# இப்புத்தகத்திலடங்கியவை:—

# முகவுரை.

*"மகிழ்மாறனை வழுத்துவா யென்றனக்கு*
*நெகிழ்மாறனை நினைக்கு நேயம் — முகிழ்மா*
*முலைக்கமலை யேற்றமொழி காவியத்தால*
*நிலைக்க மலைவேகவருணீ."*



"குரைகடலை யடலம்பான் மறுக வெய்து குலைகட்டி மறு
கரையை யதனு லேறி, யெரிநெடுவே லரக்கரோடு மிலங்கை
வேந்த னின்னுயிர்கொண் டவன்றம்பிக் கரசு மீந்து, திருமகளோ
டினிதமர்ந்த செல்வன் றன்னைத் தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்
தன்னு, ளரசமர்ந்தா னடிசூடு மரசை யல்லா லரசாக வெண்
ணேன்மற் றரசு தானே."

*நாம் மானுடப்பிறவிபடைத்ததற்குப் பயன் கடவுளையறிந்து ஏற்ற உபாயத்தால் அப்பரம்பொருளைப் பெறுவதேயாம். அவ்வண்ணம் நற்கதிபெறுதற்கு ஏற்ற கருவியாக வேதமென்பது ஏற்பட்டுள்ளது: அந்த வேதம் கர்மகாண்டமென்றும், ஞானகாண்டமென்றும் இருபகுப்பினையுடையது. கட்வுளின்ஆராதனையைக்கூறும் கர்மகாண்டத்தினும், ஆராதித்தற்குஉரிய கடவுளைக் கூறும் ஞானகாண்டஞ் சிறந்ததாம். இருபகுப்பினைக்கொண்ட அவ்வேதத்தின்பொருளை விவரமாக உணர்த்துவன, ஸ்மிருதி இதிஹாஸபுராணங்களாகும். அம்மூன்றனுள், கடவுளின்ஆராதனையைக் கூறுவனவான கர்மகாண்டத்தின்பொருளே, ஸ்மிருதியினால் அறுதியிடப்படுகின்றது. ஞானகாண்டமான உபநிஷத்துக்களின்பொருளோ இதிஹாஸபுராணங்களால் அறுதியிடப்படும். ஆகவே, ஞானகாண்டமே ஆன்மா ஈடேறுவதற்குச் சிறந்த கருவிநூலாகக் கொள்ளற்குஉரியது.*

*ஞானகாண்டத்தை விவரிப்பனவான இதிஹாஸபுராணங்களுள் ஒருசரிதையைப் பிரதானமாகக்கொண்டு பலகிளைக்கதைகளோடு புணர்த்துக்கூறுவது-இதிகாசமெனப்படும். மற்றொன்றாகியபுராணமோ -சருக்கம் பிரதிசருக்கம் மந்வந்தரம் முனிவராசர்களின்மரபு அவர்கள் சரித்திரம் என்னும் ஐந்துஉறுப்பின: அவை - பிராமம்தொடங்கிப் பதினெட்டென்ப: இதிஹாஸலட்சணமமைந்துள்ளன - ஸ்ரீராமாயணமும், மகாபாரதமுமென்ப. இவ்விரண்டனுள், ஸ்ரீராமாயணம் - புருடோத்தமனான ஸ்ரீராமனதுசரிதத்தைப் பிரதானமாகக் கொண்டிருத்தலாலும், பிதாமகக்கடவுள் 'நீ இயற்றும் இக்காவியத்தில் உன்வாக்குப் பொய்ம்மையாகஒன்றும்வாராது' என்று திருவருள்புரியப் பெருந்தவசியாகிய வான்மீகிமுனிவன் திருவாய்மலர்ந்தருளியதாகையாலும், உலகோர் மிகவும் ஆதரிக்க மகாபாரதத்தினும் மேம்பட்டுத் துலங்குகின்றது.*

வேதோபப்பிரமணமென்னப்பெற்ற இவ்விராமாயணம் வேதத்திற்கூறப்படும் பலபொருள்களை விவரிப்பதாம்: ஆயினும், எந்தப்பொருளைத் தலைமையாகக்கூறுவதென்றுபார்ப்போம். ஒருநூலிற் கூறுந் தலைமைப்பொருள் இன்னதுதானென்று அந்நூற்கருத்தையறுதியிடுமிடத்து, நூலோர், *உபக்ரமம் உபசங்காரம் அப்பியாசம் முதலியவற்றைக் கருவியாகக்கொள்ப. அம்முறைபற்றி யாராயின், இவ்விராமாயணம் முதற்காண்டமான பாலகாண்டம்முதல் யுத்தகாண்டமீறாகவுள்ள ஆறுகாண்டங்களிலும் சரணமாகஅடைதலே சேதநன் ஈடேறுதற்குச் சிறந்த உபாயமாகும் என்ற பொருளையே கூறுகின்றது.

எங்ஙனே யென்னில்,—பாலகாண்டத்தில் தேவர்கள்அரக்கரால் நேருந் துன்பத்தைத் தாங்கலாற்றாது திருப்பாற்கடலிற் றுயிலுந் திருமாலைச் சரண்புக, அப்பண்ணவன் "வருந்தல்வஞ்சகர், தந்தலையறுத்திடர்துணிப்பன்" என்று அபயமளித்தமை கூறப்பட்டது: அயோத்தியாகாண்டத்தில் இராமபிரான் தன்னைநீத்துக்கானகஞ்செல்வதையறிந்து இலட்சுமணன் அப்பிரானைக் குறையிரந்து உடன்சென்று தொண்டுபுரிதலாகிய தன்விருப்பம் நிறைவேறப்பெற்றமையைக் கூறுதலான், சரணாகதரக்ஷணம் கூறியதாயிற்று: (இங்கு ஸ்ரீவான்மீகிமுனிவர்"ஸ ப்ராதுஃ சரணௌ காடம்-நிபீட்ய ரகுநந்தந:—ஸீதாமுவாசாதியஶா:-ராகவஞ்ச மஹாவ்ரதம்' என்று சீதாபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுச் சரணம்புகுந்தானென்றுகூறுவதை வாசகர்கள் கருதுவார்களாக.) ஆரணியகாண்டத்தில்,இராமபிரான் தண்டகாரணியத்துச்சென்றபோது அங்கு உறைபவரான மகரிஷிகள் அரக்கரின் கொடுமையைத் தாங்கமாட்டாது "அருளுடைவீர! நின்னபயம் யாம்"என்று சரண்புக, "ஆரறத்தினோடன்றிநின்றாரவர், வேரறுப்பன்வெருவன்மின் நீர்"என்று அபயமளித்தமை கூறப்பட்டது. கிட்கிந்தாகாண்டத்தில், சுக்கிரீவன் "முன்னவன் பின்வந்தேனை,இருணிலைப்புறத்தின்காறுமுலகெங்குந்தொடரவிக்குன்று, அரணுடைத்தாகியுய்ந்தே னருயிர்துறக்கலாற்றேன், சரணுனைப்புகுந்தேனென்னைத் தாங்குத றருமம்" என்றுசரண்புக, ஸ்ரீராமன் "மேல்வந்துறுவனதீர்ப்பல்" என்று அபயமளித்தமை கூறப்பட்டது: சுந்தரகாண்டத்தில், சீதாபிராட்டி, தன்னை அனுமான் கண்டுவந்தமையை ஸ்ரீராமபிரான் நம்புமாறு அன்னுனிடத்து அடையாளங்கள் கூறியபோது, காகாசுரன் ஐயநின்சரணஞ்சரணென்றஞ்சி வையம்வந்துவணங்கிட வள்ளன்மகிழ்ந்துவெய்யவன்கண்போகென விட்டு அவனுயிரைக்காத்தானென்றதைக் கூறிய முகத்தால், சரண்புகுவாரைக்காப்பவன் திருமாலென்ற பொருள் கூறப்பட்டது: யுத்தகாண்டத்திலோ விபீடணனடைக்கலப்படலமென்பது, சரணாகதியின் பெருமையைத் தெரிவிப்பதற்காகவே தோன்றியுள்ளது. இந்தப்படலத்தில், சரணமடைந்தவரை ஒருகாலும் கைவிடாத தனிமுதற்கடவு

* உபக்ரமம் - தொடக்கம்: உபசங்காரம் - முடிவு: அப்யாசம்-பன்முறைகூறுதல்.

ளான திருமாலே * "அபயமென்றபொழுதத்தே யபயதான மீதலே கடப்பாடென்பது" என்று தன்னுடையமதத்தை வெளியிட்டுள்ளான்: அன்றியும், சிறியதிருவடியாகியஅனுமான் ஸ்ரீராமபிரானால் இராவணவதம்முற்றியதைப் பிராட்டிக்குத் தெரிவிக்க, 'இத்துணைமகிழ்ச்சிப் பொருளைத்தெரிவித்த உனக்குப் பரிசிலாக யான் தரத்தக்கது யாது ?' என்று தன்னுட்கருதிப் பிராட்டி வாளாவிருத்தலும், அனுமான் 'அன்னே! மறுமொழி தாராமைக்குக் காரணம் என்னே?' என்று வினவ, பிராட்டியும் 'நீ செய்த தகைமைக்கு ஏற்ப அளிக்கத்தக்க பொருள் ஏதுமின்மையே இதற்குக் காரணம்' என்ன, திருவடி 'நின்னை நலிந்த அரக்கியர்தங்களைச் சுடவேண்டும் வரம் எனக்குஅருள்' என்ன, அதுகேட்ட அரக்கியர் 'நின்பாதமே விடலம் மெய்ச்சரண்' என்று பிராட்டியைச் சரண்புகுந்து வேண்ட, 'அஞ்சன்மின்' என்று தன்னை நலிந்த அரக்கியர்க்குப் பிராட்டி வரமளித்துத் திருவடியைநோக்கி 'இராவணன்சொற்படி செய்ததன்றி என்ன தீமை யிவரிழைத்துளார்? கூனியிற் கொடியாரலரே யிவர்; போனவப் பொருள் போற்றலை: தீவினைதனக்குவாழ்விடமாகியசழக்கியர் மனக்கு நோய்செயல்: இவ்வரம், எனக்கு நீ யருள்'என்று வேண்டித் தன்னைச் சரணடைந்த அவ்வரக்கியரைப் பாதுகாத்தன ளென்ற செய்தியும் இந்தக்காண்டத்து மீட்சிப்படலத்துக் கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் நூற்றொடக்கம்முதல் நூல்முடியும்வரையும் ஒவ்வொருகாண்டத்திலும் சரணமடைந்து உய்வதைக் கூறியமையால், மாந்தர் ஈடேற எளிதான உபாயம் கடவுளைப் புகல்புகுவதே என்ற இதுவே இராமாயணத்தின் கருத்தென்பது தெற்றென விளங்குகின்றது.

இனி, 'தூதுவராலழைக்கப்பட்டு மாமன்வீட்டிலிருந்துவந்த பரதன் தசரதசக்கரவர்த்தி பரலோகம்புக்கதையும் அண்ணனுக்குரிய இராச்சியத்தைக் கைகேயி தான் வரத்தினால் வாங்கிவைத்ததையும் அறிந்து தீயினாற் கவ்வப்பட்டான்போல்அலறிக் கோவென்றுகதறிப் பழித்துப் பெருவருத்தமுற்றுஒருவாறு அரிதிற்றேறித் தசரதனது ஈமச்சடங்கை நிறைவேற்றுவித்துப் பின் ஐம்பெருங்குழுவோடும் மற்றுமுள்ளபரிவாரங்களோடும் நகரமாந்தரோடும் பயணப்பட்டுக் கானகஞ்சேர்ந்து இராமபிரானைச் சரண்புக்கு இராச்சியத்தைக் கைக்கொள்ளுமாறு வேண்டவும், அப்பிரான் திருவருள்புரிந்து அந்தப்பரதன் கருத்தை முற்றுவித்திலனே! அங்ஙனம்புரிந்தவன் சரணமடைந்தாரைத் தவறாதுகாப்பா னென்பது எங்ஙனே ?' என்று சிலர் ஐயுறக் கூடும். இவ்வினாவுக்கு ஒருசார் சான்றோரின் விடை வருமாறு:— தேவர்கள் இராவணவதம் புரியுமாறு முந்துற வேண்டிக்கொண்டனராதலால் அன்னார் வேண்டுகோளை முற்றுவித்தற்குச் சங்கற்

---

* "ஸக்ருதேவ ப்ரபந்நாய-தவாஸ்மீதிசயாசதே அபயம்ஸர்வபூதேப்யோ - ததாம்யேதத்வ்ரதம்மம" என்பது, ஸ்ரீவான்மீகிராமாயணம்.

பித்த ஸ்ரீராமபிரான் தந்தைசொல்லை நிறைவேற்றுதலென்ற ஒரு வியாஜத்தை முன்னிட்டுத் திருவயோத்தியினின்று கானகத்துக்கு எழுந்தருளினன்: அங்ஙனம் எழுந்தருளின நிலையிற் பரதாழ்வான் மீண்டு அரசைக் கைக்கொண்டருள்கவென்று சரண்புகுந்து வேண்டினன்: இந்நிலையில் ஸ்ரீராமன் கானகத்திலுறைந்திடாமல் அப்போதே அயோத்திக்கு மீண்டிடின், விண்ணவரின் வேண்டுகோளை முற்றுவிக்க வெழுந்த சங்கற்பத்தைக் கைவிடுவதோடு தனதுதமப்பனுன தசரதனை மெய்யனுக்கக் கானகஞ்சென்று பதினன்குயாண்டு வதியுமாறு உறுதியளித்தமையினின்று பிறழவும் நேரும்: இங்ஙன் முரண்பட்டநிலைமை நேரவே, எல்லாம் ஒருவகையில் ஒத்துப்போமாறு புரியவேண்டுவதாயிற்று: ஆகவே, ஸ்ரீபரதாழ்வானது சரணுகதி சடக்கென நிறைபயனைத் தருமாறு அருள்புரியாது போயினும், அந்தப்பரதாழ்வானுக்குத் தாற்காலிகமாகக் கைகேயியினல் விளைந்த மனச்சள்ளை தொலைய மூன்று மரவடியைத் தம்பிக்கு வான்பணையம் வைத்திட்டான்; பிரதிஞ்ஞைசெய்ததற்கு ஏற்ப வானேர்வாழச் செருவுடைய திசைக்கருமந் திருத்திவைத்துப் பின்னர் உலகாள ஒருப்பட்டுப் பரதாழ்வானது சரணுகதியை நிறைபயனுடையதாக்கினு னென்பது.

இங்ஙனம் சரணுகதியைப்பற்றிக் கூறுவதனுல்தான் இந்த ஸ்ரீராமாயணம் ப்ரபத்தி வேதம் என்று ஆன்றேரால் கூறப்பட்டுள்ளது. (திருமாலின் திருவவதாரங்களெல்லாமும் சரணடைந்தோரைப் பாதுகாத்தலின்பொருட்டே நிகழ்ந்தன என்ற பொருள், அவ்வவ்வவதார சரிதையிற் புலனுதல் கருதத்தக்கது.)

இவ்வண்ணம் மானிடர்க்குஉறுதிபயக்குஞ் சரணுகதியென்னும் பரமோபாயத்தை ஸ்ரீவான்மீகிபகவான் அருளிச்செய்த ஸ்ரீராமசரிதையை ஆசைபற்றியறையலுற்ற கம்பநாட்டாழ்வாரின் கவிச்சிறப்புப் பற்றி, யாம் விசேடித்துச் சொல்லவேண்டுவதில்லை: சிறிதேயுணர்ந்தோரும் இந்தக்கம்பநாடரின் பாடலைக் கேட்டமாத்திரத்தில் ஈடுபடுவதைக் கண்கூடாகக் காண்கின்றேமன்றே.

இங்ஙனஞ்சிறப்புவாய்ந்த இராமாயணத்து யுத்தகாண்டம் மற்றைக் காண்டங்களைவிட சொற்செறிவு பொருட்பொலிவு முதலியன மிக்குப்பொருந்தித் துலங்குவதை ஊன்றிப்படிப்பவர் எவருங் கண்டறியலாம். முதலேந்து காண்டங்களைப் பாடிக் கவி பண்பட்டமையே இதற்குக் காரண மாகும். "சாதுசனங்களைப் பாதுகாக்கவும் தீயோரை நலியவும் அறத்தைநிலைநாட்டவுமே யுகங்கள் தோறும் பிறக்கின்றேன் யான்" என்ற எம்பெருமான் திருவாக்கின்படி விபீடணனைப்பாதுகாத்துத் தசக்கிரீவனைத் தடிந்து திருவயோத்திக்குமீண்டு முடிபுனைந்து முறைபிறழாது அரசுபுரிந்தமையைக்கூறுவதால், இராமாவதாரத்தின் பரமபிரயோசனத்தைத் தெரிவிப்பதாகும், இந்த யுத்தகாண்டம்: சரணுகதரட்சணமே எம்பெருமானுடைய நோன்புஎன்பதைக் கையிலங்குநெல்லிக்கனிபோல வெளிப்

படையாக வுணர்த்துவது இந்தக்காண்டமே: கருணாரூபிணியான பிராட்டி தான் சிறையிருந்தது சரணாகதரான தேவமாதர்களைச் சிறை விடுத்தற்பொருட்டே என்ற கருத்து முற்றுவதும் இந்தயுத்தகாண்டத் திலேதான்.

இங்ஙனஞ்சிறப்புற்ற இந்தயுத்தகாண்டத்தில் சிலவிடங்களில் வான்மீகத்தோடு தொடர்பற்றனபோலக் கம்பநாடரின்கவிகள் தோன்றினும் சிலவிடத்துக் கம்பநாடர் வான்மீகத்தையே மொழிபெயர்த்துள்ளாரோ ? என்று கற்போர் கருதுமாறு கூறியுள்ளார் : அன்றியும், வேதப்பொருளும், திவ்யப்ரபந்தம் குறள் முதலிய நூல்களின் கருத்துக்களும் பல காணப்படுகின்றன : இவற்றையெல்லாம் உரையில் இயன்றவரையிற் காட்டியுள்ளேன். படிப்போர்க்கு ஊக்கம் உண்டாகுமாறு சில இங்கு எடுத்துக்காட்டுவேன்.

வான்மீகத்தோடு கம்பராமாயணம் ஒத்திருக்கும் பகுதி சில வருமாறு:—"பிறப்புமாறினை"(விபீ-8)="த்வாம்ஸ்து திக் குலபாம்ஸநம்": "அரக்கர்வன்மையும்...நிகழ்த்துவாய்"(இலங்கைகேள்வி - 15)="ஆக்யாஹி மம தத்வேந-ராக்ஷஸாநாம் பலாபலம்":"கருணையங்கடல் கிடந்தது கருங்கடனோக்கி" (வருணனைவழி-5)="ப்ரதிஶிஶ்யே மஹோததே:" : "பாரநீங்கிய சிலையினனிராவணன்பறிப்பத், தாரநீங்கியதன்மையனுதலிற்றகைசால், வீரநீங்கிய மனிதனென்றிகழ்ச்சிமேல் விளைய, ஈரநீங்கிய தெறிகடலாமெனவிசைத்தான்" (ஷை—10)="க்ஷமயாஹி ஸமாயுக்தம்-மாமயம் மகராலய:—அஸமர்த்தம் விஜாநாதி-திக்க்ஷமாமீத்ருஶேஜநே": " தருதிவில்"(ஷை-15)="சாபமாநயஸௌமித்ரே": "எடுக்கலுற்றவன் மேனியையேந்துதற்கேற்ற,மிடுக்கிலாமையினிராவணன் வெய்துயிர்ப்புற்றான்,""தகவுகொண்டதொர்நண்பெனுந்தனித்துணையதனால், அகவுகாதலால்...அனுமன், மகவுகொண்டுபோய் மரம்புகு மந்தியை நிகர்த்தான்"(முதற்-212,213)="வாயுஸூநோஸ்ஸுஹ்ருத்த்வேந-பக்த்யா பரமயாசஸ:—ஶத்ருணமப்ரகம்ப்யோபி-லகுத்வமகமத் கபே:" : "இறத்தியானது நினைக்கிலன் தனிமைகண்டிரங்கி" (முதற்—252)=" பரிஶ்ராந்த இதிவ்யவஸ்ய-நத்வா ஶரைர் ம்ருத்யுவஶம் நயாமி" : "உடைப்பெருங்குலத்தினரொடு முறவொடுமுதவும், படைக்கலங்களுமற்றுநீ தேடியபலவும், அடைத்துவைத்தன திறந்துகொண்டாற்றுதியாயிற், கிடைத்தி," "இன்றுபோய்ப் போர்க்கு,நாளைவாவென நல்கினான்" (முதற்—253,256)="கச்சாநுஜாநாமிரணார்த்திதஸ்த்வம்...ப்ரவிஶ்யராத்ரிஞ்சரராஜலங்காம் - ஆஶ்வாஸ்யநிர்யாஹி ரதீசதந்வீ"என்பவை முதலியன காண்க.

இனி வேதப்பொருள் வருமாறு:—(வருணனைவழிவேண்டு படலம்-34) " நீரையுண்பது நெருப்பெனு மப்பொருணிறுத்தான் " என்பது - " ஆபஸ் தேஜஸி லீயந்தே " என்ற ஶ்ருதிவாக்கியத்தையும், (சேது-22) "சிறியவாயபுண்ணியம் புரிந்தோர்போலக், குன்றுகள்...,

...உம்பர்நாட்டுச்,சென்று...திரிந்தன"என்பது-"க்ஷீணேபுண்யே மர்த்யலோகம்விஶந்தி"என்பதையும்,(இராவணன்...தானை-20)"இராமனெனத் தன், மேனியே யுரைசெய்கின்றது" என்பது - "ரூபமேவாஸ்யை தந்மஹிமாநம் வ்யாசஷ்டே"என்பதையும்,(நாக-222) "மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான் " என்பது - "அஜாயமானோ பஹுதாவிஜாயதே " என்பதையும், (இராவணன்வதை - 84) " ஊனுடையுயிர் " என்பது - "அஹமந்நமஹமந்நம்" என்பதையும், (வருண-62) "இரக்கம்வந்தெதிர்ந்தகாலத் துலகெலாமீன்று"என்பது-"காரணகலேபரைர் கடயிதும் தயமாநமநா:" என்பதையும் ஒத்திருத்தல் காண்க. மற்றும் பிரகலாதன்துதி, வருணதேவன்துதி, ராமலட்சுமணர் நாகாத்திரத்தினாற் கட்டுண்டுகிடந்தபோது கருடபகவானதுதுதி, இலக்குவன் வேற்படையால்மாய்ந்தானென்று கருதி ஸ்ரீராமன் மூர்ச்சித்துநின்ற நிலையில் தேவர்களின்துதி, ராவணவதம் முற்றியதும் பிரமதேவன் வெளிப்பட்டுவந்து செய்த துதி,சீதை அக்கினிப்பிரவேசஞ்செய்ய அவளையேந்திவந்த அங்கியங்கடவுளின்துதி இவைகளையெல்லாம் ஊன்றிப்படிக்கின் உபநிஷத்துக்கள் திவ்யப்பிரபந்தங்கள் முதலியவற்றின் பொருள் எத்துணைச்செறிந்துள்ள தென்பது தெளிவாகும்.

அன்றியும், பழைய இலக்கியமான குறளின் சொற்பொருட்கருத்துக்களும் ஆங்காங்குக்காணப்படுவதுவருமாறு:— " வஞ்சனை மனத்தினை ...நஞ்சினையுடன்கொடு வாழ்தனன்றரோ"(வீபீ-8)என்ற விடத்து " உடம்பாடிலாதவர்வாழ்க்கை குடங்கருட், பாம்போடுடனுறைந்தற்று"என்ற கருத்தும், "இராமன்றுளினைப்,புல்லுதும் புல்லியிப் பிறவி போக்குவேம் " (வீபீ - 20) என்ற விடத்து " பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தா, ரிறைவனடி,சேராதார் " என்ற குறளின் கருத்தும், " நிலத்தியல்புநீரியல்பு" (கும்ப-82) என்றவிடத்து "நிலத்தியல்பானீர் திரிந்தற்றாகும்"என்ற குறட்கருத்தும், "மாரியை நோக்கிக் கைம்மாறியற்றுமோ(நாக-271) " என்ற விடத்து"கைம்மாறு வேண்டாகடப்பாடு மாரிமாட்,டென்னாற்றுங்கொல்லோவுலகு"என்ற கருத்தும்,"ஈசன்வேலுங், குழிப்பரிதாயமார்பை மன்மதன் கொற்றவாளி, கிழிப்புறவுயிர்ப்பு நீங்கிக் கிடந்த வாளரக்கன் " (நாக-274)என்றவிடத்து "ஒண்ணுதற் கோவுடைந்ததே ஞாட்பினுள், நண்ணாரு முட்குமென் பீடு" என்ற கருத்தும் காண்க. மற்றும் சங்கச்செய்யுள்களின் சொற்றொடரும் கருத்துக்களும் காணப்படும்.

இவையன்றி,இந்த யுத்தகாண்டத்திற் றொனிப்பொருளாக ஆங்காங்குப்பலநீதிகள் புலப்படுவதன்றிச் செம்பொருளாகவும்பலஉள்ளன:அவற்றுட் சில வருமாறு:-"அழிவினையெய்துவா னறிவு நீங்கினான்"(வீபீடண—9), " புகழலால் வாழ்வுவேண்டலன், " (ஷை-18), "சிற்றினத்தவரொடுஞ்செறிதல் சீரிதோ"(ஷை-74), "தீர்வருமின்னறம்மைச் செய்யினுஞ் செய்யசிந்தைப், பேரருளாளர் தத்தஞ்செய்கையிற் பிழைப்பதுண்டோ," (ஷை-128), "ஒருவர்பாலொருவர், சென்று வேண்டுவரே

லவர்சிறுமையிற்றீரார்"(வருண—9),"பொய்த்தசான்றவன்குலமெனப் பொருகணையெரிய"(ஷை-25),"செப்பின் மேலவர் சீறினுமது சிறப்பாதல், தப்புமே" (ஷை-33)," தீயன சிறியோர் செய்தாற் பொறுப்பதே பெரியோர்செய்கை" (ஷை-73), " அறம்பிழையாதார்க்கெல்லாம், ஏய்வன நலனேயன்றி யிறுதிவந்தடைவதுண்டோ," (ஷை-80), "தருமமே வலியதம்மா"(ஷை-81), "தாமுதலோடுங் கெட்டா லொழிவரோ வண்மைதக்கோர் " (சேது - 18), " கேடுற்றாலு முணர்வரோ வுணர்விலாதார் " (ஷை - 20), " தங்கிலை நீங்கிற்றென்றால், ஆரிடைத்தோலார் மேலோ ரறிவிடைநோக்கி னம்மா" (ஷை - 23), " வள்ளியராயோர் செல்வ மன்னுயிர்க் குதவுமன்றே" (ஷை-24), " தொலைந்தன, புண்ணியம்பொருந்தாத முயற்சிபோல் " (ஷை - 44), " இடும்பையெத்தனையும் படுத்தெய்தினும், குடும்பந்தாங்குங் குடிப்பிறந்தாரின், " (ஷை - 53), " தஞ்சமென்றடைந்தோர் தம்மை, நாம்பிழை செய்யலாமோ " (ஒற்று - 28), " அருப்பமென்று பகையையு மாரழல், நெருப்பையு மிகழ்ந்தா லதுநீதியோ " (முதற் - 92), " இறுதியேயியைவதானு விடையொன்றாற் றடையுண்டாமோ " (கும்ப - 42), " தருமத்திற்குக் குறையுண்டாமோ " (ஷை - 85), " தூயவை துணிந்தபோதுபழிவந்து தொடர்வதுண்டோ " (ஷை - 142), " உய்திற முடையார்க்கன்றோ வறன் வழியொழுகுமுள்ளம்"(ஷை-170)"விதியையார் தீர்க்ககிற்பார்" (ஷை-171), " அறத்தினைப்பாவம் வெல்லா " (நாக-233), " ஆணவந்துணையாருளராவரோ " (இராவ. வதை-38), " சிறந்ததுதவமலாற் செயலுண்டாகுமோ " (ஷை - 152) என்பன முதலியன.

அன்றியும், "கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்தாலொவ்வாதோ, (விபீ-103)" "இருப்புக்கம்மியற்கிழை நுழையூசியொன்றியற்றி, விருப்பிற் கோடியால் விலைக்கெனும்பதடியின் (இராவ. வ-121), " " எல்லுண்டாகி னெருப்புண்டு (ஷை-185) " " சான்றுக்குச் சான்றிலை " (மீட்-104) என்பன முதலிய உலகத்துப்பயிலும் வழக்குக்களும் ஆங்காங்குக் காணப்படும். இவையன்றி, உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, சிலேடை, முரண்விளைந்தழிவு உலகநவிற்சி பிறிதுமொழிதல் பிறிதின்குணம்பெறல் முதலிய பலவகை அலங்காரங்களையும் ஆங்காங்குக் காணலாம்.

இந்தக்காண்டத்து மந்திராலோசனைப் படலத்துப் பலரும் தமது கொள்கைகளைப் பேசுவதும், விபீடணனடைக்கலப்படலத்தில் இராவணன் விபீடணன்மீது குறைகூறுதலும் விபீடணன் இராவணனுக்கு இடித்து மதிகூறுதலும், இராமபிரான் விபீடணனைத் தம்முடன்கூட்டிக்கொள்வதுகுறித்துத் துணைவருடனுசாவித் தன்கொள்கையை வெளிவிடுவதும், வருணனைவழிவேண்டுபடலத்தில் இராமபிரான் கடலைக் கடக்குமாறு சுக்கிரீவாதியருடன் ஆலோசித்தலும் கடலைச்சீறியதும், கடல்வெந்தமையும், ஒற்றுக்கேள்விப்படலத்து மாலியவான் மந்

திராலோசனைச் சபையில் நன்மதிகூறுவதும் சேனாநாதன் முருட்டுத் தனமாக அவனைக்கண்டிப்பதும், மகுடபங்கப்படலத்துச் சுக்கிரீவனைக்காணுதவிடத்து ஸ்ரீராமன் இரங்கிக்கூறியதும், முதற்போர்ப்படலத்து அநுமான் இராவணன் இவர்களுடைய வீரவாதங்களும், படையாவும்ஒழிந்த இராவணனிடத்து அருள்கூர்ந்து இராமபிரான்மொழிந்ததும், கும்பகர்ணன்வதைப்படலத்துக் கும்பகர்ணவிபீடணசம்வாதமும், கும்பகர்ணன் தனிப்பட்டபோது இராமபிரானை வினவ அப்பிரான்கூறும் விடையும், மாயாசனகப்படலத்தில் மாயாசனகனிடத்தும் இராவணனிடத்தும் சீதாபிராட்டி கூறுவனவும், வேலேற்றபடலத்தும் பிரமாத்திரப்படலத்தும் இலக்குவனிறந்தானென்று இராமபிரான் கருதிக்கூறுவதும், இராவணன் சோகப்படலத்தில் மண்டோதரி இந்திரசித்தைக்குறித்துப் புலம்புவதும் மூலபலவதைப்படலத்து இராமபிரான் காட்டிய திறனும், இராவணன்வதைப்படலத்து இராவணனிறந்தபின்பு விபீஷணனுக்கு இராமபிரான்கூறுவதும், இராவணனைப்பற்றிச்சோகித்து மண்டோதரி உயிர்நீங்கினமையும், மீட்சிப்படலத்துக் கனல்புகுந்த சீதாபிராட்டியாரை யேந்திவந்து அக்கினிதேவன் இராமபிரானிடத்துச் சமர்ப்பித்தலும்முதலியவற்றைக்கூறும் பகுதிகள் எப்படிப்பட்டவராகஇருப்பினும் படிக்கப்படிக்கப் படிப்போர் மனத்தைக் கவராதுஇரா. இந்தக்காண்டத்து அமைந்துள்ள சிறப்புக்களையெல்லாம் ஆராய்ந்துபன்னிப்பன்னி எழுதப்புகின், இவையே பெரிய நூலாய் விடுமாதலால், ஆங்காங்குச் சிற்சில எடுத்துக் காட்டிய வளவோடு நிறுத்திக்கொள்கிறேன்.

கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் இயற்றிய மற்றைக்காண்டங்கள் உரையெழுதப்பெற்றும் படிக்கப்பெற்றும் பயின்றுவருகையில் அந்தக் கம்பரின் முழுத்திறமையும் விளங்குவதும் இராமாயணத்தின் இதயத்தானமென்று பாராட்டுதற்கேற்றதுமான இந்த யுத்தகாண்டம் மூலமாத்திரம் பிழையுடன் அச்சிடப்பட்டுள்ளது. கற்றோர்தவிர மற்றையோரும் பயின்று நுகருமாறு இதுவரையும் இதற்கு உரை எவராலும் எழுதப்பட்டிலது. அச்சிட்டுள்ள மூலபாடமும் மிகவும் பிழைபொதுளியிருத்தலால், அனேகவிடங்களிற் கற்றோர்க்கும் பொருள்விளங்குவது அரிதாகின்றது. ஆகவே, பலபிரதிகளைவைத்து ஒப்புநோக்கிஉரையுடன் அச்சிடின், கற்றோர்க்கு உதவுவதன்றிக் கற்போர்க்கும் உதவுமென்ற கருத்தையும் கொண்ட அடியேன், இராமாயணத்தின் மீதுள்ள அன்பினால் என்றனுக்குத் தகுதியுண்மையையும் இல்லாமையுங் குறித்து ஆராய்தலுமின்றி, இவ் யுத்தகாண்டத்தைப் பல பிரதிகளைக் கொண்டுபரிசோதித்து உரையும்எழுதி அச்சிடுஞ் சாகசச்செய்கையை மேற்கொண்டேன்.

பல பிரதிகளைவைத்துப்பார்க்கும்போது பெரும்பாலும் எல்லாப் பாடல்களிலும் பல பாடபேதங்கள் காணப்பட்டன. ஏட்டுப்பிரதிகள் பலவற்றில் ழகரளகரங்கள் மாறிக்காண்பது சகசமாதலால் பாட

பேதங் காட்டுமிடத்து அவை காட்டப்படவில்லை: அன்றியும், வட
மொழியானசொற்களில் நகரனகரங்கள் அபேதமாகக்கொள்ளத்தக்
கனவாதலால், அவ்வகையாய்வரும் அநகன் - அனகன்என்றாற்போல்
வனவும் காட்டப்பட்டில. பயம் = பயன், ஐயன் = அய்யன், கொள்வன்
கொள்வென், அனைய - அன்ன, இராமனுன்-இராமனுல், எண்ணில் -
எண்ணின், என்று - என, என்ன - என்னு என்றாற்போற் காணப்படு
பவை பாடபேதமாகக் குறிக்கப்பட்டில. இடைத்தவரையிலும் பாட
பேதங்களையெல்லாம் விடாமற்பதிப்பிக்கவேணுமென்ற எண்ணத்துட
னேயே பரிசோதித்துள்ளேன். இப்பதிப்பிற் பலபாடங்களுள்ளவிடத்
துச் சிறந்த பாடத்தை மூலத்திலும் மற்றைப் பாடங்களைப்பிரதிபேத
மாகக் கீழ்ப்புறத்திலும் காட்டமுயன்றுள்ளேன்: ஆயினும், சில இடத்து
இக்கொள்கைகள் தவறியன; இதற்குக் காரணம், அயர்வும் ஏற்றதுணை
யில்லாமையுமாகும். இன்னும் பல பிரதிகள்வைத்து ஒப்புநோக்கின்
மிகச்சிறந்தபாடங்களும் கிடைக்கும்.

இந்த யுத்தகாண்டத்தில் மற்றைக்காண்டங்களைவிடப் புதிய
பாடல்கள் மிகுதியாகக் காணப்பட்டன. அன்றியும், வசந்தனுயிர்பெறு
படலம் பூசைப்படலம் என்று படலப்பெயர்பூண்டு சில செய்யுட்களும்
காணப்பட்டன. இவ்விரண்டு படலங்களின் செய்யுட்களைப் பார்க்கு
மிடத்துக் கம்பருடைய வாக்கு என்பதற்கு ஏற்ற சான்றுகள் புலப்
படவில்லை. மேலும், பூசைப்படலம் என்பது, ஒரு பிரதியில் மாத்திரந்
தான் உள்ளது. இந்தக் கம்பராமாயணத்தில் வெள்ளியம்பலத்தம்பி
ரானென்ற ஒருவர் இடையிடையே சில பாடல்களைப் பாடிச் சேர்த்
துள்ளாரென்றும், அவை வெள்ளிப்பாட்டென்றும் சொல்லக்
கேட்டுள்ளேன் : அவ்வகையாக ஒருத்தர்செய்தபாடல்களே இந்த
யுத்தகாண்டத்திற் சேர்ந்திருப்பனவாகத் தோன்றவில்லை: பல்திறப்
பட்டோர் தமக்குத் தோற்றியவாறெல்லாம் பாடிப் புகுத்தியுள்ளா
ரென்று தோன்றுகின்றது; இவ்வண்ணமான பாடல் மிகுதியாகப் புகுத்
தப்பெற்றிருப்பது இறுதிப்படலங்களில்தான்: அவற்றையெல்லாம் ஆங்
காங்கு எடுத்துக்காட்டியுள்ளேன். முன்னர் அச்சிட்டபிரதியிலில்லாத
பாடல்களுள் ஒற்றுக்கேள்விப்படலத்து ஒரு பாடல்மாத்திரம் அவ்
விடத்து இருந்தால் மிகப்பொருத்தமாயிருக்குமென்று தோன்றிய
தால், அதற்கு உரையெழுதியுள்ளேன் : மற்றைப்பாடல்களை மூல
மாத்திரம் பதிப்பித்திருக்கின்றேனேயன்றி, அவற்றிற்கு உரை எழுத
வில்லை. படலங்களின்பெயர் அச்சிட்டபிரதியிலுள்ளவாறே பெரும்
பாலும் கொள்ளப்பட்டன. மந்திரப்படலமென்பது இராவணன் மந்
திரப்படலமென்று எட்டுப்பிரதிகளிற் காணப்பட்டமையால், அயோத்
தியாகாண்டத்து மந்திரப்படலத்திலும் வேறுபாடு விளங்கவடுகளிற்
காணப்பட்டபடி இராவணன்மந்திரப்படல மென்று பதிப்பிக்கப்பட்
டது. இராவணன்றானைகாண்படலமென்று அச்சிட்டுள்ளது இராவணன்
தன்னுடைய பதாகினியைக் காண்பது தெரிவிக்கின்ற படலம் என்று

பொருள்கொள்ளுதற்கும் இடந்தருதலால், அங்ஙன்கொள்ளாமல் சில ஏடுகளிற்கண்டபடி இராவணன்வானரத்தானைகாண்படலம்என்ற பெயர் கொள்ளப்பட்டது. சீதைகளங் காண்படலம் என்று சில அச்சிட்ட பிரதியிலும் பிராட்டிகளங்காண்படலம் என்று சில அச்சிட்டபிரதியிலும் காணப்படுவதால், அவற்றுள் ஒன்றான சீதைகளங்காண்படலம் என்பதுகொள்ளப்பட்டது. சில அச்சிட்டபிரதிகளில் களங்காண்படலம் என்று ஒன்றே யிருக்கவும், பல ஏட்டுப்பிரதிகளிலும் பிந்தியச்சிட்டுள்ள பிரதிகளிலும் வானரர்களங்காண்படலம் இராவணன் களங்காண்படலம் என்று இரண்டாகக் களங்காண்படலம் காணப்பட்டதைக் கொண்டதுபோலவே, ஏட்டுப்பிரதிகள் பலவற்றில் இராவணன்தேரேறுபடலம் இராமன்தேரேறுபடலம் எனத் தேரேறுபடலம் இரண்டுகாட்டப்பட்டிருந்ததனால், இப்பதிப்பில் ஏட்டுப்பிரதிகளையொட்டி இரண்டு தேரேறுபடலம் கொண்டுள்ளேன். சில படலங்களின் தொடக்கம் அச்சிட்ட பிரதிகளில் வேறுவகையாக இருப்பினும் சில ஏட்டுப்பிரதிகளில் வேறு வகையாகக் காணப்பட்டுப் பொருத்தமுற்றனவாகத் தோன்றியவிடத்து ஏட்டுப்பிரதிகளிலுள்ளவாறே படலங்களின்தொடக்கம் கொள்ளப்பட்டுள்ளன. உரையெழுதாத பாடல்கள் செய்யுண்முதற்குறிப்பகராதியில் இவ்வாறு *உடுக்குறியிட்டுக்காட்டப்பட்டிருக்கின்றன: பிற்பகுதியினிறுதியிற் சேர்க்கப்பட்டுள்ள அரும்பதவகராதிமுதலியன என்றதில் உபமான உபமேயங்களைத் தெரிவிக்கவேண்டிய இடத்துஇக் × குறி காட்டப்பட்டுள்ளது.

இந்தக்காண்டத்திற்கு உரைவகுக்குமிடத்து மற்றைக்காண்டங்கட்கு எழுதியிருப்பதுபோலப் பதவுரையாக எழுதின் இப்போதையினும் இன்னும் பெருகுமென்றுஅஞ்சிப் பொழிப்புரையாக எழுதலானேன்: இவ்வாறு பொழிப்புரையாகஎழுதின், கற்போர்க்கு ஆராயுந்திறம் பெருகு மென்பது, இக்காலத்து ஆராய்ச்சியாளரின் துணிபு. அங்ஙனம் பொழிப்புரையெழுதுமிடத்துக் கற்போர்க்கு ஐயந்தோன்றின்அதுநீங்குமாறு அருஞ்சொற்களுக்குப்பொருள் ஆங்காங்குஎழுதுவதும் ஈற்றில் அரும்பதவுரையிற் காட்டுவதும், பிரிப்பதற்குக்கடினமாகிய சந்திகளைப்பிரிப்பதும் செய்திருக்கின்றேன். யமகம்முதலிய சிலஅருஞ்செய்யுட்குப் பதவுரையும் எழுதியுள்ளேன். சொற்களின்பொருள்தோன்றுமாறு பலவிடங்களிலும் வருவித்துக்கூறுவன இங்ஙன் () வளைத்தபகுதியிற் காட்டப்பட்டுள்ளன. செய்யுளிற்கூறிய விஷயம் விளங்குமாறு எல்லாச்செய்யுட்கும் தலைப்பும்எழுதப்பெற்றுள்ளன. பர்லகாண்டப்பதிப்பிலும் அயோத்தியாகாண்டப்பதிப்பிலும் போலவே இப்பதிப்பிலும் பாடல்கள் சீர்பிரிக்கப்பட்டுள்ளன. அன்றியும், ஒவ்வொருபடலத்திற்கும் முதன்முதலிற் கதையைத்தொகுத்து எழுதியிருப்பதோடு, ஆங்காங்குப் படலவிறுதிகளில் வான்மீகர்கூறும் சரிதப்போக்கும் வாசகருணருமாறு தொகுத்துக்காட்டப்பட்டுள்ளது.

ஸ்ரீவான்மீகிமுனிவர் கூறும் சரிதத்தோடு கம்பர்கூறும் கதைப்போக்கு மிகவும்வேறுபட்டுப் பிறழ்ந்து வருமிடங்களில் இரண்டுமூன்று படலங்களுக்குச்சேர்த்து ஸ்ரீவான்மீகமுனிவர்கூறுஞ் சரிதப்போக்குக் காட்டப்பெற்றுள்ளது. விளங்காதவற்றை விளக்கியும் பலசெய்யுள்கட்குக் கருத்துக்குறித்தும், ஒத்தபகுதிகட்கு மேற்கோள்காட்டியும், அரிய இலக்கணக்குறிப்புக்களைச்சுட்டியும், அகப்பொருள் புறப்பொருள்கள் அரியனகாணப்படின் விளக்கியும், ஆங்காங்குக் காணப்படும் அரிய அணிகளை எடுத்துக்காட்டியும்,ஆங்காங்குவரும் அரியசரிதங்களைவரைந்தும், தொனிப்பொருள்களை விளக்கியும், முன்னோர்கூறிய அரியவிஷயங்கள் தொடர்புபட்டிருப்பின் அவற்றைஆங்காங்குச்சுட்டியும், என் புத்திக்கு எட்டியபடி இவ்வுரை எழுதியுள்ளேன். ‘யான் கூறிய பொருளே பொருள்:வேறு ஒருவர்கூறும் பொருள் பொருளல்ல’என்ற கொள்கையுடையேனல்லேன். அடியேன் என்புத்தியினாலியன்றவரையாராய்ந்தும், ஐயநீங்காதவிடத்து நட்பினருடனுசாவியும் படிப்போர்க்கு ஒரு வழிகாட்டியாக உதவவேணுமென்றகருத்தோடு இந்தஉரையை ஒருவாறு எழுதிமுடித்தேன்.

என்போன்றார்க்குக் கல்வியிற்பெரியராய கம்பர்செய்த இராமாயணத்துக்குத் திருத்தமுற உரையெழுதுவதுஇயலாதாயினும் இந்நூலினிடத்துள்ள விருப்பத்தால் அடியேன் இராமபிரானுடைய திருவருளைமுன்னிட்டு இப்பெருந்தொழிலைத் தலையிட்டு நடத்துமிடத்து அடியேனுக்குத் தமிழாசிரியரும் தமையன்முறையானவரும் உரையெழுதுவதிற் கைதேர்ந்தவரும் எம்மனோருடைய தீப்பேற்றால் இளம்பிராயத்திற்றானே பரமபதித்தவருமான ஸ்ரீ. உ. வே.வை. மு. சடகோபராமானுஜாசார்யஸ்வாமிகள்எழுதிவெளியிட்டிருந்த இரணியன்வதைப்படலவுரையும்,என்னாலெழுதப்பட்டு அன்னாரால்திருத்தப்பெற்றுவெளியிடப்பெற்றிருந்த நாகபாசப்படலவுரை மீட்சிப்படலவுரைகளும் இந்தப் பதிப்பிற்குமிகவும்உதவின: இந்தயுத்தகாண்டத்திற்கு உரையெழுதி வெளிப்படுத்தவேணுமென்றுகருதியிருக்கையில் எனது உத்தியோக சாலையில் தலைவராயுள்ள திருவாளர் S. வையாபுரிப்பிள்ளை B.A,B. L. அவர்கள்தாம் பலஏட்டுப்பிரதிகளையொப்புநோக்கிப் பாடபேதங்களைக் குறித்துவைத்திருந்த தமதுபுத்தகத்தைத் தந்ததோடு சிலஏட்டுப்பிரதிகளையும் தந்தனர். அன்னார்புரிந்த உதவிதான் பலவகைப்பாடபேதங்களோடு இந்த யுத்தகாண்டத்தை உரைகண்டுஎழுதுவதற்குப் பெருங்காரணமாயிற்று. ஆதலால், இவர்கள்செய்த உதவிக்காக யானும் இப்பதிப்பாற்பயனை நுகர்வோரும், இவர்கள்திறத்து நன்றிபாராட்டக்கடமைப்பட்டுள்ளோம்.

இந்தயுத்தகாண்டத்திற்குஉரையெழுதி அச்சிட்டு வெளிப்படுத்துகையில், தமக்கு அவகாசமுள்ள நேரங்களில் எழுதியும் ஒப்புநோக்கி

யும் அச்சுப்பிழைபார்த்தும்உதவியவர்கள் சிரஞ்சீவிகளான M. R. ராம மூர்த்தி-சர்மாவும், கா. ப. வேங்கடகிருஷ்ணமாசார்யரும்.

பெரியோரிடத்துக் கற்றுங் கேட்டுமுள்ளவற்றில் மறப்பெனும் பகைவன் வாரிக்கொண்டதொழிய அவன்கையிலகப்படாதபடி நெஞ்சென்னுந் துணைவன் நிறுத்திவைத்துக்கொண்டு எழுதிய இந்த உரையில் சிறப்புக்கள் காணப்படின் அவை எனது ஆசிரியர்முதலியோருடையனவென்றும், குற்றங் காணப்படின் அவை என்னுடையனவென்றும் கருதுக. என்னுடையதிரிபுணர்ச்சி சோர்வு அறியாமைமுதலியவற்றால்இவ்வுரையிற்காணக்கூடிய குற்றங்குறைகளை விவேகிகள்பொறுப்பதன்றித் தாம் கண்ட அக்குறைவுகளையேனும், அடியேனுக்குப்புலப்படாத அரிய பெரியவிஷயங்களையேனும் எடுத்துத் தெரிவிப்பாராயின், அவர்களிடத்துப் பெருமகிழ்வோடு நன்றிபாராட்டி அவ்விஷயங்களைச் சமயம்வாய்க்கும்போது தமிழுலகிற்குப் பயன்படுமாறு பிரசுரமுஞ் செய்வேன்.

எமதுஉரைகளை உபயோகித்தும் உபயோகிக்குமாறு தூண்டியும் எமக்குஊக்கத்தை விளைத்துவருகிற மகான்கள்திறத்தில் என்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

காப்பியச்சிரேட்டமாகிய இந்தக்கம்பராமாயணத்துக்கு உரையெழுதுமாறு சிற்றறிவுடைய சிறியேனுக்கு விருப்பையுண்டாக்கி ஆறு காண்டங்கட்கும் உரை முற்றுமாறு தோன்றாத்துணையாய்நின்று திருவருள்புரிந்த ஸ்ரீராமபிரானது திருவடித்தாமரைகளை என்றுங் கருத்திற்கொண்டு வழுத்துவேன்.

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்

வை. மு. கோபாலக்ருஷ்ணன்.

# பிழைத் திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 48 | 38 | அவளே | அவளேமுன் |
| 57 | 28 | அரக்கள் | அரக்கர்கள் |
| 64 | 18 | அவைகள் | அவைகளின்வலி |
| ,, | 39 | வேள்றுள | வேறுள்ள |
| 93 | 32 | பழகு | பழக்கு |
| 120 | 17 | கைதவநீவ | கைதவநீ |
| 121 | 5 | (10) | (108) |
| 148 | 21 | ணொரு | னொரு |
| 191 | 24 | ‘திங் | தங் |
| 192 | 36 | புகை | பகை |
| 193 | 26 | | நமமைப்போன்றவரின் |
| 195 | 18 | திருட்டத் | திருட்டுத் |
| 226 | 20 | நெருங்கின | நெருங்கி |
| 238 | 26 | அழிந்த | இழிந்த |
| 242 | 10 | விகாயம் | விகாசம் |
| 243 | 15 | து. அநுமா | து அவ |
| 276 | 31 | செம்யும் | செய்யும் |
| 283 | 32 | நாற்பத்திரண்டு | முப்பத்தொன்பது |
| 305 | 13 | அன்பால் | அன்பால |
| ,, | 18 | நின்றனை | நின்றணை |
| 308 | 29 | தக்கணார் | தக்கனார் |
| 341 | 29 | நன்னகர்4 | 4நன்னகர் |
| ,, | 33 | அழகு | பொன்னினாலும் மணியி [னாலும் அழகு |
| 350 | 39 | (அவண | (அவ்விராவண |
| 352 | 15 | ஞ்சலி | அஞ்சலி |
| ,, | 27 | எண்ணிட | எண்ணிடம் |
| 355 | 23 | கடத்தில் | கட்டதில் |
| 359 | 38 | பழமொழி | பழிமொழி |
| 361 | 18 | பணை | பனை |
| 365 | 26 | சேர்ந்து | சோர்ந்து |
| 369 | 30 | தேவதி | தேவவதி |
| 391 | 36 | மற்றவன் | மற்றவன |
| 418 | 18 | குறித்தது | குறித்து |
| 420 | 20 | வாயிலிலும் | வாயிலில் |
| 430 | 11 | தலைதேவர் | தலைவர் |
| 431 | 8 | பறந்து | பரந்து |

# பிழைத்திருத்தகம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 431 | 28 | கூரிய | கூறிய |
| 441 | 15 | 5எண்ணில் | |
| 476 | 34 | பொங்கும் | பொங்கிமீ |
| 516 | 26 | கொடுங் | கொடித் |
| 539 | 12 | அநுமானால் | அநுமான் |
| 540 | 20 | தூணவின்ற | தூநவின்ற |
| 555 | 29 | வானரர் | வானர |
| 559 | 20 | சேர்ந்தார் | சேர்ந்தான் |
| 560 | 24 | வெற்றிழ்கு | வெற்றிக்கு |
| 572 | 23 | வானான்ற | வான்ற |
| 578 | 11 | களுத | யங்களுத |
| 580 | 32 | வலிய | வலியு |
| 586 | 35 | முதலியநான்கும் | குடர் |
| 608 | 19 | வழங்கு | வழங்குங் |
| 634 | 28 | பர | பரண |
| 639 | 19 | சுமித்திரைச் | சுமித்திரை |
| 640 | 2 | திரைப்பச் | திரைப்ப |
| 647 | 38 | தொளையைக் | தொளையிலே |
| 668 | 10 | ஆர்த்தனே | ஆர்த்தன |
| 686 | 27 | நகரிலி | நகரி |
| 707 | 17 | வீழ்து | வீழ்ந்து |
| 708 | 34 | யானுள | யானுளன் |
| 741 | 9 | இராவணனார் | தாம் |
| 768 | 40 | சிந்த | சிந்தின |
| 772 | 37 | உலகத்தில் | உகத்தில் |
| 779 | 35 | லலிய | வலிய |
| 787 | 28 | வெளிவிளக் | வெளிலிளக் |
| 793 | 19 | யுழிழ் | யுமிழ் |
| 807 | 27 | தர | வய |
| 824 | 8 | இமிசி | இமிசை |
| 828 | 9 | கிருந்து | கிழிந்து |
| 833 | 9 | 2விழ | |
| ,, | 10 | ருள | 2 ருள |
| 869 | 11 | இயைான | இரையான |
| 874 | 35 | சுவடெறிந்தது | |
| 962 | 36 | யெரு | யொரு |
| 994 | 16 | தம்பி | தப்பி |

முற்றும் காணப்படினுந் திருத்திக்கொள்க.



ஸ்ரீ

# கம்பராமாயணம்

ஆறாவது

## யுத்தகாண்டம்

இவ்வடமொழித்தொடர் - கதாநாயகனான இராமபிரான் தன் பகையான இராவணனைப் போரிற்கொன்றுவென்றதைக் கூறும் பாகமென்று பொருள்படும். யுத்தத்தைப்பற்றிய காண்டமென இரண்டாம் வேற்றுமையுருபும் பயனு முடன்றொக்கதொகையாக விரிக்க. உகரத்தை முன்னர்ப்பெய்து உயுத்தகாண்டம் என வழங்குவதும் உண்டு. சுந்தரகாண்டத்திற் பரம்பொருளான திருமாலினிடத்திற் சேர்ப்பிப்பதற்குப் புருஷகாரபூதனான ஆசார்யனுடையசெயல் கூறப்பட்டது; இந்தக்காண்டத்தில், அங்ஙனம் புருஷகாரஞ் செய்யப்பெற்ற சேதநனை ஸித்தோபாயமான பரம்பொருள் தான் முயன்று பெறும்வகை கூறப்படுகின்றதென்பர்.

### கடவுள் வாழ்த்து.

ஒன்றே யென்னி னொன்றேயாம் [1]பலவென் றுரைக்கிற் பல
வேயாம், அன்றே யென்னி னன்றேயாம் [2]ஆமென் றுரைக்கி
[3]னாமேயாம், இன்றே யென்னி னின்றேயாம் [4]உளதென் றுரைக்கி
னுளதேயாம், நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கிங் கென்னே
[5]பிழைப்பம்மா.

(இதன் பொருள்.) ஒன்றே என்னின் ஒன்றே யாகும்: பல என்று உரைக்கின் பலவே ஆகும்; இன்னபடி அன்று என்னின் அன்றேயாம்: இன்னபடியாகுமென்று உரைக்கின் ஆமென்பதேயாம்; இன்று என்னின் இன்றே ஆகும்: உளது என்று உரைக்கின் உளதே ஆம்; (இவ்வண்ணம் ஒருபடிப்பட்டிராமையால்), அந்தக்கடவுளது குடிவாழ்க்கை நன்றே; அம்மா! இங்கு நமக்கு (இவ்வாறுள்ள பொருளை அறிந்து) பிழைப்பது எவ்வாறோ? (என்றவாறு.)

கடவுளென்பது ஒருபொருளே யாதலால், ஒன்றென்றுரைப்பதற்கும் ஏற்றதாகும்: அந்தப்பரம்பொருள் எல்லாப்பொருளிலும் எள்ளினுள்எண்ணெய் போலக் கரந்து எல்லாப்பண்டங்களின் வடிவாயு மிருத்தலின் பலவென்று சொல்லுதற்கும் ஏற்றதாகும். இக்கருத்தை “ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுள்நின்ற நன்றெழில் நாரணன்” என்று நம்மாழ்வார் அருளிச்செய்திருத்தல் காண்க. உலகத்திற் காணப்படும் ஒவ்வொரு பொருளையிட்டு, ‘கடவுள் சூரியன்போன்று இருப்பனோ? சந்திரன்போன்று இருப்பனோ? வாயுபோன்று இருப்பனோ?’ என்றாற்போல வினவினால், ‘உலகத்திற் காணப்படும் எப்பொரு

ளைப்போலவும்உள்ளதன்று அப்பொருள்' என்றுஉரைக்கவேண்டியிருத்தலால், 'அன்றேயென்னினன்றேயாம்' என்றும், அந்தச்சூரியன் முதலிய பொருள்களிடத்துள்ளபேரொளியுடைமை, குளிர்ந்திருக்கை எங்குஞ்சென்றிடுந்தன்மை முதலியகுணங்கள் நிரம்பியிருப்பது குறித்து 'சூரியன்போல் ஒளியுள்ளவனாயிருப்பனா?' என்பது முதலியனவாக வினவின், ஆம் என்று சொல்லுதற்கு ஏற்றிருத்தலால், 'ஆமென்றுரைக்கின் ஆமேயாம்' என்றும் கூறினார்.

கடவுள்இல்லையென்பார்க்கு அக்கடவுள் இன்று என்பதற்குக் கருத்தாவாய்த் தான் தோன்றுதலால், 'இன்றே யென்னினின்றேயாம்' என்றும், 'கடவுள்உளதுஎன்னின் உளதாய்த்தோன்றுதலின், 'உளதென்றுரைக்கினுளதேயாம்' என்றும் கூறினார்: இவ்வடியின் கருத்தை ''உளனெனிலுளனவனுருவமிவ்வுருவுகள்,உளனலனெனிலவனருவமிவ்வருவுகள்,உளனெனவிலனெனவிவ்வகுணமுடைமையி, னுளனிருதகைமையோ டொழிவிலன் பரந்தே'' என்ற நம்மாழ்வார் பாசுரத்திலும் அதன் வ்யாக்யானங்களிலும் விரிவாகக் காண்க. கடவுளைக் கூறுமிடத்து இவ்வண்ணம் மாறுபட்டதன்மைகள் ஒருங்கேயமைந்தனவாகக் கூறவேண்டியிருத்தலால், 'நன்றேநம்பி குடிவாழ்க்கை' என்று வியந்துகூறினார். 'இப்படிப்பட்ட கடவுளின் தன்மையை நன்கு உணர்ந்து ஈடேறுதல் ஞானிகளுக்கு அன்றி, புல்லறிவினராகிய நமக்கு எவ்வாறு இயலும்?' என்ற கருத்தினால் 'நமக்கு இங்கென்னோ பிழைப்பு' என்றது. இதனால், அப்பிரான் நம்மைத் தன் தண்ணளியாற் பாதுகாப்பின் உய்யலாமேயன்றி,நாம் அறிந்து ஈடேறுவோமென்பது இயலாதென்ற கருத்து விளக்கப்பட்டது. பி-ம்:—[1]பலவேயென்னிற். [2]ஆமே யென்னின். [3]ஆமேயாய். [4]உளதென்றியம்பின், உளதென்றெண்ணின். [5]பிழையம்மா. (௩)

---

## க-ஆவது கடல்காண் படலம்.

இராமபிரான் கடலைக் கண்ணுற்றுக்கண்டதைக் கூறும் படலமென்பது, பொருள். இராமபிரான் கடலைக் கண்ணுற்றுக்கண்டதையும், அதனால் அயருற்றதையும் இத்தப்படலம் கூறும்.

க.—கடற்கரையில் எழுபதுவெள்ளச் சேனை தங்குதல்.

ஊழி [1]திரியும் காலத்து மலையா [2]நிலைய வுயர் கிரியும்
வாழி வற்றா மறிகடலு மண்ணும் வடபால் வான்றோயப்
பாழித் தெற்குள் ளன [3]பொருப்பும் [4]நிலனுந் தாழப் பரந்தெழுந்த
ஏழு பத்தின் பெருவெள்ள மகர வெள்ளத் திறுத்ததால்.

(இ - ள்.) ஊழி திரியுங்காலத்தும் அழியாத நிலைமையுடைய உயர்கிரியும் வற்றாத (அலை)மறிகின்ற கடலும் மண்ணும் வடதிசையில் வானில்தோயவும், தெற்குஉள்ளனவான பாழிப்பொருப்பும் நிலனும் தாழவும், பரந்தெழுந்த எழுபத்தின்பெருவெள்ளம் மகரவெள்ளத்துத் தங்கியது; (எ - று.)

வெள்ளம் வெள்ளத்துஇறுத்தது எனச் சமத்காரங் காண்க. தென்திசைக் கடற்கரையில் எழுபதுவெள்ளம்வானரப்படை தங்கியதனால் அந்தப்பாரத்தைத் தாங்கமாட்டாது தென்திசைதாழ, வடதிசையிலுள்ள இமவான் போன்ற பெருமலைகளும் வடகடலும் வடதிசைப்பூமியும் வானில்தோய்வன வாயினவென்க. முதலிலுள்ள வெள்ளம் - பெருந்தொகை: அத்தொகையைக் கொண்ட சேனைக்கு ஆகுபெயர். இரண்டாவதுவெள்ளம்-கடல்: இங்கே, கடலைச் சார்ந்தஇடத்துக்கு இலக்கணை. ஊழி திரியுங் காலம் - பிரளயத்தால் உலகம் முடியுங்காலம். வடபால், பால்-ஏழனுருபு. வான்-ஆகாயம். பாழி-வலிமை. இறுத்தல்-தங்குதல். வாழி - அசை: வாழ்தலையுடையஎனினுமாம். வெள்ளம்-மிசப்பல அக்ஷௌஹிணிகொண்டது; (யானையொன்றும் தேரொன்றும் குதிரை மூன்றும் காலாள்ஐந்துங் கொண்டது - பத்தியெனப்படும்; பத்திமூன்று கொண்டது - சேனாமுகம்: சேனாமுகம்மூன்று - குல்மம்: குல்மம்மூன்று - கணம்: கணம்மூன்று - வாகினி: வாகினிமூன்று-பிரதனை; பிரதனைமூன்று - சமூ; சமூ மூன்று - அனீகினி; அனீகினிபத்து-அக்ஷௌஹிணி;) அக்ஷௌஹிணி எட்டுப்பங்குகொண்டது - ஏகம்; ஏகம்எட்டு - கோடி; கோடிஎட்டு - சங்கம்; சங்கம்எட்டு-விந்தம்; விந்தம்எட்டு - குமுதம்; குமுதம்எட்டு - பதுமம்; பதுமம் எட்டு - நாடு, நாடுஎட்டு - சமுத்திரம்; அந்தச்சமுத்திரம் எட்டுப்பங்குகொண்டது-வெள்ளம் என விவரம் காண்க. பி-ம்:—[1]ஒத்த, உற்ற. [2]நிலையும், நிற்கும். [3]திரியும். [4]நிலமூழ் தாழுங் கீழுழுந்த. (உ)

உ.—இராமபிரான் கடலைக் காணுதல்.

பொங்கிப் பரந்த பெருஞ்சேனை புறத்து மகத்தும் புடைசுற்றச்
சங்கிற் பொலிந்த [1]தகையாளைப் பிரிந்த பின்பு தமக்கினமாங்
கொங்கிற் பொலிந்த தாமரையின் குழுவுந் துயில்வுற் றிதழ்குவிக்குங்
கங்குற் பொழுதுந் துயிலாத கண்ணன் கடலைக் கண்ணுற்றான்.

(இ - ள்.) சங்கைப்போல விளங்குகின்ற [பரிசுத்தமான] தன்மையையுடையவளான சீதையைப் பிரிந்தபின்பு, தங்கட்குஇனமாகிய தேனோடு விளங்குகின்ற தாமரைக்கூட்டம்முழுவதும் தூங்குவதையடைந்துஇதழ்களைக் குவிக்கப்பெற்ற இராப்பொழுதிலும் தூங்காத கண்களையுடையவனான ஸ்ரீராமன், மகிழ்ச்சிகொண்டு பரவியிருந்த பெரியசேனை வெளியிலும் மனத்துள்ளும் புடைபெயர்ந்து திரிந்துகொண்டிருக்க, கடலைப் பார்த்தான்; (எ - று.)

இராமபிரானது திருக்கண்கட்குச் செந்தாமரை உவமையாமாதலால்,'தமக்கினமாந்தாமரை' என்றது. 'தாமரையின்குழுவுந் துயில்வுற்றிதழ்குவிக்கும்' என்பது, கங்குற்பொழுதுக்கு அடைமொழி: இதுகூறியது, உவமானப்பொருள்குவியவும் உவமேயப்பொருள்குவியவில்லையேயென்றநயந்தோன்ற. விரகவேதனையால் இராமபிரான் கண்ணுறங்காதயினனென்க. பிரிவுத்துயரால் உடம்பு வெளுத்துப்போயிருத்தல்பற்றி, சங்கிற்பொலிந்ததகையாளென்றனரென்னலுமாம். சேனை கடற்கரையிற் சுற்றித்தங்கியிருந்ததென்பார் 'பெருஞ்சேனைபுறத்துப் புடைசுற்ற'என்றும், பெருஞ்சேனைகளை எவ்வண்ணஞ்செலுத்

திப்பகைவெல்வதென்ற சிந்தனையை மனத்திற்கொண்டுள்ளானென்பார் 'பெ ருஞ்சேனை அகத்துப்புடைசுற்ற' என்றும் கூறினர். பி-ம்:—[1]கையானே. (௩)

ந.—கடலின்திரைப்பரப்பின் வருணனை.

சேய காலம் பிரிந்தகலத் திரிந்தான் மீண்டுஞ் சேக்கையின்பால்
மாயன் வந்தா [1]னினிவளர்வா னென்றா [2]கருதி வருந்தென்றல்
தூய [3]மலர்போல் நுரைத்தொகையு முத்துஞ் சிந்திப் புடைசுருட்டிப்
[4]பாய லுதறிப் படுப்பதே யொத்த திரையின் பரப்பம்மா.

(இ - ள்.) (அக்காலத்துத்) திரையின்பரப்புவடிவாயுள்ளகடலானது;— 'வெகுகாலம்பிரிந்து அகலத்திரிந்தவனாகிய மாயன் படுக்கையி லின்பங்கொண்டு மீண்டும்வந்துஉள்ளான்: இனிக் கண்வளர்வான்' என்று எண்ணமிட்டு, வீசுகின்றதென்றற்காற்றினால் தூய[வெண்மையான]மலரைப்போன்ற நுரைத்தொகுதியையும் முத்துக்களையுஞ் சிந்தியவண்ணம் (அவனது) அப்பாயலை உட்புறத்துச்சுருட்டி (ப் பின்பு)உதறிப் பரப்பியதைப் போன்றது; (எ - று.)

தென்றலால் அலையைப்பரப்பியது, திருமாலினது படுக்கையைக் கடல் தென்றலைக்கொண்டு உதறி விரிப்பதுபோலு மென்றார்: தன்மைத்தற் குறிப்பேற்றவணி. பாயையுதறுகையில் அப்பாயலிற் சிந்தியுள்ளமலர்களும் அணிகலங்களின்முத்துக்களும் வெளியேவிழுவதுபோல, அலையாகிய படுக்கையினின்று நுரைகளும் முத்துக்களுஞ் சிந்தினவென்க. பிரிந்து அலுத்துவந்தவர்கட்கு இளைப்பாறுமாறு பணியாளனைக்கொண்டு பாயலையுதறிப்பரப்புந்தன்மையைக் கடலிடத்துஏற்றிக்கூறினர். அந்தச்சமுத்திரம் மாமனாராதலால் உபசரித்தற்குஏற்றதாதல்காண்க. திரைப்பரப்பு - திரையின்பரப்பையுடையது எனக் கடலுக்குக் காரணக்குறி. இன்பு = இன்பம். சேக்கையின்பால் - சேக்கையினிடத்துஎன்று உரைப்பாருமுளர். சேக்கை-படுக்கை. பி-ம்:—[1]கண். [2]கருதா. [3]கமலப் பசுந்தேறல்.மலர்போல்நுரை சிந்தி. [4]பாய்தல்.

ச.—சிதறுங் குறுந்திவலையின் வருணனை.

வழிக்குங் கண்ணீ ரழுவத்து வஞ்சி [1]யழுங்க வந்திக்க, பழிக்
கும் காமன் [3]பூங்கணைக்கும் [4]பற்றா நின்றான் [5]பொற்றோள்கள், கழிக்
குங் கொல்ல [6]னுலையிற் றெறிக்கும் பொறியிற் சுடு[7]மன்றே, கொழி
க்குங் கடலி னெடுந்திரைவாய்த் தென்றல் தூற்றுங் [8]குறுந்திவலை.

(இ-ள்.) (சங்கு முதலிய பொருள்களைக்) கொழிக்கின்ற சமுத்திரத்தின் பெரிய அலைகளினின்று தென்றற்காற்றால் சிதறப்படுங் குறுந்திவலைகள்.— பெருக்குகின்ற கண்ணீர்க்கடலிலே வஞ்சிக்கொடிபோன்ற சீதை வருந்திக் கொண்டு நிற்றலால் (தனக்கு) சேர்ந்துள்ள பழிக்கும் மன்மதனது மலரம்புகளுக்கும் இலக்காகிநின்றவனான ஸ்ரீராமனது அழகிய தோள்களை. (கார்மை வெளிப்படுத்துகின்ற கொல்லனுடைய ஊதுகின்ற உலைக்களத்திலே நின்று மேலெழுகின்ற தீப்பொறிபோலச் சுடாநிற்கும்;அந்தோ! (எ - று.)

தென்றல் வீசுந்திவலை, இராமபிரானது தோளிற்பட்டுத் தீப்பொறி போலச் சுடுமென்க. இராமபிரான் மகாவீரனாதலாலும், வீரத்தை 'தோள் வலிமை' என்று கூறுபவாதலாலும் அத் தோளைத் திவலை சுடுமென்றார்; வீரத்தைத் துயரம் வென்றதென்க. வந்தடுத்தபழி-தன் மனைவியை நடுக்காட்டிற் பகைவனது கையிற் காட்டிக்கொடுத்தானென்பது. அழுவம்-கடல். அன்னோ-இரக்கக் குறிப்பு. பி-ம்:—[1]அழுந்த, வருந்த. [2]அடர்ந்த, அடைந்த. [3]படுகொலைக்கும். [4]பற்றான். [5]பொற்றோண்மேற். [6]ஒல்லுலையிற். [7]அந்தோ, என்னோ, என்னே. [8]கொடுந்திவலை. (ரு)

ரு.—தென்றலினது தன்மை.

றென்னற் கண்ட [1]திருமேனி யின்று பிறிதாய் நிலைதளர்வான்
றன்னைக் கண்டு மிரங்காது தனியே கதறுந் தடங்கடல்வாய்ப்
பின்னற் றிரைமேற் றவழ்கின்ற பிள்ளைத் தென்றல் [2]கள்ளுமிழ்க்கும்
புன்னைக் குறும்பூ நறுஞ்சுண்ணம் பூசா [3]தொருகாற் போகாதே.

(இ - ள்.) நேற்றுப்பார்த்த உடம்பு இன்று [அடுத்தநாள்] (இது)வேறோருடம்பு என்று சொல்லுமாறு ஆகி [மிகவும் இளைத்துப்போய்] (உடம்பின்) நிலைமை தளரப்பெற்றவனான இராமபிரானைக்கண்டும் இரக்கங்கொள்ளாமல் தான் தனியேநின்று பேரொலிசெய்து வருத்தத்தை மிகுவிக்கின்ற பெரிய கடலினிடத்து, ஒன்றோடொன்றுபிணைந்த வண்ணந் தோன்றுகின்ற அலைகளின்மீது ஊர்ந்துகொண்டுவருகின்ற மெல்லிய தென்றற்காற்றானது, தேனையுமிழ்கின்ற புன்னையின் குறிய மலர்களினுடைய நறுமணமுள்ள மகரந்தப் பொடியை மேலே ஒருதரமாவது பூசாமற் போகாது; (எ - று.)

கடலோசை தென்றல் முதலியன ஒவ்வொன்றும் பிரிந்தார்க்கு வருத்தத்தை விளைப்பன வென்பர். இராமனது நிலைமைபைக்கண்டால் இரக்கங்கொண்டு கடல் ஒலியாதிருக்கலாமே: அதுவோ அங்ஙனம் ஒலியாமலிருப்பதில்லை: கடலொலித்தாலும் தென்றற்காற்றாவது இராமபிரான்மேல் வீசாதிருக்கலாமே; அதுதான் வீசட்டும்: அத்தென்றல் கடலில் திரைத்திவலையை யளைந்தவண்ணம் வந்து புன்னைமலர்களின் மகரந்தப்பொடியைப் பூசாமலாவது இருக்கலாமே; அது அவ்வண்ணம் வாளாவிராமல் திரைமேல்தவழ்ந்துவந்துபுன்னை மலர்ச் சுண்ணத்தையும் இராமபிரான்மீது பூசி அப்பிரானது உயிரை மாய்க்க வருகின்றதே! அந்தோ!! என்று கவி இரங்கிக்கூறியவாறு. பூசாது போகாது- இரண்டு எதிர்மறைகள் உடன்பாட்டுப்பொருளை வற்புறுத்தின: ஏகாரம்-இரக்கம். கடல் திருமகளை யளித்தவனாகி இராமபிரானுக்கு மாமனுவனாதலால், அக்கடல் இராமனைக் காணும்போது 'நின்னருமைத்தேவியை நீங்கினையோ?' என்று வினவி உடன் அழவேண்டியதாயிருக்க அங்ஙனஞ் செய்யாது என்று 'இரங்காது' என்ற சொற்குக் கருத்து விரித்துரைப்பர். பிள்ளைத்தென்றல்-மைத்துனப்பிள்ளையாகிய தென்றலென்றலு முண்டு. தென்றலைப்பிள்ளையென்றதற்கேற்பத் தவழ்கின்றஎன்றுகூறியநயம் பாராட்டத்தக்கது. பி-ம்:—[1]திருமேனிக்கின்று. [2]பெரிதாக. [3]ஒருபாற். (சு)

௬.—கடற்கரையில் தோன்றிய கொடிப்பவளவருணனை.

சிலைமேற் கொண்ட திருநெடுந்தோட் குவமை மலையுஞ் சிறி
தேய்ப்ப, நிலைமேற் கொண்டு மெலிகின்ற நெடியோன் றன்முன் படி
யேழுந், தலைமேற் கொண்ட கற்பினாள் மணிவா [1]யென்னத் தனித்
தோன்றிக், கொலைமேற் [2]கொண்டா ருயிர்குடிக்குங் [3]கூற்றங் கொல்
லோ [4]கொடிப்பவளம்.

(இ - ள்.) (கடற்கரையிலே) கொடியாய்ப்படர்ந்துள்ள பவளமானது,—வில்லைத்தாங்கிய அழகிய (தனது)பெரிய தோளுக்கு உவமையாக மலையும் சிறிது ஒத்திருக்குமாறு (துயர) நிலையைமேற்கொண்டுமெலிவையடைகின்ற பெருமையையுடையஇராமன் முன்னே, ஏழுலகத்தவர்களும் சிரமீது கொண்டு கொண்டாடுகின்ற கற்பையுடையவளான சீதாபிராட்டியின் அழகிய வாய்போலத் தனியே தோன்றிக் கொல்லுதற்றொழிலை மேற்கொண்டு (இராமனது) அரிய உயிரைக் குடிக்கின்ற யமனோ? (எ - று.)

இதனால், கடற்கரையில் தோன்றியுள்ள கொடிப்பவளம்,—சீதையின் செவ்வாய்போலத்தோன்றி இராமபிரானுக்குப் பிரிவுத்துயரை மிகுவித்ததலைக் கூறுகின்றார். பிரிவுத்துயரால் மிகவும் மெலிந்திருத்தல்பற்றி, தோளுக்கு மலை இப்போது சிறிதாவது உவமையாதற்கு ஏற்றதாயிற்று: சீதையினுடன் இராமபிரான் இருந்தகாலத்தோ அப்பிரானது தோள்கள் மலையும் தமக்கு உவமையாகாதவாறு ஓங்கிநிற்கு மென்னுங் கருத்துப்பட, 'திருநெடுந்தோட் குவமைமலையுஞ்சிறிதேய்ப்ப நிலைமேற்கொண்டு மெலிகின்ற நெடியோன்' என்றார். கொடிப்பவளத்தை,வருத்துந் தன்மையால் 'கூற்றங்கொல்லோ' என்றார்: தற்குறிப்பேற்றவணி. பிரசித்தமான உபமானமாகத் தோளுக்குக் கூறப்படும் மலையைமுற்றுவமையாதற்கு ஏலாதென்றதும், வாயென்னப் பவளந்தோன்று மென்றதும் - எதிர்நிலையுவமையணியின்பாற்படும். பி - ம்:—[1]நினையத், எள்ளத். [2]கொண்டது. [3]கூற்றுக்கென்னோ. [4]கொழும்பவளம். (௬)

௭.—முத்தைக்குறித்து இரங்குதல்.

தூர மில்லை மயிலிருந்த சூழ லென்று மனஞ்[1]செல்ல
[2]வீர வில்லி [3]னெடுமானம் [4]வெல்ல நாளு [5]மெலிவானை
ஈர மில்லா நிருதரோ டென்ன [6]வுறவுண் டுனக்கேழை
மூரன் முறுவற் குறிகாட்டி முத்தே [7]யுயிரை முடிப்பாயோ.

(இ - ள்.) (கடலில்தோன்றிக் கரையிலே யொதுங்கிய) முத்தே! மயில் போன்ற சாயலையுடையளான சீதை தங்கியிருக்கின்ற இடம் நெடுந்தூரத்தி லில்லை யென்ற காரணத்தால் மனம் (அவளிடத்துச்) செல்லப்பார்க்கவும், வீரத்தைக்காட்டுதற்குரிய வில்லினாற் பாதுகாக்கக்கூடிய சிறந்த மானம் (பகைவனையொழியாது அவனது இடத்திலிருப்பாளிடத்துச் செல்லலாகாது என்று அந்த மனத்தைத்) தடுக்கவும், நாடோறும் (பிரிவுத்துயரால்) மெலி பவனான இராமபிரானை, பேதைமைக்குணமுள்ள சீதாபிராட்டியின் பல்லொளி

வெளித்தெரிகின்றபுன்சிரிப்பின்நிலையைத் தோற்றுவித்து உயிரைமுடிக்கக் கடவையோ? இரக்கமில்லாத அரக்கரோடு உனக்குயாதுஉறவுஉள்ளது? (எ-று.)

இதனால், முத்துக்கள் சீதையின்முறுவல்போல்தோன்றி இராமபிரானுக்கு வருத்தத்தைவிளைப்பதைக் கருதிய கம்பர், தாம் பிற்காலத்து இராமபிரானது சரித்திரத்தைக் கூறவந்தகவி யென்பதையும் மறந்து நேரே சரித்திரம் அப்போதுதான் நடப்பதுபோன்ற பாவனையைப் பெற்று, 'முத்தே! நீ இங்ஙனம் சீதையின் மூரன்முறுவலைக்காட்டி இராமபிரானதுஉயிரைக் கவரக் கடவையோ? உனக்கு அரக்கரோடுஏதேனும் உறவுஉண்டோ?' என்று வினவுகின்றன ரென்க. இனி, இராமபிரான் முத்துக்களைக்கண்டு இங்ஙனம் இரங்கிக்கூறுகின்றானென்றலும் ஒன்று. இராவணனைச் சேர்ந்தவரான அரக்கர் இராமபிரானுக்குப் பகைவ ராதலால், அவர்கள் இப்பிரானுக்கு வருத்தத்தை விளைக்கலா மென்க. நிருதர் - நிருருதியென்னுந்திக்பாலகியின் மரபில்தோன்றியவ ரென்ற காரணம்பற்றி, அரக்கர்க்குப் பெயர். மயில், ஏழை - ஆகுபெயர்கள். பி-ம்:—[1]சொல்ல. [2]வீரனினைந்து, வீரகினைந்து. [3]பிரிவெண்ணி. [4]எல்லா, வெல்லா. [5]மெலிவேனை, மெலிவானுக்கு. [6]அடைவுண்டு. [7]உலகை. (அ)

அ.—இதுமுதல் மூன்றுகவிகள் - கடலின்வருணனை.

இந்து [1]வன்ன நுதற்பேதை [2]யிருந்தாள் நீங்காவிடர் கொடியேன்
தந்த பாவை [3]தவப்பாவை தனிமை தகவோ வெனத்தளர்ந்து
சிந்து கின்ற நறுந்தரளக் [4]கண்ணீர் ததும்பித் [5]திரைத்தெழுந்து
[6]வந்து வள்ளல் [7]மலர்த்தாளின் வீழ்வ [8]தேய்க்கு [9]மணியாழி.

(இ - ள்.) அழகிய சமுத்திரமானது (இராமபிரான்தாளில் தன் நீர்படும் படி அலைவீசிவிழுவது),—'சந்திரன்போலும் நெற்றியையுடைய சீதையென்னும்பெண் நீங்காதஇடரில் இருந்தாள்: கொடும்பாவத்தைப்புரிந்த நான் பெற்றபாவையும் கற்புடைப்பாவையுமானஇவள் (இங்ஙனம் எதிராளியிடத்தில்) தனிமையாக இருத்தல் தகுதியோ?' என்று மனம்வருந்தி, வழிகின்ற சிறந்தமுத்துக்களாகிய கண்ணீர் ததும்பப்பெற்றும், திரைத்தெழுந்தும் வந்து இராமபிரானது தாமரைத்தாளில் வீழ்ந்து (அவளதுஅத்தனிமையைநீக்கு மாறு) வேண்டுவதை யொத்திருக்கும்; (எ - று.)

இலக்குமி திருப்பாற்கடலினின்று திருவவதரித்தவளாதலாலும், சீதை இலக்குமியின்அமிசமாதலாலும், உவர்க்கடலும் கடலென்றஒப்புமைபற்றிப் பாற்கடலோடு தன்னை அபேதமாகக்கொண்டு 'கொடியேன்தந்தபாவை'என்ற தாகக் கூறினார்: பெற்றபெண் மாற்றான்கையிலகப்பட்டு வருந்திநிற்கக் காணுந் தீவினையையுடைமையால் 'கொடியேன்' என்றது. இராமபிரான் கடற்கரையைச்சேர்கையில் கடலின்அலை மடங்கிவீழ்வதனை, கம்பர் இங்ஙனங் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி: இதற்கு, தரளக்கண்ணீரென்ற உருவகவணி அங்கமாகி நின்றது. தவம் - கற்பு: மகளிர்க்கு அதுவே சிறத்தல் காண்க. பி-ம்:—[1]வன்னம், [2]இருந்துண்ணீங்காதிடைக், இருதாணீங்காதிடர்க்.

[3]தன்றனிமை தகவோ வென்னத்தான். [4]கண்ணீர்த்தாகி, [5]திரைத்தோடி. [6]வந்த. [7]மணித்தாளின், மலரடிமேல். [8]போன்ற. [9]மறிகடலே. (கூ)

கூ. பள்ளி [1]யாவிற் பேருலகம் [2]பசுங்கல் லாகப் பனிக் [3]கற்றை
[4]துள்ளி [5]நறுமென் புனல்தெளிப்பத் தூநீர்க் குழவி முறை[6]சுழற்றி
வெள்ளி வண்ண நுரைக்கலவை வெதும்பு [7]மண்ணல் [8]திருமேனி
யள்ளி யப்பத் திரைக்கரத்தா லரைப்ப தேய்க்கு மணியாழி.

(இ - ள்.) அழகியகடலானது,— (திருமாலின்) படுக்கையாகிய ஆதி சேஷனது தலையின்மீது தங்கியுள்ளபெரியஉலகமே (அரைத்தற்குஉரிய) கருங்கல்லாக [அம்மியாக], பனித்தொகுதித்துளியாகிய நறுமணமுள்ளமெல் லியநீரை(க் காற்று) தெளிக்க, தூயநீராகியகுழவியை (அரைக்கவேண்டிய) முறைமையாக மடக்கிமடக்கியரைத்து, வெண்ணிறத்தைக்கொண்ட நுரை யாகிய கலவைச்சாந்தை(ச் சீதையின்பிரிவுத்துயரால்) வெப்பமடைந்துள்ள இராமபிரானது திருமேனியிலே (அவ்வெப்பந்தணியுமாறு) அள்ளியப்பும்பொ ருட்டுத்திரையாகிய கையால் அரைப்பதை யொத்திருக்கும்; (எ - று)

கடலைச் சந்தனமரைப்பவனாகவும், கடலிருக்கின்றதரையை அம்மிக்கல் லாகவும்,பனிக்கற்றைத்துளியைத் தெளிநீராகவும்,மடங்கியநிலையிலுள்ளகடலி ன்நீரை அரைக்குங் குழவியாகவும்,நுரையை வெண்சந்தனமாகவும்,திரையைக் கையாகவும் உருவகஞ்செய்தார்; உருவகவணியை யங்கமாகக் கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. தாபத்தைத்தணிக்கச் சந்தனத்தையப்புதல் இயல்பு. துள்ளி - துளியென்பதன்விரித்தல். பி-ம்:—[1]அரவப். [2]பசுங்கலாகிப், பசுங் காலாகப். [3]கற்றைத். [4]துள்ளு. [5]நறுந்தெண் புனலளிப்பத், நறுமென் றேன் றுளிப்பத், நறவத்தேன் றுளிப்பத். [6]சுற்றி. [7]வள்ளல். [8]திருமேனிக்கு. (கூ)

க௦. கொங்கைக் குயிலைத் துயர்[1]நீக்க விமையோர்[2]க்குற்ற குறை
[3]முற்ற, வெங்கைச் சிலையன் றூணியினன் [4]விடாதபுணியின் [5][illegible]
செல்லுங், கங்கைத் திருநா டுடையானைக் கண்டு நெஞ்சங் களிகூர,
[7]அங்கைத் திரள்க ளெடுத்தோடி [8]யார்ப்ப தேய்க்கு மணியாழி.

(இ - ள்.) (ஆரவாரத்துடன் அலைகள்ஓங்கிய வண்ணம் [illegible] க்கு எதிர்முகமாகச் செல்லுகின்ற) அழகிய கடலானது,—கொங்கையை யுடைய குயில் போன்றவளான சீதாபிராட்டியின் துயரத்தைப் போக்கவும், தேவதைகட்கு (அரக்கரால்) நேர்ந்துள்ள குறையை ஒழிக்கவும் விரும்பத்தக்க கையிலே வில்லையேந்தி நிற்பவனும் (முதுகில்) அம்பறாத் தூணியைக் கட்டிக் கொண்டிருப்பவனுமாகி நீங்காத சீற்றத்துடனே (எதிரிகளின்மீது படை யெடுத்துச்) செல்லுகின்ற கங்கைத்திருநாட்டையுடையவனான ஸ்ரீராமனைப் பார்த்து மனத்தில் மகிழ்ச்சிமிக, (தனது) அழகிய கைகளினைத் [illegible] ஓடியவண்ணம் ஆரவாரஞ்செய்தலை யொத்திருக்கும்; (எ - று.)

பெரியோர் புதிதாகவருவதைச்சேய்மையிற்கண்ணுற்றவர் தமதுகைகளை [illegible] தூக்கியவண்ணம் மகிழ்ச்சியினால் ஆரவாரஞ்செய்துகொண்டு [illegible]

அன்னாரை எதிர்கொள்ளுந் தன்மை இங்குக் கடலுக்கு ஏற்றிக் கூறப்பட்டுள்ளது. கொங்கையென்ற குறிப்பினால், குயில்-சீதையைக் காட்டிற்று: அடையடுத்த உவமவாகுபெயர். இராமபிரான் இராட்சசசங்காரஞ்செய்து தேவர்க்கு நேர்ந்துள்ள இடுக்கண்ணைப் போக்கவே திருவவதரித்துள்ளதனாலும், இப்போது சீதையைச் சிறைமீட்டற்காகவே தண்டெடுத்து வந்துள்ளதனாலும், 'கொங்கைக்குயிலை... திருநாடுடையான்' என்று அப்பிரானைக் கூறியது. அலைகள் பலவாதலால், 'அங்கைத்திரள்கள்' என்ன வேண்டிற்று. கோசலநாடு கங்கைவரையிற்பரவியிருந்ததென்றாவது, சரயூநதி இராமகங்கையெனப்பெயர்பெறுவதனாலாவது, ஸ்ரீராமனை, 'கங்கைத்திருநாடுடையான்' என்றது.
பி-ம்:—[1]நீக்கி. [2]குறித்த. [3]தீர்ப்ப. [4]விடாது. [5]மேற்சென்ற. [6]கூர்ந்திட்டு. [7]அங்கத்திரைக்கை, அங்கத்திரையை, அங்கத்திரைகள். [8]ஆர்த்ததொத்ததணி. (கக)

கஉ.—கவிகூற்று: இராமபிரான் கடலையெய்தியிருந்தானாக, இனி இலங்கையின் நிகழ்ச்சியைத்தெரிவிப்போமெனல்.

இன்ன தாய கருங்கடலை யெய்தி [1]யிதனுக் கெழுமடங்கு
தன்னதாய நெடுமானந் துயரங் காத லிவை [2]தழைப்ப
[3]என்ன தாகு மேல்[4]வினையென் றிருந்தா னிராம னிகலிலங்கைப்
பின்ன தாய காரியமும் நிகழ்ந்த [5]பொருளும் பேசுவாம்.

(இ - ள்.) இராமன், இப்படிப்பட்டுள்ள கரியகடலையடைந்து, இந்தக் கடலைக்காட்டிலும் எழுமடங்குமிக்குள்ள தன்னுடையதான மிக்க மானமும் துயரமும் காதலும் ஆகிய இவை (தன்னுள்ளத்துள்ளே) மிக்குத் தோன்ற, இனி நடக்கவேண்டியசெயல் யாதாகுமென்று ஆலோசித்துக் கொண்டிருந்தான்: (இது இங்ஙனம் நிற்க:) வலிய இலங்கையில் (அனுமான் சுட்டெரித்துத் திரும்பிச்சென்ற) பின்னர்த்தோன்றிய காரியத்தையும் நிகழ்ந்தசெயலையும் (இனிச்) சொல்லுவோம்; (எ - று.)

இராமன் கடலையடைந்தபின், மானம்முதலியவை எழுகடலளவாகத் தன்னகத்துமிக, மேல் நடத்தவேண்டியதைப்பற்றிச் சிந்தித்தவண்ணம் இருந்தானென்க. பின்னதாயகாரியம் என்றது-இலங்கையைப் புதிப்பித்ததனையும், நிகழ்ந்தபொருள்என்றது - மந்திராலோசனையையும் காட்டும். இலங்கையிலுள்ளாரின் இகலை இலங்கையின்மீது ஏற்றி, 'இகலிலங்கை' என்றது.
பி-ம்:—[1]அதனுக்கு. [2]தளைப்ப. [3]என்னவாகும். [4]வினை. [5]வினையும். (கஉ)

கடல்காண்படலம் முற்றிற்று.

---

## உ-ஆவது இராவணன் மந்திரப்படலம்.

இராவணன் தன்மந்திரிமார்முதலானாரோடு மந்திராலோசனைசெய்ததைக் கூறும் படல மென்பது பொருள். (கீழ்அயோத்தியாகாண்டத்தில் தசரதன்மந்திரப்படலம் என்னாமல் மந்திரப்படல மென்றே பெயர் காணப்படுவதுபோல, இங்கும் மந்திரப்படலமென்றே சிலபிரதிகளில் இப்படலத்

துக்குப்பெயர் காணப்படுகின்றது. சிலபிரதிகளில் இராவணன் மந்திரிவிசாரப்படலமென்று பெயர் காணப்படுகின்றது.)

இலங்கை அநுமானால் எரியுண்டபின், தெய்வத்தச்சன் பிரமதேவனோடும்புகுந்து புதுப்பித்தானாக, இராவணன் புதுப்பித்த நகரத்தைப்பார்த்து முன்னையினும் இனிதாயமைந்ததுகண்டு தன்முனிவுமாறி, நான்முகக்கடவுளைப்பூசித்தும் தெய்வத்தச்சனுக்குச் சம்மானஞ்செய்தும்அனுப்பிவிட்டு, பின்பு ஆயிரந்தூணங்களமைந்ததோர் மந்திராலோசனைமண்டபத்தில் மந்திரிமார்முதலியவரோடுவீற்றிருந்து முனிவர்தேவர்முதலியோரைத் தவிர்கெனநீக்கி வண்டொடுகாற்றையும்வரவுமாற்றி, மக்கள்தம்பியர்போன்ற அந்தரங்கரானவர்களைத்தவிர மற்றையோரைப் புறத்துப்போக்கி,மறவரைக் காவல்வைத்துவெளியிலிருக்கும் பறவைமுதலியனவும் அஞ்சிஅசைவற்றிருக்குமாறுசெய்து, பின் தன்வீரம் பழியுண்டதற்கு மனம்வருந்திக்கூற, சேனைகாவலனும் மகோதரன் வச்சிரதந்தன் துன்முகன் மகாபார்சுவன் பிசாசன் பானுகோபன் யஜ்ஞசத்துரு தூமிராட்சன்முதலியோர்களும் தம்தம்கருத்தைக் கூற, கும்பகர்ணன் இராவணனைநோக்கி 'சீதையைக்கவர்ந்தது தீவினையேயாயினும் இப்போது அவளைவிட்டிடுதலும்பழியாம். அவ்விராமனுதியரோடு பொருது ஒருகால் நாம் இறந்தோமாயினும் பழியாகாது: இப்போதே அவர்களை வெல்லச்செல்வது தகுதி. நாள்செல்லச்செல்ல அப்பகைஞர்க்குத் துணைவலி மிகும். இப்போதே போர்க்குஎழுதல்நலம்' என்றான். இராவணன் அந்தமுடிவையங்கீகரித்து 'நமது படையோடும் போருக்கு எழுக' என்ன, இந்திரசித்து தந்தையைத்தடுத்து, 'யானேசென்று பொருதுவருவேன்: விடைதருக'என்ன, அப்போது விபீடணன் இந்திரசித்தைக்கடிந்து சானகியின்கற்பையும் நந்திமுதலியோரதுசாபத்தையும் நினைப்பூட்டி இராமபிரான்பெருமையையும் உணர்த்தி, கற்பணங்காகிய சீதையை விடுதலே நலமென்று வற்புறுத்துக்கூற, இராவணன் தனது வரத்தின்பெருமையைக்கூறி வானரப்படையையும் இராமனையும் இகழ்ந்து விபீடணனைக் கடிந்துரைத்து போர்க்குஎழத்தொடங்க, விபீடணன் 'தேவர்களின்வேண்டுகோளினால் திருமாலே மானுடனாகத்தோன்றியுள்ளான்: இவ்வாறுஇருக்கப் போருக்குச் செல்லுதல்தகுதியல்ல: வேண்டா' என்று இராவணனது பாதங்களில்வீழ்ந்துஇரக்க, இராவணன் முறுமுறுத்துப் பொருளையிகழ்ந்து, 'அச்சந்தவிர்ந்து இந்நகரிடத்துத்தானே இனிதிருக்க' என்ன, விபீஷணன் 'இரணியாசுரன் சரிதையைக்கேள்' என்று அதைச் சொல்லத்தொடங்கினானென்பது, இப்படலத்திற் கூறிய பொருள்.

க.—அநுமானால்எரியுண்ட இலங்கையைத் தெய்வத்தச்சன் புதுப்பித்தல்.

[1]பூவரு மயனொடும் புகுந்து பொன்னகர்
மூவகை யுலகினு மழகு முற்றுற
[2]ஏவினை யியற்றினன் கணத்தி னென்பரால்
தேவரு மருள்கொளத் தெய்வத் தச்சனே.

(இ - ள்.) தெய்வத்தன்மையுள்ள தச்சனாகிய மயன் (திருமாலினது உந்தித்) தாமரைமலரினின்று தோன்றிய பிரமதேவனோடும் அழகிய இலங்கையிற் புகுந்து, (சுவர்க்கம் மத்திமம் பாதாளம் என்னும்) மூன்று உலகங்களிலுமுள்ள நகரங்களினும் அழகுநிரம்புமாறும், தேவர்களும் (அவ்விலங்காநகரத்தினழகைக்கண்டு) திகைக்குமாறும், (இலங்கையில் இராவணன்) ஏவிய இடங்களையெல்லாம் ஒருகணப்பொழுதினிற் செய்துமுடித்தான்; (எ - று.)—என்பர், ஆல்-அசைகள். என்பரென்பது, கர்ணபரம்பரையாகத்தாம் அறிந்ததைக் குறிப்பித்ததுமாம்.

அநுமானால் எரியுண்டஇடங்களைத் தெய்வத்தச்சன் செப்பனிட்டு எல்லாவுலகத்திலுள்ள நகரத்தினும் அவ்விலங்கை அழகுமிக்குத்தோன்றுமாறு செய்தனனென்க. தெய்வத்தச்சன் - விசுவகருமன்என்றலுமுண்டு. தெய்வத்தச்சன் பிரமனுடன்புகுந்ததற்குக் காரணத்தை "முழுப்பெருந்தனிமுதலுலகின் முந்தையோன், எழிற்குறிகாட்டிநின்றியற்றியீந்தனன்" என்று மூன்றாஞ்செய்யுளால் விளக்குவர். அநுமானால் இலங்கையெரியுண்டபின்பு அவ்விலங்கைபுதுப்பிக்கப்பெற்றவிஷயம் ஸ்ரீவால்மீகத்தில்வெளிப்படையாகக் கூறப்படவில்லை. பொன்னகர்-இலங்கை. பி-ம்:—[1]பூமிசை. [2]ஏவெனவியற்றினன், ஏவினனியற்றினன். (கஉ)

உ.—புதுப்பித்த இலங்கையினழகுகண்டு இராவணன்உவத்தல்.

பொன்னினு மணியினு மமைந்த பொற்புடை
நன்னகர் நோக்கினன் நாகம் [1]நோக்கினன்
முன்னையி னழகுடைத் தென்று மொய்கழல்
மன்னனு [2]முவந்துதன் முனிவு [3]மாறினன்.

(இ - ள்.) நெருங்கிய வீரக்கழலையணிந்த (அரக்கர்)மன்னவனான இராவணன்,—பொன்னினாலும் நவமணிகளினாலும் இயற்றப்பெற்ற அழகுடைய (தனது) சிறந்தநகரத்தைக் கண்டு வானுலகத்துள்ள நகரத்தையும் பார்த்து, (அந்தத்தேவலோகத்து நகரத்தினும் தெய்வத்தச்சன் திருத்திய தன் நகரம் அழகாக இருந்ததோடு எரிப்பதற்கு) முன்னேயிருந்ததைக்காட்டிலும் அழகு பெற்றுள்ளதென்று கண்டு உவப்படைந்து, தன்சீற்றம்மாறப்பெற்றான்; (எ-று.)

முன்னையினும் அழகு விஞ்சியதாகத் தோன்றியதனால், எரியுண்டதும் நல்லதே யென்ற கருத்தினால் உவப்புத்தோன்றி முனிவைமாற்றியதென்க. மன்னனும், உம்-கதைப்போக்குப்பற்றி வந்தது; இறந்தது தழுவிய எச்சத்தின்பாற்படும். பி-ம்:—[1]நோக்கினர். [2]உவந்தனன். [3]மாற்றினன். (கச)

ங.—இலங்கை எழில்பெற்றுத் தோன்றியது குறித்த கவிக்கூற்று.

முழுப்பெருந் தனிமுத லுலகின் முந்தையோன்
[1]எழிற்குறி காட்டிநின் றியற்றி யீந்தனன்
பழிப்பறு முலகங்க ளவையும் பன்முறை
அழித்தழித் [2]தாக்குவாற் கரிதுண் டாகுமோ.

(இ - ள்.) (படைத்தற்கடவுளாதலால்) முதல் மூர்த்திகள் மூவரில் முதலிற் சொல்லத்தக்கவனாகி (இவ்வுலகிற்) புராணபுருஷனான பிரமதேவன் எழிலுக்குவரைகீறிக்காட்டிநின்று (அவ்வெழில் நிரம்பப்படைக்கும்) வல்லமையையும்(தெய்வத்தச்சனுக்குக்)கொடுத்தனன்:(அந்தப் பிரமனுக்குத்தான் அங்ஙனம் எழில்பட இயற்றுமாறு குறித்துக்காட்டும் வல்லமை எங்ஙனே யுண்டாயிற்று?' என்று ஐயுறவேண்டா;) பழிப்பற்ற உலகங்களெல்லாவற்றையும் பலமுறை அழித்து அழித்துப் படைத்துக் கைதேர்ந்தவற்குச்(செய்ய) அரியதும் உண்டோ? (எ - று.)

தெய்வத்தச்சன் இலங்காபுரியை வானநகரத்தினும் அழகு விஞ்ச முன்னையினும் அழகுபெறப்படைத்தது எவ்வாறெனில்,-பிரமதேவன் படைக்கவேண்டிய வழிகாட்டி அதற்கு ஏற்ற வல்லமையையும் அவனுக்குத் தந்ததனாலேயேயாமென்றவாறு. எழிற்குறிகாட்டும் வல்லமை பிரமதேவனுக்கு உண்டானதைப் பின்னிரண்டடிகளிற் கூறிய பொருள் சமர்த்தித்து நின்றது; இது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம். சிறப்புப்பொருளைப் பொதுப்பொருள் சமர்த்தித்ததாகாததால், இது, வேற்றுப்பொருள்வைப்பணி யாகாது. அளித்தல் அழித்தலாகிய தொழில்கள் நிகழ்வதற்கு ஆக்கல்தொழிலே முதலில் நிகழவேண்டு மாதலால், அத்தொழிற்கு உரியவனான பிரமதேவன் முதலிற் சொல்லத்தக்கானென்பது குறித்து, அவனை 'முழுப்பெருந்தனிமுதல்' என்றார். பிதாமஹனென்ற பெயர்பற்றி 'உலகின் முந்தையோன்' என்றது. இயற்றி யென்பது வல்லமையென்னும் பொருளதாதலை "தனக்கு இயற்றியுள்ள காலத்திலே" என்று வருகின்ற ஈட்டின் பங்க்தியினாலும் அறிக. இனி, காட்டிநின்று என்பதை முந்தையோன் எழிற்குறிகாட்டிநிற்க என்று எச்சத்திரிபாகக்கொண்டு, தெய்வத்தச்சன், இயற்றியீந்தனன் - இயற்றினனென வினைத்திரிசொல்லாக உரைத்தலும் தகும். சிலபிரதியில் இச்செய்யுள் "அவ்வழி (ரு)" என்ற செய்யுளின் பின் காணப்படுகின்றது. பி-ம்:—[1]எழில்பெறக். [2]இயற்றுவாற்கு, இயற்றுவார்க்கு. (கரு)

சு.—இராவணன் பிரமதேவனைப் பூசனைசெய்து அனுப்புதல்.

திருநகர் முழுவதுந் [1]திருந்த [2]நோக்கினன்
பொருகழ லிராவண னயற்குப் பூசனை
வரன்முறை யியற்றிநீ வழிக்கொள்வா [3]யென்றான்
அரியன தச்சற்கு முதவி [4]யாணையால்.

(இ - ள்.) போர்செய்தற்குஉரிய வீரக்கழலையணிந்த இராவணன், (தெய்வத் தச்சனைக்கொண்டு பிரமதேவன் திருத்தமுற அமைத்த தனது) அழகிய நகர முழுவதையும் செவ்வனே பார்த்து, (பின்பு) அருமையான பொருள்களை(த் தன்) கட்டளையால் அந்தத் தச்சனுக்குக் கொடுப்பித்து, பிரமதேவனுக்கு வரன்முறை தவறாது பூசனைபுரிந்து (பிரமதேவனை நோக்கி) 'நீ போய் வருவாயாக' என்று வழிவிட்டான்; (எ - று.)

சிறப்புடைப்பொருளை எடுத்துக் கிளக்கும் முறைமைபற்றிப் பிரமதேவனை வழிவிட்டதனைக் கூறினர்: இதனால், தெய்வத்தச்சனையும் வழிக்கொள்வாயென்று வழிவிட்டமை பெறப்படும். பி-ம்:—1திரிந்து,தெரிய. 2நோக்கிய, நோக்கியப். 3என. 4ஆணையான். (கசு)

ரு.—இராவணன் ஆலோசனைமண்டபத்தில் வந்து வீற்றிருந்தல்.

அவ்வழி யாயிர மாயி ரம்1மவிர்
செவ்வழிச் செம்மணித் 2தூணஞ் 3சேர்த்திய
4அவ்வெழில் மண்டபத் தரிக ளேந்திய
5வெவ்வழி யாசனத் தினிது மேயினான்.

(இ - ள்.) அப்போது, (இராவணன்) பல்லாயிரக்கணக்காக விளங்குகின்ற அழகுதிரளுதலைக்கொண்ட பதுமராகக்கற்கள்பதித்த தூணங்கள் நாட்டப்பெற்ற அந்த எழில் பொருந்திய மண்டபத்திலே சிங்கம் தாங்குவதுபோற் செய்யப்பெற்று வெம்மை வெளிப்படுகின்ற சிங்காதனத்திலே (செய்ய வேண்டுவது குறித்து ஆலோசிக்குமாறு) இனிது தங்கினான்; (எ - று.)

அவிர்தூணம், செவ்வழித்தூணம், செம்மணித்தூணம் என இயையும். செவ்வழி-செவ்விவழிகை: அழகு திரளுகை. இராவணனைக் காணவேண்டா, அவனுடைய ஆசனமேவெவ்விதாகத்தோன்றுமென்பார், 'வெவ்வழியாசனம்' என்றார். ஆயிரம்மவிர்-விரித்தல். பி-ம்:—1கிரை. 2தூண்கள். 3சார்த்திய. 4எவ்வமில், இவ்வழி, இவ்வெழில், அவ்வழி, எவ்வெழில். 5வெவ்வரி, செவ்வழி. ()

சு.—இராவணனைச் சுற்றத்தார்முதலியோர் தழுவிநிற்றல்.

1வரம்பறு சுற்றமு மந்திரத்தொழில்
நிரம்பிய முதியருஞ் சேனை நீள்2கடல்
தரம்பெறு தலைவருந் தழுவத் 3தோன்றினான்
அரம்பையர் கவரியோ டாடுந் தாரினான்.

(இ - ள்.) தேவமாதரின் சாமரையுடனே அசைகின்ற மாலையையணிந்தவனாகிய இராவணன்,--எல்லையில்லாத சுற்றத்தவரும் ஆலோசனைத்தொழிலில் தேர்ச்சிமிக்குள்ள அநுபவசாலிகளும் சேனையாகிய பரந்தசமுத்திரத்திலே மேன்மைபெற்றுள்ள சேனைத்தலைவரும் தழுவிநிற்க, (அந்தச் சபாமண்டபத்திலே) விளக்கமுற்றிருந்தான்; (எ - று.)

தழுவுதல் - அன்போடுஅணுகிநிற்றல். அரம்பையர் கவரிவீச அந்தக் காற்றினால் அசையப்பெற்ற மாலையினனென்பது, 'அரம்பையர் கவரியோடாடுந்தாரினான்' என்பதன் கருத்து: ஈற்றடியில் கவரிக்கும் தார்க்கும் ஆடுந்தொழில் உடனிகழ்வதாகச் சமற்காரம்படக் கூறியிருப்பது. உடனவிற்சியணியின்பாற் படும். அரம்பை யென்ற தேவமாது ஒருத்தியின் பெயர் - இலக்கணையால், தேவமாது என்ற பொதுப்பொருளைக் காட்ட, பிறகு அச்சொல் பன்மை விகுதிபெற்று 'அரம்பையர்' என்றாகித் தேவமாதரைப்பொதுவாகக் காட்டும். பி-ம்:—1வரம்பெறு. 2கழல். 3ஏறினான். (கஅ)

எ.—இராவணன், முனிவர் முதலியோரை அப்பாற்போக்குதல்.

முனிவரும் [1]தேவரு [2]மற்று முற்றினர்
எனைவருந் [3]தவிர்கென வேய [4]வாணையான்
[5]புனைகுழல் மகளிரோ டிளைஞர்ப் போக்கினான்
நினைவுறு காரியம் நிகழ்த்து நெஞ்சினான்.

(இ - ள்.) நெஞ்சிலெண்ணிய காரியத்தைக்குறித்து ஆலோசனைநடத்த வேண்டுமென்ற கருத்தையுடையவனான இராவணன்,—'முனிவரும் தேவர்களும் மற்றும் நிரம்பியிருந்த (வித்தியாதரர் இயக்கர் முதலியோர்) யாவரும் (இங்குநின்று) அப்பாற்செல்க' என்று கட்டளையிட்டவனாய், (முனிவர் முதலியோரைப் போக்கியதல்லாமல்) அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையுடைய மகளிரோடு சிறுவர்களையும் (அந்த ஆலோசனைச் சபாமண்டபத்திலிருந்து) அப்பாற் போகச்செய்தான்; (எ - று.)

ஆலோசனைச் சபையில் அன்னியரிருத்தல் கூடாதாதலால், முனிவர் முதலியோரைப் போக்கினானென்க. ஈற்றடி-எல்லோரையும் போக்கினமைக்குக் காரணத்தைப் புலப்படுத்திநிற்றலால், கருத்துடையடைகொளியணியாம். பி-ம்:—[1]அமரரும். [2]முற்றுமற்றுளோர், மற்றுமுற்றுளோர், முற்றுமுற்றினர். [3]தவிர்க்கென. [4]ஆணையால். [5]புனைகலன். (௧௧)

அ.—மந்திரமானவருகெனச் சொல்லி அவர்களுடன்
இராவணனிருத்தல்.

பண்டிதர் பழையவர் கிழவர் பண்பினர்
[1]தண்டலின் [2]மந்திரத் தலைவர் சார்கெனக்
[3]கொண்டட னிருந்தனன் கொற்ற [4]வாணையால்
வண்டொடு காலையும் [5]வரவு மாற்றினான்.

(இ - ள்.) (இராவணன், தன்னுடைய) அரசத்தன்மை தோன்றுமாறு இட்ட கட்டளையினால் வண்டுடனே காற்றும் உள்வராதபடி (அவைகளைப்) போக்கினவனாய், புலவர்களும் நெடுநாளாகப் பழகுபவரும் (தன்னோடு) உறவு முறையுடையவரும் நற்குணங்களிற் சிறந்தவருமாகி (த்தன்னைவிட்டு) நீங்குதலில்லாத மந்திரிமார்கள் வருக என்று சொல்லி, (அவர்களின் வருகையை) ஏற்றுக்கொண்டு அவர்களுடன் இருந்தான்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் ஆலோசனையிற் சம்பந்தப்படக்கூடாத தேவர் முதலியோரைத் தன்கட்டளையால் அப்பாற் போக்கினமையைக் கூறிய கவி, இக்கவியினால், வண்டொடுகாற்றும் உட்புகாதபடி தவிர்த்தமையைக் கூறிப் பிறகு மந்திரிகளை வருகென்று எதிர்கொண்டு இருந்தனன் இராவணனென்கின்றார். பண்டிதர் முதலிய சொற்களை மந்திரத்தலைவர்க்கு அடைமொழியாக்காமல் உரைப்பாருமுளர். கிழவர் - உறவுமுறையையுடையவர். சார்கென-தொகுத்தல். பி-ம்:—[1]தண்டின. [2]மந்திரித். [3]கொண்டன. [4]ஆணையான். [5]வரவை.

க௯.—மக்களும்தம்பியரும்போன்றவரல்லாரைப் புறத்துப் போக்கியமை.

ஆன்றமை கேள்விய ரெனினு மாண்டொழிற்கு
ஏன்றவ [1]ரன்பின ரெனினும் யாரையும்
வான்றுணைச் சுற்றத்து [2]மக்கள் தம்பியர்
போன்றவ ரல்லரைப் புறத்துப் போக்கினான்.

(இ - ள்.) பரந்து அமைந்த நூற்கேள்வியை யுடையவராயினும், வீரத் தொழிலைமுனைமுகத்திற்காட்டுதற்கு ஏற்றவராய்(த் தன்னிடத்து மிக்க) அன்பையுடையவராயினும், சிறந்ததுணைச்சுற்றத்தவர்களுள் மக்களும் தம்பியரும்போன்றவ ரல்லரான யாரையும் (மண்டபத்து) வெளியே யனுப்பிவிட்டனன்; (எ - று.)

கீழ்ச்செய்யுளினால் தழுவப்பட்டவர் தன்மையைக் கூறிய கவி, இச்செய்யுளினாற் போக்கப்பட்டவர் தன்மையைக் கூறுகின்றா ரென்க. மக்கள் - புதல்வர். பி-ம்:—[1]நண்பினர். [2]மகனுந்தம்பியும். (உக)

௨௦.—காவலாளரை நிறுவுதல்.

திசைதொறு [1]நிறுவின னுலகு சேரினும்
பிசை தொழில் மறவரைப் பிறிதென் [2]பேசுவ
[3]விசையுறு பறவையும் விலங்கும் வேற்றவும்
[4]அசைதொழி லஞ்சின சித்தி ரத்தினே.

(இ - ள்.) உலகெல்லாம் (ஒன்று) சேர்ந்துவந்தாலும் பிசையவல்ல வீரத் தொழிலையுடையவீரரை (மண்டபத்தின் வெளியே) எல்லாத்திக்குக்களிலும் (காவலாக) நிறுத்தினான்; (அதனால்) விரைவாகப் பறக்குந்தொழிலையுடைய பட்சிகளும் மிருகங்களும் இவற்றினும் வேறுபட்ட பூச்சிகளும், சித்திரத்தி லெழுதப்பட்டனபோல(அம்மண்டபத்தினருகே)புடைபெயர்தலாகியதொழிலைச்செய்வதற்கும் அஞ்சி யசையாநின்றன; வேறு சொல்லவேண்டியது என்? (எ - று.)

அஃறிணைப்பொருளாகிய பறவைமுதலியனவும் அசைதற்றொழிற்கும் அஞ்சிச் சித்திரம்போல ஆண்டுநின்றன என்று கூறிய இதனால்,மானுடர் அங்குச்செல்வதற்கு அஞ்சுவ ரென்பது தண்டாபூபிகாநியாயத்தாற் பெறப்படுமென்பார், 'பிறிதென் பேசுவ' என்றார். பேசுவ=பேசுவது; தொகுத்தல். வேற்ற - வேறுஎன்ற இடைச்சொல்லினடியாகப்பிறந்த பலவின்பாற்பெயர்: இது, மானுடர்களைக்காட்டுமெனக் கொள்வாருமுளர். பி-ம்:—[1]நிறுவினர். [2]பேசவாம். [3]விசைதுறு. [4]திசைசெலல். (உஉ)

௨க.—இராவணன் தனதுவீரம் பழியுண்டதற்கு மனம்வருந்திக் கூறத்தொடங்குதல்.

தாழ்ச்சியிங் கிதனின்மேல் தருவ தென்னினி
மாட்சி யோர் குரங்கினால் [1]மறுகி மாண்டதால்

ஆட்சியு [2]மரசுமென்னமைவும் நன்றெனச்
சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் [3]சொல்லுவான்.

(இ - ள்.) (என்) பெருமை ஒருகுரங்கினாற் கலக்குண்டு அழிந்திட்டது: ஆதலால், இப்போது(நேர்ந்த) இந்தத்தாழ்மையைத்தருஞ் செயலுக்கும்மேலாகத் தாழ்மையைத்தருவது இனி என்ன (இருக்கின்றது)? (இவ்வண்ணந் தாழ்ச்சியையடைந்த) என்னுடைய அரசாட்சியும் (அரண்முதலியவற்றோடு கூடிய) இராச்சியமும் சேனையினமைதியும் நன்றாயிருந்தது! என்று (இகழ்ச்சி தோன்ற) தன்னுட்கருதி, (பிறகு) மந்திரிமாரைநோக்கிக் கூறலாயினன், (இராவணன்); (எ - று.)

சூழ்ச்சி, ஆலோசனை, மந்திரம் என்பன - ஒருபொருளன: சூழ்சசியின் கிழவர் - மந்திரிமார். ஆட்சியும்அரசும்அமைவும் நன்று - ஒருமைப்பன்மை மயக்கம். பி-ம்:—1அழிந்தமாநகர். 2அமையுமென்னரசும், அமைவுமென்னரசும். 3சொல்லினன். (உங)

கஉ.—இதுமுதல்மூன்றுகவிகள்-இராவணன் மந்திரிமாரிடத்துத் தன்றுறையுரைத்தலைத் தெரிவிக்கும்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

சுட்டது குரங்கெரி சூறை [1]யாடிடக்
கெட்டது [2]கொடிநகர் கிளையும் நண்பரும்
[3]பட்டனர் பரிபவம் பரந்த தெங்கணும்
[4]இட்டவிவ் வரியணை யிருந்த தென்னுடல்.

(இ - ள்.) அக்கினிதேவன் (இலங்கையைக்) கொள்ளைகொள்ளும்படி குரங்கானது நெருப்புவைத்திட்டது; (அதனால்), வெற்றிக்கொடிபறக்கும் (எனது) நகரம் அழிந்திட்டது; (அன்றியும், என்னுடைய) சுற்றத்தாரும் நண்பரும் இறந்தொழிந்தனர்; பரிபவச்செய்தியோ எங்கும் பரவிவிட்டது; என்னுடல் இடப்பட்ட இந்தச்சிங்காதனத்தில் தானே கிடந்தது; (எ-று.)

'நான் உயிரோடிருக்கையில் எளியகுரங்கினால் நேர்ந்த பரிபவத்தைக் காணுமாறு ஆயிற்றே; என்னுயிரிருந்தும் பயனில்லையே!' என்ற வருத்தந் தோன்ற, 'அரியணையிருந்ததென்னுடல்' என்கின்றான், இராவணன். 'மாட்சி யோர்குரங்கினால் மறுகி மாண்டது' என்று தன்மனத்துக் கருதியதனை இதுமுதல் இராவணன் வெளிப்படையாக விரித்துக்கூறுகின்றானென்க. எரி-அக்கினி. சூறை-கொள்ளை. பி-ம்:—1ஆடின. 2கடி. 3பட்டது, பட்டன. 4இட்டது. (உச)

கரு. ஊறுகின் றனகிணறுதிர மொண்ணகர்
[1]ஆறுகின் றிலதழல் [2]அகிலி னவியொத்து
[3]ஏறுமங் கையர்நறுங் கூந்தலின் [4]சுறு
[5]நாறுகின் றது [6]நகர்ந் திருந்த நாமெலாம்.

(இ - ள்.) கிணறுகளில் (நீர்சுரப்பதற்குப் பதிலாக) இரத்தங்கள் சுரக்கின்றன; அழகிய (நமது லங்கா) புரியிலே (முன்மூண்ட) அக்கினி (இன்னுந்) தணிந்தபாடில்லை; அகிற்புகைபொருந்தப்பெற்றுச் சிறப்புற்ற மங்கைமாரின் நறியகூந்தலினின்று தீப்பற்றியநாற்றம் (எங்கும்) வீசுகின்றது; (இதுவரையில் இனிது) இன்பம் அனுபவித்துக்கொண்டிருந்த (வீரர்களாகிய) நாமெல்லாரும்,—(எ - று.)—'மற்றிலதாயினும் மலைந்தவானரம் இற்றிலதாகிய தென்னும்வார்த்தையும் பெற்றிலம்' என்று மேல் குளகமாகச்செல்லும்.

முதலடியால், 'வந்த குரங்கால் தாக்கப்பட்டு நிலத்திலேஊற்றுத்தோன்றுமாறு இரத்தவெள்ளம் பேராறாய்ப் பெருகியதே!' என்று இரங்கியவாறு. அகிலின்புகையொத்துஎன்பதற்கு-அகிற்புகையைநிறத்தாலொத்து எனினுமாம். இனி, [6]நுகர்ந்திருந்து நாம் என்றபாடத்திற்கு - இருந்தும் எனப்பிரித்துத் தன்மைப்பன்மையிறந்தகாலவினைமுற்று எனக்கொண்டு, இருந்தோமென்று உரைப்பாரும், இருந்து என்றேபிரித்து எச்சத்திரிபு எனக்கொண்டு, நாம் எலாம் நுகர்ந்திருந்து - நாமெலாம் நுகர்ந்திருக்கையில்தானே, நமதுமங்கையரின் கூந்தலினின்று சுறு நாறுவதாயிற்று என்பாருமுளர். பி-ம்:—[1]ஆறுகின்றிலதனல், ஆறுகின்றலவெரி, ஆறுகின்றிலகனல். [2]அகிலுநாவியும். [3]கூறுமங்கையர் நறுங், ஏறுமென்கோதையர், ஏறுகின்றன நறுங். [4]சுருள். [5]நாறுகின்றன. [6]உவந்திருந்த, சுமந்திருந்த. (உ௫)

௧௬. மற்றில தாயினு [1]மலைந்த வானரம்
[2]இற்றில தாகிய தென்னும் வார்த்தையும்
பெற்றிலம் பிறந்தில [3]மென்னும் பேரலால்
[4]முற்றுவ தென்னினிப் பழியின் மூழ்கினும்.

(இ - ள்.) வேறுவிசேஷமானசெயல் (நம்மாற்) செய்யப்படவில்லையென்றாலும், (பிறவிப்பயனைப் பெருமையாலே பிறந்தும்) பிறவாதவரானோம் என்ற பேரை யடைந்தோமேயன்றி, (நம்மவரோடு) போர்புரிந்த வானரமானது (தாக்குண்டு) உயிர் கெட்டு ஒழிந்திட்டதென்ற சொல்லை(யாவது பெற்றிருக்கலாம்: அதனை)யும் பெற்றோமில்லை; பழியிலேமூழ்கிவிட்டோம்; (நாம்) இப்போதுசெய்துமுடிக்க வேண்டுவதுஎன் உள்ளது? (எ - று.)—என்று வினவினன் இராவணனென்க.

"தோன்றிற்புகழொடு தோன்றுக" என்றபடி பிறந்ததற்குப் பயன் புகழேயாதலால் பகைஞனைக்கொன்றோமென்றபேரையாவது பெற்றால் பிறவிப்பயனைச் சிறிதாவது பெற்றோமாவோம்; அதனையுஞ் செய்யமுடியாமற் போயிற்றேயென்பான், 'வானரம் இற்றுஇலதாகியதென்னும் வார்த்தையும் பெற்றிலம், பிறந்திலமென்னும்பேரலால்' என்கின்றான். "ஆவிலாசபுரீலங்காஸர்வாஹநுமதாக்ருதா | கிங்கரிஷ்யாமிபத்ரம்வ:-கிம்வாயுக்தமநந்தரம் || ..... ஹிதம்புரேசலைங்யேச - ஸர்வம்ஸம்மந்த்ர்யதாம்மம" என்று ஸ்ரீவால்மீகத்து வருவதற்குஏற்ப, முற்றுவது என்இனி என்பதற்கு - இனிச்செய்துமுடிக்க வேண்டுவதுயாது? என்று பொருள்கொள்ளப்பட்டது. இனி, பிறந்திலமென்

னும்பேரலால் முற்றுவதுஎன் என்றுகூட்டி - பிறந்தும் பிறவாதவராஞே மென்ற இந்தப்பேரையன்றி நாம் சாதிப்பதுஎன்உள்ளது? என்று உரைப்பாரு முளர். வார்த்தையும்என்ற இழிவுசிறப்பும்மையால், இந்தக்குரங்கையேவிய மாற்றுனுள்ளஇடத்தைநாடியறிந்து அன்னூனைக்கொன்றால்தான் நாம் செய்ய வேண்டியதொழிலே முற்றச்செய்தவராவோமென்ற குறிப்புப் பெறப்படும்: இக்கருத்தைப் புலப்படுத்தவே 'மற்றிலதாயினும்' என்று கூறியது. பி-ம்:— [1]வலிந்த. [2]இற்றனவாயின. [3]என்னும்பேறலால்,அரசுபேறெலாம். [4]முற்றிலம்.

கரு.—சேனைகாவலன் தன்கருத்தைக் கூறத்தொடங்குதல்.

என்றவ னியம்பலு மெழுந்தி றைஞ்சினன்
கன்றிய கருங்கழற் சேனை காவலன்
ஒன்றுள [1]துணர்த்துவ தொருங்கு கேளெனு
[2]நின்றன னிகழ்த்தினன் [3]புணர்ப்பி னெஞ்சினன்.

(இ - ள்.) என்று அவ்விராவணன் சொன்னவுடனே, மனம்வருந்திய பெருமைபெற்ற வீரக்கழலையணிந்தவனான சேனுநாயகன் எழுந்து, (அவ்விராவணனை) வணங்கி, '(உன்னிடத்து) அறிவிக்கவேண்டியதான செய்தியொன்று உள்ளது; (அதனை) முற்றிலுங்கேட்பாயாக' என்றுசொல்லி, ஆலோசனையுள்ள நெஞ்சையுடையவனாய்நின்று சொல்வானாயினன்; (எ-று.)—அவற்றை, மேல் ஆறு கவிகளிற் காண்க.

சேனையைச்செலுத்தவேண்டுவது தன் தொழி லாகையால், முதன்முதலிற் சேனுநாயகன் விடைகூறலாயினன். இராட்சச சேனுபதியின்பெயர் ப்ரஹஸ்தனென்று ஸ்ரீவால்மீகிராமாயணத்தாற் பெறப்படும். பி-ம்:—[1]உணர்த்துவன். [2]நின்றவன். [3]எரியுநெஞ்சினன். (உஎ)

கசு.—இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்: சேனுநாயகன் தன்கருத்தை யுணர்த்துதலைத் தெரிவிக்கும்.

வஞ்சனை மனிதரை யியற்றி வாள்நுதல்
[1]பஞ்சன மெல்லடி மயிலைப் பற்றுதல்
[2]அஞ்சினர் தொழிலென [3]அறிவித் தேனது
[4]தஞ்சென வுணர்ந்திலை யுணருந் தன்மையோய்.

(இ - ள்.) உணரவல்லதன்மையுடையவனே! 'மனிதரை வஞ்சித்து ஒளியுள்ளநெற்றியையும் பஞ்சையொத்த மெல்லியபாதங்களையுமுடைய மயில் போன்ற சாயலளானசீதையைக் கவர்தல் (வீரருடைய தொழிலன்று); அஞ்சினவருடையசெயலாகும்' என்று (முன்னமே) தெரிவித்தேன்; அந்தச்சொல்லைப் பற்றுக்கோடாகுமெனத் தெரிந்தாயில்லை; (எ - று.)

'உணர்ந்திலை' என்றுமுடித்தால் எங்கு இராவணன் தன்மீது சினக்கின்ருனோஎன்று கருதி, சீற்றங்கொள்ளாது அவனைச் சமாதானப்படுத்த 'உணருந் தன்மையோய்' என்று புகழ்ந்துகூறுகின்றான்: இங்ஙனம் ஆராய்ச்சியுடன் பேசுவதனால்தான் 'புணர்ப்பின் நெஞ்சினன்' என்று கீழ்க்கூறியது. பி-ம்:— [1]பஞ்சின, பஞ்செென. [2]அஞ்சின. [3]அறிவித்தேற்கு. [4]தஞ்சமென்று. (உஅ)

௧௭. கரன்முதல் [1]நிருதரைக் கொன்ற கள்வரை
விரிகுழ லுங்கைமூக் கரிந்த வீரரைப்
பரிபவஞ் [2]செய்ஞ்ஞரைப் [3]படுத்தி லாத நீ
அரசிய லழிந்ததென் [4]றயர்தி போலுமால்.

(இ - ள்.) கரன்முதலிய (பதினாலாயிரம்) அரக்கவீரரைக் கொன்ற கள்ளத்தனமுடையவரும், தலைவிரிகோலமாய்நிற்கிற உனது தங்கையின்மூக்கையரிந்தவீரரும், (நமக்குப்) பழியைவிளைக்குஞ்செயலைச் செய்பவருமான இராமலட்சுமணரை (இன்னும்) கொன்றிடாமலிருக்கின்ற நீ (உனது) அரசியலழிந்ததென்று மனம்வருந்துகின்றாய்போலும்; (எ - று.)

தங்கையைமூக்கரிந்து கரன்முதலியோரைக்கொன்ற எதிரிகளைக்கொன்றொழித்துச் சீதையைச் சுவாதீனப்படுத்திக் கொள்வது நேர்வழியாயிருக்க அவரைக்கொல்லாதுவிட்டு அரசியலழிந்ததென்று மனம்வாடியிருத்தல் தகுதியன் றென்றவாறு. போலும்-ஒப்பில்போலி. காட்டில் எங்கேயோ பதுங்கியிருப்பதுபற்றி 'கள்வர்' என்றும், 'ஒருபெண்பிள்ளையை மூக்கரிந்து பரிபவப்படுத்தியவரும் ஒருவீரரோ?' என்னும் இகழ்ச்சிக்குறிப்புத்தோன்ற 'உங்கைமூக்கரிந்த வீரர்' என்றும் கூறினான். உங்கை - உன்தங்கையென்பதன் மரூஉ. செய்ஞ்ஞர், ஞ்-பெயரிடைநிலை. (பி-ம்:—[1]வீரரை. [2]செயுநரை, செருநரை, செருஞரை. [3]படுக்கலாது, படுக்கலாத, படுக்கிலாத. [4]அழியற்பாலையோ, அயர்த்திபோலுமால். (உ௯)

௧௮. தண்டமென் றொருபொருட் குரிய [1]தற்கரைக்
கண்டவர் பொறுப்பரோ வுலகங் [2]காவலர்
[3]வண்டுறை யலங்கலாய் வணங்கி [4]வாழ்வதோ
விண்டவ ருறுவலி யடக்கும் [5]வெம்மை தான்.

(இ - ள்.) தண்டனையென்ற ஒருபொருளுக்கு உரிய கள்ளத்தன்மையையுடையவரைக் கண்டவரான உலகங்காக்கின்ற மன்னவரும் பொறுப்பரோ? வண்டுகள் தங்குகின்ற மாலையையணிந்தவனே! [இராவணனே!] பகைவரின் மிக்கவலிமையை யடக்கவல்ல பராக்கிரமமென்பதுதான் (அவரை) வணங்கி வாழ்வதுதானோ? (எ - று.)

தீங்கிழைத்த இராமலட்சுமணரைப் பொறுத்திடாமல் ஒறுக்கவேண்டும். இதுவே வீரச்செயலென்றவாறு. நமக்குப்பரிபவஞ்செய்தவரை இதுவரையில் ஒறுத்திடாமல் உயிருடனிருக்கவிட்டது வணங்கிவாழ்தற்குச் சமானமென்ற கருத்தால், 'விண்டவருறுவலியடக்கும் வெம்மைதான் வணங்கிவாழ்வதோ?' என்கின்றான். தண்டமென்றதொழிலே இங்கே பொருளென்றார். தற்கர் = தற்கரர்: தஸ்கரர்: வடசொல். (பி-ம்:—[1]தக்கரைக். [2]காவல்செய். [3]வண்டமர். [4]வாழ்வரோ. [5]வெம்மையோர், மேன்மைதான். (௩0)

௧௯. [1]செற்றன ரெதிரெழுந் தேவர் தானவர்
கொற்றமும் வீரமும் வலியும் கூட்டற

[2]முற்ற[3]மூன் றுலகும்நீ முதல்வ னாயது
வெற்றியோ பொறைகொலோ விளம்ப வேண்டுமால்.

(இ - ள்.) மூவுலகிலெங்கும் நீ முதல்வனாய்விளங்குவது,—வெற்றியும் பராக்கிரமமும் உடல்வலிமையும் ஒருசேரஅழியும்படி மாறுபட்டவராய் எதிர்த்தெழுந்த தேவரையும் தானவரையும் வென்றசெயலாலோ? (அன்றி), பொறுமைகொண்டிருந்த செயலாலோ? (இதனை) நீ கூறவேண்டும்; (எ - று.)

தேவர்முதலியோரின் கொற்றம்முதலியனகெடும்படி அவரை வென்றதனாலேயே நீ மூவுலகுக்கும் முதல்வானானது; ஆதலால், இப்போதும் வீரங்காட்டியடர்த்தலே செய்யத்தக்கதல்லது பொறுமைகொண்டிருப்பது அன்று என்றனனென்பதாம். மன்னவராற் பொறுமைமூலமாக முதன்மைபெறலாகாதென்றபடி. மூன்றுலகுமுற்றவும் என்க. பி-ம்:—[1]செற்றவர். [2]முற்றி. [3]மூன்றுலகுக்கும், மூன்றுலகினும், மூன்றுலகமும். (௰௯)

௨௦. விலங்கின ருயிர்கெட [1]விலக்கி [2]மீள்கலாது
இலங்கையி [3]னினிதிருந் தின்பந் [4]துய்த்துமேற்
குலங்கெழு காவல குரங்கிற் றங்குமோ
உலங்குநம் [5]மேல்வரி னொழிக்கற் பாலதோ.

(இ - ள்.) குலத்தைவிளக்கவந்த அரசனே! பகைவரின் உயிரொழியும்படி (அன்னாரைக்) கொன்று மீளவேண்டியதாயிருக்கஅங்ஙனஞ்செய்யாமல் இலங்கையிற் சுகமாகத்தங்கி இன்பத்தை யனுபவித்துக்கொண்டிருந்தோமானால், (நம்மவரைஎதிர்ப்பதென்பது) ஒருகுரங்குசெய்ததனோடு நிற்குமோ? கொசுகும் நம்மேல் (எதிரிட்டு)வந்தால்(நம்மால்)ஒழிக்கமுடியுமோ? (எ - று.)

நாம் இன்னுஞ் சும்மாஇருந்தோமானால், குரங்கு நம்மூரைச்சுட்டெரித்து நம்மவரையழித்ததனோடு நிற்காது; ஒருகொசுகும் நம்மையடர்த்துக்கொல்லும்படி அவமதிக்கப்படுவோ மென்கின்றான். நமது வீரத்தைவெளிக்காட்டாவிடின், அற்பசந்துவும் நம்மை அவமதிக்க வருதல் இயற்கையே யென்றபடி. இன்னமும் இங்குத்தங்கி இன்பமனுபவித்துக்கொண்டிருப்பது தகுதியன்று: எதிரிகளுள்ள இடத்தை நாடிச்சென்று அடர்க்கவேண்டு மென்றவாறு. இக்கருத்தை மேற்பாடலில் விவரித்துக் கூறுதல் காண்க. பி-ம்:—[1]விலங்கி, விலங்கு. [2]வீழ்த்தலால், மீள்கிலாது. [3]இருந்தினிது. [4]துய்த்தியேல், துற்றியேல், துய்த்துற. [5]மேல்வர. (௨௦)

௨௧. போயின குரங்கினைத் தொடர்ந்து [1]போயிவண்
[2]ஏயின ருயிர்குடித் [3]தெவ்வந் [4]தீர்கிலம்
வாயினு மனத்தினும் [5]வெறுத்து வாழ்துமேல்
ஓயுநம் வலியென வுரைக் கூறினான்.

(இ - ள்.) (நம்முடையஊரைக் கொளுத்திச்) சென்ற குரங்கைத் தொடர்ந்துபோய், இந்நகரத்தின்மீது (அந்தக்குரங்கை) ஏவினவர்களின் உயிரைப்பருகி மனவருத்தம்நீங்கிமகிழ்ந்திடாமல், (நிகழ்ந்தசெய்தி குறித்து) வாயினால் வெறுத்துக்கூறியும் மனத்திற்குள்ளே நொந்தும் உயிர்வாழ்ந்திருந்

தோமாயின், நமக்குஉள்ள வலி குறைந்திடும்:(அதுவன்றி வேறுநற்பயனுளதாகாது)என (இராவணனது) மனத்திற்படும்படிகூறி முடித்தான் ; (எ - று.)

அயர்ந்திருத்தல்தகாது எனக் கீழ்க் கண்டித்துக்கூறிய சேனாபதி, இதனால், செய்யவேண்டுவது இன்னதெனத் தோன்றக் கூறுகின்றானென்க.அலட்சியமாயிராமல் இலங்கையினின்று புறப்பட்டு அனுமான்முதலியோருள்ள இடத்தைநாடிப் பகையொழிக்கவேண்டுவதே நாம் இப்போதுசெய்யவேண்டிய தொழிலென்று சேனாபதி கூறினனாயிற்று. பி-ம்: —[1]போயதை, போயவண். [2]ஏயென,ஏயினன். [3]எவருந். [4]தீர்ந்திலம், தீர்கலம். [5]மறுத்து, மறந்து. (௩௩)

உஉ.—மகோதரன் தன்கருத்தைக் கூறத் தொடங்குதல்.

மற்றவன் பின்னுற மகோதரப்பெயர்க்
கற்றடந் தோளினு னெரியுங் கண்ணினன்
முற்றுற நோக்கினன் முடிவு மன்னதாற்
கொற்றவ கேளென [1]வினைய கூறினன்.

(இ - ள்.) அந்தச்சேனைக்காவலனுக்குப்பின்னாக, மகோதரனென்னும் பேரையுடையனாகி மலைபோன்ற பெரியதோளையுடையவன் (கோபத்தாற்) சொலிக்கின்ற கண்ணினால் முழுதும் விழித்துப்பார்த்து, (இராவணனை நோக்கி), 'கொற்றவனே! தீர்மானமாகச்செய்யவேண்டுவதும் (சேனைகாவலன்கூறிய) அதுவேயாம்; (நான் சொல்வதைக்) கேள்' என்று இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ - று.)—மகோதரன்கூற்றை மேல்ஐந்துகவிகளிற் காண்க. பி-ம்:—[1]விளைவு கூறுவான். (௩௪)

உ௩.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: மகோதரன் கூறுவனவற்றைத் தெரிவிக்கும்.

தேவரு மடங்கின ரியக்கர் சிந்தினர்
தாவருந் தானவர் [1]தருக்குத் தாழ்ந்தனர்
யாவரு [2]மிறைவரென் றிறைஞ்சு [3]மேன்மையர்
மூவரு [4]மொடுங்கின ருனக்கு [5]மொய்ம்பினோய்.

(இ - ள்.) வலிமைபடைத்தவனே! உனக்குத் தேவர்களும் அடங்கினார்கள்; இயக்கரும் இரிந்தோடினர்; வலிமைபொருந்திய அசுரரும் (தமது) செருக்குக் குறையப்பெற்றனர்;(உலகத்தவர்)யாவரும்(முதல்மூர்த்திகளான) தலைவரென்றுவணங்குகின்றமேன்மையையுடைய (பிரமாவிஷ்ணுஉருத்திரன் என்கின்ற) மும்மூர்த்திகளும் (தமதுமேன்மையை வெளிக்காட்டாது) ஒடுங்கினின்றனர்; (எ - று.)

இதுவும் அடுத்தகவியும் இராவணனதுவீரத்தைத் தெரிவிப்பன. திக்குவிசயஞ்செய்யச்சென்ற இராவணனிடத்துத் தேவர்முதலியோர் தோற்றமையை உத்தரராமாயணத்திற் காணலாம். இச்செய்யுள் "விலங்கினர்" (20) என்றதன்பின் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. சிலபிரதிகளில் இச்செய்யுளின் மூன்றாமடி 'ஏவரு முனிவரு மேத்திநின்றனர்' என்று காணப்படுகின்றது. பி-ம்:—[1]தருக்குந், தருக்குள். [2]இறைவன். [3]மெய்ம்மையர். [4]அடங்கினர், ஒதுங்கினர். [5]முன்பினோய். (௩௫)

உ௪. ஏற்றமென் பிறிதினி யெவர்க்கு மின்னுயிர்
[1]மாற்றறு முறைமைசால் வலியின் மாண்பமை
[2]கூற்றம் நீ தன்னுயிர் [3]கொள்ளுங் கூற்றெனத்
தோற்றுநின் னேவல்தன் றலையிற் சூடுமால்.

(இ - ள்.) எப்படிப்பட்டமேன்மைப்பட்டவர்களென்றாலும்அவர்களை யும் விட்டிடாமல் இனியஉயிரைக்கொள்கின்ற தன்மைநிரம்பிய வலிமையின் மாட்சிமையமைந்துள்ள யமனும்,'நீ தன்னுயிரைக்கொள்ளுங் கூற்றுவனுவாய்' என்று (உனக்குக்) கீழ்ப்படிந்து உன்னுடைய கட்டளையைத் தன்தலைமீது ஏற்றுச்செய்வான்; இனி (இதனைக்காட்டிலும்) வேறு (உனக்கு) மேன்மை யைத்தருவது யாதுஉளது? (எ - று.)

இதனால், யமனுக்கு நீ அஞ்சவேண்டுவதில்லையென்பது பெறப்படும்.
பி-ம்:—[1]மாற்றரு. [2]கூற்றுவன், கூற்றினே. [3]உண்ணும். (௩௬)

உ௫. வெள்ளியங் கிரியினை விடையின் பாகனோடு
அள்ளிவிண் தொடவெடுத் [1]தார்த்த வாற்றலாய்
சுள்ளியி லிருந்துறை குரங்கின் தோள்வலிக்கு
எள்ளுதி போலும்நின் புயத்தை யெம்மொடும்.

(இ - ள்.) வெள்ளிமலையான கைலாசபருவதத்தை விடையையேறிச் செலுத்துபவனுகிய உருத்திரமூர்த்தியோடும் ஆகாயத்திற்படும்படி இலே சாகத்தூக்கி (அந்தச்சிவபிரான் மனமுவக்குமாறு) பேரொலிபடச் சாமகானஞ் செய்த பேராற்றல்படைத்தவனே! மரத்தின் சிறுகிளையிலிருந்து வசிக்கின்ற ஒருகுரங்கினுடைய தோள்வலிக்குமுன்னே உன்தோள்வலிமையை எம்மொ டும் குறைத்துக்கூறுவாய்போலும்; (எ - று.)

வெள்ளியங்கிரியை விடைப்பாகனோடு விண்தொடஎடுத்த தோள்வலி மையைச் சுள்ளிக்குரங்கின் தோள்வலிக்குமுன்னே எள்ளுவது தகுதியன்று என்றவாறு. பதினோராம்பாடலிலும் பதினான்காம்பாடலிலும் தமதுவலிமை யை இராவணன் குறைத்துக்கூறியுள்ளமை காண்க. வெள்ளி......ஆற்ற லாய், சுள்ளியிலிருந்துறைகுரங்கு - முறையே, கருத்துடையடைகோளியும், கருத்துடையடைமொழியும். எம்மொடும் என்றதன்பின், இருந்தஎன ஒரு சொல்வருவித்து உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]ஆர்க்கும். (௩௭)

உ௬. மண்ணினும் வானினு [1]மற்று முற்றுநின்
[2]கண்ணினில் நீங்கினர் யாவர் கண்டவர்
[3]நண்ணரும் [4]வலத்தினர் [5]நண்ணி னுபக
[6]எண்ணுவ திவர்திறத் தெண்ண லாகுமோ.

(இ - ள்.) மண்ணுலகத்திலும் வானுலகத்திலும் மற்றுமுள்ள எல்லா வுலகங்களிலும் உன் கண்ணுக்கு அகப்படாமல் விலகினவராய்க் கிட்டுதற்கு அரியவலிமையுடையவராய் யாவர் காணப்படுகின்றனர்? [எவருமில்லை]; நாயக! ஆலோசித்துப்பார்த்தால், (மிக்கவலியவர் பொருட்டு) ஆலோசிக்க

வேண்டியஆலோசனையை இந்த (வலியற்ற) மானுடர்பொருட்டு எண்ணுதல் தகுதியோ? (எ - று.)

திரிலோக வீரனாக உனக்குமுன்னே இந்த இராமன்முதலியோர் ஓர் பொருளாவாரன்றோ? மந்திராலோசனையென்று பலரைச்சேர்த்து ஆலோசிக்கவேண்டுவது இந்தமானுடர்பொருட்டா? என்றவாறு. பி-ம்:—[1]மற்றுமூற்றுமீ, மற்றைமூன்றினும், மற்றைமூன்றினுன், மற்றையொன்றினும். [2]கண்ணனி, கண்ணினும். [3]நண்ணிரும், நண்ணினர். [4]வலத்தவர். [5]யாவர் நாயக, எண்ணிஞயக, என்னுநாயக, என்னிஞயக, நண்ணிநாயகன். [6]எண்ணுவர் திறத்தினி லெண்ணலேயுமோ, எண்ணினர் திறத்தவரெண்ணலேயுமோ, எண்ணுறுதிறத்தவர்க்கெண்ணலாவதோ, எண்ணில ரிறந்தவ ரெண்ணிலாவரோ. (௩அ)

உஎ.[1]இடுக்கினி [2]யியம்புவ [3]தென்னை [4]யீண்டெனை
விடுக்குவை யாமெனிற் குரங்கை வேரறுத்து
ஒடுக்கரு மனிதரை [5]யுயிருண் டுன்பகை
முடிக்குவன் யானென முடியக் கூறினான்.

(இ - ள்.) இனி (நமக்குச் சங்கடம் (நேர்ந்ததென்று) சொல்லுவது எற்றுக்கு? இப்போது என்னை அனுப்புவாயேயானால், குரங்கினத்தைவேரோடும்போக்கி, வெல்லுதற்குஅரியரென்றுநினைக்கப்படுகின்ற மனிதரை [இராமலட்சுமணரை]க் கொன்று உன்பகையை யானே முடிக்கின்றேனென்று கூறிமுடித்தான்; (எ - று.)

குரங்குகளையும் இராமலட்சுமணரையும் நாடிச்சென்று கொல்லுவதே செய்யவேண்டிய செயலென்றும், கட்டளையிட்டால் அதனைத் தானே செய்து தீர்ப்பதாகவும் கூறிமுடித்தனன், மகோதரனென்க. இடுக்கு - மனமிடுங்குவதற்குக்காரணமானது; துன்பம். முடியக்கூறினான் - விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது; இனி, விகுதிபிரித்துக்கூட்டாமல் முடிவுபெறக்கூறினானெனினுமாம். பி-ம்:—[1]மிடுக்கிவண், இடுக்கிவண். [2]விளம்புவது. [3]என்ன, இல்லை. [4]வெய்தென, ஈண்டென. [5]ஒடுக்கி. (௩௯)

உஅ.—இதுமுதல்மூன்றுகவிகள் - வச்சிரதந்தன்கூறுவதைத்தெரிவிக்கும்.

இச்சிரத் தவ[1]னுரைத் திறக்கு [2]மெல்லையில்
வச்சிரத் [3]தெயிற்றவன் [4]வல்லை [5]கூறுவான்
அச்சிரத் தைக்கொரு [6]பொருளன் றென்றனன்
பச்சிரத் தம்பொழி பருநிக் கண்ணினான்.

(இ - ள்.) இந்தத்தலைமைபெற்ற மகோதரன் பேசித் தங்குமளவில், வச்சிரதந்தனென்பவன், விரைந்துகூறத்தொடங்கினவனாய்,—புதிய இரத்தத்தை வெளிக்கான்றுசூரியன்போற்(சிவந்து)தோன்றுகின்ற)கண்களையுடையவனாகி, 'அப்படிப்பட்டசிரத்தைகாட்ட இவர்ஒருபொருளன்று' என்றுகூறினான்.

கவலைப்பட்டு ஆலோசிக்குமாறு வலியபகைவர்களல்லர் இவரென்று கூறியவாறு. பொருள்என்றசொல்நோக்கி, 'அன்று' என ஒன்றன்பால்வந்தது.

அச்சிரத்தைக் குனன்பதை ஒருசொல்லாகக்கொண்டு, அவமதித்துவெறுமனே யிருத்தற்குரியபொருளன்று எனக் கூறுவாருமுளர். பி-ம்:—[1]உரையிறக்கும். [2]எல்லையில், மேலவை, எல்லையுள். [3]எயிற்றினன். [4]வல்ல. [5]கூறினான். [6]பொருளின்றாயினும், பொருளன்றாயினும். (௬௦)

உகூ.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

போயினி மனிதரைக் குரங்கைப் [1]பூமியில்
தேயுமின் கைகளால் தின்மி னென்[2]றெமை
ஏயினை யிருக்குவ தன்றி [3]யென்னினி
[4]ஆயுமி [5]தெம்வயி னயிர்ப்[6]புண் டாங்கொலோ.

(இ - ள்.) (பின்னும் வச்சிரதந்தன் கூறுவான்:—) 'இப்பொழுதேபோய்ப் பூமியிலுள்ள மனிதரையும் குரங்கையும் கைவலிமையாற் கொன்றுதின்னுங் கள்' என்று எங்களை ஏவிக் கவலையற்றிருப்பதன்றி, இப்போது (என்னசெய்ய லாமென்று) ஆராய்கின்ற இது என்னை? (நாங்கள் பகைவரை யழிக்கவல்ல மையுடையோமோ? அல்லோமோ என்று) எங்கள்மீது ஐயமும் (உனக்கு) உண்டோ? (எ-று.)—ஆம், ஓ-அசை. ஐயமும் உண்டாங்கொல்-ஐயமுளதாவது தகுதியோ எனினுமாம்.

ஆலோசிக்கவேண்டுவது இப்போது அனாவசியம்: எங்களைப் பகையொ ழிக்குமாறு ஏவலா மெனக் கூறியவாறு. கைகள் - தோள்வலிமைக்கு இலக் கணை. தேயுமின் - முற்றெச்சம்: கைகளால் பூமியிலே தேயுங்கள்; தின்னுங் கள்எனினுமாம். இதனாலும் அடுத்தசெய்யுளினாலும், இராவணன் பகை யழிக்குமாறு கட்டளையிடவேண்டுமென்கின்றான். பி-ம்:—[1]பூமிமேல். [2]எனே. [3]எண்ணினில், எண்ணிநீ, எண்ணினே. [4]ஆயுமது. [5]எமர்வயின், என்வயின். [6]உண்டாகவோ, உண்டாய்கொலோ. (௬௧)

௩௦. எவ்வுல கத்துநின் னேவல் கேட்கிலாத்
தெவ்வினை [1]யறுத்துனக் கடிமை [2]செய்த யான்
[3]தவ்வின [4]பணி[5]யுள [6]தாகத் தான்கொலோ
இவ்வினை [6]யென்வயி னீகலா தென்றான்.

(இ - ள்.) எந்தஉலகத்திலிருந்தாலும் உன்பணியைக்கேட்காத பகையை யொழித்து உனக்கு அடிமைசெய்தவனான யான் தவறியகட்டளை உள்ளதாகக் கருதியோ, இந்தத்தொழிலை [பகைவரை யழித்துவருவதை] என்னிடத்துத் தாராமலிருப்பது? என்றுகூறினான்; (எ-று.)

உடனே பகையையழித்துவருமாறு எனக்குக் கட்டளையிடவேண்டு மென்றபடி. பி-ம்:—[1]மறுத்து. [2]செய்தியான். [3]தவ்வினைப். [4]பழி. [5]உள. [6]ஆகி. [7]எம்வயின். (௬௨)

௩௧.—துன்முகன் கூறத்தொடங்குதல்.

[1]நின்னிலென் [2]றவன்றனை விலக்கி நீ[3]யிவண்
[4]என்முனு [5]மெளியையபோ [6]லிறுத்தி யோவெற

மன்முகம் நோக்கினன் வணங்கி வன்மையால்
துன்முக னென்பவ னிணைய 7சொல்லுவான்.

(இ - ள்.) (சீ)சில்சில்என்று அந்த வச்சிரதந்தன்கூறுவதைத்தடுத்து (ப்பிறகு) துன்முகனென்பவன் 'நீ இப்போது என்முன்னும் எளியவன்போல் இருக்கக்கடவையோ?' என்று அரசனுன இராவணன் முகத்தைப்பார்த்துச் சொல்லி, வணங்கி, வலிமையோடு இவ்வார்த்தைகளைச் சொல்லலானுன்; (எ - று.)—அவற்றை அடுத்த ஆறுகவிகளிற் காண்க.

சில்சிலென்று வச்சிரதந்தனைத் துன்முகன் விலக்கியது, அந்தரங்கரென்று தம்மைநினைத்து இராவணன் ஏகாந்தமாக ஆலோசனை கேட்கையில் தம்மையயிர்த்ததாக அவ்விராவணனைப்பற்றிக் குறைகூறுவது பொருந்தாதென்ற கருத்தினு லாகும். 'என்முனும்' என்றது - தன்னைப்போன்றவரிருக்கையில் எளிமைப்படவேண்டுவதில்லை யென்ற குறிப்பினுலாவது, பணியாளரிடத்துப் பெருந்தலைவன் எளிமைப்படலாகாதுஎன்ற குறிப்பினுலாவது, கூறியதாம். பி-ம்:—1சின்மின். 2அவனையும். 3இவன், இவை. 4என்னிலும், என்னினும். 5எளியர்போல். 6இருத்தி, இறத்தி. 7சொல்லினன்.　　(௬௩)

௩உ.—இதுமுதல்ஆறுகவிகள்-ஒருதொடர்: துன்முகன்கூறுவதைத் தெரிவிக்கும்.

திக்கயம் வலியில தேவர் மெல்லியர்
முக்கணன் கயிலையு மூணின் றுயது
மக்களுங் குரங்குமே 1வலிய ராமெனின்
அக்கட விராவணற் 2கமைந்த வாற்றலே.

(இ - ள்.) (உனதுவலிமைக்கு முன்னே) அஷ்டதிக்கஜங்களும் வலியில்லாதனவாயின; தேவர்களும் வலியொடுங்கியவராயினர்; மூன்றுகண்களையுடையனுன சிவபெருமானுடைய கயிலாயகிரியும் வலிமையற்றதாய் விட்டது; (அப்படிப்பெருவலிமைபடைத்த உனக்குமுன்னே) மக்களும் குரங்குகளுமே (நாம் இப்போது என்செய்யலாமென்று ஆலோசிக்குமாறு) வலிமையையுடையவரானுல் இராவணனுக்குப் பொருந்தியவல்லமை வியக்கத்தக்கதே; (எ - று.)

திக்கஜங்கள்முதலியவற்றை வென்ற இராவணேசன் அற்பஜந்துக்களாகிய குரங்கையும் மனிதரையும் பெருவீரத்தினராக மதித்து ஆலோசிப்பானுனல் அவனுடைய ஆற்றலின்தன்மை அதிசயிக்கத்தக்கதே யென்றனனென்க. மகாவீரனுனவன் அற்பரான வானரரையும் நரரையுங் குறித்துச் சிந்தித்தல் தகாதென்பது கருத்து. அக்கட என்பது - அதிசயத்தைக்குறிப்பதாய்க் கன்னடத்தில்வழங்குவது தமிழில்வந்த தென்பர்: ஆகவே, இது திசைச்சொல்லாம். பி-ம்:—1வலியவாமெனின், வலியராமெனும். 2அமைந்தது.

௩௩. பொலிவது 1பொதுவுற வெண்ணும் புன்றொழில்
மெலியவர் கடனமக் கிறுதி வேண்டுவோர்

வலியினை ரெனிலவர்க் கொதுங்கி [2]வாழ்துமோ
ஒலிகழ லொருவ [3]நம் முயிருக் கன்பினால்.

(இ - ள்.) நடுவுநிலையுடன் பார்க்குமிடத்து, ஆலோசனை செய்தலாகிய புல்லியதொழிலானது, வலியற்றவர் செய்யவேண்டிய கடமையாக விளங்குகின்றது; நமக்கு இறுதியைவிளைக்க விரும்புபவராகிய (நமது) பகைவர் (ஒருகால்) வலியவரென்று நம்மாலோசனையிற்பட்டால், ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த ஒப்பற்றவீரனே! (அப்போது) நம்முயிரிடத்து அன்புகொண்டு அப்பகைவர்க்கு ஒடுங்கி வாழக்கடவோமோ? (எ - று.)

பொது - நடுநிலைமை. 'போருக்குச்செல்வதா? அன்றி, ஊரிலேயே பகைவர்க்கு ஒடுங்கிவாழ்வதா? இவ்விரண்டில் எது தக்கதோ அதைச் செய்வோம்' என்று கருதுபவரல்லவோ மந்திராலோசனை செய்யவேண்டும். அங்ஙனம் எண்ணுவது மெலியவர்கடமையல்லவோ? வலியவராகிய நாமோ எதிரிகளை ஒழித்தேதீர்க்கவேண்டுமென்ற உறுதியைக் கொள்ளவேண்டியவ ராதலால், நமக்கு மந்திராலோசனையாற் பயனில்லையே யென்று எடுத்துக்காட்டினனென்க. 'ஒலிகழலொருவ' என்ற விளி, அஞ்சினவர்போல ஆலோசனைசெய்வது உனக்குத் தக்கதன்றென்ற கருத்தைக் குறிப்பிக்கும். பி-ம்:—[1]பொலிவுற. [2]வாழுமோ. [3]முன். (சரு)

கூசு. கண்ணிய [1]மந்திரங் [2]கருமம் காவல
[3]மண்ணியல் மனிதருங் குரங்கு [4]மற்றவும்
உண்ணிய வமைந்தன [5]வுணவுக் குட்குமேல்
திண்ணிய வரக்கரிற் றீரர் யாவரே.

(இ - ள்.) காவலனே! பூமியிற்பொருந்திய மனிதரும் குரங்குகளும் மற்றுமுள்ள (அவற்றின் இனமான) கரடிமுதலியனவும், (நாம்) உண்ணுமாறு அமைந்தனவாகும்: (அவ்வாறிருக்க, நாம் நம்முடைய) உணவுப்பொருளாகிய அந்த மனிதர்முதலியோரிடத்தினின்று அஞ்சுவோமானால், வலியவரென்றுபெயர்வைத்துக்கொண்டுள்ள அரக்கராகிய நம்மைக்காட்டிலும் மனத்திட்பமுடையவர் யாவர்? (அங்ஙனம் நம்முடைய உணவுப்பொருளினிடத்தினின்று அஞ்சுமிடத்து இப்போது செய்யவேணுமென்று) கருதிய ஆலோசனையும் செய்யத்தக்கதேயாம்; (எ - று.)

உட்கும் = உட்குதும்: விகாரம். உணவுப்பொருளைக்கண்டு அஞ்சுபவர் எவ்வளவுதீர ரென்று பிறநூறிப்புவகையால் இகழ்ந்தான். மந்திராலோசனையென்பது, வலியற்ற மனத்திட்பம் நீங்கியவர்க்குச் செய்தக்கதொழிலென்று கூறியவாறு. கருமம் - செய்யத்தக்கது. மண் - பூமி. பி-ம்:—[1]மந்திரக். [2]கருதங். [3]மண்ணிய. [4]மற்றுநாம். [5]உரையுங்கேட்டியேல். (சசா)

கூரு. எரியுற [1]மடுப்பது மெதிர்ந்து ளோர்படப்
பொருதொழில் [2]யாவையும் [3]புரிந்து போவதும்
வருவதுங் [4]குரங்கு நம் வாழ்க்கை யூர்கடந்
தரிதுகொ [5]லிராக்கதர்க் காழி நீந்துதல்.

(இ - ள்.) (நம்முடையவூர்க்கு) வருவதும், (அங்ஙனம்வந்து)நெருப்பை எப்புறமும்பரவுமாறு இடுவதும் [எரிப்பதும்], (தன்னை) எதிர்ந்தவர்யாவரும் இறந்திடுமாறு போர்த்தொழிலையெல்லாஞ்செய்து (மீண்டு நம்மூரைவிட்டுப்) போவதும் ஒருகுரங்காகும்:இராக்கதராகியநமக்குநம்வாழிடமான ஊரைவிட்டு ஆழியைநீந்தி (அந்தக்குரங்குள்ளஇடத்து)ச் செல்லுதல் அரிதுபோலும்; (எ - று.)—கொல் - ஐயப்பொருளது.

வலிமையென்பதுசிறிதும்இல்லாதஅற்பக்குரங்குஒன்று நாம் இருக்குமிடந்தேடிவந்து ஊரில் எரியூட்டி மீண்டு எளிதிற்சென்றுவிட, பேரைச் சொன்னாலும் யாவரும்நடுங்கும்படி பெருவலிபடைத்த அரக்கராகிய நாம் கடல்கடந்து அதனை நாடிச் சென்று கொல்வது அரிதாய்விட்டதோ? இது சிறிதும் தக்கதன்றென்றவாறு. வருவதும் - மிக்கவலிமையோடு நம்பகை வருடன் இலங்கைக்குமீண்டுவருவதும் எனினுமாம். பி-ம்:—1விடுப்பதும். 2யாவதும், ஆவது. 3புகலலெம்மொடும். 4குரங்கினம். 5அரக்கருக்கு. (௩௭)

௩௮. 1வந்துநம் மிருக்கையு மரணும் வன்மையும்
வெந்தொழிற் றானையின் 2விரிவும் வீரமும்
சிந்தையி 3னுணர்பவர் யாவ ரேசிலர்
உய்ந்துதம் 4முயிர்கொடிவ் வுலகத்5துள்ளுளார்.

(இ - ள்.) (நம்மூரில்) வந்து நமதுஇருப்பிடத்தின்அமைப்பையும் நம்முடையஅரணமைந்துள்ளவகையையும்,(அதன்)உறுதிப்பாட்டையும், கொடுந்தொழிலை [கொல்லுந்தொழிலை] யுடைய (நமது) சேனையின்பரப்பையும், (அரக்கராகிய நமது) பராக்கிரமத்தையும் (தமது) மனத்தினால் ஆராய்ந்துணர்பவராய் (நம் கைக்குஅகப்படாமல்) தப்பித் தமதுஉயிருடன் (சென்று) இவ்வுலகத்தினுள்உள்ளவர் எந்தச் சிலர்தாம்? [எவருமில்லை யென்றபடி].

நம்மிடத்துள்ளஅச்சத்தினால் எவரும் நமதுஇருக்கைமுதலியவற்றை மனத்தினாலுங் கருதமாட்டார்: ஒருகாற்கருதினராயின், அன்னார் நம் கையிலகப்பட்டு உயிரை யிழப்ப ரென்றவாறு. ஆகவே, நேரே கண்ணினால் நம் மிருக்கைமுதலியவற்றைக்கண்டுசென்று தனதுதலைவரிடங்கூறிய வானரத்தையும்,அவ்வானரத்தின்மூலமாக நமதுசெய்தியையெல்லாம்உணர்ந்த மானுடரையும் கொன்றொழிக்கவேண்டு மென்றபடி. இக்கருத்தை, மேற்செய்யுளிற் கூறுதல் காண்க. பி-ம்:—1வந்துன திருக்கையும், வந்துன திருக்கையின். 2விதியும். 3உணர்ந்தவர். 4உயிரொடு, உயிர்கெட. 5உள்ளுவார். (௩௮)

௩௯. ஒல்வது நினையினு முறுதி யோரினும்
வெல்வது விரும்பினும் 1விளைவு வேண்டினும்
2செல்வது மவருழைச் சென்று 3தேய்ந்தறக்
4கொல்வதுங் கருமமென் றுரைக் கூறினான்.

(இ - ள்.) (இப்போது) செய்யத்தக்கதை ஆலோசித்தாலும், (நமக்கு) உறுதியைத்தரக்கூடியதை ஆலோசித்தாலும், ‘(நமக்கு) வெற்றியைத்தரக்கூடியதை நாடினாலும், (நமதுகாரியம் நன்கு) முடிவதை விரும்பினாலும்,

அந்தஇராமலட்சுமணருள்ள இடத்துக்கு [சமுத்திரத்தின் அக்கரையிலே] செல்வதும், சென்று உயிரொழிந்துநீங்க (அப்பகைவரைக்) கொல்லுவதும் (நாம்) செய்யவேண்டியதொழிலென்று விளக்கமாகக் கூறிமுடித்தான்; (எ - று.)

நமதுபகைவர் வலிமைபெற்று நமதுஇருப்பிடத்தை நணுகுதற்கு முன்னம் நாமே அவருள்ளஇடந்தேடிச்சென்று அவர்களை வேரோடொழித்துவிடுதலே செய்யத்தக்கதொழிலென்று துன்முகன் தன்துணிபை எடுத்துக்கூறினனென்க. பி-ம்:—[1]வினையம். [2]செல்வதங்கு. [3]தீர்ந்தற. [4]கொல்வது.

௩௮.—இதுமுதல்நான்குகவிகள் - மகாபார்சுவன் கூறுவதைத் தெரிவிக்கும்.

காவலன் [1]கண்ணெதி ரவனைக் [2]கைகவித்
தியாவதுண் டினிநமக் [3]கென்னச் சொல்லினன்
கோவமும் [4]வன்மையுங் [5]குரங்குக் கேயெனு
மாபெரும் பக்கனென் றொருவன் வன்மையான்.

(இ - ள்.) மகாபார்சுவனென்றுபேர்படைத்த வலியவனான ஓரரக்கன்,—இராவணன்கண் ணெதிரிலே அந்தத்துர்முகனை (நீபேசியதுபோதுமென்னுங் குறிப்புத்தோன்றக்) கையைக்கவித்து அடக்கி, (ஒருகுரங்குக்காக நாம் இத்துணைக்கவலையெடுத்துக்கொண்டால்) இனிமேல் நமக்கு என்னவீரமுள்ளதாகும்? எனவும், சீற்றமென்னுங்குணமும் வலிமையென்னுங்குணமும் குரங்குக்கே (உள்ளனவாகும்) எனவும் கூறி (ப்பின்னுஞ்) சொல்பவனானான்; (எ - று.)—பின்னுங்கூறுவதை, மேல் மூன்றுசெய்யுள்களிற் காண்க.

பகைவர்கள் நம்மிடத்துக்கு வருவதற்குமுன் விரைந்து அப்பகைவருள்ளவிடத்துக்குச் சென்று கொல்லவேணுமென்று துர்முகன் கூறியது, மகாபார்சுவனுக்குச் சம்மதமில்லையாதலால், அவன்கூறியதைக் கைகவித்துவிலக்கி, 'நாம் இப்போது அச்சங்கொண்டு சென்று பகையை யழிக்கவேண்டுமென்பதில்லை' என்னுங் கருத்தைக் காட்டினனென்க. 'அஞ்சுதல் தகுதியன்று' என்பதை மேலிரண்டுகவிகளிலும் விளக்குதல்காண்க. மஹாபார்ஶ்வன் என்ற வடமொழிப்பெயரை 'மாபெரும்பக்கன்' என்றார். பி-ம்:—[1]தன்னெதிர். [2]கைதவிர்த்து. [3]என்றுகூறினன். [4]வெம்மையும். [5]குரங்கிற்றே. (௩௦)

௩௯. [1]முந்தினர் முரணிலர் சிலவர் [2]மொய்யமர்
நந்தினர் [3]தம்மொடு [4]நனி [5]நடந்ததோ
வந்தொரு குரங்கிடு தீயின் வன்மையால்
வெந்ததோ விலங்கையோ டரக்கர் வெம்மையும்.

இதுமுதல்மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (குரங்கொன்று நம்மூர்க்குவந்தகாலத்து) முந்திப்போர்க்குச் சென்றவரான வலியற்ற சிலஅரக்கவீரர் நெருங்கிச்செய்யும்போரில் (இறந்துபட்டனரென்றகாரணத்தால் அந்த) இறந்துபட்டவரோடு அரக்கரின்வெம்மையும் அடியோடுபோய்விட்டதோ? (அன்றி), ஒருகுரங்குவந்துஇட்ட

தீயின்பெலத்தினல் இலங்கையெரியுண்டபோது அரக்கர்வெம்மையும் உடன்வெந்திட்டதோ? (எ - று.)

குரங்கொன்று நம்மூரில்வந்தபோது வலிமையற்றசிலர் அந்தக்குரங்கை எதிர்த்துப்பொருது தம்முயிரையிழந்தார்களென்றகாரணத்தினல், அரக்கர் பலமே போய்விட்டதாகக் கருதலாமோ? இலங்கையெரியுண்டதென்ற காரணத்தினல்தான் அரக்கர்பலம் எரியுண்டதென நினைக்கலாமோ? நினைத்தலாகாது. ஆகையால், குரங்கினல் ஏதோ சிறுகேடு நிகழ்ந்ததுகுறித்து இவ்வளவு அஞ்சவேண்டுவதில்லை யென்றபடி. அரக்கர்வெம்மைஎன்றதொடர், 'நடந்ததோ, வெந்ததோ' என்ற ஈரிடத்துஞ் சென்றியைந்தது: கடைநிலைத்தீவகம். பி-ம்:—1முந்திலர், முந்துணர். 2மெய்ம்மையர். 3தமரொடு, நம்மொடு. 4தனி. 5நயந்ததோ, ஙயந்ததோர். (௫௧)

௬0. மானுட 1ரேவுவார் குரங்கு வந்திவ்வூர்
தானெரி மடுப்பது நிருதர் 2தானையே
ஆனவ ரதுகுறித் தழுங்கு வாரெனின்
3மேனிகழ் தக்கன விளம்ப வேண்டுமோ.

(இ - ள்.) ('நீ சென்றுவருக' என்று) கட்டளையிட்டனுப்பியவரோ, (நாம் அலட்சியமாகஎண்ணும்) மானுடர்; (அம்மானுடராலேவப்பட்ட அற்பப்பிராணியாகிய) குரங்கானது தான் (அங்குநின்று) இவ்வூர்க்குவந்து நெருப்புவைத்திடுவது; அந்தச்செயலைக்குறித்து (உலகத்தாரெல்லாம் நடுங்கும்பெருவலிமைபடைத்த) இராட்சதசேனுவீரரானவர் மனக்கவலைகொள்வாரென்றல் இனிமேல் நிகழக்கூடியவற்றைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?

அற்பமானுடர் தம்மினும்அற்பப்பிராணியான ஒருகுரங்கை யேவ, அந்தக்குரங்கு தன்சாதிக்குஉரிய சேஷ்டையாக இவ்வூரில் நெருப்பைப் பற்றவைத்ததென்றல், பெருவீரமுள்ள அரக்கராகிய நாம் அதை இலட்சியஞ்செய்யாமலிருப்பதைவிட்டு அதற்காக ஏக்கங்கொண்டிருந்தால், எதிரிகள் நமதுசெய்கையைக்கண்டு தருக்குக்கொண்டு தலைக்குமேலேறமாட்டாரோ? ஆகவே, இச்சிறுசெயலைப் பெரிதாகமதிப்பது தகுதியன்று என்றவாறு. இந்த மகாபார்சுவன் பேச்சு 'இன்னும் என்னென்னதீமைகளோ விளையப்போகின்றன' எனத் தூர்நிமித்தமாகவந்த தென்னலாம். பி-ம்:—1ஏவலால். 2தானவர். 3மேனிகழ்வதற்கினி, மேனிகழ்வதற்குரை. (௫௨)

௬௧. நின்றுநின் றிவைசில 1விளம்ப 2நேர்கிலன்
3நன்றினி நரரொடு குரங்கை நாமறக்
4கொன்றுதின் றல்லதோ 5ரெண்ணங் கூடுமோ
என்றன னிகல்குறித் தெரியுங் கண்ணினன்.

(இ - ள்.) இங்குஇருந்துகொண்டு (எதிரிகளின்பெருமையும் நமது சிறுமையுந்தோன்றும்) இவ்வாறன சிலவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்க உடன்படேன்; (பின் என்னசெய்யவேண்டுவதெனின், ஏக்கம்பிடித்து ஆலோசிப்பதைவிட்டிட்டு); இனி (நம்மெதிர்ப்பட்ட) மனிதருடனே

குரங்கையும் பேரும்இல்லையாம்படி கொன்றுநன்றுகத்தின்பதுதவிர வேறு ஆலோசனையென்பது கூடுமோ? என்றுகூறினான்: (யாவனெனில்?—) பராக்கிரமத்தைக்குறித்துச் சினத்தீவெளிப்படுகின்ற கண்ணையுடையவனான அந்த மகாபார்சுவன்; (எ - று.)

நமக்கு மானுடரும் குரங்கும் எதிரல்லவாதலால், அவர்கள் திறமையைக் குறித்து என்செய்யலாமென்று இவ்வாறுஆலோசிப்பதைவிட்டு, கண்ணெதிர்ப்பட்ட குரங்கையும் மானுடரையும் பேரும்இல்லாதவாறு அடியோடு கொன்றுவிடுவதே நாம் செய்யவேண்டிய செயலென்றான், மகாபாரிசுவனென்க. துன்முகன்சொன்னமுடிவுபோலவே இவன்கூறியமுடிவும்இருப்பினும், மானுடர் முதலியோரைப் பகைவராகஎண்ணி அவர்களுள்ளவிடத்துச் சென்று கொன்றொழிக்கவேணுமென்று அன்னவன் கூறினனாக, 'அந்தக் குரங்காவது மானுடராவது நமக்கு நேரல்லர்: நம்முடையவலிமைமுதலியனவோ மிகவும் மேம்பட்டவை: எதிர்ப்பட்ட அவர்களை நாம் எளிதிற்கொன்றொழிக்கலாம்' என்ற கருத்தோடு இந்தமகாபாரிசுவன் கூறுகின்றனனென்க. பி-ம்:—[1]விளம்பி, இயம்பி. [2]நேர்கிலம், நேர்வனே. [3]நன்றெனை,நன்றெனின், நன்றுநீ. [4]கொன்றுநின்று.[5]எண்ணும். (௫௩)

௪௨.—பிசாசனென்னும்இராக்கதன் தன்கருத்தைக் கூறுதல்.

திசாதிசை போதுநா மரசன் செய்வினை
யுசாவின [1]னுட்கின னொழிதும் வாழ்வென்றான்
பிசாசனென் றொருபெயர் பெற்ற பெய்கழல்
[2]நிசாசர னுருப்புணர் [3]நெருப்பி [4]னீர்மையான்.

(இ - ள்.) பிசாசனென்றுஒப்பற்ற புகழைப்பெற்ற வீரக்கழலையணிந்த நிசாசரன் நெருப்பினுருவத்தைப்பெற்ற [மிகக்கொதிக்கின்ற] தன்மையையுடையவனாய், '(நம்முடைய) அரசன் அஞ்சினவனாய்ச் செய்யவேண்டிய செயலைக்குறித்து வினவலானான்; (ஆகையால் இந்தமானக்கேடானசெயலைக் கருதித்)திக்குக்கள்தோறும் நாம்போய் (நமது) உயிர்வாழ்தலைவிட்டிடக்கடவோம்' என்று (வெறுப்பினாற்) கூறினான்; (எ - று.)

திசாஎன்றசொல்அடுக்கித்திரிந்து 'திசாதிசை' என வந்தது. போதும்-தன்மைப்பன்மைமுற்றெச்சம். 'எதற்குங்கலங்காதமனத்திண்மையையுடைய மன்னவன்கீழ் வாழ்வதே வீரர்க்குஅணி' என்னுங் கருத்தினால், இவ்வாறு கூறினான். நிசாசரன் - இரவிற்சஞ்சரிப்பவனென்று காரணப்பொருள்படும் வடமொழி. பி-ம்:—[1]உட்கினமொழிதும். [2]நிசாசராருரு, நிசாசரருள். [3]நெருப்பு. [4]நேர்மையான். (௫௪)

௪௩.—சூரியசத்துரு தன்கருத்தைக் கூறுதல்.

ஆரியன் றன்மையி தாயி னுய்வுறு
காரிய மீதெனிற் கண்ட வாற்றினால்
சீரியர் மனிதரே [1]சிறியம் [2]யாமெனாச்
சூரியன் பகைஞனென் றொருவன் சொல்லினான்.

(இ - ள்.) சூரியசத்துருஎன்ற பேரையுடைய ஒருவன் '(நமக்குப்) பெரியோனாகிய இராவணன்தன்மை இங்ஙனம் அஞ்சுவதாயின், (நாம்)ஆராய்கின்ற காரியம் (ஒருகுரங்கையும் அற்பமானுடரையும் வெல்லுகின்ற) இது ஆகுமானால், (நாம்) ஆராய்ச்சிசெய்துபார்த்தவளவினால், மனிதரே மேம்பட்டவர்: நாம் தாழ்ந்தவர்' என்று சொல்லினான்; (எ - று.)

நாம் மேம்பட்டவராயின், ஒருகுரங்கை யேவிய மானுடரைக் குறித்து இத்துணை ஆலோசனைகூடுமோ? என்றவாறு: ஒருகுரங்கையேவிய மானுடரை வெல்லுவதுகுறித்துக் கலக்கங்கொண்டு இத்துணை ஆலோசனை செய்வது மனத்திற்குப்பிடியாமையால் இங்ஙனங் கூறினான். சூரியசத்துரு என்னும் பெயரை 'சூரியன்பகைஞன்' என்றார். சூரியன் பகைஞன் - பானுகோபன் என்பாருமுளர். பி-ம்:—[1]சிறியர், சிறுமை. [2]மாயெனச். (௫௫)

௪௪.—யஜ்ஞஹாஎன்பவன் தன்கருத்தைக் கூறுதல்.

ஆள்வினை நிலைமையு [1]மரக்க ராற்றலும்
[2]தாழ்வினை [3]யிதனின்மேற் பகரத் தக்கதோ
சூழ்வினை மனிதராற் றோன்றிற் று[4]மென
வேள்வியின் பகைஞனு [5]முணர்த்தி வெள்கினான்.

(இ - ள்.) யஜ்ஞஹாஎன்ற அரக்கனும், 'நாம் ஆலோசனைசெய்வது மனிதரின் பொருட்டால் தோன்றியதாகும்: (அங்ஙனமாயின் அரக்கர் உலகத்தவரை)ஆளுந்தொழிலின்நிலையையும்,அரக்கரின் வல்லமையையும் தாழ்வுறச்செய்யுந்தொழில் இதைக்காட்டிலும் மிக்கதென்று சொல்லத்தக்கது (வேறு) உள்ளதோ?' என்று சொல்லி, (தமக்குநேர்ந்தநிலையைக்குறித்து) நாணங்கொண்டான்; (எ - று.)

மனிதரால்விளைந்ததுகுறித்துச் சூழ்தல், அரக்கராகிய நமக்கு மிக்கதாழ்ச்சியைத்தருமென்றனனென்க. ஸ்ரீவால்மீகத்து 'யஜ்ஞஹா' என்று ஒரு பெயர் மந்திராலோசனையில்வந்தவருள் ஒருத்தனுக்குஇருத்தலாலும், அது வேள்வியையழித்தவனென்று பொருள்கொள்ளுதற்கு ஏற்றதாதலாலும் அப்பெயரே 'வேள்வியின்பகைஞன்' என்றதாகக் கொள்ளப்பட்டது. பி-ம்:—[1]அரசன். [2]தாழ்வினி. [3]அவர்நிலை, இதனிலை. [4]எனில். [5]உரைத்து.

௪௫.—தூமிராட்சன் தன்கருத்தைக் கூறுதல்.

தொகை[1]நிலைக்[2]குரங்குடை மனிதர்ச் [3]சொல்லியென்
[4]சிகைநிறச் சூலிதன் றிறத்திற் [5]செல்லினும்
[6]நகையுடைத் தாமமர் செய்த னன்றெனாப்
புகைநிறக் கண்ண[7]னும் புகன்று பொங்கினான்.

(இ - ள்.) தூமிராட்சனென்பவனும், '(நமக்குத் தீங்குவிளைத்தானென்று கருதி) அக்கினிச்சுவாலையின் நிறத்தைக்கொண்ட சிவபிரான்பக்கல் (போர்புரியச்)சென்றாலும்,(அதுவும் பிறர்) பரிகசித்துச்சிரித்தற்குக் காரணமாகும்: (அங்ஙனமிருக்க), ஒன்று கூடி நிற்றலையுடைய குரங்கைக் கொண்ட

மனிதர்மீது (தீங்குசெய்தாரென்று படையெடுத்துச்) செல்லுதலைக்குறித்துச் சொல்லி என்னபயன்? [சொல்லாமலே அதுவிளங்குமென்றபடி]; (அவர் நம்மிடத்துவரின்) பொருவது நல்லதாகும்' என்றுசொல்லி, மனத்திலுள்ள கோபம்வெளிபட்டுத்தோன்ற நின்றான்; (எ - று.)

மனிதர்மீது செல்லுதல் நகையுடைத்தா மென்பதைக் கைமுதிக நியாயம்படக் கூறியது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. "தழல் நிற வண்ணன்" என்பவாதலால் 'சிகைநிறச் சூலி' என்றார். சிகை = ஜ்வாலை: அக்கினியின் சுவாலை. சூலி=சூலீ: சூலாயுதத்தையுடையவன்: சிவபெருமான். புகைநிறக்கண்ணன்-தூம்ராக்ஷன்என்பதன் மொழிபெயர்ப்பு. பி-ம்:— [1]நிறச். [2]குரங்குடன். [3]சொல்லினென், சொல்லலம். [4]திகைநிறச், திகைநிலைச். [5]சொல்லினும், சேரினும். [6]தகைநிறத்தண்ணறன் சமைதல், தகைநிறத்தெண்ணலன் சமைதல், தகைநிலத்தருஞ்சமஞ்சமைந்த. [7]என்றொருவன். (௫எ)

௬௬.—மற்றையோர்களும் தம்முடைய கருத்தைக் கூறுதல்.

மற்றவன் பின்னுற மற்றைய யோர்களும்
[1]இற்றிது வே[2]றல [3]மெண்ண [4]மற்றிலென் று
[5]உற்றன வுற்றன [6]வுரைப்ப தாயினர்
புற்றுறை யரவெனப் புழுங்கு நெஞ்சினர்.

(இ - ள்.) அந்தத் தூமிராட்சன் கூறியதற்குப்பின்னாக, மற்றையரக்கர்களும் புற்றிலேவசிக்கின்ற பாம்புபோல வருந்துகின்ற நெஞ்சையுடையவராய், 'இதுவே [இங்குவந்தால் பொருவோமென்பதே] நலமாகும்: வேறு ஆலோசனை யில்லை' என்று (தம்மனத்திற்) பொருந்தின யுக்திகளைச் சொல்லவானார்கள்; (எ - று.)

உற்றனஉற்றன - பலவின்பால்வினையாலணையும்பெயரின் அடுக்கு: பொருளைக்காட்டும். இற்று இது-இவ்வாறான இச்செயலென்று பொருள். பி-ம்:— [1]இற்றதுவோ, இற்றதுவே, இற்றிதுவேல். [2]உரம். [3]என்ன. [4]மற்றினி. [5]உற்றுழி யுற்றுழி. [6]சொல்லி யோங்கினர். (௫அ)

வேறு.

௬எ.—கும்பகர்ணன் கூறத்தொடங்குதல்.

வெம்பிக லரக்கரை விலக்கி[1]வினை தேரா
நம்பிய ரிருக்கவென நாயகனை [2]முன்னா
[3]எம்பியென கிற்கினுரை செய்வலித[4]மென்னாக்
கும்பகரு ணப்பெயரி னு[5]னிவை குறித்தான்.

(இ - ள்.) கும்பகர்ணனென்னும் பெயரையுடையவனான அரக்கன், மனம்வாடுகின்ற பராக்கிரமமுடையவரான அரக்கரை [அரக்கர் பேசுவதை]த் தடுத்து, செய்யவேண்டியசெயல் (இன்னதென்று) அறியாத பெரியோர் வெறுமனேயிருக்கக்கடவ ரென்று சொல்லி, இராவணனைக் கிட்டி, என்னுடைய தம்பி (இவன்) எனக் கருதுகின்ற உறுதியைக் கொண்டுள்ளாயேயானால்

(உனக்கு) இதமானதைக் கூறுவேனென்றுசொல்லி, இவ்வார்த்தைகளைக் கூற லானான்; (எ - று.)—கும்பகர்ணன் கூறுவனவற்றை மேல் ஒன்பது கவிக ளிற் காண்க.

குரங்கினால் தமக்கு நேர்ந்ததைக் கருதி இராவணன் அஞ்சினான்போல இருப்பதைக்கண்டு மனவாட்டமடைந்து தமதுநிலைப் பெரிதாக மதித்துக் கூறிய அரக்கர்களின் சொல் தன் மனத்துக்குப் பொருத்தமானதாகத்தோன் றாமையால், அவர்கள் சொல்வதை விலக்கி, கும்பகர்ணன், இராவணனை நோக்கி 'அண்ணா! இவன் என்தம்பி: ஆகையால், இவன் எனக்கு அநுகூல மானதைச் சொல்வனேதவிர வேறு சொல்லமாட்டானென்ற நம்பிக்கை என்னிடம் உனக்குத் தோன்றுமாயின், யான் இதத்தைச் சொல்லுகிறேன்: கேள்' என்று தன் கருத்தைக் கூறலாயின னென்க. எனகிற்கில் - ஒரு சொல்: இச்சொல்லில், 'கில்' என்ற இடைநிலை-உறுதிப்பொருளைக் காட்டும். நம்பியர் - ஆண்களிற் சிறந்தவர்: இது, பரிகாசத்தாற் கூறிய தென்னலாம். கும்பகர்ணன் - பானைபோல் தோன்றுகின்ற காதுடையவனெனப் பொருள் படும். பி-ம்:—[1]வினையத்தோர். [2]நண்ணு. [3]உம்பி. [4]என்றான். [5]உரை. (௩௪)

௪அ.—இதுமுதல் ஒன்பது கவிகள்-ஒருதொடர்: கும்பகர்ணன் கூறுவதைத் தெரிவிக்கும்.

நீயயன் முதற்குல மிதற்[1]கொருவ னின்றாய்
ஆயிர மறைப்பொரு ளுணர்ந்தறி வமைந்தாய்
[2]தீயினை நயப்புறுதல் [3]செய்வினை [4]தெரிந்தாய்
[5]ஏயின [6]வுறுத்தகைய வித்துணைய வேயோ.

(இ - ள்.) நீ பிரமதேவனை முதலாகக்கொண்ட இக்குலத்திலே ஒப்பற் றவனாயிருந்தாய்; ஆயிரங்கிளைகளாகஅமைந்த சாமவேதத்தின்பொருளை ஆராய்ந்துஅறிதற்குஏற்ற புத்தியுடன்பொருந்தியுள்ளாய்; நெருப்பை (விரும் பிக்கொண்டால் எரித்துவிடுமே எனக் கருதாது அதன்செந்நிறத்தைப்பார் த்து) விரும்புவதைச் செய்யத்தக்கதொழிலாகக் கருதினாய்; விதியினாலேவப் பட்டனவாய் விளையக்கூடிய தன்மையன இம்மாத்திரந்தானோ? (எ - று.)

பிரமதேவனுடையகுலத்திலேபிறந்து, பிறந்தகுலத்திற்குஏற்ப வேதப் பொருளைத் தெரிந்திருந்தும், பதிவிரதாசிரோமணியாகிய இராமனுடைய தேவியைக் காதலிப்பது செய்யத்தகாதகாரியமென்ற நினைப்பில்லாமல், விதி தூண்ட இச்சைகொண்டாய்; அதனால் இத்தீங்கு விளைவதாயிற்று:இத்துடன் நிற்குமா?பின்னும் நம்முயிரையே கொண்டு போகக்கூடிய நிலைமையும் வரக் கூடுமே யென்றா னென்க. தீயினை நயப்புறுதல் செய்வினைதெரிந்தாய் என்ற உபமானவாக்கியம் - சீதையைக் காதலிப்பதை நற்றொழிலென்றுதெரிந்தா யென்ற உபமேயப்பொருளைக் காட்டியதனால், பிறிதுமொழிதலணியாம். ஆயிரம் என்ற எண்ணுப்பெயர் - ஆயிரஞ்சாகைகள் என்ற பொருளைத் தந்தது: எண்ணலளவையாகுபெயர். சாமவேதம் ஆயிரஞ்சாகைகளை யுடையதென்பர். பி-ம்:—[1]உருவின். [2]தீவினை, தீயென. [3]செய்தனை. [4]நயந்

தாய், தெரிந்தால். [5]ஏயன. [6]முதற்றொகைய, முதற்றகையை,முறைத்தகைய, அனைத்தகைய, உறத்தகையை. (௬௦)

௪௯. ஓவிய மமைந்தநகர் [1]தீயுண வுளைந்தாய்
கோவிய லழிந்ததென வேறொரு குலத்தான்
தேவியை நயந்துசிறை வைத்த[2]செயல் நன்றோ
பாவிய ருறும்பழி யிதிற்பழியு முண்டோ.

(இ - ள்.) சித்திரம்போல [மிகஅழகாக] அமைந்திருந்த இலங்காநகரத்தை நெருப்பு எரித்திட, இராசாங்கமேயழிந்திட்டதென்று மனம்வருந்தினாய்; நமதுஅரக்கர்குலத்தினும்வேறான சூரியகுலத்திலேபிறந்தவனான இராமனது பத்தினியைக் காதலித்துச் சிறையிலேவைத்தஇச்செய்கை நல்லதோ? (பிறர் மனைவியை விரும்புவதாகிய பெரும்) பாவத்தைச் செய்தோர் அடையக்கூடிய இப்பழியைக்காட்டிலும் பழிக்கப்பட்ட செயல் (வேறு ஏதேனும்) உண்டோ?

பாதகங்களுள் பிறர்மனைவியை நயப்பதுபோற் பெரும்பழியை விளைப்பது எதுவும் இல்லையென்க. பழிபாவங்களை விளைக்குஞ் செயலைச் செய்திட்டுத் தீப்பயன் நேரும்போது வருந்துவது தகுதியல்ல: "தீமைசெய்தால் தீமை விளையும்" என்ற பழமொழிக்கு நீ இலக்காயினை யென்றவாறு. பழி-பழிக்கப்பட்ட செயல்: செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டபெயர்.பி-ம்:—[1]தீயுற. [2]செயலன்றோ. (௬௧)

௫௦. நன்னக ரழிந்ததென நாணினை [1]நயத்தால்
உன்னுயி ரெனத்தகைய தேவியர்க ளுன்மேல்
[2]ஒண்ணகை தரத்தர வொருத்தன்[3]மனை யுற்றாள்
பொன்னடி தொழத்தொழ மறுத்தல்புகழ் போலாம்.

(இ - ள்.) அழகிய (நமது) நகரம் அழிந்திட்டதேயென்று வெட்கங்கொண்டுள்ளாய்; முறைமைப்படி உனது உயிரென்று சொல்லத்தக்க [உன்னிடத்துப் பேரன்பையுடைய] தேவிமார்கள் உன்மீது அழகிய சிரிப்பைச் செய்துகொண்டேயிருக்கையில் வேறொருத்தனுடைய மனைவியாகப்பொருந்தியவளின் அழகிய அடிகளிலே பலமுறை வணங்கவும் அவள் மறுத்துக் கூறுதலைக் கேட்டிருத்தல் (உனக்குப்) புகழைத்தருவதோ? (எ - று.)

பிறனொருத்தன் மனைவி பராமுகஞ் செய்யவும் அவள்பாதத்திற் பலமுறை விழுந்து இரத்தல் உனக்கு வெட்கந்தரவேண்டாவோ? அதைப் புகழாகக் கருதுகின்றாயே; இது தகுமோ? அப்படிப்பட்ட தீச்செயலைப் புரிந்த நீ அத்தீச்செயலின் பயனாக நகரமழிந்ததென்று நாணுகின்றாயே! என்று ஏசியவாறு. புகழ்போலாம் என்பது-புகழல்ல என்ற கருத்தைக் காட்டும். 'தேவியர்களுன்மேல் ஒண்ணகை தரத்தர'-உன்மனைவியர் ஏளனம்புரியுமாறு எனினுமாம். பி-ம்:—[1]நயந்தாய். [2]இன்னகை, உண்ணகை. [3]மனையிற்றாழ். (௬௨)

௫௧. என்றொருவ னில்லுறை தவத்தியை [1]யிரங்காய்
வன்றொழிலி னய்மறை [2]துறந்துசிறை வைத்தாய்
அன்[3]றொழிவ [4]தாயின வரக்கர்புக ழைய
புன்[5]றொழிலி[6]னிசை [7]பொறுத்தல்[8]புல மைத்தோ.

(இ-ள்.) என்றைத்தினம் வேதநெறிக்குமாறாகப் பிறனொருத்தனுடைய மனையில் வசிக்கின்ற கற்புடையாளை இரக்கமின்றிக் கடுந்தொழிலையுடையவனாய் [அவள்கதறவும் வலியத்தூக்கிவந்து] சிறைவைத்திட்டாயோ, அன்றைக்கே அரக்கர் புகழெல்லாம் அழிந்திட்டன; ஐயனே! அற்பத் தொழிலைச் செய்திட்டவர் புகழைத்தாங்குவரென்பது, அறிவுடைமையோ? (எ - று.)

"பிறன்றார, நச்சுவார்ச்சேரும் பகைபழிபாவமென், றச்சத்தோ டிந்நாற் பொருள்"என்ற நாலடியார் இங்குக் கருதத்தக்கது. அரக்கர்தலைவனை நீ வேதநெறிவழுவிப் பிறன்மனைவியை இரக்கமின்றி வலியப்பிடித்துச் சிறைவைத்திட்டபோதே உன் புகழ் ஒழிந்திட்டதென்ற சிறப்புப்பொருளை, 'புன்றொழிலினாரிசை பொறுத்தல் புலமைத்தோ' என்ற பொதுப்பொருள் சமர்த்தித்து நின்றது - வேற்றுப்பொருள்வைப்பணி. "தீயயன்" (ருஅ) என்று தொடங்குங் கவிமுதல் நான்குகவிகளால், கும்பகர்ணன்,உனதுசெயல் குலத்துக்கும் அறிவுக்கும் ஏற்றதன்றென்றும் பழிபாவங்களை விளைப்பதென்றும் கூறி, அத்தீச்செயலின்பயனாகவே இந்தநிலைமை நமக்கு நேர்ந்துள்ளதென இராவணன் மனத்திற்படும்படி இங்குக் கூறுகின்றான். தவம்-கற்பு: அதனையுடையவள்-தவத்தி. பி-ம்:—1இரங்கா. 2திறம்பி. 3அழிவது. 4ஏசில. 5தொழிலினால். 6ஈசை. 7பொருந்தல். 8புலமைத்தே. (சுங)

ருஉ. ஆசில்பர தார1மவை யஞ்2சிறை யடைப்பேம்
மாசில்புகழ் காத3லுறு வேம் வளமை கூரப்
பேசுவது 4மான மிடை பேணுவது 5காமம்
கூசுவது மானுடரை நன்றுநம கொற்றம்.

(இ - ள்.) குற்றமில்லாத பரதாரத்தை அழகிய சிறையி லடைப்போம்; குற்றமற்றபுகழை விரும்புவோம்; வளம்படப் பேசுவதுவோ மானம்; நம்மிடத்து ஆதரித்துக்கொள்வதுவோ காமம்; பின்வாங்குவதோ மானுடரை(க் கருதியாம்): நமது வெற்றி நன்றாயிருந்தது! (எ - று.)

பரதாரத்தைச் சிறையிலடைப்பதும் புகழைவிரும்புவதும் ஒன்றற்கு ஒன்று மறுதலையானதாகும்; அவ்வண்ணமே பேசுவதோ தம்நிலையிற்றாழாமையாகிய மானம்: ஆதரிப்பதோ மானக்கேடான காமம்: இவ்வண்ணம் மாறுபட்ட குணங்களை மேற்கொள்வதனால், மானுடர்க்குக் கூசவேண்டுவதாக இப்போது நேரிட்டது. இங்ஙனமானபோது நமக்கு வெற்றி எப்படிக்கிடைக்குமென்றனனென்க. நன்று நமகொற்றம் என்பது, பிறகுறிப்பால் இகழ்ச்சிப் பொருளைத் தரும். கீழ்ச்செய்யுள்களில் இராவணனது தீச்செயலையெடுத்துக் கூறிய கும்பகர்ணன், இச்செய்யுளினால், இராவணனதுசெயலையேளனஞ் செய்கின்றான். தாரமென்ற வடசொல்-அந்த மொழியிற் பன்மையாகவே நிற்குமாதலால்,பரதாரமவை என்று பன்மையாற் கூறினான்போலும்; பொதுவாகப் பேசுவதுபற்றிப்,பன்மையாற்கூறினனுமாம். பி-ம்:—1அடைய, அமைய. 2சிறையில்வைத்தாய், சிறையடைத்தாய், சிறையடைத்தோம். 3உறுவாய். 4வீரம். 5மானம். (சுச)

௫௩. சிட்டர்செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய்
மட்டவிழ் மலர்க்குழலி னாளையினி மன்னா
விட்டிடுது மே[1]லெளிய [2]மாதுமவர் வெல்லப்
பட்டிடுது மேலதுவு [3]நன்று[4]பழி யன்றால்.

(இ - ள்.) பெரியோர்செய்கின்ற செயலைச் செய்தாயில்லை; குலத்திற்குத் தாழ்ச்சியைவிளைக்கக்கூடியசெயலைச்செய்தாய்;(இவ்வளவுதூரம்நடந்தபின்பு), மன்னவனே! தேன் பெருகப்பெற்ற மலரையணிந்தகூந்தலையுடையவளான சீதையை இப்பொழுதுவிட்டிடுவோமென்றால் (யாவரும் நம்மை அலட்சியஞ் செய்யுமாறு) எளிமையை யுடையவராவோம்; (சீதையைவிட்டிடாமையால்) அந்தமானுடர் (நம்மைப் போரில்) வென்றிட (நாம்) இறந்தோமென்றாலும் அதுவும் நல்லதே; (அவ்வாறுஇறப்பதனால்) பழியுமுண்டாகாது; (எ - று.)

இவ்வளவுதூரங் கண்டித்துக்கூறிய கும்பகர்ணன் 'சீதையை விட்டிடலாமா?' என்பதை ஆராய்ந்து, 'அங்ஙனம்விட்டிட்டால் பலரும் எளனஞ்செய்யும்நிலைமை நமக்குநேருவது திண்ண மாதலால், போர்புரிந்துபார்ப்போம். வென்றால் சரி: வெல்லாதுதோற்று நம்முயிரையிழக்கநேர்ந்தாலும் அது சுத்த வீரர்க்குப் பழிப்பையுண்டாக்காது' எனத் தன்கருத்தைத்தெரிவிக்கலாயினான்; இக்கருத்தை மேல்மூன்றுகவிகளால் விவரித்துக்கூறுவன். 'இனி' நம்பகைவர் நம்மூர்க்கு ஆளனுப்பி ஊரையெரிப்பித்து நமது நிலைமையையெல்லாம் உணர்ந்துபோருக்குவர ஆயத்தமானபின்பு என்றபடி. 'பிறன்மனைவியைக் கவர்ந்துவந்து சிறைவைத்தது அடாதசெய்கையேயாயினும் இப்போது நாம் செய்யத்தக்கது போரே:சீதையைவிட்டிடுதலன்று' என்றுகாரணத்தோடுகாட்டியவாறு. பகைவராற்பட்டிடுவதிற் பழியின்மையாகியகுணத்தைக் கண்டு அதுவேநன்று என்ற இதில், வேண்டலணி தோன்றுதல் காண்க. சிட்டர் = ஶிஷ்டர்: தமது நன்னடத்தையால் உலகத்தாரை நல்வழியிற்படுத்தும் பெரியோர். பி-ம்:—1இனியம், எளிமை. 2ஆமவரை, ஆகுமவர், யாதுமவர். 3அன்று. 4பழியாமல்.
(கூரு)

௫௪. மரன்[1]படர் வனத்தொருவ னேசிலை [2]வலத்தால்
கரன்படை படுத்தவனை வென்றுகளை [3]கட்டான்
நிரம்பிடுவ தன் [4]றதுவு [5]நின்றதினி நம்பால்
உரம்படுவ [6]தேயிதனின் மேலுறுதி யுண்டோ.

(இ - ள்.) மரங்கள்மிக்குள்ள வனத்திலே (இராமனென்பவன்) தானொருத்தனாகவே (தன்) வில்லின்வன்மையால் கரனுடைய(பதினாலாயிரஞ்)சேனைகளையும்நீறாக்கி அந்தக்கரனையும் செயித்துத்(தன்)பகையைக்களைந்தான்; அந்தச்செயலும் முடிந்திட்டதன்று; இனி, நம்மிடத்திற்செய்யவேண்டியதாக நின்ற தொழில் (நாம்) வலிமையைக்காட்டவேண்டியதென்பதே; இதைக்காட்டிலும் (நமக்கு) உற்றது (இப்போது) வேறுண்டோ? (எ - று.

வனத்திலே பதினாலாயிரஞ்சேனையோடுவந்து பொருத கரனைக் கொன்று இராமன் பகை களைந்திட்டான். இதோடு அவனதுசெயல் முடிந்திட்ட

தென்பதில்லை; இன்னும் அன்னான் தன்வலிமையைக் காட்ட நிலை யேற்பட்டுள்ளது: இப்போது நாம் செய்யவேண்டுவது நமதுவலிமையைக் காட்டவேண்டுவதே; இதுவே, நமக்குஉற்றசெய லென்று னென்க. உரம்படுவது - வலிமையொழிவது என்ற பொருளுந் தோன்றநின்றது. இனி நின்றது-இனிச் செய்யவேண்டுவதாக அந்தஇராமனுக்குமிச்சமாகநிற்பது, நம்பால் உரம் படுவது - நம்மிடத்துத் தன்வலிமையைக் காட்டப்பெறுவதே: இதனின் - இவ்வாறுசெய்யுமிடத்து [அவ்விராமன்தன்வலிமையைக்காட்டுமிடத்து], மேல் - அவனுக்கும்மேலாக, உறுதி-வல்லமை, உண்டோ - (நம்மிடத்து) உள்ளதோ? என்றுகூறுவாருமுளர். பி-ம்:—[1]படை. [2]வளைத்தான். [3]கட்டால், கட்டார். [4]இதுவும். [5]நின்றதனிநம்மால். [6]ஏயதனின். (சுசு)

ருரு. வென்றிடுவர் மானுடவ ரேனுமவர் தம்மேல்
நின்றிடைவி டாதுநெறி சென்றுற நெருக்கித்
[1]தின்றிடுதல் [2]செய்கில மெனிற்செறுந ரோடும்
ஒன்றிடுவர் தேவருல கேழுமுட [3]னொன்றும்.

(இ - ள்.) (இறுதியில்) மானுடரே வெல்வாரென்றாலும், அவருள்ள இடத்துப்போய் அவர்மீது இடைவிடாது எதிர்த்துநின்றுமிகவும்நெருக்கி இமிசித்தலைச்செய்யாதுவிட்டிடுவோமென்றால், அந்தப்பகைவரான மானுடருடனே தேவரும் ஒன்று சேர்வர்; ஏழுலகங்களும் அவரோடு ஒன்றாய்விடும்; (எ - று.)—அதனால், விரைவில்தானே நமக்கு உபத்திரவம் விளையுமென்பது குறிப்பெச்சம்.

நாம் வெல்வது திண்ணமன்று என்றாலும், விரைவில்தானே இவ்வுலகங்களிலுள்ள எல்லாப்பிராணிகளாலும் விளையக்கூடிய உபத்திரவத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டு அந்தமானுடரை எதிர்க்கவேண்டுவது நாம் செய்யவேண்டிய தொழி லென்றனனென்க. தின்றிடுதலென்பது - இங்கு இலக்கணையால், இமிசித்தலென்றபொருளைத்தந்தது. பெரும்பாலும் நாம் தோற்போம்: மானுடரே வெல்வரென்று கும்பகர்ணன் கருதியிருந்தானென்பது முதலடியில் விளங்குவதால், தின்றிடுதலென்பதற்கு - இலக்கணைப்பொருள் கொள்ளப்பட்டது. இனி, வென்றிடுவர் மானுடவரேனும்என்பதற்கு-மானுடர் வெல்லுதலை முயன்றபோதிலும் எனக் கருத்துக்கொண்டு, தின்றிடுதல்என்பதற்குச்செம்பொருளைக் கொள்ளுதலும் ஒன்று. பி-ம்:—[1]தின்றிடுவ. [2]செய்திலம். [3]ஒன்றாய். (சுஎ)

ருசு. ஊறுபடை யூறுவதன் முன்னமொரு நாளே
ஏறுகட லேறிநரர் வானரரை யெல்லாம்
வேறுபெய ராத[1]வகை வேரொடு மடங்க
நூறுவது வேகரும மென்பது நுவன்றான்.

(இ - ள்.) மேன்மேற்பெருகிவருகின்றசேனை நிரம்புவதற்குமுன்னம் (இன்று)ஒருநாளில் அலையேறுகின்ற கடலைக் கடந்து, நரர் வானரர் எல்லாரையும் வேற்றிடத்துக்குச்செல்லாதபடி (மடக்கி) வேரோடும் ஒருசேர நீறுக்கு

வதே (நாம்) செய்யவேண்டியதொழிலென்று (தன்கருத்தைக் கும்பகர்ணன்) கூறிமுடித்தான்; (எ - று.)

பிறரெல்லாம் தாம் வெல்வது அருமை யென்னுங் கருத்துப்படக் கூறிய கும்பகர்ணன், இதனால், இன்னும் நம் பகைவர்கட்குத்துணைவலிமைமுற்றிலும் உண்டாகாமையால் இப்பொழுதேசென்றால் வென்றிடுதல்கூடுமென்னுங் கருத்தை வெளிப்படுத்துகின்றானென்க. "இளைதாகமுண் மரங்கொல்ககளையு நர், கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்ற திருக்குறளின்கருத்து இங்குக் காணத்தக்கது. வேரொடும் மடங்க எனவும் பிரிக்கலாம். பி-ம்:—[1]படி.(சுஅ)

ருஎ.—கும்பகர்ணன் முடிவாகக் கூறியதற்கு இசைந்து, இராவணன் 'நமர் போர்க்கு எழுக' என்றல்.

நன்றுரைசெய் தாய்குமர [1]நானிது நினைந்தேன்
ஒன்றுமினி [2]யாய்தல்பழு தொன்னலரை யெல்லாம்
கொன்றுபெயர் வோம்[3]நமர் கொடிப்படையை யெல்லாம்
இன்[4]றெழுத [5]னன்றென விராவண னிசைத்தான்.

(இ - ள்.) பிள்ளாய்! நன்றாகக் கூறினாய்: நான் (நீ கூறிய) இத னையே எண்ணமிட்டேன்; இனி வேறொன்று ஆராய்வதும் பழுதான செய லாம்; பகைவர்களையெல்லாம் கொன்று மீளக்கடவோம்; நம்மவர் வெற்றிக் கொடியை யுயரவெடுத்த சேனையெல்லாவற்றையும் (உடன்கொண்டு)(போரு க்கு) இன்று புறப்படுதல் நல்லது என்று இராவணன் கூறினான்; (எ - று.)

அன்புதோன்ற, 'குமர' என்றான். ஒன்னலர்-மரூஉ. பி-ம்:—[1]நானது. [2]எண்ணல். [3]நம. [4]எழுக. [5]என்றனன். (சுக)

ருஅ.—இந்திரசித்து தந்தையின்செயலைத் தடுத்து ஒன்றுகூறத்தொடங்குதல்.

என்றவ [1]னியம்பியுறு மெல்லையினில் வல்லே
செம்றுபடை யோடுசிறு மானுடர் சினப்போர்
வென்றுபெயர் வாயரச நீகொ[2]லெம வீரம்
நன்றுபெரி தென்றுமக னக்கிவை நவின்றான்.

(இ - ள்.) என்று அந்தஇராவணன் சொன்னபோது, (அவனது) மக னான இந்திரசித்து (தந்தையை நோக்கி), 'அரசனே! (நாங்கள் பலர் பகை வெல்லத்தக்கவரா யிருக்கையில்) நீ, விரைந்து படையோடும்போய் அற்ப மானுடருடனே சினங்கொண்டு செய்யப்படும் போரில் வென்று மீளக்கடவை யோ? (தலைவனுக்கு உதவாமல் விட்டுக்கொடுக்கின்ற) எங்களுடையவீரம் மிக வும் நன்றாயிருந்தது' என்று சிரித்து, இவ்வார்த்தைகளை(ப் பின்னும்) கூறலா னான்; (எ - று.)—இந்திரசித்து கூறுவதனை மேல் ஆறு கவிகளிற் காண்க.

சொன்னசொல்லைச் சிரமேற்கொண்டு பகைவெல்லும்வல்லமையுடைத்த பலரிருக்கையில், அரசன், தானே போர்க்குச்செல்வது அவனுக்கு எளிமை யை விளக்குமென்பதுபற்றி இவ்வாறு கூறினான். பி-ம்:—[1]இயம்பியிடும், இயம்பியிறும். [2]என.

(எ0)

௫௯.—இதுமுதல் ஆறுகவிகள்-இந்திரசித்து கூறுவதைத் தெரிவிக்கும். இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

ஈசனருள் செய்தனவு மேடவிழ் மலர்ப்பே
[1]ராசன [2]முவந்தவ னளித்தனவு [3]மாயப்
பாசமுதல் வெம்படை சுமந்துபலர் நின்றார்
ஏசவுழல் வேனொருவன் யானுமுளெ [4]னன்றோ.

(இ - ள்.) சிவபெருமான் அருள்செய்து கொடுத்தனவும், இதழவிழப் பெற்ற தாமரைமலரைச் சிறந்த ஆசனமாக உவப்புடன்கொண்டபிரமதேவன் அருள்செய்துகொடுத்தனவுமாகிய விசித்திரத் தன்மையுள்ள பாசம்முதலிய கொடிய படைகளைத் தாங்கிப் பலர் இருக்கின்றார்கள்; ஏசுமாறு அலைபவனாகிய யானொருவனும் உள்ளேனன்றோ; (எ - று.)

இங்ஙனம் பலரிருத்தலால், எங்களையேவாது நீ படையுடன் சிறுமானுடரை யெதிர்க்கச்செல்லுதல் உன்பெருமைக்குத் தகாதென்றவாறும்: அநுமானைத் திரும்பிச்செல்லுமாறு விட்டிட்டது குறித்து,இந்திரசித்து,தன்னை 'ஏசவுழல்வேன்' என்று வெறுத்துக் கூறுகின்றான்: இனி, தன்னைத் தாழ்த்துச் சொல்லவேணுமென்ற கருத்தினால் இங்ஙனங் கூறுகின்றானுமாம். பி-ம்:—[1]ஆசனன். [2]மகிழ்ந்தவன். [3]மாயாப், மாயம். [4]என்றான். (எக)

௬௦. முற்று[1]முளை தாமுலக மூன்றுமெதிர் தோன்றிச்
[2]செற்றமுத லாரொடு [3]செறுத்தமெதிர் திறத்தும்
வெற்றி[4]யுன தாகவிலை யா[5]னொழியி னென்னைப்
பெற்ற[6]மிலை [7]யானெறி பிறந்து[8]மில னென்றான்.

(இ - ள்.) முற்றவும் உளதான உலகம் ஒரு மூன்றும் சினங்கொண்ட முதற்கடவுளருடனே எதிராக[பகையாக]த் தோன்றி நெருக்கினாலும் வெற்றி உன்னதாகச் செய்யாவிடின், என்னைப்பெற்றும் பெறாதவனாய்; யான் முறைமையாகப் பிறந்தவனுமாகே னென்று கூறினான், (இந்திரசித்து); (எ - று.)

இதனால், நான் இராவணனை உனக்கு முறைமையாகப்பிறந்தவனென்றால் எல்லாவுலகங்களும் திரிமூர்த்திகளோடு எதிர்வந்து பொருது நெருக்கினாலும் உனக்கு வெற்றியுண்டாகச் செய்வேனென்று வீரவாதமாக இந்திரசித்து கூறுகின்றான். மேல் கீழ் நடு என்று மூன்றுதிறத்தில் எல்லாவுலகங்களும் அடங்குவதுபற்றி, 'முற்றுமுளதா முலகமூன்றும்,'என்றது. செற்றம்-சினம். செறுத்தது - நெருக்கியது. என்னைப் பெற்றதற்குப் பயன் உனக்கு வெற்றிவிளைத்தலே யென்றவாறு. பி-ம்:—[1]முதலாய், முதலாம், உளவாய். [2]செற்றி. [3]செறித்தெதிர்திறத்தும். [4]உளதாக, எனதாக. [5]ஒழிவன், ஒழுகில். [6]இலன். [7]யானுமிற், யானினிப். [8]இலனன்றோ. (எஉ)

௬௧. குரங்குபட மேதினி குறைத்தலை [1]நடம்போ
ரரங்குபட [2]மானுட ரலந்தலை படப்பார்
இரங்குபடர் சீதைபட வின்றிருவர் [3]நின்றார்
[4]சிரங்[5]குவ டெனக்கொணர் தல் காணுதி சினத்தோய்,

இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) கோபம்மிக்கவனே! குரங்குகளெல்லாம் அழிந்திடவும் பூமி கவந்தம் நடித்தலைக்கொண்ட போரரங்கு ஆகவும் (பொருது), மானுடர் துன்பத்தையடையவும் உலகத்திலுள்ளோர் இரக்கமடையுந் துன்பத்தைச் சீதை படவும், இன்று (நமக்குஎதிராக) நின்றவரான(இராமலட்சுமணரென்ற) இருவரின்தலையை மலைச்சிகரத்தைப்போலக் கொண்டுவருவதைக் காண்பாய்.

நீ இங்குத்தானேயிரு; நான் உன்பகைவரையெல்லாங்கொன்று, பிரதானரான இராமலட்சுமணரின் சிரங்களை உன்திருவடியிற் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேனென்கின்றான், இந்திரசித்து. பெருவீரரென்று தாம் மதிக்கின்ற இராமலட்சுமணர் படுவதால், மானுடர் அலந்தலைப்படுவரென்க. குறைத்தலை கூத்தாடுவதால், 'போரரங்கு' எனப்பட்டது. குறைத்தலை-தலை குறைந்த உடல். பார்-ஆகுபெயர். பி-ம்:—[1]படப்போர், நடப்போர். [2]மானிடவர்வந்தலைபட. [3]என்றார். [4]கரம். [5]கடிதினில். (எக)

௬௨. சொல்லிடை [1]கிழிக்கில சுருங்கிய குரங்கென்
கல்லிடை [2]கிழிக்குமுரு மிற்[3]கடுமை காணும்
வில்லிடை [4]கிழித்தமிடல் [5]வாளிவெரு வித்தம்
[6]பல்லிடை கிழித்திரிவ கண்டுபய னுய்ப்பாய்.

(இ - ள்.) முகஞ்சுருங்குதலையுடைய குரங்குகள், மலையிடத்தையும் பிளக்கச்செய்யும் இடியைக்காட்டிலும் கொடுமைகொண்டுள்ள வில்லினிடத்தினின்று வெளிப்பட்ட வலிமையையுடைய (என்) அம்புகட்கு அஞ்சி தம் பல்லிடைதெரிய வாயுதடுகளைக் கிழித்துக்கொண்டு, ஒருசொற்சொல்லுநேரமும் தாமதியாதனவாய் [வெகுவிரைவில்] ஓடுவதைக்கண்டு, (பகைவென்றதாகிய) நற்பயனை நுகர்வாய்; (எ - று.)

கடுமைகாணும் வாளி என இயையும். உடலின்மேல்வீழும் வாளிகட்கு மலையில்வீழும் இடி யுவமை. நான்அம்புகளைவிடத்தொடங்குகையில்,வானரங்கள் பல்லைக்கடித்துக்கொண்டு வாயிதழ்களைத்திறந்தவண்ணம் ஓடப்போகின்றன காண் என்று தன்திறமையை வீரவாதமாகக் கூறுகின்றனன், இந்திரசித்தென்க. குரங்குகள் அச்சம்நேர்கையில் சத்தமிட்டுப் பல்லைக்கடித்தவண்ணம் வாயையிளித்துக்கொண்டு ஓடுதல், இயல்பு. முகஞ்சுருங்குதலுடைமைபற்றி வானரங்கட்கு 'வலீமுகம்' என ஒருபெயரிருத்தலுங் காண்க. இனி, சுருங்கியகுரங்கு என்பதற்கு - பெருமையற்ற [அற்பமான] வானரங்கள் என்று உரைப்பாருமுளர். கல்-மலைக்கு, இலக்கணை. பி-ம்:—[1]கழிக்கில, கழித்தில, கிழித்தில. [2]கழித்த, கிழித்த, குழிக்கும். [3]கடிது, கொடுமை. [4]கழித்த. [5]வானரிவெரித்தும். [6]பல்லிடைகளிற்றிரிவ. (எ௨)

௬௩. யானையிலர் தேர்புரவி [1]யாதுமில [2]ரேவுந்
தானையிலர் நின்றதனி மொன்றுமிலர் [3]தாமோ
[4]கூனமுது கின்சிறு குரங்குகொடு வெல்வார்
ஆனவரு [5]மானுடர்க ளாண்மை [6]யழ கன்றோ.

(இ - ள்.) யானைப்படையில்லாதவரும், தேர்குதிரையொன்றும் இல்லாதவரும், (நம்மேற்) செலுத்தக்கூடிய பதாதிப்படையுமில்லாதவரும், (சதுரங்கப்படைகளுடன் இராச்சியத்தைப்பெற்றுவாழ்வதற்கு) முற்பிறப்பிற்செய்துள்ள நல்வினையும் சிறிதும் இல்லாதவருமான (நம்) பகைவரா, கூனைக்கொண்டமுதுகினையுடைய அற்பக்குரங்குகளைக்கொண்டு (நம்மை) வெல்லப்போகின்றார்? அவர்களும் (தேவர்முதலியோரல்லர்), மனிதர்கள்; (அவர்களைக்கண்டு கலக்கங்கொள்ளும்)நம்முடைய ஆண்மை அழகாயுள்ளதன்றோ!

கீழிரண்டுசெய்யுள்களினால், தான்செய்யப்போகின்ற வீரத்தைக் கூறி, இதனால், மாற்றாருடைய வலியின்மையை விளக்கி, அவர்கட்கு அஞ்சுவது நமதுவீரத்துக்கு ஏற்றதன்று என்கிறான், இந்திரசித்து. தாமோ வெல்வார்-ஓகாரம்,இகழ்ச்சியோடு எதிர்மறையையும் குறிக்கும்.அழகன்றோ-பிறகுறிப்பு. பி-ம்:—1யாவும். 2எய்யும், எயும். 3தாமோர், தாமே. 4கூனல், கூனை. 5மானுடவர். 6இனிதன்றோ, இனிதன்றால். (௭௫)

௬௪. நீரும்நில னும்நெடிய காலும்கிளர் வானும்
1பேருலகில் யாவுமொரு 2நாள்புடை 3பெயர்த்தே
யாரு 4மொழி யாமைநரர் 5வானரரை யெல்லாம்
வேருமொழி யாதவகை 6வென்றலது மீளேன்.

(இ - ள்.) அப்பும் பிருதிவியும் நீண்ட [எங்குஞ்செல்லுதலையுடைய] வாயுவும் ஓங்கியுள்ள வானமுமாகிய இந்தப்பெரியஉலகிலுள்ள எல்லாவற்றையும் ஒருநாளில் நிலைபெயரச்செய்து ,நரர்வானரர்என்ற சாதியைச்சேர்ந்தவர் எவரும் மிஞ்சாதபடி எல்லாரையும் வேரும் மிச்சமாகாதவாறு வென்றலது (நான்) திரும்பேன்; (எ - று.)

கீழ் மாற்றாருடைய வலியின்மையையெடுத்துக்காட்டிய இந்திரசித்து, இதனால், தான் செய்யப்போவது இன்னதென்று பிரதிஜ்ஞைசெய்து தன் பேச்சை முடிக்கின்றா னென்க. நான்குபூதங்களைக்கூறியது, அக்கினிக்கும் உபலட்சணம். பி-ம்:—1பேருமுலகு, பேருலகு. 2நாளிடை. 3பெயர்ந்தே. 4அறியாமல். 5வானரர்க ளென்பார். 6கொன்றலது. (௭௬)

௬௫.—இவ்வாறு சொல்லி இந்திரசித்து இராவணனை வணங்கி விடைவேண்ட, விபீஷணன் கூறத்தொடங்குதல்.

என்றடி யிறைஞ்சின னெழுந்துவிடை யீமோ
வன்1றிறலி னாயெனலும் வாளெயிறு வாயில்
தின்றனன் 2முனிந்துநனி தீவினையை யெல்லாம்
3வென்றவறி னன்றுணரும் வீடணன் விளம்பும்.

(இ - ள்.) என்றுசொல்லி (இராவணனது) பாதங்களில் வணங்கியெழுந்து,'மிக்கவலிமைபடைத்தவனே!(பகைவென்று வருமாறு)விடைதருக' என்று(அவ்விந்திரசித்து) வேண்டியவளவிலே,—மிக்க தீவினையையெல்லாம் வென்ற தத்துவஞானிகள்போல நல்லுணர்வைப் பெற்றவனான விபீஷணன், (இந்திரசித்துக்கூறிய திற)கோபங்கொண்டு, ஒளியுள்ளபற்கள் வாயிலேஊன்று

மாறு உதட்டைக் கடித்தவனாகி (ப்பின்வருமாறு) சொல்பவனானான்; (எ-று.) —அதனை, மேல் ஏழுகவிகளிற் காண்க.

வீடணன் = விபீஷணன். வாளெயிறு வாயிற்றின்னுதல்-முனிவின்குறி. ஈமோ, மோ-முன்னிலையசை. பி-ம்:—[1]தொழிலி ஞயெனவும். [2]முனிந்த னன்முன். வென்றவருணன்று, [3]வென்றவனினின்று. (எஎ)

வேறு.

சூசூ.—இதுமுதல் ஆறுகவிகள்-இந்திரசித்து சொல்லியதை விபீஷணன் கண்டித்துக்கூறுதலைத் தெரிவிக்கும்.

நூலினு னுணங்கிய வறிவு [1]நோக்கினை
போலுமா [2]லுறுபொருள் [3]புகலும் [4]பூட்சியோய்
[5]காலமேல் விளைபொரு [6]ளுணருங் கற்பிலாப்
[7]பாலனீ யினையன பகரற் பாலையோ.

ஏழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (இக்காலத்துக்கு) ஏற்ற விஷயத்தைக் கூறவேணுமென்று கொண்ட கொள்கையையுடையவனே! சாஸ்திரங்களினால் நுணுக்கமாகக் கூறப்பட்டுள்ளவற்றை (உன்னுடைய கூர்மையான) அறிவினால் நுணுகியறிந்தாய்போற் பேசுகிறாய்; நீ காலத்தையும் மேல்விளையப்போகும் விஷயத்தையும் உணர்தற்கு ஏற்ற கல்வியறிவில்லாத பாலனாவாய்; (அவ்வாறுள்ள நீ), இவ்வாறான சொற்களைச் சொல்லக்கடவையோ? (எ - று.)

பாலன்-அறிவுமுதிரப்பெறாதவன். விபீஷணன் இந்திரசித்து கூறியதனை முதலிற் கண்டித்துப் பிறகு இராவணனுக்கு நற்புத்தி கூறத்தொடங்குகின் றான். பி-ம்:—[1]நோக்கினர். [2]ஒருபொருள். [3]புகலப், உணரும். [4]பூட்சியோ, பூட்சியோர். [5]காலமே. [6]உ.ணரக். [7]பாலநீ. (எஅ)

சூஎ. கருத்திலான் கண்ணிலா னொருவன் கைக்கொடு
திருத்துவான் சித்திர மனைய செப்புவாய்
[1]விருத்தர்மே [2]தகையவர் [3]வினைஞர் மந்திரத்து
இருத்தியோ இளமையான் முறைமை [4]யெண்ணிலாய்.

(இ - ள்.) பாலியத்தினாற் செய்யவேண்டியமுறைமையை யறியாதவனே! ஆலோசிக்குந் திறமையில்லாதவனும் கண்ணில்லாதவனுமாகிய ஒருவன் கைக்கொண்டு திருத்தமுறஅமைப்பவனுடைய சித்திரத்தை யொத்தனவான பேச்சுக்களைப் பேசுபவனாகின்றாய்: வயசுமுதிர்ந்தவரும் மேன்மையான குணங்களையுடையவரும் செய்தொழில்வல்லவருமானபெரியோர் செய்கின்ற மந்திராலோசனைச்சபையிலே (நீ) இருத்தற்குஉரியையோ ?

நீ சிறுவனாதலால், அநுபவம் முதலியன வாய்ந்த பெரியோர் கூட வேண்டிய மந்திராலோசனைச் சபையிலே இருத்தற்கும் உரியையல்லை; இப் படிப்பட்ட உன்னை மந்திராலோசனைச் சபையில் இருக்கவைத்ததனால், ஆலோசிக்குந் திறனேடு கண்ணையுமிழந்த குருடன் சித்திரமெழுதுகோலைக் கைக்கொண்டு சித்திரத்தையமைக்கத் தொடங்குவதுபோல், உணர்ந்தோர்

எளனஞ்செய்யுமாறு பொருத்தமறப் பேசுகின்று யென்பதாம்.மந்திரம்-இலக்கணையால், ஆலோசனைச்சபையை யுணர்த்திற்று. அனைய-பெயர். பி-ம்:—[1]விருத்தமே. [2]தகைபிவர். [3]வினையர், வினையம். [4]எண்ணலாய். (எக)

சஅ. தூயவர் முறைமையே தொடங்குந் தொன்மைய
ராயவர் நிற்கமற் றவுண [1]ராதியாந்
தீயவர் [2]முறைமையாற் றேவ ராயது
மாயமோ வஞ்சமோ வன்மை யேகொலோ.

(இ - ள்.) பரிசுத்தமானகுணத்தைமேற்கொண்டவராய் நியாயமான செயலையே செய்பவரான பழமையான பெரியோர் [தேவர்கள்] இருக்கட்டும்: அவர்களினும் வேறான அவுணர்முதலியோரான தீயவர்கள் நல்லொழுக்கத்தால் தேவரைப்போல் மேன்மையடைந்தது பொய்யோ? (அல்லது) வஞ்சனையோ? (அல்லது) வலத்தினாலோ? (எ - று.)

அவுணராதியர் தேவரைப்போல் மேன்மைபெற்றுச் சிலகாலம் விளங்குவது, தாம் புரிந்த அறச்செய்கையினாலேயே யன்றி வலிமைமுதலியவற்றாலன்று; ஆதலால், வலிமையைமதியாது அறத்தையே மேற்கொள்ளவேணுமென்றவாறு. பி-ம்:—[1]ஆதியர். [2]அறத்தினால், தவத்தினால், திறத்தினால். (அ0)

சகூ. அறந்துறந் தமரரை வென்ற வாண்டொழில்
திறந்[1]தெரிந் திடினது தானுஞ் செய்தவம்
நிறந்திறம் பாவகை [2]யியற்றும் [3]நீதியால்
[4]மறந்துறந் தவர்தரும் வரத்தின் வன்மையால்.

(இ - ள்.) அறத்தைக்கைவிட்டுத் தேவர்களை வெல்லுமாறு (உனக்கு) அமைந்த (உனது) பராக்கிரமத்தின் கூறுபாட்டை யாராய்ந்துபார்த்தால், அதுவும், செய்தற்குஉரிய தவச்செயலைச் செய்யவேண்டியகிரமம் கெடாதவாறு (நீ)இயற்றிய முறைமையைக்கண்டு, பாவச்செயலை நீங்கியதேவர் (உவந்து) தந்த வரத்தின் வன்மையினாலேயே(யாகும்); (எ - று.)

தேவர்களையும்வெல்லுமாறு உனக்குஅமைந்த வலிமையும் நீ முன்பு செய்த தவத்தின்பயனே யாதலால், எப்போதும் அறந்திறம்பியதொழிலைச் செய்யாது அவ்வறத்துறையிலேயே நடக்கவேண்டு மென்றவாறு. கீழ்ப் பொதுவாக அசுரர்க்குச் சிற்சிலகாலம் மேன்மைநேர்ந்ததும் அறத்தின்பயனே யென்று கூறிய விபீஷணன், இதனால், இந்திரசித்தெனப்பேர்பெறும்படி தேவேந்திரனையுமுள்பட நீ வென்றதும், நீ செய்த தவத்தின்பயனேயென்று எடுத்துக்காட்டுகின்றான். பி-ம்:—[1]தெரிந்திடல், தெரிந்திட. [2]இயற்றி. [3]நீர்மையால். [4]மறந்திருந்து, மறந்திறந்து. (அக)

எ0. மூவரை வென்றுமூன் றுலகு முற்றுறக்
காவலி னின்று[1]தங் களிப்புக் கைம்மிக
[2]வீவது முடிவென [3]வீந்த தல்லது
தேவரை வென்றவர் யாவர் [4]தீமையோர்.

(இ - ள்.) தீத்தொழிலேஇயற்கையாகவுடையவர்,—த்ரிமூர்த்திகளையும் அடக்கி மூவுலகுமுழுதையும்அரசுசெய்யுந்தொழிலைமேற்கொண்டுநின்று தங்களுடையசெருக்கு விஞ்ச (நல்லோர்பலர்க்குந் தீமைசெய்து) அழிந்தொழிவதே(தமது)முடிவுஎன்று (பிறருணருமாறு தாங்கள்) அழிந்ததல்லது,தேவரைவென்று (மேம்பட்டே தமதுவாழ்நாள்முழுதும்) இருந்தவர் யாவர்? (எ-று.)

காவலென்பது - ஆட்சிபுரிதலென்ற பொருளைத் தந்தது; இலக்கணையால். 'அறப்பயனுற் போராற்றலுண்டாவதாயினும், பிறகு தீத்தொழிலைக் கொண்டவர் அமரர்களைவென்று மேம்பட்டதில்லையோ? ஆகையால் தீத்தொழிலைமேற்கொள்ளலாமே!' என்று தோன்றுகின்ற வினவிற்கு, இதனால் விடையிறுக்கின்றனன் விபீஷண னென்க. தீத்தொழிலைக்கொண்டவர் தேவரைவென்று என்றும் அவரைக் கீழ்மைப்படுத்தியேவைத்திருக்கிறார்களென்பதில்லாமல், தமதுதீப்பயனுல் விரைவில்அழிந்திடுவதைக் கண்கூடாகக் காண்பதால், அறத்தையே கைக்கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தியவாறு. பி-ம்:—[1]நம். [2]ஆவன, வீவன. [3]இயைந்த. [4]சிரியோர்,தீமையோய். ()

எக. வினைகளை வென்றுமேல் வீடு கண்டவர்
எனைவரென் [1]றியம்புகே [2]னவர்த மீகையான்
முனைவரு மமரரு முன்னும் பின்னரும்
[3]அனையவர் திறத்துளார் யாவ ராற்றினுர்.

(இ - ள்.) முற்காலத்திலும் பிற்காலத்திலுமிருந்த முனிவர்களும் அமரர்களும் தீவினைகளைநீக்கித் தம்முடையதியாகத்தினால் மேலேயுள்ளமோட்சலோகத்தையடைந்தவர் எத்தனைபேரென்று (நான்)சொல்லுவேன்?[இத்தனைபேரென்று கணக்கிட்டுச்சொல்ல என்னாலாகாது]; அந்தப்பகுதியைச்சேர்ந்தவர்களில் யாவர்(தீத்தொழிலைச்) செய்தவர்? (எ - று.)

முற்காலத்திலும்இக்காலத்திலும் இருடியரிலும் தேவர்களிலும் எத்தனையோ பேர் தாம் குற்றம்நீங்கியசெயலைச் செய்ததன்பயனாக மோட்சத்தையடைந்தார்களென்றுசொல்லக்கேட்டிருக்கின்றோம்; அங்ஙனம் நற்கதிபெற்றவர்களில் தீத்தொழில்செய்தவரொருவரேனு முண்டோ? என்பதாம். ஈகை - தியாகம். தீமைசெய்யாதவரே நற்கதிபெறுவரென்பது,இதனாற் கூறப்பட்டது. பி-ம்:—[1]இயம்புதும், இயம்புவம், என்புதும், இயம்புவாம். [2]எவ்வாந் தீர்க்கையால், அவரதீகையான், ஈகையானவர், யாவர் தீமையான். [3]அனையவற்றிறம்பினர், அனையவர்பிறருளர், அனையவர்திறத்துள. (அரு)

எ௨.—விபீஷணன் இவ்வண்ணம் இந்திரசித்தை அதட்டிக்கூறி, இராவணனைநோக்கிக் கூறத்தொடங்குதல்.

பிள்ளைமை விளம்பினை பேதை நீயென
ஒள்ளிய புதல்வனை யுரப்பி [1]யென்னுரை
எள்ளலை யாமெனின் இயம்ப லாற்றுவன்
தெள்ளிய பொருளென அரசற் செப்பினுன்.

(இ - ள்.) அறிவில்லாதவனுகிய நீ சிறுபிள்ளைத்தன்மையினால் (இவ்வாறு) சொன்னுய் என்று வலிமையுள்ள புதல்வனை [இந்திரசித்தை] அதட்டிக்கூறி,(பிறகு விபீஷணன் இராவணனைநோக்கி,) 'என்பேச்சை இகழாதிருப்பாயாயின் (யான்) தெளிந்துகண்டபொருளைக் கூறுவேன்' என்றுசொல்லி அரக்கர்தலைவனைக்குறித்துச் சொல்வானாயினன்; (எ - று.)—பேதை - ஆகுபெயர். பி-ம்:—[1]என்றுரை. (அச)

எரு.—விபீஷணன் தான் சொல்வதற்குக் காரணங் கூறுதல்.

எந்தைநீ யாயுநீ யெம்முன்[1]னீ தவ
வந்தனைத் [2]தெய்வம்நீ மற்று [3]முற்றுநீ
இந்திரப் பெரும்பத மிழக்கின் ருயென
நொந்தன னாதலின் நுவல்வ தாயினேன்.

இதுமுதல் இருபத்தேழு கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) எனக்குத்தந்தை நீயே; தாயும் நீயே; தமையனும் நீயே; தவத்தினாற்கண்டு வணங்குதற்குஉரிய தெய்வமும் நீயே; மற்றும் (உலகத்தில் மேம்பட்டனவாகக்கருதப்படுகின்ற) எல்லாப்பொருளும் (எனக்கு) நீதான்; தேவேந்திரபோகத்தை நுகரும்பெரும்பதவியை யிழக்குஞ்செயலைச் செய்யக் கருதுகின்றாயே யென்று(மனம்)நொந்தேன்: ஆகையால்,(நான் இது) சொல்வதாயினேன்; (எ - று.)

'எள்ளலையாமெனினியம்பலாற்றுவன்' என்ற விபீஷணன், 'நான் எள்ளுவேனோ? என்ற ஐயத்துக்குஇடமானசொல்லை ஏன் சொல்லவேண்டும்?' என்று ஒருகால்இராவணன் வினவப்போகின்றானேயென்று, அதற்கு இதனால் விடைகூறுகின்றான். இராவணனைத் தன்வழிப்படுத்தவேண்டுமென்ற விருப்பினனாதலாலும், உண்மையில் மூத்தோரிடத்து அன்புகொண்டவனாதலாலும் விபீஷணன் இராவணனை 'எந்தைநீ' முதலியனவாகப் பாராட்டிக் கூறுகின்றான். இந்திரப்பெரும்பதம் - இந்திரனதுபதவிபோன்ற பெரும்பதவி. தெளிவினால், இழக்கின்றாயென எதிர்காலம் நிகழ்காலமாக்க் கூறப்பட்டது:காலவழுவமைதி. பி-ம்:—[1]நீதவமுநீ, நீதனி. [2]தெய்வமும். [3]மற்றுநீ.

எச.—இடையிற் சினங்கொள்ளாது யான் சொல்லுவதை முழுதுங்கேட்கவேணுமென விபீஷணன் வேண்டுதல்.

கற்றுறு மாட்சியென் கண்ணின் ருயினும்
உற்றுறு பொருள்தெரிந் [1]துணர்த லோயினும்
சொற்றுறு சூழ்ச்சியின் றுணிவு சோரினும்
முற்றுறக் கேட்டபின் முனிதி [2]மொய்ம்பினோய்.

(இ - ள்.) வலியோனே! கற்றதனாற்பொருந்திய பெருமை என்னிடத்து இல்லை யென்றாலும், (இப்போது) நேர்ந்துள்ள பெருவிஷயத்தை முற்றுற ஆராய்ந்தறிந்துசொல்லவல்லஅறிவு (எனக்கு) இல்லாவிட்டாலும், (பலவாகச்) சொல்லியுள்ள மந்திராலோசனையின் துணிவையறிவதில் (நான்)சோர்வு

பட்டவனுயிருந்தாலும்(என்வார்த்தையை)முழுதுங்கேட்டபின்பு (நான் தகாத சொல்லைக்கூறினேனென்று தோன்றின் அப்பாற்) கோபித்துக்கொள்வாய்.

என்னுடைய பேச்சிற் பலவகைக்குறைகளிருக்கலாம்; ஆயினும் இடையிலேயே சினங்கொள்ளாமல் முற்றவும் கேட்பாய்; நான் சொல்வது தவறுயிருந்தால், பிறகு வேணுமென்முற் கோபித்துக் கொள்: நான் சொல்லும்போதே இடையிற்றனே சினங்கொண்டு என்னைப் பேசவொட்டாது தவிர்க்க வேண்டா என்று வேண்டியவாறு. பி-ம்:—[1]உணர்த்தல். [2]முன்பினேய்.

எரு.—இதுமுதல் இருபத்தைந்துகவிகள்-விபீஷணன் இராவணனை நோக்கிக் கூறியவற்றைத் தெரிவிக்கும்.

கோநகர் முழுவதும் [1]நினது கொற்றமும்
சானகி யெனும்பெய ருலகின் [2]தம்மனை
யானவள் கற்பினல் வெந்த தல்லதோர்
வானரஞ் சுட்டதென் [3]றுணர்தல் மாட்சியோ.

(இ - ள்.) சானகியென்று பெயர்கொண்ட லோகமாதாவானவளின் கற்பினல் இலங்காநகரம் முழுவதும் உனது வெற்றியும் வெந்திட்டனவேயன்றி ஒருவானரஞ் சுட்டுவிட்டதென்று நினைப்பது நல்லறிவாமோ? (எ - று.)

அற்பமான ஒருகுரங்கினல் இலங்காநகரமும் உனது வெற்றியும் சுட்டெரிக்கமுடியுமோ? முடியாதன்றோ? ஆகையால்,சானகியின் கற்புத்தழலால் தான் இலங்கையும் உன்வெற்றியும் அழிந்தன என்று கருதுதலே நல்லறிவாவதன்றி, வானரஞ்சுட்டதென்று கருதுதல் பேரறிவாகாது என்றவாறு: வானரஞ்சுட்டதென்பது, வியாசம்: சானகியின் கற்புத்தீயே கொளுத்திற்றென்று எடுத்துக்காட்டியபடி. வெந்தது என்ற தொழிலுக்கு ஏற்ப, கற்பைத் தீயாகக் கொள்க. வானரம்வைத்த தீயினிடத்துச் சுடுதற்றன்மையை யொழித்துச் சானகியின் கற்பினிடத்து அதனை யேற்றிக்கூறியது-அபநுதியணியின் பாற்படும். சானகி=ஜாநகி: சனகனதுமகள்: தத்திதாந்தநாமம். கோநகர் முழுவதும் கொற்றமும் வெந்தது-ஒருமைப்பன்மைமயக்கம். பி-ம்:—[1]நின்று. [2]உதாயெனும், தாயவள், தம்முனை. [3]உரைத்தல். (அஎ)

எஅ. எண்பொருட் [1]டொன்றிநின் றெவரு மெண்ணினல்
விண்பொருட் [2]டொன்றிய [3]வுயர்வு மீட்சியும்
பெண்பொருட் [4]டன்றியும் பிறி[5]துண் டாமெனின்
மண்பொருட் [4]டன்றியும் வரவும் [6]வல்லதோ.

(இ - ள்.) எண்ணும்பொருட்டு (மனம் வேற்றிடத்துச் செல்லாமல்) ஆலோசிக்கும் விஷயத்திலேயே பதியநிற்க எவர் ஆலோசித்துப்பார்த்தாலும், ஆகாயத்தையளாவவுயர்ந்த தலைமை (ஒருவரைவிட்டு)நீங்கிவிடுவதும், பெண்(ணை விரும்பியதனுலாம்: அந்தப் பெண்)பொருட்டினலல்லாமல்வேறு வகையாக உண்டாமெனின் மண்பொருட்டினல் (வருவதாகும்); (இவ்விரு வகையினலும்) அல்லாமல் (வேறுவகையால்) வரும் தரமுள்ளதோ? (எ-று.)

நன்கு ஆலோசித்துப் பார்த்தோமாயின்,ஒருவனுடைய மிகவும்மேம்பட்ட அரசச்செல்வம் பெண்ணசையாலழியவேணும்: அன்றி, மண்ணசையாலழிய

வேணும்: இவ்விரண்டு வகையாலன்றிப் பிறவகையால் அழிவுநேராதென்ற வாறு. நீ பெண்காதல் கொண்டிருத்தலால், பெரும்பதம் உன்னைவிட்டு நீங்கு மென்றவாறு. பொதுப்பொருளால், சிறப்புப்பொருளை விளக்கினான்; பெண்ணாசையால் மன்னர்க்குக் கேடுவிளைவதை விளக்குவான், மண்ணாசை யாற் கேடுவருவதையும் இனம்பற்றிக் கூறினான். மீட்சியும், உம்மை - இசை நிறை. பி-ம்:—[1]ஒன்றநின்று. [2]ஆகிய, அன்றிய. [3]அயர்வும்வீழ்ச்சியும். [4]அன் றியே. [5]உண்டோவுயிர். [6]வல்லவோ, அல்லதோ, அல்லவோ. (சஅ)

எஎ. மீனுடை நெடுங்கட லிலங்கை [1]வேந்தென்பான்
தானுடை நெடுந்தவம் தளர்ந்து [2]சாய்வதோர்
[3]மானுட மடந்தையா லென்னும் வாய்மொழி
தேனுடை யலங்கலா யின்று தீர்ந்ததோ.

(இ-ள்.) தேனைக்கொண்ட மலராலாகிய வெற்றிமாலையைச் சூடியவனே! மீனுக்கு இருப்பிடமாகவுள்ள பெரியகடலாற் சூழப்பெற்ற இலங்கைக்குமன் னவன்(முன்பு)தான் செய்தமிக்கதவப்பயன் குறைந்தொழியப் பெறுவது ஒரு மானுடமடந்தையாலாகுமென்று (உலகத்திற்)சொல்லப்படுஞ்சொல் இன்று நிறைவேறப்போகின்றதோ? (எ - று.)

உனக்குத் தீயபுத்தி தோன்றியுள்ளதனால்,உலகத்தார்சொல் பயன்விளைக் குங்காலம் இதுவோதான் என அஞ்சுகின்றேனென்றவாறு. இன்றுதீர்ந்தது- இயல்பினால் எதிர்காலம் இறந்தகாலமாகக்கூறப்பட்ட காலவழுவமைதி.மூன் றுபாடல்களினால், நீ சீதையைக் காதலித்து இங்குவைத்துக்கொண்டிருப்பது தக்கதன் றென்று குறித்தவாறு. என்பான்-முதல்வேற்றுமைச் சொல்லுருபு. பி-ம்:—[1]வேந்தன்முன், வேந்தனின், வேந்தநின், வேந்துநின். [2]சாய்வது, சாய்ந்தது. [3]மானுடர். (சகூ)

எஅ. ஏறிய நெடுந்தவ மிழைத்த வெல்லைநாள்
ஆறிய பெருங்குணத் தறிவ னாணையால்
கூறிய மனிதர்பாற் கொற்றங் கொள்ளலை
வேறினி [1]யவர்வயின் வென்றி [2]யாவதோ.

(இ-ள்.) மிக்க பெருந்தவத்தை (நீ)செய்தகாலமாகியநாளில் சாந்தமான பெருங்குணத்தையுடைய சருவஞ்ஞனை கடவுளின்கட்டளையால், (வலி யுள்ளவராகஇப்போது) கூறப்படுகின்ற மனிதரை வெல்வதை வரம்வே ண்டாதுவிட்டாய்; (இனி) அவரிடத்து (த்தோற்பதற்கு) மாறான வென்றி எங்ஙனம்உண்டாகும்? (எ - று.)

கீழ்ச் சீதையால் உனக்குக் கேடுவிளையுமென்ற விபீஷணன், 'ஒருபெண் ணால் எனக்கு எவ்வாறு கேடு விளைக்கமுடியும்?' என்று கேட்கக்கூடிய ஐயத் தை மேற்கொண்டு, சீதையின்கணவனை இராமபிரானைற் கேடுவிளையுமென் பதைத் தெரிவித்தற்காக, வரம்பெறுங்காலத்தில் மனிதரைவெல்லுமாறு வரங்கேளாதொழிந்தா யாதலால், அவர்மூலமாகவே உனக்குக் கேடு வரலா மென்கின்றான். பி-ம்:—[1] இவர்வயின். [2]யாவையோ. (௫௦)

எசு. ஏயது பிறிதுணர்க் [1]தியம்ப வேண்டுமோ
நீயொரு தனியுல கேழும் [2]நீக்கினாய்
ஆயிரந் தோளவற் காற்றல் தோற்றனை
[3]மேயலை [4]யாமெனின் விளம்ப வேண்டுமோ.

(இ - ள்.) (மனிதரால்தீமைநேருமாறு) பொருந்தியதைப்பற்றி வேறே யாராய்ந்து கூறவேண்டுவதுண்டோ? நீ தன்னந்தனியே ஏழுலகங்களையும் வென்றாய்: (அப்படியிருந்தும்), ஆயிரந்தோள்களையுடையவனான கார்த்த வீரியார்ச்சுனனுக்குமுன்னே (பொரச்சென்று உன்)வலிமையை யிழந்தவனாய் (அங்கே) நிற்கவும்மாட்டாமற்போனாயெனின், (மேலே) கூறவேண்டுவது உண்டோ? (எ - று.)

'மனிதராவது என்னைவெல்லவாவது' என்று நினைக்கவேண்டா; மனிதனான கார்த்தவீரியன்முன்பு உன்னை வெல்லவில்லையோ? என்கின்றான், விபீஷணன். கார்த்தவீரியனால் இராவணன் வெல்லப்பட்டமையை உத்தரகாண்டத்துக் காணலாம். பி-ம்:—[1]எண்ண. [2]நீந்துவாய். [3]மேயினை. [4]ஆமினி, ஆயினி.

அ௦. மேனுயர் கயிலையை [1]வென்ற மேலைநாள்
நாலுதோள் நந்திதான் நவின்ற சாபத்தால்
கூலவான் குரங்கினாற் குறுகுங் கோளது
வாலிபாற் [2]கண்டனம் வரம்பி லாற்றலாய்.

(இ - ள்.) எல்லையில்லாத வலிமையையுடையவனே! வானம்வரை யோங்கியுள்ள கயிலாயமலையை (நீ) பெயர்த்தெடுத்த முற்காலத்தில், நாலு தோள்களையுடைய நந்தி தான் கூறியசாபத்தினால் வாலையுடைய பெரியகுரங்கினால்(உனக்குக்)கேடுகுறுகும் என்பது பெறப்பட்டது: (அது) மெய்யாகவே பலிக்கலாமென்பதை) வாலி (உன்னை) வென்றதனாற் கண்டறிந்தோம்.

வானரத்துணைகொண்ட இராமன் உன்னை வெல்லுவானென்பதை இராவணனுக்கு உணர்த்தவேண்டி, கீழ் மனிதரால் வெல்லமுடியுமென்பதற்குக் கார்த்தவீரியார்ச்சுனனது சரித்திரத்தையும் குரங்குகளால் உன்னைவெல்லுதல் கூடு மென்பதற்கு முன்னமே வாலி வென்றதையும் எடுத்துக் காட்டுகின்றான், விபீஷண னென்க. கூலம் = லாங்கூலம்: வால். கோள் - தீமை, கெடுதி. பி-ம்:—[1]எடுத்த. [2]கண்டனை. (கூஉ)

அக. தீயிடைக் குளித்தவத் தெய்வக் கற்பினாள்
வாயிடை மொழிந்தசொல் மறுக்க வல்லமோ
நோயுனக் [1]கியானென நுவன்று ளாளவள்
ஆயவள் [2]சீதைபண் டமிர்திற் றோன்றினாள்.

(இ - ள்.) நெருப்பிலே தன்னுயிரைவிட்ட அந்தத் தெய்வத்தன்மையுள்ள கற்பையுடையவளான வேதவதி வாயினாற் சொன்னசொல்லை [பிரதிஜ்ஞையை] வரவொட்டாமல்தடுக்க வல்லமையுடையோமோ? 'உனக்குநான் துன்பத்தை விளைப்பவளானேன்' என்று அவள் கூறியுள்ளாள்; அவளேயாற் கடலிற் றோன்றிய இலக்குமியினம்சமான சீதையாவாள்; (எ - று.)

மற்றும் சீதையை இலங்கையிற் சிறைவைத்தலாற் கேடு உண்டாகு மென்பதை இராவணனது மனத்திற் படுமாறு செய்யும்பொருட்டு, விபீஷணன் முன்பு வேதவதியென்பாளொருத்தி தவஞ்செய்கையில் நீ அவளை வலிய மணக்கநினைக்க, அவள் 'உன்னைக் கருவறுக்கும்படி பிறக்கப்போகின்றேன்' என்றுசொல்லி அக்கினிப்பிரவேசஞ் செய்தாளன்றோ? அவளே இப்போது சீதையாகப் பிறந்திருக்கின்றாள்; அவளைச் சிறைகொண்டிருப்பின், அவள்சொன்னசொல் தவறாது நிறைவேறு மன்றோ?" என்கின்றான். அமிர்து—பாற்கடல்.

வேதவதியென்பவள், குசத்துவசமகாமுனிவருடைய புதல்வி: அம்முனிவர் வேதமோதுகையில் அந்த வேதசொரூபத்தினின்று தோன்றியதனால் வேதவதியென்ற இப்பெயரைப் பெற்றாள்: இவளைத் தேவர்கள் முதலியோர் மணம்புரியவிரும்பி இவளது தந்தையை வினவ, இவள் ஸ்ரீ மகாவிஷ்ணுவைத்தவிர எவரையும் மணப்பதில்லை யென்று மறுத்திட்டாள்: அவர்களில் சம்பு என்ற அரக்கன் இவளதுபிதாவை இரவிற்கொன்று சென்றானாக, அதனை யுணர்ந்த தாய் மிகவும் வருந்தி அக்கினிப்பிரவேசஞ்செய்து உயிர் நீத்தாள்: பிறகு வேதவதியென்ற இவள் யவனமென்ற காட்டில் தன்மனோரதம் ஈடேறத் தவஞ் செய்துகொண்டிருந்தாள். அப்போது கைலாசத்தைப்பெயர்த்துச் சிவபெருமானருளால் விடுதலையடைந்து மீண்ட இராவணன் இவ்வேதவதியைக்கண்டு காதல்கொண்டு தன்னைமணக்குமாறுசொல்லி வலியப்பிடித்திழுக்க, இவள் 'பிரமனளித்தவரத்தாற் செருக்குக்கொண்டு தகாதனசொல்லிக் கூசாதுதீண்டினாய்: ஆதலால் இலங்கைக்கும் உனக்கும் உன்கிளைக்கும் கேடு உண்டாகத் தோன்றுவேன்' என்று சினத்தோடுசொல்லித் தீக்குதித்து உயிர் துறந்து பிறகு சீதையாய்த்தோன்றினாளென்பதை, உத்தரகாண்டத்துத் திக்குவிசயப்படலத்தா லறிக. பி-ம்:—[1]யாளெனும் [2]சீதையென்று. ()

வேறு.

அஉ. சம்பரப் பெயருடைத் தானவர்க் கிறைவனைத் தனுவலத்தால்
அம்பரத் [1]தும்பர்புக் கமரிடைத் தலைதுமித் தமரருய்ய
உம்பருக் கிறைவனுக் கரசளித் துதவினா னொருவனேமி
இம்பரிற் பணிசெயத் தசரதப் பெயரினா னிசை [2]வளர்த்தான்.

(இ - ள்.) தசரதனென்னும் பெயரையுடையவனாகிக் கீர்த்திபெற்றவனான ஒப்பற்ற வீரன், (தனது) ஆஜ்ஞாசக்கரம் இவ்வுலகத்தில் நடைபெற, சம்பரனென்னும்பெயரையுடைய அசுரேசனை ஆகாயத்தின்மேலிடத்திலே புகுந்து போரிலே வில்லின்வன்மையால் தலைதுணித்து, அமரர் (அசுரக்கொடுமைநீங்கி) உய்வுபெறத் தேவேந்திரனுக்கு அரசைக்கொடுத்துதவினன்.

சீதாநாயகனான இராமபிரானதுவல்லமையை இராவணனுக்குஎடுத்துக் கூறக் கருதிய விபீஷணன், அவனதுதந்தையான தசரதசக்கரவர்த்தியினது பெருமையை இதுமுதல் மூன்றுசெய்யுள்களாற் கூறுகின்றான். அவற்றுள், இதனால், தசரதனதுவலிமைச்சிறப்புக் கூறியவாறு. தசரதன் தான் இவ்வுலகத்திலிராதுபோர்செய்யுமாறு சுவர்க்கத்துக்குச்சென்றிருக்கையிலும், அவனது

கட்டளை இவ்வுலகத்துத் தட்டறநடந்த தென்பான், 'நேமி இம்பரிற்பணி செய' என்றான். தசரதப்பெயரினுனொருவன் என்க. தண்டகாரணியத்தில் வைஜயந்தமென்ற நகரத்திலிருந்து அரசாண்டுவந்தவனும் திமித்துவசனென்றுமறுபேருள்ளவனும் பற்பலமாயைகளில் தேர்ந்தவனுமான சம்பரனென்ற அசுரன் பலஅசுரர்களையும் அரக்கர்களையும் உடன்கொண்டுசென்று தேவர்களுடன்பெரும்போர்செய்து அவர்களைப் பலவாறுவருத்தித் தேவேந்திரனையுமுளப்படவென்று அவனதுபொன்னுலகத்தையபகரித்துக்கொண்டு துரத்திவிட,அங்ஙனம்அரசிழந்ததேவேந்திரன்தசரதசக்கரவர்த்தியையடுத்துச் சரணமடைந்து தன்குறையைக் கூறித் தனக்குஉதவிசெய்யுமாறு பிரார்த்திக்க, அவனது அந்நிலையைநோக்கி இரக்கங்கொண்ட தசரதன் அவ்வேண்டுகோட்குஇணங்கிக் கைகேயியையும் உடனழைத்துக்கொண்டு இந்திரனுக்கு உதவியாகத் தேவாசுரயுத்தத்தில்தலையிட்டுச் சம்பரனுடன்எதிர்த்துக் கடும்போர்புரிய,அந்தக்கடும்போர்க்கு ஆற்றமாட்டாதஅசுரன் மாயையால்மறைந்து ஓட்டங்காட்டவே,அவன்சென்றசென்றதிசைகளிலெல்லாம் தசரதன் விடாது தொடர்ந்துசென்று பொருது அவனைச் சுற்றத்துடன்கொன்று முன்பு அவனால்கவரப்பட்ட அரசாட்சி தனக்குஉரியதாகப்பெற்றவனாய் மீண்டு உடனேஅவ்வரசாட்சியை இந்திரனுக்குக் கொடுத்தனனென்பது, இங்குக்கூறிய வரலாறு. பி-ம்:—[1]ஊடுபுக்கு. [2]வளத்தான். (கூ௯)

அ௬. மிடல்படைத் தொருவனா யமரர்கோன் [1]விடையதா வெரிநின்[2]மேலாய், [3]உடல்படைத் தவுணரா யினரெலா மடியவா ளுருவினானும், அடல்படைத் தவனியைப் பெருவளந் தருகவென் றருளினானும், கடல்[4]படைத் தவரொடுங் கங்கைதந் தவன்வழிக் கடவுள் [5]மன்னன்.

(இ - ள்.) (அந்தத்தசரதன்),—வலிமைபெற்று (த் தான்) ஒருவனாய், அமரர்தலைவனான இந்திரன் இடபரூபங்கொண்டுவர (அவனது) முதுகின் மேலேறி அவுணரென்று உடல்படைத்தவர்யாவரையும்இறந்தொழியும்படி வாளுருவிவீசின ககுத்தமகாராசனும்,(தான்)வலிமைபெற்றுப் பூமியை 'பெருவளஞ்சுரப்பாயாக' என்று சொல்லி (ப் பெருவளத்தைப்பெற்று இவ்வுலகத்தார்க்குத்) தந்தருளின பிருதுசக்கரவர்த்தியும், கடலையுண்டாக்கிய சகரபுத்திரரும், கங்கையை (இவ்வுலகத்திற்) கொணர்ந்திட்ட பகீரதசக்கரவர்த்தியும் ஆகிய இவர்களின் வமிசத்திலேதோன்றிய தெய்விக அரசனாவன்; (எ - று.)

முன்னிரண்டடிகளிற் குறித்த வரலாறு வருமாறு:—முன்னொருகாலத்தில் தேவர்க்கும்அசுரர்க்குங்கொடியபோருண்டாகி, அதில் மகாபலவான்களானஅசுரர்களாலே தேவர்கள் வெல்லப்பட்டவராய் ஆபத்சகாயரான ஸ்ரீமந்நாராயணனை யாராதிக்க, அவ்வெம்பெருமான் பிரசன்னனாகி அவர்களை நோக்கி 'நான் பூமியிற் புரஞ்சயனென்னும்புரவலனதுஉருவத்திற் பிரவேசித்து அசுரரைச் சங்கரிப்பேன்;நீவிர் அவ்வரசனைத் துணைக்கொள்ளுங்கள்' என்றுநியமித்தார்; தேவர்கள் இட்சுவாகுவின்மகனான சசாதனனென்பவனது

புத்திரனாகிய அந்தப்புரஞ்சயனிடம்வந்துவேண்ட,அவன், 'தனக்குத்தேவேந்திரன்வாகனமாய்நிற்பின் அவன்மீதேறிச்சென்று போர்செய்து பகைவரையொழிப்பேன்'என்றுகூறவே,தேவராசன்தடைசொல்லாதுஉடனேவிருஷபரூபியாகிநிற்க,பின்பு அப்புரஞ்சயன் அவ்வெருத்தின்முசுப்பின்மேலேறி வீற்றிருந்து அசுரர்யாவரையும் எளிதிற் சங்கரித்தான்; இந்திரனை வாகனமாகக்கொண்டதனால் இந்திரவாகனனென்றும்,எருதுவடிவமான இந்திரனது ககுத்எனப்படுகிற முசுப்பின்மேலேறியிருந்ததனால் ககுத்ஸ்தனென்றும் இவனுக்குப் பெயருண்டாயிற்றென்பதாம். (இவன் இங்ஙனம் சிறப்புப்பெற்றதனால் இராமபிரான் காகுத்ஸ்தனெனப்படுவன்.)

மூன்றமடியிற்குறித்தவரலாறு:—வேனனென்னுமரசன் குணவீனனாய்த் துஷ்டசுவபாவனாய் ஸ்ரீமகாவிஷ்ணுவைநிந்தித்து யாகம் தானம் முதலிய சற்காரியங்களைச் செய்யவொட்டாது தகைந்து, முனிவர்கள் எவ்வளவுநற்புத்திகூறியதையுங் கொள்ளாமலிருக்க, அவர்கள் அவனைக் குசைத்தருப்பைகளினாலே அடித்துக் கொன்று அவனுடையவமிசவிருத்திக்காக அவனிடம் ஒருபுத்திரனையுண்டாக்கவேண்டுமென்று ஆலோசித்து அவனது வலக்கையைக் கடைந்து அக்கினியுண்டாக்கி அதிற் பிரமனைக்குறித்து யாகஞ்செய்ய, அவ்வேள்வியிற் பிருதுவென்பவன் நாராயணாமிசமுடையவனாயுதித்தான்; வேனன் இறந்துபோனதனாற்சிலகாலம் அராஜகமாயிருந்த பூமியிலுள்ள ஜனங்கள் யாவரும், இப்பிருதுமகாராஜன் பிரமதேவனாற் பட்டாபிஷேகஞ்செய்யப்பட்டுப் பூமண்டலமுழுவதையும் அரசாளத்தொடங்கினபொழுது இவனிடம் வந்து, 'ஓமகாராசனே! நீ இராச்சியாபிஷேகஞ்செய்துகொள்வதற்கு முன்னே பூமி அராஜகமாகிச் சகலவோஷதிவருக்கங்களையும் தனக்குள்ளே இழுத்துக்கொண்டது; ஆனதனால், இப்போது ஆஹாரங்களில்லாமல் நாங்கள் பசித்துன்பத்தாலே நாசமடைகின்றோம். பசியினால்வருந்துகின்ற எங்கட்குப் பிழைக்குமாறு ஓஷதிகளையுண்டாக்கி அன்னபானாதிகளைக்கொடுத்துக் காத்தருளவேண்டும்' என்று முறையிட, அதனைக்கேட்டு அம்மன்னவன் 'அவ்வாறே யாகுக' எனச்சொல்லித் தான் பிறந்தபொழுது தன்னுடனே ஆகாசத்திலிருந்துவிழுந்த அஜகவமென்ற வில்லையும் திவ்வியமான பாணங்களையும் கவசத்தையுந் தரித்தவனாய்க் கோபமூண்டு பூமியின்மேல் எதிர்த்து வந்தான்; அப்பொழுது பூமிதேவி பசுரூபத்தையெடுத்து அஞ்சியோடினாள்; அவனும் விடாமற் பின்தொடர்ந்துபோனான்: பின்பு அந்தப்பூமி சகலலோகங்களிலும்ஓடிப்பார்த்தும் எங்குஞ் சரணங்காணாமையால் அவ்வரசனையே யடைந்து 'உலகத்திலுண்டான ஓஷதிவருக்கங்கள்யாவும் என்னிடத்திற் பாலின் வடிவாக இருக்கின்றன; தகுந்தஒருகன்றையுண்டாக்கிக் கொடுத்தால், அதனிடத்துஅன்பினால் அவற்றைச் சுரந்துகொடுக்கிறேன்: நான் கொடுக்கும்பால் பூமிமுழுவதும் பரவும்பொருட்டு, மேடுபள்ளமாயிருக்கிற பூமி சமமாகும்படி மலைகளை விலக்கி நிரவவேண்டும்' என்று கூறினாள். அரசன் அவ்வாறே மலைகளையெல்லாம் தன்வில்லின்நுனியால் அப்பால் தள்ளிப் பூமண்டலத்தைச் சமனாகச்செய்து சுவாயம்புவமனுவைக் கன்றாகவைத்துத்

தன் கையைப் பாத்திரமாகச்செய்து பசுவடிவங்கொண்ட பூமியினிடத்திருந்து சகலஔஷதிகளையுங் கறந்து பெய்து பூமிமுழுவதும் பரவச்செய்தான்; அதனாற் பிரஜைகள் சந்தோஷமடைந்து அவனுண்டாக்கின ஆகாரத்தினாலே வலிமைபெற்று ஜீவித்து வரலானார்க ளென்பதாம். (இவனாற் சீர்திருத்தப்பட்டமைபற்றிப் பூமிக்குப் **பிருதிவி** யென்று பெயருண்டாயிற்று).

நான்காமடியிற்குறித்தவரலாறுகூறுவருமாறு:—சகரசக்கரவர்த்தி அசுவமேதயாகஞ் செய்யத்தொடங்கித் தனது பேரனும் அஸமஞ்சனது புத்திரனுமான அம்சுமானைப் பாதுகாப்பவனாகவைத்துப் பூமிப்பிரதட்சிணத்தின்பொருட்டு வேள்விக்குதிரையை விடுத்தானாக, அதனையுணர்ந்த இந்திரன் தன் மாயையால் அந்தக்குதிரையைக் கவர்ந்துபோய், பாதாளலோகத்திலே பெருந்தவஞ்செய்பவனும் தவஞ்செய்கையில் தான் விழித்துப்பார்த்தால் முதற்பார்வையில் எதிர்நின்றவர் எரிந்திறந்திடும்படி சங்கற்பித்துள்ளவனும் இவ்வாலாற்றையுணர்ந்தவரெவராலும் தன் தவத்துக்கு இடையூறு இயற்றப்பெறாதவனும் திருமாலினம்சாவதாரமாகவுள்ளவனுமாகிய கபிலனென்னும் முனிவனது பின்புறத்திலுள்ளதொரு மரத்தடியிற் கட்டிச்சென்றானாக, வேள்விக்குதிரை காணமற்போனதை அம்சுமான் சகரனுக்கு உணர்த்த, அவன் தன் மக்கள் அறுபதினாயிரவர்க்கு அதனைத் தெரிவிக்க, மகாபலவான்களான அவர்கள் கடுஞ்சினங்கொண்டு பூமிமுழுவதும் தேடிப்பார்த்தும் அக்குதிரை அகப்படாமையாற் பாதாளலோகத்திலும் தேடுமாறு பூமியின் வடகீழ்த்திசையிலே நூறுயோசனையகலமும்ஆழமும் பொருந்துமாறுதோண்டி அவ்வழியாகப் பாதாளலோகத்திற் சென்று அங்குத் தவஞ்செய்திருந்த கபிலமுனிவனது பின்னே குதிரையைக் கண்டு 'இவனே குதிரையைக்கவர்ந்த கள்வன்' என்று அநுமானங்கொண்டு சினந்து அம்முனிவனது தவத்திற்கு இடையூறு இயற்றி அவனது கோபத்தீக்கு இலக்காய் யாவரும் சாம்பராய்விட்டனராக; அம்சுமான் பாட்டனது வேண்டுகோளின்படி வேள்விக்குதிரையை மீட்டுக்கொணர்ந்து யாகத்தைப் பூர்த்திசெய்வித்தான்: அங்ஙனம் சகரபுத்திரர் தோண்டின பள்ளமே பின்பு கங்கைமுதலிய நீர்களால் நிறைந்து கடலாயிற்றென்க. அம்சுமானது பௌத்திரனாகப்பிறந்த பகீரதனென்பவன் கபிலமுனிவரது கோபத்தீக்குஇலக்காய்உடலெரிந்துசாம்பராய் நற்கதியிழந்த தன் மூதாதையரான சகரபுத்திரரறுபதினாயிரவரையும் நற்கதிபெறுவிக்கும்பொருட்டு நெடுங்காலந்தவஞ்செய்து கங்காநதியை மேலுலகிலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில், அதனது வெகுவிசையாகப்பெருகிவரும்வெள்ளப் பெருக்கைத் தாங்கும் வல்லமை பூமிக்கு இல்லாமைபற்றிச் சிவபிரானைப் பிரார்த்திக்க, அப்பகீரதனது வேண்டுகோளின்படி பரமசிவன் அந்நதியைத் தனது முடியிலேற்றுச் சிறிது சிறிதாகப் பூமியில்விட்டருளினனென்பதாம்.

பி-ம்:— [1]விடைதர, விடையதாய். [2]மேலால். [3]உடல்பதைத்து. [4]படைத்தவனெடுங்,படைத்தவனெடுங். [5]மன்னர். (கரு)

அஅ. பொய்யுரைத் [1]துலகின்றி னவினார் குமைறப் பொருதுதன் வேல், செய்யுரைத் துறையிலிட் டறம்வளர்த் தொருவனாய் நெறியி

னின்றான், மையுரைத் துலவுகண் மனைவிபால் வரமளித் தவை [2]மறு
தே, மெய்யுரைத் துயிர்கொடுத் தமரரும் பெறுகலா வீடுபெற்றான்.

(இ - ள்.) பொய்யாக (வீரத்தைச்) சொல்லிக்கொண்டு உலகிலே மாறு பட்டுவந்தவரான பகைஞர்களையெல்லாம் குலத்தோடு நாசமாகும்படி போர் புரிந்து தன்(கை)வேலுக்கு நெய்பூசி உறையிலேயிட்டுவைத்துத் தருமத்தை வளர்த்து ஒப்பற்ற நீதிமுறையில்நின்றவனான அந்தத்தசரதன், மைதீற்றப் பெற்றுச் சஞ்சலத்தன்மையைக்கொண்ட கண்களையுடையவளான (தன்) மனைவி கைகேசிக்கு இருவரங்கள் கொடுத்து அவற்றை மறுக்கமாட்டாமை யால் மெய்யையேயுரைத்து உயிரைவிட்டு அந்தச்சத்தியத்தைக்காத்ததன் பொருட்டுத் தேவர்களாலும் பெறுதற்குமுடியாத மோட்சலோகத்தைப் பெற்றான்; (எ - று.)

இதனால், தசரதனது வாய்மைச்சிறப்புக் கூறப்பட்டது: தருப்பிடியாம லிருக்கும்பொருட்டு உறையிலிடும்போது வேலுக்கு நெய்பூசுதல், இயல்பு.
பி ம்:—[1]உலகினை. [2]பொருது, மருது. (கசு)

அ௬. அனையவன் சிறுவரெம் பெருமவுன் பகைஞரா லவரையம்மா
இனையரென் றுணர்தியே லிருவரும் மொருவரு [1]மெதிரிலா தார்
முனைவரு மமரரும் முழுதுணர்ந் தவர்களும் முற்றுமற்றும்
[2]நினைவருந் தகையர்நம் வினையினால் மனிதரா [3]யெளிதுநின்றார்.

(இ - ள்.) எமதுபெருமையுள்ள தலைவனே! அப்படிப்பட்ட சிறப்புடைய தசரதனது புதல்வர் உன்பகைவர்: அவரை யாரென்று உணர விரும்பின யாரேல், அவ்விருவரும் எவரையும் ஒப்பாகப்பெறாதவர்கள்; இருடியரும் தேவர்களும் முற்றுமுணர்ந்த ஞானியரும் மற்றுமுள்ள பொருள்களும் அறி வதற்கு அரியதன்மையையுடையவர்[பரம்பொருளி னம்சமானவரென்றபடி]; (அப்படிப்பட்டவர்கள்), நமது வினைப்பயனால் மனிதவடிவந்தாங்கி எளிமை யுடனே [சௌலப்பிய குணத்தை மேற்கொண்டு] நின்றார்கள்; (எ - று.)— அம்மா-வியப்பு: பகைஞரா யமைந்தவரின் தன்மையை வியந்தவாறு.

உடல்வலிமை, உயர்குடிப்பிறப்பு வாய்மையில்நிற்றல் என்ற குணங்கள் அந்த இராமலட்சுமணர்க்குமுன்னோர்வழியாக வந்தவை யென்பதை விளக்கு மாறு தசரதனுக்கு அம்மேன்மையிருந்தமையை விளக்கி, இதனால், அந்தக் குணங்களோடு தெய்வாமிசம்பெற்றவர் அந்தராமலட்சுமணர்க ளென்பதைத் தெரிவிக்கின்றான், விபீஷணனென்க. மற்றும்முற்றும் என்று மாற்றுக.
பி ம்:—[1]எதிர்கிலாதார், எதிர்கலாத. [2]வினைவரும். [3]எளிதினின்றார், வெளி யினின்றார். (கஎ)

அ௲. கோசிகப் பெயருடைக் குலமுனித் தலைவனக் குளிர்மலர்ப்பே
ராசனத் தவனொடெவ் வுலகமுந் தருவனென் றமையலுற்றான்
ஈசனிற் பெறுபடைக் கலமிமைப் பளவிலெவ் [1]வுலகும்யாவும்
நாசமுற் றிடநடப் பனகொடுத் தனபிடித் [2]துடையர்நம்ப.

(இ - ள்.) தலைவனே! 'அந்தக் குளிர்ந்ததாமரைமலராகிய பெரிய ஆசனத்திலே யிருப்பவனான பிரமதேவனோடு எல்லாவுலகங்களையும் படைப்பேன்' என்று (அந்தப்படைப்புத் தொழிலைச்) செய்யப் பொருந்தியவனான கௌசிகனென்னும் பெயரையுடைய சிறந்த முனிச்சிரேஷ்டன் இமைப்பொழுதில் எல்லாவுலகங்களிலுமுள்ள எல்லாப்பிராணிகளும் நாசமாகும்படி செல்வன வாகிச் சிவபெருமானிடத்திற் பெற்ற படைக்கலங்களைக் கொடுக்க (அவற்றைக்)கையிற் கொண்டுள்ளார்கள், (அந்தஇராமலட்சுமணர்கள்); (எ-று.)

இராமபிரானுக்குக் கௌசிகமுனிவன் படைக்கலமருளியது, இராமபிரான் தாடகையைக்கொன்றதும் வேள்விதொடங்குமு னென்பதைவேள்விப்படலத்து முதற்செய்யுளா லறியலாம்; அந்தப்படைக்கலங்கள் சிவபெருமானிடத்தினின்று கௌசிகமுனிவன் பெற்றன வென்க. அஸ்திரத்தை இராமலட்சுமணர்கட்கு உபதேசித்ததைக் கூறுமிடத்து ஸ்ரீவால்மீகத்தில் பிரசாசுவமுனிவனிடத்தினின்று விசுவாமித்திரன் தான் அஸ்திரங்களையெல்லாம் உணர்ந்திருந்தனனென்று கூறியிருப்பினும், அந்தவான்மீகத்திலேயே க்ஷத்திரியனாயிருக்கையில் விசுவாமித்திரன் வசிட்டமகரிஷிக்குமுன்னே போர்புரிந்து களைத்துச் சிவபெருமானைநோக்கித் தவம்புரிந்து தநுர்வேதத்தையும் பலவகையஸ்திரங்களையும் அப்பிரான் அநுக்கிரகிக்கப்பெற்றா னென்று கூறியிருத்தலாலும், அது நிகழ்ந்த வெகுகாலத்துக்குப்பின்னரே இராமாதிகள் ஜநநமாகி விசுவாமித்திரனிடத்தினின்று அஸ்திரங்களைப் பெற்றதனாலும், கம்பர் 'ஈசனிற்பெறு படைக்கலம் கொடுத்தன பிடித்துடையர்' என்றார்.

முன்னிரண்டடிகளிற் குறித்தவரலாறு:—திரிசங்குவென்னுஞ் சூரியகுலத்துமன்னவன் தன்குலகுருவாகிய வசிட்டமுனிவனைக்கிட்டி இந்தச் சரீரத்தோடு சுவர்க்கஞ்செல்லும் வேள்வியைச் செய்யவேண்டு மென்றுவேண்ட, வசிட்டமுனிவன் மறுக்க, திரிசங்கு'வேறுபுரோகிதனை நாடி யாகம்புரிவேன்' என்ன, வசிட்டன் 'குருவை விட்டிடுவேனென்றமையால் நீ நீசனாகக்கடவை' என்று சபிக்க, மன்னவன் முனிவனுடைய சாபத்தின்படி சண்டாளனாகி ஊர்சேர்தலும், யாவரும் சீசீயென்று இகழ, அன்னான் திகைப்புக்கொண்டு காடு சேர்ந்தானாய் ஒருநாள் விசுவாமித்திர னிருக்குமிடஞ்சார்ந்து தன்செய்தியைத் தெரிவிக்க, விசுவாமித்திரமுனிவன் 'இவ்வுடலோடு சுவர்க்கஞ் சேருமாறு வேட்பிப்பேன்' என்று கூறி முனிவர்களை வரவழைக்க, வசிட்டகுமாரர்கள் மறுக்க, அப்போது விசுவாமித்திரன் அவ்வசிட்டகுமாரர்களைச் சபித்திட்டு வேள்விதொடங்கித் தேவர்களை அவிசைப்பெற்றுப் போமாறு அழைக்க, வானவர் விசுவாமித்திரன்செயலை யிகழ்ந்து அவிர்ப்பாகத்தைப் பெறுதற்கு வாராமலிருக்க, முனிவன் தன்தவமகிமையால் திரிசங்குவை வானத்தி லேற்ற, தேவர்கள் அவனைத் தள்ளிவிட, வானத்தினின்று கீழ்விழுகின்ற அந்தத்திரிசங்குவை விசுவாமித்திரன் அவ்வாகாசத்தினிடையில் நிற்குமாறு தன் தவமகிமையாற் செய்து தேவர்களின்மீதுசினத்திறைற் பிரதிசிருட்டி செய்யத்தொடங்கிவிட, பிரமன் சிவன் முதலிய தேவரெல்லாந் திரண்டுவந்து விசுவாமித்திரனைக் கிட்டிப் பொறுத்தருளுமாறு வேண்டி அவ

னது சினத்தைச் சாந்தப்படுத்தின ரென்பதாம். பி-ம்:—[1]உலகில் யாரும். [2]உடைய நம்பர், உடைய நண்பர். (கஅ)

அஎ. ஏறுழ்வலிப் பொருவிறோ ளவுணரோ டமரர்பண் டிகல்
செய்காலத், துறுதிறற் [1]கலுழன்மே லொருவனின் றமர்செய்தா
னுடையவில்லும், தெறுசினத் தவர்கள்முப் புரம்நெருப் புறவுருத்
[2]தெய்தவம்பும், குறுமுனிப் பெயரினா னிறைதவர்க் கிறைதரக்
கொண்டுநின்றார்.

(இ - ள்.) (அன்றியும்),மிக்கவலிமையைக்கொண்ட ஒப்பற்றதோள்களை யுடையஅவுணரோடு தேவர்கள் முன்பு இகல்செய்தகாலத்து மிக்கவல்லமை யுடையகருடன்மேலேறித் தானொருவனாகவேநின்று போர்செய்தவனான திரு மாலின்வில்லையும், (பகைவரை) அழிக்கவல்ல சினத்தையுடையவரான அசுரர் களின்திரிபுரத்தை நெருப்புப்பற்றியெரியக் கோபித்து எய்த (சிவபெருமானு டைய)அம்பையும் குறுகியவடிவமுள்ள முனிவனென்று பிரசித்திபெற்றவனு கியநிறைந்ததவத்தையுடைய முனிவர்க்குட் சிறந்த அகத்தியமுனிவன் தரப் பெற்றுநின்றார்; (எ - று.)

அகத்தியமுனிவன் இராமபிரானுக்கு விஷ்ணுவின்வில்லையும், முப்புர மெரித்தகணையையும் ஈந்தனனென்பதை, கீழ்ஆரணியகாண்டத்தில் அகத் தியப்படலத்து ருரு, ருசு - ஆஞ் செய்யுள்களிற் கூறுவதுகொண்டு உணர்க. குறுகியவடிவமுடையவனாயிருப்பதுகுறித்து, அகத்தியமுனிவனை 'குறுமுனி' என்றே தமிழிற் பயில்வதுபற்றி, 'குறுமுனிப்பெயரினான்' என்றார். பி-ம்:— [1]கலுழன்மீது. [2]எய்வது. (கக)

அஅ. நாவினா லுலகை[1]நக் கிடுவதிக் [2]களவிடற் குரியநாளும்
மேவுதீ[3] விடமுமிழ்ப் பனவெயிற் பொழியெயிற் [4]றனவவீரர்
[5]ஆவமா மரியபுற் றுறைவமுற் [6]றறிவருக் கழிவுசெய்யும்
பாவகா ரியருயிர்ப் பதமலா விரைபெறு பகழிநாகம்.

(இ - ள்.) (அந்தஇராமபிரானது) அம்புகளாகியநாகங்கள், (தமது)நாவி னால் உலகை நக்குபவை; திக்குக்களையெல்லாம் அளவிடுதற்குரியவை;நாடோ றும்பொருந்திய கொடியவிஷத்தை வெளியுமிழ்பவை; ஒளியையுமிழ்கின்ற எயிறுகளையுடையவை; அந்தவீரருடைய அம்பப்புட்டிலாகிய அரியபுற்றிலே வாழ்பவை; நன்குணர்ந்தஅறிஞரான பெரியோர்க்குக் கேடுபுரிகின்ற பாவகா ரிகளின்உயிராகிய உணவேயல்லாமல் வேறோரிரையைப் பெறாதவை.;(எ-று.)

இதனால், அந்தஇராமபிரானது பாணங்களின்சிறப்புக் கூறப்படுகின் றது. பகழி-பாணம். ஆவம்-அம்பப்புட்டில். பதம்-உணவு. பகழியை நாகமாக வுருவகஞ்செய்ததற்கு ஏற்ப,அவற்றிற்கு நா விஷம் எயிறு புற்று பதம் என்பன கூறினர். வில்லினின்று வெளிப்படும்நிலையில் பகழிகளின்கூரியமுனையை நாவாகவும், எதிரிகளின்மீது பொத்தி உயிரைவாங்கும்உறுப்பை எயிறாகவும் கருதுக: முற்றுருவகவணி. இது, நாகாஸ்திரத்தைப்பற்றிக்கூறுவதெனக் கொண் டாருமுளர்: அப்பொருள் சிறவாது. இராமபிரானதுஅம்புகள் திக்குக்களி னெல்லைவரையும்போய்ப் பாயுந்தன்மையன என்பது 'திக்களவிடற்குரிய'

என்பதன்பொருள். அ வீரர்-தொகுத்தல். 'இரைபெரு பகழிநாகம்' என்ற இயல்பான பாடமே இலக்கணத்திற்கு ஏற்கும். பி ம்:—[1]நக்கிடுவதொத்து, நக்கிடுவதற்கு. [2]அரியவாய்நாமநாளும். [3]வேவுதீ. [4]அனைய. [5]வாமமாம். [6]அறிவனுக்கு, அறிவினுக்கு. (௬௦௦)

அகூ. பேருமோ வொருவரா [1]லவர்களா [2]லல்லதிஃ தெரிய[3]வேனும்
நாருமூ ரியுமரு நம்முடைச் சிலைகள்போ [4]னலிவவாமோ
தாருவோ வேனுவோ தானுவா [5]யுலகினைத் தழுவிநிற்கும்
மேருவோ மால்வரைக் [6] குலமெலா மல்லவோ வில்லு[7]மன்னே.

(இ - ள்.) (அவர்கள் கைக்கொண்டிருக்கும்) விற்கள், அந்த இராமலட்சுமணராலன்றி வேறொருவரால் அசைக்கத்தான் முடியுமோ? (அவைகள்) நம்முடையவிற்களைப்போல நாணியும் வலிமையும் (எப்போதும்) நீங்கமாட்டா; இந்த(நம்முடைய)விற்கள் பெரியவையேயாயினும், (அவர்களின்விற்களை) ஒடிக்கவல்லமையுடையன வாகுமோ? (அவ்விற்கள்)கற்பகமரமோ, மூங்கிலோ, திரமாய்ப்பூமத்தியில்நின்று உலகினைத்தாங்கும்மேருவோ? (இவையெவையு மல்ல); பெரியமலைகளெல்லாம்சேர்ந்து இயைந்தனவன்றோ? (எ - று.)—மன்னே-ஈற்றசை.

கீழ் இராமலட்சுமணர்களின் அம்புச்சிறப்பைக்கூறியகவி, இதனால் அந்த அம்புகளைவெளியுமிழும் விற்களின்சிறப்பைக் கூறுகின்றார். மேற்பாடலால் அம்புக்குஇலக்கானவரின்தொகுதி கூறப்படும். இவ் + பெரிய: இஃபெரிய: சுட்டுவகரம் வலிவரஆய்தமாயிற்று. தாரு-தருஎன்பதன்நீட்டல், தாருஎன்றே வடசொல்லுமாம். பி-ம்:—[1]இருவரால். [2]அளவிடப். [3]வேணு.[4]நலியலாமோ, நலியலாகா, நலியவாகும். [5]உலகெலாம். [6]குலமதோ. [7]மன்னு. (௬௦௧)

கூ௦. உரமொருங் கியதுநீர் கடையும்வா லியதுமார் புலகைமூ டும், மரமொருங் கியகரா தியர்விரா தனதுமால் வரைகள்மானும், சிரமொருங் கியவினிச் செரு[1]வொருங் கியதெனிற் [2]றெவ்வரென் பார், பரமொருங் குவதலாற் பிறி[3]தொருங் காததோர் [4]பகையு முண்டோ.

(இ - ள்.) (அந்த இராமனெய்தஅம்புகளால்),—பாற்கடலைக்கடைந்த வாலியின்மார்பு உரம் ஒடுங்கிற்று; உலகைமூடியிருந்த [கவிந்திருந்த] (ஏழு) மராமரங்கள் ஒடுங்கின; கரன்முதலானோர் விராதன் இவர்களின் பெரியமலைகளையொத்த தலைகள் அறுந்தொழிந்தன; இனிப் போர்நெருங்கிநேர்ந்ததாயின், பகைவரென்னப்படுவோரின் சுமை [தொகுதி] ஒடுங்குவதல்லாமல் மாறாக ஒடுங்காமலிருக்கவல்ல பகையும் உண்டோ? (எ - று.)

இராமபிரானது அம்புகள் இதுவரையிற்செய்த வீரச்செயல்களைப் பார்த்தால் போரில் அந்தஇராமபாணத்தால் பகையாவும் ஒழிவது திண்ணமென்று தோன்றுகின்றதென்கிறான், விபீஷணனென்க. நீர்-நீர்த்தன்மையையுடைய பாலைக் காட்டிற்று. பி ம்:—[1]ஒருங்குவதெனில், ஒருங்கினதெழில், ஒருங் குளதெனில். [2]தேவர். [3]ஒதுங்காதது. [4]வகையும். (௬௦௨)

கூக. சொல்வரம் பெரியமா முனிவ[1]ரென் பவர்கள்தந் துணையிலாதார், [2]எல்வரம் [3]பெரியதோ ளிருவரே [4]தமரொடு முலகம்யாவும்,

வெல்வரென் பதுதெரிந் தெண்ணினார் நிருதர்வேர் முதலும் வீயக், கொல்வரென் றுணர்தலா லவரைவந் [5]தணவதோ [6]ரியைபு கொண் டார்.

(இ - ள்.) (சிறப்பித்துச்) சொல்லப்படுதற்குஉரிய வரங்களைப்பெற்றுத் தமக்கு ஒப்புஇல்லாதவரான மிகச்சிறந்த முனிவர்களென்பவர்கள், 'ஒளிக்கு வரம்பாய்ப் பெரிய தோள்களைக்கொண்டஇராமலட்சுமணரென்ற இருவரே, தம்மைச்சார்ந்தவருடனே,உலகம்எல்லாவற்றையும்வெல்வர்'என்பதை நன்கு ஆராய்ந்தவர்களாய், (அவ்விருவர்) அரக்கரை அடிவேரோடும்ஒழியக் கொல் வார்களென்று உணர்வதனால் அவரை (ஆங்காங்கு) வந்துசேர்தலாகிய ஒரு தன்மையைப் பூண்டனர்; (எ - று.)

இதனால், இருடியர் ஆங்காங்குவந்து அவ்விராமலட்சுமணரிடத்துத் அன்புபூண்டமையை யெடுத்துச் சொல்லுகிறான். துணையிலாதாரான முனிவ ரென்க. பெரியமா - மீமிசைச்சொல்: தெரிந்தெண்ணுதலும் அது. வரம்பு பெரியஎன்பன வரம்பெரியஎன்று விகாரப்பட்டன. இனி, எல்வரம்பு எரிய என்று பிரித்து, எரிய - குறிப்புப்பெயரெச்சமென்பாருமுளர். [1]என்பவர்கடந் திணையிலாதார்என்றபாடத்திற்கு, பெரியமாமுனிவர்கள்என்பவர்கள், இணை யிலாதாரான இருவரே வெல்வரென்பது எண்ணித்தெரிந்தவர்களாய், (அவர் கட்குச்) சொல்லப்படுகின்ற வரம் தந்து, அவரைவந்தணவதோர் இயைபு பூண்டா ரென்க. பி - ம்:—[2]ஒல்வரம். [3]பரியமாணிருவரே, பெரியதோ ளிருவரும். [4]அமரரோடு. [5]அமைவதோர், இனியதோர். [6]இசைவு,உறவு. (கOஎ)

கூஉ. [1]துஞ்சுகின் றிலர்களா விரவுநன் பகலும்நிற் சொல்ல வொல்கி, நெஞ்சுநின் றயரு[2]மிந் நிருதர்[3]பேர் சனகியாம் [4]நெடிய தாய, [5]நஞ்சுதின் றனர்கடாம் நண்ணுவார் நரகமென் றெண்ணிநம் மை, அஞ்சுகின் றிலர்க[6]ணம் [7]அருளலாற் சரணிலா [8]அமரரம்மா.

(இ - ள்.) (சானகிப்பிராட்டி இங்குச்சிறைப்பட்டிருத்தலால் நம் நாட் டுக்கே தீங்குநேருமென்ற கருத்தினால்),மனத்தில் விசாரங்கொண்டு வருந்து கின்ற இந்த அரக்கள்,உன்னிடத்து(த் தம்கருத்தை)ச் சொல்லப் பின்வாங்கி இரவிலும் நல்லபகலிலும் தூக்கமின்றிக்கிடக்கின்றனர்: நம்முடைய தண்ண ளியே (தமக்குத் தஞ்சமாகக்கொள்வது) அன்றி (வேறொன்றைத்) தஞ்சமா கக் கொள்ளாத தேவர்களோ, 'பெருமைபெற்ற சானகியாகிய நீண்டதான நஞ்சை யுட்கொண்டவர்கள் [சீதையைத் தம் நகரத்திலே கொணர்ந்து சேர்த்துக் கொண்டவர்களான அரக்கர்கள்] துன்பத்தையடைவார்கள்'என்று, கருதி நம்மை அஞ்சாதிருக்கின்றனர்; (எ-று.)—அம்மா-ஆச்சரியம்.

முன்பு தம்முடைய அருளையே தஞ்சமாக எண்ணியிருந்த தேவர் இப் போது தம்மைஅலட்சியஞ்செய்து தம்மிடத்து அச்சமின்றித் திரிவதுபற்றி யும், துன்பமென்பது இன்னதென்று அறியாது செருக்கித்திரிந்த நிருதர் நெஞ்சயர்ந்து துயில்நீங்கியமைபற்றியும் வியக்தவாறு. 'பேர்சனகியாம்...நரக மென்றெண்ணி'என்றதொடர்-மத்திமதீபமாக,நிருதர் அமரர் என்ற இரண்டு இடத்தும் இயையலாம். நரகம்-இலக்கணையால், துன்பத்தையுணர்த்தும். சா

ண் - பூரணம்: பற்றுக்கோடு. பி-ம்:—[1]தூஞ்சுகின்றிலரினி. [2]கின். [3]பேர சனியாய். [4]கெடிதுகாலம். [5]எஞ்சுகின்றிலர்கடாம், நஞ்சுதின்றவர்கடாம். [6]கின். [7]சரணலாதரணிலா. [8]அமரரையா. (௧0௪)

௬௩. புகல்மதித் துணர்கிலா மையினமக் கெளிமைசால் [1]பொறைமைகூர, [2]நகல்[3]மதிக் கிலமறுப் பொலியவா ளொளியிழந் [4]துய்தல் நண்ணும்,பகல்மதிக் குவமை[4]யா யின[5]வெலா [6]மிரவுகால் பருவநாளின், அகல்மதிக் குவமையா யின [7]கொலோ அமரர்தம் வதனமம்மா.

(இ-ள்.) (தமக்குப்)புகலை எண்ணி(யும்) பெருமையால் நம்மிடத்து எளிமைமிக்குப் பொறுமைக்குணத்தை மிகக்காட்ட,(அதனால்)நகுவதைக்கொள்ளாதனவாய்க் களங்கம் (தன்னிடத்துப்) பொருந்த மிக்கவொளியை யிழந்து (அழியாமல்)உய்தலைமாத்திரம்பொருந்திய பகற்காலத்துத் தோன்றுஞ் சந்திரனுக்குஉவமையாதற்குப்பொருந்தின தேவர்களின்முகங்களெல்லாம்,(இப்போது)பருவகாலத்துஇரவில் தோன்றுகின்ற பூர்ணசந்திரனுக்கு உவமையாயின.

முந்தியெல்லாம் நாம் செய்துவந்த கொடுமைகளையெல்லாம் தேவர்கள் பொறுத்துக்கொண்டு எளிமைமிக்கு, களங்கம்மிக்க பகற்காலத்துச் சந்திரன் போல முகப்பொலிவு குன்றியிருப்பார்கள்; இப்போதோ அவர்கள்நாம் அழிவது திண்ணமென்ற கருத்தினால் முன்னையநிலைமாறிச் சரற்காலத்துப் பூர்ணசந்திரன்போலத் தமதுமுகம் விளங்கப்பெற்றிருக்கின்றன ரென்பதாம். இராமபிரான் திருவவதரித்துவருமளவும் தமதுஇடுக்கணைப் போக்குதற்குரியபுகலைப்பெருமையால் ஒளியிழந்த அமரரின் வதனம், இப்போது புகலைப்பெற்றமையால் பருவநாளின் பூர்ணமதிக்கு உவமையாயின என்க. இனி, அமரரின்வதனம் பருவநாளின் அகல்மதிக்கு உவமையாதற்குக் காரணம், (அரக்கர்) புகல்மதித் துணர்கிலாமை என்று உரைப்பாருமுளர்.பொறுமைகூர நகல்மதிக்கில பகல்மதிக்கு உவமையாயின அமரர்தம்முகம் என இயையும். மறுப்பொலியவாளொளியிழந்து உய்தல்நண்ணும்என்பதும் பகல்மதிக்கு அடைமொழி. கொல் - அசை: ஓ-வியப்பு; இரண்டும் வியப்புப்பொருளைத் தருமெனினுமாம். இடைச்சொற்கள் பல்வகைப்பொருளைக் குறிக்கும் ஆற்றலுடையன என்பது இங்குக் கருதத்தக்கது. "உரமொருங்கியது (௬0)" என்பதன்பின், இச்செய்யுள் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. பி-ம்:—[1]புன்மை, பொறுமை. [2]நகை. [3]மதித்தனி, மதிக்கிளர். [4]உதயம். [5]ஆம்விபுதரம், ஆயினமுகம், ஆம்விபுதர்கார்,ஆமழகுதேர், ஆயினரெலாம். [6]விபுதர்சால், வீவுகால்.. [7]தபோதனருளார், தராபதியுளார். (௧0௫)

௬௪. சிந்துமுந் துலகினுக் கிறுதிபுக் குருவொளித் [1]துலைதல் [2]செய்வார், இந்துவின் திருமுகத் திறைவிநம் முறையுளா ளென்னலோடும், அந்தகன் முதலினோ ரமரரும் முனிவரும் பிறருமஞ்சார், வந்துநம் [3]நகரமும் வாழ்வையும் கண்டுகண் டகல்வர் மன்னோ.

(இ - ள்.) கடலினால் முந்தப்பெற்ற[சூழப்பெற்ற] இவ்வுலகினுக்கு அப்பாற்போய் (த் தம்) உருவத்தை மறைத்துக்கொண்டு வருந்துபவராகிய யமன்முதலினோரான தேவர்களும் முனிவர்களும் மற்றுமுள்ள யட்சர் கின்னரர்முதலியதேவகணத்தாரும், சந்திரனைப்போன்ற அழகியமுகத்தையுடைய

தலைவி[சீதை]நம்வாழிடத்திலே [இலங்கையிலே] (சிறைப்பட்டு)உள்ளாளென் பதைக்கேள்விப்பட்டவுடனே,அச்சமற்றவராய், (இங்கு)வந்து நமதுநகரத்தை யும் வாழ்க்கையையும் அடிக்கடி கண்டுகொண்டு போகுபவராயுள்ளார்.(எ-று.)

"சொல்வரம்பெரிய" (கூக) என்று தொடங்கும் பாடல் முதல் நான்கு பாடல்களால், முன்பு நம்மிடத்து அச்சங்கொண்டு நடுங்கிக்கொண்டிருந்த தேவர் முதலியோர் இப்போது அச்சம்நீங்கி மனவெழுச்சிகொண்டு நம்நகருக் கும்வாழ்க்கைக்கும் தீங்குநேரப்போகின்ற காலத்தை யெதிர்பார்த்தவண்ணம் நிற்கின்றனர்:இங்ஙனமிருப்பதும் நமக்குத் தீமைவிளையுமென்பதைக் குறிப்பி க்குமென்று கூறியவாறு.பி-ம்:—[1]உழறல், உறழல். [2]செய்யார், செல்லா. [3]உல கமும் வானமும். (கoகூ)

கூரு. சொலத்தகாத் துன்னிமித் தங்க[1]ளெங் கணும்வரத் [2]தொ டர்வவொன்னார், [3]வெலத்தகா வமரரு மவுணருஞ் செருவில்விட் டன விடாத, குலத்தகால் வயநெடுங் [4]குதிரையு [5]மதிர்மதக் குன்று[6]மின்று, வலத்தகால் முந்துறத் தந்நம மனையிடைப் [7]புகுவ மன்னோ.

(இ - ள்.) சொல்லுதற்குமுடியாத [மிகப்பல] துர்நிமித்தங்கள் எங்கும் தொடர்ந்துவருவனவாயின; (அன்றியும், நமக்குப்) பகைவராய் (நம்மை) வெல்லமுடியாத அமரரும் அசுரரும் (நம்மோடுபொருத) போரில் விட்டுச் சென்றனவான நீங்காத சிறந்த கால்வலிமையையுடைய வலிய நீண்டகுதிரை களும், கர்ச்சிக்குந்தன்மையுள்ள மதம்பெருகப்பெற்ற மலைபோன்ற யானைக ளும், இப்போது (தம்முடைய) வலக்காலை முந்துறவைத்து நம் வீடுகளிற் புகுவன வாகின்றன; (எ - று.)

பலதீநிமித்தங்கள் தோன்றுகின்றன என்று முன்னிரண்டடிகளிற்கூறி, பின்னிரண்டடிகளிலும் அடுத்த செய்யுளிலும் அவற்றுட் சிலவற்றை யெடுத்துக்காட்டுகின்றான், விபீஷண னென்க. தமக்கு உரிய வீட்டில் வலக் காலைவைத்துப் புகுதல், மரபு. பி-ம்:—[1]உம்வரவா. [2]தொடர்வது. [3]செலத்த கா, கொலத்தகா. [4]குதிரைதேர். [5]அதிர்குரல். [6]இன்றும், என்றும். [7]புகுதும்.

கூசா. வாயினும் பல்லினும் புனல்வறந் [1]துலறினர் நிருதர்வைகும், பேயினும் [2]பெரிதுபேர் நரிகளும் [3]புரிநரும் [4]பிறிதுமெண்ணிற், கோ யிலும் [5]நகரமும் மடநலார் குழலுநங் குஞ்சியோடும், தீயின்[6]வெந் தனவினித் [7]துன்னிமித் தம்பெறுந் திறனுமுண்டோ.

(இ - ள்.) அரக்கர்கள், (தமது) வாயிலும் பல்லிலும் புனல்வற்றிப் போக நாவறளப்பெற்றார்கள்; தங்குகின்ற பேய்களைக்காட்டிலும் மிகப்பெருந் தோற்றமுள்ள நரிகளும் விரும்பி (நம்நகரிடத்துச்) சஞ்சரியாநிற்கும்; மற்றும் ஆலோசித்துப்பார்க்குமிடத்து, அரண்மனையிலும்(நம்)நகரத்திலுமுள்ள மடப் பக்குணத்தைக் கொண்ட மகளிருடைய கூந்தலும் (ஆடவராகிய) நமது மயிர் முடியும் (காரணமின்றித்) தீயினால் வெந்துவிடுகின்றன;இனி(இதைக்காட்டி லும் மேம்பட்ட)துன்னிமித்தம் பெறும்வகை யுள்ளதோ?[இல்லையென்றபடி.]

குஞ்சி - ஆண்மயிர். தீயின் வெந்தன என்பதற்கு - இலக்கணையால், தீயினால் வெந்தனபோலச் சுறுநாற்றம் நாறுகின்றன எனினுமாம். பி-ம்:—

1உரறினர், உலறியே. 2பெரியபேய், பெரிதுபேய். 3திரிதரும். 4பிறரும், பிறவும், பெரிதும். 5தாமமும். 6வெந்தனவினுந், வெந்ததனினிற், வெந்திடு மலால், வெந்திடுதலால். 7ஒருநிமித்தம். (கOஅ)

கூஎ. சிந்தமா நாகரைச் 1செருமுருக் கியகரன் திரிசிரத்தோன்
முந்தமா ருயினன் வாலியே முதலினோர் முடிவுகண்டால்
அந்தமா னிடவனோ டாழிமா வலவனும் 2பிறருமையா
இந்தமா னிடவராமிருவரோ டெண்ணலா மொருவர்யாரே.

(இ - ள்.) (வலி)கெடும்படி பெருமைபெற்ற தேவரைப் போரில் அழித்தொழித்த கரன் திரிசிரசு முன்பு மாளுகிய மாரீசன் வாலி முதலான பெருவீரர் (இராமனால்) இறந்துபட்டமையை ஆராய்ந்துபார்த்தால், அந்த மானை இடக்கையிற்கொண்ட சிவபிரானும் (சுதரிசனமென்ற) பெரிய சக்கரத்தை வலக்கையிற்கொண்டவனுகிய திருமாலும் (பிரமன்முதலிய) மற்றுமுள்ள தேவரும் என்ற இவர்களில், ஐயனே! இந்த மானுடவடிவம் படைத்துள்ள (இராமலட்சுமணரென்ற) இருவரோடு (உவமையாக) எண்ணத்தக்க ஒருவர் யாவர்? [எவருமில்லையென்றபடி]; (எ - று.)

ஒத்த வலிமைமுதலியன படைத்த இருவர் ஒருசேரக் கூறுமாறு தேவர்களில் இல்லையாதலால், 'இருவரோடெண்ணலா மொருவர் யாரே' எனக் கூறினருமாம். இனி, இந்தமானிடவராம் இருவரோடு சிவனும் ஆழிமாவலவனும் அவர்களைப்போற்பெருமைபெற்றபிரமன் இந்திரனுமே (உவமையாவர்); (வேறே) உவமையாகத்தக்க ஒருவர் யாரே? என்று உரைகூறுவாருமுளர். நாகர் - தேவலோகவாசிகள். மூன்றும் அடியில், மான் இடவன்-மானை இடக்கையிலேந்தியவனுன சிவன். பி-ம்:—1சிரம், செக. 2அயனுமையா. (கOகூ)

கூஅ. இன்னமொன் றுரை1செய்கேன் இனிதுகே ளெம்பிரா னிருவராய,2அன்னவர் தம்மொடும்வானரத் தலைவரா 3யணுகிநின்றார், 4மன்னுநம் பகைஞராம் வானுளோ ரவரொடும் மாறுகோடல், 5கன்மமன் 6றிதுநமக் குறுதியென் 7றுணர்தலுங் 8கருமமன்றால்.

(இ - ள்.) எமது பிரபுவே! இன்னமொன்று சொல்லப்போகின்றேன்: (அதனைச்) செவிகொடுத்துக் கேட்பாய்; இருவராக உள்ள அந்த இராமலட்சுமணருடனே வானரத்தலைவராகி நெருங்கிநிற்பவர் நிலைநின்ற நமது பகைவராகிய தேவர்கள்: (ஆகையால்), அவர்களோடும் மாறுபடுதல், நாம் செய்யத்தக்கதன்று; (நம்மைப்பகைத்து வந்தோரை எதிரிடுகின்ற) இத்தொழிலே நமக்கு உறுதியான செயலெனக் கருதுவதும் (நாம் இப்போது) செய்தற்கு உரிய காரியமன்று; (எ - று.)

வானவர் தம்இயற்கைவடிவோடு நம்மைஎதிர்த்துவெல்லமுடியாதென்ற காரணத்தால், நீ தேவர்முதலியோரால் வெல்லப்படாமையை வரம் வேண்டுகையில் அலட்சியஞ்செய்துவிட்டிட்ட வானரவடிவத்தைக்கொண்டு, உன்னை வெல்லும்பொருட்டே நரவடிவங்கொண்டுள்ள இராமலட்சுமணரோடு அணுகிநிற்கின்றனர்; அதனால், அவர்களோடு மாறுபடுதல் தக்கதன்று என்கின்றான், விபீஷணன். பி-ம்:—1செய்வான், செய்தால். 2அன்னவன் றன்னொ

டும். [3]அருகுகின்றூர், அணுகுகின்றூர். [4]மன்னநம், மன்னனின். [5]கன்னம். [6]அவர்களைக் கோறலென்று, இருவரைக் குறுகவென்று. [7]அணைதரும், உணர்தியேல். [8]கருமமென்றான். (ககO)

வேறு.

சுகூ. இசையுஞ் [1]செல்வமு முயர்குலத் தியற்கையு மெஞ்ச
வசையுங் கீழ்மையு மீக்கொளக் கிளையொடு [2]மடியாது
அசைவில் [3]கற்பினவ் வணங்கைவிட் டருளுதி [4]யதன்மேல்
விசைய மில்லெனச் சொல்லினன் [5]னறிஞரின் மிக்கான்.

(இ - ள்.) (உனது) கீர்த்தியும் செல்வவாழ்க்கையும் உயர்குடிப்பிறப்பிற்குஉரிய ஒழுக்கமும் ஒழியவும், பழிப்பும் தாழ்மையும் மிகவும், சுற்றத்தாருடனே அழிந்திடாது, நீங்காதகற்பையுடைய அந்தத்தெய்வமகளை [சீதையை] விட்டிடுவாய்; அதைக்காட்டிலும் (உனக்கு) வெற்றியைத்தரக்கூடிய செயல் வேறொன்றில்லை என்று சொல்லிமுடித்தான்: (யாவனெனில்),— அறிஞரிற்சிறந்தோனாகிய விபீஷணன்; (எ - று.)

தான் இத்துணை தூரம்சொல்லக்கொண்டுவந்தது இன்னதுசெய்தற்காக என்பதனை விளக்க, 'சீதையைவிட்டிடாவிட்டால் இசைமுதலியனகுன்றும்: விட்டால், கிளையுடன் விசயமுறவாழலாம்' என்று இதனால் விபீஷணன் தெரிவித்துத் தன்பேச்சை முடித்தானென்க. பி-ம்:—[1]செய்கையும். [2]முடியா. [3]கற்பினள். [4]இதன்மேல், இனிமேல். [5]அறிவினால். (கக௧)

கOO.—அதுகேட்ட இராவணன் சினங்கொண்டு கூறத்தொடங்குதல்.

கேட்ட வாண்டகை கரத்தொடு [1]கரதலங் [2]கிடைப்பப்
[3]பூட்டி வாய்தொறும் [4]பிறைக்குலம் வெண்ணிலாப் பொழிய
[5]நாட்டடந் தீயெழ நலந்திக ழாரமு மார்பும்
தோட்[6]ட டங்களுங் குலுங்கநக் [7]கிவையிவை [8]சொன்னான்.

(இ - ள்.) (விபீஷணன் சொல்லியவற்றையெல்லாங்) கேட்ட ஆண்மைக்குணத்தையுடையவனான இராவணன், கையோடுகைபொருந்த அறைந்து, பத்துவாய்களிலும் பிறைச்சந்திரன்போன்ற வக்கிரதந்தம் வெண்ணிறக்காந்தியைப் பொழியவும் கண்களினின்று நெருப்புப்பொறி புறப்படவும் அழகுவிளங்குகின்ற(முத்தாகாரமும்)அதனையணிந்தமார்பும் தோளிடங்களும் குலுங்கச் சிரித்து இவ்வார்த்தைகளையெல்லாம் சொல்பவனானான்; (எ - று.) —அவற்றை மேல் ஒன்பதுகவிகளிற் காண்க.

பி-ம்:—[1]கைத்தலம். [2]கிடைக்க. [3]பூட்ட. [4]எயிற்றிளம் பிறைக்குலம் பொழிய. [5]வாட்டடந் திகழாரமும் வயங்கொளி, வாட்டடந் திங்களாரமும் வயங்கொளி. [6]தலங்களும். [7]இனையன. [8]சொல்வான். (கக௨)

கOக.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - விபீஷணன் கூறியவற்றை இராவணன் கண்டித்துப்பேசுதலைத் தெரிவிக்கும்.

இச்சை [1]நல்லன வுறுதிக ளிசைக்குவ னென்றாய்
பிச்சர் சொல்லுவ சொல்லினை யென்பெரு விறலைக்

கொச்சை மானுடர் வெல்குவ [2]ரென்றனை குறித்தது
அச்ச மோவவர்க் கன்பினோ [3]யாவதோ வையா.

பத்துக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) விருப்பத்திற்குரியனவும் நல்லனவுமான உறுதிமொழிகளைச் சொல்லுவனென்று பேசத்தொடங்கினவனாய், பித்தர்கூறும் பேச்சுக்களைப் பேசினாய்; என்னுடைய பெருவலிமையை அற்பமனிதர் வென்றிடுவ ரென்றாய்; ஐயா! (இங்ஙனம் நீ) கூறியது (அந்தமானுடரிடத்துள்ள) அச்சத்தினாலா? (அன்றி), அவர்களிடத்துள்ள அன்பினாலா? என்னகாரணத்தினால்?

உன் சொற்கள் அச்சத்தினாலோ அன்றி அந்த மானிடரிடமுள்ள அன்பினாலோ வந்திருக்கவேண்டும்; வேறுகாரணத்தினால் இவ்வாறு பேசத் தோன்றாதென்றனன், இராவணன். பி-ம்:—[1]அல்லன. [2]என்பது, என்றெனைக், என்றிது. [3]யாதினோ. (௧௧௩)

௪௦௨. ஈங்கு மானுடப் [1]பசுக்களுக் [2]கிலைவர [3]மென்றாய்
தீங்கு சொல்லினை திசைகளை யுலகொடுஞ் செருக்கால்
தாங்கும் யானையைத் தள்ளியத் தழல்நிறத் தவனை
ஓங்க [4]லொன்றொடு [5]மெடுக்கமுன் வரங்கொண்ட துண்டோ.

(இ - ள்.) (நீ வரங்கேட்ட) இதனில் மானுடப்பசுக்களை வெல்லுமாறு வரம்பெற்றிலை யென்று (என்மீது) குறைசொன்னாய்; உலகுடனே (எட்டுத்) திசைகளையும் செருக்கோடு தாங்குகின்ற யானைகளை [திக்கஜங்களை] வலியழித்து அந்தத்தழல்போலுஞ் செந்நிறத்தவனை சிவபெருமானை ஒப்பற்ற கயிலாயமலையுடனே தூக்க முன்னே வரம்பெற்றதுஉண்டோ? (எ - று.)

கீழ்ச்செய்யுளால் விபீஷணன் கூற்றுப் பொருந்ாதவையென்று மொத்தமாகக்கண்டிக்குங் குறிப்புத்தோன்றக் கூறிய இராவணன், அவன்கூறியவற்றைத் தனித்தனி இதுமுதல் கண்டித்துப்பேசுகின்றானென்க. 'சிவபெருமானைக் கைலாஸத்தோடு தூக்குமாறு வரம்பெற்றேனோ? ஒவ்வொரு செயலுக்கும் வரம்பெறவேணுமென்பது உண்டோ? ஆகவே, மானுடரை வெல்லுமாறு வரங்கேளாமையாற் குறை யொன்றுமில்லை' என்று, விபீஷணன்கூற்றைக் கண்டித்தவாறு. மானுடர் இலட்சியம்பண்ணத்தக்கவரல்லரென்ற குறிப்புத்தோன்ற, 'மானுடப்பசுக்கள்' என்றது. மானுடர் - காசியபமுனிவரின் மனைவியருள் மநுவின் சந்ததியார்: வடமொழித் தத்திதாந்தநாமம். ஓங்கல்-உயர்ந்திருப்பது: மலைக்குக் காரணக்குறி. என்றாய்-முற்றெச்சம்: தனியே முற்றாகமுடிப்பினுமாம். பி-ம்:—[1]புழுக்களுக்கு. [2]இல. [3]என்றேய், என்றான். [4]தன்னொடும். [5]எடுக்கவும். (௧௧௪)

௫௦௩. மனக்கொ டன்றியும் வறியன வழங்கினை வானோர்
சினக்கொ டும்படை செருக்களத் தென்னையென் செய்த
எனக்கு நிற்கமற் [1]றென்னெடுங் கொருவயிற் றாதித்த
உனக்கு மானுடர் வலியரா [2]தகைமையு முளதோ.

(இ - ள்.) மனத்திலாலோசித்தலைக்கொள்ளாமலே பயனில்லாதசொற்களைச் சொன்னாய்; வானவர்களின் சினத்தைக்கொண்ட கொடியபடைகள் போர்க்களத்தில் என்ன என்செய்தன? என்னைப்பற்றி யிருக்கட்டும்: என்னொடு இங்கே ஒருவயிற்றிலே பிறந்த உனக்குத் தான் மானுடர் வலியராகிய தன்மையும் உளதோ? (எ - று.)

நீ என்னோடு ஒப்பிட்டுப்பார்க்க, மிகத்தாழ்ந்த வலிமையுள்ளவன்: அப்படிப்பட்ட உன்னையே மனிதரால் வெல்லமுடியாது: அங்ஙனமிருக்க, தேவர்களின்படைக்கலங்களாலும் ஒன்றுஞ்செய்யமாட்டாத வலியஎன்னை, மானுடர், நம்மிடத்துத்தோற்ற தேவர்களின் படைகளைக்கொண்டு வெல்வரென்பது ஆலோசியாது கூறிய வீண்வார்த்தையேயென்றவாறு. பி-ம்:—[1]ஒருவயிற் றென்னொடும். [2]தன்மையும். (சுசுரு)

க0சு. சொல்லு மாற்றங்கள் தெரிக்கிலை பலமுறை [1]தோற்று
வெல்லு மாற்றலு மொருமுறை [2]பெறவிலை விண்ணைக்
கல்லு மாற்றலேன் [3]கிளையையு மென்னையுங் களத்திற்
கொல்லு மாற்றல ருளரெனக் கோடலுங் [4]கோளே.

(இ - ள்.) சொல்லத்தக்கவார்த்தைகள் (இன்னவையென்றும்) உணர்கின்றாயில்லை; (வானவர்கள் என்னிடத்துப்) பலமுறை தோற்றுவிட்டு ஒருமுறையேனும் வெல்லும்வல்லமையைப் பெறவில்லை; (நானோ அவ்வானவர் வாழ்கின்ற) விண்ணையும் பேர்த்தெடுக்கவல்ல வல்லமையுடையேன்; (ஆகையால், என்) சுற்றத்தாரையும் என்னையும் போர்க்களத்திலே கொல்லவல்ல பகைஞர் உள்ளா ரென்று கருதுதலும் கொள்கையாமோ? (எ - று.)

மாற்றலர் - பகைவர்: அல் - சாரியை. [2]பொறுத்தனன்என்ற பாடத்திற்கு - வாலியினிடம்ஒருமுறை யான் தோற்றாலும் பலமுறையும் வெல்லும் ஆற்றலைத் தாங்கியுள்ளேன் என்று பொருள்கூறுவர். பி - ம்:—[1]தோற்றும். [2]பெறுகதாம்,பெறுகதான்.[3] கலையையும்.[4]கொண்டாய்,கொளலோ,கொள்ளே.

க0ரு. தேவ ரிற்பெற்ற [1]வரத்தின தென்பெருஞ் செருக்கேல்
மூவ ரிற்பெற்ற முடையவன் றன்னொடு முழுதும்
காவ லிற்பெற்ற திகிரியான் [2]றன்னொடுங் கடந்தது
[3]இயாவ ரிற்பெற்ற வரத்தினு வியம்புதி யிளையோய்.

(இ - ள்.) இளையவனே! தேவரிடத்தினின்று அடைந்த வரத்தினாலாயது என்னுடைய மிக்க செருக்கு என்பாயானால், திரிமூர்த்திகளுள்ளே எருத்தைவாகனமாகவுடைய சிவனோடும் முழுமையுங்காத்தல்தொழிலைமேற்கொண்டதனாற்கொண்டுள்ள சக்கராயுதத்தையுடையவனை திருமாலோடும் வென்றது, யாவரிடத்தினின்றுபெற்ற வரத்தினாலாகும்? (இதனைச்) சொல்வாய்.

தேவர்களின்சாபமாவது வரமாவது தனக்கு யாதொருபயனையும் விளைக்காது என்பதைக் கூறுவான், முதன்முதலில் தனக்குத் தேவர்களின் வரத்தினால் யாதொருநன்மையும் விளையவில்லை யென்று நிரூபிக்கிறான். தேவர்கள் தந்த வரத்தினாலேயே யாவரையும் வெல்லலா மென்ற செருக்கு எனக்குத் தோன்றியுள்ளதென்பாயாயின், அந்தத்தேவர்களுள் முதன்மைபெற்ற திரி

மூர்த்திகளுள் ருத்திரனையும் விஷ்ணுவையும் போரில் வென்றேனே: இது யாவர்தந்த வரத்தின்பயன்? ஒருவர்தந்த வரத்தின்பயனுமன்றே. ருத்திரவிஷ்ணுக்களை எவ்வண்ணம் என்வலிமையினால்தானே வென்றேனே, அவ்வண்ணமே மற்றைத்தேவர்களையும் வென்றேனேதவிர ஒருவர்தந்தவரத்தின்பயனுக நான் வெல்லவில்லை யெனக் கூறியவாறும். 'வரத்தினால்வென்றால் வரங்கொடுத்தவரையும் வென்றிருப்பேனே? வரங்கொடுத்த அவரையும்வென்றதனுல், வென்றது வரத்தின்பயன் அன்று'என்று காட்டியவாறு. பிரமன் பிதாமகனுதலால், அந்த உறவுமுறைமைபற்றி, அக்கடவுளோடு எதிரிடவில்லை யிராவண னென்க. பெற்றம் - இங்கே, எருது. இளையோய் - அறிவுநிரம்பப் பெருதவனே! என்றகுறிப்பு. பி-ம்:—[1]வரத்தினிற் பெருஞ்செருக்கென்னின். [2]தன்னையும். [3]எவரிற். (ககஎ)

கoகூ. நந்தி சாபத்தி னமையடுங் குரங்கெனின் நம்பால்
வந்த சாபங்க ளெனைப்பல வவைசெய்த [1]வலியென்
[2]இந்தி ராதியர் சித்தர்க ளியக்கர்நம் [3]மிறுதி
சிந்தி யாதவர் [4]யாரவர் நம்மையென் [5]செய்தார்.

(இ - ள்.) நந்தியின்சாபத்தினால் நம்மைக் குரங்கு கொன்றுவிடு மென்பா யாயின், நம்மிடத்துவந்துள்ள சாபங்கள் எத்தனையோபல: அவைகள் நம்மை யென்னசெய்தன? இந்திராதியர் சித்தர்கள் இயக்கர்கள் இவர்களுள் நமது மரணத்தையெண்ணுதவர் யார்? [ஒருவருமிலர்]; அவர்கள்நம்மை என்னசெய்துவிட்டார்கள்? (எ - று.)

எவருடையசாபமும் நம்மை ஒன்றுஞ் செய்யமாட்டாதுஎன்று பொதுவாகக்கூறி, பின்னிரண்டடிகளினால் தேவேந்திராதியர்மீது ஏற்றிக் காட்டுகின்றான். பரிபவப்பட்டவர்கள் வாய்க்குவந்தபடி கூறுவது இயல்பே: அந்தச்சாபமெல்லாம் பயன் விளைக்கா வென்றவாறு.இராவணன் குபேரனோடு பொருது அவனதுபுஷ்பகவிமானத்தைப்பறித்துக்கொண்டு கயிலாயமலைக்கு நேராகவர, அப்போது விமானம் தடைப்பட்டதாக, இராவணன் விமானம்தடைப்பட்டதற்குக் காரணம்இன்னதென்றுஉணராமல் ஆலோசித்துக்கொண்டிருக்கையில், நந்திதேவர் வந்து 'கயிலாயமலையின்பெருமை இது; விமானத்தைஅப்புறப்படுத்திச்செல்' என்ன, இராவணன் அந்தநந்திதேவரைப் பலபடி பழித்து அவரதுமுகத்தை இகழ, நந்திதேவர் 'குரங்குமுகமென்று எனை இகழ்ந்த உன்இலங்கைநகரிற் குரங்குகள்புகுந்து நின்குலனைக் கொன்றிடுக' என்று சபித்தவரலாற்றை உத்தரகாண்டத்து வரையெடுத்தபடலத்துக் காணலாம். பி-ம்:—[1]வலியேது. [2]இந்திராதியர் சித்தர் வித்தியாதரர், இந்தியாதிக ளவித்தவர் தேவர்நம், இந்திராதியர் சித்தர்கடேவர்நம். [3]இயக்கர். [4]ஆரவை, யாரவை. [5]செய்த. (ககஅ)

கoள. அரங்கி லாடுவார்க் கன்பு[1]பூண் டுடைவா [2]மறியேன்
இரங்கி [3]யானிற்ப என்வலி யவன்வயி [4]னெய்த
[5]வரங்கொள் வாலிபாற் றேற்றனன் மற்றம்வே ள்றுள
குரங்கெ லாமெனை வெல்லுமென் றெங்ஙனங் கோடி.

(இ - ள்.) (கனக) சபையில் நர்த்தனஞ்செய்பவனான சிவபெருமானிடத்து அன்புபூண்டு (அதனால் வாலியென்பவன்)பெற்றுள்ள வரத்தை யறிந்தேனில்லை; (ஆகவே), யான் வருந்திநிற்க, என்வலிமை அந்த வாலியினிடஞ் சேர்ந்தமையால், வரம்பெற்ற அவ்வாலியினிடத்துத் தோற்றேன்; (இம்மாத்திரத்தைக்கொண்டு)மற்றும் வேறாகவுள்ளகுரங்குகளெல்லாம் என்னை வெல்லுமென்று எங்ஙனங்கொள்கிறாய்? (எ - று.)

"கூலவான்குரங்கிறுற் குறுகுங் கோளது வாலிபாற்கண்டனம்" என்றதை மறுத்துக்கூறுகின்றான், இராவணன். தன்னையெதிர்ந்தார்வலியிற் பாதி தனக்குவந்திடும்படி வாலியென்பவன் சிவபெருமானிடத்து வரம் பெற்றுள்ளா னென்பதை யறியாமையால், பொரச்சென்று என்னுடைய பலத்திற்பாதியும் அவனிடத்துப்போய்ச்சேர, நான் இளைத்து அந்தவாலிக்குத் தோற்றேன்: இம்மாத்திரத்தாற் குரங்குகள் நம்மைவெல்லுமென்று கொண்டிடலாமோ? கொண்டிடலாகா தென்றவாறு. பி-ம்:—[1]கொண்டு. [2]அறியேம். [3]யாநிற்ப. [4]எய்தி. [5]வரங்கொள்வாலியால். (கககூ)

க௦அ. நீல கண்டனும் நேமியும் [1]நேர்நின்று [2]பொரினும்
[3]ஏது மன்னவ ருடைவலி யவன்வயி னெய்தும்
[4]சால வன்னது நினைந்தவ னெதிர்செலல் தவிர்ந்து
வாலி [5]தன்னையம் மனிதனு [6]மறைந்துநின் றெய்தான்.

(இ - ள்.) நீலகண்டத்தையுடையவனான சிவபெருமானும், சக்கரபாணியாகியதிருமாலும் (வாலிக்கு) எதிர்நின்று போர்புரிந்தாலும், எதிர்க்கின்ற அவர்களுடைய (வலிமையிலும் பாதி) வலிமை அவனைச் சாரும்; அவ்விஷயத்தை நன்கு ஆராய்ந்தே அந்தமனிதனும் [இராமனும்] (பொருமாறு) அந்த வாலிக்கு எதிரே செல்வதைவிட்டு மறைந்துநின்று அந்தவாலியை அம்புகளால் வீழ்த்தினான்; (எ - று.)

'வரங்கொள்வாலி' என்று கீழ்ச்செய்யுளிற்கூறியதை முன்னிரண்டடிகளில் விவரித்துக்கூறி, பின்னிரண்டடிகளால் நீ கொண்டாடுகின்ற இராமனும் அந்தவாலியுடன் நேர்நின்று போர்செய்யாமையைக் கொண்டு அவ்வரமுண்மையை நிரூபித்துக்காணலாமென்கின்றான், இராவண னென்க. பி-ம்:—[1]எதிர்நின்று, நேர்சென்று. [2]நேரின். [3]ஆலம், மாலும். [4]சாலுநல்வரம், சால்பினல்லவா, சாலநல்லவாம், சாலவன்னவை. [5]தன்னையும். [6]மறைய.

க௦௯. ஊன வில்லிறுத் தோட்டைமா மரத்துள்அம் போட்டிக்
கூனி சூழ்ச்சியா லர[1]சிழந் துயர்வனங் குறுகி
யா[2]னி ழைத்திட இல்லிழந் [3]தின்னுயிர் சுமக்கும்
மானு டன்வலி நீயலா லருளர் [4]மதித்தார்.

(இ - ள்.) (ஏற்கவே) ஊனமான [முறிந்திருந்த] (சிவனது) வில்லையொடித்து ஓட்டையாய்விட்ட பெரிய மராமரத்தினுள்ளே அம்பைச்செலுத்திக் கூனியின் ஆலோசனையால் இராச்சியத்தையிழந்து பெரியவனத்தையடைந்து, யான் ஓர் சூழ்ச்சிசெய்ய மனைவியையிழந்து இன்னுயிரைச் சுமந்துகொண்டி

ருக்கின்ற மானுடனான இராமனுடைய வலியை நீயல்லாமல் மதித்துக் கூறுபவர் யாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ-று.)

" ஒருங்காதரோர் பகையு முண்டோ " என்று இராமனது தோள்வலிமையை விபீஷணன் கூறியதைக் கண்டித்து, இராமனுக்கு நேர்ந்துள்ள தாழ்ந்தநிலையை யெடுத்துக்காட்டுகின்றான், இராவணன். ஊனவில், ஓட்டை மாமரம்என்பன-கருத்துடையடைமொழிகள். ஒருபெண்ணின்சூழ்ச்சியையுந் தப்பமுடியாதவ னென்பது, 'கூனிசூழ்ச்சியா லரசிழந்து' என்பதனாற் குறிப்பித்தபடி. தான் மணந்த மனைவியையும் காக்க வலிமையிலாதவ னென்பது 'யானிழைத்திட இல்லிழந்து' என்றதன் கருத்து. இப்படிப்பட்ட இராமனுக்கு அவனுயிரே ஒருசுமை: அவ்வாறு தன்னுயிரையேபாரமாக நினைத்திருப்பவன் நம்மை என்னசெய்யமாட்டுவன்? அவனுடையவலியும் புகழத்தக்கதோ? என்று ஈற்றடியாற் கூறியவாறு. பி-ம்:—[1]அழிந்து. [2]நினைத்திட. [3]உயிர்சுமந்திருந்த. [4]மதிப்பார். (கஉக)

ககம.—இவ்வாறு சொல்லி, 'போர எழுவோம்' என்ற இராவணனைக் கிட்டி, விபீஷணன் பின்னுங் கூறத்தொடங்குதல்.

என்று [1]தானுரை மொழிந்துநீ யுணர்விலி யென்னா
நன்று [2]போதுநா மெழுகென வரக்கனை நணுகி
ஒன்று கேளின முறுதி[3]யென் றன்பின [4]னொழியான்
துன்று தாரவன் பின்னரு மினையன [5]சொன்னான்.

(இ - ள்.) என்று (இவ்வாறான) வார்த்தைகளைத்தான் [இராவணன்] சொல்லி, நீ (இவைகளையெல்லாம் ஆராய்தற்கு ஏற்ற) அறிவு இல்லாதவனென்று சொல்லிவிட்டு, 'நல்லது: நாம் (போருக்குப்) புறப்படுவோம்: (யாவரும் என்னுடன்) எழுக' என்று கூறுகின்ற இராவணனை நெருங்கி 'இன்னம் ஒருறுதிச்சொல் கூறுகின்றேன், கேட்பாய்' என்று அன்புடையனாகி, நெருங்கியமாலையையணிந்த விபீஷணன் பேசாதிருக்க மனந்தாளாமல், பின்னும் இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

என்று - ஒருசொல் விழுக்காடு. பி-ம்:—[1]தன்னுரை யிழித்துநீ, தானுரைத்தன னுரைத்துநீ. [2]போதுதி, போதநீ. [3]யானுரைக்குவன். [4]என்னாத், ஒழியாத், ஒளியான். [5]சொல்வான். (கஉஉ)

ககக.—பின்னரும் விபீஷணன் இராவணனுக்குக் கூறும் உறுதிமொழி.

தன்னின் முன்னிய பொருளிலா வொருதனித் தலைவன்
அன்ன [1]மானுட னாகிவந் தவதரித் தமைந்தான்
சொன்ன நம்பொருட் டும்பர்தஞ் சூழ்ச்சியின் துணிவால்
[2]இன்ன மேருதி போலுமென் றடிதொழு திரந்தான்.

(இ - ள்.) தன்னைக்காட்டிலும் முற்பட்ட பொருளில்லாத ஒப்பற்ற தனித்தலைவனான கடவுள், தேவர்களின் ஆலோசனைவன்மையால் (யாவராலும்) பழிக்கப்படுகின்ற நம்மைக்கொல்லுதலின்பொருட்டே அந்த மனிதனாகி [இராமனாகி] வந்து அவதரித்துள்ளான்; (இப்படியாகவும்), இன்னும் (அவ

ளோடு) பொரச்செல்வாய்போலும் [செல்வது தக்கதன்று] என்று (அந்த இராவணனது) பாதங்களில்வீழ்ந்து வணங்கி (போருக்குச் செல்லாதிருக்குமாறு) வேண்டிக்கொண்டான்; (எ-று.) பி-ம்:—[1]மானுடர். [2]இன்னந்தேர்குதி.(கஉ௩)

கக௨.—இதுமுதல் ஆறுகவிகள்-இராவணன் விடைகூறியன.

அச்சொற் கேட்டவ னுழியா னென்றனை யாயிற்
கொச்சைத் துன்மதி [1]யெத்தனை போரிடைக் குறைந்தா
னிச்சைக் [2]கேற்றன யான்[3]செய்த இத்தனை காலம்
மூச்சற் றான்கொலம் முழுமுத லோனென [4]முனிந்தான்.

(இ - ள்.) (விபீஷணன் கூறிய) அந்தப்பேச்சைக்கேட்டு, (இராவணன்), 'அந்தஇராமன் சக்கராயுதத்தைக்கொண்ட திருமாலே என்று கூறினாய்; (நீ சொல்லுகிறபடியே விஷ்ணுவே) ஆனால், வலிமைகிரம்பாத துர்ப்புத்தியை யுடைய அந்த விஷ்ணு எத்தனைமுறை போரில் தோற்றான்? [மிகப்பல முறை தோற்றானென்றபடி]; யான் இத்தனைக்காலஞ்செய்த செயல்களோ என்னிச்சையின்படி யானவையே; (அப்படி என் விருப்பத்தின்படி யான் தொழில் செய்கையில்) அந்த முழுமுதற்கடவுளென்கின்ற விஷ்ணு மூச்சற் றுக்கிடந்தானோ?' என்று முனிந்து கூறினான்; (எ - று.)

விஷ்ணு மூச்சோடு இருப்பின், நான் அவன் மனைவியைக்கவர்தல் முதலியன செய்கையிலும், என்செயலைத் தடுக்கமாட்டாமல் வாளா கிடந்தானே; அதற்குக்காரணம் தன்னால் ஒன்றுஞ் செய்யமுடியாமையல்லவோ ? என்றவாறு. மூச்சுஎன்பது முச்சு எனக் குறுக்கல் விகாரம்பெற்றுவந்தது. இராமனைத் திருமாலென்றும் அவனைவெல்லுதல் முடியாது என்றும் கீழ்ச்சொல்லியதைக் கண்டித்தவாறு. கேட்டவனென்றேயெடுத்து, உரைத்தலுமாம். பி-ம்:—[1]எத்தனையோரிடைக். [2]ஒத்தன. [3]செய. [4]மொழிந்தான். (கஉச)

கக௩. இந்தி ரன்றனை யிருஞ்சிறை [1]யிட்டநா [2]ளிமையோர்
தந்தி கோ[3]டிறத் [4]தகர்த்தநாள் தன்னையான் முன்னம்
வந்த போர்தொறுந் [5]துரந்தநாள் வானவ [6]ருலகைச்
சிந்த வென்றநாள் சிறியன்கொல் நீசொன்ன தேவன்.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இந்திரனைப் பெரிய சிறையிலே இட்டபோதும், தேவர்களின் திக்கஜங்கள் தந்தம் முறிந்திடும்படி முறித்தகாலத்திலும், அந்தத் திருமாலை யான்முன்பு எதிர்த்துவந்தபோர்தோறும் துரத்தியகாலத்திலும், தேவலோகத்தவரின் உலகை (அவ்வானவர்)சிதறுண்டுபோம்படி வென்றகாலத்திலும் நீ சொன்னதேவன் சிறியவனாயிருந்தானோ? (எ - று.)

'இச்சைக்கு ஏற்றன யான் செய்த இத்தனைகாலம்' என்று கீழ்ப் பொதுவாகக் கூறியவற்றை, இச்செய்யுளால் விவரித்துக் கூறுகின்றான். இப்பொழுது பெருமையுடையவனாகப்பாராட்டி விபீஷணன் கூறியதனால்,இந்திரனைச் சிறைவைத்தது முதலிய செய்தகாலங்களில் நீ சொன்னதேவன்எதிரிடாதிருந்

தது, தான் சிறியவனுயிருந்ததனுற் போலுமென இராவணன் பரிகாசமாகக் கூறியவாறு. பி-ம்:—1வைத்த. 2இமையாத். 3அறத். 4தகர்ந்த. 5மலைந்த. 6உலகம். (கஉரு)

ககச. சிவனும் நான்முகத் தொருவனுந் 1திருநெடு மாலாம்
அவனு மற்றுள வமரரு முடனுறைந் 2தடங்கப்
புவன மூன்றும்3யா னுண்டுள 4தாண்டவப் பொருவி
5லுவனி லாமையி னே6வலி யொதுங்கியோ வுரையாய்.

(இ-ள்.) சிவனும் நான்குமுகத்தையுடைய ஒப்பற்ற பிரமதேவனும், திருநெடுமாலாகிய அந்தக்கடவுளும் மற்றுமுள்ளதேவர்களும் ஒருசேர அடங்கி வசிக்குமாறு மூன்றுலகங்களையும் யான் ஆண்டுள்ளசெயல்(யாவரையும்)ஆளும் வன்மையுடைய உவமையற்ற அந்தத் திருமாலினமிசமான மானுடவன் இல்லாமையினுலா? அல்லது அவன் வலியொடுங்கியிருந்ததனுலா? சொல்வாய்.

அந்தத் திருமாலாம்மானுடன் இருக்கும்போதே நான்யாவரையும்அடக்கி மூவுலகத்தையும்ஆள்வதனுல், அவன் என்வலிக்கு ஒடுங்கியிருக்கின்றுனென்பது பெறப்படு மென்றவாறு. உவன்-சுட்டுப்பெயர். உறைந்தடங்க = அடங்கியுறைய: விகுதி பிரித்துக்கூட்டல். பி-ம்:—1தேவர்க்குத்தெரியா. 2அடங்காப், அடங்கும். 3நான், தான். 4ஆண்டவப் பொதுவேல், ஆண்டவர்பொருவேல், ஆண்டவப்பொருள்வேல். 5உவனியாமையினே. 6அவரொதுங்கினர், வலியோங்கவோ, அவரொதுங்கவோ, வலியொதுங்கியது. (கஉசு)

ககரு. ஆயி ரம்1பெருந் தோள்களு மத்துணைத் தலையும்
மாயி ரும்புவி யுள்ளடி 2யடக்குறும் 3வடிவும்
தீய சாலவுஞ் சிறிதென நினைந்து4நாம் 5தின்னும்
ஓயு மானுட 6வுருவு 7கொண் டனன்கொலா 8மூரவோன்.

(இ-ள்.) வலிமையுள்ளவனுகிய திருமால், (தன்னுடையவிசுவரூபத்திற்கு உரிய) ஆயிரம் பெருந்தோள்களையும் அத்துணையான [ஆயிரஞ்] சிரசுகளையுங் கொண்டு மிகப்பெரிய பூமியையும் உள்ளடிக்குள் அடக்கவல்ல (பெரு) வடிவத்தை '(இது) தீயது, மிகவும் சிறுமையையுடையது' எனநினைத்து நாம் தின்கின்ற வலிமைகுன்றிய மனிதவடிவத்தைக் கொண்டானே? (எ - று.)

இதனுல்,திருமாலே மானுடவடிவங்கொண்டு வந்தானென்று விபீஷணன் சொல்லியது பொருத்தமற்றதென்று ஏளனஞ்செய்கின்றனன், இராவணனென்க.விசுவரூபமுள்ள திருமாலே நம்மை வெல்லமுடியாமற் போனதனுல், அத்திருமால், நம்மை வெல்வதற்கு 'அந்தப்பெரியவடிவம் நன்மை பயப்பதன்று: சிறியது' என நினைப்பின், அதனினும்பெரியவடிவத்தை யல்லவா கொள்ளவேண்டும்? நம்மை வெல்வதற்காக நாம் தின்னுதற்கு உரிய மானுடவடிவத்தைக் கொண்டானென்றல் பொருந்துமோ? என்று விபீஷணன் கூறியதைப் பரிகசித்தவாறு. தீய=தீயது: விகாரம். பி-ம்:—1தடந். 2அடக்கிய. 3வலியும். 4நான், யாம். 5தின்ன. 6வடிவு. 7கொண்டான்கொலோ, கொண்டென்கொலோ, கொண்டன்னதோ. 8ஒருவன். (கஉஎ)

கககா. பித்த னாகிய [1]ஈசனு மரியுமென் [2]பெயர்கேட்டு
எய்த்த சிந்தைய ரேகுழி யேகுழி யெல்லாம்
கைத்த வேற்றினுங் கடவிய புள்ளினு முதுகில்
தைத்த வாளிக [3]ளின்றுள குன்றின்வீழ் தடித்தின்.

(இ - ள்.) பித்தனென்று கூறப்படுபவனாகிய சிவபெருமானும் மாலும் என்பெயரைக்கேட்டு வாடிய மனத்தையுடையவராய், (தாம்) செல்லுகின்ற இடங்களிலெல்லாம், (தாம்) ஏறிச்செலுத்திய இடபத்திலும், (ஏறி) நடத்துகின்ற கருடப்பறவையிலும் முதுகிலே பொத்திய அம்புகள் மலையின்மீது விழுகின்ற இடிபோல இப்போதும் தங்கியுள்ளன; (எ - று.)

சிவனும் திருமாலும் தாம் ஏறிவந்த வாகனத்தோடு என்னெதிர் நிற்க மாட்டாமல் ஓடிச்செல்கையில், யான் எய்த அம்புகள் அந்தஇடபம் கருடன் ஆகிய இவற்றின் முதுகிற்பாய்ந்தவை அங்குத்தானே தங்கிநிற்கின்றனவே; ஆகையால், நம்மைவெல்லத் திருமால் வந்துள்ளானென்பது பொருந்துமோ? என்றவாறு. கைத்தல் = உகைத்தல். இனி, (இராவணன் வருவதைக்கேட்டு ஓடித்தப்ப விரைந்துசெல்லுமாறு சிவனும் மாலும் அடித்துச் செலுத்துவதால் வெறுப்புற்றனவான ஏற்றினும் புள்ளினும் வாளிகள் இன்றுள என்று உரைத் தலும் உண்டு. பி-ம்:—[1]சிவனுமாலயனும், ஈசனுமாலுமென், ஈசனுமயனு மென். [2]பேர். [3]நின்றன, ஊன்றின, ஊன்றினன், உண்டின்ன. (கஉஅ)

கக௭. வெஞ்சி னந்தரு [1]போரினெம் முடனெழ வேண்டா
இஞ்சி மாநக [2]ரிடமுடைத் தீண்டினி திருத்தி
அஞ்ச லஞ்சலென் [3]றருகிருந் தவர்முகம் நோக்கி
நஞ்சின் வெய்யவன் கையெறிந் துருமென நக்கான்.

(இ-ள்.) கொடிய கோபத்தினால் விளைகின்றபோரில் (நீ) எம்முடன் வர வேண்டா; மதில் சூழ்ந்த (இந்தப்) பெரிய நகரம் விசாலமான இடமுடையது; இங்குத்தானே இனிது தங்கியிருப்பாய்; அஞ்சவேண்டா, அஞ்சவேண்டாஎன்று (விபீஷணனுக்குச்) சொல்லிவிட்டு, அருகேயிருந்தவர்களின் முகத்தைப்பார்த்து, நஞ்சுபோற்கொடியவனாகிய இராவணன் கைதட்டி இடியிடிப்பதுபோல (ப் பேரொலி தோன்றுமாறு) சிரித்தான்; (எ - று.)

பொருவதில் அச்சங்கொண்டு மானுடவரை மேம்படுத்திக் கூறினையாயின், பொராமல் இந்நகரில்தானே இனிதிருக்கலா மென இராவணன் விபீஷணனைச் சமாதானப்படுத்தியவாறு. பி-ம்:—[1]போரினம், போரினென். [2]இடையுறைந்து, அரணுடைத்து. [3]அயலிருந்தவர். (கஉக)

கக௮.—விபீடணன் இராவணனுக்குப் பின்னும் மதிகூறி இரணியன் சரித்திரம் கூறத்தொடங்குதல்.

பின்னும் வீடண [1]னையநின் [2]தாமலாப் [3]பெரியோர்
முன்னை [4]நாளிவண் முனிந்திடக் கிளையொடு [5]முடிந்தார்
இன்ன முண்டியான் இயம்புவ திரணிய னென்பான்
றன்னை யுள்ளவா கேட்டியென் றுரைசெயச் சமைந்தான்.

(இ - ள்.) பின்னையும் விபீடணன், (இராவணனைநோக்கி), 'ஐயனே! நின் வலிமையைகாட்டிலும் மேம்பட்டவலிமையடைத்தவரான பெரியோர் முன்

னைநாளில் இந்தத்திருமால் சினங்கொள்ள(த் தமது) சுற்றத்தாருடனே இறந்திட்டனர்; (ஆனதுபற்றி), நான் இன்னும் (உன்னிடம்) கூறவேண்டியது உள்ளது: இரணியனென்பவனைப் பற்றி, நிகழ்ந்துள்ளவகையைக் கேட்பாய்' என்று அவனுடைய சரித்திரத்தைக் கூறத்தொடங்கினான்; (எ - று.)

இதனால், மேல் இரணியன்வதைப்படலம் கூறுவதற்குக் கவி தாம் தோற்றுவாய் செய்தவாறு. சிலபிரதிகளில் இச்செய்யுளிலிருந்து அடுத்த படலம் தொடங்குகின்றது. பி-ம்:—[1]பேசுவான். [2]நின்னிலும், தரமல, தரமலன், தரமலர். [3]பெரியோன். [4]காளவன். [5]முடிந்தான். (கஙo)

இராவணன் இலங்கையிலே அநுமான் செய்துபோன செயல்களுக்குச் சிந்தையுற்று, மந்திரிமாரைக்கூட்டி, பகைஞர்படையெடுத்து வருவதன்முன் செய்யவேண்டியவற்றைக்குறித்து ஆலோசனைகேட்க, மந்திரிமார்கள் பகைஞரின் வலிமையையறியாமல் இராவணனுடைய வீரம் முதலியவற்றைப் புகழ்ந்துகூறி அவனைமகிழ்விக்க, பிரகஸ்தன் முதலிய மந்திரிமார் தாம் ஒருத்தரேசென்று இராமனை வென்றுவருவோமென்று தனித்தனிகூற, பிறகு நிகும்பன் முதலியோர் படைக்கலங்களோடும் புறப்பட, விபீஷணன் அவ்வரக்கர்களெல்லோரையும் நிறுத்திஉட்காரவைத்து,பலவகை நியாயங்களை யெடுத்துக் காட்டி இராமனிடத்துச் சீதையைக்கொடுத்துவிடுமாறு இராவணனுக்குக்கூறினான். இராவணன் விபீஷணன்சொன்னதைக் கேட்டுச் சபிகர்களையனுப்பிவிட்டுத் தன்னில்லஞ் சேர்ந்தான்: மறுநாள் விபீஷணன் இராவணன்வீட்டிற்குப் போய்ச்சீதையைஇலங்கைக்குக்கொண்டுவந்ததுமுதல் அவ்விலங்கையில் தோன்றும் பலவகைத் தீநிமித்தங்களையெடுத்துக்காட்டிச் சீதையை இராமனுக்குக் கொடுக்கும்படி போதிக்க, இராவணன் அதற்கு உடன்படாது இராமனைப் பற்றி அலட்சியமாகச் சொல்லி அவ்விபீஷணனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டான். மனக்கலக்கமுற்ற இராவணன், பின்னும் ஆலோசனைச் சபைக்குச் சென்று அரக்கர்களை வரவழைத்து, ஆலோசிக்கத்தொடங்கிச் சீதையை இராமனுக்குக் கொடுக்க விருப்பமில்லாமையையும் தெரிவித்து தன்வலிமையைப் பாராட்டிப்பேச, கும்பகர்ணன் 'முன்னமே ஆலோசித்துச்செய்யாமற் சீதையைக் கொணர்ந்தது சரியல்ல' என்று இராவணன் செய்கையைக் கண்டித்தும், பிறகு தான் அந்தப்பிழையைத் திருத்தி இராமனைவென்றுவருவதாகக் கூறினான்: பிறகு மஹாபார்ஶ்வன் சீதையை வலியக்கைப்பற்றுமாறு கூற, இராவணன் பிரமசாபத்தால் வலியச்சீதையைக்கைப்பற்ற முடியாதென்றான். பின்பு, விபீஷணன் 'ஸ்ரீராமன் எவராலும் வெல்லுதற்கு அரியன்: அவனிடத்துச் சீதையைத் திருப்பித்தருவதே யாவர்க்கும் நன்மைபயக்கும்' என்றான். இந்திரசித்து விபீஷணனுடைய கொள்கையைக் கண்டிக்க, விபீஷணன் அவ்விந்திரசித்தினுடைய துர்ப்புத்தியைத் தூஷித்து,'இராமனிடத்துச்சீதையைத் தந்திட்டு வருத்தம்நீங்கி இனி திருக்க'என்றானென்பது, இந்தச்சந்தர்ப்பத்தில் ஸ்ரீவால்மீகத்திற் கூறிய விஷயம்.

இராவணன் மந்திரப்படலம் முற்றிற்று.

---

## ௩ - ஆவது இரணியன்வதைப் படலம்.

இரணியனதுவதையைப்பற்றிக் கூறும் பாகமென்பது, பொருள். திருமால் இரணியனென்னும்அசுரனைக் கொன்றதையுணர்த்துதலால், தொக்க ஆறனுருபு செயப்படுபொருளது. இரணியன்கதைப்படலம் என்று சிலபிரதியில் இப்படலத்திற்குப் பெயர் காணப்படுகின்றது. ஹிரண்யனென்றவடசொல்லுக்கு - பொன்னிறமானவனென்பது பொருள். அது தமிழில் இரணியனென விகாரப்பட்டது: இவன் இரணியகசிபுஎன்றும் வழங்கப்படுவன். இவன் பிரமனதுகுமாரனாகிய மரீசிபிரசாபதியின்மகனான காசியபமுனிவருடைய மனைவியர்களுள் திதியென்பவளிடம் பிறந்தவன்; திருமாலால் வராகாவதாரத்திற்கொல்லப்பட்ட இரணியாட்சனது தமையன். (திருமாலின் திருவாயில்காவலரான ஜயவிஜயரே சாபத்தால் இரணிய இரணியாட்சராகத் தோன்றினர்.)

தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஐம்பெரும்பூதங்களாலும் ஆயுதங்களாலும் தனக்குமரணமில்லாதபடி அளவற்ற வரங்களைப் பெற்றுத் தேவர்முதலியயாவர்க்கும் கொடுமையியற்றித் தன்னையே கடவுளாக வணங்கச்செய்துவந்த இரணியன், தன்புத்திரனும் மகாவிஷ்ணுபக்தனுமான பிரகலாதன் தன்நாமஞ்சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமஞ் சொல்லிவரவே, அவனைக்கொல்லுதற்கு என்ன உபாயஞ்செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, அவ்விரணியன்மகனைநோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்குஉளன்? காட்டாய்' என்ன, அப்பிள்ளை 'எங்கும் உளன்' என்ன, 'இங்கு இல்லையால்' என்று எதிரிலிருந்ததொரு தூணைப் புடைக்க, அப்பொழுது திருமால் நரசிங்கப்பிரானாகத்தோன்றித் தன்கைந் நகங்களால் அவன்மார்பைப்பிளந்து அழித்திட்டனனென்பது, இப்படலத்துக் கூறும் பொருள்.

இந்தப்படலத்தைக்குறித்துக் கர்ணபரம்பரையாக வழங்குவதொரு விவரம்வருமாறு:--கம்பர் ஸ்ரீரங்கத்தில் ஆயிரக்கால்மண்டபத்தில் நாதமுனிகளின் திருவோலக்கத்தில் தமதுஇராமாயணத்தை யரங்கேற்றிவருகையில், இரணியன்வதைப்படலம் வாசித்தபொழுது அங்கிருந்த சிலவித்துவான்கள் 'ஆதிகாவியமாகிய ஸ்ரீ வால்மீகிராமாயணத்தில் இரணியன்வதை சொல்லப்படவில்லையே: இதுஎன்ன நவீனமாகஇருக்கிறதே! ஏதேனும் தெய்வீகம்காட்டினால்தான் இது ஒப்புக்கொள்ளப்படும்' என்றார்களாக, ஸ்ரீமந்நாதமுனிகள் இதுவிஷயத்தில் ஒன்றுஞ்சொல்லாதிருந்தனர். பின்பு கம்பர் பகவற்சங்கற்பத்தின்படியாகிறதென்று துணிந்து இப்படலத்தை மேட்டழகியசிங்கர் சன்னிதியில் வாசித்தபொழுது, அப்பெருமான் தமதுதிருக்கரங்களை நீட்டித் திருமுடியைத்துளக்கி வாய்திறந்து பெருஞ்சிரிப்புச்சிரித்து ஆரவாரித்தனர். அதுகண்டு எல்லோரும் அதிசயித்து, 'திருச்சித்திரகூடத்திற் பாம்புகடித்து இறந்த தில்லைமூவாயிரவர்பிள்ளையொன்று இக்கம்பராமாயணத்து நாகபாசப் படலத்துச் சிலகவிகளைவாசித்தவளவிற் பிழைத்தெழுந்தது: இங்கே இரணி

யன்வதைப்படலத்தைவாசித்தவளவில் அர்ச்சாவிக்கிரகரூபமாயெழுந்தருளி யிருக்கிற மோட்டழகியசிங்கப்பெருமான் திருவுள்ளமுவந்து அவ்வுவப்பு யாவர்க்கும்புலனாகும்படி சிரக்கம்பத்தோடு அட்டகாசமுஞ் செய்தனர். ஆதலால், இப்பெருங்காப்பியம் தெய்வத்தன்மையுடையது' என்று இந்நூலை மிகவும் மெச்சிக்கொண்டாடினர்க ளென்பது.

க.—இதுமுதற்பதினெட்டுக்கவிகள் - இரணியனதுதன்மையைக் கூறும்.

வேதங் கண்ணிய [1]பொருளெலாம் விரிஞ்சனே யீந்தான்
போதங் கண்ணிய வர[2]மெலாந் தாக்கொண்டு போந்தான்
காதுங் [3]கண்ணுதல் மாலயன் [4]கடைமுறை காணாப்
பூதங் கண்ணிய [5]வலியெலா மொருதனி பொறுத்தான்.

(இ - ள்.) வேதங்களிற்குறித்த விஷயங்களையெல்லாம் பிரமதேவனே (அந்தஇரணியனுக்குக் கற்பித்துக்)கொடுத்தான்: (மற்றும் அவ்விரணியன், தன்) அறிவினுக்குறித்த வரங்களை யெல்லாம் (அப்பிரமன் தனக்குக்) கொடுக்கப்பெற்றுக்கொண்டுவந்தான்: (எல்லாப்பொருள்களையும்) அழிக்கிற நெற்றிக்கண்ணனான சிவனும் திருமாலும் பிரமனும் முடிவுகாணவொண்ணாதனவும் பஞ்சபூதங்களினிடத்துப்பொருந்தியனவுமான வலிமைகளையெல்லாம் (அவ்விரணியன்) தானொருவனே (ஒருசேரத்) தாங்குபவனானான்; (எ - று.)

பிரமனே குருவாகி இவ்விரணியனுக்கு வேதப்பொருளைக் கற்பித்தானென்பது, முதலடியிற் கூறியபொருள். வேதங்கண்ணியபொருள்என்பதற்கு - வேதங்களிற்கூறப்படுகின்ற சிறந்த வஸ்துக்க ளெனினுமாம். இரணியாசுரன் அரும்பெருந்தவம்புரிகையில் மனமுவந்து பிரமன் பிரதியக்ஷமான போது, தன்மனத்தின்அறிவுக்குத் தோன்றியபடியெல்லாம் வரம்வேண்டிப் பெற்றபின்பே தான் முயன்ற தவத்தினின்று மீண்டா னென்பது, இரண்டாமடிக்குப்பொருள். 'கண்ணுதன்மாலயன்கடைமுறை காணாவலி' என்றது- அதிசயோக்தியணி. பஞ்சபூதங்களுக்கும் தனித்தனி எவ்வளவுவலியுண்டோ அவ்வளவுவலிமை இவனொருவனுக்கே உண்டென்பது, ஈற்றடியிற்போந்த பொருள். கடைமுறை-முடிவெல்லை. பி-ம்:—[1]தவம், வரம். [2]அவன், அயன். [3]கண்ணுதலோனயன், கண்ணுதன்மலரயன். [4]கடைமுதல்காணாப், கடன்முறைகாணாப், இமையவர்முதலாப். [5]உரம். (கஙக)

உ. எற்றை நாளினு முளனெனு மிறைவனு மயனும்
கற்றை யஞ்சடைக் கடவுளுங் காத்தளித் தழிக்கும்
ஒற்றை யண்டத்தி [1]னளவினோ [2]வதன்புறத் [3]துலவா
மற்றை யண்டத்துந் தன்[4]பெய ரேசொல வாழ்ந்தான்.

(இ - ள்.) (பின்னும் அவ்விரணியன்),—எக்காலத்தும் (அழியாமல் நித்தியமாய்) இருக்கிறானென்று (வேதங்களாற்) சொல்லப்படுகின்ற தலைவனான திருமாலும் பிரமனும் தொகுதியான அழகியசடையையுடைய சிவனும் முறையே காத்துப் படைத்துஅழிக்கும் (இந்த) ஓரண்டகோளத்தில் மாத்திரமோ, இதற்குவெளியிலுள்ள கணக்கிடவொண்ணாத மற்றையண்டகோளங்களிலும் எல்லோரும் தன்பெயரையேசொல்லித் துதிக்கும்படி வாழ்ந்திருந்தான்.

இவ்வண்டத்திலன்றி மற்றையண்டங்களிலும் அவ்விரணியன்பெயர் துதித்துக்கூறப்படு மென்பதாம். முதலிரண்டடிகள் - ஒற்றையண்டத்தின் என்பதற்குமாத்திரமன்றி, 'மற்றையண்டத்தும்' என்பதற்கும் அடைமொழி யாகத்தக்கன. எற்றைநாளிலும் உளன் என்னும் இறைவன் - மற்றையிரு மூர்த்திகள் அழியும்போதும் தான் அழியாது எஞ்சிநிற்பவன். தன்பெயரே சொல - வேறுதேவர்களின்பெயரைச்சொல்லாம லென்றபடி. காரண காரியமுறைப்படி மும்மூர்த்திகளை யோதினர். வாழ்ந்தானென்றமுற்றுக்கு இரணியனென்ற எழுவாய் வருவிக்க: மேலைச்செய்யுள்களிலும் இங்ஙனமே காண்க.பி-ம்:—[1] அளவினும். [2]இதன். [3]உம்பர்,உறவாழ். [4]புகழேசெல.(கஙஉ)

ங. பாழி வன்றடந் திசைசுமந் தோங்கிய [1]பணைக்கைப்
[2]பூழை வன்[3]கரி [4]யிரண்டிரு [5]கைக்கொடு பொருத்தும்
ஆழங் [6]காணுதற் கரியவா யகன்ற[7]பே ராழி
ஏழுந் தன்[8]னிரு தாளள வெனக்கடந் தேறும்.

(இ - ள்.) விசாலமான வலிய பெரிய திக்குக்களை (த் தூண்போலத்) தாங்கிக்கொண்டுஉயர்ந்துள்ளனவும் பருத்த உள்தொளையுள்ள துதிக்கையை யுடையனவுமான வலிய (அஷ்டதிக்கஜங்களுள்) இரண்டுயானைகளை (த் தன்) இரண்டுகைகளாலிழுத்து முட்டவிடுவான்; ஆழங்கண்டறியமுடியாதனவாகிப் பரந்த பெரிய சமுத்திரங்களேழையும் தனது இரண்டுகால்களின் அளவேயாகத் தாண்டிஅப்பாற்செல்வான்; (எ - று.)

திக்கஜங்களுள்இரண்டை ஆட்டுக்கடாப்போலப்பிடித்துஇழுத்துச் சண்டைக்குவிட்டு வேடிக்கைபார்ப்பானென்ற முதலிரண்டடிகளினால் அவ்விரணியனது பெருவலிமையையும், கடலைத்தாண்டி அப்பாற்செல்வானென்ற பின்னிரண்டடிகளினால் அவனதுவடிவின் நீட்சியையும் விளக்கியபடி. "ஆசையங்கரிகடம்மை யங்கைகொண் டொன்றோடொன்று, பூசல்செய்விக்கும்" "பெரும்புறக்கடலைக் குளப்படிநீரெனக் கருதும்" என்பன ஒப்புநோக்கத்தக்கன. ஆழியங்கர னணுகுதற் கரியவாய்க் கிடந்த, ஆழி யேழுந்தன் காலிரண் டாற்கடந் தேறும் என்று சிலபிரதியிற் பின்னிரண்டடிகள் காணப்படுகின்றன. பி-ம்:—[1]பனைக்கை. [2]பூழி. [3]வன்கிரி, வான்கிரி. [4]இரண்டொரு. [5]கையொடு. [6]காண்பதற்கரியவாய்க்கிடந்த. [7]ஓராழி. [8]பெருந். (கஙங)

ச. வண்டற் றெண்டிரை யாற்றுநீர் [1]சிலவென்று மருவான்
கொண்டல் [2]கொண்டநீர் [3]குளிர்ப்பில [4]வென்றவை [5]குடையான்
பண்டைத் தெண்டிரைப் பரவைநீ [6]ருவரென்று படியான்
அண்டத் தைப்பொதுத் தப்புறத் தப்பினு லாடும்.

(இ - ள்.) வண்டலிட்டோடுகின்ற (மேலே)தெளிவான அலைகளையுடைய நதியின்நீர்கள் சிறியஎன்று (நீராடுவதற்கு அவற்றின்) அருகிலுஞ் செல்லான்: காளமேகத்தினின்று சொரியும்நீரை(த் தனக்கு)க் குளிர்ச்சிசெய்வதற்குப்போதாஎன்றுகருதி அந்நீரிலும் முழுகான்; பழமையாகிய தெளிவாகிய அலைகளையுடைய கடலின்நீரை உப்புஎன்று (அங்கும்) நீராடான்; (பின்னை அவன் எப்படி நீராடுவனென்றால்),—அண்டகோளத்தை (ஒருபக்கத்திற்)

பொத்தல்செய்து (அதற்கு) அப்பாலுள்ள பெரும்புறக்கடலின்நீர் (அத்துளை யின்வழியாக அவ்வண்டத்தினுள்ளே) விழ, அதனைக்கொண்டுநீராடுவான்.

இதனால், இரணியாசுரனது உடலின்வளர்ச்சியும் வெம்மையும் சுகானுபவமும் வலிமையும் விளங்கும். யாறும் கொண்டலும் பலவாதலின், அவற்றின்நீரை 'சில, இல, அவை' என்று பன்மைச்சொல்லாற் கூறினர். பி-ம்:— [1]செலு. [2]கொண்டி. [3]குளிப்பில. [4]என்றதிற், என்றவன். [5]குளியான். [6]உவரியிற்.

ரு. மரபின் மாப்பெரும் புறக்கடல் மஞ்சன மருவி
அரவி னாட்டிடை [1]மகளிரொ டின்னமு தருந்திப்
[2]பரவு மிந்திரன் பதியிடைப் பகற்பொழு [3]தகற்றி
இரவி னுலகம் நான்முக [4]னுலகத்து ளிருக்கும்.

(இ - ள்.) கீழ்க்கூறியவிதமாக மஹத்தான பெரும்புறக்கடலின்நீரிலே ஸ்நானஞ்செய்து நாகலோகத்திலே (சென்று அங்குள்ள) நாககன்னிகையருடனே (இருந்து) இனிய அமிருதம்போன்றஉணவை யுண்டு, (யாவராலும்) துதிக்கப்படுகிற தேவேந்திரலோகத்திலே பகற்காலத்தைக் கழித்து, இராத்திரியிலே பிரமலோகத்திற் கொலுவீற்றிருப்பான்; (எ- று.)

மரபு - கீழ்க்கூறியமுறை. பெரும்புறக்கடல் - அண்டத்தினுள்ளேயுள்ள ஏழுகடல்களினும் பெரியதும், அதன்வெளியிலுள்ளதுமான கடல். இச்செய்யுள் பலபிரதிகளில் "காவல்காட்டுதல்" (க) என்பதன்பின் உள்ளது. பி-ம்:— [1]மக்களோடு. [2]பரவ. [3]ஆற்றி. [4]உலகின் வீற்றிருக்கும், ஓலக்கமிருக்கும். (கஙு)

௬. [1]சாருமா னத்திற் சந்திரன் றனிப்பதஞ் சரிக்கும்
தேரின் [2]மேலினின் றிரவிதன் பெரும்பதஞ் செலுத்தும்
[3]பேர்வி லெண்டிசைக் காவலர் [4]கருமமும் பிடிக்கும்
மேரு மால்வரை [5]யுச்சிமே லரசுவீற் றிருக்கும்.

(இ - ள்.) (சந்திரன்) ஏறிச்செல்லும் விமானத்தில் (தான் ஏறி), சந்திரனது ஒப்பில்லாத அப்பதவியிலே (இருந்து) சஞ்சரித்து அவனது அதிகாரத்தை (த் தான்) செலுத்துவான்; (சூரியனது) தேரின்மேலேறி நின்றுகொண்டு அச்சூரியனது பெரியபதவியின் அதிகாரத்தை(த் தான்)செலுத்துவான்; (நிலை) மாறுதலில்லாத அஷ்டதிக் பாலகர்களுடைய (இடங்களிலிருந்து அவர்களின்) தொழில்களையெல்லாம் கைக்கொண்டுநடத்துவான்; பெரிய மேருமலையின் சிகரத்தில்(பிரமன்போல)அரசைக்கொண்டு மிக்கசிறப்புடன்இருப்பான்.

சந்திரன் விமானத்திலேறிச் சஞ்சரித்தலும் சூரியன் தேரிலேறிச் சஞ்சரித்தலுமாகிய இயற்கை இங்குக் கருதத்தக்கது. மூன்றடிகளிற் சந்திரன் முதலியோர் கூறப்பட்டதற்கு ஏற்ப, ஈற்றடியிற் பிரமனென்பது, வருவிக்கப்பட்டது. எண்திசைக்குக் காவலர்—கிழக்குக்கு இந்திரன், தென்கிழக்குக்கு அக்கினி, தெற்குக்கு யமன், தென்மேற்குக்கு நிருருதி, மேற்குக்கு வருணன், வடமேற்குக்கு வாயு, வடக்குக்குக் குபேரன், வடகிழக்குக்கு ஈசானன் எனக் காண்க. "ஒற்றைத்திகிரித்தடந்தேருயர் செம்பொனேனுங்கல், முற்றக்கனை வெங்கதிர்மண்டிலமுற்றும்ஆளும், மற்றொப்பிலாதவொளிர்செம்மணி மான

மூர்த்து, கற்றைக்கதிர்வெண்மதி மண்டிலங் காத்தளிக்கும்" என்பது முதலியனகாண்க. பி-ம்:—[1]சார்விமானத்தில், சாரும்வானத்தில். [2]மேலும், மீது. [3]பேரில். [4]பெரும்பதம். [5]உச்சியின். (௬௬)

எ. நிலனும் நீரும்வெங் கனலொடு காலுமாய் [1]நிமிர்ந்த
[2]தலனு ணீடிய வவற்றின்அத் தலைவரை மாற்றி
உலவுங் காற்றொடு கடவுளர் [3]பிறருமா யுலகின்
[4]வலியுஞ் செய்கையும் வருணன்றன் [5]கருமமு [6]மாற்றும்.

(இ - ள்.) பூமியும் நீரும் வெவ்வியநெருப்பும் காற்றுமாகி விளங்குகின்றனவும் உலகத்தில் நெடுங்காலமாகஉள்ளனவுமான அந்தப்பூதங்களின் அந்தத்தேவதைகளை (அந்தந்தப்பதவியிலிருந்து)ஒழித்து, (தானே) இடைவிடாது உலாவுகிற காற்றும் மற்றைத்தேவர்களுமாகி, உலகத்து எல்லாப்பூதங்களின் வலிமையையும் செய்கையையும் வருணனதுதொழிலையும்செய்வான்; (எ-று.)

நான்குபூதங்களைக்கூறினது, ஆகாயத்திற்கும் உபலட்சணம். கருமமும் மாற்றும்என்றும் பிரிக்கலாம். மாற்றிஎன்பதற்கு-ஒருவர்பதவிக்கு மற்றொருவரை மாறச்செய்து என்றுஉரைக்கவும் இடமுண்டு. "ஆதவமுதல்வன்றன்னை யவிர்மதிப்பதத்திலோச்சும், சீதளமதியைவெய்யோன் சென்னெறிப்படுத்திச் செல்லும்" என்பதுமுதலியனகாண்க. பி-ம்:—[1]நிமிரும், நிமிர்ந்து. [2]தலமும். [3]பிறிதும். [4]வலியின். [5]செய்கையும். [6]முற்றும். (௬௭)

அ. தாம ரைத்[1]தடங் கண்ணினன் [2]பேரவை [3]தவிர
நாமந் தன்னதே யுலகங்கள் யாவையும் [4]நவிலத்
தூம வெங்கன லந்தணர் முதலினர் சொரிந்த
ஓம வேள்வியி [5]னிமையவர் பேறெலா முண்ணும்.

(இ-ள்.) செந்தாமரைமலர் போலும் பெரிய திருக்கண்களையுடையவனான திருமாலினது அத்திருநாமங்கள்நீங்கத் தனதுபெயரையே எல்லாவுலகங்களிலும் சொல்ல (ச் செய்து), யாகங்களிலே புகையையுடையவெவ்விய அக்கினியிலே முனிவர்முதலியோர் ஓமஞ்செய்தனவும்தேவர்களுக்குச்சேர்தற்குரியனவுமான அவிர்ப்பாகங்களையெல்லாம் (தானே பெற்று)உண்பான்.

உலகங்களில் எல்லாவிடத்திலும் யாவரும் எப்போதும் தன்னிடத்து அச்சத்தால் திருமாலினது நாமதேயங்களைக் கூறும் வழக்கத்தைத் தவிர்ந்து தன்பெயரையே கூறும்படி செய்தனனென்பது, முதலிரண்டடிகளின் கருத்து. யாகங்களில் தேவர்களையுத்தேசித்து மந்திரபூர்வகமாக ஓமஞ்செய்கிற அவிர்ப்பாகங்களையெல்லாம் தானே கைக்கொண்டு உண்பானென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து. ஆயிரந்திருநாமங்கள் உள்ளதனால், பேர அவை எனப் பன்மையாற்கூறினார். தாமரைத்தடங்கண்ணினன்பேரவை - ஸ்ரீவைகுண்டலோகத்தில் திருமாமணிமண்டபத்திலுள்ள சிறந்த திருவோலக்கமெனினுமாம். பேரவை - மகாசபை. பி-ம்:—[1]கண்ணன்றழற்கணன். [2]பேரிவை. [3]தவிர்த்து., தவிர்ந்து. [4]நடுங்க. [5]இறையவர். (௬௮)

௯. காவல் காட்டுதல் துடைத்தலென் றித்[1]தொழில் கடவு
ளூவ ரும்மவை முடிக்கிலர் பிடிக்கிலர் [2]முறைமை

ஏவர் மற்றவர் யோகிய ருறுபத மிழந்தார்
தேவ ரும்மவன் தாளலா லருச்சனை செய்யார்.

(இ-ள்.) (எல்லாவற்றையும்) பாதுகாத்தலும் படைத்தலும் அழித்தலு மென்ற இத்தொழில்களுக்குஉரிய திரிமூர்த்திகளும் இத்தொழில்களைச் செய்து முடிக்கமாட்டாதவர்களாய்(த் தங்களுடைய) உரிமையைக் கைக்கொள் ளாது விடுவாராயினர்; (இவர்களே இப்படி ஆயினரென்றால், தம்தமக்குரிய தொழிலை மேற்கொண்டு முடிக்கவல்லவர்), வேறு எவர்தாம் உளர்? யோகப் பயிற்சியில் தேர்ந்தவர்களும் (தம்) யோகபலத்தாற் பெறும்பதவிகளை (அவ் விரணியனால்)இழந்துவிட்டார்கள்;(அன்றியும், அதுவரையிற் பலரால் வணங் கப்பட்டுவந்த) தேவர்களும் அவ்விரணியனது பாதங்களையன்றி வேறொன் றைப்பூசிக்கமாட்டார்கள்; (எ - று.)

இதனால், இரணியனிடத்து அனைவரும் அஞ்சி நிற்குந் தன்மையை விளக்கியவாறு: "கலைமகள் கொம்மை முலைபொரு திணிதோட் கடவுள்தன் படைப்பினை மாற்றி, மலர் தலையுலக முழுவதுந்தானே வருத்தறவெளிதினிற் படைக்கும், சிலைவிழுங் குயர்தோள் மாயனை யகற்றிச் சிறப்புடனுலகெலா மளிக்கும், மலைமகள் பாகன் சிறிது கையாற வாருயிர் துடைப்பினுந் துடைக் கும்" என்றது காண்க. பி-ம்:—1தொழிற்குரிய, தொழில்கடவா, தொழில் கருதும். 2முறையின். (௩௯)

௪௦. மருக்கொள் தாமரை நான்முக 1னைம்முகன் முதலோர்
குருக்க ளோடுகற் 2றோதுவ தவன்பெருங் கொற்றம்
3சுருக்கில் நான்மறை தொன்றுதொட் 4டுரை தொறுந் 5தோன்றா
திருக்குந் தெய்வமு 6மிரணிய னேநம வென்னும்.

(இ - ள்.) வாசனையைக்கொண்ட (திருமாலின் நாபீ) கமலத்தில்தோன் றிய பிரமனும் சிவனும் முதலிய தேவர்கள் (அவ்விரணியனது) புரோகிதரி டத்துப் படித்தறிந்து (எப்போதும்) சொல்வது, அவ்விரணியனது சிறந்த வெற்றியையேயாம்: சுருக்கமாகக்கூறுவோமானால், நான்குவேதங்களும் அநாதியாகத் தமதுசொற்களிலெல்லாம் வெளிப்படாது மறைந்து இருக்கிற வனுக்கு நமஸ்காரம்' என்று சொல்லித் துதிக்கும்; (எ - று.)

சிவபிரானது ஐம்முகங்கள்-அகோரம் ஈசானம் சத்தியோசாதம் தத்புரு ஷம் வாமனம் எனப்படும். குருக்களோடு - உருபுமயக்கம்: பிருகஸ்பதியுட னேயென்றலும்ஒன்று. வேதங்களும் ஸாரமாகப்பார்க்குமிடத்துப் பரம்பொ ருள் இரணியனேஎன்று சொல்லி அவனைவணங்கியது, அவனிடத்துள்ள பேரச்சத்தினாலாகும். சுருக்கு - பிரணவமெனினுமாம்: பிரணவம் சுருதிவத சங்கிரகமாதலால், அவ்வாறு கூறத்தகும்: "வேதத்துக்கு ஓமென்னு [illegible] லுள்ளதுக்கெல்லாஞ்சுருக்காய்" என்றார், பெரியாரும். சிலபிரதிகளில் இச் செய்யுள் "மண்டலந்தரு" (௧௨) என்ற பாடலின்பின்உள்ளது. பி-ம்:— 1முதலியமறையோர், முதலிய வானோர். 2ஓதுவதன். 3சுருக்கி, சுருக்க. 4உயிர் தொறுந். 5தோன்று. 6இரணியவேநம. (௪௦)

கக. பண்டு வானவர் தானவர் யாவரும் [1]பற்றித்
தெண்டி ரைக்கடல் கடைதர வலியது தேடிக்
கொண்ட மத்தினைக் [2]கொற்றத்தன் [3]குவவுத்தோட் கமைந்த
தண்டெ னக்கொள லுற்றது நொய்தெனத் தவிர்ந்தான்.

(இ - ள்.) முன்னொருகாலத்திலே தேவர்களும் அசுரர்களுமாகிய எல்லோரும் தெளிவானஅலைகளையுடைய பாற்கடலைக் கடையும்பொருட்டு வலியுள்ளதாகத்தேடி எடுத்துக் கொண்டுவந்த மத்தாகிய மந்தரகிரியை, (இரணியன்) வெற்றியையுடைய தன் திரண்டதோள்களின் வலிமைக்கு ஏற்ற தண்டாயுதமாக எடுத்துக்கொள்ளத்தொடங்கி, (பின்பு,) அம்மலையும் அற்பமானது என்று எண்ணி நீக்கிவிட்டான்; (எ - று.)

இதனால், அவ்விரணியனது மிக்கதோள்வலிமையும் செருக்கும் விளங்கும். பற்றிக்கொண்டஎனக் கூட்டுக. தேவர்கள்இழந்த செல்வத்தைப்பெறக் கடல் கடைந்தவிவரம் பாலகாண்டத்துக் கூறப்பட்டது. பி-ம்:—[1]பயிற்றித். [2]கொற்றவக், கொற்றத்தின். [3]குவவுத்தோளமைந்த. (கசக)

கஉ. மண்ட லந்தரு கதிரவன் வந்துபோய் மறையும்
எண்ட லந்தொடற் கரியன தடவரை யிரண்டும்
கண்ட லம்பசும் [1]பொன்னவன் முன்னவன் காதில்
குண்ட லங்கள்மற் [2]றென்னினிப் பெரு[3]வலி [4]கூறல்.

(இ - ள்.) மண்டிலவடிவம்பொருந்திய சூரியன்உதித்தும் அஸ்தமித்தும் போருகின்றனவாய் மனத்தினால் எட்டுதற்கும் அரியவையான (உதயம் அஸ்தம் என்னும்) இரண்டு பெரியமலைகளும், இரணியாட்சனுக்குத் தமையனான இரணியனுக்குக் காதுகளிலிடுங் குண்டலங்களாகும்; இனி, அவ்விரணியனுடைய மிக்கவலிமையைக்குறித்துக் கூறவேண்டியதுவேறுஎன்ன? (எ-று.)

'ஹிரண்யாக்ஷன்' என்ற பெயரை மொழிபெயர்த்து, 'கண்தலம் பசும்பொன்னவன்' என்றார். எண்தலம் - மனமாகியஇடம். 'இரணியனது குண்டலம், பிற்காலத்தில் இராவணனால்எடுத்தற்கும் அரியதாயிற்று' என ஒரு சார் நூல் கூறுவதுகொண்டும் அதன்பெருமையை யுணரலாம். பி-ம்:— [1]பொன்னிறத்தவற்கிளங்காளை, பொன்னிறத் தவற்கிரு காதிற். [2]என்னெனப். [3]விறல். [4]கூறின். (கசஉ)

கங. [1]மயர்வில் [2]மன்னவன் சேவடி [3]மண்ணிடை வைப்பின்
அயரும் வாளெயிற் றாயிர [4]நனந்தலை யனந்தன்
உயரு மேலண்ட முகடுதன் [5]முடியுற வுயரும்
பெயரு மேனெடும் பூதங்க ளெங்கொடும் பெயரும்.

(இ - ள்.) சோர்தலில்லாத மன்னவனான இரணியன், சிவந்த (தனது) பாதங்களைப் பூமியில்(ஊன்ற)வைப்பானானால்,கூரியபற்களையும் அகன்ற ஆயிரந்தலைகளையுமுடைய ஆதிசேஷனும் (அந்தப்பாரமிகுதியைத் தாங்கமாட்டாமல்) தளர்வான்: (அன்றியும் அவ்விரணியன்) எழுந்துநிற்பானானால், அண்டகோளத்தின் மேல்முகடு தனது தலையிற்படும்படி உயர்வான்; இடம்விட்டுச்

சஞ்சரிப்பானானால், (தன துவலியவிசையால்) பஞ்சமகாபூதங்களும் (தன்னோடு கூடவே நிலைபெயர்ந்துவர) அவற்றுடனே நடப்பான்; (எ - று.)

மூன்றாமடிக்கு - அவன்உயர்வானானால் அவனதுமுடி தாக்குதலால் அண்டமுகடு அப்பால்உயர்ந்துபோகுமென்றும், நான்காமடிக்கு - அவன்நிலை பெயர்வானானால் பெரியபஞ்சபூதங்களும் அவனுடனே நிலைபெயருமென்றும் பதவுரைகொள்ளலாம். மயர்வின் - அறியாமையையுடையஎன்று கவிக்கூற்றாக உரைப்பாருமுளர். [1]மயருமென்றபாடத்திற்கு - (மண்) குழிபடும் என்று உரைப்பர். பி-ம்:—[1]மயரின். [2]மன்னெடுஞ். [3]மண்ணுற. [4]பணந்தலை, தலையுள. [5]முடிவுற. (கசங)

கசு. பெண்ணிற் பேரெழி லாணினில் அலியினிற் [1]பிறிதும்
உண்ணிற் கும்முயி ருள்ளதி லில்லதி னுலவான்
கண்ணிற் [2]காண்பன கருதுவ [3]யாவினும் கழியான்
மண்ணிற் சாகிலன் வானிலுஞ் சாகிலன் வரத்தால்.

(இ - ள்.) (தான் பெற்ற) வரத்தினால், பெண்ணாலும் மிக்கவளர்ச்சியையுடைய ஆணாலும் அலியாலும் உடம்பினுள்நிற்கின்ற உயிரையுடைய பிராணியாலும் உயிரில்லாததனாலும் இறக்கமாட்டான்: மற்றும், கண்களாற்காணப்படும்பொருள்களும் மனத்தாற்கருதப்படும்பொருள்களுமாகிய எல்லாவற்றாலும் இறவான்: பூமியிலுஞ் சாகமாட்டான்: ஆகாயத்திலும் சாகமாட்டான்.

பெண், ஆண், அலி, உயிருள்ளது, இல்லது-சாதியொருமைப்பெயர்கள். இல்லது - உயிரில்லாதது, அசேதனப்பொருள், ஜடபதார்த்தமெனப்படும். எழிலாவது - வளர்ந்தமைந்தபருவத்தும் இதுவளர்ந்துமாறியதன்றி இன்னும்வளருமென்பதுபோன்று காட்டுதல் என்பர். பி - ம்:—[1]பிறிதில். [2]காண்பதென் றோதுவ,காண்பது கருதுவது. [3]யாதினும். (கசச)

கரு. [1]தேவ ராயின [2]ரேவருஞ் [3]சேணிடைத் திரியும்
யாவ [4]ரேயுமற் [5]றெண்ணுதற் கரியரா யியன்ற
[6]கோவை மாலயன் [7]மானிடன் யாவருங் கொல்ல
ஆவி தீர்கில னாற்றலுந் தீர்கில னனையான்.

(இ - ள்.) அந்தஇரணியன், தேவராயினரெல்லாரும் வானத்தில்திரியும் யாவரும் மற்றும் எண்ணுதற்குஅரியராய்ப்பொருந்திய தொடர்ச்சியாய்க்கூறப்படுகிற திருமால் பிரமன் சிவன் என்ற திரிமூர்த்திகளும் மற்றும் எல்லோரும் (தன்னைக்) கொல்ல உயிர்நீங்கான்: (அன்றியும்), வலிமையும் (சிறிதும்) ஒடுங்கான்; (எ - று.)

திருமால் பின்பு நரசிங்கமூர்த்தியாய் இவ்விரணியனைக்கொன்றாலும், தானாகதன்மையினின்று அவனைக் கொல்லமுடியாமையால், 'மால்கொல்ல ஆவிதீர்கிலன்' என்றது. தாருகவனத்து முனிவரேவிய மானை இடக்கையிலுடைமையால், சிவபிரான்,'மானிடன்'எனப்பட்டான்: மான் + இடன்எனக். கோவை-திரிமூர்த்திகளென்றவரிசை. பி-ம்:—[1]தேவராதியர், தேவராயினும். [2]தேவரும், எவரினும். [3]திரிதருமியக்கர். [4]ஆயினும்,ஆலும்,ஆயும். [5]எண்ணவு நினைக்கவுமியன்ற, எண்ணவுநினைவுழி யியன்ற. [6]கோவம். [7]மானுடர். (கசரு)

கசு. நீரிற் [1]சாகில னெருப்பினுஞ் சாகில னிமிர்ந்த
[2]மாரு தத்தினு மண்ணின்மே லெவற்றினு மாளான்
ஒருந் தேவரு முனிவரும் பிறர்களு [3]முரைப்பச்
சாருஞ் சாபமு மனையவன் றனைச்சென் று சாரா.

(இ - ள்.) (அவன்) ஜலத்திலுஞ் சாகமாட்டான்: நெருப்பிலுஞ் சாகமாட்டான்: வீசியெழுகிற காற்றிலும் மண்ணுலகத்துமேலுள்ள (புவர்லோகம்முதலிய) எல்லாவிடங்களிலுஞ் சாகமாட்டான்: (முக்காலவரலாறுகளையும்) அறியவல்ல தேவர்களும் முனிவர்களும் மற்றுமுள்ளவர்களும் இடுவதனால் வருகின்ற சாபங்களும் அவ்விரணியனைச் சென்றுகிட்டா; (எ - று.)

பதினன்காம்பாடலில் பஞ்சபூதங்களுள் மண்ணும் வானமும் கூறப்பட்டனவாதலால், மற்றைமூன்றும் இங்குக்கூறப்பட்டன. மண்ணின்மேலெவற்றினும்என்பதற்கு - பூமியின்மீதுள்ள மலைமுதலிய எல்லாவிடங்களிலும் என்று உரைத்தலுமாம். சாபமும் அவனையணுகாஎன்று பின்னிரண்டடியிற் கூறினர். பி-ம்:—[1]சாவிலன். [2]மாருதத்தின மண்ணின்மற்று, மாருதத்தினு மண்ணின்மற்று, மாருதத்தினு மற்றுமற்று. [3]உரைக்குஞ். (கசசு)

கஎ. [1]உள்ளுஞ் [2]சாகிலன் புறத்தினு முலக்கில னுலவாக்
கொள்ளைத் [3]தெய்வவான் படைக்கலம் [4]யாவையுங் கொல்லா
[5]நள்ளிற் சாகிலன் பகலிடைச் சாகிலன் நமனுர்
கொள்ளச் சாகில னினி யவனுயிர் கொள்வார்.

(இ - ள்.) (வீட்டின்)உள்ளேயுஞ் சாகமாட்டான், வெளியிலேயுஞ் சாகமாட்டான்: அழிவில்லாத மிகுதியாகிய தெய்வத்தன்மையுடைய சிறந்த ஆயுதங்களெல்லாம் (அவனைக்) கொல்லமாட்டா; இரவினுஞ் சாகமாட்டான், பகலினுஞ் சாகமாட்டான்; (பிராணிகளினுயிரைக் கவர்ந்துபோக ஏற்பட்டுள்ள) யமன் (தன்னுயிரைக்) கவர்ந்துகொள்ளச் சாகமாட்டான்: இனி, அவனுயிரைக் கொண்டுபோகுபவர் யார்? (எ - று.) பி-ம்:—[1]உள்ளிற். [2]சாவிலன். [3]தேவர்தம். [4]யாதினுங்குறையான். [5]நள்ளிராவிடைப். (கசஎ)

கஅ. பூத [1]மைந்தொடும் பொருந்திய [2]வுருவினுற் [3]புரளான்
வேதம் நான்கினும் [4]விளம்பிய பொருள்களால் [5]விளியான்
தாதை [6]வந்துதான் தனிக்கொலை சூழினும் [7]சாகான்
ஈத வன்னிலை யெவ்வுல கங்கட்கு மிறைவன்.

(இ - ள்.) பஞ்சபூதங்களினாலியன்ற வஸ்துக்களாலும் அழியான்; நான்கு வேதங்களினாலுஞ் சொல்லப்பட்ட மந்திரங்களாலும் சாகமாட்டான்; (தனது) தந்தை தானே வந்து தனியே[இரகசியமாக] (தன்னைக்)கொல்லமுயன்றாலும் சாகான்; எவ்வுலகங்கட்கும் இறைவன் அவன்: அவனுடைய நிலைமை இத்தன்மையது; (எ - று.)

கீழே கச, கசு-ஆம் பாடல்களில் பூதங்களுள் ஒவ்வொன்றனாற் சாவில்லாமையைக் கூறியவர், இங்கு அந்த ஐந்துபூதங்களும் ஒன்றுசேர்ந்த பொருள்களாற் சாவில்லாமையைக் கூறுகின்றாரென்க. வேத மந்திரங்களைக் கொண்டு அபிசாரஹோமம் மந்திரப்பிரயோகம் முதலியனசெய்து கொல்ல

முடியாமையை இரண்டாமடி கூறும். பெற்றதந்தையே கொல்லமுயன்றால் விலக்கவல்லாரில்லையன்றோ? அத்தன்மையனான தந்தையாலும் கொல்லமுடியாதென்பது, மூன்றாமடியிற் கூறியபொருள். பி-ம்:—[1]ஐந்தினும். [2]உணர்வினிற். [3]சாகான், புணரும், புணரா, புணர. [4]விளங்கிய. [5]வீயான். [6]தான் வந்து, தன்னைத்தான். [7]சவியான். (கஅ)

கக.—இரணியன்மகனான பிரகலாதனது தன்மை.

ஆய வன்றனக் கருமக [1]னறிஞரி னறிஞன்
தூய ரென்பவர் யாரினு மறையினுந் தூயான்
நாய கன்[2]றனி [3]ஞானி [4]நல்லறத் துக்கு நாதன்
தாயின் மன்னுயிர்க் கன்பின னுளனொரு தக்கோன்.

(இ - ள்.) அத்தன்மையனாகிய இரணியனுக்கு அருமையாகப்பிறந்த புத்திரனும், அறிவுடையோர்களிலும் அறிவுடையவனும், பரிசுத்தரென்று சிறப்பித்துச் சொல்லப்படுபவர் யாவரினும் வேதங்களினும் பரிசுத்தியையுடையவனும், சருவேசுவரன்விஷயமான ஒப்பற்ற ஞானமுடையவனும், (அவ்வறிவிற்கு ஏற்பத்)தருமவொழுக்கத்துக்குத் தலைவனும், உலகத்துநிலைபெற்ற பிராணிகளிடத்துத் தாயைக் காட்டிலும் அன்புடையவனுமாகிய ஒருபெரியவன் இருந்தான்; (எ-று.) பி-ம்:—[1]அறிஞருக்கு. [2]திரு. [3]ஞானம். [4]மற்றறிஞர்க்கு.

௨௦.—இரணியன் தன் மகனை வேதமோதச்சொல்லுதல்.

வாழி [1]யானவன் றனைக்கண்டு மன[2]மகிழ்ந் துருகி
[3]ஆழி யையநீ யறிதியால் மறையென வறைந்தான்
ஊழி யுங்கடந் [4]துயர்கின்ற ஆயுளா னுலகம்
ஏழு மேழும்வந் தடிதொழ வரசுவீற் றிருந்தான்.

(இ - ள்.) கற்பகாலத்தையும் கடந்து மேற்செல்லுகின்ற ஆயுளையுடையவனும் பதினான்கு லோகங்களிலுள்ளாரும் வந்து (தனது) பாதங்களை வணங்க மிக்கசிறப்போடு அரசாட்சிசெய்து கொண்டிருந்தவனுமாகிய வாழ்ச்சியையுடைய அவ்விரணியன் அந்தக்குமரனைப்பார்த்து மனம்மகிழ்ந்து நெகிழ்ந்து, (என்னுடைய)ஆஞ்ஞாசக்கரத்துக்குஉரியமகனே! நீவேதங்களையறிவாயென்று கட்டளை கூறினான்; (எ - று.)

ஊழி-பிரமனுயுள். வாழி ஆனவன்றனை எனப்பிரித்துஉரைப்பாருமுளர். உலகம் ஏழுமேழும்-மேலேழ் கீழ்ஏழ் என்ற பதினான்கு லோகங்களும். பி-ம்:-[1]வானவன். [2]உவந்து. [3]ஆளி. [4]உய்கின்ற. (கூ௦)

௨க.—ஓரந்தணன் பிரகலாதனுக்கு வேதமோதுவிக்கத் தொடங்குதல்.

என்றொ ரந்தண னெல்லையி லறிஞனை [1]யேவி
[2]நன்று நீயிவற் [3]குதவுதி மறையென [4]நவின்றான்
சென்று மற்றவன் றன்னொடு மொருசிறை சேர்ந்தான்
அன்று நான்மறை முதலிய வோதுவா னமைந்தான்.

(இ - ள்.) என்றுசொல்லி, (இரணியன்), ஒருபிராமணன்வசத்திலே அறிவுடையனான பிரகலாதனையொப்புவித்து, (அக்குருவைநோக்கி), நீ இந்த

மகனுக்கு வேதங்களை நன்றாகச் சொல்லிக்கொடுப்பாய்' என்று சொன்னான்; (அவ்வாறே அக்குரு), அப்பொழுது அந்தக்குமாரனுடனே போய் ஒருபக்கத்தையடைந்து, நான்கு வேதங்கள் முதலியவற்றை (அவனுக்குக்) கற்பிக்கத் தொடங்கினான்; (எ - று.)—மற்று-அசை.

ஓதுவித்தற்கு அமைந்த குரு - சுக்கிராசாரியனென்பர்: அவன் மகனாகிய சண்டமார்க்கனென்றலும் உண்டு. முதலிய என்றது-வேதங்கட்கு அங்கமாகிய சிட்சை வியாகரணம் சந்தசு முதலியவற்றைக் காட்டும். பி-ம்:—[1]மேவி. [2]இன்று நீ யிதற்கு. [3]உதவிசெய். [4]அறைந்தான். (௩௰௧)

௨௨.—குரு 'இரணியாய நம:' என்று கூறச்சொல்ல, சிறுவன் 'நாராயணாய நம:' எனல்.

ஓதப் புக்கவ னுந்தைபே ருரையென லோடும்
போதத் தன்செவித் தொளையிரு [1]கைகளாற் [2]பொத்தி
[3]மூதக் கோயிது நற்றவ மன்றெனா மொழியா
வேதத் துச்சியின் மெய்ப்பொருட் [4]பெயரினை [5]விரித்தான்.

(இ - ள்.) (இங்ஙனங்) கற்பிக்கத் தொடங்கிய ஆசிரியன், (பிரகலாதனை நோக்கி), 'உனது தந்தையின் பேரை (முதலிற்) சொல்'என்று கூறியவுடனே, (பிரகலாதன்),தனது இரண்டு காதுதுவாரங்களையும் இருகைகளாலும் நன்றாக மூடிக்கொண்டு, 'மூத்த பெரியோனே!நீ சொன்னபடிசொல்வது நல்லொழுக்கமன்று' என்று சொல்லி (மறுத்து), வேதத்தினுச்சியாகிய உபநிஷத்துக்களிற் கூறப்படுகிற உண்மைக்கடவுளின் திருநாமத்தை வெளியிட்டுக் கூறினான்; (எ - று.)

"வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்தவிளக்கை விட்டுசித்தன் விரித்தனனே" என்றாற்போல, 'வேதத்துச்சியின் மெய்ப்பொருட் பெயரினைவிரித்தான்' என்றார். பி-ம்:—[1]கைகொடு, கையினும். [2]புதையா. [3]மாதக்கோயிதனற்றமென் முன்பினுமிலையால், மாதக் கோயிதுன் றவமென முன்பினு மிலையால், மாதக்கோயிதன் மறமென முன்பினு மிலையா. [4]பெரியனை. [5]விதித்தான். ()

௨௩.—பிரகலாதன் விஷ்ணுபக்தியை வெளியிடக்கண்டு குரு அஞ்சுதல்.

ஓந மோநாரா யணாயவென் றுரைத் [1]துள முருகித்
தான மைந்திரு [2]தடக்கையுந் தலைமிசைத் தாங்கிப்
பூநி றக்கண்கள் புனலுக [3]மயிர்ப்புறம் பொடிப்ப
ஞான நாயக னிருந்தன னந்தண [4]னடுங்க.

(இ - ள்.) தத்துவஞானத்துக்குத் தலைவனான பிரகலாதன், திருவஷ்டாக்ஷரமந்திரத்தைச் சொல்லி மனங்கரைந்து தான் அடங்கிஅசைவற்றுநின்று, (தனது) இரண்டு பெரியகைகளையும் தலைமேல்வைத்துக் கூப்பி [அஞ்சலி செய்து,] தாமரைமலர்போன்ற கண்களினின்று நீர் சிந்தவும் மயிர்கள் உடம்பின்மீது சிலிர்த்தெழுவும் அந்தக்குரு நடுங்குமாறு இருந்தனன்; (எ - று.)

மறைத்துவைத்தற்கு உரியமகாமந்திரமாதலால், திருவஷ்டாக்ஷரத்தைச் சிறிதுபின்னப்படுத்திக் கூறினாரென்பர். உளம்உருகுதல்முதலியன அன்பின்

நிகழ்ந்தமெய்ப்பாடுகள். திருவஷ்டாக்ஷரத்தின் பொருள்-'அகாரார்த்தமான திருமாலுக்கு உரியஞானஸ்வரூபியான ஆன்மாவான நான் நாராயணனுக்கே எல்லாவடிமையும் செய்யப்பெறுவேனாக வேணும்: எனக்கு உரியனல்லேன்' என்பது. பி-ம்:—[1]உணர்வுருகி. [2]சுடர். [3]மயிர்க்குலம். [4]நடுங்கி. (கஙிஙூ)

உச.—குரு பிரகலாதனை வெறுத்துப்பேசுதல்.

கெடுத்தொ ழிந்தனை யென்னையு முன்னையுங் கெடுவாய்
படுத்தொ ழிந்தனை பாவி [1]யெத் தேவரும் பகர்தற்கு
அடுத்த தன்றியே யயலொன்று பகரநின் னறிவில்
எடுத்த தென்னிது [2]வெவ்செய்த வண்ணம்[3]நீ யென்றான்.

(இ - ள்.) 'அழிந்துபோகுபவனே! (குருவாகிய) என்னையுங்கெடுத்துவிட்டாய்:பாவீ! (மாணாக்கனாகிய) உன்னையுங் கெடுத்துக்கொண்டாய்; எந்தத் தேவர்களும் சொல்லுதற்கு அடாததாயுள்ள வேறாகிய ஒருவார்த்தையைச் சொல்லும்படி உன்னறிவிற் கொண்டது என்னஆச்சரியம்! இங்ஙனம் நீ என்னகாரியஞ்செய்துவிட்டாய்' என்றுசொன்னான்; (எ-று.)—பி-ம்:—[1]அத்தேவரும், அத்தேவரை, அத்தேவனே. [2]என்செய வெண்ணினை. [3]ஈதென்றான். (கஙிச)

உரு.—பிரகலாதன் அதற்குஏற்ற சமாதானங் கூறுதல்.

என்னை யுய்வித்தே னெந்தையை [1]யுய்வித்தே [2]னினைய
உன்னை யுய்வித்திவ் [3]வுலகையு [4]முய்விப்பா னமைந்து
முன்னை [5]மூலத்தின் [6]முதற்பெயர் [7]மொழிவது [8]மொழிந்தேன்
என்னை குற்றம்நா [9]னியற்றிய தியம்புதி யென்றான்.

(இ - ள்.) (அதுகேட்டுப் பிரகலாதன் குருவைநோக்கி), என்னை (நான்) ஈடேறச்செய்தேன்: எனது தந்தையை ஈடேற்றினேன்; இத்தன்மையனான [எனக்குக்குருவாயமைந்த] உன்னையும் ஈடேற்றி இந்தஉலகத்திலுள்ள எல்லாவுயிர்களையும் ஈடேற்றத்தொடங்கிப் பழமையானவேதத்தின்முதற்சொல்லான பிரணவம் முதலிற்கூறும்பொருளான நாராயணநாமத்தைச் சொன்னேன்: நான் செய்தது என்னகுற்றம்? சொல்என்றான், (பிரகலாதன்); (எ-று.)

முன்னைவேதம் - அநாதியானவேதம். வேதத்தின்முதலிற்கூறும்பெயர்-பிரணவம்: அது பகவானைக்கூறுவதென்பதை "ப்ரணவோ பகவத்வாசீ" என்றதனாலும்அறிக. நாராயணனென்னும்நாமம் பலவகைப்பயனும்தருமென்பதை "குலந்தரும்" என்றபாசுரத்தில் திருமங்கையாழ்வார் அருளிச்செய்திருத்தல் காண்க. பி-ம்:—[1]உய்வித்தேற்கு. [2]இனியைய, இனிமற்று, இனிய இனிதும். [3]உலகெலாம். [4]உய்விக்க வுரைத்தேன். [5]வேதத்தின். [6]மூலத்தின் முறைப்பெயர். [7]முதற்பெயர் [8]உரைத்தேன். [9]இயம்பிய, இயம்பின. (கஙிரு)

உசா.—குரு பிரகலாதனுக்கு அறிவுகூறுதல்.

முந்தை வானவர் யாவர்க்கு முதல்வர்க்கு முதலோன்
உந்தை மற்றவன் றிருப்பெய ருரைசெயற் குரிய
[1]அந்த ணாளனேன் [2]என்னினு மறிதியோ ஐய
[3]எந்தை யிப்பெய ருரைத்தெனைக் கெடுத்திட லென்றான்.

(இ - ள்.) 'உன் தந்தை, பழமையான தேவர்களெல்லார்க்கும், திரிமூர்த்திகளுக்கும் தலைவன்: அவனது திருப்பெயரைச்சொல்லுதற்குஉரிய பிராமணனாகிய என்னைக்காட்டிலும் (நீ) அறிவாயோ? ஐயனே: எந்தையே! இந்த (நாராயணனென்னும்) பெயரை மறுபடியுஞ்சொல்லி என்னைக்கெடுக்காதே' என்றான், (குரு); (எ - று.)

பிரகலாதன்சொன்ன நாராயணநாமத்தைத் தன்வாயால் அநுவதித்துக் கூறுதற்கும்அஞ்சி இப்பெயரெனச் சுட்டாற் கூறினன். நாராயணநாமத்தை மாணுக்கன்கூறினல்,குருதான் சொல்லிக்கொடுத்தானென்று இரணியாசுரன் தன்மீது சினங்கொள்வானென்று கருதி, 'இப்பெயருரைத்தெனைக்கெடுத்திடல்'என்கின்றான். பி-ம்:—1அந்தணளனன், அந்தணளவன். 2என்னுமது, 3இந்த. (கஙசு)

உ௭.—பிரகலாதன் குருசொல்லைமறுத்து மற்றுங்கூறத்தொடங்குதல்.

வேத 1பாரக 2னவ்வுரை 3கூறலும் விமலன்
ஆதி நாயகன் பெயரன்றி யான்பிறி தறியேன்
ஓத வேண்டுவ தில்லையென் 4னுணர்வினுக் கொன்றும்
போதி யாததொ மில்லையென் றிவைபிவை 5புகன்றான்.

(இ - ள்.) வேதங்களினெல்லையையறிந்தவனான அந்தக்குரு அந்தவார்த்தையைச்சொன்னவளவிலே, குற்றமற்றவனானபிரகலாதன், 'எல்லாவற்றுக்கும்முதல்தலைவனாகியகடவுளினது திருநாமத்தையேயல்லாமல் மற்றொன்றை நான் சொல்லஅறியேன்; (எனக்கு இதுகுறித்துக்)கற்கவேண்டுவது யாதொன்றுமில்லை; என்னறிவினுக்குளட்டாமல்சொல்லித்தரத்தக்கதும்இல்லைஎன்று சொல்லி(ப் பின்வரும்)இவ்விந்தவார்த்தைகளைக்கூறலானான்;(எ-று.)—அவற்றை அடுத்த ஆறுகவிகளிற் காண்க. பி-ம்:—1நாயகன். 2அஃதுரை. 3விளம்பலும், செய்தலும். 4அறிவினுக்கு. 5புகலும். (கஙஎ)

உ௮.—இதுமுதல்ஆறுகவிகள் - ஒருதொடர்: பிரகலாதன் குருவுக்குக்கூறும் வார்த்தையைத் தெரிவிக்கும்.

தொல்லை நான்மறை 1வரன்முறை துணிபொருட் கெல்லாம்
எல்லை 2கண்டவ னகம்புகுந் 3திடங்கொண்ட 4தென்னுள்
இல்லை வேறினிப் 5பெரும்பதம் யானறி யாத
6வல்லை யேயினி 7ஓதுவி நீதியின் வழாத.

(இ - ள்.) என்மனமானது,—பழமையானநான்குவேதங்கள் மாறுபடாமல் நிச்சயித்துச்சொல்லியிருக்கிற எல்லாப்பொருள்கட்கும்முடிவெல்லையாகக்காணப்பட்டவனான ஸ்ரீமந்நாராயணன் உள்ளேபிரவேசித்து(தனக்குஉரிய) இடமாகக்கொள்ளப்பெற்றது;இனி, (அந்தஎம்பெருமானது திருநாமத்தைக்காட்டிலும்) பெருமைபெற்றசொல் வேறுஇல்லை;யான் அறியாதவையும் நீதியினின்று தவறாதவையுமான பொருள்களை (நீ) அறிந்துகூறவல்லாயாயின் இனிக் கற்பிப்பாயாக; (எ - று.)

திருமால் வந்துஎன்நெஞ்சிற்புகுந்துள்ளானாதலின், இதற்குமுன்கூறினாற்போல நீதிக்குமாறானதைக்கூறுவாயாயின்,யான் கேளேன்; நீதிக்குமா

ஞது எனக்குத்தெரியாதன கற்பிக்கவல்லேயாயின் கற்பிப்பாயென்றனன், பிரகலாதனென்க. பி-ம்:—1யாவையும். 2கொண்டவன். 3மனம். 4என்னில். 5பெறும்பதம், பெறும்பயன். 6வல்லேயேயெனில். 7ஓதுதி, ஓதிவை, ஓதுநீ.()

உகூ. ஆரைச் சொல்லுவ தந்தண ரருமறை [1]யறிந்தோர்
ஓரச் சொல்லுவ [2]தெப்பொரு ளுபநிட தங்கள்
தீரச் [3]செய்வினை [4]தேவரும் முனிவருஞ் செப்பும்
பேரைச் சொல்லுவ தல்லது [5]பிறிதுமொன் றுளதோ.

(இ - ள்.) அறிதற்குஅரியவேதங்களையுணர்ந்தவரான அந்தணர்கள் (ஆராய்ந்துதெய்வமாகச்) சொல்லுவது எந்தக்கடவுளையோ, உபநிடதங்கள் (அனைவரும்) அறியும்படிசொல்லுவது எந்தப்பரம்பொருளையோ, (தம்) செய்வினை தீரும்படி தேவர்களும்முனிவர்களும் சொல்லுகின்ற (அந்தப்பரம்பொருளின்) திருநாமத்தையே (நான்) கூறுவதல்லாமல் (சொல்லத்தக்க) வேறொரு சிறந்தபெயரும் உள்ளதோ? [இல்லையென்றபடி]; (எ-று.)—பி-ம்:—1அறைந்தோர். 2உண்டுகொல், ஒருபொருள். 3சொல்லுவ, சொல்பொருள். 4முனிவருமமரரும். 5பிறிதொன்றுமுளதோ, பிறிதுபேருளதோ. (கறுக)

௩௦. வேதத் தானும்நல் வேள்வியி னானுமெய் [1]யுணர்ந்த
போதத் தானுமப் புறத்துள [2]வெப்பொரு ளானும்
சாதிப் பார்பெறும் [3]பெரும்பதந் [4]தலைக்கொண்டு சமைந்தேன்
[5]ஓதிக் கேட்பது பரம்பொரு ளின்னமொன் றுளதோ.

(இ - ள்.) வேதங்களைக்கொண்டும் சிறந்தயாகங்களைக்கொண்டும் தத்துவஞானத்தைக்கொண்டும் மற்றுமுள்ள (தவம் பூசனை முதலிய) எல்லாச் சாதனங்களைக்கொண்டும்(அரியபதவியாகியமுத்திமுதலாகிய சித்திகளை) முயன்றுபெறும் பெரியோர்(தாம் ஜபித்தற்குஉரியதாகப்) பெற்றபெருமையுள்ள சொல்லை ஏற்றுக்கொண்டுகூறினேன்: நீ ஓதிக்கேட்பதாகிய பரம்பொருள் (நான் கூறுவதனினும்வேறாக) இன்னமும்ஒன்று உள்ளதோ? (எ - று.)

சாதிப்பார்பெறும்பதம் - பரமபதமெனக்கொண்டு, எனக்குப்பரமபதம் கிடைப்பது நிச்சயமெனப் பிரகலாதன் கூறியதாகக் கொள்ளலும் ஒன்று. பி-ம்:—1உணர்ந்தோர். 2அப் 3பதங்களைக். 4கைக்கொண்டு, 5ஓத.6கேட்பதும்.

௩௧. காடு பற்றியுங் கனவரை பற்றியுங் [1]கலைத்தோல்
[2]மூடி முற்றியும் முண்டித்தும் [3]நீட்டியு [4]முறையால்
வீடு பெற்றவர் பெற்றதின் [5]விழுமிய தியன்ற
மாடு பெற்றனன் மற்றினி யென்பெற வருந்தி.

(இ - ள்.) வனத்தைவசிக்குமிடமாகக்கொண்டும் மேகந்தங்குகின்றமலையை வசிக்குமிடமாகக்கொண்டும் மிருகத்தோலாலியன்ற ஆடைகளைக்கொண்டு உடலைமறைத்தும் தலையைமொட்டையடித்துக்கொண்டும் (தலைமயிரைச்)சடையாகத்திரித்துக்கொண்டும் (பல) வகையால் (மிகமுயன்று)மோட்சமடைந்தவர் (தாங்கள்) கையாண்டதான உபாயத்தைக்காட்டிலும்சிறப்புப் பெற்றதாய்ப்பொருந்திய செல்வத்தைப் பெற்றேன்: மற்றும் நான்வருந்திப் பெற (த்தக்கது) யாது (உளது)? (எ - று.)

காட்டிலும் மலையிலும் வசித்துத் தவவேடம்பூண்டு வெகுசிரமப்பட்டுச் சிலசாதனங்களைச்செய்து அவற்றின்பயனாக முத்திநிலையைப் பெறும் யோகிகள்முதலியோர் தாம் கைக்கொண்ட உபாயத்தினும் மேலானஉபாயமென்று கூறும்சிறந்தஉபாயமாவது-பிரபத்தியே: அது கைகூடப்பெற்றேன்: எனக்கு வருந்திப்பெறவேண்டுவது யாதொன்றுமில்லையென்றவாறு. எம்பெருமானே சரணமென்றுஅநுசந்தித்து அவனருளுக்குஇலக்காகி முத்திபெறுதல், எளிய வழியாதல்காண்க. கனம்-பெருமையுமாம். மூடி-உடலைமூடுவதுஎன ஆடைக்கு காரணக்குறி.பி-ம்:—[1]கறை.[2]மூடுபற்றியும்.[3]நீட்டித்தும். [4]முறைசால். [5]விழுமியதமைந்தேன், விழுமிதென் றுரைக்கும். (௧௬௧)

௩௨. செவிக ளாற்பல [1]கேட்டில ராயினுந் [2]தேவர்
அவிகொள் நான்மறை யகப்பொருள் புறப்பொரு ளறிவார்
கவிக ளாகுவர் [3]காண்குவர் [4]மெய்ப்பொருள் [5]காலாற்
[6]புவிகொள் நாயகற் கடியவர்க் கடிமையிற் புக்கார்.

(இ - ள்.) (தன்) திருவடியாற் பூமியையளந்த தலைவனாகிய திருமாலின் அடியவர்க்கு அடிமைசெய்யப்புகுந்த பக்தர்கள்,—பலநூற்பொருள்களை (ப் பெரியோர்கூறத் தமது) காதுகளாற்கேட்டிலரானாலும், தேவர்கட்கு அவிர்ப்பாகங்களைக்கொடுக்கிற (மந்திரபூர்வமாகஉபயோகப்படுகிற) நான்குவேதங்களின்உள்ளுறைபொருளையும் வெளிப்படைப்பொருளையும் (தாமே) அறிவார்கள்: பாடல்செய்யவல்லபுலவராவார்கள்: தத்துவார்த்தங்களை(த் தாமே) பிரதியட்சமாக உணர்வார்கள்; (எ - று.)

இது, திருமாலினடியார்க்கு அடிமைப்படுவதாலாகும்பயனை எடுத்துக்காட்டியது. திருமாலடியார்க்குத் தொண்டுபூண்டவர் ஒருகுருவினிடத்து உபதேசம்பெறுமலே சகலவேதங்களின் புறப்பொருளேயன்றி உட்பொருளையும் அறிவார்: கல்விகேள்விகளில்லாமலே செஞ்சொற்கவிஞரும் முத்திதரும்முதற்பொருளை உணர்வருமாவரென்பதாம்.திரிவிக்கிரமவரலாற்றினால், எல்லாவுயிர்களும் திருமாலுக்கு அடிமைப்பட்டனஎன்பது, நன்குவிளங்குதல் காண்க. பி-ம்:—[1]கேட்கிலர். [2]தேவர்க்கு. [3]காண்குறும், மெய்ப்பொருள். [4]அல்லது, மேற்பொருள். [5]கல்லார். [6]புவிகள். (௧௬௨)

௩௩. எனக்கும் நான்முகத் தொருவற்கும் யாரினு [1]முயர்ந்த
தனக்குந் [2]தன்னிலை யறிவரு மொருதனித் [3]தலைவன்
மனக்கு [4]வந்தனன் [5]வந்தன யாவையு மறையோய்
உனக்கு மின்னதி னல்லதொன் [6]றில்லென வுரைத்தான்.

(இ-ள்.) வேதம்வல்லோனே!(சிற்றறிவினனான)எனக்கும்(நான்குவேதங்களையும் இடைவிடாதுஓதும்படி) நான்குமுகங்களைப்படைத்த ஒப்பற்ற (படைத்தற்கடவுளான)பிரமதேவனுக்கும் எல்லாரினும்மேம்பட்ட(ஸர்வஜ்ஞனை) தனக்கும் தனதுநிலை அறியவொண்ணாதபடியுள்ள ஒப்பற்றஏகநாயகனை ஸ்ரீமந்நாராயணன்,(என்) மனத்து வந்துசேர்ந்துள்ளான்; (ஆதலால்), எல்லாப்பொருள்களும் (எனக்குஅறியுமாறு) வந்திட்டன: உனக்கும் இந்தப் பரம்பொருளைக்காட்டிலும் சிறந்தபொருள் வேறுஇல்லை என்றுகூறிமுடித்தான், (அந்தப்பிரகலாதன்); (எ - று.)

'எப்படிப்பட்டோர்க்கும் உணர்தற்குஅரியநிலையையுடைய அத்விதீய ஞன பரமாத்துமா என்மனத்திலெழுந்தருளியிருத்தலால் யான் எல்லாவற்றையும் ஓதாமலேயுணர்ந்தேன்: நீயோ வேதம்முதலியன ஓதியும் உண்மைப் பொருளையுணரமாட்டாமலுள்ளாய்: போனதுபோகட்டும்: இனி எம்பெருமானது திருநாமத்தையேசொல்லி உய்ந்துபோ' என்று பிரகலாதன் குருவுக்கு உபதேசித்தானென்க. இரண்டாமடி - ''தனக்குந்தன்றன்மையறிவரியானை'' என்ற நம்மாழ்வார் வாக்கின் சொற்பொருள்களைக்கொண்டது. தன்னிலையறிவருமொருத்தன்என்றுகூறிஞல், கடவுள் முற்றுமுணர்ந்தவனென்றுகூறுவதனோடுமாறுபடாதோ? எனின்,—வரம்பற்றுள்ளவற்றை வரம்பற்றன என்று உள்ளபடியுணர்வதே முற்றறிவு ஆகுமாதலால், யாதொருமாறுபாடும் இல்லையென்பர். பி-ம்:—[1]உயர்ந்தோர்தமக்கும். [2]வேறுளசராசரமனைத்திற்கும். [3]கடவுள். [4]வந்தன. [5]சொல்லுவன், வந்தனை. [6]யாதென. (கசு௩)

நசு.—நடந்தசெய்தியைக் குரு இரணியனிடம் தெரிவிக்கச்செல்லல்.

மாற்றம் யாதொன்று முரைத்திலன் மறையவன் மறுகி
ஏற்ற மென்னெனக் கிறுதிவந் தெய்திய தென்று
ஊற்ற மில்லவ னோடினன் கனகனை யுற்றான்
தோற்ற வந்ததோர் கனவு[1]கண் டனனெனச் சொன்னான்.

(இ - ள்.) (பிரகலாதன்சொன்ன இந்தவார்த்தைகளைக்கேட்டவளவிலே),—அந்தஅந்தணன் [குரு] யாதொருமறுமொழியுங் கூறமாட்டாதவனாய் மனங்கலங்கி, '(யான்) ஈடேறும்வழிஎன்ன? எனக்கு அழிவுநேர்ந்திட்டது' என்றுசிந்தித்துத்தைரியஞ்சிறிதும்இல்லாதவனாய் ஓடி இரணியனையடைந்து, வந்துதோன்றியதானஒருகனவைக் கண்டான்போலக்கூறுபவனானான்; (எ-று.) —கூறின வகையை அடுத்த கவியிற் காண்க.

மாணாக்கனாகியபிரகலாதனுடைய குற்றம் தனதுகவனக்குறைவால் வந்ததென்றுகருதி இரணியன் தண்டிக்கப்போகின்றானேயென்ற அச்சத்தினால், 'யான் ஈடேறும்வழி என்?' என்றும், 'எனக்குஅழிவுவந்துநேர்ந்ததே!' என்றுஞ் சிந்தித்து, குரு, அச்செய்தியை இரணியனிடம் எப்படிச்சொல்வதென்று சஞ்சலப்பட்டு ஒருவகையாகக் கூறலாயினனென்க. இதுவரையில் இப்படிப்பட்ட செய்தி இரணியனுடையஅரசாட்சியில் நனவில்நிகழ்ந்ததில்லையென்பதைக் காட்டுவார் 'கனவுகண்டனனெனச்சொன்னான்' என்றார்: கேட்பவர் நம்பிக்கை கொள்ள இடந்தராது அந்நிகழ்ச்சியென்க. இரணியனென்றபெயருக்குப் பரியாயமாக 'கனகன்' என்றார். பி-ம்:—[1]கண்டேன், கண்டால். (கசுச)

நரு.—குரு இரணியனிடம் செய்திகூறல்.

எந்தை கேளெனக் கிம்மைக்கு மறுமைக்கு மியம்பச்
சிந்தை யா[1]லிறை [2]நினைத்தற்கு [3]மடாதன செப்பி
[4]எந்தை யை[5]நினைந் தென்பொருள் முற்றுமென் [6]றுரைத்துன்
மைந்த னோதிலன் வேத[7]மென் றுரைத்தனன் வணங்கி.

(இ - ள்.) 'எனதுஎசமானனே! கேள்: உனதுமகன் எனக்கு இம்மை மறுமைப்பயன்களை [illegible] சொல்லுதற்கும் (மனத்தினால்)சிறிதுநினைப்பதற்

கும்தகுதியல்லாதவார்த்தைகளை(த் தானே)சொல்லிக்கொண்டு,'என துதந்தையைநினைத்தால் என்னகாரியம்முடியும்?' என்றுஞ்சொல்லிவிட்டு, வேதங்களையும் ஓதவில்லை' என்று (குரு இரணியனிடம்) வணக்கத்தோடு (செய்தி) கூறினன்; (எ - று.)

மூன்றாமடி - பிரகலாதன் 'இரணியாயநம:' என்றுசொல்லுதற்குமறுத்ததைக் காட்டும். பி-ம்:—[1]அதை. [2]நினைதற்கும். [3]அடாதெனச். [4]மூர்ந்தையே. [5]உணர்ந்தேன், நினைந்துன்பொருள். [6]உரைத்தான், உரைத்தென், உரைத்து, [7]ஒன்றுரைத்திலன். (கஙரு)

௩௬.—இரணியன் குருவைநோக்கி, 'அவன்சொன்னசொல்லைச் சொல்' எனல்.

அன்ன கேட்டவ னந்தண [1]நந்தமக் கடாத
முன்னர் யாவரு [2]மொழிதரு முறைமையிற் படாத
[3]தன்ன துள்ளுறு முணர்ச்சியாற் [4]புகுவது [5]தந்தது
என்ன சொல்லவ னியம்பிய தியம்புதி யென்றான்.

(இ - ள்.) அந்தச்சொற்களைக்கேட்டு அவ்விரணியன், (குருவைநோக்கி), 'வேதியனே! நமக்குத் தகாததும் முன்பு எவரும் சொல்லும் முறைமைக்குச்சேராததும் தனதுமனத்துத்தோன்றியஅறிவினால் புதிதாகத்தானே கொணர்ந்ததுமாக அம்மைந்தன்கூறியது என்னசொல்? சொல்வாய்' என்று வினவினன்; (எ - று.) பி-ம்:—[1]அந்தணர்க்கு. [2]ஓதரு. [3]புன்மையுள்ளுடை, தன்னதுள்ளுடை. [4]புகுவது. [5]சமைந்தது. (கஙசு)

௩எ.—குரு அது சொல்லத்தகுதியற்றதெனல்.

அரச [1]னஃதுரை செய்தலு [2]மறையவ னஞ்சிச்
சிரத லங்கரஞ் [3]சேர்ந்திடச் செவித்தொளை சேர்ந்த
உரக மன்னசொல் [4]யானுனக் குரைசெயி னுரவோய்
நரக [5]மெய்துவ னுவும்[6]வெந் துகுமென நவின்றான்.

(இ - ள்.) அசுரராசனை இரணியன் அச்சொல்லைக் கூறினவளவிலே, அந்தஅந்தணன் [குரு] அஞ்சி, (தன்) கை தலையினிடத்துச்சேர்ந்திட [தலைமேற்கைகுவிய](நின்று),'வலியோனே!(எனது) இரண்டுகாதுகளின் துவாரத்திலே நுழைந்தபாம்புபோலக்கொடிய அச்சொல்லை நான் உனக்குச்சொன்னால் (அத்தீவினையினால்)நரகத்தையடைவேன்:(எனது)நாவும்வெந்தொழியும்' என்றுசொன்னன்; (எ - று.)—உரகம் - மார்பினாற்செல்வதுஎனக் காரணப்பொருள்படும்வடசொல். செவித்தொளை - உன்காதுகளின்துளையெனினுமாம். பி-ம்:—[1]அன்னவையுரைசெய. [2]அந்தணன். [3]சேர்த்திரு. [4]உனக்குநான். [5]எய்துமென். [6]வெந்திடும். (சஙஎ)

௩அ.—பின்பு இரணியனேவலாற் பிரகலாதன்வந்துதொழுதல்.

[1]கொணர்க மைந்தனை வல்லைநீ ரென்றனன் கொடியோன்
[2]உணர்வி னெஞ்சின [3]னேவலர் கடிதினி னோடிக்
கணனி னெய்தினர் [4]பணியெனத் தாதையைக் கண்டான்
துணையி லான்றனைத் துணையென [5]வுடையவன் றொழுதான்.

(இ - ள்.) (அதுகேட்டுக்) கொடுமையுடையவனான இரணியன் 'புத்திரனை வெகுவிரைவாக அழைத்துக்கொண்டுவருக' என்று ஏவலாளர்க்குக் கட்டளையிட்டான்: நல்லறிவில்லாதமனத்தையுடைய அவ்விரணியனதுஏவலாளர் விரைவாகச்சென்று ஒருகணப்பொழுதிற்குள் (பிரகலாதனை) அடைந்து, '(உன்தந்தையின்) கட்டளை (நீ வரவேண்டுமென்பது)'என்றுதெரிவிக்க, தன் ஒப்பாரில்லப்பனுகிய திருமாலைத்துணையாகவுடைய அந்தப்பிரகலாதன் (சென்று) தாதையைக்கண்டு வணங்கினான்; (எ - று.)

ஐம்பெருங்குரவரில்ஒருவனுதலால், தாதையைக் கண்டவளவிற் பிரகலாதன் தொழுதனனென்க. பி-ம்:—[1]கொணர்கென், கொணர்தி. [2]உணரு நெஞ்சுடை, உணர்விநெஞ்சினர். [3]பணியெனக், ஏவலாற். [4]அருளெனத். [5]உடையவத் தூயோன். (௬௬௮)

௬௬௯.—'நீ குருவின்முன் சொன்ன சொல் யாது?' என்று மைந்தனை இரணியன் வினவுதல்.

தொழுத மைந்தனைச் சுடர்மணி மார்பிடைச் சுண்ணம்
எழுத வன்பினி னிறுகுறத் தழுவிமா டிருத்தி
முழுது நோக்கிநீ வேதியன் [1]கேட்கிலன் முனியப்
பழுது [2]சொல்லிய தென்னது பகருதி யென்றான்.

(இ - ள்.) (தன்னை) வணங்கினமகனான பிரகலாதனை ஒளியையுடைய அழகிய(தனது)மார்பிலே பூசப்பட்டுள்ள சுகந்தப்பொடி(அம்மைந்தனுடைய) உடம்பிலேபடியும்படி அன்போடுஇறுகஅணைத்துக்கொண்டு, (தன்) பக்கத்திலேயுட்காரவைத்து, (அவனை) நன்றாகப்பார்த்து, 'நீ உனதுகுரு கேட்கமாட்டாமல்வெறுக்கும்படி தவறாகச்சொன்னசொல் யாது? சொல்வாய்' என்று வினவினன்; (எ - று.)

பழுது - பயனின்மைகுறிக்கும்உரிச்சொல்லுமாம்: "பழுதுபயமின்றே" என்பது, தொல்காப்பியம். பி-ம்:—[1]கேட்கலின். [2]சொன்ன சொலன்னது, சொன்னசொ லென்னது, சொன்னசொ லென்னசொல். (௬௬௯)

௬௭௦.—பிரகலாதன் தந்தைக்குத் தான்சொல்லிய சொல்லின் மகிமையைக் கூறுதல்.

சுருதி[1] யாதியில் தொடங்குறு [2]மெல்லையிற் [3]சொல்லும்
ஒருவன் யாவர்க்கும் நாயகன் திருப்பெய [4]ருணரக்
கருதக் கேட்டிடக் கட்டுரைத் திடர்க்கடல் கடக்க
உரிய [5]மற்றிதின் நல்லதொன் [6]றில்லென வுரைத்தான்.

(இ - ள்.) 'வேதம் ஓதத்தொடங்குகையில், முதலிற் கூறும் (பிரணவத்தின் சொரூபமாகி) எல்லோர்க்கும் ஒப்பற்ற தனிநாயகனான கடவுளினது திருநாமமே (யான்கூறியது): (யாவரும்) அறிதற்கும் தியானித்தற்கும் உபதேசமாகக் கேட்டற்கும் உறுதியாகக்கூறிப் பிறவித்துன்பங்களைக் கடத்தற்கும் உரியதான இந்தத் திருப்பெயரினும் சிறந்தபெயர் வேறொன்றுமில்லை' என்று சொன்னான், (பிரகலாதன்); (எ - று.)

திருப்பெயர் என்ற எழுவாய்க்கு, 'யான்கூறியது' என ஏற்ற பயனிலை வருவிக்கப்பட்டது.சுருதி-எழுதாக்கிளவி. பி-ம்:—1ஆதிய, ஓதிய, யாவையும், ஆயது. 2வேலையை, வேலையிற். 3சொன்னேன். 4உரைக்க, உரைத்தேன். 5மற்றிது. 6என்றன னுரவோன். (௩௭௦)

௪௧.—மகனைநோக்கி இரணியன் 'அச்சொல் இன்னதென்று குறித்துக்கூறு' எனல்.

தேவர் 1செய்கைய னங்ஙன முரை2செயத் தீயோன்
தாவில் வேதியன் தக்கதே யுரைசெயத் 3 தக்கான்
ஆவ 4தாகுக வன்றெனி 5னறிகுவ 6மென்றே
7ஏவ தவ்வுரை 8விளம்புதி 9விளம்புதி யென்றான்.

(இ - ள்.) (அசுரகுலத்துப் பிறந்திருந்தும்) தேவர்க்கு உரிய சாத்துவிககுணத்தையுடைய அந்தப்பிரகலாதன் அவ்வாறு சொல்லவே, கொடியோனாகிய இரணியன், 'குற்றமற்ற அந்தணனாகிய குரு தகுதியானதையே கூறத்தக்கவன்; ஆகிறது ஆகட்டும்: (மகன்கூறியது தகுதி) அல்லாததாயின் (அதன்மேற் செய்யவேண்டுவதை) ஆலோசிப்போம்' என்று எண்ணி, (மகனை நோக்கி), '(நீசொன்ன) அச்சொல் என்னசொல்? சொல்லுவாய் சொல்லுவாய்' என்றான்; (எ - று.)

பிரகலாதன் தன் விடையில் 'வேதம் தொடங்குமளவிற் சொல்லுஞ் சருவேசுவரனது திருநாமமே யான் சொன்னது' என்று பொதுவாகக்கூறவே, இரணியன், குருவின்வார்த்தையிலுள்ள நம்பிக்கையினால், 'புத்திரன் மீது குரு கூறிய குற்றம் விளக்கமாகத் தெரியுமாயின் பின் அதற்குப்பரிகாரத்தை ஆலோசிப்போம்' என்று கருதி, மெல்லத் தன்மைந்தனைப் பார்த்து, 'நீ சொன்ன அச்சொல்லை விளக்கமாகக் கூறுவாய்' என்றனனென்க. தக்கதே யுரைசெயத்தக்கான் என்றதொடர்-இரட்டுறமொழிதலால், 'தொடக்கத்தில் தக்கதையே சொல்லச் சொல்லியிருப்பானேயன்றி வேறல்லன்' என்றும், 'அவன் நமது மகன்மீது சொன்ன குற்றம் தகுதியற்றதாயிராது' என்றும் இருவகையாகப் பொருள்படும். பி-ம்:—1செய்கையது. 2என. 3தகுவன். 4ஆகுவது, ஆகுவன். 5அறிகுவது, அறிகுவன். 6அன்றே. 7யாவது. 8இயம்புதி. 9இயம்புதி, விரைவினின். (௩௭௧)

௪௨.—இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்: தான் சொன்னது நாராயணநாமமென்பதையும் அதன்மகிமையையும்எடுத்துக்கூறுதலைத்தெரிவிக்கும்.

காமம் யாவையுந் தருவது மப்பதங் கடந்தாற்
சேம வீடுறச் செய்வதுஞ் செந்தழல் 1முகந்த
ஓம வேள்வியி 2னுறுபத 3முய்ப்பது மொருவன்
நாம மன்னது 4கேள்நமோ நாராய ணாய.

(இ - ள்.) விரும்பிய புருஷார்த்தங்களை யெல்லாம் கொடுப்பதும், அந்தத் திரிவர்க்கத்தின்நிலையைக் கடந்துவிட்டால் அழிவில்லாத (அபவர்க்கமாகிய) மோட்சத்தை அடையச்செய்வதும், செந்நிறமுள்ள அக்கினியிலே (நெய் முதலியவற்றை) மொண்டுசொரியும் ஓமத்தையுடைய யாகங்களி

னால் அடையப்படும் சுவர்க்கம்முதலியபோக ஸ்தானங்களில் அடைவிப்பதும், ஒப்பற்ற எம்பெருமானது திருநாமமாம்: அத்திருநாமத்தை (இன்னதென்று சொல்லக்) கேட்பாயாக: அது நமோ நாராயணாயஎன்பது; (எ - று.)

மகாமந்திரமாதலின், பிரணவத்தை நீக்கி அஷ்டாக்ஷரத்தைக் கூறினார். காமம்-அறம்பொருளின்பம். வேள்வியினுறுபதம்-சுவர்க்காதி மேலுலகங்கள். "மூன்றும் விட்டதே பேரின்பவீடு" என்றாற்போல, 'அப்பதங்கடந்தாற் சேமவீடுறச்செய்வது' என்றார். பி-ம்:—[1]அழுந்த, முகத்த, முகத்தின். [2]உருபயன். [3]துய்ப்பதும், உகப்பதும். [4]கேட்டியோநமோ. (௧௭௨.)

௪௩. மண்ணி னின்றுமேல் மலரய னுலகுற வாழும்
எண்ணில் பூதங்கள் நிற்பன திரிவன விவற்றின்
உண்[1]ணி றைந்துள [2]கரணத்தி னூங்குள [3]வுணர்வும்
எண்ணு கின்றதிவ் வெட்டெழுத் தேபிறி தில்லை.

(இ - ள்.) பூலோகம்முதல் (எல்லாவுலகங்களுக்கும்) மேலுள்ளதாகிய தாமரைமலரில்வாழும் பிரமதேவனது சத்தியலோகமளவும் (எல்லாவுலகங்களிலும்)பொருந்தவாழ்கின்ற அளவில்லாத சரம் அசரம் எனப்படும்பொருள்களின் உள்ளேபொருந்தியுள்ள மனத்தினிடத்திலேயுள்ள அறிவும் நினைக்கின்றது, இவ்வஷ்டாக்ஷரமேயாம்: (இப்படிப்பட்டது),வேறு இல்லை; (எ-று.)

எல்லாவுலகங்களிலுமுள்ள சராசரப்பொருள்கள் அனைத்தின் உணர்ச்சியும் செல்லுதற்கு இடமாவது, திருவெட்டெழுத்தே யென்பதாம். மண் என்றது - அதன்கீழுள்ள ஏழுலகங்களையும் அடக்கிநின்றது. நிற்பனதிரிவன பூதங்கள்இவற்றின்உள் நிறைந்துள கரணம் என்க. பி-ம்:—[1]நிறைந்தன, நிறைந்துளன், நிறைந்துறை. [2]கருமத்தின். [3]உணர்வின், உணர்வால். (௧௭௩)

௪௪. முக்கட் டேவனும் நான்முகத் தொருவனு [1]முதலா
மக்கட் காறுமிம் மந்திர [2]மறந்தவ ரிறந்தார்
புக்குக் காட்டுவ [3]தரிதிது [4]பொதுவுறக் [5]கண்டார்
ஒக்க [6]நோக்கின ரல்லவ [7]ரிதனிலை யுணரார்.

(இ - ள்.) மூன்றுகண்களையுடைய மகாதேவனும் நான்குமுகங்களையுடைய பிரமதேவனும் முதலாகச் சாதாரணமனிதர்களளவும் இந்தத் திருமந்திரத்தை மறந்தவர்கள் இறந்தவரேயாவர்: இதன்மகிமை (பிறர்க்கு) விவரித்துக் காட்டுதற்கு அருமையானது: (மதவேறுபாடுகளைப்பற்றிய பட்சபாதமில்லாமல்) நடுவுநிலைமைபொருந்தப் பார்க்குந்தன்மையுள்ள ஞானிகள், (இதன் மகிமையை)த் தகுதியாகக் கண்டுள்ளார்: கல்லாத பிறர் இதன் நிலைமையை யறியமாட்டார்; (எ - று.)

திரிநேத்திரன் சதுர்முகன் முதலிய சிறந்ததேவர்கள் முதலாகச் சாதாரணசனங்கள் ஈறாக எல்லோரும் உயிர்த்து வாழ்வது இந்த மந்திரத்தைஜபித்தலின்பயனாகவேயென்பது, முன்னிரண்டடியின் கருத்து. [2]மறந்தவர் மறந்தார் என்ற பாடத்துக்கு - இந்த மகாமந்திரத்தை மறந்தவர்கள் எல்லாவுணர்ச்சிகளையும் இழந்தவரேயாவரென்றும், அப்படிப்பட்டவர் அனைவராலும் மறக்

கத்தக்கவரே யென்றும் பொருளாம். பி-ம்:—[1]முதலோர். [2]மறந்திலர், வாழ்வார். [3]அரிதென, அரிதது. [4]பொதுவற. [5]காண்பார். [6]நோக்கிடு நல்லவர். [7]அதனிலே, தன்னிலே. (௧எ௪)

௪௫. தோற்ற மென்னுமத் தொல்வினைத் [1]தொடுகடற் சுழிநின்று
ஏற்று நன்கல [2]னருங்கலன் யாவர்க்கு மினிய
[3]மாற்ற மங்கல் [4]மாதவர் வேதத்தின் [5]வரம்பின்
[6]தேற்ற [7]மெய்ப்பொருள் [8]தெரிந்தமற் றிதினில்லை சிறந்த.

(இ - ள்.) பிறவியென்கின்றஆழ்ந்தகடலினது அப்படிப்பட்ட பழவினையாகிய சுழியினின்று (உயிர்களை மோட்சமாகியஅக்கரையிலே) சேர்க்கின்ற சிறந்தமரக்கலமாயுள்ளதும், யாவர்க்கும் (பெறுதற்கு) அரிய ஆபரணம்போல விளக்கத்தைச்செய்வதும், இனியமங்கலச்சொல்லாகவுள்ளதும்,பெருந்தவசிகளாற்பாராட்டப்படுகின்ற வேதங்களின்எல்லையாகிய உபநிஷத்துக்களின் சித்தாந்தமான தத்துவப்பொருளுமாக அறியப்பட்ட இந்தத்திருமந்திரத்தைக் காட்டிலும் சிறந்தவை வேறுஇல்லை; (எ - று.)

தோற்றமென்னும் தொடுகடல்அத்தொல்வினைச்சுழி என்றும், இனிய மங்கலமாற்றம் என்றும் மொழிமாற்றுக. முதலிரண்டடி-உருவகவணி. கலத்திற்குநன்மை-அபாயமின்மை. திருமந்திரத்தை மரக்கலம்முதலியவாகப் பலபடியாகக் கூறியது-பலபடப்புனைவணி. பி-ம்:—[1]சுடுகடல். [2]அருங்குலம். [3]மாற்று. [4]மாதவ. [5]மரபிற், வைப்பிற். [6]தேற்றி, தேற்றம். [7]அப்பொருள். [8]திருந்த. (௧எ௫)

௪௬. உன்னு யிர்க்குமென் னுயிர்க்குமிவ் வுலகத்தி னுள்ள
மன்னு யிர்க்குமீ துறுதி[1]யென் றுணர்வுற [2]மதித்துச்
[3]சொன்ன திப்[4]பெய ரென்றன னறிஞரிற் றாயோன்
மின்னு யிர்க்குவே லிரணியன் [5]றழலெழ விழித்தான்.

(இ-ள்.) இந்தத்திருநாமம்,—உனதுஉயிருக்கும் எனதுஉயிருக்கும் இந்தவுலகத்திலேயுள்ள நிலைபெற்றஎல்லாவுயிர்கட்கும் இதுவேமேலானஉறுதியை விளைப்பதென்று(செவ்வையாக)அறிவிலேபொருந்த ஆலோசித்துச்சொல்லியதாகும்என்றுசொல்லினன், அறிவுடையாரிற்பரிசுத்தனாகிய பிரகலாதன்: (அங்ஙனஞ்சொன்னளவிலே), மின்னல்போன்ற ஒளியைவெளிவீசுகின்றவேலாயுதத்தையுடையஇரணியன், (கண்களிலிருந்து) நெருப்புப்பொறிபறக்க(ப்பெருங்கோபத்தோடு) விழித்துப்பார்த்தான்; (எ - று.)

உறுதிதருவதனைஉறுதியென்றது, இலக்கணை. தான் ஆராய்ந்தேகூறியதென்பான் 'உணர்வுறமதித்துச்சொன்னதிப்பெயர்'என்றான். பி-ம்:—[1]என்பதை. [2]மதித்தேன். [3]சொன்ன. [4]பொருள். [5]அழல். (௧எ௬)

௪எ.—இதுமுதற்பத்துக்கவிகள் - இரணியன் பிரகலாதனைச் சினந்துகூறுவதைத் தெரிவிக்கும்.

௪எ. [1]இற்றை [2]நாள்வரை யானுள நாள்[3]முத [4]லிப்பேர்
சொற்ற [5]வாயையுங் கருதிய மனத்தையுஞ் சுடுமென்

ஒற்றை யாணைமற் றியாருனக் கிப்பெய ருரைத்தார்
கற்ற தாரொடு சொல்லுதி விரைந்[6]தெனக் கனன்ருன.

(இ - ள்.) யான் உண்டானநாள்முதல் இன்றைத்தினமளவும் (நீ குறித்த)இந்தப்பெயரைச் சொன்னவாயையும்(இப்பெயரைச்)சிந்தித்த மனத்தையும் என்னுடைய ஒப்பற்றஆஜ்ஞை எரித்திடும்: (அங்ஙனமிருக்க), இந்தப் பெயரை உனக்குச்சொன்னவர் யாவர்?(நீ இதனைக்) கற்றுக்கொண்டது யாவரிடத்தில்? விரைவாகச்சொல்லுவாயென்றுகோபித்தான்; (எ - று.)—மற்று - வினைமாற்று.

பிரகலாதன்கூறிய பெயரைத் தன்வாயால் அனுவதித்துக் கூறுதற்கும் மனமில்லாமையால்'இப்பெயர்' என்கின்ருன். கற்றதாரொடு-வேற்றுமைமயக்கம்.

பி-ம்:—[1]அற்றை.[2]நாண்முதல். [3]வரை. [4]அப். [5]நாவை. [6]எனக்கென்ருன்.

௬௮. [1]முனைவர் வானவர் முதலினர் [2]மூன்றுல கத்தும்
[3]எனைவ ருள்ளவர் யாவரு மென்னிரு கழலே
நினைவ [4]தோதுவ தென்பெயர் நினக்கிது [5]நேர
அனைய ரஞ்சுவர் மைந்தநீ யாரிடை யறிந்தாய்

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) (மற்றையனைவர்க்கும்) முந்தினவர்களாகிய திரிமூர்த்திகளும் மற்றையதேவர்களும் முதலாக மூவுலகங்களிலும் (இத்தன்மையரான) எவ்வகைப்பட்டவராயுள்ளவரெல்லோரும் (எப்போதும்) தியானிப்பது எனது உபயபாதமே: (துதித்துக்)கூறுவது என்பெயரே; (ஆதலின்), அவர்களெல்லோரும் உனக்கு இந்தப்புதியபெயரைக் கூறுதற்கு அஞ்சுவார்கள்: (ஆகவே), பிள்ளாய்! (இதனை) நீ வேறுயாரிடத்து உணர்ந்தாய்? (எ - று.)

"முன்னென்னை முனைவனென்பது, ஓர்சொல்விழுக்காடாம்: முன்என்பதனை முனையென்பவாகலின்" என்று நச்சினார்க்கினியர்கூறுவாராதலால், முனைவரென்பதற்கு - முன்னையவரான திரிமூர்த்திகளெனப் பொருள்கொள்ளப்பட்டது; இதற்குப்பழமையரான முனிவரெனப்பொருள்கூறலும்ஒன்று.

பி-ம்:—[1]முனிவர். [2]முற்று. [3]அனையர், இனையர். [4]எத்துவது. [5]நேர்வார். [6]அஞ்சல்நீ. (௧௭௮)

௬௯. மறங்கொள் வெஞ்செரு மலைகுவான் பன்முறை வந்தான்
கறங்கு வெஞ்சிறைக் கலுழன்தன் கடுமையிற் [1]கரந்தான்
பிறங்கு தெண்டிரைப் பெருங்கடல் [2]புக்கினம் பெயராது
உறங்கு வான்பெய [3]ருறுதியென் றுருனக் குரைத்தார்.

(இ - ள்.) வலிமைகொண்ட கொடியபோரை (என்னோடு) செய்யும் பொருட்டுப் பலதரம்எதிர்த்துவந்து,ஒலிசெய்கிறகொடியசிறகையுடைய(தன் வாகனமாகிய) கருடனுடையவேகத்தால் (தப்பியோடி) மறைந்து, ஒலிக்கிற தெளிவானஅலைகளையுடைய பெரியபாற்கடலிலே புகுந்து இன்னும் அவ்விடத்தைவிட்டு அப்பால்வராமல் தூங்கிக்கிடப்பவனை விஷ்ணுவினுடைய பெயரை உறுதிதருவதென்று உனக்கு எவர் உபதேசித்தார்? (எ - று.)

திருமால் திருப்பாற்கடலிற்பள்ளிகொண்டு அறிதுயில்புரிவதனை, அப்பெருமான் தனக்குஅஞ்சிக் கடலிலொளிந்துகொண்டு உறங்கிக்கிடப்பதாக இரணியன் கற்பித்துக்கூறுகின்றான். கறங்குசிறை - காற்றாடிபோலச்சுழல்கின்ற சிறையுமாம். கலுழன் = கருடன்; வடசொற்சிதைவு. பி-ம்:—[1]கழிந்தான். [2]புக்கபின். [3]ஆருனக்குறுதியென்று. (௬௭௯)

௫௦. பரவை நுண்மணா லெண்ணினு மெண்ணரும் பரப்பிற்
குரவர் [1]நங்குலத் துள்ளவ ரவன்கொலக் குறைந்தார்
அரவினு மத்தை யெலியிருந் தோதினு லதற்கு
விரவு நன்மையென் துன்மதி விளம்பென வெகுண்டான்.

(இ - ள்.) கடலினுடைய நுண்ணியமணலை எண்ணி வரையறைசெய்யமுடிந்தாலும் எண்ணிவரையறைசெய்யமுடியாத பெருந்தொகையையுடைய நமதுகுலத்தில்தோன்றிய பெரியோர் (பலர்) அந்தவிஷ்ணுகொல்ல அதனால் இறந்தார்கள்: (தன் இனத்துப் பகையாகிய) பாம்பின்பெயரை எலி இடைவிடாதுசொன்னால் அவ்வெலிக்கு (அதனால்) வரும் நன்மை யாது? துர்ப்புத்தியுடையவனே!(நீ)சொல் என்று சினந்துகூறினன், (இரணியன்); (எ - று.)

"ஒலித்தக்காலென்னாம்உவரிஎலிப்பகை, நாகமுயிர்ப்பக்கெடும்" என்றபடி மிகப்பலஎலிகள்திரண்டு ஆரவாரித்தாலும் அவற்றை மிகஎளிதில்அழிக்கவல்ல பிறவிப்பகையான பாம்பின்பெயரை ஓரெலி கூறியதனால் அதற்கு என்னநற்பயன்? என்ற இந்த உபமானவாக்கியம்-அசுரர்களைஅழிக்கும் இயற்பகையான விஷ்ணுவின்திருநாமத்தை ஓதுவதால் உனக்கு யாதொருநன்மையும்நேராதுஎன்ற உபமேயக்கருத்தைத் தெரிவித்தலால், பிறிதுமொழிதலணியாம். பி-ம்:—[1]எம், என். (௬௮௦)

௫௧. வயிற்றி னுள்ளுல கேழினே டேழையும் வைக்கும்
[1]அயிர்ப்பி லாற்றலென் [2]ன னுசனை யேனமொன் றாகி
எயிற்றி னுலெறிந் தின்னுயி ருண்டவ னுமம்
பயிற்ற வோ[3]நினைப் [4]பயந்தது நானெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) பதினன்குலோகங்களையும் (தன்)வயிற்றினுள்ளேவைக்கவல்லவனும் சந்தேகத்துஇடனில்லாத[துணிவான]வல்லமையுள்ள எனது தம்பியான இரணியாட்சனை ஒருபன்றிவடிவமாகிக் கோரதந்தத்தினாற்குத்தி (அவனுடைய) இனியஉயிரைக்கொண்டவனுமான விஷ்ணுவினுடையபெயரைப் பழகுதற்காகவோ நான் உன்னைப்பெற்றது?என்றுபின்னும்கூறினன்;(எ-று.)

ஒருகாலத்திற்பூமியைப் பாயாகச்சுருட்டி எடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாட்சனைத் திருமால் தேவர்முனிவர்முதலியோரது வேண்டுகோளினால் மகாவராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்துக்கொண்டுவந்து பழையபடிவிரித்தருளினனென்பது, இதிற் குறித்த கதை. பி-ம்:—[1]அயர்ப்பு. [2]அண்ணலை, அண்ணனை. [3]உனை. [4]வளர்த்தது. (௬௮௧)

௫௨. ஒருவன் யாவர்க்கு [1]மெவற்றிற்கு[2]மிவ் வுலகிற்கு [3]முதல்வன்
தருதல் [4]காக்குதல் [5]தவிர்த்தலென் றிவைசெயத் தக்கான்

கருமத்தா லன்றிக் [6]காரணத்தா லுள்ள காட்சி
திருவிலீ மற்றி தெம்மறை[7]ப் பொருளெனத் [8]தெரிந்தாய்.

(இ - ள்.) வாழ்வற்றவனே! உயர்திணைப்பொருளெல்லாவற்றிற்கும் அஃறிணைப்பொருள் எல்லாவற்றிற்கும் (இவ்விருவகைப்பொருட்கும் ஆதாரமான) உலகங்களெல்லாவற்றிற்கும் தலைவனுகுபவனும், (எல்லாப்பொருளையும்)படைத்தலும் பாதுகாத்தலும் அழித்தலும்என்ற இந்த முத்தொழில்களையும் செய்யத்தக்கவனும் நானொருவனே: (இங்ஙனம் நடக்கும்) தொழிலால் அறிவதன்றி,காரணப்பொருளைப்பற்றி வேறாகக்காணும்இக்காட்சிளந்தவேதத்தின் சித்தாந்தமென்று உணர்ந்துள்ளாய்? (எ - று.)—மற்று - அசை.

எல்லாவுலகங்கட்கும் அங்குள்ள உயர்திணை அஃறிணைப்பொருள்கட்கும் நானே தலைவனுகவும் படைத்தல்முதலியதொழிலைச் செய்யத்தக்கவனுகவுமிருக்கக் காண்கின்ற இந்தபிரதியட்சபிரமாணத்தைக்கொண்டு என்னையே கடவுளென்றுதுணிவதைவிட்டு, புகையைக்கண்டு நெருப்பைஅனுமானிப்பதுபோல, பிரபஞ்சத்தைக்கண்டு வேறே கடவுளுண்டென்று ஊகித்தறிவது சிறவாதென்றவாறு. இதனையும் அடுத்தசெய்யுளையும் பிரகலாதன்வார்த்தையாகக்கொண்டு நலிந்துபொருள்கொள்வாருமுளர். பி-ம்:—[1]எவர்க்கும், எவர்க்குமேல். [2]முதல்வர்க்கும். [3]இறைவன். [4]காத்தல். [5]அழித்தல். [6]காரணத்துளனெனும்,காரணனுளனெனும்.[7]துணிவென. [8]தெளிந்தாய், திரிந்தாய்.(கஅஉ)

ருங. ஆதி யந்தங்க [1]ளிதனின்மற் றில்லை[2]பே ருலகின்
வேத மெங்ஙன மங்ஙன மவைசொன்ன விதியாற்
கோதி னல்வினை செய்தவ ருயர்குவர் [3]குறித்துத்
தீது செய்தவர் [4]தாழ்குவ ரிதுமெய்ம்மை தெரியின்.

(இ - ள்.) வேதங்கள் எவ்வாறு கூறியுள்ளனவோ அங்ஙனம் அவை சொல்லியமுறை தவறாமல் குற்றமில்லாத (தவம் முதலிய) நல்லதொழில்களைச் செய்தவர் மேம்படுவார்கள்: கொடியசெயலை யெண்ணிச்செய்தவரோ தாழ்ச்சியடைவார்கள்; ஆலோசிக்குமிடத்து, இது உண்மையே: பெரிய உலகத்தில் இங்ஙனமன்றி (இயற்கையில்) முதலாயுள்ள பொருளும் கடையாயுள்ள பொருளும் வேறுஇல்லை; (எ - று.)

வேதசாஸ்திர விதிப்படி நல்வினைசெய்வார் மேம்படுவர்:தீவினைசெய்வார் கீழ்மைப்படுவர்: இதுவேயொழிய, உலகத்திலே இயற்கையாகவே உயர்வான பொருளும் தாழ்வான பொருளும் வேறுஇல்லை; ஆகவே, பெருந்தவம் இயற்றிய யான் மேம்படுதல் தக்கதே யென்றவாறும். பி-ம்:—[1]இல்லையெவ்வலகில், இல்லையவ்வுலகில். [2]பேருணரின். [3]குறித்த. [4]ஆழ்குவர். (கஅங)

ருச. செய்த மாதவ முடைமையி னரியயன் சிவனென்று
எய்தி னார்பத மிழந்தனர் யான்றவ மியற்றிப்
பொய்யி னுயகம் [1]பூண்டலி [2]னினியது புரித
[3]னெய்ய தாகுமென் [4]ருருமென் காவலி [5]னுழைந்தார்.

(இ - ள்.) (ஆதிகாலத்திலே) செய்த பெருந்தவம் இருந்ததனால் அரி அயன் சிவன் என்ற பதவியைப் பெற்றவர்,—யான் (அவரினும்)பெருந்தவ

மியற்றிப் பொய்ம்மையில்லாத தலைமையை மேற்கொண்டதனால் (அந்தத் தமது) நிலைமையை யிழந்தார்களாய், இனி தாம் (தமக்கு உள்ள படைப்பு அளிப்பு அழிப்பு என்ற) அந்தத்தொழிலைச்செய்வது (பெருந்தவனான இந்த இரணியனுக்கு முன்னேநமக்கு) எளிமையைத்தருவதா மென்று அத்தொழிலை விட்டு அவர்கள்யாவரும் என்காவலுக்குள் நுழைந்திட்டனர்; (எ - று.)

அது புரிதல் நொய்யதாகும் என்பதற்கு - இரணியனை என் காவலில் நுழைந்திருத்தல் சுலபமான செயலென்று உரைப்பாரு முளர். தனது நாயகத்தைப் பொய்யில்நாயகமென்றதனால், திரிமூர்த்திகளின் நாயகம் பொய்ம்மைப்பட்ட நாயகமென்பது, பெறப்படும்: நான்காமடி 'நொய்தினவதென் னேருமென்காவிநுழைவல்வார்' என்று சிலபிரதிகள். பி-ம்:—[1]பூண்டபின், பூண்டனன். [2]இனியவைசெய்தல், இனியெதிர்பொருதல். [3]நொய்தல். [4]ஏவருமேவலின். [5]நுழைவார், உழல்வார். (கஅச)

ருரு. வேள்வி [1]யாதிய புண்ணியந் தவத்தொடும் விலக்கிக்
கேள்வி யாவையுந் தவிர்த்தன னிவைகிளர் பகையைத்
தாழ்வி யாதன செய்யுமென் [2]றனையவர் தம்பால்
[3]வாழ்வி யாதய லெவ்வழிப் புறங்கொண்டு வாழ்வார்.

(இ - ள்.) 'இந்தயாகம் தவம் முதலிய செயல்கள் ஊக்கமுள்ள பகைவர்களைத் தாழ்வியாத மேன்மைகளை யுண்டாக்கும்' என்று கருதி (அந்த) யாகம் முதலிய நற்கருமங்களையும் தவத்தையும் செய்யவொட்டாமல்தடுத்து, சாஸ்திரவிசாரம் முழுவதையும் தடுத்துவிட்டேன்: (ஆகவே), அந்தத் திரிமூர்த்திகள் தம்மை வாழ்வுறச்செய்யாது அயலாரை எப்படிப் பாதுகாத்து வாழ்வார்? (எ - று.)

நான் அந்தத் திரிமூர்த்திகளையே யாகம்முதலியனசெய்து என்னினும் மேம்படவொட்டாமல் அடக்கிவைத்திருக்கிறேன்: அவ்வாறிருக்க, அந்தத் திரிமூர்த்திகளில் ஒருமூர்த்தியான விஷ்ணுவால் உனக்கு எப்படி நன்மையுண்டாகுமென்று பிரகலாதன்செயலைக் கண்டித்தவாறு. மூன்றாமடியில் 2எனையவர் தம்பால் என்று பாடங்கொண்டு, நான்அரிமுதலியோரை யாகம் முதலியன செய்யாமலும் சாஸ்திரவிசாரஞ் செய்யாமலுமிருக்கச் செய்திட்டேனாதலால், (அவர்கள் என்னையே கடவுளாகக்கொண்டு), தங்கள் காரியங்களிலெல்லாம் என்னையே துதித்து வாழ்கின்றனரே யன்றி, என்னைவிட்டுப் போய்த் தப்பி வாழும் வழி யாதுமிலரென்றலும் ஒன்று. இப்பொருளில்,எனை வாழ்வியாது என இயையும். இவையென்பது-வேள்வி முதலிய நற்கருமங்களையும், பகையென்பது-அரிமுதலியோரையுங் காட்டும். பி-ம்:—[1]ஆகிய. [2]எளியவர்தம்பால். [3]வாழ்வியாதவர். (கஅரு)

ருசு. பேதைப் பிள்ளைநீ [1]பிழைத்தது பொறுத்தனென் [2]பெயர்த்தும்
[3]ஏதில் வார்த்தைக [4]ளினையன விளம்பலை முனிவன்
யாது [5]சொல்லின னவை[6]யவை யிதமென வெண்ணி
[7]ஓதி போதியென் றுரைத்தன [8]னுலகெலா முயர்ந்தோன்.

(இ - ள்.) அறியாமையையுடைய பிள்ளாய்! நீ தவறுசெய்ததை (இப்போது)பொறுத்தேன்;(மீண்டும்)இவ்வாறான யாதொருபயனுமில்லாத வார்த்தைகளைச் சொல்லாதே: குரு எதைச்சொல்லுகின்றானோ, அந்தந்த வார்த்தையை நன்மை தருவதென்று எண்ணி, ஓதுவாய்; போ என்று சொன்னான்: (யாவனெனில்),—உலகமுழுவதும் உயர்வுபெற்றவனான இரணியன்;(எ-று.)

ஏதில் வார்த்தைகள் - யாதோரியைபு மில்லாத வார்த்தைகளென்று பொருள்கொள்ளினுமாம். இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை. பி - ம்:—[1]உரைத்தது. [2]பிழைத்தும். [3]மேதை. [4]இனியன. [5]உரைத்தனன். [6]இவை. [7]ஓதுபோவென, ஓதிபோதியென்று. [8]உலகினுள். (கஅசு)

வேறு.

ருஎ.—இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - இரணியனுக்குப் பிரகலாதன் அறிவுறுத்துவன கூறும்.

உரையுள துணர்த்துவ துணர்ந்து கோடியேல்
விரை[1]யுள வலங்கலாய் வேத [2]வேள்வியின்
கரை[3]யுள தியாவரும் [4]கற்குங் கல்வியின்
பிரையுள தென்பது மைந்தன் [5]பேசினான்.

(இ - ள்.) நறுமணமுள்ள பூமாலையைத் தரித்தவனே! (நான் உனக்கு) அறிவிக்கவேண்டிய வார்த்தை இருக்கிறது: (அதனை எத்தன்மையதென்று) அறிந்துகொள்வாயேயானால், (அது), வேதங்கட்கும் யாகங்கட்கும் முடிவெல்லையாக உள்ளது:(அன்றியும்),யாவரும் கற்குங் கல்விக்குப் பிரையாகவுள்ளது என்பதை எடுத்துச் சொன்னான், பிரகலாதன்; (எ - று.)

'வேதவேள்வியின் கரையுளது'என்பதற்கு-வேதாந்தங்களிற் கூறப்படுவதென்றும், வேதங்களுக்கு எட்டாமல் அப்பாலுள்ளதென்றும், யாகங்கள் சென்று சேரும் இடமாகவுள்ளதென்றும் கருத்து. பிரை-பாலைத் தயிராக்கும்பொருட்டு அதிற் குத்தப்படும் சிறுமோர்த்துளி: அது தான் சிறிதாயினும் பால் முழுவதையும் திரித்துத் தன்மயமாக்குவதுபோல, யான் சொல்லும் வார்த்தை சுருக்கமுடையதாயினும் பிறரது சாதாரண கல்விஞானம் முழுவதையும் தன்வசமாக்கவல்லது என்பான் 'யாவருங்கற்குங் கல்வியின்பிரையுளது' என்றான். பிரையென்றதற்கு ஏற்பக் கல்வியைப் பாலாகக் கொள்க. பி-ம்:—[1]உளர். [2]வேலையும், வேலையின். [3]உளயாவையும். [4]கறங்கும். [5]பேசுவான். (கஅஎ)

ருஅ. வித்தின்றி விளைவதொன் றில்லை வேந்தநின்
பித்தின்றி யுணர்தியே லளவைப் [1]பெய்குவன்
உய்த்தொன்று மொழிவின்றி [2]யுணர்தற் [3]பாற்றெனக்
[4]கைத்துன்று நெல்லியங் கனியிற் காண்டியால்.

(இ - ள்.) அரசனே! விதையில்லாமல் முளைப்பதொரு விருட்சவர்க்கம் இல்லையன்றோ! உன்னுடைய விபரீதஞானத்தைவிட்டு உண்மையையறியத் தொடங்கினால், (தத்துவப் பொருளையறியும்) வகையைக் கூறுவேன்: (நான்

கூறுவது); சிறிதும் விடாமல் ஊன்றியறியத்தக்கதென்று எண்ணி, கையினிடத்துப் பொருந்திய நெல்லிப்பழத்தைப்போல (அதனை உள்ளபடி)விளங்கவுணர்வாய்; (எ - று.)

வித்தின்றி விளைவதில்லை யென்ற வாக்கியம்-மூலகாரணப்பொருளாகிய கடவுளொருவரில்லாமல் இந்தப்பிரபஞ்சம்தோன்றாது என்ற உபமேயக் கருத்தைக் காட்டுவதால், பிறிதுமொழிதலணியாம். பித்து-விபரீதஞானம். கைம்மாறு கருதாமற் கூறுவேனென்பான் 'பெய்குவன்' என்கின்றான். கையிலுள்ள நெல்லிக்கனியை யுணர்வதுபோலத் தத்துவப்பொருளை என் சொல்லால் ஐயந்திரிபு அற உணர்வாயென்பது;ஈற்றடியிற் கூறிய விஷயம்.பி-ம்:—[1]செய்தனன், பெய்தன, பெய்தனன். [2]உணர்த்தல், [3]பாற்றன. [4]கைத்தொன்று. (கஅஅ)

௫௯. தன்னுளே யுலகங்க ளெவையுந் [1]தந்தவை
தன்னுளே நின்றுதா [2]னவற்றுட் டங்குவான்
பின்னிலன் முன்னில [3]னொருவன் [4]பேர்கிலன்
தொன்னிலை யொருவராற் றுணியற் [5]பாலதோ.

(இ-ள்.) ஒப்பற்ற முதற்கடவுள்,—தன்னுள்ளிருந்து எல்லாவுலகங்களையும் உண்டாக்கி, அவற்றுக்குள்ளே தான் (பலவடிவமெடுத்து)நிற்பதல்லாமல், (தான் எள்ளினுள் எண்ணெய்போல) அவற்றினுள்ளெல்லாந் தங்குவான்; பின்னும் முன்னும் இல்லாதவன்:நிலைமாறுபடாதவன்:(அப்பெருமானுடைய) பழமையான நிலைமை (இத்தன்மையதென்று) ஒருவரால் துணிந்து சொல்லக் கூடியதோ? (எ - று.)

ஆதிகாலத்தில் உலகங்களையெல்லாம் படைத்து, படைத்த உலகங்களுள்ளே உபேந்திரன் இராமன் கிருஷ்ணன் என்றாற்போலத் திருவவதரிப்பதும் அந்தர்யாமியாய் அவ்வுலகங்களி னுட்புறத்திலெல்லாம் நீங்காது வாழ்தலுமுடையவன் அந்த ஒப்பற்றகடவு ளென்றவாறு. தன்னுளேநின்றுஎன்ற இடத்துள்ள'நின்று'என்பதைப் பிறவினைப்பொருளில்வந்த தன்வினையெனக்கொண்டு-'பிரளயகாலத்திலே தான்படைத்த உலகங்களையெல்லாம் தன்னுள்ளே நிறுத்தி யென உரைகூறலும் ஒன்று. கடவுள் தான் படைத்த உலகங்களைத் தன்னிடத்தில்தானேலயிக்கச்செய்கிறானென்றநூற்கொள்கை காண்க. பி-ம்:—[1]தந்தவன். [2]தவத்துள். [3]பெயர்வன். [4]பேர்கலன்.[5]பாலனோ. (கஅக)

௬௦. [1]சாங்கியம் யோகமென் றிரண்டு [2]தன்மைய
வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன
ஆங்கவை [3]யுணர்ந்தவர்க் கன்றி யன்னவன்
ஓங்கிய [4]தனிநிலை யுணரற் பாலதோ.

(இ - ள்.) மிகப்பரந்துள்ள எல்லாப்பொருள்களையும் வெவ்வேறாகப் பகுத்துநோக்குகின்றனவாகிய சாங்கியம் யோகம் என்று இரண்டுவகைவழிகள் (உள்ளன): அவற்றை உள்ளவாறுஅறிந்தவர்க்குஅல்லாமல்(மற்றவர்க்கு), அந்தமுதற்கடவுளினுடைய எல்லாவற்றினும்மேம்பட்ட சிறந்தநிலை அறியக் கூடியதோ? (எ - று.)

தன்மாத்திரைகள்ஐந்து, பூதங்கள்ஐந்து, ஞானேந்திரியங்கள்ஐந்து, கருமேந்திரியங்கள்ஐந்து, மஹாந், அஹங்காரம், மனம், மூலப்பிரகிருதி, புருஷன் என்னும் இருபத்தைந்துதத்துவங்களின் தன்மையை யுள்ளபடி விவரித்துக் கூறுதல் சாங்கியமார்க்கம். உலகத்தைப் பகவானுடையசொரூபமாகநினைத்து இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதிஎன்ற எட்டுஅங்கங்களும் வழுவாதபடிநின்று மனத்தை மற்றைவிஷயங்களினின்று மீட்டுப் பரம்பொருளிடத்துநிறுத்துதல், யோகமார்க்கம்: இவற்றை விரிப்பிற் பெருகும். இது "மூவகை யுலகுமாய்" (63) என்பதன் பின் சிலபிரதியிலுள்ளது. பி-ம்:—[1]தாங்கிய வுலகமென்று, தாங்கிய யோகமொன்று. [2]தங்கிய. [3]அறிந்தவர். [4]தன்னிலே, தவனிலே, மேனிலே, தவநிலே.

கூக. சித்தென வருமறைச் சிரத்திற் [1]றேறிய
தத்துவ [2]மவனது தம்மைத் தாமுணர்
வித்தக ரறிகுவர் வேறு [3]வேறுணர்
பித்தரு [4]முளர்சிலர் வீடு [5]பேறிலார்.

(இ - ள்.) ஞானசொரூபமென்று (அறிதற்கு)அரிய வேதாந்தங்களிற் சித்தாந்தப்படுத்திய பரதத்துவமாவன் அக்கடவுள்: அத்தன்மையை தமதுஉண்மைநிலையைத் தாம் அறிந்த ஞானிகளே அறிவார்கள்: (அன்றி), வெவ்வேறுவகையாகமாறுபடஅறிகிற விபரீதஞானிகளும் சிலர்உளர்: (அம்மயக்கவறிவாளர்), மோட்சத்தைப்பெறுர்; (எ - று.)—பி-ம்:—[1]தேற்றிய. [2]ஆனது, அறிகுநர், அறிந்தவர். [3]வேறுள. [4]உணர்கிலர். [5]பெற்றிலார். (ககூக)

கூஉ. அளவையா [1]னளப்பரி [2]தறிவி னப்புறத்து
உளவையா வுபநிட தங்க [3]ளோதுறு
[4]கிளவியார் பொருள்களாற் [5]கிளக்கு ருதவன்
களவையா ரறிகுவார் மெய்ம்மை கண்டிலார்.

(இ - ள்.) (அந்தக்கடவுளின்நிலை), பிரதியட்சம்முதலிய பிரமாணங்களைக்கொண்டு அளந்திடமுடியாதது; அறிவுக்கும் எட்டாமல் அப்புறத்ததாயுள்ளது; ஐயாவே! உபநிடதங்கள் கூறுகின்ற சொற்களிற்பொருந்திய பொருள்களினுற் கூறமுடியாதவனை அக்கடவுளின் (பிறரால்சாணவொண்ணுத) மாயத்தன்மையை யாவர்அறியவல்லவர்? அம்மெய்ம்மை(எவரும்)கண்டாரிலர்; (எ-று.)

அளவை யான் அளப்பு அரிது என்று பிரித்து - அப்பரம்பொருளின் நிலையளவை யான் அறிந்து சொல்லமுடியாது எனினுமாம். பி-ம்:—[1]அளவறிந்து. [2]அவையின், அறிவன், அளவின். [3]ஓதுவ. [4]கிளவியால். [5]கிளத்துருவவன், கிளத்துருதவன், கிளக்குருனவன், கிளக்கினன்னவன். (ககூஉ)

கூங. மூவகை [1]யுலகுமாய்க் குணங்கள் மூன்றுமாய்
[2]யாவையு [3]மெவருமா [4]யெண்ணில் வேறுபட்டு
[5]ஓவலி லொருநிலை யொருவன் செய்வினை
தேவரு முனிவரு முணரத் தேயுமோ.

(இ - ள்.) (சுவர்க்கம் பூமி பாதாளம் என்ற) மூவகைப்பட்ட உலகங்களின் சொரூபமாகியும், சத்துவம் இரசசு தமசுஎன்ற முக்குணங்களின்சொரூபமாகியும், (பிரபஞ்சத்திலுள்ள) உயர்திணைப்பொருள் அஃறிணைப்பொருளென்ற எல்லாமுமாகியும், (மற்றும் இவ்வாறு) எண்ணிக்கையில்லாமல் வெவ்வேறுபல பேதப்பட்டும், நீங்குதலில்லாத ஒப்பற்ற தனித்தநிலையையுடைய [இரண்டற்றவனுன] முதற்கடவுள் செய்தருளுகிறதொழில் தேவர்களும் முனிவர்களும் அறியுமாறு குறைபெறுமோ? (எ - று.)

சகல பிரபஞ்ச வடிவமாகப் பரிணமித்துப் பலவேறு வகையாகத்தோன்றினும், தன் தனிநிலைமை மாறுபடாமலேயுள்ள கடவுளின்தன்மை எப்படிப்பட்டவராலும் அறியும்படி ஓரளவிற் பட்டதன்றென்றபடி. ஓவல்=ஒருவல்: நீங்குதல். பி-ம்:—1உலகமும். 2யாவரும். 3எவருமாய். 4எண்ணி. 5ஒய்வலி.　　(ககரு)

கூச. கருமமுங் கருமத்தின் பயனு 1மப்பயன்
தருமுதற் றலைவனுந் தானு 2மானவன்
அருமையும் பெருமையு 3மறிய வல்லவர்
இருமையென் றுரைசெயுங் 4கடனின் றேறுவார்.

(இ - ள்.) (வேள்விமுதலிய) கிரியைகளும், அந்தக்கிரியைகளை யநுட்டிப்பதனால்விளையும் பயனும், அப்பயனைக் கொடுத்தருள்கிற முதற்கடவுளும், (அப்பயன்களைப் பெறுஞ்) சீவனுமான அந்தப் பரம்பொருளின் அருமை பெருமைகளை யறியவல்லவரே, இம்மைமறுமையெனப்படுகின்ற கடலிலிருந்து (மோட்சமாகிய அக்கரையிலே) ஏறப்பெறுவார்கள்; (எ - று.)

இருமை - இரண்டென்றபொருளைத் தந்தது. "கருமமுங் கருமபலனுமாகிய காரணன் றன்னை" என்பது, நம்மாழ்வார் பாசுரம். மறுமை - சுவர்க்காதிகள். பி-ம்:—1கண்ணிய. 2தானவன். 3அறிவரேலவர், அறிவராலிவர். 4கடலின்.　　(ககச)

கூரு. மந்திர மாதவ மென்னு 1மாலைய
தந்துறு பயனிவை முறையிற் சாற்றிய
நந்தலில் தெய்வமாய் நல்கும் நான்மறை
2அந்தமில் வேள்விமாட் 3டவிசு மாமவன்.

(இ - ள்.) மந்திரமும் சிறந்ததவமும்என்னும் இயல்பையுடையவையும், (இவைகள்) தருகின்ற பயன்களும், இவற்றிற்குஉரியதாகி முறைப்படிசொல்லப்படுகின்ற அழிவில்லாத தெய்வமுமாய், நான்குவேதங்களின்விதிப்படி அழிவில்லாதயாகங்களிலே (தேவர்களையுத்தேசித்து) இடப்படுகிற அவிசினுடைய சொரூபமுமானவன், அந்தப்பரமன்; (எ - று.)

தேவதாத்தியானத்தோடு மந்திரங்களைப் பன்முறைஜபித்தும் தவஞ்செய்தும் மனத்துக்கருதியபயனைப்பெறுதல்,மரபு.நால்மறையந்தமில்வேள்விமாட்டவிசுமாம்என்பதற்கு - நால்வகைவேதங்களும் அவற்றிலிடப்படும்அவிசும் ஆவன் என்று உரைத்தலும்உண்டு. அவிசு=ஹவிஸ். பி-ம்.—1ஆற்றலைத்,

மாலயம், மாதவன், மாலவன். [2]அந்தணர். [3]அவியதாமவன், இன்பமாவன, அவிற்பமாவன. (கககூ)

கூசு. முற் [1]படப் பயன்தரு [2]முன்னில் [3]நின்றவை
பிற் [1]படப் பயன்றரும் பின்பு [4]போதுவ
[5]தற்பயன் தான் [6]திரி தருமு [7]மில்லையே
அற்புத மாயையா லறிகி லார் [8]பலர்.

(இ - ள்.) (அப்பரம்பொருள்), முதலிற்செய்யப்படுகின்ற கருமங்கட்கு முந்திப் பயனைக்கொடுத்தருள்வான்: பின்புசெய்யப்படுகின்ற கருமங்கட்குப் பிந்திப்பயனைக்கொடுப்பான்: (இங்ஙனமன்றி வேண்டியபடி) தனதுபயன் தானே முன்பின்னாக முறைபிறழப்பெறுவது ஒருவினையும்இல்லை; அந்த அற்புதத்தை அப்பிரானதுமாயையாற் பலரும் அறியமாட்டார்; (எ - று.)

ஒருயிர்செய்த இருவினைப்பயன் அவ்வுயிரையே மீண்டுசென்று அடையும்போது முன்செய்தமுறைதவறாதென்பது, முன்னிரண்டடிகளிற் கூறப்பட்ட விஷயம்: இதனை "முறைபிறழ்ந்துவாரா...சிறுகாலைப்பட்டபொறியும்" என்று பிறமதத்தவரும் கூறியுள்ளமை காண்க. இத்தன்மையை இங்கே பிரகலாதன் எடுத்துக்கூறியது - இரணியனைநோக்கி 'நீ முற்பிறப்பிற்செய்த நல்வினையின்பயனால் இப்பொழுது பெருஞ்செல்வவாழ்வு பெற்றிருக்கிறாய்: அந்நல்வினைமுற்றியபின் தீப்பயனையடைவாய்'என்று குறிப்பித்தற்கு. செய்த வினைக்குஏற்றபடி பகவான் முறைமைப்படப் பயனளிக்கின்றானென்ற இவ்வுண்மையையுணராமல் வினைப்பயன் தானே விளைகின்றதென்று விரைந்து துணிபவர் பல ராதலால், 'அற்புதமாயையாலறிகிலார்பலர்' என்றார். பி-ம்:— [1]பயப், பயம். [2]முன்னி. [3]நின்றவர். [4]போல்வன, போலவன். [5]தற்பயத்தான், தற்பரன்தான். [6]தெரி. [7]இல்லையந்து, இல்லையது, இல்லையேல். [8]பிறர். (ககஅ)

கூஎ. ஒருவினை யொருபய [1]னன்றி யுய்க்குமோ
இருவினை யென்பவை [2]யியற்றி யிட்டவை
கருதின கருதின [3]காட்டு கின்றது
[4]தருபர னருளினிச் [5]சான் று வேண்டுமோ.

(இ-ள்.) (உயிர்கள்)செய்திட்டனவான இருவகைவினைகளுள் ஒவ்வொரு வினை ஒருபயனையன்றி அதற்குமேல் தரக்கூடியதோ? [அன்று]: (எல்லாவற்றையும்) உண்டாக்குகின்ற அப்பரம்பொருளின் கருணையோ(அங்ஙனமன்றி) நினைத்த நினைத்தபயனையெல்லாம் அளிக்கின்றது:(அவ்வெம்பெருமான்பெருமையை யுணர்த்துதற்கு) இதனினும் வேறுசாட்சி வேண்டுமோ? [வேண்டா].

"ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று,சூழினுந்தான் முந்துறும்"என்று கொண்டாடப்படுகின்ற தவறாத மிக்கவலிமையையுடையது ஊழ்வினையென்பர்: அந்த ஊழ்வினையினும் மிகமேலானது, பகவத்சங்கற்பம்: எங்ஙனமெனின்,—செய்தவினை ஒவ்வொன்றும் ஒவ்வொருபயனையே தரவல்லது: பகவற்சங்கற்பமோ அவ்வெம்பெருமான் திருவுள்ளம்பற்றினபடியும் அடியவர்கள் கருதியபடியும் பலவகைப்பயன்களையும் அளிக்கவல்ல ஆற்றலுடையதென்பதாம். யாகமும் தவமுமாகிய நல்வினைகளைச்செய்து அவற்றின்பயனால்

யான் இப்பெருவாழ்வு பெற்றேனென்று இரணியன் பெருமிதம் பாராட்டிய தனை மறுப்பவனாய், பிரகலாதன், அப்படிப்பட்ட வினையினும் பலமடங்கு அதிகமானபயனைக் கடவுளினருளாற் பெறலா மென்றற்கு இது கூறினன். முதலடி - 'ஒருவினைபெருமையினுரைக்குந் தன்மைபோல்' என்று சிலபிரதி களிற் காண்கின்றது. பி-ம்:—[1]இன்றி. [2]இயற்றுமீட்டவை. [3]காட்டுகின்றன. [4]தருபயனருளிது, தருபயனருளினில், தருபயனருளினிச், தருபயன்பெறினி திற். [5]சான்றும்வேண்டுமே. (௧௬௭)

௬அ. [1]ஓராவுதி [2]கடைமுறை வேள்வி யோம்புவோர்
அராவணை யமலனுக் களிப்ப [3]ராலது
சராசர மனைத்தினுஞ் சாரு மென்பது
பராவரு மறைப்பொருட் பயனு [4]மன்னதால்.

(இ-ள்.) ஓமங்களை விதிமுறைதவறாதுசெய்பவர்கள் (அவ்வோமத்தின்) முடிவில் ஆதிசேஷசயனத்திற் பள்ளிகொண்டருள்பவனான ஸ்ரீமகாவிஷ்ணு வுக்கு ஓராகுதியைக் கொடுப்பார்கள்: அந்த ஆகுதியானது, சகல சராசரப் பொருள்களினிடத்தும் சேர்ந்திடு மென்பது, துதித்தற்குஅரிய அளவற்ற சிறப்புடைய வேதத்திற் கூறப்பட்டபொருளாம்: (அன்றியும்,அதன்)பயனும் அத்தன்மைத்தே; (எ - று.)

ஓமத்தின் முடிவில் மிச்சமாயிருக்கின்ற நெய்ம்முதலிய ஓமப்பொருள் முழுவதையும் 'ஸ்ரீவிஷ்ணவே ஸ்வாஹா' என்று சொல்லி ஓரே ஆகுதியாய் ஓமஞ்செய்கின்ற தன்மை முதலிரண்டடிகளிற் கூறப்பட்டது. பற்பலதேவர் களை யுத்தேசித்துச் செய்யும் ஓமங்களின் முடிவில் அத்தேவர்கட்கெல்லாந் தலைவனான திருமாலைக்குறித்து ஓராகுதி செய்தலும், அந்த ஆகுதி சகலசரா சரத்துக்கும் திருப்திதருதலுமாகிய தன்மையை நோக்கி, அவ்வெம்பெருமா னது உண்மையை யறியலா மென்றவாறு. [2]கடன்முறை... அளிப்பரேல் என்ற பாடத்துக்கு—விதிமுறைப்படி யாகஞ்செய்பவர் முடிவில் ஓராகுதிமூல மாய் அந்தயாகத்தைத் திருமாலுக்கு ஸமர்ப்பிப்பாராயின் அதுஅவ்வெம்பெரு மானுக்கு உரியதாகி அவனுக்குச் சரீரமாகவுள்ள சராசரங்களிலெல்லாஞ் சார்ந்திடுமென்று பொருள் காண்க. ஆஹுதி - விதியையொட்டி ஓமாக்கி னியில் நெய்ம்முதலியவற்றைப் பெய்தல்.வேதத்தில் அர்த்தவாதமாகக் கூறப் பட்டுள்ள சிலபொருள்போலன்றி, இப்பொருள் உண்மையியல்பை விளக்கி யதே யென்பதை நன்குஉணர்த்துதற்கு 'பயனுமன்னதால்' எனப்பட்டது: இப்பொருள் ஏட்டுச்சுரைக்காயாகாது அநுட்டானத்திற் கண்டதென்றவாறு. வேள்வி,ஓமத்துக்கு இலக்கணை.பி-ம்:--[1]ஓராகுதி.[3]எயது,ஆவது.[4]அல்லதால்.

௬௯. பகுதியி னுட்பயன் [1]பயந்த தன்னதின்
[2]விகுதியின் [3]மிகுதிக [4]ளெவையு [5]மேலவர்
வகுதியின் [6]வயத்தன வரவு [7]போக்கது
[8]புகுதியில் லாதவர் [9]புலத்திற் றுகுமோ.

(இ - ள்.) (அந்தப் பரப்ரஹ்மம்), மூலப்பிரகிருதியினின்று காரியரூப மானபிரபஞ்சத்தை யுண்டாக்கியது; மேலோர் (நூல்களிற்கூறிய) வகுப்புக்

களில் அடங்கியவையான பொருள்க ளெல்லாம், அந்த மூலப்பிரகிருதி தந்த விகாரத்தாலுண்டான தொகுதிகளே; (மற்றும் அப் பரப்ரஹ்மம், கருமசம்பந் தத்தால் இப்பிரபஞ்சத்தினுள்) வருதல் [பிறப்பு]இல்லாதது; (அந்தபரப்பிரம சொரூபம்), தத்துவஞானமில்லாதவருடைய உணர்வுக்கு விஷயமாகுமோ? [ஆகா தென்றபடி]; (எ - று.)

மேலவர்வகுதியின்வயத்தன எவையும் அன்னதின்விகுதியின்மிகுதிகள் என இயையும். நித்தியமாய் அளவில்லாததாய்த் திரிகுணாத்மகமாய் ஜகத்துக் குக்காரணமாய்த் தனக்குஒருகாரணம் உற்பத்தி விநாசம் இல்லாததாயிருக்கிற மூலப்பிரகிருதியென்பது பரமாத்மாவின் கிரியாசாதநரூப மென்றும், நித்திய மானஆத்மாவும் அத்தன்மையதே யென்றும், ஸ்ருஷ்டிகாரியத்தில் விருப்பங் கொண்ட பரமாத்மாவினது இச்சையாகிய சங்கல்பத்தாற் சலனப்பட்ட மூலப் பிரகிருதியினின்று மகத்தத்துவமும், அதினின்று அகங்காரமும்,அதினின்று சப்தமும், சப்தத்தினின்று ஆகாசமும், ஆகாசத்தினின்று ஸ்பர்சமும், ஸ்பர் சத்தினின்று வாயுவும்,வாயுவினின்று ரூபமும், ரூபத்தினின்று அக்கினியும், அக்கினியினின்று ரஸமும், ரஸத்தினின்று ஜலமும், ஜலத்தினின்று கந்தமும், கந்தத்தினின்று பூமியும் உண்டாயின வென்றும், சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த மென்னும் பஞ்சதந்மாத்திரைகளும், பூமி ஜலம் அக்கினி வாயு ஆகாசம் என் னும் பஞ்சபூதங்களும் ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்னும் மூவகைப்பட்ட அகங்காரத்தில் தாமஸஅகங்காரத்தின் காரியமென்றும், மனம் ஸாத்விகஅகங் காரத்தினின்று உண்டானதென்றும்,மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சஞானேந்திரியங்களும், வாக் பாணி பாத பாயுர்உபஸ்தம் என்னும் பஞ்ச கருமேந்திரியங்களும் ராஜஸஅகங்காரத்தில் தோன்றியவை யென்றும் அறிக.

பகுதி, விகுதி, வயம் - ப்ரக்ருதி, விக்ருதி, வசம்: வடசொற்கள். மேலவர் - அறிவின் மேம்பட்டவர். வகுதி=வகுப்பு. வயத்தன - பெயர்: அடங்கியவையென்ற பொருளைக்காட்டிற்று. மேலவர் வகுதியின் வயத்தன எவையும் - பஞ்சதந்மாத்திரைகளும் பஞ்சஞானேந்திரியங்களும் பஞ்சகரு மேந்திரியங்களும் பஞ்சபூதங்களும் மனம் அகங்காரம் மகத்என்னும் மூன்றும், மூலபிரகிருதியொன்றுமாக நூல்களில் ஆன்றோரால் வகுத்துக்கூறப்பட்ட தத் துவங்களின்மயமான ப்ரபஞ்சம்முழுதும் என்றபடி. வரவுபோக்கது-வரவின துபோதலையுடையது. எம்பெருமான் இவ்வுலகத்திற் கொண்ட திருவவதார ரூபங்களெல்லாம் ஜீவாத்மாக்களின் பிறப்புக்கள்போலக் கருமசம்பந்தத்தாலா கியவையல்லவென்றும் விருப்பமாத்திரத்தாலுண்டானவை யென்றும் அறிக. புகுதி-அறிதல். பி-ம்:—1பயனு மன்னதின். 2மிகுதியின். 3விரதிகள். 4எவை யின். 5மேலவாம். 6வைத்தது, வசத்தன, வயத்தது, வயத்தன. 7போக்கறு. 8புகுதியின்மாதவர். 9புலத்தில் தங்குமோ. (கககக)

௬1௦. எழுத்தியல் 1நாளத்தி 2னெண்ணி லாவகை
முழுத்தனி 3நான்முகன் முதல 4முற்றுயிர்
வழுத்தரும் பொருட்ட5தோர் புரையின் வைகுமால்
6விழுத்தனிப் 7பல்லிதழ் 8விரையி லாமுகிழ்.

(இ - ள்.) அளவற்ற பகுப்புக்களையுடைய பெரிய ஒப்பற்றபிரமன் முதலிய உயிர்களெல்லாம், சித்திரம்போன்ற [மிக்கஅழகு அமைந்த] நாளத்தோடு கூடியதும், சிறந்த ஒப்பற்ற பலஇதழ்களையுடையதும், வாசனைக்கு இருப்பிடமுமான (அத்திருமாலினது நாபித்தாமரை) மலரின் துதிக்கவொண்ணாத [மிக்கசிறப்பையுடைய] கொட்டையினது ஒருபகுதியிலே தங்கும். (எ - று.)—ஆல் - ஈற்றசை.

நான்முகன்முதல முற்றுயிர், விரையிலாமுகிழின் பொகுட்டதோர் புரையின்வைகுமெனக. "அண்டப்பெருங்கோயிற்கெல்லாம்,......புண்டரீகமொட்டின் பொகுட்டே புரையம்மா" என்ற ஆரணியகாண்டச்செய்யுளோடு இச்செய்யுளை ஒப்பிடுக. எழுத்து-எழுதப்படுவது: சித்திரம். நாளம்-உள்தொளையுள்ள பூந்தண்டு. முதல - குறிப்புப்பெயரெச்சம். பி - ம்:—[1]நாணித்தி. [2]எண்ணலாமறை. [3]நாயகன் மூலம். [4]முற்றியல், மற்றுயிர். [5]ஒரொளியின். [6]விழுத்தன. [7]பலவிதழ், அல்லிதன். [8]விரையுலா. (உOO)

எக. கண்ணினுங் கரந்துளன் [1]கண்டு காட்டுவா
ருண்ணிறைந் திடு[2]முணர் வாகி [3]யுண்மையால்
மண்ணினும் வானினு மற்றை மூன்றினும்
எண்ணினு [4]நெடியவ னொருவ னெண்ணிலான்.

(இ - ள்.) (தன்னைக்குறித்து எண்ணுவாருடைய) எண்ணத்துக்கு எட்டாமற் கடந்துள்ளவனும், ஒப்பற்றவனும், (குணஞ்செயல்களினால்) ஒரு வரையறைப்படாதவனுமான அத்திருமால்,—(காண்பவர்களுடைய) கண்களிலும் மறைந்துள்ளான்; ஞானசொரூபியாயிருத்தலால், (தனது சொரூபத்தைத்) தரிசித்து(ப் பிறர்க்கு) எடுத்துக்காட்டுபவரான ஞானிகளுடைய மனத்தில் நிறைந்துள்ளான்; பூமியிலும் ஆகாயத்திலும் (நீர் நெருப்புக் காற்று என்னும்) மற்றை மூன்று பூதங்களிலும் (அந்தர்யாமியாய் மறைந்துள்ளான்); (எ - று.)

கரந்துளன் என்ற முற்று, மூன்றுமடியிலும் எடுத்துக்கூட்டப்பட்டது; 'உண்ணிறைந்திடும்' என்றதை எடுத்துக்கூட்டினும் ஒக்கும். [1]கண்டுகாட்டுவான் என்ற பாடத்துக்கு - தான் எல்லாப் பொருள்களையுங் கண்டு பிறர்க்குக் காட்டுந்தன்மையன் என்று பொருள்காண்க. மண்ணினும்வானினும் மற்றைமூன்றினும் நெடியவன் என இயைத்து பஞ்சபூதங்களினும் பெரியவன் என்று பொருள்கொள்ளினுமாம். 'எண்ணிலான்' என்பது - எளிமையில்லாதவனென்றும் பொருள்படும்; அரியவன்என்பது கருத்து. ஒருவன்-அத்விதீயன்; ஏகமூர்த்தி. பி-ம்:—[1]கரந்துகாட்டுவேன். [2]முனியாகி, மதியாகி. [3]ஆகியான், ஒண்மையால். [4]நெடியனென்றொருவன். (உOக)

எஉ. சிந்தையிற் செய்கையிற் சொல்லிற் [1]சேர்ந்துளன்
[2]இந்தியந் தொறுமுள னுற்ற [3]தெண்ணினால்
முந்தையோ ரெழுத்தென வந்து மும்முறைச்
சந்தியும் பதமுமாய்த் [4]தழைத்த தன்மையான்.

(இ - ள்.) (அத்திருமாலினுடைய) நிலைமையை ஆலோசிக்குமிடத்து, (அவன்பிராணிகளுடைய) நினைப்பிலும் செய்கையிலும்சொல்லிலும் பொருந்

தியிருக்கின்றான்; (அவற்றின்) பஞ்சேந்திரியங்களிலும் பொருந்தியுள்ளான்; (வேதங்களின்)முதலிற் கூறப்படுகிற ஏகாக்ஷரமாகிய 'ஓம்' என்னும் பிரணவத்தின் வடிவமாய் நின்று, (அப்பிரணவமந்திரத்துள்ள)அகாரம் உகாரம் மகாரம் என்னும் ஓரெழுத்துச்சொற்கள் மூன்றும் அவற்றின்சேர்க்கையிலமைந்த இரண்டு சந்தியுமாகி(ப் பொருளினாற்)செழித்த இயல்பையுடையவன்; (எ-று.)

பிரணவமந்திரத்தின் பொருள் - அகாரவாச்யனான திருமாலுக்கு மகார வாச்யனான ஜீவன் அடிமை என்பது. இவ்வாறு பொருளாயினும், உயிர்களையெல்லாம் அடிமையாக வுடையவன் திருமாலென்று இந்தப்ராணவம் கருத்துப்பொருள்பட்டுப் பரமான்மாவை யுணர்த்தும். மனம் மொழி மெய் என்னும் முறை பிறழக்கூறப்பட்டது,செய்யுளாதலின். முந்தை-பழமையான என்றுங் கொள்ளலாம். பி-ம்:—1தீர்ந்துளன். 2இந்தியந்தனிலுள னிற்றது. 3எண்ணிலான். 4தோன்றும், தழைக்கும், கிளைத்த. (உ0உ)

எங. காமமும் வெகுளியு 1முதல கண்ணிய
தீமையும் வன்மையுந் 2தீர்க்குஞ் 3செய்கையான்
நாமமு 4மவன்பிற 5நலிகொ டாநெடுஞ்
சேமமும் பிறர்களாற் 6செப்பற் பாலவோ.

(இ - ள்.) காமமும் கோபமும் முதலியனவாகக் கருதப்பட்ட தீக்குணங்களையும் (அவற்றின்) வலிமையையும் (தன்னைச் சரணமடைந்தவர்களுக்கு) ஒழிக்கின்ற திருவருட்செயலையுடையவனான அத்திருமாலினது திருநாமங்களின் மகிமையும், அப்பெருமானுடைய பிறவுயிர்களுக்கு வருத்தந்தராத மிக்க பாதுகாத்தற்றொழிலும், எவராலேனும் சொல்லிமுடிக்கவல்ல தன்மையுடையனவோ? [அல்லவென்றபடி]; (எ - று.)

திருமாலினுடைய திருநாமத்தின் பிரபாவமும், ஸர்வரக்ஷகத்வமும், பிறர்களாலறிந்து செப்பற்பாலனவல்ல வென்றவாறு. "மேல்மற்றோர், நோயுஞ் சார்வுகொடான் நெஞ்சமே சொன்னேன், தாயுந்தந்தையுமா யிவ்வுலகினில், வாயுமீசன் மணிவண்ணனெந்தையே" என்ற திருவாய்மொழி இச்செய்யுளின் பின்னிரண்டடியிற் காணத்தக்கது. பி-ம்:—1களிப்பும். 2தீய்க்குஞ். 3செய்கையன், செய்கையால், செம்மையன். 4வினைபெற, பிறர்கொள, பெருமையும். 5நலிலனன்றது, நலிலினன்னது. 6செப்பலாகுமோ. (உ0ங)

எச. காலமுங் கருவியு மிடனு மாய்க்கடைப்
1பாலமை பயனுமாய்ப் பயன்றாய்ப் பானுமாய்ச்
சீலமு மவைதருந் திருவு மாயுளன்
ஆலமும் வித்துமொத் 2தடங்கு 3மாண்மையான்.

(இ - ள்.) (பெரிய) ஆலமரமும் (அம்மரம் உள்ளடங்கப்பெற்ற அதன் சிறிய) விதையும் போன்று (தனது சூக்ஷ்மமான உருவத்தில்) அடங்கிய மிக்க விபவத்தை யுடையவனான அத்திருமால்,—(ஒருதொழிலைச் செய்தற்கு ஏற்ற)காலமும் (அத்தொழில்செய்தற்கு ஏற்ற) கருவியும் (அத்தொழில்செய்தற்குஉரிய) இடமும் (அத்தொழிலினால்) முடிவில் நேர்கிற பயனும் அப்

பயனை அனுபவிக்கிற ஜீவனுமாகி, நல்லொழுக்கங்களும் அவ்வொழுக்கங்கள் (இம்மை மறுமை வீடுகளில்) விளைக்கிற ஐசுவரிய மூமா யுள்ளான்; (எ - று.)

யாவும் எம்பெருமானது சொரூபமும் எம்பெருமானது அதீனமுமேயா மென்பது கருத்து. "கருமமும் கருமபலனுமாகிய காரணன்" என்றார், சடகோபரும். மாண்மை-விபவம்; ஆண்மையென எடுத்தலுமாம். பி-ம்:—[1]பாலமைப், பாலவை, பால்வரு. [2]அணைந்த, அமைந்த. [3]ஆண்மையான். (உ0௪)

எரு. உள்ளுற [1]வுணர்வினி [2]துணர்ந்த வோசையோர்
[3]தெள்விளி யாழிடைத் [4]தெரியுஞ் [5]செய்கையா
னுள்ளுளான் புறத்துள [6]னொன்று நண்ணலான்
[7]தள்ளரு மறைகளு மருளுந் தன்மையான்.

(இ - ள்.) ஒப்பற்ற தெளிவான இசையையுடைய வீணையினின்று எழுவதும் மனப்பூர்வமாக அறிவினால் இனியதென்று அறியப்படுவதுமான ஓசைபோல (இனிதாக)விளங்குகின்ற தன்மையையுடையவனான அத்திருமால்,—(எல்லாப்பொருள்களிலும்) உள்ளிலும் உளான்: புறத்திலும் உள்ளான்; (ஆயினும்),(அவற்றின்குணதோஷங்களில்)யாதொன்றும் (தன்னிடம்) தொடரப்பெறான்;(மற்றும் அவன்), விலக்கவொண்ணாத[சிறந்த பிரமாணமென்று பலராலும் ஏற்றுக்கொள்ளப்படுகிற] வேதங்களும் (உள்ளபடி யுணரமாட்டாது) மயங்கும்படியான சொரூபத்தை யுடையவன்; (எ - று.)

"முன் நல் யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே," "நுடங்கு கேள்வியிசை யென்கோ", "பண்ணினைப் பண்ணில்நின்றதோர் பான்மையை" என்று ஆழ்வார்கள் அருளிச்செய்தபடி எம்பெருமானது இனிமைக்கு இசை ஏற்ற உவமையாதல் காண்க. மறைகளும் அருளும் எனப்பிரித்து - வேதங்களையெல்லாம் (பிரமனுக்கு) உபதேசித்தருளிய, தன்மையான் என உரைப்பினுமாம். ஓர் தெள்விளியாழிடை ஓசை(போலத்) தெரியுஞ் செய்கையான் என்க. பி-ம்:—[1]உணர்வினின், உணரினும்,உணர்வினும். [2]உணர்ந்ததோதிய, உணர்ந்தவோசையான். [3]தெள்ளிய விழியிடை, தெள்ளியமனமிடை, தெள்ளியயாழிடை, தெள்ளுறுமனமிடை. [4]தெரிக்கும். [5]செய்கையின், செய்கைபோல். [6]ஒன்றுந்தானலன். [7]தள்ளுறு. (உ0ரு)

எசா. ஓமெனு மோரெழுத் ததனி னுள்ளுயி
ராமவ னறிவினுக் கறிவு [1]மாயினான்
தாம[2]மூ வுலகமுந் [3]தழுவிச் [4]சார்தலால்
[5]தூமமுங் கனலும்போற் றொடர்ந்த தோற்றத்தான்.

(இ - ள்.) ஏகாக்ஷரமான 'ஓம்' என்னும் பிரணவமகாமந்திரத்தி (லடங்கிய அ உ ம் என்னும் ஓரெழுத்துப்பதம் மூன்றி) னுள் பிரதானமான அகாரமென்னும்உயிரெழுத்தின் பொருளாகிய அத்திருமால், (ஸ்வயம்பிரகாசமான) ஞானத்துக்கும் ஒருஞானமாகவுள்ளான்; இடம்பரந்த மூவகையுலகங்களையும் எங்கும் வியாபித்துப்பொருந்துதலால், புகையும் நெருப்பும்போல ஒருங்கே பலவிடங்களிற் பரவுந் தன்மையையுடையான்; (எ - று.)

"ஓமித்யேகாக்ஷரம்" என்று ஶ்ருதி கூறுதலால், 'ஓமெனும் ஓரெழுத்து' என்றார்: அதற்குள் இருக்கும் உயிர் - அகாரமென்க. அறிவினுக்கு அறிவுமாயினன் என்பதற்கு-ஆன்மாவுக்கும் ஆன்மாவாகஇருப்பவனென்னலுமாம்: "உயிர்க்குயிராகி நின்ற" என்றார், பெரியாரும். அறிவுமயமான ஆன்மாவை அறிவு என்றே கூறினர்: "ஒருவனையேநோக்குமுணர்வு" என்றாற்போல; "தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேஶ:" என்றனர், ஸ்ரீவ்யாஸமஹர்ஷி.தூமம், தூமம்-வடசொற்கள். பி-ம்:—[1]ஆகுவான். [2]மூன்றுலகமும், முன்னுலகமும், உம்முலகமும். [3]தானுஞ், ஆமுஞ், தாமுஞ். [4]சாற்றலால். [5]தூமவெங்கனலும், தூமமும் புகையும். (உ0௬)

எஎ. காலெயி னறுமல [1]ரொன்றக் [2]கட்டிய
மாலையின் மலர்[3]புரை சமய [4]வாதியர்
சூலையின் [5]திருக்கலாற் சொல்லு வார்க்கெலாம்
வேலையுந் திரையும்போல் வேறு பாடிலான்.

(இ - ள்.) காலத்தில்மலர்ந்த மணம்வீசும் மலர்களை ஒருசேரத் தொடுத்த மாலையிலுள்ள (அம்) மலர்களை யொத்த [ஒன்றுக்கு ஒன்று நெருக்கமுடையனவாய் மிகப்பலவான] மதங்கட்குஉரிய விவாதங்களைச் செய்பவர்களுடைய சூடைதலினாலுண்டான மாறுபாடேயல்லாமல், (ஏகபாவனையாய்ச்) சொல்லுகின்றவர் எல்லோர்க்கும் கடலும்(அதிற்காணப்படும்) அலையும் போல(த் தன்னில்) வேறுபாடு ஒன்றுமில்லாதவன், (அப்பெருமான்); (எ - று.)

சூலை - 'ஐ' விகுதிபெற்ற தொழிற்பெயர்; சூல் - பகுதி; சூலுதல்-குடைதல்: என்றது - இங்கு, பல வேறுவகைப்பட்ட மதங்களிலுள்ளார் தம்தமது கொள்கைக்கு இணங்க வேதம் முதலிய பிரமாணங்களில் நலிந்து கூறும் பொருள்களை. கடலின் அலைகள் பலவாக எழுந்து காணப்படினும் அவையெல்லாம் அக்கடலில் அடங்குதல்போல, அந்தச்சமயவாதிகள்கூறும் பொருள்களெல்லாம் எம்பெருமான்பக்கலிலே அடங்கு மென்க. ஒருமாலையிற் பலவகைநிறமுள்ள மலர்கள் அமைதல்போல ஒருபரம்பொருள்திறத்துப் பல மதங்கள் அமைகின்றன என்க. காலை - காலம்: வடசொல். பி-ம்:—[1]ஒன்றிற். [2]காட்டிய. [3]பொருள், புனை. [4]வாதிகள். [5]திருகலால். (உ0எ)

எஅ. இன்னதோர் [1]தன்மைய னிகழ்வுற் றெய்திய
நன்னெடுஞ் செல்வமு நாளு [2]நாமற
மன்னுயி ரிழத்தியென் [3]றிறைஞ்சி வாழ்த்தினேன்
சொன்னவ னுமமென் றுணரச் சொல்லினன்.

(இ - ள்.) 'இப்படிப்பட்ட ஒப்பற்ற தன்மையையுடையவனை ஸ்ரீமந் நாராயணனை (நீ) இகழ்ந்து, பெற்றுள்ள சிறந்த மிக்க செல்வங்களும்ஆயுளும் பெயரோடுஅழிய நிலைபெற்ற உயிரை இழக்கின்றனையே!' என்றுஇரங்கி, கீழ்ச்சொன்ன அப்பெருமானுடைய திருநாமத்தைத் துதித்து(அவனை)வாழ்த்தினேனென்று விளக்கமாக (இரணியனுக்கு)க் கூறினன், (பிரகலாதன்).

இகழ்வுற்று இழத்தி என இயையும். நாமறஎன்பதில், நாமம் என்பது நாம் என விகாரப்பட்டது. சொன்னவன் இறைஞ்சி நாமம் வாழ்த்தினேன் -

அப்பெருமானைவணங்கி அவன்திருநாமத்தை வாழ்த்தினேனென்றுமாம்.
பி-ம்:—[1]தன்மையின். [2]நாமுற, நாமறத்து. [3]அஞ்சி. (உ௦அ)

வேறு.

எகூ.—இதுமுதல் முப்பத்தெட்டுக் கவிகள்-இரணியன் கட்டளையிட்ட படி அவனது பரிஜனங்கள் பிரகலாதனைப்பலவாறுவருத்துதலையும், பிரகலாதன் பகவந்நாமமகிமையால் அத்துயரத்தினின்று மீளுதலையும் கூறும்.

[1]எதிரில் நின்றவ [2]னிவையுரைத் திடுதலு [3]மெவ்வுல கமு [4]மஞ்ச, முதிரும் வெங்கத மொழி[5]கொடு மூண்டது [6]முதுகடற் கடுவேய்ப் பக், கதிரும் வானமுஞ் சுழன்றன நெடுநிலங் கம்பித்த கனகன் கண், உதிரங் கான்றன தோன்றின புகைக்கொடி யுமிழ்ந்தது கொடுந்தீயே.

(இ - ள்.) எதிரிலே நின்றவனான பிரகலாதன் இவ்வார்த்தைகளைச் சொன்னவுடனே, எல்லாவுலகங்களும் அஞ்சும்படி மிக்க கொடுங்கோபம், (தனக்கு உரிய) சொற்களையும் உடன்கொண்டு, பழமையான பாற்கடலினின்று தோன்றிய (ஆலாகலமென்னும்) விஷத்தைப்போல (இரணியனுக்கு) மிக்கு எழுந்தது; (அதன் உக்கிரத்தால், சூரியன்முதலிய) சோதிகளும் மேலுலகமும் சுழலலாயின: பெரிய பூமியினிடங்கள் அசையலாயின: அவ்விரணியனுடைய கண்கள், இரத்தத்தைச் சொரிந்தன; (நெருப்புக்குக்) கொடியெனத்தக்க புகைகள் (அக்கண்களினின்று) மேலெழுந்தன; கொடியஅக்கினி (அக்கண்களினூற்) சொரியப்பட்டது; (எ - று.)

கொடி-துவசம். கனகன் என்பது-இரணியனென்பதன் பரியாயச்சொல். கனகம், இரணியம் என்பன பொன்னின் பெயர்கள்: இரணியனென்பது - பொன்னிறமுடையோன் என்னும் பொருளது. பி-ம்:—[1]எதிர. [2]அவ்வுரை. [3]எவ்வுலகங்களும். [4]எஞ்ச. [5]கண்டு, கொண்டு. [6]முதிர்தரும். (உ௦௯)

இந்தச்செய்யுளின்பின் ஒருபிரதியில் ஒருசெய்யுள்காணப்பட்டது: அது வருமாறு:—

வைய மேலினி வரும்பகை யுளவெனின் வருவதொன் றென்றும், உய்ய வுள்ளுளே யொருவனை யுணர்ந்தனை யென்றென்றும் னுரைசெய்தாய், செய்ய வேண்டுவ தென்னினி நின்னுயிர் செகுக்குவன் சிறப்பில்லாப், பொய்யி லாளனைப் பொருந்திய பெரும்பகை போயபின் புகழையா.

அ௦. [1]வேறு மென்னொடு தரும்பகை பிறிதினி [2]வேண்டலென் வினையத்தால், ஊறி யென்னுளே யுதித்தது [3]குறிப்பினி யுணர்குவதுள [4]தன்றால், ஈறி லென்பெரும் பகைஞனுக் கன்புசா [5]லடியென்யானென்கின்றான், [6]கோறி ரென்றன னென்றலும் பற்றினர் கூற்றினுங் கொலைவல்லார்.

(இ - ள்.) 'இனி [இதனைக்காட்டிலும்] வேறாக என்னோடு விளைக்கும் பகைமை மற்றொன்றை வேண்டுவேனல்லேன்; வஞ்சனையாக என்குடலிலே ஊறியிருந்து (இப்படிப்பட்ட பகையொன்று) உண்டாயிற்று; இன்னமும் (இப்பிள்ளையின்) எண்ணத்தை அறியவேண்டுவது இல்லை; அழிவில்லாத

எனது தொன்று தொட்ட பகைவனை திருமாலுக்கு அன்புமிக்கதொண்டன் யான் என்று கூறுகின்றான்: (ஆதலால்), (இவனைக்) கொன்றிடுங்கள்' என்று (இரணியன் தனது பரிசனங்களை நோக்கிக்) கூறினான்; என்று சொன்ன வுடனே, கொல்லுதற்றொழிலில் யமனினும் வல்லவரான பல அசுரர்கள், (வந்து பிரகலாதனைப்) பிடித்துக்கொண்டார்கள்; (எ - று.)

இரணியன் தன்புதல்வனைபிரகலாதனைக் கொல்லுங்களென்ன, கொலை ஞர் அவனைப் பற்றிக்கொண்டன ரென்பதாம். இதுவே மிக்கபெரும்பகைமை யாமென்பது, முதல்வாக்கியத்தின் கருத்து; புறப்பகை கோடியினும் அகப் பகையொன்று மிகக்கொடி தென்க. வினையத்தால் - தீவினையினால் எனினு மாம். குறிப்பு இனி உணர்குவது உளது அன்று என்பதற்கு - (இவனைக் கொல்லுகிறவிஷயத்தில்) இன்னமும் என்குறிப்பை நீங்கள் ஆராய்ந்து அறிய வேண்டுவதில்லை யென்றும் உரைக்கலாம்; 'கோபம் மிக்க நிலையிலே இவன் சொன்னவார்த்தையைக்கொண்டு இவன்பிள்ளையை யாம் கொல்லலாமோ?' என்று நீங்கள் சங்கிக்கவேண்டா என்றபடி. பி-ம்:—[1]வேறுவேறுனதரும்பகை பிறிதெனின். [2]வேண்டலன். [3]குறிப்பினிலுணர்குவது, குறிப்பின னுணர்கு வது. [4]என்றால். [5]அடியனென்கின்றானைக். [6]கோறியென்றனனென்றலும் பற்றினர், கோறிரென்றலும் பற்றினர் சுற்றினர். (௨௧௦)

௮௧. குன்று போன்மணி வாயிலின் [1]பெரும்புறத் துய்த்தனர் [2]மழுக்கூர்வா, ளொன்று போல்வன வாயிர மீதெடுத் தோச்சின ருயி ரோடுந், தின்று [3]தீர்குது மென்குந ருருமெனத் [4]தெழித்தனர் சின வேழக், [5]கன்று புல்லிய கோளரிக் குழுவெனக் [6]கனல்கின்ற [7]தறு கண்ணார்.

(இ - ள்.) (கோபாக்கினி) சொலிக்கின்ற அஞ்சாதநோக்கையுடையவர்க ளாகிய அவ்வசுரர்கள்,—கோபத்தையுடைய ஒருயானைக்குட்டியை வந்துசூழ் ந்த வலிய ஆண்சிங்கங்களின் கூட்டம்போல (அப்பிரகலாதனைச் சூழ்ந்து கொண்டு), மலைபோலஉயர்ந்துள்ள இரத்தினமயமான அரண்மனைவாயிலின் பெருவெளியிலே (அவனைக்) கொண்டுபோய்ச் சேர்த்து, 'உயிருடனே (இவ னுடலைத்) தின்றுவிடுவோம்' என்று சொல்லுகிறவர்களாய் இடிபோலப் பயங் கரமாக அதட்டி, ஒன்றுபோலவுள்ள ஆயிரக்கணக்கான மழுக்களையும் கூரிய வாளாயுதங்களையும் உயரவெடுத்து (அவன்மேல்) வீசினார்கள்; (எ - று.)

மழு - எரியிரும்புப்படை; கோடாலியுமாம். மழுவையும் வாளையும் கூறி னது, மற்றைப்படைகட்கும் உபலக்ஷணம். தெழித்தல் - கொக்கரித்தலுமாம். கோள்-வலிமை. பி-ம்:—[1]நெடும்.[2]மழுக்கறைவாள்.[3] தீர்த்தும்யாம், தீர்க்குதும். [4]தெழிக்குநர். [5]குன்று. [6]கனலுகு. [7]குறு. (௨௧௧)

௮௨. தாயின் மன்னுயிர்க் கன்பினன் றன்னையத் தவமெனாந் தகை யில்லோ, ரேய னுந்துணை மாத்திரத் [1]தெய்தின [2]செறிந்தன வெறி தோறுந், [3]தூய வன்றனைத் துணையென வுடையவவ் வொருவனைத் துன்னுதார், வாயின் வைதன வொத்தன [4]வத்துணை [5]மழுவொடு [6]கொலைவாளும்.

(இ - ள்.) நல்வினையென்கிற தகுதி யில்லாதவர்களான அவ்வசுரர்கள், ஏயென்று ஒருமுறைசொல்லுங் காலவளவினுள் [வெகுவிரைவாக] (உலகத்திற்) பொருந்திய பிராணிகளிடத்திற் (பெற்ற)தாயினும் அன்புடையவனான அப்பிரகலாதனை வந்துசூழ்ந்து (அவன்மேல் வீசி) எறிந்தனவான மழுவும் கொல்லுதலில்வல்ல வாளும் முதலிய ஆயுதங்களெல்லாம், (அங்ஙனம்) எறியுந்தோறும் பரிசுத்தமூர்த்தியான எம்பெருமானைத் துணையாகக்கொண்ட அந்தஒப்பற்றஞானியை, வேண்டாதார் வாயினுல்வைத வசைச்சொற்களைப் போன்றன [யாதோர் ஊறும் செய்யமாட்டாவாயின என்றபடி]; (எ - று.)

தவமில்லாதபகைஞரின்வசைச்சொல் யாதோரிடையூற்றையும் செய்ய வல்லமையுடையனவல்லவாதல்போல, அந்தக்கொலைஞரானஅசுரர்எறிந்த படைக்கலங்கள் அந்தப்பிரகலாதனை ஒன்றுஞ்செய்யமாட்டாவாயினவென்க. தவமெனுந் தகவில்லோரென்றதொடர், துன்னுதார்க்கு அடைமொழியாகவும் இயையத்தக்கது. உயிர்க்கு - உருபுமயக்கம். ஏயெனுந் துணை மாத்திரத்து - விரைவுக்குறிப்பு. ஒத்தன அத்துணை என எடுத்து, ஒத்தனஅவ்வளவே என்றுமாம். தவமெனுந் தகவு இல்லோர் - பாவிகள் என்றபடி. பி-ம்:—[1]எய்தனர், எய்தன. [2]எறிதொறுமெறிதோறும், எய்தனவெறிதோறும். [3]தூயவல்வினை தீயெனத் துணிவிலா, தூயவன்றனைத் தீயவன்றுணிவிலா, தூயவன் வினைதீயனதுணிவிலா. [4]வரும்வரும். [5]மழுவெழுக், மழுவொடும். [6]கொல்வாளும்; கூர்வாளும். (௨௯௨)

அ௬. எறிந்த வெய்தன வெற்றின குத்தின [1]வீர்த்தன படையாவும்,[2]முறிந்து நுண்பொடி [3]யாயின [4]முடிந்தன [5]முனிவிலான் முழுமேனி, சொறிந்த தன்மையுஞ் [6]செய்தில [7]வாயின தூயவன் [8]துணிவொன்று,[9]அறிந்த நாயகன் சேவடி மறந்தில [10]னயர்த்தில னவனுமம்.

(இ - ள்.) எறியப்பட்டனவும் எய்யப்பட்டனவும் தாக்குந்தன்மையனவும் குத்துந்தன்மையனவும் பிளக்குந்தன்மையனவுமாகிய ஆயுதங்களெல்லாம், (அவனுடம்பிற்பட்டவளவில் தாம்) முறிந்து நுண்ணிய தூள்களாய் ஒழிந்து, கோபமில்லாத அப்பிரகலாதனுடைய உடம்புமுழுவதிலும் தினவு சொறிதல்போன்ற தன்மையையும் செய்யாவாயின; (அங்ஙனமாக), பரிசுத்த குணமுடையவனான அப்பிரகலாதன்,சித்தாந்தமான ஒருபொருளாக(த்தன்னால்) அறியப்பட்ட தலைவனான திருமாலினது சிவந்ததிருவடிகளை மறந்தானில்லை; அப்பெருமானுடைய திருநாமத்தையும் உச்சரியாது சோரவிட்டானில்லை.

எறிந்தமுதலியன, பெயர். துணிவு ஒன்று என்றதற்கு - துணிவு ஒன்றி என்றும் பொருள்கொள்ளலாம். பி-ம்:—[1]ஈர்ந்தன. [2]முறிந்த. [3]வாயின. [4]முடிவிலன். [5]முனிவிலான். [6]செய்கில. [7]தன்மனம்,வாயது, வாயன, தானது. [8]துணிவோடும்,துணிவொன்றால், துணிவொன்றாய். [9]அறிந்து.[10]அயர்ந்திலன்.

அ௭. உள்ள [1]வான்பெரும் படைக்கலம் யாவையு [2]முக்கன வுரவோய்நின், பிள்ளை மேனிக்கோ ரணிவந் [3]திலதினிச் செயலென் கொல் பிறிதென்னக், கள்ள வுள்ளத்தன் [4]கட்டினன் கருவிகள் கது

மெனக் [5]கனல்பொத்தித், தள்ளு மின்னென வுரைத்தனன் வயவரு மத்தொழிற் றலைநின்றார்.

(இ - ள்.) (பின்பு அவ்வசுரர்கள் இரணியனிடஞ் சென்று),'வலிமையை யுடையவனே! (எங்களிடம்) உள்ள சிறந்த பெரிய ஆயுதங்களெல்லாம் பொடியாய்விட்டன; (அவற்றால்), உன்பிள்ளையின் உடம்புக்குச் சிறிதுதீங் கும் உண்டாகவில்லை; இனி(யாங்கள்)செய்யவேண்டிய வேறுசெயல்யாதோ?' என்று வினவ,— (அதுகேட்ட இரணியன்), 'மாயைவல்ல மனமுடையனாத லால் (அப்பிரகலாதன்) ஆயுதங்களை (அம்மாயைவலிமைகொண்டு) கட்டிவிட் டான்போலும்; (இனி), விரைவாக நெருப்பைமூட்டிநிறைத்து (அதில் அவ னைத்) தள்ளுங்கள்' என்று சொன்னான்; அவ்வசுரவீரர்களும் அந்நெருப்பு மூட்டுந்தொழிலிலே முயன்று நின்றார்கள்; (எ - று.)

படைக்கலம் பிரகலாதனை யாதோருறுஞ் செய்யமாட்டாமையை அசுரர் தெரிவிக்க,இரணியன் பிரகலாதனைக் கனலில்தள்ளுமாறுகூறினனென்பதாம். கட்டுதல்-யாதொருதீங்கும் செய்யவொட்டாது தடுத்தல்;இதனை'பாம்பின்வா யைக்கட்டினான்' என்றாற்போலக் கொள்க.தள்ளுமின்னென-விரித்தல்.ஆனி- ஹாநி: வடசொல். பி-ம்:—[1]வான்படையுலப்பில. [2]உதிர்ந்தன. [3]இலதென. [4]கருவிக்கட்டதுவலன்.[5]தழல்போற்றித், கனன்மீது. (உகச)

அரு. குழியி லிந்தன மடுக்கினர் [1]குன்றெனக் குடந்தொறுங் [2]கொணர்ந் தெண்ணெய், இழுது நெய்சொரிந் திட்டனர் நெருப் [3]பெழுந் தெரிந்தது விசும்பெட்ட, அழுது நின்றவ [4]ரயர்வுற வையனைப் [5]பெய்தன ரரியென்று, தொழுது [6]நின்றனன் நாயகன் றாளிணை குளிர்ந்தது சுடுதீயே.

(இ - ள்.) (அவ்வசுரர்கள்), ஒருபெருங்குழியிலே விறகுகளை மலைபோல உயரமாக அடுக்கி, குடங்களில் எண்ணெயையும் வெண்ணெயையும் நெய்யை யும் கொண்டுவந்து சொரிந்தார்கள்; (அங்ஙனஞ் செய்த முயற்சியால்), தீ வானத்தையளாவ எழுந்து சொலித்தது; (இரணியன்செய்த உபத்திரவங்க ளால்) அழுதுகொண்டுநின்றவரான தேவர்கள் (இதனைக்கண்டு) இரக்கம் மிகும்படி பிரகலாதனை (அசுரர்கள் அந்நெருப்பிற்) போகட்டார்கள்; (அப் பொழுது அப்பிரகலாதன்), 'ஹரி' என்று திருமாலின் திருநாமத்தை உச்சரி த்து அப்பெருமானுடைய உபயதிருவடியை வணங்கிநின்றான்; (அந்தப் பிர பாவத்தால்), சுடும்இயல்பினதான தீக் குளிர்ச்சி யடைந்துவிட்டது;(எ - று.)

அசுரர் கனலில்தள்ளவும் அது பிரகலாதனுக்குக் குளிர்ந்திருந்ததென்க. பி-ம்:—[1]ஆயிரம். [2]கொணரெண்ணெய். [3]எழுந்திட்டது. [4]அவாவுற, வாவுற. [5]இட்டரிகரியென்று. [6]நாயகன் றாளிணை நினைத்தலும். (உகரு)

அசு. கால வெங்கனல் கதுவிய காலையிற் கற்புடை யவள்சொற்ற
சீல நல்லுரை [1]சீதமிக் கடுத்தலிற் கிழியொடு நெய்தீற்றி
ஆல [2]மன்னவர் கரங்களால் [3]வயங்கெரி [4]மடுத்தலி னனுமன்றன்
கூல மாமென [5]என்புறக் [6]குளிர்ந்ததக் குருமணித் திருமேனி,

(இ - ள்.) விஷம்போலக் கொடியவரான ராக்ஷசர்கள் (இராவணன் கட்டளையாலே தங்கள்) கைகளால் (அநுமானுடைய வாலில்) துணிசுற்றி (அதன்மேல்) நெய்யை ஊற்றி விளங்குகிற நெருப்பைப் பற்றவைத்ததனால் பிரளயகாலாக்கினிபோன்ற கொடியஅக்கினி அதில் மூண்டெழுந்த சமயத்தில், பதிவிரதாதருமத்தையுடைய சீதாபிராட்டி சொன்ன ஒழுக்கத்தை விளக்கும் நல்லவார்த்தையினாற் குளிர்ச்சி மிகுதியாகஉண்டானதால் அந்த அநுமானுடைய வால் (குளிர்ச்சியடைந்தது) போல, நிறமுள்ள இரத்தினம் போன்ற அந்த(ப் பிரகலாதனது அருமைத்)திருமேனி(பகவந்நாம உச்சாரண மகிமையால்) எலும்பளவும் குளிர்ச்சியடைந்தது; (எ - று.)

இங்குக்கூறிய உபமானம் உபமேயத்துக்குப் பிற்காலத்த தாயினும் தாம் அறிந்த பொருளாதலாற் கூறினா ரென்க. அநுமான் இராமதூதனாய்க் கடலைத் தாண்டி இலங்கைபுக்குப் பிராட்டியைக்கண்டு பேசியபின் இராவணனுக்குத் தன்வரவைத்தெரியச்செய்து அவனைத் தான் நேரிற்கண்டுபேசக் கருதி, அசோகவனத்தையழித்து, அதுகாரணமாக வந்தெதிர்த்த இராக்கத வீரர்பலரையும் இராவணகுமாரனான அக்ஷனையும் நாசப்படுத்தியபின்பு, இராவணனது மூத்தமகனான இந்திரசித்துவந்து எதிர்த்து அநுமானைப் பிரமாஸ்திரத்தாற் கட்டிக்கொண்டு சென்றபோது, அக்குரங்கைக் கொல்லக் கருதிய இராவணனை விபீஷணன் 'தூதரைக்கொல்லலாகாது' என்று நீதிகூறி மறுக்க, பின்பு இராவணனிட்ட கட்டளையின்படி அரக்கர்கள் அநுமானுடைய வாலிற் கிழிசுற்றி நெய்யாலும் எண்ணெயாலும் நனைத்து நெருப்புமூட்ட, அச்செய்தியை யறிந்த பிராட்டி 'யான் கற்புநிலைதவறாதவளாயின் அவ்வனல் அநுமானைச் சுடாதொழிக' என்று அநுக்கிரகிக்க, அவளுடைய கற்பின்மகிமையால் அக்கினிகுளிர்ந்து அநுமானைச்சுடாதொழிய, அவ்வனல்கொண்டு அநுமான் இலங்கையை யெரித்தனனென்பதைச் சுந்தரகாண்டத்திற் காண்க.

அஞ்சனாதேவியிடம் வாயுதேவனது அநுக்கிரகத்தாற்பிறந்த வானரசிசு இளமையிற் சூரியமண்டலத்தைக் கனியென்றுகருதி எழுந்து தாவிக் கவரத் தொடங்கியபோது இராகுவினாற் செய்தியறிந்த இந்திரன் சினங்கொண்டு வந்து வச்சிராயுதத்தால் மெல்லப்புடைக்க, அக்குரங்கு இடக்கன்னத்தில் அடிபட்டு அக்கன்னம் சிதையப்பெற்றதனால், பிறகு, அதற்கு அநுமான் என்ற பெயர் இந்திரனால் வைக்கப்பட்டது; ஹநுமாந் என்ற வடசொல் - கன்னத்தில் விசேஷமுடையவ னென்று பொருள்படும்: ஹநு - கன்னம்; மாந் - உடைமைப்பொருள் காட்டும் பெயர்விகுதி: அப்பெயர் இங்கு அநுமன்என விகாரப்பட்டது. மூன்றாமடி சிலபிரதியில் 'ஆலமன்னவர் வயங்கெரி மடுத்தபோ தனுமன்றன் வாலென்னும்'என்று காணப்படுகிறது.பி-ம்:—[1]சீதளமடுத்தலிற். [2]அன்னவவ்வரக்கர்கள், அன்னநம்மரக்கர்கள். [3]பயந்தெரி. [4]மடுத்தபோது, அடுத்தலில். [5]எழுந்தது.[6]குளிர்ந்தன, குளிர்ந்தது. (உகசு)

அஎ. சுட்ட தில்லெகின் றேன்றலைச் [1]சுடர்க்கனல் [2]சுழிபடரழுவத்துள், இட்ட போதினு மென்னினிச் [3]செயத்தக்க தென்றனரிகல் [4]வெய்யோர், கட்டித் தீயையுங் கடுஞ்சிறை [5]யிடுமினக் [6]கள்வனைக் கவ

ர்ந்துண்ண, எட்டுப் பாம்பையும் விடுமின்க ளென்றன 7னெரியெழு தறுகண்ணன்.

(இ - ள்.) (அதுகண்ட)வலிய கொடிய அசுரர்கள் 'சுழன்றுஎரிகின்றநெருப்பு மிக்க பெருங்குழியிற் போகட்டபொழுதும், சுவாலையையுடைய அந்த அக்கினி உன்பிள்ளையை எரிக்கவில்லை; இனி(மற்றும் நாங்கள்)செய்யத்தக்கது யாது?' என்று (இரணியனிடஞ் சென்று) சொன்னார்கள்; (அதுகேட்டு), கோபாக்கினிபொங்கியெழுகின்ற அஞ்சாத நோக்கையுடையவனான இரணியன்,— '(இங்ஙனம் என்கட்டளைக்கு இணங்கி நடவாத) அக்கினிதேவனையுங்கட்டிக் கொடியசிறையில் வைத்திடுங்கள்; வஞ்சகனான அப்பிரகலாதனைப் பிடுங்கித் தின்னுமாறு அஷ்டமகாநாகங்களையும் (அவன்மேல்) ஏவுங்கள்' என்றான்.

நெருப்புப் பிரகலாதனை எரிக்காமையையறிவிக்க, இரணியன் அக்கினியைக் கட்டிச்சிறையிலிடுமாறும், பிரகலாதனை அஷ்டமகாநாகங்களைக் கடிக்க விடுமாறுங் கட்டளையிட்டானென்க. அழுவம் - குழி. சுழி - சுழித்தெரிவது: தீக்குக் காரணக்குறி. எட்டுப் பாம்புகள் - அநந்தன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்ஷகன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்பன. பி-ம்:— 1சுடர்கின்ற. 2சுழிப்பட. 3செய்தக்கது. 4செய்வோர், வெய்யோன். 5இடுமின்கள். 6அவன்றனை. 7எரிகின்ற. (உ௬எ)

அஅ. அனந்த னேமுத லாகிய நாகங்க ளருளென்கொ லெனஅன்னான், 1நினைந்த மாத்திரத் 2தெய்தின நொய்தினில் நெருப் 3புகு பகுவாயால், வனைந்த 4தாமன்ன மேனியி னுன்றன் மேல்வாளெயி றுறவூன்றிச், 5சினந்த மீக்கொளக் 6கடித்தன துடித்திலன் திருப்பெயர் மறவாதான்.

(இ - ள்.) அனந்தன் முதலான அஷ்டமகாநாகங்கள் அவ்விரணியன் (தம்மைப்பற்றி) நினைத்தமாத்திரத்தில் (அவனது) கட்டளையாதோ என்று எண்ணி(அங்கு)வந்துசேர்ந்து, விரைவாக விஷாக்கினி வெளிப்படுந்தன்மையுள்ள திறந்த (தம்)வாய்களால் கருத்தோடு அழகியதாகச் செய்யப்பட்டதான சித்திரப்பாவையைப்போன்ற[மிக்கஅழகையுடைய]உடம்பையுடைய அப்பிரகலாதன்மேல் வாள்போற் கூரிய(தம்)விஷப்பற்கள் அழுந்தக் கோபம் தம்மை விஞ்சி அதிகப்பட ஊன்றிக்கடித்தன; (அங்ஙனம் கடிக்கவும்), ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமத்தை மறவாதவனான அப்பிரகலாதன் (அக்காரணத்தாற்) சிறிதும் வருந்தினானில்லை; (எ - று.)

'திருப்பெயர்மறவாதான்' என்ற விசேஷ்யம் இங்கே லாபிப்பிராயமாதலால், கருத்துடையடைகோளியணி. தெய்வநாகங்களாதலால் அவன் நினைத்தமாத்திரத்தில் அதனையுணர்ந்து எய்தின வென்க. அநந்தன் என்றபெயர்- (பிரளயத்திலும்)அழிவில்லாதவனென்று பொருள்படும். 'அனந்தசாயிதனன் பெனுமடியவ னரும்பெறற் திருமேனி,' 'அனந்தசாயிதன் னருளுடை யடியவனருள்பெற்றதிருமேனி' என்று சிலபிரதிகளில்மூன்றாமடி காணப்படுகின்றது. பி-ம்:—1உன்ன, என்ன. 2எய்தினர் நேர்ந்தனர், எய்தின நேர்ந்த. 3உகப். 4தாரவன். 5சினந்து மீக்கொள, சினந்தலைக்கொள. 6கடித்தது. (உ௬அ)

அசுூ. பக்க [1]நின்றவை [2]பயத்தினிற் [3]புயற்கறைப் பசும்புனல்
[4]பகுவாயிற்,கக்க வெஞ்சிறைக் கலுழனு [5]டுடுக்குறக் கவ்விய காலத்துட்,
செக்கர் மேகத்துச் சிறுபிறை நுழைந்தன செய்கைய [6]வலிசிந்தி,
உக்க பற்[7]குல மொழுகின எயிற்றிரும் [8]புரைதொறு மமிழ்தூறி.

(இ - ள்.) அருகில்நின்ற பிராணிகளெல்லாம் அச்சத்தால் திறந்த (தம் தம்) வாயினின்று மேகம் (மழைபொழிவது) போலப் புதிய இரத்தநீரைக் கக்கவும் (பாம்புகளுக்கு வைரியாகிய) வெவ்விய சிறகுகளையுடைய கருடனும் நடுக்கமடையவும் (அஷ்டமகாநாகங்கள் பிரகலாதனைக்) கடித்துப் பிடுங்கியபொழுது,—சிவந்த மேகத்தினுள்ளே சிறிய பிறைச்சந்திரன் நுழைந்தாற் போன்ற செய்கையையுடையனவான பற்களின் கூட்டங்கள், வலிமையொழிந்து ஒடிந்துஉதிர்ந்தன; (அங்ஙனம் ஊன்றிய) பற்களின்பெரிய துளைகளிலிருந்தெல்லாம் (விஷம்பாயாமல்) அமிருதத்துளிகள் ஊறியொழுகின.

புயற்கறை - உவமைத்தொகை. கறை - இரத்தம். பசுமை-புதுமையின் மேலது. கலுழன் சிறைக்கு வெம்மை - பாம்புகட்கு அச்சந்தருதலும், வேகமுடைமையும். வளைந்தவடிவத்தோடு வெண்ணிறமாய் விளங்கும் பற்கள் பொன்னிறமான பிரகலாதனுடம்பில் ஊன்றியழுந்தியதற்கு உவமை கூறுவார், 'செக்கர்மேகத்துச் சிறுபிறை நுழைந்தன செய்கைய' என்றார். சிறு பிறை - இளம்பிறை. எயிறு-பல். உகுதல்-ஒடிதல். ஒருமுறை கடித்தபோது அவனுடம்பில் நன்றாகத்தைத்து அழுந்திப்பதியாத பற்கள் மீளவுங் கடித்தற் பொருட்டு கோபத்தால் எடுக்கத் தொடங்கியபோது எடுக்கமுடியாமல் வலியற்று ஒடிந்து உதிர்ந்தனஎன்க. பி-ம்:—[1]நின்றிவை, நின்றவர். [2]பயத்தினர். [3]பற்கறை, புயற்றகை. [4]பகுவாயால். [5]நடுங்குற. [6]பலசிந்தி. [7]குவை. [8]புழை.

வேறு.

கூ௦. சூழப் பற்றின [1]சுற்றுமெயிற்றிற்
போழக் கிற்றில வென்றுபு கன்றார்
வாழித் திக்கின் [2]மயக்கின் மதந்தாழ்
வேழந் துக்கிடு [3]மின்னென விட்டான்.

(இ - ள்.) (அங்ஙனமாக அசுரர்கள் இரணியனிடஞ் சென்று, 'பிரகலாதனுடம்பைச்) சூழ்ந்து பற்றிக்கொண்டவையான நாகங்கள் (தம் விஷப்) பற்களால் (அவனுடம்பை) எங்கும் பிளந்து வடுப்படுத்தமாட்டவில்லை' என்று சொன்னார்கள்; (அதுகேட்டு இரணியன்), 'மதமிகுதலாலாகிய களிப்பையுடைய திக்கஜங்களிற் சிறந்ததாகிய ஐராவதத்துக்கு (இவனை இலக்காக) இடுங்கள்' என்று சொல்லி ஏவி யனுப்பினன்; (எ - று.)—வாழி - அசை; வலிமிக்கது செய்யுளோசையின் பொருட்டு.

'ஐராவதத்தைக் கொண்டு இவனைக் கொல்ல விடுங்கள்' என்பது, இரணியன் கட்டளை. திக்கின்வேழத்துக்குஎனப் பொதுவாகஇருப்பினும் ஐராவதத்துக்குஇட்டதாக மேல்வருதலால் இங்ஙனம் கொள்ளப்பட்டது. தாழ்

தல்-மிகுதல். மயக்கு - களிப்பு. இடிமின்னென - விரித்தல். பி-ம்:—[1]குற்றெயிற்றன. [2]மதக்கைக்கழூர்தான், மயக்கிமதர்தாழ். [3]என்னென. (உஉ0)

கூக. பசையிற் [1]றங்கலில் சிந்தையர் பல்லோர்
திசையிற் சென்றனர் [2]செப்பின னென்னும்
இசையிற் [3]றந்தன னிந்திர னென்பான்
[4]விசையிற் றிண்பணை வெஞ்சின வேழம்.

(இ - ள்.) (அதுகேட்டவுடன்), அன்போடு பொருந்துதலில்லாத மனத்தையுடையவரான பல அசுரர்கள் (கிழக்குத்)திக்கிற் சென்று '(இவ்வாறு இரணியன்) கட்டளை கூறினன்' என்று சொன்ன சொல்லைக் கேட்டமாத்திரத்தில், (அக்கிழக்குத் திக்குப்பாலகனான) இந்திரனென்னுந் தேவராஜன், வலிய (நான்கு) தந்தங்களையும் (இயற்கையான) கொடிய கோபத்தையுமுடைய (தனது ஐராவதமென்னும்) யானையை (இரணியன்பக்கல் அச்சத்தால்) விரைவாகக்கொடுத்தான்; (எ - று.)—பசை-இரக்கம். பி-ம்:—[1]தங்கில. [2]செப்பினர். [3]சென்றனன். [4]விசையத். (உஉக)

கூஉ. கையிற் கால்களின் மார்பு கழுத்தில்
தெய்வப் பாச முறப்பிணி செய்தார்
[1]மையற் காய்கரி முன்னுற வைத்தார்
பொய்யற் றானு [2]மிதொன்று புகன்றான்.

(இ - ள்.) (அசுரர்கள் பிரகலாதனுடைய) கைகளிலும் கால்களிலும் மார்பிலும் கழுத்திலும் தெய்வத்தன்மையுடைய [மந்திரபலமுள்ள] கயிறுகளால் இறுகக்கட்டி, (அவனை), மதமயக்கத்தையுடையதும் (அதனால் அனைவரையும்) கோபிப்பதுமான அந்தயானையின் எதிரிலே பொருந்தப் போகட்டார்கள்; (அப்பொழுது), பொய்ம்மையில்லாதவனான பிரகலாதனும் (அந்த யானையைநோக்கி) இந்த ஒரு வார்த்தையைச்சொன்னான்; (எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

பொய்யற்றான்-மெய்ப்பொருளாகிய பரதத்துவத்தை உள்ளபடி யுணர்ந்து உரைப்பவன். பிரகலாதனைக் கட்டி ஐராவதத்தின் முன்னிட, அவன் அதனை நோக்கிப் பின்வருமாறு கூறலாயினனென்க. பி-ம்:—[1]மையில், மையை. [2]இருந்து. (உஉஉ)

கூங. எந்தாய் பண்டொ ரிடங்கர் விழுங்க
[1]முந்தாய் நின்ற முதற்பொரு ளேயென்று
[2]உந்தாய் தந்தை யினத்தவ னேதை
வந்தா [3]னென்றன் மனத்தின னென்றான்.

(இ - ள்.) 'உமது தாய்தந்தையரது இனத்தானான கஜேந்திராழ்வான் முன்பு ஒருமுதலை(தன்னை)விழுங்கத்தொடங்கியபொழுது, 'எமது தலைவனே! (எல்லாப்பொருளுக்கும்) மூலகாரணமாய்நின்ற முதன்மையான பொருளே!' என்று சொல்லியழைக்க, (உடனே அங்கு) வந்து (முதலையைக்கொன்று அக் கஜேந்திரனுக்கு) இடர்தீர்த்தவனான திருமால், எனது மனத்திலேயுள்ளான்' என்று சொன்னான்; (எ - று.)

உனது இனத்தானுக்கு ஆபத்காலத்தில் வந்து உதவினவனே யான் மனத்திற் கொண்டுள்ளேனாதலால், நீ எனக்கு இடர்செய்யமாட்டாயென்பது உட்கோள். முந்து ஆய் நின்ற முதற் பொருளே - ஆதிமூலமே! உம் தாய் தந்தை இனத்தவன் - யானையினத்திற்சேர்ந்தவன். உம் - உயர்வுப்பன்மை. 'இனத்தவன்' என யானையை உயர்திணையாகக் கூறினது, உயர்வுபற்றிவந்த திணைவழுவமைதி. 'எந்தாய்' என்பதை, பிரகலாதன் யானையைவிளித்ததாகக் கொள்ளினுமாம்.

இதிற் குறித்த கதை:—இந்திரத்யும்நனென்னும் அரசன் மிக்கவிஷ்ணு பக்தியுடையவனாய் ஒருநாள் விஷ்ணுபூஜை செய்கையில், அகஸ்தியமகாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவன் தன்கருத்துமுழுவதையும் திருமாலைப்பூசிப்பதிற் செலுத்தியிருந்ததனால் அவ்விருடியின் வருகையை யறிந்திலானாய் அவனுக்கு உபசாரமொன்றும் செய்யாதிருக்க, அம்முனிவன் தன்னை அரசன் அலக்ஷியஞ்செய்தானென்று கருதிக் கோபித்து, 'நீ யானை போலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒருகாட்டில் ஒருயானையாகத் தோன்றினானாயினும், முன் செய்த விஷ்ணுபக்தியின் மகிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர்களைக் கொண்டு திருமாலை அருச்சித்துப் பூசித்து வருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் அருச்சனைக்காகப் பூப்பறித்தற்குப் போய் இறங்கினபொழுது, அங்கே, முன்பு நீர்நிலையில் நின்று தவஞ்செய்துகொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரியமுதலையாய்க் கிடந்த ஹூஹூ என்னும் கந்தருவன் அவ் யானையின் காலைக் கவ்விக்கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ள முடியாமல் கஜேந்திரன் ஆதிமூலமேயென்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அங்கு எழுந்தருளித் தனது சக்கரத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முத்தியை அருள்செய்தனன் என்பதாம். இவ்வரலாற்றில், திருமாலே பரம்பொருளாந் தன்மை வெளியாம். பி-ம்:—1முந்தா. 2உந்தாய் தந்தை யினத்திபமோத, உய்ந்தா யுந்த னினத்தவனோத, உந்தாய்தந்தை யெனத்தவனோத. 3வந்தென், இன்றென். (௨௨௩)

௬௪. என்னா முன்ன 1மிருங்களி 2றுந்தன்
பொன்னா ரோடை பொருந்த நிலத்தின்
அன்னா னைத்தொழு தஞ்சி யகன்றது
3ஒன்னா 4ரத்திற 5மெய்தி யுரைத்தார்.

(இ - ள்.) என்று (பிரகலாதன்) சொன்னவுடனே, பெரிய அந்த யானையும் தனது பொன்னினாலமைந்த நெற்றிப்பட்டம் தரையிற் படும்படி அப் பிரகலாதனை நமஸ்கரித்து; (அவனுக்கு) அஞ்சி விலகிற்று; அத்தன்மையை, பகைவர்களான அசுரர்கள்(இரணியனிடம்)போய்ச் சொன்னார்கள்; (எ-று.)

--ஒன்னுர்-ஒன்றார் என்பதன் மரூஉ; பொருந்தாதவர் என்று பொருள். பி-ம்:— [1]இகற்களிறு, மதக்கரி. [2]அஞ்சி. [3]ஒன்னுன். [4]இத்திறம். [5]எய்த வுணர்ந்தான்.

கூரு. வல்வீ ரைத்துயில் வானை மதித்தென்
நல்வீ ரத்தை [1]யழித்தது [2]நண்ணுற்று
ஒல்வீ ரொற்றை யுரக்கரி தன்னைக்
கொல்வீ ரென்றன [3]னெஞ்சு [4]கொதிப்பான்.

(இ - ள்.) (அதுகேட்டு) மனம்கொதிப்பவனுன இரணியன்,—(அவ்வசுரர்களை நோக்கி, 'இந்தயானை) பெரிய கடலிலே உறங்கிக்கிடப்பவனுன திருமாலை (நன்கு) மதித்து எனது சிறந்தபராக்கிரமத்தைச் சிதைத்தது; (ஆதலால்), வல்லமையுடையவர்களே ! (நீங்கள்) சென்று, ஒப்பற்ற வலிமையையுடைய அவ்யானையைக் கொல்லுங்கள்' என்று சொன்னுன்; (எ - று.)

நான் எல்லா வுலகத்துக்கும் தலைமைபூண்டதனுல் உலகங்களில் எங்கும் தனக்குத் தங்கஇடங்கிடையாமல் எனக்குஅஞ்சி யோடிக் கடலை வலிய அரணுகக்கொண்டு அதிற்சேர்ந்து யாதொன்றும்செய்ய இயலாமல் தூங்கிக்கிடப்பவனைப் பெரியபொருளாகமதித்து அதனுல் எனதுசிறந்தவீரத்தைப் பொருள்செய்யாது சிதைவுபடுத்தியது என்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. ஒல்வீர் - ஒல்வார் என்பதன் ஈறுதிரிந்த விளி. பி-ம்:—[1]ஒழித்தது. [2]நாமத்தொல்வீரத்த துணைக்கரி தன்னை. [3]நின்று. [4]கொதித்தான். (உஉ௫)

கூசா. தன்னைக் கொல்லுநர் சாருத லோடும்
பொன்னைக் கொல்லு [1]மொளிப்புகழ் பொய்யா
மன்னைக் கொல்லிய வந்தது [2]வாரா
மின்னைக் கொல்லும் [3]வெயிற்றி னெயிற்றால்.

(இ - ள்.) (அதுகேட்ட அசுரர்கள் உடனே) தன்னைக் கொல்பவர்களாய் நெருங்கிய அளவிலே, (அந்த யானை), (மேகத்தினின்று) நீங்காத மின்னலை யழிக்கும் வெயில்போன்ற ஒளியையுடையதான (தனது) தந்தத்தால், பொன்னையழிக்கும் (உடம்பின்) ஒளியையுடைய புகழழியாத பெரியோனுன அப்பிரகலாதனைக் கொல்ல வந்தது; (எ - று.)

இரண்டாமடியிலும் நான்காமடியிலும் 'கொல்லும்' என்றது, கீழ்ப்படுத்துமென்றபடி; உவமையுருபுமாம். ஒளி - மன்னுக்கு அடைமொழி. கொல்லிய - எதிர்காலவினையெச்சம். வெயிற்று - வெயிலையுடையது; ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். எயிற்றால்மன்னைக்கொல்லியவந்தது: வாரா-(அங்ஙனம்) வந்து என மேற்பாட்டோடுகுளகமாகவுரைப்பினுமாம். பி-ம்:—[1]மொழிப்புகல், மொழிப்புகழ். [2]வாரி. [3]எயிற்றினியற்றால். (உஉசு)

கூஎ. வீரத் திண்டிறன் மார்பினில் [1]வெண்கோடு
ஆரக் குத்தி [2]யழுத்திப நாகம்
வாரத் [3]தண்குலை வாழை [4]மடற்சூழ்
ஈரத் தண்டென விற்றன வெல்லாம்.

(இ - ள்.) மிகவும் அதிகமான வலிமையையுடைய (அப்பிரகலாதனது) மார்பிலே நன்றாகக்குத்தி யழுத்தியவையான அந்தயானையின் வெண்ணிறமான

தந்தங்கள்நான்கும், விரும்பப்படுகிற குளிர்ந்த [செழிப்பான] குலையையுடைய வாழைமரத்தின் பட்டைசூழ்ந்த குளிர்ந்த தண்டுபோல (எளிதில்) ஒடிந்தன.

உவமையணி.மார்பினிலழுத்திய நாகவெண்கோடுஎல்லாம் இற்றனஎன இயையும். வாரம் - அன்பு. பி-ம்:—[1]வெங்கோடு. [2]அழுத்தியதாக, அழுத்தியதாகம். [3]தண்டலை. [4]மடற்குள். (௨௨௭)

௬௮. வெண்கோ டிற்றன [1]மேவலர் செய்யுங்
கண்கோ டற்பொறி யிற்கடி தேகி
[2]எண்கோ டற்கரி தென்ன வெகுண்டான்
திண்கோ டைக்கதி ரிற்றெறு கண்ணான்.

(இ - ள்.) (அதுகண்டு), பகைவர்களான அசுரர்கள், கண்இமைத்தல் செய்யும் அளவிலே விரைவாக (இரணியனிடஞ்) சென்று, '(ஐராவதத்தின்) வெண்மையான தந்தங்கள் ஒடிந்துவிட்டன; (நின்பிள்ளையின்) வலிமை [உயிர்] கவர்தற்குஅரியது' என்றுசொல்ல, (அதுகேட்டு இரணியன்) முதிர்ந்த கோடைக்காலத்துச் சூரியனினும் உக்கிரமான கண்களையுடையவனாய்க் கோபித்தான்; (எ - று.)

கண் கோடல்செய்யும் பொறியில் என இயையும்: பொறி - அளவு: இமைப்பொழுதிலெனக. எண் - வலிமை. தெறுதல் - சுடுதல். பி-ம்:—[1]மெய்யிலர். [2]வெண்கோடிற் கிரியென்ன. (௨௨௮)

இப்பாடலையடுத்து

இவனை யெண்ணிலே மாளிகை யும்பர்மே லேற்றிப்
புவனந் தன்னிலே நூக்குமென் றவுணர்கோன் புகலப்
புவன முண்டவன் கழலிணைப் புண்ணியன் றன்னைப்
பவனன் றன்னிலும் வெய்யவர் பற்றியே யெடுத்தார்,

உற்றெ முந்தனர் மாளிகை யும்பர்மேற் கொண்டு
கற்ற றிந்தவர்க் கரசனைக் கடுந்திற லவுணர்
பற்றி நூக்கலும் பார்மகள் பரிவுடன் வரரார்
நற்ற வற்கொரு தீங்கிலை யெனவவ னயந்தான்.

என்று இரண்டுபாடல்கள் சிலபிரதிகளில் காணப்படுகின்றன.

௬௯. தள்ளத் தக்கில் பெருஞ்சயி லத்தோடு
[1]எள்ளக் கட்டி [2]யெடுத்து [3]விசித்துக்
கள்ளத் திங்கிவ னைக்கரை காணா
[4]வெள்ளத் துய்த்து விடுமென விட்டான்.

(இ - ள்.) (அங்ஙனம்கோபித்த இரணியன் அசுரர்களைநோக்கி, 'எவ்வகையாலும் கொல்லமுடியாத) வஞ்சனையையுடைய இப்பிரகலாதனை, இப்பொழுது (யாவரும்) இகழும்படி (யாவராலும்) அசைக்கமுடியாத பெரிய மலையுடனே இறுக்கிக்கட்டி எடுத்துக்கொண்டுபோய், கரைகாணவொண்ணாத கடல்வெள்ளத்திலே தள்ளிவிடுங்கள்' என்று ஏவினான்; (எ - று.)

தக்கில் - தகாத. சைலம் - வடமொழி. கள்ளத்துஇவனை இங்கு விசித்துக்கட்டி எடுத்துஎன்க. பி-ம்:—[1]அள்ளக். [2]இறுக்கி, அடக்கி, அடித்து.

3விசித்திர், விசித்தே. 4வெள்ளத் துக்கிடுமின், வெள்ளத்துய்த்திடுவீர், வெள்ளத்துய்த்திடுமின். (உஉக)

கoo. ஒட்டிக் கொல்ல வுணர்ந்து 1வெகுண்டான்
விட்டிட் டானல னென்று விரைந்தார்
கட்டிக் கல்லொடு கால்விசை யிற்போய்
2இட்டிட் டார்கட லின்3னடு வெந்தாய்.

(இ - ள்.) (அதுகேட்டு அவ்வசுரர்கள்),—'(இன்னும் இவனே இரணியன்) விட்டானில்லை; பிரதிஜ்ஞைசெய்து [தவறாது] கொல்ல நிச்சயித்துக் கோபங்கொண்டான்' என்றுஅறிந்து விரைவுகொண்டு, (அவனைப் பெரிய தொரு)மலையுடனேகட்டி வாயுவேகமாகச்சென்று கடலின் நடுவிலேபோகட்டார்கள்; (எ - று.)—எந்தாய் - எமதுதலைவனே! என்றது, கதைகூறிவருகிற விபீஷணன் இராவணனைநோக்கி விளித்தது.

கால் - காற்று. கால்விசை-கால்களின்வேகமுமாம். பி-ம்:—1வெகுண்டார். 2விட்டிட்டார். 3நடுவேதான். (உஉo)

கoக. நடுவொக் குந்தனி நாயக னுமம்
1விடுகிற் கின்றில னுகலின் வேலை
மடுவொத் 2தங்கதின் வங்கமு 3மன்றாய்க்
4குடுவைத் 5தன்மைய தாயது குன்றம்.

(இ - ள்.) (அப்பொழுது பிரகலாதன்),—நடுவுநிலைமை தவறாதுள்ள ஏகநாயகனான திருமாலின் திருநாமத்தை (உச்சரித்துக்கொண்டு) சோரவிடாதிருந்தானாதலால் கடல் மடுப்போன்றிருக்க, அக்கடல்வெள்ளத்திலே (பிரகலாதனைச்சார்த்திக்கட்டிய)மலை (பெரிய) மரக்கலம்போலவுமாகாமல் (சிறிய) சுரைக்குடுவையின் தன்மையதாயிற்று; (எ - று.)

மிதக்கும்இயல்பினதான சுரைக்குடுவையை நீந்துவார் தமக்குஉதவியாக இடையிற்கட்டிக்கொள்ளும் இயல்பை இங்குஉணர்க. அக்குடுவை தான் மிதத்தலோடு தன்னைச்சார்த்திக்கட்டியவர் நீரில் அமிழாது மிதத்தற்குங் கருவியாதல்போல, அம்மலை தான் மிதந்துகொண்டு தன்னைச்சார்த்திக்கட்டிய பிரகலாதன் நீரில்அமிழாதபடி அவனை மேல்நிறுத்துவதுமாயிற்றென்க. இங்ஙனம் மலை மிதவையானதற்குக் காரணம் பகவந்நாமோச்சாரணமகிமை யென்பதை முன்னிரண்டடியில் விளக்கினர்.4உடுபத்தன்மையதாயதுஎன்று பாடமோதி-தெப்பத்தின் தன்மையதாயிற்று என்று உரைத்தலுமொன்று; உடுபம்-தெப்பம்: வடசொல். அங்கதின் வங்கமு மன்றாய் என்பதற்கு - அக்கடலில் அலைகளுமில்லையாக என்று உரைப்பினும் அமையும்; அவ்வுரைக்கு, வங்கம் - பங்கம் என்ற வடசொல்லின் விகாரமென்க. பி-ம்:—1விடுகிக்கின்றினன். 2ஆர்கலி. 3அன்றால், ஒன்றாய்க். 4குடுபத். 5தன்மையுமாயது. (உஉக)

கoஉ. தலையிற் கொண்ட தடக்கையி னுன்றன்
நிலையிற் 1றீர்வின் மனத்தி னினைந்தான்
சிலையிற் 2றிண்புன லிற்3சினை யாவின்
இலையிற் பிள்ளை யெனப்பொலி கின்றான்.

(இ - ள்.) வலிய பிரளயவெள்ளத்திலே கிளைகளையுடையதோர் ஆலமரத்தினது இலையின்மேல் சிறுகுழந்தைவடிவத்தோடுபள்ளிகொண்டருளிய திருமால்போல (வலிய கடல் வெள்ளத்திலே) மலையின்மீது (பள்ளிகொண்டு யாதோர் அபாயமுமின்றி) விளங்குகின்றவனான அப்பிரகலாதன்,—தலைமேற் (கூப்பிவைத்துக்) கொண்ட பெரியகைகளையுடையவனாய், (தனது) உறுதி நிலையினின்று நீங்குதலில்லாத மனத்துடனே (திருமாலைத்) தியானிப்பவனானான்; (எ - று.)

கையினன் - குறிப்புமுற்றெச்சம். எல்லாம்அழியும் பிரளயகாலத்தில் கடல்பொங்கி உலகங்களை மூடிக்கொள்ள, எங்கும் ஜலார்ணவமான அப்பிரளயப்பெருங்கடலிலே ஓர் ஆலமரம் தோன்ற, அம்மரத்தின் ஓர் இலையின்மீது எம்பெருமான் ஒருவனே சராசரங்களையெல்லாம் ஊறுபடாமல் தனது திருவயிற்றிலடக்கி வைத்துக்கொண்டு ஒருசிறுகுழந்தைவடிவமாய்ப் படுத்துயோக நித்திரை செய்தருளுகின்றனனென்பது நூற்கொள்கை. இச்செய்யுள் "மோதுற்றூர்" (103) என்பதன்பின் பலபிரதிகளிற் காணப்படுகின்றது. பி-ம்:— [1]நீர்வன். [2]தண். [3]சிலைமேற்றன். (௨௩௨)

௧௦௩. மோதுற் றூர்திரை வேலையின் [1]மூழ்கான்
மீதுற் றூர்சிலை மீது கிடந்தா
னாதிப் பண்ணவ னாயிர நாமம்
ஓதுற் றூன்மறை யொல்லை யுணர்ந்தான்.

(இ - ள்.) வேதங்களை விரைவிலேயறிந்தவனான அப்பிரகலாதன்,— மோதிக்கொண்டு நிறைகிற அலைகளையுடைய கடலிலே அமிழாமல் (மிதந்து) மேலே பொருந்தியுள்ள மலையின்மீது படுத்தபடி யிருந்தவனாய், ஆதிதேவனான திருமாலினது ஆயிரந்திருநாமங்களைச் சொல்லலானான்; (எ - று.)

பண்-பெருமை; அதனையுடையவன் - பண்ணவன். ஒல்லை-குருவினிடம் ஓதுதற்கு முன்னமே என்றபடி; பிரகலாதன், தாயின் கருப்பத்தி லிருக்கும் பொழுதே நாரதமகாமுனிவன் அவன்செவியிற் செய்த உபதேசத்தால் அனைத்தையும் அறிந்தன னென்க. பி-ம்:— [1]மூழ்கா. (௨௩௩)

வேறு.

௧௦௪. அடியா ரடியே னெனுமார் வமலால்
ஒடியா [1]வலியா னுடையே னுளனோ
கொடியாய் குறியாய் குணமே துமிலாய்
நெடியா யடியே னிலை [2]நேர் குதியோ.

(இ - ள்.) (துஷ்டர்களை யழிப்பதில்) கொடுமையை யுடையவனே! (எவர்க்கும்) வரையறுத்து அறியமுடியாதவனே! தீக்குணம் ஒன்றுமிலாதவனே! பெருமையையுடையவனே! யான் '(உனது) அடியார்களுக்கு அடியவனாவேன்' என்னும் விருப்பமுடையவனே யல்லாமல், அழியாத அகங்காரத்தை யுடையவனாயிருக்கிறேனோ? [இல்லையே என்றபடி]; அடியனான எனது நிலைமைக்கு (நீ) இணங்கி அருள்செய்வாயோ? (எ - று.)—பிரகலாதன்

எம்பெருமானைத் துதித்தவகை, இதுமுதற் பத்துக்கவிகளிற் கூறப்படு கின்றது.

அடியாரடி யேனெனு மார் வமலால் என இவ்வாறு இவ்விருத்தங்களைச் சிந்தடிநான்குகொண்ட வஞ்சிவிருத்தமாகவும் அலகிடலாம். நெடியாய்-விசுவ ரூபமுடையவனே! எனினுமாம். குறியாய் - (மனமொழிமெய்களாற்)குறித் தற்கு அரியாய்! பி-ம்:—[1]வலியென். [2]நோக்குதியோ. (உ௬௪)

க௦ரு. கள்ளந் [1]திரிவா ரவர்[2]கை தவன்நீ
உள்ளந் [3]தெரியா தவுனக் [4]குளவோ
துள்ளும் [5]பொறியின் னிலைசோ தனைதான்
வெள்ளந் தருமின் னமுதே விதியோ.

(இ - ள்.) வஞ்சகமாக நடக்கின்றவர்களுக்கு வஞ்சகமாக நடக்கின்ற வன் நீ; (அத்தன்மையனான) உனக்கு (பிராணிகளுடைய) உள்ளக்கருத்துக் கள் தெரியாதவை யுண்டோ? பாற்கடலினால் தரப்பட்ட இனிய அமிருதம் போல மிக இனியனாகவுள்ளவனே! சஞ்சலப்படும் இயல்பினதான (எனது) மனத்தின் நிலையை (நீ இவ்வாறு) சோதித்தல் முறைமையோ? (எ - று.) —பி-ம்:—[1]திரிவானன. [2]கைதவனீவ. [3]தெரியாதது. [4]உளதோ. [5]பொறியே னிலைசோர்தலைதான். (உ௬ரு)

க௦கூ. வருநான் [1]முகனைம் முகன்வா னவர்[2]கோன்
திருநான் மறையின் [3]நெறியே திரிவார்
பெருநாள் தெரிகின் றிலர்பே தைமையேன்
[4]ஒருநா ளுனையெங் ஙன[5]முன் னுவனே.

(இ - ள்.) (உனது திருநாபிக்கமலத்தினின்று) தோன்றிய நான்குமுகங் களையுடையவனான பிரமனும் ஐந்துமுகங்களையுடையவனான சிவனும் தேவ ராஜனான இந்திரனும் (ஆகிய தலைமைத்தேவர்கள்) சிறந்த நான்கு வேதங்க ளிற் கூறப்பட்ட நெறியிலேயே நடக்கின்றார்கள்; (அங்ஙனம் நடக்கின்ற அவர்களும்), வெகுகாலமாக (உனது உண்மைநிலையை) அறிகின்றார்களில்லை; (அங்ஙனமாக), அறியாமையையுடையவனான நான் ஒருநாளில்[சொற்பகாலத் தில்] உன்னை எவ்வாறு தியானிக்கமாட்டுவேன்? (எ - று.)—பி-ம்:—[1]முக னேமுதல். [2]தான். [3]முறையே. [4]ஒருநான். [5]முன்னுவனோ. (உ௬௬)

க௦எ. செய்யா தனவோ விலைதீ வினைதான்
[1]பொய்யா தணவந் து[2]புணர்ந் திடுமால்
மெய்யே [3]யுயிர்தீர் வதொர்மேல் வினைநீ
ஐயா வொருநா ளுமயர்த் தனையோ.

(இ - ள்.) (நான்) செய்யாத தீய செயல்களோ இல்லை;(அங்ஙனம் யான் செய்த எல்லாத்தீச்செயல்களாலுமாகிய பாவங்கள்) தாம் தவறாதனவாய் வந்து (எனக்கு) நேரும்; இது உண்மையே; ஐயா! (அக்கருமம் என்) உயிரை விட்டு நீங்கும்படியான ஒப்பற்ற மேலான அருட்செயலை நீ ஒருபொழுதே னும் மறந்தாயோ? (எ - று.)

தலைவனான நீ அடியவனான என்பக்கல் ஒருபொழுதும் மறவாமல் திருவருள் செய்தலால், யான் முன்பு செய்த தீச்செயல்களாலாகிய பாபகருமங்கள் என்னிடம் வந்து நெருங்குதற்கு அஞ்சி விலகுகின்றனஎன்பதாம். முதலடியில், ஓ - தெரிநிலை. சிலபிரதிகளில் "ஆயப்பெறு" (10) என்பதன்பின் இச்செய்யுள்உள்ளது. 'மெய்யாயின தீர்வதென் மேல்வினையை' என்று சில பிரதியில் மூன்றாமடி காண்கின்றது. பி-ம்:—1 பொய்யாதெனவந்து, பொய்யாதனவாய்மை. 2புணர்த்திடும். 3இடர். (௨௩௭)

௧௦அ. ஆயப் 1பெறுநன் னெறிதம் 2மறிவென்று
ஏயப் பெறுமீ சர்களெண் ணிலரால்
நீயப் 3புறநிற் கநினைக் கிலர்நின்
மாயப் பொறிபுக் குமயங் குவரால்.

(இ - ள்.) ஆராய்ந்து அடையத்தக்க நல்ல உபாயமாவது, தமது அறிவேயென்று எண்ணி, (அப்படிப்பட்ட சிறப்புள்ள தத்துவஞானம்) பொருந்தப்பெற்ற தலைவர்கள் [பெரியோர்] அளவிறந்தவருண்டு; நீ (அவர்களுடைய உண்மையறிவுக்கும் எட்டாமல் அதனைக்கடந்து) அப்பால் நிற்றலால், (அவர்களெல்லோரும் உனது சொரூபத்தை முழுவதும்) சிந்திக்கத்திறமையற்றவர்களாய் உனது மாயையாகிய வலையிலே அகப்பட்டு மயங்குவார்கள்;(எ-று.)

மகாஞானியரும் உன்னைத் தம்மறிவாற் காணும் வல்லமையுள்ளவரல்லரென்றபடி. பொறி-யந்திரம். என்று என்பதை, என்ன வென்னும் எச்சத்தின் திரிபாகக்கொண்டு, என்று பிறர் கொண்டாடும்படி என்று உரைப்பினுமாம். பி-ம்:—1பெருமன். 2அறிவன். 3புறமேனிகரொக்கிலர். (௨௩௮)

௧௦௯. தாமே தனி1நா யகரா யெவையும்
போமே பொருளென் றபுரா தனர்தாம்
யாமே பர2மென் றனர்3ரென் றவர்க்கு
4ஆமே 5பிறர்6நின் னலதா ருளரே.

(இ - ள்.) தாமே ஒப்பற்ற முதன்மைத்தலைவராய் (உலகத்தில்விளங்கி) எல்லாப்பொருள்களும் அழிந்துவிடு மென்று சொன்ன பழைய பெரியோர் சிலர், யாமே பரம்பொருள் என்று சொன்னார்கள்; என்று சொன்ன அவர்களுக்கு (சொன்னபடி)ஆகுமோ?[ஆகா தென்றபடி]; (உண்மையிற் பரம்பொருளாவார்) உன்னையன்றி வேறுயாவர் உளர்? (எ-று.)

பொருள் எவையும் போமே என்ற என்பதற்கு - எல்லாப்பொருள்களும் தமக்கு உள்ளபடி தெரியு மென்றுகொண்ட என்றும் பொருள்கொள்ளலாம். சிவபிரான்முதலிய தேவர்கள், ஆடம்பரத்தால் தாமே தனிநாயகர்போலப் பாவித்துத் தாம் ஸர்வஜ்ஞரென்பது தோன்ற எல்லாப்பொருள்களின் அழிவையும் எடுத்துக்காட்டித் தாமே பரத்துவ மென்று கூறினும், அவர்கட்கு அப்பரத்துவம் சித்தியாது; உண்மையிற் பரதத்துவம் நீயே என்பதாம். இனி, கடவுள் நானே என்றுகூறும் அத்வைதமதத்தவரைக் குறிப்பதாகக்கொள்ளவு

மாம். இச்செய்யுள் ஒரு பிரதியில் இல்லை. பி-ம்:—[1]நாயகம். [2]என்றவர்.[3]என் கவவற்கு, ஏன்னவவர்க்கு. [4]தாமே. [5]பிறன்.[6]நின்னலதானுளதோ. (உ௩க)

கக௦. ஆதிப் பரமா [1]மெனிலன் [2]றெனலாம்
ஓதப் பெருநூல் களுலப் பிலவால்
[3]பேதிப் பனநீ [4]யவைபேர் கிலையால்
வேதப் பொருளே விளையா டுதியோ.

(இ - ள்.) (ஒருதெய்வத்தை) முதன்மைப்பரம்பொருளாகுமென்று (ஒருவர்) சொன்னால், (அதனை மறுத்து மற்றொருவர்) அங்ஙனமன்று என்று கூறலாம்: (இங்ஙனம் தம்மில் மாறுபாடாகச்) சொல்லுதற்கு (ஆதாரமாக)ப் பெரிய சமயநூல்கள் அளவில்லாமல் இருக்கின்றன; (அவை ஒன்றோடொன்று)மாறுபடுகின்றனவாம்:நீயோ(உண்மையிற் பரம்பொருளாயிருக்கும் நிலைமையினின்று) வேறுபடுகின்றாயில்லை; வேதத்திற் கூறப்பட்டுள்ள பொருளாயிருப்பவனே! (நீ)இங்ஙனம் கபடநாடகம் நடிக்கின்றாயோ? (எ - று.)

ஆதிப்பரமாமெனிலன்றெனலாம்-"ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின், அன்றென்ப ஆறுசமயத்தார்": ஓதப்பெருநூல்களுலப்பில - "தெய்வம்பல வவர்நூலும்பல அவைதேர்பொழுதில், பொய்வம்பலவென்று தோன்றும் புல்லோர்கட்கு":பேதிப்பன அவை நீபேர்கிலை-"வணங்கும் துறைகள் பலபலஆக்கி மதிவிகற்பாற், பிணங்குஞ்சமயம் பலபலஆக்கி அவையவை தோறு, அணங்கும் பலபலஆக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" என்பன காண்க. பி-ம்:—[1]எனல். [2]எனலாய். [3]போதிப்பன. [4]இவைபோதிலவால், அவை போகலையால். (உ௩௦)

கக௧. [1]அம்போ ருகனும் மானும் மறியார்
எம்போ லிய[2]ரெண் ணிடினென் [3]பலவாக்
கொம்போ டடைபூக் கனிகா [4]யெனினும்
வம்போ [5]மரமொன் றெனும்வா சகமே.

(இ - ள்.) (எல்லாம் நீயாயிருக்கின்ற உனது மகிமையை) அறியாதவரான எம்மைப்போன்றவர்கள் (ஒரு தன்மையாக உன்னையே குறியாமல்)பிரமனென்றும் சிவனென்றும் (இங்ஙனம் வெவ்வேறு) பல பொருளாகக் குறித்தால், (அது) எவ்வாறு பொருந்தும்? கொம்பும் இலையும் பூவும் கனியும் காயும் என்று சொல்லும்படி வெவ்வேறு பலபொருளாயிருந்தாலும், விருக்ஷமென்பது ஒன்றேயாமென்கிற சொல்புதியதோ? (எ - று.)

கொம்பு முதலியன வெவ்வேறு பொருளாயிருந்தாலும் முதற்பொருளாகிய மரமொன்றில் அவை சினைப்பொருள்களாய் அடங்குதல்போல, பிரமன் முதலியோர் அனைவரும் உனது சொரூபத்தில் அடங்கியவர்களே; அங்ஙனம் நினக்கு அங்கமாய் அடங்குகிற அவர்களைத் தனிமுதற்பொருள்போல வைத்துக் கூறுவது அறிவின்மையேயாகு மென்பதாம். எடுத்துக் காட்டுவமையணி. அம்போருகன் - தாமரைமலரில் வாழ்பவன்; அம்போருஹம் - நீரில் முளைப்பதெனக் காரணப்பொருள்படும்; வடசொல். இனி, முதலடிக்கு - பிரமதேவனும் சிவபிரானுமே (உனது உண்மைநிலையை) அறியார் என்று உரைப்பினு

மாம். பி-ம்:—[1]அம்போருகனூரானர், அம்போருகனன்முகனே, அம்போருக னும்மறியான். [2]என்னிலெனப், எண்ணிடிலெண், எண்ணினிலென். [3]பல வாம். [4]எனவும், எனலும், கொளினும். [5]மரமென்பதொர். (உ௫௧)

௧௧௨. நின்னிற் பிறிதாய் நிலையிற் [1]றிரியாத்
தன்னிற் [2]பிறிதா யினதா மெனினும்
உன்னிற் [3]பிறிதா யினவோ வுலகம்
பொன்னிற் பிறி[4]தா கிலபொற் கலனே.

(இ - ள்.) உலகங்கள்தாம் உன்னிடத்திலிருந்து வெளிப்பட்டு நிலைமை மாறி [விகாரமாய்]த் தமக்குள்ளே பல வேறுவகைப்பட்டன வானாலும், உன் னினின்றும் வேறுபட்டன வாகுமோ? [ஆகா என்றபடி]: பொன்னினாலாகிய ஆபரணங்கள் அந்தப்பொன்னினின்றும் வேறாகின்றனவில்லையே; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. பொன்னினாலாகிய ஆபரணங்கள் அப்பொ ன்னின்பரிணாமமேயாய் அதனினின்று வேறுபடாதவாறுபோல, உன்னிடத் தினின்று வெளிப்பட்ட உலகங்கள் உனது பரிணாமமேயாய் உன்னினின்று வேறுபடா என்றபடி: ஸூக்ஷ்மங்களான சித்அசித் என்ற இவற்றுடன்கூடிய பரப்பிரமமே ஸ்தூலசித்து அசித்துக்களைக்கொண்ட பரப்பிரமமாகத்தோன்று கின்றன என்க. பிறிதாயின, பிறிதாகில-ஒருமைப்பன்மைமயக்கம். பி-ம்:— [1]திரிவார்,பிறியா, பிரியாத். [2]பிறிதாயினதானினமும், பிறிதாயினதான்றவ மும், பிறிவாயினதானறமும், பிறியாதன பேரமுதாய். [3]பிறிதாயினதோ, பிறி தாயுளதோ. [4]ஆகிய. (உ௫௨)

௧௧௩. தாய்தந் தையெனுந் [1]தகைவந் தனைதான்
நீ[2]தந் தனை[3]நீ யுறுநெஞ் சினன்நான்
நோய்தந் தவனே [4]நுவல்தீர் வுமெனா
வாய்தந் தனசொல் லிவணங் கினனால்.

(இ - ள்.) தாயும் தந்தையும் என்று சொல்லப்படுகிற அன்பின்தகுதி யுடனே வந்து நீயே (என்னைப்)படைத்தருளினாய்; நீ எழுந்தருளியிருக்கின்ற நெஞ்சத்தை யுடையேன்யான்: (எனக்குப் பிறவி) நோயைத்தந்த நீயே (அந் நோய்க்குச்) சொல்லப்படும் பரிகாரமுமாவாய்என்று (இங்ஙனம் தனது) வாயில்வந்த வார்த்தைகளைச் சொல்லித் துதித்து, வணங்கினன் - (எம்பெரு மானைத்) தொழுதான், (அந்தப் பிரகலாதன்); (எ - று.)—தான்-அசை.

'நோய்தந்தவனே நுவல்தீர்வும்' என்றது, முன்னிலைப்படர்க்கை, இட வழுவமைதி. வாய்தந்தனசொல்லி - பக்திபரவசனாய்ப் பலவாறுசொல்லி யென்றபடி. நீ தந்தனை - நீ எனக்கு இத்துயரைத்தந்தாய் எனினுமாம். வந் தனை-முற்றெச்சம். பி-ம்:—[1]தகைதந்தனை, தகைவன்றனை. [2]தந்தன. [3]நீவுறு நெஞ்சினெழ, நீயுறுநெஞ்சினனால். [4]நுவதீருமெனா. (உ௫௩)

௧௧௪. அத்தன் மையறிந் தவருந் திறலோன்
உய்த்துய்ம் மினென்முன் னெனா[1]வுய்த் தனரால்
[2]பித்துண் டதுபோ லுறுமா பெறுதுங்
[3]கைத்துங் [4]கடுநெஞ் சினெனக் [5]கனல்வான்.

(இ - ள்.) அத்தன்மையை [மலையொடுகட்டிக் கடலிற்போகட்டும் பிரகலாதன் இறவாதிருத்தலை](அசுரர்கள்வந்துசொல்ல) அறிந்தவனும் (அழித்தற்கு) அரிய வலிமையுடையோனுமான இரணியன், '(அவனைக்) கொண்டுவந்து என் முன்னே விடுங்கள்' என்று சொல்ல, (அசுரர்கள் அங்ஙனமே அவனைக்) கொண்டுவந்து (அவனெதிரில்) விட்டார்கள்; (உடனே இரணியன், 'இவன்) கொண்ட பைத்தியம் நீங்கும்படியான உபாயத்தைச் செய்யப்பெறுவோம்; (எங்ஙனமெனின்);—கொடியவிஷத்தினாற் கொல்வோம்' என்று கொதித்துக் கூறுபவனானான்; (எ - று)—இரணியன் பிரகலாதனை விஷத்தினாற்கொல்ல நினைத்ததைத் தெரிவிப்பது, இது.

பித்துண்டது என்றது, திருமாலுக்கு அடிமைபூண்டசெயலை. ஆ - ஆறு என்பதன் விகாரம். கைத்தல் - வெறுத்தல், கோபித்தல்: கொல்லுதலென்ற பொருளில் கைத்தல் என்றது, காரியத்தைக் காரணத்தாற் கூறிய உபசார வழக்கு. பி-ம்:—1உய்த்துளரால். 2மத்துண்டனை, மத்துண்டது. 3கைக்கும். 4கடுநெஞ்சின். 5கனகன், கனலா. (உசச)

கக௫. இட்டார் கடு[1]வல் விட[2]மெண் ணுடையான்
[3]தொட்டா னுகரா வொருசோர் விலனால்
கட்டார் கடுமத் திகைகண் [4]கொடியோன்
[5]விட்டா னவன்மே [6]லவர்வீ சினரால்.

(இ - ள்.) (அந்த இரணியனது கட்டளைப்படி அசுரர்கள் பிரகலாதனுக்கு) மிகக்கொடிய விஷத்தை ஊட்டினார்கள்: (நாராயணத்) தியானத்தையுடையவனான அப்பிரகலாதாழ்வான், (அவ்விஷத்தை) வாங்கியுண்டு, சிறிது மயக்கமு மில்லாம லிருந்தான்: (அதன்பின்பு), கொடிய கண்களையுடைய இரணியன், கட்டுக்களமைந்த கொடியகுதிரைச்சம்மட்டிகளால் (அடித்துக் கொல்லும்படி) ஏவினான்; (அங்ஙனமே), அப்பிரகலாதன்மேல் அவ்வசுரர்கள் (குதிரைச்சம்மட்டிகளால்) வீசியடித்தார்கள்; (எ-று.)—அசுரர்கள் இரணியனேவலாற் பிரகலாதனுக்கு விஷங்கொடுத்தலும் அவனைச் சம்மட்டிகளாலடித்தலும் இதனாற் கூறப்பட்டன.

கட்டு - முடிச்சு. விடுதல் - ஏவுதல். கொடியோன் கண்விட்டான்-இரணியன் கண்ணின்நோக்கினாற் குறிப்பாக ஏவினான் எனினுமாம். 3தொட்டானுகரத் தொகைவன்கசையின் என்ற பாடத்துக்கு, தொகை வல் கசையின்-தொகுதியான வலிய முறுக்குக்கம்பிகள்போன்ற, கடுமத்திகைஎன்க. கைத்துண் கடுமத்திகை கண்கொடியான். என்று சிலபிரதியில் நான்காமடி. பி-ம்:—1வெவ். 2என்னுடையான். 3தொட்டார் நுகராதிகளத்தொகைவான், தொட்டா னுகராதிகழ் கோதையவன். 4கொடியார். 5விட்டாரவர்மேல். 6உறவரை.

கக௬. வெய்யார் புடைவில் லவர்வீ சியபோது
உய்யா னெனும்[1]வே லையினுள் [2]ளுறைவோன்
கையா யிர[3]மல் லகணக் கிலவென் றூ
எய்யா வுலகியா வையு[4]மெண் ணினனால்.

(இ-ள்.) எண்ணிறந்தபலரான கொடியஅவ்வசுரர்கள் (சம்மட்டிகளால்) வீசியடித்தபோது (காண்பவர்அனைவரும் இனி இவன்) பிழையானென்று சொல்லும் அச்சமயத்தில், (அப்பிரகலாதன், 'எனது) மனத்தில் எழுந்தருளியிருப்பவனுன எம்பெருமானுக்குக் கைகள் ஆயிரமென்னும் அளவிற் பட்டனவல்ல: அளவிறந்தனவாம்' என்று அனைத்துலகங்களின் வடிவமான எம்பெருமானது சொரூபத்தை மறவாமல் தியானித்துக்கொண்டிருந்தான்.

பிரகலாதன் மனங்கலங்காமல் விராட்சொரூபத்தைத்தியானித்திருந்தானென்க. எய்த்தல் - சோரவிடுதல். எம்பெருமானது விராட்சொரூபத்தை விடாதுதியானித்திருந்தன னென்க. பி-ம்:—[1]அன்னவனுள். [2]உறைவார். [3]இல்ல. [4]எண்ணினவாய், எண்ணினவால். (௨௬௬)

௧௧௭.—தானே பிரகலாதனுயிரைக்கவர்வனாக, இரணியன் பிரகலாதனருகில்வருதல்.

ஊனே டுயிர்வே றுபடா வுபயந்
தானே யுடையன் றனி[1]மா யையினுல்
யானே யுயிருண் பலெனக் [2]கனலா
வானே ழுநடுங் கிடவந் தனனுல்.

(இ - ள்.) (என்னசெய்தும் பிரகலாதன் இறவாததைக் கண்ட இரணியன், 'அசுரர்கட்குஉரிய) ஒப்பற்ற மாயையினுல் (இப்பிரகலாதன்) உடம்பைவிட்டு உயிர்நீங்காமைக்கு உரிய உபாயத்தை இயல்பிலே உடையனுயிருக்கிறுன்; (ஆதலால், இனி இவனுடைய) உயிரை யானே கவர்வேன்' என்று சொல்லிக்கோபித்து,(இடியின்கொடுமையையுடைய)ஏழுமேகங்களும்அஞ்சும்படி (பிரகலாதனருகில்) வந்தான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

உபயம் = உபாயம்:குறுக்கல்.பிரகலாதன் பகவத்தியானத்தால் இங்ஙனம் எவ்வாற்றுனும் இறவாது பிழைத்திருக்கிறு னென்கிற உண்மையை இரணியன் உட்கொள்ளாமை, இரண்டாம் அடியால் வெளியாம். ஏழுமேகம் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. பி-ம்:—[1]மாயையினுன். [2]கனகன். (௨௬௭)

௧௧௮.—இதுமுதல் ஒன்பதுகவிகள் - பிரகலாதனுக்கும் இரணியனுக்கும் நடந்த சம்வாதத்தைத்தெரிவிக்கும்.

வந்தா னைவணங் கி[1]யென்மன் னுயிர்தான்
எந்தாய் [2]கொளவெண் ணினையே லிதுதான்
[3]உந்தா ரியதன் றால[4]கியா வுமுடன்
தந்தார் [2]கொளநின் றதுதா னெனலும்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (அங்ஙனம்கோபித்துக்கொல்ல) வந்த (தந்தையான) இரணியனை (மைந்தனுன பிரகலாதன்) வணங்கி, 'என்தந்தையே! எனது நிலைபெற்ற உயிரை (நீர்) கவர்ந்துகொள்ள நினைத்தீராயின், இவ்வுயிர்தான் உமது வசத்திலுள்ளதன்றே: சகலலோகங்களையும் ஒருங்குபடைத்தருளியவரான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே கொள்ளும்படி யுள்ளது'என்றுசொன்னவுடனே,—(எ - று.)—'என்றுன்' என அடுத்த கவியில் முடிபு காண்க.

உலகுதந்தானுக்குஅன்றி உனக்குக் கொள்ளும்படி என்னுயிர் எளிதன் றென்று பிரகலாதன் கூறினனென்க. தாரியது - தரத்திலுள்ளது; அன்றி, வழிப்பட்டது எனினுமாம்: தாரி-வழி: திசைச்சொல். பி-ம்:—[1]எம். [2]தொழ வெண். [3]உந்தாவரிதென்று, உந்தாவினிதன்று. [4]எழுமுடன். (௨௬௮)

வேறு.

கககூ. [1]எவரே [2]யுலகந் தந்தா ரென்பெய ரேத்தி வாழு
[3]மூவரே யல்ல [4]ராகின் [5]முனிவரே முழுதுந் தோற்ற
[6]தேவரே பிறரே யாரே செப்புதி தெரிய [7]வென்முன் [ள்வான்.
கோவமுண் [8]டெழுந்துங் கொல்லான் காட்டுமேற் காட்சி கொ

(இ - ள்.) (இரணியன், 'நீ சொன்னபடி) உலகங்களையுண்டாக்கினவர் எவர்தாம்? என்பெயரைத் துதித்துக்கொண்டுவாழ்கிற திரிமூர்த்திகளா? அவர்களல்லராயின், (என்பெயரைத் துதித்துவாழ்கிற) முனிவர்களா? (அன்றித்) தங்களுடைமைகளைமுழுதும்(எனக்குத்) தோற்றிழந்த தேவர்களா? (அல்லது) வேறேனும் யாவரா? விளங்கச் சொல்வாய்' என்று வினவினன்; (அப்படிப்பட்ட ஒருவன் உண்டாயிருந்து அவனைப் பிரகலாதன்)காண்பிப்பானாகிற் காணலாமென்ற எண்ணத்தைக் கொண்டானாதலால்,(அவ்விரணியன்), சினம் மிக அதிகப்பட்டும் (பிரகலாதனைக்) கொல்லத் தொடங்கினானில்லை; (எ-று.)

உலகுதந்தார் யாவரெனப் பிரகலாதனை இரணியன் வினவினனென்க. பி-ம்:—[1]எவரோ. [2]உலகத்தாமற்று. [3]மூவரோ. [4]வான. [5]முனிவரோ. [6]தேவரோ பிறரோ யாரோ. [7]என்று. [8]எழுந்துகொல்வான். (௨௬௯)

க௨௦. உலகுதந் தானும் பல்வே றுயிர்கள்தந் தானு முள்ளுற்று
[1]உலைவிலா வுயிர்க டோறு மங்கங்கே யுறைகின் றானும்
[2]மலரினின் மணமு மெள்ளி லெண்ணெயும் [3]போல வெங்கும்
அலகில்[4]பல் [5]பொருளும் பற்றி முற்றிய வரிகா [6]ணத்தா.

மூன்றுகவிகள் ஒருதொடர்: பிரகலாதன் வார்த்தை.

(இ - ள்.) தந்தையே! உலகங்களைப் படைத்தவனும் (அவ்வுலகங்களிலுள்ள) பல வேறு வகைப்பட்ட பிராணிகளைப் படைத்தவனும் அவ்வுலகங்களிலேயுள்ள எல்லையில்லாத பிராணிவர்க்கங்களிலெல்லாம் உள்ளே பொருந்தி [அந்தர்யாமியாய்] வசிக்கின்றவனும் (யாவனெனில்), பூவில் வாசனையும் எள்ளில்எண்ணெயும் போல எங்குமுள்ள அளவில்லாத பல பொருள்களிலும்கலந்து நிறைந்திருக்கின்ற திருமாலேயாவன்; (எ - று.)

உலகு தந்தவன் அரியேஎன்று விடையிறுத்தவாறு. 'மலருநல்வெறியுமெள்ளுமெண்ணெயுமவற்றுட்டங்கும்' என்று சிலபிரதியில் மூன்றடியுள்ளது. பி-ம்:—[1]அலகிலா. [2]மலருள்நல்வெறியும். [3]மற்றுட்டங்கும், மருட்டுங்கோளாய், மற்றுங்கோளாய். [4]எப், தொல். [5]புகழும். [6]அத்தன். (௨௭௦)

க௨க. என்கணு ளேக்கிக் [1]காண்டற் கெங்கணு முளன்கா ணெந்தை, யுன்கணு னன்பிற் [2]சொன்ன னுறுதியென் [3]றென்றுங் கொள்ளாய், நின்கணு ளேக்கிக் காண்டற் கெளியனே நினக்குப் [4]பின்னேன், [5]பொன்கணு னவியுண்ட புண்டரீ கக்[6]கணம்மான்.

(இ - ள்.) எனது தலைவனான அப்பெருமான் (அவனது அடியவனான யான்) என்கண்களாற் குறித்துப்பார்க்குமாறு எவ்விடத்திலும் இருக்கின்றான் காண்!(அவ்வுண்மையை)உன்னிடத்தில் அன்போடு நான் சொன்னால்(அதனை) நிச்சயமானதென்று(நீ)சிறிதும் எண்ணுகின்றாயில்லை:(இங்ஙனம் நீ நம்பிக்கை கொள்ளாததனால்), உனக்குப் பின்பிறந்தவனான இரணியாட்சனுடைய உயிரைக் கவர்ந்த செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடைய அத்திருமால் உனது கண்களாற் குறித்துக் காண்பதற்கு எளியவனாவனோ? (எ - று.)

"பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய, வித்தகன்" ஆதலால், பக்தனான எனக்கு எங்கும் விளங்குகின்றவன், பகைவனான உனக்கு எங்கும் விளங்கானென்கின்றான் பிரகலாதன். உலகுதந்தானைக்காணுமாறு இதனாற் கூறப்பட்டது. 'எந்தை' என்பதை, இரணியனைநோக்கிய அண்மைவிளியாகக்கொள்ளினுமாம். பொன்கணான் - ஹிரண்யாக்ஷன் என்ற வடமொழிப்பெயரின் மொழிபெயர்ப்பு; பொன்போலு நிறமுள்ள கண்களையுடையவனென்று பொருள்: ஆவியுண்ட என்றது, உண்ணப்படாதது உண்ணப்பட்டதுபோலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி; புண்டரீகக்கண் அம்மான்-புண்டரீகாக்ஷன். பி - ம்:—[1]காணாய், காணான், காணா. [2]சொன்னவுறுதியென்று, சொன்னேனுறுதியென்று, சோறலுறுகோளென்று. [3]உணரகில்லாய், ஒன்றுங்கேளாய். [4]மூத்த. [5]புன்கணான். [6]கணானை, கணனே. (உ௫க)

கஉஉ. மூன்றவன் [1]குணங்கள் செய்கை மூன்றவ னுருவ மூன்று
[2]மூன்றுகண் சுடர்கொள் [3]சோதி [4]மூன்றுதன் [5]னுலக மூன்று
தோன்றலு மிடையு மீறுந் [6]தொடங்கிய பொருள்கட் கெல்லாஞ்
சான்றவ [7]னிதுவே வேத [8]முடிவிது சரத மென்றான்.

(இ - ள்.) (சாத்துவிகம் ராஜசம் தாமசம் என்னும்) முக்குணங்களும் அப்பெருமானுடையன; (படைத்தல் காத்தல் அழித்தல் என்னும்) முத்தொழில்களும் அவனுடையன; (பிரம விஷ்ணு ருத்திரர் என்னும்) திரிமூர்த்தி சொரூபமும் அவனுடையன; ஒளியைக்கொண்ட (சூரியன் சந்திரன் அக்கினி என்னும்) மூன்று சுடர்களும் அவனுடைய கண்களாம்; (சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்னும்) மூன்று உலகங்களும் அவனுடையன; முதலும் நடுவும் முடிவும் ஆகிய மூன்று நிலைமையுமுண்டான எல்லாப் பொருள்கட்கும் சாட்சியாவான் அவனே; இதுவே வேதத்தின் சித்தாந்தம்; இது சத்தியம் என்று சொன்னான், (பிரகலாதன்); (எ - று.)—சர்வவியாபியான அரியினுடைய தன்மை இன்னபடி யென்பது கூறப்பட்டது. பி-ம்:—[1]குணமே. [2]மூன்றுவண், மூன்றவண். [3]செந்தீ. [4]மூன்றவன், மூன்றதன். [5]உருவம். [6]துடக்கிய. [7]அவனே, அதுவே. [8]முடிவவன், முடிவது. (உ௫உ)

கஉ௩. என்றலு மவுணர் வேந்த [1]னெயிற்றரும் பிலங்க நக்கான்,
[2]ஒன்றலில் [3]பொருள்க ளெல்லா மொருவன்புக் [4]குறைவ னென்றாய்,
நன்றது [5]கண்டு பின்னர் [6]நல்லவா [7]புரிதுந் தூணில், [8]நின்றுளனென்
னிற் [9]கள்வ [10]னிரப்புதி நிலைமை யென்றான்.

(இ - ள்.) என்று (பிரகலாதன்) சொன்னவுடனே, அசுரராஜனான இரணியன் அரும்புபோன்ற (தனது) பற்கள் வெளியேதெரியும்படி சிரித்து, (நீ சொல்லும்) ஒருவன் ஒன்றுபடுதலில்லாத [பற்பலவகைப்பட்ட] பொருள்களெல்லாவற்றினும் உட்புகுந்து வசிக்கின்றானென்று சொன்னாய்; அத்தன்மையை நன்றாகச் சோதித்துப்பார்த்துப் பின் (அதற்கு) ஏற்றகாரியத்தைச் செய்வோம்; (நீ சொன்ன அத்)திருடன் இந்தத்தூணினுள்ளே மறைந்துநின்றுள்ளானாயின், (அவனுடைய) அந்நிலைமையைத் திருஷ்டாந்தப்படுத்துவாயென்று சொன்னான்; (எ - று.)

அரி எங்குமுளனாயின், இந்தத்தூணிற் காட்டுவாயென்றனன் இரணியனென்க. இங்கே நகை, இகழ்ச்சிகாரணமாக உண்டானது. 'நின்ற தூணகத்துமுன்கோ னிருக்குமோ நிரப்பு கென்றான்' என்று நான்காமடி சிலபிரதியிலுள்ளது. பி-ம்:—1எயிற்றிணை. 2ஒன்றல. 3பொருள்கட்கெல்லாம். 4உறையும். 5காண்டும், கண்ட. 6நல்லவற். 7செய்துமன்றே, செய்துந் தூணில், புரிதூணில். 8நின்றுளது. 9கள்வம். 10நிரப்புவன். (உருரு)

கஉ௪. சாணினு முள1னோர் தன்மை யணுவினைச் 2சதகூ றிட்ட
கோணினு முளன்மா மேருக் குன்றினு முள3னிந் நின்ற
தூணினு முள4னீ சொன்ன சொல்லினு முளனித் தன்மை
காணுதி விரைவி னென்றா னன்றெனக் கனகன் 5சொன்னான்.

(இ - ள்.) (அதற்குப் பிரகலாதன், 'யான் சொன்ன அந்த எம்பெருமான்) சாணிலும் இருக்கின்றான்; எளிய ஓர் அணுவை நூறுகூறாகப்பகிர்ந்த பகுப்பிலும் இருக்கிறான்; மகாமேருமலையிலும் இருக்கிறான்; இவ்விடத்துள்ள இத்தூணிலும் இருக்கிறான்; நீ (அவனைக்குறித்து இகழ்ச்சியாகச்) சொன்ன சொற்களிலும் இருக்கிறான்; இந்த உண்மைத்தன்மையை விரைவில் சோதித்து அறிவாய்' என்று சொன்னான்; (அதுகேட்டு), இரணியன், நல்லதென்று உடன்பட்டுமேற்றுஞ்சொல்லலானான்;(எ - று.)—அதனை மேற்கவியிற்காண்க.

1ஓர்தன்மை என்ற பாடத்துக்கு - ஓர்தன்மையாகவே எங்குமுள்ளான் என்க. அணு - மிகச்சிறுபொருள். 'பூணினு முளனினுள்ளப் பொருட்டினு முளனென்பொய்மை'என்று ஒருபிரதியில்,மூன்றாமடி காண்கின்றது. பி-ம்:- 2கூறிட்டுக். 3முன்னின்ற, நீ பூண்ட, உண்ணின்ற. 4முன். 5நக்கான்சென்றான்.

கஉரு. உம்பர்க்கு 1முனக்கு மொத்திவ் 2வுலகெங்கும் 3பரந்து ளானைக்
கம்பத்தின் வழியே காணக் காட்டுதி 4காட்டி டாயேற் [றான்
5கும்பத்தின் கரியைக் கோண்மாக் கொன்றென நின்னைக்6கொன்
செம்பொத்த குருதி தேக்கி 7யுடலையுந் தின்பெ னென்றான்.

(இ - ள்.) 'தேவர்களுக்கும் உனக்கும் அநுகூலனாய் இந்த உலகம் முழுவதிலும் வியாபித்துள்ளவனென்ற அத்திருமாலை, இந்தத் தூணினிடத்திலே (யான்) காணுமாறு (நீ)காட்டுவாய்; (அங்ஙனம்) காட்டாமற் போவையானால், மஸ்தகத்தையுடைய யானையை வலியசிங்கம் கொல்லுதல்போல உன்னை (யான்) எளிதிற்கொன்று, (நினது) தாமிரம்போன்ற செந்நிறத்தையுடைய

இரத்தத்தைக் குடித்து (நினது) உடம்பையும் தின்பேன்', என்று சொன்னான், (இரணியன்); (எ - று.)

கும்பம் - இரண்டுகுடம் கவிழ்த்தாற்போல யானைத்தலையிற் காணப்படும் உறுப்பு. பி-ம்:—[1]எனக்கும். [2]உலகெலாம். [3]போந்துளானை. [4]காட்டாயாகில். [5]கும்பத்திண். [6]கொன்று. [7]உயிரையும். (உருரு)

கஉகூ. என்னுயிர் நின்னாற் கோறற் கெளியதொன் றன்றி யான்முன், சொன்னவன் றொட்ட தொட்ட விடந்தொறுந் தோன்றானாயின், [1]என்னுயிர் யானே [2]மாய்ப்பல் பின்னும்வாழ் வுகப்ப லென்னின், அன்னவற் [3]கடியெ னல்லே னென்றன [4]னறிவின் மிக்கான்.

(இ - ள்.) அறிவிற்சிறந்தவனான பிரகலாதன், (இரணியனை நோக்கி), 'எனது உயிர் உன்னாற் கொல்லப்படுதற்கு எளியது ஒன்றன்று; என்னால் முன்புசொல்லப்பட்டவனான அத்திருமால் (நீ) தொட்ட இடங்களி லெல்லாம் வெளிப்பட்டுக் காணப்படாமற்போவானானால், எனது உயிரை நானே மாய்த்துக்கொள்வேன்; (அங்ஙனம் செய்யாமல்), பின்னும் இவ்வுலகவாழ்க்கையை விரும்பி ஜீவித்திருப்பேனானால், அப்பெருமானுக்கு நான் அடியவன் அல்லேன்' என்று பிரதிஜ்ஞை செய்தான்; (எ - று.)—அன்றியான்-குற்றியலிகரம். பி-ம்:—[1]இன்னுயிர், மன்னுயிர். [2]நீப்பன். [3]அடிமை. [4]அறிவு. (உருகூ)

கஉஎ.—இரணியன் தூணையறைய அதனுள் நாசிங்கமூர்த்தி சிரித்தல்.

நகைதிறந் [1]திலங்கப் பொங்கி நன்றுநன் றென்ன [2]நக்கு
[3]விசைதிறந் துருமு வீழ்ந்த [4]தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் [5]துயர்ந்த கையா லெற்றின னெற்ற லோடுந்
திசைதிறந் தண்டங் [6]கீறிச்[7]சிரித்தது செங்கட் சீயம்.

(இ - ள்.) (அதுகேட்டு இரணியன், தன்மனத்திலுள்ள) பரிகாசக்கருத்து வெளிப்பட்டு விளங்கும்படி கிளர்ந்து நல்லது நல்லது என்று சொல்லிச் சிரித்து(க் கோபித்து), வேகமாக வெளிப்பட்டு இடி விழுந்தாற்போல(எதிரிலுள்ள)ஒரு தூணிலே வெற்றியையும் புகழையும் பரவச்செய்து சிறப்புற்ற (தன்)கையினா லறைந்தான்: (அங்ஙனம்) அறைந்தவளவிலே, சிவந்த கண்களையுடையதொரு சிங்கமானது (தனது ஆரவாரத்தால்) திக்குக்களைக்கிழித்து அண்டகோளத்தைப் பீறிக்கொண்டு சிரித்தது; (எ - று.)—சீயம்-ஸிம்ஹம் என்ற வடசொல்லின் சிதைவு. பி-ம்:—[1]என்னப். [2]நக்கான். [3]விசைபிறந்து, இசைதிறந்து. [4]என்னவே. [5]அமர்ந்த,அமைந்த. [6]போக,கீற. [7]சிரித்ததச். (உருஎ)

கஉஅ.—அச்சிரிப்பொலி கேட்ட பிரகலாதனது ஆனந்தம்.

நாடினான் றருமெ [1]னென்ற நல்லறி வாள னானுந்
தேடினான் முகனுங் காணாச் [2]சேயவன் சிரித்த லோடும்
ஆடினா னழுதான் பாடி யரற்றினான் [3]சிரத்திற் செங்கை
சூடினான் றொழுதா னோடி யுலகெலாந் துகைத்தான் றுள்ளி.

(இ - ள்.) சருவகாலமும்தேடிப் பிரமனாலும் காண இயலாத சேய்மையிலுள்ளவனான திருமால் (அங்ஙனம் சிங்கவடிவத்தோடு தூணினுள்ளே) சிரித்தவுடனே, 'நான் (உனக்கு அப்பெருமானைக்) காட்டிக்கொடுப்பேன்' என்று

(இரணியனுக்கு உறுதியாகச்) சொன்ன மகாஞானியாகிய பிரகலாதன்,(மிக்க ஆனந்தமடைந்து), (எழுந்து) கூத்தாடினான்; (ஆனந்தக்கண்ணீர்விட்டு) அழுதான்; கீதம்பாடி ஆரவாரித்தான்;சிவந்த(தனது)கைகளைக் கூப்பித் தலைமேல் வைத்துக்கொண்டான்; கீழ்விழுந்து நமஸ்கரித்தான்; துள்ளித்துள்ளி எழுந்து உலகமுழுவதும் ஓடித் துகைத்தான்; (எ - று.)

சேயவன் - சேய்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; எவர்க்கும் காண்டற்குஅரியனாய் எட்டாததூரத்தி லுள்ள வனென்க. பி-ம்:— [1]என்று. [2]சேவகன், செய்யவன். [3]ஆரத்திச். (உருஅ)

"நாணிகின் னெதிரே யாண்டு நடுவதாயினதோர்செம்பொற்
றாணினின் றனையே யன்றித் தோன்றிய நிலதென் றென்ற
வேணுதண் டுடையோன் வெய்ய வெள்ளியே விளம்ப வெள்ளி
காண வந்தனைய சீயங் கணத்திடைக் கதிர்த்த தம்மா"

என ஒருபாடல் ஒருபிரதியில் இங்குக் காணப்படுகின்றது.

கஉக.—இரணியன் அச்சிங்கத்தை வெளிப்படச்சொல்லல்.

ஆரடா சிரித்தாய் சொன்ன [1]அரிகொலோ அஞ்சிப் புக்க
நீரடா போதா தென்று நெடுந்தறி [2]நேடி னாயோ
போரடா [3]பொருதி யாயிற் புறப்படு புறப்ப டென்றான்
[4]பேரடா நின்ற தாளோ டுலகெலாம் பெயரப் போவான்.

(இ - ள்.) (எங்கும் தன்)பெயர்அடுத்து [பொருந்தி] நிற்றற்குக் காரணமான வலிமையுடனே எல்லா வுலகங்களிலும் (அவை) நிலைபெயரும்படி செல்பவனான இரணியன்,—(அச்சிரிப்பொலிகேட்டு), 'சிரித்த நீ ஆரடா? (இவன்) சொன்ன திருமாலோ (நீ)? (நீ முன்பு எனக்கு)அஞ்சிப் புக்குஒளித்துக்கொண்டிருந்த கடலினிடம் போதாதென்று நீண்ட இத்தூணைத் தேடி இதனுள்ளும் ஒளித்தாயோ அடா? (என்னோடு நீ) போர்செய்யவல்லையானால் வெளிப்புறப்படு புறப்படு அடா' என்று சொன்னான்; (எ - று.)

ஹரி - வடசொல்; (அடியார்துயரை) அழிப்பவன். அடுக்கு - விரைவும் வெகுளியும் பற்றியது. நான்காம்அடியில், அடாஎன்பது-அடுஎன்னும் பகுதியின்மேற் பிறந்த உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம். நின்ற என்ற பெயரெச்சம், இங்குக் காரியப்பொருளது. தாள்-வலிமை. பி-ம்:—[1]அரிகொலாம். [2]நீட்டினாயோ, தேடினாயோ. [3]பொருவை. [4]பேரிடா. (உருக)

கஙo.—நரசிங்கமூர்த்தி அத்தூணைப்பிளந்து வெளிப்பட்டு விசுவரூபங்கொள்ளல்.

பிளந்தது தூணு மாங்கே பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைக [1]ளெட்டும் பகிரண்ட முதல மற்றும்
அளந்ததப் புறத்துச் [2]செய்கை யாரறிந் [3]தறைய கிற்பார்
கிளர்ந்தது ககன [4]முட்டை கிழிந்தது கீழு மேலும்.

(இ - ள்.) (இங்ஙனம் இரணியன் கூறியவுடனே) அந்தத்தூணும் பிளவுபட்டது; அவ்விடத்தினின்று சிங்கமூர்த்தி வெளித்தோன்றிற்று; (அத்திரு

வுருவம்) உடனே எட்டுத்திக்குகளையும் அளாவி வளர்ந்தது; இவ்வண்டத்துக்கு வெளியிலுள்ள வேறு அண்டம்) முதலியவற்றையும் அளாவிற்று; (இவ் வண்டத்துக்கு) அப்பால் நடந்த செய்கையை யறிந்துசொல்லவல்லவர் யார்? அண்டகடாகம் கீழும் மேலும் பீறிப்பிளந்தது; எ - று.)

அண்டம் என்ற சொல் - ஆகாயம் உலகவுருண்டை என்ற இரண்டு பொருளையும் உணர்த்துவதாதலால், ஆகாயத்தின் பரியாயநாமமான ககனம் என்ற சொல்லால் இங்கு உலகவுருண்டை குறிக்கப்பட்டது; இது, ஆகுபெயரில் அடக்கப்படும்; இதனை வடநூலார் லக்ஷிதலக்ஷணை யென்பர். இங்கு முட்டையென்றது, அண்டகோளத்தின் ஓட்டைக் குறித்தது. பஹிரண்டம் - வடமொழித்தொடர். பி-ம்:—1அண்ட. 2செய்யதாரறிந்து. 3ஆற்ற, அறிய, அமைய. 4முட்டக். (௨௬௦)

௧௩௧.—இதுமுதல் ஆறுகவிகள் - விசுவரூபத்தின் வருணனை.

மன்றலந் துளப மாலை மானுட மடங்கல் 1வானிற்
சென்றது தெரிதல் 2தேற்றுஞ் சேவடி படியிற் 3றீண்ட
நின்றதோர் 4பொழுதி னண்ட நெடுமுகட் 5டிருந்த 6முன்னோன்
அன்றவ னுந்தி வந்தா னெனத் தோன்றி னானால்.

.(இ - ள்.) பரிமளமுள்ள அழகிய திருத்துழாய்மாலையைத் தரித்த அந்த நரசிங்கமூர்த்தி வானத்திலூடுருவிச்சென்ற எல்லையை (யாம்) அறியமாட்டோம்; (அந்நரசிங்கமூர்த்தி) சிவந்த (தனது) திருவடிகள் பூமியிற் படும்படி நின்றசமயத்தில் அண்டத்தின் உயர்ந்த மேன்முகட்டில் [சத்தியலோகத்தில்] இருந்த பிரமன் அப்பொழுதே அச்சிங்கப்பிரானுடைய திருநாபியில் தோன்றியவன்போல விளங்கினான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

மேலேழுலகங்களுள்ளும் மேலுலகமான சத்தியலோகத்திலிருந்த படைத்தற்கடவுளான பிரமன் அந்நரசிங்கமூர்த்தி எழுந்துநின்றுவளர்ந்துவரும் பொழுது அத்திருவுருவத்தின் நாபியின் அளவிலே நின்றனன் என்றால், அப்பெருமான் மேலோங்கிச்சென்ற எல்லையின் வரையறை அறியமுடியுமோ? என்பதாம். அங்ஙனம் திருமாலின் நாபியளவில்நின்ற பிரமனை அப்பொழுதே அத்திருநாபிக்கமலத்தினின்று தோன்றியவன்போன்றனன் என்றது, தற்குறிப்பேற்றவணி. திருத்துழாய்மாலை, திருமாலுக்குஉரியது. மானுடமடங்கல் - மனிதவடிவங்கலந்த சிங்கவடிவம்: முகமும் நகங்களும் சிங்கத்தினுடையனபோலஅமைய மற்றைஉருவம் மனிதவடிவம்போல்வது. தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளால் தனித்தனி சாவதில்லை என்று வரம் பெற்ற இரணியனை அவ்வரம் பழுதுபடாதபடி கொல்லுதற்பொருட்டு, திருமால் இங்ஙனம் விலங்குவடிவங்கலந்த மனிதவடிவ மாயின னென்க. மடங்கல்-(பிடரிமயிர்)மடங்குதலையுடையது என ஆண்சிங்கத்திற்குக் காரணக்குறி; தொழிலாகுபெயர். பி-ம்:—1மானிச். 2தேற்றுச், தேற்றூர். 3தீண்டி. 4பொழுதின்கண்ணே. 5இருந்து. 6மன்னோ. (௨௬௧)

௧௩௨. 1எத்துணை 2போதுங் கையென் 3றியம்பினு லெண்ணாற் கேற்ற
வித்தக ருளரே அந்தத் தானவர் 4விரிந்த சேனை

பத்துநூ றமைந்த கோடி வெள்ளத்தாற் பகுதி செய்த
[5]அத்தனை கடலு மாளத் தனித்தனி யள்ளிக் [6]கொண்ட.

(இ - ள்.) (அந்நரசிங்கமூர்த்திக்குக்) கைகள் எத்தனையுள்ளன வென்று சொல்லி வினவினால், (அக்கைகளை யெல்லாம்) எண்ணி (இத்தனையென்று) கணக்கிடவல்ல திறமையுடையவர் (உலகத்தில் எவரேனும்) இருக்கின்றனரோ? ஆயிரங்கோடிவெள்ளமென்னுந் தொகையால் அளவிட்டு வகுக்கப்பட்ட அந்த அசுரர்களுடைய பரந்தசேனைகளாகிற கடல்கள்யாவும் அழியும்படி (அந்த நரசிங்கமூர்த்தியின்கைகள் அவ்வசுரர்களையெல்லாம்) தனித்தனி பற்றிக்கொண்டன; (எ - று.)

நரசிங்கமூர்த்தி தன்னெதிர்ப்பட்ட அசுரசேனையிலுள்ள ஆயிரங்கோடி வெள்ளம்பேரில் ஒவ்வொருவரையும் ஒவ்வொருகையால் அள்ளிக்கொண்டனனாதலால், அப்பெருமானுக்கு அத்தொகையினும் அதிகமான கைகள் இருந்தனவென்க. பி-ம்:—[1]எத்தனை, இத்துணை. [2]உளது. [3]எண்ணினுலியம்பற்கொத்த, இயம்பினுலெண்ணத்தக்க. [4]வேந்தர். [5]அத்தனைவரையும். [6]கொண்டான்.

கூரு. ஆயிரங் கோடி வெள்ளத் தயிலெயிற் றவுணர்க் கங்கங்கு
ஏயின வொருவர்க் கோரோர் திருமுக மிரட்டிப் பொற்றோள்
தீயெனக் கனலுஞ் செங்கண் [1]சிரந்தொறு [2]மூன்றுந் [3]தெய்வ
[4]வாயினிற் கடல்க ளேழு மலைகளு மற்று முற்றும்.

(இ - ள்.) ஆயிரங்கோடி வெள்ளமென்னுந் தொகையுள்ளகூரியபற்களையுடைய அசுரர்களில் ஒவ்வொருவர்க்குமெதிராக ஒவ்வொரு திருமுகமும், இவ்விரண்டு திருக்கைகளும், (அந்த ஒவ்வொரு) திருமுகத்திலும் நெருப்புப்போலக் கோபத்தாற்சொலிக்கின்ற சிவந்த மும்மூன்று திருக்கண்களும் (அந்நரசிங்கரூபத்தில்) அங்கங்கே தோன்றிக்காணப்பட்டன: அத்திவ்விய சொரூபத்தினது (பெரியபகு) வாயிலே எழுகடல்களும் பர்வதங்களும் மற்றும் எல்லாப்பொருள்களும் கொள்ளும்; (எ - று.)

எதிர்ப்பட்ட அசுரசேனையிலுள்ள ஆயிரங்கோடி வெள்ள மென்னுந் தொகையுடைய பேரில் ஒவ்வொருவர்க்கும் எதிராக ஒவ்வொரு திருமுகமும் இவ்விரண்டு திருக்கைகளும் அம்முகங்களிலெல்லாம் மும்மூன்று திருக்கண்களுமாக அப்பொழுது எம்பெருமான்கொண்ட நரசிங்க விசுவரூபத்தில் அளவிறந்த முகம் கை கண் முதலிய உறுப்புக்கள் காணப்பட்டன வென்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. இரண்டாம் வாக்கியத்தின் கருத்து - அம்மூர்த்தியினது வாய் எழுகடல்களும் மலைகளும் மற்றும் எல்லாப்பொருள்களும் கொள்ளும்படி மிகப்பெரிய தென்பது. உக்கிரமூர்த்தியாதலால், உருத்திரமூர்த்திக்குப்போல முகந்தோறும் மூன்றுகண்கள் தோன்றினவென்க. முற்றும் - செய்யுமென் முற்று. பி-ம்:—[1]முகந்தொறு, சிறந்தொரு. [2]மூன்று. [3]தோன்ற. [4]வாயின. (௨௬௨)

கூசு. முடங்கு[1]வா ருளையவ் வண்ட முழுவது முடிவி னுண்ணும்
கடங்கொள் வெங் காலச் செந்தீ யதனைவந் [2]தழிக்கும் [3]கால

மடங்கலி [4]னுயிர்ப்பு மற்றக் காற்றினை மாற்று மானு
லடங்கலும் பருவா யாக்கை யப்புறத் தகத்த தம்மா,

(இ-ள்.) அச்சிங்கவடிவத்தினது மடங்கிய நீண்ட (பிடரிமயிர்த்) தொகுதி, அண்டகோள முழுவதையும் இறுதியிலே யுட்கொள்ளுங் கடமையைக்கொண்ட கொடிய அந்த யுகாந்தகாலத்துச் சிவந்ததீயைக் கீழ்ப்படுத்தும்; (அச்சிங்கமூர்த்தியினது) சுவாசமும், அந்த யுகாந்தகாலத்துப் பெருங்காற்றை யடக்கும்: ஆனால், (பிடரிமயிர்த்தொகுதி உயிர்ப்பு என்ற) அவ்விரண்டும் திறந்த வாயையுடைய அச்சிங்கவடிவத்தினது மேலிடத்திலும் உள்ளிடத்திலுமே உள்ளன; ஆச்சரியம்! (எ - று.)—மற்று-அசை.

அச்சிங்கவடிவத்தின் பிடரியில் எழுந்து வளர்ந்து தொங்குகின்ற நீண்ட மயிர்த்தொகுதி, தனது செந்நிறமிகுதியாலும் உக்கிரத்தன்மையாலும் சர்வசங்காரகாலத்தில் உலகமுழுவதையும் அழிக்குந்தொழிலை மேற்கொண்ட கொடிய பிரளயகாலாக்கினியை வென்றடக்கும்; அச்சிங்கமூர்த்தியின் உள்நின்று வெளிப்படுகிற சுவாசக்காற்று அங்ஙனமே வேகத்தாலும் வலிமை கொடுமைகளாலும் அந்த ஊழிக்காலத்தில் உலகங்களையழித்தற்கு எழுந்து வீசும் பிரசண்டமாருதத்தை வென்றடக்கும்; இங்ஙனம் ஊழித்தீயினும் மேம்பட்ட பிடரிமயிரும் ஊழிக்காற்றினும் மேம்பட்ட உயிர்ப்பும் அவ்வூழித்தீயும் காற்றும்போல எங்குமுள்ளனவாகாமல் அத்தூணினின்று வெளிப்பட்ட சிங்கத்தின் உடம்பின்மேலும் உடம்பினுள்ளுமே உள்ளன: இது ஆச்சரியம்! என்பதாம். கடம்-கடமை. அக்காலக்காற்றினையென இயையும். வாயாக்கை-தனிக்குறிலைச்சாராத யகரம் யகரம்வரக் கெட்டது. அம்மா-வியப்பிடைச்சொல்.

பி-ம்:—[1]வானுளையின், வாலணையின், வாலுளைய. [2]அவிக்கும். [3]காலான், கையான். [4]உயிர்ப்பின். (உகூ௯)

கசுடு. குயிற்றிய வண்டங் [1]குஞ்சை யிட்டிலா [2]முட்டை முட்டப்
பயிற்றிய பருவ மொத்த காலத்து [3]வாழுது பல்கும்
வயிற்றுவன் [4]பருவா யுள்புக் [5]கிருக்குக விருக்கை யெய்தி
[6]வெயிற்றின்வந் தந்நா ளிந்நாள் வாழுமன் னுயிர்கண் மன்னோ.

(இ - ள்.) (திருமாலினால்) படைக்கப்பட்ட அண்டகோளங்கள் குஞ்சு பொரிக்காதநிலையிலுள்ள முட்டைகள் (போன்றிருக்க), (அந்த முட்டைகளை அவற்றையீன்ற பறவைமுதலியன வயிற்றோடு) அணைத்து அடைகாக்கின்ற காலம்போன்ற (அத்திருமால் அவ்வண்டகோளங்களைவயிற்றில்வைத்துப்பாதுகாக்கின்ற) பிரளயகாலத்தில் (அத்திருமாலினது) திருவயிற்றினுள்ளே யிருத்தலையடைந்து, (பின்பு) அப்பிரளயம் நீங்கினநாளிலே (அத்திருவயிற்றினின்று) வெளிவந்து இக்காலத்திலும் வாழ்ந்துவருகிற நிலைபெற்றஉயிர்களெல்லாம்,—அமிருதம் ஊறுகின்ற பற்களையுடைய வலிய திறந்த (அச்சிங்கமூர்த்தியின்) திருவாயினுள்ளே புக்கு அங்கு இருப்பனவாயின; (எ - று.)

பிரளயகாலத்தில் திருமாலினது திருவயிற்றில் அடங்கியிருந்த அண்டங்களும் சராசரங்களுமாகிய அனைத்தும், அதுபோலவே, இப்பொழுது,

விசுவரூபங்கொண்ட நரசிங்கமூர்த்தியான திருமாலின் திருவயிற்றினுள்ளே அடங்கியிருந்தன என்பதாம். அங்ஙனம் அவ்வுயிர்கள் அச்சிங்கத்தின் வாய் வழியாக வயிற்றினுட்புகும்போது அதன்பற்கள் படுதலால் அபாயமடையாவோ என்ற ஆசங்கையைப் போக்கும்பொருட்டு, அப்பற்களுக்கு 'அமுது பல்கும்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது; என்றது - அத்திருமால் எல்லாவுயிர்களிடத்தும் இயல்பாகக்கொண்டுள்ள பேரருளையும், அப்பெருமான் அவ்வுயிர்களையெல்லாம் குறிக்கொண்டு பாதுகாக்குந்தன்மையையும் விளக்கும். பி-ம்:—[1]குஞ்சிக்கிடமிலா, குஞ்சியிடைநிலை, குஞ்சியிட்டிலா. [2]முட்டைகுட்டி, முட்டைகுட்டம், முட்டைக்குட்டம். [3]அமுதமூறும், அமுதுபாயும். [4]பகுவாயாற், பகுவாயூர். [5]இன்னருளிருக்க, இருக்குநரிருக்கை, இரங்கினரிருக்கை. [6]வயிற்றினை யந்நாள், வயிற்றின வந்நாள். (உ௬ு)

கரு௬ரு. நன்மையிற் றொடர்ந்தார்க் குண்டோ கேடுநான் முகத்தோனுதி, தொன்மையிற் றொடர்ந்தவாய்மை யறத்தொடுந் [1]தொடர்ந்திலோரை, [2]யன்வயித் தோருந் தீய வவுணரல் லாரை யந்நாள், [3]தன்வயிற் றகத்து வைத்துத் [4]தந்ததச் சீயந் [5]தாயின்.

(இ - ள்.) நற்குண நற்செய்கைகளில் நீங்காது உரிமைபூண்டுள்ள சாதுக்களுக்கு(எப்பொழுதேனும்)கெடுதி உண்டாமோ? பிரமன் முதலாகத்தொன்று தொட்டுவருகிற சத்தியமான தருமமார்க்கத்தோடு தொடர்பில்லாத கொடிய அசுரர்கள் மாத்திரமேயன்றி அவ்வசுரர்களைச்சார்ந்தவர்களும் அழிய, அவ்வசுரர்களல்லாதவர்களையெல்லாம், அந்தச்சிங்கவடிவம், அப்பொழுது தனதுவயிற்றினிடத்திலே வைத்துத் தாய்போலப் பாதுகாத்தது; (எ - று.)

துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநத்தின் பொருட்டுத் திருவவதரித்த அந்நரசிங்கப்பிரான், அநாதியாகவருகிற உண்மையான தருமமார்க்கத்தை யனுசரியாத கொடிய வலிய அசுரர்களையும் அவர்களைச்சார்ந்த துஷ்டர்களையும் அழிப்பவனாகி, அவர்கள் போலாது தருமமார்க்கத்தை விடாது கைக்கொண்டுள்ள சாதுக்களையெல்லாம் அப்பொழுது தன்வயிற்றினுள் வைத்துத் தாய்போலப் பாதுகாத்தருள்பவனாயின னென்பதாம். சிங்கப்பிரான் இரணியனைச்சார்ந்த அசுரர்சேனைகளையெல்லாம் அழித்து இரணியனையும் அழிப்பதை மேல் விவரமாகக்கூறுவார்,அச்சமயத்தில்அப்பெருமான் நல்லோர்களைக் குறிக்கொண்டு பாதுகாத்த அருமையை இங்கு எடுத்துக்கூறினார்.'நன்மையிற்றொடர்ந்தார்க்குண்டோ கேடு' என்ற பொதுப்பொருளைக்கொண்டு, பிந்தினவாக்கியத்திற்கூறும் சிறப்புப்பொருளை விளக்க வைத்ததனால், வேற்றுப்பொருள் வைப்பணி. 'நான்முகத்தோனுதிதொன்மையிற்றொடர்ந்த' என்றது,அறத்துக்கு அடைமொழி. தருதல்-புறந்தருதல்: காத்தல். பி-ம்:—[1]துறக்கிலோரை, துறந்திலோரை. [2]அன்வயத்தோடும். [3]தன்வயிற்றந்து. [4]வந்தது. [5]தானே.

கருஎ.—இதுமுதல் ஏழுகவிகள் - அந்நரசிங்கமூர்த்தி அசுரர்களையழித்தலைக் கூறும்.

[1]பேருடை யவுணர் தம்மை[2] பிறை [3]யெயிற் றடக்கும் பேராப் பாரிடைத் தேய்க்கு [4]மீளப் பகிரண்டத் [5]தடிக்கும் பற்றி

மேருவிற் புடைக்கு [6]மோள விரல்களிற் பிசையும் [7]வேலை
நீரிடைக் குமிழி யூட்டு நெருப்பிடைச் [8]சுரிக்க நீட்டும்.

(இ - ள்.) (அச்சிங்கமூர்த்தி, கொடுமையிற்) பெயர்பெற்ற அசுரர்களிற் பலரைப் பிறைச்சந்திரன்போன்ற (தனது) வக்கிரதந்தங்களில் அடக்கிக் கொள்ளும் [கடித்து உட்கொள்ளும் என்றபடி]; (மற்றும்பலரை அவர்களுள் எவிடத்தினின்று) எடுத்துப் பூமியிலே தேய்க்கும்; மற்றும் (பலரை), (இவ் வண்டத்துக்குப்)புறத்தேயுள்ள அண்டங்களிலே மோதும்; (மற்றும்பலரைப்) பிடித்து மகாமேருமலையில் தாக்கும்; (மற்றும்பலரை), இறக்கும்படி விரல்களாற் பிசையும்; (மற்றும்பலரைக்) கடலின்நீரினுள்ளே(ஆழ அமுக்கி) மேலே குமிழியெழும்படிசெய்யும்; (மற்றும்பலரைப்) படபாமுகாக்கினியிலே இட்டு வாட்டும்.

ஊட்டும்-உண்டாக்கும். சுரிக்க-எரிந்து சுருளும்படி, நீட்டும்-கைநீட்டிப் பிடிக்கும். 'வேலைநீர்' என்பதை அடுத்துவந்ததனால், நெருப்பு, அக்கடலிடையுள்ள வடவாநலமெனக் கொள்ளப்பட்டது. 'நீட்டும்' என்றதும், அதனை வற்புறுத்தும். பி-ம்:—[1]வேருடை. [2]வீழ. [3]உகிர்த்தடக்கைபேரப். [4]அள்ளி மீதில். [5]அடைக்கும். [6]வாரி, மற்றை. [7]பல்கால். [8]சுருக்கி, சுரிப்ப. (உகுஎ)

கருஅ. வகிர்ப்[1]படத் துணிக்கும் [2]பற்றி வாய்களைப் பிளக்கும் வன்[3]றோல்,[4]துகிற்படுத் [5]துரிக்குஞ் [6]செந்தீக் [7]கண்களைச்[8]சூலுஞ் சுற் றிப், பகிர்ப்படக் குடரைக் கொய்யும் பசையறப் பிசையும் பல்கால், [9]உகிர்ப்புரை புக்கோர் தம்மை யுகிர்களா லுறக்கு மூன்றி.

(இ - ள்.) (அந்நரசிங்கமூர்த்தி பற்பலஅசுரர்களை) இரண்டுபிளவாம்படி துண்டிக்கும்; வாய்களைப் பிடித்துக் கிழிக்கும்; வலிய தோலைத் துணியைக் கிழிக்குமாறுபோல உரித்தெடுக்கும்; சிவந்த கோபாக்கினியையுமிழ்கிற கண்களைத் தோண்டியெடுக்கும்; குடலை(க் கைகளாற்) சுற்றித் துண்டுபடுமாறு அறுத்திடும்; உதிரப்பசையும் அற்றுப்போம்படி பலதரம்பிசைந்துவிடும்; (தனது) கைந்நகச்சந்துகளிலே பதுங்கிய அசுரர்களை மற்றைநகங்களால்அழுத்திக் கீண்டெறியும்; (எ - று.)

வாய்கள் - மேல்வாயும் கீழ்வாயும். துகில் படுத்து - துணிக்குச் சமமாக்கி. உறத்தல்-கீளுதலாதலை, "உறக்குந் துணையதோ ராலம்வித்து" என நாலடியாரிலுங் காண்க. பி-ம்:—[1]படுத்துதிர்க்கும்,படுத்துரிக்கும்.[2]பீறி.[3]தாள். [4]உகிர்படுத்து.[5]உதிர்க்கும். [6]வெந்தீ. [7]கணத்தொடும். [8]தோண்டும், தீக்கும். [9]உகிர்ப்பெரும்புரைபுக்கோரை. (உகுஅ)

கருகூ. யானையுந் தேரு மாவும் யாவையு [1]முயிரி ராமை
ஊனொடுந் தின்னும் பின்னை யொலி[2]திரைப் பரவை [3]யேழும்
மீனொடுங் குடிக்கு [4]மேகத் தருமொடும் விழுங்கும் விண்ணில்
தாரொடுங் காறெதன் றஞ்சித் தருமமுஞ் சலித்த தம்மா.

(இ - ள்.) (மற்றும் அந்நரசிங்கமூர்த்தி, அவ்வசுரர்கட்கு வாகனமாகிய) யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் மற்றவற்றையும் உயிரில்லாதபடி உடம்புமுழுவதையுங் கடித்துத்தின்னும்; பின்பு, ஒலிக்கின்ற அலைகளையுடைய எழுகடல்களையும் (அவற்றிலுள்ள) மீனினங்களுடனே குடிக்கும்;

வானத்திலுள்ள மேகங்களை இடிகளுடனே உட்கொள்ளும்; (அந்த உக்கிரத்தைக்கண்டு), தருமதேவதையும், இந்தச்சிங்கமூர்த்தி எவ்வாற்றானும் கோபந்தணியா தென்று பயந்துநடுங்கிற்று; ஆச்சரியம்! (எ - று.)

எற்புழிக்கோடல் என்னும் உத்தியால், 'உயிரிராமை', 'ஊனொடும்' என்றவற்றைத் தேர்ஒழிந்த மற்றவற்றிற்குக் கொள்க. ஊனொடும் - உடம்பு பின்னப்படாமல் என்றபடி. பி-ம்:—[1]உயிருருமல். [2]கடல். [3]பின்னும். [4]மேகமுருமொடும், வேகமுகமொடும், மேகமுதலொடும். (உசுக)

கசுO. ஆழி [1]மால் வரையோ டெற்றுஞ் சிலவரை யண்ட கோளச்
சூழிருஞ் சுவரிற் றேய்க்குஞ் சிலவரைத் [2]துளக்கில் குன்றம்
ஏழினோ டெற்றிக் கொல்லுஞ் சிலவரை யெட்டுத் திக்குந்
[3]தாழிருட் பிழம்பிற் றேய்க்குஞ் சிலவரைத் [4]தடக்கை [5]தாக்கி.

(இ - ள்.) (மற்றும் அச்சிங்கமூர்த்தி, அவ்வசுரர்களிற்) சிலவரை (உலகங்களைச்சூழ்ந்துள்ள) பெரிய சக்கரவாளகிரியோடு மோதும்; சிலவரை அண்டகோளத்தின்சுற்றிலுமுள்ள பெரிய சுவரிலே தேய்க்கும்; சிலவரை அசைதலில்லாத ஏழுகுலபருவதங்களுடனே மோதியடித்துக் கொல்லும்; சிலவரைப் பெரியகைகளால் எட்டுத்திக்குகளிலும் நிறைந்த இருட்டொகுதியிலே கொண்டுபோய்த் தாக்கித் தேய்த்தொழிக்கும்; (எ - று.)

ஏழுதீவுகளையுஞ்சூழ்ந்துள்ள ஏழுகடல்களுக்கும் அப்பாற் கோட்டைமதில்போலச் சூழ்ந்திருப்பது சக்கரவாளகிரி யென்பதும், அதனைச்சூழ்ந்துள்ள புறக்கடலை யடுத்துச் சூழ்ந்துள்ளது மகாந்தகாரமென்றும் சிலநூற்கொள்கை. குலகிரியேழு - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிஷதம், ஏமகூடம், நீலம். இச்செய்யுள் மலைகளிற்புரண்டு (கசக) என்றதன்பின் ஒருபிரதியிலுள்ளது. பி-ம்:—[1]மாவரையில். [2]சொன்னக், சொன்ன. [3]தாழிரும். [4]கடக்கித். [5]தாங்கி.

கசக. மலைகளிற் புரண்டு வீழ வள்[1]ளுகிர் நுதியால் வாங்கித்
தலைகளைக் கிள்ளு மள்ளித் [2]தழலெழப் பிசையுந் [3]தக்க
கொலைகளிற் கொல்லும் வாங்கி யுயிர்களைக் குடிக்கும் [4]வான
நிலைகளிற் [5]பரக்க வேலை [6]நீரினி [7]னிரம்பத் தூர்க்கும்.

(இ - ள்.) (மற்றும் அச்சிங்கமூர்த்தி சில அசுரர்களை), இழுத்து, (அவர்களுடம்பு) மலைகள்போல வீழ்ந்துஉருளும்படி கூரிய நகங்களின் நுனியால் (அவர்களின்) தலைகளைக் கிள்ளியெடுக்கும்; (சில அசுரர்களைப் பிடித்து) நெருப்புக்கிளம்பும்படி பிசைந்திடும்; (சில அசுரர்களை அவர்கள் கொடுமைக்கு) ஏற்ற கொலைவகைகளாற் கொன்றிடும்; (சில அசுரர்களுடைய உடம்புகளினின்று) உயிர்களைப் பறித்துப் பானம் பண்ணும்; (கடல்நீர்) ஆகாயத்தினிடங்களில் தாவிமிகும்படி அந்நீரிலே (சில அசுரர்களைப் பிடித்து) நிறையத் தூர்த்துவிடும்; (எ - று.)

தக்கொலைகளிற் கொல்லும் - சின்னபின்னப்படுத்திவதைக்கும் என்றபடி. 'உயிர்களை வாங்கிக்குடிக்கும்'என்றது, கவிகள் கூறும் மரபுவழுவமைதி. பி-ம்:—[1]உகிர்க்கையால். [2]தழலென. [3]தத்தும், தாக்கிக். [4]யானை. [5]பரம்பும். [6]நீர்களை. [7]நிரப்ப. (உஎக)

கசஉ. முப்புறத் துலகத் துள்ளு [1]மொழிவற முற்றும் பற்றித்
[2]தப்புத லின்றிக் [3]கொன்று தையலார் கருவுந் தள்ளி
யிப்புறத் [4]தண்டத் தியாரு மவுணரில் லாமை [5]யெற்றி
யப்புறத் தண்டந் தோறுந் தடவின சிலகை யம்மா.

(இ - ள்.) (சுவர்க்க மத்திய பாதாளமென்னும்) மூன்றுவகை யுலகங்களி லும்மிச்சமில்லாதபடி, அசுரர்களெல்லோரையும் பிடித்துத் தவறுமற்கொன்று அவ்வசுரஸ்திரீகளுடைய கருப்பங்களேயும் புறத்தேதள்ளி யொழித்து, (அதன்பின்பு) இந்த அண்டத்திலே அசுரர்கள் எவரும் இல்லாததனுல், (அந் நரசிங்கமூர்த்தியின்) கைகளிற் சில, பகிரண்டங்களிலும்எட்டி (அசுரர்களை) த்தடவித்தேடின; ஆச்சரியம்! (எ - று.)—பி-ம்:—[1]மொழியற. [2]தப்புறல். [3]கொண்டு. [4]அண்டந்தோறும், கண்டத்தியாரும். [5]எய்தி. (உ௭உ)

கசங. கனகனு மவனில் வந்த வானவர் [1]களைக ணுன
அனகனு மொழியப் பல்வே றவுணரா னவரை யெல்லாம்
நினைவதன் முன்னங் கொன்று [2]நின்றதங் நெடுங்கட் சீயம்
வனைகழ லவனு [3]மற்றம் மடங்கலின் [4]வரவு நோக்கி.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) பெரிய கண்களையுடைய அந்நரசிங்கமூர்த்தி,—இரணியனும் அவனிடத்தினின்று தோன்றிய [அவனதுபுதல்வனுன] தேவர்களை இரட் சிப்பவனுன பிரகலாதாழ்வானும்தவிர, பல வேறுவகைப்பட்ட அசுரர்களை யெல்லாம் நினைத்தற்கு முன்னே [வெகுவிரைவிலே] கொன்று (வாளா) நின் றது; பின்பு, தரித்த வீரக்கழலேயுடைய இரணியனும், அந்நரசிங்கத்தின் வருகையைப் பார்த்து, (எ - று.)—"வாங்கி......நின்ருன்" என அடுத்த கவி யோடு முடியும்.

தேவர்கட்குப் பகைவர்களான அசுரர்களைக்கொன்று தேவர்களைக் காக்கு மாறு திருமால் வெளிப்பட்டது பிரகலாதன்பொருட்டாதலால், அத்தன்மை யைப் பிரகலாதன்மேல் ஏற்றி 'வானவர்களைகணுன அனகன்' என்ருர். அந கன் - தோஷமில்லாதவன். பி-ம்:—[1]கண்களான. [2]நின்றது. [3]மற்றை. [4]வர வை, வாழ்வு. (உ௭௩)

கசச.—இரணியன் வாளுங் கேடகமும் ஏந்திப் போருக்குநிற்றல்.

வயிரவா ளுறையின் வாங்கி வானக[1]மறைக்கும் [2]வட்டச்
செயிரறு கிடுகும் பற்றி வானவ ருள்ளந் தீய
அயிர்[3]படர் வேலை யேழு மலைகளு மஞ்ச வார்த்தங்கு
உயிருடை மேரு[4]வென்ன வாய்மடித் துருத்து நின்ருன்.

(இ - ள்.) வச்சிராயுதம்போன்ற [மிகக்கூரிய வலிய] வாளாயுதத்தை உறையினின்றுஎடுத்து (வலக்கையிற்கொண்டு) ஆகாயம்முழுதையும் மறைக் கும்படியான வட்டவடிவமுள்ள குற்றமற்ற கேடகப்படையையும் (இடக்கை யிற்) கொண்டு, (காண்கின்ற) தேவர்களுடைய மனம் கருகவும் நுண்மணல் பரந்த ஏழுகடல்களும் மலைகளும் அஞ்சவும் ஆரவாரித்து, உயிருள்ளதொரு

மகாமேருகிரிபோல (க் கம்பீரமாய்) உதட்டை மடித்துக்கடித்துக்கொண்டு கோபித்து (அச்சிங்கமூர்த்தியோடு பொருமாறு) அங்கேசலியாது நின்றான்.

கேடகம் - எதிரிகள் பிரயோகிக்கும் படைக்கலங்களைத் தன்மேற்பட வொட்டாது தடுக்குங் கருவி; அதற்குச் செயிராதல்-தன்தொழிலிற் குறைவு படாமை. வட்டம் - விருத்தம் வடசொல்: உயிருள்ளமேரு வென்றது, இல் பொருளுவமை. பி-ம்:—1மறையும். 2வட்டம்...கிடுகு. 3படு, பட. 4அன்ன வாய் மடுத்துருத்து. (உ௭௪)

கசரு.—அச்சமயத்திற் பிரகலாதன் தந்தைக்கு அறிவுகூறல்.

நின்றவன் றன்னை நோக்கி நிலையிது [1]கண்டு[2]நீயும்
[3]ஒன்றுமுன் னுள்ளத் தியாது முணர்ந்திலை போலு [4]மன்றே
வன்றொழி [5]லாழி வேந்தை வணங்குதி வணங்க வேயுன்
புன்றொழில் பொறுக்கு மென்றா னுலகெலாம் புகழ நின்றான்.

(இ - ள்.) எல்லாவுலகங்களும் புகழும்படி நின்றவனான பிரகலாதன், அங்ஙனம்நின்ற இரணியனைநோக்கி, 'இந்த (நரசிங்கமூர்த்தியின்) நிலைமையைப் பார்த்தும் நீ (கொடுமை) பொருந்திய உன்மனத்தில் சிறிதும் நல்லறிவு கொண்டனையில்லைபோலும்; (பகையழித்தலாகிய) வலியதொழிலில் தேர்ந்த சக்கராயுதத்தையுடைய எம்பெருமானை (நீ)நமஸ்கரிப்பாய்; (அங்ஙனம்) நமஸ்கரித்தமாத்திரத்திலே (அப்பெருமான்) நீ செய்த இழிந்ததொழில்களையெல்லாம் பொறுத்தருள்வான்' என்று சொன்னான்; (எ-று.)—அன்றே-தேற்றம்.

'கண்டு நீயும்' என்பது - கண்டும் நீயென உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. பி-ம்:—1காண்டி. 2நீச, கேளில், கேழில். 3என்றுநின். 4ஒன்றே. 5ஒழியவெந்தாய். (உ௭௫)

கசசு.—அதற்கு இரணியன் கூறிய விடை.

கேளிது நீயுங் காணக் கிளர்ந்த[1]கோ ளரியின் கேழில்
தோளொடு [2]தாளு நீக்கி நின்னையுந் [3]துணித்துப் பின்னென்
வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதன் மகளி ரூடல்
நாளினு முளதோ வென்னா வண்டங்க ணடுங்க நக்கான்.

(இ - ள்.) (அதுகேட்டவுடனே இரணியன் பிரகலாதனை நோக்கி), (யான்சொல்லும்) இவ்வார்த்தையைக் கேட்பாயாக: (இங்ஙனம்சொல்லுகிற பக்தனான) நீயும் பார்த்துக்கொண்டிருக்க, எழுந்தோங்கிய வலியஇச்சிங்கத்தினது ஒப்பற்றகைகளையும் கால்களையும் வெட்டித்தள்ளி உன்னையும் துண்டித்து, பின்பு (அங்ஙனம் வெற்றிதந்ததான) எனதுவாட்படையை (யான்) வணங்குவதேயல்லாமல் (பிறரை) வணங்குவதென்பது, (எனக்குஉரிய) மகளிர் ஊடல்கொண்டபொழுதும் (என்பக்கல்) உளதாமோ?' என்றுசொல்லி அண்டங்கள் நடுங்கும்படி சிரித்தான்; (எ - று.)

இது, வீரத்துஎழுந்த வெகுளிநகை. ஊடலாவது - ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும்பொருட்டு ஒருவரோடொருவர் கோபித்தல்; இது பிரணயகலக மெனப்படும். இன்சொல்முதலிய வேறு

உபாயங்களால் தணிக்கக்கூடிய நிலையைக் கடந்து வணங்குதலாகிய ஒருபாயத்தினாலன்றித் தணிக்கக்கூடாத நிலையை யடைந்த ஊடல்முதிர்ச்சியில் இயல்பாக ஆடவர் மகளிரிடத்துக்கொள்ளும் வணக்கத்தையும் யான் கொள்ளும் இயல்பினனல்லேனென்று தனதுவணக்கமின்மையை விளக்கியவாறு; ஆரணியகாண்டத்தில் இராவணனுடைய கிரீடங்களை "மாதர்வலியநெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை" என்றதுங் காண்க. பி-ம்:—[1]கோளரியையின்று, கோளரியின்கேளார். [2]தோளும். [3]துணித்த. (உ௭௬)

க௪௭.—நரசிங்கப்பிரான் இரணியனைப் பற்றி மார்பைப்பிளந்து கொன்றவிவரத்தை இதுமுதல் ஏழுகவிகளிற் கூறுகிறார்.

நகைசெயா வாயுங் [1]கையும் வாளொடு நடந்த தாளும்
புகை[2]செயா நெடுந்தீப் பொங்க [3]வுருத்தெதிர் பொருந்தப் புக்கான்
[4]தொகைசெய்வார்க் கரிய தோளாற் றாள்களாற்[5]சுற்றிச் சூழ்ந்தான்
மிகைசெய்வார் [6]வினைகட் கெல்லா மேற்செயும் வினையம் வல்லான்.

(இ - ள்.) (இரணியன், இவ்வாறுசொல்லிச்) சிரித்து, (அங்ஙனம் சிரித்த)வாயிலும் கையிலும்(கையிலேந்திய)வாளாயுதத்திலும் நடக்கின்றகால்களிலும் (உக்கிரமிகுதியாற்) புகைசெய்துகொண்டு மிக்க நெருப்புக்கிளர்ந்து சொலிக்கக்கோபித்து, (அந்நரசிங்கமூர்த்தியை) எதிர்த்தற்கு நெருங்கினான்; (அப்பொழுது உலகத்துக்கு) மிக்கதுன்பஞ்செய்பவர்களான (அசுரர்முதலிய) துஷ்டர்களுடைய வஞ்சனைச்செயல்களுக்கெல்லாம் மேலாகச்செய்யும் தந்திரச்செய்கையில் வல்லவனான அத்திருமால், கணக்கிடவல்ல கணிதசாஸ்திரபண்டிதர்களுக்கும் (கணக்கிட்டு இவ்வளவென்று தொகைசொல்லுதற்கு) அரிய [மிகப்பலவான] (தனது)கைகளினாலும் கால்களினாலும் (அந்த இரணியனைச்) சூழ்ந்துகட்டிப்பிடித்தான்; (எ - று.)—பி-ம்:—[1]கண்ணும். [2]செய.[3]உரத்தெதிர்பொங்க.[4]தொகைசெயற்கு.[5]சுழற்றி.[6]மிகைகட்கு. (உ௭௭)

க௪அ. இருவரும் பொருந்தப் பற்றி யெவ்வுல குக்கு [1]மேலாய்
ஒருவருங் காணா வண்ண முயர்ந்ததற் குவமை [2]கூறின்
வெருவருந் தோற்றத் தஞ்சா வெஞ்சின வவுணன் மேரு
அருவரை யொத்தா[3]னண்ண லல்லவை யெல்லா மொத்தான்.

(இ-ள்.) இருவரும் (இங்ஙனம் ஒருவரையொருவர்) கட்டிப்பிடித்து எல்லாவுலகங்களுக்கும் மேலாக எவரும் காணவொண்ணாதபடி உயர்ந்துநின்ற தன்மைக்கு ஒப்புமைகூறுமிடத்து,—(யாவரும்)அஞ்சும்படியானதோற்றத்தையுடையவனும்(எதற்கும்)அஞ்சாதவனும் கொடியகோபத்தையுடையவனுமான (பொன்னிறமுள்ள) இரணியாசுரன்,(பூமியின்நடுவிலுள்ள அழித்தற்கு) அரிய (பொன்மயமான) மகாமேருகிரியைப் போன்றான்: (அவனை அணைத்துப்பற்றிய) நரசிங்கப்பிரான் மற்றமலைகளையெல்லாம் போன்றான் [அம்மேருமலைக்குச் சுற்றிலுமுள்ள குலபருவதங்களும் சக்கரவாளகிரியுமாகிய அனைத்தையும் போன்றான்]; (எ - று.)

தோற்றம்-ஆகாரம்.உவமையணி. பொன்னிறமான இரணியாசுரனுக்கு மேருமலை உவமை. பி-ம்:—[1]எல்லாம். [2]வேண்டின். [3]மாயன். (உ௭அ)

௧௪௪௯. ஆர்ப்பொலி [1]முழக்கின் வெவ்வாய் வள்ளுகிர்ப் [2]பாரமான்ற
[3]ஏற்றருங் [4]கரத்திற் பல்வே றெறிதிரைப்[5]பரப்பி னுற்ற
பாற்கடல் பரந்து பொங்கிப் பங்கயத் தொருவ னாட்டின்
மேற்[6]சென்ற தொத்தான் மாயன் கனகனு [7]மேரு வொத்தான்.

(இ - ள்.) பயங்கரமான வாயினாற் செய்யும் கர்ச்சனையொலியின் ஆரவாரத்தாலும் கூரிய நகங்களின் மிகுதி பொருந்திய பெறுதற்கு அரிய [மிகப்பலவான] கைகளினாலும் நரசிங்கமூர்த்தியான திருமால், பலவேறுவகைப்பட்ட ஆரவாரிக்கின்ற அலைகளின் மிகுதியோடு கூடிய திருப்பாற்கடல் (உலகமெங்கும்) பரவிப் பொங்கிக்கிளர்ந்து பிரமலோகத்துமேலும் சென்றதைப் போன்றான்; (அந்நரசிங்கமூர்த்தியின் கைகளினிடையே அகப்பட்டுக்கொண்ட) இரணியனும் (அக்கடலினிடையே அகப்பட்ட) மேருமலையைப் போன்றான்.

முந்திய செய்யுளில்வந்த முதலிரண்டடியை இச்செய்யுளின் முன்னும் எடுத்துக்கூட்டுக. கீழ்ச்செய்யுளிற் கூறிய உவமையோடு திருப்திப்படாமல் இச்செய்யுளில் அவ்விஷயத்துக்கே மற்றுமோருவமை கூறினார். நரசிங்கத்தின் கர்ச்சனைக்குக் கடலின்முழக்சமும், அப்பெருமானது கைகளின் தொகுதிக்குக் கடலின் அலைப்பரப்பும்-உவமை. தற்குறிப்பேற்றஉவமையணி. பங்கயத்தொருவன் நாட்டின்மேல் - தாமரைமலரில்தோன்றிய ஒருமூர்த்தியான பிரமனது சத்தியலோகத்துக்கு மேலும். ஆன்ற-அமைந்த. பி-ம்:—[1]முழக்கி, முழக்கம். [2]மகரமாற்றை. [3]வேற்றகும், வேற்பொலி. [4]கரங்கள். [5]பரப்பிலிற்ற, பரப்பிற்றோன்ற. [6]செல்வது.[7]வெயிலை. (௨௭௯)

௧௪௫௦. வாளொடு தோளுங் கையு மகுடமு மலரோன் [1]வைத்த
நீளிருங் [2]ககன முட்டை நெடுஞ்சுவர் தேய்ப்ப நேமி [னத்
கோளொடுந் திரிவ தென்னக் [3]குலமணிக் [4]கொடும்பூண் மின்
தாளிணை யிரண்டும் பற்றிச் சுழற்றினன் றடக்கை யொன்றால்.

(இ - ள்.) (இரணியனுடைய) வாட்படையும் தோள்களும் கைகளும் கிரீடமும் பிரமன்படைத்த உயர்ந்த பெரிய அண்டகோளத்தினது உயர்ந்த மேற்சுவரில் உராயும்படியும், சோதிச்சக்கரம் [சோதிமண்டலம்] கிரகங்களுடனே சுழல்வதுபோலச் சிறந்தசாதியிரத்தினங்கள் பதித்துச் செய்யப்பட்ட கொடிய ஆபரணங்கள் (சுற்றிலும்) ஒளிவீசும்படியும்,—(நரசிங்கப்பிரான்), (தனது) பெரியகைகளிலொன்றினால் (வேறு ஒப்புமையில்லாமல்) ஒன்றோடொன்று ஒத்த (அவ்விரணியனது) கால்களிரண்டையும் ஒருசேரப்பிடித்து (அவ்விரணியனைச்) சுழற்றினான்; (எ - று.)

நேமி கோளொடுந் திரிவதென்ன என்பதற்கு - சூரியன் தன்னைச் சூழ்ந்த பரிவேஷத்துடனே சுற்றித் திரிவதுபோல என்று உரைத்தலும் ஒன்று; பரிவேஷம்-ஊர்கோள்,வட்டம். நேமி-வட்டவடிவமான சூரியமண்டலத்தின் மேல் நின்றது. பூண்பவனது கொடுமையைப் பூணின்மேல் ஏற்றி 'கொடும் பூண்' என்றது, ஒருவகை உபசாரவழக்கு. பி-ம்:—[1]தந்த. [2]கனகமுட்டை. [3]குருமணி.[4]குழையும். (௨௮௦)

கருக. சுழற்றிய காலத் [1]திற்ற தூங்குகுண் டலங்க ணீங்கிக்
கிழக்கொடு [2]மேற்கு மோடி விழுந்தன [3]கிடந்த வின்றும்
அழற்றரு கதிரோன் [4]ரேுன்று முதயத்தோ டத்தமான
[5]நிழற்றருங் காலைமாலை நெடுமணிச் [6]சுடரி னீத்தம்.

(இ - ள்.) (இரணியன்காதுகளில்) தொங்கிக்கொண்டிருந்த இரண்டு குண்டலங்களும், (சிங்கப்பிரான் அவ்விரணியனைப்பிடித்து விசையோடு) சுழற்றியபொழுது சிதறினவையாய்(த் தனித்தனி)பிரிந்து கிழக்கிலும் மேற்கிலும் நெடுந்தூரத்துக்கு அப்பாற் சென்று விழுந்துகிடந்தவை தாமே, இந்நாளிலும் சூரியன் விளங்குகிற உதயகிரியும் அஸ்தகிரியும் ஆம்; (அக்குண்டலங்களிற் பதித்த) பெரிய [சிறந்த] மாணிக்கங்களின் ஒளிப்பெருக்கே காலைப்பொழுதிலும் மாலைப்பொழுதிலும் (முறையே அக்கிழக்கு மேற்குகளில் செவ்வானமென்னும்) ஒளியைச் செய்யும்; (எ - று.)

அழல் தரு கதிரோன் - வெப்பத்தைச் செய்யும் உஷ்ணகிரணங்களையுடையவன். நீத்தம்-வெள்ளம்; இங்கு, இலக்கணை. அவநுதியணி. உதயஅத்தமன பருவதங்களினிடத்துப் பருவதத்தன்மைகளையும் செவ்வானத்தினிடத்து அத்தன்மையையும்மறுத்து, இரணியனது குண்டலத்தன்மையையும், மணி நிழற்றன்மையையும் ஏற்றிக்கூறியிருத்தல் காண்க.'இன்றும்' என்பதை 'நிழல்தரும்' என்பதனோடும் கூட்டுக. பி-ம்:—[1]அற்ற. [2]மேற்கினோடி, மேற்கினூடு. [3]கிடந்த விண். [4]வைகும். [5]நிழற்றுறு, நிழற்றுவ. [6]சுவறில். (உஅக)

கருஉ. [1]போன்றன [2]வினைய தன்மை [3]பொருவிய தினைய தென்று
[4]தான்றனி யொருவன் றன்னை யுரைசெயுந் [5]தாத்தன் நானோ
வான்றரு வள்ளல் வெள்ளை வள்ளுகிர் வயிர மார்பின்
ஊன்றலு முதிர வெள்ளம் பரந்துள துலக மெங்கும்.

(இ - ள்.) இவைபோன்றனவான தன்மைகள் பொருந்தியதனால் (தன்னைப்போன்றவர் ஒருவருமில்லாமையால்) தான்தனிப்பட்ட ஏகமூர்த்தியான அந்நரசிங்கப்பிரானது நிலைமையைக் குறித்து, இத்தன்மையதென்றுசொல்லும் வல்லமையுடையேன் யானோ? (தனதுஅடியார்களெல்லோர்க்கும்) பரமபதத்தைக் கொடுத்தருள்கிற உதாரகுணமுடையவனான அச்சிங்கப்பிரான் வெண்ணிறமானகூரிய (தனது) கைந்நகங்களை வச்சிர ரத்தினம்போலுறுதியான (அவ்விரணியனுடைய) மார்பில் ஊன்றியவளவிலே இரத்தவெள்ளம் எழுந்து உலகமுழுவதும்பரவிற்று; (எ - று.)

பொருவியது-போர்செய்ததென்று பொருள்கொள்ளினுமாம். பி-ம்:—[1]போன்றனன். [2]அனையதன்மை. [3]பொருவியவினையதென்றும், பொருந்திடுமளவிலொன்றும், பொருவியதேனைவென்று. [4]தான்றனை. [5]தரத்தினேனோ.

கருந. ஆயவன் றன்னைமாய னந்தியி னவன்பொற் கோயில்
வாயி[1]லின் மணிக்க வான்மேல் வயிரவா ளுகிரின் [2]வாயின்
[3]தீயெழு குருதி பொங்க வெயில்விரி வயிர [4]மார்பு
தீயெழப் பிளந்து நீக்கித் [5]தேவர்த மிடுக்கண் டீர்த்தான்.

(இ - ள்.) மாயவனான அத்திருமால்,—அவ்விரணியனை, சாயங்காலத்திலே, அவனுடைய அழகிய அரண்மனையின் வெளிவாசற்படியில், அழகிய (தனது) தொடையின்மேல் (வைத்துக்கொண்டு), சூரியகாந்திபோன்றகாந்தியை வீசுகிற வச்சிரரத்தினம்போலுறுதியான (அவனுடைய) மார்பை வச்சிராயுதம்போன்ற கூரிய (தனது) கைந்நகங்களின் நுனியால் மேற்கிளம்புகிற இரத்த வெள்ளம் அதிகப்படவும் நெருப்புப்பொறிபறக்கவும் பிளந்து ஒழித்து, தேவர்களுக்கு (அவனால்) நேர்ந்திருந்த துன்பத்தை நீக்கியருளினான்; (எ - று.)

அவ்விரணியன் பகலிலும் இரவிலும் சாவாதபடி வரம்பெற்றிருந்ததனால், எம்பெருமான், அவனைப்பகலுமாகாது இரவுமாகாது அவ்விரண்டுக்கும் இடைப்பொழுதான அந்திமாலைநேரத்திலே கொன்றிட்டான். இங்ஙனமே, தனதுவீட்டின் உள்ளிலும் அதன்வெளியிலும்,—சாவா வரம் பெற்றமைபற்றி வீட்டினது அகமும் புறமு மாகாத வாயிற்படியின்மேலும்,—பூமியிலும் ஆகாயத்திலும் சாவாத வரம் பெற்றதனால் அவ்விரண்டுமல்லாத தன்மடியின் மேல் வைத்துக்கொண்டும், ஆயுதங்களினாற் சாவதில்லை யென்று வரம்பெற்றதனால் நகங்களினாற் பிளந்தும் கொன்றிட்டான். அன்றியும், ஈரமுள்ளபொருள்களாலும் ஈரமில்லாதபொருள்களாலும் சாவாத வரம்பெற்ற அவனை அவ்விரண்டின்பாற்படாத நகத்தினாலும்கொன்றான். இன்னும் இவைபோல அவன்பெற்றிருந்த வரங்கட்கெல்லாம் பழுதுநேராதவண்ணம் தந்திரமாக அவனைத் தொலைத்த திவ்வியசக்தியை வியந்து, 'மாயன்' என்றார். பி-ம்:— [1]நன்மாணிக்கவயிரவள்ளுகிரால். [2]வாளின். [3]மீயிருங். [4]மார்பும். [5]தேவர்கள்.

கஙச.—முன்பு இரணியனுக்குஅஞ்சிஓடியொளித்த தேவர்கள்முதலியோர் அவன்தொலைந்தவுடன் அச்சமின்றி அங்குவருதல்.

முக்கணா னெண்க ணானு முளரியா யிரங்க ணானுந்
திக்கணந் [1]தேவ ரோடு முனிவரும் பிறருந் தேடிப்
புக்கநா டறிகு றாமற் றிரிகின்றார் புகுந்து மொய்த்தார்
எக்கணாற் [2]காண்டு மெந்தை யுருவமென் [3]றிரங்கி நின்றார்.

(இ - ள்.) (தாம்தாம்) சென்றஇடத்தை (எவரும்) தேடியறியவொண்ணாதபடி (இரணியனுக்குஅஞ்சி) ஓடியுழல்கின்றவர்களான மூன்றுகண்களையுடையனான சிவபிரானும் எட்டுக்கண்களையுடையனான பிரமனும் தாமரைமலர்போன்றஆயிரங்கண்களையுடையனான இந்திரனும்எட்டுத்திக்குக்களிற் பொருந்திய தேவர்களும் இருடிகளும் மற்றையோரும்,—(அவ்விரணியன்தொலைந்தவுடனே) அங்குவந்து நெருங்கினவர்களாய், எம்பெருமானுடைய அந்நரசிங்கவடிவத்தை எந்தக்கண்ணினாற் காண்போமென்று இரக்கமுற்றுநின்றார்கள்; (எ - று.)

அந்நரசிங்கவடிவம் எவர்க்கும் இனிது காணவொண்ணாதபடி பயங்கரமாயிருந்த தென்பதாம். 'எக்கணாற் காண்டும்' என்றது, தங்கள்கண்கள் காணக் கூசுதலால். எண்கணான் = நான்முகன். திக்கு அணம் தேவர் - அஷ்டதிக்பாலகர். அணம் - அணவும் என்பதன் விகாரம். திக்கண் ஆம் என்று பதம்பிரித்து, திக்குக்களிலுள்ள எனினுமாம்; திக் - வடசொல்: கண் - ஏழனுருபு. புக்கநாடறிகுறாமல் தேடித்திரிகின்றார் என்பதற்கு - எம்பெருமான்

உள்ளவிடத்தை யறியாமையால் தேடியலேகின்றவர்களான எனப் பொருள் கொள்வாருமுளர். பி-ம்:—[1]முனிவரோடு தேவரும் பிறருஞ் சிந்தி. [2]காண்போம், காட்டும். [3]இரங்குகின்றார், இரந்துகின்றார். (உஅச)

கருரு.—தேவர்கள் முதலியோர் நரசிங்கத்தைக் கண்டு அஞ்சுதல்.

நோக்கினர் நோக்கி னார்முன் னோக்குறு முகமுங் கையும்
ஆக்கையுந் [1]தாளு [2]மாகி யெங்கணுந் தானே யாகி
வாக்கினன் [3]மனத்தி னன்மற் றறிவினு ளளக்க வாரா
மேக்குயர் சீயந் தன்னைக் [4]கண்டனர் வெருவு கின்றார்.

(இ - ள்.) (அங்ஙனம் வந்துசூழ்ந்து) பார்த்த பார்த்த அவர்களுடைய முன்னெல்லாம் காணப்படுகிற முகங்களும் கைகளும் உடம்பும் கால்களும் (பல) உடையனாய் எல்லாவிடத்தும் தானேநிறைந்து, சொல்லினாலும் கருத்தினாலும் அறிவினாலும் வரையறுக்கமுடியாத மேலோங்கிவளர்ந்துள்ள அச்சிங்கத்தைப்பார்த்து, (அம்முக்கண்ணன் முதலியோர்) அஞ்சுகின்றவர்களானார்கள்; (எ - று.)—மற்று-அசை. பி-ம்.—[1]தோளும். [2]ஆக. [3]மனத்தினாலும். [4]கண்டவர். (உஅரு)

கருசு.—அப்பெருமானைப் பிரமன் துதிக்கத் தொடங்கல்.

பல்லொடு பல்லுக் கெல்லை யாயிரக் [1]காதப் பத்தி
சொல்லிய வதனங் கோடி கோடி மேல் விளங்கித் தோன்ற
எல்லையி [2]லுருவிற் றாகி யிருந்ததை [3]யெதிர நோக்கி
அல்லியங் கமலத் தண்ண லவன்புகழ் விரிப்ப தானான்.

(இ - ள்.) பல்லுக்குப் பல் இடைவெளி ஆயிரங்காததூரமாகச் சொல்லப்பட்ட முகங்கள்பலகோடி யென்னுந் தொகையினும் அதிகமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்க, எல்லையில்லாத பெருவடிவமுடையதாயிருந்த அந்நரசிங்கத்தைப் பிரதியட்சமாகத் தரிசித்து, அகவிதழ்களையுடைய அழகிய தாமரை மலரில் தோன்றியவனான பிரமதேவன் அப்பெருமானுடைய கீர்த்தியை எடுத்துச்சொல்லத்தொடங்கினான்; (எ - று.)

பல்லொடு பல்லுக்கு எல்லை - ஒருபல்லோடு மற்றொருபல்லுக்கு நடுவிலுள்ள இடம். பத்தி-தூரம். எதிர - எதிரில். வதநம் - வடசொல். கோடி கோடி - கோடியினாற்பெருக்கிய கோடி. பி-ம்:—[1]காதம்பற்றி. [2]உருவத்தாகி. [3]எய்திநின்றான், எதிர்ந்து நோக்கி. (உஅசு)

வேறு.

கருஎ.—இதுமுதல் நான்குகவிகள் - பிரமன் நரசிங்கமூர்த்தியைத் துதித்தலைக் கூறும்.

தன்னைப் படைத்ததுவுந் தானே யெனுந்தன்மை
பின்னைப் படைத்ததுவே காட்டும் பெரும் [1]பெருமை
உன்னைப் படைத்தாய்நீ யென்றா லுயிர் படைப்பான்
என்னைப் படைத்தாய்நீ யெனுமிதுவு [2]மேதாமோ.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (முதலில்) உன்னைப்படைத்தவனும் நீயே யென்ற உண்மையை பின்பு [இப்பொழுது] (நீ உன்னை இந்தத்தூணினிடத்தில் அழகிய சிங்

களுகப்) படைத்துக்கொண்டதே நன்குவிளக்கும்; (இவ்வாறு) மிக்கமகிமை யையுடைய உன்னை நீயே படைத்துக்கொண்டா யென்றால், பிராணிவர்க்கத் தைப் படைத்தற்காக என்னை நீ படைத்தா யென்னு மிதுவும் எத்தன்மைத் தாமோ? (எ - று.)

இன்னபொருளுக்கு இன்னபொருள் காரண மென்று ஒன்றன்மேலொ ன்றாகக் காரியகாரணவிசாரணை செய்துகொண்டே செல்லுமிடத்து எல்லா வற்றுக்கும் மூலகாரணம் ஸ்ரீமந்நாராயணனென்றும், அந்தப் பரப்ரஹ்மத் துக்குக் காரணமானபொருள் ஒன்றுமில்லை யென்றும் தெரிதலால், அப் பரம்பொருள் ஆதியில் தன்னைத் தானே படைத்துக்கொண்டதென்று வேதம் முதலிய நூல்கள் கூறுகின்றன;[அதன்கருத்து - அப்பரம்பொருள் தான் ஒரு பொருளினின்று உண்டானதன்றென்பது.] அங்ஙனம் அப்பரப்ரஹ்மமாகிய நீயே உன்னைப்படைத்துக்கொள்ளுதல் சாத்தியமோஎன்று சங்கிக்குமிடத்து, இப்பொழுது பலருங் காண வேறொருகாரணமுமின்றி நீயே உன்னை நரசிங்க மூர்த்தியாக இத்தூணினின்று தோற்றுவித்ததே அச்சங்கையையொழித்தற்கு ஏற்ற சாட்சியாகின்றது: மகாவிபவத்தையுடைய உன்னையே படைக்கத்தக்க அற்புதமான திவ்வியசக்தியையுடையவனாயிருக்கிற உனக்கு இந்தச் சராசரங் களாகிய உயிர்களைப் படைக்கிற சக்திதான் இல்லாமற்போயிற்றோ? இவை களைப்படைத்தற்காக என்னை நீ படைத்தா யென்பது யாதாகும்? உனது திருவிளையாடலேயாமென்றவாறு. பி-ம்:—[1]பெரும. [2]எத்தாமோ. (உஅஎ)

கரு௩அ. [1]பல்லா யிரகோடி யண்டம் பனிக்கடலுள்
நில்லாத [2]மொக்குளெனத் தோன்றுமா னின்னுழையே
எல்லா [3]வுருவமுமாய் நின்றக்கா லிவ்வுருவம்
வல்லே [4]படைத்தால் [5]வரம்பின்மை வாராதோ.

(இ-ள்.) பலஆயிரங்கோடி அண்டங்களும் குளிர்ச்சியான கடலிலே தோன்றியழியும் நீர்க்குமிழிகள்போல உன்னிடத்திலே உற்பவிக்கும்; (ஆத லால்), எல்லாவுருவங்களும் நீயேயாயிருக்க (அவற்றையெல்லாம் அழிக்கும் படியான பயங்கரமான) இந்தநரசிங்கரூபத்தை (நீயே) விரைவாகவகித்துக் கொண்டால் வரம்பில்லாமையென்னுங்குற்றம் (உனக்கு) வரமாட்டாதோ?

உனது இச்சிங்கவடிவம் நினதுசொரூபமேயான உலகங்களை வரம்பு கடந்து அழித்திடாதபடி இதனை அடக்கிக்கொள்ளவேண்டும்; அல்லது, சீற் றந்தணிந்தருளல்வேண்டும் என்று வேண்டியபடி. வரம்பின்மை-அநவஸ்தா தோஷம்: அதாவது - இங்கு, உனதுசொரூபமாக வுள்ளவற்றை உனதுசொ ரூபமொன்றே அழித்தல். பி-ம்:—[1]பல்லுயிர. [2]மொக்குளினில், மொக்குளில். [3]உருவமுநீ. [4]குறித்தால். [5]வரம்புண்மை. (உஅஅ)

கருக௯. பேரை யொருபொருட்கே பல்வகையாற் பேர்த்தெண்ணுந் தாரை [1]நிலையை தமியை பிறரில்லை
யாரைப் படைக்கின்ற தியாரை யளிக்கின்றது
இயாரைத் துடைக்கின்ற தையா வறியேமால்.

(இ - ள்.) (நீயாகிய) ஒருபொருளுக்கே பலவகையால்வேறுபடுத்து வெவ்வேறுபெயர் குறிக்கப்படுகிற ஒழுங்கானநிலைமையையுடையாய்; தனி முதற்பொருளாகவுள்ளாய் நீயே; (இவ்வாறு நீயன்றிப்) பிறர்இல்லை; (பிர பஞ்சமுழுதும் நீயேயாயிருக்க), சுவாமி! (நீ) சிருஷ்டிக்கிறது எவரை? (நீ) காக்கின்றது எவரை? (நீ) அழிக்கின்றது எவரை? அறிகிறோமில்லை; (எ-று.)

பிரமவிஷ்ணுருத்திர ரென்னும் பேர்களை வகித்து நின்றுற் படைத்தல் காத்தல் அழித்தல் செய்யப்படுகின்ற பிரபஞ்சமுழுவதும் நினது சொரூபமே; நின்னினும் வேறான பொருள் யாதுமில்லை யென்பதாம். உலகத்தில் வழங்கு கிற பொருட்பெயர் யாவும் கடவுட்கே நிலைவேறுபாட்டில் உரியனவாகின் றன வென்க. நூரா-வடசொல்: ஒழுங்கு. பி-ம்:—1 தனியைதம்மிற். (௨அ௧)

௧௩௦. நின்னுளே யென்னை [1]நிருமித்தாய் [2]நின்னருளால்
என்னுளே யெப்பொருளும் யாவரையும் யானீன்றேன்
பின்னிலேன் முன்னிலே னெந்தை பெருமானே [ன்.
பொன்னுளே [3]தோன்றியதோர் [4]பொற்கலனே போல்கின்றே

(இ - ள்.) (நீ) உன்னிடத்திலே என்னை உண்டாக்கினாய்; நினது கருணை யினாலேயே என்னிடத்திலே எல்லா அஃறிணைப்பொருள்களையும் எல்லா உயர்திணைப்பொருள்களையும் யான் படைத்தேன்; எனக்குத் தந்தையும் தலை வனுமாகவுள்ளவனே! (உன்னையன்றி எனக்கு) ஒருகாரணமுமில்லேன், காரி யமுமில்லேன்(யான்); (உன்னினின்று உண்டான யான்) பொன்னினின்று உண்டானதொரு பொன்னணியையே ஒக்கின்றேன்; (எ - று.)

என்னைப்படைத்தவன் நீயே யாதலால், உன்னையன்றி எனக்கு ஒருகார ணமில்லேன்; என்றுற்படைக்கப்பட்ட பொருள்யாவும் நினது சொரூபமே யாதலால், உன்னையன்றி ஒருகாரியமுமில்லேன்: யானும் நினது சொரூபமே யாதலால்,பொன்னினாகிய அணிகலம் போல்கின்றேன் என்றனன். கடவுளு க்குச்சேதநாசேதநங்களெல்லாம் சரீரமாகுமாதலாலும், சரீரத்தையிட்டு 'நான் மனிதன், நான் தேவன்' என்று வழங்குவது மரபாதலாலும், சரீரமாகிய நான் என்பது கடவுளைக் காட்டுமாதலால், 'என்னுளே யெப்பொருளும் யாவரையும் யானீன்றேன்' என்றது: ''மத்தஸ்ஸர்வம் அஹம் ஸர்வம்'' என்பது முதலிய னவும் இங்ஙனமே வந்தனவாம். முன் - காரணம்: பின் - காரியம். பி-ம்:— [1]நிருமித்தால். [2]நீயலாது, நீயல்லாய். [3]தோற்றிய, தோன்றும். [4]பூணுக்கும் பூட்சியாய். (௨௩௦)

௧௩௧.—பிரமன்முதலியோர் துதித்துவணங்க, சிங்கப்பிரான் சீற்றந்தணிதல்.

என்றுங் [1]கியம்பி யிமையாத [2]வெண்கணனும்
வன்றுண் [3]மழுவோனும் [4]யாரும் வணங்கினராய்
நின்று ரிருமருங்கு நேமிப் பெருமானும்
[5]ஒன்றுத சீற்றத்தை யுள்ளே யொடுக்கினான்.

(இ - ள்.) என்றுசொல்லித் துதித்து, இமைத்தலில்லாத எட்டுக்கண்களையுடையனான பிரமனும் வலியபோர்முயற்சியையுடைய மழுவென்னும் படைக்கலத்தையுடையனான சிவனும் மற்றை (த்தேவர்கள்முதலிய) எல்லோரும் நமஸ்கரித்தவர்களாய், (அருகில்அணுகமாட்டாமல்) இரண்டுபக்கங்களிலும் விலகிநின்றார்கள்: அப்பொழுது, சக்கராயுதத்தையேந்திய தலைவனான நரசிங்கப்பிரானும், அடங்குதற்குஅரிய (தனது) கோபத்தை உள்ளே அடக்கியருளினான்; (எ - று.)

கண்ணிமையாமை, தேவர்க்கு இயல்பு. வல் தாள் மழு - வலிய காம்பையுடைய கோடாலிப்படையுமாம். ஆங்கு-அப்போது. ஒன்றுத - தனதுபேரருளுடைமைக்குப் பொருந்தாத எனினுமாம். பி-ம்:—[1]இயம்ப. [2]முக்கண்ணின். [3]தருவிறையும், மலரோனும். [4]தானும்வழுத்தினான், வந்துவணங்குகின்றான், வந்துவணங்கினர், வந்துவணங்கினான், யாரும்வணங்கினர். [5]ஒன்றுன, ஒன்றுகச். (உகக)

கசுஉ.—சிங்கப்பிரான் தேவர்கட்கு அபயமளித்தல்.

எஞ்சு முலகனைத்து [1]மிப்பொழுதே யென்றென்று
நெஞ்சு [2]நடுங்கு நெடுந்தே வரைநோக்கி
யஞ்சன்மி னென்று வருள்[3]சுரந்த நோக்கினாற்
கஞ்ச மலர்பழிக்குங் கையபயங் காட்டினான்.

(இ - ள்.) உலகங்களெல்லாம் இப்பொழுதே அழிந்துவிடுமென்று இடைவிடாதுசிந்தித்து (அச்சத்தால்) உள்ளம்நடுங்குகிற பெரியதேவர்களைநோக்கி, (சிங்கப்பிரான்), பயப்படாதேயுங்களென்றுசொல்லி, திருவருள்பொழிகின்ற இனியபார்வையுடன் (அழகிய) தாமரைமலரைக் கீழ்ப்படுத்தும்படியான (தனது) கையில் அபயமுத்திரையையும் காட்டினான்; (எ - று.)

அபயமுத்திரையாவது - உள்ளங்கை வெளித்தோன்றுமாறு கையை மலர்த்தி விரல்கள் மேல்நோக்கும்படி வைக்கும் நிலை; இது, அஞ்சாதேயுங்களென அபயமளித்தற்கு அடையாளமாம். பி-ம்:—[1]எப்பொழுதோ. [2]நடுங்கி. [3]சுரந்துநோக்கினான். (உகஉ)

கசுக.—பிரமன்முதலியோர் அலைவந்த பெரியபிராட்டியாரை அச்சிங்கப்பிரானருகில் மூர்த்திச்செல்லும்படி பிரார்த்தித்து அனுப்புதல்.

பூவிற் றிருவை யழ[1]கின் புனைகலத்தை
யாவர்க்குஞ் செல்வத்தை [2]வீடென்னு [3]மின்பத்தை
ஆவித் துணையை யமுதிற் பிறந்தாளைத்
தேவர்க்குந் தம்மோயை [4]யேவினார் பாற்செல்ல.

(இ - ள்.) அழகுக்கு ஓர் ஆபரணமாகவுள்ளவளும் எல்லோர்க்கும் (அவரவர் விரும்பும்) ஐசுவரியமாகவுள்ளவளும் பரமபதத்திலடையும் பேரின்பத்தின்மயமானவளும் (எல்லா) உயிர்க்கும் உற்றதுணையாகின்றவளும் அமிருதத்துடனே (திருப்பாற்கடலினின்று) தோன்றியவளும் தேவர்களுக்கும் பெற்றுவளர்க்குந் தாய்போன்றவளுமாகிய செந்தாமரைமலரில் வாழ்கிற

ஸ்ரீமகாலக்ஷ்மியை, அந்நரசிங்கப்பிரானருகில் எழுந்தருளுமாறு (பிரமன் முதலிய தேவர்கள்) பிரார்த்தித்து அனுப்பினார்கள்; (எ - று.)

சிங்கப்பிரான் தன்சிற்றத்தை உள்ளே யொடுக்கி 'அஞ்சன்மின்'என்று அருள்சுரந்த நோக்கோடு கையபயங்காட்டிய பின்பும் தேவர்கள் அச்சந்தணியாமையால் அருகிற்செல்லத் துணிவின்றித் திருமகளை அப்பெருமான்பக்கல் முந்திச்செல்லுமாறு வேண்டினரென்க. அழகுக்குஅழகானவளென்பது,'அழகின்புனைகலம்' என்பதன்கருத்து. அடியார்கள் முத்தியுலகத்து நிரதிசயப்பேரின்பத்தை யடைதற்குத் திருமகள் திருமாலினிடம் புருஷகாரமாகநிற்றல்பற்றி, 'வீடென்னுமின்பம்' என்று சொன்னதாகக் கொள்ளினுமாம். பி-ம்:—[1]இன்புறுநலத்தை. [2]வீடியும். [3]அப்பதத்தை. [4]ஏவினன். (உகங)

கசுச.—சிங்கப்பிரான் தன்அருகில் வந்த அத்திருமகளை அருளோடு நோக்குதல்.

செந்தா மரை[1]ப்பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா [2]விளக்கை [3]நறுந்தா ழிளங்கொழுந்தை
[4]முந்தா வுலகு முயிரு முறைமுறையே
தந்தாளை நோக்கினான் றன்னொப்பொன் றில்லாதான்.

(இ - ள்.) தனக்குஒப்பு ஒருபொருளுமில்லாதவனான அத்திருமால், செந்தாமரைமலரின்நடுவிலுள்ளகொட்டையின்மீது மிக்ககளிப்போடு எழுந்தருளியிருக்கின்ற தூண்டாவிளக்குப்போன்றவளும், பரிமளம்தங்கிய இளையகொழுந்துபோன்றவளும், உலகங்களையும் உயிர்களையும்ஒழுங்காக ஆதியிற் பெற்றருளியவளுமான திருமகளை(க் குளிர)க்கடாட்சித்தருளினான்; (எ - று.)

நந்தாவிளக்கு - சுயம்பிரகாசமான சோதிச்சொரூப முடையாளென்றபடி. உத்தமஸ்திரீலக்ஷணமான இயற்கைநறுமணமுடைமையோடு என்றும் மாறாத இளமையுடைமையும், 'நறுந்தாழிளங்கொழுந்து' என்பதில்விளங்கும். பி-ம்:—[1]மலர்மேல், மேல். [2]மணிவிளக்கை. [3]நறுந்தார். [4]மூந்தாம். (உகச)

கசரு.—பின்பு சிங்கப்பிரான் பிரகலாதனைக் கடாட்சித்தல்.

[1]தீதிலா வாக வுலகீன்ற [2]தெய்வத்தைக்
காதலா னோக்கினான் கண்ட முனிக்கணங்கள்
ஓதினார் சீர்த்தி யுயர்ந்த பரஞ்[3]சுடரும்
நோதலாங் கில்லாத வன்பனையே நோக்கினான்.

(இ-ள்.) சிறந்த பரஞ்சோதிச்சொரூபியான அச்சிங்கப்பிரானும்,—தீமைகளில்லாதனவாம்படி [இனிதாக] உலகங்களைப் படைத்தற்கு உதவிய தெய்வமானதிருமகளை அன்போடு பார்த்தருளினான்; (அதனைப்) பார்த்த இருடிவர்க்கத்தார் (அப்பெருமானது) பெரும்புகழை எடுத்துச்சொல்லித் துதித்தார்கள்; அப்பொழுது, (தனது தந்தையிறந்ததற்காகச் சிறிதும்) வருந்துதலில்லாத பக்தனான பிரகலாதாழ்வானையே கடாக்ஷித்தான், (அப்பிரான்); (எ - று.)

தீதிலாவாக நோக்கினான் என இயைப்பினுமாம். பிரகலாதன் நோதலில்லாமைக்குக் காரணம், எம்பெருமானிடம்வைத்த அன்பேயாதலால்,'நோத

லில்லாத அன்பன்' என்றார். பி - ம்:—1நீதிலாவந்த, நீதில்வரவாக, நீதில வந்த. 2செல்வத்தை. 3சுடரான். (உகூ)

கசுகூ.—இதுமுதல் மூன்றுகவிகள்-சிங்கப்பிரான் பிரகலாதனை நோக்கிச்சொல்லும் உபசாரவார்த்தை.

உந்தையையுன் 1முன் 2கொன் றுடலைப் பிளந்தளையச்
சிந்தை 3தளரா தறம்பிழையாச் செய்கையாய்
4அந்தமிலா வன்பென்மேல் 5வைத்தா யளியத்தாய்
எந்தை யினி6யிதற்குக் 7கைம்மா றியாதென்றான்.

(இ - ள்.) உனதுதந்தையை உனது முன்னிலையிலே (யான் கைந்நகங்களால்) உடம்பைப் பிளந்து அளைந்து கொல்லவும் மனந்தளராமல் தருமநெறிதவறாத செயலையுடையையாய் எல்லையில்லாத அன்பை என்னிடத்தில் வைத்தாய்(நீ); அருள்செய்யத்தக்கவனே! அப்பா! இப்பொழுது(நீ என்னிடம் வைத்த) இப்பேரன்புக்குஈடாக (நான் உனக்கு)ச்செய்யும் எதிருதவி யாது? என்று (சிங்கப்பிரான் பிரகலாதனைநோக்கிச்) சொல்லியருளினன்; (எ - று.)

சிங்கப்பிரான் பிரகலாதனை 'எந்தை' என்றது, அன்புபற்றிய மரபுவழுவமைதி. பி-ம்:—1முன்னே, எதிரே. 2கொன்றியானுயிர்களைய, கொன்றுடலையானளைய,யான்கொன்றுயிருண்ண. 3தளராய். 4அந்தமில்பேர், அந்தமில். 5வைத்தயலளித்தாய், வைத்தாயளித்தாயேல். 6செய்யும். 7கைம்மாறிங்கு. ()

கசுஎ. அயிரா விமைப்பினை1யோ ராயிரங் கூறிட்ட
2செயிரி ஞெருபொழுதி 3னுந்தையை 4யாஞ்சீறி
உயிர்5தேடு வேம்போ லுடலையக் 6கண்டுஞ்
செயிர்சேரா வுள்ளத்தாய்க் கென்னினி 7யாஞ்செய்கேம்.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) ஒருமாத்திரைப்பொழுதை நுண்மையாக ஆயிரங்கூறுகப்பகிர்ந்த பகுப்புக்களுள் ஒருபகுப்பான சிறிதுபொழுதிலே, உனதுதந்தையை, (அவன்செய்த) குற்றங்காரணமாக யாம் கோபித்து,(அவனது)உயிரைத் தேடுவோம்போல அவனுடம்பை(க் கைந்நகங்களாற் பிளந்து) அளைய, (அதனைக் கண்ணெதிரே)கண்டும், துன்பஞ்சேராத மனநிலையையுடைய உனக்கு, யாம் இப்பொழுது என்னகைம்மாறுசெய்வோம்? (எ - று.)

அயிர்-நுண்மை. செயிர்-குற்றம். பி-ம்:—1ஆயிரம். 2செயிரான். 3முந்தையை. 4யான். 5தேடுவேன், தேடுவான். 6தான்கண்டும். 7யான்செய்கேனோ. ()

கசுஅ. 1கொல்லே 2மினியுன் குலத்தோரைக் குற்றங்கள்
எல்லை யிலாதன செய்தாரே 3யென்றாலும்
நல்லே முனக்4கெம்மை நாளுமல் நாஞ்செய்வதே
ஒல்லை யுளதே லியம்புதியா லென்றுரைத்தான்.

(இ - ள்.) இனி எல்லையில்லாத குற்றங்களைச் செய்தனராயினும்,உனது குலத்திற்பிறந்த அசுரர்களை (யாம்) கொல்லமாட்டோம்; உனக்கு எப்பிறப்பிலும் (யாம்) நல்லவராக இருப்போம்;நாம் (உனக்குச்) செய்யவேண்டிய உதவி

(ஏதேனும்) உளதாயின், சங்கோசப்படாமல் விரைவிற்சொல்வாய் என்று (சிங்கப்பிரான் பிரகலாதனை நோக்கி) கூறியருளினன்; (எ - று.)

இனி இப்பிரகலாதனுடைய பௌத்திரனும் பலிசக்கரவர்த்தி மூவுலகத்தரசாட்சியைக் கைப்பற்றித் தேவர்கட்கெல்லாம் துன்பஞ்செய்த போதும் அவனைத் திருமால் கொல்லாமல் அடக்கியருளுதலும், அவன்மகனை நமுசியென்பான் அத்திரிவிக்கிரமாவதாரகாலத்தில் "என் இது மாயம் என் அப்பன் அறிந்திலன், முன்னையவண்ணமே கொண்டு அளவாய்" என்றபோதும் அவனைக்கொல்லாமல் வானிற்சுழற்றிய மாத்திரத்தோடு விடுதலும், அவனது பௌத்திரனை பாணாசுரன் கண்ணபிரானை எதிர்த்துப் பெரும்போர் செய்தவிடத்தும் அவனைக் கொல்லாமற் கைகளைப் பெரும்பாலுந் துணித்த மாத்திரத்தோடு விட்டருளுதலும் முதலியன இச்சமயத்தில் திருமால் பிரகலாதனுக்கு வரங்கொடுத்த உறுதிமொழி தவறாது நிகழ்த்திய நிகழ்ச்சிகளென அறிக. எம்மை - எப்பிறப்பும்: எனது அவதாரங்களிலெல்லாம் என்றபடி. பி-ம்:-- 1கொல்லேன்...நல்லேன்...என்னை...நான். 2நனி. 3ஆனாலும். 4என்றும்.

கசுகூ.—பிரகலாதன் வரம்வேண்டுதல்.

முன்பு பெறப்பெற்ற 1பேறோ முடிவில்லை
பின்பு பெறும்பேறு 2முண்டோ பெறுகுவெனேல்
என்பு பெறாத விழிபிறவி 3யெய்தினுநின்
4அன்பு பெறுகை யருப்பே றெனக்கென்றான்.

(இ - ள்.) (உனது திருவருளால்) இதுவரையில் (யான்) அடையப்பெற்ற நன்மைகளோ எல்லையில்லாதன; இன்னும் (யான்) பெறவேண்டிய நன்மையும் உளதோ? (இன்னும் ஏதேனும்) பெறவேண்டுவேனாயின், எலும்பில்லாத இழிந்த பிறப்பாகிய புழுவின்சன்மத்தை (யான்) பெற்றாலும் நின்பக்கல் பக்தியைப் பெறுதலே எனக்கு அருமையான வரமாமென்று (பிரகலாதன் சிங்கப்பிரானைநோக்கி) விண்ணப்பஞ் செய்தான்; (எ - று.)

'முன்பு பெறப்பெற்ற பேறோ முடிவில்லை' என்றது, இரணியனாலும் அவன்பரிவாரங்களாலும் எவ்வாற்றானுங் கொல்லமுடியாமலிருந்தமை முதலியவற்றை. அதனை "நம்பெருமானெட்டெழுத்தின் பெருமை நவிலுமதோ, சம்பரன்மாயம் புரோகிதர் சூழ்வினை தாரணிவாள், வெம்படை மாசுணம் மாமதவேழம் விடந் தழல் கால், அம்பரமே முதலானவை பாலனுக்கு அஞ்சினவே" எனக் காண்க. திருவரங்கக்கலம்பகத்தில் "நின்மாட்டொன்றை, அடியேன் வேண்டுவது அஃதி நீ மறுக்கேல், மூவுலகளந்த நின்சேவடி வாழ்த்தி, தொழுதகைத் தொண்டர்தந் தொண்டருட் சேர்க்காது, எழுவகைத்தோற்றத் தின்னாப்பிறப்பின், என்பொழியாக்கையுட் சேர்ப்பினும் அவர்பால், அன்பொழியாமை அருள்மதி யெனக்கே" என்றதனோடு பின்னிரண்டடிகளை ஒப்பிடுக. பி-ம்:—1பேறே. 2உண்டுபெறுவேனேல். 3எய்திடினும். 4அன்புபெறும் பேறடியேற்கருளென்றான். (உகக)

கஎ௦.—இதுமுதல் நான்கு கவிகள் - சிங்கப்பிரான் பிரகலாதனுக்கு வரந்தருதலைத் தெரிவிக்கும்.

அன்னானை நோக்கி யருள்சுரந்த நெஞ்சினனாய்
என்னானை [1]வல்ல னெனமகிழ்ந்த பேரீசன்
முன்னான பூதங்கள் [2]யாவையு [3]முற்றிடினும்
[4]எந்நா ளுமுலவாய்நீ யென்போ லுளையென்றான்.

(இ - ள்.) அங்ஙனஞ்சொல்லி வரம்வேண்டின பிரகலாதனைப்பார்த்துக் கருணைகூர்ந்த திருவுள்ளத்தை யுடையவனாய், 'எனது அன்பன் (மெய்யுணர்வு) வல்லவன்'என்று உகந்தருளினபெருமையையுடைய எம்பெருமான்,—'பழமையான பஞ்சபூதங்களெல்லாம் அழிந்தாலும் அழியாமல்நீ என்னைப் போல எக்காலத்திலும் உள்ளவனாவாய்' என்றுசொல்லியருளினான்; (எ - று.)

'என் ஆனை' என்றது - அருமைபாராட்டிக் கூறுவதோர் சொல்விழுக்காடாம்; "என்னானை யென்னப்பன்" எனத் திருவாய்மொழியிலுங் காண்க. முன் ஆனஎன்பதற்கு-தலைமைபெற்ற என்றும், பூதங்கள் என்பதற்கு-பிராணிவர்க்கங்கள் என்றும் பொருள்கொள்ளலாம். 'என்போல் எந்நாளு முளை' - நெடுங்காலம்வாழ்வை யென்றபடி. பி-ம்:—[1]வல்லையெனவளித்த. [2]யாவையுமே. [3]முற்படினும். [4]உன்னாளுலவாய். (௯௦௦)

கஎக. மின்னைத் தொழுவளைத்த [1]தென்ன மிளி[2]ரொளியாய்
முன்னைத் [3]தொழும்புனக்கே யாமன்றோ [4]மூவுலகும்
என்னைத் தொழுதேத்தி யெய்தும் பயனெய்தி
உன்னைத் தொழுதேத்தி யுய்க [5]வுலகெல்லாம்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (நிலைநில்லாது தோன்றி மறையுந்தன்மையதான) மின்னலை (அங்ஙனம்மறைந்துபோகவொட்டாமல்) தொழுமரத்திலே பிடித்து அகப்படுத்திவைத்தாற்போல [மின்னலை நிலைநிறுத்தினாற்போல] விளங்குகிற தேககாந்தியை யுடையவனே! மூன்று உலகங்களும் உனக்கே பழமையான அடிமையா மன்றோ? அவ்வுலகங்களிலுள்ள உயிர்களனைத்தும், என்னை வணங்கித் துதித்தலால் அடையும் பயனை உன்னை வணங்கித் துதித்தலாற் பெற்று வாழக்கடவன; (எ - று.)—அன்றோ-தேற்றம். பி-ம்:—[1]அன்ன. [2]ஒளியே. [3]தொழும்புக்கே. [4]மூன்றுலகும். [5]உயிரெல்லாம். (௯௦க)

கஎஉ. [1]ஏனவர்க்கு [2]வேண்டி [3]னெளிதொன்றோ வெற்கன்பர்
[4]ஆனவர்க்க ளெல்லா நினக்கன்ப ராயினார்
தானவர்க்கு [5]வேந்தனீ யென்னுந் தரத்தாயோ
[6]வானவர்க்கு நீயே [7]யிறைதொன் மறைவல்லோய்.

(இ - ள்.) பழமையான வேதங்களில்வல்லவனே! எனக்கு அடியவரான எல்லாவகையாரும் உனக்கு அடியவர்களானார்கள்; (ஆகவே), நீ அசுரர்கட்கு மாத்திரம் அரசனென்றுசொல்லப்படும் நிலைமையுடையாயோ? தேவர்கட்கும் நீயே அரசனாகிறாய்; (இம்மாட்சி உன்னையன்றி) மற்றையோர்க்குப் பெறவிரும்பினாற்(பெறுதற்கு)எளியதொருபொருளாகுமோ?[ஆகாதுஎன்றபடி];(எ-று.)

பி-ம்:—[1]ஏனையர்க்கும். [2]வேண்ட. [3]எளிதன்றே. [4]ஆனவர்களெல்லாம். [5]வேந்தனே. [6]மானவர்க்கும். [7]இறைவன்முறைவல்லோய், இறைமறைநாவல்லோய்.

௧௭௩. நல்லறமு [1]மெய்ம்மையு நான்மறையு நல்லருளும்
[2]எல்லையின் ஞானமு மீறிலா வெப்பொருளுந்
தொல்லைசா [3]லெண்குணனு நின்சொற் றொழில்செய்க
[4]வல்ல வுரு[5]வொளியாய் [6]நானு வளர்கநீ.

(இ - ள்.) சிறந்த உடலொளியை யுடையவனே! சிறந்ததான தருமமும், சத்தியமும், நான்கு வேதங்களும், சிறந்த கருணையும், எல்லையில்லாத [மிகப் பரந்த] தத்துவஞானமும், முடிவில்லாத எல்லாப்பொருள்களும், பழமைமிக்க எட்டுக்குணங்களும், உனதுசொற்படி தொழில்செய்யக்கடவன; நீ என்னைப்போலவே சிறப்புற்று வாழ்வாயாக; (எ - று.)

இனி எனக்கும் உனக்கும் ஒருபேதமுமில்லை யென்று எம்பெருமான் வரங் கொடுத்தவாறும். எண்குணங்களாவன - அபஹதபாப்மத்வம் [தீவினையின்மை], விஜரத்வம் [மூப்பின்மை], விம்ருத்யுத்வம் [மரணமின்மை], விசோகத்வம் [துயரமின்மை], விஜிகத்ஸத்வம் [பசியின்மை], அபிபாஸத்வம் [தாகமின்மை], ஸத்யகாமத்வம் [மெய்ம்மைவிருப்புடைமை], ஸத்யஸங்கல்பத்வம் [எண்ணம்தவறாது பலிக்குந்தன்மையுடைமை] என்பன. இனி, வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி, ப்ராப்தி, பூர்த்திஎன்றும்; தன்வயத்தனாதல், தூயஉடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்றும் கொள்ளினுமாம். பி-ம்:—[1]மேன்மையு நாமமறைநான்கும். [2]எல்லையிலா. [3]எண்கணனும். [4]நல்லவுரு, மல்லனுரு. [5]ஒழிய. [6]நாளும்வளர்கநீ, எந்நாளும்வாழ்கநீ. (௩௦௩)

௧௭௪.—சிங்கப்பிரான் தேவர்களைநோக்கிப் பிரகலாதனுக்கு முடிசூட்டுதற்கு ஏற்றசெயலைச் செய்க எனல்.

என்று வரமருளி யெவ்வுலகுங் கைகூப்ப
முன்றின் முரச முழங்க [1]முடிசூட்ட
நின்ற [2]வமர ரனைவீரு [3]நேர்ந்திவனுக்கு
ஒன்று பெருமை யுரிமை புரி[4]கென்றான்.

(இ - ள்.) (சிங்கப்பிரான்) இவ்வாறுசொல்லி வரங்கொடுத்து, 'எல்லாவுலகத்தவர்களும் கைகூப்பிவணங்கவும் வாயிலிலே முரசவாத்தியங்கள் ஆரவாரிக்கவும் இவனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ் செய்வதற்காக இங்குநின்ற தேவர்களனைவீரும் மனமிணங்கி,வேண்டியசிறப்புற்றசெயல்களைச்செய்வீர்களாக' என்றுகட்டளையிட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]முடிசூட்டி. [2]அமரரையும்நீர்விரும்பி, அமர ரனைவரும். [3]வந்திவனுக்கு, நேராக. [4]என்றார். (௩௦௪)

௧௭௫.—பிரகலாதன் மூவுலகத்து அரசாட்சியை வகித்தல்.

[1]தேம னுரிமை புரியத் திசைமுகத்தோன்
ஓம மியற்ற வுடையான் முடி[2]சூட்டக்

[3]கோமன் னவனுகி மூவுலகுங் கைக்கொண்டான்
நாம [4]மறையோதா தோதி நனி [5]யுயர்ந்தான்.

(இ - ள்.) (அப்பெருமானுடைய நியமனப்படியே) தேவர்களும் (அத் தேவர்கட்கு) அரசனுன இந்திரனும் உரியகுற்றேவல்களைச் செய்யவும், பிரமன் ஓமம்வளர்த்தி வைதிகச்சடங்கு செய்யவும், (எல்லாப்பொருள்களையும் அடிமையாக)உடையவனுன சிங்கப்பிரான்பட்டாபிஷேகஞ்செய்ய,—பிரசித்தி பெற்ற வேதங்களை (எந்தஆசிரியரிடத்தும்) பயிலாமலே உணர்ந்து மிகச்சிறப்புற்றவனுன பிரகலாதாழ்வான்,—அரசர்கட்கு அரசனுய் மூன்றுஉலகங்களையும் தன்வசத்திற்கொண்டான்;(எ - று.)

தே - தேவ என்னும் வடசொல்லின் விகாரம்; இது, இங்குச் சாதிப் பெயராய்நின்றது. மன் - மன்னன்: பண்பாகுபெயர். உரிமை புரிய-பட்டாபிஷேகத்துக்குவேண்டிய தொழில்களைச் செய்ய. பி - ம்:—[1]தேவர். [2]சூடிக், சூட்டிக். [3]கோமானவனுகி. [4]அருமறைநூலோதி. [5]உணர்ந்தான். (நஅ௫)

களகூ.—விபீஷணன் இராவணனுக்குச்சொல்லிய வரலாற்றைமுடித்தல்.

ஈதாகு முன்னிகழ்ந்த தெம்பெருமா [1]னென்மாற்றம்
யாதானு மாக நினையா திகழ்தியேல்
தீதாய் [2]விளைதல்நனி திண்ணமெனச் செப்பினுன்
மேதாவி கட்கெல்லா மேலான [3]மேன்மையான்.

(இ - ள்.) எங்கள் தலைவனே ! முன்பு நடந்தவரலாறு இதுவாம்; என் வார்த்தையைச் சிறிதும் பொருள்செய்யாது இகழ்வாயாகுல், தீமையுண்டாகி வளர்தல் மிகநிச்சயமென்று, அறிவுடையார் யாவரினும் மேம்பட்ட மேன்மையையுடையவனுன விபீஷணன் (இராவணனுக்குச்) சொல்லிமுடித்தான்.

'எம்பெருமான்' என்றது, அரசனுன தமையனை அடிமையான தம்பி விளித்த முறை. மேதாவீ - வடசொல்; மேதா-அறிவு: அதனையுடையோன். பி-ம்:—[1]என்னுரையை. [2]வருதல் திடமென்று. [3]மெய்ம்மையான். (நஅ௬)

இரணியன்வதைப் படலம் முற்றிற்று.

---

## ச-ஆவது விபீடணனடைக்கலப்படலம்.

விபீஷணுழ்வான் ஸ்ரீராமபிரானைச் சரணமடைந்ததைக் கூறும் பாகம். விபீஷணன் என்ற வடசொல்லுக்கு - (பகைவர்க்குப்) பலவாறு பயங்கரனுகவுள்ளவனென்று பொருள்; இனி, பயங்கரனல்லாதவனென்று உரைத்தலுமொன்று. இவன், இராவணனது இறுதித்தம்பி; எழுசிரஞ்சீவியரில் ஒருவன். (மற்றையோர் - அசுவத்தாமா, மகாபலிசக்கரவர்த்தி, வியாசன், அநுமான், கிருபன், பரசுராமன் என்பவர்.) இது, வீடணனடைக்கலப்படலம் எனவும் வழங்கப்படும்.

விபீஷணன் இரணியனது சரித்திரமூலமாகப் பலவாறு நன்மதிகூறியும் இராவணன் அவன்மதியையேற்றுக்கொள்ளாமல் அவ்விபீஷணனைச் சினந்து 'என்முன்நில்லாது அப்பாற் செல்க' என்று கடிந்துகூற, அவ்விபீஷணன்

அனலன்முதலிய நான்கு அமைச்சர்களுடனே விண்மீதுஎழுந்துநின்று பின் னும் நன்மதிகூறி இலங்கையைவிடுத்துப் பின்செய்யவேண்டுவதை அந்த மந்திரிமாரோடு ஆலோசித்துக் கடல்கடந்து சேய்மையிலிருந்து வானரசேனை களைக்கண்டு வியந்து,அப்போது இரவாகையால் அங்குச்செல்லாது பொழுது புலர்ந்ததும் வானரசேனையை 'கொற்றவ!சரணம்'என்றுவந்து சேர்ந்தானாக; பகைப்புலத்தார் நம்மிடத்துவந்தாரென்று அந்த விபீஷணன்முதலியோரை வானரவீரர் கொல்லமுயல, அப்போது ஸ்ரீராமபிரானது கட்டளைப்படி அநு மானேவலால் மைந்தத்விவிதர்வந்து விசாரித்து அனலன்பேச்சினால் உண்மை யுணர்ந்து ஸ்ரீராமனுக்குத்தெரிவிக்க,அப்போது அப்பிரான்வினவ,சுக்கிரீவன் முதலியபலரும்'பகைப்புலத்தானைச் சேர்த்துக்கொள்ளலாகாது' என்று ஒருமு கமாகக்கூற, இறுதியில் அநுமான் தம்முடைய அநுபவம்முதலியவற்றைக் கூறி 'விபீஷணனைக்கொள்ளுவது தக்கதே' என்று தெரிவிக்க,பிறகு ஸ்ரீராமன் சில உயர்ந்ததருமங்களை எடுத்துக்கூறி 'சரணமடைந்தவனைக் கைவிடலாகாது' என்று வற்புறுத்திச் சுக்கிரீவனைக்கொண்டே விபீஷணனைத்தம்மிடத்து அழைப் பிக்க,விபீஷணன்ஸ்ரீராமனைச்சேர்ந்து ஆனந்தபரவசனாக,ஸ்ரீராமன் அவ்விபீஷ ணனுக்குஇலங்காராச்சியமளித்து அவன்வேண்டுகோளின்படி தமது திருவ டிச்சுவட்டைக்கொண்ட மகுடஞ்சூட்டித் தேவர்முதலியயாவரும் கொண்டா டும்படி வானரசேனையுள்ளவிடத்தைச் சுற்றி ஊர்வலமுஞ்செய்வித்தமை இப் படலத்திற் கூறப்படுகின்றது. (ருoக)

வேறு.

ச.—இராவணன் விபீடணன்மீது கோபங்கொள்ளுதல்.

கேட்டன [1]னிருந்துமக் கேள்வி[2] தேர்கலாக்
கோட்டிய [3]சிந்தையா னுறுதி [4]கொண்டிலன்
மூட்டிய தீயென [5]முடுகிப் பொங்கினான்
ஊட்டரக் கூட்டிய வனைய வொண்கணான்.

(இ - ள்.) (இராவணன் தன் தம்பியான விபீஷணன் கூறியதைக்) கேட் டிருந்தும்,அந்தக்கேட்டபொருளை(த் தனக்கு நன்மைதருவது என்று)ஆராய்ந் தறியமாட்டாமல் உறுதிப்பொருளைக் கைக்கொள்ளாதவனாய்,மாறுபட்ட எண் ணத்தையுடையவனும் ஊட்டுதற்குஉரியஅரக்கை ஊட்டியவற்றைப் போன்ற ஒள்ளிய [செந்நிறமாகவிளங்குகின்ற] கண்களையுடையவனுமாகி, மூளுமாறு செய்த தீப்போலக் கிளர்ந்து கோபம்மூண்டான்; (எ - று.)

விபீஷணன் கூறியது உறுதியயப்பதாயிருந்தும் அதனிலுள்ளநன்மையை யாராய்ந்தறியமாட்டாமையால் அவ்விபீடணன்மீது பெருஞ்சினங்கொண்ட னன் இராவண னென்பதாம்.சினத்தாற் கண்கள் சிவத்தல்,இயல்பு.கை கால் உதடு முதலிய உறுப்புக்களுக்குச் செந்நிறமுண்டாதற்காக அரக்குஊட்டுதல், மரபு:அவ்வரக்கை ஊட்டினாற்போலக் கண்களிருந்தன என்றது-தன்மைத்தற் குறிப்பேற்றவணி.அரக்கு-லாக்ஷா:வடசொல்.தேர்கலாச்சிந்தையான் கோட்டி யசிந்தையான் என முடிப்பாருமுளர். ஊட்டிய-பெயர். பி-ம்:—[1]இருந்துழி, இருந்தவக்.[2]தேர்விலாக்,தேவிபாற்,தேவிபிற்.[3]சிந்தையால்.[4]சிந்தியா.[5]முருங்கி.

உ.—இதுமுதல் எட்டுகவிகள்-ஒருதொடர்; இராமனிடத்து அன்புவைந்திருப்பதற்காகத் தன்தம்பியைத்திட்டி'நீ என்னைவிட்டுப் போய்விடுவாய்' என்று இராவணன் துரத்திவிட்டதைத் தெரிவிக்கும்.

இரணிய னென்பவ [1]னெம்ம னோரினும்
முரணிய [2]னவன்றனை முருக்கி முற்றினன்
[3]அரணிய னென்றவற் கன்பு பூண்டனை
மரணமென் றொருபொருண் மாற்றும் [4]வன்மையோய்.

(இ - ள்.) மரணமென்ற ஒருபொருளைப் போக்கவல்ல தவவலிமையை யுடையவனே! 'இரணியனென்பவன் எம்மைப்போன்றவர்களைக் காட்டிலும் வலிமையையுடையவன்: சரணமடைந்தவரைப் பாதுகாப்பவனான திருமால் அந்த இரணியனையழித்து வெற்றிபெற்றான்' என்றுநினைத்து, அந்தத்திரு மாலினிடத்து அன்புகொண்டுள்ளாய்; (எ - று.)

இரணியாசுரன் எங்களைக்காட்டிலும் வலிமையையுடையவனாக இருந்தும் அவனைத் திருமால் அழித்தானென்றும், அத்திருமாலே இராமனாகவந்துள்ளானாதலால் என்னை அவன் அழிப்பது திண்ணமென்றும் கருதி அவனிடத்து அன்புபூண்டிருக்கின்றாயென்று விபீஷணன்மீது குறைகூறுகின்றனன் இராவணனென்க. மரணமென்றொருபொருள் மாற்றும் வன்மையோய்-சிரஞ்சீவியே! என்றவாறு. என்னைக்கொன்று நெடுங்காலம் வாழப்பார்க்கின்றாயென்பது, குறிப்பு. 'பொருதால் நமக்கு எங்கே மரணம் நேரிடுமோ?' என்று அஞ்சுவதால்தான் நீ இவ்வாறு அவ்விராமனிடத்து அன்புபூண்டுள்ளாயென்று குறிப்பிக்க, 'மரணமென்றொருபொருள் மாற்றும்வன்மையோய்'என்று விளித்ததாகக் கொள்வாருமுளர். பி-ம்:—[1]எம்முன்னோரினும், எம்மைநேரினும். [2]அவனையே. [3]அரணிவன். [4]வன்மையோ. (௬௦அ)

௯. ஆயவன் [1]வளர்த்ததன் றாதை [2]யாகத்தை
மாயவன் [3]கல்லிய மகிழ்ந்த மைந்தனும்
[4]ஏயுநம் பகைஞனுக் கினிய [5]நண்புசெய்
நீயுமே நிகர்பிறர் [6]நிகர்க்க நேர்வரோ.

(இ - ள்.) அப்படிப்பட்டவனாகிய வளர்த்த தன்னுடைய தந்தையின் மார்பை மாயையையுடையவனாகிய திருமால் கல்லியதனால் மகிழ்ச்சியடைந்த அந்த இரணியனுடையபுத்திரனும், பொருந்திய நம்முடைய பகைவனிடத்து இனிய நண்புபூண்ட நீயுமே (ஒருவர்க்கொருவர்) சமானராவீர்; மற்றையோர் (உங்கட்குச்) சமானராக ஒத்துவருவாரோ? (எ - று.)

அந்தப்பிரகலாதன் தன்னுடையதாதையைக் கொன்ற திருமாலினிடம் மகிழ்ச்சிபூண்டதுபோலவே நீயும் என்பகைவனிடத்து நண்புபூண்டாய்: ஆகவே, நீவிரிருவரும் ஒருவர்க்கொருவர் ஒப்பாவதன்றி, உங்கட்குச் சமானராக வேறொருவருளரோ? இல்லையென்றவாறு. ஆயவனாகிய தாதை என்க. கல்லிய-வினையெச்சம். நிகர்-நிகர்ப்பீர் என்பதன்விகாரம். பி-ம்:—[1]வளர்த்த, பயந்த. [2]யாக்கையை. [3]பிளந்திட. [4]ஏயவெம், ஏயுமென், ஏயவென், ஆயவெம். [5]அன்பு. [6]நிகர, இதற்கு, நினக்கு. (௬௦௯)

௪. பாழிசா லிரணியன் புதல்வன் பண்பெனச்
சூழ்வினை முற்றியா னவற்குத் தோற்றபின்
ஏழைநீ யென்பெருஞ் செல்வ [1]மெய்திப்பின்
வாழவோ [2]கருத்தது [3]வரவற் றுருமோ.

(இ - ள்.) வலிமைநிறைந்த இரணியாசுரனுடைய புத்திரனை பிரகலாதனது தன்மைபோல (நீ) ஆலோசிக்கின்றசெயல் முடிந்து,நான் அந்த இராமலட்சுமணர்கட்குத் தோற்றால் ஏழைமையையுடைய நீ என்னுடைய மிக்க செல்வத்தையடைந்து பிறகு வாழ்வதாகவா (உன்)எண்ணம்? அந்த எண்ணம் நிறைவேறக்கூடியது ஆகுமோ? [ஆகாது]; (எ - று.)

பிரகலாதன் தன்தந்தைஇறந்தபின்பு அவன் செல்வத்தையடைந்து வாழ்ந்தாற்போல, நீயும் நான் இராமலட்சுமணர்கட்குத் தோற்றுஇறந்துபட என் செல்வத்தைப் பெறவேண்டுமென்று கருதுகின்றாய்; அது ஒருபோதும்கைகூடாதென்பதாம். ஏழையென்றசொல் - அறிவில்லாதவனென்ற பொருளோடு செல்வமில்லாதவனென்ற பொருளையும் காட்டும். வற்று-(நிறைவேறும்) வன்மையையுடையது. பி-ம்:—[1]எய்தினை. [2]கருத்திது. [3]வரமற்று. (௩௪0)

ரு. முன்புற வனையர்பால் [1]நண்பு முற்றினை
வன்பகை [2]மனிதரின் [3]வைத்த [4]வன்பினை
என்புற வுருகுதி யழுதி யேத்துதி
உன்புக லவர்பிறி துரைக்க வேண்டுமோ.

(இ - ள்.) முன்னதாக அந்த இராமலட்சுமணரிடத்தில் சிநேகம் முதிர்ந்துள்ளாய்; (இப்போது) கொடியபகையாகிய (அந்த இராமலட்சுமணரென்கின்ற) மனிதரைப்போல, (அரக்கரிடத்துக்)கொண்டுள்ள பகைமையையுடையாய்; (அன்றியும் நீ, அந்த இராமலட்சுமணர் விஷயத்தில்), எலும்பும் மிகுதியாகஉருகப்பெறுகின்றாய்; மகிழ்ச்சிக்கண்ணீர் சொரிகின்றாய்; துதிக்கின்றாய்; அந்த மனிதர், உனக்குச்சரணமாவர்; (இனி, உன்னைப்பற்றி) வேறொன்று சொல்லவேண்டுமோ? (எ - று.)

புதிதாகவந்துகொண்டிருப்பவரிடத்து அன்பும் அரக்கரிடத்துப் பகைமையும் காட்டி,அந்தமனிதர்விஷயத்தில் மனவுருக்கம் முதலியனகொண்டிருப்பதுகண்டால்,நீ அவர்களைச் சரணமாக அடைபவனாகக் காணப்படுகின்றாய்: உன்னைப்பற்றி இவ்வளவேகூறத்தக்கதென்றனன்இராவணனென்க.முன்புற அனையர்பால்நண்புமுற்றினைஎன்றது-'அவர்கள்நம்மிடத்து அன்புவைப்பரோ மாட்டாரோ?'என்பதையும் ஆலோசியாது அவர்கள்திறத்து அன்புபூண்டுள்ளாயென்றபொருளைக் காட்டும். இனி,முன்புஉறவு அனையர்பால் நண்புமுற்றினையென்றுஎடுத்து-முன்னமே(உன்னோடு) உறவைக்கொண்டவர்போன்றவரான அந்தமனிதரிடத்து நண்புமுற்றினை என்று உரைத்து, அவர்கள் உன்னுறவை முந்துறப்பாராட்டுபவர்போல அன்னாரைமதித்து அவர்கள்திறத்து அன்புமுற்றினையெனக் கூறுவாருமுளர். இனி, வைத்த அன்பினைஎன்றுபிரித்து இரண்டாமடிக்கு-கொடும்பகை பாராட்டவேண்டிய அந்தமனிதரிடத்துவைத்துள்ள

அன்பையுடையவனு யிருக்கின்றாயென்று உரைத்தாருமுளர். பி-ம்:—1அன்பு. 2மனிதர்பால், மனிதரை. 3வதிந்த, மதித்த. 4சிந்தையை, அன்பினேய். (நுகக)

சு. 1நண்ணின 2மனிதரை நண்பு பூண்டனை
எண்ணினை செய்வினை யென்னை 3வெல்லுமாறு
4உன்னினை யரசின்மே லாசை யூன்றினை
திண்ணிதுன் 5செயல்பிறர் 6செறுநர் 7வேண்டுமோ.

(இ - ள்.) (எனக்குப் பகையாகக்) கிட்டிய மனிசரிடத்துச்சிநேகத்தைக் கொண்டாய்; (நீ) செய்யவேண்டியகாரியத்தை(த் தனியே) ஆலோசித்துவிட்டாய்; என்னை வெல்லுதற்குரிய உபாயத்தை நினைத்துள்ளாய்; இலங்காராச்சியத்தின்மீது ஆசைபதித்துள்ளாய்; உன்செயல் மிக்கவன்மையையுடையது; (எனக்கு உன்னைக்காட்டிலும்) வேறொருபகைவர் வேண்டுமோ? (எ - று.)

உன்செயலால், அந்த இராமலட்சுமணரைவிட நீயேபெரும்பகைவனென்பது பெறப்படுகின்றதென்கின்றான், இராவணன். பி-ம்:—1நண்ணினை. 2மனிதர்பால். 3வெல்லுவது. 4உண்ணினைவு. 5செயலது, செயலின்மேற். 6செறுக்க. 7தீயரோ. (நுகஉ)

வேறு.

எ. அன்று வானரம் 1வந்துநஞ் சோலையை யழிக்கக்
2கொன்று நின்றிடு மின்னெனத் தூதரைக் கோறல்
வென்றி யன்றென விலக்கினை 3மேல்வினை வெண்ணித்
துன்று தாரவன் றுணையெனக் கோடலே துணிந்தாய்.

(இ - ள்.) அன்றைக்கு [சிலநாளைக்குமுன்பு] ஒருகுரங்கு வந்து நம்முடைய (அசோகவனிகையென்ற) சோலையை யழிக்கையில், '(இதனைக்) கொன்றுநின்றுவிடுங்கள்' என்று (யான்) சொல்ல, '(நீ) தூதுவரைக்கொல்லுதல்வெற்றியைத்தருவதாகாது' என்று சொல்லி, மேலே விளையவேண்டியதை ஆலோசித்து [செய்தியறிந்து பகைவன் இலங்கையை முற்றுகைசெய்யவேண்டுமெனக்கருதி] (வந்த தூதுவனைக் கொல்லாதபடி) தடுத்தாய்; (அச்செயலுக்கு ஏற்பவே), மலர்கள் நெருங்கிய மாலையையணிந்தவனாகிய இராமனைத் துணையாகக்கொள்வதையே உறுதியாகக் கொண்டுள்ளாய்; (எ - று.)

நீ அன்றுவந்ததூதுவனைக் கொல்லாதிருக்கும்படி விலக்கியது, என்னுடையபகைவர் செய்தியுணர்ந்துவந்து பொரவேணுமென்று கருதியதனாலேயாம்: அதற்கு ஏற்பவே, அவரைத் துணையாகக்கொள்ள இப்போது கருதுகின்றாயென்றனனென்பதாம். இச்செய்யுள் ஒருபிரதியி லில்லை. பி-ம்:—1மணிமலர்க்காவினை, மணிமலர்ச்சோலையை. 2கொன்றுமென்றியான் கூறிட, கொன்றுமென்னெனக்கூறலும். 3மேல்வரும்வினை, மேல்வினைவிளைவு, மேல்விளைவினை. (நுகங)

வேறு.

அ. அஞ்சினை யாதலி னமர்க்கு யாளலை
தஞ்சென மனிதர்பால் வைத்த சார்பினை

வஞ்சனை மனத்தினை பிறப்பு [1]மாறினை
நஞ்சினை யுடன்கொடு வாழ்த [2]னன்றரோ.

(இ - ள்.) (பகைவரிடத்து) அச்சங்கொண்டுள்ளாயாதலால் போர்செய்வதற்கும் ஏற்ற வீரனுகமாட்டாய்; (நமக்குப்) புகலிடமென்று மனிதர்களிடத்தில் வைத்துள்ள பற்றுதலையுடையாய்; வஞ்சனையைக்கொண்ட மனத்தினையுடையாய்; (நீ பிறந்த) பிறவியை [அரக்கப்பிறவிக்குரிய ஒழுக்கத்தை] மாறிவிட்டாய்; (உன்னை உடன்வைத்துக்கொண்டு வாழ்வதைக்காட்டிலும்) விஷத்தைக் கூடவைத்துக்கொண்டு வாழ்தல் நல்லது; (எ - று.)

நீ எனக்கு உதவியாயிருந்து போர்புரியப் போகிறாயென்பதற்கு, நீயோ பயங்கொள்ளியாயிருக்கிறாய்: மேலும் மனிதரிடத்துப் பற்றுக்கொண்டு அவர்களே தஞ்சமென்ற கருத்தோடு என்னிடத்து வஞ்சகஞ்செய்யவும் கருதுகின்றாய்: அரக்கர்க்குஉரிய ஒழுக்கமும் மாறிவிட்டாய்: உட்பகைகொண்ட உன்னை உடன்வைத்துக்கொண்டிருத்தலினும், விஷத்தை யுடன்கொண்டு வாழலாமென்றவாறு. உட்பகை வெளித்தோற்றத்தில் தெரியாமலே தீங்கு செய்தலால், தீங்கு விளையுமென்பதை வெளிப்படையாகத்தெரிவிக்கின்ற நஞ்சே அவ்வுட்பகையினும் நல்லதாகுமென்க. பிறப்புமாறினை-அரக்கர்க்குரிய கொலைமுதலிய பாவச்செயலை விரும்பாமல் பிறவுயிர்களிடத்து அன்பு முதலியவற்றைக் கொண்டிருக்கின்றாயென்றபடி. பி-ம்:—[1]மாற்றினை. [2]நன்மையோ, வாழ்க்கையோ. (௩௪௪)

௬. [1]பழியினை யுணர்ந்தியான் படுக்கி லேனுனை
[2]யொழிகிலை புகலுத லொல்லை [3]நீங்குதி
விழியெதிர் நிற்றியேல் [4]விளிதி யென்றனன்
அழிவினை [5]யெய்துவா [6]னறிவு நீங்கினான்.

(இ - ள்.) (உடன்பிறந்தவனைக் கொன்றானென்ற) பழிவருமேயென்று கருதி, யான் உன்னைக்கொல்லாதுவிட்டேன்; (வாய்க்குவந்தபடிசொல்லுதலை நீங்குகின்றாயில்லை; (ஆகையால் நீ), விரைவில் (என்னை) விட்டுப்போவாய்; (என்) கண்ணெதிரில் நிற்பாயானல், (என்கையால்தானே) இறந்திடுவாயென்று கூறினன்:(யாவனெனில்),—அழிந்துபோவதை யடையும்பொருட்டு விவேகம் நீங்கப்பெற்றவனாகிய இராவணன்; (எ - று.)

தன்தம்பி விபீஷணன் உறுதியானபொருளைத் தனக்கு இடித்துக்கூறவும் விநாசகாலம்கிட்டியதனால் அதனை விபரீதமாகக்கருதினன் இராவணனென்பார், அவனுக்கு 'அழிவினையெய்துவா னறிவுநீங்கினான்' என்று ஒரு பெயர் கொடுத்தார். பி-ம்:—[1]பழவினையுழந்தியான். [2]ஒழிசில. [3]ஏகுதி. [4]விளிதியேயென. [5]ஏதுவான். [6]அனையகூறினன். (௩௪௫)

௪௦.—விபீஷணன் துணைவருடன் வானத்து எழுந்துநின்று, பின்னும் பற்பல உறுதிமொழிகளை அவ்விராவணனுக்குக் கூறுதல்.

என்றலு மிளவலு மெழுந்து வானிடைச்
சென்றனன் றுணைவருந் தானுஞ் [1]சிந்தியா

நின்றனன் ²பின்னரு நீதி ³சான்றன
⁴ஒன்றல பலபல வுறுதி யோதினன்.

(இ - ள்.) என்று (இராவணன்கடிந்து) கூறியவுடனே,—(அவ்விராவணனுடைய) இளையசகோதரனை விபீஷணனும், (இனி) என் செய்யவேண்டுமென்று எண்ணமிட்டுத் துணைவருடனே தானும் எழுந்துவானத்தினிடத்துநின்றவனாய், பின்னும், நீதிமிக்கனவாய் ஒன்றுஅல்லாத பலப்பல உறுதிச்சொற்களை (இராவணனுக்குச்) சொல்பவனானான்; (எ - று.)—அதனை மேல் இரண்டுகவிகளிற் காண்க.

சிந்தித்து 'இலங்கையிலிருப்பு இனித்தனக்குத்தகாது' என்று கருதிய விபீஷணன் தன்துணைவரான நால்வரோடு வானத்திலெழுந்து, 'தன்னண்ணன் வீணே கேட்டுக்குப் பாத்திரமாகின்றானே! இன்னும் உறுதிமொழிகளை உரைத்துப்பார்ப்போம்: ஒருகால் திருந்துவானோ?' என்ற எண்ணத்தினால் பின்னும் பலப்பல உறுதிமொழிகளை இராவணனுக்குக் கூறலாயினனென்க. இவ்வாறு கூறுவது-விபீஷணன் தான் இராவணனைவிட்டுச்செல்வது இராச்சியத்தில் விருப்பினாலன்றி அவனுடைய தீக்குணம் தனக்குப்பிடியாமையினாலேயே யென்பதைத் தெரிவிக்கும். பி-ம்.—¹சிந்தியான். ²பின்னொரு. ³சான்றனை,சார்ந்தன. ⁴ஒன்றின. (நுகசு)

கக.—இதுவும் அடுத்த கவியும்-இராவணனுக்கு விபீஷணன் இடித்துக்கூறுவதைத் தெரிவிக்கும்.

வாழியாய் ¹கேட்டியால் ²வாழ்வு கைம்மிக
ஊழிகாண் ³குறுகின துயிரை ⁴யோர்கிலாய்
கீழ்மையோர் சொற்கொடு ⁵கெடுத னேர்தியோ
⁶வாழ்மைதா னறம்⁷பிழைத் தவர்க்கு மாகுமோ.

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) வாழவேண்டுமென்று விரும்புபவனே!(யான் சொல்வதைக்) கேட்பாய்; செல்வவாழ்க்கை மேம்பட்டுநிற்கப் பலகாலம் காண்பதற்குஉரிய [பலநாள்வாழ்தற்குஉரிய] உன்பிராணனைப்பற்றி ஆராய்ச்சியில்லாதவனாய், கீழானவரின்சொல்லைக்கொண்டு அழிதற்கு உடன்பட்டுள்ளாயோ? தருமத்தினின்று தவறியவர்க்கும் நல்வாழ்க்கை உண்டாகுமோ? (எ - று.)

வாழ்மைதான் அறம்பிழைத்தவர்க்குமாகுமோ - "கேடுவரும்பின்னே, மதிகெட்டுவரும்முன்னே," "விநாஶகாலே விபரீதபுத்தி:" பி.ம் :—¹கேட்டியே. ²வாழிய. ³குறுகினதுயிரை, குறுகினவுறுதி. ⁴ஓர்கிலை. ⁵கெடுக்கவோர்தியோ, கெடுதியோர்தியோ, கெடுதலோர்தியோ. ⁶ஆண்மை, வாழ்வு. ⁷பிழைத்திருப்பதாக்குமோ, பிழைத்தவர்க்கு வாய்க்குமோ. (நுகஎ)

கஉ. புத்திரர் குருக்கள் ¹நின் ²பொருவில் கேண்மையர்
மித்திர ரடைந்துளோர் மெலியர் ³வன்மையோர்
இத்துணை பேரையு மிராமன் வெஞ்சரஞ்
சித்திர வதைசெயக் கண்டு ⁴தீர்தியோ.

(இ - ள்.) உன்னுடைய புத்திரர்களும் (பாட்டன்மார் முதலிய) பெரியோர்களும் ஒப்பற்ற பந்துக்களும் சினேகிதரும்,(உன்னைப்புகலிடமாகச்)சார்ந்துள்ளவர்களும் பலவீனரும் வலிமைபெற்றவருமாகிய இத்தனைபேரையும் இராமபிரானுடைய கொடியஅம்பானது,சித்திரவதம்செயப் பார்த்து(ப் பிறகு) (உனதுஉயிர்) நீங்கப்போகிருயோ? (எ - று.)

அக்கிரமஞ்செய்த நீ அப்பிரானைச்சேர்ந்து அவன்பாதங்களில் விழுந்து அபராதக்ஷாமணஞ்செய்துகொள்ளாவிட்டால், அப்பிரானுடைய அம்பு, புத்திரர்முதலானுரோடு உன்னைச் சித்திரவதஞ்செய்யு மென்றன னென்பதாம். சித்திரவதமாவது-கைவேறு கால்வேறு என இவ்வாறு உறுப்புக்களைத் தனித்தனியறுத்துத் துடிக்கச்செய்து பிறகு கொல்லுதல். பி-ம்:—1இன். 2பொருவுசேண்மையர்,பொருவில்கேள்வியர். 3வாண்மையோர். 4தேர்தியோ. (ருகஅ)

கரு.—விபீஷணன் இராவணனிடம் அபராதக்ஷாமணஞ் செய்துகோண்டு இலங்கையைவிட்டுச்செல்லுதல்.

எத்துணை [1]வகையினு முறுதி [2]யெய்தின
ஒத்தன வுணர்த்தினே [3]னுணர கிற்றிலே
[4]அத்தவென் பிழைபொறுத் [5]தருளு வாயென
உத்தம னந்நக ரொழியப் போயினன்.

(இ - ள்.) எல்லாவகையினும் உறுதிபொருந்தியனவும் (நீதிநூற்குப்) பொருந்தியனவுமானவற்றை யறிவுறுத்தினேன்: (நீ அவற்றை) அறியும்வல்லமையற்றவனாய்; தலைவனே! என்னுடையகுற்றத்தைப் பொறுத்தருள்வாய் என்றுசொல்லிவிட்டு, சிறந்தகுணங்களையுடையவனான விபீஷணன், அந்த லங்காநகரத்தை விட்டுச்செல்லலானன்; (எ - று.)

விபீஷணன் கூறியவை-அர்த்தசாஸ்திரம் காமசாஸ்திரம் தருமசாஸ்திரம் முதலிய எல்லாநூல்களின்கொள்கைக்கும் ஏற்றனவும் உறுதியைத்தருவனவுமாக இருத்தல்காண்க. இராவணனைவிட்டுத் தான் செல்வதனல், அபுத்திபூர்வகமாகத் தான் ஏதேனும் பிழைசெய்திருப்பின் அதனைப்பொறுப்பாயென்று வேண்டிக்கொள்கின்றான். பி-ம்:—1வகையெனும். 2ஏய்ந்தன.3உணர்கிற்றில்லையேல். 4ஒத்தென. 5அருடியால். (ருககூ)

கச.—அனலன்முதலிய நால்வர் விபீஷணனேடும் உடன்சென்றமை.

அனலனு மனிலனு மரன்சம் பாதியும்
[1]வினையவர் நால்வரும் விரைவின் [2]வந்தனர்
கனைகழற் காலினர் கருமச் [3]சூழ்ச்சியர்
[4]இனைவரும் வீடண னோடு [5]மேயினர்.

(இ - ள்.) ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த பாதங்களையுடையவரும் செய்யவேண்டியகாரியத்தை ஆராயுந்தன்மையுள்ளவருமான அனலன் அனிலன் அரன்சம்பாதி என்கின்ற(விபீஷணனுக்குஏற்ற)தொழிலுள்ள இவர் நால்வரும் விரைவாகவந்து, வருந்துகின்ற விபீஷணனுடனே பொருந்தினர்கள்; (எ-று.)

விபீஷணனுக்குஇனைவு - இராவணன்திருந்தாமையாலானது. கருமச்சூழ்ச்சியர் - விபீஷணனுக்குச் செய்யவேண்டியகாரியங்களில் உடனிருந்து

ஆலோசனைகூறுபவர்: 'விபீஷணன் துணைவருந் தானுமாக வானத்திடைச் சென்றனன்' என்று கீழ்வந்ததனால், அங்ஙன் உடன்சென்றவர் 'இன்னார், இத்துணையவர்' என்பது இதனாற் கூறப்பட்டதென்க. பி-ம்:—[1]இனையவர். [2]எய்தினார். [3]சூழ்ச்சியான். [4]அனைவரும், அனையரல், அனையவர். [5]ஏகினார், ஆயினார்.

கரு.—கடற்கரையில் வானரசேனையுடன் இராமன் வந்துள்ளானென்றதும், விபீஷணாதியர் அங்குப் போதல்.

அரக்கனு [1]மாங்கவே ரமைச்சர் நால்வரும்
[2]குரக்கினத் தவரொடு மனிதர் கொள்ளைநீர்க்
கரைக்கண்வந் திறுத்தன ரென்ற காலையிற்
பொருக்கென [3]வெழுதுமென் றெண்ணிப் போயினார்.

(இ - ள்.) அப்போது விபீஷணனும் (அனலன்முதலிய) நான்குமந்திரிமாரும், 'குரங்குக்கூட்டத்திற்குஉரிய சுக்கிரீவன்முதலியோருடனே இராமலட்சுமணர் பெருநீராகியகடலின்கரையிலே வந்து தங்கியுள்ளார்'என்றசமயத்தில், 'விரைவாக (அங்குப்) போவோம்' என்று ஆலோசனைசெய்து (கடலின் அக்கரைக்குப்) போயினார்; (எ - று.)

அரக்கனும்அமைச்சர்நால்வரும்போயினார்என்க. அமைச்சர் (அரசனுக்கு) அருகிலிருந்து ஆலோசனையுரைப்பவரெனப் பொருள்படும். குரக்கினத்தவர்-வானரசேனையைக்கொண்டவர்: சுக்கிரீவன் அங்கதன் அநுமான் சாம்பவான் முதலியோர். வானத்திலெழுந்த விபீஷணாதியர்க்குக் கடற்கரையிற்றங்கியது தெரியுமென்க. கொள்ளைநீர்-கடல். பி-ம்:—[1]அங்ஙன். [2]குரக்கினக்கடலொடு. [3]எழுந்துவேறென்ன. (கூ௨க)

கசு.—விபீஷணன் வானரசேனையைக் காணுதல்.

அளக்கரைக் கடந்துமே [1]லறிந்த நம்பியும்
விளக்கொளி [2]பரத்தலிற் பாலின் [3]வெண்கடல்
[4]வளத்தடந் தாமரை மலர்ந்த தாமெனக்
களப்பெருந் தானையைக் [5]கண்ணி [6]னோக்கினான்.

(இ - ள்.) வரப்போவதையறிபவனான விபீஷணனும், சமுத்திரத்தைத் தாண்டி [அக்கரையைச்சார்ந்து], விளக்குக்களின் ஒளி பரவுதலினால் வெண்ணிறமுள்ள பாற்கடலானது (தன்னிடத்து) வளமுள்ள பெருமைபெற்ற தாமரைமலர்கள் மலரப்பெற்றதுபோலும் என்றுதோன்ற, முனைமுகத்துச் செல்லும் (அந்தப்)பெரியவானரசேனையைக் கண்களாற் பார்த்தான்.

வானரப்பெருஞ்சேனையில் விளக்கொளிவிளங்கியது-பாற்கடலில் தாமரைமலர் விளங்குவதுபோலத் தென்பட்டதென்க: நற்குறிப்பேற்றவணி. குரங்குகளின்நிறம் வெண்ணிறமாதலால், அச்சேனைசமுத்திரத்திற்குப் பாற்கடல் உவமைகூறப்படும். 'கண்ணின்' என வேண்டாதுகூறியது - விபீஷணனுக்கு அதனைக் காண்பதில் அதிசயந்தோன்றியமையை விளக்குதற்பொருட்டாம். பி-ம்:—[1]அறிந்து. [2]யாத்தலின். [3]வேலையின். [4]வளத்தன, அளக்கரும். [5]கண்டு. [6]கண்டனன். (கூ௨௨)

கஎ.—வானரத்திரளைக்கண்ட விபீஷணனது அதிசயவுரை.

ஊனுடை [1]யுடம்பின வுயிர்கள் யாவையும்
ஏனைய [2]ஒருதலை நிறுத்தி யெண்ணினால்
வானரம் பெரிதெனை [3]மறுவில் சிந்தையான்
தூநிறச் [4]சுடுபடைத் துணைவர்ச் சொல்லினான்.

(இ - ள்.) 'மாமிசத்தைக்கொண்ட உடம்பையுடையனவான பிராணிகளையெல்லாம் ஒருபுறத்திலும் மற்றையவான வானரங்களை ஒருபுறத்திலும் நிற்கவைத்தெண்ணினால் வானர சாதியே (அளவினால்)மேம்பட்டது' என்று, குற்றமற்றமனத்தையுடையனான விபீஷணன், மாமிசம்படியப்பெற்று ஒளிபடைத்துக் கொல்லுந்தன்மைவாய்ந்த படைக்கலங்களையுடைய மந்திரிமாரை நோக்கிச்சொல்லினான்; (எ - று.)

விபீஷணன் துணைவரைநோக்கிச் சொல்லியதில், வானரசேனையின் மிகுதியைவிளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி காண்க. 'ஒருதலை' என்பதை, உயிர்கள்யாவையுமென்றதனோடும் இயைக்க. பி - ம்:—[1]உடம்புடை, உடம்பினின். [2]ஒருவகை. [3]மறுகும். [4]சிறுபடைத்துணைவன். (௩௨௩)

கஅ.—விபீஷணன் செய்யத்தக்கதுகுறித்து மந்திரிமாரை வினவுதல்.

அறந்தலை [1]நின்றவர்க் கன்பு பூண்டனன்
மறந்துநன் புகழலால் வாழ்வு வேண்டலன்
பிறந்த[2]வென் னுறுதிநீ பிடிக்க லாயெனத்
துறந்தன னினிச்செயல் சொல்லு வீரென்றான்.

(இ - ள்.) தருமத்தைமுக்கியமாகக்கொண்டு நின்றவராகிய இராமனிடத்தில் அன்புகொண்டுள்ளேன்; அபுத்திபூர்வகமாகவும் சிறந்தபுகழைத்தரும் வழியினலல்லாமல் (வேறு பழியைத்தரும்வழியால்வரும்) வாழ்ச்சியை விரும்புவேனில்லை; (இதுபற்றி), 'உடன்பிறந்துள்ள என்னுடைய தீர்மானமான கருத்தை, நீ கைக்கொள்ளாமலிருக்கின்றாய்' என்று (இராவணன் என்னைக் கடிந்து) துறக்க, (யான் அவனை) விட்டிட்டேன்: இந்நிலையில், (யான்) செய்யத்தக்கதைச் சொல்லுமினென்று (தன்மந்திரிமாரை) வினவினான், (விபீஷணன்;) (எ - று.)

என்தன்மைகள் என்னுடைய அண்ணனான இராவணனுக்குப்பிடிக்காமையால், 'உடன்பிறந்தஎன்னுடைய உறுதியைக் கைப்பற்றாத நீ எனக்கு உடன்பிறந்தவனெனப்பேர்வைத்துக்கொண்டு இங்குஇருக்கத்தக்கவனல்லை: ஒழிந்திடு' என்றுசொல்லி என்னைத் துறக்கவே, நான் அவ்விராவணனை விட்டிட்டேன்: இப்போது யான்செய்வதற்குஉரியசெயலைச் சொல்லவேண்டுமென்று மந்திரிமாரை வேண்டினன் விபீஷண னென்க. மூன்றுநான்காம் அடிகட்கு-உடன்பிறந்த நான் கூறும் உறுதியை நீ ஏற்றுக்கொள்ளாதுவிட்டாயென்றுசொல்லி (நான் இராவணனை) த்துறந்தேன்'என்றுஉரைப்பாருமுளர். இனி, தருமமார்க்கத்தில் நிற்கின்றார்களென்ற காரணத்தினால் இராமலட்சுமணர்களிடத்தில் அன்புபூண்டேன்: ஆயினும், அவர்களைச் சேர்வது இராச்சி

யத்திலாசைகொண்டு பகைவருடன் சேர்ந்திட்டானென்ற வசைச்சொற்கு இடமாகுமாயின், அவ்வாறு பழிப்புஉண்டாகுமாறு வாழ விரும்புகின்றிலேன்: இனி, மீண்டு இராவணனிடத்துச் சார்ந்திருக்கலாமென்றாலோ அவன் என்னுறவைத்துறந்து அப்பாற்படுத்திவிட்டான். இந்தநிலையில் யான் செய்யத்தக்கது இன்னது என்பதை நீவிர் ஆராய்ந்துசொல்லவேணுமென்று கூறினன் என்று இச்செய்யுளுக்கு உரைகூறினுமாம். பி-ம்:—[1]நின்றவதற்கு. [2]நல். (கஉச)

கசு.—இராமபிரானைக் காணுமாறு மந்திரிமார் கூறல்.

மாட்சியி னமைந்தது [1]வேறு மற்றிலை
தாழ்ச்சியிற் [2]பொருடருந் தரும மூர்த்தியைக்
காட்சியே யினிக்கட னென்று கல்விசால்
சூழ்ச்சியின் [3] கிழவருந் துணிந்து சொல்லினர்.

(இ - ள்.) '(தன்னைவந்து) வணங்குகையில் (வணங்குபவர் வேண்டுகின்ற)புருஷார்த்தத்தைக் கொடுக்கவல்லவனும்தருமமேவடிவெடுத்துவந்தாற்போன்றுள்ளவனுமான ஸ்ரீராமனைத் தரிசித்தலே இப்போதுசெய்யவேண்டிய தொழில்: பெருமையுடன்பொருந்தியது, வேறொன்றுஇல்லை' என்று கல்வியறிவுமிகுந்த ஆலோசனைக்குஉரியவரான அந்தமந்திரிமாரும், (தம்முடைய ஆராய்ச்சியினால்) தீர்மானித்துச்சொல்லினர்; (எ-று.)

'தருமத்திற் கருத்தாயிருப்பவர்க்குத் தருமமூர்த்தியைச் சேர்வதாற் புகழுண்டாகுமேயன்றிப் பழிப்புண்டாகாது: ஆதலால், இராமனைச்சென்றுசேர்வதேமாண்பையுடையது: பிறிதொருசெயலும் மாண்புடையதல்ல' என்று மந்திரிமார் விபீஷணனைநோக்கிக் கூறினரென்க. பி-ம்:—[1]மற்றும்வேறிலை. [2]பெரும்படைத். [3]கிழவர்கள். (கஉரு)

உ0.—இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்: மந்திரிமார் கூறியதை உடன்பட்டு விபீஷணன் மகிழ்ந்துகூறுவதைத் தெரிவிக்கும்.

நல்லது சொல்லினீர் நாமும் வேறினி
அல்லது [1]செய்துமே லரக்க [2]ராதுமால்
எல்லையில் பெருங்குணத் திராமன் றாளிணை
புல்லுதும் [3]புல்லியிப் பிறவி [4]போக்குவேம்.

(இ - ள்.) நன்மைதருவதையே (நீங்கள்) சொன்னீர்கள்: இப்போது (நீங்கள்சொல்லியது) அல்லாததாகிய வேறொருசெயலைச் செய்வோமானால், நாமும் ராக்ஷஸசாதிக்கு உரியசெயலைச் செய்தவராவோம்:(ஆதலால்), எல்லையில்லாத மிக்க குணத்தைக்கொண்ட இராமபிரானுடைய உபயபாதங்களைப் போய்த்தழுவுவோம்: தழுவி (அவனுடைய அங்கீகாரத்தைப்பெற்று) இந்த அரக்கஜந்மத்தைப் போக்கிக்கொள்வோம்; (எ - று.)

தருமமூர்த்தியாகிய இராமபிரானைச் சேர்தலென்பது அரக்கர்க்குஉரிய செயலன்றாதலால், அப்பிரானதுதிருவடிகளைப்புல்லவே நமக்குராக்ஷஸரென்ற பேர்போய் இராமபக்தர்என்றபேர் கிடைக்குமென்றனன் விபீஷணனென்க. இந்தச்சமயத்தில் இராமபிரானைச்சேராவிடின் அரக்கரென்றபேர் ஒழிவதற்கு

வழியில்லை யென்கின்றான். பேஷபூதர் [அடியவர்] இழியவேண்டிய துறை பேஷியினுடைய[தலைவனுடைய]தாளிணையேயாதல் காண்க. பி-ம்:—1நினை துமேல். 2ஆகுதும். 3புல்லிய, புல்லியிற். 4போக்குதும்,போகவே,போகுமால்.

உக. முன்புறக் கண்டிலன் கேள்வி [1]முன்பிலன்
அன்புறக் காரண மறிய [2]கிற்றிலேன்
என்புறக் குளிரு[3]நெஞ் சுருகு [4]மேலவன்
[5]புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்.

(இ-ள்.) (இதற்கு)முன்னாக(அவ்விராமனை ஒருபோதும்)தரிசித்ததில்லை; முன்பு(அப்பிரானைப்பற்றிக்)கேள்விப்பட்டதும்இல்லை;(இங்ஙனம் இருக்கவும் அப்பிரானிடத்து) அன்பைப்பொருந்தக் காரணத்தை அறிந்துகொள்ளும் வல்லமையுடையேனல்லேன்; (அவனை நினைக்கையில்தானே என்னுடைய) உடலெலும்புகள் மிகவும் குளிர்ச்சியடையும்: மனமும் உருகாநிற்கும்: (இவ்வாறு காரணமில்லாமல் என்புகுளிர்தல்முதலியன நிகழும்)ஆயின், அந்தஇராமன் அற்பமான ஞானத்தையுடைய [அறிவைப் புல்லியதாக்குகின்ற] இந்தப் பிறவிக்குப் பகைவனுவான்போலத்தோன்றுகின்றது; (எ - று.)

இராமபிரானது தாளிணையைப் புல்லுவதாகத் தீர்மானித்த விபீஷணன், இந்தச்செய்யுளில் அவன் பரம்பொருளின் அமிசமானவனென்பதை ஊகையினாற் கூறுகின்றான். ஒருபொருளினிடத்து அன்பு உண்டாவதற்கு அப்பொருளை நேரிற் காணவேண்டும்: காணநேர்படாவிட்டால் அதைப்பற்றி மிகவும்கேள்விப்பட்டாவது இருக்கவேண்டும்; இராமனென்பவனையோ இதற்கு முன் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை: அப்படியிருக்க, அவனைப்பற்றி அன்பு தோன்றி அவனை நினைக்கும்போதே எலும்புங்குளிர மனமு முருகின்றதே! இதற்குக் காரணம் யாதோ? அந்தஇராமன் பிறவியைப்போக்குகின்ற சாட்சாத்பரமாத்துமாவின் சொரூபமாகவேயிருக்கவேணுமென்று தோன்றுகின்றதென்றனன் விபீஷணனென்க. ஒருகாலும் காணப்படாவிட்டாலும் ஆனந்தமயனான பரம்பொருளைக் கிட்டும்போது தம்மையும்அறியாமல் மனம்பரவசப்பட்டு என்புகுளிர்தல் நெஞ்சஉருகுதல் முதலியனநிகழ்தல் இயற்கையேயாதலால் இவ்வாறுஊகித்தான்.ஆன்மா இயற்கையாக முற்றுணர்வு அமைந்ததாயினும் இந்தப்பிரகிருதியின் சம்பந்தத்தால் அந்தஆன்மாவின் ஜ்ஞானத்துக்கு மழுங்குத லேற்படுகின்ற தென்பதும், பிரகிருதி ஸம்பந்தம்நீங்கிய மோக்ஷதசையில்அந்தமுற்றுணர்வு உண்டாய்விடு மென்பதும், பிரகிருதிஸம்பந்தம்நீங்குவது பரம்பொருளின் பரமகருணையினு லென்பதும், நூற்கொள்கை. இந்தச் செய்யுளில் என்புகுளிர்தல் நெஞ்சுருகுதல்என்ற அடையாளங்களைக்கொண்டு இராமனைப் பரம்பொருளென ஊகித்தது-அநுமானலங்காரத்தின்பாற்படும்.
பி-ம்:—1மூளவே. 2கிற்கிலேன். 3நெஞ்சுருக்கும். 4எற்கவன், என்னவன்· 5புன்புறப், புன்புலைப். (நூஉஎ)

உஉ. ஆதியம் பரமனுக் கன்பு நல்லறம்
நீதியின் [1]வழாமையு [2]முயிர்க்கு நேயமும்

[3]வேதிய ரருளுநான் [4]விரும்பிப் [5]பெற்றனன்
போ[6]துறு கிழவனைத் தவமுன் பூண்டநாள்.

(இ - ள்.) எல்லாப்பொருட்கும் முதன்மையான அழகிய பரமாத்மாவி னிடத்தில் பக்தியும் தருமமார்க்கத்தில்நடக்கையும் நீதியிலிருந்து தவறு மையும் எல்லாப்பிராணிகளிடத்திலும் அன்பும் பிராமணர்களின் கருணை யும் (ஆகியஇவற்றை), திருமாலினதுநாபீகமலத்தில்தங்கியுள்ள பிதாமகனுகிய பிரமதேவனைக்குறித்துத் தவம்புரிந்த முற்காலத்தில் நான் விரும்பி வரமாக அடைந்தேன்; (எ - று.)

பரம்பொருளினிடத்துப்பக்தி முதலியவற்றைப் பிரமதேவனிடத்து வர மாகப்பெற்றமையைக் கூறுகின்றான், விபீஷணன். இங்கு இதுகூறியது, பரம் பொருளிடத்துப் பக்திதோன்றுமாறு பிரமதேவ னருளியுள்ளமையால், இவ் விராமபிரானிடத்துப் பக்தி எனக்குத் தோன்றியதும், இவ்விராமன் பரம் பொருளென்பதை மெய்ப்பிக்குமென்று காட்டுதற்காகும். 'புராணமுனி, பிதா மஹன்' என்று இவ்வாறாகப் பிரமதேவனைக் கூறுவதற்கு ஏற்ப, 'கிழவன்' என்று ரென்னலாம். பி-ம்:—[1] வழாமலும். [2]அவர்க்கு. [3]வேதியர்க்கு. [4]வேண்டி. [5]பெற்றதும், பெற்றது. [6]உறை. (௩௨அ)

௨௬. ஆயது பயப்பதோ [1]ரமைதி [2]யாயது
தூயது [3]நினைந்தது தொல்லை யாவர்க்கும்
நாயகன் மலர்க்[4]கழல் [5]நணுகி நம்[6]மனத்து
ஏயது முடித்துமென் [7]றினிது [8]மேவினான்.

(இ - ள்.) அந்த (ப்பிரமதேவனுடைய) வரமானது பயனையளிப்பதாகிய ஒருதகுதியானகாலம் (நமக்கு) உண்டாகியுள்ளது; (மந்திரிமாராகிய நீங்கள்) ஆராய்ந்துசொல்லியது குற்றமற்றதேயாகும்; எல்லார்க்கும் பழமையான தலை வனை ஸ்ரீமந்நாராயணனுடைய தாமரைமலர்போன்ற பாதங்களைக்கிட்டி, நமது மனத்திலுள்ளதை நிறைவேற்றுவோமென்று, (மனக்கவலைநீங்கி) இனி தாகப்பொருந்தியிருந்தான் (விபீஷணன்); (எ - று.)

கீழ் 'செய்திறன் இன்னது' என்பதைப்பற்றிச்சஞ்சலமுற்ற விபீஷணன், மந்திரிமாரும் தக்கஆலோசனைகூறவே ஸ்ரீராமனையே சரணமாக அடைவது என்று உறுதிகொண்டு அந்தமனச்சஞ்சலம்நீங்கி இனிதாக இருந்தனனென் பதாம். பி-ம்:—[1]அவதி. [2]யாவதும், ஆவது. [3]நினைந்தனம், நினைத்தது, நினை த்தனே. [4]சரண். [5]அணுகி. [6]மனம்மேயது. [7]எண்ணி. [8]போயினர், மேயினார், மேவினர். (௩௨௧)

௨௪.—'இரவில் இராமபிரானிடத்துச் சேர்தல் தக்கதன்று' என்று அவர்கள் சோலையில் தங்க, சூரியன் உதயமாதல்.

[1]இருளுற வெய்துவ [2]தியல்பன் றெனப்
பொருளுற [3]வுணர்ந்தவப் [4]புலன்கொள் புந்தியார்
மருளுறு [5]சூழலின் மறைந்து வைகினர்
உருளுறு தேரவ னுதய [6]மெய்தினான்.

(இ - ள்.) 'இருட்டுப் பொருந்தியிருக்கையில் [இரவினில்] (நாம் அந்த இராமபிரானை) அடைவது, இயற்கையான செயலன்றாகிவிடுமென்று, செய்யவேண்டிய செயல்களை நன்கறிந்த அந்த விவேகமமைந்த புத்திமான்களான விபீஷணனும் அவனுடைய துணைவரும், மருட்சியை யுண்டாக்குகின்ற சோலையில் மறைந்து தங்கினார்கள்; (அப்பால்), ஒற்றைச் சக்கரமமைந்த தேரையுடையவனாகிய சூரியன் உதயமலையை யடைந்தான் [உதித்தான்].

இராத்திரியிற் புதியவர் வந்தால் மருளுதல் இயற்கை யாதலால், நாம் அங்ஙனம் சந்தேகமுண்டாக்கும்படி இரவிற்சேர்தல் நல்லதன்றென்று விவேகிகளான விபீஷணன்முதலியோர் ஆராய்ந்து அங்குத்தானே ஓர்சோலையில் மறைந்திருந்தன ரென்க. மறைந்திருந்தனரென்றது-அவ்வானரர்களின்கண்ணுக்கு எட்டாத தூரத்திலிருந்தன ரென்றவாறு. சூரியன் சம்வற்சரரூபமானஒற்றைச்சக்கரங்கொண்ட தேரையுடையவ னென்ன நூல்கள் கூறுவதால், 'உருளுறுதேரவன்' எனப்பட்டான். பி-ம்:—1இருளிடை. 2இயல். 3எண்ணிய. 4பொலன்கொள் தோளினர், புலன்கொள் கேள்வியார். 5சோலையின். 6ஆயினான். (கூகo)

௨ரு.—இராமபிரான் கரைமருங்கு வருதல்.

அப்புறத் 1திராமனவ் வலங்கு வேலையைக்
குப்புறக் கருதுவான் குவளை நோக்கிதன்
றுப்புறச் சிவந்தவாய் நினைந்து சோர்குவான்
இப்புறத் திருங்கரை மருங்கி னெய்தினான்.

(இ - ள்.) இராமன்,—அலைவீசுந்தன்மையுள்ள அந்தக்கடலை அக்கரை சேருமாறு கடப்பதற்குச் சிந்திப்பவனாகி, கருங்குவளைமலர்போன்ற கண்களையுடையவளான சீதாபிராட்டியின் பவழத்தை யொப்பச் சிவந்துள்ள வாயை நினைத்து மனந்தளர்பவனாய், இந்தப்பக்கத்துக் கடலின் பெரியகரையோரத்தில் வந்துசேர்ந்தான்; (எ - று.)—அக்கரைசேர உபாயங்கருதுபவன்,குவளை நோக்கித் தன்வாய்நினைந்து சோர்பவனாயினனென்க.இப்புறத்திருங்கரைஎன வந்ததனால், அப்புறத்து என்பது - அக்கரையைக் காட்டிற்று. பி-ம்:—1இராமனுமலங்கல். (கூகக)

௨கூ.—இதுமுதல் மூன்றுகவிகள்-இராமன் ஆங்குள்ள கானல் முதலியவற்றை நோக்குதலைத் தெரிவிக்கும்.

கானலுங் கழிகளு மணலுங் 1கண்டலும்
பானலுங் குவளையும் பரந்த புன்னையும்
மேனிறை யன்னமும் 2பெடையும் வேட்கைகூர்
3பூநிறச் 4சோலையும் புரிந்து நோக்கினான்.

(இ - ள்.) கடற்கரைச் சோலைகளும் உப்பங்கழிகளும் மணற்பரப்புக்களும்(அங்கு முளைத்துள்ள) தாழைகளும் (ஆங்குள்ள நீர்நிலைகளில்தோன்றிய) கருநெய்தல்களும், கருங்குவளைகளும், (மணலில் முளைத்துள்ள) கிளைகளினால்)பரவியுள்ள புன்னை மரங்களும்,வானத்தின்மேல் நிறைந்து காணப்படும் ஆணன்னப்பறவைகளும் பெண்ணன்னப்பறவைகளும், ஆசைமிகுதற்குக்

காரணமான மலர்களால் விளக்கம்பெற்ற சோலைகளும் (ஆகிய இவற்றை), விரும்பி நோக்கினன்; (எ - று.)

கடலைக் கடக்கச் சிந்திக்கவந்த இராமன், தான் வந்தசெயலைமறந்து கானல் முதலியபொருளை நோக்கினனென்க. நோக்கினன் என்ற வினைமுற்றுக்குக் கீழ்ச்செய்யுளிலுள்ள 'இராமன்' என்பதே, எழுவாய். மேலும் இங்ஙனமே கொள்க. இச்செய்யுள் ஒருபிரதியிற் காணப்படவில்லை. பி-ம்:—1காண்டலும். 2அடம்பும். 3பூநறச், பூநிறை. 4சூழலும். (ருரு௨)

உஎ. தாளமும் பவளமுந் 1தரங்க மீட்டிய
திரண்மணிக் குப்பையுங் கனகதீரமும்
மருளுமென் பொதும்பரு 2மணலின் குன்றமும்
3புரள்நெடுந் திரைகளும் புரிந்து நோக்கினன்.

(இ - ள்.) (அன்றியும்), முத்துக்களும், பவழங்களும், அலைகள் கொழித்துக் கொணர்ந்து (கரையிற்) குவித்த திரண்டுள்ள இரத்தினக்குவியல்களும், பொன்போல் விரும்பத்தக்க கரைகளும், மருளுதற்குக் காரணமான மெல்லிய சோலைகளும் மணல்மேடுகளும், புரளுகின்ற நெடிய அலைகளும் (ஆகியஇவைகளை) விரும்பி நோக்கினன், ஸ்ரீராமன்; (எ - று.)

மரங்கள் அடர்ந்து இருப்பதனால் இருண்டு உள்புகுபவர் மருளும்படி உள்ளது பொதும்ப ரென்றனர். குப்பை - கும்ப என்ற வடசொல்லின் சிதை வென்பர். இச்செய்யுள் சிலபிரதியில் "மின்னகு (28)" என்ற பாடலின்பின் உள்ளது. பி-ம்:—1தரங்கம்மீட்டிட. 2அமிழ்தின். 3புரி. (ருரு௨)

உஅ. மின்னகு மணி1விரற் றேய வீழ்கணீர்
துன்னரும் பெருஞ்சுழி யழிப்பச் சோர்விேனாடு
இன்னகை நுளைச்சிய ரிழைக்கு மாழிசால்
2புன்னையம் பொதும்பரும் புக்கு நோக்கினன்.

(இ - ள்.) (கணவனேொடு கூடியிருந்தகாலத்தில்)இனிய சிரிப்போடுகூடியவரான பரவமடந்தையர் (பிரிவுநேர்ந்த அக்காலத்தில்) மின்னல்போல் விளங்குகின்ற இரத்தினாபரணமணிந்த (தம்) கைவிரல்கள் தேயவும், கண்களினின்று வீழ்கின்ற கண்ணீர் சேர்தற்கு அரிய பெரிய சுழியை அழித்துக் கொண்டிருக்கவும், மனத்தளர்ச்சியுடனே தரையிற்கீறுகின்ற கூடற்சுழி மிக்கிருந்துள்ள புன்னைமரங்கள் நிரம்பிய அழகியசோலைகளையும்போய்ப்பார்த்தான், (அவ்விராமன்); (எ - று.)

அந்தக்கடற்கரையில் மீன்பிடித்தல்முதலிய தொழில்நிமித்தமாகச் சென்ற தமதுகணவரைப் பிரிந்த துயரத்தினால்மிகவருந்திக் கண்ணீர்வடிக்கின்ற நுளைச்சியர் 'தம்கணவர் சௌக்கியமாக வந்து சேர்வரா? மாட்டாரா?' என்று அறியவிரும்பித் தமதுவிரல்தேயப் புன்னைப்பொதும்பரிலிருந்து மணலிற் கூடற்சுழி இழைப்பர்:அங்ஙனம் இழைக்குஞ்சுழியை அவரது பிரிவுத்துயர்க் கண்ணீர் அழித்துவிடும்: அவ்வாறுள்ள இடத்தை'நம்மைப்போல் இவர்களும் வருந்துகின்றனரே!சீதையும் இவர்களைப்போல் நமது பிரிவினால் கூடலிழை

த்துவருந்துவானன்றோ!' என்ற குறிப்போடு ஸ்ரீராமன் சென்று பார்க்கலாயின னென்க. நுளைச்சியர் தாமிழைத்த சுழியைக் கண்ணீரழித்ததனால், சோர்வு கொண்டு மீண்டும் கூடற்சுழியை இழைப்பர் எனக் கூறுதலும் உண்டு. கூட லிழைத்தலாவது - கூடல்தெய்வத்தை வாழ்த்தி 'என்கணவன் இப்போது கூடுவானாயின் நீகூடு' என்று மணலிற்சுழியிழைத்தல். பிரிந்த மகளிர் கண்ணை மூடிக்கொண்டு சுழிக்கிற அது பிளவுபடாமல் இருநுனியும்சேர்ந்திடுமாயின் கணவர்கூடுவ ரென்றும் சேராவிடின் கூடாரென்றும் இதனால் நிமித்தம் உண ரப்படுமென்பர். இனி, வட்டமாகக் கோட்டைக் கீறி அதுக்குள்ளே சுழிசுழி யாகச் சுற்றுஞ் சுழித்துக் கணக்கிட்டுப்பார்க்குமிடத்து இரட்டைப்பட்டால் கணவர்கூடுவரென்றும், ஒற்றைப்பட்டால் கூடாரென்றும் நிமித்தமறிகை என்று கூறுவதுமுண்டு. பி-ம்:—[1] இனம்வீழ்கண்கள். [2]புன்னையும். (கஙச)

உகூ.—நான்குகவிகள்-உயிர்ப்புவீங்குதல்முதலிய இராமன்செயலைத்தெரிவிக்கும்.

கூதிர் நுண் குறும்[1]பனித் திவலைக் [2]கோவை[3]கான்
[4]மோதிவெண் டிரை[5]வர முடவெண் டாழைமேற்
பாதியஞ் [6]சிறையிடைப் பெடையைப் பாடணைத்து
ஓதிமந் துயில்வகண் டுயிர்ப்பு வீங்கினான்.

(இ - ள்.) வெண்ணிறமுள்ளஅலை தாக்கிக்கொண்டுவர, (அத்திரைகள் தாக்காதபடி) கூதிர்காலத்து நுண்ணியகுறிய பனித்திவலையின்திரளைக்காலு கின்ற [பனிநீரைச் சொட்டுச்சொட்டாகக்கோவையாய்ச்சொட்டுகின்ற] வளை ந்த வெண்ணிறத் தாழையின்மேலிருந்து (தம்) பேடையை(த் தமது) அழகிய சிறையின்பாதியிடத்துப்பக்கத்திலே யணைத்துக்கொண்டு அன்னங்கள்துயில் வனவற்றைக் கண்டு பெருமூச்சுமிகப்பெற்றான், (இராமபிரான்); (எ - று.)

கூதிர்காலத்துப் பெடையைச்சிறையினாலணைத்தவண்ணம் இனிதுஅமர் ந்தசேவலன்னத்தைக் காணவே, இராமபிரானுக்குச் சீதையை யணைக்கப்பெறா தவருத்தத்தினால் உயிர்ப்புவீங்கிற்றென்க. இராமபிரான் போருக்குஎழுந்தகா லம் கூதிர்ப்பருவமென்பது, இங்கு விளங்கும். பி-ம்:—[1]துளி. [2]கொள்ளை. [3]சால், சார். [4]மோது. [5]பொரு. [6]சிறகிடை. (கஙரு)

கூ0. அருந்துதற் [1]கினியமீன் கொணர அன்பினாற்
பெருந்தடங் [2]கொம்பிடைப் பிரிந்த சேவலை
வருந்திசை நோக்கியோர் மழலை வெண்குருகு
இருந்தது [3]கண்டுநின் றிரக்க மெய்தினான்.

(இ - ள்.) உண்ணுதற்கு இன்சுவையானமீனைக் கொண்டுவருமாறு அன் போடு மிகப்பெரிய மரக்கிளையிலிருந்து பிரிந்துசென்ற (தன்) ஆண்பற வையை, (அது) வருகின்ற திக்கை நோக்கிக்கொண்டு இன்குரலையுடைய வெண்ணிறமுள்ள பெண்நாரை ஒன்று தங்கியிருந்ததைக்கண்டுநின்று இரக் கங்கொண்டான், (ஸ்ரீராமன்); (எ - று.)

'தன்னுடைய ஆண் வருந் திசையை நோக்கியவண்ணம் பிரிந்த பெண் குருகு இருந்ததைக் கண்டபோது, ஸ்ரீராமனுக்கு, இந்தக் குருகுபோலவே நாம் வருந்திசையைச் சீதை பார்த்தவண்ணமாய் இருப்பாளன்றோ?' என்ற கருத்துத்தோன்றியதனால் இரக்கமுண்டாயிற்றென்க. பி-ம்:—[1]அரிய. [2]சொம்பரிற். [3]நோக்கி. (௩௩௬)

௩௫. ஒருதனிப் [1]பேடைமே லுள்ள மோடலாற்
[2]பெருவலி வயக்குரு கிரண்டும் [3]பேர்கில
திருகுவெஞ் சினத்தன [4]தறுகட் டீயன
[5]பொருவன கண்டுதன் புருவங் கோட்டினான்.

(இ - ள்.) ஒப்பற்ற தனித்துள்ள பேடைக்குருகின்மேல் (தம்) மனஞ் செல்லுதலினால், மிக்கவலிமையையுடைய இரண்டுபெரிய குருகுகள் பின்வாங்காமல் மாறுபடுகின்ற கொடிய கோபத்தைக்கொண்டனவும், அஞ்சாமை தோன்றுங் கண்களிலிருந்து தீப்பொறிபறக்கப்பெற்றனவுமாகிப் போர்செய்வனவற்றைப்பார்த்துத் தன்புருவத்தை(ச் சினந்தோன்ற) வளைத்தான்.

ஒருபேடையை இரண்டு ஆண்குருகுகள் காதலித்தல் தக்கதன்றென்ற குறிப்புத்தோன்ற, ஸ்ரீராமன் புருவத்தைவளைத்தானென்க. தன்காதலியை நீசனாகிய இராவணன் காதலிப்பதை நினைப்பூட்டுதலால், இந்தக் குருகுகளின் செயல் இராமபிரானுக்குச் சினத்தைமூட்டியதென்னலாம். "வயவலியாகும்" என்பது, தொல்காப்பியம். வலிவய-ஒருபொருட்பன்மொழி. பி-ம்:—[1]பெடையின்மேல். [2]பொரு. [3]போகில, போக்கில. [4]தெறு. [5]பொருவது. (௩௩௭)

௩௬. உண்ணிறை யூடலிற் றோற்ற வோதிமங்
[1]கண்ணுறு [2]கலவியால் வெல்லக் கண்டவன்
தண்ணிறப் பவளவா யிதழைத் தற்பொதி
வெண்ணிற [3]முத்தினா லதுக்கி விம்மினான்.

(இ - ள்.) உள்ளே நிறைந்த ஊடலிலே தோற்றுப்போன பெடையன்னம் காட்சிக்குப்புலனாகின்ற கலவியிலே வெல்லுதலைக் கண்டவனான ஸ்ரீராமன்,—இனிய நிறத்தையுடைய பவழம்போன்ற வாயிதழைத் தன்னைமறைக்கின்ற முத்துப்போலுள்ள பற்களினால் அதுக்கியவண்ணம் பொருமினான்.

ஊடலில் தோற்றலாவது-ஊடலால் தன்சேவலைத் தனக்குக்கீழ்ப்படியும்படிசெய்யமுடியாமை. ஊடலிற்றோற்றபேடை கலவியில்தான் ஆணன்னத்தை விஞ்சியதென்க. இனி, ஊடலில்தோற்றது சேவலன்னமெனக் கொள்ளுதலுமொன்று. வெளியெழுகின்றதுயரத்தைஅடக்கும்படி ஸ்ரீராமன் வாயினிதழைப் பற்களினாற் கடித்தவண்ணம் மனத்துக்குள்ளாகவே விம்மலாயினனென்க. முத்து-பற்களுக்கு, உவமவாகுபெயர். பி - ம்:—[1]கண்ணுறை, கண்ணிறை. [2]கலவியில். [3]முகத்தினால். (௩௩௮)

௩௩.—சுக்கிரீவன் முதலியோரின்சொற்களால் இராமபிரான் மெலிவுநீங்கி அவ்விடத்தைவிட்டுத் தன்னிருப்பிடத்திற்குப்போதல்.

இத்திற [1]மெய்திய காலை [2]யெய்துறும்
வித்தகர் சொற்களான் மெலிவு [3]நீங்கினான்

ஒத்தன னிராமனு முணர்வு தோன்றிய
பித்தரி னொருவகை பெயர்ந்து போயினன்.

(இ - ள்.) இந்நிலையை அடைந்தபோது (ஸ்ரீராமன்),(அங்கு)வந்த அறிவாளிகளான சுக்கிரீவன் அநுமான் அங்கதன் ஜாம்பவான் முதலியோரின் (தேற்றரவு)மொழிகளினால் (ஒருவகையாக) மனத்துயரம் தணியப்பெற்றவன் போன்றவனாய்,—நல்லறிவுவரப்பெற்ற பித்தர்போன்று அவ்விடத்தைவிட்டுச் சென்றான்; (எ - று.)

சுக்கிரீவாதியர் சொற்களுக்குக் கட்டுப்பட்டுத் துயர்நீங்கினன்போன்று இருந்தானே யன்றி, ஸ்ரீராமன் மனத்துயரம் நீங்கப்பெற்றில னென்பதை யுணர்த்த, 'மெலிவுநீங்கினனொத்தனன்' என்றார்: ஆனதுபற்றியே, உணர்வு தாற்காலிகமாகத் தோன்றிய பித்தரை ஸ்ரீராமனுக்கு உவமைகூறினார். பி-ம்:- 1மேவிய, நிகழ்வுறு. 2எய்திய. 3நீங்கினர். (ருருகூ)

ருச.—விபீஷணன் வானரசேனையின்பக்கத்தைச் சார்தல்.

உறைவிட மெய்தினு னொருங்கு கேள்வியின்
துறையறி துணைவரோ டிருந்த சூழலின்
முறைபடு தானையின் மருங்கு முற்றினன்
அறைகழல் வீடண னயிர்ப்பில் சிந்தையான்.

(இ - ள்.) (தன்) வாழிடத்தையடைந்தவனான ஸ்ரீராமன், ஒருசேர, கேட்கவேண்டிய நூற்பொருளின்வழிகளையெல்லாம் அறிந்த (தன்னுடைய) சிநேகிதரோடு இருந்த எல்லையில், (போர்க்கு உரிய) முறைப்படியே நடக்கின்ற வானரசேனையின் பக்கத்திலே, ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த விபீஷணன் சந்தேகிக்கத்தக்க மனமில்லாதவனாய் வந்துசேர்ந்தான்; (எ - று.)

சுக்கிரீவன் முதலாயினாரோடு ஸ்ரீராமனிருக்கையில், வானரசேனையின் பக்கத்து விபீஷணன் வந்துசேர்ந்தன னென்க. விபீஷணன் வந்துசேர்ந்த போது இன்னது சொல்லிக்கொண்டுவந்தானென்பதை, மேற்செய்யுளில் அநுவாதமாகக்கூறுவர். அயிர்ப்பு இல் சிந்தையான் - மனக்களங்கமில்லாதவனென்றபடி; தான்செய்யவேண்டியது இன்னதுஎன்பதில் சந்தேகமற்ற சிந்தையான் என்னலுமாம். அயிர்ப்பு-இராமபிரான் தன்னைச்சேர்த்துக்கொள்வனோ மாட்டானோ என்ற சந்தேகமுமாம். (ருசா)

ருரு.—'நோற்றவ! சரண்' என்ற சொல் செவிப்பட, ஸ்ரீராமன் துணைவரின்முகத்தை நோக்குதல்.

மற்றொரு பொருளுள தென்னின் மாறிலாக்
1நொற்றவ சரணெனக் கூயதோருரை
உற்றது செவித்தலைத் தைய 2னெல்லையின்
நற்றுணை வரைமுக நயந்து 3நோக்குறா.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) 'உன்னைக்காட்டிலும் (மேம்பட்டு) உள்ளதாகிய மற்று ஒரு பொருள் என்? [உன்னிலும்மேம்பட்ட வேறொருபொருளும் இல்லை: ஒப்பில்

லாத வெற்றியையுடையோனே! (நீ எம்மை இரட்சிக்கும்) புகல்' என்று உரத்துச்சொன்னதாகிய ஒப்பற்றவார்த்தை (ஸ்ரீராமனுடைய) காதுகளில் விரைவாகக்கேட்டது; ஸ்ரீராமன் (தனது) சிறந்ததோழன்மார்களின் முகத்தை விரும்பிப் பார்த்து,— (எ - று.)—'சாற்றுமின்னென' என்று அடுத்தகவியோடு தொடரும்: அதுவரையில் கவியின் அநுவாதம்.

இச்செய்யுளும் அடுத்தசெய்யுளும் பலபிரதிகளிலில்லை: சிலபிரதிகளில், "முற்றிய" (கஎ) என்னும் பாடலுக்குப் பின்உள்ளது. மாறு-ஒப்பு.பி - ம்:— 1கூயினன். 2ஒல்லென. 3நோக்கினன். (கஅக)

கசு.—ஸ்ரீராமன் சரணம்வேண்டியவரைக்குறித்து வினவுகையில், வானரசேனையின்முன்னணியில்நிகழ்ந்ததைக் கூறுவோமெனல்.

எந்தையே யிராகவ சரண மென்றசொல்
1தந்தவ ரெனைவரோ சாற்று மின்னென
2மந்தண முற்றுழி 3வயவெஞ் சேனையின்
4முந்தினர்க் 5குற்றதை மொழிகு வாமரோ.

(இ - ள்.) 'எந்தையே! இராகவா! சரணம் என்ற சொல்லைக் கூறியவர் எப்படிப்பட்டவரோ? சொல்லுங்கள்' என்று வினவி ஆலோசனையைக்கொண்டபோது, வெற்றிபொருந்திய கொடியசேனையிலே முன்னணியிலிருந்தவர்க்கு உற்றதை மொழிகுவாம்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

'இராகவ! நீ சரண்' என்றுகூவியசொல் செவிப்பட்டபோது, 'இதனைக் கூறியவர் எப்படிப்பட்டவரோ? சொல்லுக' என்று வினவி அதனையறியவேணுமென்கின்ற எண்ணத்தோடு ஸ்ரீராமன் இருக்கையில், சேனையின் முன்னிடத்துள்ளார்க்குள் நிகழ்ந்ததைக் கூறுவோமென்று கவி கூறுகின்றாரென்க. இச்செய்யுளில் 'வயவெஞ்சேனையின்...மொழிகுவாமரோ' என்பது - கவிக்கூற்று. மந்தணம்-மந்த்ரணம்: ஆலோசனை யென்பது, பொருள். மூன்றாமடி 'வந்தனர் முடிவிலாவயங்குதானையின்' என்று சிலபிரதியில். பி-ம்:—1தந்தனர். 2மந்திரமுற்றுழி, வந்தனருற்றிழி. 3வயங்கு. 4முந்தவர்க்கு. 5உற்றது.

கஎ.—வந்தவிபீஷணனைக்கண்டு சேனையில் முன்புறத்துநின்ற வானரங்கள் அதட்டிப் பலபடி கூறியவற்றை இதுமுதல் ஐந்துகவிகள் கூறும்.

முற்றிய 1குரிசிலை முழங்கு 2தானையின்
3உற்றனர் நிருதர்வந் தென்ன வொன்றினர்
எற்றுதிர் பற்றுதி 4rெறிதி ரென்றிடை
சுற்றின ருருமெனத் 5தெழிக்குஞ் சொல்லினார்.

(இ-ள்.) வந்துசேர்ந்த ஆண்களிற் சிறந்தவனான விபீஷணனை (க்கண்டு), 'ஒலிக்கின்ற சேனையிலே அரக்கர் வந்துசேர்ந்துள்ளார்' என்று (யாவரும்) ஒன்றுகூடியவராய்,—'(வந்த இந்த அரக்கர்களைப்) பிடித்துக்கொள்ளுங்கள்: மோதுங்கள்: (ஆயுதங்களை) வீசியெறியுங்கள்' என்றுசொல்லிக்கொண்டு, இடி

போலப் பேரொலிதோன்ற அதட்டுகின்ற சொல்லையுடையவர்களாய், அவ்வி டத்தில் (அவர்களைச்) சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று.)

'கிருதர்' என்று பன்மை வந்ததனால், விபீஷணனைக் கூறியது அவனது துணைவர்க்கும் உபலட்சணமென்பது, பெறப்படும். அரக்கர்கள் வந்தமை யாற் கலங்கிய வானரவீரர் திரண்டு அதட்டியவண்ணம் அவர்களைச் சூழ்ந்து கொண்டன ரென்க. பி-ம்:—[1]குருசிலும். [2]தானையுள், தானையர். [3]உற்றுளர். [4]எறிமின். [5]தொனிக்கும். (௩௪௩.)

௩௮. தந்தது [1]தருமமே கொணர்ந்து [2]தானிவன்
வெந்தொழிற் றீவினை [3]பயந்த [4]மெய்ம்மையான்
வந்தன னிலங்கையர் [5]மன்ன னுருநஞ்
சிந்தனை [6]முடிந்தன வென்னுஞ் [7]சிந்தையார்.

(இ - ள்.) 'தருமதேவதையே (இவனை இங்குக்) கொண்டு கொடுத்தது; இவன் (தன்னுடைய) கொடுந்தொழிலான பாவம் விளைத்த உண்மையான பயனால் வந்தவனாகிய இலங்கை மன்னவனாவான்: (ஆதலால்), நமது கருத் துக்கள் முடிந்திட்டன' என்று கருதுகின்ற எண்ணமுடையராயினர், (அவ் வானர சேனையிற் சிலர்); (எ - று.)

தருமதேவதை பிடித்துக்கொண்டு வந்துவிட, மகாபாவியாகிய இராவ ணன் நாமுள்ளஇடத்திற்கு வலுவில் தானே வந்திட்டான்: இனி, நாம் கருதியபடி இவனை முடித்துவிடலாமென்று வானரரிற் சிலர்கருதினரென்க. சிந்தனை-கவலைகள் என்பாரு முளர். பி-ம்:—[1]கருமமே. [2]தானெனு. [3]உந்த. [4]மேன்மையால், வெம்மையால். [5]மன்னனாதலின், மன்னனுமென. [6]முடிந் தனன். [7]செய்கையார், செய்கையான். (௩௪௪)

௩௯. இருபது கரந்தலை யீரைந் [1]தென்னுமத்
திருவிலிக் கன்னவை [2]சிதைந்த வோவென்பார்
பொருதொழி [3]லெம்மொடும் [4]பொருதி [5]போரென்பார்
ஒருவரி னொருவர்[6]சென் றுறுக்கி யூன்றுவார்.

(இ - ள்.) 'இருபதுகைகளும் பத்துத்தலைகளும் (பெற்றவன்) என் கின்ற அந்தப்பாக்கியவீனனுக்கு அந்தப் பத்துத்தலைகளும் இருபதுகைகளும் அழிந்தனவோ?'என்றுசொல்லுபவர்களும்,'போர்த்தொழிலையுடைய எம்முட னேபோர் செய்வாய்' என்றுசொல்பவர்களுமாகி,ஒருத்தரினும் ஒருத்தர் முற் பட்டுச்சென்று கோபித்துச் (சிலர்) எதிர்ப்பார்கள்; (எ - று.)

'இருபது கரந்தலையீரைந்தென்னு மத்திருவிலி' என்ற தொடர், திருவவ தாரப்படலத்திலும் வந்துள்ளது. பி-ம்:—[1]என்பரித், என்பரத். [2]சிறந்தவோ. [3]என்னொடும், [4]பொருதிர். [5]போர்த்தென. [6]முன். (௩௪௫)

௪௦. [1]பற்றினஞ் [2]சிறையிடை வைத்துப் பாருடைக்
கொற்றவர்க் [3]குணர்த்துது மென்று கூறுவார்
எற்றுவ தன்றியே யிவனைக் கண்டிறை
[4]நிற்றலென் பிறிதென [5]நெருக்கி [6]நேர்குவார்.

(இ - ள்.) (மற்றுஞ் சிலர், 'இவனைப்) பிடித்துச் சிறையிலே வைத்து, உலகத்திற்கெல்லாந் தலைவராகிய வெற்றிபொருந்திய ஸ்ரீராமர்க்கு அறிவிப்போம்' என்று கூறுவார்; 'மோதவேண்டுமேயல்லாது (செய்யவேண்டியசெயலுக்கு) வேறாக, இவனைப்பார்த்துக்கொண்டு தாமதத்துடன் நிற்பது எதற்காக?' என்று சொல்லி நெருக்கி எதிர்ப்பார்கள்; (எ - று.)—எற்றுவது-காலாலுதைப்பது என்பாருமுளர். பி-ம்:—[1]பற்றிநம், பற்றிநாம். [2]சிறையிட. [3]உணர்த்துவது. [4]நிற்றிலென். [5]நெருங்கி. [6]நோக்குவார், நேர்வரால். (௫௬௬)

௪௧. இமைப்பதன் [1]முன்விசும் பெழுந்து [2]போயபின்
அமைப்பதென் பிறிதிவ ரரக்க ரல்லரோ
சமைப்பது கொலை[3]யலாற் றக்க தியாவதோ
குமைப்பது நலனென [4]முடுகிக் கூறினார்.

(இ - ள்.) (மற்றுஞ் சிலர்),—'கண்ணிமைப்பதற்கு முன்னே வானத்திலே கிளம்பி (இவன்) போனபிறகு, வேறாகச்செய்வது யாதுஉளது? இவர்கள் ராக்ஷசரல்லரோ? (நாம் இவர் விஷயத்திற்) செய்யவேண்டியது கொலையேயல்லாமல், பொருந்திய வேறு செயல் யாதோ? [ஒன்றுமில்லையென்றபடி]: (இவனை) உருத்தெரியாமற்சிதைப்பது நலம்' என்றுவிரைந்துகூறினார்கள்.

'இவரரக்கரல்லரோ' என்ற வாக்கியம், 'திடீரென இவர் வானத்து எழுந்து செல்லக்கூடும்' என்ற பொருளைச் சமர்த்திக்கும்: ஆகவே, இச்செய்யுளின் முன்னிரண்டடி - தொடர்நிலைச்செய்யுட்குறிப்பணி. இவர் ஓடிவிடுவதற்கு முன் இவரைப்பற்றிக் குமைத்துக் கொன்றுவிடவேண்டுமென்று சிலர் முடுகிக்கூறினரென்க. பி-ம்:—[1]முனம். [2]போமிவர், போமவர். [3]எனத்தகுவது. [4]முடுக்கிக்கூறுவார். (௫௬௭)

௪௨.—வானரர்செய லிவ்வாறு, மைந்ததுவிவிதர் அநுமனேவலால் அந்த முன்னணிக்கு வருதல்.

[1]இயைந்தன [2]வியைந்தன வினைய கூறலும்
மயிந்தனுந் [3]துமிந்தனு மென்னு மாண்பினார்
அயிந்திர [4]நிறைந்தவ னாணை [5]யேவலால்
நயந்தெரி காவல [6]ரிருவர் நண்ணினார்.

(இ - ள்.) (முன்னணியிலிருந்த வானரர், தம்) மனத்திற்குப்பொருந்திய பலவகையான இவ்வாறான வார்த்தைகளைச் சொல்லுகையில்,—நீதிமுறையறிந்த காவலாளிகளான மைந்தன் துவிவிதன் என்ற மாட்சிமையுடைய இருவானரர்கள், ஐந்திரவியாகரணமுற்றுங் கற்றுணர்ந்த அநுமானுடைய கட்டளையான ஏவலினாலே (அங்கு வந்து) சேர்ந்தனர்; (எ - று.)

மயிந்தன் = மைந்தன்: துமிந்தன் = த்விவிதன்: இவர்கள் அசுவினீதேவர்களென்னும் இரட்டையரின் குமாரராய்த் தோன்றியவர்கள். ஸ்ரீராமன் துணைவரின்முகத்தைநோக்கி 'வந்தவர்எனைவரோ? சாற்றுமின்' என, மந்துணைமுற்றுழி, அதனையநுசரித்து, அநுமான், சேய்மையிலிருந்துநிகழ்வதுகண்டு, வானரர்கள் விபீஷணனை ஒன்றுஞ் செய்யாதிருக்கும்படி விலக்கி வந்தவர் நிலையைக் கண்டுவரச் சொல்லினனாகஅதற்கு ஏற்பமைந்ததுவிவிதர்கள் நண்

ணினு ரென்க. ஐந்த்ரமென்ற வடசொல் - இந்திரனுலியற்றப்பட்டதென்று பொருள்படும். தெய்வத்தன்மைவாய்ந்த வானரங்களாதலால், உயர்திணையாற் கூறப்படுகின்றனர். ஆணை - ஆஜ்ஞா: வடசொற்சிதைவு. பி-ம்:—[1]இயைந்தனர். [2]இசைந்தன, இயைந்தனர். [3]துவிந்தனும். [4]இயைந்திவர். [5]ஏவலார். [6]நால்வர். (௫௪௮)

௪௫.—வந்த மைந்த துவிவிதர் விபீஷணதியரின்அருகே சேர்தல்.

விலக்கினர் படைஞரை வேத நீதிநூல்
இலக்கண நோக்கிய[1] வியல்ப ரெய்தினர்
சலக்குறி யிலரென[2] வருகு சார்ந்தனர்
புலக்குறி [3]யறநெறி பொருந்த நோக்கினர்.

(இ - ள்.) வேதநூல்களிலும் நீதிநூல்களிலும் (இன்னர் இன்னபடியிருப்பர்என்று கூறிய)இலக்கணங்களை யறிந்த தன்மையையுடையரான வந்தவர்களாகிய அந்த மைந்த துவிவிதர்,—படையிலுள்ள வானரவீரரை விலக்கி, விவேகத்தினால் உணரத்தக்க தருமமார்க்கம் (அந்தவிபீஷணதியரான அரக்கரிடத்துப்) பொருந்துதலைக் கண்டவர்களாய், '(இவ்வரக்கர்கள்) வஞ்சனைக் குறியை (த் தம்மிடத்து) உடையவர்களல்லர்' என்று (அந்தவிபீஷணதியருடைய) சமீபத்திலே சேர்ந்தார்கள்; (எ - று.)

நூலிற்கூறியமுறைப்படி ஆராய்ந்து 'இன்னர் இப்படிப்பட்டவர்' என விவேகித்து அறியும் இயல்பையுடையவரான அந்த மைந்ததுவிவிதர், வந்துள்ள விபீஷணதியரான அரக்கரிடத்துத் தருமம்பொருந்தியுள்ளதைக் குறிப்பினுலுணர்ந்து, அவ்விபீஷணதியரை வருத்துமாறு முயலும் வானரர்களை விலக்கி அவருடைய அருகே சார்ந்தனரென்க. அங்கங்களின் அமைப்பிலிருந்து அவரவருடைய குணதிசயங்களை யறியலாமென்பதையுணரத்தக்கது. பி-ம்:—[1]இயல்பின், வியவர். [2]மருங்கு. [3]ஒருநெறி, அறிநெறி, உண்மையில். (௫௪௯)

௪௬.—மைந்தனென்ற வானரன் அவ்வரக்கர்களை விசாரித்தல்.

யா[1]ரிவ ணெய்திய கருமம் யாவது
[2]போரது புரிதிரோ புறத்தொ ரெண்ணமோ
சார்புற[3]நின்றநீர் சமைந்த வாறெலாஞ்
சோர்விலீர் [4]மெய்ம்முறை சொல்லு வீரென்றான்.

(இ - ள்.) (சேர்ந்த மைந்ததுவிவிதரில் மயிந்தனென்றவானரவீரன்),—'(நீவிர்) யார்? (நீங்கள்) இங்குவந்த செயல் எதுபற்றி? (எங்களுடன்) போர் செய்யப்போகின்றீர்களோ?(போர்புரிவதனினும்)வேறாக [சமாதானஞ்செய்துகொள்ள] ஒரு எண்ணத்துடன்வந்தீர்களா? (வானரங்களாகிய நாங்கள்)சார்ந்துள்ள இடத்திலேபொருந்தநின்ற நீர் எண்ணியுள்ள வகைகளையெல்லாம் ஒளிப்பது இல்லாமல் உண்மையாகச்சொல்லுக' என்றுவினவினான்;(எ-று.)—"மயிந்தனுமவ்வுரை" என வருவதனால், வினவியறிந்தவன் மயிந்தனென்பது பெறப்படும். சமைந்தன - மனத்திலமைந்துள்ளவற்றையென்றபடி. பி-ம்:—[1]இவண், இவர். [2]போர்புரி தொழிலதோ. [3]எண்ணி. [4]மெய்ம்மையே. (௫௫௦)

சரு.—இதுமுதல்நான்குகவிகள் - ஒருதொடர்: அனலனென்ற துணைவன் விடையளித்ததைத் தெரிவிக்கும்.

பகலவன் வழிமுதற் பாரி நாயகன்
[1]புகலவன் கழலடைந் துய்யப் போந்தனன்
தகவுறு சிந்தையன் றரும நீதியன்
மகன்மகன் மைந்தனன் முகற்கு [2]வாய்மையான்.

(இ - ள்.) நற்குணம்நிறைந்த நெஞ்சத்தையுடையவனும் தருமவழிதவறாத ஒழுக்கமுடையவனும் உண்மையையுடையவனும் பிரமதேவனுக்குப் பேரனுடைய புதல்வனுமான விபீஷணன்,—சூரியவமிசத்தில் முதன்மைபெற்றவனும் பூமிக்குத் தலைவனுமான அந்தஸ்ரீராமபிரானுடைய திருவடிகளைச் சரணமாக அடைந்து ஈடேறும்பொருட்டு வந்துள்ளான்; (எ - று.)

பிரமனுடைய குமரன் - புலஸ்த்யன்: அவனுடைய மகன் - விசிரவசு: விசிரவசின் மைந்தன் - விபீஷணன். முதல் - முதன்மைபெற்றவனுக்கு ஆகுபெயர். இச்செய்யுள்கள் - அனலனென்ற மந்திரியின் மொழியென்பது-சஅ-ஆங்கவியில் விளங்கும். புகலவன் என்று எடுத்து-சரணமாக இருப்பவனென்னுமாம். பி-ம்:—[1]புகலரும். [2]வாய்மையால். (ருருக)

சசு. அறநிலை [1]வழாமையு மாதி மூர்த்திபால்
நிறை[2]வரு நேயமு நின்ற வாய்மையும்
மறையவர்க் கன்புமென் றினைய [3]மாமலர்
இறையவன் றரநெடுந் தவத்தி னெய்தினான்.

(இ - ள்.) தருமமார்க்கத்திலிருந்து தவறாமையும் முதற்கடவுளாகிய திருமாலினிடத்து நிறைந்துள்ள பக்தியும் சத்தியந்தவறாமையும் பிராமணர்களிடத்து விசுவாசமும் என்ற இவைகளை, (தனது) பெருந்தவத்தின் பயனாகச் சிறந்ததாமரைமலரிலே தங்கியிருக்குங் கடவுளாகிய பிரமதேவன் (வரமாகத்) தந்ததனால், இவன் அடைந்தான்; (எ - று.)

அரக்கர்குலத்துப்பிறந்தும், விபீஷணனுக்கு நற்குணங்கள் அமைந்ததற்குக் காரணங் காட்டியவாறு. என்றினைய-தொகுத்தல். பி-ம்:—[1]வழாமலும். [2]பெரு, தரு. [3]யாவையும். (ருருஉ)

சஎ. சுடுதியைத் துகிலிடைப் [1]பொதிந்து துன்மதி
இடுதியே சிறையிடை [2]யிறைவன் றேவியை
விடுதியே லுய்குதி விடாது [3]வேட்டியேற்
படுதியென் [4]றுறுதிகள் பலவும் [5]பன்னினான்.

(இ - ள்.) 'துர்ப்புத்தியுடையவனே! சுடுகின்ற தீயை ஆடைக்குள் மூடி வைத்துச் சிறையிலே (யாவர்க்குந்) தலைவனான ஸ்ரீராமனுடையமனைவியை வைத்திருக்கின்றாயே!(இப்போது சீதையைச் சிறையினின்று)விட்டிடுவாயானால் பிழைத்திடுவாய்; விட்டிடாமல் (அவளை) விரும்புவாயானால், இறந்தொழிவாய்' என்று நன்மைதரக்கூடிய பலசொற்களையும் (இராவணனுக்கு) விரிவாகச்சொன்னான், (இவன்); (எ - று.)

இச்செய்யுளினால் விபீஷணன் இராவணனுக்கு உறுதிமொழிகூறியதைத் தெரிவிக்கின்றான்: அங்ஙனம்கூறியதே இராவணன் இவ்விபீஷணனைத் துறத்தற்குக் காரண மென்று மேலே கூறுவன். சீதையைச் சிறையிடைவைத்தது, துகிலிடைத்தீயைப் பொதிந்துவைத்ததனோடொக்குமென்ற கருத்தை, உபமான உபமேயங்கட்கு ஐக்கியம்பட 'துகிலிடைத்தீயைப்பொதிந்து சீதையைச் சிறையிடையிடுதிஎன்றது - காட்சியணியாம். தியை-தீயை: விகாரம். பி-ம்:—[1]பொதியும், பொதிந்த. [2]இராமன். [3]வைத்தியேல். [4]இவைநனி, உறுபொருள். [5]சொல்லினான். (ருநரு)

சஅ. மறந்தரு [1]சிந்தையன் மதியி னீங்கினான்
பிறந்தனை [2]பின்பதிற் பிழைத்தி [3]போகுதி
இறந்தனை நிற்றியே [4]லென்ன [5]வின்னவன்
துறந்தன னெனவிரித் தனலன் சொல்லினான்.

(இ - ள்.) அதருமத்தைக்கொண்ட நெஞ்சத்தையுடையவனும் நல்லறிவு நீங்கப்பெற்றவனுமான இராவணன், (இந்தவிபீஷணன் கூறியஉறுதிமொழி கேட்டு),— 'தம்பியாகப்பிறந்திட்டாய்: அதனால், பிழைத்திருக்கிறாய்; (என்னிடத்தை) விட்டுப்போவாய்; (இங்கு) நிற்பாயானால், செத்தாய்'என்று சொல்லிவிடவே,—இந்தவிபீஷணன், (அவ்விராவணனை) விட்டுத்துறந்தானென்று விவரித்து அனலனென்ற மந்திரி விடை கூறினான்; (எ - று.)

'என்தம்பியென்று உன்னைக்கொல்லாதுவிட்டேன்: அப்பாற்போய்விடு; இங்குத்தானே நிற்பாயாயின் தம்பியென்றம்பாராது உன்னைக்கொன்றுவிடுவேன்' என்று இராவணன் கூறிவிட்டதனால், அவனைத் துறக்கவேண்டியதாயிற்றென்று, விபீஷணன் இராவணனைத் துறந்த காரணத்தைக் கூறினானென்க. இறந்தனை-துணிவினால்வந்த காலவழுவமைதி. பி-ம்:—[1]சிந்தையே. [2]இன்பதில், இன்பத்தில். [3]போகுதி, போதிநீ. [4]என்று. [5]மன்னவன், இராவணன். (ருருசு)

சகூ.—பகைஞர்க்கு இடங்கொடாமலிருக்கும்படிசொல்லி மயிந்தன் இராமனுக்குச்செய்தி தெரிவிக்கச் செல்லுதல்.

மயிந்தனு மவ்வுரை மனத்து [1]வைத்துநீ
[2]இயைந்தது நாயகற் [3]கியம்பு வேனெனாப்
பெயர்ந்தனன் [4]றம்பியும் பெயர்வில் சேனையும்
[5]அயர்ந்திலிர் [6]காமினென் றமைவ தாக்கியே.

(இ - ள்.) மயிந்தனும் அந்த (அனலன்கூறிய) வார்த்தைகளைத் (தன்) மனத்திற்கொண்டு, '(என்) தம்பியும், நிலைபெயர்தலில்லாத [அஞ்சாதுஉறுதியாயிருக்கின்ற]சேனையும்சோர்வில்லாதவர்களாய்ப்பாதுகாத்துக்கொண்டிருங்கள்' என்றுசொல்லி (அவ்வானரசேனைகளையெல்லாம்) அமர்ந்திருக்கும்படி செய்து,—(அனலனைநோக்கி), 'நீ மனமொத்துச்சொல்லியதைத் தலைவனாகிய இராமபிரானுக்குச்சொல்லுவேன்' என்றுசொல்லி (இராமபிரானுள்ள இடம் நோக்கிப்) புறப்பட்டான்; (எ - று.)—தம்பியும் சேனையும் காமின்-இடவழுவமைதி. பி-ம்:—[1]வைத்திவை, வைத்தினி. [2]இயைந்தன. [3]இயம்புவாயெனப்,

[4]துமிந்தனும், [5]அயர்ந்திடல், இயைந்துடன், மயங்கலில், [6]கோவலினமைதி, காவலென்றமைவது, சாவனின்றியைவது. (௬௫௫)

௫௦.—மயிந்தன் இராமபிரானைச்சேர்ந்து அடிவணங்குதல்.

தருமமு ஞானமுந் தவமும் வேலியாய்
[1]மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க்
கருணையங் கோயிலு ளிருந்த கண்ணனை
அருணெறி யெய்திச்சென் றடிவ ணங்கினான்.

(இ - ள்.) தருமம் ஞானம் தவம் இவை வேலியாகவும், பொருந்தியபெருமையும் பொறுமையும் வாயிலாகவும் (அமைய), கருணையாகிய கோயிலுக்குள்ளேயிருந்த கண்ணழகுடையவனை, அருளிப்பாட்டை முறைமையாற்பெற்றுக் கிட்டிச்சென்று, (அப்பிரானது) திருவடிகளில்விழுந்து நமஸ்கரித்தான், (மயிந்தன்). (எ - று.)

இராமபிரான் கருணாமூர்த்தி யென்பதும், அப்பிரானிடத்துத் தருமம் முதலியன விஞ்சியிருப்பது எப்போதும் அப்பிரானைக் கருணைக்குள் நிற்குமாறு செய்வதென்பதும், பெருமை பொறையென்கின்ற குணங்களை முன்னிட்டே அப்பிரானுடைய கருணை வெளிப்படுகின்றதென்பதும் விளங்க, தருமம் முதலியவற்றை வேலிமுதலியனவாக உருவகஞ்செய்தார்; உருவகவணி. இராமபிரான் கருணாமூர்த்தியென்பதை இங்குக் கவி விளக்கிய நயம் பாராட்டத்தக்கது. "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்ற நம்மாழ்வாரது அருளிச்செயலுக்கு ஏற்ப, 'கண்ணன்' என்பதற்கு-யாவர்க்குங்கண்ணாயிருப்பவனென்று உரைப்பினுமாம். இனி, க்ருஷ்ணன் என்பது கண்ணன் எனச் சிதைந்து வந்ததென்றுகொள்ளுதலும் உண்டு; க்ருஷ்ணனென்பது திருமாலின் ஓரவதாரத்துச் சிறப்பாகவழங்கும் பெயராவதன்றி, திருமாலுக்குப் பொதுப்பெயராகவும் வழங்கும் வடசொல்: தன்வடிவழகால் எவரையும் கவர்பவனென்றும், கருநிறமுடையவனென்றும் பொருள்படும். பெரியோர் தம்முடைய சந்நிதானத்தில் வரலாமென்றுகியமித்தலை அருளிப்பாடு என்று வழங்குதல், ஒருமரபு. பி-ம்:—[1]பொருவருங் கேள்வியும்.

௫௧.—மயிந்தன் 'ஒன்று சொல்லவேண்டும்' என்ன,
ஸ்ரீராமன் சொல்லுமாறு அநுமதிதருதல்.

உண்டுரை புணர்த்துவ தாழி யாயெனப்
புண்டரீ கத்தடம் [1]புரையும் பூட்சியான்
மண்டிலச் சடைமுடி [2]துளக்கி [3]வாய்மையாய்
கண்டதுங் கேட்டதுங் [4]கழறு வாயென்றான்.

(இ - ள்.) 'யுகாந்தகாலத்திலும் அழியாதிருப்பவனே! அறிவிக்கவேண்டியதான வார்த்தையொன்று உண்டு' என்று (மயிந்தன்) சொல்ல, தாமரைத் தடாகம்போன்ற திருமேனியைப் படைத்தவனாகிய ஸ்ரீராமபிரான், வட்டமாகிய சடையையுடைய தலையை (உடன்பாடுதோன்ற) அசைத்து, 'உண்மை

யுடையோனே! (நேரிற்) கண்டதையும் கேள்வியுற்றதையும் சொல்வாய்' என்று வினவினான்; (எ - று.)

அநுமான் மைந்த துவிவிதரை நிகழ்ந்ததையுணர்ந்துவருமாறு ஏவியதை யறிந்துள்ளா னாதலால், இராமபிரான், 'கண்டதும் கேட்டதும் கழறுவாய்' என்றான். திருமாலின் திருமேனி தாமரைத்தடாகம்போலு மென்பதை "மாயக் கூத்தாவாமனா வினையேன்கண்ணா கண்கைகால், தூயசெய்யமலர்களாச்சோ திச்செவ்வாய் முகிழதாச், சாயச்சாமத்திருமேனித் தண்பாசடையாத் தாமரை நீள், வாசத்தடம்போல் வருவானே யொருநாள் காணவாராயே" என்ற ஆழ்வார்பாசுரத்திலும் காண்க. ஊழியாய் - நீதிநூல்முறைக்கு வழுவாது நடப்பவனே! எனினுமாம். பூட்சி-திருமேனி. பி-ம்:—1புரைகட்புங்கவன். 2துளக்க. 3வாய்மையால். 4கழறன்மேயினான். (௩௫௭)

௫௨.—இதுமுதல் ஆறுகவிகள்-ஒருதொடர்: மயிந்தன் தான் கண்டதனையும் கேட்டதனையும் தெரிவித்தலைக் கூறும்.

1விளைவினை 2யறிந்திலம் 3வீட ணப்பெயர்
4நளிர்மலர்க் கையின னால்வ ரோடுடன்
5களவியல் வஞ்சனை யிலங்கைக் காவலற்கு
6இளவனஞ் சேனையி னடுவ ணெய்தினான்.

(இ - ள்.) (முடிவில்) என்ன விளையுமோ அஃது எமக்குத் தெரியாது; உடன்பிறந்த களவுத்தொழிலோடு பொருந்திய வஞ்சனைக் குணத்தையுடைய இலங்கைக்கு அரசனாகிய இராவணனுடைய தம்பியான விபீஷணனென்று பெயர்பூண்ட குளிர்ந்ததாமரைமலர்போன்ற கைகளையுடையவன் நமதுசேனையின் நடுவிலே (தனது மந்திரிமார்) நால்வருடனே வந்து சேர்ந்தான்; (எ-று.)

இதுவும் அடுத்தகவியும் - மயிந்தன் தான் நேரே கண்டதைக் கூறுவன. 'களவியல் வஞ்சனையிலங்கைக்காவலற்கு இளவல்' என்று விபீஷணனைக் கூறுவதனால், 'அந்த விபீஷணன் தேறுதற்கு உரியனோ? அல்லனோ?' என்று தனக்கு ஐயம் உள்ளதைப் புலப்படுத்தியவாறு; இது பற்றியே, 'விளைவினையறிந்திலம்' என்றதும். அறிந்திலம் என்ற பன்மை துவிவிதனையும் உளப்படுத்தியதென்னலாம். பி-ம்:—1விளைவினி. 2அறிந்திலன். 3வீடணன். 4நளிமலையாக்கையன், நளிமலையாக்கையர், நளிபுனையாக்கையன், நளிமலரரக்கர்கள். 5களவுசெய். 6இளையவன். (௩௫௮)

௫௩. கொல்லுமின் பற்றுமி 1னென்னுங் கொள்கையாற்
பல்பெருந் தானைசென் றடர்க்கப் பார்த்தி2யான்
நில்லுமி னென்ற3நீர் யாவிர் 4நுங்கிலை
5சொல்லுமி னென்னவோர் துணைவன் சொல்லினான்.

(இ - ள்.) (வந்த இந்த அரக்கர்களை),—'கொல்லுங்கள்; கெட்டியாகப் பிடித்துக்கொள்ளுங்கள்' என்கின்ற பலவானபெரியசேனை (வந்த அவர்களைக்) கிட்டிக் கருத்தோடு நெருக்கப்புக, (அப்போது) யான் பார்த்து விலகியிருங்களென்றுசொல்லி (அடர்க்கப்புகுந்த சேனையைவிலக்கி), 'நீர் யாவிர்? உம்மு

டைய நிலைமையைச்சொல்லுங்கள்' என்றுவினவ,(அந்த விபீஷணனது) துணைவர்களுள் ஒருத்தன், (பின்வருமாறு) சொல்லலானான்; (எ - று.)—விபீஷணனுடைய துணைவன் சொன்னதை, மேல் நான்குகவிகளில் மயிந்தன் அநுவதித்துக்கூறுவது காண்க. இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை. பி-ம்:—[1]என்ற. [2]யாம். [3]நீ யாரை, நீயாவன். [4]நின்னிலை, இன்னிலை. [5]சொல்லுதி. (ருடுக)

ருச. முரண்[1]புகு தீவினை முடித்த [2]முன்னவன்
கரண்புகு சூழலே [3]சூழக் [4]காண்பதோர்
அரண்பிறி தில்லென [5]வருளின் வேலையைச்
சரண்[6]புகுந் தனனென முன்னஞ் சாற்றினான்.

(இ - ள்.) '(விபீஷணனென்றஇவன்), மாறுபாடுபொருந்திய தீத்தொழிலைச்செய்துதீர்த்த (தன்) தமையனான இராவணன் (தன்) மனம்சென்ற வழியே சென்றதனால், (தான்) கண்டு அடைதற்கு உரிய ஒப்பற்ற பாதுகாவலான இடம்(இராமபிரானுடைய திருவடிகளைக்காட்டிலும்)வேறொன்றுஇல்லையென்ற காரணத்தால்,கருணைக்கடலான அந்த ஸ்ரீராமனைச் சரண்புகுந்தனன்' என முன்னம் கூறினான்; (எ - று.)

இதனால், தான் செய்தி விசாரித்ததில், சேனையினிடம் வந்துள்ள காரணம் இன்னதென்று அந்தவிபீஷணனுடையதுணைவன் முதன்முதலிற்கூறியதைத் தெரிவிக்கின்றான் மைந்தனென்பவனென்க. கரண்-கரணம்: அந்தக்கரணம். 'இராவணன் தன்மனத்தின்படி நடப்பின் இவ்விபீஷணன் இங்கு வருவானேன்?' என்றுதோன்றும் ஆசங்கைக்கு அத்துணைவன் பின்னர் விடையிறுத்தது, மேல் மூன்றுகவிகளால் அநுவதிக்கப்படும். பி-ம்:—[1]புகும். [2]முன்னவற்கரண், முன்னவன்கரன். [3]புகுதக், காணக், காணும். [4]காப்பதோர். [5]அருளிச்செல்வனை. [6]புகுந்தேன், புகுந்தான். (ருசு0)

ருரு. ஆயவன் றருமமு மாதி [1]மூர்த்திபால்
மேயதோர் சிந்தையு [2]மெய்யும் வேதியர்
நாயகன் [3]றரநெடுந் தவத்தி [4]னண்ணினன்
தூயவ னென்பதோர் பொருளுஞ் சொல்லினான்.

(இ - ள்.) மிகப்பரிசுத்தனான அந்த விபீஷணன் அறத்தின்வழியே நடத்தலையும் முதல்மூர்த்தியாகிய திருமாலினிடத்தில் பொருந்திய சிந்தனையையும் சத்தியத்தையும், (தான் செய்த) பெருந்தவத்தின்பயனாக, அந்தணர்க்கெல்லாந்தலைவனான பிரமதேவன்(வரமாகக்)கொடுக்கப்பெற்றுள்ளான் என்பதான ஒரு விஷயத்தையும் சொல்லினான்; (எ - று.)

இதனால், அரக்கர்குலத்துப்பிறந்தும் அவ்விபீஷணனுக்கு, நல்லகுணம் ஏற்பட்டதற்குக் காரணங் காட்டியவாறாயிற்று.'தூயவன்ஆயவன்' என்றுஇயைக்க. பி-ம்:—[1]மூர்த்தியான். [2]மெய்ம்மை.[3]தருநெடுவரத்தை. [4]எய்தினான்.(ருசுக)

ருசு. கற்புடைத் தேவியை விடாது காத்தியேல்
எற்புடைக் [1]குன்றமா மிலங்கை யேழைநின்
பொற்புடை முடித்தலை புரளு மென்றொரு
நற்பொரு ளுணர்த்தினை னென்று நாட்டினான்.

(இ - ள்.) (அந்த விபீஷணன் இராவணனைநோக்கி), 'கற்பையுடைய தேவியை(ஸ்ரீராமபிரானிடம்) விடாமற் சிறையிலேயே வைத்திருப்பாயானால், இந்த இலங்காநகரமானது (அரக்கர்களின்) எலும்பினாலியன்ற மலையாக ஆய் விடும்: (அன்றியும்), அறிவில்லாதவனே! உன்னுடைய அழகையுடைய கிரீடத்தைக்கொண்ட தலையும்(பூமியிலே)புரளும்' என்று ஒரு நல்ல உபதேசத்தை யுணர்த்தினனென்பதையும்(அந்தவிபீஷணனுடைய துணைவன் என்னிடம்) தெரிவித்தான்; (எ - று.)—இதனால் இராவணன் மனத்துக்குப்பிடியாத நல்லுபதேசத்தை விபீஷணன் செய்ததைக் காட்டியவாறு. பி-ம்:—1குன்றும்.

௫௭. 1ஏங்தெழி லிராவண னினைய 2சொன்னநீ
சாங்தொழிற் குரியையென் சார்பு 3நிற்றியேல்
4ஆந்தினைப் 5பொழுதினி லகறி யாலெனப்
போந்தன னென்றனன் புகுந்த தீதென்றான்.

(இ - ள்.) பொருந்தியசெயற்கையழகையுடைய இராவணன், (அதுகேட்டு விபீஷணனை நோக்கி), 'இவ்வாறு (எனக்கு) மாறான வார்த்தைகளைச் சொன்ன நீ என்னுடையஇடத்தில் நிற்பாயேயானால் இறப்பதற்கு உரியவனாவாய்; பொருந்தியதினையவ்வளவு காலத்திற்குள்ளே (என்னுடைய இடத்தைவிட்டு) அப்பாற் செல்வாய்' என்று துரத்தினதை, (அவ்விடத்தைவிட்டு இங்கு அவ்விபீஷணன்) வந்துள்ளான் என்று (அந்த அனலன்) தெரிவித்தான்: நிகழ்ந்தது ஈது என்று (தான் கண்டதும் கேட்டதுமாகிய விஷயங்களை மைந்தனென்ற வானரன் இராமபிரானிடம்) தெரிவித்தான்; (எ - று.)

இதனால் இராவணன் விபீஷணனைத் துரத்தினமையால் அவன் புகலாக வந்தமையைத் தெரிவித்தவாறு. இங்ஙனம் தான் கண்டதையும், வந்தவர் முகமாகக் கேட்டதையும் ஸ்ரீராமனிடம் மயிந்தன் தெரிவித்தானென்க.பி-ம்:—1ஏங்தொழில். 2சொல்லி.3நின்றினி. 4ஆய்ந்திமைப், ஆந்தனைப். 5பொழுதினீய கறியாம். (௯௬௯)

௫௮.—ஸ்ரீராமன் தன் நண்பரை நோக்கி, 'வந்தவனைச் சேர்த்துக் கொள்வதா? விட்டிடுவதா? நும்கருத்து உரைமின்' எனல்.

அப்பொழு திராமனு 1மருகி னண்பரை
இப்பொருள் கேட்டநீ 2ரியம்பு வீரிவன்
கைப்புகற் பாலனோ கழியற் பாலனோ
ஒப்புற 3நோக்கிநும் முணர்வி னாலென்றான்.

(இ - ள்.) (மயிந்தன் வார்த்தையைக் கேட்ட) அப்போது,—இராமனும்,—(தன்)சமீபத்திலிருந்த சினேகிதரைநோக்கி, 'இப்போது நிகழ்ந்தசெய்தியை (இந்தமயிந்தன்கூறுகையிற்) கேட்டுக்கொண்டிருந்த நீர், 'இந்த விபீஷணன் நம்மிடத்துச் சேர்தற்கு உரியனோ? (நம்மிடத்தைவிட்டு) அப்பாற் சென்றிடுதற்கு உரியனோ? உமது அறிவினால் (மனத்திற்) பொருந்துதல்பெற நன்குஆராய்ந்து (நும்கருத்தில்தோன்றுவதைக்)கூறுங்கள்' என்றான்; (எ-று.)

ஆலோசனை கூறுமாறு ஸ்ரீராமன் சுக்கிரீவன்முதலிய நண்பரைக் கேட்டனனென்க. பி-ம்:—1அறிவினன்பரை, அருகுநண்பரை, அமருநண்பரை. 2இயம்புவீரனைக். 3நோக்குவீர், நோக்குநும், நோக்குறும். (௩௫௪)

௫௯.—சுக்கிரீவன் கூறத்தொடங்கினனெனல்.

தடமலர்க் கண்ணனைத் தடக்கை 1கூப்பிநின்று
இடனிது காலமீ தென்ன வெண்ணுவான்
கடனறி 2காவலன் கழறி னனரோ
சுடர்நெடு மணிமுடிச் சுக்கி ரீபனே.

(இ - ள்.) பெரிய தாமரைமலர்போன்ற கண்களையுடையவனான ஸ்ரீராமனைநோக்கி (த் தன்னுடைய) பெரிய கைகளைக் குவித்தவண்ணமிருந்து, (தன்) கடமையறிந்த வானராதிபதியாகிய ஒளிபொருந்திய நெடிய இரத்தின கிரீடந்தரித்த சுக்கிரீவன், 'இடன் இது, காலம் ஈது' என்று எண்ணுபவனாய்க் கூறலானான்; (எ - று.)—சுக்கிரீவன் கழறுவதை மேலிற் பத்துக் கவிகளிற் காண்க.

அரசர்க்குக்காலமறிதலும் இடனறிதலும் முக்கியமாதலால், வானரர்தலைவனான சுக்கிரீவன் இராவணன்தம்பியான விபீஷணன் தம்மைச்சார்ந்தகாலமும் வந்துசேர்ந்துள்ள இடமும் தக்கனவல்ல என்று தோன்றுவதால் அவை பற்றித் தன்மனத்துப்பட்டஆலோசனையைக் கூறலானானென்க. இடம்—நம்முடைய இடமல்லாமல் மாற்றான்நகரையணுகிய இடம்: காலம் - குணங்களை ஆராய்ந்து கொள்ளுதற்கு இடனில்லாமல் நெருக்கடியாயுள்ளகாலம்: பகைவர் பலவகைச்சூழ்ச்சியால்முயன்று எப்படியாவது நம்மைவெல்லவேணுமென்றுபார்க்குங்காலம் என இவ்வாறெல்லாம் எண்ணினன் சுக்கிரீவனென்க. கடனறிகாவலன் - காவலர்கடமையையுணர்ந்தவ னென்றபடி. 'இங்குவருபவர் யாவரும் பெண்ணாய்விடுக' என்ற பார்வதிசாபத்தினாற்பெண் வடிவமடைந்த ருக்ஷரஜஸ்என்ற வானரராசனது கழுத்தினழகைக்கண்டு காமுற்ற சூரியபகவானது அருளாற்பிறந்தவன் சுக்கிரீவன்: சுக்கிரீபன் = சுக்கிரீவன்: என்பது - அழகியகழுத்தையுடையவனென்று காரணப்பொருள்படும். பி-ம்:—1கூப்பினான். 2காதலன், சூழ்ச்சியின். (௩௫௫)

௬௦.—இதுமுதல் பன்னிரண்டு கவிகள் - ஒருதொடர்: சுக்கிரீவன் தன்கருத்தைக்கூறுதலைத் தெரிவிக்கும்.

நனிமுதல் வேதங்க 1ளான்கு நாமநூல்
மனுமுதல் யாவையும் வரம்பு கண்டநீ
2இனையன 3கேட்கவோ வெம்ம னோர்களை
வினவிய காரணம் 4விதிக்கு மேலுளாய்.

(இ - ள்.) விதிக்கும் மேம்பட்டிருப்பவனே! மிக்கமுதன்மைபெற்றுள்ள நான்குவேதங்களையும் பிரசித்த நூல்களாகிய மனு முதலிய எல்லாச்சாஸ்திரங்களையும் எல்லைகண்டுள்ள நீ எம்போலியரை வினவியகாரணம் இவ்விஷயங்களைக் கேட்டறிவதற்காகவோ? (எ - று.)

பிறரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டுவது சாமானியமானவர்க்கு ஏற்கும்: வேதசாஸ்திரங்களையெல்லாம் கரைகண்டுள்ள உன்போலியர்க்கு வினவி யறியவேண்டிய பொருள் இல்லை யாதலால், நீ எங்களை வினவியது எங்களைக்கேட்டு ஒன்றுஅறிந்துகொள்ளவேணுமென்ற எண்ணத்தினாலன்று: இவர்கள் மனநிலை எவ்வாறுஉள்ளது என்று பரிசோதித்தற்கேயாகுமென்ற படி. நாமம்-புகழ். விதிக்கு மேலுளாய்-உன்விருப்பின்படி எதையும் நடப்பிக்க வல்லாய் நீ என்றபடி. பி-ம்:—1நாளும். 2இனியன. 3கேட்டிகொல். 4விதியின்.

ருக. ஆயினும் விளம்புவ 1னருளி னாழியாய்
2ஏயின 3தாதலி னறிவிற் 4கேற்றவா
5தூயவென் றெண்ணினுந் 6துணிவன் றெண்ணினும்
மேயது 7கேட்டியால் விளைவு 8நோக்குவாய்.

(இ-ள்.) (எம்மைக்கேட்டுத்தெரிந்துகொள்ளவேண்டியது உனக்குஇல்லை) ஆனாலும் (நீ) ஏவினதாதலால் (என்னுடைய) அறிவிற்கு எட்டியவாறு விளம்புவன்: கருணைக்குக் கடல்போன்றவனே! (யான்கூறுவது), தூயது [மிகச்சிறந்த ஆலோசனை]என்று எண்ணினாலும், துணியத்தகுந்ததன்று என்று தள்ளிவிட்டாலும், (நான்) கருதுவதைக் கேட்பாய்; (கேட்டபின்பு), விளையக் கூடிய பயனைக்குறித்து (நீயே) ஆராய்ந்துகொள்வாய்; (எ - று.)

எம்மைகேட்டுத்துணியவேண்டியது எல்லாமுணர்ந்த உனக்கு இல்லை: அதனால் நான் சொல்லுவது அவசியமன்று: ஆயினும், பெரியோனான நீ இன்னதுசெய்யவேணுமென்று பணித்தால் அதனைத்தட்டுதல் முறையன்றாதலால் என்மனத்திற்குப் பட்டதைச் சொல்லுகிறேன்: நான் சொல்லிவிட்டேனென்று தாட்சிணியப்படாமல், நான் கூறுவதுகுற்றமோ? குணமோ? என்று ஆராய்ந்து பயனைநோக்கி உன்விருப்பின்படிசெய் என்று பூர்வபீடிகையாகச் சுக்கிரீவன் அடக்கங்கூறியவாறு. பின் 'மேயது' என வருவதனால், தூய-தூயது என்பதன் விகாரம். பி-ம்:—1அருளினையைநீ. 2ஏயெனக், ஏயின. 3காதலின், ஆதலென். 4ஏற்றன. 5தூயவன்றென்னினும். 6துணிவென்றெண்ணினும். 7கேட்டபின். 8கோடியால், கோடுவாய், நோக்கென்றான்.　　(௩௬எ)

ரு௨. வெம்முனை 1விளைதலி னன்று வேறொரு
சும்மையா னுயிர்கொளத் துணித லா2லன்று
தம்முனைத் துறந்தது தரும 3நீதியோ
4செம்மையி லரக்கரில் யாவர் சீரியோர்.

(இ - ள்.) (இந்தவிபீஷணன்)தனது தமையனான இராவணனை (இப்போது) விட்டுவந்தது, (தமையனோடு தனக்குக்) கொடும்போர் விளைந்ததனாலன்று: வேறொருபழிக்கத்தக்க செயலாலும் (அன்று); தன்னுயிரையேகொள்வதற்குத் துணிந்தமையாலும் அன்று;(ஆகையால் இவன் செயல்), தருமசாஸ்திரத்தின் ஒழுங்குக்கு ஏற்றதாகுமோ? நேர்மைக் குணமில்லாத அரக்கரில் சீரியோர் யாவர்?(எ - று.)

'இவ் விபீஷணன் தமையனை விட்டிட்டுவந்தா னென்பது, ஒருகுற்றமாகாது;நீ தமையனான வாலியை விட்டிட்டுச் சேர்ந்தாயல்லவா?'என்றுஎன்னைக்

குறித்துக்கருதலாம்;யான் விட்டுவந்ததற்கும் இவன் விட்டுவந்ததற்கும் மிக்க வேறுபாடு உண்டு. நான் எவ்வளவோ பணிந்தும் வாலியென்பவன் என்னைத் துரத்தித் துரத்தியடித்துப் போர் புரியலானான்; அன்றியும், என்னுடைய மனைவியைக் கவர்ந்துகொண்டு என்னையே கொல்லப் பார்த்திட்டான்; இவ்விபீஷணனுக்கோ அவ்வாறு ஒன்றுமில்லை. ஆதலால், இவன்வந்தது கள்ளத்தனமாக இருக்கலாகுமென்றே கருதுகிறேன்; அரக்கரில் நற்குணமுடையாரெவரையும் கண்டிராமையால் அரக்கர்க்குள்ள குணத்திற்குமாறானகுணமுடையவனென்று இவனைக் கொள்ளமுடியாதென்றவாறு. வேறொருசும்மையான்-வேறொருபெருந்தவறான காரியத்தைச் செய்ததனால் எனினுமாம்; என்றது-மகிஷாசுரனுடன்பொருமாறு பாதாளலோகத்திற்கு வாலி சென்றிருந்தபோது அவனைக்கொன்ற குருதி பிலத்துவாரத்தின்வழியாய்வெளிப்பட, வாலி கொல்லப்பட்டானாதலால் அந்தமகிஷாசுரன் ஒருகால் எம்மையும் கொல்வானோஎன்று கருதிப் பிலத்துவாரத்தை மலைகொண்டு அடைத்தமையாற் சொல்லுமாறு பகைகொண்டமை போன்றதைக் குறிக்குமென்னலாம். பி-ம்:—[1]விளைத்தலாலன்று, விளைத்தலினன்று. [2]அன்றே. [3]நீதியோய். [4]செம்மையால். (௩௬௮)

௯௩. [1]தகையுறு தம்முனைத் தாயைத் தந்தையை
[2]மிகையுறு குரவரை யுலகின் [3]வேந்தனைப்
பகையுற வருதலுந் துறந்த பண்[4]பிது
நகையுற [5]லன்றியும் நயக்கற் பாலதோ..

(இ - ள்.) பெருமைபொருந்திய தமையனையும், தாயையும், தந்தையையும், மேம்பாடுபொருந்திய ஆசிரியன்மாரையும், உலகிற்குத்தலைவனாகிய அரசனையும், (அவர்கட்குப்) பகையாயினார் நெருங்கவந்தவுடனே, கைவிடுதலென்கின்ற இந்தக்குணமானது,—(தகாத செயலென்று) எள்ளனஞ்செய்வதற்கு உரியதல்லாமலும் விரும்பியேற்றுக்கொள்ளத் தக்கதாகுமோ? (எ - று.)

தகாதசெயலைச் செய்தவனை ஏற்றுக்கொள்ளலாகாதென்பதுகருத்து. முன்னிரண்டடிகளிற் கூறப்பட்டவர்-ஐங்குரவரெனப்படுவர். பி-ம்:—[1]தகைவுறு. [2]மிகையறு. [3]வேந்தரை. [4]அது. [5]அன்றியே. (௩௬௯)

௯௪. [1]வேண்டுழி [2]யினியன [3]விளம்பி வெம்முனை
பூண்டுழி யஞ்சி[4]யே செருவிற் புக்குடன்
[5]மாண்டொழி லன்றிநம் மருங்கு வந்தவன்
ஆண்டொழி லுலகினுக் காணி யா[6]மன்றே.

(இ - ள்.) (அண்ணனால் தனக்குக் காரியம்) ஆகவேண்டியகாலத்தில் இனியவார்த்தைகளைச் சொல்லிவிட்டுக் கொடும்போர்நேர்ந்தபோது போரிற் புக்குஉடன்மாளுந்தொழிலை மேற்கொள்ளாமல் அஞ்சி நம்பக்கத்துவந்தவன் ஆண்தொழிலைமேற்கொண்ட உலகத்துக்கு ஆணிபோலச் சிறப்பானன்றோ?.

கீழ்ச்செய்யுளில், விபீஷணன் கபடமாகவந்தவனென்று தன்கருத்தைக் கூறினான், சுக்கிரீவன்; இங்கு அவன் வஞ்சகனாகவராமல் அஞ்சிவந்து அடைக்

கலம்புகுந்தானென்றாலும் கொள்ளத்தக்கவனல்ல னென்று கூறுகின்றான். போருக்குஅஞ்சிவந்தவன் போர்செய்து ஆண்டொழிலைக்காட்டவேண்டிய நமக்கு உதவா னாதலால் இவனைக் கைக்கொள்வதிற் பயனில்லையென்றவாறு ஆண்டொழிலுலகு என்றது, தம்மைக் காட்டும்.: ஆண்டொழிலுலகினுக்கு-நமக்குஎன்றபடி. ஆண்டொழில் உலகத்தில் ஆணித்தரமாய்த் தோன்றுமன்றோ? எனினுமாம். ஆண்டொழிலுலகினுக்கு ஆணியாமென்றது-பிறகுறிப்பு. பி-ம்:—1வேண்டொழி. 2இனையன. 3விரும்பி. 4வெம். 5மாண்டுழியன்றி, மாண்டொழிலஞ்சி. 6அன்றோ, என்றான். (௩எ0)

ஙாரு. 1மிகைப்புலந் தருமமே 2வேட்ட 3போதவர்
4தகைப்புலந் துறந்துபோய்த் 5துறத்த லன்றியே
நகைப்புலம் 6பொதுவுற 7நடந்து 8நாயக
பகைப்புலஞ் 9சார்தலோ 10பழியி னீங்குமோ.

(இ-ள்.) நாயகனே! (தன்) மேம்பட்ட அறிவு தருமத்தையே விரும்புமானால், (மாறான) அவருடைய (நல்நெறியைத்) தடுத்தலைக்கொண்ட இடத்தைவிட்டுச்சென்றுதுறவைமேற்கொள்வதல்லாமல்(யாவரும்)பொதுவாகநகைத்தலைப்பொருந்த அவ்விடத்தைவிட்டுவந்து பகைவரிடத்தைச்சார்தல் தக்கதோ! (அது), பழியினின்றுநீங்கிய செயலாகுமோ? (எ - று.)

தன்மனம்தருமத்தையே விரும்புகையில், தன்னைச்சேர்ந்தவர் தருமத்திற்குத் தடைநிகழ்த்துவராயின் தான்அவர்களைவிட்டுச்சென்று துறவுபூண்டு தனியேயிருத்தலென்பது செய்யத்தக்கதேயன்றி, யாவரும் இகழ்ச்சிசெய்யப் பகைவரிடத்தைச்சேர்தலென்பது செய்யத்தக்கசெயலன்று: அது புகழை யுண்டாக்காது பழியையே விளைக்குமென்பதாம். விபீஷணன் அச்சத்தினால் தமையனைவிட்டிடாமல் தருமத்திற்குமாறாகத் தமையன்நடப்பதனால் அவனை விட்டுவந்தானானாலும் அதுவும்சரியன்று என்கின்றான்.பி-ம்:—1மிகப். 2கேட்ட. 3போதுதன், போதிவன். 4தொகைக்குலம். 5சாதலின்றியே, சார்தலின்றியே. 6பொதுவற. 7நடந்த. 8நாயகன். 9சார்தலோர், சார்வதோர், சார்வது. 10பழியதாகுமால், பகையுமாகுமால், பகையினீங்குமோ. (௩எக)

ஙாசு. 1வார்க்குறு வனைகழற் றம்முன்2 வாழ்ந்தநாட்
சீர்க்குற 3வாயிடைச் செறுநர் 4சீறிய
போர்க்குற வன்றியே 5போந்த போதிவன்
ஆர்க்குற 6வாகுவ னருளி னாழியாய்.

(இ - ள்.) கருணைக்கடலே! வார்த்துச்செய்யப்பட்ட வீரக்கழலை அலங்காரமாகப் பூண்ட தனது அண்ணனான இராவணன் வாழ்ந்தகாலத்தில் (அவனது) செல்வத்தை யனுபவித்தற்கு வேண்டிய உறவு பூண்டுவிட்டு,இவ்வேளையில் பகைவர் சீறிச்செய்கின்ற போருக்கு (உற்ற) உறவினனாக விராமல்(அவனை)விட்டு வந்தானென்றால், இந்த விபீஷணன், யாருக்குத்தான் உறவாக இருப்பான்? (எ - று.)

தன்னண்ணன் செல்வச்சிறப்போடு இருந்தகாலத்து அவனுக்குத் தம்பியென்று உறவுகொண்டாடிச் செல்வத்தாற் பெறலாகுஞ் சுகத்தையெல்லாம்

நுகர்ந்து அவ்வண்ணனுக்குக் கேடுவிளையக்கூடிய கடும்போர் நிகழ்ந்ததென்று இப்போது கைவிட்டானாதலால், ஆபத்துக்காலத்தில் இவன் எவர்க்கும் ஒருபோதும்உதவுபவ னல்லனென்பது, பெறப்படும்: ஆதலால், இவனைக் கைக்கொள்வது தகாதென்றவாறு. இவன் வந்தது எப்படியிருந்தாலும், தக்க காலத்திற் கைவிடுந்தன்மையனான இவனைக் கொள்வதிற் பயனில்லையென்றவாறு. இங்கு 'அருளினாழியாய்' என்று இராமபிரானை விளித்தது-நீ கருணைக் கடலாதலால், உனக்கு யாவர்விஷயத்திலும் கருணைதோன்றுவது இயல்பேயாதலால், இவனிடத்துங் கருணைதோன்றுவது திண்ணம்: ஆயினும், இவனைக் கைக்கொள்ளலாகாது என்று குறிப்பித்தற்காக: கருத்துடையடைமொழியணி. பி-ம்:—[1]வார்க்குற. [2]வாழுநாள். [3]ஆகியே. [4]சீறுநாள். [5]புகுந்த. [6]ஆகுங்கொல். (சுஎஉ)

சுஎ. ஒட்டிய கனகமா னுருவ மாகிய
[1]சிட்டனு மருமக னிழைத்த தீவினை
கிட்டிய [2]போதினிற் றவமுங் கேள்வியும்
விட்டது கண்டுநாம் விடாது [3]வேட்டுமோ.

(இ - ள்.) ஏறிட்டுக்கொண்ட பொன்மானின் வடிவமாகிய பெரியோனான மாரீசனும் மருமகனான இராவணன் போதித்த தீச்செயலைச் செய்ய நேர்ந்த சமயத்தில், தவத்தையும் கேள்வியையும் கைவிட்டது கண்டும் நாம் (இவனைக்) கைவிடாமல் விரும்பக் கடவோமோ? (எ-று.)

மாரீசனென்பவன் சுகேதுவென்னும் யட்சனதுமகளாகிய தாடகையின் குமாரன்; இவனது தந்தையான சுந்தனென்ற யட்சன் அகஸ்தியமுனிவனது கோபத்திற்கு இலக்காய்ச் சாம்பராய்விட, கணவனையிழந்த தாடகை தனது இருபுதல்வரோடு அம்முனிவனையெதிர்க்க, அவனது சாபத்தால் மூவரும் அரக்கராயினர். பின்பு சுபாகு மாரீசர் இராவணனது மாதாமகனையடுத்து 'நாங்கள் உனக்கு மக்கள் முறையாவோம்' என்று உறவுபூண்டு அதனால் இராவணனோடு மாமன்முறைபெற்றுச் செருக்குக்கொண்டு முனிவர்கட்குத் தீங்கு செய்தவண்ணம் திரியலாயினர். இப்படியிருக்கையில் விசுவாமித்திர முனிவன் இராமலட்சுமணரைத் துணையாகக்கொண்டு வேள்விதொடங்க, அவ்வேள்விக்குப் பல அரக்கரோடு இடையூறுசெய்யத் தொடங்கி இராமபாணத்தால் சுபாகு இறந்தானாக, மாரீசன் வாயவ்யாஸ்திரத்தினாற் கடலில் தள்ளப்பட்டான். அங்ஙனம் உயிர்தப்பிய மாரீசன் சிலகாலம் கடற்கரையில் தவஞ்செய்துகொண்டிருந்து இராமன் தண்டகாரணியம் புகுந்தபோது பழைய வைரத்தால் வேறு இரண்டுஅரக்கருடன் மான்வேடம்பூண்டு இராமபிரானைத் தன்கொம்புகளால் முட்டிக் கொல்லக்கருதி நெருங்குகையில், இராமனெய்த அம்புகளாற் கூடவந்த அரக்கர் இறக்க, இவன் தான்மாத்திரம் தப்பியோடியுய்ந்து இலங்கைசேர்ந்து தவவேடம்பூண்டிருந்தானென்பதறிக.

இவ்வாறு இராவணனுக்கு மாமன் முறையான மாரீசன் தான் தவமும் கேள்வியுமுடையவனாயிருந்தும், மருமகனான இராவணன் செய்த துர்ப்போதனையால் தன்னுடைய தவம் முதலாயினவற்றை விட்டு மாயமான் வடிவமா

யினதைக் கண்டோமன்றோ. ஆகவே, இராட்சசர்கள் தவம் முதலியன உடையவராயினும், சமயத்தில் நல்லொழுக்கத்தைக் கைவிட்டுத் தீவினைக்கு உடன்படுவாரென்பது தெற்றென விளங்குதலால், இந்த விபீஷணன் இப்போது நல்லொழுக்கமுடையனு யிருந்தானானாலும் இவனை விரும்பி நேசித்தல் செய்யலாகாதென்றனனென்க. சிட்டன் = ஶிஷ்டன்: பெரியோன். தவம் முதலியன உடையவனாயிருந்தது பற்றி மாரீசனை 'சிட்டனும்' என்றது. பி-ம்:— 1சிட்டனன். 2போதவன்,பொழுதுநல். 3வேட்குமோ, வேண்டுமோ. (௩௭௩)

௬௮. கூற்றுவன் றன்னொ[1]டிவ் [2]வுலகங் கூடி[3]வந்து
ஏற்றன [4]வெனினும் வெல்ல [5]வேற்றுளோம்
மாற்றவன் றம்பிநம் மருங்கு [6]வந்தி வண்
[7]தோற்றுமோ வன்னவன் [8]றுணைவ[9]னாகுமோ.

(இ - ள்.) யமனுடனே இந்த உலகமெல்லாம் திரண்டுவந்து எதிர்த்தனவானாலும்(அவற்றையும்)வெல்வதற்குச் சித்தராக இருக்கின்றோம்,(நாம்: இவ்வாறிருப்பதனால்), இங்கு நம்முடைய பக்கத்திலே (நமது) மாற்றானாகியஇராவணனுடைய தம்பிவந்து தோற்றுவானோ? [இராவணன் தம்பி நம்பக்கல் வரவேண்டிய அவசியமில்லையென்றபடி]; அந்த மாற்றான் தம்பியான விபீஷணன் துணைசெய்பவனாவனோ? (எ - று.)

யமன் இவ்வுலகத்தையெல்லாம் திரட்டிக்கொண்டு வந்தாலும் எல்லாவற்றையும் எதிர்க்கச் சித்தராயிருக்கின்ற நமக்குப் பகைவனான இராவணனுடைய தம்பியின் துணை வேண்டியதில்லை: இவன் இங்குவருதலே தகாதென்றவாறு. கீழ்ச்செய்யுளிலே வந்தவன் சமயத்தில் ஏமாற்றிவிடக்கூடுமென்ற சுக்கிரீவன், இதனால், இவன் துணை வேண்டுவதன்றென்கின்றான். பி-ம்:— 1எவ். 2உலகு. 3வந்தேற்றினர், வந்தேற்றளவு. 4எண்ணினும். 5ஏற்றுளான், ஏற்றுள். 6வந்தவன். 7தோற்றமே. 8துணையும். 9ஆவனே. (௩௭௪)

௬௯. அரக்கரை யாசறக் கொன்று நல்லறம்
புரக்க[1]வந் தனமெனும் பெருமை பூண்டநாம்
இரக்கமி [2]லவரையே துணைக்கொண் [3]டேறலாற்
சுருக்கமுண் டவர்வலிக் கென்று தோன்றுமால்.

(இ-ள்.) 'இராட்சசர்களையெல்லாம் விரைவில் அடியோடு அழியக் கொன்று சிறந்ததருமத்தைக் காப்பாற்றுவதற்கு வந்துள்ளோம்' என்கின்ற பெருமையை மேற்கொண்டுள்ள நாம் இரக்கமில்லாத அந்த அரக்கரையே துணையாகக்கொண்டு(போருக்குச்)செல்லுதலால், 'அந்த இராமலட்சுமணரது வலிமைக்குக் குறைவுள்ளது' என்று (வெளிக்குத்) தோன்றும்; (எ - று.)

அரக்கரை யறத்தொலைத்துத் தருமத்தைநிலைநாட்டவந்துள்ளோமென்று பெருமைபூண்டுள்ள நாம்அதற்குமாறாக அரக்கரிற்சிலரைத் துணையாகக்கொள்வது தகாது; அன்றியும், நாம் அவர்களைத் துணைக்கொண்டு பொருதலால், 'நாம் தனியாக இருந்து அரக்கரை வெல்லமுடியாது; உளவு சொல்பவராய் அவ்வரக்கரிற் சிலர் நமக்கு உதவிபுரிந்தால்தான் வெல்லமுடியும்' என்று

வெளியிற் பார்ப்பவர்க்குத் தோன்றுமாதலால், நம்முடையவலிமை இழிவு பட்டதாக மதிக்கப்படும்: இக்காரணங்களினாலும் வந்த இவர்களைக் கொள்ள லாகாதென்பதாம்.நம்முடைய தருமத்திற்கும் அரக்கரைக்கொள்வது தகாதென்றவாறு. ஆசு - பற்றுக்கோடுமாம். பி-ம்:—1வந்தனர். 2அரக்கரை. 3எற்றுற, ஏற்றுமேல், ஏறமேல், ஏறுமேல், ஏறுற. (கஎடு)

எ0. விண்டுழி யொருநிலை நிற்பர் மெய்ம்முகங்
கண்டுழி யொருநிலை நிற்பர் கைப்பொருள்
கொண்டுழி யொருநிலை நிற்பர் கூழுடன்
உண்டுழி யொருநிலை நிற்ப ருற்றவர்.

(இ - ள்.) பொருந்தியஉறவினரென்பார்,—பிரிந்தகாலத்திலும் ஒரு நிலையில்தானே நிற்பர்; நேர்முகத்தைக் கண்டபோதும் (முன்புநின்ற) அந்த ஒருநிலையிலேயே நிற்பர்; கையிலுள்ள பொருளைப் (பிறர்) கவர்ந்துகொண்டு விட்டாலும் [ஏழையாய்விட்டாலும் அந்நிலையிலும்] ஒருநிலை நிற்பர்; உணவுகளை உடன்உண்டபோதும் ஒருநிலைநிற்பர்; (எ - று.)

'கூழ்' என்பது - நுகர்தற்குஉரிய பொருள்கட்கெல்லாம் உபலட்சணமென்னலாம். மறைவாக இருக்கும்போதும் நேரே இருக்கும்போதும் கைப்பொருளை யிழந்திட்டகாலத்திலும், கைப்பொருளோடு பலவகை நுகர்ச்சிகளை நுகருங்காலத்திலும் எக்காலத்திலும் ஒருநிலையில் நிற்பவரே உற்ற உறவினராவர்: இவனோ இனிது நுகருங்காலத்துத் தமையனோடு இனிது இருந்து, இன்னாமைநேர்ந்த காலத்து அவனைவிட்டுப் பிரிந்திட்டானாதலால், உற்றானதற்கு ஏலாதவனென்றவாறு. கீழ் கசுசு-ஆஞ் செய்யுளிற் கூறியதை வற்புறுத்துதற்காக இங்கு வேறுவகையாகக் கூறினனென்க. 'ஒருநிலைநிற்பர்' என்பது ஒருபொருளில்தானே பலமுறைவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. உற்றவர்-கடைநிலைத்தீபகம். (கஎசு)

எக. வஞ்சனை 1யியற்றிட வந்த வாறலால்
தஞ்செனு நம்வயிற் சார்ந்து ளானலன்
2நஞ்செனக் 3கொடியனை நயந்து 4கோடியோ
அஞ்சன வண்ணவென் றறியக் கூறினான்.

(இ - ள்.) (இவன்) வந்தவகை கபடச்செய்கையை செய்வதற்காகவேயல்லாமல் தஞ்சமென்று நம்மிடத்துச்சேர்ந்துள்ளானல்லன்: மைப்போன்ற திருநிறத்தையுடையவனே! விஷம்போற் கொடியவனான இவனை விரும்பிக் கொள்ளக் கடவாயோ? என்று (தன்கருத்து) விளங்கும்படி சொல்லிமுடித்தான், (சுக்கிரீவன்); (எ-று.)—'இவன் நம்மை யேமாற்றுதற்காவந்த வேஷக்காரன்: ஆதலால், அங்கீகரிக்கத்தக்கவனல்லன் என்று தான் துணிந்ததைக் கூறிமுடித்தனன் சுக்கிரீவனென்க. தஞ்சு-தஞ்சமென்பதன் விகாரம். கோடியோ, ஓகாரம்-தகுதியின்மை குறிப்பது. பி-ம்:—1இயற்றிய. 2நஞ்சினிற். 3கொடிதென, கொடியனே, கொடுமென. 4கோமேல், கோடியால். (கஎஎ)

எஉ.—ஸ்ரீராமன் சாம்பவானை 'உன்கருத்து யாது?' என வினவுதல்.

அன்னவன் பின்னுற வலகில் [1]கேள்வியில்
தன்னிகர் [2]பிறரிலாத் தகைய சாம்பனை
என்னையுன் கருத்தென விறைவி னுயினுன்
[3]தொன்முறை நெறிதெரிந் தவனுஞ் [4]சொல்லுவான்.

(இ - ள்.) அந்தச் சுக்கிரீவன் கூறிமுடித்த பிறகாக, அளவில்லாத நூற் கேள்வியில் தன்னையொத்த பிறரில்லாத தன்மையையுடைய சாம்பவானை நோக்கி, தலைவனுகிய ஸ்ரீராமன், '(விபீஷணனைக் கைக்கொள்வதில்) உன்னுடையகருத்து யாது?' என்று வினவினன்; பழமையான முறையிலுள்ள வழியினல்ஆராய்ந்து அந்தச்சாம்பவானும் கூறலானன்; (எ - று.)—சாம்பவான் கூறுவதைமேல் ஐந்துகவிகளிற் காண்க.

சாம்பன்-ஜாம்பவாந் என்பதன் விகாரம்: இவன் பிரமனது கொட்டாவியினின்று வெளியில் தோன்றியவன். கரடிகட்கு அரசன்: காலங்கண்டவன். நான்காமடி-'தொன்முறைதெரிந்தவன் சொல்லினனரோ'என்றும், 'சொன்னவன்வரன்முறை தெரியச்சொல்லுவான்' என்றும் சிலபிரதிகள். பி-ம்:— [1]கேள்வியால். [2]பிறனலா, பிறிதிலா. [3]சொல். [4]சொல்லினன். (௩எஅ)

எ௩.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: சாம்பவான் கூறும் விடையைத் தெரிவிக்கும்.

[1]அறிஞரே யாயினு மரிய [2]தெவ்வரைச்
[3]செறிஞரே [4]யாவரேற் கெடுத றிண்ண[5]மால்
நெறி[6]தனை [7]நோக்கினும் நிருதர் நிற்பதோர்
[8]குறிநனி யுளதென வுலகங் கொள்ளுமோ.

(இ - ள்.) (ஒருவர்) எவ்வளவு அறிவாளிகளாயிருந்தாலும்,(ஒழித்தற்கு) அரிய பகைவரை நெருங்கிச்சேர்ந்தவராவராயின், (அவர்கள்) அழிவது திண்ணம்: (இவர்கள் இப்போது) நன்னெறியில் நிற்கின்றார்களென்பதொன்றையே (நாம்) பார்த்தோமானுலும், அரக்கர்கட்கு (வஞ்சனையினல் வெவ்வேறு) இருப்பதாகிய ஒருபழக்கம் மிகவுமுள்ளதுஎன்றிருக்கையினல், உலகத்தவர் (நாம் அரக்கரை யேற்றுக்கொள்வதைச் சரியென்று) உடன்படுவார்களோ?

எத்துணையறிவாளிகளும் கொடுந்தெவ்வரைச் சேர்தலாகாது: சேர்ந்தால் கெடுவது திண்ணம்: 'இங்கு வந்துள்ளவர் பகைமையையொழித்து வந்திட்டதனல் தெவ்வரைச் சேர்த்துக்கொண்டவர்களாக மாட்டோம்?' என்று எண்ணவேண்டா; இப்போது நன்னெறியில்நிற்பவர்போலத்தோன்றினும், அரக்கர்கட்குச் சமயத்திற்கு ஏற்றவாறு வேஷம்பூண்கின்ற ஒருதன்மை மிகவுமுள்ளதனல் இவர்களை யேற்றுக்கொள்வதை உலகத்தார் சரியென்றுகொள்ள மாட்டார்களென்பதாம். பகைவரைச்சேர்த்துக்கொள்வதால் தீமைவிளையுமென்பதற்கு 'கோட்டானும் காகமும்' என்ற பஞ்சதந்திரக்கதை மேற்கோளாம். இனி, ஈற்றடிக்கு-மாற்றாராய்வந்தடைந்த இவர்களிடத்தில் வெளித்தோற்றத்தில் நற்குறியுள்ளதென்றகாரணத்தினல் இவர்களையேற்றுக்கொள்வதை உல

சுத்தவர் நல்லதென்று கொள்ளுவார்களோ?என்றலுமாம்.'அறிஞரேயாயினும்' என்பதற்கு-(பகைவர்) அறிவுடையராயிருந்தாலும் என்று கூறுதலும் ஒன்று. பி-ம்:—1அறிநரே. 2தேவரை. 3செறுநரே, 4ஆமெனில். 5ஆம். 6நனி. 7நோக்குறின். 8குறிஞர், குறுநனி. (௩௭௧)

எ௪. வெற்றியுந் 1தருகுவர் 2வினையம் வேண்டுவர்
முற்றுவ ருறு3குறை 4முடிப்பர் 5முன்பினால்
6உற்றுறு நெடும்பகை யுடைய 7ரல்லதூஉம்
சிற்றினத் தவரொடுஞ் செறிதல் 8சீரிதோ.

(இ - ள்.) ஊன்றிய நெடிய பகைமையையுடைய சத்துருக்கள்—, வஞ்சனையைவிரும்புவார்: (ஆதலால், அவர்கள் நம்மை ஏமாற்றுவதற்காக முதலில் நமக்குச்) செயத்தையும் தருவார்கள்: வலிமையோடு, (நமக்கு) நேர்ந்துள்ள குறையையும் (ஏற்றதொழில்) செய்து நீக்குவார்கள்: (சமயம்வாய்த்தபோது, நம்மையே) சூழ்ந்து தீமைவிளைப்பார்கள்: இதுவல்லாமலும், சிற்றினத்தாரோடும் நெருங்குதல் சிறப்பைத் தருவதாகுமோ? (எ - று.)

பகைவர் முதலில் நமக்கு வெற்றிதருதல் முதலியன செய்து நமக்கு அனுகூலர்போலத் தோன்றி, நாம் நம்பியிருக்கும் நிலையில் அறத்தொலைக்கப் பார்ப்பார்கள்: ஆதலால், பகைவரோடுஉறவாடுதல் ஆபத்துக்கே இடனாம்: அன்றியும், இப்பகைவர் சிற்றினத்தைச் சேர்ந்தவ ராதலால், அந்தச் சிற்றினத்தாரோடுசேர்தல் நம்பெருமைக்கு இழுக்கை விளைக்குமாதலாலும் இவருடன்சேரலாகாதென்பதாம். குறைமுடித்தல்-குறையைப்போக்குதல். வினையம் என்பதற்கு-தொழில் செய்து முடிக்கும்உபாயம் என்றும், முற்றுவர் என்பதற்கு-(விடாமல் நம்மைச்) சூழ்ந்துகொண்டேயிருப்ப ரென்றும் கொள்வாருமுளர். பி-ம்:—1தருவர்நல். 2வினையும். 3முறை. 4முடிய. 5முன்பினர்,மொய்ம்பினால். 6உற்றுறின், உற்றது. 7அல்லரே, அல்லரேல், அல்லரோ. 8திண்மையோ. (௩௭௦)

எ௫. வேதமும் வேள்வியு 1மயக்கி வேதியர்க்கு
ஏதமு 2மிமையவர்க் கிடரு மீட்டிய
பாதகர் நம்வயிற் படர்வ ராமெனில்
3தீதில ராய்நமக் 4கன்பு 5செய்வரோ.

(இ - ள்.) வேதங்களையும் (வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள) யாகங்களையும் கெடுத்து, வேதம்வல்லவரானபிராமணர்கட்குத் தீமையையும் தேவர்கட்குத் துன்பத்தையும் வலிதிற்செய்கின்ற பாவிகளாகிய இராக்கதர் நம்மிடத்து வந்துசேர்வாரானல், (அவர்கள்), தீக்குணமில்லாதவராய் நம்மிடத்து அன்பு செய்வார்களோ? [செய்யாரன்றோ]; (எ - று.)

சாதியின்குணம் போகாதாதலால், அவ்வரக்கரைக் கைக்கொண்டோமாஞலும், தீமையேபுரிவ ரென்றவாறு. வேதத்தைமயக்குதல் - வேதத்திற் கூறியனநிகழவொட்டாது செய்தல்: அதற்கு ஒருதிருஷ்டாந்தமாக வேள்வியைமயக்குதல் கூறப்பட்ட தென்னலாம். இமையவர் - இமையில் (மூடாமையாகிய) விசேஷமுடையவரென்றும், இமயமலையில்வாழ்பவ ரென்றும் கார

ணப்பொருள்படும். பி-ம்:—1விலக்கி. 2தேவருக்கு. 3தீதிலராயவர்க்கு, தீதலா லவர்க்கு, தீதிலாவரவற்கு. 4அருள். 5செய்துமோ. (ருஅக)

எசு. கைப்புகுந் 1துறுசர 2ணருளிக் காத்துமேற்
3பொய்க்கொடு வஞ்சனை 4புணர்த்த போதினும்
5மெய்க்கொள 6வின் யினும் 7விடுது 8மென்னினும்
9திக்குறும் நெடும்பழி யறமுஞ் சீறுமால்.

(இ - ள்.) (நம்மிடத்துப்) புகலாகப்புகுந்தாரென்றகாரணம்பற்றி ஏற்ற அபயந்தந்து (இவர்களைக்) காக்கத்தொடங்கிவிட்டோமானால், (இவர்கள்), பொய்ம்மையைக்கொண்டு வஞ்சனைச்செய்கையைச் செய்தபோதிலும் (இவர்களால் நம்முடைய) உடலையே பிறர்கொள்ளும்படி (நமக்குச்) சாவு நேரிடினும் (அப்போதும் இவர்களைக்) கைவிட்டோமானாலும் திக்குக்களில் மிக்க பழிப்பானது மிகும்: (அன்றியும்), தருமதேவதையும் விரோதிக்கும்; (எ - று.)

நாம் இப்போது இவர்களைக் கைக்கொண்டுவிட்டால், அவர்களிடத்துத் தீமையைக் கண்டபோது கைவிட்டிடுவோமென்பதற்கும் இல்லை: நம்மாற் கையடையாகக் கொள்ளப்பட்டோர் நமக்குமரணத்தையே ஒருகால் விளைத்தாலும் அப்போதும் இவர்களைக் கைவிடலாகாது: கைவிட்டாலோ பழியுண்டாவதன்றித் தருமத்திற்கும் விரோதமா மென்றவாறு. புகுந்து - இறந்தகால வினையெச்சம், காரணப்பொருளது. உறும்-மிகும். பி-ம்:—1ஒரு. 2அளித்து. 3பொய்க்கொரு. 4புணர்ந்த. 5மெய்க்கொடு. 6இழியினும். 7விருத்தும். 8என்னெனில், என்னினி. 9திக்கொடு. (ருஅஉ)

எஎ. 1மேனனி விளைவது விளம்ப வேண்டுமோ
கானகத் 2திறைவியோ 3டுறையுங் காலையின்
மானென வந்தவன் வரவை மானுமிவ்
வேணையன் வரவுமென் 4றினைய கூறினான்.

(இ - ள்.) (அரக்கரால் முதலில் நன்மைபோலத்தோன்றிப் பின் தீமை விளைவதைக் கண்கூடாகக்கண்டிருக்கின்றோமன்றோ!) இனி மிகவும் விளையப் போவதைப்பற்றிச்சொல்லவேண்டுமோ? காட்டிலே தலைவியாகிய சீதாபிராட்டியோடு (நீர்) வசிக்கின்ற நாளில் பொன்மானென்று (வேஷம்போட்டுக்கொண்டு) வந்தவனான மாரீசனுடைய வரவை இந்த மாற்றான்வருகையும் ஒத்திருக்குமென்று இவ்வாறான வார்த்தைகளைச் சொல்லிமுடித்தான், (சாம்பவான்).

மேல்விளைவு இன்னதென்பதை மாரீசன்செய்கையால் உணர்ந்துள்ளோமாதலால், இவனாலும் அவ்வாறே தீமைநேருமென்பது எடுத்துச்சொல்ல வேண்டுவதொன்றோ? என்று தன்சொல்லை முடித்தனன் சாம்பவானென்க. பி-ம்:—1மேனக. 2இறைவரீ. 3உறைந்த. 4இனிது. (ருஅங)

எஅ.—'உன்கருத்துயாது?' என்று நீலனை இராமபிரான் வினவ, அவன் கூறத்தொடங்குதல்.

பால்1வரு பனுவலின் றுணிவு பற்றிய
2சால்பெருங் 3கேள்வியின் றானை நாயகன்

நீலனை நின்கருத் தியம்பு நீயென
4மேலவன் விளம்ப லும் விளம்பன் மேயினான்.

(இ-ள்.) பலபகுப்புப்பொருந்திய நூல்கள் துணிந்து கூறியபொருளைப் பற்றிச் சிறப்புள்ள பெருங்கேள்வியையுடையனான சேனாதிபதியாகிய நீலனை நோக்கி,மேலோனாகிய ஸ்ரீராமன்,'உன்கருத்தை நீ கூறுவாய்'என்று சொன்னவுடனே சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—நீலன்கூறுவதை, மேல் ஆறு கவிகளிற் காண்க. பி-ம்:—1வரும் 2சால்வருங். 3கேள்வியன். 4ஏலவனி னைத்தனவினைய கூறினான், ஏல்வயினினைந்தனனினைய கூறினான். (௩௮௪)

எ௬.—நீலன் தன்னுரையைக் கேட்கவேணுமெனல்.

1பகைவரைத் துணையெனப் பற்றற் பால2வாம்
3வகையுள வன்னவை வரம்பில் கேள்வியாய்
தொகையுறக் 4கூறுவன் குரங்கின் சொல்லென
நகையுற 5வின்றியே நயந்து 6கேட்டியால்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பகைவரைத் துணையாகக்கொள்ளுதற்குஉரிய வகையுள்ளன: எல்லையில்லாத நூற்கேள்வியையுடையவனே! அவற்றைத் தொகுத்தல்பொருந்த [சுருக்கமாக]க் கூறுவேன்; குரங்கின்சொல்லென்று இகழ்ச்சிசெய்யாமல் விரும்பிக்கேட்பாய்; (எ - று.)—பி-ம்:—1பகையுரை. 2ஆல். 3வகையலது. 4கூறுவ. 5தக்கன, தக்கல. 6கோடியால். (௩௮௫)

அ௦.—இதுமுதல் ஐந்துகவிகள்-நீலன் தன்னுள்ளக்கருத்தைக் கூறலைத் தெரிவிக்கும்.

தங்குலக் கிளைஞரைத் 1தருக்கும் போரிடைப்
2பொங்குநர்க் 3கொன்றவர்க் 4கெளியர் போந்தவர்
மங்கையர் திறத்தினில் 5வயிர்த்த சிந்தையர்
சிங்கலில் பெரும்பொரு ளிழந்து சீறினோர்.

(இ - ள்.) தமதுகுலத்தவரான சுற்றத்தாரைச் செருக்கிச்செய்யும்போரிலே சீற்றம்பொங்கினராய்க்கொன்றவரான மாற்றார்க்கு எளிமைப்பட்டு வந்தவர்களும், மங்கைமார்பொருட்டாக (மாற்றானோடு) பகைமைகொண்ட சிந்தையையுடையவர்களும், குறைவில்லாத மிக்கபொருளை யிழக்கும்படி (பிறராற்) சீறப்பட்டவர்களும்,—(எ - று.)—போந்தவர்முதலியன, அஉ - ஆம் பாடலிலுள்ள 'உடற்கொளத்தகையர்' என்பதனோடுமுடியும்: மேற்செய்யுளிலும் இங்ஙனமே காண்க. பொங்குநர் கொன்றுஅவர்க்குஎன் றெடுத்து-பொங்கினமாற்றார்பக்கத்தாரைக்கொன்று இறுதியாகஅம்மாற்றார்க்குஎளிமைப்பட்டவரென்றும், ஈற்றடிக்கு-பொருளையிழந்ததனால் (தம்மாற்றான்மீது) சீறினவரென்றும்உரைத்தலும், ஒன்று. பி-ம்:—1தருக்கிப். 2பொங்கினர், பொங்கவர். 3கொற்றவர்க்கு. 4இளைஞர். 5வலிந்த, வயிரச். (௩௮௬)

அ௧. பேரபி மானங்க ளுற்ற பெற்றியோர்
1போரிடைப் புறங்கொடுத் தஞ்சிப் போந்தவர்

நேர்வரு தாயத்து [2]நிரப்பி னோர்பிறர்
[3]சீரிய கிளைஞரை மடியச் செற்றுளோர்.

(இ - ள்.) மிக்க அபிமானத்துடனே பொருந்திய தன்மையையுடையவரும், போரிலே முதுகுகொடுத்து அஞ்சி வந்தடைந்தவரும், நேரான தாயத்தினால் [பங்காளியால்] வறுமையுற்றவரும், பிறருடைய சிறப்புப்பெற்ற கிளைஞரை மடியுமாறுஅழித்த வரும்,— (எ-று.)—முதலடிக்கு-அவமானமடைந்தவரென்பது, பொருள். பி-ம்:—[1]போரினில். [2]நிரம்பினோர்கள்தம், நிரம்பினோர்பிறர். [3]சீரிய. (௩௮௭)

அ௨. அடுத்தநாட் டர[1]சியல் புடைய வாணையாற்
படுத்தவர் [2]பட்டவர் [3]பகைஞ ரோடொரு
மடக்கொடி [4]பயந்தவர் மைந்த ராயினும்
உடற்[5]கொளத் தகையர்நம் முழைவந்[6]தொன்றினால்.

(இ - ள்.) (தன்னாட்டுக்கு) அடுத்த நாட்டிலுள்ள அரசனது இயல்பான கட்டளையால் நசுக்கப்பெற்றவராய்க் கேடடைந்தவரும் (ஆகிய இவர்கள்),—பகைஞருடனே ஒப்பற்ற மடக்கொடியினாற் பெறப்பட்டவரான புதல்வராயினும் [பகைவருடைய சகோதரரேயானாலும்], நம்மிடத்துவந்து சேர்ந்தால் நம்முடனிருக்குமாறு அங்கீகரித்தற்கு உரியவராவர்; (எ - று.)

கிளைஞரைக்கொன்ற பகைவரிடத்து எளிமைபட்டுவந்தவர் முதலியோர் பகைவரின் சகோதரராக இருந்தாலும், நம்மைச்சரணமாகவந்து அடைந்தாற் கைக்கொள்ளத்தக்கவரேயென்று நீலன் (80-ஆம் பாடல் முதல் 82-ஆம்பாடல் வரை) கூறினனென்க. பகைவருடையஒப்பற்றமடக்கொடியால் [மனைவியினால்] பெறப்பட்டமைந்தராயிருப்பினும்என்று கொள்ளுதலுமுண்டு. ஆயினும் என்பதை அ௦-ஆம் பாடல் தொடங்கிய 'திங்குலக்கிளைஞரை...போந்தவர்' என்பது முதலிய தொடர்களோடுஇயைத்து - போந்தவராயினும் சிந்தையராயினும்...மைந்தராயினும் உடற்கொளத்தகையர் என்று கூறுவாருமுளர். அங்ஙனங் கூறுபவர் பகைஞரோடு ஒருமடக்கொடிபயந்த மைந்தர் ஆயினும் என்பதற்கு-பகைஞர்க்குஉரியபலமகளிருள் ஒருமடக்கொடி பயந்தவரான மைந்தராயிருந்தாலும்என உரைப்பர். பி - ம்:—[1]இயல். [2]நட்டவர். [3]பகைவரோடரு, பகைவர்மற்றொரு. [4]திறத்திடைவைத்த சிந்தையர், திறத்தினால்வாஞ்சைவைத்தவர், திறத்திடையத்தசிந்தையோடு. [5]கொல. [6]ஒன்றினோர்.

அ௩. [1]தாமுற வெளிவருந் தகைமை யாரலர்
நாமுற வல்லவர் நம்மை [2]நண்ணினால்
[3]தோமுற [4]நீங்குதல் [5]துணிவ ராதலின்
யாமிவன் [6]வரவிவற் றென்னென் றுன்னுவாம்.

(இ-ள்.) தாமே பிறரை வந்துசேரும்படி எளிமைப்பட்ட தன்மையுடையரல்லாதவரும் (கண்டவர்) அச்சங்கொள்ளும்படி வல்லமைபெற்றவருமாகியவர் நம்மை நண்ணினாராயின், அவர்கள் குற்றமுண்டாக(ச் சமயத்து) நீங்கிச் செல்லுதற்குத்துணிவ ராதலால், நாம் இவ்விபீஷணன்வருகையைக் குறித்துக் கீழ்க்கூறியவகையில் எந்தவகையினது என்று எண்ணவேண்டுவது அவசியம்.

முதலடியில் வெளிவரும் என்றும் பிரிக்கலாம். 'தங்குலக்கிளைஞரைத் தருக்கும் போரிடைப்பொங்குநர்க்கொன்றவர்க்கு எளியர் போந்தவர்'என்பது முதலாகக்கூறியவகையில் எந்தவகையிலும் எண்ணத்தக்கவனல்லன் இந்த விபீஷணன்:ஆகவே, இவனைக் கைக்கொள்ளலாகாதென்பதுகருத்து.பி-ம்:— 1தாமவர்க்கு, தாமவற்கு. 2நண்ணினர் 3ஆமுறை, தோமுறு, தோன்முறை. 4நீங்குவர். 5அழிவர். 6வரவினை, வரவினி, வரவிவற்கு. (ருஅகூ)

அரு. காலமே நோக்கினுங் கற்ற நூல்களின்
மூலமே நோக்கினு முனிந்து போந்தவன்
சீலமே 1நோக்கியாந் 2தெளிந்து தேறுதற்
கேலுமே யென்3றெடுத் தினைய கூறினான்.

(இ - ள்.) இவன் (வந்த) காலத்தை யாராய்ந்துபார்த்தாலும் கற்றுள்ள நூல்களின்மூலமாக எண்ணிப்பார்த்தாலும் (தன்னண்ணனை) வெறுத்துவந்தவன்(இப்போது கொண்டுள்ள)நல்லொழுக்கத்தையே பார்த்து நாம் மனந்தெளிந்து நம்புதற்கு முடியுமோ? என்று இவ்வாறான வார்த்தைகளையெடுத்துக் கூறிமுடித்தான்; (எ - று.)—பி-ம்:—1நோக்கினும், நோக்கியான். 2தெரிந்து. 3உரைத்து, உணர்ந்து. (ருகூ0)

அரு.—மற்றுளாரும் வந்தவனை ஏற்றுக்கொள்ளலாகாதென ஒருமுகமாகக்கூறுதல்.

மற்றுள 1மந்திரிக் கிழவர் வாய்மையாற்
குற்றமில் 2கேள்விய 3ரன்பு கூர்ந்தவர்
பற்றுதல் பழுதெனப் 4பழுது றுவொரு
பெற்றியி னுணர்வினர் முடியப் பேசினர்.

(இ - ள்.) குற்றமில்லாதகேள்வியையுடையவர்களும் அன்புமிக்கவர்களுமான மற்றுமுள்ள ஆலோசனைக்குஉரியவரான மந்திரிமார், பழுதுபடாத ஒருபடிப்பட்டதன்மையையுடைய உணர்வையுடையவராய், உண்மையாக [மனப்பூர்வமாக]'(எதிரியைக்)கொள்வதுகுற்றமாம்'என்றுதீர்மானமாகக்கூறினர்.

அந்த மந்திரக்கிழவர்யாவரும் குற்றமில்லாதகேள்வியராயினும், இராமபிரானிடத்து அன்புகூர்ந்தவராதலால், ஒருபடிப்படத் தீர்மானமாக எதிரியைக் கைக்கொள்வது பழுதேயாமென்று கூறினரென்பதாம். "காய்தலுவத்தலகற்றியொருபொருட்கண்ஆய்தல்" வேண்டுமாதலால், இராமபிரானிடத்துப்பொங்கும்பரிவுடைய அந்தவானரர்கள் தீர்மானமாகக்கூறியமுடிவு தவறிவிட்டதென்ற கருத்துத்தோன்ற, 'அன்புகூர்ந்தவர் பற்றுதல்பழுதென முடியப்பேசினர்' என்றார். பழுதுறுவுணர்வினர் ஒருபெற்றியின் பேசினர்என்று இயைத்து உரைக்கலுமாம். பி-ம்:—1மந்திரக்கிழமை, மந்திரக்கிழவர். 2கேள்வியான். 3நண்பு. 4பகையுறுவொரு, புகையுறுவகை. (ருகூக)

அசு.—ஸ்ரீராமன் அநுமானைநோக்கி 'உன்கருத்தைக் கூறு' எனல்.

உறுபொருள் 1யாவரு 2மொன்றக் கூறினர்
செறு3பெருங் 4கேள்வியாய் கருத்தென் செப்பென

நெறிதரு மாருதி யென்னு நேரிலா
வறிவனை [5]நோக்கினு [6]னறிவின் மேலுளான்.

(இ - ள்.) சாதாரணஅறிவினால் அறியமுடியாதபடி அப்பாற்பட்ட பரம்பொருளின்சொரூபமான இராமபிரான்,—நீதிநெறியைக்காட்டவல்ல மாருதியென்றுசொல்லப்படுகின்ற (தனக்கு) ஒப்பாரைஇலாத அறிவாளியை, 'மிக்க கேள்வி செறிந்துள்ளவனே! செய்யத்தக்க காரியத்தைப்பற்றி யாவரும் ஒருபடிப்படச்சொல்லினர்: (இந்தவிபீஷணனைச் சேர்த்துக்கொள்வதில் உன்) கருத்து யாது? சொல்லுவாய்' என்றகருத்துத்தோன்றப் பார்த்தான்; (எ-று.)

எல்லாருடையசொல்லும் பூர்வபட்சமாகஇருக்க அநுமானுடையபேச்சு சித்தாந்தமாகு மென்ற கருத்தினால், இறுதியில் இவ்வநுமானை ஸ்ரீராமன் வினவினனென்க. அநுமான் குறிப்பறியும் நுண்ணுணர்வினனென்று ஸ்ரீராமன் கருதியிருந்தானென்பது இங்குப்புலனும். மாருதி-மாருதனது புதல்வன்: வடமொழித்தத்திதாந்தநாமம்; மாருதன் - வாயுதேவன். கேசரனென்னும் வானரராசனது மனைவியாகிய அஞ்சனாதேவியைக் கண்டு காதல்கொண்ட வாயுதேவனது அருளாற்பிறந்தவனாதலின், அநுமான் மாருதியெனப்பட்டான். இச்செய்யுள், "இணங்கினர் (அஎ)" என்ற பாடலுக்குப்பின் ஒருபிரதியிலுள்ளது. பி-ம்:—[1]யாவையும். [2]ஒன்று.[3]பொருட்.[4]கேள்வியர். [5]வினவினன். [6]அறிவினையுளான். (ருகஉ)

அஎ.—அநுமான் கூறத்தொடங்குதல்.

இணங்கின [1]ரறிவில ரெனினு [2]மெண்ணுங்காற்
கணங்[3]கொள்கை நும்மனோர் [4]கடன்மை காணென
வணங்கிய சென்னியன் [5]மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியா னுவல்வ தாயினன்.

(இ - ள்.) 'ஆலோசிக்குமிடத்து (தம்மைச்) சேர்ந்தவர்கள் அறிவில்லாதவராயினும் (தம்முடைய) இனமாகக்கொண்டு மேம்படுத்துவது முறைமையாம்' என்றுசொல்லி,—சூட்சுமமாகக் கேட்டறிந்த கேள்வியையுடையவனை அநுமான்,—வணக்கந்தோன்றுகின்ற தலையையுடையவனும் மறைத்துக்கொண்ட வாயையுடையவனுமாகிச் சொல்லத்தொடங்கினன்; (எ - று.)

'நும்மைப்போன்ற அறிவாளிகட்கு அற்பபுத்தியையுடைய எங்களுடைய ஆலோசனையைக் கேட்டல் அவசியமில்லை: ஆயினும், அற்பரான எங்களையும் கௌரவித்து இனமாகக்கொள்வது நும்மைப்போன்ற பெரியோர் கடமையாகக்கொண்டுள்ளசெயலாம்: ஆதலால், எம்மைப்போன்ற வானரங்களைத் துணையாகக்கொண்டு ஆலோசனைகேட்கின்றீர்' என்று தன்னுடைய இழிவு தோன்றக் கூறிவிட்டு அநுமான் பிறகு தலைவணங்கி வாய்பொத்திக்கொண்டு பின்வருமாறு கூறலாயினனென்க. தலையைநிமிர்த்து வானத்தைநோக்கியதுபோல நிற்றல் செருக்கைத்தோற்றுவிப்பதெனவும், தலையைவணங்கவைத்தல் வணக்கத்தைத்தோற்றுவிப்பதெனவும்அறிக. பெரியோரிடத்துப் பேசும்போது கையால் வாயைப்பொத்திக்கொண்டு பேசுதல், மரபாதலறிக. "நுணங்கியகேள்வியரல்லார் வணங்கிய, வாயினராதலரிது" என்ற குறள் இச்செய்யு

ளின் பின்னிரண்டடிகளிற் காணத்தக்கது. பி-ம்:—1அறிவினர். 2எண்ணுவ, எண்ணினும். 3கொளவதுமன்னர். 4கடமை. 5மறைத்தவாயினும், மறைந்து வாயின. (ருகங)

அஅ.—இதுமுதல் பதினெட்டுக்கவிகள் - ஒருதொடர்: அநுமான் கூறுவதைத் தெரிவிக்கும்.

எத்தனை 1யுளர்2தெரிந் தெண்ண வேய்ந்தவர்
அத்தனை வரு3மொரு பொருளை 4யன்றென
5உத்தம ரதுதெரிந் துணர வோதினர்
வித்தக வினிச்6சில விளம்ப வேண்டுமோ.

(இ - ள்.) ஆராய்ந்துஎண்ணுவதற்குப்பொருந்தியவரான எத்தனைபேர் இருக்கின்றார்களோ அத்தனைபேரும், ஒருவிஷயத்தைப்பற்றி ஆராய்ந்து 'அது செய்யத்தக்கதன்று' என்று உணரும்படி [தெளிவாக] சொல்லிவிட்டார்கள்: அறிஞனே! இவ்வாறுகூறியபின்பு,(யான்)சிலவற்றைச் சொல்லவேண்டுமோ?

நீரே நன்குணர்ந்தவர்: வேறொருத்தர் உமக்குச் சொல்லவேணுமென்பது இல்லை:மேலும்,இந்தச்சேனையிலுள்ள அறிவாளரெல்லாம் ஆராய்ந்து ஒருபடியாகத் தீர்மானமானகருத்தையும் தெரிவித்தாயிற்று. இந்நிலையில் யான் சொல்லவேண்டுவதில்லை யென்றனன் அநுமானென்க.பி-ம்:—1உள.2தெரிந்தென்ன. 3பொருளைய. 4நன்றென, நன்றெனில். 5உத்தமவென்பதென் புணர. 6பிற. (ருகச)

அகூ. தூயவர் துணிதிற மன்று 1தூயதே
ஆயினு மொருபொரு ளுரைப்ப னுழியாய்
தீயனென் றிவனையா 2னயிர்த்தல் செய்கிலேன்
மேயின சிலபொருள் 3விளம்ப வேண்டுமால்.

(இ - ள்.) பரிசுத்தகுணமுடையவரான இந்தமந்திரிமார்கள் துணிந்து கூறிய விஷயம் மிகவும்பரிசுத்தமானதே: சக்கராயுதத்தையுடையவனே! ஆயினும் ஒருபொருள் சொல்லுவேன்: (அதுஎன்னவெனில்), இவனை யான் (இங்குள்ளார்நினைப்பதுபோலத்) தீக்குணமுடையவனென்று சந்தேகிக்கின்றேனில்லை: (அதற்கு) ஏற்றனவான சிலவிஷயங்களைச் சொல்லவேண்டும்.

ஆழியாய் - பாற்கடலில் கண்துயில்பவனே! என்றும், பிரளயசாகரத்தில் ஆலிலையிற் பள்ளிகொள்பவனே! என்றும், இன்னும் பலவாறாகவும்பொருள்கூறப்படும். பி-ம்:—1தீயதே. 2கிரத்தல், வரைதல்.3விளம்பக்கேட்டியால், விளம்பமேயினேன், விளம்பவேண்டுமோ, சொல்லிமேவினன். (ருகரு)

கூ0. 1வண்டுள ரலங்கலாய் வஞ்சர் வாண்முகங்
கண்டதோர் 2பொழுதினிற் றெரியுங் கைதவம்
உண்டெனி னஃதவர்க் கொளிக்க 3வொண்ணுமோ
விண்டவர் 4நம்புகல் மருவி வீழ்வரோ.

(இ - ள்.) வண்டுகள் ஒலிக்கப்பெற்ற மாலையையணிந்தவனே! வஞ்சனைக்குணமுடையோருடைய ஒளியுள்ள முகத்தைப் பார்த்தகாலத்தில்தானே

தெரிந்துவிடும்; (ஒருவரிடத்து) வஞ்சனைக்குணம் இருக்குமாயின் அஃது அந்தவஞ்சகரால் ஒளிக்கமுடியுமோ? (அன்றியும்), பகைவர் நம்மைஅடைக் கலமாகவிரும்பி வந்துசேர்வரோ? (எ - று.)

"அகத்தினழகு முகத்தில்தெரியும்" ஆதலால், இவர் வஞ்சனையில்லாதவ ரென்பது முகத்தில்தானே தெரிகின்றது. மேலும் பகைவர்கள் பலவகைமா யைகள்செய்து ஏமாற்றலாம்: நம்மைப் புகலாகவந்துசேர்தலென்பதோ நிக ழாது; இதனாலும், இவர்கள் உண்மையானவரென்றே தெளியலாமென்ற வாறு. கைதவம் - தற்சமவடசொல். இச்செய்யுள்முதல் ஆறுசெய்யுள்கள் சில பிரதியில் "அன்னவன் (கoக)" என்றுதொடங்கும் பாடலுக்குப்பின் உள் ளன. பி-ம்:—[1]வண்டுழாய். [2]பொழுதிலே. [3]எண்ணுமோ. [4]பல்பகல். (ருகசு)

கசுக. *உள்ளத்தி னுள்ளதை யுரையின் முந்துற
[1]மெள்ளத்தம் முகங்களே விளம்பு மாதலால்
கள்ளத்தின் விளைவெலாங் [2]கருத்தி லாமிருட்
பள்ளத்தி னன்றியே வெளியிற் பல்குமோ.

(இ - ள்.) இருட்டானது பள்ளமான இடத்திலல்லாமல் (வெளிச்சம் விழும்) வெளியிடத்தில் மிக்குத்தோன்றுமோ? [தோன்றாதன்றே?] (அதுபோ ல), திருட்டத்தனத்தினால் விளைவனயாவும்(ஒருத்தருடைய)மனத்தில்தானே தங்கியிருக்கும்: ஆதலால், மனத்தில் மறைந்திருக்கின்ற வஞ்சனையை (அவ ரவர்களுடைய) வாயினின்று பேச்சுவருவதற்கும் முன்பாக, மெள்ளத் தம் முடைய முகந்தானே சொல்லிவிடும்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் முகம் கண்டபோதுபொழுதில் அவரிடத்துள்ள கைத வம் தெரியு மென்றுகூறி, இந்தச்செய்யுளில் இருள் பள்ளத்தில் தங்குவது போலக் கள்ளமென்பது மனத்திலிருப்பதால்தான் முகம் கண்ணாடிபோல் அதனை விளக்கிக்காட்டுமென்கின்றான். "அடுத்ததுகாட்டும் பளிங்குபோனெஞ் சங், கடுத்ததுகாட்டும்முகம்," "முன்னம், முகம்போல்முன்னுரைப்பதில்" என்பவை இங்குக் காணத்தக்கன. 'மனத்திலுள்ளது வாயில்வரும்' என் பது, நூற்கொள்கை: அந்தப்பேச்சுக்கும்முந்தியே மனத்திலுள்ள கள்ளம் முகத்திற் பிரதிபலிக்கு மென்க. இரண்டுபாடல்களால் விபீஷணனை இங் கிதத்தால் குற்றமற்றவ னென்று விளக்கியவாறு. பி-ம்:—[1]எள்ள... இயம்பும். [2]கருத்திலாவிருள். (ருகஎ)

கசுஉ. †வாலிவிண் பெறவர சிளைய வன்பெறக்
கோலிய [1]வரிசிலை வலியுங் கொற்றமும்

* "ஆகாரச்சாத்யமாநோபி - நஸக்யோவிநிகூஹிதும் | பலாத்தி விவ்ரு ணோத்யேவ - ஹாவமந்தர்கதம்ந்ருணாம்" என்ற ஸ்ரீ ராமாயணஸ்லோகம் இந்தச்செய்யுளுக்குமூலம்.

† " புருஷாத்புருஷம்ப்ராப்ய - ததாதோஷகுணாவபி | தௌராத்ம்யம் ராவணேத்ருஷ்ட்வா - விக்ரமஞ்சததாத்வயி || யுக்தமாகமநம்தஸ்ய - ஸத்ரு ஸம்தஸ்யபுத்தித: || " என்ற ஸ்ரீராமாயணஸ்லோகம் இதற்கு மூலம்.

*சீலமு முணர்ந்துநிற் சேர்ந்து தெள்ளிதின்*
*மேலர செய்துவான் விரும்பி மேயினான்.*

(இ - ள்.) வாலியானவன் வீரசுவர்க்கத்தைச்சார (அவனுடைய)இராச்சியத்தை (அவனது) தம்பியாகிய சுக்கிரீவன் அடையும்படி முயன்ற (உமது) கட்டமைந்தவில்லின் வலிமையும் ஜயமும், சீலகுணமும் அறிந்து, பிறகு, உம்மைச்சேர்ந்து தெளிவாக அரசைப்பெறும்பொருட்டு விரும்பி வந்தான், (இந்தவிபீஷணன்); (எ - று.)

ஆபத்துக்காலத்திற் கைவிட்டுவந்தானென்பதனால், காலமல்லாக்காலத்தில் வந்தானென்று கீழ் மந்திரிமார்கள் விபீஷணன்மீது குற்றஞ்சாட்டியதை அநுமான் இதனாற் பரிகரிக்கின்றானென்க. 'தன்னண்ணனால் அலக்கணுற்றார்க்கு அபயமளித்து நல்வாழ்வு அளித்தவன் இராமன்' என்பதைக் கேள்வியுற்ற விபீஷணன், தன்னண்ணனால் தூரத்தப்பட்டு அலக்கணுற்று 'தருமமூர்த்தியாகிய இராமபிரானைப் புகலடைந்து அலக்கணீங்கி இராச்சியமும் பெறலாம்' என்று வந்தானாதலால், இவன்வந்தது தக்கதேயென்றுசமர்த்தித்தவாறாயிற்று. வாலி - நீண்டவாலையுடையவனென்று காரணப்பொருள்படும். இவன் ருக்ஷராஜஸ்என்னும் வானரராசனது மனைவியின் வாலினழகைக்கண்டு காமுற்ற தேவேந்திரனது அருளால் தோன்றியவன்: சுக்கிரீவனது அண்ணன். சீலம் = பரீலம்: பெரியோர் தாழ்ந்தோருடன் பேதமில்லாமற்கலந்திருக்குங் குணம்: ஸ்ரீராமன் வானரர்களுடன் ஒருசீராகக்கலந்து நிற்பது, அப்பிரானுக்குக் குணமாம். மேனோக்கில் கேட்பவர்க்கு விபீஷணன் இராச்சியத்தில் ஆசையால் வந்துள்ளானென்றுகூறிய இதில், ஊன்றிநோக்குமிடத்து, மேலரசு - மோட்ச சாம்ராஜ்யத்தை, எய்துவான் விரும்பிமேயினான் என்று உட்பொருள்தோன்றக் கூறியுள்ளமை காணத்தக்கது. பி-ம்:—1வரு.

௯௬. *செறிகழ லரக்கர்த [1]மரசு [2]சிறியோர்*
*[3]நெறியல தாதலி [4]னிலைக்க லாமையும்*
*எறிகட லுலகெலா மிளவற் கீந்தோர்*
*பிறிவருங் கருணையு [5]மெய்யும் பேணினான்.*

(இ - ள்.) வீரக்கழலைக்கட்டிய அரக்கர்களுடைய அரசு நற்குணமுடையோரின் முறைமையுடையதன்று: ஆதலால், (அதன்) நிலைக்கமாட்டாத தன்மையையும், (அலை) வீசுகின்ற உலகம்முழுவதையும் தம்பியாகிய பரதனுக்குக் கொடுத்திட்டதாகிய ஒப்பற்ற நீங்குதலில்லாத (இராமபிரானது) அருளையும் உண்மைக்குப் பாடுபடுந்தன்மையையும் (கண்டு), விரும்பிவந்தான், (இந்த விபீஷணன்); (எ - று.)

நீதிநெறி தவறிய அரக்கர்கட்கு இராச்சியம் நிலைநில்லாதென்பதையும், தம்பியர்விஷயத்திற் கருணைவைக்குந் தன்மையோடு சத்தியத்திற்குப் பாடுபடுந்தன்மை இராமபிரானிடத்து இருப்பதையும் கண்டு விபீஷணன் விரும்பி வந்தடைந்தானென்க. இராமபிரான் பரதனுக்கு இராச்சியத்தைக்கொடுத்தது-அவனிடத்துத் தான் கருணைவைத்தமையோடு தன் பிதாவைச் சத்திய

சந்தனுக்கவேணுமென்ற கருத்தினுலுமாதல் காண்க. உலகெலாம் இளவற்கீந்ததோர் கருணையைப் பேணியது - தன்னையுந் தம்பியாகப் பாவித்துக் கருணை செய்வனென்றும் என்றும்மாறுபடானென்றும் கருதியதனுலாகும். இளவற்கு உலகெலாமீந்ததைப் பேணியது - தனக்கு இராமபிரான் அரசு தருவனென்று விரும்பியதா லென்பாரு முளர். பி - ம்:—[1]அரசும். [2]சீரியோய். [3]நெறியல்லாமையால், நெறியலதாமையும். [4]நினைக்கிலாமையும். [5]அன்பும்.

௬௯. காலமன் றிவன்[1]வரு கால [2]மென்பரேல்
வாலிதன் [3]னுறுபகை [4]வலிதொ லைத்தலால்
[5]ஏலுமிங் கிவற்கினி யிறுதி யென்றுனை
[6]மூலமென் றுணர்வுறப் பிரிவு முற்றினன்.

(இ - ள்.) 'இந்தவிபீஷணன் (தன் தமையனைவிட்டு நம்மை) வந்தடைந்த காலம் தக்ககாலமன்று' என்பார்களானுல்,(அது, சரியன்று):(இராமன்),வாலியென்கின்ற தனது பெரும்பகைவனின் வலி தொலைத்தலால் [கொன்றதனுல்], இனி இவ்விடத்து, இந்த இராவணனுக்கு நாசம்பொருந்துமென்று கருதி உன்னைப்பற்றி மூலப்பொருளாகுவையென்ற உணர்ச்சிதோன்ற (தன் தமையனைப்) பிரிதலை முடிவாகச்செய்தான் [பிரிந்தான்என்றபடி]; (எ - று.)

நெருக்கடியான வேளையில் தமையனைப் பிரிந்த இவன் கள்ளத்தினுல் ஏமாற்றுவதற்கே வந்தானுகுமென்று சிலர் கருதக்கூடும்:அது தக்கதாக எனக்குப் படவில்லை: இராவணனுடைய அக்கிரமச்செயல் தன்மனத்திற்குப்பட்டபோதிலும் உம்முடைய நிலை இப்படிப்பட்டதென்று அந்த விபீஷணனுக்குத் தெரியாதிருந்தது: அதனுல், சீதையைக்கவர்ந்தநாள் முதல் இராவணனுக்கு நல்லுபதேசஞ்செய்வதோடு விபீஷணன் நின்றிட்டான்: இப்போது வாலியைக் கொன்று வானரங்களையெல்லாம் பரிவாரமாகக்கொண்டு இராவணனேடு போர்புரிவதென்று நீர் வந்திட்டதனுல்,உம்முடைய வலிமையை யாராய்ந்து, வாலியின் வலியைக்குலைப்பது பரம்பொருட்குஅன்றி மற்று எவர்க்கும் இயலாதாதலால் அத்தொழிலைச்செய்த நீர் மூலப்பொருளென்று தெரிந்து, இப்போது தமையனைவிட்டு உம்மையடைந்திட்டான்: ஆகவே, இவன் வந்த காலம் ஏற்றகாலமேயென்று தெரிவித்தான் அநுமானென்க. 'காலமன்றிவன்வருங்காலமென்றிடும், வாலிதன்னுறுவலிதொலைத்ததாதலால்' என்று முன்னிரண்டடிகள்சிலபிரதியில். "ஸஏஷதேஶ:காலஶ்சஎன்கையாலே இதுக்கு [சரணமாகஅடைவதற்கு] தேஶகாலநியமமில்லை"என்றஸ்ரீவசநபூஷணமும், "மஹாராஜர் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்தபட்சத்தைத் தூஷிக்கிற திருவடி......இராவணனலே அவமானிதனுய் ஸ்வநிகர்ஷத்தைமுன்னிட்டுக்கொண்டு ஶரணமென்றுவந்த ஸ்ரீவிபீஷணுழ்வான் அதேஶத்திலே அகாலத்திலே வந்தானென்று தேவரீருடைய மந்த்ரிகளாலே யாதொன்றுசொல்லப்பட்டது, இந்தப்பக்ஷத்தில் விஶேஷித்து எனக்கு இந்தவிவக்ஷை யுண்டாகாநின்றது: இவன்வருகிறவளவில் யாதொருதேஶத்திலே யாதொருகாலத்திலே வந்தான், அவன்வரவுக்கு அந்தஇதுவே தேஶமும் அந்தஇதுவே காலமுமாம் யாதொருபடி, அப்படிப்பட்ட விவக்ஷயை நான்அறிந்தவளவும் விண்

ணப்பஞ்செய்யக் கேட்டருளவேணும்: எங்ஙனேயென்னில்,—தமஃ ப்ரக்ருதியாகையாலே பரஹிம்ஸையே யாத்ரையான ராவணனிற்காட்டில், ஸத்வோத்தரராகையாலே பராக்ஷணமே யாத்ரையாயிருக்கிறதேவரீரைப்ராப்யராகபுத்திபண்ணி, அப்படியே ராவணனை விட்டுப் போராதொழிந்தால் அவனுடைய அக்ருத்யத்துக்குஸஹகாரியாய் அந்தப்ராதிகூல்யத்தோடே முடிந்துபோகையாகிற தோஷத்தையும், தார்மிகரான தேவரீருடனே கூடப்பெற்றால் தத்பலமான தேவரீர்திருவடிகளிற் கைங்கர்யத்தைலபித்துவாழ்கையாகிறநன்மையையும் புத்திபண்ணி, அப்படியே தேவரீர்திருவுள்ளத்திலே புண்படும்படி குற்றத்தைத்தீரக்கழியச்செய்துநிற்கிற ராவணன்தௌராத்ம்யத்தையும் துராத்மாக்களை அநாயாஸேந அழிக்கவல்ல தேவரீரின் ஆண்பிள்ளைத்தனத்தையுங் கண்டால், விஶேஷஜ்ஞனை அவனுக்கு இவ்வரவு ப்ராப்தம்: ந்யாயத்திலே ஸஞ்சரிக்குமவனுடையபுத்திக்கும் இது ஸத்ருஶமென்றாரிறே: ஆக இப்படி ஹாவஶக்தியையுடையனை ஸ்ரீவிபீஷணாழ்வான் ஶரணமென்றுவந்த தேஶகாலங்களில்குறைபார்க்கக்கடவதல்ல: அவன்வந்ததுவே தேஶமும் காலமுமென்று ஶரணாகதிதர்மஜ்ஞனை திருவடிசேர்ணயிக்கையாலே ப்ரபத்திக்கு தேஶகால நியமமில்லையென்க" என்ற அதன் வ்யாக்யானத்தின்பொருளும் உணரத்தக்கன. பி-ம்:—[1]வரும். [2]என்றது. [3]துறு. [4]வலியதேறியது, வலியதெய்தியது. [5]ஏனுமிங்கிவற்கினி யிறுதியென்னலால், ஆலினியங்கிவற்கிறுதியாவதால். [6]மூலமென்றுணர்தலால், மூலமென்றுணேவரை. (௪௦௦)

௯௫. தீத்தொழி லரக்கர்த மாயச் செய்வினை
[1]வாய்த்துள ரன்னவை யுணரு [2]மாண்பினால்
[3]காய்த்தவ ரவர்களே [4]கையுற்றார் நமக்கு
[5]ஏத்தரு முறுதியு [6]மெளிதி னெய்துமால்.

(இ - ள்.) கொடுந்தொழிலையுடைய அரக்கரின் மாயத்தைச் செய்கின்ற தொழில் பொருந்தியிருக்கப் பெற்றவரும் [அரக்கர் செய்யும் மாயமெல்லாம் தாம் செய்யவல்லவரும்] அப்படிப்பட்ட மாயச்செயல்களை யறியும்வகையில் தேர்ந்தவருமான அவர்களே (தாமே வலியவந்து) நமக்கு வசமாயினர்: (இதனால்), கொண்டாடுவதற்கு அருமையான நன்மையும் (நமக்கு) எளிதிற் கிடைக்கும்; (எ - று.)

கீழ்ச்செய்யுளினால், விபீஷணன் தன் துணைவரோடுவந்தது சரியான காலமே: அவன் வந்த காலத்தைக்கொண்டு தன்மாயத்தினால் நம்மை ஏமாற்றுவதற்காக வந்தானென்று சொல்வதற்கில்லையென்று எடுத்துக்காட்டிய அநுமான், இதனால், வந்த அரக்கர் மாயத்தையறிந்தவராயிருப்பது நமக்கு நன்மையே தருமென்கின்றானென்க. 'பாம்பின் கால் பாம்பறியும்'என்றபடி இந்த விபீஷணாதியர் அரக்கச்சாதியிற் பிறந்தவராதலால், அரக்கர் ஏதேனும் மாயம் செய்தால் அதனையறிந்து கூறுவர்: அன்றியும் ஏதாவது அவர்செய்வதற்கு மாறாக மாயஞ்செய்யவேணுமென்றாலும் செய்வர்: இவ்வழியால் நன்மையே நமக்கு விளையுமென்பதாம். ஏத்தரு-செயவெனெச்சத்தின் அகரயீறுதொகுத்தல். இனி, ஏ தரும் உறுதியும் - (உமது) அம்பு தருகின்ற உறுதிப்பொருளா

கிய வெற்றியும், எளிதின் எய்தும் என்று உரைப்பினுமாம். ஏற்றுக்கொள்ளக் கூடாமைக்குக் காரணமாகக் கீழ்க்கூறிய மாயமுணர்ந்தமையையே அநுமான் ஏற்றுக்கொள்ளுதலால் நன்மையுண்டாகுமென்பதற்குக் காரணமாகக்கூறியது-மற்றதற்காக்கலென்னுமணியாம்: இது, வடமொழியில் வ்யாகாதாலங்காரமெனப்படும். பி-ம்:—[1]வாய்த்துளான், வாய்த்தன. [2]மாண்பினூர். [3]காத்தவர். [4]கையுற்றால். [5]ஏற்றதோர். [6]எளிதும். (௪0௧)

௯௬. [1]தெளிவுற லரிதிவர் [2]மனத்தின் றீமைநாம்
[3]விளிவது செய்குவ ரென்ன வேண்டுதல்
[4]ஒளியுற வுயர்ந்தவ [5]ரொப்ப [6]வெண்ணலார்
எளியவர் திறத்திவை [7]யெண்ண லேயுமோ.

(இ - ள்.) 'இந்த அரக்கருடைய மனத்திலுள்ள தீமையைத் தெளிதலைப் பொருந்துதல் [செவ்வனேயறிதல்] அருமையானது: நாம் இறக்கக்கூடிய செயலைச் செய்வர்' என்று கருதுதலை (ச்சிலர் செய்யக்கூடும்): மேம்பாடுபொருந்த உயர்ந்தவரான பகைவரையொப்ப எளிமைப்பட்டுவந்துள்ள இவர்கள் விஷயத்தில் இவ்வாறுனசெயலை எண்ணுவது பொருந்துமோ? (எ - று.)

வலியபகைவரிடத்துச் சங்கிப்பதுபோல, இவரால் தீமை விளையுமோ என்று எளியவரான இவரிடத்துச் சங்கிக்க இடமில்லையென்பதை, இதனால் அநுமான் எடுத்துக்காட்டுகின்றானென்க. எளியவரென்றது - உற்றோரால் துரத்தப்பட்டுத் தங்கஇடமில்லாது தவிப்பவராதலால். வேண்டுதல் என்பதைச் செயப்படுபொருளாக்கி,வினைமுற்று வருவிக்கப்பட்டது. எண்ணலார் - பகைவர். இனி, எழுவாய் வருவித்து, ஒளியுற உயர்ந்தவரையொப்ப (இவரைத்) தெளிவுறலரிது என்னவேண்டுதலை, (அறிஞர்) எண்ணலார் என உரைப்பினுமாம். பி-ம்:—[1]தெளிவுறவறிதவர். [2]மனத்துத்தீமைகள், மனத்தின்தீமையும். [3]இளிவகை, விளிவகை. [4]ஒளிவுற. [5]உள்ளத்து. [6]எண்ணலால், எண்ணிலா. [7]எண்ணி. (௪0௨)

௯௭. கொல்லுமி னிவனையென் றரக்கன் [1]கூறிய
எல்லையிற் றூதரை யெறித லென்பது
புல்லிது பழியொடும் புணரும் போர்த்தொழில்
[2]வெல்லலம் [3]பின்னையென் றிடைவி லக்கினான்.

(இ - ள்.) (நான் சீதையைக்காணமுந்தி இலங்கையைச்சேர்ந்து இராவணனைக் கிட்ட),'இவனைக் கொல்லுமின்' என்று இராவணன்சொன்னபோது 'தூதுவரை வெட்டுதலென்பது இழிவைத் தருவது:(அச்செயல்) பழியுடனும் பொருந்தும்: பின்னும், (நம்பகைவர் வந்து) பொர அவருடன் போர்செய்தலாகிய தொழிலில் வெற்றிபெறுதற்கு இடையூறுவிளைத்துக்கொண்டவராவோம்' என்று (தந்திரமாகச்) சொல்லித் தக்கவேளையில் தடுத்தான், (இந்த விபீஷணன்); (எ - று.)

'ஒருகால் தீமைசெய்வரோ?' என்று எளியவரான இவர்திறத்துச் சிலர் சந்தேகித்தல் வெண்டுவதன்று எனக்காட்டிய அநுமான், விபீஷணன் நல்லெண்ணமுள்ளவனென்பதை மெய்ப்பிக்க அவனுடைய செயலில் ஒன்றை

எடுத்துக்காட்டுகின்றா னென்க. பி-ம்:—[1]கூறிட. [2]வெல்லுவாய், வெல்ல லாம். [3]பின்னர். (௬0௩)

௬௮. மாதரைக் கோறலு [1]மறத்து நீங்கிய
ஆதரைக் கோறலு மழிவு செய்யினுந்
தூதரைக் கோறலுந் தூய்தன் றாமென
ஏதுவிற் சிறந்தன வெடுத்துக் காட்டினான்.

(இ - ள்.) 'மகளிரைக் கொல்லுதலும், வீரத்தினின்று நீங்கிய இழிந்தோரைக்கொல்லுதலும், (நமக்குக்) கேட்டைச்செய்தாலும் தூதுவரைக் கொல்லுதலும், குற்றமற்றசெயலன்றாம்' என்று (அதற்கு ஏற்றனவான) சிறந்த ஏதுக்களை,(இந்த விபீஷணன் இராவணனுக்கு)எடுத்து அறிவித்தான்;(எ-று.)

கீழ்ச்சொல்லியதையே வேறுவகையாக விவரித்துக் கூறுகின்றனன், அநுமான். இவ்வாறு விபீஷணன் உபதேசிப்பது சீதாபிராட்டியை இராவணன் கொல்லாமைக்கு ஏதுவாதலாற் கூறினானென்க. ஆதர்-பசுப்போன்றவர். மாதரைக் கோறலும்முதலியமூன்றும் தூய்தன்று என்றதொடரோடு தனித்தனி யியையும். ஹேது - ஏது என்றாயிற்று. பி-ம்:—[1]மறத்துள், மனத்து. (௬0௪)

௬௯. [1]எல்லியி னணிவ [2]னிரண மாளிகை
செல்லிய போதினுந் [3]திரிந்த போதினும்
நல்லன நிமித்தங்கள் [4]நனிந யந்துள
அல்லது முண்டுநா னறிந்த தாழியாய்.

(இ - ள்.) ஆழியாய்! இராப்போதில், யான், இந்தவிபீஷணனுடைய பொன்மயமானமாளிகையிலே (முதன்முறை) சென்றகாலத்திலும் (பிறகு அந்தமனைப்பக்கமாகத்) திரிந்தகாலத்திலும், நன்மையைத்தருவனவான சகுனங்கள் மிகவும் விரும்புமாறுதோன்றியுள்ளன: அதுவல்லாமலும்,நான் (இவ்விபீஷணனைப்பற்றி) அறிந்துள்ளது, உண்டு; (எ - று.)—'அல்லதும்' என்றதை, மேற்செய்யுளில் விவரிப்பன்.

விபீஷணன் நல்லகுணமுள்ளவனென்பதை அவன்செய்தியால்மெய்ப்பித்த அநுமான், இதனால், அவ்விபீஷணனது மாளிகையைச்சார்கையில் நல்லநிமித்தங்கள்தோன்றியமை அவனால் நமக்கு நன்மையுண்டாகுமேயன்றித் தீமையுண்டாகாதென்பதைக் குறிப்பிக்கு மென்பதற்கு அநுமனைக் கூறுகின்றான். இரணம்-ஹிரணம்: வடசொல்: பொன்என்பது,பொருள். பி-ம்:—[1]எல்லையில். [2]இரத. [3]திரண்ட. [4]நிகழ்ந்தன. (௬0௫)

௭00. நிந்தனை நறவமூ னெறியி லூன்களும்
[1]தந்தன [2]கண்டிலேன் [3]தருமந் தானமும்
வந்தனை நீதியும் பிறவு [4]மாண்பமைந்து
அந்தண [5]ரில்லெனப் பொலிந்த [6]தாமரோ.

(இ - ள்.) பழிக்கத்தக்க கள்ளும் நன்னெறியுடையோர்க்குத்தகாத இறைச்சிகளும் (இவ்விபீஷணன்மனையில்) கொணர்ந்துவைத்திருப்பனவற்றைப் பார்த்தேனில்லை: (அவன்மனையானது),—தருமத்தோடுகூடிய தான

மும் (கடவுள் பெரியோர் இவர்களின்)வழிபாடும் தருமத்திற்குக் கட்டுப்பட்டிருக்குந்தன்மையும் மற்றுமுள்ள நன்மைகளும் சிறப்போடுபொருந்திப் பிராமணருடைய வீடுபோல விளங்கிற்று; (எ - று.)

இதனால், இந்தவிபீஷணன் நல்லவன்போல நடிப்பவனன்று: உண்மையாகவே நற்குணமுடையவனென்பதைக் கண்கூடாகக்கண்டுள்ளேனென்கின்றான், அநுமா னென்க. பி-ம்:—1தந்திலை. 2கண்டிலம். 3தருமம். 4மாண்டவை, மாண்பமை. 5மனையென. 6ஆழியாய். (௪௦௬)

௪௦௭. 1அன்னவன் 2றனிமக 3ளலரின் மேலயன்
சொன்னதோர் சாபமுண் 4டுன்னைத் துன்மதி
நன்னுதல் தீண்டுமேல் 5நணுகுங் கூற்றென
என்னுடை யிறைவிக்கு 6மினிது கூறினாள்.

(இ - ள்.) அந்தவிபீஷணனுடைய ஒப்பற்றமகளும்,—(சீதை மிகவும் வருந்தியநிலையில்),—'அழகியநெற்றியையுடையவளே! (திருமாலின் திருநாபீ) கமலத்தின்மேல் வீற்றிருப்பவனாகிய பிரமதேவன் சொல்லியுள்ளதாகிய ஒரு சாபமுள்ளது: (ஆதலால்), கெடுமதியையுடைய இராவணன் உன்னைத்தொடுவானானால், (உடனே) யமன் (அவனைச்) சேர்வான் [இறந்திடுவான்]' என்று என்தலைவியாகிய சீதாபிராட்டிக்கு நல்வார்த்தைசொல்லித் தேற்றுவித்தாள்.

இதனால், விபீஷணனேயன்றி அவனைச் சார்ந்தாரும் நற்குணமுடையரென்று எடுத்துக்காட்டுகின்றான், அநுமான். விபீஷணனைச்சேர்ந்தவர் நற்குணமுடையவரென்பது பிரதியட்சமாகப் பார்க்கப்பட்டதனாலும், இவ்விபீஷணன் நல்லவன்போல் வேஷம்போட்டுக்கொண்டுவந்தவனோ? என்று ஐயுறற்கு இடமில்லையென்று காட்டியவாறு.

அயன்சொன்ன சாபம் வருமாறு:—முன்னொருகாலத்திலே பிரமனை வந்தனஞ்செய்யும்பொருட்டு அவனது இருப்பிடத்தைக்குறித்துச் சென்றுகொண்டிருந்த புஞ்சிகஸ்தலையென்னும் அப்ஸரஸ் ஸ்திரீயை ஆகாசமார்க்கத்திலே கண்ணுற்ற இராவணன் அவளைக் காதலித்து வலியக்கற்பழிக்க, அங்ஙனங் கலங்கினநிலையோடு பிரமனிருக்கையைச்சார்ந்த அவளை நோக்கின நான்முகக்கடவுள் நிகழ்ந்ததையுணர்ந்து கடுங்கோபங்கொண்டு இராவணனைக் குறித்து 'இனி நீ அயல்மாதை வலியக்கற்பழிப்பாயாயின், அப்பொழுதே உன்தலை நூறுகப்பிளந்துஅழிக' எனச் சபித்திட்டா னென்பது. பி - ம்:—1மன்னிவன், மன்னவன். 2தன். 3மலரின். 4என்னைத். 5நண்ணும். 6இனிய.

வேறு.

௪௦௮. பெற்றுடைய பெருவரமும் பிறந்துடைய வஞ்சனையும் பிறவு முன்கை, விற்றொடையின் விடுகணையால் வெந்1தொழியு மெனக்கருதி 2விரைவின் வந்தான், உற்றுடைய 3பெருவரமு 4முகந்துடைய தன்னனிபு 5முணர்வு நோக்கின், மற்றுடையர் தாமுளரோ வாளரக்க னன்றியே தவத்தின் 7வாய்த்தார்.

(இ - ள்.) '(தன்தமையன்) அடைந்துள்ள பெரியவரங்களும் பிறவி தொட்டுத் தோன்றியுள்ள [சகசமாக அமைந்துள்ள] மாயச்செயலும் மற்று முள்ள தீச்செயல்களும் உன்கையிலேயுள்ள வில்லிலிருந்து வரிசையாகவிடு கின்ற அம்புகளால் எரிந்து தீந்துபோம்' என்றுநினைத்து, (இந்தவிபீஷணன்) விரைவுகொண்டு வந்துள்ளான்: ஆராய்ந்துபார்த்தால், அடைந்துள்ள பெரிய வரங்களும் மனமுவந்து கைக்கொண்டுள்ள குளிர்ந்த கருணையும் தத்துவ ஞானமும் (ஆகிய இவைகள்), தவத்தினாலே வாய்க்கப்பெற்றவர் கொடிய அரக்கர்பிறவியையுடையவனான இந்தவிபீஷணனேயல்லாமற்பெற்றிருக்கின் றாரென்றுசொல்லுமாறு வேறும் உள்ளாரோ? [இல்லையன்றோ என்றபடி].

பெற்றுடைய பெருவரம் - தேவர்கள்முதலியோரால் கொல்லப்படாமை முதலியன. கேட்போர்யாவருக்கும் தான் கூறியவை மனத்தில் நன்குபடிய வேணுமென்ற கருத்தினால், அநுமான் முன்னர்க்கூறியவற்றையே வேறுவகை யாக எடுத்துக்கூறுகின்றான். அரக்கரில் இவனைப்போல வரம்முதலியனபெற் றிருப்பார் வேறில்லையென்க. அரக்கர்க்கு இயற்கையாகக்கொடுக்கும் அடை மொழியாக 'வாளரக்கன்' என்றார்: இனி, வாள்-வாளாயுதமேந்திய என்றும், எதிரிகட்குவாள்போற்கொடியஎன்றும் உரைத்தலுமாம். ஒருபிரதியில் முன் னிரண்டடிகள் பின்னிரண்டடிகளாயுள்ளன. 'பெற்றுடைய பெருவரமும் பிறந்துடைய பெருந்தவமும் பிறவும்நோக்கின்' என்று சிலபிரதியிலும், 'பெற்றுடைய மனவலியு மூக்கமிகுபெருந்தொழிலு முணர்ந்து நோக்கின்' என்று சிலபிரதியிலும் மூன்றாமடி காணப்படுகின்றது. பி - ம்:—[1]அழியும். [2]மேவினனால், மேற்சொல்லோடும், மேற்கோளோடும். [3]மனவலியும். [4]பிறந் துடைய பெருந்தவமும், பிறந்துடையவஞ்சனையும். [5]பிறவும், உணர்ந்து. [6]வாளரக்கர். [7]மிக்கார். (௬0௮)

௯0௯. தேவர்க்குந் தானவர்க்குந் [1]திசைமுகனே முதலாய [2]தேவ தேவர், மூவர்க்கு [3]முடிப்பரிய காரியத்தை [4]முற்றுவிப்பான் மூண்டு [5]நின்றே, ஆவத்தின் வந்தபய மென்றானை யயிர்த்தகல [6]விடுதி யாயின், கூவத்தின் சிறுபுனலைக் கட[7]லயிர்த்த தொவ்வாதோ கொற்ற வேந்தே.

(இ - ள்.) வெற்றிபொருந்திய அரசே! தேவர்க்கும் அசுரர்கட்கும் பிரம தேவன்முதலான முதல்தேவர் மூவர்க்கும் நிறைவேற்றுவதற்கு அருமையான செயலை [இராவணசங்காரத்தை] முடித்துவைக்கும்பொருட்டு முனைந்திரு ந்து ஆபத்துக்காலத்தில் (நம்மிடத்து) வந்து அபயமென்று சொல்லிக்கொண்டு நின்ற இவனைச் சந்தேகித்து(க் கைக்கொள்ளாமல்) அகலவிட்டிடுவாயானால் '(பெரு நீரையுடைய) சமுத்திரமானது கிணற்றிலுள்ள சொற்பமானநீரைக் குடித்து ( நம்மையடித்துக்கொண்டுபோய்விடுமோ?' என்று) சந்தேகிப்பதை ஒத்திராதோ? (எ - று.)

நீர் ஒருத்தரே சகலராட்சசர்களையும் அழிக்குந் திறமைவாய்ந்தவர். அப் படிப்பட்ட நீர் 'எளிமைப்பட்ட இவனால் என்ன நேருமோ?' என்று சந்தேகி க்க இடமுண்டோ? கடலின்நீரைக் கிணறுகொள்ளாதவாறுபோல, இவனால்

உமக்கு ஒருதீங்குஞ்செய்யமுடியாதென்பது, திண்ணம்: எவர்க்கும் செய்ய முடியாத இராவணசங்காரத்திற்குத் துணையாயுதவ வேண்டி ஆபத்துக்காலத்தில் அபயம் வேண்டும் இவனைச் சந்தேகிக்காமல் கைக்கொள்ளுதலே தக்கதென்றவாறு. 'கடலினீரைக் கிணறுகொள்ளாது' என்ற பழமொழி, உபமானமாக இங்கு அமைக்கப்பட்டிருத்தல் காண்க. ஆவத்து=ஆபத்: வடசொல். அபயம் - பயமில்லாதபடிகாக்கவேண்டிய பொருளெனப் பொருள் தரும் வடசொல். பி - ம்:—[1]திசைமுகற்கும். [2]தேவர்தேவர், தேவதேவே. [3]முற்றுத. [4]முற்றுவிப்பாய். [5]நின்றாய். [6]விடுதுமென்றால், விடுதியென்றால். [7]அயிர்த்தால். (௪0௧)

௧0௪. பகைப்புலத்தோர் துணை[1]யல்லரென்[2]றிவனைப் பற்றாமே லறிஞர் பார்க்கின், நகைப்[3]புலத்த தாமன்றே நற்றாய [4]முளதாய [5]பற்றுன் மிக்க, தகைப்[6]புலத்தோர் தந்தையர்க டம்பியர்க டமையரிவர் தாமே [7]யன்றே,[8]மிகைப்புலத்து [9]விளைகின்ற தொருபொருளைக் காதலிக்கின் விளிஞராவார்.

(இ - ள்.) 'பகையிடத்தைச்சேர்ந்தவர் துணை அல்லர்'எனச் சொல்லி இந்தவிபீஷணனைக்கொள்ளாது விட்டிட்டேமானால், (அது, அரசநீதிநூலை) அறிந்தவர் பார்ப்பாராயின் பரிகசித்துச்சிரிப்பதற்குவிஷயமாக ஆய்விடுமன்றோ? சிறந்த பங்காளிபாத்தியதையைக்கொண்டுள்ள (ஒருவர்க்கொருவர்) அன்புமிகுந்த தகுதியையுடையரான தந்தையார் தம்பிமார் தமையன்மார் என்ற இவர்களேயல்லவா,மேம்பாட்டுக்குவிஷயமாய் விளைந்துள்ள ஒருவஸ்துவை விரும்பினால் கொல்லத்தக்கவரென்னுமாறு (ஒருத்தரோடொருத்தர்)பகைவராவர்; (எ - று.)

தமையனால்துரத்தப்பட்டுத் தனக்குநிச்சிந்தையாகத் தங்கக்கூடிய இடமில்லாமற் கவலைப்பட்டு இவன் வந்தடைந்தபோது இவனைச்சேர்த்துக்கொள்ளாமல், 'இவன் பகைவரைச் சேர்ந்தவன்: ஆகையால்,இவன்மனம் நம்பகைவரான இராவணாதியரை வெல்லவேணுமென்றுஇராது: ஆகவே, இவனை நம்பி அங்கீகரிக்கலாகாது' என்றுசொல்வது இராசநீதிதெரிந்தோர்சொல்லும் வார்த்தையல்ல: அவர்கள் கேட்பின் சிரிப்பார்கள்: ஒருவர்க்கொருவர் பங்காளிகளாய் அன்புபூண்டவரான தந்தையார் தமையனார் தம்பிமார்என்ற இவர்களே பொருள்நிமித்தம் மாறுபாடுபூண்டு ஒருவரையொருவர் கொல்லப்பார்ப்பதைக் கண்கூடாகக்காணவில்லையோ? இது இயல்பேயன்றோ? என்றனனென்பதாம். நற்றாயமென்றது - செத்தாலும் வாழ்ந்தாலும் நீட்டுக்காக்கும்படியுள்ள பங்காளித்தன்மை. ஒருத்தர்க்கொருத்தர் நம்மைச்சேர்ந்தவரென்று அன்புவைத்தற்கு எவ்வாறு உரியரோ,அங்ஙனமே பகைமை மிகுதியாகக் கொள்ளுதற்கும் உரியவர் இவரென்பது, விளக்கப்பட்டது. பி-ம்:—[1]அல்ல. [2]இவரை. [3]புலத்தாரென்றென்றே. [4]முதலாய, உளதாகப், உளதாகிற். [5]பற்றார்வாரார். [6]புலத்ததந்தைதாய்தம்பியர்கடனையரிவர், புலத்தர்தங்குலத்தர் தம்பியர்கடனையரிவர். [7]அன்றே. [8]மிகைப்புலத்தின். [9]விளைகின்ற மெய்ப். (௪௧0)

க0௫.ஆதலா லிவன்வரவு நல்வரவே [1]யென[2]வுணர்ந்தே [3]னடியே னுன்றன், வேதநூ லெனத்தகைய [4]திருவுளத்தின் குறிப்பறியே னென்று விட்டான், காதலுனன் முகனாலுங் [5]கணிப்பரிய கலையனைத்துங் கதிரோன் முன்சென், றோதினு னோதநீர் கடந்துபகை [6]கடிந்துலகை யுய்யச் [7]செய்தான்.

(இ - ள்.) 'இவ்வாறுஇருத்தலால் இந்த விபீஷணனுடைய வருகை நல்லஎண்ணத்துடன்வந்த வருகையே' என்று (உமக்கு) அடியனுன யான், அறிந்துள்ளேன்: உம்முடைய வேதசாஸ்திரமென்று சொல்லத்தகுந்த [பழுது படாததான] மனத்திலுள்ள எண்ணத்தை அறியமாட்டேனென்று சொல்லி முடித்தான்; (யாவனெனில்),அன்புசெய்யப்படுகின்ற பிரமதேவனாலும் எண்ணுதற்குமுடியாத சாஸ்திரங்களையெல்லாம் சூரியனுக்கு முன்னே நடந்து சென்றவண்ணம் அப்பியசித்தவனும் வெள்ளநீராகிய கடலைக்கடந்து (அந்த இலங்கையிலுள்ள) பகைவர்களைவென்று உலகத்தை உய்யுமாறு செய்தவனுமாகிய அனுமான்; (எ - று.)

சூரியனிடத்துச் சகலசாஸ்திரங்களையும் அநுமான் ஓதியவனென்பதறிக. உலகுக்கெல்லாம் உயிராகிய இராமபிரானுக்குச் சீதையின்செய்தியை யறிவித்துப் பிழைப்புமூட்டியதனுல், அநுமான் உலகை உய்யக்கொண்டவனுயினுன். பி-ம்:—[1]என்று. [2]அயிர்த்தேன். [3]அடியனேனுன். [4]திருமனத்தில். [5]அளப்பரிய. [6]கடந்து. [7]கொண்டான். (௬௧௧)

வேறு.

க0௬.—அநுமான்கூறியதைக் கேட்டு, இராமன் கூறத்தொடங்குதல்.

மாருதி [1]வினய வார்த்தை செவிமடுத் [2]தமிழ்தின் மாந்திப்
பேரறி வாள நன்று நன்றெனப் பிறரை நோக்கிச்
சீரிது [3]மேலிம் [4]மாற்றம் [5]தெளிவுறத் [6]தேர்மி னென்னு
ஆரிய னுரைப்ப தாது னனைவரு மதனைக் கேட்டார்.

(இ - ள்.) பெரியோனுகிய இராமபிரான்,—அநுமானுடைய வணக்கத்தோடுகூடியவார்த்தையைக் காதினுல்கேட்டு அமுதத்தையுண்டதுபோல மனம் மகிழ்ந்து (அவ்வநுமானைநோக்கி), 'பேர் அறிவு ஆள! (உனது வார்த்தை) மிகவும் நன்றுயிருந்தது!' என்று கொண்டாடிக்கூறி, (சுக்கிரீவன்முதலிய) மற்றையோரைப்பார்த்து, '(இவ்வனுமான்கூறியது) மிகவுஞ் சிறப்புடையது; இனிமேல் (யான் கூறுகின்ற) இந்த வார்த்தையைத் தெளிவாக (நீங்கள்) ஆலோசியுங்கள்' என்றுசொல்லி (த்தன்கருத்தை)ச் சொல்லத்தொடங்கினுன்: (அங்குள்ள) எல்லோரும் அதனைக் கேட்கலானுர்; (எ - று.)

அநுமான் 'விபீஷணனை யங்கீகரிக்கலாம்' என்று காரணங்காட்டி வணக்கத்தோடுகூறிய வார்த்தையைக்கேட்ட இராமபிரான், அவ்வநுமான் கூறியது யுக்திக்கு ஏற்றதாயிருந்ததுபற்றி மிகமகிழ்ந்து அவ்வசனத்தைக் கொண்டாடிக்கூறி, பிறகு தான் அநுமான்கூறியதையே ஏற்றுக்கொள்ளுதற்குஏற்ற காரணத்தை அங்குள்ளார் அனைவரும் கேட்டறியும்படி எடுத்துக்கூறத்தொடங்க, அனைவரும் கேட்கலாயின ரென்பதாம். ''தெரிந்த வினத்தொடு தேர்ந்

தெண்ணிச் செய்வார்க்கு, அரும்பொருள் யாதொன்றுமில்'' என்றபடி அரசன் மந்திரிமுதலிய இனத்தோடுகூடி ஆலோசித்துத் துணிந்தபிறகே தொழில்செய்யவேண்டுமென்பது அரசநீதியாதலால், இராமபிரான் இவ்வாறு ஆலோசிக்கின்றானென்க. வாயினால் உட்கொள்ளப்படுகிற அமிருதத்தினால் உண்டாகும் ஆனந்தம் செவியின்மூலமாகக் கேட்ட அநுமன் வார்த்தையினாலுண்டாயிற்றென்பது, 'செவிமடுத்தமிழ்தின்மாந்தி' என்பதன் கருத்து. இராமபிரான் அநுமானை 'பேரறிவாள' என்று விளித்தது-அவன் கூறியவை யாவும் அரசநீதிக்கு ஒத்திருந்ததனாலென்க. விநயம் - வணக்கம்: வடசொல். நயம் - நீதி. விநயம் வார்த்தை-மிக்கநீதியையுடைய வார்த்தையெனினுமாம். நன்று நன்று, அடுக்கு-உவகைபற்றியது. பி-ம்:—[1]வினைய, அமுத. [2]இனிது. [3]மேலிவ், மேய. [4]வார்த்தை. [5]தெளிவறத். [6]தெரிமினென்ன. (சுகஉ)

கoஎ.—இதுமுதற் பதினான்குகவிகள்-இராமன் விபீஷணனைக் கைவிடலாகாமைக்குக் காரணங்காட்டிக்கூறலைத் தெரிவிக்கும்.

கருத்துற நோக்கிப் போந்த [1]காலமு நன்று காதல்
[2]அருத்தியு மரசின் மேற்றே யறிவினுக் கவதி யில்லை
[3]பெருத்துயர்[4]தவத்தி னானும் பிழைப்[5]பில னென்னும்பெற்றி
[6]திருத்திய தாகுமன்றே நம்வயிற் சேர்ந்த செய்கை.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) '(தன்) மனத்தினால் நன்றாக ஆராய்ந்து (விபீஷணன்) வந்து சேர்ந்த காலமும் தக்கதேயாம்; (இவனது) மனப்பூர்வமான விருப்பமும், இராச்சியத்தின்மீது உள்ளதாகும்: (இவனது ஆராய்ச்சிசெய்யும் வல்லமையுள்ள) புத்திக்கு, ஓரெல்லையில்லையாம்; (இவன்) நம்மிடத்தில் (அடைக்கலமாக) அடைந்த ஒரு செயலும், மிகுதியாகச் சிறந்துள்ள தவத்தையுடைய இந்தவிபீஷணன் ஒரு தவறும் இல்லாதவன்' என்னுந் தன்மையைச் செவ்வனே விளக்குமன்றோ? (எ - று.)

இராவணன் சீதையை அபகரித்துக்கொண்டுபோய்ப் பலநாள்களாயும் அப்போதெல்லாம் நம்மிடம் வந்துசேராமல், இந்தவிபீஷணன், நாம் எதிரியோடு போர்தொடங்கும் இச்சமயத்தில் வந்திருத்தலால், நம்முடன் கலந்தவன்போன்றிருந்து நம்முடைய அந்தரங்கங்களையெல்லாம் தெரிந்துகொண்டு நம்மை வஞ்சனையாற் கொல்லுதற்காகத்தான் வந்தானென்று நீங்கள் கருதுகிறீர்கள்; அவ்வாறுகருதுதற்குஇடமில்லை; நன்மதிகூறி எப்படியாவது தமையனைத்திருத்தலாமென்று இத்துணைநாள் பலபடிமுயன்றுபார்த்தும் அது பலியாமல், ''அஞ்சினையாகவினமர்க்குமாளலை,'' ''விழியெதிர்நிற்றியேல் விளிதி'' என்று அவ்விராவணன் தன்னைக் கடிந்துகூறவே, மனம்பொறாமல், இவன் 'இனி இராவணனை வழிப்படுத்த முடியாது; இப்போது நாம் மனத்திருப்தியின்றி இவனோடிருந்தாலும் இவனதுகொடுஞ்செயலுக்கெல்லாம் உதவியாயிருந்து நாமும் அழியநேரிடும்; இவனைவிட்டு இராமனிடம் சேர்ந்தால் தார்மிகரோடு சேர்ந்த பயனும் கிடைக்கும்; இராமன் வாலியைக்கொன்று, சுக்கிரீ

வனுக்கு இராச்சியமளித்தவனுனதால் ராக்ஷஸராஜ்யமும் நமக்குக்கிடைக்கும்; இந்தச்சமயம் தப்பினுல் இனிச் சமயம்வாய்க்காது' என்று இவ்வளவு ஆலோசனையோடு இராவணனைப் பற்றறவிட்டிட்டு இங்கே வந்திருக்கிறுன்: ஆகையால், இவன் சரியான காலத்தில் வரவில்லையென்றுவது, ஆலோசனையில் தவறுள்ளவனென்றுவது குறைகூற இடமில்லை யென்று இராமபிரான் கூறினனென்க. இதனுல், தக்ககாலத்தில் வரவில்லையென்றுவது, நல்லெண்ணத்தோடுவரவில்லை யென்றுவது அடைக்கலம் புகுந்த இவ்விபீஷணனைக் கைவிடலாகாதென்பது, கூறப்பட்டது. "ராஜ்யகாங்க்ஷீசராக்ஷஸ: [இவ்வரக்கன் இராச்சியத்தில் விருப்பமுள்ளவன்]"; "பண்டிதாஹி பவிஷ்யந்தி[அரக்கரிலும் ஆலோசனையுள்ளவர்கள் உளர்]" என்று ஸ்ரீவால்மீகிபகவான் கூறியிருப்பது இங்கே அறியத்தக்கது. விபீஷணன் தருமத்திலேயே விருப்பமுள்ளவனுதலாலும், இராவணன் தருமவிரோதமாகிய தகுதியில்செயலைச் செய்ததனுலும், இவ்விபீஷணன் இராவணனைவிட்டுவந்தானென்பதே இராமபிரானதுஉட்கோள்; ஆயினும், வாலியின் அரசைக் கைக்கொண்டு ஆள்கின்ற சுக்கிரீவன் விபீஷணனை அங்கீகரிப்பதில் எவ்வாற்றுலும் குறைசொல்லாதிருத்தற்பொருட்டு "காதல் அருத்தியும் அரசின்மேற்றே" என்று அவன் மனங்கொள்ளுமாறு இதனை ஒருகாரணமாக எடுத்துக்கூறுகின்றன னென்க. "ஸ்ரீவிபீஷணுழ்வானுக்குபலம் ராமப்ராப்தி" என்று லோகாசார்யர் அருளிச்செய்திருத்தலும் காண்க. எதிரியோடுபோர்செய்ய வேண்டிய இப்போது இவ்விபீஷணன் நம்மை வந்தடைந்திருத்தலால், இவனைக்கொண்டு நாம் பகைவருடைய அந்தரங்கங்களை யெல்லாம் அறிதல் எளிதிற் கூடுமாதலால், 'போந்தகாலமும் நன்று' என்றுனுமாம். அரசர்க்குக் காலம் பார்த்துத் தொழில்செய்வது இன்றியமையாதென்பதை "ஞாலங் கருதினுங் கைகூடும் காலங், கருதி யிடத்தாற் செயின்," "அருவினை யென்ப வுளவோ கருவியாற் காலமறிந்து செயின்" என்று திருக்குறள்களிலுங் காண்க. விபீஷணனை 'பெருத்து உயர் தவத்தினுன்' என்று குறித்தது, அவன்வஞ்சனையில்லாதவனென்று தெரிவித்தற்காக: "ஆதியம்பரமனுக் கன்பு நல்லறம், நீதியின் வழாமையு முயிர்க்கு நேயமும், வேதியருளும் நான்விரும்பிப் பெற்றனன், போதுறுகிழவனைத் தவமுன் பூண்டநாள்," "நல்லா யறத்தைக்கைவிட்டு நடுங்குமிடும்பைவரினும் நான், பொல்லாதன செய்யாதொழிக" என்பவற்றுல் இவன் வரம்வேண்டிப் பெற்றமைகாண்க. 'தவத்தினுன்' என்பதை மூன்றனுருபுஏற்ற பெயராகக்கொண்டு உரைப்பினுமாம்.

காதல் அருத்தி - ஒருபொருட்பன்மொழி: மீமிசைச்சொலெனப்படும். அருத்தி-அர்த்தீ: வடசொல். அவதி-எல்லையென்னும் பொருளுணர்த்தும் வடசொல். தவமாவது-மனம் பொறிகளின் வழியாய்ப் புலன்களின்மேற் போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உணவுசுருக்குதலும் கோடைக்காலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலும் மழைக்காலத்தில் மழையிலும் பனிக்காலத்தில் நீர்நிலையிலும் நிற்றலும் முதலிய அருஞ்செயல்களை மேற்கொண்டு அவற்றுல் உயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்தலாம். பி-ம்—1காலத்து. 2அருத்தியின்

மாசுமேற்றே, அருத்தியுமாசுவேறே. 3பெருத்துறை. 4தவத்தினாலும், அரசினாலும். 5இலது. 6தெரித்தனன், தெரித்தனம். (சுகங)

க0அ. மற்றினி யுரைப்ப 1தென்னை மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி 2யன்ன தன்றெனிற் பிறிதொன் றானும்
வெற்றியே பெறுக தோற்க 3வீக வீயாது வாழ்க
4பற்றுத லன்றி யுண்டோ 5வடைக்கலம் பகர்கின்றானை.

(இ - ள்.) இப்போது வேறுவகையாகச்சொல்வது எதற்காக? அனுமான் ஆராய்ந்து கூறியவகையே (நாம் செய்தற்குத்தக்க) ஆலோசனையாம்; அவன் சொன்னது தகுதியற்றதென்று (நீங்கள்) எண்ணினால், வேறுஒருவகையினால் (நாம்) வெற்றிபெற்றாலுஞ் சரி இறவாமலிருந்து நல்வாழ்க்கைபெறுவதாயிருந்தாலும் சரி (அது எனக்கு உடன்பாடன்று; அடைக்கலமாக அடைந்த இவனைக் கைக்கொள்வதனால், நமக்கு வெற்றியுண்டாகாமல்) தோல்விநேர்ந்தாலுஞ் சரி, (அல்லது நமது) உயிருக்கே கேடுநேர்ந்தாலுஞ் சரி,(அது எனக்குச் சம்மதமே): எம்மையே சரணமென்று சொல்லிக்கொண்டு அடைக்கலம் அடைந்த இந்த விபீஷணனை அங்கீகரிப்பது அல்லாமல் (வேறுசெய்யத்தக்க செயல் ஒன்று) உளதோ? [இல்லை]; (எ - று.)

அனுமான் ஆராய்ந்துசொன்னது இச்சமயத்துக்கு மிகவும் தகுதியாயிருத்தலால், அதற்குமாறாகச் சொல்லவேண்டியது வேறொன்று மில்லை; அடைக்கலம்புகுந்த இவனை அங்கீகரியாமற் கைவிட்டால்தான் நல்வாழ்வும்வெற்றியுமுண்டாகுமென்று ஏற்பட்டாலும், அது எனக்கு உடன்பாடன்று; சரணமடைந்த இவனை அங்கீகரிப்பதனால் நமக்குத்தோல்வியே உண்டாவதானாலும் அதற்குமேல் மரணமே நேர்வதானாலும் அதுவே எனக்கு உடம்பாடாகுமென்று இராமபிரான் கூறுகின்றனனென்க. விளையும்பயனைக் கருதாமற் சரணமடைந்தோரைக் காக்கவேண்டு மென்பதே துணிபு என்று இதனாற் கூறப்பட்டது. இரண்டுமூன்றுமடிகட்கு வேறுவகையாகப் பொருள்கூறுதல் சிறக்குமேற் கொள்க. பி-ம்:—1என்றே, இல்லை. 2என்ன தன்றியே. 3வீய, வீய்க. 4பற்றுவது. 5புகலெமைப். (சுகச)

க0கூ. இன்றுவந் தானென் றுண்டோ வெந்தையை யாயை 1முன்னங்
கொன்றுவந் தானென் றுண்டோ 2வடைக்கலங் 3கூறு கின்றான்
4தொன்றுவந் தன்பு 5செய்யுந் துணைவனு மவனே பின்னைப்
6பின்றுமென் றாலு நம்பாற் புகழன்றிப்7 பிறிதுண் டாமோ.

(இ - ள்.) 'நான் அடைக்கலம்' என்ற சொல்லைச் சொல்லிக்கொண்டு வருகின்றவன், (இதற்குமுன் பழக்கமில்லாமல்) இன்றைக்குத்தான் வந்தவனென்றுகூறித் தள்ளிவிடுவதற்கு இடமுண்டோ? தந்தையையும், தாயையும், தமையனையும் கொலைசெய்துவிட்டுச் சரணமடைந்தானென்று கூறித் தள்ளிவிடுதற்குத்தான் இடமுண்டோ? பலநாளாகப் பழகி அன்பைப்பாராட்டுதற்கு உரிய சிநேகிதனும் அவன்தான்; புகலென வந்தடைந்த பின்பு, (அவன் தனது கடமையில்) மாறுபட்டு நடப்பானென்றாலும், (அதனால் அவனுக்குப்பழியும்

பாவமும் உண்டாகுமேயன்றிச் சரணாகதரக்ஷணஞ்செய்த) நம்மிடத்திற் புக ழுண்டாவதல்லாமல் வேறாகிய பழி உண்டாகுமோ? (எ - று.)

நமக்கு வெகுநாளைப் பழக்கமில்லாமல் இப்பொழுதுதான் புதியவனாக வந்தா னென்றாவது மகாபாதகனென்றாவது சரணமடைந்தவனைப்பற்றிக் குறைகூறி அங்கீகரியாமல் தள்ளிவிட இடமில்லை; அவன் எப்படிப்பட்டவ னாயிருந்தாலும் எப்போதுவந்தவனாயிருந்தாலும், சரணமென்று அடைந்த மாத்திரத்தில், அவன் வேறொன்றையும் கருதாது நெடுநாளைப்பழக்கமுள்ள நண்பன்போல உடனே அன்புசெய்தற்குரியவன்; ஒருகால், அங்கீகரிக்கப் பட்ட அவன் நமக்குத் துரோகஞ்செய்து தீங்குவிளைத்தானானாலும், அதனால் சரணமடைந்தவனுக்கு அபயமளித்த நமக்குப் பெரும்புகழுண்டாக, துரோ கியான அவனுக்கே பழிபாவங்க ளுண்டாகுமென்பதாம். இதனால், சரண மடைந்தவனைப்பற்றிப் பழக்கமில்லாதவ னென்றாவது, பாவமுடையவ னென்றாவது பார்த்தல் வேண்டா வென்பதும், அவனால் நமக்குத் தீங்கு நேர்ந்தாலும் நமக்குப்புகழே யென்பதும் கூறப்பட்டன. பழக்கமில்லாதவ னென்ற காரணம்பற்றியாவது, தமையனை ஆபத்துக்காலத்திற் கைவிட்டு வந்தானென்ற காரணம்பற்றியாவது அடைக்கலமடைந்த இந்த விபீஷண னைக் கைவிடுதல் கூடாது; இவன் நமக்கு உற்ற நண்பன்; ஒருகால் இவன் நம்மை வஞ்சிப்பதற்கே நல்லவன்போல வேஷம் பூண்டுவந்தவனாக இருந்து பிறகு இவனால் நமக்குத் தீமைவிளையுமானால், அதனாலும் நமக்குப்புகழேயெ ன்று இராமபிரான் கருதின னென்பது இங்கு வெளியாம்.

என்தந்தையென்பதன் மரூஉவாகிய எந்தையென்பது தந்தையென்ற மாத்திரமாய்நின்றது. இனி, எனதுதந்தை யென்றே கொண்டு, எனக்குத் தந்தை முறையாகிய ஜடாயுவைக் கொன்ற இராவணனேயானாலும் சரணமடைந்தால் அக்குற்றத்தையும் அவனிடத்திற் பாராமல் அவனையும் அங்கீகரிப்பதே முறையென்று கருத்துக்கூற இடமுண்டு; (ஸ்ரீவால்மீகிபக வானும் "யதிவா ராவணஸ் ஸ்வயம்" [இராவணனேயானாலுஞ்சரி] என்று கூறியது காண்க.) 'என்று' - என்பது எனப்பொருள்பட்டு, 'உண்டோ' என் பதற்கு எழுவாயாக நின்றது. முன்-முன்பிறந்தவனுக்கு, ஆகுபெயர். பி-ம்:— [1]முன்பு, முன்பே, முன்னைக், முந்திக். [2]புகலது. [3]புகுகின்றானை. [4] துன்றிவந் தன்பு, வென்றுவந்தம்பு. [5]பேணும். [6]பொன்றும். [7]பிறிதுமுண்டோ, இறுதி யுண்டோ. (கூகரு)

கக்O. பிறந்தநாட் டொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன் பெற்றி
மறந்தநா ளுண்டோ வென்னைச் சரணென வாழ்கின் றானைத்
துறந்த[1]நாட் கின்று வந்து துன்னினான் சூழ்ச்சி யாலே
இறந்தநா [2]ளன்றே [3]வென்று மிருந்தநா [4]ளாவ [5]தென்றான்.

(இ - ள்.) (சரணமடைந்த புறாவினுயிரைக் காக்கும்பொருட்டுத்) தராசு தட்டிலேறிய (எமதுகுலத்து) முன்னோனாகிய சிபிசக்கரவர்த்தியினது வர லாற்றை எவரேனும் (அறிவு) தோன்றிய நாள்முதற்கொண்டு மறந்துபோன

நாள் உளதோ? (அப்படியிருத்தலால்), என்னை அடைக்கலமாகவந்தடைந்து (தான்) வாழ்வுபெறவிருக்கிற இவ்விபீஷணனை ('என் உயிருக்கு ஆபத்துவருமோ?' என்று அஞ்சிக் கைவிடுவேனானால் அவ்வாறு) கைவிடுகின்றநாளைக்காட்டிலும், இன்றைக்குவந்து சேர்ந்தவனாகிய இவ்விபீஷணனுடைய தந்திரத்தினால் (எனக்கு மரணமே நேருமானால் அவ்வாறு) மரணமடைந்த தினமல்லவா என்றைக்கும் (நான்) அழியாது நிற்கிறநாளாவது என்று (இராமபிரான்) கூறினான்; (எ - று.)

எனதுகுலத்துமுன்னோனாகிய சிபிசக்ரவர்த்தி தன்னைச்சரணமடைந்த ஒருபுறாவைக் காப்பதன்பொருட்டுத் தனதுஉயிரையே தருமாறு துலையிலே ஏறியிருக்க, அதனையுணர்ந்திருந்தும் அவ்வமிசத்திலேயே பிறந்திருக்கிறயான் இப்போது உங்களாலோசனையைக் கேட்டுச் சரணமடைந்த இந்தவிபீஷணனைக் கைவிடுதல் தகுதியோ? தகுதியன்று; இந்தவிபீஷணனை அங்கீகரித்தால் இவன் பிறகு வஞ்சனையாக நம்மையே கொல்வானென்றல்லவோ இவனை அங்கீகரிப்பதில் நீங்கள் தடைசொல்லுகின்றீர்கள்: பெரியோர்கள் அநுஷ்டித்துக்காட்டியபடி அடைக்கலமடைந்தவனை ஆதரித்து அதனால் நாம் இறப்பதானால் அது விசேஷமா? அன்றி, நம்முயிரைப் பாதுகாப்பதையே பெரியதாக எண்ணி 'ஒருகால் நம்மை இவன் கொல்வானோ?' என்று அஞ்சி அடைக்கலமடைந்தவனைக் கைவிடுவது விசேஷமா? என்று பார்ப்போம். புகழ்பயத்தலால், அடைக்கலமடைந்தோனைக்காப்பதே சிறந்தது என்று எனக்குத்தோன்றுகின்றது: எனெனின், மரணம்நேரிடுமேயென்று அஞ்சி அதனால் அடைக்கலமடைந்தோனைப் பாதுகாவாமற் கைவிட்டு 'அடைக்கலமடைந்தோனைக் கைவிட்டவன்' என்ற பழியையும் பாவத்தையும் பூண்டு பூமிக்குப் பொறையாய் நெட்டுயிர்ப்போடுற்ற பிணமாகி இவ்வுலகத்திற் சொற்பநாள் வாழ்வதைக்காட்டிலும், அடைக்கலமடைந்தோனை ஆதரித்து இறந்தாலும் அதனால் என்றும் அழியாத புகழுடம்பைப்பெற்று நீடூழிகாலம் வாழலாமன்றோ? என்று இராமபிரான் கூறினானென்பதாம். "ஒப்புரவினால்வருங் கேடெனினஃதொருவன், விற்றுக் கோட்டக்க துடைத்து" என்ற திருக்குறள் இங்கு ஊன்றி நோக்கத்தக்கது. "வீந்தவரென்பவர் வீந்தவரேனும், ஈந்தவரல்ல திருந்தவர் யாரே" என்ற பாலகாண்டம் இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது. இதனால், தன்னுயிரையும் பாராது சரணமடைந்தோரைப் பாதுகாப்பதற்கு மேலோர்செய்துகாட்டிய ஒழுக்கம் இவ்வாறென்பதும், சரணமடைந்தோரைப் பாதுகாப்பதனால்நேரும் கேடு கேடாகாது என்றும் அழியாத பெருவாழ்வேயாமென்பதும் கூறப்பட்டன. 'யாரும் துலைபுக்க பெரியோன்பெற்றி மறந்தாருண்டோ' என்றது—சிபிசக்கரவர்த்தியின்வரலாறு உலகபிரசித்தமென்று கூறியவாறு.

'துலைபுக்க பெரியோன்' என்பதி லடங்கிய கதை:—சிபிசக்கரவர்த்தி அரசாளுகையில் அவனதுமேன்மைக்குணத்தைப் பரிசோதிக்கும்பொருட்டு இந்திரன் பெரும்பருந்தாகவும், யமன் சிறுபுறாவாகவும் வடிவமெடுத்து அப்புறாவைப் பருந்து துரத்திவர, அது சக்கரவர்த்தியைச் சரணமடைய, அன்னான் அதற்கு அபயமளிக்க, பின்னேவந்த பருந்து 'என் இரையைக்கொடுத்துவிடு'

என்றுகேட்க, மன்னவன் 'அடைக்கலம்புகுந்தவரை ஆதரியாதுவிடுதல் அதிபாதகமாதலால், இதையன்றி எதைக்கேட்டாலும் கொடுப்பேன்' என்ன, பருந்து 'இந்தப்புறாவின் எடையளவு தசையை உன்உடம்பினின்று அரிந்துகொடு' என்ன, வேந்தன் சம்மதித்து, உடனே தனது உடம்பிலுள்ள உறுப்புக்களையெல்லாம் ஒவ்வொன்றாக அறுத்துவைத்தும் எடை குறைந்தமையால் தானே தராசுதட்டில் ஏறி எடையைநிறைக்க, உடனே அத்தேவர்கள் பிரதியட்சமாகிச் சக்கரவர்த்தியை மிகக்கொண்டாடி அவனது உடம்பு முன்போல நிறைவுறும்படி வரமளித்துப்போயின ரென்பதாம். பி - ம்:—[1]நாளிறந்த நாளாம், நாளகன்றநாளாம், நாட்கன்றுவந்து, நாளன்றுவந்த. [2]அன்றே. [3]வென்றியிருந்த. [4]நாளாயது. [5]என்பார். (௬௬௪)

௬௬௫. இடைந்தவர்க் கபயம் யாமென் [1]றிரந்தவர்க் கெறிநீர் வேலை
கடைந்தவர்க் [2]காவி யால முண்டவற் கண்டி லீரோ
உடைந்தவர்க் [3]குதவா னாயி னுள்ளதொன் றீயா னாயின்
அடைந்தவர்க் கருளா னாயின் [4]அறமென்னா மாண்மை யென்னாம்.

இதுமுதல்பத்துக்கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) (கொடியஆலாகலவிஷந்தோன்றியதுகண்டு) அஞ்சினவரும், 'நாம் பயமில்லாமற் பாதுகாக்கவேண்டியபொருளாவோம்' என்றுசொல்லி இரந்தவருமான (அலைகளை) வீசுகின்ற பாற்கடலைக்கடைந்த தேவாசுரர்களைக் காப்பதற்காக (அப்பாற்கடலினின்று தோன்றிய) ஹாலாஹலவிஷத்தை உட்கொண்ட சிவபிரானதுவரலாற்றைக் கேட்டறிந்திலீரோ? (ஒருவன்), வலியொடுங்கினவர்க்கு உதவிசெய்யாதவனானாலும், (தன்னிடம்வந்து யாசித்தவர்க்குத் தன்னிடம்) உள்ளதொருபொருளைக் கொடாமல் ஒளித்தானானாலும், (தன்னைச் சரணமாகவந்து) அடைந்தவருக்கு அருள்செய்து அங்கீகரியாதவனானாலும், (அப்படிப்பட்டவனுக்கு), தருமம் யாதுபயன்படும்? பராக்கிரமந்தான் என்ன பயன்படும்? (எ - று.)

சிவபெருமான் தன்னை அடைக்கலமடைந்தவரைக் கைவிடலாகாதென்ற கருத்தினாலல்லவோ பாற்கடலினின்று பயங்கரமாகத்தோன்றிய ஹாலாஹலவிஷத்தைக்கண்டு அஞ்சிச் சரணமடைந்த தேவாசுரர்களைக் காப்பாற்றினான்; நாமும் அவ்வகையாகவே, சரணாகதரக்ஷணஞ்செய்தல் முறைமையாகுமல்லவோ? சரணமடைந்தவரைக் காப்பாற்றாதவர்க்கு அறம் இருந்தும் ஆண்மை இருந்தும் பயனில்லை யென்பதாம். கீழ் அடைக்கலமடைந்தவரைக் காப்பதே முறை யென்பதையும், அதற்கு இன்னான் இனையானென்று பார்த்தலும் வேண்டாவென்பதையும், அதனால் தீங்குவிளைந்தாலும் புகழேயென்பதையும், முன்னோர் அவ்வாறு அடைக்கலமடைந்தோரைத் தம்முயிரைக் கொடுத்தும் பாதுகாத்திருக்கின்றா ரென்பதையும் எடுத்துக்கூறிய இராமபிரான், இனி அடைக்கலமடைந்தோரை முன்னோர் ஆதரித்திருப்பதற்குவேறுபலஉதாரணங்காட்டுகின்றன னென்று அறிக. அடைந்தவர்க்குஅருளுதலைக் கூறவேண்டிய இந்தச்சந்தர்ப்பத்தில், உடைந்தவர்க்கு உதவுதலையும் இரந்தவர்க்கு ஒன்று ஈதலையும் உடன்கூட்டிக்கூறுகின்றான்: இவ்வாறு கூறுவது-விளக்கணியின்பா

றப்டும். நீர்-பாலுக்கு இலக்கணையுமாம். ஆலம்-வடசொல். உண்டவற் கண்டி லீரோ—காணுதல் - இங்கே செவியாலுணர்தல்: மனத்தாற்காணுதலுமாம். பி-ம்:–1இத்திரையெழுநீர்வேலை. 2ஆதி. 3இரங்காளுகில். 4அரசென்றும். (சுகஎ)

ககஉ. பேடையைப் [1]பிடித்துத் தன்னைப் [2]பிடிக்கவந் தடைந்தபே [தை
வேடனுக் [3]குதவி செய்வான் விறகிடை வெந்தீ மூட்டிப்
பாடுறு பசியை நோக்கித் தன்னுடல் [4]கொடுத்த பைம்புள்
வீடுபெற் றுயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமி [5]தன்றோ.

(இ - ள்.) (தனது) பெண்பறவையைப் பிடித்துக்கொண்டு, தன்னைப் பிடிக்கவந்து அடைந்த அறிவில்லாத வேடனொருவனுக்கு உதவும்பொருட்டு விறகினிடத்தில் வெப்பமுள்ள நெருப்பைப் பற்றவைத்துக் குளிர்காயுமாறு உதவி, (அவ்வேடனது) வருத்துகின்ற பசியைப் பார்த்து (அதைப்போக்கும் படி)(தான் நெருப்பில்விழுந்து) தனதுஉடல்தசையை (அவ்வேடன்உண்ணும் படி)கொடுத்தசிறியஆண்புறாநற்கதியடைந்து சிறப்புப்பெற்ற வரலாறு,வேதத் திற்கூறிய விஷயத்தைப்போலவே பெருமையாகப் பாராட்டக்கூடியதன்றோ?

ஒருவனத்தில் ஒருவேடன் கண்ணி முதலிய வேட்டைக்கருவிகளைக் கொண்டு திரியும்போது அசநியிற் பெருமழை வந்து இருட்டிக்கொள்ள, அப்போது அவ்வேடன் நடுக்கலெடுத்து ஒருமரத்தின்சார்பில் வருந்திநிற்க, அச்சமயத்தில் அம்மரத்தின்மேலுள்ள ஆண்புறா தனதுபெட்டைவாராமை யைக்குறித்துப் புலம்புவதைக்கேட்டு அவ்வேடனது கைக்கூட்டிலகப்பட்டி ருந்த பெண்புறா துக்கித்து, 'முற்பிறவியின் தீவினைப்பயனாக எனக்கு நேர்ந்த சிறையைக் குறித்து நீ வருந்தாமல், நமது வீட்டுக்கு வந்த இவ்வேட னுக்குக் குளிர் முதலாகிய துன்பத்தை நீக்கி உதவிசெய்யவேணும்' என்று கூற, அதுகேட்ட ஆண்புறா வேடனை நோக்கி,'நீ சங்கையில்லாமல் உன்வீடு போல நினைத்து வேண்டுவதைக் கேள்' என்ன, அவன் 'எனது குளிரைப் போக்கடிக்கவேணும்' என்று கேட்க, புறா கொள்ளியொன்றை எடுத்துவந்து சருகுகளின்மேல் வைத்து மூட்டி, வேடனைக் குளிர்காயுமாறு சொல்லி, பின்பு அவன் பசியால் வருந்துவதைப்பார்த்து,'நான் பறவையாயிருப்பதனால் என்னண்டை உன்பசிக்குஏற்ற பதார்த்தம் இல்லை: துன்பத்திற்கு இடமாய் எதற்கும் உதவாமலிருக்கிற இந்தச் சரீரத்தைக் கொண்டு உன் ஆத்மாவைத் திருப்திசெய்' என்று சொல்லிக்கொண்டே மூண்டெரிகிற நெருப்பில் ஆனந் தத்தோடு விழுந்து இறந்து நற்கதியடைந்த தென்பது, வரலாறு.

ஓரற்பப்பிராணியாகிய புறாவே தன்னிடத்து அடைந்தது காரணமாகத் தன்மனைவியைச் சிறைபிடித்துக்கொண்டிருப்பதையும் பாராட்டாமல் தன்னை யும்பிடிக்கக்கூடியவேடனொருவனுக்கு உதவிசெய்ததென்றால், பேரறிவுள்ளவ ரென்று பேர்வைத்துக்கொண்டிருக்கிற நாம், நமக்கு யாதொரு தீங்குஞ்செய் யாமல் நம்மைச் சரணமென்று அடைந்துள்ள இவனை 'ஒருகால் நமது உயிர் க்கு ஏதேனும் தீங்குநேருமோ?' என்று அஞ்சிக் காவாது கைவிடுதல் தகுதி யோ? தகாது: சரணமடைந்தவனை எப்படியிருந்தாலும் காத்தலே முறையாகு

மென்று இராமபிரான் கூறினனென்பதாம். வேதத்தின் விழுமிதன்றோ- "ஶ்ரூயதேஹி" என்ற ஸ்ரீவால்மீகமும், 'ஸ்மர்யதேயென்னுதே ஶ்ரூயதே யென்கிறது-வேதம்போலே கேட்டுப்போருவதொன்று' என்று அதற்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநமருளியதும் காணத்தக்கன. இதிற்கூறிய சரித்திரம் 'கபோதோபாக்யாநம்' என்று வழங்கப்பெறும்.

பைம்புள்—பசுமை-இங்கே, சிறுமையின் மேலது; இளமையின்மேலதெ னினுமாம். வீடு-இவ்வுலகத்தை விட்டு அடையப்படுமிடம் என, நற்கதிக்குத் தொழிலாகுபெயர். வேதம்-நல்லது இன்னது தீயது இன்னது என அறிவிப் பதென்று பொருள்படும் வடசொல். இதுவும் அடுத்தசெய்யுளும் "சீதையை" (௧௧அ) என்பதன்பின் சிலபிரதியில்உள்ளன. பி-ம்:—[1]படுத்து. [2]பிடித்திய வந்த. [3]அபயநல்கி, உதவிசெய்து. [4]துறந்த. [5]என்றான். (௪௧அ)

௧௧௩. போதக மொன்று கன்றி யிடங்கர்மாப் பொருத போரின்
ஆதியம் [1]பரமே யானுன் னபயமென் றழைத்த வந்நாள்
வேதமு [2]முடிவு காணு மெய்ப்பொருள் வெளிவந் தெய்தி
மாதுயர் துடைத்த வார்த்தை மறப்பரோ [3]மறப்பி லாதார்.

(இ - ள்.) கஜேந்திராழ்வான் கோபங்கொண்டு முதலையாகிய விலங்கு செய்த போரிலே (வலி குறைந்து), 'அழகிய ஆதிமூலமே! யான் உனக்கு அடைக்கலம்' என்று கூக்குரலிட்ட அக்காலத்து, வேதத்தினாலும் (இப்படிப் பட்டவனென்று) வரைந்து காணமுடியாத உண்மைப் பரம்பொருளான திரு மால் பிரதியட்சமாக வந்துசேர்ந்து (அவ்யானையின்)மிக்க துயரத்தை நீக்கின வரலாற்றை, மறதியில்லாத அறிஞர் மறந்துவிடுவார்களோ? (எ - று.)

இந்திரத்யும்நனென்னும் அரசன் மிக்க விஷ்ணுபக்தியுடையனாய் ஒரு நாள் விஷ்ணுபூஜைசெய்கையில், அகத்தியமகாமுனிவன் அவனிடம் எழுந் தருள, அப்பொழுது அவன் தன் கருத்துமுழுவதையும் திருமாலைப் பூஜிப் பதிற் செலுத்தியிருந்ததனால் அவ்விருடி வருகையை அறிந்திடானாய் அவ னுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன் தன்னை அரசன் அலட்சியஞ் செய்தானென்று கருதிக் கோபித்து, 'நீ யானைபோலச் செருக் குற்றிருந்ததனால், யானையாகக்கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும், முன்செய்த விஷ்ணுபக்தி மகிமையினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர் களைக்கொண்டு திருமாலையருச்சித்துப் பூசித்துவருகையில், ஒருநாள் பெரிய தொரு தாமரைத்தடாகத்தில் அருச்சனைக்காகப் பூப்பறித்தற்குப் போயிறங் கினபொழுது அங்கே முன்பு நீர்நிலையில்நின்று தவஞ்செய்துகொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற்கோபங்கொ ண்ட அவனது சாபத்தாற் பெரியமுதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னுங் கந்தருவன் அவ்யானையின் காலைக் கௌவிக்கொள்ள, அதனைவிடுவித்துக் கொள்ள முடியாமல் கஜேந்திரன் ஆதிமூலமே யென்று கூவியழைக்க, உட னே திருமால் கருடாரூடனாய் அங்கு எழுந்தருளித் தனது சக்கரத்தைப் பிர

யோகித்து முதலையைத்துணித்து யானையை அதன்வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முத்தியளித்தன னென்பது, வரலாறு. வேதத்துக்கும் எட்டாத திருமால் 'நீயே சரண்' என்று சொன்னதுவே காரணமாக, 'இது ஒரு சாமானியமான விலங்கு' என்றும் பாராமல், யானையிருந்த இடத்திற்குத் தான் நேரே அரைகுலையத் தலைகுலையஓடிவந்து சரணாகதரக்ஷணம்பண்ணினு னென்றால், நம்மைப்போல் அறிவுபடைத்த ஒருவன் நம்மெதிரே வந்து நம் மைச் சரணமென்று சொல்லவும் அவனை நாம் உபேட்சிப்பது தகுதியோ? என்று இராமபிரான் கூறினனென்க. போதகம்-யானையின் இளமைப்பெயர்: வடசொல். பி-ம்:—1பரனே. 2முடியும். 3பிறப்பிலாதார். (சுகக)

கக௪. மன்னுயி ரெல்லாந் தானே 1வருவித்து வளர்க்கு மாயன்
2தன்னன வுலக மெல்லாந் 3தருமமு மெவையுந் தானே
என்னினு மடைந்தோர் தம்மை யேமுற வினிதி 4னோம்பிப்
பின்னும்வீ டளிக்கு மென்றாற் 5பிறிதொரு சான்று முண்டோ.

(இ - ள்.) நிலைபெற்ற எல்லாப்பிராணிகளையும், தானே படைத்து (அவ ற்றைப்) பாதுகாக்கின்ற திருமால்,—எல்லாவுலகங்களும் தன்னுடையனவே என்றாலும், (அவ்வுலகத்தில் வழங்குகின்ற) தருமங்களும்(அவற்றினால் விளை யும்) எப்பயன்களும் தானே என்றாலும், (தன்னைச்) சரணமடைந்தவரைமாத் திரம் க்ஷேமமடையும்படி நன்றாகப்பாதுகாத்து, மேலும் மோக்ஷத்தையும் தந் தருள்வானென்றால், (அடைக்கலமடைந்தவரைப் பாதுகாக்கவேண்டியது அவசியமென்பதை மெய்ப்படுத்த) வேறொருதாரணமும் (சொல்லவேண் டியது) உண்டோ? (எ - று.)

மன்றோ?என்றன னென்பதாம்.திருமால் பிரமனுக்கு அந்தராத்மாவாயி ருந்து படைப்பதும், தானானிலைமையிலிருந்து அளிப்பதும், சிவபிரானுக்கு அந்தராத்மாவாயிருந்து அழிப்பதுஞ்செய்வனென்பது, நூற்கொள்கை. கட வுளது மனத்திற்கு இஷ்டமானது எதுவோ அதுவே தருமமெனப்படுதலா லும், அந்தத்தருமங்களினால் விளையக்கூடிய பயனைத் தருபவன் அக்கடவுளே யாதலாலும், 'தருமமும் எவையுந் தானே' என்றார். "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி திருமால் அந்தர்யாமியாக எல்லாப் பொருள்களிலும் இருத் தலால், 'எவையுந்தானே' என்று கூறியதாகக் கொள்ளினுமாம். மாயன் - மா யையுடையவன்: மாயையாவது-கூடாததையும் கூட்டுவிக்குந் திறம். பி-ம்:— 1அறிவித்து. 2தன்னது. 3தருமமேலவையும். 4நம்பிப். 5என்னினிப்பிறிது பேசில். (சுஉo)

ககரு. நஞ்சினை மிடற்று வைத்த நகைமழு வாள 1னுளுந்
தஞ்சென முன்னந் தானே தாதைபாற் 2கொடுத்துச் 3சாதல்
அஞ்சினே னபய மென்ற 4வந்தணற் காகி யந்நாள் [டோ.
வெஞ்சினக் கூற்றை 5மாற்றும் மேன்மையின் மேன்மை யுண்

(இ - ள்.) விஷத்தைக் கண்டத்திலே நிறுத்திய விளங்குதலையுடைய மழுப்படையையுடையவனை சிவபிரான் '(இவனுடைய) வாழ்நாளும் எளி மைப்பட்டது[குறைவானது]'என்றுசொல்லி முன்னம் தந்தைக்கு (மார்க்கண்

டேயனென்றபுத்திரனைக்)கொடுத்திட்டு,பின்பு 'சாதற்கு அஞ்சினேன்: (உன்) அபயம்'என்றுஅடைக்கலம்புகுந்த (மார்க்கண்டேயனென்ற) அந்தணனுக்காக அந்தக்காலத்திலே கொடுஞ்சீற்றத்தையுடைய யமனை உதைத்துத்தள்ளியமேன்மையைக்காட்டிலும் மேன்மையுள்ளதோ? (எ - று.)

சிவபெருமான்'உன்புத்திரன் பதினாறுபிராயமேயுள்ளவன்'என்று மார்க்கண்டேயமுனிவனது தந்தைக்கு வரமளித்தும் மார்க்கண்டேயமுனிவன் சரணமடைந்தபின் தான் முன்புவரங்கொடுத்ததற்கும் மாறுதலுண்டாகக் கூற்றத்தை உதைத்துத்தள்ளியது சரணாகதனைக்காக்கவேண்டுமென்ற ஒருகருத்தினாலல்லவோ? இதைக்காட்டிலும் சரணமடைந்தவனைக் காக்கவேண்டுமென்பதற்குச் சிறந்தஉதாரணம் வேறுவேண்டுமோ?வேண்டுவதில்லையன்றோ? என்றவாறு. "தஞ்சக்கிளவியெண்மைப்பொருட்டே" என்ற தொல்காப்பியத்தின்படி எளிமைப்பொருளுள்ள தஞ்சமென்பதன் திரிபாகிய 'தஞ்சு' என்பது சொற்பமென்றபொருளைத் தந்தது. இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. சிலபிரதியில் "சரணெனக்கு" (ககசு) என்றபாடலுக்குப்பின் உள்ளது. பி-ம்:— [1]நாடும். [2]கொடுத்த. [3]சார்தல். [4]அந்தணற்காகவன்றான். [5]வென்ற, கொன்ற.

இச்செய்யுளிற் குறித்த கதை:—மிருகண்டுவென்னும் முனிவன் பிள்ளையில்லாக்குறையால் தவஞ்செய்தபோது சிவபிரான் பிரதியட்சமாகி அறிவின்மையும் உறுப்புக்குறையும் பெரும்பிணியும்தீக்குணமுமுடையனாய் நூறுபிராயம் உயிர்வாழும் புதல்வன் வேண்டுமோ? கூரிய அறிவும் அழகியவடிவமும் நோயின்மையும் நற்குணமுமுடையனாய்ப் பதினாறுபிராயமேவாழுங் குமாரன் வேண்டுமோ? இவ்விரண்டில் நீ விரும்புவதுயாது?' என்று வினவ,முனிவன் 'ஆயுள்சிறிதேனும் அறிவும் அழகும் குணமுஞ்சிறந்து, பிணியிலனாகுஞ் சற்புத்திரனையே வேண்டுகின்றேன்' என்று தன்கருத்தை விண்ணப்பிக்க, சிவபிரானும் அவ்வாறே அனுக்கிரகித்தனன். அங்ஙனம் ஊழ்வினையாற் பதினாறுபிராயம் பெற்றுப்பிறந்தவனான மார்க்கண்டேயன் தனது அற்பாயுசைக்குறித்துத் தாய்தந்தையர் வருந்தியதுகண்டு தேற்றித் தான் விதியைக்கடந்துவருவதாகச்சொல்லித் தீர்க்காயுசு பெறுதற்பொருட்டுத் தினந்தோறும் சிவபூசை செய்துவருகையில், பதினாறுபிராயம் பூர்த்தியாகவே, யமன் தூதரையனுப்ப, அவர்கள் மார்க்கண்டேயனது தவக்கனலால் அவனையணுகமாட்டாது அவன்செய்யுஞ் சிவபூசைச்சிறப்பைக் கண்டு அஞ்சிவெருண்டோடி யமனிடஞ்செய்திசொல்ல, யமனும் கோபித்துத் தனது மந்திரியான காலனையேவ, அவன் வந்து நயபயங்களால் அழைக்கவும் மார்க்கண்டேயன் வரமாட்டேனென்று சொல்லிவிட, பிறகு யமன் மிகக்கொதித்துத் தானே நேரில் வந்து மார்க்கண்டேயனைக் காலபாசத்தாற் கட்டியிழுக்கத்தொடங்குகையில், அம்முனிகுமாரன் சிவலிங்கத்தைத்தழுவிக்கொள்ள, யமன் சிவலிங்கமுமுட்பட வலித்திழுக்கும்போது அளவிலாற்றலுடையனான சிவபிரான் கோபானுக்கிரகங்களுடன் அங்கு நின்று வெளிப்பட்டு யமனைக்காலாலுதைத்துத் தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறுபிராயமாகவே அனேககற்பகாலம் இனிது வாழும்படி தீர்க்காயுசுகொடுத்தருளினனென்பதாம். (அஉக)

ககசு. சரணெனக் கியார்கொ லென்று சானகி யழுது சாம்ப
அரணுனக் காவன் வஞ்சி யஞ்சலென் றருளி னெய்தி [ய்வ
முரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யமர் [1]முடித்துத் தெ
[2]மரணமென் றாதை பெற்ற தென்வயின் வழக்கன் றாமோ.

(இ - ள்.) (இராவணன் தூக்கிக்கொண்டு செல்லும்போது) ஜநகமகாராசனது புதல்வியாகிய சீதாபிராட்டி 'எனக்கு (இந்த ஆபத்துக்காலத்தில்) இரட்சகராவார் யார்தான்?' என்று புலம்பியவண்ணம் ஒடுங்க, (அப்பொழுது) எனது தந்தைமுறையான ஜடாயுவானவர், (சீதையைநோக்கி), 'வஞ்சிக்கொடி போன்றவளே! அஞ்சல்: (நான்) உனக்கு இரட்சகனாவேன்' என்று கூறிக்கொண்டே (அவளிடத்துக்) கருணையோடு (அவ்விடத்துக்கு) வந்து, (தருமத்திற்கு) மாறான அதருமகுணத்தையுடைய கொடிய இராவணன் (தன்னை) மிகவும் வருத்தவும் (தன்னால் இயன்றவரையிலும்) நெருங்கிய பெரும்போரை (அவனோடுஞ்) செய்துவிட்டு மிக்கபெருமைவாய்ந்த சாவை யடைந்தது எனக்குமுறைமையானசெயலாகாதுபோமோ [யான் முறைமையானதாகஎண்ணி நடக்கவேண்டியசெய்கை யாகாதோ?] (எ - று.)

இராவணன் சந்நியாசிவேஷங்கொண்டு சீதை தனித்திருக்குஞ் சமயம் பார்த்து அவளைத் தூக்கிச்செல்லுகையில், அவள் கூக்குரலிட, அதனைக் கேட்டு ஜடாயு ஓடிவந்து அவ்விராவணனோடெதிர்த்துப் பெரும்போர்செய்து அவனெறிந்த வாளினால் தனதுசிறை துணிப்புண்டு விழுந்து குற்றுயிராகிப் பிறகு அச்செய்தியை எனக்கு அறிவித்துத் தனது உயிரை விட்டானன்றோ? இவ்வாறு எனதுதந்தைமுறையாயிருந்த ஜடாயு பிறர்க்கு அபயமளித்துஅதற்காகவே தனது உயிரைவிட்டு அவ்வழியாலே செய்யவேண்டிய முறைமையை எனக்குத் தெரிவித்திருந்தும், நான் அவ்வழியைக் கைக்கொள்ளாது கைவிடுவது அழகாகுமோ? என்று இராமபிரான் கூறினனென்க. சூரியசாரதியான அருணனது புத்திரனும் சம்பாதியினது தம்பியுமாகிய ஜடாயுவென்பவன் தசரதசக்கரவர்த்திக்குப் பலவுதவிகள்செய்து உயிர்த்தோழனாயிருந்து, பின்பு அத்தசரதகுமாரரான இராமலக்குமணர்களைத் தனது புத்திரரைப்போலப் பாவித்து அன்புபாராட்ட, அவர்களும் தசரதனைவிடவயதுமுதிர்ந்தஇவனைத் தமது பெரியதந்தையாராகப் பாவித்துவந்தார்க ளாதலால், இராமன் ஜடாயுவை 'என்தாதை' என்று குறிக்கின்றானென்க. இதுபற்றி, இந்த ஜடாயுவை 'பெரியவுடையார்' என்று வழங்குவது, வைஷ்ணவசம்பிரதாயம். பிறர்க்கு உதவியதனால் நேர்ந்த மரணமாதலால், 'தெய்வமரணம்' எனப்பட்டது. "மரணமாம் பெரியோன்பெற்ற மேன்மையுமார்க் கென்றாமோ" என்று நான்காமடி ஒருபிரதியில். பி-ம்:—[1]முடித்ததெந்தை, முடிந்தவெந்தை. [2]மரணமப்பெரியோன். (சுஉஉ)

ககஎ. [1]உய்யநிற் கபய மென்றா னுயிரைத்தன் னுயிரி னோம்பாக்
கையனு மொருவன் செய்த வுதவியிற் கருத்தி லோனும்
[2]மையற [3]நெறியி னோக்கி [4]மாமறை நெறியி னின்ற
மெய்யினைப் பொய்யென் றானு மீள்கிலா நரகில் [5]வீழ்வார்.

(இ - ள்.) (தான்) பிழைக்கும்படி '(உனக்கு யான்) அபயம்' என்று சரணமடைந்தவனுடைய உயிரைத் தனது உயிரைப்போல நினைத்துப் பாதுகாவாத வஞ்சகனும்,—(தனக்குப்) பிறனொருவன் செய்த உபகாரத்தில் (இவன் நமக்கு உதவிசெய்தானென்ற) எண்ணமில்லாத செய்ந்நன்றி மறந்தவனும், குற்றம் நீங்கும்படி செவ்வையாக ஆலோசித்துப் பார்த்தும் சிறந்த வேதமார்க்கத்திலுள்ள தத்துவப்பொருளாகிய கடவுளைப் பொய்யென்று சாதிக்கும் நாஸ்திகனும் (ஆகிய இவர்கள்), என்றும் மீளுதலில்லாத நரகத்திலே வீழ்வார்; (எ - று.)

ஒருவன் செய்த நன்றியை மறந்தபாவியும், வேதத்திற் கூறப்படுகின்ற உண்மைப் பரம்பொருளான கடவுளை இல்லையென்று சாதிக்கின்ற நாஸ்திகனும் போலவே, தன்னைச்சரணமடைந்தாரைத் தன்னுயிர்போல எண்ணிப் பாதுகாவாதவனும் என்றும் நரகத்தில் வீழ்ந்துவருந்துவா னென்பதாம். கீழ் ஏழு கவிகளில் சரணமடைந்தோரைப் பாதுகாத்தற்குப் பல உதாரணங்கள் காட்டிய இராமபிரான் சரணமடைந்தாரைக் கைவிட்டார்க்கு உண்டாகுந் தீப்பயன் இன்னதென்று இதனாற் கூறுகின்றனனென்க. வஞ்சகனைக் கையனென்பது - திசைச்சொல். மறைநெறியின்நின்றமெய்-கடவுளும் இருவினைப் பயனும் இம்மை மறுமையும் உள்ளன என்னுந் தத்துவமெனினுமாம். மெய் - உள்ளபொருள்: பொய்-இல்லாதபொருள். மெய்யினைப் பொய்யென்றுனும்- தொடைமுரண். பி-ம்:—[1]உய்யலுற்று. [2]மையறு, மையுறு. [3]முறையின். [4]அருமறைவழக்கில். [5]வீழ்வான். (கஉஈ)

கசஅ. சீதையைக் குறித்த தேயோ தேவரைத் தீமை செய்த
பேதையைக் [1]கொல்வே னென்று பேணிய [2]விரதப் பெற்றி
வேதிய ரபய [3]மென்றூர்க் கன்றுநான் விரித்துச் சொன்ன
காதையைக் குறித்து [4]நின்ற வவ்வுரை கடக்க லாமோ.

(இ-ள்.) 'தேவர்கட்கு உபத்திரவத்தைச் செய்துகொண்டிருந்த அறிவீனனாகிய இராவணனைக்கொல்வேன்' என்று (நான்) விரும்பிக்கூறிய சபதத்தின் தன்மை,சீதையை(அவன் எடுத்துக்கொண்டுபோவான்:அதனால் அவனைக்கொல்லவேண்டும் என்று) நினைத்துச் சொன்னதோ? [அன்று]; ('நீயே சரணம்' என்றுகூறி) அபயம்வேண்டிய (தண்டகாரணியவாசிகளான) முனிவர்கட்காக அக்காலத்தில் நான் விரித்து சொன்ன செய்தியைக் குறித்துக் காட்டுகின்ற அவ்வார்த்தையை [சரணமடைந்தவரை எவ்வகையாலும் காப்பேன் என்ற விஷயத்தை] (இப்போது நானே) தவறுதல் தகுமோ? (எ - று.)

லோககண்டகரான இராவணாதியரைக் கொல்வதாகத்தேவர்கட்கு நான் அபயமளித்தது-இராவணன் சீதையை இனிக் கவர்ந்துசெல்வானென்பதை முன்னமே யறிந்தன்று: நம்மைச் சரணமடைந்தவரைக் காப்பதே நமது கடமை யென்ற கருத்தினாலேயேயாகும்: தண்டகாரணியவாசிகளான முனிவர்களிடத்து 'அடைக்கலமடைந்தவரைப் பாதுகாப்பதே எனதுகடமை' என்று அப்போது சொல்லிவிட்டு, இப்போது அதற்குமாறாக, அபயம்வேண்டிவந்த

இவ்விபீஷணனைக் கைவிடுவது எனக்குத் தகுதியாகுமோ? என்று இராம பிரான் காட்டினனென்க. "ஐயிருதலையினோனை னுசாரதியாம், மெய்வலியரக் கரால்***உய்திறமில்லை" என்று தேவர் ஓலமிட, "வஞ்சகர்தம் தலையறுத் திடர்துணிப்பன்" என்று திருமால் அபயமளித்ததும்; தண்டகாரணியவாசி களான முனிவர்கள் "உருளுடைநேமியா னுலகை யோம்பிய, பொருளு டைமன்னவன்புதல்வ போக்கிலா, இருளுடைவைகலே மிரவிதோன்றினாய், அருளுடைவீர நின்னபயம்" என்று அடைக்கலம் புக, "புகல்புகுந்திலரேற் புறத்தண்டத்தின், அகல்வரேனு மென்னம்பொடும் வீழ்வரால், தகவில்துன் பம் தவிருதிர் நீர்," "சூரறுத்தவனுஞ் சுடர்நேமியும், ஊரறுத்தவொருவனு மோம்பினும், ஆரறத்தினொடன்றிநின்றாரவர், வேரறுப்பன் வெருவன்மின் நீர்" என்று இராமபிரான் அபயமளித்ததுங் காண்க.

சீதை - ஸீதா: வடசொல்: உழுபடைச்சால் என்று பொருள். ஜநகமகா ராஜன் யாகசாலையமைத்தற்பொருட்டுக் கலப்பைகொண்டு உழுகையில் அவ் வுழுபடைச்சாலினின்று பிறந்தவளாதலால்,இவளுக்கு, இப்பெயர். தேவரை- உருபுமயக்கம். வேதியர் என்றார்க்கு-என்றார் வேதியர்க்கு என உருபு பிரித் துக்கூட்டுக.காதை = காதா: பாடல் என்று பொருள்படும் வடசொல்: இங்கே செய்திக்கு-இலக்கணை. பி-ம்:—1கொல்லவென்று. 2விரதம். 3என்றார். 4சொ ன்ன, நின்றது. (கஉச)

கஅக. காரிய மாக [1]வன்றே யாகுக [2]கருணை யோர்க்குச்
சீரிய தன்மை நோக்கி [3]னிதனின்மேற் சிறந்த துண்டோ
பூரிய [4]ரேயுந் தம்மைப் புகல்[5]புகுந் தோர்க்குப் பொன்றா
ஆருயிர் கொடுத்துக் [6]காத்தா ரெண்ணிலா வரச ரம்மா.

(இ - ள்.) நினைத்ததொழில் நிறைவேறட்டும், (அல்லது) நிறைவேறாமற் போகட்டும்;ஆராய்ந்துபார்த்தால் அருளுடையவர்கட்கு மேன்மையுண்டாக்கக் கூடிய குணம் (சரணமடைந்தோரைக் காக்கின்ற) இந்தச்செயலைக்காட்டிலும் சிறந்தது உண்டோ? அற்பர்களாயிருந்தாலும், (ஒருவர்) தம்மைச் சரண மாக அடைந்தால் அவர்கட்காக, கணக்கில்லாத [மிகப்பலரான] அரசர், அழியாத (தமது) அருமையான உயிரைக் கொடுத்தாவது பாதுகாத்துள்ளார்; ஆச்சரியம்!! (எ - று.)

தம்மைச் சரணமடைந்தவர் அற்பராயிருந்தாலும் அவர்பொருட்டுத் தம் முயிரையும் கொடுத்துப் பாதுகாத்துள்ளார், முன்னோரான பல அரசர்களும்: ஆகவே, நாம் 'நமது காரியம் நிறைவேறும், நிறைவேறாது' என்பதைப் பாராமல் சரணமடைந்த இவ்விபீஷணனைக் காப்பதே கடமையென்று தனது திடமான கருத்தை இராமபிரான் கூறினனென்க. இங்ஙனம் இராமபிரான் பலகாரணங்களால் அடைக்கலமடைந்தோரைக் காத்தலே முறைமையென் றும், ஆண்மையுடையார் தமக்கு ஏதேனும் தீங்குவருமென்று அஞ்சிக் கருணை யின்றிக் கைவிடாரென்றும் தனது மனக்கருத்தை வெளியிட்டமை காண்க. ஆக, ஆகுக-வியங்கோள்முற்றுக்கள். பி-ம்:—1 இன்றே, வென்றே. 2கருணை

யோர்க்கும்.3அதனின், ஈதின்.4எனும். 5புரிந்தோர்க்கு. 6காத்தற்கெண்ணிலா வரசர்க்கென்னும், காத்தாரெண்ணிலாவரசரென்றான். (௬உ௫)

மோதிவந் தடருஞ்சிய முனிவினுக் குடைந்த வேடன்
மீதொரு மரத்திற்சேர வெகுண்டுரையரிக்கு[1]ச் சொல்லப்
பேதமற் றிருந்து மன்னன் பிரித்த வஞ்சகத்தை யோர்ந்தும்
காதலிற் கனிகாய் நல்கிக் [2]காத்ததுங் கவிகளன்றோ.

என்ற ஒருபாடல் இங்கே சிலபிரதியிற் காணப்படுகின்றது. பி-ம்:—[1]நல்கா. [2]காத்ததுங்கவியதன்றோ.

கஉ௦.—இராமபிரான் விபீஷணனைத் தன்னிடம் அழைத்துவரும்படி சுக்கிரீவனுக்குக் கூறுதல்.

*ஆதலா னபய மென்ற பொழுதத்தே யபய தானம்
ஈதலே [1]கடப்பா டென்ப தியம்பினீ ரென்பால் வைத்த
காதலா னினிவே றெண்ணக் கடவதென் கதிரோன் மைந்த
[2]கோதிலா தவனை நீயே யென்வயிற் கொணர்தி யென்றான்.

(இ - ள்.) ஆதலால், (ஒருவன்) 'அபயம்' என்று (எம்மை)வந்தடைந்த பொழுதே அபயதானம் ஈதலே (எமது)கடமையாகும்:என்னிடத்து (நீங்கள்) வைத்துள்ள பேரன்பினால், (இவனை அங்கீகரிப்பது சிறிதும் தகுதியன்று) என்று சொன்னீர்கள்; இனிமேல் (இவ்விபீஷணனை அங்கீகரிக்கும் விஷயத்தில்)வேறுஆலோசிக்கவேண்டியது என்ன இருக்கின்றது?சூரியனது குமாரனான சுக்கிரீவனே! ஒருகுற்றமும் இல்லாதவனான இந்தவிபீஷணனை நீயே என்னிடம் அழைத்துவருவாயென்று(இராமபிரான்)கூறிமுடித்தான்; (எ-று.)

சரணமடைந்தோரைக் கைவிடுதல் தகாதென்பது, கீழ்க்கூறிய நியாயங்களாற் செவ்வையாக ஏற்படுவதுபற்றி, ஒருத்தன் நம்மிடத்து அபயமாக அடைந்தால், அவனுக்கு அப்போதே அபயப்பிரதானஞ்செய்தல் எமதுவிரதம்: இதெல்லாம் உமக்குத்தெரியாததல்ல; ஆயினும் நீங்கள் இவனை அங்கீகரிப்பதில் ஆட்சேபங்கூறியது என்னிடம் கொண்ட பேரன்பின் செயலாகும்; ஆகவே, இனி வேறுஆலோசனை யின்றி, வானரராஜனான நீ இவனை அங்கீகரிப்பதில் உடன்படுகின்றாயென்பது தோன்றுமாறு நீயே இவனை இங்கு அழைத்துவரவேணுமென்று இராமபிரான் கூறினானென்க. ஸ்ரீராமனை யடையுமாறுவந்த ஸ்ரீவிபீஷணாழ்வான் வானரப்படையைமுன்னிட்டே வந்தடைந்தானாதலால், அவ்வானரர்கட்கெல்லாந்தலைவனான சுக்கிரீவன் புருஷகாரமாகவே ஸ்ரீராமன் அவ்விபீஷணனை யங்கீகரித்தானென்பர்: "இவன் முன்னிடுமவர்களை அவன்முன்னிடுமென்னுமிடம் அபயப்ரதாநத்திலுங் காணலாம்" என்ற ஸ்ரீவசனபூஷணவாக்கியமும், 'இச்சேதநன் தான் ஆஸ்ரயிக்கும்போது புருஷகாரமாகமுன்னிடுமவர்களை அவனும் அங்கீகரிக்கும்

* "ஸக்ருதேவப்ரபந்நாய-தவாஸ்மீதிசயாசதே | அபயம்ஸர்வபூதேப்யோ - ததாம்யேதத்வ்ரதம்மம || ஆநயைநம்ஹரிஸ்ரேஷ்ட | தத்தமஸ்யாபயம் மயா".

போது முன்னிடு மென்னுமிடம் திருவடியையும் குஹப்பெருமாளையும் அங்கீ கரித்த ஸ்தலங்களில் மாத்திரமன்றிக்கே ஸ்ரீவிபீஷணாழ்வானை யங்கீகரித்த ஸ்தலத்திலும் காணலா மென்கை. ஸோஹம் பருஷிதஸ்தேந - தாஸவச்சாவ மாநிதः | த்யக்த்வாபுத்ராம்ஶ்சதாராம்ஶ்ச-ராகவம் ஶரணம் கதः || ஸர்வ லோக ஶரண்யாய - ராகவாய மஹாத்மநே | நிவேதயதமாம் க்ஷிப்ரம்-விபீஷ ணமுபஸ்திதம்"என்று நின்ற ஸ்ரீவிபீஷணாழ்வானை அபயப்ரதாநபூர்வகமாக அங்கீகரித்த இடத்தில்...முதலிகளுக்கெல்லாம் மூலபூதனான மஹாராஜரை முன்னிட்டேயங்கீகரித்தது. திருவடியையும் ஸ்ரீவிபீஷணாழ்வானையும் அங்கீ கரிக்கிறவிடத்தில் பிராட்டிஸந்நிஹிதையல்லாமையாலே அவளை முன்னிட்ட மைதோற்றிற்றில்லையேயாகிலும் பிராட்டி லங்கைக்கெழுந்தருளுகிறபோது திருவடியும் மஹாராஜரும் நிற்கிறவிடத்திலே திருவாபரணங்களைப்போகட் டுக் கடாட்சித்துப்போகையாலும், லங்கையிலேயெழுந்தருளினபின்பு ஸ்ரீவிபீ ஷணாழ்வானைப் பெருமாள்திருவடிகளிலே வரும்படி கடாட்சித்தருளுகையா லும் பெருமாள் இருவரையும் அங்கீகரிக்குமிடத்திற் பிராட்டியைமுன்னிட் டே யங்கீகரித்தா ரென்று கொள்ளவேணும். பரதந்த்ரையானவளுக்கு இத் தலையில் ப்ரவ்ருத்தியொழியத் தனித்தொருப்ரவ்ருத்திகூடாதிறே. ஆகையா லேயிறே பரகதஸ்வீகாரம்சொல்லுகிற இடத்திலே ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரித்ததையும் இவர் ஸஹபடித்தது' என்ற வ்யாக்யாநமும் அறியத்தக் கன. பி-ம்:—[1]கடமைநீருமியம்பினீரென்மேல். [2]கோதிலாதானை. (சஉகூ)

கஉக.—சுக்கிரீவன் விபீஷணனை யழைத்துவருமாறு செல்லுதல்.

ஐயுற வெல்லாந்[1]தீரு மளவையா [2]யமைந்த தன்றே
தெய்வ[3]நா யகன துள்ளந் தேறிய [4]வடைவே தேறிக்
[5]கைபுகற் கமைவ தானான் [6]கடிதினிற் கொணர்வ லென்னா [ன்.
மெய்யினுக்[7]குறையு ளான வொருவன்பால் விரைவிற் [8]சென்றா

(இ - ள்.) (சுக்கிரீவனுடைய மனத்தில் விபீஷணனையங்கீகரிப்பதைப் பற்றித் தோன்றிய) சந்தேகம் முழுதும் (இராமபிரான் இதுவரையிலும் எடுத் துச்சொன்ன வார்த்தையினால்) நீங்கும் நிலைமையை யுடையதாகப் பொருந் திற்று; அப்பொழுதே, (சுக்கிரீவன்) தேவாதிதேவனான இராமபிரானது மனம் தெளிந்து (சரணமடைந்தோரைக் காப்பதே முறையென்று) நிச்சயித்தது போலவே (தானும்) தெளிந்து, இராமபிரானிடம் (விபீஷணன்) வந்துசேர் தற்கு உடன்பட்டவனாகி, '(விபீஷணனை) விரைவில் அழைத்துவருவேன்' என்றுகூறிச் சத்தியத்துக்குஇருப்பிடமான ஒப்பற்ற அந்தவிபீஷணனிடத்தில் விரைவிற் சென்றான்; (எ - று.)

இராமபிரானது வார்த்தைமுழுதையும் கேட்டவுடனே சுக்கிரீவன் விபீ ஷணனை அங்கீகரிப்பதில் தன்மனத்திற்கொண்டிருந்த சந்தேகம்முழுதும் நீங் கப்பெற்று, இராமபிரான் மனம்போலவே தன்மனமும் தெளிவடைய, அவ் விபீஷணனை அங்கீகரிப்பதற்கு உடன்பட்டு, இராமபிரான்மொழிப்படியே அவனையழைத்துவருமாறு விரைந்துசென்றனனென்பதாம். ஐயுறவெல்லாம் அமைந்தது - ஒருமைப்பன்மைமயக்கம். கைபுகுதல் - அருகிற்சேர்தல்: கை -

தமிழுபசருக்கம். இனி, தெய்வநாயகன துஉள்ளம் தேறிய அடைவினால் (என் மனம்) தேறப்பெற்றதனால், ஐயுறவெல்லாம் தீருமளவையாயமைந்ததன்றே: ஆகவே, நம்மோடொருங்குபுகுதற்கு ஏற்றதன்மையை அந்தவிபீஷணன் பொருந்தியவனானான்: அதனால் கடிதினிற்கொணர்வவென்னச்சென்றான் என்று உரைப்பினுமாம். பி-ம்:—1நீக்குமளவையுள், நீங்கியளவையால். 2அமைந்த. 3நாயகன்றன். 4அளவே, தெளிவே. 5கையுற. 6கடிதினிக். 7உறையுளான் முன். 8போனான். (௬௨௭)

௬௨௨.—சுக்கிரீவன்வருகையைத் துவிவிதனுணர்த்த, விபீஷணன் அச்சுக்கிரீவன்முன்னே வருதல்.

வருகின்ற கவியின் வேந்தை மயிந்தனுக் [1]கிளைஞன் வள்ளல்
தருகென்றா [2]னதனை னின்னை யெதிர்[3]கொளற் கருக்கன் றந்த
இருகுன்ற மனைய தோளா னெய்தின [4]னென்ன லோடும்
[5]திரிகின்ற வுள்ளத் தானு [6]மக[7]மலர்ந் தவன்முன் சென்றான்.

(இ - ள்.) (விபீஷணனையழைத்துச் செல்லும்படி) வருகின்ற வானரராசனான சுக்கிரீவனை மைந்தனென்னும் வானரவீரனதுதம்பியான துவிவிதன் (விபீஷணனுக்குச் சுட்டிக்காட்டி), 'வரையாதருளுந்தன்மையுடையவனான இராமபிரான், உன்னை அழைத்துவருக என்று சொன்னான்; அதனால் சூரியன் பெற்ற மலைபோன்ற இரண்டுதோள்களையுடையவனாகிய சுக்கிரீவன் உன்னை எதிர்கொண்டுசெல்வதற்காக வந்தான்' என்றுகூறியவுடனே (முடிவில்என்ன சொல்வரோ?என்று) அலைபாய்கின்ற மனமுடைய விபீஷணனும் மனங்களித்து அந்தச்சுக்கிரீவனெதிரிற் போனான்; (எ - று.)

சுக்கிரீவன் வருகின்றதைக் காவலாளியான துவிவிதனென்னும் வானரவீரன் விபீஷணனுக்குச் சுட்டிக்காட்டி 'இராமனதுகட்டளையால் உன்னையழைத்துவருமாறு எமது அரசர் 'வருகிறார்' என்று உணர்த்த, மனம்அலைபாய்கின்ற விபீஷணன் அக்கலக்கம்நீங்கி மகிழ்ந்து சுக்கிரீவனெதிரிற்சென்றானென்பதாம். பி - ம்:—1இளைய, இளையோன். 2அண்ணல், ஆதி. 3கொள. 4எய்தலோடும். 5தெரிகின்ற. 6மனம், முகம். 7மகிழ்ந்து. (௬௨அ)

௬௨௩.—சுக்கிரீவனும் விபீஷணனும் ஒருவரையொருவர் தழுவுதல்.

[1]தொல்பெருங் கால மெல்லாம் பழகினுந் தூய ரல்லார்
புல்லல ருள்ளந் தூயார் [2]பொருந்துவ ரெதிர்ந்த ஞான்றே
ஒல்லைவந் துணர்வு மொன்ற விருவரு மொருநா ளுற்ற
எல்லியும் பகலும் [3]போலத் தழுவின ரெழுவிற் றோளார்.

(இ-ள்.) பழைய அருமையான (தமது) காலம் முழுவதும் பழகினாலும், பரிசுத்த குணமுடையவரல்லாத கீழோர் மனம்பொருந்தார்; பரிசுத்தகுணமுடைய பெரியோர் எதிரிற் பார்த்தபோதே மனங்கலந்தநட்பாவர்;(இவ்வாறு இருத்தலால்); விரைவிலேபோய் (இருவருடைய)மனமும் ஒருசேரக்கலக்க, இரும்புத்தூண்போன்ற தோள்களையுடையவரான (சுக்கிரீவன் விபீஷணன்

என்ற) அவ்விருவரும், ஒருதினத்திற் பொருந்தியிருக்கிற இரவும் பகலும் போல ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள்; (எ - று.)

அற்பருடைய சிநேகம் பலநாள் பழகினாலும் பயன்படாது; மனந்தூயரான பெரியோரது சிநேகமோ கண்டமாத்திரத்திலேயே உண்டாகின்றது: ஆதலால், சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்கும் இதற்குமுன்பு பரிசயமில்லாதிருந்தும் கண்டமாத்திரத்திலேயே மனம்ஒத்துப்போகப் பெரும்பழக்கமுள்ளவர்போன்று ஒருவரையொருவர் தழுவிக்கொண்டன ரென்பதாம். கருநிறமுள்ள விபீஷணனும் விளக்கமுள்ள சுக்கிரீவனும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டதற்கு - ஒருதினத்திற் கலக்கும் இரவு பகல்களைஉவமை கூறினர். 'உள்ளந்தூயார் பொருந்துவ ரெதிர்ந்தஞான்றே' என்றபொதுப்பொருளைப் பின்னிரண்டடியிற் கூறிய சிறப்புப்பொருளால் விளக்கினார்; இவ்வாறு விளக்குவது - வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். சிறியோர்நட்பு நிலைத்துநிற்காதென்பதை "நூறாண்டுபழகினும் மூர்க்கர்கேண்மை,நீர்க்குட்பாசிபோல் வேர்க்கொள்ளாதே," "பெருகுவதுபோலத்தோன்றி வைத்தீப்போல், ஒருபொழுதுஞ் சொல்லாதே நந்தும்" என்ற இடங்களிலும், பெரியோர்நட்புக் கண்டமாத்திரத்தில் நிலைத்துண்டாகுமென்பதை "ஒருநாள் பழகினும் பெரியோர்கேண்மை, யிருநிலம்பிளக்க வேர்வீழ்க்கும்மே," "செல்வுழிக்கண் ணொருநாட் காணினுஞ் சான்றவர், தொல்வழிக்கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்," "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான், நட்பாங்கிழமை தரும்" என்ற இடங்களிலுங் காண்க. பி-ம்:—[1]சொல்லருந், தொல்பெருங். [2]புல்லுவர். [3]என்ன. (௬௨௯)

௧௨௩௰.—இராமபிரான் அபயமளித்ததனால் அவனதுபாதத்தைத் தொழலாமென்று சுக்கிரீவன் விபீஷணனுக்குக் கூறுதல்.

தழுவினர் நின்ற காலைத் தாமரைக் கண்ணன் [1]றங்கள்
முழுமுதற் குலத்திற் கேற்ற முறைமையா லுவகை [2]மூள
[3]வழுவலி லபய [4]முன்பால் வழங்கின [5]னவன்பொற் பாதம்
தொழுதியால்விரை[6]வி னென்னாக் கதிரவன் சிறுவன் சொன்னான்.

(இ - ள்.) (அவ்விருவரும் ஒருவரை யொருவர்) தழுவிக்கொண்டு நின்றபோது, சூரியகுமாரனாகிய சுக்கிரீவன் (விபீஷணனைநோக்கி), 'செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய இராமபிரான்,தங்களுடைய மிகச்சிறந்த சூரியகுலத்துக்கு ஏற்ற கிரமப்படியே மகிழ்ச்சிமிகத் தவறுதலில்லாத அபயதானத்தை உன்னிடத்து கொடுத்தருளினான்; (ஆதலால்), அப்பிரானது பொற்கழலையணிந்த திருவடிகளைச் சீக்கிரத்தில் வணங்குவாய்' என்று சொன்னான்.

அப்போது சுக்கிரீவன் விபீஷணனைநோக்கி, 'ஸ்ரீராமபிரான் தமது குலமுறைப்படியே அடைக்கலமடைந்த உனக்கு அபயமளித்துவிட்டார்: ஆகையால், இனி நீ விரைவிற் சென்று அப்பிரானதுதிருவடிகளை வணங்குவாய்' என்று கூறின னென்பதாம். பொற்பாதம்-பொன்போல் அருமையான திருவடி யெனினுமாம். பி-ம்:—[1]தன்கண். [2]முற்ற. [3]வழுவலன். [4]நின்பால். [5]மலர். [6]என்று.

(௬௩௰)

கஉரு.—அதுகேட்ட விபீஷணனது மகிழ்ச்சி.

சிங்கவே றனையான் சொன்ன வாசகஞ் செவிபு காமுன்
கங்குலி னிறத்தி னான்றன் [1]கண்மழைத் தாரை கான்ற
அங்கமு மனம தென்னக் [2]குளிர்ந்ததவ் வகத்தை மிக்குப்
[3]பொங்கிய வுவகை [4]யென்னப் [5]பொடித்தன வுரோமப் [6]புள்ளி.

(இ - ள்.) ஆண்சிங்கத்தை யொத்தவனாகிய சுக்கிரீவன் சொன்ன வார்த்தை, (தன்) காதில் நுழைவதற்குமுன்னே இருள்போலக் கருநிறமுடையவனாகிய விபீஷணனது கண்கள் ஆனந்தநீர்ப்பெருக்கைக் கக்கின; (அவனது) உடம்பும் (அவனுடைய) மனம்போலவே குளிர்ந்தது; அந்தமனத்தைக்காட்டிலும் மிகுதியாய்க் களிப்புப் பெருகப்பெற்றதென்று (கண்டோர்) கூறும்படி, மயிர்க்கூச்செறிதலாலான புள்ளிகள் (அவனது உடம்புமுழுதும்) நிறைந்தன.

இராமபிரானங்கீகரித்ததைச் சுக்கிரீவன் கூறக் கேட்டவுடனே, விபீஷணன் தனதுகண்களில் தாரைதாரையாக ஆனந்தக்கண்ணீர் பெருகவும், உடம்பும் உள்ளமும் ஒருசேரக்குளிரவும், ஆனந்தம் உள்ளடங்காமல் வெளியேபெருகினாற்போல உடம்பெங்கும் மயிர்க்கூச்செறியவும் நின்றனனென்பதாம். சிங்கம் = ஸிம்ஹம்: பிராணிகளை ஹிம்ஸிப்பது என்று பொருள்படும் வடசொல். பி-ம்:—[1]கண்கணீர். [2]குளிர்ந்தன, அகங்குளிர்ந்து. [3]பொங்கின. [4]வெள்ளம். [5]பொடித்ததவ். [6]புள்ளின். (௬௩௧)

கஉரு.—இதுமுதல் நான்குகவிகள் - இராமபிரான் தன்னை யங்கீகரித்ததைக்குறித்து விபீஷணன் கொண்டாடிக் கூறுதல்.

பஞ்செனச் [1]சிவக்கு மென்காற் றேவியைப் [2]பிரித்த பாவி
வஞ்சனுக் கிளைய வென்னை வருகவென் றருள்செய் தானோ
தஞ்செனக் கருதி னானோ தாழ்சடைக் கடவு ளுண்ட
நஞ்செனத் [3] தகையே னன்றோ நாயக [4]னருளி னாயேன்.

(இ - ள்.) (தோழிமார்) செம்பஞ்சுக்குழம்பு (ஊட்டவேணும்) என்று சொன்னாலும் (அதனையும் பொறாமற்) சிவந்துபோகுந் தன்மையுள்ள மென்மையான திருவடிகளையுடையசீதாபிராட்டியை (த் தான் கவர்ந்து இராமபிரானை விட்டு)ப் பிரியச்செய்த பாதகனாகிய வஞ்சனைக்குணமுடைய இராவணனுக்குப் பின்பிறந்த தம்பியாகிய என்னையும் வரலாமென்று (இராமபிரான்) கருணை செய்தானோ? (என்னையும்) அடைக்கலப்பொருளாகத் திருவுள்ளம்பற்றினானோ? லோகநாயகனாகிய இராமபிரானது திருவருளினால் நாய்போற்கடைப்பட்ட யானும், தொங்குகின்ற ஜடையையுடைய சிவபெருமான் உட்கொண்ட விஷம்போல் தகுதியை [பெருமையை] யடைந்தேனன்றோ? (எ - று.)

தனக்குத்தேவியான சீதையைப் பிரித்தலாகிற பெரும்பிழையைச்செய்து பகைஞனான இராவணனது தம்பியான எனக்கும் தன்னைப்புகலாகஅடைந்ததே காரணமாகத் தனதுபேரருளினால் அபயதானஞ்செய்து தன்னிடம்வருமாறு இராமபிரான் அருள்புரிந்தானே! இவ்வாறு அப்பரமன் அருள்புரிந்ததனால், சிவபிரான் உட்கொண்டதனாற் சிறப்படைந்த விஷம்போல மிகவும்

நீசனுகிய யானும் உயர்வுபெற்றேனென்று விபீஷணன் தன்னை இராமபிரான் அங்கீகரித்ததைப் பாராட்டிக்கூறுகின்றன னென்க.

சீதாபிராட்டியின் சுகுமாரத்தன்மையை விளக்குதற்பொருட்டு 'பஞ்செனச்சிவக்கும் மென் கால்' என்றார்; உயர்வுநவிற்சியணி. சீதைக்கு இந்த அடைமொழி கொடுத்தது - அவள் இராமபிரானைப்பிரிந்து ஆறியிருக்குந் தன்மையளல்லளென்பதைக் குறிப்பிக்கும்: அவ்வாறு மிக்க சுகுமாரையான சீதையை வஞ்சனையாற் பிரித்ததனுல், இராவணனை,'தேவியைப்பிரித்தபாவி வஞ்சன்' என்றான். 'பாவிவஞ்சனுக்கிளையஎன்னை' என்றது - அப்படிப்பட்டவனுடைய தீக்குணங்களெல்லாம் படியும்படி அவன் வாசஞ்செய்தவயிற்றிற் பத்துமாதம்வசித்துப் பிறந்தவ னென்று குறித்தற்கு. விபீஷணன் தன்னை இராமபிரான் அங்கீகரியாததற்குத் தக்க காரணமிருந்தும் அதனைச் சிறிதும் பாராட்டாமல் அங்கீகரித்தானே! என்று இராமபிரானதுபேரருளில் ஈடுபட்டுக்கூறுகின்றன னென்க. விபீஷணன் தனக்கு நஞ்சை உவமைகூறியது - தான் அதுபோலவே கொடுந்தன்மை யுடையவ னென்பதை விளக்குதற்காக. சரணம்புகுபவர் தம்முடைய குற்றத்தைச் சொல்லிக்கொண்டே சரணம்புக வேண்டு மென்ற முறை,இங்குவெளியாகும். பி-ம்:—[1]சிவந்த. [2]பிரிவுசெய்த, பிரித்தபாவ. [3]கருதினுனே, சிறந்தேனன்றே. [4]நாயினேனை, அருளநாயேன்.

கஉஎ. மருளுறு [1]மனத்தி னுனென் வாய்மொழி [2]மறுத்தான் வானத்
உருளுறு தேரி னுனு மிலங்கைமீ தோடு மன்றே [து
தெருளுறு சிந்தை வந்த தேற்றமீ தாகிற் செய்யும்
அருளிது வாயிற் கெட்டேன் பிழைப்பரோ வரக்க [3]ராமேனோர்.

(இ - ள்.) (இராமபிரானது) தெளிவுபொருந்திய திருவுள்ளத்திலுண்டான உறுதியானஎண்ணம் (அடைக்கலமடைந்தோரைக் காப்பதென்ற)இதுவேயானுல், (அப்பிரான் என்னிடத்திற்) செய்கின்ற கருணை (குற்றம்பாராமல் தன்னிடத்துவருமாறு கொள்கின்ற)இதுவேயானுல்,(இராவணனும் இப்பிரானைச் சரணமடைந்து உய்யலாமே; அவ்வாறு செய்யாமல்), அறியாமைக்குணம் நிரம்பிய மனத்தையுடைய இராவணன் என்னுடைய இதமான வார்த்தையைக் கேளாது மறுத்துவிட்டான்; கெட்டேன்! இராட்சசராயுள்ளவர்கள் இனிமேல் பிழைத்திருக்க வகையுண்டோ? ஆகாசமார்க்கத்தில்உருண்டுசெல்லுந்தன்மையுள்ள தேரையுடைய சூரியனும் (இனி இராவணபயமில்லாமல்)இலங்காநகரத்துக்குநேர்மேலே செல்லுவானல்லவோ? (எ-று.)

இராமபிரான் எவ்வகைப்பிழைசெய்தோராயினும் அடைக்கல மடைந்தோரைக் காப்பதே விரதமாகக்கொண்டு பெருங்குற்றவாளியான என்னையும் அங்கீகரித்தான்; இராவணன் நான் சொன்ன இதவசனத்தைக்கேட்டுச் சீதாபிராட்டியைக் கொடுத்துவிட்டுச் சரணம்புகுந்திருந்தால் அப்பிரான் அவனையும் குற்றத்தைப்பொறுத்துப் பாதுகாத்திருப்பனே; அப்போது அரக்கரெவரும் யாதொருகுறைவுமின்றி வாழ்ந்திருப்பரே; இராவணன் என் வார்த்தையைக் கேளாததனுலன்றே அரக்கரெல்லோரும் அழிந்துபோகும்படிநேர்ந்திட்டது என்று, இராவணன் தன் இதவசனத்தைக் கேளாததுபற்றி விளை

யும் தீங்கை நினைந்து விபீஷணன் இரங்கிக்கூறுகின்றன னென்க. கெட்டேன் என்றது - அரக்கரது அழிவை நினைந்து இரங்கிக்கூறிய வார்த்தை: "கெட்டேன்வாழ்வில்லை" என்ற பெரியார்பாசுரத்திற்போல; அங்கு, 'கெட்டேன்என்றது, விஷாதாதிஶயத்தாலே [துக்கத்தின் மிகுதியாலே] இரங்கிச் சொல்லுகிற வார்த்தை' என்று வியாக்கியானமிட்டிருத்தல் காண்க. இராமபிரான் அவ்விராவணனைக் கொல்வானாதலால், "இருள் நன்காசறவெழுகதிரவன் நிற்கவென்றும், அருணன் கண்களும் கண்டிலாவிலங்கை" என்றபடி இராவணனிடத்து அச்சத்தால் சூரியன்சென்றறியாத இலங்கையிலே இனிச் சூரியன் இராவணபயமொழிந்து தனது சஞ்சாரரீதியின்படி தடையின்றி இனிது செல்ல நேரிடுமென்பது, இரண்டாமடியின் கருத்து. "இலங்கையிலாதவன் போகக்கண்டான்" என்றார் பிள்ளைப்பெருமாளையங்காரும். பி-ம்:- [1]மனத்தாலென்றன், மனத்தானென்றன். [2]மறுத்து. [3]அம்மா. (௬௩௩)

௪௨அ. தீர்வரு [1]மின்னா நம்மைச் செய்யினுஞ் [2]செய்ய சிந்தைப்
[3]பேரரு ளாளர் தத்தஞ் [4]செய்கையிற் பிழைப்ப துண்டோ
கார்வரை நிறுவித் தன்னைக் கனலெழக் கலக்கக் கண்டும்
ஆர்கலி யமர ருய்ய வமிழ்துபண் [5]டளித்த தன்றே.

(இ-ள்.) நீக்கமுடியாத தீங்குகளைப் (பிறர் தமக்குச்) செய்தாலும், நல்ல எண்ணத்தையுடைய மிக்க அருளையுடைய பெரியோர்கள் தமது இயற்கையான அருள்செய்வதாகிய குணத்தினின்று தவறுவது உண்டோ? கருநிறமுள்ள மந்தரமலையைநாட்டித் தன்னை நெருப்புப்பொறிபறக்கும்படி கலக்கக் கண்டும் கடலானது (என்றும் இறவாமல்) தேவர்கள் பிழைத்திருக்கும்படி அமிருதத்தை முற்காலத்திற் கொடுத்ததல்லவோ? (எ - று.)

'பெரியோர்கள் பிறர் தமக்குப் பெருந்தீங்கு செய்தவராயினும் அவரிடத்தும் தமதுஇயற்கையான சற்குணத்தால் நன்மையே செய்வார்கள்' என்ற பொருளுள்ள முதலிரண்டடி, இராமபிரான் தன்னைச்சரணமடைந்தவர் குற்றஞ்செய்தவரேயாயினும் அதனைப் பொறுத்து அவரிடத்துங் கருணைசெய்வனென்ற சிறப்புப்பொருளைப் பிறிதுமொழிதலென்ற அணிவகையாலுணர்த்தும்; இங்ஙனம் இராமபிரான் அருள்செய்வதற்கு-பாற்கடல் தன்னைக்கடைந்த அமரர்க்கும் அமுதமளித்ததனைத் திருஷ்டாந்தமாக எடுத்துக் காட்டினார். முன்னிரண்டடியாற்கூறிய பொதுப்பொருளைப் பின்னிரண்டடிகளிற்கூறிய சிறப்புப் பொருள் சாதித்துநிற்பது - வேற்றுப்பொருள்வைப்பணியாம். பி-ம்:—[1]இன்னதீமை, அன்னதீமை.[2]செய்யப்பெற்ற. [3]பேரறிவாளர்.[4]பெருமையிற். [5]உதவிற்றன்றே. (௬௩௪)

௪௨௯. துறவியி [1]னுறவு பூண்ட தூயவர் துணைவ னென்னை
உறவு[2]வந் தருளி மீளா வடைக்கல [3]முதவி னானே
[4]மறவினை நீக்க வில்லா மாயமு மாய வாழ்க்கைப்
[5]பிறவியும் [6]பெயர்த்தேன் [7]பின்னு [8]நரகினிற் பிழைப்ப தானேன்.

(இ - ள்.) துறப்பதிலுறவுபூண்ட பரிசுத்தகுணமுடையார்க்கு நண்பனான இராமபிரான், (ராக்ஷஸராஜனது தம்பியான) என்னையும் மிக்கமகிழ்

ச்சியோடு அங்கீகரித்தருளி, இனி என்றும் கைவிடுதலில்லாத அபயதான த்தை உதவினனே; (இது என்ன ஆச்சரியம்!! இனி இதனால்), அருமை காரியத்தைத் தவிர்தலில்லாத மாயத்தையும் மாயச்செயலைக்கொண்ட வாழ்க் கையோடு கூடிய அரக்கப்பிறப்பையும் விட்டொழிந்தேன்; மேலும் நரகத்தை யடைவதிலிருந்து தப்பி ஈடேறினவனுமானேன்; (எ - று.)

'துறந்துவந்தோரிடத்து அன்புகொள்ளுந் தன்மையுடைய பரிசுத்த மூர்த்தி தீக்குணம்நிறைந்த என்னையும் மகிழ்ந்து அங்கீகரித்தானன்றோ? ராக்ஷஸவேஷத்தை யுடையவனாயிருந்தாலும், இனி அவனுடைய கடாக்ஷத் தால், நான் அரக்கனல்லேன்: இராமபிரானருளால் நற்கதியே கிடைக்குமாத லால்,நரகவேதனையும் எனக்கு நேராது' என்று இராமபிரான் அங்கீகரித்ததை விபீஷணன் பாராட்டிக் கூறுகின்றன னென்க. 'அரக்கப் பிறவியும் பெயர்த் தேன்' என்றது - இராமபிரானுடைய நண்பினால் கொடுமைக்குணமெல்லா மொழியச் சாந்தகுணமே மேலிடு மென்றவாறு. உறவு உவந்தருளி என்று பிரித்தும் உரைக்கலாம்.'என்னை' என்ற சொல்லினீற்றில் இழிவு சிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. ஏகாரம்-வியப்புப்பொருளது. பி-ம்:—[1]உணர்வு. [2]தந்தருளி. [3]உதவினனேல். [4]அறிவினையிறையுமில்லா வறிவிலியரக்கனென் னும், அறிவினையிறையுமில்லா வறிவிலாவரக்கரென்னும். [5]பிறவியில், பிறவி யை. [6]பெயர்ந்தேன், பிழைத்தேன். [7]மீண்டு. [8]நரகினும். (௬௩௫)

௧௩௦.—சுக்கிரீவன் இராமபிரானிடத்து விரைவில் வருமாறு விபீஷணனிடங் கூறுதல்.

திருத்திய [1]வுணர்வு மிக்க செங்கதிர்ச் செல்வன் செம்மல்
[2]ஒருத்தரை நலனுந் தீங்குந் தேரினு முயிரி னோம்பும்
கருத்தின னன்றே [3]தன்னைக் கழலடைந் தோரைக் காணும்
அருத்திய னமலன் றூழா தேகுதி யறிஞ வென்றான்.

(இ - ள்.) (இராமபிரானது வசனத்தால்) சீர்திருத்தப்பெற்ற நல்லறிவு சிறந்துள்ளவனாகிச் சிவந்தகிரணங்களையே செல்வமாகவுடைய சூரியனது புதல்வனான சுக்கிரீவன்,—(விபீஷணனை நோக்கி), 'அறிஞனே! குற்றமற்ற இராமபிரான், ஒருவரிடத்துள்ள நற்குணத்தையும் தீக்குணத்தையும் ஆரா ய்ந்து அறிபவனாயிருந்தாலும் (அவற்றைக் கருதாமல் தன்னைச் சரணமடை ந்த அவரைத்) தன்னுயிரைப்போலப் பாதுகாக்கின்ற எண்ணமுடையவன்; தனது திருவடிகளை நாடியடைபவரை (அப்போதே)காணவேணுமென்கின்ற விருப்பமுள்ளவன்; (ஆதலால்), தாமதியாமல் (இராமனிடஞ்) செல்வாய்' என்றான்; (எ - று.)

இராமபிரான் தன்னை யடைந்தோரிடத்துள்ள நன்மைதீமைகளைப் பாராது அவர்களைத்தன்னுயிரைப்போலப் பாதுகாக்குந் தன்மையோடு இப்ப டிப்பட்டவரை எப்போது காணப்போகின்றோ மென்ற ஆவலும் கொண்டி ருப்பவ னாதலால், நீ தாமதியாது உடனே அப்பிரானைச் சென்று சேர்வா யென்று சுக்கிரீவன் விபீஷணனிடத்துக் கூறின னென்க. இராவணனது

தம்பியாய்ப் பிறந்திருந்தும் அவனுக்கே நன்மதி கூறவும், அவன் கேளாது கோபித்தபோது அவனைவிட்டு இராமபிரானைச் சரணமாக அடையவும் ஏற்ற நல்லறிவு பெற்றுள்ளானாதலால், விபீஷணனை 'அறிஞ' என்று விளித்தான். முதலில் விபீஷணனை அங்கீகரிப்பதில் மாறுபட்ட சுக்கிரீவன் இராமவசனத்தால் பிறகு உடன்பட்டானாதலால்,'திருத்திய வுணர்வுமிக்க செங்கதிர்ச்செல்வன்செம்மல்'எனப்பட்டான்.செங்கதிர்-பண்புத்தொகையன்மொழியாய்ச் சூரியனையுணர்த்துமெனக் கொண்டு,செங்கதிர்ச்செல்வன்-சூரியபுத்திரனை சுக்கிரீவனனவன் எனஉரைத்து, செம்மல்-ஸ்ரீராமன், அருத்தியன்: அமலன் என முடிப்பினுமாம். 'அன்றே' என்பதைத் தேற்றப்பொருளதாக்கி,கருத்தினனன்றே,அருத்தியனன்றே யென்று கூட்டிப் பொருளுரைப்பாருமுளர். பி-ம்:— [1]உணர்வின். [2]ஒருத்தரு; ஒருத்தரைநலனுந்தீங்குமுணர்வனே, உரைத்த நன்னலனுந்தேரினுணரினும். [3]தன்பொன். (௬௩௬)

கஙக.—இராமபிரானிருந்த இடத்திற்குச் சுக்கிரீவனும் விபீஷணனும் வருதல்.

மொய்தவழ் கிரிகண் [1]மற்றும் [2]பலவுடன் முடுகிச் [3]செல்ல
மைதவழ் கிரியு மேருக் குன்றமும் வருவ தென்னச்
செய்தவம் பயந்த [4]வீரர் திரண்மர மேழுந் [5]தீய
எய்தவ னிருந்த சூழ லிருவரு மெய்தச் சென்றார்.

(இ - ள்.) நெருங்கின (மேகந்)தவழப்பெற்ற மலைகள்வேறு பல கூடவே விரைந்துவரக்கருமைநிறம்பொருந்திய அஞ்சனமலையும்பொன்மயமான மேருபர்வதமும் ஒருசேர வருவதுபோல, (முற்பிறப்பிற்)செய்த நல்வினைப்பயன் கைகூடப்பெற்ற வீரர்களாகிய விபீஷணன் சுக்கிரீவனென்ற இருவரும் ஒருசேரத்திரண்ட மராமரங்களேழும் தீந்துபோகும்படி அம்பு எய்தவனாகிய இராமபிரான் தங்கியிருந்த இடத்தில் நெருங்கச் சேர்ந்தார்கள்; (எ - று.)

அஞ்சனமலையும் மேருமலையும் பலமலைகள் தம்மோடுவரச் செல்வது போல, விபீஷணனும் சுக்கிரீவனும் பலவானரவீரர் தம்முடனே வர, இராமபிரானிருக்குமிடத்தை நெருங்கிச் சேர்ந்தார்களென்றவாறு. மைம்மலை - விபீஷணனுக்கும், மேருமலை-சுக்கிரீவனுக்கும், மற்றைப் பலமலைகள் - வானரவீரர்க்கும் உவமையாம். உவமையால் வானரர்கள் உடன்வந்தமையைத்தெரிவித்தார். மொய் தவழ்கிரி-யானைகள் தவழப்பெற்ற மலையென்றலுமொன்று. மைதவழ்கிரி-கருநிறமேகம் தவழப்பெற்ற மலை யென்பாருமுளர். புண்ணிய மூர்த்தியாகிய இராமபிரானைச் சேரும் பெரும்பாக்கியம்வாய்க்கப்பெற்றமையால், 'செய்தவம் பயந்த வீரர்' என்றார்.

மராமரமேழுந் தீய எய்த வரலாறு:—இராவணனால் அபகரிக்கப்பட்ட சீதையைத் தேடிக்கொண்டுசென்ற ராமலக்ஷ்மணரை அநுமான் மூலமாகச் சிநேகித்த பிறகு, சுக்கிரீவன், 'தனது பகைவனும் பலசாலியுமான வாலியைக்கொல்லும் வல்லமை இராமபிரானுக்கு உண்டோ? இல்லையோ?' என்று ஐயமுற்று, தன் சந்தேகம் தீரும்படி 'எதிரிலுள்ள எழுமராமரங்களையும் ஏக

காலத்தில் தொளைபடும்படி எய்யவேண்டும்' என்று சொல்ல, உடனே இராம பிரான் ஓரம்புதொடுத்து அந்த ஏழு மராமரங்களையும் ஒருங்கே தொளைபடுத் தின னென்பதாம். பி-ம்:—[1]முற்றும். [2]பரிவுடன். [3]செல்வன். [4]வீரன். [5]தீர.

௬௩௨.—விபீஷணன் இராமபிரானைக் காணுதல்.

மார்க்கடஞ் சூழ்ந்த வைப்பி [1]னிளையவன் மருங்கு காப்ப
நாற்கட லுடுத்த பாரி னாயகன் புதல்வ [2]னாமப்
பாற்கடல் சுற்ற விற்கை வடவரை [3]பாங்கு நிற்பக்
கார்க்கடல் கமலம் பூத்த தெனப்பொலி வானைக் கண்டான்.

(இ - ள்.) வானரக் கூட்டம் சூழ்ந்துள்ள இடத்தில் வில்லைக் கையிலே பிடித்த இளையபெருமாள் பக்கத்தில்நின்று பாதுகாக்க, பிரசித்திபெற்ற பாற் கடல் சூழ்ந்து நிற்கவும் வடக்குமலையாகிய மகாமேரு பக்கத்திலே நிற்கவும், தாமரை மலர்கள் பூக்கப்பெற்றதொரு கருநிறமுள்ள கடல் (விளங்குவது) போல விளங்குபவனாகிய (நான்குதிசையிலுள்ள) நான்குகடலினாலுஞ் சூழப் பட்ட நிலவுலகத்துக்குத் தலைவனான தசரதசக்கரவர்த்தியினது புத்திரனாகிய இராமபிரானை (விபீஷணன்)தரிசித்தான்; (எ - று.)

(விற்பிடித்த) மகாமேருமலை யொன்று பக்கத்தில் நிற்கப் பாற்கடலின் நடுவே தாமரைமலர்கள் மலரப்பெற்ற கருங்கட லொன்று இருப்பதுபோல, செந்நிறமாகிய கண் கை கால் முதலிய அவயவங்களையுடைய சாமளமூர்த்தி யான இராமபிரான் வெண்ணிறமான வானரசேனைகளுக்கு நடுவே இளைய பெருமாள் வில்லுங்கையுமாய்ப் பக்கத்திலேயிருக்க விளங்கின னென்பதாம்: பின்னிரண்டடி - இராமபிரானுக்கு இல்பொருளுவமை. பாற்கடலுக்கு - மார்க்கடமும், வில்லையேந்திப் பக்கத்துநிற்கும் இளையபெருமாளுக்கு-விற்கை வடவரையும், அவயவசோபையையுடைய கருநிறத்தவனான இராமபிரானுக் குக் கமலம்பூத்த கார்க்கடலும் உவமையாகும். 'விற்கை' என்பதை இளையவ னென்பதனோடு இயைக்க. இனி,விற்கை வடவரை பாங்குநிற்ப என்று உபமா னத்திற் கூறியதனால், இலக்குமணன் வில்லுங்கையுமாய்ப் பக்கத்தில்நிற்க என்று உபமேயத்தில் வருவித்து உரைத்தலுமொன்று.

மார்க்கடம் - மர்க்கடத்தின் தொகுதி: வடமொழித்தத்திதாந்தநாமம். அங்கதன் - வாலியின் குமாரன். நாமம் - வடசொல். தமிழ்மொழியாகக் கொண்டு, அச்சத்தைத் தருகின்ற என்று பொருளுரைத்தால், 'நாம்' என்ற உரிச்சொல் அம்முச்சாரியை பெற்ற தென்க. மேருமலை எங்கேயிருக்கின்ற தென்றால், வடக்கேயுள்ள தென்று சொல்லவேண்டுதலின், அது 'வடவரை' எனப்படு மென்பர். பி-ம்:—[1]அங்கதன். [2]ஆழும். [3]மருங்கு. (௬௩௮)

௬௩௩.—இதுமுதல் நான்கு கவிகள்-இராமபிரானது வருணனை.

அள்ளிநீ துல்லை வீசு மரிக்குலச் சேனை நாப்பண்
[1]தெள்ளுதண் டிரையிற் றூகிப் பிறிதொரு [2]திறனுஞ் சாரா
[3]வெள்ளிய கடலின் மேனாள் விண்ணவர் தொழுது வேண்டப்
பள்ளிநீர்ந் திருந்தா னென்னப் பொலிதரு பண்பி னானை.

ஐந்துகவிகள்-குளகம்.

(இ - ள்.) நிலவுலகத்தைக் கையாலெடுத்து வானத்தில் எறியவல்ல [வலிமையமைந்த] கூட்டமாகிய வானரசேனைக்கு நடுவே, தெளிந்த குளிர்ந்த அலைகளையுடையதாகி வேறொருதன்மையுஞ் சேராத [பால்மயமாகிய] வெண்ணிறமுடைய பாற்கடலிலே முற்காலத்தில் தேவர்கள் வணங்கி (ராக்ஷஸபயத்தினின்று தம்மைப் பாதுகாக்குமாறு) பிரார்த்திக்க (தனது ஆதிசேஷசயனத்திற்) பள்ளிக்கொள்வதை விட்டு வீற்றிருந்ததுபோல விளங்குகின்ற தன்மையுடையவனும்,—(எ-று.)—நாப்பண் பொலிதரு என்க.

இதுமுதல் நான்குகவிகளிலுள்ள 'பண்பினானை' 'வயங்குவானை' முதலிய இரண்டனுருபேற்ற பெயர்கள், மேல் நூற்றுமுப்பத்தேழாங்கவியிலுள்ள 'வீரனை' என்பதற்கு அடைமொழிகளாக இயையும். இனி, கீழ்ச்செய்யுளிலுள்ள 'பொலிவானை' என்பதனோடு இயைத்து உரைத்தலும் ஒன்று. வெண்ணிறமுள்ள வானரசேனையின்மத்தியில் இராமபிரான் இருத்தற்கு, தேவர்கள் இராவணாதிராக்ஷஸர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் அதைப்போக்க வேண்டுமென்று பிரார்த்தித்தபோது திருப்பாற்கடலின் நடுவில் ஆதிசேஷசயனத்தை விட்டுத் தனியே வீற்றிருந்த திருமாலை உவமை கூறினர். திருமால் பாற்கடலிற் பள்ளிகொண்டு நிற்கின்ற நிலை 'வ்யூஹம்' எனப் பெயர்பெறும்; அவதாரங்கள் 'விபவம்' எனப் பெயர்பெறும். பி-ம்:—[1]தள்ளருந், தெள்ளு தெண். [2]திறனுஞ்சார, நிறனுஞ்சார. [3]வெள்ளிவெண். (௩௨௯)

க௩௪. கோணுதற் [1]கமைந்த கோலப் புருவம்போற் றிரையுங் கூடப்
பூணுதற் [2]கினிய முத்தின் பொலி[3]மணல் பரந்த வைப்பிற்
காணுதற் கினிய [4]நீள வெண்மையிற் கருமை காட்டி
வாணுதற் கமைந்த கண்ணின் மணியென வயங்கு வானை.

(இ - ள்.) வளையுந்தன்மை பொருந்திய (சீதாபிராட்டியினது) அழகிய புருவத்தைப்போல அலைகளும் பொருந்த அணிந்துகொள்வதற்குஏற்ற முத்துக்கள்போல விளங்குகின்ற மணற்கூட்டம் பரந்த (கடற்கரையின்) இடத்திலே, காண்பதற்கு இனிமையாகத் தோன்றுகின்ற நீண்டவெண்ணிறத்திலே கருநிறத்தைத் தோற்றுவித்துக்கொண்டு ஒளிபொருந்திய நெற்றியையுடைய சீதாபிராட்டிக்குப்பொருந்திய கண்ணின் கருவிழிபோல விளங்குபவனும், (எ-று.)—வைப்பில் வயங்குவானை என்க.

அலைகள்வளைந்து மடிகின்ற வெண்மையான கடற்கரையின் மணற்பரப்பிலே கருநிறத்திருமேனியுள்ள இராமபிரான், சீதாபிராட்டியினது வளைந்து முறியுந்தன்மையுள்ள புருவத்தின் பக்கத்திற் சுற்றிலும்வெண்ணிறமாய்நீண்ட கண்ணின் மத்தியிலுள்ள கருமணிபோல விளங்குகின்றானென்க. இதனால், இராமபிரான் சீதாபிராட்டிக்குக் கண்போல் அருமையானவனென்பது, தொனிக்கும். புருவத்திற்கு-அலை உவமையாம். 'கூட' என்ற வினையெச்சம், 'பரந்த' என்றதனோடு இயையும். பி-ம்:—[1]அரிய. [2]அரிய, உரிய. [3]மணற்கானல். [4]நீல.

(௩௩௦)

க௩௫. படர்மழை சுமந்த [1]காலைப் [2]பகர்வரு மமரர் கோமான்
[3]அடர்சிலை துறந்த தென்ன வாரந்தீர் மார்பி னானைக்
கடர்கடை [4]மத்திற் பாம்பு கழற்றிய தென்னக் [5]காசின்
சுடரொளி வலயந் தீர்ந்த சுந்தரத் தோளி னானை.

(இ - ள்.) (வானத்திற்) சஞ்சரிக்குந்தன்மையுள்ள மேகமானது(நீரை) மிகுதியாகக்கொண்டு(ஆகாயமெங்கும்) நிறைந்த காலத்தில்[சூரியகிரணமென் பதே எங்குந்தோன்றாது அடைமழையா யிருந்தகாலத்தில்] சொல்லுதற்கு அரிய [மிக்கபெருமைபெற்ற] தேவேந்திரனது நெருங்கிய வில்லை [வான வில்லை] விட்டிருந்தாற்போல இரத்தினஹாரத்தை அணியாதிருக்கிற திரு மார்பையுடையவனும்,—பாற்கடலைக்கடைந்த மத்தாகிய மந்தரபருவதத்தி லிருந்து (கடைகயிறாகச்சுற்றிய வாசுகியென்னும்) பாம்பைக் கழற்றப்பெற் றதுபோல இரத்தினங்களினாலே விளங்குகின்ற ஒளியையுடைய வாகுவல யத்தைநீங்கிய அழகிய திருத்தோள்களையுடையவனும்,—(எ - று.)

இரத்தினஹாரம்நீங்கிய இராமபிரானது திருமார்புக்கு - இந்திரதனுசு நீங்கிய காளமேகமும்,அப்பிரானது வாகுவலயம்நீங்கிய திருத்தோள்களுக்கு- வாசுகியென்னுங் கடைகயிறு நீங்கிய மந்தரமலையும் ஏற்ற உவமையாம். கடர் = லகர ரகரப்போலி. இச்செய்யுளின் முதலிரண்டடிகளுக்கு வேறுவகை யாகப் பொருளுரைப்பது பொருந்துமாயிற் கொள்க. பி-ம்:—[1]காயம்,காலப். [2]பருவவான். [3]அடல். [4]மத்துந்தாம்பும், மத்துத்தாம்பு. [5]காய்பொற். (௪௪௯)

க௩௬. கற்றைவெண் ணிலவு [1]நீக்கிக் கருணையா மமிழ்தங் காலும்
முற்றுறு கலையிற் றூய முழுமதி முகத்தி னானைப்
பெற்றவ னளித்த மோலி யிளையவன் [2]பெறத்தான் பெற்ற
சிற்றவை [3]பணித்த மோலி [4]பொலிகின்ற சென்னி யானை.

(இ - ள்.) தொகுதியாகிய வெண்மைநிறமுள்ள நிலாச்சொரிவதையொ ழித்துக் கருணையாகிய அமிருதத்தைக் கக்குகின்ற நிறைந்த கலைகளையுடைய பூர்ணசந்திரன்போன்ற முகத்தையுடையவனும்,—(தன்னைப்) பெற்றதந்தை யாகிய தசரதன் கொடுத்தருளிய(ராஜாங்கத்துக்குஉரிய)கிரீடத்தைத்(தனது) தம்பியாகிய பரதன் அடைய, தான் அடைந்த (தனது) சிறியதாயாகிய கைகேயி நியமித்த ஜடாமகுடம் விளங்கப்பெற்ற சிரசையுடையவனுமாகிய,—

நிலாப்பொழிவதைவிட்டுக் கருணமிருதத்தைச் சொரிகின்ற பூர்ணசந்தி ரன்போன்று இராமனது திருமுகமண்டலம் விளங்குமென்பது, முன்னிரண் டடியின் கருத்து. தசரதன் இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்யுமாறு நிச்சயிக்க, கைகேயி தான் பெற்றுள்ள இரண்டுவரங்களுள் ஒன்றினால் தான் பெற்ற பிள்ளையாகிய பரதன் முடிசூடுமாறும், மற்றொன்றினால் இராமபிரான் ஜடாமகுடதாரியாய் மரவுரியுடுத்து முனிவன்போலக் காட்டிற் சஞ்சரிக்கு மாறும் நேர்ந்ததைப் பின்னிரண்டடியாற் கூறினார். இராமபிரானைப்பார்க்கும் போதே இவன் தனது சிற்றன்னை பணித்த மொழியைத் தனது சென்னியால் தாங்குபவ னென்பது விளங்குமென்பார், 'சிற்றவை பணித்த மோலி பொலி கின்ற சென்னியான்' என்றார்.

கலை = கலா; சந்திரகிரணம். மோலி - மௌலியென்ற வடசொல்லின் திரிபு: சிரசு என்று பொருள்; இச்சொல், இங்கு, அதிலணியுங் கிரீடத்துக்கு இடவாகுபெயர். சிறு + அவை = சிற்றவை. ஈற்றடியில், 'மோலி'-இலக்கணையால், கட்டளையென்று கொள்வாருமுளர். பி-ம்:—1நீங்க. 2பெறவேபெற்ற. 3பணியா, பணியால். 4சடைபொரு. (சசஉ)

நகஎ.—இராமபிரானைக்கண்ட விபீஷணனது ஈடுபாடு.

வீரனை நோக்கி 1யங்க 2மென்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர்
வார3நெஞ் சுருகிச் செங்கண் அஞ்சன 4மலையன் றுகில்
கார்முகில் கமலம் 5பூத்த தன்றிவன் கண்ணன் கொல்லாம்
ஆரருள் சுரக்கு நீதி யறநிறங் கரிதோ வென்றான்.

(இ - ள்.) வீரனை இராமபிரானைத் தரிசித்து (அதனால் தனது) உடம்புமுழுவதிலும் மெல்லியமயிர் சிலிர்க்கவும் (ஆனந்தத்தினால்) கண்களிலிருந்து நீர் பெருகவும் மனம் கசிந்து,—(விபீஷணன் 'இம்மூர்த்தி), சிவந்த கண்களைப்படைத்த அஞ்சனகிரியோ? அன்று ஆகில், செந்தாமரை மலர்கள் (தன்னிடத்து) மலரப்பெற்றதாகிய காளமேகமோ? (இவ்விரண்டும்) அன்று; இவன், (தருமஸ்வரூபியாகிய) ஸ்ரீமகாவிஷ்ணுவே போலும்; நிறைந்த கருணையைச் சுரக்கின்ற தன்மையையுடைய அந்தத் தருமமூர்த்தியின் நிறம், கரிதோ?' என்று (மனங்கசிந்து) கூறினான்; (எ-று.)

விபீஷணன் இராமனைத் தரிசித்தமாத்திரத்தில் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சு எறிய, கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக, மனமுருகி 'இந்தமூர்த்தி செங்கண்படைத்ததொரு அஞ்சனமலையோ? அன்றி, செந்தாமரை மலர்கள் மலரப்பெற்ற காளமேகமோ? இவ்விரண்டு மன்று; இம்மூர்த்தி ஸாக்ஷாத்தருமமாகிய விஷ்ணுமூர்த்தியாகவே இருக்கவேண்டும். கருணைமழைபொழிகின்ற அந்தத்தருமமூர்த்திக்கு நிறம் கருமையானதேபோலும்' என்று ஈடுபட்டுக் கூறினனென்க. அஞ்சனமலை-மையைப்போலக் கருநிறமான மலை. மலைமுகில் என்பவற்றின்பின் வினாவை யுணர்த்தும் ஓகாரம் விகாரத்தால்தொக்கன. பி-ம்:—1அங்கண். 2மெய். 3நெஞ்சுருக. 4மலையின்றுகில், மலையிற்றுகி. 5பூத்ததாமிவன். (சசங)

நகஅ.—தனக்கு இப்போது நேர்ந்த பேற்றுக்குத் தமையனேகாரணமென்று விபீஷணன் மகிழ்தல்.

மின்மினி யொளியின் மாயும் பிறவியை 1வேரின் 2வாங்கச்
செம்மணி மகுட நீக்கித் திருவடி புனைந்த செல்வன்
3தன்புணர் கமலத் தண்ணல் தாதைதயார் சரணந் தாழ
4என்முனு 5னெனக்குச் செய்த வுதவியென் றேம்ப லுற்றான்.

(இ - ள்.) 'மின்மினிப்பூச்சியின் ஒளிபோலத் (தோன்றி உடனே) மறையுந்தன்மையுள்ள (தனது) ஜந்மத்தை அடியோடு ஒழிக்கும்படி செந்நிறமுள்ள இரத்தினமயமான ராஜகிரீடம் (தனக்குத் தாய்மூலமாகக் கிடைத்திருக்கவும அதனைவேண்டாஎன்று) ஒழித்துவிட்டு (இராமபிரானது) திருவடிநிலைகளை

[பாதுகைகளை] (த் தனது முடிக்கு அலங்காரமாகத்) தரித்த பாக்கியவானான பரதாழ்வானது தமையனும் தாமரைமலரில் வாழ்கின்ற பிரமதேவனது தந்தையுமாகிய இராமபிரானது திருவடிகளில் (நான் வந்து) வணங்கும்படி எனது தமையனான இராவணன் எனக்கு செய்த உதவி (இருந்தபடி என்னே!)' என்று வியந்துசொல்லிக் களிப்புக்கொண்டான், (விபீஷணன்); (எ-று.)

இராவணன் "பழியினையுணர்ந்து யான் படுக்கிலே னுனை, ஒழிசிலபுகலுதல் ஒல்லைநீங்குதி, விழியெதிர்நிற்றியேல் விளிதி" என்று தன்னைக் கடிந்து கூறியதுவே தான் இராமபிரானது திருவடிகளைப் பற்றுதற்குக் காரணமானதனால், தன் தமையன் தன்னைக்கடிந்து அப்பாற்படுத்தியதே தனக்குப் பேருதவியாயிற்றென்று விபீஷணன் அகமகிழ்ந்தனனென்க. "இளையவற்கவித்த மோலி யென்னையுங்கவித்தி" என மேல் வேண்டுமாறு பரதனைப்போலவே தானும் இராமபிரானது திருவடிமகுடத்தைச் சூடவேண்டு மென்று கருதியிருக்கின்ற விபீஷணன், இராமபிரானை 'திருவடிபுனைந்தசெல்வன் தன்முனோர்' என்றான்.

பிறவியென்பது - இங்குப் பிறக்கின்ற உடம்பிற்கு இலக்கணை. பிறவியின் நிலையில்லாமையை விளக்க 'மின்மினியொளியின் மாயும் பிறவி' என்றார்: "மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள்" என்பது, பெரியார்பாசுரம். இறைவனடி சேர்ந்தார்க்கே பிறவித்துன்பம் ஒழியு மென்பது பற்றி 'பிறவியை வேரின்வாங்கத் திருவடிபுனைந்த செல்வன்' என்றார். விபீஷணன் இராமபிரானைத் திருமாலின்திருவவதார மென்று உணர்ந்தவனாதலால், 'கமலத் தண்ணல்தாதை' என்றுகூறினான். பி-ம்:—[1]விரைவின். [2]வாங்கிச். [3]தம்முனோர். [4]எம்முனோர். [5]எமக்குத்தந்த. (௪௪௪)

௪௪௫.—துஷ்டர்களாயிருந்தும் அரக்கர்க்கு இராமபிரானது திருக்கையாற் கொலையுண்ணும் பாக்கியம் நேர்ந்ததை விபீஷணன் பாராட்டுதல்.

பெருந்தவ மியற்றி னோர்க்கும் [1]போர்வரும் பிறவி நோய்க்கு
மருந்தென [2]நின்றான் றானே வடிக்கணை தொடுத்துக் கொல்வான்
இருந்தன [3]னின்ற தென்னா மியம்புவ தில்லை தீர்ந்த
அருந்தவ முடைய ரம்மா வரக்கரென் றகத்துட் கொண்டான்.

(இ - ள்.) 'மிக்க தவஞ்செய்தவர்கட்கும் போக்குதற்கு முடியாதபிறவியாகிற வியாதியைப்போக்குதற்கு மருந்துபோல நின்றவனாகிய இராமபிரான் தானே (தனது வில்லிலே) கூர்மையான பாணங்களைச் சேர்த்துப் பிரயோகித்து (அரக்கர்களை)க் கொல்வதற்குச் சித்தனாயிருந்தனன்; (அதனால்), இராட்சசர்கள் முற்றிய பெருந்தவமுடையராவர்; (இனிப்பேசும்படியாக) நிற்பது என்ன உள்ளது? சொல்வதற்கு (ஒன்றும்) இல்லை' என்று (தன்) மனத்தில் நினைந்தான், (விபீஷணன்); (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: அரக்கர்களின் தவப்பயனை வியந்தவாறு.

மிக்கபெருந்தவஞ்செய்தோர்க்கும் ஒழித்தற்கு அரியதான பிறவித்துன்பங்களைத் தனது பார்வைமாத்திரத்தால் வேரோடழிக்கவல்ல இராமபிரான்,

தானே எதிர்நின்று அம்புதொடுத்து அழிக்குமாறு நேர்ந்துள்ளதனால், இவ்வரக்கர்கள் எம்பெருமானுக்கு அநுகூலராக இருந்து உய்வுபெறாவிடினும், பிரதிகூலராக இருந்தாவது அப்பிரானது கண்ணுக்குக்கு இலக்காய் அதன் மூலமாக இருடியர்க்கும் போக்குதற்கு அரிய தமதுபிறவித்துயரம் ஒழியப் பெறலாவார்கள்; இவர்களதுபேற்றைக் குறித்து இதற்குமேல் நம்மால் யாதுகூறமுடியுமென்று விபீஷணன் அரக்கர்களுக்கு ஒருவாறு நேர்ந்த பாக்கியத்தை வியக்கின்றனனென்க. மருந்தினாற் பிணிதீர்தல்போலக் கடவுளாற் பிறவி யொழியு மாதலால், 'பிறவிநோய்க்கு மருந்தெண நின்றான்' என்றார். கொல்வான் - பெயர்; வினையெச்சமாக உரைப்பினுமாம். தீர்தல் - முதிர்தல்: செய்துதீர்தல் என்பாருமுளர். பி-ம்:—[1]பொருவரும். [2]நின்ற. [3]நின்றதென்னைவியம்புவதெல்லை, என்றபோதென்னியம்புவதெல்லை. (௩௪௫)

௧௪௦.—விபீஷணன் இராமபிரானது திருவடிகளில் வீழ்ந்துவணங்குதல்.

கரங்கண்மீச் சுமந்து செல்லுங் கதிர்மணி முடியன் கல்லும்
மரங்களு முருக நோக்குங் காதலன் கருணை வள்ளல்
இரங்கின னோக்குந் தோறு மிருநிலத் திறைஞ்சு கின்றான்
வரங்களின் [1]வாரி யன்ன தாளிணை வந்து வீழ்ந்தான்.

(இ - ள்.) (தனது) ஒளியுள்ள இரத்தினங்கள்பதித்துச்செய்த கிரீடத்தின்மீது தாங்கிக்கொண்டுசெல்லுகின்ற [கூப்பின] கைகளையுடையவனும், கற்களும் மரங்களும் கரைந்து உருகும்படி காண்கின்ற பக்தியையுடையவனும், கிருபாமூர்த்தியாகிய இராமபிரான் அருளுடையவனாய்ப் பார்க்கும் பொழுதெல்லாம் பெரியநிலத்தில்வீழ்ந்து வணங்குபவனுமாகிய விபீஷணன், வேண்டியவரங்களைத் தரவல்ல சமுத்திரம்போன்ற (இராமபிரானது) இரண்டு திருவடிகளைச்சேர்ந்து வணங்கினான்; (எ - று.)

கதிர்மணி முடிமீ சுமந்து செல்லும் கரங்கள் அன் என இயையும். விபீஷணன் தலைமேற்கூப்பியகையனாய் இராமபிரான் அருட்பார்வைகொண்டு பார்க்கும்போதெல்லாம் அப்பிரானை வணங்கிக்கொண்டே வந்து அப்பிரானைக்கிட்டி அவனது திருவடிகளிற் சேவித்தனனென்பதாம். விபீஷணனது பக்திமிகுதியை விளக்க 'கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன்' என்றார். இனி, இத்தொடரை 'கருணைவள்ளல்' என்பதற்கு அடைமொழியாக்கி, இராமபிரானது கருணைமிகுதியை விளக்குகின்ற அதிசயோக்தியெனக்கொண்டு பொருள்கூறினுமாம்; இப்பொருளில், காதல்-உயிர்களின்மீதுசெய்யும் அன்பு என்க. தனதுபகைவனைச் சார்ந்த விபீஷணன்மீதும் பெருங்கருணை காட்டியதனால், இராமபிரானை 'கருணைவள்ளல்' என்றார். திருவடியைப்பற்றியவரது விருப்பமெல்லாம் நிறைவேறுமாதலின் 'வரங்களின் வாரியன்ன தாளிணை' எனப்பட்டது. வாரி-கடலுக்கு, இலக்கணை. பி-ம்:—[1]வாரியன்னான்.

௧௪௧.—இராமன் விபீஷணனுக்கு இருக்கையீதல்.

அழிந்தது பிறவி [1]யென்னு மகத்தியன் முகத்துக் காட்ட
வழிந்த[2]கண் ணீரின் மண்ணின் மார்புற வணங்கி னானைப்

பொழிந்ததோர் கருணை தன்னாற் புல்லின ³னென்று தோன்ற
எழுந்தினி திருத்தி யென்று மலர்க்கையா லிருக்கை யீந்தான்.

(இ - ள்.) '(தனது) பிறவித்துன்பம் ஒழிந்துபோயிற்று' என்கின்ற மனத்தினெண்ணம் முகத்திற் பிரகாசிக்க, பெருகிவழிகிற கண்ணீரோடு தரையிலே மார்பு நன்குபதியும்படி(ஸாஷ்டாங்கமாகச்)சேவித்துக்கிடக்கின்ற விபீஷணனை, (இராமபிரான்), சுரந்துவழிகின்றகருணையினாலே தழுவினானென்பதுதோன்ற, எழுந்து இனிதாக உட்காருவாயாக என்று சொல்லித் தாமரைமலர்போன்ற (தனது) கையினால் இருப்பிடத்தைக் கொடுத்தான்; (எ - று.)

'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்றபடி தனதுபிறவியொழிந்ததென்ற ஆனந்தம் முகத்தில் விளங்குமாறு ஆனந்தபாஷ்பத்தோடு விபீஷணன் ஸாஷ்டாங்கமாகத் தன்திருவடியில் வீழ்ந்துகிடக்க, அப்போது இராமபிரான் அவனிடத்துத் தான் அருள்செய்தமை தோன்ற அவனைத் தனது கைகளால் எடுத்து இருக்குமாறு நியமித்தன னென்பதாம். "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும்முகம்" என்பவாதலால், 'அகத்தியல் முகத்திற்காட்ட' என்றார். 'அழிந்தது'-காலவழுவமைதி. பி-ம்:— ¹என்ன, என்று. ²கண்ணீரன். ³உருகியன்போடு, என்னநோக்கி. (சசஎ)

கசஉ.—லங்காராஜ்யத்தை இராமபிரான் விபீஷணனுக்கு அளித்தல்.

ஆழியா னவனை நோக்கி யருள்சுரந் துவகை ¹தூண்ட
ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயரு மெந்நாள்
வாழு²நா ளன்று காறும் ³வாளெயிற் றரக்கர் ⁴வைகும்
தாழ்கட லிலங்கைச் செல்வ ⁵நின்னதே தந்தே னென்றான்.

(இ - ள்.) சக்கராயுதத்தையுடைய திருமாலின் அம்சமாகிய இராமபிரான் அந்தவிபீஷணனைப் பார்த்து, கிருபைமிகுந்து மகிழ்ச்சி தூண்டியதனால் 'பதினான்காக இருக்கின்ற லோகங்களும் என்பெயரும் எத்துணைநாள் வரையில்நிலைநிற்குமோ அந்நாள்வரையிலும் வாள்போற் கூரிய பற்களையுடைய அரக்கர்கள்வசிக்கின்ற ஆழ்ந்தகடலின்நடுவிலுள்ள லங்காராச்சியத்தின் ஐசுவரியம் உன்னுடையதேயாம்; கொடுத்தேன்' என்றான்; (எ - று.)

இராமபிரான் விபீஷணனிடத்து அருள்சுரந்து 'இந்த உலகம் அழியுமளவும் சிரஞ்சீவியாயிருந்து இந்த உலகத்து என்பேரிருக்குமளவும் இலங்காதிபதியாய் ஐசுவரியத்தை யனுபவிப்பாய்' என்று அனுக்கிரகித்தன னென்பதாம். "மின்னிலங்குபூண்விபீடணநம்பிக்கு, என்னிலங்குநாமத்தளவும் அரசு என்ற, மின்னலங்காரன்" என்று இராமபிரான் விபீஷணனுக்கு அருள்சுரந்ததைப் பெரியார் பாராட்டிக் கூறியிருத்தலுங் காண்க. இராமபிரானருளே விபீஷணனுக்கு உத்தேசியமானது: லங்காதிபத்தியமோ வந்தேறியானதென்பர். இராமபிரான் இவ்வாறே வானரராச்சியத்தைச் சுக்கிரீவனுக்குமுந்துறஅளித்தது, இங்குநோக்கத்தக்கது. தொல்காப்பியத்தில் வேற்றேன்மதிலே முற்றுகைசெய்கையும் அதனைப்பாதுகாத்தலுமாகிய உழிஞைத்திணையின்

துறைகளை விவரிக்குமிடத்து "கொள்ளார்தேஎங் குறித்த கொற்றமும்" என்று கூறியஇடத்திற்கு 'பகைவர்நாட்டினைத் தான்கொள்வதற்குமுன்னேயும் கொண்டாற்போல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்த வெற்றியும்' என்று பதப்பொருள்கூறி 'இராமன் இலங்கைகொள்வதன்முன் வீடணற்குக் கொடுத்த துறையும்அது' என்று விசேடவுரைகூறியது அறியத்தக்கது. பி - ம்:—1கூர, கூர்ந்தே. 2அந்நாள்களெல்லாம். 3வளை. 4வேட்கும். 5இன்னதே. (௩௯௮)

## ௧௪௩.—சராசரங்கள்யாவும் மகிழ்ந்து ஆரவாரித்தல்.

1தீர்த்தனல் லருளை நோக்கிச் 2செய்ததோ சிறப்புப் பெற்றான்
கூர்த்தநல் லறத்தை நோக்கிக் 3குறித்ததோ யாது கொல்லோ
வார்த்தையஃ துரைத்த லோடுந் தனித்தனி 4வாழ்ந்தே மென்ன
ஆர்த்தன வுலகி லுள்ள சராசர 5மனைத்து மம்மா.

(இ - ள்.) (இராமபிரான்) அவ்வார்த்தையைக் கூறினவுடனே, இவ்வுலகத்திலிருக்கின்ற சரம் அசரம் அனைத்தும், (மகிழ்ச்சியால்) 'வாழ்ந்தேம்' என்னத் தனிதனி ஆரவாரஞ்செய்தன; அம்மா! (இவ்வாறு அவை ஆரவாரித்தது),—பரிசுத்தமூர்த்தியாகிய இராமபிரானது சிறந்த கருணையைப் பார்த்து வியந்ததனாலாகியதோ? (அன்றி, இராமபிரானுடைய) திருவருட்சிறப்பைப் பெற்ற விபீஷணனது மிக்க நல்ல தருமகுணத்தைப் பார்த்து வியந்ததனாலாகியதோ? வேறு என்னகாரணத்தினாலாகியதோ? (எ - று.)

இராமபிரான் விபீஷணனுக்கு இலங்காராச்சியத்தைக் கொடுத்ததாகச் சொன்னவுடனே, 'இனி துஷ்டனாகிய இராவணன் ஒழிவான்' என்ற மனக்கிளர்ச்சியினால் உலகத்துச் சராசரங்கள்யாவும் ஆரவாரித்தன: அதனை, கவி, இராமபிரானதுகருணையை வியந்துசெய்த ஆரவாரமோ? அன்றி, அரக்கனாயிருந்தும் விபீஷணன் நற்குணமுடையவனாய் இராவணனுக்குத் தருமோபதேசஞ் செய்யுந் தன்மையைப்பெற்று அவன் செவிக்கொள்ளாது வெருட்டியபோதும் தருமந்தவறலாகாதென்ற கருத்தினால் இராமபிரானைச் சரணமடைந்தானாதலால், அவனது அத்தகைய தருமகுணத்தை வியந்துசெய்த ஆரவாரமோ? என்று தற்குறிப்பேற்றவணிவகையாற் கூறினரென்க. தீர்த்தன்-தான் பரிசுத்தனாயிருப்பதோடு தன்னையடைந்தாரையும் பரிசுத்தராக்கவல்லவன். இராமபிரானது திருவருளைப்பெற்றமையைப்பாராட்டி, விபீஷணனுக்கு 'சிறப்புப்பெற்றான்' என்று ஒருபெயர் கூறினர். பி-ம்:—1சீர்த்தனகருணை, தீர்த்தனதருளை. 2செய்ததோ, செய்ததோர். 3குறித்ததோ. 4வாழ்ந்தோமென்னா, வாழ்ந்ததென்னா. 5எவையும். (௩௯௯)

## ௧௪௪.—விபீஷணனுக்கு முடிசூட்டுமாறு இராமபிரான் இலக்குமணனுக்குக் கட்டளையிடுதல்.

உய்ஞ்சன னடிய னேனென் றாழ்முறை வணங்கி நின்ற
அஞ்சன மேனி யானை யழகனு மருளி னோக்கித்
1தஞ்சநற் றுணைவ னான 2நவறிலாப் புகழான் றன்னைத்
துஞ்சலி னயனத் தைய 3சூட்டுதி மகுட மென்றான்.

(இ - ள்.) சுந்தரமூர்த்தியான இராமபிரானும்,—'அடியனேன் உய்ந்தேன்' என்று முறைதவறாது (தன்னை) வணங்கிநிற்கின்ற மைபோற்கறுத்த உடம்பின் நிறத்தையுடைய விபீஷணனைக் கருணையோடுகடாக்ஷித்து,—'தூங்குதலில்லாத கண்களையுடைய ஐயனே! (நமது) அடைக்கலமாகிச்சிறந்த நண்பனான குற்றமில்லாத புகழையுடையவனான விபீஷணனுக்கு, (இலங்கை நகர்க்கு அரசனென்பதைத் தெரிவித்தற்குரிய) கிரீடத்தைச் சூட்டுவாய்' என்று (இலக்குமணனைநோக்கிக்) கூறினன்; (எ - று.)

அப்போது இராமபிரான், இலங்காராச்சியத்திற்கு அதிபதியானமை தோன்ற மனநிறைவோடு தன்னைவணங்கிநிற்கின்ற விபீஷணனுக்குக் கிரீடஞ்சூட்டுமாறு இளையபெருமாளுக்கு நியமித்தன னென்பதாம். அழகன்-சர்வாங்கசுந்தரன். இராமன் வனவாசஞ்செய்த பதினான்குவருடத்திலும் இலக்குமணன் உறங்காது அல்லும்பகலும் அநவரதமும் இராமனுக்கும் சீதைக்கும் பாதுகாவலாய் விழித்தபடியே யிருந்தன னாதலால், அவ்வருமையைப் பாராட்டி 'துஞ்சலில்நயனத்தைய!' என்று விளித்தான். அடியனேன் என்றது - இரட்டுறமொழிதலாக அடிமைப்பட்டவனென்றும், திருவடிகளையடைந்தவனென்றும் பொருள்படும். பி-ம்:—[1]தஞ்சமென்றுணைவனாய, தஞ்செனத்துணைவனாய. [2]நின்பெருந்தமையன்றன்னை, தகைவிலாப்புகழோன்றன்னை, தவவிலாப்புகழோன்றன்னை. [3]சூட்டுதும். (௬௫௦)

கசா௫.—திருவடிநிலைகளைச் சூட்டுமாறு விபீஷணன் ஸ்ரீராமனை வேண்டுதல்.

விளைவினை யறியும் [1]வென்றி வீடண னென்றும் வீயா
[2]அளவறு பெருமைச் செல்வ மளித்தனை யாயி னைய
களவிய லரக்கன் பின்னே தோன்றிய [3]கடன்மை தீர
[4]இளையவற் கவித்த மௌலி யென்னையுங் கவித்தி யென்றான்.

(இ - ள்.) காரியத்தின்பயனை (முன்னமே) ஆராய்ந்தறியுந்தன்மையையுடைய வெற்றியையுடைய விபீஷணன்,—(இராமபிரானைநோக்கி), 'ஐய! எப்போதும் அழியாததும் எல்லையில்லாத பெருமையையுடையதுமாகிய செல்வத்தை (அடியேனுக்குத்) தரும்படி கருணைபுரிந்தாயேயானால், வஞ்சனைத் தன்மையையுடைய ராக்ஷஸராஜனான இராவணனுக்குத் தம்பியாகப்பிறந்த தொடர்பு (அடியேனுக்கு) ஒழியும்படி, தம்பியாகிய பரதாழ்வானுக்குச் சூட்டிய கிரீடத்தை [திருவடிநிலையை] எனக்குஞ் சூட்டுவாய்' என்றான்; (எ-று.)

விபீஷணன் இராமபிரானை நோக்கி 'எனக்கு என்றும் அழியாததாய்ப் பெருமைபெற்ற செல்வத்தை யளிக்குமாறு விரும்பினையானால், இராவணனுக்குத் தம்பியாய்ப்பிறந்த எனது குற்றம் தீரும்படி தேவரீரது பாதுகைகளை அடியேனது சிரசுக்கு அலங்காரமாகச் சூட்டியருளவேண்டும்' என்று பிரார்த்தித்தன னென்க. இதனால் விபீஷணன் இலங்காராச்சியத்தை விரும்பியவனல்ல னென்றும், மோட்சசாம்ராச்சியத்தையே விரும்பியிருப்பவனென்றும் விளங்குதல் காண்க. ஆகவே, இராமபிரான் திருவுள்ளத்தின்படி நடக்கவேணு மென்பதற்காகவே, இலங்காராச்சியத்தை ஒப்புக்கொண்டமை

பெறப்படும். இராமபிரானோடுபகைத்தல் வேரோடுஅழிதற்குக் காரணமா மென்பதை விபீஷணன் தனது நுண்ணறிவால் முன்னமேயுணர்ந்து இராவணனுக்கும் உபதேசித்தானாதலால், அவனை 'விளைவினையறியும்வென்றி வீடணன்' என்றார். கடன்மை - முறை, தொடர்பு. என்னையும், உம்மை - இழிவுசிறப்புப் பொருளது. பி-ம்:—[1]மேன்மை. [2]அளவரும். [3]கடமை, கட்டை. [4]இளையவன்கவித்த. (௬௫)

௬௪௬.—இராமபிரான் விபீஷணனைத் தன்தம்பியாகக்கொண்டு கூறுதல்.

குகனொடு மைவ ரானேம் முன்புபின் குன்று சூழ்வான்
மகனொடு மறுவ ரானேம் [1]மெம்முறை யன்பின் வந்த
அகனமர் காத லைய நின்னொடு மெழுவ ரானேம்
புகலருங் கானந் தந்து [2]புதல்வரால் பொலிந்தா னுந்தை.

(இ - ள்.) எம்மிடத்து அன்போடுவந்திட்ட மனத்துப்பொருந்திய விருப்பத்தைக்கொண்ட ஐயனே! முதலில் குகனோடும் ஐவர்ஆனேம்: பின் மேருமலையைச்சுற்றிவருபவனாகிய சூரியனுடையபுதல்வனாகிய சுக்கிரீவனுடனே அறுவர் ஆனேம்: (இப்போது)நின்னொடும்(சேர்ந்து) எழுவர் ஆனேம்: உனது தந்தையாகிய தசரதசக்கரவர்த்தி புகுதற்கு அரிய காட்டை (எனக்குக்) கொடுத்துப் புத்திரர்களால் விளங்கலானான், (என்று கூறினன், ஸ்ரீராமன்);(எ-று.)

தசரதசக்கரவர்த்திக்கு நகரிலே நாங்கள் நால்வரே புத்திரராகப் பிறந்தோம்: நாட்டைவிட்டுக் காட்டுக்குவந்தபின் குகன் தம்பிமாரைப்போல்அன்பு பாராட்ட ஐவராய்விட்டேம்: பிறகு, சுக்கிரீவன் அவ்வாறு அன்புபாராட்ட அறுவரானோம்: இப்போது, விபீஷணா! நீ ஒருத்தனும் 'தம்பியைச்சூட்டிய மௌலி சூட்டுக'என்று வேண்டியதனால், நீயும் எனது தம்பிமாரைப்போல் ஒருத்தனாகஇருக்கவேணுமென்று விரும்புவதாகத்தோன்றுகின்றது: உன்னையும் தம்பியாகச்சேர்த்துக்கொள்ள நாங்கள் எழுவராய்விட்டோம்: கானகத்திற்கு என்னை அனுப்பியதனால், உன்னுடையதந்தையாகிய தசரதன் பலபுத்திரர்களையடைந்தவனாய் விளங்கலுறுகின்றானென்று, ஸ்ரீராமன் தான் தம்பிமாரிடத்துப்போல விபீஷணனிடத்து அன்புவைத்தமையை வெளிப்படையாகக் கூறுகின்றானென்க. தான் தம்பியாக விபீஷணனை அங்கீகரித்தமையை வற்புறுத்த, தசரதனை எந்தை யென்னாது'உந்தை'என்றனன் ஸ்ரீராமன். "விபீஷணனை ராவணன் 'குலபாம்ஸநம்' என்றான்: பெருமாள் இக்ஷ்வாகுவம்ஸ்யராக நினைத்து வார்த்தையருளிச்செய்தார்" என்ற ஸ்ரீவசனபூஷணமூலமும், "அபக்ருஷ்ட ஜாதீயரானவர்கள் அந்தஃஸரீரத்தோடே ஸஜாதீயவ்யாவ்ருத்தராய் உத்க்ருஷ்டதமராவர்களென்று கீழ்ச்சொன்ன அர்த்தத்தை ஸ்திரீகரிக்கைக்காக, ராவணாநுஜனைக்குறித்துப் பெருமாளருளிச்செய்த வார்த்தையை யருளிச்செய்கிறார் 'விபீஷணனை'என்று தொடங்கி: "ப்ரதீயதாம் தாஸரதாய மைதிலீ" என்று தனக்குஹிதத்தைச்சொன்ன தர்மாத்மாவான ஸ்ரீவிபீஷணாழ்வானைப் பாபிஷ்டனானராவணன் குபிதனாய் "த்வாந்து திக் குலபாம்ஸநம்" என்று இக்குலத்துக்கு இழுக்காகப் பிறந்தஉன்னை வேண்டேனென்று பருஷித்துத் தள்ளிவிட்டான்: இக்ஷ்வாகுகுலநாதரான பெருமாள்

இவனை ஆதரபூர்வகமாக அங்கீகரித்த அநந்தரம்'ஆக்யாஹி மமதத்த்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்' என்று ராக்ஷஸருடைய பலாபலமிருக்கும்படி நமக்குச் சொல்லுமென்கையாலே திருத்தம்பிமாரோபாதியாக அபிமானித்து வார்த்தையருளிச்செய்தாரென்கை.இவ்வாக்யத்திலே இராவணன் பரித்யஜித்தமையும் பெருமாள் பரிக்ரஹித்தமையும் சொல்லுகையாலே,பகவதாநுகூல்யமுண்டாகவே ப்ராக்ருதர்'இவன் நமக்குஉடலல்லன்'என்று கைவிடுவார்களென்னுமிடமும், பகவான் மேல்விழுந்துபரிக்ரஹிக்கு மென்னுமிடமுஞ் சொல்லுகிறது" என்ற அதன்வ்யாக்யாநமும் காணத்தக்கன. பி - ம்:—[1]எம்முனை. [2]புதல்வரிற், புதல்வராய்.　　(௬௫௨)

கசஎ.—விபீஷணன் முகமன்கூறிக் கழல்மௌலியைச் சென்னியிற் சூடுதல்.

[1]நடுவினிப் பகர்வ தென்னே [2]நாயக நாயி னேனை
உடனுதித் தவர்க ளோடு மொருவனென் றுரையா [3]நின்றாய்
அடிமையிற் சிறந்தே [4]னென்று [5]வயிர்ப்பொடு மச்ச நீங்கித்
தொடுகழற் செம்பொன் மோலி சென்னியிற் [6]சூட்டிக் கொண்டான்.

(இ - ள்.)(அதுகேட்ட விபீஷணன் ஸ்ரீராமனை நோக்கி),—'தலைவனே! நாய்போற்கடைப்பட்ட என்னை உன்னுடன்பிறந்தவர்களோடுஒருத்தனென்று சொல்லுகின்றாய்; (இவ்வாறு நீ என்திறத்து அன்புசெய்திருக்க), இப்போது நடுவே (நான்) சொல்லவேண்டியது என்னஉள்ளது? (உன்னுடைய) அடிமையினால் மேம்பட்டவனானேன்' என்றுசொல்லி, சந்தேகத்தோடு அச்சமும் நீங்கி பூண்ட வீரக்கழலையுடைய திருவடியாலாகிய செம்பொற் கிரீடத்தை(த்தன்) சிரசிற் சூட்டிக்கொண்டான்; (எ - று.)

தன்னையடிமைகொண்டதற்காக உவந்துகூறி, விபீஷணன் ஸ்ரீராமனது திருவடிநிலைகளாலாகிய செம்பொற்கிரீடத்தைப் பூண்டனனென்க.அயிர்ப்பு-ஸ்ரீராமன் அங்கீகரிப்பனோ மாட்டானோஎன்றசந்தேகம்:அச்சம்-இவ்வானரர்கள் என்னசெய்வார்களோ என்ற பயம். தொடுகழல் என்றதொடர்-அன்மொழித்தொகையாகி,திருவடி என்ற பொருளைக் காட்டி, பின்பிரதிகிருதிக்கு ஆயிற்று. பி-ம்:—[1]நடுவினில். [2]நாயகன். [3]நின்றான். [4]என்னே. [5]வயிர்ப்பெனும். [6]சூடி.　　(௬௫௩)

கசஅ.—அதுகண்டு அங்குள்ளார் மகிழ்கையில்,வானவர் பூமழை பொழிதல்.

திருவடி [1]முடியிற் சூட்டிச் செங்கதி ருச்சி [2]சேர்ந்த
அருவரை யென்ன நின்ற வரக்கர்த மரசை நோக்கி
இருவரு [3]மின்ப முற்றா ரியாவரு மின்ப முற்றார்
பொருவரு மமரர் வாழ்த்திப் பூமழை பொழிவ தானார்.

(இ - ள்.) (ஸ்ரீராமனது) திருவடிநிலைகளை (த்தனது) சிரசிலே சூட்டிச் செந்நிறமுள்ளகிரணங்களையுடையவனான சூரியன் தன்னுச்சியிலே சேரப்பெற்ற பெரிய மலைபோலநின்ற இராட்சசராசனான விபீஷணனைப்பார்த்து,(இரா

மலட்சுமணர் என்ற) இருவரும் இன்பமடைந்தார்: மற்றுமுள்ளார்யாவரும் இன்பமடைந்தார்கள்:ஒப்பில்லாததேவர்கள் வாழ்த்துக்கூறி மலர்மாரிபொழியலானார்; (எ - று.)

இருவரென்பது - விபீஷணனை அங்கீகரிக்கவேணுமென்று ஆலோசனைகூறிய அநுமானையும், இராமபிரானதுகட்டளையினால் அந்த விபீஷணனை அழைத்துவந்த சுக்கிரீவனையும் காட்டுமென்பாருமுளர்.பி-ம்—1 தலையிற்சேர, தலைமேற்சூடி,நிலையிற்சூடி, நிலையைச்சூடி. 2நேர்ந்த. 3உவகைகூர்ந்தார். (சருச)

ருசகூ.—அப்போது தோன்றிய ஆரவாரம்.

ஆர்த்தன பரவை யேழு [1]மார்த்தன [2]மேக மார்த்த
வார்த்தொழில் புணருந் தெய்வ மங்கல முரசுஞ் சங்கும்
தூர்த்தன கனக மாரி சொரிந்தன நறுமென் சுண்ணம்
[3]போர்த்தது [4]வானத் தன்றங் கெழுந்தது துழனிப் பொம்மல்.

(இ - ள்.) ஏழுசமுத்திரங்களும் ஆரவாரஞ்செய்தன; மேகங்களும் ஆரவாரித்தன: வாராற்கட்டுதல்தொழிலமைந்த தெய்வத்தன்மைபொருந்திய மங்கலமுரசமும் [தேவதுந்துபியும்] மங்கலச்சங்கங்களும் ஆரவாரித்தன: (வானத்திலுள்ளார்பொழிந்த) பொன்மழை, (நிலவுலகத்தை எங்கும்) நிரப்பின; நறிய மழமழப்பான வாசனைச்சுண்ணத்தையும் (அவ்வானத்திலுள்ள தேவதைகள்) சொரிந்தன; அன்று அங்குத் தோன்றியதாகிய பேரொலியின் மிகுதி ஆகாயத்தினிடமெங்கும் வியாபித்துக்கொண்டது; (எ-று.)—பரவை முதலியனவும் ராவணசங்காரத்திற்குச் சுபசூசகமாக ஆரவாரித்தன என்க. பி-ம்:—1அவனியும், வேதமும்.2 அமரர்நாடும்.3போர்த்தன.4வானத்தொன்ற, அன்று வானத்து, ஒன்றேவானத்து. (சருரு)

சருO.—பிரமதேவனும் அறக்கடவுளும் மகிழ்தல்.

மொழிந்தசொல் லமிழ்த மன்னாள் [1]திறத்தினின் முறைமை நீங்கி
[2]அழிந்தவென் மரபு [3]மின்றே யுயர்ந்ததென் [4]றிடரிற் றீர்ந்தான்
செழுந்தனி மலரோன் [5]பின்னை யிராவணன் றீமைச் செல்வம்
அழிந்ததென் றறனுந் தன்வா யாவலங் கொட்டிற் றன்றே.

(இ - ள்.) செழிப்பான ஒப்பற்றநாபீகமலத்தில் வாழ்பவனான பிரமதேவன்,—'பேசுகின்ற சொல்லின் இனிமையால் அமிருதத்தை யொத்திருக்கப்பெற்றவளான சீதாபிராட்டிதிறத்தில் (இராவணன்) நியாயம்நீங்கியதனால் இழிந்த என்மரபும் (அவ்விராவணனுடையதம்பியான விபீஷணன் இராமனனுக்கிரகத்தைப்பெற்றதனால்), இன்றே(தாழ்வு நீங்கி) மேன்மைபெற்றது' என்று (தான் கொண்டிருந்த) துன்பத்தினின்றும்தீர்ந்தான்;இனி, இராவணனுடைய பொல்லாத்தன்மையையுடைய செல்வமானது அழிந்ததென்று தருமதேவதையும் தன்னுடைய வாயினால் ஆரவாரஞ்செய்துபுடைத்துக்கொண்டது; (எ - று.)

தன்னுடையகொள்பேரனான இராவணனால் தன்மரபு இழிவடைந்தது குறித்து வருந்திய பிரமன் அந்தப்பழிப்பு மறையும்படி விபீஷணன் இராம

பிரானை அடைக்கலமாகஅடைந்தானாதலால் அத்துயரொழிந்தானாக, தரும தேவதையும் இனி இராவணனது கொடுமையொழியுமென்று மகிழ்ச்சிக்குறி யாக ஆரவாரித்துத் தன்வாய்கொட்டிற்றென்க. பி-ம்:—1 திறத்தினால். 2இழி ந்த, அழிந்தது. 3நின்றே. 4எம்பலுற்றான். 5நல்கும். (சருகூ)

கருக.—இராமபிரான் இலங்கைச்செல்வம் பெற்ற விபீஷணனைப் பாடிவீட்டைவலஞ்செய்விக்க இலட்சுமணனுக்குக் கட்டளையிடல்.

1இன்னதோர் 2செவ்வித் தாக 3விராமனு மிலங்கை வேந்தன்
தன்னெடுஞ் செல்வந் தானே பெற்றமை பலருங் 4கேட்பப்
பன்னெடுந் தானை சூழப் பகலவன் சேயு 5நீயும்
6மன்னெடுங் குமர பாடி வீட்டினை வலஞ்செய் கென்றான்.

(இ-ள்.) இவ்வாறானநிலைமைநேர்ந்ததாக,—(அப்போது) இராமனும்,—(இலட்சுமணனைநோக்கி), 'பெருமைபெற்ற ராஜகுமாரனே!சூரியகுமாரனான சுக்கிரீவனும் நீயும் இலங்கைக்குஅதிபதியாகிய இராவணனுடைய பெருஞ் செல்வத்தை இந்தவிபீஷணனே அடைந்தமையைப் பலரும்கேட்டறியுமாறு பலவான பெருஞ்சேனை சூழும்படி இந்தப்படைவீட்டை ஊர்வலம்செய்விக்க' என்றுகட்டளையிட்டான்; (எ - று.)

இவ்வாறு ஊர்வலஞ்செய்விப்பது - தன்னால் அங்கீகரிக்கப்பட்டவரிடத் தில் பரிவாரங்கட்கு நன்மதிப்புஉண்டாவதற்காகவும், தன்னால் அங்கீகரிக் கப்பட்டவர்க்கும் தாம்மேற்கொண்டதொழிலில் ஊக்கம்மிகுவதற்காகவும்போ லும். செய்கென்றான் - தொகுத்தல். செய்க-தன்வினைப்பொருளில்வந்த பிற வினை. பி-ம்:—1இன்னதோ. 2காலமாக. 3இன்னதோர். 4காண. 5வாலி. 6நல்.

கருஉ.—இராமபிரான்கட்டளைப்படியே விபீஷணனைப் பாடிவீட்டை வலஞ்செய்வித்தல்.

அந்தமில் குணத்தி னானை யடியிணை முடியி னோடும்
சந்தன விமான மேற்றி வானரத் தலைவர் தாங்க
இந்திரற் 1குரிய செல்வ மெய்தினா னிவனென் 2றேத்தி
மந்தரத் தடந்தோள் வீரர் வலஞ்செய்தார் 3தானை வைப்பை.

(இ - ள்.) மந்தரமலைபோன்ற விசாலமான தோள்களையுடைய இலட்சு மணனும் சுக்கிரீவனும்,—எல்லையில்லாத குணத்தையுடையவனான விபீஷ ணனை (இராமபிரானது) திருவடியிணைகளினாலாகிய கிரீடத்துடனே அழ கியவிமானத்தின்மீதுஏறச்செய்து, வானரத்தலைவர்கள் தாங்கிநிற்க 'இவன், தேவேந்திரசம்பத்தையடைந்தான்' எனச்சொல்லிக்கொண்டாடி (த் தம்மு டைய)சேனைதங்கியுள்ள படைவீட்டை ஊர்வலஞ்செய்வித்தனர்; (எ - று.)

பெருஞ்சம்பத்துஉடையவனை "இந்திரத்திருவன்" என்று கூறுபவராத லால், 'இந்திரற்குரியசெல்வமெய்தினான்' என்றார். பி-ம்:—1அரிய. 2எத்த. 3பாடிவைப்பை. (சருஅ)

கருங. தேடுவார் தேட நின்ற 1சேவடி தானுந் தேடி
நாடுவா னன்று கண்ட நான்முகன் 2கழீஇய நன்னீர்

ஆடுவார் பாவ [3]மைந்தும் நீங்கிமே லமர ராவார்
சூடுவா ரெய்துந் தன்மை சொல்லுவார் யாவர் [4]சொல்லீர்.

(இ - ள்.) (கடவுளையாராய்ந்தறியவேணுமென்று) முயல்கின்றவரான ஞானிகள் தேடுமொறுள்ள சேவடிகளைத் தானும் நாடுபவனுகி அன்று [திரிவிக்கிரமாவதாரகாலத்திற்] கண்டவனுகிய பிரமதேவன் கழுவியதனுற்போந்த (நதியாகிய கங்கையின்) நல்லநன்னீரில் மூழ்குபவரே பஞ்சமகாபாதகங்களிலிருந் துநீங்கி மேன்மைபெற்ற தேவர்களாவார்: (இங்ஙனமாயின், அந்தத்திருவடிகளையே)சூடுபவர் அடையக்கூடியபெருமையை யறிந்துசொல்பவர் யாவர் தாம்? சொல்லீர்கள்; (எ - று.)

திருமால்திருவடியின்பரிசமாத்திரம்பெற்ற நீரே பஞ்சமகாபாதகங்களைப்போக்குமென்றுல், அந்தத்திருவடியைநேரேசூடுபவரின்பெருமையையறிந்து சொல்லமுடியுமோ? முடியாதென்றவாறு. பிரதிகிருதிகளும் மூலப்பொருளைப் போலவே சிறப்புவாய்ந்தனஎன்பது, உணர்க. அர்ச்சைகள்மேன்மையுறுவதும் இதனுற்பொருந்து மென்று உணரலாம். பி-ம்:—[1]திருவடி. [2]கழிய. [3]அஞ்சும். [4]கண்டீர். (௬௫௯)

கருச.—பெரியோர்களின் கோண்டாட்டம்.

இற்றைநா ளளவும் யாரு மிருடிக ளிமையோர் ஞானம்
முற்றின ரன்பு பூண்டார் வேள்விகண் முடித்து நின்றுர்
மற்றுமா தவரு மெல்லாம் வாளெயிற் றிலங்கை வேந்தன்
பெற்றதார் பெற்று ரென்று [1]வியந்தனர் பெரியோ ரெல்லாம்.

(இ - ள்.) பெரியவர்யாவரும்,—'ரிஷிகள்யாவரும் தேவர்களும் ஞானம் நிரம்பியவரும் [ஞானிகளும்] பக்தியைப்பூண்டவர்களும் யாகங்களைநிறைவேற்றியவர்களும் மற்றுமுள்ள மஹாதபஸ்விகளும் ஆகிய எல்லாரிலும் வாள்போற்கூரியபற்களையுடைய 'இலங்கைக்கு அரசனுன இந்தவிபீஷணன் அடைந்தசிறப்பை இன்றைவரையிலும்வேறுயாவர் அடைந்தார்?"என்று கொண்டாடினர்; (எ - று.)

விபீஷணனுக்குநேர்ந்தசிறப்பை இருடியர்முதலிய யாவரும் பெறவில்லையென்று பெரியோரெல்லாம் வியந்தாரென்க. பரம்பொருளைக் கண்ணுற்கண்டு அடைக்கலம்புகுந்து பேரளிசெய்யப்பெற்று அப்பிரானது திருவடியிணையை முடிக்கு அணியாகக்கொண்டு இம்மையிற் பேராசுபெற்ற பேறு எவர்க்கும் இல்லையாதலால் வியந்தனர். பி-ம்:- —[1]பெயர்ந்தனர். (௬௬0)

வேறு.

கருரு.—இராமபிரான் விபீஷணனுக்கு உறையுள்தந்து அனுப்புவதும், சூரியன் அஸ்தமிப்பதும்.

வந்தடி வணங்கிய நிருதர் மன்னவற்கு
[1]அந்தமி லாததோ ருறையு ளவ்வழித்
தந்தனன் விடுத்தபி னிரவி தன்கதிர்
[2]சிந்தின வெய்யவென் றெண்ணித் தீர்ந்தனன்.

(இ - ள்.) (ஊர்வலம்) வந்து (தன்)திருவடிகளில் வணங்கிநின்ற அரக்கர்தலைவனுகிய விபீஷணனுக்கு(ச் சௌக்கியத்தில்) எல்லையற்றதான ஒரு

வாழிடத்தை ஆங்குத்தந்து அனுப்பியபின்,—(இராமபிரான்),—சூரியன் தான் சிந்தின கிரணங்கள் வெப்பமுள்ளன என்று கருதி(த்தான்)நீங்கினன்;(எ-று.)

தானைவைப்பை வலம்வந்துநின்ற விபீஷணனுக்கு அந்தச்சேனை தங்கிய இடத்தில்தானே இராமபிரான் ஒருறையுளமைப்பித்து விடைதரச்சென்றுன் என்பதுவரையில் விபீஷணனது வரலாறு கூறப்பட்டது. அப்போது சூரியன் இயல்பாக அஸ்தமித்ததற்கு 'என்னுடைய கிரணங்களை இன்னும் வெளிவிடின் இராமன்முதலியோர் வெப்பத்தினுல் வருந்தக்கூடுமென்றுகருதிச் சூரியன் தான் அஸ்தமித்தானென்று கவி ஒருகாரணங்கற்பித்துக்கூறினர்: இது-ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். கதிர்-பால்பகாவஃறிணைப்பெயர். அச்சிட்ட பிரதிகளிலும் பலஏட்டுப்பிரதிகளிலும் இந்தப்பாடல்முதற்கொண்டே அடுத்த படலமாகக் குறிக்கப்பட்டுள்ளதாயினும், எமக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதிகளு ளொன்றில் அவ்வாறில்லாமையாலும், தன்னை யடைக்கலமாக அடைந்த விபீஷணனுக்கு அபயதானஞ்செய்து உறையுளுமளித்தான் ஸ்ரீராமன் என்று படலத்தைமுடித்தலே ஏற்றிருத்தலாலும் இச்செய்யுள் விபீடணனடைக்கலப் படலத்து இறுதிச்செய்யுளாகப்பதிப்பிக்கப்பட்டது. பி-ம்:—1அந்தமிநிறத்தது. 2சிந்துதல், சிந்தினன், சிந்தனே.　　(௬௬௧)

இராவணன் இதமொழிகூறிய விபீஷணனை மிகப்பழித்து, 'நீ இவ் விலங்கையில் நில்லாதே; அப்பாற்போ' என்ன, விபீஷணன் கதாயுதத்தைக் கையிலேந்தியவண்ணம் நான்குராட்சசர்களோடு வானத்துக்கிளம்பி மீண்டும் இராவணனைப்பார்த்து'நீ தமையனுகையால் உனக்குநன்மை யுண்டாகவேணு மென்று வெகுவாகச்சொல்லியும் ம்ருத்யுவின்வசப்பட்ட உனக்கு அது ஏற வில்லை: உன்மேன்மையைக்கருதி நான் சொன்னதையெல்லாம் பொறுத்துக் கொள்வாயாக: இந்த இலங்கையையும் உன்னையும் பாதுகாத்துக்கொள்வா யாக: உனக்குச்சுபமுண்டாகுக: நான் போய்வருகின்றேன்' என்றுசொல்லி, ராமன்லக்ஷ்மணனேடு இருக்குமிடத்துக்குவரலாயினன். அங்ஙனம்வரும் விபீ ஷணனை அவன் ஆகாயத்திலெழும்போதே வானரர் கண்டனர். வானத் தில் நான்குஅரக்கருடனே வருகின்ற அந்தவிபீஷணனைப்பார்த்துச் சுக் கிரீவன் மற்றைவானரர்களை நோக்கி 'இவன் நம்மைத் தாக்குவதற்காகவே படைக்கலத்தோடும் பரிவாரத்தோடும் வருகின்றுன்' என்ன, வானரர்கள் உடனே தம் கையில் மரங்களையும் மலைகளையும் ஏந்திக்கொண்டு அந்தஅரக் கர்களைக்கொல்ல அநுமதிதருமாறு சுக்கிரீவனை வேண்டினர். இவ்வண்ணம் வானரர்கூறியவை தன்செவியில் விழுந்தும், விபீஷணன் மனங்கலங்காது வானத்துநின்றபடியே தான் இன்னுனென்பதையும் தான் வந்தவகையை யும் வந்தகாரியத்தையும் சொல்லி, இராமபிரானிடத்தில் தன்வருகையைத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டனன். 'ராமனைச் சரணம் புகுந்தேன்' என்று சொன்ன வார்த்தையைக்கேட்ட சுக்கிரீவன், விரைவாக இராமபிரா னிடஞ்சென்று விபீஷணன் நான்குஅரக்கரோடு சரணுகதனுகவந்துள்ளமை யைத் தெரிவித்து, 'இவன் வேஷக்காரன்: நம்மை வஞ்சிப்பதற்காகப் பகைவரிடத்தினின்று வந்துள்ளானுதலாற் கொல்லுதற்குஉரியன்'என்று தன்

கொள்கையைவிவரித்துச்சொன்னான். அதனைச்செவியுற்ற ஸ்ரீராமன் மற்றைய வானரர்களைநோக்கி 'உங்களுடையகருத்துக்களைச்சொல்லுங்கள்' என்ன, அங்கதன்முதலியோர், 'விபீஷணனுடைய குணதோஷங்களை ஆராய்ந்துபார்த்துக் குணம்மிக்கிருந்தால் அங்கீகரித்தல், சாரபுருஷனைவிபீஷணனிடம் அனுப்பிக் குணதோஷங்களைப்பரீட்சித்துப்பின்புயுக்தப்படிசெய்தல், அதேசகாலங்களில் வந்தமையாற் கொள்ளத்தகாமை, சமர்த்தனான புருஷனையனுப்பி விபீஷணனோடு அவனைப்பேசச்செய்து அவனுடையகுணதோஷங்களைப் பேச்சினாலறிந்து பிறகுயுக்தப்படிசெய்கை'என்பவை முதலிய கொள்கைகளைக் கூறினர். பிறகுஅனுமான் அவர்கள்கூறியமதங்களைக் கண்டித்து, 'முகவிகாயம்முதலியவை இவனுடைய தன்மையைப்புலப்படுத்துவதாலும் இராவணனுக்கு எவ்வளவோபுத்திசொல்லிப்பார்த்து அவன் வெருட்டியமையால் எல்லாவற்றையுந் துறந்துவந்துள்ளமையாலும் எல்லாப்படியாலும் அங்கீகரிக்கத்தக்கவனே' என்று தன்கொள்கையைத் தெரிவித்தனன். பின்பு ஸ்ரீராமன் மனந்தெளிந்து 'ஒருகால் இவன் குற்றமுள்ளவனாயினும் சரணமென்றுவந்தவனைக் கைவிடமாட்டேன்'என்று தன்கொள்கையைத் தெரிவித்தனன். தெரிவித்ததும் சுக்கிரீவன் இராமனிடத்துள்ள அன்பின்மிகுதியால், 'ஆபத்துக்காலத்தில் அண்ணனைக்கைவிட்டுவந்த இவன் நமக்குஆபத்துக்கு உதவுவானோ? இவனையங்கீகரிப்பதில் யாதுபயன்?'என்றனன். ஸ்ரீராமன் 'இவன் அண்ணனைவிட்டுவந்ததில் ராஜதர்மம்உள்ளது: இவன் ஞாதிதானே: இராவணன் சந்தேகித்துவெருட்ட அவனால் துரத்தப்பட்ட இவன் அவனுக்குஅஞ்சி இராச்சியத்தைத் தான் பெறலாமென்றுவந்துள்ளான்: அஞ்சிவந்துள்ளதனால் இவனை யங்கீகரிக்கலாம்'என்றனன். அதுகேட்ட சுக்கிரீவன் இலட்சுமணனுடனே எழுந்து ஸ்ரீராமனுடையதாள்களில்விழுந்து 'இவன் இராவணனால் தூண்டப்பட்டு நமக்குத் தீமைபுரியவே வேஷம்போட்டுக்கொண்டு வந்திருக்கின்றான்: இவனைக் கொல்வதே தகுதி: இவன் இராவணனுடைய தம்பியாகையால் நம்பத்தக்கவனல்லன்' என்று மீண்டும் கூறினான். ஸ்ரீராமன் அதுகேட்டு, 'வானரோத்தமா! இந்த ராட்சசசாதியேயன்று; க்ரூரஜாதிகளான பிசாசர்முதலிய யாவரும்திரண்டுஎதிராக வரட்டும்: நான் விரும்பினால் ஒருவிரலின்முனையால் எல்லாரையும் கொல்லவல்லேன்; இனி, கபோதமும் வேடன்தன்னிடத்துக்கு வந்ததனால் தன்னுயிரைக்கொடுத்ததே: பெரியோர்களெல்லாம் சரணாகதனைக் கைவிடலாகாதென்று கூறியுள்ளனரே: ஆகவே, சரணாகதனை எவ்விடத்திலும்கைவிடமாட்டேன். சுக்கிரீவனே! நீயே அந்தவிபீஷணனை யழைத்துக்கொண்டுவா' என்றனன். அதுகேட்டுச் சுக்கிரீவன் மனந்தெளிந்து இராமனுடைய செயலை மிகவும்மெச்சிப்புகழ்ந்துகூறிப் பின்னர் அவ்விபீஷணனை யழைத்துக்கொண்டுவந்தானாக. விபீஷணன் முகமலர்ச்சியுடனே ஸ்ரீராமனைக்கிட்டினானென்பது, இங்கு ஸ்ரீவால்மீகத்திற் கூறிய கதாசந்தர்ப்பம்.

விபீடணனடைக்கலப்படலம் முற்றிற்று.

# ரு-ஆவது இலங்கைகேள்விப்படலம்.

(இராமபிரான் கடல்கடந்து இராவணனுடன் பொருமாறு புகுமுன், இராவணனது தம்பியான விபீஷணன்மூலமாக அந்த) இலங்கையின் நிலைமையைக் கேட்டறிந்ததைத் தெரிவிக்கும் படலமென்க. இலங்கை-ஆகுபெயர். இலங்கையளவறிபடலம் என்று சிலபிரதியிலும், ஒன்னார்வலியறிபடலம் என்றுசிலபிரதியிலும் இந்தப்படலத்துக்குப் பெயர் காணப்படுகின்றன.

சூரியன் அஸ்தமிக்கும்பொழுதாகுகையில் இராமபிரான் சந்தியாவந்தனஞ் செய்துவிட்டுச் சீதையைப்பிரிந்திருப்பதற்கு மிகவும்வருந்தினனாக, அப்போது சுக்கிரீவன் இராமபிரானைத் தேற்றி 'மேற்செய்யவேண்டியதை விபீஷணனோடும் ஆலோசித்தலே தக்கது' என்ன, இராமபிரான் சற்றுத்தெளிந்து விபீஷணனை வரவழைத்து, 'இலங்கையின் அரணையும் இராவணன்வலிமையையும்அவனதுசேனையினளவையும் அங்கு ஆஞ்சனேயர்செய்த பராக்கிரமத்தின் தன்மையையும் சொல்லுவாய்' என்ன, விபீஷணன் அவற்றையெல்லாங் கூற ஸ்ரீராமன்கேட்டு, அனுமான்புரிந்த ஆற்றலுக்கு அகமகிழ்ந்து அவ்வநுமானைப் புகழ்ந்து. அநுமானுக்கு வரமுமளித்தமை, இப்படலத்திற் கூறப்படுகின்றது.

க.—அந்திக்காலம் வருதல்.

சந்திவந் தனைத்தொழின் முடித்துத் [1]தன்னுடைப்
புந்திநொந் திராமனு [2]முயிர்ப்பப் பூங்கணை
சிந்திவந் திறுத்தனன் [3]மதனன் றீநிறத்து
அந்திவந் திறுத்தது கறுத்த தண்டமே.

(இ - ள்.) (சூரியன் அஸ்தமிக்கவே), இராமனும் சந்தியாகாலத்திற் செய்யவேண்டிய கடமைகளைச் செய்துமுடித்துத் தன்னுடைய மனம்வருந்திப் பெருமூச்சுவிட்டுக்கொண்டிருக்குமாறு மன்மதன் (தன்) மலரம்புகளைப் பொழிந்துகொண்டு வந்துதங்கினான்: (அப்போது) தீப்போலுஞ் செந்நிறத்தைக்கொண்ட அந்திக்காலமானது வந்துதங்கிற்று; (பின்பு) உலகம் இருளடைய ஆரம்பித்தது; (எ - று.)

மனைவியைப்பிரிந்துள்ள காரணத்தினால் மன்மதன் வருத்தலாயினனென்க. மதநன் என்ற வடசொல்-ஆசைப்பெருக்கத்தை யுண்டாக்குபவனென்று காரணப்பொருள்படும். செவ்வானம் தோன்றுதலால், 'தீநிறத்தந்தி' எனப்பட்டது: அந்தி=ஸந்தி: வடசொல். அண்டம்-உலகம். பி-ம்:—[1]தன்னொடும், தன்னுளே. [2]இருப்ப. [3]அநங்கன். (சஉஉ)

உ.—உலகெங்கும் இருள்பரத்தலும், வானத்து நட்சத்திரம் பிரகாசித்தலும்.

மாத்தடந் திசைதொறு [1]மறைந்த வல்லிருள்
கோத்தது கருங்கடல் கொள்ளை கொண்டென
[2]நீத்தநீர்ப் பொய்கையி னிறைந்த நாண்மலர்
[3]பூத்தபோன் [4]மீன்களாற் பொலிந்த தண்டமே.

(இ-ள்.) பெரிய விசாலமான திக்குக்களிலெல்லாம் மறைந்திருந்த வலிய இருளானது, கரியகடல்நீர் (உலகத்தைக்) கொள்ளைகொண்டாற்போல எங்கும்பரவிற்று; பெருக்கானநீரைக்கொண்டபொய்கையிலே நிறைந்த புதிய மலர்கள் அலர்ந்தாற்போல, வானம் நட்சத்திரக்கூட்டத்தால் விளங்கிற்று.

இருள் பரவியதையும் நட்சத்திரம்பிரகாசித்தலையும்பற்றி வந்த நன்மைத் தற்குறிப்பேற்றவணி. 'பொய்கையில்மலர்பூத்தபோல்" என்றது-பிரகிருதத்தையே உவமையாகக்கூறியதென்னலாம். அண்டமென்பது வானமென்னும் பொருளதாதலை "அண்டம் முட்டையுமாகாயமுமே" என்ற பிங்கலந்தையாலும் அறிக. பி-ம்:—1மலர்ந்த, விளைத்த. 2நீர்த்த. 3பூத்தன, பூத்தென. 4மீன்குலம். (சகூ௩)

௩.—மல்லிகைமலர்தலின்வருணனை.

1சில்லியல் கோதையை நினைந்து தேம்பிய
வில்லியைத் திருமனம் வெதுப்பும் 2வேட்கையால்
எல்லியைக் காண்டலு மலர்ந்த வீட்டினால்
மல்லிகைக் கானமும் வான மொத்ததே.

(இ - ள்.) சிலவகைகளாகவகுத்து அலங்கரிக்கப்படுகிற கூந்தலையுடைய சீதாபிராட்டியை நினைந்து வருந்துகின்ற வில்வீரனை இராமபிரானது அழகிய மனத்தை வாட்டவேணுமென்னும் விருப்பத்தைக்கொண்டு, இரவைக்கண்டதும் மலர்ந்ததன்மையினால் மல்லிகைமலர்களைக்கொண்டபரந்தஇடமும் வானத்தையொத்திருந்தது; (எ - று.)

இரவுவந்ததும் இயல்பாகமலர்ந்த மல்லிகைக்கானமானது, இராமபிரானைவருத்துதற்கேற்ற இராக்காலமாகிய துணைவலிமையைப்பெற்றதனால் முகமலர்ச்சியடைந்ததுபோல அலர்கள்மலரப்பெற்று, நட்சத்திரத்துடன்விளங்கும்ஆகாயத்தை யொத்த தென்றவாறு: மல்லிகை இயற்கையாக மலர்தலை, இராமனைவருத்தவேணுமென்னும் விருப்புக்கொண்ட அம்மல்லிகை தான் அச்செயலைச்செய்தற்குஏற்ற துணைவலிமைபெற்றதனால் அலர்ந்ததுபோலுமென்றது-ஏதுத்தற்குறிப்பேற்றவணி. மலரைப்பெற்றமல்லிகைக்கானம் நட்சத்திரத்துடன்விளங்கும் வானத்தைப்போலுமென்றது-உவமையணி. சில்லியல்கோதை - அன்மொழித்தொகை: முடி கொண்டை சுருள் குழல் பனிச்சை என ஐம்பாலாகக்கூந்தல் புனையப்படுதல்பற்றி, 'சில்லியல்கோதை' எனப்பட்டது: இனி, குளிர்ச்சிபொருந்தியகூந்தலாளென்றும், மென்மைத்தன்மைபொருந்திய கூந்தலாளென்றுமாம்: சில் - ஒருவகை யாபரணமென்றுங்கூறுவர். தேம்பிய - இயல்பினால்வந்த காலவழுவமைதி. பி-ம்:—1சில்லியற். 2வெம்மையால். (சகூச)

௪.—சந்திரோதயவருணனை.

1ஒன் றூ2முட் க றப்பினே 3டொளியின் வாளுரீ இத்
தன் 4பனி முகத்தினு லென்னைத் 5தாழ்த்தபு
வென்றவள் துணைவனை யின் று வெல்குவேன்
என்றது போலவந் தெழுந்த கிங்களே

(இ - ள்.) 'தனது தனிமையானமுகத்தினால் என்னை மிகவும்தாழ்மைப் படுத்தி வென்றவளின் கணவனை இன்றுவெல்வேன்'என்றுகருதியதுபோல, இந்துவானது பொருந்திய உட்கறுப்புடனே ஒளியாகியவாளையுருவிக்கொண்டுவந்து (கீழ்த்திசையில்) தோன்றிற்று; (எ - று.)

தன்முகத்தினால் தன்னை வென்றவளாகிய சீதையை வெல்ல வல்லமையற்ற சந்திரன், அந்தப்பகைமையையுட்கொண்டு அச்சீதையைச்சேர்ந்தவனை இவ்விராமபிரானையாவது வெல்வோமென்று கருதி யுதித்ததுபோல வெழுந்தானென்று வருணித்தவாறு. வலியபகைவனைவெல்லமாட்டாதவன் அவனைச்சார்ந்தார்திறத்துத் தன்வல்லமையைக் காட்டுவதாகக்கூறுதல் - விறல்கோளணியாம்:வடநூலார்ப்ரத்யநீகாலங்காரமென்பர்.இவ்வணியுடன் தற்குறிப்பேற்றவணி பிரிக்கமுடியாமல் நீரும்பாலும்போற் கலந்துவந்தது - கலவையணி. உட்கறுப்பு - மனத்திலுள்ளகோபம், சந்திரனிடையிலுள்ள களங்கம் என்றஇருபொருளைச் சிலேடையால் தெரிவிக்கும்:இந்தச் சிலேடையும் ஒளியின்வாள்என்ற உருவகமும் தற்குறிப்பேற்றத்திற்கு அங்கமாகிவந்தன.பி-ம்:—1ஒன்றி. 2உட்கறுவினோடு. 3ஒளியும். 4திரு. 5தாழ்ந்தற, தானற.

ரு.—நிலாப்பரவுதலின் வருணனை.

1கண்ணினை யப்புறங் கரந்து போகினும்
பெண்ணிற முண்டெனிற் 2பிடிப்ப லீண்டெனா
உண்ணிறை நெடுங்கட லுலக மெங்கணும்
வெண்ணிற நிலவெனும் வலையை வீசினான்.

(இ - ள்.) கண்ணுக்குப்புலனாகாமல் (சீதை) அப்பாற்பட்டு மறைந்திருப்பினும் (அப்) பெண்ணின்நிறம் எங்கேனும் இருப்பின் இப்போதே பிடிப்பேனென்றுகருதி, உள்ளேநிரம்பிய நெடுங்கடலையுடைய இவ்வுலகமுழுவதும் வெண்ணிறம் பொருந்தியநிலாவென்கிறவலையை வீசியெறிந்தான்,(சந்திரன்);

சீதையின்வடிவம் காணப்படாததுகொண்டு இராமபிரான் மிகவும் வருந்துவதனால் அப்பிரானது அத்துயரம்நீங்க அப்பெண்வடிவத்தைப் பிடித்துத் தரலாமென்று கருதினான்போல் தோன்றினான் சந்திர னென்றார்: தற்குறிப்பேற்றவணி: உலகத்தை வலைவிரிக்கும் இடமாகவும், நிலவை வலையாகவும் கூறிய உருவகவணியை யுடன்பெற்றுவந்தது. இச்செய்யுளின்பின் "மேலுகத்(எ)," "கரத்தொடும்"(கூ),"புடைக்கை"(சு), "மன்றல்வாய்" (அ)என்ற முறையில் சிலபிரதியில் செய்யுள்கள்காணப்படுகின்றன. பி-ம்:—1கண்ணனைவருத்துவான்.2பிணிப்பனீண்டென, பிடிப்பலின்றென,பிடிப்பனென்ன.

சு.—அலைக்கிளர்ச்சியின் வருணனை.

1புடைக்கைவன் றிரையெடுத் தார்க்கும் போர்க்கடல்
உடைக்கருந் 2தனிநிற மொளித்துக் கொண்டவன்
அடைக்கவந் தா3னெனை யரியின் றானையாற்
4கிடைக்கவந் தானெனக் கிளர்ந்த 5தொத்ததே.

(இ - ள்.) மோதுதலைக்கொண்ட வலிய திரையை மேலெடுத்து ஆரவாரிக்குந் தன்மையைக்கொண்டபோரில்விருப்புள்ளகடலானது,—'என்னுடைய ஒப்பற்ற கருநிறத்தைக் கைக்கொண்டுவிட்டவனாகிய இராமன் என்னை வானர சேனையைக்கொண்டு அணைகட்டுமாறு வந்துள்ளானாகிக் கைக்குளகப்பட்டவனாயுள்ளான்' என்றுகருதிக் கிளர்ச்சிசெய்வதை யொத்தது; (எ - று.)

சமுத்திரமானது அலைதிரைக்கையையெடுத்துப் பேராரவாரஞ்செய்து கிளர்வது - இராமபிரான் முந்தியே என்னிறத்தைக்கைக்கொண்டதுமாத்திரமேயன்றி இப்போது என்மீது அணைகட்டி என்னைத்தூர்க்குமாறும்வந்துள்ளானாதலால், இவன் என்னிடத்துக்கிட்டியிருக்கும்போது இவனை அடர்ப்பேனென்றுகருதிக் கிளர்ச்சிசெய்வதுபோல் தோன்றிற்றென்றவாறு: தற்குறிப்பேற்றவணி. புடைக்கை-தொழிற்பெயர். பி-ம்:—1புடைக்க. 2கனி, தன். 3எனமதித்தரியின், எனவன்றியின்றுயில். 4கிடக்க. 5ஒத்தவே. (௬௬௭)

எ.—வெண்மணற்பரப்பில் நிலாவீழ்தலின் வருணனை.

மேலுகத் தொகுதியான் முதிர்ந்த மெய்யெலாந்
தோலுகுத் தாலென 1வரவத் தொல்கடல்
2வாலுகத் தாலிடைப் பரந்த வைப்பெலாம்
பாலுகுத் தாலென நிலவு 3பாய்ந்ததால்.

(இ-ள்.) பழமையான அரவக்கடலானது முன்னர்(ப் பல)யுகத்தொகுதி கழிந்தமையினால் முதிர்ந்துவிட்ட உடம்பையெல்லாம் தோலையுரித்தாற்போல் தோன்றுகின்ற வெண்மணலினிடையே பரவியுள்ள இடம்முழுவதும் பாலைச் சொரிந்ததுபோல நிலவு பரவலாயிற்று; (எ - று.)

அரவக்கடல்-அரவத்தை [பேரொலியை]யுடைய கடலென்றும் அரவமாகிய கடலென்றும், சிலேடைவகையால் இருபொருள்படும். பாம்பு நாள் சென்றதாயின் தோலையுரித்தல், இயல்பு. அனேகயுகங்கழியப்பெற்ற கடலாகிய அரவத்தின் உரித்த உடற்சட்டைபோலும் வாலுகமென்றது-தன்மைத் தற்குறிப்பேற்றவணி. வாலுகம்-வெண்மணல். அங்கு நிலாவைச் சந்திரன் பொழிந்தது பாலையுகுத்ததுபோலும் என்றார்: இதுவும்-அவ்வணியே. பாம்புள்ள இடத்துப் பாலையூற்றும் மரபு இங்குக் கருதத்தக்கது.பி-ம்:—1 வார்த்த. 2வாலுகத்தரவுடை. 3பாய்ந்ததே. (௬௬௮)

அ.—தென்றலின் வருணனை.

மன்றல்வாய் மல்லிகை 1யெயிறு 2வண்டினங்
கன்றிய 3நிறத்தது 4நறவின் கண்ணது
குன்றின்வாய் 5முழையினின் றுலாய கொட்பது
தென்றலென் றொருபுலி யுயிர்த்துச் சென்றதால்.

(இ - ள்.) நறுமணம்பொருந்திய மல்லிகையாகிய நச்சுப்பற்களுடனே வண்டினமாகியகருநிறக்கோட்டையுடையதும்,நறவாகிய(செந்நிறக்)கண்களையுடையதும் மலையின்முழைஞ்சினின்று உலாவுகின்ற தன்மையையுடையது

மாகிய தென்றலென்ற ஒருபுலி (சினந்தோன்றப்)பெருமூச்சுவிட்டுக்கொண்டு வரலாயிற்று; (எ - று.)

இராமபிரானது உயிரைக்கொள்வதுபோன்று தோன்றுதலினால், தென்றலைப் புலியாக உருவகஞ்செய்தார்; மன்றல்வாய் என்றஇடத்திலுள்ள வாய் என்பது, ஐம்பொறியினுள் ஒன்றாகிய வாய் என்ற ஒருபொருளும் தோன்ற நின்றது.என்றொரு-தொகுத்தல்.பி-ம்:—[1]எயிற்றின். [2]வண்டுண,வண்டென. [3]நீர்த்தது, விடத்தது. [4]நிலவின். [5]நுழையினிற்குலாய, நுழையினின்றுலாய.

கூ.—மன்மதபாணமும் சந்திரிகையும் இராமனை வருந்துதல்.

கரத்தொடும் பாழிமாக் கடல்க டைந்துளான்
உரத்தொடுங் [1]கரனொடு [2]முருவ வோங்கிய
மரத்தொடுந் தொளைத்தவன் மார்பின் மன்மதன்
சரத்தொடும் [3]பாய்ந்தது நிலவின் றுரைவாள்.

(இ - ள்.) (தன்) கையினால் வலியபெரியகடலைக்கடைந்தவனாகிய வாலியினது மார்புடனே கரனென்னும்அரக்கனையும், (வானத்தை) அளாவவோங்கிய மராமரங்களேழையும் (தன்கணையால்) தொளைத்தவனாகிய ஸ்ரீராமனது மார்பிலே மன்மதனுடையசரத்துடனே நிலவாகிய கூரியநுனியையுடைய வாளாயுதமும் பாய்ந்தது; (எ - று.)

மகாவீரனாகிய இராமபிரானை மன்மதபாணமும்நிலவும் வருத்தலாயினவென்றவாறு. தாரை - தாரா: கூர்நுனியெனப்பொருள்படும் வடசொல். தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு மந்தரகிரியை மத்தாகவும் வாசுகியைக் கடைகயிறாகவும் சந்திரனை யடைதூணாகவுங்கொண்டு திருப்பாற்கடலைக்கடைகையில்இளைத்தனராக, அப்போது வாலி தன்கையால் அப்பாற்கடலில்அமுதெழுமளவுங் கடைந்தா னென்பதை "மந்தரநெடுவரைமத்துவாசுகி, யந்தமில் கடைகயிறடைக லாழியான், சந்திரன்றூணெதிர்தருக்கின்வாங்குந, ரிந்திரன் முதலியவமரரேனையோர்," "பெயர்வுறவலிக்கவு மிடுக்கில்பெற்றியா, ரயர்வுறலுற்றதைநோக்கியானது, தயிரெனக்கடைந்தவர்க்கமுதந்தந்தது" என வாலிவதைப்படலத்துவந்ததுகொண்டும் உணர்க. பி-ம்:—[1]கானொடு, கானிடை.[2]உயர. [3]பட்டனநிலவின்றுரைவாள்,நிலவினின்றுரைவாளினன். (உஎ0)

க0.—அப்போது இராமபிரானுக்குநேர்ந்துள்ள நிலை.

உடலினை நோக்கு[1]மின் னுயிரை நோக்கு[2]மால்
இடரினை நோக்குமற் றியாது [3]நோக்கலன்
கடலினை நோக்குமக் கள்வன் வைகுறுந்
திடரினை நோக்குந்தன் சிலையை நோக்குமால்.

(இ - ள்.) (அப்போதுஇராமபிரான், நிலாத்தென்றல்முதலியனவீசுதலால் மிகவும் வாட்டமுறுகின்ற தன்) உடம்பைப் பார்ப்பான்; (இவ்வண்ணம் தன்மேனிவாட்டமுறுதற்குக் காரணமான தன்)இன்னுயிருக்குஒப்பான சீதையை மனத்தினாலெண்ணமிடுவான்; (தனக்குநேர்ந்துள்ள) துன்பநிலையைக்கருதிச் சிந்தைகொள்வான்; வேறொன்றையும் நோக்காது, (உடனே

செல்லமுடியாது குறுக்கேகிடக்கின்ற) கடலினைப் பார்ப்பான்; (தன் மனைவியைக் கவர்ந்துபோன) கள்வனான அந்த இராவணன் தங்கியிருக்கின்ற இலங்கையாகிய திட்டை நோக்குவான்: தன்வில்லினைப் பார்ப்பான்;(எ - று.)

இன்னுயிரைநோக்கினது, தன்னுடலினது வாட்டத்தைப்போக்குதற்கு மருந்து அவளேயாதலால். உடனே அவளைக் கிட்டமுடியாமையால் இடர்ப்படவேண்டியதாயிற்றேயென்று சிந்தைகொள்வானென்பது'இடரினைநோக்கும்'என்பதன்பொருள். பின்னர்க்கடலினையும் கள்வன்வைகுறுந்திடரினையும் தன்சிலையையும்நோக்கியது-கடலினை எப்படியாவதுகடந்து தன்மனைவியைக் கவர்ந்த கள்வனான இராவணனைத் தன்பாணத்தாற் கொன்றுவீழ்த்தவேணுமென்ற கருத்தினாலாம். பி-ம்:—[1]பின். [2]மான். [3]நோக்குமுன். (சஎக)

கக.—கவிக்கூற்று:ஸ்ரீராமன்சீதையைநினைந்துவருந்துவதுதக்கதேயெனல்.

பணிபழுத் தமைந்தபூ [1]ணலத்திற் பண்பினாற்
பிணிபழுத் தமைந்ததோர் பித்தி னுள்ளத்தான்
அணிபழுத் [2]தமைந்தமுத் தரும்பு செம்மணி
மணி[3]பழுத் தமைந்த[4]வாய் மறக்க வல்லனோ.

(இ-ள்.) வேலைப்பாடு நிரம்பப்பெற்ற ஆபரணம்போல் அழகினைச்செய்கின்ற(சீதாபிராட்டியின்) குணங்களைநினைப்பதனால் காமநோய்மிக்குப்பொருந்தி அதனால் அமைந்ததாகிய ஓர் பித்துக்கொண்ட மனத்தையுடையவனாகியஇராமன், அழகு மிக்கமைந்த முத்துக்கள் (தன்னில்)தோன்றப்பெற்ற செம்மணி போன்று அழகு நிரம்பப்பெற்ற (அச்சீதையின்) வாயை மறக்கவல்லானோ? (எ - று.)—சீதையின்வாயழகு மறக்கத்தக்கதன்றென்றபடி. பழுத்தமைதல்-மிக்குப்பொருந்துதல்.மணி-அழகு. பி-ம்:—[1]அல்குல். [2]அழகமைந்தமுதசும்பு தேன், அழகமைந்தசும்புதேன்மலர், அழகமைந்தசும்புதென்றென. [3]பழுத்தனைய. [4]மாமாயன். (சஎஉ)

கஉ.—அப்போது சுக்கிரீவன் மேல்நடத்தவேண்டியதை விபீஷணனோடு ஆலோசித்துச் செய்யவேண்டுமெனல்.

ஆயதோ ரளவையி னருக்கன் மைந்த[1]னீ
[2]தேய்வதென் காரிய [3]நிரப்புஞ் [4]சிந்தையை
மேயவன் றன்னொடு மெண்ணி மேலினித்
தூயது [5]நினைக்கிலை யென்னச் சொல்லினான்.

(இ-ள்.) அங்ஙனம் இராமபிரான் வருத்தப்படும்நிலையினில், சூரியனது புத்திரனாகிய சுக்கிரீவன், (இராமபிரானைநோக்கி), 'நீசெய்யவேண்டியதொழிலை நிரப்ப வல்ல கருத்தைக்கொண்டவன்: (அப்படிப்பட்ட நீ)வருந்துவது என்னே? (வருந்துதல்தகாது; இப்போது நம்மைச்) சார்ந்தவனாகிய விபீஷணனோடும் ஆராய்ந்து இனிமேல் செய்தற்குரிய குற்றமற்றசெயலை நினையாமலிருக்கின்றாயே: (இது தக்கதன்று)' என்றுசொல்லினான்; (எ - று.)

'நீ செய்யத்தக்க தூயசெயலை விபீஷணனோடு ஆராயவேண்டும்: வருந்தலாகாது' எனச் சுக்கிரீவன் இராமபிரானைத் தெளிவித்தவாறு. கடலிடைத்

தீவில்வாழ்பவனுகையால், விபீஷணனுக்கு அதன்விஷயம் தெரியுமென்று அவனோடு ஆலோசித்துச் செய்யவேண்டியதொழிலைச் செய்யவேண்டுமென்றனன் சுக்கிரீவனென்க. பி-ம்:—1நீர். 2தேய்வதே. 3முடிக்கும். 4சிந்தையாய். 5நினைத்திலை. (சஎ௬)

கஃ.—இராமபிரான் சிறிதுதெளிந்து விபீஷணனை அழைத்துவரச்சொல்ல,விபீஷணன் இராமனிடம் வந்து சேர்தல்.

அவ்வழி [1]யுணர்வுவந் தயர்வு நீங்கினன்
செவ்வழி யறிஞனைக் [2]கொணர்மின் சென்றென
இவ்வழி வருதியென் றியம்ப வெய்தினான்
வெவ்வழி [3]விலங்கிநன் னெறியை [4]மேவினான்.

(இ - ள்.) (இராமபிரான்) அப்போது தன்னுணர்வுவரப்பெற்று மனம் வருந்துதலொழிந்து, 'நல்வழியிற்செல்லும் அறிஞனாகிய விபீஷணனைப் போய்அழைத்துவருமின்' என்று (வானரர்களை நோக்கிச்)சொல்ல,(பணியாளரான வானரர்களும் விபீஷணனையடைந்து) 'இவ்விடம் [இராமபிரானுள்ள விடத்துக்கு] வருக' என்று சொல்ல, தீநெறியினின்று விலகி நன்னெறியிற் செல்பவனாகிய அந்தவிபீஷணன்,(இராமபிரானுள்ளவிடத்துக்கு) வந்துசேர்ந்தான்; (எ-று.)—பி-ம்:—1நினைவு. 2கொணர்தி. 3விலங்கினன். 4மேயினான்.

கஅ.—விபீஷணன் இராமனைவணங்கி அவனதுகட்டளையால் இருந்தல்.

மருக்கிளர் தாமரை வாச நாண்மலர்
நெருக்கிடு தடமென விருந்த நீதியான்
திருக்கிளர் தாமரை பணிந்த செம்மலை
யிருக்கவீண் டெழுந்தென விருந்த காலையில்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) நறுமணம் வீசுகின்ற தாமரையின் வாசனையுள்ள அன்று மலர்ந்த மலர்கள் நெருங்கியிருக்கப்பெற்ற தடாகம்போலத் தோன்றுகின்ற நிலையையுடையவனான ஸ்ரீராமன்,(தனது) அழகுவிளங்குகின்ற தாமரைமலர்போன்றதிருவடிகளை வணங்கின பெருமைபெற்றவனாகிய விபீஷணனை எழுந்து(உபசரித்து) இங்கேயிருக்க எனச்சொல்ல, (அவ்வண்ணமே அந்தவிபீஷணன்) தங்கிய அப்போது,—(எ - று.)—'நிகழ்த்துவாயென்றான்' என மேலிற்கவியோடு முடியும்.

"மாயக்கூத்தா வாமனா வினையேன்கண்ணா கண்கைகால், தூயசெய்ய மலர்களாச்சோதிச்செவ்வாய்முகிழதாச்,சாயச்சாமத் திருமேனித் தண்பாசடையாத்தாமரைநீள்,வாசத்தடம்போல்வருவானே!" என்ற நம்மாழ்வார் அருளிச்செயல் முன்னிரண்டடிகளிற் கருதத்தக்கது. மூன்றாமடியில், தாமரை-உவமவாகுபெயர். இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை. (சஎ௫)

கரு.—இலங்கையின் அரண்முதலியவற்றைக்கூறுமாறு இராமபிரான் விபீஷணனை வினவுதல்.

*ஆர்கலி யிலங்கையி னரணு மவ்வழி*
*வார்கெழு [1]கனைகழ [2]லரக்கன் வன்மையுந்*
*தார்கெழு தானையி னளவுந் [3]தன்மையும்*
*நீர்கெழு தன்மையாய் [4]நிகழ்த்துவா யென்றான்.*

(இ-ள்.) நற்குணம்விளங்குகின்ற இயல்பையுடையவனே! கடலினாற் சூழப்பட்ட இலங்கையின் அரணமைப்பையும், அவ்விலங்கையிலுள்ள நீட்சி பொருந்திய ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்துள்ள இராவணனது வலிமையையும், (வெற்றி)மாலையோடுவிளங்குகின்ற சேனைகளின் அளவையும், (அநுமான் அங்குச்செய்துகாட்டிய பராக்கிரமச்செயலின்) தன்மையையும் சொல்லுவாயென்று வினவினான், (இராமபிரான்); (எ - று.)

இராமபிரான்வினவிய வினாக்களுக்கு விடையிறுக்கத்தொடங்கிய விபீஷணன் இறுதியில் ஆஞ்சனேயர்செய்த பராக்கிரமச்செயலைத் தெரிவித்தலால், தன்மை என்பதற்கு-அநுமானின் பராக்கிரமச்செயலின் தன்மை என்று கூறப்பட்டது: இனி, தன்மை-சேனைகளின் தன்மை யெனக் கொள்வாருமுளர். அநுமான்திறத்தைப்பற்றி, இங்கு முதனூலிற்கூறப்படவில்லை. பி-ம்.—[1]வனை. [2]அரக்கர். [3]தன்மையும். [4]நிரப்புதி. (சஎசு)

கசு.—கூப்பியகையனாய் விபீஷணன் இராமபிரானது வினவுக்கு உத்தரஞ்சொல்லத் தொடங்குதல்.

*எழுதலு மிருத்தியென் றிராமனேயினான்*
*முழுதுணர் [1]புலவனை முளரிக் கண்ணினான்*
*பழுதற வினவிய பொருளைப் [2]பண்புறத்*
*தொழுதுயர் கையினன் றெரியச் சொல்லினான்.*

(இ - ள்.) (இராமபிரானுடைய வினாக்கட்கு விடையிறுக்குமாறு விபீஷணன்) எழுந்துநின்றவளவில், தாமரைமலர்போன்ற கண்களையுடையவனான ஸ்ரீராமன், முழுதுணர்ந்த அறிஞனாகிய அந்தவிபீஷணனை, இருந்தே சொல்வாயென்று ஏவினனாக,—(அவ்விபீஷணன்),—தொழுவதனால் மேம்பாடமைந்தகையையுடையவனாய் (இராமபிரான்) வினவிய விஷயங்கட்கெல்லாம் தக்கபடி குற்றமற விளக்கமாக மறுமொழிகூறலானான்; (எ - று.)—விபீஷணன் கூறுவதை மேலிற்கவிகளிற் காண்க. பி-ம்:—[1]புலவர்முன். [2]பண்பினால்.

கஎ.—இலங்கையினுற்பத்தி.

*நிலையுடை வடவரை குலைய நேர்ந்ததன்*
*றலையென விளங்கிய தமனி யப்பெரு*
*மலையினை மும்முடி [2]வாங்கி யோங்குநீர்*
*அலைகட லிட்டன னனுமன் றாதையே.*

(இ - ள்.) அநுமனது தந்தையாகிய வாயுபகவான், (அழியாது) நிலைத்திருத்தலையுடைய மேருமலையின்சிகரத்தைக் குலைப்பதாக பிரதிஞ்ஞைசெய்து, அந்தமலையின் சிகரமாகவிளங்கிய மூன்றுமுடியையொருங்கேகொண்டபொன்

மயமான பெரிய மலையைப் பறித்து மிக்கநீரைக்கொண்ட அலையுந்தன்மையை யுடைய கடலி லிட்டனன்; (எ - று.)—இதுமுதல் அறுபத்தேழாங்கவிவரை யில் ருக-கவிகள் விபீஷணன்கூறும் உத்தரத்தைத் தெரிவிப்பன.

நேர்ந்து அதன் தலை எனப் பிரிக்க. "வடமேருக்குலைய மோதியதன்றிகழ் முத்தலையார்சிகரந்தனைமுறித்து," "முறிந்தசிகரமுக்குடுமிக் கோலவரையாங் கது" என்று உத்தரகாண்டத்தில்வருவன இச்செய்யுளிற் காணத்தக்கன. அந்தத்திரிகூட மலையில்தானே இந்த இலங்கை யமைந்திருத்தல்பற்றி, திரிகூடாசலம் கடலிடையே இங்கு வந்ததற்குக்காரணத்தை இதனால் தெரிவித்தனன்.

அநுமன்தாதை வடவரைநிலைப ேர்ந்த கதை:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார் பலசாலியென்று விவாதமுண்டாக, அதனைப் பரீட்சித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின்சிகரத்தைப் பெயர்த்துத்தள்ளுவதென்றும் ஆதிசேஷன் அதனைப் பெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் கோட்பாடுஉண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்முதலியோரது முன்னிலையில் தம்தம்வலிமையைக் காட்டத் தொடங்கியபோது, ஆதிசேஷன் தனதுபெரியஉடம்பினால் மேருவைவளைந்து தனதுஆயிரந்தலைகளாலும் மேருமலையின்ஆயிரஞ்சிகரங்களையும் கவிந்துகொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரங் காக்க, பின்பு வாயுதேவன் தன் வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டனனென்பது. பி-ம்:—[1]நேர்ந்தனன். [2]வலியினால்.

கஅ.—இலங்கையினுடையமதிலின் வருணனை.

ஏழு[1]நூ றியோசனை யகல [2]மிட்டகீழ்
ஆழு[1]நூ றியோசனை [3]யாழி மால்வரை
[4]வாழியா யுலகினை [5]வளைந்த வண்ணமே
சூழுமா மதிலது சுடர்க்கு மேலதால்.

(இ - ள்.) (அந்த இலங்கையின்மதிளானது) ஏழுநூறுயோசனை அகலமுள்ளது; கீழ்ஆழம் நூறுயோசனையாகும்; வாழ்ச்சிபெற்றவனே! சக்கரவாளமலையானது இவ்வுலகினை எவ்வண்ணம் வளைந்துள்ளதோ, அவ்வண்ணமே பெரியமதில் அந்நகரத்தினைச் சூழ்ந்துள்ளது; அதன் உயரமோ சூரியசந்திரர்முதலிய சுடர்கள் சஞ்சரிக்குமிடத்தினும் மேலாகவுள்ளது; (எ - று.)

முன்னிரண்டடிகள்-அந்த இலங்கையைச்சூழ்ந்துள்ள மதிலின் விஸ்தீர்ணத்தையும், ஆழ்ந்த தன்மையையும் காட்டு மெனக் கொள்ளுதல், பொருந்தும். ஏழுநூறுயோசனையகலம் என்பதற்கு - அவ்விலங்கை ஏழுநூறுயோசனை விஸ்தீர்ணமுள்ளதெனக் கூறுவதுமுண்டு. ஏழுதீவுகளாகவுள்ள இந்த உலகத்தைச் சக்கரவாளகிரியென்றமலையொன்று வட்டவடிவாகச்சூழ்ந்துகொண்டுள்ளதென்பது புராணக்கொள்கை. பி-ம்:—[1]நூறேசனை. [2]மீட்ட. [3]ஆகி. [4]வாழிய. [5]வளைத்த.

கக.—இலங்கையின் இயந்திரம் அரண்கள் முதலியன.

மருங்குடை விளையமும் பொறியின் மாட்சியும்
[1]இருங்கடி யரணமும் [2]பிறவு மெண்ணினால்
சுருங்கிடு [3]மெனைப்பல [4]சொல்லிச் சுற்றிய
கருங்கட லகழது [5]நீருங் காண்டிரால்.

(இ - ள்.) அந்தமதிலினிடத்துள்ள வேலைப்பாடும் (நூற்றுவரைக்கொல்லி முதலிய) இயந்திரங்களின் மேம்பாடும், (இலங்காபுரியின்) மிக்ககாவலாக வுள்ள அரண்களும் மற்றுமுள்ளவும் எண்ணினால், (எண்ணமுடியாதவாறு மனமே) சுருங்கிவிடும்; பலசொல்லியென்? (அந்தஇலங்கை தன்னைச்) சூழ்ந்துள்ள கரியகடலையேஅகழாகக்கொண்டது; இவ்விஷயத்தை நீருங் காணலாம்; (எ - று.)—சுருங்கிடும்என்பதற்கு-எண்ணுபவர்களின் ஆயுள்நாள் சுருங்குவதல்லது, விஷயம் முதலியன சொல்லித்தொலையா எனினுமாம். பி-ம்:—[1]அருங். [2]அமையம். [3]என். [4]சொல்லில். [5]நீளங்காண்டியால். (சஅ0)

உ0.—இலங்கையின் வடதிசைவாயில் வீரர்.

வடதிசை வயங்கொளி வாயில் [1]வைகுவோர்
இடையில ரெண்ணிரு கோடி யென்பரால்
கடையுக முடிவினிற் கால னென்பதென்
விடைவரு பாகனைப் பொருவு [2]மேன்மையோர்.

(இ - ள்.) (இலங்காபுரியின்) விளங்குகின்ற ஒளியையுடைய வடதிசை வாயிலில் (காவலாகத்)தங்கியிருப்பவர், (எப்படிப்பட்டநிலையிலும்) இடைதல் [பின்வாங்குதல்] இல்லாதவரான எண்ணத்தக்க இருகோடியென்னுந்தொகையினராவர்; (அவர்களை) யுகாந்தகாலத்தில் (எல்லாவுயிர்களையும் நாசஞ்செய்கின்ற) யமனென்றுதான் சொல்வது எப்படி? [அந்தயமனும் அவர்கட்கு ஒப்பாகான்]; விடையின்மேலேறிச் சஞ்சரிப்பவனை உருத்திரனையே ஒப்பாகப்பெற்றமேன்மையுடையவர் (அவர்கள்); (எ - று.)—இடை-முதனிலைத்தொழிற்பெயர். எண்ணிருகோடி-பதினறுகோடியென்பாருமுளர். பி-ம்:—[1]காப்பவர். [2]வெம்மையார். (சஅக)

உக.—மேற்றிசைவாயில் வீரர்.

மேற்றிசை வாயிலின் வைகும் [1]வெய்யவர்க்கு
[2]ஏற்றமு முளவவர்க் கிரண்டு கோடிமேல்
கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல்
[3]ஊற்றுறு குருதியோ டுயிரு முண்குவார்.

(இ - ள்.) மேற்றிசைவாயிலிலே தங்குகின்ற வெய்யவரின் தொகைக்கு கீழ்க்கூறியவர்களின் தொகையினும் மேலாக இரண்டுகோடி அதிகமாதலும் உள்ளன: (அவர்கள்), யமனையும் (தமது) கண்ணாகிய பொறியினால் நெருங்கக் காண்பராயின், மேன்மேற்சுரந்துவருதலையுடைய இரத்தத்தோடு (அக்கூற்றுவனது) உயிரையும் உண்பார்கள்; (எ - று.)

இச்செய்யுளுக்கு—மேற்றிசைவாயிலிலே வைகுகின்ற வெய்யவர்க்கு (வலத்தினால்) மேம்பட்டதன்மையுமுண்டு; அவர்க்குத்தொகை இரண்டுகோடி

யாம்;(அன்னார்)கொல்லுந்தொழிலின்மேம்பட்டவனென கூற்றுவனையும் குரு
தியோடு உயிருமுண்பர் என்று கூறினுமாம். பி-ம்:—1வெய்யவர். 2ஏற்றமிலெ
ண்ணிருகோடியென்பரால், ஏற்றமுமுளரவர்க்கிரண்டுகோடியால். 3ஊற்றுகு.

உஉ.—தென்றிசைவாயில் வீரர்.

தென்றிசை வாயிலின் வைகுந் தீயவ
ரென்றவ ரெண்ணிரு கோடி யென்பரால்
1குன்றுறழ் நெடியவர் கொடுமை கூறியென்
வன்றிறல் 2யமனையு 3மரசு மாற்றுவார்.

(இ - ள்.) தெற்குத்திக்குவாயிலிலே (காவலாகத்) தங்குகின்ற தீயவ
ரென்று பிரசித்திபெற்றவர் எண்ணிருகோடியென்பர்: மலையையொத்த நெடி
யவரான அன்னாரது கொடுமையை யெடுத்துக்கூறி என்னபயன்?(அன்னார்)
மிக்கவலிமையையுடைய யமனையும் (அவனது) ஆட்சியை மாற்றுதற்குவல்ல
வர்; (எ - று.)—1குன்றுறு...கொடுமை, கொன்றுயிர்கொள்பவர் வன்மை.
2நமனையும். 3வரவுமாற்றினர். (சஅங)

உங.—கீழ்த்திசைவாயில்வீரர்.

கீட்டிசை வாயிலின் வைகுங் கீழவ
ரீட்டமு மெண்ணிரு கோடி யென்பரால்
கோட்டிருந் திசைநிலைக் 1கும்பக் குன்றையும்
தாட்டுணை 2பிடித்தகன் றரையி னெற்றுவார்.

(இ-ள்.) கிழக்குத்திக்குவாயிலிலேதங்குகின்ற கீழவரின்கூட்டமும் எண்
ணிருகோடியென்பர்; விசாலமான(எட்டுத்)திக்கிலும் நிற்றலையுடைய தந்தங்க
ளையும் மத்தகங்களையும்கொண்ட யானைகளையும் [அஷ்டதிக்கஜங்களையும்] இர
ண்டுபாதங்களைப் பிடித்துப் பரந்த தரையிலே மோதுதற்கு உரியவர்;(எ-று.)-
குன்று-உவமவாகுபெயர். பி-ம்:—1கோரக். 2சுழற்றியே, பிடித்தவை.(சஅச)

உச.—மேலிடத்துங் கீழிடத்துங் காவலரான வீரர்.

விண்ணிடை விழித்தனர் நிற்கும் வெய்யவர்
எண்ணிரு கோடியி னிரட்டி யென்பரால்
மண்ணிடை வானவர் 1வருவ ரென்றவர்
2கண்ணிலர் கரையிலர் கரந்து போயினர்.

(இ - ள்.) ஆகாயத்தில்தானே (எதிரிகளைத்தடுக்குமாறு) கண்விழித்தவ
ராய்நிற்கின்ற கொடியவர், எண்ணிருகோடியின் இரட்டித்த அளவினராவர்
[முப்பத்திரண்டுகோடியாவர்]; பூமியிலே (பகைவரான) வானவர் வரக்கூடு
மென்றுபாதுகாப்பவர், இரக்கமற்றவராய் எல்லையற்றவர் மறைந்துள்ளார்
கள்; (எ - று.)—கண் - இரக்கம். பி - ம்:—1வருதலின்றியே. 2கண்ணிலி
கரையிலி. (சஅரு)

உரு.—மதிலின் முன்னும் பின்னும் பாதுகாப்பவர்.

பிறங்கிய நெடுமதிற் பின்னு முன்னரும்
உறங்கல 1ருண்பத 2முலவை யாதலாற்

கறங்கெனத் திரிபவர் கணக்கு வேண்டுமேல்
[3]அறைந்துள தையிரு நூறு கோடியால்.

(இ - ள்.) விளங்குகின்ற நீண்ட மதிலின் பின்புறமும் முன்புறமும் கண்மூடாதுபாதுகாப்பவரும் உண்ணுகின்ற உணவு காற்றுதலால் காற்றுடி போலச்சுற்றுபவருமானவரின் தொகையறியவேண்டுமானால் பத்துநூறுகோடியென்றுசொல்லப்பெற்றுள்ளது; (எ - று.)—உணவுக்கேற்றசெயலினரென்பார் 'உண்பதமுலவையாதலாற் கறங்கெனத் திரிபவர்' என்றார். உலவை - காற்று. பி-ம்:—1உண்பதும். 2உலவையாயென, உலாவியாதலின். 3அறைந்தனர். (௪அ௬)

உ௬.—மதில்களும் நகர்காப்பாளரும்.

இப்படி மதிலொரு [1]மூன்று வேறினி
ஒப்பரும் [2]பெருமையு முரைக்க [3]வேண்டுமோ
[4]மெய்ப்பெருந் திருநகர் காக்கும் வெய்யவர்
முப்பது கோடியின் மும்மை முற்றினர்.

(இ - ள்.) கீழ்க்கூறியவாறு காவலமைந்த மதிள் அந்நகர்க்குமூன்று(உள்ளன); இனி, வேறாக(அந்நகர்க்குஅமைந்த)ஒப்பற்ற(பாதுகாவலின்)சிறப்பையும் சொல்லவேண்டுமோ?உண்மையான பெருமைபெற்ற அந்தத்திருநகரைக் காக்கின்ற வெய்யவர் முப்பதுகோடியின்மும்மடங்கு [தொண்ணூறுகோடி] யளவு மிக்கவர்;(எ-று.)—அகமதில் இடைமதில் புறமதில்என நகர்க்கு மூன்று மதிள்கள்கூறப்படுவதை பண்டைத்தமிழ்நூல்களிற் காணலாம். ஒருமதிளுக்கு முப்பதுகோடிவீதம் மூன்றுமதிள்களுக்குத் தொண்ணூறுகோடி வீரரென்க. பி-ம்:—1மூன்றுமெண்ணினில், மூன்றுமெண்ணினி. 2பெருமையை. 3ஒண்ணுமோ. 4வெப்பெழுந். (௪அ௭)

உ௭.—சேமப்படை.

சிறப்பவன் செய்திடச் செல்வ மெய்தினர்
அறப்பெரும் பகைஞர்க [1]ளளவி லாற்றலர்
உறப்[2]பெரும் பகைவரி னுதவு முண்மையர்
இறப்பில ரெண்[3]ணிரு நூறு கோடியே.

(இ - ள்.) (இவர்களல்லாமல்) அந்தஇராவணன் சம்மானங்களைச் செய்திட அதனால் மிக்கவளம்பெற்றவர்களும், அறத்திற்குப்பெரும்பகைஞர்களும் அளவிட முடியாதவல்லமைபெற்றவர்களும் பெரும்பகை எதிரிடவருமாயின் உண்மையாக [மனப்பூர்வமாக] உதவுபவர்களும் (மன்னவனாணையைக்) கடவாதவர்களுமான வீரர் பதினாறுநூறுகோடியென்னும்அளவினர் (அந்நகரத்திற் சேமப்படையாக உள்ளனர்); (எ - று.)—இச்செய்யுள் ஒருபிரதியிற் காணப்படவில்லை. பி-ம்:—1அளவின். 2தெறும், தரும். 3அவர்க்கேழுவெள்ளமே, இவர்க்கேழுவெள்ளமால். (௪அஅ)

உ௮.—கோயிலின் வாயில்காவலர்.

விட[1]மல விழியெனும் வெருளிக் [2]கண்ணினர்
கடனல [3]விமைத்தலு மென்னுங் காவலர்

வட[4]வரை [5]புரைவன கோயில் வாயிலின்
இடம்வலம் வருபவ [6]ரெண்ணெண் கோடியால்.

(இ - ள்.) '(இது) விடமல்ல, கண்விழியே' என்றுசொல்லுமாறு வெகுளிதோன்ற (உக்கிரமாக) விழிக்குங் கண்களையுடையவர்களாகி, கண்கொட்டுதலும் (நாம் மேற்கொண்டுள்ள காவற்றொழிற்கு) முறையல என்று கருதுகின்ற காவல்வீரர் மேருமலையையொப்பனவாகிய அரண்மனையின்வாயிலிலே இடம்வலமாகஉலாவியவண்ணம் (தம்காத்தல்தொழிலைச் செய்து) வருபவர், அறுபத்துநான்குகோடியளவினராவர்;(எ-று.)—எண்ணெண்கோடி-எண்ணத்தக்கஎட்டுக்கோடியுமாம். பி-ம்:—[1]அனவிழியினர்வெகுளிக், அலவிழியெனவெருளும், அலவிழியெனும்வெருளும், அலவிழிப்பனவென்னும்.[2]சிந்தையர். [3]இமைப்பன. [4]மலை. [5]புரையுயர்,புரைபவன்,புரைபவர்.[6]ஏழெண்வெள்ளமால்.

உசு.—இராவணனதுபடையின் மொத்தமான சங்கியை.

[1]பேயனே னென்பல பிதற்றிப் [2]பேர்த்தவன்
மாயிரு ஞாலத்து [3]வைத்த மாப்படை
[4]தேயினு நா[5]ளெலாந் தேய்க்க வேண்டுவது
[6]ஆயிர வெள்ளமென் [7]றறிந்த தாழியாய்.

(இ - ள்.) ஆழியாய்! பேய்போன்ற யான் மறுபடியும்மறுபடியும் பலவகையாக (அவனது படையளவைப்) பிதற்றுவதால் யாது (பயன்)? அந்த இராவணன் மிகப்பெரியஇப்பூமியிலே வைத்துள்ள பெரியசேனை, உலகுள்ள நாள்அழியினும் (தான்ஒழியாமல்) அழிக்கவேண்டியவை, ஆயிரம்வெள்ளமென்று அறியப்பட்டுள்ளது; (எ - று.)—இச்செய்யுள் "அன்றியும்"(௩௦)என்ற தன்பின் சிலபிரதிகளி லுள்ளது. ஒருபிரதியில் "அன்றியும்" என்றபாடல் காணப்படவில்லை. பி-ம்:—[1]பேயனன். [2]பேர்வுரு. [3]வாழுமன்னுயிர். [4]தேய்வுறு. [5]எல்லாந்தேய. [6]ஆயிரம். [7]அறைந்தது, அறிவன். (௬௧௦)

௩௦.—அரண்மனை முன்றிலிலுள்ள வீரர்.

அன்றியு மவனகன் கோயி [1]லாய்மணி
[2]முன்றிலின் வைகுவார் முறைமை கூறிடின்
[3]ஒன்றிய வுலகையு மெடுக்கு மூற்றத்தார்
குன்றினும் [4]வலியவர் கோடி [5]கோடியால்.

(இ - ள்.) அன்றியும், அந்தஇராவணனது அகன்ற அரண்மனையிலே ஆய்ந்தமணிகளாலியன்றமுன்றிலிலேதங்கிய வீரர்களின் நிலைமையைக் கூறின்,ஒருங்குசேர்ந்த உலகத்தையெல்லாம் பெயர்த்தெடுக்கவல்ல வலிமையையுடையவர்; மலையினும்திண்மையுள்ளவர்;(அவர்களின்தொகை), கோடிகோடியாகும்; (எ-று.)—பி-ம்:—[1]வாயணி, வாய்மனை. [2]முன்றிலுண்மாநினர்முறையின்வைகுவார். [3]ஒன்றிடில். [4]நெடியவர். [5]கோடியே. (௬௧௧)

௩௧.—இராவணனது தேர்முதலியன.

தேர்[1]பதி னாயிரம் பதுமஞ் செம்முகக்
[2]கார்வரை யவற்றினுக் கிரட்டி கால்வயத்து

ஊர்பரி [3]யவற்றினுக் கிரட்டி யொட்டகந்
[4]தார்வரு புரவியி [5]னிரட்டி சாலுமே.

(இ - ள்.) (அந்தஇராவணனுக்குத்) தேர்கள், பதினாயிரம்பதுமமாகும்; செம்புள்ளிசேர்ந்தமுகத்தைக்கொண்ட கரியமலைபோலும் யானைகள், அந்தத் தேர்களின்தொகையினும் இரட்டித்ததொகையினவாம்; கால்வலிமையையுடைய [வருந்தாதுவிரைந்தோடுந்தன்மைபெற்ற] மேலேறிச்செல்லவல்ல குதிரைகள், அந்தயானைகளின்தொகையினும் இரட்டித்ததொகையினவாம்; ஒட்டகங்கள், கிண்கிணிமாலைபூண்ட குதிரைகளினும் இரட்டித்து நிரம்பியிருக்கும்; (எ - று.)—பி-ம்:—[1]பதினாயிரகோடி, பதினாயிரம்பத்து. [2]காரவை. [3]உரைத்தவற்று. [4]ஏர்வரும். [5]பாகஞ்சாலுமால்; இரட்டியென்பரால், இரட்டிவெள்ளமால்.

கூஉ.—கீழ்க்கூறியவற்றின் தொகுப்பும், அவ்விராவணனதுதுணைவரும்.

இலங்கையி னரணிது படையி னெண்ணிது
வலங்கையில் வாள்சிவன் கொடுக்க வாங்கிய
வலங்கலந் தோளவன் றுணைவ ரந்தமில்
[1]வலங்களும் வரங்களுந் தவத்தின் வாய்த்தவர்.

(இ - ள்.) இலங்காநகரத்தின் அரண், (கீழ்க்கூறிய) இன்ன தன்மையது: அவனதுசேனையின் அளவும், (கீழ்க்கூறிய) இந்தத்தன்மையது; சிவபெருமான் (அருள்கொண்டு) வாளைக் கொடுக்க வலக்கையால் (அதனை) வாங்கிக்கொண்டுள்ளவெற்றிமாலைசூடிய அழகியதோள்களையுடைய இராவணனுக்குத் துணையாய்நிற்பவர், எல்லையில்லாதவலிமைகளையும் வரங்களையும் (தாம் புரிந்த) தவத்தின்பயனாகப் பெற்றவராவர்; (எ - று.)— துணைவர் - சினேகிதர். மேல் அவர் தன்மையை விவரிப்பர். பி-ம்:—[1]பெலங்களும்... தவத்திற்பெற்றுளார். (சுகூங)

கீழ் 'அந்தமில்வலங்களும்வரங்களும் தவத்தின்வாய்த்தவர்' என்று கூறியவரை இதுமுதல் விளக்குகின்றான்: அவர்களுள்

கூ௩.—அகம்பன்.

வேறு.

உகம்பல் காலமுந் தவஞ்செய்து பெருவர முடையான்
சுகம்பல் போரலால் வேறிலன் [1]பொருபடைத் தொகையான்
நகம்ப லென்றிவை [2]யில்லதோர் நரசிங்க மனையான்
அகம்ப னென்றுள னலைகடல் [3]பருகவு [4]மமைவான்.

(இ-ள்.) பலயுககாலந் தவம்புரிந்து பெருவரம்பெற்றவனும், பலபோர்த்தொழிலேயன்றி இன்பந்தருந்தொழிலாக வேறு எதனையுங் கொள்ளாதவனும், போர்செய்யவல்லபடைத்தொகுதியையுடையவனும், நகம் வக்கிரதந்தம் பல் என்ற இவைகளைப் பெற்றிராததோர் நரசிங்கமூர்த்தியையொத்தவனுமாகிய அகம்பனென்றுஒருவன் உளன்; (அவன்) அலைகின்றகடலைப்பருகவேண்டுமென்றாலும் பருகவும்வல்லவன்; (எ - று.) பி-ம்.—[1]பெரும்படை. [2]இலாததோர். [3]குடிக்கவும். [4]வல்லான், ஆவான். (சுகூச)

௩ச.—நிகும்பன்.

பொருப்பை மீறிடும் [1]புரவியும் பூட்கையுந் தேரும்
உருப்ப விற்படை யொன்பது கோடியு முடையான்
[2]செருப்பெய் வானிடைச் சினக்[3]கிடாய் கடாய்வந்து செறுத்த
நெருப்பை வென்றவ னிகும்பனென் றுளனொரு நெடியோன்.

(இ - ள்.) மலையையும் மேலிட்டுச்செல்லும் குதிரைப்படையும், யானைப்படையும், தேர்ப்படையும் கோபத்தைவெளிப்படுத்துகிற வில்லையேந்திய பதாதிப்படையும் சேர்ந்து ஒன்பதுகோடியளவுடையவனும், போர்புரிகின்ற வானத்திலே சினத்தைக்கொண்ட ஆட்டுக்கிடாயைக் கடாவிவந்து எதிரிட்ட அக்கினிதேவனை வென்றவனுமான, நிகும்பனென்று பேர்பூண்ட பெருமை பெற்ற வீரனொருவனுளன்; (எ - று.)—கும்பநிகும்பரென்பவர் - கும்பகர்ணனது புதல்வ ரென்று ஸ்ரீவான்மீகத்தால் தெரிகின்றது. நிகும்பனென்று வேறொரு அரக்கனும் உண்டென்றும் இராவணனுக்கு மாமன்முறையாகுபவனென்றும் கூறுகின்றனர். பூட்கை = புழைக்கை: தொளையுள்ளகையையுடையதென யானைக்குக் காரணக்குறி. கிடாய் - யாட்டுக்கடா. கடாய் - 'கடாவு' என்ற பகுதியினடியாப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். பி-ம்:—[1]பூட்கையும் புரவியும், புழைக்கையும் புரவியும். [2]செருப்பை. [3]கடாய். (சகரு)

௩ரு.—கும்பன்.

தும்பி யீட்டமு [1]மிரதமும் புரவியுந் தொடர்ந்த
[2]அம்பொன் [3]மாப்படை யையிரு கோடிகொண் டமைந்தான்
செம்பொ [4]னாட்டுள [5]சித்தரைச் சிறையிடை வைத்தான்
கும்ப னென்றுள னூழிவெங் [6]கதிரினுங் கொடியான்.

(இ - ள்.) யானைக்கூட்டமும் இரதமும் குதிரையும் சேர்ந்த அழகிய பொன்போலருமையான சிறந்தசைனியங்கள் பத்துக்கோடிகொண்டு பொருந்தியிருப்பவனும், செம்பொன்னாடாகியதேவலோகத்திலுள்ள சித்தரென்னுந் தேவசாதியாரைச் சிறையிலேவைத்தவனுமாகிய கும்பனென்று ஒருதுணைவன், உள்ளான்: (அவன்) யுகாந்தகாலத்துத்தோன்றுகின்ற உஷ்ணகிரணனை சூரியனைக்காட்டிலும் கொடியவன்; (எ - று.)—இச்செய்யுள் அச்சிட்ட பிரதிகளிலும் சில ஏட்டுப்பிரதிகளிலும் "உகம்பல்" (௩௩) என்ற செய்யுளின் முன்உள்ளது. பி-ம்:—[1]புரவியுமிரதமும். [2]வன். [3]வாட்படை. [4]நாட்டிடை, நாட்டுளர். [5]சித்திரச்சிறையினில். [6]காற்றினும். (சகசு)

௩சு.—மகோதரன்.

பேயை யாளியை யானையைக் கழுதையைப் [1]பிணித்த
ஆய தேர்ப்படை யையிரு கோடிகொண் [2]டமைந்தான்
தாயை யாயினுஞ் [3]சலித்திடு வஞ்சனை [4]தவிரா
மாயை யானுளன் மகோதர னென்றொரு மறவோன்.

(இ - ள்.) (அந்தியும்), பேயையும் யாளியையும் யானையையும் (கோவேறு) கழுதையையும் பூட்டினவாகிய தேர்ச்சேனை பத்துக்கோடி பொருந்தி

யிருக்கப்பெற்றவனும், தாயானாலும்அவளையும் கலங்கச்செய்யவல்ல வஞ்சனைத்தன்மை நீங்காத மாயையையுடையவனுமாகி, மகோதரனென்று பேர் பூண்ட பராக்கிரமசாலி யொருவனுளன்; (எ-று.)—யாளியென்பது - சிங்கம் போன்ற முகமும் யானைபோல்துதிக்கையுமுடைய மிருகவிசேடமென்பர். பி-ம்:—1பிணித்தது. 2அமைந்த. 3சலித்திடின், சலத்தினில். 4தவிரான். (சகஎ)

௩௭.—யஜ்ஞஹா.

1குன்றில் வாழ்பவர் கோடிநாலைந்தினுக் கிறைவன்
இன்று ளார்2பினை நாளையி லாரென வெயிற்றால்
தின்று ளானெடும் 3பன்முறை தேவரைச் செருவின்
வென்று ளானுளன் வேள்வியின் பகைஞனோர் வெய்யோன்.

(இ - ள்.) (அல்லாமலும்), குன்றிலேவாழ்பவரான இருபதுகோடிவீரர்க்குத்தலைவனும், இன்றைக்குஉள்ளவர் பின்னர் நாளைக்கு இல்லையென்ற வசனம் வழங்குமாறு(தன்)பற்களினால்(தன்கண்ணெதிரிற்பட்ட பிராணிகளைத்) தின்பவனும், மிக்கபலதடவைகளிலே தேவர்களைப் போரில் வென்றுள்ளவனுமான யஜ்ஞஹா என்னும் பேர்பூண்ட ஒருகொடியவன் உள்ளான்; (எ - று.)

இன்றைக்கு இருப்பவர் நாளைக்குஇல்லை யென்ற வசனம் இவனுடைய செய்கையால் நாடோறும் கண்கூடாகக் காணும்படியாயிற் றென்க. பழமொழியை யமைத்துக்கூறியது - உலகவழக்குநவிற்சியணியாம். பி-ம்:—1குன்றின்வாழ்பவன். 2தமை, தம்மை. 3தேவரைப்பன்முறைச். (சகஅ)

௩௮.—சூரியசத்துரு.

மண்ணு ளாரையும் 1வானிலுள் ளாரையும் வகுத்தால்
உண்ணு 2நாளொரு நாளினென் றுளிர்படைத் தானை
எண்ணி னாலிரு 3கோடிய னெரியஞ்ச 4விழிக்கும்
5கண்ணி னானுளன் சூரியன் பகை6யென்றோர் கழலான்.

(இ-ள்.) (மற்றும்), இவ்வுலகிலுள்ளாரையும் வானிலுள்ளாரையும் வகைப்படுத்தி வைத்தால் (அவ் வெல்லோரையும்) உண்ணுகின்ற நாள் ஒருநாளிலேயாகு மென்று சொல்லுமாறு விளங்குகின்ற படைக்கலத்தோடுகூடியசேனைகளைக் கணக்கிட்டுப்பார்க்குமிடத்து, இரண்டுகோடிகளைக் கொண்டவனும் நெருப்பும் அஞ்சும்படி (உக்கிரமாக) விழித்துப்பார்க்கின்ற கண்ணுள்ளவனுமான சூரியசத்துரு என்னும்பெயர்பூண்ட வீரக்கழலையணிந்தவனொருத்தன் இருக்கின்றான்; (எ-று.)—எண்ணின் நாலிருகோடி என்றும்பிரிக்கலாம். பி - ம்:—1வானுளார்தம்மையும். 2நாளினின்றுழறுபசியன், நாளெனவுழறும்பசியான். 3கோடிய. 4எரியும். 5கண்ணுளான். 6என்ற. (சகக)

௩௯.—மகாபார்சுவன்.

தேவருந் தக்க முனிவருந் திசைமுகன் முதலா
மூவரும் பக்க 1நோக்கியே மொழிதர முனிவான்
தாவரும் பக்க மெண்ணிரு 2கோடியின் றலைவன்
மாபெரும் பக்க னென்றுளன் 3குன்றினும் வலியான்.

(இ - ள்.) (பின்னும்), தேவர்களும் தகுதிபெற்றமுனிவரும் பிரமன் முதலாகிய திரிமூர்த்திகளும் பக்கம்பார்த்துப்பேசுமாறு பெருங்கோபங் கொள்பவனும், தாவிவருகின்ற தன்பக்கத்தைச்சார்ந்தசேனை எண்ணிரு கோடிக்குத் தலைவனுமான குன்றினும்வலிமைபெற்ற மகாபார்சுவனென்று ஒருத்தன் உள்ளான்; (எ - று.)

பக்கம்-பக்கத்தைச்சார்ந்தவரான சேனைவீரரைக்காட்டிற்று: இலக்கணை. திரிமூர்த்திகள் இந்தமகாபார்சுவனைப்பற்றிப் பேசக்கருதினாராயினும் 'இவன் பக்கத்தில் எங்கே வந்துவிடுகிறானோ?' என்று அஞ்சிப் பக்கம்பார்த்துப் பேசுமாறு கோபம்மிக்கிருக்கப்பெற்றவனென்பது, 'திசைமுகன்முதலாமூவ ரும்பக்கநோக்கியேமொழிதர முனிவான்' என்பதன் கருத்து. பி - ம்:—[1]நோக்கியோர். [2]கோடியென். [3]வாளரியனையான். (ருoo)

ருo.—வச்சிரதம்ஷ்டிரன்.

[1]உச்சி ரத்தெரி கதிரென வுருத்தெரி முகத்தன்
நச்சி ரப்படை நாலிரு கோடிக்கு நாதன்
முச்சி ரத்தயில் தலைவற்கும் [2]வெலற்கரு [3]மொய்ம்பன்
வச்சி ரத்தெயிற் றவ[4]னுளன் கூற்றுவன் மாற்றான்.

(இ - ள்.) (மற்றும்), தலையின்மேற்புறத்திலே ஒளிவிளங்குகின்ற சூரி யன்போன்று சினந்து சுவாலிக்கின்ற முகத்தையுடையவனும், மிகவும்மேன் மைபெற்ற எட்டுக்கோடிச்சேனைக்குத்தலைவனும், மூன்றுதலையையுடையசூல ப்படையையேந்திய தலைவனான சிவபெருமானுக்கும் வெல்லுதற்குமுடியாத வலிமையையுடையவனுமாகி, யமனுக்குப்பகையாயிருப்பவனான வச்சிரதம்ஷ் ட்ரனென்று ஒருவனுளன்; (எ - று)

உச்சிரம் - தலையின்மேற்புறம். உகரச்சுட்டு மேலிடத்தையுங்குறிக்குமாத லால், உச்சிரத்துஎன்பதற்கு - இவ்வாறுபொருள்கொள்ளப்பட்டது. ந-உயர் வுப்பொருள்குறிப்பதோரிடைச்சொலென்பர் நச்சினார்க்கினியர்: சிரமென்ற சொல்லும் - இலக்கணையால், உயர்வுப்பொருளைத்தரும்: ஆகவே, நச்சிரம் என்றதொடர்-மிக்கமேம்பாடு என்ற பொருளைக் காட்டிற்று. எரிமுகத்தன்அச் சிரப்படையெனப் பிரிப்பது மோனைத்தொடைக்கு ஏலாது. பி - ம்:—[1]உச்சி ரத்தெறி, உச்சிரத்தது. [2]விலக்கரு. [3]முனைவன். [4]என்றோர்கூற்றிற்கும்வலி யான், உளன்...கூற்றுக்குமாற்றா. (ருoக)

ருக.—பிசாசன்.

அசஞ்ச லப்படை யையிரு கோடிய [1]னமரின்
வசஞ்[2]செ யாதவன் [3]தானன்றிப் பிறரிலா வலியான்
[4]இசைந்த வெஞ்சமத் தியக்கரை வேலொடு முன்னாட்
[5]பிசைந்து [6]மோந்தவன் பிசாசனென் றுளனொரு பித்தன்.

(இ - ள்.) (மேலும்), (போரிற்) சஞ்சலத்தையடையாத [பின்வாங் காதுபொருகின்ற] பத்துக்கோடிச்சேனைக்குத்தலைவனும், போரில் (எவரா லும்) வசஞ்செய்ய [வெல்ல]ப்பெறாதவனும், தானன்றி (வலியாரென்றுசொ ல்லப்) பிறரைப் பெறாத (பெரு)வலிமைபடைத்தவனும், நேர்ந்த கொடும்போ

ரில் இயக்கரை வேரோடும் முன்னாளிற் பிசைந்துமோந்தவனுமான பிசாச னென்னும்பேரைக்கொண்ட (பொருதொழிலிற்) பித்துக்கொண்டவன், ஒரு வன் உள்ளான்;(எ-று.)—வலியவரைக்கணக்கிடும்போது இவனொருவனை வலி யவனென்றுகணக்கிட்டாற் பிறகு இரண்டாவனுக மற்றொரு வலியவனைக் கணக்கிட இவனைப்போன்ற வலியவரில்லையென்பது, 'தானன்றிப்பிற ரிலாவலியான்' என்பதன்பொருள். பி-ம்:—1மலரின். 2செயாதவர். 3தான ன்றிப்பிறிதிலா,தளர்ந்திடவளர்ந்திடும். 4இசைஞ்சு. 5பிசைஞ்சு, 6போந்தவன்.

௬௨.—துர்முகன்.

சில்லி மாப்பெருந் 1தேரொடுங் கரிபரி 2சிறந்த
வில்லின் மாப்படை யேழிரு கோடிக்கு வேந்தன்
3கல்லின் மாப்படி கலக்குவான் 4கனலெனக் காந்திச்
சொல்லு 5மாற்றத்தன் றுன்முக னென்றறந் துறந்தோன்.

(இ-ள்.) (பின்னரும்) சக்கரங்களைக்கொண்ட பெரியஇரதங்களுடனே யானைகளும் குதிரைகளும் சிறந்தவில்வீரப்படைகளுமாகிய ஏழிருகோடிச் சேனைக்குத்தலைவனும், மலையோடுகூடியபெரியபூமியை நிலைகுலையச்செய்பவ னும், (சினத்தினாற்) கனல்போலக் காந்திப்பேசுகின்ற பேச்சையுடையவனு மாகிய அறத்தைக்கைவிட்ட துன்முகனென்பவன் (ஒருவனுளன்);(எ-று.)— பி-ம்:—1தேர்கரிபரியொடும். 2செறிந்த. 3கல்லி, கல்லு. 4கடலென, கடலி னை. 5மாற்றிலன், ஆற்றலின், ஆற்றலன். (௫௦௩)

௬௩.—விருபாட்சன்.

இலங்கை 1நாட்டன்ன வெறிகடற் றீவிடை யுறையும்
2அலங்கல் வேற்படை யையிரு கோடிக்கு மரசன்
3வலங்கொள் வாட்டொழில் விஞ்சையர் பெரும்புகழ் மறைத்தான்
விலங்கு 4நாட்டவ னென்றுளன் வெயிலுக விழிப்பான்.

(இ - ள்.) (அன்றியும், அந்த) அலைமோதுகின்ற கடலிடையிலுள்ள தீவாகிய இலங்கைநாட்டிலே வாழ்கின்ற (வெற்றி)மாலைசூடிய வேலாயுத மேந்திய சேனைகள் பத்துக்கோடிக்குத் தலைவனும், வெற்றியைக்கொண்ட வாட்போர்த்தொழிலில்வல்ல வித்தியாதர (ரைவென்று அவ)ருடையமிக்க புகழை மறைத்தவனும், வெயில்போன்றஒளி வெளிப்படுமாறு (உக்கிரமாக) விழிப்பவனுமான விரூபாட்சனென்றுஒருவன்உள்ளான்: (எ - று.)—விலங்கு தல் - இயற்கையுருவம்மாறுபடுதல்: ஆகவே, விலங்குநாட்டவனென்றது - விரூபாட்சனைக் காட்டிற்று. இலங்கைநாட்டன்னவெறிகடற்றீவிடை என்ப தற்கு - இலங்கைநாட்டையொத்த எறிகடலினிடையிலேயுள்ள தீவில்என்று மாம். பி-ம்:—1நாட்டினன். 2அலங்கை. 3வலங்கள்வாட்பொர. 4நாட்டத்தன்.

௬௪.—தூம்ராட்சன்.

நாம நாட்டிய 1சமனெனி 2ஞென்று மொருவர்
ஏம நாட்டிடை 3யிடாமற்றன் னெயிற்றிடை யிடுவான்
தாம நாட்டிய கொடிப்படைப் பதுமத்தின் றலைவன்
தூம 4நாட்டவ னென்றுளன் றேவரைத் 5துரந்தான்.

(இ - ள்.) (மேலும்),எல்லாநாளிலும் சவமென்றுபேரிடப்பட்டபொருள் என்றால்(அந்தப்பொருளையெல்லாம்) ஒருவர் மயானபூமியிலே இடாமல் தன் பற்களினிடையே இடுபவனும், வெற்றிமாலைநாட்டிய துவசமேந்திய பதும மென்ற எண்ணைக்கொண்ட சேனைக்குத்தலைவனுமாகித் தூமிராட்சனென்று பேர்பெற்று(ஒருவன்) உள்ளான்:(அவன்)தேவர்களை யோட்டியவன்; (எ-று) —பிணம்பிடுங்கிஎன்று கருணையற்றவனைச் சொல்லும் வழக்கு முதலடியில் அறியத்தக்கது. இச்செய்யுள், ஒருபிரதியில் 'போரின்மத்தனும்' என்றஅடுத்த செய்யுளின்பின் காணப்படுகின்றது. பி-ம்:—1சவமெலாம்,சவமெரி. 2நாடொறும். 3இடாவணம். 4நாட்டத்தன். 5தொலைத்தான். (ருCரு)

சஙு.—ரணமஸ்தன்முதலியோர்.

1போரின் 2மத்தனும் 3பொருவய மத்தனும் 4புலவர்
5நீரின் 6மத்தன்ன 7பெருமையர் 8நெடுங்கடற் படையார்
ஆரு மத்தனை வலியுடை யாரிலை 9யமரிற்
பேரு மத்தனை 10யெத்தனை யுலகமும் பெரியோய்.

(இ - ள்.) (மற்றும்) ரணமத்தனும் போர்செய்யவல்ல வயமத்தனும் தேவர்கள் பாற்கடலைக்கடையுமாறுநேர்ந்த மந்தரமலையென்றமத்துப் போன்ற பெருமை பொருந்தியவர்: பரந்த கடல்போன்ற சேனையையுடையவர்; பெரியோனே! போரில்அவரவ்வளவு வலியுடையார் யாவரும் இல்லை; (அவ்வீரரால்) எத்தனைஉலகம்உண்டோ அத்தனையுலகமும் நிலைகுலையும்; (எ - று.)—வய-வலியுமாம். நீர்-இலக்கணையால், கடலையுணர்த்திற்று. பி - ம்:—1போருள். 2மத்தெனும். 3போருக்கு, பொருவரு. 4இருவர், உலவா,புலவா. 5நேரின். 6மத்தெனும், மத்தனும். 7பெருமையன். 8நெடும்படைத்தலைவர். 9அவரால். 10எத்தனையுலகெலாம், உலகமும்வானமும். (ருoசு)

சஎ.—இதுவும் அடுத்த கவியும் ஒருதொடர்: இராவணனுடைய சேனாபதியான பிரகத்தனைப்பற்றிக் கூறும்.

இன்ன தன்மைய ரெத்தனை 1யாயிர ரென்கேன்
அன்ன வன்பெருந் துணைவரா யமர்த்தொழிற் கமைந்தார்
சொன்ன aசொன்னவா படைத்2துணை யிரட்டியின் றொகையான்
3பின்னை 4யெண்ணுவா ன் பிரகத்த னென்றொரு பித்தன்.

(இ - ள்.) அந்தஇராவணனுக்குப் பெருந்துணைவராகிப் போர்த்தொழிலிலமைந்தவர் இப்படிப்பட்டதன்மையுடையவர் எத்தனையாயிரவரென்று கணக்கிட்டுச் சொல்லவல்லேன்?[மிகப்பலரென்றபடி]; (இவர்க்குப்) பின்னும் மதிப்புடன்கூறத்தக்கவன், கீழ்மிகுதியாகச்சொல்லப்பட்ட வாறுகவுள்ள அந்தப் படைத்துணையின் இரட்டிப்பானபடைத்தொகையையுடையவனாகிப் பிரகத்தனென்றுசொல்லப்படுகின்றபோர்ப்பித்துக்கொண்டவன்,—(எ-று.)—சேனைகாவலன்என அடுத்தசெய்யுளில்முடியும். a'சொன்னவர்'என்றும் படிக்கலாம். பி-ம்:—1ஆயிரம். 2துணைக்கிரட்டி, தொகைக்கிரட்டி. 3பின்னர். 4எண்ணுவர்.

௪௭. சேனை காவல னிந்திரன் சிந்தூரச் சென்னி
யானை கால்குலைந் தாழியோ ரேழும்விட் டகல
ஏனை வானவ ரிருக்கைவிட் [1]டிரியலுற் றலையச்
சோனை மாரியிற் சுடுகணை பலமுறை [2]துரந்தான்.

(இ - ள்.) (அந்தஇராவணனது)சேனைத்தலைவன்; (அவன்), சிந்தூரமப்பிய மத்தகத்தையுடைய இந்திரனது ஐராவதமென்னும்யானை வலிகுலைந்து எழுசமுத்திரத்தையுடைய இவ்வகலிடத்தைவிட்டு அப்பாற்செல்லவும், மற்றுமுள்ளவானவர் தம்மிருப்பிடத்தைவிட்டுநிலைகுலைந்து அலையவும், விடாப்பெருமழைபோலச் சுடுந்தன்மையுள்ள அம்புகளைப் பலமுறை எய்தான்; (எ - று.)—யானைச்சென்னியில் அலங்காரமாகச் சிந்தூரம் அப்புவ ரென்க. பி-ம்:—[1]உலைதலுற்றிரிய, இரியல்போயுலைய. [2]சொரிந்தான். (௫௦௮)

௪௮.—கும்பகர்ணன்.

தம்பி முற்பகற் சந்திரர் நால்வரிற் றயங்கும்
[1]கும்ப [2]மாக்கரிக் கோடிரு கைகளாற் [3]கழற்றிச்
செம்பொன் மால்வரை மதம்பட்ட தாமெனத் திரிந்தான்
கும்ப கன்னனென் றுளன்பண்டு தேவரைக் குமைத்தான்.

(இ-ள்.) மத்தகத்தைக்கொண்ட பெரிய (ஐராவதமென்னும்)யானையின் பிளவுபட்டுத்தோன்றுதலையுடைய சந்திரர்நால்வர்க்குஒப்பாக விளங்குகின்ற தந்தங்களை இரண்டுகையாலும் (வேரோடு) முன்னைபிடுங்கி (ப்பின்) செம்பொன்மயமானபெரியமலையொன்று மதம்பொருந்தித் திரிவதுபோலுமெனச் சொல்லுமாறு(செருக்குடன்)திரிந்தவனாய், முன்புதேவரைக் குமைத்தவனை கும்பகர்ணனென்று (இராவணனுக்குத்) தம்பியொருவன் உளன்; (எ-று.)—பகல் - பிளவுபடுதல். பி - ம்:—[1]கம்பம். [2]மால். [3]வாங்கி. (௫௦௯)

௪௯.—இந்திரசித்து.

கோளி ரண்டையுங் கொடுஞ்சிறை வைத்தவக் குமரன்
மூளும் வெஞ்சினத் திந்திர சித்தென [1]மொழிவர்
ஆளு மிந்திரற் கன்னவன் பிணித்ததற் பின்னைத்
[2]தாளு மார்பினுந் தோளினு முள[3]வினந் தழும்பு.

(இ - ள்.) (சூரியன் சந்திரன் என்ற) இரண்டுகிரகங்களையும் கொடிய சிறையில்வைத்த அந்த(இராவணனது)குமாரன், மேன்மேல்தோன்றுகின்ற வெவ்விய சீற்றத்தையுடைய இந்திரசித்தென்று சொல்வார்; அவ்விந்திரசித்து (அவ்விந்திரனைச்சிறையிலிடுமாறு) கட்டியபிறகு, (மூவுலகத்தையும்) ஆட்சிபுரிகின்ற அவ்விந்திரனுக்குப் பாதங்களிலும் மார்பிலும் தோள்களிலும் இன்னும் கட்டிய தழும்பு உள்ளன; (எ - று.)—பி - ம்:—[1]மொழிவான். [2]தாளினும்முள. [3]இனும்.
(௫௧௦)

௫௦.—அதிகாயன்.

தன்னை யுந்தெறுந் [1]தருமமென் றிறையனுந் [2]தாழான்
[3]முன்ன வன்றரப் பெற்றதோர் முழுவலிச் சிலையான்

அன்ன வன்றனக் கிளையவ னப்பெய [4]ரொழித்தான்
பின்னொ ரிந்திர னிலாமையிற் பேரதி காயன்.

(இ - ள்.) (தான் தருமத்துக்குமாறாக நடந்தால்) தன்னையும் அந்தஅறக்கடவுள் அழிக்குமென்று சிறிதும் மனமிரங்காதவனும் [கூசாது அறத்திற்கு மாறானதொழிலைச்செய்பவனும்], பிதாமகக்கடவுள் தரப்பெற்றதாகிய நிறைந்த வலிமையையுடைய வில்லைக்கொண்டவனும், அந்தஇந்திரசித்துக்கு இளையவனும், பின்னும்ஒருஇந்திரன் இல்லாமையினாலே (இந்திரசித்துஎன்ற) அப்பெயரை(த் தான்பெறாது)நீங்கப்பெற்றவனுமானவன், அதிகாயனென்பவன்.

இந்திரசித்துப்போலவே இந்திரனைச்சயிக்கும் பேராற்றல்படைத்தவன், அவனதுதம்பியாகிய இந்த அதிகாயனுமென்பது - 'பின்னொரிந்திரனிலாமையிலப்பெயரொழித்தான்' என்பதன் கருத்து: சொல்லவேண்டிய பொருளை நேரேசொல்லாமல் வேறுவகையாகச்சொன்னது-பிறிதினவிற்சியணி. பி-ம்:- [1]தருமமன்று. [2]தாழின். [3]முன்னரன். [4]ஒழிந்தான்.　　(ருகக)

ருக.—தேவாந்தக நராந்தக திரிசிரசுகளென்னும் இராவணன்புதல்வர்.

தேவ ராந்தக னராந்தகன் றிரிசிரா வென்னும்
மூவ ராந்தகை முதல்வராந் தலைவரு முனையிற்
போவ ராந்தகை யழிவ ராமெனத் தனிபொருவார்
ஆவ ராந்தகை யிராவணற் கரும்பெறற் புதல்வர்.

(இ - ள்.) தேவாந்தகன் நராந்தகன் திரிசிராஎன்னும் மூவர், 'பெருமைபெற்ற திரிமூர்த்தியரும் போரிலெதிரிட்டுப் போவாராயின்(தமது)வலிமைக்குணம் அழிபவராகுவர்'என்று சொல்லுமாறு தனித்தனிப்பொருபவராவர்; (அன்னார்), பெருமைக்குணமுடையவனான இராவணனுக்குப் பெறுதற்கு அரியபுதல்வர்; (எ - று.)—இரண்டாமடியின்முதலிலுள்ள ஆம் - அசை. போவராம் அழிவராம்என்பது - ஊகித்தற்பொருளைக் குறிக்கும். தேவாந்தகனென்றசொல்லின்பொருள் தேவர்க்குஅந்தகன்என்பதென விளங்குமாறு தேவர்அந்தகன் எனப்பிரித்துக் கூறவந்தஆசிரியர் நீட்டல்விகாரமாக தேவராந்தகன் என்றார்.　　(ருகஉ)

ருஉ.—விபீஷணன் இங்ஙனம் துணைவர்வலியைக் கூறியபின்
இராவணன்நிலையை ஏழுகவிகளாற் கூறுகின்றான்.

இனைய தன்மையர் வலி[1]யிஃ திராவண னென்னும்
அனைய வன்றிறம் யா[2]னறி யளவெலா மறைவன்
தனைய னான்முகன் றகைமகன் [3]சிறுவற்குத் தவத்தால்
[4]முனைவர் கோன்வர முக்கணான் வரத்தொடு முயர்ந்தான்.

(இ - ள்.) இப்படிப்பட்ட தன்மையையுடைய துணைவரின் வலி, இவ்வாறானது; இராவணனென்ற அவனதுதிறத்தை யான் அறிந்தவளவினால் முழுதும் கூறுவேன்; நான்முகனது நற்குணம்வாய்ந்த புதல்வனான புலஸ்தியனது புத்திரனான விசிரவமுனிவனுக்குப் புதல்வன், தான் செய்த தவத்தி

னால் அந்தணர்தலைவனான பிரமதேவனது வரத்தோடு த்ரிணேத்திரனான சிவபெருமானது வரமும் பெற்று மேம்பட்டான்; (எ - று.)

நான்முகன்தகைமகன் சிறுவற்குத் தனையனென்க. தவத்தினாற்பிரம தேவனிடமும், சிவபெருமானிடமும் வரம்பெற்றவன் இராவண னென்ற வாறு. தனையன் = தநயன். பி-ம்:—[1]இவை. [2]அறிவன. [3]சிறுவன்முன்றவத் தான். [4]முனைவர்கோனவன், முனைவகேளவன். (௫௬௩)

௫௬௪. எள்ளி லைம்பெரும் [1]பூதமும் யாவையு [2]முடைய
புள்ளி [3]மா னுரி யாடைய னுமையொடும் [4]புணர்ந்த
வெள்ளி யம்[5]பெருந் தடங்கிரி வேரொடும் வாங்கி
யள்ளி விண்டொட வெடுத்தன னுலகெலா மனுங்க.

(இ - ள்.) எள்ளுதலில்லாதனவான பெரிய பூதங்களையும் மற்றுமுள்ள பொருள்களையும் சுவாதீனமாகவுடையவனும் புள்ளிமானுரிவையையாடை யாகவுடையவனுமான சிவன் பார்வதீதேவியுடனே சேர்ந்துள்ளவெள்ளிமய மான அழகிய பெரியமலையை வேரோடும்அள்ளிப்பிடுங்கி உலகெலாம்வருந்த வானத்திற்படும்படி எடுத்தான்; (எ-று.)—இதனால், இராவணன்வெள்ளிமலை யெடுத்த சிறப்பைக் கூறுகின்றான்.

இனி, பூதபிரேதபிசாசங்களென உலகத்து இழித்துக்கூறப்படுவனபோ லல்லாமல், சிவனது பூதகணங்கள் பெருமைபெற்றன என்பார் 'எள்ளிலைம் பெரும்பூதம்' என்றாரென்றலுமொன்று. பி - ம்:—[1]பூதங்கள். [2]சூழ்ந்த;சூழப். [3]மாவுரி. [4]பொருந்தும். [5]பெருங்கிரியினை. (௫௬௪)

௫௬௫. ஆன்ற வெண்டிசை யுலகெலாஞ் சுமக்கின்ற யானை
[1]யூன்று கோ[2]டிறத் [3]திரள்புயத் [4]தழுத்திய [5]வொண்மை
தோன்று மென்னவே துணுக்கமுற் [6]றிரிவரத் தொகுதி
மூன்று கோடியின் மேலொரு முப்பத்து மூவர்.

(இ - ள்.) அந்தத் தொகுதியான முப்பத்துமுக்கோடிக்கணக்கான தே வர்,—பரந்த எண்திசைகளிலுமிருந்து உலகமுழுவதையுஞ் சுமக்கின்ற அஷ்ட திக்கஜங்களின் ஊன்றிய தந்தங்கள் முறிந்திடும்படி திரண்டபுயத்திலே பதிய வைத்த விளக்கமானவன்மை தோன்றுமென்றபோதே [திக்கஜங்களின்தந்தம் முறிந்தநிலையில் அவ்விராவணனது வலிமைகாணப்பட்டதாக அப்போதே] அச்சமுற்று நிலைகெட்டோடுபவராயினர்; (எ - று.)—முப்பத்துமுக்கோடித் தேவர்கள் நிலையழிந்தொழிந்தமையை இதனாற் கூறுகின்றான்.

இந்தஇராவணனதுமேலே முட்டுமாறு திக்கஜங்கள் தம் தந்தங்களையழு த்த, ஊன்றிய அத்தந்தங்கள் அவன்புயத்தில் ஊடுருவிப் பாயமாட்டாது முறிந்ததனால், அந்தஇராவணனது வலிமை விளக்கமாகத் தமக்குத் தெரிய, பொருமாறுசென்றிருந்த முப்பத்துமுக்கோடித்தேவர்களும் அப்போதே நிலை யழிந்தொழிந்தன ரென்றவாறு. முப்பத்துமுக்கோடித்தேவர் - அஷ்டவசுக் கள், ஏகாதசருத்திரர், துவாதசாதித்தர், இரட்டையரான அசுவினிதேவர்கள்

என்றஇந்த முப்பத்துமூவரைத் தலைவராகக்கொண்டவர். பி-ம்:—[1]ஊன்ற. [2]உற. [3]மணிப். [4]அழுந்திய. [5]உண்மை, உரவோன். [6]அறிவரத், இரிதரத், இரிவன. (ருகரு)

ருரு. குலங்க ளோடுந்[1]தங் குலமணி முடியொடுங் [2]குறைய
[3]அலங்கல் வாள்கொடு காலகே யரைக்[4]கொன்ற தற்பின்
இலங்கை வேந்தனென் றுரைத்தலு மிடியுண்ட வரவிற்
கலங்கு மாலினந் தானவர் தேவியர் கருப்பம்.

(இ - ள்.) (தமது) குலங்களோடும் தமது சிறந்தமணிகளழுத்திச்செய்யப்பட்ட கிரீடங்களையணிந்தசிரசுகளோடும் ஒழியும்படி காலகேயரென்பவரை வெற்றிமாலைபுனைந்த வாளைக்கொண்டு (இராவணன்) கொன்றபிறகு, இலங்கைவேந்தனென்றபேச்சை (எவரேனும்) சொன்னாலும் அம்மாத்திரத்திலும் இடியொலிகேட்ட அரவுபோல இப்போதும் தானவரின் மனைவிமாருடையகருப்பம் கலங்கும்; (எ - று.)—ஆல்-தேற்றம். காலகேயர்தோற்றமை கூறியது. உலகவழக்குநவிற்சியணியாக 'தானவர்தேவியர்கருப்பம்கலங்கும்' என்றார். பி-ம்:—[1]தன். [2]குன்றை. [3]அலங்கு. [4]கொன்றவதற்பின். (ருகசு)

ருசா. குரண்ட மாடு[1]நீ ரளகையி னொளித்துறை குபேரன்
[2]திரண்ட மாடுந்தன் [3]திருவொடு நிதியமு மிழந்து
புரண்டு மான்றிரள் புலிகண்ட தாமெனப் போனான்
இரண்டு மானமு மிலங்கைமா நகரமு மிழந்து.

(இ - ள்.) குரண்டமென்னும்பறவை மூழ்குகின்ற நீரையுடைய அளகாபுரியிலே ஒளித்துவாழ்கின்ற குபேரன் (தனது) திரண்டசெல்வத்தையும் தனதுஇராச்சியலட்சுமியுடனே நவநிதிகளையும் இழந்து, மான்திரள் புலியைக்கண்டதையொப்ப (அச்சத்தாற் கீழ்வீழ்ந்து) புரண்டு இரண்டுவகைப்பட்ட மானத்தையும் இலங்கைமாநகரத்தையும் (இவ்விராவணனால்) இழந்து சென்றான்; (எ - று.)—குபேரன்தோற்றமை கூறியது.

இராவணன் தவஞ்செய்து வரம்பெற்றபின் தாய்பாட்டனான சுமாலி 'பூர்விகராட்சசர்களின் வாழிடமான இலங்கையைக் கைப்பற்றுவாய்' என்று இராவணனுக்கு உபதேசிக்க, அவ்விராவணனும் அச்சொற்படியே குபேரனிடத்து இலங்கையைவிட்டிடுமாறு ஒருதூதுவனையனுப்ப,குபேரனும் இலங்கையை இராவணனுக்குவிட்டு, அளகாபுரியை யடைந்தான்: அங்ஙனம் அளகையிற் குபேரன்வாழுநாளில்,திக்குவிசயஞ்செய்யப்புறப்பட்ட இராவணன் மற்றைத்திக்குப்பாலகரோடு பொருததுபோலவே, குபேரனோடும்பொருது அவனதுசெல்வத்தையும் புஷ்பகமென்னும்விமானத்தையுங் கவர்ந்திட்டானென்பது, வரலாறு. மானம் - பெருமை விமானம் என்ற இருபொருளையுடையது: தம்பியுடன்பொரமாட்டாது தோற்றதனாற் குபேரன் மானத்தையிழந்தவனானான்; புஷ்பகத்தையும் அப்போரிற்பறிகொடுத்தது பற்றி, 'இரண்டு மானமுமிழந்து, என்றார். குரண்டம்-ஒருநீர்ப்பறவை: கொக்கின்சாதியைச்சேர்ந்ததென்பர். பி-ம்:—[1]பேர். [2]இரண்டு. [3]நிதியமுந்திருவொடும். (ருகஎ)

௫எ. புண்ணுஞ் செய்தது முதுகெனப் புறங்கொடுத் தோடி
யுண்ணுஞ் [1]செய்கையத் தசமுகக் கூற்றந்[2]தன் னுயிர்மேல்
நண்ணுஞ் செய்கைய தெனக்கொடு நாடொறுந் தன்னாள்
எண்ணுஞ் செய்கைய னந்தகன் றன்பத மிழந்தான்.

(இ - ள்.) 'உயிரைக்கொள்ளுந்தன்மையோடுகூடிய அந்தத்தசமுகனாகிய கூற்றமானது முதுகையும் புண்செய்திட்டது' என்று புறங்காட்டியபடியே யோடித்தன்பதவியை யிழந்தவனாய், யமன், தன்னுயிரின்மேலும் வருகின்ற செய்கையது என்றுகொண்டு நாடோறும் தன்வாழ்நாளைக்குறித்து எண்ணமிடுஞ்செய்கையனானன்; (எ - று.)—யமன்தோற்றமை கூறியது.

இவ்விராவணனதுபடையால் புண்பட்டு முதுகுகொடுத்துஓடித் தன் பதவியையிழந்த யமன் 'எங்கே நம்முடைய உயிரையும் அந்தஇராவணனென்னுங்கூற்றம்கொள்ளவருகின்றதோ?' என்று தன்வாழ்நாளைக்குறித்து எண்ணமிடுபவனாயுள்ளானென்றவாறு. முதுகும்புண்செய்தது என உம்மையைமாற்றியுரைக்க. 'புறப்புண்படுதல் வீரத்திற்கு இழுக்காதலால், புண்ணுஞ்செய்தது முதுகு' என்று யமன் புறங்கொடுத்தோடும்போது வருந்திக்கூறலாயினன். பி-ம்:—[1]செய்கையில். [2]தன்னுயிரை. (௫௧௮)

௫அ. இருணன் காசற வெழுகதி ரவனிற்க [1]வென்றும்
அருணன் கண்களுங் [2]கண்டிலா விலங்கைபண் டமரிற்
பருணன் றன்பெரும் பாசமும் பறிப்புண்டு [3]பயத்தால்
வருண னுய்ந்தனன் மகரநீர் வெள்ளத்து [4]மறைந்து.

(இ - ள்.) விரைவாக இருள் நன்றாகவொழியும்படி உதயமாகின்ற சூரியன் கிடக்கட்டும்; எப்போதும்(அந்தச்சூரியனதுசாரதியான) அருணனுடைய கண்களும் கண்டிராததாகும் அந்தஇலங்கை; போரில் தோர்ந்தவனான் வருணன் முற்காலத்து (அவ்விலங்கைமன்னவனாகிய இராவணன் புரிந்தபோரில்) தன்னுடைய பெருமைவாய்ந்த பாசமென்னும்படையும் (அவ்விராவணனால்) பறித்துக்கொள்ளப்பெற்று அச்சத்தாற் கடல்வெள்ளத்தே மறைந்து உயிர்தப்பினன்; (எ - று.)—வருணன்தோற்றமைகூறியது. பாசம் - கயிற்று வடிவான ஆயுதம். பருணன் = பருணிதன்: விகாரம். ஆஶு - விரைவு என்னும்பொருளுள்ளவடமொழியிடைச்சொல். பி-ம்:—[1]இன்றும். [2]கண்டில. [3]புயத்தால். [4]மறைந்தே. (௫௧௯)

௫௯.—அவ்விராவணன் உன்னால்தான் ஒழித்தற்கு உரியவனெனல்.

என்று லப்புறச் சொல்லுகே னிராவண [1]னென்னுங்
குன்று லப்பினு [2]முலப்பிலாத் தோளினான் கொற்றம்
இன்று லப்பினு நாளையே யுலப்பினுஞ் சிலநாட்
சென்று லப்பினு நினக்கன்றிப் [3]பிறர்க்கென்றுந் [4]தீரான்.

(இ - ள்.) மலைகளழிந்தாலும் அழிதலில்லாத தோள்வலிமையையுடையவனை இராவணனென்றுபேரைக்கொண்ட மகாவீரனது கொற்றத்தை என்றைக்கு முழுவதும் சொல்லுவேன்? [எத்தனைநாள் சொன்னாலும் அவ்விராவ

ணனது வெற்றிசொல்லிமுடிக்கமுடியாதபடி மிகுதியானதென்றபடி]; (அவ் விராவணன்), இன்றைக்கேயழிவதானாலும் நாளைக்கே யழிவதானாலும் சில நாள்கழிந்து அழிவதானாலும் உன்னாலன்றிப் பிறரால் என்றைக்கும் ஒழியான்; (எ - று.)—இங்ஙனம்வெற்றிபெற்ற இராவணன் உன்னால்தான் வென்றொழித்தற்குஉரியவ னென்றவாறு. பி-ம்:—[1]மேருக். [2]உலப்பருத். [3]பிறர்க்கொன்றும். [4]தீரா. (ருஉ0)

கூ0.—அநுமான்திறம் இனி ஏழுசெய்யுள்களாற் கூறப்படும்.

ஈடு பட்டவ ரெண்ணிலர் தோரணத் தெழுவாற்
பாடு பட்டவர் படுகடன் மணலினும் பலராற்
சூடு [1]பட்டது [2]கொடிநக ரடுபுலி துரந்த
ஆடு [3]பட்டதே [4]பட்டன ரநுமனா லரக்கர்.

(இ - ள்.) அநுமனால், (இலங்கையின்) கட்டுவாயிலிலுள்ள உழலைமரத்தால் (தமது) வலியொடுங்கிய அரக்கர், எண்ணிலாதவராவர்; (அடிபட்டு) அழிந்தொழிந்தவரோ ஆழமானகடலின்மணலினும் பலராவர்; கொடியினாலலங்கரிக்கப்பெற்றுள்ள இலங்காநகரமானது, நெருப்பினாலெரியுண்டது; (மிச்சமான அரக்கரும்) கொல்லுந்தன்மையுள்ள புலியினால் துரத்தப்பட்ட ஆடுகள் அடைந்துள்ள நிலைமையையேயடைந்துள்ளார்; (எ-று.)

சீதையுள்ளவிடத்தைத்தேடியறிந்துவருமாறுஅனுப்பப்பட்ட அனுமான் கடல்கடந்துஇலங்கையிற்சீதாபிராட்டியாரைக்கண்டு செய்திசொல்லி, தான் கண்டமைக்கு அறிகுறியாகக் கணையாழிபெற்றுக்கொண்டு தான்வந்தசெய்தியை இராவணனுக்குத்தெரிவிக்குமாறு அசோகவனிகையையழித்தபின் போருக்குவந்தவர்களைபெல்லாம் பொருது வென்று பஞ்சசேனாபதிகள் முதலியோரை வதைத்தல் அட்சகுமாரனைத்தரையில் தேய்த்தல்முதலியனவாகச்செய்த வீரச்செய்கையை விபீஷணன் எடுத்துக்கூறுகின்றானென்க. அநுமானுடையவீரத்திற்கு இலக்காகாத மற்றுமுள்ள அரக்கரும் மனத்திகில் கொண்டுள்ளார் என்பது, ஈற்றடியிற்கூறியபொருள். பி - ம்:—[1]பட்டவர். [2]தொன்னகர். [3]பட்டது. [4]பட்டதன்று. (ருஉக)

கூக. காய்த்த வக்கணத் தரக்கர்த முடலுகு கறைத்தோல்
நீத்த வெக்கரி [1]னிறைந்துள கருங்கட னெருப்பின்
வாய்த்த வக்கனை வரிசிலை மலையொடும் வாங்கித்
தேய்த்த வக்குழம் [2]புலர்ந்தில விலங்கையின் [3]தெருவில்.

(இ - ள்.)(அநுமான்) சினங்கொண்ட அந்தக்கணத்திலே அரக்கருடைய உடலினின்று சிந்திய இரத்தக்கறையோடுகூடிய உடற்றோல்கள், கருங்கடலின் தொகுதியான மணற்குன்றுகள்போல நிறைந்துள்ளன; நெருப்புப்போல் உக்கிரங்கொண்டவனான அட்சகுமாரனை மலைபோன்ற கட்டமைந்த வில்லுடனே கையாற்பிடித்து (இவ்வநுமான் பூமியிலே கறகறவெனத்)தேய்த்ததனாலான அந்தக்குழம்பானது இலங்கையின்தெருவிலே(இன்னும்)உலர்ந்தபாடில்லை; (எ - று.)

அக்ஷன்என்றவடசொல் - அக்கனெனத்திரிந்தது. நீத்தம் - இலக்கணை யால், தொகுதியென்றபொருளைத் தந்தது. எக்கர்-மணற்குன்று. கருங்கடல் நெருப்பின்வாய்த்தளனஎடுத்து-கருநிறமாகத்தோன்றுகின்ற கடலினிடையே யுள்ள வடவைக்கனல்போன்ற அக்கன் எனினுமாம். ஒருபிரதியில் "வெம்பு மாகடல்" (சுச) "எங்குலத்தவர்" (சுங), "சேனைக்காவலர்", (சுஉ) "காய்த் தவக்கணத்து" (சுக) என்ற முறையிலும், மற்றொருபிரதியில் "எங்குலத்தவர்", "வெம்புமாகடல்," "சேனைக்காவலர்" "காய்த்தவக்கணத்து" என்ற முறை யிலும்உள்ளன. பி-ம்:—1நிறைந்துகு. 2உலர்ந்திலவின்னமும். 3தெருவும்.

சுஉ. சேனைக் காவல ரோரைவ ருளர்பண்டு தேவர்
வானைக் காவலு 1மானமு மாற்றிய மறவர்
தானைக் 2கார்க்கருங் 3கடலொடுந் தமரொடுந் 4தாமும்
யானைக் காற்பட்ட செல்லென 5வொல்லையி னவிந்தார்.

(இ - ள்.) முற்காலத்திலே தேவருடைய சுவர்க்கலோகத்தைக் காவலும் மானமும்போகுமாறுசெய்த பெருவீரரான சேனபதிகள் ஓர் ஐவர் உளர்;(அன் னார், தமது) சேனையாகிய கருநிறம்பொருந்திய பெருங்கடலோடும் தம் முடைய சுற்றத்தாரோடும் தாமும், யானையின்பாதத்தின்கீழகப்பட்ட செல் லுப்புற்றுப்போல விரைவில் அழிந்தார்கள்; (எ - று.)—சேனைக்காவலர் ஐவ ரின்பெயர் - விருபாட்சன், யூபாட்சன், துர்த்தர்ஷன், ப்ரகஸன், பாசகர்ணன் என்பன. கருங்கடல் - பெருங்கடல். பி-ம்:—1அரணமும். 2கார்வரும். 3கட லொடுதமரொடு. 4தவிர. 5ஒல்லென. (ருஉங)

சுங. எங்கு லத்தவ ரெண்பதி னாயிர 1ரிறைவர்
கிங்க ரப்2பெயர்க் கிரியன்ன தோற்றத்தர் கிளர்ந்தார்
வெங்க ரத்தினுங் 3காலினும் வாலினும் 4விலங்கிச்
சங்க ரற்கழி 5முப்புரத் தவரெனச் சமைந்தார்.

(இ - ள்.) எமதுகுலத்தில்தானே பிறந்தவரும்(தொகையினால்) எண்பதி னாயிரவராகவுள்ள தலைவருமான கிங்கரரென்று பெயரைக்கொண்டு மலை போன்ற தோற்றமுள்ளவரான வீரர் (போர) உற்சாகங்கொண்டு எழுந்தனர்; (அவர்கள்; அனுமானால்) வேகமமைந்த கைகளினாலும் கால்களினாலும் வாலினா லும் உயிர்நீங்கிச் சங்கரனுக்கு அழிந்த முப்புரத்துஅசுரர்கள்போல அழிந்தார் கள்; (எ - று.)—கிங்கரரென்று இவ்வீரர்கள் வழங்கப்பெறுவதுபற்றி, 'இவர் கள் அரக்கரல்லரோ?' என்று சங்கிக்கவேண்டா என்பான் 'எங்குலத்தவர்' என்றான். பி-ம்:—1இறைவ. 2பெருங். 3மழுவினு மெழுவினும். 4வீக்கிச், வீக் கச். 5திரிபுரத்தவர். (ருஉச)

சுச. வெம்பு 1மாக்கடற் சேனை 2கொண் டெதிர்பொர வெகுண்டான்
அம்பு 3மாயிரத் தாயிர மிவன் 4புயத் தழுத்தி
உம்பர் வானகத் தொருதனி 5நமனைச்சென் றுற்றான்
சம்பு மாலியும் 6வில்வி றுத் தருக்குண்டு தலைவ.

(இ - ள்.) தலைவனே! சம்புமாலியென்பவனும் கோபித்துச்செய்கின்ற பெரியகடல்போற்பரந்த சேனையைக்கொண்டு எதிரேபொருமாறு வெகுண்ட

னுகி, பலவாயிரக்கணக்கான அம்புகளை இந்தஅநுமானது புயத்திலே பதியு மாறுஎய்து, (பின்பு தன்) வில்லினாலே சுருக்கிடப்பெற்று ஒப்பற்ற தனித்த யமனையடைந்து [உயிர்கொள்ளப்பட்டு] மேலிடத்துள்ள வீரசுவர்க்கத்தைச் சென்றுசேர்ந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]மாகடல். [2]கண்டு. [3]ஆயிரமாயிரம். [4]சிரத்து. [5]யமனைச். [6]வாலினால். (ருஉரு)

௬ரு. சொன்ன மாமதி லிலங்கையின் [1]பரப்பினில் [2]துகைத்துச்
சின்ன மானவர் [3]கணக்கிலர் [4]யாவரே தெரிப்பார்
இன்ன மாருளர் வீரர்மற் றிவன்சுட வெரிந்த
அன்ன மாநக ரவிந்ததக் குருதியா [5]லகன்று.

(இ - ள்.) சொர்ணமயமான பெரிய மதிளாற் சூழப்பெற்ற இலங்காபுரி யின்பரப்பில் (அநுமானால்) துகைப்புண்டு தலையறுபட்டவர் கணக்கில்லாதவ ராவர்:(அதனை)யாவரே அளவிட்டுச்சொல்லவல்லவர்? இவ்வனுமான்கொளுத் தியதனால் எரிந்துபோன அந்தப்பெரிய இலங்காநகரமானது (இவனாற்கொல் லப்பட்ட அந்த அரக்கரது) இரத்தத்தால் தீநீங்கி யவிந்தது: (இங்ஙனாயின் இவனைப்பார்க்கிலும் மேம்பட்ட) வீரர் இனி யார் உள்ளார்? (எ - று.)—மற்று- அசை. பி-ம்:—[1]பரப்பிது. [2]தொலைந்து. [3]கணக்கினை. [4]நீர்களோதெரிகிர், நீர்க ளோதெரிமின். [5]அன்று, அரக்கர். (ருஉ௬)

௬௬. [1]விலங்கல் [2]வெந்தவா வேறினி [3]விளம்புவ தெவனோ
அலங்கன் மாலையுஞ் சாந்தமு மன்றுதா னணிந்த
கலங்க ளோடுமச் சாத்திய துகிலொடுங் கதிர்வாள்
இலங்கை வேந்தனு மேழுநாள் விசும்பிடை யிருந்தான்.

(இ - ள்.) ஒளிபொருந்திய வாட்படையையுடைய இலங்கைவேந்தனான இராவணனும், அன்று தான் அணிந்த அசையுந்தன்மையுள்ள மாலையும் சந் தனமும் ஆபரணங்களும் அந்தச்சாத்திய ஆடையும் ஆகியஇவற்றுடனே (இலங்கையில் தங்கமுடியாமல்) ஏழுநாள் ஆகாயத்திலேயே இருந்தான் (என் றால்), திரிகூடாசலமானது வெந்தவகையை வேறாக இனிச் சொல்லுவது எதுக்காக? (எ - று.)—பி-ம்:—[1]இலங்கை. [2]வெந்தது. [3]விளம்புமாறெவனோ.

௬எ.—அநுமனால் எரிந்தஇலங்கையைப் பிரமன் மீண்டும் இயற்றியமை.

[1]நொதுமற் றிண்டிற [2]லரக்கன [3]திலங்கையை நுவன்றேன்
அதுமற் றவ்வழி யரணமும் பெருமையு மறைந்தேன்
இதுமற் [4]றெய்திய திராவண னென்பவ னேவப்
பதுமத் தண்ணலே பண்டுபோ லந்நகர் படைத்தான்.

(இ - ள்.) மிக்கவலிமைபடைத்த இராவணனது இலங்கையினுற்பத்தி யைச் சொன்னேன்; அதுக்குமேலே மற்றும் அவ்விலங்கையின் அரணமைப் பையும் பெருமையையும் பட்சபாதமில்லாமற் சொன்னேன்; இந்த இலங்கா நகரமானது அவ்விடத்து நேர்ந்தது; (பின்பு), இராவணனேவலினால் பது மத்திலிருப்பவனான பெருமைபெற்ற நான்முகக்கடவுளே முன்புபோல எரி யுண்ட அந்நகரைப் படைத்தான்; (எ - று.)

அநுமானால் எரியுண்ட இலங்கையைத் தெய்வத்தச்சனைக்கொண்டு பிரமன்படைத்தானென்றுகீழ் இராவணன்,மந்திரப்படலத்துக்கூறியமை காண்க. எரியுண்டபின் மீண்டும் இலங்கை நிருமிக்கப்பட்டமை இதனாற் கூறப்பட்டது: இச்செய்யுள் ஒருபிரதியில் "காந்துமானையில்" (௬அ) என்பதன்பின் உள்ளது.பி-ம்:—[1]நொதுமத்தின். [2]அரக்காது. [3]இயற்கையும். [4]இவ்வழியெய்தியதிராவணன்,இவ்வயினெய்தியதிராவணன், அவ்வழியெய்தியதிராவணன்.

௬அ.—விபீஷணன் தான்வந்துசேர்ந்தமைக்கும் அநுமான்வீரச்செயலே காரணமெனல்.

காந்து [1]மானையிற் கரன்முதல் வீரருங் கவியின்
வேந்து [2]மென்றிவர் விளிந்தவா கேட்டன் [3]றவ்விலங்கை
தீந்த வாகண்டு மரக்கரைச் [4]செருவிடை முருக்கிப்
போந்த வாகண்டு நானிங்குப் புகுந்தது புகழோய்.

(இ - ள்.) புகழ்பெற்றோனே! கோபிக்கின்ற களிறுபோன்ற கரன் முதலிய வீரரும் குரங்குக்குஅரசனான வாலியும் என்றஇவர்கள் (உம்மால்) இறந்தொழிந்தமையைக் கேட்டதனாலன்று (நான் இங்கு வந்தது: இவ்வநுமானால்) அவ்விலங்கை யெரியுண்டதைக் கண்டதனாலும், (இவன்) அரக்கர்களைப் போரிலேயழித்துவந்தது கண்டதனாலுமே நான் இங்கே வந்தது; (எ-று.)—மகாவீரனான இவ்வநுமானை அடியனாகவுடையவன் புருஷோத்தமனாக இருக்கவேண்டுமென்ற எண்ணத்தினாலேயே நான் உம்மையடைந்தே னென்றனன் விபீஷணன். பி-ம்:—[1]மானையும், வாளியின். [2]அன்னவர். [3]விலங்கல். [4]இவன்செருமுருக்கி. (௫உ௧)

௬௯.—இராமபிரான் அநுமானைப்பார்த்துச் சொல்லத்தொடங்குதல்.

கேள்கொண் [1]மேலையான் கிளத்திய பொருளெலாங் கேட்டான்
வாள்கொ ணோக்கியைப் பாக்கியம் பழுத்தன்ன மயிலை
நாள்கள் சாலவு [2]நீங்கலி னலங்கெட [3]மெலிந்த
தோள்கள் வீங்கித்தன் றூதனைப் பார்த்திவை சொன்னான்.

(இ - ள்.) (தன்னிடத்து) நட்பைக்கொண்ட மேலோனாகிய விபீஷணன் சொன்ன விஷயங்களையெல்லாங் கேட்டவனாய், (இராமபிரான்), வாட்படையையொத்த கண்களையுடையவளும் (முற்பிறப்பின்) நல்வினைப்பயன் முதிர்ந்துவந்ததுபோல் தோன்றுகின்ற மயில்போலுஞ் சாயலையுடையவளுமான சீதாபிராட்டியைப் பலநாள்களாக(த் தான்) பிரிந்திருத்தலால் அழகுகெட மெலிந்துள்ள (தன்) தோள்கள் பூரிக்கப்பெற்றுத் தன்தூதுவனைப்பார்த்து இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ - று.)—அவற்றை மேல்மூன்று கவிகளிற் காண்க. இராமபிரான் அநுமான் வீரச்செயலைக்கேட்டதனால் தோள்கள் பூரிக்கப்பெற்றா னென்க.பி-ம்:—[1]மெய்ம்மையான்.[2]பிரிதலின்.[3]உலர்ந்த.

எ௦.—இதுவும் அடுத்தகவியும்-இராமபிரான் அநுமானைப் புகழ்தலைத் தெரிவிக்கும்.

கூட்டி னார்படை பாகத்தின் மேற்படக் கொன்றாய்
ஊட்டி னாயெரி யூர்முற்று மினியங்கொன் றுண்டோ

கேட்ட வாற்றினாற் கிளிமொழிச் சீதையைக் கிடைத்தும்
மீட்டி லாததென் விற்றொழில் [1]காட்டக்கொல் வீர.

இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.)வீரனே! பெருந்திரளாகவுள்ள பகைவரின் படையைப் பாதிக்கு மேற்படக் கொன்றொழித்தாய்; இலங்காநகரம்முழுவதும் எரியூட்டினாய்; இனி அங்கே (நான்)செய்யவேண்டுவது ஏதேனும் உண்டோ?(இப்பொழுது)கேட்ட வகையால் கிளிபோன்ற பேச்சையுடையளான சீதையையடைந்தும்(நீ)மீட்டுக் கொணராதது,என்வில்வல்லமையைக்காட்டுதற்குப்போலும்(என்று தோன்று கின்றது); (எ - று.)—'ஆற்றினால்' என்பதற்கு முடிக்குஞ்சொல் வருவிக்க, பி-ம்:—1காட்டவோ. (ருஎக)

எக.நின்செய் தோள்வலி [1]நிரம்பிய விலங்கையை [2]நேர்ந்தோம்
பின்செய் தொழிற்சில வவை[3]யினிப் [4]பீடின்று [5]பெறுமோ
பொன்செய் தோளினாய் போர்ப்பெரும் [6]படையொடும் புக்கோம்
என்[7] செய் தோமென்று பெரும்புக ழெய்துவா னிருந்தோம்.

(இ - ள்.) உன்னாற்காட்டப்பட்ட தோள்வலிமைநிரம்பியுள்ள இலங்கை யை எதிரிட்டோமாகி,இனிச் சில வீரத்தொழில்களைச்செய்வோம்:(ஆயினும்). அவை இனி இப்போது பெருமைபெறுமோ? அழகமைந்த தோள்வலிமையை யுடையவனே! போர்செய்யவல்ல பெருஞ்சேனையுடனே இலங்கையிலே புகுந்து என்னவீரகாரியஞ்செய்தோமென்று பெரும்புகழ் எய்துமாறு இருந்தோம்? (எ - று.)

நீ தனியனாய்ச்செய்த வீரச்செயலை நோக்குமிடத்துப் பெரும்படையோடு இலங்கையிற்புகுந்து நாம் செய்யப்போகின்ற செயல் மிகச்சொற்பமே யாதலால் அதனால் எமக்குப்புகழுண்டாகுமோ? என்றனன் இராமன். பொன்செய்தோளினாய் - பொன்னினாலியன்றதுபோன்ற தோள்களையுடையவனே! எனினுமாம்:"காஞ்சநாத்ரிகமநீயவிக்ரஹம்"என்று அநுமானைப்பற்றிய தியான ஶ்லோகத்தில் வருவது காண்க. பி-ம்:—1நிரப்பியது, நிரம்பியது. 2நேர்ந்து 3எனில். 4பீடென்று, பீடொன்று. 5பெறுமே. 6படைகொடு. 7செய்வோமென்றும். (ருஎஉ)

எஉ.—பிரமபதத்தை அநுமானுக்குவரமாக இராமனளித்தல்.

என்ன தாக்கிய [1]வலியொடவ் விராவணன் வலியும்
[2]உன்ன தாக்கினை பாக்கிய முருக்கொண்ட தொப்பாய்
முன்ன [3]தாக்கிய மூவுல காக்கிய முதலோன்
பின்ன தாக்கிய பத[4]நினக் காக்கினன் [5]பெற்றாய்.

(இ - ள்.) (என்) நல்வினை உருக்கொண்டாற்போலத் தோன்றுபவனே! என்னதாக (நான்) கொண்டுள்ள வலிமையையும் அவ்விராவணனது வலிமையையும் (நீ இலங்கையில் முந்துறச்சென்றுவென்றதனால்) உன்னதாக்கிவிட்

டாய்; முன்னிருந்ததுபோலவே படைக்கப்படுந் தன்மையைக்கொண்ட மூவகையுலகத்தையும் படைக்குந்தொழிலைக்கொண்ட முதல்வனான பிரம தேவனுக்காக ஏற்பட்டுள்ள பதவி இப்பிறவிக்குப்பின்னே உனக்காகவென்று ஏற்படுத்தியுள்ளேன்;(நீ அப்பதவியைத்)திண்ணமாகப்பெறுவாய்; (எ - று.)— பெற்றாய்-காலவழுவமைதி. முதலோனுக்கு ஆக்கியபதம் பின்னது நினக்கு ஆக்கினேனென்னக. (பி-ம்:—[1]தன்மையும். [2]உன்னை. [3]ஆக்கியும். [4]உனக்காக்கினன், உனக்காக்கினம், உனதாகின. [5]பெற்றும். (ருஉ)

எக.—அநுமான் நாணிநிற்க, மற்றையோர் பெருமகிழ்ச்சி கொண்டிருத்தல்.

[1]என்று கூறலு மெழுந்திரு [2]நிலனுற விறைஞ்சி
யொன்றும் பேசல [3]னாணினன் வணங்கிய வுரவோன்
நின்ற வானரத் தலைவரு மரசுமந் நெடியோன்
வென்றி [4]கேட்டலும் வீடுபெற் றாரென வியந்தார்.

(இ-ள்.) என்று (இராமபிரான்) கூறியவுடனே, வணக்கங்கொண்டுள்ள வலியவனாகிய அநுமான் எழுந்து பெரியபூமியில் உடம்புபடியும்படி வணங்கி ஒன்றும்பேசாமல் நாணங்கொண்டிருந்தான்; அங்கிருந்த வானரத்தலைவரும் (அவர்கட்குத்) தலைவனாகிய சுக்கிரீவனும், அந்தப்பெரியோனது வெற்றிச் செய்தியைக்கேட்டவுடனே, மோட்சத்தையடைந்தவர்போலப் பரமானந்தத்தில் மூழ்கினார்கள்; (எ-று.)—(பி-ம்:—[1]என்றபோழ்தினில். [2]நிலத்து. [3]நாணினன்வணங்கினன். [4]கேட்டனர். இப்படலத்தின்பெயர் இலங்கைக்கேள்விப் படலம்என்று வலிமிக்கிருப்பின்நலம். (ருகூ)

இராமபிரானால்அபயமளிக்கப்பெற்ற விபீஷணன் மெல்லவானத்தினின்றுஇழிந்து சகலபாபங்களையும் இராமபிரானதுஅதீனமென்று பரந்யாஸஞ் செய்துநிற்க, இராமபிரான் அபயமென்றுசொன்னபோதே உடனேஅங்கீகரியாதகுற்றத்தைப் பொறுக்குமாறு இன்னுரைகூறி இராட்சசரின் பலாபலங்களைத்தெரிவிக்குமாறுவினவ, விபீஷணனும் தெரிவிக்க, ஸ்ரீராமன் 'ராட்சச ராஜனைப் பலத்தோடும்கொன்று உன்னைஇலங்கைக்குஅரசனுக்குவேன்'என்று பிரதிஜ்ஞைசெய்ய, 'நீர் அரக்கரைக் கொல்லும்பொழுது என்னாலியன்றஉதவி புரிவேன்' என்ன, இங்ஙனங்கூறிய விபீஷணனை மகிழ்ந்துதழுவி, ஸ்ரீராமன் 'பேரறிவாளனாகிய விபீஷணனை அவன்விரும்பாமற்போனாலும் அரசனாக்க வேணுமென்று நான் விரும்புவதனால், அபிஷேகஞ்செய்வாயாக' என்றுசொல்ல, இலட்சுமணன் வானரர்களிடையிலே விபீஷணனை ராட்சசராஜனாக அபிஷேகஞ்செய்தானென்பது, இங்கு ஸ்ரீவால்மீகத்திற்கூறியவகையாகும்.

இலங்கைகேள்விப்படலம் முற்றிற்று.

---

## ௬-ஆவது வருணனைவழிவேண்டுபடலம்.

(இராமபிரான் கடலை வானரசேனைகளோடுங் கடக்குமாறு) வருணபகவானை வழிவேண்டியதைத் தெரிவிக்கும் படலமென்பது,பொருள். சிலபிரதிகளில் முதல் ௯௨-பாடல்-கடல்சீறியபடலமென்றும், அதற்குமேலே படலம் முடிவுவரையிலுமுள்ள பாடல்கள் வருணனடைக்கலப்படலமென்றும் காணப்படுகின்றன. கீழ்ப்படலத்துக்கு'ஒன்னார்வலியறிபடலம்'என்றுபேரெழுதிய பிரதியொன்றில் "நன்றிலங்கையர் நாயகன்" (௩) என்றபாடலில் அப்படலம் முடிவுபெற, "கொழுங்கதிர்ப்பகை" (௪) என்பதுமுதல் கடல்சீறியபடலம் தொடங்குகின்றது. வேறுசிலபிரதியில் "கொழுங்கதிர்ப்பகை (௪)" என்றதனோடு இலங்கைக்கேள்விப்படலம் முற்றுப்பெற, "தருணமங்கை" (௫) என்றபாடல்முதல் வருணனடைக்கலப்படலம் தொடங்குகின்றது. கடல்சீறுபடலமென்பது - சிலபிரதியில் கடலைச்சீறியபடலமென்றும், மற்றுஞ் சிலபிரதியில் கடல்சீறியருள்படலம் என்றும் உள்ளது.

பிறகு 'கடலைக் கடக்கும்உபாயம் என்?' என்று விபீஷணனைக் கேட்க, அவ்விபீஷணன் 'வருணனைச் சரணமடைந்து அவனருளைப்பெறுவதே கடலைக் கடக்கு முபாயம்' என்று தெரிவிக்க, ஸ்ரீராமன் எழுநாள் தருப்பசயனத்திற் படுத்து வருணமந்திரத்தைஜபிக்கவும் அக்கடவுள் பிரதியட்சமாகாதிருக்க பின்பு அவ்விராமபிரான் இலக்குமணனைவில்லைக்கொண்டுவரச்சொல்லிப் பலபாணங்களைத் தொடுத்தானாக, அப்போதும் அவன் வாராமையால் மிகச் சினந்து பிரமாஸ்திரத்தைப்பூட்ட, உடனே இராமபிரானது கருத்தையறிந்து வருணன் நடுங்கிக் காணிக்கையோடும் அடிவீழ்ந்து துதித்து அபயம்வேண்ட, ஸ்ரீராமன் அபயமளித்து அவ்வருணன்காட்டியஇலக்கிற் பிரமாஸ்திரத்தை விடுத்துப் பின் வழிவேண்ட, அவ்வருணதேவன் தன்மீதுசேதுகட்டினால் தான் தாங்குவதாகச்சொல்லி இராமபிரானருளைப்பெற்றுச்சென்றமை இந்தப் படலத்திற்கூறப்படுகின்றது.

௧.—விபீஷணனுழ்வானை இராமபிரான் சமுத்திரத்தைக்கடக்கும் உபாயத்தை ஆலோசித்துச்சொல்வாயெனல்.

[1]தொடக்கு [2]மென்னிவ் வுலகொரு மூன்றையுந் தோளால்
அடக்கும் வண்ணமு மழித்தலு மொருபொரு ளன்றாற்
கிடக்கும் வண்ணவெங் கடலினைக் கிளர்பெருஞ் சேனை
கடக்கும் வண்ணமு மெண்ணுதி [3]யெண்ணுநூல் கற்றாய்.

(இ - ள்.) மதிப்பைப்பெற்ற நூல்களையெல்லாங் கற்றவனே! (இந்தக் கடல்) கட்டுக்குஉட்படுமோவெனில், (இலங்கையேயன்றி) இந்தமூவுலகங்களையும் தோள்வலியால் அடக்குந்தன்மையும் (எதிரிட்டவரை) அழித்தலும் (நமக்கு) ஒருபெரியகாரியமன்றாம்; (ஆதலால் நாம் நேரே செல்லமுடியாது வழியிடையே) கிடக்கின்ற அழகிய கொடியகடலை உற்சாகங்கொண்டுள்ள(நமது) பெரியசேனை கடக்கவேண்டியவகையையும் எண்ணிச்சொல்வாய்(என்று அப்போது விபீஷணனைநோக்கி இராமபிரான் வினவினான்); (எ - று.)

கடலைக்கட்டுப்படுத்திக் கடந்துவிட்டோமே யாயின், நமதுகாரியங் கை கூடுதல்எளிதாதலால், இராவணனைவெல்வதற்கு அவனுடையவலிமைமுதலிய வற்றையறியுமாறு கூறியதுபோலவே இக்கடலைக்கடக்கும் வண்ணத்தையும் ஆலோசித்துக்கூறுவாயென்றுவினவினன் விபீஷணனை இராமபிரான். இனி, இச்செய்யுளை, அடுத்தசெய்யுளோடொருதொடராக்கி, இராமபிரானைநோக்கி விபீஷணன் உமக்குமூவுலகையும்வெல்லுதல் ஒருபொருளன்று: ஆனால், இப் போது இந்தக்கடலைக்கடப்பதற்குஉரிய உபாயத்தைஆலோசிக்கவேண்டும்: ஆகையால், படைசெலவழியை இந்தப்பரவையை இரந்துவேண்டுதிஎன்றான் என உரைப்பாருமுளர். தொடக்கும் = தொடக்கப்படும்: கட்டப்படும்; செயப் பாட்டுவினைப் பொருளில்வந்தசெய்வினை: இனி, தொடக்குதும்என்பது தொடக்கும்எனவந்ததாக்கொண்டு-கட்டுப்படுத்துவோமெனினுமாம். அன்றி, தொடக்கும் = தொடங்கும்:தொடக்கும்என்னில்-போர்தொடங்குமாறு லென் றேனும், முயன்றுதொழில்செய்கிற என்றலென்றேனும் பொருளுரைப்பினு மாம்.பி-ம்:—1துடைக்கும். 2என்னினுலகொரு. 3எண்ணிநூல், எண்ணநூல்.

உ.—விபீஷணன் கடலைச் சரண்புகுந்து வழிவேண்டுவாயெனல்.

கரந்து நின்றநின் [1]றன்மையை யது[2]செலக் கருதும்
[3]பரந்த துன்றிருக் குலமுதற் [4]றலைவராற் [5]பரிவாய்
வரந்த ரும்மிந்த மாக்கடல் படைசெல வழிவே று
இரந்து வேண்டுதி யெறிதிரைப் பரவையை யென்றான்.

(இ - ள்.) அந்தக்கடலானது,—மறைந்துள்ளஉனதுதன்மையைச் செல்ல [முழுவதும்] ஆராய்ந்தறியும்: (மேலும்) உன்திருக்குலத்தில்தோன்றிய தலை மைபெற்றவரால் [சாகரரால்] (தோண்டப்பெற்றுப்) பரவத்தோன்றியதாகும்: (அதனால்,) இந்தப்பெரியகடலானது அன்புகொண்டு (நீவேண்டும்) வரத் தைத் தரும்;வீசுகின்ற அலைகளையுடைய இந்தக்கடலை (நமது) படைசெல்லு மாறு வேறாக இரந்து [சரண்புகுந்து] வழியை வேண்டுவாயென்றனன்,(விபீ ஷணன்); (எ - று.)

இந்தச்சமுத்திரமானது உமதுகூடஸ்தரால் தோண்டப்பட்டுப் பரவிய தாகையாலும், நீர்க்கடவுள் உமது மறைந்துள்ள பெருமையையுணர்வானாத லாலும், நீர் இதனைச்சரண்புகுந்து இரந்துவேண்டுவீரானல் உம்மிடத்துப் பேரன்புபொருந்தி உமதுவேண்டுகோளைத் தவறாதுசெய்யும்: இதுவே, இப் போது செய்யவேண்டிய காரிய மென்றனன் விபீஷண னென்க. இராம பிரானைச் சரணம்புகுந்து அப்பிரானது திருவருளை ஸ்ரீவிபீஷணாழ்வான் பெற்றவனாதலால், பிறரருளைப் பெறுதற்குச் சரணாகதியே சிறந்தஉபாய மெ ன்று அன்னான் கூறினான். அநுமானும் சுக்கிரீவனும் விபீஷணனை ஏகாந்தத் தில்நோக்கி, 'சைனியங்களோடு நாம் இந்தக்கடலைத்தாண்டுவது எப்படி? இதற்குஉபாயங்கூறுக' என்ன, 'இராமபிரான் கடலைச்சரணம்புகுவதே செய் யத்தக்கது' என்று அன்னான்கூற, பிறகு அதனை விபீஷணன்வார்த்தையாக ஸ்ரீராமனுக்கு அன்னார்தெரிவித்தனரென்று முதனூலிலுள்ளது. இச்செய்யு ளில் 'என்றான்' என்பதற்கு எழுவாய் விபீஷணனென்பது, அடுத்த செய்யு

ளால்விளங்கும். கரந்துநின்றதன்மை - பரம்பொருளானதன்மை. பி - ம்:—[1]தன்மையதது. [2]சொலிற்கருதிற், செலக்கருது. [3]பரந்துநின்றநின். [4]தலைவர் போல். [5]பரிவால், பாரில். (௫௬)

௩.—இராமபிரான் விபீஷணன்மொழிக்குஇசைந்து கடற்கரைசேர்கையில் சூரியோதயமாதல்.

நன்றி லங்கையர் நாயகன் மொழியென நயந்தான்
[1]ஒன்று தன்[2]பெருந் துணைவரும் புடைசெல வரவோன்
சென்று வேலையைச் சேர்தலும் விசும்பிடைச் சிவந்த
குன்றின் மேனின்று [3]குதித்தன பகலவன் குதிரை.

(இ - ள்.) பேரறிவினனாகிய இராமபிரான், 'இலங்கைக்குத்தலைவனாகிய விபீஷணனதுமொழி நன்றாயுள்ளது' என்று விரும்பிக்கொண்டாடியவனாய், பொருந்திய தனது சிறந்ததுணைவராகிய சுக்கிரீவன் விபீஷணன் அநுமான் முதலியோர் பக்கத்தில்வரச் சென்று கடற்கரையைச்சேர்தலும்,சூரியனுடைய குதிரைகள் சிவந்துள்ள குன்றாகியஉதயகிரியின்மேலிருந்து(ஆகாயத்தினிடத்தில்தாவிக்) குதித்தன;(எ-று.)—வேலை = வேலா: கடற்கரையென்றுபொருள் படும்வடசொல். பி-ம்:—[1]ஒன்றும். [2]பெருஞ்சேனையும்புடைசெல, பெரும்படைஞரும்புடைவர. [3]குதித்தது. (௫௭)

௪.—உலகத்து இருள்நீங்குதலின் வருணனை.

[1]கொழுங்க திர்ப்பகைக் [2]கோளிரு ணீங்கிய [3]கொள்கை
செழுஞ்சு டர்ப்பணிக் கலையெலா நிரம்பிய திங்கள்
புழுங்கு வெஞ்சினத் [4]தஞ்சனப் பொறிவரி யரவம்
[5]விழுங்கி நீங்கிய தொத்தது வேலைசூழ் ஞாலம்.

(இ - ள்.) கடலாற் சூழப்பட்ட இந்தவுலகமானது,—செழிப்பானகிரணங்களையுடைய சூரியனாலே பகையாயிருந்தவலியஇருள்நீங்கப்பெற்ற தன்மையினால்,—செழிப்பான ஒளியைக்கொண்ட குளிர்ந்த பதினாறுகலைகளும்நிரம்பிய திங்கள் வெம்புகின்றகொடுங்கோபத்தையும் கருநிறத்தையும் படப்புள்ளிகளையும்உடல்வரியையுமுடைய இராகுவினால் விழுங்கப்பெற்று(ப்பின்) வெளிப்பட்டதை யொத்தது; (எ - று.)

இருளால்மூடப்பட்டஉலகம்-இராகுவாற்கொள்ளப்பெற்ற சந்திரனையும், சூரியனால்மூடிய அவ்விருள்நீங்கியவுலகம்-அந்தப்பாம்பின்வாயினின்றுவெளிப்பட்டுத்தோன்றுஞ் சந்திரனையும்போலு மெனக் கூறினர்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]கொழுந்திருட். [2]கோளெலாம். [3]செய்கை. [4]அஞ்சிய. [5]விழுங்கு. (௫௮)

௫.—இராமன் கடற்கடவுளைவேண்டித் தருப்பசயனத்தில் அமர்தல்.

*தருண மங்கையை மீட்பதோர் நெறிதரு கென்னும்
பொருள் நயந்து[1]நன் னூனெறி யடுக்கிய புல்லிற்

* ததஸ்ஸாகரவேலாயாம்-தர்ப்பாநாஸ்தீர்யராகவ: | அஞ்சலிம்ப்ராங்முகம் க்ருத்வா-ப்ரதிசிஸ்யேமஹோததே: ||

கருணை யங்கடல் 2கிடந்தனன் கருங்கட னோக்கி
வருண மந்திர மெண்ணினன் விதிமுறை வணங்கி.

(இ - ள்.) இளம்பருவத்தையுடைய பெண்ணாகிய சீதையை (ச் சிறை) மீட்பதற்காக, '(வானரப்படையுடன்செல்லுதற்கேற்ப) ஒருவழியைத்தருவா யாக' என்று இரந்துகேட்கின்ற ஒருவிஷயத்தைவிரும்பி, கருணைக்கடலாகிய இராமபிரான், சிறந்தசாத்திரங்களிற்கூறியபடியே அடுக்கியதருப்பைப்புல்லி லே விதிமுறையே கரியகடலைநோக்கி வருணமந்திரத்தை ஜபித்தவண்ணம் வணங்கிப்படுத்தான்; (எ - று.)

"ப்ரதிஶிஶ்யே மஹோததே:" என்று ஸ்ரீவால்மீகிபகவான் அருளிச்செய் ததன்விவரணமாக "கருணையங்கடல்கிடந்தனன்கருங்கடனோக்கி" என்றனர், மகாகவியாகிய கம்பர். "கடல் தன்னைப் போர அளவுடைத்தாகநினைத்திருக் குமாயிற்று; அதுக்காக ஒருகடல் ஒருகடலோடே ஸ்பர்தித்து [மாறுபட்டு]க் கிடந்தாற்போலேயிருக்கை; கருணையங்கடல் கருங்கடல்நோக்கிக் கிடந்தது" என்னும்படியிறே" என்று(திருவாய்மொழி கூ-க-ரு-இன்)ஈட்டில்அருளிச்செய் திருப்பது காண்க. "இவ்விடத்திலே வேல்வெட்டிப்பிள்ளைக்குப் பிள்ளையருளி ச்செய்தவார்த்தையை ஸ்மரிப்பது" என்ற ஸ்ரீவசனபூஷணமும், "வேல்வெட் டிப்பிள்ளை 'பெருமாள் கடலை ஶரணம்புகுகிற இடத்தில் ப்ராங்முகத்வாதி நியமோபேதராய் ஶரணம்புகுருகையாலே, இதரோபாயங்களோபாதி ப்ரபத் திக்கும் சிலநியமங்களுண்டோ?' என்று நம்பிள்ளையைக்கேட்க, பெருமாள்பக் கல்கண்ட நியமம் இவ்வுபாயத்துக்கு உடன்வந்தியாயிருப்பதொன்றன்று: உபாயபரிக்ரஹம் பண்ணினவருடைய ஸ்வபாவத்தாலே வந்ததித்தனை: பெருமாள்தனக்கு...உபதேசித்தான் ஸ்ரீவிபீஷணாழ்வானிறே: அவன்தான் பெருமாளை ஶரணம்புகுகிறஇடத்தில் கடலிலே யொருமுழுக்கிட்டுவந்தா னென்றில்லையே; இத்தால் சொல்லிற்றாயிற்று-பெருமாள் இக்ஷ்வாகுவம்ஶ ராய் ஆசாரப்ரதானராயிருக்கையாலே தம்முடைய நியமங்களோடே ஶரணம் புக்கார்: இவன்[விபீஷணன்] ராக்ஷஸஜாதியனாகையாலே நின்றநிலையிலே ஶரணம்புக்கான்: ஆகையால், யோக்யனுக்கு அயோக்யதை ஸம்பாதிக்க வேண்டா: நின்றநிலையிலே அதிகாரிகளாமித்தனையென்னுமதுஎன்றுஅருளிச் செய்த வார்த்தை" என்றஅதன்வ்யாக்யானமும் இங்கே அறியத்தக்கன. கரு ணைக்கடலென்றது - வற்றச்செய்யும் திறனிருந்தும்வரங்கிடந்தமைபற்றி.

பி-ம்:—1 நுண்ணூன்முறை. 2 துயின்றனன், கிடந்தது. ([illegible])

௬.—இராமபிரான் இவ்வண்ணம் ஏழுநாட்கிடந்தும் வருணன் பிரதியட்சமாகாதிருந்தல்.

பூழி சென்றுதன் றிருவுருப் பொருந்தவும் 1பொறைதீர்
வாழி வெங்கதிர் 2மணிமுகம் வருடவும் வளர்ந்தான்
ஊழி சென்றன வொப்பன வொருபக லவையோர்
ஏழு சென்றன வந்தில னெறிகடற் கிறைவன்.

(இ - ள்.) (இராமபிரான்) புழுதியானதுவந்து தனது திருவுருவத்திலே படியவும், பொறுமைதீர்ந்த வெப்பமான வெயில் அழகியமுகத்திலே வீழ

வும், (ஜபித்தலினிமித்தம்) கண்வளர்ந்தவன்போன்றிருந்தான்; ஒருபகல் ஒரு ஊழிக்காலம்போலத்தோன்ற இவ்வண்ணம் ஏழுபகல்கள்கழிந்தன; அலையெறிகின்றகடலுக்குஉரியதெய்வமாகிய வருணன்(அப்போதும்)வெளிப்பட்டுவந்தானில்லை; (எ - று.)

மூன்றுநாள்களே ஸ்ரீராமன் விரதங்கிடந்தானென்று முதனூல்கூறும். அருமைத்திருமேனியில் புழுதியும் வெயிலும்படும்படியாயிற்றே! என்ற உருக்கந்தோன்ற, முன்னிரண்டடிகள் கூறப்பட்டன. [illegible] - அசை. பி - ம்:— [1]புரை. [2]மதி. (ருசo)

எ.—இராமபிரான் சினத்தைக் கொள்ளுதல்.

ஊற்ற மீக்கொண்ட வேலையா னுண்டிலை யென்னும்
மாற்ற [1]மீக்கவும் [2]பெற்றிலம் யாமெனு மனத்தால்
ஏற்ற மீக்கொண்ட புனலிடை யெரிமுளைத் தென்னச்
சீற்ற [3]மீக்கொண்டு சிவந்தன தாமரைச் செங்கண்.

(இ - ள்.) 'வலிமையைமிகக்கொண்டவனாகிய கடற்கிறைவன் [வருணன்] உண்டு இல்லை என்ற மொழியைச் சொல்லவும்பெற்றிலோம் யாம்' என்ற எண்ணத்தினால், பொங்குதலை மிகுதியாகக்கொண்ட (பெரும்) புனலிலே நெருப்புத் தோன்றியதுபோல (இராமபிரான் தனது குளிர்ந்த திருவுள்ளத்திலே) சீற்றத்தை மிகுதியாகக்கொண்டதனால், (அப்பிரானது) தாமரைச் செங்கண்கள் மிக்குச்சிவந்தன; (எ - று.)

இதனால், இராமபிரான் குளிர்ந்த தன் திருவுள்ளத்திலே கொடுங்கோபத்தைச் செயற்கையாக வரவழைத்துக்கொண்டமை கூறப்பட்டது. "கோபமாஹாரயத் திவ்ரம்" என்றார், ஸ்ரீவால்மீகியும். குளிர்ந்த திருவுள்ளத்திற் கடுஞ்சினந்தோன்றியதற்கு உலகத்துப்பொருள்களில் உபமானம் கிடையாமையால் இல்பொருளுவமையாக 'புனலிடை யெரிமுளைத்தென்ன' என்றார். ஊற்றம்-வலிமை. உண்டு-உனதுவேண்டுகோள் செய்யப்படுமென்பது; இலை-உனதுவேண்டுகோள் செய்யமுடியாதென்பது. மாற்றம்-உத்தரம். ஈக்கவும்=ஈகவும்: விரித்தல். பி-ம்:—[1]ஈயவும், நீக்கவும். [2]பெற்றிலனும், பெற்றிலமாம். [3]மீக்கொள. (ருசக)

அ.—இராமபிரான் சீற்றத்தினாற் புருவத்தை நெரித்தல்.

மாண்ட வில்லிழந் [1]தயருநான் வழிதனை [2]வணங்கி
வேண்ட வில்லையென் [3]றொளித்ததா மெனமனம் [4]வெதும்பி
நீண்ட [5]வில்லுடை நெடுங்[6]கனலுயிர்ப்பொடு [7]நெடுநாண்
பூண்ட வில்லெனக் [8]குனிந்தன கொழுங்கடைப் புருவம்.

(இ - ள்.) பெருமைபெற்ற மனைவியை (மாற்றான்கொள்ள) இழந்து வருந்துகின்றநான் வழியை வணங்கிவேண்டவும்(இந்தக்கடற்றெய்வம்'என் வேண்டுகோளைச்) செய்யமுடியாது' என்னுங்குறிப்புத்தோன்ற மறைந்திருப்பதாகுமெனக்கருதி மனத்திற் சினந்து, நீண்டஒளியையுடைய நெருப்புப் போன்ற பெருமூச்சுடனே நெடுநாணைப்பூட்டிய வில்லைப்போல் (அப்பிரானது) கொழுவிய புருவத்தின்ஓரங்கள் வளையப்பெற்றன; (எ - று.)

கடைப்புருவம்-இலக்கணப்போலி. இராமபிரான் வெப்பமான நெட்டுயிர்ப்புடனே புருவத்தின் கடையைக் குனித்தன னென்றவாறு. இல்-மனைவி: இலக்கணை. வில்-ஒளியும், தனுசும். நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு. பி-ம்:—1அயருநாள், அயருவான். 2தருகென்ன, தருகென்று. 3ஒளித்ததாலென. 4வெதும்ப. 5வில்லிடை. 6நெக்கனல், 7உண்ணிறைநாண், நிறைநாண். 8குனித்தன.

கூ.—இதுமுதல் ஆறுகவிகள் இராமபிரான் சினங்கொண்டு வருணன் செயலைக் க... ...துப் பலபடி கூறியவற்றைத் தெரிவிக்கும்.

1ஒன்றும் வே... ...லராயினு 2மொருவர்பா லொருவர்
சென்று வேண்டுவ ரேலவர் சிறுமையிற் றீரார்
3இன்று வேண்டிய தெறிகட 4னெறிதனை 5மறுத்தான்
நன்று நன்றென நகையொடும் 6புகையுக நக்கான்.

(இ - ள்.) ஒருபொருளையும் வேண்டாதவராயினும் [எல்லாப்பொருளினாலும் நிரம்பியவராயினும்] ஒருவர் ஒருவரிடத்துச் சென்று ஏதேனும் ஒன்றை வேண்டுவராயின், (வேண்டப்படுகின்ற) அவர் (தமது) அற்பகுணத்தினின்று நீங்கார்: (அதற்குஏற்பவே), இன்றுவேண்டியதாகிய நெறியை எறிகடல் மறுத்தான்: (இது), மிகவும் நன்றாயிருந்த தெனவெகுளிநகையுடனே புகைதோன்றச் சிரித்தான், (இராமபிரான்); (எ - று.)

எவரிடத்திலும் ஒன்றையும்வேண்டாத குறைவற்ற பெரியோர் ஏதேனும் ஒருஉதவியைத் தம்மிடம்வேண்டிவந்தாலும், அற்பர், தம் அற்பத்தன்மையையே காட்டுவ ரென்பதற்குஏற்ப, இந்தக்கடலினிடத்து அற்பத்தன்மையைக்கண்டோம்: இது சாலநன்று என்று தனக்குக் கடற்கிறைவன் இரங்காமையைக் குறித்து இராமபிரான் கூறினனென்க. அவர் என்பதற்கு எதையும் வேண்டாதிருந்து இப்போது ஒன்றைவேண்டிய பெரியோர் என்று உரைத்து, தாம் சிறுமையையடைவதிற் றீரார் என்றலும் ஒன்று. 'என்றுகொண்டதிவ்வெறி கடலென்னுடையிரக்கோள்' என்று ஒருபிரதியில் மூன்றாமடி. பி-ம்:—1ஒன்று. 2ஒருவர்போல், 3என்றுவேண்டுவது. 4நெறியிது. 5மறுத்தல், மறுத்தால். 6புகையெழ. (ருசஉ)

சுo. பார நீங்கிய சிலையின னிராவணன் 1பறிப்பத்
தார நீங்கிய தன்மைய னாதலிற் றகைசால்
வீர 2நீங்கிய மனிதனென் றிகழ்ச்சிமேல் விளைய
ஈர நீங்கிய தெறி3கட லாமென விசைத்தான்,

(இ - ள்.) (நான்) இராவணன் கவர்ந்துகொண்டுசெல்ல மனைவியையிழந்ததன்மையையுடையேனாதலினால், அலைவீசுகின்ற இந்தக் கடலானது, (என்னை) 'பெருமைமிக்க வீரம்நீங்கிய மனிதன்; பெருமைநீங்கிய [அற்பமான] வில்லையுடையவன்' என்று இகழ்ச்சி மிகுதியாகத்தோன்ற இரக்கமற்றதாகு மென்று (பின்னும்) கூறினான், (இராமன்); (எ - று.)

"க்ஷமயாஹி ஸமாயுக்தம் - மாமயம் மகராலய: | அஸமர்த்தம்விஜாநாதி - திக்க்ஷமாமீத்ருசேஜநே" என்றார், ஸ்ரீவால்மீகிபகவான். பி-ம்:—1பறித்த. 2நீங்கினன். 3கடற்கின்று. (ருசங)

கக. புரந்து கோடலும் [1]புகழொடு கோடலும் பொருது
துரந்து கோடலு மென்றிவை [2]தொன்மையிற் றொடர்ந்த
இரந்து [3]கோடலு ளியற்கையுந் தருமமு [4]மெஞ்சக்
கரந்து கோடலே நன்றினி நின்றதென் கழறி.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (பிறருக்கு) உதவிசெய்து (பிறகுதான் வேண்டின பொருளை அவரிடத்தினின்று) பெறுதலும், (தம்மேன்மையைக்கருதிப் பிறர்காணிக்கைதரப்) புகழ்பெற (அப்பொருளை)ப் பெறுதலும், போர்புரிந்து (பகைவரைத்) துரத்திவிட்டு (அவரிடத்துள்ள பொருளை)க் கவர்ந்துகொள்ளுதலும் என்ற இவை தொன்றுதொட்டுநடந்துவருவனவாம்; (நாம் அவ்வழியிலொன்றாற் பெறப்பாராமல்) இரந்துகொள்வதைக்கைக் கொண்டபோது (தனது) நற்குணமும் தருமமும் குறைவுறும்படி (இந்தக்கடல்தெய்வம்) மறைந்துகொண்டிருத்தல் மிகவும்நன்றாயிருந்தது; இனிச் சொல்லி (நாம்) பெறுமாறுஉள்ளது என்? [சொல்லுவதிற்பயனில்லையென்றபடி]; (எ - று.)

உலகத்தில் ஒன்றைப்பெறுதற்குப் புரிந்துகோடல்முதலிய வழிகளிருக்கின்றன: நாம் அவற்றையெல்லாம்விட்டு இரந்துகொள்வதென வந்ததனால், இந்தக்கடல் இவ்வாறு அவமதித்தது; இதைச்சொல்லிக்கொண்டிருப்பதிற்பயனில்லை யென்றனன், இராமபிரானென்க. என்றிவை-தொகுத்தல். ஒருவர் ஒன்றைவேண்டிநிற்கையில் உபேட்சித்திருப்பது நற்குணமாகாமையோடு, தன்னைச்சரணமடைந்தோரை உபேட்சிப்பதனாலான பாவமும்விளையுமாதலால் 'இயற்கையுந் தருமமு மெஞ்சக் கரந்துகோடல்' என்றான். (க்ஷத்திரியர்க்குரிய புரந்துகோடல்முதலியவற்றைவிட்டு) எனதுவீரத்தன்மையும் க்ஷத்திரியதருமமுங் குறைய இரந்துகோடலை (நான்) மேற்கொண்டஇடத்துக் கரந்துகோடலேநன்று' என்று பின்னிரண்டடிகட்கு உரைகூறுவாருமுளர்: சரணாகதியென்பது எல்லார்க்கும் உரியதாதலாலும் இராமபிரான் தான் க்ஷத்திரியதருமத்திற்குவிரோதமாக இரத்தலை முதலில் மேற்கொண்டுவிட்டுப் பிறகு தான்தருமத்திற்குவிரோதமாகச் செய்தேனென்று கூறினனென்பது பொருந்தாமையாலும் அவ்வுரை பொருந்தாது. நன்று-பிறகுறிப்பு. ஒன்பதாஞ்செய்யுளில் நன்றுநன்றுஎனவந்ததும் இவ்வாறே. பி - ம்:—[1]புகழொடும். [2]தொன்மைதொடர்ந்தும். [3]கோடலின். [4]அஞ்ச. (ருசரு)

கஉ. கானி டைப்புகுந் திருங்கனி காயொடு [1]நுகர்ந்த
ஊனு டைப்பொறை யுடம்பின னென்றுகொண் டுணர்ந்த
மீனு டைக்கடற் பெருமையும் வில்லொடு நின்ற
மானு டச்சிறு தன்மையுங் காண்பரால் வானோர்.

(இ - ள்.) காட்டிலேபுகுந்து பெருமைபெற்ற கனிகளையும் காய்களையும் உண்ட மாமிசத்தினாலியன்ற பாரமாகிய உடம்பையுடையவன் (நான்)என்று கருதுகின்ற மீன்களைக்கொண்ட கடலின்பெருமையையும் வில்லோடுமிருந்த

(எனது) சிறுமைப்பட்ட மானுடத்தன்மையும் வானிடத்தவரான தேவர் காண்பார்கள்: (எ - று.)

'நான் பெரியவனோ, கடல்பெருமைபெற்றதோ?'' என்ற இவ்விஷயத்தைத் தேவர்கள் கண்கூடாகக் காணுமாறு என்வில்வலிமையாற் காட்டுவேனென்ற வாறு. ஊனுடைப்பொறையுடம்பினன்-மாமிசபிண்டமாகிய தன்தேகத்தைப் போற்றுதலே பெரும்பாரமாக நினைப்பவன்: இவனால் நம்மை என்செய்ய இயலுமென்பது, சமுத்திரத்தினுட்கோள். காண்பர்-காண்க என்றபடி. பி-ம்:—1கவர்ந்த. (ருசுகூ)

கூ௩. ஏத மஞ்சினா [1]னிரந்ததே யெளிதென [2]விகழ்ந்த
ஓத மஞ்சினோ டிரண்டும்வெந் தொருபொடி யாகப்
பூத மஞ்சும்வந் தஞ்சலித் துயிர்[3]கொண்டு பொருமப்
பாத மஞ்சலர் [4]செஞ்செவே [5]படர்வரென் படைஞர்.

(இ - ள்.) (சமுத்திரத்தை உபத்திரவிப்பது) பழியாமென்று அஞ்சி நான் இரந்ததுகொண்டு '(இவன் செயல்) எளிமைப்பட்டது' எனக்கருதி அலட்சியஞ் செய்த கடல்ஏழும் வெந்து தூளியாய்விடவும், பஞ்சபூதங்களும்வந்து கைகுவித்து அழுது (தமது) உயிரைக்கொண்டுசெல்லவும், என்படைஞராகிய வானரர் அஞ்சாமல் (தமது) பாதங்களால் நேராக இலங்கையைநோக்கி (இனி) நடப் பார்; (எ - று.)

யான் அம்புகளைத்தொடுத்துச் சமுத்திரத்தைவற்றடித்து விடுவதால், வானரவீரர் கால்களினால் இலங்கைக்குநடந்துசெல்லும்படியாகுமென்றனன் இராமபிரானென்க. உயிர்கொண்டுபொரும=பொருமியுயிர்கொள்ள: விகுதி பிரித்துக்கூட்டல். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும் நடுங்கி அஞ்சலிசெய்து அழுது தமதுபிராணனுக்கு அபயதானத்தை நம்மிடத்துவேண்டிப்பெற்றுச்செல்லுமென்பது, மூன்றாமடியின்கருத்து. முதலிலேயே கடலை வில்லைக்கொண்டு வற்றவடியாமல் தன் பெருமைக்கு இழுக்கு உண்டாகவும் ஸ்ரீராமன் தான் இந்தக்கடலையிரந்தது-அதனிலுள்ள பிராணிகட்கும் அந்தக் கடற்றெய்வத்திற்கும் இமிசைநேரிடுமேயென்ற கருணையினாலேயேயென்பதை 'ஏதமஞ்சி' என்பதனால் விளக்கினான். "ஸாகரம் சோஷயிஷ்யாமி-பத்ப்யாம்யாந்து ப்லவங்கமா:" என்றார், ஸ்ரீவால்மீகிபகவான். பி-ம்:— 1இருந்ததையெளியென, இருந்ததென்னெளிவென. 2இகந்த, நினைந்த. 3கொடுபோற்ற. 4அஞ்சியே. 5பணிவரென்பகைவர். (ருஎ௦)

கூச. மறுமை கண்டமெய்ஞ் ஞானியர் நூலுநந்து வரினும்
வெறுமை கண்டபின் [1]யாவரும் யாரென விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கன லென்னினுங் கடசார்
சிறுமை கண்டவர் பெருமைகண் டல்லது தேறார்.

(இ - ள்.) மோட்சத்தைப்பெற்ற தத்துவஞானிகளும் இந்தஉலகத்துறைந் தால், (இவ்வுலகத்தவர் அவரிடத்துப்) பொருளில்லாமையைக் கண்டபின் யாவரும் (இவர்) யாரென்றுஅறிதற்கும் விருப்பங்கொள்ளார்: சிறியவராகக்

காணப்பட்டவர் (தமது ஒழுக்கத்தால்) கொழுவிய நெருப்பேயாயினும் (அவரிடத்தும்தம் பணிவுதோன்றக்) கூசிநடக்கமாட்டார்; சிறுமையை (த் தம் கண்களாற்) கண்ட இவ்வுலகத்தார், குணப்பெருமையைக் கண்கூடாக் கண்டாலல்லாமல் உணர்வடையமாட்டார்; (எ - று.)

இவ்வுலகத்தவரின்தன்மை,காணப்படுந்தோற்றமாத்திரத்தைக்கொண்டு எளியவரென்றுகருதுவது: அத்தன்மையே இந்தவருணனுக்கும் என்விஷயத்தில் உண்டாயுள்ளதென்றவாறு: சாமானியப்பொருள் விசேடப்பொருளைக் காட்டிற்று: இது-பிறிதுமொழிதலணி. குறுமையுடன் காணப்பட்டவர் (நீறுபூத்த நெருப்புப்போல மகிமையுள்ளடங்கப்பெற்றவராயினும் இவ்வுலகோர் அவரிடத்தும் கூசாரென்பது மூன்றுமடிக்குப்பொருள். பி-ம்:—[1]யாவரும் யாவையும், யாவரும் யாவதும், யாரையும் யாவையும். (௫௪அ)

கரு.—இராமன் கடலின்மீது அம்புசெலுத்துமாறு 'வில்லைத்தருக' என, இலட்சுமணன் கொடுத்தல்.

திருதி யென்பதொன் [1]றழிதர வூழியிற் சினவும்
பருதி மண்டில மெனப்பொலி முகத்தினன் பலகால்
தருதி வில்லெனு மளவையிற் றம்பியும் வெம்பிக்
குருதி வெங்கன லுமிழ்கின்ற கண்ணினன் கொடுத்தான்.

(இ - ள்.) மனவடக்கமென்பதாகிய ஒன்று(தன்னை விட்டு)நீங்க, ஊழிக்காலத்திற்சீறுகின்ற சூரியமண்டலம்போல உக்கிரத்தன்மைவிளங்குகின்ற முகத்தையுடையவனாய், 'வில்லைத்தருவாய்'என்று(ஸ்ரீராமன்)பலமுறைசொல்லுமளவிலே,தம்பியான இலக்குமணனும் குருதியுடனே வெங்கனலையுமிழ்கின்ற கண்களையுடையவனாய், மனம்வருந்தி(அவன்கேட்டவில்லையும் அந்தவில்லிற் பூட்டுதற்குஉரிய அம்புகளையும்) கொடுத்தான்; (எ - று.)

கடலைநோக்கி வரங்கிடந்த பெருமாள், ஜடப்ரக்ருதியான அந்தக்கடல் வந்து முகங்காட்டாமையாலே அந்த ஆழியைச் சீறி 'மீன்படுகுட்டமானஇது, நம்மை மதிக்கிறதில்லை; குண [குணம்-நாணும், நல்லியல்பும்.] ஹீநனாய் இறுமாப்பையுடைய இந்தக்கடல் கட்டுக்குலைந்து புல்லைக்கவ்வும்படி குணவத்தாகிக் கட்டுடைய வில்லைக்கொண்டு வருக'என்னவும், இளையபெருமாள் தாம் படுக்கையானபடியாலே 'படுக்கைப்பற்றைப் படைப்பற்றாக்கவொண்ணாது' என்ற கருத்தாலே தயங்கிநிற்க, 'உனதுதாய் சொன்னபடி செய்யவேண்டாவோ? தமையன்சொல்லை மீறலாமோ? நம்மைப்பண்ணின பரிபவம் உனக்கு இல்லையோ? வில்லைத்தருக, வில்லைத்தருக' என்று பலமுறை கூறவே, இலட்சுமணன் அஞ்சி அவ்வாறே வில்லைத்தந்தன னென்று இதன் கருத்தை விரித்துரைப்பர். வில்லைக்கூறியது-வில்லில்வைத்து எய்யப்படும் அம்புகளையும் உபலட்சணத்தாற் காட்டும். குருதிவெங்கன லுமிழ்கின்றகண்-சினத்தைக்காட்டுங்கண். த்ருதி என்ற வடசொல்-சாந்தியையென்றபொருளைக்காட்டிற்று.பி-ம்:—[1]இழிதர. (௫௪௯)

௧௬.—இராமன் நாணேற்றி ஒலியெழுப்புதல்.

வாங்கி [1]வெஞ்சிலை [2]வாளியின் மற்றொரு வேலை
வீங்கு [3]தோள்வலம் [4]வீக்கினன் [5]கோதையை விரலால்
தாங்கி நாணினைத் தாக்கினன் தாக்கிய தமரம்
[6]ஓங்கு முக்கணான் றேவியைத் தீர்த்தது ஊடல்.

(இ-ள்.) கொடியவில்லை அம்புகளுடனே (இலக்குமணனிடத்தினின்று) வாங்கி, (வில்லின்ஒருபுறத்துத் துவக்கியுள்ள நாணியை) மற்றொருமுனையில் மிக்க (தன்) தோள்வலிமையாற் கட்டி, விரலினால் உறையைத்தாங்கி அந் நாணியைத் தாக்கினன்: தாக்கியதனாலெழுந்த ஒலியானது, உயர்ச்சிபெற்ற த்ரிணேத்ரனான சிவபெருமானது தேவியின் ஊடலைப் போக்கியது; (எ-று.)

கணவனோடு ஊடிப்பிரிந்திருந்த பார்வதிதேவி வில்லின் நாணொலியைக் கேட்டு அஞ்சி ஊடலைவிட்டுக் கணவனைப்புல்லினளென்பது - இறுதியடியின் கருத்து: இதனால் நாணினின்றுஎழுந்தபேரொலியின்கடுமை தொனிக்கும். வரம்பு என்ற பொருளுள்ள வேலாஎன்ற வடசொல்லின் திரிபானவேலையென்பது-இங்கு, (வில்லின்) முனை யென்ற பொருளைத் தந்தது. கோதை-கோதா: வடசொல்: உடும்புத்தோல்: அதனாலியன்ற விரற்சட்டையைக் காட்டும்.

பி-ம்:—[1]வார். [2]வாளிபெய்புட்டிலுமலைபோல். [3]தோளயல், தோளியல். [4]வீக்கிவன். [5]கோதையின். [6]ஓங்கல். (௫௯௦)

௧௭.—இதுவும் அடுத்தகவியும்-இராமபிரான் அம்புகளை எய்தமையைத் தெரிவிக்கும்.

[1]மாரி யின்பெருந் துளியினும் வரம்பில வடித்த
சீரி தென்[2]றவை யெவற்றினுஞ் சீரிய தெரிந்து
பாரி யங்கிரும் புனலெலா [3]முடிவினிற் பருகுஞ்
சூரி யன்கதி ரனையன சுடுசரந் [4]துரந்தான்.

(இ - ள்.) மழையின் பெருத்த தாரைகளினும் வரம்பு இல்லாதனவும் [மிகப்பலஆயினவும்], காய்ச்சியடித்துக் கூராக்கப்பட்டனவும், சிறப்புள்ளவையென்று சொல்லப்படுபவை யெவற்றினும் சிறப்புடையனவும், பூமியிற் பொருந்திய மிக்கநீரையெல்லாம் உலகமழியுங்காலத்திற் பருகுகின்ற சூரியன் கிரணங்களையொப்பனவுமான எரிக்குந்தன்மையுள்ள அம்புகளை ஆராய்ந்தெடுத்து (இராமபிரான் அப்போது) செலுத்தினான்; (எ - று.)

"ஓரம்பேஅமைந்திருக்கப் பலஅம்பு வேண்டுவான் என்? என்னில்,—...இக்கடலோடு துவக்கான எழுகடலையும் அழிக்கையிலுண்டான திருவுள்ளத்தாலே. மராமரமேழும் மலையேழும் கீழேழுலகமுமாக மூவேழிருபத்தொன்றையும் ஓரம்பாலே துளையுருவப்பண்ணினவருக்கு ஓரேழுக்குப் பல அம்புகள்வேணுமோ? என்னில்,—யானை தன்வலிமையையறியாதவாறுபோலக் கோபத்தின் மிகுதியாலே தம்முடையமிடுக்கை மறந்து...செய்தார்" என்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தது இங்குக் காணத்தக்கது.

பி-ம்:—[1]மாரியில். [2]இவை. [3]முடிவுறப். [4]சொரிந்தான். (௫௯௧)

௪௮. பெரிய மால்வரை யேழினும் பெருவலி [1]பெற்று
வரிகொள் வெஞ்சிலை வளர்பிறை யாமென வாங்கித்
திரிவ நிற்பன யாவையு முடிவினிற் றீக்கும்
[2]எரியின் மும்மடி கொடியன சுடுசர மெய்தான்.

(இ - ள்.) பெருமைபெற்ற ஸப்தகுலாசலங்களினும் பெருவலிமைபடைத்துக் கட்டமைந்த கொடியவில்லை வளர்பிறைச்சந்திரன்போல வளைத்து, திரிவனவும்நிற்பனவுமாகிய எல்லாப்பொருளையும் [சராசரங்களையெல்லாம்]ஊழிக்காலத்து எரிக்கவல்ல ஊழித்தீயினும் மும்மடங்குகொடுமைவாய்ந்தனவான சுடுசரத்தை யெய்தான்; (எ - று.)

கீழ்க்கூறியபொருளையே இங்குவேறுவகையாகக்கூறினர்: இவ்வாறுகூறுவது, பெருங்கவிகட்குஇயற்கை. இவ்வாறுகூறுவதில் வைசித்திரியம்ஏற்படுவதால் கூறியதுகூறலென்னுங் குற்றத்திற்குஇடமில்லை. ஸப்தகுலாசலங்களாவன-கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரிஎன்பன. பி-ம்:—[1]படைத்த, பெற்ற. [2]எரியும். (௫௫௨)

௧௯.—அப்போது கடலடைந்த நிலையின் வருணனை.

மீனு நாகமும் [1]விண்டொடு மலைகளும் விறகாய்
ஏனை நிற்பன யாவையு மேலெரி யெய்தப்
பேன நீர்நெடு நெய்யெனப் [2]பெய்கணை [3]நெருப்பாற்
கூனை யங்கியின் குண்டமொத் ததுகடற் குட்டம்.

(இ - ள்.) (கடலிலுள்ள)மீன்களும் நாகங்களும் விண்ணையளாவியோங்கியுள்ள மலைகளும் விறகாகஅமைய,மற்றுமுள்ளவையாவும் (வெந்து) மேலே எரியோங்க, நுரையோடுகூடிய கடலின்நீர் மிக்க நெய்யாக, (இராமபிரான்) எய்த கணையினின்று தோன்றியநெருப்பினாலே கடற்குட்டமானது வளைந்த அக்கினிகுண்டம் போன்றது; (எ - று.)

அக்கினிகுண்டத்தில் விறகிட்டு மேலெரியோங்க நெய்யூற்றி ஓமம்வளர்த்தல்,இயல்பு.கடலினிடத்து அவ்வக்கினிகுண்டத்தின் தன்மையை யேற்றிக் கூறினர்: உருவகத்தையங்கமாகக்கொண்ட தற்குறிப்பேற்றவுவமையணி. கூனை, ஐ-சாரியை: அழகியஎனினுமாம். பேநம் - நுரை: வடசொல். குட்டம்-ஆழ்ந்துபரந்தஇடம்: விறகு-சமிதை. பி-ம்—[1]விண்டொடர். [2]பெருங்கடல். [3]நெருப்பாய். (௫௫௩)

௨௦.—அம்புகளின்செயல்-இதுமுதல் நாற்பத்திரண்டுகவிகளிற் கூறப்படுகின்றது.

பாழி வன்னெடுங் கொடுஞ்சிலை வழங்கிய பகழி
யேழு வேலையு மெரியொடு புகை[1] மடுத் தேகி
ஊழி வெங்கனற் கொழுந்துக [2]ளுருத்தெழுந் தோடி
ஆழி மால்[3]வரைக் கப்புறத் திருளையு மவித்த.

(இ - ள்.) (இராமபிரானுடைய) மிக்கவலிமையுள்ள நீண்டுவளைந்த சிலை வெளிப்படுத்திய கணைகள்,—ஏழுகடல்களையும் நெருப்புடனே புகையையும் நிரப்பிப்புறப்பட்டு, ஊழிக்காலத்துக்கொடிய அக்கினிச்சுவாலைகள் போல் சினந்தெழுந்து ஓடி, சக்கரவாளமலைக்கு அப்புறத்துள்ள இருளையும் போக்கின.

எழுகடல்களுக்குஅப்பால் சக்கரவாளகிரி சூழ்ந்திருக்கின்றதென்பதும், அதற்குஅப்பால் சூரியனதுவெயிலேபடாது இருள்சூழ்ந்தஇடம் உள்ளதென் பதும் புராணங்களின்கொள்கை. பி-ம்:—1மடுத்தென்ன,மடுத்தெரிய. 2உருத் தென. 3வரையப்புறத்து. (ருருச)

உக. மருமதாரையி னெரியுண்ட மகரங்கண் மயங்கிச்
செருமு வானிடைக் கற்பக மரங்களுந் தீய
நிருமி யாவிட்ட நெடுங்கணை பாய்தலி னெருப்போடு
உருமு வீழ்ந்தெனச் சென்றன கடற்றுளி யும்பர்.

(இ - ள்.) மருமஸ்தானங்களில் எரிபட்ட சுறாமீன்கள் மயங்கிநெருங்க வும் வானுலகத்துள்ள கற்பகமரங்களும் தீய்ந்துபோகவும் (இராமபிரான்) தொடுத்துவிட்ட நீண்டஅம்புகள் பாய்தலினால், நெருப்புடனே இடி விழுந் தாற்போலக் கடலின்நீர்த்துளிகள் வானத்துச்சென்றன;(எ-று.)—மருமம்= மர்மம்: உயிர்நிலை; தாரை=தாரா: ஒழுங்கு: வடசொல். பி-ம்:—1தாரையி னெரியுண்ட. 2படுதலின். (ருருரு)

உஉ. கூடும் வெம்பொறிக் கொடுங்கனல் தொடர்ந்தன கொளுந்த
ஓடு மேகங்கள் பொரிந்திடை யுதிர்ந்தன வும்பர்
ஆடு மங்கையர் கருங்குழல் விளர்த்தன வளக்கர்க்
கோடு தீந்தெழக் கொழும்புகைப் பிழம்பு மீக் கொள்ள.

(இ - ள்.) திரண்ட வெவ்வியபொறியைக்கொண்ட கொடிய நெருப்புச் சுவாலைகள் தொடர்ந்தனவாய் எரிவதனால், (வானத்திற்) சஞ்சரிக்கின்ற மே கங்களும் (அந்தவெப்பத்தாற்) பொரிந்துபோய்(ப்பொடிப்பொடியாய்)க் கீழே யுதிர்ந்திட்டன; கடலின் வரம்பு தீந்துபோம்படி கொழுவியபுகையுடனே அனற்பிழம்பு மேலெழுந்ததனால், வானுலகத்தில் நர்த்தனஞ்செய்கின்ற(அரம் பைமுதலிய)மகளிரின் கருங்குழல்கள் (சாம்பலாகி) வெளுத்திட்டன; (எ-று.) —அளக்கர் - அளப்பதற்குஅருமையானது எனக் கடலுக்குக் காரணக்குறி. பி-ம்:—1கொழுங்கனல், கொடுங்கணை. 2தொடர்ந்திட. 3கொளுத்த. 4வெளுத் தன. 5நீர்த்தெழு. 6கொடும். 7போய். (ருருசு)

உங. நிமிர்ந்த செஞ்சர நிறந்தொறும் படுதலு நெய்த்தோர்
உமிழ்ந்து லர்ந்தன மகரங்க ளுலப்பில வுருவத்
துமிந்த துண்டமும் பலபடத் துரந்தன தொடர்ந்து
திமிங்கி லங்களுந் திமிங்கில கிலங்களுந் திரிந்த.

(இ-ள்.) எழுந்த செந்நிறமுள்ள கணைகள் (தமது) மார்புகள்தோறும் படு தலும், மகரங்கள் இரத்தத்தைக்கக்கிக்கொண்டு உலர்ந்தவை கணக்கில்லா தன; விரையச்செலுத்தப்பெற்றனவான அந்தஅம்புகள் தொடர்ந்து உருவி யதனால், திமிங்கிலங்களும் திமிங்கிலகிலங்களும் சிதறுண்டு பலதுண்டங்க ளாகித் துணிவுபட்டன; (எ - று.)—துரந்தன-பெயர். பி - ம்:—1செஞ். 2படுந்தொறு, தைத்தலும், மன்னலும். 3உலந்தன. 4சிரங்களுமுருவ, சிகரங்க ளுருவி. 5தொடர்ந்தன. 6தொலைந்து, தொலைந்த. 7திமிகளுமுதிர்ந்தன. (ருருஎ)

உ௪. நீறு மீச்செல [1]நெருப்பெழப் பொருப்பெலா [2]மெரிய
நூறு மாயிர கோடியுங் கடுங்கணை நுழைய
ஆறு கீழ்ப்பட வளறுபட் டழுந்திய வளக்கர்
சேறு தீர்ந்தெழக் [3]காந்தின சேடன்றன் சிரங்கள்.

(இ - ள்.) நீறு மேலேபறக்குமாறு நெருப்புத்தோன்றியதனல் மலைகளெல்லாம் எரிந்துபோக நூறிய ஆயிரகோடியென்னும் பெருங்கணக்கினைக் கொண்ட கொடியஅம்புகள் (தன்னுட்)புகுந்ததனல் (முதலில் தன்னிடத்து விழுகின்ற) யாறுகளெல்லாம் கீழ்மைப்படும்படி சேருகி அழுந்துந்தன்மையைப்பெற்ற கடல் (பின்பு) அச்சேறும் தீர்ந்துபோனதனல், பாதாளலோகத்திலுள்ள ஆதிசேஷனதுசிரங்கள் விளங்கித்தோன்றின; (எ-று.)--இது-தொடர்புயர்வுநவிற்சியணி.பி-ம்:—[1]பொருப்பெலாநெருப்பெழுந்து. [2]நெரிய. [3]காய்ந்தன. (௫௫௮)

உ௫. மொய்த்த மீன்குல முதலற முருங்கின மொழியிற்
பொய்த்த சான்றவன் குலமெனப் பொருகணை [1]யெரிய
உய்த்த [2]கூம்புடை நெடுங்கல [3]மோடுவ கடுப்பத்
தைத்த வம்பொடுந் திரிந்தன [4]தாலமீன் [5]சாலம்.

(இ - ள்.) போர்செய்கின்ற அம்புகள் எரிவதனல்,பேச்சில்தவறிவிட்ட [பொய்பேசிய] பெரியவன்குலம்போல நெருங்கிய மீன்குலங்கள் அடியோடு அழிந்தன; செலுத்தப்பட்ட கூம்பைக்கொண்ட பெரியமரக்கலங்கள் ஓடுவனவற்றை யொத்திருக்குமாறு, தாலமீன்கூட்டங்கள், தைத்தஅம்போடும் மிகத் திரிந்தன; (எ - று.)

மேல்முகமாகத் தைத்த கணைகள் கூம்பையும், தாலமீன்கள் மரக்கலத்தையும் போலு மென்க; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]அரிய. [2]கூம்பொடு. [3]ஓடுவதொப்ப. [4]சாலமீன். [5]சால. (௫௫௯)

உ௬. சிந்தி யோடிய குருதிவெங் [1]கனலொடு செறிய
அந்தி வானகங் [2]கடுத்ததவ் வளப்பரு மளக்கர்
பந்தி பந்திக ளாய்நெடுங் [3]கடுங்கணை படர
வெந்து [4]தீந்தன கரிந்தன பொரிந்தன சிலமீன்.

(இ - ள்.) வரிசைவரிசையாக நெடியகொடிய அம்புகள் பாய்ந்துவருதலினுல், சிலமீன்கள்,வெந்து தீந்து கரிந்து பொரிந்துவிட்டன;(அந்தமீன்களினின்று)வெளிப்பட்டுஓடியஇரத்தம் வெவ்விய அம்புக்கனலோடு நெருங்குவதனல், அளத்தற்குஅருமையான அந்தச் சமுத்திரமானது அந்திவானத்தையொத்தது.—முன்னிரண்டடி-தற்குறிப்பேற்றவுவமையணி.பி-ம்:—[1]கனலொடும், கனல்களே. [2]ஒத்தன. [3]சரங்களும்பருக, கணையெரிபடர. [4]வீந்தன, வீழ்ந்தன. ()

உ௭. வைய நாயகன் வடிக்கணை குடித்திட வற்றி
[1]ஐய நீருடைத் [2]தாய்மருங் கருங்கனன் மண்டக்
கைக லந்தெரி கருங்கடல் காமகல் கடுப்ப
வெய்ய நெய்யிடை வேவன வொத்தன சிலமீன்.

(இ - ள்.) உலகிற்கெல்லாந்தலைவனாகிய இராமபிரானது கூரியஅம்புகள் பருகியதனால் வற்றிப்போய், 'நீர்உள்ளதோ, இல்லையோ?' என்ற ஐயத்திற்குஇடனாகித் தன்னிடமெங்கும் கொடியநெருப்பு மண்டியதனால் எல்லாப் பக்கமும்ஒருசேரஎரியப்பெற்ற கரியகடலானது கரியஅகலையொத்திருக்க, சிலமீன்கள் காய்ந்த நெய்யிலே வேகின்றவற்றை யொத்தன; (எ - று.)

கடலே வாணலியாகவும், கடல்நீரே நெய்யாகவும் இருக்க, அந்நெய்யால் வேகும் பண்டங்களைப்போன்றன அக்கடலிடைப்பட்ட மீன்களென்க. உருவகத்தை யங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1 மையநீர். 2ஆயபேருங்கனன்மண்டி, ஆய்வருங்கடுங்கனன்மண்டி. (௫௯௧)

உ௮. குணிப்ப ருங்[1]கொடும் பகழிகள் குருதிவாய் [2]மடுப்பக்
கணிப்ப ரும்புனல் [3]கடையுறக் குடித்தலிற் காந்து
மணிப்[4]ப ருங்[5]தடங் குப்பைகண் மறிகடல் வெந்து
தணிப்ப ருந்தழல் சொரிந்தன போன்றன தயங்கி.

(இ - ள்.) எண்ணுவதற்குமுடியாத கொடிய (இராம)பாணங்கள் (தமது) இரத்தம்படிந்தவாயினால்உட்செல்லும்படி சொல்லுதற்குமுடியாத[மிக்கிருந்த] (கடலின்) நீரை முழுதும்பருகியதனால், (அந்தக்கடலிலே) ஒளிவிடுந்தன்மையுள்ள இரத்தினங்களின் மிகப்பெரியகுவியல்கள் விளங்கித்தோன்றி, அலைமடங்குந்தன்மையுள்ள கடல்வெந்துபோய்த் தணித்தற்குமுடியாத தணலைச் சொரிந்தனபோன்றன; (எ - று.)

எரிந்தவிறகுகளினின்று தணலுண்டாதல்இயல்பு; அத்தன்மை கடலிடையேவிளங்கித்தோன்றும் மணிகளிடத்து அமைத்துக் கூறப்பட்டது: தற்குறிப்பேற்றவுவமையணி. பி - ம்:—1பெரும். 2மடுத்து. 3கடையறக். 4பெருந். 5தடக். (௫௯௨)

உ௯. எங்கும் வெள்ளிடை [1]மடுத்தலி [2]னிழுதுடை யினமீன்
சங்க முங்கறி கிழங்கென விடையிடை [3]தழுவி
அங்கம்வெந்து[4]பே ரளற்றிடை யடுக்கிய கிடந்த
பொங்கு [5]நன்னெடும் புனலறப் [6]பொரித்தன போன்ற.

(இ-ள்.)எங்கும் வெற்றிடமாம்படி நீரை(இராமபாணங்கள்)பருகியதனால் நிணத்தைக்கொண்டமீனின் பலவகைப்பட்டசாதிகளும் கறியுங் கிழங்கும்போல இடையிடையே பொருந்தி, (தமது) உடல்வெந்துபோய் மிக்க(கடற்) சேற்றிலே யடுக்கினவாய்க் கிடந்தவைகள்,—பொங்குந்தன்மையுள்ளநல்ல மிக்கபுனல் அடியோடுஅறும்படிபொரிக்கப்பட்ட பொரியலை யொத்திருந்தன.

எரிந்துபொரிந்துநிணத்துடன் அடுக்காய்த்தோன்றும் பலவகைமீன்குலங்கள் - பொரியலானகறிகிழங்குவர்க்கம்போலத் தோன்றினவென்க: தற்குறிப்பேற்றவணி. இனமீனும் சங்குகளும்எனினுமாம். பி-ம்:—1படுதலின், படுத்தலின். 2இனிதுடை. 3தழுவ. 4வெஞ்சேற்றிடையடுக்கியவயங்க, பேரளற்றிடையடுக்கின கிடந்த. 5நன்கதி. 6பொடித்தமீன், பொடிப்பன. (௫௯௩)

௩௦. அதிரும் வெங்கணை யொன்றையொன் றடர்ந்தெரி [1]யுய்ப்ப
வெதிரின் [2]வன்னெடுங் கானென [3]வெந்தன மீனம்
பொதுவின் மன்னுயிர்க் குலங்களுந் துணிந்தன பொழிந்த
உதிர முங்கடற் றிரைகளும் [4]பொருவன வொருபால்.

(இ - ள்.) ஒலித்துவருந்தன்மையுள்ள கொடியஅம்புகள் ஒன்றையொன்றுமோதி மூங்கிலின் கொடியநெடிய காட்டைப்போல் நெருப்பையுண்டாக்க, (அதனால், ஒருபக்கத்திலே) மீன்கள் வெந்தன; சாதாரணமான நிலைபெற்றபிராணிவர்க்கங்களும் துணிப்புண்டனவாய் வெளிக்கக்கிய இரத்தமும் ஒருபக்கத்திலே கடற்றிரைகளேயும் ஒத்துத்தோன்றின; (எ - று.)

உயிர்க்குலங்களும்-இறந்ததுதழுவிய எச்சவும்மை.பொதுவின் மன்னுயிர்க்குலம் என்றது-கடலில்வாழ்தலுடையனவாகாத பிராணிவர்க்கம் என்றவாறு. திரைகளும், உம்மை-உயர்வுசிறப்பு. உதிரமும் கடற்றிரைகளும் பொருவன என்பதற்கு - உதிரமும் கடலலேகளும் தம்மிலெதிர்ப்பன என்றுமாம். பி-ம்:— [1]அடர, மடுப்ப. [2]நன்னெடுங், வெங்கடுங். [3]வெந்தது. [4]பொருதன. (ருசுச)

௩௧. அண்ணல் வெங்கணை யறுத்திடத் தெறித்தெழுந் தகைக்கர்ப்
பண்ணை [1]வெம்புனல் படப்பட நெருப்பொடும் பற்றி
மண்ணில் [2]வேருறப் [3]பற்றிய நெடுமர [4]மற்று
மெண்ணெய் [5]தோய்ந்தென வெரிந்தன கிரிக்குல மெல்லாம்.

(இ - ள்.) கிரிக்குலங்களிலெல்லாமுள்ள மண்ணில் வேர்நன்றாகவூன்றிய நீண்டமரங்கள் இராமபிரானது கொடியகணைகள் அறுத்திட்டதனல் துண்டுபட்டு,நெருப்பினலும்பற்றப்பட்டு மேலெழுந்து,கடலாகிய நீர்நிலையின் வெவ்விய நீர் (தம்மீது) படுந்தோறும் பின்னும் எண்ணெயிற்றேய்ந்தாற்போல எரியலாயின; (எ - று.)

பண்ணை-வயலுமாம். கடலின்நீர் இராமபாணத்தினற் கொதியுண்டு வற்றிப் பண்ணைநீர்போலச் சிறிதாகத் தோன்றிப் பட்டமாத்திரத்தினல் வீழ்ந்த மரங்களே எண்ணெய் சேர்ந்தாற்போலப் பின்னும் எரியச்செய்தன வென்க. கிரிக்குலம்-கடலிலிருந்தவையென்னலாம்.பி-ம்:—[1]வெம்புலப்.[2]வேரற.[3]முற்றிய, வற்றிய. [4]முற்றும். [5]தோய்ந்தன. (ருசுரு)

௩௨. தெய்வ நாயகன் றெரிகணை திசைமுகத் தொருவன்
[1]வைவி தாமெனப் பிழைப்பில மனத்தினுங் கடுக
[2]வெய்ய வன்னெருப் பிடையிடை [3]பொறித்தெழ [4]வெறிநீர்ப்
பொய்கை தாமரை பூத்தெனப் [5]பொலிந்தது புணரி.

(இ - ள்.) தேவாதிதேவனை இராமபிரான் ஆராய்ந்தெடுத்து எய்த அம்புகள் நான்குதிசையும்நோக்கி நான்குமுகங்களேயுடைய பிரமதேவனது கொடியகணைபோல [பிரமாஸ்திரம்போல]த் தவறுதனவாய் மனத்தினும் விரைந்துசெல்லவே, (அந்தக்கணையால்தோன்றிய) கொடிய வலிய நெருப்பானது இடையிடையே பொறியைச்சிதறியவண்ணம் மேலெழுதலால், கட

லானது,—நறுமணமுள்ள நீர்ப்பொய்கை தாமரைமலர்களைப் பூத்தாற்போல விளங்குவதாயிற்று; (எ - று.)

கடலின்நீரில் இடையிடையே நெருப்புச்சுவாலையெழுந்து தோன்றுவதால், அக்கடல் தாமரைபூத்த நீர்ப்பொய்கைபோலு மென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]வைததாம். [2]எய்கையால், வெய்யவான், வெய்யதாய். [3]பொடித்தெழ. [4]விரிந்த. [5]பொலிந்ததப். (ருகூ)

ஙங. செப்பின் மேலவர் சீறினு மது[1]சிறப் பாதல்
தப்பு மேயது கண்டன முவரியிற் றணியா
உப்பு வேலையென் றுலகுறு பெரும்பழி [2]நீங்கி
அப்பு வேலையாய் நிறைந்தது குறைந்ததோ வளக்கர்.

(இ - ள்.) சொல்லுமிடத்து,மேலோர் சீற்றங்கொண்டாலும் அது சிறப்பேயாகுதல் தவறுமோ? [தவறாது]; அவ்விஷயத்தை உப்புக்கடலிற்(பிரதியட்சமாகக்) கண்டோம்; (எங்ஙனமெனின்),—கடலானது, தணியாதஉப்பையுடையது என்று உலகிற்பொருந்திய பெரும்பழி நீங்கப்பெற்றுஅம்புவேலையாய் நிறைந்தது; கடல் குறையுற்றதோ? (எ - று.)

இராமபிரான் சீற்றத்தால் அப்போது உவரிக்கு உப்புவேலையென்றபேர் நீங்கி அப்புவேலையென்ற பேர் நேரிட்டதனால், பெரியோர்சீறினால் மேன்மையேநிகழு மென்பதைக்கண்ணாரக்கண்டோமென்றவாறு.ஒருசெய்கையால் பிறருக்கு நல்லவிஷயத்தையோ தீயவிஷயத்தையோ தெரிவிப்பதாகிய காட்சியணி இச்செய்யுளிற் காண்க. அம்புவேலையென்ற மென்றொடர்க்குற்றியலுகரம் வன்றொடர்க்குற்றியலுகரமாயிற்று: இத்தொடர், அம்பையுடைய வேலையென்று விரியும்: அம்பு என்பது - சிலேடைவகையால், நன்னீர் கணை என்ற இருபொருளை யுணர்த்தும். பி-ம்:—[1]சிறப்பான. [2]ஒழிய. (ருகஎ)

ஙச. தாரை யுண்டபே ரண்டங்க [1]ளடங்கலுந் தானே
வாரி யுண்டருள் செய்தவற் [2]கிதுவொரு வலியோ
பாரை[3]யுண்பது படர்புன லப்பெரும் பரவை
நீரை[3]யுண்பது நெருப்பெனு மப்பொரு [4]ளிறுத்தான்.

(இ - ள்.) (ஒன்றன்மேலொன்றாக) ஒழுங்காகஇருக்கின்ற பெரியஅண்டங்களையெல்லாம் தானொருவனே வாரியுண்டு அருள்செய்தவனாகிய திருமாலின் அமிசாவதாரமான இராமபிரானுக்கு இந்தக்கடல்நீரை அம்பினாலுண்பது ஒரு பெரியகாரியமாமோ? (யுகாந்தகாலத்தில்) உலகத்தையழிப்பது பரவிய (கடற்) புனலாகும்: அந்தப் புனலைக்கொண்ட கடலின்நீரை நெருப்பு உண்ணுமென்று வேதத்திற்கூறிய அந்தவிஷயத்தை(த் தன்செயலால்) நிலைநாட்டினான்; (எ - று.)

அக்கினியிலிருந்து நீரும் நீரிலிருந்து பூமியும் தோன்றியது போலவே, காரியங்கள் தமக்குக்காரணமான பொருள்களிலே லயமடையும் முறைமைக்கு ஏற்ப, பூமியானது நீரிலும் நீரானது நெருப்பிலும் லயமடையுமென்று வேதம் கூறுகின்றது: அவ்விஷயத்தை உலகத்தோர் கண்ணாற்காணும்படி

கணையினால்தோன்றிய நெருப்பினால் கடலின்நீரைவற்றுவித்தான்: உலகத்தை யெல்லாம் வாரியுட்கொண்ட பெருமானுக்கு இச்செயல் ஒருபெருங்காரிய மன் றென்றவாறு. அண்டங்களையெல்லாம் உண்டருள்பவனுக்கு ஓரண்டத் தின் ஏகதேசத்திலடங்கியிருக்கும்பொருளை யுண்பதில் அருமைப்பாடு சிறிது மில்லையென்பார் 'இதுஒருவலியோ' என்றார். தாரை-தாரா என்ற வடசொல் லின் சிதைவு. 'தாரையுண்ட பேரண்டங்கடாழையின் கனியைத்,தேரையுண் டெனவுண்டவற்கிதுவொருவலியோ'என்று முதலிரண்டடிகள் சிலபிரதியிற் காண்கின்றன. பி-ம்:—1அடங்கவும். 2ஈதொரு. 3உண்டது. 4நிறைத்தான்.()

வேறு.

௩௫. மங்கலம் பொருந்திய 1தவத்து மாதவர்
கங்குலும் பகலுமக் 2கடவுள் வைகுவார்
அங்கம்வெந் திலரவ னடிக ளெண்ணலாற்
பொங்குவெங் கனலெனும் புனலிற் போயினார்.

(இ - ள்.) இரவும்பகலும் அந்தக்கடவுள்தங்குபவராகிய மங்கலம்பொருந் தியதவத்தையுடைய பெருந்தவசியர்,—அந்தக்கடவுளின் பாதங்களைத் தியா னித்துக்கொண்டிருத்தலால், தம்முடல்வேவப்பெறாமல் மிகக்கொடிய அக்கினி யென்றுசொல்லத்தக்க(அந்தக்கடலின்)நீரில்தானே போனார்கள்; (எ - று.)— மாதவர்க்கு நெருப்பிலிருந்தும் உடல்வேதலாகியகாரியம் தோன்றாமையைக் கூறியதனால், இது - சிறப்புநவிற்சியணியாம்: இதனை வடநூலார் விசே ஷோக்தியென்பர். அங்ஙனம் உடல்வேவப்பெறாமல் அவர்கள் இனிதிருந் ததுபற்றி,'கனலெனும்புனல்'என்றார். பி-ம்:—1தவத்தின். 2கடலின். (௫௬௯)

௩௬. தென்றிசை 1குடதிசை முதல திக்கெலாந்
துன்றிய பெரும்புகைப் 2படலஞ் சுற்றலாற்
கன்றிய நிறத்தன கதிர வன்பரி
3நின்றன சென்றில நெறியி னீங்கின.

(இ - ள்.) தென்திசை மேற்றிசை முதலிய திக்குக்களிலெல்லாம் நெருங் கிய மிக்க புகைத்தொகுதி சூழ்ந்துகொண்டதனால், சூரியன்குதிரைகள்,—(தம் முடையஇயற்கையான பச்சைநிறம்நீங்கிக்) கன்றியநிறத்தையடைந்தனவாய் வழிதவறிப்போய்மேற்செல்லமாட்டாமல்நின்றன; (எ - று.)—பரிநிறம்மாறு பட்டனவென்றது - பிறிதின்குணம்பெறலணியும், நெறியின்நீங்கின சென் றில நின்றன என்றது - தொடர்புயர்வுநவிற்சியணியுமாம். பி-ம்:—1குண திசை. 2படலை. 3நின்றது. (௫௭௦)

௩௭. 1பிறிந்தவர்க் குறு2துய ரென்னும் பெற்றியை
அறிந்திருந் தறிந்தில ரனைய ராமெனச்
செறிந்ததம் பெடைகளைத் தேடித் 3தீக்கொள
மறிந்தன கரிந்தன வானப் புள்ளெலாம்.

(இ - ள்.) வானத்திற்சஞ்சரிக்குந் தன்மையுள்ள பறவைகளெல்லாம்,— (தம்மோடு)நெருங்கிப்பழகுகின்ற தம்முடைய பெண்பறவைகளைத் தேடி,(அப்

பெடைகள் இராமபிரானெய்த அம்புகளினால்தோன்றிய) தீக்கொள்ளவே (அங் ஙனமானதையறிந்து), '(இராமபிரான்) பிறிந்தவர்க்கு மிக்கதுயரம்(விளையும்) என்ற தன்மையை யறிந்திருந்தும் அறியாதவரைப் போன்றார்' எனச்சொல்லி, (அத்தீயில் தாமும்) உயிர்மடங்கிக் கரிந்திட்டன; (எ - று.)

தமதுபேடையைத்தேடி அவை தீக்கொண்டதையறிந்த ஆண்பறவை கள் 'இராமபிரான் தான் சீதையைப்பிரிந்து பிரிந்தார்க்குஉறுந்துயர் இத்தன் மையது என்பதை உணர்ந்திருந்தும்,பிறபிராணிகட்கு நமதுசெயலால் அவ்வா றான துயர் நேருமோ? என்றுஅஞ்சியல்லவோ தொழிலைச்செய்யவேண்டும்: அங்ஙனம் ஆராயாதுசெய்து எமதுபேடையைத் தமதுஅம்புத்தீக்கொள்ளச் செய்தாராதலால்,இவர் பிரிந்தார்க்குஉறுந் துயரை அறிந்திருந்தும் அறியாத வர்போன்றார்' என்றுசொல்லித் தாமும் அத்தீயில் உயிரொழிந்துகரிந்தன வென்றவாறு. ஆம் - அசை. பி-ம்:—[1]பிறிந்தவற்கு, பிறந்தவற்கு. [2]பொருளு ணரும்பெற்றியர், துயரெண்ணும்பெற்றியை. [3]தீச்செல. (ருளக)

ரூஅ. [1]கமையறு கருங்[2]கடல் கனலி கைபரந்து
[3]அமைவன மொத்தபோ தறைய வேண்டுமோ
சுமையுறு பெரும்புகைப் [4]படலஞ் சுற்றலால்
இமையவ [5]ரிமைத்தனர் [6]வியர்ப்பு மெய்தினார்.

(இ - ள்.) (இராமபிரான்)பொறுமையறுதற்குக் காரணமான அந்தக் கரியகடலானது நெருப்புத் தன்னிடம்முழுதும் பரவப்பெற்று மூங்கிற் காட்டையொத்தபோது (அதனால்நேர்ந்த கொடுமையைச்) சொல்லவேண் டுமோ? சுமையாகப்பொருந்திய பெரும்புகைக்கூட்டம் சுற்றிக்கொண்டத னால்,(இமையாக்கண்ணரான)தேவரும் கண்ணிமைத்து உடலில்வியர்வையும் உண்டாகப்பெற்றனர்; (எ - று.)—பி-ம்:—[1]கமையுறு. [2]கடற். [3]அமைவன வொத்த. [4]படலை. [5]இமைத்தன. [6]வெயர்ப்பும். (ருளஉ)

ரூகூ. பூச்[1]செலா தவணடை [2]போல்கி லாமையால்
[3]ஏச்செலா மெய்திய [4]வெகினம் யாவையுந்
தீச்செலா நெறிபிறி தின்மை யாற்றிசை
[5]மீச்செலா புனலவன் புகழின் வீந்தவால்.

(இ - ள்.) பூவிலும்அடிவைத்துச்செல்லமாட்டாத (மிக்கமென்மையையு டைய)வளான சீதாபிராட்டியின் நடையைப் போன்று(அழகாக)நடக்கமாட்டா மையால் பழிப்பைமிகுதியாகஅடைந்த அன்னப்பறவைகளெல்லாம்,—நெருப் புச்செல்லாதவழி வேறுஇல்லாமையால் திக்கின்மீதுசெல்லமாட்டாதனவாய், வருணபகவான்புகழ்போல அழிந்தன; (எ - று.)—செலா - முற்றெச்சம். புன லவன்புகழ்வீந்தமை [illegible] கிடந்து இராமபிரானுக்கு அருளாமையாலென்க. புகழை வெண்ணிறமுடையதாகக்கூறுதல் கவிமரபாதலால்,வெண்ணிறமுடை யஅன்னப்பறவை வீந்தமையை வருணனுடையபுகழே சரீரம்படைத்துஅழிந் ததைப்போலுமென்றுகுறித்தார்: தற்குறிப்பேற்றவணி. 'பூச்செலாதவள்' என் பது,சீதையின்மென்மையைக்குறிக்கும். பி-ம்:—[1]செலாதவண்பெடை,செலா

தவப்பெடை. 2போகலாமையில், போகிலாமையால். 3எச்செலாவெய்திய 4அன்னம். 5மீச்செலாப்புரவலன், மீச்செலப்புல்லன்றன். (௫௭௩)

௪௦. பம்புறு நெடுங்கடற் 1பறவை யாவையும்
உம்பரிற் செல்லலுற் றுருகி 2வீழ்ந்தன
3அம்பர மம்பரத் தேக 4லாற்றல
இம்பரி 5லுதிர்ந்தன வெரிபு மெய்யன.

(இ - ள்.) பரவுதல்பொருந்திய பெரியகடலிலேவாழ்கின்ற பறவைகளெல்லாம் வானத்திற் (பறந்து) செல்லத்தொடங்கி(அங்கும்அனற்சுவாலைவீசுவதனால்) உருகி விழுந்திட்டன; மேகங்களும் எரிகின்ற உடலையுடையனவாய் ஆகாயத்திற் செல்லமாட்டாதனவாகி இவ்வுலகிற் சிந்தின; (எ - று.)—அம்பரம் அம்பரத்திற்செல்லமாட்டாதனவாயின என்று கூறிய நயம் பாராட்டற்குரியது. அம்பரம்-மேகமும், ஆகாயமும். பி-ம்:—1பரவை. 2வீய்ந்தன 3வம்பரும். 4ஆற்றில. 5மறிந்துபோயெரிந்துவீழ்ந்தவே. (௫௭௪)

௪௧. பட்டன படப்படப் படாத புட்குலம்
சுட்டுவந் 1தெரிக்குலப் படலஞ் சுற்றலால்
இட்டுழி யறிகில விரியல் 2போவன
முட்டையென் றெடுத்தன 3வெளுத்த முத்தெலாம்.

(இ - ள்.) இறந்தபறவைகள் இறந்திறந்துபோயினவாக, இறவாதபறவைகளெல்லாம் சுட்டுக்கொண்டேவந்து அக்கினிச்சுவாலைகளின்தொகுதி சூழ்ந்துகொண்டதனால் ஓடத்தொடங்கி, (தாம்முட்டையை) இட்டஇடத்தை யறியாமல் வெளுத்தமுத்துக்களையெல்லாம் (தமது)முட்டைகளென்றுகருதி யெடுத்தன; (எ - று.)—படாதபுட்குலம் வெளுத்தமுத்தை முட்டையென்று கருதியெடுத்தனவெனக் கூறியது - மயக்கவணி. தீப்பட்டுவேகும்நிலையிலும் பறவைகட்குத் தாம் இட்டமுட்டையினிடத்துள்ளஅன்பு விளங்குதல்காண்க. பி-ம்:—1எரிக்கனல், எரிகனல். 2போயின. 3கடலுள், கடுத்த. (௫௭௫)

௪௨. வள்ளலைப் 1பாவியே மனித னென்று கொண்டு
எள்ளலுற் 2றறைந்தன 3மெண்ணி லாமென
வெள்ளிவெண் பற்களைக் கிழித்து விண்ணுறத்
துள்ளலுற் றிரிந்தன 4குரங்கு சூழ்ந்தில.

(இ - ள்.) (நீர்க்)குரங்குகள்,—திரண்டிருக்கமுடியாமையால்,'பாவிகளாகியநாங்கள் உதாரகுணமுடையவனை ஸ்ரீராமபிரானைச் சாதாரணமனிதனே யென்றுஎண்ணிப் பரிகசித்தலைச்செய்து (எளனமாகச்)சொன்னோம்;ஆராய்ச்சியில்லாமற்போனோம்' என்றுசொல்லி வெள்ளிபோல் வெண்ணிறமான (தமது) பற்களை யிளித்தவண்ணம் ஆகாயத்தையளாவத் துள்ளி நிலைகெட்டு ஓடின; (எ - று.)

'எண்ணிலாம்'என்றது-'இராமன் மனிசனல்லன்: கடவுளின்அமிசமானவன்'என்ற எண்ணம் அவனது இந்தஅற்புதமானசெயலைக்காண்பதற்குமுன்னமேதோன்றியிருப்பின், அவனையெள்ளாமல் மற்றைவானரங்கள்போலவே அப்பரமனையடைந்து நற்கதியைப்பெறலாமென்றஉட்கோளினாலாகும். பொ

குளுரைக்கும்போது சூழ்ந்திலஎன்பதை முன்னேகூட்டாமல் இறுதியிலேயே கொண்டு, அதற்கு-குரங்குகள் இரிந்தனவாதலாற் கணையின்நெருப்பினாற் சூழப்பெறுதனவாயின என்றுஉரைப்பாருமுளர். பாவியேம் - தன்மைப்பன் மைப்பெயர். இனி, முதலிரண்டடிகள் "வள்ளலைப்பாவிதான் மனிதனென் றுடன், எள்ளலுற்றெதிர்ந்திலனேமுனாளென" என்று சிலபிரதியிற்காண்கின் றன. அந்தப்பாடம், அக்குரங்குகள் வருணனைப்பழித்தனவாகப் பொருள்பட் டுச்சிறக்கும். பி-ம்:—1பாவிகாள்,பாவிதான், பாவிகாண், பாவியேன். 2இகழ்ந் தனம். 3எண்ணிலோம். 4குரங்கின்சூழலே. (ருஎசு)

ருஎ. 1தாநெடுந் தீமைக ளுடைய தன்மையார்
2மாநெடுங் கடலிடை 3மறைந்து வைகுவார்
4தூநெடுங் குருதிவே லவுணர் துஞ்சினார்
5மீநெடுங் கிரியென மிதந்து வீங்கினார்.

(இ - ள்.) (பிறருக்கு) வருத்தஞ்செய்கின்ற மிக்கதீமைகளைக்கொண்ட தன்மையையுடையவரும்மிக்கபெருங் கடலிடையேமறைந்துதங்குபவருமான மாமிசங்களின் மிக்கஇரத்தம்படிந்தவேற்படையையுடையஅவுணர்கள்,(கணைக ளால்தோன்றிய நெருப்பினு லெரிக்கப்பட்டு) இறந்தவராய் மேலோங்கிய பெருமலையோலப் பருந்தோற்றத்துடன் மிதந்தார்கள்; (எ-று.)—'வீங்கிமிதந் தார்'என மாறுக. முதலடியில், தாம்என்றும்பிரிக்கலாம். பி-ம்:—1தானெடுந். 2மானெடுங். 3மறந்து. 4தூணெடுங். 5மீனெடுங்குலம். (ருஎஎ)

ருஅ. தசும்பிடை விரிந்தன வென்னுந் 1தாரைய
பசும்பொனின் 2மானங்க 3ளுருகிப் பாய்ந்தன
அசும்பற வறந்தன 4வான வாறெலாம்
விசும்பிடை 5விளங்கிய மீனும் 6வெந்தவே.

(இ-ள்.) (கணைத்தீயால்), பசும்பொன்னாலியன்ற விமானங்கள்,—(முத லிற் பொற்)குடம்இடையேவிரிந்தனவென்றுசொல்லத்தக்க ஒழுங்கையுடைய னவாய், (பிறகு)உருகிப்பாயலாயின; ஆகாயத்திலுள்ள கங்கையின் நீரெல் லாம், சீர்த்திவலையும்அறும்படி வரண்டுபோயின; ஆகாயத்தில்விளங்கிய நட் சத்திரங்களும் வெந்தன; (எ - று.)—மானம்-விமானமென்பதன்முதற்குறை. வானவாறு - ஆகாயகங்கை: ஆகாயவழியுமாம். முதலடி 'தசும்பொடுவிளங்கி யேயொளிருந்தானத்த' என்று ஒருபிரதி. பி-ம்:—1தாரையப். 2விமானங்கள், விமானமும். 3உருக்கி. 4வானயாறெலாம், வானயாறுகள். 5இயங்கின. 6வெந்த வால், வெந்ததால். (ருஎஅ)

ருகூ. 1செறிவுறு செம்மைய தீமைய யோம்புவ
நெறியுறு செலவின தவத்தி 2னீண்டன
உறுகின முறுபல வுருவு 3கொண்டன
குறுமுனி யெனக்கடல் பருகு மம்புகளே.

(இ - ள்.) (இராமபிரானுடைய) கூரிய அம்புகள்,—குறுகியவடிவமுள்ள அகத்தியரைப்போல், நெருங்கிய செம்மையையுடையனவும், தீமையையோம்பு வனவும், நெறியிற்செல்லுகின்றசெலவினையுடையனவும், தவத்தினீண்டன

வும், மிக்கசினம்பொருந்துவதாற்பலவுருவங்களைக்கொண்டனவுமாகிக் கடல் நீரைக் குடித்தன; (எ - று.)

கணைக்கு, செம்மை - செந்நிறமுடைமை, தீயையோம்புதல்-தீயை மேன் மேல்தோன்றச்செய்துவளர்த்தல், நெறியுறுசெலவு-நேரேசெல்லுதல், தவத்தின்நீளுதல் - இராமபிரானதுசங்கற்பத்தால்வளர்வனவாதல், உறுசினமுறப் பலவுருவுகொள்ளுதல் - இராமனதுசினத்தினால் ஒன்றுநூறாகஆதல்; கடல் குடித்தல் - கடல்நீரைவற்றச்செய்தல். குறுமுனிக்கு, செம்மை - நற்குண முடைமை; தீயையோம்புதல் - அக்கினிகாரியஞ்செய்தல், நெறியுறுசெலவு - சன்மார்க்கத்தில்நடக்கை, தவத்தின்நீளுதல் - தவத்தைமிகுதியாகக்கொள்ளுதல், உறுசினமுறப்பலவுருவுகொள்ளுதல்-மிக்கசினந்தோன்ற அச்சினத்திற் குஏற்பப் பலவுருவத்தையடைதல், கடல்குடித்தல்-கடல்நீரைஆசமனஞ்செய்தல்: இவ்வாறு இராமனது கணைக்கும் குறுமுனிக்கும்செம்மொழிச் சிலேடை மூலமாக ஒப்புமைகூறியது-சிலேடையையுறுப்பாக்கொண்ட உவமையணியாகும். பி-ம்:—[1]செறியுறுசெம்மையில். [2]நீண்டென. [3]கொள்வன. (ருஎகூ)

சசூ. மோதலங் கனைகடன் [1]முருக்குந் தீயினாற்
பூதலங் காவொடு [2]மெரிந்த பொன்மதில்
[3]வேதனு மிலங்கையு மீளப் போயின
தூதன்வந் தானெனத் துணுக்கங் [4]கொண்டதால்.

(இ - ள்.) மோதுதலையுடைய அழகிய ஒலிக்கின்ற கடலில் (இராமபிரானெய்தஅம்புகளினால்தோன்றிய) அழிக்குந்தன்மையுள்ள தீயினால் (இலங்கையின்) பொன்மதில் வேகவும், (முன்னர்அநுமானால்) அசோகவனிகையுடனே பூதலமும்எரியப்பெற்ற இலங்கைநகரத்திலுள்ளாரும் சென்ற (இராம)தூதனாகியஅநுமான் மீளவும்வந்திட்டானென்றுகருதி மனத்தி லச்சங்கொண்டனர்.

இலங்கை - இலங்கையிலுள்ளார்க்கு, ஆகுபெயர். இராமபிரானெய்த கணையினால் கடலில்தோன்றியநெருப்பு இலங்கையின்மதிலை வேவச்செய்யவும், 'முன்னர்ச்சோலையுடனே பூதலத்தையெரித்திட்ட அனுமான் மீளவும் வந்துநெருப்புவைத்திட்டானோ?' என்று இலங்கையிலுள்ளார் அச்சங்கொண்டனரென்பதாம்: ஐயவணி. பி-ம்:—[1]முழங்கு, முழங்கத். [2]எரிந்து. [3]மேய்தலும். [4]உற்றதே. (ருஅ௦)

சஎ. அருக்கனி லொளி[1]விடு மாட கக்கிரி
யுருக்கென வுருகின வுதிரந் தோய்ந்தன
முருக்கெனச் சிவந்தன [2]முரிய வெந்தன
கரிக்குவை நிகர்த்தன பவளக் காடெலாம்.

(இ - ள்.) சூரியனைப்போல ஒளிவிடுகின்ற பொன்மலையான திரிகூடாசலம் பொன்னுருக்குப்போலஉருகி இரத்தம்படியப்பெற்றுப் பலாசம்பூப்போலச் சிவந்துதோன்றின; பவளக்காடெல்லாம் நிறம்முரியும்படிவெந்தனவாகிக் கரிக்குவியலை யொத்தன; (எ - று.)—ஆடகக்கிரியென்றது - திரிகூடாசலத்தை: அதற்குச்சிகரங்கள்மூன்றுஇருத்தலால், பன்மை கூறப்பட்டது. பி - ம்:—[1]விளங்கு. [2]முதிர. (ருஅக)

௪௮. [1]பேருடைக் கிரியெனப் [2]பெருத்த [3]மீன்களும்
ஓரிடத் துயிர்தரித் [4]தொதுங்க கிற்றில
நீரிடைப் [5]புகுஞ்சில [6]நெருப்பு நன்றெனப்
பாரிடைக் குதித்தன பதைக்கு மெய்யன.

(இ - ள்.) பெருமையையுடையமலைபோலப் பெருத்தமீன்களும் ஓரிடத்தில் உயிரைத்தாங்கி ஒதுங்கிநிற்கமுடியாதனவாக, நீரிடையிற்புகுந்த சில, நெருப்பும் இந்தக்கடல்நீரின் நன்று என்றுசொல்லிப் பூமியிற்குதித்துத் துடிதுடிக்கின்ற உடம்பையுடையனவாயின; (எ - று.)—கடல்நீர் உடம்பில் இழிசிக்கொண்டு பூமியிற்குதிப்பினும் உடலை வேகச்செய்தலால், நீரினும் நெருப்பே நன்று மென்றனவென்க. பி-ம்:—[1]வேருடை. [2]பெரிய. [3]மீன்குலம். [4]ஓங்க. [5]புகுமதில். [6]நெருப்பில். (௫௮௨)

௪௯. சுருள்[1]கடற் றிரைகளைத் தொலைய [2]வுண்டனல்
பருகிடப் புனலில பகழி [3]பாரிடம்
மருள்[4]கொளப் [5]படர்வன நாகர் வைப்பையும்
இருள்கெடச் [6]சென்றன விரவி [7]போல்வன.

(இ - ள்.) (இராம) பாணங்கள்,—சுருளுந்தன்மையுள்ள கடலின் அலைநீரை வற்றும்படிபருகிப் (பின்னும் தம்மிடத்துள்ள) அனல் பருகுதற்கு நீர் இல்லாமையால் பாரிடத்தவர் திகைப்புஅடையும்படி செல்லத்தொடங்கியனவாய், நாகரின்வாழிடமான பாதாளலோகத்தையும் இருள்கெடச்சென்றனவாகிச் சூரியனையொத்தன; (எ - று.)—இருள்கெடுத்தலாற் பகழிக்குச் சூரியன் உவமையாவன். பி-ம்:—[1]கெடத். [2]உண்டன, உண்டெனப். [3]பாரிடை. [4]கெட. [5]படர்நெடு மகரவைப்பெலாம். [6]சென்றுள. [7]போன்றன, ஒப்பன. (௫௮௩)

௫௦. கரும்புறக் கடல்களோ டுலகங் [1]காய்ச்சிய
இரும்புறச் செல்வன விழிவ கீழுற
அரும்புறத் [2]தண்டத்தை யுருவி [3]யப்புறம்
பெரும்புறக் கடலையுந் தொடர்ந்து பின்[4]செல்வ.

(இ - ள்.) (இராமபாணங்கள்),—கறுத்துத்தோன்றுகின்ற மேற்புறத்தைக்கொண்ட கடல்களுடனே உலகங்களையும் எரித்தனவாய் இரும்பின் தன்மைபொருந்தச் செல்வனவும் கீழுறஇழிவனவுமாகி,(துளைத்தற்கு)அரிய இடத்தைக்கொண்ட அண்டத்தை ஊடுருவிச்சென்று அப்புறம் (அவ்வண்டத்தின்)பின்னேயுள்ள பெரும்புறக்கடலையும் தொடர்ந்துசெல்வனவாயின; (எ - று.)—திண்மையுடனிருத்தல்பற்றி 'இரும்புறச்செல்வன' என்றார். தொடர்புயர்வுநவிற்சியணி. பி - ம்:—[1]காட்சிய. [2]அண்டமும். [3]அப்புறப். [4]செலும். (௫௮௪)

௫௧. திடல்[1]திறந் துகுமணித் திரள்கள் சேணிலம்
உடல்திறந் துதிரம்வந் துகுவ போன்றன
கடல்[2]திறந் தெங்கணும் வற்ற வக்கடல்
[3]குடல்திறந் தனவெனக் கிடந்த கோளரா.

(இ - ள்.) (நீர்வற்றினமையால் கடலிடையே) திட்டுக்கள் திறக்கப் பெற்று (அங்குக்கிடந்த) இரத்தினத்தொகுதிகள், பாரதகிலம் உடல்திறக் கப்பெற்று இரத்தம் வந்து உகுவனவற்றைப் போன்றன; கடலானது திறக் கப்பெறுமாறு எங்கும் நீர்வற்றினமையால் (அதனிடையேதோன்றுகின்ற) வலிய கடற்பாம்புகள், அந்தக்கடல் குடல்திறந்தவற்றைப் போன்றன; (எ-று.) —தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1சிறந்து.2இறந்து.3குடர். (௫௬௫)

௫௨. ஆழியிற் புனலற மணிக 1ளட்டிய
2பேழையிற் பொலிந்தன பரவை 3பேறுறப்
4பூழையிற் பொருகணை 5யுருவப் புக்கன
மூழையிற் பொலிந்தன மூரலும் வெள்வளை.

(இ - ள்.) கடலின்நீர் வற்றுதலினாலே (ரத்நாகரமான) சமுத்திரங்கள், பாக்கியந்தோன்ற மணிகள்நிரம்பவைத்த பெட்டிபோல விளங்கின; (தம்மி டத்துள்ள) துவாரத்திலே (இராமபிரானுடைய) பொருகணை ஊடுருவப்புகப் பெற்றனவான ஒலிக்குந்தன்மையுள்ள வெண்ணிறச் சங்குகள், அகப்பைபோ லத்தோன்றின; (எ-று.)—நீர்வற்றிய கடல்கள் மணிகள்வைத்துள்ள பெட்டி யையும், கணைபொத்திய வளைகள் மூழையையும் போலுமென்றவை - தன் மைத்தற்குறிப்பேற்றவணிகளாம். பி-ம்:—1எட்டிய. 2ஏழையிற். 3பேர்வறப், பெட்புடை. 4பூழியிற். 5உருவிப். (௫௬௬)

௫௩. நின்றுநூ றாயிரம் பகழி நீட்டலாற்
குன்று 1நூறாயிரங் கோடி யாயின
சென்றுதேய் 2வுறுவரோ புலவர் 3சீறினும்
ஒன்றுநூ றாயின வுவரி முத்தெலாம்.

(இ - ள்.) (இராமபிரான் தனது) வில்லினின்று நூறாயிரம்பகழியைச் செலுத்தலால், குன்றுகள் நூறாயிரங்கோடித்துண்டுகளாயின; (அன்றியும்), உவரியிலுள்ள முத்துக்களெல்லாம் ஒன்றுநூறாகஆயின; (இங்ஙனம் ஒன்று பலவானது தகுதியே):புலவராயினோர் சீறினால் (சீறப்பட்டவர்)போய்க்குறை வுறுவரோ? [குறைவுறார்]; (எ-று.)—புலவர்சீறினும் குறைவு வாராதாகையால், குன்றுகளும் முத்துக்களும் இராமபிரானுடைய சீற்றத்தினாலெய்த கணைக்கு இலக்காயும் குறைவுறாமல் ஒன்று மிகப்பலவாயின வென்க.பொதுப்பொருள் சிறப்புப்பொருளைச் சமர்த்தித்துநின்ற வேற்றுப்பொருள்வைப்பணி.சென்று -சொல்விழுக்காடு.பி-ம்:—1நூறாயிரகோடி. 2உறுவரே. 3சீறினால். (௫௬௭)

௫௪. சூடுபெற் 1றையனே தொலைக்கு மன்னுயிர்
வீடுபெற் றன 2விடை மிடைந்த வேணுவின்
காடுபற் றிய 3பெருங் கனலி கைபரந்து
ஓடியுற் றதுநெருப் புவரி நீரெலாம்.

(இ - ள்.) தலைவனாகிய இராமபிரானால்தானே [இராமபிரானது அம்பி னால்] சுடப்பட்டு உயிர்தொலைக்கப்பெற்ற மன்னுயிர்கள், மோட்சலோகத் தைப் பெற்றன; கடலினிடையே நெருங்கிய மூங்கிலின் காடுகளிற் பற்றிய

சுடுந்தன்மையுள்ள பெருநெருப்பு, எங்கும்பரவுவதால், அந்நெருப்பு உவரிநீர் முழுவதும் ஓடிப்பொருந்திற்று;(எ-று.)—திருமாலாகிய இராமபிரானது திருக் கைகளால் மாண்டவை வீடுபெற்றன என்க. பி-ம்:—1ஐயமேநொலைத்துமீளு யிர். 2அடை, புடை. 3நெடுங். (ருஅஅ)

ருரு. காலவான் கடுங்[1]கணை சுற்றுங் கவ்வலால்
நீலவான் றுகிலினை நீக்கிப் பூநிறக்
கோலவான் [2]கழிநெடுங் கூறை சுற்றினாள்
போலமா நிலமகள் பொலிந்து தோன்றினாள்.

(இ - ள்.) யமன்போன்ற நீண்ட கொடிய(இராம)பாணங்கள் சுற்றிலுங் கவ்விக்கொண்டதனால், மாநிலமகள்(தான் பூண்ட)நீலநிறமுள்ள சிறந்த துகிலினைக் களைந்திட்டுச் செம்பூவின்நிறத்தைக்கொண்ட அழகியசிறந்தமிக்கநீண்ட (செந்நிறமுள்ள) ஆடையை அரையிலணிந்துகொண்டாள்போல விளங்கிக் காணப்பட்டாள்; (எ - று.)

பூமிதேவியாகியபெண்ணுக்குக் கடலை ஆடையாகக் கூறுவர்: கறுத்துத் தோன்றுங் கடல் முன்னெல்லாம் நீலவஸ்திரம்போலத்தோன்றிக் கொண்டிருக்க, இராமபாணத்தாற் கொளுந்துண்ட இப்போது அக்கடல் செந்நிறமாகக்காணப்படுவதனால், பூமிதேவி நீலவஸ்திரத்தைக் களைந்திட்டுச் செந்நிறமுள்ளஆடையை யணிந்தாள்போலத் தோன்றினளென வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1கனல். 2தனி, தளி. (ருஅகூ)

ருசா. கற்றவர் கற்றவ [1]ருணர்வு [2]காண்கிலர்
கொற்றவன் [3]படைக்கலங் [4]குடித்த வேலைவிட்டு
உற்றுயிர் [5]படைத்தெழுந் [6]தோட லுற்றதால்
மற்றொரு கடற்புக வடவைத் தீயரோ.

(இ - ள்.) படித்தவர் மற்றொருபடித்தவருடைய உணர்வைக் கண்டு சகிக்கமாட்டார்:(அதற்குஏற்பவே),வடவைத்தீயானது கொற்றவனான இராமபிரானது கணை குடித்த கடலை விட்டிடுதலைப் பொருந்தி, வலிமையடைந்து மற்றொருகடலிற் (சென்று) புகுமாறு எழுந்தோடத்தொடங்கிற்று;(எ - று.)

'தான் நீரைப்பருகுவதுபோலவே இராமபிரானது அம்புகள் நீர்பருகுவதைக்கண்டு சகியாமையால்தான் இந்தக்கருங்கடலை விட்டிட்டுச் சென்றது' என்று கண்டவர் கருதுமாறு வடவைத்தீயானது வேற்றுக்கடலிற் புகலாமென்றுகருதி அக்கடலை விட்டு எழுந்தோடலாயிற்றென்க.முதலடியிற்கூறிய பொதுப்பொருள் மற்றையடிகளிற்கூறிய சிறப்புப்பொருளைச்சமர்த்தித்தது; வேற்றுப்பொருள்வைப்பணியாம். கடல்நீர் சுட்டதனால் வடவை அக்கடலினீரைவிட்டுச்சென்றதாகக்கூறியது - அம்பின் கடுமையை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணியாகும். முதலடியில் கற்றவர் கற்றவருணர்வு காண்கிலாக்கொற்றவன் என்ற பாடத்தைக் கொண்டு - மிகக்கற்றவருடைய அறிவினாலும் காணமுடியாதவனான இராமபிரான் என்று உரைகூறுவதுமுண்டு. பி-ம்:—1உணர்வில். 2காண்கிலாக். 3படைத்தநீக், புடைத்தநீக். 4குடிக்க, குதித்த. 5பதைத்து. 6ஓடி. (ருகூ0)

ருஎ. 1வாழிய ருலகினை 2வளைத்து வானுறச்
சூழிரும் பெருஞ்3சுடர்ப் பிழம்பு தோன்றலால்
ஊழியி னுலகெலா முண்ண வோங்கிய
ஆழியிற் 4பொலிந்ததவ் வாழி யன்னநாள்.

(இ - ள்.) உலகை வளைத்துக்கொண்டு வானிலும்பொருந்தச் சூழுந் தன்மையுள்ளமிக்கபெரியஅனற்பிழம்புதோன்றியதனால்,அந்தக்கடலானது ஊழிக்காலத்திலே உலகங்களையெல்லாம் அழிக்குமாறு பொங்கியெழுந்தன்மையுள்ள கடலை அப்போது ஒத்தது; (எ - று.)—வாழியர்-அசை. நன்மைந்தற்குறிப் பேற்றவணி. பி-ம்:—1வாழியவுலகினை. 2வளைத்த. 3சுடர்பிழம்பு. 4பொலிந்தவவ்வாழியந்த. (ருகக)

ருஅ. ஏனைய 1ரென்னவே றுலகி னீண்டினு
ரானவர் செய்தன வறைய வேண்டுமோ
மேனிமிர்ந் தெழுகனல் வெதுப்ப மீதுபோய்
வானவர் மலரய னுலகின் வைகினார்.

(இ - ள்.) சுவர்க்கலோகத்தவரான தேவர்கள், மேல்முகமாக நிமிர்ந்தெழுந்த கனல் வெதுப்பியதனால் (பின்னும்) மேலேசென்று தாமரைமலரில் வாழ்பவனான பிரமனது உலகத்தில் தங்கினார்கள்; (இவர்கள்நிலையே இங்ஙனமாயின் விண்ணவரினும்) வேறானவரென்று சொல்லுமாறு (சுவர்க்கத்தினும்)வேறான மண்ணுலகில் நெருங்கிவாழ்பவரெனப்படுகின்ற மனிதர்கள் செய்தனவற்றைச் சொல்லவேண்டுமோ? (எ - று.)

பெருவலிமைபடைத்தவரும் கனல்பற்றிய நிலமல்லாத சுவர்க்கலோகத்து வசிக்குந்தன்மையருமான தேவர்களும் கடலின் அவ்வெம்மையைத்தாங்க மாட்டாமற் சத்தியலோகத்திற் பதுங்கியிருக்குமாறு சென்றன ரென்றால், 'கனல்பற்றிய இடமாகிய இப்பூவுலகத்திலேயே யிருப்பவராய் வலிமையற்றவரான மனிதர் என்னபாடுபட்டனரோ' என்பதை நாமே மனத்தினால் ஆராய்ந்துணரலாமென்றவாறு. கைமுதிகநியாயத்தினால் விஷயம் பெறப்படுவதால், இச்செய்யுள்-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. பி-ம்:—1ஏனை, எண்ணி, எண்ண. (ருகஉ)

ருகூ.—இராமபிரான் பிரமாஸ்திரத்தைத் தொடுக்கத்தொடங்குதல்.

இடுக்கினி 1யெண்ணுவ தில்லை யீண்டினி
முடிக்குவன் வருணனை யென்ன 2மூண்டெழு
தடுக்கரும் 3வெகுளியான் சதுமு கன்படை
தொடுத்தன னமரருந் துணுக்க மெய்தினார்.

(இ - ள்.) (இதனால் நேரும்)வருத்தத்தைப்பற்றி இப்போது (நான்) கருதப்போவதில்லை:இனி, வருணனை இங்கேவிரைந்துவரச்செய்வேனென்று மூண்டெழுகின்ற தடுப்பதற்கு அருமையானசீற்றத்தையுடையவனாகி,(இராமபிரான்) பிரமாஸ்திரத்தை அபிமந்திரித்து விடத்தொடங்கினான்; (அது கண்டு) தேவர்களும் அச்சமடைந்தனர்; (எ - று.)

தான் கணைதொடுக்கும்போதும் வருணன் வெளிப்பட்டுவாராமையால், 'அந்தவருணனை முடிக்குவேன்' என்று இராமபிரான் அந்தக்கணையிற் பிரமாஸ்திரத்தை யபிமந்திரித்துவிடலானு னென்க. மூன்றுநாள் வேண்டிக்கிடந்திருந்தும் வருணபகவான்பிரதியட்சமாகாமற்போகவே, இராமபிரான் கொடிய பாணங்களைக் கடலின்மீதுவிட அப்போதும்அந்தக்கடற்கிறைவன் வாராதிருக்க,பின்னும்சினந்து இலட்சுமணன் தடுக்கவும் பிரமாஸ்திரத்தைவிடமுயலத் தரங்கத்தினிடையிலிருந்து அந்தவருணன் வெளிப்பட்டானென்று முதனூல் கூறும். பி - ம்:—[1]எண்ணுவதென்னையீண்டினி, இயம்புவதென்னையிவ்வழி, இயம்புவலென்னையிவ்வழி,இயம்புவலென்னை யவ்வழி. [2]மூண்டதோர், மூண்டெதிர். [3]வெகுளியால். (ருகூ)

கூ௦.—பிரமாஸ்திரத்தை இராமபிரான் விடத்தொடங்குகையில் பலவிடத்துநேர்ந்த நிகழ்ச்சிகள் நான்குகவிகளாற் கூறப்படும்.

மழைக்குலங் கதறின வருணன் வா[1]யுலர்ந்து
அழைத்தன [2]னுலகினி லடைந்த வாறெலாம்
இழைத்தன [3]நெடுந்திசை யாதும் யாவரும்
[4]பிழைப்பில ரென்பதோர் பெரும்ப யத்தினால்.

(இ - ள்.) (அப்போது) மேகக்கூட்டங்கள் பேரொலிசெய்தன: வருணன் வாயுலர்ந்துபோய்க் கதறலாயினன்; உலகத்தில் யாறுகளெல்லாம் தூர்ந்திட்டன: நீண்டதிக்குக்களெல்லாம் (தம்மிடத்துவாழ்கின்ற) அஃறிணைப்பொருளும் உயர்திணைப்பொருளும் எல்லாம் பிழைத்தலிலராவரென்பதான ஒருபேரச்சத்தினாலே ஆலோசனையைக் கொண்டன; (எ - று.)—அடைந்த - இல்லையாயினஎன்றபடி. இழைத்தல் - ஆலோசனைகொள்ளுதல். யாதும்யாவரும் பிழைப்பிலர்-உயர்திணையும் அஃறிணையும்தொடர்ந்து சிறப்பினால் உயர்திணை முடிபைப்பெற்ற வழுவமைதி. பி-ம்:—[1]புலர்ந்து. [2]உலகமுமடைத்த.[3]தூறெலாம்யாரும்யாதினிப், நெடுந்திசையாதும்யாரினிப். [4]பிழைப்பரிது. (ருகூ)

வேறு.

கூக. [1]அண்டமூ லத்துக் கப்பா லாழியுங் [2]கொதித்த தேழு
தெண்டிரைக் கடலின் செய்கை செப்பியென் றேவன்சென்னிப்
பண்டைநா ளிருந்த கங்கை நங்கையும் பதைத்தாள் பார்ப்பான்
குண்டிகை யிருந்த நீருங் [3]குளுகுளு கொதித்த வன்றே.

(இ - ள்.) (அப்போது), அண்டத்தின்அடிக்குஅப்பாலுள்ள ஆவரணக்கடலும் கொதித்திட்டது; ஏழாயுள்ள தெளிந்த அலைநீரைக்கொண்ட கடலின் செய்கையைப்பற்றிச் சொல்லி யாதுபயன்? சிவபெருமானுடையமுடியிலே முன்னாள்தொட்டுவசித்திருக்குங் கங்காதேவியும் (வெப்பந்தாங்காது) துடிக்கலானாள்; பிரமதேவனது கமண்டலத்திலிருந்த நீருங் குளுகுளுவென்று கொதித்தது; (எ - று.)—அன்றே - தேற்றம்.

புனற்கிறையான வருணன்மீது இராமபிரான் பிரமாஸ்திரத்தை யபிமந்திரித்துவிடத்தொடங்கியபோது ஜலதத்துவமென்ற காரணத்தினால் புறக்கடலும் கங்கையும் கொதித்ததோடில்லாமல் கங்கைக்குக்காரணமான குண்

டிகைநீருங் கொதித்ததென்றால், இந்தஉவரிக்கடலுக்கு இனமான மற்றைக் கடல்கள்கொதித்தன என்பதைப்பற்றிச் சொல்லவேணுமோ?என்றவாறு:ஒரு பொருளைக்கூறி, அதுகொண்டு மற்றொருபொருளை எளிதிற் சித்திக்கச்செய்த லால், இது-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. கடற்கினமானதென்ற காரணத்தினால் அண்டமூலத்துக்குஅப்பாலாழியும் கொதித்தது. கடலிற் பாய் வதால்கங்கைகடலோடுதொடர்புடையது;பிரமனதுகமண்டலநீரே கங்கையா கப்பாய்ந்ததாதலால், அந்தக்கங்கையோடு கமண்டலநீருந் தொடர்புடையதாயி ற்று: ஆதலால், அவையும்வெந்தனஎன்றாரென்றலு மொன்று. இது, அப்போ துதோன்றியஉக்கிரத்தன்மையை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. பி-ம்:—[1]அண்டமுமுலகத்தப்பால்.[2]கொதித்த.[3]கொளுகொளு,கொளகொள.

௬௨. இரக்கம்வந் [1]தெதிர்ந்த காலத் துலகெலா மீன்று மீளக்
கரக்குநா யகனைத் தானு [2]முணர்ந்திலன் சீற்றங் கண்டும்
வரக்கரு தாது தாழ்த்த வருணனின் மாறு [3]கொண்டார்
அரக்கரே [4]யல்ல ரென்று வறிஞரு மலக்க முற்றார்.

(இ-ள்.) (தன் திருவுள்ளத்திலே)கருணைவந்து தோன்றியகாலத்தில் உல கெல்லாவற்றையும்படைத்து மீண்டும் (தன்னிடத்திலே அவ்வுலகங்களை) இலயிக்கச்செய்யுந்தலைவனான திருமாலினது அமிசமான இராமபிரானையும் (இந்தவருணன்) உணர்ந்தானில்லை; (அப்பிரானது)சீற்றத்தைக் கண்டும் வர எண்ணங்கொள்ளாமல் தாமதித்த வருணனைக்காட்டிலும் மாறுபாடுகொண்ட வர் அரக்கராவரோ?அல்லர் என்றுசொல்லி அறிஞரும் வருந்தலானார்;(எ-று.)

நித்யசூரிகளைப்போலவே தன்னுடையகைங்கர்யத்தைச்செய்து பரமா னந்தத்தைப்பெறுதற்கு ஏற்றவராயிருந்தும் பிரளயகாலத்திலே கரசரணாதி உறுப்புஅற்று உரைமெழுக்கிற்பொன்போல மூலபிரகிருதியிலழுந்தியிருக்கிற ஆன்மாக்களைக் கண்டு, திருமாலான சருவேசுவரன் பேரருள்தோன்றப்பெற் றுத் தன்னை யடைந்துய்யுமாறு அவற்றிற்குக் கரசரணாதியவயவங்களைப் படைத்தருளினானென்ற நூற்கொள்கைபற்றி, 'இரக்கம்வந்தெதிர்ந்தகாலத் துலகெலாமீன்று'என்றார். 'உலகெலாமீன்று மீளக் கரக்கு நாயகனைத் தானும் உணர்ந்திலன்'என்ற தொடர்-இந்தவருணனது அறியாமையிருந்தபடியென் னே!என்ற பொருளைக் குறிப்பிக்கும். அரக்கர் பகைவரென்றுபேர்படைத்து மாறுபடுகின்றாராதலால், அது தகும்; வருணனோ அநுகூலனென்றுபேரிட் டுக்கொண்டு மாறுபடுதலால், இது அவனுக்குத் தகாது என்பது 'வருணனின் மாறுகொண்டார் அரக்கரே? அல்லர்' என்றதன்கருத்து. பி-ம்:—[1]உற்ற. [2]உணர்ந்திலன்.[3]கொண்ட.[4]நல்லரென்றுவறிஞரும்,அறிஞரென்றுவமாரும்.

௬௩. உற்றொரு தனியே தானே தன்கணே யுலக [1]மெல்லாம்
பெற்றவன் முனியப் [2]புக்கா [3]னடுவினிப் பிழைப்ப[4]தெங்ஙன்
குற்றமொன் [5]றிலாதோர் மேலுங் கோள்வரக் குறுகு மென்று
[6]மற்றைய பூத மெல்லாம் வருணனை வைத மாதோ.

(இ - ள்.) 'தானே தன்னந்தனியே சங்கற்பித்துத் தன்னுள்ளே உல குங்களையெல்லாம் தந்தவனான பரம்பொருள் சினங்கொள்ளலானான்; இனி

இவ்விடையில் பிழைப்பது எவ்வாறு? (குற்றஞ்செய்தவரின்மேல்மாத் திரமே யன்றிக்) குற்றமொன்றுஞ்செய்யாதவர்மேலும் தீங்குவந்துநேர்படும்' என்று சொல்லி,மற்றையபூதங்கள்யாவும் வருணனைத் திட்டலாயின; (எ - று.)

'இவனுடையநடத்தையால் நிலம் தீ காற்று ஆகாயமென்ற பூதங்களாகிய நமக்கும் கேடு வருமே!' என்றுகருதி, அந்தப்பூதங்கள் ஜலமென்றபூதத்திற்கு உரியதெய்வமாகிய வருணனை வைதன வென்க. திருமாலுக்கு இந்தச்சரா சரங்களான உலகமெல்லாம் சரீரமென்றும், கடவுள் சரீரியென்றும், பிரளய காலத்திலே அப்பரமனதுசரீரமான உலகங்களெல்லாம் மூலப்பிரகிருதியிலே இலயித்து அந்தப்பரமனோடு ஒன்றாய்விடுகின்றனவென்றும், படைப்புக்காலம் வந்தவாறே தன்னிடத்துஇலயித்த பொருள்களையெல்லாம் ஸ்தூலமாகத்தெரி யும்படி தன்னிடத்தினின்றே அப்பிரான் படைப்ப னென்றும் அறிக: "தன் னுளே திரைத்தெழுந்தரங்கவெண்டடங்கடல்,தன்னுளே திரைத்தெழுந் தடங்கு கின்றதன்மைபோல், நின்னுளேபிறந்திறந்துநிற்பவுந்திரிபவும், நின்னுளேய டங்குகின்ற நீர்மை நின்கணின்றதே"என்றபாசுரத்தின்பொருள் இங்குஆரா யத்தக்கது. கடல்சீறியபடலம் இச்செய்யுளோடுமுடிகின்றது: இனி, வருணை னடைக்கலப்படலம்என்று காண்கிறது. பி-ம்:—[1]யாவும். [2]பெற்றால். [3]நடு வினிற். [4]உண்டோ, எங்கே. [5]இல்லார். [6]மற்றையப். (௫௧௭)

௫௧௮.—வருணன் தோன்றுதல்.

எழுசுடர்ப் படலை யோடு மிரும்புகை [1]யெழும்பி யெங்கும்
வழிதெரி [2]வறிவி லாத நோக்கினன் வருண னென்பான்
அழுதழி கண்ண னன்பா லுருகிய நெஞ்ச னஞ்சித் [லான்
[3]தொழுதெழு கைய னேய்ந்திற் றோன்றினன் வழுத்துஞ் சொல்

(இ - ள்.) மேன்மேலோங்குகின்ற சுவாலையின்தொகுதியோடும் மிக்க புகைஎழுந்து எங்கும் வழியைக்காண்கைமுடியாத கண்களையுடையவனாய்,வரு ணன்,—அழுவதனால்அழிந்த கண்களையுடையவனும் அன்பால்உருகுகின்ற நெஞ்சத்தையுடையவனுமாகி, அச்சத்தோடு தொழுதெழுகின்ற கையையும் துதிக்குஞ்சொல்லையும் பெற்றவனாய், (இராமபிரானுக்குமுன்னே அப்போது) விரைவிற் காணப்பட்டான்; (எ-று.)—எழுசுடர்ப்படலை-இராமபாணத்தினா லாகியது. பி-ம்:—[1]நிரம்பி, நெருக்கி. [2]அறிகிலாதான், அறிகிலாத. [3]தொழு துயர். (௫௧௮)

௫௧௯.—வருணபகவான் தான் தாமதித்த காரணத்தைச் சொல்லிக்கொண்டே இராமபிரானிடம் நடத்தல்.

[1]நீயெனை நினைந்த தன்மை நெடுங்கடன் முடிவி [2]னின்றேன்
நாயினே னறிந்தி லேனென் றன்னையுங் கயிர்ப்பு நீங்கக்
காயெரிப் [3]படலை சூழ்ந்த கருங்கடற் றரங்கத் தூடே
தீயிடை [4]நடப்பான் போலச் செறிபுனற் கிறைவன் சென்றான்.

(இ - ள்.) 'நாய்போற்கடைப்பட்ட யான், நெடுங்கடலின்கோடியிலே நின்றேன்: (ஆதலால்), நீ என்னை நினைந்தசெயலைஅறிந்திலேன்' என்று சொல் லிக்கொண்டு, நெருங்கிய நீர்க்குரியகடவுளாகிய வருணன், இராமபிரானுக்கு

(த் தன்னிடத்துத்தோன்றியுள்ள) சந்தேகம்நீங்கும்படி, தீயிடையிலேநடப்பான்போல, காயுந்தன்மையுள்ள நெருப்புத்தொகுதிசூழ்ந்த கருங்கடலின் அலையின் வழியாக நடந்துவந்தான்; (எ - று.)

ஒருவிஷயத்தை மெய்ப்பிக்கவேணுமென்றுகருதுபவர் தீயிடைநடத்தலும் மரபு: அத்தன்மையை, எரிகின்ற தரங்கத்தினிடையே நடந்துவந்த வருணபகவானுக்கு ஏற்றிக்கூறினர்; பற்றியெரிவதனால் அத்தீயிடையே வரவேண்டியதாயிருக்க, அயிர்ப்புநீங்கத் தீயிடையேவந்தானென்று காரணமல்லாததைக் காரணமாக்கிச்சொன்னதனால், இது-ஏதுத்தற்குறிப்பேற்றவணி.
பி-ம்:—[1]நீயென. [2]நின்றேன் ஆயினேன், நின்றேதாயினேன். [3]படலை. [4]நடப்பானென்னச். (௯௯)

௯௯.—வருணன் இராமபிரானிடம் வந்துசேர்தல்.

வந்தன னென்ப மன்றே மறிகடற் கிறைவன் வாயிற்
சிந்திய மொழியன் றீந்த சென்னியன் [1]றிகைத்த நெஞ்சன்
வெந்தழிந் துருகு மெய்யன் விழுப்புகைப் படலம் விம்ம
அந்தரி [2]னலமந் தஞ்சித் துயருழந் தலக்க ணுற்றான்.

(இ - ள்.) அலைமடங்குகின்ற கடற்குத்தலைவனாகிய வருணன், வாயிலிருந்துவெளிப்படுகின்ற மொழிகளையுடையவனும், தீந்துபோனதலையையுடையவனும், திகைப்படைந்தநெஞ்சையுடையவனும், வெந்து அழிந்துகரைந்துபோன உடலையுடையவனுமாகி, மிக்கபுகைத்தொகுதி கம்மியதனாற் குருடரைப்போலத் தடுமாறிக்கொண்டு அஞ்சி, மனத்துயரத்துடனே (தன்) துயரத்தைவெளிப்படையாகக் காட்டுபவனாய்வந்தான்; (எ - று.) —என்ப மன்றே - அசைகள். வாயில்சிந்தியமொழி - தன்பிழையைப்பொறுக்கவேண்டுமென்பது. பி-ம்:—[1]தீய்ந்த. [2]வலம்வந்து. (௩௦௦)

௩௦௭.—இதுமுதல்ஏழுகவிகள் - வருணன் தன்பிழையைப்பொறுக்குமாறு வேண்டி இராமனைத்துதித்து அப்பிரானதுதிருவடிகளில் வீழ்ந்தமையைத் தெரிவிக்கும்.

நவையறு முலகிற் கெல்லாந் [1]நாயக நீயே சீறிற்
[2]கவயநின் சரண மல்லாற் பிறிதொன்று கண்ட துண்டோ
இவையுனக் கரிய வோதா னெனக்கென வலியே றுண்டோ
அவயநின் னவய மென்று [3]வடுத்தடுத் தரற்று கின்றான்.

(இ - ள்.) குற்றமற்ற உலகிற்கெல்லாந் தலைவனே! நீயே கோபித்தாயானால், உன்னுடையதிருவடியேயல்லாமல் இரட்சகமாக வேறொன்று கண்டது உள்ளதோ? இவ்வுலகமெல்லாம் உனக்குஅருமையானபொருளோ? எனக்கென்று (உன்னையெதிரிடுமாறு) வலிமையுண்டோ? [இல்லையே]; அபயம் நான் உனக்குஅபயம் என்று அடுத்தடுத்துக் கதறலானான்; (எ - று.)

இவையுனக்கரியவோ - இவ்வுலகமெல்லாம் உனக்குக் கீழடங்கினவேயென்றபடி: இனி, இவ்வாறுஉலகத்தைத் தடுமாறச்செய்தல் உனக்கு ஒரு

பெருங்காரியமோ? எனினுமாம். கவசமென்றவடசொல்லின்திரிபாகிய கவயமென்பது-இலக்கணையால்,இரட்சையென்றபொருளையுணர்த்திற்று.சரணம்-திருவடி. அவயம் = அபயம்: பயமின்றிக்காக்கவேண்டியபொருளென்றவாறு.
பி-ம்:—[1]நாயகனீயே. [2]கவையன். [3]எடுத்தெடுத்து. (௬௦௧)

௯௮. ஆழிநீ யனலு நீயே [1]யல்லவை யெல்லா நீயே
ஊழிநீ யுலகு நீயே யவற்றுறை யுயிரு நீயே
வாழியா யடியே னின்னை மறப்பனோ [2]வயங்கு [3]செந்தீச்
சூழுற [4]வுலைந்து போனேன் காத்தருள் சுருதி மூர்த்தி.

இதுமுதல்ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வேதங்களாற் பரம்பொருளாகக் கூறப்படுகின்ற சுவாமீ! கடலும் நீ; கனலும் நீயே; மற்றையெல்லாப்பூதங்களும் நீயே; (உலகத்தையழிக்கும்) ஊழிக்காலமும் உன்னால் தோன்றுவதே; உலகத்தின்வடிவானவனும் நீயே; அவ்வுலகங்களில்வசிக்கின்ற உயிரும் நீயே; (எப்போதும்)வாழ்ச்சிபெற்றிருப்பவனே! அடியேன் உன்னை மறப்பனோ? விளங்குகின்ற செந்நிறத்தீயானது(என்னைச்)சூழ்ந்துவிட வருந்தினேன்;(என்னைக்)காத்தருள்வாய்;(எ-று.)
பி-ம்:—[1]அல்லவும். [2]வயங்கும். [3]வெந்தீ. [4]தொலைந்து. (௬௦௨)

௯௯. காட்டுவா யுலகங் காட்டிக் [1]காத்தவை கடையிற் செந்தீ
ஊட்டுவா யுண்பாய் நீயே யுனக்குமொண் ணாத துண்டோ
தீட்டுவான் பகழி யொன்றா [2]லுலகங்க ளவையுந் தீய
வீட்டுவாய் [3]நினையி னாயேற் கித்தனை வேணு மோதான்.

(இ - ள்.) (உலகத்தையெல்லாம்) படைப்பவனே! (அவ்வுலகங்களைப்) படைத்துப் பாதுகாத்து முடிவிற் செந்தீயுண்ணும்படி யழிப்பவனே! இவ்வுலகங்களையுண்டு வயிற்றிற்கொள்பவன் நீயே; உனக்குச்செய்யமுடியாத செயலும் உண்டோ? தீட்டப்பட்ட [கூரிய] பெரிய பாணமொன்றால் [பிரமாஸ்திரத்தினால்] உலகங்களெல்லாந்தீந்து அழியும்படி நினையாநின்றாயென்றால், என்பொருட்டு உலகங்களையழிக்கும்படி நினைப்பதாகிய இத்துணைச்சிரமம் எடுத்துக்கொள்ளவேணுமோ? (எ - று.)

'நினையின்'என்ற வினையெச்சம் மறைந்துநின்ற நினைத்தலென்ற சொல்லின் 'நினை' என்ற பகுதியோடு முடியும். பி-ம்:—[1]காந்தவை. [2]உலகங்கள் மூன்றும். [3]நீயுநாயேற்கு. (௬௦௩)

௱. சண்டவான் கிரண வாளாற் றயங்கிருட் காடு [1]சாய்க்கும்
மண்டலத் துறையுஞ் சோதி வள்ளலே மறையின் வாழ்வே
பண்டைநான் முகனே யாதிச் சராசரத் [2]துள்ள பள்ளப்
புண்டரீ கத்து வைகும் புராதனா போற்றி போற்றி.

(இ - ள்.) வெப்பமான நீண்ட கிரணங்களாகிய வாளினாலே நிறைத்தற்குக்காரணமான இருட்காட்டை வெட்டித்தள்ளுகின்ற சூரியமண்டலத்திலே யெழுந்தருளியிருக்கிற பரஞ்சோதியாகிய வள்ளலே! வேதத்தின்வாழ்ச்சிக்கும்

காரணமானவனே!பழைய நான்முகன் முதலிய சராசரப்பொருளுடன்கூடிய ஆழ்ந்தநாபீகமலத்துடனே தங்கியிருக்கின்ற புராணபுருஷனே! போற்றி;போற்றி;(எ-று.)—போற்றி-வியங்கோள்: வாழ்க என்றவாறு. பி-ம்:—1சிய்க்கும். 2உள்ளப்பள்ளப். (௬0௪)

எக. [1]கள்ளமா யுலகங் கொள்ளுங் [2]கருணையாய் [3]மறையிற் கூறும்
எள்ளலா காத மூலத் [4]தியாதுக்கு [5]முதலாயுள்ள
வள்ளலே காத்தி யென்ற [6]மாகரி வருத்தந் தீரப்
புள்ளின்மேல் வந்து தோன்றும் புராதனு போற்றி போற்றி.

(இ - ள்.) ஒருவருக்குந்தெரியாதவாறு உலகங்களையெல்லாம் மறைத்து வைக்கிற கிருபாமூர்த்தியே! 'வேதத்தினுற்கூறப்படுகின்ற பழிக்கமுடியாத மூலப்பொருள்எதுக்கும் மூலமாயுள்ள வள்ளலே! காப்பாய்' என்றுவேண்டிய பெரிய யானையின் வருத்தந் தீரும்படி கருடன்மேல்வந்து தோன்றிய பழமையோனே! போற்றி; போற்றி; (எ - று.)

நீ என்னைக் கணைகளால் வருத்தியதும் கிருபாகாரியமே யென்பான் 'கள்ளமாயுலகங் கொள்ளுங் கருணையாய்' என்றுவிளித்தான். யானையின்துயரத்தைத் தீர்த்தாற்போலவே, எனக்கு இப்போதுநேர்ந்துள்ள துயரத்தையும் போக்கவேணுமென்றான். பி-ம்:—1கொள்ளையா. 2கருணையான். 3மழையிற். 4யாவர்க்கும். 5முதலாயீறில். 6மத. (௬0௫)

எஉ. அன்னைநீ யத்த னீயே யல்லவை யெல்லா நீயே
பின்னுநீ முன்னு நீயே பேறுநீ[1]யிகழ்வு நீயே
என்னைநீ [2]யிகழ்ந்த தென்ற தெங்ஙனே யீசனுய
[3]உன்னைநீ [4]யுணராய் நாயே னெங்ஙன முணர்வே [5]னுன்னை.

(இ - ள்.) (எனக்குத்) தாயும் நீ, தந்தையும் நீயே; மற்றும் (எனக்கு வேண்டிய) எல்லாப்பொருளும்நீயே; அந்தமும் நீ,ஆதியும் நீயே; மோட்சம்நீ, நரகமும் நீயே; என்னைநோக்கி இகழ்ந்தாயென்று நீ கூறுவது எங்ஙனம் பொருந்தும்? கடவுளாகிய உன்னை நீயே யுணரமாட்டாய்;நாய்போற் கடைப்பட்டவனான யான் உன்னை எவ்வாறு உணரமாட்டுவேன்? (எ - று.)

"தனக்குந்தன் றன்மையறிவரியான்"என்னுமாறு உன்தன்மையை நீயே யுணராதவனாக இருக்கும்போது, நான் உணராதது முறையேயன்றோ? அது என்மீது தவறாமோ? என்றவாறு. பேறு - வேண்டிப்பெறப்படும் உத்தமபுருஷார்த்தம்: அதாவது - மோட்சம். பேற்றுக்கு மறுதலையாக வந்ததனால், 'இகழ்வு' என்பது - இகழப்படும் நரகமென்று கூறப்பட்டது. பிதா மாதா ப்ராதா பார்யை புத்ரன் ஸுஹ்ருத் முதலியோர் ஒவ்வொருவகையாக உதவுவர்: அவர்கள் ஆபத்துவந்தவாறே நழுவவிடுவர். மேலும் பிதா ஹிதத்தைச் செய்யப்பார்ப்பான்: மாதாவோ ப்ரியத்தைச் செய்யப்பார்ப்பாள்: இங்ஙனம் ஒவ்வொருத்தர் ஒவ்வொன்றையே உபகரிக்கப் பார்ப்பவராக, ஸர்வேச்வரனே ஒருபோதுங் கைவிடாது எல்லாவிதபந்துக்கள்செய்வதையும் செய்துபோவனென்பது, முதலடியின்பொருள்: "அத்தனாகியன்னையாகியாளுமெம்

பிரானுமாய்'', "பெற்றதாய்நீயே பிறப்பித்ததந்தைநீ, மற்றையாராவாரும்நீ பேசில்-எற்றேயோ?......நீ யம்மா! காட்டும் நெறி'', "மாதாபிதா ப்ராதா ஸுஹ்ருத்கதிர்நாராயண:'' என்பன காண்க. பின்னும்நீ முன்னும்நீயே-பின்னேயிருப்பவனும்நீ, முன்னேயிருப்பவனும்நீ' என்று உரைத்தலுமுண்டு. பி-ம்:—1இழவுநீயே. 2இகழ்ந்தாயென்றதெங்ஙனம். 3நின்னைநீ, நின்னையே. 4உணரா. 5நின்னை. (௬௦௬)

௭௩. பாயிருள் சீக்குந் தெய்வப் பருதியைப் பழிக்கு மாலை
மாயிருங் கரத்தான் மண்மே லடியுறை யாக வைத்துத் [கை
1தீயன சிறியோர் செய்தாற் 2பொறுப்பதே 3பெரியோர் செய்
யாயிர நாமத் தையா 4சரணமென் றடியில் வீழ்ந்தான்.

(இ - ள்.) பரவிய இருளை யொழிக்கவல்ல கடவுட்சூரியனையும் (தன்னொளியாற்) பழிப்படையச்செய்கிற[பேரொளிபடைத்த]ஆரமொன்றை மிக்க பெரிய (தனது) கைகளால் (ஏந்திவந்து) பூமியின்மேற் காணிக்கைப்பொருளாக வைத்து, 'சிறியோர் தீயனவற்றைச்செய்தால் பொறுப்பதே பெரியோரின்செயலாகும்; ஸஹஸ்ரநாமங்களையுடையதலைவனே! (நீயே எனக்குச்) சரணம்' என்று சொல்லி (வருணபகவான் இராமபிரானது) திருவடிகளில் விழுந்தான் [தண்டனிட்டான்]; (எ - று.)—அடியுறை - பாதங்களில்உறுவது [பொருந்துவது]: காணிக்கைப்பொருள். ஶரணம்என்றவடசொல் - இரட்சிப்பவனென்றபொருளைக் காட்டும். பி-ம்:—1 தீயவை. 2பொறுப்பது. 3பெரியோர்மேற்றே. 4சரணென. (௬௦௭)

௭௪.—வருணன் அபயம்வேண்டியதுகேட்டு,ஸ்ரீராமபிரான்சினந்தணிதல்.

பருப்பதம் வேவ தென்னப் 1படரொளி படரா நின்ற
உருப்பெறக் காட்டி 2நின்றியானுனக் கபய மென்ன
3அருப்பறப் பிறந்த கோப 4மாறினா னுரு வாற்றல்
நெருப்புறப் பொங்கும் வெம்பால் நீருற்ற 5தன்ன நீரான்.

(இ - ள்.) ஒருபெருமலை எரிகின்றதென்று (கண்டோர்) கருதுமாறு பரவுகின்ற ஒளியையுடையநெருப்புப் பரவுகின்ற (தன்) வடிவத்தை நன்றாகக் காட்டிநின்று, 'நான் உனக்கு அபயம்' என்று (வருணன்)வேண்ட, தணியாத வல்லமையையுடைய நெருப்பு மிகுதியாகஎரித்ததனால் பொங்குந்தன்மைவாய்ந்த சுடுகின்ற பாலில் நீர் பொருந்தியதையொத்த தன்மையுடையவனாய், (இராமபிரான்) மிகுதியாகத் தோன்றிய கோபம் மாறினான்; (எ - று.)

அபயம்வேண்டிய வருணனதுமொழியால், இராமபிரானதுகோபந் தணிந்ததற்கு, பொங்கும்பாலில் நீர்உற்றதால் அப்பொங்குந்தன்மை நீங்கியடங்குவதை உவமைகூறினார்.நின்றியான்-குற்றியலிகரம். அல்பம்என்ற வடசொல், அருப்பம்எனத் திரிந்து, பின்பு அருப்பு என்றாயிற்று: விகாரம். அருப்பு அற - அல்பமாகவல்லாமல்: மிகுதியாக என்றபடி: இனி, அருப்பு அற - பின்னும் அரும்புதலில்லாமல்எனினுமாம். பி-ம்:—1படரொளி படரநின்ற. 2வந்தநானுனக்கடிமை. 3அருப்பிற, அருப்புற. 4மாற்றினான். 5அனைய. (௬௦௮)

எ௫.—இராமபிரான் வருணனுக்குஅபயமளித்து 'நாம் இரந்தபோது வாராமல் சீறியபோதுவரக் காரணமென்?'என வினவல்.

[1]ஆறினு மஞ்ச லுன்பா லளித்தன மபய மன்பால்
ஈறிலா வணக்கஞ் செய்தி[2]யா மிரந்திட [3]வெய்தி டாதே
சீறுமா கண்டு வந்த திறத்தினைத் [4]தெரிவ தாகக்
[5]கூறுநீ யறிய வென்றான் வருணனுந் தொழுது கூறும்.

(இ - ள்.) '(நாம்) கோபம் தணிந்தோம்: அஞ்சாதே: (உனக்கு) அபயம் கொடுத்தோம்: பக்தியோடு முடிதலில்லாத[ஒரேகிடையாயிருக்கின்ற] வணக்கத்தைச்செய்து நாம் இரந்திடவும் (நீ)வாராமலிருந்து (நாம்) சீறும்வகையைக் கண்டு வந்த காரணத்தைத் தெரியும்படி விளங்க நீ சொல்லுவாய்' என்று (இராமன்) வினவினன்; வருணனும் தொழுது கூறுபவனானன்; (எ - று.)—அதனை மேலிற் காண்க. அன்பால்பயமளித்தன மெனினுமாம். பி-ம்:—[1]ஆறினன்,ஆறிநீ.[2]யான்.[3]எய்தாதே.[4]தெரியும்வண்ணம்.[5]கூறுவாய்தெரிய. (சா௦க)

எசா.—வருணன் தான் வாராமைக்குக் காரணங்கூறுதல்.

[1]பார்த்தனிற் பொறையின் மிக்க பத்தினிக் குற்ற [2]பண்பு
வார்த்தையி னறிந்த தல்லாற் றேவர்பால் [3]வந்தி லேனால்
தீர்த்தநின் னானை யேழாஞ் [4]செறிதிரைக் கடலின் மீனின்
போர்த்தொழில் விலக்கப்போனே னறிந்திலேன் புகுந்த தொன்றும்.

(இ - ள்.) பூமிதேவியைக்காட்டிலும் பொறுமையில்மிக்க (உனது) பத்தினிக்கு நேர்ந்துள்ளநிலையை (உனது) வார்த்தையா லறிந்தேனேயன்றித் தேவர்களிடத்தில்(இச்சங்கதியை வாயிலே)வரக் கேட்டேனில்லை;[தேவர்கள் சீதையைச் சிறைகொண்டதை எனக்குத்தெரிவித்திலர்:] பரிசுத்தமூர்த்தியே! (எனக்கு நேர்ந்துள்ளதான)உனது கட்டளையை,ஏழாவதாகிய நெருங்கியதிரைகளைக்கொண்ட கடலிலே மீன்களின்போர்த்தொழிலை விலக்கப்போனேனாதலால் சிறிதும்அறிந்திலேன்; (எ - று.)

அகழ்வாரையுந் தாங்குவ தாதலால், நிலம் பொறுமையில் உவமையாக எடுத்துக்காட்டப்படும்.ஓசையின்பம்நோக்கி 'பார்த்தனில்'என வந்தது.தேவர்பால்வந்திலேன் - தேவர்களிடத்தில் வந்தேனில்லையென்று கூறி தேவர்களிடத்து வந்திருந்தாற் செய்திதெரிந்திருக்கு மெனினுமாம். பிரமாஸ்திரத்தைப் பிரயோகிக்கத்தொடங்கியவுடன் வருணன் வந்து அபயம்வேண்டி, பின்பு 'ஆழ்ந்திருக்குந்தன்மை இயற்கையாதலால் அதனைத் தவிர்வது எனக்கு இயலாதே; இதனை எவ்வாறு சொல்வது? என்ற எண்ணத்தினாலேயே வாராதிருந்தேன்: என்னாலியன்ற உதவி புரிவேன்' என்று தானே கூறியதாக முதனூலி லுள்ளது. பி-ம்:—[1]பார்த்தலைப். [2]பண்பும். [3]வந்திலேனன். [4]திரைநெடுங். (சாகO)

எஎ.—இராமன் இப்படிநழிக்கு இலக்கு என்?'என்ன,வருணன் கூறலுறுதல்.

என்றலு மிரங்கி யைய னித்திற நிற்க [1]விந்தப்
பொன்றலில் பகழிக் கப்பா [2]லிலக்கமென் புகறி [3]யென்ன

நன்றென வருணன் [4]யானு முலகமு நலிவு தீர்ந்தாம்
[5]குன்றென வுயர்ந்த தோளாய் கூறுவ லென்று கூறும்.

(இ - ள்.) என்று (வருணன்) கூறியவுடனே, இராமபிரான் (அவ்வருணன்மீது) கருணைகொண்டு, 'இந்தச்செய்தி இருக்கட்டும்: இலக்கில்தவறாது எய்யவேண்டிய இந்த அம்புக்கு இனி இலக்காக(நீ)காட்டுவது என்ன?சொல்வாய்'என்ன, வருணன் 'நல்லது' என்றுசொல்லி,குன்றுபோலுயர்ந்ததோளையுடையவனே! நானும் உலகமும் துயரந் தீர்ந்தோம்; இலக்குக் கூறுவேனென்றுசொல்லிக் கூறலானான்; (எ-று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க. வருணன்மீது அம்பையெய்யாமையாலும் தீமைபுரியும் அவுணரை இலக்காகக்குறிக்கப்போவதாலும் வருணனுடனே உலகமும் நலிவு தீர்வதுஆகுமென்க. இப்போது அபிமந்திரித்திருப்பது பிரமாஸ்திரமாதலால், அதற்கு இலக்காக ஏதேனும்ஒன்றைக் கொடுத்தேதீரவேண்டுமென்பான் 'பொன்றலில்பகழிக்கு இலக்கமென்' என்றான். பி-ம்:—[1]என்கைப். [2]இலக்குநீ. [3]என்றான். [4]தானுமுலகத்துநலிவு தீரக். [5]குன்றினும். (௬௯௧)

எஅ.—வருணன் இராமபாணத்துக்கு இலக்குக் குறித்தல்.

மன்னவ மருகாந் தார மென்பதோர் தீவின் வாழ்வார்
அன்னவர் சதகோ டிக்கு [1]மேலுளா ரவுண ராயோர்
தின்னவே யுலக மெல்லாந் [2]தீந்தன வெனக்குந் தீயார்
மின்னுமிழ் கணையை வெய்யோர் மேற்செல விடுதி யென்றான்.

(இ - ள்.) 'மன்னவனே! மருகாந்தாரமென்று சொல்லப்படுவதாகிய ஒரு தீவிலேவாழ்பவரான அவுணரானஅவர்கள் நூறுகோடியென்னுந்தொகையினும் மேம்பட்டுள்ளார்; (அவர்கள்) தின்பதால் உலகத்துள்ளபிராணிவர்க்கம் ஒழிந்தன; (அன்னார்) எனக்குந் தீமைபுரிகின்றார்; ஒளியை வெளிவீசுகின்ற (உனது)அம்பை கொடிய அந்தஅவுணர்களின்மீது விடுவாயாக' என்று கூறினான்; (எ - று.)

'த்ருமகுல்யமென்ற இடத்தில் பாபிஷ்டர்கள் வாழ்தலால் அங்கு இந்தப் பகழியை யெய்வாய்' என்று வருணன் சொல்ல, அங்கு இராமபிரான் தன் பகழியைவிட்டதனால் அவ்விடம் நீரற்ற மருகாந்தார மாயிற்றென்பது, முதனூலால் விளங்கும். பி-ம்:—[1]அளப்பருமவுணர்தாங்கள். [2]தேய்ந்தன, தீர்ந்தன.

எகூ.—இராமபிரான் வருணனுரைப்படியே பகழியையெய்ய, அங்குள்ள அவுணரைக்கொன்று அப்பகழி மீளுதல்.

[1]தேடினால் [2]தெரிந்து ணோர்க்கு முணர்விற்கு நிமிர நின்றான்
கோடிநா றுய தீய வவுணரைக் [3]குலங்க ளோடும்
ஓடினா [4]னென்று விட்டா னேரிமை யொடுங்கா முன்னம்
பாடினா ருக நூறி மீண்டதப் பகழித் [5]தெய்வம்.

(இ - ள்.) ஆராய்ந்து(மிகப்பலவான)நூலைஅறிந்தோருடைய அறிவிற்கும் அப்பாற்பட்டுநிற்பவனான இராமன், 'நூறுகோடியினரான கொடிய அவுணரைக் குலங்களோடும் விரைந்துசென்று அழிப்பாய்' என்றுசொல்லி(த் தன் பகழியை) விட்டான்; அந்தத் தெய்வத்தன்மையுள்ள பாணமானது ஒருமுறை

கண்மூடித்திறக்குங்காலத்திற்குள்ளே பாடியவண்ணம் நீறுகும்படி (அவர்களை) அழித்திட்டுத் திரும்பிவந்திட்டது; (எ - று.)—ஓசைசெய்துகொண்டு பகழி சென்றதை 'பாடி' என்றார். பாடி-இருப்பிடமுமாம். பி-ம்:-[1]தேடி. [2]தெரிந்துளோர்தமுணர்வுக்குந்தெரிய. [3]குலத்தினோடும். [4]என்ன. [5]புத்தேள்.

௮௦.—வருணன்மேல்வந்த சீற்றம் மாறி, அவுணர்மேல்ஆனமை.

ஆய்வினை யுடைய ராகி யறம்பிழை யாதார்க் [1]கெல்லாம்
[2]ஏய்வன நலனே யன்றி யிறுதிவந் [3]தடைவ துண்டோ
மாய்வினை [4]யியற்றி முற்றும் வருணன்மேல் [5]வந்த சீற்றம்
தீவினை யுடையார் மாட்டே தீங்கினைச் செய்த தன்றே.

(இ - ள்.) ஆராய்தலையுடையவராகித் தருமந் தவறாதவர்க்கெல்லாம் பொருந்துவன நன்மையேயன்றிக் கேடுவந்துஅடைவது உண்டோ?[இல்லை]; மாய்தலைஇயற்றி வருணன்மேல்வந்த (இராமபிரானது) சீற்றம்முற்றிலும் (அறத்தையுடைய வருணனுக்குத் தீமைசெய்யாமல்) தீவினையுடைய அவுணரிடத்திலேதான் கேட்டை விளைத்ததன்றோ? (எ - று.)

இங்கு, ஸர்வேச்வரன் தன்னைப்பற்றினவருடைய குற்றங்களைப்பொறுப்பதனோடு அவருடையபகைஞரின்மேலே அக்குற்றப்பயனை விளைவிப்பானென்று வேதாந்தங்களிற் கூறுகின்ற பொருள் தொனிக்குமென்பர். "கடலுக்குத் தொடுத்த அம்பை, அவன் நாலடிவாராநின்றவாறே அநந்தரத்தே உன் விரோதிகளைச்சொல்லாயென்றானிறே. இவ்விடத்திலே பட்டர் இதிஹாஸம் அருளிச்செய்வர்; பண்டு தலையில் மயிரின்றிக்கேயிருப்பானொருவன் நெற்பரிமாறாநின்றானாய் அங்கேயொருவன்சென்று 'மயிரைப்பேணாதே நீர் தனியே நின்று பரிமாறாநின்றீர்' என்ன, 'ஆகில், ஒருகோட்டையைக் கொண்டுபோகலாகாதோ?' என்றுஎடுத்துவிட, அவன் அத்தைக்கொண்டுவாராநிற்கச்செய்தே எதிரேயொருவன்வந்து 'இது எங்கேபெற்றது?' என்ன, 'உன்தனை மொட்டைத்தலையன் தந்தான்' என்றானாய், அவன் அத்தைச்சென்று அங்கே 'இன்னான் உம்மை வைதுபோகாநின்றான்!' என்ன, 'அடா! என்நெல்லையுங் கொண்டு என்னையும் வைதுபோவதே!' என்று தொடர்ந்துவந்தானாய், அவன் புரிந்துபார்த்து, 'என்தான்? குழல்கள் அலைய அலைய ஓடிவாராநின்றதீ! என்ன, 'ஒன்றுமில்லை: இன்னம் ஒருகோட்டை கொண்டுபோகச்சொல்லவந்தேனென்றானாம்: அப்படியே, கடலை முகங்காட்டுவித்துக்கொள்ளுகைக்காகக் காலைப் பிடிப்பது கோலைத்தொடுப்பதாகாநிற்க, அவன் வந்து முகங்காட்டினவாறே 'உனக்கு அம்புதொடுத்தோம்'என்ன லஜ்ஜித்து,'உன்விரோதிகளைச்சொல்லு, நாம் இத்தைவிட' என்றானிறே" என்ற (3-3-6) ஈடு இங்கே காணத்தக்கது. முன்னிரண்டடியிற்கூறிய பொதுப்பொருளைப் பின்னடிகள் சமர்த்தித்துவந்ததனால், இச்செய்யுள்-வேற்றுப்பொருள்வைப்பணியாம். பி-ம்:—[1]என்றும். [2]ஏயவனருளே. [3]இயைவது. [4]இயற்றவேண்டி. [5]எழுந்த. (௯௧௮)

௮௧.—இதுவும் அது.

பாபமே யியற்றி னோரைப் பன்னெடுங் காத மோடித்
தூபமே பெருகும் வண்ண மெரியெழச் [1]சுட்ட தன்றே

தீபமே யனைய ஞானத் திருமறை [2]முனிவன் செப்பும்
சாபமே [3]யொத்த தம்பு தருமமே [4]வலிய தம்மா.

(இ-ள்.) (இராமபாணமானது) பல நீண்ட காததூரம் விரைந்துசென்று, புகைமிகும்படி நெருப்பெழ பாவத்தொழிலையேயியற்றினவரைச் சுட்டதல்லவா? அந்தஅம்பு (எதைஒக்குமெனில்),—தீபத்தைப்போல்விளங்குகின்ற தத்துவஞானத்தோடுகூடிய சிறந்த வேதம்வல்ல முனிவர் சபிக்கின்ற சாபத்தையொத்தது; (இதனால்விளங்குவது), தருமமே வலியதாகும் (என்பது); (எ-று.)

இராமபாணமானது அருகேயிருந்த வருணனைச் சுடாது எங்கேயோகிடந்த அவுணரைச் சுட்டொழித்ததனால், தருமமேவலியதென்பது பெறப்படு மென்றவாறு. எங்கேயோயிருந்தவரைப் பகழியழித்ததுபற்றி, அப்பகழிக்கு முனிவர்சாபத்தை உவமைகூறினர். தூயம் = தூமம்: விகாரம். பி - ம்:— [1]சுட்டதாகி. [2]முனிவர். [3]ஒத்ததம்ம. [4]பெரியதம்மா. (சுகரு)

அஉ.—ஸ்ரீராமன் வருணனை வழிவேண்டுதல்.

மொழி[1]யுனக் கபய மென்று யாதலான் முனிவு தீர்ந்தேன்
பழி[2]யெனக் காகு மென்று [3]பாதகர் பரவை யென்னுங்
குழியினைக் கருதிச் செய்த குமண்டையைக் [4]குறித்து [5]நீங்க
வழியினைத் தருதி யென்றான் வருணனை நோக்கி வள்ளல்.

(இ-ள்.) உதாரகுணம்வாய்ந்த இராமபிரான், வருணனைநோக்கி,'மொழியினாலே [வாயைத்திறந்து] உனக்கு அபயமென்று யாதலால், (கொண்ட) சீற்றம் மாறினேன்; (நான் பாதகரைக்கொல்லாவிட்டால்) எனக்குப்பழிப்புண்டாகுமென்ற காரணத்தினால் பாவிகளாகியஅரக்கர் பரவையென்கின்றசிறுகுழியை(த் தமக்குஅரணாக) எண்ணிச் செய்துவருகின்ற மகிழ்ச்சிக்கூத்தைவிட்டொழியும்படி வழியினைத் தருவாய்' என்று வேண்டினான்; (எ-று.)

'சமுத்திரம்ஒன்று இருப்பதனால் நம்முடையமாற்றானால் வர முடியாது என்றுகருதி,இராவணாதியர், மகிழ்ச்சிக்கூத்துஆடுகின்றார்: அச்செயலொழியும்படி யாம் சேனையோடு இலங்கை சேருமாறு வழிதருக' என்றுவேண்டினன், இராமபிரா னென்க. குமண்டை - ஒருவகைமகிழ்ச்சிக்கூத்து; செருக்குமேலிட்டுச்செய்யுஞ்செய லெனினுமமையும்: "தக்கனார்கொண்டவேள்விக் குமண்டையதுகெட" என்ற தேவாரம் இங்குக் காணத்தக்கது. பி - ம்:— [1]எனக்கு. [2]எனக்காக. [3]பாதகப். [4]குறைத்து. [5]நீக்கி, நீக்க. (சுகசு)

அங.—இதுவும் அடுத்த கவியும் - வருணன் நம்பிநீருனேறுகட்டின் நாம் தாங்குவோம் என்றுசொல்லுதலைத் தெரிவிக்கும்.

ஆழமு மகலந் தானு மளப்பரி தெவைக்கு மைய
[1]ஏழென வடுக்கி நின்ற வுலகுக்கு மெல்லை யில்லை
வாழியாய் [2]வற்றி நீங்கில் [3]வரம்பில கால மெல்லாம்
தாழுநின் சேனை யுள்ளாந் தளர்வுறுந் தவத்தின் மிக்காய்.

(இ - ள்.) ஐய! தவத்தின்மிக்கோனே! ஏழாகஅடுக்கிநின்ற உலகின்பரப்புக்கும் எல்லையில்லை:(அதுபோலவே, என்னுடைய)ஆழமும் அகலமும் எனக்

கும் அளவிடமுடியா; வாழ்ச்சிபெற்றவனே! நான் நீர் வற்றி நீங்குவதானால் வரம்பில்லாத காலமெல்லாம் செல்லும்; (அத்துணைக்காலம் தாழ்த்திருப்பதற்கு) உனதுசேனையின் மனமும் சலிப்படையும்; (எ - று.)—எழெனவடுக்கி நின்ற வுலகு என்பதற்கு-எழுதீவுகளைக் கொண்டதான இந்தப்பூமிப்பரப்பு எனினுமாம். பி-ம்:—[1]எழுவை. [2]வற்றநீக்கில். [3]வரம்பறு. (சுகஎ)

அசு. [1]கல்லென வலித்து நிற்பிற் [2]கணக்கில வுயிர்க ளெல்லாம்
ஒல்லையி [3]னுலந்து வீயு மிட்டதொன் றொழுகா வண்ணம்
எல்லையில் கால மெல்லா மேந்துவ [4]னெளிதி னெந்தாய்
செல்லுதி சேது வென்றொன் [5]றியற்றியென் சிரத்தின் மேலாய்.

(இ - ள்.) என்தந்தைபோன்றவனே! (வற்றாமல்) கல்லுப்போல (நீர்) இறுகி நிற்கப்பெறுவேனானால் கணக்கில்லாமல் என்னிடத்துவாழ்கின்றபிராணிகளெல்லாம் விரைவில் உயிரொழிந்தழியும்; (என்மீது) இட்டது சென்றிடாதபடி எல்லையிலாதகாலமெல்லாம் இலேசாக ஏந்திநிற்பேன்; சேது என்ற ஒன்றை என்சிரம்மீது இயற்றிச் செல்லுவாய் (என்றுகூறிநின்றான் வருணன்); (எ-று.) பி-ம்:—[1]கல்லெனவடுக்கிநிற்கிற், கல்லினிற்றூர்த்து மென்னிற். [2]கணக்கிலா. [3]உலைந்து, உலர்ந்து. [4]இனிதின். [5]இயற்றவென். (சுசுஅ)

அரு.—'வருணன் மொழிப்படியே சேதுவைக் கட்டுங்கள்' என்றுசொல்லி ஸ்ரீராமன் இருக்கைசெல்ல, வருணனும் தன்னிருப்பிடஞ்சேர்தல்.

நன்றிது புரிது [1]மன்றே [2]நளிகடற் பெருமை [3]நம்மாம்
இன்றிது தீரு மென்னி லெளிவரும் பூத மெல்லாம்
குன்று[4]கொண் டடுக்கிச் [5]சேது குயிற்றுதி ரென்று கூறிச்
சென்றன னிருக்கை நோக்கி வருணனு மருளிற் சென்றான்.

(இ-ள்.) (சேதுவைக்கட்டுவதாகிய) இந்நற்செயலைப் புரிவோம்; (வற்றச்செய்வதால்) குளிர்ந்த கடலின் (ஆழ்ந்திருக்கின்ற இந்தப்) பெருமையானது நம்மால் இன்று நீங்குமெனின், மற்றைநான்குபூதங்களும் எளிமைப்படும்; (ஆகவே), மலையைக்கொண்டு அடுக்கிச் சேதுவைக்கட்டுங்கள் என்றுசொல்லி, ஸ்ரீராமன் தன்னிருக்கைசேர்ந்தான்; (இராமனது)அருளினோடும் வருணனும் தன்னிருக்கைநோக்கிச் சென்றான்; (எ-று.)

'ஆழ்ந்திருக்கையாகிய தன்தன்மையினின்று இந்தக்கடல் நம்மால் மாறுமாயின், மற்றைப்பூதங்களுக்கும் எளிமையுண்டாகுமாதலால், இது வற்றவேண்டியதில்லை; இதன்மீது சேதுகட்டுங்கள்' என்று சொல்லி, ஸ்ரீராமன் தன்னிருக்கைக்குச் செல்ல, அப்பிரானது திருவருளைப்பெற்று வருணன் தன்னிருக்கைநோக்கிச் சென்றனனென்க. அன்றே - ஈற்றசை. சிலபிரதிகளில் இந்தப்பாடல்முதல் சேதுப்படலம் என்ற பெயருடன் காணப்படுகின்றது. பி-ம்:—[1]என்றே, என்னு. [2]நளிர். [3]நம்பால். [4]கொடு. [5]சேதுக். (சுசுகூ)

வருணனைவழிவேண்டுபடலம் முற்றிற்று.

## எ-ஆவது சேதுபந்தனப்படலம்.

(ஸ்ரீராமன் தன்படைகளோடு கடலைக்கடந்து இலங்கையைச்சேருமாறு கடலில்) சேதுவைக் கட்டினமையைத் தெரிவிக்கும் படல மென்பது, பொருள். சிலபிரதிகளில் சேதுப்படலம் என்று இந்தப்படலத்திற்குப் பெயர் காணப்படுகின்றது.

வருணபகவான் சென்றபிறகு, விபீஷணன் வானரத்தலைவர்கள்முதலினோரோடு சுக்கிரீவன் இருந்து ஆலோசித்து வானரத்தச்சனாகிய நளனை வரவழைத்துச் சேதுவைக் கட்டுமாறு கட்டளையிட, நளன் வானரங்களை யுதவி செய்யுமாறு வேண்ட, வானரர்கள் மரங்களையும் மலைகளையும் கொணர்ந்துஉதவ, நளன் சேதுவை மூன்றுதினங்களிற் கட்டிமுடிக்கச் சுக்கிரீவன் விபீஷணன்முதலியோர் ஸ்ரீராமனுக்குச் சேது கட்டிமுடிந்தமையைத் தெரிவித்தல், இந்தப்படலத்திற் கூறப்படுகின்றது.

வேறு.

க.—சுக்கிரீவன் விபீஷணனும் மற்றையோரும் உடனிருக்க,
ஆலோசித்து, நளனை வருக என்று அழைத்தல்.

[1]அளவறு [2]மறிஞரோ டரக்கர் கோமகற்கு
இளவலு மினிதுட னிருக்க [3]வெண்ணினன்
வினைவன [4]விதிமுறை முடிக்க வேண்டுவான்
நளன்வரு கென்றனன் கவிக்கு நாயகன்.

(இ - ள்.) வானரர்கட்கெல்லாந்தலைவனாகிய சுக்கிரீவன், அளவற்ற அறிஞருடனே அரக்கர்தலைவனான இராவணனது தம்பியாகிய விபீஷணனும் இனிதாக உடனிருக்க, ஆலோசித்தவனாய், மேல்செய்யவேண்டியவற்றை முறைப்படி நிறைவேற்றுதற்குத் தக்கவனாகிய நளன் வரட்டும் என்றான்.

தன்மீது அணைகட்டினால் தாங்குவே னென்றுகூறியபிறகு, சமுத்திரராஜன் விசுவகர்மனது மகனான நளனென்னும் வானரன் சேதுவைக்கட்டுவதற்குஉரிய வல்லமையுடையவனென்றுந் தெரிவிக்க, இராமன் உணர்ந்தானாக, அப்பால் நளனும் 'சமுத்திரராஜன் சொல்லியது உண்மையே' என்று சொல்லிச் சேதுவைக் கட்டுதற்கு வானரர்களை உதவுமாறுசொல்லி அத்தொழிலைச் செய்யலானானென்று முதனூல்கூறும். இந்தச்செய்யுளுக்கு-இராமபிரான் அளவற்றஅறிஞருடனே ராட்சசராசனான இராவணனது தம்பியாகிய விபீஷணனும் இனிதாக உடனிருக்க ஆலோசித்தவனானான்: பின்னர் இராமபிரான் விருப்பின்படி பயனைவிளைக்குஞ்செயலைச்செய்துமுடிப்பவனாகிக் கவிக்குநாயகனான சுக்கிரீவன் 'சேதுவைக்கட்டுமாறு நளன் வரட்டும்' என்றனன் என்று உரைப்பாருமுளர். பி-ம்:—1 அளவரும். 2 அரக்கரோடரசர்கோமகன். 3 எண்ணியே. 4 செய்வினை.

௨.—வந்த நளனைச் சேதுகட்டுமாறு சுக்கிரீவனேவ அவன் உடன்படுதல்.

வந்தனன் வானரத் தச்சன் மன்னநின்
சிந்தனை யென்னெனச் செறிதி ரைக்கடற்
பந்தனை செய்குதல் பணிந மக்கென
நிந்தனை [1]யிலா தவன் [2]செய்ய [3]நேர்ந்தனன்.

(இ - ள்.) வானரச்சிற்பியான நளன் வந்து, (சுக்கிரீவனைநோக்கி),'மன்னவனே! (என்னையழைக்குமாறு) உன்ஆலோசனை யென்?' என்று வினவ, 'நெருங்கிய அலைகளையுடைய கடலைப் பந்தனஞ்செய்வது நாம் செய்யவேண்டியதொழில்' என்று (சுக்கிரீவன்) விடைகூற,—பழிப்பற்ற அந்நளன் (அப்பணியைச்)செய்ய உடன்பட்டனன்;(எ - று.)—பி-ம்:—[1]இல்லவன். [2]இயற்ற. [3]நோக்கினன். (௬௨௧)

௩.—சுக்கிரீவனிடத்து நளன் 'சேதுபந்தனஞ்செய்ய மலைமுதலியன கொணரச்செய்க' எனல்.

காரியங் [1]கடலினை யடைத்துக் [2]காட்டலே
சூரியன் [3]காதல சொல்லி யென்பல
மேருவு மணுவுமோர் வேறு ருவகை
[4]ஏருற வியற்றுவன் [5]கொணரச் செப்பென்றான்.

(இ - ள்.) சூரியகுமாரனே! கடலினையடைத்துக் காட்டுவதே (நான்) செய்யவேண்டியகாரியம்: (ஆயின்), பலசொல்லி என்பயன்? மேருமலையும் அணுவும்வேறாகத்தெரியாதபடி[சமனாகுமாறு]அழகுபொருந்த(அணையை)யியற்றுவேன்:(அதற்குஏற்ப மலைமுதலியவற்றைக்)கொணரச்செய்வா யென்றான்; (எ - று.)—[5]கொணர்தியென்றனன் என்ற பாடத்துக்கு' கொணர்தி - பிறவினைப்பொருளில்வந்த தன்வினையென்க: வடநூலார் இங்ஙனம்வருவதனை அந்தர்ப்பாவிதணிச் என்பர். பி-ம்:—[1]கடறனை. [2]கட்டலே, காட்டுவேன், காட்டுதல். [3]காதலே, காதலன். [4]சேர்வுற, [5]கொணர்தியென்னவே, கொணர்கவென்றனன். (௬௨௨)

௪.—கடலடைக்கச் சேனையிலுள்ளார் வருமாறு சாம்பன் பறைசாற்றுதல்.

இளவலு மிறைவனு மிலங்கை வேந்தனும்
அளவறு நங்குலத் தரசு மல்லவர்
[1]வளைதருங் கருங்கட லடைக்க வம்மென
துளமலி சேனையைச் சாம்பன் சாற்றினான்.

(இ - ள்.) 'இளையபெருமாளும் ஸ்ரீராமனும் இலங்காதிபதியான அரசனும் [விபீஷணனும்] எல்லையற்ற [பெருந்திரளாகவுள்ள] நமது வானரகுலத்துக்கு அரசனான சுக்கிரீவனும் தவிர மற்றையோர் வளைந்துள்ள கருங்கடலை யடைக்க வாருங்கள்' என்று (சுக்கிரீவனாணையால்) கூட்டம்மிகுந்தசேனையை நோக்கிச் சாம்பவான் பறையறைந்துதெரிவித்தான்; (எ - று.)

நளன் தானே வானரர்களைத் துணையாகக்கொண்டு சேதுவைக்கட்டலானன்: அப்போது வானரர்கள் பலவகைமரங்களை வேருடனும் வேரில்லாமலும் கொணர்ந்தார்கள்: அன்றியும், அவ்வானரர்கள் பலவகைமலைகளைப் பண்டிமுதலிய யந்திரங்களிலிட்டுக் கொணர்ந்து சேர்த்து உடனிருந்துஉதவ, நூல்பிடித்தல் முதலியன செய்து நளனால் கடலில் அணைகட்டப்படுவதாயிற்று என்று இவ்வாறுனவிவரம் முதனூலிலுள்ளது. சாம்பவான் பறையறைந்து தெரிவித்தல் முதலியவிவரங்கள் அங்குஇல்லை. சாம்பன் = ஜாம்பவாந். வம் = வாரும்: விகாரம். அல்லவர்வாரும்-ஓரிடம் பிறவிடந்தழுவிய இடவழுவமைதி. வளை தரும்-சங்குகளைத்தருகின்ற எனினுமாம். பி-ம்:—1வளைதரு. (௬உ௩)

ரு.—மலைகளையேர்திக்கொண்டு வானரங்கள் வருதலை இதுமுதல் மூன்றுகவிகள் தெரிவிக்கும்.

கருவரை காதங்கள் கணக்கி லாதன
இருகையிற் [1]றோள்களிற் சென்னி யேந்தின
ஒருகட லடைக்கமற் றொழிந்த வேலைகள்
வருவன வாமென வந்த வானரம்.

(இ - ள்.) கணக்கில்லாத காதங்கள்(அகன்றனவான)கருவரைகளை இரண்டுகைகளிலும் இருதோள்களிலும் சிரசிலும் தாங்கியனவாய், ஒருகடலையடைப்பதற்கு ஒழிந்த மற்றைச் சமுத்திரங்கள் வருவனபோல வானரங்கள் வந்தன; (எ - று.)

கடலையடைக்கப் பெருந்திரளானவானரங்கள் மலைமுதலியவற்றைச் சுமந்துகொண்டுவருதல், ஒருகடலையடைக்க மற்றையாறுகடல்களும் வருவன போலுமென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இதனை, இல்பொருளுவமையென்பாருமுளர். பி-ம்:—1தோளினில். (௬உ௪)

௬. பேர்த்தன மலைசில பேர்க்கப் [1]பேர்க்கநின்று
ஈர்த்தன சிலசில சென்னி யேந்தின
தூர்த்தன சிலசில [2]தூர்க்கத் தூர்க்கநின்று
ஆர்த்தன சிலசில வாடிப் பாடின.

(இ - ள்.) சிலவானரங்கள் மலைகளைப் பேர்த்துத்தள்ளின; சிலவானரங்கள் பேர்த்துத்தள்ளுந்தோறும் (அம்மலைகளை) உறுதியாகநின்று இழுத்துக் கொண்டுவந்தன; சிலவானரங்கள் (மலைகளைத் தம்) சிரசில் தாங்கிக்கொணர்ந்தன: சிலவானரங்கள்(அவற்றைவாங்கிக் கடலிலிட்டுத்)தூர்த்தன: சிலவானரங்கள் தூர்க்குந்தோறும் மகிழ்ச்சியா லாரவாரித்தன; சிலசில வானரங்கள் ஆடிக்கொண்டுபாடின; (எ-று.)—பி-ம்:—1பேர்க்கச்சென்று. 2சேர்க்கத். (௬உ௫)

எ. காலிடை யொருமலை யுருட்டிக் கைகளின்
[1]மேலுடை [2]மலையினை [3]வாங்கி விண்டொடுஞ்
[4]சூலிடை மழைமுகில் சூழ்ந்து [5]சுற்றிய
வாலிடை யொருமலை யீர்த்து [6]வந்தவால்.

(இ-ள்.) '(சிலவானரங்கள்),—காலினால் ஒருமலையை யுருட்டியும், கைகளின்மேலே (பாரம்) உள்ள மலையை யேந்தியும், வானத்தையளாவிக் கருக்கொண்ட மழைபெய்யவல்ல மேகங்கள் கவிந்து சுற்றப்பெற்ற ஒருமலையை வாலினால்இழுத்தும் வந்தன; (எ-று.)—'கைகளின்மேலுடைமலையினை வாங்கி' என்பதற்கு-வேறொருவானரத்தின் கைகளின்மேலுள்ள மலையைவாங்கிஎன்று உரைப்பாருமுளர். பி-ம்:—1மேலிடை. 2ஒருமலை, இருமலை. 3ஏந்தி. 4சூலுடை. 5சுற்றுற. 6வந்தன. (௬உ௬)

அ.—நளன் மலைகளைவாங்கிச் சேதுகட்டுதல்.

முடுக்கினன் றருகென மூன்று கோடியர்
1எடுக்கினு மம்மலை யொருகை யேந்தியிட்டு
அடுக்கினன் றன்வலி காட்டி யாழியை
நடுக்கினனளனெனு 2நவையி னீங்கினான்.

(இ-ள்.)குற்றத்தினின்றுநீங்கியநளனென்கிறவானரன்,—மூன்றுகோடி வீரர் எடுத்துவந்தாலும், கொணர்ந்து தருக என்றுசொல்லி (அவர்களை)விரைவுபடுத்தியவண்ணம் அம்மலைகளைத்தன்கையினாலேந்தியிட்டு வரிசையாகக்கடலில்வைத்து (இவ்வாறு) தன்வலிமையைக்காட்டிக் கடலை நடுங்கச்செய்தனன்; (எ - று.)—மூன்றுகோடிவீரர்சேர்ந்து தூக்கிவந்த மலையையும்தருகஎன்று ஒருகையால்வாங்கி நளன் தன்வலிமையைக்காட்டினனென்றுஉரைப்பினுமாம். பி-ம்:—1எடுப்பினும். 2நவையுள். (௬உஎ)

௬. மஞ்சினிற் றிகழ்தரு 1மலையை மாக்குரங்கு
2எஞ்சுறக் 3கடிதெடுத் தெறிய வேநளன்
விஞ்சையிற் றாங்கினன் சடையன் வெண்ணெயிற்
றஞ்சமென் றோர்களைத் தாங்குந் தன்மைபோல்.

(இ-ள்.) (உலகில் மலைகள்) குறைந்திடும்படி மேகத்தோடுவிளங்குகின்ற மலைகளைப் பெரியகுரங்குகள் விரைவாக எடுத்துவந்து வீச, வெண்ணெநல்லூரிலே சடையன் 'நீயே தஞ்சம்' என்று சொல்லி(த் தன்னை) யடைந்தவர்களைத் தாங்குந்தன்மைபோல, நளன்(அம்மலைகளையெல்லாம் தன்)தொழில்வல்லமையாலே தாங்கினன்; (எ - று.)—இந்தச்செய்யுள் ஒரு பிரதியில் "சயக்கவி" (௧௦) என்றதன்பின் உள்ளது; ஒருபிரதியில் "தழுவி"(௬எ)என்றதன் பின் உள்ளது. "மஞ்செனத்திகழ்தருவெற்பைமாருதி" என்று ஒருபிரதியில் முதலடி. பி-ம்:—1வெம்மை. 2எஞ்சலில். 3கிரி. (௬உஅ)

௧௦.—சேதுகட்டும்போது நிகழ்ந்த பலவகைநிகழ்ச்சிகள் இதுமுதல் இருபத்தேழுபாடல்களால் வருணிக்கப்படும்.

சயக்கவிப் பெரும்படைத் தலைவர் 1தாள்களால்
முயற்கறை மதிதவழ் முன்றிற் குன்றுகள்
2அயக்கலின் முகிற்குல மலறி யோடின
வியக்கரு மகளிரு மிரியல் போயினர்.

(இ - ள்.) வெற்றிபொருந்திய வானரங்களின் பெருஞ்சேனைத்தலைவர் (தமது) தாள்களால், முயற்கறையைக்கொண்ட சந்திரன் தவழும் முன்னிடத்தைக்கொண்ட குன்றுகளை அசக்குவதனால், (அம்மலையிலிருந்து) முகிற்குலங்கள் அலறியோடின; (அக்குன்றுகளில்வாழும்) இயக்கரும் (அவரது) மனைவிமாரும் நிலைகெட்டு ஓடலானார்கள்; எ-று.)—தாள்களால் அயக்கலின் என இயையும். தாள்-பாதமென்றேனும், முயற்சியென்றேனும் பொருள்படும். இயக்கர்-யக்ஷரென்ற தேவசாதியார். அயக்கல் = அசக்கல்: சகரயகரப் போலி. பி-ம்:—1தாங்கின. 2அயற்கலி, அயற்கலின். (௯௨௯)

கக. 1வேருடை 2நெடுங்கிரி தலைவர் வீசின
ஓரிடத் தொன்றின்மே லொன்று 3சென்றுற
நீரிடை நிமிர்பொறி பிறக்க 4நீண்டவி
தாருடை நெருப்பென வருண னஞ்சினான்.

(இ - ள்.) வேரோடுள்ள பெருமலைகள் வானரத்தலைவர்களால் வீசியெறியப்பெற்றனவாய் ஓரிடத்திலே ஒன்றின்மேலொன்று சென்றுதாக்க, (அவ்வண்ணம் மலைகள் ஒன்றோடொன்று தாக்கியதனால்) நீரிலே மேலோங்கிய வண்ணம் அனற்பொறி தோன்ற, வெகுதூரம்பரவியிருந்து அவிந்த மாலைபோலொழுங்கான (கணையின்) நெருப்பு (மிச்சமிருந்து மீண்டும் பற்றிற்றோ) என்றுகருதி வருணன் அஞ்சினான்; (எ-று.)—மயக்கவணி. பி-ம்:-1வேரொடு. 2கிரிதலைவாங்கி. 3சென்றுக. 4நீண்டவீந்துஆருடை. (௯௩௦)

கஉ. ஆனிறக் கண்ணனென் றொருவ னங்கையாற்
1கானிற மலைகொணர்ந் தெறியக் கார்க்கடல்
தூநிற முத்தினந் துவலை யோடும்போய்
2வானிறை மீனொடு மாறு 3கொண்டவே.

(இ - ள்.) கவாட்சனென்றுபேர்கொண்ட ஒருவானரவீரன், தனது அங்கையினால் கானொழியும்படி மலையைக்கொணர்ந்து எறிந்திட, (எறிந்தவிசையினால்), கரியகடலிலுள்ள வெண்ணிறமுள்ள முத்தினம் கடலின் நீர்த்திவலைகளோடு (வானத்திற்) சென்று வானத்தில்நிறைந்துள்ள நட்சத்திரங்களோடு மாறுபட்டுவிளங்கின;(எ - று.)—கவாக்ஷனென்றவடசொல்-பசுவின்கண்ணைப் போன்ற கண்ணுடையவனென்று பொருள்படுமாதலால், அச்சொல்லைமொழிபெயர்த்து, 'ஆனிறக்கண்ணன்' என்றார். மலையைக்கொணர்ந்து கடலில்வீசுவதனால் அதனிலுள்ள கான் இறுவதாயிற்று. இனி, கான் நிறம் மலைஎன்று பிரித்து-கானையும்நிறத்தையுமுடையமலையென்பாருமுளர். பி-ம்:-1கானிறை, கானிமிர். 2வானிடை, வானுள. 3கொண்டதே. (௯௩௧)

கங. சிந்துரத் தடவரை யெறியச் சேணிடை
முந்துறத் தெறித்தெழு முத்தம் 1மொய்த்தலால்
அந்தரத் தெழுமுகி 2லாடை பாவகம்
பந்தரொத் ததுநெடும் பருதி வானமே.

(இ - ள்.) யானைகளைக்கொண்ட பெரியமலைகளை (க் கடலில் வானரங்கள்) எறியும்போது (அந்தக்கடலிலிருந்து) முற்பட்டுத்தெறித்தெழுந்த முத்

தங்கள் வானத்திடையில் தொத்திக்கொண்டதனால், நீண்ட ஆகாயத்திற்றோன்றுகின்ற முகில்(பந்தலிற்கட்டும்)ஆடைபோலத்தோன்ற நீண்ட சூரியன்செல்லும்ஆகாயமானது (தான்) பந்தரையொத்தது;(எ-று.)—வானம் பந்தரையும், அதில்எழுமுகில் பந்தருக்குக்கட்டுஞ் சீலையையும், அங்குத் தொத்திய முத்தம் சீலையிற்றொங்கவிடும் முத்துச்சரத்தையும் போன்றன வென்றவாறு; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]தோற்றலால். [2]ஆடையாய். (௬௩௨)

௧௪. வேணுவி னெடுவரை வீச மீமிசை
சேணுறு திவலையா [1]னனைந்த செந்துகில்
பூணுறு மல்குலிற் [2]பொருந்திப் போதலால்
நாணினர் [3]வானவர் நாட்டு நங்கைமார்.

(இ - ள்.) மூங்கிலைக்கொண்ட நீண்ட மலைகளை(க் கடலில்வானரங்கள்) வீசியெறிய, (அந்தவிசையால்) மிக்கமேலிடமான ஆகாயத்திலேயுற்ற நீர்த்திவலைகளால் நனையப்பெற்ற(தாம்உடுத்த)செந்நிறத்துகில்(மேகலைமணியைப்) பூணுதலைப்பொருந்திய அல்குலில் ஒட்டிக்கொள்ளுதலால், (தமதுஉறுப்பு வெளித்தெரிவதுபற்றி) வானவர்நாட்டுநங்கைமார் நாணினர்; (எ - று.)

மலையை வானரங்கள் வீசியெறிந்தபோது கடலின்நீர்திவலையாகி வானத்துச்சென்று சுவர்க்கலோகத்துமகளிரின் செந்துகிலை நனைப்பதாயிற்றென்றது-தொடர்புயர்வுநவிற்சியணி. "துடுப்புவீசுந்துவலைகண்மகளிர்மென்றூ, சுயல்வுறுபரவையல்குலொளியுறத்தளிப்ப" என்றது இங்கு நினைவிற்கு வருகின்றது. பி-ம்—[1]நனைந்து. [2]பொருந்த. [3]வானநாடுடைய,வானநாட்டுறையும். ( )

௧௫. [1]தேனிவர் தடவரைத் திரைக்க ருங்கடல்
தானிமிர் தரவிடை [2]குவியத் தள்ளுநீர்
மேனிமிர் திவலைமீச் சென்று மீடலால்
வானவர் நாட்டினு மழை[3]பொ ழிந்தவால்.

(இ - ள்.) தேனுலாவப்பெற்ற தடவரைகள் திரையையுடைய கருங்கடல் மேலோங்குமாறுஇடையே(வீசப்பட்டு)த்திரள,(கடலிலிருந்து)வெளிப்பட்டுமேலேசென்ற நீர்த்திவலைகள் வெகுதூரம்மேலேசென்று மீளுவதனால் தேவலோகத்திலும் மழை பொழிந்தனபோன்றன; (எ-று.)—தொடர்புயர்வுநவிற்சியணிபற்றிவந்த தற்குறிப்பேற்றவணி. இதில், தற்குறிப்பேற்றவுருபு தொக்குநின்றது. பி-ம்:—[1]தேனிமிர். [2]குவிப்பத்தள்ளும்,குவிப்பதுள்ளி.[3]பொழிந்தவே, பொழிந்ததால். (௬௩௪)

வேறு.

௧௬. [1]மைபுறு மலைக ளோடு மறிகடல் வந்து வீழ்ந்த
[2]வெய்யவாய் மகரம் பற்ற [3]வெருவின விளிப்ப மேனாட்
பொய்கையி னிடங்கர் கவ்வப் புராதனு போற்றி யென்று
கையெடுத் தழைத்த யானை போன்றன களிகல் யானை.

(இ-ள்.) மதக்களிப்புக்கொண்ட அழகிய(மலைகளில் தங்கிய) யானைகள்) மேகங்கள்தங்கிய மலைகளுடனே (அலை) மடங்குகின்ற கடலிலே வந்துவீழ்ந்தனவாய்க் கொடியவாயையுடைய முதலை பற்றிக்கொள்ள அஞ்சிக்கதறின

வை,—முன்னொருகால் (தாமரைப்)பொய்கையிலே முதலைகௌவிக்கொள்ள, 'புராதனனே! (என்னைக்)காப்பாற்றுக'என்று கையெடுத்துக்கூப்பிட்ட கஜேந்திரனைப் போன்றன; (எ - று.)—பி-ம்:—1மையறு. 2வெய்யவாம். 3வெருவியேயுளைந்து, வெருவினைவிரிப்ப, வெருவினைவிளைப்ப. (கூஙடு)

கஎ. அசும்புபாய் 1தேனும் பூவு மாரமு மகிலு மற்றும்
விசும்பெலா முலவுந் தெய்வ 2வேரியின் மிடைந்து 3விம்மத்
4தசும்பினில் வாச மூட்டிச் 5சார்த்திய தண்ணீ 6ரென்னப்
பசும்புலா னாறும் வேலை பரிமளங் கமழ்ந்த தன்றே.

(இ - ள்.) ஊற்றுகப்பாய்கின்ற தேனும் மலர்களும் சந்தனமும் அகிலும் மற்றுமுள்ள (வாசனைப்) பண்டங்களும் ஆகாயமெல்லாம்பரவுகின்ற தெய்வ மணத்துடனே நெருங்கிமிகுதலாலே, குடத்தில்வாசனைப்பொருள்களையிட்டு வைத்துள்ள தண்ணீர்போல, புதுப்புலால்நாற்றங்கமழுங் கடல் நறுமணங் கமழலாயிற்று; (எ - று.)

நறுமணமுள்ள தேன்முதலியனமிக்குச் சேர்ந்ததனால் கருங்கடல்நீர் தனதுபுலால்நாற்றம் நீங்கி வாசப்பண்டஞ்சேர்ந்த தண்ணீர்க்குடங்களிலுள்ளநீர்போல வானத்திலெல்லாம் திவ்வியமணம்பரவுமாறு நறுமணங்கமழ்வதாயிற்றென்றவாறு; கடல் தனதுபுலால்நாற்றம்நீங்கி வேற்றுமணம் விளங்கப்பெற்றதென்றது-பிறிதின்குணம்பெறலணி.பி-ம்:—1தேனும்போதும்,மலருந்தேனும். 2வெறியின. 3வீழ. 4தசும்பெலாம். 5சேர்த்திய, சாரித்த.6போல.

கஅ. தேமுதற் கனியுங் காயுந் தேனினோ டூனுந் தெய்வப்
பூமுத லாய வெல்லா மீன்கொளப் 1பொலிந்த வன்றே
மாமுதற் றருவோ 2டொக்கும் வானுயர் மானக் குன்றம்
தாமுத லோடுங் கெட்டா லொழிவரோ வண்மை தக்கோர்.

(இ - ள்.)பெரியோர்கள் தாம் அடியோடுஅழிந்தாலும்(தமது)வண்மைக் குணத்தையொழிவரோ? [ஒழியமாட்டார்களன்றோ?] (அதற்குஏற்பவே), மாமுதலிய மரங்களோடு பொருந்திய வானுறவுயர்ந்த பெருமைபெற்ற மலைகள் இனிமையைத்தம்மிடத்தேகொண்ட பழமும் காயும் தேனினுடனே ஊனும் தெய்வத்தன்மையைக்கொண்ட பூமுதலியஎல்லாமும் மீன்உட்கொள்ளும்படி பொலிந்தன; (எ - று.)—அன்றே - தேற்றம். பொதுப்பொருள் சிறப்புப் பொருளைச் சமர்த்தித்துவந்த வேற்றுப்பொருள்வைப்பணி.ஊன்-மிருகங்களினுடையன. பி-ம்:—1பொலிந்தது. 2ஒக்கும். (கூஙஎ)

ககூ. 1மண்ணுறச் சேற்றுட் புக்குச் 2சுரிகின்ற 3மாலைக் குன்றம்
கண்ணிறை 4போதுங் காயுங் கனிகளும் பிறவுங் 5கவ்வி
6வெண்ணிற மீன்க ளெல்லாம் வறியவ ரென்ன 7மேன்மேல்
உண்ணிறை செல்வ நல்கா 8தொளிக்கின்ற வுலோப ரொத்த.

(இ - ள்.) (கடலில்வீழுகின்ற) கண்ணுக்குநிறைந்துதோன்றுகின்ற மலர்களையும் காய்களையும் கனிகளையும் பிறவுணவுப்பொருள்களையும் கவ்வி வெண்ணிறமீன்களெல்லாம் வறியவர்போன்றிருக்க, மண் (நும்மீது) படியச்சேற்றி

னுட்புகுந்துபுதைகின்றவரிசையான குன்றங்கள்,தம்மிடத்துநிறைந்தசெல்வத் தைப்பிறர்க்குமேன்மேல்தராது ஒளிக்கின்ற உலோபிகளை யொத்தன; (எ-று.)

மீன்கள் கடலில்வீழ்ந்த மலைகளிலுள்ள போதுமுதலியவற்றைக் கவ்வு வது-வறிஞர் பிறரிடத்தினின்று பொருள்களை வருத்திக் கைக்கொள்வது போன்றிருக்க, தம்மிடத்துள்ள காய்முதலிய பொருள்கள் பலபிராணிகட்கும் உதவாது சேற்றினுள்மறைகின்ற அம்மலைகள்-தம்மிடத்துள்ள செல்வத்தைப் பிறர்க்குக்கொடுக்க மனமில்லாமல் ஒளித்துக்கொள்கின்ற உலோபிகளைப் போலு மென்று வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]மண் ணிறைசேற்றுப். [2]சுரிக்கின்ற. [3]மானக். [4]பூவும். [5]கவ்வா, கவ்வ. [6]எண்ணிறை, எண்ணுறு. [7]செல்ல. [8]ஒளிகின்றலோபர். (௬௫௮)

௨௦. கறங்கெனத் திரியும் வேகக் கவிக்குலங் [1]கையின் வாங்கிப்
பிறங்கிருங் கடலிற் பெய்த [2]போழ்தத்தும் பெரிய பாந்தள்
மறங்கிளர் மான யானை வயிற்றின வாக வாய்[3]சோர்ந்து
உறங்கின கேடுற் றாலு முணர்வரோ வுணர்வி லாதார்.

(இ - ள்.) காற்றாடிபோலத்திரிகின்ற வேகத்தையுடைய வானரக்கூட் டம் (தமது) கையினால் (மலைகளைப்) பேர்த்துஎடுத்து விளங்குகின்ற பெரி யகடலிலேஇட்டபோழ்தும், (அம்மலைகளிலுள்ள)பெரும்பாம்புகள்,—வலிமை யோடுவிளங்குகின்ற ரோஷத்தைக்கொண்ட யானைகள் தம்வயிற்றிலுள்ளன வாக வாய்திறந்தவண்ணம் உறங்கிக்கிடந்தன; உணர்விலாதார் கேடுற்றாலும் உணர்ச்சியடைவரோ? (எ - று.)

சிறப்புப்பொருளைப் பொதுப்பொருள் சமர்த்தித்துநின்ற வேற்றுப் பொருள்வைப்பணி. "கண்கூடாப்பட்டதுகேடெனினுங்கீழ்மக்கட்கு, உண் டோவுணர்ச்சிமற்றில்லாகும் - மண்டெரி, தான்வாய்மடுப்பினும் மாசுணங் கண்டுயில்வ, போராபெருமூச்செறிந்து" என்ற செய்யுள் இச்செய்யுளை யடி யொற்றியது. மலைப்பாம்புகள் யானைகளை விழுங்கியதனால் தம்வயிற்றிடைக் கொண்டனவாயின. பி-ம்:—[1]கடிதின், கதுவ. [2]பேர்வரைப். [3]சேர்ந்து. (௬௫௯)

௨௧. இழையெனத் தகைய மின்னி னெயிற்றின முழக்க மெய்தப்
புழையுடைத் தடக்கை யொன்றோ டொன்றிடை பொருந்தச்
கழையுடைக் குன்றின் முன்றி லுருமொடு கலந்த கால [சுற்றிக்
மழையெனப் பொருத வேலை மகரமு மத்த மாவும்.

(இ - ள்.) புழையுள்ள பெரியகை ஒன்றினிடத்து மற்றொன்று இடை பொருந்த (ஒன்றையொன்று) சுற்றிக்கொண்டு ஆபரணமென்னுந் தன்மை யையுடைய விளங்குகின்ற எயிற்றையுடையனவான மதம்பிடித்தயானையும் வேலையிலுள்ளமகரமும், மூங்கிலைக்கொண்ட மலையின்மேலிடத்துத் தங்கு கின்ற இடியொடுபொருந்திய யுகாந்தகாலமழைபோலப்பேரொலிதோன்றப் பொருதன; (எ - று.)—நாம் தனியேநிற்பின் மகரங்களைவெல்லமுடியா தென்றுகருதிமத்தமாக்கள் தம்மிற்கையையொன்றோடொன்று சுற்றியவண் ணம்நின்று மகரங்களோடு பொருதன என்க. எயிறு-தந்தமும்,கோரப்பல்லும்.

உஉ. [1]பொன்றின சிறிய வாய புண்ணியம் புரிந்தோர் போலக்
குன்றுகள் [2]குரக்கு வீரர் [3]குவித்தன நெருப்புக் கோப்ப
ஒன்றின்மே லொன்று வீழ[4]வுதைத் [5]தெழுந் தும்பர் [6]நாட்டுச்
சென்று[7]மே லிடம்பெ றாது திரிந்தன சிகரச் சில்லி.

(இ - ள்.) குரங்குவீரர் குவித்தனவான குன்றுகள்(பிறகு)நெருப்புத்தோன்ற ஒன்றின்மேலொன்றுவீழுமாறு செலுத்தப்பெறுதலால்தோன்றிய சிகரத்துண்டுகள்,—ஒழிந்துபோன சிறியவாயபுண்ணியம்புரிந்தோர்போல எழுந்து வானுலகஞ்சென்று மேலேயிடம்பெறாது மீண்டன; (எ - று.)

*அற்பமான புண்ணியம்புரிந்தோர் வானுலகத்துச்சென்று அப்புண்ணியம் கழிந்துவிட அவ்வானினின்று மண்ணுலகத்துப் புகுவ ரென்பது, நூற்கொள்கை. வானின்மேற்சென்று மீண்ட சிகரச்சில்லிக்குப் புண்ணியந்தேய்ந்த அவரை உவமைகூறினர். பி-ம்:—[1]பொன்றினர். [2]துரக்கும். [3]குவித்தனர். [4]உதைத்து. [5]எழும். [6]நாடச், நாடு, நாட்டிந். [7]மேனிலை. (ஙூஅக)

உங. கூருடை யெயிற்றுக் கோண்மாச் சுறவின மெறிந்து கொல்லப்
[1]போருடை யரியும் வெய்ய புலிகளும் யாளிப் போத்தும்
நீரிடைத் தோற்ற வன்றே [2]தங்நிலை [3]நீங்கிற் றென்றால்
[4]ஆரிடைத் தோலார் மேலோ ரறிவிடை நோக்கி னம்மா.

(இ - ள்.) கூர்மையைக்கொண்ட பற்களினாற் பற்றிக்கொள்ளுந்தன்மையையுடைய விலங்காகிய சுறவினம் எறிந்து கொன்றதனால், போர்செய்யுந்தன்மையுள்ள சிங்கமும் கொடியபுலிகளும் யாளிக்குட்டிகளும் நீரிலே தோற்றுவிட்டன; ஆச்சரியம்: அறிவினால்ஆராய்ந்துபார்க்கும்போது, தம்மிருப்பிடம் நீங்கிற்றானால்? வலிமைமிக்கோர் யாரிடத்தில்தான் தோற்கமாட்டார்கள்.

சிறப்புப்பொருளைப் பொதுப்பொருள் சமர்த்தித்துநின்ற வேற்றுப்பொருள்வைப்பணி. "அடும்புன லுள்வெல்லுமுதலையதுநீங்கின், வெல்லுமதனைப் பெற" என்ற திருக்குறள் இங்குக் காணத்தக்கது. பி-ம்:—[1]போரிடை. [2]தன்னிலை. [3]நீங்கிற்பின்னை, நீங்கிச்சென்றால். [4]ஆரிடையழிவுவாராது, ஆரிடைத்தோலார்தங்கள். (ஙூஅஉ)

உச. ஒள்ளிய வுணர்வு கூட வுதவல ரெனினு மொன்றோ
வள்ளிய [1]ராயோர் [2]செல்வ மன்னுயிர்க் குதவு மன்றே
துள்ளின குதித்த [3]வானத் துயர்வரைக் குவட்டிற் றூங்குங்
கள்ளினை நிறைய மாந்திக் கவியெனக் களித்த மீன்கள்.

(இ - ள்.) விளக்கத்தையுடைய அறிவு கூட [புத்திபூர்வகமாக] உதவலரேயானாலும்,வண்மையுடையோரின்செல்வமான துஅம்மட்டோடுநிற்குமோ? (திண்ணமாக) உலகத்துள்ள பிராணிகட்கு உதவுமன்றோ? மீன்கள் துள்ளி வானத்திற் குதித்தனவாய் ஓங்கியமலைகளின்உச்சியிலே தொங்குகின்ற(தேன் கூண்டிலுள்ள) தேனை நிறையப்பருகி,வானரங்கள்போலக் களித்தன;(எ - று.) —பொதுப்பொருளைச் சிறப்புப்பொருள் சமர்த்தித்துநின்ற வேற்றுப்பொ

* 'க்ஷீணேபுண்யேமர்த்யலோகம்விசந்தி' என்பது காண்க.

† கோய் சொரி என்று பாடமும் உண்டு. கோய் என்பது க-
-ளைக்கும் பாத்திரமாதலால் அதனின்று சொரிகின்ற நறவம் ...

... உகக்கும் எனப்பொருள் கொடல் சிறிதல் காண்க.
... - Purananuru - 300 - foot note

நுரைவைப்பணி. வரைகள் தம்மினைவன்றியிலே மீன்களுக்குத் தேனையுதவி யமைகாண்க. பி-ம்:—[1]ஆனோர். [2]செய்கை. [3]மானத்தும்பர்தங், வானத்துயர் முறைக், மானத்துயர்வரைக். (மேற்)குறித்த பாடம் கொள்ளாக்கால், வானப் ... (௬௪௩)

௨௫. மூசெரி பிறக்க மீக்கொண் டிறக்கிய முடுக்கந் தன்னாற்
† [1]கோசொரி நறவ மென்னத் [2]தண்புன லுகுக்குங் குன்றின்
[3]வேய்சொரி முத்துக் கம்மா விருந்துசெய்[4]திருந்த வீண்ட
வாய்சொரி யிப்பி யோடும் வலம்புரி யுமிழ்ந்த முத்தம்.

(இ - ள்.) மொய்க்கின்ற அக்கினியுண்டாகுமாறு உயரத்திலிருந்து கீழிறக்கிய விசையினாலே வானத்திலிருந்து நறவத்தைச்சொரிவதுபோலக் குளிர்ந்த நீரை வெளிச்சிந்துகின்ற குன்றங்களிலுள்ள மூங்கில்களிலிருந்து சொரிந்த முத்துக்களுக்கு, இப்பிகள் தாம் வாயிலிருந்துசொரிந்தமுத்துக்களும் வலம்புரிச்சங்கம் சொரிந்த முத்துக்களும் விரைந்து விருந்துசெய்திருந்தன; (எ-று.)—அம்மா-வியப்பிடைச் சொல்: வேய்சொரிமுத்துக்கு நேர்ந்த நிலைகுறித்து வியந்தவாறு. மலையைவீசியெறிகையில் இப்பிமுத்தும் சங்குமுத்தும் தாம் எதிர்வந்து வேய்முத்துக்களுக்கு இடங்கொடுத்தலால், 'விருந்துசெய்திருந்த' என்றார். இனி, இப்பியும் சங்கும் முத்துக்களைச்சொரிந்தது வேய்முத்துக்கட்கு விருந்து செய்ததுபோலு மென்றுருமாம். பி-ம்:—[1]பூ. [2]சுனைப். [3]வேசொரி. [4]இருந்தபோலும், இருந்தவிண்ட. (௬௪௪)

வேறு.

௨௬. விண்ட லந்தொடு மால்வரை வேரொடுங்
[1]கொண்ட லங்கொள வீரர் குவித்தலாற்
றிண்ட லங்கட லானது நீர்செல
மண்ட லங்[2]கட லாகி [3]மறைந்ததே.

(இ-ள்.) (வானர)வீரர்கள் ஆகாயத்தலத்தைத் தொடுகின்ற பெரியமலைகளை வேரோடும் பேர்த்துவந்து சிரமமுண்டாகக் (கடலிற்) குவித்ததனால், கடலானது,—நீர் அப்பாற்சென்றுவிட வலியபூமியாயிற்று; (கடலிலுள்ள) நீர் பாய்ந்ததனால் பூமியும் கடலாகி மறைந்தது ;(எ - று.)

பூமியின்தன்மையைக்கடலும், கடலின்தன்மையைப் பூமியும்அடைந்தன வெனக் கூறியதில் மாற்றலணிதோன்றுதல் காண்க. வடமொழியில் இது - அந்யோந்யாலங்காரமெனப்படும். அலங்கொள - தேகச்சிரமத்தையடைய. நீர்செல-இரட்டுறமொழிதலான மத்திமதீபம். பி-ம்:—[1]கொண்டலங்கொளி. [2]கெடலாகி. [3]மறைந்தவே, மலிந்ததே. (௬௪௫)

௨௭. ஐயன் வேண்டி னதுவிது வா[1]மன்றே
வெய்ய சீயமும் [2]யாளியும் வேங்கையும்
மொய்கொள் [3]குன்றின் [4]முதலின மொய்த்தலால்
நெய்தல் [5]வேலி குறிஞ்சி நிகர்த்ததால்.

(இ - ள்.) நெருங்குதலைக்கொண்ட குன்றினிடத்துள்ளனவான கொடிய சிங்கமும் யாளியும் வேங்கையும் நெருங்கியதனால், நெய்தலினெல்லையானது

குறிஞ்சியையொத்தது; யாவர்க்குந்தலைவனான கடவுள் வேணுமென்றுகினைத்தால், ஒன்று வேறொன்றாக ஆகுமன்றோ; (எ - று.)

கடலும்கடல்சார்ந்தஇடமும் - நெய்தல்நிலம்: அது குறிஞ்சிநிலப்பொருளாகிய சிங்கம்முதலியனநிரம்பினதால், குறிஞ்சியையொத்ததென்றார்: மலையும்மலைசார்ந்தஇடமும்குறிஞ்சி.ஒன்று வேண்டியமற்றொன்றாகுமென்றுகுறிப்பிக்க, 'அது இதுவாம்' என்றார். பொதுப்பொருளைச் சிறப்புப்பொருளைக் கொண்டுசமர்த்தித்த வேற்றுப்பொருள்வைப்பணி. பி-ம்:—[1]அழல். [2]வேங்கையும்வேழமும். [3]குன்று, குன்றம். [4]முதலினமொத்தலால். [5]வேலை. (௬௪௬)

௨௮. யானு ணாதன [1]விங்கிவை [2]யென்னவே
தீனு ணாதன வென்னிது [3]செய்யுமே
[4]மானு ணாத திரைக்கடல் [5]வாழ்தரு
மீனு ணாதன வில்லை விலங்கரோ.

(இ - ள்.) 'யான் உணாதவை இந்தக்கடலிலுள்ள இவை' என்றுசொல்லி (மலையில்வாழ்விலங்குகள்) தீனியை யுண்ணாதனவாயின; விலங்குச்சாதி (இதைத்தவிர்த்து) என்னசெய்யும்? (இவ்வாறு) விலங்குகளால் உண்ணப்பெறாத திரைக்கடலில்வாழ்கின்ற மீன்களால் உண்ணப்பெறாத விலங்குகளோ இல்லை; (எ - று.)

மான்-மிருகவிசேடமெனக்கொண்டு அதற்குஏற்பஉரைப்பினுமாம். தீன்-தின்னப்படுவது: தீனிஎன்பதுசெயப்படுபொருள்விகுதிகெட்டுவந்தது. பி-ம்:—[1]ஈங்கிவை.[2]என்னவோர். [3]செய்யுமோ. [4]தானுணாத,கானுணாகர். [5]தாழ்தரு.

௨௯. [1]வெளவி லங்கு வளர்த்தவர் மாட்டருள்
செவ்வி லங்கலில் [2]சிந்தையிற் றீருமோ
இவ்வி லங்கல் விடேமினி யென்பபோல்
எவ்வி லங்கும்வந் [3]தெய்தின வேலையே.

(இ - ள்.) (பிறவுயிர்களைக்) கவ்விக்கொள்ளுந்தன்மையையுடைய மிருகமும் (தம்மை) வளர்த்தவரிடத்தில் செவ்வியஅருள் விலங்குதலில்லாத சிந்தையினின்று நீங்குமோ? [நீங்காது]; (ஆதலால்), இனி (எமதுவாழிடமான) இம்மலையைவிட்டுவாரோமென்றுசொல்வனபோல எல்லாவிலங்குகளும்(மலைகளுடனே) கடலைவந்துசேர்ந்தன; (எ - று.)—பொதுப்பொருளைச் சிறப்புப்பொருள்சமர்த்தித்துநின்ற வேற்றுப்பொருள்வைப்பணி. வெளவிலங்கு - வினைத்தொகை: விலங்குஎன்பதன்பின், இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. பி-ம்:—[1]வல். [2]சிந்தையதாமென, சிந்தையர்தீர்வரோ. [3]எய்திய.

௩௦. கனித ருங்கெடுங் காய்தரு நாடொறும்
இனித ருந்தவ நொய்தி னியற்றலாற்
பனித ருங்கிரி தம்மனம் [1]பற்றறு
முனிவ ரும்முனி யார்முடி வுன்னுவார்.

(இ - ள்.) இனிதான அருமையானதவத்தை இலேசாக வியற்ற இடமாயிருத்தலால், நாடொறும் கனிதருவதும் நெடுங் காய்தருவதுமான குளிர்ச்சிபொருந்திய மலையைத் தம்மனத்துப்பற்றற்றவரான முனிவரும் வெறுத்துவி

டாமல் (தாம்)மூடிந்துவிடக்கருதுவார்; (எ-று.)—பற்றற்றமுனிவரும், இருப்பிடத்தில்விருப்பால், கடலில்வீசியெறிந்த மலைகளிலிருந்தபடியே முடியவும் கருதினரென்க.கனிதரும்கிரி, காய்தரும்கிரிஎன இயையும்.பி-ம்:—1பற்றுறு.

௩௧. புலையின் வாழ்க்கை யரக்கர் 1பொருப்புளார்
தலையின் மேல்வைத்த கையினர் சாற்றுவார்
மலையி லேமற்று மாறினி வாழ்வதோர்
நிலையி லோமென் றிலங்கை 2நெருங்கினர்.

(இ - ள்.) மாமிசத்தால்உயிர்வாழ்தலைக்கொண்டு (கடலில்வீசிய அம்) மலைகளிலிருப்பவரான அரக்கர்கள், தலையின்மேற்கைவைத்தவராய், (நாம் வாழ்ந்த மலை கடலில் எறியப்பெற்றதனால்)மலையை யிழந்தவரானோம்: இனி வாழ்வதற்கு வேறு ஓர்இருப்பிடம் இல்லாதவரானோ மென்றுசொல்லி இலங்கையை நெருங்கலுற்றனர்; (எ-று.)—பொருப்பில்வாழ்ந்தஅரக்கர் தம் மிருக்கையையிழந்ததனால், இலங்கையில் நெருங்குவாராயினரென்க.பி-ம்:—1பொருப்பினர். 2நெருக்குவார். (௬௰)

௩௨. 1முழுக்க நீரிற் புகா2முழு கிச்செலாக்
குழுக்க ளோடணை கோளரி யாளிகள்
இழுக்கில் பேரணை யின்னிரு பக்கமும்
ஒழுக்கின் மாலை வகுத்தன 3வொத்தவே.

(இ - ள்.) (கடலின்நீர் தம்மை)முழுத்திவிட(அக்கடலின்)நீரிலேயே சென்றுவிடாதனவும்,(தாம் நீரிற் பாதி) முழுகி (அவ்விடத்தைவிட்டு)ச் செல்லாதனவுமான கூட்டங்களோடு சேர்ந்திருந்த வலியசிங்கங்களும் யாளிகளும், குற்றமற்ற பெரியஅணையின் இருபக்கங்களிலும் ஒழுங்காக மாலையமைத்திருந்தனவற்றைப் போன்றன; (எ - று.)

கடலினுள் அமிழ்ந்துவிடாமல் பாதியமிழ்ந்து அமிழ்ந்தபடியே அணையினிருபக்கத்திலும் இருக்கின்ற யாளிகளும் சிங்கங்களும் நீளஅமைத்த ஒருவகைமாலைபோல் தோன்றின என்றார். ஒழுக்கின்மாலை என்பதற்கு-ஒழுக்க வரிசை என உரை வகுப்பாருமுளர். பி - ம்:—1முழுக்கு. 2முழுகிற்செலக். 3ஒத்தவால். (௬௧)

௩௩. பளிக்கு மால்வரை மூழ்ந்து 1படுத்தன
ஒளிக்கு மாழி 2கிடந்தன வோர்கிலர்
வெளிக்கு மால்வரை வேண்டு மெனக்கொணர்ந்து
அளிக்கும் வானர வீர ரநேகரால்.

(இ - ள்.) (கண்ணுக்குத்தெரியாதவாறு) மறைக்கப்படுகிற கடலிலே முன்னமே இடப்பட்டனவான பளிக்குமலைகள்கிடந்தவற்றை அறியமாட்டாதவராய், இடைவெளியாயுள்ளஅவ்விடத்தைமூடுவதற்குப் பெரியமலைவேண்டுமென்று (மலைகளைப் பிடுங்கிக்)கொணர்ந்து (அங்கேஇடுமாறு) கொடுக்கின்ற வானரவீரர் பலர்; (எ - று.)

பளிக்குமலையால் சேதுவின் ஓரிடம் அமைந்திருக்க, அணையில் அவ்விடம் இன்னும் மூடப்படாமல் நிற்பதாகக்கருதி வானரவீரர் அங்குமூடுமாறு மலையைக்கொணர்வரென்ற இதில், பளிக்குமலையிட்ட இடத்துக்கும் இடாத இடத்துக்கும் பொதுக்குணத்தினால் வேற்றுமைதோன்றாமையைக்கூறியது - மறைவணி: இதனை, வடநூலார் மீலிதாலங்கார மென்பர். பி-ம்:—[1]படுத்தனன். [2]கிடந்தென. (௬௫௨)

௩௪. [1]பாரி னுண்முது குந்நெடும் பாழ்பட
வூரி வானரம் வாங்கிய மொய்ம்மலை
[2]வேரி னுமென [3]வெம்முழை யின்னுழை
சோரு [4]நாக நிலனுறத் தூங்குமால்.

(இ - ள்.) பூமிதேவியின் முதுகும்பெரும் பாழிடமாகும்படி வலியவானரம் (வேரோடும்) பறித்துக்கொண்டுவந்த நெருங்கியமலைகளின்வேர்போலாமென்றுதோன்றுமாறு கொடிய முழைஞ்சுகளிலிருந்து நழுவிய நாகம் நிலத்திற் பொருந்தத் தொங்கும்; (எ-று.)—மலைமுழைஞ்சுகளினின்று நிலத்துத் தொங்குகின்றநாகங்கள் மலையின்வேர்போலத்தோன்று மென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]பாரினீள். [2]வேரினுயின, வேரினுயகல். [3]மென்முழை. [4]நாகினிலத்துறத்தூங்குவ. (௬௫௩)

௩௫. அருணச் செம்மணிக் குன்றய [1]லேசில
இருணற் குன்ற மடுக்கின வேய்ந்தன
கருணைக் கொண்டல் வறியன் கழுத்தென
வருணற் கீந்த வருண [2]சாரத்தையே.

(இ - ள்.) செந்நிறத்தைக்கொண்ட அழகிய இரத்தினங்கள்விளங்குகின்ற குன்றுகளின்பக்கத்திலே மிக்க இருள்நிறத்தைக்கொண்ட நல்ல சில குன்றங்கள் அடுக்கப்பட்டவை,—கருணையைச்சொரியும் மேகம்போன்றவனை இராமபிரான் (தன்னுடைய இரத்தினமாலையைக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டதனால்) கழுத்துவறியனாயிருக்கின்றானென்று கருதி, வருணனுக்குக்கொடுத்த பலவர்ணமுள்ள மணிவடத்தை யொத்திருந்தன; (எ-று.)

ஒன்றல்லாதவற்றைப் பல வென்றல் தமிழ்வழக்காதலால், செம்மணிநிறமும் இருள்நிறமுங் கலந்த மலைகளை 'வருணசாரம்' என்றார். வருணற்கீந்த வருணசாரம் என்ற தொடரிலுள்ள நயம் கருதத்தக்கது. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]ஏகுசில். [2]சாத்ததே. (௬௫௪)

௩௬. வய்ந்த தம்முடம் பிட்ட வுயிர்க்கிடம்
ஆய்ந்து கொள்ளு மறிஞரி [1]னாழ்கடற்
[2]பாய்ந்த பண்டுறை யும்மலைப் பாந்தள்கள்
[3]போந்த [4]மாமலை யின்முழை [5]புக்கவே.

(இ-ள்.) (வேறோருடம்பிற்பாய்ந்து) பொருந்திய உயிர்க்கு நிலைக்களமிடமான தம்முடம்பை ஆராய்ந்து (மீளக்) கொள்ளுகிற பரகாயப்பிரவேசவித்தையில்வல்ல யோகியர்போல, (மலையையெறிந்த விசையால்) ஆழ்ந்தகடலி

லே பாய்ந்தனவான மலைப்பாம்புகள் முன்னே தாம் வசித்தனவாய்(க் கடலை) அடைந்த பெரியமலையின் குகைகளிலே (மீண்டும்) புகுந்தன; (எ - று.)

பரகாயப்பிரவேசம்-கூடுவிட்டுக்கூடுபாய்தல். அவ்விச்சைவல்ல யோகியர் வேறொருபிராணியின் உடலிலே புகுந்தாலும் தமக்குஉரியஉடம்பிலே மீண்டும்வந்துசேர்தல்போல, மலைப்பாம்புகள் கடலிற்பாய்ந்துவிடினும் மீளவும் தம்வாழிடமாயிருந்த மலையின்முழைகளிற் புக்கனவென்க. உவமையணி. பி-ம்:—1ஆழிக்கண். 2பாய்ந்து. 3போந்து. 4மால்வரையின். 5புக்கதே,புக்கதால். ()

௩எ.—இதுமுதல் எட்டுக்கவிகள்-அநுமான் முதலியோர் கடலில் மலையிட்டதைக் கூறும்.

சேது வின்பெரு மைக்[1]கிணை செப்பவோர்
ஏது வேண்டு[2]மென் றெண்ணுவ தென்கொலோ
தூத னிட்ட மலையின் றிவலைபால்
மீது விட்டுல[3]குற்றன மீன்களும்.

(இ - ள்.) சேதுவின் பெருமைக்கு ஒப்பாகச்சொல்ல வேறொருகாரணம் வேண்டுமென்று எண்ணுவது எதற்காக? இராமதூதனான அநுமானிட்ட மலையினால் (வானத்துத்தெறித்த கடலின்) நீர்த்திவலையோடு (கடலிலிருந்த) மீன்களும் (கடலை) விட்டு வானுலகைச் சேர்ந்தன; (எ-று.)

சேதுவின்சம்பந்தத்தால் கடல்வாழ்மீனும் நீர்த்திவலையோடு வானுலகத்தைஅடைந்தமையே சேதுவின்சிறப்பை விளக்குதற்குப் போதியசான்றாம்: இச்சேதுவின் பெருமையைநிரூபிக்க வேறுகாரணம் தேடவேண்டியதில்லையென்றவாறு. மீதுஉலகு-வானுலகு. பி-ம்:—1இனி, அணி. 2எண்கண்ணுவதென்னென. 3உற்றது மீன்குலம். (௩௬௬)

௩அ. நீல னிட்ட நெடு[1]வரை நீணிலம்
மூல முட்டலின் [2]மொய்புனல்[3]கைம்மிகக்
கூல [4]மிட்டிய வார்கலி [5]கோத்ததால்
ஓல [6]மிட்டெழுந் தோடி யுலகெலாம்.

(இ - ள்.) நீலன் (கடலிற்) போகட்ட நெடுவரையானது நீண்டநிலத்தின் அடிவரையில் தாக்குதலினாலே, நெருங்கிய புனல் பரவுமாறு கரைநெருங்கப்பெற்ற சமுத்திரம் கவிந்துகொண்டதனால், உலகத்திலுள்ளபிராணிகள்,— எழுந்து ஓடியவண்ணம் பெருஞ்சத்தமிட்டன; (எ - று.)—நான்காமடியில், இட்ட - முற்று. இட்டெழுந்து-தொகுத்தல். பி-ம்:—1மலை. 2மொய்ம்புனல். 3கைம்மிகும். 4இட்டியதாதலின், முட்டியதாதலின், இட்டியவாதலின். 5கோத்தலால். 6இட்டனவோடி, இட்டெழுந்தோட. (௩௬எ)

[1]ஒருவ ருயிரம் யோசனை யோங்கிய
[2]வெருவு மால்வரை விட்டெறிந் தார்த்தலால்
[3]மருவு வான்கொடி மாட விலங்கையில்
தெருவெ லாம்புக் குலாய [4]தெண் ணீரரோ.

என்று ஒருசெய்யுள் சிலபிரதிகளில் இங்கே காணப்படுகின்றது. பி-ம்:— [1]ஒருவர். [2]அருவி. [3]மருவி. [4]திரைக்கடல்.

௩௯. மயிந்த னிட்ட நெடுவரை வானுற
[1]உயர்ந்து முட்டி விழவெழுந் தோதநீர்
[2]தியந்த [3]முட்டத் திசைநிலை யானையும்
பெயர்ந்து விட்டவை [4]யாவும் [5]பிளிறுவ.

(இ-ள்.) மயிந்தனென்றவானரவீரன் இட்ட நெடுவரையினால் கடலின் நீரானது வானுறஉயர்ந்தெழுந்து (அவ்வானத்தை) முட்டி விழுகையில் திகந்தங்களைத் தாக்குவதாக, (அப்போது) திக்கஜங்கள் எல்லாமும் (தம்மிடம் விட்டுப்) பெயர்ந்தவையாய் வீரிடுவனவாயின; (எ-று.)—தியந்தம் = திகந்தம்: திசையின் எல்லையான இடம். பி-ம்:—[1]அயிர்ந்த மிட்டவளவெழுந்தார்த்துநீர், வயிந்தமுட்டிவிழவெழுந்தார்த்தநீர், உயர்ந்துமுட்டவிழவெழுந்தோதநீர். [2]இயிந்த. [3]முட்டி. [4]தாமும். [5]பிளிறின. (௩௫௮)

௪௦. இலக்கு வன்சர மாயினு [1]மின்றெதிர்
[2]விலக்கி னால்விலங் காத விலங்கலால்
அலக்க [3]ணெய்தி யமிர்தெழ வாழியைக்
கலக்கி னான்மகன் மீளக் கலக்கினான்.

(இ - ள்.) (பாற்)கடலைச் சிரமப்பட்டுஅமிழ்தம்தோன்றுமாறு கடைந்தவனாகிய வாலியின்மகனான அங்கதன்,—இலக்குமணனுடைய சரமேயானாலும் இன்று எதிர்த்துவிலக்கினால் விலங்காத [மிக்கஉறுதியான வலிமைபடைத்த] மலையைக்கொண்டு மீளவும் (அக்கடலைக்) கலங்கச்செய்தான்; (எ-று.)—முன் கடலைத் தந்தை கலக்கினானாதலால், 'மீளக் கலக்கினான்' என்றது. பி-ம்:— [1]என்று. [2]விலக்கினும். [3]எய்த. (௩௫௯)

௪௧. மருத்தின் மைந்தன் மணிநெடுந் தோளெனப்
பெருத்த குன்றங் காடிப் பெரும்படை
விருத்த னிட்ட விசையினின் வீசிய
திருத்தம் வானவர் சென்னியிற் சென்றவால்.

(இ - ள்.) வாயுபுத்திரனான அநுமானது அழகியநெடிய தோள்போலப் பெருத்துள்ள குன்றத்தைக் காடிப்பெரும்படைக்குரிய வயசுமுதிர்ந்தவனான ஜாம்பவான் (கடலிற்) செலுத்தியவிரைவினால் தெறித்த தீர்த்தம் தேவர்களின்சிரசிலே சென்று வீழ்ந்தது; (எ-று.)—மருத்தின்மைந்தனும் காடிவிருத்தனும் இட்டகுன்றம்என்றுஇயைத்துஉரைத்தலுமொன்று. திருத்தம்-தீர்த்தம் என்பதன்சிதைவு. (௩௬௦)

௪௨. [1]குமுத னிட்ட குலவரை [2]கூத்தனில்
திமித மிட்டுத் [3]திரியுந் திரைக்கடற்
[4]றுமித மூர்புக வானவர் துள்ளினார்
அமிர்த [5]மின்ன மெழுமெனு மாசையால்.

(இ - ள்.) குமுதன் எறிந்த சிறந்தமலையானது கூத்தனைப்போல திமிதமென்னும் ஒலியைச்செய்து திரியப்பெற்ற அலைகளையுடைய கடலின் நீர்த்

திவலை தம்மூரிற்புக,வானவர் இன்னும் அமுதமெழுமென்கின்ற ஆசையினால் துள்ளினார்கள்; (எ - று.)

குமுதனிட்டதடவரை திரிவதனால் மேலெழுந்த நீர்த்துளி தம்மூரில் தெறிக்கக்கண்டு, முன்னர் மந்தரம் திரிதலால் அமுதம்தோன்றியதைக்கண்ட தேவர் இப்போதும் அமுதந்தோன்று மென்று கருதி மகிழ்ச்சிக்கூத்தையாடினார் என்க. பி-ம்:-1குமிதன். 2கூத்தரில். 3திரையும். 4துமுதம்.5இன்னும்.

௬௩. கனசி னத்துரு மிற்கடுங் கார்வரை
பனச னிட்டன யாவும் பரிக்கிலன்
1மனசி னத்த 2வனந்தனவ் வாழ்விகந்து
3அனச னத்தொழின் மேற்கொள்வ தாயினான்.

(இ-ள்.) (இயற்கையாக) மனத்திற் சினங்கொண்டுள்ளஅநந்தன், பனச னென்றவானரவீரனாலெறியப்பட்டனவாகி மிக்கசினத்தோடு [உக்கிரமாக] விழுகின்ற இடிபோல் வேகம்பூண்ட பெரியமலைகள் எல்லாவற்றையும் தாங்க மாட்டாதவனாய்,அவ்வாழ்வுநீங்க உண்ணாவிரதத்தை மேற்கொள்வானாயினான்

அநந்தன் - கீழிருந்துஉலகங்களைத்தாங்கும்நாகம். பனசனிட்ட பெரு மலைகள் பெரும்பாரத்தையுடையன வாதலால் அவற்றைத் தாங்கமாட்டாது போய் 'இனி நாம் உயிருடனிருந்து தாங்குதலைச்செய்ய இயலாது: இப்படி வருத்தத்தையனுபவிப்பதைவிட உயிரைவிடுதலே நன்று' என்ற கருத்தினால் உண்ணாவிரதத்தை மேற்கொள்வானாயின னென்க. அநசநம் - உண்ணாமை: வடசொல். பாம்புகட்குச்சீறுதல் இயற்கை யாதலால் 'மனசினத்தவனந்தன்' என்றார். எதுகைநோக்கி 'மனசினத்த'என இயல்பாக வந்தது.பி-ம்:—1சினத்தின். 2அனந்தனும். 3அனசினத். (௬௬௨)

௬௪. எண்ணி லெண்கின மிட்ட கிரிக்குலம்
உண்ண வுண்ணச்சென் 1றொன்றினோ டொன்றுறச்
சுண்ண 2நுண்பொடி யாகித் தொலைந்தன
புண்ணி யம்3பொருந் தாத முயற்சிபோல்.

(இ - ள்.) எண்ணுக்குஅடங்காத கரடிக்கூட்டத்தாற் கடலிலிடப்பட்ட மலைக்கூட்டம்,—(ஒன்றையொன்று) உண்ணுவதுபோற்சென்று ஒன்றினோடு ஒன்றுதாக்க,(நிறைவேறுதற்குஉரிய)புண்ணியமில்லாத காரியமுயற்சிபோலச் சூர்ணமான நுண்ணியபொடியாகி அழிந்தொழிந்தன; (எ - று.)

ஆகூழில்லாதகாலத்துத் தொடங்கிய காரியம் நிறைவேறாது பட்ட வருத்தமெல்லாம் வீணாகுமாறு அழிந்திடுதல்போல, மலைக்குழாம் சேதுகட்டுவதற்குஉதவாது பொடியாய் உருத்தெரியாது அழிந்தனஎன்றார்; உவமையணி. பி - ம்:—1ஒன்றினிலொன்றுற. 2நன்பொடி. 3பொருந்தார்தம். (௬௬௩)

௬௫.—இட்ட மலைகளின் பாரத்தைப்பற்றிய வருணனை.

ஆர வாயிர யோசனை யாழமுந்
தீர நீண்டு பரந்த திமிங்கிலம்
பார 1மால்வரை யேறப் பதைத்துடல்
பேர வே2குன்றும் வேலையும் 3பேர்ந்தவால்.

(இ - ள்.) (கடலில்) ஆயிரயோசனையாழமும் நிரம்புமாறு முழுமையும் நீண்டு பரந்திருந்த திமிங்கிலம் பாரமுள்ள பெரியமலை (தம்மீது) ஏறவே உடல்பதைத்து (அவ்விடத்தைவிட்டு) அப்பாற்சென்றதனால், (இட்ட)மலையும்(இடப்பட்ட)கடலும் நிலைமாறுவனவாயின;(எ-று.)—தீர-முழுதும். பி-ம்:—[1]மாமலை. [2]நெடுங்குன்றமும். [3]பேர்ந்ததால், பேர்ந்தவே. (௬௬௪)

௬௫.—இதுவும்அடுத்தகவியும்-நளன் சேதுவை யமைக்குந் தன்மையைக் கூறுவன.

குலை[1]கொ ளக்குறி நோக்கிய கொள்கையான்
சிலைக ளொக்க முறித்துச் [2]செறித்துநேர்
மலைக ளொக்க வடுக்கி மணற்படத்
தலைக ளொக்கத் தடவுந் தடக்கையால்.

(இ - ள்.) அணை (நன்கு) அமையச்சிந்தித்துநோக்கிய தன்மையையுடையனான நளன், கற்கள் (மேடுபள்ளமில்லாமல்) நேராகஅமையுமாறு முறித்து நெருங்கச்சேர்த்தும் மலைகளைநேரொக்க அடுக்கியும்(அவற்றின்மேலே)மணல் பொருந்தவும் (சேர்த்துச்)சிகரங்கள்தனியேதெரியாமல் நேராய்விடப் பெரிய கைகளால்நிரவுவான்;(எ-று.)—குலை-பாலம். பி-ம்:—[1]கொளுங். [2]செறித்த.()

௬௭. தழுவி யாயிர [1]கோடியர் தாங்கிய
குழுவின் வானரந் தந்த கிரிக்குலம்
எழுவி னீள்கரத் [2]தேற்றிட விற்றிடை
வழுவி [3]வீழ்வன கால்களின் வாங்குவான்.

(இ-ள்.)(அன்றியும்,நளன்)—ஆயிரகோடிக்கணக்கையுடையரானகூட்டமானவானரங்கள் தழுவித் தாங்கிக்கொணர்ந்த மலைத்தொகுதியை இருப்புத்தூண்போன்ற (தன்) நீண்ட கைகளால் ஏற்கையில், துண்டுபட்டு இடையே நழுவிவிழுவனவாக,(அவைகளைக்)கால்களால் வாங்குவான்; (எ - று.)—[2]எற்றிட எனவும் படிக்கலாம்.பி-ம்:—[1]கோடியும்,கோடிய,கோடிகள். [3]மஞ்சினிற்.

௬௮.—மூன்றுக்விகள் - மலைசுமந்துசெல்லும் வானரங்களின் வருணனை.

மலைசு மந்து வருவன வானரம்
நிலையி னின்றன செல்ல நிலம்பெறா
அலைநெ டுங்கட லன்றியு மாண்டுத்தந்
தலையின் [1]மேலொரு [2]சேதுவுந் [3]தந்தபோல்.

(இ - ள்.) மலையைச் சுமந்துவருவனவான வானரங்கள் செல்ல இடம் பெறாமல்(ஓரிடத்திலேயே)நிலையாகநின்றவை,அலையைக்கொண்ட நெடியகடலில்மாத்திரமன்றி அப்போது தமதுதலையின்மேலும் ஒருசேதுவையுண்டாக்கினபோன்றன; (எ - று.)

இடம்பெறாமையால் வானரங்கள் மலைகளுடனே நின்றனவாக, அப்போது அவ்வானரங்களின் சிரசின்மீதிருந்த மலைகள், தமது தலைமீதும் ஒருசேதுவை அவ்வானரங்கள் அமைப்பனபோல் தோன்றினவென்றார்: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]மேலுமொர். [2]சேதுத், சேதுந். சேது. [3]தருவபோன்ம், தருவபோல். (௬௬௭)

௬௯. பருத்த [1]மால்வரை யேந்திய பல்படை
நிரைத்த விற்[2]சில செல்ல நிலம்பெறுக்
கரத்தி னேந்திய [3]கார்வரை கண்ணகன்
சிரத்தின் மேற்கொண்டு நீந்தின சென்றவால்.

(இ - ள்.) பருத்த பெரியமலைகளை யேந்தியனவான பலவகைப்பட்ட குரங்குச்சேனைகள் வரிசையாகநின்றுவிட்டபடியால், (அவற்றுட்)சில,— செல்லஇடம்பெறுமல் (தம்) கரத்திலேந்திய பெரியமலைகளை இடமகன்றசிரத்தின்மேலே வைத்துக்கொண்டு கடலில் நீந்திச்சென்றன; (எ - று.)

செல்லுதற்கு இடங்கிடையாமையாற் சிலவானரங்கள் கரத்திலேற்பிடுங்கிய மலைகள் கடலில்இடவேண்டியஇடத்திற்சேருமாறு சிரசின்மேலேயே செல்லும்படி அவற்றைத் தள்ளிவிட்டன என்று பொருள்காண்பாருமுளர். பி-ம்:—[1]மாமலை.[2]செலச்செல்ல.[3]வானரம். (௬௬அ)

௫௦. ஆய்ந்து நீள மரிது சுமந்தன
[1]ஓய்ந்த [2]கால பசியி [3]னுலர்ந்தன
ஏந்து மால்வரை வைத்தவற் றீண்டுதேன்
மாந்தி யாந்தி மறந்து [4]மயங்குமால்.

(இ - ள்.) நீளத்தைஆராய்ந்து அரிதிற்சுமந்தனவும் காலோய்ந்தனவும் பசியினுலர்ந்தனவுமான வானரங்கள்,—(தாம்)ஏந்திய பெரியமலையைக் கீழேவைத்து அவற்றிலேநெருங்கியுள்ள தேனை மிகப்பருகி உடல்மறந்து மயக்கமடைவனவாயின; (எ - று.)

சேது வெகுதூரம்கட்டவேண்டியிருத்தலை யாராய்ந்து அரிதுசுமந்தன வென்க. மதுவைமிகுதியாகப்பருகினுர் மெய்ம்மறத்தல், இயற்கை. பி-ம்:— [1]ஓய்ந்து. [2]காலும், கால்கள். [3]உலர்ந்தன, உழந்தன. [4]துயின்றவால். (௬௬௯)

௫௧.—வானரர்கள் சேதுபந்தனம்நடப்பதுகுறித்து ஒருவரையொருவர் விசாரித்தல்.

போதல் செய்கு நரும்புகு வார்களும்
மாதி ரந்தொறும் வானர வீரர்கள்
சேது வெத்துணை சென்ற[1]தென் பார்சிலர்
பாதி சென்ற தெனப்[2]பகர் வார்சிலர்.

(இ - ள்.) பெரியதிக்குகள்தோறுமுள்ள வானரவீரர்கள்,—சேதுகட்டுமிடத்தினின்றுபோகுபவர்களும் (அங்குப்) புகுவார்களுமாகி, (புகுகின்ற) சிலர் 'சேது எவ்வளவுதூரம் கட்டப்பட்டது?' என்றுவினவினராக, (போகின்ற) சிலர் பாதிகட்டப்பட்டதென்பார்; (எ-று.)—போதல்செய்குநர் - மலையைமீண்டுங்கொணரப்போகின்றவர்: புகுவார் - மலையைக்கொண்டு புகுபவர். "நெடும்பன்மால்வரை" (௫௩) என்றதன்பின் இச்செய்யுள் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. பி-ம்:—[1]என்றார். [2]பகர்ந்தார். (௬எ௦)

௫௨.—இதுமுதற்பதின்மூன்றுகவிகள்-மலைகளும் மரங்களும் கடலில் வீழ்த்தப்படுவதால்நேர்ந்த நிகழ்ச்சிகளின் வருணனையைக் கூறும்.

குறைவில் குங்கும முங்[1]குகைத் தேன்களும்
நிறைம லர்க்[2]குல முந்நிறைந் தெங்கணும்
துறைதொ றுங்கிரி [3]தூக்கின தோய்தலால்
நறைநெ டுங்கட லொத்தன நாமநீர்.

(இ - ள்.) மலைகளால்தாங்கப்பெற்றனவான குறைவில்லாத குங்குமமும் மலைக்குகைத்தேன்களும் நிறைந்த மலர்த்தொகுதிகளும் துறைதோறும் எங்கும்நிறைந்து படிந்துவிட்டதனால், அச்சத்தையுண்டாக்குகின்ற அந்தஉவர்க்கடலானது நெடிய தேன்கடலை யொத்தது; (எ - று.)—செந்நிறமும் சுவையும் பற்றிவந்த தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]குலத். [2]குவையும். [3]தூர்த்தன, தூங்கின. (௬௭௧)

௫௩. [1]நெடும்பன் மால்வரை தூர்த்து நெருக்கவுந்
[2]துடும்பல் வேலை துளங்கிய தில்லையால்
இடும்பை யெத்தனை யும்[3]படுத் தெய்தினும்
குடும்பந் தாங்குங் குடிப்[4]பிறந் தாரினே.

(இ - ள்.) துன்பம் மிகவும்வருத்தப்படுத்தி மேன்மேல்வரினும், குடும்பத்தைத் தாங்குகின்ற உயர்குடிப்பிறந்தார்போல, நீண்ட பல பெரிய மலைகள் தூர்த்துநெருக்குமிடத்தும்,பேரொலிபடைத்தகடலானது,கலங்கவில்லை; (எ - று.)—ஆல்-வியப்பு. இச்செய்யுளின்பின் சிலபிரதிகளில் "தொக்கடங்கல"(௫௭)என்ற பாடல் காணப்படுகின்றது. பி-ம்:—[1]நெடும்பொன். [2]தொடும்பல். [3]மடுத்தெய்தினும், மடுத்தெய்தவும். [4]பிறந்தார்கள்போல். (௬௭௨)

௫௪. கொழுந்து டைப்பவ ளக்கொடி யின்குலம்
[1]அழுந்த வுய்த்த [2]வடுக்க றகர்ந்தயல்
விழுந்த பன்மணி யின்னொளி மீமிசை
[3]எழுந்த வெங்கணு [4]மிந்திர [5]வில்லினே.

(இ - ள்.) கொழுந்துவிட்டுப்படருந்தன்மையுள்ள பவளக்கொடியின் கூட்டம் (நீரில்)அழுந்தும்படி வீசியெறியப்பட்ட மலைகளினின்று சிதறுண்டு பக்கங்களில்விழுந்த பலவகை யிரத்தினங்களி னொளி, மிக்கமேலிடமான வானத்தில்தோன்றும் இந்திரதநுசைப்போல எங்குந்தோன்றின; (எ - று.)—அடுக்கல்-மலை. தகர்தல் - சிதறுதல். பி-ம்:—[1]அழுங்க. [2]அடுக்கலிற்காந்துவ, அடுக்குறக்காய்ந்தயல். [3]எழுந்தது. [4]இந்திரன். [5]வில்லென. (௬௭௩)

௫௫. பழும ரம்பறிக் கப்பற வைக்குலம்
தழுவி நின்றொரு வன்றனி [1]தாங்குவான்
விழுத லும்[2]புகல் [3]வேற்றிட மின்மையால்
அழுத ரற்றுங் கிளையென வானவால்.

(இ - ள்.) (கடலில்விழுத்தும்படி வானரவீரர்கள்) ஆலமரத்தைப் பறித்துக்கொண்டு செல்ல, (அம்மரத்திலிருந்த) பறவைக்கூட்டங்கள், (யாவரை

யும்) தழுவிக்கொண்டு பாதுகாப்பவனாகிய ஒப்பற்ற(குடும்பத்) தலைவனொருத்தன் இறந்துபடுதலும், (தமக்குப்) புகலான வேற்றிடமில்லாமையால் அழுது கதறுகின்ற (அவனுடைய) சுற்றத்தார்போல ஆயின; (எ - று.)—இடம்பெறாமல் தத்தளித்துக்கொண்டு பறவைகள் கத்துவனவாயின என்றபடி. உவமையணி. பி-ம்:—1 தாங்கினன். 2புகும். 3வேறிடம். (௬எ௪)

௫௬. 1தாவ லோவல மென்றது தாங்கிய
2மாவெ லாங்கடல் வீழ்தலும் வண்டெலாங்
3காவ லாளர் விழக்கண் 4கண்ணிலா
5ஏவ லாளரி னெங்குந் 6திரிந்தவால்.

(இ - ள்.) இளைப்பாறுமிடமாதலை நீங்கோ மென்று அவ்வண்டினத்தை (இதுவரையும்) தாங்கிய மாமரங்களெல்லாம் கடலில் வீழ்தலும், வண்டுகளெல்லாம் பாதுகாப்பவர் இறக்க, வேறுபாதுகாப்பவரைப்பெறாத ஏவலாளரைப்போல் எங்கும்அலைவனவாயின; (எ - று.)—உவமையணி. தாவல்-பலபறவைகளும் தாவிவருதற்குஇடனாதல். பி-ம்:—1 தருதலோவிலமென்றுயிர், தாவலோமலரென்றுயிர், தாவலோருளரென்னுயிர். 2மரம். 3காவிலாளர், கரவலாளர். 4கண்ணிலார். 5இரவலாளரின். 6விரிந்தவால், திரிந்ததால், இரிந்தவால், எழுந்தவே. (௬எ௫)

௫எ. 1தொக்க டங்கல வோடுங் 2துவலைகள்
மிக்க டங்கலும் போவன மீன்குலம்
அக்க ருங்கட றார வயற்கடற்
புக்க டங்கிடப் போவன 3போன்றவே.

(இ - ள்.) (மலைகளைவீசியெறிந்தபோது) ஒன்றுசேர்ந்து அடங்கியிராமல ஓடுகின்ற (கடலின்) நீர்த்திவலை மிகுதியாகி எப்புறத்துஞ்செல்பவை,—அந்தக்கருங்கடல் (மலைகளால்) தூர்ந்துவிட்டதனால் வேறுகடல்களிலேபுக்கு அடங்குமாறு மீன்குலம் போவனவற்றை யொத்தன; (எ - று.)—தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1தொக்கடங்கலுமோடும், தொக்கருங்கடலோடும். 2 துவலையின். 3போல்வன, போன்றன. (௬எ௬)

௫அ. மூசு வண்டின மும்மத 1யானையின்
ஆசை கொண்டன போற்றொடர்ந் தாடின
ஓசை 2யொண்கடற் குன்றொடு டவைபுக
வேசை மங்கைய 3ரா மென 4மீண்டவே.

(இ - ள்.) மும்மதங்களையுடைய யானைகளினிடத்திலே விருப்பங்கொண்டிருப்பனபோல்தொடர்ந்துவந்து ஆடினவான மொய்க்கின்ற வண்டுக்கூட்டங்கள்,—ஓசையையுடைய அழகிய கடலிலே மலைகளுடனே அவ்யானைகள் புகுதலும், வேசைப்பெண்கள்போல (அந்தயானைகளை விட்டு) மீண்டன; (எ - று.)

ஆசையுள்ளவர்போல்நடித்துத் தம்மாற் பற்றப்பட்டவர்க்குக் கேடுஉண்டாதலும் அவர்களைவிட்டிடுதல் வேசைமங்கையர்க்கு இயல்பு: தொழில்பற்றிய உவமையணி. இச்செய்யுள் சிலபிரதியில் "நிலமரங்கிய" என்ற அடுத்த

பாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]மாவின்பின். [2]மாக்கடல்குன்றொடொளித் தலும், ஒண்கடற்குள்புகவுள்புக. [3]அன்பெண. [4]மீண்டதே. (கூஎஎ)

ருகூ. நிலம ரங்கிய வேரொடு நேர்[1]பறித்து
அலம ருந்துய ரெய்திய வாயினும்
[2]வலம ரங்களை விட்டில மாசிலாக்
குலம டந்தைய [3]ரென்னக் கொடிகளே.

(இ - ள்.) பூமியிலழுந்திய வேரோடு நேரேபறிக்கப்பட்டு (அதனால்) சுழற்சியைப்பெறுகின்ற துன்பத்தை யடைந்தனவாயிருந்தும், உறுதியான மரங்களை, குற்றமற்ற குலஸ்திரீகள்போலக் கொடிகள் விடாமலிருந்தன.

வேரோடுபறிக்கப்பட்டு கடலிலிடப்பட்ட மரங்களைக் கொடிகள் அந்நிலையிலும் விடாது தழுவியிருந்ததற்கு, எந்நிலையிலும் தம்கணவரை விட்டிடாத குலமங்கையரை உவமைகூறினர். பி-ம்:—[1]பறிந்து. [2]மலை. [3]போன்ற. (கூஎஅ)

கூ௦. [1]துப்பு றக்[2]கட றாய துவலையால்
[3]அப்பு றக்கட லுஞ்சுவை யுற்றன
[4]எப்பு றத்துரு மேறுங் குளிர்ந்தன
உப்பு றைத்தன மேக முகுத்தநீர்.

(இ - ள்.) (வானரர் மலைகளைக் கடலிலிட்டபோது) வலிமைபொருந்தக் கடல்வீசிய நீர்த்திவலைகளாலே அப்புறத்துள்ள கடலும் (தமது) சுவையற்றன [உப்புச்சுவையைப் பெற்றன]: எவ்விடத்துள்ள பேரிடிகளும் (தமது வெம்மைநீங்கிக்)குளிர்ச்சியடைந்தன; மேகஞ்சொரிந்த புனலும் உப்பு உறைக்கப்பெற்றன; (எ - று.)

உப்புக்கடலின் நீர்த்திவலை மிகுதியாகக் கலந்ததனால் மற்றைக்கடல் தமதுசுவை நீங்க,இடிகுளிர மேகம்பொழிந்தநீரும் உப்புச்சுவைபெற்றனஎன்றது - தொடர்புயர்வுநவிற்சியணியோடு கலந்துவந்த பிறிதின்குணம்பெறலணி. பி-ம்:—[1]துப்புடை. [2]கடற்றாய. [3]அப்புடைக். [4]வெப்புறுத்து, இப்புறத்து. (கூஎகூ)

கூக. [1]முதிர்நெ டுங்கிரி வீழ முழுங்குநீர்
எதிரெ ழுந்து நிரந்தர மெய்தலால்
மதிய வன்[2]கதி ரிற்குளிர் வாய்ந்தன
கதிர வன்கனல் வெங்கதிர்க் கற்றையே.

(இ - ள்.) முதிர்ந்த நீண்ட மலைகள் (தன்மீது) விழுந்ததனால், முழங்குகின்றநீரையுடைய கடலானது மேற்புறமாகஎழுந்து இடைவிடாமற் சேர்தலால், சூரியனுடைய நெருப்புப்போல் வெவ்விய கிரணத்தொகுதிகள் சந்திரன்கிரணங்கள்போலக் குளிர்ச்சிபொருந்தின; (எ - று.)—இதுவும்-தொடர்புயர்வுநவிற்சியணியோடு கலந்துவந்த பிறிதின்குணம்பெறலணி. பி-ம்:—[1]முது. [2]கலையில். (கூஅ௦)

கூ௨. நன்கொ டித்து நறுங்கிரி சிந்திய
பொன்[1]கொ டித்துவ லைப்பொதிந் தோடுவ

வன்கொ டிப்பவ ளங்கள் ²வயங்கலால்
மின்³பொ டித்தது போன்றன விண்ணெலாம்.

(இ - ள்.) (தன்மீதெறிந்த) நறுமணமுள்ள மலைகளாலே மிகவுஞ்சிதற டிக்கப்பட்டுச் சிந்திய பொன்னொழுங்கைக்கொண்ட நீர்த்திவலைகளாலே மறைக்கப்பெற்று விரைந்து (மேலே) செல்வனவான வலிய கொடிப்பவளங்கள் விளங்குதலால் ஆகாயமெல்லாம் மின்னல்தோன்றியதுபோன்றன; (எ - று.)

பொன்னோடுசேர்ந்த நீர்த்திவலைகளாற் பொதியப்பெற்று வானத்துத் தோன்றும் பவளங்களுக்கு மின்னல்கள் ஏற்ற உவமையாமென்க; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. மலைகளை விசையாக எறியும்போது சிதறுண்டு அம்மலைகளிலிருந்த பொன்னுடனே சேர்ந்த கடலின் நீர்த்திவலைகள் கடலிற்படர்ந்த பவழங்களைப் பொதிந்தவண்ணம் மேலெழுந்தனவென்க. பி-ம்:-¹கொடிக்கணொடும்பொதியின்திரள், கொடித்துவலைப்பொதிந்தோடிய. ² வழுங்கலான். ³கொடிக்கள்பொடித்தது, கொடித்திரள்போன்றன. (௫௮௧)

௫௮௨. ஓடு ¹மோட்டரி ²லொன்றின்மு னொன்றுபோய்க்
காடு நாடு ³மரங்களுங் கற்களும்
⁴நாட நாட நளிர்கடல் வைப்பிலோர்
⁵பூடு மாடுத வில்லையிப் பூமியில்.

(இ - ள்.) ஓடுகின்ற ஓட்டக்காரர்போல ஒருவானரத்திற்குமுந்தி ஒருவானரம் (போட்டிபோட்டுக்கொண்டு) போய், காட்டிற்பொருந்திய மரங்களையும் மலைகளையும் குளிர்ந்தகடலுள்ளவிடத்துத் தேடித்தேடிக்கொணர்ந்து சேர்த்தலால், இந்தப்பூமியில் (அவைகளின்) ஓர்பூண்டும் தோன்றாமற் போயிற்று; (எ - று.)

கண்ணுக்குப்புலனாகும் மரங்களையும் மலைகளையும் வானரங்கள் கடலிடத்துச் சேர்த்திட்டதனால், பூமியிலே ஒருசிறுசெடியாவது சிறுகுன்றாவது தென்படாமற்போயிற்றென்றவாறு. பிம்:—¹ஓட்டறும், ஓட்டரும், ஓட்டரின், மீளுமது. ²ஒன்றின்பின். ³நகரமுங் காண்கில. ⁴நாடொட்டுநளிர்கடலுட்டிலோர், நாடிநாடி நளிர்கடல்வைப்பிலோர், நாடிநாடி நளிர்க்குலவைப்பிலோர். ⁵பூடுமாட்டவிலாயபொருப்பரோ, பூடும்வாட்டமிலாமைபொருந்தின.

௫௮௩. வரைப்ப ரப்பும் வனப்பரப் பும்மொளித்
தரைப்ப ரப்புவ தென்னத் தனித்தனி
உரைப்ப ரப்பு முறுகிரி யொண்கவிக்
கரைப்ப ரப்புக் கடற்பரப் பானதால்.

(இ - ள்.) தனித்தனியே கீர்த்தியைப் பரப்பியுள்ள பெருங்கிரியையொத்த வலியவானரங்களின் எல்லையைக்கொண்ட பரப்பானது,—வரைப்பரப்பையும் வனப்பரப்பையும் ஒளிநிலத்திற்பரப்புவதுபோல (த்தோன்றுமாறு பரப்புகையில்) ஒருகடற்பரப்பை யொத்திருந்தது; (எ-று.)

கடலில் மலைகளையும் மரங்களையுங்கொண்டு வானரங்கள் பரப்புகையில், அந்தவானரங்களின்பெருந்திரள் ஒருகடல்போன்றிருந்த தென்பதாம். கடல்

நீர் பளிங்குபோன்றிருத்தலால் அதிற்பரப்பும்மலையும் மரனும் ஒளித்தரையிற் பரப்புவதுபோலு மென்க.

இந்தப்பாடலுள்ள இடத்து சிலபிரதியில் இரண்டுபாடல்கள் காணப்படு கின்றன: அவைவருமாறு:—

மணற்ப ரப்பு மணிப்ப ரப்பும்மொளி
தணற்ப ரப்புவ போன்றன தான்கவி
[1]உணர்ப்ப ரப்பு முறுகவி யின்குகைக்
கணப்ப ரப்புக் கடற்பரப் பானதே.

வரைப ரப்பு மணற்ப ரப்பு[2]மயில்
[3]திரைப ரப்பு வ[4]தென்னத் தனித்தனி
உரைப ரப்பு முறுதனி யொண்கவிக்
கரைப ரப்புங் கடற்பரப் பன்னதால்.

சிலபிரதிகளில் இப்பாடலில் ஒவ்வொன்று சிலபாடபேதங்களோடு காணப்படுகின்றன. பி-ம்:—[1]உணப்பரப்பும். [2]அவல், ஒளித். [3]தரை. [4]போன்ற.

௬௫.—அணைகட்டி முற்றுதலினால் வானரர் பேராரவாரஞ் செய்தல்.

உற்ற தாலணை யோங்க லிலங்கையை
[1]முற்ற மூன்று பகலிடை [2]முற்றவும்
பெற்ற வார்ப்பு விசும்பு [3]பிளந்ததால்
மற்றி வானம் பிறிதொரு வான்[4]கொலோ.

(இ - ள்.) மூன்றுபகற்பொழுது முற்றிலும்முற்றுகையில், திரிகூடமலையிலிருக்கின்ற இலங்கையை அணைபோய்ச் சேர்ந்தது; (அப்போது வானரங்கள்) ஆரவாரித்த ஆரவாரம் ஆகாயத்தைப் பிளப்பதாயிற்று; (அவ்வேளை காணப்பட்ட) இந்த வானம் வேறோரண்டத்தின் வானமேகொல்? (எ - று.)

ஆகாயம்பிளந்துவிட்டதென்னுமாறு வானரங்கள் பெருமகிழ்ச்சியினாற் பெருங்கர்ச்சனைசெய்யவும் மீண்டும் வானம் காணப்படுவதால், அதனை, 'பிறிதொருவான்கொல்?' எனக் குறித்தார். வானம் ஒலியைக் குணமாகவுடையதென்பர் தர்க்கநூலார்: அதற்கேற்ப இதுவரையிற் பெற்றிருந்த ஒலியைப்போல அல்லாமல் வானம் மிக்கஒலிபெற்றிருந்ததுபற்றி, 'பிறிதொருவான்கொலோ?' என்றுருமாம். ஐந்துநாள்களிற் சேது கட்டி முடிந்ததாக முதனூல் கூறும். பி-ம்:—[1]முற்றி, முற்று. [2]முற்றலும், முற்றவில். [3]பிளந்தது. [4]கொலாம். ( )

௬௬.—நான்குகவிகள்-சேதுவின்தோற்றத்தைப் பற்றிய வருணனை.

நாடு கின்றதென் வேறொன்று நாயகன்
தோடு சேர்குழ லாடுயர் நீக்குவான்
[1]ஓடு மென்முது கிட்டென வோங்கிய
சேட னென்னப் பொலிந்தது சேதுவே.

(இ - ள்.) '(கடலைக்கடக்க)வேறோருபாயம் தேடுவது எதற்கு? (யாவர்க்கும்)தலைவனான இராமன் பூவிதழ்பொருந்தின கூந்தலையுடையளான சீதை

யின் துயரத்தைநீக்கும்பொருட்டு(த் தன்சேனைகளுடனே)என்முதுகிலே அடி வைத்து விரைந்துசெல்வான் [விரைந்துசெல்லட்டும்]' என்றுகருதி (த் தன் முதுகை) உயர்த்திக்காட்டிய ஆதிசேஷனைப்போல (அந்தச்) சேதுவானது விளங்கிற்று; (எ-று.)

தன்மைத்தற்குறிப்பேற்றவணி. திருவனந்தாழ்வான் திருமாலுக்கு வேண்டிய எல்லாவடிமைகளையுஞ் செய்யப்பெற்று, அதனால் 'சேஷன்' என்றுபெயர்பெறுவானென்ற நூற்கொள்கை இங்கு உணரத்தக்கது. பி-ம்:—[1]ஓடுமின். (௬௮௫)

௬௭. [1]மெய்யி னீட்டத் திலங்கையா மென்மகள்
[2]பொய்யி னீட்டிய தீமை [3]பொறுக்கலாது
ஐய னீட்டிய சேனைகண் டன்பினாற்
கையை நீட்டிய தன்மையுங் காட்டுமால்.

(இ-ள்.) சத்தியத்தில் மனஞ்செல்லுதலையுடைய இலங்கையென்கின்ற மெல்லியபெண், (இராமபிரானுக்கு அரக்கர்) வஞ்சனையினாற்செய்த தீமையைப் பொறுக்கமாட்டாமல், ஐயன் மிகுதியாகக்கொண்டுவந்த சேனையைக் கண்டு அன்பினோடு (தன்) கையைநீட்டிய தன்மையையும் போலும்;(எ - று.) —ஈட்டம் - ஈண்டுதல்: நெருங்குதல்: மனஞ்செல்லுதல். கையைநீட்டுதல் - 'வருக' என்று சைகையினாற்காட்டுதலென்னலாம். முதலடியில், 'இலங்கையர்' என்றும், 'மேன்மகள்' என்றும் படிக்க இடமுண்டு. பி - ம்:—[1]மெய்யன். [2]பொய்யன். [3]பொறுக்கலாள். (௬௮௬)

௬௮. கான யாறு பரந்த கருங்கடல்
ஞான நாயகன் சேனை [1]நடத்தலால்
ஏனை யாறினி [2]யானல தாரென
வான யா[3]றிம்பர் வந்தது மானுமால்.

(இ - ள்.) ஆகாசகங்கையானது, 'காட்டாறுகள் பரவியிருந்த கரியகடலிலே ஞானநாயகனாகிய இராமபிரானது சேனை செல்லவேண்டியிருத்தலால், இனி யானேயல்லாமல் மற்றையாறுகள் (உதவுதற்கு) யார்?' என்று சொல்லிக்கொண்டு இவ்வுலகத்தில் வந்திட்டதையும் போலும்; (எ - று.)

கடலைக்கடக்க ஆறு [வழி] வேண்டுமன்றோ? அங்ஙனம் உதவக்கூடிய ஆறு நானேயென்று வானயாறே வந்ததுபோலுந் தோற்றத்தது, அணை யென்க. ஆறுஎன்பதற்கு வழியென்ற பொருளோடு நதியென்ற பொருளும் இருத்தலால், இங்ஙனஞ் சமத்காரம்படப்பேசினர். பி-ம்:—[1]நடக்கலால், நடக்கத்தான். [2]யாமலது. [3]வதிந்தது, வகிர்ந்தது. (௬௮௭)

௬௯. கற்றி டங்கொ டாளிர் [1]காசினங் காந்தலால்
[2]மற்க டங்கள் வருத்த வயங்கணை
ஏற்[3]க டந்த விருளிடை [4]யிந்திரன்
விற்[5]கி டந்தது வென்ன விளங்குமால்.

(இ - ள்.) (அணைகட்டுமாறு இட்ட) மலைகளிற் கிடந்து பிரகாசிக்கின்ற இரத்தினத்தொகுதிகள் ஒளிவிடுதலால், குரங்குகளாற் கட்டப்பட்ட விளங்குகின்றஅணையானது,—சூரியன் அஸ்தமித்தஇரவிலே இந்திரவில்கிடந்தது போலத் தோன்றும்; (எ - று.)—மலை இருளும், நவரத்தினவொளி இந்திரவில்லினொளியும் என உவமைப்பொருத்தங் காண்க. பி-ம்:—[1]காஞ்சனம். [2]மற்கடந்தரவந்து. [3]கடந்ததிருளிடை, கிடந்திருள்வானிடை. [4]இந்திரவிற். [5]கிடந்தனவென்ன. (௬௮௮)

௭௦.—சுக்கிரீவன் விபீஷணன்முதலியோர் சேதுகட்டி முடிந்ததைத் தெரிவிக்க இராமபிரானிடஞ் செல்லுதல்.

ஆன பேரணை யன்பி [1]னமைந்தபின்
[2]ஞான வாழ்க்கைக் கவிக்குல நாதனும்
மான [3]வேலை யிலங்கையர் மன்னனும்
ஏனை யோரு மிராமனை யெய்தினார்.

(இ - ள்.) அந்தப்பெரிய அணை அன்போடு யாவருஞ்சேர்ந்து நிருமித்த பிறகு, ஞானவாழ்க்கையையுடைய சுக்கிரீவனும், பெருமைபெற்ற கடலிடையேயுள்ள இலங்கைக்குப் பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றவனான விபீஷணனும் மற்றுமுள்ளோரும் அச்செய்தியையறிவிக்க இராமனை யடைந்தனர். 'அன்பினமைந்தபின்' என்றமையால், இராமபிரானிடத்துள்ள பக்தியினால் தமதுசிரமத்தைச் சிறிதும்பாராட்டாது மிக்கபரபரப்புடன் வானரர்கள் சேதுவை இயற்றினரென்பது, பெறப்படும். பி-ம்:—[1]அமைத்தனர், அமைந்தன. [2]ஞானமேரு, ஞானமாலை, கானவாழ்க்கை. [3]வேற்கை. (௬௮௯)

௭௪.—அணைமுற்றியமையை ஸ்ரீராமனுக்குத் தெரிவித்தல்.

[1]எய்தி யோசனை யீண்டொரு [2]நூறிவை
ஐயி ரண்டி னகல மமைந்திடச்
செய்த தாலணை [3]யென்றது செப்பினார்
வைய நாதன் சரணம் [4]வணங்கியே.

(இ - ள்.) (இராமனை) அடைந்து இக்கடலில் அணையானது யோசனை ஒருநூறுநீளமும், பத்துயோசனை அகலமும் அமையச் செய்யப்பட்டதென்ற அவ்விஷயத்தை லோகநாயகனாகிய அவ்விராமனுடைய பாதங்களில் வணங்கித் தெரிவித்தனர்; (எ - று.)—'செப்பினார்' என்பதற்கு எழுவாய்கீழ்க்கவியிலுள்ள 'கவிக்குலநாதன்' முதலியோர். பி-ம்:—[1]எய்த. [2]நூறுடன். [3]என்பது. [4]வணங்கினார். (௬௯௦)

சேதுபந்தனப்படலம் முற்றிற்று.

---

## அ-ஆவது ஒற்றுக்கேள்விப்படலம்.

(இராமபிரானதுபக்கத்து வலிமை முதலியவற்றை யறிந்துவருமாறு ஒற்றரையனுப்பிய இராவணன்)அவ்வொற்றுச்செய்தியைக் கேட்டலைத் தெரிவிக்கின்ற படல மென்பது,பொருள்.ஒற்று = ஒற்றர்: ஆங்காங்குநிகழ்பவற்றை மறைந்தடுத்து அறியும் வேவுகாரர். சிலபிரதிகளில் இப்படலத்துக்குத்திருவணை சேல்படலம் என்று பெயர் காணப்படுகின்றது.

வானரரின் உதவிகொண்டு நளனென்றவானரத்தச்சன் சேதுகட்டிமுடித்ததையறிந்த ஸ்ரீராமன் மகிழ்ந்து சேதுவைக்குறுகி சேதுகட்டிமுடித்த நளனைப்புகழ்ந்து அவனுக்குவருணனீந்த மணியாரம்முதலியன அளித்துச்சேனையுடனே அந்தச்சேதுவைக்கடந்து சுவேலமலையிலிறங்கிச் சேனாபதியானநீலனிடம் யாவர்க்கும் தங்கும்படி பாடிவீடுஅமைக்குமாறுகூற,நீலனென்றசேனாபதி நளனைக்கொண்டு இராமபிரானுக்குப் பர்ணசாலையும் மற்றையோர்க்குத் தக இல்லும்அமைக்க, அவற்றில் யாவருஞ்சேர்ந்தாராகச் சூரியன் அத்தமித்தான். அங்கே இராவணனேவியனுப்பிய சுகசாரணர் வானரவுருக்கொண்டு வானரசேனையில் வேவுகாண்கையில் விபீஷணன் அவர்களைக் கண்டறிந்து ஸ்ரீராமனுக்கு அவர்களைத்தெரிவிக்க, ஸ்ரீராமன் அவர்கட்குஅபயமளித்து இராவணனுக்கு உணர்த்தும்படி சிலசெய்தி சொல்லி யனுப்பினான். அக்காலத்து இலங்கையில்இராவணன்நியமித்த மந்திராலோசனைச்சபையில் மாலியவான் இராவணனுக்கு இதமுரைக்க, இராவணன் சினந்து 'என்தம்பியோடு வாழ்க' என்ன, மாலியவான்'மௌனமே நன்று' என்றிருக்க சேனாபதியான பிரகஸ்தன் அந்தமாலியவானுடையபேச்சுக்கு மாறு கூறுகையில், வாயில்காவலோன் ஒற்றர்வந்தசெய்தியையறிவித்து அவ்வொற்றர்களையுள்ளேவிட,அவர்கள் இராவணன் வினவியவற்றிற்கெல்லாம்விடைகூறுபவராய் இராமபிரான் முதலியோரின் செய்திகளையெல்லாஞ்சொல்லி வாழ்த்திநின்றன ரென்பது, இந்தப்படலத்திற் கூறப்படுகின்ற பொருளாகும்.

வேறு.

க.—சேதுகட்டிமுடிந்ததைக்கூறியசுக்கிரீவன்முதலியோரை இராமபிரான் புல்லிச் சேதுவைக் காண விரைதல்.

ஆண்டகையு மன்பினொடு [1]காதலமிர் தூற
நீண்டகையி னு[2]லவரை நெஞ்சினொடு புல்லி
ஈண்ட [3]வெழு கென்றன னிறைத்த[4]பரி செல்லாங்
[5]காண்டலதன் மேனெடிய காதன்முதிர் கின்றான்.

(இ - ள்.) ஆண்மைக்குணமமைந்த இராமபிரானும்,—பிரீதியாகிய அமிருதஞ் சுரக்க, (சேதுவைக்கட்டியநற்செய்திசொல்லிய) அந்தச்சுக்கிரீவன்முதலியோரை நீண்ட (தனது) கையினால் அன்புடனேமார்போடு சேர்த்துத் தழுவி,(சேதுவைக்)கட்டியவிதத்தையெல்லாம் காணுதலில் விருப்பம் முதிரப் பெற்றவனாய், (யாவரும்) விரையப்புறப்படுகவென்றான்; (எ - று.)—பி-ம்:—

[1]தானிடையெழுந்தே, காதலதுகூர. [2]நளனை. [3]எழுகின்றனன். [4]படி. [5]காண்டிடுதல், காண்டலதின். (௭௧௧)

௨.—இராமபிரான் அணையைக் குறுகிநிற்றல்.

பண்டையுறை யுட்கெதிர் படைக்கடலின் வைகும்
கொண்டலென [1]வந்தவணை யைக்குறுகி நின்றான்
[2]அண்ட முதல் வன்றொருத னாவியனை யாளைக்
கண்டன னெனப்பெரிய காதன்முதிர் கின்றான்.

(இ - ள்.) உலகிற்கெல்லாம் முதல்மூர்த்தியாகிய இராமபிரான்,—பழையவாழிடமான கடலுக்கு எதிரே சேதுசமுத்திரத்திலே தங்கும் மேகமென்னும்படி வந்து அந்தஅணையைக்கிட்டிநின்றவனாய், ஒப்பற்ற தன்னுயிர்போன்றவளானசீதையைக் கண்டவன்போல மிக்க காதல்முதிரப்பெற்றான்; (எ-று.)

கடல்தோறும் திருமால் பள்ளிகொண்டுள்ளானென்று கூறுதலும் உண்டாதலால், 'பண்டையுறையுட்கெதிர் படைக்கடலினவைகுங்கொண்டல்' என்றாரென்க. இனி விரைவிற் சீதையைக் காணலாமாதலால், அணையைக் கண்டதுமே சீதையைக்கண்டாற்போல் இராமபிரானுக்குக் காதல் முதிர்வதாயிற்று. அவணையை = அவ்வணையை: தொகுத்தல். பி-ம்.—[1]வந்து. [2]அண்டர்.

௩.—இதுவும் அடுத்த கவியும் - இராமன் நளனது அணையமைத்த திறனைப் புகழ்தலைத் தெரிவிக்கும்.

நின்று[1]நெடி தன்னினன் [2]நிரைக்கட னிரம்பக்
குன்றுகொ டடைத்தணை குயிற்றியதொர் கொள்கை
அன்றுலகு தந்தமுத லந்தண [3]னமைத்தான்
என்றபொழு தின்கணுமி தென்[4]றியலு மென்றான்.

(இ - ள்.) வெகுநேரம்நின்று ஆலோசித்தவனாய், (ஸ்ரீராமன்),—(அந்த) ஒழுங்கானகடலில் நிரம்புமாறு மலைகளைக்கொண்டு அடைத்து அணையைச் செய்ததாகிய ஓர்செயல், முன்பு உலகங்களையெல்லாம்படைத்த பிரமதேவனே அமைத்தானென்றாலும் எப்போது முடியும்? (எ - று.)

நான்முகனே செய்தாலும்இந்தஅணைகட்டிமுடிதற்கு மிகப்பலநாள் செல்லுமே; அவ்வாறான இச்செயலைமூன்றுநாள்களில் எவ்வாறு இந்நளன்செய்து முடித்தானோ! என்று வியந்தவாறு. பி-ம்:—[1]பெரிதுன்னியும், நெடிதுன்னியின், நெடிதுன்னிய. [2]நிறைக், நெடுங். [3]அமைந்தான். [4]இசையும். (௭௧௩)

௪. ஊழிமுத னாயகன் வியப்பினொடுவந்தான்
[1]ஆழமுரை செய்யு[2]மள வேயினிய தொன்றோ
ஆழியி னிலங்கை[3]நெடி தத்[4]திசையி னூடே
ஏழுகட லுங்கடி தடைப்ப[5]னிவ னென்றான்.

(இ - ள்.) ஊழிக்காலத்திலும் அழியாது நிற்கும் முதற்கடவுளாகிய இராமபிரான்,—ஆச்சரியத்துடனே மனமகிழ்ந்து, "(இந்தச்சமுத்திரத்தின்) ஆழத்தைச்சொல்லுதல் தான் இனிதுமுடியுமோ? (இவ்வாறு ஆழமானகடலில் இந்நளன் வெகுவிரைவில் அணைகட்டிமுடித்தானே!); கடலிடையேயுள்ள இலங்

கையானது தூரமாக அந்த (எழுகடலுக்கும்அப்பாலான) இடத்திலிருக்குமாயினும், 'இந்தநளன் எழுகடலையும் விரைவில் அடைத்துவிடுவான்' என்று(நளனது திறமையை) வியந்து கூறினான்; (எ - று.)—சிலபிரதிகளில் 'ஆழியினை தாழமுரைசெய்யுமளவன்றே' என்று இரண்டாமடியும், 'வாழியிவ்விலங்கை நெடிவன்றிசையதாமேல்' என்றுமூன்றாமடியும் உள்ளன. பி-ம்:—1தாழும். 2அளவேதினியதொன்றே, அளவேதணியிதொன்றே, அளவேதகையிதென்றே. 3பெரிது. 4திசையது. 5இவர். (௬௯௪)

ரு.—இராமபிரான் நளனுக்குவெகுமதியளித்துப் பகைவர்மேற்செல்ல விரைதல்.

என்றுநள னைக்கருணை யிற்றழுவி யன்பாய்
அன்றுவரு ணன்னுதவு மாரமு மளித்துத்
துன்றுகதிர் பொற்கலனு மற்றுள தொகுத்தே
வென்றியினி யென்றுபடை யோடுடன் விரைந்தான்.

(இ - ள்.) என்றுசொல்லி, (இராமபிரான்), நளனை அருளோடு தழுவி, (சினந்தணியுமாறு)அன்றுவருணன் தந்த ஆரத்தையும் ஒளி நெருங்கிய மற்றுமுள்ள பொன்னணிகலங்களையும் உடன்சேர்த்துப் பிரீதியுடனேகொடுத்து, இனி நெருங்கிய வெற்றி (நிச்சயம்) என்று படையுடன்செல்லவிரைந்தான்.

"துன்றுகதிர்பொற்கலனு மற்றுளதொகுத்தே" என்று கூறுவதனால், வனவாசகாலத்திலும் சிலஅணிகலங்கள் இராமனிடத்திருந்தன என்பது கம்பர்கொள்கையாவது பெறப்படும். நளனைக்கொண்டாடி வெகுமதியளித்தது—முதனூலிற் காணப்படவில்லை. இச்செய்யுள் பலஏட்டுப்பிரதிகளிலில்லை. ()

சு.—சேனையுடனே இராமபிரான் அலையின்மீதுபோதல்.

நெற்றியி லரக்கர்பதி செல்ல1நிறை நன்னூல்
கற்றுணரு மாருதி கடைக்குழை வரத்தன்
2வெற்றிபுணர் தம்பியொரு பின்புசெல வீரப்
பொற்றிரள் புயக்கரு நிறக்களிறு போனான்.

(இ - ள்.) முன்புறத்தில் விபீஷணன் செல்லவும், நிறைந்த சிறந்தநூல்களைக் கற்றுணர்ந்த மாருதி சேனையின்பின்னணியில் வரவும், வெற்றிபொருந்திய தன்ஒப்பற்றதம்பி பின்னேவரவும், வீரத்தோடுகூடிய அழகியதிரண்ட கைகளையுடைய கருநிறங்கொண்ட களிறுபோன்றவனான இராமபிரான் போனான்; (எ - று.)

சுக்கிரீவன்சொற்படி அநுமான்மீது இராமபிரானும் அங்கதன்மீது இலட்சுமணனுமாகச் செல்ல, சுக்கிரீவன் உடன்வந்தானென்று முதனூல் கூறும். பி-ம்:—1நெறி. 2வெற்றியுணர் தம்பியொரு,வெற்றிபுனைவோருமவர். (௬௯௫)

எ.—குன்றுகவியி...-சேனைகள் செல்லுதலின் வருணனை.

இருங்கவிகொ ள் சேனமணி யார1மிட றுத்தன்
மருங்குவளர் 2தண்டலை 3வயங்குநிரை மான
ஒருங்குநனி 4போயின வுயர்ந்தகரை யூடே
கருங்கடல் புகப்பெருகு காவிரி கடுப்ப.

(இ - ள்.) மிக்க வானரங்களைக்கொண்ட சேனைகள்,—மணிகளும் சந்தனக்கட்டைகளும் காலிலிடறவும், (அணையின்) பக்கங்களிலே வளர்ந்துள்ள சோலை விளங்குகின்றஅலைகளை யொத்திருப்பவும், கரியகடலிலேபோய்ச் சேருமாறு பெருகுகின்ற காவேரியையொப்ப, உயர்ந்தஅணையின்வழியாக ஒருசேர மிகவுஞ்சென்றன; (எ - று.)

மணியாரங்களையிடறிக்கொண்டு அலையுடனேசெல்வது காவேரிக்கு இயற்கையாதலால், இச்சேனைக்கு அது உவமையாகக் கூறப்பட்டது. மணியாரங்கள், சேதுவாகஇடப்பட்ட மலையிலுள்ளவை; தண்டலைகளும் இடப்பட்ட மலைகளிலுள்ளனவே. பி-ம்:—[1]இடறி. [2]தெண்டிரை, தண்டிரை. [3]வயங்கு பொழில். [4]போயினது. (௬௬௭)

௮. ஓதிய குறிஞ்சிமுத லாயநில னுள்ள
கோதில வருந்துவன கொள்ளையின் முகந்துற்று
யாதுமொழி யாவகை சுமந்துகட [1]லெய்தப்
[2]போதலினு மன்னபடை பொன்னியென [3]லான.

(இ - ள்.) (நூல்களிற்) கூறப்படுகின்ற குறிஞ்சிமுதலாகிய நிலத்திலுள்ளனவான குற்றமற்ற உணவுப்பொருள்களை எதையும்விடாமல் பெருங்குவியலாக வாரிக்கொண்டு சுமத்தலாலும், கடலிற் பொருந்தச் செல்லுதலாலும், அந்தச்சேனை காவிரியென்று சொல்லுமாறு இருந்தது; (எ - று.)

காவிரி தான் வரும் வழியிடையேயுள்ள குறிஞ்சிமுதலிய நிலங்களில் தோன்றும்விளைபொருள்களை வாரிச்சுமந்துகொண்டு கடலெய்துமென்க; நமைந்நற்குறிப்பேற்றவணி. இங்ஙனம் பலநிலத்துப்பொருள்களையும் வாரிக்கொண்டு கடலைநோக்கிச்செல்வது பலஆறுகட்கும் உள்ளனவாயினும், கவி, சோழநாட்டவராதலால்,தேசாபிமானத்தினாற் சோழநாடுசிறப்புற்றிருத்தற்குக் காரணமான காவேரியை யெடுத்துக்கூறினர். பி - ம்:—[1]செல்ல. [2]போதலும். [3]ஆகும். (௬௬௮)

௯. ஆயது நெருங்க வடியிட் [1]டடியிடாமல்
தேயுநெறி மாடு[2]திரை யூடு[3]விசை செல்லப்
போயசில பொங்குதொறு பொங்குதொறு பூசற்
பாய்புரவி [4]யிற்படர்வ போலினிது பாய்வ.

(இ-ள்.) (வேறுசெல்லுஞ் சில வானரங்கள்), அந்தச்சேனை நெருங்கஅடியிடுதலால்,(பாதங்களைவைத்துத்)தேய்ந்தவழிகளிலே அடியிடமுடியாமல்(சேதுவின் இருபக்கத்தோரத்திலும் அடியிட்டு), கடலினலைகள் இடையே விசையோடு வந்துகொண்டிருக்க (அப்படி அலைகள்) பொங்கிப்பொங்கியெழுந்தோறும் போரிலே பாய்கின்ற புரவியின்மீது ஏறியவண்ணம் செல்வனபோல இனிதுபாய்ந்து செல்லலாயின; (எ - று.)

முன்னணியாகவந்த வானரப்படைகள் நெருங்கித் தம்காலால் மிதித்தடத்தலால் மற்றும் வானரங்கள் அடியிடுதற்கு இடமில்லாமற்போகவே, செல்லத்தொடங்கிய வேறுசிலவானரங்கள் திரைவந்துபாயும் சேதுவின் இருபுறத்து வழியாகப் பிரயாணஞ்செய்யத்தொடங்கி, கடலினலைகள் அங்குப்பொங்கி

வரும்போதெல்லாம்அலை தமது கீழேயிருக்கத் தாம் செல்வனவாக, அத்தோற்றம் குதிரையின்மீதுஏறிச் செல்வதைப்போலு மென்றவாறு: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. திரை வாவுங்குதிரையைப்போலு மென்க. பி-ம்:—[1]இடைவிடாமல், இடமிலாமல். [2]தரையோடு. [3]சிலசெல்லப். [4]விண்படர்வ...பாய்வ, மீது செல்படைத்தலைவரொத்த. (௬௯௯)

௧௦.—மிக்கநெருக்கத்தால் செல்லமுடியாதுவிழப்பார்சிறுக்கேனையிலுள்ள கருணைவான்கள் தம்கைமீதேசெல்லுமாறுஉதவ, அவர் கரைசேர்தல்.

மெய்யிடை நெருங்க [1]விசையுற்ற வயல்வீழும்
பொய்[2]யிட மிலாத புனலிற் புகலிலாத
உய்யிட மளிக்குமரு ளாளர்முறை யுய்த்தார்
[3]கையினிடை சென்று கரைகண்ட கரையில்லை.

(இ - ள்.) செல்லக்கூடிய இடங்களில் (சேனைகள்) நெருங்கியிருத்தலால், (செல்ல) விரைவுகொண்ட(வேறு)வானரங்களை, அயலில் விழக்கூடிய வெற்றிடமில்லாதனவும் புனலிலே அமிழ்ந்துவிடாதனவுமாக, உய்விடத்தை அருள்கொண்டு உதவுகின்ற அருளாளர் (தம்கையின்மேலேயே செல்லுமாறு) முறையே செலுத்தினார்கள்: (இவ்வண்ணம்) கையினிடமாகச்சென்று கரை சேர்ந்த வானரங்களுக்கு ஓர் எல்லைஇல்லை; (எ - று.)

பொய்யிடம்-வெற்றிடம். இடைவெளியில்லாமல் சேனைகள் சேதுவின் மீது நெருங்கிடவே, மற்றுஞ்செல்லுதற்கு விரைகின்ற வானரங்களை அருளாளரான அச்சேனையினுள்ளார் வரிசையாகநின்று தம்கையாகிய அணையின் மீதேசெல்லுமாறு கைகொடுத்து உதவினார்களென்பதாம். பி-ம்:—[1]வெளியற்றயலில்வீழும். [2]இடை. [3]கையிடை கொடுப்ப வழிசென்ற. (௭௦௦)

௧௧.—இதுவும் அடுத்தகவியும்-அணைமீதுசெல்லும் இராமபிரானுக்கு வானரர் உபசாரஞ்செய்தமையைக் கூறும்.

இழைத்தனைய வெங்[1]கதிரின் வெஞ்சுட ரிராமன்
மழைத்த[2]முகி லன்னமணி மேனிவரு டாமல்
[3]தழைத்தநிழ லுற்றகுளிர் [4]சந்தன முயர்ந்த
[5]வழைத்தரு வெடுத்தருகு [6]வந்தன ரநேகர்.

(இ - ள்.) (மணிகளை) இழைத்தாற்போல்தோன்றுகின்ற சூரியனுடைய வெவ்வியவெயிலானது(இராமனது)மழைபொழியும் முகிலையொத்த அழகிய திருமேனியிலே தீண்டாமல், தழைத்தனவும் நிழல்பொருந்தியனவுமான குளிர்ந்த சந்தனமரங்களையும் சிறந்த குங்குமமரங்களையும் (பறித்து) எடுத்துக்கொண்டு(இராமபிரானுக்குக் குடைபோல்நிழல்செய்யுமாறு அப்பிரானது) அருகில்வந்த வானரர்கள் பலர்; (எ - று.)—வெங்கதிர் - பண்புத்தொகையன்மொழி. பி-ம்:—[1]கதிரெழுஞ். [2]முகில்போலும். [3]தழைத்து. [4]சந்தனமரக்கா. [5]அழைத்தவை, [6]சென்றனர். (௭௦௧)

௧௨. ஓமநெறி வாணர்மறை வாய்மையொரு [1]தாமே
யா[2]மரசர் மைந்தர்திரு மேனியல சாமே
பூமர [3]னிறுத்தவை பொருத்துவ பொருந்திச்
சாமரையின் வீசினர் படைத்தலைவர் தாமே.

(இ - ள்.) ஓமநெறியாலே (கடவுளைவேட்டு) வாழ்பவராகிய அந்தணர்களின் வேதத்தின் உண்மையானபொருள் தாமேயாமவரான சக்கரவர்த்தித் திருமகனார் தமது திருமேனி வாட்டமடையாமல், மலர்களைக்கொண்ட மரங்களைமுறித்து, அவற்றிற்சேர்க்கக்கூடியவற்றை ஒன்றுசேர்த்துப் படைத்தலைவர் தாமே சாமரைபோல வீசினர்; (எ - று.)

கீழ்க்கவியால் குடைபிடித்தலாகிய இராசோபசாரத்தைக் கூறிய கவி, இச்செய்யுளாற் சாமரைவீசுதலாகிய இராசோபசாரம் நிகழ்த்தியமையைக்கூறுகின்றார். அரசர்க்குச் சத்திரசாமரங்களிரண்டும் உபயலிங்கமென்று சிறப்பித்துச்சொல்லப்படும். பி-ம்:—[1]தானே. [2]அரசன். [3]இறுத்தவைபொருந்துவ பொருந்தச், இறுத்தவைபொருந்திநெறிகட்டிச், இறுத்தவர்பொருந்துவர் பொருந்திச். (எ௦உ)

ருக.—இராமன் திருவணையின்மூலமாகக் கடல்கடந்து அக்கரைசேர்தல்.

மருங்கடை வளர்ந்தமுலை மங்கை[1]மண முன்னா
வருங்கடக மங்கையினில் வள்ள [2]லினைகின்றான்
ஒருங்[3]கட லுயர்ந்தபடர் தானையொடு மோதத்து
இருங்கடல் கடந்துகரை யேறின னிராமன்.

(இ - ள்.) கடகம்பொருந்திய அழகியகையினால் வரையாதுகொடுக்குந் தன்மைவாய்ந்தவனான இராமன்,—இடையைவருத்தும்படி பருத்துத்தோன்றிய தனங்களையுடைய மங்கைப்பருவமுள்ள சீதாபிராட்டியைச் சேர்தலையெண்ணி வருந்துபவனாய், ஒருசேர வலிமைமிகுந்த(தன்னுடன்)வருவதான குரங்குச்சேனையுடனே நீர்ப்பெருக்கைக்கொண்ட பெரியகடலைக்கடந்து அக்கரையேறினன்; (எ - று.)—முதலிரண்டடிகள் - 'அருங்கடகமங்கையிலகற்றியயர்வோடும், மருங்கடவளர்ந்தமுலைமங்கைமணமுன்னா' என்று சிலபிரதிகள். பி-ம்:—[1]மணம். [2]நினைகின்றான், அணைகின்றான். [3]உடனுயர்ந்துமிகு.

ருஉ.—இராமன் ஒருமலையில் தங்குதல்.

பெருந்தவ முயன்றமரர் [1]பேணிய தவத்தால்
மருந்தனைய தம்பியொடும் வன்றுணைவ ரோடும்
அருந்ததியும் வந்தனைசெ யஞ்சொ[2]லிள வஞ்சி
இருந்தநக ரின்புறமொர் குன்றிடை [3]யிருந்தான்.

(இ-ள்.) தேவர்கள் பெருந்தவத்தில்முயன்று,(அங்ஙனம்)விரும்பிச்செய்த தவத்தினாலே, தேவாமிருதத்தையொத்த [இனிய] தம்பியோடும் வலியதுணைவரோடும், அழகியசொல்லையுடைய இளவஞ்சிக்கொடிபோல் மெல்லியளாகி அருந்ததியும்வணங்குதற்குஏற்ற (கற்பையுடைய) சீதை தங்கிச்சிறையிருந்த இலங்கைநகரியின்புறத்தே ஒருகுன்றில் தங்கினன்; (எ - று.)

வஞ்சி - உவமவாகுபெயர். தவத்தால் இருந்தானென்க. தேவர்களின் வேண்டுகோளினாலேயே ராட்சசசங்காரஞ்செய்யத் திருமால் திருவவதரித்தனனாதலால்; அவ்விராக்கதசங்காரத்திற்காக ஸ்ரீராமன் படையோடுகடல்கடந்து தங்கியதைத் தேவர்கள் தவத்தாலிருந்தானென்றார். இங்குக் கூறிய குன்று சுவேலமலையென்பது. "முனையுவரியின் சுவேலம் வந்திறுத்தது"

என்று மீட்சிப்படலத்தில் வருவதனாற்பெறப்படும். அருந்ததி-வசிட்டமுனிவருடையமனைவி: இவட்குச்சிறப்பு நட்சத்திரநிலையிலும் கணவனைவிட்டுப் பிரியாதிருக்கை. பி-ம்:—1பேணியபயத்தான், பெற்றிடும் வரத்தால். 2மடவன்னம். 3இருந்தான். (௭௦௪)

வேறு.

௩௫.—'படைவீடுஅமைக்க' என்று ஸ்ரீராமன் நீலனுக்குந்தெரிவிக்க, அன்னான் நளனுக்கு அப்பணியைத் தெரிவித்தல்.

நீலனை 1நெடிது நோக்கி நேமியோன் 2விரைய நீநம்
பால்வரு சேனைக் 3கெல்லா 4மிறைபுத்தியாற் பாடி 5யென்னக்
6காலமிசை வணங்கிப் போனான் கல்லினாற் கடலைக் கட்டி
7நூலுரை வழிசெய் தானுக் கந்நிலை நொய்திற் சொன்னான்.

(இ-ள்.) சக்கரப்படையையுடையவனான திருமாலின்அமிசமான ஸ்ரீராமன், நீலனை நெடிதாகப்பார்த்து 'நீ நம்முடன்வருஞ்சேனைக்கெல்லாம் விரையப் படை வீடு அமைப்பாய்'என்று கட்டளையிட, (அவன் இராமபிரானது) பாதங்களில் வணங்கிச்சென்று, மலைகளைக்கொண்டு கடலைக்கட்டிச் சிற்ப சாஸ்திர முறைப்படி வழியமைத்தவனான நளனிடம் அப்பணியை விரைவிற் சொன்னான்; (எ - று.)

சேனாபதியாதலால் நீலனிடம் இராமபிரான் கூற, எவ்வகைக் கட்டடத்தொழிலையும் எளிதிலமைக்கவல்ல வானரத்தச்சன் நளனேயாதலால், அவனுக்கு நீலன் அந்தப்பாசறையமைக்குங்கட்டளையைக் கூறினானென்க. பி-ம்:— 1நோக்கியீண்ட, இனிதுநோக்கி. 2நெடியநீ, விரைவினீ, 3இன்னே. 4அமைத்தியாற்பாடி, பாடிவீடமைத்தி. 5என்றான், என்ன. 6கால்வரை, காலவன். 7நூல்வரை, நூல்வழி. (௭௦௫)

௩௬.—சுக்கிரீவன்முதலியோர்க்கு நளன் பாசறைஅமைத்தல்.

பொன்னினு மணியி னானு நான்முகன் புனைந்த பொற்பின்
நன்னல 1மாக வாங்கி 2நான்முகச் சதுர நாட்டி
இன்ன3ரென் றெணுத வண்ண மிறைவர்க்கும் பிறர்க்கு மெல்லாம்
நன்னகர் 4நொய்திற் செய்தான் 5றாதையு நாணுட் கொண்டான்.

(இ - ள்.) மிக்கநன்மையுள்ளஇடத்தைத்தேர்ந்து நான்குமுகமாகப்பொருந்தச் சதுரமமையச்செய்து,(இந்தப்பாடிவீட்டில் தங்குதற்குஉரியவர்)இவர் தாம் என்றுதபடி தலைவராகியசுக்கிரீவவிபீஷணர்க்கும் மற்றுமுள்ள வானரர்க்கும் எல்லாம் நான்முகனாற்படைக்கப்பட்டனபோல் அழகுஅமையச் சிறந்த பாசறைநகரை விரைவிற் செய்தான், (நளன்): (அவன்செய்த அந்தப்பாசறையைப்பார்த்து விரைவில் இத்துணைஅழகுபெற நம்மாலும் அமைக்கமுடியாதென்று) தந்தையாகிய விசுவகர்மாவும்(தன்) மனத்து நாணத்தைக்கொண்டான்; (எ - று.)—தொடர்புயர்வுநவிற்சியணி.

சிலபிரதியில் 'நன்னெறிமுறையினுங்கு நால்வரைச்சதுரமாக' என்று இரண்டாமடி. பி-ம்:—1அமையவாங்கி. 2நால்வகைச். 3என்றுதவண்ணம். 4நன்னகர்விரைவிற், நன்னகரென்னச். 5தாதையைநாணுக். (௭௦௬)

௧௭.—இராமபிரானுக்குப் பாசறையாகப் பர்ணசாலையமைத்தல்.

[1]வில்லினாற் றிருக்கை செய்யும் விருப்பினாற் [2]பொருப்பின் [3]வீங்கும்
கல்லினாற் கல்லை யொக்கக் கடாவினான் [4]கழைக ளான
நெல்லினா லலக்குங் காலு நிரப்பினான் றருப்பை [5]யென்னும்
புல்லினாற் றொடுத்து வாசப் பூவினான் [6]வேய்ந்து [7]போனான்.

(இ - ள்.) வில்வீரனை இராமபிரானுக்கு இருப்பிடம்அமைக்கவேணு மென்றவிருப்பத்தினாலே மலையிலே பருத்துள்ளகற்களைக்கொண்டு(தங்கியிருத் தற்குஉரிய இடத்தில்அமைந்த)கற்களை மேடுபள்ளமில்லாமல் சமனாகஇருக்கும் படி தட்டிச் சரிப்படுத்தினான்; பிறகு மூங்கில்கள் எற்றனவான வாகைமரங் கள் என்ற இவைகளால் வரிச்சலும் காலும் நிரப்பி,தருப்பைப்புல்லினாற்கட்டி வாசனையுள்ளமலர்களைக்கொண்டு மேற்கூரையைமேய்ந்திட்டான்.

சுக்கிரீவன்முதலியோர்க்குப் பொன் மணி முதலியவற்றால் அமைத்தாற் போலஅல்லாமல்இராமபிரானது தவக்கோலத்திற்குஏற்பப் பர்ணசாலையமைத் தானென்க.நெல்லென்பது வாகையாதலை "நெல்லே வாகையு நெல்லு மிருபெ யர்" என்ற அகராதிநிகண்டினாலும் அறியலாம். கழைகளான நெல்லினால்என எடுத்து-உள்தொளைபொருந்தியனவான மூங்கிலினால்என்று பொருள்சொன் னாருமுளர்.(நெல் மூங்கிலென்னும்பொருளது என்பதற்கு மேற்கோள்வேண் டும்.) "புறக்காழனவேபுல்லெனப்படுமே" என்பவாதலால், புல்லென்ற பல பொருளொருசொல் - புறக்காழனவான மூங்கில்முதலியவற்றைக் காட்டா திருக்கும்பொருட்டு, 'தருப்பையென்னும்புல்லினால்' என்றது. பி-ம்:—1வில் லினார்க்கு. 2பொருப்பு. 3வீங்க. 4கழைகளாலும். 5ஆன. 6மேய்ந்து. 7விட்டான்.

௧௮.—யாவரும் தத்தமக்கு அமைத்த பாசறையிற் சேர்தல்.

வாயினு [1]மனத்தி னானும் வாழ்த்திமன் னுயிர்கட் கெல்லாந்
தாயினு மன்பி னானைத் [2]தாளுற வணங்கித் [3]தத்தம்
மேயின விருக்கை நோக்கி யெண்டிசை [4]மருங்கும் யாரும்
போயினர் [5]பன்ன சாலை யிராமனு [6]நொய்திற் புக்கான்.

(இ - ள்.) நிலையாகவுள்ள எல்லாப்பிராணிகளிடத்தும் தாயைக்காட்டி லும் அன்புசெய்பவனான இராமபிரானை,யாவரும், வாயினாலும் மனத்தினாலும் வாழ்த்தி(அப்பிரானது) பாதங்களில் சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு, எட்டுத் திக்கினிடங்களிலும் தத்தமக்குஎன்று ஏற்பட்ட இருக்கைநோக்கிச் சென்றார்; இராமபிரானும்(தனக்காகஅமைத்த)பர்ணசாலையிற் புகுந்தான்;(எ-று.)—இராம பிரானுக்குப் பாசறைவீடாகப் பர்ணசாலையமைத்தமை கீழ்ச்செய்யுளிற் கூறப்பட்டமைகாண்க. "பெற்றதாயினுமாயின" என்றார், பெரியாரும். பி - ம்:—1மனத்தும்வாழ்த்தி மன்னுயிர்க்கெல்லாம்பெற்ற. 2தாளினை. 3தந்தம். 4மருங்கில்,மருங்கு. 5அமைத்த. 6இனிது. சென்று. (௭௦௮)

௧௯.—சூரியாஸ்தமனவருணனை.

[1]பப்புநீ ராய வீரர் பருவரை [2]கடலிற் பாய்ச்சுத்
துப்பு[3]நீ ராய தூய சுடர்களுங் கழுக்க [4]வந்திட்டு

உப்புநீ [5]ரகத்துட் டோய்ந்த வொளிநிறம் விளங்க வப்பால்
அப்புநீ ராடு வான்போ லருக்கனு [6]மத்தஞ் [7]சேர்ந்தான்.

(இ - ள்.) பரவுந் தன்மைபெருந்திய வானரவீரர் பருத்தமலைகளைக் கடலிலே யிட்டதனாலே, பவழம்போற்செந்நிறம்வாய்ந்த பரிசுத்தமான கிரணங்களும் கறுத்திடுமாறு (அக்கடலினின்றுதெறித்து)வந்திட்டு உப்புநீர் தன்னுடலிடத்துப் படிந்ததனால் (மங்கிய தன்னுடைய) ஒளியுள்ளநிறம் விளங்கும்படி பிறகு அம்புஎன்றுசொல்லப்படும் நீரில் நீராடுபவன்போல சூரியனும் அத்தமித்தான்; (எ - று.)

செந்நிறவொளியுள்ள கிரணங்கள் கறுத்தனவாம்படி உப்புநீர் தெறித்ததனால் தன்னிறம் மங்கிவிட்டதுபற்றி அம்மாசுதீர நீராடச்செல்லுவான்போலச் சூரியன் அத்தமித்தானென்றார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி: இயற்கையில் அத்தமித்ததற்கு,ஒருகாரணங்கற்பித்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. பி-ம்:— [1]பப்புநீண்டுயர்ந்த. [2]கடலுட். [3]நீரதனால். [4]தீய, வீந்திட்டு. [5]அகத்துத். [6]வரையை, வானம். [7]சார்ந்தான். (௭௦௯)

௨௦.—பிறைச்சந்திரனதுதோற்றம்.

மாலுறு குடக வானின் [1]வயங்கிய வந்து தோன்றும்
பாலுறு பசுவெண் டிங்கள் பங்கய நயனத் தண்ணல்
மேலுறு பகழி [2]வாங்கி [3]வெகுண்டனன் விரைவின் [4]வந்த
காலுற [5]வளைத்த காமன் வில்லெனக் காட்டிற் றன்றே.

(இ - ள்.) பெருமைபொருந்திய வானத்தின் மேற்றிசையிலே விளங்குமாறு வந்துதோன்றுகின்ற பகுப்பாகப்பொருந்திய வெண்ணிறமுள்ள இளைய பிறைச்சந்திரன்,—தாமரைமலர்போன்ற கண்களையுடைய பெருமையிற்சிறந்த இராமபிரான்மேற் படுகின்ற பகழியைத் தேர்ந்தெடுத்துச் சினங்கொண்டவனாய் விரைவின்வந்த மன்மதன் இரண்டுமுனையும் சேருமாறுவளைத்த வில்லைப் போலத் தோன்றிற்று; (எ - று.)—தற்குறிப்பேற்றவணி. பி - ம்:— [1]வயங்கியே. [2]தூர்க்க. [3]வெகுண்டன. [4]வாங்கிக். [5]வளைந்த. (௭௧௦)

௨௧.—இதுவும் சந்திரோதயவருணனை.

நூற்றிதழ்க் கமலந் [1]தந்த [2]நுண்ணறுஞ் சுண்ண [3]முண்ணத்
[4]தீற்றிமென் பனிநீர் தோய்ந்த [5]சீகரத் தென்ற லென்னுங்
காற்றினு மாலை யான கனலினுங் [6]காம வாளிக்
கூற்றினும் வெம்மை காட்டிக் கொதித்தது குளிர்வெண் டிங்கள்.

(இ-ள்.) நூறுஇதழ்களையுடைய தாமரைதந்த நுண்ணிய நறுமணமுள்ள மகரந்தப்பொடியை (த் தன்னிடத்து) நிறையும்படி தீற்றிக்கொண்டு மெல்லிய பனிநீர்த்திவலை படியப்பெற்ற தென்றற்காற்றினாலும் மாலைக்காலமென்ற நெருப்பினாலும் மன்மதபாணமாகிய யமனாலும் அந்தக்குளிர்ந்த திங்கள் வெம்மையை(இராமனுக்கு)க் காட்டிக்கொண்டு கொதித்துத் தோன்றிற்று; (எ-று.)

கூடியநிலையிற் குளிர்ந்து காணப்படுஞ் சந்திரன், சீதையைப்பிரிந்துவருந்துகின்ற இராமனுக்குத் தென்றல்முதலியனசேரப்பெற்று மிகவும்வெப்பத்

தை யுண்டாக்கிற்றென்க. ஸீகரம்-திவலை: வடசொல். பி-ம்:—[1]மன்னு.[2]நுண்ணுறுஞ். [3]உண்டு. [4]தூற்று. [5]சீதளத், தூயவத். [6]காமன். (௭௧௧)

௨௨.—இராமபிரானுடையதோள்மீது நிலாவீசுதலின் வருணனை.

செயிர்ப்பினு மழகு செய்யுந் திருமுகத் தணங்கைத் தீர்ந்து
துயிற்சுவை [1]மறந்தான் [2]றோளிற் றாய்நிலாத்[3]தவழுந் தோற்றம்
மயிற்குலம் [4]பிரிந்த தென்ன மரகத மலைமேன் [5]மெள்ள
உயிர்ப்புடை வெள்ளைப் பிள்ளை வாளரா [6]வூர்வ போன்ற.

(இ - ள்.) கோபித்தாலும் அழகாகவுள்ள திருமுகத்தையுடைய தெய்வப் பெண்போன்ற சீதையைப் பிரிந்து, உறக்கத்தின்சுகத்தை மறந்திட்டவனான இராமபிரானது தோளிலே வெண்ணிறமுள்ள நிலாத்தவழ்கின்ற காட்சி,— சிறந்த மயில் பிரிந்திட்டதென்ற காரணத்தினால் மரகதமலைமீது கடுமையாயாகச்சுவாசித்தலையுடைய வெண்ணிறமுள்ள கொடியபாம்புக்குட்டி மெல்ல ஊர்வதை யொத்திருந்தது; (எ - று.)

நிலா ஸ்ரீராமன்மேற்படுதல் அப்பிரானுக்குப் பெருந்துன்பத்தை விளைத்தல்பற்றி,அதனைஉயிர்ப்புடை வெள்ளைவாளராப்பிள்ளையூர்வபோலுமென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மலையில் மயிலுள்ளஇடத்துப் பாம்பூரின் அதனை மயில் குத்திக்கொல்லக்கூடுமாதலால்,மயில்பிரிந்தவிடத்து அச்சமின்றி யூருமென்க. குலமயில் - சீதை. மரகதமலை - ஸ்ரீராமன். சீதையைப் பிரிந்த இராமபிரானது தோளின்மீது நிலா வீசுவதுபற்றி அதற்கேற்ப உவமை கூறிய நயம் கருதத்தக்கது. பி - ம்:—[1]துறந்தான். [2]தோண்மேல். [3]தவழ்ந்த, தழுவும். [4]பிரிந்தமான. [5]வன்னி. [6]ஊர்வதொத்த. (௭௧௨)

௨௩.—இராமபிரானுந்துப் பிரிவுத்துயர்மிகுதலின் வருணனை.

மன்னெடு [1]ங்கர மாடே [2]வருதலால் [3]வயிரச் செங்கைப்
பொன்னெடுந் திரடோ ளையன் மெய்யுறப் புழுங்கி னைந்தான்
பன்னெடுங் காதத் தேயுஞ் சுடவல்ல பவளச் செவ்வாய்
[4]அந்நெடுங் [5]கருங்கட் டீயை யணுகினாற் [6]றணிவ துண்டோ.

(இ - ள்.) பெருமைமிகுந்த இலங்காநகரத்தருகில் வருதலாலே,உறுதியான செந்நிறக்கையையும் அழகிய நீண்ட திரண்ட தோளையுமுடைய இராமபிரான் உடல் மிகவும் வெயர்த்துவருந்தினான்; பலநீண்ட காதத்திலும் சுடவல்ல பவளம்போற்சிவந்த வாயையும் நீண்டகருங்கண்ணையுமுடைய அத் தீயை நெருங்கினால், (அது சுடாமல்)தணிந்திருக்குமோ? (எ - று.)

முன்னிரண்டடிகளைப் பின்னிரண்டடிகள்சமர்த்தித்துநின்றது-வேற்றுப்பொருள் நிலைச்செய்யுட்குறியணி. சீதையைத் தீயாக உருவகஞ்செய்தார்: உலகத்துத் தீயினும் இதற்குவேற்றுமைதோன்ற. 'பவளச்செவ்வாய்க்கருங்கண்' என்று அடைமொழி கொடுத்தார். பி-ம்:—[1]கிரியின், நகரின். [2]வருவா. [3]உருங்கரம். [4]அன்னெடுங், அன்னெடுந். [5]தீயையாங்கே. [6]ஆவதுண்டோ. (௭௧௩)

௨௪.—அப்போது குரங்குவடிவுகொண்டிருந்த ஒற்றரை விபீஷணன் பிடித்துக்கொள்ளுதல்.

[1]இற்றது கால மாக விலங்கையர் வேந்த [2]னேவ
ஒற்றர்வந் [3]தளவு நோக்கிக் குரங்கென வுழல்கின் றாரைப்
பற்றின னென்ப மன்றே பண்டுதான் பலநாட் செய்த
நற்றவப் [4]பயன்றந் துய்ப்ப முந்துறப் போந்த நம்பி.

(இ - ள்.) முன்னர்த் தான் பலநாள்செய்த நல்ல தவத்தின்பயன் வந்து தூண்டிச்செலுத்த முன்னம்(இராமபிரானைச்)சேர்ந்த விபீஷணன்,-இலங்கையர்க்குத்தலைவனான இராவணன் (தனது) வாழ்நாள் இற்றதாக(த் தூர்ப்புத்தி கொண்டு) ஏவியதனால் ஒற்றர்வந்து (வானரசேனையின்) அளவைநோக்கிய வண்ணம் வானரங்களென்று (வேஷம்பூண்டு) பாசறையில் திரிகின்றவரைப் பிடித்துக்கொண்டான்; (எ - று.)—காலம் - வாழ்நாள். இனி, இற்றது காலம் ஆக - அக்காலத்து இவ்வாறு நிகழ்கையிலெனினுமாம். என்ப, மன்றே - அசைகள். பி-ம்:-[1]இற்றிது. [2]ஏவும். [3]உற்று. [4]பயன்கடுப்பான்,பயன்கடுப்ப.

௨௫.—விபீஷணன் ஒற்றரைக் கண்டுபிடித்ததைப்பற்றிய வருணனை.

பேர்வுறு கவியின் சேனைப் பெருங்கடல் [1]வெள்ளந் தன்னுள்
ஓர்வுறு [2]மனத்த னாகி யொற்றரை யுணர்ந்து கொண்டான்
சேர்வுறு பாலின் வேலைச் சிறுதுளி [3]தெறித்த தேனும்
நீரினை வேறு செய்யு மன்னத்தி னீர [4]னானன்.

(இ - ள்.) இடம்விட்டுப்பெயர்ந்துசெல்லுந்தன்மைவாய்ந்த குரங்குச் சேனையாகிய பெருங்கடல்வெள்ளத்திலே,ஆராய்ச்சியுள்ளமனத்தனாகி,(வந்த) ஒற்றரை யறிந்துகொண்டவனான விபீஷணன், திரண்ட பால்சமுத்திரத்திலே ஒருசிறுநீர்த்துளி தெறித்ததாயினும் அந்தநீரினையும் பிரித்துஎடுக்கவல்லஅன்னப்பறவையின்தன்மையையுடையவனானான்; (எ - று.)

பாற்கடலில் நீர்த்துளி சேர்ந்தாலும் பிரித்தெடுக்கவல்ல அன்னப்பறவை, குரக்குச்சேனாசமுத்திரத்தில் வந்த ஒற்றரைப் பிரித்தறிந்த விபீஷணனுக்கு உவமையாயிற்று: உவமையணி. 'மாற்றாரைச் சேர்ந்தோர் சேனையில் வந்து பேதித்தல்முதலியன எங்கே செய்துவிடுவாரோ?' என்று எப்போதும் சாக்கிரதையுடனே பார்த்துக்கொண்டிருப்பவன் விபீஷணனென்பார் 'ஓர்வுறு மனத்தனாகி' என்றார். பி-ம்:—[1]ஆயவெள்ளத்து. [2]மனத்தாற்பார்க்கும், மனத்தினாகி. [3]தெளித்ததேனும், தெறித்ததேலர். [4]அன்னான். (எ௧௫)

௨௬.—இதுவும் அது.

பெருமையுஞ் சிறுமை தானு [1]முற்றுறு [2]பெற்றி யாற்ற
அருமையி னகன்று நீண்ட [3]விஞ்சையு ளடங்கித் தாமும்
உருவமுந் தெரியா வண்ண மொளித்தன ருறையு மாயத்து
இருவரை யொருங்கு காணும் யோகியு [4]மென்ன லானான்.

(இ - ள்.) விபுவாயிருத்தலும் அணுவாயிருத்தலும் நிரம்பப்பெற்ற தன்மை மிக, (அனுஷ்டிப்பதற்கு) அரிய தன்மையினாற் பரந்து மிகுந்துள்ள

(வேதாந்தங்களிற்கூறப்படும்)வித்யைகளுக்குக் கட்டுப்பட்டு,தாமும்,உருவமும் கண்ணுக்குப்புலனாகாதபடி ஒளித்தவராய் (ச் சரீரத்துக்குள்ளே) வாழ்கின்ற விசித்திரத்தன்மையமைந்த (ஜீவன் ஈசுவரன் என்ற) இருவரையும் ஒருங்கே பிரதியட்சமாகக்காணவல்ல யோகி என்று சொல்லுதற்கும் ஏற்றவனானான், (விபீஷணன்); (எ - று.)

ஒவ்வொருத்தர்உடலிலும் ஜீவாத்மா பரமாத்மாஎன்ற இருவர்உளர்: அவர்களில் பரமாத்மா, விபு [எங்கும் வியாபித்துநிற்குந்தன்மையன்]: ஜீவாத்மாவோ, அணுஸ்வரூபமானது: இங்ஙனம் உடம்பினுள்ளே யிருந்தும் இவ்விருவரின்வடிவும் ஊனக்கண்ணுக்குத் தோன்றுவதில்லை: இவ்விருவர்களை வேதாந்தங்களிற்கூறப்பட்டுள்ள தகரவித்யைமுதலிய வித்யைகளைக்கொண்டு உபாஸனைசெய்தால், ஞானத்திற்கு விஷயமாக்கலாம்;அவ்வண்ணமுள்ள ஜீவாத்ம பரமாத்மாக்களை யோகியர் தமதுயோகபலத்தால் ஸாக்ஷாத்கரிப்ப ரென்பது, நூற்கொள்கை. பெரியவடிவங்கொள்ளவேண்டுமென்றாலும் சிறியவடிவங்கொள்ளவேண்டுமென்றாலும் கொள்ளுதற்குஏற்றவல்லமைவாய்ந்து, மாயவித்தைக்குக் கட்டுப்பட்டுத் தம்முருத் தெரியாதிருந்த சுகஸாரணரென்னும் இராவணனது ஒற்றர்களைத் தனதுவிஞ்ஞைமகிமையாற் கண்டுபிடித்த விபீஷணனுக்கு,தமதுயோகபலத்தால் ஜீவாத்மபரமாத்மாக்களைக் கண்ட யோகியை உவமையாக்காட்டினார். ஜீவாத்மபரமாத்மாக்கள் வேதாந்தவித்யைக்குக்கட்டுப் படுபவர்போல் இந்தவொற்றர்கள் விபீஷணனுடையமாயவிச்சைக்குக் கட்டுப் பட்டனர்களென்க. இந்த உவமையால் இவர்களைக் கண்டுபிடிப்பதுஅரிய செயலென்பதுபெறப்படும். பி-ம்:—[1]முற்றொரு. [2]பெற்றியாற்றம். [3]விஞ்ஞையிடைக்கத்தாலும், விஞ்ஞையுளடங்கியார்க்கும். [4]எண்ணல். (எகசு)

உஎ.—இராமபிரானுக்கு விபீஷணன் அவ்வொற்றரைக் காட்டுதல்.

[1]கூட்டிய விரற்றின் கையாற் குரங்குக ளிரங்கக் குத்தி
மீட்டொரு வினைசெய் யாமன் [2]மாணையின் கொடியால் வீக்கிப்
[3]பூட்டிய கையர் வாயாற் குருதியே பொழிகின் றாரைக்
காட்டினன் கள்வ ரென்றாங் கருணையங் கடலுங் கண்டான்.

(இ - ள்.) விரலையொன்றுசேர்த்துமுட்டியாக்கிய வலிய கையினாலே வானரங்களாற் பரிதபிக்கும்படி குத்தப்பட்டுப் பின்னும் வேறுஒருதொழில் செய்யமுடியாதபடி மாணைக்கொடியாற்சேர்த்துக்கட்டிய கையையுடையவர்களும் வாயினால் இரத்தத்தையே சிந்துகின்றவருமான அந்தஒற்றர்களை, வேஷம்பூண்டுவந்தவரென்று (இராமபிரானுக்கு விபீஷணன்) காட்டினான்; கருணைக்கடலாகிய இராமபிரானும் கண்டான்; (எ - று.)—இராமபிரானை இங்கே கருணைக்கடல்என்றது-அவர்கள்மீது இராமபிரான் இரக்கங்கொள்வதுபற்றியாகும். பி-ம்:-[1]கூட்டியவிறற்றின்கையால், கூட்டிநற்றின்கையாரக். [2]மாழையின். [3]பூட்டியதன்கைவாயிற்பொழிகின்றகுருதியாரை. (எகஎ)

உஅ.—இராமபிரான் ஒற்றரின் கட்டை யவிழ்த்துவிடும்படி கூறுதல்.

[1]பாம்பிழைப் பள்ளி வள்ளல் பகைஞரென் றுணரான் [2]பல்லோர்
நோம்பிழை [3]செய்த [4]கொல்லோ குரங்கென விரங்கி நோக்கித்

தாம்பிழை செய்தா ரேனுந் தஞ்சமென் றடைந்தோர் தம்மை
நாம்பிழை செய்ப லாமோ [5]நலியலீர் [6]விடுமி னென்றான்.

(இ - ள்.) பாம்பாகிய அணிகலம்போன்ற படுக்கையையுடைய உதார குணமுள்ள இராமன்,(அவர்களைப்)பகைவராயிற்றேயென்று மனத்துக்கொள்ளாதவனாய், '(பலரும்)வெறுத்துக்கூறும் தீங்கை(நம்பக்கத்து) வானரங்கள் செய்தனவோ?" என்று இரக்கங்கொண்டுநோக்கி, 'தாம் தீமைசெய்தாரேனும் '(நீதான்)இரட்சகம்'என்று வந்துசேர்ந்தவரைநாம் உபத்திரவஞ்செய்யலாமோ? (இவர்களை) வருத்தாதீர்; அவிழ்த்துவிட்டிடும்' என்றுகூறினான்; (எ - று.)

'தஞ்சமென்றடைந்தோர்தம்மை நாம் பிழைசெய்யலாமோ' என்று அநுவாதமாகக் கூறியிருத்தலால், அவ்வொற்றர்கள் தஞ்சமென்று ஓலமிட்டனரென்பது பெறப்படும்.பகைப்புலத்தார் கள்ளத்தன்மையால் வந்திட்டாரென்றாலும், ஒற்றரானஅவரை இமிசித்தலும் இரக்கமற்றசெயலென்று பலராலு மிகழப்படுமென்பான், 'பல்லோர்நோம்பிழை' என்றான். பி - ம்:—[1]பாம்புழைப். [2]பல்கால். [3]செய்தார். [4]கொல்லாம். [5]நலிந்திடல். [6]விடுதியென்றான், விடுதிரென்றான். (எகஅ)

௨௯.—விபீஷணன் சுகசாரணரென்று அவர்களைத் தெரிவித்தல்.

அகனுறப் [1]பொலிந்த வள்ளல் [2]கருணையா லழுத கண்ணன்
[3]நகநிறை கானின் வைகு நம்[4]மினத் தவரு மல்லர்
[5]தகை[6]நிறை யில்லா வுள்ளத் திராவணன் றந்த வொற்றர்
சுகனிவ னவனுஞ் சார னென்பதுந் தெரியச் சொன்னான்.

(இ - ள்.) மனம் மிகவும்விளக்கமாயுள்ள உதாரனான இராமபிரான், இரக்கத்தால் நீர்பெருகுகின்ற கண்களையுடையவனானான்;(அப்போது விபீஷணன் இவர்கள் வானரரூபத்தைக்கொண்டிருப்பினும்)மரம்நிறைந்த காட்டிலே வைகும் நம்மினத்தவரும் [வானரரும்] அல்லர்;நற்குணம்நிறைதலில்லாத இராவணனனுப்பிய ஒற்றராவர்;இவன் சுகனென்பவன்:அவனுஞ் சாரணன்'என்பதையும் விளக்கமாகச்சொன்னான்; (எ - று.)

சாரன்-சாரணனென்பதன் திரிபுபோலும். இவர்கள் இரக்கஞ்செய்யத் தக்கவரல்லரென்ற குறிப்புத்தோன்ற விபீஷணன் கூறினான். இராமபிரானது பேரிரக்கத்தைக்கண்டு விபீஷணன் அழுதகண்ணனாய்க் கூறினானென்று கொள்வாருமுளர். பி-ம்:—[1]பேர்ந்தவள்ளல். [2]கருணையொத்தழுதகண்ணர். [3]நகனிறைகாலின். [4]இனத்தவர்கள். [5]தக. [6]நெறியிலாத, நிறைவிலாத. (எகக)

௩௦.—விபீஷணனைப் பேதோபாயத்தால் வேறுபடுத்தநினைந்து அவ்வொற்றர் இராமனிடத்துக் கூறுதல்.

கல்விக்கண் மிக்கோன் சொல்லக் [1]கருமன நிருதக் கள்வர்
வல்விற்கை வீர மற்றிவ் வானரர் வலியை நோக்கி
வெல்விக்கை யரிதென் றெண்ணி வினையத்தா லெம்மை யெல்லாங்
கொல்விக்க [2]வந்தான் மெய்ம்மை குரங்குநாங் கொள்க வென்றார்.

(இ - ள்.) படிப்பில்மிக்கோனாகிய விபீஷணன் (இவ்வாறு) சொல்ல, வஞ்சகமனத்தையுடைய கள்ளவேஷத்தைக்கொண்ட இராட்சசவொற்றர்,

(இராமபிரானைநோக்கி),வலிய வில்லைக்கையிற்கொண்ட வீரனே!இந்தவான ரரின் வலிமையைப்பார்த்து(இராவணனுக்கு)வெற்றியையுண்டாக்கிக்கொடுத் தல் முடியாதென்றுகருதி, (அந்த இராவணனது தம்பியாகிய இவன்) வஞ்ச னையால் ('அஞ்சி உன்னைச் சரணமடைந்ததாக வேஷம்போட்டுக்கொண்டு வானரங்களாகிய) எங்களையெல்லாம் (ஒவ்வொருவியாசத்தால்) கொல்விக்கு மாறு வந்துள்ளான்: (இது) மெய்யேயாம்: நாங்கள் வானரங்கள்; (இதனை மனத்திற்) கொள்க' என்று கூறினர்; (எ - று.)—கள்வர் என்றுரென்க. பி-ம்:—1கருதிற. 2வந்தானென்னு. (எஉ0)

௩க.—விபீஷணன் பேதோபாயஞ்செய்யக்கருதிய அந்தஒற்றரைத் தன்துமந்திரபலத்தால் நிசவடிவமடையுமாறு செய்தல்.

கள்ளரே காண்டி யென்னு மந்திரங் கருத்துட் கொண்டான்
தெள்ளிய தெரிக்குந் [1]தெவ்வர் தீர்வினை சேர்த லோடும்
துள்ளியி னிரதந் [2]தோய்ந்து [3]தொன்னிறங் [4]கரந்து வேறாய்
வெள்ளி[5]யோ டிருந்த [6]செம்பொ னுமென வேறு பட்டார்.

(இ-ள்.) '(இவர்கள்)கள்ளமாகவேஷம்பூண்டவரே;(இதனைக்)காண்பாய்' என்று (அவர்களின்மாயத்தை மாற்ற) மந்திரத்தை மனத்தில் ஜபித்தான்; உண்மையைக்காட்டவல்லதாய்ப் பகைவரின் [சுகசாரணரின்] (குரங்குவடி வத்தை) நீக்குதற்குரியதான செயல் [மந்திரஜபம்] சேர்ந்தவுடனே, பாத ரசத்துளிதோயப்பெற்றுப் பழையதன்னிறம்மறைந்து வேறுபட்டு வெள்ளி யோடு [வெள்ளியெனக்கருதுமாறு] இருந்த செம்பொன் (அந்த இரசம்போ குஞ்செயலைச் செய்து புடமிட வெள்ளித்தன்மை நீங்குவதைப்) போலு மென் னும்படி வேறுபட்டு(முன்னைய)வடிவத்தைப் பெற்றார்கள்; (எ - று.)—கரந்த வுருவம் மாறி நிசவடிவம்பெறுதலில் உவமை. பி-ம்:—1தெய்வத்தீவினைசேர்த லோடும், தெய்வவீடணன் சேர்ந்துசீர். 2தோய்ந்த, தோயத். 3தூய்நிறம் 4திரிந்துவேறாய், திரிந்துவேறோர், கரந்துதோன்று. 5போவிருந்த, போன் றிருந்த. 6செம்பும். (எஉக)

௩உ.—அப்போது இராமபிரான் அவர்கட்கு அபயமளித்து வந்தசெய்தியைக் கூறுமாறு வினவுதல்.

மின்றுலா மெயிற்ற ராகி [1]வெருவந்து வெற்பி னின்ற
வன்கணார் தம்மை நோக்கி மணிநகை முறுவ [2]றோன்றப்
புன்கணார் [3]புன்க ணீக்கும் புரவலன் போந்த தன்மை
என்கொலாந்[4]தெரிய வெல்லா மியம்புதி ரஞ்ச லென்றான்.

(இ - ள்.) மின்னல்போல் ஒளிவிளங்குகின்ற கோரப்பற்களையுடையவ ராகி அஞ்சி மலைபோன்றபெருந்தோற்றத்துடனே நின்ற கொடியவரான (அந்த) ஒற்றர்களைப் பார்த்து, வருந்துபவரின் வருத்தத்தைப் போக்குகின்ற அரசனான இராமன்,—முத்துப்போல் வெண்ணிறமான புன்சிரிப்புத்தோன்ற, 'அஞ்சவேண்டா; (நீவிர்) வந்த காரணம் என்கொலோ?எல்லாம் தெரியுமாறு சொல்லுமின்' என்றுவினவினான்;(எ - று.)—புன்கணாரதுபுன்மை தீர்க்கும் புரவ

லன்-கருத்துடையடைமொழியணி. பி-ம்:—1வெருவியே, வெருவிய. 2செய் தான். 3புன்மை. 4தெரியவென்னு. (௭௨௨)

௩௩.—அந்தஒற்றர்கள் தாம் வந்த காரணத்தைச் சொல்லுதல்.

தாய்தெரிந் 1துலகு காத்த தவத்தியைத் தன்னைக் கொல்லும்
நோய் 2தெரிந் துணரான் றேடிக் 3கொண்டன னுவல 4யாங்கள்
வாய் தெரிந் 5துணரா வண்ணங் 6குழறுவார் வணங்கி மாய
வேய்தெரிந் துரைக்க வந்தேம் வினையினால் வீர வென்றார்.

(இ - ள்.) (அந்தஒற்றர்கள், இராமபிரானை) வணங்கி, ஆராய்ந்து (இன்னதுசொல்வது என்று) அறியாதபடியினாலே வாயினாற் குழறுபவர்களாய், 'வீரனே! தாயாகஅறியப்பட்டு உலகைக்காக்கின்ற தவமுடையவளை [சீதையை]த் தன்னைக்கொல்லும் நோயென்று ஆராய்ந்தறியாதவனாய் (கேட்டை)த் தேடிக்கொண்டுவிட்டவனாகியஇராவணன் ('ஒற்றிவாருங்கள்'என்று)கட்டளையிட, யாங்கள் (எமது) தீவினையினாலே வஞ்சனையாக ஒற்றறிந்து (இராவணனுக்குச்) சொல்ல வந்தோம்'என்று (தாம் வந்த காரணத்தைத்) தெரிவித்தார்கள்; (எ - று.)—பி-ம்:—1உலகங்காத்த, உலகுக்காய. 2தெரிந்தாய்ந்து. 3கொண்டவன். 4ஆற்றின், என்னு. 5உரையா. 6கழறுவார்வணங்கி, கழறுவான் மறைந்து. (௭௨௩)

௩௪.—இதுமுதல் ஐந்துகவிகள்-இராவணனிடஞ்சொல்லுமாறு இராமபிரான் அத்தூதரிடம் கூறியவற்றைத் தெரிவிக்கும்.

எல்லையி லிலங்கைச் செல்வ மிளையவற் கீந்த தன்மை
சொல்லுதிர் மகர வேலை கவிக்குல வீரர் 1தூர்த்துக்
கல்லினிற் கடந்த வாறுங் கழறுதிர் காலந் தாழ்த்த
வில்லினர் வந்தா ரென்றும் விளம்புதிர் 2விளம்ப லாதீர்.

இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) எல்லையில்லாத இலங்கைச்செல்வத்தை யாளுமாறு இளையவனைதம்பிக்குக் கொடுத்த தன்மையைச் சொல்லுங்கள்; மகரங்கள் நிறைந்த கடலை வானரகுலத்துதித்தவீரர்கள் மலைகொண்டு தூர்த்துக் கடந்திட்ட விதத்தையும் சொல்லுங்கள்; இத்தனைகாலம் தாமதித்த வில்வீரர்கள் வந்திட்டாரென்றும் சொல்லுங்கள்; (இவற்றில் எதையும்) சொல்லாதிருக்காமற்போகின்றீர்: [அவசியமாகச்சொல்லுங்களென்றபடி]; (எ - று.)—காலந்தாழ்த்த- உனதுவாழ்நாளைக்குறைக்கஎன்று உரைத்தலு மொன்று. பி-ம்:—1தூர்த்த. 2தெரியவென்றான், வினையமிக்கீர், விளம்பவல்லீர். (௭௨௪)

௩௫. கொத்துறு தலையான் வைகுங் குறும்புடை 1யிலங்கைக் குன்றம்
தத்துறு 2தடநீர் வேலை 3தனியொரு சிறையிற் றூதல்
ஒத்துற வுணர்ந்தி லாமை யுயிரொடு 4முறவி னோடும்
இத்துணை யிருந்த தென்னுந் 5தன்மையு மியம்பு வீரால்.

(இ - ள்.) கொத்தாகவுள்ள சிரசையுடைய இராவணன் தங்கியுள்ளதும் குறும்பர்களையுடையதுமான இலங்கைமலை தடுமாறுகின்ற மிக்கநீரைக்கொண்ட கடலில் ஒருதனிப்பட்ட இடத்திலேயிருப்பதாதலை மனத்திற்படும்படி அறியாமலிருந்ததுதான் (நீ) உன்னுயிருடனும் சுற்றத்தாருடனும் இத்துணை நாள் இருந்ததற்குக்காரணமென்ற இந்தவிஷயத்தையும் சொல்லுவீர்;(எ-று.) --சிறையிற்று குறிப்புமுற்று. 'குலைகொண்டவீரைந்தலையான்'' என்றாற்போல, 'கொத்துறுதலையான்' என்றார். பி-ம்:—[1]இருக்கைக். [2]கடலினுள்ளாய்த்.[3]தனியொரு, தனிலொரு. [4]உணர்விலேனேடும், [5]தண்மையும். (எ௨௫)

௩௬. சண்டங்கொள் [1]வேக மாகத் தனிவிடை யுவணந் தாங்குந்
துண்டங்கொள் பிறையான் மௌலித் துளவினோ னோடுந் தொல்லை
[2]அண்டங்க ளளவையுந் தாக்கிக் காப்பினு [3]மறமி லாதான்
கண்டங்கள் பலவுங் [4]காணக் காண்பதுங் கழறு வீரால்.

(இ - ள்.) வானத்தில் உக்கிரத்தன்மைகொண்ட வேகத்துடன்செல்ல வல்ல ஒப்பற்ற இடபமும் கருடனும் (முறையே) தாங்குகின்ற பாகமாயுள்ளபிறைச்சந்திரனை(ச் சிரசிலே) பூண்டவனான சிவபிரான் (தன்) சிரசிலே துளசிமாலையையணிந்த திருமாலுடனே பழமையானஅண்டங்களிலுள்ள எல்லாப்பிராணிகளும் (எதிரிடுபவர்களை) மோதியவண்ணம் பாதுகாத்தாலும், தருமமில்லாதவனான இராவணனைப் பலதுண்டங்கள்ஆகுமாறு செய்யப்போவதையும் சொல்லுவீர்; (எ - று.)

அண்டங்கள்-அண்டத்துயிர்கட்கு, இலக்கணை. முதலடியில், தனிவிடை தாங்கும் பிறையான், உவணந்தாங்குந்துளவினோன் என முறையே சென்று இயைவது - முறைநிரனிறைப்பொருள்கோள். உவணம்-ஸுபர்ணம் என்ற வடசொல்லின்திரிபு: இனிய இறகுஅமைந்த தென்றுபொருள். முதல் மூன்றடிகட்கு - இராவணன் சிவபெருமானைத் திருமாலோடும் தாக்கி [வென்று] அண்டங்களெல்லாவற்றையும் காக்குந்திறம்பெற்றிருந்தானேனும் என்று பொருள் காண்பாருமுளர். இச்செய்யுள் சிலபிரதியில் "தாழ்விலா" (௩௮) என்பதன்பின் உள்ளது. பி-ம்:—[1]வேகமாரும். [2]அண்டங்கொள்தேவர்வந்து, அண்டங்களளவையுந்தாங்கிக். [3]அறமில்யாக்கை, அறிவிலானை. [4]காண்பனென்பதும். (எ௨௬)

௩௭. [1]தீட்டுறு மழுவாள் வீரன் றாதையைச் [2]செற்றான் சுற்றம்
[3]மாட்டிய [4]வண்ண மென்ன வருக்கமு மற்று முற்றும்
வீட்டியென் [5]றாதைக் காக [6]மெய்ப்பலி [7]விசும்பு ளோருக்கு
ஊட்டுவ னுயிர்கொண் டென்னும் வார்த்தையு முணர்த்து வீரால்.

(இ - ள்.) தீட்டுதலைப்பொருந்திய மழுவென்னும்படையைக்கொண்ட வீரனான பரசுராமன் தன்தாதையைப்பகைத்தவனான கார்த்தவீரியார்ச்சுனனைச் சுற்றத்தோடும் அழித்தவகைபோல,பந்துவர்க்கத்தாரையும் மற்றுமுள்ள சாதியாரையும் அழித்து, (இராவணனுடைய) உயிரையுங்கொண்டு, என் தாதையான சடாயுவின்பொருட்டு (அவனது) உடம்பாகியபலியை விசும்

பில்வாழ்பவரானதேவர்கட்கு ஊட்டுவேனென்ற வார்த்தையையும் உணர்த்துவீர்; (எ-று.)

சந்திரவமிசத்திற்பிறந்தயயாதிமகாராசனதுமூத்தகுமாரனாகிய யதுவின் குலத்தவனான கிருதவீரியனென்பவனதுகுமாரன் கார்த்தவீரியார்ச்சுனன் தத்தாத்திரேயமுனிவரநுக்கிரகத்தினால் பலவரங்களையும்பெற்றுப் பலவேள்விகளையும் இயற்றி, தனதுமரபிற் சிலகாலத்துக்குமுன்பு தோன்றியவனான மகிஷ்மானென்ற அரசனா லுண்டாக்கப்பட்ட மாகிஷ்மதிபட்டணத்தை அரசாண்டுவரும்போது ராவணனையுமுள்பட வென்று ராவணஜித்தென்றுபேர் பெற்றிருக்கையில், ஒருகாலத்தில் தன்சேனையுடனே வனத்திற்சென்றுவேட்டையாடிவந்து பரசுராமனது தந்தையான சமதக்கினிமகாமுனிவனுடைய ஆச்சிரமத்தையடைந்து, முனிவனனுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், ஓமதேனு முனிவனுக்குப் பலவளங்களையும் எளிதிற்சுரந்தளித்தலைக் கண்டதனால் அதனிடம்விருப்புக்கொண்டு அப்பசுவை அம்முனிவனனுமதியில்லாமல் வலியக் கவர, அதனையறிந்த சமதக்கினிமுனிவனுடைய குமாரன்பரசுராமன் பெருங்கோபங்கொண்டு படைக்கலங்களுடனேசென்று அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனுடன் பொருது அவனைப் பெருஞ்சேனையுடனேநிலைகுலைத்து அவனுடையஆயிரந்தோள்களையும் தலைகளையும் வெட்டி வீழ்த்தி வெற்றிகொண்டனனாக, பிறகு அந்தக்கார்த்தவீரியனுடைய குமாரர்கள் பழிக்குப்பழிவாங்கவேண்டுமென்று நிச்சயித்துப் பரசுராமனில்லாதசமயம் பார்த்துப் பர்ணசாலையினுட்சென்று அவனது தந்தையாரைத் தலைதுணித்துப் போக, பின்புவந்த பரசுராமன் அதனையறிந்து பெருஞ்சினங்கொண்டுசென்று அந்தஅருச்சுனகுமாரர்களையும் உலகத்திற்செருக்குக்கொண்ட அரசர்கள் பலரையும் அழித்தொழித்துச் சகல க்ஷத்திரியவமிச விநாசகாரணனாயினனென்பது, வரலாறு. பி-ம்:—1நீட்டிய. 2செற்றார். 3வாட்டிய. 4வண்ணமேதன். 5தாதைக்காய. 6மெய்ம்மலி. 7விசும்புளோரை, விசும்பினோரை. (எ௨எ)

௩௮. தாழ்விலாத் தவத்தோர் தையல் 1தனியொரு 2சிறையிற் றங்கச்
3சூழ்விலா வஞ்சஞ் சூழ்ந்த தன்னைத்தன் சுற்றத் தோடும்
வாழ்வெலாந் தம்பி கொள்ள வயங்கெரி நரக மென்னும்
4மீள்விலாச் சிறையின் வைப்பே னென்பதும் விளம்பு வீரால்.

(இ - ள்.) குறைவற்றதவத்தையுடைய ஒப்பற்ற பெண் தனிப்பட்ட ஒரு சிறையிலேதங்க(ப் பிறரால்)சூழ்வதற்கு முடியாதவஞ்சனையை ஆலோசித்துச் செய்த தன்னைத் தன்னுடைய சுற்றத்தோடும் செல்வவாழ்க்கையையெல்லாம் அவனது தம்பிகொள்ள, விளங்குகின்ற நெருப்புப்பொருந்திய நரகமென்கின்ற தப்பமுடியாதசிறையிலே வைப்பேனென்பதையும் விளம்புவீர்; (எ - று.)

தீவினைப்பயனைத் தவறாது அநுபவிக்கச்செய்வேனென்றவாறு. "எரிவாய் நிரயத்து" என்றாற்போல, 'எரிநரகம்' என்றார். "தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்" என்ற ஆழ்வாரருளிச்செயலுக்கு ஏற்ப 'ஓர்தையல் தனியொருசிறையிற்றங்க' என்றார். பி-ம்:—1தனித்தொரு. 2சிறையிற்றுக. 3சூழ்கலா. 4மீள்கலா, வீழ்விலா. (எ௨அ)

௩௯.—இராமன் விடைகொடுத்தனுப்ப ஒற்றர் திரும்பிப்போதல்.

நோக்கினீர் தானை யெங்கு [1]நுழைந்துநீ ரினிவே ருென்றும்
ஆக்குவ தில்லை [2]யாயி [3]னஞ்சலென் றபைதுண் டன்றே
[4]வாக்கினின் மனத்திற் கையின் [5]மற்றினி நலியா வண்ணம்
[6]போக்குமின் விரைவி னென்று னுய்ந்தன [7]மென்று போனார்.

(இ - ள்.) நீர் சேனையெங்கும் நுழைந்துநோக்கினீர்: இனிவேறொன்றும் ஆகவேண்டுவதில்லையாயின், அஞ்சலென்று அபயமளித்த அது இருக்கின்றதன்றோ? (ஆதலால்), வாக்கினாலும் மனத்தினாலும் கையினாலும் இனி எவரும் நலியாதபடி, விரைவில் (நும்மரசனிடம்) போங்கள் என்றான்; (அந்தச்சுகசாரணர்களும்) உய்ந்தோமென்று சொல்லிக்கொண்டு போயினார்; (எ - று.)

ஆக்குவது, போக்குமின் - ஆகுவது, போகுமின் என்பவற்றின்விகாரம். ஆயின், போகுமின்என்க. நாம் அபயமளித்திருத்தலால் வானரர்கள் ஒன்றுஞ் செய்யார்: அஞ்சாதுபோமினென்றான். பி - ம்:—[1]நுழைந்தீர், நுழைந்தினிர். [2]ஒன்றும் [3]ஞ்சலிரென்றுகூற. அஞ்சலென்றவரையையன். [4]வாக்கினான் மனத்தாற்கையால். [5]மற்றிவர்வலியா. [6]போக்குதிர், போக்குதி. [7]என்ன. (எ௨௯)

வேறு.

௪௦.—இராவணன் ஆலோசிக்க மந்திரசாலை சேர்ந்திருந்தல்.

அரவ மாக்கட லஞ்சிய வச்சமும்
உரவு நல்லணை [1]யோட்டிய வாற்றலும்
வரவு நோக்கி யிலங்கையர் மன்னவன்
இரவி [2]னெண்ணிட வேறிருந் தானரோ.

(இ - ள்.) ஒலியையுடைய பெரியசமுத்திரம் அச்சமடைந்த அச்சத்தையும், வலிமைபொருந்திய சிறந்த சேதுவை (அந்தக்கடல்)நெடுகக்கட்டிய வலிமையையும், (வானரவீரர்கள்) வந்ததையும் கண்டு, இலங்கையர்க்குத்தலைவனாகிய இராவணன் இராப்போதில் (மேல்செய்யவேண்டுவதை) ஆலோசிக்குமாறு வேறேயிருந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]கட்டிய. [2]எண்ணிட. (எ௩௦)

௪௧.—இதுவும் அது.

[1]வார்கு லாமுலை மாதரு மைந்தரும்
ஆரு [2]நீங்க வறிஞரோ [3]டேகின்றான்
சேர்க வென்னினல் லா[4]லன்று தென்றலுஞ்
சார்கி லாநெடு [5]மந்திரச் சாலையே.

(இ - ள்.) 'சேர்க' என்ற அநுமதிகொடுத்தாலல்லாமல் அப்போது தென்றற்காற்றும் உட்புகாத நெடிய ஆலோசனைச்சாலையில், கச்சுவிளங்குகின்ற தனங்களையுடைய மகளிரும் ஆடவரும் யாரும் (அந்தஇடத்தைவிட்டு) அப்பாற்செல்ல, (மந்திரத்திற்குஉரிய) அறிவாளிகளுடனே போய்ச்சேர்பவனானான், (இராவணன்;) (எ - று.)

கீழ் 'எண்ணிட வேறிருந்தான்' என்று தொகுத்துக்கூறியதை எண்ணுவதற்குச்சென்ற இடம் இன்னதென்றும், அது இப்படிப்பட்டதென்றும்,

இன்னொருடன் சென்றானென்றும் விரித்துக்கூறுவதனால், இச்செய்யுள், கூறியதுகூறலாகாது. மாதர் - மனைவியாரென்றும், மைந்தர் - வயிற்றிற்பிறந்த பிள்ளைகள் என்றுங் கொள்ளலுமாம். ஆலோசனைக்குத்தகாதவராயின், மனைவியரும் மக்களுமேயாயினும் அவர்களையும் அப்பாற்படுத்துவது முறைமையேயா மென்க. பி-ம்:—[1]வாருலா. [2]நீக்கி. [3]ஏகினான். [4]இளங்கென்றலும். [5]மந்திரசாலையே. (௭௩௧)

௪௨.—அப்போது விளக்கேந்தியவர்.

உணர்வி [1]னெஞ்சின ருமருரைப்பொருள்
புணருங் கேள்விய ரல்லர் பொறியிலர்
[2]கொணருங் கூனர் குறளர் கொழுந்[3]சுடர்
துணரு நல்விளக் கேந்தினர் சுற்றினர்.

(இ - ள்.) (மனிதர்க்குஉரிய) இலக்கணமமையாதவராய் அறிவதுஎன்னுந்தன்மையில்லாத நெஞ்சையுடையவரும் ஊமர்களும் சொல்லுகிறவிஷயம் புலனாதற்குஏற்ற செவியில்லாதவரும் [பெருஞ்செவிடரும்] (வேண்டியவற்றைக்) கொணருந் தன்மைவாய்ந்த கூனரும் குறளரும் ஆகிய இவர்கள், கொழுவியஒளிவிளங்குகின்றஅழகியவிளக்கையேந்தியவராய் சுற்றியிருந்தனர்.

பொறி - நல்லிலக்கணம். பொறியிலார் - அலிகள்என்பாருமுளர். உணர்வில்நெஞ்சினர் முதலியோரால் கேடுஉண்டாகாதுஎன்பதுபற்றி,அவர் விளக்குஏந்திவர அநுமதித்தான் இராவணனென்க.குறளர்-இரண்டடியுயரமேவளர்ந்தவர்: இச்சொல்,இக்காலத்துக் குள்ளரென வழங்குகின்றது.பி-ம்:—[1]நெஞ்சினமருமறைப், நெஞ்சினருமரைப்போற். [2]குணரும். [3]சுடர்த். (௭௩௨)

௪௩.—ஆலோசனைச்சபையில் 'நாம்துணிந்துசெய்யவேண்டிய காரியம் யாது?' என இராவணன் வினவுதல்.

[1]நணியர் வந்து மனிதர் நமக்கினித்
துணியுங் [2]காரியம் யாதெனச் சொல்லினான்
பணியுந் தானவ ராதியர் பன்முடி
மணியி னால்விளங் கும்[3]மணித் தாளினான்.

(இ - ள்.) (தன்னை) வணங்குகின்ற அசுரர்முதலியோ ரின் பல கிரீடங்களின்மணியினால் விளங்குகின்ற அழகியதாள்களையுடையவனான இராவணன்;—'(நமதுபகைவரான) மனிசர் வந்துசமீபித்துவிட்டனர்: இப்போது நாம் துணிந்துசெய்யவேண்டியகாரியம் யாது? என்று (ஆலோசனைச்சபையோரைநோக்கி) வினவினான்; (எ - று.)—இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை.

'பணியுந்......தாளினான்' என்று இராவணனைக்குறித்தது-அப்படிமேன்மைபெற்றவன் தன் தீவினையினால் மனிதர்க்காகஆலோசிக்கும்படியாயிற்றே! என்றுதெரிவித்தற்காக. பி-ம்—[1]நணிய. [2]செய்வினை. [3]மலர்த். (௭௩௩)

௪௪.—இதுமுதல் ஐந்துகவிகள் - தாய்ப்பாட்டனான மாலியவான் தன்கருத்தைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

கால வெங்கனல் போலுங் கணைகளால்
வேலை வெந்து நடுங்கி வெயில்புரை

மாலை கொண்டு வணங்கின வாறெலாம்
சூல மென்னவென் னெஞ்சைத் [1]தொளைக்குமால்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அப்போது இராவணனது தாய்ப்பாட்டன் இவ்வாறு கூறலானான்):—ஊழிக்காலத்துக்கொடிய தீப்போலவுள்ள இராமனது அம்புகளால் சமுத்திரராசன் வெந்துபோய் நடுங்கி வெயிலையொத்த ஆரத்தைக் காணிக்கைப்பொருளாகக்கொண்டு வணங்கிய வகையெல்லாம், சூலப்படை (மனத்திற் புகுந்ததுபோல) என்நெஞ்சத்தைத்தொளைக்கும்; (எ - று.)—ஆல்-இரக்கத்தைக் குறிக்கும். மேலைக் கவிகளிலும் இவ்வாறே. ஒற்றர்மூலமாய்ச் செய்தியுணர்ந்த மாலியவான் இவ்வாறுகூறுகின்றானென்க. பி-ம்:—[1]துளைத்ததால். (எ௩௪)

௩௫. கிழிப டக்கடல் கீண்டது மாண்டது
மொழிப டைத்த [1]வலியென மூண்டதோர்
பழிப டைத்த பெரும்[2]பயத் தன்னவன்
வழி[3]கொ டுத்ததென் னுள்ளம் வருத்துமால்.

(இ - ள்.) (இராமபாணத்தாற்) பிளவுஉண்டாகக் கடல் துளைக்கப்பட்டவுடனே, மாட்சிமையையுடையதான (தவசியரின்) சாபமொழி கொண்டுள்ள வலிமையைப்போல (அந்தஇராமபாணத்தால்)மூண்டதான ஒப்பற்ற பழியைக்கொண்ட பெரும்பயத்தையுடைய அந்தச்சமுத்திரராசன் வழிகொடுத்தது என்னுள்ளத்தை வருத்தாநிற்கும்; (எ - று.)

முனிவரின்சாபமொழி அச்சத்தையுண்டாக்குவதுபோல், இராமபாணம் சமுத்திரராஜனுக்குப் பேரச்சத்தையுண்டாக்கிற் றென்க. ஒருவனுடைய அம்புக்காக ஒருகடவுட்சாதியான் பயப்படுவது பழியை விளைக்கு மாதலால், 'பழிபடைத்தபெரும்பயத்து' எனப்பட்டது. பி - ம்:—[1]வல்வீரமுடித்திட. [2]புயத்து. [3]தொடுத்தது. (எ௩௫)

௩௬. படைத்த [1]மால்வரை யாவும் [2]பறித்துவேர்
[3]துடைத்த வானர வீரர்தந் தோள்களைப்
புடைத்த வாறும் புணரியைப் போக்கற
அடைத்த வாறுமென் [4]னுள்ளத் [5]தடைத்தவால்.

(இ-ள்.) (பிரமனாற்) படைக்கப்பட்ட பெரிய மலைகளையெல்லாம் வேரோடும்பறித்துக்கொணர்ந்து (கடலிலிட்டு உலகத்திற்பெரியமலை) இல்லாமற்செய்த வானரவீரர்கள் தம்தோள் களைத் தட்டிய விதமும், கடலைச் சலிக்கவொட்டாமல் அடைத்தவிதமும் என்மனத்திலடைபட்டுள்ளன; (எ - று.)—பி-ம்:—[1]மாமலை. [2]பறித்த. [3]துடைத்து. [4]நெஞ்சத்து. [5]அடைத்ததால். (எ௩௬)

௩௭. [1]காந்து வெஞ்சின வீரர் கணக்கிலார்
தாந்த மாற்றலுக் [2]கேற்ற தரத்கா
[3]வேந்த வெற்பை யொருவன் விரல்களால்
ஏந்தி யிட்டதென் னுள்ளத்தி னிட்டதால்.

(இ - ள்.) கொதிக்கின்ற கொடுஞ்சினத்தையுடைய கணக்கில்லாரான வானரவீரர் தாம் தம்வல்லமைக்குஏற்றமலைகளை(க் கொண்டு வந்து) கொடுத்

துக்கொண்டேயிருக்க, தலைமையுள்ள அம்மலைகளை ஒருவன் [நளன்] கைவிரல்களால் தாங்கிக் கடலிலிட்டு அடைத்தது என்மனத்திலிட்டதுபோல் வருத்துகின்றது; (எ - று.)—பி-ம்:—1காய்ந்தவானரவீரர்கதத்தினால். 2ஏற்றனதாக்கவே. 3வேய்ந்த...ஒருவன், வேந்தன்மற்றொருவன்றன். (௭௩௭)

௪அ. சுட்ட வாகண்டுந் தொன்னகர் வேலையைத்
தட்ட வாகண்டுந் 1தாவற்ற தெவ்வரைக்
கட்ட வாகண்டுங் கண்ணெதி ரேவந்து
விட்ட வாகண்டு மே2லெண்ணம் வேண்டுமோ.

(இ - ள்.) இராமன் (கடலைச்) சுட்டவாற்றைக் கண்டும் பழமையான நகரைச்சூழ்ந்த கடலை அணைகட்டித் தடுத்தவகையைக்கண்டும், (வருணனுடைய) அழிவற்ற பகைவரை யொழித்தவாற்றைக் கண்டும், கண்ணெதிரே (அப்பகைவர்) வந்துவிட்டவாற்றைக் கண்டும் மேல் (அவர்களைவெல்லுமாறு)எண்ணுதலும் வேண்டுமோ? (எ - று.)

சீதையைக்கொடுத்துஅவர்கள்காலில்விழுவது தகுதியேயன்றி யெண்ணுவதிற் பயனில்லையென்று மாலியவான் தன்கருத்தைக்கூறிமுடித்தா னென்க. 'தொன்னகர்வேலையை' என்பதை மத்திமதீபமாகக்கொண்டு, சுட்டவாகண்டும் தட்டவாகண்டும் என்ற ஈரிடத்தும் இயைக்க. இனி,தொன்னகரை அநுமான் சுட்டவாகண்டும் (அவ்வநுமான்)தாவற்றதெவ்வரைக்கட்டவாகண்டும், (இராமன்) வேலையைத் தட்டவாகண்டும்(அவன் தானையோடும்)கண்ணெதிரேவந்துவிட்டவா கண்டும்மேல் எண்ணம் வேண்டுமோ? என்று உரைப்பாரு முளர்:எல்லாம் இராமபிரான் செயலாகக்கொள்வதேமிகப்பொருத்தமானது. தெவ்வரைக்கடத்தில் விருப்பின்படி அஸ்திரங்களைச் செலுத்தும்வல்லமை பெறப்படும். இவ்வைந்துபாடல்களும் மாலியவான்கூறியனஎன்பது மேற்பாடலில்"தாயைப்பயந்தோன்" என வருவதனால் விளங்கும். பி-ம்:—1தானவர்தானையைக். 2எண்ண. (௭௩அ)

௪௯.—இராவணன் அந்தமாலியவானைச் சினந்துகூறுதல்.

என்று தாயைப் பயந்தோ னியம்பலுந்
1தின்று வாயை விழிவழித் தீயுக
நன்று நன்றுநம் மந்திர நன்றெனு
என்றும் 2வாழ்தி யிளவலொ டேகென்றான்.

(இ-ள்.) என்று தன்தாயானகேகசியைப்பெற்றவனானமாதாமகன் சொல்லவும், (இராவணன்) வாயைக்கடித்து(க் கண்களில்) தீப்பொறிபறக்க, 'நன்றாயிருந்தது, நன்றாயிருந்தது;நமதுஆலோசனை நன்றாயிருந்தது' என்று கூறி, (நீயும்என்) தம்பியோடும்போய் என்றும் வாழ்வாயாக என்று (சினந்து) கூறினான்; (எ-று.)—நன்று நன்று-பிறகுறிப்பு. பி-ம்:—1மென்று. 2வாழி. (௭௩௯)

௫௦.-மாலியவான் மௌனமாய்விட,சேனைத்தலைவன்கூறத்தொடங்குதல்.

ஈன மேகொ விதமென 1வெண்ணுறு
மோன 2மாகி 3யிருந்தனன் மூற்றினன்

ஆன காலை யடியி [4]னிறைஞ்சியச்
சேனை நாத னிவையன செப்பினன்.

(இ - ள்.) இதங்கூறுவது ஈனத்தைத்தருவதே என்று எண்ணி, முதிர்ந்த அந்தமாலியவான் மௌனமாகியிருந்தான்; அப்போது (இராவணனது) பாதங்களில்வணங்கி அந்தச்சேனாநாதன் இவ்வார்த்தைகளைச் சொல்லினன்; (எ - று.) —அவற்றை மேல்மூன்றுகவிகளிற்காண்க. கொல்-அசை. பி-ம்:—[1]எண்ணினன். [2]ஆக. [3]இருந்தானற. [4]இறைஞ்சிய. (எசுo)

ருக.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: சேனைத்தலைவன் மாலியவானைக் கண்டித்துக் கூறுதலைத் தெரிவிக்கும்.

[1]கண்மை யின்னகர் வேலை கடந்தவத்
திண்மை யொன்று மலாற்றிசைக் காவலர்
எண்ம ரும்மிவற் கேவல்[2]செய் கின்றவவ்
வுண்மை யொன்று [3]முணர்ந்திலை யோவையா.

(இ - ள்.) ஐயனே! கண்ணுக்குளதிராக (இந்த) நகரைச்சூழ்ந்த கடலைக் கடந்த அந்தவலிமையொன்றையுமேயல்லாமல், திக்குப்பாலகரெட்டுப்பேரும் இந்தஇராவணனுக்கு ஏவல்செய்கின்ற அந்த உண்மையைச் சிறிதும் அறிந்திலையோ? (எ - று.)

கடலரசனை வென்று அணைகட்டிவந்தான் இராமனென்றால், திக்பாலகருள் ஒருவனாகிய வருணனை அவன் வென்றானென்பது, பெறப்படும். அஷ்டதிக்குப்பாலகரையெல்லாம் வென்ற இந்தஇராவணனது வலிக்குமுன்னே அச்செயல் பாராட்டத்தக்கதோ? என்றவாறு. பி-ம்:—[1]கண்மையந்தர, கண்வயந்தர. [2]செய்கின்றதத் திண்மை. [3]உணர்ந்திலேபோலென்றான், உணர்ந்திலையோனுவாய், உணர்ந்திலைசெப்புவாய். (எசுக)

ருஉ. [1]கூசும் [2]வானரர் குன்று[3]கொ டிக்கடல்
வீசி னாரெனும் வீரம் [4]விளம்புவாய்
ஊசி வேரொடு மோங்கலை [5]யோங்கிய
ஈச னோடு மெடுத்தது மில்லையோ.

(இ - ள்.) கூச்சங்கொள்ளுமியல்புள்ள வானரர்கள் குன்றுகொண்டு இந்தக்கடலிலே வீசினாரென்கிற (பகைவரின்) வீரத்தைப் புகழ்கின்றாய்; பெருமையோடெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானோடும் ஊசிவேருடனே (இராவணன்) கைலாசமலையைப் பெயர்த்தெடுத்ததும் இல்லையோ? (எ - று.)

பெருமலையான கைலாசமலையைச் சிவபெருமானோடும் பேர்த்தெடுத்துக் கைக்கொண்டிருந்த இராவணனது பெருவீரத்துக்குமுன், வானரர் குன்றுகளைக் கடலில்வீசிய செயல் பாராட்டுதற்கு உரியதோ? என்றவாறு. பி - ம்:—[1]கூசி. [2]வானரம். [3]கொடுகடல், கொடாய்கடல். [4]விளம்பினாய். [5]எங்கிய. (எசுஉ)

ருங. அதுகொ டெண்சில [1]வாரமர் மேவினி
மதி[2]கெ டுங்கை யோர்வந்து நாமுறை

பதிபு குந்தனர் [3]தம்மைப் படுப்பதோர்
விதிகொ டுந்த [4]விளைந்தது தானென்றான்.

(இ - ள்.) இனி, (நடந்த) அந்தச்செயலைச் சொல்லி என்பயன்? சிலபுத்தி கெட்ட எண்ணத்தையுடையோர் தம்மைக் கொல்விப்பதாகிய ஒப்பற்றவிதி பிடித்துத் தள்ளுவதால், பெரும்போர்புரியும்பொருட்டாக வந்து,நாம் வாழ்கின்ற ஊரிலே புகுந்தனர்; (இது)தான் விளைந்தது என்று கூறிமுடித்தான்;

அமர்மேல் = அமர்க்காக: வேற்றுமைமயக்கம். சிலர் போகூழால் போர் புரிய நம்பதியிற் புகுந்தன ரென்பதே இப்போது விளைந்த விஷய மென்று மாலியவானைக் கண்டித்துக் கூறி முடித்தான் சேனாதிபதி யென்க. பி-ம்:— [1]வானரமாகிநீ,மானிடராகுவார். [2]கொடுந். [3]தன்மை.[4]விளிந்திடவேண்டுவார்.

௫௪.—வாயில்காவலன் ஒற்றர்வந்தமையை அப்போது தெரிவித்தல்.

முற்று மூடிய [1]கஞ்சுகன் மூட்டிய
வெற்ற னற்[2]பொறிக் கண்ணினன் வேத்திரம்
பற்று மங்கையி னன்[3]படி காரனின்று
ஒற்றர் வந்தன ரென்ன வுணர்த்தினான்.

(இ - ள்.) (உடல்)முழுதும்மூடிய சட்டையையுடையவனும், மூளுமாறு செய்த வெறும்நெருப்புப்பொறியைக் கண்ணிற் கொண்டவனும், பிரப்பங் கோலைப் பிடித்துக்கொண்டுள்ள அகங்கையையுடையவனுமான வாயில்காவலன் (உள்ளேவந்து) இப்போது ஒற்றர் வந்துள்ளா ரென்று தெரிவித்தான்.

படிகாரன்- ப்ரதீஹாரன் என்பதன் திரிபு. எவரும் உத்திரவின்றிஉள்ளே புகாதபடி தோற்றத்தைக்கண்டே யஞ்சுமாறு தீப்பொறிபறக்குங் கண்ணை யுடையவன் வாயில்காவல னென்பார் 'மூட்டிய வெற்றனற்பொறிக்கண்ணினன்' என்றார். பி-ம்:—[1]கஞ்சுகி மூட்டிய, கஞ்சுகமொய்ம்பினான். [2]பொழி. [3]படிகாவலன், படிவாயினின்று. (எ௪௪)

௫௫.—இராவணன்அநுமதிகொடுத்ததை வாயில்காவலன் தெரிவிக்க, ஒற்றர் உட்புகுதல்.

வாயில் காவலன் [1]கூறி வணங்கலும்
ஏய வெங்கண் [2]விறல்கொ ளிராக்கதர்
நாய கன்புகுத் தீங்கென [3]நன்றெனப்
போய வன்[4]புக லப்புகுந் தாரரோ.

(இ - ள்.) வாயில்காவலன் (இவ்வாறு) கூறி வணங்குதலும், வெங்கண் ணோடுபொருந்திய வலிமையைக்கொண்ட இராக்கதர்க்குத்தலைவனான இராவணன் 'இங்கே வரவிடுக' என்று அநுமதிதர, நன்று எனச் சொல்லிப்போய், அந்தவாயில்காவலன் (அரசனனுமதியைச்)சொல்ல, (வந்தஒற்றர் மந்திரசாலைக்குட்) புகுந்தார்; (எ - று.)

இச்செய்யுள் அச்சிட்டபிரதியிற் காணப்படவில்லை; ஆயினும், பலஏட்டுப் பிரதிகளில் உள்ளதனாலும், வாயில்காவலன் அரசனனுமதியைத்தெரிவிக்க

ஒற்றர் உட்புகுந்தாரென்பதே முன்னையசெய்யுளோடு தொடர்புபடுதலாலும் இச்செய்யுட்குஉரை எழுதப்பட்டது. பி - ம்:—[1]கூறவயங்கெரி. [2]இராக்கதர் நாயகன், ஆயவர்ப். [3]ஆமெனுப், நண்பொடும். [4]புகுத்தப். (எசரு)

ருசா.—ஒற்றர் இராவணன்பாதங்களில் வணங்குதல்.

மனைக்கண் வந்தவன் பாதம் வணங்கினார்
பனைக்கை வன்குரங் கின்படர் சேனையை
[1]நினைக்குந் தோறுந் [2]திடுக்கிடு நெஞ்சினார்
கனைக்குந் தோறு முதிரங்கள் கக்குவார்.

(இ - ள்.) பனைமரம்போன்ற வலிய கைகளையுடைய குரங்குகளின் பரவியசேனையை எண்ணுந்தோறும் நடுங்குகின்ற நெஞ்சையுடையவரும், கனைக்குந்தோறும் உதிரங்களைக் கக்குபவருமான ஒற்றர், அந்தமந்திராலோசனைச் சாலையினிடம் வந்து அவ்விராவணனது பாதங்களில் வணங்கினார்;(எ-று.)—உதிரங்கக்குதல்-அவர்கள் பட்ட வருத்தத்தினாலாகும். பி-ம்:—[1]நினைக்கவேயும். [2]அலமரும், திடுக்கெனும். (எசசு)

ருஎ.—இராவணன்வானரசேனைபின்நிலை முதலியவற்றைக் கூறச்சொல்லல்.

வெள்ள வாரி [1]விரிவொடவ் வீடணன்
[2]தள்ள வாரி நிலைமையுந் [3]தாபதர்
உள்ள வாறு முரைமினென் றானுயிர்
[4]கொள்ள வாய்வெரு வுங்கொடுங் [5]கூற்றனான்.

(இ - ள்.) வெள்ளநீரைக்கொண்ட கடல்போன்ற சேனையின்பரப்போடு அந்தவீடணனென்ற சோம்பேறியின் நிலைமையும் தாபதவடிவம்பூண்டஇராமலட்சுமணர்இருக்கும்வகையும்ஆகிய இவற்றைச் சொல்லுங்களென்றுவினாவினான்; (யாவனெனில்),—உயிர்கொள்ளுமாறு வாய்புலற்றுகின்ற கொடிய யமனையொத்தவனான இராவணன்; (எ - று.)

தள்ளவாரம்-சோம்பல்என்றபொருளதாதலை, "தூங்க லசைத லலசுதல் சோம்பே, சடமடி தள்ளவாரமுந் தகுமே" என்ற பிங்கலந்தையாலும்அறியலாம். சோம்பலையுடையவன் 'தள்ளவாரி' எனப்பட்டான். உடனிருந்துபோர் புரிந்துவெற்றிபெறாமல் ஓடிப்போனமைபற்றி,விபீஷணனை இங்ஙனம்இகழ்ந்துகூறினானென்க. இனி, கன்னடபாஷையில் தள்ளபாருஎன்றசொல்-போர் செய்ய அஞ்சுகையென்றபொருளிலுள்ளதாகக்கூறுகின்றனர்: அந்தச்சொல்லிலிருந்து இவ்வாறுவந்ததெனக்கொள்ளினுமாம். இனி, [2]தள்ளவாழும்என்றபாடத்தைக்கொண்டு-யாம்தள்ளிவிட வாழ்கின்ற,நிலைமையும் என்று உரைப்பாருமுளர். பி-ம்:—[1]நிலைமையும்,விரிவொடும்.[3]தாபதன்.[4]கொள்ளை.[5]கூற்றினான்.

இப்பாடலுக்குப்பின்

[1]என்னச் சார ரிசைத்தனர் வேலையை
கன்ன லொன்றிற் [2]கடந்து கவிக்குலம்

துன்னு பாசறைச் சூழ்க டோறுமே
அன்ன ராகி யரிதி னடைந்தனம்.

என்று ஒருபாடல் சிலஏட்டுப்பிரதியிற் காண்கின்றது. பி-ம்:—1என்ன வே சுகசாரரிவ். 2கடந்தகவிக்கடல்.

௫அ.—இதுமுதல் எட்டுக்கவிகள்-ஒற்றர் கூறுதலைத் தெரிவிக்கும்.

அடிய 1மங்கெடுஞ் சேனையை யாசையால்
முடிய 2நோக்கலுற் றேமுது வேலையின்
படியை நோக்கியெப் பாலும் படர்குறும்
கடிய வேகக் 3கலுழனிற் கண்டிலம்.

(இ - ள்.)(உனது)அடியவராகிய நாங்கள் அந்த நீண்டவானரசேனையை விருப்போடு முடியக்காணத்தொடங்கினோம்; (ஆனால்), பழையகடலின்தன்மையை நோக்குமாறு எல்லாப் பக்கமும் பறந்துசேர்ந்த கடியவேகத்தையுடைய கருடனைப்போலக் காணமுடியாதவர்களானோம்; (எ - று.)—இதனால், வானரசேனை முடிவுகாணவொண்ணாதவாறு மிகப்பெரியதென்றுஉரைத்தவாறு. பி-ம்:—1மன்னெடுஞ். 2நோக்கியபாரம், நோக்கியவ்வானம், நோக்கியெக்காலும். 3கலுழற்குங்காண்கொணா. (எ௬அ)

௫௯. தவல யாம்வர வேண்டிய நோக்கதோ
கவலை வேலை 1யெனுங்கரை கண்டிலா
அவல 2மெய்த வடைத்துழி யார்த்தெழுந்
துவலை யேவந்து சொல்லிய தில்லையோ.

(இ - ள்.) வேலையென்றுசொல்லப்படுகின்ற கடலின்கரையைக் காணமாட்டாமையாலான கவலை அவலப்படும்படி [நீங்கும்படி] (வானரர்கள் மலைகொண்டுஎறிந்துகடலை) அடைத்தபோது, ஆர்த்தெழுந்த நீர்த்திவலையே (வானரப்படை கணக்கிடமுடியாதென்பதை) வந்துதெரிவிக்கவில்லையோ? (அதனைச்சொல்ல) யாம் வரவேண்டியநோக்கத்தையுடையதோ? (எ - று.)

வானரர்வீசிய மலையினாலெழுந்தநீர்த்திவலையின்ஆரவாரமே வானரரின் பெருந்தொகையையும் பெருவலிமையையும் தெரிவிக்குமென்றவாறு. கவலைவேலையெனுங்கரைகண்டிலா அவலமெய்தஎன்பதற்கு-யாவரும் கவலையாகிய வேலையை [கடலை] க்கரைகாணமாட்டாதவருந்த எனினுமாம். பி - ம்:— 1அடைந்திடக்கற்பழிந்து, எனுங்கரைகாண்கிலாது. 2எய்தியதேதுளி, எய்தியடைத்துழி. (எ௬௯)

௬௦. எல்லை 1நோக்கவு 2மெய்தில தாமெனுஞ்
சொல்லை நோக்கிய மானுடன் றோளெனுங்
கல்லை நோக்கிக் கணைகளை நோக்கித்தன்
வில்லை 3நோக்கவும் வெந்தது வேலையே.

(இ - ள்.) கடற்பரப்பைநோக்கிக் கிடக்கவும் (அந்தக்கடலின்தெய்வம்) வராதுவிட்டதுஎன்ற பழமொழியைக்கருதிய அந்தமானுடன் (தனது) தோ

னென்னும் மலையை நோக்கிக் கணைகளையும்நோக்கி வில்லையும் நோக்கியமாத் திரத்தில், கடலானது வெந்திட்டது; (எ - று.)

தோளையுங்கணையையும்பார்த்தது - தோள்வலிமையிருந்தும் அதை வெளிப்படுத்திக்காட்டுதற்கு உரிய கணைகளிருந்தும் இந்தக்கடலரசன் அதனை யுணராமற்போயினனே என்ற குறிப்பினு லாகும். வில்லைநோக்கவும் வேலைவெந்ததுஎன்றது-வில்லிற்கணையைப்பூட்டிச் செலுத்துவதற்கு முன்னமே கடல்வெந்திட்டதென்ற கருத்தினால்.பி-ம்:—[1]நோக்கினும். [2]எய்தலராயினும், எய்தலதாமெனும். [3]நோக்கலும். (எ௬௦)

௬௧. தாரு லாமணி மார்பநின் றம்பியே
தேரு லாவு [1]கதிருந் திரிந்துதன்
பே[2]ரு லாவு மளவினும் பெற்றனன்
நீரு லாவு மிலங்கை நெடுந்திரு.

(இ - ள்.) வெற்றிமாலைவிளங்குகின்ற அழகியமார்பையுடையவனே! உன்னுடையதம்பியாகிய விபீஷணனே தேரில்(தினந்தோறும்)சஞ்சரிக்கின்ற ஆயிரங்கிரணனுன சூரிய னுஞ் சஞ்சரித்துத் தன் [இராமன்] பேர்வழங்குங் காலமளவிலும் [சூரியனுதிப்பதும் ராமநாமம்வழங்குவதுமான காலமாகிய கற்பகாலம்வரையிலும்] நீர்சுற்றிலுமிருக்கப்பெற்ற இலங்காநகரின் பெருஞ் செல்வத்தைப்பெற்முன்; (எ - று.)—பி-ம்:—[1]கதிர்களிரண்டுந்தன், கதிருந் திருந்துதன், கதிருந் திரிந்தன. [2]உலாவளவுமெய்தப். (எ௬க)

௬௨. சேது பந்தனஞ் செய்தன னென்றதிப்
போது வந்த [1]புதுவலி யோவொரு
தூது வந்தவன் றோள்[2]வலி சொல்லிய
வேது [3]வந்தமி லாத விருக்கவே.

(இ - ள்.) (அந்த இராமனுக்கு), ஒரு தூதாகவந்த அநுமானுடையதோள் வலிமுன்னமேதெரிவித்த முடிவில்லாத [மிகப்பெரிய] காரணம் இற்கையில், அணைக்கட்டைச்செய்தானென்ற இவ்விஷயம் இப்போது ஏற்பட்ட புதிய வலிமையோ? (எ - று.)

ஒருதூதுவந்த வானரம் தன்தோள்வலியால் இலங்கையைச் சுட்டுக் கொட்டைபரப்பியதனுலேயே அப்படிப்பட்ட தூதுவனைக்கொண்ட தலைவன் திறம் முன்னமே நமக்கு ஏற்பட்டதேயென்றவாறு. பி-ம்:—[1]புதுமையதோ. [2]வலியாமுனம், வலியான்முனம்,வலிசொல்லவே. [3]வந்ததெலாமிருக்கையே. அந்தமிலாததிருக்கவே. (எ௬௨)

௬௩. மருந்து தேவ ரருந்திய மாலை[1]வாய்
[2]இருந்த தானவர் தம்மை [3]யியைத்துமுன்
பெருந்திண் மாயற் குணர்த்திய [4]பெற்றியின்
[5]தெரிந்து காட்டின னும்பி [6]சினந்திலன்.

(இ - ள்.) முன்னொருகாலத்தில், தேவர்கள் அமிருதத்தையுண்ட சமயத்தில் அவர்களிடையே யிருந்த அசுரனை யறிந்துமிக்கவலிபடைத்த மாயவனாகிய திருமாலுக்கு(ச் சந்திரசூரியர்) காட்டியதன்மைபோல, உன்தம்பி (குரங்கு வடிவுபூண்ட எங்களை) யறிந்து சினங்கொண்டவனாய்(இராமனுக்கு)த் தெரிவித்தான்; (எ - று.)

பாற்கடலினின்று அமுதம்தோன்றியபின் மோகினியவதாரங்கொண்டு அசுரரை மயக்கி வஞ்சித்துவிட்டுத் திருமால் தேவர்கட்கு அவ்வமுதத்தை அகப்பையாற்கொடுத்துவருகையில்,சிம்மிகையின்புதல்வனான சைம்மிகேயன் அசுரவுருவத்தைக்கரந்து தேவருருக்கொண்டு அவ்வமுதத்தைப்பெற்றானாகச் சூரியசந்திரர் அவ்வசுரனைக்காட்டிக்கொடுத்தாரென்றும், அப்போதுதிருமால் அமுதம்பகிர்ந்துகொடுத்த அகப்பையினால் அவ்வசுரனைத் தாக்க அவன் தலைவேறுஉடல்வேறாகப்பிளவுபட்டானாயினும் உயிர்நீங்காதுநின்று,இராகுகேதுக்களென்றுபெயர்பூண்டு இருவடிவாகிக் கோள்சொன்ன சூரியசந்திரரைச் சிற்சிலகாலங்களிற் பற்றிக்கொள்வதனால்தான் கிரகணமுண்டாவதென்றும் புராணங்கள்கூறும். பி-ம்:—1வந்து, 2அருந்து;அறிந்து.3இமைப்பின்முன், இரவிமுன். 4பெற்றிபோல். 5திரிந்து. 6சினத்தினால். (எ௫௩)

௯௪. பற்றி வானர வீரர் பனைக்கையால்
எற்றி யெங்களை 1யேனெடுந் தோளிறச்
சுற்றி யீர்த்தலைத் துச்சுடர் போ2லொளிர்
வெற்றி 3வீரற்குக் காட்டி விளம்பினான்.

(இ-ள்.) எங்களைப்பற்றி, வானரவீரர்களைக்கொண்டு பனைமரம்போன்ற கையால் (எங்களுடைய)பெருமைபெற்ற தோள் முறியும்படி குத்தி யீர்த்துச் சுற்றலைத்து வருத்தி, (அந்தவிபீஷணன்), சூரியன்போல்விளங்குபவனான வெற்றிபொருந்தியவீரனாகியஇராமனுக்குக் காட்டி (இன்னாரென்று)அறிவித்தான்; (எ-று.)—பி - ம்:—1என்பொடு தோளுறச், ஏநெடுந்தோளுறச். 2ஒளி. 3வீரனிற். (எ௫௪)

௯௫. சரங்களிங் 1கிவற்றிற் பண்டு தானுடை
வரங்கள் சிந்துவ னென்றனன் மற்றெமைக்
குரங்க லாமை 2தெரிந்துமக் கொற்றவன்
இரங்க வுய்ந்தன மீதெங்க 3ளொற்றென்றார்.

(இ - ள்.) அந்தவெற்றிபொருந்திய இராமன்,—இங்குள்ள இந்தச்சரங்களினால், இராவணன் முன்னேமுதற்கொண்டு அடைந்துள்ள வரங்களையெல்லாம் ஒழித்துவிடுவேனென்றான்; மற்றும், எங்களை, (ஏமாற்றுவதற்காகக் குரங்கின்வடிவைக்கொண்டிருப்பவரேயன்றி உண்மையிற்) குரங்குஅல்லோம் என்றஉண்மை தெரிந்தபின்பும் எங்கள்மீது இரக்கங்கொண்டதனால், (நாங்கள்) உய்ந்தோம்: இதுவே நாங்கள் ஒற்றிவந்தபொருள்என்று (தாம் ஒற்றியறிந்துவந்தமையைத்)தெரிவித்தார்கள்; (எ-று.)—பி-ம்:—1இவற்றால்.2தெரிந்தும். 3ஒற்றரோ. (எ௫௫)

௬௬.—மற்றும்யாவற்றையுஞ்சொல்லி இராவணனை அவர்கள் வாழ்த்தி நிற்றல்.

*மற்றும் யாவையும் [1]வாய்மைய வானவன்*
*சொற்ற [2]யாவையுஞ் [3]சோர்வின்றிச் சொல்லினார்*
*குற்றம் யாவையுங் கோளொடு நீங்குக*
*[4]இற்றை நாண்முத லாயுவுண் [5]டாகென்றார்.*

(இ-ள்.) பின்னும் (அந்தவானரச்சேனையிடையிலே நடந்த)எல்லாப்பொருளையும் உண்மையைக்கொண்ட கடவுளினவதாரமான இராமன்(இராவணனிடம்கூறுமாறு)சொன்ன எல்லாவிஷயங்களையும் தளர்ச்சியில்லாமல்விரிவாகக் கூறினாராய், (அவ்வொற்றர்),—'மாறுபாட்டுடனே குற்றம்யாவையும்நீங்குக: இன்றுமுதல் இன்னும்ஆயுள்(மேன்மேல்)உண்டாகுக'என்றுவாழ்த்தினர்.

தாம் கூறியதில் இராவணன் வெறுக்கத்தக்கன பல இருக்குமாதலால், இராவணனைவாழ்த்திநின்றனர் ஒற்றர்களென்னலாம். பி-ம்:—[1]வாய்மையும் வானவன், வாய்மையம்மானவன்,ஈதென மன்னவன். [2]யாவுஞ். [3]செவிசுடச், செவியிடைச். [4]உ.ற்ற. [5]உண்டீதென்றார், உண்டாகென்றான். (௭௫௬)

ஒற்றுக்கேள்விப்படலம்முற்றிற்று.

---

## ௯-ஆவது இலங்கைகாண்படலம்.

இராமபிரான்சுவேலமலைமீதேறி இலங்கையைக் கண்டதைக் கூறும் படலமென்பது, பொருள். இப்படலத்தின்பெயர், இராமனிலங்கைகாண்படலம் எனவும்வழங்குகின்றது.சிலபிரதிகளில் முதல்இருபத்துநான்குகவிகளும் சிலபிரதிகளில்இருபத்தைந்துகவிகளும் ஒற்றுக்கேள்விப்படலத்தையே சேர்ந்தனவாகக்காணப்பட, வேறு சிலபிரதிகளில் முதல்இருபத்துமூன்றுகவிகள் செருப்பதிப்படலம் என்ற பெயருடன் உள்ளன. [செருப்பதிப்படலம்-இராவணன்மனம் போரிற்பதிதலைத் தெரிவிக்கும் படலமென்று பொருள்படும்.]

ஒற்றர்கள்செய்திசொல்லிவிட்டுச்சென்றதும், இராவணன் சபைகூட்டி வினவ, சேனாபதி 'இப்போது செய்யவேண்டுவது போரே: 'பகைவருள்ளவிடத்துச்சென்று பொரலாமோ?' என்ற தெண்ணம் நமக்கு இருக்கையில், அவர்கள்வலியவந்திட்டது நன்மையே. ஆயிரம்வெள்ளம்சேனை நமக்குஉள்ளதனால் வலிமையைப்பற்றிக்கவலையேயில்லை:நீ எனக்குவிடைகொடுத்தால்,நான் பகைவென்றுவருகின்றேன்' என்ன, அப்போது மாலியவான் 'இராமபிரான் முதலியோர் திருமால்முதலிய தேவர்களின் அவதாரமென்றும் இராட்சசசங்காரத்திற்காகவேவந்துள்ளாரென்றும், அநுமான் நம்பதியிற்புகும்போது இலங்கையின்தேவதையை வென்றிட்டானென்றும் இங்ஙனம் பலபடியாகச்சொல்லுகிறார்கள்: அதற்குஏற்ப, ஆயிரக்கணக்கான உற்பாதங்களுந்தோன்றியுள்ளன: முன்னமும்திருமாலால் நமதுகுலம் ஒடுங்கியதுஉண்டு: அதனால்,எனக்கு

அச்சமாயுள்ளது: சீதையைக்கொடுத்திடுதலே தகுதி' என்று தன்கருத்தைமீண்டும் வற்புறுத்துக்கூற, இராவணன் அவனைப்பரிகசித்துத் தன்னைப்பற்றிப் பெருமிதமாகப்பேசினன்: இங்ஙனம்நிகழ்கையில், சூரியன்தோன்றினனாக, இராமபிரான் தம்பியுடனும் பரிவாரங்களுடனும் சுவேலமலையினுச்சியேறி இலங்கைவளநகரைக்கண்டு தன்தம்பிக்குங்காட்டிக்கொண்டு அதிசயிக்கையில், வானரப்படைத்தொகுதியைக்காணுமாறு இராவணன், இலங்கைக்கோபுரத்தின் மேலிடத்தைச்சேர்ந்தானென்பது, இப்படலத்திற் கூறிய பொருள்.

வேறு.

௧.—இராவணன் வினவச் சேனைகாவலன் சொல்லத் தொடங்குதல்.

வைதெனக் கொல்லும் விற்கை மானிடர் [1]மகர நீரை
நொய்தினி [2]னடைத்துத் தானை யோடும்வந் தேறி நம்மூர்
எய்தின ரென்ற [3]போதின் வேறினி யெண்ண வேண்டும்
செய்திற னுண்டோ [4]வென்னச் சேனை[5]கா வாளன் [6]செப்பும்.

(இ - ள்.) சாபம்பெற்றாற்போல(த் தவறாது)கொல்லுகின்ற வில்லைக்கொண்ட மானுடர் கடலை விரைவில்அணைகட்டிவிட்டு சேனையோடு வந்து (அந்தக்கடலைக்)கடந்திட்டு நம்மூரைச்சேர்ந்தா ரென்றபோது வேறேஎண்ணுதற்குரியதாய்ச் செய்யத்தக்கதொழில் [எண்ணிச்செய்யத்தக்க ஒருகாரியம்] உண்டோ? என்று இராவணன் வினவியதற்கு, சேனைகாவாளன்மறுமொழி கூறலுற்றான்; (எ - று.)—மறுமொழியைமேல்நான்குகவிகளிற்காண்க.

இனி, இச்செய்யுட்கு - ஒற்றர்கூறியதுகேட்ட சேனைகாவாளன் 'மானுடர்எய்தினரென்றபோது வேறினிச்செய்திறனுண்டோ?' என்றுசொல்லிப் பின்னும் கூறலானனென்று உரைத்தலும்ஒன்று. பி-ம்:—[1]மகரவேலை. [2]அடைத்து மானத்தானையா னுவன்றநம்மூர், அடைத்தமானத்தானையானுவன்றநம்மூர். [3]போதும். [4]என்று. [5]காப்பாளன், காவலவன். [6]சொன்னான்.

௨.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: சேனைகாவாளன் சொல்லும் மறுமொழியைத்தெரிவிக்கும்.

[1]விட்டன மாதை யென்ற போதினும் வெருவி [2]வேந்தன்
பட்டதென் றிகழ்வர் விண்ணோர் [3]பற்றியும் பகையைத் தீர
[4]ஒட்டலாம் போரி னென்னு னொட்டினு மும்பி யொட்டான்
கிட்டிய போது [5]செய்வ தென்னினிக் கிளத்தல் [6]வேண்டும்.

(இ - ள்.) சீதையை விட்டிட்டோமென்றாலும் 'ராட்சசராசன் அஞ்சிச்செய்த தொழிலாம்' என்று தேவர்கள் இகழ்வார்கள்;போர்செய்தாலும் பகைமையைத்தீரும்படி சமாதானஞ்செய்யலாம்: (ஆனால்), பகைவர் போரிற் சமாதானமாவதானாலும் உன்தம்பி ஆகவொட்டான்; நெருக்கடியான இச்சமயத்தில் இனிச்செய்வதென்னென்று ஆலோசித்துச் சொல்லவேண்டும்; (எ-று.)—பட்டனனென்பரெல்லாம் படப்பெறிற்பழியிற்றீர்வோம்என்பது, சிலபிரதியிலிரண்டாவதுஅடி. பி-ம்:—[1]விட்டனை. [2]வேந்த. [3]பற்றியிப். பகை

யைத்தீர்வோம். 4ஒட்டினமெனினுமன்று, ஒட்டலாம்பெரியோயொன்னுர், ஒட்டலாங்கேளிரென்ன. 5வேறுசெய்வதென். 6வேண்டாம். (எ௬அ)

௩. ஆண்டுச்சென் றரிக ளோடு மனிதரை யமரிற் கொன்று
மீண்டுநம் மிருக்கை சேர்து மென்பது மேற்1கொண் டேமேல்
ஈண்டுவந் திறுத்தா 2ரென்னு மீதலா துறுதி யுண்டோ
3வேண்டிய தெய்தப் பெற்ருல் 4வெற்றியின் விழுமி தன்றே.

(இ - ள்.)(கடற்கரையில் நமதுபகைவர்தங்கினுரென்று கேட்டபோதே) அங்கேயே போய் வானரங்களுடனே மனிசரைப் போரிற் கொன்று மீண்டு நமது இருப்பிடத்திற்கு வந்துசேருவோமென்ற செயலை மேற்கொண்டிருந்தோமானுல்(கொண்டிருக்கலாம்:அது செய்யாதுவிட்டோம்:அதனுல் என்ன? நமது பகைவர்) இங்குவந்து தங்கினுரென்பதல்லது (வேறு) உற்றபொருளுண்டோ? (நாம்) வேண்டிய செயல் கிட்டப்பெற்ருல், வெற்றியிலே சிறப்புடையதாமன்றே? (எ - று.)

நாம் முன்னமே நம்பகைவர்களிருந்த இடத்திற்குப்போய்ப் போர்புரிந்து அவர்களைக் கொன்று மீண்டுவாராமற்போனேமே யென்று கவலைப்படவேண்டா: ஏனெனின்,நாம் அங்கே போகிறசெயலில்லாமலே நம்பகைவர் நம்மிடத்துக்கே போர்புரியுமாறு வந்துவிட்டால், நாம் வேண்டியது தானே வந்து கூடியதாதலால்,இது நல்லதேயன்றே என்றவாறு.பி-ம்:—1கொண்டோமே. 2என்னில், என்ருல். 3வேண்டுவது. 4வெற்றியின், வெற்றியில். (எ௬௯)

௪. ஆயிர வெள்ள 1மான வரக்கர்தந் தானை 2யைய
தேயினு மூழி நூறு 3வேண்டுமாற் சிறுமை 4யென்னே
நாயினஞ் சீயங் கண்ட தாமென நடப்ப தல்லால்
நீயுருத் 5தெழுந்த போது குரங்கெதிர் நிற்ப துண்டோ.

(இ - ள்.) ஐயனே! ஆயிரவெள்ளமென்னுந் தொகையையுடைய அரக்கருடைய சேனை (பகைவரால்) அழிவதாயினும் ஊழி நூறுவேண்டும்: (நமக்கு ஏற்பட்டுள்ள) சிறுமை என்னவோ? (மேலும்), நீ சினந்து போருக்குச்செல்லும்போது நாயினங்கள் ஒருசிங்கத்தைக் கண்டதாகு மென்னுமாறு (அந்தப் பகைவர்திரள்) அஞ்சியோடுவதல்லாமல், குரங்குகள் எதிரேநிற்பதும் உண்டோ? (எ - று.)

நமக்கு எவ்வகையாலும் சிறுமையில்லை: நமக்குச் சேனைவலியும் மிகவும் பெரிது: உன்னொருவனைக் கண்டமாத்திரத்தில்தானே சிங்கத்தைக்கண்ட நாயைப்போல நடுங்கியோடுவதல்லது குரங்குகள் உன்னெதிரேநிற்குமோ? ஆகையால், பகைவர் வந்திட்டா ரென்று கவலைப்படவேண்டியதில்லையென்றவாறு. பி-ம்:—1ஆய, ஐய. 2உண்டு. 3வேண்டுமே. 4என்னும், என்னே. 5எதிர்ந்த. (எ௭0)

௫. வந்தவர் தானை யோடு மறிந்துமாக் கடலில் வீழ்ந்து
1சிந்தின ரிரிந்து போகச் 2சேனையும் யானுஞ் சென்று
வெந்தொழில் புரியுமாறு காணுதி விடை3யீ தென்ன
இந்திரன் முதுகு கண்ட விராவணற் 4சேயச் சொன்னான்.

(இ - ள்.) (இப்போது நம்முடன்பொருமாறு) வந்தவர் (தமது) சேனையுடனே திரும்பிப் பெரியகடலில்வீழ்ந்து சிதறுண்டுநிலைகெட்டுப்போகுமாறு சேனையும் யானும் போய்க் கொடிய போர்த்தொழிலைப் புரியுமாற்றைக் காண்பாய்; விடைதருவாய் என்று இந்திரனை முதுகுகாணுமாறுசெய்த இராவணற்கு ஏற்றவைகளைச் சொன்னான்; (எ - று.)—பி-ம்:—[1]சிந்தியேபிரியல், [2]தேவருந்திகைப்பயான்போய். [3]தாவென்ன, ஈயென்ன. [4]எய்திச். (௭௬௧)

௬.—மாலியவான் கூறத்தொடங்குதல்.

மதிநெறி யறிவு சான்ற மாலிய வா[1]னல் வாய்மை
பொதுநெறி [2]நிலைய தாகப் புணர்த்துதல் [3]புலமை யென்னா
விதிநெறி [4]நிலைய தாக [5]விளம்புகின் றோரு மீண்டு
செறுநெறி [6]நிலையி னாரே [7]யென்பதுந் தெரியச் [8]சொல்லும்.

(இ - ள்.) ஆராயவேண்டியமுறையாலே (ஆராய்ந்தறிந்த) உணர்வு மிக்க மாலியவான், (இராவணனைநோக்கி உலகில்நிகழ்கின்ற நல்லவார்த்தை பொதுவானநெறியிலே நிற்பதானாலும் அதனை நமக்கும்) உபயோகப்படுத்திப்பார்த்தல் புலமையாகுமென்று (முன்னஞ்) சொல்லி, (பிறகு, பகைவர்நம்மீதுவந்தது) விதியின்முறைநிற்றலையுடையதாக விளம்புகின்றபிரகத்தன்முதலினோரும் அந்நிலைநீங்கிச்சோர்கின்ற நிலையையடைபவரே யென்னுங் கருத்துத் தோன்றுமாறு பின்னுஞ்சொல்லலானான்; (எ - று.)

உலகத்துப் பொதுப்படஒருபேச்சுப் பிறந்திட்டால், அதைப்பற்றியாலோசிக்கவேண்டுவது அவசியமென்பது, முன்னிரண்டடியிற் கூறியபொருள். இராமன்முதலியோர் எதிரிடவந்தது தம்முடைய தீயவிதியின்பயனாலேயேயென்று பிரகத்தன்கூறியதை "பதிபுகுந்தனர் தம்மைப்படும்பதோர், விதிகொடுந்த விளைந்ததுதானென்றான்" என ஒற்றுக்கேள்விப்படலத்து வந்ததுகொண்டு உணர்க. பிரகத்தன்போல்வார் டம்பமாகக் கூறினாலும் போரிற்சேர்ந்துவிடுபவரேயென்பது, பின்னடிகளின்பொருள். இனி, விதிநெறிநிலையதாக விளம்புகின்றோரும் - இதுவரை விதிபோன்றுபேசிப் பகைவரைத் தவறாது அழிப்பவருமெனினுமாம். பி-ம்:—[1]அவ்வாய்மை, இவ்வாய்மை. [2]நிலைமையாகப்புணர்த்துதல், நிலையாகத்தானேவுதல். [3]பொதுமெய். [4]நிலையவாக, நிலையினின்ற. [5]வீரர்மற்றிவரையையா, விளம்புகின்றோர்களியாரும், [6]நிலையரல்லர். [7]என்பது. [8]சொன்னான். (௭௬௨)

௭.—இதுமுதற்பத்துக் கவிகள்-ஒருதொடர்: மாலியவான் சொல்லியதைத் தொகுத்தும்.

பூசற்கு முயன்று நம்பாற் பொருதிரைப் புணரி [1]வேலைத்
தேசத்துக் [2]கிறைவ னான தசரதன் [3]சிறுவன் றன்னை
மாசற்ற சோதி வெள்ளத் தார்ச்சியின் [4]வரம்பிற் றோன்றாம்
ஈசற்கு மீசன் வந்தா னென்பதோர் வார்த்தை [5]யிட்டார்.

(இ - ள்.) மோதுகின்ற அலைகளைக்கொண்ட கடலையெல்லையாகவுடைய பூமிக்குத் தலைவனாகிய தசரதனதுபுதல்வனான இராமனை, குற்றமற்ற சோதிக்

தொகுதிகளையுடைய வானத்தின் உயர்ந்தஇடத்தெல்லையிலே காணப்படுபவனாகித் தேவாதிதேவனான கடவுளே நம்மிடத்துப் போர்செய்யமுயன்று வந்துள்ளா னென்பதாகிய ஓர்வார்த்தையை(ப் பலரும்) சொல்லுகிறார்கள்; (எ - று.)—சோதிவெள்ளத்துச்சியின் வரம்பு-பரமாகாசம். பி-ம்:—[1]வேலித். [2]அரசனை. [3]சிறுவனுக, சிறுவன்சேர. [4]வைகுகின்ற. [5]இட்டான். (எ௬௩)

அ. அன்னவற் [1]கிளவ றன்னை யரு[2]மறைப் [3]பரமென் றோதும்
நன்னிலை நின்று [4]தீரா [5]நவையிலா வுயிர்க டோறும்
தொன்னிலை [6]பிரிந்தா னென்னப் பலவகை [7]நின்ற தூயோன்
[8]இன்னனை யென்ன யாரும் [9]மியம்புவ தேதி யாதோ.

(இ-ள்.)அந்தஇராமனுக்குத்தம்பியான இலக்குமணனை,—(உணர்வதற்கு) அரிய வேதமானது பரமென்று சொல்லுகின்ற (அந்தச்) சிறந்தநிலையினின்று விட்டுநீங்காது குற்றமற்று,(தனது)பழமையான நிலைநீர்ந்தேவிட்டானென்று கருதுமாறு (பலவகைப்) பிராணிவர்க்கங்களிலெல்லாம் பலவகையாக (ப் பிறந்து) நிற்கின்ற பரிசுத்தமூர்த்தியான திருமாலினது இன்னனையாவனென்று பலரும் (நம்செவியிற்படச்) சொல்லுவார்கள்: (இதற்குக்) காரணம் யாதோ? (எ - று.)

இலட்சுமணனைத் திருமாலின்திருவணையான ஆதிசேஷனென்கின்றன ரென்றவாறு. திருமால் பரத்துவத்தினின்று நீங்காது தனது இச்சையால் பலவகைப்பிறவியிலும் தோன்றுகின்றான். அங்ஙனம் தோன்றும்பொழுது எந்தப்பிறவியிற் பிறக்கின்றானோ அந்தப்பிறவியிலுள்ள மற்றைப்பிராணிகளைப் போலவே யிருக்கின்றானே யன்றித் தனது பரத்துவநிலை தோன்றுமாறு இருப்பதில்லை. கருமசம்பந்தமோ அப்பரமனுக்கு உண்டாவதில்லை யென்பது, இரண்டுமூன்றாமடிகளின் கருத்து. தீரா நின்ற எனவும், நவையிலா நின்ற எனவும் இயையும். மூன்றாமடி 'தொன்னிலையாகி நின்றசுடரொளியாய தூயோன்' என்று சிலபிரதி. இந்தப்பாடலுக்குப்பின் "ஆயிரமுற்பாதங்கள்" (௧௪) என்றபாடலும், அதன்பின்"அம்பினுக்கு இலக்கமாக"(௧௫)என்ற பாடலும், அதன்பின் "அவ்வமர்க்கு (௧) என்ற பாடலும் சிலபிரதியி லுள்ளன. பி-ம்:—[1]இளையான். [2]நெறிப். [3]பரன், பாம்பு. [4]தீர்ந்து. [5]நவையறுபொருள்கடோறும். [6]பரன். [7]நின்று, நிறைந்த. [8]இன்னணமெவருங்கேட்ப, என்னுமீதெவருங்கேட்ப, இன்னவனருளயாரும். [9]விளம்புவது. (எ௬௪)

௯. [1]அவ்வமர்க் கமைந்த வில்லுங் குலவரை யவற்றி னொன்று
வெவ்வலி வேறு வாங்கி விரிஞ்சனே விதித்த மேனாட்
செவ்வழி நாணுஞ் சேடன் றெரிகணை யாகச் [2]சேர்த்தித்
[3]கவ்வயில் கால நேமிக் கணக்கையுங் கடந்த [4]தென்பார்.

(இ - ள்.) போர்செய்யுமாறு (அந்த இராமனுக்கு) அமைந்துள்ள அவ் வில்லும்,குலாசலங்களிலே மிகுந்த கொடிய வலியைத் தனியே வாங்கிப் பிரமதேவன் முற்காலத்தில் நிருமித்ததாகும்;(அந்தவில்லுக்கு)நேர்மையானமுறைமையைக் கொண்ட நாணியாலதும், ஆதிசேடனே; (அந்தவில்லில்)ஆராய்ந்தெடு

த்த அம்பாகச் சேர்க்கப்பட்டுக் கவ்வுந்தன்மையுள்ள கூரிய முனையும், கால சக்கரத்தின் தன்மையையுங் கடந்துள்ள தென்று சொல்வார்; (எ - று.)

பிரமதேவன் ஹரிஹரர்களின் வலிமையைத்தெரிதற்பொருட்டு இரண்டு விற்களை நிருமித்துக் கொடுத்தவற்றில் விஷ்ணுவின் வில்லே அகத்திய முனிவன்மூலமாக இராமபிரானுக்கு வந்துள்ளதனால், 'வில் விரிஞ்சனே விதித்த' என்றது; இதனை ஆரணியகாண்டத்துக் காணலாம். காலநேமி-காலத்தைநடத்துஞ்சக்கரம்: அது தட்டுத்தடையின்றிச் செல்லவல்லதுபோல, கணையயிலுஞ் செல்லவல்லதென்பார் 'காலநேமிக்கணக்கையுங் கடந்தது' என்றார்: இனி, காலநேமி என்பது-எதிர்த்தார்க்குத்தவறாமல் மரணத்தையுண்டாக்கவல்ல திருமாலின் சக்கரப்படையான சுதரிசன மென்றுங் கொள்ளலாம். பி-ம்:—1அவ்வவர்க்கு. 2செய்த. 3கவ்வையில். 4என்று. (எசுரு)

கசo. வாலிமா மகன்வந் தானை வானவர்க் கிறைவ னென்றார்
நீலனை யுலக முண்ணு நெருப்பினுக் 1கரச னென்றார்
2காலனை யொக்குந் தூதன் 3காலுங்கண் ணுதலு மென்றார்
மேலுமொன் றுரைத்தா ரன்னான் விரிஞ்சனா மினிமே லென்றார்.

(இ - ள்.) வாலியின்சிறந்தகுமார(னான அங்கத)னாகப்பிறந்தவனைத் தேவர்கட்குத்தலைவனான இந்திர னென்றார்கள்; நீலனென்பவனை, (யுகாந்தகாலத்தில்) உலகத்தையுமுண்ணவல்ல அக்கினிதேவ னென்றார்கள்; யமனையொத்த தூதனாய்வந்த அனுமானை, வாயுதேவனும் உருத்திரமூர்த்தியு மென்றார்கள்; மேலும், (அவனைப்பற்றி) ஒன்றுகூறியுள்ளார்: அவன் இந்தப்பிறவியின் பின் பிரமதேவனாவா னென்றார்கள்; (எ - று.)

வானவர்க்கிறைவன் - இந்திரனமிசம்கிரம்பியவனென்பது கருத்து: நீலன் முதலானார்க்கும் இங்ஙனமே காண்க. விரிஞ்சன்-அன்னப்பறவையால் தாங்கப்படுபவன்: பிரமன்: வடசொல். பி-ம்:—1அரசென்றார்கள். 2காலனே. 3காற்றெனுங்கடவுளென்றார். (எசுசு)

கக. அப்பத மவனுக் கீந்தா னரக்கர்வே ரறுப்ப தாக
இப்பதி 1யெய்தி னானவ் விராமனென் றெவருஞ் சொன்னார்
2ஒப்பினு லுரைக்கின் றாரோ வுண்மையே யுணர்த்தி னாரோ
செப்பியென் குரங்காய் வந்தார் தனித்தனித் தேவ 3ரென்றார்.

(இ - ள்.) அந்தப்பிரமபதத்தை அவ்வனுமானுக்குக் கொடுத்தவனான அந்தஇராமன், அரக்கரை வேரோடும் ஒழிப்பதாக இந்நகரத்தையடைந்துள்ளா னென்று பலருஞ் சொன்னார்கள்; குரங்காகவந்துள்ளார் (யாவரும்) தனித்தனித் தேவதையாவ ரென்றார்; (இவ்வண்ணமாக உலகத்தார்) ஒப்புமைபற்றிக்கூறுகின்றாரோ? உண்மையைக் கண்டறிந்தே கூறுகின்றாரோ? (அதைப்பற்றிச்) சொல்லியென்ன? (எ-று.)

'செப்பியென்' என்றதனால், உலகத்தார்கூறுவது உண்மையாகவேயிருந்தால் இருக்கட்டும்: அன்றி, ஒப்புமைபற்றிச் சொல்லுவதாயிருந்தா லிருக்கட்டும்: எப்படியும் பகைவர் சாமானியரல்லரென்பது வெளிப்படையேயென்றவாறு. பி-ம்:—1எய்தியின்ற. 2ஒப்பினி, ஒப்பினில். 3கின்றார். (எசுஎ)

௬௨. ஆயது தெரிந்தோ தங்க ளச்சமோ வறிவோ யார்க்கும்
சேயவ ளெளிய ளென்னச் [1]சிந்தையி னிகழ லம்மா
தூயவ ளமிர்தி னோடுந் தோன்றின ளென்றுந் தோன்றாத்
தாயவ ளுலகுக் கெல்லா மென்பதுஞ் சாற்று கின்றார்.

(இ - ள்.) (இவ்வாறெல்லாம் உலகத்தார்கூறுவது), உண்மையையறிந்தோ? (அன்றித்) தங்களுடையஅச்சத்தினாலோ?(அன்றித் தமது) அறிவினால் ஊகித்துச்சொல்லுவதேயோ? (எப்படியிருந்தாலும் இருக்கட்டும்): பரிசுத்தத் தன்மையையுடைய சீதாபிராட்டி அமிழ்தினோடுந்தோன்றிய இலக்குமியாவளென்றும் உலகுக்கெல்லாம் (தனது தன்மைஇன்னதென்றுஅறியப்படாத) தாயானவளென்பதும் சொல்லுகின்றார்; அழகியசீதை எளியவளாயிருக்கின்றாளென்றுமனத்தினால் இகழாதே; (நான் சொல்வதைக்) கேள்; (எ - று.)

அம்மஎன்றசொல் செய்யுள்நோக்கி நீண்டுவந்தது: "அம்மகேட்பிக்கும்" என்பது, தொல்காப்பியம். சேயவள் - செம்மையுள்ள இலக்குமி. சேயவளடைந்தோர்க்கென்றுஞ் சிந்தையள்செப்பினுள்ளம்என்று இரண்டாமடி சில பிரதியிற் காண்கின்றது. பி-ம்:—[1]சீதையை, சீதையென்று. (எசுஅ)

௬௩. கானிடை [1]வந்த தேயும் வானவர் [2]கடாவ வேயாம்
மீனுடை யகழி வேலை [3]விலங்கன்மே லிலங்கை வேந்தன்
தானுடை வரத்தை யெண்ணித் [4]தருமத்தின் றலைவர் தாமே
[5]மானுட வடிவங் கொண்டா ரென்பதோர் வார்த்தை யிட்டார்.

(இ - ள்.) (அந்தஇராமன்) காட்டிற்குவந்ததும் தேவர்களின் தூண்டுதலினாலேயாம்: மீனையுடையகடலை அகழியாகக்கொண்டதும் திரிகூடமலையிலுள்ளதுமான இலங்காபுரிக்குத்தலைவனான இராவணன் தான் பெற்றுள்ள வரத்தையெண்ணித் தருமத்தின் தலைவரான திருமால் தாமே மானுடவடிவங் கொண்டாரென்பதான ஓர்வார்த்தையும் சொன்னார்கள்; (எ - று.)

'ஈசற்குமீசன்வந்தானென்பதோர் வார்த்தையிட்டார் என்று கீழ்க்கூறியதை மீண்டுங்கூறுவது - அவ்விஷயம் இராவணனதுமனத்தி லுறைக்க வேண்டுமென்ற கருத்தினாலாகும்: ஆகவே, இதுகூறியதுகூறலென்ற குற்றத்திற்கு இடனாகாது. பி-ம்:—[1]வந்தவாறும். [2]கடவவேயாம், கடாவவேயால். [3]இலங்கைமேல். [4]தனித்தனி. [5]மானிடர். (எசுக)

௬௪. ஆயிர முற்பா தங்க [1]ளீங்குள வடுத்த வென்றார்
தாயினு முயிர்க்கு நல்லா ளிருந்துழி யறியத் தக்கோன்
ஏயின தூத னெற்றப் பற்றுவிட் டிலங்கைத் [2]தெய்வம்
போயின [3]தென்றுஞ் சொன்னார் புகுந்தது போரு [4]மென்றார்.

(இ - ள்.) இந்தஇலங்கைநகரத்திலே உள்ளனவாக ஆயிரமுற்பாதங்கள் அடுத்தடுத்துத் தோன்றியுள்ளனவென்றார்: தாயைப்பார்க்கிலும் பிராணிகள் விஷயத்திற் கருணைசெய்பவளாகிய சீதை இருந்தஇடத்தினைக் கண்டறிவதற்காக மேலோனாகியஇராமபிரான் ஏவிய தூதன் [அநுமான்] தாக்கியதனால் இலங்கைத்தெய்வமானது (இந்த இலங்கையிலே) பற்றுநீங்கிப்போயிற்றென்றுஞ்சொன்னார்: (அதற்குஏற்ப), போரும் (இப்போது) வந்துள்ளது

என்று சொன்னார்; (எ - று.)—உற்பாதம் = உத்பாதம்: பின்னேவருந் தீமையை முன்னமேயறிவிக்குங் குறி. பி - ம்:—1இங்குளதடுத்தது. 2செல்வம். 3என்று. 4என்பார். (எஎ0)

கரு. அம்பினுக் 1கிலக்க மாவா ரரசொடு மரக்க 2ரென்றார்
நம்பரத் தடங்கு 3மெய்ய னவினிற் பொய்யி லாதான்
உம்பர்மந் திரிக்கு 4மேலா வொரு5முழ முயர்ந்த ஞானத்
தம்பியே சாற்றிப் போனு 6னென்பதுஞ் 7சாரச் சொன்னார்.

(இ - ள்.) (இராமனுடைய) அம்புக்குஇலக்காகப் போகின்றவர் இலங்கைக்குத்தலைவனை இராவணனுடனே அரக்கரென்று சொன்னார்கள்; நம்முடையபாரத்திலே யடங்கின [நம்மைச்சார்ந்துள்ள] மெய்யனும் நாக்கினாற் பொய்சொல்லாதவனும் தேவமந்திரியான பிருகற்பதிக்கும்மேற்பட ஒருமுழம் உயர்ந்துள்ளஞானத்தையுடையனுமான தம்பியான விபீஷணனே (உலகத்தார்கூறும் அவ்வார்த்தையைநேரே)சொல்லிவிட்டுப் போனானென்பதையும்சேரக் கூறினார்; (எ-று.)—"முழநட்பிற்சாணுட்கு நன்று" என்றாற்போல 'முழமுயர்ந்தஞானத்து' என்றார். பி - ம்:—1இலக்கும். 2என்றான், என்ன. 3என்று. 4மேலாம், மேலாய். 5நெறியறிந்த. 6என்பது. 7சமையச்சொன்னான். (எஎக)

கசு. ஈதெலா முணர்ந்தே 1னுயு மென்குல மிறுதி யுற்றது
ஆதியி 2னிவனு லென்று 3முன்றன்மே லன்பி னாலும்
வேதனை நெஞ்சி 4னெய்த 5வெம்பியான் விளைவ சொன்னேன்
சீதையை விடுதி யாயிற் றீருமித் தீமை யென்றான்.

(இ - ள்.) இவற்றையெல்லாம் (நான்கேட்டு) உணர்ந்தவனாயிருத்தலாலும், என்னுடைய [இராட்சச] குலம் முன்னர் அழிந்தது இந்தத்திருமாலால் தானென்ற காரணத்தினாலும், உன்னிடத்துள்ள அன்பினாலும் மனத்தில் வேதனைதோன்ற, மனம்வருந்தி நான் நிகழ்வதைச் சொன்னேன்: சீதையை விட்டிடுவாயானால் (உனக்கு நேர்வதாயுள்ள) இந்தத்தீமை நீங்கிவிடும் என்று சொல்லிமுடித்தான்; (எ - று.)

முன்னர்த்தோன்றிய இராட்சசகுலத்திற் பிறந்த ஹேதியென்பவனது மகனான வித்யுத்கேசனென்பவன் ஸாலகடங்கடையென்பவளை விவாகஞ் செய்துகொண்டு சுகேசனைப்பெற, அவனுக்குத் தேவதியென்னும் மனையாளிடம் மால்யவான் சுமாலி மாலிஎனமக்கள்மூவர்தோன்றினர்; அவர்கள் பிரமனைக்குறித்துத் தவஞ்செய்து சிறந்தவரங்கள்பெற்று, விசுவகர்மாவினால் தென்கடலிடையே இந்திரனுக்காக நிருமிக்கப்பட்ட இலங்கையென்னும் நகரத்தை இருப்பிடமாகக்கொண்டு ராட்சசசமூகத்துடன் அங்குவசித்துப் பல மக்களைப்பெற்றுப் பெருஞ்செல்வத்தினால் அடங்காச்செருக்கினராய்,எங்குஞ் சென்று யாவர்க்கும்பொறுக்கவொண்ணாத துன்பமியற்றிவந்தனர். இவர்கள் செய்யுந்துன்பங்களைப்பொறாதவராய்த் தேவர்களெல்லாந் திருமாலினிடஞ் சென்று முறையிட,அப்பெருமான் அவர்கட்கு அபயமளித்து உடனேநிகழ்ந்த தேவராட்சசயுத்தத்தில் தேவர்கள்பக்கல் தான் துணைநின்று மிகப்பல அரக்கர்சேனையுடன் மாலியைக்கொல்ல, அண்ணன்மாரிருவரும் மிகப்புண்பட்ட

வராய் உபேந்திரமூர்த்தியாகிய அத்திருமாலால் துரத்தப்பட்டு இலங்காநக ரத்தைவிட்டுப் பாதாளத்திற் குடிபுகுந்தனரென்பது,வரலாறு. பிறகு குபேர னுக்குவாழிடமான அந்நகரத்தை மாலியவானது தௌகித்திரனை இராவ ணன் பற்றிக்கொள்ள, பூர்விகராட்சசரான மாலியவான்முதலியோர் அங்கு வந்துசேர்ந்தனரென அறிக. பி-ம்:—1ஆயின், யானும். 2அவனுல். 3உன்கண் மேலன்பினுலும், அன்புனக்குடைமையாலும், அன்புனக்குண்மையானும். 4எய்தி. 5வெதும்பியான் விளைவைச்சொன்னேன், விளம்பினேன்வேண்டி யீண்டு. (எஎஉ)

கஎ.—இராவணன் மாலியவானைப் பரிகசித்துப் பின்னுங் கூறத் தொடங்குதல்.

மற்றெலா நிற்க 1வந்த 2மனிதர்வா னரங்கள் வானின்
இற்றைநா ளளவு 3நின்ற விமையவ ரென்னுந் தன்மை
சொற்றவா றன்றி யேயுந் 4தோற்றிநீ யென்றுஞ் சொன்னாய்
கற்றவா நன்று போவென் 5றினையன கழற லுற்றான்.

(இ-ள்.) '(நீ சொன்னவற்றில்) மற்றையனவைக ளிருக்கட்டும்:(இப்போது வந்துள்ள மனிதரும் வானரங்களும் ஆகாயத்திலே இன்றைநாள்வரையி) லும் (என்னை ஒன்றுஞ்செய்யமாட்டாது) நின்ற இமையவரென்கின்ற விஷ யத்தைச் சொன்னதல்லாமலும் நீ (அந்தஇராமனுக்குத்) தோற்பாய் என்றுஞ் சொன்னாய்; (நீ நூல்களைக்)கற்றறிந்தவிதம் நன்றாயுள்ளது! போ' என்று (இராவணன் மாலியவானைநோக்கிச்) சொல்லி(ப் பின்னும்) இவ்வார்த்தை களைக் கூறலானான்; (எ-று.)—அவற்றை மேல்ஐந்துகவிகளிற்காண்க.பி-ம்:- —1இந்த. 2மலையில். 3நின்றார். 4சோதிமால்மனிதனென்றாய். 5றிவையிவை.

கஅ.—இதுமுதல் ஐந்துகவிகள் - இராவணன் தன்பெருமையைப் பாராட்டிக் கூறுநிலை தெரிவிக்கும்.

*பேதைமா னிடவ ரோடு குரங்கல பிறவே யாகப்
பூதல வரைப்பி னாகர் 1புரத்தினைப் 2புறத்த தாகக்
3காதுவெஞ் 4செருவேட் டென்னைக் காந்தினர் கலந்த 5போதுஞ்
சீதைதன் 6திறத்தி னாபி னமர்த்தொழி றிறம்பு வேனே.

(இ - ள்.) பேதைமானிடவர்களுடனே குரங்குமாத்திரமேயல்ல, மற்ற மிருகங்களும் சேரட்டும்:இந்தப்பூமியினெல்லையிலும் நாகர்லோகத்திலும் அத ற்குஅப்பாற்பட்ட இடத்திலும்தான் ஆகட்டும்: மோதிச்செய்யப்படுகின்ற கொடியபோரை விரும்பி என்னை எதிரிட்டு (ப் பகைவர்) நெருங்கினபோ தும், சீதையின்பொருட்டானல் அவ்வமர்த்தொழிலிற்பின்வாங்குவேனோ.

வேறுநிமித்தமாகப் போர்விளைந்தால் போர்செய்யாதுவிட்டாலும் விட் டிடுவேன்: சீதையின்பொருட்டுநிகழ்ந்த போரையோ ஒருபோதும் விடே னென்கின்றான் இராவணன். இதனாற் போருக்கு அஞ்சிச்சீதையைவிடக்கொ

*யதி மாம் ப்ரதியுந்யேரந்-தேவகந்தர்வதாநவா: | நைவ ஸீதாம் ப்ரதாஸ்யாமி-ஸர்வலோகபயாதபி ||

டுத்தல் செய்யாமையிலுள்ள உறுதியைவிளக்கியபடி. ஏககாலத்தில் சுவர்க்க மத்திமபாதாளமென்ற மூன்று லோகத்திலும் போர்விளைந்தாலும் என்பது, இரண்டாமடியின் கருத்து. பி-ம்:—[1]புரத்தினில். [2]புறத்தினுள்ளார். [3]காதி. [4]செருவிலென்முன்கடுகியே.[5]போது.[6]திறத்தினுகில்,திறத்தன்றுயின்.(எஎச)

கசூ. ஒன்றல பகழி யென்கைக் குரியன வுலகை மெல்லாம்
[1]வென்றன வொருவன் செய்த வினையினும் [2]வலிய வெம்போர்
முன்[3]றரு கென்ற தேவர் [4]முதுகுபுக் [5]கமரின் முன்னஞ்
சென்றன [6]வின்று வந்த குரங்கின்மேற் [7]செல்க லாவோ.

(இ - ள்.) என்கையிலேஇருத்தற்குஉரியனவும் உலகங்களையெல்லாம் வென்றனவும் ஒருவன்செய்த தீவினையைக்காட்டிலும் கொடும்பயனை விளைப் பனவும், போர்க்களத்தில் (எம்முன்னே) 'கொடும்போரைச்செய்க' என்று வந்த தேவர்களின் முதுகிலேபுகுந்து முன்பு சென்றனவுமான ஒன்றல்லாத (மிகப்பல) அம்புகள்,இன்றுவந்துள்ள குரங்குகளின்மீது பாய்ந்துசெல்லமாட் டாவே? (எ - று.)—பி-ம்:—[1]வென்றவன். [2]வெய்ய. [3]தருகின்ற. [4]முதுகிட. [5]உவரியூடு. [6]மீட்டுமிந்தக். [7]செல்கிலாவோ. (எஎரு)

உ0. சூலமேய் தடக்கை யண்ண றானுமோர் குரங்காய்த் [1]தோன்றின்
ஏனுமே விடைவதல்லா லென்[2]செய்வ னென்னைக் கால
[3]வேலைநீர் கடைந்த மேனா ளுலகெலாம் வெருவ வந்த
வாலமோ விழுங்க வென்கை யயின்முகப் பகழி யம்மா.

(இ - ள்.) சூலப்படைபொருந்திய பெரியகைகளையுடைய பெருமையிற் சிறந்தவனான சிவனும் தான் ஒருகுரங்காய்த்தோன்றினானாயின், கூடுமானால் (தோற்றுப்)பின்னிடைந்து போவதல்லாமல் என்னை என்செய்யமாட்டுவான்? என்கையினின்று வெளிப்படுகின்றனவான கூரிய முகத்தையுடைய அம்பு, (அச்சிவனால்) விழுங்கப்படுவதற்கு, யுகாந்தகாலத்தையுண்டாக்கவல்ல கடல் நீரைக் கடைந்தமுற்காலத்து உலகெலாம் அஞ்சும்படி (அக்கடலினிடத்தி னின்று) வெளிப்பட்ட ஆலாகலவிஷமோ? (எ - று.)—தன்கையயில்முகப் பகழி ஆலகாலவிஷத்தினும் கொடியது: ஆகவே, சிவபெருமானாலும் விழுங்க முடியாதது எனக் கூறியவாறாயிற்று. விலக்கணி. பி-ம்:—[1]தோன்றி. [2]செய வல்லானென்னை. [3]வேலையே. (எஎசு)

உக. அறிகிலை போலு மைய வமரெனக் கஞ்சிப் போன
வெறிசுடர் நேமி யான்வந் [1]தெதிர்ப்பினு மென்கை வாளிப்
பொறி[2]படச் சுடர்க ளுயப் போவன [3]போக்கி லாத
மறிகடல் கடைய வந்த மணி[4]கொலாம் [5]பூண மார்பில்.

(இ-ள்.) அமரிலே எனக்கு அஞ்சி ஓடிப்போனவனான (கண்)வெறிக்கும் ஒளியையுடைய சக்கரப்படையையுடையனான திருமால் (மீளவும்வலிமைபெ ற்று) வந்து எதிர்த்தபோதிலும், தீப்பொறிப்பிறக்கவும்(சூரியசந்திரர்களாகிய இரு) சுடர்களும் தேய்ந்துபோகவும் வெளிச்செல்வனவான எல்லையற்ற என் கைவாளிகள்,(அவன்)மார்பிலேபூண்பதற்கு, அலைமடங்குகின்ற பாற்கடலைக் கடையும்போது அங்குத்தோன்றிய கௌத்துவமணியோ? [மணியல்லவே].

என்கைவாளிகள் மார்பைத்தொளைத்து ஊடுருவிச்செல்லும் பாணங்களாகையால், அந்தத்திருமால் மானிடவடிவங்கொண்டதனால்தான் என்செய்யமாட்டுவன்? ஒன்றுஞ்செய்யமாட்டாது தோற்றோடிப்போகவேண்டியதுதானென்றபடி. வாளி கௌஸ்துவமணியன்று என்பது தெரிந்திருந்தும், மணிகொலாம் மார்பில்பூணை என்றது-விலக்கணியாம்: வடநூலார் ப்ரதிஷேதாலங்காரமென்பர். அதுவன்று என்று தெரிந்திருந்தும் மீண்டும் அதுவன்று என்பதுபடச்சொல்லுவது, இவ்வணியினிலக்கணம். இதனால் வாளியின் வன்மை பெறப்படும். கீழ்ச்செய்யுளிலும் இவ்வாறே. கௌஸ்துவமென்பது, திருமால் மார்பிற்பூணும் ஓர்இரத்தினம். பேர்க்கிலாத - போக்கமுடியாதவை யெனினுமாம். பி-ம்:—1எதிர்க்குமேல். 2படர், படு. 3போகிலந்த, போழ்துமுன்னாள். 4கொலோ. 5மார்பிற்பூண. (எஎஎ)

௨௨. 1நோற்றவ னிமையோர் கோமான் குரக்கின 2துருவு கொண்டால்
அற்றைநா 3ளவன்றான் விட்ட வயிற்படை யறுத்து 4மாற்ற
இற்றவான் சிறைய வாகி விழுந்து5போ யெழுந்து 6வீங்காப்
பொற்றை மால் 7வரைக ளோவென் புயநெடும் பொருப்பு மம்மா.

(இ - ள்.) வெற்றிபெற்றவனாகித் தேவர்கட்கெல்லாந்தலைவனான இந்திரன் குரங்கின்உருவத்தைக் கொண்டானென்றால், (மலையைச்சிறகறுக்கத் தொடங்கிய) அந்தக்காலத்தில் அந்தஇந்திரன் விட்ட வச்சிரப்படை யறுத்துப் போக்கியதனால் இற்ற பெரியசிறைகளையுடையனவாகி விழுந்திட்டு(ப் பிறகு) எழுந்து ஓங்குதலில்லாத பொற்றையென்றுவழங்கப்படுகின்ற பெரிய மலைகளோ என்னுடைய புயமாகிய பெரிய மலைகளும்? (எ - று.)—இங்ஙனம் தன் பெருமைதோன்ற இராவணன் கூறினான். அம்மா-இப்படிச்சாமானியமாகக் கருதுவதுபற்றிய வியப்பைக் குறிக்கும்.

என்புயவரை பொற்றைவரைகளல்ல வாதலால், இவற்றை அயிற்படை ஒன்றுஞ் செய்யமாட்டா தென்றவாறு: இதுவும் மேலையவணியே. புயவரையினும் வேறுபாடுதோன்றுதற்கு'பொற்றைவரை'யென்றான்: பொற்றைவரை - பொன்றுதலையுடையவரையென்றும் ஒருபொருள் தோன்ற நின்றது; பொன்றுதல் - அழிதல். முற்காலத்தில் மலைகளெல்லாஞ் சிறகுடையனவாயிருந்து வேண்டுமிடத்துப் பறந்துசென்று பாழாக்கிவருகையில், அக்கொடுமையைப் பொறுக்கமாட்டாதமுனிவர் முதலியோரின் வேண்டுகோளினால் இந்திரன் தனதுவச்சிராயுதத்தைக்கொண்டு அவைகளைச் சிறகறுத்துவிழுந்திடச் செய்தனனென்பது, புராணகதை.பி-ம்:—1கொற்றவாள். 2உருவங்கொண்டான். 3அவனால். 4நீக்கி, நீக்க. 5மேலெழுந்து. 6விக்காப். 7வரையவோ. (எஎஅ)

௨௩.—பொழுதுவிடிதல்.

உள்ளமே தூது செல்ல 1வுயிரனு ருறையு ளூடுங்
2கள்ளமார் மகளிர் 3சோர 4சேமிப்புள் 5கவற்சி 6நீங்கக்
கொள்ளைபூண் டமரர் வைகுங் குன்றையுங் 7கோட்டிற் 8கொண்ட
வெள்ளநீர் வடித்த தென்ன வீங்கிருள் 9விடிந்த தன்றே.

(இ - ள்.) (தமது) மனமே தூதாகச்செல்ல(த் தமது) உயிரையொத்த கணவரின் வாழிடத்தைநோக்கிச் செல்லுகின்ற சோரம்போகின்ற மகளிர் மனஞ்சோரவும், சக்கரவாகப்பறவைகள் (தம்) மனத்துயரம் நீங்கவும், திரளாகக்குவிந்து தேவர்கள் தங்குகின்றமேருமலையையும் உச்சிவரையில்மூடிக்கொண்டிருந்த வெள்ளநீரானது வடிந்தாற்போல மிக்கஇருள்கழிந்துபோயிற்று.

வெள்ளங்கோத்துக்கிடந்தாற்போன்ற இருள் நீங்கிற்றென்றவாறு. பொழுதுவிடிந்துவிட்டதேயென்று சோரம்போன மகளிர் சோரநாயகனைப் பிரிதலின்பொருட்டு வருந்துவ ரென்க. சக்கரவாகம் இரவிற்பிரிந்திருந்து பகலிற்கூடும்பறவை யென்று கூறுவர், கவிஞர். உறையுள்-வாழிடம். கோடு-உச்சி. பி-ம்:—1உயிரன்னார்தம்மை. 2கள்ளமாம். 3துஞ்ச, சோரும். 4நெஞ்சினிற். 5கவற்றி, கவலை. 6வீங்க. 7கோட்டிச். 8கொள்ளும். 9வீய்ந்ததன்றே. ()

உச.—சூரியோதயவருணனை.

இன்னதோர் 1தன்மைத் தாமென் 2றெட்டியும் பார்க்க வஞ்சிப்
பொன்மதிற் புறத்து நாளும் போகின்றான் போர்மேற் கொண்டு
மன்னவர்க் கரசன் வந்தான் வலியமா மென்று தானும்
தொன்னகர் காண்பான் போலக் கதிரவன் றோற்றஞ் செய்தான்.

(இ - ள்.) இப்படிப்பட்டதான ஒரு தன்மையையுடையதாகுமென்று எட்டிப்பார்ப்பதற்கும் அச்சங்கொண்டு (இலங்கையின்) பொன்மயமான மதிற்குஅயலிலேயே நாளுஞ் செல்பவனாகிய (ஆயிரம்) கிரணங்களைக்கொண்ட சூரியன், 'போரைமேற்கொண்டு சக்கரவர்த்தியாகிய இராமன் வந்திட்டான்: ஆகையால், (நாம்) வலிமைபெற்றுள்ளோம்'என்று தானும் பழமையான அந்த இலங்காநகரத்தைக் காண்பவன்போல உதித்தான்; (எ - று.)

சூரியன் இயற்கையாக உதித்ததற்கு ஒருகாரணங்கற்பித்துக் கூறியது-ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1தன்மையாம். 2எட்டுதற்கஞ்சியப்பால்.

உரு.—இராமன் பரிவாரங்களோடு சுவேலமலையினுச்சியி லேறுதல்.

அருந்ததி யனைய நங்கை யவ்வழி யிருந்தா 1ளென்று
பொருந்திய காதல் தூண்டப் பொன்னகர் காண்பான் போலப்
பெருந்துணை வீரர் சுற்றத் தம்பியும் பின்பு செல்ல
இருந்தமான் மலையி னுச்சி யேறினா னிராம னிப்பால்.

(இ - ள்.) இங்கே, அருந்ததியையொத்த கற்பையுடைய மகளிரிற்சிறந்த சீதை அந்தஇலங்கையி லிருந்தா ளென்ற காரணம்பற்றி மனத்துள்ள காதல் தூண்டுவதனால், அழகிய இலங்காநகரைக் காண்பவன்போல,(தனக்குப்)பெருந்துணையாயுள்ள வீரர்கள் சுற்றிவரவும் தம்பி பின்னேவரவும் (தான்) தங்கியிருந்த சுவேலமலையினுச்சியிலே திருமாலாகிய இராமன் ஏறினான்; (எ - று.)

இராமபிரான் சுவேலமலையினுச்சியி லேறினது - தான் போரிடப்போகின்ற இலங்கையினமைப்பு எவ்வாறுஇருக்கின்றது என்பதுமுதலியவற்றைக் காண்பதற்கே யாதலால், 'சீதையிருக்கின்றாளென்றகாதல் தூண்ட அதனைக்

காண்பான்போல' என்றது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இதுவரையில் இராவணன்செயலைச் சொல்லிவந்த கவி இப்போது இராமன்செய்தியைக் கூறுவதால், அதுதோன்ற 'இப்பால்' எனப்பிரித்துக்கூறினர். பி-ம்:—[1]என்னும்.

உகூ.—நான்குகவிகள் - மலைமீதேறும் இராமனை வருணிப்பன.

செரு[1]மலி வீர ரெல்லாஞ் [2]சேர்ந்தனர் மருங்கு செல்ல
இருதிறல் [3]வேந்தர் தாங்கு மிணைநெடுங் கமலக் கையான்
[4]பொருவலி வயவெஞ் சீயம் [5]யாவையும் புலியுஞ் சுற்ற
அருவரை யிவர்வ தாங்கோ ரரியா சனைய னானான்.

(இ-ள்.) போரின்மிக்க வீரர்யாவரும் ஒன்றுசேர்ந்து பக்கங்களிற்செல்ல, வலிமைபொருந்திய (சுக்கிரீவனும் இராட்சசராசனுமாகிய) இரண்டு அரசர்கள் (கைலாகுகொடுத்துத்) தாங்குகின்ற இரண்டாகிய நீண்ட கமலம்போன்ற கையையுடையவனாகிய இராமன், அப்போது,போர்செய்யும் வலிமையையும் வெற்றியையுமுடைய கொடியசிங்கம் பலவும் புலிகளும் (தன்னைச்)சூழ்ந்திருக்க, (ஏறுவதற்கு) அரிய மலையிலேயேறுவதாகியஒப்பற்ற அரசசிங்கத்தையொத்தவனானான்; (எ-று.)—இல்பொருளுவமையணி: தன்மைத்தற்குறிப்பேற்றவணியென்னலுமாம். பி-ம்:—[1]வலி. [2]சேர்ந்துடன். [3]வீரர்தாங்குமிகல். [4]பொருவரும். [5]யானையும்புலியுஞ், புலியினம்யாவுஞ். (எஅஉ)

உஎ. கத[1]மிகுந் திரைத்துப் பொங்குங் கனைகட லுலக மெல்லாம்
[2]புதைவு[3]செய் யிருளிற் [4]பொங்கு [5]மரக்கர்தம் புரமும் பொற்பும்
[6]சிதைவுசெய் குறியைக் காட்டி வடதிசைச் [7]சிகரி யொன்றின்
[8]உதயம தொழியத் தோன்று மொருகரு ஞாயி றொத்தான்.

(இ - ள்.) அலைமிக்குப் பொங்குகின்ற ஒலிக்குந்தன்மையுள்ள சினம்மிக்கதுபோல்தோன்றுகின்ற கடலாற்சூழப்பட்ட உலகமெல்லாம் (தன்னிடத்திற்) புதையுமாறுசெய்கின்ற இருளிலே வலிமைமிகுகின்ற அரக்கருடைய பட்டணமாகிய இலங்கையும் அதன்அழகும் சிதையப்போகின்றகுறியைத் தெரிவித்து, உதயமலைச்சிகரத்திலே யுதயமாதல்தவிர வடதிசையிலுள்ளதொரு மலையில்உதயமாகின்ற ஒருகருஞாயிற்றையும் போன்றான்; (எ - று.)

தான் உதிக்கவேண்டிய இடத்தைவிட்டுச் சூரியன் வேறோரிடத்து உதித்தலும்,செஞ்ஞாயிறு கருஞாயிறுஆவதும் உற்பாதக்குறி யாதலால்,உதயகிரியல்லாத சுவேலமலையினுச்சியிலே இராமபிரான்தோன்றியதை அவ்வாறான உற்பாதம்போலு மென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]கதமிகுத்துரைத்துப்பொங்கும், கதமொத்துக்கணத்திற்றோன்றாக்,கதமிக்குக்கணத்திற்றோன்றாக், கதையொத்துக்கணக்கற்றொன்றாக். [2]புதையச். [3]செய்து. [4]தோன்றும். [5]அரக்கரும். [6]சிதையச். [7]சிகரக்குன்றின், கிரியொன்றின், சிகரந்தன்னில். [8]உதயத்தை. (எஅங)

உஅ. [1]துமிலத்திண் செருவின் வாளிப் பெருமழை சொரியத் தேவர்
[2]விமலத்திண் [3]சிலையை யன்றோர் வெற்பினை மேய வீரன் [..ரர்
[4]அமலத்திண் [5]காமுங் காலும் வதனமுங் கண்ணு மான
[6]கமலத்திண் காடு பூத்த காளமா மேக மொத்தான்.

(இ - ள்.) நெருங்கிச்செய்கின்ற வலிய போரில் அம்புகளாகிய பெரிய மழையைச் சொரியுமாறுதோன்றுகின்ற குற்றமற்ற வலிய வில்லையுடையவனாகி அங்கே ஒருமலையைப்பொருந்திய வீரனாகிய இராமன்,—குற்றமற்ற வலிய கையும் காலும் முகமும் கண்ணுமாகிய திண்ணியதாமரைக்காடுபூத்த காளமாமேகத்தைப் போன்றிருந்தான்; (எ - று.)

வில்லைப்பெற்றிருத்தல் அப்புமழைபொழிதல் மேகத்திற்கு முள்ளது: தாமரைக்காடுபூத்த காளமேக மென்றது-இல்பொருளுவமை. பி-ம்:—1துமிலத்தின். 2விமலத்தின். 3செருவில். 4அமலத்தின். 5கண்ணும்வாயும். 6கமலத்தின். (எ௮௪)

௨௬. மற்றுவ டனைய திண்டோண் மானவன் 1மான மில்லாக்
கற்றுவ டடுக்கி வாரிக் கடலினைக் கடந்த காட்சி
நற்றுவ டனைய வீர 2ரீட்டத்தி 3னடுவ ணின்றான்　[றான்.
பொற்கு வட்4டிடையே தோன்று மரகதக் 5குன்றம் 6போன்

(இ - ள்.) அளவுக்குஅடங்காத கன்மலைகளையடுக்கி நீர்க்கடலைக் கடந்தவரும் காணுதற்குஇனியஅழகிய மலையை யொத்தவருமான வீரரின்கூட்டத்தினிடையே நின்றவனாகிய வலிமைபொருந்திய மலைச்சிகரத்தையொத்த வலியதோள்களையுடைய மனுகுலத்தோன்றலான இராமன்,—பொன்மலைகளினிடையிலேதோன்றுகின்ற மரகதமலையை யொத்திருந்தான்; (எ - று.)—பி-ம்:—1வானத்தோங்கும், மானத்தோங்கும். 2ஈட்டத்துள். 3நடுவு. 4இடையத் 5குவடு. 6போல்வான். (எ௮௫)

௩௦.—மலைமீதேறிய இராமன் இலங்கையைக் காணுதல்.

அணைநெடுங் கடலிற் றோன்ற 1வாறிய சீற்றத் தையன்
பிணைநெடுங் கண்ணி யென்னு 2மின்னுயிர் 3பிரிந்த பின்னைத்
துணைபிரிந் தயரு மன்றிற் சேவலிற் றளங்கு கின்றான்
இணைநெடுங் கமலக் கண்ணா லிலங்கையை 4யெய்தக் கண்டான்.

(இ - ள்.) பெண்மானைப்போன்ற நீண்டகண்களையுடையவளான சீதையென்கின்ற இனியவுயிரைப் பிரிந்தபிறகு (தன்)பேடையைப் பிரிந்துவருந்துகின்ற ஆணன்றிற்பறவைபோலவருந்துபவனும்,நெடியகடலில் அணைதோன்றவே தணிந்தகோபத்தையுடையவனுமாகிய ஸ்ரீராமன்,—(தனது) நீண்ட இரண்டுதாமரைக்கண்களாலும் இலங்காநகரத்தை நன்றாகப் பார்த்தான்.

அன்றிலென்பது - ஒருபறவை. அது, எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாதுஇருக்கும். கணப்பொழுது ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்தாலும் அத்துயரத்தைப்பொறாமல் ஒன்றையொன்று இரண்டுமூன்று தரம் கத்திக்கூவி அதன்பின்பும் தன்துணையைக் கூடாவிடின் உடனே இறந்துபடும். இதனை, வடநூலார் க்ரௌஞ்சமென்பர். மிகவும் நன்குபார்த்தமை விளங்க, 'இணைக்கண்ணாலெய்தக்கண்டான்' என்றார். பி-ம்:—1ஆற்றிய. 2மன். 3துறந்த. 4இனிது. (எ௮௬)

௩௧.—இதுமுதற் பதினேழுகவிகள் - இராமபிரான் இலங்கையின் சிறப்பைத் தான் கண்டு இலக்குமணனுக்கு அறிவித்தலைக் கூறும்.

நந்திரு நகரே யாதி வேறுள நகர்கட் கெல்லாம்
வந்தபே ருவமை கூறி வழுத்துவா னமைந்த காலை
இந்திர னிருக்கை யென்ப ரிலங்கையை யெடுத்துக் காட்டார்
அந்தர [1]முணர்த றேற்று ரருங்கவிப் புலவ ரம்மா.

(இ - ள்.) நமது அழகியநகரம்முதலிய வெவ்வேறுள்ள நகரங்கட்கெல்லாம் பொருத்தமான சிறந்த உவமைப்பொருளைச்சொல்லிப் புகழ்ந்துகூறத் தொடங்கிய காலத்தில், (உவமைப்பொருள்) இந்திரன்வாழுமிடமான அமராவதிநகரென்பர்: இலங்கையை (உவமைப்பொருளாக) எடுத்துக்காட்டமாட்டார்; (ஏனெனின், தேவலோகத்துக்கும் இந்தஇலங்கைக்குமுள்ள) வித்தியாசத்தை அருங்கவிப்புலவர் அறியும்வல்லமையற்றவரானார்கள்; (எ - று.)—அம்மா-கவிஞரின் அறியாமைபற்றிய வியப்பைக்குறிக்கும்.

புலவர் உண்மையையறியவல்லவராயின், இலங்கைநகரம் மிகஅழகியதாதலால், இவ்விலங்கையை யுவமைகூறுவரென்றவாறு. பி-ம்:—[1]அறிதல்.

௩௨. பழுதற விளங்குஞ் செம்பொற் றலத்திடைப் பருதி நாண
முழுதெரி மணியிற் செய்து [1]முடிந்தன [2]முனைவ ராலும்
எழுதரு [3]வகைய [4]வாய [5]மாளிகை யிமையச் செய்க
தொழிறெரி கில்வாற் [6]றங்கட் [7]சுடர்மணிக் கற்றை [8]சுற்றி.

(இ - ள்.) குற்றமறவிளங்குஞ் செம்பொன்னினாலியன்ற தலத்திலே சூரியனும் வெள்கும்படி முழுமையாய்த்தேர்ந்தெடுக்கப்பட்ட மணியினாற் செய்து முடிந்தனவும் தேர்ந்தஅறிவினராலும் எழுதுதற்குஅரியவானதன்மையையுடையனவுமாகப்பொருந்திய மாளிகைகளில் (ஆங்காங்கு) இயைத்திருக்குந் தொழில்கள் சுடரைக்கொண்டமணிகளின் ஒளியாற்சூழப்பெற்று அறியமுடியாமலுள்ளன; (எ - று.)—பொற்றலத்து மணிமாளிகைகளின் இயைப்பு ஒளியால் அறியமுடியாமலுள்ளனவென்க. 'எழுதருதகையவாகிலிமைப்பனவியன்றதன்கண்' என சிலபிரதிகளில்மூன்றுமடி. பி-ம்:—[1]முடித்தன. [2]முனைவனாலும். [3]தகைய. [4]ஆகி. [5]இசையச். [6]எங்கும், ஓங்கும். [7]சுடர்செடுங். [8]சுற்ற.
(௭௮௮)

௩௩. விரிகின்ற [1]கதிர வாகி மிளிர்கின்றமணிகள் [2]வீசச்
சொரிகின்ற சுடரின் சும்மை விசும்புறத் [3]தொடருந் தோற்றம்
அரி[4]யென்ற [5]வெற்றி யாற்றன் மாருதி [6]யமைத்த தியால்
எரிகின்ற [7]தாமே காணிக் கொடிநக ரிருந்த [8]தின்னும்.

(இ-ள்.) விரிகின்ற கிரணங்களையுடையனவாய்ப் பிரகாசிக்கின்ற மணிகள் வெளியேபரவுமாறுசொரிகின்ற ஒளிகளின்தொகுதி ஆகாயத்தையளாவத் தொடர்கின்ற காட்சியானது,—அரியென்றுசொல்லப்படுகின்ற வெற்றியையும் வல்லமையையுமுடைய வாயுகுமாரனான அனுமான் (கொளுத்துமாறு) உண்டாக்கியதீயினால் இந்தக்கொடிகள்கட்டபட்ட இலங்காநகர் இன்னும்எரிகின்றதாகவேயிருந்தது; (நீ) காண்; (எ - று.)

செம்மணிகளினொளி மேலேபரவ இலங்கை விளங்குவது, இன்னும் அனுமான்வைத்த தீ எரிகின்றதுபோலு மென்றவாறு: தன்மைத்தற்குறிப் பேற்றவணி. அரியென்றபலபொருளொரு சொல்-குரங்குஎன்ற பொருளையு முடையது. பி-ம்:—1கதிரது. 2வீசிச். 3தொடர்ந்த, சுடரும். 4வென்ற. 5வென்றி. 6மடுத்த, அளித்த. 7ஆயே. 8இருந்ததோற்றம். (எஅகூ)

௩௪. 1மாசடை 2பரந்த மான மரகதத் 3தலத்து வைத்த
4காசடை சமைந்த 5மாடங் கதிர்த்தழைக் கற்றை சுற்ற
ஆ6சடை 7குன்ற வெள்ளி 8யகன்மனை யன்ன மாகப்
பாசடைப் 9பொய்கை பூத்த பங்கய 10நிகர்ப்ப பாராய்.

(இ - ள்.) மேகங்கள் அடைந்து பரவியுள்ள பெருமைபெற்ற மரகதத் தலத்திலே கட்டப்பட்ட பொன்னினால்நெருக்கமாகச்சமைந்த மேன்மாளிகை கள் [உபரிகைகள்],(தமது)தழைந்த கதிர்க்கற்றை எங்குஞ்சுற்ற,ஆசு [குற்றம்] அடைதல்குன்றுமாறு [இல்லையாகுமாறு] வெள்ளியினாலியன்ற அகன்றஅறை கள்அன்னமாக,பசிய (நீர்க்கொடிகளின்)இலைபரவிய பொய்கைபூத்துள்ள பங் கயம் நிகர்ப்பவற்றைப் பாராய்; (எ - று.)

மரகதத்தலம் பசியஇலைபரவிய பொய்கையையும்,அதனிடையே பொன் னினாலமைந்த பல உபரிகைகள் தாமரைமலர்களையும், உபரிகையின்நடுவில் வெள்ளியினாலமைந்த அறைகள் அன்னப்பறவையையும் ஒத்திருக்குமென்க: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. அடையென்ற சொல்நான்கனுள் முதலி ரண்டும்-அடைந்து என்னும் பொருளன: மூன்றாவது - முதனிலைத்தொழிற் பெயர்: நான்காவது-இலையென்னும் பொருளது. பாசடை-கொடிப்பாசியென் பாருமுளர். பி-ம்:—1மாசடப். 2பரந்துநீண்ட. 3தலத்துமான, மாடஞ்செய்ய. 4காசிடைச், காசட. 5மாடக்கதிரிடைக். மாடங்கதிர்நிறக், மாடக்கதிர்மணிக். 6ஆசறக்.7குயின்ற.8மாடங்கள். 9கமலம்பூத்தபொய்கையை.10நிகர்த்த. (எசுo)

௩௫. தீச்சிகை சிவணுஞ் சோதிச் செம்மணிச் 1செய்த தூணில்
தூச்சுடர் மாட மீண்டித் துறுதலாற் கருமை தோன்றா
மீச்செலு மேக மெல்லாம் விரிசுட 2ரிலங்கை 3வேவக்
காய்ச்சிய விரும்பு மானச் 4சேந்தவை யொளிர்வ [illegible]றய்.

(இ - ள்.) நெருப்பின்கொழுந்தையொத்த ஒளியையுடைய செம்மணி களினாலியன்ற தூண் நாட்டப்பட்ட மாடத்தினின்று பரிசுத்தமானசுடர்நெரு ங்கி நிற்றலால், கருநிறந்தோன்றாதனவாய்: அந்நகரின் மேலேசெல்லும் மேகங் கள்;—விரிகின்ற ஒளியையுடைய இலங்கை வேகையில் பழுக்கக்காய்ச்சிய இரும்புத்தகட்டையொப்பச்செந்நிறத்தனவாய்த்தோன்றுவனபாராய்;(எ-று.)

இலங்கைமேலேசெல்லும்மேகங்கள் செம்மணியொளிபடியப்பெற்றுக் காய்ச்சிய இரும்புத்தகட்டைப் போலும்; பிறிதின்குணம்பெறலணியோடுகல ந்துவந்த தற்குறிப்பேற்றவணி. இச்செய்யுள் சிலபிரதியில் "பிணைமதர்த்த னைய"(சுகூ)என்னும் பாடலின்பின் உள்ளது. பி-ம்:—1செற்றிச்செய்ய, செற் றிச்செய்த.2விழுங்க. 3வேறு.4சேந்தொளிகளுல்லை,சேர்ந்தவையொளிர்வ,சேர்ந் தவையொழிவ. (எகூக)

௩௫. விற்படி திரடோள் வீர நோக்குதி வெங்கண் யானை
அற்படி நிறத்த வேனு மாடகத் தலத்தை [1]யாழக்
கற்படி வயிரத் திண்[2]கா ணகங்களிற் [3]கல்விக் கையாற்
[4]பொற்பொடி [5]மெய்யிற்[6]பூசிப் [7]பொன்மலை யென்னப் போவ.

(இ - ள்.) வில்படிந்துள்ள திரண்டதோளையுடைய வீரனே! [இலட்சுமணனே!] கோபந்தோன்றுகின்ற கண்களையுடைய யானைகள் இருள்படிந்தாற்போன்ற (கரு) நிறத்தையுடையவாயினும்,(பொன்னாலியன்ற தலத்திலே (கட்டப்பட,அந்தப்)பொன்தலத்தை ஆழமாகக் கல்லையொத்து உறுதிபொருந்திய திண்ணிய காலின் நகங்களால் தோண்டி(ஆங்குத்தோன்றிய)பொற்பொடிகளைக்கையால் தம்முடம்பிற்பூசிக்கொண்டு பொன்மலைபோலச்சென்றன (இதனை) நோக்குவாய்; (எ - று.)

பொற்றலத்திற்கட்டப்பட்ட கருநிறயானைகள் ஆழப் பொற்றரைகளைத் தாள்களினுற் கல்லி, அப்பொற்பொடிகளைத் தம்மேற்பூசிக்கொண்டு பொன்மலைபோ லாயின என்றார்: பிறிதின்குணம்பெறலணியோடுவந்த தற்குறிப்பேற்றவணி. தரையைக்காலாற்கல்லுதலும், புழுதிகளை மேலேபூசிக்கொள்ளுதலும் யானைகட்குஇயற்கை. பி-ம்:-[1]ஆர்க்க, ஆழிச். [2]காத்திரங்களில். [3]கல்லிற். [4]பொற்படி. [5]மேலில், என்ன. [6]வீசிச். [7]பொன்வரை. (எகூஉ)

௩௬. [1]பூசல்விற் குமர நோக்காய் புகரற [2]விளங்கும் பொற்பிற்
காசுடைக் [3]கவரிக் கற்றைக் [4]கால்களாற் கதுவு கின்ற
வீசுபொற் [5]கொடிக ளெல்லாம் [6]விசும்பினின் விரிந்த மேகம்
மாசறத் [7]துடைத்தவ் வானம் [8]விளக்குவ [9]போலு மாதோ.

(இ - ள்.) போர்புரிகின்ற வில்லைக்கொண்ட குமரனே!குற்றமறவிளங்குகின்ற அழகையுடைய பொற்காம்பைக்கொண்ட சாமரைத்தொகுதிகளினின்று தோன்றிய காற்றுக்களால் அலைக்கப்படுகின்ற அலைகின்ற அழகிய கொடிகளெல்லாம், விசும்பிலேபாவிய மேகமாகிய மாசுநீங்கும்படி துடைத்து அந்தவானத்தைவிளக்குவன போலும்; (இதனை) நோக்குவாய்; (எ - று.)

உபரிகைகளில் சாமரைவீச, அவற்றினின்று எழும் காற்றுக்கள் மேன்மாளிகையிற்கட்டிய கொடிச்சீலைகளை யலைக்க,அசைகின்ற அவை மேகமாகிய மாசுநீங்க வானத்தைத் துடைப்பதுபோலுமென்க. காசு-பொன்: அதனாலியன்ற காம்புக்கு; ஆகுபெயர். பி-ம்:—[1]பூசலிற். [2]இமைக்கும்பொற்பின், விளங்கும்பொன். [3]கதிரின்கற்றை, கதலிக்கற்றை, கதலிகட்டும். [4]விரல்களால்.[5]பொடிகள்.[6]விசும்பினைக்கவித்த.[7]துடைப்பவோங்கி,துடைத்துமாடம், துயிலும்வானம். [8]விளங்குவ. [9]போல்வ. (எகூங)

௩௮. நூல்படத் [1]தொடர்ந்த பைம்பொற் சித்திர நுனித்த பத்திக்
[2]கோல்படு மனைக ளாய குலமணி யெவையுங் கூட்டிச்
சால்படுத் தரக்கன் [3]மாடத் தனிமணி [4]நடுவட் சார்த்தி
மால்கடற் கிறைவன் பூண்ட மாலை[5]போன் றுளதிம் மூதூர்.

(இ - ள்.) இந்தப்பழைய (இலங்கா) புரியானது,—நூல் இடப்பட்டதுபோல்[கோணாது] தொடர்ந்திருப்பனவும் பைம்பொன்னினாலியன்று சித்

திரத்தொழில் நுண்மையாகஅமைந்தனவும், வரிசையாகவுள்ளனவும், அழகு பொருந்தியனவுமான மனைகளாகிய சிறந்தமணிகள்எல்லாஞ் சேர்க்கப்பெற்று, மேன்மைபொருந்தி, இராவணனது மாடமாகிய ஒப்பற்றநாயகமணி நடுவே சார்த்தப்பெற்றுப் பெருமைபொருந்திய கடலரசன் பூண்ட ஹாரம்போலும்.

மற்றையரக்கர்மாளிகைகள் சுற்றிலுமிருக்கின்ற மணிகள்போலாக இராவணன்மாளிகை நடுநாயகமாக, கடலரசனது இரத்தினஹாரத்தையொத்திருக்கும் இவ்விலங்கை யென்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. கோல்= கோலம்: அழகு. சால்பு-மேன்மை. பி-ம்:—[1]தொடர்ந்து, துரந்த. [2]கால்படு மனைகளெல்லாங் கதிர்மணிக்கூட்டமாக. [3]மாடந். [4]நடுவட்சேர்த்தி, தழுவச்செய்து. [5]ஒன்று. (எகச)

௩௯. நன்னெறி [1]யறிஞ நோக்காய் [2]நளிநெடுந் [3]தெருவி [4]னூப்பண்
பன்மணி மாடப் பத்தி நிழல்படப் படர்வ பண்பால்
தந்நிறந் [5]தெரிகி லாத வொருநிறஞ் [6]சார்கி லாத
வின்னதோர் [7]குலத்த வென்று [8]புலப்படா [9]புரவி யெல்லாம்.

(இ - ள்.) நன்னெறியையுணர்ந்தோனே! பெருமைபொருந்திய பெருந்தெருவின்நடுவில் பலமணிகளினாலியன்ற மேன்மாளிகை வரிசைகளினொளிகள் (தம்மீது) படுமாறு செல்வனவான குதிரைகளெல்லாம்,—இயற்கையாகவுள்ள தமது நிறம் இன்னதென்று தெரியப்பெறாதனவும் ஒருநிறத்தைப் பொருந்தாதனவும் இன்னசாதியைச்சேர்ந்தவையெனத்தெரியாதனவுமாயின: (நீ இதனை) நோக்குவாய்; (எ - று.)

பத்தியான மாளிகைகளில் ஒவ்வொன்று ஒவ்வொருஇரத்தினத்தொகுதியாலியன்றுள்ளன வாதலால், அவ்விலங்கையின் மாளிகையை இருபுறத்துங்கொண்ட தெருவின் நடுவே குதிரைகள் செல்லும்போது, அவ்வம்மணிகளின் நிறம் மேல்படப்பெற்று அவ்வந்நிறமாகக் குதிரைகள் தோன்றுவதால் இந்த நிறத்தை இக்குதிரை இயல்பாகக்கொண்டது என்று எந்தக்குதிரையும் அறியப்படாமலிருப்பதோடு, குதிரைகள் காணப்படும் நிறமன்றி மரகதம்முதலிய வேறுஇரத்தினங்களின் ஒளிபடும்போது இந்த விலங்கு எந்த இனத்தைச் சேர்ந்தன என்று கண்டறிதற்கும் முடிவதில்லை யென்றவாறு: பிறிதின்குணம்பெறலணி. பி-ம்:—[1]அறிஞன். [2]நளிர்நெடுந், நளிபடுந், நனிநெடுந். [3]தேரின். [4]நாணப். [5]தெரிகிலாதது. [6]சார்கிலாதது. [7]நிறத்த. [8]புலப்படாப். [9]இவுளி. ()

௪௦. [1]வீரநீ பாராய் மெல்லென் பளிங்கினால் [2]விளங்கு கின்ற
மாரனு மருளச் செய்த மாளிகை மற்றோர் சோதி
[3]சேர்தலுந் தெரிவ வன்றேற் [4]றெரிகில [5]தெரிந்த காட்சி
நீரினா லியன்ற வென்ன நிழ[6]லெழு கின்ற நீர்மை.

(இ - ள்.) வீரனே! மெல்லியபளிங்குக்கற்களினால் விளங்குகின்றவையும் மன்மதனும்மருளும்படியமைந்தனவுமான மாளிகைகள் (தம்மீது) வேறொன்றன் ஒளி பட்டவுடனே தெரிவனவும் படாமற்போனால் தெரியாதனவுமாகி விளங்குகின்ற காட்சியானது,—நீரினாலியன்றவை இவையென்னும்படி ஒளிதோன்றுகின்றதன்மையை நீ பாராய்; (எ - று.)

பளிங்கினாலியன்ற மாளிகைகள் செல்லும்பொருளின்சாயை மரகதம் மாணிக்கம்முதலியவற்றின்ஒளி இவை தம்மீதுபடும்போது அவற்றை தோற்றுவிக்கின்றன; மற்றைவேளைகளில் சிறிதுந்தெரியப்படமாட்டா: அதனால், அவை நீரினாற்கட்டப்பட்ட மாளிகைகளோ என்னுமாறு தோன்று மென்க. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மாரன் பிறரைக் காமத்தால் மயங்கச்செய்வதன்றித் தான் மயங்காதவனென்பார்'மாரனும்'என்றார்.பளிங்குக்குமென்மை- எளிதிலுடைந்துபோந்தன்மை. பி-ம்:—1ஆரிய. 2விளங்கிமீது. 3சேர்தலுந் தெரிபவன்றே, சேர்வனதெரிப்பவன்றேற், சேர்தலுந்தெளிவதன்றேல். 4தேர் கிலாத். 5சிறந்த, தெளிந்த. 6எழுகின்றதன்றே, எழுகின்றநீர. (எகூகு)

சுகு. கோனிறக் 1குனிவிற் செங்கைக் குமரனே கொழுவெண் டிங்கட்
காணிறக் 2கதிரின் கற்றைச் சுற்றிய 3வனைய காட்சி
வானிறத் 4தராளப் பந்தர் மரகத 5நடுவண் வைத்த
பானிறப் பரவை வைகும் பரமனை 6நிகர்ப்ப பாராய்.

(இ-ள்.) அம்பையும் ஒளியையுடைய வளைந்தவில்லையுங்கொண்ட செவ்வியகையையுடைய குமரனே! கொழுமையுள்ள வெண்ணிறச்சந்திரனுடைய ஒளியைவீசுகின்ற கதிரின்தொகுதியைச் சுற்றினாற்போன்ற தோற்றத்தையுடைய வெண்ணிறமுத்துப்பந்தரினிடையே பதிக்கப்பெற்றுள்ள மரகதக் கற்கள், பால்மயமானகடலிலே தங்குகின்ற பரம்பொருளான திருமாலையொத்திருப்பனவற்றைக் காணாய்; (எ - று.)

சந்திரனுடைய கதிர்க்கற்றையைச் சூழவைத்தாற்போன்ற காட்சியது முத்துப்பந்தரென்க. கோல் - அம்பு. நிறம் - ஒளி. நிறம் கால் கதிர்க்கற்றையென்க. வால்நிறம் - வெண்மையானநிறம். முத்துப்பந்தர் பாற்கடலையும், இடையில்வைத்த மரகதக்கற்கள் திருமாலையும் போலு மென்க. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—1குளிர்வெண். 2கதிர்வெண்டிங்கடெற்றிய, கதிர்வெண்கற்றைதெற்றிய, கதிர்வெண் கற்றைதோற்றிய. 3ஆய. 4தவளப். 5நடுவுள். 6நிகர்த்த. (எகூஎ)

சுஉ. கோளவா வரியே றன்ன குரிசிலே 1கொள்ள நோக்காய்
2நாளவா மின்றோய் மாடத் தும்பரோர் நாகர் 3பாவை
4காளவா றுறையின் வாங்குங் கண்ணடி விசும்பிற் கவ்வி
வாளரா விழுங்கிக் காலு மதியினை 5நிகர்த்த வண்ணம்.

(இ - ள்.) கொல்லுதற்றொழிலை யவாவுகின்ற ஆண்சிங்கத்தையொத்த ஆண்களிற்சிறந்தோனே! நட்சத்திரங்கள்படிகின்ற ஒளிபொருந்திய மேன்மாளிகையினிடத்திலே ஒருதெய்வப்பெண் கருநிறமுடைய நீண்ட உறையினின்றுவெளியெடுத்தகண்ணாடியானது,கொடியஇராகுவென்னும் பாம்பு ஆகாயத்தில் வாயினாற்கவ்விவிழுங்கிப் பிறகுவெளிப்படுத்துகின்ற சந்திரனையொத்திருக்குந்தன்மையை நன்றாகக்காண்பாய்; (எ - று.)

கருநிறமுள்ள உறையிலிருந்துவெளிப்படுங் கண்ணாடி இராகுவின்வாயினின்று வெளிப்படுஞ் சந்திரனைப் போலும்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. காளம் - கறுப்பு. இச்செய்யுள் "வானைவென்றிலே" (கூ௭) என்ற பாடலின்பின்

சிலபிரதியில். நாகர்பாவை-இராவணனுற் கவர்ந்துகொணரப்பட்டவள்: இராவணன் பலதேவமாதரைக் கவர்ந்தமையறிக. பி-ம்:—[1]கொள்கை. [2]நாளவாய்மீன், நாளவாம்மீன். [3]பார்வை. [4]காளவாவுறை, காளவாயுறை, காளவாளுறை. [5]நிகர்ப்பபாராய், நிகர்த்தமாதே. (எகூஅ)

சுகூ. கொற்ற[1]வான் சிலைக்கை வீர கொடி[2]யுடை மாடக் [3]குன்றை
உற்றவான் கழுத்த வான வொட்டகம் [4]வைத்த வும்பர்ச்
செற்றிய மணிக ளீன்ற [5]சுடரினைச் [6]செக்க ராத்தின்
கற்றையந் தளிர்க ளென்னக் [7]கவ்விய [8]நிமிர்வ காணுய்.

(இ - ள்.) வெற்றிபொருந்திய பெரிய வில்லைக் கையிலேகொண்ட வீரனே! கொடியையுடைய குன்றம்போன்ற மாடத்தையெட்டுகின்ற நீண்ட கழுத்தையுடையவான ஒட்டகங்கள், கட்டிவைத்த உபரிகையிலழுத்திய செம்மணிகளினுல்தோன்றிய (செந்நிறச்) சுடரைத் தேமாமரத்தின் தொகுதியான தளிர்களென்றுகருதிக் கவ்வும்பொருட்டு நிமிர்பவற்றைக் காணுய்.

உபரிகையிலழுத்திய செம்மணியொளிகளைத் தேமாமரத்தின் தளிர்களென்று மயங்கியதாகக் கூறியது-மயக்கவணி. செக்கராம்-ஸஹகாரம் என்ற வடசொல்லின் சிதைவு: இது, அத்து இன்என்னுஞ் சாரியைபெற்றுவந்தது. பி-ம்:—[1]வெஞ். [2]மிடை. [3]கொற்றை. [4]மற்றதும்பர், அவற்றதும்பர். [5]சுடர்களை. [6]செக்கரார்ந்த, செய்கையாரக், செக்கரொண்பற், செய்யராகக், செக்கரந்திக், சேகாரத்தின். [7]கவ்வுவ. [8]நிகர்வ. (எகூகூ)

சுசு. வாகைவெஞ் சிலைக்கை வீர மலர்க்குழல் [1] வடிக்கு மாலைத்
தோகைய ரிட்ட [2]தூமத் தகிற்புகை முழுதுஞ் சுற்ற
வேகவெங் களிற்றின் வன்றோல் மெய்யுறப் போர்த்த தையல்
பாகனிற் பொலிந்து தோன்றும் பவளமா ளிகையைப் பாராய்;

(இ - ள்.) வெற்றிமாலையைச்சூடிய கொடிய வில்லைக் கையிலேந்திய வீரனே! மாலைசூடிய மயில்போலுஞ்சாயலையுடையவரானமகளிர் இட்டதும் (தமது) மலர்சூடுங்கூந்தலைப் புலர்த்துகின்றதுமான தூபவர்க்கத்தைச்சேர்ந்த அகிலின் புகையானது முழுதுஞ் சுற்றிக்கொண்டதனுல், வேகமுள்ள கொடிய யானையின் வலியதோலைத் தன்னுடம்பிலே நன்குபோர்த்தவனும் பார்வதீதேவியை யொருபாகத்திற்கொண்டவனுமான சிவபெருமானைப்போல் ஒளிபெற்றுத்தோன்றுகின்ற பவளமாளிகையைப் பாராய்; (எ - று.)

பவளமாளிகை செந்நிறத்திருமேனியனுன சிவபிரானையும், அம்மாளிகையின் வெளியிடமெங்குஞ்சூழ்ந்த கருநிறப்புகை-அப்பிரான் போர்த்துக்கொண்டுள்ள யானைத்தோலையும் போலு மென்க. வடித்தல் - நீரைவற்றச்செய்தல். பி-ம்:—[1]வடிவமானத், புலர்த்தமாலைத். [2]தூய. (அ௦௦)

சுரு. காவலன் பயந்த வீரக் கார்முகக் களிறே கற்ற
தேவர்தந் தச்ச னிலக் [1]காசினுற் றிருந்தச் செய்தது
[2]ஈவது தெரியா வுள்ளத் திராக்கத ரீட்டி வைத்த
பாவபண் டார மன்ன செய்குன்றம் பலவும் [3]பாராய்.

(இ - ள்.) தசரதன்பெற்ற வீரத்தைக்கொண்ட வில்லையேந்திய ஆண் யானைபோன்றவனே! (சிற்ப) நூலைத்தேர்ந்த தெய்வத்தச்சனானவிசுவகருமா வினால்நீலவரதனங்களாற் செய்தனவும், ஈதல்தொழிலையறியாத மனத்தை யுடையஇராட்சசர்கள் சேர்த்துவைத்த பாவத்தின்பொக்கசம்போலவுள்ளன வுமான செய்குன்றம்பலவற்றையும் பாராய்; (எ - று.)

தெய்வத்தச்சன் நீலமணிகொண்டுசெய்தசெய்குன்றம்அரக்கரின் பாவப் பண்டாரம்போலு மென்கின்றான்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி.பாவத்தை நீலநிறமாகக்கூறுவது-கவிசமயம். இலங்கையை நிருமித்தவன் தெய்வத்தச்ச னாதலால், 'தேவர்தந்தச்சன்திருந்தச்செய்தது செய்குன்றம்' என்றார். பி-ம்:- [1]கல்வினால். [2]யாவதும், யாவரும். [3]காணாய். (அ௦௧)

௬௬. பிணை[1]மதர்த் தனைய நோக்கம் பாழ்படப் பிடியுண் டன்பில்
[2]துணைவனைப் பிரிந்து போந்து மருங்கெனத் துவளு [3]முள்ளம்
பணமயிர்ப் பெய்து மல்குற் பாவையர் பருவ நோக்குங்
கணமயிற் [4]குழுவி னம்மைக் காண்கின்றார் தம்மைக் காணாய்.

(இ - ள்.) பெண்மானின் மதர்த்த பார்வையைப்போன்ற பார்வையின் அழகு பாழ்படும்படி (அரக்கரால்) பிடிக்கப்பட்டு, (தமது) அன்பிற்குஇடனான கணவனைபிரிந்துவந்து,தமது இடைபோலத்துவளுகின்ற மனமும் பாம்பின் படம்போன்ற அல்குலையுமுடைய (தேவ) மாதர் கார்காலத்திலே(மேகத்தை) நோக்கும் திரண்டமயிற்கூட்டம்போல் நம்மைக்காண்பவரைக்காணாய்;(எ-று.)

அயிர்ப்பு எய்தும் - சந்தேகத்தையடைகின்ற: ஒப்பாகின்ற என்றபடி. இராமலக்ஷ்மணரைக்காண்கின்ற பாவையர்க்குப் பருவம்நோக்கும் மயிற்குழு உவமை.காரின்வரவு மயிற்குழாத்துக்குக் களிப்பைத் தருவதாதல்போல, இவ் விராமலட்சுமணரின்வரவு அந்தத்தேவமாதர்க்குச் சிறைத்துன்பத்தை நீக்கிக் களிப்பைத்தருமென்று காண்க. பி-ம்:-[1]மதத்தனைய. [2]துணைவரை. [3]உள்ளப். [4]குழாம்போல். (அ௦௨)

௬௭. [1]நாழ்மலர்த் தெரியல் [2]வீர நம்[3]படை காண வானத்து
யாழ்மொழித் [4]தெரிவை மாரு மைந்தரு மேறு கின்றார்
வாழ்வினிச் [5]சமைந்த தன்றே யென்றுமா நகரை யெல்லாம்
பாழ்படுத் திரியல் போவா ரொக்கின்ற பரிசு பாராய்.

(இ - ள்.) அன்றலர்ந்தமலர்மாலையையணிந்த வீரனே! நமதுசேனையைக் காணுமாறு யாழ்போலும்பேச்சையுடைய தேவமகளிரும் தேவமைந்தரும், வானத்திலேறுபவர்களாய், இனி நமக்குநல்வாழ்வு உண்டாயிட்டதன்றோ என்று சொல்லிப் பெரியஇலங்கைநகரையெல்லாம் பாழ்படுத்திவிட்டு ஓடிப் போகின்றவரையொத்திருக்கின்ற தன்மையைப் பார்; (எ - று.)

நாள்என்றசொல் ளகரத்துக்கு ழகரம்பெற்றுவந்தது: எதுகைநோக்கி. இலங்கையிலிருக்குந்தேவசாதியர் வானத்திலேறிப் படையைப்பார்த்தலால், இங்ஙனம் வருணித்துக்கூறுகின்றான்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]நாண்மலர். [2]மார்ப. [3]பலங்காண்பான்மாடத்து, வலிகாண்பான்மாடத்து. [4]பாவைமாரும். [5]சமைந்ததென்றே. (அ௦௩)

௪அ.—இராமன் இலங்கையின்அதிசயத்தைக்காட்டிக்கொண்டிருக்கையில், இராவணன் வானரசேனையைக்காணக் கோபுரத்தின்மீது ஏறுதல்.

[1]இன்னவா றிலங்கை தன்னை யிளையவற் கிராமன் காட்டிச்
சொன்னவா சொல்லா [2]வண்ண மதிசயந் தோன்றுங் காலை
யன்னமா [3]நகரின் வேந்த [4]னரிக்குலப் பெருமை காண்பான்
சென்னிவான் [5]றடவுஞ் செம்பொற் [6]கோபுரத் [7]தும்பர்ச் [8]சேர்ந்தான்.

(இ - ள்.) இந்தவிதமாக இலங்காபுரியை இராமன் இளையவனாகிய இலட்சுமணனுக்குக் காட்டிக்கொண்டு சொன்னவகையை மீண்டுஞ்சொல் லாதபடி அதிசயம் மனத்தில் தோன்றிக்கொண்டிருக்கையில் [வெவ்வேறான அதிசயந்தோன்ற இலங்கையைக் கண்டுகொண்டிருக்கையில்] அந்த இலங்கா புரத்துக்குஅரசனாகிய இராவணன் குரங்குக்கூட்டத்தின்மிகுதியைக் காணும் பொருட்டு, உச்சியானது வானத்தையெட்டுகின்ற செம்பொன்னினாலியன்ற கோபுரத்தின்மீது சேர்ந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]இன்னவா. [2]முன்னம். [3]நகரி. [4]அரிகுலப். [5]தடவுந்தோற்றக், தடவுகின்ற. [6]கோபுரங். [7]தென்பாற். [8]சென்றான். (அ௦௪)

இலங்கைகாண்படலம்முற்றிற்று.

---

## ௧௦-ஆவது இராவணன் வானரத்தானைகாண்படலம்.

(கோபுரத்தின்மீதுஏறிய) இராவணன் வானரசேனையைக் கண்டதைத் தெரிவிக்கும் படலமென்பது, பொருள். இராவணன்றானைகாண்படலம் என்று இப்படலத்துக்குப்பெயர் அச்சிட்டபிரதிகளிலும், சிலஏட்டுப்பிரதியி லும் உள்ளது. சிலபிரதியில் கோபுரப்படலம் என்று இப்படலத்துக்குப் பெயர் காண்கின்றது.

இராவணன்பரிவாரங்களோடு இலங்கையின் உத்தரவாயிலின் கோபுரத் தின்மீதுஏறி, சுவேலபருவதத்திலுள்ள இராமபிரானுடைய சேனையின்பெருக் கைக் கண்டு, முன்னர் ஒற்றுபோய்வந்த சாரணற் சேனாவீரர்களுடைய திறத் தையும் பெயரையும் கேட்டமை இதனுட்சொல்லப்படும்.

வேறு.

௧.—இராவணன் கோபுரத்தின்மீதுநிற்றலின்வருணனை இதுமுதற் பதினறுகவிகளிற் கூறப்படுகின்றது.

[1]கவடு கப் [2]பொருத காய்களி றன்னான்
அவள் [3]து யக்கின் [4]மலரம்புற வெம்புஞ்
சுவடுடைப் பொருவி [5]றோள்கொ டனேகங்
குவடு டைத்தனியொர் குன்றென நின்றான்.

(இ-ள்.) (தன்னைக்கட்டிய)மரக்கிளை முறிந்திடும்படி மாறுபட்ட கோபிக் கின்ற ஆண்யானையை யொத்தவனான இராவணன்,—அந்தச்சீதாபிராட்டியி

ளிடம்வைத்த ஆசையினால் (மன்மதனுடைய) புஷ்பபாணங்கள் தாக்க வருந்துகின்ற அடையாளத்தைப்பெற்ற ஒப்பற்ற தோள்களைக்கொண்டு, அனேகஞ்சிகரங்களையுடைய ஒப்பற்ற ஒருமலைபோலநின்றான்; (எ - று.)

ஒருமரக்கிளையிற்கட்டப்பெற்ற களிறு உவமையாகாதெனக் கொண்டு, இராவணனுக்கு, கவடுகப்பொருதகளிற்றை யுவமைகூறினார். அனேகந்தோள்கள் அனேகங்கவடுகள்போன்றிருக்க, இராவணன் குன்றினை யொப்பநின்றானென்க. பி-ம்:—[1]கவடுறப். சுவடுகப். [2]பொருவு. [3]துவக்கின். [4]மலரப்புற. [5]தோளினனேகக், தோளினனேகங், தோளொடனேகக். (அ௦௫)

உ. பொலிந்த [1]தாங்குமிகு போரெனவோடும்
[2]மலிந்த நங்கை யெழிலால் [3]வலிநாளும்
மெலிந்த தோள்கள் வடமேருவின் மேலும்
[4]வலிந்து செல்ல மிசைசெல்லு மனத்தான்.

(இ-ள்.) (அங்ஙனம்நின்ற இராவணன்),—அங்கே பெரும்போர் தோன்றிவிட்டதென்றமாத்திரத்தில், சீதாபிராட்டியின்மிக்கஅழகால் நாளுக்குநாள் வலிமைமெலிந்ததோள்கள் வடமேருவைக்காட்டிலும் வலிமைபெற்றுவளர்ந்து செல்ல, (அப்போரின்மீது)செல்லுகின்றமனத்தையுடையவனானான்; (எ-று.)—போரெனில் தோள்பூரித்தல், வீரர்க்கு இயல்பு. பி-ம்:-[1]ஆகுமிது,ஆமினிது. [2]நலிந்த. [3]மிக. [4]வலிந்துசெல்லுமிசை, மலிந்துவெல்லமிசை. (அ௦௬)

ங. செம்பொன் [1]மௌலி [2]சிகரங்க [3]டயங்க
அம்பொன் மேருவரை கோபுர மாக
வெம்பு [4]காலினை விழுங்கிட [5]மேனாள்
உம்பர் [6]மீநிமிர் வாசுகி யொத்தான்.

(இ - ள்.) செம்பொன்னினாலியன்ற கலசங்களைக்கொண்டஉச்சிகள் சிகரம்போல் விளங்க, கோபுரம் அழகியபொன்மேருமலை யாக,(தன்னோடு) மாறுபட்டவாயுபகவானைவெல்லுமாறு முற்காலத்தில்(மேருமலையின்)சிகரங்களின் மீதுஉயர்ந்துகவிந்த வாசுகியையொத்தான்; (எ-று.)—மந்தரம் மேரு இமயம் என்பவற்றை அபேதமாகக்கூறுவதுபோல, ஆதிசேஷனையும் வாசுகியையும் அபேதமாகக்கொண்டுகூறினார். செம்பொன்-ஆகுபெயரால், செம்பொன்னினாலியன்ற கலசங்களைக்காட்டிற்று. உம்பர்-மேலிடம். பி-ம்:-[1]மௌலிய,மௌலிகொள். [2]சிரங்கள். [3]தயங்கும். [4]காலை, காலனை. [5]மேன்மேல். [6]மேலும். (அ௦எ)

ச. தொக்க பூதமவை [1]யைந்தொடு [2]துன்னிட்டு
ஒக்க நின்றதிசை யொன்பதொடொன்றும்
பக்க [3]முந்நிழல் [4]பரப்பி வியப்பால்
[5]மிக்கு நின்றகுடை மீது விளங்க.

(இ - ள்.) ஒன்றுகூடிய (மண் நீர் தீ காற்று வான் என நின்ற) பஞ்சபூதங்களோடும் நெருங்கி ஒன்றுபட்டுள்ள பத்துத்திசைகளிலும் அவற்றின்பக்கங்களிலும் நிழலைப்பரப்பி, ஆச்சரியப்படும்படி விசாலமாகநின்ற குடை

(தலை) மீது விளங்கவும்,—(எ-று.)—இதுமுதல் பதினாருங்கவிவரையில் ஒவ்வொருசெய்யுளின்இறுதியிலும்வரும் செயவெனெச்சங்கள் அடுக்கி, பதினேழாங்கவியிலுள்ள 'நின்றான்' என்ற முற்றோடு இயையும். பி-ம்-:—[1]ஐந்தையும். [2]தூசுற்று, துள்ளிட்டு, மெய்யுற்று. [3]முன்னிழல். [4]பரப்பியதிப்பால், பரப்பியதிப்பார். [5]மிக்க. (அoஅ)

௫. கைத்த ருங்கவரி வீசிய [1]காலால்
நெய்த்தி ருண்[2]டுயரு நீள்வரை மீதில்
தத்தி [3]வீழருவி யின்[4]றிரள் [5]சால
உத்த ரீகநெடு மார்பி னுலாவ.

(இ - ள்.) கையினால் ஏந்தப்பெற்ற சாமரம் வீசிய காற்றால், நெய்ப்புடனே இருண்டிறத்தையடைந்து உயர்ந்துள்ள நீண்ட மலைமீது பாய்ந்துவீழ்கின்ற அருவியின்திரளின்தன்மை நிரம்புமாறு உத்தரீயம் நீண்டமார்பிலே யுலாவவும்,—(எ - று.)—மார்புக்கு மலையும், உத்தரீயத்துக்கு அருவியும் உவமை. பி-ம்:-[1]காலின், கால்வாய். [2]உயர. [3]வீழுமருவித்.[4]திரை. [5]சாலும்,சால்முத்து.

௬. [1]வான கத்தினி லுருப்பசி வாசத்
[2]தேன கத்தரு திலோத்தமை செவ்வாய்
[3]ஏன கைக்குல வரம்பையர் யாருஞ்
சான கிக்கழ[4]கு தந்தயல் சார.

(இ - ள்.) வானகத்தினிலுள்ள உருப்பசியும், வாசனையும் தேனையும் தன்னுட்கொண்ட அருமையான திலோத்தமையும்,செந்நிறவாயிலேயேய்ந்த புன்சிரிப்பையுடைய திரளான (மற்றுமுள்ள) தெய்வமாதர்யாவரும் சானகிப்பிராட்டியாருக்குஅழகையுண்டாக்கிக்கொண்டு(தனது) அருகிலேசேர்ந்திருக்கவும்,—(எ - று.)

உருப்பசிமுதலியோர் நர்த்தனஞ்செய்யும்பொருட்டு இராவணனுடைய அருகே சேர்ந்திருக்கின்றனரென்க. மணம்பொருந்தியஉடம்போடு இன்பத்தைக்கொண்டவ ளென்பார் 'வாசத்தேனகத்துத் திலோத்தமை' என்றார். அழகிற்பேர்பெற்ற உருப் பசிமுதலியோரைக் காணுமிடத்து ஏற்றத்தேவமாதரின்அழகினும் சீதையின்அழகு விஞ்சியிருப்பது விளங்குமாறு ல் 'சானகிக் கழகுதந்தயல்சார'என்றது. மூன்றாமடியில் ஏல் நகை என்றுபிரிக்க. பி-ம்:—[1] வானகத்த, வானகத்தன, வானகத்தரும், வானகத்தமுது, கானகத்துறும். [2]தேனகத்திரு, தேனகைத்தரு, தேனகைத்தன. [3]மேனகைக்குயில மென்மயிலாரும், மேனகைக்குயிலின்மென்மையர்யாரும், மேனகைக்குலவரம்பையர் மேலாம், ஏனகைக்குயிலரம்பையர்யாரும். [4]உருத்து. (அகo)

எ. வீழி யின்கனி யிதழ்ப்பணை மென்றோள்
ஆழி வந்த வரமங்கைய ரைஞ்ஞூற்
[1]றேழி ரண்டினி னிரண்டு பயின்றோர்
சூழி ரண்டு [2]புடையும் முறைசுற்ற.

(இ - ள்.) வீழிப்பழத்தின்கனிபோன்ற வாயிதழையும் மூங்கிலைப்போன்ற மெல்லியதோள்களையுமுடையவராய்த் திருப்பாற்கடலினின்று தோன்

றிய தெய்வமங்கையர் பதினாலாயிரவர் (பாடலிற்)பயின்றவர் சூழ்ந்த இரண்டு பக்கத்திலும் முறையே சுற்றிநிற்கவும்,—(எ - று.)

ஐஞ்ஞூற்றேழ்-ஐந்நூற்றினாற்பெருக்கியஏழ்: எனவே, மூவாயிரத்தைஞ்ஞூறு: அவற்றிற்குஇரண்டு-ஏழாயிரம்: அத்தொகைக்குஇரண்டு-பதினாலாயிரம். பி - ம்:—[1]எழிரண்டினிரட்டியரன்பால், எழிரண்டினினதிரட்டிபயின்றார், எழினிரண்டினிரட்டிபயின்றார், எழிரண்டினிரட்டியினின்றோர். [2]புறமும்மயல், புடைகொண்டனர். (அகக)

அ. முழைபடிந்தபிறை முள்ளெயி றுள்வாள்
இழைபடிந்த [1]விள வெண்ணில வீனக்
குழை[2]படிந்தவொரு குன்றின் முழங்கா
மழைபடிந்தனைய தொங்கல் வயங்க.

(இ - ள்.) குகையிற்படிந்திருக்கின்ற பிறைச்சந்திரன்போன்று (வாயிலிருக்கும்) கூர்மையான கோரப்பற்கள் ஒண்மையான ஒளியை ஆபரணங்களினின்றுதோன்றுகின்ற வெண்ணிலவொளியுடனே வீசவும், குண்டலங்களையணிந்தவொரு குன்றிலே முழங்குதலில்லாத மழைபடிந்தாற்போன்று (கருங்குவளைத்)தொங்கல் விளங்கவும்,—(எ - று.) குண்டலங்களை யணிந்த குன்று-தோள். பி-ம்:—[1]அவிர். [2]படிந்தனைய. (அகஉ)

கூ. [1]ஓத [2]நூல்கள் [3]செவியின்வழி [4]புள்ளுஞ்
சீதை சீதை[5]யென வாருயிர் தேய
நாத வீணையிசை [6]நாரதர் பாட
வேத [7]கீதவமிழ் தள்ளி விழுங்க.

(இ - ள்.) (அரிய) நூற்பொருளை (அறிஞர்காதினிடத்து ஓதுவும்) மனம் சீதைசீதையென்றுகருதியவண்ணம் அருமையான உயிர் குறையவும், சாமவேதமாகிய அமிழ்தத்தை முகந்துபருகுமாறு ஒலியுள்ள வீணையினிசையோடு நாரதமுனிவர் பாடவும்,—(எ - று.)

அறிஞர் நூற்பொருளையோதவும், சாமவேதப்பிரியனென்ற காரணத்தால் நாரதமுனிவர் வீணுகானத்தோடு சேர்ந்து சாமகீதப்பாடலைப் பலருங்கேட்க உரத்துப்பாடவும் சீதையின்நினைவேநினைவாகவுள்ள அந்த இராவணனுடைய செவிகளில் அவைவிழவில்லை யென்க. பி-ம்:—[1]ஓதை, ஓது. [2]நூல்கொள். [3]வழியின்செவி. [4]உள்ளும். [5]எனவும். [6]நாரதனேர்தம். [7]கீதமுங். (அகங)

க0. வெங்[1]கரத்தரயில் வாளினர் [2]வில்லோர்
[3]சங்கரற்கும்வலி [4]சாய்கில் [5]வலத்தோர்
[6]அங்கரக்கர்சத கோடி யமைந்தோர்
பொங்[7]கரத்த விழியோர் புடைசூழ.

(இ - ள்.) கொடியகையையுடையவரும் கூர்மையான வாளையேந்தினவரும் வில்லையேந்தியவரும் சிவபெருமானுக்கும் வலிமைகுறைதலில்லாத மிக்க பலம்படைத்தவரும் சதகோடியென்னும் எண்ணையுடையவருமான இராவணனதுஉடற்காவலாளர் அவ்விடத்து இரத்தம்பொங்குகின்ற விழியினை

யுடையராய்ப் பக்கத்திலே சூழ்ந்துவரவும்,—(எ - று.)— அங்கரக்கர் - அங்க ரக்ஷர்என்றவடசொல்லின்திரிபு. பி-ம்:-1கரத்தயில, கரத்தயிலர், கரத்தியைய. 2வேகச். 3கிங்கரற்கும். 4சார்வில், கேடில். 5சலத்தோர், தவத்தோர், மனத் தோர். 6அங்கமைச்சர். 7அரக்குவிழியோர், அரக்கர்மிடலோர். (௮௧௪)

கக. கல்வி லங்கை 1யுலகங் கவர்கிற்போர்
நல்வி லங்கை முதலோர் நவையில்லோர்
2சொல்வி லங்கர் சதகோடி தொடர்ந்தோர்
வில்வி லங்குபடை யோர்புடை விம்ம.

(இ - ள்.) கல்லுவதானல் அழகிய கையிலே உலகங்களைக் கவர்ந்தெடுக்க வல்லவர்களும், அழகியஇலங்காபுரிதோன்றினநாள்தொட்டு முதன்மைபெற் றவரும், குற்றமற்றவரும், கணக்கிட்டுச்சொல்லுமிடத்து நூறுகோடியென் னும்அளவு அமைந்தவருமான யக்கர் வில்லாகியவிளங்குகின்ற ஆயுதத்தை யுடையவராய்ப் பக்கத்திலே மிக்கிருக்கவும்,—(எ - று.)

யக்ஷரென்றவடசொல், யக்கர் அக்கர் அங்கர் என முறையே திரிந்து வருமென்க. இனி, அங்கர் - நாட்டினுறுப்பான படையைச்சார்ந்தவரெனினு மாம். இச்செய்யுளில் திரிபென்னுஞ்சொல்லணி காண்க. கீழ்ச்செய்யுளிலும் இது காணலாம். பி-ம்:—1உலகங்கள்கடப்போர். 2சொல்விலங்கொர், சொல் விலங்கு, சொல்விலங்கை. (௮௧௫)

கஉ. பாரி 1யங்குநர் விசும்பு 2பரந்தோர்
வாரி யங்கு மழையின்3குரன் மானும்
4பேரி யங்கண் முருடாகுளி 5பெட்குந்
தூரி யங்6கடலி னின்று துவைப்ப.

(இ - ள்.) பூமியிற்சஞ்சரிப்பவரும் ஆகாயத்திற்பரந்திருப்பவருமாகிய அனேகர், ஜலத்துடனேசஞ்சரிக்கின்றமேகத்தின் குரலையொத்த பேரியங்க ளும் முருடும் ஆகுளியும்என்றவிரும்பத்தக்க வாச்சியங்கள் கடலைப்போலநின் று ஒலிக்கவும்,—(எ - று.)—பி-ம்:—1இயங்கினர், இயங்கிய. 2படர்ந்தோர். 3குரன்மானப், குலமென்னப். 4பேரியங்கு, பேரியேங்கு. 5பெட்பின், பெட் புக். 6கடைநின்று, கடையினின்று. (௮௧௬)

கங. நஞ்சு மஞ்சுவிழி நாகியர் 1நாண
வஞ்சி யஞ்சுமிடை 2மங்கையர் வானத்து
அஞ்சொ 3லின்சுவை யரம்பைய 4ரோடும்
5பஞ்ச மஞ்சிவ ணுமின்னிசை பாட.

(இ - ள்.) விஷமும்அஞ்சுகின்ற விழியையுடையநாகஸ்திரீகளும் நாணு மாறுள்ள வஞ்சிக்கொடியையொத்த இடையையுடைய இந்தப்பூலோகத்து மங்கையருடனே அழகியசொல்லின்இன்சுவையையுடைய வானநாட்டவரான அரம்பையரும்,—பஞ்சமமென்னும்ஸ்வரத்தையொத்த இனியஇசையைப் பாட வும்,—(எ - று.)—பி-ம்:—1நாகர், நாணி. 2விஞ்சையர், வஞ்சியர். 3இஞ்சொ லின், 4ஆடிப். 5பஞ்சரஞ்சிவணுமின்னிசைபாட, விஞ்சைமங்கையர்மின்னிசை பாட, பஞ்சமஞ்சினமணி னின்னிசைபாட. (௮௧௭)

௧௪. நஞ்சு [1]கக்கியெரி கண்ணினர் [2]நாமக்
கஞ்சு கத்தர் [3]கதைபற்றிய கையர்
மஞ்சு கக்குமுறு சொல்லினர் [4]வல்வாய்க்
கிஞ்சு கக்கிரி யொத்தனர் சுற்ற.

(இ - ள்.) விஷத்தை வெளிப்படுத்திக்கொண்டு எரியாநின்ற கண்களையுடையவரும், கையில் தடியைக்கொண்டவரும், மேகமும் உதிர்ந்துவிழும்படி குமுறியொலிக்கின்ற சொல்லையுடையவரும், வலியவாயாகிய முருக்கமலரையுடையவரும், மலைபோன்றதோற்றமுடையவருமான கஞ்சுகியரென்றுபேர் பூண்டவர்,—சுற்றிக்கொண்டேயிருப்பவும்,—(எ-று.)

இந்தக்கஞ்சுகியர் கையிற் பிரம்புகொண்டு எம்மருங்கும் சுற்றிக்கூட்டத்தைவிலக்குபவரான சட்டைபூண்ட சேவகரென்க. சட்டைபூண்டமைபற்றிக் கஞ்சுகியரெனப்படுதலின் 'நாமக்கஞ்சுகத்தர்' என்றும், மாமிசத்தின் இரத்தந்தோய்ந்த வாயையுடைமையால் 'வல்வாய்க்கிஞ்சுகத்தர்' என்றும், யாவரையும் விலகுமாறு அதட்டுபவராதலின் 'மஞ்சுகக்குமுறுசொல்லினர்' என்றும் கூறினர். சிலபிரதிகளில் இச்செய்யுள் "கூயுரைப்ப" என்ற அடுத்தசெய்யுளுக்குப் பின் உள்ளது. பி-ம்:—[1]கக்கும். [2]நாணுக், நாணு. [3]கசை. [4]வல்வாய்ச்சிஞ்சுகத்தின்விசையோர்திசைசெல்ல, வல்வாய்த்திஞ்சுகத்தின்மிசையோர்திசைசெல்ல, வல்வாய்க்கிஞ்சுகத்திகிரியொத்தனர்சுற்ற. (௮௧௮)

௧௫. கூ[1]யு ரைப்ப குலமால் வரை[2]யேனும்
[3]சாயு ரைப்பரிய வாய தடந்தோள்
வாயு ரைத்த கலவைக்[4]களி வாசம்
வேயு ரைப்பதென [5]வந்து விளம்ப.

(இ-ள்.) (யாவரும்) உரத்தகுரலோடு (உவமையாதற்குஏற்றனஎன்று) உரைப்பனவான அஷ்டகுலாசலமேயாயினும் உவமைகூறுவதற்குஅரியனவான பெரியதோள்களினிடங்களிற் பூசப்பெற்ற கலவைச்சாந்தின் செழிப்புள்ள நறுமணமே (இராவணன் வருகின்றானென்பதை) ஒற்றுஉரைப்பது போலவீசித் தெரிவிக்கவும்,—(எ-று.)—தோள்வாய், வாய்-ஏழனுருபு. சாய் = சாயல்; ஒப்பு. பி-ம்:-[1]உரைப்பு. [2]ஏயும், என்னும், பேனும். [3]தாயுரைப்பரியது. [4]தனி. [5]எங்கும்விளம்ப. (௮௧௯)

௧௬. வேத்தி ரத்த ரெரி[1]வீசி விழிக்கும்
நேத்தி ரத்த [2]ரிறைநின் றுழி யில்லாக்
காத்தி ரத்தர்மனை காவல் விரும்புஞ்
சூத்தி ரத்தர் பதினாயிரர் சுற்ற.

(இ-ள்.) (கையிற்)பிரம்பையுடையவர்களும் நெருப்பைவெளிப்புறப்படவிட்டுக்கொண்டுவிழிக்கின்ற கண்களையுடையவர்களும் ஒருநொடிப்பொழுதாவது நின்றவிடத்துநில்லாத உடம்பையுடையவரும் மனைக்காவலைவிரும்பிச் செய்கின்றசூட்சுமத்தன்மையமைந்தவருமானசேவகர் பதினாயிரர்(காவலாகச்) சுற்றிக்கொண்டேயிருக்கவும்,—(எ-று.)—பி-ம்:—[1]வீச, வீசு. [2]இறை. (௮௨௦)

கஎ.—இராமபிரானை இராவணன் காணுதல்.

1தோர ணத்தின்மணி வாயின் மிசைச்சூல்
2நீர ணைத்தமுகி லாமென 3நின்றான்
4ஆர ணத்தமுதை யம்மறை 5தேடும்
கார ணத்தை நிமிர் 6கண்கொடு கண்டான்.

(இ-ள்.) தோரணமெனப்படுகின்ற மணிவாயிலின் மேலிடத்திலே கருக்கொண்டதெனப்படுகின்ற நீர்கொண்ட முகில்போலுமென்னுமாறு நின்றவனாகிய இராவணன், வேதத்தின்சாரமானபொருளாயிருப்பவனும் அவ்வேதங்களால்தேடப்படுகின்ற காரணப்பொருளாயிருப்பவனுமான இராமபிரானை நிமிர்ந்துபார்க்கின்ற கண்ணினாற் காணலானான்; (எ - று.)

வேதாந்தங்கள் பற்பலதேவர்களைப்பற்றிக்கூறுவதாயினும் பரம்பொருளென்றுதேர்ந்தெடுப்பது திருமாலையே யாதலால், 'ஆரணத்தமுதை' என்றார். பி-ம்:—1தோரணத்த. 2நீரணைத்து, நீரணத்த. 3நின்ற. 4ஆரணத்தையரியை, ஆரணத்தமறையையரி. 5சொல்லும், நேடும். 6கண்ணெதிர். (அ௨௬)

கஅ.—அப்போது இராவணன் கோபம்மிக, துர்நிமித்தந் தோன்றுதல்.

மடித்த 1வாயினன் வயங்செரி வந்து
பொடித்2தெ ழுந்த3விழி யன்னது போழ்தின்
இடித்த 4வன்றிசை 5யெரிந்தது நெஞ்சம்
துடித்த 6கண்ணினொ 7டிடத்திர டோள்கள்.

(இ - ள்.) (கண்டதும்),—(கோபத்தால்) உதட்டைமடித்துக் கவ்விய வாயனான இராவணனுடைய கண்களினின்று கொழுந்துவிட்டொளிர்கின்ற அக்கினியானது தோன்றிச் சிறுசிறுபொடியாய் வெளிப்பட்டது;அப்போது (அவனதுகோபாவேசவொலியால்) வலிய திசையெங்கும் பேரொலிதோன்றின; (அவனுடைய) நெஞ்சமும் பற்றியெரியலாயிற்று; (நிமித்தமாக அவ்விராவணனுடைய) இடக்கண்ணினோடுதிரண்ட இடத்தோள்கள் துடித்தன; (எ - று.)—ஆடவர்க்கு இடக்கண்ணும் இடத்தோளும்துடித்தல், தீநிமித்தமென்பர். பி - ம்:—1வாயின. 2அழன்ற. 3விழியின். 4வானகம். 5எரிந்தன. 6கண்ணினன், கண்ணொடு. 7இடந். (அ௨௭)

கக.—இராகவனைக்கண்ட இராவணன் வெதுப்புதல்.

ஆக ராகவனை யவ்வழிக் கண்டான்
மாக ராக1நிறை வாளொளி யோனை
யேக ராசியினி 2னெய்த வெதிர்க்கும்
வேக ராகுவென வெம்பி வெகுண்டான்.

(இ - ள்.) அவ்வாறுதீநிமித்தந்தோனறவும், இராமபிரானை அப்போது கண்டவனான இராவணன், ஆகாயத்திலே நிறைந்த செந்நிறமானமிக்கவொளியையுடையவனான சூரியனை அமாவாசையிற் கிட்ட(ச் சென்று) எதிர்க்கின்ற வேகமுள்ள இராகுவைப்போல மனம் வெம்பிச் சீறினான்; (எ - று.)

ராகம் - செந்நிறம். வாளொளி - ஒருபொருட்பன்மொழி. சூரியனும் சந்திரனும் ஒருங்குசேர்தல்பற்றி, அமாவாசை 'ஏகராசி' எனப்பட்டது. பி-ம்:—1நிறவாள். 2எய்தியெதிர்க்கும், எய்தவுயிர்க்கும். (அ௨௮)

௨௦.—இராவணன் இராமனைத் தானேயறிந்து, மற்றையோரை இன்னுரென விளம்புவாயென்று ஸாரணனை வினவுதல்.

[1]ஏனை யோனிவ னிராம னெனத்தன்
மேனி யே[2]புரை செய் கின்றது [3]வென்றிச்
[4]சேனை வீரர் படையைத் தெரியென்று
தான்வி னவவெதிர் சாரன் விளம்பும்.

(இ - ள்.) யாவரினும்வேறுபட்டுத்தோன்றுபவனாகியஇவன் இராமனாவானென இவனுடையமேனியே யுரைக்கின்றது; (ஆகவே,இவனைவிட்டு),வெற்றிபொருந்திய படையோடுகூடிய சேனைவீரரை யறிவிப்பாயென்று (இராவணன் (ஸாரணனை) வினவ, ஸாரணன் மறுமொழி கூறலானான்; (எ - று.)

இராமனெனத் தன்மேனியேயுரைசெய்கின்றது-"கண்டவாற்றாற்றன தேயுலகெனநின்றான்" என்றநம்மாழ்வார்பாசுரமும்,"ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே" என்ற ச்ருதிவாக்யமும் காணத்தக்கன. சேனைவீரர் படையையென்றிருப்பினும் எதிர்விளம்புதலுக்கேற்ப, படைச்சேனைவீரரையென இயைத்துப்பொருளுரைக்கப்பட்டது. பி-ம்:-[1]ஏனையோனையவ், ஏனையோரன, ஏனையோனவ். [2]உரைக்கின்றது. [3]வேறிச் [4]சேனையோரையடையத்தெரியென்னத், சேனைவீரரைத்தெரிந்துரையென்று, சேனைவீரர்தமைச்செப்பிடுகென்றே, சேனைவீரர்தமைச்செப்பிடுகென்னத். (அ௨௭)

௨௧.—இதுமுதற்பதினைந்துகவிகள் - சாரணன் படைவீரரைத் தெரிவித்தலைக் கூறும்.

[1]இங்கி வன்[2]படை யிலங்கையர் மன்னன்
றங்கை [3]யென்றலு முநிர்ந்த [4]சலத்தால்
அங்கை [5]வாள்கொ டவளாகம் விளங்குங்
கொங்கை நாசிசெவி கொய்து குறைத்தான்.

(இ - ள்.) இங்குள்ள இவன், 'படைவலிமைகொண்ட இலங்கையர்க்கு அரசனான இராவணனது தங்கையாவள், (இவள்)'என்றுகேள்வியுற்றதும் முதிர்ந்தகோபத்தினால்(தனது)அகங்கையிலுள்ளவாளைக்கொண்டு அந்தச்சூர்ப்பணகையின்மார்பில் விளங்குகின்ற தனங்களையும் நாசியையும் செவியையும் கொய்துவீழ்த்தின இலட்சுமணனாவன்; (எ - று.)

வந்தமானுடர்இருவரில் ஒருவனாகியஇராமனை யுணர்ந்தேனென்றபோதே இலட்சுமணனையும் உணர்ந்தமை பெறப்படுமாயினும், மற்றவரையெல்லாம் கூறுமாறு இராவணன் வினவினானதலால், இலட்சுமணனைப்பற்றி இரண்டுகவியாற் கூறுகின்றான். அன்றியும், ஒருகால் இலட்சுமணன் வேறோரிடத்திருக்க,வானரர் காமரூபியராதலால் இங்ஙனம் மனிதவுருக்கொண்டனரோஎன்றுசங்கிக்கஇடமிருத்தலாற்கூறினனுமாம். பி-ம்:—[1]இங்கிவர், இங்குக்கொல். [2]பண்டு, முன். [3]என்னவும். [4]சினத்தான். [5]வாள்கொடவளாகம்விளக்கும், வாளுருவியுங்கைபரற்ற, வாளொடவளாகம்விளங்கும். (அ௨௯)

௨௨. அறக்க [1]ணல்லதொரு [2]கண்ணில னாகி
நிறக்[3]க ருங்கடலு னேயியி னின்று

துறக்க ⁴மெய்தி யவருந் துறவாத
உறக்க மென்பதனை யோட முனிந்தான்.

(இ - ள்.) தருமத்தினிடத்திலல்லாமல் வேறோரிடத்துக் கண்ணைச் செலுத்தாதவனாகி, கருநிறக்கடலுக்கு ஒரு சக்கரவாளகிரியமைந்ததுபோல நின்று, துறக்கத்தையடைந்தவரும் துறப்பதற்குஅருமையான உறக்கமென் பது தன்னிடத்தைவிட்டுஓடும்படி (அதனைச்)சினந்தவனாவன்; (எ-று.)

இராமபிரானையடுத்துநின்று அப்பிரானுக்கு யாதோரிடையூறும் வர வொட்டாது காப்பவன் இந்தஇலக்குமணனென்பார் 'நிறக்கருங்கடலுநேமி யினின்று' என்றார். இனி, இத்தொடர்க்கு-கருநிறக்கடலுக்குட்பட்டுநிற்கின்ற பூமியிலிருந்தும் உறக்கத்தைத் துறந்தவனெனினுமாம்: நேமியென்பது பூமி யென்னும் பொருளதாதலை "அவனி வைய மகலிடங் காசினி.........கோத் திரங் குவலயங் குவ்வே கோ நேமி" என்ற பிங்கலந்தையினாலுமறிக. பி-ம்:—¹என்பதொரு. ²கண்ணுளனாகி, கண்ணினனாகி. ³கடுந்தகைமைநீதியினின் றும், கடுந்தகையநீதியினின்று, கடறுயிநேமியினீடு, கருங்கடலினுண்மையி னின்று. ⁴மேயினர்களும். (௮௨௬)

௨௫. கைய வன்றொட வமைந்த கரத்தான்
¹ஐய வாலியொடிவ் வண்ட நடுங்கச்
²செய்த வன்செருவி னிற்றிகழ் கின்றான்
வெய்ய வன்³புதல்வன் யாரினும் வெய்யான்.

(இ-ள்.) ஐயனே! அவ்விலக்குமணன்(தன்)கையினாற் பிடித்துக்கொள்ள ப்பொருந்திய கையையுடையவனானவன்,—போர்க்களத்திலே வாலியோடு இவ்வண்டம் நடுங்கும்படி செய்தவனாகிச் சூரியகுமாரனான சுக்கிரீவன்: யாவ ரினும் கொடியவன்; (எ - று.)—சுக்கிரீவன் இராமபிரானால் தம்பியாகக்கொள் ளப்பட்டவனாதலால், அந்தச்சுக்கிரீவனோடு இலட்சுமணன் கைகோத்துக் கொண்டு திரிவனென்க.பி-ம்:-¹நைய. ²செய்யதிண்மைச்செருவில். ³மகன்.

௨௬. ¹தந்தை மற்ற வனசார்வில் வலத்தோன்
²அந்த ரத்தரமு தார்கலி காண
³மந்த ரத்தினொடும் ⁴வாசுகி யோடும்
சுந்த ரப்பெரிய தோள்க டிரித்தான்.

(இ - ள்.) (அந்தச்சுக்கிரீவனது பக்கத்திலிருக்கும்)மற்றொருவனுடைய தந்தை,—துணைவேண்டாத வலிமையையுடையவன்; வானுலகத்தவரான தேவர் அமிருதத்தைக் கடலினின்றுபெறும்படி மந்தரமலையோடு வாசுகியென் னுங்கடைகயிற்றைப்பூட்டித் (தனது) அழகியதோள்களால் (அம்மலையைத்) திரியும்படி கடைந்தவனான வாலியாவன்; (எ - று.)—எனவே, அங்கதனைக் கூறியவாறாயிற்று. மற்றவன் - ஆறும்வேற்றுமைவிரி. பி - ம்:—¹மைந்தன் மற்றையவன் மாள்வில்வலத்தோர், மைந்தன்மற்றவரென்பர்சலித்தோர், மைந் தன்மற்றிவனென்பர்சலித்தே. ²அந்தரத்திலமுதார்கலிகால, அந்தரத்தினமு தார்கலியிய, அந்தரத்திலுளார்வலிசாய. ³மந்தரத்தொடும். ⁴வாசுகிசுற்றி. ()

௨௫. [1]நடந்து[2]நின்றவ னருங்கதிர் முன்பு
தொடர்ந்த வன்னுலகு [3]சுற்று மெயிற்றின்
[4]இடந்தெ ழுந்தவனை யொத்தவன் வேலை
கடந்த வன்சரிதை கண்டனை [5]யன்றே.

(இ-ள்.) (அதோ) நடந்துகொண்டிருப்பவன்,—விளங்குகின்ற சூரியனுக்குமுன்னே (கற்குமாறு) தொடர்ந்துசென்றவனும், இவ்வுலகத்தை நெருங்கிய எயிற்றினாலிடந்தெழுந்தவனான திருமாலையொத்தவனும், கடலை (த் தன் காலாற்) கடந்தவனுமான அநுமானவன்; (அவனுடைய) செயலைக் கண்டுள்ளாயன்றோ? (எ - று.)

அநுமான் சூரியனுடன்சென்று கலைகளைக்கற்றானென்பதை யுட்கொண்டு 'நருங்கதிர்முன்பு தொடர்ந்தவன்' என்றார். இனி, இளம்பருவத்துச் சூரியன்மேற்பாய்ந்ததைக் குறிக்குமெனினுமாம். கதிர்-உவமவாகுபெயர். பி-ம்:— [1]கடந்து. [2]நின்றவன்னகதிர், நின்றவவனுங்கெதிர். [3]சுற்றியெயிற்றின், துற்றுமெயிற்றால், துற்றவெயிற்றால், [4]இடந்தபன்றியினெழுந்தெழு, இடந்தபன்றியின்மேலவன், இடந்தபன்றியினெழுந்ததிர். [5]என்றான். (௮௨௯)

௨௬. நீல [1]னின்றவ னெருப்பின் மகன் [2]றிண்
சூல முங்கயிறு மின்மை [3]துணிந்தும்
[4]ஆல மென்னு நிறமின்மை யறிந்தும்
கால னென்ப ரிவனைக் கருதாதார்.

(இ-ள்.) (இதோ) நின்றவன்,—நெருப்பின்மகனான நீலனாவன்; (இவன்), திண்மையுள்ள சூலம் கயிறு என்பவற்றைப் பெற்றிராமையைத் தெளிவாகக் கண்டறிந்தும் விஷமென்னத்தக்க நிறம் இல்லாமையைக் கண்டும், பகைவர் இவனைச் செயலொப்புமையாற் காலனென்றே கூறுவார்கள்; (எ - று.)

காலன்-யமன். யமனுக்குரிய படைகள்-சூலமும் கயிறும். அவனது நிறம்-ஆலம்போன்றகருநிறம்: இவை இல்லையாயினும், காலனென்னும்படியுள்ளான் இவனென்றவாறு. பி - ம்:— [1]என்பவன், இங்கு, நின்றவன். [2]தான். [3]தொடர்ந்தோன், துணிந்தான். [4]ஆலமுண்டவனடுந்திறன்மிக்க, ஆலமன்றிக்கடுந்திறலன்றிவன், ஆலமன்றிவனடுந்திறன்மிக்கான், ஆலமென்னவனெலன்னவன்றனை, ஆலமொன்றுநிறமென்றயலோனை. (௮௩௦)

வேறு.

௨௭. [1]வேறாக [2]நின்றா னளனென்னும் விலங்கலன்றான்
ஏறா வருணன் வழிதந்தில னென்றி ராமன்
சீறாத வுள்ளத் தெழுசீற்றம் [3]முருகுத்த செந்தீ
ஆறாத முன்னம் மகன்வேலையை யாறு செய்தான்.

(இ-ள்.) வேறாகநின்றவன்,—நளனென்றபேரை யுடைய மலையையொத்தவன்; (அவன்), வருணன் கருவங்கொண்டு வழிதந்திலனென்று கருதி, இராமபிரான் சீற்றமென்பதையேயறியாத தன்னுள்ளத்தில் தோன்றுகின்ற சீற்றம் வெளிப்புறப்பட விட்ட செந்நிறத்தீ அடங்குதற்குமுன்னம் பரந்த கடலை யணைகட்டி வழியுண்டாக்கியவன்; (எ - று.)

விரைவிற் சேதுவைக்கட்டி முடித்தா னென்பதைக் குறிப்பிக்க, 'இராமன் சீற்றம் ஆறுதமுன்னம் வேலையையாறுசெய்தான்' என்றான். பி-ம்:— 1வேறாகி. 2நின்ற.3உமிழ்ந்த, உமிழ்ந்து, எழுந்து. (அ௩௪)

இங்கு ஒருபிரதியில் மற்றைப்பிரதிகளிலில்லாத சிலபாடல்கள் காணப் படுகின்றன: அவைவருமாறு:—

(க)ஏறிட்ட கல்லு வீழு மிடமற வெண்கி ஞாலே
நாறிட்ட தென்ன வொவ்வோ ரோசனை நாலு பாலும்
சூறிட்ட சேனை நாப்பட் டோன்றுவோ னிடும்பனென்றே [வான்.
கூறிட்ட வயிரத் திண்டோட் கொடுந்தொழின் மடங்கல் போல்

(உ)மற்றிவன் படையி லொன்று னன்றிவா னரர்க ளேவந்து
உற்றன ரெனினும் பற்றி யுயிருகப் பிசைந்திட் டூதக்
கொற்றவ னருளுங் கொண்டோன் குடாவடிக் கிறைவன் கூற்றம்
பெற்றவ னடைந்தோர் தம்மை யுயிரெனப் பேணு நீரான்.

(௩)ஆங்கவ னெதிரே வேறோ ராடகக் குன்ற மொன்றை
வாங்குநீர் மகர வேலை வந்துடன் வளைந்த தென்ன
ஓங்குமைம் முகத்தின் றானை யுட்பொலிந் திடுவான் வெற்றி
ஓங்கிய குவவுத் திண்டோள் வினதனென் றுரைக்கும் வெய்யோன்.

(௪)அன்னவன் றனக்கு வாமத் தைம்பது கோடி யூகந்
தன்னைவந் திடையிற் சுற்றத் தடவரை யென்ன நிற்பான்
கொன்னவில் குலிசத் தண்ணல் கொதித்தெதிர் கொடுக்கு மேலும்
வென்னிடக் குமைக்கும் வேக தெரிசியென் றுரைக்கும் வீரன்.

(௫)பிளக்கும்மன் பதையும் நாகர் பிலனையுங் கிழக்கும் வேரோடு
இளக்கமில் குடுமிக் குன்றத் தினமெலாம் பிடுங்கி யேந்தி
அளக்கர்கட் டவனு மாட்டா தலக்கணுற் றிடவிட் டார்க்குந்
துளக்கமில் மொய்ம்பிற் சோதி முகனுந்துன் முகனு மென்பார்.

(௬)குன்றொடு குணிக்குங் கொற்றக் குவவுத்தோட் குரக்குச் சேனை
ஒன்றுபத் தைந்தொ டாறு கோடிவந் தொருங்கு சுற்ற
மின்றொகுத் தமைந்த போல விளங்கெயி றிலங்க மேருச்
சென்றென வந்து நிற்பான் றிறல்கெழு தீர்க்க பாதன்.

(எ)நூற்றிரண் டாய கோடி நோன்கவித் தானை சுற்றக்
காற்றின்மா மகற்குக் கீழ்பாற் கனவரை யென்ன நிற்பான்
கூற்றின்மா மைந்தன் கூற்றுங் குலுக்கமுற் றலக்க ணெய்தச்
சீற்றமே சிந்துஞ் செங்கட் டெதிமுக னென்னுஞ் சீயம்.

உ௮. 1முக்கா லமுமொய்ம் மதியான் முறையின் னுணர்வான்
புக்2கா லமெழுப் 3புணரிப் புலவோர் கலக்கும்
4அக்கால முள்ளான் கரடிக் கரசாகி நின்றான்
5இக்கால நின்று முலகேழு 6மெடுக்க வல்லான்.

(இ - ள்.) (அவன், இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்கின்ற) மூன்றுகாலத்துச்செய்திகளையும் (தனது) நிறைந்த அறிவால் முறைமையாக உணரவல்லவனும், தேவர்கள் விஷமுண்டாகும்படி புகுந்து கடலைக் கடைந்த அக்காலத்திலும் இருந்தவனும், கரடிக்கரசனுமான ஜாம்பவான்: இத்தனைகால மிருந்தும் [மிக்கமுதுமையடைந்தும்] ஏழுலகங்களையும் பெயர்த்தெடுக்கவல்ல ஆற்றல்படைத்தவன்; (எ - று.)

புணரிப்புலவோர்கலக்கு மக்காலமுள்ளான்-காலங்கண்டவனென்றபடி. பி-ம்:—1முக்காலுலகைமுறைசூழ்ந்து முன்னேயுரைப்பான்,முக்காலமுந்தன்னுடைமொய்ம்மதியாலுணர்வான். 2ஆலமெனப். 3புணரியை. 4அக்காலமும். 5இக்காலமும், இக்காலம்நின்ற. 6எடுக்குமீட்டான். (அஙஉ)

உகூ. 1சேனு பதிதன் னயலே யிருள்செய்த குன்றின்
ஆறு மருங்கே யிரண்டா டகக் 2குன்றி னின்றார்
3ஏனோரி விராம னிலக்குவ னென்னு மீட்டார்
4வானோர்த மருத்துவர் மைந்தர் வலிக்கண் 5மிக்கார்.

(இ - ள்.) கருநிறமுள்ள குன்றின்அருகே நீங்காத பக்கத்தே [வெகு அருகே] நீங்காத இரண்டுபொன்மலைபோலச் சேனைபதியான நீலனுடைய அருகே நின்றவர்,—மற்றைச்சேனையிலிருப்பவருக்குள்ளே இராமலட்சுமணர் போன்ற வலிமைபடைத்தவராகி, தேவமருத்துவரான அசுவினிதேவரின் குமாரர்; வலிமையில் மிகமேம்பட்டவர்; (எ - று.)—பி - ம்:—1சேனைபதியின். 2குன்றமன்னார், குன்றநின்றது. 3ஏனோர். 4வானோர்தமருத்துவன்மைந்தர், வானோருந்தாமருந்தன்ன. 5மிக்கான். (அஙங)

ங0. 1உவன்காண் குமுதன் குமுதாக்கனு 2மூங்க வன்காண்
3இவன்காண் கவயன் கவயாக்கனு 4மீங்கி வன்காண்
சிவன்கா ணயன்கா 5ணெனுந்தூதனைப் பெற்ற செல்வன்
அவன்கா 6ணெடுங்கேசரி யென்பவ னாற்றன் மிக்கான்.

(இ - ள்.) அதோதூரத்தில் தெரிகின்றானே அவன்தான், குமுதனென்பவன்: அதோநிற்பவன், குமுதாட்சனவன்; இவன், கவயனவன்: இதோ இவன், கவயாட்சன்; 'சிவனேயாவன் பிரமனேயாவன்' என்று கண்டோர் சொல்லும்படியுள்ள தூதனைப் பெற்றசெல்வவான் [பெற்றதந்தை], அவனவன்; (அன்னான்), பெருமைபெற்ற கேசரியென்று சொல்லப்படும் பேராற்றல் படைத்தவன்; (எ - று.)

பின்னிரண்டடியால், அநுமானுடையதந்தையான கேசரியைக் காட்டினான். கேசரியென்னும் வானரனுடைய மனைவியான அஞ்சனாதேவியினிடம் தோன்றியவன் அநுமானென்று அறிக. பி-ம்:—1இவன். 2இங்கிவன்,ஊங்குவன். 3உவன். 4உங்கிவன். 5திருமாலென. 6நெடுந்தோள்வலிக்கேசரியாற்றன், நெடுங்கேசரிகேசரியாற்றல். (அஙச)

ஙக. 1மூபன் னகுதோளவன் மூரி யடங்க லென்னக்
2கரபன் னகமன்னவை 3மின்னுகக் காந்து கின்றான்

[4]வரபன்ன கந்தன்னையும் வேரொடு [5]வேண்டின் வாங்குஞ்
[6]சரபன்ன வனிவன் சதவலி யாய தக்கோன்.

(இ - ள்.) வலிமைபெற்றநரசிங்கம்போலக்கையில்தோன்றிய நகங்களும் பல்லும் ஒளியை வீசக் கோபித்துநிற்பவனை விளங்குகின்ற தோள்வலிமையையுடையவன், முரபனென்பவன்: அவன் சிறந்த பல மலைகளையும்வேண்டினுலுயின் பிடுங்கவல்ல சரபனென்பவன்; இவன், சதவலியென்று பேர்படைத்த பெரியோன்; (எ - று.)

முதலடியில்முரபன் நகுஎனவும், இரண்டாமடியில், கரம் பல் நகம் என்றும், மூன்ருமடியில் வரம் பல்நகந்தன்னையும் என்றும் பிரிக்க. இரண்டாமடியில் பல் நகம் என்பன-தந்தம் உகிர் என்பவற்றைக் காட்டும். முதலடிக்கு வேறுபொருள்கூறுவது பொருந்துமாயிற் கொள்க. பி-ம்:—[1]முரவன்னகு, முரபன்னகத். [2]கரவன்னகம், கரம்பல்லிவை. [3]இன்னவை மின்னென. [4]வரவன்னகந். [5]வாங்கும்வேண்டில். [6]சரவன்னகமன்ன, சரபன்னவன்மன்ன.()

வேறு.

௩௨. மூன்று கண்ணில னாயினு [1]மூன்றெயி லெரித்தோன்
போன்று நின்றவன் பனசனிப் போர்க்கெலாந் தானே
யென்று நின்றவ [2]னிடபன்மற் றிவன்றனக் கெதிரே
தோன்றுகின்றவன்[3]சுடேணன் மூ[4]தறிவொடு தொடர்ந்தோன்.

(இ - ள்.) மூன்றுகண்களைப் படையாதவனாயினும் திரிபுரமெரித்த சிவபிரான்போன்று நிற்பவன் பனசனென்பவன்; இந்தப்போருக்கெல்லாம் தானே (முக்கியனென்று) மேற்கொண்டு (ஊங்கு) நிற்பவன்,—இடப னென்பவன்; இவனுக்குஎதிரே காணப்படுபவன் சுஷேணன்; இவன் பேரறிவுபொருந்தப்பெற்றவன்; (எ - று.)—பி - ம்:—[1]மூவெயில், மூதெயில். [2]இடவனுமற்றவனெதிரே, இடவன்மற்றிவன் வலனெதிரே, இடவன்மற்றினையவனெதிரே. [3]சுசேடணன், சுசேடன்முன். [4]என்றுளந்துயோன், தீயொடுந்தொடர்ந்தான், தீயினைத்தொடர்ந்தான். (அ௩௬)

௩௩. வெதிர்கொள் குன்றெலாம் வேரொடும் வாங்கிமே தினியை
முதுகு நொய்தெனச் செய்தவன் கனலையு முனிவோன்
கதிர வன்மகற் [1]கிடமருங் கேநின்ற [2]காளை
ததிமு கன்[3]னவன் சங்கனென் [4]றுரைக்கின்ற சிங்கம்.

(இ - ள்.) சூரியனதுபுதல்வனை சுக்கிரீவனுக்கு இடப்பக்கத்தே நின்ற காளைபோன்றவீரன்,—மூங்கிலைக்கொண்டமலைகளையெல்லாம்வேரோடுபிடுங்கிப் பூமியின்நடுவிடம் பாரமற்றதெனச் செய்தவனும் நெருப்பையும் சினப்பவனுமான ததிமுகனென்பவன்; அதோ புலப்படுபவன் சங்கனென்றுகூறப்படுகின்ற சிங்கம்போன்றவன்; (எ - று.)—பி-ம்:—[1]இடவருகே. [2]காலன். [3]இவன். [4]உரைக்குமிச், உரைக்குமச். (அ௩௭)

௩௪. அண்ணல் கே[1]ஸரிபர்க் [2]குவமையு மளவுமொன் றாளதோ
விண்ணவரின் [3]மீனிநைக் குலிப்பிறும் [4]வேலையுண் டீனே

5எண்ணி நோக்கினு 6மிக்கடன் மணலினை யெல்லாங்
7கண்ணி நோக்கினுங் 8கணக்கிலை யென்றனன் 9காட்டி.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தோனே! (இதனைக்) கேட்பாய்; (என்று அச்சேனைகளைக்) காட்டி, 'இந்த வானரர்கட்கு உவமையேனும் அளவேனும் ஒன்றுஉண்டோ? ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைக் கணக்கிட்டாலும், கடலிலுள்ள மீன்களை எண்ணிப்பார்த்தாலும், இந்தக்கடலின் மணலினையெல்லாம் ஆராய்ந்துபார்த்தாலும் (இவ்வானரர்களைக்) கணக்கிடமுடியாதுஎன்று கூறிமுடித்தான், (சார்த்தூலன்); (எ - று.)

சேனையின்வரம்பின்மையை விளக்கியவாறு. பி-ம்:—1இதற்கு. 2அவதியும். 3மீன்களை. 4மீனினையெல்லாம். 5எண்ணினேக்கினும். 6அக்கடல், கடலினின். 7கண்ணினேக்கினும், கண்ணிநாடினும், கண்ணினுட்டினும். 8கணக்கிலர், கணக்கிலது. 9காட்ட. (அருஅ)

நூ௫.—இராவணன் புன்னகைசெய்து இக்குரங்குகளால் நம்மையொன்றுஞ்செய்யமுடியாதெனல்.

சினங்கொ டிண்டிற லரக்கனுஞ் சிறுநகை செய்தான்
புனங்கொள் புன்றலைக் குரங்கினைப் புகழுதி போலாம்
வனங்க ளும்1படர் வரைதொறுந் 2திரிதரு மானின்
இனங்க ளும்பல வென்செயு 3மரியினை யென்றான்.

(இ - ள்.) (சார்த்தூலன்கூறியதுகேட்டுக்) கோபத்தைக்கொண்ட மிக்க வலிமையையுடைய அரக்கனாகியஇராவணனும்,—புன்னகை செய்து, (அந்தச்சார்த்தூலனைநோக்கி), 'கொல்லையில்திரிகின்றபுல்லிய [இழிவான] தலையையுடைய குரங்குகளைப் புகழ்வாய்போலும்: காடுகள்தோறும் படர்ந்துள்ள மலைகள்தோறும் திரிகின்ற மானின்கூட்டங்கள் மிகப்பலவாயிருப்பினும், ஒரு சிங்கத்தை என்னசெய்யமாட்டும்?'என்றுகூறினான்; (எ - று.)

மான்கூட்டங்கள் பலவற்றாலும் சிங்கமொன்றை ஒன்றுஞ்செய்ய இயலாதவாறுபோல, இந்தக்குரக்குக்கூட்டம் மிகப்பலவானாலும் இவற்றால் என்னை ஒன்றுஞ்செய்யஇயலாதென்றபொருளைப்பின்னடிகள் காட்டுவது-பிறிதுமொழிதலணி. 'வனங்களும் பலவனங்களும் வனங்களும்மானின்' என்று ஒருபிரதியில்மூன்றாமடி. பி-ம்;—1பலமலை. 2திரிந்துழல். 3எரியினை.

இராவணன் வானரத்தானைகாண்படலம் முற்றிற்று.

---

## கக - ஆவது மகுடபங்கப்படலம்.

சுக்கிரீவன் இராவணனது மகுடங்களைக் கீழ்த்தள்ளுவதைக் குறிக்கும் படலமென்பது,பொருள்.மகுடபங்கம்-மகுடமணியைப்பறித்தலெனினுமாம்.

இலங்கையின் வடதிசைவாயிலின்கோபுரத்தின்மீதுஏறிநின்ற இராவணனையும் அவன்சேனைவீரர்களையும் இன்னாரின்னாரென்று தெரிவிக்குமாறு விபீஷணனுக்கு ஸ்ரீராமன் கட்டளையிட, அவ்விபீஷணன் இராவணனைக்

சுட்டிக்காட்டிக் கூறியமாத்திரத்தில் மேலே கூறுவதற்குமுன்னம் மனம் பொறுமற் சுக்கிரீவமகாராஜன் அந்தச்சுவேலமலையினின்று மேலேயெழுந்து போய்இராவணன்மீதுபாய, பிறகுஇருவருக்கும் வெற்றிதோல்வியின்றி வெகு நேரம் மல்லயுத்தம்நிகழ்கையில், சுக்கிரீவனைப் பிரிந்ததனல் ஸ்ரீராமன் வருந் தாநிற்க, சுக்கிரீவன் இராவணனுடைய பத்துமகுடங்களிலிருந்தும் நாயகமணி களைப்பறித்துக்கொணர்ந்து ஸ்ரீராமபிரானுடைய திருவடிகளிற்சமர்ப்பித்துத் தொழுதுநிற்க, ஸ்ரீராமன் சுக்கிரீவமகாராஜனைநோக்கிக்கடிந்துகூறியபின் விபீஷணாழ்வான் அந்தச்சுக்கிரீவன் முடிமணிபறித்துக் கொணர்ந்த பராக் கிரமச்செயலைப் பாராட்டிக்கூற ஸ்ரீராமனும் அச்செயலைப் பாராட்டிக்கூறி னுக, அப்போது சூரியன் அத்தமித்தான்; அப்பால் ஸ்ரீராமனும் தன்பரி வாரங்களுடனே சுவேலமலையின்மேலிடத்தினின்று இறங்கித் தன்னிருக்கை சேர்ந்தான்; இராவணனும் கோபுரத்தினின்று இறங்கிப்போனனென்பது, இப்படலத்திற் கூறுகின்ற பொருள்.

முன்னர் அச்சிட்டபிரதிகளில் "காலவிருள்"(எ)என்னும் பாடல் முதற் கொண்டுதான் மகுடபங்கப்படலம் என்றுஉள்ளது; ஆயினும், இராவணன் தானைகாணுதல் "சினங்கொடு" என்னும்பாடலோடு முடிவதாலும், 'இராவ ணன்பக்கத்தாரைஇன்னர்இனையார்என்றுகாட்டு' என்று விபீஷணாழ்வானை இராமபிரான்வினவியதாகிய "என்னும்வேலையின்" (க) என்னும் பாடல் முதல் மகுடபங்கத்திற்குஅங்கமாகவந்ததெனக்கொள்ளுதலே ஏற்குமாதலா லும், இவ்வண்ணமேசிலபிரதிகளிற் காணப்படுவதாலும் "என்னும்வேலையின்" என்ற இப்பாடல்தொடங்கியே 'மகுடபங்கப்படலம்' என்று பதிப்பிக்கலா யிற்று. பலஏட்டுப்பிரதிகளில் "கருதிமற்றென்று" (௩) என்ற பாடல்முதல் இப்படலந் தொடங்குகின்றது.

க.—சேனையைக்காணுமாறு மேலிடத்து வந்துள்ள அரக்கரை இன்னரின்னரெனத்தேரிவியென்று இராமன் விபீஷணனைக் கேட்டல்.

என்னும் வேலையி னிராவணற் கிளவலை யிராமன்
[1]கன்னி மாமதி னகர்நின்று [2]நம்வலி காண்பான்
[3]முன்னி [4]வானினு முடிநின் றோர்களை முறையால்
இன்ன [5]நாமத்த ரினையரென் றியம்புதி யென்றான்.

(இ - ள்.) என்றுஇராவணன்சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, இரா வணனுக்குத் தம்பியான விபீஷணனைநோக்கி, இராமன், பகைவராற்கிட்ட முடியாத பெரியமதிளைக்கொண்ட இலங்கைநகரினின்று நமதுசேனையைக் காணும்பொருட்டு நினைந்து ஆகாயத்திலும் கவிந்துகொண்டிருப்பவர்களை முறையே இன்னபேரையுடையவரென்றும், இப்படிப்பட்டதன்மையுடையவ ரென்றும் சொல்வாயென்று வினவினன்; (எ-று.)—வானினும்என்ற இறந் ததுதழுவியஎச்சவும்மை உபரிகைமுதலியஇடங்களிலும்என்ற பொருளைக் காட்டும். பி-ம்:—[1]கன்னிமாயதிற்புறம். [2]நம்பலங்காண, நம்பெலங்காண, நாம் பலர்காண. [3]முன்னின். [4]வானகமுடி, வான்றெடுமுடுகி. [5]தானத்தர். (௮௬௨௦)

௨.—விபீஷணன் இராவணனைக் காட்டல்.

நாறு தன்[1]குலக் கிளையெலா நரகத்து நடுவான்
சேறு [2]செய்துவைத் தானும்பர் திலோத்தமை முதலாக்
கூறு மங்கையர் குழாத்திடைக் கோபுரக் [3]குன்றத்து
ஏறி நின்றவன் புன்றொழி லிராவண னென்றான்.

(இ-ள்.) கோபுரமாகியகுன்றத்திலேயேறி வானுலகத்தவரான திலோத்தமைமுதலாகிய சிறப்பித்துச்சொல்லப்படுகிற தேவமங்கையரின்கூட்டத்தின்நடுவேயிருப்பவனே,—தன்னுடைய குலத்துத் தோன்றிய பந்துக்களாகிற நாற்றுக்களையெல்லாம் நரகபூமியிலேநடும்பொருட்டு (அந்தநரகத்தை)ச் சேறு செய்துவைத்திருப்பவனை புன்றொழிலையுடைய இராவணனென்பவன் என்று (விபீஷணன்) கூறினான்; (எ - று.)—நாற்றைச்சேறுசெய்த நிலத்திலே நடுதல்,இயல்பு.நரகத்தை இங்குச் சேறுசெய்தநிலமென்றது-அரக்கராகிய நாற்று நடுவதற்கு ஏற்றதாதல்பற்றியே. உருவகவணி. பி-ம்:—[1]பெருங்குலச். [2]செய்தவனுருப்பசி. [3]குன்றின். (௮௬௧)

௩.—இராவணன்மேற் சுக்கிரீவன் பாய்தல்.

[1]கருதி மற்றொன்று கழறுதன் [2]முனம்விழிக் கனல்கள்
பொருது [3]புக்கன முந்துறச் சூரியன் புதல்வன்
சுருதி [4]யன்னவன் [5]சிவந்தநற் கனி[6]யென்று சொல்லப்
பருதி மேற்பண்டு பாய்ந்தவ னுமெனப் பாய்ந்தான்.

(இ - ள்.) மனத்திலெண்ணி (விபீஷணன்) வேறொன்றுசொல்லுதற்கு முன்னம், (தன்) கண்களிலேநெருப்புப்பொறிகள் போட்டிபோட்டிக்கொண்டு முற்பட்டுச்சென்றனவாக,—சூரியனதுகுமாரனாகிய சுக்கிரீவன்,—சிவந்தகனிந்தபழமென்று சொல்லியவண்ணம் சூரியன்மேற் பாய்ந்தவனும் சுருதியையொத்தவனுமான அநுமானுமென்றுசொல்லுமாறு (இராவணன்மீது) பாய்ந்தான்.

அரக்கரிற் பிரதானரையெல்லாம் கூறுமாறு ஸ்ரீராமபிரான் கேட்டுக்கொண்டதனால் அவ்வண்ணமே விபீஷணன் அவர்களையெல்லாம்கூறவேண்டுமாதலாலும், அவ்வாறுகூறுமிடத்து மனத்தினுலெண்ணியே வாயாற் கூறவேண்டுமாதலாலும் 'கருதிமற்றொன்று கழறுதன்முனம்' என்றார். பரிதிமைந்தன் இராவணன்மீது விழிக்கனல்கள் முந்துறப்புக்கனவாகப் பரிதிமேற்பாய்ந்தஅநுமானைப்போலப் பிந்துறப்பாய்ந்தா னென்க. பி-ம்:—[1]கருதுகின்றது, [2]முன். [3]புக்கெனமுந்துற, புக்கனன்முந்துற. [4]அன்னமுன், அன்னதாய். [5]சிந்த. [6]என. (௮௬௨)

௪.—இராவணன்மேற்பாய்ந்த சுக்கிரீவன் வருணனை.

சுதையத் தோங்கிய சுவேலத்தி னுச்சியைத்[1] துறந்து
சிதையத் திண்டிற லிராவணக் குன்றிடைச் சென்றான்
ததையச் செங்கரம் [2]பரப்பிய தன்பெருந் தாதை
உதயக் குன்றினின் [3]றொருகுன்றிற் [4]பாய்ந்தவ னொத்தான்.

(இ - ள்.) நட்சத்திரமண்டிலம்வரை ஓங்கிய சுவேலமலையினுச்சியைத் துறந்து, இராவணனிருந்த கோபுரத்துச்சியிலே (அவனுடைய) மிக்கதிறல்

அழியும்படி பாய்ந்தவனாகிய சுக்கிரீவன்,-நெருங்க(த் தன்னுடைய) செந்நிறக் கிரணங்களைப் பரப்பிய தனது பெருமைபெற்ற தாதையாகிய சூரியன் உதய மலையிலிருந்து அந்தக் கோபுரக்குன்றத்திற் பாய்ந்தவனை யொத்தான்;(எ-று.)

சுவேலமலையினின்றுபாயுஞ் சூரியபுத்திரனுக்கு உதயக்குன்றினின்றுபாயும்அவனது தந்தையை யுவமைகூறினர். சுதையம்-நட்சத்திரம். 3உ.குகுன்றில் என்றபாடத்துக்கு - அத்தமனகிரியில் என்று பொருள்கொள்ளலாமாயினும், உதயத்திலிருந்துசூரியன் அத்தக்குன்றிற்சேரின் அவன் தன்னொளியிழக்கப் பெறுவானாதலால், ஒளிமிகப்போகின்ற சுக்கிரீவனுக்கு அவ்வாறான உவமை கொள்வது, சிறவா தென்க; இனி, ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்குச் செல்லுதலில்மாத்திரம் உவமையென்னலுமாம். பி-ம்:—1தூரந்து. 2பரப்பியே. 4பாய்ந்ததை, பாய்வதைபாய்ந்தன. (அசஙு)

ரு.—இதுவும் அது.

பள்ளம் போய்ப்புகும் 1புனலெனப் படியிடைப் படிந்து
தள்ளும் பொற்கிரி சலிப்புறக் கோபுரஞ் சார்ந்தான்
வெள்ளம் போற்2கண்ணி யழுதலு மிராவணன் 3மேற்றன்
உள்ளம் போற்செலுங் கழுகினுக் 4கரசனு மொத்தான்.

(இ - ள்.) பள்ளமான இடத்திலே போய்ப் பாய்கிற நீரென்னுமாறு பூமியிலே படிந்துதாழ்ந்த திரிகூடமலை சலிப்படையும்படி [திரிகூடமலைசலித்துப் பூமியிலேபடிந்து தாழும்படி] கோபுரத்தின்மீதுபாய்ந்தவனான சுக்கிரீவன்,—வெள்ளம்போற்பெருகிய கண்ணீரைக்கொண்ட கண்ணையுடைய சீதை யழுதலும் இராவணன்மீது தன்மனம்போல விரைந்துபாய்ந்துசென்ற கழுகுக்கரசனை சடாயுவையும் ஒத்தான்; (எ - று.)—மேருவினின்று பிரிந்ததாதலால், திரிகூடமலையை 'பொற்கிரி' என்றார். இராவணன்மீதுபாய்தல் பராக்கிரமங் காட்டுதல் என்ற இவற்றில்மாத்திரம் சடாயு சுக்கிரீவனுக்கு உவமையாவன். பி-ம்:—1சரியென,கிரியென. 2கன்னி. 3தன்மேல். 4அரசையும். (அசசு)

சு.—அமரமங்கையர் நிலைகெட்டு ஓடுதல்.

கரிய கொண்டலைக் கருணையங் கடலினைக் காணப்
பெரிய கண்கள்பெற் றுவக்கின்ற வரம்பையர் பிறரும்
உரிய குன்றிடை யுருமிடி 1வீழ்தலு முலைவுற்று
இரியல் 2போயின மயிற்3பெருங் குலமென விரிந்தார்.

(இ - ள்.) கருநிறமுள்ள மேகம்போன்றவனும் கருணைக்கடலுமாகிய ஸ்ரீராமனைப் பார்ப்பதற்குப் பெரிய கண்களைத் தாம் பெற்றுள்ளமையால் மனம்மகிழ்கின்றவராய், (அரக்கியரினும்) வேறான அரம்பையர்யாவரும்,—தமக்கு உரியமலையிலே பேரிடிவிழுதலும்வருந்தி நிலைகெட்டுஓடுகின்ற பெரிய மயிற்கூட்டம்போல நிலைகெட் டோடினர்; (எ - று.)

கோபுரத்தின்மீது சுக்கிரீவன்பாய்தலும் நிலைகெட்டோடிய அரம்பையர்க்குப் பேரிடிவீழ்தலும் தமக்குரியமலையினின்று நிலைகெட்டோடும் மயிற்குலம் உவமையாம். அரம்பையர்பிறரும்-அரம்பையரும் பிறரும்எனினுமாம். பி - ம்:—1வீழ்தர. 2போகின்ற. 3குலமாம். (அசரு)

வேறு.

எ.—சுக்கிரீவன் இராவணன் முன்னேபோய் நிற்றல்.

காலிருள் சிந்துகதி ரோன்மதலை கண்ணுற்று
ஏலவெதிர் சென்றட லிராவணனை யெய்தி
நீலமலை முன்கயிலை நின்றதென நின்றான்
[1]ஆலவிட மன்றிவர நின்றசிவ னன்னான்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இராக்காலத்துத்தோன்றிய இருளை யொழிக்கின்ற ஆயிரங்கிரணங்களையுடையனான சூரியனுடையபுத்திரனான சுக்கிரீவன், (இராவணனைக்) கண்டு, பொருந்த அவனெதிரேபோய், வலிமைபொருந்திய அவ்விராவணனைக் கிட்டி நீலமலைக்குமுன்னே கயிலைமலைநின்றதுபோல நின்றான்; (அப்போது) ஹாலாஹலவிஷம் (அன்று) பொங்கிவர அதற்குமுன்னே அஞ்சாது நின்ற சிவனைப்போன்றவனான இராவணன்,—(எ - று.)—'என, இயம்பான் உரத்திற்குத்தினன்' என அடுத்த கவியோடு தொடர்ந்துமுடியும்.

பொங்கிவந்த சுக்கிரீவனைக் கண்டு சிறிதும்அஞ்சாது உறுதியுடன் நின்றானாதலால், இராவணனை, 'ஆலவிடமன்றிவரநின்ற சிவனன்னான்' என்றார். பி-ம்:—[1]ஆலம்வரவன்றதன்முன், ஆலவிடமன்றுவர.

(அ௬௬)

அ.—வர்தகாரணத்தை இராவணன் வினவுகையில், சுக்கிரீவன் அவனுடையமார்பிற் குத்துதல்.

இத்[1]திசையின் வந்தபொரு ளென்னென [2]வியம்பான்
தத்தியெதிர் சென்றுதிசை வென்றுயர் தடந்தோள்
பத்திரொடு பத்துடைய வன்னுடல் பதைப்பக்
குத்தின னுரத்தினிமிர் கைத்துணை[3]குளிப்ப.

(இ - ள்.) 'இங்கே வந்த காரியம் யாது?' என்று வினவுகையில், (சுக்கிரீவன்),— மறுமொழிசொல்லாதவனாய், தாவி அவனெதிரேபோய், எல்லாத் திக்குக்களையும் வென்று உயர்ந்த பெரியதோள் இருபதுபடைத்தவனான அந்த இராவணனுடைய உடல் பதைக்கும்படி ஓங்கிய (தனது) கைகளிரண்டும் அழுந்த அவன்மார்பிலே குத்தினான்; (எ - று.)—பி-ம்:—[1]திசையில். [2]இயம்பத். [3]குழிப்ப.

(அ௬எ)

கூ.—இராவணன் தனதுஇருபதுகைகளாலும் சுக்கிரீவனைக் குத்துதல்.

திருகிய சினத்தொடு செறுத்[1]தெரி விழித்தான்
ஒருபது திசைக்கணு மொலித்த[2]வொலி யொப்பத்
தருவன மெனப்புடை தழைத்துயர் [3]தடக்கை
இருபது மெடுத்துரு [4]மிடித்தென வடித்தான்.

(இ-ள்.) (அப்போது இராவணன்),—மாறுபட்ட சினத்துடனே கோபித்துத், தீப்பொறிபறக்கவிழித்தவனாய், மரமடர்ந்தகாடுபோலப் பக்கங்களில் தழைத்து உயர்ந்துள்ள பெரியகைஇருபதுகளையும் எடுத்து, இடியிடித்தென்னுமாறு பத்துத்திக்கிலும் தோன்றிய பிரதித்தொனியொத்திருக்க, (அந்தச்

சுக்கிரீவனை) அடித்தான்; (எ-று.)—இங்கே சிலசெய்யுள்கள் அந்தாதித்தொடையால் வருதல்காண்க. பி-ம்:—[1]எதிர். [2]வலி. [3]தடந்தோள். [4]எனப்பல.

௧௦.—சுக்கிரீவன் இராவணனை யுதைத்தல்.

அடித்தவிரல் பட்ட[1]வுட லத்துழி யிரத்தம்
பொடித்தெழ வுறுக்கியெதிர் புக்குடல் [2]பொருத்திக்
[3]கடுத்தவிசை யிற்கடி தெழுந்துகதிர் வேலான்
முடித்தலைகள் பத்தினு முகத்தினு முதைத்தான்.

(இ - ள்.) அடித்த விரல்பட்ட உடம்பினிடத்திலிருந்து இரத்தம்பொங்கியெழ,(சுக்கிரீவன்),—சினங்கொண்டு, அவ்விராவணனெதிரிற்போய்த் தன்னுடலை (அவ்விராவணனது உடலோடு) பொருந்தத்தாக்கி, மிக்கவிசையோடு விரைந்தெழுந்து, ஒளிபொருந்திய வேலாயுதத்தையுடையவனான அவ்விராவணனுடைய கிரீடமணிந்த பத்துத்தலைகளிலும் முகத்திலும் உதைத்தான்.

வேல், மந்தோதரியை மணக்கும்போது இராவணனுக்கு அவனுடையமாமனார் தந்தது. பி-ம்:—[1]உடலற்றுழி. [2]பொருந்திக். [3]இடித்தெரிவிழித்திகல் பர்ப்பியொரிமைப்பின். (௮௪௯)

௧௧.—சுக்கிரீவனை இராவணன் தலத்திலிட்டுத் துகைத்தல்.

உதைத்தவ னடித்துணை பிடித்தொரு [1]கணத்திற்
பதைத்துலைவு றப்பல [2]விதத்திகல் பரப்பி
மதக்கரியை யுற்றரி நெரித்தென [3]மயக்கிச்
சுதைத்தல னிடைக்கடி தடிக்கொடு துகைத்தான்.

(இ - ள்.) (தன்னை) உதைத்தவனான அந்தச்சுக்கிரீவனுடைய கால்களிரண்டையும் பிடித்து ஒருகணப்போதிற்குள் (அந்தச்சுக்கிரீவன்) துடித்துவருந்தப்பலதிறப்பட்ட வலிமையைமிகுத்துக்காட்டி, மதயானையைப்பொருந்தி ஒரு சிங்கம் நொருக்கினாற்போல அறிவுமயங்கச்செய்து, (தனது) கால்களைக்கொண்டு சுண்ணாம்புதீற்றிய தலத்தினிடத்திலே விரைவாக (அச்சுக்கிரீவனையிட்டு)த் துகைத்தான்;(எ - று.)—இகல்பரப்பி மயக்கினானென்க. மயக்குதல்-மூர்ச்சையுறச்செய்தல். பி-ம்:—[1]கரத்தில். [2]திறத்து. [3]மயங்கிச். (௮௫௦)

௧௨.—சுக்கிரீவன் இராவணனையமுக்கி அவன்கக்கிய இரத்தத்தைக் குடித்தல்.

துகைத்தவ னுடற்பொறை [1]சுறுக்கொள விறுக்கித்
தகைப்பெரு வலத்தொடு தலத்திடை [2]யமுக்கி
வகைப்பிறை [3]திறத்தெயி றுடைப்[4]பொறி வழக்கிக்
குகைப்பொழி புதுக்குருதி கைக்கொடு குடித்தான்.

(இ - ள்.) (தன்னைத்) துகைத்தவனுடைய உடற்பாரம் நெருப்பினால் வேகும்படி கெட்டியாகத் தகைதலைக்கொண்ட பெரியவலிமையோடு பூதலத்திலே நெருக்கி, பலவகையான பிறையின் தன்மையைக்கொண்ட பற்கள் உடைவதினின்று தீப்பொறியை வெளிப்படும்படிசெய்து, குகைபோன்ற (அவ்விராவணனுடைய) வாயினின்றுபொழிந்த இரத்தத்தைக் கையினாற் பருகினான், (சுக்கிரீவன்); (எ - று.)

ஒருபொருளை நெருக்குவதனால் தீயெழுதலியல்பாதலால், இராவண னது உடற்பொறைச் சுறுக்கொள்வதாயிற்று. பலஎயிறுகளிருத்தலால், 'வகைப் பிறைநிறத்தெயிறு' என்றார். உடை-முதனிலைத்தொழிற்பெயர். எயிறுகளை உடைப்பதனால் அவ்வெயிறுகளிலிருந்து பொறியை வழங்கச் செய்தனவெ ன்க. குகை-குஹா: குகைபோல் ஆழ்ந்துதோன்றுகின்ற வாயினுள்ளிடம். பி-ம்:—1சுறுக்கொட. 2அழுத்தி. 3நிறுத்து. 4பெரியவாயால்,பொறிவழக்கில், பொறிவழுத்தி. (அ௬௧)

௧௩.—சுக்கிரீவனுடலை இராவணன் திரித்தல்.

கைக்கொடு குடித்தவ னுடற்கனக வெற்பைப்
பைக்கொடு 1விடத்தர வெனப்பலகை பற்றி
2மைக்கொடு நிறத்தவன் 3மறத்தொடு புறத்தில்
திக்கொடு 4பொருப்புற 5நெருப்பொடு திரித்தான்.

(இ - ள்.) மைபோற்கறுத்துக் கொடுமையாகத்தோன்றுகின்ற நிறத்தை யுடையவனான இராவணன்,(கையினால் தன் இரத்தநீரைப்)பருகினவனுடைய உடலாகிய மேருவெற்பை, விடத்தையும் கொடியபடத்தையுங் கொண்ட அராப்போலப் பல கைகளாற் பற்றி, மிக்கவலிமையுடனே திக்குக்களுடனே மலைகளிலும் மோதுமாறு வெளியிலே நெருப்புப்பறக்கக் கிருகிரென்று சுழற் றினான்; (எ - று.)

இராவணன் பல கைகளால் சுக்கிரீவனுடலைப்பற்றினது - அனந்தன் தனதுபடங்களினால் மேருவைப்பற்றியதுபோலு மென முதலிரண்டடிகளில் உவமைகாண்க. பி-ம்—1மிடற்று. 2மைக்கடு. 3மறத்தொடுமுரத்தில். 4பொருப் பொடு,பொருப்பென. 5நிலத்தொடு. (அ௬௨)

௧௪.—சுக்கிரீவன் இராவணனை அகழியிலிடுதல்.

திரித்தவ னுரத்தி1னுகிர் 2செற்றும்வகை குத்திப்
பெருத்துயர் தடக்3கைகொ டடுத்திடை பிடித்துக்
4கருத்தழி வுறத்திரி திறத்தெயில் கணத்தன்று
எரித்தவனை யொத்தவ னெடுத்தகழி யிட்டான்.

(இ - ள்.) திரிபுரங்களை அன்று கணப்போதில் எரித்தவனான உருத்திர மூர்த்தியையொத்துக் கொடுமை கொண்டவனாகிய சுக்கிரீவன், (தன்னைச்) சுழற்றினவனான இராவணனுடைய மார்பிலே (தன்) நகம் அழுந்தும்படி குத்தி, பெருத்துயர்ந்துள்ள விசாலமானகைகளைக்கொண்டு நெருங்கி (அவ்விராவணனுடைய) இடையைப்பிடித்துத் திரிகின்றதிறத்தினால்(அவ்வி ராவணன்) கருத்தழிதல்பொருந்த [மூர்ச்சிக்க], (பின்பு) எடுத்து (அவனை) அகழியி விட்டான்; (எ - று.)

இங்குக்கூறியஅகழி, இராவணன் அரண்மனையைச்சுற்றியுள்ள தென்ன லாம். இலங்கைக்கு; புறம் இடை அகம் என மூன்றிடத்து மூன்றுமதிலும் மூன்றகழியும் உள்ளன என்பதனைச் சுந்தரகாண்டத்தில் ஊர்தேடுபடலத்து வருஞ்செய்யுள்களிலும் அறியலாம். எயில் - இலக்கணையால், திரிபுரத்தை

யுணர்த்திற்று. பி-ம்:—1உயிர். 2செற்றுமவை, செத்தும்வகை. 3கையொடடித்து, கைகொடெடுத்து. 4கருத்தழிவுறுத்துற நெரித்தெயில்கணத்தில், கருத்தழிவுறத்திரிகிறத்தெயில்கணத்தின், கருத்தழிவுறுத்தெதிர்நெரித்தெயில்கணத்தின். (௮௫௩)

௧௫.—இராவணன் சுக்கிரீவனை அகழியிலிட, அவனும்மீள, இருவரும் ஒருசேர அகழியில் விழுதல்.

இட்டவனை யிட்டவக ழிற்கடி தினிட்டான்
தட்ட1வுய ரத்தினி லுறுந்தச முகத்தான்
ஒட்டவுட னேயவனும் 2வந்தவனை யுற்றான்
விட்டிலர் புரண்டிருவ ரோரகழின் வீழ்ந்தார்.

(இ-ள்.) தட்டுப்பட்ட திடரினால் எதிர்ப்பொருந்திய இராவணன் (தன்னை) அகழியிலிட்டவனான சுக்கிரீவனை(த் தன்னை) யிட்ட அகழியிலேயே இட்டானாய் ('ஏறுபார்ப்போம்' என்று) சபதங்கூற, உடனே அந்தச்சுக்கிரீவனும் (அவ்வகழியினின்று) எதிவந்து அவ்விராவணனைப் பொருந்தினான்; இருவரும் (ஒருவரையொருவர்) விடாதவராய்த் தரையிற்புரண்டு ஓரகழியிலே விழுந்தார்; (எ-று.)—அகழ் = அகழி. பி-ம்:—1உயரத்தினினிருந், உயரத்தினிமிருந். 2வந்திவனை. (௮௫௪)

௧௬.—பத்துக்கவிகள்-சுக்கிரீவராவணர்களின் மல்லயுத்தங் கூறும்.

விழுந்தனர் சுழன்றனர் 1வெகுண்டனர் திரிந்தார்
அழுந்தின ரழுந்தில 2ரகன்றில ரகன்றார்
எழுந்தன 3ரெழுந்தில ரெதிர்ந்தனர் முதிர்ந்தார்
ஒழிந்தன ரொழிந்தில 4ருணர்ந்திலர்க ளொன்றும்.

(இ-ள்.) ஓரகழியில் விழுந்தவரான (இராவணன் சுக்கிரீவன் என்ற) அவ்விருவர்களும்,—சுழன்றும் வெகுண்டு (வலசாரிஇடசாரியாகத்) திரிந்தும் சற்றுநேரம்நிலத்திலழுந்திநின்றும் அழுந்தியிடாமல்வெளிப்பட்டும்,(ஒருவரையொருவர்)நெருங்கியும் நெருங்காமலும் சற்றுமேலெழுந்தும் எழுந்திராமலே எதிர்த்துநின்றும், சற்றுப்போரினின்றுநீங்கியும் சற்றுநீங்காமலும் (தாம் செய்வது இன்னதென்று)சிறிதும்உணர்வில்லாமல் (பொருவதில்)முதிர்ந்துநின்றார்கள்; (எ-று.)—பி-ம்:—1விரைந்தனர், விரிந்தனர். 2அகன்றிலரடர்ந்தார், அகன்றனர்புகன்றார். 3இடைந்திலரெதிர்ந்திலர், முதிர்ந்தார், எதிர்ந்தனர்முதிர்ந்தனர்சிறந்தார், முனிந்தனரிடைந்திலரெதிர்ந்தார். 4ருலைந்திலர்கள். (௮௫௫)

௧௭. அந்தர வருக்கன்மக னாழியக ழாகச்
சுந்தர 1முடைக்கரம் வலிப்பதொர் சுழிப்பட்டு
எந்திர மெனத்திரி யிரக்கமி லரக்கன்
மந்தர மெனக்கடையும் வாலியையு மொத்தான்.

(இ-ள்.) வானத்திற்சஞ்சரிக்கின்ற சூரியனுடையமகனாகிய சுக்கிரீவன்,—அகழே கடலாக அழகையுடைய கையினாலே இழுத்துக்கடைகையில் ஓர் சுழிபொருந்தி (அதனிடையே) எந்திரம்போலத்திரிகின்ற இரக்கமில்லாத

அரக்கனாகிய இராவணன் மந்தரம்போன்றிருக்க, (முன்பு பாற்கடலைக்)கடைந்த வாலியையும் போன்றான்; (எ - று.)

பாற்கடலிற் சுழல்பட மந்தரமலையையிட்டுக் கடைந்த வாலிபோலச் சுக்கிரீவன் இராவணனை அகழியிலிட்டுச் சுழிபட வலமுமிடமுமாகத் திரிக்கலாயினனென்றவாறு; உருவகவணியையங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. பி-ம்:—[1]உடைக்கைகள்சுடர்க்கயிறதாக, உறக்கரம் வலக்கயிறதொப்ப.(௮௫௬)

௧௮. ஊறுபடு செம்புன [1]லுடைந்த கழையுற்றது
ஆறு[2]படர் கின்றன வெனப்படர வன்னார்
பாறு[3]பொரு கின்றென [4]பருந்திவை யெனப்போய்
ஏறினர் விசும்பிடை யிரிந்தவுல கெல்லாம்.

(இ - ள்.) ஊறுபட்டதனால் தோன்றிய இரத்தம் கரும்பிற்பொருந்திய (சாற்றின்) நதி படர்கின்றனஎன்னும்படி பெருக,—(இராவணன் சுக்கிரீவன் என்ற)அவர்கள்,—பருந்து தம்முட்பொருகின்றனஎன்று கருதுமாறு (வானத்துப்)போயேறினர்; (இவ்விருவரும் வெகுமும்முரமாகப்பொருவதைக் கண்டு இவர்கள் ஒருகால் தம்மீதுவிழுவதனால் தமக்குஆபத்து நேருமோஎன்று) உலகோரெல்லாம் நிலைகெட்டு ஓடலானார்கள்; (எ-று.)—பாறு = மாறு.பொருகின்ற = பொருகின்றன. பொருகின்றவெனஎன்பது பொருகின்றென எனத் தொகுத்தல்விகாரம்பெற்றுவந்தது. பி-ம்:-[1]உடைத்தகரையொத்தார்,உடைத்தகளையோதத், உடைத்தகரையொத்த, உடற்கணிழிகின்ற. [2]தாறு. [3]பொருகின்றன. [4]பரிந்துவிசையிற்போம், பரிந்தவையெனப்போய். (௮௫௭)

௧௯. தூரநெடு வானின்மலை யுஞ்சுடர வன்சேய்
[1]காரினிற மோடுநிகர் காய்சின வரக்கன்
[2]தாருடைய தோள்கள்பல வுந்தழுவ நின்றான்
ஊரினொடு கோள்கதுவு தாதையையு மொத்தான்.

(இ - ள்.) தூரமாயுள்ள நெடுவானிற்பொருகின்ற சூரியன்புதல்வன், மேகத்தின் நிறத்தையொத்த நிறத்தையுடைய காயுஞ்சினத்தைக்கொண்ட அரக்கனுடைய மாலையையணிந்த பலதோள்களாலும் தழுவப்பட்டுநின்றவனாய், ஊர்கோளாற் கதுவப்பெற்ற தந்தையாகிய சூரியனையும் போன்றான்; (எ-று.)—ஊரினொடுசேர்ந்த கோள்-ஊர்கோள். செந்நிறச்சூரியனைக்கருநிறப் பரிவேடஞ் சுற்றியதுபோல இராவணனுடைய தோள்கள் சுக்கிரீவனைச் சுற்றியன வென்க. பி-ம்:—[1]காரினொடுமேருநிகர். [2]தாரினொடு. (௮௫௮)

௨௦. பொங்கமர் விசும்பிடை யுடன்றுபொரு போழ்திற்
செங்கதி ரவன்சிறுவ னைத்திரள் புயத்தால்
[1]மங்கல வயங்கொளி மறைத்தவ லரக்கன்
வெங்கதிர் கரந்ததொரு மேகமென லானான்.

(இ-ள்.)விசும்பினிடத்து (மனங்)கொதித்துச்செய்கின்ற போரை (அவ்விருவரும்)மாறுபட்டுச்செய்யும்போதில், செந்நிறக்கிரணங்களையுடையவனான சூரியனுடையபுத்திரனைத் திரண்டபுயத்தினால் மங்குதலில்லாத விளங்குகி

ன்ற ஒளியைமறைத்தவனான வலிய அரக்கன், சூரியனைமறைத்த தொரு மேகம்போலத் தோன்றினன்; (எ-று.)—நிறமும் செயலும்பற்றிய உவமை. பி-ம்:—1மங்குலில். (அறுக)

உக. நூபுர மடந்தையர் கிடந்தலற [1]நோனார்
மாபுர [2]மடங்கலு [3]மிரிந்தயர வன்றாள்
[4]மீபுர மடங்கலென வெங்கதிர வன்சேய்
கோபுர மடங்க விடியத்தனி குதித்தான்.

(இ - ள்.) நூபுரமணிந்த மங்கைமார் அலறிக்கிடக்கவும், பகைவரின் பெரிய நகரமுழுதும் நிலைகெட்டு வருந்தவும், வலிய பாதங்களைக் கொண்டவனும் உடலின்மேலிடம் நரசிங்கமுமான திருமால்போல(உக்கிரங்கொண்டு) உஷ்ணகிரணனான சூரியனுடைய புத்திரன் [சுக்கிரீவன்], கோபுரமெல்லாம் இடியத் தனியே குதித்தான்; (எ - று.)

நரசிங்காவதாரஞ்செய்த திருமாலின் இடைக்குமேற்பட்ட பகுதி சிங்கவடிவமாதலால், அப்பிரானை 'மீபுர மடங்கல்' என்றார்: புரம் - உடல். திரிபென்னுஞ்சொல்லணி காண்க. வல்தாள் - வலியமுயற்சியினால், குதித்தான் என்றலுமுண்டு. பி-ம்:—1நோனா. 2மடந்தையர். 3இரிந்தலறவன்றோள், இடிந்துவிழவன்றாள். 4மேபுரம். (அகூ0)

உஉ. [1]ஒன்றுற விழுந்த வுருமைத்தொடர [2]வோடா
மின்[3]றெரி [4]யெயிற்றினொரு மேகம்விழு மென்னத்
தின்றிடுவ னென்றெழு சினத்திக லரக்கன்
பின்றொடர வந்திரு கரத்துணை பிடித்தான்.

(இ-ள்.) மின்னல்போலவிளங்குகின்ற பற்களையுடைய ஒருமேகம் ஒப்பற்றதாகிப்பொருந்தவிழுந்த இடியைத் தொடர்ந்துஓடி விழுகின்றதென்னும்படி, '(இவனைத்)தின்றிடுவேன்' என்று பொங்குகின்ற சினத்தைக்கொண்ட வலிய இராவணன் அந்தச்சுக்கிரீவனைப் பின்தொடர்ந்துவந்து (அவனுடைய) பெரிய இரண்டுகைகளையும் பிடித்துக்கொண்டான்; (எ - று.)—பி-ம்:—1என்றிடவமைந்த, ஒன்றிடைவிழுந்த. 2ஓடி. 3திரி. 4எயிற்றது. (அகூக)

உ௩. வந்தவனை நின்றவன் வலிந்தெதிர் மலைந்தான்
அந்தகனு மஞ்சிட நிலத்திடை யரைத்தான்
எந்திர மெனக்கடி தெடுத்தவ னெறிந்தான்
கந்துக மெனக்கடி தெழுந்தெதிர் கலந்தான்.

(இ-ள்.) நின்றவனாகிய சுக்கிரீவன்,—(தொடர்ந்து)வந்தவனான இராவணனை வலிகொண்டு எதிரேமலைந்தவனாய், யமனும் அஞ்சும்படி நிலத்திலேயிட்டுத்தேய்த்தான்: அந்தஇராவணன் எந்திரம்போன்று விரைவிலே அந்தச்சுக்கிரீவனை யெடுத்து அப்பாலெறிந்திட்டான்: அவனும், பந்துபோன்றுவிரைவிலெழுந்து எதிரேபொருமாறு வந்துசேர்ந்தான்; (எ - று.) (அகூஉ)

உ௪. [1]படிந்தன மரந்தரை [2]பகிர்ந்தன பரப்புங்
[3]கொடுஞ்சின முதிர்ந்தனர் வுரத்தின்மிசை குத்த

நெடுஞ்சுவர் பிளந்தன நெரிந்த நிமிர்குன்றம்
இடிந்தன தகர்ந்தன விலங்கை[4]மதி லெங்கும்.

(இ - ள்.) (அவ்விருவருஞ்செய்த போரின்அதிர்ச்சியால்), மாம் தரையிற் படிந்தன:பரவியநிலங்களும் பிளவுபட்டன: வலிமையோடு மேலே தாக்குவத னல் நெடியசுவர்கள் பிளந்தன: ஓங்கியமலைகள் நொருங்கின: இலங்கைமதில் எல்லாவிடத்தும் இடிந்து பிளந்திட்டன: (இங்ஙனமாகும்படி அவ்விருவரும்) கொடியசினம் முதிரப்பெற்றார்கள்; (எ - று.)

முதலடி-படிந்தனர்பரந்தனர் பரந்ததொர் நெருப்பின், என்று சிலபிரதிகள்.பி-ம்:—[1]படிந்தது. [2]பகிர்ந்தது. [3]கொடுஞ்சினமுதிர்ந்தன. [4]நகரெல்லாம்.

உரு.—இராவணசுக்கிரீவர்களின் போர்த்திறமை.

[1]செறிந்துயர் கறங்[2]கனையர் மேனிநிலை நேரார்
பிறிந்தனர் பொருந்தின ரெனத்[3]தெரிதல் பேணார்
[4]எறிந்தனர்க ளெய்தினர்க ளின்னரென முன்னின்று
அறிந்தில ரரக்கரு மமர்த்தொழி [5]லயர்ந்தார்.

(இ - ள்.) நெருங்கவுயர்ந்த காற்றாடியைப்போன்றவராயுள்ள அந்த ராவணசுக்கிரீவருடைய உடலின்நிலையையும் அறிய முடியாதவரும், (அவ்விருவரைப்பற்றியும் 'இப்போது) பிரிந்துள்ளார், (அன்றிப்) பொருந்தியுள்ளார்' எனத் தெளிவாக உணர்தலையும் விரும்பிச்செய்யமுடியாதவருமாகி, '(இன்னார் இன்னாரைத் தாக்கி)எறிந்தார்(இன்னார் இன்னாரைக்)கிட்டியுள்ளார்' எனவும் முன் நின்றும் அறியாதவராய், அரக்கரும் (அவ்விருவர்செய்யும்)போர்த்தொழிலில் மனஞ்சோர்ந்தனர்; (எ - று.)—பி-ம்:—[1]செறிந்துழல். [2]அனைய. [3]திரிதல், தெளிதல்.[4]எறிந்திலர்களெய்திலர்கள்.[5]அயர்த்தார்,மறந்தார். (அசுஅ)

வேறு.

உசு.—இராமபிரான் சுக்கிரீவனைக் காணாது கவலுதல்.

இன்னதோர் தன்மை யெய்து [1]மளவையி னெழிலி வண்ணன்
மன்னுயி ரனைய காதற் றுணைவனை வரவு காணான்
உன்னிய கரும மெல்லா [2]முன்னொடு முடிந்த வென்னாத்
தன்னுணர் வழிந்து சிந்தை [3]யலம்வந்து தளர்ந்து [4]சாய்ந்தான்.

(இ - ள்.) இவ்வாறானசெயல் நிகழும்போது, கருமுகில்போன்றமேனி நிறத்தவனான இராமபிரான், (தன்னுடைய) நிலைபெற்றஉயிரையொத்த அன்பிற்குஉரியதுணைவனுடைய வரவைக் காணாதவனாய், '(நான்செய்யவேணுமென்று) நினைத்திருந்த தொழில்களெல்லாம் உன்னோடும் முடிந்திட்டன' என்று சொல்லி மனம்வருந்தி, தன்னுடைய அறிவு ஒடுங்கி (உடல்) தளர்ந்து மெலிந்தான்; (எ - று.)

சென்ற துணைவன் உடனே திரும்பிவராமல்தாமதித்ததனால்,'அவனுக்கு என்ன தீங்கு நேருமோ?' என்ற சிந்தையினால் ஸ்ரீராமன் வருந்திச் சோர்ந்து மெலிந்தான். தன்னைச் சார்ந்தார்க்கு ஏதேனும் தீங்குநேரின், பின்னர்த் தான்

இப்போதுபெறுமாறு முயல்கின்ற சீதையைப் பெறுவதையும் விரும்பாமை யை 'உன்னியகருமமெல்லா முன்னொடுமுடிந்த'என்பதனால் உணர்த்தினான், ஸ்ரீராமன். இதனால், அப்பிரான் தன்னைச் சார்ந்தாரிடத்து மிக்கபேரன்புகொண்டுள்ளானென்பது, விளங்கும். பி-ம்:—1அளவினில்.2முதலொடுமுலந்தது. 3அலமா. 4சோர்ந்தான். (அசுரு)

உஎ.—இதுமுதல் ஐந்துகவிகள்-மனம்வருந்திய ஸ்ரீராமன் வருந்திக் கூறுதலைத் தெரிவிக்கும்.

ஒன்றிய 1வுணர்வே யாய வோருயிர்த் துணைவ வுன்னை
இன்றியா னுளனாய் நின்றொன் 2றியற்றுவ 3தியைவ தன்றால்
அன்றியுந் 4துயரத் திட்டா யமரரை யரக்கர்க் கெல்லாம்
வென்றியுங் கொடுத்தா 5யந்தோ கெடுத்தனன் வெகுளி யென்றான்.

(இ - ள்.) 'பொருந்திய உணர்வே ஒருவடிவெடுத்தாற்போன்றுள்ள ஒப்பற்ற (என்) உயிர்த்துணைவனே! உன்னையில்லாமல் நான் மாத்திரம் உயிருடனிருந்து ஒருகாரியத்தைச் செய்வது நடப்பதன்று: [இனி என்காரியமொன்றும்நிகழாது]: இது அன்றியும், தேவர்களைத் துன்பத்திற்கு உள்ளாக்கினாய்: ராட்சசர்கட்கெல்லாம் வெற்றியையும் தந்தாய்: உன்வெகுளி கெடுத்திட்டது! அந்தோ!!' என்று வருந்திக் கூறினான்; (எ - று.)

நீ இல்லாமற்போனால், என்காரியம் இனி ஒன்றும் நிகழாது;இம்மாத்திரமோ? இனி, ராட்சசசங்காரம் நிகழாதாகையால் அமரர்வருந்த அரக்கர்வெற்றி பூண்பரே! உன்சினத்தினால் எவ்வளவு தீங்குநேர்ந்தது! ஐயோ!என்று ஸ்ரீராமன் வருந்திக் கூறலாயினன். பி-ம்:-1உணர்வினைய, உணர்வினாய. 2இயற்றுதல். 3இசைவது. 4துயர்தந்திட்டாய். 5என்னைக். (அசுசு)

உஅ. தெய்வ1வெம் படையுந் தீரா 2மாயமும் வல்ல 3தீயோன்
கையிடைப் புக்காய் நீவே 4றெவ்வணங் கடத்தி காவல்
வையமோ ரேழும் பெற்றால் வாழ்வனோ வாராயாகில்
5உய்வனோ தமிய னேனுக் குயிர்தந்த வுதவி யோனே.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நீ, கொடிய அஸ்திரங்களும் நீங்காதமாயமும்வல்ல கொடியவனான இராவணனுடைய கையிலே யகப்பட்டாய்: (அக்காவலினின்றும்) வேறுகும்படி எவ்வண்ணம் கடந்துவருவாய்? (நீ) வாராவிட்டால் ஓரேழுலகத்தையும்(யான்)பெற்றாலும் நல்வாழ்க்கைபெறுவேனோ?(சீதையைப்பிரிந்து)தனிப்பட்ட எனக்கு உயிரைத்தந்த உபகாரகனே! (நான்) உயிர்தான் பிழைத்திருப்பேனோ? (எ - று.)

'வாராயாகில்' என்பது - மத்திமதீபமாக 'வையமோரேழும்பெற்றால் வாழ்வனோ' என்பதனோடும், 'உய்வனோ' என்பதனோடும் இயையத்தக்கது. இராவணன் சீதையைக் கவர்ந்துசெல்ல அதனால் தனிப்பட்டுப் பெருந்துயரடைந்து ஸ்ரீராமனுக்கு உயிர்போவதாயிருந்த தருணத்தில் சுக்கிரீவன்வந்து நண்புபூண்டு சீதையைத்தேடித் தருவதற்குஉதவுவதாக வாக்களித்துத் தன்பரி

வாரங்களான வானரர்களைச் சீதையுள்ள இடத்தை நாடிவருமாறுவிட்டு அச்சீதையின்செய்தியைத் தெரியச்செய்ததே அப்பிரான் உயிருடன்வாழ்ந்திருத்தற்கு ஏதுவாதலால்,'தமியனேனுக்கு உயிர்தந்தஉதவியோனே!'என்கின்றான். தெய்வவெம்படை-பிரமாஸ்திரம் முதலியன. பி-ம்:—[1]வான். [2]மாயையும். [3]தீயோர். [4]எங்ஙனம். [5]உய்வனே. (அசுஎ)

உகூ. ஒன்றாக நினைய வொன்றாய் விளைந்ததென் கரும மந்தோ
[1]என்தானும் [2]யானே வாழே னீயிலை யெனவுங் கேளேன்
இன்றாய [3]பழியு நிற்க நெடுஞ்செருக் களத்தி னென்னைக்
[4]கொன்றாயு நீயே யுன்னைக் கொல்லுமேற் [5]குணங்க டயோன்.

(இ - ள்.) என்னுடையசெயலானது ஒருவாறாக நினைக்க, வேறொன்றாக விளைந்திட்டது! அந்தோ!! எந்தவகையினாலும் நானோ (இனி) வாழமாட்டேன்: நீ இல்லாதவனானாயென்று சொல்லுவதையும் கேட்கப்பொறேன்: தீக்குணமுடையவனான இராவணன் உன்னைக்கொல்லுவானானால், இன்று(உனக்கு மாற்றான்கையிற்பட்டதனால்) தோன்றிய பழியும் வந்துசேர, பெரிய போர்க்களத்திலே என்னைக்கொன்றவனும் நீயேயாவாய்; (எ - று.)

"ஒன்றைநினைக்கினதுவொழிந்திட்டொன்றாகும்" என்றாற்போல, 'ஒன்றாகநினையவொன்றாய்விளைந்ததென்கருமம்'என்கின்றான். இராமபிரான் தான் உயிரைவிடுவதாகக்கருதுதற்கும் சுக்கிரீவன் சென்றிட்டதே காரண மாதலால், 'என்னைச்செருக்களத்திற் கொன்றாயும் நீயே' என்கின்றான். பி-ம்:—[1]வென்றாலும், என்றாலும். [2]யானே. [3]பழியில், பழியோ. [4]கொன்றாய்நீயன்றோநின்னை, கொன்றானேயன்றோ நின்னை. [5]குணங்கண்டயான். (அசுஅ)

ங.௦. இறந்தனை யென்ற போது மிருந்[1]தியா னரக்க ரென்பார்
திறந்தனை [2]யுலகினீக்கிப் பின்னுயிர் [3]தீர்வ னென்றால்
புறந்தரு [4]பண்பி னாய வுயிரொடும் பொருந்தி னானை
மறந்தனன் [5]வலியனென்பா ராதலா லதுவு மாட்டேன்.

(இ-ள்.) (நீ)இறந்திட்டாயென்றபொழுதிலும் யான்இருந்து அரக்கரென்பவரின்கூட்டங்களை யுலகத்தினின்று நீக்கிப் பின்பு உயர்தீர்வேனே யானால், '(ஆபத்துக்காலத்துப்) பாதுகாத்தலாகிய தன்மையோடுகூடிய உயிரோடும் ஒத்தவனான நண்பனை (இராமன்) மறந்தான்: (மனம்)வலியன்' என்று உலகோர் பழிப்பர்: ஆதலால், அவ்வாறுசெய்யவும் மாட்டேன்; (எ - று.)

இதனால், 'எனக்கு உன்னைப்பற்றி அன்பில்லாவிட்டாலும் உலகோர் பழிப்பரே!' என்றவது பார்க்கவேண்டுமாதலால், உன்னைவிட்டுநீங்கினபின்பு ராட்சசசங்காரத்தைச்செய்து தேவரின்காரியத்தை முடித்தலும் என்னாலியலாதென்று இராமபிரான்காட்டியவாறு. பி-ம்:—[1]இகல். [2]செருத்து. [3]தீர்வெனேனும். [4]நண்பினோர்கள், பண்பினோர்கள், பண்பினாலும். [5]என்றுகொள்வார். ()

ங.க. [1]அழிவது செய்தா யைய வன்பினா [2]னளியத் தேனுக்கு
[3]ஒழிவரு முதவி செய்த வுன்னையா னொழிய [4]வாழேன்
எழுபது வெள்ளந் தன்னி னீண்டொர்ப்பெ ரொஞ்சா [5]தேகிச்
செழுநக [6]ரடைந்த போழ்து மித்துயர் தீர்வ துண்டோ.

(இ - ள்.) ஐயனே! (என்னிடத்துள்ள) அன்பினால் அழிதற்குஎதுவான செயலைச் செய்தாய்: இரங்கத்தக்கஎனக்கு நீங்காத [என்றும்நிலைத்துநிற்பதான] உதவியைச் செய்த உன்னை யொழிய யான் வாழேன்: எழுபதுவெள்ளஞ் சேனையில் இங்கே ஒருத்தரும் குறையாமல்(மீண்டு)சென்று வளப்பமுள்ள நகரத்தையடைந்தகாலத்தும் (உன்னை நீங்கிய) இத்துயர் நீங்குவதாகுமோ?

ஒருத்தரும் போரில் இறவாமல் எல்லோரோடும் மீண்டு என்னகர்க்குச் சென்றாலும்,உன்னைப்பிரிந்த துயர் எனக்குப் போகாதென்கின்றான்.இதற்குக் காரணம்-உயிர்நீங்குவதாயிருந்த காலத்தில் சீதையின் அணிகலங்களைக் காட்டியும் தூதனுப்பிச்செய்தியுணர்வித்தும் உயிரைக்காத்தும், சேதுகட்டிக் கடல் சூழிலங்கையை யடைவித்தும் போந்தமை யென்பான் 'ஒழிவருமுதவிசெய்தவுன்னை' என்கின்றான். பி-ம்:—1அழிவன. 2அளியற்றேனுக்கு,அளியத்தேனை. 3உழிவரும். 4வாழ்தல். 5ஆசைச். 6அடையினன்றேவித்துயர் தீர்வதென்றான்.

௩௨. —சுக்கிரீவன் இராவணனதுமகுடமணிகளைப்பறித்துக்கொண்டு இராமனைச் சார்தல்.

என்[1]றவ [2]னிரங்குங் காலத் திருவரு மொருவர் தம்மின்
வென்றிலர் [3]தோற்றிலா ராய் வெஞ்[4]சமம் விளைக்கும் வேலை
வன்றிற லரக்கன் மௌலித் [5]தனிமணி [6]வலியால் வாங்கிப்
பொன்றின [7]னாகி னன்றென் றவன் [8]வெட்க விவனும் போந்தான்.

(இ-ள்.) என்று அந்தஇராமபிரான் வருந்தும்போது,—(இராவணன்சுக்கிரீவன்என்ற)இருவரும் தம்முள் (எவரும்)வென்றிலராயும் தோற்றிலராயும் கொடியபோரைநடத்தும்போது,அந்தஇராவணன் நான்இறந்தேனேயானால் நல்லதுஎன்று நாணமடையும்படி மிக்கவலிமையையுடைய அரக்கனாகிய அவ்விராவணனது கிரீடத்திலுள்ள ஒப்பற்ற மணிகளை(த்தன்) வலிமையாற்பறித்துக்கொண்டு இந்தச்சுக்கிரீவனும் (இராமனுள்ளஇடத்துக்கு) வந்திட்டான்.

புகழ்கெடவாழ்தலின் இறத்தலே நன்றென்று இராவணன் வெட்கினான். இராவணனுடைய கிரீடங்களையெல்லாம் கீழேதள்ளி அவற்றின் மணிகளைப்பறித்துவந்தனன்சுக்கிரீவனென்றவாறு."பொறிப்புண்டரீகம்போலுமொருவனாற் புனைந்தமோலிபறிப்புண்டும்"என அங்கதன்தூதுபடலத்தில் வருவது காண்க. வடமொழியிலும் கிரீடங்களைத்தள்ளியதாகவே கூறியுள்ளது. மகுடத்தைத் தள்ளியவன் தான் அவ்வாறுசெய்தசெயல் தெரியுமாறு மணியைப்பறித்துவந்து ஸ்ரீராமபிரானது திருவடிகளிற்சமர்ப்பித்தானென்க. பி-ம்:—1இவன். 2இரங்கு. 3தோற்றிலாதார். 4சமர். 5மணிகளை. 6வலியின், வாயில். 7ஆகிநன்றென்று, ஆகிலேனென்று. 8வெள்க. (௭௩௧)

௩௩.—சுக்கிரீவன் தான் கொணர்ந்தமணிகளை இராமபிரானது திருவடித்தலத்தில்வைத்துத் தொழுதுநிற்றல்.

கொழுமணி முடிக டோறுங் [1]கொண்டன [2]மணியின் கூட்டம்
அழு[3]தய ருறுகின் றான்ற [4]னடித்தல மதனிற் சூட்டித்
தொழுதய னுணி நின்றான் றூயவ னிருவ ரோடும்
எழுபது [5]வெள்ளம் யாக்கைக் கோருயி [6]ரெய்திற் றன்றே.

(இ - ள்.) கொழுவியமணிகளழுத்திய கிரீடந்தோறும் பதித்துக்கொண்டனவான மணியின்கூட்டத்தை அழுது மனம்வருந்துகின்றவனான ஸ்ரீராமனுடைய அடித்தலத்திற் சமர்ப்பித்து, தொழுது நாணி (ச் சுக்கிரீவன்) அயவிலேகின்றான்; பரிசுத்தகுணமுடையவரான இராமலட்சுமணரிருவரோடும் எழுபதுவெள்ளஞ்சேனையின்யாக்கைக்கும் (அப்போது) உயிர்வந்திட்டாற்போலாயிற்று; (எ - று.)

இராவணனைச் சங்கரியாமல்வந்தமையாற் சுக்கிரீவன் நாணினன்: 'பையல்தலையைப் பிடுங்கிக்கொண்டுவந்து திருவடிகளிலே இடப்பெறாத நாம் என்சொல்லி முன்னேநிற்பதென்று பெருமாளருகே வருகின்றார்' என்பர், பெரியவாச்சான்பிள்ளை. சுக்கிரீவன்சென்றிட்டதனால் சேனைகளும்உயிரற்றனபோல் அழுங்கியிருந்தனவென்பது 'எழுபதுவெள்ளம்யாக்கைக்கு ஓருயிரெய்திற்று' என்பதனாற் பெறப்படும். பி-ம்:—[1]கொண்டனன், கொண்டநன். [2]குழுவின். [3]அயர்கின்றவண்ணல், அயர்வுறுகின்றான்றன். [4]அடித்தலத்தமரச். [5]வெள்ளத்தாக்கை. [6]எய்திற்றன்றான். (அஎஉ)

ஙச.—இராமபிரான் சுக்கிரீவனைத் தழுவிக்கொண்டு மகிழ்ச்சிக்கண்ணீர் சொரிதல்.

என்புறக் [1]கிழிந்த புண்ணி [2]னிழிபெருங் குருதி யோடும்
[3]புன்புலத் தரக்கன் றன்னைத் தீண்டிய [4]புன்மை போக
அன்பனை [5]யமரப் புல்லி மஞ்சன மாட்டி விட்டான்
தன்[6]பெரு நயன மென்னுந் [7]தாமரை சொரியு நீரால்.

(இ - ள்.) எலும்புவரையிலும்பொருந்தக் கிழிந்த புண்களிலிருந்து இழிகின்ற மிக்க இரத்தத்துடனே, புல்லிய அறிவினையுடைய அரக்கனாகியஇராவணனைத் தீண்டிய இழிவு போகுமாறு, ஸ்ரீராமன், அன்பிற்குஇடனான சுக்கிரீவனை இறுகத் தழுவித் தன்னுடையபெரிய கண்களென்கின்ற தாமரைபொழியும் நீரினால் அபிஷேகஞ்செய்திட்டான்; (எ - று.)

புன்மை - ஆசௌசம், தீட்டு. புன்மைதீர மஞ்சனமாட்டுவித்தல், முறைமை. ஸ்ரீராமன்தழுவியதனால் அந்தச்சுக்கிரீவனது என்புறக்கிழிந்த புண்ணின் குருதி தீர்ந்ததென்க. இறுகக்கட்டுவதனால் வடுப்பட்டஇடத்தினின்று குருதி வெளிப்படாதுபோதல் காண்க. பி-ம்: -[1]குழிந்த. [2]இழிசொழுங், இழிதருங். [3]புன்புறத்து. [4]தீமை. [5]மார்பிற். [6]பெருங்கண்கள். [7]தாமரைத்தடத்து. (அஎங)

ஙரு.—சுக்கிரீவனைநோக்கி இராமபிரான் அன்போடுசொல்லந் தொடங்குதல்.

ஈர்கின்ற தன்றே யென்ற னுள்ளத்தை [1]யிங்கு மங்கும்
பேர்கின்ற தாவி யாக்கை பெயர்கின்ற தில்லைப் [2]பின்னைத்
தேர்கின்ற சிந்தை [3]யன்றோ [4]திகைத்தனை யென்று தெண்ணீர்
சோர்கின்ற வருவிக் கண்ணான் றுணைவனை நோக்கிச் [5]சொல்லும்.

(இ - ள்.) (நீ என்னைப்பிரிந்தானது), என்னுடைய உள்ளத்தைப் பிளக்கின்றதன்றோ! (உன்பிரிவினால் என்னுடைய) உயிர், இங்குமங்குமாகத் தத்

தளிக்கின்றது; பின்னும், என்னுடலோ செயலற்றுக் கிடக்கின்றது: ஆலோசிக்குந் தன்மையுள்ள(உன்)மனம் திகைத்தனையன்றோ! என்று தெளிவான நீரருவிவழிகின்ற கண்களையுடையவனாய், (ஸ்ரீராமன்), தன்நண்பனான சுக்கிரீவனை நோக்கிப் பின்வருமாறு சொல்வானானான்; (எ - று.)—பி - ம்:—[1]அங்குமிங்கும். [2]பின்னர்த். [3]ஒன்றோ. [4]திகைத்தன. [5]சொன்னான். (அஎசு)

நடசு.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஸ்ரீராமன் சுக்கிரீவனிடத்து அன்பினாற் கூறுவனவற்றைத் தெரிவிக்கும்.

கல்லினும் வலிய தோளாய் நின்னையக் கருணை யில்லோன்
கொல்லுதல் செய்தா னாகிற் கொடுமையாற் [1]குற்றம் பேணிப்
பல்பெரும் பகழி மாரி வேரொடும் பறிய நூறி
வெல்லினுந் [2]தோற்றேன் யானே யல்லனோ விளிந்தி லாதேன்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) கல்லைக்காட்டிலும் வன்மையுள்ள தோளையுடைய சுக்கிரீவனே! உன்னைக் கருணையில்லாத அந்தஇராவணன் கொல்வானாகில், (அவன்) செய்த குற்றத்தைப் பாராட்டிக் கொடுமையோடு மிக்க பலஅம்புமழைகளைக் கொண்டு வேரோடும் (அவ்விராவணன்) பறியுண்ணும்படி அழித்து வென்றேனென்றாலும், உயிரிறவாத யான் தோற்றவனேயாவனன்றோ! (எ - று.)

நண்பர்க்கு ஆபத்துநேராதபடி பாதுகாக்கமுடியாமற் பெறும் வெற்றி வெற்றியன்று; அதனினும் உயிரைப் பலிகொடுப்பதும் மேலென்றபடி. இச்செய்யுள் சிலபிரதியில் "பெருமையும்" என்ற அடுத்த பாடலுக்குப் பின்னே காணப்படுகின்றது. பி-ம்:—[1]கொற்றம். [2]தோற்றேனானே னல்லனோ. ()

நடஎ. பெருமையும் [1]வண்மை தானும் பேரெழி லாண்மை தானும்
ஒருமையி னுணர நோக்கிற் பொறையினை தூற்ற மன்றே
அருமையு [2]மடர்ந்து நின்ற பழியையு [3]மயர்ந்தாய் [4]போலும்
இருமையுங் [5]கெடுத்தா யன்றே யென்னினைந் தென் செய்தாய்நீ.

(இ-ள்.) மனவொருமையோடுதேர்ந்து பார்ப்போமாயின், பெருமையும் வண்மைக்குணமும், மிக்களழுச்சியையுண்டாக்குகின்ற ஆண்மையும் பொறுமைக்கு வலிமைசெய்வனவன்றோ! உன்னுடையஅருமையும் நெருங்கின்ற பழியையும் மறந்தாய்போலும்: (இம்மைமறுமைஎன்ற) இரண்டையுங்கெடுத்தாயன்றோ! என்ன நினைந்து என்னகாரியஞ்செய்தாய்? (எ - று.)

ஆண்மைக்குணம்முதலாகியவற்றைப் பொறுமையை மிகுதிப்படுத்தத் துணைக்கொள்ளவேணுமேயன்றிப் பொறுமையையிழப்பதற்குத் துணையாகக் கொள்ளலாகாது: நீயோ இராவணனைக் கோபுரத்தின்மீது கண்டதும்,'நமக்கு முன்னே ஒருபையல் மேலிடத்திருக்கையாவதுஎன்?' என்று சினம்பொங்க ஆண்மைகொண்டு அவன்மீதுபாய்ந்தாய்: அங்ஙனம் பாயுமிடத்து 'வானரர் தலைவரான நாம் நம்பணியாளரைக்கொண்டு எதிரியை யடர்ப்பதல்லது தாசித் தலையில் நாம் நிற்கவொண்ணாது' என்று கருதினையில்லை: இந்தப்படைகட்கெல்லாம் ஒருயிரென்னத்தக்க நீ உன்னருமையைக் கருதவேண்டாவோ? ஒருகால் எதிரியின்கையில் நீ சிக்கினபோது வானராதிபதியாய் மகாராஜ

னெனப்படுகின்ற உன்னை 'அடா! குரங்கே!! என்று இழிவுபடப்பேசினுறை யின், அது எமக்கெல்லாம் தலையிறக்கத்தை யுண்டாக்காதோ? இவ்வாறுபழிப் பிற்குஇடனுனதொழிலைச் செய்யலாமா? உனக்கு ஏதேனும் தீங்குநேரிடின் அதனால் உன்னைச்சார்ந்த நாங்களெல்லாம் உயிர்விடும்படி நேரிடுமே: இங்ஙனம் மறுமையிலும் இம்மையிலும் நாசத்தையும் பழிப்பையும்உண்டாக்கக்கூடிய செயலைச் செய்யலாமோ? என்னநற்பயனைக்கருதி இவ்வாறானதொழிலைச் செய்தாய்? என்றனன் ஸ்ரீராமனென்க. புகழ் நல்லுலகத்தையும் பழி நரகத் தையும் சேர்ப்பிக்குமென்பது, நூற்கொள்கை. பி-ம்:—1மேன்மை, வன்மை. 2அடுத்து, அடர்த்து. 3அயர்த்தாய். 4போல. 5கெடுக்கலுற்றாய். (அஎசு)

௩௮. 1இந்நிலை விரைவி னெய்தா தித்துணை தாழ்த்தி யாயின்,நன் னுதற் சீதை யாலென் 2ஞாலத்தாற் பயனென் னம்பி, உன்னையான் றொடர்வ னென்னைத் தொடருமிவ் வுலக 3மென்றால், பின்னையென் 4னிதனைக் கொண்டு 5விளையாடிப் 6பிழைப்ப செய்தாய்.

(இ - ள்.) இந்தநிலைமையில் விரைவினிலடையாமல் இவ்வளவுநேரம் [இன்னுஞ் சற்றுநேரம்] தாமதித்திருப்பாயாயின், (நான் உனக்குத் தீங்குநேர்ந்துவிட்டதென்றே திண்ணமாகக் கருதுவேன்: உனக்குத் தீங்குநேருமாயின், அப்போது), விசுவாசத்திற்கு உரியவனே! அழகிய நெற்றியையுடைய சீதையினால்தான் (எனக்கு)என்ன பயன்? இந்தப்பூமியால்தான் பயனென்னை? (ஒன்றாலும் பயனில்லையாதலால், நான் இறந்திட்ட) உன்னைப் பின்பற்றுவேன்: [யானும்இறந்திடுவேன்என்றபடி]: (அப்போது) இவ்வுலகம் என்னைப் பின்பற்றும்: [நான் இறந்தால் இவ்வுலகமும் இறந்துபடுமென்றபடி]; ஆயின், இவ்வாறானசெயலை (நீ) கைக்கொண்டு பின்னே ஆவது என்னஉள்ளது? விளையாடியவண்ணம் தவறானகாரியத்தைச் செய்தவனானாய்; (எ - று.)

உனக்குத் தீங்குநேருமாயின், நானும்உலகமும் அழியும்படிநேர்படுமாதலால், விளையாட்டுத்தனமானகாரியத்தை ஆலோசனையின்றிச்செய்தது சிறிதும்தகுதியன்றென்று சுக்கிரீவன்செயலைக் கண்டித்தவாறு. காரியம்நிகழ்ந்த பின்பு ஸ்ரீராமன் சுக்கிரீவனிடத்து இவ்வளவு கூறுவது - இனியாவது நீ இவ்வாறுபொறுமையின்றிச் செயல்செய்யலாகாதென்று உணர்த்துதற்காக. பி-ம்:—1இன்னிலை. 2ஞானத்தாற். 3ஒன்றோ, அன்றோ. 4இதனைநோக்கி. 5விழையாரைப். 6பிழைக்கச். (அஎஎ)

௩௯.—இராமனைநோக்கிச் சுக்கிரீவன் கூறத்தொடங்குதல்.

என்றன னென்ற லோடு மிணையடி யிறைஞ்சி யாங்குக்
குன்றுழற் குவவுத் திண்டோட் கொற்றவல் வீரற் காணத்
தன்றனி யுள்ள நாணுற் றழல்விழிக் கொலை வெஞ்சீயம்
நின்றென வெருத்தந் கோட்டி நிலனுற நோக்கிக் கூறும்.

(இ - ள்.) என்றுகூறி முடித்தான் (ஸ்ரீராமன்): என்றுகூறினவுடனே, (சுக்கிரீவன்),—(அவ்விராமனுடைய) தாளிணைகளை வணங்கி அங்கே மலையை யொத்த திரண்ட வலியதோளையுடைய வெற்றிபெற்ற வலியவீரனை, ஸ்ரீரா

மனை(கேரே)காண்பதற்குத் தனது தனிப்பட்டமனத்திலே நாணத்தோடு நெருப்பைக்கக்குகின்ற கண் விழியோடுகூடிய கொடியசிங்கம் நின்றாற்போலக்கழுத்தைவணக்கிக்கொண்டு நிலத்திலேபார்வையுறுமாறு பார்த்துக்கொண்டு கூறலானான்; (எ-று.)—இச்செய்யுள் பலபிரதிகளிலில்லை. (அஎஅ)

சo.—இதுமுதல்நான்குகவிகள் - சுக்கிரீவன் நான் இராவணனைக்கொல்லுதல் சீதையைச்சிறைமீட்டல்செய்யாமைகுறித்து வருந்திக் கூறுதலைத் தெரிவிக்கும்.

காட்டிலே கழுகின் வேந்தன் [1]செய்தது காட்ட மாட்டேன்
நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்க மாட்டேன்
கேட்டிலே [2]னல்லே னின்று கண்டுமக் கிளியன் னாளை [ன்.
மீட்டிலேன் தலைகள் பத்துங் [3]கொணர்ந்திலேன் வெறுங்கை [4]வந்தே

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) காட்டிலே கழுகுக்குஅரசனான சடாயுவென்பான் செய்தாற்போன்றசெயலைச் செய்துகாட்டவல்லமையுடையேனல்லேன்: நாட்டிலே குகன்செய்த (நன்மையையொத்த) நன்மையை விரும்பிச்செய்யமாட்டாதவனாயினேன்;(நான் அவைகளைக்)கேளாதவனல்லேன்:(கேட்டிருந்தும்),இன்று (பேச்சிற்) கிளிபோன்றவளான அந்தச்சீதையைக்கண்டு சிறைமீட்கலாயிருக்க அதுவுஞ் செய்யாதவனானேன் ;(அவளைக் கவர்ந்த இராவணனுடைய) பத்துத்தலைகளையும் கொணராதவனாய் வெறுங்கையோடுவந்தேன்; (எ - று.)

சடாயுசெய்தது - இராவணன் சீதையென்பாளைக் கவர்ந்துசெல்கையில் இடைவழியில் தடுத்து அன்னாளைச் சிறைமீட்பதற்காகத் தன்முழுவலிகொண்டு பொருது குற்றுயிராய்ப்போய்ப் பின்னும் அரிதில்உயிர்தாங்கியிருந்து இராமபிரானுக்குச் செய்திசொல்லிப் பின்னரே உயிர்விட்டமை. குகப்பெருமான்செய்தது - இராமனைக்கண்டதும் பேரன்புபூண்டு தன்னாலானஉபசாரங்களையெல்லாஞ்செய்து கங்கையைக்கடத்தி அப்பிரானதுகட்டளைப்படியே தன்சிருங்கிபேரபுரத்தில் தங்கியிருந்து பரதன் ஸ்ரீராமனைமீட்பதற்காக நாடி வருகையில் ஸ்ரீராமனிடத்துள்ள பேரன்பினால் அவனிடத்து அதிசங்கை செய்து அவன்கருத்தை நாடியுணர்ந்தபின் அந்தப்பரதன்முதலியோர் ஸ்ரீராமனைச்சேருமாறு கங்கைகடத்தியமை. ஸ்ரீராமனது திருவுள்ளத்துக்கு உவப்பானசெயல்களை ஜடாயு குகப்பெருமாள் என்பவர் செய்தாற்போலத் தான் செய்யவில்லையே யென்பது தோன்றச் சுக்கிரீவன் வருந்திக்கூறுகின்றானென்க. இங்ஙனம் இராமபிரானிடத்துப்பரிவுகொண்டு உதவிபுரிந்தமையினாலேயே சடாயுவும் குகனும் முறையே பெரியவுடையாரென்றும், குகப்பெருமாளென்றும் வைஷ்ணவசம்பிரதாயத்திற் பாராட்டிக் கூறப்படுவர்.

பி - ம்:—[1]செய்தன, செய்ததுங். [2]இன்றுகண்டுங் கிளிமொழிமாதராளை, கண்டுவந்தகிளிமொழியாளைநின்பால், கண்டேனந்தக்கிளிமொழியாளைநின் பால். [3]கொணர்கிலேன். [4]வந்தே. (அஎகூ)

சக.வன்பகை நிற்க வெங்கள் வானரத் தொழிலுக் கேற்ற
புன்பகை [1]காட்டும் [2]யானே புகழ்ப்[3]பகைக் கொருவன் போலாம்

என்பகை தீர்த்தென் னுவி யரசொடு மெனக்குத் தந்த
உன்பகை [4]யுனக்குத் தந்தே னுயிர்சுமந் [5]துழலா நின்றேன்.

(இ - ள்.) வலியபகை உயிரழியாதுநிற்க, எங்களுடைய வானரத்தொழி லுக்குஏற்ற புல்லிய பகையைக் காட்டுகின்ற யானே (நமது)புகழ்க்குப் பகை யாதற்குஏற்ற ஒருவன்போல்வேன்: என்னுடையபகையைத் தீர்த்து என் னுயிரை என்னரசுடனே எனக்குத்தந்தவனான உம்முடையபகையை (நான் ஒழித்திடாமல்) உமக்கே (ஒழித்திடும்படி) விட்டிட்டேன்: (இங்ஙனம் செய்யவேண்டியஉதவியைச் செய்யாமையால் பூமிபாரமான)உயிரைச் சுமந்து கொண்டுஉழன்றுகொண்டிருக்கிறேன்; (எ - று.)

நீர் என்பகைவனான வாலியை யொழித்து அப்பகைவனுக்குஅஞ்சிப்பதுங்கியிருந்தஎன்னுயிர் அவ்வாறானஅச்சமொழிந்து இனிதுவாழும்படிசெய்ததோடு இராச்சியத்தையும் மீட்டுக்கொடுத்தீர்: அங்ஙனம் பேருதவிபுரிந்த உமக்கு உம்பகைவனையொழித்துச் சிறைப்பட்டபிராட்டியை மீட்டுக்கொடுத்தாலல்லவா ஏற்ற கைம்மாறு செய்ததாகும்: அப்படிவெல்லமுடியாவிட்டால் என்னுயிரையாவது கொடுத்திருக்கவேண்டும். நான் அவ்வாறுசெய்வதை விட்டு, என்னுடைய பகைவனைக் கண்டபோது தாவிப்பாய்ந்து சண்டையிட்டுத் திரும்பியோடிவந்திட்டதனால் குரங்குப்புத்தியைக் காண்பித்தவனாய் உம் புகழ்க்குக் குறைவை விளைத்திட்டேனென்று சுக்கிரீவன் வருந்திக்கூறுகின்றான். 'இராமனைச்சேர்ந்தார் பகையையொழித்தார்' என்றால் அது உமக்குப்புகழாமேயன்றி, இராமனைச்சேர்ந்த குரங்குகட்கெல்லாந்தலைவன் பெருவீரன்போல் முதலில்தாவிப் போர்க்குவந்து பிறகு போரில்நிலைத்துநிற்க முடியாமல் ஓடிவிட்டானென்றால் அது உமக்குப் புகழ்க்குறைவையே யுண்டாக்கு மென்பான்,'வானரத்தொழிலுக்குஏற்ற புன்பகைகாட்டும்யானே புகழ்ப்பகைக்கொருவன்போலாம்' என்கிறான். பி - ம்:—[1]நாட்டும். [2]யானேர். [3]பகையொருவன். [4]உனக்கே. [5]உழல. (அஅ0)

சுஉ. செம்புக்குஞ் சிவந்த செங்கட் டிசைநிலைக் களிற்றின் சீற்றக்,
கொம்புக்கும் [1]குறைந்த துண்டே யென்னுடைக் குரக்குப் புன்றோள்,
அம்புக்கு [2]முன்னஞ் சென்று னரும்பகை [3]முடிப்ப லென்று, வெம்
புற்ற மனமும் யானுந் [4]தீதின்றி மீள வந்தேன்.

(இ - ள்.) தாமிரத்தைக்காட்டிலும் மிகச்சிவந்த கண்களையுடைய திக்கு யானைகளின் சீற்றத்தோடு பாய்ந்த தந்தங்கட்கும் என்னுடைய புல்லிய குரக்குத்தோள் குறைந்ததாயிற்றே! (உம்முடைய) அம்பிற்குமுன்னேசென்று உமது(போக்குவதற்கு) அரிய பகையை முடிப்பேனென்றுசொல்லி(ச் சினத்தினால்)வெம்புதலடைந்தமனமும் யானும் தீதில்லாமல் மீளுமாறுவந்தேனே.

திசையானைக்கொம்பு இராவணனுடையமார்பிற்பாய்ந்தழுந்தினதுபோல் என்னுடையகையும் அவன்மார்பிற்புதையும்படி யான் அவ்விராவணனை வலியக் குத்தாதுவிட்டேனேயென்பான் 'திசைநிலைக்களிற்றின்சீற்றக்கொம்புக்கும் குறைந்ததுண்டே....தோள்' என்கின்றான்: தோள் கையாதலை "தோளுற்றொரு தெய்வம்" என்ற இடத்துங் காண்க.தோளின்இழிவை விளக்க,அதற்கு 'புல்,

குரங்கு' என்ற அடைமொழிகள் கொடுக்கப்பட்டன. சிவந்த செம் - ஒருபொருட்பன்மொழி. 'தீதின்றிமீளவந்தேன்' என்றது-எதிரியைக்கொல்லமுடியாமற்போனால் உயிரைவிட்டிடவேண்டியதாயிருக்க அங்ஙனஞ்செய்யாது உயிர் தப்பினாற்போதுமென்று மீண்டுவந்தேனே! என்று இரங்குவதைக் காட்டும். பி-ம்:—1குறைந்தவன்றே. 2முன்பு. 3அறுப்பேனென்று, அறுப்பேனென்ற. 4தீதிலேன். (அஅக)

சஙு. நால்வலி காட்டுஞ் சிந்தை 1நம்பெருந் தூதன் 2வெம்போர்
வேல்வலி 3காட்டி னார்க்கும் வில்வலி 3காட்டி னார்க்கும்
வால்வலி காட்டி4ப் போந்த வளநகர் புக்கு மற்றென்
கால்வலி காட்டி5ப் போந்தேன் கைவலிக் கவதி யுண்டோ.

(இ - ள்.) தான் கற்ற நூல்களின் பெருமையைக்காட்டவல்ல ஆராய்ச்சியோடுகூடிய நமதுபெருமைபெற்ற தூதுவனாகிய அனுமான்நிகழ்த்திய கொடியபோரில் தமது வேல்வலிமைகாட்டினவர்க்கும் வில்வலிமைகாட்டினவர்க்கும்(தன்)வாலின்வலிமையைக் காட்டிவந்த வளப்பமுள்ளநகராகிய இலங்கையிலே என்னுடைய கால்வலிமையைக் காட்டிவந்தேன்: (என்) கைவலிமைக்கு எல்லையுண்டோ? (எ - று.)

அநுமான் வில்லைக்கொண்டும் வேலைக்கொண்டும் தன்னோடு எதிர்ந்தோரைத் தன் வாலினால் கட்டியிழுத்து அடித்ததுமன்றி, இலங்கையிலெரியூட்டியும் தன்வால்வலிமையை இலங்கையிற் காட்டினான்; அந்நகரத்திலே திரும்பியோடுவதில் என்கால்களுக்குஉள்ள வலிமையைக் காட்டினேனேயன்றித் தோள்வலிமையைக் காட்ட முடியாதவனானேனேயென்று வருந்திக்கூறுகின்றான் சுக்கிரீவனென்க. கால்வலிகாட்டுதல் - காலால்விரைந்து ஓடிமீளுதல். 'கைவலிக்கவதியில்லை' என்றது - பிறகுறிப்புவகையாற் கைவலிமை சிறிது மற்றவனானேனென்ற பொருளைக் குறிப்பிக்கும். பி-ம்:—1நுன். 2வன்போர். 3காட்டுவார்க்கும். 4மீண்ட. 5மீண்டேன், மீட்டேன். (அஅஉ)

சச.—சுக்கிரீவனாதுதிறமையை விபீஷணன் வியந்து கூறத்தொடங்குதல்.

இன்னன பலவும் 1பன்னி 2யிறைஞ்சிய முடிய 3னாகி
மன்னவர் மன்னன் முன்னர் வானர மன்ன னிற்ப
அன்னவன் றன்னை நோக்கி 4யாழியா னறிவ தாக
மின்னென விளங்கும் பைம்பூண் வீடணன் 5விளம்ப லுற்றான்.

(இ - ள்.) இவ்வாறான பலவார்த்தைகளையுஞ் சொல்லி வணங்கிய தலையையுடையவனாகி, ராஜாதிராஜனான ஸ்ரீராமனுக்கு முன்பு வானரமன்னவனான சுக்கிரீவன் நிற்கையில், அந்தச்சுக்கிரீவனைப்பார்த்து, இராமபிரான் அறிவதாக [அறியும்படி] மின்னல்போல்விளங்குகின்ற பைம்பூணணிந்த வீடணன் சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—விபீஷணன் கூறுவதை மேல் நான்குகவிகளிற் காண்க. பி-ம்:—1சொல்லி. 2இறங்கிய. 3நாணி. 4அழகனை நோக்கியாழி. 5இதனைச்சொன்னான். (அஅங)

௩௫.—நான்குகவிகள்-ஒருதொடர்: இராவணனதுமகுடமணிகளை சுக்கிரீவன் பறித்தமைபற்றி விபீஷணன்கொண்டாடிக்கூறுதலைத் தெரிவிக்கும்.

*வாங்கிய மணிக ளன்னான் றலைமிசை மௌலி மேலே*
*யோங்கிய வல்ல வோமற் றினியப்பா லுயர்ந்த துண்டோ*
*[1]தீங்கவன் சிரத்தின் மேலு முயிரினுஞ் சீரி தம்மா*
*வீங்கிய புகழை யெல்லாம் வேரொடும் [2]வாங்கி விட்டாய்.*

(இ - ள்.) (நீ) பறித்துவந்த கிரீடமணிகள் அவ்விராவணனுடைய தலைமீதுள்ள மௌலியினிடத்து உயர்ந்துவிளங்கினவல்லவோ? இனி அவற்றுக்கும்மேலாக உயர்ந்தபொருளும் உண்டோ? தீங்கையுடையனான ராவணனது சிரத்தின்மேலே உயிரைக்காட்டிலும் சிறப்புள்ளனவாகும் அவை: (நீ அந்த மணிகளைக்கவர்ந்ததனால் அவ்விராவணனுடைய) மிக்க புகழையெல்லாம் வேரோடும் பறித்தவனானாய்; (எ - று.)

நீ இராவணனுடைய கிரீடமணிகளைக் கவர்ந்தது அவனது உயிரைக் கவர்ந்ததனினும் மேல்: மகாவீரனென்று பேர்கட்டிக்கொண்டுள்ள அவ்விராவணனுடைய சிரசின்மீதுவிளங்கும் கிரீடங்களில் மிகச்சிறந்துதோன்றும் மணியைப்பறித்தது - அவன் 'நாம் இப்படிப்பரிபவப்பட்டு உயிர்வைத்துக் கொண்டிருத்தலில் யாதுபயன்?' என்று மிகவும் வருந்துதற்கு இடமாம்: உயிரையே வாங்கிவிட்டால் வருந்துதற்கு இடனில்லை: ஆதலால், உயிரை வாங்குவதனினும் கிரீடமணியைவாங்கியது மேலாம்: புகழழிவு உயிரழிவினும் வருத்தம் மிகுவிக்கு மென்க. மணியென்று சாதியொருமைகொண்டு, சீரிதுஎன ஒன்றன்பால்முற்றுவந்தது. பி-ம்:—1 தீங்கினன், தீங்கிவன். 2பறித்துவிட்டாய், வாங்கிவிட்டான். (௮௮௪)

௩௬. *பாரகஞ் சுமந்த [1]பாம்பின் பணாமணி பறிக்க வேண்டின்*
*வார்கழற் காலி னாலே [2]கல்லவல் லவனை [3]முன்னாத்*
*தார்கெழு [4]மௌலி பத்தின் றனிமணி வலிதிற் [5]றந்த*
*[6]வீரதை விடை[7]வ லோற்கு முடியுமோ [8]வேறு முண்டோ.*

(இ-ள்.) பூமியைச்சுமந்த பாம்பினுடைய பணாமணிகளைப் பறிக்க விரும்பினாலும் (தனது) நீண்டவீரக்கழலையணிந்த காலினாலேயே கல்லவல்லவனான இராவணனை ஆலோசித்து, மாலையணிந்த பத்துக் கிரீடங்களிலுள்ள ஒப்பற்ற மணிகளை வலிமையுடனே பறித்துக்கொணர்ந்து கொடுத்த வீரத்தன்மை விடையையேறிச் செலுத்துபவனான உருத்திரமூர்த்திக்குத் தான் முடியுமோ? (இதைக்காட்டிலும் மேம்பாடு தருவது) வேறும் உள்ளதோ? (எ-று.)—பி-ம்:—1நாகப். 2வல்ல. 3மன்னா, மன்னோ. 4மவுலிபற்றித்தனிமணிபறித்து. 5வந்த. 6வீரமே. 7வல்லோர்க்கும். 8மேலும். (௮௮௫)

௩௭. *கரு[1]மணி கண்டத் தான்றன் சென்னியிற் கறைவெண் டிங்கள்*
*பருமணி வண்ணன் மார்பிற் செம்மணி பறித்திட் டாலும்*
*தருமணி யிமைக்குந் தோளாய் தசமுகன் முடியிற் [2]றைத்த*
*திருமணி பறித்து[3]த் தந்த வென்றியே சீரி [4]தன்றோ.*

(இ - ள்.) பதித்துக்கொணர்ந்த மணிகளாலேவிளங்குகின்ற தோள்வலிமையையுடையவனே! நீலமணிபோன்ற கண்டத்தையுடையவனான சிவபெருமானுடைய சென்னியிலேசூடிய களங்கத்தைக்கொண்ட வெள்ளியசந்திரனைப் பதித்திட்டாலும் பெருமைபெற்ற மணிவண்ணனெனப்படுகின்ற திருமாலின் திருமார்பிலேபூண்டுள்ள செவ்வியமணியைப்பதித்திட்டாலும் (அவற்றை விடத்) தசமுகனான இராவணனுடைய கிரீடத்திற்பதித்த சிறந்தமணியைப் பறித்துதந்த வலிமையே சிறப்புடையதாம்; (எ - று.)—ஒற்றைக்கலைப்பிறையைச் சிவபிரான் அணிவதால் அந்நிலையில் திங்கட்குக் கறையில்லாதிருப்பினும் பின்வளர்ந்தநிலையில் தோன்றுவது பற்றி 'கறைவெண்திங்கள்' என்றது.
பி-ம்:—1மணிக். 2கொண்ட. 3வந்த. 4அன்றே.　　(௮௮௬)

௮௮௭. தொடிமணி யிமைக்குந் தோளாய் 1சொல்லினும் வேறு முண்டோ, வடிமணி 2வயிர வெவ்வாள் சிவன்3வயின் வாங்கிக் கொண்டான், முடிமணி பறித்திட் டாயோ 4வவனினி முடிக்கும் வென்றிக்கு, அடிமணி யிட்டா 5யன்றே யரிக்குலத் தரச வென்றான்.

(இ - ள்.) வானரகுலத்துக்கெல்லாம் அரசனே!(பூண்ட) தொடியின்மணிகள் விட்டுவிட்டு விளங்குகின்ற தோள்களையுடையவனே! ஆராய்ந்தெடுத்த மணிகளழுத்திய காம்போடுகூடிய உறுதியான வெவ்விய வாளைச் சிவபிரானிடத்தினின்று பெற்றுக்கொண்டவனான இராவணனுடைய கிரீடங்களிலிருக்கும் மணிகளைப் பறித்திட்டாயோ? [நீ முடிமணிபறித்தாயல்லை]; அந்தஸ்ரீராமன் இனி பிரதிஷ்டைசெய்யப்போகின்ற (ராவணவதையாகிய) வெற்றிக்கு அடிப்படையில் மணிகளை யிட்டாயல்லவோ?புகழ்தருவது இன்னும் வேறே யுள்ளதோ? என்று (சுக்கிரீவனைப்புகழ்ந்து) கூறிமுடித்தான், (விபீஷணனாகிய வான்);(எ - று.)

கண்டவர் இராவணனுடைய முடிமணியைப்பறித்தாயென்பர்; நீ செய்தது இராவணனுடைய முடிமணியைப்பறித்தாயென்பது அன்று: பின்னை யென்னையெனின்? இனி ஸ்ரீராமன் பிரதிஷ்டை செய்யப்போகின்ற ராவணவதமாகியவெற்றிக்கு அடிமணியிட்டதாகுமென்றவாறு.முடிமணியைப்பறித்ததில் அத்தன்மையை மறுத்து அதனிடத்து அடிமணியிட்டதாகக் கூறியது - அபநுதியணியாகும். ராவணவதத்துக்கு அஸ்திவாரம் போட்டாயிற்றென்றபடி. மூலவிக்கிரகம் பிரதிஷ்டை செய்வதானால் அதை ஸ்தாபிக்கு மிடத்திற் பலவகையிரத்தினங்களையிடுதலும், ஓர்கட்டடம் தொடங்கும்போது வானம் பறித்து அந்தஅஸ்திவாரத்திலே இரத்தினங்களையிட்டுப் பிறகு கட்டடம் கட்டுதலும் மரபு. சொல் - புகழ். இனும் வேறும் உண்டோ - இன்னும் உன் செயலைப்பற்றிச் சொல்லவேண்டியதுண்டோ? சொல் - நீ சொல்வாயென்பாருமுளர். பி-ம்:—1சொல்லினி. 2வயிரத்து,வயிரவொள். 3கையில். 4இவன். 5அன்றே.　　(௮௮௭)

௪௬.—இராமபிரான் சுக்கிரீவன்செயலைக் கொண்டாடிக் கூறுதல்.

1வென்றியென் றென்று மன்று வீரர்க்கு விளம்பத் தக்க
நன்றியென் றென்று மன்று நானில மெயிற்றிற் கொண்ட

பன்றியன் றாகி[2]னீதா ரியற்றுவார் [3]பரிவி னென்னா
[4]இன்றிது வென்றி யென்றென் றிராமனு மிரங்கிச் சொன்னான்.

(இ - ள்.) (இயற்கைப்)பெருவீரர்க்கு (எதுவும்) வென்றியென்று எப்போதும் விளம்பத்தக்கதன்றாகும்: (அன்றியும்), என்றும்(இஃது)நன்று என்றும் (தம்செயலைக்குறித்து) விளம்பத்தக்கதன்றாகும்; (என்றாலும்),பூமியை(த்தனது) எயிற்றிலேகொண்ட வராகரூபியான திருமால் அல்லாவிட்டால், இவ்வாறான செயலை யார்செய்யமாட்டுவார்? என்று (சுக்கிரீவன்செயலைப்) பரிவோடு கொண்டாடி,இன்று நிகழ்ந்த இதுவெற்றியேயென்று ஸ்ரீராமனும் மனத்துக்கருணைகூர்ந்து பலமுறைசொன்னான்; (எ - று.)

உத்தமவீரர்க்குத் தாம் எந்த அரியதொழிலைச்செய்தாலும் அதைப்பற்றி நாம் என்ன விசேஷமான செயலைச் செய்திட்டோமென்று தோன்றலாம்: என்றாலும், இந்தச்சுக்கிரீவன் செய்தசெயல் மகாவராகமூர்த்திக்கு அன்றி வேறு எவர்க்கும் செய்யமுடியாததாகும்: ஆகவே, இதுவே சிறந்தவெற்றியாவது என்று மனப்பூர்வமாகச் சுக்கிரீவன்செயலைக் கொண்டாடிக்கூறினான் ஸ்ரீராமபிரா னென்க. முன்னர் அந்தச்சுக்கிரீவன் தான்வானரத்தலைவனாயிருந்தும் தனியே எதிராளியுள்ள இடத்திற்குச் சென்றது ஆபத்திற்கு இடனாதலால் அதுகுறித்தது ஸ்ரீராமன் கண்டித்துக் கூறினானென்றும், அவ்விராவணனது முடிமணியைப் பறித்துக்கொணர்ந்ததைக் குறித்துத் தானும் மிகப்பாராட்டுவதை இதனால் தெரிவிக்கின்றா னென்றும் அறிக. பி-ம்:—[1]வென்றியினென்றும் வென்றிவீரர்க்குவிளைக்கத்தக்க நன்றியென்றென்றும்நன்று,வென்றியன்றென்றும் வென்றிவீரற்குவிளைக்கத்தக்க நன்றியன்றென்றுமன்று, வென்றியின்றென்றும் வென்றிவீரற்குவிளைக்கத்தக்க நன்றியன்றென்றுமன்று, வென்றியன்றன்றுநன்று வீரர்க்குமெனக்குந்தக்க நன்றியன்றான்று நன்று,வென்றியின்றன்றுநன்று வீரர்க்குமெனக்குந்தக்க நன்றியென்றான்று மின்று. [2]ஆரிதியற்றுவார். [3]பரிவிற்றந்தது, பரியத்தந்த, பரிவைத்தந்த, பரியத்தக்கது. [4]இன்றிவற்கருமை, இன்றிவற்காயது, இன்றிவனருமை. (௮௮)

௫௦.—சூரியாத்தமன வருணனை.

தன்றனிப் புதல்வன் வென்றித் தசமுகன் முடியிற் [1]றைத்த
மின்றளிர்த் [2]தனைய பன்மா [3]மணியினை வெளியிற் கண்டான்
ஒன்றொழித் தொன்றா [4]மென்றவ் வரக்கனுக் கொளிப்பான் போல
வன்றனிக் குன்றுக் கப்பா லிரவியு மறையப் போனான்.

(இ - ள்.) தன்னுடையஒப்பற்ற புதல்வன் வெற்றிபொருந்திய இராவணனுடைய கிரீடங்களிலே அழுந்தியிருந்த மின்னல்தளிர்விட்டாற்போன்ற பல சிறந்தமணிகளை வெளியிலேகண்டான் [பறித்துக்கொண்டு சென்றான்]; (அதனால்) ஒன்று ஒழித்து ஒன்று நேரும்என்று அஞ்சிச் சூரியனும் அந்தஇராவணனுக்கு ஒளிப்பவன்போல வலிய தனிப்பட்ட அத்தமலைக்கு அப்புறத்தில் மறையப்போனான்; (எ - று.)

என்புதல்வன் தனக்குவெட்கமுண்டாகும்படி செய்ததற்கு ஒன்றுஞ் செய்யமுடியாமற் போன அவ்விராவணன் ஒருகால் அந்தச்சுக்கிரீவனுக்குத்

தந்தையாதல்குறித்து என்னை யேதேனும் துன்பஞ்செய்தலுங் கூடு மென்று கருதி அஞ்சினுன்போலச்சூரியன் அத்தகிரிக்குஅப்புறத்துமறைந்தான்.சூரியன் அத்தகிரியில் மறைந்ததற்குக்காரணமல்லாததைக் காரணமாக்கிச்சொன்ன து-ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். இந்தச்செய்யுளோடு சிலபிரதிகளில் மகுடபங்கப்படலம் முற்றுப்பெற, அடுத்தசெய்யுள்முதல் அணிவகுப்புப்படலமென்று காணப்படுகின்றது. பி-ம்:—1தந்த. 2அன்ன. 3மணிகளை. 4என்னுவரக்கனுக்கு, என்னவரக்கனை. (அஅகூ)

ருக.—இராமபிரான் தன்னிருக்கைசேர்தல்.

கங்குல்வந் திறுத்த காலைக் கைவிளக் [1]கெடுப்ப தென்ன
வெங்கழ லரக்கன் [2]மௌலி [3]மிசைமணி விளக்கஞ் செய்யச்
செங்கதிர்ச் [4]செல்வன் செய்த வென்றியை நிறையத் தேக்கிப்
பொங்கிய தோளி னானு மிழிந்துபோ யிருக்கை புக்கான்.

(இ - ள்.) இராத்திரிவந்து தங்கியபோது, கைவிளக்கெடுப்பதையொப்ப வெவ்வியவீரக்கழலைப்பூண்ட அரக்கனது கிரீடங்களினிடத்துமணிகளே(இருளைப்போக்கி) விளக்கத்தையுண்டாக்க,செந்நிறக்கதிரைக்கொண்ட சூரியனது புத்திரனுன சுக்கிரீவன் செய்த வெற்றியை மனத்தில்நிரம்பக்கொண்டு அதனுற்கிளர்ந்தோங்குகின்ற தோள்களையுடையவனுன ஸ்ரீராமனும் அவ்விடத்தினின்றும் இறங்கிப்போய்த் தன்னிருப்பிடத்திற்குப் போனுன்; (எ - று.)—தோளினுனும் என்ற உம்மை இரவிபோனதன்றி யெனக் கீழ்க்கவியிற் கூறியதைத் தழுவுவதனுல், இறந்ததுதழுவியதாம். மௌலிமிசைமணி - சுக்கிரீவன் கொணர்ந்தவை. இச்செய்யுள் சிலபிரதிகளில் "என்றுனும்" என்ற அடுத்த செய்யுளின்பின் உள்ளது. பி-ம்:—1எடுப்பக்காவல், எடுத்தகாவல், எடுத்ததாக. 2தானே. 3விளக்கமே. 4மைந்தன். (அகூ0)

ருஉ.—இராவணன் தன்னிருக்கை சேர்தல்.

என்றுனு மினைய தன்மை [1]யெய்தாத விலங்கை வேந்தன்
நின்றார்க டேவர் கண்டா ரென்பதோர் நாண நீள
அன்[2]றுய மகளிர் நோக்க மாடவர் நோக்க மாகப்
பொன்றாது பொன்றி னான்றன் புகழெனு விழிந்து போனுன்.

(இ - ள்.) என்றைக்குஆயினும் [ஒருபோதும்] இவ்வாறான நிலையையடைந்திராத இலங்காதிபதியான இராவணன்,—நின்றவர்களான தேவர்கள் (நமக்குச் சுக்கிரீவனென்ற வானரனுல் நேர்ந்த அவமானத்தைக்)கண்டாரென்பதுகுறித்து ஒப்பற்றநாணம் மிகுதியாக,—அன்று ஆங்குப்பொருந்திய மகளிரின் (காதற்) பார்வை ஆடவர்காண்கின்ற பார்வைபோ(லக் காதலையுண்டாக்காம)லிருக்க, உயிர்போகாமல் இறந்தவன்போன்றவனுகித் தன்புகழ் இழிந்தாற்போல(த் தான் வானரத்தானைகாண ஏறிய அந்த இடத்திலிருந்து) இறங்கிப்போயினுன்; (எ - று)

சுக்கிரீவனுல் வெல்லப்பட்டதனுல் தனது புகழ் கீழுக்கு வந்திட்டாற்போல அந்த இராவணனும் தானையைக் காண ஏறியிருந்த இடத்தினின்றும்

கீழிறங்கியிட்டா னென்பதாம். பொன்றுது பொன்றினன் என்பது - உயிருடனே யுள்ளா னென்ற குறையொழிய மற்றைப்படி உயிருடனிருப்பதற்கு வேண்டிய செயலொன்றும் அவ்விராவணனிடத்துக் காணப்படவில்லையென்றபடி. பி-ம்:—1எய்திலா. 2ஆயர். (அகூச)

மகுடபங்கப்படலம் முற்றிற்று.

---

## கஉ-ஆவது அணிவகுப்புப்படலம்.

ஸ்ரீராமன் இராவணன் இருவரும் போருக்காகச் சேனையை அணியணியாக வகுத்தமையைக் கூறும் படல மென்பது, பொருள். அணிவகுப்புநகர்க் காவற்படலம் என்று ஒருபிரதியில் இந்தப்படலத்தின்பெயர் காணப்படுகின்றது.

வடதிசைக்கோபுரத்தினின்றும் கீழிறங்கியஇராவணன் மானபங்கம் நேரிட்டதனால் மனவருத்தத்தோடு தலைசாய்ந்து, மதுபானம் ஆடல் பாடல் என்ற எதனிலும் மனஞ்செல்லாமல் அரண்மனையிற்புகுந்து மெத்தென்ற மலரணையிற்படுத்திருந்தானாக, அப்போது முன்பு அவ்விராவணனால் வேவு பார்த்துவரும்படி அனுப்பப்பட்ட சார்த்தூலனென்பவன் வர,வாயில்காவலன் இராவணனுக்கு அச்செய்தியையுணர்த்தி அவனைஉள்ளே புகவிட,இராவணன் அருகுவந்த சார்த்தூலனை 'மாற்றார்செய்திறம் தெரிப்பாய்' என்ன, அவனும், இலங்கையின் மேற்குவாயிலிலும் அனுமானும் தெற்குவாயிலில் அங்கதனும் கீழைவாயிலில் நீலனும், வடக்குவாயிலில் தானும் ஒவ்வொருத்தர்பதினேழு வெள்ளஞ்சேனையோடு தகைந்துநிற்குமாறும் சூரியன்மைந்தன் தன்னைவிட்டுப் பிரியாதுநிற்குமாறும்,போர்புரிகின்ற சேனைகட்கெல்லாம் இரண்டுவெள்ளஞ் சேனை ஆங்காங்கிருந்துகிடைக்கும் காய்கனிவர்க்கங்களைக்கொண்டு உணவு கொடுக்குமாறும் இராமன் ஏற்பாடுசெய்துள்ளானென்றுதெரிவிக்க, உடனே இராவணன் அம்மலரணையைவிட்டுச் சென்று பளிங்கினாலியன்ற மந்திரசாலையிற்போய் அமைச்சரை வரவழைத்து ஆலோசனை வினவ, நிகும்பன் 'ஆயிரம் வெள்ளஞ்சேனையிருக்கஎழுபதுவெள்ளஞ்சேனை இலங்கையைவளைத்ததென்று ஆலோசிப்பதே! தேவர்களெல்லாம் தமது படைக்கலங்களை விட்டிட்டு ஓடும்படிபெருவலியோடு பலவகைப்படைக்கலங்களையுங் கொண்டுள்ள நாம் படைக்கலமில்லாக் குரங்குகட்கு அஞ்சுவது நன்றாயுள்ளது?' என்று அவமதிப்பும் சினமுந் தோன்றக்கூற, மாலியென்ற மாதுலத்தலைவன் அநுமானும் சுக்கிரீவனுஞ்செய்த வலிமைகளைக்காட்டி நிகும்பன் கூறியதைக் கண்டிக்க, இராவணன் அதுகேட்டு மாலியைக்கடிந்துகூறவே, மாலி மௌனமடைந்தான்.பிறகு இராவணன் பிரகத்தனை இருநூறுவெள்ளஞ்சேனையோடு கீழைத்திசைவாயிலிலும், மகோதரமகாபாரிசுவர்களை அத்துணைச்சேனையோடு தென்திசைவாயிலிலும், இந்திரசித்தை இருநூறுவெள்ளஞ்சேனையோடு மேற்றிசைவாயிலிலும் ஏவித்தான் அத்துணைவெள்ளஞ்சேனையோடு வடதிசைவாயிலிற் செல்வதாகச் சொல்லி, விரூபாட்சனை இருநூறுவெள்ளஞ்சேனையோடு நகரைப்பாதுகாக்க

எவி இங்ஙனம் ஆயிரம்வெள்ளஞ்சேனையையும் அணிவகுத்துவிட்டானாக, இராமீங்கிச் சூரியனுதயமாயினதும் அரக்கர்சேனை இலங்கையினுட்புறத்துக் காத்திருக்க, வானரசேனைகள் முன்கட்டளைப்படியே பிரிந்து இலங்கையை வெளியிலிருந்து முற்றுகைசெய்த தென்பது, இப்படலத்துக் கூறும்பொருள்.

க.—இராவணன் வருந்தத்தோடும் அரண்மனையிற்புக்குப் படுத்தல்.

மானத்தா [1]னூன்றப் பட்ட மருமத்தான் வதன மெல்லாம்
[2]கூனற் றாமரையிற் றோன்ற வான்றொடுங் கோயில் புக்கான்
பானத்தா னல்லன் றெய்வப் பாடலா னல்ல னாடல்
தானத்தா னல்லன் [3]மெல்லென் [4]சயனத்தா [5]னுரையுந் தாரான்.

(இ - ள்.) மானத்தினால்தாக்கப்பெற்ற மருமத்தானத்தையுடையவனான இராவணன், (தன்) முகங்கள்யாவும் வளைந்ததாமரைபோலத்தோன்ற [தலையைக் கவிழ்த்தவண்ணம்] வானத்தைத் தொடுகின்ற அரண்மனையிற் புகுந்து, (வெறியையுண்டாக்கும்) பானங்களைப் பருகாதவனும் தெய்வப் பாடலைக் கேளாதவனும் ஆடுகின்ற நர்த்தனசாலையை வேண்டாதவனுமாகி. (எவருடனும்)பேச்சுந்தாராதவனாய் மெத்தென்றபடுக்கையிற்படுப்பவனானான்.

ஒருகுரங்கினால் மகுடங்களின் மணிகள் பறிக்கப்பட்டதனால் தோன்றிய மானக்கேடு மருமத்தில் வேல் துளைத்ததுபோல இராவணனுக்கு வேதனையை யுண்டாக்கிற்றென்பது 'மானத்தாலூன்றப்பட்டமருமத்தான்' என்பதன் கருத்து. அங்ஙனம் மானக்கேடு நேர்ந்ததுபற்றி, ஆடல் பாடல் மதுபானம் முதலியவற்றையெல்லாம் வெறுத்து எவருடன் பேசுதற்கும்மனம்பிடிக்காமல் இராவணன் சயனத்திற் சாய்ந்தானென்க. பி-ம்:—[1]அல்லற்பட்ட. [2]கூனத். [3]மெல்லே. [4]சயனத்தால். [5]உறையுந்தாரான். (அகஉ)

உ.—அணையிற்சாய்ந்திருக்கும் இராவணன் வருணனை.

[1]வையெயிற் றாலும்[2]கோர மணி[3]யிழந் திரங்க லாலும்
[4]பையுயிர்த் தயரும் பேழ்வாய்ப் பஃறலைப் [5]பரப்பி னாலும்
[6]மெய்யனைத் திரையின் வேலை மென்மலர்ப் [7]பள்ளி யான
ஐயனைப் பிரிந்து வைகு மனந்தனே யரக்கர் வேந்தன்.

(இ - ள்.) அரக்கர்தலைவனான இராவணன்;—(அப்போது) கூரிய பற்களையுடைமையாலும் உவமையற்ற மணிகளையிழந்து இரங்குவதாலும் மெல்லப்பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்துகின்ற பிளவுபட்ட வாயோடுகூடிய பலதலைகளின்பரப்பையுடைமையாலும், மெய்ப்பொருளும்(யாவருக்குந்)தலைவனுமான திருமாலைப் பிரிந்து தங்குபவனும் அலையையுடைய திருப்பாற்கடலிலேயிருக்கும் மெல்லியமலர்ப்படுக்கையுமான அநந்தனே போல்வான்.

எயிறுடைமை மணியிழந்தமை பையவுயிர்த்து அயரும்பேழ்வாய்ப்பஃறலையுடைமை என்ற இத்தன்மைகளால் பாற்கடலிலுள்ள ஆதிசேஷனைப் போல்வன் இராவண னென்றார். அநந்தனுக்கு மணியிழத்தல் கருமாணிக்க மென்னப்படுகின்ற திருமாலையிழந்துள்ளமையென்று கொள்ளலாம். இராவணனுக்கு மணியிழந்திரங்கல்-மகுடமணிகளையிழந்து வருந்தல். பி-ம்:—[1]வையம்

விற்றனும். 2நீடு. 3மணியிழந்தனனே மானும். 4பையணைத்துயிர்க்கும்வெவ். 5பாம்பின்பாலில். 6மெய்யணைத்திரையின்,மெய்யெனத்திரையின். 7பள்ளியாக.

௩.—சார்த்தூலனென்ற ஒற்றன் வர, அதனைவாயில்காவலன் இராவணனுக்குத் தெரிவித்தல்.

தாயினும் 1பழகி னார்க்குந் தன்னிலை தெரிக்க லாகா
மாயவல் லுருவத் தான்முன் வருதலும் வாயில் காப்பான்
சேயவர் சேனை 2நண்ணிச் செய்திறந் தெரித்தி நீயென் றேவ
ஏயவ னெய்தி னானென் றரசனை யிறைஞ்சிச் சொன்னான்.

(இ - ள்.) தாயைக்காட்டிலும் பழகினவர்க்கும் தன்னுடைய நிலையை அறிந்துரைக்கமுடியாத மாயையுடைய வலிய உருவத்தையுடைய சார்த்தூலன் (மாற்றரான ஸ்ரீராமனாதியோரின்சேனையைக் கண்டு இராவணனுக்கு அச்செய்தியையுணர்த்த அரண்மனைவாயிலுக்கு) முன்னே வருதலும், வாயில் காவலாளன் 'தூரத்திலிருப்பவரான பகைவர் சேனையைக் கிட்டி (அவர்கள்) செய்யுஞ்செயல்களை நீ (யுணர்ந்துவந்து) தெரிவிப்பாய் என்று ஏவப்பட்டவனான சார்த்தூலன் வந்துள்ளான்'என்று இராவணனைப்பணிந்து(செய்தியைக்) கூறினான்; (எ - று.)—வந்தவன் சார்த்தூலனென்பது "சார்த்தூலனிதனைச் சொல்ல" என்ற எட்டாவதுசெய்யுளால் விளங்கும். "தாயினும், பழகினர் தமக்கும் மாயந்தேர்வொணார்" என்றார், பாலகாண்டத்தும். பி-ம்:—1பழகினாரும். 2நண்ணுச், நண்ணார். (அ௬௪)

௪.—இராவணன் கட்டளையால் உள்ளேசென்று சார்த்தூலன் மேல்லச் செய்தி கூறத் தொடங்குதல்.

அழைகென வெய்திப் பாதம் வணங்கிய வறிஞன் றன்னைப்
பிழை1யற 2வறிந்த வெல்லா முரைத்தியென் றரக்கன் பேச
முழையுறு சீய மன்னான் முகத்தினு லகத்தை நோக்கிக்
குழையுறு மெய்யன் பைய வரன்முறை கூற லுற்றான்.

(இ - ள்.) (உள்ளே) அழைப்பாய் என்று (இராவணன்) கூற, உள்ளே வந்து (தன்னுடைய) பாதங்களில் வணங்கின நுண்ணறிவினனான சார்த்தூலனைநோக்கி, 'குற்றமற(நீ)அறிந்தனவெல்லாவற்றையும் சொல்வாய்' என்று இராவணன் சொல்ல, குகையிலே பொருந்திய சிங்கத்தையொத்தவனான இராவணனுடைய முகக்குறிப்பினால் (அவன்) மனம்வருந்துவதை யறிந்து, ஒடுங்கினஉடலையுடையவனாய் மெல்லத் தானுணர்ந்தமுறைப்படி சொல்லத்தொடங்கினான்;(எ-று.)—சார்த்தூலன்சொல்லுவன மேல்மூன்றுகவிகளிற் காண்க. பி-ம்:—1உறுது. 2அறிந்தது. (அ௬௫)

௫.—மூன்றுகவிகள்-சார்த்தூலன் மாற்றார்செய்தியை யுணர்ந்துநிலைத் தெரிவிக்கும்.

1வீரிய விதியி னெய்திப் பதினெழு வெள்ளத் தோடும்
மாருதி மேலை 2வாயி லுழிஞைமேல் வருவ தானான்
3ஆரிய னமைந்த வெள்ள மத்தனை யோடு 4வெற்றிச்
சூரியன் 5மைந்தன் றன்னைப் பிரியல னிற்கச் சொன்னான்.

(இ - ள்.) சௌரியமுடையவனே! அநுமான் பதினேழுவெள்ளஞ்சேனையுடனேசென்று இலங்கையின் மேற்குப்பக்கத்துவாயிலிலே மதில்வளைத்து முற்றுகைசெய்தலில் மூண்டவனானான்; வெற்றியையுடைய சூரியபுத்திரனான சுக்கிரீவனைநோக்கி, ஸ்ரீராமன் பொருந்திய அத்துணையான [பதினேழுவெள்ளஞ்] சேனையுடனே (தன்னைப்) பிரியாமல் நிற்குமாறு கூறினான்; (எ - று.)—பி-ம்:—[1]வீரியவீரனேவப், வீரியவிரைவினெய்திப். [2]வாயின்வஞ்சி. [3]ஆரியன்மைந்தன். [4]நெற்றிச். [5]மகனைத். (௮௬)

௬. அன்றியும் பதினேழ் வெள்ளத் தரியொடு மரசன் மைந்தன்
தென்றிசை [1]வாயில் செய்யுஞ் செருவெலாஞ் செய்வ தானான்
ஒன்று[2]பத் தாறு வெள்ளத் [3]தரியொடுந் துணைவ ரோடும்
நின்றன னீல[4]னென்பான் குணதிசை வாயி னெற்றி.

(இ - ள்.) அன்றியும், அரசகுமாரனான அங்கதன் பதினேழுவெள்ளங் குரங்குச்சேனையுடனே, (இலங்கையின்) தென்றிசைவாயிலிலே செய்கின்ற போரையெல்லாஞ் செய்வதாகப் பொருந்தினான்; நீலனென்பவன் பதினேழுவெள்ளஞ்சேனையுடனும் துணைவருடனும் கிழக்குத்திக்குவாயிலின்முகப்பிலே (போர்செய்யுமாறு) நின்றுள்ளான்; (எ - று.)—பி-ம்:—[1]வாயிற். [2]பத்தேழுவெள்ளக். [3]கவியொடுந், கவிக்குலத். [4]மற்றைக். (௮௭)

௭. இம்பரி னியைந்த காயுங் கனியுங்கொண் டிரண்டு வெள்ளம்
[1]வெம்புவெஞ் சேனைக் கெல்லா முணவு[2]தந் துழல விட்டான்
உம்பியை வாயி றோறு நிலைதெரிந் [3]துணர்த்தச் சொன்னான்
தம்பியுந் தானு நிற்ப தாயினான் சமைவீ தென்றான்.

(இ - ள்.) இரண்டுவெள்ளஞ்சேனையை இவ்வுலகிலே பொருந்திய காய்களையும் பழங்களையுங் கொணர்ந்து கோபித்துப் பொருகிற கொடிய சேனைக்கெல்லாம் உணவுதரத் திரியுமாறு விட்டிருக்கின்றான்; உன்தம்பியை [விபீஷணனை] வாயில்கள்தோறும் (அவ்வப்போதுள்ள) நிலையை ஆராய்ந்துணர்ந்து சொல்லுமாறுசொல்லி, (இராமன்) தம்பியுந்தானுமாக (வடதிசைவாயிலில்) நிற்பதாயினான்: நடந்துள்ள ஏற்பாடுஇது என்று சொன்னான்; (எ - று.)—பி-ம்:—[1]வெம்பும். [2]கொண்டுதவ. [3]உணரச்சொன்னான், உணர்கவென்றான்.

௮:—இராவணன் சினங்கொண்டு நாளையேபகையொழிப்பே னெனல்.

சார்த்தூல னிதனைச் சொல்லத் [1]தழறெரி தறுக ணானும்
[2]பார்த்தூளி வாடை பொங்கப் படுவது படுமா பார்த்தி
போர்த்தூளி துடைப்ப னாளை யவருடற் பொறையி னின்றுந்
[3]தோத்தூறுங் குருதி தன்னா லென்றன னெயிறு [4]தின்னா.

(இ - ள்.) இவ்வார்த்தையைச் சார்த்தூலனென்பவன் சொல்லத் தழல் விளங்குகின்ற கொடுங்கண்களையுடையவனான இராவணனும்,—பற்களை (நெறுநெறென்று) கடித்து, யுகாந்தகாலத்தின் சாயைதோன்றுமாறு உக்கிரமாகப்பார்த்து, 'அந்தப்பகைவரின் உடற்சுமையிலிருந்து பெருக்கெடுத்துச் சுரக்கின்ற இரத்தத்தினாலே போர்த்தூளியைநாளைக்கே போக்குவேன்: ஊழிக்காற்று மிகுந்துதோன்றும் நிலை தோன்றுவதைப் பார்ப்பாய்' என்றுகூறினான்.

வாடைகாற்று ஆதலே, 'அவன்வாடை உனக்கு அடித்ததோ?' என்று கூறும் வழக்குப்பற்றியும் அறியலாம். யுகாந்தகாலத்தின் சாயைதோன்ற உக்கிரமாகப்பார்த்து என்னும் பொருளில் 'ஊளிவாடைபொங்க' என்றுரௌன் பாருமுளர். ஊளி = ஊழி: ழகரத்துக்கு ளகரம் போலியாகவந்தது. பி - ம்:— [1]தழல்சொரி. [2]பார்த்துழிவடவை. [3]தேர்த்தூரு, தேர்த்தூறுங். [4]தின்று, தின்றான். (௮௯௯)

௯.—இராவணன் மந்திரசாலையிற் புகுதல்.

[1]மாவணை நீலக் குன்றத் திளவெயில் [2]வந்த தென்னத்
தூவணைக் குருதிச் செக்கர்ச் சுவடுறப் பொலிந்த தோளான்
ஏவணை வரிவிற் காமன் [3]கணைபட [4]வெரியா நின்ற
பூவணை [5]மாற்றி வேறோர் புனைமணி யிருக்கை புக்கான்.

(இ - ள்.) மரங்கள்பொருந்திய நீலக்குன்றத்திலே இளவெயில் வந்தாற்போல, மாமிசத்திற்பொருந்துதலேயுடைய இரத்தத்தின்செந்நிறச் சுவடு தோன்ற விளங்குகின்ற தோளேயுடையவனான இராவணன், ஏவுதல் தொழிலேக் கொண்ட கட்டமைந்தவில்லேயுடைய காமதேவனுடைய அம்புகள் படுவதனுல் எரியாநின்ற பூவணையைமாற்றி வேருக அலங்கரிக்கப்பெற்றபளிங்குமணியாலியன்ற ஆலோசனைக்குரியதான ஓர் இடத்திற் சேர்ந்தான்; (எ-று.)

சுக்கிரீவனுற் குத்தப்பட்டதனுல் இரத்தங்குழம்ப அதனுல் அந்த இராவணனுடையதோள்கள் நீலக்குன்றத்து இளவெயில்வந்தனபோலத் தோன்றுமென்க: இனி, இதுவரைப் பகைவரைக்கொன்ற இரத்தச்சுவடு தோளிற் பொலிகின்ற தெனக் கொள்ளலு மொன்று. இராவணன்புக்க இருக்கை ஆலோசனைசெய்வதற்காக ஏற்பட்ட தென்பதும் அது பளிங்குமணியினுலியன்ற தென்பதும் மேலேக்கவியால் விளங்கும். மதனவேதனைப்பட்டுக் கொண்டிருக்கும் இராவணன் போருக்கு ஆலோசனைசெய்வதால் 'வேறு' என்றார். பி-ம்:—[1]பாவணை, பாவனை. [2]வளர்ந்தது, பரந்தது. [3]சரம். [4]எரியாய்நின்ற. [5]ஆற்றவேறோர், மாறிவேறூர், காயமாற. (௯௦௦)

௧௦.—மந்திரிமாரை அங்கு வருமாறு கூறுதல்.

செய்வன முறையி னெண்ணித் [1]திறந்திற [2]முறையிற் றேரும்
மையறு மரபின் வந்த வமைச்சரை வருக வென்றான்
பொய்யெனப் பளிங்கி னய [3]விருக்கையின் புறத்தைச் சுற்றி
ஐயிரண் டாய கோடிப் பேய்க்கணங் [4]காப்ப வாக்கி.

(இ-ள்.) (கட்டிடமில்லாத) வெற்றிடமென்றுதோன்றும்படி பளிங்கினுலியன்ற (அந்த) இருப்பிடத்தைச் சுற்றிப் பத்துக்கோடிப்பேய்க்கணங்களேக் காக்குமாறுவைத்து,(பின்பு) செய்யவேண்டுவனவற்றை முறையாக எண்ணிக் கூறுகூருக முறைமையயாராய்கின்றவரும், குற்றமற்றவமிசத்திலே தோன்றியவருமான மந்திரிமாரை'(அங்கு)வருக'என்று(ஏவலாளரை) அனுப்பினுன்; (எ - று.)—பி-ம்:—[1]திறத்திறம். [2]உணர்விற்றேர. [3]பொதுவினின், பொதுவினிற். [4]காப்பதாக்கி. (௯௦௧)

கக.—இராவணன் அமைச்சரை நோக்கி 'போர் நெருங்கிய இப்போது செய்யவேண்டுவது என்?' என்று வினவுதல்.

*அளந்தறி [1]வரிய ராய வமைச்சரை யடங்க நோக்கி*
*வளைந்தது குரங்கின் சேனை வாயில்க டோறும் வந்து*
*விளைந்தது பெரும்போ [2]ரென்ன விட்டது விடாது நம்மை*
*[3]உளைந்தன மென்ன வெண்ணி யென்செயற் [4]குரிய வென்றான்.*

(இ - ள்.) அளந்தறிவதற்குமுடியாதபடி மிகப்பலராகிய மந்திரிமாரை யெல்லாம் முழுவதும் நோக்கி, 'வாயில்கள்தோறும்வந்து குரங்குச்சேனைவளைந்துகொண்டது; பெரும்போர் விளைந்ததென்னுமாறுதொடங்கிவிட்டது; (அது இனி) நம்மைவிடாது: (நாம்) வருந்தியுள்ளோம், (இப்போது) என்னஎண்ணி என்னசெய்தற்குரியது?' என்றுவினவினான், (இராவணன்); (எ - று.) —பி - ம்:—[1]அளந்தறிவறியவல்ல, அளந்தளவறியவந்த, அளந்தறிவறியவந்த, அளந்தறிவரியதாய. [2]என்று. [3]உளைந்தனர், இளைந்தனம். [4]உரியது. (௬0௨)

கஉ.—இரண்டுகவிகள்- ஆயிரம்வெள்ளச்சேனையையும் பல படைக்கலங்களையும் வைத்துக்கொண்டு எதிராளிகளுக்கு அஞ்சுவது குறித்து நிகும்பன் பரிகசித்தலைக் கூறும்.

*எழுபது வெள்ளத் துற்ற [1]குரக்கின மெயிலை முற்றுந்*
*தழுவின வென்று செய்யத் தக்கது [2]சமைதி போலாம்*
*அழுவநீர் வேலை [3]யன்ன தாயிர வெள்ள [4]மன்றே*
*யுழிஞையைத் [5]துடைக்க நொச்சி யுச்சியிற் கொண்ட தன்னூர்.*

*மூன்றுகவிகள் - ஒருதொடர்.*

(இ - ள்.) எழுபதுவெள்ளமென்ற கணக்குப்பொருந்தின குரங்குக்கூட்டம் (நம் நகரத்து) மதிலை முற்றுந்தழுவினவென்று செய்யத்தக்கதுகுறித்து மனமழிவாய்போலும்; அப்படிப்பட்டசேனாசமுத்திரம் (நமக்கு) ஆயிரம்வெள்ளமன்றோ? நம்மாற்றார் சூடியஉழிஞையைப் போக்குவதற்கு நெருங்கிய நம்மூர்ச்சேனை நொச்சியையுச்சியிற்கொண்டதாகின்றது; (எ - று.)

பகைவர் உழிஞைசூடியதைப்போக்க, நமது இலங்கைநகரத்தார் நொச்சியைக்கைக்கொண்டுள்ளார்: பகைவர்சேனை எழுபதுவெள்ளமென்றால் நம்முடையசேனை ஆயிரம்வெள்ளமுள்ளன; இவ்வாறுஇருக்கையில், இப்போது செய்வதுகுறித்து நீ மனமழியக் காரணமென்னோ?என்று இராவணனைத் தெருட்டியவாறு. உழிஞை-பகையரண்வளைப்போர் சூடும் மாலை: நொச்சி-மாற்றார்க்கெதிருன்றித் தம்மதில்காப்போர் சூடும் மாலை. அழுவநீர்வேலை-பரப்பானநீரையுடையகடல். கொண்ட தன் ஊர்எனப் பிரிக்க; கொண்டது உன் ஊர் என்று பிரித்து உரைப்பாருமுளர். பி-ம்: —[1]குரங்கினம். [2]சமைதும், சமைத்தி. [3]என்னது. [4]என்றே. [5]தொடக்கநோக்கினுச்சிகைக், தொடக்கநோக்கிநொச்சியிற்.

கங. *எழுமழுத் தண்டு [1]வேல்வா ளிலைநெடுஞ் சூல [2]மென்றிம்*
*[3]முழுமுதற் படைக ளேந்தி யிராக்கதர் [4]முனைந்த போது*
*தொழுதுதம் படைகள் [5]கைவிட் டோடுவார் சுரர்க [6]ளென்றால்*
*விழுமிது குரங்கு வந்து வெறுங்கையாற் கொள்ளும் வென்றி.*

(இ - ள்.) எழுவும் மழுவும் தண்டும் வேலும் வாளும் இலைத்தொழிலை யுடைய நெடியசூலமும் என்ற இப்படிப்பட்ட சிறந்தமுதன்மைபெற்றபடைக் கலங்களைத் தாங்கிக்கொண்டுவந்து இராக்கதர் (போரிலே) முனைந்தபோது தேவர்களே தம்முடையபடைக்கலங்களை விட்டிட்டுக் கைகூப்பியவண்ணம் ஓடுவார்களென்றால், குரங்குகள்வந்து (படைக்கலங்கொள்ளாத) வெறுமனே யுள்ளகைகளாற் கொள்ளுகின்ற வெற்றி மிகச்சிறந்திருக்கின்றது! (எ - று.)

நமக்குமுன்னே தேவர்களே படைக்கலங்களைப்போகட்டுவிட்டுத் தொழுதுகொண்டு ஓடுகையில், குரங்குகளால் என்னசெய்யமுடியு மென்றவாறு. விழுமிது - பிறகுறிப்பு: இகழ்ச்சியைத் தெரிவிக்கும். பி-ம்:-1 வில். 2வென்றி. 3மழு. 4முனிந்த, மலைந்த. 5முன்னிட்டு, போக்கிட்டு. 6என்னின். (கூ0ச)

**கச.—நிகும்பன் வெகுண்டுகூறியதும், மாலி கூறத் தொடங்குதல்.**

ஈ[1]திவ ணிகழ்ச்சி யென்று வெரிவிழித் திடியி னக்குப்
பூதலத் தடித்த கைய னிகும்பனென் றொருவன் [2]பொங்க
வேதனைக் காம மந்தோ வேரொடுங் கெடுத்த [3]தென்று
மாதுலத் தலைவன் [4]பின்னு மன்பினோர் [5]மாற்றஞ் சொன்னான்.

(இ-ள்.) இப்போது நிகழவேண்டுவது இவ்வாறு [சேனையோடுபொருவ தே]என்றுசொல்லி, நெருப்புப்பொறிபறக்க (உக்கிரமாக) விழித்து இடிபோல(ப் பேரொலிதோன்ற)ச்சிரித்து, பூமியிலறைந்த கையனாய், நிகும்பனென்ற ஒருவன் சினம்பொங்கிநிற்க,—மாதுலனாகியதலைவன் 'வேதனையையுண்டாக்குங் காமம் வேரொடுங் கெடுத்துவிட்டது! அந்தோ!!' என்றுசொல்லி, அன்பினாற்பின்னும் ஓர்வார்த்தை கூறலானான்; (எ - று.)—அதனை, மேல் இரண்டு கவிகளிற் காண்க. பி-ம்:—1இவர். 2பொங்கி. 3என்ன. 4மன்னும். 5வார்த்தை.

**கரு.—இரண்டுகவிகள் - மாதுலத்தலைவன் நிகழ்ந்தவற்றை யெடுத்துக்காட்டிச் சீதையைக்கொடுத்து இராமனைச்சரணடைவதே உறுதியென்று கூறுதலைத் தெரிவிக்கும்.**

புக்கெரி மடுத்திவ் வூரைப் பொடிசெய்து [1]போயி னாற்குச்
சக்கர முண்டோ கையிற் [2]றனுவுண்டோ வாளி யுண்டோ
[3]இக்கிரி பத்தின் [4]மௌலி யினமணி [5]யடங்கக் கொண்ட
சுக்கிரீ வற்கு முண்டோ சூலமும் வாளும் வேலும்.

(இ-ள்.) (இவ்வூரிற்)புகுந்து நெருப்பையூட்டி இந்தவூரைப் பொடியாய்ச் செய்து போன அநுமானுக்குக் கையிற் சக்கரமிருந்ததோ? தநுசு இருந்ததோ? (தநுசிற் கோத்தெய்யும்) அம்புதான் இருந்ததோ? பத்துக்கிரிபோன்றுள்ள இந்த முகுடத்தின் தொகுதியானமணியை யிடந்துகொண்டுபோன சுக்கிரீவனுக்கும் சூலமும் வாளும் வேலும் உண்டோ? (எ - று.)

'விழுமிதுகுரங்குவந்து வெறுங்கையாற்கொள்ளும்வென்றி' என்று கூறியதற்கு விடையாக, 'முன்னம் இலங்கையை யெரிமடுத்துப் பொடியாக்கின அநுமானுக்கும், இப்போது இராவணன்முடிமணிகளைப்பறித்துச்சென்ற சுக்கிரீவனுக்கும் யாதொருபடைக்கலமுமில்லையே: ஆகையால், வெல்வதற்குப்

படைக்கலமிருந்ததே தீரவேண்டு மென்பதில்லை' என்றுகாட்டியவாறு. பி-ம்:—1போயினார்க்குஞ். 2தசமுகன்றலைகளான, தசமுகன்றலைகளாரும், தசமுகன் றலைகள்பத்தின். 3இக்கிரீவத்தின், இக்கிரீடத்தின். 4மின்னும். 5இமைப்பிற்.

கசு. 1தொடைக்கலந் திராமன் வாளி தோன்றுதன் முன்னர்த் தோன்
இடைக்2கலம் வருதல் செய்பு மூலையிறு டன்னை யீந்து [று
படைக்கல முடைய நாமப் படையிலாப் படையை 3யீண்ட
அடைக்கலம் புகுவ தல்லா லினிப்புகு 4மாணு முண்டோ.

(இ - ள்.) (கண்ணுக்குத்தோன்றாத) இடைப்பிற்குச் சுழற்சியையுண்டாக்குகின்ற தனங்களையுடையவளான சீதையை இராமனுடைய அம்புகள் தொடுத்தலைப்பொருந்தித் தோன்றுவதற்குமுன்னம் கொடுத்திட்டு, படைக்கலங்களையுடைய நாம் படைக்கலமில்லாத (அந்தமாற்றான்) சேனையை விரைவாக அடைக்கலம்புகுவதன்றி இனி (த் தீங்குவாராமல்) அடைதற்குஉரிய அரணும் வேறு உள்ளதோ? (எ - று.)— பி-ம்:—1தொடைக்கலத்து. 2அலமரலைச், அலமரவு. 3ஈண்டி, ஈன்ற. 4அரணம். (கூ0எ)

கஎ.—இராவணன் மாலியைத் தகாதவார்த்தைகூறுதேயென்ன, அன்னான் மௌனமாதல்.

என்புழி 1மாலி தன்னை யெரியெழ நோக்கி 2யென்பால்
வன்பழி தருதி போலாம் 3வரம் முறை யறியா வார்த்தை
4அன்பழி சிந்தை தன்னு லடாதன 5வறைய லென்றான்
பின்பழி 6யெய்த நின்று னவன்பின்னைப் பேச்சு விட்டான்.

(இ - ள்.) என்றுசொல்லும்போது மாலியை, பின்னர்ப்பழிப்பையடையப்போகின்றவனான இராவணன், தீப்புறப்பட (விழித்து) ப்பார்த்து, 'என்னிடத்து வலியபழியைத் தருவாய்போலும்: அன்பினால்அழிந்துகிடக்கின்ற கருத்தினாலே தகுதியில்லாச்சொற்களைச் சொல்லாதே என்றுகூறினான்; அந்த மாலி பின்பு பேசுவதை நிறுத்திவிட்டான்; (எ - று.)

இராவணன் தன்நிலையையுணராது 'வன்பழி தருதிபோலாம்' என்று, அந்தமாலியை யதட்டிவிட்டுப் பின்னே செய்கின்ற போர்த்தொழில் அந்த இராவணனுக்குப் பழிப்பையேவிளைத்தலால், 'பின் பழியெய்தநின்றான்' என்றார். வன்பழி-இராவணன்மாற்றானுக்குஅஞ்சிச்சரண்புகுந்துகொண்டசீதையைக்கொடுத்தானென்பது. பி - ம்:—1அனையான்றன்னை, அரசன்றன்னை. 2அன்பால். 3வாய். 4அன்புளி. 5அறைதி. 6என்னவெய்யோன். (கூ0அ)

கஅ.—இதுமுதல் ஐந்துகவிகள் - இலங்கையில் இன்னாரின்னார், இந்தஇந்தஇடத்துச் சேனையோடு இருக்கவேண்டுமென்று இராவணன் அணிவகுத்துவைத்தலைக் கூறும்.

காட்டிய கால கேயர் கொழுநிணக் கற்றை காலத்
தீட்டிய படைக்கை 1வீரச் சேனையின் றலைவ தெள்ளி
ஈட்டிய 2படைஞ ரோடு மிருநூறு வெள்ளங் கொண்டு
கீட்டிசை வாயி னிற்றி நின்பெருங் 3கிளைக ளோடும்.

(இ - ள்.) (போரில் தலை) காட்டிய காலகேயரின் கொழுவிய நிணத் தொகுதியை வெளிப்படுத்துமாறு தீட்டிய படைக்கலங்களைக் கையிலேகொண்ட வீரச்சேனையின்தலைவனே! ஆராய்ந்துசேர்த்த படைஞருடனே இருநூறுவெள்ளஞ்சேனைகளைக்கொண்டு, நினது பெருஞ்சுற்றத்துடனே (இலங்கையின்) கீட்டிசைவாயிலில் நிற்பாய்; (எ - று.)

சேனையின்தலைதன் பிரகத்தனென்பது, முன்னரே கூறப்பட்டது. பி-ம்:—1வீரசேனையின். 2அரக்கர்தானை, அரக்கர்சேனை. 3கிளையினேடும்.

கக. காலன்றன் களிப்புத் தீர்த்த 1மகோதரக் காளையே போய்
மாலொன்று மனத்து 2வீர மாபெரும் பக்கனேடும்
கூலங்கொள் குரங்கை யெல்லாங் 3கொல்லுதி வெள்ள 4மான
நாலைம்ப தோடுஞ் சென்று நமன்றிசை வாயி னண்ணி.

(இ - ள்.) காலனுடையமகிழ்ச்சியைப்போக்கிய மகோதரனென்னும் பேர்பூண்ட காளைப்பருவத்தானே!போர்ப்பித்துப் பொருந்தியமனத்தையுடையவீரத்தைக்கொண்ட மகாபாரிசுவனுடனே வெள்ளம் இருநூறுபொருந்திய சேனையுடனே புறப்பட்டுத் தெற்குத்திக்குவாயிலையடைந்து, வாலைக்கொண்டுள்ள குரங்குகளையெல்லாங் கொல்லுவாய்: (எ - று.)—கூலம்-லாங்கூலமென்பதன் முதற்குறை:இனி,குலம் என்பது கூலமென்று நீட்டல்விகாரம்பெற்றதாகக்கொண்டு - தொகுதியான என்று பொருளுரைப்பினுமாம்.பி-ம்:—1மகோதரகாளையே. 2வீரன்.3கொல்லுநின்,கொல்லுமின். 4கொண்ட.. (கக0)

உ0. ஏற்றமென் 1சொல்லி 2னென்பா லிந்திரன் பகைஞ 3வந்நாள்
காற்றினுக் கரசன் மைந்தன் கடுமைநீ 4கண்ட தன்றே
நூற்றிரண் 5டாய வெள்ள 6நுன்பெரும் படைஞர் சுற்ற
மேற்றிசை வாயில் 7சேர்தி விடிவதன் முன்னம் வீர.

(இ-ள்.) என்னிடத்து உன்னுடைய மேன்மையைச் சொல்லினால் யாது சிறப்பு? இந்திரசித்தே! அப்போது வாயுபுத்திரனை அநுமானுடையகடுமை நீ கண்கூடாகக்கண்டதன்றே! வீரனே! இரண்டுநூறுவெள்ளமான சேனையும் உனது பெரும்படைஞரும்சூழ விடிதற்குமுன் மேற்றிசைவாயிலிற் சேர்வாய்; (எ - று.)—பி-ம்:—1சொல்ல. 2ஒள்வாள், வல்வில். 3இந்நாள். 4கண்டாயன்றே, கண்டதன்றே. 5ஏய. 6நும், நுண். 7சேர்த்தி. (ககக)

உந. இந்நெடுங் கால மெல்லா மிமையவர்க 1கிறுதி கண்டாய்
புன்னெடுங் குரங்கிற் சேரல் புல்லிது புகழு மன்றால்
அந்நெடு மூலத் தானை யதனெடு 2மமைச்ச ரோடுந்
தொன்னெடு 3நகரி காக்க 4விருபாக்க வென்னச் சொன்னான்.

(இ - ள்.) விருபாட்சனே! இந்தநெடுங்காலமெல்லாம் தேவர்கட்குத் துன்பத்தை யுண்டாக்கினாய்: (அப்படிப்பட்ட நீ) புல்லிய மிக்க குரங்கின் படைமீது போர்க்குப் போதல், இழிவைத் தருவது;புகழுமன்று:அந்த மிக்க மூலபலத்தோடும் மந்திரிமாரோடும் பழமையான நெடியநகரைக் காப்பாயாக என்று கூறினான், (இராவணன்); (எ - று.)—பி-ம்:—1 இருக்கும். 2அரசரோடும். 3நகரைக். 4விருபாக்கனென்னச், இருக்கவென்றரக்கன். (ககஉ)

௨௨. கடகரி புரவி [1]யாட்டேர் கமலத்தோ னுலகுக் [2]கிப்பாற்
[3]புடையுள பொருது கொண்டு [4]போர்பொரப் பொங்கு கின்ற
இடையிடை மிடைந்த சேனை யிருநூறு வெள்ளங் கொண்டு
வடதிசை வாயில் காப்பேன் யானென வகுத்து விட்டான்.

(இ - ள்.) பிரமதேவனுடைய உலகத்துக்கு இப்புறமுள்ள இடங்களிற் பொருதுள்ளனவும், மேற்கொண்டுபோர்செய்தற்குப் பொங்குகின்றனவுமான மதப்பெருக்கையுடைய யானை குதிரை காலாள் தேர் என்பவற்றுடன் அங்கங்குநெருங்கியுள்ள சேனைஇருநூறுவெள்ளங்களையும் யான்கொண்டு இலங்கையின்வடதிசைவாயிலைக்காப்பேனென்று (இவ்வாறு ஆயிரம்வெள்ளஞ்சேனையையும்)பிரித்துவிட்டிட்டான், (அவ்விராவணன்); (எ - று.)

சிலபிரதிகளில் இச்செய்யுள் "இந்நெடுங்காலம்" என்றுதொடங்கும் முந்தியசெய்யுளுக்கு முன்னேயுள்ளது; ஒருபிரதியில் "கலங்கிய" என்ற அடுத்த செய்யுளுக்குப் பின் உள்ளது. பி-ம்:—[1]ஆடேர், காற்றேர், காற்பார். [2]அப்பால். [3]புடையன. [4]போர்பெருப். (௯௧௩)

௨௩.—இராப்பொழுதுவிடிதல்.

கலங்கிய [1]கங்கு லாகி நீங்கிய கற்பங் காணும்
நலங்[2]கிளர் தேவர்க் கேயோ நான்மறை முனிவர்க் கேயோ
பொலங்கெழு சீதைக் கேயோ பொரு[3]வலி யிராமற் கேயோ
இலங்கையர் வேந்தற் கேயோ [4]வெல்லார்க்குஞ் செய்த தின்பம்.

(இ - ள்.) கலங்குவதற்குக்காரணமான கங்குலென்றுவடிவங்கொண்டு காணும் கற்பம் நீங்கியது,—நன்மைவிளங்குகின்ற தேவர்கட்குமாத்திரந்தானோ, நான்குவேதங்களில்வல்ல முனிவர்க்குமாத்திரந்தானோ, அழகுவிளங்குகின்ற சீதைக்குமாத்திரந்தானோ,போர்செய்யவல்ல வலிமையமைந்த ஸ்ரீராமனுக்குமாத்திரந்தானோ, இலங்கையரசனுக்குமாத்திரந்தானோ?, எல்லாருக்கும் இன்பஞ்செய்தது; (எ - று.)

'எப்போது போர்நேர்ந்து ராட்சசசங்காரம்நிகழப்போகின்றது?' என்பதையே எதிர்பார்த்திருக்கும் தேவர்முதலியோர்க்கும், அவ்வாறுனகருத்தோடு பிரிவுத்துயரால் வருந்தும் ஸ்ரீராமனுக்கும், மன்மதவாதைப்படும் இராவணனுக்கும் கற்பம்போல்தோன்றிய இரவு கழிந்து இன்பத்தைவிளைத்ததென்க. இச்செய்யுள்முதல் சிலபிரதிகளில் அங்கதன்றூதுபடலம் தொடங்குகின்றது. பி-ம்:—[1]கங்குலங்குநீங்கிய, கங்குலாங்குநீங்கிய, கங்குல்நீங்கிவிடிந்தன. [2]செழு. [3]விறல். [4]இன்பம்வந்தெய்திற்றென்பார். (௯௧௪)

௨௪.—சூரியோதயவருணனை.

[1]அளித்தக வில்லா வாற்ற லமைந்தவன் கொடுமை யஞ்சி
வெளிப்பட வரிதென் [2]றுன்னி வேதனை யுழக்கும் [3]வேலை
[4]களித்தவற் களிப்பு [5]நீக்கிக் காப்பவர் தம்மைக் கண்ணுற்று
ஒளித்தவர் [6]வெளிப்பட் டென்னக் கதிரவ னுதயஞ் செய்தான்.

(இ - ள்.) கருணையாகிய நற்குணம்இல்லாத வல்லமையமைந்தவனான கொடுங்கோலரசனதுகொடுமைக்குஅஞ்சி(நாம்) வெளிப்படுதல் அருமையான

துளன்றுகினைத்து (சிற்றரசர்) வருத்தம் அநுபவிக்கும்போது,—(அங்ஙனஞ்) செருக்குற்றவனான கொடுங்கோலரசனைச் செருக்கைப் போக்கிப் காப்பவரான சக்கரவர்த்தியைக் கண்ணுற்று ஒளித்திருந்த அவர் வெளிப்பட்டாற் போலச் சூரியன் உதிக்கலானான்; (எ-று.)—காப்பவர் - ஸ்ரீராமன். பி-ம்:—[1]அளித்தகை. [2]உள்ளம். [3]காலை. [4]களித்தவர்களிப்பு. [5]நீங்கக், நோக்கிக். [6]வெளிப்பட்டன்ன. (கஙகரு)

உரு.—வானரசேனை இலங்கையின்வாயில்களை வளைத்தல்.

உளைப்புறு மோத வேலை [1]யோங்கலை யொடுங்கத் தூர்ப்ப
அளப்பருந் தூளிச் சுண்ண மாசைக [2]ளலைப்பப் [3]பூசல்
இளைப்பருந் [4]தலைதேவர் [5]முன்ன [6]மேவலி னெயிலை முற்றும்
[7]வளைத்தனர் விடியத் தத்தம் [8]வாயில்க டோறும் வந்து.

(இ - ள்.) விடியாநிற்கையில்,—அளக்கமுடியாத புழுதிப்பொடி திக்குகளை யலைப்பதனாலான ஆரவாரமானது ஒலித்தல்பொருந்திய நீர்ப்பெருக்கையுடைய கடலின் ஓங்கிய அலையொலியை யடங்குமாறு உள்ளழுத்த, இளைத்தலில்லாத வானரசேனைத்தலைவர் முன்னம்ஏவிய கட்டளையின்படி தம்தம்வாயில்கடோறும்வந்து (அந்தஇலங்கையின்)மதிளைமுற்றும்வளைத்தனர்; (எ-று.) உளைப்புறும்-சலிப்பினையுடைய என்பாருமுளர். பி-ம்:—[1]ஓங்கலையொடுங்கித் தூர்க்க,ஓங்கலையோடுதுன்னி. [2]அலைக்கும். [3]பூசை. [4]தேவர். [5]முன்னே, [6]ஏயவர். [7]வளைத்திட,வளைத்தவர். [8]வாயிலின்வந்துசார்ந்தார், வாயில்கள்வந்துசேர்ந்தார்.

உசா.—வானரசேனைகள் மதிளைத் தழுவி யாரவாரிக்கையில் சுக்கிரீவலட்சுமணர் முன்செல்ல இராமனும் செல்லுதல்.

தந்திர மிலங்கை மூதூர் மதிலினைத் தழுவித் தாவி
[1]அந்தரக் குலமீன் சிந்த வண்டமுங் [2]கிழிய வார்ப்பச்
செந்தனிச் சுடரோன் சேயுந் தம்பியு [3]முன்பு செல்ல
இந்திரன் தொழுது வாழ்த்த விராமனு மெழுந்து [4]சென்றான்.

(இ - ள்.) வானரசேனையானது இலங்கையென்னும்பழமையானஊரின் மதிலினைத் தழுவி ப்பாய்ந்து வானத்திலுள்ள தொகுதியானநட்சத்திரங்கள் சிந்தும்படியும் அண்டமுங்கிழியும்படியும் ஆரவாரிக்கையில்,—ஒப்பற்றசெவ்விய ஆயிரங்கிரணங்களையுடையனான சூரியனுடையகுமாரனான சுக்கிரீவனும் இளையபெருமாளும் முன்னே செல்ல, இந்திரன்தொழுதுவாழ்த்தாநிற்கையில், இராமபிரானும்எழுந்துபோனான்; (எ - று.)—தந்த்ரம்என்ற பலபொருளைக்கொண்ட வடசொல்லின் திரிபாகிய தந்திரமென்பது - சேனையென்ற பொருளைக் காட்டிற்று. பி-ம்:—[1]அந்தியம். [2]குலுங்க. [3]பின்பு. [4]போனான்.

உஎ.—வானரசேனை இலங்கையை வளைந்த காட்சி.

நூற்கடற் புலவ ராலு நுனிப்பரும் வலத்த தாய
வேற்கடற் றானையான விரிகடல் விழுங்கிற் றேனுங்
கார்க்கடல் புறத்த தாகக் கவிக்கடல் வளைந்த காட்சி
பாற்கட லழுவத் துள்ள தொத்ததப் பதகன் மூதூர்.

(இ - ள்.) பாதகனான இராவணனுடைய அந்தமுதுமையானவூரானது, கடல்போற்பரந்த நூலில்வல்லபுலவராலும் ஆராய்ந்துணர்தற்குஅரிய (பெரு) வலிமையுள்ளதாகிய வேற்படைத்தொகுதியைக்கொண்ட (அரக்கர்)சேனையான விரிந்தகடலால் விழுங்கப்பட்டிருந்ததென்றாலும், கரியகடல்புறத்ததாகக் கவிக்கடல் வளைந்த காட்சியானது,— ஒருபாற்கடலின் பரப்பிலே உள்ளதை யொத்திருந்தது; (எ - று.)—முதலிரண்டடிகள், அரக்கர்சேனை கடல்போற் பரந்துள்ளதென்ற பொருளைக் காட்டும். குரங்குச்சேனைசூழ இடையிலிருந்த இலங்கை,பாற்கடலிடையிலிருப்பதுபோலுமென்றார். (கஅஅ)

உஅ.—அரக்கர்சேனையை வானர சேனைவளைந்ததன் வருணனை.

அலகிலா [1]வரக்கன் சேனை யகப்பட வரியின் [2]றானை
வலைகொலா மென்னச் சுற்றி [3]வளைத்ததற் குவமை கூறிற்
[4]கலைகுலாம் பரவை யேழுங் கால்கிளர்ந் தெழுந்த காலத்து
உலகெலா மொருங்கு கூடி [5]யொதுங்கின வேயுமொத்த.

(இ - ள்.) கணக்குஅற்ற இராவணன்சேனை(தனக்குள்ளே)யகப்படுமாறு குரங்குச்சேனை ஒருவலையோஎன்னும்படி சுற்றிக்கொண்டு வளைத்ததற்குஉவமை கூறுவோமேயாயின்,—நூல்களிற்கூறப்பட்டுள்ள ஏழுசமுத்திரங்களும் சண்டமாருதத்தாற் பொங்கியெழுந்தகாலத்தில் உலகெலாம் ஒருசேரக்கூடி ஒதுங்கினவற்றையும் ஒத்திருந்தன; (எ - று.)

வானரசேனை ஏழுகடல்கள் போன்றிருக்க, அரக்கர்சேனை ஓரிடத்து உலகெலாம்ஒருங்குகூடியதை யொக்குமென்றவாறு. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]அரக்கர். [2]சேனை. [3]வளைந்ததற்குவமைகூறின், வளைத்தமானகரமென்னே, வளைத்தமாநகரமன்னே. [4]மலைகொலாம். [5]ஓங்கினவேயுமொக்கும். (கஅக)

அணிவகுப்புப்படலம் முற்றிற்று.

---

வருணனைவழிவேண்டுபடலம்முதல் அணிவகுப்புப்படலம் வரையில் ஸ்ரீ வான்மீகிமுனிவர் கூறியசரித்திரப்போக்குச் சுருக்கமாக வருமாறு:—விபீஷணன் மொழிப்படி இராமன் தர்ப்பசயனத்தில்நியமங்கொண்டு கிடக்கையில், சைனியங்களோடு ஸ்ரீராமன் கடற்கரைசார்ந்ததைச் சார்த்தூலன்மூலமாயறிந்த இராவணன் சுக்கிரீவனை இராமபிரானிடத்தினின்று வேறுபடுத்துமாறு சுகனை யனுப்ப, அவனும் பறவையுருக்கொண்டுவந்து வானத்திலிருந்தபடியே இராவணன் மொழிந்தவிதமாகவே சுக்கிரீவனைப் பேதப்படுத்தும் மொழிகளைக் கூறுகையில், வானரர்கள் அவன்சிறகைப்பறிப்பதும் அடிப்பதுமாகி, அவ்வரக்கனைப் பூமியில்தள்ளினர்: வானரர் அவ்வாறு வருத்துகையில், சுகன் இராமபிரானிடத்து ஓலமிட, ஸ்ரீராமன் கருணைகூர்ந்து வானரரைத்தவிர்த்து அபயந் தந்தனன். பின்பு அவ்வரக்கன் வானத்தெழுந்து 'இராவணனிடத்து என்ன மறுமொழிசொல்வது?' என்று சுக்கிரீ

வனை வினவ, சுக்கிரீவன் இராவணன் செயலையெல்லாங்கண்டித்துச் சொல்லி அவற்றைக் கூறுமாறு பணித்தனன். பின்னர் அங்கதன் சுக்கிரீவனைப்பார்த்து 'மகாராஜனே! இவன் தூதுவனல்லன்: வானத்திருந்தபடி நம்நிலைமையெல்லாங்கண்டுபோவதற்குவந்த ஒற்றன்: ஆகையால், இவனை இலங்கைக்குப் போக விடலாகாது' என்ன, பின்னர்ச் சுக்கிரீவன்கட்டளைப்படி வானரர்கள் வானத்தெழுந்து அவ்வரக்கனைப்பற்றிக் கட்டிப்போட்டனர்.

பின்பு ஸ்ரீராமன் தர்ப்பசயனத்தில் மூன்று இரவுகள்கிடந்து ஆராதித்தும் சமுத்திரராசன் அருள்புரியாதிருக்கச் சினந்து பாணத்தைவிடுதற்கு முயலுகையில் இலட்சுமணன் வேண்டாமென்றுதடுக்கவும் பாணங்களைப் பிரயோகஞ்செய்தானாக, அப்போதும் அக்கடலரசன் வாராமையாற் பெருஞ் சினங்கொண்டு பிரமாத்திரத்தைத் தொடுக்கத்தொடங்கினான். தொடங்குதலும், கடலரசன் இராமபிரானுக்குப் பிரதியட்சமாகித் தான் வற்றிவிடுவது தகுதியன்றென்றும் ஜலத்திற்செல்லுமவர்கட்குக் கடலிடையிலுள்ள முதலை முதலியவற்றால் யாதோரிடையூறும் நேராதவண்ணஞ் செய்வதாகவும், தன் மீது அணைகட்டினால் தாங்குவதாகவும் இணங்கினான். அதுகேட்டஸ்ரீராமன், 'ஆயின், என்னம்பு வீணாகாதே: இதற்குஇலக்குஎன்?' என்ன, கடலரசன் 'என்னிடையில் வடபுறத்தில் த்ருமகுல்யமென்ற இடத்தில் எனக்குப் பகைஞராய்ப் பலரிருக்கின்றனர்: அங்குவிடுவாய்' என்ன, அவ்வண்ணமே ஸ்ரீராமன் அஸ்திரத்தை விடுக்க, அது அப்பகைவர்களை யொழித்து அவ்விடமெல்லாம் நீரற்றதாகும்படிசெய்தது. அதனால், அவ்விடம்மருகாந்தாரமாயிற்று: ஆனால், இராமபிரான் எய்த அந்தஅம்பு ஊடுருவிச்சென்றவிடம் ஒருகிணறாகி வ்ரணகூபமென்று புகழ்பெற அங்குப்பாதாளத்தினின்று நீர் பொங்கிப் பெருகி எங்கும் புலப்படுவதாயிற்று. ஸ்ரீராமன், அவ்விடமெல்லாம் பசுமுதலியன செழித்திருக்கும்படி வரமீந்தனன்.

அப்பாற் கடலரசன் நளனைச்சுட்டி இவன் சேதுகட்டுந்திறமைவாய்ந்தவனென்பதைத் தெரிவித்துச்செல்ல, நளனும் சேதுகட்ட உடன்பட்டு, ஸ்ரீராமன்கட்டளையால் வானரர்கள் உதவிசெய்ய, முதனாள் பதினான்கு யோசனைதூரமும், இரண்டாம்நாள் இருபதுயோசனைதூரமும் மூன்றாவதுநாள் இருபத்தோரியோசனைதூரமும், நான்காநாள் இருபத்திரண்டுயோசனைதூரமும், ஐந்தாநாள் இருபத்துமூன்றுயோஜனைதூரமுமாகப் பத்துயோசனை அகலமும் நூறுயோசனை நீளமுமுள்ள சேதுவைக் கட்டி முடித்தனன். அப்பால் ஸ்ரீராமன் வானரசைனியத்துடனே கடலைக்கடந்து சுவேலபருவதத்தையடைந்தானாக, தேவர்கள் சுபமொழிகளாற் கொண்டாடினர்.

பின்பு ஸ்ரீராமன் போரைத்தெரிவிக்கிற உற்பாதங்களைக் கண்டு இளைய பெருமாளுக்குக் காட்டினன். சேனைகளெல்லாம் தக்கஇடத்திலிறங்கிய பின்பு திரிகூடமலையின்மேல்தோன்றும் இலங்கையைக்கண்டு பிராட்டியின் நினைவால் முதலில் வருத்தந்தோன்ற, மகாவீரனாகிய ஸ்ரீராமன், அதையடக்கிக் கொண்டு இலங்கையின் வளத்தையெல்லாம் இலட்சுமணனுக்குக் காட்டிப் பிறகு சேனையை ஒழுங்குபடுத்தக்கருதி, அங்கதன் நீலனுடன் சேனையின்நடுப்

புறத்தும் இடபன் தன் கூட்டங்களோடு வலப்புறத்தும் கந்தமாதனன் இடப்புறத்தும் சாம்பவான் சுஷேணன் வேகதர்சியென்பவர்கள் வயிற்றுப் புறத்தும் சுக்கிரீவன் தன்சைனியங்களோடு பின்புறத்தும் இருக்குமாறும் தானும் இலட்சுமணனும் சேனையின் தலைப்புறத்து இருப்பதாகவுஞ்சொல்லி, இவ்வாறு கருடவியூகமாக அணிவகுத்துநிறுத்தினன். வானரர் இலங்கையைப் பாழ்படுக்கவெண்ணி உற்சாகம்பூண்டிருந்தனர். இங்ஙனம் அணிவகுத்த பின்பு, ஸ்ரீராமன் வானரரால்வருத்தப்பட்டுத் தன்னைத் துதித்துக்கூறும் சுக னென்னுஞ் சாரனைக் கண்டு'இனி,இந்தச் சாரனைக் கட்டுஅவிழ்த்துவிடலாம் என்று கட்டளையிடவே,அவனை வானரர் அவிழ்த்துவிட்டனர்; விடவே,சுகன் இராவணனிடம்போய்ச் சேர்ந்தவனாய், நிகழ்ந்ததைச்சொல்லி 'இராமனிடம் சீதையைத் தரவேணும்: இல்லாவிடின், போராவது புரிக' என்றனன். அது கேட்ட ராவணன் சினம்பொங்கத் தன்வல்லமையைப் பாராட்டிக்கூறினான்.

பின்,இராவணன் மந்திரிகளான சுகசாரணர்களை வேவுபார்த்துவருமாறு அனுப்ப, அவர்கள் வானரரூபந்தரித்து வானரசைனியத்திற் புக்கிருத்தலும் விபீஷணன் கண்டறிந்து அவர்களைப்பிடித்து ஸ்ரீராமனிடம் ஒப்புவிக்க, இரா மன் அருள்கொண்டு வானரசைனியங்களையெல்லாம் காணுமாறுசெய்து விட்டிட, அவர்கள்போய் நிகழ்ந்தசெய்தியையும் இராமனுடைய பராக் கிரமத்தையும் பாராட்டிக் கூறிச் சீதையைக் கொடுத்திடுவது தகுதியென்ற னர். இராவணன் அதுகேட்டுச் சுகனைப்பழித்துத் தன்னை மெச்சிக்கூறி, வானரசேனையைப் பார்க்கவிரும்பி உயர்ந்தஉபரிகையின்மேலேற,ஸாரணன் வானரயூதபதிகளைக்காட்டி அவரதுபராக்கிரமங்களை யெடுத்துக்கூறினன்: ஸாரணன் கூறாது விட்டுப்போனவற்றையெல்லாம் சுகன் சுட்டிக்காட்டிக் கூறினான். அதுகேட்ட இராவணன் மனத்தில்அச்சங்கொண்டானாயினும் மாற்றாரைப்புகழ்ந்ததற்காக அவர்களைக் கண்டித்து வெருட்டிவிட்டு அருகே நிற்கும் மகோதரனைநோக்கி ஏற்ற ஒற்றரையழைக்குமாறு பணித்தனன். அந் தக்கட்டளையின்படியே சார்த்தூலன்முதலிய ஒற்றர் வர,அவர்களை எதிரிகளின் உளவுகளையெல்லாம் அறிந்துவருமாறுவிடுத்தனன். விடுக்கப்பட்ட அவர்கள் சென்று வேற்றுருக்கொண்டு வேவுபார்க்கையில் விபீஷணன் அவர்களைக் கண்டுபிடித்து மற்றவரைவெருட்டிவிட்டுச் சார்த்தூலனைமாத்திரம் வானரர் கையிற்பிடித்துக் கொடுத்தனன். வானரர் அந்தச்சார்த்தூலனை வருத்துகை யில் ஸ்ரீராமன் கண்டு விடுவித்தனன். அரக்கர்கள் மீண்டு இலங்கைசேர்ந்து செய்திசொல்லினர். மீண்டும் இராவணனால் வினவப்பெற்ற சார்த்தூலன் தான் கண்டதையும் நிகழ்ந்ததையும் விரிவாகச்சொல்லித் தன்னை விடுவித்த பின் இராமன் கருடவியூகமாயணிவகுத்த சேனையுடன் இலங்கைநோக்கி வருவதையும் தெரிவித்து 'சீதையையாவது கொடுத்துவிடுக: நன்றாகப்போரா வது புரிக' என்று கூறினான். இராவணன் ஆலோசனைகொண்டு 'சீதை யைக்கொடுப்பதில்லை' என்று தன்னுறுதியைக்கூறி வானரர்களை 'இன்னார், இனையர்' என்று விரிவாகஉரைக்குமாறு வினவ, அவனும் அவற்றையெல் லாம் கூறினான்.

அப்பால் இராவணன் மனத்திற் சிறிது அச்சங்கொண்டு மந்திரிமார்களை வரவழைத்து அக்காலத்துக்கு ஏற்ற ஆலோசனைகளைச்செய்து மந்திரிமார்க்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் தன்மாளிகைசேர்ந்து வித்யுஜ்ஜிஹ்வனை வரவழைத்து மஹாமாயாவியான அவனைக்கொண்டு 'துண்டிக்கப்பட்ட ராம சிரசையும் நாணேற்றினவில்லையும் மாயையால் நிருமிக்கச்செய்து சீதையிருக்கும் அசோகவனிகைக்குப்போய் அவற்றைச் சீதைக்குச் சுட்டிக்காட்டி 'இது உன்னுடையபர்த்தாவான இராமன்தலை: இது அவனுடைய வில்: ப்ரஹஸ்தன் மனுஷ்யனான அந்தஇராமனை இரவிற்கொன்று அவனுடைய சிரசைக்கொண்டுவந்துவிட்டான், பார்: இனியாவது எனக்குஉட்படுவாய்' என்றனன். அது கண்டசீதை சொல்லமுடியாத பெருந்துயரோடு பலபடி புலம்பலானாள். அங்ஙனம் புலம்புகையில், வாயில்காவலன் வந்து இராவணனைநோக்கி, 'தலைவனே! பெருங்காரிய மிருத்தல்பற்றி மந்திரிகளோடும் பிரகஸ்தன்வந்து விரைவாக உம்மைப் பார்க்கும்படி விரும்புகின்றான்' என்று தெரிவிக்க, உடனே இராவணன் மந்திராலோசனையின்பொருட்டுப் புறப்பட்டுச்சென்றான். இராவணன்சென்றதும் மாயசிரசு முதலியனவும் அந்தர்த்தானமாயின. இராவணன் மந்திரசாலையில்ஆராய்ந்து சேனைகளையெல்லாம் வரவழைக்கும்படி சேனாபதிகட்குக் கட்டளையிட, அவர்களும் அவ்வாறே சேனைகளையெல்லாம் வரவழைத்து இராவணனுக்குச் செய்திதெரிவித்தனர். இதுஇவ்வாறுநிகழ்கையில், விபீஷணனதுமனைவியான ஸரமை புலம்புஞ்சீதையைப்பலவகையாகத் தேற்றிக் கூறினாள். முடிவாக இராவணன் அப்போதுசெய்வதை வேணுமானால் அறிந்துவருகிறேனென்று சொல்ல, சீதை அங்ஙனஞ்செய்யுமாறுசொல்லினள். உடனே ஸரமை இராவணன் ஆலோசிக்குமிடம்போய், கேகசியும் கிழமந்திரியாகிய அவித்தனும் சீதையைத் திருப்பிக்கொடுத்துவிடும்படி இராவணனுக்குப் போதித்ததையும் என்னசொல்லியும் அவ்விராவணன்போரில் மாள்வதல்லது சீதையைக் கொடுப்பதில்லை யென்று பிடிவாதமாய்நிற்பதையும் அறிந்துவந்துகூறினள். இங்ஙனம் ஸரமை சொல்லித் தேற்றிக் கொண்டிருக்கையில், பேரி சங்கம் இவற்றின் முழக்கங்களும் வானரர்களின் சிங்காநாதமும் அங்குச் செவியிற்பட்டன. சீதையின்மனமுந் தெளிந்திட்டது.

இவ்வாறு போரின்ஒலி செவிப்படவே இராவணன் சிறிது ஆலோசித்து மந்திரிகளைப்பார்த்து 'பகைவனுடையவல்லமையைக்கேட்டு உற்சாகமற்றிருக்கின்றீரே. இது ஏன்?' என்றனன். என்னவும், மால்யவான், இராசநீதிகளையும் நிகழ்ந்துள்ளவைகளையும் எடுத்துக்காட்டி 'சீதையைக்கொடுத்துவிடுவதே தகுதி' என்று வெகுவாகக் கூறினான். எவ்வளவுகூறியும் இராவணன இணங்காமையால், அவன் மவுனமா யிருந்தான். இராவணன் மாலியவானைப் பலபடியாகப்பழித்துப் பிறகு செய்யவேண்டியதை ஆலோசித்து இலங்கைக்குக்காவலேற்படுத்தி, கிழக்குவாசலுக்குப் பிரகத்தனையும் தெற்குவாயிலுக்கு மகோதர மகாபார்சுவர்களையும் மேலைவாயிலுக்கு இந்திரசித்தையும் வடவாயிலுக்குச் சுகசாரணர்களையும் பிரதானராக ஏற்படுத்தித் தானும் அவ்வடக்குவாயிலைப் பார்த்துக்கொள்வதாகச்சொல்லி, நகரின் இடைக்காவலுக்கு விரூபாட்சனை

யேவிக் காரியம்கைகூடியதாக நினைந்து அந்தப்புரஞ்சார்ந்தான். இதுநிற்க. இலங்கையைச்சேர்ந்த சுக்கிரீவன்முதலியோர் ஆலோசிக்கத்தொடங்குகை யில் விபீஷணன் தன் மந்திரிமாரால் இராவணன் போருக்குச்செய்துள்ள ஏற்பாடுகளையெல்லாம் அறிந்துவந்துஉணர்த்தி அதற்குஏற்பச் சேனையை நான்குவகையாகப்பிரித்து ராவணனைக் கொல்லுமாறு ஆலோசனைகூறினன். ஸ்ரீராமன் நீலன்முதலியோரைக் கிழக்குமுதலிய வாயிலைத் தகையும்படி ஏற் பாடுசெய்து, தான் போர்புரியும் வடதிசைவாயிலில் தனக்கும் மேற்குவாயிலி லிருக்கும் அனுமானுக்கும் உதவியாக விபீஷணன் சுக்கிரீவன் சாம்பவான் என்ற மூவரும் இருக்கும்படிசொல்லி, பின்னும் மந்திரிமார்நால்வரோடு விபீ ஷணனும் தாங்களிருவரும்ஆகியஏழுவர்தவிர எவரும் மநுஷ்யரூபங்கொள்ள லாகாது என்ற ஏற்பாடுஞ் செய்தனன்.

இவ்வாறெல்லாம் ஏற்பாடுசெய்துவிட்டு ஸ்ரீராமன் லங்கையைக்காணச் சுவேலமலையின்மீதுஏறி, அதன் அமைப்புக்களையெல்லாம் கண்டனன். சுக்கி ரீவனும் தன்வானரசைனியங்களோடு சுவேலமலையின்மீதுஏறி இலங்கையைக் காண்கையில், இராவணன் இலங்கையின்கோபுரத்தின்மீது இராசசின்னங்க ளோடு நிற்பதுகண்டு 'இராமனுக்குமுன் இந்தப்பயல் நிற்பதா?'' என்று மனத் துச்சினம்பொங்கத் தாவிச்சென்று அவனோடு மல்லயுத்தம்புரிய, வெகுநேரம் இருவர்க்கும்வெற்றிதோல்வியின்றியிருக்கையில், வலிமைகொண்டுசுக்கிரீவன் இராவணனதுபத்துக்கிரீடங்களையும் கீழேதள்ளிவிட்டு, அவன் மாயையைத் தொடங்கக்கருத உடனே ஸ்ரீராமன்பக்கல்வந்துசேர்ந்தான். ஸ்ரீராமன் அவ்வ ண்ணம் சுக்கிரீவன் ஸாஹஸச்செயல் செய்ததற்குத் தான் மனத்தில் வருத் தங்கொண்டதைவெகுவாகத்தெரிவித்து இனிஅவ்வாறு செய்யாமலிருக்குமா றுகூறி அவன்வெற்றிக்கு மகிழ்ந்தான். அப்பால்பலவகை உத்பாதங்கள் தோ ன்றுவதைக்காட்டிக்கொண்டு ஸ்ரீராமன்அணிவகுப்புடனே புறப்பட்டு இலங் கைவாயிலைச்சார்ந்தனனாக, அவரவர்க்கு ஏற்படுத்திய இடத்திலே அவரவர்நி ற்க, வானரசைனியங்கள் இலங்கைநடுநடுங்குமாறு கர்ச்சனை செய்தது. இவ் வண்ணம் அந்தச்சேனை இலங்கையைச்சூழ்ந்துகொண்டு தேவாசுரர்கட்கும் எதிரிடவொண்ணுதிருந்ததென்பது.

---

## கங - ஆவது அங்கதன்றூதுபடலம்.

அங்கதனுடையதூதைத் தெரிவிக்கும்படல மென்பது, பொருள்: ஸ்ரீரா மன் 'சீதாபிராட்டியை இப்போதாவது தந்திடுக; அன்றேல், மறைந்திராமல் போருக்காவது நேரேவருக' என்று இராவணனிடத்துச் சொல்லிவருமாறு அங்கதனைத் தூதாகச் செலுத்தியமை இப்படலத்திற் கூறப்படும்.

க.—இராமபிரான் இராவணனது நகரையைநோக்கிநின்று விபீஷணனைக்கண்டு தான் கருதியதனைக் கூறத்தொடங்குதல்.

வள்ளலும் விரைவி னெய்தி வடதிசை வாயின் [1]முற்றி
வெள்ள மோரேழு [2]பத்துக் கணித்த[3]வெஞ் சேனை யோடும்

கள்ளனை வரவு நோக்கி நின்றனன் [4]காண்கி லாதான்
ஒள்ளிய துணர்ந்தே னென்ன வீடணற் குரைப்ப தானான்.

(இ - ள்.) வரையாதுகொடுத்தருளுந்தன்மையனான இராமபிரானும், ஓரெழுபதுவெள்ளமென்று கணக்கிடப்பட்ட கொடிய சேனையுடனே விரைவாகப்போய் (இலங்காபுரத்தை) முற்றுகைசெய்து (சீதாபிராட்டியை யொளித்துவந்து) கவர்ந்துசென்றவனான இராவணனுடைய வருகையை எதிர்பார்த்துக்கொண்டு அந்நகரத்தின் வடக்குவாயிலிலே நின்று (அவ்விராவணன் வரக்) காணாதவனாய்,—(தன்னருகினின்ற விபீஷணனைநோக்கி, 'இக்காலத்துச் செய்தற்கு) மிகச்சிறந்ததொரு செயலை (மனத்தில்) ஆராய்ந்துள்ளேன்' என்றுசொல்லி, (தான் மனத்தினால் ஆலோசித்த அச்செயலை) வீடணற்கு உரைப்பதுஆனான்; (எ - று.)—இராமன் விபீஷணனிடம் தன்கருத்தைக் கூறியதை அடுத்த செய்யுளிற் காண்க.

எழுபதுவெள்ளம் வானரப்படையோடு இலங்காபுரியை முற்றுகைசெய்த இராமபிரான், வடக்குவாயிலிற்சென்று இராவணன் வரவையெதிர்பார்த்தும் அவன் வரக்காணாமையால் 'ஒருகால் இப்போதாவது இராவணன் பணிந்து வந்து சீதையைக் கொடுத்தால் கொடுத்துவிடட்டும்: இல்லாவிட்டால் பொருதற்குவரட்டும்' என்று தன்னுடைய சாந்தகுணத்திற்கும் தான் கருதிவந்த செயல் விரைவில் முடிவதற்கும் ஏற்ப இராவணனிடத்து ஒருதூதுவனை யனுப்புவதாகத் தீர்மானித்து, அப்படித் தான் மனத்திற்கருதியதைத் தனது நண்பனான விபீஷணனிடஞ் சொல்லலானா னென்க. தான் இப்போது கருதியது-'இராமபிரான் தன்திறத்துத் தீரக்கழியப் பெருங்குற்றஞ் செய்தவனையும் அளவுக்குவிஞ்சிப் பொறுத்தான்' என்று உலகத்தோர் தனதுகுணத்தை மெச்சிப்புகழ்ந்துகூறுமாறும், இராவணன் வணங்கிச் சீதையைத்தராவிட்டாற் போர்க்குவந்தேதீருமாறும் நிகழும்படி ஆராய்ந்த தாதலால், அதனை, 'ஒள்ளியது' என்கிறான். இராமபிரான் தனக்குஉதவியாகவந்த எழுபதுவெள்ளம் வானரசேனைகளில் திசைக்குப் பதினேழுவெள்ளம்வீதம் அநுமான் முதலியவரின்தலைமையின்கீழ் நிற்குமாறுவகுத்துவிட்டு இரண்டுவெள்ளம் வானரசேனை மற்றைச்சேனைகட்கெல்லாம் காய் கனி முதலியன தந்து உதவுமாறு ஏவினானெனக் கூறியுள்ளதனால், 'எழுபதுவெள்ளம் வானரசேனையோடும் வடதிசை வாயிலை முற்றுகைசெய்தனன் இராமபிரான்' என்றுகூறுவது பொருந்தாது. பிரதானவாயிலாதலால் அங்கு இராவணனே வருவனென்று ஸ்ரீராமன்ஊகித்தறிந்தானென்றாவது ஒற்றர்மூலமாக இராவணனது ஆலோசனையையறிந்தானென்றாவது கொள்க. பி-ம்:—[1]நண்ணி. [2]பத்தும், பத்திற். [3]வன். [4]கணக்கிலாதான். (௬௨०)

௨.—இராமபிரான் விபீஷணனிடத்தில் தன்கருத்தைத்தெரிவித்தல்.

தூதுவ னொருவன் றன்னை [1]யிவ்வழி [2]விரைவிற் றூண்டி
மாதினை விடுதி யோவென் [3]றுணர்த்தவே மறுக்கு மாகில்
காதுதல் கடனென் றுள்ளங் கருதிய தறனு மஃதே
நீதியு மஃதே யென்றான் கருணையி [4]னிலய மன்னான்.

(இ - ள்.) அருளுக்கு இருப்பிடம் போன்றவனான ஸ்ரீராமன்,—(விபீஷணனைநோக்கி),—'இவ்விடத்தினின்று, ஒருதூதனை விரைவாக (இராவணனிடத்து) ஏவியனுப்பி, '(இப்போதாவது சீதையென்னும்) மாதை விட்டிடுவாயா? (விட்டாயாயின் உன்னுயிர்தப்பலாம்)' என்று (நமதுகருத்தைத்) தெரிவிக்கவே, (அப்போதும் அவ்விராவணன் சீதையென்னும் அந்தமாதைத் திருப்பிக்கொடுப்பதை) மறுத்தானானால் (பிறகு அந்த இராவணனோடு) போர்செய்வது (நாம் செய்யத்தக்க) முறைமையான காரியமென்று (என்-) மனம் எண்ணியுள்ளது; அறனும் அவ்வாறு செய்வதே; இராசநீதியும் அவ்வாறுசெய்வதே' என்றுகூறினான்; (எ - று.)

கருணையினிலயமன்னான் என்றானென்க. 'நீ இப்போதாவது சீதையென்னும் மாதினைக் கொடுப்பாயா?' என்று ஒருதூதுவனையனுப்பிக் கேட்டோமாயின், இராவணன் அதற்குஇசையாமல் இப்போதும் மறுத்தானானால், பிறகுபொரலாம்: அது தருமமும் இராசநீதிக்கு ஏற்றதுமா மென்றான், இராமபிரானென்க. இச்செய்யுளில் 'கருணையினிலயமன்னான்' என்றஅடைமொழி- தனதுமனைவியைக்கவர்ந்து சிறைப்படுத்தித் தனக்கும் உலகத்தார்க்கும் பேரிடுக்கண் விளைத்த மகாபாவியினிடத்தும் எவ்வளவுதூரம் கருணைசெய்து பார்க்கலாமோ அவ்வளவுதூரம் கருணைசெய்து பார்ப்பவன் இப்பெருமானென்றகருத்தை விளக்கும்: கருத்துடையடைகொளியணி. ஒருகால் மதிமயங்கித் தவறுசெய்தானென்ற அதனையே தலைமையாகக்கருதி, ஒருவனை ஒறுத்திடாது இயன்றவரையும் பொறுத்துப்பார்த்தல் தருமசாத்திரத்திற்கும்ஏற்றதென்பான் 'அறனுமஃதே' என்றான். அரசர்க்குஉரிய சாம பேத தான தண்டமென்கிற நால்வகையுபாயங்களுள் பொருவதாகிய தண்டோபாயம் இறுதியிலேயே செய்யத்தக்கதென்பது நூற்கொள்கை யாதலால், 'நீதியுமஃதே' என்றான். பி-ம்:—[1]அவ்வழி. [2]வாவிற். [3]உணர்த்தினால், உணர்த்துவோம். [4]நிலைமையானான். (கஉக)

ங.—அதுகேட்டு விபீஷணன் சுக்கிரீவன் இலட்சுமணன் என்ற இவர் தம்தமது கருத்தைக் கூறுதல்.

அரக்கர்கோ னதனைக் கேட்டா [1]னழகிற்றே யாகு மென்றான்
[2]குரக்கினத் திறைவன் [3]கேட்டுக் [4]கொற்றவர்க் குற்ற தென்றான்
[5]இரக்கம திழுக்க மென்றா னிளையவ னினிநா மம்பு
[6]துரக்குவ தல்லால் வேறோர் சொல்லுண்டோ வென்னச் சொன்னான்.

(இ-ள்.) அரக்கர்கட்கெல்லாந் தலைவனாகிய விபீஷணன்,(இராமபிரான்கூறிய) அச்சொல்லைக் கேட்டு நன்றாயிருக்கின்றதென்று(தன்னுடன்பாட்டைத்) தெரிவித்தான்; குரங்குக்கூட்டங்கட்கெல்லாந் தலைவனாகிய சுக்கிரீவன் (இராமன்கூறியதைக்)கேட்டு வெற்றிபொருந்தியவரான அரசர்க்குத்தக்கதேயென்று கூறினான்; தம்பியாகிய இலட்சுமணன், (பகைவரிடத்து) இரங்குவதென்பது தவறானசெயலாகுமென்று சொல்லியவனாய், 'இனிமேல், நாம்(எதிராளிமீது) அம்பைச்செலுத்திப் போர்புரிவதல்லாமல் (போருக்கு) மாறாக்ச் சமாதானமாகப் போவதென்றஒருசொல் (பேசுதற்கு) உரியதோ?' என்று சொன்னான்.

அந்த இராமபிரானது கருத்தைக் கேட்டு, விபீஷணனும் சுக்கிரீவனும் நன்றென்று அங்கீகரித்துச்சொல்ல, இலக்குமணன் 'எப்போதும் யாரிடத்தும் இரக்கத்தைக் காட்டுவது தகுதியன்று: நாம் இவ்வளவு தூரம் வந்தபின்பு இனிச் சமாதானத்திற் சிறிதும் கருத்துவையாது அம்பைச்செலுத்திப் பகைவனை வெல்வதுதவிர, ஆலோசித்துச் சொல்லவேண்டிய சொல்லும் ஒன்று உண்டோ? இல்லை' என்றனனென்க. ரக்ஷஸ்என்றவடசொல்திரிந்து பலர் பால் விகுதியேற்று, 'அரக்கர்' என வந்தது. பி-ம்:—1அழுகிதே. 2குரக்கினத் தலைவன். 3நின்றான். 4கொற்றவற்குறுதியென்றான், கொற்றவருறுகின்று. 5இரக்குமது. 6தூரக்குமது. (கஉஉ)

சு.—நான்குகவிகள் - குளகம்: இலக்குமணன் 'சமாதானங்கூடாது' என்றதற்குக் காரணத்தை விரிவாக எடுத்துக்காட்டலைத்தெரிவிக்கும்.

1தேசருக் கிடுக்கண் செய்தான் றேவியைச் சிறையில் வைத்தான்
பூசுரர்க் கலக்க ணீந்தான் மன்னுயிர் புடைத்துத் தின்றான்
2ஆசையி னளவு மெல்லா வுலகமுந் தானே 3யாள்வான்
வாசவன் றிருவுங் கொண்டான் வழியலா வழிமேற் செல்வான்.

(இ - ள்.) (நீ எவனுடன் சந்தி பேசவேணுமென்று விரும்புகின்றாயோ அந்த இராவணன்), தேவர்கட்குத் துன்பமுண்டாக்கினான்; சீதாதேவியைச் சிறையில்வைத்தான்; அந்தணர்க்குத் துன்பத்தைக் கொடுத்தான்; நிலைபெற்ற பிராணிகளை அடித்துக்கொன்றான்; திக்குக்களினெல்லைவரையிலும் எல்லா வுலகங்களையும் தானே யாளக்கருதியவனாய்த் தேவேந்திரனுடைய செல்வத்தையெல்லாம் கவர்ந்துகொண்டான்;வழியல்லாதவழியிலே [நியாயத்தவறான வழியிலே] நடப்பவனானன்; (எ - று.)

இலக்குமணன், இராவணன் செய்த முறைக்கேட்டையெல்லாம் அடுக்கிச்சொல்லி, இப்படிப்பட்டவனோடு சமாதானம்பேசலாமோ? என்கிறான். இடுங்குகண்என்பது இடுக்கண் என்று விகாரப்பட்டு, கண்ணிடுங்குதலாகிய காரியத்தை யுணர்த்தும் தொடர் அதற்குக் காரணமாகிய துன்பத்தைக்காட்டிற்றென்க. பூசுரர் - பூமியிற் சுரர்போல் விளங்குபவர்: அந்தணர்: பூஸுரர் என்னும் வடசொல், திரிந்துவந்தது. அலக்கண்-துன்புறுதற்கு இடனாயிருப்பது என்ற காரணம்பற்றி,உபத்திரவத்திற்குப்பெயர்:அலத்தல்-துன்புறுதல். "உண்டற்குரிய வல்லாப்பொருளை, யுண்பதுபோலக் கூறலும்மரபே" என்ற தொல்காப்பியத்துமரபியற் சூத்திரத்தால், 'மன்னுயிர் புடைத்துத்தின்றான்' என்றார். ஆசையினளவும்-தன் விருப்பத்தின்வரையிலு மெனினுமாம். ஆசை - திக்கு, விருப்பம் என்ற இருபொருளுடையது. வாசவன்-வாஸவன்: அஷ்ட வசுக்களுக்குத் தலைவ னென்ற காரணம்பற்றி இந்திரனுக்குப்பெயர். பி-ம்:- 1தேசியைச்சிறையில்வைத்தான்தேவரையிடுக்கண்செய்தான், தேவியைச்..... இடுக்கஞ்செய்தான். 2ஆசையும்விசும்பும். 3ஆள. (கஉங)

ரு. வாழியாய் நின்னை 1யன்று வரம்பறு துயரின் 2வைகச்
சூழ்விலா 3மாயஞ் செய்தான் 4தேவியைப் பிரிவு 5செய்தான்

[6]ஏழையா ளிரக்க நோக்கி யொருதனி யிகன்மேற் சென்ற
ஊழிகாண் கிற்கும் வாழு ளுந்தையை யுயிர்பண் டுண்டான்.

(இ-ள்.) வாழ்ச்சிபெற்றிருப்பவனே! (நீமாயமானையெய்யச்சென்றிருந்த) அப்போது எல்லையில்லாத துன்பத்திலே மூழ்குமாறு ஆலோசிப்பதற்கு முடியாத (கொடிய) வஞ்சனைத்தொழிலைச்செய்து, உன்மனைவியைப் பிரிந்து செல்லுமாறு செய்தான்: முன்பு அந்த சீதாபிராட்டி இரக்கமுண்டாகுமாறு கதறியதுநோக்கி, (மனம்பொறாது) தன்னந்தனியே போருக்குச் சென்ற வனான யுகாந்தத்தையுங் காணவல்ல ஆயுளையுடைய உனதுதந்தையை [சடாயுவை] உயிரைக்கவர்ந்தான்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் இராவணன்செய்த தீச்செயல்களையெல்லாந் தொகுத்துச்சொல்லிய இலட்சுமணன், தேவியைச் சிறையில்வைத்ததே தாங்கள் இலங்கை தேடி வருவதற்குக் காரண மாதலால், இதனால் தேவியைமாயத்தால் மாறுவேடம்பூண்டு கவர்ந்துசென்றதையும், அங்ஙனங் கவர்ந்துசெல்கையில் அந்தத் தேவியை மீட்குமாறு எதிர்த்துவந்த சடாயுவை உயிர்நீங்கச் செய்ததையும் விவரித்துக் கூறுகின்றானென்க. மனைவியைக்கவர்தல் தந்தையைக் கொல்லுதல் என்றஇருவகைப் பெருந்தீமையைத் தமக்குப்புரிந்தமையை எடுத்துக்காட்டியவாறு. கானகஞ்சேர்ந்தபின் இராமன் தமதுதந்தையின் உயிர்த்துணைவனான சடாயுவைக் கண்டு அவனைத் தந்தைபோலப்பாவித்து, பின்பு சீதையை இராவணன் கவர்ந்துசெல்கையில் அவனையெதிர்த்து வலியொடுங்கித் தம்மிடத்துச்செய்திசொல்லியிறந்த அந்தச்சடாயுவுக்கு(த்தந்தையின் ஈமக்கடனைச் செய்யப்பெறாத குறைதீர)ஈமக்கடனைச்செய்தானென்பது ஆரணிய காண்டத்திற் பெறப்பட்டதனால், அந்தச்சடாயுவை, 'உந்தை'யென்றான். சடாயுஎன்பதற்கு - பலமயிர்கள்சேர்த்துத் திரித்தாற்போன்றமிக்க ஆயுளுள்ளவனென்று பொரு ளாதலால், அவனை 'ஊழிகாண்கிற்கும்வாழு ளுந்தை'என்றான். பி-ம்:—[1]இஞ்ஞான், இங்ஙன். [2]வைக்க. [3]வஞ்சஞ்சூழ்ந்து. [4]துணைவியை. [5]சூழ்ந்தான். [6]ஏழையாளிடுக்கண், ஏழைபாலிரக்கம், ஏழையாளிடுக்கம். (௬௨௪)

௫. அன்னவன் றனக்கு மாதை விடுலுயி ரருளு வாயேல்
என்னுடை நாம நிற்கு [1]மளவெலா மிலங்கை [2]மூதூர்
மன்னவ னீயே யென்று வந்தடைந் தவற்கு வாயாற்
சொன்னசொ [3]லென்னா முன்னஞ் சூளுற [4]வென்னாந் தோன்றல்.

(இ-ள்.) ஆண்களிற் சிறந்தவனே! (இராவணன் உன்)மனைவியாகிய சீதையை விட்டிட்டால் (அதுபற்றி மனைவியைக்கவர்ந்தும் தந்தையைக்கொன்றும் பெரும்பிழை செய்தவனான) அந்த இராவணனுக்கும் அருள்புரிந்து உயிரை வாங்காது விடுவாயேயானால், 'என்னுடையபெயர் (இந்தப் பூலோகத்தில்) பயில்கின்ற காலம்வரையும் இலங்கையென்னும் பழமையான நகரத்துக்கு அரசனாகுபவன் நீயே,என்று(உன்னிடத்து)அடைக்கலமாக வந்துசேர்ந்த விபீஷணனுக்கு (உன்னுடைய) வாயினாலே சொன்ன சொல் யாதாய்முடியும்? முன்னம் (அபயம்வேண்டிய தண்டகாரணியவாசிகளான இருடியர்க்குச்) சபதஞ்செய்துகொடுத்ததுதான் யாதாய்முடியும்? (எ - று.)

ஒருகால் இராவணன் இப்போது சீதையை விட்டிட்டால் அவனிடத்து இரங்கி அவனைக் கொல்லாது விட்டிடவேண்டும்: அங்ஙனம் விட்டிட்டால் அப்போது, சிரஞ்சீவியாகிய விபீஷணனிடத்தில் 'என்னுடையபெயர் உலகில்நிற்கும்வரையில் இந்தஇலங்காராச்சியத்திற்கு நீயேயரசனுவாய்' என்றுசொன்னதும், தண்டகாரணியவாசிகளான இருடிகள்அபயம்வேண்டித் தம் குறைகூறியிரந்தபோது 'அரக்கரைக்கொன்று நுந்துயரத்தைக் களைவேன்' என்று சொல்லியதும் தவறிவிடுமே! ஆகையால், இப்போது 'மாதைவிட்டால் உன்னுயிரைக் கொல்லாது விடுவேன்' என்று தூதுமூலமாகச் சமாதானம் பேசுவது தகுதியன்று என இலக்குமணன் தன் கருத்தைத் தெரிவிக்கின்றனென்க. இராமபிரான் 'என்னுடைநாம நிற்குமளவெலாம் இலங்கைமூதூர் மன்னவன்நீயே'என்று விபீடணனுக்குக் கூறியதை "ஆழியானவனைநோக்கியருள்சுரந்துவகைதூண்ட, எழினேடேழாய் நின்றவுலகு மென்பெயருமெந்நாள், வாழுநாளன்றுகாறும் வாளெயிற்றரக்கர் வைகும், தாழ்கடலிலங்கைச்செல்வநின்னதே தந்தே னென்றான்" என்ற விபீடணனடைக்கலப்படலத்துச்செய்யுளா லறிக. தண்டகாரணிய வாசிகளான முனிவர்க்கு இராமன் அபயமளித்ததை "அறந்தவாநெறியந்தணர் தன்மையை, மறந்தபுல்லர் வலிதொலையேனெனி, னிறந்துபோகினுநன்றிதுவல்லது, பிறந்தியான்பெறும் பேறென்பதியாவதோ," "சூரறுத்தவனுஞ் சுடர்நேமியும், ஊரறுத்தவொருவனு மோம்பினும், ஆரறத்தினோடன்றி நின்றாரவர்,வேரறுப்பென் வெருவன்மினீரென்றான்"என்பவைமுதலிய அகத்தியப்படலச்செய்யுளா லறிக.'வாயால்'என்றுவேண்டாது கூறியது, அந்தவாயிலிருந்துவந்தசொல் பழுதுபட்டதில்லையென்ற கருத்தைத் தெரிவிக்கும். பி-ம்:—[1]நாளெலாம். [2]காக்கும்,ஆளும். [3]எல்லாம். [4]என்னுய்த்தோன்றும். (௯௨.௫)

௭. அறந்தரு [1]தவத்தை யாயு மறிவினு லொற்றை [2]முற்றும்
மறந்தனை யெனினு [3]மற்றிவ் விலங்கையின் [4]வளமை நோக்கி
இறந்திது போத றீதென் றிரங்கினை யெனினு மெண்ணிற்
சிறந்தது போரே யென்றான் சேவகன் முறுவல் செய்தான்.

(இ - ள்.) தருமத்தைத் தரவல்ல பொறுமையையே(எப்போதும்)நினைக்கின்ற (உனது) புத்தியினுல், (விபீடணற்கும் தண்டகாரணியவாசிகளான முனிவர்க்கும் வாக்களித்துள்ள) அவ்விஷயங்களை அடியோடு மறந்துவிட்டாயென்றாலும், அன்றி இந்தலங்காபுரியின் செழிப்பைப்பார்த்து 'இந்த இலங்கையானது அழிந்துபோய்விடுதல் நன்றன்று' என்று (ஒருகால் நீ) இரக்கங்கொண்டாயென்றாலும், ஆலோசித்துப்பார்க்குமிடத்து, (இப்போது செய்யுமாறு) சிறந்திருப்பதாக (என்புத்திக்குத்) தோன்றுவது போரே யென்று (தன்கருத்தை விரிவாக இலக்குமணன்) எடுத்துச்சொன்னுன்; அதுகேட்ட மகாவீரனுகிய இராமபிரான் புன்சிரிப்புச்செய்தான்; (எ-று.)

உனக்குஇயற்கையாயுள்ளபொறுமையினுல் அவ்வரக்கன்செய்த தீமையை மறந்தனையோ, 'இலங்கை நாசமாய்விடுமே' என்ற இரக்கத்தினுலோ, நீ அரக்கனோடு சமாதானம் பேசிப்பார்ப்போமென்று கருதினையென்

ரூனும், எனக்குச் சமாதானமென்பது பிடிக்கவில்லை. பொருவதே தகுதியென்று தன்கருத்தை வெளியிட்டனன் இலட்சுமண னென்க. மூன்றும் பாடலில் தன்கருத்தைச் சுருக்கமாகச்சொல்லிய இலட்சுமணன், பின் நான்கு பாடலால் தன்கருத்தின்காரணத்தை விவரமாகச் சொன்னான். இராமன் முறுவல்செய்தது - ஒரு குரங்கின்மூலமாகச் செய்திதெரிந்து கடலிலணை கட்டித் தன்னூர்புகுந்து முற்றுகைசெய்யவும் தன்தம்பியே தன்னைவிட்டு ஏகவும் பார்த்திருந்த இராவணனைக்குறித்து இப்போதுஇரங்கிவிட்டாலென் செய்வது என்று கருதி அஞ்சவேண்டிய அவசியமில்லை யென்ற குறிப்பினாலாகும். அறந்தருதவம்-தருமநெறியிற் செல்வோர்க்கே தக்கதாகிய தவமென்றவாறு; "உற்றநோய்நோன்ற லுயிர்க்குறுகண்செய்யாமை, யற்றேதவத்திற்குரு" என்பவாதலால், பொறுமையைத் தவமென்றேகூறினார். அவற்றை என்பது-தேவரை யிடுக்கண்செய்தல்முதலிய நான்காம்பாடலிற் கூறியவற்றைச் சுட்டுமென்னலுமாம். பி - ம்:—1தவத்தினுண் மேலருளினால். 2எல்லாம். 3மற்றையிலங்கையின். 4அழகை, வண்மை. 5எண்ணில். (கஉ௬)

இங்கு ஒருபிரதியில் ஒருசெய்யுள்காணப்படுகின்றது. அதுவருமாறு:—

தப்பில் வீடணர்க் கிலாவகை தானமச்
செப்பிய வாய்மைதான் சிதைய லாகுமோ
இப்பொழு திராவண னிங்கு வந்திடில்
அப்பொழு தயோத்திநா டளிப்ப னௌனையே.

அ:.—முடிவு நீ கூறுவதேயாயினும் நீதிநூலுக்கு ஏற்பத் தூதனுப்புதல் தக்கதுஎன்று இராமன் உரைத்தல்.

அயர்த்திலன் முடிவு மஃதே யாயினு மறிஞ ராய்ந்த
1நயத்துறை 2நூலி னீதி 3நாந்துறந் 4தமைது னன்றோ
5புயத்துறை வலிய ரேனும் பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத்துறை யறனு மஃதே 6யென் றிவை சமையச் சொன்னான்.

(இ - ள்.) (அரக்கன்செய்த தீச்செயல்களையும் விபீடணனுக்கும் தண்டகாரணியவாசிகளான இருடியர்க்கும் நான் வாக்களித்திருத்தலையும்) மறந்திட்டேனில்லை; இறுதியாக நடக்கப்போவதும், (நீ கூறிய) அப்போரே யாகும்; ஆயினும்,அறிவுள்ளவரான பிருகஸ்பதி சுக்கிராசார்யர் முதலியோர் ஆராய்ந்து கூறியுள்ள (அரச) நீதியின்வழியைவிளக்குவதான சாஸ்திரத்தின்முறையை, நாம் விட்டிருப்பது நல்லதாகுமோ? தோள்வலிகொண்டு செய்யும் போர்த்துறையிலே வலிமையையுடையவராயினும்,பொறுமையுடன்சேர்ந்துவாழ்வது வெற்றிபெறுவதற்குஉரிய வழியாகும்: அரசதருமமும் அங்ஙனம்பொறுமைகொண்டுவாழ்தலேயாம்'என்று சொல்லிவிட்டு, பின் வரும் விஷயங்களை(யாவரும்) அங்கீகரிக்குமாறு (இராமபிரான்) கூறலானான்; (எ-று)—அதனை மேற்கவியிற் காண்க.

'பொறுத்துப்பார்த்துச் சந்திக்குவராவிட்டாற் பின்னரே போர்செய்ய வேண்டும்' என்று அரசநீதியிற் கூறியிருத்தலாலும்,பெருவலிபடைத்தோராயினும் அவசரப்படாமற் பொறுத்துப்பார்த்துப் பிறகு போர்க்குச்செல்வதே

வெற்றி விளைக்குமாதலாலும், நான் சமாதானம் பேசிப்பார்ப்போமென்று சொன்னேன்: நீசனான இராவணனிடத்திற் போர்தான் முடியப்போகின்றது: எனது வாக்குத் தவறாமல் நிறைவேறுமென்று இராமபிரான் இலட்சுமணன் மனங்கொள்ளும்படி கூறிப் பின்னுங்கூறலாயின னென்க. பி-ம்:—1நயத்திறம். 2நீதிநூலே, நீதிநூலில். 3திறப்பது. 4நன்மைத்தாமே, அமைத்தனன்றே. 5புயத்துள, புயத்துற. 6என்பது, என்றுரை. (கூஉஎ)

கூ.—விபீஷணன் முதலியோரிடத்து இராமபிரான் அங்கதனைத் தூதனுப்புதல் நலமென்று தெரிவித்தல்.

மாருதி [1]யின்னுஞ் செல்லின் [2]மற்றிவ னன்றி வந்து
[3]சாருநர் வலியோ ரில்லை யென்பது [4]சாரு மன்றே
யாரினி யேகத் தக்கா ரங்கத னமையு மொன்னார்
வீரமே விளைப்ப ரேனுந் தீதின்றி [5]மீளவல்லான்.

(இ - ள்.) இப்போது வாயுபுத்திரனான அநுமான், (இராவணனிடத்துத் தூதுவனாகச்) சென்றால், பிறகு, இந்த அநுமானை யல்லாமல், (இலங்கையினுள்ளே) வந்து சேர்வதற்குரியராகிய வலிமையுள்ளவர், (மாற்றார் பக்கத்துச் சேனையில் எவரும்) இலர் என்கின்ற எண்ணமானது (நம் பகைவருக்கு) உண்டாகுமல்லவா? (ஆகவே அநுமனைமீண்டும் அனுப்பலாகாது: அநுமனையனுப்பவேண்டாமென்கின்ற கருத்து உண்டாகிய) இப்போது, (இலங்கையினுள்ளே) சென்று மீள்வதற்கு உரியவர், யாவர்? அங்கதனே தக்கவனாவான்; (அந்த அங்கதன்), பகைவர்களாகிய அரக்கர் பராக்கிரமத்தை மிகுதியாகக் காட்டினாராலும், (தான்) யாதோருறுபாடும் இல்லாமல் மீள்வதற்கு வல்லமையுள்ளவனாவான்; (எ - று.)

'சீதையுள்ளவிடந்தேடி வருவதற்காக முன்னம் ஒருமுறை அநுமான் சென்றிருத்தலால் மீண்டும் அவனையே யனுப்பினால் அநுமானைத்தவிர வேறு வீரர் மாற்றார்பக்கவில்லையென்றுகருதி எதிராளிகள் நம்மை அலட்சியஞ்செய்வார்கள்; அவ்வாறுகருதாமல் 'அநுமானைப்போலப் பெருவீரர்எத்தனைபேருள்ளார்களோ?' என்று மாற்றார்மனம் நடுங்குமாறு செய்யவேண்டுமாதலால், இப்போது அவனையனுப்பாது அங்கதனை யனுப்புவோம். அவ்வங்கதன், எதிரிகள் தீமைசெய்யச் சூழ்ந்தாலும் அவர்களை வென்று மீளும் வல்லமையுடையான்' என்று கூறி அங்கதனைத்தூதாக அனுப்புவதற்குத் தான் விரும்பியதை இராமன் விபீஷணனுதியரிடத்துத்தெரிவித்தனனென்க. அநுமான் கேஸரியென்னும் வாநரராஜனது மனைவியான அஞ்சனாதேவியினிடத்தில் வாயுதேவனது அனுக்கிரகத்தினாற் பிறந்தவனாதலின், மாருதியெனப்பட்டான். மாருதி-மாருதனது குமாரன்: (மாருதன் - வாயுதேவன்.) பி-ம்:—1இன்னனுஞ். 2மற்றவன். 3சாருதல். 4சாலும். 5மீடல்.

(கூஉஅ)

கo.—யாவரும் ஒப்பவே, இராமன் அங்கதனைநோக்கி 'தூதுசெல்' என்ன, அவன் பெருமகிழ்ச்சி யடைதல்.

நன் றெனு [1]மவன் றனைக் கூய் நம்பிநீ [2]நண்ணலார்பாற்
[3]சென் றுள துணரவொன்று [4]செப்பினை [5]திரிதி யென்றான்

அன்றவ [6]னருளப் பெற்ற வாண்டகை [7]யலங்கற்பொற்றோள்
குன்றினு முயர்ந்த தென்றால் [8]மனநிலை கூற லாமோ.

(இ - ள்.) (யாவரும்) நல்லதென்று அங்கீகரிக்க,—(இராமபிரான்) அந்த அங்கதனை யழைத்து, நற்குணம் நிறைந்தவனே! நீ பகைவரிடத்திற் போய் மனத்திலிருப்பதையுணருமாறு ஒன்றுசொல்லிவிட்டு மீண்டுவருவாய் என்று கூறினான்: அப்போது, அவ்விராமபிரானால் கருணைகொண்டுகட்டளையிடப்பெற்றஆண்மைக்குணம்நிறைந்த அங்கதனுடைய வெற்றி மாலையையணிந்த அழகியதோள்கள் மலையைக்காட்டிலும் பருத்துப்பூரித்ததென்றால், அந்த அங்கதனதுமனத்தின் (உற்சாகமான) நிலையைக்கூற (நம்மால்) முடியுமோ? (எ-று.)

இந்தச்செய்யுளின் பின்னிரண்டடிகள் அங்கதன் பெருமகிழ்ச்சிகொண்டமையைப்பற்றித் தெரிவிக்குங் கவிக்கூற்றாம். நம்பிஎன்பதற்கு-வைஷ்ணவ சம்பிரதாய வியாக்கியானங்களில், குணபூர்ணனென்று பொருள்கூறப்பட்டுள்ளது: "நம்பும்மேவும் நசையாகும்மே" என்றதொல்காப்பியத்தை யொட்டி, விரும்புதற்குரியவன் என்றுங் கூறலாம். ஆண்டகை - பண்புத்தொகையன்மொழி. சென்றவனுரைத்துமீளத் திரிதியென்றுவந்ததுகூற, என்று சில பிரதிகளில் இரண்டாமடி. பி-ம்:—1 அவனைக்கூவி. 2நண்ணலான்பால். 3சென்றிரண்டுரையினொன்றை, சென்று வென்னுரையிதொன்று. 4செப்பிநீ. 5தெரிதி. 6ஏவப்பெற்றவாணையால், ஏவப்பெற்றதாதலால். 7 அவன்பொற்றோள்கள். 8 அவனிலை. (கஉக)

கச.—இரண்டுகவிகள்-இராவணனிடத்து அங்கதன் சொல்லவேண்டுவதை இராமன் சுருக்கமாகச் சொல்லுதலைக்கூறும்.

என்னவற் குரைப்ப தென்ன வேந்திழை யாளை விட்டுத்
தன்னுயிர் [1]பெறுகை நன்றே வன்றெனிற் றலைகள் பத்துஞ்
சின்னபின் னங்கள் செய்யச் செருக்களஞ் சேர்த லன்றே
சொன்னவை யிரண்டி [2]னொன்றே துணிகெனச் சொல்லி டென்றான்.

(இ - ள்.) (அங்கதன் இராமபிரானைநோக்கி), 'அந்த இராவணனுக்கு, (நான்) சொல்லத்தக்கது என்னசெய்தி?' என்றுவினவ,—(இராமபிரான்), 'தரித்துள்ள ஆபரணங்களை யுடையவளான சீதாபிராட்டியை விட்டிட்டுத் தன்னுடைய உயிரைப் பெற்றுப்போவது (உனக்கு) நன்மையைத்தருவதா? அன்று எனில் (உனது) பத்துத்தலைகளையும் இராமபிரான் தன்னம்புகளில் துண்டந்துண்டமாக அறுத்துத்தள்ளுமாறு போர்க்களத்தைச் சேர்தல் (உனக்கு) நன்மையைத்தருவதா? கூறியவை இரண்டற்குள் ஒன்றைத் துணிந்துசொல்வாயாகஎன்று (இராவணனிடம்) சொல்லுவாய்,' என்றான்; (எ - று.)

அங்கதன் இராவணனிடத்து 'யாது உரைப்பது?' என்றுவினவ, இராமபிரான் 'சந்திசெய்துகொள்வது நன்மையாகத்தோன்றினால் சீதையைவிட்டிட்டு உயிரைப்பெற்றுப்போகுமாறும், போர்செய்வது நன்றுஎன்று தோன்றினால் பொருது உயிரைவிடுமாறுங் கூறுக' என்றான். தான் வெல்வதுதிண்ணமென்பான் 'தலைகள்பத்துஞ் சின்னபின்னங்கள் செய்யச் செருக்களஞ்சேர்தல்நன்றோ?' என்று கூறச்சொன்னான். சின்னம்-அறுக்கப்பட்டது; பின்னம்-

துண்டாக்கப்பட்டது. பி - ம்:—1பெறுதல். 2ஒன்றதுணிந்ததுசொல்லுகென்ருன், ஒன்றைத்துணியெனச்சொல்லிவிட்டான். (கூ௩௦)

கூ௨. அறத்துறை யன்று வீரர்க் கழகுமன் ருண்மை யன்று
மறத்துறை யன்று [1]சேம மறைந்துறைந் தொதுங்கி வாழ்தல்
[2]நிறத்துற வாளி கோத்து நேர்வந்து நிற்கு மாகிற்
புறத்துற வெதிரே வந்து போர்தரப் புகறி யென்ருன்.

(இ - ள்.)(பின்னும் இராமபிரான்),—'(சீதையைவிட்டிட விருப்பமில்லையானல்),—க்ஷேமமாக (ஊர்க்குள்ளேயே) பதுங்கிவசித்து ஒதுங்கிவாழ்தல், (இராச) தருமத்திற்கு ஏற்ற வழியுமன்று; சுத்தவீரர்கட்குத் தக்கதுமன்று; ஆண்மையுமாகாது; வீரகுணத்துக்குத் தக்க முறைமையுமாகாது; (எம்முடைய) மார்பிலே பொருந்துமாறு (தன்னுடைய) அம்புகளைத் தொடுத்துக்கொண்டு எதிரேவந்து [எதிர்த்து] நிற்கவல்லமையுடையவனானல், (ஊர்க்குள் மறைந்திராமல், தன்) நகருக்குவெளியே பொருந்த எதிரே வந்து போர்புரியுமாறு சொல்வாய் என்றுங்கூறினன்; (எ-று.)

இராவணன் சீதையைக் கொணர்ந்துகொடுத்துச் சமாதானத்திற்குஉடன்படாமற் போவதானல் பின்னும் பொருவதற்கு வாராமல் ஊரிலேயே பதுங்கியிருப்பது தகுதியன்று; வீரனயிருப்பவன் இங்ஙனம் அச்சங்கொண்டு ஊர்க்குள்ளேயே பதுங்கியொதுங்கி வாழானென்றுசொல்லி அவ்விராவணனுக்கு ரோஷம்பிறக்குமாறு செய்கஎன்று இராமபிரான் சொல்லினனென்க. வாளி கோத்து நிறத்து உற - எம்முடைய அம்புகள் தொடுக்கப்பட்டுத் தன்மார்பிலேதுளைக்க, நேர்வந்து - எதிரேவந்து, நிற்குமாகின் - நிற்கவல்லமையுள்ளவனனல் என்று உரைத்தலும் சிறக்கும். பி-ம்:—1செப்பின். 2நிறுத்துறு. ()

கூ௩.—அங்கதன் வணங்கி மகிழ்ச்சியோடு இராவணனிடம் தூதுசேல்லுதல்.

[1]பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப் [2]படர்வ தென்ன
வீரன்வெஞ் சிலையிற் கோத்த வம்பென [3]விசையிற் போனன்
மாருதி யல்ல னாகி னீயெனு [4]மாற்றம் பெற்றேன்
யாரினி [5]யென்னொ டொப்பா ரென்பதோ ரின்ப முற்ருன்.

(இ - ள்.) 'மாருதியல்லாவிட்டால், நீயே (தூதுக்குரியவன்)' என்று (என்னிடம் மதிப்புவைத்துச்) சொல்லுகிற ஒப்பற்றவார்த்தையை யடைந்திட்டேன்; இனி, என்னைப் போல்பவர் யாவருளர்?' என்று(மனத்திற்) கருதுவதாலாகிய ஒப்பற்ற இன்பத்தைப் பொருந்தியவனாகிய அங்கதன், (இராமபிரானைப்) பூமியில்விழுந்து தொழுது, சிங்கமானது ஆகாயத்தின்மீது செல்வதுபோல(க் கம்பீரமான தோற்றத்துடன்) மகாவீரனன இராமபிரானது கொடிய கோதண்டமென்ற வில்லிலே பூட்டித்தொடுக்கப்பட்ட அம்புபோல விசையாகப் போனன்; (எ - று.)

'இராமபிரான் இப்போது அநுமானை மீண்டும் அனுப்புவது தகுதியன்றாதலால் யாரையனுப்பலாமென்று ஆலோசித்து, அங்கதனை தக்கவனென்று

என்னிடம் மதிப்புவைத்துக் கூறினானாதலால், அப்பிரானது மதிப்பைப் பெற்ற எனக்கு நிகரானவர் எவருமில்லை' என்ற பெருமகிழ்ச்சியுடனே அங்கதன் இராமனை வணங்கிப் பெருமிதத்தோற்றத்துடன் விரைவிற்சென்றானென்பதாம். சீயம் = ஸிம்ஹம்: வடசொல்லின் விகாரம். பி-ம்:—1பாரினில். 2படர்வதேபோல். 3விரைவிற். 4வார்த்தை. 5என்னின்மிக்காரெனப் பொலிந்துயர்ந்ததோளான், என்னை யொப்பாரென்றன னணிகொடோளான். (கூஉ)

கச.—அங்கதன் இராவணனிருப்பிடஞ்சேர்தல்.

அயில்கடந் 1தெரிய நோக்கு மரக்கரைக் கடக்க வாழித்
துயில்கடந் தயோத்தி வந்தான் சொற்கட வாத தூதன்
வெயில்கடந் திலாத காவன் மேருவின் மேலு நீண்ட
எயில்கடந் திலங்கை யெய்தி யரக்கன திருக்கை 2புக்கான்.

(இ - ள்.) வேற்படையைக்கடந்து[வேற்படையினும் உக்கிரமாக]நெருப்புண்டாகக்(கடுமையாகக்)காணவல்ல இராட்சசர்களைத் தொலைப்பதற்காகவே பாற்கடலிற் பள்ளிகொள்வதைவிட்டு அயோத்தியில் திருவவதரித்தவனாகிய இராமபிரானது சொல்லை மீறிநடவாத தூதுவனாகிய அங்கதன்,—சூரியன் கடந்துசெல்லாத காவலைக்கொண்டதும் மேருமலையைக்காட்டிலும் நீண்டுள்ளதுமான மதிலைத்தாண்டி, இலங்காபுரியையடைந்து, இராவணனது இருப்பிடத்தைப் போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

அரக்கர் நெருப்பெழவிழிக்குந்தன்மைய ரென்பார் 'அயில்கடந்தெரிய நோக்கும் அரக்கர்' எனவும், தேவர்களின்வேண்டுகோளினால் அரக்கரையொழித்தற்காகவே திருப்பாற்கடலினின்று திருமால் இராமனாகத் திருவவதரித்தானாதலால் 'அரக்கரைக் கடக்க ஆழித்துயில்கடந்தயோத்திவந்தான்' எனவுங்கூறினார். திருமாலுக்குள்ள பரத்துவம் வியூகம் விபவம் அந்தர்யாமித்துவம்அர்ச்சை என்ற ஐவகை நிலைகளுள் பாற்கடலிலுள்ள வியூகமூர்த்தியே இராமாதியரான விபவாவதாரங்கட்குக் காரண மென்பது, நூற்கொள்கை: திருமால் இராமகிருஷ்ணாதியராகத் திருவவதரிக்கும்போது அப்பரமனது வியூகத்தினின்று சிறிது அமிசமே வருவதாயினும் ஔபசாரிகபிரயோகமாக 'ஆழித்துயில்கடந்தயோத்தி வந்தான்' என்றது. சூரியன் இராவணனிடத்து அச்சத்தினால் இலங்கையினுட் செல்வதில்லையென்க.

இரண்டாமடியில் துயில்கடந்தயோத்திவந்தான் சொற்கடவாத தூதன் என மாறுபட்டசொற்கள் வந்தது-[illegible]: ஆழி-ஆழ்ந்திருப்பதென்றாவது வட்டவடிவாயிருப்பதென்றாவது கற்பாந்தகாலத்திற் பொங்கிவந்து உலகங்களையெல்லாம் அழிப்பதென்றாவது காரணப்பொருள் காண்க. அயோத்தி-அயோத்யா; (படை வலி அரண்முதலியவற்றால் மாற்றாரால்) பொரமுடியாதது எனக் காரணப்பொருள்படும் வடசொல். பி - ம்:—1இலங்குஞ்செங்கை, எரியின் நோக்கும். 2சேர்ந்தான், பார்த்தான். (கூகூ)

கரு.—அங்கதன் இராவணனைக் காணுதல்.

அழுகின்ற கண்ண ராகி யநுமன்கொ லென்ன வஞ்சித்
தொழுகின்ற சுற்றஞ் 1சுற்றச் சொல்லிய தூதை கேட்டாறும்

மொழிகின்ற [2]வீரர் வார்த்தை முகந்தொறுஞ் செவியின் மூழ்க
எழுகின்ற [3]சேனை நோக்கி [4]யியைந்திருந் தானைக் கண்டான்.

(இ-ள்.) (அங்கதனைக்கண்டபோது 'முன்பு இலங்கையிற்புகுந்து அனர்த்தப்படுத்தின) அநுமான்தானோ (இவன்?) என்று பயந்து (பேரச்சத்தால்) நீரைப்பெருக்குகின்ற கண்களையுடையவராய் (த் தங்கட்குத் துன்பமுண்டாகாதபடி பாதுகாக்குமாறு) வணங்கிவேண்டுகின்ற (தன்) இனத்தவர்(தன்னைச்) சுற்றிக்கொள்ளவும், (அரசாங்கத்துக்கு வேண்டுவனவாக நூல்களிற்) கூறப்பட்டுள்ள அவ்வத்துறைகளிலே உத்தியோகஸ்தராக அமைந்துள்ள வீரர்கள் தெரிவித்துக்கொள்கின்ற வார்த்தைகள் (தன்) பத்துமுகங்களிலுமுள்ள காதுகளிலேவீழ்ந்துகொண்டிருக்கவும்,—போருக்காகப் புறப்படுகின்றசேனையைப் பார்த்தவண்ணம் அமைந்திருந்தவனாகிய இராவணனைக் கண்டான், (அவ்வங்கதன்); (எ - று.)

ஒருபக்கத்தில் அங்கதனை அனுமானென்று மயங்கி அஞ்சியதனால் சுற்றத்தார் தன்னை வணங்கி அபயம்வேண்டிச் சுற்றிக்கொள்ளவும், ஒருபக்கத்தில் இராசாங்கத்து அவ்வத்துறையிலுள்ள உத்தியோகஸ்தர் பலரும் தம்தம் துறையைப்பற்றிய விஷயங்களைச் சொல்லப் பத்துமுகத்திலுள்ள காதுகளும் அவ்வவற்றைக் கேட்கவும், சேனை போர்க்கு எழுவதைச் சரியென்று கண்டுகொண்டிருந்த இராவணனைத் தூதுசென்ற அங்கதன்கண்டனனென்க.

அஞ்சனாதேவியினிடம் வாயுவின் அநுக்கிரகத்தாற்பிறந்த வானரசிசு இளமையிற் சூரியமண்டலத்தைக் கனியென்றுகருதி எழுந்து தாவிக் கவரத்தொடங்கியபோது இராகுவினாற்செய்தியறிந்த இந்திரன்சினங்கொண்டுவந்து வச்சிராயுதத்தினால் மெல்லப்புடைக்க, அக்குரங்கு கன்னத்தில் அடிபட்டுக் கன்னஞ்சிதையப்பெற்றதனால், அதற்கு, பிறகு 'ஹநுமாந்' என்றபெயர் இந்திரனால் வைக்கப்பட்டது; ஹநுமாந் என்ற வடசொல் - கன்னத்தில் விசேஷமுடையவனென்று பொருள்படும்; ஹநு - கன்னம்: மாந்-உடைமைப்பொருள் காட்டும்வடமொழிப்பெயர் விகுதி: அப்பெயர், தமிழில் 'அநுமன்' எனத்திரிந்தது. பி-ம்:—[1]சுற்றும். [2]வீரன், வீர. [3]தானை. [4]வியந்து, இசைந்து. (கூகூ)

கசு.—இராவணனது ஆற்றலை அங்கதன் வியந்துநிற்றல்.

கல்லுண்டு மரமுண் டேழைக் [1]கடலொன் றுங் கடந்தே மென்னுஞ்
சொல்[2]லுண்டே யிவனை வெல்லத் [3]தோற்றத்தோர் [4]கூற்ற முண்டோ
எல்லுண்ட படை[5]கைக் கொண்டா லெதிருண்டே யிராமன் கையில்
[6]வில்லுண்டே யுண்டென் [7]றெண்ணி [8]யாற்றவும் வியந்து நின்றான்.

(இ - ள்.) '(கடலைத்தூர்த்து அணைகட்டக்) கற்களும் மரங்களும்உண்டு: (கல்மரங்களால் தூர்ந்துவிடும்படி) சிறிய இந்தக்கடலொன்றையும் கடந்துவிட்டோமென்று கருதுஞ் சொல்லும் உண்டாய்விட்டது; (ஆனால்), இந்த இராவணனை வெல்லத் தோன்றியுள்ள ஒருயமனும் உள்ளதோ? ஒளிபொருந்தியஆயுதத்தை (இவ்விராவணன்) கையிற் கொண்டானாயின் (இவன் படைக்கு) எதிராகநிற்பதும் உண்டோ? இராமபிரானது கையிலே வில்லா

னது எதிராகத்தோன்றுமானால், (அப்போது இவன்படைக்கு) எதிருண்டு' என்றுநினைத்து (அவ்விராவணனது) வல்லமையைக் கொண்டாடியவண்ண மிருந்தான்; (எ - று.)

கல்லையும்மரங்களையும்கொண்டு எளிதாகத் தூர்த்துக் கடலைக் கடந்துவிட்டோ மென்று நாம் கருவங்கொள்ளக்கூடாது; இந்தஇராவணனை எதிர்த்துநிற்பது மிகவும் முடியாத காரியம்: நமது தலைவனாகிய இராமன் கையில் வில்லையேந்தி எதிர்த்துநின்றால் இவனை வெல்லலாமேதவிர மற்றொருவரால் இவனை வெல்வது முடியா தென்று அவ்விராவணனது பராக்கிரமத்தை அங்கதன் வியந்தன னென்க. எதிர் - எதிராயிருப்பது: எதிராயிருப்பவனென்றுகொண்டும் உரைக்கலாம். கடலைக்கடந்தது பெரியகாரியமென்று நினைக்கத் தக்கதன்றென்பான் 'ஏனைக்கடல்' என்றான் [5]கைக்கொண்டான் என்ற பாடத்துக்கு - கைக்கொண்ட இராவணனுக்கு என்க. பி - ம்:—[1]கடலுண்டு. [2]உண்டிங்கிவனை. [3]தோற்றவோர், தோற்றுமோர், தோற்றவர். [4]கூற்றும். [6]வில்லுண்டே. [7]உள்ளம். [8]ஆற்றலை, வென்றிபால். (கூரு)

கா.—அங்கதன் 'இராவணனைவெல்ல இராமன் வந்துள்ளானென்பதன்றி வேறு ஒருவராலும் இவனை வெல்லமுடியாது' எனல்.

[1]இன்றிவன் [2]றன்மை யெய்த [3]நோக்கினு லெதிர்ந்த போரில்
[4]வென்றவென் றாதை மார்பின் வில்லின்மேற் கணையொன் [5]றேவிக்
கொன்றவன் றானேவந்தா னென்று [6]தான் குறிப்பி னல்லால்
ஒன்றிவன் றன்னை[7]ச் செய்ய வல்லரோ வுயிர்க்கு நல்லார்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இப்போது இந்த இராவணன்தன்மையை நன்குகவனித்துப் பார்த்தால், எதிரிட்டயுத்தத்திலே(இந்த இராவணனை)வென்ற என் தந்தையான வாலியினுடைய மார்பிலே வில்லினிடத்தில் அம்பொன்றைவைத்துச் செலுத்திச் சங்கரித்தவனாகிய இராமபிரான் தானே (இவனைக்கொல்லுமாறு) வந்துள்ளானென்று குறித்துச்சொன்னாற் சொல்லலாமேதவிர, தம்முயிரின் திறத்து நல்லவராகப்போகவேணுமென்று விரும்புகின்றவர்[தம்முயிரைப்பாதுகாக்கவேணுமென்று விரும்புகின்றவர்] இவ்விராவணனை(எதிர்நின்றுபோர்செய்து) சிறிதேனும் துன்பம்விளைக்கவல்லவரோ?(எனக்கருதி),—(எ-று.)

இராவணனைவென்ற எனதுதந்தையைத் தனதுவில்லில் ஒருகணையைப் பூட்டிக் கொன்ற இராமபிரான் வந்துள்ளானாதலால் இவனை வெல்லலாகுமென்று குறித்துக் கூறலாமேயன்றி, மற்றைப்படி இந்த இராவணனைவெல்லவல்லார் வேறேயொருத்தருண்டோ? தம்முயிர்க்குநன்மையைவேண்டுபவர் இவனுக்குமுன்னே எதிர்த்துநின்று ஏதேனும் சிறிது ஊறுவது இவ்விராவணனுக்குச் செய்யவல்லரோ? என்று இராவணனது ஆற்றலை வியந்தனன் அங்கதனென்க. உயிர்க்குநல்லார் - உயிர்க்கு நன்மையை நாடுபவர். உயிர்க்கு நல்லார் இவன்தன்னைஒன்றுசெய்யவல்லரோ - தமது உயிர்க்குக்கேடுநாடுபவரே இவனையெதிர்த்து ஏதேனுஞ் செய்யமுயலத்தக்கா ரென்ற பொருளும் தோன்றும்.

எதிர்த்தபோரில்வென்ற என்தாதை என்பதிலடங்கியகதை:—திக்கு விசயஞ்செய்யப்புறப்பட்டு யாவரையும்வென்ற இராவணன், ஒருகாலத்தில் வாலியோடு போர்செய்யக்கருதிக் கிஷ்கிந்தாபட்டணஞ்சேர்ந்து, அப்பொழுது அவன் அங்கு இல்லையென்றும், வழக்கப்படி நாற்கடலிலும் நீராடி நித்திய கருமம்முடிக்கச்சென்றுள்ளானென்றும் அறிந்து தென்கடற்கரைக்குச்சென்று, அங்கு மந்திரஜபஞ்செய்துகொண்டிருக்கிற வாலியைப் பார்த்து அவனைத் தந்திரமாக எளிதிற் பிடித்துக்கொள்ளும்பொருட்டு அடியோசைப்படாமல் மெதுவாய்நடந்து அவன்பின்னே சேர, கீழ்க்கண்ணாற்கண்ட வாலி முன் ஜாக்கிரதைப்பட்டு அவன் கிட்டவந்து தன்னைக் கட்டத்தொடங்கியவுடனே அவ்விராவணனைக் கக்கத்திலிடுக்கி வாலினாற் சுற்றிக்கொண்டபடியே ஆகாய மார்க்கமாய்ச்சென்று மற்றைக்கடல்களிலுஞ்சேர்ந்து நியமங்களை நிறைவேற்றிக்கொண்டு தனதுநகரமடைந்து இராவணனைக் கீழே யுதற, அவன் தன் வரலாறுகூறித் தன்குற்றம் பொறுக்கவும் தன்னை நட்பாக்கிக்கொள்ளவும் வேண்டி அவனதுநட்பைப் பெற்றனனென்பது. பி-ம்:—1என்றவன். 2தன்மை. 3நோக்கினேற்கு, நோக்கினன். 4வென்றவன். 5உந்திக். 6தான்குறிப்பது, தான்குறுகின், தான்குறுகிற்று, உடன்குறிப்பின். 7வெல்ல. (கஅசு)

கஅ.—இராவணனது மகுடமணிபறித்ததைபற்றித் தன் சிறியதந்தையை அங்கதன் வியத்தல்.

அணி[1]பறித் தழகு [2]செய்யு மணங்கின்மேல் வைத்த [3]காதற்
பிணி[4]பறித் திவனை யாவர் [5]முடிப்பவர் [6]படிக்கட் பேழ்வாய்ப்
பணி[1]பறித் தெழுந்த மானக் [7]கலுழனி னிவனைப் பற்றி
மணி[1]பறித் தெழுந்த வெந்தை யாரினும் வலிய [8]னென்றான்.

(இ - ள்.) (பின்னும்)அணிகலன்களை நீக்கி[அணிகலத்தைப் பூணாமலே] அழகுகொண்டுவிளங்குகின்ற தெய்வப்பெண்போன்ற சீதையின்மீதுவைத்த ஆசையாகியநோயைப் போக்கி,இவ்விராவணனை முடிக்கவல்லார் யாவர்? (இந்தப்)பூமியிலே, பிளவுபட்டவாயையுடைய சர்ப்பத்தைக் கவர்ந்துகொண்டுசென்றபெருமையைக் கொண்ட கருடனைப்போல, இந்த இராவணனைக் கைப்பற்றி(ப்பொருதுமகுடபங்கஞ்செய்து அம்மகுடத்திருந்த)இரத்தினங்களைக்கவர்ந்துவந்த எனது சிறிய தகப்பன் [சுக்கிரீவன்], எல்லாரைக்காட்டிலும் வலிமையுள்ளவனென்றுங் கருதினான்; (எ - று.)

இராவணனைமுடித்தாலல்லாமல் அவனது ஆசைப்பிணி நீங்காதென்னுங்கருத்தினால் 'ஆசைப்பிணி பறித்திவனையாவர்முடிப்பவர்' என்றான். இவ்வளவுபெருஞ்சூரனை எளிதில்வென்றமைபற்றி, அங்கதன் தன் சிறிய தந்தையை வியக்கின்றான். இராவணனது மகுடமணியைப் பறித்தெழுந்த சுக்கிரீவனுக்கு - சர்ப்பத்தின் மணியைப் பறித்தெழுங் கருடன் உபமானமெனஉரைகூறலுமொன்று. காதற்பிணி-இருபெயரொட்டு. பணி-பணீ: படத்தையுடையது எனக் காரணப்பொருள்படும் வடசொல். கலுழன் - கருடன்என்பதன் விகாரம். சுக்கிரீவனைஎந்தையென்றது ஔபசாரிகப்பிரயோகம். பி-ம்:—1பழு

த்து. 2செய்த. 3ஆசைப். 4பறித்தவனே. 5முறிப்பார். 6படிக்கட்போரிற், பிடித்தபோரில்.7கலுழனேயென்னப். 8மன்றே. (கூ௬எ)

கக.—அங்கதன் இராவணனைக் குறுகிநிற்றல்.

நெடுந்தகை விடுத்த தூத 1னினையன நிரம்ப வெண்ணிக்
கடுங்கனல் 2விடமுங் கூற்றுங் 3கலந்து4கால் கரமுங் காட்டி
விடுஞ்சுடர் மகுட மின்ன விரிகட லிருந்த 5தென்னக்
கொடுந்தொழின் மடங்க லன்ன 6னெதிர்சென்று குறுகி நின்றான்.

(இ - ள்.) மிக்ககுணமுள்ளவனை இராமபிரான்அனுப்பிய தூதனாகிய அங்கதன் (கீழ்க்கூறிய) இவ்வகையான எண்ணங்களை மிகுதியாக (மனத்தினால்) எண்ணமிட்டு, 'பரவியிருக்குங் கடலானது கொடிய அக்கினியும் விஷமும் யமனும்ஆகிய இம்மூன்றுபொருள்களையும் ஒன்றுசேர்த்துக் காலாகவும் கையாகவும் படைக்கப்பெற்று ஒளிவிடுகின்ற மகுடம் தன்(முடிமீது)விளங்க இருந்தது'என்று சொல்லுமாறு(இருந்த)கொடுமையான தொழிலைக்கொண்ட ஆண்சிங்கத்தையொத்த இராவணனுடைய எதிரேசென்று கிட்டிநின்றான்.

தூதன் மடங்கலன்னனெதிர் குறுகிநின்றானென்க.இராவணன் அங்கு இருந்தது-ஒருகருங்கடல் கடுங்கனல்முதலிய கொடியபொருள்களாலியன்ற கைகால்களையுடையதாய்த் தன்முடிமீது மகுடம்மின்ன இருந்ததுபோலுமென்று இல்பொருளுவமைபடக் கூறினார். 'என்ன' என்கின்ற வினையெச்சத்திற்கு, 'இருந்த' என ஒருபெயரெச்சம் வருவித்து முடிக்கப்பட்டது. நெடுந்தகை - பண்புத்தொகையன்மொழி. (பி-ம்:-1இவையிவை. 2கதுவும். 3கலந்த, கரந்து. 4கார்விடமுங்கூட்டி. 5அன்ன. 6முன். (கூ௬அ)

வந்தெதென் குரங்கொன் றில்லை யடைத்த தென்கடல் வாய்1மந்தி
சிந்தையின் கனியா லென்2பேர் தெரியுமோ தெரியா தாகில்
இந்தவெம் பதியோ கெட்டு மிறைவனோ வறிது மெங்கள்
விந்தையம் பெருமா ளவாழி வீடண னென்னும் வேந்தன்.

என்று ஒருபாடல் சிலபிரதியிற் காணப்படுகின்றது.(பி-ம்:—1மாக்தி. 2போர்.

உ0.—இராவணன் அங்கதனைவிசாரித்தல்.

1நின்றவன் றன்னை 2யன்னு னெருப்பெழ நிமிரப் பார்த்திங்கு
இன்றிவண் வந்த நீயா 3ரெய்திய கரும 4மேது
5கொன்றிவர் தின்னு முன்னங் கூறுதி தெரிய வென்றான்
வன்றிறல் வாலி சேயும் வாளெயி றிலங்க நக்கான்.

(இ - ள்.) அந்த இராவணன் (புதிதாகவந்து குறுகி) நின்றவனை அங்கதனை(க் கண்களிலிருந்து)தீப்பொறிபறக்க நிமிர்ந்துபார்த்து,'இன்றையதினம் இப்போது இவ்விடத்தில் வந்துள்ள நீ யார்?வந்த காரணம் யாது?இந்த என்னுடையபணியாளர் கொன்றுதின்னுமுன்னம் நன்கு உணருமாறு சொல்வாயாக' என்றுவினவினான்; மிக்கவலிமையையுடைய வாலிகுமாரனும் (தனது) ஒளியுள்ள பற்கள் (வெளியே) விளங்குமாறு சிரிக்கலானான்; (எ - று.)

அங்கதனைக் கொடுநோக்குடன்பார்த்து இராவணன்'நீ வந்தகாரியத்தை இங்கிருப்பவர் கொல்லாமுன்னம் விரைவிற்கூறுக'என்ன,அங்கதன்சிரித்தன

னென்க. சிரிக்கும்போது பற்கள் வெளித்தோன்றுதலால், 'வாளெயிறிலங்க' என்றது. அங்கதன் இராவணனைச்சிரித்தது, தன்னை அவர்களாற்கொல்லமுடியாதென்ற கருத்தினாலும், 'தூதாகவந்தவனைக் கொல்லுதல் யாண்டும் இல்லாத செயலாயிருக்க, இவன் இவ்வாறுகூறுகின்றானே!' என்ற கருத்தினாலுமாம். 'இவர்' என்று தன்னருகேயிருந்த பணியாளரைச் சுட்டிக்காட்டினான், இராவணன். வாலி = வாலீ: இதற்கு, வாலில் வலியுள்ளவனென்றும், வாலினின்று பிறந்தவனென்றும் காரணப்பொருள் கூறுவர்: 'இங்குவருபவர் யாவரும் பெண்வடிவமடைக' என்று சொல்லப்பட்டிருந்ததொரு தலத்திற் சென்றதனாற் பெண்வடிவமடைந்த ருக்ஷரஜஸ் என்னும் வானரராசனது வாலினழகைக்கண்டு காமுற்ற இந்திரனது அனுக்கிரகத்தால் தோன்றியவன் வாலியென்று உணர்க. பி-ம்:—1என்றவன். 2நோக்கிநெருப்பினுமிமிர்ந்தகோபத்து, நோக்கியெரிசிகர்கோபத்தோடு, அன்றுநெருப்புற கிமிரநோக்கி. 3எதுவுனகருமம், 4உன்னை, என்னை, என்னா. 5கொன்றமர், கொன்றெமர். (௩௫-௧)

முந்தவோர் தசக்கி ரீப னுக்கையை மொய்ம்பால் வீக்கும்
அந்தவா யிரத்தோள் தன்னை யாக்கிய மழுவ லாளன்
வந்தெதிர் கொள்ள வீரச் சிலையும்வெவ் வலியும் வாங்கும்
சுந்தரத் தோளன் விட்ட தூதனா னென்னச் சொன்னான்.

என்று ஒருசெய்யுள் இங்கே ஒருபிரதியிற் காணப்படுகின்றது.

௨௧.—அங்கதன் தன்னை இராமதூதனென்று தெரிவித்தல்.

பூதநா யகனீர் சூழ்ந்த புவிக்குநா யக[1]னிப் பூமேற்
சீதைநா யகன்வே றுள்ள தெய்வநா யகனீ செப்பும்
வேதநா யகன்மே னின்ற விதிக்குநா யகன்றான் விட்ட
தூதன்யான் பணித்த மாற்றஞ் சொல்லிய [2]வந்தே னென்றான்.

(இ - ள்.) 'பஞ்சபூதங்கட்குந் தலைவனும், நீரினாற் சூழப்பட்ட பூமிக்கெல்லாந் தலைவனும், இந்தப்பூமியின்மீதுதோன்றியுள்ள சீதாபிராட்டிக்குத் தலைவனும், (உலகத்தில்) வெவ்வேறாக வழங்குகின்ற தெய்வங்கட்கெல்லாந் தலைவனும், நீ ஓதுகின்ற வேதத்தின்பொருளாய் நிற்குந் தலைவனும், மேம்பட்டுத் தோன்றுகின்ற ஊழ்வினைக்குந் தலைவனும் [விதிக்கடவுளைத் தன் திருவுள்ளத்தின்படி நடத்துபவனும்] ஆக நிற்கின்ற இராமபிரான்,—(உன்னிடத்தில்) அனுப்பிய தூதன் யான்: (எனது தலைவன் உன்னிடஞ்சொல்லுமாறு) கட்டளையிட்டுள்ள சொல்லைச் சொல்லும்பொருட்டு வந்தேன்' என்று (தான் வந்த காரணத்தை அங்கதன் இராவணனிடத்துக்) கூறினான்; (எ - று.)

பஞ்சபூதங்களையும் தன்விருப்பின்படி காரியங்கொள்ளுபவனாய் உலகமுழுவதுக்குந் தலைவனாய், சீதாபதியுமாய், எல்லாத்தெய்வங்களினும் மேம்பட்டு வேதப்பிரதிபாத்தியனாகி, விதியும் தன்னேவலின்படி நடக்கும் முதற்கடவுள் இராமனாகத் திருவவதரித்திருக்கிறான்: அப்பெருமான் கூறுமாறுசொல்லியசொற்களைச் சொல்லும்பொருட்டு வந்துள்ள தூதனாவேன் யான் என்று தன்னை இன்னானென்றும், தான் வந்த காரணம் இன்னதென்றும் சுருக்கமாகக் கூறினன் அங்கதனென்க. புவிக்குநாயகன் இப்பூமேல் சீதைநாய

கன் - பூமிதேவி ஸ்ரீதேவிகளுக்குத்தலைவனென்றபடியாம். பூ என்பது - வடமொழியாய்ப் பூமியையும், தென்மொழியாய் மலரையும் உணர்த்தும். மலர்மேலுறையும் மங்கையான இலக்குமியே பூமியின்மகளாய்ச் சீதையாகத் தோன்றினாளாதலின், பூஎன்பதை எவ்வாறுகொள்ளினும் ஏற்கும். பூதம் - மண் நீர் நெருப்பு காற்று விண்என்பவை. பி-ம்:—1அப். 2வந்தது. (கூசo)

உஉ.—இராவணன் இராமபிரானைப்பற்றிப் பரிகசித்துக்கூறல்.

அரன்கொலா மரிகொ லாமற் றயன்கொலா [1]மென்பா ரன்றிக்
குரங்கெலாங் [2]கூட்டி வேலைக் குட்டத்தைச் சேது கட்டி
யிரங்குவா ளாகி லின்ன மறிதியென் றுன்னை யேவும்
நரன்கொலா [3]முலக நாத னென்றுகொண் டரக்க னக்கான்.

(இ - ள்.) சிவபெருமானோ? (அன்றித்) திருமாலோ? (அன்றி முன்னையவரினும்) வேறான பிரமன்தானோ? என்று (உலகத்தில் முதற்கடவுளாக) வழங்கப்படுகின்ற இவர்களன்றி, குரங்குகளையெல்லாம் கொண்டு ஒருசேனை சேர்த்துக் குட்டைபோலுள்ள சமுத்திரத்தை அணைகட்டி(க் கடந்து, அம் மாத்திரத்தில் தன்னைப் பெருவீரனாகமதித்து),இப்போதாவது (இராவணன்) இரக்கங்கொள்வானாகில் அறிந்துவா என்று சொல்லி உன்னை (என்னிடத்து) ஏவுகின்ற மனிதனா உலகநாதனாகுபவன்?' என்று சொல்லிக்கொண்டு இராவணன் பரிகாசமாகச்சிரித்தான்; (எ - று.)

'ருத்திரவிஷ்ணுபிரமர்களைத் திரிமூர்த்தியரென்று சிறப்பித்துச் சொல்வது,உலகத்தி லுள்ளது; இவர்களிலொருவனுமன்றி,கேவலம் நரமனுஷ்யன் தன்னினத்தவரைப் படைத்துணையாகப்பெறுதற்கும் வகையின்றி நிலையற்ற மனமுள்ள குரங்குகளைச் சேனைகளாகத் திரட்டிக்கொண்டு, சிறுகுட்டம் போன்ற இச்சிறுசமுத்திரத்தைக் கடந்ததனாலேயே தன்னைப் பெருவலியனாக மதித்து, 'இராவணன் இப்போதாவது இரங்குகின்றானா? கண்டறி'என்றுஉன்னைத் தூதுவனாக அனுப்பினானே; 'திரிலோகத்திலும் பிரசித்தனான மகாபிரதாபமுள்ள இராவணனிடத்தில் நாம் இங்ஙனம் செய்யலாமா? 'என்கிற ஆராய்ச்சியுமின்றித் தூது அனுப்புகின்ற இவனுடைய பேதைமை இருந்தபடி என்னே! இந்த நரனை உலகநாதன் என்கிறாயே!! 'என்று இராவணன் ஏளனமாகச் சிரித்தனனென்க. நரன் உலகநாதனாகானென்ற குறிப்பினால், 'நரன்கொலா முலகநாதன்' என்றது. வேலைக் குட்டம் - இருபெயரொட்டு. கடலைக்கடந்தது ஒரு பெரிதல்ல என்பதற்காக 'வேலைக்குட்டத்தைச் சேது கட்டி' என்றது. நரன்-நசித்துப்போகும் இயல்புடையவனென்று காரணப் பொருள்படும் வடசொல். என்றுகொண்டு, கொண்டு-அசையுமாம். பி-ம்—
1என்பதன்றி, என்பதொன்ற. 2கூடி, கொண்டு, காட்டி. 3உலகின். (கூசக)

உங.—அங்கதனைநோக்கி'தூதனாகிய உன்னை இன்னானென்று தெரிவி' என்று இராவணன் கேட்டல்.

கங்கையும் பிறைபுஞ் சூடுங் கண்ணுதல் கரத்து நேமி
சங்கமுந் [1]தரித்த மான்மற் றிந்நகர் தன்னைச் சாரார்

அங்கவர் [2]நிலைமை நிற்க [3]மனிசனுக் காக வஞ்சாது
இங்குவந் திதனைச் [4]சொன்ன தூதனீ [5]யாவ னென்றான்.

(இ - ள்.) கங்காநதியையும் பிறைச்சந்திரனையும் (தன்)முடிமீது அணிந்துள்ள நெற்றியிற்கண்ணையுடைய சிவபிரானும் (தன்) கைகளிலே சக்கரத்தையும் சங்கத்தையுந் தரித்தவனாகிய திருமாலும், இந்நகரத்தில் (அச்சத்தினால்) வரவேமாட்டார்கள்; அந்தச் சிவவிஷ்ணுக்களுடையதன்மையே அவ்வாறிருக்கையில், 'ஒருமனிதன்பொருட்டாக (மனத்திற்) சிறிதும்அச்சமில்லாமல் இந்தஇலங்காபுரியை வந்துசேர்ந்து (தூதுவந்த) இச்செய்தியைச் சொன்ன தூதனாகிய நீ, யாவனோ? (அதனை எனக்குத் தெரியும்படிசொல்லுக)' என்றுவினாவினான், (இராவணன்); (எ - று.)

சிவவிஷ்ணுக்களே எம் நகரினுள்வருவதற்கு அஞ்சி உட்புகாதிருக்கின்றனர். தேவர்களின் நிலைமையே அவ்வாறு இருக்க, ஒருமனிதனுக்குத் தூதாய் வந்து 'பூதநாயகன் விதிக்குநாயகன்தான்விட்ட தூதன் யான்' என்கிறாய் உன்னை இன்னானென்று தெரிவிக்கஎன்றனன் இராவணனென்க. கண்நுதல்- வேற்றுமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. சக்கரவட்டை யென்னும் பொருளுள்ள நேமியென்னும் வடசொல்-ஆகுபெயராய், சக்கரத்தை யுணர்த்தும். மால் - அடியார்களிடத்து அன்பு, திருமகளிடத்து ஆசை: இவற்றையுடையவனுக்குப் பண்பாகுபெயர். மனிசன் = மநுஜன்; காசியபமுனிவரதுமனைவியருள் மநுஎன்பவளின் சந்ததியாகஉண்டானவன். பி-ம்:—[1]தரித்தார்தாமற்றிந்நகர்தன்னை, தரித்தானுற்றதறிந்துவந்தூரைச். [2]தம்மையன்றி, தன்மைநிற்க. [3]மனிதருக்காக, ஆரேனுமாக. [4]சொற்ற. [5]யாரை. (கூசஉ)

உச.—வாலியின்மைந்தனென்று அங்கதன் இராவணனுக்குந் தன்னைத் தெரிவித்தல்.

இந்திரன் செம்மல் பண்டோ ரிராவணா [1]னென்பான் றன்னைச்
சுந்தரத் [2]தோள்க ளோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிக டாவித் [3]திரிந்தனன் றேவ ருண்ண
[4]மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினான் மைந்த னென்றான்.

(இ - ள்.) இந்திரனது குமாரனும், முற்காலத்தில் ஒப்பற்ற இராவணனென்று பிரசித்தமாக வழங்கப்படுபவனை (அவனது) அழகிய தோள்களுடனே (தனது) வாலினிடத்தில் தொங்கும்படி சுற்றிக்கட்டி யானைகள்சஞ்சரிக்கின்ற(நான்குதிசையிலுமுள்ள)மலைகளிலே பாய்ந்து திரிந்தவனும், தேவர்கள் உண்ணும்படி மந்தரகிரியினாற் கடலைக் கடைந்தவனுமான வாலியென்பானுடையபுதல்வனாவேன் (யான்) என்று (தன்னையின்னானென அங்கதன்) தெரிவித்தான்; (எ - று.)

தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு மந்தரகிரியை மத்தாகவும் வாசுகியைக் கடைகயிறாகவும் சந்திரனை யடைதூணாகவுங்கொண்டு பாற்கடலைக் கடைகையில் இளைத்தனராக, அப்போது வாலி தனதுகையால் அப்பாற்கடலில் அமுதெழுமளவுங் கடைந்தனனென்பதை "மந்தரநெடுவரை மத்தவாசுகி,

யந்தமில் கடையயிறடைகலாழியான், சந்திரன் றூணைதிர் தருக்கின்வாங்கு நர், இந்திரன் முதலிய வமரரேனையோர்,'' ''பெயர்வுறவலிக்கவுமிடுக்கில் பெற்றியா,ரயர்வுறலுற்றதை நோக்கியானது, தயிரெனக் கடைந்தவர்க் கமு தந்தந்தது'' என்று வாலிவதைப்படலத்து வந்ததுகொண்டும் உணர்க.

இந்திரன் - மிக்க ஐசுவரியமுடையவனென்று பொருள்படும் வடசொல். செம்மல் - செம்மையையுடையவன்: இது, புதல்வனென்ற பொருளில்வரும். இராவணன்-உலகத்தாரைத் தன்கொடுமையாற் கதறச்செய்தவ னென்றும், கைலாயமலையின் கீழ்த் தான் அகப்பட்டுக்கொண்டு கதறியவனென்றும் காரணப்பொருள்படும்: இனி, விசிரவசின்குமாரன் என்ற பொருளில் ராவண னென்ற சொல் வந்துள்ளதென வடமொழி இலக்கணநூலார் கூறுவர். இந்திரன் செம்மல், இராவணனென்பான்றன்னை... திரிந்தனன், வேலைகலக்கினான் - ஒரு பொருளின்மேல் வந்த பலபெயர்கள். பி-ம்:—[1]என்கின்றானை. [2]தோள்கடோறுந், தோளினோடும், புயங்களோடும். [3]தேவர்க்குந்திரிக்கவொண்ணா,திரிந்தனன்றேவர்க்குண்ண. [4]மந்தரக்கிரியால். (கஉசக)

உரு.—இதுமுதல் மூன்றுகவிகள் - இராவணன் அங்கதனைப் பேதோபாயத்தினால் வேறுபடுத்தப்பார்த்ததைத் தெரிவிக்கும்.

உந்தையென் றுணைவ[1]னன்றே யோங்கு[2]நற் சான்று[3]முண்டால்
[4]நிந்தனை யிதன்மே லுண்டோ நீயவன் றூத [5]னாதல்
தந்தன [6]னினக்கு யானே வானரத் தலைமை தாழா
வந்தனை [7]நன்று செய்தா யென்னுடை மைந்த வென்றான்.

(இ - ள்.) 'உன்தந்தை என்னுடைய நண்பனல்லவா? (இதற்குச்)சிறந்த நல்லசாட்சியுமுண்டு: (அப்படி எனதுநண்பனாய் மகாவீரனாயிருந்தவனுடைய புதல்வனான) நீ,(சாதாரண ஒரு மனிதனான)அந்த இராமனுக்குத் தூதுவனாக ஆதலாகிய இதைக்காட்டிலும் மேற்பட்ட பழிப்புக்கிடமாகிய செயல் ஏதேனும் உண்டோ? [இல்லை]; (ஆகையால் இப்போதாவது அவனது தூதாந்தன்மையை விட்டிடு); என்னுடைய குழந்தாய்! உனக்கு, யானே வானரங்கட்குத் தலைவனாயிருக்கும் பதவியைக் கொடுத்திட்டேன்; தாமதியாது வந்தாய்; (நீ) நன்றுசெய்தாய்' என்றுகூறினன் (இராவணன); (எ - று.)

உன்னுடைய தந்தையோடு அக்கினிசாட்சியாக நான் நட்புக்கொண்டுள்ளேன்: அவ்வண்ணமானவனுடைய புத்திரனாயிருந்து நீ ஒருமனிதனுக்குத் தூதுவனாகுவதென்பது உனக்கு மிகவும்இழுக்குத்தரு மாதலால், இச்செயலை விட்டிடுக: தற்செயலாய்ப் போர்மூள்வதற்குமுன் வந்ததனால்,இப்போது தூதுவனாகவந்ததுவும் ஒருநன்மையாயிற்று: உனக்குவானரர்கட்கெல்லாந்தலைவனாயிருக்கும்பதவியைத் தருகின்றேன். இப்பதவியை யேற்று மேன்மைபெற்று விளங்குவாயென்று பேதோபாயத்தினால் அங்கதனைத் தன்வசப்படுத்தப்பார்க்கின்றனன் இராவணனென்க. இங்ஙனமே மேலிரண்டுகவிகளிலுங் கருத்துக் காண்க. நண்பனுடையபுத்திரன் வேறு, தன்னுடையபுத்திரன்வேறு என வேற்றுமை பாராட்டுபவ னல்லன் தான் என்று தோன்றுமாறு,தன் நண்பனு

டைய புதல்வனான அங்கதனை 'என்னுடைமைந்த' என்கின்றான். பி - ம்:— [1]என்றே. [2]அறஞ், அறச். [3]உண்டே. [4]சிந்தனை. [5]ஆசை. [6]உனக்குநானே. [7]நன்றி. (கூசுச)

உரு. தாதையைக் கொன்றான் பின்னே தலைசுமந் திருகை நாற்றிப் [ய்
[1]பேதைய னென்ன [2]வாழ்ந்தா னென்பதோர் பிழையுந் [3]தீர்ந்தா
சீதையைப் பெற்றே னுன்னைச் சிறுவனு மாகப் பெற்றேன்
[4]ஏதெனக் கரிய தென்றா [5]னிறுதியி னெல்லை கண்டான்.

(இ - ள்.) மரணகாலமாகிய ஆயுளின்காலவெல்லையை விரைவிற்காணப் போகின்றவனான இராவணன்,—(பின்னும் அவனைநோக்கி,—'நீ இவனது தூதனாயிருப்பதைவிட்டிட்டு வானரத்தலைமைபூண்டொழுகினையானால், தன்) தந்தையைக் கொன்றவனுடைய பின்னே இரண்டுகைகளையைத் தலைமேற் சுமந்துகொண்டும் [தலையின்மீது வணக்கக்குறியாக இருகையையும் குவித்துக் கொண்டும்], (முகத்தைத்) தொங்கப்போட்டுக்கொண்டும் (கண்டோர் இவன்) அறிவிலி என்று சொல்லுமாறு வாழ்ந்தானென்று (உலகத்தாரால்) ஏளனமாகச் சொல்லப்படுவதாகிய ஒப்பற்ற பழிச்சொல்லையும் நீங்கப்பெறு வாய்:(யானும்அப்போது),சீதையையும் அடைந்தேன்;நீயும் புதல்வனாக வந்து சேரப்பெற்றவனாவேன்; (இனி), எனக்கு அருமையானது யாதுஉள்ளது?" என்றுங்கூறினான்; (எ - று.)

நீ யாருடைய தூதனென்கிறாயோ, அவனே உன்தந்தையைக் கொன்றவன்; தந்தையைக்கொன்றவனைப் பகைவனாகக்கொள்வது முறையேயன்றி, அவனிடத்துத் தலைமேற்கைகுவித்து முகங்கவிழ்ந்து பணியாளனாயிருப்பது முறையன்று: உலகோர்பழித்தற்கும் இடனாகும்: ஆதலால், அவனை விட்டிட்டால்,உலகோர் உன்னைப் பேதையனென்று பழித்தற்கும் இடமிராது. நான் சொன்னவாறுசெய்தால், நான் சீதையைப் பெற்றிருப்பதன்றி, உன்னையும் பெற்றேனாவேனாதலால், எனக்கு இனி எதுவுங் கைகூடுமென்று தான் முற்கூறியதை வற்புறுத்தற்கு மீண்டுங்கூறுகின்றானென்க. இப்போதாவது நல்லறிவுபிறந்து பிராட்டியை இராமனிடத்துச் சமர்ப்பித்துத் தன்பிழையைப் பொறுக்குமாறுவேண்டி உயிர்பிழைத்துப்போவது இராவணனுக்குத் தகுதியாயிருக்க,நன்மதி சிறிதுமில்லாமல் சீதையைப்பெற்றே னென்கின்றானே:'கெடுமதிகண்ணுக்குத்தோன்றாது' என்றவாறு இவன் தனது சாவுகாலங் கிட்டினமையை யுணராது பிதற்றுகின்றானென்பார்'இறுதியி னெல்லைகண்டான்' என்று இராவணனுக்கு ஒருபெயர்கூறினார். தலைசுமந்து இருகைஎன்பதற்கு - துக்கக்குறிப்பாகத் தன் இருகையையும் தலைமேற் கவியவைத்துக்கொண்டு என்று உரைப்பாருமுளர். இராவணன் இறப்பது தேற்றமாதல்பற்றி, இறுதியினெல்லைகாண்பான் என்னவேண்டிய இடத்து 'இறுதியினெல்லைகண்டான்' என்றது; தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்ட காலவழுவமைதி: தீர்ந்தாய் என்ற இடத்திலும் இவ்வாறே. பி-ம்:—[1]பேதையர். [2]வாழ்ந்தாய். [3]தீர்ப்பாய். [4]யாது. [5]இறுதிநாற்கு. (கூசரு)

உஎ. [1]அந்நர ரின்று நாளை யழிவதற் கைய மில்லை
யுன்னர [2]சுனக்குத் தந்தே னுளுதி யூழிக் காலம்
பொன்னரி சுமந்த பீடத் திமையவர் போற்றி செய்ய
மன்னவ [3]னாகி யானே சூட்டுவன் மகுட மென்றான்.

(இ - ள்.) (பின்னும்), 'அந்த மானிடர் இன்றைநாளையிலே அழிந்திடுவதற்குச் சந்தேக மில்லை: உனக்கு உரிய வானரத்தலைமையை உனக்குக்கொடுத்திட்டேன்; கற்பாந்தகாலம்வரையும் பொன்னாலியன்ற சிங்கந்தாங்குவதாகச் செய்யப்பெற்ற சிங்காதனத்திலே (வீற்றிருந்து), தேவர்கள் துதிக்க, (இந்தத்தலைமையை மேற்கொண்டு) ஆட்சிசெய்க; வானரத்தலைவனாக (இப்போதே) மகுடஞ்சூட்டுவேன்' என்றுங் கூறினான்; (எ - று.)

வாலி வானரராச னாதலால், அவனது மகனான அங்கதனுக்கு வானரத் தலைமை உரிய தாகும். கீழிரண்டு செய்யுளிற் கூறியதனையே இங்கு வேறு வகையாக இராவணன் கூறுகின்றனனென்க. இமையவர் - இமயமலையில் வாழ்பவ ரென்றும், இமையிமைக்காமையாகிய விசேஷமுடையவரென்றும் காரணப்பொருளுரைப்பர். இன்று நாளை-வெகுவிரைவி லென்னும்பொருட்டு.
பி-ம்:—1 அன்னவர். 2 உனக்கே. 3 ஆதியுன்னை, ஆகவின்று.　　(கூசசு)

உஅ.—இதுவும் அடுத்தகவியும் - இராவணன்கூறியதைக்கண்டித்து அங்கதன் கூறுதலைந் தெரிவிக்கும்.

அங்கத னதனைக் கேளா [1]வங்கையோ டங்கை தாக்கித்
துங்க[2]வன் றோளு மார்பு மிலங்கையுந் [3]துளங்க நக்கான்
இங்குநின் றார்கட் கெல்லா [4]மிறுதியே யென்ப துன்னி
[5]நுங்கள்பா னின்று மெம்பாற் [6]போந்தன னும்பி யென்றான்.

(இ - ள்.) அங்கதன் அவ்விராவணன்கூறியதைக் கேட்டு, அழகியகையோடுமற்றொரு அங்கையைச்சேர்த்துப்புடைத்து உயர்ந்துள்ளனவான (தன்) வலியதோள்களும் மார்பும் இலங்கைநகரும் அசையும்படி சிரித்தவனாகி,'இந்த லங்காபுரியிலுள்ளவர்கட்கெல்லாம் மரணமே (விளையப்போகின்றது) என்ற (இந்த)விஷயத்தை(முன்னமே)ஆராய்ந்தறிந்து, உங்களிடத்தினின்றும் எம்மிடத்து உனது தம்பியே வந்துள்ளான்' என்றுகூறினான்;(எ - று.)

இந்தலங்காபுரியிலுள்ளார்க்கெல்லாம் விரைவில் மரணம் நேரப்போகின்றதென்பதைத் தனது நுண்ணறிவா லுணர்ந்து உனது தம்பியே எம்மிடத்து வந்து சேர்ந்துள்ளமையைக் கண்கூடாகக் கண்டறிந்தும், நீ, விளைவதறியாது பிதற்றுகின்றாயே!என்று கூறி இராவணனது பேதைமைக்காகத் தோளும் மார்பும் இலங்கையுமே சலிக்கும்படி பெருஞ்சிரிப்புச்சிரித்தனன் அங்கதனென்க.
பி-ம்:—1 அங்கைகொண்டு. 2 நல். 3 குலுங்க. 4 இறுதியென்றென்றுமுள்ளான். 5 உங்கள். 6 போந்ததென்.　　(கூசஎ)

உகூ. வாய்தரத் தக்க சொல்லி யென்னையுன் வசஞ்செய் வாயேல்
ஆய்தரத் தக்க தன்றோ தூதுவந் [1]தரச தாள்கை
நீதரக் [2]கொள்வேன் யானே யிதற்[3]கினி நிகர்வே றெண்ணில்
நாய்தரக் கொள்ளுஞ் சீய நல்லர சென்று நக்கான்.

(இ - ள்.) (பின்னும்), 'வாயிலே வருபவைகளைச் சொல்லி, என்னை உன் வசமாகச் செய்துகொள்வாயானால்,-தூதனாகவந்து(நான்) அரசுபுரிகை (பெரியோரால்)ஆராய்தற்குரிய செயலல்லவோ?நீ(வானரத்தலைமையைத்)தர யானு கொள்வேன்?[யான் பெற்றுக்கொள்ளமாட்டேன்];(ஒருகால் வானரத்தலைமையை நீ தர நான்பெற்றுக்கொள்வேனேயானால்)இந்தச்செயலுக்கு இனி வேருக ஒரு உவமை நாடிச்சொல்வோமேயானால், நாயானதுகொடுக்கச் சிங்கமானது பெற்றுக்கொள்ளுகின்ற சிறந்த மிருகாதிபத்தன்மைக்கு ஒப்பாகும்' என்று சொல்லிச் சிரித்தான், (அங்கதன்); (எ - று.)

தூதனாகச்சென்ற யான் மாற்றான்வார்த்தைக்கு உட்பட்டு ஆசையினால் வேறுபட்டேனானால், இதனால் பெரியோர்கள் ஆராய்ந்துகூறும் பாவமும் பழியும் மிகுமன்றோ! அன்றியும், நீ தரவா நான் அரசுகொள்ளவேணும்?நான் உன்னிடத்தினின்று அரசைப்பெற்றுக்கொள்வது, நாயினிடத்தினின்று சிங்கம் அரசைப்பெற்றுக்கொள்வதுபோலு மென்று,இராவணன்கூறியதைப் பரிகசித்துத் தன்பெருமிதந்தோன்ற அங்கதன் கூறுகின்றனனென்க. பி-ம்:—1அரசை. 2கொள்வன்யானோ. 3ஒருநிகருமுண்டோ,இனிநிகர்வேறுண்டோ.

ந.௦.—இராவணன் முதலிற்சினந்துபிறகு'வந்த காரியத்தைக்கூறுக'எனல்.

[1]அடுவனே யென்னப் பொங்கி [2]யோங்கிய வரக்க னந்தோ
தொடுவனே [3]குரங்கைச் சீறிச் [4]சுடர்ப்படை [5]யென்று தோன்று
நடுவனே [6]செய்யத் தக்க [7]நாளுலந் தாரை நம்பிப்
படுவதே [8]துணிந்தா யாகில் வந்தது பகர்தி யென்றான்.

(இ - ள்.) '(இவனைக்) கொன்றே தீர்வேன்' என்று சினம்மிகுந்து எழுந்த இராட்சசனாகிய இராவணன்,—(பிறகு),'அந்தோ!குரங்கைச்சீறி(அதனைக் கொல்லுமாறு) ஒளியுள்ள ஆயுதத்தை (நான்) தொடுவேனோ? [வானரத்தைக் கொல்லுமாறு சினந்து படையைக் கையாற்றொடுதல் பெருவீரனான எனக்கு இழுக்காம்]' என்றுசொல்லி, '(கண்ணுக்குத்) தெரியாத யமனே (இறுதி) செய்யத்தக்க ஆயுள்நாள் முடியப்பெற்றவனான இராமலட்சுமணரை நம்பி இறப்பதற்கே துணிந்திட்டாயாயின் வந்தகாரியத்தை சொல்வாய்'என்றான்.

யமன் மரணகாலத்துக் கண்ணுக்குத்தோன்றாதுவந்து ஆயுள்முடியப் பெற்றாரின் உயிரைக் கொண்டுபோவனென்ற நூற்கொள்கைபற்றி, 'தோன்றாநடுவனே செய்யத்தக்க நாளுலந்தார்' எனப்பட்டது. இராமலட்சுமணர் இறப்பது நிச்சயமென்று தான் கருதியமைதோன்ற, இவ்வாறு கூறுகின்றனன்,இராவணன். நீ என்னைச்சேராது இராமனிடம் இருந்தால் உனது உயிர் போவது திண்ணமென்பான் 'படுவதே துணிந்தாயாகில்' என்றான். இளையோரென்றும் வறியோரென்றும் செல்வரென்றும் பாராது யாவரிடத்தும் ஆயுள் முடிந்தநிலையில் ஒருதன்மையாகநடத்தலால், யமனுக்கு 'நடுவன்' என்று பெயர்; நடுவன் - பட்சபாதமில்லாமல் நடப்பவன்: ஸமவர்த்தீஎன்ற வடமொழிப் பெயரும் இப்பொருளேபடும். பி-ம்:—1அடுவனோ. 2ஓங்கிவாள். 3குரங்குதனை. 4சுடர்படைக்கு. 5இழிவுதோன்ற, என்றுகொண்டான், ஒன்றுகொண்டான். 6என்னத்தக்காய். 7நாளுலந்தார்க்குத்தூதாய், நாளுலந்தார்க்குத்தூத. 8குணித்தாய். (கூசக)

௫௧.—இதுமுதல் ஐந்துகவிகள் - அங்கதன் இராமபிரான்கூறியதை இராவணனிடந் தெரிவித்தலைக் காட்டும்.

கூவியின் றென்னை நீபோய்த் தன்குல முழுதுங் கொல்லும்
பாவியை [1]யமருக் கஞ்சி யரண்[2]புக்குப் பதுங்கி னானைத்
தேவியை விடுக வன்றேற் [2]செருக்களத் தெதிர்ந்து தன்னின்
ஆவியை [5]விடுக வென்று [6]னருளினம் விடுகி லாதான்,

(இ - ள்.) (நீ தன்திறத்தில் மிகவும் பிழைபுரிந்திருந்தும்) இன்னும் (உன்னிடத்துக்) கருணையைவிடாத அந்த இராமபிரான், இப்போது என்னை யழைத்து,நீ போய்த்தன்னுடையகுலத்தை யெல்லாம் அழியச்செய்யும் பாவியைச்சேர்ந்து,போருக்குஅஞ்சி அச்சங்கொண்டு அரணுக்குள்புகுந்து பதுங்கிக்கொண்டிருக்கிற அவ்விராவணனைநோக்கி, 'தேவியை விட்டிடுக; அவ்வாறு செய்யவிருப்பமில்லையாயின் போர்க்களத்திலே (போர்செய்யுமாறு) எதிர்ப்பட்டுநின்று தன்னுடையஇனிய உயிரை விட்டிடுக (என்றுகூறுவாய்)' என்று சொல்லினான்; (எ - று.)

இப்போதாவது சீதையைக்கொணர்ந்து கொடுத்து இராவணன் உயிர் தப்பட்டும்: அவ்வாறு செய்யவிருப்பமில்லாமற் போனால், போர்செய்துமாள்வதென்று துணிவுகொண்டு, அச்சத்தினால் அரணிற் பதுங்கியிராமல் வரட்டுமென்று உன்னிடத்துச்செய்திசொல்லுமாறு இராமபிரான் கூறினனென்று செய்தி தெரிவித்தான் அங்கதனென்க. இப்பொழுது என்னைத் தூதுவிடுத்ததும் அவ்விராமபிரானது அருளின்செயலே யென்பான், 'அருளினம்விடுகிலாதான்' என்று இராமபிரானைக்குறித்தான். இராவணன் சீதையைக்கவர்ந்து சென்றது - அரக்கர்குலமெல்லாம் அழிந்துபோவதற்குக் காரணமாமென்பான் 'தன்குலமுழுதுங்கொல்லும் பாவியை' என்றான். விபீஷணன் முதலிய சிலஅரக்கர் தப்பவில்லையோவெனின்,—அவர்கள் அரக்கர்க்குரிய கொடுமை நீங்கியவ ராதலின் அரக்கராகக் கணிக்கப்படாரென்க. பி-ம்:—[1]எய்தி. [2]புகப். [3]பதுங்கினானென், பதுங்குவானை. [4]செருப்புறத்தெதிரேவந்துன், செருக்களத்தெதிர்ந்துதன்கண். [5]விடுக்க. [6]அருளினை. (கூ௫௦)

௫௨. பருந்துணப் பாட்டி யாக்கை படுத்தநாட் [1]படைஞ ரோடும்
மருந்தினு மினிய மாமன் மடிந்தநாள் வனத்துள் வைகி
இருந்துழி [2]வந்த தங்கை [3]மூக்கும்வெம் முலையு மெம்பி
[4]அரிந்தநாள் வந்தி லாதா [5]னினிச்செய்யு மாண்மை யுண்டோ.

இதுமுதல் ஆறுகவிகள் - குளகம்.

(இ - ள்.) பாட்டியாகியதாடகையின் உடலைப் பருந்து உண்ணும்படி கொன்றுவீழ்த்தியநாளிலும், மருந்தைக்காட்டிலும் அநுகூலனான மாமனாகிய சுபாகு (விசுவாமித்திரமுனிவனுடையவேள்வியைக் கெடுக்கச்சென்று) படைஞருடனே இறந்தநாளிலும், (யான்) காட்டிலே (பஞ்சவடியில்) தங்கியிருந்தபோது வந்த (அவனது) தங்கையான சூர்ப்பணகையின் மூக்கையும் விரும்பத்தக்க முலையையும் என்தம்பிஇலட்சுமணன் அரிந்தபோதும்(பொருமாறு எதிர்த்து)வந்திராதவன் இனிச்செய்யும் ஆண்மையும் உண்டோ?(எ-று.)

இதுமுதல்ஐந்துகவிகள் இராமபிரானுடையசொல்லாக அங்கதன் இராவணனிடத்துக்கூறுவன. இராவணன் வலிமையுள்ளவனுனல் தன்னுடைய பாட்டிமுறையான தாடகை மாமன்முறையான சுபாகு இவர்களை யான் கொன்றபோது அவர்கட்காகப்பரிந்துகொண்டுபோருக்கு வரவேண்டாவோ? அவை போகட்டும்: என்தம்பி அந்தஇராவணனுடைய உடன்பிறந்த சூர்ப்பணகையை அங்கபங்கஞ்செய்தானே: அப்போதாவது அவசியம்பொருமாறுவந்திருக்க வேணுமே: அப்போதும் வரவில்லையே: அங்ஙனம் வராதது அவனுடைய வீரமின்மையைக்காட்டுவதால், அங்ஙனம்வலியற்றுக்கிடந்தான், இப்போதும் அரணிற்புகுந்துகொண்டு பதுங்கியிருப்பானேயன்றி எதிர்ந்துநின்று போர் புரிய வலியிலானென்பது விளங்குகின்றதல்லவா? எனக் கூறுமாறு ஸ்ரீராமன் சொல்லினனென்று இராவணனிடம் அங்கதன் கூறுகின்றனென்க. இவ்வாறெல்லாம் அங்கதன்கூறுவது இராவணனுக்கு ரோஷத்தை மூட்டுவதற்காக.

பி-ம்:—1பகைஞரோடும், 2வந்தஙங்கை, தங்கைமூக்கும். 3இருஞ்செவிமூலையினேடும், மூக்கொடுமூலையுமெம்பி, இருஞ்செவிமூக்குமெம்பி, இருஞ்செவிமூலையுமூக்கும். 4அரிந்துழி. 5ஆண்டொழிலழகிதென்றன், ஆண்டொழிலழகிதம்மா, இனிவரற்கையமுண்டோ. (கூருக)

௩௩. 1கிளையொடும் படைஞரோடுங் கேடிலா வுயிர்கட் கெல்லாம்
2களையெனத் தம்பி மாரை வேரொடுங் களையக் கண்டும்
இளையவன் பிரிய மாய 3மியற்றியா யிழையை வௌவும் [டோ.
வளையெயிற் றரக்கன் வெம்போர்க் கினி4யெதிர் வருவதுண்

(இ-ள்.) அழிவில்லாத உலகத்துயிர்களையெல்லாம் அழிப்பதற்கு '(இவர்) களைபோல்வர்' என்றுகருதி (கரன்முதலிய) தம்பிகளைச் சுற்றத்தாருடனும் சேனைவீரருடனும் வேருடனே [மிச்சமில்லாமல்] (நான்) ஒழித்துவிட்டதையறிந்திருந்தும்,—(எனது) தம்பியாகிய இலக்குமணன் (என்னைவிட்டுப்) பிரியும்படி வஞ்சனைத்தொழிலைச் செய்து (அவன் பிரிந்த சமயம்பார்த்து) ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களைப் பூண்டவளான (என்) மனைவியைக் களவு செய்த வளைந்த கோரதந்தங்களையுடைய அந்த இராவணன்], கொடியயுத்தத்திற்கு இனித்தான் எதிராகவரப்போவதுஉளதோ? (எ - று.)

இராவணனென்பவன் எதிர்த்துப் போர்செய்யவல்ல வீரமுடையவனுனல், சீதையைத் தன்வசப்படுத்திக்கொள்ளவேணுமென்று தான் எப்போது விரும்பினனே; அப்போதே எதிர்வந்து பொருது என்னை வென்றல்லவா அச்சீதையை எடுத்துக்கொண்டு செல்லவேணும்: அங்ஙனஞ்செய்யாது நான் தன்தம்பிமாரான கரன்முதலிய பதினாலாயிரவரைக்கொன்றதைக் கண்டும் என்னேடு பொரவலிமையில்லாமையாற் பதுங்கியிருந்து மாயமானையேவி என்னையும் என்தம்பியான இலக்குமணனையும் பிரித்துச் சீதை தனிப்பட்டது கண்டு அவ்வேளையில் எப்போது கவர்ந்தானே, அப்போதே அவ்விராவணன் நம்மோடு எதிர்த்துப்பொருதற்கு வலியிலானென்பது விளங்குகின்றதல்லவா? என்று கூறுமாறு இராமபிரான் சொல்லினனென அங்கதன் இராவண

னிடத்துக் கூறுகின்றான். களையானது தான் தோன்றிய பயிரை யோங்கவிடா துஅழியச்செய்வதுபோல இந்தக்கரன்முதலியோர் தாம்உள்ளஇடத்துவாழும் நல்லோரை யோங்கவிடா தொழிப்பவ ராதலின், களையென்றது. தம்பிமாரென்றது - தம்பி முறையாரான கரனையும் தூஷணதிரிசிரசுக்களையும்.

கரனென்பவன்-பூர்வீகராட்சசசிரேஷ்டனான சுமாலியின்மகளும் இராவணன்தாயான கேகசியின் தங்கையும் இராவணனது தந்தையான விசிரவமுனிவரையே கணவனாக அடைந்தவளும் இங்குக்காட்டிய இருமுறையாலும் இராவணனுக்குச் சிறியதாயுமாகிய கும்பீநசியின் குமாரனாதலால், இராவணனுக்குத் தம்பியாவன். இராவணனது தந்தையான விசிரவமுனிவர்க்கே கலையென்பவளிடம் தோன்றிய தூடணன் திரிசிரசு என்பவரும் அவ்விராவணனுக்குத் தம்பிமாராதலே யுணர்க. இந்தக்கரனைச் சேனையோடும் படைவீரர்களோடும் தம்பிமாரான தூஷணன் திரிசிரசுஎன்னும் படைத்தலைவரோடும் இராமபிரான் கொன்றனன். அங்ஙனம் கரன்முதலியோர் தம்பரிவாரங்களோடு அழிக்கப்பட்டபின்பு சூர்ப்பணகை யென்பவளால் ராமலக்ஷ்மணரிடத்துப் பெருங்கோபமும் சீதாதேவியினிடத்துப் பெருங்காதலும் மூட்டப்பட்ட இராவணன் சீதையைக் கவர்வதற்கு மாரீசனைத் துணையாகவரவேண்டுமென்று வேண்டவே, அவன் பொன்மானுருக்கொண்டு தண்டகாரணியத்திற் பஞ்சவடியிலே சீதையின்னெதிரிலுலாவ, அதுகண்டு விரும்பிய சீதையின்விருப்பத்தின்படி இராமபிரான் அதனைப் பிடித்தற்குப் புறப்பட்டு நெடுந்தூரஞ்சென்று மாயமானென்று உணர்ந்து அதன்மீது அம்பெய்யவே, மான்வடிவங்கொண்ட மாரீசன் அம்புபட்டு வீழ்கையில் 'ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணா!' என்று இராமன்குரலாற் சத்தமிட்டுவிழுந்து இறக்க, அக்குரல்கேட்ட சீதையின்நிஷ்டூரமொழியால் இராமனுள்ளவிடம்நோக்கி இலட்சுமணன் பிரிந்துசெல்ல, அச்சமயம்பார்த்து இராவணன் சீதையைக் கவர்ந்துசென்றானென்க. பி-ம்:- 1 கிளைநெடும். 2 சுளையன. 3 இயற்றியேகொண்டுபோன. 4 இவண். (கஙஉ)

ஙஅ. [1]எந்நிழை தன்னைக் கண்ணுற் றெதிர்ந்தவர் தம்மை யெற்றிச்
சாந்தெனப் புதல்வன் றன்னைத் [2]தரையிடைத் தேய்த்துத் தன்
[3]காந்தெரி மடுத்துத் தானுங் காணவே கடலைத் தாவிப் [னூர்
போந்தபின் வந்தி லாதா [4]னினிப்பொரு போரு முண்டோ.

(இ - ள்.) (எம்மால் அனுப்பப்பட்ட தூதுவனாகிய அநுமான்),—சீதாபிராட்டியைப் பார்த்திட்டு, எதிரிட்ட வீரர்களையெல்லாம் மோதியொழித்து, (தன்) புத்திரனான அட்சகுமாரனைச் சாந்துபோல ஆய்விடுமாறு பூமியிலே அரைத்துவிட்டுத் தான் [இராவணன்] குடியிருக்கும் ஊராகிய இலங்கையை எரிகின்றநெருப்பையிட்டெரித்துத் தான் பார்த்துக்கொண்டிருக்கும்போதே கடலைக்கடந்து போயினபின்பும் (அந்த அநுமனையழிக்கவேணுமென்று எண்ணங்கொண்டுவெளிப்பட்டுவரவேண்டியதாயிருக்கவும்)வந்திலாதவனாகியஇராவணன், இனி(நேரேவந்து)செய்யப்போகின்ற யுத்தமும் உண்டோ? (எ-று.)

கரன் முதலியோர் அழிந்தது அவ்விராவணன் தன் கண்ணாற் காணாதது: மேலும், அந்தப்பழிக்குப் பழியாகச் சீதையைக் கவர்ந்துகொண்டு வந்து

விட்டோமென்று கருதி இராவணன் ஒருகால் வாளா இருக்கலாம்: அது கிடக்கட்டும்: நமது தூதுவனான அநுமான், கடல்கடந்துசென்று தன்வீரர்கள் பலரையெற்றியது அட்சகுமாரனைக்கொன்றது இலங்கையில்நெருப்பிட்டது முதலிய கோரச்செயல்களைச் செய்தானே: அவ்விராவணன்பார்த்துக்கொண்டிருக்கையிலேயேயன்றோ இவ்வாறு கடுஞ்செயல்களைச் செய்து அவ்வநுமான் மீண்டுவந்தது? உண்மையான வீர னென்றால், அங்ஙனஞ் செய்துவந்த அநுமானோடும், அவனை ஏவி யனுப்பிய என்னோடும் எதிர்த்துவந்து பொரவேண்டாவோ? அப்போதெல்லாம் பொர வலியற்றுப் பதுங்கிக்கிடந்த இராவணன் இப்போதும் பதுங்கிக்கிடப்பானேயன்றிப் பொரவாரா னென்று சொல்லி வருமாறு இராமபிரான் கூறினதாகப் பின்னும் அங்கதன் கூறின னென்க.

பி-ம்:—[1]ஏந்தியபடைகள்கொண்டன்று. [2]தரையொடுங். [3]காய்ந்தெரி. [4]இவனனிப். (கூ௫௩)

௩௫. உடைக்குலத் [1]தொற்றர் தம்பா லுயிர்கொடுத் துள்ளக் கள்ளந்
துடைத்துழி வருணன் வந்து தொழுதுழித் தொழாத கொற்றக்
[2]குடைத்தொழி லும்பி கொள்ளக் கொடுத்துழி வேலை கோலி
யடைத்துழி வந்தி லாதா [3]னினிவர வைய முண்டோ.

(இ - ள்.) (தம்முடையகுலத்திற்) பிறந்த ஒற்றர்களிடத்திலே அவருயிர்களைக்கொள்ளாமல் விடுத்திட்டு (அவர்களுடைய) மனக்கள்ளத்தைப் போக்கியபோதும், வருணபகவான் பிரதியட்சமாய்வந்து (தன்மீது அணைகட்டும்படி) தொழுதபோதும் (தன்னைப் பிறர்தொழுவதன்றித் தான் எவரையுந்) தொழவேண்டாத வெற்றிபொருந்திய (இலங்கைக்கு) அரசுபூணுந்தொழிலை விபீஷணன் பெற்றுக்கொள்ளுமாறு கொடுத்தபோதும், கடலை முயன்று அணைகட்டியபோதும் வராத அந்தஇராவணன் இனி வருவானென்று கருதச் சந்தேகமேனும் உள்ளதோ? [திண்ணமாக இராவணன் வாரானென்றபடி].

இராவணனது ஒற்றர்களான சுகன் சாரணன்என்றஇருவர் இராமபிரானது வானரசேனையின் நிலையை யுணருமாறு வானரவடிவுகொண்டு வந்தனராக, விபீஷணாழ்வான் அவர்களைப்பற்றிவானரங்கள்குத்த இழுத்துக்கொண்டுபோய் இராமபிரான்முன்னே விட்டுச்செய்தி சொல்லித் தன் மந்திரவலிமையால் அவரைத் தம்முடைய நிசவடிவம்பெற்றிடுமாறுசெய்ய, அப்போது இராமன் கருணைகொண்டு கள்ளவேடங்கொண்டிருந்த அவர்களை வானரங்கள்ஒன்றுஞ்செய்யாதபடிவிலக்கித் தன்னுடையவலிமையெல்லாம் இராவணனிடத்துச்சொல்லுமாறு சேனைகளையெல்லாங்காட்டி யனுப்பினனாதலால், 'உடைக்குலத்தொற்றர்தம்பா லுயிர்கொடுத் துள்ளக்கள்ளந்துடைத்துழி' என்றது. சேதுபந்தனஞ் செய்தபின்னரே ஒற்றர்தம்பா லுயிர்கொடுத்து உள்ளக்கள்ளந் துடைத்தமை நிகழ்ந்திருக்கவும் அதனை முன்னர்க்கூறியது, செய்யுளாதலின். வருணன்வந்து தொழுதற்கு முன்னமே தம்பிக்குக் கொற்றக்குடைத்தொழில் கொடுத்திருக்கவும் அதனைப் பின்னர்க்கூறியதும் செய்யுளாதலினால்தானென்க. தன்னூரைக்கிட்டி மாற்றான் முற்றுகைசெய்யும்முன் தூரத்திலிருக்கும் போதே அவனைப் பொருது ஓட்டுதல் செய்யவேண்டியதாயிருக்க, தன்னூரை

யடைந்து தன்னைச்சேர்ந்தவரைப் பரிபவப்படுத்துவதும், தன்னுளவை யறி யும்படி விடுவதுஞ் செய்த அந்தஇராவணன் எதிர்த்துச் சண்டைக்கு வரப் போகின்றா னென்று கருதுவதற்கும் இடமில்லை யென்று கூறினன் இராம பிரானென்றனன் அங்கதன். கொற்றம்-அரசுக்குரியதுமாம். ஐயம் என்பதன் பின், இழிவுசிறப்புப்பொருளதான உம்மை தொக்கது. துடைத்துழி, தொழு துழி, கொடுத்துழி, அடைத்துழி, பெயரெச்சத்தின் அகரவீறு - தொகுத்தல். உடைத்தவன்றோற்றமெல்லா மொருமையின் மாற்றியூற்றம் என்று ஒருபிரதி யில் முதலடி காண்கின்றது. பி-ம்—[1]ஒற்றர்க்கம்மாவுரை கொடுத்து. [2]கொ டைத்தொழிறம்பி. [3]ஆண்டொழிற்கழகேதம்மா, ஆண்டொழிலழகிதம்மா, இனி ச்செயுமாண்மையுண்டோ. (கூ௫௪)

நகூ. மறிப்புண்ட தேவர் காண [1]மணிவரைத் தோளின் வைகும்
நெறிப்புண்ட ரீக மன்ன முகத்தியர் [2]முன்னே நென்னல்
பொறிப்புண்ட ரீகம் போலு [3]மொருவனாற் புனைந்த மௌலி
பறிப்புண்டும் வந்தி லாதா [4]னினிப்பொரும் [5]பான்மை யுண்டோ.

(இ - ள்.) (தன்னாற் சிறையிலே) மடக்கப்பட்ட தேவர்கள் பார்த்துக் கொண்டிருக்கவும், அழகிய திரிகூடமலையின்மேலே தங்கியுள்ள நெறித்தலைக் கொண்ட தாமரைமலரையொத்த முகத்தையுடையரான தேவமகளிர்க்கு எதி ரே, நேற்று உடற்புள்ளிகளையுடைய புலியையொத்த (பராக்கிரமசாலியான) ஒப்பற்ற சுக்கிரீவனால் (தான்) அணிந்திருந்த கிரீடம் பங்கஞ்செய்யப்பெற் றும், (அந்தச்சுக்கிரீவனை அப்போதே கொல்லுமாறு) தொடர்ந்துவாராமலிருந் தவனான இராவணன், இனிமேல் போர்செய்யப்போகின்ற தன்மை உண் டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

தனது எதிரிகளான தேவர்முன்னிலையிலும், மகளிர் முன்னிலையிலும் சுக்கிரீவனால் மகுடபங்கம் நேர்ந்தது மிகவும் அவமானத்தை விளைத்து ரோ ஷத்தை வளர்க்குமாதலால், உடனே போர்செய்து தன்திறனைக் காட்டித் தன்னையவமதித்தவனைத் தொடர்ந்துவந்தேனுங்கொல்லவேண்டியதாயிருக்க, ரோஷப்படவேண்டியகாலத்திலே அங்ஙனஞ் செய்யாமலிருந்தவன் இனியும் போருக்கு வரமாட்டா னென்று கூறுக வென்றனன் இராமபிரானென அங் கதன் கூறுகின்றன னென்க. புண்டரீகம்-தாமரையும், புலியும்: வடசொல். இச்செய்யுளில் முதலெழுத்துவேறுபட்டிருக்க இரண்டுமுதலியஎழுத்துக்கள் ஒருவகையாக வந்து பொருள்வேறுபட்டது திரிபு என்னுஞ் சொல்லணியாம். நென்னல்-நெருநல் என்பதன் மரூஉ வென்பர். மணிவரைத்தோளின்வைகும்- அழகிய அல்லது மணிப்பூண்களையணிந்த மலைபோன்றதோளிலேதங்கிய [தோளைத்தழுவுபவரான] மகளிர்என உரைத்தலும் ஒன்று. பி - ம்:—[1]தன். [2]முன்னேநிற்க, எதிரேநென்னல், நென்னல்காண. [3]ஒருவனாற்புனைந்த. [4]என் னினிப். [5]படுவதென்றான், படர்வதென்றான். (கூ௫௫)

பசையறு சிந்தை யானைத் தமரொடும் படுத்த போதும்
இசையெனக் கில்லை யென்றே யென்பதோ ரிகழ்வு [1]கொண்டான்

[2]வசையற விசைக்கு மூரை வளைக்கவும் வந்தி லாதான்
திசையினை வென்ற வென்றி வரவரச் சீர்த்த [3]தென்றான்.

என்று ஒருசெய்யுள் இங்கே சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. பி-ம்:—[1]காண்பான். [2]வசையுறவைகும். [3]அன்றே.

௯௭.—இராமன்சொல்லிய செய்தியைச் சொன்ன அங்கதன் இரண்டிலொன்றைப்புரிக எனல்.

என்றிவை [1]யியம்பி வாவென் றேவின [2]னென்னை யெண்ணி
ஒன்றுனக் குறுவ துன்னித் துணிந்துரை யுறுதி பார்க்கின்
துன்றிருங் குழலை விட்டுத் தொழுதுவாழ் சுற்றத் தோடும்
பொன்றுதி [3]யாகி லென்பின் வாயிலிற் புறப்ப டென்றான்.

(இ-ள்.) என்ற இந்தவார்த்தைகளைச் சொல்லி (அந்த இராவணனுடைய மனக்கருத்தை அறிந்து) வருவாயென்று என்னைக் கட்டளையிட்டனுப்பினான்; (ஆதலால், இவ்விரண்டிலே) உனக்குத்தக்க செயலொன்றை நன்கு ஆராய்ந்து, துணிந்துசொல்வாய்: (உனக்கு பிராணாபாயமுண்டாகாமல்) நன்மையான செயலைப் பார்ப்பாயானால், நெருங்கிய மிக்க கூந்தலையுடையவளான சீதாபிராட்டியை (இராமபிரானிடத்திலே) கொண்டுவந்துவிட்டு (அப்பிரானை) வணங்கி வாழ்ச்சிபெறுவாய்; பந்துக்களோடு இறந்துவிடுவாயானால்; [இறந்துவிடுவதை நிச்சயித்தாயாயின்], என்னுடைய பின்னேதானே வீட்டுவாயிலிலிருந்து வெளிப்பட்டுவருவாய் என்று கூறினான், (அங்கதன்); (எ - று.)

சீதையை விட்டால் பிராணனோடுவாழலாம். இன்றேல் உயிரைச்சுற்றத்தாரோடும் இழக்கவரும்: இவ்விரண்டில் எதைத் துணிகின்றாய்? சீதையை விட்டிடாதபட்சத்தில், என்னுடனே தானே அரண்மனையிலிருந்து புறப்பட்டுவருக: பதுங்கியிராதே யென்றனன் அங்கதனென்க. துன்றிருங்குழல்-அன்மொழித்தொகைப் பன்மொழித்தொடர். பி-ம்:—[1]யெம்புவாய். [2]இவற்றை யெல்வாய். [3]ஆயினின்றே, ஆகிலுன்றன். (௬௫௬)

௯௮.—நீ ஊர்ப்பதுங்கியிருப்பது உனக்குப் பழியையேவிளைக்குமென்று அங்கதன் கூறுதல்.

நீரிலே [1]பட்ட சூழ்ந்த நெருப்பிலே [1]பட்ட நீண்ட
பாரிலே பட்ட வானப் பரப்பிலே [2]பட்ட வெல்லாம்
போரிலே பட்டு வீழப் பொருதநீ யொளித்துப் புக்குன்
ஊரிலே [3]பட்டா யென்றாற் பழி[4]யென வுளையச் சொன்னான்.

(இ - ள்.) நீர்க்கடவுளுடையலோகத்திலே தோன்றின பிராணிகளும் வளைந்துகொள்ளுமியல்புள்ள அக்கினியினுலகத்திலே தோன்றிய பிராணிகளும் நீண்டுள்ள இந்தப் பூமியிலேதோன்றிய பிராணிகளும் பரவிய வானத்துத்தோன்றிய பிராணிகளும் ஆகிய எல்லாப்பிராணிகளும், யுத்தகளத்திலே உயிரழிந்து வீழ்ந்திடும்படி (வெகுபராக்கிரமங்கொண்டு) போர்செய்த நீ, மறைந்துபுகுந்துகொண்டு (எதிராளிகள்வந்து போர்க்கு அறைகூவவும்) உன்னூருக்குள்ளேதானே கிடந்தா யென்றால், (உனக்கு இதனால்) அபகீர்த்தி

விளைவதாகுமென்று(இராவணன்) மனம் வருந்தும்படி,(அங்கதன், பின்னும்) சொன்னான்; (எ - று.)

எவ்வுலகத்தாரையும்வென்று மகாபலபராக்கிரமசாலியென்று சொல்லிக் கொண்டுள்ள நீ, உன் நகரையடைந்து போருக்குவருமாறு அறைகூவவும், பதுங்கி யொளித்திருந்தால் உனக்கு இதைவிட அபகீர்த்தியையுண்டாக்குவது வேறு உண்டோ? என்று இராவணன் மனத்திற்படும்படி இடித்துக்கூறினன் அங்கதனென்றவாறு. நீர் - இலக்கணையால், நீர்க்கடவுளை யுணர்த்தி, பிறகு அக்கடவுளுக்குஉரிய உலகத்தை யுணர்த்திற்று. இனி, நீரிலேதோன்றியபொருள் நெருப்பிலேதோன்றியபொருள்என்று உரைப்பின்சிறப்பின்மையறிக. இச்செய்யுள் ஒருபிரதியி லில்லை. பி-ம்:—[1]பட்டு. [2]பட்டதெல்லாம். [3]பட்டவென்றால். [4]என்பது. (கூ௩௭)

வேறு.

ந௯.—இராவணன் சினங்கொண்டு அங்கதனைப் பிடித்துஎற்றுமாறு நால்வரை யேவுதல்.

சொற்ற வார்த்தையைக் கேட்டலுந் தொல்லுயிர்
முற்று முண்பது போலு [1]முனிவினான்
பற்று மின்கடி திண்ணெடும் [2]பார்மிசை
யெற்று மின்னென நால்வரை யேவினான்.

(இ - ள்.) (அவ்வண்ணம் அங்கதன்) சொன்ன வார்த்தையைக் கேட்டவுடனே,(இராவணன்),—பழமையான உயிர்களையெல்லாம்விழுங்கிவிடுவனோ என்று கருதுமாறுள்ள சினத்தையுடையவனாகி, '(இந்தத் தூதுவனைப்) பிடியுங்கள்: விரைவாக நீண்ட பூமியின்மீது மோதுங்கள்' என்றுசொல்லி நான்கு பேரைக் கட்டளையிட்டனுப்பினான்; (எ - று.)

'இவன் கோபத்தினால் உலகத்திலே உயிர்களேயில்லாதுசெய்துவிடுவானோ?'என்றுகண்டோர்கருதுமாறு அத்துணையுக்கிரமாக இருந்தது அந்தஇராவணனுடையகோபமென்பது,'தொல்லுயிர்முற்றுமுண்பதுபோலுமுனிவினான்' என்பதன் பொருள். பி-ம்:—[1]முனிவினால். [2]பாரிடை. (கூ௩௮)

௪0.—அங்கதன் தன்னைப் பற்றினவரான நால்வர்தலையையுந் துணித்துக் கோபுரவாயிலில் தாவிக் கூறத்தொடங்குதல்.

[1]ஏவி னான்பிடித் தாரை யெடுத்தெழத்
தாவி னானவர் [2]தந்[3]தலை போயறக்
கூவி னானவன் கோபுர [4]வாயிலில்
தூவி னான்றுகைத் தானிவை சொல்லினான்.

(இ - ள்.) (அந்த அங்கதன்,—இராவணனது)கட்டளையினால்(தன்னைப்) பற்றினவரான அந்தநான்குவீரர்களையும் தூக்கிக்கொண்டு உயரப்பாய்ந்து அந்நால்வரின் தலையும் அறுபட்டுப்போயினவாக(ச் செய்து) கர்ச்சித்துக் கோபுரவாயிலில் (அவர்களுடலைப்) போகட்டுக் (காலால்) மிதித்து இவ்வார்த்தை

களைச்சொல்லினன்; (எ - று.)—அங்கதன்கூறியவற்றை அடுத்தசெய்யுளிற் காண்க. பி-ம்:—1ஏவினர். 2தன். 3தலையாலறை, தலையாறலை. 4வாசலிற்.

ஏவு - கட்டளை; இன் - சாரியை. ஆன் - மூன்றனுருபு. (கூகூசு)

சக.—மற்றையோரைநோக்கி அங்கதன் கூறுவன.

ஏமஞ் 1சார வெளியவர் 2யாவிரும்
தூமங் கால்வன வீரன் சுடுசரம்
வேமின் 3போல்வன வீழ்வதன் முன்னமே
போமின் போமின் புறத்தென்று போயினன்.

(இ - ள்.) (அங்குள்ள வீரரைநோக்கி),'புகையை வெளிவிடுவனவும் எரிகின்ற மின்னல்போலச் சொலிப்பனவுமான இராமபிரானுடைய சுடுகின்ற அம்புகள் (வந்து) வீழ்வதற்குமுன்னமே வலிமையற்ற நீங்களெல்லீரும் பாதுகாப்பையடையும்படி அப்பால் ஓடிப்போய்விடுங்கள்' என்றுசொல்லிக்கொண்டே, (அங்கிருந்து இராமபிரானுள்ளவிடத்துக்குச்) சென்றான்; (எ - று.)

இவ்வண்ணம் அங்கதன்கூறியது - அங்குள்ளார்க்கெல்லாம் அச்சந்தோன்றவேணுமென்ற கருத்தினாலாகும்: கருணைபற்றியுமாம். ஏமம் - க்ஷேமம்: வடசொற்றிரிபு. எளியவர் யாவிரும்-முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; எளியீர் யாவிரும்என்றுஇருப்பின் வழாநிலையாம். பி-ம்:—1சார்ந்த. 2யாவரும். 3போலவிழுவதன், போல்வன வீழ்வன. (கூசுo)

சஉ.—அங்கதன் இராமபிரானையடைந்து அவனதுதாளில் வணங்குதல்.

அந்தரத்திடை யார்த்தெழுந் தா1னவன்
2சிந்து ரத்தந் 3துதைந்தெழுஞ் 4செச்சையான்
இந்து விண்ணின் றிழிந்5துள தாமென
வந்து வீர னடியுள் வணங்கினன்.

(இ - ள்.) சிந்திய இரத்தத்தினால் நெருங்கப் பூசிய செஞ்சந்தனப்பூச்சையுடையவனான அவ்வங்கதன் ஆரவாரஞ்செய்துகொண்டு வானத்திலேகிளம்பி ஆகாயத்தினின்று சந்திரன் கீழேயிறங்கியதென்று (கண்டோர்) கருதும்படி இறங்கிவந்து இராமபிரானுடைய பாதங்களில் வணங்கினன்; (எ - று.)

அங்கதன் ஆர்ப்பரவத்துடனே வானத்திலெழுந்துவந்து இராமபிரானுள்ள இடத்துக் கீழிறங்கி அவனது பாதங்களில் வணங்கின னென்பதாம். பகைவரோடுபொருததனால் அவர்இரத்தம் மேற்படிந்திருந்தது, அங்கதனுக்குச் செஞ்சந்தனக்குழம்பைப் பூசிக்கொண்டது போன்றிருந்ததென்க. செச்சை-செஞ்சந்தனக்குழம்பு: சர்ச்சா: வடசொல். அங்கதன் வெண்ணிறமுடையவனாதலால், அவன்இழிந்தது - இந்து இழிந்ததுபோலும். பி-ம்:—1அவர். 2சிந்த. 3தெறித்தெழு, துதைத்தெழுஞ். 4செம்மையான். 5உளதேயென. (கூசுக)

சங.—இராவணன்கருத்து இன்னதென்று அங்கதன் தெரிவித்தல்.

உற்ற போதவ னுள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீர 1னுணர்த்தென்று கூறலும்

[2]முற்ற [3]வோதியென் மூர்க்கன் முடித்தலை
யற்றபோ தன்றி யாசை [4]யறுனென்றான்.

(இ - ள்.) (அங்கதன்) வந்துசேர்ந்தபொழுதில் வெற்றிபொருந்திய வீரனை இராமபிரான், 'அந்த இராவணனது மனத்திலுள்ள எண்ணங்களையெல்லாம் தெரிவிப்பாய்' என்றுசொல்லவும், (உடனே அங்கதன்),—'(இராவணனது கருத்தை ஒவ்வொன்றாக) முழுவதுஞ்சொல்லி யென்ன பயன்? விடாப்பிடியையுடைய அவ்விராவணன் கிரீடங்களையணிந்துள்ள (தனது) சிரசுகள் அறுபட்டபொழுதிலல்லாமல் (தன் மனத்துக்கொண்டுள்ள) காதல் நீங்கப்பெறான்' என்று (இராவணனுடைய உறுதியானஎண்ணத்தைச் சுருக்கமாகத்) தெரிவித்தான்; (எ - று.)

தனக்குக் கேடுவிளையுமென்பது பல காரணங்களால் தோன்றவும் நல்லறிவுகூறும்போது கேளாமையால், அவனை 'மூர்க்கன்'என்கிறான்: மூர்க்கன்-பிடிவாதகுணமுடையவன். பி-ம்:—1உரை. 2முற்றும். 3ஓதிய. 4அறுது. சிலபிரதிகளில் இப்படலத்தின்பெயர் அங்கதன்றூதுப்படலம் என்று காண்கின்றது.

அங்கதன்றூதுபடலம் முற்றிற்று.

---

## கசு-ஆவது முதற்போர்புரிபடலம்.

(இராவணசேனையோடு இராமசேனை) முதலிற் போரைப் புரிந்ததைக் கூறும் படலமென விரியும். இனி, இராவணனோடு இராமபிரான் முதலிற் போரிலே புரிந்ததைப்பற்றிய படலமெனக் கூறுதல் அமையும். இப்படலத்தில் இராவணன் இராமபிரானோடுபோர்புரிந்து சலித்து நிராயுதபாணியாய் நிற்க, 'இன்றுபோய் நாளை நின்தானையோடு வா' என்று அப்பிரான் தனது கருணைதோன்றக் கூறியமையோடு இப்படலம் முடிதல் காண்க. 'இராவணன் முதனாளையிற்றேற்றபடலம்' என இப்படலத்திற்குச் சில ஏட்டுப்பிரதிகளிற் பெயர் காணப்படுகின்றது: முதனாளையுத்தம் என்றும் ஒருபிரதியிற் காணப்படுகின்றது.

தூதுசெய்தியைக் கேட்டுச்சினந்து இராவணனேவிய அரக்கர்களோடு வானிலெழுந்து சென்று தலைகளறுத்துக் கோபுரவாசலிலே விழும்படி தூதைத்துமீண்டுவந்த அங்கதன் கூறியவாக்கினால் இனிப்போர்நிகழவேண்டுவதே யெனத்திடப்படவே, தலைவனேவலால் வானரசேனைவீரர்கள் இலங்கையின் அகழியைத் தூர்த்துக்கோட்டைமதிலை வளைத்துக்கொள்ளவும்,நான்குவாயிலிலும்அரக்கச்சேனைகள் புறப்படலாயின: பின்னர் அவ்விருதிறத்துச்சேனைகட்கும்வெகுமும்முரமாகப் பெரும்போர்நிகழ்ந்தது. வடக்குவாயிலில் வச்சிரமுஷ்டிகடும்போர்புரிய அவனைச் சுக்கிரீவன் கொன்றிடவே, அங்கு எஞ்சிநின்றவர் நடுநடுங்கி நகர்நோக்கி யோடலாயினர்: கிழக்குவாசலிற் கற்பாந்தகாலத்துக் கடல்போல அரக்கர்சேனை கொந்தளித்துவரவும், இரண்டுசேனைக்கும்பெரும்போர்நிகழ்கையில், நீலன் கடும்போர்புரிய அரக்கர்சேனை முறிந்தது. அப்

போதுகும்பானென்ற அரக்கரின்சேனைத்தலைவன் எதிர்க்க,வானரசேனை நிலைகுலைந்தது: அதுகண்ட கரடித்தலைவனான இடும்பன் எதிர்த்துநின்ற அவனைப் பற்றி மோதி மூளைசிதறிஉயிரிழக்கச்செய்தான். தன்படைத்தலைவனான கும்பானு இறக்கவே, பிரகஸ்தன் வானரப்படைகள்மேல்எதிர்த்துச் சரமாரிபொழிய, இறுதியில் நீலனென்ற வானரப்படைத்தலைவன் அந்தப்பிரகஸ்தனைத் தன்வாலினால் சுற்றிவீழ்த்திக்கொன்றான். தெற்குவாசலில் அங்கதனுக்குமுன்னே நிற்கமாட்டாமல் அரக்கர்சேனையோடிட, சுபாரிசன்என்ற அரக்கரில்முக்கியன் இறந்திட்டான். மேற்குவாயிலில் துன்முகன் பெருஞ்சேனையோடு அநுமானாகிற யமனால் மாண்டனன். இங்ஙனம் நாற்றிசைகளிலும் அரக்கர்க்குப் பங்கமுண்டாகவே, அவ்வத்திசைகளில் செய்தியறிந்து தெரிவிக்கவந்திருந்த ஒற்றர் இராவணனைக் கிட்டி அச்செய்தியை இரகசியமாகத் தெரிவித்தனர். அதுகேட்டஇராவணன் பெருந்துன்பத்தோடு சீற்றமுங்கொண்டு போர்க்கோலந்தரித்துப் போர்க்களத்துக்கு வரலானான். ஒற்றரால் அச்செய்தியையுணர்ந்த ஸ்ரீராமனும் யுத்தசன்னத்தனானான். அப்போது சுக்கிரீவனும் அநுமானும் இலட்சுமணனும் இராவணனோடு பொருதுமெலிய, மீட்டும் அநுமான் அவ்விராவணனோடு குத்துச்சண்டையாடித்தோற்க, இலட்சுமணன் அவ்விராவணனைவளைத்துப்பொருது பின் இராவணனால் பிரமன்தந்தவேலாலெறியப்பெற்று மூர்ச்சையானான். மூர்ச்சையாய்விழுந்த இலட்சுமணனைத் தூக்கிக்கொண்டுபோய்விடும்படி இராவணன்முயன்றும் முடியாமற்போகவே, அநுமான் தன்பக்தியினால் இலேசான இலட்சுமணனையேந்திச்சென்று ஸ்ரீராமபிரானிடத்துச்சேர்ப்பிக்க,பின்பு அநுமானதுவேண்டுகோளினால் ஸ்ரீராமன் அவ்வநுமான்தோளிலேறிக்கொண்டு இராவணனோடு கடும்போர்புரிந்து இறுதியாக அவனைமெலியச்செய்து நிராயுதபாணியாக்கி, அவனுக்குச் சில நல்லறிவுகூறி 'நாளைவா' என்று அனுப்பினனென்பது, இப்படலத்துக் கூறிய விஷயம்.

௧.—இதுமுதல் மூன்றுகவிகள்-குளகம்: வானரசேனைக்கு இடப்பட்ட கட்டளையைத் தெரிவிக்கும்.

பூசலேபிறி தில்லையெ னப்புறத்து
ஆசை தோறு முரச[1]மறைந்தன
பாச றைப்[2]படை யின்னிடம் [3]பற்றிய
வாச றோறு முறையின் வகுத்திரால்.

(இ - ள்.) போரேதவிர இனி வேறு[சமாதானமென்பது]இல்லையென்று (அங்கதன்) அறிவித்துவிட, போர்தொடங்கிற்றென்பதைக் குறிப்பிக்குமாறு வெளியிலுள்ள திக்குக்கள்தோறும் முரசமறையப்பட்டன; (பிறகு இராமன்), பாசறையிலுள்ள படைகளைநோக்கி, பொருந்திய இலங்கையின்வாசல்தோறும் முறையே நீவிர்யாவரும் அணிவகுத்து நிற்பீராக; (எ - று.)

இந்தச்செய்யுளில் 'என' என்பது 'அறைந்தன' என்பதனோடு முடியும். படையின்னிடம் "என்றான்" (௩)என்க. 'பற்றியவாசறோறும்'என்பதுமுதல்

"கொடிமதிற்குடுமித்தலைக்கொள்க" (ங) என்பதுவரையில் இராமபிரான் பாசறைப்படையினிடம் கூறியன: இவை இராமபிரான் கூற்றுக்களென்பது அங்கதன்தூதுசென்று மீண்டதும் இராமபிரான் சேனைகளைநோக்கிக் கட்டளையிட்டதாக முதனூலில் வருவதற்குஏற்பக் கொள்ளப்பட்டது. இனி, சேனாநாயகனுகிய நீலன் இவ்வாறு கட்டளையிட்டானென்றலும் ஒன்று. 'அறைந்தெனஎன்ற பாடத்திற்கு-அறையப்பட்டதாக எனப் பொருள்: இது ங-ஆஞ்செய்யுளில் 'என்றான்' என்பதனோடுமுடியும். பி - ம்:—1அறையுமின், அறைந்தகன், அறைந்தனர். 2பறையின்னிடம், பறைபின்னிடப். 3பற்றுமின். (கூகூங)

உ. மற்று நின்ற மலையு மரங்களும்
பற்றி 1வீரர் பரவையின் மும்முறை
2கற்ற கைகளி னாற்கடி மாநகர்
சுற்று நின்ற வகழியைத் தூர்த்திரால்.

(இ - ள்.) பின்னும், முன்பு(தூர்த்தற்குப்)பழகியுள்ள கைகளினால், வீரர்கள் ஆங்காங்குள்ள மலைகளையும்மரங்களையும் (சேதுகட்டியபோது)கடலிலிட்டதினும்மூன்றுமடங்கு அதிகமாகக் கொண்டுவந்து (எறிந்து), காவலுள்ள சிறந்த இலங்கைமாநகரைச் சுற்றியுள்ள அகழியைத் தூர்த்துவிடுங்கள்; (எ-று.)—இலங்கைக்கு முதலகழியாயுள்ள கடல் கடக்கப்பட்டதனால், இங்குக்கூறிய அகழி இடைநகரியிலுள்ள அகழியைக்குறிக்குமென்னலாம். பி-ம்:—1வீசப், வீசிப். 2சுற்றி. (கூகூச)

ங. 1இடுமின் பன்மர மெங்கு 2மியக்கறத்
தடுமின் போர்க்கு 3வருகெனச் 4சாற்றுமின்
5கடுமி னிப்பொழு தேகதிர் 6மீச்செலாக்
7கொடிம திற்குடு மித்தலைக் 8கொள்கென்றான்.

(இ - ள்.) எங்கும் பலமரங்களையும் (செல்லும்பாதைகளில்) இடுங்கள்; (அதனால், அரக்கர்களை) இயங்கமுடியாமல் தடுங்கள்; 'போர்க்கு வருக' என்று (அரக்கரை) அறைகூவுங்கள்; விரைந்தவர்களாய், இப்பொழுதே சூரியனும் மேற்செல்லமாட்டாத கொடிநாட்டியமதிள்களின் சிகரத்தைக் கைப்பற்றிக் கொள்ளுங்கள் என்று கட்டளையிட்டான்; (எ - று.)—கடுமின்-'கடி' என்னும் உரிச்சொல் திரிந்து வினைப்பகுதியான கடுஎன்றபகுதியினடியாப்பிறந்த முன்னிலையேவற்பன்மைவினைமுற்று: இது - எச்சப்பொருளில்வந்தது. குடுமித்தலை - உச்சியிடம். பி-ம்:—1எடுமின். 2இயங்காத, இயக்கிறத். 3வருமெனச். 4சாற்றலும். 5கெடுமின். 6மீச்செலக். 7கொடு. 8கொள்ளுமின். (கூகூரு)

ச.—வானரசேனை அகழியைத் தூர்த்தல்.

தடங்கொள் குன்று மரங்களுந் 1தாங்கிய
மடங்க 2லன்னவவ் வானர மாப்படை
3இடங்கர் மாவிரி யப்புன லேறிடத்
தொடங்கி வேலை யகழியைத் தூர்த்ததால்.

(இ-ள்.)பெருமையைக்கொண்ட மலைகளையும் மரங்களையும் தாங்கிய சிங்கங்களையொத்த அந்த வானரப்பெருஞ்சேனையானது,—முதலையாகிய நீர்வா

முயிர்கள் நிலைகெட்டோடவும் புனல் அப்பாற்செல்லவும், முயன்று (இலங் கைக்குஉள்ள) கடல்போன்றஅகழியைத் தூர்க்கலாயிற்று; (எ - று.)

'திர்யக்' என்ற வடசொல்லைப்போல, மாஎன்பது மிருகங்கட்கேயன்றிப் பறவைகட்கும் நீர்வாழ்வனமுதலியவற்றிற்கும் வழங்கும் பெயராகும்: 'அசுண மா, "முதலைத்தனிமா", கலிமா' என்பனவுங் காண்க. பி-ம்:—1தாங்கியே. 2போல்வரும். 3இடங்கண்மா. (கூசுசு)

ரு.—அகழிநீர் இலங்கையூரினுட்புறத்துச்சென்று வளைதல்.

ஏய வெள்ள மெழுபது மெண்கடல்
ஆய [1]வெள்ளத் தகழியைத் தூர்த்தலும்
தூய வெள்ளந் துணைசெய்வ தாமென
வாயி லூடுபுக் கூரை [3]வளைந்ததே.

(இ - ள்.) எட்டாங்கடல்போன்று பொருந்திய எழுபதுவெள்ளம் வான ரசேனைகளும் வெள்ளமான நீர்ப்பெருக்கைக்கொண்ட (இலங்கையின்) அகழி யை (மரங்களைக்கொண்டும் மலைகளைக்கொண்டும்) தூர்க்கையில், வெண்ணிற மான அந்தவெள்ளநீர் இராமபிரானுக்குத் துணைசெய்வதுபோல இலங்கை யின்வாசல்கள்வழியாக உட்புகுந்து ஊரை வளைந்துகொண்டது; (எ - று.)

எண்கடலாயவெள்ளத்தகழியை யென்றேயெடுத்து - எட்டாங்கடல்போ ன்ற நீர்வெள்ளத்தையுடைய அகழியையென்றும், மதிக்கத்தக்க கடலாகிய வெள்ளநீரைக்கொண்டுள்ள அகழியை யென்றும் கூறினுமாம்: முன்னைய பொருளில், 'எண்' என்பது-எட்டுஎன்னுந்தொகைப்பெயரின்விகாரம். வெள் ளந்துணைசெய்வதாமென வளைந்தது-பயன்றற்குறிப்பேற்றவணி. பி-ம்:— 1வெள்ளத். 2துணைச். 3வளைந்ததால். (கூசுஎ)

சு.—தாமரைக்கொடிகளை வானரங்கள் பிடுங்கியதன்வருணனை.

விளையும் வென்றி யிராவணன் மெய்ப்புகழ்
முளையி னோடுங் களைந்து முடிப்பபோல்
[1]தளைய விழ்ந்த கொழுந்தடந் தாமரை
வளையம் [2]வன்கையில் வாங்கின வானரம்.

(இ-ள்.) (இதுவரையில்) விளைந்துகொண்டிருந்த வென்றியையுடைய இராவணனது உருவம்படைத்தபுகழைமுளையோடும்பேர்த்தொழிப்பனபோல, முறுக்கவிழ்ந்த செந்தாமரைமலரைக்கொண்ட கொடியின் சிறந்தபெரிய அடிப் பகுதியை, வானரங்கள் (தமது) வலிய கையாற் பிடுங்கின; (எ - று.)

இலங்கையின் அகழியிலிருந்த தாமரைக்கொடிகளை அடிக்கிழங்கோடும் வானரங்கள் பேர்த்தெடுத்தது, இராவணனது மெய்ப்புகழை முளையினோ டுங் களைந்து முடிப்பன போலுமென்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. புகழை வெண்ணிறத்ததாகக்கூறுதல்,கவிமரபு. பி-ம்:—1தளையவிழ்ந்தசெந் தாமரைமாத்தட, தளையவொண்மலர்த்தாமரையின்தட. 2ஒண். (கூசுஅ)

ஏ.—வானரங்கள் தாவிப் பாய்தல்.

[1]ஏழை தார மியம்பிய [2]வண்டுகள்
பாழை தா துகு நீர்நெடும் [3]பண்ணைய
தாள [4]தாமரை யன்னங்க டாவிட
வாளை தாவின வானரந் [5]தாவவே.

(இ - ள்.) வானரங்கள் தாவிக்குதித்தலால், தாரமென்னும் பண்ணினைப் பாடிய ஏழை வண்டுகள் மொய்க்கின்ற (கமுகு தென்னை முதலியவற்றின்) பாளையிலுள்ள தாதுகள் சிந்தப்பெற்ற நீரைக்கொண்ட பெரிய நீர்நிலைகளி லுள்ள நெடுந்தாளுள்ள தாமரைமலரிலே வாழ்கின்ற அன்னங்கள் தாவிச் செல்லும்படி வாளைமீன்கள் தாவிக்குதித்தன; (எ - று)

வானரந்தாவவே அஞ்சி வாளைகள் தாவின: அதனால் அஞ்சி அன்னப் பறவைகள் தாமிருக்கும் தாளதாமரையை விட்டுத்தாவின என்க. பண்ணை-நீர்நிலை. ஏழையென்றசொல்-ழகரளகரப்போலிபெற்று, ஏளையெனவந்தது: அறி யாமையென்னும்பொருளுள்ள ஏழை என்ற இச்சொல், இலக்கணையால் இள மையென்ற பொருளைத் தந்த தென்க. இந்தச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளில் "தண்டிருந்த" (கூ) என்ற பாடலுக்குப் பின்னேயுள்ளது. பி - ம்:—[1]ஊளி தாரம். [2]வண்டுறை. [3]பண்ணைகள், பண்ணைசூழ். [4]தாமரையின்வளந்தாவிட. [5]தாவும். (கசுக)

அ.—கருங்குவளை மூடியிருத்தலின் வருணனை.

இகமுந் தன்மைய னாகிய விராவணன்
புகழு [1]மின்றொடு [2]போயின தாமென
நிகழுங் கண்ணொடு நீல [3]முகிழ்த்தலால்
அகழி தானு [4]மழுவது போன்றதே.

(இ - ள்.) பெருகுகின்ற தேனுடனே நீண்ட கருங்குவளைமலர்கள் குவி தலினால், இகழத்தக்கதன்மையுடையவனாகிய இராவணனது (வலிமையாற் பெற்ற)புகழும் இன்றோடு போய்விட்டதாகுமென்று(இலங்கையின்)அகழி தா னும் அழுவதை யொத்திருந்தது; (எ-று.)—தன்மைத்தற்குறிப்பேற்றவணி. கள்-தேன். கண்ணாகியநெடுநீலம் என்றும் பொருள்படும். பி-ம்:—[1]மேன்மை யும். [2]போயின. [3]வகுத்தலால், நெகிழ்தலால். [4]அழுவனபோன்றவே. (கஎ0)

கூ.—தாமரைக்கொடி பிடுங்கப்பட,
வண்டுகளும் அன்னங்களும் நிலைகெட்டோடுதல்.

[1]தண்டி ருந்தபைந் தாமரை [2]தாளறப்
[3]பண்டி ரிந்து [4]சிதையப் படர்சிறை
வண்[5]டி ரிந்தன வாய்தொ றுற [5]முட்டையைக்
கொண்[5]டி ரிந்தன வன்னக் குழாமெலாம்.

(இ-ள்.) தண்டாகஇருந்த பசியதாமரைக்கொடி அடியோடு பேர்க்கப் பட்டுப்போய்விட்டதனால், பரவிய சிறகுகளையுடைய வண்டுகள் இசைகள் மாறுபட்டுக்கெட நிலைகெட்டு ஓடின; அன்னப்பறவைகளின் கூட்டங்களெ

ல்லாம் (தமது) வாயிலே முட்டையைக்கௌவியவண்ணம் நிலைகெட்டோடின; (எ - று.)—தண்டு-உட்டொளையுள்ளபொருள். பி-ம்:—[1]தண்டிருந்தடர். [2]தாளுடை, தாளிறப். [3]பண்டிருந்த, பண்டிருந்து. [4]சிதையை. [5]இருந்தன, இரிந்தென. [6]முட்டையுப். (கஎச)

க0.—அகழியைத்தூர்த்துமாறு மரம்முதலியவற்றை வானரங்களெறிய அந்நீர் வெளிச்சென்றதன்வருணனை.

தூறு மாமரம் [1]குன்றொடுந்தொடர்
[2]நீறு நீர்மிசைச் சென்று நெருக்கலான்
ஏறு பே[3]ரகழ் நின்று மெழுப்பல
ஆறு சென்றன வார்கலி மேலரோ.

(இ - ள்.) தூறுபோல அடர்ந்துள்ள பெரியமரங்களும் தொடர்ந்த மலைகளும் புழுதிகளும் (அகழியின்) நீரின்மேற்சென்று நெருக்கியதனால், (நீர்)மேலேறிய பெரியஅகழியினின்று மிகப்பலநதிகள்கடலின்மீது சென்றன;(எ-று.)—பி-ம்:—[1]மரமும்மலையுந். [2]சிறுமீமிசைச். [3]அகழின்னின்றினப், அகழின்னின்றெனப். (கஎரு)

கக.—வானரங்கள் அகழியில் மலையைபெறிம்பொழுது நீரில்முழ்கியெழுந்தாமரைமலரின் வருணனை.

இழுகு மாக்க விடுந்தொ றிடுந்தொறும்
[1]சுழிக டோறுஞ் [2]சுரித்திடை [3]தோன்றுதே
னொழுகு தாமரை யொத்தன வோங்குநீர்
முழுகி மீதெழு மாதர் முகத்தையே.

(இ - ள்.) பரவியுள்ள பெரியமலைகளை(அகழியிலே)வீசியெறியுந்தோறும் (தோன்றுகின்ற) சுழிகளின்நடுவிற் புதைந்து (பிறகு) தோன்றுகின்ற தேனொழுகப்பெற்ற தாமரைமலர்கள், அலையோங்குகின்ற நீரிலே முழுகி மேலேயெழுகின்ற மாதரார் முகத்தை யொத்தன; (எ - று.)—தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இழுகுதல்-பரவுதல். பி-ம்:—[1]சுழிகடோன்றும். [2]சுரத்திடைத். [3]தோன்றுவ, தூங்குதேன். இதுவும் அடுத்தசெய்யுளும் ஒருபிரதியி வில்லை. (கஎசா)

கஉ.—அகழியைத் தூர்த்தலைப்பற்றிய வருணனை.

[1]தன்மைக் குத்தலை யாய தசமுகன்
தொன்மைப் பேரகழ் [2]வானரந் [3]தூர்த்தலால்
இன்மைக் கும்மொன் றுடைமைக்கும் யாவர்க்கும்
வன்மைக் கும்மொர் வரம்புமுண் டாங்கொலோ.

(இ - ள்.) மேம்பாட்டுக்கெல்லாம் சிறந்த இடமாகவுள்ள இராவணனது பழமையான பெரிய அகழியையும் வானரங்கள் தூர்த்துவிட்டதனால், எப்படிப்பட்டவர்க்கும் (ஒன்று) இல்லாமைக்கும் ஒன்று உடைமைக்கும் வன்மைக்கும் ஒருவரம்பு உண்டாகுமோ? (உண்டாகாதுஎன்பது பெறப்படுமென்றே?)

தூர்த்தலால் என்பதற்கு, வினை வருவித்து முடிக்க. வானரங்கள் இராவணனுடைய அகழியையும் தூர்த்ததனால், கடல்போன்ற பேரகழிக்கும் இன்

மையேற்பட்டதனால், இன்மை இங்குத்தான் வருமென்று ஓர் வரம்புக்குஉட் படாமையும், அகழியுள்ளஇடம் தரையாய்விட்டதனால் ஒன்றுஉடைமைக்கு வரம்புஇன்மையும் பெறப்படுமென்க. குரங்குகள் தூர்த்ததனால் இங்குத் தான் வல்லமையிருக்குமென்ற ஓர்வரம்பு இன்மையும் பெறப்படுதல் காண்க. பி-ம்:—1தன்மைக்குங். 2நீரொடுங். 3தூர்த்ததால். (கஎச)

கரு.—வானரங்கள் மதிலின்மீதுஏறி ஆரவாரித்தல்.

தூர்த்த வானரந் 1துங்க வரைகளாற்
சீர்த்த 2பேரணை தன்னையுஞ் 3சிந்தின
வார்த்த தன்ன மதிலின் வரம்புகொண்டு
ஆர்த்த வார்கலி காரொடு மஞ்சவே.

(இ - ள்.) ஓங்கியமலைகளைக்கொண்டு(அகழியைத்)தூர்த்த வானரங்கள், சிறப்புப்பொருந்திய பெரிய தடையாயிருந்த அரக்கப்படையையும் அழித்தன வாய், வார்த்தாற்போலுள்ள மதிலின் வரம்பைக் கைப்பற்றிக்கொண்டு, கட லோடு மேகமும்அஞ்சும்படி பேராரவாரஞ்செய்தன; (எ - று.)

மதிலிற்காவலாகவைத்துள்ள படைகளை வானரங்கள் ஒழித்தமையை, 'பேரணைதன்னையுஞ்சிந்தின' என்ற தொடராற் குறித்தார். அணையென்ப தற்கு-அகழியின்கரையென்று உரைப்பாருமுளர். மதிலின் வரம்புகொள்ளு தல்-மதிலின்மீது ஏறிநிற்றல்.1சுள்ளிமடுத்திடஎன்றபாடத்திற்கு-மராமரத்தை (அகழி) கொள்ளுமாறு வீசியதனாலென்க. பி - ம்:—1சுள்ளிபதித்திடை. 2பேரணியாவையும், பேருரண்டன்னையும். 3சிந்திட. (கஎரு)

கசு.—மதிலின்மீதுஏறியிருந்த வானரர்களின் வருணனை.

வட்ட மேரு விதுவென வான்1முகடு
எட்ட நீண்ட மதின்மிசை யேறிவிண்
தொட்ட வானரந் தோன்றின மீத்தொகை
விட்ட வெண்கொடி 2வீங்கின வென்னவே.

(இ - ள்.) வட்டவடிவமாகவுள்ள மேருமலை இதுவாகுமெனக் கருது ம்படி ஆகாயமுகட்டை யெட்டுமாறுநீண்ட மதிளின்மீது ஏறி, ஆகாயத்தைத் தீண்டின வானரங்கள், மேலிடத்தே தொகுதியாகநாட்டிய வெண்ணிறக் கொடி பருத்துள்ளன வென்னுமாறு தோன்றின; (எ - று.)

மதிலின்மேலேறிநின்ற வானரங்கள் மதிளின்மீதுநாட்டிய வீங்கினவெ ண்கொடிகள் போன்றன வென்றார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:— 1முகம். 2வீங்கினது. (கஎசு)

கரு.—வானரர்களின் பாரத்தால் இலங்கைமதில் தரையி லழுந்துதல்.

இறக்க 1வேண்டுவ தில்லை2யெண் ணர்மணி
3வெறுக்கை 4யோங்கிய மேரு 5விழுக்கலான்
நிறுக்க நேர்வரு வீரர் நெருக்கலாற்
பொறுக்க லாது மதிள்தரை 6புக்கதால்.

(இ - ள்.) மதிப்புத்தீர்ந்த [மதிக்கமுடியாதவாறு மிகச்சிறந்த] இரத்தினம்முதலிய பொருள் மிகப்பெற்ற மேருவாகிய சிறந்த எடைக்கல்லினால் சிறுக்க (அப்போது) ஒத்துவருகின்ற வானரவீரர்கள் எறியமுத்தியதனால் அந்தச்சுமையைத் தாங்கமாட்டாமல், மதில்,தானே தறையிலிறங்கிவிட்டது; (அதனால்,அந்தமதிலை)இடிக்கவேண்டியதென்பது (வானரர்கட்கு)இல்லாமற் போய்விட்டது; (எ - று.)

மேருவிழுக்கலால் சிறுக்கநேர் வருவீரர்-மேருவோடொத்த பாரமுடையவர் ஒவ்வொருவானரவீரரும் என்றபடி. எண்தீர்தல்-மதிக்கமுடியாதபடிசிறந்துநிற்றல். பி-ம்:—1வேண்டியது. 2இனமணி. 3வெறுக்க, 4ஓங்கியும். 5எனப்பொலி. 6புக்கதே. (கஎஎ)

சசு.—அரக்கர்போர்க்குஎழுதல்.

அறைந்த மாமுர சானைப் பதாகையான்
1மறைந்த தானெடு வானக மாதிரங்
குறைந்த தூளி குழுமி வின்2ஊடுபுக்கு
உறைந்த 3தாங்கவர் போர்க்கெழு 4மோதையே.

(இ - ள்.) அறையப்பெற்ற பெரியமுரசைத்தாங்கிய ஆனைகளின்மீது பிடித்த பெருங்கொடிகளால் நீண்ட ஆகாயத்தினிடங்கள் மறைந்தன;(சேனைகளாலெழுப்பப்பட்ட) தூசிகள் சேர்தலால் திக்குகள் குறைந்திட்டன; அந்த அரக்கர் போர்க்குப்புறப்பட்ட பேரொலியானது, ஆகாயத்திற்புகுந்து தங்கிற்று; (எ - று.)—மறைந்ததால், ஆல்-அசை.யானைமீது முரசேற்றியறைந்து செய்திதெரிவித்தலும்,யானைகள்மீது கொடிபிடித்தலும் பண்டைக்காலத்துமரபுகள். பி-ம்:—1மறைந்தவால். 2கூடு. 3ஆமவர். 4ஓசையே. (கஎஅ)

கஎ.—அரக்கர்சேனையிற் பலவகையொலி யெழுதல்.

கோட லம்பின கோதை யலம்பின
ஆட லம்பரித் தாரு மலம்பின
மாட லம்பின மாமணித் 1தேர்மணி
பாட லம்பின பாய்மத 2யானையே.

(இ-ள்.)சங்கங்கள் (எங்கும்)முழங்கின;(அவ்வரக்கர்கள் அணிந்துகொண்டிருந்த பலவகை) ஆரங்கள் ஒலித்தன : ஆடுந்தன்மையைக்கொண்டு அழகிய குதிரைகள் பூண்டிருந்த கிங்கிணிமாலைகளும் ஒலித்தன; பெரியமணிகளழுத்திய தேரிற்கட்டியுள்ள மணிகள் பக்கங்களில்ஒலித்தன:பாய்கின்ற மதநீரைக் கொண்ட யானைகளின் இருபக்கங்களிலும் (கட்டியமணிகள் கணீர்கணீரென்று) ஒலித்தன; (எ - று)—சொற்பொருட்பின்வருநிலை பணி. மாமணித்தேர், மாடு-அந்தப்போர்நிகழுமிடத்து, அலம்பின: பாய்மதயானையின் இருபுறத்தும் தொங்கும் மணிகள்பெருமையுற ஒலித்தன என்றுமாம். ஈற்றடிக்கு-பாய்மதயானை போர்படிமிடத்துவீரிட்டன எனினுமாம். பி-ம்:—1தேர்மணிப். 2மாவெலாம். (கஎகூ)

கஅ.—வானரசேனை வந்த அரக்கர்சேனையைத் தாக்குதல்.

அரக்கர் 1தொல்குல 2வேரற 3வல்லவர்
வருக்கம் யாவையும் 4வாழ்வுற வந்ததோர்

கருக்கொள் [5]காலம் விதிகொடு காட்டிடத்
தருக்கி யுற்றெதிர் தாக்கின தானையே.

(இ - ள்.) அரக்கர்கள் பழமையான குலத்தின் வேரோடுஅழியவும்,அவரி னும்வேறுபட்ட தேவர் மனிதர்முதலியோருடைய கூட்டம்எவையும் (வாழ்ச்சியையடையவும் (வேண்டி) வந்ததாகிய ஒப்பற்ற நிமித்தத்தை யுள்ளேகொண்ட காலத்தை விதியே தோற்றுவிக்க, (வானர)சேனைகள் பெருமகிழ்ச்சிகொண்டு போய் (அரக்கர்சேனையை) எதிர்த்துத்தாக்கின; (எ - று.)—பி-ம்:— [1]நற்குலம். [2]மாசற. [3]அல்லவாய். [4]வாழ்ந்துற, வாழ்ந்திட, வாழ்ந்தற.[5]காலவிதி கொடிகாட்டிட, காலம்விடுகொடுங்காட்டிடை. (கூஅ0)

ரகூ.—வானரச்சேனையும் அரக்கர்சேனையும் எதிர்ந்தவகை.

[1]பற்கொ டுங்கெடும் [2]பாதவம் பற்றியுங்
கற்கொ டுஞ்சென்ற தக்கவி யின்கடல்
[3]விற்கொ டுங்நெடு [4]வேல்கொடும் [5]வேறுள
எற்கொ டும்படை யுங்கொண்ட திக்கடல்.

(இ - ள்.) வானரசேனசமுத்திரம், பற்களைக்கொண்டும் பெரியமரங்களைக்கொண்டும் கற்களைக்கொண்டும் (எதிர்க்குமாறு)சென்றது; இந்த(அரக்கர் சேனைக்)கடலோ வில்லைக்கொண்டும் நீண்டவேற்படையைக்கொண்டும்,மற்றுமுள்ள ஒளிபொருந்திய படைக்கலங்களையுங் கொண்டது; (எ-று.)—வானரங்கள் தமதுபற்களும் மரங்களும் கற்களும் படைக்கலமாகக்கொண்டுபொர, அரக்கர் வில்முதலியவற்றைப்படைக்கலமாகக்கொண்டனர். பி-ம்:-[1]பற்கொடு. [2]பாதகம்பற்றிய. [3]விற்கொடு. [4]வேல்கொடு. [5]வேறுளது. (கூஅக)

௨௦.—இனி ஏழுகவிகள்-வானரர்க்கும் அரக்கர்க்கும் நேர்ந்த
நெருங்கியபோரைத் தெரிவிக்கும்.

அம்பு கற்களை யள்ளின வம்பெலாம்
கொம்பு டைப்[1]பணை [2]கூறுற நூறின
வம்பு டைத்திட மாமர மாண்டன
[3]செம்பு கச்சுடர் வேற்கணஞ் [4]செல்லவே.

(இ - ள்.) (அரக்கர்விட்ட) அம்புகள்,(வானரர்விட்ட) கற்களைக் கவர்ந்து பொடிசெய்தன;(அரக்கர்விட்ட)அம்புகளையெல்லாம்கொம்புகளையுடைய பருத்தமரங்கள் துண்டாகுமாறு நீறுசெய்தன:(பகைவரின் இரத்தந்தோய்தலால்) செந்நிறம்வெளிப்படும்படி விளங்குகின்ற வேற்கூட்டங்கள் ஊடுருவிச்சென்றதனால் நறுமணமுள்ள மிகப்பெரியமரங்கள் அழிந்தன; (எ - று.)—பி-ம்:— [1]படை [2]கூறுக. [3]செம்புகாற், செம்புகற்,வெம்புகர்ச், வெம்புகற். [4]சொல்லவே.

௨க. மாக்கை வானர வீரர் மலைந்தகல்
தாக்கி வஞ்சர் தலைக டகர்த்தலால்
நாக்கி னூடுஞ் [1]செவியினு நாகம்வாழ்
[2]மூக்கி னூடுஞ் சொரிந்தன மூளையே.

(இ - ள்.) பெரியகைகளையுடைய வானரவீரர் போரில்வீசிய கற்கள் மோதி வஞ்சராகிய அரக்கரின் தலைகளை யுடைத்தலால், (அவருடைய) நாக்

கின் [வாயின்] வழியாகவும், செவித்தொளேயின்வழியாகவும், பாம்புஉறை கின்ற [புற்றுத்தொளேபோன்றுள்ள] மூக்குத்துவாரத்தின்வழியாகவும் மூளே கள் வெளிப்பட்டன; (எ - று.)—பி-ம்:—1செவிதொறும். 2மூக்கிஞேடுஞ். ()

உஉ. அற்க ளோடு 1நிறத்த வரக்கர்தம்
விற்க ளோடு சரம்பட 2வெம்புணீர்
பற்க ளோடுஞ் சொரிதரப் பற்றிய
கற்க ளோடு 3முருண்ட கவிகளே.

(இ - ள்.) இருளுங் கண்டு தோற்ருேடும்படி (மிகவும்) கருநிறத்தையு டைய அரக்கரின் விற்களிலிருந்து விரைந்துவெளிவந்த அம்புகள் தைத்தத ஞல் தோன்றிய வெவ்விய புண்களிலிருந்து இரத்தநீர் பற்களோடும் சொரி ய(த் தாம் கையிற்) பற்றிய கற்களுடனே குரங்குகள் உருண்டுவிழுந்தன; (எ-று.)—வெம்புணீர்பற்களோடுஞ் சொரிதரக் கற்களோடும் கவிகளுருண்ட- உடனவிற்சியணி. பி-ம்:—1நிகர்த்த. 2வெம்புநீர். 3சொரிந்தன. (கூ௮௪)

உ௩. 1நின்று 2மேரு நெடுமதி ணெற்றியின்
வென்றி வானர வீரர் விசைத்தகல்
சென்று தீயவ 3ராருயிர் சிந்தின
குன்றின் வீழு 4முருமின் குழுவினே.

(இ - ள்.) மேருமலேபோன்று ஓங்கிய மதிளி ணுச்சியில் நின்று வெற்றி பொருந்திய வானரவீரர் விரைந்துவீசிய கற்கள், மலேயில்விழுகின்ற இடிக் கூட்டங்கள்போற்சென்று கொடிய அவ்வரக்கரின் நிறைந்த உயிரை வெளிப் படசெய்தன; (எ - று.)—அரக்கர் குன்றுபோன்ற தோற்றத்த ராதலால், அவர்மீதுவிழுங் கற்களுக்கு, குன்றின்வீழு முருமின்குழாத்தை யுவமைகூறி ஞர். பி - ம்:—1நின்ற. 2பேரும். 3ஆவிசிதைத்தன. 4உருமின்குழுவென, உருவின்குழுவிஞல். (கூ௮௫)

உ௪. எதிர்த்த 1வானர மாக்கையொ டிற்றன
மதிற்2பு றங்கண்டு மண்ணின் 3மறைந்தன
கதிர்க்4கொ டுங்க ணரக்கர் கரங்களால்
விதிர்த்தெ றிந்த 5விளங்கிலே 6வேலினே.

(இ - ள்.) சூரியன்போற் கொடுமையான கண்களேயுடைய அரக்கரின் கைகளால் அசைத்துஎறிந்த விளங்குகின்ற இலேவடிவமைந்த வேல்களால், எதிரிட்டவானரங்கள்பெரிய(தமது)கையோடு(உயிர்)முறிந்தனவாய் மதிளின் வெளிப்பக்கம் விழுந்து மண்ணிலே மறைந்திட்டன; (எ - று.)—பி-ம்:— ஆக்கையொடுஎன்றுபிரித்து - உடலோடுஎனினுமாம். 1வானரம்யாக்கையொ டிற்றன, வானரர்யாக்கையையெற்றின. 2புறங்கொண்டு. 3மறைந்தென. 4கடுங்கண். 5விலங்கிலே. 6வேல்களே. (கூ௮௬)

உ௫. 1கடித்த குத்தின கையிற் 2கழுத்தறப்
3பிடித்த வள்4ளுகி ராற்பிள வாக்கின
இடித்த வெற்றின வெண்ணி லரக்கரை
முடித்த வானரம் வெஞ்சின முற்றின.

(இ - ள்.) வானரங்கள்,---கடுஞ்சினம்மிக்கனவாய்,(பற்களாற்)கடித்தும், கையினாற்குத்தியும், கழுத்து அறுபடும்படி பிடித்தும்,கூரியநகங்களால் இருபிளவாகச்செய்தும், (கைகளால்) தாக்கியும், கால்களா லுதைத்தும், கணக்கில்லாத அரக்கரை உயிரொழித்தன; (எ - று.)—பி-ம்:—[1]கடித்திடித்தன. [2]சமூத்தினில். [3]பிடித்து. [4]உகிரிற். (கூஅஎ)

உக. எறிந்து மெய்து [1]மெழுமுளைத் [2]தண்டுகொண்டு
அறைந்தும் [3]வெவ்வயி லாகத் தழுத்தியும்
[4]நிறைந்த வெங்க ணரக்கர் [5]நெருங்கலாற்
குலைறந்த வானர [6]வீரர் குழுக்களே.

(இ - ள்.) நிறைந்துள்ள கொடுங்கண்ணைக்கொண்ட அரக்கர்(தோமரம் முதலிய படைக்கலங்களை) வீசியும், (அம்புகளை) எய்தும், இருப்புத்தூண் போன்ற பூண்கட்டிய தண்டாயுதத்தால் தாக்கியும், கொடியவேற்படையை உடம்பில்தைக்குமாறு செய்தும் நெருங்கியதனால்,---வானரவீரர்களின்திரள்கள் குறைந்திட்டன; (எ-று.)—பி - ம்:—[1]எழுமழுத். [2]தண்டெடுத்து. [3]அவ்வவர், அவ்வயில், மாவெயில். [4]நிறைந்து. [5]நெருக்கலால். [6]தானைக்குழாமெலாம், தானைக்குழுவெலாம். இச்செய்யுள் சில பிரதியில் இங்கின்றி "பாய்ந்த சோரி" (ருரு) என்றதன்பின் காணப்படுகிறது. (கூஅஅ)

உஎ.—இதுமுதல் நான்குகவிகள்—படுகளச்சிறப்பு.

செப்பிற் செம்புன [1]றோய்ந்த செம்பொன்மதில்
துப்பிற் செய்தது போன்றது சூழ்வரை
[2]குப்புற் றீர்பிணக் குன்று சுமந்துகொண்டு
உப்பிற் [3]சென்ற [4]துதிரத் தொழுக்கமே.

(இ - ள்.) செப்பைப்போற் செந்நிறமான இரத்தநீர் தோயப்பெற்ற செம்பொன்னாலியன்ற (இலங்கையின்)மதிலானது, சூழ்ந்துள்ளதொருமலை பவழத்தாற்செய்ததுபோன்றது; உதிரப்பெருக்கானது, தலைகீழாக்கி இழுக்கப்படுகின்ற பிணக்குன்றுகளைச் சுமந்துகொண்டு இலவணசமுத்திரத்திற் சென்றது; (எ-று.)—பி-ம்:—[1]தோய்த்த, தேய்த்த. [2]குப்பிற்றிண்பிணக். [3]சென்ற. [4]உதிரத்திஞேதமே. (கூஅகூ)

உஅ. வந்தி லரத்த பறவை [1]மயங்கின
அந்த ரத்தி [2]னெருங்கலி னங்கொரு
பந்தர் [3]பெற்றது போன்றது பற்றுதல்
இந்தி ரற்கு மரிய விலங்கையே.

(இ - ள்.) இந்திரனாலும் கைப்பற்றுதற்கு அருமையான இலங்கையானது, வந்து இரைச்சலிடுகின்ற பலசாதிப்பறவைகள் (தம்மிற்) கூடி ஆகாயத்தில் நெருங்கியதனால், அங்கே ஒருபந்தலைப்பெற்றாற்போன்றது: (எ - று.)—தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பந்தர்பெற்றபடியினால் வானத்தினின்று இழிந்துவந்து இலங்கையைச் சேர்தல் இந்திரற்கும் அரியதாயிருந்ததெனக் கருத்துப்பட வுரைத்தாருமுளர். பி - ம்.—[1]வயங்கின, மயங்கியே. [2]நெருங்கினவங்கொரு, நெருங்கலின்வந்தொரு, மயங்கலினங்கொரு. [3]உற்றது. (கூகூ0)

௨௯. தங்கு [1]வெங்கன லொத்துத் தயங்கிய
பொங்கு [2]வெங்குரு திப்புனற் செக்கர்பூங்
கங்கு [3]லன்ன கவந்தமுங் கையெடுத்து
அங்கு மிங்குநின் [4]றுடிய வாமரோ.

(இ - ள்.) தங்குகின்ற கொடிய நெருப்புப்போல்விளங்கிய பொங்குகின்ற வெவ்வியகுருதிப்புனலாகிய செவ்வானத்திலே அழகிய இரவுபோன்ற [கருநிறத்தனவான] உடற்குறையும் கையையெடுத்து அங்கும் இங்கும் நின்று ஆடலாயின; (எ - று.)—"பேரொத்தவாயிரம்பேர் மடிந்தாற்பிறக்குங் கவந்தம், நேரொத்தவாடும்" என்பர், பிள்ளைப்பெருமாளையங்கார். பி-ம்:—1வெங்கனலோடும். 2செம்புனலோடும்பொருந்திய, செம்பருந்தோடும்பொருந்திய. வெங்குருதிப்புனற்செக்கர்முன். 3என்னக். 4ஆடினவாமரோ, ஆடினதாலரோ.

௩௦. கொன்[1]னி றக்குரு திக்குடை புட்களின்
தொன்னி றச்சிறை யிற்றுளி தூவலாற்
பன்னி றத்த பதாகைப் பரப்பெலாம்
செந்நி றத்தன [2]வாய்நிறந் தீர்ந்தவே.

(இ - ள்.) (பார்ப்போருக்கு) அச்சத்தைவிளைக்கின்ற (செந்)நிறமுள்ள இரத்தவெள்ளத்திலே மூழ்குகின்ற பறவைகளின் பழமையான அழகிய சிறகுகளிற்படிந்த இரத்தத்துளி சிந்துவதனால், பலநிறத்தைக்கொண்டனவான பெருங்கொடிகளின் தொகுதிமுழுவதும்,— செந்நிறத்தையடைந்தனவாய் மற்றைநிறங்கள் நீங்கப்பெற்றன; (எ-று.)—பிறிதின்குணம்பெறலணி. பி-ம்: —1நிறத்தகுருதிக்கடல்புடை, நிறக்குருதிக்கிடைபுக்கினன், நிறக்குருதிக்குடைபுட்குலம். 2வானிறந்தீர்ந்ததே. (௧௧௨)

௩௧.—எஞ்சியவானரங்கள், அரக்கரோடு எதிர்க்கமுடியாமல், மதிளினின்று வெளிப்புறத்திற் கீழிறங்குதல்.

பொழிந்த சோரிப் புதுப்புனல் பொங்கி[1]மீ
வழிந்த மாமதில் கை[2]விட்டு வானரம்
ஒழிந்த மேருவி னும்பர்விட் டிம்பரின்
இழிந்த மாக்கட லென்ன [3]விழிந்தவே.

(இ - ள்.) வானரங்கள்,—வலியொழிந்தனவாய், சிந்திய இரத்தமாகிய புதுவெள்ளம் பொங்கி மேல்வழியப்பெற்ற பெரியமதிலைக்கைவிட்டு, மேருவின்மேலிடத்தைவிட்டு இப்பக்கத்திலிறங்கின பெரியகடல்போலக் கீழேயிழிந்தன; (எ-று)—"செப்பிற்செம்புனலேய்ந்தசெம்பொன்மதில்" என்றதற்கு ஏற்ப 'சோரிப்புதுப்புனல்பொங்கும் வழிந்தமாமதில்' என்றார்; இனி, 'சோரிவழிந்த' என்று மதிலுக்கு அடைமொழி கொடுத்தது மதிலைவிட்டு வானரம் இழிந்ததற்குக் காரண மென உரைப்பாரு முளர். உம்பர் - அந்தப்பக்கமென் பாருமுளர். பி - ம்:—1மேல். 2விட்ட. 3இழிந்ததே. (௧௧௩)

௩௨.—அரக்கர் மதிண்முதலியவிடங்கும் முற்றும் நிற்றல்.

[1]பதன முமமதி லும்[2]படை நாஞ்சிலும்
[3]கதன வாயிலுங் [4]கட்டுமட் டாலையும்

முதல யாவையும் புக்குற்று முற்றின
[5]விதன வெங்க ணிராக்கதர் வெள்ளமே.

(இ - ள்.) (கண்டோர்க்கு) விசனத்தையுண்டாக்கவல்ல கொடுங்கண்ணைக்கொண்ட இராக்கதரின் பெருந்திரள்கள், மதிளினுள் மேடையும் மதிளும், கற்படுக்கப்பட்ட நாஞ்சிலென்னும்உறுப்பும், கொடியகோட்டைவாசலும் கட்டப்பட்ட அட்டாலைகளும் முதலிய எல்லாவிடங்களிலும் புகுந்து நிரம்பின; (எ - று.)—பதனம்=பதணம்: மதிளினுள்மேடை. [1]பதணமென்ற பாடமும் உண்டு. அட்டாலை-கோட்டைமதிலின் மேல்மண்டபமென்பர். பி-ம்:--[2]படர். [3]கதவும், கதவ. [4]கட்டியட்டாலையும், கட்டினட்டாலையும்,கட்டிலட்டாலையும், கட்டின்மட்டாலையும். [5]விதலை. (கககச)

ங.ங.—அரக்கர்சேனை நிரம்ப, வானரசேனை ஓடுதல்.

பாய்ந்த சோரிப் பரவையிற் பற்பல
நீந்தி [1]யேகு நெருக்கிடச் [2]செல்வன
சாய்ந்து சாய்ந்து [3]சரம்படத் தள்ளலுற்று
ஓய்ந்து [4]வீழ்ந்த சிலசில வோடின.

(இ - ள்.) (அரக்கர்) நெருக்கியதனால் (வேற்றிடத்திற்குச்) செல்வனவாய் பற்பலவானரங்கள்பாய்ந்த இரத்தக்கடலில் நீந்திச்செல்லுவனவாயின: சில வானரங்கள் வலிமிகவும்ஒடுங்கி,(அவர்களின்)அம்புகள்படுவதனால் தள்ளப்பட்டுஉயிரொடுங்கி விழுந்தன: சிலவானரங்கள் (உயிர்தப்பும்படி) ஓடலாயின;(எ - று.)—பி-ம்:—[1]ஏகுநெருக்கிடைச்,ஏகநெருங்கி, ஏறநெருக்கிடை,ஏகிநெருக்கிட, எங்குநெருக்கின. [2]இடைச்செல, சிற்சில. [3]படை, தாம். [4]வீழச்.()

ங.ச.—அரக்கர் ஆரவாரஞ்செய்தல்.

தழிய வானர மாக்கடல் சாய்தலும்
[1]பொழியும் வெம்படைப் போர்க்கட [2]லார்த்தலால்
ஒழியுங் காலத் துலகொரு மூன்றுமொத்து
அழியு [3]மாக்கட [4]லார்ப்பெடுத் தாயரோ.

(இ-ள்) (மதிளைத்)தழுவிய வானரமாக்கடலானது வலியொடுங்குதலும்,--பொழிகின்ற கொடிய ஆயுதங்களையுடைய போர்செய்வதை மேற்கொண்ட அரக்கர் சேனையாகிய கடல்,—பேராரவாரஞ்செய்தலால், யுகாந்தகாலத்திலே ஒருமூன்றுலகங்களும் ஒருசேரஅழிதற்குக்காரணமான பெருங்கடல் ஆர்ப்பெடுத்ததை ஒத்திருக்கும்; (எ - று.) 'ஆய்' என்ற வினையெச்சம், வருவிக்கப்பட்ட முற்றோடுமுடியும்; இனி, ஆயர்எனஎடுத்து ஆகியரென்ற வியங்கோள் முற்றின் விகார மெனக் கூறுவாரு முளர். பி - ம்:—[1]பொழிய. [2]ஆர்த்ததால், ஆர்த்தன. [3]மால்கடல். [4]ஆர்ப்பெடுத்தென்னவே: ஆர்ப்பெடுத்தாலரோ. ()

ங.ரு.—அரக்கர் பக்கத்துச்சேனையிற்பலவகையொலியெழுதல்.

முரசு மாமுருடும்[1]முரல் சங்கமும்
உரைசெய்காளமுமாகுளி யோசையும்

2விரைசும் பல்லியம் வில்லர வத்தொடுந்
திரைசெய் வேலைக்கொ ராகுலஞ் 3செய்தவே.

(இ - ள்.) முரசவாத்தியமும் பெரியமுருடு என்னும்வாச்சியமும் ஒலிக்குந்தன்மையுள்ள சங்கவாச்சியமும், சிறப்பித்துச்சொல்லப்படுகின்றஎக்காளமும், ஆகுளியென்னும் சிறுபறையும் ஆகிய இவ்வாறு பொருந்திய பலவகை வாச்சியங்களினொலியும், வில்லையெய்யும்ஒலியோடுசேர்ந்து. அலைவீசுகின்ற கடலுக்கும் ஒருகலக்கத்தையுண்டாக்கின; (எ-று.)—முரசுமுதலியவற்றின் ஓசைகள் கடலோசையினும்விஞ்சியிருந்தன என்பது கருத்து. பி - ம்:—1முரட். 2விரசு, விரவும், விரைசெய். 3செய்ததே. (கககஎ)

௩௬.—இலங்கையின் நான்குவாயிலாலும் இராட்சத சேனை புறப்பட்டு வருதல்.

ஆய 1காலை யனைத்துல குந்2தரும்
நாய கன்3முக னூடுநடந்தெனை
மேய சேனை விரிகடல் 4விண்குலாம்
5வாயி லூடு 6புறப்பட்டு வந்ததே.

(இ - ள்) அப்போது படைக்கின்றகடவுளான பிரமதேவனது நான்கு முகத்தினூடும் எல்லாவுலகங்களும் வெளிப்பட்டுவந்தாற்போல, பொருந்திய (இராட்சச) சேனையாகிய பரவியகடலானது ஆகாயம்வரையிலோங்கிவிளங்குகின்ற (இலங்கையின்) நான்குவாயிலின்வழியாக வெளிப்பட்டுவரலாயிற்று.

அனைத்துலகும் நடந்தென என இயையும். அனைத்துலகும் என்பதை 'தரும்' என்பதனோடு இயைப்பின், 'நடந்தென' என்பதற்கு எழுவாய் வருவித்துஉரைக்கவேண்டும். பி-ம்:—1காலத்து. 2மலர். தரு. 3முகத்தன்று, முகனுவின், முகத்தாறு. 4விண்குலாய், விண்ணுறும், விண்ணகர். 5வாயிலூடும், வாயில்தோறும். 6புறத்துவளர்ந்ததே, புறத்தும்வளைந்ததால். (ககக௮)

௩௭.—வெளிவரும் யானைப்படைகளின் வருணனை.

நெடிய காவத 1மெட்டு நிரம்பிய
2படிய 3வாயிற் பருப்பதம் 4பாய்ந்தெனக்
கொடியொ டுங்கொடி சுற்றத் 5தொடுத்ததண்டு
ஒடிய 6வூன்றின மும்மத வேழமே.

(இ - ள்) நீண்ட எட்டுக்காதவழிதூரம் நிரம்பிய தன்மையுடையனவான மும்மதங்களையுடையயானைகள்,-கோபுரவாயில்களிலேமலைகள்பாய்ந்து சென்றாற்போல (தம்மீதுவைத்துள்ள)கொடியுடனே கொடிகள் சுற்றிக் கொள்ளவும், (கொடி) தொடுக்கப்பட்டுள்ள தண்டுகள் ஒடியவும் தள்ளிக்கொண்டு வெளிவந்தன; (எ - று.)

சதுரங்கசேனை வெளிவருதலைப்பொதுவாகக்கூறியகவி இதுமுதல் நான்குகவிகளால் முறையே யானை தேர் குதிரை, காலாள்சேனைகள் வெளிவருதலின் வருணனையை ஒவ்வொருசெய்யுளாற் கூறுவர். யானைகளின்மீது கொடிகளைவைத்தல் மரபாதலால் அங்ஙனம் கொடிகள் நிறுத்திய பலயானைகள் ஒரு

ங்கே வரும்போது ஒன்றன்மீதுள்ளகொடி மற்றொன்றன்மேலுள்ள கொடியோடு சுற்றிக்கொள்ள, அந்நிலையில்தானே நடந்துசெல்வதனால் கொடியுள்ள தண்டங்கள் ஒடியலாயினவென்க. ஊன்றுதல் தள்ளுதலென்னும் பொருளதாதலை "நூக்க லூன்ற லுேன்ற றள்ளல்" என்ற திவாகரத்தாலும் அறிக. ஓங்கல்-ஓங்கியிருப்பதெனக் காரணக்குறி: ஆகுபெயரால், யானையைக் காட்டிற்று. பி-ம்:—1விட்டு. 2படியின், படிகொள். 3மீதிற். 4சார்ந்தெனக். 5கொடுத்த. 6ஓங்கின. (கககக)

ரு அ.—வெளிவரும் தேர்களின் வருணனை.

சூழி யானை 1மதம்படு தொய்யலின்
ஊழி நாணெடுங் காலென 2வோடுவ
3பாழி யாள்4வயி ரப்படி பன்முறை
பூழி யாக்கின பொன்னெடுந் தேர்களே.

(இ-ள்.)பொன்னாலாகியநெடியதேர்கள்,—முகபடாத்தையணிந்தயானைகளின் மதம் பெருகுவதனால்தோன்றிய சேற்றிலே யுகாந்தகாலத்திலே சண்டமாருதம்வீசுவதுபோல விரைந்தோடுவனவாய், வலிமையைக் கொண்டு உறுதியுள்ள பூமியைப் பலமுறைத்தூளியாகச்செய்தன;(எ-று.)—பி - ம்.—1மதப்படு. 2ஓடின. 3பாழியாழ், பாழிவாய், பாழிவாள், பாழிசால். 4நெடுங்கற்படப்பட்டன. (சOOO)

ரு கூ.—வெளிவருங் குதிரைகளின் வருணனை.

பிடித்த 1வானரம் பேரெழிற் றோள்களால்
இடித்த மாமதி 2லாடை யிலங்கையாள்
3மடுத்த மாக்கடல் வாவுந் திரையெலாங்
குடித்துக் கால்வன 4போன்ற குதிரையே.

(இ - ள்.) (இலங்கையை) முற்றுகைசெய்த வானரங்கள் மிக்க எழுச்சியைக்கொண்ட (தமது) தோள்களால் இடிக்கப்பட்ட பெரியமதிளாகிய ஆடையையுடைய இலங்கையென்னும் பெண், குடித்துஉட்கொண்டதான பெரிய கடலிலே தாவிப்பாய்கின்ற அலைகளெல்லாம் வெளிப்படுவனவற்றையொத்தன, (வெளிவந்த) குதிரைகள்; (எ - று.)

வானரங்கள் இலங்கையின் மதிலையிடித்ததனால், அகழாக இருந்த கடல் போன்ற நீரின்திரைகள் உள்ளே சென்றவை வெளிப்பட்டுவருவனபோலக் குதிரைகள் கோபுரவாயிலின்வழியாக வெளிப்பட்டனவென்றார்: நன்மைத் தற்குறிப்பேற்றவணி: எழிலாவது - வளர்ந்துஅமைந்ததன்றி இன்னும் வளருமென்பது போன்றிருக்கை. பி - ம்.—1வானரப். 2ஆடலிலங்கையுள். 3மடுத்துமாக், மடித்தமாக், வடித்தமாக். 4போலும். (சOOக)

சo.—வெளிவரும் அரக்கவீரரின் வருணனை.

1கேழில் ஞாலங் 2கிளத்திய தொன்முறை
நாளு நாளு நடந்தன நள்ளிரா
நீள மெய்தி யொருசிறை நின்றன
3மீளு 4மாலையும் போன்றனர் வீரரே.

(இ - ள்.) ஒப்பில்லாத ஞாலத்திலே பழமையாகச் சொல்லுகின்ற நாள் தோறும் கழிந்தனவான நள்ளென்னும் ஒலிபடைத்த இரவுகள் நீளம்பொருந்தி ஒருபுறத்திலே நின்றவை,—(அங்ஙனம் நின்றதன்மைநீங்கி) மீளுந்தன்மையைப் போன்றனர், (வெளிவந்த) இராட்சசவீரர்; (எ - று.)

இலங்கையிலிருந்து கருநிறங்கொண்ட மிகப்பலர்வந்தது - அநாதிகாலமாகக் கழிந்த பலநாள்களின் இராப்போதெல்லாம் ஓரிடத்தில்தங்கிநின்றவை இப்போது வெளிப்பட்டுவருவன போலுமென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. கேளிரென்றுபாடங்கொண்டு ஒருசாரார்கூறும்பொருள் வருமாறு:— கேளிரைப்பற்றி ஞாலம் தொன்முறை கிளத்தியது-"சுற்றத்திற்கழகுசூழவிருத்தல்" என்பது: இலங்கையிலிருந்த ராட்சசவீரர்கள், நாள்தோறும் மேன்மேல் எண்ணிக்கையில் மிக்கவரானது-தினந்தோறும் தோன்றுகின்ற இராப்போதெல்லாம் அங்குத்தானே தங்கியிருப்பதனுற் போலு மெனவும்,இப்போது அந்தராட்சசவீரர் வெளிப்பட்டது அங்ஙனந்திரண்டு ஒருசிறைகிடந்த இரவெல்லாம் மீள்வதுபோலுமெனவும் வருணித்தவாறு: கருநிறமுடைமையால் இரவு அரக்கர்க்கு இனமாகும்: ஆகவே அரக்கருள்ளவிடத்தில்தானே நாடோறுந்தோன்றும் இரவுகள் இருப்பனவாயிவென்க. பி-ம்:—1கேழில், கேளில். 2கிளர்த்திய. 3வீழும். 4மாலைய. (௪௦௦௨)

௪௧.—பெருந்தூளி யெழுதல்.

பத்தி வன்றலைப் பாம்பின் பரங்கெட
முத்தி நாட்டின் 1முகத்தினை 2முற்றுறப்
பித்தி 3பிற்பட வன்றிசை 4பேர்வுறத்
5தொத்தி மீண்டில வானெடுந் தூளியே.

(இ-ள்.)(இப்படிப்பட்ட நால்வகைச்சேனைகளால் எழுப்பப்பெற்ற)மிக்க தூளிகள்,—வரிசையாகவுற்ற வலியதலைகளை [ஆயிரந்தலைகளை]க் கொண்ட ஆதிசேஷனுடையபாரம் குறையுமாறு வானநாட்டினிடத்தை வளைந்துகொள்ளும்படியும், அண்டபித்தி பிற்படும்படியும், வலியதிசைகள் நிலைபேரும்படியும் தொத்திக்கொண்டு மீளாதனவாயின; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

ஆதிசேஷன் தாங்குகின்ற பூமியானது புழுதியாகி முத்திநாட்டினை முற்றினபடியால், அவ்வாதிசேஷனது தலைப்பாரம் கெடுமென்க. அண்டபித்திக்கும் அப்பால் முத்திநாடுவரையிலும் தூளி சென்றதனால்,அண்டபித்தி பிற்பட்டது: இது-தொடர்புயர்வுநவிற்சியணி. தொத்துதல்-(அங்குத்தானே) பற்றியிருத்தல். பி-ம்:—1முகட்டினை. 2முந்துறப், மொய்த்துறும். 3பித்திபடத். 4பேர்வறத். 5தொத்திருண்டில, தொத்திமீண்டிலது. (௪௦௦௩)

௪௨.—நிலைகெட்ட நரர்குச்சேனை சுக்கிரீவனைச்சேர்தல்.

1நெருக்கி வந்து நிருதர் 2நெருங்கலாற்
குரக்கி னப்பெருந் 3தானை குலைந்துபோய்
4அருக்கன் மாமக னாம ராசையாற்
செருக்கி 5நின்றவ னின்றுழிச் சென்றவால்.

(இ - ள்.) (தம்மை) நெருக்கிக்கொண்டேவந்து இராட்சசவீரர் நெருங்குவதனாற் குரங்குகளின் கூட்டமான பெருஞ்சேனைகள்,--நிலைகுலைந்துபோய், போர்புரியவேணுமென்ற விருப்பத்தோடு கர்வங்கொண்டுநின்றவனான சூரிய குமாரனான சுக்கிரீவன் நின்றஇடத்திலே போய்ச்சேர்ந்தன; (எ-று.)—பி-ம்:- [1]நெருக்க. [2]நெருக்கலால். [3]சேனை. [4]அருக்கனார். [5]நின்றவர். (கOOச)

சஙு.—அதுகண்டு சுக்கிரீவன் போருமாறு மராமரமொன்றை யேந்துதல்.

[1]சாய்ந்த தானைத் தளர்வுஞ் [2]சலத்தெதிர்
பாய்ந்த தானைப் பெருமையும் பார்த்துறக்
காய்ந்த [3]நெஞ்சன் கனல்சொரி கண்ணினன்
ஏய்ந்த தங்கொர் மராமர மேந்தினான்.

(இ - ள்.) வலிகுறைந்தவானரசேனையின் தளர்ச்சியடைந்தநிலைமையையும் சினத்தோடு எதிரேபாய்ந்துவந்த அரக்கச்சேனையின் பெருமிதத்தையும் பார்த்து,--மிகவும் கோபங்கொண்ட நெஞ்சையுடையவனும் நெருப்புப்பொறி பறக்கின்ற கண்களையுடையவனுமாகி, (சுக்கிரீவன்),---அங்கேகிடந்ததொரு மராமரத்தை யெடுத்துக்கொண்டான்;(எ-று.)—பி-ம்:--[1]சார்ந்த.[2]சலித்தெதிர். [3]நெஞ்சின். (கOOரு)

சச.—சுக்கிரீவனொருவனே நால்வகைச்சேனைகளினும் முன்னின்று எதிர்த்தல்,

வார ணத்தெதிர் வாசியி னோர்வயத்
தேர்மு கத்தினிற் சேவகர் மேற்செறுத்து
ஓரொ ருத்தர்க் [1]கொருவரி னுற்றயர்
தோர ணத்தொரு வன்னெனத் தோன்றினான்.

(இ - ள்.) (அப்போது சுக்கிரீவன்),—யானையினெதிரிலும் குதிரையினெதிரிலும் வெற்றிபொருந்திய தேரினெதிரிலும் இராட்சசவீரரெதிலும் கோபித்துநின்று,ஒவ்வொருத்தர்க்குமுன்னும் ஒவ்வொருசுக்கிரீவன்இருப்பது போல(ச் சாரிகைவருவதாற்) பொருந்தி,தோரணவாசலிலேயிருந்து பொருத அனுமான்போலத் தோன்றினான்; (எ - று.)—அநுமான் பொழிலிறுத்தபின் தோரணவாசலிலேயிருந்து கிங்கரர்முதலிய அரக்கவீரரோடு பொருதமையைச் சுந்தரகாண்டத்திற் பரக்கக்காணலாம். தோரணம்-கட்டுவாயில்.பி-ம்:— [1]ஒருத்தரினுற்றயர், ஒருவருற்றரெனத். (கOOசு)

சரு.—சதுரங்கசேனைகளையும் அம்மராமரத்தைக்கொண்டு சுக்கிரீவன் வீசுதல்,

களிறு மாவு நிருதருங் [1]காலற
ஒளிறு மாமணித் தேரு முருட்டிவெங்
குளிறு சோரி யொழுகக் [2]கொதித்திடை
வெளிறி லாமர மேகொண்டு வீசினான்.

(இ - ள்.)யானைகளும் குதிரைகளும் அரக்கவீரர்களும் கால்முறிந்துபோகுமாறும் விளங்குகின்ற சிறந்த மணிகளழுத்திய தேரும் உருளும்படியுஞ்

செய்து,(பார்ப்பவர்க்கு)அச்சத்தைத்தருகின்ற உஷ்ணமுள்ள இரத்தம்(ஆறு ய்ப்)பெருக மிகவும்கோபித்து, நடுவில் வெளியில்லாத [முழுவயிரமுள்ள] அந்தமராமரத்தையே கொண்டு சுழற்றினன்,(சுக்கிரீவன்);(எ-று.) பி-ம்:-1கா லிற, காலுற. 2கொதித்துடை. (கஇ0எ)

சசு.—அப்போது சுக்கிரீவனை வானரவீரர் வந்துகூடுதல்.

அன்ன காலை 1யரிக்குல 2வீரரும்
மன்னன் முன்3புக வன்க ணரக்கரும்
முன்4னு ழந்த முழங்கு 5பெருஞ்செருத்
தன்னில் வந்து தலைமயக் 6குற்றனர்.

(இ - ள்.) அப்போது அரசனை சுக்கிரீவன் முன்னேபுகவே, அரிக்கு லவீரர்களும் கொடுங்கண்ணையுடைய அரக்கர்களும் முன்புமுயன்றுபொருத முழங்குகின்ற பெரும்போரில் வந்து சேர்ந்துகொண்டார்கள்; (எ - று.)— பி-ம்:—1அரிகுல. 2வீரர்தம். 3மத. 4எழுந்து. 5பொருஞ். 6உற்றதால், உற்ற வால். (கஇ0அ)

சஎ.—அரக்கரும் வானரர்களும் மடிதல்.

கற்று ரந்த 1களம்பட வஞ்சகர்
இற்2று லந்து 3முடிந்தவ ரெண்ணிலர்
விற்4று ரந்தன வெங்கணை யாலுடல்
அற்று லந்த 5குரங்கு மனந்தமே.

(இ - ள்.) போர்க்களத்திலே (வானரர்கள்) துரந்த கற்கள் பட்டதனால் வஞ்சகரான அரக்கரில் உயிரிற்று ஆயுள்குறைந்து மாண்டவர் எண்ணில்லா தவராவர்;(அரக்கரின்)விற்கள் வெளிப்படுத்தியனவான கொடிய அம்புகளால் உடல்அற்று இறந்த குரங்குகளும் அனந்தங்களாம்;(எ-று.)—பி-ம்:—1களம் பட, படக்கழல். 2உலர்ந்து. 3முடிந்தனர். 4துரந்தகணைபடவெங்களத்து. 5கவியுமனந்தமால். (கஇ0க)

சஅ.—வானரங்களால் அரக்கர் மிகுதியாகஇறந்தல்.

1கற்க டந்து நிமிர்ந்த கடுஞ்செரு
மற்க டங்கள் 2வலிந்து 3மலைந்திடத்
தற்க டங்கி யுலந்தவர் தம்முயிர்
தெற்4க டங்க நிறைந்து 5செறிந்தவால்.

(இ - ள்.) மும்மரமாகஉண்டான கொடும்போரிலே வானரங்கள் (தம்) வலிமையைக்காட்டிக் கற்களை வீசிப்பொர, (தமது) செருக்குக் குலைந்து மாண்டவரான அரக்கரின் உயிர் தென்திசை முழுவதும் நிறைந்து நெருங் கின; (எ - று.)—முதலடியில், கற்கள் தந்து எனப்பிரிக்க. பி - ம்:—1கற் கடந்துநிமிர்ந்து, கற்கடந்துதுரந்த, கற்கடங்கள்துரந்தன. 2மலிந்து. 3மலைந் திடு. 4அடங்கி. 5செறிந்ததால். (கககம)

சகூ.—படுகளச்சிறப்பு.

பாடு கின்றன பேய்க்கணம் பல்விதத்து
ஆடு கின்ற வறுகுறை யாழ்கடற்கு

[1]ஓடு கின்ற வுதிரம் புகுந்[2]துயிர்
நாடு கின்றனர் கற்புடை நங்கைமார்.

(இ - ள்.) பேய்க்கணங்கள்,(மகிழ்ச்சியடைந்து) பாடுவனவாயின: அற்ற உடற்குறை பலவகையாக ஆடுவனவாயின;(இறந்தவீரர்களின் உடலிலிருந்து பெருகிய) இரத்தம் ஆழ்ந்தகடலைநோக்கி ஓடுவனவாயின; கற்புடைமகளிர் (போர்க்களத்திற்)புகுந்து கணவனை நாடுபவராயினர்; (எ - று.)—உயிர்-உயிர் போன்ற கணவன். பி-ம்:—[1]ஓடுகின்றது. [2]உடல். (சOகக)

ருO.—இரத்தப்பெருக்கு.

[1]யானை பட்ட வழிபுனல் [2]யாறெலாம்
[3]பானல் [4]பட்ட [5]பலகணை [6]மாரியின்
சோனை பட்டது சொல்லரும் வானரச்
சேனை பட்டது பட்டது [7]செம்புணீர்.

(இ-ள்.) (வானரங்களால் தாக்குண்ட) யானைகள்(துண்டுபட்டு)இறந்ததனாற் பெருகுகின்ற இரத்தநீராலாகிய யாறுகளெல்லாம், கடலிற்போய்ப் பாய்ந்தன; (அரக்கரின் பல) அம்புகளின்பெருமழை யுண்டாயிற்று; (அதனால்), வானரச்சேனை இறந்துபட்டது; இரத்தநீர் தோன்றிற்று; (எ - று.)

அழிதல் பெருகுதலாதலை "அழிபுனலஞ்சனமாநதியே" என்ற சிந்தாமணியிலுங் காண்க. பானல் கடலென்னும்பொருளுமுடைய தாதலை "பானலே கடல் குதிரை வெற்றிலை, பழன நெய்தல் கள்ளென் றறுபெயர்" என்ற நிகண்டினாலும் அறிக. துண்டுபட்டயானையின் குருதிநீர் கடலிற் சேரவும், அவ்விடத்து அரக்கரின் அம்புமழைகளாலறுபட்ட வானரர்களின்குருதிநீர் நிரம்பிற்றென்க. பி-ம்:—[1]ஆனை. [2]ஆறு. [3]பானை. [4]பட்டன. [5]பல், போல். [6]மாரிகள். [7]செம்புனல். இச்செய்யுளுள்ளவிடத்து இதற்குப்பிரதியாக

ஆனை பட்டன வடுபரி பட்டன
தானை பட்டது தாரிர தங்கனை
சோனை பட்டது துன்னரும் வானரச்
சேனை பட்டது பட்டது செங்களம்.

என்று ஒருபாடல் காண்கின்றது. (சOகஉ)

ருக.—வானரச்சேனையால் அரக்கர்சேனை தகர்தல்.

காய்ந்த வானர வீரர் கரத்தினால்
தேய்ந்த வாயுள ரானவர் செம்புணீர்
பாய்ந்த தானைப் படுகளம் பாழ்படச்
சாய்ந்த தானிரு தக்கடற் றானையே.

(இ - ள்.) கோபித்த வானரவீரரின் கையாற் குறைந்தஆயுளையுடையவரான அரக்கரின் செந்நிறமுள்ளபுண்ணீரானது,பாய்ந்தது; ஆனைச்சேனையழிந்த போர்க்களம் பாழடையும்படி நிருதரின்சேனைக்கடல் வலியொடுங்கிப் போய்விட்டது; (எ - று.)—தானைப் படுகளமென எடுப்பினுமாம். (சOகங)

௫௨.—அப்போது வச்சிரமுஷ்டியென்னும் அரக்கன் எதிர்த்து வருதல்.

தங்கண் மாப்படை சாய்தலுந் [1]தீயெழ
வெங்கண் வாளரக் கன்[2]விரை தேரினைக்
கங்க சாலந் தொடரக் கடற்[3]செலூஉம்
வங்க மாமென வந்தெதிர் [4]தாக்கினான்.

(இ - ள்.) தங்களுடைய [அரக்கருடைய] பெரியசேனை வலியொடுங்கிப் போய்விடவும், (தன் கண்களில்) தீப்பொறிபறக்கக் கொடுங்கண்ணையுடைய கொடிய (வச்சிரமுஷ்டியென்னும்) அரக்கன்,-விரைந்துவருந் (தன்) தேரைப் பருந்துக்கூட்டங்கள்தொடருமாறு கடலிலே மரக்கலஞ்செல்வதுபோல (விரைந்து) வந்து (வானரர்க்கு) எதிரில் மோதினான்; (எ - று.)

இங்குக்கூறிய அரக்கன் வச்சிரமுட்டியென்பது - "மலைகுலைந்தெனவச் சிரமுட்டிதன், நிலைகுலைந்துவிழுதலின்" என மேல் ௫௫ - ஆவதுபாடலில் வருவதனால் விளங்கும். பி-ம்:-[1]தீயெழும். [2]விசைத். [3]செலும். [4]தோன்றினான்.

௫௩.—வச்சிரமுஷ்டி உக்கிரமாகப் போருதல்.

வந்து [1]தாக்கி வடிக்கணை மாமழை
சிந்தி வானரச் சேனை சிதைத்தலும்
இந்தி ராதிய ருந்நிகைத் [2]தேங்கினார்
நொந்து சூரியன் கான்முளை நோக்கினான்.

(இ - ள்.) (தேரில் விரைந்து) வந்து (வச்சிரமுஷ்டியென்பவன்) கூரிய அம்புகளினாலாகிய மிக்கமழையைச் சிந்தி வானரச்சேனையைத் தாக்கிச் சிதைத்தவளவில்,—இந்திராதியரான தேவர்களும் திகைப்புக்கொண்டு, (சுக்கிரீவனுக்குஎன்னநேருமோ என்று) ஏக்கமுற்றனர்; சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன் வருந்தி (எதிரியை)ப்பார்த்தான்; (எ - று.)—பி-ம்:—[1]தாங்கி. [2]ஏகினார். (௧0௧௫)

௫௪.—வச்சிரமுஷ்டியைச் சுக்கிரீவன் சிதைத்தல்.

நோக்கி வஞ்ச னொறில்வய மாப்புரி
வீக்கு [1]தேரினின் மீதெழப் பாய்ந்துதோள்
தூக்கு தூணியும் வில்லுந் [2]தொலைத்தவன்
யாக்கை யுஞ்சிதைத் திட்டெழுந் தேகினான்.

(இ - ள்.) (அங்ஙனம்) பார்த்து, (சுக்கிரீவன்),—வஞ்சனைக்குணமுள்ள வச்சிரமுட்டியென்னும்அரக்கனது விரைவுள்ள வலிய பெரிய குதிரைகள்பூட்டிய தேரின்மீது எழும்பிப்பாய்ந்து, (அவனது) தோளில்தூக்கிய அம்புப்புட்டிலையும் வில்லையும்போக்கி அவனதுஉடலையும் அழித்திட்டு (மீண்டும் அங்குநின்று) எழுந்துசென்றான்; (எ - று.)—பி - ம்:—[1]தேரினன். [2]துணித்தவன், துளைத்தவன். (௧0௧௬)

௫௫.—வச்சிரமுஷ்டி யிறந்துபட்டதனால் அரக்கர் திரும்பிவிட, வானரர் ஆரவாரஞ்செய்தல்.

மலை[1]குலைந்தென வச்சிர முட்டிதன்
நிலைகு லைந்து விழுதலி னின்றுளார்

குலைகு லைந்து கொடிநகர் நோக்கினர்
அலைகி ளர்ந்தென வானர மார்த்தவே.

(இ-ள்.) மலையானது (தன்நிலை) குலைந்தாற்போல வச்சிரமுட்டி தன்நிலை குலைந்து விழுந்ததனால், உடனிருந்தஅரக்கர் நடுநடுங்கிக் கொடிகட்டிய இலங்கைமாநகருக்குத் திரும்பினர்: (அதுகண்டு), அலைகொந்தளித்தாற்போல வானரங்கள் பேராரவாரஞ்செய்தன; (எ-று.)—பி-ம்:—1குலைந்தன. (கOகஎ)

ருசு. பன்னிரண்டுகவிகள்-கீழைவாசலிலே வானரர்க்கும் அரக்கர்க்கும் பெரும்போர்விளைய தும்பானுவை இடும்பன் கொல்லுதலைத்தெரிவிக்கும்.

வீழி வெங்க ணிராக்கதர் வெம்படை
ஊழி யாழி கிளர்ந்தென 1வோங்கின
கீழை வாயிலிற் 2கிட்டலு முட்டினர்
சூழும் வானர வீரர் துவன்றியே.

(இ-ள்.) வீழிப்பழம்போற் செந்நிறமான கொடுங்கண்ணையுடைய இராக்கதரின் கொடியசேனை,பிரளயகாலத்துச் சமுத்திரம் கிளர்ந்தாற்போலக்கிளர்ந்து இலங்கையின்கிழக்குவாயிலைக்கிட்டுதலும் சூழ்ந்துள்ளவானரவீரர் நெருங்கித்தாக்கலாயினர்; (எ - று.)—பி-ம்:—1ஓங்கியே. 2கிட்டவும். (கOகஅ)

ருஎ. சூலம் 1வாளயில் சக்கரந் தோமரம்
2வாலம் வாளி மழையின் 3வழங்கியே
ஆல மன்ன 4வரக்க ரடர்த்தலுங்
காலும் வாலுந் துமிந்த கவிக்குலம்

(இ - ள்.) (அப்போது) காலகூடவிஷம்போன்ற அரக்கர் சூலம் வாள் அயில் சக்கரம் தோமரம் பிண்டிபாலம் அம்பு என்பவைகளைமழைபோலப் பொழிந்து தாக்குதலும், வானரக்கூட்டங்கள், காலும் வாலும் அறுப்புண்டன; (எ - று.)—பி-ம்:—1வாண்மழுத்தோமரஞ்சக்கரம். 2மாலை. 3வழங்கினர். 4அரக்கர்கடாக்கலும். (கOகக)

ருஅ. வென்றி வானர வீரர் விசைத்தெறி
குன்று மாமர முங்கொடுங் 1காலினிற்
சென்று 2வீச நிருதர்கள் சிந்தினர்
பொன்றி வீழ்ந்த 3புரவியும் பூட்கையும்.

(இ - ள்.) வெற்றிபொருந்திய வானரவீரர், விரைந்து எறிதற்குரிய மலைகளையும் பெரியமரங்களையும் கடுங்காற்றுப்போல (விரைந்து) சென்று வீச,நிருதர்கள் சிதறுண்டார்கள்: (அப்போது அவர்களுடைய) குதிரைகளும் யானைகளும் உயிரொழிந்துவீழ்ந்திட்டன; (எ - று.)—பி - ம்:—1கொடுங்காலினில், கொடுங்கோலுற. 2வீழ. 3புரவிவெம்பூட்கைதேர். (கOஉO)

ருகூ. தண்டு வாளயில் சக்கரஞ் சாயகம்
கொண்டு 1சீற்ற நிருதர் 2கொதித்தெழப்
புண்டி றந்து குருதி பொழிந்துக
மண்டி யோடினர் வானர வீரரே.

(இ - ள்.) சீற்றங்கொண்ட அரக்கர் தண்டு வாள் வேல் சக்கரம் அம்புகள்என்ற இவற்றைச் சொரிந்துகொண்டு சீறியெழ, வானரவீரர்கள், (எதிரிகளின்படைகள்பட்ட) புண் வாய்திறந்து இரத்தத்தை மிகுதியாகச்சிந்த நெருங்கியோடினார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]சீறி. [2]குதித்தெழ. (௧௦௨௧)

௬௦. எரியின் மைந்த னிருநிலங் கீழுற
விரிய நின்ற மராமரம் வேரொடும்
திரிய வாங்கி [1]நிருதர்வெஞ் சேனைபோய்
நெரிய வூழி நெருப்[2]பென வீசினான்.

(இ - ள்.) (அப்போது) நெருப்பின்குமாரனான நீலன்,—பெரியபூமியில் வெகுதூரம்வேரோடப் பரவிநின்ற மராமரத்தை வேருடனே நிலைபெயரும்படி கையினாற் பறித்து, அரக்கரின்கொடியசேனை நெரிந்துபோகுமாறு யுகாந்தகாலத்து நெருப்புப்போல(க் கொடுமைதோன்ற) வீசினான்; (எ-று.)—பி-ம்:—[1]நிருதர்தம். [2]எழ. (௧௦௨௨)

௬௧. தேரும் [1]பாகரும் வாசியுஞ் செம்முகக்
காரும் யாளியுஞ் [2]சீயமுங் காண்டகு
[3]பாரின் வீழப் புடைப்பப் பசும்புணின்
நீரும் [4]வாரி யதனை நிறைத்ததே.

(இ - ள்.) தேர்களும்,(தேரையோட்டுகின்ற) பாகர்களும், (தேரிற்பூட்டியுள்ள) குதிரைகளும் யாளிகளும் சிங்கங்களும், செம்புள்ளிகளைக்கொண்ட முகத்தையுடைய கருமுகில்போன்ற யானைகளும்,காணத்தக்க [அழகிய] பூமியிலே (உயிரொழிந்து) விழுமாறு (அந்தமராமரம்)தாக்கியதனாற்(காயம்பட்ட) பச்சைப்புண்ணிலிருந்துவெளிப்பட்ட இரத்தநீரும் கடலை நிறைத்தது;(எ-று.) —வாரி - கடலுக்கு இலக்கணை. பி-ம்:—[1]மாவும்படைஞரும். [2]சிங்கமும். [3]போரின்வீழ்ந்துபுடைப்பப்பசும்புணீர். [4]வாரியதென்னநிறைந்தவே.(௧௦௨௩)

௬௨. அரக்கர் சேனை யடுகளம் பாழ்பட
வெருக்கொண் டோடிட வெம்படைக் [1]காவலன்
[2]நெருக்க நேர்ந்து கும்பானு நெடுஞ்சரந்
துரக்க வானரச் சேனை [3]துணிந்ததே.

(இ - ள்.) (அவ்வேளையில்) போர்க்களம் பாழ்படும்படி அரக்கருடைய சேனை அச்சங்கொண்டு ஓட, (அப்போது) கொடியபடைத்தலைவனான கும்பானு,---வானரசேனைகளை நெருக்குமாறு கருதி,வெகுதூரம்செல்லும்அம்புகளைச் செலுத்தவே வானரசேனை துண்டுபட்டது; (எ - று.)—இனி, வெம்படைக்காவலனாகிய நீலனை நெருக்க மனத்திற்கருதிக் கும்பானுநெடுஞ்சரந் துரக்க வானரச்சேனை துணிந்தது என்றலுமொன்று. பி-ம்:—[1]காவலர். [2]நெருக்கு, நெருக்கி. [3]துணிந்தவே. (௧௦௨௪)

௬௩. கண்டு நின்ற கரடியின் காவலன்
எண்டி சாமுக [1]மெண்ணு மிடும்பனோர்
சண்ட மாருத மென்னத் தடவரை
கொண்டு சீறி யவனெதிர் குப்புறா.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அவ்வண்ணம் வானரசேனை துண்டுபடுவதைப்) பார்த்து நின்ற கரடிக்குத்தலைவனாகி எட்டுத்திக்கிலுள்ளாரும் மதிக்கும் (வலிமைபெற்ற) இடும்பன், ஒருபெரியமலையைக் கைக்கொண்டு சண்டமாருதம்போல (விரைவுகொண்டு) சீறி, அந்தக்கும்பானுவென்னும் அரக்கர்படைத்தலைவனுக்கு எதிரேபோய்க் குதித்து,—(எ - று.)—'எறிதலும்' என்று அடுத்தகவியோடு தொடரும். பி-ம்:—1 எங்கும். (௧௦உரு)

௬௪. தொடுத்த வாளிகள் வீழுமுன் சூழ்ந்தெதிர்
எடுத்த [1]குன்றை யிடும்ப னெறிதலும்
[2]ஒடித்து வில்லு மிரதமு மொல்லெனப்
[3]படுத்த [4]வாசியும் பாகனும் பாழ்பட.

(இ - ள்.) (கும்பானுவென்னும் படைத்தலைவன்) தொடுத்த அம்புகள் (எதிரே)வளைத்துக்கொண்டுவீழுதற்குமுன்னே எடுத்த மலையை அந்த இடும்பன் வீசியெறிதலும்,(அந்தமலை)அவ்வரக்கனது வில்லையொடித்து,இரதத்தையும் (அதிற்பூட்டிய) குதிரைகளையும் பாகனையும் விரைவிலேஒழிய அழியச்செய்ய,—(எ-று.)—'காய்ந்து பாய்ந்தனன்'என முடியும். பாழ்படப்படுத்தவென்க. பி-ம்:—1குன்றம். 2ஒடித்த. 3படுத்து. 4வாசிபதாகையும். (௧௦உ௬)

௬௫. தே[1]ர ழிந்து சிலையு [2]மழிந்துகக்
கா[3]ரி ழிந்த வுருமெனக் [4]காய்ந்தெதிர்
பார்கி ழிந்[5]துகப் பாய்ந்தனன் வானவர்
போர்கி ழிந்து [6]புறந்தரப் போர்செய்தான்.

(இ - ள்.) தேரும்முறிந்து வில்லும்அழிந்து சிந்திவிட்டதனால், வானவர் வலிகெட்டு முதுகுகொடுத்தோடும்படி முன்னர்ப் பொருதவனான அந்த அரக்கன்,—கோபித்து,மேகத்திலிருந்து வீழ்ந்த இடிபோலப் பூமி கிழிந்துசிந்தும்படி(அந்த இடும்பனுக்கு)எதிரே பாய்ந்தான்;(எ-று.)—பி-ம்:—1கிழிந்து. 2இழிந்துக, இழந்துக. 3கிழிந்த, அழிந்த. 4காந்துவான். 5உற. 6பரந்தொட்டப். ()

௬௬. தத்தி மார்பின் வயிரத் தடக்கையாற்
குத்தி நின்ற கும்பானுவைத் தானெதிர்
[1]மொத்தி நின்று முடித்தலை [2]கீழுறப்
பத்தி [3]வன்றடந் தோளுறப் பற்றுவான்.

(இ - ள்.) (அவ்வண்ணம்)பாய்ந்து(தன்) மார்பிலே வயிரம்போல் உறுதியான பெரியகையாற் குத்திநின்ற கும்பானுவைத் தான் அவனுக்குமாறாக மோதிநின்று (அவனுடைய) முடியணிந்த தலை கீழேபொருந்துமாறு பதாதியாய்நின்ற அவனது பெரியதோள்களை நன்றாகப்பிடித்துக்கொண்டான்; (எ - று.)—பத்தி-ஒழுங்குமாம். பி-ம்:—1மொய்த்துநீடு. 2கவ்வுறப். 3வன்றலை கோளுறப். (௧௦உ௮)

௬௭. கடித்த லத்திரு காலுறக் கைகளாற்
பிடித்துத் தோளைப் பிறங்கலின் கோடுநேர்

[1]முடித்த லத்தினி லெற்றிட மூளைகள்
வெடித்[2]தி ழிந்திட வீந்தன னுமரோ.

(இ - ள்.) அவனது இடைப்புறத்துத் தன்இருகாலும் பொருந்தக் கைக ளால் (அவனது) தோளைப் பிடித்து மலைச்சிகரம்போன்ற முடித்தலத்தினில் (இடும்பன்) மோதவே, மூளைவெடித்துக்கீழே விழுந்திட(அந்தக்கும்பானு)உயி ரொழிந்தான்; (எ-று.)—பி - ம்:—[1]முடித்தலத்தினைக்கவ்வுற. [2]வீழ்தரவீழத் தினன், சிந்திடவீழ்ந்தனன். (௪௦௨௯)

சூஅ.—இதுமுதற் பதினெருகவிகள் - பிரகஸ்தன் வானரர்களைப் பறக்கடிக்க, அப்போது அவனுக்கு நீலனுடன்நேர்ந்த கடும்போரில் அந்தப் பிரகஸ்தன் இறந்ததை தெரிவிக்கும்.

தன்ப டைத்தலை வன்படத் தன்னெதிர்
துன்ப டைத்த [1]மனத்தன் சுமாலிசேய்
முன்ப டைத்த முகிலன்ன [2]காட்சியன்
வன்ப டைத்த வரிசிலை வாங்கினன்.

(இ - ள்.) தனது சேனைத்தலைவன் தன்னெதிரே இறந்துபடவே, துன் பம்பொருந்திய மனமுடையவனான சுமாலியின்புத்திரன்பிரகத்தன்,—முன் னேவந்துநின்ற முகில்போன்ற தோற்றமுடையவனாய், வலிமைப்பெற்றுள்ள கட்டமைந்தவில்லை ப் (பொருமாறு) வளைத்தான்; (எ - று.)—இவன்பெயர் பிரகத்தனென்பது மேல் எகூ-ஆங்கவியில்"இறந்துவீழ்ந்தனனே பிரகத்தன்" என வருவதனால் விளங்கும். பி-ம்:—[1]மனத்தின். [2]காட்சியின். (௪௦௩௦)

சூகூ, வாங்கி வார்சிலை வானர மாப்படை
ஏங்க நாணெறிந் திட்[1]டிடை யிடின்றித்
தூங்கு மாரி [2]யெனச்சொரி வாளிகள்
வீங்கு தோளினன் [3]விட்டன னுமரோ.

(இ - ள்.) (பின்பு பிரகத்தன்),—தோள்பூரிக்கப்பெற்றவனாய் நீண்ட சிலையை வளைத்து மிக்க வானரசேனை ஏக்கமடையும்படி நாணையொலித் திட்டு,பொழிகின்றமழைபோலச் சொரிகின்றஅம்புகளை இடைவிடாமல் எய் தனன்; (எ - று.)—ஆம், அரோ - ஈற்றசைகள். பி-ம்:—[1]இடையின்றியே. [2]எனச்சுடர், சொரிதர. [3]வீழ்த்தினன். (௪௦௩௧)

எ௦. நூறு மாயிர முங்கணை நொய்தினின்
வேறு வேறு [1]படுதலின் வெம்பியே
ஈறில் வானர மாப்படை யெங்கணும்
பாற [2]நீலன் [3]வெகுண்டெதிர் பார்ப்புறு.

இதுவும் அடுத்த கவியும்-குளகம்.

(இ - ள்.) அம்புகள் வெகுவிரைவில் நூறும் ஆயிரமுமாக வெவ்வேறாகத் (தம்மீது) தாக்குதலினால் ஈறில்லாத வானரப்பெரும்படைகள் (மனம்) வெதும்பி எல்லாப்பக்கத்திலும் சிதறிப்போக, (அப்போதே) நீலனென்னும் வானரவீரன் அதனைப்பார்த்து மாறாகவெகுண்டு,—(எ - று.)—குன்றமெடுத்

துச் சென்றெறிந்து அவன்சேனை சிதைத்தலும்என அடுத்த கவியோடு தொடரும். பி-ம்:—[1]படுத்தலின். [2]வீரன். [3]வெகுண்டெனுப். (௧0௬௨)

எக. குன்ற நின்ற [1]தெடுத்தெதிர் கூற்றெனச்
சென்[2]றெ றிந்தவன் சேனை [3]சிதைத்தலும்
[4]வென்றி வில்லின் விடுகணை மாரியால்
ஒன்று [5]நூ றுதி [6]ருற்றதக் குன்றமே.

(இ - ள்.) அருகேயிருந்ததான குன்றையெடுத்து எதிர்க்கின்ற யமன்போலச்சென்று எறிந்து அந்தஅரக்கனுடையசேனையைச் சிதைத்தலும்,(அவ்வரக்கன் தன்னுடைய) வெற்றிபொருந்திய வில்லினின்று தொடுத்துவிட்ட அம்புமழையால் அந்தமலையொன்று நூறுகூறுபட்டுஉதிர்ந்தது; (எ - று.)—பி-ம்:—[1]எடுத்தெறி. [2]நின்றனன், எறிந்தவர். [3]சிதைத்திட. [4]வென்று. [5]நூறுற. [6]உக்கது. (௧0௬௩.)

எஉ. மீட்டு மங்கொர் மராமரம் வேரொடும்
[1]ஈட்டி [2]வானத் திடியென [3]வேற்றலுங்
கோட்டும் வில்லுங் கொடியும் [4]வயப்பரி
பூட்டுந் தேரும் [5]பொடித்துக ளாயவே.

(இ - ள்.) மறுபடியும் (நீலன்) அங்குஇருந்த ஒருமராமரத்தை வேரோடும் தேடிப்பெற்று வானத்துத்தோன்றும்இடிபோல(க் கர்ச்சித்துநின்று அந்தமரத்தைச்சுழற்றி) எதிர்த்தவளவில், (பிரகத்தனுடைய) வளைக்குந்தன்மையுள்ளவில்லும் துவசமும் வலியுள்ளகுதிரைபூட்டிய தேரும் சிறுதுகளாய்விட்டன; (எ - று.)—கோட்டுதல்-வளைத்தல். பி - ம்:—[1]ஈட்ட. [2]வாங்கி. [3]எற்றலும்எனவும்படிக்கலாம். [4]குலப். [5]பொறிதுகளாயதே, அப்போதுகளாயதே.

எ௩. தே[1]ரி ழந்து சிலையு [2]மிழந்திடக்
கா[3]ரி ழிந்த வுருமெனக் காந்துவான்
பா[4]ரி ழிந்து பரு[5]வலித் [6]தண்டொடும்
ஊ[7]ரிழந்த கதிரென வோடினான்.

(இ - ள்.) (பிரகத்தன்) தேரையிழந்து வில்லையுமிழந்ததனால் (தனக்கு ஆதாரமான)மேகத்தைவிட்டு வந்த இடிபோலக்கோபிப்பவனாய்,பூமியிலிழிந்து பருத்த வலியுள்ளதண்டாயுதத்துடனே,ஊர்கோளையிழந்தசூரியனைப்போன்று (எதிரியைநோக்கி) விரைந்துசென்றான்; (எ - று.)—தேரையிழந்தபிரகத்தனுக்கு ஊர்கோளையிழந்தசூரியன் உவமை. பி-ம்:—[1]அழிந்து. [2]அழிந்திடக். [3]அழிந்த, உழந்த.[4]இழந்து,அழிந்த,கிழிந்து.[5]வரைத்.[6]தண்டுகொண்டு.[7]அழிந்த.

எ௪. வாய்ம டித்[1]தழல் கண்டொறும் வந்துகப்
போ[2]ய டுத்தலு நீலன் புகைந்தெதிர்
தா[3]ய டுத்தவன் றன்கையிற் றண்டொடும்
மீயெ டுத்து விசும்புற வீசினான்.

(இ - ள்.) (பிரகத்தன்) வாயை மடித்தவண்ணம் நெருப்புஇரண்டுகண்ணிலும் வெளிப்பட்டுவந்துசிந்துமாறு போய் (நீலனை)ச் சேர்ந்தவளவில்,—

அந்தநீலன், சினந்து எதிரேதாவிப்போய் (த் தன்னை) அடுத்தவனான அந்தப் பிரகத்தனுடைய கையிலுள்ள தண்டாயுதத்துடனே (அவனைத்) தூக்கி மேலே ஆகாயத்திற் பொருந்துமாறு வீசினான்; (எ-று.)—பி-ம்:—[1]அனல். [2]அடித்தலும். [3]அடித்தவன், எடுத்தவன். (௧௦௩௬)

௭௫. [1]அம்ப ரத்தெறிந் தார்ப்ப வரக்கனும்
இம்ப ருற்றெறி யின்றிரு மைந்தன்மேற்
செம்பு னற்பொழி யக்கதை சேர்த்தினான்
உம்பர் தத்தம துள்ள நடுங்கவே.

(இ - ள்.) (அப்படிப் பிரகத்தனென்பவனை) வானத்திலெறிந்து(நீலன்) ஆரவாரஞ்செய்கையில், அந்தஅரக்கனும், (அங்குநின்று) இந்தப்பூமியில்வந்து, வானத்திலுள்ள எல்லாத்தேவர்களும் தத்தமதுமனம் நடுங்குமாறு அக்கினி குமாரனான அந்தநீலன்மேல் (அவனுடம்பிலிருந்து) இரத்தவெள்ளம்பெருகும்படி தண்டாயுதங்கொண்டு தாக்கினான்; (எ - று.)—'இராமனுடையபக்கத்தார்க்குத் தோல்வி நேருமோ?' என்ற சங்கையினால், உம்பர் உள்ளம் நடுங்குவரென்க. சிலபிரதியில் இச்செய்யுள் "குருதிவாய்" (௭௭) என்பதற்குப்பின்னுள்ளது. பி-ம்:—[1]அம்பரத்தினின்றார்த்த. (௧௦௩௭)

௭௬. அடித்த லோடு மதற்கிளை யாதவன்
எடுத்த [1]தண்டம் பறித்தெறி யாவிகன்
முடித்து மென்[2]றொரு கைக்கொடு மோதினான்
குடித்து [3]மிழ்ந் தெனக்[4]கக்கக் குருதியே.

(இ - ள்.) (பிரகத்தன் தண்டாயுதங்கொண்டு) அடித்தவுடனே (நீலன்) அதற்குச்சலியாதவனாய், (அவன்)கையிலெடுத்திருந்த தண்டாயுதத்தைப்பறித்தெறிந்துவிட்டு, இப்போரைமுடிப்போமென்றுகருதி, (இதற்குமுன் அவ்வரக்கன்) குடித்துள்ள இரத்தத்தை உமிழ்ந்தாற்போல இரத்தத்தைக் கக்குமாறு கையினாற் குத்தினான்; (எ - று.)—குடித்து - குடித்ததுஎன்பதன்விகாரம். உமிழ்ந்து - எச்சத்திரிபு. பின்னடிகளில் தன்மைத்தற்குறிப்பேற்றவணி காண்க. பி-ம்:—[1]தண்டைப். [2]இரு. [3]வீழ்ந்தென. [4]கக்கும். (௧௦௩௮)

௭௭. குருதி வாய்நின் [1]றொழுகவுங் கூசலன்
நிருத னீல னெடுவரை மார்பினிற்
கருத லாதமுன் குத்தலுங் [2]கைத்தவர்
பொருத பூசல் புகலவொண் ணாததே.

(இ - ள்.) வாயிலிருந்துஇரத்தம்பெருகவும் சலியாதவனாய்,அரக்கன் நீலனுடைய நீண்டமலைபோன்ற மார்பிலே அவன் எதிர்பார்ப்பதற்குமுன்னே குத்துதலும்,(அப்போது)அவ்விருவரும் கோபித்துப் பொருத போர் சொல்லுதற்குமுடியாததேயாம்; (எ-று.)—மிகக்கடுமையாகப் பொருதனரென்றவாறு. கைத்தல் கோபித்தலாதலை "மருவலரைக்கைக்கும்" என்று தஞ்சவாணன் கோவையில் வருவதுகொண்டும் உணர்க. பி-ம்:—[1]ஒழுகலும். [2]கைக்கொடு.

௭௮. [1]மற்று நீல னரக்கனை மாடுறச்
சுற்றி வால்கொடு தோளினு மார்பினும்

நெற்றி மேலு நெடுங்[2]கர நீட்டலும்
[3]இற்று மால்வரை யென்ன விழுந்தனன்.

(இ - ள்.) பின்பு, நீலன் (அந்தப்பிரகத்தனென்னும்) அரக்கனை வாலினால் இருமருங்கும் உறுதியாகச்சுற்றி (அவனுடைய) தோளிலும் மார்பிலும் நெற்றி மீதும் நீண்டகையினாற்குத்தலும், (அவன்) உயிரொழிந்து பெரியமலைபோல விழுந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]மற்ற. [2]கரத்தெற்றலும். [3]இற்ற. (௪0௪0)

எகூ.—அதுகண்டு வானவர் ஆர்த்தலும், அரக்கர் நகர்க்குத் திரும்பியோடுதலும்.

இறந்து வீழ்ந்தன னேபிர கத்தனென்று
அறிந்து வானவ ராவலங் கொட்டினார்
வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றுடவர்
முறிந்து தத்த [1]முதுநகர் [2]நோக்கினார்.

(இ - ள்.) பிரகத்தன் இறந்து வீழ்ந்திட்டான் என்பதைஅறிந்து வானவர் (வெற்றிக்குறியாக) ஆர்த்துவாய்கொட்டினார்; செறிந்தசெம்மயிரையும் வெள்ளியபற்களையுடைய அரக்கவீரர் நிலைகெட்டுத் தம்முடைய பழமையான நகரத்தைநோக்கிச் சென்றார்; (எ - று.)—வெறிதல் செறிதலாதலை "வெறிதலோதி, செற்றுவெறுப்புக்களுறலடர்தல், நெருங்குதல்திணுங்குதல்செறிவின் பெயரே" என்ற பிங்கலந்தையாலுமுணர்க. பி-ம்:—[1]முமுநகர். [2]எய்தினார்.()

அ0.—தெற்குவாயிலில் அங்கதனாற் சுபாரிசன் இறத்தலும் அரக்கர் எதிர்நிற்கமாட்டாது ஓடுதல்.

தெற்கு வாயிலிற் சென்ற நிசாசரர்
மற்கு லாவு வயப்புயத் தங்கதன்
நிற்க வேயெதிர் நின்றில ரோடினார்
பொற்கு லாவு [1]சுபாரிசன் [2]பொன்றவே.

(இ - ள்.) தெற்குவாயிலிலே சென்ற அரக்கர்,—வலிமைவிளங்குகின்ற வெற்றியைக்கொண்டபுயத்தையுடைய அங்கதன் எதிர்த்துநிற்கையில், அழகு விளங்குகின்ற சுபாரிசனென்றதலைவன் இறந்தானாகப் (பிறகு) எதிர்நிற்க முடியாமல் ஓடலானார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]சுபாருசன். [2]பொன்றினான்.

அக.—அநுமனால் மேற்குவாயிலில் நூற்றிரண்டுவெள்ளஞ்சேனையும் துன்முகனும் அழிதல்.

நூற்றி ரண்டெனும் வெள்ளமு நோன்கழல்
ஆற்றல் சால்துன் முகனுமங் கார்த்தெழ
மேற்றிண் வாயிலின் மேவினர் வீடினார்
காற்றின் மாமகன் கையெனுங் காலனால்.

(இ - ள்.) அப்போது நூற்றிரண்டுவெள்ளஞ்சேனையும் வலியவீரக்கழலை யணிந்த வலிமைமிக்க துன்முகனென்பவனுமாகிய அப்போரில் ஆரவாரித்து எழுச்சிபொருந்தச் சேர்ந்தவர் மேலைப்புறத்துத் திண்ணிய வாயிலிலே வாயு புத்திரனை அநுமானது கையென்கின்ற யமனால் உயிரொழிந்தனர்; (எ - று.)

—வெள்ளமும் தூன்முகனும் வீடினர்-சிறப்பினால் உயர்திணைமுடிபு வந்தது. நூற்றிரண்டு-இரண்டுநூறுஎனப் பண்புத்தொகையாற் பொருள்கொள்ளலாம்: அணிவகுப்புப்படலத்தில் "நூற்றிரண்டாயவெள்ளம்"(உ0)என வந்திருத்தல் காண்க. (கOசாங)

அஉ.—நாற்றிசைவாயிலிலும் நிகழ்ந்தவற்றை ஒற்றர் இராவணனிடஞ் சொல்லுதல்.

அன்ன 1காலை யயிந்திர 2வாய்முதல்
துன்னு போர்கண்ட தூதுவ 3ரோடினர்
மன்ன கேளென வந்து வணங்கினர்
சென்னி 4தாழ்க்கச் செவியிடைச் செப்பினர்.

(இ - ள்.) அப்போது இந்திரதிசையாகிய கிழக்குமுதல் (நான்குவாயிலிலும் ஆங்காங்கு) நிகழ்ந்த போரைக் கண்ட தூதுவர் விரைந்துபோய், (இராவணன்முன்னே)வந்து தலைதாழுமாறுவணங்கி, 'மன்னவனே!கேள்' என்று இரகசியமாகச் சொல்லலானார்கள்;(எ-று.)—அவர்கூறியதை மேல்மூன்றுகவிகளிற் காண்க.ஒவ்வொருதிசையினின்று போரைக்கண்ட தூதர் தனித்தனிச் சொல்லலாயின ரென்க. தோல்வியைப் பலரறியச்சொல்லுதல் தகாதென்று இரகசியமாகக் கூறினர். அயிந்திரம்=ஐந்த்ரம்: போலிபெற்றுவந்த வடமொழித்தத்திதாந்தநாமம். அயிந்திரவாய் - இந்திரனைத்திக்குப்பாலகனாகக்கொண்ட இடம்: கிழக்குத்திக்கு. பி-ம்:-1காலத்து. 2வாசலில். 3முந்தினர்,தோன்றினர். 4தாழ்ப்ப. (கOசச)

அங.—இதுமுதல் மூன்றுகவிகள்-நாற்றிசைத்தூதுவரும் அவ்வத்திசை வாயிலில் அரக்கர் தோற்றமையைக் கூறுதலைத் தெரிவித்தும்.

கீழை 1வாயிற் கிளர்கிரு தப்படை
ஊழி 2நாளினும் 3வெற்றிகொண் டுற்றநின்
ஆழி யன்ன வனீகத் தலைமகன்
4பூழி யானுயிர் புக்கது விண்ணென்றார்.

(இ - ள்.) கீழைவாசலிலே ஊழிக்காலத்திலும் வெற்றிக்கொண்டுள்ள உனது ஆஜ்ஞாசக்கரத்தைப்போன்ற சேனைத்தலைவன் பிரகத்தன் கிளர்ச்சிகொண்ட அரக்கச்சேனையுடனே (சென்று பொருது) புழுதியில் விழுந்தவனானான்;அவனுடையஉயிர் விண்ணிலேபுகுந்தது என்று தெரிவித்தார்;(எ-று.)—இது கீழைவாசல் தூதுவர் கூறியது; இங்ஙனமே மேலுங்காண்க. சில ஏட்டுப்பிரதிகளில் வடக்குவாசலில் நிகழ்ந்தபோர்த்தோல்வியைக் குறிக்குஞ் செய்யுளாகிய "வடக்குவாயிலின்" (அரு) என்ற பாடல் முதலிலும், அதன் பின் "வென்றி" (அச) என்றபாடலும், அதன்பின் "கீழை" என்றஇப்பாடலும் உள்ளன. உபசாரமாக 'ஊழிநாளினும் வெற்றிகொண் டுற்றநின்' என்றார். பி - ம்:—1வாய்தல். 2நாளிறவா, நாளினில். 3வாரியையுண்பவன், வெற்றி கொண்டுற்றுளார், 4பூழியால், பூழியாய். (கOசரு)

அச. வென்றி வேற்கை நிருதர் வெகுண்டெழுத்
தென்றி சைப்பெரு வாயிலிற் சேர்ந்தூழிப்

பொன்றி னனச் [1]சுபாரிசன் [2]போயினர்
இன்று போன விடமறி யோமென்றார்.

(இ - ள்.) வெற்றிபொருந்திய வேற்படையேந்திய கையையுடைய அரக்கர் சினந்துபுறப்பட்டுத் தென்திசையின் பெரியவாயிலைச் சேர்ந்தபோது அந்தச்சுபாரிசன் இறந்தான்; (அவனுடன்) சென்றவர் இன்று போனவிடத்தை யாம் அறிந்திலோ மென்றார்கள்: (எ-று.)—இதுவும், அடுத்தசெய்யுளும் ஒரு பிரதியிலில்லை. பி'- ம்:—[1]சுபாருசன். [2]போயுளர், போயுளான். (கஂ௦சுகு)

அ௫. வடக்கு [1]வாயிலின் [2]வச்சிர முட்டியும்
குடக்கு [1]வாயிலிற் [3]றுன்முகக் குன்றமும்
[4]அடக்க ரும்வலத் தைம்பது வெள்ளமும்
படக் [5]கு றைந்தனர் நம்படை யென்றனர்.

(இ - ள்.) வடக்குவாசலிலே வச்சிரமுஷ்டியும் மேற்குவாசலிலே துன்முகனென்ற மலைபோன்றவரக்கனும் (மாற்றரால்) அடக்குதற்குஅரிய வலிமையையுடைய நமதுஐம்பதுவெள்ளஞ்சேனையும்இறக்க, அழிந்தனரென்றனர்; (எ - று.)—பி - ம்:—[1]வாய்தலில், வாசலில். [2]வச்சிரத்தாடவர். [3]குன்றனதோளினர், துன்முகக்குன்றனும். [4]அடற்கு. [5]சிதைந்தது. (க௦சஎ)

அகூ.—அதுகேட்ட இராவணன் பெருமூச்செறிதல்.

என்ற வார்த்தை யெரிபுகு நெய்யெனச்
சென்று சிந்தை புகுதலுஞ் சீற்றத்தி
கன்று கண்ணின் [1]வழிச்சுடர் [2]கான்றிட
நின்று நின்று [3]நெடிதுயிர்த் தானரோ.

(இ-ள்.) என்ற வார்த்தையானது அக்கினியிற்பெய்த நெய்போல மனத்திலே சென்றுபுகுந்தவுடனே,கோபத்தீச் சினக்குறிப்புக்கொண்ட கண்ணின் மூலமாகப் பொறியைக் கக்க, தடைப்பட்டுத்தடைப்பட்டுப் பெருமூச்செறிந்தான்,(இராவணன்);(எ-று.)—பி-ம்:—[1]விழி. [2]காந்திட. [3]நெருப்பு. (க௦சஅ)

அஎ.—மூன்றுகவிகள் - பிரகத்தனுயிரைக் கோன்றவர் யார்? என வினவவே தூதுவர் நிகழ்ந்தசெய்திகூற, இராவணன் சினத்தல்.

[1]மறித்து [2]மற்றவ னுருயிர் [3]வவ்வினன்
இறுத்துக் [4]கூறுமென் றான்[5]திசை யெங்கணும்
[6]நிறுத்து நீல னெடும்பெருஞ் சேனையை
ஒறுத்து மற்றவ னோடும்வந் துற்றனன்.

இதுவும் அடுத்தகவியும் - குளகம்.

(இ-ள்.) மீண்டும், (இராவணன் அந்தத்தூதுவனைநோக்கி), 'கீழைவாசலிலேபொரச்சென்ற பிரதானனை அந்தப்பிரகத்தனது அரியஉயிரைக் கவர்ந்தவனைக்குறித்து விடையீமின்' என்று வினவினனாக,—(தூதுவர்கூறுவார்:-) 'எல்லாத்திசைகளிலும்(தன்புகழை)நிறுத்திய நீலனென்பவன் நீண்டபெருஞ்சேனையையழித்து மற்றும் அந்தப்பிரகத்தனுடனே பொருமாறுவந்துநெருங்கினன்; (எ - று.)—இப்பாடலில் 'திசையெங்கணும்' என்பதுமுதல் அடுத்த

பாடலில்'வீந்தனன்'என்பதுவரையில்தூதுவர்கூறியவிடை.ஒறுத்தல் அழித்த லாதலே "ஒறுத்தாஞமொன்ஞர்புரங் கண்மூன்றும்" என்ற தேவாரத்தாலும் அறிக. பி - ம்:—[1]மறுத்தும். [2]ஆரவன். [3]வவ்விஞர். [4]கூறி. [5]இசை. [6]நிறுத்த, நிறுத்தி. (கoசுகூ)

அஅ. உற்ற [1]போதி னிருவரு [2]மொன்றல
கற்ற போர்க ளெலாஞ்செய்த காலையில்
நெற்றி மேன்[3]மற்ற நீல னெடுங்கையால்
எற்ற வீந்தன னென்ன [4]வியம்பிஞர்.

(இ - ள்.) அங்ஙனம்வந்துநெருங்கினபோது, (நீலன்பிரகத்தன்என்ற) இருவரும் ஒருவகையாகஅல்லாமல்(தாங்கள்)கற்றறிந்த போர்வகைகளேயெல் லாஞ் செய்கையில் மற்ரெருவஞனநீலன் பிரகத்தனுடையநெற்றிமேல் நெடுங்கையால் மோத, அந்தப்பிரகத்தன் மாண்டனனென்று கூறிஞர்; (எ-று.)—நெற்றிமேல் மோதியதைக்கூறியது, வாலால்மருங்கிற்சுற்றித் தோ ளிலும்மார்பிலும் எற்றியதற்கும் உபலட்சணம். பி-ம்:—[1]போதும்,போழ்தில். [2]ஒன்றலக். [3]மற்றைவீரன். [4]இயம்பிஞன், விளம்பிஞர். (கoஙo)

அகூ. அன்ன வன்ெருடும் போன வரக்கரில்
[1]நன்ன கர்க்கு வந்தோமைய நாங்களே
யென்ன வென்ன [2]வெயிற்றிகல் [3]வாயினைத்
தின்னத் தின்ன வெரிந்தன திக்கெலாம்.

(இ-ள்.) (மற்றும்ஒற்றர்யாவரும் இராவணனைநோக்கி),—'ஐயனே! அந் தப் பிரகத்தனுடனேசென்ற அரக்கர்களில் அழகிய இலங்காநகரத்துக்குத் திரு ம்பிவந்தவர்கள் நாங்களே' என்று பல முறைசொல்ல, (இராவணனது)பற்கள் (சினத்திஞல்)வலியவாயைப்பலமுறைக்கடித்துக்கொள்ள,(அவனதுகோபத்தீ யால்) திக்கெல்லாம் எரிவனவாயின;(எ-று.)—பி-ம்.—[1]இன்னகர்க்கு...யாங் களே. [2]எயிறகல், எயிதிகல். [3]வாய்களைத். (கoஙக)

கூo.—இதுமுதல்நான்குகவிகள்-குளகம்: இராவணன், பிரகத்தன் இறந்தமைக்குநொந்துகூறி,தான் போருக்குப்புறப்படவேணுமென்றுகருதி முந்தி வீரரை யேவினதைத் தெரிவிக்கும்.

மாடு நின்ற நிருதரை வன்கணுன்
ஓட நோக்கி யுயர்[1]படை யான்மறக்
கோடு கொண்டு [2]பொருமக் குரங்கிஞல்
வீடி ஞுனென்று [4]மீட்டும் விளம்பிஞன்.

(இ - ள்.) பக்கத்திநின்றஅரக்கரைக் கொடுங்கண்ணினஞகிய இராவ ணன் நன்குஉறுக்கிப்பார்த்து,—'சிறந்தபடைடையுடைய பிரகத்தன் மரக்கிளே கொண்டுபொருதகுரங்கிஞல் இறந்தானென்று மீட்டுஞ்சொல்விஞன்;(எ-று.)

பிரகத்தன் இறந்தானென்பதைத் தூதுவர் மூலமாகக்கேட்டறிந்த இராவ ணன் தான் அதை மீட்டும்மீட்டும் தன்வாயாற்சொல்வது, அவன் இறந்ததுய ரத்தையும் கோடுகொண்டு பொருங் குரங்கிஞல் எவ்வாறுகொல்லப்பட்டா

னென்ற வியப்பையும் மிகவும்பாராட்டுகின்றானென்பதைப் புலப்படுத்தும். வன்கணன்-பெயர்: மூன்றனுருபேற்றசொல்லுமாம். பி - ம்:—1படைக்காவலன், படையாமரக். 2பொருத. 3என. 4விட்டு. (கo௫உ)

சுக. கட்ட திந்திரன் வாழ்வைக் 1கடைமுறை
2பட்ட திங்கோர் குரங்கு 3படுக்கவென்று
இட்ட வெஞ்சொ 4லெரியினி லென்செவி
சுட்ட 5தென்னுடை நெஞ்சையுஞ் சுட்டதால்.

(இ - ள்.) (இந்தப்பிரகத்தன்) வேரோடுஅழித்ததோ, இந்திரன்வாழ்வினையாகும்: (அப்படியிருக்க), கடைசியில் 'இறந்தது ஒருகுரங்குகொன்றதனாலாகும்'என்று (இந்தத்தூதுவர்) சொன்ன கொடுஞ்சொல் நெருப்புப்போல என்செவியைச் சுட்டது: (அதோடுநில்லாமல்) என்னுடைய மனத்தையும் சுட்டது; (எ-று.) பி-ம்:—1கடன்முறை. 2பட்டதங்கு. 3படுத்தவென்று. 4எரிபுகுநெய்யென, எரியினியென்செவி. 5என்றனிநெஞ்சினைச். (கo௫௩)

சுஉ. கருப்பை போற்குரங் 1கெற்றக் 2கதிர்சுழல்
பொருப்பை 3யொப்பவன் தானின்று 4பொன்றினன்
அருப்ப மென்று பகையையு மாரழல்
நெருப்பை யும்5மிகழ்ந் தாலது நீதியோ.

(இ-ள்.)எலியைப்போன்ற[இழிந்த]குரங்குஒன்று எற்றியதனால்,சூரியன் வலம்வருகின்ற (மேரு) மலையையொத்த பிரகத்தன் இன்று இறந்திட்டான்: பகையையும் மிகுதியாக அழலுந்தன்மையைக்கொண்ட நெருப்பையும் அற்பமானதென்று இகழ்ந்தால் அது முறைமையாகுமோ? (எ - று.)

சத்துருவையும் அக்கினியையும் அற்பமென்று இகழ்தலாகாதென்பதை "வினைபகையென் றிரண்டினெச்சநினையுங்கால், தீயெச்சம்போலத்தெறும்" என்ற குறளாலும் அறிக. வேற்றுப்பொருள்வைப்பணி. அநுமன் முந்துற வந்தபோது ஒருகுரங்குதானே யென்றுநினைத்துவிட்டிட்டது இப்போது தீங்குபயப்பதாயிற்றென்றவாறு. பகையைக் கூறவேண்டியவிடத்து ஒப்புமைபற்றித் தீயையும் உடன்கூறினர். அருப்பம்-அல்பம்:வடசொல். பி-ம்:—1என்றலும். 2கைசுழல். 3ஒப்பவர்தாமின்று. 4போயினர், பொன்றினர். 5இகழ்ந்தால்.

சுங. நிற்க வன்னது நீர்நிறை 1கண்ணனாய்
வற்க 2மாயின மாப்படை யோடுஞ்3சென்று
ஒற்கம் 4வந்துத வாம லுறுகென
5விற்கொள் வெம்படை வீரரை 6யேவினன்.

(இ - ள்.) (என்றுஇவ்வாறுசொல்லி) நீர்நிறைந்தகண்களையுடையவனாய், (இராவணன்), 'அதுகிடக்கட்டும்: பெருந்திரளாகவுள்ள சிறந்தசேனைகளோடும்போய், பின்வாங்குதலென்பது வந்து சேராதவாறு மனத்தைரியத்துடன் பொருக'என்றுவில்லைக்கொண்ட கொடியபடைவீரரைக் கட்டளையிட்டனுப்பினான்; (எ - று.)—பி-ம்:—1கண்ணினன், கண்ணினர். 2வாயிலின். 3என்று, போய். 4இன்றியுறுகவவ்வாயிலில். 5எற்கொள். 6ஏவியே. (கo௫௪)

௬௪.—பதின்மூன்றுகவிகள்-இராவணன் போர்க்களஞ்சேர்நிலைக்கூறும்.

மண்டு கின்ற செருவின் வழக்கெலாங்
[1]கண்டு நின்று கயிலை [2]யிடந்தவன்
புண்டி றந்[3]தன கண்ணினன் பொங்கினான்
திண்டி றன்னெடுந் தேர்தெரிந் தேறினான்.

(இ - ள்.) கயிலையைப்பேர்த்தெடுத்தவனாகிய இராவணன், மிக்குச்செல்லுகின்ற போரின் நிகழ்ந்தமுறைமையையெல்லாம் மனத்தினாலாராய்ந்து, புண்ணைத்திறந்தாற்போன்ற [மிகச்செந்நிறமடைந்த] கண்களையுடையவனாய்ச் சீறி, மிக்கவலிமையையுடைய பெரியதேரை யாராய்ந்து (அதில்) ஏறினான்; (எ-று.)—சினத்தினாற் கண்கள் மிகவுஞ்சிவந்தன வென்பார் 'புண்டிறந்தன கண்ணினன்'என்றார். பி-ம்:—[1]கண்டுமென்று. [2]கடந்தவன். [3]அன்ன. (௧௦௫௬)

௬௫. ஆயி ரம்பரி பூண்ட துதிர்குரன்
மாயி ருங்கடல் [1]போன்றது வானவர்
தேய மெங்குந் திரிந்தது திண்[2]டிறல்
சாய [3]விந்திர னே[4]பண்டு தந்தது.

(இ-ள்.) (அவன் ஏறியதேர்),—ஆயிரங்குதிரைகட்டியது; அதிர்கின்றகுரலையுடைய மிகப்பெரியகடலைப் போன்றது; வானவர்தேசமெங்குந் திரிந்தது; இந்திரன் (தனது)மிக்கவலிமைஅழிந்தபோது அவனே தந்தது; (எ - று.)— இதனால், அவ்விராவணன் ஏறியதேரின் சிறப்பைக்கூறுகின்றார். பி-ம்:—[1]ஒப்பது,போல்வது,போல்வன. [2]திசை. [3]இந்திரன், இத்துணைத். [4]தந்துநடந்தது.

௬௬. ஏற்றி எண்ணி யிறைஞ்சி யிடக்[1]கையால்
[2]ஆற்றி னான்ற [3]னடுசிலை [4]யன்னதின்
[5]மாற்ற மென்னெடு நாணொலி வைத்தலுங்
[6]கூற்றி னாரையு மாருயிர் [7]கொண்டதே.

(இ - ள்.) (தனது இஷ்டதேவதையாகிய உருத்திரமூர்த்தியை மனத்திலே)கொண்டு தியானித்து வணங்கி, (பிறகு) தனதுநெடியவில்லை இடக்கையினால்உறுதியாகப்பற்றினான்;(அந்த வில்லினுடைய)வார்த்தையென்றுசொல்லத்தக்க நீண்டநாணொலியை எழுப்புதலும் (அவ்வொலி) யமனாரையும் அரிய உயிர்கொண்டது; (எ - று.)

இதனால், இராவணன் வில்லைக்கையிற்கொண்டமையைக் கூறுகின்றார். பின்னடி அவ்வில்லின்சிறப்பைத் தெரிவிக்கும். வில்லின்நாணொலியையெழுப்பினால் அது வில்லினதுமாற்றமோ என்றுசொல்லுமாறுஉள்ளது எனத் தற்குறிப்பேற்றவணிவகையால் வந்தது மூன்றாமடி. பி-ம்:—[1]கையின். [2]ஆற்றியான்ற. [3]நெடுஞ், அடுஞ். [4]மற்றதின். [5]மாற்றமின்னெடுநாணொலி,மாற்றமின்னதெனுமொலி. [6]கூற்றின்றாரங்கருவுயிர், கூற்றினார்தங்கருவுயிர். [7]கொள்வதே, கொள்வது. (௧௦௫௮)

௬௭. மற்றும் [1]வான்படை [2]வானவர் மார்பிடை
இற்றி லாதன [3]வெண்ணமி லாதன

பற்றி ளுன்கவ சம்படர் மார்பிடைச்
சுற்றி ளுனெடுந் தும்பையுஞ் சூடிஞன்.

(இ-ள்.) இன்னும் வானவருடையமார்பிற்பட்டும் முறியாதனவும் கணக்கற்றனவுமானசிறந்தபடைக்கலங்களை(க் கையில்)தாங்கிஞன்;கவசத்தைப் பரவியமார்பைச்சூழ அணிந்தான்; (போர்க்குச்செல்லச்) சிறந்த தும்பைமாலையையுஞ்சூடிஞன்; (எ-று.)—இதனுல், பலபடைக்கலங்கொண்டமையும் கவசம்பூண்டு தும்பைமாலைசூடியமையும் கூறப்படுகின்றன. பி-ம்:-[1]வன். [2]மானவர். [3]எண்ணும். (கo௫௧)

௬அ. பேருங் கற்றைக் [1]கவரிப் பெருங்கடல்
நீரு நீர்நுரை யும்மெென [2]நின்றவன்
[3]ஊரும் வெண்மை [4]புவாமதிக் கீழுயர்
காரு மொத்தனன் முத்தின் கவிகையான்.

(இ - ள்.) (இரண்டுபக்கத்திலும்) வீசுகின்ற தொகுதியான சாமரையால் பெருங்கடலின்நீரும் (அதன்மீதுதோன்றும்) நுரையும்போல நின்றவனை இராவணன்,—முத்துக்கவிகைபிடிக்கப்பெற்றவனுய், வெண்மைநிறம்பொருந்திய பூர்ணசந்திரன்கீழ்விளங்குகின்ற மேகத்தையும் ஒத்தான்; (எ - று.)—சாமரைவீசுதலும் முத்துக்கவிகை பிடித்தலும் கூறப்பட்டன; சாமரைக்கு நுரையும் இராவணனுக்குக் கடல்நீரும் உவமை. முத்துக்குடையின் கீழ்நின்ற இராவணனுக்கு உவாமதிக்கீழுள்ள கார் உவமை. ஊர்தல் - பொருந்துதல். பி - ம்:—[1]கவரி. [2]நின்றனன். [3]தூரும். [4]உயர். (கo௬o)

௬௬. [1]போர்த்த சங்கப் படகம் புடைத்திடச்
[2]சீர்த்த சங்கக் கடலுகத் தேவர்கள்
[3]வேர்த்த சங்கிட வண்டம் வெடிபட
ஆர்த்த சங்க மறைந்த [4]முரசமே.

(இ - ள்.) படகம் அடிக்கப்படவும், சிறப்புப்பொருந்திய திரண்ட கடல் போன்ற பகைவர் சேனை(அச்சத்திஞற்)சிதறவும், தேவர்கள்(உடல்)வேர்த்து அசங்கிடவும், அண்டம் வெடிபடவும், சங்கம் ஆரவாரித்தன;போருக்குஉரியனவும் தசாங்கத்தைச்சேர்ந்தனவுமான முரசம் அடிக்கப்பட்டன; (எ - று.)

முதலடியில், தசங்கம்-தசாங்கமென்ற வடசொல்லின்சிதைவு: தசாங்கங்களாவன(இன்னவை)யென்பதை "ஆறுமலையும்யானையுங்குதிரையும்,நாடூருங் கொடியுமுரசுந், தாருந்தேருந் தசாங்கமெனப்படும்" என்பதனுலறிக. இரண்டாமடியில், சங்கம் = ஸங்கம்: திரள். கடல் - ஆகுபெயர். நான்காமடியில், சங்கம் - சங்கவாத்தியம். திரிபுஎன்னுஞ்சொல்லணிகாண்க. இனி, இவ்வணிகொள்ளாமல், போர்த்த-தோல்போர்க்கப்பட்ட, சங்கம்-திரளாகவுள்ள, படகம் புடைத்திட என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]போர்த்தசங்கம். [2]தீர்த்த. [3]வேர்த்தசங்கவிசம்பு. [4]முரசினம், முரசெலாம். (கo௬க)

கoo. தேரு மாவும் [1]படைஞருங் [2]தெற்றிட
மூரி [3]வன்னெடுந் [4]தானையின் முற்றிஞன்
நீரொ ரேழு முடிவி [5]னெருக்குநாள்
மேரு மால்வரை யென்ன விளங்கிஞன்.

(இ - ள்.) தேரும் குதிரையும் படைவீரரும் நெருங்க, மிகவலியமிக்க இராக்கதசேனையில் நிரம்பித்தோன்றுபவனான இராவணன்,—ஒரேழுகடல்களும் நெருக்கும் நாளாகிய யுகமுடிவில் மேருமால்வரைபோல விளங்கினான்; (எ - று.)—ஏழுகடல்களால் நெருக்கப்படும் மேருமலை தேர்முதலியவற்றால் நெருங்கப்பெறும் இராவணனுக்கு உவமையாகும். நீர்-கடலுக்கு, இலக்கணை. பி - ம்:—1படைகளும். 2செற்றிட, தெற்றிய. 3வாணெடுந். 4தானையை. 5நெருங்கும். (கOசுஉ)

வேறு.

கOக. எழிசைக் கருவிவீற் றிருந்த தென்னினுஞ்
சூழிருந் திசைகளைத் தொடருந் தொல்கொடி
[1]வாழிய வுலகெலாம் [2]வளைந்து வாயிடும்
ஊழியி னந்தக னாவி னோங்கவே.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (தன்தேரிலே) எழிசைகளையுடைய கருவியாகிய வீணையின் வடிவம் பெருமைபெறப் பொறிக்கப்பட்டிருப்பினும், சூழ்ந்துள்ளபெருந்திசைகளை (க் காற்றினால்) தொடர்கின்ற பழமையான கொடியானது,—வாழ்வுபெற்றுள்ள உலகையெல்லாம் வளைந்துகொண்டு தன்வாயிலிடுகின்ற யுகாந்தகாலத்து யமனதுநாவைப்போல ஓங்கித்தோன்றவும்,—(எ - று.)—"உலகெலாம்...வெற்றிமுற்றினான் தோன்றினான்" (கOசு) என முடியும்.

அவ்விராவணனது தேரில் வீணைக்கொடி கட்டப்பட்டிருந்ததென்றும், அது காற்றிற் படபடவென்று நீட்டியடித்துக்கொள்ளும்பொழுது யுகாந்தகாலத்து யமன் நாவைநீட்டுவதுபோலுமென்றும் வருணித்தற்குக் காரணம் - அவனுடையதேரில் வீணைக்கொடிகட்டி யுத்தயாத்ரையாகச் செல்லின் மிகப்பலர் மாள்வரென்னுங் கருத்துப் பற்றியாகும். வீணைக்கொடியும் அச்சத்தைவிளைத்ததென்ற பொருள்தோன்றவே, 'என்னினும்' என உம்மை கொடுத்தார். பி - ம்:—1வாழியர். 2வளைத்து. (கOசுங)

கOஉ. [1]வேணுயர் [2]நெடுவரை யரக்கர் வேலைக்கோர்
தோணி[3]பெற் றனமெனக் கருதுந் தொல்செருக்
காணிய வந்தவர் [4]கலக்கங் கைம்மிகச்
சேணுயர் [5]விசும்பிடை யமரர் [6]சிந்தவே.

(இ-ள்.) மூங்கில்உயரவளர்ந்த நெடியமலையைப்போன்ற(பெருந்தோற்றமுள்ள) அரக்கராகிய கடலைக் கடப்பதற்குஉரிய ஒப்பற்றதோணியைப் பெற்றோமெனக் கருதிப் போரைக் காணும்பொருட்டு வந்தவராகிய பழமையான அமரர் கலக்கம்மிகுவதால் மிகவும்உயர்ந்தஆகாயத்தினிடத்தேசிதறவும்,—(எ - று.)—"தோன்றினான்"(கOசு)என முடியும். தொல் என்பது அமரரென்பதோடு இயையும். பி-ம்:—1வேணுவின். 2நெடுஞ்சிலை. 3பெற்றனரெனக் கடக்குந். 4கலங்கக், கலங்கிக். 5நெடுவரை. 6சிந்தினார். (கOசுச)

கOரு. கண்ணுறு [1]கடும்புகை [2]கதுவக் கார்நிறத்து
[3]அண்ணல்வா ளரக்கர்த மரத்தப் பங்கிகள்

⁴வெண்ணிறங் ⁵கோடலி னுருவின் வேற்றுமை
⁶நண்ணினர் ⁷நோக்கவு மயிர்ப்பு நல்கவே.

(இ - ள்.) (தனது) கண்ணிற்பொருந்திய கோபாக்கினியின்புகை கவ்வவே கருநிறம்பொருந்திய பெருமையிற்சிறந்தவராகிய கொடிய்அரக்கருடையசெம்பட்டமயிர்கள் வெண்மையான நிறத்தையடைதலினால் முன்னையுருவம்மாறியமைபற்றிக் கிட்டியஉறவினர்நோக்கும்போது (அவர்கட்கும்) சந்தேகத்தைவிளைக்கவும்,—(எ - று.)—"தோன்றினான்"(கoசு)என்க. மயிர் அனற்பொறிப்புகை கதுவுவதனால் வெண்ணிறமாகத்தோன்ற, கிட்டியஉறவினரும் அம்மயிர் அங்ஙனம் வெண்ணிறங்கொண்டமைபற்றி அயிர்ப்பாராயினரென்க. பி-ம்:—¹கடும்பொறி, நெடும்புகை, நறும்பொறி. ²கழுமக். ³முன்னரக்கர்தம். ⁴ஒண். ⁵கோடல்னுருவும், கொண்டவில்லுருவு. ⁶நண்ணுற. ⁷நோக்கமும் வியப்பு. (கoசுரு)

கoசு. கானெடுந் ¹தேருயர் ²கதலி யுங்கரத்து
ஏனைய ரேந்திய பதாகை யீட்டமும்
ஆனையின் கொடிகளு ³மளவித் தோய்தலால்
வான⁴வா றொடுமழை ⁵யொற்றி வற்றவே.

(இ - ள்.) சக்கரத்தைப்பூண்ட நீண்ட தேரிலேஉயரக்கட்டியுள்ள கொடியும் (தம்)கைகளிலே மற்றையோ ரேந்திய பெருங்கொடிகளின்கூட்டமும், ஆனையின்மீது பிடிக்கப்படுகின்ற கொடிகளும் ஒன்றுசேர்ந்துபடிதலினாலே ஆகாசகங்கையுடனே மேகமும் ஒற்றப்பட்டு நீர்வற்றவும்,—(எ-று.)—"தோன்றினான்"(கoசு) என்க. பி—ம்:-¹தேன். ²காதலின். ³அளாவித், அனைத்துந். ⁴யாறொடு. ⁵எற்றி. (கoசுசு)

கoரு. ¹ஆயிரங் கோடிபே ²யங்கை யாயுதந்
தூயன சுமந்துபின் ³றொடரச் சுற்றொளிர்
சேயிரு மணிநெடுஞ் சேமத் தேர்தெரிந்து
ஏயின வாயிரத் திரட்டி யெய்தவே.

(இ - ள்.) ஆயிரங்கோடிப்பேய்கள்(தமது)உள்ளங்கையிலே தூய்மையனவான ஆயுதங்களைச் சுமந்துகொண்டு பின்தொடர்ந்துவரவும், சுற்றுப்பக்கங்களில் ஒளிவிடுகின்ற மிகப்பெரிய மணிகளழுத்தியனவும் ஆராய்ந்தெடுத்து உடன்படுமாறுகட்டளையிடப்பெற்றனவுமான சேமத்தேர்கள் இரண்டாயிரம் உடன்வரவும்,—(எ - று.)—"தோன்றினான்"(கoசு) என்க.

ஆயுதத்திற்குத் தூய்மை-துருப்பிடியாமை. சேமத்தேர்-போர்க்குச்செல்லும்போது ஏறிச்செல்லுந் தேர் அழிந்துவிடுமாயின் உடனே ஏறும்படி உதவுந் தேர். பி-ம்:—¹ஆயிரகோடிபேய், ஆயினபெருங்கொடி. ²அணிகொள், அமலன். ³தொடர்ந்துசுற்றிட. (கoசுஎ)

கoஅ. ஊன்றிய பெரும்படை யுலைய வுற்றுடன்
ஆன்ற¹போ ரரக்கர்க ²ணெருங்கி யார்த்தெழத்
தோன்றினன் ³னுலகெலாந் தொடர்ந்து ⁴நின்றன
மூன்றையுங் கடந்தொரு வெற்றி முற்றினான்.

(இ-ள்.) எதிர்த்தபெரியவானரப்படை (அஞ்சி) வருந்தவும், தன்னுடன் பொருந்திய அமைந்தபோரில்வல்ல அரக்கர்கள் நெருங்கி (மகிழ்ச்சிகொண்டு) ஆரவாரித்துக்கிளரவும், ஒன்றன்மீதுஒன்று தொடர்ச்சியாகவுள்ளனவும் சுவர்க்கம் மத்திமம் பாதாளம் என மூன்றுவகையாகவுள்ளனவுமான எல்லாவுலகங்களையும் கடந்துசென்று ஒப்பற்ற வெற்றிபெற்றவனான இராவணன்(போர்க்களத்துத்)தோன்றினன்; (எ-று.)—"பெருங்களம் புகுந்துளான்" என மேற்செய்யுளில் வருவதனால்'போர்க்களத்து'என்பது வருவிக்கப்பட்டது. பி-ம்:—1பேர். 2நெருக்கி. 3உலகெனத். 4நின்றவை, நின்றவம். (௧௦௬௮)

௧௦எ.—போர்க்களத்துஇராவணன் புகுந்துள்ளதைத்தூதுவர் இராமபிரானுக்குத் தெரிவித்தல்.

ஓதுறு கருங்கடற் [1]கொத்த தானையான்
[2]தீதுறு [3]சிறுதொழி லரக்கன் [4]சீற்றத்தாற்
போதுறு [5]பெருங்களம் புகுந்து ளானெனத்
தூதுவர் [6]நாயகற் கறியச் சொல்லினர்.

(இ-ள்.)தீமைபொருந்திய இழிதொழிலைப்புரிந்த இராவணன்,—'(சிறப்பித்துச்)சொல்லப்படுகின்ற கரியசமுத்திரத்துக்கு ஒப்பான சேனையையுடையவனாகிச் சீற்றத்தோடு, (தான்) புகுதற்குரிய பெரியபோர்க்களத்திலே வந்துள்ளான்' என்று தூதர்கள் (தமது) தலைவனாகிய இராமபிரானுக்குத் தெரியுமாறு சொல்லினர்; (எ - று.)—போதுறுதல் - வருதற்குஉரியதாதல். பி-ம்:—1உயர்ந்த. 2மீதுறு. 3தெறுதொழில். 4சீறினன், சீறியே, சீறியப், சீற்றத்தான். 5பொருகளம். 6நாயகர்க்கு. (௧௦௬௯)

௧௦அ.—அதுகேட்ட இராமபிரானதுதோள் மகிழ்ச்சியாற் பூரித்தல்.

ஆங்கவ னமர்த்தொழிற் கணுகி னு[1]னென
வாங்கினன் சீதையை யென்னும் [2]வன்மையால்
தாங்குறு [3]பிரிவினுற் [4]றேய்ந்த தேய்வற
ஓங்கின [5]விராகவன் மீளித் தோள்களே.

(இ - ள்.) அப்பொழுது அந்தஇராவணன் போர்த்தொழிற்குவந்து நெருங்கினனென்று(தூதுவர்)சொன்னமாத்திரத்தில்'(நான்)சீதையை(இனி) மீட்டுவிட்டேன்' என்கின்ற உறுதியானஎண்ணத்தினால், துன்பத்தையுண்டாக்குகின்ற பிரிவினால் மெலிவடைந்த மெலிவுநீங்க,இராகவனுடைய வலிய தோள்கள் பூரித்தன; (எ - று.)—பி - ம்:—1எனின். 2வண்மையால். 3பரிவினால். 4மெலிந்ததேயவை. 5ஆரியன்வீரத், இராகவன்மெலிந்த. (௧௦௭௦)

௧௦௯.—இதுமுதல் ஒன்பதுகவிகள்-இராமபிரான்போர்க்குச்சன்னத்தனாகி வானரசேனையோடு தோன்றுதலைத் தெரிவிக்கும்.

தொடையுறு வற்கலை [1]யாடை சுற்றிமேற்
புடையுறு வயிரவாள் பொலிய வீக்கினன்
இடையுறு கருமத்தி னெல்லை கண்டவர்
[2]கடையுறு நோக்கினிற் காணுங் காட்சியான்.

(இ - ள்.) (ஸ்ருஷ்டிகாலந்தொடங்கி மீளாவுலகத்தை [பரமபதத்தை] அடையுங்காலத்திற்கு) இடைப்பட்டகாலத்திலே பயன்விளைக்கின்ற (புண்ணியபாபரூபமான)கருமத்தின் எல்லையைக் கண்ட ஞானிகள் எல்லையானஞானக் கண்ணினாற் காண்கின்ற காட்சிக்குவிஷயமாகின்றவனான ஸ்ரீராமன்,—தொடுத்தாற்போன்றுள்ள மரவுரியாடையை (அரையிற்கெட்டியாகச்)சுற்றி,அதன் மேற்புறத்திலே பொருந்திய உறுதியுள்ள வாளை விளங்கக் கட்டினான்;(எ-று) —பரம்பொருள் தான் கொண்ட மநுஷ்யபாவனைக்கேற்க இங்ஙனம் போர்க்கோலங்கொள்கின்றானேயென்று ஈடுபடுகின்றார். கருமத்தின் எல்லைகண்டவர் - இனிப்புதிதாகக் கருமத்தொடர்பு தம்மிடம்வரப்பெறாதவ ரென்றபடி. பி-ம்:—[1]ஆடைச்சுற்றின்மேல். [2]கடையுற. (கoஎக)

கக0. [1]ஒத்திரு சிறுகுறட் பாத முய்த்தநாள்
[2]வித்தக ரருமறை [3]யுலகை மிக்குமேற்
[4]பத்துள விரல்புடை பரந்த [5]பண்பெனச்
சித்திரச் சேவடிக் கழலுஞ் சேர்த்தினான்.

(இ - ள்.) (திருமால்) சிறிய வாமனாவதாரங்கொண்டு ஒத்த இரண்டுபாதங்களையும் உலகினளவினும்மிக்கு (முறையே மேலேழுலகங்களையும் கீழேழுலகங்களையும் அளக்குமாறு) செலுத்திய காலத்தில், அரியவேதமுணர்ந்த ஞானவான்களின்பத்தியோடுகூடியவிரல்கள் புடைகளிற்பரவிய பண்பையொப்பச் சேவடியிலே சித்திரத்தன்மையுள்ள கழலையுங் கட்டினான்; (எ - று.)

திருமால் வாமனாவதாரஞ்செய்து மூவடிமண்பெற்றுத் திரிவிக்கிரமனாக வோங்கி அளக்கையில் ஆங்காங்குள்ள ஞானவான்கள் அப்பிரானதுபாதங்களைப்பற்றிப் பணிந்தன ரன்றோ? அங்ஙனம்பற்றிய விரல்கள் தாம் இவ்வண்ணந்தோன்றுகின்றனவோ என்னுமாறு கழல்கள் தோன்றின வென்க. கழல்கள்-கொலுசுஎன்றஅணிகலத்திற்போல இடையிடையே வரிகள் கைவிரல்கள் போன்றுநெருங்கப் பருக்துத்தோன்றுமாதலால்,இவ்வாறுவருணித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பத்து-பக்தி: "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றஇடத்துப்போல. இனி, பத்து-பத்தென்னும்எண்என்பாருமுளர். வித்தகர்-பிரமதேவரென்றலுமொன்று. 'அருமறையுவகைமிக்கு' எனப் படிப்பாருமுளர். பி-ம்:-[1]ஒத்துறு. [2]வித்தகவரு. [3]உலகின்மேற்படர், உலகைமீக்குமால். [4]பத்துடை. [5]பண்பெனுஞ். (கoஎஉ)

கஉக. பூவுயர் மீனெலாம் பூத்த வானிகர்
[1]மேவருங் கவசமிட் [2]டிறுக வீக்கினன்
தேவியைத் [3]திருமறு மார்பிற் றீர்ந்தனன்
[4]நோவில னென்பது நோக்கி னான்கொலோ.

(இ - ள்.) (இராமன், ஒளி) மிக்கநட்சத்திரங்களெல்லாம் பூப்போற்பூத்த வானத்தை நிகர்த்துப் பொருந்திய கவசத்தைப் பூண்டு இறுகக்கட்டினான்; ஸ்ரீவத்ஸமென்னும்மறுப்பொருந்தின மார்பில்நின்றும் தேவியாகியஇலக்குமியைப் பிரிந்துள்ளானாதலால் (இறுகக்கட்டுவதனால் அந்தத்தேவி) நோவடையமாட்டாளென்பதை யாலோசித்தானோ? (எ - று.)—தற்குறிப்பேற்றவணி

இடையிற் பளபளவென்னும் பூத்தொழிலமைந்த இருப்புக்கவசத்திற்கு, மீன் பூத்த வான் உவமை. பி-ம்:---1மேவிருங். 2இறுக்கி. 3திருமணி... தீர்தலால். 4கோவிலே. (௧0எ௩)

௧௧உ. [1]நற்புறக் கோதைதன் னளினச் செங்கையின்
நிற்புறச் சுற்றிய காட்சி [2]நேமிசால்
கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை [3]போன்றதால்.

(இ - ள்.) (அந்தஇராமன்), சிறந்த மேனியையுடைய தோலுறையைத் தன்னுடையதாமரைமலர்போன்ற செங்கையிலேநிற்கும்படி சூழ அணிந்த காட்சி,—வட்டவடிவமைந்த கற்பகக்கிளையைக் கருநிறமுள்ள பாம்பு அழகு பொருந்தச் சுற்றியதன்மையைப் போன்றிருந்தது; (எ - று.)—உவமையணி. கோதை - கைக்கவசம்: கோதா-உடும்பு: அதன்தோலினாலியன்ற கைக்கவசத்துக்கு ஆகுபெயர். பி-ம்:—1நற்புறு, நற்புதுக். 2நேமியான். 3போன்றவால். ()

௧௧௩.புதையிருட் பொழுதினு மலரும் பொங்கொளி
[1]சிதைவரு [2]நாள்வரச் [3]சிவந்த தாமரை
இதழ்தொறும் வண்டுவீற் [4]றிருந்த தாமெனத்
[5]ததைவுறு [6]நிரைவிரற் புட்டி ருங்கினன்.

(இ-ள்.) (எல்லாப்பண்டங்களையும் தெரியவொட்டாமல்) மறைக்கின்ற இருட்காலத்திலும் மலருந் தன்மையுள்ளதும் மிக்கவொளியுள்ளசூரியன்(அவ்விருளைச்) சிதைக்கின்ற பகற்பொழுதுவரச் சிவந்துதோன்றுவதுமான தாமரையின் இதழ்தோறும் வண்டு வீற்றிருந்ததாகு மென்னுமாறு நெருங்குதல் பொருந்திய வரிசையாகிய விரல்களுக்குக் கவசத்தைத் தாங்கினன்; (எ-று.) —தற்குறிப்பேற்றவுவமையணி. விரற்கவசம் புட்டிலெனப்படுவதை "விரற்றலைப் புட்டில் வீக்கி" என்ற சிந்தாமணியாலும் அறிக. பி-ம்:—1சிதைவில. 2நாள்வரைச், நாள்வரை, நாரவிர்,நாள்விரைச்.3சிறந்த,சிதைவில்.4இருந்தவே. 5ததையுறும். 6நிறைவிரற், விரல்நிரை. (௧0எ௫)

௧௧௪.பல்விய லுலகுறு [1]பாடை [2]பாடமைந்து
எல்லையி னூற்கடல் [3]லேற நோக்கிய
நல்லிய [4]னவையறு கவிஞர் [5]நாவருஞ்
சொல்லெனத் தொலைவிலாத் தூணி [6]தூக்கினன்.

(இ - ள்.) உலகத்துப்பொருந்திய பல்வகையியல்பமைந்த பாஷைகளிற் சிறந்தஅறிவு அமைந்து எல்லையில்லாதநூற்கடல்களை நன்குணர்ந்த நல்லதன்மையையுடைய குற்றமற்றகவிஞருடைய நாவிலே மேன்மேல்தோன்றுகின்ற சொல்லைப்போலத் தொலைவில்லாத தூணீரத்தைத் தோளில் தாங்கினன்.

தொலைவிலாத்தூணி - எடுக்கஎடுக்க அம்பு வற்றாமலுள்ள அம்புப்புட்டில்: அட்சயதூணீரமெனப்படும். இந்தத்தூணீரத்தினின்று அம்பு தொலையாமல்வருதல், கவிஞரின்நாவில் சொல் தடைப்படாமல் மேன்மேல்வருதற்கு உவமையாம். ஒவ்வொருபாஷையின்தன்மை ஒவ்வொருவகையாயிருத்தலால், 'பல்வியலுலகுறுபாடை' என்றார். இனி, பலஇடப்பட்ட பாஷைகளில் வல்ல

கவிஞருமாம். பி-ம்:-1பாடல். 2பாடமைத்து, பாணமைத்து, பாட்மை. 3எய்த. 4நவையுறு. 5நாவிடைச். 6சேர்த்திஞன். (ச0எசு)

கக௫. கிளர்மழைக் குழுவிடைக் 1கிளர்ந்த மின்னென
2அளவறு செஞ்சுடர்ப் பட்டம் 3மார்த்தனன்
இளவரிக் கவட்டிலை யாரொ 4டேர்பெறத்
5துளவிய 6தும்பையுஞ் 7சுழியச் சூடிஞன்.

(இ - ள்.) (மழைமெய்யுமாறு) கிளர்ச்சிகொண்ட மேகத்தின்கூட்டத்தினிடத்திலே விளங்குகின்ற மின்னல்போலத்தோன்றுமாறு, (நெற்றியிலே) அளவற்ற செவ்வியசுடரையுடைய வீரப்பட்டங் கட்டிக்கொண்டான்; இளைய அழகுள்ள கவட்டிற்பொருந்திய இலையையுடைய ஆத்திமாலையுடனே அழகு பொருந்தத் துளவையும் பொருந்திய தும்பைமாலையையும்வளையச்சூடிஞன்.

வரி-இரேகையுமாம். கவடு-கிளைக்கொம்பு. துளவத்தின் தன்மைபொருந்திய ஆத்தியையும் தும்பையையுஞ் சூடிஞனென்றுமாம்: திருமால் அவதாரங்களில்அணியும் மாலைகள் துளவத்தினமிசயானவை யென்பர். சூரியவமிசத்தாரான சோழர்க்கு ஆத்திமாலை யுரிய தாதலால், அவ்வமிசத்தவஞன இராமனுக்கும் ஆத்தி கூறிஞர். தன்குலத்தார்க்குஉரிய மாலையோடு போர்க்குச்செல்வோர் சூடவேண்டிய தும்பைமாலையை இராமபிரான்சூடினமை,இதிற் கூறப்பட்டது. பி-ம்:—1கிடந்த. 2வளர்பிறைநெற்றியிற், அளவறுநெடுஞ்சுடர்ப், வளமிகுநெடுஞ்சடைப். 3ஆர்த்துமேல். 4எற்படத். 5துளவொடு. 6தும்பையின். 7சுழியஞ், செறியச். (ச0எஎ)

கககூ. ஓங்கிய வுலகமு முயிரு 1முட்புறந்
தாங்கிய 2பொருள்களுந் தானுந் 3தானென
நீங்கிய தியாவது 4நினைக்கி லோமவன்
வாங்கிய வரிசிலை மற்றொன் றே5கொலாம்.

(இ - ள்.) (ஒன்றன்மேலொன்ருக) ஓங்கியுள்ள உலகங்களும் அவற்றினுட்புறத்திலுள்ள உயிருடனுள்ள சரப்பொருள்களும் அசரப்பொருள்களும் தானும் தானென்னுமாறு(பரம்பொருளாக இருந்தும் அவற்றினின்றும்)வேருயிருக்கும் [மனிதனுகஅவதரித்திருக்கும்] வகை இன்னவாறுஎன (நாம்)நினைந்துஉணரவல்லமையுடையோமல்லோம்:(இவ்வண்ணம் வேறுபட்டுவிளங்குள்ள அப்பிரான்போலவே), அவன் கைக்கொண்டவில்லும் (நம்மால்அறியமுடியாத) வேருெருபொருளோ? (எ-று.)—இராமபிரான் கைக்கொண்டவில் சாதாரணவில்லைப்போல இருக்கவில்லை யென்றபடி. பி-ம்:-1ஒப்புறத். 2மறைகளும்பொருளும். 3தானெனின். 4நினைந்திலேம். 5கொலோ. (ச0எஅ)

கஅ0. நாற்கட லுலகமும் விசும்பு நாண்மலர்
தூர்க்கவெஞ் சேனையுந் தானுந் தோன்றிஞன்
மாற்கடல் 1வண்ணன்றன் வளரு மாவிரும்
பாற்கட லோடும்வந் ததிரும் 2பான்மையான்.

(இ - ள்.) நாற்றிசையிலும் கடலாற்சூழப்பட்ட இம்மண்ணுலகத்தாரும் வானுலகத்தாரும் அன்றுமலர்ந்த மலர்களை மிகுதியாகத் தூவ, கொடியகுரக்

குச்சேனையுடனே (அப்போது) தோன்றியவனான இராமன், கரியகடல்போன்ற திருநிறத்தையுடையவனான திருமால்தான் கண்வளர்கின்ற மிகப்பெரியதிருப் பாற்கடலுடனே வந்து எதிர்ப்பட்டாற்போன்ற தன்மையையுடையவனானான்; (எ-று.)—நன்மைத்தற்குறிப்பேற்றவணி. குரங்குகள் வெண்ணிறமுடையன வாதலின், அந்தச்சேனைக்குப் பாற்கடல் உவமையாயிற்று. பாற்கடலிற்பள்ளி கொள்ளும்பரமன் ஸ்ரீராமனாகத் திருவவதரித்ததற்கு ஏற்ப, பாற்கடல் வானர சேனையாகத்தோன்றிற்றென்க. பி-ம்:-[1]வண்ணனையருளுமாறிரு. [2]பான்மை போல். (௧௦௭௧)

௧௧அ.—யுத்தசன்னத்தனான இராமபிரான் இலட்சுமணனுடன் சேர்தல்.

ஊழியி னுருத்திர [1]னுருவு [2]கொண்டுதான்
ஏழுய ருலகமும் [3]வீக்கின் றானென
வாழிய வரிசிலைத் தம்பி மாப்படைக்
[4]கூழையி [5]னெற்றிநின் றானைக் கூடினான்.

(இ - ள்.) ஊழிக்காலத்தில் தான் உருத்திரமூர்த்தியினுடைய உருவத்தைக்கொண்டு ஏழாகவுள்ள சிறந்தஉலகங்களையும் அழிக்கின்றவன்போல, பெரிய(குரங்குச்)சேனையின் பின்னணியின்நெற்றியிலே கட்டமைந்தவில்லுடனேநின்றவனாகிய தம்பியைப் போய்ச்சேர்ந்தான், (ஸ்ரீராமன்); (எ - று.)

கூழை-பின்னணி. திருமால் யுகாந்தகாலத்திற் சிவபெருமானது உருவத்தைக்கொண்டு எல்லாவுலகங்களையும் அழிப்ப னென்பது, நூற்கொள்கை. அங்ஙனம் யுகாந்தகாலத்துச் சினந்துள்ள உருத்திரமூர்த்தியையொப்பான் இலட்சுமண னென்க: "முற்றுமதியம் மிலைந்தான் முனிந்தானையன்னான்" என்றார், அயோத்தியாகாண்டத்தும். என நின்றானை என்றுஇயையும். பி-ம்:-- [1]உருவம். [2]கொண்டனாள். [3]அவிக்கின்றான், எரிக்கின்றான், நீக்குந்தான். [4]கூழையன். [5]நெற்றியின்றானைகூட்டினான். (௧௦அ௦)

௧௧௯.—அரக்கர் சேனையும் வானரசேனையும் கைகலந்துபொருதல்.

என்புழி நிருதரா மேழு வேலையும்
மின்பொழி [1]யெயிறுடைக் கவியின் வெள்ளமுந்
தென்புலக் [2]கிழவனுஞ் செய்கை [3]தீட்டிடப்
புன்புலக் களத்திடை[4]ப் பொருத போலுமால்.

(இ - ள்.) என்றஅளவில் [இராவணன் அரக்கர்போர்க்களத்துத் தன் சேனையோடும் இராமன் தமக்குஉரியகளத்து வானரர் இலட்சுமணன் என்ற இவர்களோடும் சேர்ந்தபோதில்], தெற்குத்திக்குக்குஉரியவனான யமனும் தன் செய்கையை [கொலைத்தொழிலை] விரைந்துநடத்த, அரக்கராகிய எழுசமுத்திரமும் மின்னலைப்பொழிகின்ற பற்களையுடைய கவியின் சமுத்திரமும், புல்லியஇடமான போர்க்களத்திலே(கைகலந்து)போர்செய்யலாயின; (எ - று.)— போலும்-ஒப்பில்போலி. பி-ம்:--[1]எயிற்றுடைக். [2]கிழவன்றன். [3]கீழ்ப்படப், நீக்கிடப். [4]நின்ற. (௧௦அ௧)

கஉ௦.—இருதிறத்துச்சேனையும் மிகுதியாகஇறத்தல்.

[1]தெற்கிவை வடக்கிவை [2]யென்னுந் திக்கெலாம்
பற்குவை பரந்தன குரக்குப் பல்பிணம்
பொற்குவை நிகர்த்தன நிருதர் போர்ச்சவங்
கற்குவை நிகர்த்தன மழையுங் [3]காட்டின.

(இ - ள்.) 'இவை தெற்கு, இவை வடக்கு'என்றுசொல்லுகின்ற திக்குக்களிலெல்லாம் பற்களின்திரள் பரவின;குரங்கின்மிக்கபிணம், (வெண்)பொற்குவியலை ஒத்தன;போரிற்பட்ட(அரக்கரின்)பிணங்கள் கல்லின்குவியலையொத்தன;(அன்றியும்)மழைக்குவியலின்தன்மையையுங் கொண்டன; (எ-று.)

கீழ்க் குரங்குச்சேனைக்குப் பாற்கடலையுவமைகூறியதனால்,இங்குப்பொன் என்பதற்கு-வெண்பொன்னென உரைக்கப்பட்டது. நிருதரின்சவக்குவியல்-கற்குவியலையும், மழையின்தன்மையையும் ஒத்ததென்க. "துமிந்தன" (கஉக) என்பதன்பின் சிலபிரதியிலும், "கடுங்குரங்கு"(கஉஉ)என்றதன்பின் சிலபிரதியிலும் இச்செய்யுள் உள்ளது. பி-ம்:—[1]தெற்கிதுவடக்கிது. [2]என்னத்தேர்கிலார். [3]காட்டினன். (கoஅஉ)

கஉக.—இதுவும், அடுத்தகவியும் - அரக்கர்சேனை
மிகுதியாகஇறத்தலைத் தெரிவிக்கும்.

துமிந்தன தலைகுடர் சொரிந்த தேர்க்குலம்
அவிந்தன புரவியு [1]மாளு மற்றன
குவிந்தன பிணக்குவை [2]சுமந்து [3]கோணிலம்
நிமிர்ந்தது பரந்தது குருதி நீத்தமே.

(இ - ள்.) தலைகள் துண்டுபட்டன; குடல்கள் சிந்தின; தேர்க்கூட்டங்கள் அழிந்தன; குதிரைகளும் ஆளும் பலதுண்டுபட்டன; குவிந்தனவாகிய பிணக்குவியல்களைச்சுமந்து வலிய நிலம் மேடாகத் தோன்றிற்று;இரத்தவெள்ளம் எங்கும்பரவிற்று;(எ-று.)—பி-ம்:-[1]தாரும். [2]சுமந்த. [3]கோளில. (கoஅ௩)

கஉஉ.கடுங்குரங் கிருகையா லெற்றக் கால்வயக்
கொடுங்குரந் துணிந்தன புரவி குத்தினால்
ஒடுங்குரந் [1]துணிந்தனர் நிருத ரோடின
நெடுங்[2]குரம் பெனநிறை குருதி நீத்தமே.

(இ-ள்.) கொடியகுரங்குகள் (தமது)இருகையால் ஓங்கிக்குத்த, கால்வலிமையையும் வளைவான குளம்பையுங்கொண்ட குதிரைகள் துண்டுபட்டன; கைக்குத்தினால் உரம்ஒடுங்க அரக்கர் துண்டுபட்டனர்; நீண்ட ஒருஅணைக்கட்டு(உள்ளது)போல நிறைந்தஇரத்தவெள்ளம் ஓடலாயின; (எ - று.)

கால்வயப்புரவி கொடுங்குரந் துணிந்தனஎன இயைத்தலுமொன்று: குதிரைகள் குரகதங்கள்[குளம்புகளினாற்செல்வன]ஆதலால், குரங்குகளின் குத்தினால் அவை துணிந்தனஎன்றுரென்க.திரிபுஎன்னுஞ்சொல்லணி.கால்வயம்-விரைந்தோடுந்தன்மை.பி-ம்:—[1]துணிந்தன,துறந்தனர்.[2]குரம்பினில்.(கoஅச)

கஉரு.—இதுவும், அடுத்த கவியும்-சினத்துடன் இராவணன் வில்லின் நாணொலியை யெழுப்ப, வானரங்கள் சிதைந்துநிலைகெடுதலைக் கூறும்.

அவ்வழி யிராவண னமர [1]ரஞ்சத்தன்
[2]வெவ்விழி நெருப்புக வில்லி னாணினைச்
செவ்வழிக் கோதையிற் [3]றெறிக்கச் [4]சிந்தின
எவ்வழி மருங்கினு மிரிந்த வானரம்.

(இ-ள்.) அப்போது இராவணன் தேவரும் அஞ்சும்படி தனதுவெவ்விய கண்களினின்று நெருப்புப்பொறி பறக்க, வில்லினுடைய நாணியைச் செவ்வியமுறைமையிலணிந்த கைத்தோற்கட்டினோடுங்கூடித் தெறிக்க, வானரங்கள் சிதறினவாய்ப் பக்கத்துஎல்லாவிடங்களிலும் நிலைகெட்டோடின; (எ-று.) —பி-ம்:—1அஞ்சிட. 2வெவ்வழி. 3தெறிப்ப. 4சிந்தியாங்கு, சிந்தினன். (கoஅரு)

கஉச. உருமிடித் து[1]ழியுலைந் தொளிக்கு நாகமொத்து
இரியலுற் றனசில விறந்த வாற்சில
வெருவலுற் றனசில [2]விம்ம லுற்றன
பொருகளத் துயிரொடும் [3]புரண்டு போஞ்சில.

(இ - ள்.) இடியிடித்தபொழுதில் வருந்தியொளிக்கின்ற சருப்பத்தையொத்து, சிலவானரங்கள், நிலைகெட்டுஓடின; சிலவானரங்கள், இறந்தன; சிலவானரங்கள், அச்சங்கொண்டன; (சிலவானரங்கள்), அழுதலைப்பொருந்தின; சிலவானரங்கள், பொருகின்றகளத்தில் உயிருடனேபுரண்டுபோவனவாயின; (எ-று.)—பி-ம்:—1உலைந்துபோய். 2விம்மிவிம்மலாற். 3புரண்டவாற். (கoஅசு)

கஉரு.—நாணொலியால்தோன்றிய அச்சத்தின் வருணனை.

பொரக்[1]கரு நிறநெடு விசும்பு [2]புண்பட
இரக்கமி லிராவண னெறிந்த நாணினாற்
குரக்கின மூற்றதென் [3]கூறிற் றன்குலத்து
அரக்கரு மனையதோ ரச்ச மெய்தினார்.

(இ-ள்.) பொருமாறு, இரக்கமற்ற இராவணன் கருநிறமுள்ள நெடியவிசும்பும் புண்படும்படி தட்டி யொலியெழுப்பிய நாணியினால், [நாணைத்தெறித்து ஒலியெழுப்பியதனால்], கூறுமிடத்து, தன்குலத்தைச்சேர்ந்தவரான அரக்கர்களும் (வாயினாலும்சொல்லுதற்குஅரிய) அப்படிப்பட்ட அச்சத்தையடைந்தனர்; குரங்குக்கூட்டம் அடைந்தநிலையைப்பற்றிக் கூறவேண்டுவதென்? (எ-று.)--தன்குலத்தவரான அரக்கரே சொல்லமுடியாத பேரச்சத்தை யடைந்தன ரென்றால், குரங்குகளின் அஞ்சியநிலை தானே பெறப்படு மென்றவாறு. பி-ம்:—1கருதியநெடு, கருதியேநெடு, கருதினநெடு. 2புண்டர, போழ்பட. 3கூறித்தன், கூறறன். (கoஅஎ)

கஉசு.—நாணொலியால் அஞ்சாதுநின்றவர்.

வீடண னொருவனு மிளைய வீரனுங்
[1]கோடணை குரங்கினுக் கரசுங் [2]கொள்கையான்
நாடினர் நின்றனர் நாலு திக்கினும்
ஓடின ரல்லவ ரொளித்த தும்பரே.

(இ - ள்.) விபீஷணனொருத்தனும் இளையவீரனும் மரக்கிளைகளில் தத்திச்சேருந்தன்மையுள்ள குரங்குகட்குஅரசனான சுக்கிரீவனும் மனத்தினால் (செய்யவேண்டுவதை) ஆராய்ந்துநின்றனர்; மற்றையோர் நாலுதிக்கிலும் ஓடினார்; வானத்தவரும் போயொளித்துக்கொண்டனர்; (எ - று.)

உம்பர்-ஆகுபெயர். ஒளித்ததும்பர்என்பதற்கு - மேலுலகம் தூளியினால் மறைந்திட்ட தெனக் கூறுவாருமுளர். 'ஶாகாம்ருகம்' என்று குரங்குகட்கு ஒருபெயரிருத்தலால், 'கோடணைகுரங்கு' என்றார். இளையவீரனைக் கூறினது-இராமனுக்கும்உபலட்சணம். கொள்கையான்நாடினரென்பதற்கு-சத்திய சங்கல்பனான இராமபிரானை யனுசரித்துநின்றனரெனினுமாம்.பி-ம்:—1கோடிலர், கோடலர், கோடுறு, கோடுறை. 2கொள்கைதான். (கoஅஅ)

வேறு.

கஉஎ.—நாணொலியால் தேவர்களும் அஞ்சுதல்.

1எடுக்கின னிலத்தை 2யேந்து மிராவண னெறிந்த 3நாணின்
நடுக்கின 4னுலகை யென்பார் நல்கின னென்னற் பாற்றோ
மிடுக்கினன் மிக்க வானோர் மேக்குயர் வெள்ள மேனாள்
கெடுக்கு5நா ளுருமி னார்ப்புக் கேட்டன ரென்னக் 6கேட்டார்.

(இ-ள்.) (பேர்த்து) எடுக்கவேணுமென்றுநினைத்தால், (இந்தப்)பூமியைப் பேர்த்தெடுக்கவல்ல இராவணன் தெறித்தெழுப்பிய நாணொலியினால் உலகை நடுங்கச்செய்தானென்பார்: வலிமைமிக்கதேவர், மேலேயோங்கிவருகின்றபிரளயவெள்ளம் மேல்வரப்போகிறநாளாகிய உலகையழிக்கும் யுகாந்தகாலத்தில் தோன்றுகின்ற இடியின் பேரொலியைக்கேட்டனர்போல(ப் பேரச்சத்துடனே நாணொலியைக்) கேட்டார்கள்:(ஆகையால் வானத்தவரைஅஞ்சாதவாறு) கருணைசெய்துவிட்டானென்று சொல்லுதற்குஉரியதோ? (எ-று.)—இதனால், இவ்வுலகத்தவரைப்போலவே வானவரையும் நாணொலி நடுங்கச்செய்ததென்றவாறு. பி-ம்:—1எடுக்கும். 2என்னும். 3ஞாணின், நாணால். 4என்பதல்லால் நண்ணினன்...பாற்றோ, என்பது...நல்கியான்...பாற்றோ,உலகை...பாற்றோ. உலகை வெள்ளிநாகத்தையெடுக்கப்பெற்ற. 5நாண்மழையின். 6கேட்டான்.

கஉஅ.—இராவணனுக்கும் சுக்கிரீவனுக்கும் கடும்போர்நிகழ்ந்தமை நான்குபாடல்களாற் கூறப்படும்.

ஏந்திய 1சிகர 2மொன்றங் கிந்திரன் குலிச மென்னக்
3காந்திய வுருமின் விட்டான் கவிக்குலத் தரச 4னக்கல்
நீந்தரு நெருப்புச் 5சிந்தி நிமிர்தலு நிருதர்க் கெல்லாம்
வேந்தனும் பகழி யொன்றால் 6வெண்டுக ளாக்கி 7வீழ்த்தான்.

(இ - ள்.) கவிக்குலத்தலைவனான சுக்கிரீவன், அப்போது உக்கிரமாக விழுகின்ற இடிபோன்ற ஏந்திய மலைச்சிகரமொன்றை இந்திரனது வச்சிராயுதம்போல (இராவணன்மீது) எறிந்தான்;அந்தமலைச்சிகரம் கடத்தற்கு அரிய நெருப்பை யுமிழ்ந்து விரைந்துவருதலும்,(அதனை) அரக்கர்க்கெல்லாந்தலைவனான இராவணனும், ஒருஅம்பினால் வெண்ணிறப்புழுதியாக்கித் தள்ளினான்; (எ - று.)—கவி = கபி: வடசொல்: குரங்குஎன்பது, பொருள். பி-ம்:—1கோ

டும். 2ஆங்கொன்று, அங்கொன்று. 3காந்தியது. 4நக்கான். 5சிந்த. 6வெறுங். 7விட்டான். (௧௦௧௦)

௯௨௯. அண்ணல்வா ளரக்கன் விட்ட 1வம்பினா லழிந்து சிந்தித்
திண்ணெடுஞ் சிகர நீறாய்த் திசைதிசைச் சிந்த லோடுங்
2கண்ணெடுங் கடுந்தீக் காலக் கவிக்குலத் தரசன் கையால்
மண்மகள் வயிறு 3கீற மரமொன்று வாங்கிக் கொண்டான்.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனான கொடிய இராவணன் விடுத்த அம்பினாலே (சுக்கிரீவனெறிந்த)வலிய பெரியமலைச்சிகரம் அழிந்துவீழ்ந்து பொடிப்பொடியாய்த் திக்குகள்தோறும் சிதறுதலும், வானரக்குலத்தலைவனான அந்தச்சுக்கிரீவன், (தன்) கண்கள் மிக்ககொடுநெருப்பை வெளிக்கக்க, (தன்) கையினால் பூமிதேவியின்வயிறு பிளவுபடும்படி பெரியமரமொன்றைப் பேர்த்து எடுத்துக்கொண்டான்;(எ-று.)—வெகுதூரம் வேர்வீழ்ந்தமராமரத்தைப் பேர்த்ததனால்,'மண்மகள்வயிறுகீற' என்றார். பி-ம்:—1வாளியால்...சிந்தி,அம்பொன்றால்...சிந்த. 2கண்ணொடுங். 3கீறி. (௧௦௧௧)

௯௩௦. கொண்டமா மரத்தை யம்பின் கூட்டத்தாற் காட்டத் தக்க
கண்டமா யிரத்தின் மேலு முளவெனக் கண்டங் கண்டான்
1விண்டவா ளரக்கன் 2மீது விசும்பெரி பறக்க விட்டான்
பண்டைமால் வரையின் மிக்க தொருகிரி பரிதி மைந்தன்.

(இ - ள்.) (சுக்கிரீவன்) கைக்கொண்ட பெருமரத்தை அம்பின்தொகுதிகளைக்கொண்டு செய்யத்தக்க துண்டுகள் ஆயிரத்தினும் மிக்குள்ளன என்னுமாறு மிகப்பலகண்ட மாக்கினான்; (அப்போது) சூரியகுமாரன், (மரத்தைப்) பிளந்திட்ட கொடிய அரக்கன்மேல் ஆகாசத்திலே நெருப்புப்பொறி பறக்க, முன்னே விடுத்தபெருமலையினும் மிக்கதான ஒருமலையை எறிந்தான்;(எ-று.)—எவ்வளவுசிறுதுண்டு ஆகலாமோ அத்துண்டத்தினும் மிகுதியாகப் பலதுண்டங்களாக்கினானென்பது, 'காட்டத்தக்க கண்டமாயிரத்தின்மேலுமுளவெனக் கண்டங்கண்டான்' என்பதன்கருத்து. பி-ம்:—1விண்டவால். 2மீள. ()

௯௩௧. அக்கிரி யினையு மாங்கோ ரம்பினா லறுத்து மாற்றித்
திக்கிரி தரப்போர் வென்ற சிலையினை 1வளைய வாங்கிச்
சுக்கிரீ வன்றன் மார்பிற் 2புங்கமுந் தோன்றா வண்ணம்
3உக்கிர வயிர வாளி யொன்றுபுக் கொளிக்க வெய்தான்.

(இ - ள்.) (இராவணன்),—அப்போது அந்தமலையினையும் ஓரம்பினால் அறுத்துப்போக்கி,திக்கிலுள்ளாரெல்லாம் நிலைகெட்டுஓடுமாறு போரில் வெற்றிபெற்ற(தன்)சிலையினை வளையுமாறுசெய்து,கொடிய உறுதியான அம்பொன்றைச் சுக்கிரீவன்மார்பிலே அம்புமுனையும் வெளித்தோன்றாமற் புகுந்து ஒளிக்குமாறு தொடுத்துவிட்டான்; (எ - று.)—புங்கம்-வடசொல்: அம்பின்முனையென்பது,பொருள்.''புங்கமே தோன்றாவண்ணம்'' என்று அதிகாயன்வதைப்படலத்து (௨௦௦)வருகின்றது. பி-ம்:—1உளைய என்றபாடத்துக்கு 'எய்தான்' என்பதனோடு முடிக்க. 2சுடர்விடுபகழியொன்றும்,சாங்களும்... வண்ணம். 3உக்கிரமாகவேதானுடல் புக்குமூழ்கிற்றன்றே, உக்கிர...புக்கமூர்தவெய்தான். ()

கரு௨.—சுக்கிரீவன் சலித்துவிட, மேலைவாயிலிலிருந்த அநுமான் அங்குவருதல்.

சுடுகணை படுத லோடுந் துளங்கினான் றுளங்கா முன்னம்
குடதிசை வாயி னின்ற மாருதி [1]புகுந்த கொள்கை
உடனுறைந் தறிந்தா னென்ன வோ[2]ரிமை யொடுங்கா முன்னர்
வடதிசை [3]வாயில் வந்து மன்னவன் [4]முன்ன ரானான்.

(இ - ள்.) சுடுந்தன்மையுள்ள அம்பு (தன்மீது) படுதலோடும், (சுக்கிரீவன்) கலங்கினான்; (அப்படி அவன்) கலங்குதற்குமுன்னம் [துளக்கமடைந்ததும் அடையாததுமாயிருக்கும் நிலையிலென்றபடி],(அப்போது)நிகழ்ந்த நிகழ்ச்சியை உடனிருந்து அறிந்தவன்போல,மேற்குவாயிலிலிருந்த வாயுகுமாரனான அனுமான், ஓரிமைப்பொழுது கழிவதன்முன்னம் வடதிசைவாயிலிலேவந்து மன்னவனான சுக்கிரீவனது முன்னே சேர்ந்தான்;(எ - று.)—பி-ம்:—[1]புகுந்து. [2]இமைப்பு. [3]வாயினின்ற. [4]முன்னிதானான். (சoகச)

கருரு.—இதுமுதல் ஆறுகவிகள்-போருகையில் அனுமான் இராவணனது தோள்வலயத்தையும் சாரதியையும்ஒழித்தானாகி, இறுதியில் இராவணன் அம்புகளாற் சோர்வுறுதலைந் தெரிவிக்கும்.

பரிதிசேய் [1]தேறு முன்னம் பருவலி யரக்க பல்போர்
[2]புரிதியோ வென்னொ டென்னாப் புகையெழ விழித்துப் பொங்கி
[3]வருதியோ வாவென் பான்மேன் மலையொன் றுநிலையின் வாங்கிச்
சுருதியே யனைய [4]தோளால் [5]வீசினான் காலின் றோன்றல்.

(இ - ள்.) 'மிக்கவலிமையையுடைய அரக்கனே! சூரியகுமாரனான சுக்கிரீவன் தேறுதலையடைவதற்குமுன்னம் என்னொடு பலவகைப்போரைச் செய்வாயா?' என்று (அநுமன் இராவணனை அறைகூவிச்) சொல்ல, கண்களிற் புகைகிளம்ப உக்கிரமாக விழித்துப்பார்த்து, '(போர்செய்ய)வருகின்றாயோ? (வருவதாயின்)வா' என்று சொல்லுகின்ற அந்தஇராவணன்மேலே, வாயுகுமாரனான அவ்வனுமான், ஒருமலையை(அது)இருந்தஇடத்தினின்று பறித்து எடுத்து, வேதத்தையேயொத்த தன்தோளினால் வீசியெறிந்தான்; (எ - று.)--பி-ம்:—[1]தேறமுன்பாய்வருமரக்கர்தம் வெம். [2]பொருதியோ. [3]வருதியேல்வா வாவென்பான்மேன், வருதியேல்வாவாவென்றான்மேல். [4]தோளான். [5]எறிந்தனன்காற்றின். (சoகரு)

கருசு.மீயெழு [1]மேக மெல்லாம் வெந்துவெங் கரியிற் சிந்தித்
தீயெழ விசும்பி னூடு செல்கின்ற செயலை நோக்கிக்
காய்கணை யைந்து மைந்துங் [2]கடுப்புறத் தொடுத்துக் கண்டித்து
ஆயிரங் கூறு செய்தா னமரரை யலக்கண் செய்தான்.

(இ - ள்.) தேவர்கட்குத் துன்பமிழைத்தவனாகிய இராவணன், —(அநுமான்) எறிந்த அந்தமலை (வானத்தின்)மீது எழுந்துசெல்லுகின்ற மேகமெல்லாம் வெந்துபோய் வெவ்விய கரி[தணல்]போலச் சிந்தித் தீப்பறக்க விசும்பிலே போகின்றதன்மையைப்பார்த்து, கொதிக்கின்ற பத்து அம்புகளை விரை

வாகத்தொடுத்து (அந்தமலையை)க் கண்டித்து ஆயிரந்துண்டுகளாகுமாறுசெய் தான்;(எ-று.)—பி-ம்—[1]மழைகள்,மழையும், மலையும், மையும். [2]கடுப்பினில்.

௧௬௫.[1]மீட்டொரு சிகரம் வாங்கி வீங்குதோள் விசையின் வீசி
ஓட்டினான் [2]றேட்ட வானத் துருமினுங் கடுக வோடிக் [றேருள்
கோட்டுவெஞ் சிலையின் வாளி முன்சென்று கொற்றப் பொற்
பூட்டிய வலயத் தோடும் பூழியாய்ப் போயிற் றன்றே.

(இ-ள்.)(அநுமான்)மீண்டும் ஒருமலையை வாங்கிப் பருத்ததோள்வலிமை யால் விரைவாகவீசிச் செலுத்தினான்; (அங்ஙனஞ்) செலுத்த, (அம்மலை) வானத்தினின்றுவிழும் இடியினும் மிக்கவிரைவாகஓடி,வளைக்கின்ற கொடியவில் லினின்று (இராவணன் எய்த) அம்புகட்குஎதிரேபோய் (அவ்விராவணனது) வெற்றிபெற்ற அழகிய தோளிலணிந்த வலயத்துடனே தானும் புழுதியாய் விட்டது; (எ - று.)—அநுமான்எறிந்தமலை இராவணனது தோள்வளையைப் பொடியாக்கிப் பிறகு தானும் பொடியாயிற்றென்க: உடனவிற்சியணி. பி-ம்:- [1]மீட்டுமோர். [2]என்னலோடுமுருமினுங்கடிதின், என்னலோடும்...கடிதாய்.

௧௬௬ [1]மெய்யெரிந் தழன்று பொங்கி வெங்கணான் [2]விம்மி மீட்டோர்
மைவரை வாங்கு வானை வரிசிலை [3]வளைய வாங்கிக்
கையினுந் தோளின் மேலு மார்பினுங் காக்க வாளி
ஐயிரண் டழுந்த வெய்தா [4]னவனவை யாற்றி நின்றான்.

(இ-ள்.)கொடுங்கண்ணையுடையவனான இராவணன்,-(தன்வலயம்பொடியாய்விட்டதனாற்)சிறிதுதுயரமடைந்து மறுபடியும்(தன்மீதுஎறியுமாறு)மேகந்தங்குவதொரு மலையைப் பறித்துக்கொண்டிருந்த அநுமானைப்பார்த்துத் தன்னுடம்பும்எரியும்படி சினந்து கொதித்துக் கட்டமைந்தவில்லை வளைவுதோன்றுமாறு நன்குவளைத்து, (அந்தஅநுமானுடைய)கையிலும் தோளின்மேலும் மார்பிலும்(உள்ளேசென்று)மறைந்திடும்படி பத்துப்பாணங்களை அழுந்தவிட்டான்; அந்தஅநுமான் (அவை தன்மீதுபாயவும்) அந்தப்பாணங்களைத் தாங்கி நின்றான்; (எ-று.)—பி-ம்:—[1]மெய்யெரித்து, மெய்யெரி. [2]விம்மமீட்டோர், வீரமிட்டோர். [3]உளைய. [4]அவையவன், எய்தவை. (௧௦௯௮)

௧௬௭.யாரிது செய்ய கிற்பா ரென்று[1]கொண் டிமையோ ரேத்த
மாருதி பின்னு மாங்கோர் மராமரங் [2]கையின் வாங்கி
வேரொடுஞ் சுழற்றி விட்டான் [3]விடுதலு மிலங்கை வேந்தன்
சாரதி தலையைத் தள்ளிச் [4]சென்றது நிருதர் சாய.

(இ - ள்.) (இப்படித்தன்னுடம்பினுள்ளே அம்புகள் அழுந்தப்பாயவும் தாங்குகின்ற அநுமானைப்பார்த்து), 'யார்இவ்வாறு செய்யவல்லவர்? [உடலிற் பாய்ந்த கணைகளைத்தாங்கவல்ல திறல்வாய்ந்தவர் யாவர்?]' என்று சொல் லியவண்ணம் தேவர்கள் கொண்டாட, அநுமான், பின்னும் அங்கேயிருந்ததொரு மராமரத்தை வேரோடுங் கையாற்பறித்துச்சுழற்றி யெறிந்தான்; எறிதலும், (அது) இலங்கைவேந்தனான இராவணனுடைய சாரதியின் தலையை வீழ்த்தி,அரக்கர்பலர் மடிய(க் கீழ்வீழ்த்திச்)சென்றது;(எ-று.)—பி-ம்:—[1]நின் றமரரேத்த, கொண்டிமையோரார்த்தார். [2]வலியின். [3]விட்டதவ். [4]நின்றது. ()

கரு அ. மாறியோர் பாகனேற மறிதிரைப் பரவை [1]பின்னுஞ்
[2]சீறிய தனைய னங்கோர் செறிகழ [3]லரக்கன் றெய்வ
நூறுகோ ளெய்தி னெய்தா னவையுட னுழைத லோடும்,
ஆறுபோற் குருதி சோர வனுமனு மலக்க ணுற்றான்.

(இ - ள்.) பதிலாக வேறோர்பாகன் (இராவணனுக்குச் சாரத்தியஞ்செய்யுமாறு அவன்தேரில்) எதிர்கொள்ள, அலைமடங்குகின்ற கடல் சீறினாற்போலுந் தன்மையையுடையவனான நெருங்கிய வீரக்கழலையணிந்த அரக்கன் [இராவணன்], விரைவில் தெய்வத்தன்மையுள்ள நூறு அம்புகளை அப்போது பின்னும் எய்தான்; அவை (தனது)உடலில் நுழைதலும், அநுமனும், ஆறுபோல் தன்னுடம்பினின்று இரத்தம் வெளிப்படத் துன்பமடைந்தான்; (எ-று.)—அநுமனும், உம்மை-உயர்வுசிறப்புப்பொருளது. பி-ம்:-[1]எழுஞ், மன்னைச், மண்ணுஞ். [2]சீறியவிரதந்தூண்டிச், சீறியதனையதொப்ப, சீறியதனையனை. [3]அரக்கர்தேவன். (ககOO)

கரு கூ. இதுவும் அடுத்த கவியும்-அநுமான் சலித்திடவும், இராவணன் வானரவீரர்களை ஏளனஞ்செய்து முறியடித்தலைத்தெரிவிக்கும்.

கற்கொண்டு மரங்கள் கொண்டுங் கைக்கொண்டுங் [1]களித்து [2]நும்வாய்ச், சொற்கொண்டு மயிரின் புன்றோ றோள்கொண்டுந் [3]துள்ளி வெள்ளிப்,பற்[4]கொண்டு மலைகின் றாரிற் பழிகொண்டு பயந்தி யானோர், விற்கொண்டு நின்ற போது விறல்கொண்டு [5]மிகுதிர்[6]போலாம்.

(இ - ள்.) நுமதுவாய்க்குவந்த சொல்லைச்சொல்லியவண்ணம் 'கல்லைக்கொண்டும் மரங்களைக்கொண்டும் கையைக்கொண்டும் மயிரடர்ந்தபுல்லிய தோலையுடைய தோளைக்கொண்டும் வெள்ளிய பற்களைக்கொண்டும் துள்ளிகளித்துப்போர்செய்கின்றவர்களிடத்து(ப்போர்செய்யப்)பின்வாங்கியது,(திரிலோகங்களையும் வென்ற இராவணன் அற்பக்குரங்குகளை எதிராகக்கொண்டு பொருதான்என்ற) பழிப்புவருமேயென்ற காரணத்தினால் (ஆகும்); யான் ஒருவில்லைக்கொண்டு போர்முகத்தில்நின்றபோது, (குரங்குகளாகிய நீங்கள் உமது) வலிமையைக்கொண்டு உயிருடன் செல்வீர்களோ? (எ - று.)

[5]மிகுதிபோலாம்என்ற பாடம்-அநுமனொருவனைநோக்கிச்சொன்னதாகப் பொருள்படுமாயினும், 'நும்வாய்' என வந்ததனையும், மேல் வானரச்சேனைகளையெல்லாம் சிந்துமாறு எய்ததாகவருவதனையும்நோக்குமிடத்துப் பொருந்துவதாகத்தோன்றவில்லை. புல் தோல் தோள்கொண்டு எனப்பிரியும். பி-ம்:—[1]அளித்து. [2]தம்வாய்ச். [3]சுள்ளி, சொள்ளை. [4]கொண்டேனென்னநானோர், கொண்டேனென்றானே. [5]மீடிர். [6]கொல்லாம். (ககOக)

கசO. என்றுரைத் தெயிற்றுப் பேழ்வா யெரியுக [1]நகைசெய்தியாணர்ப், [2]பொன்றொடர் [3]வடிம்பின் வாளி கடையுகத் துருமுப் போல, ஒன்றினொன் றதிக [4]மாக வாயிர கோடி யுய்த்தான், சென்றது குரங்குச் சேனை காலெறி கடலிற் [5]சிந்தி.

(இ-ள்.) என்று (இராவணன்) சொல்லி, கோரதந்தங்களைக்கொண்ட பிளவுபட்டவாயினின்று நெருப்புப்புறப்படசிரித்து, யுகாந்தகாலத்துஇடிப் போன்றனவாய்ப் புதியபொன்னினாற்செய்த (ஒன்றேடொன்று)தொடர்ந்த கூர்முனையுள்ள ஆயிரகோடி அம்புகளை ஒன்றைக்காட்டிலும் ஒன்றுவிஞ்ச விடுத்தான்; (அதனால்),காற்றால்மோதப்பெற்ற கடல்போலக் குரங்குச்சேனை சிதறிவிட்டது; (எ-று.)—[1]நகைசெய்தியான்றஎன்றபாடத்திற்கு 'இயன்ற'என்பது இயான்றஎன விகாரப்பட்டதாகவுரைக்க. பி-ம்:-[1]நகைசெய்தீண்டும்.[2]பொன்னுடை. [3]வயிரவாளி. [4]மொய்த்த, எய்த. [5]சிந்த. (ககoஉ)

கசக.—இலக்குவன் அவ்விராவணனுக்குமுன்னே போருமாறுவருதல்.

கலக்கிய வரக்கன் வில்லின் [1]கல்வியின் கவிக ளுற்ற
அலக்கணுந் தலைவர் [2]செய்த தன்மையு மமைய[3]க் கண்டான்
இலக்குவ [4]னென்கை வாளிக் கிலக்கிவ னிவனை யின்று
விலக்குவ னென்ன வந்தான் வில்லுடை [5]மேரு வென்ன.

(இ - ள்.) (தம்முடைய சேனைகளைக்) கலங்கச்செய்தஇராவணனுடைய வில்வித்தையினால் வானரர்களடைந்த துன்பத்தையும் வானரத்தலைவர்காட்டியவீரத்தன்மையையும் பொருந்தக் கண்டவனாய்,இலக்குமணன்,'என்னுடைய கையம்புக்கு இலக்குஆதற்குஉரியவன் இந்தஇராவணன்: இவனைஇப்போது தடுப்பேன்' என்றுசொல்லி, வில்லைக்கொண்டமேருமலைபோன்ற தோற்றத்துடனே (ஆங்கு) வந்தான்; (எ - று.)—இராமபிரான் போரப் புறப்படுகையில், இலட்சுமணன் அப்பிரானைச் சரணமடைந்து தான்செல்வதாக அநுமதிபெற்றுவந்தா னென்று முதனூல்கூறும்.பி-ம்:-[1]கல்வியும். [2]பட்ட. [3]நோக்கி. [4]என்றன். [5]மேகமன்னான்,மேகமென்ன. (ககoங)

கசஉ.—இலக்குவன் நாணொலிசெய்ய, எதிரிகள் நடுங்குதல்.

தேயத்தின் றலைவன் மைந்தன் சிலையைநா ணெறிந்தான் றீய
மாயத்தின் [1]வினையை [2]வல்லார் நிலையென்னை முடிவின் மாரி
ஆயத்தி [3]னிடியி தென்றே யஞ்சின வுலகம் [4]யானை
சீயத்தின் முழக்கங் கேட்டல் போன்றனர் செருந ரெல்லாம்.

(இ-ள்.) நாட்டிற்கெல்லாந்தலைவனான தசரதசக்கரவர்த்தியின் (இளைய) குமாரன் வில்லின்நாணைத் தெறித்து ஒலியெழுப்பினான்; கொடிய மாயத்தினாற்செய்யுந்தொழிலில்வல்லவரான இராக்கதரின்நிலையை என்னென்றுசொல்வது? உலகமெல்லாம், யுகாந்தத்தில் மழைபொழிகின்ற மேகத்தின்இடியே இதுஎன்றுகருதி அச்சங்கொண்டன; போர்வீரரெல்லாம் யானை சிங்கத்தின் முழக்கத்தைக்கேட்டதையொத்திருந்தனர்; (எ-று)—ஆயம் மேகமாதலை "முதிரம் பயோதரம் கதம்ப மெய்ப்பிரம்,அப்பிரமாயமு மப்பெயர்க்குரித்தே" என்ற பிங்கலந்தையாலும் உணர்க. பி-ம்:—[1]இயற்கை. [2]வல்லான். [3]இடிப்பிதென்றே, இறுதிபீதென்று. [4]யாவும். (ககoச)

கசங.—இராவணனும் அதுகேட்டு இலக்குமணனை அதிசயித்தல்.

ஆற்றல்சா லரக்கன் றானு மயனின்ற வயவர் [1]நெஞ்சம்
வீற்றுவீற் றுகி[2]யுற்ற [3]தன்மையும் வீரன் றம்பி

[4]கூற்றின்வெம் புருவ மன்ன சிலை[5]நெடுங் குரலுங் கேளா
[6]ஏற்றினன் [7]மகுட மென்னே யிவனொரு மனிச [8]னென்றே.

(இ - ள்.) வலிமைமிக்க இராவணனும், பக்கத்திலேயிருந்த வீரர்கள் மனம் மிகவும்வேறுபட்டுப்போன தன்மையையும் (பார்த்து), மகாவீரனை இராமபிரானுடைய திருத்தம்பியாகிய இலட்சுமணனது யமனின்கொடியபுருவம்போன்றதான வில்லின் பெருங்குரலையும் கேட்டு, 'இவன் ஒருமனிசன்! (இது) என்னே!!' என்றுசொல்லி, மகுடத்தை மேலேறச்செய்தான் [தலையிற் கிரீடம்உயருமாறு அசைத்தான்என்றபடி]; (எ-று.)

என்னே இவனொருமனிசன்-அற்பனாகநினைத்த மனிசன் பெருவீரரெல்லாம் நடுநடுங்கும்படி நாணொலியெழுப்புகின்றானே! இப்படியும் ஒருமனிதனுண்டோ!! என வியந்தவாறு. பி-ம்:---[1]நெஞ்சும். [2]உக்க. [3]தன்மையும். [4]கூற்றினதுருவம். [5]ஒலிகேளாமுன்னம். [6]ஏற்றின. [7]புருவம். [8]என்றான். ()

கசஉச.---இதுமுதற்பதினொருகவிகள் - அரக்கர்கட்கும் இலக்குமணனுக்கும் நிகழ்ந்த கடும்போரில், இலக்குமணன் அரக்கரை யழித்தமையைக்கூறும்.

கட்டமை தேரின் மேலுங் களிநெடுங் களிற்றின் மேலும்
விட்டெழு புரவி மேலும் வெள்ளெயிற் றரக்கர் மேலும்
முட்டிய மழையின் றுள்ளி [1]முறையின்றி மொய்க்கு மாபோற்
[2]பட்டன [3]பகழி யெங்கும் [4]பரந்தது குருதிப் பவ்வம்.

(இ - ள்.) தாக்கிய மழைத்துளி ஒருமுறையின்றி(ப் பலவிடத்தும்) மொய்க்கும் விதம்போல, உறுதிப்பாடுஅமைந்த தேரின்மீதும், களிப்புள்ள பெரியயானையின்மீதும், விட்டுத்தாவிச்செல்கின்ற குதிரைகளின்மீதும் வெள்ளியகோரப்பற்களையுடைய அரக்கரின்மீதுமாக அம்புகள் தாக்கின; எவ்விடத்தும் இரத்தக்கடல் பரவிற்று; (எ - று.)---துள்ளி-துளியென்பதன்விரித்தல். பி-ம்:—[1]முறைமுறை. [2]பட்டது. [3]கணைகளெங்கும். [4]பரந்தன. (கக0சு)

கசஉரு. நகங்களிற் பெரிய வேழ நறைமத வருவி [1]காலும்
முகங்களிற் புக்க [2]வாளி [3]யபரத்தை முற்றி [4]மொய்ம்பர்
அகங்களைக் [5]கிழித்துத் தேரி னச்சினை யுருவி யப்பால்
உகங்களிற் கடைசென் றாலு [6]மோய்வில வோட லுற்ற.

(இ - ள்.) மலைகளைக்காட்டிலும் பெருந்தோற்றமுள்ள யானைகளின் நறுமணமுள்ள மதவருவி பெருகுகின்ற முகத்திலே பாய்ந்துசென்ற(இலக்குமணனுடைய) அம்புகள் (அவ்யானைகளின்) பின்னங்கால்களில் நிரம்பி, (தேரினது அருகிருந்த) வலிமைபொருந்தியவீரரின் மார்பினைக் கிழித்து அந்தத்தேரின் அச்சினைத் துளைத்துப் பிறகு யுகங்களின்முடிவுகழிந்தாலும் [வெகுநேரம் கழிந்தும்] ஓய்ச்சலில்லாமல் ஓடத்தொடங்கின; (எ - று.)—அபரம்-யானைப் பின்கால். பி-ம்:—[1]நாலும், நாளும். [2]அம்பு. [3]அபரத்தின், அபானத்தின், பானத்தின். [4]மூன்பார், முன்னம், ஒன்னார். [5]கழன்று. [6]உலப்பில. (கக0எ)

கசஉசா. தாக்கிய களிறுந் தேரும் புரவியு மாழிற் செய்ய
ஆக்கிய வரக்கர் [1]தானை யையிரு கோடி கையொத்து

[2]ஊக்கிய படைகள் [3]வீசி [4]புடற்றிய துலகஞ் செய்த
பாக்கிய மனைய வீரன் றம்பியைச் சுற்றும் பற்றி.

(இ-ள்.) (பகைவர்)செலுத்திய யானையையும் தேரையும் குதிரையையும் (அவ்விலட்சுமணனது அம்பு) அழிக்க, அணிவகுத்திருந்த அரக்கருடைய பத்துக்கோடிச்சேனை, செலுத்துதற்குரிய படைக்கலங்களை, உலகஞ்செய்த புண்ணியப்பயன்போன்ற வீரனுடையதம்பியான இலட்சுமணனை, சுற்றிய இடமெல்லாம் பொருந்துமாறுவீசிப்பொருதது; (எ - று.)—உடற்றுதல் - பொருதலும், சினமூட்டுதலுமாம். கையொத்தாக்குதல் - அணிவகுத்திருத்தல். பி-ம்:-[1]சேனை. [2]ஓக்கிய. [3]வீதி. [4]உடற்றிய. (ககOஅ)

கசஎ. உறுபகை மனித னின்றெம் [1]மிறைவனை யுறுகிற் பானேல்
வெறுவிது நந்தம் வீர [2]மென்றொரு [3]மேன்மை தோன்ற
எறிபடை யரக்க ரேற்றா [4]ரேற்றகைம் மாற்றா னென்று
[5]வறியவ ரொருவன் வண்மை பூண்டவன் மேற்சென் றென்ன.

(இ-ள்.) (பின்னும்) படைகளையெறிகின்ற அரக்கர்கள்,—'பெரும்பகையாகிய மனிதன் இன்றைக்கு எம்முடையதலைவனான இராவணனை நெருங்குவானானால், (அப்போது) நம்முடையவீரம் பயனற்றதென்று சொல்லுமாறு ஆகும்' என்று கருதியதனால், ஒருபெருமிதம் உண்டாக, யாசகரின் இரந்து ஏந்தியகையை மறுக்காமலீபவனென்று வண்மைபூண்ட ஒருவனிடத்தில் வறியவர்செல்வதுபோல (வந்து) எதிர்த்துநின்றார்; (எ - று.)

வண்மையாளனை யாசகர் ஏற்பதுபோல,அரக்கர் இலக்குமணனை ஏற்றுநின்றார்: ஏற்றல்-இரப்பதுதோன்றக்கையேற்றலும், எதிர்த்துநிற்றலும். இவ்வுவமையால் வண்மையாளன் யாசகர் திருப்தியாகும்வரையிற் கொடுப்பதுபோல,அரக்கவீரர்சலிப்படையும்வரையும் இலட்சுமணன் அம்புமழைபொழிந்தமை பெறப்படும்:"ஏற்றகைமாற்றாமையென்னானும்,ஆற்றாதார்க்கீவதாமாண்கடன்"என்ற நாலடியார் இங்கு நினைப்பிற்குவருகின்றது.பி-ம்:—[1]மன்னனை, இறையினை. [2]என்பதோர். [3]மென்கோள். [4]ஏற்றது, ஏன்றது. [5]வறியவன்.()

கசஅ. அறுத்தன னரக்க ரெய்த வெறிந்தன வறுத்த றாத
[1]பொறுத்தனன் பகழி மாரி பொழிந்தன னுயிரின் போகம்
வெறுத்தன னமனும் வேலை யுதிரத்தின் வெள்ள மீள
[2]மறித்தன மறிந்த வெங்கும் [3]பிணங்களம் மலைகண் மான.

(இ-ள்.)(இலட்சுமணன்)அம்புமழைகளைப்பொழிந்தவனாகி,அரக்கர் எய்த அம்புகளையும் எறிந்தபடைக்கலங்களையும் துண்டித்தனன்; அறுக்கப்படாதவைகளை (த் தான்) தாங்கினன்; யமனும் உயிர்களைத் தின்னுதலை வெறுத்தான்; அழகியமலைகளையொப்பப் பிணங்கள் எங்கும் மடங்கிக்கிடந்தனவாய், இரத்தவெள்ளம் கடலுக்குச்செல்லாமல் மீளும்படிதடுத்தன; (எ - று.)— பி-ம்:—[1]பொறுத்தன. [2]மறித்தனன் மறிந்தது, மறித்தது மறித்தது. [3]பிணங்கண்மாமலைகண்மான, மறிந்தவர்மலைகண்மான, பிணங்களின்மலைகளம்மா.

கசகூ. தலையெலா மற்ற [1]முற்றுந் தாளெலா மற்ற தோளாம்
மலையெலா மற்ற பொற்றார் மார்பெலா மற்ற சூலத்து

இலையெலா மற்றவீர ரெயிறெலா [2]மற்ற கொற்றச்
சிலையெலா மற்ற கற்ற செருவெலா மற்ற சிந்தி.

(இ - ள்.) (இலட்சுமணனெய்தஅம்புகளால்), முற்றவும் (அரக்க) வீர ருடைய தலையெலாம் அற்றன; பாதங்களெல்லாம் அற்றன; தோளாகியமலை யெல்லாம் அற்றன; அழகியமாலையையணிந்த மார்பெல்லாம் அற்றன; எயி றெல்லாம் அற்றன; சூலப்படையின்இலைகளெல்லாம் அற்றன; வெற்றிபொ ருந்திய விற்களெல்லாம் அற்றன; (அரக்கர் நாற்புறமும்) சிதறியோடுமாறு ஆய்விட்டதனால் (அவர்) கற்றபோர்த்திறமையெல்லாம் ஒழிந்தன ; (எ - று.) —பி-ம்:—[1]மற்றத். [2]அற்றே. (கககக)

கநo. தேரெலாந் [1]துமிந்த மாவின் [2]திறமெலாந் [3]துமிந்த செங்கட்
காரெலாந் துமிந்த வீரர் கழலெலாந் துமிந்த [4]கண்டத்
தாரெலாந் [5]துமிந்து [6]நின்ற தனுவெலாந் துமிந்து தத்தம்
போரெலாந் [7]துமிந்து கொண்ட புகழெலாந் துமிந்து [8]போய.

(இ - ள்.) (அன்றியும், அரக்கர்சேனைகள்),—தேர்களெல்லாம் துணி பட்டன; குதிரைகளின்வகைகளெல்லாம் துணிந்தன; சிவந்தகண்களையுடைய மேகம்போன்ற யானைகளெல்லாம் துணிந்தன; வீரரின்கழல்களெல்லாம் துணிந்தன; கழுத்திலணிந்த மாலைகளெல்லாம் துணிந்தும், (கையிற்) கிடந்த வில்லெல்லாம் துணிந்தும், தத்தம்போரெல்லாம் துணிந்தும், (தாம்இதுவரை யிற்) பெற்றிருந்த புகழெல்லாம் துணிந்துபோகப் பெற்றன; (எ - று.)

ரதகஜதுரகபதாதிகள் துண்டுபட்டமையைக் கூறுவதனால், 'தாளெலா மற்ற' என்று கீழ்ச்செய்யுளிற்கூறினும் இங்கு 'கழலெலாந்துமிந்த'என்றார். தேர்முதலிய உருவப்பொருளோடு, போரென்றதொழிலையும் புகழென்ற அருவப்பொருளையும் துமிந்தனவாகக் கூறிய நயம் பாராட்டற்பாலது. சொற்பொருட்பின்வருநிலையணி. தனு - உடலுமாம். பி - ம்:—[1]துமிந்து. [2]சிரம். [3]தமிந்த. [4]கண்டர், கண்ட. [5]துமிந்த. [6]கண்டர்தலையெலாந்துமிந்த, நின்றதருவெலாந்துமிந்த. [7]துமிந்த. [8]போன. (ககக௨)

கருக. அரவியற் றறுகண் [1]வன்றா ளாள்விழ வாண்மேல் [2]வீழப்
புரவிமேற் பூட்கை [2]வீழப் பூட்கைமேற் பொலன் றேர் வீழ
நிரவிய தேரின் [3]றன்மே னெடுந்தலை கிடந்த நெய்த்தோர்
விரவிய களத்து னெங்கும் [4]வெள்ளிடை [5]யரிது வீழ.

(இ - ள்.) அராப்போன்ற [சீறுகின்ற] தன்மையையும் அஞ்சாமையை யுமுடைய வலிய தாளைக்கொண்ட பதாதிகள் வீழ, அந்தப்பதாதிகளின்மேல் புரவிகள்) வீழ, (வீழ்ந்த) குதிரைகளின்மேல் யானைகள் வீழ, வீழ்ந்தயானை களின்மேல் அழகியதேர்கள் வீழ, நிரம்பியதேர்களின்மேல் நீண்டதலைகள் வீழ்ந்துகிடந்தன;இரத்தம் கலந்துள்ள போர்க்களத்திலே எங்கும் (இனிவே ரொன்று) வீழ்வதற்குவெற்றிடமில்லை; (எ-று.)--இது படுகளச்சிறப்பு. பி-ம்:- [1]வன்றோள். [2]வீழ்ந்த. [3]மேன்மேல். [4]வெள்ளிடம், வெளியிடம், வெள்ளிடி. [5]உருமு. (கககங)

கருஉ. கடுப்பின்க ணமர ரேயுங் கார்முகத் தம்பு[1]கையால்
தொடுக்கின்றான் [2]றரக்கின் றானென் றுணர்ந்திலர் தூர்ந்த வாளி
இடுக்கொன் றுங் காணார் காண்ப தெய்தகோ லெய்தி னெய்திப்
படுக்கின்ற பிணத்தின் [3]பம்மற் குப்பையின் [4]பரப்பே பல்கால்.

(இ - ள்.) (இலட்சுமணன் அம்புகளை) விரைவாகச்செலுத்துமிடத்து, தேவர்களும் வில்லினின்று அம்புகளைக் கையால் தொடுக்கின்றானென்றும் விடுகின்றானென்றும் அறியவல்லமையற்றவ ராணார்; செலுத்திய வாளி கவ்வுதலையும் சிறிதுங் கண்டாரில்லை;(அந்தத்தேவர்கள்)காண்பது, எய்தஅம்புகள் பல தரமும் விரைந்துசென்று வீழ்த்துகின்ற பிணங்களின் நெருங்கியகுவியலின் பரப்பேயாகும்; (எ - று.)—இதனால், இலட்சுமணனது விரைந்துதொழில் செய்யுந்திறனை விளக்கியவாறு. இடுக்கு-கவ்வுகை. பி-ம்:—[1]கையில். [2]தூர்க்கின்றான். [3]குப்பைபம்மலின், பம்பற்குப்பையின். [4]பரப்பை. (கககசு)

கருங. கொற்றவாள் கொலைவேல் சூலங் கொடுஞ்சிலை[1]முதலவாய, வெற்றிவெம் படைகள் யாவும் வெந்தொழி லரக்கர் [2]மேற்கொண்டு, [3]உற்றன கூற்று மஞ்ச வொளிர்வன வொன்று நூறாய், அற்றன [4]வன்றி யொன்று மறுதன வில்லை யன்றே.

(இ - ள்.) கொடுந்தொழிலையுடைய அரக்கர்கள் (பொருவதை) மேற்கொண்டு உபயோகித்தவையும் யமனும் அஞ்சுமாறு விளங்குவனவுமான வெற்றிபொருந்திய வாள் கொல்லுந்தொழிலையுடைய வேல் சூலம் கொடிய வில்முதலிய வெற்றியைவிளைக்கின்ற கொடிய படைக்கலங்களெல்லாம்,—ஒன்று நூறுகண்டங்களாகத் துண்டுபட்டனவேயல்லாமல் எதுவும் துண்டிக்கப்படாதது இல்லை; (எ - று.)—இச்செய்யுள் சிலபிரதிகளில் "குன்றன" என்ற அடுத்தசெய்யுளின்பின் உள்ளது. பி-ம்—[1]முதலகோலி. [2]மெய்க்கொண்டு, மீக்கொண்டு. [3]உற்றனர். [4]அலதியாவும். (கககரு)

கருச. [1]குன்றன யானை [2]மானக் குரகதக் கொடுந்தேர் [3]கோப
வன்றிற லாளி சீய மற்றைய பிறவு முற்றுஞ்
சென்றன வெல்லை யில்லை [4]திரிந்தன சிறிது போதும்
நின்றன வில்லை யெல்லாங் கிடந்தன [5]நெளிந்த பார்மேல்.

(இ - ள்.) (போர்க்குச்) சென்றனவாய் எல்லையில்லாதனவான மலைகளையொத்த யானைகளும் ரோஷத்தைக்கொண்ட குதிரைகளும் கொடிகட்டியதேர்களும் கோபத்தையும் கொடுந்திறமையையுங்கொண்ட யாளிகளும் சிங்கங்களும் மற்றைய பிராணிகளும் முழுவதும் சிறிதுபோதும் (போர்க்களத்தில்) திரிந்தனவும் நின்றனவும் இல்லை: எல்லாம் தரையிற்கிடந்துநெளிவனவாயின; (எ - று.)—பி-ம்:—[1]கொன்றனன், குன்றன்ன, கொன்றனர். [2]மானக்கொடிநெடுந்தேர்கள், மானக்கொடி நெடுந்தோகை, மானக்குரகதக்கொடுந்தேர். [3]பாய்மா. [4]திரிந்தில. [5]நெளிந்து. (கககசு)

கருரு.—அரக்கச்சேனையொழிந்ததுகண்டு இராவணனுற்றுக் கோபம்மூளுதல்.

[1]சாய்ந்தது நிருதர் தானை தமர்தலை மிடறித் தள்ளுற்ற
[2]ஓய்ந்தன [3]வொழிந்த வொழி [4]யுலர்ந்தன வாக [5]வன்றே

வேய்ந்தது வாகை வீரற் கிளையவன் வரிவில் [6]வெம்பிக்
[7]காய்ந்ததவ் விலங்கை வேந்தன் மனமெனுங் காலச் [8]செந்தீ.

(இ - ள்.) தம்மவரான அரக்கரின் சிரம்(அம்புகளால்) இடறித் தள்ளப்பட்டு உயிரோய்ந்தனவும் ஒழிந்தவை ஓடி வலிகுறைந்தனவுமாக, அப்போதே அரக்கர்சேனை தோற்றிட்டது; இராமபிரானுக்குஇளையவனான இலட்சுமணப் பெருமாளது கட்டமைந்த வில்லானது, (வெற்றிக்குரிய)வாகைப்பூமாலையைச் சூடிற்று; அந்தஇலங்கைக்கு அரசனான இராவணனுடைய மனமென்கிற யுகாந்தகாலத்துச் செந்நிறமாகத்தோன்றும் நெருப்பானது,—வெம்பிக்கொதிக்கலாயிற்று; (எ - று.)---பி-ம்:—[1]சாய்ந்தன. [2]ஓய்ந்தது, ஓய்ந்ததும். [3]பொழிந்தது, ஒழிந்தது. [4]உலர்ந்ததுமாக, உலர்ந்தனவாறே, உலைந்ததுமாக, உலந்ததுமாக. [5]ஒன்றோ. [6]அம்பிற். [7]காய்ந்தன. [8]வெந்தீ. (கககள)

கருகூ.—ராவணன் கிட்டியெதிர்க்க, லட்சுமணன் பின்னிடாது நிற்றல்.

[1]காற்றுறழ் கலின மான்றேர் கடிதினிற் கடாவிக் கண்ணுற்று
ஏற்றன னிலங்கை வேந்த னெரிவிழித் திராமன் றம்பி
கூற்றுமால் கொண்ட தென்னக் கொல்கின்றான் குறுகச் சென்
சீற்றமுந் தானு [2]நின்றான் பெயர்ந்திலன் சிறிதும் பாதம். [றான்

(இ - ள்.) காற்றையொத்த கடிவாளம்பூண்ட குதிரைகள்கட்டியதேரை விரைவினில் தூண்டிச்செலுத்தி,இலங்கைக்குஅரசனான இராவணன்,---(இலட்சுமணனைப் பார்த்துநெருப்புப்புறப்பட விழித்து எதிர்த்துநின்றான்; (அப்போது) யமன் வெறிகொண்டாற்போலப் போரிற்கொல்பவனான இராமனுடையதம்பி இலக்குமணன், (அவனை) நெருங்கப்போய்ச் சீற்றமும் தானுமாக நின்றான்; காலைச் சிறிதும் பின்வாங்கினானில்லை;(எ-று.)—கோபமும் தானும் நின்றான்-கோபமே இவன்என்னும்படி நின்றானென்றவாறு. பி-ம்:—[1]காற்றனல், காற்றுள. [2]வேறென்றியாவர்க்குந்தெரிகொணாதால், நின்றான்...சென்றுபாதம். (கககஅ)

வேறு.

கருஎ.—இராவணனைப்பழித்து இலட்சுமணன் அம்புஎய்தல்.

காக்கின்றவென் னெடுங்காவலின் [1]வலிநீங்கிய கள்வா
போக்கின்றனக் [2]கரிதாமெனப் புகன்றான்புகை யுயிர்ப்பான்
கோக்கின்றன தொடுக்கின்றன கொலை[3]யம்புக டலையோடு
[4]ஈர்க்கின்றன கனலொப்பன வெய்தானிகல் செய்தான்.

(இ - ள்.) 'காத்துக்கொண்டிருந்த என்னுடைய சிறந்த காவலின் வலிமையை நீங்குமாறு செய்த வஞ்சக்குணமுள்ளவனே! (இன்றைத்தினம்) தப்பிப்போதலென்பதுஉனக்கு முடியாது' எனக் கூறியவனாய்,(இலட்சுமணன்),-புகைதோன்றப் பெருமூச்சுவிட்டு,(வில்லிலே)பூட்டித் தொடுக்குந்தன்மையனவும் தலையையிழுத்துக்கொண்டு செல்வனவும் நெருப்பையொப்பனவுமாகிய கொலைத்தொழிலைக்கொண்ட அம்புகளைப் பிரயோகித்துப் போர்செய்தான்;

(எ - று.)—எய்தான்-முற்றெச்சம். பி-ம்:—[1]கடி.[2]அணித்தால். [3]வெங்கணே. [4]ஈர்க்கொன்றிய. (கககக)

கருஅ.---இலட்சுமணன்விடுத்த அம்புகளை இராவணன் அறுத்துவிட, வீரவாதத்துடனே மீண்டும் இலட்சுமணன் சரமாரிபொழிதல்.

எய்தான்சர மெய்தாவகை [1]யிற்றீகென விடையே
[2]வைதாலென வைதாவின வடிவாளியி னறுத்தான்
ஐதாதலி னறுத்தாயினி [3]யறுப்பாயென வழிகார்
பெய்தாலெனச் [4]சரமாரிகள் சொரிந்தான் றுயில்பிரிந்தான்.

(இ - ள்.) எய்தவனுடைய அம்புகள் என்மேற்கிட்டாதபடி நடுவிலே இற்றுப்போக'என்று வைதாற்போலக் கூர்மைபொருந்தியவாக இனமான வடிக்கப்பட்ட அம்புகளைக்கொண்டு அறுத்தான்,(இராவணன்);(அப்போது)துயில் வதைநீங்கியவனாகிய இலட்சுமணன், '(நான் முன்எய்தவை)மெல்லியனவாதலால் அறுத்திட்டாய்; இனிமேல் (இப்போதுஎய்வதை) அறுப்பாயாக, (பார்ப்போம்)' என்று சொல்லி, (உலகத்தை) அழிக்கின்ற [பிரளயகாலத்து] மேகம் மழைபொழிந்தாற்போலச் சரமாரிகளைப் பொழிந்தான்; எ-று.)---அறுப்பாய்-பிறகுறிப்புமாம். இற்றீக-வினைத்திரிசொல். பி-ம்:—[1]இற்றீர்கென. [2]வைதானென.[3]அகல்செய்கென. [4]நெடுவாளிகள்,வடிவாளிகள். (ககஉ0)

கருகூ.---இலட்சுமணன்விட்ட அம்புகளையெல்லாம்விலக்கி,அவனுடைய அட்சயதூணீரத்தையும் இராவணன் துணித்தல்.

ஆங்குஞ்சர மனையான்விடு மயில்வாளிக ளவை[1]தாம்
வீங்குஞ்சரம் பருவத்[2]திழி மழைபோல்வன [3]விலக்காத்
தூங்குஞ்சர நெடும்புட்டிலிற் சுடர்வேலவற் கிளையான்
வாங்குஞ்சரம் வாங்காவகை யறுத்தானற மறுத்தான்.

(இ - ள்.) (வலி) பொருந்திய யானையையொத்தவனாகிய அந்த இலட்சுமணன் விட்டனவும் மிக்க சரற்காலத்துப்பொழிகின்ற மழைபோல்வனவுமான கூரியஅம்புகளை யெல்லாம் விலக்கி,அசைவதாகித்தொங்குகின்ற நெடிய அம்பறாத்தூணியிலிருந்து எடுக்கின்ற அம்புகளை விளங்குகின்ற வேற்படையையுடைய இராமனுக்குஇளையவனான இலட்சுமணன் (இனி) எடுக்கமுடியாதபடி அறத்தைமறுத்தவனாகிய இராவணன் அறுத்திட்டான்; (எ - று.)

திரிபுஎன்னுஞ்சொல்லணி: சரற்காலத்தைச்சேர்ந்ததான ஐப்பசியில் மிக்கமழை பொழிதல் காண்க. இரண்டாமடியில், சரம்-சரற்காலம்: ஐப்பசி கார்த்திகைமாதங்கள் கூடிய காலம். மூன்றாமடியில், சரம்-அசைவது. திரிபு என்ற அணியைக்கொள்ளாமல்,வீங்கும் சரம்-பருத்தசரமெனப்படுகின்ற அயில்வாளிகளவைதாம் என்றும், சரம்தூங்கும் நெடும்புட்டில்-அம்புத்தங்குகின்ற நெடியபுட்டிலென்றும் கூறுவாருமுளர். 'வீங்குஞ்சரநெடுமார்பினில் நுழையக்கனல் விழியா' என்று இரண்டாமடி சிலபிரதியிற் காணப்படுகின்றது. பி-ம்:—[1]தான். [2]அழி. [3]விலகாத். (ககஉக)

கசு௦.—அநுமான் அப்போதுகிட்டி அந்தப்போரைத் தவிர்கென்று பின்னும் சொல்லுதல்.

[1]அப்போதையி னயர்வாறிய வனுமா[2]னழல் விழியாப்
பொய்ப்போர்சில [3]புரியேலென [4]வவன்றேரெதிர் புகுந்தான்
கைப்போதக மென[5]முந்தவன் கடுந்தேரெதிர் நடந்தான்
இப்போரொழி [6]பிற்போருள விவைகேளென விசைத்தான்.

(இ - ள்.) அவ்வேளையில் இளைப்பாறிய அநுமான் நெருப்புப்புறப்பட விழித்து, 'சிலபொய்ப்போரை(நீ)செய்யாதே'என்று சொல்லிக்கொண்டு அந்த இராவணனுடைய தேரினெதிரேபோனான்: துதிக்கையுள்ள யானைபோல முற்பட்டு விரைவுள்ள அவன்தேரெதிராக நடந்தவனான அநுமான்'(இப்போதுசெய்யும்)இப்போரைத்தவிர்: பின்போர்கள் இருக்கின்றன: (நான்சொல்லுகின்ற) இவற்றைக் கேள்'என்று சொல்லலானான்; (எ-று.)--அநுமான் கூறுமவற்றை மேற்கவியிற் காண்க. பி-ம்:--1அப்போதகன். 2அனல். 3புரியேனென,புரியேலினி.4எனவந்திடைப். 5வந்தவன், நின்றவன். 6மற்போருள. (ககஉஉ)

கசுக.--வீரவாதத்துடன் அநுமான் ஓங்கிவளர்ந்து நிற்றல்.

வென்றாயுல கொருமூன்றையு [1]மெலியாநெடு வலியால்
தின்றாய்செறி கழலிந்திர னிசையைத்திசை [2]திரிந்தாய்
[3]என்றாலுமின் றழிவுன்வயி னெய்தும்மென [4]விசையா
நின்றானவ னெதிரேயுல களந்தானென நிமிர்ந்தான்.

(இ - ள்.) தளராத மிக்கவலிமையால் ஒருமூன்று உலகத்தையும் வென்றாய்; திக்குக்களிலெல்லாம் (வெல்லுமாறு)திரிந்து நெருங்கியவீரக்கழலையணிந்த இந்திரனுடைய கீர்த்தியை யொழித்தாய்; இப்படி(மேம்பாட்டுடன்)இருந்தாலும், இன்றைக்கு அழிவு உனக்குநேருமென்றுசொல்லி,அவ்விராவணனெதிரே உலகளந்ததிரிவிக்கிரமமூர்த்திபோல நின்று ஓங்கினான்; (எ - று.)--- பி-ம்:--1மெலியாதமெய். 2திரித்தாய். 3என்றானும். 4உரையா. (ககஉங)

கசுஉ.---அநுமான் பேருருவங்கொண்டு இதனைக் காணென்றல்.

எடுத்தான்வலத் தடக்கையினை [1]யதுபோயுல கெல்லாம்
அடுத்தாங்குற வளந்தான்றிரு வடியின்[2]வர வன்னான்
[3]மடுத்தாங்குற [4]வளர்ந்தானென [5]வளர்கின்றவ னுருவங்
கடுத்தானெனக் [6]கடியாற்கெதிர் காண்பாயெனக் [7]காட்டா.

இதுவும் அடுத்த கவியும்-குளகம்.

(இ - ள்.) உலகளந்தஎம்பெருமானுடைய திருவடியாகவழங்கப்படுதலையுடைய அந்தஅநுமான்,---(உலகங்களையெல்லாம் தன்னுள்)அடக்கிக்கொண்டுஅந்தத் திரிவிக்கிரமாவதாரகாலத்து மிகவும்வளர்ந்தவனென்று (யாவரும்) கூறும்படிவளருந்தன்மையனானதிருமாலின் வடிவத்தையொத்தான்போன்று [மிகவும்வளர்ந்து], பெரியவலக்கையைத் தூக்கினான்; அதுபோய் உலகமெல்லாம்அடுத்துநிற்க,கொடியவனான இராவணனுக்குஎதிரே காண்பாயாகஎன்று காட்டி,---(எ-று.)---திருவடியென்னப்படுகின்றவன் வடிவத்தாலும் அப்பெரு

மானையொத்திருக்கக் கருதினன்போல வளர்ந்தா னெனத் தற்குறிப்பேற்ற வணிபடக் கூறியவாறு. அளந்தான்-உலகளந்ததிருமால். 'அடுத்தான்குறள் வளர்ந்தான் திருவடியின்படியாயே'என்று சிலபிரதிகளில் இரண்டாமடியுள்ளது. ஆங்கு-அசை. வரவு-வழங்கப்படுகை. பி ம்:---1இது.2வடிவென்ன.3அடுத்து. 4அளந்தானென, வளர்ந்தாலென. 5வளர்கின்றதைவயவெங். 6கொடியாற்கு. 7காட்டார். (ககஉச)

ககூரு.---அநுமான் வீரவாதத்துடன் பெருமூச்சுவிடுதல்.

வில்லாயுத முதலாகிய [1]வயவெம்படை [2]யிடலோடு
[3]எல்லாமிடை பயின்றாய்புய நாலைந்தினொ டியைந்தாய்
வல்லாய்செரு வலியாய் திறன் மறவோர்[4]யிக லெதிரே
நில்லாயென நிகழ்த்தாநெடு நெருப்பாமென வுயிர்ப்பான்.

(இ-ள்.) விற்படைமுதலாகிய வெற்றிபொருந்திய கொடியஆயுதங்களையெல்லாம் வலிமையோடு இவ்வுலகிற் பயின்றுள்ளாய்: இருபதுகைகளோடும் பொருந்தியிருக்கிறாய்; போர்செய்யும்வலிமையில் மிக்குள்ளாய்; ஆராயப்படுகின்ற திறனுடன்கூடிய வீரனே! போராடுவதில் எதிரேநில்லு,(பார்ப்போம்) என்றுசொல்லி, பெருநெருப்புப்போலப் பெருமூச்சுவிட்டான்; (எ - று.)— நில்லாய் - நிற்கமாட்டாயென்பாருமுளர். இடை - உலகு. பி-ம்: --1விறல். 2முதலோடு, அடவே. 3எல்லாமவை. 4இனி, இதன். (ககஉரு)

ககூசு.-மூன்றுகவிகள்-குளகம்:அநுமன் நான் குத்துவதைத்தாங்கிப் பின் நீ குத்த நான்இறவாவிடினும் உன்னோடுபோருவதில்லை யென்றலைக் கூறும்.

நீ[1]ளாண்மையி னுடனேயெதிர் நின்றா[2]யிஃ தொன்றோ
வாளாண்மையு [3]முலகேழினொ டுனேயுடை வலியும்
தாளாண்மையு நிகராருமி றனியாண்மையு [4]மினிநின் [பாடல்.
தோளாண்மையு [5]மிசையோடுடன் றுடைப்பேனொரு [6]புடைப்

(இ - ள்.) (பின்னும் இராவணனைநோக்கி அநுமான் கூறுவான்):---மிக்க பராக்கிரமத்துடனே என்னெதிரே நிற்பவனானாய்; இது(நிலைத்துநிற்கும் ஒரு பொருளோ? [இது நிலைத்துநிற்காதென்றபடி]: வாளினாற்காட்டும் ஆண்மையும், மேலேழுகீழேழ்என்ற எல்லாவுலகமும்சேரஅழியுமாறுசெய்யும் வலிமையும், மேன்மேல்முயன்றுதொழில்செய்தலும், எவரும் ஒப்பாகாத தனிப்பட்ட ஆண்மையும்; தோள்வலியும் என்ற இவற்றை உன்னுடையகீர்த்தியுடனே இனி ஒருகுத்தில் ஒழித்துவிடுவேன்; (எ - று.)

தன்னெதிர்நிற்பதே பெருவன்மையென்கின்றான்,போரில்தன்முன்னே பிறர்நிற்பதும் அருமை யென்ற கருத்தினால்: இது-வீரவாதம். உடைவலி - உடைக்கின்ற [அழிக்கின்ற]வலி: வினைத்தொகை. உடன்றுடைப்பேனென்று பிரிக்காமல், உடன்றுஉடைப்பேனென்றுபிரிப்பினுமாம். பி-ம்:---1ஆண்மையொடெதிரேதனி. 2இனியொன்றோ, இனியொன்றாய். 3வில்லாண்மையுமறவோயுள, உலகேழினொடு...தெறு. 4நனி. 5மிடலோடு.6புடைப்பில். (ககஉசு)

ககூரு.பரக்கப்பல வுரைத்தெ நன்படர் கயிலைப்பெரு வரைக்கும்
[1]அரக்குற்றெறி பொறிக்கட்டிசைக் கரிக்குஞ்சிறி [2]தனுங்கா

உரக்குப்பையி னுயர்தோள்பல வுடையா[3]யுர னுடையாய்
குரக்குத்தனிக் [4]கரத்திற்புடை பொறை[5]யாற்றுவை கொல்லாம்.

(இ - ள்.) விஸ்தாரமாகப் பல சொல்லி யென்? படர்ந்துள்ள கயிலையென்ற பெரியமலைக்கும் செந்நிறம்பொருந்தி யெரிகின்ற தீப்பொறிபறக்கின்ற கண்களைக்கொண்ட திக்கஜங்கட்கும் சிறிதும்பின்வாங்காத வலிமைத்தொகுதி மிக்க பல [இருபதான] தோள்களையுடையவனே! வலியோனே! (இனிப்பின் வாங்காமல்)குரங்கினுடையஒப்பற்றகரத்தினாற்(புடைக்கின்ற)புடையைத்தாங் கவல்லாயோ? (எ-று.)---பி - ம்:---[1]அரக்குத்தெறிபொறி, அரக்குப்பொறித் தெரி. [2]ஒதுங்கா. [3]இனியுடையாக். [4]கரத்திற்றொடப். [5]ஆற்றுதி. (ககஉஎ)

கசுசு. என்றோள்வலி யதனாலெடுத் தியானெற்றவு மிறவா
நின்றாயெனி [1]னீபின்னெனை நின்கைத்தல நிரையாற்
[2]குன்றேபுரை தோளாய்மிடல் கொடுகுத்துதி குத்தப்
பொன்றேனெனி னின்னோடெதிர் பொருகின்றில னென்றான்.

(இ-ள்.) மலையையொத்ததோள்களையுடையவனே! என்னுடையதோள் வலிமையினால் (என்கையைத்) தூக்கி யான் குத்தவும் இறவாமல் நின்றாயே யானால்,நீ பின்பு என்னை உன்னுடையகைத்தலவரிசைகளினால் வலிமையோடு குத்துவாய்: (அப்படிக்) குத்த (நான் அந்தக்குத்தின்விசையால்) இறவாவிட் டாலும் உன்னோடெதிர்ந்துபொரேனென்று கூறிமுடித்தான், (அநுமான்); (எ - று.)---பொன்றேனெனின்என்பதன்பின், உம்மை, விகாரத்தால்தொக் கது. எதிர்-வினைப்பகுதி, வினையெச்சப்பொருளில் வந்தது. பி-ம்:---[1]நின்றே னெனை. [2]குன்றேயுயர்தோளால். (ககஉஅ)

கசுஎ.---இராவணன் அநுமான்கூறியதை வியந்துகூறுதல்.

காரிற்கரி யவன்மாருதி கழறக்[1]கடி தகவா
வீரற்குரி யதுசொற்றனை விறலோயொரு [2]தனியேன்
நேர்நிற்பவ ருளரோபிறர் [3]நீயல்லவ ரினிநின்
பேருக்குல களவே[4]யினி யுளவோபிற வென்றான்.

(இ-ள்.) மேகத்தைக்காட்டிலுங் கருநிறமுள்ளவனான இராவணன்,--அநு மான் (அவ்வாறு)சொல்ல மிகவும்கொண்டாடி(அவனைநோக்கி),'வலியோனே! வீரற்குத்தக்கதைக்கூறினாய்:நிகரெவரையும்பெறாத தனிப்பட்ட என்னுடைய எதிரே உன்னையல்லாதபிறர் நிற்பவரும் உள்ளாரோ? இனி, உன்னுடையபுக ழுக்கு உலகுள்ளவளவே (அளவாம்): இனி வேறுவகை புளதோ?' என்றான்; (எ-று.)---என்முன் நின்றதனாலே அழியாப்புகழ் உனக்கு உண்டாகு மென்ற னன், இராவணன். 'போருக்குளவளவேயினியுளவே புகழ்விறலோய்'என்று சிலபிரதிகளில் நான்காமடி. பி - ம்:-[1]கடிக துவா, கடிதுதவா. [2]தனியே, தனி யென். [3]நீயல்லெவர். [4]என. (ககஉக)

கசுஅ.---இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்: மற்றும் இராவணன் கூறுதலைத் தெரிவிக்கும்.

ஒன்றாயுத மூடையாயலை யொருநீயென துறவுங்
கொன்றாயுயர் தேர்மேனிமிர் கொடுவெஞ்சிலை கோலி

வன்றானையி னுடன்[2]வந்தவெ னெதிர்வந்துநின் வலியால்
நின்றாயொடு [3]நின்றாரினி நிகரோவுரை நெடியோய்.

(இ - ள்.) பெருமைபெற்றவனே! தனியாயுள்ள நீ, பொருந்திய ஆயுதத்தையும் கொண்டிருக்கின்றாயல்லை: என்னுடையசுற்றத்தையுங் கொன்றாய்; ஓங்கிய மிகக்கொடியவில்லை வளைத்து வலியசேனையுடனேஉயர்ந்த தேரின்மீதுவந்த என்னுடைய எதிரேவந்து நின் வலிமையால் நின்றவனான உன்னோடு(உலகத்தில்) உள்ளவர் இனி ஒப்பாவரோ? சொல்; (எ - று.)

நீ தனியன்: ஆயுதமுமில்லாதவன்: வாகனமுமில்லாதவன்:என்னுடைய சுற்றத்தாரைக்கொன்று எனக்குக்கோபமூட்டியவன்;நான் சேனையுடையவன், சிலையுடையவன், தேர்மீதிருப்பவன்,கோபமூட்டப்பட்டவன்:இப்படிப்பட்ட என்முன்னே வந்துநிற்பதனால்,உனக்கு இணை எவருமில்லை யென்கின்றான், இராவணனென்க. ஒன்றாயுதம் - வினைத்தொகை: ஓராயுதமும் எனினுமாம். பி-ம்:-[1]நெடுந்தேர்மிமிர். [2]வந்தவன். [3]நிகராரினியுளரோ, நின்றாயெனினிகரோ.

கசுகூ. முத்தேவர்கண் முதலாயினர் முழுமூன்றுல [1]கிடையே
எத்தேவர்க ளெத்தானவ [2]ரெதிர்வாரிக லென்னோர்
பித்[3]தேறின ரல்லாலிடை பேராதெதிர் மார்பிற்
குத்தேயென நின்றா[4]யிது கூறுந்தர மன்றால்.

(இ - ள்.) முழுமையான மூன்றுலகங்களிலுமுள்ள முத்தேவர்கள் முதலாயினோரில் பித்துஏறினவர்களல்லாமல் எந்தத்தேவர் (அல்லது) எந்தத்தானவர் போரில் எனக்குநேராக எதிர்வார்கள்? (ஒருவருமிலர்; அவ்வாறிருக்க), (நின்ற)இடத்தினின்று சலியாமல் மார்பிற்குத்து என்றுசொல்லி (எதிர்)நின்றாய்: இது கூறுந் தரமல்ல; (எ - று.)—ஆல்-தேற்றம். பி-ம்:—[1]இடையும். எதிர்வாரிகலென்னப், எவ்வீரர்களென்னோர். [3]ஏறினன். [4]அது. (ககஙக)

கஎ௦. பொருகைத்தல மிருபத்துள புகழும்[1]பெரி துளதால்
வருகைத்தல மதவெங்கரி வலி[2]கெட்டன வருவாய்
இருகைத்தல முடையா[3]யெதி ரிவைசொற்றனை யினிமேல்
தருகைக்குரிய தொர்கொற்றமெ [4]னமர்தக்கது [5]மன்றால்.

(இ - ள்.) (எனக்கோ), போர்செய்வதற்குஉரிய கைகள் இருபது உள்ளன: (உலகத்தையெல்லாம்வென்றவ னென்ற) புகழும் பெரிதாக உண்டு; பொருந்திய துதிக்கையையுடைய மதங்கொண்ட கொடிய யானைகளும் வலிகெட்டனவாகுமாறு(பெருந்தோற்றத்துடனே)வருமவனே! (நீ)இரண்டே கைத்தலமுடையவன்; என்னெதிரேநின்று ('நான்குத்துகின்றேன்: தாங்குவாயானால் பிறகு என்னைக்குத்து'என்ற)இவ்வார்த்தைகளைச் சொன்னாய்; (ஒருஅற்பக்குரங்கு இராவணனென்றுபேர்பெற்ற என்னெதிரேநின்று இங்ஙனஞ்சொல்லுமாறு ஆனபின்)விளைதற்குஉரியதான ஒப்பற்ற வெற்றி(எனக்கு)என்ன இருக்கின்றது? (நான்)போர்புரிவதும் தக்கதன்று; (எ-று.)—பி-ம்:—[1]சிறிது. [2]கட்டினன்வருவான், கெட்டெனவருவாய், தெட்டெனவருவாய். [3]எனதெதிர். [4]பகர்தக்கதும். [5]என்றால். (ககஙஉ)

களக. *திசை[1]யத்தனை யையும்வென்றது சிதையப்புகழ் [2]தெறுமவ்*
*வசைமற்றினி [3]யுளதேயென துயிர்போல்வரு மகனை*
*யசையத்தரை [4]யரைவித்தனை யழிசெம்புன லதுவோ*
*பசையற்றில தொருநீயென தெதிர்நின்றிவை பகர்வாய்.*

(இ-ள்.)எல்லாத்திக்குக்களையும்வென்ற வெற்றி குலையப் புகழை யொழிக்கவல்ல அப்படிப்பட்ட பழி [அபகீர்த்தி] (எனக்கு உன்னால் நேர்ந்ததைக் காட்டிலும்) வேறு இனி யுளதோ? (எனக்கு உன்னால் விளைந்த அந்தப்பழி இன்னதெனப்பகர்வேன்):என துஉயிரைப்போல்(முனைமுகத்தில்)வந்த அட்சகுமாரனை உயிரொழியத் தரையிலேவைத்து அரைத்திட்டாய்; (அப்போது) பெருக்கெடுத்த இரத்தமோ, (இன்னும்)ஈரம் உலரவில்லை; ஒப்பற்ற நீ என்னுடைய எதிரேநின்று இவ்வாறானவார்த்தைகளைச் சொல்பவனானாய்; (எ-று.) —பி-ம்:—[1]பத்தினையுற. [2]தேறும். [3]உளவே. [4]அணைவித்தனை. (ககஙரு)

களஉ. *பூணித்திவை யுரைசெய்தனை யதனா[1]லுரை பொதுவே*
*பாணித்தது பிறிதென்சில பகர்கின்றது பழியால்*
*நாணித்தலை யிடுகின்றில [2]னனிவந்துல கெவையுங்*
*காணக்கடி தெதிர்குத்துதி யென்றான்[3]வினை கடியான்.*

(இ - ள்.) (இவ்வண்ணம் பழி யெனக்கு நேர்ந்த) அதனால், பிரதிஞ்ஞை செய்து இவைகளைச் சொன்னாய்;(இவ்வாறு)உரைப்பது சகஜமே:காலம் தாழ்த்தது;வேறேசில சொல்லுகின்றதிற் பயனென்ன?(நான்) பழியால் வெட்கிப்போரில் தலையிடாதவனாய் நின்றேன்;மிகவும் விரைந்துவந்து உலகமெல்லாம் காணும்படிஎதிரேநின்று குத்துவாய் என்றான்:(யாவனெனின்),—பாவத்தொழிலைநீங்காதவனான இராவணன்; (எ - று.)

குரங்காகிய நீ இவ்வாறுசொல்லும்போது வெட்கித்தலைகுனிந்து இசையவேண்டியதாயுள்ளது என்னிலைமை யென்கின்றான், இராவணன். பி-ம்:— [1]உயிர். [2]இனி. [3]வினைகடிவான், தறுகண்ணன். (ககஙச)

களங.—அநுமான் இராவணனதுவீரத்திறத்தைவியந்து
அவன்மார்பிற் குத்துதல்.

*வீரத்திற [1]மிதுநன்றென வியவாமிக விளியாத்*
*தேரிற்கடி திவராமுழு விழியிற்பொறி சிதறா*
*ஆரத்தொடு [2]கவசத்துடல் பொடிபட்டுக வவன்மா*
*[3]மார்பிற்கடி தெதிர்குத்தினன் வயிரக்கர மதனால்.*

(இ-ள்.) இந்தவீரத்திறம் நன்றாயுள்ளதென்றுவியந்து மிகஆரவாரித்து, தேரிலே விரைந்து ஏறி, கண்முழுதும் தீப்பொறிசிந்தி, ஆரத்தோடுபொருந்திய கவசத்துடனே உடல் பொடிபட்டுச்சிந்தும்படி அவ்விராவணனதுபெரிய மார்பில் (தன்னுடைய)வயிரம்போன்ற கையினால் விசையாகஎதிர்நின்று குத்தினன்,(அநுமான்); (எ-று.)—பி-ம்:—[1]அவை. [2]கவசத்தொடுமழியபட்டுகவரை போன், கவசத்துடல்பொடிபட்டவன்மார்பில். [3]கூரத்தனி. (ககஙசு)

௧௭௪.—இதுமுதல் நான்குகவிகள் - அநுமான்கைக்குத்தினால்
நேர்ந்த நிகழ்ச்சியைத் தெரிவிக்கும்.

*அயிருக்கன நெடுமால்வரை யனலுக்கன [1]விழிகள்*
*தயிருக்கன முழுமூளைக டலையுக்கன [2]தரியா*
*உயி[3]ருக்கன நிருதக்குல முயர்வானர மெவையும்*
*மயிருக்கன வெயிறுக்கன மழையுக்கன வானம்.*

(இ-ள்.) (அநுமானதுகுத்தின்விசையால்)மிகப்பெரியமலைகள் மணற்பொடிபோல உதிர்ந்தன;(இராவணன்)கண்களினின்று நெருப்புப்பொறிகள் சிந்தின;மூளைகள் தயிர்போலச்சிந்தின;தலைகளும் நிற்கமாட்டாமற்சிந்தின;அரக்கர்குலத்தின் உயிர்களும் சிந்தின; உயர்ந்தவானரங்களெல்லாமும் மயிரும் பற்களும் உக்கன; வானத்தினின்று மழைகள் சிந்தின; (எ - று.)—தொடர்புயர்வுநவிற்சியணியும், சொற்பொருட்பின்வருநிலையணியும் சேர்ந்துவந்த சேர்வையணி. நெடுமால்வரை-இலங்கையிருந்த திரிகூடாசலம்: இனி, உவமவாகுபெயராய், இராவணனதுமார்பைக் குறிக்குமென்னலுமொன்று. பி-ம்:—[1]விழிதண். [2]திரியா, தரியாது. [3]உக்கதுநிருதக்கடல். (௪௧௩௬)

௧௭௫. *விற்சிந்தின [1]நெடுநாணியிர் [2]திரைசிந்தின விரிநீர்*
*கற்சிந்தின குலமால்வரை கதிர்சிந்தின சுடரும்*
*பற்சிந்தின [3]மதயானைகள் படைசிந்தின ரெவரும்*
*எற்[4]சிந்தின வெரி[4]சிந்தின விகலோன்மணி யகலம்.*

(இ-ள்.) (வீரர்களுடைய)வில்லினின்று நீண்டநாணிகள் சிந்தின; கடல் ஓங்கியகரையைக்கடந்தன;சிறந்தபெரியமலைகளினின்று கற்கள்சிந்தின;(இரு)சுடர்களும் கதிர்களைச் சிந்தின; மதயானைகள் (தம்)தந்தங்களைச் சிந்தின; எவரும்(தம்)படைக்கலங்களைக் கீழேபோட்டிட்டனர்; பராக்கிரமத்தையுடையனான இராவணனது அழகியமார்புமுழுதும் ஒளியைவீசுகின்ற நெருப்பைச் சிந்தின;(எ-று.)—விரிநீர்-வினைத்தொகையன்மொழி. பி-ம்:-[1]கணைசிந்தின. [2]தரை. [3]மதவானைகள்...எவரும், பரிமாகரிபணைசிந்தினபடையும். [4]சிந்திய. (௪௧௩௭)

௧௭௬. *[1]கைக்குத்தது படலுங்[2]கழ னிருதர்க்கிறை கறை[3]நீர்*
*மைக்குப்பையி னெழில் கொண்டொளிர் வயிரத்தட மார்பில்*
*[4]திக்கிற்சின மத[5]யானைகள் [6]வயவெம்பணை செருவிற்*
*புக்[7]கிற்றன [8]போகாதன புறமுக்கன [9]புகழின்.*

(இ - ள்.) (அநுமானுடைய) கைக்குத்துப் பட்டவுடனே, வீரக்கழலையணிந்த அரக்கர்தலைவனான இராவணனுடைய களங்கத்தின்தன்மையோடு அஞ்சனத்தொகுதியின் அழகைக்கொண்டுவிளங்குகின்றவயிரம்போலுறுதியான விசாலமானமார்பிலே திக்குக்களிலேயுள்ள சினமுள்ள திசையானைகளின் வெற்றிபொருந்திய கொடியதந்தங்கள் போரிலே புகுந்து ஒடிந்தனவாய் (அந்தமார்பிலேயே) தங்கிநின்றவை, (அவ்விராவணனுடைய)புகழ்(போயின)போல் மூழ்கின்வழியாய்ச்சிந்தின; (எ-று.)—இதுவும், அநுமான் இராவணனுடையமார்பிற்குத்திய குத்தின் விசையை விளக்குந் தொடர்புயர்வுநவிற்சியணி. மார்பிற்புதைந்திருந்த திக்கயத்தின்தந்தம் அநுமானுடைய குத்தின்வி

சையால் முதுகின்வழியாய் வெளியேயுக்கவை அவன்புகழ் சிந்தியதைப்போ லுமென்று வருணித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இராவணன் அநுமானதுகுத்திற்குச் சலிப்படைந்ததுபற்றி இவ்வாறு வருணித்தது.புறம்-முதுகு. பி-ம்:—[1]கைக்குத்திடை. [2]களி. [3]தீர். [4]திக்குச்செறி. [5]யானையின். [6]நெடு. [7]அற்றன. [8]போதாதன. [9]புகழில், புகலில். (ககரு அ)

களஎ. அள்ளாடிய கவசத்தவிர் மணி[1]யற்றன திசைபோய்
விள்ளாநெடு முழு[2]மீனென விழிவெம்பொறி யெழநின்று
உள்ளாடிய நெடுங்கால்பொர வொடுங்கா[3]வுல குலையத்
தள்ளாடிய வடமேருவிற் சலித்தா[4]னறம் வலித்தான்.

(இ-ள்.) பற்றுவிட்டுப்போன (தனது)கவசத்திலே விளங்குகின்றஇரத்தினங்கள் விண்டு பெரியமுழுமையானநட்சத்திரம்போலத் திசைகளில் தெறித்துப்போய் வீழ்ந்திட்டன;(அப்போது)அறத்தைத் துன்புறுத்தியவனான இராவணன், (தன்) கண்களினின்று நெருப்புப்பொறி பறக்கநின்று, உள்ளே சஞ்சரிக்கின்ற சிறந்த (தன்) பிராணவாயு வீசுவதினின்றுஒடுங்க, உலகுவருந்தும்படி தள்ளாடிப்போன வடமேருவைப்போலச் சலித்திட்டான்; (எ - று.)—விள்ளா அற்றன-விண்டுவிழுந்திட்டன. பி-ம்:-[1]அன்னவை, அற்றவை. [2]மின்னெனவிழ. [3]கிலைகுலையத். [4]அறமறுத்தான், தவமறுத்தான். (ககரு க)

களஅ.—வானவர்முதலியோர் ஆரவாரித்தல்முதலியன.

ஆர்த்தார்விசும் புறைவோர்நெடி தனுமான்மிசை யதிகந்
தூர்த்தார்நறு முழுமென்மல [1]ரிசையாசிகள் சொன்னார்
வேர்த்தார்[2]நிரு தர்கள்வானரர் வியந்தா[3]ரிவன் விசயந்
தீர்த்தானென [4]வுவந்தாடினர் [5]முழுமெய்ம்மயிர் சிலிர்த்தார்.

(இ - ள்.) (அதுகண்டு) வானத்தில்வாழ்பவரானதேவர்கள் (மகிழ்ச்சியால்)ஆரவாரித்தவர்களாய்,நீண்ட அநுமான்மீது நறுமணமுள்ள முழுமையான மென் மலரை மிகவும் பொழிந்து ஏற்ற வாழ்த்துமொழிகளைக் கூறினார்;அரக்கர்கள்(உடல்)வேர்த்தார்;வானரர் வியப்படைந்து இந்தஇராவணனுடையவெற்றியை(இவ்வநுமான்)ஒழித்திட்டானென்று மகிழ்ச்சிக்கூத்தையாடி உடம்பு எல்லாம் மயிரைச் சிலிர்த்தனர்; (எ - று.)—பி-ம்:—[1]மூனைவொர். [2]மிகநிருதாதியர், உயிர்நிருதாதியர், நிருதர்கள்வானவர், நிருதர்கள் தானவர். [3]அவன். [4]உயர்ந்தாடினர். [5]திகழ்மெய், முழுமென். (ககச0)

களகூ.—இராவணன் மூர்ச்சித்து உடனே உணர்வுபெறுதல்.

[1]கற்றங்கியி னெடுவாயுவி னிலைகண்டவர் கதியால்
மற்றங்கொரு [2]வடிவுற்றது [3]மாறுடு று காலைப்
பற்றங்[4]கொரு மையிலன்னது [5]பயில்கின்றதொர் செயலால்
[6]உற்றங்கது புறம்போயுடல் புகுந்தாலென வுணர்ந்தான்.

(இ-ள்.) (உடம்பிலுள்ள) அக்கினியினுடையநிலையினையும் பிராணவாயுவினிலையையும் பழகிக் கண்டறிந்த யோகிகள் (தமக்குள்ள) பரகாயப்பிரவேச சக்தியினால் வேறொருஉடலிற்பொருந்தி அதனின்றுமாறும்போது (முன்னே)

யொருமைப்பட்டிருந்த அந்தச்சரீரத்திற் பற்றினாலே அவ்வுடலிலேயே பொருந்துஞ்செயலுக்குஎற்ப, (அப்போதுடலிற்) பொருந்திய அவ்வுயிர் புறத்தேசென்று (மீண்டும்) உடலிற்புகுந்தாற்போல (இராவணன்) உணர்ச்சி பெற்றான்; (எ - று.)

இராவணன் உயிர் தப்பியவன்போன்று பிரஞ்ஞையற்று மீண்டும் உயிர் பெற்றதற்கு, பரகாயப்பிரவேசஞ்செய்யும் வல்லமையுடையயோகிகள் தம் முடம்பைவிட்டுச்சென்று மீண்டும் அவ்வுடம்பில்தானே பற்றுக்கொண்டு வருதலை உவமைகாட்டினார். கதி - செல்லுதலென்றுபொருள்படும் வடசொல் லாதலால், அச்சொல் - தன்னுடம்பினின்று வேற்றுடம்பிற்செல்லும் பரகாயப்பிரவேசத்தைக் காட்டிற்றென்னலாம். பி-ம்:—[1]கற்றங்கியல். [2]வடிவின்னுயிர். [3]மாறுவே. [4]அருமையில். [5]பயவாதொருசெயல்போல், பயிலாதொருசெயலால். [6]உற்றங்குயிர்.

இச்செய்யுளுக்குப்பிரதியாக சிலபிரதியில் வேறுஒருபாடல் காணப்படுவது வருமாறு:—

கற்றங்கிய முழுமார்பிடைக் கவியின்கர மதனால்
உற்றொன்றிய குத்தின்வலி யதனாலுட லுளைவான்
பற்றின்றிய வொருமால்வரை யனையானொரு படியால்
மற்றங்குடல் பெற்றாருயிர் வந்தாலென வுய்ந்தான். (கககச)

கஅ௦.—மூர்ச்சைதெளிந்த இராவணன் அநுமானைக் கிட்டிச் சில கூறுதல்.

உணராநெடி துயிரா[1]வுரை யுதவாவெரி யுமிழா
இணையாருமி லவனேர்வர [2]வெய்தாவலி செய்தாய்
அணையாயினி யெனதூழென வடரா[3]வெதிர் படராப்
பணையார்புய முடையானிடை சில[4]விம்மொழி [5]பகர்வான்.

(இ - ள்.) உணர்ச்சிபெற்றுப் பெருமூச்செறிந்து பேச்சுவெளிக்குவராமல் நெருப்புப்புறப்படவிழித்து, (தன்னை) ஒப்பார் எவருமில்லாத அநுமானுடைய எதிரேவந்து, 'இகல் செய்தவனே! இனி, என்னாலுண்டாகும் ஊழைச் சேர்வாய்' என்று நெருங்கி எதிரேபோய், மூங்கிலையொத்த புயமுடையவனை அநுமானிடத்திற் பின்வருமாறு சிலமொழிகளைக் கூறலானான்; (எ - று.) —அவற்றை மேல் இரண்டுகவிகளிற் காண்க. என்னால்விளையப்போகிற விதிக்கு நீ இலக்காகவேணுமென்பது, 'அணையாயினி யெனதூழ்' என்பதன்பொருள். பி - ம்:—[1]உணர்வுதியா. [2]வெய்தாய். [3]வெளி. [4]வன். [5]பகர்ந்தான்.

கஅக.—இதுவும் அடுத்த கவியும்-குளகம்: இராவணன் அநுமானுடைய திறமையைப் புகழ்ந்து பின் கூறுதலைத் தெரிவிக்கும்.

வலியென்பது [1]முளதேயது நின்பாலது மறவோய்
அலி[2]யென்பவர் [3]புறநின்றவ [4]ருலகேழையு [5]மடர்த்தாய்
சலியென்றெதிர் மலரோனுரை [6]தந்தாலிறை சலியேன்
மெலிவென்பது [7]முணர்ந்தேனெனை வென்றா[8]யினி விறலோய்.

(இ - ள்.) வீரனே! வலியென்பதுஒன்று உண்டே, அது உன்னிடத்தில் தான் உளது; புறத்திலுள்ளவீரரெல்லாரும் (உன்னைப்பார்க்குமிடத்து) அலி

யென்றே சொல்லத்தக்கார்: உலகேழையும் அடர்த்தவனுனாய்; (எப்படியெனின்?),—பிரமதேவனே என்னெதிரே (நீ) சலிப்பாய்என்றுசொன்னாலும் சிறிதும் சலியாத நான் மெலிவென்பதனை (உன்னால்) அறிந்தேனன்றோ?வலிமையுடையோனே! இனி என்னை வென்றவனே யானாய்; (எ - று.)—பி-ம்:— [1]உளதேல். [2]என்பன. [3]புறநின்றன, பிறநின்றன. [4]உலகேழினும். [5]அடைத்தாய். [6]தாழ்ந்தால். [7]அறிந்தேன். [8]இகல்விறலோய், இனியென்றான்.(கககரு)

கஅஉ. ஒன்றுண்டினி யுரைநேர்குவ துன்மார்பினை னொருகைக்
[1]குன்றின்மிசை கடைநாள்விழு முருமேறெனக் [2]குத்தா
நின்[3]றிந்நிலை தருவாயெனி [4]னீயல்லவ ருளரோ
இன்றும்முளை யென்றும்முளை யிலையோர்பகை யென்றான்.

(இ-ள்.) இப்போது (நான்) சொல்லவேண்டுவது ஒன்றுஉள்ளது; உன்னுடையமார்பிலே மலையின்மீது யுகாந்தகாலத்திலே விழுகின்ற பேரிடிபோல என்னுடைய ஒருகையாற் குத்தாநிற்கவும் (நீ) உயிர்நிலைத்திருக்கப்பெறுவாயானால், (பின்பு) உன்னைத்தவிர்த்து வேறொருவர் (உலகில்) நிலைத்திருப்பவருளரோ? (அப்பால்) இன்றைக்கு உள்ளவனாயிருப்பதுபோலவே என்றைக்கும் இருப்பவனாவாய்; (உனக்கு) வேறோர் பகையில்லை என்று கூறினான், (இராவணன்); (எ - று.)—பி - ம்:—[1]குன்றின்னெடுங், குன்றின்னிடை. [2]குத்த, குதித்தால், குளித்தால், [3]உன்னிலை. [4]நின்னேர்பிறர். (கககச)

கஅ௩.—அநுமான் இராவணனைக்கொண்டாடிக் குத்துமாறு தன்மார்பைக் காட்டுதல்.

என்றானெதிர் சென்றானிக லடுமாருதி யெனைநீ
வென்றாயலை யோ[1]வுன்னுயிர் வீடாதுரை செய்தாய்
நன்றாக[2]நின் னிலைநன்றென நல்காவெதிர் நடவாக்
குன்றாகிய திர[3]டோளவன் [4]கடன்கொள்கெனக் கொடுத்தான்.

(இ-ள்.) (தன்) வல்லமையால் (பகைவரை) அழிக்கவல்ல அநுமான்,—என்றுகூறிய இராவணனுடைய எதிரேபோய், (என்குத்தினால்) உன்னுயிரொழிந்துவிடாமல் (என்னெதிரேநின்று) பேசினையாதலால், என்னை நீவென்றவனேயாவாயல்லையோ? நன்றாக, உன்னிலை செவ்வனேயுள்ளது என்று (அவ்விராவணனைக்) கொண்டாடி, அவனெதிரே நடந்துசென்று, குன்றையொத்த திரண்ட தோளவன் [அநுமான்] (உன்) கடனைப்பெற்றுக்கொள்க என்று (தன்மார்பைக்) காட்டினான்; (எ - று.)

பின்னிரண்டடிகட்கு - நன்றாக: நின்னிலை நன்று என்று (அநுமான்) கூற, குன்றாகிய திரடோளவன் [இராவணன்] விரும்பி அவ்வநுமானெதிரே நடந்து உன்கடனைப் பெற்றுக்கொள்க என்று கொடுக்கலானான் [குத்தலானான்] என்று பொருள்கூறினும் ஏற்கும். பி-ம்:—[1]இன்றுயிர். [2]உன் வலிதான், உன்னிலைநன்று. [3]தோளவுன். [4]கொள்ளேன். (கககரு)

கஅச.—இதுவும் அடுத்த கவியும்-குளகம்: இராவணன் குத்த, அநுமான் சலித்ததைத்தெரிவிக்கும்.

உறுக்கித்தனி யெதிர்நின்றவ னுரத்திற்றன தொளிர்பல்
இறுக்கிப்பல நெடுவாய்மடித் தெரிகண்டொறு [1]மிழிய

முறுக்கிப்[2]பொறி நிமிரக்[3]கர நெரியத்திசை முரியக்
குறுக்கிக்[4]கிரி நெடுந்[5]தோள்புற நிமிரக்கொடு குத்த.

(இ - ள்.) தன்னுடைய நீண்ட பலவாயையமடித்து விளங்குகின்றபல் வரற் கெட்டியாகக்கடித்துக்கொண்டும் கண்கள்தோறும் நெருப்புப்புறப்பட அனற்பொறிகள் உக்கிரமாகமேலெழவும்கோபித்து, திசைமுரியுமாறு, கைகளை நெரியக் குறுக்கி நெடியமலைபோன்ற தோளுக்குவெளியே செல்லக்கொண்டு போய்த் தனியேயெதிரேநின்றவனுன அநுமானுடைய மார்பிலே (இராவணன்) குத்தாநிற்க,—(எ-று.)—'சலித்தான்'என அடுத்த கவியோடு முடியும்.

இராவணன் உக்கிரத்தோடும் வலிமையோடும் குத்தின இயற்கையை இனிதாகஎடுத்து உரைத்திருத்தலினல், இச்செய்யுள்-தன்மைநவிற்சியணியாம். முதலில்இராவணன்குத்த, அப்பால்அநுமான்குத்த, மீண்டும் இராவணன்குத்தினனென்று முதனூல்கூறும். பி-ம்:—[1]உமிழ. [2]பொறிநிமிர்பல். [3]பலவிரன்முரியதிசையக். [4]கரம். [5]தோளுறநிரைகைக்கொடு. (கககசசு)

கஅரு. பள்ளக்கடல் கொள்ளப்படர் படிபேரினும் [1]பதையா
[2]வள்ளற்பெரு [3]வெள்ளத்தெறுழ் வலியாரினும் வலியான்
கள்ளக்கறை யுள்ளத்[4]ததிர் கழல்வெய்யவன் கரத்தால்
தள்ளத்தளர் வெள்ளிப்பெருங் கிரியாமெனச் சலித்தான்.

(இ - ள்.) ஆழமாகிய கடல் கொள்ளுமாறுபரவிய பூமி அழியும்போதும் [யுகாந்தகாலத்திலும்] அழியாத வள்ளலும் பெருவெள்ளம்போலும் வலிமைபடைத்தவலியவரினும் வலியவனுமான அநுமான்,—கள்ளத்தனத்தினல் மாசுபடிந்தமனத்தையும் அதிரும் வீரக்கழலையுமுடைய கொடியவனுன இராவணன் (தன்) கையினற்குத்தித்தள்ளியபோது தளர்ந்திட்ட வெள்ளிப்பெருமலையான கைலாசம்போலச் சலித்தான்; (எ - று.)—பி - ம்:—[1]பதையான். [2]வள்ளப். [3]வெள்ளத்துறு. [4]எதிர். (கககசஎ)

வேறு.

கஅசு.—இராவணன்குத்தினல் அநுமான் சலித்தபோது நிகழ்ந்தன.

சலித்த காலையி னிமையவ [1]ருலகெலாஞ் சலித்த
சலித்த தாலறஞ் சலித்தது மெய்ம்மொழி தகவுஞ்
[2]சலித்த தன்றியும் புகழொடு சுருதியுஞ் சலித்த
சலித்த நீதியுஞ் சலித்தது கருணையுந் [3]தவமும்.

(இ-ள்.) (அநுமான் இராவணனுடையகுத்தினற்) சலிப்படைந்தபோது தேவரின்உலகெல்லாமும் சலித்தன; தருமமும் சலித்தது; உண்மைமொழியென்பதும் சலித்தது; நற்குணமும் சலித்தது; அன்றியும், புகழுடனே சுருதியும் சலித்தன; நீதியென்பதும் சலித்தது; கருணையும் தவமும் சலித்தன; (எ - று.)—உண்மை நீதி முதலிய எல்லாநற்குணங்கட்கும்இடமான அநுமானுக்குத் தீங்கு நேருமோஎன்று தேவருலகம்முதலிய யாவும் சலித்தனஎன்க. பி-ம்:-[1]உலகொடுஞ். [2]சலித்தநன்றியுஞ்சுருதியுமிருதியும், சலித்த தந்தையும் புகழொடுசுருதியும், சலித்தநன்றியுந்தவமொடுசுருதியும். [3]பலவும். (கககசஅ)

கஅஎ.—இதுமுதல் மூன்றுகவிகள் - வானரத்தலைவர் அப்போது இராவணன்மேல் மலைகளையெறிதலைத்தெரிவிக்கும்.

*அனைய காலையி னரிக்குலத் தலைவரவ் வழியோர்*
*[1]எனைவ ரன்னவர் யாவரு [2]மோர்குவ டேந்தி*
*நினைவின் முன்னெடு விசும்பொரு வெளியின்றி [3]நெருங்க*
*[4]வினையி தென்றறிந் திராவணன் மேற்செல விட்டார்.*

(இ - ள்.) அப்போது ஆங்கிருந்தவரான வானரக்குலத்தலைவர் எத்தனை பேருண்டோ அவர்யாவரும்,--'நெருக்கடியில் இதுவேசெய்வதற்குஉரியதொழில்' என்று தெரிந்து (ஒவ்வொருத்தர்) ஒவ்வொருமலைவீதம் ஏந்திவந்து, நினைப்பதற்குமுன் நீண்ட ஆகாசத்தில் வெற்றிடமென்பது சிறிதுமில்லாமல் இராவணன்மேற் செல்லும்படி விட்டார்கள்; (எ - று.)---பி-ம்:—[1]எனையரன்னவரனைவரும். [2]இருங், ஒரு. [3]நிமிர. [4]வினையகன்றிதென்று, வினையது. ()

கஅஅ.ஒத்த கையின ரூழியி னிறுதியி னுலகை
*மெத்த [1]மீதெழு மேகத்தின் விசும்பெலா [2]மிடையப்*
*பத்து [3]நூறுகோ டிக்குமேற் பனி[4]படு சிகரம்*
*[5]எத்த மேற்செல வெறிந்தனர் பிறிந்தன ரிமையோர்.*

(இ-ள்.) ஒத்த தோள்வலிமையையுடையவர்களான வானரர்கள், ஊழிக்காலத்திறுதியிலே உலகையழிக்குமாறு மேலேயெழுகின்ற மேகங்கள்போல வானமெல்லாம்நிறைய, பத்துநூறுகோடியென்னும் கணக்குக்குமேற்பட்டனவான பனிமிகுந்துள்ள மலைச்சிகரங்களை மோதித்தாக்குமாறுசெல்லும்படி அந்தஇராவணன்மேலெறிந்தார்; இமையோரும் (அச்சத்தினால் வானத்தை விட்டு) அப்பாற்சென்றனர்; (எ - று.)---பி-ம்:-[1]மொய்த்தெழு, மேய்ந்தெழு. [2]மறையப், மறைப்பப். [3]நூறிருகோடிக்குமேற். [4]படர். [5]எத்தி. (ககறுo)

கஅகூ.—இரண்டுகவிகள்-வீசியெறிந்தமலைகளின் வருணனை.

*[1]தருக்கி [2]வீசிட [3]விசும்பிட [4]மின்மையிற் றம்மின்*
*நெருக்கு கின்றன [5]நின்றன சென்றில நிறைந்த*
*அருக்க னும்[6]மறைந் தானிருள் விழுங்கிய தண்டஞ்*
*[7]செருக்க முற்றன ரரக்கரென் றிமையவர் சூழ்ந்தார்.*

(இ - ள்.) (கீழ்க்கூறியவாறு) செருக்குக்கொண்டு (வானரர்கள் மலையை) வீசினதனால், ஆகாயத்திலும்இடமில்லாமையால் (அம்மலைச்சிகரங்கள்) தமக்குள் நெருக்குகின்றனவாய்நின்று அப்பாற்செல்லாமல் நிறைந்தன; (அவற்றால்) சூரியனும் மறைந்திட்டான்; இவ்வுலகம் இருளால் விழுங்கப்பட்டது; அரக்கர்கள் குறையலானார்களென்று தேவர்கள் (எங்கும்வந்து) சுற்றிக்கொண்டார்கள்; (எ-று.)—இச்செய்யுள், சிலபிரதியில் "இரிந்து" (ககூக) என்றதன் பின் காணப்படுகின்றது. பி-ம்:—[1]தருக்கின். [2]வீசின. [3]விசும்பிடை. [4]வின்மையில், மின்மையில். [5]நின்றிலசென்றவைநிறைய. [6]மறைந்தார். [7]வருக்கமற்றனர்...மகிழ்ந்தார். (ககறுக)

௧௬௦. [1]ஒன்றி னொன்றுபட் [2]டுடைவன விடித்துரு [3]மதிரச்
[4]சென்ற [5]வன்பொறி மின்பல [6]செறிந்திடத் தெய்வ
வென்றி வில்லென [7]விருநிலம் வீழ்ந்திட மேன்மேற்
கன்றி யோடிடக் கன்மழை நிகர்த்தன கற்கள்.

(இ - ள்.) ஒன்றன்மீது ஒன்றுபட்டு உடைவனவும்,(ஒன்றன்மீதுஒன்று மோதும்போது) வலிய தீப்பொறிகளினாற் பலமின்னல்கள் நெருங்க இடி போலஇடித்து அதிர்ச்சிபெற்றுச்சென்றனவுமான மலைச்சிகரங்கள், தெய்வத் தன்மையையும் வெற்றியையுங்கொண்ட(இராமபிரானதுகோதண்டமென்ற) வில்லினின்றுபுறப்படுகின்றஅம்புபோல மேன்மேற் கோபம்முதிர்ந்துசென் றதனாற் பெரியநிலத்தில்வீழ்கையிற் கன்மழையை யொத்தன; (எ - று.)--- பி-ம்:---[1]இச்செய்யுள் சிலபிரதிகளில் "இரிந்து" என்ற அடுத்தபாடலுக் குப்பின் காணப்படுகின்றது. வில்-அம்புக்கு, இலக்கணை.கற்கள்-மலைச்சிகரங் கள். பி-ம்:---[1]ஒன்றை. [2]ஒடிவன, ஒடின. [3]உதிர.[4]சென்று, [5]வான்பொறிமீப் பல. [6]சிந்திட. [7]விழுநிலம்விழுந்திடமேனி, விழுநிலவிழுந்திடமேன்மேல், விழுநிழல்விரிந்திடமேன்மேல். (௧௧௫௨)

௧௬௧.---அப்போது நிகழ்ந்த நிகழ்ச்சி.

இரிந்து [1]நீங்கிய திராக்கதப் பெரும்படை யெங்கும்
விரிந்து சிந்தின வானத்து மீனொடு [2]விமானஞ்
[3]சொரிந்த வெம்பொறி படக்கடல் சுவறின [4]தோற்றங்
கரிந்த கண்டகர் கண்மணி யெனப்பல [5]கழறில்.

(இ-ள்.) (கல்மழையால்) இராக்கதருடையபெரியசேனையானது, நிலைகெ ட்டுஓடிவிட்டது; வானத்தில்தோன்றும்நட்சத்திரங்களுடனே விமானங்கள், விரிவுகொடுத்துச்சிந்தலாயின;(அப்போது)சொரிந்தகொடியநெருப்புப்பொறி பட்டதனால் கடல்நீர்முழுதும் வற்றினவாக (ப் பிறகு) தோன்றிய தோற்றத் தைப்பற்றிச்சொல்லுமிடத்துக் கரிந்துபோன அரக்கரின்பலவகையான கண் ணின்விழியென்று கூறுதற்கு(த்தகும்);(எ-று.)—நீர்வற்றியபின் கடலிற் கரி ந்துகாணப்பட்ட பலவகை மச்சங்கள் கண்டகரான அரக்கரின் கண்மணியெ னத்தகுமென்றார்: தற்குறிப்பேற்றவணி. 'என்பலகழறி' அல்லது 'என்பலகழ றில்'என்று பாடமிருப்பின்நலம். பி - ம்.—[1]நீங்கிய, [2]மானம். [3]சொரிந்து. [4]தோல்கள். [5]கழறி. (௧௧௫௩)

௧௬௨.—இராவணன் தன்மேல்எறிந்த மலைகளை அம்புகளால் துண்டுபடுத்துதல்.

இறத்த தின்றல கென்பதோர் துமுலம்வந் தெய்தக்
கறுத்த சிந்தைய னிராவண னீையது கண்டான்
[1]மறுத்து வானவர் புகழுண்ட பாரவில் [2]வளைய
அறுத்து நீக்கின னுயிர்ப கோடிமே லம்பால்.

(இ - ள்.) இன்றைக்கு உலகம் முறிந்ததென்று ஓர்பேரொலி எங்கும் உண்டாக, கோபித்தமனமுள்ளவனான இராவணன் அவ்வொலியைக்

கேட்டு, வருத்தி வானவரின்புகழைக் கைப்பற்றிய பெருமைபெற்ற (தன்) வில் வளைய(அவற்றினின்றுவெளிப்பட்ட)மிகப்பல அம்புகளால்(அம்மலைகளை) அறுத்தொழித்தான்; (எ-று.)—காணுதல்-நோக்கல் நோக்கம்: செவிக்குவிஷய மாக்குதலென்க. இனி, துமுலம்வந்தெய்த,இராவணன், அனைய து-அவ்வாறு மலைகள்வீசியதை, கண்டானாகி, அறுத்துநீக்கினன் என்று உரைத்தல் சிறக்கும். பி - ம்.—1ஒறுத்த. 2உளைய. (ககருச)

ககருரு.—மலைகள் போர்க்களத்து விற்காம்புமுதலியவற்றைப் பொடியாக்கி இராவணன் விடுத்தஅம்புகளால் தாம்பொடியாதல்.

காம்பெ லாங்[1]கடுந் துகள்படக் களிறெலாந் [2]துணியப்
பாம்பெ லாம்பட [3]யாளியு முழுவையும் பாறக்
[4]கூம்பன் மாமர மெரிந்துகக் குறுந்துக [5]ணெருங்கச்
சாம்ப ராயின தடவரை சுடுகணை தடிய.

(இ - ள்.) விற்காம்புகளெல்லாம் சிறுதுண்டுகளாகவும், யானைகளெல்லாந் துண்டுபடவும், (கடிவாளக்கயிறுமுதலியனவாக அமைந்திருந்த) பாம்புகளெல்லாம் அழியவும், (தேர்களிற்பூட்டியிருந்த) யாளிகளும் புலிகளும் உயிர்மாறவும், குவிதலையுடைய பெரியமலைகள் (தம்மிடத்துப் பொருந்திய) பெரியமரங்கள் எரிந்துசிந்தக் குறுந் துகளாய்நெருங்கும்படி சுடுகின்ற (இராவணனது) அம்புகள் துணித்ததனற் சாம்பராய்விட்டன; (எ-று.)—விற்காம்பு-தநுர்த்தண்டு. மலைகள் இராவணனம்புகளாற் சாம்பராகப்போவதற்குமுன் மாற்றாரின் விற்கழுந்துமுதலியவற்றை அழித்தன வென்க. பி-ம்:-1களப்பட்டன. 2துமியப். 3ஆளியும். 4கூம்பர்மாமரமெரிந்திட,கூம்புமால்வரைமாமரம். 5நுறுங்க. (ககருரு)

ககருசு.—வானவர் இராவணனது திறமையைக்கண்டு கைவிதிர்த்தல்.

உற்ற வா[1]றென் று மொன்றுநூ றுயிர முருவா
இற்ற வா[1]றென் று மிடிப்புண்டு பொடிப்பொடி [2]யாகி
அற்ற வா[1]றென் று [3]மரக்கனை [4]யடுசிலை கொடியோன்
கற்ற வா[1]றென் றும் வானவர் கைத்தலங் குலைத்தார்.

(இ-ள்.) (அந்தஇராவணனம்புகள்) மேலேபாய்ந்தவிதம் (என்னே!)என்றும், ஒருமலை இலட்சமுருவாக முறிந்தவகை (என்னே!) என்றும், (ஒன்றோடொன்று) மோதுண்டு பொடியாயற்றவிதம் (என்னே!)என்றும், அரக்கனை இராவணனைக் குறித்து இந்தக்கொடியோன்(பகைவரை)அடுகின்ற விற்படையைக் கற்றுள்ளவகை (என்னே!) என்றுஞ்சொல்லித் தேவர்கள் கைந்நடுக் கங்கொண்டனர்; (எ - று.)—ஆறுஎன்பவற்றின் பின் வியப்பைக்குறிக்கும் முடிக்குஞ்சொல் தொக்குவந்தன. பி-ம்:—1கண்டு. 2ஆக்கி. 3அழற்கணை. 4அடுசிலைக். (ககருசு)

ககருஎ.—மலைகளைப்புழுதியாக்குதலும், அவை கடலைத்தூர்த்தலும், வானரநடலிலிருந்து உதிரம்பெருகுதலும்.

அடாறு டைத்துமென் றரிக்குல வீரரன் றெறிந்த
இடாறு டைத்தன தசமுகன் [1]சரமவை திசைசூழ்

கடறு டைத்தன [2]களத்தினின் றுயர்தரும் பூழி
உடறு டைத்தன வுதிரமுந் துடைத்ததொண் புடவி.

(இ-ள்.) (இராவணனுடைய) வலிமையை யொழித்துவிடுவோ மென்று வானரகுலவீரர்கள் அன்று எறிந்த மலைகளைத் தசமுகனுடையஅம்புகள் ஒழித்தன; அங்ஙனம்மலைகள் பொடியானவை, திக்குக்களிற்சூழ்ந்துள்ள கடலைத் தூர்த்தன; (அக்காலத்துப்) போர்க்களத்தினின்று எழுந்த தூளிகள்(வீரரின்) உடலிற்சென்றுபரவின; (சரங்கள்பட்டதனாற் பெருகிய) இரத்தமும் அழகிய பூமியைத் துடைத்தது; (எ-று.)—திடல்-மலை. பி-ம்:—[1]சிரம். [2]களத்துநின் றவர்கரும். (௧௧௫௭)

௧௯௬.—வீரர்களின்மேற் பின்னும் இராவணன் சரமழை பொழிதல்.

கொல்வ [1]னிக்கண மேமற்றிவ் வானரக் குழுவை
வெல்வன் மானிட ரிருவரை யெனச்சினம் [2]வீங்க
[3]வல்வன் வார்சிலை பத்துட [4]னிடக்[5]கையின் வாங்கித்
தொல்வன் மாரியிற் [6]றொடர்வன [7]சுடுசரந் துரந்தான்.

(இ - ள்.) 'இந்தக்கணமே இந்தவானரக்கூட்டத்தைக் கொல்வேன்; மற்றும், மானுடர்இருவரையும் வெல்வேன்' என்றுகருதிச் சினம் (மனத்திற்) பொங்க, (இராவணன்), மிகவலிய நீண்டபத்துச்சிலைகளை இடக்கையிலேஒருசேரஎடுத்து, பழையவலியமழைபோலத் தொடர்ந்துவருவனவாகிய சுடுகின்ற அம்புகளைத் தொடுத்து விட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]இப்பொழுதே மற்றிவ், இக்குறியேமற்றிவ், இக்கிரிவீசிய. [2]வீங்கி. [3]பல். [4]தடக். [5]கையால். [6]சுடர்நெடுஞ். [7]நெடுஞ். (௧௧௫௮)

௧௯௭.—எங்கும் இராவணனுடையஅம்புகளே யாதல்.

ஐயி ரண்டுகொர் முகத்தினு மாயிரம் பகழி
கைக ளீரைந்தி னுலும்வெங் கடுப்பினிற் [1]றொடுத்துற்று
எய்ய [2]வெஞ்சின வானமு மிருநில வரைப்பும்
மொய்கொள் வேலையுந் திசைகளுஞ் சரங்களாய் [3]முடிந்த.

(இ - ள்.) பத்துவிற்களிலும் ஆயிரம்அம்புகளை பத்துக்கைகளினாலும் மிக்கவேகத்துடனே தொடுத்து (இராவணன்) எய்ததனால், (எல்லாப்பூதங்களையும்)கடந்துநின்ற ஆகாயமும் பெரியபூமிப்பரப்பும் வலிமையைக்கொண்ட கடலும் திக்குக்களும் சரங்களாகமுடிந்த; (எ-று.)—எஞ்சுதல் கடத்தலாதலை "இரக்குவாரே னெஞ்சிக்கூறேன்"என்ற இடத்துங் காண்க. பி-ம்:-[1]தொடுப்புற்று. [2]அஞ்சின. [3]முடித்தான். (௧௧௫௯)

௧௯௮.—படுகளச்சிறப்பு.

அந்தி வானக மொத்ததவ் வமர்க்கள முதிரஞ்
[1]சிந்த வேலையுந் திசைகளு நிறைந்தன [2]சரத்தாற்
பந்தி பந்தியாய் [3]மடிந்தது வானரப் பகுதி
வந்து மேகங்கள் படிந்தன [4]பிணப்பெரு மலைமேல்.

(இ-ள்.) அந்தப்போர்க்களமானது,—உதிரஞ்சிந்தியதனால் அந்திவானத்தையொத்திருந்தது; கடலும் திக்குக்களும், அம்புகளால் நிறைந்தன; வானர

சேனை, வரிசைவரிசையாய் மடிந்துவீழ்ந்தது; (அப்படிவீழ்ந்தவானரப்)பிணங்களாகியபெரியமலைமேல் மேகங்கள் வந்துபடியலாயின; (எ - று.)—வானரப்பிணக்குவியலை மேகங்கள் மலையென மயங்கி அதன்மேற்படிந்தன என்றவிடத்து மயக்கவணி காண்க. பகுதியென்பது சேனையென்னும்பொருளதாதலை "சேனைபகுதி பாடி பலம் படை" என்ற பிங்கலந்தையாலும் அறிக. பி-ம்:—1சிந்தி. 2சினத்தால், சிரத்தால். 3முடிந்தன. 4நெடும்பிணமலைமேல்.()

ககூகூ.—சிலவானரத்தலைவரின்நிலைமை.

நீல னம்பொடு 1சென் றில னின் றில 2னனிலன்
கால னூர்3வயத் தடைந்தில னேவுண்ட கவயன்
ஆல 4மன்னதோர் சரத்தொடு மங்கத னயிர்த்தான்
சூல மன்னதோர் வாளியாற் சோம்பினன் சாம்பன்.

(இ - ள்.)நீலனென்பவன்,(தன்மீதுபடிந்த)அம்பினாற் செல்லமாட்டாதவனாயினன்; அனிலன்,நிற்கமாட்டாதவனாயினான்; [கீழேவிழுந்திட்டானென்றபடி]; அம்பினால்தைக்கப்பட்ட கவயனென்பவன், (இன்னும்) யமனுடைய வசத்திலேயாகவில்லையென்பதே குறை; [மூர்ச்சித்துக்கிடந்தானென்றபடி]; அங்கதன்,விஷத்தையொத்தசரத்துடனே உயிர் தங்குமோ தங்காதோஎன்று ஐயங்கொண்டுகிடந்தான்: சாம்பன் சூலப்படையையொத்த அம்பினால் ஒன்றுஞ்செய்யமுடியாதவனாயினான்; (எ - று.)—பி - ம்:—1நின்றிலன்சென்றிலன். 2நிலத்தான், அனலன். 3வசத். 4அன்னபோரங்கதன் சரத்தொடுமயர்ந்தான். (ககசுக)

உ00.—வானரப்படை நிலைதலைபக்கண்டு இலக்ஷ்மணன் சினத்தல்.

1மற்றும் வீரர்தம் மருமத்தி னயிலம்பு மடுப்பக்
கொற்ற வீரமு மாண்டொழிற் செய்கையுங் குறைந்தார்
சுற்றும் வானரப் பெருங்கட றொலைந்தது 2தொலையாது
உற்று 3நின்றவ ரோடின 4ரிலக்குவ னுருத்தான்.

(இ-ள்.)மற்றுமுள்ளபெருவீரர்கள்,—தம்முடைய உயிர்நிலைகளிலே கூர்மையானஅம்புகள் பாய்ந்ததனால், வெற்றிபொருந்திய வீரத்தனமும் ஆண்டொழிற்குஏற்ற செயலும் ஒழியப்பெற்றார்; சுற்றுமுள்ளவானரப்பெருஞ்சமுத்திரமானது அழிந்திட்டது; (வானரரில்) அழியாது உயிருடன் நின்றவர் ஓட்டம்பிடித்தனர்;(அது கண்டு) இலக்குவன் சினங்கொண்டான்; (எ-று.)—பி - ம்:—1மற்ற. 2குலைவால். 3நின்றவரோடியே, நின்றனவோடின. 4இலக்குவற்குரைத்தார், இலக்குவற்குரைத்த. (ககசுஉ)

உ0க.—இலக்ஷ்மணன் இராவணனெய்த அம்புகளையெல்லாம் விலக்கி, அவனுடைய பத்துவிற்களையும் அறுத்துவிடுதல்.

நூறு கோடிய நூறுநூ றாயிர கோடி
வேறு வேறெய்த சரமெலாஞ் சரங்களால் விலக்கி
ஏறு சேவகன் றம்பியவ் விராவண னெடுத்த
ஆறு நாலுவெஞ் சிலையையுங் 1கணைகளா லறுத்தான்.

(இ - ள்.) நூறுகோடிக்கணக்குள்ளனவும் நூறுநூறாயிர கோடிக்கணக்குள்ளனவுமாக வேறுவேறாக (இராவணன்) எய்த அம்புகளையெல்லாம், மிகுகின்ற வீரத்தன்மையையுடையவனான இராமபிரானுடைய திருத்தம்பியான இலக்குமணன்(தன்)அம்புகளால்விலக்கி, அவ்விராவணன்(தன் பத்துக்கைகளிற்)பிடித்துள்ள பத்துக்கொடியவிற்களையும்(தன்)அம்புகளாலறுத்திட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]சரங்களால். (௧௧௬௩)

௨௦௨.—வானவர்முதலியோரின் மகிழ்ச்சியும், அரக்கரின் வருத்தமும்.

ஆர்த்து வானவ ராவலங் கொட்டின ரரக்கர்
வேர்த்து நெஞ்சமும் வெதும்பினர் வினையறு முனிவர்
தூர்த்து [1]நாண்மலர் சொரிந்தன [2]ரிராவணன் றோளைப்
பார்த்து வந்தனன் குனித்தது [3]நல்லறம் பாடி.

(இ - ள்.) வானவர்கள்,(மகிழ்ச்சியால்) ஆரவாரஞ்செய்து வாய்கொட்டினார்கள்; (இரு)வினைகளினின்றுநீங்கிய முனிவர், அன்றுமலர்ந்தமலர்களைச் சொரிந்து போர்க்களத்தை நிரப்பினர்; நல்லறம், பாடிக்கொண்டு கூத்தாடிற்று; அரக்கரோ,நெஞ்சமும் வேர்த்து வெதும்பினர்;இராவணன்,(இலக்குவனுடைய)தோள்வலியைக்கண்டு உவந்தனன்; (எ - று.)

தூர்த்துச்சொரிந்தனர் = சொரிந்துதூர்த்தனர்: விகுதிபிரித்துக்கூட்டல். மேலிரண்டுகவிகளில் இராவணன் இலட்சுமணனதுவீரத்தைப் புகழ்ந்துகூறுதலைக் காணலாம். தோள்-தோள்வலிமைக்குத் தானவாகுபெயர். பி - ம்:—[1]நன்மலர். [2]இலக்குவன், இராமனுந். [3]வானரம்படியில். (௧௧௬௪)

௨௦௩.—இதுவும் அடுத்தகவியும்-இலக்குமணன் தோள்வலியை இராவணன் கண்டு அதிசயித்துக்கூறுதலைக் குறிக்கும்.

நன்று [1]போர்வலி [2]நன்றுபோ ராள்வலி வீரம்
நன்று நோக்கமு நன்றுகைக் கடுமையு நன்று
நன்று கல்வியு நன்று[3]நின் றிண்மையு நலனும்
என்று கைம்மறித் திராவண னொருவனீ யென்றான்.

(இ - ள்.) போர்செய்யும்வலி, நன்று; போரைக் கைக்கொண்டு ஆள்கின்ற (உடல்) வலிமையோடுகூடிய வீரமும்,நன்று; (பார்க்கும்) பார்வையும், நன்று; கைவிசையும்,நன்று;கல்வியும்,நன்று;நின்திண்ணியதன்மையும்,நன்று; (உன்னுடையபோர்செய்யும்)அழகும்நன்று என்று இராவணன் சொல்லி,(அதிசயந்தோன்றக்) கையை மடக்கிவைத்துக்கொண்டு, நீ ஒப்பற்றவனென்று, (இலட்சுமணன் திறம்முதலியவற்றை அதிசயித்துக்)கூறினான்; (எ - று.)—பி - ம்:—[1]தோள்வலி. [2]நன்றதோராள்வினை. [3]நின்றிண்மையும். (௧௧௬௫)

௨௦௪.காணி [1]னன்றிகற் கரன்படை படுத்தவக் கரியோன்
தானு மிந்திரன் றன்னையோர் தனுவலந் தன்னால்
வானில் வென்றவென் மதலையும் வரிசிலை [2]பிடித்த
யானு [3]மல்லவர் [4]யாருனக் கெதி[5]ரென்று மிசைத்தான்.

(இ - ள்.) தண்டகவனத்திலே அக்காலத்தில் [முன்பு] வலிமைபெற்ற கரனுடையசேனைகளை யொழித்த அந்தக்கருகிறமுள்ள இராமனும், இந்திரனை(த் தன்னுடைய) ஒப்பற்ற வில்வன்மையினுற் சுவர்க்கலோகத்திலே வென்ற என்குமாரனுன இந்திரசித்தும்,கட்டமைந்தவில்லை(க்கையிலே)பிடித்துள்ள யானும் அல்லாதவேறுஎவர் உனக்கு ஒப்பாவர்?என்றும்(இராவணன்) கூறினுன்; (எ - று.)—பி-ம்:—[1]வன்றிறல். [2]மடித்த. [3]அல்லது. [4]உனக்கெதிரன்று. [5]என. (கககசுசு)

உ0ரு.—இராவணன் தான் பிரமனிடத்துப்பெற்ற வேற்படையை இலட்சுமணன்மீது எறிதல்.

வில்லி னுலிவன் வெலப்படா னெனச்[1]சினம் வீங்கக்
கொல்லு நாளு[2]மின் றிதுவெனச் [3]சிந்தையிற் கொண்டான்
பல்லி னுலித ழதுக்கினன் பருவலிக் கரத்தால்
எல்லி னுன்முகன் கொடுத்ததோர் வேலெடுத் தெறிந்தான்.

(இ - ள்.) இந்தஇலட்சுமணன் வில்லினுல் வெல்லப்படமாட்டானென்றுகருதிச் சினம்பொங்க, (இராவணன்), '(இவனைக்) கொல்லவேண்டிய நாளும் இன்றைக்கே:(ஆதலால், நான் செய்யவேண்டியதொழில்)இதுவாகும்' என(த் தன்)மனத்தில் தீர்மானித்து,பல்லினுல்உதட்டைக் கடித்துப் பருத்த வலியுள்ளகையினுற் பெருமைபெற்ற நான்முகன்கொடுத்ததொரு வேற்படையைஎடுத்து (அந்த இலட்சுமணன்மீது) வீசினுன்; (எ - று.)

எல்-ஒளி: "எல்லேயிலக்கம்"; இது - பெருமையென்ற பொருளில்வந்தது.வில்லினுல்வெல்லமுடியாதென்பதைக் கண்டறிந்த இராவணன் இது தவருமல் இலட்சுமணனுயிரை யழிக்குமென்று பிரமன்கொடுத்தவேற்படையை அவன்மீதுஎறிந்தானென்க.பி-ம்:-[1]மனம்வெதும்பாக். [2]என்றிது. [3]சிந்தையுட்.

உ0சு.—இராவணன்வேல் மார்பிடைச்செல்ல, இலக்குமணன் அயர்ந்திருத்தல்.

எறிந்த காலவே லெய்தவம் பியாவையு [1]மெரித்துப்
பொறிந்து போயுகத் தீயுக விசையினிற் [2]பொங்கிச்
செறிந்த தாரவன் மார்பிடைச் சென்றது சிந்தை
[3]அறிந்த மைந்தனு மமர்நெடுங் களத்திடை [4]யயர்ந்தான்.

(இ - ள்.) (இராவணன்)எறிந்த யமன்போன்ற வேற்படையானது,இலட்சுமணனெய்த அம்புகளெல்லாவற்றையும் எரித்துத்தீப்பொறியாகிப் போய்ச்சிந்திவிழுமாறும் தீச்சிந்துமாறும் விரைவுடனேபாய்ந்துபோய், நெருங்கிய மாலையையணிந்த இலட்சுமணனதுமார்பிலே பாய்ந்தது;(அதன்தன்மையை) மனத்தினுலறிந்த சிறுவனுகிய அவ்விலட்சுமணனும் நீண்டபோர்க்களத்திலே மூர்ச்சித்தாற்போற்கிடந்தான்; (எ-று.)—அம்புகளை இலக்குவன் தொடுத்தும் அவ்வேல் மார்பிற்பாய,அறிந்த அம்மைந்தன் அயர்ந்திருந்தானென்க.பொரிந்து என்பது-பொறிந்துஎன எதுகைநோக்கிவந்ததென்றலுமாம்.பி-ம்:—[1]எரிந்து. [2]போகிச், போக்கிச். [3]அறிந்து. [4]அமைந்தான். (கககசுஅ)

உ0எ.—இலட்சுமணன் அயர்ந்ததனால் நிகழ்ந்த நிகழ்ச்சி.

இரிய லுற்றது வானரப் பெரும்படை யிமையோர்
பரிய [1]லுற்றன ருலைந்தனர் முனிவரும் பதைத்தார்
விரிதி ரைக்கடற் கிரட்டிகொண் டார்த்தனர் விரவார்
[2]திரிகை யொத்தது மண்டலங் கதிரொளி [3]திரிந்த.

(இ - ள்.) பெரியவானரசேனையானது,நிலைகெட்டு ஓடலாயிற்று;தேவர்கள், வருந்தத்தொடங்கினர்: முனிவர்களும் வருந்தித்துடித்தார்கள்: பகைவராகியஅரக்கர் விரிந்தஅலைகளையுடைய கடலோசைக்கு இருமடங்குஓசையுண்டாக ஆரவாரித்தனர்: (அந்தஅதிர்ச்சியால்) பூமண்டலமும் சக்கரத்தையொத்துச்சுழன்றது; சூரியன்ஒளியும் மாறுபட்டது; (எ - று.)

திரிந்த = திரிந்தது. திரிகை-சுழல்வதெனச் சக்கரத்துக்குக் காரணக்குறி.
பி-ம்:—1உற்றவர், உற்றுணர்வு. 2திரியலுற்றது. 3தீர்ந்த. (ககசுகு)

உ0அ.—இலட்சுமணன் அயர்ந்திருப்பதையுணர்ந்து அவனுடலைத் தூக்கிச்செல்லுமாறு அந்த இராவணன்வருதல்.

அஞ்சி னானல னயன்றந்த வேலினு மாவி
துஞ்சி னானலன் றுளங்கின [1]னென்பது துணியா
எஞ்சி லியாக்கையை யெடுத்துக்கொண் டகல்வனென் றெண்ணி
நஞ்சி னாற்செய்த [2]நெஞ்சினன் [3]பாரின்மே னடந்தான்.

(இ - ள்) '(இந்த இலட்சுமணன் நான் எறிந்ததான) பிரமதேவன்கொடுத்த வேலுக்கும் அஞ்சினனுமல்லன்;உயிரொழிந்தானுமல்லன்; உயிர்சோர்ந்துள்ளான் என்பதைத் திண்ணமாகஅறிந்து, (வலி) ஒடுங்குதலில்லாத (அந்த இலட்சுமணனது) உடம்பை எடுத்துக்கொண்டு அப்பாற்செல்வேனென்று நினைத்து, விஷத்தினாற்செய்ததுபோன்ற கொடியநெஞ்சையுடையவனாகிய இராவணன், பூமியில் (இலட்சுமணன்கிடக்குமிடத்தைநோக்கி) நடந்துவந்தான்; (எ - று.)—பி-ம்:—1என்பதூஉம். 2மனத்தினன்.3பார்மிசை. (ககஎ0)

உ0கூ.—இலட்சுமணனுடலை இராவணன்தூக்கமுயலுதல்.

உள்ளி வெம்பிணத் [1]துதிரநீர் வெள்ளத்தி லோடி
அள்ளி யங்கைக ளிருபதும் பற்றிப்பண் [2]டான்மா
வெள்ளி யங்கிரி [3]யெடுத்தனன் வெள்கினா னென்ன
[4]எள்ளில் பொன்மலை யெடுக்கலுற் றானென [5]வெடுத்தான்.

(இ - ள்.) (கீழ்க்கூறியவாறு இலட்சுமணனுடலைத் தூக்கிச்செல்ல)நினைத்து, வெவ்விய பிணங்களின்இரத்தப்பெருக்கிலே விரைந்துசென்று (இராவணன் தனது)இருபது அழகியகைகளினாலும்(அந்தஇலட்சுமணனது உடலைக்) கவ்விப்பிடித்து;முன்பு சிவனுடையசிறந்தவெள்ளிமலையாகிய கைலாசத்தைத் தூக்கியெடுத்தஅவ்விராவணன் (அப்போதுதான் மலையின்கீழகப்பட்டதற்கு) நாணங்கொண்டான்போலவும் (அந்தஅவமானம்தீரும்படி அதனினும் மேம்பட்ட) குற்றமற்றபொன்மலையை யெடுக்கத்தொடங்கியவன்போலவும் எடுக்கத்தொடங்கினான்;(எ-று.)--இலக்குமணனுடல் பொன்மலையை யொத்திருப்

பதுபற்றி, இவ்வாறு வருணித்தது. தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]உதிரத்தினோதத்தின். [2]ஆன்ற, அரன்றன், அமரின், அமலன். [3]எடுத்தது. [4]எள்ளிப். [5]எடுப்பான். (ககஎக)

உகo.—இராவணன் இலட்சுமணனைத் தூக்கமுயலவும், தூக்கமுடியாதவனாதல்.

அடுத்த நல்லுணர் [1]வொழிந்தில னம்பரஞ் செம்பொன்
உடுத்த நாயகன் [2]றானென [3]வுணர்தலி னொருங்கே [போடு
[4]தொடுத்த வெண்வகை மூர்த்தியைத் [5]துளக்கிவெண் [6]பொருப்
எடுத்த தோள்களுக் கெழுந்தில னிராமனுக் கிளையான்.

(இ - ள்.) இராமனுக்குஇளையவனாகிய இலட்சுமணன்,—பீதாம்பரதாரியான தலைவன் தானென்று உணர்தலோடுகூடிப்பொருந்தியநல்லஅறிவுநீங்காமலிருந்தான்: (அப்போது), அஷ்டமூர்த்தங்களை ஒருசேரக்கொண்ட சிவபிரானைச் சலிக்கச்செய்து வெள்ளிமலையான கைலாசத்தோடும் எடுத்த (அந்த இராவணனுடைய) தோள்களுக்குத் தூக்கமுடியாதவனானான்; (எ-று.)

இராவணன் சிவபெருமானுடனே கைலாயமலையைத் தூக்கினவனாயினும், இலட்சுமணன் தான் விஷ்ணுவினமிசமாதலால் அவ்விராவணனுக்குத் தூக்கமுடியாதவனாயினனென்பது, கருத்து. இராவணன் இலட்சுமணனைத் தூக்கிச்செல்லமுயன்றபோது அந்தஇலட்சுமணன் இருந்தநிலையை, 'தான் விஷ்ணுவின்ஸ்வரூபம்' என்ற அந்தஉண்மையறிவுடனிருந்தானென்று முன்னிரண்டடிகள் காட்டும். விஷ்ணுவின்ஸ்வரூபம் பக்தர்க்குஅன்றி, மற்றையோர்க்குப்பெரும்பாரமாகத் தோற்றுமென்க. இனி, ஒருசாரார் 'இலட்சுமணன் தான் விஷ்ணுவின்ஸ்வரூபமென்பதை நினைத்தமையால், இராவணனுக்குப்பாரமானான்'என்று இச்செய்யுட்குக்கருத்துக்கூறுவர்: அது பொருந்தாது; தன்ஸ்வரூபத்தை நினைப்பது பாரமாதற்குக் காரணமென்பதற்குஒரு பிரமாணமுமில்லை: இனி, தனக்குக் காரணமான விஷ்ணுவைக்கருதினனென்றுகூறலாமோ? எனின்,—அதுவும் பொருந்தாது. தானே விஷ்ணுவின் ஸ்வரூபமாகையால் தன்னைத்தவிரத் தனக்குநேர்ந்தாற்போல்தோன்றும் இடரைப்போக்குபவர் வேறு ஒருவர்இல்லாமையாலென்க. இங்ஙனம் ஒருவஸ்து இராவணனுக்குஎடுக்கமுடியாமற் பாரமாகவும் அநுமானுக்குஎளிதிற் தூக்கிச்செல்லும்படி இலேசாகவும் இருந்ததுபற்றியே ஸ்ரீவால்மீகிபகவான் "‡அசிந்த்யம்" என்றார்.

அம்பரம் - ஆடை. பஞ்சபூதங்கள் சூரியசந்திரர்கள் யாககர்த்தா என்ற இவ்வெட்டுப்பொருளைச் சிவபெருமான் தனக்குத்திருமேனியாகவுடையவ

‡"ஹிமவாந் மந்தரோ மேருஃ-த்ரைலோக்யம்வா ஸஹாமரைஃ | ஶக்யம் புஜாப்யா முத்தர்த்தும்-நஶக்யோ பரதாநுஜஃ || ஶக்த்யாப்ராஹ்ம்யாபிஸௌமித்ரிஃ-தாடிதஸ்துஸ்தநாந்தரே | விஷ்ணோரசிந்த்யம் ஸ்வம்பாகம்-ஆத்மாநம் ப்ரத்யநுஸ்மரத் ||" என்ற ஸ்ரீராமாயணஶ்லோகங்களும் வ்யாக்யாநங்களும் இங்குக் காணத்தக்கன.

முதல்பற்றி, அஷ்டமூர்த்தியெனப்படுவன். பி-ம்:-1அழிந்திலன், அதிந்திலன். 2தாளிணை. 3உணர்ந்திலன். 4தடுத்த. 5துளக்கிய, தாங்கிய. 6பொருப்பை. ()

௨கக.—இலட்சுமணனுடலை இராவணன் தூக்க முயலும்போதைய நிலையின் வருணனை.

தலைகள் 1பத்தொடுந் தழுவிய 2தசமுகத் தலைவன்
நிலைகொண் மாக்கட லொத்தனன் 3கரம்புடை நிமிரும்
4அலையை யொத்தன வதிலெழு 5மாமதி யொத்தான்
இலைகொ 6டண்டுழா 7யிலங்குதோ ளிராமனுக் கிளையான்.

(இ - ள்.) (இலட்சுமணனது உடலைத்தூக்கமுயன்ற) பத்துத்தலைகளுடனேகூடிய இராவணேச்சுரன், நிலைத்திருக்கின்றதொருகடலையொத்திருந்தான்; பக்கத்தி லோங்கியுள்ள (அவனுடைய) கைகள், அலைகளையொத்தன (அவ்விராவணன்கையில்தோன்றும்) இலைகளைக்கொண்ட குளிர்ந்ததுழாய் மாலைவிளங்கப்பெற்ற தோளிணையுடையஇராமனுக்கு இளையவனான இலட்சுமணன், அந்தக்கடலில்தோன்றுஞ் சிறந்தசந்திரனை யொத்தான்; (எ - று.)—இராவணன் கடலையும், இலட்சுமணன் கடலில்தோன்றுஞ் சந்திரனையும்போன்றனரென்றார். நிமிருமலையைஎன்பதை நிமிரும்மலையைஎனப்பிரிப்பாருமுளர்: அங்ஙனம் பிரிப்பின், உதயபர்வதத்திலே யென்க. அலை - சாதியொருமை. பி-ம்:—1பத்துடன். 2தசமுகன்றணவா. 3தாம்பொடு, பாம்பொடு. 4அலைகள். 5அவிர்மதி, இரவியை. 6தண்டொடை. 7வயங்கு. (ககஎ௩)

௨க௨.—அநுமான் திடீரென்றுவந்து இலட்சுமணனை யெடுத்துச்செல்லுதல்.

எடுக்க லுற்றவன் மேனியை யேந்துதற் கேற்ற
மிடுக்கி லாமையி னிராவணன் வெய்துயிர்ப் புற்றான்
1இடுக்கி னின்ற2வம் மாருதி புகுந்தெடுத் தேந்தித்
3தடுக்க லாததோர் 4விசையினி னெழுந்தயல் சார்ந்தான்.

(இ-ள்.) இராவணன் (தான்) எடுத்துச்செல்லத்தொடங்கி அந்த இலட்சுமணனுடைய மேனியைத் தூக்குவதற்குஏற்ற வலிமையில்லாமையினாலே வெம்மையாகப் பெருமூச்சுவிட்டான்; (எங்கோஒரு) மூலையிலிருந்த அந்த அநுமான், வந்து (இலட்சுமணனைக்கையிலே) எந்தியெடுத்துத்தடுக்கமுடியாத ஓர்விரைவுடனே எழுந்துபோய் அப்பாற்சேர்ந்திட்டான்; (எ - று.)—இடுக்கு-மூலை: இனி, இராவணன் குத்தியதனாலுண்டான சலிப்புஎனினுமாம். பி-ம்:-1இடுக்குகின்ற, இடுக்குநின்ற, இடுக்கினிற். 2பொர, போர். 3தடுக்கலாகலா. 4விசையினால், விசையினன். (ககஎ௪)

௨க௩.—எளிதாகஇலக்குமணனைத்தூக்கிச்செல்லும்அநுமானதுவருணனை.

தொக1வொ ருங்கிய ஞான2மொன் றெவரினுந் தூயான்
தகவு 3கொண்டதோர் 4நண்பெனுந் தனித்துணை யதனால்
5அகவு காதலா லண்டகை 6யென்னினு மநுமன்
மகவு கொண்டுபோய் மரம்புகு மந்தியை 7நிகர்த்தான்.

(இ - ள்.) தொகுதியாகச்சேர்ந்துள்ள ஞானம்பொருந்திய யாவரினுந் தூய்மைபெற்றவனான அநுமான், (இலட்சுமணன்) புருஷோத்தமனாகிய பரம் பொருளேயாகியிருக்கவும், நன்மைபொருந்தியதோர் சிநேகமென்கின்ற ஒப் பற்றதுணையினாலும்தழைத்தபக்தியினாலும் (இலட்சுமணனைத்தூக்கிச்சென்று),மகவைச்சுமந்துகொண்டுமரம்போய்ச்சேரும்மந்தியையொத்தான்;(எ-று.) —பெண்குரங்கு எங்ஙனம்தன்குட்டியை ஒருசிரமமின்றித் தூக்கிச்செல்லுமோ, அங்ஙனம் இலட்சுமணனை அநுமான் இலேசாகத் தூக்கிச்சென்றமையைப் புலப்படுத்தலால், இது,இழிவுவமையாகாது:''மிகுதலுங்குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும்பாகுபாடுடைய'' என்றார், தண்டியாசிரியர்.

'கைலாயமலையைச்சிவபெருமானுடனேபெயர்த்தெடுத்தஇராவணனால் எடுக்கமுடியாத இளையபெருமாள் ஒருவானரனான அநுமானால் எளிதாகத் தூக்கிச்சென்றமை எப்படி?' என்று தோன்றும் ஐயத்தைப் போக்குவார் 'நண் பெனுந்தனித்துணையதனால் அகவுந்தலால்' என்றார்: ஸ்ரீவால்மீகிபகவானும் "வாயுஸூநோஸ் ஸுஹ்ருத்த்வேந பக்த்யா பரமயா ச ஸ: | ஶத்ரூணாமப்ர கம்ப்யோபி-லகுத்வ மகமத் கபே:''என்றார். இங்கு, இளையபெருமாள் அநுமா னுக்குஇலேசாயிருந்ததற்குக் காரணம், அந்த அநுமானுடையநட்பே: மிகுந்த பக்தியும் உடையனாயிருப்பதுபற்றிஇனிச்சொல்லவேணுமோ? இது மிகையே என்று கருத்துக்கூறுவர். விஷ்ணுவின்அம்சமாதலால் இயற்கையிற் பாரமா யிருக்கின்ற இளையபெருமாள், தன்னிடத்து நண்பும் பக்தியும்உடையவனாத லால் அநுமானுக்கு இலேசாயினனென்க. இதனால், தாம் கொண்டுள்ள மநு ஷ்யபாவனைக்குஏற்ப, ராமலக்ஷ்மணர்கள் துன்பமுற்றவர்போலவும் மூர்ச்சை யடைந்தவர்போலவும் தோன்றுவராயினும், அவர்தம்இயற்கை மாறாதென்க. இந்தப்ரகரணத்தில்''ராவணன் ஸபரிகரனாய்க்கொண்டுஎடுக்கப்புக்கவிடத்தில் நெஞ்சில் ஶாத்ரவத்தாலே [பகைமையாலே] எடுக்கமாட்டிற்றிலன்: திருவடி தனியனாயிருக்கச்செய்தேயும் நெஞ்சிற்செவ்வையாலே கருமுகைமாலைபோ லே எடுத்தேறிட்டுக்கொண்டு போனான்; இங்ஙனன்றாகில், ராவணனுக்குக் கனக்கவேணுமென்றும், திருவடிக்கு நொய்தாகவேணுமென்றும் அன்று: வஸ்து ஸ்வபாவம் இருக்கும்படியாயிற்று இது'' என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருத்தல் காணத்தக்கது. பி-ம்:—1ஒதுங்கிய. 2என்றெவ ரினுந்தூயான், அன்றேலமற்றெவற்கும், என்றெவற்றிற்குந்தூயான், என் றெவற்றினுந்தூயான். 3கண்டதென். 4அன்பெனுந்தனித்துணையல்லால், அன்பெனுந்தனித்துணையதனால். 5அகமுங். 6ஆயினும். 7ஒத்தான். (கசஎ)

உகச.—இலட்சுமணன் தேற, அநுமான் இராமபிரானுள்ள இடத்தைச் சேர்தல்.

மையல் கூர்மனத் திராவணன் படையினான் மயங்குஞ்
செய்ய வாளரி யேறனான் சிறிதினிற் 1தேறக்
கையுங் கால்களு நயனமுங் கமலமே யனைய
பொய்யி லாதவ னின்றிடத் தனுமனும் போனான்.

(இ - ள்.) மயக்கம்மிகுந்தமனத்தையுடைய இராவணனெறிந்த வேற்படையாலுற் சோர்ந்துகிடந்தசெவ்வியகொடிய ஆண்சிங்கத்தையொத்தவனு னஇலட்சுமணன் சிறிதுநேரத்தில் தெளிவடைய, (தன்னுடைய) கை கால் கண்என்பன தாமரைமலரையேயொத்துள்ள பொய்யில்லாதவனுன இராமபிரான் நின்றஇடத்துக்கு, அநுமானும் போனுன்; (எ - று.)

இனி; [1]தேறிஎன்றபாடத்திற்கு-எச்சத்திரிபுஎன்முவது, இலட்சுமணன் தேறி இராமனிடம்போனுன்: அநுமனும்அங்குப்போனுன்என்முவதுஉரைக்க. இலட்சுமணனுடையமார்பிற்பாய்ந்த சக்திபாயுதம் இராவணனிடம்மீண்டு போக, இலட்சுமணன் தேறுதலடைந்தா னென்றுமுதனுல்கூறும். இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை. 'தடுக்கலாததோர்விசையினினெழுந்தயல்சார்ந்தான்' என்றுகீழ்வந்ததே இராமனுள்ளஇடத்து இலட்சுமணனேடு அநுமான் சேர்ந்தான்என்றுகருத்துக்கொள்ள இடந்தருதலால், இது, செருகுகவியாயிருக்கலாமென்றுதோன்றுகின்றது. இவ்வண்ணமே ஆங்காங்குக் காண்க. ()

உகரு.—அப்போது இராவணனைநோக்கி இராமபிரான்செல்ல, இராவணன் தேரைச்செலுத்திக்கொண்டு வருதல்.

போன காலையிற் புக்கனன் புங்கவன் போர்வேட்டு
[1]யானை மேற்செலுங் கோளரி [2]யேறிவ னென்ன
வானு ளோர்கண மார்த்தனர் தூர்த்தனர் மலர்மேல்
தூன வின்றவே லரக்கனுந் [3]தேரினைத் தூரந்தான்.

(இ - ள்.) (அநுமான்) சென்ற காலத்தில், இராமபிரானும் யானைமேற் செல்லுகின்ற கொல்லுந்தன்மையுள்ள சிங்கமாவன் இவனென்று (கண்டோர்) சொல்லும்படி போரைவிரும்பி (இராவணனைநோக்கிப்) புகுந்தான், (அப்போது) தேவர்கள் திரள்திரளாக ஆரவாரித்தனர்; மலர்களை மேலேமிகுதியாகப்பொழிந்தார்கள்; மாமிசம்பொருந்தியுள்ள வேற்படையையுடையஇராவணனும், (தன்) தேரினை (இராமபிரானைநோக்கிச்) செலுத்தினுன்; (எ-று.)— புங்கவன் - காளைபோன்றவ னெனப் பொருள்படும் வடசொற்றொடரின், விகாரம். இலட்சுமணனை வேல்கொண்டெறிந்ததுபற்றி இராவணனிடத்துச் சினந்துசெல்கின்று னென்று ஒருசாரார்கூறுவர். பி - ம்:—[1]ஆனை. [2]ஏறது ஏறிது, வருவதும். [3]தெரிகணைசொரிந்தான். (ககஎஎ)

உகசு.—அநுமான் தரையிற்செல்லும் இராமபிரானைக் கிட்டுதல்.

தேரிற் போரரக் கன்செலச் சேவகன் [1]றனியே
பாரிற் செல்கின்ற வறுமையைப் [2]பார்த்தனன் பரிந்தான்
சீரிற் செல்கின்ற தில்லையிச் செருவெனுந் திறத்தால்
வாரிற் பெய்கழன் மாருதி கதுமென வந்தான்.

(இ - ள்.) போர்செய்யவல்லஅரக்கன் தேரிலேசென்றுகொண்டிருக்க, வீரனுகிய இராமபிரான் தனியே [தேரில்லாமல்] பூமியிலே நடந்துசெல்கின்ற எளிமையைநோக்கி அன்புகொண்டவனுய், வாரினுற்கட்டப்பெற்ற கழல்களையணிந்த அநுமான்,—(தரையிலிருக்கும்இராமனுக்கும் தேரிலிருக்கும்

இராவணனுக்கும் இவ்விருவர்க்கும் நடக்கப்போவதாகவுள்ள) இந்தப்போரானது சிறப்பாகஇராது என்ற கருத்தினால் (இராமபிரானுள்ளஇடத்துக்கு) விரைவாகவந்தான்; (எ-று.)—பி-ம்:—1செவ்வே. 2நோக்கினன். (ககஎஅ)

உகஎ.—இது, கவிக்கூற்று: இராமபிரான் தரையில்நடப்பதை அநுமான்விரும்பாதது பொருத்தமேயெனல்.

பண்டை நாடரு பனித்திரைப் புனல்சடை யேற்றுக்
கொண்ட தூயவன் கொடுந்தொழி லிருதர்கள் குழுமி
மண்டு வாளமர்க் களத்திலம் மலர்க்கழல் சேறல்
கண்டு கூசல னிற்குமென் றாலது கடனே.

(இ - ள்.) முற்காலத்து (அந்தத்திருமால்) தந்த குளிர்ந்தஅலைகளைக்கொண்டகங்கைப்புனலைச் சடையிலே தாங்கித் தூய்மையையடைந்தவனாகிய சிவபெருமான் கொடுந்தொழிலையுடைய அரக்கர்கள் திரண்டு மிகுகின்ற கொடியபோர்க்களத்திலே அந்தத்தாமரைமலர்போன்ற திருவடிகளால் நடந்துசெல்லுதலைக்கண்டு கூசாமல் நிற்குமென்றால், அதுமுறைமையோ? (எ-று.) —கண்டுகூசியது முறைமையேயாகுமென்க. அநுமான் சிவபெருமானுடைய அமிசமாதலால் இவ்வாறுகூறியது. இச்செய்யுள், பலஏட்டுப்பிரதிகளில் இல்லை. செருகுகவியாயிருக்கலா மென்று தோன்றுகின்றது. (ககஎகூ)

உகஅ.—இராவணனுக்குஏற்ப நீ என் தோளின்மீதுஏறிப்பொருக' என்று ஸ்ரீராமனை அநுமான் வேண்டுதல்.

நூறு பத்துடை நொறில்பரித் தேரின்மே னுன்முன்
மாறில் 1போரரக் கன்பொர நிலத்துநீ மலைதல்
வேறு காட்டுமோர் 2வெறுமையை 3மெல்லிய னெனினும்
ஏறு நீயைய வென்னுடைத் தோளின்மே லென்றான்.

(இ - ள்.) மாறில்லாதபோரைச்செய்யும் அரக்கன் விரைவுள்ள ஆயிரங்குதிரைகளைக்கொண்ட தேரின்மேலேயிருந்து உன்முன்னே பொருகையில் நிலத்திருந்தவண்ணம் நீ மலைதல், ஒப்பற்றஎளிமையைத் தனியேயெடுத்துக்காட்டும்; ஐயனே! (நான்) மெலியவனாயிருந்தாலும் என்னுடையதோளின் மேல்ஏறிக்கொள்கஎன்றுகூறினான், (அநுமான்); (எ - று.)—பி-ம்:—1பேர். 2வெறுமைய, வறுமைய. 3மெல்லிய. (ககஅ0)

உகூ.—இராமபிரான் உடன்பட்டு ஆரோகணிக்க, அநுமான் களித்தல்.

நன்று 1நன்றெனு நாயக னேறின னுடக்
2குன்றின் 3மேலிவர் கோளரி யேறெனக் 4கூறி
5அன்று 6வானவ ராசிக ளியம்பின ரீன்ற
கன்று தாங்கிய தாயென மாருதி களித்தான்.

(இ-ள்.) (யாவர்க்குந்) தலைவனாகிய இராமபிரான், நன்றென்றுசொல்லி (அநுமான்வேண்டுகோட்குஇசைந்து அவனதுதோள்களில்) ஏறினன்; சிறப்புப்பொருந்தியமலையின்மீதுஏறிய கொல்லுந்தன்மையுள்ள சிங்கம் (அநுமான்மீதுஏறிய இராமபிரானுக்குஒப்பாம்) என்றுசொல்லி, தேவர்கள் அப்

போது வாழ்த்துமொழிகளைக் கூறினார்கள்; ஈன்றகன்றைத் தாங்கிய தாயைப் போல அநுமான் மனங்களித்தான்;(எ-று.)—பி-ம்:—1நன்றென, தானென. 2குன்று. 3தாவிய, தாங்கிய. 4கூறல், கூறில், கூடி.5இன்று. 6நாவலரஃதலாலி யம்பலர், வானவரஃதலாலியம்பலர். (ககஅக)

உஉ௦.—கருடாழ்வான் நாண, ஆதிசேஷன் நடுக்குறுதல்.

மாணி யாயுல களந்தகா ளவனுடை வடிவை
ஆணி யா[1]யுணர் மாருதி யதிசய [2]முற்றான்
காணி யாகப்பண் டுடையதொ மொருதனிக் கலுழன்
நாணி னான்மற்றை யனந்தனுந் தலைநடுக் குற்றான்.

(இ - ள்.) வாமனப்பிரமசாரியாகி உலகளந்த அப்போது அந்தத்திருமா லின்வடிவைச் சிறப்பாகஅறிந்துள்ள அநுமான், அதிசயமடைந்தான்; (திரு மாலின் வடிவைக்) காணியாட்சியாக [தனக்கேயுரியபொருளாக] பழையநாள் தொட்டுக்கொண்டுள்ள ஒருதனிக்கருடன் (அத்தன்மை தனக்குநீங்கியது பற்றி) வெட்கங்கொண்டான்; மற்றொருவனாகிய அநந்தனும் தலைநடுக்குக் கொண்டான்; (எ - று.)

உணர்தல் - கண்டும்தொட்டும்அறிதல்: தியானித்தறிதலுமாம். அதி சயம் - இராமபிரானைத்தாங்கும்பேறு தனக்குக்கிடைத்ததனாலானது.அவதார நிலையில் திருமாலைத் தாங்கும்பேறு தனக்குக்கிடையாமலிருக்க அநுமானுக்குக் கிடைத்ததனால், கலுழன் வெள்கினான். இராமபிரானது திருவடி தன்மீதுபட அப்பெருமானை இராமாவதாரத்தில்தாங்கியஇதனால்தான் அநுமானுக்குச் சிறியதிருவடியென்றும், தானான தன்மையில் அப்பெருமானைத் தாங்கிச்செல் வதனாற் கருடபகவானுக்குப் பெரியதிருவடியென்றும் ஸ்ரீவைஷ்ணவசம்பிர தாயத்தில் பெயர் வழங்கு மென்று அறிக.இராமபிரானை அநுமான் தாங்கிநிற் கையில் அவர்களதுபாரத்தைத்தாங்கமாட்டாது அநந்தன் தலைநடுக்குற்றான். பி-ம்:—1உயர். 2கொண்டான். (ககஅஉ)

உஉக.—இராமபிரானைத் தாங்கிய அநுமானுடைய வருணனை.

ஓத மொத்தனன் மாருதி யதனகத் துறையும்
நாத னொத்தன [1]னென்னிலோ துயிலகில [2]னம்பன்
வேத மொத்தனன் மாருதி வேதத்தின் சிரத்தின்
போத மொத்தன [3]னிராமன்வே [4]றிதனில்லை பொருவே.

(இ-ள்.) 'அநுமான், (பாற்)கடலை யொத்தனன்; அதனுள்ளேவாழ்கின்ற க்ஷீராப்திநாதனைதிருமாலை (இராமன்) ஒத்துள்ளானென்போமானால், குற்ற மற்றஇராமபிரானோ, (அந்தத்திருப்பாற்கடல்நாதனைப்போல யோக)நித்தி ரை புரிகின்றானில்லை; (பின்னர் எதனை உவமைகூறலாமென்றால்), மாருதி வேதத்தை யொத்தனன்; ஸ்ரீராமன், வேதத்தின்சிரசாகிய உபநிடதங்களிற் கூறப்படும் ஞானஸ்வரூபியானபரம்பொருளை யொத்திருந்தனன்: இதைக் காட்டிலும்உவமையாகச்சொல்லக்கூடியது வேறொன்றுஇல்லை; (எ - று.)

"ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம" என்று பரம்பொருளை ஞாநமாகவே கூறியுள்ளதும், "தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேச:" என்று பிரமசூத்திரத்

திற் ஞானமென்றேகூறுவதைச் சமர்த்தித்திருப்பதும் காண்க. பி-ம்:—1என்கிலோ. 2அமலன். 3இராகவன். 4இதனிலேப், இதுநல்ல, இதனினில். (ககஅங)

வேறு.

உஉஉ.—இதுவும்அது.

தகுதியாய் நின்ற வென்றி மாருதி தனிமை 1சார்ந்த
மிகுதியை வேறு நோக்கி னெவ்வண்ணம் விளம்புந் தன்மை
புகுதி2கூர்ந் துள்ளார் வேதம் 3பொதுவுறப் புலத்து நோக்கும்
பகுதியை யொத்தான் வீரன் மேலைத்தன் 4பதமே யொத்தான்.

(இ - ள்.) (இராமபிரானுக்குப்) பொருத்த (மான வாகன) மாகநின்ற வெற்றிபொருந்தியஅநுமான்தனிமைப்பட்டுப்பொருந்தியமேன்மையைவேறே ஆராய்ந்துபார்க்குமிடத்து, விளம்புந்தன்மை எவ்வாறு? அறிவு மிகுந்துள்ளாரான இருடியர்க்குஉரிய வேதமானது பொதுவாக அறிவினாலறிவதான மூலப்ரக்ருதியை (அநுமான்) ஒத்துள்ளான்; (அவனுக்குமேலுள்ள) வீரனாகிய இராமபிரான், இந்தப்ரக்ருதிக்குமேலேயுள்ள தனக்குரிய பரமபதத்தையொத்துள்ளான்; (எ - று.)

பகுதி = ப்ரக்ருதி: இதுஇருபத்துநான்குதத்துவமயமாய்த் திருமாலுக்குச்சரீரமாகஅமைந்திருப்பது; இதுவே எல்லாவுலகங்கட்கும் காரணமாவது. இந்த மூலப்ரக்ருதிக்கு மேற்பட்டிருக்குந்தானமாகிய பரமபதத்திலே ஸ்ரீவைகுண்டநாதன்வீற்றிருக்கின்றானென்பது, நூற்கொள்கை. பி-ம்:-1சான்ற. 2கூர்ந்துள்ள, கூர்ந்தளாய. 3பொதுவறப். 4பதத்தை. (ககஅச)

உஉங.—அநுமானது போற்றோளின் வருணனை.

மேருவின் சிகரம் 1போன்ற தென்னினும் 2வெளிறுண் டாமால்
மூரிநீ ரண்ட மெல்லாம் வயிற்றிடை முன்னங் கொண்ட
ஆரியற் கனேக 3மார்க்கத் 4தாலிடம் வலம தாகச்
5சாரிகை திரிய லான மாருதி 6தாமப் பொற்றோள்.

(இ-ள்.) வலிமைபெற்ற நீரிற்றோன்றிய அண்டங்களையெல்லாம் வயிற்றிலே முன்புகொண்ட ஆரியனாகிய இராமபிரானுக்கு அனேகவகையால் இடப்பக்கமாகவும் வலப்பக்கமாகவும் சாரிகைதிரியத்தொடங்கின மாருதியினது மாலையணிந்த பொன்போன்றதோள்,—மேருவின்சிகரத்தையொத்திருந்ததென்றாலும் குற்றமுண்டாகும்; (எ - று.)

சாரிகைதிரியவல்லதோளுக்கு அசல [அசலம் - சலிக்குந்தன்மையில்லாதது]த்தின்சிகரத்தை உவமைகூறுதல் ஏலாதென்றவாறு. "காஞ்சநாத்ரி கமநீயவிக்ரஹம்" என்று அநுமத்தியானத்தில்வருவதனால், பொன்னார்மேனியன் அநுமான்என்பது, பெறப்படும். மேருவை உவமையாகச்சொல்லலாம்: ஆனாலும் அநுமான் திருமேனிவெண்மைநிறம்பொருந்தியிருக்கும் எனக் கூறினருமுளர். பி-ம்:-1போன்ற. 2வேறு. 3மாற்கத்து,மாற்றத்து ஆக. 4ஆயிரம்வலமதாக, வலமிடமுதலவான. 5சாரியை. 6தருமப். (ககஅரு)

வேறு.

உஉச.—அருந்தவர் ஆசிசொல்ல, தேவர்கள் அந்தரத்துப் போர்காணவருதல்.

*ஆசி சொல்லின ரருந்தவ ரறமெனுந் தெய்வங்*
*காசி னன்னெடுங் கரமெடுத் [1]தாடிடக் கயிலை*
*ஈச னான்முக [2]னென்றிவர் முதலிய [3]விமையோர்*
*பூசல் காணிய [4]வந்தன [5]ரந்தரம் புகுந்தார்.*

(இ - ள்.) அருமையான தவமுள்ள இருடியர், வாழ்த்துமொழிகூறினார்கள்; அறக்கடவுள் குற்றமற்றஅழகிய நெடிய கையை யெடுத்துக் கூத்தாட, கயிலையில்வீற்றிருக்குஞ்சிவபெருமானும்பிரமதேவனும்என்றஇவரைமுதலாகவுள்ள தேவர்கள் (இராவணனுக்கும் இராமனுக்கும் நடக்கப்போகின்ற) பெரும்போரைக் காணும்பொருட்டு வந்து ஆகாயத்திற் புகுந்தார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]ஆர்த்தது. [2]என்றிவை. [3]முதலோர். [4]வந்தவர். [5]அணுகுறப், அருகுறப். (ககஅசு)

உஉரு.—இராமனது வில்நாணியின் ஒலி.

*அண்ண லஞ்சன வண்ணனு மமர்குறித் [1]தமர்ந்தான்*
*எண்ண ருப்பெருந் தனிவலிச் சிலையைநா ணெறிந்தான்*
*மண்ணும் வானமு [2]மற்றைய பிறவுந்[3]தன் வாய்ப்பெய்து*
*உண்ணுங் [4]காலத்தவ் வுருத்திர னார்ப்பொத்த [5]தோதை.*

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனான மைபோற்கருநிறத்தவனாகிய இராமனும்,—போர்செய்யக்கருதிப்பொருந்தியவனாய்எண்ணுதற்குஅரிய பெருமைபெற்ற ஒப்பற்றவலிமையுள்ளவில்லின் நாணைப்புடைத்தான்; (அதனால்தோன்றிய) ஓசையானது,—மண்ணையும் விண்ணையும் மற்றையெல்லாவற்றையும் தன் வாயிலேபொகட்டுக்கொண்டு உண்ணுகின்ற யுகாந்தகாலத்திலே அவ்வனைம்உண்ணுகின்ற உருத்திரமூர்த்தியின் ஆரவாரத்தை யொத்தது; (எ- று.)—பி-ம்:—[1]அமைந்தான். [2]மற்றுந்தன். [3]வாரிவாய்ப்பெய்த, வாய்ப்பெய்துவாரி. [4]காலத்திருத்திரன், காலத்தினுருத்திரன். [5]ஓசை. (ககஅஎ)

உஉசு.—நாணொலியினா லுண்டான நடுக்கம்.

*ஆவி சென்றில ரின்றில ரரக்கரோ டியக்கர்*
*நாவ லர்ந்தனர் கலங்கினர் [1]விலங்கினர் நடுங்கிக்*
*கோவை நின்றபே [2]ரண்டமுங் குலைந்தன குலையாத்*
*[3]தேவ தேவனும் விரிஞ்சனுஞ் சிரதலங் [4]குலைந்தார்.*

(இ - ள்.) அரக்கரும் இயக்கரும், (நாணொலியைக்கேட்டுத்தோன்றிய அச்சத்தினால்) உயிரொழியாவிடினும் ஓரிடத்துநிற்கமாட்டாமல் நாவுலர (இருந்தவிடத்தினின்று) விலகி நடுங்கிக் கலங்கினர்; வரிசையாகவுள்ள பெரியஉலகவுருண்டைகளும் நிலைகலங்கின; அஞ்சாத்தன்மையுள்ள சிவனும் பிரமனும்,— தலைநடுக்கங்கொண்டனர்; (எ-று.)—பி-ம்:—[1]விலங்கென. [2]உலகமும். [3]தேவர்தேவனும். [4]குலைத்தார். (ககஅஅ)

௨௨எ.—இராவணன் கொடியஏழம்புகளைத் தொடுத்துவிடுதல்.

ஊழி வெங்கன லொப்பன துப்பன வுருவ
ஆழி நீரையுங் குடிப்பன திசைகளை யளப்ப
வீழின் [1]மீச்செலின் [2]மண்ணையும் விண்ணையுந் தொளைப்ப
ஏழு வெஞ்சரந் [3]முடன்றொடுத் திராவண னெய்தான்.

(இ - ள்.) (அந்தச்சமயத்தில்) ஊழிக்காலத்துத்தோன்றுங் கொடிய தீயையொப்பனவும் பவழம்போன்றநிறத்தையுடையனவும் கடல்நீரையும் வற்றக்குடிக்கும் வல்லமைவாய்ந்தனவும் திக்குக்களையெல்லாம்அளக்கவல்லனவும் [திக்குக்களினெல்லைவரையும்செல்லும்வன்மைவாய்ந்தனவும்] கீழே சென்றால் மண்ணையும் மேலேசென்றால் வானத்தையும் தொளைக்கவல்லனவுமான கொடிய ஏழுஅம்புகளை இராவணன் ஒருசேரத்தொடுத்துவிட்டான்; (எ-று.)—பி-ம்:-1மேற். 2விண்ணையும்மண்ணையும். 3இராவணனெடுத்துடன்.

௨௨அ.—ஏழுஅம்புகளை ஏழம்புகளால்துண்டித்து இராமன் ஐந்துஅம்புகளை விடுதல்.

[1]எய்த வாளியை யேழினு லேழிரு டேழு
செய்து [2]வெஞ்சர மைந்தொரு [3]தொடையினிற் சேர்த்தி
வெய்து காலவெங் [4]கனல்களும் [5]வெள்குறப் பொறிகள்
பெய்து போம்வகை யிராகவன் சிலைநின்று [6]பெயர்த்தான்.

(இ - ள்.) (இராவணன்) எய்தஅம்புகளை(த் தன்னுடைய) ஏழுஅம்புகளினால் ஒவ்வொன்றுஏழுதுண்டுவீதம் நாற்பத்தொன்பதுதுண்டுகளாகுமாறு செய்து, ஒருதரம்தொடுக்குமிடத்து வெம்மையான ஐந்துபாணங்களை ஒருசேரஅமைத்து எய்து, யுகாந்தகாலத்துக்கொடிய அக்கினிகளும் (இவற்றின் கொடுமைக்குமுன்னே தாம்)நாணமடையும்படி பொறிகளையுமிழ்ந்துகொண்டு போமாறு இராகவன் (தனது) வில்லினின்று விடுத்தான்; (எ-று.)—பி-ம்:— 1எய்து. 2செஞ்சரமஞ்சொரு. 3தொடையிடைச். 4கனலுளம், கனலெனக். 5காரெனப். 6பெய்தான். (கககய)

௨௨கூ.—ஐந்துஅம்புகளைவிலக்கி, இராவணன்பத்துஅம்புகள்விட, இராமன்அவற்றைவிலக்குதல்.

வாளி யைந்தையு மைந்தினால் விசும்பிடை மாற்றி
ஆளி [1]மொய்ம்பினவ் வரக்கனு மையிரண் டம்பு
[2]தோளி னுறை வாங்கினன் றுரந்தனன் சுருதி
யாளு நாயக [3]னவற்றையு மவற்றினு லறுத்தான்.

(இ - ள்.) யாளியைப்போன்ற வலிமையுள்ள அந்தஇராவணனும், — (இராமனெய்த) ஐந்துஅம்புகளையும் ஐந்துபாணங்களினால் ஆகாயத்திலேயே விலக்கி, பத்துஅம்புகளை(த் தனது) தோளில் நாணிபொருந்தும்படி (வில்லை) வளைத்துச்செலுத்தினன்; வேதங்களையாள்கின்ற [வேதத்தினற் பிரதிபாதிக்கப்படுகிறபரம்பொருளினமிசமாயுள்ள] தலைவனை ஸ்ரீராமன்,—அந்தப்பத்துப்பாணங்களையும் பத்துப்பாணங்களினு லறுத்தான்;(எ - று.)—பி-ம்:— 1மொய்ம்புடை. 2தோளினுல், தோளினன். 3அவற்றினுலவற்றையும். (கககக)

உ௯௦.—பிறகு இராமன் அரக்கச்சேனையார் தன்மேற்பொழிந்த படைக்கலம் முதலியவற்றைச் சிதறச்செய்து அவர்களைக்கொன்று குவித்தல்.

*அறுத்து [1]மற்றவ னயனின்ற [2]வளக்கரு மளக்கர்*
*செறுத்து [3]விட்டன [4]படையெலாங் கணைகளாற் [5]சிந்தி*
*இறுத்து வீசிய [6]கிரிகளை யெரி[7]யுக நூறி*
*ஒறுத்து மற்றவர் தலைகளாற் சிலமலை [8]யுயர்த்தான்.*

(இ-ள்.) அறுத்துவிட்டு, பிறகு அந்தஇராவணனுடைய அருகிலேநின்ற அளத்தற்குஅருமையான (இராட்சசசேனு)சமுத்திரம் கோபித்துவீசியெறிந்த படைக்கலங்களையெல்லாம் அம்புகளாற் போக்கி, பிடுங்கியெறிந்த மலைகளை நெருப்புப்பொறிசிந்தப் பொடியாக்கி அழித்து, அவருடையதலைகளாற் சில மலைகள் உயர்ந்துதோன்றும்படியுண்டாக்கினுன்; (எ - று.)—மலைகளையழித்தவன் மலைகளை யுண்டாக்கினு னென்று சமத்காரந்தோன்றக் கூறியமை காண்க. 'அறுத்து' என்பது-அநுவாதம்: இது, கதைத்தொடர்ச்சியைக் காட்ட வந்தது. பி-ம்:—[1]வேறவன். [2]அளப்பருமரக்கர். [3]விட்டவன். [4]படையைவெங். [5]சிதறி. [6]கிரிகளை. [7]எழு. [8]உய்த்தான். (கககூஉ)

உ௯க.—அரக்கரெறிந்தபடைக்கலங்கள் வானரர்மீதுபடாதபடி விலக்கி, இராமபிரான் அரக்கரைக் கொன்றமை.

*மீனு டைக்கருங் [1]கடல்புரை யிராக்கதர் விட்ட*
*ஊனு டைப்படை யிராவண னம்பொடு மோடி*
*வான ரக்[1]கடல் படாவகை [2]வாளியான் மாற்றித்*
*தானு டைச்சரத் தாலவர் [3]தலைமலை தடிந்தான்.*

(இ - ள்.) மீனைக்கொண்டுள்ள கரியகடலையொத்த இராக்கதர் விட்ட மாமிசம்படிந்துள்ள படைக்கலங்கள் இராவணனம்புகளுடனேயோடி வானரசேனுசமுத்திரத்திலேபடாதவாறு(தன்)அம்புகளினுல் விலக்கி, (வேறு)தன்னுடைய அம்புகளினுல் அவ்வரக்கரின்தலையாகிய மலையை யறுத்தான்; (எ - று.)—நிறத்தினுலும் பரவியிருத்தலினுலும், சமுத்திரம் அரக்கர்சேனைக்குஉவமை: படைக்கலம் மீன்போலும். பி-ம்:—[1]கடற். [2]பகழியான். [3]நெடுந்தலை. (கககூ௩)

உ௯உ.—வாகனமாகிய அநுமான் சாரிபோதலின் வருணனை.

*இம்ப ரானெனில் [1]விசும்பின னுகுமோ ரிமைப்பில்*
*தும்பை சூடிய விராவணன் முகந்தொறுந் தோன்றும்*
*வெம்பு வஞ்சகர் விழிதொறுந் [2]திரியுமே னின்றான்*
*அம்பின் முன்செலு மனத்திற்கு முன்செலு மனுமன்.*

(இ-ள்.) (தன்)மேலேறியிருக்கின்ற இராமபிரானுடைய அம்பைக்காட்டிலும் விரைந்துசெல்பவனும் மனோவேகத்தினும் விரைந்துசெல்பவனுமான அநுமான்,—இவ்வுலகத்திலுள்ளானென்று கருதுவோமாகுல் ஆகாயத்திலுள்ளவனுவான்; ஓரிமைப்பொழுதிலே தும்பைமாலைசூடிவந்து பொருகின்ற இராவணனுடைய முகந்தோறுந் தோன்றுவான்; (மனம்)வெதும்புகின்ற வஞ்சகரின் கண்கள்தோறும் திரிவான்; (எ - று.)—அனுமான் ஒருத்தனுக்

குப் பலவிடத்திலிருப்புக்கூறியது - முறையிற்படர்ச்சியணியாம். பி - ம்:— [1]விசும்பினில். [2]தோன்றுமாகின்ருன், தெரியுமேனின்ருன். (கககச)

உ௩௩.—இதுமுதல் ஐந்துகவிகள்-போர்க்களத்தின் நிலைமையைத் தெரிவிக்கும்.

ஆடு கின்றன கவந்தமு மவற்ெருடு மாடிப்
பாடு கின்றன வலகையு [1]நீங்கிய [2]பணைக்கைக்
கோடு துன்றிய [3]கரிகளும் பரிகளுந் தலைக்கொண்டு
ஓடு கின்றன வுலப்பில வுதிரவா றுவரி.

(இ - ள்.) கவந்தங்களும், ஆடுதற்குத் தொடங்கின: பேய்களும், அந்தக் கவந்தங்களுடனே ஆடிக்கொண்டு பாடுதற்குத்தொடங்கின: வற்றுதலில்லாத இரத்தப்பெருக்குக்கள், அற்றுப்போன பருத்த கைகளுடனே தந்தங்களும் நெருங்கிய யானைகளையும் குதிரைகளையும் தம்மிடத்துக்கொண்டு கடல் நோக்கி ஓடுவனவாயின; (எ - று.)—பி-ம்:—[1]நீந்தின. [2]பணைத்த, பணைத்த, பனைக்கைக். [3]கரியொடுதேர்க்குலம். (ககக௫)

உ௩ச. அற்ற வாழிய [1]வறுப்புண்ட [2]வச்சின வம்போடு
இற்ற கொய்யுளைப் புரவிய தேர்க்குல மெல்லாம்
[3]ஒற்றை வாளியோ டுருண்டன கருங்களிற் றுங்கல்
சுற்றும் வாசியுந் [4]துமிந்தன வமர்க்களந் [5]தொடர்ந்த.

(இ - ள்.) தேர்த்தொகுதிகளெல்லாம்,—(இராமனெய்த) அம்புகளினால் துண்டாகிவிட்ட சக்கரங்களையுடையனவும் முறிந்திட்ட அச்சுக்களையுடையனவும் இற்றுப்போன கொய்யும் உளைமயிரைக்கொண்ட குதிரைகளையுடையனவும் ஆயின; கரியயானைகளாகிய மலைகள், ஒற்றைப்பாணத்தினால் உருண்டுகிடந்தன; போர்க்களத்திலே தொடர்ந்துள்ளனவான சாரிசெல்லுந்தன்மையுள்ள குதிரைகளும் துண்டுபட்டுக்கிடந்தன; (எ - று.)—பி-ம்:—[1]அரியுண்ட. [2]அச்சினம்பொடிபட்டு. [3]உற்ற. [4]துணிந்தன, துணிந்தவே. [5]துவன்றி.

உ௩௫. தே[1]ரி ழந்துவெஞ் சிலைகளு மிழந்துசெந் தறுகட்
கா[1]ரி ழந்துவெங் கவினமாக் கால்களு மிழந்து
சூ[1]ரி ழந்து[2]வன் [3]கவசமு மிழந்துதுப் பிழந்து
தா[1]ரி ழந்துபின் [4]னிழந்தனர் நிருதர்தந் தலைகள்.

(இ - ள்.) அரக்கர்கள்,—தேர்களையிழந்தும், கொடியவிற்களையிழந்தும், செந்நிறமுள்ள கொடுமையோடுகூடினகண்ணைக் கொண்ட மேகத்தையொத்த யானையையிழந்தும்,கொடிய கடிவாளம்பூண்டகுதிரைகளின் காலை யிழந்தும், சூரத்தனத்தையிழந்தும், வலிய கவசத்தை யிழந்தும், வலியையிழந்தும்,மாலையையிழந்தும், முடிவில் தந்தலைகளையும் இழந்தார்கள்; (எ - று.)—பி-ம்:— [1]அழிந்து. [2]வெங். [3]கவசமுமிழந்தது பிளர்ந்து, கவசமுந்துவசமுந்துணிந்து, கவசமுந்துவசமுமிழந்து. [4]இழந்தது. (கககஎ)

உ௩௬. [1]அரவ நுண்ணிடை [2]யரக்கியர் கணவர்[3]த மற்ற
சிரமு மன்னவை யாதலின் [4]வேற்றுமை [5]தெரியாப்

புரவி யின்றலை [6]பூட்கையின் றலையிவை பொருத்திக்
[7]கரவி [8]லின்னுயிர் துறந்தனர் [9]கவவுறத் தழுவி.

(இ - ள்.) பாம்புபோல் நுண்ணிய இடையையுடைய அரக்கமடந்தையர் (அன்று)அற்றுப்போன தங்கணவரின் தலைகளும் குதிரையானையென்றுற்போன்ற மிருகங்களின்தலைகளே யாதலினால் (குதிரையானைகளின் தலைகட்கும் தமதுகணவரின்தலைகட்கும்) வேற்றுமையறியமாட்டாதவராய், குதிரைகளின் தலை யானைகளின்தலை என்ற இவற்றைத் (தம்கணவரின் அற்ற உடலோடு) பொருத்திப்பார்த்து,முயக்கமுண்டாக இறுகத்தழுவி ஒழிதலில்லாத இன்னுயிரைத் துறந்தார்கள்; (எ-று.)—கவவு-ஆலிங்கனம். பி - ம்:—1அரவவல்குலார், அரவினுண்ணிடை.2மடந்தையர்.3அன்றற்ற.4யாதொன்றும்.5தெரியா.6இவையவையோயொடுபொருத்துக். 7தரவில். 8நல். 9குவவுத்தோள், காமுறத். ()

உ௬எ.—போர்க்களத்து அரக்கரின் அப்போதையநிலை.

ஆர்ப்ப டங்கின வாயெலா [1]மழற்கொழுந் [2]தொழுகப்
பார்ப்ப டங்கின கண்ணெலாம் பலவகைப் படைகள்
தூர்ப்ப டங்கின கையெலாந் தூளியின் படலைப்
போர்ப்ப டங்கின வுலகெலா முரசெலாம் [3]போன.

(இ-ள்.) (அரக்கரின்)வாய்களெல்லாம், ஆரவாரஞ்செய்தல் ஒடுங்கிவிட்டன;கண்களெல்லாம்,அனற்கொழுந்து வெளிப்புறப்படப் பார்த்தலொழிந்தன;கைகளெல்லாம், பலவகைப்படைக்கலங்களைத் தூர்த்தலை யொழிந்தன; தூளியின்படலங்கள்,உலகங்களையெல்லாம் கவிந்துகொள்ளுதலை யொழிந்தன; முரசங்கள் ஒலியடங்கின; (எ-று.)—இச்செய்யுள், சிலபிரதிகளில் "ஒன்று நூற்றினோடு"என்று தொடங்கும் அடுத்தசெய்யுளுக்குப்பின் உள்ளது.பி-ம்:- 1அனல். 2ஒழுகும். 3போல. (௯௯௯௯)

உ௬அ.—இராவணனொருத்தனே எஞ்சிநிற்க, இராமபாணம் அனைவரையும் ஒழித்தல்.

ஒன்று நூற்றினோ டாயிரங் [1]கொடுந்தலை யுருட்டிச்
சென்று [2]தீர்வில [3]வெனைப்பல கோடியுஞ் [4]சிந்தி
நின்ற தேரொடு மிராவண னொருவனு [5]நிற்கக்
கொன்று [6]வீழ்த்தின இராகவன் சரமெனுங் கூற்றம்.

(இ-ள்.) இராகவனுடைய அம்புகளென்ற யமன்,--ஒருநூறுயிரங்கொடிய தலைகளை யுருளச்செய்து, (அதனோடு) போய்விடாமல் எத்தனையோபலகோடிவீரர்களை யொழியச்செய்து,நின்றதேருடன் இராவணன் ஒருத்தனே எஞ்சிநிற்க, கொன்றுவீழ்த்திற்று; (எ - று.)—பி-ம்:—1நெடுந். 2தீர்வன. 3எனப். 4சிந்த. 5நிற்கப்க். 6வீழ்த்ததவ், வீழ்த்தின. (௯உ00)

உ௬௯.—தனதுசேனைகளெல்லாந் துண்டிக்கப்பட்டுக் கீழ்விழுந்து கிடத்தலைக்கண்டு இராவணன் வெகுளுதல்.

தேரும் யானையும் [1]புரவியு மரக்கரும் [2]தெற்றிப்
பேரு [3]மோரிட [4]மின்றெனத் திசைதொறும் பிறங்கிச்

காரும் வானமுந் தொடுவன [5]பிணக்குவை கண்டான்
[6]மூரி வெஞ்சிலை யிராவண [7]னராவென [8]முனிந்தான்.

(இ - ள்.) பெருமைபெற்ற கொடிய வில்லைக்கொண்ட இராவணன்,—இரதங்களும் யானைகளும் குதிரைகளும் அரக்கவீரர்களும் (எங்கும் ஒன்றோடொன்று) முட்டிப் பேர்ந்துசெல்லுதற்குரிய ஓரிடமும் இல்லையென்னும்படி திசைகளிலெல்லாம் விளங்கி, மேகத்தையும் வானத்தையுந் தீண்டுவனவான பிணக்குவியலைக் கண்டவனாய்ச் சர்ப்பம்போலச் சீறினான்; (எ - று)—பி-ம்:—[1]அரக்கரும்புரவியும். [2]செற்றி. [3]ஓர்விடம். [4]இன்மையில். [5]பிணக்குன்று. [6]மூரவெஞ்சிலை. [7]அரவென. [8]முரிந்தான். (கஉ0க)

உசய.—இராவணன் சினத்தோடு அம்புஎய்தல்.

முரண்டொ குஞ்சிலை யிமைப்பினின் முறையுற வாங்கிப்
புரண்டு [1]தோளுறப் பொலன்கொணுண் வலம்படப் போக்கித்
திரண்ட வாளிகள் சேவகன் மரகதச் சிகரத்து
இரண்டு தோளினு மிரண்டுபுக் கழுந்திட வெய்தான்.

(இ - ள்.) அழகைக்கொண்ட நாணியானது புரண்டுதோளிலேபொருந்துமாறு வலிமைசேர்ந்துள்ள வில்லை ஓரிமைப்பொழுதிலே முறைமையாகவளைத்து, திரட்சிபொருந்திய அம்புகளிரண்டை வலிமைபொருந்தத் தொடுத்து, வீரனான இராமபிரானது மரகதச்சிகரம்போன்றஇரண்டுதோள்களிலும் தைத்தழுந்துமாறு (இராவணன்)பிரயோகித்தான்; (எ-று.)—வலம் = பலம்: வலிமை: வடசொல். வலம்-வெற்றியென்றல் இங்குச்சிறவாது. பி-ம்:—[1]தோளுகப். ()

உசக.—இராமன் இராவணனுடையவில்லைத் துண்டித்தல்.

முறுவ லெய்திய முகத்தினன் முளரியங் கண்ணன்
மறுவி லாததோர் வடிக்கணை [1]தொடுத்துற வாங்கி
இறுதி யெய்துநாட் கால்பொர மந்தர மிடையிட்டு
அறுவ தாமென விராவணன் சிலையினை யறுத்தான்.

(இ - ள்.) தாமரைக்கண்ணனான இராமன், (பாணம் தன்தோள்களிலழுந்தியதை இலட்சியஞ்செய்யாமற்) புன்சிரிப்புக்கொண்டமுகத்தையுடையவனாகி, குற்றமற்றதான ஒருகூரியஅம்பை (வில்லிற்)பூட்டி (அதனை) நன்கு வளைத்துவிட்டு, யுகாந்தகாலத்திலே பெருங்காற்றுவீசும்போது மந்தரமலை நடுவிலே யிற்றுப்போவதுபோலு மென்னுமாறு இராவணனுடைய வில்லினைத் துண்டாக்கினான்; (எ-று.)—பின்னிரண்டடி - இல்பொருளுவமை. பி - ம்:- [1]தொடுத்தது. (கஉ0ரு)

உசஉ.—இராவணன் வேறொருவில்லையெடுக்க, இராமன் அதனையுந் துண்டித்துத் தேர்க்குதிரைகளையுந் தலையறுத்தல்.

[1]மாற்று வெஞ்சிலை வாங்கினன் [2]வடிம்புடை நெடுநாண்
ஏற்று முன்[3] மிடையறக் கணைகளா லெய்தான்
காற்றி னுங்[4]கடி தாவன [5]கதிர்மணி நெடுந்தேர்
[6]ஆற்று கொய்யுளைப் புரவியின் [7]சிரங்களு மறுத்தான்.

(இ-ள்.) வேறொருகொடியவில்லையெடுத்துத் தழும்பையுண்டாக்கவல்ல நீண்டநாணை (இராவணன்) ஏற்றுவதற்குமுன்னம் (இராமன் அவ்வில்) நடுவிலே துண்டாகும்படி அம்புகளைக்கொண்டு எய்தான்; (அன்றியும்), காற்றினும் விசைபொருந்தத் தாவிச்செல்வனவும் ஒளியுள்ள இரத்தினங்களழுத்திய நெடியதேரைஇழுப்பனவுமான கொய்த பிடரிமயிரையுடைய குதிரைகளின் சிரங்களையும் அறுத்தான்; (எ - று.)—பி-ம்:—[1]மாற்றும். [2]வாங்கியவடிநாண். [3]வகை. [4]கடிதாமவன், கடிதாயவன். [5]கடி. [6]ஆற்றுங், ஆற்றுக். [7]சிரமங்களை.

உ௪௩.—மேலும் வேறொருபடைக்கலத்தைவிடுத்துமளவில் இராமன் அதையுந்துண்டித்து, அவ்விராவணனுடைய குடைகோடிகளை யறுத்துக் கவசத்தையும் கட்டழித்தல்.

மற்றும் வெம்படை [1]வாங்கினன் [2]வழங்குறு [3]முன்னம்
[4]இற்ற விந்துக வெரிகணை யிடையற வெய்தான்
கொற்ற [5]வெண்குடைகொடியொடுந் [6]துணிபடக் குறைத்தான்
கற்றை யஞ்சுடர்க் கவசமுங் கட்டறக் கழித்தான்.

(இ - ள்.) (இராவணன்) பின்னும் வேறொருகொடிய படைக்கலத்தையெடுத்து எறிதற்குமுன் அது இடையிலேநீங்கும்வண்ணம் இற்றுஅழிந்துபோய்விடுமாறு எரியுந்தன்மையுள்ள அம்பை (இராமபிரான்) எய்தான்; (பின்னும் அம்புகளால்) வெற்றிபொருந்திய வெண்குடை தேர்க்கொடியுடனே துண்டுபடும்படி வெட்டிவீழ்த்தினன்; தொகுதியான அழகிய ஒளியுள்ள (அவ்விராவணனுடைய) கவசத்தையும் பூட்டற்றுவிழும்படி நீக்கினன்; (எ-று.)—பி-ம்:—[1]வழங்கினன். [2]வாங்குறு. [3]வண்ணம். [4]அற்றழிந்துகவயிலெடுங்கணை களாலறுத்தான். [5]வெண்குடையோடது. [6]குறைபடத்துணித்தான். (க௨0ரு)

௨௪௪.—பின்னும் இராவணனேறிவந்த பலதேர்களையும் இராமபிரானழிக்க, இராவணன் சினத்தல்.

மாற்றுத் [1]தேரவண் வந்தன வந்தன வாரா
வீற்று [2]வீற்றுக வெயிலுமிழ் [3]கடுங்கணை விட்டான்
சேற்றுச் செம்புனற் படுகளப் பரப்பிடைச் செங்கட்
[4]கூற்றுங் கையெடுத் தாடிட விராவணன் [5]சொதித்தான்.

(இ - ள்.) அவ்விடத்து (இராவணனுக்கு) வெவ்வேறுதேர்கள் வருபவைகளை வருந்தோறும் (அவைகள்) துண்டந்துண்டமாகச்சிந்திட ஒளிவிடுகின்ற கடிய அம்புகளை (இராமபிரான்) விட்டான்; சேறுபட்ட இரத்தநீரைக்கொண்ட போர்க்களப்பரப்பிலே செங்கண்ணைக்கொண்ட யமனும் கையைத்தூக்கிக்கொண்டு ஆடாநிற்க, (அப்போது) இராவணன் சீற்றங்கொண்டான்; (எ-று.)—சரியானபடி பொரமுடியாமையாற் சினந்தான், இராவணனென்க. பி - ம்:—[1]தேரவை, தேரவன். [2]வீற்றுற. [3]நெடுங். [4]கூற்றுக். [5]குதித்தான். (க௨0௬)

௨௪௫.—இராமன் இராவணனை மகுடபங்கஞ்செய்தல்.

மின்னும் பன்மணி மவுலிமே லொருகணை விட்டான்
அன்ன காய்கதி ரிரவிமேற் [1]பாய்ந்தபோ ரனுமன்

என்ன லாயதோர் விசையினிற் சென்றவன் றலையிற்
[2]பொன்னின் மாமணி மகுடத்தைப் புணரியில் வீழ்த்த.

(இ-ள்.) மின்னுகின்ற பலமணிகளழுத்திய(இராவணனது) கிரீடத்தின் மேல்ஓரம்பை(த்தொடுத்து)விட்டான்; அந்தஅம்புஉஷ்ணகிரணத்தையுடைய சூரியன்மேலே பாய்ந்த போர்த்திறமையைக்கொண்ட அநுமனென்றுசொல்லத்தக்க விசையுடனேபோய், அவ்விராவணன் தலையிலேபுனைந்த பொன்னினாற்செய்து மணிகளழுத்திய கிரீடத்தைக் கடலிலே வீழ்த்திற்று; (எ-று.)— அன்ன, வீழ்த்த-அன்னது,வீழ்த்தது என்பவற்றின்விகாரங்கள். பி - ம்:— [1]பாய்ந்தனன், பாய்ந்தபேர். [2]பொன்னினுலுயர். (கஉ0எ)

உசகூ.—வீழ்ந்த இராவணமகுடத்தின் வருணனை.

செறிந்த [1]பன்மணிப் பெருவனந் திசைபரந் தெரியப்
பொறிந்த வாய்வயக் கடுஞ்சுடர்க் கணை[2]படும் பொழுதின்
[3]எறிந்த கால்பொர மேருவின் கொடுமுடி [4]யிடிந்து
மறிந்து [5]வீழ்ந்தது மொத்ததவ் வரக்கன்றன் மகுடம்.

(இ - ள்.) வெற்றிபொருந்திய கடுஞ்சுடரையுடைய இராமபாணம் படும்போது,மகுடத்திற்பதித்திருந்த பலமணிகள் கடலுடனே திக்குக்களிற்பரவி விளங்கப் பொறித்தன்மையையடைந்தனவாக, அந்தஅரக்கனுடையமகுடமானது, கடுமையாகவீசிய காற்றுமோதுதலினல் மேருவினுடையசிகரமானது பேர்க்கப்பட்டு மடங்கி வீழ்ந்ததையு மொத்திருந்தது; (எ - று.)

கதைத்தொடர்ச்சியைத்தழுவ உம்மை கொடுத்தார்;மேற்பாடலைநோக்கிய எதிரதுதழுவியதுமாம். பெருவனம்-மிக்கநீரையுடையது:கடலுக்குப் பண்புத்தொகையன்மொழி:பெருங்காடுமாம். மகுடம்-சாதியொருமையாதலால்,பத்து மகுடங்களைக் குறிக்கு மென்னலுமாம். பி-ம்:—[1]பன்மயிர்ப். [2]பட்டபோழ்தில். [3]எறிந்து. [4]இடந்து, இழந்து. [5]வேலையில்வீழ்ந்ததுமொத்தது. (கஉ0அ)

உசஎ.—இதுவும் அது.

அண்டர் நாயக னடுசிலை யுதைத்தபே ரம்பு
கொண்டு போகப்போய்க் குரைகடற் [1]குளித்தவக் கொள்கை
மண்ட லந்தொடர் வயங்குவெங் [2]கதிரினை வாயால்
உண்ட கோளொடு மொலிகடல் வீழ்ந்தது மொக்கும்.

(இ - ள்.) தேவர்கட்கெல்லாந் தலைவனாகிய இராமபிரானது கொல்லுந் தன்மையுள்ள வில்லினின்று செலுத்திய பேரம்பு கொண்டுபோகப்போய்(இராவணன் மகுடம் ஒலிக்கின்றகடலிலே மூழ்கியதன்மை,—வட்டவடிவமாகத் தொடர்ந்து விளங்குகின்ற உஷ்ணகிரணனான சூரியனை(த் தன்) வாயாலுட்கொண்ட (செம்பாம்பாகிய)கிரகத்துடனே ஒலிக்கின்ற கடலிலே வீழ்ந்துள்ளதையும் ஒத்திருக்கும்; (எ - று.)

மகுடத்தைப்பற்றிய இராமனம்பு சூரியனைப்பற்றிய கோளைப் போலும்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி.வீழ்ந்ததுஎன்பது சூரியமண்டலத்தைக் குறிக்கும். பி-ம்:—[1]குளித்ததோர்.[2]கதிரவன்றன்னை, கதிர்தனைவாயால், கதிர்களை வாயால். (கஉ0கூ)

௨௪அ.—மகுடம்நீங்கிய இராவணன்வருணனை.

சொல்லு மத்தனை யளவையின் மணிமுடி துறந்தான்
எல்லி மைத்தெழு மதியமு ஞாயிறு மிழந்த
அல்லு மொத்தனன் பகலுமொத் தனனமர் பொருமேல்
வெல்லு மத்தனை யல்லது [1]தோற்றிலா விறலோன்.

(இ - ள்.) போரைப்புரிவானாயின் (இதுவரையில்) வெல்லுமளவேயல்லாமல் தோற்றில்லாத பெருவலிமைபடைத்த இராவணன்,—சொல்லும்பொழுதிற்குள் மணிமுடியை(இராமபாணத்தால்)நீங்கியவனாய்,ஒளிவிட்டு விளங்குகின்ற சந்திரனையும் சூரியனையும் முறையேயிழந்த இரவையும் பகலையும் ஒத்தான்; (எ-று.) —மகுடத்தையிழந்தஇராவணனுக்கு, சந்திரனையிழந்தஇரவும் சூரியனையிழந்தபகலும் உவமை. பி-ம்:—[1]தோற்கிலா. (கஉ௧௦)

௨௪௯.—இதுவும் அது.

மாற்ற ருந்தட [1]மணிமுடி யிழந்தவா ளரக்கன்
[2]ஏற்ற மெவ்வுல கத்தினு முயர்ந்துள னெனினும்
[3]ஆற்ற னன்னெடுங் [4]கவிஞனோ ரங்கத முரைப்பப்
போற்ற ரும்புக ழிழந்த[5]பே ரொருவனும் போன்றான்.

(இ - ள்.) மாற்றுவதற்குஅரிய பெரியமணிகளையழுத்திய கிரீடத்தையிழந்த கொடிய இராவணன்,—பெருமையால் எல்லாவுலகத்திலும் உயர்ந்துள்ளானென்றாலும், (வாழ்வுறச்செய்யவும் கெடுக்கவும்) வல்லமைபெற்ற நல்ல சிறந்த கவிஞன் ஒருவசைப்பாட்டைச் சொல்ல, போற்றுதற்கு அருமையான (தன்)புகழை யிழந்த பெருமைபெற்றஒருத்தனையும் ஒத்திருந்தான்; (எ - று.)—இராவணன் புகழொழிந்து வறிதேயிருந்தா னென்க. அங்கதம் - வசைப்பாட்டு: இதன்விரிவை "அங்கதந் தானே யரிறபத்தெரியின், செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே," "செம்பொருளாயின்வசையெனப்படுமே," "மொழிகரந்து சொல்லி னது பழிகாப்பாகும்" என்பவற்றா லறிக. பி - ம்:—[1]முடியிழந்தயரும், மணிமுடி துறந்த. [2]ஏற்ற. [3]ஆற்றறன்னெடுங். [4]கவிஞர். [5]போர். (கஉகக)

௨௫௦.—இராவணன் நாணங்கொண்டு நிற்றல்.

அறங்[1]க டந்தவர் செயலிதென் றுலகெலா மார்ப்ப
நிறங்[2]க ரிந்திட [3]நிலம்விரல் கிளைத்திட நின்றான்
இறங்கு கண்ணின னெல்லழி முகத்தினன் றலையன்
வெறுங்கை [4]நாற்றினன் விழுதுடை யாலன்ன மெய்யன்.

(இ-ள்.) (அப்போது செருக்குப்போனமையால்), கீழேபார்க்கின்ற கண்களையுடையவனும் ஒளியழிந்தமுகத்தையும் தலையையுமுடையவனும், (ஆயுதமின்றி) வெறுமையானகைகளைத் தொங்கவிட்டிருப்பவனும், (அவ்வண்ணம் இருத்தலினால்) விழுதையுடைய ஆலமரத்தையொத்த சரீரத்தையுடையவனுமான இராவணன்,—அறத்தைக்கடந்த(கொடிய)வர்களின் செய்கை இவ்வண்ணந்தான்முடியு மென்று உலகத்தவர் ஆரவாரிக்க, (தன்) நிறம் (முன்னிலும்)

கறுக்க, கால்விரல் நிலத்தைக் கீறிக்கொண்டிருக்கசின்றான்; (எ - று.)—விரலால் நிலங்கிளைத்திடல்-நாணத்தின்செயல். பி - ம்:—1கடிந்தவர். 2கரிந்துதன், கரிந்ததோர், கரிந்துக. 3நீலமால்வரையென, நிலம்விரல்கிளைத்தவன். 4ஆற்றினன். (கஉகஉ)

உருக.—இராமன் சில சொல்லத்தொடங்குதல்.

நின்ற வன்னிலை நோக்கிய நெடுந்தகை யிவனைக்
கொன்ற 1லுன்னிலன் வெறுங்கைநின் றானெனக் கொள்ளா
இன்ற விந்தது போலுமுன் 2றீமையென் றிசையோடு
ஒன்ற வந்தன 3வாசக மினையன வுரைத்தான்.

(இ - ள்.) நின்றவனுடைய(அந்த)நிலைமையைப்பார்த்த பெருங்குணவாளனை இராமன்,—'இவன் வெறுங்கையோடு நிற்கின்றான்' என்று கொண்டு இவனைக் கொல்ல நினையாதவனாகி, 'இன்று உன் தீமை கெட்டதுபோலும்' என்று சொல்லுதலுடனே பொருந்தவந்தனவான இவ்வாசகங்களைச் சொல்லலானான்; (எ - று.)—அவற்றை, மேல் காண்க. இசை-முதனிலைத்தொழிற்பெயர்: என்று என்றவினையெச்சம் இசைத்தலென்ற தொழிலோடு முடியும். பி-ம்:—1என்பயன், என்னினி. 2தண்மை. 3இனையனவாசகம். (கஉகா)

உருஉ.—இதுமுதல் ஐந்துகவிகள்-குளகம்: இராமன் இராவணனைநோக்கிச் சில உபதேசஞ்செய்து 'யுத்தஞ்செய்ய இன்னும் விருப்பமிருந்தால் இன்றுபோய் நாளை நின்தானையோடு வா' என்றலைத் தெரிவித்தும்.

அறத்தி னாலன்றி யமரர்க்கு மருஞ்சமங் கடத்தல்
மறத்தி னாலரி தென்பது மனத்திடை 1வலித்தி
பறத்தி நின்னெடும் 2பதிபுகக் கிளையொடும் பாவி
இறத்தி யானது 3நினைக்கிலன் றனிமைகண் டிரங்கி.

(இ - ள்.) (இராமன் இராவணனைநோக்கிக் கூறுவான்):—தருமத்தினாலல்லாமல் அதருமத்தினாற் பெரும்போரைவெல்லுதல் தேவர்கட்கும் அருமையான தென்பதை மனத்திலே உறுதியாகக்கொள்வாய்; பாவி! உன்னுடைய பேரூரிலே கிளைஞருடனே புகுமாறு விரைவாய்; (நீ இப்போது என் கையால்) இறந்திருப்பாய்;(ஆனாலும், உன்னுடைய)தனிமையைக்கண்டு இரக்கங்கொண்டு (உன்னைக் கொல்வதாகிய) அச்செயலை நான் நினைத்திலேன்; (எ - று.)—போர்செய்ய வலியில்லாவிட்டால் பதுங்கிக்கொள்ளுமாறு இராமன் கூறுகின்றான். பி - ம்:—1மதிப்பாய். 2பதிபுகவிரையினிற், பதாதிபோலின்றினிப். 3நினைத்திலேன். (கஉகச)

உருரு.உடைப்பெ ருங்குலத் தினரொடு முறவொடு முதவும்
படைக்க லங்களு மற்றுநீ தேடிய பலவும்
அடைத்து வைத்தன திறந்துகொண் டாற்றுதி யாயிற்
கிடைத்தி 1யல்லையே லொளித்தியாற் சிறுதொழிற் கீழோய்.

(இ - ள்.) சிறுதொழிலையுடைய கீழோனே! உன்னுடைய பெருங்குலத்தினரோடும் சுற்றத்தாரோடும் உனக்குஉதவக்கூடிய படைக்கலங்களையும் மற்றும் நீதேடிய பலசேனைகளையும் சேர்த்து உள்ளேவைத்திருப்பனவற்றையும்

திறந்துஎடுத்துக்கொண்டு சண்டைசெய்யவல்லமையுடையாயாயின்,போர்க்கு வருவாய்; அல்லையேல், ஒளித்துக்கொள்வாய்; (எ - று.)—சிறுதொழில்-பிறர் மனைவிரும்புகை, நல்லோரைக்கடிகைமுதலியன. பி-ம்:—[1]அம்பொடும் ()

உருச.சிறையில் வைத்தவ டன்னை[1]விட் டுலகினிற் றேவர்
முறையில் [2]வைத்துநின் றம்பியை [3]யிராக்கதர் முதற்பேர்
இறையில் வைத்தவற் கேவல்செய் திருத்தியே லின்னுந்
தறையில் வைக்கில னின்றலை வாளியிற் றடிந்து.

(இ-ள்.)இனியும்,சிறையிலேவைத்தவளான சீதையை விட்டிட்டு,நின்தம்பியை உலகிலே தேவரின்முறையிலேவைத்து, (என்றால்)அரக்கர்க்கெல்லாம் முதன்மையான பெரிய அரசில்வைக்கப்பட்ட அவ்விபீஷணனுக்கு ஏவல்செய்து கொண்டிருப்பாயானால்,உன்தலையை என்னம்புகளாலறுத்துத் தரையில் வைக்காமல்(உன்னை)விட்டிடுவேன்; (எ-று.)—இதனால், இராமன் இராவணனுக்குத் தலையோடு தப்ப வழி யுரைக்கின்றான்.தம்பியென்று நினையாமல் தேவர்போலப்போற்றவேண்டு மென்பான் 'தேவர்முறையில்வைத்து' என்கின்றான்.பி-ம்:—[1]விட்டிவ்வழித்தந்து. [2]வைத்த, நின்ற. [3]இராக்கதமுறைப்பேர், மணிமுடிசூட்டி. (கஉகசு)

உருரு.அல்லை யாமெனி னாரம [1]ராற்றெனுந் தோற்றம்
வல்லை யாமெனி னுனக்குள வலியெலாங் கொண்டு
நில்லை யா[2]வென நேர்நின்று பொன்றுதி யெனினும்
நல்லை யாகுதி பிழைப்பினி [3]யுண்டென நயவேல்.

(இ - ள்.) (நான்கூறியவாறு செய்ய விருப்பம் ஒன்றும்) இல்லாதவனாவாயேயானால், அரியஅமரைச் செய்வாயென்று சொல்லிக்கொண்டு தோன்றுதற்கு வல்லமையுடையையாயிருந்தால், உனக்குள்ள வலிமையெல்லாவற்றையுங்கொண்டு, 'எதிர்த்துநில், ஐயனே!' என்றுசொல்லி, என்னெதிரேநின்று உயிரொழிவாய்; அவ்வாறு ஒழிந்தாயானாலும், நல்லவனாவாய்: (ஆனால், போர்செய்தாற்)பிழைப்புஉண்டுஎன்றுமாத்திரம்(உயிரில்)ஆசைவையாதே;(எ-று.)-- உலகிற் போரிலேவெற்றிதோல்வி ஒருவர்பங்கல்லஎன்றுகூறுதற்குஏற்ப, ஒருகால் நாம் வெல்லக்கூடாதாஎன்ற நப்பாசையைக் கொள்ளற்கவென்பான் 'பிழைப்பினியுண்டெனநயவேல்' என்கின்றான். நேர்நின்றுபொருது இறந்தவர்க்கு வீரசுவர்க்கங் கிடைக்குமாதலால் 'பொன்றுதியெனினும்நல்லையாகுதி' என்கின்றான். பி-ம்:—[1]ஆற்றிநின்றேற்க, ஏற்றுநின்றாற்ற, ஆற்றிநின்றெதிர்க்க. [2]எதிர். [3]உண்டென்று. (கஉகஎ)

உருசு.ஆளை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை[1]யாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கின னிளங் கமுகின்
வாளை தாவுறு [2]கோசல நாடுடை வள்ளல்.

(இ - ள்.) (அரக்கரை)ஆள்கின்ற ஐயா!உனக்கு(த் துணையாக) அமைந்த சேனைகள் காற்றினால்மோதப்பட்ட பூளைப்பூண்டுகள்போலாயினவற்றைக் கண்டாயன்றோ! இன்றுபோய் நாளைக்குப் போர்க்குவா என்று கருணைசெய்து

(இராவணனை) விடுத்தான்: (யாவனெனில்),—மிக்கஇளமையுள்ள கமுகமரத்தின்மீது வாளைமீன் துள்ளிப்பாயும் (நீர்வளமமைந்த)கோசலநாட்டிற்குஉரிய தலைவனான உதாரகுணமுள்ள இராமன்; (எ - று.)

"காற்றிடைப்பூளைக் கரந்தையென வரந்தையுறக் கடலரக்கர் தஞ்சேனைக், கூற்றிடைச்செல்லக் கொடுங்கணை துரந்த கோலவில்லிராமன்" என்ற பெரியார்பாசுரம் முன்னிரண்டடிகளிற் காணத்தக்கது. "பேராண்மையென்பதறுகணொன்றுற்றக்கா, லூராண்மை மற்றதனெஃகு" என்ற திருக்குறளும், "ஊராண்மை - உபகாரியாந்தன்மை: அஃதாவது - இலங்கையர் வேந்தன் போரிடைத் தன்றானை முழுதும்படத் தமியனாயகப்பட்டானது தனிமைநோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது 'இன்றுபோய்நாளை நின்றானையோடு வா' என விட்டாற்போல்வது" எனப் பரிமேலழகர் விசேடவுரைகூறியதும் இங்குக் காணத்தக்கன. இது-புறப்பொருளில் தழிஞ்சியென்னுந் துறையாம்: தழிஞ்சி இன்னதென்பதனை "அழிகுநர்புறக்கொடையயில்வாளோச்சாக், கழிதறுகண்மை காதலித்துரைத்தன்று" என்ற புறப்பொருள் வெண்பாமாலையின்கொளுவாலும் அறிக. தழிஞ்சி - தழுவல்: தழிச்சுதல் தழிஞ்சியாயிற்றென்பர், நச்சினார்க்கினியர். பி-ம்:—[1]ஆனவை. [2]கோசலை. அச்சிட்டபிரதிகளில் இந்தப்படலத்தின்பெயர் 'முதற்போர்ப்படலம்' என்று காண்கின்றது. (௧௨௧௮)

கதைப்போக்கில்கம்பர்கூறியவகை ஸ்ரீவான்மீகிமுனிவர்கூறியவகையினும் மிகவேறுபட்டிருந்தலால், அவ்வேறுபாட்டைப் படிப்போருணருமாறு சுருக்கமாக எழுதப்படுகின்றதுவருமாறு:—தூதுசென்ற அங்கதன்அரக்கரைக் கீழ்வீழ்த்தி இராவணனதுஉபரிகையின்சிகரத்தைக் காலால்வீழ்த்தி மீண்டுவரவே, ஸ்ரீராமன்கட்டளையால் வானரர்கள் இலங்கையின்அகழியைத் தூர்த்து மதிளைமுற்றுகைசெய்யலாயினர்: இராவணன்கட்டளையால் அரக்கர்கள் எதிர்க்கலாயினர்: இருதிறத்தார்க்குங் கைகலந்தபோர் நிகழ, சுக்கிரீவன் ப்ரகஸனையும், ஸ்ரீராமன் அக்கினிகேது ரஶ்மிகேது ஸுப்தக்நன் யஜ்ஞகோபன்என்ற நால்வரையும், த்விவிதன் அசனிப்ரபனையும், ஸுஷேணன் வித்யுந்மாலியையும் கொன்றனர். அந்தப்படுகளம், வானரர்வரக்கர்களின் முண்டங்களாலும் தலைகளாலும் நிறைந்து இரத்தப்பெருக்கு நிரம்பப்பெற்றுப் பயங்கரமாகத் தோன்றிற்று. இருதிறத்தாரும் கடும்போர்புரிகையில், அரக்கர்க்கு வலிமைதரும் இருட்போது வந்தது. அவ்விரவில் அரக்கர்கள் பெருஞ்சினத்துடன் வானரர்களைப் பட்சித்தவண்ணம் போர்க்களத்திற் சஞ்சரித்தனர்; இராமலட்சுமணர் சிறிதேபுலப்படுகின்ற அவ்விரவிற் கூரியபாணங்களை அரக்கரின்மீது எய்யலாயினர். வடக்குவாயிலில் ஏவப்பட்டிருந்த சுகசாரணர்முதலியோர் அம்புவிசையைத் தாங்கமுடியாமல் ஓடிவிட்டனர்.

அங்கதன் இந்திரசித்தின்சாரதியையும் குதிரைகளையும் அப்போதுமுடித்திட்டதனால், அவன், அந்தர்த்தானமடைந்தான்: அங்கதன்திறமையை யாவரும் கொண்டாடினர். ஸ்ரீராமன் வானரர்கட்கு ஊக்கமூட்டினன். அப்பால் மறு

ந்த இந்திரசித்து ஸ்ரீராமலக்ஷ்மணர்களின் உடம்பெல்லாம் நாகவடிவமான அம்புகளை எய்து பந்தித்துவிட்டனன். ஸுஷேணன்முதலியோரை இந்திரசித்தைக் கண்டுபிடிக்கும்படி யேவ,வானத்திலெழும்பிய அவர்கள் தமது சரீரம் இந்திரசித்தின்அம்புகளாற் பிளப்புண்ணப்பெற்று அவனைக் கண்டிலர். இந்திரசித்தின்நாகாஸ்திரங்களினால் இராமலட்சுமணர் விழுந்திட்டனர். நாகபாசங்களாற் கட்டுண்டுவீழ்ந்திருக்கும் அவ்விருவீரர்களைச்சூழ்ந்துகொண்டுஅநுமான்முதலியோர் வருந்தித் துயருற்றனர். விபீஷணன் அங்குவந்து, பெருந்துயருறும் வானரர்தன்னை இந்திரசித்தோஎன்று ஐயுற்றுஅஞ்சிக்கலங்க அவர்களைத்தெளிவித்துப் பின் சுக்கிரீவனுக்குப் பலவகைக்காரணங்களை எடுத்துக் காட்டித் தேற்றரவுகூறி, அரக்கரால்தீங்குநேராதவாறு பாதுகாக்கும்படியுங் கூறினன்.

சுக்கிரீவாதியர் ஸ்ரீராமலட்சுமணர்களைக்கண்டு துயருறுகையில் இந்திரசித்து சுக்கிரீவாதிகளைத் தன்அம்புகளால் அடித்துவிட்டுத் தான் செய்த பெருஞ்செயலை அரக்கர்களிடம் பாராட்டிக்கூறி மகிழ்ச்சியோடு சேனைசூழ மீண்டுசென்று, இராவணனிடத்துத் தான் இராமலட்சுமணர்களை நாகபாசத்தால் வீழ்த்தியதை எடுத்துக்கூறினன். இராவணன், தன்புதல்வனுடைய அச்செயலைப் பாராட்டிப் புகழ்ந்து விடைகொடுத்து அனுப்பிவிட்டு, சீதையைக் காக்கின்ற அரக்கியரை வரவழைத்து நாகபாசத்தால் இறந்துகிடக்கும் ராமலட்சுமணர்களைச் சீதைக்குக் காட்டுமாறு கட்டளையிட்டான். அவர்களும் கட்டளைப்படியே சீதாபிராட்டியைப் புஷ்பகவிமானத்திலேற்றிப் போர்க்களத்துக்குக்கொண்டுபோய் நாகபாசத்தாற்கட்டுண்டு பிரஞ்ஞையற்றுவீழ்ந்துகிடக்கும் இராமலட்சுமணரைக் காட்டினர். அதுகண்ட சீதை சொல்லவொண்ணாத் துயரத்தாற் பலவாறுபுலம்பப் பலவகைக் காரணங்களால் திரிசடையென்பவள் அப்பிராட்டியைத்தேற்றியும் அவள் துயர்நீங்காமலே யிருந்தனள்.

சுக்கிரீவாதியர் சூழ்ந்திருக்கையில் நாகபாசத்தாற்கட்டுண்டு மூர்ச்சித்துக் கிடந்தவர்களான இராமலட்சுமணர்களில் ஸ்ரீராமன் மஹாஸத்வவானாதலாற் சிறிதுமூர்ச்சைதெளிந்து லக்ஷ்மணனைக்குறித்துவருந்தி, ‘உடன்பிறந்த தம்பியையின்றிப்பிழைத்திருக்க நான் விரும்பவில்லை: நான் இல்லாமற்போனால் உங்களை இராவணன் துரத்தியடிப்பானாகையால், சுக்கிரீவா! நீ வானரர்களுடன் கிட்கிந்தைக்கு மீண்டுசெல்க’ என்றனன். இராமன் இவ்வாறுபுலம்புவதுகண்டு வானரர்கள்யாவரும் கண்ணீர்வடித்தனர். விபீஷணன் இராமலட்சுமணர்களின் அவஸ்தையைக் கண்டுவருந்துகையில், சுக்கிரீவன் விபீஷணனைத் தேற்றினன். அப்போதுசுக்கிரீவனுடைய மாமனாகிய சுஷேணன் ‘தேவாசுரயுத்தத்தில் முன்பு தேவர்கட்கு இங்ஙனம்மரணம்நிகழ்ந்தபோது பிருகஸ்பதி ஔஷதிகளைக்கொண்டு உயிர்பிழைப்பித்தானாதலால், சந்திரம்த்ரோணம்என்ற மலைகளில்வைத்திருக்கும் அவ்வோஷதிகளைக் கொணர அநுமான் செல்லட்டும்’ என்றனன். இவ்வாறுசொல்லிக்கொண்டிருக்கையில் நாகபாசத்தாற்கட்டுண்டதைக் கேள்வியுற்றுக் கருடபகவான் அங்குவர, நாகபாசங்க

ளெல்லாம் நீங்கிவிட்டன. இராமலட்சுமணர், முன்போலவே வலிமையுடன் விளங்கலாயினர். கருடபகவான் இராமபிரானைத் தழுவிப் புகழ்ந்துவாழ்த்திச் சென்றனன். வானரர்கள் பெருமகிழ்ச்சியாற் பேராரவாரஞ் செய்தனர்.

அந்தப்பேரொலி செவிப்பட்டதும், இராவணன் ஒற்றரையனுப்பி இராமலட்சுமணர் நாகபாசத்தினின்று மீண்டதையுணர்ந்து, மறுநாள் தூம்ராட்சனென்பவனைச் சதுரங்கசேனையோடு பொருமாறு அனுப்பினன். அவன்பெரும்போர்செய்து இறுதியாக அனுமானால் அடியுண்டு மாண்டனன். பின்பு இராவணன் வஜ்ரதம்ஷ்டரனையனுப்ப, அவன் தன்சைனியத்தோடும் அங்கதனால் முடிந்தனன். பின்பு அகம்பனன்என்பவன் மேற்குவாயிலால் வெளிவந்து அங்கிருக்கும்அனுமானுடையசேனைகளோடு பெரும்போர்புரிந்து முடிவில் அனுமானால்உயிரொழிந்தனன். இராவணன்கட்டளையால் தன்பெருஞ்சேனையோடு கடும்போர்புரிந்து தன்மந்திரிகளான நராந்தகன் முதலியோர் மாண்டபின், பிரகத்தன் நீலனால் அடியுண்டு மாண்டனன்.

பிறகு, இராவணன் மிகப்பல தானை சூழத் தானேவந்துபெரும்போர்புரிந்து சுக்கிரீவன்முதலியோரைப் பங்கப்படுத்த, வானரர்கள் சரண்யனான ஸ்ரீராமனைச்சார, அப்பிரான் யுத்தசன்னத்தனாய். அவ்விராவணனோடுபொரச் செல்கையில், இலட்சுமணன் தன்னைப்பொருதற்கு அனுப்புமாறுகவலடைந்து இராமபிரானது அநுமதியைப் பெற்றுப் போர்புரியச்சென்றனன். அதுகண்ட அனுமான் பணியாளாரிருக்கையில் தலைவர் பொருதலாகாதென்று இராவணனையெதிர்த்துக் குத்துச்சண்டையில் தளர்ந்திருக்க, இராவணன் நீலனுடன்பொருது இறுதியாக ஆக்நேயாஸ்திரத்தையபிமந்திரித்து அந்நீலனை மூர்ச்சிக்கச்செய்தனன்.

அப்பால் இலட்சுமணன் இராவணனுடன் கடும்போர்புரிய, இராவணன் எதிர்நின்றுபொர வல்லமையற்றவனாய்ப் பிரமதேவன்தந்த சக்தியை அவன்மீது ஏவ, அதனால் இலட்சுமணன் மூர்ச்சித்தான். அவனைத் தூக்கிச் செல்ல இராவணன் முயன்று முடியாமற்போனபின் அநுமான்வந்து எளிதாகத்தூக்கிகொண்டுபோய் இராமபிரானிடத்துச் சேர்க்க, அவன் மூர்ச்சை தெளிந்தான். பின்பு ஸ்ரீராமன் அநுமானதுவேண்டுகோளினால் அவ்வநுமனதுதோளின்மேலேறிக்கொண்டு இரதிகனான இராவணனுடன் கடும்போர் புரிந்து சேனைகளையெல்லாம் நீறுக்கித் தேரையும்ஒழித்து நிராயுதபாணியாகச்செய்து, 'நாளை தானையோடு வா' என்று விடைகொடுத்தனுப்பினனென்பது.

முதற்போர்புரிபடலம் முற்றிற்று.

---

# ௬௫-ஆவது கும்பகருணன்வதைப்படலம்.

கும்பகர்ணனுடையவதையைக் கூறும் படலமென்று விரியும்: ஸ்ரீராம -பிரான் கும்பகர்ணனைவதைத்ததைக் கூறும் பகுதியென்க. சிலபிரதியில் கும்ப கர்ணப்படலமென்றே இதற்குப் பெயர் காண்கின்றது.

ஸ்ரீராமபாணத்தால்மெலிந்த இராவணன், தனியனாய்த் தன்மாளிகைக் குப்போய், தூதர்களைப் பணியாளனால் வரவழைத்து நாற்றிசையிலுமுள்ள அரக்கச்சேனைகளைக் கொணரும்படி கட்டளையிட்டனுப்பி மாலியவானோடு தனக்குநேர்ந்த குறையைக் கூற, அவன்அறிவுறுத்துகையில் அதனைத் தடுத் துரைத்த மகோதரனுடைய துர்ப்போதனையால், மிகப்பல அரக்க மல்லர்களைக் கொண்டு கும்பகர்ணனைத் துயிலெழுப்பிவரவழைத்துத் தன்கருத்தைத் தெரி விக்க, அவனும் நன்மதிகூறி வெறுப்புக்கொண்டு அண்ணன்விருப்பின்படி நடப்பது தன்கடமையென்று போர்க்களங் குறுக, ஸ்ரீராமன் விபீஷணனால் அந்தக்கும்பகர்ணனையுணர்ந்து அவ்விபீஷணனையே அவனைத் தம்மோடு சேரும்படியழைக்குமாறு அனுப்ப, கும்பகர்ணனும் அவற்றைக்கேட்டுத் தன் னுறுதிப்பாட்டைக் கூறி மறுக்க, பின்னர் இருதிறத்தார்க்கும் கடும்போர்நடக்க லாயிற்று. அப்போரில் நீலன் அநுமான் அங்கதன் என்றஇவர் மெலிந்தரும், இளையபெருமாள் அவனைப் பாதசாரியாக்கி, அவனொடுவந்த சேனையையும் பின்இராவணனனுப்பிய சேனையையும் மாய்த்தான்: அப்பால், சுக்கிரீவன் அந் தக்கும்பகர்ணனை வளைத்துப்போரிடுகையில், அவன்சூலத்தை யெறிந்தான். அநுமான் அதனை முறித்தெறிய, மீண்டும் சுக்கிரீவன் நிராயுதனாய அவனோடு மற்போர்புரிந்து மூர்ச்சிக்க, அவ்வரக்கன் அந்தச்சுக்கிரீவனை இலங்கைக்குத் தூக்கிக்கொண்டுபோகுமாறு முயன்றானாக, அதனையுணர்ந்த ஸ்ரீராமன் அவன் நெற்றியிற் கணையெய்து அவனைமூர்ச்சிக்கச்செய்ய, அப்போதுமூர்ச்சைதெளி ந்து சுக்கிரீவன் அவனுடையமூக்கையும் காதையும் அறுத்துக்கொண்டு வான ரப்படையிற் சேர, பின்பு கும்பகர்ணன் மூர்ச்சைதெளிந்து இராவணன் மீண் டும் அனுப்பிய பெருஞ்சேனைகளைத் துணையாகக்கொண்டு போர்வி ளைக்க, ஸ்ரீராமன் அந்தச்சேனைகளைக் கணப்போதில் மாய்த்து அவனுடைய இரண்டுதோள்களையுந் தாள்களையுந் துணித்துவிட, அப்பால் அவன் தன் சரீரத்தினாலேயே வீரத்தன்மையைக் காட்ட, ஸ்ரீராமன் அவனுடையகருத் தையறிந்து அவனுடையசிரத்தைக்கொய்து கடலில்வீழ்த்தியமை, இந்தப் படலத்துக் கூறப்படுகின்றது.

வேறு.

௧.—இராவணன் நகர்நோக்கியேகுதல்.

வாரணம் பொருத மார்பும் [1]வரையினை யெடுத்த தோளும்
[2]நாரத முனிவற் கேற்ப [3]நயம்பட வுரைத்த நாவுந்
தாரணி மௌலி பத்துஞ் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமுங் களத்தே [4]போக்கி [5]வெறுங்கையே [6]மீண்டு போனான்.

(இ-ள்.) திக்கஜங்களோடு(எதிரிட்டு ப்)போர்செய்த மார்பும், கைலாயமலையைப்பெயர்த்தெடுத்ததோளும், நாரதமுனிவனும்(நன்றாயுள்ளதென் று)ஏற்றுக்கொள்ளும்படி இனிமைபொருந்த(ச் சாமவேதம்)பாடிய நாவும், மாலையையணிந்த பத்துக்கிரீடங்களும், சிவபெருமான்கொடுத்த வாளும், (தன்னுடைய) வீரகுணமும் போர்க்களத்திலேயேயிருக்கவிட்டு வெறுங்கையுடனே (இராவணன்) மீண்டுபோனான்; (எ - று.)

இராவணன் இராமபிரானிடத்துத் தோற்றுத் தன்னிலைமைகுன்றிப் போகின்றானென்பதை விவரிப்பார் 'வாரணம் பொருதமார்பும்...வீரமுங் களத்தேபோக்கிவெறுங்கையேமீண்டுபோனான்' என்றார். நாரதமுனிவன் இசையில்வல்லவனாதலால் அவனும்மகிழும்படி சாமகீதம்பாடவல்ல நாவன்மையுடையவன் இராவணனென்பதை விளக்க, 'நாரதமுனிவற்கேற்ப நயம்படவுரைத்தநா' என்றது. பி-ம்:—[1]வலியகுன்று. [2]ஆரணமுனிவர்க்கு. [3]நயம்பெறவுரைத்த, நனிமறைசிறந்த, அருமறைபயின்ற. [4]விட்டு, போட்டு. [5]வெறுங்கையா, வெறுங்கையோடு. [6]இலங்கைபுக்கான். (௧௨௧௯)

௨.—இராவணன் இலங்கைபுகுதலும் சூரியனத்தமித்தலும்.

கிடந்தபோர் வலியார் [1]மாட்டே கெடாதவா னவரை யெல்லாங்
கடந்து [2]போ யுலக மூன்றுங் காக்கின்ற காவ லாளன்
தொடர்ந்துபோம் பழியி னோடுந் [3]தூக்கிய கரங்க ளோடும்
நடந்துபோய் நகரம் புக்கா னருக்கனு நாகஞ் சேர்ந்தான்.

(இ - ள்.)பொருந்திய போர்செய்யும்வலிமையுடையோரிடத்துத் தோற்காத தேவர்களையெல்லாம் வென்றுபோய் மூவுலகங்களையும் பாதுகாக்கின்ற காத்தற்றொழிலையுடையவனான இராவணன்,-(தன்னைப்)பின்பற்றிவருகின்ற பழியினுடனும் சுமக்கின்ற கைகளுடனும் நடந்துபோய் இலங்கைமாநகரத்திற் புகுந்தான்; (அப்போது) சூரியனும்(அத்த)மலையைச் சேர்ந்தான்; (எ-று.)

முன்னிரண்டடிகள்-இராவணனது வீரப்பெருமையை விளக்கும். பழி-முன்னடிகளிற்கூறப்பட்ட வீரத்தையிழந்ததனாலான அபகீர்த்தி. இரண்டுகைகளையுடைய மானுடனை வெல்லமாட்டாமையால், இருபதுகரங்கள் இராவணனுக்குப் பாரத்தை யுண்டாக்குவனவே யென்பார் 'தூக்கியகரங்களோடும்' என்றார். பி-ம்:—[1]மாட்டே. [2]பேர். [3]தூங்கிய. (௧௨௨௦)

௩.—இராவணனது நாணநிலை.

மாதிர மெவையு நோக்கான் [1]வளநகர் நோக்கான் வந்த
காதலர் தம்மை நோக்கான் கடற்பெருஞ் சேனை நோக்கான்
தாதவிழ் [2]கூந்தன் மாதர் தனித்தனி நோக்கத் [3]தானோர்
பூதல மென்னு [4]நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்.

(இ - ள்.) (நகர்நோக்கிச்செல்கின்ற இராவணன்), திக்குக்களெதனையும் கண்ணெடுத்துப்பாராமலும் வளப்பமுள்ள தன்நகரினையும் கண்ணெடுத்துப் பாராமலும், வந்த புத்திரர்களை நோக்காமலும், கடல்போற் பரந்த (தன்) சேனையைப்பாராமலும், மகரந்தப்பொடிகள் சிந்தப்பெற்ற மயிர்முடியையு

டைய (மந்தோதரிமுதலிய) மனைவியர் தனித்தனி நோக்கிக்கொண்டிருக்கத் தான் பூமியென்கின்ற மங்கையைப் பார்த்தவண்ணமே நகரிற் புகுந்தான்.

பூதலமென்னுநங்கைதன்னையே நோக்குதல் - முகங்கவிழ்ந்திருத்தலால் கண்பார்வை தரையில்விழுமாறு இருத்தல்: தலைகவிழ்தல்-தோற்ற நாணத்தினால், தனதுமனைவியரை யுபேட்சித்துச் சீதாபிராட்டியின்மீது மோகம்வைத்ததனாலேயே இத்துணை யனர்த்தம் விளைந்த தாதலால், தன்மாதரைநோக்க இராவணனுக்கு நாணம் விஞ்சியது என்ற கருத்துப்பட 'மாதர்தனித்தனிநோக்கப் பூதலநங்கைதன்னையே நோக்கிப்புக்கான்' என்றார். இச்செய்யுள், பலபிரதிகளில் "நாளொத்த" என்ற அடுத்த பாடலின்பின் உள்ளது. காதலர்-புத்திரர்: அன்பருமாம். பி-ம்:—[1]வளர். [2]கோதை. [3]தானும், தானப். [4]மங்கை, மக்கள்.

ச.—இராவணன் தான் தோற்றமைபற்றி வெறுப்புக்கொண்டிருந்தல்.

நாளொத்த நளின மன்ன முகத்தியர் நயன மெல்லாம்
வாளொத்த [1]மைந்தர் வார்த்தை யிராகவன் வாளி யொத்த
கோளொத்த சிறைவைத் தாண்ட கொற்றவற் கற்றை [2]நாட்டன்
தோளொத்த துணைமென் கொங்கை நோக்கங்குத் தொடர்கி லாமை.

(இ-ள்.) அந்நாளில், பகலில் ஒருசேரமலர்ந்த தாமரைமலரைப்போன்ற முகத்தையுடையரான மகளிரின்கண்களெல்லாம், வாட்படைபோல்வருத்தத்தை விளைத்தன; மைந்தர்கூறுகின்ற சொற்களெல்லாம், இராமபாணத்தைப் போல் துன்புறுத்தின; நவக்கிரகங்களையும் ஒருசேரச் சிறைவைத்து(த் தனக்கு)அடிமைப்படுத்தின வெற்றிபொருந்திய இராவணனுக்கு, இரட்டையான மெல்லியகொங்கைகள், (அங்குத் தன்) பார்வை செல்லாமல் (தன்) தோளை யொத்தன; (எ - று.)—அங்கு - அசையுமாம்.

யுத்தத்தில் தோள்வலி தன்வெற்றிற்கு உடலாகாமல் வெறுஞ்சுமையாக ஆய்விட்டதுபற்றி, இராவணன் அத்தோள்களில் வெறுப்புக்கொண்டானென்க. தன்மனைவியரானமகளிர் காண்பதும் மைந்தர்பேசுவதும் நாணத்தினால் வெறுப்புக்கொண்ட நிலையில் வாளும் வாளியும்போல் வருத்தம் விளைத்தன என்றார். 'ஒத்தசிறைவைத்தாண்ட' என்றமையால், ஒருசேரச்சிறைவைத்து அடிமைப்படுத்தியமை பெறப்படும். துணைமென்கொங்கை, மனைவியருடையவை. ஈற்றடிக்கு-தோளிலே பொருந்திய இரட்டையான தனங்களையுடைய வெற்றிமகளின் நோக்கம் அவ்விராவணனிடத்திற் செல்லாமையால் என்று கூறி, நயனம் வாளொத்தமைக்குக் காரணமாக்கி யுரைப்பாருமுளர். பி-ம்:—[1]மக்கள், வானோர். [2]நாடன்.
(கஉஉஉ)

ரு.—இராவணன் எவருமின்றித் தனியே கோயில்சேர்தல்.

மந்திரச் சுற்றத் தாரும் வாணுதற் சுற்றத் தாருந்
தந்திரச் சுற்றத்தாருந் தன்கிளைச் சுற்றத் தாரும்
எந்திரப் பொறியி னிற்ப யாவரு மின்றித் [1]தானோர்
சிந்துரக் களிறு கூடம் [2]புக்கெனக் கோயில் சேர்ந்தான்.

(இ - ள்.) ஆலோசனைக்குத் துணையானவரும் ஒளிபொருந்திய நெற்றியையுடையமனைவிமார்களும் சேனைத்தலைவர்களும் தன்உறவுமுறையார்களும் எந்திரத்தின்வன்மையால் இயங்குந்தன்மையையுடைய பிரதிமைபோன்று (அசையாது) நிற்க, எவருமில்லாமல்,தான் ஒருசிந்துரப்பொடியப்பிய யானை கொட்டாரத்தைச்சேர்வதுபோல அரண்மனையிற் சேர்ந்தான்; (எ-று.)

இராவணன்நிலையைக் கண்டவுடனே திடுக்கிட்டு அசைவற்றுநின்ற மந்திரச்சுற்றத்தார்முதலியோர்க்கு, எந்திரப்பாவை உவமை. போரில் அடிபட்டுக் குருதிநீர்வழியப்பெற்ற இராவணனுக்குச் சிந்துரக்களிறு ஏற்ற உவமையாம். பொதி - பிரதிமை. பி-ம்:—1தானே. 2சேர்ந்தெனக். (கஉஉரு)

சு.—பொற்பீடத்திருந்த இராவணன் தூதரைக் கொணருமாறு கஞ்சுகியை யேவுதல்.

ஆண்டொரு செம்பொற் பீடத் திருந்துதன் வருத்த 1மாறி
2நீண்டுயர் நினைப்ப னாகிக் 3கஞ்சுகி யயனின் றானை
ஈண்டுநந் தூதர் தம்மை யிவ்வழித் தருதி யென்றான்
பூண்டதோர் 4பணியின் வல்லே 5யனைவரைக் கொண்டு புக்கான்.

(இ - ள்.) (இராவணன்) அங்கே ஒருசெம்பொன்னினாலியன்ற பீடத்திலே யிருந்து, தன்வருத்தம் சிறிது தணியப்பெற்று, மிகவும்பெருத்த சிந்தையைக் கொண்டவனாகி,அயலில்நின்றவனை கஞ்சுகியைப் பார்த்து.இப்பொழுதேநமதுதூதுவரை இங்கேஅழைத்துவருவாயென்றான்: (அந்தக்கஞ்சுகியும்), மேற்கொண்ட அந்தக்கட்டளையினாலே விரைவிலே அப்படிப்பட்டதூதரை யழைத்துக்கொண்டு (இராவணனுள்ளவிடத்திற்) புகுந்தான்; (எ - று.)

சிறிதுவருத்தந்தணிந்து மேல் செய்யவேண்டுவதைப்பற்றிப் பெரிதும் ஆலோசனைசெய்து, இராவணன் அருகிருந்த கஞ்சுகியைக் கொண்டு தூதரை வருவித்தான். கஞ்சுகி-சட்டையிட்டவனாய்நிற்கும் மெய்காப்பாளன். பி-ம்:—1மாற்றி. 2நீண்டதோர். 3காஞ்சுகி. 4பணியன், பணியான். 5நால்வரை. ()

எ.—இராவணன் எங்குமுள்ள அரக்கச்சேனைகளையும் திரட்டிக்கொணருமாறு வந்த தூதர்களை ஏவுதல்.

மனகதி வாயு வேகன் மருத்தன்மா மேக னென்றிவ்
1வினையறு தொழிலர் 2முன்னா 3வாயிரர் 4விரவி னாரை
நினைவதன் முன்ன நீர்போய் நெடுந்திசை யெட்டு நீந்திக்
கனைகழ லரக்கர் தானை கொணருதிர் கடிதி னென்றான்.

(இ-ள்.) மனகதி வாயுவேகன் மருத்தன் மாமேகன் என்ற இந்தக்குற்றமற்றதொழிலையுடையவர்கள் முதலாக ஆயிரக்கணக்காகவந்துசேர்ந்த தூதரைநோக்கி, (இராவணன்), 'நீங்கள் நினைக்குங்காலத்திற்குட்போய்ப் பெரியஎட்டுத்திசைகளையுங்கடந்து,ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த அரக்கரின் சேனையை விரைவில் இட்டுக்கொண்டுவாருங்கள்' என்றான்; (எ - று.)

1வினையறிதொழிலர் என்ற பாடம் - (தாம் செய்யவேண்டிய) செய்கையையொழுங்குபெறுமாறு செய்யஅறிந்தசெயலையுடையாரென்று பொருள்படும். பி-ம்:-2முன்னின். 3ஆயினர், வாயிலர், வாயிலில். 4வினவினுரை. (௬௨௨௫)

அ.—தூதுவர் இராவணன்பணியைத் தலைமேற்கொள்ளல்.

ஏழ்பெருங் கடலுஞ் சூழ்ந்த வேழ்பெருந் தீவு 1மெண்ணில்
பாழியம் பொருப்புங் கீழ்2பா லடுத்தபா தாளத் துள்ளும்
3ஆழியங் கிரியின் மேலு மரக்கரா னவரை யெல்லாந்
4தாழ்விலிர் கொணர்தி ரென்றா னவரது தலைமேற் கொண்டார்.

(இ - ள்.) ஏழுபெருங்கடல்கள்சூழ்ந்துள்ள ஏழுபெரியதீவுகளிலும், எண்ணில்லாத [மிகப்பலவான]வலியுள்ள அழகிய மலைகளிலும், கீழ்ப்புறத்திலிருக்கும் பாதாளவுலகத்திலும், சக்கரவாளமலைமீதுமுள்ள அரக்கரானவரையெல்லாம் தாமதியாதவராய் அழைத்துக்கொண்டுவாருங்களென்று (இராவணன்) கட்டளையிட்டான்; அந்தத்தூதுவரும் அந்தக்கட்டளையைச் சிரமேற்கொண்டார்கள்; (எ - று.)—ஏழ்......என்றான்-கீழ்க்கவியிற்கூறியதனைவிரித்துக்கூறியது.

பணிசிரமேற்கொள்ளல் - பணியைத்தட்டாது செய்வேமென்பதுபட வணக்கத்துடன்கூறுதல். பி-ம்:—1எண்ணெண். 2பாரடுத்த, பாற்படுத்த. 3ஆழியின். 4தாழ்விலர். (௬௨௨௬)

௯.—பின் பெருவருத்தத்தோடு இராவணன் மலர்ப்படுக்கையிற் சேர்தல்.

மூவகை 1யுலகு ளோரு முறையி2னின் றேவல் 3செய்வார்
பாவக மின்ன 4தென்று தெரிகிலர் பதைத்து 5விம்மத்
தூவக லாத வைவா 6யெஃகுறத் தொளைக்கை யானை
சேவகஞ் 7சேர்ந்த தென்னச் செறிமல ரமளி சேர்ந்தான்.

(இ - ள்.) முறைப்படியிருந்து இட்ட கட்டளையைப் புரிபவராகிய மூன்றுலகத்தவர்களும், (இராவணனுடைய)கருத்து இன்னதென்று அறியாதவராகி மனம்வருந்தித் துடிக்க,-(இராவணன்),—மாமிசம்நீங்காத கூரிய முனையையுடைய வேலாயுதம்(தன்னை)நன்குதொளைத்தலால் யானை(தான்)படுக்குமிடத்தைச்சேர்ந்ததுபோல நெருங்கியமலர்ப்படுக்கையிலே சேர்ந்தான்.

இராமனிடந்தோற்ற லாகிய அவமானம் தொளைக்க வருந்தும் நெஞ்சினனாகிய இராவணனுக்கு எஃகு தொளைத்த யானை,உவமை. தொளைக்கை-தொழிற்பெயர்: இனி, தொளைத்த கையையுடைய யானை யென்பாருமுளர். தூ - மாமிசம்: பகைவர்மீதுஎறிகையில் அவருடம்பினின்று பற்றியது. பி-ம்:—1உலகினுள்ளும்,உலகினுள்ளார்.2என்று.3செய்யப்.4என்றும்.5விம்மித். 6வேல். 7அமைந்தது. (௬௨௨௭)

௧௦.—இராவணன் பெருமூச்சு விடுதல்.

1பண்ணிறை பவளச் செவ்வாய்ப் பைந்தொடிச் சீதை யென்னும்
பெண்ணிறை கொண்ட 2நெஞ்சி னாணிறை கொண்ட பின்னர்க்

கண்ணிறை கோடல் செய்யான் கையறு [3]கவலை சுற்ற
உண்ணிறை மானந் தன்னை [4]யுமிழ்ந்தெரி யுயிர்ப்ப தானான்.

(இ - ள்.) இன்னிசைநிறைந்த பவளம்போன்ற செந்நிறமான வாயை யுடைய பைம்பொற்றொடியையணிந்த சீதையென்கின்ற பெண்ணை நிறையக் கொண்ட நெஞ்சிலே நாணமானது நிரம்பியபின்னர், (இராவணன்), செய லறுதற்குக்காரணமான கவலை சூழ்ந்துகொண்டதனாற் சிறிதும் கண்துயிலாத வனாய், உள்ளேநிரம்பியஅவமானத்தை வெளிப்படுத்துக்கொண்டு நெருப்புப் போல உஷ்ணமாகப்பெருமூச்சுவிடலானான்; (எ - று.)

பெண்ணிருந்தநெஞ்சிலே நாணம் நிரம்பிற்று:இதுபொருத்தமேயென்க. பெண் தன் நிறையை[ஆண்மைக்குணத்தை]க் கைப்பற்றிய நெஞ்சிலேஎன்று உரைப்பாருமுளர். கண்கோடல்-துயிலுதல். பி-ம்:—[1]பண்ணிய,பண்ணிறப். [2]நெஞ்சன். [3]பழங்கண். [4]உமிழ்ந்தென, உமிழ்ந்துமிழ்ந்து. (கஉஉஅ)

கக.—இராவணன் தன்னைச் சீதை சிரிப்பளேயென்று வருந்துதல்.

[1]வானகு மண்ணு மெல்லா நகு[2]நெடு வயிரத் [3]தோளான்
[4]நானகு பகைஞ [5]ரெல்லா நகுவரென் றதற்கு நாணான்
வேனகு நெடுங்கட் செவ்வாய் மெல்லியன் மிதிலை வந்த
சானகி [6]நகுவ ளென்றே நாணத்தாற் சாம்பு கின்றான்.

(இ - ள்.) 'வானத்திலுள்ளோர் நகுவர்: மண்ணிலுள்ளோரெல்லாம் நகு வர்: நான் வென்றுஅவமதித்த பகைவரெல்லாம் நகுவர்'என்பதுபற்றிநாணங் கொள்ளாதவனாய்,—வயிரம்போலுறுதிபொருந்தியநெடியதோள்களையுடையவ னான இராவணன்,—வேற்படையையவமதிக்கின்ற நீண்டகண்களையும் செந் நிறவாயினையும் மெல்லியதன்மையையுமுடைய மிதிலாபுரியில்தோன்றிய சானகிப்பிராட்டி சிரிப்பாளென்பதுபற்றியே நாணத்தினால் வாடுபவனானான்.

நகுதல் - பரிகாசத்தாற்சிரித்தல். நானகுபகைஞர் - இராமலட்சுமண ரென்பர், ஒருசாரார். தான் இவ்வளவுபரிபவமடைவதற்குக் காரணம் சீதை யின்பொருட்டுத்தோன்றிய காதலே யாதலால், தன்மாற்றானதுகாதலியான அன்னாள் தன்னை நகுதல் இராவணனுக்கு மிகவும்நாணிவாடுவதற்குக்காரண மாயிற்று. பி-ம்:—[1]வானமும். [2]மணி. [3]கையான். [4]தான். [5]யாரும். [6]நகுவ ளென்று, நகுமென்றுள்ளம். (கஉஉகூ)

கஉ.—மாலியவான் இராவணனிருப்பிடத்தைச் சார்தல்.

ஆங்கவன் [1]றன்மு தாதை யாகிய மூப்பின் யாக்கை
வாங்கிய வரிவி லன்ன மாலிய வா[2]னென் றோதும்
பூங்கழ லரக்கன் [3]வந்து பொலங்கழ [4]லிலங்கை வேந்தைத்
தாங்கிய வமளி [5]மாடோர் [6]தவிசுடைப் பீடஞ் சார்ந்தான்.

(இ-ள்.) அப்போது அந்த ராவணனுடைய பாட்டனாகிய கிழத்தன்மை யால் உடல்வளைந்தகட்டமைந்தவில்லைப்போன்ற[உடல்வளையப்பெற்ற] மாலி யவானென்று சிறப்பித்துச்சொல்லப்படுகின்ற அழகிய வீரக்கழலையணிந்த

இராட்சசன்,—வந்து,பொன்னாலாகிய வீரக்கழலைப் பூண்டஇராவணனைத்தாங்கிய படுக்கையின்பக்கத்து ஒருதவிசுஅமைந்தபீடத்திலே சேர்ந்தான்; (எ-று.)

தவிசுடைப்பீடம்-மெத்தையிட்ட ஆசனம். 'இலங்கைவேந்தைத்தாங்கிய வமளி' என்றசொற்சேர்க்கையால், இராவணன் துயரால் ஒடுங்கியுள்ள தன்மை வெளியாம். பி-ம்:—[1]முதிய. [2]என்பானோர். [3]வந்தப். [4]அரக்கர். [5]மாட்டோர். [6]தவிசிடைப். (கஉகூ0)

கங.—மாலியவான் என்னநேர்ந்ததென்று இராவணனை வினவுதல்.

இருந்தவ னிலங்கை வேந்த னியற்கையை யெய்த நோக்கிப்
பொருந்தவந் துற்ற போரிற் [1]றோற்றனை போலு மென்னு
வருந்தினை மனமுந் தோளும் வாடினை நாளும் வாடாப்
பெருந்தவ முடைய [2]வையா வென்னுற்ற பெற்றி யென்றான்.

(இ - ள்.) (பீடத்தைச்) சார்ந்தவனாகிய மாலியவான், இலங்காதிபதியாகியஇராவணன்அடைந்துள்ள நிலைமையை யுற்றுப்பார்த்து, 'ஒருபொழுதுங் கெடாத தவப்பயனையுடைய ஐயனே! நெருங்கவந்துநிகழ்ந்தபோரில் தோல்வியையடைந்தாய்போலு மென்று கருதும்படிவருந்தி, மனமுந்தோளும் வாடினாய்; நிகழ்ந்தசெயல் யாது?' என்று வினவினான்; (எ - று.)—பி-ம்:—[1]தோற்றனன், தேறினன். [2]வீர. (கஉகூக)

கச.—இராவணன் மறுமொழி கூறத்தொடங்குதல்.

கவையுறு நெஞ்சன் காந்திக் கனல்கின்ற கண்ணன் பத்துச்
சிவையின்வா யென்னச் செந்தீ யுயிர்ப்புறத் [1]திறந்த [2]மூக்கன்
நவையறு பாகை யன்றி யமுதினை [3]நக்கி னாலுஞ்
சுவையறப் [4]புலர்ந்த [5]நாவா னினையன [6]சொல்ல லுற்றான்.

(இ - ள்.) துன்பமுற்றமனமுடையவனும், பற்றியெரிகின்ற கண்களையுடையவனும், துருத்திவாய்போன்று செந்தீவெளிப்படுகின்ற மூச்சு வெளிப்படத்திறந்த பத்துமூக்குக்களையுடையவனும், குற்றமற்றவெல்லப்பாகையேயல்லாமல் அமிருதத்தையே நக்கினாலும் சுவையுறைக்காதபடி உலர்ந்தநாவினையுடையவனுமான இராவணன், இவ்வாறானசொற்களைச் சொல்வதானான்; (எ - று.)—அவற்றை மேல் கஎ-கவிகளிற் காண்க.

நாக்கில் புனலூறினாலன்றிச் சுவை தோன்றாதாகையால், பாகேயன்றி அமுதும் சுவைதோன்றாதவாறு உலர்ந்துள்ளது இராவணனுடையநாஎன்றார். கவை = கவ்வை: தொகுத்தல். பி-ம்:—[1]சிவந்த, சேந்த, சிவக்கும். [2]மூக்கண். [3]நக்குமேனும். [4]உலர்ந்த, உணங்கு. [5]வாயால், நாவன். [6]சோறல். (கஉகூஉ)

கரு.—இராவணன் மாலியவானிடத்து இராமபிரானால் நிகழ்ந்தவற்றைச் சுருக்கிக் கூறுதல்.

சங்கம்வந் துற்ற கொற்றத் தாபதர் தம்மோ [1]டெம்மோடு
அங்கம்வந் [2]துற்ற தாக வமரர்வந் [3]துற்றா ரன்றே
கங்கம்[4]வந் துற்ற [5]செய்ய களத்துறுங் குலத்துக் கொவ்வாப்
பங்கம்வந் துற்ற [6]தன்றிப் பழியும்வந் துற்ற [7]தென்றான்.

(இ - ள்.) தொகுதியாகப்பொருந்திய வெற்றியையுடைய தவக்கோலத்தையுடைய மானுடரோடும் எமக்குப் போர்மூண்டதாக, தேவர்களும் (வேடிக்கைபார்க்குமாறு) வந்துவிட்டார்களே: (மேலும்), பருந்து வந்து நெருங்கிய (குருதிபடிந்ததனால்) செந்நிறமாகத்தோன்றுகின்ற போர்க்களத்திலே, நம்முடையகுலத்துக்குத் தகாத தோல்வி நேரிட்டதன்றி (எனக்கு) அபகீர்த்தியும் வந்திட்டதென்று கூறினன், (இராவணன்); (எ - று.)—முதலிரண்டடிகள், எமக்கும் இராமலட்சுமணர்கட்கும் போர் நேரின் அமரர் என்வரவேணுமென்று இராவணன் கருதியமையைத்தெரிவிக்கும். அங்கம்-சதுரங்கத்தாற்செய்யப்படும்போர்க்கு, ஆகுபெயர். பி-ம்:—[1]ஏற்ற. [2]உற்றகாலத்து. [3]உற்றதாற்றூர். [4]வந்துற்றுச். [5]செய்யுங். [6]ஒன்றோ. [7]அன்றே. (கஉஙுஙு)

கசு.—பதினறுகவிகள்-இராவணன் மாலியவானிடத்து இராமன் வல்லமைமுதலியவற்றைவியந்து, நிகழ்ந்தசெயலைத்தெரிவித்தலைக் கூறும்.

முளையமை திங்கள் சூடு முக்கணான் [1]முதல்வ ராகக்
கிளையமை புவன மூன்றும் [2]வந்துடன் [3]கிடைத்த வேனும்
வளையமை வரிவில் வாளி மெய்[4]யுற [5]வழங்கு மாயின்
இளையவன் றனக்கு [6]மாற்றா [7]தென்பெருஞ் சேனை [8]நம்ப.

(இ - ள்.) பெரியோனே! முளைத்தல்பொருந்திய [பிறைவடிவான] சந்திரனைச் சிரசிற்கொண்ட முக்கண்ணனான சிவபிரான் முதற்கொண்டு மேன்மேல் வளருந்தன்மையைக்கொண்ட மூன்று உலகத்தவரும் வந்து ஒருசேரப் பக்கபலமாய்நின்றாலும், என்னுடைய பெரியசேனையானது, வளைதல்பொருந்திய கட்டமைந்தவில்லினின்று வெளிப்படுகின்ற அம்புகளை உடலின்மீதுதாக்குமாறு பிரயோகிப்பானாயின், (அவ்விராமபிரானது) தம்பியாகிய இலக்குமணனுக்கும் எதிர்த்துநிற்கமாட்டாது; (எ - று.)

இளையவன்வலியை விளக்கியமுகத்தால், இராமபிரானது வலியைப் பெறவைத்தான். புவனமூன்று-இடவாகுபெயராய், மூவுலகத்திலுள்ளாரைக் காட்டிற்று. இராமபிரானுடையவல்லமை பகைவரும்போற்றுமாறுஉள்ளதென்பது, இங்குக் கருதத்தக்கது. "மத்ரோ: ப்ரக்யாதவீர்யஸ்ய" என்றார், ஸ்ரீவால்மீகிபகவானும். பி ம்:—[1]முதலவாக, ஆதியாக, முதல்வனாக. [2]கிளர்ந்துடன். [3]கெழீஇய. [4]அற. [5]வழங்கும்போது, வழங்குமேலவ். [6]ஆற்றா. [7]எம். [8]நம்பாய், என்னே. (கஉஙுசு)

கஎ. எறித்தபோ ரரக்க ராவி யெண்ணிலா வெள்ள மெஞ்சப்
பறித்த[1]போ தென்னை [2]யந்தப் பழிபட முதுகிற் பற்றப்
பொறித்தபோ [3]தன்றோ னந்தக் கூனி[4]கூன் போக வுண்டை
தெறித்த[5]போ தொத்த தன்றிச் [6]சினமுண்மை தெரிந்த தில்லை.

(இ - ள்.) மோதிச்செய்யும்போரில் எண்ணிலாவெள்ளக்கணக்கினரான அரக்கர்களின் உயிர்கள் ஒழியும்படி (அவ்வுயிர்களைக்) கவர்ந்தபோதும், அப்படிப்பட்ட அவமானம் என்பிடரியிலே தங்கும்படி (என்முதுகிலேதன் அம்புகளைக்கொண்டு) பதியச்செய்தபோதும், அந்த இராமனுக்குக் கூனியின் கூன்

நீங்கும்படி (வில்லினின்று) மண்ணுண்டையைத்தெறித்தபோது இருந்த நிலைமையையொத்திருந்ததேயன்றிக் கோபமுண்மை தெரிந்ததில்லை; (எ-று.)

இளமையில் எவ்வாறு விளையாட்டாகக் கூனியின்கூனிற் படுமாறு வில்வில் மண்ணுண்டையை வைத்துத் தெறித்தானோ, அவ்வண்ணம் விளையாட்டாகவே பலவெள்ளக்கணக்கான அரக்கவீரரை ஆவிகொண்டானேயன்றி இராமன் சிறிதும் சிரமப்பட்டதுமில்லை, பெருங்கோபங்கொண்டு இப்போரைச் செய்தானுமல்லனென்று இராமனுடைய வீரப்பெருமையை வியந்தவாறு. இப்படிப்பட்ட அவமானமென்று எடுத்துச்சொல்ல இயலாமையால் 'அந்தப்பரிபவம்' என்றது. எறித்த-வலித்தல்விகாரம். பி-ம்:—[1]போழ்து. [2]இந்தப். [3]அன்னாள், அந்நாள். [4]போதாமல். [5]போழ்தொத்ததல்லால். [6]சினமுண்மை. (௧௨௩௫)

௧௮. மலையுறப் [1]பெரிய ராய வாளெயிற் றரக்கர் தானை
நிலையுறச் [2]செறிந்த வெள்ள நூற்றிரண் [3]டெனினு நேரே
[4]குலையுறக் [5]குளித்த வாளி குதிரையைக் [6]களிற்றை [7]யாளின்
[8]தலையறப் பட்ட தல்லா லுடல்களிற் றங்கிற் றுண்டோ.

(இ - ள்.) மலையையொப்பப் பெரியவராயிருந்த வாள்போற்கூரிய பற்களையுடைய அரக்கரின் சேனை நிலையாகநெருங்கிய நூற்றிரண்டுவெள்ளத்தளவையுடையதாயிருந்ததானாலும், (இராமபிரானாற் செலுத்தப்பட்டுக்) குறிதவறாமல் கூட்டமாகப்பாய்ந்த அம்புகள்யாவும் குதிரைகளையும் யானைகளையும் பதாதிகளையும் தலைகளைத்துண்டித்துக் கீழ்வீழச்செய்ததல்லது எந்த உடலிலேனும் தடைப்பட்டுநின்றது (ஒன்று) உண்டோ? (எ - று.)

இராமசரங்கள் தவறாமல் இலக்கை வீழ்த்தியேநின்றன வென்றவாறு. தங்கிற்று-வினையாலணையும்பெயர். இச்செய்யுள், சிலபிரதிகளில் "வரிசிலை" (௨௧)என்ற பாடலுக்குப்பின் உள்ளது.பி-ம்:—[1]பெரியவாய,பெரியரான.[2]சேர்ந்த. [3]அதனை. [4]கொலை. [5]குனித்த. [6]கழித்த. [7]ஆளைத். [8]தலைகளைத்தள்ளிற்று.

௧௯. போயபி னவன்கை வாளி யுலகெலாம் புகுவ தல்லால்
ஓயுமென் றுரைக்க லாமோ வூழிசென் றாலு மூழித்
தீயையுந் தீய்க்குஞ் செல்லுந் திசையையுந் தீய்க்குஞ் [1]செப்பும்
வாயையுந் தீய்க்கு முன்னின் மனத்தையுந் தீய்க்கு மன்றே.

(இ - ள்.) அவ்விராமன்கையினின்று அம்பு வெளிப்பட்டபின் உலகெல்லாம் புகுந்துசெல்வதல்லாமல் ஊழிக்காலமவ்வளவுநாள் கழிந்தாலும் ஓய்ந்துவிடுமென்று உரைத்தற்கு இயலுமோ?[இயலாது]:(அவனுடைய அம்புகள்),கற்பாந்தகாலத்துத்தோன்றும் அக்கினியையும் தீய்த்துவிடும்; செல்லுகின்ற திக்குக்களையெல்லாந் தீய்த்துவிடும்; (ஏதேனும் மாறாகச் சொல்லத்தொடங்கினால் அங்ஙனஞ்)சொல்லுகின்ற வாயையும் தீய்த்துவிடும்; (மனத்தில் மாறுபட) எண்ணினால், (அவ்வாறுஎண்ணுகின்ற)மனத்தையுந் தீய்க்கும்; (எ - று.) —பி-ம்:—[1]செல்லின், சொல்லும். (௧௨௩௬)

௨௰. மேருவைப்[1] பிளக்க [2]வென்றால் விண்கடந் [3]தேக [2]வென்றாற்
பாரினை [4]யுருவ [2]வென்றாற் [5]கடல்களைப் [6]பருக [2]வென்றால்

ஆருமே [7]யவற்றி னூற்ற [8]லாற்றுமே லனந்த கோடி
மேருவும் [9]விண்ணு மண்ணுங் கடல்களும் வேண்டு மன்றே.

(இ - ள்.) மேருவைப் பிளக்கஎன்று சொன்னாலும், ஆகாயத்தைக் கடந்து அப்பாற்செல் என்றாலும், பூமியை யூடுருவுக என்றாலும், கடல்களைப் பருகுக என்றாலும், அந்த (இராமபிரானது) அம்புகளின்வல்லமைக்கு நிரம்பியிருக்கும்; (அந்த அம்புகளின்விசையைத்) தாங்குவதென்றால், (அப்போது) அநந்தகோடிக்கணக்கான மேருமலையும் ஆகாயமும் இந்தப்பூலோகமும் கடல்களும் வேண்டும்; (எ-று.)—அன்றே-தேற்றம்.

"மலையுற" என்றபாடல்முதல் மூன்று செய்யுட்களால் இராமபாணத்தின் தன்மை கூறப்பட்டது. பி-ம்:-[1]உருவும், உருவ, பிளக்கும். [2]வேண்டில், என்னின். [3]எகும். [4]உருவும், பிளக்கும். [5]பவ்வத்தைப். [6]பருகும். [7]அவற்றினாலே. [8]ஆறுமே, ஆருமேல். [9]மண்ணும்விண்ணும். (கஉ௲அ)

உக. வரிசிலை நாணிற் கோத்து [1]வாங்குதல் விடுத [2]லொன்றுந்
[3]தெரிகில [4]ரமர ரேயு [5]மாரவன் செய்கை தேர்வார்
பொருசினத் தரக்க ராவி [6]போக்கிய போக வென்று
[7]கருதவே யுலக [8]மெங்குஞ் சரங்களாய்க் காட்டு மன்றே.

(இ-ள்.) (இராமன்)கட்டமைந்தவில்லை நாணியிலே கோத்துவளைத்தலையும் (அம்புகளைத்தொடுத்து) விடுதலையும் ஒன்றையும் அமரர்களும் தெரிந்துகொள்ளமுடியாதவராயினர்; அந்தஇராமனுடையசெய்கையை ஆராய்ந்துஅறியக்கூடியவர் யாவர்? (இராமன்) 'போர்செய்யுந்தன்மையுள்ள சினங்கொண்ட அரக்கரின் உயிர்போகும்படி செல்க' என்று (தன்அம்புகளைக்குறித்து) எண்ணவே, உலகமுழுதும் அம்புமயமாகவே யாய்விடும்; (எ - று.)

இதனால், இராமபிரானது அம்புவிடுந்திறன் கூறப்பட்டது. பி-ம்:---[1]வாங்கினன். [2]என்றும். [3]தெரிகிலது. [4]அமர்தனுற்றல். [5]ஆரதன், ஆதவன், ஆர்த்தனர். [6]போகிய, போகுக, போகிலார். [7]கருதிய. [8]எல்லாம். (கஉ௲க)

உஉ. நல்லியற் கவிஞர் நாவிற் பொருள்குறித் [1]தமர்ந்த [2]நாமச்
சொல்லெனச் [3]செய்யுட் கொண்ட தொடையெனத் தொடையை [4]நீக்கி
[5]எல்லையில் செல்வந் தீரா விசையெனப் பழுதி லாத
பல்லலங் காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ.

(இ - ள்.) ககுத்தனுடையமரபில்தோன்றியவனான இராமனுடைய அம்புகள்,—நல்லியல்பைக்கொண்ட [சிறந்த] கவிஞரின் நாவிலே பொருளைக் குறித்துப்பொருந்திய சிறப்புப்பொருந்திய சொற்கள்போலவும்,—(அவர்களின்வாயிலிருந்துவருகின்ற) செய்யுள்கொண்டுள்ள தொடைபோலவும், தொடையைத்தவிர்த்து (அச்செய்யுளில்) வரம்பில்லாத சிறப்பினின்றுநீங்காத இசைபோலவும் பொருந்தி, குற்றமற்ற பலவகைப்பட்ட அலங்காரத்தின் தன்மையைக்கொண்டதேயாம்; (எ - று.)

மிகவும் பலதிறப்பட்டு மேன்மேல்வருவனவாய்ப் பயன்விளைத்தலில் காகுத்தன்பகழிக்குக் கவிஞரின்நாவிற்சொல் முதலியன உவமையாம்.

தொடையாவது-பலஅடிகளிலாவது பலசீர்களிலாவது எழுத்துக்கள்ஒன்றிவ ரத்தொடுப்பது. அது-எதுகை மோனை முரண் அளபெடை இயைபுஎன்பவற் ருற் பிரதானமாக ஐந்துவகைப்படும்: இவற்றைவிரித்து "மெய்பெறுமரபிற் ருெடைவகைதாமே, யையீராயிரத் தாறைஞ்ஞூற்ருெடு, தொண்டுதலையிட்ட பத்துக்குறையெழு, நூற்ருென்பஃதென்பவுணர்ந்திசினேரே" எனக் கூறி, "தெரிந்தனர் விரிப்பின் வரம்பிலபல்கும்" என்று இவைவரம்பிலவாமென்று கூறியமையுங் காண்க. தொடை - ஏகபாதம் சுழிகுளம் சக்கரபந்தம்முதலிய சொல்லலங்காரமென்பாருமுளர். இசை-தொனி: காப்பியத்திற்குச்சிறந்தது இதுவே. இனி, இசை-இராகமெனக்கொண்டு, செய்யுளினிசைகள்பண்ணமைத் துப் பாடவல்லோரின் திறத்திற்குஏற்பப் பல்குமென்பர். அலங்காரங்களை முப்பத்தைந்தென்றும் நூறுஎன்றும் வேறுவகையாகவும் விரித்துரைத்த லைக் காணலாம். பி-ம்:—1அமைந்த. 2ஞானச். 3செப்பங். 4நோக்கில். 5எல்லை யிற்சென்றுங். 6வழுவிலாத, வழுவிலாதப். (௧௨௫௦)

௨௫. இந்திரன் குலிச வேலு மீசன்கை யிலைமூன் 1றென்னும்
மந்திர வயிலு 2மாயோன் வளையெஃகின் வரவுங் கண்டேன்
அந்தர மிளி தம்மா தாபத னம்புக் காற்ருே
3னொந்தனன் 4யான லாதா ராரவை 5நோக்க கிற்பார்.

(இ-ள்.) இந்திரனுடையவச்சிராயுதமும், சிவபெருமானதுகையிலுள்ள மூன்றுஇலைவடிவுகொண்ட மந்திரசக்திபொருந்திய சூலப்படையும், மாயை யையுடையவனான திருமாலின் சக்கராயுதமும் ஆகியஇவற்றின் வருகையை யும் கண்டுள்ளேன்: (அவற்றிற்கும் இராமன்அம்பிற்கும்) தாரதமியம், மிகுதி யாகவுள்ளது; (வச்சிரப்படைமுதலியவற்றை அலட்சியமாகப்பொறுத்த) யான், தாபதனானஇராமனுடைய அம்பின்வேகத்தைப் பொறுக்கமாட்டாது வருந்தினேன்: நானல்லாதமற்றையோரில் யாவர் அந்தஅம்புகளைக் கண் ணெடுத்துத்தான் பார்க்கவல்லமையுடையவர்? [எவருமில்லையென்றபடி].

வேல் எஃகுஎன்ற சிறப்புப்பெயர்கள், பொதுப்பொருளின்மேலனவாய்ப் படைக்கலமென்றபொருளைத் தந்தன. எஃகின்வரவும் எனவந்ததற்குஏற்ப, குலிசவேல் அயில்என்றவிடங்களில் குலிசவேல்வரவும் அயில்வரவும் என்று உரைக்க. யான் தாபதனம்பால் நொந்தேனாயினும், கண்ணெடுத்துப்பார்க்க வாவது வல்லமை எனக்கு உண்டு: அதுவும் மற்றையோர்க்கில்லை யென்பது, நான்காமடியிற் கூறிய பொருள். பி-ம்:—1ஏற்ற. 2மாயன்றிகிரியின். 3நொந் தனர். 4யானேயென்ருல். 5நோக்கிகிற்பார். (௧௨௫௧)

௨௬. பேயிருங் 1கணங்க ளோடு சுடுகளத் துறையும் பெற்றி
ஏயவன் ருேள்க ளெட்டு மிந்திர னிரண்டு தோளும்
மாயிரு ஞால முற்றும் வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரந் தோளு மன்னன் விர 2லொன்றி 3னுற்ற வாற்ரு.

(இ - ள்.) பேய்களின்பெருங்கூட்டத்தோடு மயானத்திலே வாழ்கின்ற தன்மை பொருந்தியவனான சிவபெருமானது எட்டுத்தோள்களும், இந்திர

னுடையஇரண்டுதோள்களும், மிகப்பெரியபூமிப்பரப்படங்கலும் வயிற்றிலே வைத்த திருமாலின் ஆயிரந்தோள்களும் அந்தஇராமனுடைய ஒருவிரலின் வலிமைக்கும் தாளமாட்டாது; (எ - று.)—பி-ம்:—1கணங்களோடும். 2ஒன் றிற்கு, ஒன்றில். 3ஆற்றலோதான். (கஉசுஉ)

உரு. சீர்த்த[1]வீ ரியரா யுள்ளார் செங்கண்[2]மா லெனினு மியானக்
கார்த்தவீ ரியனை நேர்வா ருளரெனக் கருத லாற்றேன்
பார்த்தபோ தவனு [3]மற்றத் தாபதன் றம்பி பாதத்
தார்த்ததோர் [4]துகளுக் கொவ்வா னிரவற் காற்ற கிற்பார்.

(இ - ள்.) சிறப்புப்பொருந்திய வீரமுள்ளவரியிருப்பவர் சிவந்தகண் களையுடையதிருமாலேயாக விருந்தாலும், நான் அந்தக்கார்த்தவீரியார்ச்சுனனை ஒப்பவர் உள்ளா ரென்று கருதுதலைச் செய்யேன்: ஆலோசித்துப்பார்க்குமிடத்து, அந்தக்கார்த்தவீரியார்ச்சுனனும் அந்தத்தவக்கோலத்தையுடைய இராம னுடைய தம்பியின் பாதத்திலே ஒட்டிக்கொண்டுள்ளதான ஒருதுகளுக்கும் ஒப்பாகான்; (இவ்வாறாயின்), அந்தஇராமனுக்குமுன் நிற்க வல்லவர்யாவர்?

மற்று - அசை. இச்செய்யுள் சிலபிரதியில் "முப்புரம்" என்ற அடுத் தபாடலுக்குப்பின் உள்ளது. பி - ம்:—1வீரியனுயுள்ளான், வீரியனுயுள்ள. 2மால்முதலோர்மற்றைக். 3மற்றுத். 4துகளும். (கஉசுரு)

உசு. முப்புர [1]மொருங்கச் சுட்ட மூரிவெஞ் சிலையும் வீரன்
[2]அற்புத [3]வில்லுக் கைய வம்பெனக் கொளலு மாகா
ஒப்புவே றுரைக்க லாவ தொருபொரு ளில்லை வேதந்
தப்பினு போது மன்னோன் றனுவுமிழ் சரங்க டப்பா.

(இ-ள்.) ஐயனே!முப்புரங்களையும்அழியும்படிசுட்ட வலிமைபொருந்திய கொடியவில்லும்,வீரனுனஇராமனுடைய அற்புதத்தன்மையையுடைய வில்லுக்குமுன்னே விஞேதத்துக்காகக்கொள்ளுதற்கும் உதவாது; அதற்குஒப்பாகச் சொல்வதற்கு வேறொருபொருளு மில்லை: வேதம் பொய்ப்பதாயினும், அந்த ராமனுடையவில் வெளிப்படுத்துகின்ற அம்புகள் தவறமாட்டா; (எ - று.)

தனுவுமிழ்சரங்கள் தப்பா - கோதண்டத்தினின்று வெளிப்படும்அம்புகள் இலக்கைத் தவறாமலழிக்கு மென்றபடி. ஒருங்குதல்-அழிதல். பி-ம்:-1முருங் கச்செற்ற. 2அப்புதை. 3வில்லுக்கம்மா, வில்லுக்காற்ரு. (கஉசுசு)

உஎ. [1]உற்பத்தி யயனே யொக்கு மோடும்போ தரியே யொக்கும்
கற்பத்தி னரனே யொக்கும் பகைஞரைக் கலந்த காலைச்
[2]சிற்பத்தி னம்மாற் பேசச் சிறியவோ [3]வென்னைத் தீராத் [போ.
[4]தற்பத்தைத் துடைத்த வென்றாற் பிறிதொரு சான்று முண்

(இ-ள்.) (அந்தஇராமனது அம்புகள்),—தோன்றும்போது (நான்குமுகங் களையுடைய) பிரமதேவனையே யொத்திருக்கும்; (பகைவரைநோக்கி) ஓடும் போது (ஆயிரம்முகங்களையுடைய) திருமாலையே யொக்கும்; பகைவரை (யழிக்குமாறு) சேர்ந்தபோது யுகாந்தகாலத்துத்தோன்றுகின்ற காலருத்திரமூர்த்தியையே யொத்திருக்கும்: (அந்தஅம்புகள்), செய்யுந்தொழில்திறமையில் நம்மாற்பேசும்படி அற்பமானவையோ? (அவை), என்னையும் (ஒருபோதும்)

நீங்காதசெருக்கைப் போக்கின வென்றால், (அவற்றின் திறமைக்கு) வேறொரு சாட்சியும் வேண்டுமோ? (எ-று.)—தர்ப்பமென்றவடசொல்-செருக்கெனப் பொருள்படும். பி-ம்:—1உற்பத்தில். 2சிற்பத்தை. 3என்றுந்தீராத், எனது தீரத், என்றுந்தேரைத். 4சற்பத்தைத்தொடர்ந்தது, தற்பத்தைத்துடைக்கும்.

உஅ. குடக்கதோ குணக்க தேயோ கோணத்தின் பால தே யோ, தடத்தபே ருலகத் தேயோ விசும்பதோ வெங்குந் தானோ, வடக்கதோ தெற்க தோவென் 1றுணர்ந்திலன் மனிதன் 2வல்வில், இடத்ததோ வலத்த தோவென் 1றுணர்ந்திலே னியானு மின்னும்.

(இ - ள்.) 'மனிதனான இராமன் கொண்டுள்ள வலிய வில்,—மேற்குப் புறத்ததோ? கிழக்குப்புறத்ததோ? வடக்குப்புறத்திலுள்ளதோ? தெற்குப்புறத் திலுள்ளதோ? மூலைத்திசையினிடத்துள்ளதோ? விசாலமான பெரிய உலகத்தி லுள்ளதோ? விசும்பிலுள்ளதோ? (அல்லது) எங்குந்தான் உள்ளதோ?' என்ற இவ்விஷயத்தை (யான்) உணர்ந்தேனில்லை; (அன்றியும், அவ்வில்),—வலப் புறத்திலுள்ளதோ, இடப்புறத்திலுள்ளதோ என்றும் இன்னும் உணர்ந்திலேன்.

பலவகைச்சாரியுடனே கண்ணெடுத்து நிதானித்துப்பார்க்கமுடியாத படி மேன்மேல் அம்புமழை பொழிவதால், இன்னதிசையிலிருந்து அம்புமழை பொழிகின்றதென்பதாவது, அவ்வில் இராமனுக்கு இன்னபுறத்திலுள்ள தென்றாவது இராவணனுக்கு அறியமுடியாததாயிற்றென்க. உலகத்து = உல கத்தது: விகாரம். பி-ம்:-1அறிந்திலன். 2கைவில். (௧௨௬௬)

உகூ. ஏற்றமொன் றில்லை யென்ப தேழைமைப் பால தன்றே
ஆற்றல்சால் கலுழ னேதா னாற்றுமே யமரி னாற்றல்
காற்றையே மேற்கொண் டானோ கனலையே கடாவி னானோ
கூற்றையே 1யூர்கின் றானோ குரங்கின்மேற் கொண்டு நின்றான்.

(இ - ள்.) (இராமன்),—காற்றையே வாகனமாகக்கொண்டுள்ளானோ? அக்கினியையே யேறிச் செலுத்துகின்றானோ? யமனையே வாகனமாகக்கொண் டுள்ளானோ? (இவையொன்றையும் வாகனமாகக்கொண்டுள்ளானல்லன்): ஒருகுரங்கின்மேல்தான் ஏறிக்கொண்டுள்ளான்; (அந்தவாகனமாகியகுரங்கு) போரிற்செய்யுஞ்செயலை, வலிமைமிக்க கருடன்தான் செய்யவல்லதோ? (இப் படிப்பட்டவாகனத்தைக்குறித்து) ஒருஏற்றமுமில்லையென்று சொல்வது, அறிவீனத்தின்பாற் பட்டதேயாமன்றோ; (எ - று.)—இதனால், இராமன் கொண்ட அநுமானாகிய வாகனத்தின் சிறப்புக் கூறப்பட்டது. பி-ம்:—1மேற் கொண்டானோ. (௧௨௬௭)

௩௦. போயினித் தெரிவ 1தென்னே பொறையினு லகம் போலும்
வேயெனத் தகைய 2தோளி யிராகவன் மேனி 3நோக்கித்
தீயெனக் கொடிய 4வீரச் சேவகச் செய்கை கண்டால்
நாயெனத் 5தகுது மன்றே காமனு நாமு மெல்லாம்.

(இ - ள்.) (நாம் போர்க்குப்) போய் இனித் தெரிந்துகொள்ளவேண்டி யது என்னஇருக்கிறது? பொறுமையினாற் பூமிதேவியையொத்திருப்பவளாகி மூங்கிலென்றுசொல்லத்தக்கதோளையுடையளான சீதை இராமனுடையஉடம்

பைப்பார்த்து நெருப்புப்போற் கொடிய (அவனது) வீரச்செய்கையையுங்கண்டால் [கண்டிருத்தலால்] (அன்னாருக்கு), காமனும் யாமுமாகிய யாவரும் நாயென்றுசொல்லுதற்குத்தகுவோ மன்றோ? (எ - று.)

மேனிவிஷயத்திற் காமன் நாயெனத்தக்கான்: சேவகச்செய்கையில் நான் நாயெனத்தக்கே னென முறைநிரனிறையாகக் கருத்துக்காண்க. அழகில் மன்மதனை உவமைகூறுவது, மரபு. நாம் - செருக்குப்பற்றியபன்மை. பி-ம்:—1என்னே. 2தோளிக்கு. 3சோக்கில். 4வீரச்சேவகன், வீரன்சேவகன். 5தகுவது, தகுமது. (கஉசஅ)

ருக. வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழுவா ளங்கை
ஈசனென் 1றினைய தன்மை யிளிவரு மிவரா லன்றி
நாசம்வந் 2துற்ற போது நல்லதோர் பகையைப் பெற்றேன்
பூசல்வண் 3டுறையுந் தாரா யிதுவிங்குப் புகுந்த தென்றான்.

(இ - ள்.) ஆரவாரிக்கின்ற வண்டுகள் தங்குகின்ற மாலையையுடையவனே! (எனக்கு) நாசம்வந்துநேர்ந்தகாலத்தில், இந்திரன் திருமால் மற்றுமுள்ளதாமரைமலரில்வாழும்பிரமன் மழுப்படையை அழகியகையிற்கொண்டசிவன்என்ற இப்படிப்பட்ட இளிவந்ததன்மையையுடைய இவர்களாலேயல்லாமல், சிறந்ததொருபகையை யடைந்தேன்: இது இங்கு நிகழ்ந்தது என்று (இராவணன் மாலியவானிடத்துக்) கூறினான்; (எ - று.)

தான் இராமனால் இறக்கும்படியிருக்கு மென்பதை மாலியவானிடம் தெரிவித்தவாறு. வாசவன்முதலியோர் தன்னால்வெல்லப்பட்டவ ராதலின், 'இளிவருமிவர்' என்கிறான். பி-ம்:—1இனையரானவெறுழ்வலியவரால், இனைய ...இழிவருமிவரால், இனையாரன்றே... இவரால். 2உற்றதேனும். 3அறையும். ()

ருஉ.—இதுவும் அடுத்தகவியும் - மாலியவான் இராவணனுக்குச் சில அறிவுறுத்தலைத் தெரிவிக்கும்.

முன்1னுரைத் தேனை வாளா முனிந்தனை முனியா வும்பி
இன்னுரைப் பொருளுங் கேளா யேதுவுங் டெணினு மோராய்
நின்னுரைக் குரைவே றுண்டோ நெருப்புரைத் தாலு நீண்ட
மின்னுரைத் தாலு மொவ்வா 2விளங்கொளி யலங்கல் வேலாய்.

(இ-ள்.) (அதுகேட்டமாலியவான், இராவணனைநோக்கிப் பின்வருமாறு சொல்வான்:—) நெருப்பை உரையிட்டாலும் நீண்டமின்னலை யுரையிட்டாலும் ஒப்பாகாத விளங்குகின்ற ஒளியைக்கொண்ட (வெற்றி)மாலைசூடிய வேற்படையையுடையவனே! முன்னே (இராமனுடையஆற்றலைச்) சொன்ன என்னை வீணாகக்கோபித்தாய்; கோபித்தலென்றகுணத்தையேகொள்ளாத உன்தம்பிவிபீஷணனுடைய இனியவாசகத்தின்பொருளையும் (காதுகொடுத்துக்)கேளாதுவிட்டாய்; (நாங்கள் இவ்வாறுகூறுவதற்குக்) காரணங்களுண்டு என்றாலும், ஆராயாதுவிட்டாய்; உன்னுடையவார்த்தைக்கு (மாறான)உரையும் உண்டோ? (எ - று.)

உனக்குமுன்னே எவராலும் மாறாகச்சொல்லவியலாதுஎன்பது 'நின்னுரைக்குரைவேறுண்டோ?' என்பதன்கருத்து. 'உன்வார்த்தைக்கு மாற்றி

ல்லை, உரையில்லை' என்று உலகில்வழங்கும் பழமொழி இங்கு அமைந்திருத்தல்காண்க. இவ்வாறுவருவது-உலகவழக்குநவிற்சியணியெனப்படும். உரைத்தல்-மாற்றையறியும்படி தேய்த்துப்பார்த்தல்: பொன் வெள்ளிகட்குஉரிய இச்செயல் ஔபசாரிகபிரயோகமாக, வேலின்ஒளியினுடையமாற்றை யறியுமாறுநெருப்பையும் மின்னையும்உரைத்தாலுமென்றார்: நெருப்பையும் மின்னலையும்விட ஒளி விஞ்சியிருப்பது வேற்படையென்றவாறு. பி-ம்: --[1]உரைத்தோனே. [2]விலங்கொளி. (கஉ௫0)

௩௩. உளைவன வெனினு மெய்ம்மை [1]யுற்றவர் முற்று [2]மோர்ந்தார்
விளைவன சொன்ன போதுங் [3]கொள்கிலாய் விடுதல் கண்டாய்
[4]கிளைதரு சுற்றம் வெற்றி [5]கேண்மைநங் கல்வி செல்வங்
களைவரு தானை யோடுங் [6]கழிவது காண்டி யென்றான்.

(இ - ள்.) (மனத்துக்கு) வருத்தத்தைவிளைப்பனவாயிருந்தாலும், மெய்ம்மையானஉறவினர் முழுதும் ஆராய்ந்தவராய் விளையப்போகின்றவற்றைச் சொன்னபொழுதிலும், (அவற்றை யேற்றுக்)கொள்ளாதுவிட்டிடுதலைச் செய்தாய்: (அதன்பயனாக), தொகுதியாகவுள்ள சுற்றத்தாரும் வெற்றியும் நட்பும் நம்முடையகல்வியும் செல்வமும் களைப்பையடைகிறதானையோடு இறந்துபடுவதை (இனிக்)காண்பாய் என்றான்;(எ-று.)--'களைவருதானை' என்பதற்கு-ஒளிவளரப்பெற்றசேனை என்றலு முண்டு. பி-ம்:-[1]உற்றவா. [2]ஓர்ந்து. [3]கொள்கலாய்விடுதல், கொள்கிலைவிடுதி. [4]கிளைவரும். [5]கிழமைதம், கீழ்மையில். [6]களைவது, கழிவதும். (கஉ௫க)

௩௪.—அப்போது மகோதரன் வந்து கூறத்தொடங்குதல்.

ஆயவ னுரைத்த லோடு மப்புறத் [1]திருந்த [2]வானன்ற
[3]மாயைகள் பலவும் வல்ல மகோதரன் கடிதின் வந்து
[4]தீயெழ [5]நோக்கி யென்னிச் சிறுமைநீ செப்பிற் றென்ன
[6]ஓய்வுறு சிந்தை யானுக் குறுதபே ருறுதி சொன்னான்.

(இ-ள்.) அந்தமாலியவான் சொன்னவுடனே,—அப்புறத்திலேயிருந்தவனான மிக்கமாயைகள்பலவற்றிலும்வல்லவனான மகோதரனென்பவன்,--விரைவில்வந்து, நெருப்புப்பொறிபறக்க (அந்தமாலியவானைப்) பார்த்து, 'இப்படிச் சிறுமையாக நீ சொல்லியது என்னே!' என்று(அவனை அதட்டி), ஓய்ந்துள்ள மனத்தைக்கொண்டவனான இராவணனுக்கு(அக்காலத்திற்கு)ஏற்காத பெரிய உறுதிமொழிகளைச் சொல்லலானான்;(எ-று.)—மகோதரன் இராவணனுக்குக் கூறும் உறுதியை மேல்எழுகவிகளிற் காண்க. பி-ம்:—[1]இருந்தான். [2]ஆண்ட. [3]மாய்கைகள். [4]தீயென. [5]விழித்துநோக்கிச்சிறுமையென், நோக்கிநீயிச்சிறுமையென், நோக்கியென்னீசிறுமையென். [6]ஒயுறு. (கஉ௫உ)

௩௫.---இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர். மகோதரன்கூறியவற்றைத் தெரிவிக்கும்.

நன்றிமீ தென்று [1]கொண்டா [2]னயத்தினை நயந்து வேறு
வென்றியே யாக [3]மற்றுத் தோற்றுயிர் விடுத லாக
ஒன்றிலே நிற்றல் போலா முத்தமர்க் குரிய தொல்லைப்
பின்றுமே [4]லவனுக் கன்றோ பழியொடு நரகம் பின்னை.

(இ - ள்.) இனியதை (ப் பெற) விரும்பி, 'இது நல்லது' என்று (ஒரு செயலை)மேற்கொண்டால், (அதனால் தோல்விக்கு) வேறான வென்றியேவிளையட்டும்: அன்றி, மாறாகத் தோற்று உயிரை விடும்நிலைமையே நேரட்டும்: (தாம் மேற்கொண்ட அந்த) ஒருசெயலிலே (உறுதியாக) நிற்பதே உத்தமர்க்குஉரிய செயலாம்: மனந்தளர்ந்து (தாம் மேற்கொண்டசெயலை நிகழ்த்தப்) பின்வாங்குவானாகில், அங்ஙனஞ்செய்பவனுக்குப் பின்பு பழியும் நரகும் (விளையும்) அல்லவோ? (எ - று.)—இதனால், ஒருகால் தோல்விநேருமென்று தோன்றினாலும், மேற்கொண்டசெயலினின்று பின்வாங்குதல் தகாதெனக் கூறியவாறு. பி-ம்:—[1]கொண்ட, கொண்டு, கொண்டார். [2]நயந்தனை. [3]மற்றுந், வேறு, மாறுந், மற்றோர். [4]அவருக்கு. (கஉருங)

ந.சு. திரிபுர [1]மெரிய வாங்கோர் தனிச்சரந் துரந்த செல்வன்
[2]ஒருவனிப் புவன [3]மூன்று மோரடி யொடுக்கிக் கொண்டோன்
பொருதுனக் குடைந்து போனார் மானிடர் பொருத போர்க்கு
வெருவுதி போலு [4]மன்ன கயிலையை வெருவல் கண்டாய்.

(இ - ள்.) திரிபுரங்கள் எரியும்படி அங்கே ஒப்பற்றதனிப்பாணத்தைச் செலுத்திய அஷ்டைசுவரியங்கட்குஉரியவனான சிவபெருமானும், தானொருவனாக இந்தப்புவனங்கள் மூன்றையும் ஓரடியிலேயடங்கச்செய்த திருமாலும், போர்செய்து உனக்குத் தோற்றுப்போனார்கள்; மன்னவனே! கயிலைமலையை யசைத்தவனே!மானுடர் பொருத போருக்கு(நீ)அஞ்சுவாய்போலும்; (எ - று.)—இதனால், மனிதர்புரியும்போர்க்கு நீ வெருவவேண்டுவதில்லையென்று உறுதிகூறியவாறு. பி-ம்:—[1]தீய. [2]ஒருதனிப். [3]எல்லாம். [4]மானக், மேனாட். (கஉருச)

நஎ. வென்றவர் தோற்பர் தோற்றோர் வெல்குவ ரெவர்க்கு மேலாய்
நின்றவர் தாழ்வர் தாழ்ந்தோ [1]ருயர்குவர் [2]நெறியு மஃதே
[3]என்றன ரறிஞ ரன்றோ யாற்றலுக் கெல்லை யுண்டோ
[4]புன்றவ [5]ரிருவர் போரைப் [6]புகழ்தியோ புகழ்க்கு மேலோய்.

(இ - ள்.) 'வென்றவர் தோற்பார்கள்: தோற்றவர் வெல்வார்கள்: எவர்க்கும்மேலாகநின்றவர் தாழ்ச்சியடைவார்கள்:தாழ்ந்தவர்மேன்மையடைவார்கள்: (உலகத்து நடக்கும்) முறையும் அவ்வாறனதே' என்று அறிந்தவர் கூறினாரன்றோ! வல்லமைக்குஒருஎல்லையுண்டோ? (யார்)புகழ்ச்சிக்கும்மேம்பட்டிருப்பவனே! (இவ்வாறுஇருப்ப), புல்லியதவத்தையுடைய இராமலட்சுமணரிருவரின்போரைப் புகழ்கின்றாயோ? (எ - று.)

வென்றவர் தோற்பதுமுதலியன உலகத்தியற்கையேயாதலால், இராமலட்சுமணர் வென்றார்போன்றார்: இதுபற்றி, அன்னாரைப்புகழ்வது தகுதியோ? என்றவாறு: இனி, நீஇராமலட்சுமணரின்வீரத்தைப் பாராட்டிக்கூறுவது வெற்றிதோல்வியொருதலையல்ல என்பது பற்றிப்போலும்: இவ்வாறு இருப்பது அறிஞரின்செய்கையென்று இராவணனைச் சமாதானப்படுத்தியவாறெனக் கொள்வாருமுளர். பி-ம்:—[1]உயருவர். [2]நெறியுமீதே, நெறியின்மீதே, நேயமீதே. [3]என்றவர். [4]புன்றொழில். [5]மனிதர். [6]புகலுதி. (கஉருரு)

ந அ. தேவியை விடுதி யாயிற் [1]றீருமுன் றீமை யன்றேல்
ஆவியை [2]விடுத லன்றி யலமைதான் றுவ துண்டோ
தாவரும் பெருமை [3]யம்மா [4]நீயினித [5]தாழ்ந்த தென்னே
[6]காவல விடுதி யின்றிக் கையறா [7]கவலை நொய்தின்.

(இ - ள்.) தேவியை[சீதையை]விடுவாயாளுல், உனக்குத்தீமை வாராமல் (திண்ணமாகத்)தீரும்: அவ்வாறுவிடாவிடின் (அதமபட்சமாக நேரக்கூடியது) உயிரைவிடுவதல்லது, வேறொன்று நடப்பதுண்டோ? (இதுவரையில்) அழித லில்லாத(உன்)பெருமையை இப்போது நீ தாழ்த்துக்கொள்வது எதற்கு?காவ லனே! இந்தச்செயலறுதற்குக் காரணமான கவலையை இன்றுவிரைவில் விட் டிடுவாய்;(எ-று.)—அம்மா-வியப்பிடைச்சொல்: எதற்குங் கலங்காத மனநிலே யையுடைய இராவணன் தன் மனநிலே கலங்கியதுகுறித்து வியந்தமையைத் தெரிவிக்கும். இக்கையறுகவலே இன்றுநொய்தின்விடுதியென்க.

இதனல், சோர்வுங் கவலேயும் நீங்கி, உறுதிகொள்வா யெனத் தெரு ட்டியவாறு. பி-ம்:—[1]திறலதுதீருமன்றே, தீருகின்றிறலுமன்றே, திறலது தீருமன்றேல். [2]விடுதலல்லாலன்றிமற்று, விடுவதல்லாலன்றிமற்று. [3]ஐயா. [4]நீயிங்குத், நீயிறை. [5]தாழ்ந்தது, தாழ்ந்த. [6]காவலன். [7]கவற்சி. (கஉருகூ)

ந கூ. இனிபிறை தாழ்த்தி யாயி னிலங்கையும் [1]யாமு மெல்லாங்
கனியுடை [2]மரங்க ளாகக் கவிக்குலங் [3]கடக்குங் காண்டி
பனியுடை வேலேச் சின்னீர் பருகின [4]னிரவி யென்னத்
துனியுழந் [5]தயர்வ தென்னே [6]துறத்தியாற் றுன்ப [7]மன்னே.

(இ - ள்.) இனி ஒருநொடிப்பொழுதேனும் (போர்புரியாது) தாமதித்தி ருப்பாயாயின், இலங்கையும் நாங்களும் எல்லாம் பழங்களைக்கொண்டமரங் கள்போலாகும்படி வானரக்கூட்டம் வென்றுவிடும்; இதனைக்காண்; குளிர்ச்சி பொருந்திய கடலின் சிறிதுநீரை இரவி பருகினனென்று மனவெறுப்புக்கொ ண்டு வருந்துவது எதற்காக? துன்பத்தைத் துறந்திடுவாய்; (எ - று.)

இராட்சசசேனையோ கடல்போலப் பரந்துள்ளது: அதன்பேரளவைப் பார்க்குமிடத்து இராமனுலழிவுண்ட சேனையானது சூரியனுற்பருகப்படுகி ன்ற கடலின் சொற்பநீரைப்போலும்: அப்படியிருக்க, அதற்காக நீ வருந்த லாகாதென்பது, பின்னிரண்டடியின்கருத்து. ப்ரஸ்துதமாகிய இராவணனி டத்து அவர்ண்யமான வாக்கியார்த்தத்தையேற்றிக்கூறியதனல், வஞப்பு நிலேயணியாம். மன்னே-ஈற்றசை. பி-ம்:—[1]அரணும்யாமும். [2]மரங்களாலக். [3]கடத்தல். [4]பருதி. [5]அயர்வதுண்டோ, துயர்வதுண்டோ,அயர்வதென்னே. [6]துறத்தியித். [7]என்றான். (கஉருஎ)

ஙo. முன்னுனக் கிறைவ ரான மூவருந் தோற்றார் தேவர்
பின்னுனக் கேவல் செய்ய லல்லதொரு மொன்றும் பெற்றாய்
புன்னுனைப் பனிநீ ரன்ன மனிதரைப் பொருதென் [1]றுன்னி
என்னுனக் கிளைய தும்ப [2]கருணனே [3]யிகழ்ந்த தெந்தாய்.

(இ - ள்.) தலைமையுடையவரான பிரமவிஷ்ணுருத்ரர்களாகிற மூத்தே வரும் உனக்கு முன்னே தோற்றார்கள்:(அதற்கு)மேலும், உனக்கு ஏவல்செய்

யுமாறு உலகுஒருமூன்றையும் பெற்றுள்ளாய்: எந்தையே! புல்லின்நுனியில் ஒட்டிக்கொண்டுள்ள பனிநீரையொத்த மனிதரை ஒருபொருளாகமதித்து உனக்கு இளைய கும்பகர்ணனை இகழ்ந்தது என்? (எ-று.)—மூவர்தேவரும் என்க.

இப்படிப்பட்டசமயத்திற் கும்பகர்ணனை யனுப்பினால், அவன் மற்றவரையெல்லாம் தொலைக்கவல்லனாயிருக்கவும், அவ்வாறுசெய்யாதிருத்தலையே இகழ்ந்ததாகக் கூறுகின்றான். பி-ம்:—[1]எண்ணி. [2]தன்னனை. [3]இகந்தது. ()

சுரு. ஆங்கவன் றன்னைக் கூவி யேவுதி [1]யென்னி னைய
ஓங்கலே போல்வான் மேனி காணவே யொளிப்ப [2]ரன்றே
தாங்குவர் செருமுன் [3]னென்னிற் றபத ருயிரைத் தானே
வாங்குமென் றினைய சொன்னா னவனது மனத்திற் கொண்டான்.

(இ - ள்.) ஐயனே! அந்தக்கும்பகர்ணனை வரவழைத்து(ப் பொருமாறு) ஏவுவாயாயின், மலைபோன்றவனான அந்தக்கும்பகர்ணனது மேனியைக் காணவே (அஞ்சி அப்பகைவர்) ஒளித்துக்கொள்வார்களன்றோ? (ஒருகால் ஒளித்துக்கொள்ளாமல்) முன்னே (வந்து) பொருதல்தொழிலை மேற்கொள்வாராயின், தாபதரான அந்த இராமலட்சுமணர்களின் உயிரை(க் கும்பகர்ணன்) தானே வாங்குவான் என்று இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொன்னான்: அந்தஇராவணன் அந்தச்சொல்லை மனத்துட்கொண்டான்; (எ - று.)—பி-ம்:—[1]ஆகில். [2]அன்னோர், ஒன்னார். [3]என்றால். (கஉருக)

சுஉ.—மகோதரன்சொன்னதை இராவணன் மெச்சுதல்.

பெறுதியே யெவையுஞ் [1]செல்வம் [2]பேரறி வாள [3]சீரிற்று
அறிதியே யென்பால் வைத்த வன்பினுக் களவு [4]முண்டோ
உறுதியே சொன்னா யென்னா வுள்ளமும் வேறு பட்டான்
இறுதியே [5]யியைவ தானா லிடை[6]யொன்றாற் [7]றடையுண் டாமோ.

(இ-ள்.) (அதுகேட்ட இராவணன்,—மகோதரனைநோக்கி), 'பேரறிவாளனே! (நீ) எல்லாச்செல்வமும் பெறுதற்குரியாய்: சிறந்தசெயலை அறிகின்றாய்: (நீ) என்னிடத்தில்வைத்த அன்பிற்கு ஓரெல்லையுண்டோ? (எனக்கு) உறுதியானசெயலையே சொன்னாயென்று (அவனைக்) கொண்டாடி (துயர்கொண்டு சோர்ந்திருந்த) மனம் மாறுபட்டவனானான்; இறுதிக்காலம்நேர்வதானால் இடையே வேறொன்றினால் தடையுண்டாமோ? (எ - று.)

'விநாசகாலம்கிட்டியதனால்இராவணனுடையஅழுங்கிய மனம்உறுதியையடைந்தது' என்ற விஷயத்தை, வேற்றுப்பொருள்வைப்பணியினால் விளக்கினார்: பொதுப்பொருள் சிறப்புப்பொருளைச் சமர்த்தித்துநின்றது. 'விநாசகாலேவிபரீதபுத்தி:'' சீரிற்று - ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும் பெயர். பி-ம்:-[1]சொல்லப், சொல்லிப். [2]பேரறிவாளர். [3]சீரிது. [4]இல்லை. [5]விளைவதானால், எய்வதாயின். [6]ஒன்றில். [7]தடையுமுண்டோ, தகைவுண்டாமோ. ()

சுக.—இராவணன் கும்பகர்ணனையழைத்துவருமாறு பணியாளரையேவ, அவர் கும்பகர்ணனது அரண்மனையை யடைதல்.

நன்றிது கரும மென்னா [1]நம்பியை நணுக வோடிச்
[2]சென்றிவட் டருதி ரென்றா னென்றலு நால்வர் சென்றார்

தென்றிசைக் கிழவன் றூதர் தேடினார் [3]செல்வா ரென்னக்
குன்றினு முயர்ந்த தோளான் [4]கொற்றமாக் கோயில் புக்கார்.

(இ - ள்.) '(கும்பகர்ணனைப் போருக்குச் செலுத்துவதாகிய) இச்செயல் தக்கதே' என்று சொல்லி, (தூதரைநோக்கி), '(நீங்கள்) ஓடிப்போய், சிறந்த கும்பகர்ணனை இங்கே வருமாறு அழைத்துவாருங்கள்' என்று கட்டளையிட்டான்; (இராவணன்); என்றவுடனே யமதூதர் தேடிக்கொண்டுசெல்வதுபோல நான்குதூதர்சென்று, குன்றைவிடஉயர்ந்ததோளையுடையவனான கும்பகர்ணனதுவெற்றியுள்ள பெரியஅரண்மனையிற் புகுந்தார்கள்; (எ - று.)

ஓடிச்சென்று நம்பியை இவண் நணுக தருதிர் என்க. தூதர் கும்பகர்ணனையழைக்கச்செல்வது அவனது மரணத்தின்பொருட்டே யென்பதை விளக்க, 'தென்றிசைக்கிழவன் றூதர் தேடினர் செல்வாரென்ன' என்றார். பி-ம்:— [1]நம்பிபால்விரைவினண்ணி. [2]இன்றிவட்டருதிர், சென்றிவற்றருதிர். [3]திரிவார். [4]துஞ்சிடங்கூடிப்புக்கார். (௧௨௬௧)

௪௪.—கையினாலும் தண்டாலும் தாக்கவும், கும்பகர்ணன் எழுந்திராமை.

கிங்கரர் நால்வர் சென்றக் கிரியனான் கிடந்த [1]கோயில்
மங்குறோய் வாயில் சார்ந்து மன்னநீ யுணர்தி யென்னத்
தங்கையி னெழுவி னாலே தலைசெவி [2]தாக்கப் பின்னும்
வெங்[3]கணார் துயில்கின் றானை வெகுளியா லினைய சொன்னார்.

(இ - ள்.) பணியாளர் நால்வர் போய், மலையையொத்தவனான அந்தக்கும்பகர்ணன் படுத்திருக்கிற அரண்மனையின் மேகம்படிகின்றவாயிலைச் சேர்ந்து, '(இளைய) அரசனே! துயிலுணர்வாய்' என்றுசொல்லி, தம்முடையகையிலுள்ள இருப்புத்தூணினால் தலையிலும்செவியிலும் மோதவும் பின்புந் துயில்கின்ற அந்தக்கும்பகர்ணனைப்பார்த்து, கொடுங்கணார் சினத்தினால் இவ்வார்த்தைகளைசொல்லலானார்; (எ - று.)—அவர்கள் கூறுவதை மேலேகாண்க.

இதுமுதல் "சென்றனர்பத்துநூறு" (௪௧) என்றுதொடங்கும் பாடல்முடியும்வரையில் சிலஏட்டுப்பிரதிகளி லில்லை: இவை செருகுபாடலாயிருக்கவேணும். மேல்வரும் பாடல்களிரண்டும் பணியாளர் சொல்லத்தகாதனவாயிருத்தலும், மல்லர்கள்உள்ளே புகமுடியாமல்வருந்தினாரென்று மேல்வருவதனோடு கிங்கார்நால்வர்நேரே சென்றுஎழுப்பினாரென இங்குக்கூறுவது மாறுபடுதலுங்காண்க. பின்னிரண்டடிகள் ஒருபிரதியில் "தங்கையாற் குளிர்ந்த சந்தம் பூசிச்சாம்பிராணித்தூமம், வெங்கணான்றுயிலைநீக்கப் புகைத்திட்டு விளம்புகின்றார்" என்று உள்ளது: இப்பாடத்தின்கருத்துமுதனூலிலுள்ளது. பி-ம்:---[1]பள்ளி, பாழி. [2]தாக்கிப். [3]கணான், கணன். (௧௨௬௨)

வேறு.

௪௫.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: கிங்கரர் வெகுளியாற்கூறுவன.

உறங்கு கின்ற கும்ப கன்ன வுங்கண் [1]மாய வாழ்வெலாம்
[2]இறங்கு கின்ற தின்று காணெ ழுந்தி ராயெ ழுந்திராய்
கறங்கு போல விற்பி டித்த கால தூதர் கையிலே
உறங்கு வாயு றங்கு வாயி னிக்கி டந்து றங்குவாய்.

(இ - ள்.) உறங்குகின்ற கும்பகர்ணனே! உங்களுடையபொய்யாகிய வாழ்வுஎல்லாம் இன்று இறங்குவதற்குத் தொடங்கிவிட்டது; இதனைக் காண்பாய்; எழுந்திருப்பாய், எழுந்திருப்பாய்; காற்றுடிபோலத்திரிகின்ற வில்லைப்பிடித்த யமதூதரின் கையிலே உறங்குவாய் உறங்குவாய்; இனிப்படுத்துறங்குவாய்; (எ - று.)—பி-ம்:--1சேனே. 2இறங்குகின்ற, இறந்துபோகுது.

சசு. என்று மீறி லாவ ரக்க [1]ரின்ப மாய வாழ்வெலாஞ்
சென்று [2]தீய நும்மு ஞேன்றெ ரிந்து தீமை தேடினன்
[3]இன்றி றத்த றிண்ண மாக வின்ன முன்னு றக்க[4]மே
[5]அன்ற லைத்த செங்கை யால லைத்த லைத்து ணர்த்தினர்.

(இ-ள்.) என்றும் அழிவில்லாதது போன்றிருந்த அரக்கருடைய இன்பமுள்ள பொய்வாழ்வெல்லாம் போயழிந்திட, உமது அண்ணன் தெரிந்து தீய தொழிலைத் தேடிக்கொண்டான்; இன்று இறந்துவிடுதல் திண்ணமாகவும், இன்னும் உனக்கு உறக்கமா? (என்றுசொல்லி), அப்போது (எழுப்பி) அலைச்சற்பட்ட செந்நிறக்கையால் (மீண்டும்)அலைத்தலைத்து எழுப்பினர்கள்;(எ-று.) —பி-ம்:---1இம்மையின்ப.2அறிந்ததுன்.3இன்றழித்தல்.4ஏது,என்.5குன்று.()

சஎ.—தங்களாற் கும்பகர்ணனை எழுப்பமுடியாமையைத் தெரிவிக்க, குதிரை யானை முதலியவற்றால் மிதிக்கவிட்டு எழுப்புங்களென்று அவற்றை இராவண னேவுதல்.

என்று [1]சொல்ல வன்ன வன்னெ ழுந்[2]தி ராமை கண்டுபோய்
[3]மன்ற றங்கு மாலை [4]மார்ப வன்று யில்லெ ழுப்பலம்
[5]அன்று கொள்கை கேண்மி னென்று மாவொ டாளி யேவினன்
ஒன்றன் மேலொ ராயி ர[6]மு ழக்கி விட்டெ ழுப்புவீர்.

(இ - ள்.) என்றுசொல்லவும், அந்தக்கும்பகர்ணன் எழுந்திராமையைக் கண்டு, (அங்குநின்றுகிங்கரர்)போய்,(இராவணனையடைந்து),'வாசனைதங்கிய மாலையையணிந்தமார்பையுடையவனே! (கும்பகர்ணனை) வலியஉறக்கத்தினின்று எழுப்பவல்லோமல்லோம்; (என்றுதெரிவிக்க), அப்போது, (இராவணன், இப்போதுசெய்யவேண்டிய) செயலைக் கேண்மின்; ஒன்றன்மேலொன்றாய் யானை யாளிஎன்றவற்றை ஓராயிரக்கணக்காக மிதிப்பித்து எழுப்புவீர் என்றுசொல்லி யானைகளுடனே சிங்கங்களையும்(அவர்களுடன்)அனுப்பினன். ஆயிரம்முழக்கிஎன விரித்தல்விகாரப்பாடமுமுண்டு. உழக்கிவிடுதல்-மிதிப்பித்தல். பி-ம்:—1சொல்லி. 2இராதுமீண்டு. 3மன்றலங்கல். 4மார்பன்வன்றுயிலெழுந்திலன், மார்பமன்னவற்குணர்த்தலும். 5நன்றுகொள்கைகேண்மின், என்றுகொள்கைகேண்மின், என்றுசொல்லநன்றிது. 6உழக்கிவிட்டுழப்புவீர், உறற்றவிட்டரப்பினர், உழக்கவிட்டெழுப்புவீர், உழக்கிவிட்டெழுப்பவே, உழக்கிவிட்டெழுப்பென. (கஉசுரு)

சஅ.—குதிரைமுதலியவைகளும் எழுப்பமுடியாமல் திரும்பியதைத் தெரிவிக்க, இராவணன் மல்லரைச் சேனையோடுசெல்ல ஏவுதல்.

அனைய [1]தானை [2]யன்று செல்ல வாண்டு நின்று பேர்ந்திலன்
இனைய [3]சேனை [4]மீண்ட தென்றி ராவ ணற்கி யம்பலும்

5வினையம் வல்ல நீங்க 6ளுங்க 7டானை யோடு சென்மி னென்று
இனைய மல்ல ராயி ரரை 8யேவி நின்றி யம்பினான்.

(இ - ள்.) 'அந்தச்சேனை அப்போது(மிதித்துச்)செல்லவும்(தான் உறங்கிய) அவ்விடத்தினின்று (கும்பகர்ணன்) அசையவுமில்லை: இந்தச்சேனையும் (கும்பகர்ணனை யெழுப்பமுடியாமல்) மீண்டது' என்று இராவணனுக்குச் சொல்லவும்,—'தொழில்செய்வதில்வல்லமையுடைய நீங்கள் உங்கள்சேனையோடு (கும்பகர்ணனையெழுப்புமாறு) செல்லுங்கள்' என்று இப்படிமல்லராயிரரை யேவிநின்று கூறினான்; (எ - று.)

'வினையம்வல்லநீங்கள்மேவி யிரண்டுமூன்றுமுப்பதென், றினையபல்லிகளுதவெழுந்திலன்கணென்றனர்' என்று மூன்றுநான்காமடிகள் 'இனைய... நூறுபத்தை...அருளினான்' அல்லது'இனையவீரர்...அருளினான்'என்று நான்காமடி சிலபிரதியிலும் காணப்படுகின்றன. ஆயிரார்-ஆயிரவர். பி-ம்:—1செய்த. 2காலெசெல்ல, அங்குழக்க. 3பேர்கள், தானை. 4மீண்டுசென்று. 5மல்லல்நீங்க, வல்லநீர்கள். 6நுங்கள். 7சேனையோடுமேவும். 8ஏவவங்கண்மேவினார். (கஉசுசு)

வேறு.

சகூ.—ஆயிரம்மல்லர்கள் எழுப்புமாறு கும்பகர்ணன்றன்மனையை யடைதல்.

சென்றனர் பத்து 1நூற்றுச் சீரிய வீர ரோடி
2மன்றலந் தொங்க லான்றன் 3மனந்தனில் வருத்த 4மாற
5இன்றிவன் 6முடிக்கு மென்று 7வெண்ணின ரெண்ணி யீண்டக்
8குன்றென வுயர்ந்த தோளான் கொற்றமாக் கோயில் புக்கார்.

(இ - ள். ஆயிரஞ்சிறந்தவீரர்கள், ஓடிப்போய்,'நறுமணம்வீசுகின்ற அழகிய மாலையையணிந்த இராவணனது மனவருத்தம்நீங்கும்படி இப்போது இவன் இராவணனுடையகருத்தை முற்றுவிப்பான்'என்றெண்ணினர்: (அவ்வாறு)எண்ணி, விரைவாக, குன்றைவிடஉயர்ந்ததோளையுடைய கும்பகர்ணனது வெற்றிதங்கிய பெரிய அரண்மனையிற் புகுந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—1நூறு. 2மன்றலர். 3மனத்தினில், மார்பினில். 4ஆக. 5இன்றிது, இன்றிவண். 6முடித்துமென்ன. 7எழுப்புகையெண்ணியீண்டக், எழுப்புகையெண்ணிமீண்டக், எண்ணினரெண்ணியீண்டிக். 8குன்றினும்.

இங்கேஎட்டுப்பிரதிகள் பலவற்றில் ஒருசெய்யுள் காணப்படுகின்றது: அதுவருமாறு:—

ஓதநீர் 1விரிந்த தென்ன வுறங்குவா னுசிக் காற்றுற்
2கோதில 3மலைகள் கூடி வருவது போவ தாக
ஏதெலாங் 4கண்ட வீர ரேங்கினர் 5துணுக்க முற்றார்
போதுவா னருகு செல்லப் பயந்தனர் 6பொறிகொள் கண்ணார்.

பி-ம்:—1இசைந்தது, அசைந்தது. 2கோதிலா. 3மல்லர். 4கண்டு. 5திகைப்புக்கொண்டார். 6பிறழுங்கண்ணார், பூதம்போல்வார். (கஉசுஎ)

ரு0.—சென்றவர் அரிதில் அரண்மனைவாயிலினுட்புகுதல்.

திண்டிறல் 1வீரன் வாயிற் றிறத்தலுஞ் சுவாத 2வாதம்
மண்டுற வீர ரெல்லாம் வருவது 3போவ தாகிக்
4கொண்டுறு தடக்கைப் பற்றிக் 5குலமுடைட் வலியி னாலே
6கண்டுயி லெழுப்ப வெண்ணிக் 7கடிதொரு வாயில் புக்கார்.

(இ - ள்.) கண்டுயிலெழுப்பக்கருதி மிக்கவலிமையையுடைய வீரனான கும்பகர்ணனது அரண்மனைவாயிலைத் திறந்தவுடனே, (அந்தக்கும்பகர்ணனது) சுவாதக்காற்றானது மிகவும்வீசுதலால் வீரர்யாவரும் வெளியேவருவதும் உள்ளேபோவதுமாகி, (இவ்வாறுதத்தளித்துப் பிறகு), வலிபொருந்திய பெரிய கைகளை ஒருவர்க்கொருவர்பிடித்துக்கொண்டு, திரண்டுள்ள தமதுவலிமையினாலே விரைவாக ஒப்பற்றவாயிலினுட்புகுந்துவிட்டார்கள்; (எ - று.)—
பி-ம்:---1வீரர். 2வாயு. 3போவதாகக். 4கண்டுறு, கொண்டுடைத். 5காலுடை வலியிலேறி. 6விண். 7வேறொரு. (கஉகூஅ)

ருக.—கும்பகர்ணனையெழுப்புமாறு சென்றவர் சங்கு முதலியவற்றினின்று ஒலியெழுப்புதல்.

இங்கிவன் றன்னை யா1மின் றெழுப்பலாம் வகை2யே தென்று
துங்க 3பேழ் வாயு மூக்குங் கண்டுமெய் 4துணுக்க முற்றார்
அங்கைக டீண்ட வஞ்சி யாழ்செவி 5யதனி னூடு
சங்கொடு தாரை 6சின்னஞ் சமைவுறச் சாற்ற லுற்றார்.

(இ - ள்.) 'இன்று இப்போது இவன் தன்னை யாம் எழுப்புதற்குக்கூடிய வகை யாது?' என்று எண்ணமிட்டு, (அவனது) மேடானபிளந்தவாயும் மூக்கும் கண்டு உடல்நடுக்கமெடுத்து, (அவனது) கைகளைத்தீண்டுவதற்கும்அஞ்சி (அவனுடைய) ஆழ்ந்தசெவியினுள்ளே சங்கம் தாரை சின்னம் என்ற ஊது கருவிகளைப்பொருந்தப்பேரொலிசெய்யத் தொடங்கினார்கள்; (எ-று.)—சமைவுற - யுகாந்தகாலத்தின் றன்மைபொருந்தவெனினுமாம். பி - ம்:—1இங்கு. 2யாதென்று. 3வெவ்வாயும்மூக்கும், மெய்வாய்மூக்கது, வாயுதடுமூக்கும். 4துளங்கித்துண்ணென்று. 5அதனினுள்ளே. 6பேரிமத்தளந்தாக்கல். (கஉகூகூ)

ருஉ.---என்னசெய்தும் கும்பகர்ணன் விழியானாக, அதனை இராவணனுக்கு அறிவிக்க, அவன் குதிரைகளை மேலேசெலுத்துமாறு கூறல்.

1கோடிக றண்டு 2கூடங் குந்தம்வல் லோர்கள் கூடித்
3தாடைகள் சந்து மார்பு 4தலையெனு மிவற்றிற் றாக்கி
வாடிய கைய ராகி 5மன்னவற் குரைப்பப் பின்னும்
நீடிய பரிக ளெல்லா 6நிரப்பிடும் விரைவி னென்றான்.

(இ - ள்.) மலைச்சிகரத்தையொத்த தண்டாயுதமும் சம்மட்டியும் ஈட்டியும் என்னும்இப்படைகளில்வல்லவர்கள் ஒன்றுகூடி (அந்தக்கும்பகர்ணனது) தாடைகள் உடற்பொருத்துகள் மார்பு தலை என்ற இவ்விடங்களிலே தாக்கிக் கையோய்ந்தவராய், (பிறகு) ராட்சசராசனான இராவணனுக்கு (அதனைத்)தெரிவிக்க, (அவன்) பின்னும் 'நீண்ட குதிரைகளை யெல்லாம் விரைவாக (அவன்மீது)நிரம்பச்செலுத்துங்கள்' என்றான்; (எ - று.)—ருரு - ஆம்பாடலில் இராவ

ணன் 'சூலம்வாள்முதலிய படைக்கலங்களைக்கொண்டாயினும்எழுப்புக'என்று கட்டளையிடுவதனால்,இங்குக் கையினாலேயே தாக்கியெழுப்பலானார்களென்க. ஆயின்,தண்டுகூடங்குந்தம்வல்லோர்கள் என்று அவரைக் கூறியது எற்றுக்கு? எனின்,—படைக்கலம்பழகித்தீர்ந்த முருட்டுக்கையர் அவர் என்று தெரிவித்தற்கு என்க. நீடியகரிகளாலேமிதித்திடச்செய்துநின்றார்என்று ஒருபிரதியில் நான்காமடி காண்கின்றது. பி-ம்:—[1]கோடிகழ். [2]பிண்டிபாலம், கூட்டஞ்சங்கு. [3]தாடிகள். [4]தலைசெவிதாக்கலோடும், தலையெனுமவையிற்றாக்கி, தலையெனுமவற்றிற்றாக்கி. [5]வலியறமாண்டுநின்று. [6]நிரைத்திடும். (௧௨௭௦)

௫௩.—குதிரைகள் துகைக்க அதனாற் கும்பகர்ணன் இனிதுஉறங்குதல்.

கட்டுறு கவன மாவோ ராயிரங் கடிதின் வந்து
[1]மட்டற வுறங்கு வான்றன் மார்பிடை [2]மாலை மான
விட்டுற நடத்தி யோட்டி [3]விரைவுள சாரி வந்தார்
[4]தட்டுறு குறங்கு போலத் [5]தடந்துயில் கொள்வ தானான்.

(இ - ள்.) மிதமில்லாதஉறக்கத்தைக்கொண்டுள்ளவனான அந்தக்கும்பகர்ணனது மார்பிலே, மாலையையொத்திருப்ப (க்கடிவாளம்முதலியன) பூட்டப்பெற்றவிரைந்துசெல்வனவான ஓராயிரங்குதிரைகள் விரைவின்வந்து இருக்கவிட்டுப் பின்பொருந்தநடத்தி,(அப்பால்) ஓட்டி, விரைவுபொருந்திய சாரிகையாக வந்தார்கள்; (அதனால், கும்பகர்ணன்), தட்டுகின்றதுடையைப்போல துடையில்தட்டுவதுபோல] ப் பெருந்துயில்கொள்ளலானான்; (எ - று.)

கும்பகர்ணனை யெழுப்பவேணுமென்ற கருத்துடன் குதிரைகளை அவனது உடலின்மேலேறச்செய்து நடத்தியோட்டிச் சாரிவந்தது, தூக்கம் செவ்வனே பிடியாதவர்க்குத் துடையைத் தட்டிக்கொண்டிருந்தால் எப்படித் தூக்கம் நன்குவருமோ,அப்படி அக்கும்பகர்ணனது தூக்கமிகுவதற்குக்காரணமாயிற்றென்றவாறு: ஒன்றைப்பெறவிரும்பிச்செய்த தொழில் அதற்கு மாறானபயனைவிளைத்தலாகிய நநுதியின்மையணி இங்குக் காணத்தக்கது. பி-ம்:—[1]மட்டுற. [2]வருத்தமாக, வருத்தஞ்செய்ய, வருத்தமாற. [3]சாரியின் விரைவின், விரைவொடுசாரி. [4]தட்டுறல். [5]தான். (௧௨௭௧)

௫௪.—பணியாளர் இராவணனுக்கு அச்செய்தியைத் தெரிவித்தல்.

கொய்ம்மலர்த் [1]தொங்க லான்றன் குரைகழல் வணங்கி ஐய
[2]உய்யலாம் வகைக ளென்றிங் கெழுப்பலாம் [3]வகையே செய்தும்
கையெலாம் வலிய [4]மோய்ந்த கவனமாக் காலு மோய்ந்த
செய்யலாம் வகை[5]வே றுண்டோ செப்புதி [6]தெரிய வென்றார்.

(இ - ள்.) (பிறகு பணியாளர் இராவணனைக்கிட்டி), 'கொய்தமலரால் தொடுக்கப்பெற்ற மாலையையணிந்தவனான இராவணனுடைய ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த பாதங்களை வணங்கி,'ஐயனே!(அரக்கர்)உய்வுபெறக்கூடிய வழி (யாகும் இந்தக்கும்பகர்ணனையெழுப்புவது)என்று கருதி இப்போது கும்பகர்ணனை) எழுப்பக்கூடிய உபாயங்களைச் செய்தும், கையெல்லாமும் வலியொடுங்கிவிட்டன: விரைவாகச்செல்லும் குதிரைகளின்காலும் வலி

யொடுங்கின: செய்யக்கூடிய் வகை வேறுண்டோ? (உண்டாயின், யாங்கள்) அறியும்படி (அதனைச்) சொல்லுவாய்' என்றார்; (எ - று.)

அரசனுணையென்றுமாத்திரம் கும்பகர்ணனை நாங்கள் எழுப்பவில்லை: அரக்கராகியநாங்களெல்லாம்உய்யும்வழியாயிற்றேயென்று எங்களக்கரையாகவும் எழுப்பினோ மென்பார், 'உய்யலாம்வகைகளென்றிங்கெழுப்பலாம் வகையே செய்தும்'என்றார். பி-ம்:—[1]அலங்கலான். [2]உய்வகைநாடிநின்றே, உய்யலாம் வகையுண்டென்றிங்கு, உய்யலாம்வகைவேறுண்டோ. [3]வகையேசெய்து, வகையேநாடி, உபாயஞ்செய்து. [4]ஓய்ந்து. [5]வேறில்லை. [6]தெரியும். (கஉஎஉ)

வேறு.

ருரு.—சூலம் மழு வாள்முதலியன எறிந்தாகிலும் எழுப்புக என்று இராவணன் கூறுதல்.

இடை[1]பேரா [2]விளையானை [3]யிணையாழி மணிநெடுந்தேர்
படைபேரா வரும்போதும் பதையாத [4]வுடம்பானை
மடைபேராச் சூலத்தான் மழுவாட்கொண் [5]டெறிந்தானும்
[6]தொடை[1]பேராத் துயிலானைத் துயிலெழுப்பிக் கொணர்கென்றான்.

(இ - ள்.) பொருந்திய சக்கரங்களைக்கொண்ட அழகிய பெரிய தேரும் (மற்றையானைமுதலிய) படையும் (தன்மீது) பேர்ந்துவரும்போதும் சிறிதும் வருந்தாத உடம்பையுடையவனாகி, தொடர்ந்திருத்தலைக்கொண்டு நீங்காத் துயிலைக்கொண்டவனான (என்னை) விட்டுநீங்காத தம்பியான கும்பகர்ணனை, மூட்டுக்குலையாத சூலங்களைக்கொண்டும் மழுப்படைகொண்டும் எறிந்தாயினும் துயிலெழுப்பி யழைத்துவாருங்க ளென்று (இராவணன்) கூறினான். (எ-று.)

தொடை - தொடர்ந்திருத்தல்: இடைவிடாதிருத்தல். நான்காமடியில், [6]புடைபேரா என்றபாடங்கொள்ளின், மோனைத்தொடையில்லாததாகும். மடை-மூட்டாதலை "மடையவிழ்ந்த வெள்ளிலைவேல்" என்ற இடத்துங் காண்க. விபீஷணனென்றதம்பி தன்னைவிட்டு நீங்கினானதலால் அவனைப் போலத்தன்னைவிட்டுநீங்குபவனல்லன் இந்தக்கும்பகர்ணனென்பான் 'இடைபேராவிளையானை' என்றா னென்பர். பி-ம்:—[1]பெயரா. [2]இளயானை. [3]மதயானையிவுளியொடு,இடையாளிமணிநெடுந்தேர். [4]மார்பானை. [5]எறிந்தாலும்.

ருசு.—பணியாளர் ஆயிரம்முசலப்படைகொண்டு அடிக்கக் கும்பகர்ணன் துயிலெழுதல்.

என்றலுமே யடி[1]வணங்கி [2]யீரைஞ்ஞூற் றிராக்கதர்கள்
வன்றொழிலாற் றுயில்கின்ற மன்னவன்றன் மாடணுகி
நின்றிரண்டு கதுப்புமுற நெடுமுசலங் [3]கொண்டடிப்பப் [ன்.
பொன்றினவ [4]னெழுந்தாற்போற் புடைபெயர்ந்தங் கெழுந்திருந்தா

(இ - ள்.) என்று (இராவணன்) கூறியவுடனே, ஆயிரம்இராக்கதர்கள் (இராவணனை) அடிவணங்கிவிட்டு, துயில்கின்ற அரசனான கும்பகர்ணனது அருகைச்சார்ந்துநின்று,(தமது)வலிய தொழில்செய்யுந்தன்மையால் இரண்டு கன்னத்திலும் பொருந்த நீண்டஉலக்கைகளைக்கொண்டு அடிக்க, அப்போது செத்தவன் எழுந்தாற்போல (அந்தக்கும்பகர்ணன்) படுத்தஇடத்தைவிட்டு

அசைந்துஎழுந்திருந்தான்; (எ - று.)—வன்தொழிலால் துயில்கின்ற-மிகவும் பலமாகஉறங்குந்தொழிலைச்செய்கின்ற என்று உரைத்தலு மூண்டு. பி-ம்:—[1]இறைஞ்சி.[2]எண்பதினுயிரமல்லர். [3]கொடுதாக்கப்.[4]எழுந்ததுபோற் புரண்டிரு கண்விழித்தனனால். (கஉஎச)

வேறு.

ருஎ.—கும்பகர்ணனது உடலின்தன்மை.

விண்ணினை யிடறு [1]மோலி [2]விசும்பினை நிறைக்கு மேனி
கண்ணெனு மவையி ரண்டுங் கடல்களிற் [3]பெரிய வாகும்
எண்ணினும் பெரிய ஞன விலங்கையர் வேந்தன் பின்னோன்
மண்ணினை [4]யளந்து நின்ற மாலென [5]வளர்ந்து நின்றான்.

(இ - ள்.) (மனத்தில் எண்ணினால்) எண்ணத்தையும் விஞ்சியிருக்கும் பெருமைபெற்றவனான இராவணனுடைய தம்பியான கும்பகர்ணன், மண்ணினை (த் திரிவிக்கிரமனாகி) யளந்துநின்ற திருமால்போல ஓங்கிநின்றான்: (அவனுடைய) மோலி விண்ணினை யிடறும்: உடல், விசும்பினைமறைக்கும்: கண்களிரண்டும் கடல்களிற் பெரியவாகும்; (எ - று.)

இந்தச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளில் இங்கில்லாமல்"அவ்வழி" (கூக) என்பதன்பின்உள்ளது. ஒருபிரதியில் "மூவகை" என்ற அடுத்த பாடலின் பின்காணப்படுகின்றது. பி-ம்:—[1]திண்மை, மேன்மை. [2]விளங்கியல்விசயத் தோள்கள், விசும்பினையழிக்குமேனி. [3]பெரியதாக. [4]அளக்கநீண்ட. [5]வந்து நின்றான், எழுந்திருந்தான், எழுந்துநின்றான். (கஉஎரு)

ருஅ.—கும்பகர்ணன்எழுந்திருந்தல்.

மூவகை [1]யுலகு [2]முட்க முரட்டிசைப் [3]பணைக்கை யானை
[4]தாவருந் திசையி [5]னின்று [6]சலித்திடக் கதிரு [7]முட்கப்
பூவுளான் புணரி மேலான் [8]பொருப்பினன் முதல்வ ராய
யாவருந் துணுக்குற் [9]றேங்க வெளிதினி னெழுந்தான் வீரன்.

(இ-ள்.) மூவகையுலகமும்அஞ்சும்படி வலிய பருத்த கையைக்கொண்ட திக்கஜங்கள் நீங்குதலில்லாத தமக்குஉரிய திக்குக்களிலிருந்து நிலைபெயரவும், சூரியனும் அஞ்சவும், பிரமனும் திருமாலும்சிவபெருமானும் முதலாகவுள்ள யாவரும் நடுக்கமுற்று ஏக்கங்கொள்ளவும் வீரனான கும்பகர்ணன் எளிதின் எழுந்தான்; (எ - று.)

புணரிமேலான்-கடலிற்பள்ளிகொண்டிருப்பவனான திருமால். பொருப்பினன்-கைலாயமலையை வாழிடமாகவுடையவன். 'புடைபெயர்ந்தங் கெழுந்திருந்தான்' என்று கீழ்க் கூறியிருக்கவும், மீண்டும் இங்கு 'எளிதினினெழுந் தான்வீரன்' என்று எழுந்ததையே கூறியது-எழுந்தபோது நிகழ்ந்ததை விளக்கும் பொருட்டுவந்த அனுவாதம். இங்ஙனம் அநுவாதமுகத்தாற் கூறுவது கூறியதுகூறலென்னும் குற்றமாகாதென்பதை "கூறியது கூறினுங் குற்றமில்லை, வேறொருபொருளை விளக்குமாயின்" என்பதனாலும் அறிக. இவ்வாறுகூறுவது, கவிசமயமாதலை ஆங்காங்குக் காணலாம். இச்செய்யுள் ஒரு

பிரதியி லில்லை. பி-ம்:—1உலகம். 2ஒக்க. 3பனைக்கை. 4தீவரும். 5காவல். 6வர்திடக், கலித்திடக். 7சிந்த. 8பொருப்புளான்முதலாயுள்ள. 9ஏக. (கஉஎசு)

வேறு.

ருசு.—ஊனும் நறவும் பெறாமையாற் கும்பகர்ணன் முகஞ்சாதல்.

உறக்க மவ்வழி நீங்கி யுணத்[1] தரும்
[2]வறைக்க மைந்தன வூனொடு [3]வாக்கிய
நறைக்கு டங்கள் பெறுன்கடை நக்குவான்
[4]இறக்க நின்ற [5]முகத்தினை [6]யெய்துவான்.

(இ - ள்.) அப்போது உறக்கம்நீங்கி,(உடனே) உண்ணுதற்குஉரிய வறுத்தல்பொருந்திய மாமிசத்துடனே வார்த்த கள்ளைக்கொண்ட குடங்களையும் பெறாதவனாய், கடைவாயைநக்கிக்கொண்டு இறத்தற்குப்பொருந்தின முகத்தை [சாமூஞ்சியை] அடைபவனானான்; (எ - று.)—விழித்தெழுந்தவுடனே ஊனும் கள்ளும் கொடாமையாற் கும்பகர்ணன்முகம் பிணமூஞ்சிப்பட்டதென்றார். நறைவாக்கியகுடங்கள் என்னலாம். பி-ம்:—1தரும். 2அறைக்கு. 3ஆக்கிய, வாங்கிய. 4இறக்குகின்ற. 5முகத்தனுக்கு. 6எய்தினாய், எய்தினான், எய்தினார்.

சு௦.—கும்பகர்ணன் அடிசில்கள்முதலியன உண்டதை, இதுவும் அடுத்த கவியும் தெரிவிக்கும்.

ஆறு நூறு சகடத் தடிசிலும்
நாறு நூறு [1]குடங்களு நுங்கினான்
[2]ஏறு கின்ற பசியை யெழுப்பினான்
சீறு கின்ற [3]முகத்திரு செங்கணான்.

(இ-ள்.) கோபமேமிகுந்துதோன்றுகின்ற முகத்தில் (அந்நிலைக்குஏற்ப) சிவந்த இரண்டுகண்களையுடையவனான கும்பகர்ணன், ஆறுநூறுவண்டிச் சோற்றையும் பலநூற்றுக்கணக்கான கட்குடங்களையும் உட்கொண்டவனாய், மிகுகின்ற பசியைப் பின்னும் கிளப்பினான்; (எ - று.)

பசித்தவர்க்குச் சிறிதுஉணவு கிடைப்பின் முன்னிருந்தபசி மிக்குத் தோன்றுவது, இயல்பு. ஆறுநூறுவண்டிஅடிசிலும் பலநூற்றுக்கணக்கான கட்குடங்களும் பசியை யெழுப்புவதாயின வென்றதனால், கும்பகர்ணன் அளவில்லாதுண்பவ னென்ன விளக்கியவாறு. பி-ம்:—1குடங்கணுகர்ந்தனன். 2ஏறுகின்றில. 3முகத்தினன். (கஉஎஅ)

சுக. எருமை [1]யேற்றை யோரீ ராறுநூற்றையும்
அருமை [2]யின்றியே தின்றிறை யாறினான்
பெருமை [3]யேற்றது கோடுமென் றேபிறங்கு
[4]உருமை யேற்றைப் பிசைந்தெரி யூதுவான்.

(இ - ள்.) ஆயிரத்திருநூறுஎருமைக்கடாக்களையும் வருத்தமில்லாமலே தின்று (பசி) சிறிதுஆறியவனாய், பெருமைபொருந்தியசெயலைச்செய்வோமென்று கருதி, விளங்குகின்றபேரிடியைப்பிடித்து (த் தன் கைகளாற்)பிசைந்து (அங்குத்தோன்றிய) நெருப்பை ஊதிவிடுவானாயினான்; (எ - று.)

இனி, இச்செய்யுட்கு வேறுவகையாகப் பொருள்கூறுவாருமுளர்: அது வருமாறு:—ஆணிடியையும் கையினாற்பிசைந்து நெருப்புப்பொறியாகப் பறக்கும்படி ஊதவல்ல கொடுமையையுடையவனான அந்தக்கும்பகர்ணன் ஆயிரத்திருநூறு எருமைக்கடாக்களையும் வருத்தமில்லாமல் (சிற்றுண்டியாகத்) தின்று, பெருமைபெற்றதாகவுள்ள உணவை [பேராகாரத்தை] ப் பிறகுஉட்கொள்வோமென்று அப்போதுஇருந்த பசி சிறிதுதணிந்தானென்பது. 'அருமையாற்றியேதுய்த்திறையாற்றினான்' என்று இரண்டாமடி சில பிரதிகளிற் காண்கின்றது. பி-ம்:—[1]ஏற்றைய. [2]அன்றியே. [3]ஏறியகைக்கொடுமெற், ஏறியகற்கொடுமெற், பெற்றதுகோடுமென்றே. [4]உருமின். (கஉஎக)

கூஉ.—இதுமுதல்எட்டுக்கவிகள் - கும்பகர்ணனது உருவவருணனை.

இருந்த போது மிராவண [1]னின்றெனத்
தெரிந்த மேனியன் றிண்கட லின்றிரை
[2]நெரிந்த தன்ன புருவத்து நெற்றியான்
சொரிந்த சோரிதன் [3]வாய்வரத் தூங்குவான்.

(இ - ள்.) உட்கார்ந்தநிலையிலும் இராவணன் நின்றாற்போல ஓங்கிக் காணப்படுகின்ற உடம்பையுடையவனும், வலிய கடலின்அலைகள் வளைந்து தோன்றுவதையொத்த புருவத்தைக்கொண்ட நெற்றியை யுடையவனுமாகி, (கும்பகர்ணன்),—(உட்கொண்ட மாமிசத்தினின்று) வெளிப்பட்ட இரத்தம் தன்வாயிலிருந்து(சிறிது)பெருகவும்(பின்னும்)துயில்மயக்கத்துடனே யிருந்தான்; (எ - று.)

இராவணன் நிற்கும்போது எவ்வளவுஉயரமாகத் தோன்றுவனோ, அவ்வளவுஉயரம் கும்பகர்ணன் இருக்கும்போதே அவனுக்கு இருந்த தென்க. உறக்கத்தினின்றுஎழுந்தான் என்று கீழ் வந்திட்டதனால் தூங்குவான்என்பதற்கு - துயில்மயக்கந்தோன்றஇருந்தான் என்று பொருள் கூறப்பட்டது. பி-ம்:—[1]நின்றிடத். [2]நெரிந்த. [3]வாயுகத், வாயுறத். (கஉஎ௦)

கூங. உதிர வாரியொ [1]டூனொ டெலும்புதோல்
உதிர வாரி நுகர்வதொ ரூணினான்
கதிர வாள்வயி ரப்[2]பணைக் கையினான்
சுதிர வாள்வயி ரக்கழற் காலினான்.

(இ - ள்.) (அந்தக்கும்பகர்ணன்),—உதிரப்பெருக்கும் ஊனும் எலும்பும் தோலும் வெளிச்சிந்துமாறு வாரியெடுத்து உட்கொள்வதாகிய ஒப்பற்ற உண்ணுதற்றொழிலையுடையவன்; நெற்கதிரின்தன்மையைக்கொண்ட வாட்படையேந்திய உறுதியாய்ப்பருத்த கைகளையுடையவன்; சந்திரனுடைய ஒளிபோன்றுஒளிவிடுகின்ற வயிரம்பதித்துச்செய்த வீரக்கழலைப்பூண்ட பாதங்களையுடையவன்; (எ-று.)—யமகமென்னுஞ்சொல்லணி. முதலடியில், உதிரவாரி - இரத்தநீர். இரண்டாமடியில், உதிர - செயவென்னும்வினையெச்சம்.வாள், நெற்கதிர்போலு மென்க.நான்காமடியில்,வயிரக்கழல் சந்திரனொளியையொத்து வெண்ணிறமாகஇருக்குமென்க.'கதிர' இரண்டும்-குறிப்புப்பெய

ரெச்சம். நான்காமடியில், கதிர-பதினாறுகதிர்களைக்கொண்ட சந்திரனுடைய, வாள்-ஒளியைக்கொண்ட என்க. பி-ம்:—[1]ஊனுள்ளெலும்புதோல். [2]பனைக். ()

கூச. இரும்ப சிக்கு மருந்தென வெஃகிஞேடு
இரும்ப சிக்கு மருந்து மெயிற்றினன்
[1]வருங்க ளிற்றினைத் தின்றனன் மாலுறு
வருங்க ளிற்றிரி கின்றதொ ராசையான்.

(இ-ள்.) (அன்றியும்அவன்),—மிகுந்த பசியைத் தணித்தற்குஉரிய மருந்தென்று (தன்கையிலுள்ள) எஃகினாலும் இரும்பினாலும் இயன்றபடைகளை மென்றுண்டுபார்த்து(அவை அங்ஙனமாகாமையாற்)சிரிக்கின்ற பற்களையுடையவன்: வருகின்ற மதயானைகளைத் தின்று மயக்கம்நீங்காத அருமையான கள்ளிலேசெல்கின்ற மிக்கவிருப்பமுடையவன்; (எ-று.)—எஃகினொடு, ஒடு-எண்ணொடு. எஃகினொடிரும்பு-எஃகையும் இரும்பையும்என்க. எஃகு, இரும்பு - அவற்றாலியன்றபடைக்கலங்கட்கு ஆகுபெயர். இரும் பசிக்கு மருந்து என, எஃகினோடு இரும்புஅருந்தும் அசிக்கும் எயிற்றினன் என்க. அசிக்கும்-ஹஸிக்கும்: சிரிக்கின்றஎன்றுபொருள். நான்காமடியில், களில் - கள்ளில்என்பதன் தொகுத்தல். பி-ம்:—[1]அருங்களிற்றினைத்தின்றுமவாவுறு. (கஉஅஉ)

கூரு. சூல மேகர் [1]திருத்திய தோளினன்
[2]சூல மேக [3]மெனப்பொலி தோற்றத்தான்
[4]காலன் மேனிமிர் மத்தன் [5]கழற்பொரு
[6]காலன் மேனிமிர் [7]செம்மயிர்க் கற்றையான்.

(இ - ள்.) ஒப்பற்ற சூலப்படையைத் தீட்டிவைத்துக்கொண்ட கைகளையுடையவன்: கருக்கொண்ட மேகம்போல விளங்குகின்ற தோற்றமுள்ளவன்; யமன்மேற் போருக்குச்செல்லவல்ல உடற்கொழுப்பையுடையவன்; வீரக்கழல்கட்டிய பாதங்களையுடையவன்;மேனோக்கிவளர்ந்தசெம்பட்டமயிர்த்தொகுதியையுடையவன்; (எ - று.)

முதலடியில், சூலம் ஏகம் எனப்பிரிக்க: இனி, சூலமே-சூலப்படையையே,கந்து-கழுத்தடியில்,இருத்திய-இருக்குமாறுபிடித்த, தோளினன்-கையையுடையவனெனக்கூறுவாருமுளர்; தோள் கையென்னும்பொருளில்வருதலை, "தோளுற்றொர்தெய்வம்" என்றஇடத்துங் காண்க. இரண்டாமடியில், சூல-கர்ப்பமென்ற பொருளுள்ள 'சூல்' என்றபகுதியினடியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம். இச்செய்யுள், சிலபிரதியில் "எயிறலைத்த" என்ற அடுத்தபாடலின்பின் காணப்படுகின்றது. பி-ம்:—[1]திருந்துயர். [2]சூலிமேகம். [3]திருத்திய. [4]காலன்மேனிமனத்தன், காலன்மேனிமிறைக்க. [5]கழற்பெருங், கனற்பொரு. [6]காலநேமியிற், காலின்மேனிமிர். [7]மூச்சுக்கடியனுன். (கஉஅங)

கூகூ. எயிற லைத்த கரதலத் திந்திரன்
எயிற லைத்த [1]கரதலத் தெற்றினன்
அயிற லைத்தொட ரங்கையன் சிங்கவூன்
அயிற லைத்தொட ரங்[2]ககல் வாயினன்.

(இ - ள்.) (பின்னும்), தலத்து - (தன்னிடமாகிய) சுவர்க்கலோகத்திலுள்ள, இந்திரன் - இந்திரனது, எயிறு அலைத்த - பற்களையுதிரச்செய்த, கர

தலத்து - கையினால், எயில் தலை தகர - (அவனது) மதிள் தலையுடைந்திடும்படி, எற்றினான்-மோதினான்; அயில்-வேற்படை, தலை தொடர்-தலைமையாகப் பொருந்திய,அம் கையன்-அகங்கையையுடையவன்: சிங்கவூன் - சிங்கத்தின் மாமிசத்தை, அயிறலை-உண்ணுவதை, தொடர்-மேற்கொண்டு,அகல்-அகன்ற, வாயினான்-வாயையுடையவன்; (எ - று.)—அங்கு-அசை: அப்போதுமாம்.

மடக்குப்பற்றி, இரண்டாமடியில் 'தகர' என்ற செயவெனெச்சத்தின் முன் வலி மிகவில்லை. அயிறல்-'அயில்'என்ற வினைப்பகுதியின்தொழிற்பெயர். மூன்றாமடியில்,தொடர்-பாசமென்னும்ஆயுதமென்றலுமுண்டு.நான்காமடியில் தொடர்=தொடர்ந்து:வினைப்பகுதி வினையெச்சப்பொருள்பட்டது. இனி,இப் பாடலுக்கு—எயிறு அலைத்த-(சினங்கொண்டு) பற்களைமென்றுஎதிர்த்த, கர தலத்து - (வலிய) கைகளையுடைய, இந்திரன்-இந்திரனை, எயில்தலை-அண்ட பித்திகையில், தகர-மோதும்படி, தலத்து-பூமியிலே, எற்றினான்-மோதினான்: அயில்-வேற்படையையும்,தலை தொடர்-சிறப்பாகியபாசத்தையும்பற்றிய,அங் கையன்-அழகியகையையுடையவன்: ஊன்-(பணியாளர்கொணர்ந்த) மாமிசம், சிங்க - குறைந்தால், அயிறலை தொடர் - உண்ணுதலைத்தொடர்ந்து, அங்கு - (உண்ணுகின்ற) அந்த இடத்தில்தானே, அகல் வாயினான்-வாயைத்திறந்து வைத்துக்கொண்டிருப்பவனென்று கூறுதலும்ஒன்று. பி-ம்:—[1]களிற்றொடு மெற்றினான். [2]அகன். (௧௨௮௪)

௯௭. [1]உடர்கி டந்துழி [2]யும்பர்க்கு முற்[3]றுயிர்
[4]குடர் கிடந்தடங் காநெடுங் கோளினான்
[5]கடல்கி டந்தது [6]நின்றதன் மேற்கதழ்
[7]படர்க டுங்கனல் [8]போன்மயிர்ப் பங்கியான்.

(இ - ள்.) (அல்லாமலும்), (தன்) உடல் (வெறுமனே) கிடக்கும்போதே (தன்னைக்காணும்)தேவர்க்கும் பெருங்குடல்(தாம் இருக்கவேண்டியஇடத்துப்) பொருந்திக்கிடந்து அடங்காத மிக்கவலிமைபடைத்தவன்: படுத்திருந்ததொரு கடல்(அத்தன்மையைவிட்டு)நின்ற தன்மேல்,விரைந்துசெல்லுந்தன்மையுள்ள கொடியவடவைக்கனல் விருப்பதுபோல் விளங்குகின்ற செம்பட்டமயிரை யுடையவன்; (எ - று.)

இவன் பொருதற்குவாராமல் படுத்திருப்பினும்,இவனைக் காணுந் தேவர் அச்சத்தாற் குடல் குழம்புமாறு பெருவலிபடைத்தவனென்பது:முதலிரண்டடிகளின்பொருள்.கிடந்த கும்பகர்ணன் எழுந்திருந்த இப்போது அவனது சிரத்தின்மீது விளங்குஞ் செம்பட்டமயிர், கிடந்தகடல் நின்ற தன்மேற் கதழ்படர் கடுங்கன லிருப்பதுபோலத் தோன்றுமென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி.உடர்முதலிய நான்கும்-போலிகள்.இச்செய்யுள் "காம்புறக்கும்" (௯௧) என்றதன்பின் சிலபிரதியி லுள்ளது. [3]உயிர்என்றபாடத்துக்கு-முற்றியஉயிர் குடலிலேகிடந்து அடங்காத என்க. குடல்-உடலுக்கு, இலக்கணை. பி-ம்:— [1]உடல். [2]உம்பற்கு. [4]குடல், [5]கடல்.[6]நின்றனன்மேற்கதழ்,நின்றதுமேனிமிர். [7]வடவைக்கனல், [8]போனெடுங். (௧௨௮௫)

௬அ. திக்க டங்கலும் வென்றவன் [1]சீறிட
[2]மிக்க டங்கலில் வெங்கதி ரங்கிகள்
புக்க டங்கிய மேருப் புழையெனத்
தொக்க டங்கித் துயிறரு கண்ணினான்.

(இ - ள்.) (அன்றியும்), திக்குக்களையெல்லாம் வென்றவனான இராவணன் சீறுகையில் மிகவும்அடங்குதலில்லாத உஷ்ணகிரணங்களையுடைய சூரியனும் அக்கினியும் புகுந்துபதுங்குதற்குஉரிய மேருமலைக்குகைபோலத் தோன்றுகின்ற (இமைத்)தோல்சுருங்கி யுறக்கக்குறிப்பைத்தெரிவிக்கின்ற கண்களையுடையவன்:(எ-று.)—[2]மிக்கடங்கியஎன்றபாடம் சிறக்கும். தொக்கு-தோல். வெங்கதிர்-சூரியன்: பண்புத்தொகையன்மொழி. துயிறரும்,தா-துணைவினை. பி-ம்:—[1]சீறிடா. [2]மிக்கடங்கிய. (கஉஅசு)

௬௯. காம்பு [1]றங்குங் கனவரைக் கைம்மலை
தூம்பு றங்கு [2]முகத்தின துய்த்துடல்
[3]ஓம்பு றும்முழை [4]யென்றுயர் மூக்கினன்
பாம்பு றங்கும் படர்செவிப் பாழியான்.

(இ - ள்.) துவாரம்பொருந்திய முகத்தையுடைய கைம்மலை[யானைகள்], உண்டு உடலைப்போற்றுதற்குரியவான மூங்கில்தங்கிய பெரியமலையின் குகையென்றுசொல்லுமாறு உயர்ந்த மூக்கையுடையவன்;பாம்புஉறங்குமாறு பரந்த செவித்துளையையுடையவன்; (எ - று.)

தூம்புறங்கும்முகத்தின கைம்மலை துய்த்து உடல்ஓம்புறும் காம்புஉறங்கும் கனவரைமுழையென்று உயர்மூக்கினன்என்று முதல்மூன்றடிகட்கு அந்வயங் காண்க. இனி, காம்புறங்கும் கனவரையிலே தூம்புறங்கும்முகத்தினவாகிய கைம்மலை துய்த்து, உடல்ஓம்புறும்-தம்முடலைச்சிரமபரிகாரஞ்செய்துகொள்ளப்பெற்ற, முழை என்று உரைப்பாருமுளர். தூம்பு - துவாரம்.யானை மூங்கிற்குருத்தையுண்பது, இயற்கை. பி-ம்:—[1]இறங்கும். [2]அகத்தின துய்த்துடல்,மதத்தின துற்றிட,மதத்தின துற்றபின்.[3]ஓம்புறம்.[4]என்றுரை,உற்றுயர்.

எ௦.—கும்பகர்ணன் பணியாளர் வார்த்தையைக்கேட்டு இராவணனிடம் வருதல்.

கூயி னன்[1]னுமு னென்றவர் கூறலும்
போயி னன்னகர் பொம்மென் றிரைத்தெழ
வாயில் வல்லை நுழைந்து மதிதொடுங்
கோயி லெய்தினன் [2]குன்றன [3]கொள்கையான்.

(இ - ள்.) அந்தப்பணியாளர் 'உன்தமையன் உன்னைக்கூப்பிட்டான்' என்றுகூறலும், மலைபோன்றதோற்றமுள்ளவனாகிய கும்பகர்ணன்,—நகரெங்கும்பொம்மென்றுஆரவாரமுண்டாக(ப் புறப்பட்டுப்)போய்,வாயிலில்விரைந்து நுழைந்து சந்திரனையளாவுமாறுஓங்கியுள்ள(இராவணன்)மாளிகையைச் சேர்ந்தான்; (எ - று.)—கும்பகர்ணனைக் கண்டதனால் நகரத்தவர் ஆரவாரித்தனரென்னலாம். பி-ம்:—[1]உன்றன்முன்னெனக், உன்முன்னென்று, உனைமுன்னென்று. [2]குன்றன்ன. [3]கோளினான். (கஉஅஅ)

எக.—கும்பகர்ணன் இராவணனை வணங்குதல்.

நிலை[1]கி டந்த நெடுமதிட் கோபுரத்து
அலைகி டந்த விலங்கைய ரண்ணலைக்
கொலைகி டந்தவேற் கும்ப கருணனோர்
மலைகி டந்தது போல வணங்கினான்.

(இ - ள்.) நெடுமதிலையுடையதும் (பல)நிலைகளையுடைய கோபுரத்தை யுடையதுமான கடலாற்சூழப்பெற்ற இலங்கையிலுள்ளார்க்குத் தலைவனான பெருமையிற்சிறந்த இராவணனை, கொலைத்தொழிலிற்பயின்றவேற்படையை யுடைய கும்பகர்ணன் ஒருமலை கீழேபடுத்தாற்போல(நிலத்தில்வீழ்ந்து) வணங்கினான்; (எ - று.)—அலை-கடலுக்கு, இலக்கணை. கோபுரத்தலை எனஎடுத்து - கோபுரமாகியதலையையுடையதுமான இலங்கை யெனினுமாம்: ஆயினும்,மோனைக்குப் பொருந்தாது. பி-ம்:—[1]கடந்த. (௧௨அக)

எஉ.—இராவணன் கும்பகர்ணனைத் தழுவுதல்.

வன்றுணைப்பெருந் [1] தம்பி வணங்கலுந்
தன்[2]றி ரண்டதோ ளாரத் தழுவினன்
நின்ற குன்றொன் று [3]நீணெடுங் [4]காலொடுஞ்
சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்.

(இ - ள்.) வலியுள்ள துணைவனான பெருமைபெற்றதம்பி[கும்பகர்ணன்] (தன்னை) வணங்கவும்,(இராவணன்),நின்றகுன்றுஒன்றுனது மிகநீண்டகாலுடனே வந்த குன்றைத் தழுவிக்கொண்டாற்போன்ற தன்மையனாய்,(அந்தக் கும்பகர்ணனைத்)தன்திரண்டதோளினால்இறுகத்தழுவிக்கொண்டான்;(எ-று.) —இருவரும் குன்றுபோன்றுஇருத்தலால், இவ்வாறு உவமை கூறினர். பி-ம்:—[1]தம்பியைமார்புறத்.[2]திரட்டடந்தோளால்.[3]நீல்நெடுங்.[4]கால்கொடு.()

எங.—இராவணன் அன்பினால் உணவுமுதலியனஈந்து கும்பகர்ணனை ஓம்புதல்.

உடனி ருத்தி யுதிரத்தொ டொண்ணறைக்
குடனி ரைத்தவை யூட்டித் தசைக்[1]கொளீஇக்
கடனு ரைத்துகில் சுற்றிக் கதிர்க்குழாம்
புடை[2]நி ரைத்தொளிர் பல்கலன் பூட்டினான்.

(இ - ள்.) (பின்னும்இராவணன், அந்தக்கும்பகர்ணனைத்) தன்னுடன் உட்காரவைத்துக்கொண்டு, இரத்தங்களுடனே சிறந்தகள்ளையும் குடங்களிலேவரிசையாகக்கொண்டுவந்தவற்றை யுண்பித்து, மாமிசத்தைஉட்கொள்ளச் செய்து, கடல்நுரைபோன்ற வெண்பட்டாடையை அரையிலுடுத்து, ஒளித் தொகுதிகளைப் பக்கங்களிலேவரிசையாகவெளிவிடுகின்ற பலஇரத்தினாபரணங்களையும் அணிந்தான்; (எ-று.)—குடன்-குடமென்பதன்போலி. பி-ம்:— [1]குடஇக். [2]நிரைத்தவை. (௧௨௯௧)

எச.—கும்பகர்ணனதுநெற்றியில் இராவணன் வீரபட்டங்கட்டுதல்.

பேர விட்ட பெருவலி யிந்திரன்
ஊர் விட்ட களிற்றொடு மோடுமாம்

சோர விட்ட சுடர்மணி யோடையை
வீர பட்ட மெனநுதல் வீக்கினான்.

(இ - ள்.) மலையபோச்செய்த பெருவலியையுடைய இந்திரன் (தான்) ஊர்ந்த யானையுடன் தோற்றோடும்நாளில், தவறிவிழுமாறுவிட்ட [தவறிவிழுந் திட்ட] ஒளியுள்ள மணிகளழுத்திய (அவ்யானையின்) நெற்றிப்பட்டத்தை வீரபட்டமென்று(அந்தக்கும்பகர்ணனுடைய)நெற்றியிலேகட்டினான்; (எ-று.)

எரு.—சாந்துபூசுதல்.

மெய்யெ லா[1]மிளிர் மின்வெயில் வீசிடத்
தொய்யில் [2]வாசத் துவர்துதைந் [3]தாடிய
கையி னாக மெனக்[4]கடன் மேனியில்
தெய்வ நாறுசெஞ் சாந்தமுஞ் சேர்த்தினான்.

(இ - ள்.) (தன்) உடம்பெல்லாம் விளங்குகின்ற மின்னொளி வீசும்படி வாசனையுள்ள எழுதுகோலத்தினால் செந்நிறம்நிறைந்துபொருந்திய துதிக்கையைக்கொண்ட யானைபோலத்தோன்றுமாறு (அந்தக்கும்பகர்ணனது) கடல் போன்றமேனியிலே தெய்வத்தன்மையாக [இயற்கையாக] மணம்வீசுகின்ற செஞ்சந்தனக்குழம்பையும் பூசினான்; (எ - று.)

நாகம் மின்வெயில்வீசிட வாசத்தொய்யிலால் துவர்துதைந்தாடியுள்ள தென்க. செஞ்சாந்துசேர்த்திய கும்பகர்ணனுக்கு, தொய்யிலால் துவராடிய நாகம் உவமை. பி-ம்:—[1]மின்னிளவெயில். [2]வாசந்துவர். [3]ஆட்டிய, ஆடிடக். [4]கடலாமெனத், (கஉகரு)

எசு.—கவசமணிதல்.

விடமெ ழுந்தது போனெடு விண்ணினைத்
தொடவு யர்ந்தவன் மார்பிடைச் சுற்றினான்
இடப முந்து [1]மெரிபுரை நான்குதோட்
கடவு ளீந்த கவசமுங் கட்டினான்.

(இ - ள்.) விஷமானது எழுந்துநின்றாற்போல நெடியஆகாயத்தைத் தீண்டும்படி ஓங்கியுள்ளவனான கும்பகர்ணனுடைய மார்பிலே, இடபத்தைச் செலுத்துபவனாகி நான்குதோள்களையுடைய அக்கினியையொத்த [செந்நிறம் வாய்ந்த] சிவபிரான் தந்த கவசத்தையும் சுற்றிக்கட்டினான்; (எ - று.)

தான் இருந்த இடத்திநின்று கட்டமுடியாதபடி அந்தக்கும்பகர்ணனுடையசுற்றளவு மிக்கிருத்தலால், இராவணன் கவசத்தை அவனைச்சுற்றி வந்து கட்டவேண்டுவதாயிற்றென்பர். பி-ம்:—[1]எழிலிரு. (கஉகசு)

எஎ.—போர்க்கோலஞ்செய்வித்தற்கு யாதுகாரண மென்று கும்பகர்ணன் வினவுதல்.

அன்ன [1]காலையி னாரம்ப மியாவையும்
என்ன காரணத் தாலென் றியம்பினான்
[2]மின்னி னன்ன புருவமும் விண்ணினைத்
துன்னு தோளு மிடந்துடி யாநின்றான்.

(இ-ள்.) (கும்பகர்ணன்), மின்னலையொத்த [செம்பட்டமயிரால்நிறைந்துள்ள] புருவமும் வானத்தைநெருங்கிய தோளும் இடப்புறம்துடிக்கப்பெற்றவனாய், அப்போது, யுத்தசன்னாகமெல்லாம் என்னகாரணத்தினாலே (செய்யப்படுகின்றன)? என்றுவினாவினான்; (எ-று.)—கும்பகர்ணன்வினாவுகையில் தீநிமித்தமாக அவனுடையஇடப்புறத்துப் புருவமும் தோளும் துடித்தன என்க. பி-ம்:—[1] காலையிவ்வாரம்பம், காலையிலாயத்தம். [2] மின்னே. (கஉகரு)

எஅ.—செய்திதெரிவித்துக் கும்பகர்ணனைப் போருக்குச் செல்லச் சொல்லுதல்.

வான ரப்பெருந் [1] தானையர் மானிடர்
[2] கோன கர்ப்புறஞ் [3] சுற்றினர் [4] கொற்றமும்
ஏனை [5] யுற்றனர் நீயவ ரின்னுயிர்
போன கத்தொழின் முற்றுதி போயென்றான்.

(இ - ள்.) (அதற்குஇராவணன்), 'மானுடர் (இருவர்), வானரப்பெருஞ் சேனையையுடையவராய், சிறந்த (நமது) நகர்ப்புறத்தை முற்றுகைசெய்து, (இதுவரையில் நம்மிடத்து)எவரும்பெறாததான வெற்றியையும் அடைந்துள்ளார்; நீ போய் அவருடைய இனியஉயிரை புண்கின்ற செயலைமுடிப்பாய்' என்றான்; (எ - று.)

'நீ யவரின்னுயிர் போனகத்தொழில் முற்றுதிபோ யென்றான்' என்ற தொடர்-நீ போய் அவருக்கு உன்னுயிரைக்கொண்டு போனகத்தொழிலை முற்றுவிப்பாய் [உன்னுயிரை அவர் கவருமாறு ஈவாய்] என ஒருஅமங்கலப் பொருள்படக் கூறியதென்னலாம். ஏனைக்கொற்றம் எனவே, எவரும்பெறாத வெற்றியென்றாயிற்று. பி-ம்:—[1] தானையும், தானைய. [2] கோநகர். [3] சுற்றினங். [4] கொற்றமோடு. [5] உற்றவரோடமரேற்று. (கஉகசு)

வேறு.

எகூ.—இதுமுதற் பதினொருகவிகள்-ஒருதொடர்: கும்பகர்ணன் மறுமொழி: சீதையைவிட்டிடாமற் செருவினையச்செய்தமைக்கு வருந்தி, இராவணனுக்கு நன்புத்திமதிகூறுதலைத் தெரிவித்தும்.

ஆனதோ வெஞ் [1] சமர் அலகில் கற்புடைச்
சானகி துயரினந் தவிர்ந்த தில்லையோ
வானமும் வையமும் [2] வளர்ந்த வான்புகழ்
போனதோ புகுந்ததோ பொன்றுங் காலமே.

(இ - ள்.) கொடிய போர், தோன்றிவிட்டதோ? எல்லையில்லாத கற்பை யுடைய சானகியின்(சிறைத்)துயரம், இன்னும் நீங்கியபாடு இல்லையோ? வானத்திலும் வையத்திலும் வளர்ந்த (உன்னுடைய) மிக்கபுகழானது, போய்விட்டதோ? (அரக்கர்க்கு)அழிவுகாலம், வந்துவிட்டதோ? (எ-று.)—இச்செய்யுள், சிலபிரதிகளில் "கிட்டியதோ" என்ற அடுத்தபாடலுக்குப்பின் உள்ளது. பி-ம்:— [1] சமர். [2] நிறைந்த. (கஉகஎ)

அ0. கிட்டிய தோசெருக் [1]கிளர்பொற் சீதையைச்
சுட்டிய தோமுனஞ் சொன்ன [2]சொற்களால்
திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோவிது விதியின் [3]வன்மையே.

(இ - ள்.) போர் கிட்டிவிட்டதோ? (அப்போர்), விளங்குகின்ற பொன் போன்ற சீதாபிராட்டியை நிமித்தமாகக்கொண்டதோ? முன்னேசொல்லிய சொற்களைக்கருதிக் கண்ணில்விடமுள்ளநாகம்போன்ற கற்பினையுடைய அந்தச்சீதையை விட்டிடவில்லையோ? (நீ) இவ்வாறுவிட்டிடாமலுள்ளது விதியின் செயலேயாம்; (எ - று.)

'சீதை நிமித்தமாக வானரப்படையுடன் மானுடர் நெருங்கிவிட்டார்களென்றால், முன்னம் நந்தி, வேதவதிமுதலியோர்களாற் கூறிய சாபத்தை நினைந்து சீதையை விட்டிடவேண்டியது செய்யவேண்டியதொழிலாயிருக்க, நீ அங்ஙனஞ் செய்யாதது, கொடுவிதி உன்னைத் தூண்டுவதனாலேயேயாகும்' என்று கும்பகர்ணன் கூறினனென்க. சொன்னசொற்கள்-நந்திசாபம் வேதவதிசாபம் முதலியன. திட்டிவிடம்-பார்த்தமாத்திரத்தில் உயிரைப்போக்குந் தன்மையுள்ள ஓர்பாம்பு: கிளர்பொற்சீதையைச் சுட்டியதாய்ச் செருகிட்டியதோஎன்பாருமுளர். பி-ம்:-[1]கிளர்ந்தபல்படை. [2]சொற்கொளாய். [3]வண்ணமோ.

அக. [1]கல்லலா முலகினை வரம்பு [2]கட்டவுஞ்
சொல்லலாம் பெருவலி யிராமன் றோள்களை
வெல்லலா [3]மென்பது சீதை மேனியைப்
புல்லலா [3]மென்பது போலு மாலையா.

(இ - ள்.) ஐயனே! உலகினைப் பேர்த்தெடுக்கலாம்: (அன்றி, அவ்வுலகத்திற்கு) வரம்புஅமைக்கவும் சொல்லலாம்: (இவையும் சாத்தியமான காரியமே); இராமனதுதோள்வலியை வென்றுவிடலாமென்பதோ, சீதைமேனியைத் தழுவலாமென்பதுபோலும் [அசாத்தியமான செயலாகும்]; (எ - று.)

உலகினை-மத்திமதீபமாய் நின்று,கல்லலாமென்பதனோடும்,வரம்புகட்டவும் சொல்லலாமென்பதனோடும் இயைந்துநின்றது உலகைக்கல்லுதல் அல்லது உலகிற்குவரம்புகட்டுதல் என்கின்ற தொழிலை ஒருவன் செய்யவல்லவனானாலும், அவனாலும், கற்பின்தெய்வமாகிய சீதையைப்புல்லுதல் எவ்வாறு இயலாதோ, அவ்வாறே இராமனை வெல்வதென்பதும் இயலாத காரியமாகுமென்றவாறு. பி-ம்:—[1]கல்லினால், கல்லினாலும். [2]கட்டினும், கட்டெனும். [3]என்பதும். (கஉகக)

அஉ. புலத்தியன் வழிமுதல் வந்த பொய்யறு
குலத்தியல் [1]பழிந்தது கொற்ற [2]முற்றுமோ
வலத்திய லழிவதற் கேது மையறு
நிலத்திய [3]னீரிய லென்னு நீரதால்.

(இ - ள்.) (அதருமத்தில் நடக்கின்ற உனக்கு) வெற்றி கிடைக்குமோ? (உனதுசெயல்), வெற்றித்தன்மை யழிவதற்கே ஏதுவாகும்; புலஸ்தியரிஷியின்வமிசமாகவந்த வஞ்சகக்குணமில்லாத குலத்தின்மேன்மை (உன்னால்)

அழிந்தது; (இது), குற்றமற்ற நிலத்தியல்பு நீரினியல்பு என்கின்ற முறை
மைக்கு ஏற்றுள்ளது; (எ - று.)

நிலத்தினியல்பால் நீரின் இயல்பு மாறுவதுபோல, உன்னுடையசெயல்
உனதுவெற்றியழிவதற்குக் காரணமாகுமேயன்றி, உனக்கு வெற்றியையுண்
டாக்காது என்றவாறு. "நிலத்தியல் பானீர் திரிந்தற்றா மாந்தர்க்கு, இனத்
தியல்ப தாகு மறிவு" என்பது, திருக்குறள்.௪௫௨-குற்றம். பி-ம்:—1அழித்தனை.
2முற்றுமே, முற்றுமேல். 3நீரியல்பென்னுநீரதே. (கரு00)

அரு. கொடுத்தனை யிந்திரற் குலகுங் கொற்றமும்
கெடுத்தனை நின்பெருங் [1]கிளையு நின்னையும்
படுத்தனை [2]பலவகை யமரர் தங்களை
விடுத்தனை வேறினி வீடு மில்லையால்.

(இ - ள்.) (உனதுதீச்செயலால்), இந்திரனுக்கு (அவனுடைய) உலகத்
தையும் வெற்றியையும் கொடுத்திட்டாய்; உன்னுடையபெரிய சுற்றத்தாரை
யும் உன்னையும் கெடுத்திட்டாய்; பலவகைத் தொழிலை(நீ)அழியுமாறுசெய்திட்
டாய்; தேவர்களை விட்டிட்டவனானாய்; இனி, வேறே(உனக்குஇந்தத்தீவினைப்
பயனினின்று) விட்டுநீங்குதற்கு (ஏற்ற)வழியும் இல்லை; (எ-று.)—ஆல்-தேற்
றம். கொடுத்தனைமுதலியன-தெளிவுபற்றி, எதிர்காலம்இறந்தகாலமாகக்கூறப்
பட்டகாலவழுவமைதிகள். பி-ம்:—1கிளையொடுன்னையும், கிளையையுன்னையும்.
2பல்பகல். (கரு0க)

அச. அற[1]முனக் கஞ்சியின் [2]றொளித்த தாலதன்
திறமுன முழத்தலின் வலியுஞ் செல்வமும்
நிறமுனக் களித்த[3]தங் கதனை [4]நீக்கிநீ
[5]இறமுனங் கியா[6]ருனை யெடுத்து நாட்டுவார்.

(இ - ள்.) இப்போது உனக்குஅஞ்சித் தருமம் ஒளித்துக்கொண்டது;
அந்தத்தருமத்தின் கூறுபாட்டை முன்பு(நீ)வருந்திச்செய்ததனால், (அந்த அற
மானது), வலியையும் செல்வத்தையும் உனக்கு ஒருநிறம்[மேன்மை]உண்டா
கத் தந்தது; (அவ்வாறுள்ள) அந்தத்தருமத்தை நீக்கி நீ அழிகையில், முன்னே
அங்கு (வந்து) யாவர் உன்னை எடுத்து நிலைநாட்டவல்லவர்? (எ - று.)

தருமத்தினால் மேன்மையடைந்த நீ இப்போது அதனைக்கைவிட்டதனால்
அழிகின்றாய்; அவ்வாறுஅழிகையில், உன்னைக் கைகொடுத்துத்தாங்குதல் எவ
ராலும் இயலாதென்றவாறு. பி-ம்:—1உமக்கு. 2ஒளித்ததன்னதின். 3இங்கி
தனை. 4நீக்கிய, நீக்கினை, நீக்கினாய், நீக்கினீர். 5இறுமுனிங்கு, இறவினங்கு,
இறவினிங்கு. 6உமை. (கரு0உ)

அரு. தஞ்சமுந் தருமமுந் [1]தகவு மேயவர்
நெஞ்சமுங் கருமமு முரையு மேனெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ வதற்கொரு [2]குறையுண் டாகுமோ.

(இ- ள்.) (தமது) உரையும் செயலும் மனமும்என்ற மூன்றும் முறை
யே (பிறர்க்குத்)தஞ்சமாவதும் அறத்துடனிருப்பதும் நன்மையுடனிருப்பது

மாகப்பொருந்தியவர்க்கு முன்னே, மிக்கவஞ்சனையும்பாவமும் பொய்யும் வல்ல நாம் உய்வோமோ? அந்தத்தருமத்திற்கு ஒருகுறை யுண்டாகுமோ? (எ - று.)

நமது பகைவர் - பிறர்க்குத் தஞ்சமளிப்பவர்: அறச்செயலைப் புரிபவர்: நன்மையே நினைப்பவர்: நாமோ பொய்யுரையைச்சொல்வதும் பாவத்தொழிலைப்புரிவதும் வஞ்சகத்தையே நினைப்பதுமாக உள்ளோம்: இப்படிப்பட்ட நமக்கு வெற்றியுண்டாவதெப்படி யென்றனனென்க. கருமமும் உரையும் என வந்ததற்கு ஏற்ப, நெஞ்சம்என்பதற்கு நினைவு என்று இலக்கணையாற் பொருள்கொள்க. கொள்ளவே, திரிகரணச்செயலும் கூறியவாறாயிற்று. நெஞ்சம் தகவு, கருமம் தருமம், உரை தஞ்சம் எனவும்: நெஞ்சம் வஞ்சம், கருமம் பாவம், உரை பொய் எனவும் சென்று இயைவதனால், இச்செய்யுள் நிரனிறைப்பொருள்கோளாம். நெஞ்சமும் கருமமும் உரையுமே என்ற தொடர் மத்திமதீபம். உய்துமென்பதன் விரித்தல்விகாரமான உய்ந்தும் என்றசொல் போலிபெற்று வந்தது. இச்செய்யுள் சிலபிரதிகளில் "என்றுகொண்டு" (அசு) என்ற பாடலின்பின் உள்ளது. பி-ம்:—1தவமுமே. 2குறைவு. (கஙOங)

அசு. என்றுகொண் டினையன 1விளம்பி யானுனக்கு
ஒன்றுள 2துணர்த்துவ 3துணர்ந்து கோடியேல்
நன்றது நாயக நயக்கி லாயெனிற்
பொன்றினை யாகவே கோடி போக்கிலாய்.

(இ - ள்.) என்று இவ்வாறானவார்த்தைகளைச்சொல்லி, யான் உனக்கு உணர்த்தவேண்டியது ஒன்று இருக்கின்றது; தலைவனே! (அதனைத்)தெரிந்துகொள்வாயாயின் நல்லது; விரும்பாமற்போவாயானால், நல்வழியிற்செல்லவறியாதவனே! (உன்னை) இறந்தாயாகவேநினைப்பாய்; (எ-று.)—கொண்டு-அசை. இது, அச்சுப்பிரதிகளில் "தஞ்சம்" (அரு) என்ற பாட்டிற்குப்பின்னேயும், சிலபிரதிகளில் "காலினில்" என்ற அடுத்தபாட்டிற்குப் பின்னேயும் உள்ளது. பி-ம்:—1இயம்பி, இயம்ப. 2உணர்த்துவன். 3உவந்து. (கஙOச)

அஎ. காலினிற் கருங்கடல் 1கடந்த 2காற்றது
3போலவன் குரங்குள சீதை 4போகிலள்
வாலியை யுரங்5கிழித் தேக வல்லன
கோலுள யாமுளேங் குறையுண் டாகுமோ.

(இ - ள்.) (தன்னுடைய)பாதங்களினாற் கரியகடலைக் கடந்த காற்றைப் போல்வன்மையுடைய குரங்கோ, (நம்பகைவர்க்குத் துணையாக) இருக்கின்றது; சீதையும், போகாமல் (சிறையிலேயே) இருக்கின்றாள்; வாலியையும் மார்பைக்கிழித்துச்செல்ல வல்லமையுள்ள அம்புகளும் (சித்தமாக) இருக்கின்றன; (அவற்றையேற்குமாறு) நாமும் இருக்கின்றோம்: (இனி) என்னகுறையிருக்கின்றது? (எ - று.)

சீதையை விட்டிடாவரையில், அநுமானைப்போன்றவரைத் துணைபெற்று, வாலியையும் உயிர்வாங்கிய அம்பைக் கொண்டுள்ள இராமன் நம்மையழிப்பானென்பது திண்ணமென்றவாறு. காற்றது, அது-பகுதிப்பொருள்விகுதி.

பி-ம்:—1கடப்பக், கடந்து. 2காற்றினைப். 3போல்வனகுரங்குகள். 4போகலள். 5இழித்துருவவல்லவன். (கஙCரு)

அஅ. தையலை விட்டவன் சரணந் தாழ்ந்துநின்
[1]ஐயறு தம்பியோ டளவ ளாவுதல்
உய்திற மன்றெனி னுளது வேறுமோர்
செய்திற [2]மன்னது தெரியக் கேட்டியால்.

(இ - ள்.) சீதாபிராட்டியை விட்டிட்டு அந்தஇராமனுடைய பாதங்களிலே வணங்கி உன்னுடைய சந்தேகிக்கத்தகாததம்பியோடு நண்புபூண்டிருத்தல்உயிர்பிழைத்தற்குரியவழியாம்: அவ்வாறுசெய்யாவிடின், (முன்கூறியதற்கு) மாறாகச்செய்யவேண்டிய செயல்வகையுள்ளது: அதனைத் தெரியுமாறுகேட்பாயாக; (எ-று.)—செய்திறம் இன்னதென்பதை மேலிற்கவியிற்காண்க. பி-ம்:—1மையறு, ஐயுறு. 2உண்டதுதெளிந்துகோடியால்; உண்டதுதெரிந்துகோடியால்.

அகூ. பந்தியிற் பந்தியிற் படையை விட்டவை
சிந்துதல் கண்டுநீ யிருந்து தேம்புதல்
மந்திர மன்று[1]நம் வலியெ லா[2]முடன்
உந்துதல் கருமமென் [3]றுணரக் [4]கூறினான்.

(இ-ள்.) வரிசைவரிசையாகச் சேனைகளை யேவி அவைகள் உயிரொழிந்து போவது கண்டு நீ இங்கிருந்துகொண்டு வருந்துவது, ஆலோசனையன்று; நமது வலிமைமுழுவதையும் ஒருசேர(ப் பகைவர்மீது) செலுத்துவது செய்தற்குரியதொழில்என்று தெரியுமாறு (கும்பகர்ணன்) கூறினான்; (எ - று.)

சீதையை விட்டிட்டுச் சமாதானஞ் செய்துகொள்ள மனமிராவிட்டால், நமதுமுழுவலியுங்கொண்டு பொருது பார்க்கவேண்டுமேயல்லது நஞ்சேனையைக் கூட்டங்கூட்டமாகஅனுப்பி அவையொழிந்துபோகப்போகக் கண்டுவருந்துவது தகாதென்றவாறு. பி-ம்:-1நின். 2எடுத்து. 3உறுதி. 4ஓதினான். ()

கூ0.—இதுமுதல் மூன்றுகவிகள்-இராவணன் கும்பகர்ணனைச் சினந்து கூறியதைத் தெரிவிக்கும்.

உறுவது தெரியவன் றுன்னைக் கூயது
சிறுதொழின் மனிதரைக் கோறி [1]சென்றெனற்கு
அறிவுடை யமைச்சனீ யல்லை யஞ்சினை
வெறுவிதுன் வீரமென் றிவைவி ளம்பினான்.

(இ-ள்.) '(நான்) உன்னை (இப்போது) கூப்பிட்டது,—இனி நேரப்போவதை (உன்னுடைய சோதிடவறிவினால்) தெரிந்துகொள்ளுவதற்கு அன்று; 'நீபோய், அற்பச்செய்கையையுடைய மானிடரைக் கொல்வாய்' என்று (எனக்கு ஆலோசனை) சொல்லுதற்கு, நீ, அறிவுபடைத்த அமைச்சனன்று; (இப்போது நீ) அஞ்சினாய்: உன் வீரம் வீணானது' என்றுசொல்லிப் பின்னும் இவைகளைச் சொல்லலானான், (இராவணன்); (எ-று.)—அவைகளை மேல் இரண்டுகவிகளிற் காண்க. பி-ம்:—1சென்றென. (கஙoஅ)

௯௧. மறங்கிளர் செருவினுக் குரிமை மாண்டனை
பிறங்கிய [1]தசையொடு நறவும் பெற்றனை
இறங்கிய கண்முகிழ்த் [2]திரவு மெல்லியும்
உறங்குதி போவென வுளையக் கூறினான்.

(இ-ள்.) வீரத்தன்மைவிளங்குகின்ற போர்புரிவதற்கு உரியவல்லமையை இழந்தாய்; நிறைந்த மாமிசத்துடனே கள்ளையும் பெற்றாய்: (இனி உனக்கு ஆகவேண்டியது என்னஉள்ளது? உள்ளேபோய்)குழிந்துள்ள கண்ணை மூடிக் கொண்டு இரவும்பகலும் உறங்குவாய் என்று (அவன்) மனம்வருந்தும்படி கூறினான்; (எ - று.)—பி - ம்:—[1]நறவொடுதசையும். [2]எல்லும். (௧௩௦௯)

௯௨. மானிட ரிருவரை வணங்கி மற்றுமக்
கூனுடைக் [1]குரங்கையுங் கும்பிட் டுய்தொழில்
ஊனுடை யும்பிக்கு முனக்கு மேகடன்
யானது [2]முடிக்கிலே [3]னெழுக போகென்றான்.

(இ-ள்.) மானிடர்இருவரையும் [இராமலட்சுமணரை]வணங்கி,பின்னும் அந்தக்கூனலைக்கொண்டுள்ள குரங்கையும் கும்பிட்டுக்கொண்டு உயிர்வாழ்ந் திருக்குந்தொழில்,—ஊனையேவிரும்புதலையுடைய [புகழைவிரும்பாத] உன் தம்பிக்கும் உனக்குமே முறைமையான செயலாம்: நான் அச்செயலைச் செய் யேன்: எழுந்துபோவாய் என்று (பின்னும்) கூறினான், (இராவணன்); (எ-று.)—பி-ம்:—[1]குரங்கினைக். [2]கினைக்கிலேன், புரிகிலேன். [3]எழுதிபோ தியால். (௧௩௧௦)

௯௩.—இராவணன் போருக்குந் தான் எழ முயலுதல்.

தருகவென் றேர்படை [1]சாற்றென் கூற்றையும்
வருக[2]முன் வானமு மண்ணு மற்றவும்
இருகைவன் சிறுவரோ டொன்றி யென்னொடும்
[3]பொருகவெம் போரெனப் போதன் மேயினான்.

(இ-ள்.) (இவ்வாறு கூறிவிட்டு அருகிருந்த பணியாளனைநோக்கி இராவ ணன்),—'என்னுடையதேரையும் ஆயுதங்களையும் கொணர்க: என்கட்டளைச் சொல்லையும் (யாவர்க்கும்) கூறுவாய்: வானத்திலுள்ளாரும் மண்ணுலகிலுள் ளாரும் மற்றஇடங்களிலுள்ளாரும் இருகையையுடைய வலியசிறுவரான இராமலட்சுமணருடனே சேர்ந்து என்னொடும் முன்னேவந்து கொடிய போரைச்செய்க'என்றுசொல்லி(ப் போருக்கு)ச்செல்ல ஆரம்பித்தான்;(எ-று.) —பி - ம்:—[1]சாற்றுங்கூற்றமும். [2]வெல், என். [3]பொருகை. (௧௩௧௧)

௯௪.—கும்பகர்ணன் ராவணனிடம் அபராதக்ஷாமணஞ்செய்துகொண்டு தான் போர்க்கு ஆயத்தமாதல்.

அன்னது [1]கண்டவன் றம்பி [2]யானவன்
பொன்னடி [3]வணங்கிநீ பொறுத்தி யாலெனை
[4]வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினான்
இன்னமொன் [5]றுரையுள தென்னக் கூறினான்.

(இ-ள்.) அதைக்கண்டு அவன்தம்பியான கும்பகர்ணன்,—(இராவணனுடைய) பொற்கழலையணிந்த பாதங்களிலே வணங்கி, 'நீ பொறுப்பாய்' என்று வேண்டிக்கொண்டு, (தான் போர்க்குச் செல்வதாகக்கூறி), வலியநீண்ட சூலாயுதத்தை வலப்புறத்திலேவைத்துக் கொண்டவனாய், இன்னும் ஒருவார்த்தை சொல்லவேண்டியது உள்ளதுஎன்று சொல்லலானான்; (எ - று.)—அவற்றை மேல் மூன்றுகவிகளிற் காண்க. பி-ம்:—1கேட்டவன். 2ஆமவன். 3வணங்கினன். 4மன்னனே. 5உளதுரை. (கங-கஉ)

கூ௩.—இதுமுதல் மூன்றுகவிகள்-கும்பகர்ணன் இராவணனிடங்கூறுங் கட்டுரைகளைத் தெரிவிக்கும்.

வென்றிவண் வருவனென் றுரைக்கி லேன்விதி
1நின்றது பிடர்பிடித் 2துந்த நின்றது
பொன்றுவன் பொன்றினாற் பொலன்கொ 3டோளியை
4நன்றென நாயக 5விடுதி நன்றரோ.

நான்குகவிகள்-குளகம்.

(இ - ள்.) வெற்றிபெற்று இங்கு (மீண்டு) வருவே னென்று (நான்) சொல்லமாட்டேன்; (வலியுடனிருப்பதாகிய) விதியானது நின்றது, கழுத்தின்புறத்தைப் பிடித்துத்தள்ளுமாறு நின்றது; (நான் போரில் அனேகமாய்) இறந்துபடுவேன்; (அங்ஙனம்) இறந்தால், அழகைக்கொண்ட தோளையுடைய சீதாபிராட்டியை, தலைவனே! (நாம் விட்டிடுதல்) நன்றுஎன்று கருதி விட்டிடுவாய்; (அவ்வாறுவிட்டிடுவதே உனக்கு) நன்மைபயப்பதாம்; (எ-று.)—பி-ம்:- 1ஒன்றது. 2உந்துகின்றது, உந்திநின்றது. 3தையலை. 4நன்றது, நன்றிது, நன்றினி. 7விடுதல். (கங-கங)

கூ௫. இந்திரன் பகைஞனு மிராமன் றம்பிகை
மந்திர 1வம்பினான் மடிதல் வாய்மையால்
தந்திரங் 2காற்றுறு 3சாம்பல் 4பின்னரும்
5அந்தர 6முணர்ந்துனக் குறுவ 7தாற்றுவாய்.

(இ - ள்.) இந்திரன்பகைஞனாகிய இந்திரசித்தும் இராமனுடைய தம்பியான இலட்சுமணனது கையிலுள்ள மந்திரசக்தியோடுகூடிய அம்பினால் இறப்பது, நிச்சயம்:(இராட்சச)சேனையோ, காற்றினால் வீசப்பட்ட சாம்பர் (போல எதிரிகட்குமுன்னர்ப் பறந்துபோம்): (இப்படியிருத்தலால்) பின்பும் (உனக்கு நிகழவிருக்கும்) இடையூற்றையறிந்து உனக்குத் தக்கசெயலைச் செய்வாய்.

சீதையைக்கொடாமல் இந்திரசித்தையனுப்பினாலும் நிகழ்வதையும், நிகழ்த்தவேண்டியதையுங்கூறுகின்றான். இச்செய்யுள்"என்னைவென்று"என்ற அடுத்தபாடலின்பின் சிலபிரதியிலுள்ளது. மந்திரவம்பு - அஸ்த்ரம். பி - ம்:— 1வலியினால், அயிலினால். 2காலுறு. 3சாம்பர். 4பின்னும்.5மந்திரம். 6உனக்குணர்ந்தும். 7ஆற்றுவார். (கங-கச)

கூ௭. என்னைவென் றுளரெனி லிலங்கை காவல
உன்னைவென் றுயருத லுண்மை 1யாதலால்

பின்னைநின் றெண் ணுதல் பிழையப் பெய்வளை
தன்னை[2]நன் களிப்பது [3]தவத்தின் பாலதே.

(இ - ள்.) இலங்கைக்கு அரசே! என்னைவென்றார்களானல், (அப்பகைவர்) உன்னையும் வென்று மேம்படுதல், திண்ணம்: ஆகையால், பின்னும்(சீதையைவிட்டிடாது)நின்று எண்ணுதல், தவறுனகாரியம்: அந்த யணிந்தவளையலையுடையசீதையை (இராமனிடத்து) க்கொடுத்துவிடுவது சிறந்த தவப்பயனிற் சேர்ந்ததாம்;(எ-று.)--சீதையைக் கொடுக்கவேண்டுமென்பதே தனக்குச்சம்மதமென்பதை வற்புறுத்த, அதனையே காரணத்துடன் மீண்டும் கூறினான். பெய்வளை - சீதைக்கு, அன்மொழித்தொகை. நன்குதவத்தின்பாலதுஎன்க. பி-ம்:--[1]ஆமன்றால். [2]அன்றளிப்பது. [3]தவத்தினன்றரோ.　　(கஙகரு)

கூஅ.—கும்பகர்ணன் விடைபெற்றுக்கொண்டு போருக்குச்செல்லல்.

[1]இற்றைநாள் வரைமுத லியான்முன் செய்தன
குற்றமு முளவெனிற் பொறுத்தி கொற்றவ
அற்றதான் முகத்தினில் விழித்த லாரிய
பெற்றனன் விடையெனப் [2]பெயர்ந்து போயினான்.

(இ - ள்.) கொற்றவனே! முன்னைநாள்முதல் இன்றைத்தினம்வரையில் (யான்)செய்தனவான குற்றங்கள் இருக்குமானல், (அவற்றையெல்லாம்) பொறுப்பாய்: (உன்) முகத்தில்விழித்தல், (இனி)அருமையாகும்; ஆரியனே! விடைபெற்றுக்கொண்டேன் என்றுசொல்லிப் புறப்பட்டுப்போயினான், (அந்தக்கும்பகர்ணன்); (எ - று.)—முன்முதல் இற்றைநாள்வரையென்க.பி-ம்:—[1]இற்றையினுள்முதல், இற்றையினுள்வரை, இற்றைநாள்வரையதா. [2]பரிந்து.

கூகூ.—யாவரும் வருந்திநிற்கக் கும்பகர்ணன் புறப்பட்டு
நகர்வாயிலை யடைதல்.

அவ்வழி இராவண [1]னனைத்து நாட்டமுஞ்
செவ்வழி நீரொடுங் குருதி தேக்கினன்
எவ்வழி யோர்களு மிரங்கி யேங்கினர்
[2]இவ்வழி யவனும்போய் வாயி [3]லெய்தினான்.

(இ - ள்.) அப்போது இராவணன் (தனது) கண்களிலெல்லாம் நேரே வழிகின்ற கண்ணீருடனே இரத்தத்தையும் தேக்கினான்; (அந்தக்கும்பகர்ணனுடைய) எல்லாஉறவினரும் இரக்கங்கொண்டு ஏக்கமுற்றனர்: இங்ஙனம் நிகழ்கையில்,அந்தக்கும்பகர்ணனும்(புறப்பட்டுச்) சென்று நகர்வாயிலையடைந்தான்; (எ - று.)

கொடுத்தற்குவிருப்பமில்லாத பொருளைக் கொடுக்க நேரும்போது 'அவன்கண்களில் இரத்தம் வடிந்தது'என்று கூறும் வழக்குக்கு ஏற்ப, கும்பகர்ணனைப் போர்க்குப் பலிகொடுப்பதுபோல ஒரெண்ணம் இராவணன் மனத்தில்தோன்றுவதனால், 'செவ்வழிநீரொடுங் குருதி தேக்கினன்' என்றார். வழியோர்-உறவினரென்றபொருளில்வந்ததென்க.இந்தப்பாடலின்பின் "விண்

ணிலையிடறும்' (ருஎ) என்ற பாடல் சிலபிரதியி லுள்ள தென்று முன்னரே காட்டப்பட்டது. பி - ம்:—1அலைய. 2வெவ்வழி. 3மேயினுன். (கங்கள)

கஅ00.—தன்தம்பியோடு பெரும்படைசெல்லுமாறு இராவணன் கட்டளையிட, அவ்வண்ணமே பெரும்படைவருதல்.

1இரும்படை கடிப்பெடுத் தெற்றி யேகுக
பெரும்படை யிளவலோ டென்ற பேச்சினுல்
வரும்படை வந்தது வானு ளோர்கடஞ்
சுரும்படை 2மலர்முடி 3தூளி தூர்க்கவே.

(இ-ள்.) 'பெரியபடைக்கலங்களையுடைய(எனது)தம்பியுடனே பெரிய சேனைகள் குறுந்தடியையெடுத்து (இரணபேரிகையை) அடித்துக்கொண்டு செல்லுக'என்று(இராவணன்)கட்டளையிட்டபேச்சினுல், வானத்திலுள்ள தேவர்களினுடைய வண்டுகள் மொய்க்கின்றமலர்களையணிந்ததலைகளைத் தூளி நிரப்புமாறு, வருதற்குஉரிய படை வந்தது; (எ - று.)—'தேவர்கள்சூடிய மலரில் வண்டுமொய்க்காது'என்ப வாதலால், மலருக்கு 'சுரும்படை' என்றது-இயற்கையடைமொழியா மென்க. பி-ம்:-1இரும்பணை. 2நெடுமுடி. 3பூழி. (கஙகஅ)

கஅ0க.—சேனையிற்பிடிக்குங் கொடிகளின் வருணனை.

தேர்க்கொடி யானையின் பதாகை சேனுறு
தார்க்கொடி யென்றிவை ததைந்து 1வீங்குவ
2போர்க்கொடுந் தூளிபோய்த் துறக்கம் 3புக்கன
ஆர்ப்பன துடைப்பன 3போன்ற வாடுவ.

(இ - ள்.) தேரின்மீதுகட்டியிருக்குந் துவசமும், யானையின்மீது பிடிக்கப்படுந் துவசமும், முன்னணிச்சேனையிற்பிடிக்கப்படுகின்ற ஆகாயத்தையளாவுகின்றகொடிகளும் என்ற இவைகள் நெருங்கி மிக்கிருப்பவை,—போர்க்களத்திலிருந்து மிக்கதூளிகள் போய்ச் சுவர்க்கத்திற்புக்கனவாய் நிறைந்து தங்கியிருப்பனவற்றைத் துடைப்பனபோன்றனவாய் (மேலே) ஆடலாயின.

பலவிடத்துப்பிடிக்கப்படுகின்ற கொடிகள் வானத்தில்ஆடுபவை, சேனையாலெழுப்பப்பட்டுச் சுவர்க்கத்திற்படிந்த தூளிகளைத் துடைத்தலைப் போலு மென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. தார்ச்சேனுறுகொடி யென்க. என்றிவை -தொகுத்தல். பி-ம்:—1வீங்கின. 2பார்க்கொடுந். 3புக்கன,பண்புற, புக்கிட. 4ஆர்ப்பது துடைப்பது. 5போல. (கஙகக)

கஅ0௨.—போரில்தோன்றிய தீப்பொறிகளின் வருணனை.

எண்ணுறு படைக்கல மிழுக 1வெற்றிட
2நண்ணுறு பொறிகளும் படைக்கு நாயகர்
3கண்ணுறு பொறிகளுங் 4கதுவக் கண்ணகல்
விண்ணுறு மழையெலாங் கரிந்து வீழ்ந்தவால்.

(இ-ள்.) மதிக்கப்படுகின்ற படைக்கலங்கள் (எங்கும்) பரவியதனுல் (ஒன்றோடொன்று) மோத, (அதனுல்) தோன்றிய (நெருப்புப்) பொறிகளும் படைத்தலைவர் கண்களினின்றுபறக்கின்ற தீப்பொறிகளும் கதுவியதனுல் இடமகன்

றவானத்திலுள்ள மேகங்களெல்லாம் கரிந்துவீழ்ந்தன; (எ-று.)—இமுகுதல்-பாத்தல். பி-ம்:—1இற்றிடை. 2நண்ணுறும். 3கண்ணுறும். 4கதுவி. (கருஉ0)

கoரு.—சதுரங்கசேனைகளில் முன்னணி பின்னணிகளின்நெருக்கத்தால் இடையணியிலுள்ள சேனைக்கு இடமின்மை.

தேர்செலக் கரி1செல நெருக்கிச் செம்முகக்
கார்2செலத் தேர்2செலப் புரவிக் 3கால்4செலத்
தார்2செலக் 5கடைசெலச் சென்ற தானையப்
பார்செலற் கரிதென விசும்பிற் பாய்ந்ததால்.

(இ - ள்.) தேர்செல்லுவதனாலும் யானைசெல்லுவதனாலும், நெருக்கிக்கொண்டு செம்புள்ளியமைந்த முகத்தையுடைய யானைகள் செல்லத் தேர்கள் செல்லக் குதிரைகள்காற்றுப்போலவிரைந்துசெல்லுவதனாலும், இவ்வண்ணம் முன்னணிச்சேனையும் பின்னணிச்சேனையும் சென்றுகொண்டிருக்க, (இடையணியிற்) சென்றசேனை அந்த (ப்போர்க்கள) ப்பூமி செல்லுதற்குஅரியது என்று ஆகாயத்திற் பாய்ந்துசெல்லலாயிற்று; (எ - று.)

முன்னணி பின்னணிஇடையணிஎன்று மூன்றுவகையான வரிசைகளில் முன்னணி இடத்தையடைத்துக்கொண்டு செல்லுகையிற் கடையணி மிகவும் நெருக்குவதனால், இடையணியிலுள்ளசேனை நமக்குப்பூமியிற்செல்லுதற்கு இடமில்லையென்றுகருதி வானத்திற் செல்லலாயிற்றென்க. தார்-முன்னணி. கடை-பின்னணி. முதலடியிற்கூறிய தேர்கரிகள் - முன்னணியிற்சேர்ந்தன. இரண்டாமடியிற்கூறியவை-கடையணியைச்சேர்ந்தன. கார்-யானைக்கு, உவமவாகுபெயர். முதலடியில், தேர் கரி-சதுரங்கங்களில் மற்றையவற்றிற்கும் உபலட்சணம்.இரண்டாமடியிலும் இங்ஙனங் காண்க.பி-ம்:—1செலாநெருக்கும், செலாக்கரிக்கும். 2செலாத். 3கார். 4செலாத், செலா. 5கடைசெலாச்...தானையும், கடையெனச்...தானையும், தடையெனச்...தானையும், தடைசெயநின்ற தானையிப்,கடைசெலச்...தானையும். (கருஉக)

கoச.—தேரொன்றின்மீது கும்பகர்ணன் ஏறிவருதல்.

ஆயிரங் கோளரி யாளி யாயிரம்
ஆயிர மதகரி பூத மாயிரம்
மாயிரு ஞாலத்தைச் 1சுமப்ப வாங்குவது
2ஏயிருஞ் சுடர்மணித் தேரொன் றேறினான்.

(இ - ள்.) ஆயிரம்சிங்கங்களும் ஆயிரம்யாளிகளும் ஆயிரம்மதயானைகளும் ஆயிரம்பூதங்களும்(பூட்டப்பெற்று),மிகப்பெரிய பூமியைச்சுமப்பனவும் பின்வாங்குவதுஎய்ப்ப [மிகுபாரமுடைய] மிக்கஒளியுள்ளமணிகளமுத்திய தேரொன்றின்மீது ஏறிவந்தான், (அந்தக்கும்பகர்ணன்); (எ - று.)

பூமியின்கீழிருந்து சுமக்கும் அஷ்டமகாநாகங்கள்முதலியன ஆயிரஞ்சிங்கம்முதலியனபூட்டப்பெற்ற கும்பகர்ணனுடையதேரைச் சுமக்கப் பின்வாங்குவனவாக, அப்படிப்பட்ட தேரின்மீது ஏறினானென்க. பி - ம்:—1சுமந்துலாவுவ. 2சேயிருஞ். (கருஉஉ)

கo௫.—பலபடைக்கலங்களைச் சேனை சுமந்துசெல்லுதல்.

தோமரஞ் சக்கரஞ் சூலங் [1]கோன்மழு
நாமவே லுலக்கைவா ணாஞ்சி றண்டெழு
வாமவில் [2]வல்லயங் கணைய மற்றுள
சேமவெம் படையெலாஞ் சுமந்து [3]சென்றவால்.

(இ - ள்.) தோமரமும் சக்கரமும் சூலமும் அம்புகளும் மழுப்படையும் (பகைவர்க்கு) அச்சத்தைவிளைக்கின்ற வேற்படையும் உலக்கையும் வாளும் நாஞ்சிலும் தண்டாயுதமும் இருப்புலக்கையும் அழகியவில்லும் வல்லயமும் கணையமும் மற்றுமுள்ள பாதுகாவலான கொடியபடைகளும் எல்லாவற்றையும், (சேனைகள்), சுமந்துசென்றன; (எ - று.)—பி-ம்:--1கோண்மழு. 2வலயங் கற்பரிசை. 3பேய்செல, சென்றவே. (௩௨௩)

௧௦௬.—வேண்டியபோது கும்பகர்ணனுக்குக் கொடுக்குமாறு ஆயிரம் பண்டியிலேமாமிசத்தையும் மதுக்குடங்களையும் பணியாளர்கொண்டு சென்றமை.

நறையுடைத் தசும்பொடு [1]நறிதின் வெந்தவூன்
[2]குறைவினற் சகடமோ ராயி ரங்கொடு
பிறையுடை [3]யெயிற்றவன் பின்பு [4]சென்றனர்
[5]முறைமுறை [6]கைகொடு [7]முடுகி நீட்டுவார்.

(இ - ள்.) (கும்பகர்ணன் வேண்டும்போது) முறைமுறையே விரைந்து (ஊனையும் கள்ளையும்) கையிற்கொண்டு நீட்டுபவரான அரக்கர்கள் (பலர்), கள்ளைக்கொண்டகுடங்களுடனே செவ்வனே வெந்த மாமிசத்தையும் குறைவில்லாத நல்ல ஓராயிரம்வண்டியிலே போகட்டுக்கொண்டு பிறைபோன்ற வக்கிரதந்தங்களையுடையவனான அந்தக்கும்பகர்ணனதுபின்னே சென்றார்கள்.

பி - ம்:---1நறுநெய், நறையின். 2குறைவற...கொடு, நிறையுடைச்சகடமாயிரங்கணேர்கொடு. 3எயிற்றினர். 4சென்றன. 5முறையுடைக். 6கைதொறு, கைக்கொடு, கையிடை.7முடுக. (௩௨௪)

கoஎ.—கும்பகர்ணன் மதுமாமிசங்களை யுண்ட வண்ணஞ்செல்லுதல்.

ஒன்றல [1]பற்பல ருதவு [2]மூனறை
பின்றரும் [3]பிலனிடைப் பெய்யு மாறுபோல்
வன்றிற லிருகரம் [4]வழங்க மாந்தியே
சென்றன னியாவருந் [5]திடுக்க மெய்தவே.

(இ - ள்.) பற்பல பணியாளர்உதவுகின்ற ஒன்றல்லாத [மிகப்பலவான] ஊனையும் கள்ளையும் மிக்கவலியஇரண்டுகைகளும் (வாங்கிக்) கொடுக்க, (இருள்) பின்னிக்கொண்டிருக்கிற குகையினுள்ளே சொரிகின்ற விதம்போல உட்கொண்டவண்ணம் யாவரும் திடுக்கிடும்படி செல்லலானான்; (எ - று.)—பி-ம்:—1பலபல. 2ஊன்றசை. 3பிலத்திடைப். 4வாங்கி. 5திட்கல். (௩௨௫)

கo அ.—கும்பகர்ணன்செயலைக்கண்டு அமரர் அஞ்சியோடுதல்.

கணைந்தரு குரங்கொடு கழிவ தன்றிது
நிணந்தரு நெடுந்தடிக் குலகு நேருமோ

பிணந்தலைப் பட்டது பெயர்வ [1]தெங்கினி
உணர்ந்தது [2]கூற்றமென் றும்ப ரோடினார்.

(இ-ள்.)(இவனது)இக்கொலைத்தொழில், கூட்டமாகப்பொருந்திய வானரத்தோடு நீங்குவதன்று: (இவன் தின்னுகிற) நிணத்தோடுகூடிய பெரிய மாமிசத்திற்கு இவ்வுலகத்துப்பிராணிகளெல்லாந்தான் போதியதாகுமோ? (எங்கும்) பிணமயமாக ஆயிட்டது: (கொலைத்தொழிற்குஉரிய)யமனும் உணர்ந்துவிட்டான்: (நாம் தப்பி) ஓடிச்செல்வது எங்கே யினி? என்று சொல்லிய வண்ணம் தேவர்கள் ஓடினார்கள்; (எ - று.)—இது-நெஞ்சறிசுட்டு. உலகு - ஆகுபெயர். பி-ம்:—[1]இங்கினி. [2]கூற்று. (கஈ௨சு)

கoசு.—இராமபிரான் தம்பகர்ணனதுதேரைப் பார்த்தல்.

பாந்தளி [1]னெடுந்தலை வழுவிப் பாரொடும்
வேந்தென விளங்கிய மேரு மால்வரை
போந்தது போற்பொலந் தேரிற் பொங்கிய
ஏந்தலை [2]யேந்தெழி லிராம னோக்கினான்.

(இ - ள்.) ஆதிசேஷனுடைய பெரியதலையிலிருந்து தவறிப் பூமியுடனே மலையரசுஎன்றுவிளங்கிய மேருவென்னும்பெரியமலை வந்ததுபோல்தோன்றுகின்ற பொன்மயமானதேரிலே, சீற்றம் பொங்கப்பெற்ற ஆண்களில்மேம்பட்ட கும்பகர்ணனை, தாங்கியஎழிலையுடையஇராமன், கண்டான்; (எ-று.)

தேர்த்தட்டு - பூமியையும்,மேற்பகுதி மேருமலையையும் போலு மென்க. பி-ம்:—[1]ஏந்தலை. [2]ஏந்தனி. (கஈ௨எ)

கககo.—தேரிலிருப்பவன் யாவனோன்று இராமன் எண்ணங்கொள்ளல்.

வீணை[1]யென் றுணரினஃ தன்று விண்டொடுஞ்
சேணுயர் [2]கொடியது வயவெஞ் [3]சீயமால்
காணினுங் [4]காலின்மே லரிய காட்சியன்
பூ[5]ணொளிர் மார்பின னியாவன் போலுமால்.

(இ - ள்.) விண்ணைத்தொடுகின்ற மிகவுயர்ந்த (இத்தேரின்) கொடியிலேயிருப்பது வீணையாயிருக்குமோஎன்றால் அன்று: வெற்றிபொருந்தியகொடிய சிங்கமாகும்: வாயுவேகத்தினும்மிக்கு(மனோவேகத்துடன்)கண்டாலும், (முழுதும்பார்த்தற்கு) அரிய பெருந்தோற்றமுடையவனாயிருக்கின்றான்: ஆபரணம் விளங்குகின்ற மார்பையுடையஇவன் யாராவனோ?(எ-று.)—என்று இராமன் நினைப்பிட்டானென்க. 'வீணையன்று'என்றமையால், இவன் இராவணனல்லனென்றுதெளிந்தவாறு.பி-ம்:---[1]ஒன்று.[2]கொடியிது.[3]சீயமாக்.[4]காலன்.[5]ஒளி.

கககக.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: 'இவனை இன்னனென்று தெரிவி' என்று விபீஷணனை ஸ்ரீராமன் கேட்டலைத் தெரிவிக்கும்.

தோளொடு தோள்செலத் [1]தொடர்ந்து நோக்குறின்
நாள்பல கழியுமால் [2]நடுவ ணின்றதோர்
தாளுடை மலைகொலாஞ் சமரம் வேட்டதோர்
ஆளென [3]வுணர்கிலே னார்கொ லா[4]மிவன்.

(இ-ள்.) (இவனுடையவொரு) தோளோடு (மற்றொரு)தோளுள்ளவரையில் முழுவதும் தொடர்ச்சியாகப்பார்ப்பதானால், பலநாள் கழிந்திடும்; (பூமிக்கு)நடு வேநிற்பதாகிய ஒப்பற்ற கால்முளைத்த மேருமலை, (இப்படி வந்தது) கொல் லோ? போர்விரும்பிவந்த ஒருவீரனென்று நினைக்கமுடியவில்லை; இவன் ஆரோ? (எ - று.)—வீரரில்இப்படியிருப்பவரை இதுவரையிற்கண்டதில்லை யாதலால், இராமன் 'சமரம்வேட்டதோர்ஆளெனவுணர்கிலேன்' என்கின் றான். மலைக்கு 'தாளுடை'என்பதை அடைமொழியாக்கியுரைத்திருப்பினும், மலை தாளுடையதுகொல் என்று கூறியதாகக் கருத்துக் காண்க. பி - ம்:— [1]தொடர. [2]நடுவுநின்றதோர். [3]அறிகிலேன். [4]இது. (௬௩௨௧)

௧௧௨. எழுங்கதி ரவனொளி மறைய வெங்கணும்
விழுங்கிய திருளிவன் மெய்யி னால்வெரீஇப்
புழுங்குநம் பெரும்படை யிரியல் போகின்றது
அழுங்கலில் சிந்தையா யார்கொ லாமிவன்.

(இ - ள்.) இவனுடையஉடலினால், (உதயமலையினின்றுஉயர)எழுகின்ற சூரியனுடையவொளியானது, மறைந்திட எங்கும் இருளானது(அதனை)விழுங்கி விட்டது; இவனுடம்பைக்கண்டு அஞ்சி (மனம்) வேர்க்கின்ற நம்முடைய பெரியசேனையானது, நிலைகெட்டுஓடுகின்றது; வருந்துதலில்லாத மன முடையவனே! இவன் யாவனோ? (எ - று.)

கும்பகர்ணனுடையபேருடலானது தரையிற் சூரியகிரணத்தை விழ வொட்டாதுமறைத்து எங்கும் அவனுடலின்நிழலேயாய்விடுமாறுசெய்தலால், 'கதிரவனொளிமறைய விழுங்கியதிருள்'என்கின்றான். 'இவன்மெய்யினால்'என் பது மத்திமதீபமாய்,முன்வாக்கியத்தோடும் பின்வாக்கியத்தோடும்இயையும். இச்செய்யுள், அச்சிட்டபிரதிகளிற் காணப்படவில்லை யாயினும், ஏட்டுப்பிரதி களி லுள்ளது. (௬௩௨௦)

௧௧௩. அரக்கனவ் வுரு[1]வொழித் தரியின் சேனையை
வெருக்கொளத் தோன்றுவான் கொண்ட வேடமோ
தெரிகிலே னிவ்வுருத் தெரியும் வண்ணநீ
பொருக்கென வீடண புகறியா லென்றான்.

(இ - ள்.) இராவணன் (தன்னுடைய) அந்தவடிவத்தைவிட்டு வானர சேனை அஞ்சும்படி தோன்றும்பொருட்டுக் கொண்ட வேஷமோ (இது)? இவ் வுரு (இன்னதென்று) தெரியவில்லை; (நான்) உணரும்படி, வீடணனே! நீ விரைவாகச் சொல்லுவாய் என்றான் (இராமன்); (எ-று.)—பி-ம்:-[1]ஒளித்து.

வேறு.

௧௧௪.—இதுமுதல் பதின்மூன்றுகவிகள் - வந்தவன் கும்பகர்ண னென்பதையும் அவனுடையதன்மைமுதலியவற்றையும் விபீஷணன் கூறியதைத் தெரிவிக்கும்.

ஆரிய [1]னனைய கூற வடியிணை [2]யிறைஞ்சி யைய
பேரிய விலங்கை வேந்தன் பின்னவ னெனக்கு முன்னோன்

காரியல் கால [3]னன்ன கழற்கும்ப கருண னென்னுங்
கூரிய சூலத் தானென் றவனிலை கூற லுற்றான்.

(இ-ள்.)இராமன் அவ்வாறுசொல்ல, (விபீஷணன், இராம்பிரானுடைய) உபயபாதங்களில்வணங்கி, (அவனைநோக்கி), 'ஐய! (இவன்), பெருமைக் குணத்தையுடைய இலங்கைக்குஅதிபனான இராவணனுக்குப்பின்பிறந்தவன்; எனக்குமுன்பிறந்தவன்; கருமைநிறம்பொருந்திய யமனையொத்தகழலையணிந் துள்ள கும்பகருணனென்னப்படுகிறவனான கூரிய சூலப்படையையுடையவ ன்'என்று சொல்லி, அவன்நிலைமையைத்தெரிவிக்கலுற்றான்; (எ-று.) —'கால னன்ன', என்பது, கும்பகருணனுக்கு அடைமொழி. கும்பகர்ணன்-பானைபோ ன்றகாதுடையவனெனக் காரணப்பொருள்படும்.'காரியல்'என்பதும், கும்பகர் ணனுக்கு அடைமொழியாகத்தக்கது. பி-ம்:—1 இணைய. 2வணங்கி. 3அன்னான்.

ககரு. தவ[1]னுணங் கியரும் வேதத் தலைவரு முணருந் தன்மைச்
சிவனுணர்ந் தலரின் மேலைத் திசைமுக னுணருந் தேவன்
அவனுணர்ந் தெழுந்த காலத் தசுரர்கள் [2]படுவ ரெல்லாம்
இவனுணர்ந் தெழுந்த காலத் திமையவர் [2]படுவ ரெந்தாய்.

(இ - ள்.) எந்தாய்! நுண்மையான [செய்தற்கு அருமையான]தவத்தை யுடையவரும் வேதத்தில்வல்லதலைவருமான அந்தணர்கள் உணர்வைப்பெறு மாறுஉபாசிக்கின்ற சிவபெருமானால் தியானிக்கப்பட்டு, தாமரைமலரில்வாழ் கின்ற பழமையான நான்குமுகங்களையுடைய பிரமனாலும் தியானிக்கப்படு கின்ற கடவுளான (பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும்) அந்தத்திருமால்,— யோகநித்திரை நீங்கி எழுந்தகாலத்தில் அசுரர்கள்எல்லாம் இறப்பார்; இவ னுணர்ந்தெழுந்தகாலத்தில் தேவர்கள் இறப்பார்கள்; (எ - று.)

திருமால் கண்விழிக்கையில் அசுரர்கள் மாய்வதுபோல,இவன் கண்விழிக் கையில் தேவர்கள்இறப்பார்க ளென்றான்: இதனால்,கும்பகர்ணன் திருமாலோடு ஒத்த வலிமையுடையவனென்பதும் பெறப்படும். "ஶங்கராத் ஜ்ஞாந மந்விச் சேத்"என்றவாறு சிவபெருமான் உபாஸிக்கப்பட்டு ஞானத்தைப் பெறுதற்கு உரியவனாதல்காண்க. பி-ம்:—1நுணங்கினரும். 2படுவது. (கஙஙு)

வேறு.

கஙசு. ஆழி யா[1]யிவ னாகுவா
னேழை வாழ்வுடை [2]யெம்முனோன்
[3]தாழ்வி லாவொரு [4]தம்பியோன்
ஊழி [5]நாளு முறங்குவான்.

(இ-ள்.) பாற்கடலிற்பள்ளிகொண்டிருக்குந் திருமாலினமிசமானவனே! இவனானவன்,—எளிமைப்பட்ட வாழ்க்கையையுடைய எமது அண்ணனான இராவணனுடைய தாழ்வில்லாத ஒருதம்பியாவன்: (இவன்) ஒருஊழிக்காலம் வரையிலும் உறங்குந்தன்மையன்; (எ - று.)

இதனால், கும்பகர்ணன் உறங்குந்தன்மைய னென்பதைத் தெரிவித்த வாறு. ககச - ஆம் பாடலில் "இலங்கைவேந்தன் பின்னவன் எனக்குமுன்

ஞேன்"எனக் கூறியதனால், இங்கு 'எம்முஞேன்தாழ்விலா வொருதம்பி'என்பதனை அநுவாதமாகக் கொள்ளவேணும். கும்பகர்ணன் பிரஜைகளையெல்லாம் வாரிவாய்ப்பெய்ய,அவர்கள் தேவேந்திரனைச்சரணமடைய, அவன் கும்பகர்ணனை வச்சிராயுதத்தினால் தாக்க,ப்ரஜைகள்பின்னும் நடுங்கும்படி அரக்கன் பேரிரைச்சலிட்டுஐராவதத்தின்தந்தத்தைப்பறித்துத் தேவேந்திரனுடையமார்பில் தாக்க, அவ்விந்திரனும் தாங்காதுவருந்திச்சிறிப்பிரமரிஷிகள் தானவர்களுடன் பிரமனிடத்துமுறையிட, அப்பரமன், கும்பகர்ணனைநோக்கி, 'நீ செத்தாற்போல் தூங்குவாய்' என்ன, ஆறுமாதத்திற்குக் குறையாமல் தூங்குவதும் ஒருநாள்விழிப்பதுமாயின னென்றவிவரம் ஸ்ரீவால்மீகத்துவிளங்கும். மந்திராலோசனையிலிருந்த கும்பகர்ணன் இராவணனைவிட்டு விபீஷணன்சென்ற அன்று துயிலச்சென்றன னென்பதும்,தூங்கஆரம்பித்த ஒன்பதாநாள் அவனை இராவணன்பணியாளரா லெழுப்பினனென்பதும், முதனூலிற்பெறப்படும். பி - ம்:—[1]இவராகுவார். [2]எம்முனூர். [3]தாழ்விலான். [4]தம்பியார், தம்பியான். [5]காலமுறங்குவார். (௧௩௩௪)

௧௧௭. கால னாருயிர் [1]காலனால்
[2]காலின் [3]மேனிமிர் [4]காலினான்
[5]மாலி னார்கெட [6]வாகையே
சூல மேகொடு [7]சூடினான்.

(இ-ள்.) (இவன்), யமனுயிரைப்பருகுவதற்கு ஒருயமன்போல்வன்; காற்றைக்காட்டிலும் விரைந்துசெல்லுகின்ற காலையுடையவன்; இந்திரன் தோற்றோட; வெற்றிமாலையை(த் தன்) சூலப்படையாற் சூடினவன்;(எ-று.)—முதலடியில், ஆல்-ஈற்றசை. மாலினார்-கருநிறமுடையவர் என்ற காரணம்பற்றி, இந்திரனைக்காட்டிற்று. வாகை வென்றோர்சூடுவ ரென்பது, தமிழ்வழக்கு. பி-ம்:—[1]காலனார், காலநேர். [2]காலன்.[3]மேல்வரு. [4]காலனும்,காலனார், காலினார். [5]மாலனார். [6]வாகையோர், வாகையோர். [7]சூடினார். (௧௩௩௫)

௧௧௮. தாங்கு கொம்பொரு நான்கு[1]கால்
ஓங்க லொன்றினை யும்பர்கோன்
வீங்கு [2]நெஞ்சன் விழுந்திலான்
[3]தூங்க நின்று சுழற்றினான்.

(இ - ள்.) (அன்றியும் இவன்),—தாங்குகின்ற ஒருநான்கு தந்தங்களுடனே நான்குபாதங்களையுமுடைய மலைபோன்ற ஐராவதமென்ற யானையை, தேவர்கட்குத்தலைவனான இந்திரன் (அதன்மீது) விழுந்திடாமல் (அச்சம்) மிக்கநெஞ்சுடையவனாய்ச் சோர்ந்திருக்க, (தான்) நின்றுகொண்டு சுழற்றினான்; (எ-று.)—தூங்க-தொங்க எனினுமாம். பி-ம்:—[1]தாள். [2]நெஞ்சினன் வீழ்ந்திலன். [3]தூங்கு. (௧௩௩௬)

௧௧௯. [1]கழிந்த தீயொடு காலையும்
பிழிந்து சாறுகொள் பெற்றியான்
[2]அழிந்து மீனுக வாழிநீர்
இழிந்து காலினி [3]னேறுவான்.

(இ - ள்.) (பின்னும்இவன்),—மிகுந்ததீயுடனே காற்றையும்பிழிந்து சாறெடுக்கவல்ல வலிமையுடையவன்; மீன்களெல்லாம் அழிந்து (உயிர்) சிந்துமாறு கடலினீரிலிழிந்து காலினாலேறவல்லவன்; (எ - று.)

[2]அழிந்துமீதுக என்றபாடத்துக்கு - நிலையழிந்து பூமிமீதுபொங்கிவர என்க. இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை. பி-ம்:—[1]ஒழிந்த. [2]அழிந்தநீருகும், அழிந்துமீதுயர். [3]எற்றுவான். (கஙஙஎ)

கஉ௦. ஊனு யர்ந்த வுரத்தினன்
மேனி மிர்ந்த மிடுக்கினன்
றானு யர்ந்த தவத்தினன்
வானு யர்ந்த வரத்தினன்.

(இ - ள்.) (மற்றும்இவன்),—உடம்பில் (யாவரினும்) மிக்க வலிமை படைத்திருத்தலால், மிகவும்மேம்பட்ட மனவுறுதியை யுடையவன்; தான் (செய்த) மிக்கதவத்தினால் மிகமேம்பட்டவரங்களைப் பெற்றவன்;(எ - று.)— 'உரத்தினன்' என்பதை மூன்றனுருபேற்ற பெயராகக்கொள்ளாமல், ஆண் பாற் குறிப்புமுற்றாகக்கொண்டு கூறுவாருமுளர். (கஙஙஅ)

கஉக. திறங்கொள் சாரி திரிந்தநாட்
கறங்க லாது [1]கணக்கிலான்
[2]இறங்கு தாரவ னின்றுகாறு
உறங்க லாலுல குய்ந்ததால்.

(இ-ள்.)(மேலும்), தொங்குகின்ற மாலையையணிந்துள்ளவனான இவன், பலவகைப்பட்ட சாரிகைதிரிந்தகாலத்தில் காற்றாடியைத்தவிர்த்து வேறொன் றின்தன்மையில்லாதவன்; (இவன்), இன்றைவரையில் தூங்கியதனால் உலகம் பிழைத்துள்ளது; (எ - று.)—பி-ம்:—[1]கணக்கிலாா, கணக்கிலர்.[2]இறங்கினர் புவி, இறங்குவார்புவி. (கஙஙக)

கஉஉ. சூல முண்டது சூருளோர்
கால முண்டது [1]கைக்கொள்வான்
ஆல [2]முண்டவ னாழி[3]வாய்
ஞால [4]முண்டவ [5]நல்கினன்.

(இ - ள்.) தேவர்களாகவுள்ளோரின் வாழ்நாளை யுண்டதாகிய சூலப் படை ஒன்றுஉள்ளது: அதனை, (இவன்)கைக்கொள்பவன்: ஞாலத்தையெல் லாம்(பிரளயகாலத்தில்) உண்டு பாதுகாக்குந்திருமாலின்மிசமானவனே! கட லில்தோன்றிய ஆலகாலவிஷத்தையுண்டவனாகிய சிவபெருமான் (அந்தச்சூ லப்படையை இவனுக்குக்)கொடுத்தான்; (எ-று.)—சூருளோர்-தேவர்:சூர்-ஸூ ரத்தன்மை. ஞாலமுண்டவன்-அண்மைவிளி. பி-ம்:—[1]கைக்கொள்வார். [2]உண் டவர். [3]வாழ். [4]உண்டவன், உண்டவர். [5]நல்கினர். (கஙசO)

கஉங. மின்னி னொன்றிய விண்ணுளோர்
முன்னி லென்[1]றமர் முற்றினர்
என்னி[2]லென்றும [3]வெண்ணிலார்
பொன்னி லன்றி விழித்திலான்.

(இ-ள்.) மின்னல்போன்ற ஒளிபொருந்திய தேவர் '(என்)முன்னே நில்' என்று சொல்லி (இவனுடன்)பெரும்போரைத் தொடங்கினாராயின், எப்போதும் அந்தக்கணக்கில்லாத தேவர்களின் முதுகிலன்றி (வேறிடத்தில்) விழித்தில்லான்; (எ - று.)—தன்னோடுபொரவரும் தேவர்கள்யாவரையும் முதுகு கொடுத்து ஓடச்செய்பவன் இந்தக்கும்பகர்ண னென்பது, கருத்து. பி-ம்:—1அவர். 2என்றவர், என்றுமவ். 3எண்ணிலா. (௩௩௪)

கஉ௪. தரும மன்றிது 1தானிதால்
வருந மக்குயிர் 2மாய்வெனா
உருமின் வெய்யவ னுக்குரை
இருமை மேலு மியம்பினான்.

(இ - ள்.) '(பிறர்தாரத்தைக் கவர்தலாகிய) இது, அறச்செயலன்று;இதனால் நமக்கு உயிர்மாய்கை நேரும்' என்று, இடிபோற்கொடியவனான இராவணனுக்கு, (இத)வார்த்தையை இருமுறைக்குமேலும்(இவன்)இயம்பினான்; (எ-று.)—தான்-அசை. பி-ம்:—1தான்செயில், தானெனா. 2மாள்வு. (௩௩௫)

கஉ௫. மறுத்த 1தன்முனை வாய்மையால்
ஒறுத்து மாவ துணர்த்தினான்
வெறுத்து 2மாள்வது மெய்யெனா
இறுத்து நின்னெதி ரெய்தினான்.

(இ - ள்.) (சீதையைக்கொடுத்திடுதற்கு) உடன்படாத தன்தமையனான இராவணனை (தன்) வாய்வார்த்தையாற் கடிந்தும், (தன்னால்) இயன்றவளவு உணர்வுகொளுத்தினான்; (அவ்விராவணன் எவ்வளவுசொல்லியுங் கேளாமையால்),வெறுப்புக்கொண்டு (நாம்) இறப்பது உண்மையென்று (முடிவாகக்) கூறிவிட்டு உன்னெதிரேவந்து சேர்ந்தான்; (எ - று.)—விபீஷணன் ஒற்றர் மூலமாகக் கும்பகர்ணன் இராவணனுக்குப்புத்திமதிகூறியதை உணர்ந்ததனால், இங்ஙனம் தெரிவிக்கின்றா னென்க. பி-ம்:—1தம்முனை.2மாய்வது.(௩௩௬)

கஉ௬. நன்1றி தன்று நமக்கெனா
ஒன்று நீதி யுணர்த்தினான்
இன்று 2காலன்மு னெய்தினான்
என்று சொல்லி யிறைஞ்சினான்.

(இ - ள்.) '(பிறர்மனையைக்கவர்ந்துவைத்திருக்கும்) இது நமக்குநன்று அன்று'என்று பொருந்தியநீதியை (இந்தக்கும்பகர்ணன் அந்தராவணனுக்கு) எடுத்துச்சொன்னான்: (அவன்கேளாமையால்), இன்று யமனுக்குமுன்னேவந்துசேர்ந்தான் என்றுசொல்லி (இராமனை) வணங்கிநின்றான், (விபீஷணன்); (எ - று.)—கும்பகர்ணனுடைய நற்குணத்தைவற்புறுத்த, முன்கூறியதையே விபீஷணன் பின்னும் கூறுகின்றான்.பி-ம்:—1இதென்று.2காலமும்.(௩௩௭)

வேறு.

கஉ௭.—விபீஷணன்சொல்லியதைக் கேட்டுக்கொண்டிருந்த சுக்கிரீவன் இவனை நம்முடன்சேர்த்துக்கொளல் நலமெனல்.

என்றவ னுரைத்த லோடு மிரவிசே 1யிவனை 2யின்று
கொன்றொரு பயனு மில்லை 3கூடுமேற் கூட்டிக் 4கொண்டு

நின்5றது 6புரிது 7மற்றிந் நிருதர்கோ னிடரு நீங்கும்
நன்8றென 9நினைந்தே னென்று 10ரைதனு 11நலனீ தென்றான்.

(இ - ள்.) என்று அந்தவிபீஷணன் சொன்னவுடனே, சூரியகுமாரனை சுக்கிரீவன்,-(இராமனைநோக்கி),'இன்று இந்தக்கும்பகர்ணனைக்கொன்று பயன் ஒன்றுமில்லை; (இவன் நம்மோடு) சேர்வானால், (இவனையும் நம்முடன்) கூட்டிக்கொண்டு,மேற்செய்யவேண்டுவதைச் செய்வோம்: பின்பு இந்த ராட்சசராசனுனவிபீஷணனும்,துன்பம்நீங்கப்பெறுவான்;(இதுவே)நல்லதென்று நினைத்தேன்' என்றுசொன்னான்; இராமனும் 'இதுவே நல்லது'என்றுசொன்னான்; (எ - று.)—பி-ம்:—1 அவனை. 2ஈண்டு. 3கோடும். 4கொண்டால். 5அமர். 6புரிதின். 7என்றால். 8இது. 9நினைத்தேன். 10நாயகன். 11நயன். (கஙு௬௫)

கஉஅ.—'கும்பகர்ணனையழைக்குமாறு செல்வார் யாவர்?'என, விபீஷணன் உடன்பட்டு விடைபெற்றுச்செல்லுதல்.

ஏகுதற் குரியா ரியாரே 1யென்னலு மிலங்கை வேந்தன்
ஆகின்மற் 2றடிய னேசென் 3றறிவினா லவனை யுள்ளஞ்
சேகறத் தெருட்டி யீண்டுச் சேருமேற் 4சேர்ப்ப னென்றான்
மேகமொப் பானு நன்று 5போகென்று விடையு மீந்தான்.

(இ - ள்.) ('கும்பகர்ணனிடத்திற்) செல்லுதற்கு உரியார் யாவர்?' என்று(ஸ்ரீராமன்)வினவுதலும், இலங்கையரசனான விபீஷணன், 'அப்படியானால், பின்னர் அடியனேபோய் (என்)அறிவின்வல்லமையினால் அந்தக்கும்பகர்ணனை மனவுறுதிகுன்றும்படி தெளிவித்து, இங்கேவந்துசேர்வனேயானாற் சேரச்செய்வேன்' என்று கூறினான்: மேகத்தையொத்தவனான ஸ்ரீராமனும் 'நல்லது: போய்வருக' என்றுசொல்லி (அவனுக்கு) விடையுந் தந்தான்; (எ-று.)—பி-ம்:—1என்றலும். 2அடியனேன். 3அறிவினுவதனை. 4சேர்ப்பல். 5போகெனக் கூறிவிட்டான். (கஙு௬௬)

கஉகூ.—விபீஷணன் கும்பகர்ணனையடைந்து வணங்குதல்.

தந்திரக் கடலை நீந்தித் 1தன்பெரும் 2பலத்தைச் சார்ந்தான்
வெந்திற லவனுக் கைய வீடணன் விரைவி 3னுன்பால்
வந்தன 4னென்னச் சொன்னார் வரம்பிலா வுவகை 5கூரச்
6சிந்தையாற் களிக்கின் றான்றன் செறிகழல் சென்னி 7சேர்த்தான்.

(இ-ள்.) (வானரச்) சேனாசமுத்திரத்தைக் கடந்து, தனது பெரியபலத்தை [இராட்சசசேனையை]ச் சேர்ந்தான், (விபீஷணன்); (அதுகண்ட அச்சேனையிலுள்ள பணியாளர்), கொடியவலிமையையுடையவனான கும்பகர்ணனுக்கு, 'ஐயனே! விபீஷணன் விரைவாக உன்னிடத்துவந்தான்' என்று தெரிவித்தார்கள்; (அதுகேட்டு),எல்லையில்லாத மகிழ்ச்சிமிக, மனத்தினால்மகிழ்பவனான அந்தக்கும்பகர்ணனுடைய நெருங்கிய வீரக்கழலையணிந்த பாதங்களை(த் தன்) சிரமேற் பூண்டான்; (எ - று.)—விபீஷணன் கும்பகர்ணனுடைய பாதங்கள் தன்சிரமீதுபடும்படி நிலத்தில்வீழ்ந்துவணங்கினா னென்றபடி. சேனையைக் கட லென்றதற்கேற்ப, 'நீந்தி' என்றார்: உருவகவணி. செறி

கழல்-அன்மொழித்தொகை. பி-ம்:—1தம். 2படையைச். 3நம்பால், நின்பால் 4என்றலோடும். 5கூர்ந்து. 6சிந்தையுட், சிந்தையில். 7கொண்டான்.(௧௩௪௭)

௧௩௦.—இதுமுதல் ஒன்பதுகவிகள்-'நல்லிடத்தைச்சேர்ந்த நீ எங்களைச் சேர்வது தகுதியன்று' என்று கும்பகர்ணன் கூறுதலைத் தெரிவிக்கும்.

முந்திவந் திறைஞ்சி னானை 1மோந்2துயிர் மூழ்கப் புல்லி
உய்ந்தனை 3யொருவை போனு 4யெனமன 5முவக்கின் றேன்றன்
சிந்தனை முழுதுஞ் சிந்தத் தெளிவிலார் போல மீள
வந்ததென் 6றனியே யென்றான் மழையினீர் 7வழங்கு கண்ணான்,

(இ-ள்.) (அப்போது கும்பகர்ணன்),-மழைபோலநீரைப்பெருக்குகின்ற கண்களையுடையவனாய்,—(தன்) முன்னேவந்து வணங்கினவனான விபீஷணனை(உச்சி)மோந்து உயிர்ஒன்றுகுமாறு[இறுகத்]தழுவி,'ஒருவனான நீ(எங்களைவிட்டு விலகிச்சென்றதனால்) உய்ந்துபோனாய்' என்று மனம்களிக்கின்றவனானஎன்னுடைய எண்ணமுழுதுங் கெடுமாறு அறிவிலார்போல மீளவும் தனியேவந்தது என்னகாரணம்?'' என்றுவினாவினான்; (எ - று.)—தனியேவந்தமையே 'தம்முடன்சேர்தற்கே மீண்டுவந்திட்டானோ?'என்ற சங்கையையெழுப்புவதால், 'வந்ததென் தனியே' என்று வினவலானானென்க. பி-ம்:—1முகந்து. 2மார்பமுந்தப். 3ஒருவன். 4உளையென. 5உவக்கின்றேனென். 6தமியே. 7வயங்கு, வழங்கு. (௧௩௪௮)

௧௩௧. 1அவையநீ பெற்ற வாறு மமரரும் பெறுத லாற்றா
2உவையலோ கத்தி னுள்ள சிறப்புங்கேட் 3டுவந்தே னுள்ளங்
கவிஞரி னறிவு மிக்காய் காலன்வாய்க் களிக்கின் றேம்பால்
4நவையிலை 5வந்த தென்னீ யமுதுண்பாய் நஞ்6சுண் பாயோ.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அபயச்சொல்லை நீ யடைந்தவகையையும், தேவர்களும்பெறுதற்குமுடியாத (இம்மைமறுமைஎன்ற) இரண்டுலோகத்துமுள்ள ஐசுவரியத்தைப்பெற்றதையும்கேள்வியுற்று (யான்) மனமுவந்தேன்:கவிஞரைப்பார்க்கிலும் அறிவுமிகுந்தவனே! யமன் வாயிலிருந்தவண்ணம் களிக்கின்ற எம்மிடத்துக் குற்றமற்றவனாகிய நீ வரக் காரணம் யாது? அமுதத்தை யுண்டுகொண்டிருக்கிற நீ விஷத்தை யுண்ணக்கடவாயோ? (எ - று.)

இராமனிடத்தைச்சேர்ந்து நல்வாழ்வுபெற்றுள்ள நீ எம்மைச்சேர்ந்து தீவாழ்வுக்குப்பாத்திரமாதல் உரியசெய லன்று என்பான் 'அமுதுண்பாய்நஞ்சுண்பாயோ' எனக்கூறினான்; இன்பநிலையணி. கவிஞர்-நல்லறிவுபெற்றவர். அமரர்பெறுதலாற்றாச்சிறப்பு - சிரஞ்சீவியாயிருத்தல்: உபயலோகத்தினுள்ள சிறப்பு-இம்மைமறுமையைசுவரியங்களென்பர், ஒருசாரார். அவையம், உவையம் - அபயம், உபயம் என்ற வடசொற்களின்திரிபுகள். பி-ம்:—1அபயம். 2உபயலோகத்துமுற்ற. 3உவந்ததுள்ளம். 4நவையினில், நவையிலாய், நவையுற. 5வந்ததென்னை. 6உண்பார். (௧௩௪௯)

௧௩௨. குலத்தியல் பழிந்த தேனுங் குமரமற் றான்னைக் கொண்டே
புலத்தியன் மரபு மாயாப் புண்ணியம் பொருந்திற் 1றென்ன

வலத்திய ரோனை நோக்கி மகிழ்கின்றேன் மன்ன வாயை
[2]உலர்த்தினை திரிய [3]வந்தா யுனைகின்ற துள்ளமந்தோ.

(இ - ள்.) குமரனே! (பரதாரத்தைச் சிறைவைத்ததனால் எங்களுடைய) குலத்தின்தன்மை அழிந்துவிட்டதானாலும், மன்னனே! (இராமபிரானைச் சார்ந்த) உன்னைக்கொண்டே புலத்தியமகரிஷியின்வமிசமானது,மாய்ந்திடாத புண்ணியத்தைப்பெற்றது என்று (இதுவரையிற்)கருதி, வெற்றியோடுபொருந்திய (உன்)தோளைக்கண்டு மகிழ்ச்சியடைந்தவனுயுள்ள என்னுடைய வாய் ஈரமும் புலருமாறு மறுபடிவந்தாய்: (அதுகண்டு) அந்தோ! என்னுள்ளம் வருந்துகின்றது; (எ-று.)—மற்று-வினைமாற்று. 'மகிழ்கின்றேன்' என்பதைமுற்றாகக் கொள்ளினுமாம். விசிரவமுனிவனுடையகுமாரனை குபேரனாற் புலஸ்திய குலம் அழியாமல்நிற்குமாயினும், அம்முனிவனுடைய மற்றொருதாரமாகிய கேகசியின்மூலமாகப்பெருகிய வமிசம் அழிவதுகுறித்து 'புலத்தியன் மரபு மாயாப்புண்ணியம் பொருந்திற்றென்ன மகிழ்கின்றேன் வாயையுலர்த்தினை' என்கின்றான். பி-ம்:—[1]என்ன, என்றன், என்று, என்றென். [2]உலத்தினை. [3]வந்தே. (௬௬௫௦)

௬௬௫௧. அறப்பெருந் துணைவர் தம்மை யபயமென் [1]றடைந்த நின்னைத், [2]துறப்பது துணியார் தங்க ளாருயிர் துறந்த போதும், இறப்பெனும் [3]பயத்தை விட்டா யிராமனென் பானைப் பற்றிப், பிறப்பெனும் புன்மை [5]தீர்ந்தாய் [6]நினைந்தென்கொல் பெயர்ந்த வண்ணம்.

(இ-ள்.) அறத்திற்குப் பெருந்துணைவரான அந்த இராமர், தம்முடைய அருமையான உயிர் விட்டுப்போவதாயிருந்தபோதிலும், தம்மை அபயமென்றுஅடைந்த உன்னைக் கைவிடுதற்குத் துணிந்திடார்; (முன்னமே வரபலத்தினால்) இறப்பென்கின்ற பயம் தீரப்பெற்றாய்; (இப்போது) இராமனைச் சரணமாகப்பற்றிப் பிறப்பென்கின்ற இழிவும் நீங்கினாய்: (இப்படியிருக்க,அவரைவிட்டு நீ) மீண்டுவந்தவிதம் எந்தபயனைக் கருதி? (எ - று.).

அறப்பெருந்துணைவர் - சரணாகதரைப் பாதுகாப்பவரென்றபடி: ஒருவரைக் கூறும்பன்மைக்கிளவி. இத்தொடர் - இராமலட்சுமணரிருவரையுங் காட்டுமெனக் கொள்வாருமுளர். பி-ம்:—[1]அமைந்தவுன்னை, அடைந்தாற் பின்னை. [2]துறப்பினைத். [3]பதத்தை. [4]என்பளவுமற்றிப். [5]இல்லை. [6]என்கொனீ ...வண்ணம் பிறிதென்கொல்...வண்ணம், நினைந்தென்கொல்... தன்மை. ()

௬௬௫௨. அறமென நின்ற [1]நம்பற் கடிமைபெற் [2]றவன்ற னாலே
மறமென நின்ற மூன்று மருங்கற மாற்றி [3]மற்றுந்
[4]திறமென நின்ற தீமை [5]யிம்மையே தீர்ந்த [6]செல்வ
பிறர்மனை நோக்கு வேமை யுறவெனப் [7]பெறுதி போலாம்.

(இ - ள்.) தருமமென்றுசொல்லுமாறு நின்ற அ பெருமானுக்கு அடிமைசெய்யப்பெற்றும் அவனாலே பாவத்திற்குக்காரணமென்னுமாறுஉள்ள அஜ்ஞாநம் [அறியாமை] அந்யதாஜ்ஞாநம் [திரிபுணர்ச்சி] ஸந்தேஹஜ்ஞாநம் [ஐயவுணர்வு] என்ற மூன்றும் இருந்தஇடமும் தெரியாதபடிபோக்கி,மேலும்

வலிமையாகஇருந்த தீமையை இம்மையிலேயேதீர்ந்த பாக்கியவானே! அய லார்மனைவியைப் பார்த்துக்கொண்டிருக்கிற எங்களை உறவாகக்கொள்வாயோ?

இராவணனுடன் தான்சேர்ந்திருத்தலால், 'பிறர்மனைநோக்குவேமை' என்கின்றான். "ஸாக்ஷாத் தர்மம்ஸநாதநம்" என்பவாதலால், 'அறமெனநின்ற நம்பன்' என்றது. பி-ம்:—1நம்பர்க்கு. 2அவர்களாலே. 3முற்றும். 4இறவென. 5இன்மையே. 6செல்வம். 7பெறுதியோநீ, பெறுதியேநீ. (கஅருஉ)

கஅரு. நீதியுந் தரும நின்ற நிலைமையும் புலமை தானும்
ஆதியங் கடவு ளாலே யருந்தவ மாற்றிப் பெற்றாய்
வேதியர் தேவன் சொல்லால் [1]விளிவிலா வாயுப் பெற்றாய்
சாதியின் [2]புன்மை யின்னுந் தவிர்ந்திலை போலுந் தக்கோய்.

(இ - ள்.) நற்குணங்களையுடையவனே! நீதியும் தருமமும் என்றஇவற் றிலேயூன்றியிருக்குந் தன்மையையும் நல்லறிவையும் செய்தற்குஅரியபெருந் தவஞ்செய்து முதற்கடவுளைச்சார்ந்தபிரமதேவனாலே யடைந்தாய்: (அன்றி யும்), அந்தணர்தலைவனான (அந்தப்) பிரமனது சொல்லால் அழிவில்லாத ஆயுளை [சிரஞ்சீவியாயிருத்தலை]யும் அடைந்தாய்; (இப்படியிருக்க), சாதி யின் இழிவை இன்னுந்தவிர்ந்திலாய் போலும்; (எ-று.)—தம்மைமீண்டுவந்து சேர்ந்ததாகக் கருதியதனால், 'பிறர்மனைநோக்குவேமை யுறவெனப்பெறுதி' என்று கீழ்க்கூறியதுபோலவே, இங்கு 'சாதியின்புன்மை யின்னுந் தவிர்ந்திலை போலும்' என்கின்றான். பி-ம்:—1வீவிலா. 2தருமம், தன்மை. (கஅருங)

கரு சு. ஏற்றிய [1]வில்லோ னியார்க்கு [2]மிறையவ னிராம னின்றான்
மாற்றருந் தம்பி நின்றான் மற்றையோர் முற்று நின்றார்
கூற்றமு நின்ற தெம்மைக் கொல்லிய விதியு [3]நின்ற
[4]தோற்றவெம் பக்க லைய [5]வெவ்வலி தொலைய வந்தாய்.

(இ-ள்.) யாவர்க்குந் தலைவனான இராமன்,—நாணேற்றியவில்லையுடை யவனாய் (பகைவரையொழிக்கக்) காத்துக்கொண்டிருக்கின்றான்; விலக்குதற்கு அரியனான [பெருவலிபடைத்த](அவனுடைய)தம்பியும், நிற்கின்றான்; மற்றை யோராகிய வானரரும், நிரம்பவும் இருக்கின்றார்கள்; எம்மைக்கொல்லும் பொருட்டு, யமனும், சித்தமாகநிற்கின்றான்: (அதற்குஏற்ப)விதியும், காத்திருக் கின்றது; ஐயனே! (உன்னுடைய) கொடியவலிமை ஒழிவதற்கே தோல்வி யடைந்த எம்மிடத்துவந்தாய்; (எ - று)—நீ எம்மிடத்து வருவதால் உன்வலி யெல்லாம்தொலைந்து அழுங்கநேரிடுமென்று கூறியவாறு. தோற்ற-காலவழு வமைதி. பி-ம்:-1வில்லின், வில்லன். 2இறைமகன். 3நின்றான். 4ஏற்ற. 5வெவ்வழி.

கஅஎ. ஐயநீ யயோத்தி வேந்தற் கடைக்கல மாகி யாங்கே
உய்கிலை யென்னின் [1]மற்றிவ் வரக்கரா யுள்ளோ ரெல்லாம்
[2]மொய்கணை மாரி யாலே [3]யிறந்துபாழ் முழுதும் பட்டாற்
[4]கையினா லெண்ணீர் நல்கிக் கடன்கழிப் பாரைக் காட்டாய்.

(இ - ள்.) ஐயனே! நீ அயோத்தியரசனுக்கு [இராமனுக்கு] அடைக் கலப்பொருளாகி அங்குத்தானே உயிருய்ந்துவாழாயாயின், பின்னர் இந்த

அரக்கராயுள்ள நாங்க ளெல்லோமும் (அவ்விராமனுடைய)நெருங்கியஅம்பு மழையாலே உயிரொழிய (இலங்கை)முழுவதும் பாழாகிவிட்டால், கையினால் (நூல்கள்) பாராட்டிச்சொல்லுகிற நீரை (இறந்தஎம்பொருட்டுக்) கொடுத்து நீர்க்கடனைநிறைவேற்றுவா(ர் யாவருளர்? அவ)ரைக் காட்டுவாய்; (எ - று.)

நீயாவது இராமனுடனேயிருந்தால், இறந்தஎங்கட்கு நீர்க்கடன்தரலா மென்றவாறு; இதனால், இராமனிடத்து நீஇருப்பது, உனக்கேயன்றி எங்கட் கும் நன்மைபயப்ப தெனக் காட்டியவாறு. நீர்-வாலோதகதிலோதகங்கள் எள்நீர்எனப் பிரித்து-எள்ளோடுகூடியநீர் என்று உரைத்தலுமுண்டு. பி-ம்:— [1]மற்றிங்கரக்கராயுள்ளோரெல்லாம்,மற்றிவ்வரக்கராயுள்ளோரெல்லாம். [2]பெய் கணை, எய்கணை. [3]இறந்துபாழ்படுவேம், பிறந்துபாழ்முழுதும். [4]கைகளா லிறைநீரள்ளிக், கையினாலிறைநீர்நல்கி. (கநடுரு)

கநஅ. [1]வருவது மிலங்கை [2]மூதூர்ப் புலையெலா மாண்ட பின்னைத்
திருவுறை மார்ப னேநம் [3]புகுந்தபி னென்றுந் தீராப்
பொருவருஞ் செல்வந் துய்க்கப் [4]போதுதி விரைவி னென்றான்
கருமமுண் [5]டுரைப்ப தென்றா னுரையெனக் கழற லுற்றான்.

(இ-ள்.) (நீ) இலங்கைமூதூர்க்கு (மீண்டு) வருவதும், இழிவுள்ள அரக் கர்குழாமெல்லாம் மாண்டபிறகு, இலக்குமிவாழும்மார்பினையுடையனான இராமபிரானேயே (யாகும்): (அவ்வாறு இலங்கையிற்) புகுந்தபின்பு, விரை வில் என்றும்அழியாத ஒப்பற்ற (இலங்கையரசச்) செல்வத்தை அநுபவிக்கப் போகின்றாய் என்றுகூறிமுடித்தான், (கும்பகர்ணன்; அதுகேட்ட விபீஷ ணன், உன்னுடன்) சொல்லவேண்டியகாரியம்உள்ளது: (அதற்காகத்தான் வந்தேன்) என்றுசொன்னான்: (வந்த காரியத்தைச்) சொல் என்று (கும்ப கர்ணன்) வினவ, (விபீஷணன்) கூறத்தொடங்கினான்; (எ - று.)—புலை - அரக்கர்குழாத்துக்கு, ஆகுபெயர். பி - ம்:—[1]வருவதுன். [2]ஊர்க்கிப், ஊர்க் குப. [3]புகுந்தனை, புகுந்துபின். [4]விரைந்தனைபோதி, விரைந்தவண்போதி. [5]உரைப்ப. (கநடுகூ)

கநகூ.—இதுமுதற்பதினைந்துகவிகள்-விபீஷணன் கும்பகர்ணனை இராம பிரானையடையுமாறு பலகாரணங்காட்டிக் கூறுதலைத் தெரிவிக்கும்.

இருளுறு [1]சிந்தை யேற்கு மின்னருள் [2]சுரந்த வீரன்
[3]அருளுநீ சேரி [4]னென்றோ வபயமு மளிக்கு மன்றி
மருளுறு பிறவி நோய்க்கு மருந்து[5]மா மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை [6]யொழித்துவீ டளிக்கு மன்றே.

(இ-ள்.) அஜ்ஞாநம்நிரம்பியமனத்தையுடையேனான என்திறத்திலும் இனியஅருளைச் சுரந்தவீரனான இராமன், நீ வந்தாலும்(உன்திறத்தும்)அருள் புரிவான்: (இது) ஒன்றுதானோ?(உனக்கு எவராலும்துன்பம்நேராமல்)அபய மும் கருணைசெய்வான்: (இதுவும்) அன்றி, அஜ்ஞாநம்நிரம்பிய பிறவிநோய் க்கு மருந்துமாவன்; சகடத்திற்பொருந்திய உருளையொத்து மாறிமாறிவருந் தன்மையையுடைய (பிரபஞ்ச)வாழ்வை யொழித்து மோக்ஷத்தையும் அளிப்

பாணன்றே? (எ-று.)—அவயவம்-எவரிடத்தினின்றும் யாதோரச்சமும்நேராத நிலே. சகடத்தினுருளை மாறிமாறிவருவதுபோலப் பிரபஞ்சவாழ்க்கையும் மாறிமாறிவருதலால், '*மாறிச்செல்லும் சகடவுருளுறுவாழ்க்கை' எனப்பட்டது. பி - ம்:—[1]சிந்தையோர்க்கும். [2]சுரக்குமண்ணல், புரிந்தமன்னன். [3]அருளினை. [4]அன்றோ. [5]ஆய். [6]நீக்கி. (கஙடுள)

கசௗ. எனக்கவன் றந்த செல்வத் திலங்கையு மரசு மெல்லாம்
நினக்குநான் [1]றருவன் றந்துன் னேவலி னெளிதி னிற்பன்
உனக்கிதி னுறுதி யில்லே யுத்தம வுன்பின் வந்தேன்
[2]மனக்குநோய் துடைத்து [3]வந்த மரபையும் [4]விளக்கு வாழி.

(இ - ள்.) (இன்னும்) எனக்கு அந்தஇராமன் தந்தசெல்வத்தைக்கொண்டஇலங்கையும் (அதனை) ஆளும்முறைமையும் எல்லாவற்றையும் நினக்கு நான்கொடுப்பேன்: தந்து உன்னே வலின்வழியேஎளிதாய்நடப்பேன்: உத்தமனே! உனக்குஇதைக்காட்டிலும் உறுதிதருவது ஒன்றுமில்லே; உன்பின்வந்தேனாகியஎன்னுடைய மனத்திலுள்ள வருத்தத்தைப் போக்கிப் பிறந்தகுலத்தையும் விளங்கச்செய்வாய்; (எ - று.)—வாழி-அசை: வாழ்வாயாக எனினுமாம்.

கீழ்ச்செய்யுளில் இராமபிரானைச்சேர்ந்தால், அவனருளேப்பெற்று அபயமும்பெற்றுப் பிறவியும் ஒழிக்கலாமென்ற விபீஷணன், இதனல், இலங்காராச்சியமும் பெறலாமென்கின்றான்: இங்ஙனம் இம்மைமறுமைஎன்ற இரண்டுஞ் சிந்திப்பதனல், 'உனக்குஇதினுறுதியில்லே' என்கின்றான். இராவணனுடையதீச்செயல் தன்மனத்திற்குஒவ்வாமையாலும் இராமபிரானே பரம்பொருளென்ற மெய்ம்மைப்பொருள் மனத்திற் பட்டதனாலும் விபீஷணனுக்கு இலங்கையிலிருப்பு அடிக்கொதிக்க, அவ்விலங்கையிலுள்ள எல்லாப் பொருள்களையுந்துறந்து பரம்பொருளான இராமனைச்சேர்தலே தனதுசொரூபத்திற்குச்சேர்ந்ததென்றகருத்தினலேயே ஸ்ரீராமனைக் கிட்டினனாக, இலங்காராச்சியம் அவ்விபீஷணனுக்கு இராமனருளாற்கிடைத்தது: இதுபற்றியே இராமபிரானருளாற்கிடைத்த இராச்சியத்தைஉனக்குத்தந்திடுகின்றேனென்கின்றான். மனக்கு - விகாரம். பி-ம்:—[1]தந்துமற்றுனேவலினெடிதுநிற்பன். [2]மனத்துநோய், மனத்துயர். [3]வந்தம். [4]விளக்கிவாழ்தி, விளக்குமாதோ, வளர்த்துவாழ்தி. (கசறுஅ)

கசக. [1]போதலோ வரிது போனற் புகலிட மில்லே [2]வல்லே
[3]சாதலோ சரத நீதி யறத்தொடுந் தழுவி நின்றாய்
ஆதலா [4]லுளதா மாவி [5]யனுபமே [6]யுகுத்தெ னேய
வேதநான் மரபுக் கேற்ற [7]வொழுக்கமே [8]பிடிக்க வேண்டும்.

(இ - ள்.) அறத்தோடுநீதியையுந்தழுவிநின்றவனே! (இராமனையடையாதுவிடின், உயிர்தப்பிப்) போதலோ முடியாது; ஓடிப்போனாலும், புகலாக அடைதற்குஉரியஇடம் இல்லே; விரைவாகச் சாவதோ திண்ணம்: ஆதலால்,

*"ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே-ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: | "ஜீவே" என்றது

உள்ளதான பிராணனை அநியாயமாகஒழித்து என்னபயன்? ஐயனே! வேத நூலிற்கூறியமுறைமைக்குத்தக்க நல்லொழுக்கத்தையே (உறுதியாகப்) பற்ற வேண்டும்; (எ - று.)—"பொருவருந்திருவிழந்தனையம்பொன்றுவாய்" என்றது காண்க. பி-ம்:—[1]போதலே. [2]வல்லை. [3]சாதலே. [4]உனது. [5]அனுதமே. [6]உகுப்பதென்னே. [7]ஒழுக்கமோ. [8]பிடித்தல். (௧௬௫௯)

௧௬௨. தீயவை செய்வ ராகிற் சிறந்தவர் பிறந்த உற்றார்
[1]தாயவை தந்தை மாரென் றுணர்வரோ தருமம் பார்ப்பார்
நீயவை யறிதி யன்றே நினக்குநா னுரைப்ப [2]தென்னோ
தூயவை துணிந்த போது பழிவந்து தொடர வுண்டோ.

(இ - ள்.) தருமத்தையே (முக்கியமாகப்) பார்ப்பவர்கள்,—(ஒருவர்) தீத்தொழில்களைச்செய்வராயின், (அவரைக்குறித்து 'இவர்,—அன்புசெய்தலிற்) சிறந்தவர், உடன்பிறந்த உறவுமுறையுள்ளவர், ஔவையென்னப்படுகின்ற தாய், தந்தைமார்' என்று ஆலோசிப்பரோ? நீ அவற்றை அறிவாயன்றோ! உனக்கு யான் சொல்லவேண்டுவது என்னஉள்ளது? பரிசுத்தமான செயல்களை உறுதிகொண்டுசெய்யும்போது பழிவந்துதொடர்வதுஉண்டாகுமோ?

தருமத்தைக்கடைப்பிடித்து இராமபிரானைச் சேரின், உனக்கு அதனால் புகழுண்டாகுமேயன்றி, உடன்பிறந்தோனைக் கைவிட்டானென்றபழி விளையா தென்றவாறு. பி-ம்:—[1]தாயவர்தந்தையார். [2]என்னே, என்னை. (௧௬௬௦)

௧௬௩. மக்களைக் [1]குருக்க [2]டம்மை மாதரை மற்று ளோரை
ஒக்குமின் னுயிரன் னாரை யுதவி[3]செய் தாரோ டொன்றத்
துக்கமித் தொடர்ச்சி யென்று துறப்பராற் [4]றுணிவு பூண்டோர்
மிக்கது நலனே [5]யாகில் வீடு[6]பே றளிக்கு மன்றே. [ர்

(இ - ள்.) 'இந்தச்சமுசாரபந்தமானது, துன்பத்தை விளைக்கும்' என்று (தருமத்தில்) துணிவுபூண்டவர்,—மக்களையும் இருமுதுகுரவரையும் மனைவியரையும் மற்றுமுள்ளோரான சுற்றத்தாரையும், (தமது இனியபிராணனை) யொத்தநண்பரையும், உதவிசெய்தவரையு முளப்படத் துறந்தேதீர்வார்கள்; (அன்னார் துறவாமல்) மிச்சமாயுள்ளது தருமமேயாகில், (அது) மோட்சமாகியபுருஷார்த்தத்தைத் தருமன்றோ! (எ - று.)

எப்படிப்பட்டவராலும் போற்றத்தக்கது தருமமே யாதலால், தருமத்தைக் காத்தலின்பொருட்டுத் தமையன்முதலியோரைக் கைவிடுவதிற் குற்றமில்லையென்கின்றான், விபீஷணன். பி-ம்:—[1]குரவர். [2]தன்னை. [3]செய்தாரை. [4]துறவு. [5]ஆகி. [6]வேறு. (௧௬௬௧)

௧௬௪. தீவினை யொருவன் செய்ய வவனொடுந் தீங்கி லாதோர்
வீவினை யுறுத லைய மேன்மையோ [1]கீழ்மை தானோ
ஆய்வினை யுடையை யன்றே யறத்தினை நோக்கி யீன்ற
தாய்வினை செய்ய [2]வன்றோ [3]கொன்றனன் தவத்தின் மிக்கான்.

(இ - ள்.) ஐயனே! ஒருவன் பாவச்செயலைச்செய்யத் தீமைசெய்யாதவர்களும் அவனுடனே உயிரொழிதலையடைவது [இறப்பது] மேன்மையை

விளக்குமோ? தாழ்மையைவிளக்குமோ? [பாதகனுக்குஉதவிசெய்துஉயிர்விடுவது கீழ்மையையேதருமாதலால், அதுசெய்யத்தக்கதன்றென்றபடி]: ஆராய்ச்சிசெய்யுந்திறமையைப்படைத்துள்ளாயன்றோ! தருமத்தைப்பார்த்து,பெற்றதாய் தீத்தொழிலைச்செய்ததனாலன்றோ, தவத்தின்மிக்கவனான பரசுராமன் (அவளைக்) கொன்றான்; (எ - று.)

தீமைசெய்தோரை விட்டிடலாமென்றதனை உதாரணமுகத்தால் விளக்கியவாறு: மேலும் விளக்குவன். பரசுராமன் தாயைக்கொன்றவாலாறு வருமாறு:—சாமதக்கினியெனப்படுகின்ற பரசுராமனதுதாயான ரேணுகையென்பவள் ஒருகால் நீராடிப் புனல்கொணரக் கங்கைக்குப் போயிருக்கையில், அங்கே சித்திராதனென்ற கந்தருவன் அப்ஸரஸ்ஸ்திரீகளோடு புனல்விளையாட்டயர்கையில் அவனைக்கண்டு மனம்நெகிழ்ந்து அங்குத்தானே தாமதித்துப் பிறகு வந்து தன்கணவனான சமதக்கினிமுனிவன் ஓமஞ்செய்யும் நேரம் கடந்ததுகண்டு அச்சத்துடனே தீர்த்தகலசத்தை முன்னேவைத்து நிற்க, முனிவன் அவளுடையவியபிசாரத்தையுணர்ந்து, முறையே ருமண்வான் ஸுஷேணன் வஸு விசுவாவஸு என்னும் தன்புதல்வர்நால்வரைக் கூப்பிட்டு 'தீச்செயலைச்செய்தஇவளை மனத்திரக்கமிலையின்றிக் கொல்லுங்கள்' என்றுகட்டளையிட, அவர்கள் பின்வாங்கிநிற்க, இறுதிப்புதல்வனாகிய பரசுராமனைப்பார்த்துச் சமதக்கினிமுனிவன் கட்டளையிட்டமாத்திரத்தில் அந்தப் பரசுராமன் அவ்வண்ணமே செய்தனனென்பது. பி-ம்:—[1]கீழ்மையோதான். [2]அன்றே. [3]கொன்றதோர், கொன்றது. (௬௩௪)

௬௩௫. கண்ணுதல் றீமை [1]செய்யக் [2]கமலத்து முளைத்த [3]தாதை [றே
அண்ணறன் றலையி னொன்றை [4]யறுக்கவென் றமைந்தா னன்
புண்ணுறு புலவு வேலோய் பழியொடும் பொருந்திப் [5]பின்னை
[6]எண்ணுறு நரகின் [7]வீழ்வ தறிஞரு மியற்று வாரோ.

(இ - ள்.) கண்ணைநெற்றியிலுடையவனான சிவபெருமானானவன், (தனக்கு) ஒருதீத்தொழிலைச் செய்யவே கமலத்துத்தோன்றிய மூதாதையாகிய பெருமையிற்சிறந்தோனான பிரமனது தலையிலொன்றை அறுக்கவென்று ஒருப்பட்டானல்லவா? (அன்றியும்), புண்தன்மைபொருந்திய மாமிசம்படிந்த வேற்படையையுடையவனே! பழியொடும்பொருந்திப் பின்னும் (கொடுமையினால்) மதிக்கத்தக்கநரகத்திலும் வீழ்வதற்குக் காரணமானசெயலை அறிஞரும் செய்வார்களோ? (எ - று.)

தமக்குத் தீங்குவிளைவதற்குக் காரணமாயின் பெற்றோரையும் மாய்ப்பரென்பதற்கு இச்செய்யுளின் முன்னிரண்டடிகளிலும் உதாரணம் காட்டினான். கமலத்தண்ணல் செய்த தீத்தொழில்-தன்குமரன் மனைவிமயங்குமாறு ஐம்முகம்படைத்திருந்தமை. இச்செய்யுளின் பின்னிரண்டடிகளினால் அறிஞர் நரகிற்குஏதுவானதைப் புரியாரென்கின்றான். பி-ம்:-[1]செய்த. [2]கமலத்துள், கமலத்தின். [3]காதல். [4]அறுத்துவேறிட்டான், அறுத்தினிதமைந்தான். [5]பின்னர். [6]எண்ணுறுநரகம். [7]எய்தல், எய்த, வீழ. (௬௩௫)

கசசு. உடலிடைத் தோன்றிற் றொன்றை யறுத்ததனுதிர [1]மூற்றிச்
[2]சுடலுறச் சுட்டு வேறோர் [3]மருந்தினாற் றுயரந் தீர்வர்
கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கருமமன்றால்
மடலுடை யலங்கன் மார்ப மதி[4]யுடை யவர்க்கு மன்றே.

(இ - ள்.) இதழ்களையுடைய மலர்மாலையணிந்த மார்பையுடையவனே! உடலிலேதோன்றியதொரு கழற்புண்ணை யறுத்து அதிலுள்ள (அசுத்தமான) உதிரத்தை வெளிப்படுத்திக் காரத்தைப்பொருந்தவைத்துச் சுட்டு (ஆறுதற்கு உரிய) வேறோர்மருந்தினால் (கழற்பிணியினால்நேர்ந்த) துயரம் நீங்கப்பெறுவார்கள், (உலகத்தவர்): அறிவுடையோர்க்கு (வாசனையுள்ள) கோட்டத்தைக்கடலிலேதேய்த்துக்கழியுமாறு விடுவது, செய்யத்தக்கதொழிலாகாது; (எ - று.)

உடம்பிற் புறப்படுவதாயினும் கட்டியை யறுத்துப்போகட்டு அதில்அசுத்தஇரத்தமும் இல்லாதவாறு காரமிட்டுப் போக்கிப் பிறகு அந்தப்புண்ணையுலர்த்துவதுபோல அக்கிரமச்செயலைக்கொண்டுள்ள இராவணனை நம்முடையவனென்று கருதாது வேறுபடுத்தி அவனையறவொழித்தல் செய்யத்தக்கதேதவிர, கடலிடைக்கோட்டந்தேய்ப்பது பயனற்றசெயலாவதுபோல அந்த இராவணசேனையிலேயே யழியுமாறு உபேட்சித்து நீ இருப்பது பயனற்ற செயலாகு மென்றவாறு; பிறிதுமொழிதலணி. அறுத்துச்சுடுதல் சில நோய்க்குப்பரிகாரமாதலை "வாளா லறுத்துச் சுடினும்" என்பதனாலும் அறிக. சுடுதல்-சூடுபோடுதலுமாம். பி-ம்:—[1]முற்றிச். [2]சுடர். [3]மருந்தினில். [4]உடையோர்க்கு. (கஙசுசு)

கசஎ. காக்கலா நும்முன் றன்னை [1]யெனினது கண்ட தில்லை
ஆக்கலா மறத்தை வேறே [2]யென்னினு மாவ தில்லைத்
[3]தீக்கெலாங் [4]கொண்ட தேவர் சிரிக்கலாஞ் [5]செருவி லாவி
போக்கலாம் [6]புகலாம் பின்னை நரகன்றிப் பொருந்திற் றுண்டோ.

(இ-ள்.) உம்முடையதமையனாரைக் காக்கலாமென்றாலோ அதற்குஉபாயம் ஏற்பட்டிலது; (அன்றி, அவனுடைய) அதருமத்தை வேறேயாக்கலாம் [போக்கவழி தேடலாம்] என்றாலும் ஆகுவதன்று; (இனி போர்காணுமாறு) திக்குகளையெல்லாம் கைப்பற்றிக்கொண்டுள்ள தேவர்கள் சிரிக்கலாகும் போரிலே (நீயும் உன்) ஆவியைப் போக்கலாம்: பின்பு நரகமும் புகலாம்: இதுவன்றிப் பொருந்தியசெயல் (வேறே) உண்டோ? (எ - று.)

இரண்டாமடியில், ஆக்கலாம் அறத்தை வேறேஎன்று பிரித்து-(அவனுடனிருந்தே) தருமத்தை வேறேசெய்வோமென்றாலும் அதுமுடியாது என்று உரைப்பாருமுளர். 'நும்முன்' என்று இராவணனைக்கூறுகின்றான், தான் அவனுறவையொழித்தமை தோன்ற. தீக்கெலாம், தீக்கு-திக்குஎன்பதன்நீட்டல். பி-ம்:—[1]என்னினும். [2]எனினுமாங்காவதில்லை. [3]தீக்கலாம், தீர்க்கலாம். [4]கொண்டு. [5]செருமுன்னாவி. [6]பின்னைநின்ற, புகலாம் பின்னர், போனபின்னை. ()

கசஅ. மறங்கிளர் [1]நூலகை வென்று வாழ்ந்திலை மண்ணின் மேலா
இறங்கினை யின்று காறு மிளமையும் [2]வறிதே யேக

உறங்கினை யென்ப தல்லா லுற்றதொன் [3]றுளதோ [4]வென்னீ
அறங்கெட வுயிரை நீத்து மேற்கொள்வா னமைந்த தையா.

(இ-ள்.) ஐயனே! விளங்குகின்றமேலுலகங்களையெல்லாம் (உன்னுடைய) வீரகுணத்தினல் வென்றும் (அங்குத்தானே) வாழ்ந்தாயில்லை; பூமியின்மேலே யிறங்கி இன்றுவரையிலும் இளமையும் வீணேகழிய உறங்கினையென்பதல்லது (நீ) பெற்றநன்மை ஒன்று உள்ளதோ? தருமங் கெடும்படி உயிரைவிட்டு மேற்கொள்ளுமாறு நீ பொருந்தியுள்ளது என்? (எ-று.)—பி-ம்:—[1]செருவில். [2]வதிதேபோக, வதிதுபோக. [3]உளதே, உளவோ. [4]எண்ணி, என்ன, என்னே. (கஙசுசு)

கஙசுஎ. திருமறு மார்ப னல்க [1]வனந்தருந் [2]தீர்ந்து செல்வப்
பெருமையு மெய்தி [3]வாழ்தி யிறிலா நாளும் பெற்றாய்
ஒருமையே யரசு செய்வா [4]யுரிமையு முளதே யொன்றும்
[5]அருமையு [6]மிவற்றி னில்லைக் காலமு மடுத்த தையா.

(இ - ள்.) இலட்சுமியையும் (ஸ்ரீவத்ஸமென்னும்) மச்சத்தையும் மார்பிலுடையவனை திருமாலினவதாரமான ஸ்ரீராமன் கருணைசெய்ய, (எப்போதும் உனக்குஉண்டாயுள்ள) நித்திரையையும் ஒழிந்து, செல்வப்பெருமையையும் பெற்றுஅழிவில்லாதவாழ்நாளும் பெற்றுவாழ்வாய்: [சிரஞ்சீவியாயிருத்தலையும் பெற்றவனுவாய்]: தனித்து விளங்க [ஏகசக்ராதிபதியாக] அரசுபுரிவாய்: (ஆள்வதற்கு உனக்கு) உரிமையும் உள்ளது: இவ்வாறெல்லாஞ்செய்வதிற் சிறிதும் அருமையும்இல்லை; ஐயனே! (அவ்வாறுசெய்யக்) காலமும் ஏற்றுள்ளது; (எ-று.) —பெற்றாய்-தெளிவினல் எதிர்காலம் இறந்தகாலமாகவந்த காலவழுவமைதி. பி - ம்:—[1]அனந்தலும். [2]தீரும். [3]வாழி. [4]உரிமையோவுனதே, உரிமையே. [5]அருமையே. [6]இதனின். (கஙசுஎ)

கஙஅo. தேவர்க்குந் தேவ னல்க விலங்கையிற் செல்வம் [1]பெற்றால்
[2]யாவர்க்குஞ் சிறியை யல்லை யாருனை நலியு மீட்டார்
மூவர்க்குந் [3]தலைவ ரான மூர்த்தியா றறத்தை முற்றுங்
[4]காவற்குப் [5]புகுந்து [6]நின்றார் காகுத்த வேடங் காட்டி.

(இ-ள்.) மும்மூர்த்திகளுள்ளுந் தலைமைமூர்த்தியானவர் தருமத்தை முழுதும் காக்கும்பொருட்டுக் காகுத்தவேடங்கொண்டு புகுந்துள்ளார்: (அப்படிப்பட்ட) தேவதேவனை இராமன் தந்தருள இலங்கைச்செல்வத்தைப் பெற்றால் எவரிடத்தும் சிறுமையுடையவனுகாய்: உன்னை எதிர்த்துவருத்தக்கூடியவர் யாவர்? (எ - று.)—பி-ம்:—[1]பெற்றாய். [2]ஏவர்க்கும், ஏவற்கும். [3]முதலேயான, மூலமான. [4]காவற்கும். [5]பிறந்து. [6]நின்றான். (கஙசுஅ)

கஙக. உன்மக்க ளாகி யுள்ளா ருன்னொடு [1]மொருங்கு தோன்றும்
என்மக்க ளாகி யுள்ளா ரிக்குடிக் கிறுதி [2]சூழ்ந்தான்
தன்[3]மக்க ளாகியுள்ளார் [4]தலையொடுந் திரிவ ரன்றே
[5]புன்மக்கட் டருமம் பூணப் புலமக்கட் டருமம் பூண்டால்.

(இ - ள்.) நீ புல்லியமக்களாகிய அரக்கரின்தருமத்தை மேற்கொண்டு (இராவணனுடனே) இராமல், அறிவையுடைய மக்களாகிய தேவர்களின்தரு

மத்தைப்பூண்டு (இராமனுடன்)சேர்ந்தால், (அப்போது), உன்மக்களாயிருப்பவரும் உன்னோடும் ஒருங்குபிறந்த என்மக்களாகியுள்ளவரும், இந்த அரக்கர் குடிக்கே முடிவைத் தேடியவனான இராவணனுடைய மக்களுடனே தலையெடுத்துத் திரிவாரன்றோ! (எ - று.)

தேவர்கட்குப் புலவ ரென்று ஒருபெய ரிருத்தலால், அவரை 'புலமக்கள்' என்றார். புன்மக்கட்டருமம் - அதருமம். புலமக்கட்டருமம் - நீதிவழுவாததருமம். இராமபிரானுடனே நீ சேர்ந்துவிடின், இராவணனொருவன் தன் சேனையுடனே இறந்தானென்றாலும், அரக்கர்குலத்தவரான நம்மிடத்து அவ்விராமன் கருணைவைத்திடுவனாதலால், நமதுபுத்திரர்களும் அவ்விராவணனுடைய புத்திரரோடு தலையெடுத்துத் திரியலாம்; இராட்சசவமிசம் ஒழிந்ததென்பதில்லாமற் போகுமென்றவாறு. இனி, மூன்றமடிக்கு-இராமபிரானுடனேசேர்ந்து பொருதலால், கும்பகர்ணன் விபீஷணன் என்பவர்களின்புதல்வர் இராவணபுத்திரரின் தலையைக் கையிற்கொண்டு திரிவ ரென்றலுமாம். இவ்வாறுகூறியது, இராவணனை இராமன்வெல்வானென்ற உறுதியினால். பி-ம்:—[1]உ தயஞ்செய்த. [2]சூழ்ந்தார். [3]மக்களோடுமையா. [4]தலைமையாய். [5]புன்மக்கட்டருமம்பூண்டார் புலமக்கட்டருமம்பூணார், புன்மக்கட்டருமம்பூணார் புலமக்கட்டருமம்பூண்பார். (காசுக)

கருஉ. முனிவருங் கருணை வைப்பர் [1]மூன்றுல கத்துந் தோன்றி
இனிவரும் [2]பகையு மில்லை யிறண்டென் [3]றிரங்க வேண்டா
துனிவருஞ் செருந ரான தேவரே துணைவ ராவர்
கனி[4]வருங் காலத் தைய பூக்கொய்யக் கருத லாமோ.

(இ - ள்.) (அன்றியும் நம்மீது), முனிவர்களும் கருணைகொள்வார்கள்; மூவுலகங்களிலும் இனி பகையாகத்தோன்றிவருபவரும் இலராவர்; '(நமக்கு) மரணம் உண்டாகுமோ?' என்று (அச்சத்தினால்)வருந்துதலும் வேண்டா: (அரக்கரோடு)மாறுபாடுகொண்டுபொருபவரானதேவர்களும்துணைவராகுவர்: கனி தோன்றுங்காலத்திலே, ஐயனே!(மரத்தில்தோன்றும்)பூக்களையே கொய்துவிட நினைக்கலாமோ? (எ - று.)

கனிதோன்றும்பருவத்து மலர்களைப் போற்றினால், அந்தமலர்களினின்றும் கனியுண்டாகும்: அவ்வாறன்றி, மலர்களையே கொய்துவிட்டாற் பிறகு எவ்வாறு கனிதோன்றும்? இராச்சியம்முதலியனபெற்று இனிதுவாழ்வதற்கு உரிய காலத்தில், அவ்வினியவாழ்ச்சிக்குக்காரணமாகும் உடலை இராமபிரானுக்குப் பகைவனாயிருந்து விட்டிடக்கருதுதல் தக்கதன்று என்றவாறு: ஈற்றடியிற்கூறிய உபமானப்பொருள் உபமேயத்தைவிளக்கியது-பிறிதுமொழிதலணி. துனிவருஞ் செறுநரானதேவர் - வானரவடிவாகவுள்ளதேவரென்னலாம். பி-ம்:—[1]மூவுலகத்துந். [2]துன்பம். [3]இரங்கவேண்டாம். [4]வரு. (காஎ0)

கருந. வேதநா யகனே [1]யுன்னைக் கருணையால் வேண்டி விட்டான்
[2]காதலா [3]லென்மேல் வைத்த கருணையாற் [4]கரும மீதே
ஆதலா லவனைக் காண வறத்தொடுந் [5]திறம்பா தைய
[6]போதுவாய் நீயே யென்னப் [7]பொன்னடி யிரண்டும் பூண்டான்.

(இ-ள்.) வேதத்தினாற்பிரதிபாதிக்கப்படுகின்ற கடவுளாகிய இராமனே,- (இயற்கையான தன்னுடைய) திருவருளாலும், என்மேல்வைத்துள்ள கருணையால்தோன்றிய அன்பினாலும், உன்னைவேண்டிக்கொள்ளுமாறு (என்னை) அனுப்பினான்; செய்யத்தக்க காரியமும் அவ்விராமனைச்சேர்ந்திருக்கவேண்டுவதே: ஆதலால், ஐயனே! தருமத்தோடுமாறுபடாமல் அப்பிரானைக்காணுமாறு நீயே வருவாய் என்றுசொல்லி (அந்தக்கும்பகர்ணனது) அழகிய திருவடியிரண்டையும் (சிரமேற்) பூண்டான்; (எ - று.)

இதனால், 'ஒருகால் இராமன் கைக்கொள்ளாவிடின் என்னசெய்வதென்ற சங்கை உனக்கு வேண்டா; அப்பிரானுடையஏவலாலேயே வந்துள்ளேன்' என்றவாறு. கருணை - இயல்பாய் எல்லாவுயிர்களிடத்துந்தோன்றும் அருள். காதல் - தொடர்புபற்றிஒருவரிடத்துத்தோன்றும்அருள். விபீஷணனிடத்துமுன்னமே இராமபிரான் அருள் சுரந்தமையால், அவனைச்சார்ந்தவனென்று கும்பகர்ணனிடத்துத் தோன்றிய அன்பை 'கருணையாற்' காதலால் என்றான். பி-ம்:—[1]என்னைக். [2]ஈதலால். [3]உன். [4]தருமம். [5]திறம்பல். [6]போதுவாயாக, போதுவாயாதி. [7]பொலன்கழல். (௧௩௭௧)

௧௫௪.—அவ்வாறுசொல்லிக் கும்பிட்டுநின்றவிபீஷணனையெடுத்துத் தழுவிக் கும்பகர்ணன் சொல்லத்தொடங்குதல்.

[1]தும்பியந் தொடையல் மாலைச் சுடர்முடி [2]படியிற் றோயப் [ள்
[3]பம்புபொற் கழல்கள் கையாற் பற்றினன் [4]புலம்பும் பொற்றோ
தம்பியை யெடுத்து மார்பிற் [5]றழுவித்தன் [6]றறுக ணூடு
வெம்புணீர் [7]சொரிய நின்றா னினையன விளம்ப லுற்றான்.

(இ-ள்.) வண்டுகள்மொய்க்கின்ற அழகிய தொடுத்தலைக்கொண்ட மலர்மாலையைச்சூடிய ஒளிபொருந்திய முடிபூமியிற்படியும்படி (சாஷ்டாங்கமாகவணங்கித் தனது) பரவியபொற்கழலையணிந்த பாதங்களைக் கையாற்பற்றினவனாய்ப் புலம்புகின்றபொற்றோளைக்கொண்ட தம்பியான விபீஷணனை (க்கும்பகர்ணன்) எடுத்து மார்பிலேதழுவிக்கொண்டு தன்னுடையதெறுவதுபோன்றகண்களின் வழியாய்வெப்பமுள்ள இரத்தநீர் சொரியநின்றவனாய் இவ்வாறானசொற்களைச் சொல்லலானான்; (எ-று)—அவற்றைமேலொன்பதுகவிகளிற் காண்க.

தறுதல் = தெறுதல். கொடும்பார்வையையுடையவனென்பார் 'தறுகணூடு' என்றார். 'காட்டமுஞ், செவ்வழி நீரொடுங் குருதிதேக்கினான்' என்றாற்போல, இங்கு 'கணூடுவெம்புணீர்சொரியநின்றான்' என்றார். 'தொடையல்-மலர்மாலை, மாலை-மணிமாலை' என்றலுமுண்டு. பி-ம்:—[1]தும்பியன், தும்பையந், தும்பியின். [2]அடியில். [3]பைம்பொலன்...கையிற், பம்புபைங்...கையாற். [4]புலம்பு, புலம்பய். [5]தழுவினன். [6]தறுகண்ணோடும், தடங்கணூடு, தறுகணூனும். [7]சோர. ()

௧௫௫.—இதுமுதல்ஒன்பதுகவிகள்-விபீஷணனைநோக்கி 'இராவணனுக்குச் சார்பாக என்னுயிரையீவேன்: நீ இராமனை விரைவிற்சேர்' என்று கும்பகர்ணன் கூறுவதைத் தெரிவிக்கும்.

நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் [1]பின்னைப்
போர்க்கோலஞ் செய்து விட்டாற் குயிர்கொடா தங்குப் [2]போகேன்

தார்க்கோல மேனி [3]மைந்த [4]வென்றுயர் தவிர்த்தி யாகிற்
கார்க்கோல மேனி யானைக் கூடுதி கடிதி [5]னென்றான்.

(இ - ள்.) நீரிலெழுதியகோலத்துக்கு ஒப்பான [நிலையில்லாத] செல்வ வாழ்க்கையை விரும்பி, நெடிதுநாள்வளர்த்துப் பின்பு (இன்று) போர்க்கோலஞ்செய்து (என்னை) அனுப்பிய இராவணன்பொருட்டு என்னுயிரைக்கொடாமல்,அந்தஇராமனிடம் போய்ச்சேரமாட்டேன்; மாலையையணிந்த அழகிய உடம்பையுடைய மைந்தனே! என்துயரத்தைப் போக்குகின்றாயென்றால், (நீ),மேகம்போன்ற அழகியதிருமேனியையுடையவனான இராமனை விரைவிற் கூடுவாயென்றான்; (எ-று.)—இது, தொகுத்துச்சுட்டல்: மேல்வரும்எட்டுச் செய்யுள்கள்-வகுத்துக்காட்டல்; (எ - று.)

தான் தூங்கியெழுந்திருக்கும்போதெல்லாம் தனக்குவேண்டிய மதுமாமிசாதிகளைச் சித்தமாகவைத்துக்கொண்டு ஊட்டிவளர்த்தவனென்பான்'நெடிது நாள்வளர்த்து' என்றும், என்னாலானவரையிற்பொருவேனென்ற நம்பிக்கையோடு இராவணனிருக்கையில் நான் இராமனைச் சேர்வது விசுவாசகாதுகமாதலால் அவ்வாறுசெய்யேனென்பான் 'போர்க்கோலஞ்செய்துவிட்டாற்குயிர்கொடாதங்குப்போகேன்' என்றும், நீ இராமனைச் சேராவிடின் உன்னொருவனைக் கொண்டாவது அரக்கர்குலம் ஈடேறுமென்று இப்போது யான் கொண்டுள்ள எண்ணம் போய்விடுதலால் அதனால்என்மனத்துயர் மிகுமென்பான்'என்துயர்தவிர்த்தியாயின்'என்றும் கூறினான். "போர்க்கோலஞ்செய்து ...விடுத்தவன்"என்ற தொடர் நாச்சியார்திருமொழியில்வந்துள்ளது."புலைமேலுஞ்செலற்கொத்துப் பொதுநின்றசெல்வத்தின்புன்மைத்தன்மை, நிலைமேலுமினியுண்டோ...நீர்மேலைக்கோலமெனு நிலைமைத்தன்றே" என்று இராவணன் வதைப்படலத்துவருவது 'நீர்க்கோலவாழ்வைநச்சி' என்றவிடத்துக் காணத்தக்கது. பி-ம்:—[1]நீங்காப். [2]போதேன், போந்தேன். [3]எந்தாய். [4]எனதுயிர்தருதியாயின். [5]எகி. (கஙஎங)

கருசூ. மலரின்மே லிருந்த வள்ளல் [1]வழுவிலா [2]வரத்தி னானீ
உலைவிலாத் தருமம் பூண்டா யுலகுள [3]தனையு முள்ளாய்
தலைவனீ யுலகுக் கெல்லா முனக்கது தக்க தேயாற்
[4]புலையுறு மரண [5]மெய்த [6]லெனக்[7]கிது [8]புகழ தேயால்.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தாமரைமலரின்மேலிருப்பவனாகிய பிரமதேவனுடையகுற்றமற்ற வரத்தினாலே நீ அழிவில்லாத தருமத்தை மேற்கொண்டாய்;உலகுள்ளவரையுஞ் சிரஞ்சீவியாயுள்ளாய்; நீ உலகுக்கெல்லாந் தலைவன்: உனக்கு(இராமனைச்சேர்தலென்ற) அது தக்கது; இழிவுபொருந்திய மரணத்தையடைதலென்றது, எனக்குப் புகழை விளைக்கக்கூடியது; (எ - று.)—ஆல்-தேற்றம்.

நீ சிரஞ்சீவியாயிருத்தலால் எப்போதும்இருந்துகொண்டுஇலங்கையைப் பாதுகாக்கலாமாதலால் அதற்குஏற்ப இராமனைச்சேர்ந்தது·தக்கதே:சேர்ந்ததில் உயிருக்குஅஞ்சிமாற்றானைச்சேர்ந்தானென்றபழி உண்டாவதற்கு வழியில்லை;

இறக்கவேண்டிய எனக்கோ, என்னைவளர்த்த தமையன் திறத்துச் செய்ந்நன்றி காட்டி மரணத்தை யடைவதே தக்கது: புகழும்உண்டா மென்றனன், கும்ப கர்ண னென்க. பி-ம்:--[1]மழுவல்லான். [2]வரத்தினுலே. [3]ஆயுப்பெற்றாய். [4]புலை யறு. [5]எனும். [6]எமக்கு. [7]அது. [8]புகழுமே. (கருஎச)

கருஎ. கருத்திலா [1]விறைவன் றீமை [2]கருதினு லதனைக் காத்துத்
திருத்தலா [3]மாகி னன்றே [4]திருத்தலாந் [5]தீரா தாயிற்
[6]பொருத்துறு பொருளுண் டாமோ [7]பொருதொழிற் குரிய ராகி
ஒருத்தரின் முன்னஞ் சாத லுண்டவர்க் குரிய தம்மா.

(இ - ள்.) ஆலோசனையில்லாத தலைவன் தீத்தொழிலைச் செய்யக் கருதினனேயானல், அதனைச் செய்யவொட்டாது தடுத்து (அவ்விறைவனைத்) திருத்துவது கூடுமாயின் திருத்துதல் நல்லதேயாம்; (திருத்துவது) கூடாதாயின், (மாற்றாரைச்) சேர்தலால் அடையக்கூடியபொருளுண்டோ? (ஒருவருடைய அன்னத்தை) உண்டவர்க்கு உரியசெயல், பொருதொழிற்குஉரிமையுடையவராயிருந்து ஒப்பற்றதலைவர்க்குமுன்னஞ் சாதலே; (எ - று.)

பொருத்து-முதனிலைதிரிந்ததொழிற்பெயர். இங்கே, மாற்றாருடனே பொருந்துகை. இதனால், எனக்கு மாற்றாரைச்சேர்தல் தகுதியன்றென்றவாறு. பொருத்துறுபொருளுண்டாமோ - பொருந்தியதக்கபொருளும் [நன்மையும்] நேருமோ? நேராதென்றலுமொன்று. பி - ம்:—[1]விரைவின். [2]கருத்தினல். [3]ஆகினன்றோ, ஆகிலொன்றோ, ஆகிலன்றோ, ஆகிலன்றே. [4]திருத்துக, திருத்துதல். [5]திருந்தாதாயின், தீராதென்னின். [6]பொருத்தலாம்பொருள்வேறுண்டோ, பொருத்துறுபொருளுண்டாமே. [7]பொருத்துக பொறுத்தானுகில், போர்த்தொழிற்குரியராகி, பொருதொழிற்குரியரான. (கருஎரு)

கருஅ. [1]தும்பியந் தொடையல் வீரன் சுடு[2]கணை [3]தூரப்பச் சுற்றும்
வெம்புவெஞ் சேனை யோடும் வேறுள கிளைஞ ரோடும்
உம்பரும் பிறரும் [4]போற்ற வொருவன்[5]மூ வுலகை யாண்டு
[6]தம்பியை யின்றி மாண்டு [7]கிடப்பனோ தமையன் மண்மேல்.

(இ - ள்.) தேவர்களும் மற்றுமுள்ள அசுரர்முதலியோரும் போற்றுமாறு ஒப்பற்றவனான(என்)தமையன் மூவுலகங்களையும் அரசுபுரிந்துவிட்டு, (இப்போது முடிவில்) வண்டுகள்மொய்க்கின்ற அழகிய மலர்மாலையையணிந்த வீரனாகிய இராமன் (தனது) சுடுகின்ற அம்புகளைச் சுற்றிலும் செலுத்துகையில், வாடுகின்ற கொடுஞ்சேனையோடும் வெவ்வேறுள்ள பந்துக்களோடும் தம்பியுமின்றித் தரையில் மாண்டுகிடத்தற்கு உரியனோ? (அல்லனே); (எ - று.)

இதுவும் அடுத்தகவியும், இராவணனைத் தனித்து மாளுமாறுவிட்டிடுதல் எனக்குத் தகுதியன்றென்று கும்பகர்ணன் கூறுவதைத் தெரிவிக்கும். பி-ம்:---[1]தும்பை. [2]சரம். [3]துணிப்ப, தொலைப்ப, துடைப்ப, சுளிப்ப, துணிக்க. [4]காணு, காண. [5]மூன்றுலகையாண்டான். [6]தம்பியரின்றி, தம்பியையன்றி. [7]கிடப்பதோ. (கருஎசு)

கருசு. அணை[1]யின்றி [2]யயர்ந்த வென்றி யஞ்சினர்[3]நகைசெய் தார்க்கப்
பிணையொன்று கண்ணாள் பங்கன் பெருங்கிரி [4]நெருங்கப் பேர்த்த

பணையொன்று திரடோள் கால பாசத்தாற் பிணிப்பக் [5]கூசித்
துணையின்றிச் சேற லன்றோ [6]தோற்றுள கூற்றின் சூழல்.

(இ-ள்.) தடையில்லாமற்செய்த வெற்றிச்செயலாலே (முன்பு) அச்சங் கொண்டவரான மாற்றார் நகைத்துப்பேரொலி செய்ய, மான்பேடுபோன்ற கண்களையுடையவளான பார்வதியை (வாம)பாகத்திற்கொண்ட சிவபெருமானுடைய பெரியமலையாகிய கைலாயத்தை நெருங்கப்பேர்த்தனவும் மூங்கிலையொத்தனவுமான திரண்டதோள்கள் காலபாசத்தினாற் பிணிக்கப்படுகையில், (தான்)அச்சங்கொண்டு துணையுமின்றி (முன்பு தனக்குத்)தோற்றவனான யமனது இடத்திற்செல்லுதல்நன்றாயுள்ளதோ? (எ - று.)—பி-ம்:—[1]அன்றி. [2]உயர்ந்த. [3]நகையதாக. [4]நெருங்கிப். [5]தம்முன். [6]தோற்றுழல்,தோற்றுறும்.()

௧௬௦. செம்பிட்டுச் செய்த விஞ்சித் திருநகர்ச் செல்வந் தேறி
வம்பிட்ட தெரிய [1]லெம்மு னுயிர்கொண்ட பகையை வாழ்த்தி
யம்பிட்டுத் துன்னங் கொண்ட புண்ணுடை நெஞ்சோ டைய
கும்பிட்டு [2]வாழ்கி லேனியான் கூற்றையு மாடல் கொண்டேன்.

(இ - ள்.) செம்புகொண்டுசெய்த மதிலையுடைய அழகிய இலங்காநகரின் செல்வத்தை(ச் சாசுவதமானதென்று) கருதி, வாசனைபொருந்திய மாலையையணிந்துள்ள என்தமையனுடைய உயிரைக்கொண்ட பகைவனை வாழ்த்திக்கொண்டு, அம்புபடுதலாலே துளைக்கப்பட்டுப் புண்ணையடைந்த நெஞ்சோடு, ஐயனே! கூற்றையும் வலியையடக்கியவனாகிய யான், கும்பிட்டுவாழ்தற்கு உடன்படுகின்றிலேன்; (எ - று.)

இதனால், ஒருகால் இராவணனே முதலி லிறந்தானானாலும் அப்போதும் இராமனைச் சேரே னென்று கும்பகர்ணன் தன்னுறுதியைக் கூறுகின்றானென்க. "செம்புறழ்புரிசை" என்றாற்போல, 'செம்பிட்டுச்செய்தஇஞ்சி'என்றார்.
பி-ம்:—[1]என். [2]வாழ்கிலேனக், வாழ்கிலேனான். (௧௩௭௮)

௧௬௧. அனுமனை வாலி சேயை யருக்கன்[1]சேய் தன்னை யம்பொன்
தனு[2]வுடை யவரை வேறோர் நீலனைச் சாம்பன் றன்னைக்
கனிதொடர் [3]குரங்கின் சேனைக் கடலையுங் [4]கடந்து மூடும்
பனிதுடைத் துலகஞ் சுற்றுங் [5]கதிரெனத் திரிவன் பார்த்தி.

(இ - ள்.) அநுமானையும் வாலியின்குமாரனான அங்கதனையும் சூரியகுமாரனான சுக்கிரீவனையும் அழகிய பொன்னிறமான விற்களையுடைய அந்த இராமலட்சுமணரையும் வேறுபட்ட தன்மையையுடைய ஒப்பற்றநீலனையும் சாம்பவானையும் கனியைநோக்கிக் கைப்பற்றத் தொடர்கின்ற குரங்குகளின் சேனைக்கடலையும் வென்று, (பின்பு) மூடுகின்றபனியைப்போக்கி உலகத்தை வலஞ்செய்கின்ற சூரியன்போலத் திரிவேன்; காண்பாய்; (எ - று.)

இதுமுதல் மூன்றுகவிகளால் கும்பகர்ணன் தான் காட்டப்போகின்ற போர்த்திறனைப் பாராட்டிக் கூறுவன்: முன் சாத்துவிககுணந் தலையெடுத்துப் பேசியகும்பகர்ணன் இப்போது ராஜசம்தலையெடுத்து வீரவாதங்கூறுகின்றான். அம்பொற்றனுவுடையவர் என்பது-அழகியபொன்மயமான தநுசை [வில்லை] யுடையவரான இராமலட்சுமணரைக் காட்டும். பி-ம்:—[1]சேயவனை. [2]உடை

யவனை. [3]குரங்குச்சேனைக்கடலையும், குரங்கின்காலக்கடலொடும். [4]கடந்து மற்றப்,கலந்துகாலப், கடந்தாளும். [5]பரிதியில். (௬௭௯)

௧௬௨. ஆலங்கண் டஞ்சி யோடு மமரர்போ லரிக ளோடச்
சூலங்கொண் டோடி வேலை தொடர்வதோர் தோற்றந்[1]தோன்ற
நீலங்கொள் கடலு மோடக் [2]காலொடு நெருப்பு மோடக்
காலங்[3]கொண் டுலகு மோடக் கறங்கெனத் திரிவன் காண்டி.

(இ-ள்.) விஷத்தைக்கண்டு அஞ்சியோடிய தேவர்களைப்போல வானரர்களோடவும், (ஒருகடலானது) சூலத்தைக் கையிற்கொண்டு ஓடி (மற்றொருகடலை)த் தொடர்வதுபோன்ற ஒருகாட்சி யுண்டாகவும், நீலநிறத்தையுடைய கடலும் (தன்இடத்தைவிட்டுப்) புடைபெயர்ந்துசெல்லவும், காற்றும் நெருப்பும் (தம்நிலைகெட்டு)ஓடவும், யுகாந்தகாலத்தைக்கொண்டு உலகமும் ஓடவும் காற்றாடிபோலத்திரிவேன்(நான்): (இதனைக்) காண்பாய்: (எ - று.)

சூலத்தைக் கையிற்கொண்ட தான் வானரசேனையைத் துரத்திஓடுவது-சூலங்கொண்டு ஒருகடல் வேறொருகடலை யோடித் தொடர்வதுபோலுங் காட்சியையுண்டாக்கு மென்கின்றான்,கும்பகர்ணன். கடல் கால் நெருப்பு மூன்றும் கும்பகர்ணனதுபோரின் விசையால் நிலைபெயர்ந்து ஓடு மென்க. பஞ்சபூதங்களில் ஆகாயம் அமூர்த்தமாதலாலும்,பூமி நிலைத்திருக்குந்தன்மையதாதலாலும் ஓடமாட்டாவென்று அவற்றைவிலக்கினான்போலும். பி-ம்:—[1]தோற்றி. [2]நெருப்பொடுகாலும். [3]கொளுலகம், கொளுடலும். (௬௮0)

௧௬௩. [1]செருவிடை [2]யஞ்சார் வந்தென் கண்ணெதிர் [3]சேர்வ ரேலக்
கருவரை கனகக் குன்ற மென்னலாங் [4]காட்சி தந்த
[5]இருவரு நிற்க [6]மற்றிங் கியாருள [7]ரவரை யெல்லாம்
[8]ஒருவருந் திரிய வொட்டே னுயிர்சுமந் துலகி னென்றான்.

(இ-ள்.)போரிலே அஞ்சாதவராய் வந்து(எவரேனும்)என்கண்ணெதிரிற் சேர்வரானால், அந்தக்கருவரையும் கனகக்குன்றமும் என்று சொல்லுதற்கு உரிய தோற்றம்பொருந்திய இராமலட்சுமணர் நிற்க,இங்கு(ச் சேர்பவராகவுள்ளார்)எவரோ அவர்களையெல்லாம் ஒருவரையும் உலகில் உயிர்சுமந்துகொண்டு திரியவொட்டேன் என்றுகூறினான், (கும்பகர்ணன்); (எ - று.)

இராமலட்சுமணர்களையும் வெல்வேனென்னும் பொருள்படப் பரபரப்பினால் முந்துறக் கும்பகர்ணன் கூறினானாயினும், சற்று ஆலோசனைநிகழவே, அவர்களை "கருவரைக்கனகக்குன்ற மென்னலாங் காட்சிதந்த இருவரு நிற்க' என்று இங்குவிலக்கிக்கூறுகின்றான். பி-ம்:—[1]செருவரை. [2]அரிகள். [3]சேர்வராகில், நேர்வராயிற். [4]காட்சியோராம், காட்சிதந்தாய், காட்சித்தாய. [5]இருவரை. [6]மற்றிங்காருளார். [7]இவரை. [8]ஒருவரைத். (௬௮௧)

௧௬௪.—கும்பகர்ணன் இங்ஙனம்சொல்லியபின் ஓராலோசனையுஞ் செய்யாது இராமனைச்சேருமாறு விபீஷணனுக்கு மீண்டுங் கூறுதல்.

தாழ்க்கிற்பா [1]யல்லை யென்சொற் றலைக்[2]கொளத் [3]தக்க தென்று
கேட்கிற்பா [4]யாகி னெய்தி யவரொடுங் கெழீஇய நட்பை

வேட்கிற்பா யினியோர் மாற்றம் விளம்பினால் [5]விளைவுண் டென்று
சூழ்க்கிற்பா யல்லை யாருந் [6]தொழுநிற்பா யென்னச் சொன்னான்.

(இ - ள்.) 'எவருந்தொழத்தக்க மேன்மைபெற்றவனே! என்சொல்லானது, தலையாலேற்கத்தக்க தென்றுகருதி (நான்சொல்வதை)க் கேட்பாயாயின், தாமதியாமல் (இங்குநின்றும்) போய் அந்தஇராமலட்சுமணரோடு பொருந்திய நட்பையே (மேலும்)விரும்புவாய்: இனி(என்னோடு) ஒருபேச்சுப்பேசினால் நன்மைவிளையுமோஎன்று ஆலோசித்தற்கு உரியவனல்லை: [ஆலோசிக்க வேண்டாஎன்றபடி]' என்றுஞ் சொன்னான், (கும்பகர்ணன்); (எ-று.)—பி-ம்:- [1]இல்லை. [2]கொள்ளத். [3]தக்க. [4]ஆகியேகி, ஆகிலேகி. [5]வினை. [6]தொழுகிற்பாய், தொழுகிற்பர். (௬௩அ௨)

௬௬௫.—கும்பகர்ணன் 'இராமனிடம் நீ செல்லுவது எமக்கும்நன்மை' என்று விபீஷணனுக்கு எடுத்துக்காட்டுதல்.

[1]போதுநீ யைய [2]பின்னைப் பொன்றினார்க் கெல்லா [3]நின்ற
வேதியர் தேவன் றன்னை [4]வேண்டினை [5]பெற்று [6]மெய்ம்மை
யாதிநாள் மரபி னாலே [7]கடன்களு மாற்றி [8]யேற்ற
மாதுயர் நரக நண்ணா வண்ணமுங் காத்தி [9]மன்னோ.

இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) ஐயனே! நீ, (இவ்விடத்தினின்று இராமனிடம்) செல்வாய்; பிறகு (பொருமாறு) நின்றுள்ள வேதியர்தலைவனான இராமனை வேண்டி(அநுமதி) பெற்று மெய்ம்மையான பழமையாகிய நூலிற் கூறிய முறைப்படியே இறந்தவர்கட்கெல்லாம் அந்திமக்கடன்களைச் செய்து, (அவர்கள்) பெறுவதாகவிருக்கின்ற மிக்கதுயரைவிளைக்கும் நரகத்தை(அவர்கள்)அடையாவகைகாக்கக் கடவாய்; (எ - று.)

ஈமக்கடன் செய்யப்பெறாதோர் பிரேதசரீரத்துடன் கிடந்துவருத்தமுறுவரென்பது நூற்கொள்கை யாதலால், 'கடன்களு மாற்றி யேற்ற மாதுயர் நரகநண்ணாவண்ணமுங் காத்தி' என்கின்றான். பி-ம்:—[1]போதி. [2]பின்னர். [3]நின்று. [4]வேண்டியே. [5]பெற்றும். [6]மேன்மை. [7]கடமையும், கடன்மையும். [8]ஏற்றி, ஆன்ற, ஆண்ட. [9]மன்ன. (௬௩அ௩)

௬௬௬.—'இதனால் தமக்காக வருந்தவேண்டா' என்று கும்பகர்ணன் விபீஷணனைத் தேற்றுதல்.

ஆகுவ தாகுங் காலத் [1]தழிவது மழிந்து சிந்திப்
[2]போகுவ தயலே நின்று போற்றினும் [3]போதல் செய்யுஞ்
சேகற [4]உணர்ந்தோர் நின்னி லியாருளர் [5]வருத்தஞ் செய்யாது
ஏகுதி யெம்மை நோக்கி யிரங்கலை யென்று முன்னாய்.

(இ - ள்.)(உரிய)காலத்திலே ஆகவேண்டியது ஆகியேதீரும்: அழியவேண்டியதோ அழிந்துசிதறிப்போகுவதாம்: (அங்ஙனம்அழிந்து போகவேண்டியதைப்) பக்கத்திலேயேநின்று பாதுகாத்தாலும் போயேதீரும்: குற்றமறவுணர்ந்தவர் உன்னைக்காட்டிலும் யாவருளர்? வருத்தங்கொள்ளாமற்செல்வாய்:

என்றுமுள்ளவனே [சிரஞ்சீவியே]! எம்மைக்குறித்து இரக்கங்கொள்ள வேண்டா; (எ-று.)—பி-ம்:—[1]ஆகுவது, ஆவதும். [2]போவதும். [3]போதறிண்ணம். [4]தெளிந்தோர். [5]வருத்தல். (கஙஅச)

கசுஎ.—கும்பகர்ணன் விபீஷணனையெடுத்துத்தழுவி இன்றேடுஉடன் பிறப்புஒழிந்தது' என்ன, அவன்பாதத்து விபீஷணன்வணங்கல்.

என்றவன் றன்னை மீட்டு மெடுத்துமார் பிறுகப் புல்லி
நின்றுநின் றிரங்கி யேங்கி [1]நிறைகணு னெடிது நோக்கி
யின்றொடுந் தவிர்ந்த தன்றே யுடன்பிறப் [2]பென்ப தென்றான்
வென்றிவெந் திறலி னானு மவனடித் தலத்து வீழ்ந்தான்.

(இ - ள்.) என்றுகூறிவிட்டு, (கும்பகர்ணன்) அந்தவிபீஷணனை மீண்டும் எடுத்து மார்பினால் அழுந்தத்தழுவி நின்றுநின்றுஇரக்கமுற்று ஏக்கங்கொண்டு (நீர்) நிறைந்தகண்ணால் நெடிதுநேரம் பார்த்து,(உனக்கும்நமக்குமுள்ள) 'உடன்பிறப்பு என்பதாகிய தொடர்பு இன்றோடும் போயிற்றன்றே!' என்று கூறினான்; வெற்றியையும் கொடியபராக்கிரமத்தையுமுடையவனான விபீஷணனும் அந்தக்கும்பகர்ணனுடைய அடித்தலத்திலே வீழ்ந்தான்; (எ - று.)—தான் இன்றைக்கு இராமசரங்களால் இறந்துபடுவது திண்ணமென்றகருத்தினால், இவ்வாறுகும்பகர்ணன் கூறுகின்றான். பி-ம்:—[1]நீர்பொழிகண்ணின், நீர்க்கணனெடிது. [2]என்றுவிட்டான், என்பதென்ன. (கஙஅரு)

கசுஅ.—விபீஷணன் கும்பகர்ணனை விட்டுச்செல்லுதல்.

வணங்கினான் வணங்கிக் கண்ணும் வதனமும் மனமும் வாயும்
உணங்கினா [1]னுயிரோ டியாக்கை யொடுங்கினா னுரைசெய் தின்னும்
பிணங்கினா லாவ தில்லைப் [2]பெயர்வதென் [3]றெழுந்து [4]போந்தான்
குணங்களா லுயர்ந்தான் சேனைக் கடலெலாங் கரங்கள் கூப்ப.

(இ - ள்.) வணங்கினவனான விபீஷணன், வணங்கிக் கண்ணும் முகமும் மனமும் வாயும் உலர்ந்தான்: உயிரும் உடலும் ஒடுங்கினான்; பேசி இன்னும் (இந்தக்கும்பகர்ணனோடு) பிணங்குவதனால் ஆகக்கூடியபயன் ஒன்றுமில்லை: பெயர்வதே (தக்கது) என்று கருதி, குணங்களாலுயர்ந்தவனான கும்பகர்ணனுடையசேனைக்கடல்யாவும் கைகூப்பி (த் தன்னைத்) தொழ, எழுந்துபோனான்; (எ - று.)—குணங்களாலுயர்ந்தான் - விபீஷணன்என்றலுமொன்று. பி-ம்:—[1]வயிரவாக்கை, வயிரயாக்கை. [2]பெயர்வன். [3]உணர்ந்து. [4]பேர்ந்தான், போனான். (கஙஅசு)

கசுகூ.—விபீஷணன் பிரிந்துசெல்லக் கும்பகர்ணன் உதிரநீரைக் கண்ணினின்று பெருக்குதல்.

கள்ளநீர் [1]வாழ்க்கை யேமைக் கைவிட்டுக் காலும் [2]விட்டான்
[3]பிள்ளைமை துறந்தா னென்னப் பேதுறு [4]நிலைய னாகி
வெள்ளநீர் வேலை [5]தன்னில் வீழ்ந்தநீர் வீழ வெங்கண்
உள்ளநீ ரெல்லா மாறி யுதிரநீ [6]ரொழுக நின்றான்.

(இ - ள்.) 'கள்ளத்தன்மைபொருந்திய வாழ்க்கையுள்ள எங்களைக் கைவிட்டு, (தான்பிறந்த அரக்கர்) மரபின்தன்மையையுங் கைவிட்ட இந்தவிபீஷ

ணன், இளம்பிள்ளைத்தன்மையைத் துறந்தான் [பாரபுத்தியையடைந்துள்ளான்]' என்றுகருதி (அவனைப் பிரிந்ததனால்) கலங்கியமனத்தையுடையவனாய், (கும்பகர்ணன்),வெள்ளநீரைக்கொண்ட கடலிலே வீழுந்தன்மையுள்ள ஆற்றுநீர் உவமையாகாமற் பின்னிடுமாறு (தன்)கொடிய கண்ணிலுள்ள நீரெல்லாம் மாறி உதிரநீர்பெருகுமாறு நின்றான்; (எ - று.)—வீழ - உவமவுருபு. கால்-மரபு. பி-ம்:—[1]வாழ்க்கையோரைக்,வாழ்க்கையோரை.[2]விட்டுப்.[3]பிள்ளைமைதொடர்ந்தான்.[4]மனத்தனுகி.[5]தன்னுள்.[6]ஒழுகாநின்றான். (கரு-அஎ)

கஎ௦.—கும்பகர்ணன் தம்முடன் சேர்ந்து உடன்படாமையை இராமனையடைந்து விபீஷணன் தெரிவித்தல்.

எய்திய நிருதர் கோனு மிராமனை [1]யிறைஞ்சி யெந்தாய்
உய்திற முடையார்க் கன்றோ [2]வறன்வழி [3]யொழுகு முள்ளம்
பெய்திற னெல்லாம் பெய்து பேசினன் பெயருந் தன்மை
செய்திலன் குலத்து மானந் [4]தீர்ந்திலன் சிறிது மென்றான்.

(இ - ள்.) வந்தடைந்த இராட்சசர்தலைவனான விபீஷணனும்,—இராமனை வணங்கி, 'எந்தாய்! பிழைக்கின்ற கூறுபாட்டையுடையார்க்கல்லவோ தருமவழியிலே மனஞ்செல்லும்? செலுத்தக்கூடிய சாமர்த்தியமெல்லாஞ்செலுத்தி(க் கும்பகர்ணனிடம்) பேசிப் பார்த்தேன்: (தன்நிலையினின்று)மாறுந்தன்மையை மேற்கொண்டானில்லை: குலாபிமானம் சிறிதும் குலையப்பெற்றானில்லை' என்று தெரிவித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]எய்தி. [2]அறநெறி.[3]ஒழுக்கமுண்மை, ஒழுக்கமுண்டாம், வழுக்குண்டாய, ஒழுக்குண்டாய. [4]தீர்ந்தில. ()

கஎக.—அதுகேட்ட இராமன் 'விதிவலிது' எனல்.

[1]கொய்திறச் சடையின் கற்றைக் கொந்தளக் [2]கோலக் கொண்டல்
[3]நொய்தினிற் றுளக்கி யைய நின்னெதிர் [4]நும்முன் றோனை
[5]எய்துறத் துணித்து [6]வீழ்த்த லினிதன்றென் றினைய சொன்னேன்
செய்திற னினி[7]வே றுண்டோ விதியையார் [8]தீர்க்க கிற்பார்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) கொய்துவிடுதற்குரியதன்மைவாய்ந்த சடைத்தொகுதியான மயிர்முடியையுடைய அழகிய மேகம்போன்றவனான இராமன்,—(அதுகேட்டு)இலேசாகத் (தலை)துளக்கி, 'ஐயனே!உன்னெதிரே உன்தமையனை அம்பெய்து (உடல்) துண்டுபடும்படி துண்டித்துவீழ்த்தல் இனியதன்றென்றுகருதி இவ்வாறானவார்த்தைகளைக் கூறினேன்: இனி (நாம்) செய்யக்கூடியசெயல் வேறுஉள்ளதோ? விதியைத் தவிர்த்தற்குஉரியவர் யாவர்?' (எ று.)—பி-ம்:- [1]கொய்திறற், கொய்தளிர்ச். [2]காலக். [3]நொய்துறத். [4]நுன்முன்றோனை. [5]எய்திறத். [6]வீழ்க்கை. [7]வேறில்லை. [8]தொத்தச்செய்வார், தீர்க்கவல்லார். (கரு-அக)

கஎஉ.—அப்போது இராக்கதசேனை வானரசேனையை வளைத்தல்.

எனவினி துரைக்கும் [1]வேலை [2]யிராக்கதர் சேனை யென்னுங்
கனைகடல் கவியின் [3]றானைக் [4]கடலினை வளைந்து கட்டி

முனைதொழின் [5]முயன்ற தாக மூவகை [6]யுலக முற்றத்
தனிநெடுந் [7]தூளி யார்க்க வார்த்தில பரவை தள்ளி.

(இ - ள்.) என்று இனிதாகச்சொல்லும்போது அரக்கர்சேனையாகிய ஒலிக்கின்றகடல் வானரசேனையாகிய கடலை வளைந்து நெருக்கிப் போர்த்தொழிலிலே முயன்றதாக, மூவகையுலகையும்முற்றும்படி ஒப்பற்ற மிக்க தூளி நெருங்கவே, சமுத்திரமும் (தன்மீதுபடிந்த அத்தூளியை) நீக்கி ஆரவாரித்தில; (எ - று.)—தூளியின்மிகுதியைவிளக்கத் தொடர்புயர்வுநவிற்சியணியாக, தூளியைத் தள்ளிப் பரவையார்த்திலவென்றார். பி-ம்:—[1]காலை. [2]இராக்கதச். [3]சேனை. [4]கழியினை. [5]முயன்றாராக. [6]உலகுமுற்றும். [7]தூளியார்த்தது... தள்ளி, தூளியாலேதகைவுற்றபரவைதள்ளி, தூளி...பறவைதள்ளி.

களஙு.—போர்க்களத்தின் தன்மை.

ஓடின புரவி வேழ மோடின வுருளைத் திண்டேர்
ஓடின மலைக ளோட வோடின [1]வுதிரப் பேராறு
[2]ஆடின கவந்த பந்த [2]மாடின வலகை மேன்மேல்
[2]ஆடின பதாகை யோங்கி [2]யாடின பறவை யம்மா.

(இ - ள்.) குதிரைகளோடின; வேழங்களோடின; உருளையைப்பூண்ட திண்ணியதேர் ஓடின; (போர்வீரராற்செலுத்தப்பட்டு) மலைகள் (மேன்மேல்) வந்துகொண்டேயிருக்க, இரத்தப்பேராறுகள் ஓடின; கவந்தத்தொகுதிகள் ஆடின; பேய்கள் (இரைமிகுதியாகக்கிடைப்பதுபற்றி) மேன்மேலாடின: பதாகைகள் (வானத்தில்) உயர்ந்து ஆடின; (பருந்துமுதலிய) பறவைகள்(மாமிசம் முதலியவற்றைக்கவருமாறு வானத்தில்) வட்டமிட்டன; (எ - று.)—மலைகளோடஉதிர்வாறு ஓடினஎனினுமாம்.பி-ம்:—[1]உதிரநீத்தம். [2]ஓடின.(௬௩௬௯)

களச.—அரக்கவீரரும் குரக்குவீரரும் அடைந்தநிலை.

மூளையுந் தசையு மென்பும் குருதியு நிணமு மூரி
வாளொடுங் குழம்பு பட்டார் வாளெயிற் றரக்கர் [1]மற்றவ்
[2]வாளிருங் குருதி வெள்ளத் [3]தழுந்தின கவிக ளம்பொன்
[4]தோளொடு மரனுங் கல்லுஞ் சூலமும் வேலுந் தாக்க.

(இ - ள்.) மூளையும் தசையும் எலும்பும் இரத்தமும் நிணமும்என்பவற்றில் (தாம் கையிலேந்திய) வலியவாட்படையுடனே, வாள்போன்றஎயிற்றையுடைய அரக்கர், குழம்புபட்டார்கள்: மற்றைக்கவிகள், அழகியபொற்றோளும் மரனும் கல்லும் சூலமும் வேலுந்தாக்கவே, (அரக்கரான) அவ்வீரரின் மிக்க குருதிவெள்ளத்திலே அழுந்தின;(எ-று.)—மூரி-வலிமை மரனுங்கல்லுந்தாக்க அரக்கர் குழம்புபட்டார்: சூலமும் வேலுந் தாக்கக் கவிகளழுந்தினஎன்றலுமொன்று. பி-ம்:—[1]இற்றார்,மற்ற.[2]ஆளழி.[3]அழுங்கின,அழுந்திய.[4]தோளெழு.

களரு.—அரக்கருக்கும் வானரர்களுக்கும் போர்.

எய்தனர் நிருதர் கல்லா [1]லெறிந்தனர் கவிக ளேந்திப்
[2]பெய்தன ரரக்கர் பற்றிப் பிசைந்தன ரரிகள் [3]பின்று
[4]வைதனர் [5]யாது தானர் [6]வலித்தனர் வான ரேசர்
செய்தனர் பிறவும் வெம்போர் திகைத்தனர் தேவ ரெல்லாம்.

(இ-ள்.) அரக்கர்கள்(அம்புகொண்டு)எய்தார்கள்; வானரர்கள்(அவ்வரக்கர்மீது)மலையா லெறிந்தனர்;அரக்கர்கள்,(அவைகளைக் கைகளால்)ஏந்தி(மீண்டும் வானரர்மீது) எறிந்தார்கள்;வானரர்கள்,(அவைகளைக் கைகளாற்) பற்றிப் பிசைந்தார்கள்; பின்வாங்காமல், அரக்கர்கள், திட்டலானார்கள்; வானரர்கள், (அரக்கர்களைப்) பற்றியிழுக்கலானார்கள்; (இவ்வண்ணம்) போர்செய்தாரின் மற்றுமுள்ள செயலையும் கொடும்போரையுங் கண்டு தேவர்களும் திகைத்தார்கள்; (எ-று)---யாதுதானர் = அரக்கர். பி-ம்:—[1]எறிந்தன.[2]பெய்தன. [3]பின்றார். [4]வைதன. [5]யாதுந்தாழா. [6]வதைத்தனர், வலிந்தனர். (கஙகரு)

கஎசு.—இருதிறத்தாரும் பொருவதுகண்டு, கும்பகர்ணன் அங்குத் தன்தேரினை யோட்டிக்கொண்டுவருதல்.

நீரினை யோட்டுங் காற்றுங் காற்றெதிர் நிற்கு நீரும்
[1]போரினை யாக வென்று பொருகின்ற பூசனோக்கித்
தேரினை யோட்டி வந்தான் றிருவினைத் தேவர் தங்கள்
ஊரினை நோக்கா வண்ண [2]முதிரவே னோக்கி யுள்ளான்.

(இ - ள்.) (புயல்மழையில்) மழைநீரை யோட்டுகின்ற காற்றும்,காற்றையெதிர்த்துநிற்கின்றமழைநீரும்,நெருங்கியஉவமையாக(அரக்கரும்வானரரும் என்றஇருதிறத்தாரும்) எதிர்த்துப் பொருகின்ற போரைப் பார்த்து,—இலக்குமிதேவியைத தேவர்களினூரைநோக்காதபடி (எப்போதும்) இரத்தம்படிந்த வேலாயுதத்தைப் பார்த்துக்கொண்டிருப்பவனாகியகும்பகர்ணன்,—(தன்) தேரினை (அங்கு) ஓட்டிக்கொண்டுவந்தான்; (எ - று.)

திருவினைத் தேவர் தங்களூரினை நோக்காவண்ணம் உதிரவே னோக்கியுள்ளான் - தன்வேற்படைவலியால் தேவசம்பத்தைத் தனக்கேயுரியதாகச் செய்தவனென்றபடி. பி-ம்:—[1]போரினையாவமென்னப்,போரினையாயவென்னப், போரினையாயவென்ன, போரினையாயவென்று,போரினையாகவென்று, போரினைவாகவென்று. [2]உதிரவேநோக்கியுள்ளான். (கஙகச)

கஎஎ.—இதுமுதல் நான்குகவிகள் - கும்பகர்ணன் வானரர்களைப் படுத்தின பாட்டைத் தெரிவிக்கும்.

ஊழியிற் பட்ட [1]காலி னுலகங்கள் பட்டா லொப்பப்
பூழியிற் [2]பட்டுச் செந்நீர்ப் புணரியிற் [2]பட்டுப் [3]பொங்குஞ்
சூழியிற் பட்ட நெற்றிக் களிற்றொடுந் [4]துரந்த தேரின்
ஆழியிற் பட்ட வன்றே யவனியிற் [5]பட்ட வெல்லாம்.

(இ-ள்.) பூமியிற்பொருந்திய வானரங்களெல்லாம்,—யுகாந்தகாலத்தில் வீசுகின்ற காற்றில் உலகங்கள் அகப்பட்டதையொப்பப் புழுதியிலகப்பட்டும் இரத்தச்சமுத்திரத்திலகப்பட்டும், விளங்குகின்ற முகபடாத்தோடுபட்டங் கட்டியநெற்றியையுடைய யானைகளிலும் செலுத்திய தேரின்சக்கரங்களிலும் அகப்பட்டும் இறந்துபோயின; (எ - று.)—அன்றே-ஈற்றசை: தேற்றமுமாம். களிற்றொடும்-வேற்றுமைமயக்கம். பட்ட-முற்றும்,பெயரும். படுதல்-அகப்பட்டு இறத்தல். பூமியிற்பட்டுப்புணரியிற்பட்டுப் பொங்கும் களிறுஎன்று இயைப் பாருமுளர். பி - ம்:—[1]காலத்து. [2]பட்ட. [3]பொங்கச். [4]தொடர்ந்த. [5]பட்டது.

பற்றினன் வசந்தன் றன்னைப் பனைத்தடங் கைகளாலே
யெற்றின னிவனை மீள விடவொண்ணா தென்று சொல்லிக்
கொற்றமு முடைய னென்னாக் குழம்பெழப் பிசைந்து கொண்டு
நெற்றியிற் றிலத மாக விட்டன னிகரில் லாதான்.

என்று ஒருபாடல் இங்கே ஒருபிரதியிற் காண்கின்றது. (௧௩-௧௫)

௧௭௮. [1]குன்றுகொண் டெறியும் பாரிற் [2]குதிக்கும்வெங் [3]குரங் கைப் பற்றி, ஒன்றுகொண் டொன்றை யெற்று முதைக்கும்விட் டுழக்கும் வாரித், தின்றுதின் [4]றுமிழும் [5]பற்றிச் சிரங்களைத் திருகுந் தேய்க்கும், மென்றுமென் [6]றிழிச்சும் விண்ணில் வீசுமேற் [7]பிசைந்து பூசும்.

(இ - ள்.) (அப்போது கும்பகர்ணன்), —மலைகொண்டெறிவனவும் தேர்ப்பாரில்வந்து குதிப்பனவுமாகிய கொடிய குரங்குகளைக் கையினாற் பிடித்து, ஒன்றைக்கொண்டு மற்றொன்றை மோதுவான்; (சிலவற்றைக் காலி னால்)உதைப்பான்;(சிலவற்றைப்போக)விட்டு(க் காலினால்) துகைப்பான்;(சில வற்றை) வாரித் தின்றுதின்று உமிழ்வான்; (சிலவற்றைப்) பிடித்துத் தலைக ளைத் திருகுவான்;(சிலவற்றைப் பூமியிற் கையினால்)தேய்ப்பான்; (சிலவற்றை வாயிற் போட்டுக்கொண்டு) மென்று மென்று (தரையில்) வீழ்த்துவான்; (சில வற்றை)வானத்தின்மேல் தூக்கிவீசுவான்; (சிலவற்றைப்)பிசைந்து(அவற்றின் இரத்தங்களைச் சந்தனம்போலப்) பூசிக்கொள்வான்; (எ-று.)—பி-ம்:—[1]குன் றின்மீது. [2]புடைக்கும். [3]கூலம். [4]உமியும். [5]அள்ளிச். [6]உமிழும் வீரவசந்தனை; இழிச்சும்...வீசிடும். [7]மெய்யிற். (௧௩-௧௬)

௧௭௯. [1]வாரியி [2]னமுக்குங் கைபான் மண்ணிடை [3]யடிக்கும் வாரி
நீரிடைக் [4]குமிழி யூட்டு [5]நெருப்பிடை நிமிர வீசுந்
தேரிடை யெற்று மெட்டுத் [6]திசையினுஞ் செல்லச் சிந்துந்
[7]தூரிடை [8]மரத்து மோது மலைகளிற் புடைக்குஞ் சுற்றி.

(இ-ள்.)(பின்னும் கும்பகர்ணன்,—சிலவானரவீரர்களைச்)சமுத்திரத்தில் தோய்ப்பான்; (சிலவானரவீரர்களைக்) கையினால் வாரியெடுத்துத் தரையில் தாக்குவான்: (சிலரை)நீரில் மூழ்கச்செய்வான்:(சிலரை)நெருப்பினில் நேராக உயர்ந்துநிற்கும்படிவீசுவான்; (சிலவானரவீரர்களைத்)தேரிலே யெற்றுவான்; (சிலவானரர்களை) எட்டுத்திக்கிலும் சிதறிக்கிடக்கும்படி இறைத்துவிடுவான்; (சிலவானரர்களைப்) புதர்களிலும் மரங்களிலும் மோதுவான்; (சிலவானரர்க ளைச்)சுழற்றி மலைகளிலேபுடைப்பான்;(எ-று.)—பி-ம்:—[1]வாரினன்,வாரியை. [2]முகக்கும், முக்கும். [3]தேய்க்கும். [4]சுரிக்கநீட்டும், குவிக்குமப்பால். [5]நெருப் பெழ. [6]திசைகளும். [7]தூருடை. [8]மரத்தின். (௧௩-௧௭)

௧௮௦. [1]பறந்தன ரமர ரஞ்சிப் பல்பெரும் [2]பிணத்தைப் புல்லி
நிறைந்தன பறவை யெல்லா நெடுந்திசை நான்கு நான்கும்
மறைந்தன பெருமை [3]தீர்ந்த மலைக்குலம் வற்றி வற்றிக்
குறைந்தன குரக்கு வெள்ளங் கொன்றனன் [4]கூற்றுங் கூச.

(இ - ள்.) (அது கண்ட)தேவர்கள், அஞ்சி யோடிப் போகலாயினர்; பலபி ணங்களைத் தழுவிப் பறவைகளெல்லாம் நிறைந்தன; (அன்றியும்), பெருந்தி சைகள் நான்கும் நான்குமூலைத்திசைகளும், மறையலாயின; மலைக்குலம் பெருமைதீர்ந்தனவாய், (அளவினால்) வற்றிக்குறைந்தன;யமனும் அஞ்சும்படி குரங்குவெள்ளத்தைக் (கும்பகர்ணன்)—கொல்லலாயினன்; (எ - று.)

பறவைகள் இறந்துவிழும் வீரர்களின் உடற்றசையையுண்பதற்காக நிறை யவே திசைகள்மறைந்தன. பிணக்குவியல் மலையினும் மிக ஓங்கித்தோன்றுவ தனால், 'ஓங்கல்' என்று சிறப்பித்துக்கூறுமாறுஇருந்தமலைகள் பெருமைதீர்ந் தனஎன்க. போரில் இருதிறத்துவீரர்களும் பிடுங்கியெறிவதனால் மலைக்குலம் வற்றிக்குறைந்தன. பி-ம்:—[1]மறைந்தனர், பறைந்தனர். [2]பிணத்தின்பம்மல். [3]ஆன்றமலைக்குலம்வாங்கியெற்றக். [4]கூற்றம். (கூ௯௯)

க௮௧.—மூன்றுகவிகள் - வானரர்களால் கும்பகர்ணனிடத்து ஒன்றுஞ்செய்யலாகாமையைத் தெரிவிக்கும்.

[1]மற்றினி [2]பொருவர் மேலோர் மரனொடுங் கற்கள் [3]வீசப்
[4]பெற்றில [5]மாது [6]மன்றே [7]யின்றொடும் [8]பெறுவ தாதும்
[9]அற்றன [10]நீங்கு மென்னா வரிக்குலத் தலைவர் [11]பற்றி
எற்றின [12]வெறிந்த வெல்லா மிணைநெடுந் தோளி னேற்றான்.

(இ-ள்.) 'இனிஒருவர்மேலெறிவதற்கு ஒருமரமாவது கற்களாவது பெறு தவராவோம்: நிச்சயம்;இன்றைக்கே எதையும் [மிக்கவெற்றியையும்] பெறுக: நீங்குமற்றன'என்று சொல்லிக்கொண்டு வானரவீரர்கள் பற்றிமோதியனவும் வீசியெறிந்தனவுமான (மரம் கற்களாகிய) எல்லாவற்றையும் (கும்பகர்ணன் தன்னுடைய)இரண்டாகிய பெருந்தோள்களால் தாங்கிக்கொண்டான்; (எ-று.) —பெறுவது-வியங்கோள்முற்று:"கொள்ளப்படாது மறப்பதறிவிலேன் கூற் றுக்களே" என்றஇடத்துப்போல. பி - ம்:—[1]மற்றிலே. [2]ஒருவன். [3]வைக்கப். [4]பெற்றிலர். [5]ஆகும், வாழும். [6]என்றே. [7]எம்மொடும். [8]பெறுவதாமே. [9]அற்றி லன். [10]ஆகும், நீங்கும். [11]ஆற்றி. [12]எல்லாமெற்ற. (கூ௯௯)

க௮௨.கல்லொடு மரனும் வேருங் கட்டையுங் காலிற் [1]றீண்டும்
புல்லொடும் பிறவு[2]மெல்லாம் பொடிப்பொடி யாகிப் போன
இல்லைமற் றெறியத் தக்க வெற்றுவ [3]சுற்று [4]மென்னப்
பல்லொடும் [5]பல்லு மென்று பட்டன குரங்கு முட்டி.

(இ-ள்.) காற்றுப்போல்தீண்டுகின்ற கற்கள் மரங்கள் வேர்கள் கட்டை கள் புற்கள் மற்றும் யாவும் (வானரர்களினலெறியப்பட்டுப்) பொடிப்பொடி யாய்ப் போய்விட்டன; (எப்புறத்திலும்) இனி யெறியத்தக்கவையும் மோதத் தக்கவையும் இல்லை என்றுகருதிக் குரங்குகள் பல்லோடுபல்லைக் கடித்துக் கொண்டு (கும்பகர்ணனை)முட்டி இறந்திட்டன; (எ - று.)

"புறக்காழனவே புல்லெனப்படுமே" என்பவாதலால்,புறக்காழனவான மூங்கில் தென்னை பனை முதலியன இங்கே புல்லெனப்பட்டன; ஆகவே, அக க்கா ழுடையவை மரமெனப்பட்டன வென்க. புல் - திருணமெனின்,சிறப் பின்று. பி-ம்:—[1]தண்டு. [2]என்னப். [3]சற்றும். [4]என்னுப். [5]பல்லை. (௪௦௦)

கஅ௩. குன்றின்வீழ் [1]குரீஇக் குழாத்திற் [2]குழாங்கொளக் குறித்துக் [3]கூடிச்
சென்றுமே [4]லெழுந்து பற்றிக் கைத்தலந் தேயக் குத்தி
வன்றிற லெயிற்றாற் கவ்வி வள்ளுகிர் மடியக் [5]கீளா
ஒன்றுமா கின்ற தில்லை பென்[6]றிழிந் தோடிப் போன.

(இ-ள்) (சில்வானரங்கள்), (ஒன்று) கூடியெண்ணி, மலையின்மேல்வீழ்கின்ற குருவிக்கூட்டங்கள்போலக் கூட்டமாகப் போய்(க் கும்பகர்ணன்)மீதேறி (அவனைப்)பிடித்துக்கொண்டு(தமது)கை வருந்தும்படி குத்தியும் மிக்கவலிமையையுடைய பற்களினாற் கௌவியும் கூரியநகங்கள் நுனிமடங்கும்படி கீண்டும், (நம்மாற்)செய்யக்கூடியது ஒன்றுமில்லையென்று அறிந்து(அக்கும்பகர்ணனது உடம்பினின்றும்)இறங்கி ஓடிப்போவனவாயின; (எ - று.)—பி-ம்:—[1]குருவியென்னக்,அருவிபோலக். [2]குழாங்குழாங்கொண்டு,குழாங்கொடுகுதித்து குழாங்கொளக்குதித்து. [3]கூடச். [4]விழுந்து. [5]அள்ளி,நூறி, ஊன்றி. [6]இரிந்து. (க௪௦க)

கஅ௪.—நீலனென்னும் வானரன் விட்ட மலையைக் கும்பகர்ணன் பொடியாக்கிச் சிரித்துநிற்றல்.

மூலமே [1]மண்ணின் மூழ்கிக் கிடந்ததோர் பொருப்பை முற்றுங்
[2]காலமே லெழுந்த கால்போற் கையினாற் [3]கடிதின் வாங்கி
[4]நீலன்மே னிமிர்ந்த தாங்கோர் நெருப்பெனத் [5]திரித்து விட்டான்
சூலமே கொண்டு நூறி முறுவலுந் [6]தோன்றி நின்றான்.

(இ-ள்.) (அப்போது) நீலனென்னும்வானரன்,—அடிப்பகுதி பூமியில் மூழ்கிக்கிடந்ததான ஒப்பற்றதோர்மலையை முழுதும்(தன்)கையினால் யுகாந்தகாலத்தில்மேலெழுந்துவீசிய கடுங்காற்றுப்போல (உக்கிரமாக) விசையுடனே பெயர்த்தெடுத்து, வானத்திலோங்கியதான ஒருநெருப்புப்போல (வெம்மை பிறக்க) அங்கிருந்துசுழற்றிவிட்டான்; (கும்பகர்ணனும் தன்)சூலத்தைக்கொண்டு (அதனைப்) பொடியாக்கிப் புன்சிரிப்புத்தோன்ற நின்றான்; (எ - று.)—பி-ம்:—[1]மூழ்கிமண்ணிற். [2]காலமே. [3]வாங்கிநின்று. [4]நீலனுமரக்கன்மேலே நெருப்பெழச். [5]சுழற்றி, திருப்பி. [6]தோன்ற, தோற்றி. (க௪௦உ)

கஅ௫.—நீலன் கும்பகர்ணனோடு மல்லயுத்தஞ் செய்தல்.

பெயர்ந்தொரு சிகரந் தேடி னச்ச[1]மாம் [2]பிறர்க்கு மென்னாப்
புயங்களே படைக ளாகத் [3]தேரெதி ரோடிப் புக்கான்
இயங்களுங் கடலு மேகத் [4]திடிகளு [5]மொழிய யாரும்
பயங்கொளக் கரங்க [6]ளோச்சிக் குத்தினா னுதைத்தான் பல்கால்.

(இ-ள்.) மீண்டும் ஒருமலையைத் தேடினால் (தேடியெறிந்தஅதுவும் இம்மலைபோலவே நீறாய்விடுமாதலால்)மற்றவானரங்களுக்கும் (அதனால்) அச்சம் நேரிடு மென்றுகருதி(த் தன்)புயங்களேபடைக்கலமாக(க் கும்பகர்ணனது) தேருக்கெதிரே ஓடிப்போய்,(நீலன்), பலவகைவாச்சியங்களும் கடலும் மேகத்திடிகளும்பின்னடையப் [பெருஞ்சத்தமுண்டாக]யாவரும் அஞ்சும்படி கைக

ளால் ஓங்கிக் குத்தினுன்;பலமுறையுதைத்தான்;(எ-று.)—[1]ஆப்ப். [2]பிறக்கும். [3]தேரிடை. [4]இடிகளுள். [5]இயாருமெய்ப்ப, இடியயாரும், இழியயாரும். [6]வீசிக்.

கஅகூ.—நீலன் தோற்றல்.

கைத்தலஞ் [1]சலித்துக் காலுங் [2]குலைந்துதன் [3]கருத்து முற்றுன்
செய்த்தலை [4]யழலிற் காந்தி யெரிகின்ற நீலன் றன்னை
[5]எய்த்துயிர் பதைப்ப வன்ன னெற்றின [6]னிடது கையால்
[7]முத்தலைச் சூல மோச்சான் வெறுங்கையா னென்று முன்பன்.

(இ - ள்.) கைத்தலஞ் சலித்துப்போய், காலும் வருந்தித் தன்கருத்து நிறைவேறப்பெறுமல் நெய்யைத்தன்னிடத்துக்கொண்ட நெருப்புப்போல உக்கிரங்கொண்டு எரிகின்ற நீலனென்னும் வானரவீரனை, இளைத்துஉயிர் பதைக்கும்படி, அந்தக்கும்பகர்ணன்,-(தனது)இடக்கையால் எற்றினுன்;(என்றாலும்,இவன்ஆயுதத்தைக்கொள்ளாத)வெறுங்கையையுடையவனென்றுகருதி, வலியவனுன கும்பகர்ணன்,—(தன்னிடத்திலுள்ள) முத்தலைச்சூலத்தை ஓங்கி யெறியாதவனுயினுன்; (எ-று.)—பி-ம்:—[1]சலிக்கக். [2]ஓய்ந்து.[3]கருமமுற்றுன், கருத்துமுற்றி.[4]அனலிற். [5]கைத்துயிர்குடிப்பவென்ன,எற்றுயிர்குடிப்பவென்ன. [6]இடத்துக். [7]மெய்த்தலைச்...என்றுவெள்கி. (கஅ0ச)

கஅஎ.—அதுகண்ட அங்கதன் ஓர்மலையைப் பிடுங்கியெறிய, கும்பகர்ணன் அதைத் தன்தோளினு லேற்றல்.

ஆண்டது நோக்கி நின்ற வங்கத [1]னழி தன்னுள்
நீண்டதோர் நெடுந்திண் குன்ற நிலமுது [2]காற்ற[3]வாங்கி
மாண்டன னரக்கன் றம்பி யென்றுல கேழும் வாழ்த்தத்
தூண்டின னதனை யன்னே னொருதனித் தோளி னேற்றுன்.

(இ - ள்.) அப்போது அதனைப் பார்த்துநின்ற அங்கதன், கடலினுள்ளேயுள்ள நீண்டதாகிய ஒருபெரிய வலிய மலையைப் பூமிதேவியானவள் (தன்)முதுகையாற்றிக்கொள்ளும்படிபெயர்த்து,'அரக்கன்தம்பி மாண்டனன்' என்று ஏழுலகத்தவரும் (தன்னை வாழ்த்தும்படி (அவன்மீது) எறிந்தான்: அம்மலையை, அக்கும்பகர்ணன், ஒப்பற்றதன்ஒருதோளில் தாங்கிக்கொண்டான்; (எ - று.)—பி-ம்:—[1]ஆண்டுசால. [2]ஆற்றி. [3]நீக்கி. (கஅ0டு)

கஅஅ.—குன்றம் தூளான துகண்டு, குரக்குச்சேனை மனவுறுதிகுறைய, அங்கதன் சீற்றத்துடன் பின்வாங்காதுநிற்றல்.

ஏற்றபோ தனைய[1]குன்ற[2]மெண்ணருந் துகள தாகி
வீற்று[1]வீற் றாகி யோடி விழுதலுங் கவியின் வெள்ளம்
ஊற்றமே தெமக்கென் [2]றெண்ணி யுடைந்தது குமர [3]னுற்ற
சீற்றமுந் தானு நின்றுன் [4]பெயர்த்திலன் [5]சென்ற பாதம்.

(இ-ள்.) (அங்ஙனம் கும்பகர்ணன்) ஏற்றபோது, அந்தக்குன்றமானது எண்ணுதற்குஅரியதூளாகிச்சின்னபின்னப்பட்டுச்சிதறுண்டுவீழ்தலும்,குரங்குச்சேனை 'எமக்குப் பற்றுக்கோடாவது யாதுஉள்ளது? [எதுவுமில்லை]' என்று கருதி நிலைகெட்டது; அங்கத குமாரனே, (முன்)வைத்த பாதத்தைப்

பின்வைக்காதவனுய்ச் சீற்றமும் தானுமாக நின்ருன்; (எ-று.)—பி-ம்:—1வீற்ருக. 2அஞ்சி. 3ஏற்ற, ஏற்றுச். 4பெயர்ந்திலன். 5சென்று. (௧௪௦௬)

௧௮௯.—கும்பகர்ணன் வீசிய வயிரத்தண்டை அங்கதன் தன்கையாற் பிடித்துக்கொள்ளல்.

இடக்கையா லரக்க 1னுங்கோ ரெழுமுனை வயிரத் தண்டு
2தடுக்கலாந் தரத்த தல்லா வலியது தருக்கின் வாங்கி
மடக்குவா 3யுயிரை யென்று வீசின னதனை மைந்தன்
தடக்கையாற் பிடித்துக் கொண்டான் வானவர் தன்னை வாழ்த்த.

(இ-ள்.) (அப்பொழுது)கும்பகர்ணன்,—(தான்சென்ற)அப்போர்க்களத்திலேஎழுந்த [கூரிய]முனையையுடையதும் தடுக்கக்கூடிய தன்மையையுடையதாகாததுமான வலியதொரு வயிரத்தண்டை இடக்கையினுற் கருவத்தோடு எடுத்து,'(இவ்வங்கதனது) உயிரை யொழிப்பாய்'என்று சொல்லி வீசினுன்; அதனை, அங்கதகுமாரன், வானவர் தன்னைவாழ்த்தும்படி பெரியகையினுற் பிடித்துக்கொண்டான்; (எ-று.)—எழுமுனை-வினைத்தொகை. பி-ம்:—1ஆண்டோர். 2கடக்கலாந்...அன்றும் வலியது கடிதின், கடக்கலாந்...அன்றுவலியினுற்கடிது. 3ஆவி. (௧௪௦௭)

௧௯௦.—பிடித்த வயிரத்தண்டுடன் கும்பகர்ணன்தேரெதிரில் அங்கதன் குறுகிநிற்றல்.

பிடித்தது சுழற்றி 1மற்றப் பெருவலி யரக்கன் றன்னை
இடித்துரு மேறு 2குன்றத் தெரிமடுத் 3தியங்கு மாபோல்
அடித்துயிர் குடிப்ப னென்று வனல்விழித் தார்த்து மண்டிக்
கொடித்தடந் தேரின் 4முன்னர்க் குதித்தெதிர் குறுகி நின்ருன்.

(இ-ள்.)'பிடித்ததான தண்டாயுதத்தைச் சுழற்றிக்கொண்டே பின்பு மிக்க வலிமைபடைத்த அரக்கனை அந்தக்கும்பகர்ணனை(இந்தத்தண்டாயுதத்தால்) அடித்து இவனுயிரைக்குடிப்பேன்'என்று சொல்லி ஆரவாரித்து அனற்பொறி புறப்படவிழித்து மூண்டு, (அங்கதன்),—கொடிகட்டியபெரியதேரின்முன் பேரிடி இடித்தவண்ணம் மலையிலே நெருப்பைப்பரப்பிக்கொண்டு சஞ்சரிப்பதுபோலக் குதித்து,அந்தக்கும்பகர்ணனெதிரிலே நெருங்கிநின்ருன்;(எ-று.)—பி-ம்:—1மாற்றி. 2குன்றை. 3இறுக்கும். 4மீது. (௧௪௦௮)

௧௯௧.—கும்பகர்ணன் அங்கதனை வினவுதல்.

நின்றவன் றன்னை 1யன்ன னெருப்பெழ நிமிர நோக்கிப்
பொன்றவந் தடைந்த தானைப் புரவல னொருவன் ருனோ
அன்றவன் மகனோ வெம்மு 2ரனன்மடுத் தாக்கர் 3தம்மை
வென்றவன் ருனோ வாரோ 4சொல்லுதி விரைவி னென்ருன்.

(இ - ள்.) (தன்னெதிரேகுறுகிவந்து) நின்றவனை அங்கதனை அந்தக் கும்பகர்ணன் நெருப்புப்பொறி புறப்பட (முகத்தை)எடுத்துப் பார்த்து, (நீ) இறக்குமாறுஎன்னிடம்வந்துசேர்ந்த வானரசேனைத்தலைவனைசுக்கிரீவனோ? அன்றெனில், அவனுடையமகனை அங்கதனோ? (அன்றெனில்) எம்

முடைய ஊரிலே நெருப்பிட்டுஅரக்கரை வென்றவனை அநுமனே? ஆரோ? விரைவினிற் சொல்லுவாய்' என்று வினவினான்; (எ - று.)

'பொன்றவந்தடைந்த' என்பதை 'மகனே', 'வென்றவனே' என்றவற்றோடுங் கூட்டுக. வாலியின்புத்திரன் சுக்ரீவனுக்கும் மகன்முறையாதலறிக. மூன்றாமடியின்முதலில், அன்று-அன்றிஎன்ற வினையெச்சத்தின்திரிபு: இனி, அன்றுஅவன் (இராவணனைக்) கோபித்த அவ்வாலியினுடைய, மகனே? எனினுமாம். பி - ம்:—1நோக்கிநெருப்புகவிழித்துநீயிப், அன்றனெருப்புற நோக்கிநீயிப். 2அழல். 3மாள. 4விளம்புதி. (௧௪௦௧)

௧௯௨.—அங்கதன் தான் இன்னானென்பதைத்தெரிவித்து, உன்னை வாலினாற்கட்டிக்கொண்டுபோய் இராமனிடஞ் சேர்ப்பேனெனல்.

நும்முனை வாலிற் சுற்றி நோன்றிசை 1நான்குந் தாவி
மும்முனை நெடுவே லண்ணல் முளரியஞ் சரணஞ் 2தாழ்ந்த
வெம்முனை 3வீரன் மைந்த 4னின்னையென் வாலின் வீக்கித்
தெம்முனை யிராமன் பாதம் வணங்கிடச் செல்வ னென்றான்.

(இ - ள்.) உன்னுடையஅண்ணனை இராவணனை வாலினாற்சுற்றி வலியதிசைநான்கிலுந் தாவி (ச்சென்று), மூன்றுமுனையைக்கொண்ட நீண்ட வேற்படையையேந்திய பெருமையிற்சிறந்தவனான சிவபெருமானது தாமரை மலர்போன்ற அழகியதிருவடிகளில் வணங்கிய கொடியபோர்செய்யவல்லவீரனாகியவாலியின் மைந்தன், (யான்): (நான்), உன்னை என்வாலினாற்கட்டிப் பகைவரோடுமுனைந்துபொருகின்ற இராமபிரானுடையபாதத்தை வணங்கும் படிசெல்வேன் என்றான்; (எ - று.)

இராவணனைத் தன்வாலினாற் சுற்றியவண்ணம் சிவபிரானைவணங்கச் சென்ற வாலிக்கும், தன்வாலினாற் கும்பகர்ணனைச்சுற்றியவண்ணம் இராமபிரானைவணங்கப்போகும் அங்கதனுக்கும் ஒப்புமை. பி-ம்:—1நாலும்பாய்ந்த. 2சார்ந்த. 3வாலி. 4நின்னையும். (௧௪௧௦)

௧௯௩.—கும்பகர்ணன் அங்கதன் கூறியதைப் பிறதுறிப்புவகையாற் கொண்டாடுதல்.

உந்தையை மறைந்தோ ரம்பா லுயிருண்ட வுதவி யோற்குப் [ர்
பந்தனைப் பகையை1ச் செற்றுக் 2கொடுக்கிலை யென்னிற் பாரோ
நிந்தனை நின்னைச் 3செய்வர் நல்லது நினைந்தாய் 4நேரே
வந்தனை புரிவ ரன்றே வீரராய் வசையிற் றீர்ந்தார்.

(இ - ள்.) (தான்) மறைந்துநின்று உன்தந்தையை ஓரம்பினால் உயிர் கொண்ட உபகாரிக்குக் கட்டாகவுள்ள பகையை அழித்துக்கொடாமற்போனால், உலகத்தோர்,— உன்னை நிந்தனைசெய்வார்கள்; நல்லகாரியத்தைச் செய்யக்கருதினாய்; வீரராய்க் குற்றமற்றவர், (உன்னை) நேரே (கண்டு) வணங்குவாரன்றோ? (எ - று.)

உன்தந்தையைக்கொன்று உன்திறத்து அபகாரஞ்செய்தவனுக்கு நீ உதவிசெய்யத் தேடுவதனால் உன்னை உலகத்தோர் நிந்தனைபுரிவர்: வீரரானவர் உன்னை அவமதிப்பர்: நீ நினைந்தசெயல் நல்லதன்று எனக் கருத்துக்

காண்க: வஞ்சப்புகழ்ச்சியணி. பந்நா=தொகுதி: வடசொல். பி-ம்:—
1வென்று. 2காட்டலே. 3சொல்வார். 4வேறே. (௧௪௧௧)

௧௧கூச.—கும்பகர்ணன் என்னால் நீ வெல்லப்படுவாயெனல்.

இத்தலை 1வந்த தென்னை யிராமன்பால் வாலி னீர்த்து
வைத்தலை 2நுதலி யன்று வானவர் 3மார்பிற் றைத்த
முத்தலை யயிலி னுச்சி முதுகுற மூரி 4வால்போற்
கைத்தலங் 5காலுந் தூங்கக் கிடத்தலைக் கருதி யென்றான்.

(இ - ள்.) (நீ) இங்கேவந்துள்ளது, என்னை இராமனிடத்து (உன்) வாலாற்கட்டி யீர்த்துக்கொண்டுபோய் வைத்தலைக் கருதியன்று: வானவரின்மார்பிலே தைத்த மூன்றுதலையைக்கொண்ட வேற்படையின் கூரிய முனை (உன்மார்பிலுந் தைத்து) முதுகின்வழியாக வெளிப்பட (அது) வலிய வால்போன்றிருக்க, (அதிலே உன்னுடைய) கையுங்காலும் (தைப்புண்டு) தொங்கிக்கிடத்தலைக் கருதியாகுமென்றான்; (எ - று.)

நீ என்னை வாலினாற் கட்டிக்கொண்டு போவேனென்றது-நடவாதகாரியம்: என்முத்தலைவேல் உன்மார்பிற்பாய்ந்து முதுகின்வழியாய் வெளிப்பட அதனில் உன்கையும்காலும் மாட்டிக்கொண்டு தொங்குவதே நடக்கப்போகின்றசெய லென்று கும்பகர்ணன் கூறினனென்க. உச்சி-கூரியமுனை. பி-ம்:-
1வந்த. 2கருதியென்றால். 3மரபிற்றீர்ந்த. 4வாலிற். 5அவையுநல்கிக். (௧௪௧௨)

௧கூரு.—கும்பகர்ணனால் அங்கதன்கையிலிருந்த வயிரத்தண்டு பலதுண்டமாதல்.

அற்றவ னுரைத்த லோடு மனல்விழித் தசனி குன்றத்து
உற்றது போலு 1மென்னு மொலிபட வுலகை முட்கப்
பொற்றடந் தோளின் வீசிப் 2புடைத்தனன் பொறியிற் சிந்தி
யிற்றது நூறு கூறா யெழுமுனை வயிரத் தண்டு.

(இ - ள்.) அவ்வாறானசொல்லைச் சொன்னவுடனே, (அந்தக்கும்பகர்ணன்),—நெருப்புப்பொறி புறப்படவிழித்து, இடி மலைமீதுவிழுந்ததுபோன்ற ஒலிதோன்றவும் உலகத்தோர் அச்சங்கொள்ளவும் பொன்னாபரமணிந்த (தனது) பெரியகையினால் வீசிப்புடைக்கலானான்: (அங்கதன்கொண்டிருந்த) எழுமுனை வயிரத்தண்டானது, தீப்பொறிபோற்சிதறுண்டு நூறுகூறாய் முறிந்திட்டது; (எ - று.)

அவ்வாறு சொல்லியபின் கும்பகர்ணன் தன்கையினால்தாக்கவே, அங்கதன் கொண்டிருந்த வயிரத்தண்டு பலசுக்கலாயிற் றென்றவாறு. அங்கதன் எழுமுனைவயிரத்தண்டு கொண்டிருந்தமை ௧௨௧கூ-ஆங் கவியிற் காண்க. இனி, இப்பாடலுக்கு வேறுவகையாகக் கருத்துக் காணலுமாம்: அது வருமாறு:—கும்பகர்ணன் சொன்னவுடனே, (அங்கதன்), அனல்விழித்து ஒலிபடவும் உலகமுட்கவும், தோள்வலிகொண்டு (வயிரத்தண்டை) வீசி(க் கும்பகர்ணனை) ப்புடைத்தான்: அவன்மீதுபட்டதும் (கும்பகர்ணனுடல் மிகவலியதாகையால் வீசிய) எழுமுனைவயிரத்தண்டம் பலகூறாயிற்றென்பது. பி-ம்:—
1என்ன. 2புடைத்தன. (௧௪௧௩)

கககூசு.—அங்கதன் தோற்கையில் அநுமான்வருதல்.

தண்டிறத் தடக்கை யோச்சித் [1]தழுவிய தறுக ணனைக்
கொண்டிறப் புறுவ னென்னாத் [2]தலையுறக் குனிக்குங் காலைப்
[3]புண்டிறப் புறவ லாளன் கையினாற் புகைந்து குத்த
[4]மண்டிறப் பெய்த வீழ்ந்தான் மாருதி யிமைப்பின் வந்தான்.

(இ-ள்.) தண்டாயுதம் முறிய, (பிறகு அங்கதன்,—தன்) பெரியகைகளை உயரத்தூக்கிக்கொண்டு '(போர்க்கு)வந்துள்ள கொடியனை கும்பகர்ணனைப்பற்றிக்கொண்டு (இவனை) இறப்புறச்செய்வேன்' என்றுசொல்லி, (அவனைப்பற்றிக்கொள்ளுமாறு)தலைப்புறம் கீழேபொருந்தக் குனிந்தபோது,—வன்மையையுடையனை அந்தக்கும்பகர்ணன்,—கோபித்து (உடலிற்) புண்பலதோன்றுமாறு குத்த, (அங்கதன் அதனைத்தாங்கமாட்டாது அறிவுதப்பிப்) பூமிபிளவுபடும்படி கீழ்வீழ்ந்தான்: ஓரிமைப்பொழுதிற்குள் அநுமான் அங்குவந்தான்; (எ - று.)—உறுவன் = உறுவிப்பன்: பிறவினைப்பொருளில்வந்தது: அந்தர்ப்பாவிதணிச். பி-ம்:—[1]தழுவியத்.[2]தரையினிற் குனிக்கின்றானைப், தலையுறக்குத்துங்காலைப், தரைமிசைக்குதிக்கின்றானைப். [3]புண்டிறப்போர்வன்யாக்கை, புண்டிறப்புறுவல்யாக்கை. [4]மண்டிறப்பெய்து. (கஎகச)

கககூஎ.—அங்கதன்மார்பிற் சூலத்தைக்கும்பகர்ணன் எறிய, அநுமான் மலையைப்பறித்து அவன்மீதுஎறிதல்.

மறித்தவ னவனைத் தன்கை வயிர[1]வாட் சூல மார்பிற்
குறித்துற வெறிய லுற்ற காலையிற் குன்ற மொன்று
பறித்தவ னெற்றி முற்றப் [2]பரப்பிடைப் [3]பாக முள்ளே
[4]செறித்தெனச் சுரிக்க வீசித் தீர்த்தனை வாழ்த்தி யார்த்தான்.

(இ-ள்.) அந்தக்கும்பகர்ணன் மறுபடியும் அந்தஅங்கதனைத் தன்கையிலேயுள்ள உறுதிபொருந்திய கூரியசூலாயுதத்தை மார்பிலே குறியாகப்பொருந்த எறியத்தொடங்கியபொழுது, (அநுமான்), குன்றமொன்றைப்பறித்து அவன் நெற்றி முற்றும்படி [முழுவதும்] பரவியஇடத்தையுடைய அந்தமலைப்பகுதி உள்ளேபொத்தியுள்ள தென்னுமாறு உள்ளேபதிய வீசிப் பரிசுத்தமூர்த்தியாகிய இராமனை வாழ்த்தியாரவாரித்தான்; (எ-று.)—மறித்தவன் அவனை-(தன்னைப்)போரில்மடக்கியவனுகிய அநுமானைஎனினுமாம். பி-ம்:—[1]வான்.[2]பார்ப்பிடை. [3]பாதியுள்ளே, பாகமுன்னே. [4]செறித்தனன், செறித்தன. (கஎகரு)

கககூஅ.—அந்தமலையைக் கும்பகர்ணன் அநுமான்மீதுவீசியாரவாரித்தல்.

தலையினிற் றைத்து வேறோர் தலையென [1]நின்ற தன்ன
மலையினைக் கையின் வாங்கி மாருதி வயிர மார்பின்
உலையுற [2]வெந்த பொன்செய் கம்மியர் கூட மொப்பக்
[3]குலையுறு பொறிகள் சிந்த வீசித்தோள் கொட்டி யார்த்தான்.

(இ - ள்.) தலையிலேதைத்து வேறோர்தலை (கும்பகர்ணனுக்குத்தோன்றியுள்ளது) என்று (கண்டோர்) கருதுமாறு நின்றதான அந்தமலையை, (கும்பகர்ணன்,—தன்) கையினாலெடுத்து மாருதியின் வயிரம்போலுறுதியான மார்பிலே, உலையிலேயுற்றதனால் வெந்திட்ட பொன்னைப் பணிசெய்கின்ற கம்மி

யரின் சம்மட்டியையொப்பத் தொகுதியாகப்பொருந்திய தீப்பொறிகள் சிந்தும்படியெறிந்து, தோளைத்தட்டிக்கொண்டு ஆரவாரஞ்செய்தான்; (எ-று.)

பொன்-கரும்பொன்னெனலாம்: பழுக்கக்காய்ந்த கரும்பொன்னைச் சம்மட்டிகொண்டு அடித்துத் தொழில்செய்கையில் தொகுதியான நெருப்புப் பொறிகள் வெளிச்சிந்துதல், இயல்பு. கம்மியர்-தொழிலாளர். பி-ம்:—[1]நின்றதன்னா, நின்றதம்மா. [2]வெந்துமிக்கவிரும்பின்வீழ்கூடம், வெந்தபொன்மேற்... கூடம், வெந்தபொன்மீச்... கூடம். [3]கொலை. (௧௨௧௬)

௧௯௯.—அங்கதனை வானரவீரர் தூக்கிச்செல்ல, கும்பகர்ணன்மீதுஎறியஅநுமான் வேறோர்மலையைக்கொள்ளுதல்.

[1]அவ்வழி வாலி சேயை யரிகுல வீ ரஞ்சார்
வவ்வினர் கொண்டு [2]போனார் மாருதி வானை முற்றுங்
கவ்விய தனைய தாங்கோர் நெடுவரை கடிதின் வாங்கி
எவ்வமி லாற்ற லானை நோக்கிநின் றினைய [3]சொன்னான்.

(இ-ள்.) அப்பொழுது வானரவீரர்கள் அஞ்சாதவராய் வாலியின்குமாரனை அங்கதனைத் தூக்கிக்கொண்டுபோய்விட, அநுமான்,—ஆகாயம்முழுவதையும் கௌவிக்கொண்டதுபோன்றிருப்பதான ஒருபெரியமலையை அங்கே விரைவாகக் (கையிற்)கொண்டு குற்றமற்றவலிமையையுடையவனை கும்பகர்ணனைப்பார்த்து நின்று இவ்வார்த்தைகளைச்சொல்லலானான்; (எ-று.)-மாருதி-கூறியதைமேற்கவியிற்காண்க. பி-ம்:--[1]அவ்வயின். [2]போந்தார். [3]சொல்வான்.

௨௦௦.—கும்பகர்ணனைநோக்கி அனுமான் 'இம்மலையைத் தாங்கு: பார்ப்போம்' எனல்.

எறிகுவ னிதனை நின்மே லிமைப்புறு [1]மளவி [2]லாற்றல்
[3]மறிகுவ தன்றி [4]வல்லாய் [5]மாற்றினை யென்னின் வன்மை
அறிகுவ ரெவரும் [6]பின்னை யானுன்னோ டமருஞ் செய்யேன்
பிறிகுவ னுலகில் [7]வல்லோய் பெரும்புகழ் பெறுதி யென்றான்.

(இ-ள்.) (அப்பொழுது அனுமான் கும்பகர்ணனைநோக்கி), உன்மேல் (நான்) இந்தமலையை எறியப்போகிறேன்; (இதனால்) இமைப்பொழுதில் [விரைவில்] (உன்) வல்லமை மாய்ந்துபோவதல்லாமல் (மாய்ந்திடாமல்) வல்லவனாய் (இதனைத்) தள்ளிவிட்டாயானால், பின்பு (உன்) வல்லமையை எல்லாரும் அறிவார்: நானும் உன்னோடு சண்டைசெய்யவும்மாட்டேன்: அப்பாற்போய்விடுவேன்: வல்லவனே! உலகில் (நீ) மிக்கபுகழைப்பெறுவாய்' என்றுகூறினான்; (எ-று.) —பி-ம்:—[1]அளவும். [2]ஆற்றாய். [3]மறிகுவையன்றி. [4]வல்லை, அல்லால். [5]மாற்றிநின்றாற்றில். [6]பின்னையமர்நின்னோடமர்தல், பின்னரமர்நின்னோடமைதல். [7]நீயோர், நீயோ, நீயே. (௧௨௧௮)

௨௦௧.—அதற்குக் கும்பகர்ணன் விடை.

மாற்றமஃ [1]துரைப்பக் கேளா மலைமுழை திறந்த தென்னக்
கூற்றுறழ் பகுவாய் விள்ள [2]நகைத்துநீ கொணர்ந்த குன்றை
ஏற்றனெ னேற்ற காலத் திறையதற் [3]கொற்க மெய்தின்
தோற்றன னுனக்கென் வன்மை சுருங்குமென் றரக்கன் சொன் [னான்.

(இ - ள்.) (அநுமான்) அவ்வாறுகூறிய வார்த்தையைக் கேட்டுக் கும்பகர்ணன்,-மலைக்குகையைத் திறந்தாற்போன்றுதோன்றுமாறு யமனதுபிளவுபட்டவாயையொத்த (தன்) வாய்விரியச் சிரித்து (அநுமானைநோக்கி), 'நீ கொணர்ந்தமலையை பேற்றவனும் ஏற்றகாலத்திலே சிறிதளவாவது சோர்வையடைந்தேனுனல் தோற்றவனுவேன்: உன்வலிமைக்குமுன் என்வலிமை தாழ்ந்ததாகும்' என்றுகூறினன்; (எ-று.)—பி-ம்:---[1]உரைத்தலோடும். [2]சிரித்து. [3]இடைவனுகிற். (கசகக)

உ0உ.—தும்பகர்ணன் அநுமானெறிந்தமலையையேற்க, அது பொடிபொடியாய்ப் போதல்.

மாருதி வல்லை யாகி னில்லடா மாட்டா யாகிற்
பேருதி யுயிர்கொண் டென்று பெருங்கையா [1]னெருங்க விட்ட
[2]காருதிர் வயிரக் குன்றைக் [3]காத்திலன் [4]ருேண்மே லேற்ருன்
ஓருதிர் நூறு கூறு யுக்க[5]தெவ் வுலகு முட்க.

(இ - ள்.) (அதுகேட்ட)அநுமான், 'அடா! (நீ)வல்லமையுள்ளவனுயின் நில்: நிற்கவல்லமையில்லாதவனுயின், உயிரைக்கொண்டு அப்பாற்போ' என்றுசொல்லி(த் தனது) பெரியகையினுல் (கும்பகர்ணனை) நெருங்குமாறு செலுத்தியதும் (அப்போது) மேகங்கள்நிலைகுலைதற்கிடனுனதுமான உறுதியுள்ள அம்மலையை, (மேற்படாதபடி) காத்துக்கொள்ளாமல் (கும்பகர்ணன்) தோளின்மேலேற்ருன்: (அம்மலை)எவ்வுலகும்அஞ்சும்படி ஒருமுறையுதிர்கையில் நூறுபகுதியாகிச் சிந்திவிட்டது; (எ-று.)—பி-ம்:---[1]நெருங்கி. [2]காருதி, காருறு. [3]காந்தினன், கரந்திலன். [4]தோளில். [5]அங்கெவரும். (கசஉ0)

உ0௩.—தும்பகர்ணன் வலிமைகண்டு மாருதி அப்பாற்போதல்.

இளக்கமொன் றின்றி நின்ற வியற்கைபார்த் திவன தாற்றல்
அளக்குறற் பாலு மாகா குலவரை யமரி [1]னுற்று
துளக்குறு [2]நிலைய னல்லன் சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேற் பிளக்கு மென்னு மாருதி [3]பெயரப் போனுன்.

(இ - ள்.) (தானெறிந்தமலை தாக்கியும் கும்பகர்ணன்) சிறிதும்தளர்ச்சியின்றியிருந்த நிலைமையைப் பார்த்து, அநுமான்,— 'இவனுடையவல்லமை (இவ்வளவினதென்று) அளவிட்டுச்சொல்லக்கூடியது மன்று; அஷ்டகுலாசலங்களும் போரில் (இவன் வல்லமையைத்)தாங்கமாட்டா;(எவராலும்)சலிக்குமாறுசெய்தற்குரிய நிலைமையை யுடையவனல்லன்(இவன்): (இவனை), அழகியதோள்களையுடையவனுன இராமபிரானுடையஅம்புகள் பிளக்கவேணுமென்ருற் பிளக்கும் என்று கருதி அப்பாற் போயினுன்; (எ - று.)—பி-ம்:---[1]ஆற்றல், ஆற்ருத். [2]நினையனல்லன். [3]பெயர்ந்து. (கசஉக)

உ0௪.—தும்பகர்ணன்வல்லமையைக்கண்டு தேவர்கள் கலங்கி நடுங்குதல்.

எழுபது வெள்ளத் துள்ளா ரிறந்தவ ரொழிய யாரும்
[1]முழுமுதன் [2]மாள்வ ரின்றே யிவன்வலத் தமைந்த முச்சூற்

கழுவினி [3]னென்று வானோர் கலங்கினார் [4]நடுங்கி னாரற்
[5]பொழுதினி னுலக [6]மூன்றுந் திரியுமென் றுள்ளம் பொங்கி.

(இ - ள்.) எழுபதுவெள்ளமாகவுள்ளசேனாவீரரில் இறந்தவரொழிய எஞ்சியயாவரும் இவனது வலத்துடனமைந்த திரிசூலமாகிய கழுவிலே இன்றே அடியோடுமாள்வரென்று வானவர்கள் கலங்கினார்:(அன்றியும்),(இவனாற் கொல்லப்படுவோரின் மதுமாமிசங்களால்)முகூர்த்தகாலத்திற்குள் இவ்வுலக மூன்றுமே நிலைமாறுமென்று(கருதி)மனங்கொதித்து நடுங்கினார்கள்;(எ-று.)--சூல் - சூலமென்பதன்விகாரம். பி-ம்:—[1]முழுவதும். [2]மாய்வரென்ன. [3]என்ன. [4]நடுங்கியிற்றைப். [5]பொழுதினின்று. [6]எங்கும். (௧௬௨௨)

௨௦௫.—கும்பகர்ணன்வேற்றி.

தாக்கினார் தாக்கி னார்தங் கைத்தலஞ் சலித்த [1]தன்றி
நூக்கினா ரில்லை [2]யாரு நோவுசெய் தாரு மில்லை
[3]ஆக்கினான் களத்தி னாங்கோர் குரங்கின தடியு மின்றிப்
போக்கினா [4]னாண்மை யாலே புதுக்கினான் புகழை [5]யம்மா.

(இ - ள்.) (கும்பகர்ணனை வானரவீரர்) தாக்கினார்: தாக்கினாருடைய கைத்தலஞ் சலித்ததேயல்லாமல்(அவனை)வென்றவர்(எவரும்)இல்லை: (வெல்லாவிட்டாலும் நோவையுண்டாக்கியாவது இருக்கலாமே அவ்வண்ணம்) நோவையுண்டாக்கினவரும் இல்லை; (போரைச்) செய்தவனான கும்பகர்ணன் அப்போது போர்க்களத்திலே ஓர்குரங்கினது அடிச்சுவடும் இல்லாதபடி யழித்திட்டு(த் தன்னுடைய) ஆண்மையினால் புகழைப் புதுப்பித்தான்; (எ-று.)—அம்மா-வியப்பிடைச்சொல். பி-ம்:---[1]அல்லால். [2]ஒன்றும். [3]ஆக்கினார். [4]ஆண்மையோடும். [5]அன்னான். (௧௬௨௩)

௨௦௬.—கும்பகர்ணனுடைய கோக்கரிப்பு.

[1]சங்கத்தார் [2]குரங்கு சாயத் தாபத ரென்னத் தக்கார்
[3]இங்குற்றா ரல்ல ரோதான் வேறுமோ ரிலங்கை யுண்டோ
[4]எங்குற்றா ரெங்குற் றாரென் றெடுத்தழைத் திமையோ ரஞ்சத்
துங்கத்தோள் கொட்டி யார்த்தான் கூற்றையுந் துணுக்கங் கொண்டான்.

(இ-ள்.) யமனையும் அச்சங்கொண்டிடச்செய்தவனான கும்பகர்ணன்,—(தன்னாண்மையாலே) கூட்டமாகப்பொருந்திய வானரங்கள் இறந்தனவாக, 'தவசியரென்றுசொல்லத்தக்கவரான இராமலட்சுமணர் இங்கேயுள்ளரல்லரோ? (அவர்கள்முற்றுகையிடும்படி இந்தஇலங்கையேயன்றி) வேறும் இலங்கையுமுளதோ? (அவ்விராமலட்சுமணர்கள்)எங்கேபோனார்? எங்கேபோனார்?' என்றுகுரலெடுத்துக்கூவி, இமையோரும் அஞ்சும்படி (தனது) உயர்வாகியதோளைத் தட்டி ஆரவாரித்தான்; (எ - று.)—தான் - அசை.

'இராமலட்சுமணர்கள் இருப்பாராயின் குரங்குகள் சாய்கையிற் பொரவரவேண்டாவோ? வராமையால் வேறேஎங்கேனும் போய்விட்டாரோ?' என்ற பழிப்புத்தோன்ற, 'வேறு மோரிலங்கையுண்டோ?எங்குற்றாரெங்குற்றார்'என்கின்றான். தாபதர்-வீரரல்லரென்பது, குறிப்பு. பி-ம்:—[1]சங்கொத்த. [2]தானை தாங்குந். [3]இங்குத்தான். [4]எங்குத்தானுற்றாரென்றென்று. (௧௬௨௪)

உ௦எ.—உதிரப்பெருக்கின்வருணனை.

பறந்தலை யதனின் வந்த பலபெருங் கவியின் பண்ணை
இறந்தது கிடக்க நின்ற [1]திரிதலா வியாரு மின்றி
வறந்தது [2]சோரி பாய [3]வளர்ந்தது மகர வேலை
[4]குறைந்தது வுவாவுற் றேதங் கிளர்ந்துமீக் கொண்ட தென்ன.

(இ - ள்.) போர்க்களமானது,—அதனிடத்துவந்த பல பெரியகுரங்குகளின்திரள் இறந்ததுபோக நின்ற வானரக்கூட்டம் நிலைகெட்டுஓடியதனால் எவருமின்றி வெறியதாயிற்று; குறைந்ததான [அலையடங்கியுள்ள] மகரவேலை, உவாமதியைக்கண்டு பெருக்குமிக்கு மேலேபொங்குவதொப்ப, இரத்தம்பாய்ந்ததனால் மிக்கது; (எ-று.)—வேலை-கடலுக்கு,இலக்கணை. பி-ம்:-1 இரிதலின். 2கோக்கிவந்து. 3வளர்ந்தன. 4குறைந்தன, குறைந்துளது, குறைந்ததவ். ()

வேறு.

உ௦அ.—இலட்சுமணன் போருதலை
இதுமுதற் பதினைந்து கவிகள் தெரிவிக்கும்.

குன்றுங் கற்களு மரங்களுங் குறைந்தன குரங்கின்
வென்றி யம்பெருஞ் சேனையோர் பாதியின் மேலும்
[1]அன்று தேய்ந்ததென் [2]றுரைத்தலு [3]மமரர்கண் டுவப்பச்
சென்று தாக்கின னொருதனிச் சுமித்திரைச் சிங்கம்.

(இ - ள்.) 'மலைகளும் கற்களும் மரங்களும் (பொருதற்குஉபயோகித்ததனாற்) குறைந்திட்டன: குரங்கினுடையவெற்றிபொருந்திய சேனையானது, ஒருபாதிக்குமேலாகத் தேய்ந்திட்டது' என்று(தூதுவர்கள் வந்து) அப்போது சொன்னவுடனே, அமரர் கண்டுமகிழும்படி, மிகவும்ஒப்பற்ற சுமித்திரையின் புதல்வனான இலட்சுமணன்,—(அக்கும்பகர்ணனுள்ள இடஞ்) சென்று தாக்கலாயினன்; (எ-று.)—சிங்கம் - உவமவாகுபெயர். பி-ம்:—1இன்று. 2உரைத்தனர். 3அமரரும். (கசஉ௬)

உ௦௯.நாணெ றிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற்
பூ[1]ணெ றிந்தனர் படியிடை யிடிபொடித் தென்னச்
சே[1]ணெ றிந்தெழு திசைசெவி டெறிந்தன வலகை
தூணெ றிந்தன கையெடுத் [1]தாடின துணங்கை.

(இ - ள்.) (இலட்சுமணன் தன்)சிலையின்நாணைத் தெறித்துஒலியெழுப்பினன்; (அதனாற் பலஅரக்கரிறந்ததனால், இறந்த அரக்கரின்மனைவிமாரான) அரக்கியர்கள்,—விளங்குகின்ற பொற்பூணை [பொற்றாலியை]க் கழற்றியெறிந்தார்கள்; (வில்நாணியொலியினால்), பூமியினிடத்திலே இடிதோன்றியதென்று கருதுமாறு வெகுதூரம் நெறிபட்டுத் தோன்றுவனவான திக்குக்கள் செவிடுபட்டன; பேய்கள், தாம் (உண்ணும்) மாமிசத்தடிகளை யெறிந்துவிட்டு(நிரம்பவுணவுகிடைக்குமென்னும் மகிழ்ச்சியால்) கையெடுத்துத் துணங்கைக்கூத்தாடின; (எ - று.)—துணங்கைக்கூத்தாவது - முடக்கியஇருகைகளையும் விலாப்புடைகளில் ஒற்றியடித்துக்கொண்டுஅசைந்தாடும் ஒருவகைக்கூத்து. தூண் - மாமிசத்தடி. பி-ம்:—1எறிந்தன. (கசஉஎ)

உ௯௦. இலக்கு வன்கடி [1]தேவின விரை[2]பெறு நிரைப்பச்
சிலைக்க டுங்[3]கணை நெடுங்கணஞ் சிறை[4]யுடன் செல்ல
[5]உலைக்கொ டுங்கனல் [6]வெதும்பிட வாயெரிந் தோடிக்
குலக்க யங்களிற் குளித்தன குடித்தன குருதி.

(இ - ள்.) இலக்குவன் விரைவாகஎவியனவும் இரைபெறுமையாற் சீறு கின்றனவுமான வில்லின் கொடிய அம்புகளின் பெருங்கூட்டங்கள்,---சிறகுடனேசென்றதனால், உலைக்களத்திலுள்ள கொடியகனலும் வெதும்பும்படி வாயினால் எரியைக் கக்கவிட்டுக்கொண்டு ஓடி அஷ்டதிக்கஜங்களினுடலில் மூழ்கி அவற்றின் இரத்தத்தைக் குடித்தன; (எ - று.)

இரைத்தல் சீறுதலாதலை, "இரைக்கின்ற பாம்பினை" என்னுமிடத்துங் காண்க. எரிதலுண்டாயின் குளித்தல் அதற்குப்பரிகார மாதலால், 'எரிந் தோடிக் கயங்களிற்குளித்தன' என்றுகூறிய நயங் காண்க. பி-ம்:-1எவியது. 2பொருது. 3கதிர்நெடுங்கணை, 4இடைச்செல்லா. 5உலக்கவெங்கணை, உலைக் கடுங்கனல். 6வெதும்பினவா. (௧௬௨௮)

உ௯௧. அலைபு டைத்தவா ளரக்கரைச் சிலகழுத் [1]தரிவ
சில[2]சி ரத்தினைத் துணித்தவை திசைகொண்டு [3]செல்லக்
கொலைப டைத்தவெங் [4]களத்திடை [5]விழாக்கொடு போவ
தலைப டைத்தன போன்றன [6]வானெடுஞ் சரங்கள்.

(இ - ள்.) சிலஅம்புகள், கடலையொத்த கொடிய அரக்கரைக் கழுத்தரிவனவாயின; சிலநீண்டஅம்புகள்,சிரத்தினைத் துண்டித்துக் கொலைத்தொழில் பயின்ற கொடியபோர்க்களத்திலே விழுந்திடாதபடி அத்தலைகளைக்கொண்டு போகின்றனவாகித் திக்குக்களினெல்லையிற் கொண்டுசெல்வதனால், தலை படைத்தவற்றையொத்தன;(எ-று.)—ஆல்-அசை. சிலநெடுஞ்சரங்கள் சிரத்தினைத்துண்டித்துஅவைகளத்திடைவிழாக்கொண்டுபோவனவாகித்திசைகொடு செல்லவே, தலைபடைத்தனபோன்றனவென்க: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1அரியச். 2சிரத்தினிற்றைத்தவை. 3செல்வ. 4களத்தினில். 5விழுந்தவக்கொடியோர், வசைகொண்டுகுனிப்ப, குழாங்கொண்டுவிசையிற். 6தான். (௧௬௨௯)

உ௯௨. உருப்ப தங்கனை யொப்பன சிலகணை யோடைப்
பொருப்ப தங்களை யுருவிமற் றப்புறம் [1]போன
செருப்ப தம்[2]பெறு வரக்கர்தந் [3]தலைபல சிந்திப்
[4]பருப்ப தங்கள்புக் [5]கொளிப்பன முழைபுகு பாம்பின்.

(இ - ள்.) (தம்முடைய) உருவம் சூரியனைஒப்பனவான சிலஅம்புகள், முகபடாமணிந்த மலைபோன்ற யானைகளை யுடலுருவிப்பின் அப்புறம்போனவையாய், போரில் (நிலைத்துக்) காலடிவைத்திருக்கப்பெறுத அரக்கரின் பல தலைகளையுருட்டி, குகையிற்புகும் பாம்புபோலப் பருவதங்களிலே புக்கு ஒளிப்பனவாயின; (எ-று.)—பதங்கன் - சூரியன். பொருப்பு-மலை: அது - பகுதிப் பொருள்விகுதி, அம்-சாரியை: உவமவாகுபெயரால், பொருப்பதங்களையென்பது-யானைகளைக்காட்டிற்று. பி-ம்:—1போவ. 2பெற, பொரும், பொருது. 3தலைசிந்தியுடலாம். 4பொருப்பதங்கள். 5ஒளித்தன. (௧௬௩௦)

உ௧௬.பின்பு குந்தன பல்குழு வாமென [1]மிளிர்வ
பொன்[2]பு குந்தொளிர் வடிம்பின கடுங்கணை [3]போவ
[4]முன்பு நின்றவர் முகத்திற்குங் கடைக்குழை [5]முதுகின்
பின்பு நின்றவர் [6]பிடர்க்குமிவ் விசையொக்கும் பிறழா.

(இ - ள்.) பலகூட்டங்களாகிய மின்னல்கள் புகுந்தனஎன்று (கண்டவர்) கருதும்படி விளங்குவனவும்,பொன்பொருந்திவிளங்குகின்ற கூர்முனையையுடையனவுமான கொடியகணைகள், (விரைந்து) செல்வனவாய், முன்னணிச்சேனையில்நிற்பவரின் முகத்திலும் பின்னணிச்சேனையின் பின்புறமான இடத்து நிற்பவரின் பிடரிலும் இந்தவிசையில் மாறுபடாமல் ஒத்திருப்பனவாயின:(எ-று.)—கடைக்குழை-கடைக்கூழை:பின்னணிச்சேனை.இலக்குமணன்அம்புகள் தொடக்கம்முதல் முடிவுவரையில் ஒரேவகையான விரைவுடைத்திருந்தனவென்றவாறு. முதுகின்பின்பு-பின்புறத்திடம்: பின்பு-ஏழனுருபு. பல்குழுவாம் மின்எனக. பி-ம்:-[1]மிளிரும்.[2]புகுந்தன.[3]போன.[4]முன்புகுந்தவர். [5]முதுகிற். [6]மிடற்றிற்கும். (கசுகக)

உ௧௭.போர்த்த பேரியின் கண்ணன காளத்தின் பொருட்ட
ஆர்த்த [1]வாயன கையன வானையின் [2]கழுத்த
ஈர்த்த [3]தேரன விவுளியின் [4]றலையன வெவர்க்கும்
பார்த்த [5]நோக்கன கலந்தன விலக்குவன் பகழி.

(இ-ள்.) இலக்குவன்விடுத்த அம்புகள்,—(தோலாற்) போர்த்தபேரியின் கண்ணிடத்திற்பாய்வனவும், காளமென்ற ஊதுகருவியிலே திரண்டவடிவாய் ஊதுகின்றவாயிற் பாய்வனவும், (சங்கம்முதலிய)ஊதுகருவிகளைப்பிடித்த கையிற்பாய்வனவும், ஆனைகளின்கழுத்திற் பாய்வனவும், (குதிரைகளால்) இழுக்கப்பெற்ற தேரிற் பாய்வனவும், குதிரைகளின்தலையிற் பாய்வனவும், (எவராயினும் பார்ப்பின்) பார்த்தகண்களிற் பாய்வனவுமாகி எங்கும்பரவின.

கண்-குணில்கொண்டு அடிக்கப்படும்இடம். பொருட்டு - கொட்டை: இச்சொல்-ஊதும்போது வாயு பூரித்ததனால் திரண்டுதோன்றும் வாயின்வடிவுக்கு இலக்கணை.ஆர்த்தவாயன-சங்குபோன்ற ஒலியிசைக்குங்கருவிகள்.வாயனவும் கையனவுமெனினுமாம். பி-ம்:—[1]வாயின. [2]முகத்த. [3]தேரின. [4]தலையின. [5]கண்ணனதலத்தன, நோக்கினுங்கலந்தன, நோக்கினகலந்தன. (கசுகஉ)

உ௧௮.மருப்பி ழந்தன களிறெலாம் வால்செவி யிழந்த
நெருப்பு குங்கண்க ளிழந்தன நெடுங்[1]கரந் துணிந்த
செருப்பு குங்[2]கடுங் கால்திர [3]மிழந்தன சிகரப்
பொருப்பு ருண்டன வாமெனத் தலத்திடைப் புரண்ட.

(இ-ள்.) (இலக்குவனெய்த அம்புகளினால்),—யானைகளெல்லாம், தந்தங்களையிழந்தனவும், வாலையும்செவிகளையும் இழந்தனவும், நெருப்பைச்சிந்துகின்ற கண்களை யிழந்தனவும், நீண்டகரங்கள் துண்டுபட்டனவும், போரிற்செல்லுவதற்குஉரிய விரைவுள்ள முன்னங்காலையிழந்தனவுமாகி, சிகரத்தையுடையமலைகள் உருண்டனவென்னும்படி பூமியிற் புரளலாயின; (எ - று.)—காலையிழந்ததனாற் புரள்வனவாய்க் களிறுகள் பொருப்புப்புரள்வதனையொத்

தனவென்க. இதனால் யானைகள்பட்டமை கூறப்பட்டது. பி-ம்:-[1]கரமிழந்த. [2]கொடுங்காற்றிரள், கடுங்காற்றுரம். [3]சிந்தின. (கசாநரு)

உகசு. [1]நிரந்த ரந்தொடை நெகிழ்த்தலிற் றிசையெங்கு [2]நிறைந்த
சரந்[3]த லைத்தலை படப்பட [4]மயங்கின சாய்ந்த
உரந்த லத்துற [5]வுளைத்தலாற் [6]பிழைத்ததொன் றில்லைக்
குரந்த லத்தினும் விசும்பினு [7]மிதித்திலாக் குதிரை.

(இ - ள்.) பூமியிலும் வானத்திலும் குளம்பினால்மிதித்துச்செல்லாக் குதிரைகள்,---இடைவிடாமல்தொடுத்தலைச்செய்து (இலக்குவன் வில்லினின்று) வெளிவிடுதலாலே திக்குக்களில்எவ்விடத்தும்நிறைந்தனவான அம்புகள்(தமது) தலைகளில்மிகுதி யாகப்படுதலால் மயங்கிச்சாய்ந்தனவாகி, (தம்)மார்பு பூமியிற் படியுமாறுவருந்தினவேயல்லாமல், எதுவும்உயிர்பிழைத்தது இல்லை; (எ - று.)

உளைத்தவலால்என்பது-'உளைத்தலால்' என விகாரப்பட்டுவந்தது. உளைத்த - பலவின்பால்வினையாலணையும்பெயர். இதனால், குதிரைகள் பட்டமை கூறப்பட்டது. தாவித்தாவி விரைந்துசெல்வதனால் 'வானத்துச்செல்கின்றனவா? பூமியிற்செல்கின்றனவா?' என்று அறியமுடியாமலிருத்தலால், 'குரந் தலத்தினும் விசும்பினும் மிதித்திலாக் குதிரை' என்றார். பி-ம்:—[1]நிரந்துவிற்றொடை. [2]நிறையுஞ். [3]தலைப்பட்டுத்தலைப்பட. [4]மயங்கினர். [5]உழைத்தலாற். [6]பிழைத்திலவொருபொற், பிழைத்திலவொண்பொற். [7]மிதித்தில. (கசாநசு)

உகஎ. [1]பல்ல வப்படை [2]படப்படு [3]புரவிய பல்கால்
வில்லு டைத்தலை [4]யாளொடு [5]சூதரை வீழ்த்த
எல்லை [6]யற்ற[7]செங் குருதியி [8]னீர்ப்புண்ட வல்லாற்
செல்ல கிற்றில நின்றில [9]கொடிநெடுந் தேர்கள்.

(இ - ள்.) கொடிகட்டிய நெடியதேர்கள்,—(இலக்குமணன்தொடுத்துவிடுத்த) பலவான அந்தஅம்புகள் பலமுறை படுதலால் இறந்தகுதிரைகளையுடையனவாய், (மற்றும் அந்தஅம்புகள்) வில்லைக்(கையிற்)கொண்ட ரதிகனுடனே பாகரையும்கொன்றுவீழ்த்தியதனால் எல்லையற்ற செங்குருதியினால் இழுத்துக்கொண்டு போகப்பட்டனவேயல்லாமல், ஓடிச்செல்லமாட்டாதனவும் நிற்கமாட்டாதனவுமாயின; (எ - று.)

தேரிற்கட்டியகுதிரைகளும் தேர்க்குஉரியதலைவனும் தேரோட்டுஞ் சாரதியும் இலக்குவன்அம்புகளால்இறந்துபட்டனராதலால் தேர்கள் செல்லமாட்டாதனவாயின என்றாலும்,குருதிப்பெருக்கு அத்தேர்களைஇழுத்துச்செல்வதனால் நிற்கமாட்டாதனவுமாயின வென்க. பிறிதாராய்ச்சியணி. விபாவநாலங்காரம் காரணமில்லாமலும் காரியம்நிகழ்ந்ததாகக்கூறல், இவ்வணியினிலக்கணம்: பல்ல-பெயர். பல்லவம் படைஎன எடுத்து-தளிர்போற்செந்நிறம் வாய்ந்த அம்புகள்என்பாருமுளர். பி-ம்:—[1]பல்லவக்கணை. [2]படப்படப். [3]புரவிகள், புரவியும். [4]வாளொடும். [5]சூதர்கள்வீழ்ந்த. [6]உற்ற. [7]வெங். [8]ஈர்ப்புண்டது. [9]மணி. (கசாநஎ)

உகஅ. பேழை யொத்தகல் [1]வாயன பேய்க்கண முகக்கும்
மூழை யொத்தன கழுத்தற வீழ்ந்தன முறைசால்

ஊழை யொத்தன [2]வோர்கணை தைத்தன வுதிரத்
தாழி யொத்த[3]வெங் குருதியின் மிதப்பன தலைகள்.

(இ - ள்.) (பயனைத்தவறுதுவிளைக்கும்) முறைமைபொருந்திய ஊழை யொத்தனவான ஒப்பற்ற (இலக்குமணனுடைய) அம்புகள் தைத்தனவும், கழுத்தறுபட்டுவீழ்ந்தனவும், (திறந்த) பெட்டியையொத்து அகன்ற வாயையுடையனவும் உதிரக்குடத்தையொத்துத்தோன்றுகின்றனவும், வெவ்விய இரத்தத்திலே மிதப்பனவுமான தலைகள்,—பேய்க்கணம்முகக்கும் மூழையை யொத்தன; (எ - று.)

இலக்குமணன்கணைகளாற் பொத்தப்பெற்றுக் கழுத்தறுப்புண்டு வீழ்ந்து குருதியில்மிதக்குந் தலைகள், பேய்க்கணங்கள் கூழைத்துழாவுவதற்குஉதவும் மூழையையொத்தனவென்றார்; தற்குறிப்பேற்றவணி. மூழை-முழையெனக்கொண்டு, குகையென்றலுமுண்டு. இனி, கணைதைத்தனவாய்க் குருதியின் மிதப்பனவாகியதலைகள், உதிரத் தாழியொத்தன - இரத்தமயமானசமுத்திரத்தின்மிதக்கும் தோணியையொத்தனஎன்று உரைப்பாருமுளர். உதிரத்து ஆழி எனப் பிரிப்பது மோனைக்குஏற்காது. பி-ம்:-[1]வாயின, வாயன்ன. [2]ஒருகணை தைத்தலின். [3]பெருததியின். (கசாஙகூ)

உககூ. ஒட்டி நாயகன் வென்றிநாள் குறித்தொளிர் முளைகள்
அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன வழிந்து
நட்ட வாமென [1]வீழ்ந்தன துடிகளின் [2]நவைதீர்
வட்ட [3]வான்கணில் [4]வதிந்தன வருணசா மரைகள்.

(இ - ள்.) அழிந்துகுத்திட்டாற்போல் வீழ்ந்தனவான துடியென்னும் பறைகளின்குற்றமற்ற வட்டமாகவுள்ள சிறந்த அடிக்கப்படுமிடங்களிற் பொருந்தினவாகிய நன்னிறங்கொண்ட சாமரைகள்,—(சமீபித்துவரப்போகின்ற) ஸர்வலோகநாயகனான ஸ்ரீராமனுடைய வென்றிநாளையொட்டி யெண்ணிச்செய்யப்பெற்றுப் பாலிகைகளில் வார்த்திருக்கின்ற விளங்குகின்றமுளைகளை யொத்துத்தோன்றின; (எ - று.)

இராமபிரானதுவென்றிநாளென்பது-ஒருமங்கலநாள்: சிலவகை மங்கல நாளைக்கொண்டாடும்போது முதலில் அங்குரார்ப்பணஞ்செய்து [பாலிகையில் முளைகள்வார்த்து]ப் பின்திருவிழாநடத்துவது மரபு: இராமபிரானது வெற்றி நாள்திருவிழாவைக் கொண்டாடுமாறு அங்குரார்ப்பணஞ்செய்தாற்போல்தோன்றிற்று, குத்திட்டாற்போல்வீழ்ந்த துடிகளின் கிழியுண்ட வாய்களிற் சாமரை பதிந்துவீழ்ந்திருப்ப தென வருணித்தார்: தற்குறிப்பேற்றவணி. நட்டுவீழ்ந்த துடிகள் பாலிகைக்கும், வான்கணில்வதிந்த வருணசாமரைகள் அந்தப்பாலிகைகளில் அட்டிவைத்தனவான முளைகட்கும் உவமை. பி-ம்:—[1]வீழ்ந்துநற். [2]நடுவண். [3]வாய்களின். [4]வயங்கியகவரி, வதிந்தனதருண. (கசாஙஎ)

உஉ0. எரிந்த வெங்கணை நெற்றியிற் [1]படுதலி னியானை
அரிந்த வங்குசத் [2]தங்கையின் கல்வியி [3]னமைவால்
திரிந்த [4]வேகத்து [5]பாகர்க ளூர்ந்தன [6]செருவிற்
[7]புரிந்த வானரத் தானையிற் புக்கன புயலின்.

(இ - ள்.) (இலட்சுமணனது) எரியுந்தன்மையுள்ள கொடியஅம்புகள் நெற்றியிற்படுதலினால், யானைகள், அரியப்பட்ட அங்குசத்தைக்கொண்ட அழகியகைகளோடு, (தாம் தொடங்கிய) செயலோடுபொருந்தித் திரிந்தவேகத்தையுடையனவாய், (தம்மைச் செலுத்துகின்ற) பாகர்களைத் தீர்ந்தனவாகியும்போரில்விருப்பங்கொண்ட வானரசேனையிலே புயல்போலப் புகலாயின.

யானைகள் கைகள்அரியுண்டும், பாகரையிழந்திருந்தும், இலக்குமணனுடையஅம்புகள் நெற்றியிற்பாயவேஏற்கவே ஓடத்தொடங்கியமையால் அத்தொழில் இடையறாதுநிகழப் போர்க்களத்தில் வானரசேனையிற் புயல்போலப் புக்கனவென்பதாம். கல்வி - பாகனாற்றூண்டப்பட்டுயானைகள் மேற்கொண்டநடை. பி-ம்:—[1]படுதலும், படுதொறும். [2]அங்கையன். [3]அமையா, அமையாத். [4]வேகத்தின். [5]பாரங்கடீர்ந்தன, பாரங்கண்டீர்ந்தன. [6]செருநேர். [7]புரிந்து. ()

௨௨௧. வேனி லானன்ன விலக்குவன் [1]கடுங்கணை [2]விலக்க
மான [3]வெள்ளெயிற் றரக்கர்தம் [4]படைக்கல வாரி
போன [5]போனவன் றிசைதொறும் பொறிக்குலம் பொடிப்ப
மீனெ லாமுடன் விசும்பினின் றுதிர்ந்தென வீழ்ந்த.

(இ - ள்.) வேனிற்காலத்துக்கு உரியவனான மன்மதனையொத்த இலக்குமணனுடைய கொடிய அம்புகள் விலக்கியதனால், ரோஷத்தையும் வெண்ணிறக்கோரப்பற்களையுமுடையஅரக்கரெறிந்த ஆயுதத்திரள்கள், (தாங்கள்)சென்றசென்ற வலியதிசைகளிலெல்லாம் தீப்பொறித்திரள் பறக்க(ப் பொடியாகி) நட்சத்திரங்களெல்லாம் ஒருசேரவிசும்பினின்று உதிர்ந்தாற்போல வீழ்ந்தன.

[4]படைக்கலம்வாரிப் என்ற பாடத்துக்கு—வாரி - வாரப்பட்டு: அள்ளப்பட்டு என்க. இலக்குமணன்கணைகளால் வாரிவிலக்க மீனெனப் பொடியாகி வீழ்ந்தனவென்று உரைக்க.முன்னையபாடத்தில், கடலென்னும்பொருளுள்ள 'வாரி' என்றசொல்-இலக்கணையால், திரளென்றபொருளைக் காட்டிற்று. பி-ம்:—[1]விடு. [2]விலக்கா. [3]வாள். [5]போயின. (௧௪௩௧)

௨௨௨. கரங்கு டைந்தன [1]தொடர்ந்துபோய்க் கொய்யுளைக் கடுமாக்
குரங்கு டைந்தன வெரிநுறக் கொடிநெடுங் கொற்றத்
தரங்[2]கு டைந்தன [3]வணிநெடுந் தேர்க்குலங் [4]குடைந்த
அரங்கு டைந்[4]தன [5]வயிநெடு வாளிக [6]ளம்மா.

(இ-ள்.) அரத்தினாலராவப்பட்டுக் கூர்மையான நீண்டவாளிகள் (இலக்குமணனது) கையினால் (வில்லிற்) பூட்டப்பட்டவை,—(பகைவர்படைகளின்மீது) தொடர்ந்துபோய்க் கொய்யப்பட்டஉளைமயிரையுடைய குதிரைகளின்குளம்புகளைத் துளைத்து, முதுகுகொடுத்தோடக் கொடிப்படைகளைச் சிறந்த வெற்றியை ஒழித்தனவாய், அழகியநீண்ட தேர்க்குலங்களையும் துளைத்திட்டன; (எ - று.)—அம்மா-வியப்பு.

இலக்குமணனுடைய அம்புகள்,—குதிரைகள் ஓடித்தாவிச்செல்லும்போது அவைகளின்குரங்களைத் துளைத்துத் தோற்றோடச்செய்து, இரதங்களையுந்துளைத்தன என்க. கொடி-கொடிப்படைக்கு, இலக்கணை. பி-ம்:—[1]தொடர்ந்துயர். [2]குடைந்தென. [3]தமனியத். [4]அளித்து, தகர்ந்த. [5]வாய்நெடும். [6]அனுப்ப.

௨௨௩.—இதுவும் அடுத்தகவியும்-அரக்கர் வீரசுவர்க்கம் அடைந்ததைத் தெரிவிக்கும்.

துரக்கு மெய்யுணர் விருவினை களையெனுஞ் [1]சொல்லிற்
கரக்கும் [2]வீரதை [3]தீமையை யெனுமிது கண்டோம்
இரக்க நீங்கின ரறத்தொடு திறம்பின ரெனினும்
அரக்க ராக்கையை யரம்பையர் தழுவினர் விரும்பி.

(இ-ள்.) தத்துவஞானமானது இருவினைகளை யொழிக்கு மென்ற சொல்லில், வீரகுணமானது பாவத்தைப்போக்குமென்ற இப்பொருளையும் (உபலட்சணத்தாற்) கண்டோம்; (இது எவ்வாறெனில்?—அரக்கர்கள்) இரக்கம் நீங்கினவர்களாய்த் தருமநெறியில் தவறினவராயிருந்தாலும், அவ்வரக்கர் (இறந்து வீரசுவர்க்கஞ்சென்றபின் அவர்களின்)உடலை அமரமங்கையர்விரும்பித்தழுவினர்கள் (ஆதலால்); (எ - று.)

அரக்கர் தீமைபுரிந்தவராயிருந்தும் வீரச்செயலைப்புரிந்து இவ்வுடலை நீத்து வீரசுவர்க்கத்தையடைந்து அமரமங்கையரால் தழுவப்பட்டனராதலாலும், பாவமுடையார்க்குத் துறக்கம்புகுதல் நேர்படாதாதலாலும் வீரதை தீமையைக் கரக்குமென்பது உபலட்சணத்தாற் கொள்ளவேண்டுவதாயிற்று. வீரதை = வீரதா: வடசொல். சொல்லின் - சொற்போலஎன்றலுமொன்று.

பி-ம்:—[1]சொல்லுங். [2]வீரத்தைத், வீரங்கள். [3] தீமையே. (௧௪௪௧)

௨௨௪.மறக்கொ டுந்தொழி [1]லரக்கர்கண் மறுக்கிலா [2]மழைபோல்
நிறக்கொ டுங்கணை [3]நெருப்பொடு நிகர்வன நிமிர
இறக்க [4]மெய்தினர் யாவரு [5]மெய்தின ரென்னைத்
துறக்க மென்பதிற் பெரியதொன் றுளதெனச் சொல்லேம்.

(இ - ள்.) பாவத்தோடுகூடிய கொடிய தொழிலைப்புரிபவரான அரக்கர்கள் விலக்கமுடியாத மழைபோற்பொழிந்த(இலக்குமணனுடைய)ஒளிபொருந்திய கொடியகணைகள் நெருப்புக்குச்சமானமாகி உயர்ந்தோங்கி வந்துதம்மீது பட்டதனால் இறப்படைந்தவர் எல்லாரும், (வீரசுவர்க்கத்தை) அடைந்தாரென்றால், அந்தச்சுவர்க்கத்தைக்காட்டிலும் பெருமைபெற்றது ஒன்று உண்டு எனச்சொல்லத்துணியேம்; (எ - று.)

கொடியோரையும் தன்னிடத்துக்கொண்டு இன்பத்தை யளித்தலால், துறக்கத்தினும் பெருமைபெற்றது ஒன்றுஉண்டெனச்சொல்லுதல்முடியாதாயிற் றென்க. பி-ம்:—[1]அரக்கர்கள்மறுக்கிலர், அரக்கருமறக்கிலா, அரக்கருமளப்பில. [2]மறம். [3]காலென. [4]எய்தின. [5]எய்தவுமிடமார், எய்தினரென்னிற்.

௨௨௫.—அப்போதைய இலக்குமணனம்புகளின் வருணனையை, இதுவும் அடுத்தகவியும் தெரிவிக்கும்.

ஒருவ னைக்கர மொருவனைச் சிரமற் றங்கொருவர்
குரைக ழற்றுணை [1]தோளிணை பிறமற்றுங் கொளலால்
இரவ லர்ப்பெறு [2]வெறுமைய வாயின வெவ்வேறு
இரவு கற்றன போன்றன விலக்குவன் பகழி.

(இ - ள்.) இலக்குமணனம்புகள்,—ஒருவரைக் கையையும், ஒருவரைச் சிரத்தையும், பின்னும் வேறொருவரின் ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த இரு

பாதங்களையும்(மற்றும் ஒருவரை)இருதோள்களையும், மற்றுங்கிடைப்பவற்றையுங்கொண்டுவிட்டதனால், பகைவரைக் கிடைக்கப்பெறாத தரித்திரத்தையடைந்தனவாகி வெவ்வேறுபொருளை இரத்தலைக் கற்றனபோன்று (வெறுமனே) திரிந்தன; (எ - று.)

அரக்கர்களுள் ஒருவரைக் கரத்தையும் ஒருவரைச்சிரத்தையும் என இவ்வாறு பொரவந்த எல்லாவரக்கர்களையும் அழித்திட்டமையால் வேறேபகைவரைக்கிடையாமல் இலக்குமணனம்புகள் வேறு பொருளைப்பெறுமாறுதிரிவனபோல வாளாதிரிந்தன என்றார்: இனி, இலக்குமணன் அம்புகட்கு நேரே எதிர்நின்று பொருபவரில்லாமற் போய்விட்டதனால், அவ்விலக்குமணனாற் செலுத்தப்பட்ட அம்புகள், தாம் வேண்டியபொருள்கிடையாதபோது கிடைத்தபொருளை யாசித்துப் பெறும் பொருளாகக் கொள்பவர்போலாயின வெனினுமாம். பி-ம்:---1தாளிணை, தாளினை. 2வறுமையை, வறுமைய. ()

௨௨௫. சிலவ ரைக்[1]கரஞ் சிலவ ரைச்செவி சிலர்நாசி
சிலவ ரைக்[2]கழல் சிலவ ரைக்[3]கண்கொ ளுஞ்செயலால்
நிலவ ரைத்தரு [4]பொருள்வழித் தண்டமிழ் நிரப்பும்
புலவர் சொற்றுறை [5]புரிந்தவும் போன்றன [6]சரங்கள்.

(இ-ள்.) (இலட்சுமணனெய்த) அம்புகள்,—சிலவரைக் கரத்தையும், சிலவரைச் செவியையும், சிலவரை நாசியையும், சிலரைக் கழலையும்,சிலரைக்கண்ணையும் கொள்ளுகின்ற செயலால், பூமியினெல்லையிற் கொடுக்கின்ற பொருளின்நிலைமைக்கேற்ப குளிர்ந்த தமிழ்ச்செய்யுளைப்பாடுகின்ற புலவர்களின் சொல்லின்துறையை விரும்பியவற்றையும் ஒத்திருந்தன; (எ - று.)

சிலர்சிரம் சிலர்செவி சிலர்நாசி இவ்வாறுஒவ்வோருறுப்பையே இலட்சுமணனம்புகள் கொள்வதனால், கொடுப்பவர் தமக்குக்கொடுக்கின்ற பொருளளவுக்குத்தக்கபடி தமிழ்ப்புலவர்களால் அவர்களைக்குறித்துச் செய்யுட்களியற்றிமுடிக்கப்படுதலை யொத்திருந்தன வென்றவாறு. கிடைத்தவளவிற்கு ஏற்பச் செய்யுட்பாடுவதுபோல, இலட்சுமணனம்புகள் கிடைத்தவளவுக்குஏற்பத் தமக்குஉரிய அறுத்தற்றொழிலைச் செய்தன வென்க. பி - ம்:—1சிரம். 2கரம். 3கொளலுறுஞ். 4பொருள்கொண்டு. 5புரிந்தன. 6புங்கம். (௧௨௪௪)

௨௨௭.—அரக்கர் நிலைகெட்டோடுதல்.

அறத்தி னின்னுயி ரனையவன் கணைபட வரக்கர்
இறத்து மிங்கிறை நிற்பினென் றிரியலின் மயங்கித்
திறத்தி றம்படத் திசைதொறுந் திசைதொறுஞ் சிந்திப்
புறத்தி னோடின [1]ரோடின குருதியே போல.

(இ - ள்.) தருமதேவதைக்கு இனிய உயிரையொத்தவனாகிய இலட்சுமணனெய்த அம்புகள் படுவதனால், அரக்கர்கள்,---மருண்டு, 'நொடிப்போது இங்குநிற்பினும்(நாம்)இறந்துவிடுவோம்' என்று நிலைகெட்டு ஓடத்தொடங்குகையில், கூட்டங்கூட்டமாகத் திக்குக்கள்தோறும் சிதறுண்டு, ஓடியஇரத்தவெள்ளம்போல வெளியே யோடலானார்கள்; (எ - று.)

அரக்கர் இங்குஇறைநிற்பின் அறத்தினின்னுயிரனையவன் கணைபடஇற த்தும் என்று இரியலின் [இரிகையில்], மயங்கிச் சிந்திப்புறத்தினோடினரெனி னுமாம். பி-ம்:—1பொன்றினர். (கஈசரு)

உஉஅ.—கும்பகர்ணன் இலக்குமணனது வில்திறமையைப் புகழ்தல்.

செருவின் மாண்டவர் பெருமையு மிலக்குவன் செய்த
1வரிவி லாண்மையு நோக்கிய புலத்தியன் மருமான்
திரிபு ரஞ்செற்ற தேவனு 2மிவனுமே செருவின்
ஒருவி லாளரென் றுயிரக் காலெடுத் துரைத்தான்.

(இ - ள்.) போரில் இறந்தவரின் மிகுதிப்பாட்டையும், இலட்சுமணன் செய்த கட்டமைந்தவில்வீரத்தையும் கண்கூடாகக்கண்ட புலத்தியமுனிவ ரின் வழித்தோன்றலான கும்பகர்ணன்,—'திரிபுரத்தை யழித்தசிவபெருமா னும் இவனுமே போரில் ஒப்பற்றவில்லாளர்' என்று ஆயிரம்முறையெடுத்துச் சொன்னான்; (எ - று.)—பலமுறையெடுத்துக்கூறியது வியப்பினாலாகும். ஒருவிலாளர் என்பதற்கு - நீங்காதசமானமானவரென்று கூறுவாரு முளர். பி-ம்:—1பொருவில். 2இவனொடேந்திறலில், இவனுமேயுலகில். (கஈசசு)

உஉகூ.—தன்தேரையோட்டிக்கொண்டு கும்பகர்ணன் இளையபெருமாளுள்ள இடத்துக்குவருதல்.

படர்நெ டுங்1தடந் 2தட்டிடைத் திசைதொறும் 3பாகர்
கடவு கின்றது காற்றினு மனத்தினுங் கடியது
அடல்வ யங்கொள்வெஞ் சீயநின் றூர்க்கின்ற தம்பொன்
வட4பெ ருங்கிரி 5பொருவுதே ரோட்டினன் 6கலந்தான்.

(இ - ள்.) பரவிய ஓங்கிய விசாலமான தேர்த்தட்டிலேயுள்ள பாகரால் திசைதோறும் செலுத்தப்படுவதும், காற்று மனம்என்ற இவற்றினும் வேக முடையதும், வலியவெற்றிபொருந்திய கொடியசிங்கங்கள் இடைவிடாமல் முழங்கப்பெற்றதும், அழகியபொன்மயமான வடக்கேயுள்ள பெரிய மேரு மலையைப்போல்வதுமாகிய தேரையோட்டிக்கொண்டு வந்துசேர்ந்தான்; (எ - று.)—பி-ம்:—1கொடித். 2தேரொன்று. 3பகரக். 4நெடுங். 5போல்வதேர்; போல்வதொன்று, புரைவதொன்று. 6வந்தான். (கஈசஎ)

உகூ0.—'கும்பகர்ணன் தேரிலிருந்துபொருகையில் இலட்சுமணன் தரையிலிருந்துபொருதல் சிறவாது' என்றுகருதி, அநுமான்அவனைத் தன்தோளின்மீது ஏறிக்கொள்ளுமாறு கூறுதல்.

தொளைகொள் 1வானுகச் சுடர்நெடுந் தேர்மிசைத் தோன்றி
வளைகொள் வெள்ளெயிற் றரக்கன்வெஞ் செருத்தொழின் 2மலையக்
கிளைகொ ளாதிக 3லென்றெண்ணி மாருதி 4கிடைத்தான்
இளைய வள்ளலே யேறுதி தோண்மிசை யென்றான்.

(இ - ள்.) 'வளைதலைக்கொண்ட வெள்ளிய கோரப்பற்களையுடைய அரக் கன் தொளையைக்கொண்ட பெரிய நுகத்தையுடைய ஒளிபொருந்திய பெரிய தேர்மீது எதிரிருந்து கொடியபோர்த்தொழிலைச் செய்கையில்,—(தரையி

விருந்தபடியே இவன்பொருகின்ற) போரானது, மேம்பாட்டையுடையது' என்று கருதி, அநுமான் (இலட்சுமணனைக்) கிட்டியவனாய், (அவனைநோக்கி) 'இளையபெருமானே! என்தோள்மீது ஏறிக்கொள்க' என்றான்; (எ - று.)— பி-ம்:—[1]வானுகத்தொடர், வானுகச்சுடர். [2]மறையச். [3]என்றனன், என்றடல், என்றென்ன. [4]கிடைத்தே. (௧௪௪௮)

௨௩௧.—அனுமான்தோளில் இலட்சுமணனேறிக்கொள்ளுதல்.

ஏறி னானிளங் கோளரி யிமையவ ராசி
கூறி னாரெடுத் தார்த்தது வானரக் குழுவும்
நூறு பத்துடைப் பத்தியி [1]னெறிற்பரி பூண்ட
ஆறு தேரினு [2]மகன்றதவ் வனுமன்றன் றடந்தோள்.

(இ - ள்.) இளஞ்சிங்கம்போன்றவனான இலட்சுமணன், (அநுமன்தோளின்மீது) ஏறினான்; இமையவர், ஆசி கூறினார்கள்; வானரக்கூட்டங்களும், (வெற்றிபெறுக வெற்றிபெறுக என்று) குரலெடுத்து ஆரவாரஞ்செய்தது; வரிசையாக விரைவுள்ள ஆயிரம்பரிபூண்டு (கும்பகர்ணன் ஏறியதாய்ப் போர்க்களபூமி) வழியேசெல்லுகின்ற தேரினும் அவ்வநுமன் தடந்தோள் அகன்றது; (எ-று.)—இனி, நதியென்னும் பொருளுள்ள 'ஆறு' என்றசொல் - இலக்கணையாற் பரப்பையுணர்த்திற்றென்பாருமுளர். பி-ம்:-[1]னோன். [2]அகன்றன, அகன்றான். (௧௪௪௯)

௨௩௨.—அநுமன்தோள்மேல் இலக்குமணன்தோன்றியதன் வருணனை.

தன்னி னேர்பிறர் தா[1]னலா தில்லவன் றோண்மேல்
துன்னு பேரொளி யிலக்குவன் றோன்றிய தோற்றம்
பொன்னின் மால்வரை [?]வெள்ளி[2]மால் வரையினைப் பொலிந்தது
[3]என்னு மாறன்றிப் பிறிதெடுத் தியம்புவ தியாதோ.

(இ - ள்.) தனக்குச்சமானம் தானேயல்லாமல் பிறரையுடையவனல்லாதவனான அநுமானுடைய தோள்மேல் நெருங்கியபேரொளியுடைய இலட்சுமணன்தோன்றிய தோற்றம்,—பொன்மயமான பெரியமேருமலை வெள்ளிமயமான பெரிய கைலாசமலைமேலே விளங்கிற்று என்னும்வகை சொல்வதன்றி வேறொன்று (உவமப்பொருளாக) எடுத்துச்சொல்வது ஏது உளது? [ஏதுவுமில்லையென்றபடி]; (எ - று.)—தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]அலது. [2]அங்கிரியிடைப், அங்கிரியின்மேற். [3]என்னலாமன்றிப், என்னுமாறின்றிப். ()

௨௩௩.—கும்பகர்ணன் இலட்சுமணனோடுபோருமாறு சித்தனாதல்.

ஆங்கு வீரனோ டமர்[1]செய்வா னமைந்தவா ளரக்கன்
தாங்கு பல்கணைப் புட்டிலுந் தகைபெறக் கட்டி
வீங்கு தோள்வலிக் [2]கேயது விசும்பில்வில் வெங்க
வாங்கி னானெடு வடவரை [3]புரைவதோர் வரிவில்.

(இ - ள்.) அப்போது வீரனாகிய இலட்சுமணனோடு போர்செய்யும்பொருட்டுச் சமைந்தகொடியஅரக்கன் [கும்பகர்ணன்],—பலகணைகளைத் தாங்கின அம்புப்புட்டிலையும் அழகுபொருந்த (த் தோளிலே) கட்டி, பருத்த (தனது)

தோள்வீரத்துக்குஏற்றதாகி நெடியமேருமலையையே (தனக்கு) ஒப்பாகப்பொருந்தியதொரு கட்டமைந்தவில்லை வானவில்லும் வெள்கும்படி வளைத்தான்; (எ - று.)—பி-ம்:—1பொர. 2எய்வது. 3அனையதோர். (கஎருக)

உகச.—நாம் இருவேமும் பொருவேமென்று இலட்சுமணனிடம் கும்பகர்ணன் கூறுதல்.

இராமன் றம்பிநீ யிராவணன் றம்பிநா னிருவேம்
பொராநின் றேமிது காணிய வந்தனர் 1புலவோர்
பராவுந் தொல்செரு முறைவலிக் குரியன பகர்ந்து
விராவு நல்லமர் 2விளைக்குது 3மியாமென 4விளம்பா.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) 'நீ இராமனுடைய தம்பியாவாய்; நான் இராவணன்தம்பியாவேன்: இருவேமும், (இப்போது) பொருவதாகநின்றுள்ளோம்: (நமது) இந்தப்போர்த்தொழிலைக் காணுமாறு தேவர்கள் வந்துள்ளார்கள்; (யாவரும்) அதிசயிக்கத்தக்க பழமையான போர்முறைமையில் வலிமைக்கு உரியவற்றைச் சொல்லிக்கொண்டு, யாம் பொருந்திய சிறந்த போரை விளைப்போம்' என்றுசொல்லி,—(எ-று.)—'என்றான்' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும். பி-ம்:—1புலவர். 2விளைக்குவம். 3நாம். 4விளம்பும். (கஎருஉ)

உகரு.—கும்பகர்ணன்செய்த வீரவாதம்.

பெய்த வத்தினோர் பெண்கொடி 1யெம்முழைப் பிறந்தாள்
செய்த குற்றமொன் றில்லவ ளுசிவெஞ் சினத்தாற்
கொய்த கொற்றவ மற்றவள் கூந்தலூட் டீர்த்த
கைத லத்திடைக் கிடத்துவன் காக்குதி யென்றான்.

(இ-ள்.) 'செய்ததவத்தினால் எம்குலத்துப்பிறந்த ஒருபெண்கொடியாகிய செய்தகுற்றமொன்றுமில்லாதவளின் மூக்கைக் கொடியசீற்றத்தினால்கொய்த கொற்றவனே! அவளுடைய கூந்தலைத் தொட்டுஇழுத்த கையைப் பூதலத்திலே கிடத்தப்போகின்றேன்; (வல்லமையுடையாயாயின்) காத்துக்கொள்வாயாக' என்றுகூறினான்; (எ-று.)—'பெண்கொடிநாசிகொய்தகொற்றவ' என்றுகூறியவாறு. சூர்ப்பணகியின்கூந்தலைப்பற்றி வயிற்றிலுதைத்து நாசிமுதலிய உறுப்புக்களை இலக்குமண னரிந்தானென்பது, ஆரணியகாண்டத்திற் கூறிய விஷயம். இச்செய்யுள் "அல்லினாற்செய்த" என்ற அடுத்தபாடலின்பின் ஒருபிரதியிலுள்ளது. மற்று-வினைமாற்று. பி-ம்:—1எம்முடன், எங்களிற். (கஎருங)

உகசு.—இலட்சுமணன் மறுமொழி.

அல்லி னாற்செய்த திறத்தவ 1னனையது 2பகர
மல்லி னாற்செய்த 3தோளினன் மாற்றங்க 4ளும்பால்
வில்லி னாற்5சொல்லி னல்லது வெஃகிறல் 6வெள்கச்
சொல்லி னாற்சொலக் கற்றில மியாமெனச் சொன்னான்.

(இ - ள்.) இருளினாற்செய்தாற்போன்ற (கரு)நிறத்தையுடையவனான கும்பகர்ணன் அவ்வாறானசொல்லைச் சொல்ல,—வலிமையென்னுங்குணத்

தைக்கொண்டு இயற்றப்பட்டனபோன்ற தோள்களையுடைய இலட்சுமணன்,— 'நம்மிடத்து மறுமொழியை வில்லினாற் சொல்லலாமேயன்றிக் கொடியதிற லுக்கு [வீரத்தன்மைக்கு] நாணமுண்டாகும்படி சொல்லினால் (மாறு) சொல் வதற்கு யாம் கற்றிலோம்' என்றுகூறினான்; (எ-று.)—"வாளினாற்பேசினல் லால்வாயினாற்பேசலொட்டேன்" என்றது, இங்கு ஞாபகத்திற்குவருகின் றது. பி-ம்:—[1]ஆங்கது. [2]செப்ப. [3]புயத்தவன். [4]உன்பால். [5]சொல்வதல்லது. [6]வீழ்கச். (கசருச)

உருஎ.—இனிப்பத்துக்கவிகள் - கும்பகர்ணனுக்கும் இலட்சுமணனுக்கும் நிகழ்ந்த போரைத் தெரிவிக்கும்.

விண்ணி ரண்டு[1]கூ றுபது பிளந்தது வெற்பு
மண்ணி ரண்டுறக் கிழிந்ததென் றிமையவர் மறுகக்
கண்ணி ரண்டினுந் தீயுகக் கதிர்முகப் பகழி
எண்ணி ரண்டினோ [2]டிரண்டொரு தொடைதொடுத் தெய்தான்.

(இ - ள்.) (அப்போதுகும்பகர்ணன்,—தனது) கண்ணிரண்டினின்றும் தீவெளிப்பட, 'ஆகாயம்இரண்டுகூறுபட்டது: வெற்பு பிளந்தது; மண் இரண் டாகக் கிழிந்தது' என்று கருதித் தேவர்கள் கலங்குமாறு ஒளிவிடுகின்ற முனையையுடைய பதினெட்டுஅம்புகளை ஒருதொடுப்பினில்தொடுத்துவிட் டான்; (எ-று.)—பி-ம்:-[1]கூறுகியே. [2]இரண்டுகோத்தொருதொடை. (கசருரு)

உருஅ. கொம்பு [1]நா லுடைக் [2]குலக்கரி கும்பத்திற் குளித்த
உம்ப ராற்றலை [3]யொதுக்கிய [4]வுருமெனச் [5]செல்வ
வெம்பு வெஞ்சினத் திராவணற் [6]கிளையவன் விட்ட
அம்பு [7]பத்தினோ டெட்டையு நான்கினா லறுத்தான்.

(இ - ள்.) நான்குதந்தங்களையுடைய சிறந்த (ஐராவதமென்ற) யானை யின் மத்தகத்திற்பாய்ந்தனவும் தேவர்களின்வல்லமையைப்போக்கினவும் இடிபோலச்செல்வனவுமாகி வெம்புகின்ற கொடியசினத்தையுடைய இராவ ணன்றம்பி கும்பகர்ணன் விட்ட பதினெட்டுஅம்புகளையும் (இலட்சுமணன்) நான்குஅம்புகளினால் அறுத்திட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]நான்குடைக். [2]குலக்கிரி, கொலைக்கிரி. [3]ஒடுக்கிய. [4]உருமினிற். [5]செல்ல. [6]தம்பிமேல். [7]நான் கினாற்பத்தினோடெட்டையும். (கசருசு)

உருகூ. அறுத்த காலையி னரக்கனு மமரரை நெடுநாள்
ஒறுத்த தாயிர [1]முருவது திசைமுக னுதவப்
பொறுத்த தாங்கொரு புகர்முகக் கடுங்கணை பூட்டி
[2]இறுத்து [3]மாற்றிது வல்லையே லென்றுகோத் தெய்தான்.

(இ - ள்.) (அவ்வாறுஇலட்சுமணன் தான் எய்த அம்புகளை) அறுத்துத் தள்ளிய வளவில், கும்பகர்ணனும், நெடுநாள் அமரரை அடக்கியதும், ஆயிர முருவத்தையுடையதும் பிரமதேவனுதவ(த் தான் பெற்று) வைத்துக்கொண் டிருப்பதுமான ஒளிவிடும்முகத்தையுடைய கொடியதோர்அம்பைத் தெய்வத் தைத் தங்கச்செய்து (அப்போதுவில்லிலே)பூட்டி, 'வல்லமையுடையவனானால் இதனைமாற்றுவாய்' என்றுசொல்லிவிடுத்தான்; (எ - று.)—அஸ்திரத்தை

அபிமந்திரித்துக் கும்பகர்ணன் விடுத்தா னென்றவாறு. பி-ம்:—[1]உருவின. [2]இறுத்தி. [3]மற்றிது. (கசருள)

உசo. புரிந்து நோக்கிய திசைதொறும் பகழியின் புயலால்
எரிந்து [1]செல்வதை நோக்கிய [2]விராமனுக் கிளையான்
தெரிந்து மற்றது தன்னையோர் தெய்வவெங் கணையால்
அரிந்து [3]வீழ்த்தது [4]மாயிர வுருச்சர மற்ற.

(இ-ள்.) கண்கொண்டுபார்த்தஇடமெங்கும் அம்புகளின்வர்ஷத்தினால் எரிந்துபோவதைக் கண்ட இளையபெருமாள், ஆராய்ந்து பின்பு அந்தக்கணையை ஒருகொடிய தெய்வக்கணையால் [அஸ்திரத்தினால்] அறுப்புண்டுவீழச் செய்தவளவில், ஆயிரமுருவத்தைக்கொண்ட அந்தக்கணை நீங்கிற்று; (எ - று.) —பி-ம்:---[1]செல்வகை. [2]இராகவற்கு. [3]நீக்கலும். [4]ஆயிரஞ்சரங்களுமற்ற. ()

உசக. ஆறி ரண்டுவெங் [1]கடுங்கணை யனுமன்மே லழுத்தி
[2]ஏறு வெஞ்சர மிரண்டிளங் குமரன்மே லெற்றி
நூறு மைம்பது [3]மொருதொடை தொடுத்தொரு நொடியிற்
[4]கூறு திக்கையும் விசும்பையு [5]மறைத்தனன் [6]கொடியோன்.

(இ-ள்.) (அப்போது) கொடியவனாகிய கும்பகர்ணன்,---கொடியவிசையுள்ள பன்னிரண்டுஅம்புகளை அநுமன்மேற் பதியுமாறு செலுத்தியும், பாய்கின்ற கொடியஇரண்டுஅம்புகளை இளையபெருமாள்மீதுசெலுத்தியும்,ஒருதொடுப்பினில் நூறும் ஐம்பதுமாக(ப் பாணங்களை)த் தொடுத்து ஒருநொடிப்போதிற் கூறுபட்டுள்ள திக்கையும் ஆகாயத்தையும் மறைத்தான்; (எ - று.)—பி-ம்:—[1]சுடு. [2]வேறு...வேற்றி. [3]ஓர். [4]மாறு. [5]நிலத்தையும், மண்ணையும், வாளியான். [6]மறைத்தான். (கசருக)

உசஉ. மறைத்த வாளிக ளவற்றைய மவற்றினன் மாற்றித்
துறைத்த லந்தொறுந் [1]தலந்தொறு நின்றுதேர் சுமக்கும்
பொறைக்க மைந்தவெங் கரி[2]பரி யாளிமாப் பூதந்
திறத்தி றம்படத் துணித்தவன் றேரையுஞ் [3]சிதைத்தான்.

(இ-ள்.) (இலட்சுமணன்)—(ஆகாசம் திக்கு இவற்றையெல்லாம்) மறைத்துக்கொண்டிருந்த(கும்பகர்ணனது)அம்புகளையெல்லாம்(தனது)அம்புகளாற் போக்கி, பூட்டுதற்குஉரியஇடங்கள்தோறும் இடங்கள்தோறும் பூட்டப்பட்டு நின்றுதேரைச்சுமக்கின்றனவும் சுமத்தற்றொழிற்குஏற்பட்டனவுமான கொடிய யானை பரி சிங்கம் பெரியபூதம் என்னும் இவற்றைத் திரள்திரளாகத்துணித்து அவன்தேரையும்அழித்தான்; (எ - று.)

தேரையுஞ்சிதைத்தான் என்னுமிடத்தில், அவ்விரதத்தின்அச்சு மச்சு குத்துக்கால் கொடுங்கை விட்டம் தூண் நாகவட்டம் இரிசு வட்டை இலைகுடம் குடை கொடி மணி சிகரம்என்னும் இவ்வகையான உறுப்புக்களையெல்லாம் சின்னபின்னப்படுத்தினனென்று பொருள்விரித்துக்கூறுவர். பி-ம்:---[1]நிலந்தொறும். [2]அரி. [3]துணித்தான். (கசசுo)

உசங. தேர ழிந்தது செங்கதிர்ச் செல்வனைச் [1]சூழ்ந்த
ஊர ழிந்தது போற்[2]றுரந் தூர்பவ ருலந்தார்

நீர [3]ழிந்திடா நெடுமழைக் குழாத்திடை நிமிர்ந்த
பார வெஞ்சிலை யழிந்தெனத் [4]துமிந்தது அப் பருவில்.

(இ - ள்.) (ஆயிரம்)கிரணங்களைச்செல்வமாகக்கொண்ட செந்நிறமுள்ள சூரியனைச் சூழ்ந்திருந்த ஊர்கோள் அழிந்ததுபோலத் தேர் அழிந்தது; (அத் தேரிற்பூட்டிய குதிரைமுதலியவற்றைச்) செலுத்தி நடத்தும் பாகர் அழிந்தனர்; நீர்நீங்கப்பெறாத மிக்கமேகத்திரளிலே உயர்ந்துதோன்றிய பெருமை பெற்ற வெவ்விய இந்திரதனுசு அழிவதுபோல அந்த(க் கும்பகர்ணனுடைய) பெரியவில் துண்டுபட்டது; (எ - று.)

நான்காமடியில், வெஞ்சிலை-விரும்பத்தக்கசிலையென்க. கும்பகர்ணனைத் தன்னுட்கொண்ட தேர்அழிந்ததற்குச் சூரியனைச் சுற்றித்தோன்றும்ஊர்கோள் அழிவதை யுவமை கூறினர். பி-ம்:—[1]சேர்ந்த. [2]துறந்தூர்பவர், துரந்துய்ப்ப வர். [3]அழிந்திலா. [4]துணிந்ததுபரு, துமிந்ததுபரு. (கஈசுக)

உசுச. செய்த போரினை நோக்கியித் தேரிடைச் சேர்ந்த
கொய்யு ளை[1]கடுங் சோளரி முதலிய குழுவை
எய்து கொன்றன னோநெடு மந்திர மியம்பி
வைது கொன்றன னோவென வானவர் [2]மயர்ந்தார்.

(இ - ள்.) (அப்போது இலட்சுமணன்) செய்த போரைப்பார்த்து, 'இந்த(க்கும்பகர்ணனது) தேரிற்பூட்டிய குதிரை கொடியவலியயாளி முதலியவற்றின் கூட்டங்களை (இலட்சுமணன்)எய்துகொன்றானோ? சிறந்தமந்திரத்தைச் சொல்லிச்சபித்துக்கொன்றானோ?' என்று தேவர்கள் சொல்லிப் பிரமித்துநின்றார்கள்; (எ-று.)—இது-தேவர்கள் இலட்சுமணனது கைத்திறமையைக்கண்டு வியந்துகூறியது. கொய்யுளை-அன்மொழி: இனி, அரிக்கு விசேடணமுமாம். பி-ம்:—[1]கொடுங். [2]மகிழ்ந்தார். (கஈசுஉ)

உசரு. ஊன்று தேரொடு சிலையிலன் கடல்கிளர்ந் தொப்பான்
ஏன்று மற்றவ னின்னுயிர் குடிப்பலென் றுலகம்
மூன்றும் வென்றமைக் [1]கிடுகுறி யென்னமுச் சிகைத்தாய்த்
தோன்றும் [2]வெஞ்சுடர்ச் சூலவெங் கூற்றினைத் தொட்டான்.

(இ - ள்.) எதியதேருடனே வில்லையும் ஒழியப்பெற்றவனாகிய கும்பகர்ணன்,—கடல்பொங்கினாற் போன்றவனாய், 'அந்தஇலட்சுமணனுடைய இனிய உயிரைக் குடிப்பேன்' என்றுசொல்லி எதிர்த்துநின்று, உலகம்மூன்றையும்(தான்)வென்றதற்கு இட்டஅடையாளமென்னுமாறு மூன்றுகிளையையுடையதாய்த்தோன்றும்கொடியஒளியையுடைய சூலப்படையாகிய கொடிய கூற்றினை(க் கையிற்) கொண்டான்; (எ-று.)—இது-சிலபிரதியில் "தேரழிந்தது" (உசங) என்ற பாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]இடுகுறிக்கென்னும், இடுகுறியென்னும். [2]வெங்கதிர்க். (கஈசுங)

உசரு. [1]இழியப் பாய்ந்தன னிருநிலம் பிளந்திரு [2]கூறாக்
கிழியப் பாய்புனல் [3]கிளர்ந்தெனக் கிளர்சினத் தரக்கன்
பழியப் பாலிவன் [4]பதாதியென் றனுமன்றன் படர்தோள்
ஒழியப் பார்மிசை [5]யிழிந்துசென் றிளவலு முற்றான்.

(இ - ள்.) பாயுந்தன்மையுள்ள நீர்வடிவானகடல் பொங்கிவிழுந்தாற் போற் பொங்கியெழுகின்ற சீற்றத்தையுடையவனான கும்பகர்ணன்,—பெரிய பூமி பிளவுபட்டு இரண்டுபகுதியாகக் கிழியத் தாழப்பாய்ந்தான்,'இவன்பதாதி: (ஆகையால், நாம் அநுமான்தோளின்மீது இருந்தபடியே பொருதல்) இனிப் பழியைவிளைப்பதாம்' என்றுகருதி இளையபெருமாளும் அநுமானது பரவிய தோளைவிட்டுப் பூமியின்மீது இறங்கிப்போய்(ப் போர்செய்ய)ப் பொருந்தினான்; (எ - று.)—பி-ம்:—[1]குழியப். [2]கூறுய்ப். [3]கிளர்ந்தெழக்.[4]பகருமென்று. [5]இளவலுமிழிந்து சென்றுற்றான். (கசகசச)

உசஎ.—அப்போது இராவணன் கும்பகர்ணனுக்கு உதவுமாறுஏவிய பெரும்படைகளை இலட்சுமணன்அழித்தமையை ஐந்துகவிகளிற் கூறும்.

உற்ற காலையி னிராவணன் றம்பி[1]மா ருதவ
இற்ற தானையி னிருமடி [2]யிகற்படை யேவ
முற்றி [3]யன்னது முழங்குமுந் நீரென முடுகிச்
சுற்றி [4]யார்த்தது சுமித்திரை சிங்கத்தைத் [5]தொடர.

(இ - ள்.) (இலட்சுமணன் பூமியிற்), பொருந்தியபோது இராவணன் (தன்)தம்பியாகியகும்பகர்ணனுக்கு அருகே(சென்று) உதவுமாறுஅழிந்தசேனையினும் இருமடங்கு வலிமையுள்ளசேனையை யேவ,அந்தச்சேனை நிரம்பி முழங்குகின்ற கடல்போலவிரைந்து சுமித்திரைபெற்ற சிங்கம்போன்ற இலட்சுமணனைத் தொடரச் சுற்றியாரவாரஞ் செய்தது; (எ - று.)—ஒற்றரால் சேனை அழிந்தமையையறிந்த இராவணன் கும்பகர்ணனுக்கு உதவுமாறு முன்னினும் இருமடங்குசேனையை யனுப்பினனென்க. பி - ம்:—[1]மாட்டு. [2]கடற். [3]அன்னவை. [4]ஆர்த்தன. [5]தொடர்ந்து. (கசகசரு)

உசஅ. [1]இரிந்து [2]வானர [3]நிரியலின் மயங்கின [4]வெங்குஞ்
சொரிந்த வெம்படை துணித்திடத் தடுப்பருந் தொழிலாற்
பரிந்த வண்ணலும் [5]பரிவில னொருபுடை படரப்
புரிந்த [6]வங்நெடுஞ் சேனையங் [7]கருங்கடல் புக்கான்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அதுகண்டு) நிலைகெட்டு வானரங்கள் ஓடுதலினால் (ஒன்றோடொன்று)தடுமாறின; எல்லாவிடத்தும் (வந்தசேனை) சொரிந்த கொடிய படைகளைத் துணிக்கும்படி தடுப்பதற்குஅரியதொழிலினோடு சென்ற பெருமைபெற்றஇலக்குமணனும் மனப்பரிவுஇல்லாதவனாகி (வந்தசேனையையெல்லாம்)ஒருபுறமாகச்செல்ல(ச் செய்து), (போர்செய்ய)விரும்பிய அந்த நெடிய சேனைக் கருங்கடலுட்புகுந்தான்; (எ - று.)

இனி, பரிவு [இரக்கமென்பது] இல்லாதவனான கும்பகர்ணன் ஒருபுடைபடர, பரிவுகொண்டுள்ளஅண்ணலாகிய இலட்சுமணனும் தடுப்பருந் தொழிலோடு அந்நெடுஞ்சேனைக்கடலுட்புக்கானென்றல் ஏற்கும்: "அரக்கன் மற்றொருதிசைநின்றான்" (உருச) என வருதல்காண்க. பரிந்த - (கும்பகர்ணனை) விட்டுச்சென்ற எனினுமாம். புரிந்த-சூழ்ந்தஎன்று உரைப்பினுமாம்.

பி-ம்:—[1]இரிந்த. [2]வானவர். [3]இரியல்போய்மயங்கிட, இரியலின்மயங்கினர். [4]எவரும். [5]பரிவினிலொருபுடைபடர்ந்து.[6]வன்னெடுஞ்.[7]கடலிடைப்.(கசகூகூ)

உசகூ. [1]முருக்கி னுண்மலர் [2]முகைவிரிந் தாலன முரட்கண்
அரக்கர் செம்மயிர்க் கருந்தலை [3]யடுக்கலி னணைகள்
[4]பெருக்கி னாற்பெருங் [5]கடலிடைப் பெய்துபெய் [6]தெருவை
[7]உருக்கி னாலன்ன குருதிநீ ராறுக [8]ளோதுங்க.

(இ - ள்.) பலாசமரத்தின் அன்றலருந்தன்மைகொண்டமலர் மொட்டு விரிந்தாற்போன்ற மாறுபட்ட்கண்களையுடைய அரக்கரின் செம்மயிரைக் கொண்ட கருந்தலையாலியன்றமலைகளாகிய அணைகள்மூலமாய்ச் செம்பையுருக்கினாற்போன்ற இரத்தநீராலாகியயாறுகள் பெருக்கெடுத்துப் பெரியகடலிடையே சேர்ந்துசேர்ந்தொதுங்க,—(எ-று.)—'சேனையங்கருங்கடல்புக்கான்' எனக் கீழ்க்கவியோடு இயைக்க. மேலைக்கவியோடு இயைப்பினுமாம். அடுக்கல்-மலை. பி-ம்:—[1]முருக்கு. [2]முகிழ். [3]அடுக்கிய. [4]பெருக்கினான்.[5]கனலிடைப். [6]உருவம், உருச. [7]உருக்குஞ்செம்பெனக். [8]ஓட. (கசகூஎ)

உருo. கரியின் கைகளும் புரவியின் கால்களுந் [1]காலின்
திரியுந் தேர்களின் சில்லியு மரக்கர்தஞ் சிரமுஞ்
சொரியுஞ் [2]சோரியின் [3]றுறைதொறுந் துறைதொறுஞ் சுழிப்ப
நெரியும் பல்பிணப் பெருங்கரை கடந்தில நீத்தம்.

(இ - ள்.) யானையின்கைகளும், குதிரையின்கால்களும், காற்றுப்போல் (விரைந்து) திரிகின்ற தேர்களின் சக்கரங்களும், அரக்கரின்தலைகளும்,—(அறுபட்ட உறுப்புக்களினின்று)பெருகுகின்ற இரத்தங்களுள்ள இடந்தோறும் சுழித்துக்கொண்டிருக்க,(இரத்த)வெள்ளங்கள் நெரிந்தபலபிணப் பெருங்கரையைக்கடந்து(அப்பாற்செல்லமாட்டாமற்)கிடந்தன; (எ-று.)—படுகளச்சிறப்பு.

அறுபட்டவுறுப்புக்களினின்றுபெருகிய இரத்தப்பெருக்கினிடையிலே கைமுதலியவை சுழித்துக்கொண்டிருக்கையில் எம்மருங்கும்நெரியுண்டுவீழ்ந்துகிடக்கும் பிணக்குவியல் கரைபோன்றிருக்க அப்பிணக்குவியலினிடையே இரத்தப்பெருக்குக்கள் கிடந்தனவேயன்றி அப்பாற்செல்லமாட்டாதனவாயின வென்றவாறு. பி-ம்:—[1]காலில்.[2]சோரியுந்.[3]துறைமடுத்,உறைதொறும்.

உருக. கொற்ற [1]வாளெழுத் தண்டுவேல் [2]கோன்மழுக் குலிசம்
மற்றும் வேறுள படைக்கல மிலக்குவன் வாளி
சுற்று மோடுவ தொடர்ந்திடை துணித்திடத் [3]தொகையாய்
அற்ற துண்டங்கள் படப்படத் [4]துணிந்தன வனந்தம்.

(இ - ள்.) வெற்றிபொருந்திய வாள் இரும்புலக்கை தண்டு வேல் கோல் மழு வச்சிரப்படைஇவையும் சுற்றும்ஓடுவனவான மற்றும்வேறுள்ள படைக்கலங்களும் ஆகியவற்றை இலக்குவன்வாளியானது தொடர்ந்துசென்று இடையே துண்டிக்க, பெருந்தொகையாக அற்ற(அப்படைக்கலத்) துண்டங்கள் படுந்தோறும் மற்றுந்துணிந்தவை மிகப்பல; (எ - று.)

இலட்சுமணன்அம்புகளால் துணிக்கப்பட்ட படைக்கலங்கள் படுவதனால் மற்றும்பலபடைகள் துணிப்புண்டனவென்றவாறு. துண்டங்கள்படப்படத்து

ணிந்தனஎன்பதற்கு-துண்டங்களாக ஆகும்படி பல துணிந்தனவெனினுமாம். மு தலடிக்கு 'கொற்றவாளெழுக்கோன்மழுத்தண்டுவேல்குலிசம்' என்றஒருபிரதி யின் பாடம். பி-ம்:—1 வாண்மழுக். 2கோல்முதல். 3தொகைபோய், தொகையா. 4 துணிந்தனரனேகர், சாய்ந்தனரனேகர். (கசுசுகூ)

உருஉ.—இதுவும் அடுத்த கவியும்-படுகளச்சிறப்பைத் தெரிவித்தும்.

குண்ட லங்களு 1மவுலியு மாரமுங் கோவை
தண்டை தோள்வளை கடகமென் 2றினையன 3தறுகட்
4கண்ட கண்டங்க 5ளொடுங்கணை துரந்தன கதிர்சூழ்
மண்ட லங்களை மாறுகொண் 6டிமைத்தன 7வானில்.

(இ-ள்.) குண்டலங்களும் கிரீடங்களும் ஆரங்களும் மணிச்சரங்களும் தண் டைகளும் தோள்வளைகளும் கடகங்களும் என்ற இவ்வாறான அணிகலங்கள், அஞ்சாமையோடு (இலக்குமணனெய்த) அம்புகள் துண்டமாகச்செய்த துண் டங்களோடுந் துரக்கப்பட்டனவாய், ஒளிசூழ்ந்த சூரியமண்டலம் சந்திரமண் டலம் நட்சத்திரமண்டலம் என்றஇவற்றோடு மாறுகொண்டு வானிற் பிரகாசி த்தன; (எ - று.)—பி - ம்:—1மோலியும். 2இனையவும். 3தயங்கக். 4கண்டர். 5துரந்தனகடுங்கணை, ஒடுங்கணைதூர்த்தன, ஒடுங்கரந்துணிந்தன, ஒடுங்கணை துணித்திடக். 6அமைத்தன. 7வானி. (கசுஎ0)

உருங.பரந்த வெண்குடை சாமரை நெடுங்கொடி பதாகை
சரந்த ருஞ்சிலை 1கேடகம் பிச்ச2மொய் சரங்கள்
துரந்து செல்வன குருதிநீ ராறுக டோறும்
நிரந்த பேய்க்கணங் கரைதொறுங் குவித்தன நீந்தி.

(இ - ள்.) பரந்தவெள்ளியகுடையும் சாமரையும் நெடுங்கொடியும் பெ ருங்கொடியும் அம்புகளைவெளிக்கக்குகின்ற விற்களும் கேடகமும் பீலிக்குடை களும் நெருங்கியஅம்புகளும் குருதிநீராறுகள்தோறும் (பெருக்கினுற்)செலுத் தப்பட்டுச்செல்பவற்றை, திரளாகியபேய்க்கணங்கள்நீந்திக் கரைகளிலெல்லாம் குவித்தன; (எ - று.)—பி-ம்:—1தண்டுவேளுந்தும். 2எய். (கசுஎக)

உருச.—கும்பகர்ணன் வேறொருதிசையிற்போய்ச் சுக்கிரீவனோடு போருதல்.

1ஈண்டு வெஞ்செரு வினையன 2நிகழ்வுழி யெவர்க்கும்
நீண்ட வெள்ளெயிற் றரக்கன்மற் றொருரு3திசை நின்றான்
பூண்ட வெஞ்4செரு விரவிகான் முளையொடு பொருதான்
5காண்ட கும்மென விமையவர் குழுக்கொண்டு கண்டார்.

(இ - ள்.) இங்குக் கொடியபோர் இவ்வாறு யாவர்க்கும்நிகழ்கையில்,— நீண்டவெள்ளியகோரப்பற்களையுடைய கும்பகர்ணன், மற்றொருதிசையிற் போய்நின்று கொடும்போரைமேற்கொண்ட சூரியன்புத்திரனாகிய சுக்கிரீவ னோடும் போர்செய்தான்; (இப்போர்) காணத்தகுமென்றுகருதி, தேவர்கள் கூட்டமாகஇருந்து காணலானார்கள்; (எ - று.)—பி-ம்:—1ஆண்டு. 2நிகழ்வுறு மளவில். 3தனி. 4சமர். 5காண்டரும். (கசுஎஉ)

வேறு.

உ௫௫.—இனி ஐந்துகவிகள் - கும்பகர்ணனுக்கும் சுக்கிரீவனுக்கும் நிகழ்ந்த போரைக் கூறும்.

பொறிந்தெழு கண்ணினன் புகையும் வாயினன்
செறிந்தெழு கதிரவன் சிறுவன் சீறினன்
முறிந்தன வரக்கன்மா முரட்டிண் டோளென
எறிந்தனன் [1]விசும்பின்மா மலையொன் றேந்தியே.

(இ-ள்.) நெருங்கியெழுகின்ற கிரணங்களையுடையவனான சூரியனுடைய புத்திரனாகியசுக்கிரீவன்,—தீப்பொறிக்கிளம்பியெழுகின்ற கண்களையுடையவனும் புகைவெளிப்படுகின்ற வாயையுடையவனுமாகிச் சீறி, அரக்கனுடைய பெரிய மாறுபடுகின்ற வலிய தோள்கள் முறிந்தன என்று(கண்டோர்)கருதும்படி பெரியமலையொன்றை யேந்தி வானத்தினின்று (அந்தக்கும்பகர்ணன் மீது) எறிந்தான்; (எ - று.)—பி-ம்:---[1]விசும்பிவர், விசும்புயர். (௧௫௭௩)

உ௫௬. அம்மலை [1]நின் றுவந் தவனி யெய்திய
செம்மலை [2]பனையவெங் களிறுஞ் சேனையின்
வெம்[3]மலை வேழமும் பொருத வேறினி
எம்மலை [4]புளவரற் கெடுக்[5]கொ ணாதன.

(இ - ள்.) அந்தமலையினின்றுவந்து பூமியையடைந்த செவ்வியமலை போன்ற கொடிய யானையும் (அரக்கர்)சேனையிலிருந்த கொடியமலைபோன்ற வேழமும் பொரலாயின:(இப்படிப்பட்டமலையை யெடுத்தெறிந்த)அந்தச் சுக்கிரீவனுக்கு, இனிஎடுக்கவொண்ணாதனவாய் வேறுஎம்மலைகள்உள்ளன?(எ-று.) —எப்படிப்பட்டமலைகளையும் பெயர்த்தெடுத்து எறியும் வலியினன், சுக்கிரீவனென்றவாறு. பி-ம்:---[1]நின்றும். [2]ஆன. [3]முலை. [4]உளது. [5]ஒணாததே. ()

உ௫௭. [1]இவ்வகை நெடுமலை யிழிந்த மாசுணங்
[2]கவ்விய நிருதர்தங் [3]களிறுங் கட்டற
[4]அவ்வகை [5]மலையினை [6]யேற்றொ ரங்கையால்
வவ்வின னரக்கன்வா னவுணர் வாழ்த்தினார்.

(இ - ள்.) இவ்வகையான நெடியமலையிலிருந்து இழிந்த மலைப்பாம்புகள், அரக்கரின்யானைகளும் வலிமையறும்படி(அவற்றைக்)கவ்வின; அப்படிப்பட்டமலையினைக் கும்பகர்ணன்ஏந்தி(த் தன்) உள்ளங்கையொன்றினாற் பற்றினான்; (அதுகண்ட)கொடியஅரக்கர்யாவரும்(அவனை)வாழ்த்தினார்கள்; (எ-று.) —அவுணரையும் அரக்கரையும் அபேதமாகக்கூறுதலுமுண்டு. அவுணர்-அசுரருமாம். பி-ம்:—[1]அவ்வரையிழிந்துவந்தமுந்த. [2]கவ்வின. [3]களிறு. [4]இவ்வகை. [5]மலையிலை. [6]ஏந்தி. (௧௫௭௫)

உ௫௮. ஏற்றொரு கையினா லிதுகொ ணீ[1]யடா
ஆற்றிய குன்றமென் [2]றளவி லாற்றலான்
[3]தீற்றிய [4]னுனுகுறப் பிசைந்து நீங்கெனத்
தூற்றின னிமையவர் துணுக்க மெய்தினார்.

(இ - ள்.) அளவில்லாத வல்லமையுடையவனான கும்பகர்ணன், ஒரு கையினால் (அம்மலையைத்)தாங்கி, 'அடா! நீ எறிந்தகுன்றம் இதுதானோ?என்

று(அலட்சியமாகச்)சொல்லி,நீற்றின் தன்மையதாய் நுண்ணியதாகப்பிசைந்து, போவென்றுசொல்லித் தூற்றிவிட்டான்; (அதுகண்ட)தேவர்,(அந்தக்கும்பகர்ணனுடையபேராற்றலைக்கண்டு) அச்சங்கொண்டனர்; (எ-று.)—பி-ம்:—1எடா. 2அளவினுற்றலால்.3நீற்றினும். 4நுணுகிறப். (கசஎசு)

உ௫கூ. [1]செல்வனோர் நெடுங்கிரி யின்னுந் [2]தேர்ந்தெனு
எல்லவன் கான்முளை யுணரு மேல்வையிற்
கொல்லெனு [3]வெறிந்தனன் குறைவி லோன்பினோர்
சொல்லெனப் பிழைப்பிலாச் சூலஞ் சோர்விலான்.

(இ-ள்.) சூரியகுமாரனை சுக்கிரீவன்,—இன்னொரு நெடியமலையைத் தேடிக்கொணரச்செல்வேனென்றுசொல்லிப்போய் ஆராய்கையில்,சோர்வில்லாத கும்பகர்ணன், 'கொல்' எனச்சொல்லி, குறைவில்லாததவத்தையுடையவரின் சாபச்சொற்போலத் தவறுதலில்லாத சூலத்தையெறிந்தான்; (எ - று.) கொல்லெனு-கொல்லென்றஒலியுண்டாகஎன்பாருமுளர். எல்லவன்-சூரியன். பி - ம்:—1செல்வனே, செல்லவோர். 2செலுத்தவென்று, தேர்ந்தளவு. 3விடுத்தனன். (கசஎஎ)

உகூ0.—சுக்கிரீவன்மீது கும்பகர்ணன் வீசியெறிந்த வேலை அநுமான் தாவிப்பிடித்து முறித்தெறிதல்.

[1]பட்டனன் பட்டன னென்று பார்த்தவர்
[2]விட்டுலம் பிடநெடு விசும்பிற் சேறலும்
எட்டின னதுபிடித் திறுத்து நீக்கினன்
ஒட்டுமோ மாருதி யறத்தை யோம்புவான்.

(இ-ள்.) (சுக்கிரீவன்) இறந்தான் இறந்தானென்று பார்த்தவரெல்லாம் வாய்விட்டுக் கதறுமாறு (அந்தச்சூலம்) பரந்தஆகாயத்திற் சேர்தலும், (அநுமான்) அதனைஎட்டிப்பிடித்து முறித்துப் போக்கினன்: அறத்தைப்பாதுகாப்பவனாகியமாருதி,(சுக்கிரீவன்மேல்தாக்கப்) பார்த்திருப்பனோ? (எ - று.)

தருமத்தைப் பாதுகாத்தலின்பொருட்டே வந்துள்ளானாதலால், அறத்திற்குத்துணையாக வந்துள்ள சுக்கிரீவனுக்கு யாதொருதீங்கும் நேரிடாதவாறு கும்பகர்ணனெறிந்த சூலத்தைத் தாவிப்பிடித்து அநுமான்போக்கினனென்க. பி-ம்:—1பட்டதுபட்டதுவென்று. 2விட்டழைத்திட. (கசஎஅ)

உகூக.—சூலமிற்றவோசை.

சித்திர வனமுலைச் சீதை செவ்வியால்
முத்தனார் [1]மிதிலையூ ரறிவு முற்றிய
[2]பித்தன்வெஞ் சிலையினை யிறுத்தபேரொலி
யொத்தது சூல[3]மன் றிற்ற வோசையே.

(இ - ள்.) அன்று சூலப்படை (அனுமானால்) முறிக்கப்பட்டபோது தோன்றியவோசையானது,—வியக்கத்தக்க அழகுவாய்ந்த தனங்களையுடைய சீதாபிராட்டியின்அழகினால், முத்தியுலகத்திற்குஉரிய திருமாலின் அவதாரமான ஸ்ரீராமபிரான், மிதிலாபுரியிலே, அறிவுநிரம்பிய [ஸர்வஜ்ஞனான]பித்த

னென்னும்பேரைக்கொண்ட சிவபெருமானது கொடியசிலையை முறித்த போதுதோன்றிய பேரொலியை யொத்தது; (எ - று)—வனப்புமுலையென் பது வனமுலையென்றாயிற்று. பி-ம்:—[1]முகுந்தனார்மிதிலைமுற்றுப். [2]பித்த னார்வெஞ்சிலை. [3]இன்று. (கசஎகூ)

உசஉ.—கும்பகர்ணன் அநுமான்திறமையை வியந்துகூறுதல்.

நிருதனு [1]மனையவ னிலைமை நோக்கியே
கருதவு மியம்பவு [2]மரிதுன் கைவலி
அரியன முடிப்பதற் [3]கனைத்து நாட்டினும்
ஒருதனி [4]யுளையிதற் [5]குவமை யாதென்றான்.

(இ - ள்.) அரக்கர்குலத்தவனாகிய கும்பகர்ணனும் அவ்வநுமானதுதிற மையைப் பார்த்து 'எண்ணுதற்கும் சொல்லுதற்கும்அருமையானது உன் கைவலிமை: அருஞ்செயல்களைமுடிப்பதற்கு எல்லாநாட்டினுள்ளும் ஒரு தனிப்பட்டவனாகஉள்ளாய்:(உனது) இத்திறமைவிஷயத்தில் உவமமாகக்கூறு தற்குஉரியது யாதுஉளது?' என்று (புகழ்ந்து)கூறினான்; (எ - று.)—[1]இளைய வன். [2]அலது. [3]அணைந்துகாட்டினும். [4]நீ. [5]உவமம். (கசஅ0)

உசங.—அநுமனைக் கும்பகர்ணன் அறைகூவ, அநுமான்மறுத்தல்.

என்றொடு பொருதியே லின்னு [1]மியானமர்
[2]சொன்னன [3]புரிவலென் றரக்கன் [4]சொல்லலும்
[5]முன்னினி யெதிர்க்கிலே னென்று முற்றிய
பின்னிகல் பழுதெனப் பெயர்ந்து போயினான்.

(இ - ள்.) '(நீ) என்னோடும்பொருவாயானால் இன்னும் யான் போரில் (நீ)சொன்னவற்றை [சொன்னவாறாக] (போர்)செய்வேன்' என்று அரக்கன் சொன்னவளவில்,— (அனுமான்),— 'முன்பு இனி எதிர்க்கிலேனென்று (போரை) முடித்தபின்பு (உன்னோடு) பொருவது (சொன்னசொல்) தவறிய தாகும்' என்று சொல்லித் (தான் இருந்த இடத்தைவிட்டு) அப்பாற் சென் றான்; (எ-று-) பி-ம்:—[1]நீயமர். [2]சொன்னது. [3]புரிதும், புரிவன். [4]சொல்லி னான். [5]முன்னினியெதிர்கிலேனென்றுமுற்றிய, முன்னினியெதிர்கிலேனெ ன்னமுன்சொன்னேன், உன்னோடுமெதிர்க்கிலேனென்னவோதினேன். (

உசச.—நான்குகவிகள்-மீண்டு சுக்கிரீவனும் கும்பகர்ணனும் பொருகையில் சுக்கிரீவன் உணர்வுநீங்குதலைத் தெரிவிக்கும்.

அற்றது காலையி னரக்க னாயுதம்
பெற்றிலன் பெயர்ந்தில னிளைய பெற்றியிற்
பற்றினன் பாய்ந்தெதிர் பருதி கான்முளை
எற்றினன் குத்தின [1]னெறழ்வெங் கைகளால்.

(இ - ள்.)அந்தச்சூலப்படை யற்ற காலத்தில் கும்பகர்ணன் வேறோராயு தத்தைப் பெறாதவனாயிருந்தும்,(அவ்விடத்தைவிட்டு) நிலைபெயராதிருந்தான்; அவ்வேளையில்,சூரியபுத்திரனான சுக்கிரீவன், எதிரேபாய்ந்து(கும்பகர்ணனைப்)

பற்றி வலியகொடியகைகளால் மோதிக்குத்தினன்; (எ - று.)—அது அற்ற காலையிலென்க. பி-ம்.—1எரியுங்கண்ணினன், எறியுங்கைகளால். (கசஅஉ)

உசரு. அரக்கனு 1நன் றுநின் னுண்மை யாயினும்
தருக்கினி யின்றொடு சமையுந் தானென
நெருக்கினன் பற்றின 2னீங்கொ ணுவகை
யுருக்கிய 3செம்பென வுதிரக் கண்ணினன்.

(இ-ள்.) உருக்கியசெம்பைப்போலஇரத்தங்குழம்பிய கண்களையுடையவனை கும்பகர்ணனும்,—'நினதுவீரம்நன்று; ஆயினும், இப்போது(கொண்டுள்ள) செருக்கு, இன்றோடு அடங்கிவிடும்' என்றுசொல்லி, நெருக்கி (அப்பாற்) செல்லவொண்ணுதபடி பற்றினன்; (எ-று.)—இச்செய்யுள் சிலபிரதிகளில் "திரிந்தனர்" என்ற அடுத்தபாடலுக்குப்பின் உள்ளது. தான்-அசை. பி-ம்:—1நன்றுளதாண்மை. 2நீங்குரு. 3செம்பன. (கசஅங)

உசசு. திரிந்தனர் 1சாரிகை தேவர் கண்டிலர்
புரிந்தனர் நெடுஞ்செருப் புகையும் போர்த்தெழ
எரிந்தன 2வுருமெலா மிருவர் வாய்களுஞ்
3சொரிந்தன குருதிதா மிறையுஞ் சோர்ந்திலார்.

(இ - ள்.) (மெல்லச்சுக்கிரீவன் கும்பகர்ணனிடத்தினின்றுவிடுபட்டனனாக, பின்பு அவ்விருவரும்),---பெரும்போரைவிரும்பினவர்களாய் (ஒருவரையொருவர்பற்றுமாறு) சாரிகை திரிந்தார்கள்: தேவர்களும் (அப்போது இன்னார் இங்குள்ளாரென்று) காணமுடியாதவராயினர். (அவ்விசையிற்பிறந்த தீயினல்) புகையும்(திக்குக்களையெல்லாம்) மூடிக்கொண்டுமேற்செல்ல இடிகளெல்லாம்எரிவனவாயின; இருவருடையவாய்களும் குருதியைச்சொரிந்தன: (அப்படியிருந்தும்), தாங்கள் சிறிதும் சோர்வடையாதவராயினர்; (எ-று.)—பி-ம்:---1சாரியை. 2உருவெலாம். 3சொரிந்தனர். (கசஅச)

உசஎ. 1உறுக்கின ரொருவரை யொருவ 2ருற்றிகல்
முறுக்கினர் முறைமுறை யரக்கன் மொய்ம்பினற்
3பொறுக்கிலா வகைநெடும் புயங்க ளாற்4பிடித்து
இறுக்கின 5னிவன்சிறி துணர்வு மெஞ்சினன்.

(இ - ள்.) (ஒருவர்கையில் ஒருவர்அகப்படாமல் இப்படிவெகுநேரந்திரிந்தபிறகு கும்பகர்ணன் சுக்கிரீவன்என்ற அவ்விருவரும்), ஒருவரையொருவர் பொருந்திநின்று அதட்டினர்கள்: முறைமுறையாகப் போரைச் சினத்தோடு புரிந்தார்கள்:கும்பகர்ணன் வலிமையோடுபொறுக்கமுடியாதபடி (சுக்கிரீவனைப்)பெரியகைகளாற் பிடித்தழுத்தினன்;இந்தச்சுக்கிரீவன் சிறிது அறிவும் நீங்கினன் [மூர்ச்சித்தான்]; (எ - று.)---கும்பகர்ணன் வலிமைகொண்டு கைகளாலழுத்தச் சுக்கிரீவன் உணர்வுநீங்கினனென்க.— பி - ம்:-1ஒறுக்கிலர். 2ஒற்று. 3பொறுக்கலா. 4பிணித்து. 5அவன். (கசஅரு)

௨௬௮.—கும்பகர்ணன் சுக்கிரீவனைத் தூக்கிக்கொண்டு ஊர்க்குச்செல்லத் தொடங்குதல்.

மண்டம ரின்றொடு மடங்கு [1]மன்னிலாத்
[2]தண்டலில் பெரும்படை [3]சிந்துந் தக்கதோர்
எண்டரு கருமமற் றிதனி னில்லெனக்
கொண்டனன் போயின னிருதர் [4]கோநகர்.

(இ - ள்.) அரக்கர் தலைவனாகிய கும்பகர்ணன்,—'(நாம்இவனைத் தூக்கிக் கொண்டுபோய்விட்டோமானால்) நெருங்கியபோர் இன்றோடுமுற்றுப்பெறும்: அரசனில்லாமையாற் கெடுதலில்லாத (வானரப்) பெருஞ்சேனையானது சித றிவிடும்: (ஆகையால்), இதனைக்காட்டிலும் தக்கதாகிய ஆலோசித்துச்செய் தற்கு உரியஒருதொழில் இல்லையாம்' என்றுகருதி (அந்தச்சுக்ரீவனை) இலங் கை மாநகரத்தைநோக்கித் தூக்கிக்கொண்டு செல்லலாயினான்;(எ-று.)--பி-ம்:- [1]மானிடர். [2]திண்டிறற். [3]சிந்தத்தக்கதே, இரிந்துசிந்திடும். [4]கோனகர். ()

௨௬௯.—அதுகண்டு வானரர் துயருற, அரக்கர் ஆரவாரித்தல்.

[1]உரற்றின [2]பறவையை யூறு கொண்டெழச்
சிரற்றின [3]பார்ப்பினிற் சிந்தை [4]சிந்திட
விரற்றுறு கைத்[5]தலத் தடித்து வெய்துயிர்த்து
அரற்றின [6]கவிக்குல மரக்க ரார்த்தனர்.

(இ - ள்,) சத்தஞ்செய்துகொண்டிருந்த(தாய்ப்)பறவையை வல்லூறு பற் றிக்கொண்டுபோய்விடப் பேரொலிபடக்கதறின குஞ்சுகள்போல, (சுக்கிரீ வனைக் கும்பகர்ணன் தூக்கிக்கொண்டுசென்றபோது) கவிக்கூட்டங்கள், (தமது) மனம் முறிந்திட விரல்நெருங்கியகையினாலடித்துக்கொண்டு வெப்ப மாகப்பெருமூச்சுவிட்டு வாய்விட்டுக்கதறின; அரக்கரோ, (மகிழ்ச்சியினாற்) பேராரவாரஞ்செய்தார்கள்; (எ - று.)---பி-ம்:---[1]உரற்றினப், உரத்தினன். [2]பார்ப்பினை. [3]பறவையிற். [4]நொந்திடா. [5]தலநெரித்து. [6]வானரம். (௧௪௮௭)

௨௭௦.—வானவரும் வானரத்தலைவர்களும் வருந்துதல்.

[1]நடுங்கின ரமரரு [2]நாவுலர்ந்து வேர்த்து
ஒடுங்கினர் வானரர் தலைவ ருண்முகிழ்த்து
[3]இடுங்கின கண்ணின [4]ரெரிந்த நெஞ்சினர்
மடங்கின வாமுயிர்ப் பென்னு மாண்பினர்.

(இ - ள்,) அமரரும், நடுங்கி (உடலமெல்லாம்) வேர்த்து நாவுலர்ந்து ஒடுங்கினர்; வானரத்தலைவர், மனம்மகிழ்ச்சிகுன்றி இடுங்கினகண்களையுடை யவரும் எரிந்தநெஞ்சையுடையவருமாகி, (இவர்களின்)உயிர்ப்புமடிந்திட்டன என்று (காண்போர்) கருதுமாறு (தம்மரசன்திறத்து அன்பு) சிறந்திருந்தனர்.

நாவுலர்ந்து வேர்த்தொடுங்கினரென்பதையும் வானரத்தலைவர்க்குக் கூட்டினுமாம். இடுங்கினகண்ணினனெரிந்தநெஞ்சினன் அடங்கினனுமுயிர்ப் பென்னுமன்பினரென்று பின்னிரண்டடிகளிற் பாடமானபோது - (நம் முடைய அரசன்) இடுங்கினகண்ணினனும் எரிந்தநெஞ்சினனுமாகி உயிர்ப்பு

அடங்கியவனுனேஎன்று அவன்திறத்துஅன்புகொண்டவராயினர் வானர ரென்க. பி-ம்:---[1]நடுங்கினன்மாருதி, நடுங்கினமாருதி. [2]நாவும்வேர்த்துலர்ந்து. [3]இடுங்கனற். [4]எரியும். (கசஅஅ)

உஎக.—அரக்கன்தூக்கிச்செல்லும் சுக்கிரீவனது வருணனே.

புழுங்கிய வெஞ்[1]சினத் தரக்கன் போகுவான்
அழுங்கலில் கோண்முகத் தரவ மாயினுன்
எழுங்கதி [2]ரிரவிதன் புதல்வ [3]னெண்ணுற
விழுங்கிய மதியென மெலிந்து தோன்றினுன்.

(இ-ள்.) (மனம்)புழுங்குவதற்குக்காரணமான கொடுஞ்சினத்தையுடைய அரக்கன் போகுபவன்,--வருந்துதலில்லாது[இலேசாகப்]பற்றுந்தன்மையைக் கொண்ட முகத்தையுடைய இராகுவென்னும்பாம்புபோ லாயினுன்; எழுகின் றகதிரைக்கொண்ட சூரியனதுபுத்திரனுகிய சுக்கிரீவன் (யாவரும்) எண்ணு தல்பொருந்த(அரவத்தால்)விழுங்கப்பட்ட சந்திரன்போல மெலிந்துதோன்றினுன்;(எ-று.)—பி-ம்:---[1]சமத்து. [2]த்தலைமகன். [3]எண்ணற, எணற,எண்ணரா.

உஎஉ.—இதுவும் அது.

திக்குற [1]விளக்குவான் சிறுவன் றீயவன்
[2]மைக்கரு நிறத்திடை மறைந்த தன்னுரு
மிக்கதுங் குறைந்தது மாக மேகத்துட்
[3]புக்கதும் புறத்துமா மதியும் போன்றனன்.

(இ - ள்.) திக்குக்களெல்லாம் செவ்வனே விளங்குமாறுதோன்றுகின்றவனுன சூரியனுடையகுமாரனுன சுக்கிரீவன், தீயவனுனகும்பகர்ணனுடைய மேகம்போற்கறுத்த உருவத்திலே மறைந்த தன்னுருவம் ஒருகால்மிக்கதும் ஒருகால்குறைந்ததுமாகத்தோன்றி, மேகத்திற் புக்கதும் புறத்ததுமான சந்திரனையும் போன்றனன்; (எ-று.)---இச்செய்யுள் "ஒருங்கமர்" என்ற அடுத்த பாடலுக்குப்பின்னே ஒருபிரதியி லுள்ளது. பி-ம்:---[1]விளங்குவான். [2]தக்கரு. [3]புக்கதுபுறத்ததா. (கசகூ0)

உஎங.—அநுமான் கும்பகர்ணனேடுஎதிர்த்துப்போர்செய்யாது அவன்பின்னே கைபிசைந்துகொண்டுசெல்லுதல்.

ஒருங்கமர் [1]புரிகிலே னுன்னொ டியானென
நெருங்கிய வுரையினை நினைந்து நேர்கிலன்
கருங்கடல் கடந்தவக் காலன் [2]காலன்வாழ்
பெருங்கரம் பிசைந்தவன் பின்பு சென்றனன்.

(இ - ள்.) கரியகடலைக்கடந்த அப்படிப்பட்ட காலையுடையவனுகிய அநுமான்,---'யான் உன்னுடன்பொருந்த (இனிப்)போர்புரியேன்' என்று சமீபத்திற்கூறியஉரையினை நினைத்து எதிர்க்காதவனுய், யமன்வாழ்கின்ற (தன்) பெருங்கையைப்பிசைந்துகொண்டு அந்தக்கும்பகர்ணன்பின்னே சென்றுன்.

கையிலகப்பட்டார் உயிரொடுங்குவதுபற்றி, 'காலன்வாழ்பெருங்கரம்' என்றது. பி-ம்:---[1]புரிகலன், புரிகிலன். [2]காலின்சேய், காலின்காதலன். ()

உ௭௪.—சுக்கிரீவனைக் கும்பகர்ணன் தூக்கிச்சென்றசெய்தியை வானரர் இராமபிரானுக்குத் தெரிவித்தல்.

ஆயிரம் [1]பெயரவ னடியில் வீழ்ந்தனர்
நாயக ரெமக்கினி யாவர் [2]நாட்டினிற்
காய்கதிர்ச் [3]சிறுவனைப் பிணித்த கையினன்
போயின னரக்கனென் [4]றிசைத்த பூசலார்.

(இ - ள்.) (அப்போது வானரர்கள்,---இராமபிரானைநோக்கி),—'எரிகின்றகிரணங்களையுடைய சூரியனுடையபுத்திரனான சுக்கிரீவனைக் கட்டிய கையையுடையவனாய் [கையினாற்கட்டியெடுத்துக்கொண்டு] கும்பகர்ணன்போயினான்:(இனி)நாட்டில்எமக்கு நாயகர் யாவர்?'என்று பேரொலியோடு இசைத்தவராய், ஆயிரந்திருநாமங்களையுடையவனான இராமபிரானதுபாதங்களில் வீழ்ந்தார்கள்; (எ - று.)—பி - ம்:-1பேரவன். 2நாட்டிடை. 3புதல்வனைப். 4உரைக்கும். (௧௪௯௨)

உ௭௫.—இராமன் சினங்கொண்டு இலங்கைவாயிலை யடைதல்.

தீயினு முதிர்வுறச் சிவந்த [1]கண்ணினான்
காய்கணை சிலையொடுங் கவர்ந்த கையினான்
ஏயெனு [2]மளவினி னிலங்கை மாநகர்
வாயில்சென் றெய்தினான் மழையின் மேனியான்.

(இ - ள்.) மழைபோன்றதிருமேனியையுடையவனான ஸ்ரீராமன்,---தீயைக்காட்டிலும்விஞ்சச் செந்நிறமாய்விட்ட கண்களையுடையவனும், எரிக்கவல்ல அம்புகளை வில்லுடனே கொண்ட கையையுடையவனுமாகி,ஒருநொடிப்போதில் இலங்கைமாநகரின் வாயிலைச் சென்று சேர்ந்தான்; (எ-று.)---பி-ம்:- 1செங்கணான். 2மாத்திரத்து. (௧௪௯௩)

உ௭௬.—இராமன் சரக்கூடங்கட்டிக் கும்பகர்ணன் செல்லும்வழியைத் தடுத்தல்.

உடைப்பெருந் துணைவனை யுயிரிற் கொண்டுபோய்க்
[1]கிடைப்பருங் [2]கொடிநக ரடையிற் கேடெனத்
தொடைப்[3]பரும் பகழியின் மாரி [4]தூர்த்துற
அடைப்பனென் றடைத்தனன் விசும்பி னூறெலாம்.

(இ - ள்.) 'என்னுடைய சிறந்தநண்பனான சுக்கிரீவனை என்னுயிரைக் கொண்டுபோவதுபோற்போய், கொடியோடுவிளங்குகின்ற கிட்டுவதற்குஅரிய நகரை யடைந்திடிற் கேடாகும்'என்றுகருதி,'தொடுத்தலைப்பொருந்தினபெரிய அம்புகளின் வருஷத்தினால்நிரப்பிநன்கு அடைப்பேன்'என்றுசொல்லி-ஆகாய வழியையெல்லாம் அடைத்தான்,(ஸ்ரீராமன்); (எ-று.)--தொடை-தொடுத்தல். பி-ம்:—1கிடைப்பெருங். 2கடி. 3பெரும். 4தூர்த்திறை, தூர்த்துராய்.(௧௪௯௪)

உ௭௭.—இராமனது அம்புமழையால் ஆகாயவழியெல்லாம் அடைபட்டு விடுதல்.

மாதிர மறைந்தன வயங்கு வெய்யவன்
[1]சோதியின் கிளர்கிலே தொடர்த லோவின

யாதும்விண் படர்கில வியங்கு [2]கார்மழை
மீதுநின் [3]றகன்றது விசும்பு [4]தூர்த்தலால்.

(இ - ள்.) (இராமனதுஅம்புகள்) விசும்பை நிரப்பியதனால், திக்குக்களெல்லாம் மறைந்தன: விளங்குகின்ற உஷ்ணகிரணனான சூரியனுடைய கிரணங்களின் விளங்கும்நிலையும் (பூமியில்) தொடர்ந்துபிரகாசித்த லொழிந்தது; எதுவும் வானத்திற்செல்லமாட்டா தொழிந்தன; (வானத்திற்) சஞ்சரிக்கின்ற கருநிறமுள்ளமேகம் மேற்புறத்தினின்று அகன்றிட்டது; (எ-று.) ---ஓவின = ஓவினது. பி-ம்:---[1]சோதியும். [2]கான்மழை. [3]அகன்றன. [4]தூர்ந்தால், தூர்த்ததால். (சஅகூ)

உஎஅ.---கும்பகர்ணன் அம்புமதிலைக்கிட்டிக் கடக்கமுடியாது நிற்றல்.

மனத்தினுங் கடியதோர் [1]விசையின் வான்செல்வான்
இனக்கொடும் பகழியின் மதிலை யெய்தினன்
[2]நினைத்தவை [3]நீக்குத லருமை [4]யின்றெனச்
சினக்கொடுந் [5]திறலவன் றிரிந்து நோக்கினான்.

(இ - ள்.) மனத்தினும்விரைவுள்ளதானஓர் விசையோடு வான்வழியாய்ச் செல்பவனாய், சினத்துடன் கொடிய வலிமையையுடையவனாகிய கும்பகர்ணன்,—திரளாகவுள்ள கொடிய (இராம) பாணத்தினாலாகிய மதிலைக் கிட்டி, ஆராய்ந்து அவற்றை இப்போதுபோக்குதலருமை என்றுகருதித் திரும்பிப் பார்த்தான்; (எ - று.)

திரிந்துநோக்கியது - பகழிமதில் எவ்வாறுஉண்டாயிற் றென்பதை யுணர்தற்பொருட்டாகும். பி-ம்:---[1]விசும்பின். [2]நினைத்தனன். [3]நீங்குதல். [4]நின்றனன், நின்றனுச், நின்றெனச். [5]தொழிலவன். (சசுசு)

உஎகூ.---கும்பகர்ணன் இராமனைக் காணுதல்.

கண்டனன் வதனம்வாய் கண்கை [1]காலெனப்
புண்டரீ கத்தடம் [2]பூத்துப் பொற்சிலை
மண்டலந் தொடர்ந்து[3]மண் வயங்க வந்ததோர்
கொண்டலிற் பொலிதரு கோலத் தான்றனை.

(இ - ள்.) தாமரைத்தடாகம்போல முகம் வாய் கண் கை கால்என்று வழங்குமாறு (தாமரைமலர்கள் தன்னிடத்துப்) பூக்கப்பெற்று, அழகியவில்வட்டம் தொடரப்பட்டு, பூமியில்விளங்குமாறு வந்துள்ளதொரு மேகம்போல் விளங்குகின்ற அழகிய திருமேனியையுடையவனாகிய ஸ்ரீராமனைக் கண்டான்.

கண் கை கா லென்றுபேர்பெற்ற தாமரைகளைக்கொண்டு வில்வட்டத்தைப்பெற்ற காளமேகம் பூமியில்தோன்றுவதுபோல, இராமபிரான் தோன்றினனென்க: இல்பொருளுவமை. பி-ம்:—[1]காலினப். [2]பூத்தொர்வார், பூத்தபொற். [3]வான், மின், பின். (சசுஎ)

உஅ0.---கும்பகர்ணனதுகோடுமை.

[1]மடித்தவாய் [2]கொழும்புகை வழங்க மாறிதழ்
[3]துடித்தன [4]புருவங்கள் [5]சுறுக்கொண் டேறிடப்

[6]பொடித்ததீ நயனங்கள் பொறுக்க லாமையால்
இடித்தவான் றெழிப்பினு லிடிந்த குன்றெலாம்.

(இ - ள். (அப்போது கும்பகர்ணனுடைய) மடித்தவாயானது கொழு வியபுகையை வெளிப்படுத்த,மாறுபாட்டுடனே வாயிதழ்கள் துடித்தன;புருவங்கள் கோபக்குறிப்பைக்கொண்டு நெரிந்தேற,நயனங்கள்தீப்பொறியைவெளிக் கக்கின;(அவன்)கர்ச்சித்த பெரியகர்ச்சனையினுல்(அந்தஉக்கிரத்தைப்) பொறுக்கமாட்டாமல் குன்றுகளெல்லாம் இடிந்தன; (எ-று.)—பி---ம்:-[1]மடித்து,வடித்து.[2]கொடும்புகையைக்க.[3]துடித்தமார்.[4]புருவங்கண்.[5]சுறுட்.[6]பொடித்தன.

௨அ௪.—இதுமுதல்ஐந்துகவிகள் - ஒருதொடர்: கும்பகர்ணன் இராமனைநோக்கிக் கழறுவன.

* மாக்கவந் தனும்வலி தொலைந்த வாலியாம்
பூக்கவர்ந் துண்ணியும் போலு [1]மென்றெனைத்
தாக்கவந் தனை[2]யிவன் றன்னை யின்னுயிர்
காக்கவந் தனை[3]யிது காணத் தக்கதால்.

(இ - ள்.) பெரியகவந்தனும் வலியற்றவாலியாகிய பூவைப்பறித்துண்ணுந்தன்மையுள்ள குரங்கும் போலுவானென்றுகருதி இந்தச்சுக்கிரீவனுடைய இனியவுயிரைக்காக்குமாறுவந்து என்னைத் தாக்கவந்தாய்: இந்தஉன்செயல் காணத்தக்கது; (எ-று.)—இது காணத்தக்கதால்என்றது - உன்னால்இவனை மீட்கலாகாது: வல்லமையுடையா யாயின் மீட்பாயாக: பார்ப்போமென்ற வாறு.பி-ம்:—[1]இன்றெனைத்.[2]இனன்றனை.[3]எனக்கழறன்மேயினுன். (கஅ௯௯)

௨அ௫. உம்பியை முனிந்திலே னவனுக் கூர்தியாந்
[1]தும்பியை முனிந்திலேன் [2]றொடர்ந்த வாலிதன்
தம்பியை முனிந்திலேன் சமரந் தன்னில்யான்
அம்பியல் சிலையினுய் [3]புகழன் றாதலால்.

(இ-ள்.)அம்புபூட்டியவில்லையேந்தியவனே!போரில்,யான்,உன்தம்பியை முனிந்தேனில்லை; அவனுக்கு வாகனமாயமைந்த தும்பிபோன்றவனை அநுமானை முனிந்தேனில்லை;(என்னைத்) தொடர்ந்துவந்த வாலியின்தம்பியாகிய சுக்கிரீவனை முனிந்தேனில்லை; (இவற்றிற்குக்காரணம் என்னையெனின்),—(அவர்களைவெல்வது) புகழ்ச்சியன்றாகையால்; (எ-று.)—பி-ம்:---[1]நம்பியை. [2]தொடர்ந்து, தோற்ற, நயக்கும். [3]புகழின்றாதலால், அழகன்றாதலால்.(கூ௦௦)

௨அ௬. தேடினன் றிரிந்தன னின்னைத் [1]திக்கிறந்து
[2]ஓடிய துன்படை யும்பி [3]யோர்ந்தொரு
பாடுற [4]நடந்தன னனுமன் பாறினன்
ஈடுறு மிவனைக்கொ ணெடெளிதி னெய்தினேன்.

(இ - ள்.) உன்னைத்தேடித் திரிந்தேன்; உன்படை திக்கைக்கடந்து ஓடியது; உன்தம்பி(அதனை)அறிந்து ஒருபக்கமாகப்பொருந்த நடந்தான்: அநுமன் வலிகெட்டுவிட்டான்; வலியொடுங்கிய இவனைஎடுத்துக்கொண்டு எளிதாகச்

*நாஹம் விராதோ விஜ்ஞேயோ-நகபந்தஃ கரோநச | நவாலீ நசமாரீசஃ-கும்பகர்ணோஹ மாகதஃ ||

சென்றேன்; (எ-று.)—பி-ம்:—1திக்கறிந்து. 2ஓடினதுன், ஓடினவுன். 3நேர்ந்தொரு, ஓய்ந்தொரு. 4மறைந்தனன். (கருoக)

உஅச. காக்கிய வந்தனை யென்னிற் கண்டவென்
பாக்கியந் தந்தது நின்னைப் பன்முறை
ஆக்கிய செருவெலா மாக்கி 1யெம்முனைப்
2போக்குவன் மனத்துறு காதற் புன்கணோய்.

(இ - ள்.) (நீ இந்தச்சுக்கிரீவனைக்)காக்கும்பொருட்டு வந்தாயென்னின், (உன்னைக்) கண்ட என்பாக்கியம் நின்னைத் தந்தது (என்னவேண்டும்): (நான் முன்பு) பலமுறைசெய்துள்ள போரையெல்லாம் (இப்போது) செய்து எமது அண்ணனுடையமனத்திலே பொருந்தியகாதலாகிய வருத்தந்தரும் நோயைப் போக்குவேன்; (எ - று.)—யான் செருவையாக்கிப் பிறகு மனத்துறுகாதற் புன்கணோயோடு எம்முனைப் போக்குவேன் என்று ஒருஅமங்கலப்பொருள் தோன்றுமாறு பாடலமைந்துள்ளமை காண்க. பி-ம்:—1எம்முன்னை. 2நோக்குவன். (கருoஉ)

உஅரு. 1ஏதிவெந் திறலினோ யிமைப்பி லோர்2ரெதிர்
பேதுறு குரங்கையான் பிணித்த கைப்பிணி
3கோதை வெஞ்4சிலையினாற் கோடி வீடெனிற்
சீதையும் 5பெயர்ந்தனள் சிறைநின் றுமென்றான்.

(இ-ள்.) படைக்கலத்தாற்செய்யுங் கொடியதிறமைவாய்ந்தவனே! தேவர்கள்முன்னிலையிலே மனங்கலங்கியகுரங்கை[சுக்கிரீவனை]யான் பிணித்தகைப் பிணிப்பை நாணியோடுகூடிய கொடியஅம்பினால் விடுதலைசெய்வாயாயின், சீதையும் சிறையினின்று விடுபட்டவளாவள் என்றுகூறிமுடித்தான்; (எ-று.)

இந்தச்சுக்கிரீவனை என்கைப்பிணிப்பினின்று மீட்டுக்கொண்டுபோதற்கு நினக்குவல்லமையுள்ளதாயின், அப்போது நீ சீதையை மீட்டுச்செல்லவல்லமையுடையா யென்பது தேற்றமென்றவாறு. ஏதி=ஹேதி: வடசொல். பி-ம்:—1ஏதில்வெந்திறலினால். 2கண்முன். 3கோதில். 4சிலையினோய்கோள் விட்டேனெனில். 5போந்தனள். (கருoங)

உஅசு.—இராமபிரான் கூறிய சபதம்.

என்றலு முறுவலித் திராம னியானுடை
இன்றுணை யொருவனை யெடுத்த 1தோளெனுங்
2குன்றினை யரிந்தியான் குறைக்கி லேனெனிற்
3பின்றின னுனக்குவிற் பிடிக்கி லேனென்றான்.

(இ - ள்.) என்று (கும்பகர்ணன்) கூறியவுடனே, இராமன் புன்சிரிப்புச்செய்து, 'என்னுடையஇன்னுயிர்நண்பனை ஒருத்தனை [சுக்கிரீவனை]த் தூக்கிச்சென்ற தோளென்கிற குன்றை யரிந்துயான் வெட்டிவீழ்த்தாவிடின், உனக்குத்தோற்றவனாய் (ப் பிறகு) வில்லைப்பிடிப்பதில்லை' என்று சபதங் கூறினான்; (எ - று.)—பி-ம்:—1தோளிணைக், தோளினைக். 2குன்றினுமுயர்ந்தன, குன்றினுமுயரிய. 3பின்றுவன். (கருoச)

௨௮௭.—இராமபிரான் கும்பகர்ணன்மீது அம்புஏவுதல்.

மீட்டவன் [1]கரங்களால் விலங்க லாரையை
மூட்டற நீக்குவான் முயலும் வேலையில்
வாட்டலைப் [2]பிடர்த்தலை [3]வயங்கு வாளிகள்
[4]சேட்டக னெற்றியி னிரண்டு சேர்த்தினான்.

(இ - ள்.) அந்தக்கும்பகர்ணன் மீண்டு (தன்) கைகளால் குறுக்கேயமைந்த(அம்பு)மதிளைக்கட்டில்லாமல் நீக்கும்பொருட்டு முயல்கின்றசமயத்தில்,--- (ஸ்ரீராமன், தன்) பிடரியிடத்திலே [அம்பறாத்தூணியிலே] விளங்குகின்ற வாளின்தலைபோன்ற[கூரிய]அம்புகளிரண்டை உயர்ந்த பரந்த (அவனுடைய) நெற்றியிலே பிரயோகித்தான்; (எ - று.)—ஆரை - மதிள்.

[1]கரங்களால்விலங்கலானையேஎன்ற பாடத்துக்கு-(தன்) கைகளால்விலங்குசாதியினனாகியசுக்கிரீவனை, மூட்டுஅற - தடையில்லாமல், நீக்குவான் - அப்புறப்படுத்தும்பொருட்டு, கும்பகர்ணன் முயல்கையி லென்க. பிடர்த்தலை வயங்கு வாட்டலை வாளிகள்-முதுகில் அம்பறாத்தூணியிலுள்ள கூரியஅம்புகள். பி-ம்:---[1]சரங்களாம்விலங்கலாரையை, கரங்களாம்விலங்கலானையே, சரங்களாம்விலங்கலானை. [2]விடர்த்தலை. [3]வயங்க. [4]சேட்டகநெற்றியின். (௧௫௦௫)

௨௮௮.—இராமனம்பாலடிபட்ட கும்பகருணன்வருணனை.

[1]சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்தெழ
நெற்றியி னெடுங்கணை யொளிர நின்றவன்
முற்றிய [2]கதிரவன் [3]முளைக்கு முந்துவந்து
உற்[4]றெழு மருணன துதயம் போன்றனன்.

(இ-ள்.) (அம்புபட்டதனாலெழுந்து) சூழ்ந்த இரத்தத்தினாற்செவ்வானஞ் சுற்றிலுந் தோன்ற,நெற்றியிலேநீண்டகணைகள் விளங்கநின்ற கும்பகர்ணன்,-- நிரம்பிய [ஆயிரமாகிய] கதிர்களையுடையவனான சூரியன் தோன்றுதற்குமுன்னேவந்து பொருந்தியெழுகின்ற அருணனது உதயத்தை யொத்துத் தோன்றினான்; (எ - று.)

அருணனது உதயத்தையொத்துத் தோன்றினனென்று கூறினாராயினும் உதித்த அருணனையொத்துத் தோன்றின னெனக் கருத்துக்கொள்க. பி-ம்:—[1]செற்றிய. [2]வெய்யவன். [3]முளைக்கமுந்து, முளைப்பின்முன்பு. [4]எழு காலையின், எழுதுகிரியின். (௧௫௦௬)

௨௮௯.—சுக்கிரீவன் உணர்ச்சிபெறக் கும்பகர்ணன் மூர்ச்சையடைதல்.

குன்றின்வீ [1]ழருவியிற் குதித்துக் [2]கோத்திழி
புன்றலைக் குருதிநீர் முகத்தைப் போர்த்தலும்
இன்றுயி [3]லெழுந்தென வுணர்ச்சி யெய்தினான்
வன்றிற றேற்றிலான் மயக்க மெய்தினான்.

(இ-ள்.) குன்றினின்றுவீழ்கின்றஅருவிபோலப் புல்லியஇடத்தினின்று [கும்பகர்ணனதுநெற்றியிலிருந்து] குதித்துக்கொண்டு கோத்துஇழிகின்ற இரத்தநீர் (சுக்கிரீவனுடைய) முகத்தை நிறைத்தலும், இனிய துயிலி

னின்று எழுந்தாலொப்ப உணர்ச்சியை (அவன்) அடைந்தான்; (இதுவரை யில் தனது) வலியதிறல் தோற்கப்பெறாதவனான கும்பகருணன்,மயக்கத்தை யடைந்தான்; (எ - று.)

கும்பகர்ணனது நெற்றியினின்று பெருகியஇரத்தநீர் படவே,நீர்தெளிக் கப்பெற்றான்போலச் சுக்கிரீவன் மூர்ச்சைதெளிந்தானென்றவாறு. இச்செய்யு ளில் ஒருவன்துன்பமடைய, அதனால் மற்றொருவன் இன்பமடைதலாகிய உல கத்தன்மை கூறப்பட்டிருத்தல் காண்க. மூர்ச்சை கும்பகர்ணனையடைய, உணர்ச்சி சுக்கிரீவனையடைந்ததென்ற இதில், பரிவர்த்தனைப்படுகின்றமாற் றலணி தோன்றும். பி - ம்:—[1]அருவிபோற். [2]சோத்துழி. [3]உணர்ந்தென, எழுந்தன. (கருஎ)

உசுo.—உணர்வுபெற்ற சுக்கிரீவன் இராமபிரானைக் காணுதல்.

நெற்றியி [1]னின்றொளி நெடி[2]து மைப்பன
கொற்றவன் சரமெனக் குறிப்பி [3]னுன்னினான்
சுற்றுற [4]நோக்கினன் றொழுது [5]வாழ்த்தினான்
[6]முற்றிய பொருட்கெலா [7]முடிவு ளான்றனை.

(இ-ள்.) (கும்பகர்ணனுடைய) நெற்றியிலே யூன்றிநின்று மிகவும் ஒளி கொண்டு விளங்குவனவற்றைவெற்றிபொருந்தியஇராமனது சரமென்று(தன்) மனத்திற் கருதினவனாய், (சுக்கிரீவன்) சுற்றுறப்பார்த்து(உலகத்து)நிரம்பிய பொருட்கெல்லாம் முடிவாகஅடைதற்கு உரிய பரம்பொருளின் அமிசமான இராமபிரானைக் கண்டு தொழுதுவாழ்த்தினான்; (எ-று.)—பி-ம்:—[1]நின்றவை [2]இமைப்பதை. [3]எண்ணினான். [4]நோக்கினுந். [5]நோக்கினான். [6]முற்றுறு. [7]முடிவிலான்றனை. (கருஅ)

உசுக.—சுக்கிரீவன் கும்பகர்ணனது மூக்கையும் காதையும் கடித்து எடுத்துக்கொண்டு தம்மவரோடு சேர்தல்.

கண்டனனாயகன் றன்னைக் [1]கண்ணுறாத்
தண்டலின் மானமு நாணுந் தாங்கினான்
விண்டவ னாசியுஞ் செவியும் வேரொடுங்
கொண்டன னெழுந்துபோய்த் தமரைக் [2]கூடினான்.

(இ - ள்.) (சுக்கிரீவன்),—தலைவனாகிய இராமபிரானைப் பார்த்தான்: பார்த்து நீங்குதலில்லாத மானத்தையும் நாணத்தையும் தாங்கினவனாகி,பகை வனாகிய கும்பகர்ணனுடைய மூக்கையுஞ் செவியையும் வேரோடுங்கொண்டு எழுந்துபோய்த் தம்மவருடன் கூடினான்; (எ - று.)—மானம் - அகங்காரம். பகைவன்கைப்பட்டமையால், நாண் தோன்றியதென்க. விண்டவன் - பகை வன். இனி, விண்டு-(கடித்து) விள்ளச்செய்துஎனினுமாம். பி - ம்:—[1]கண்க ளால். [2]கூட்டினான். (கருசு)

உசுஉ.—வானரம்முதலியன மகிழ்ச்சியா லாரவாரித்தல்.

வானர மார்த்தன [1]மழையு மார்த்தன
தானர மகளிருந் [2]தமரு மார்த்தனர்

³மீனரல் வேலையும் ⁴வெற்பு மார்த்தன
வானவ ரோடுநின் றறமு ⁵மார்த்ததே.

(இ-ள்.) (சுக்கிரீவன் பகைவனது நாசியையும் செவியையும் வேரோடும் பறித்துக்கொண்டு எழுந்து தம்மிடம்வந்து சேர்ந்ததுகண்டு), வானரங்களெல்லாம் ஆரவாரித்தன; (லப்த)மேகங்களும் ஆரவாரித்தன: தேவமாதரும் தம்மவரும் ஆரவாரித்தனர்; மீன்கள்ஒலிக்கின்றகடலும் மலையும் ஆரவாரித்தன; வானவருடனே (ஒருசேரக்கூடி)நின்றுதருமதேவதையும் ஆரவாரித்தது: (எ-று.) —பி-ம்:—1மறையும். 2தவமுமார்த்தன, தவருமார்த்தனர். 3மீனலர், மீனர. 4விண்ணும். 5ஆர்த்தனே, ஆர்த்தவே. (௧௫௧௦)

௨௬௩.—இராமபிரான்மகிழ்ச்சி.

¹காந்திக லரக்கன்வெங் கரத்து னீங்கிய
ஏந்தலை யகமகிழ்ந் தெய்த நோக்கிய
வேந்தனுஞ் சானகி யிலங்கை வெஞ்சிறை
போந்தன ளாமெனப் பொருமி னீங்கினான்.

(இ - ள்.) கோபிக்குந்தன்மையுள்ள வலிமைபெற்ற அரக்கனாகிய கும்பகர்ணனுடைய கையிலிருந்து வெளிப்பட்ட தலைவனாகியசுக்கிரீவனை(க் கண்டு) மனம்மகிழ்வுற்று (அவனிடத்துள்ள அன்பினால் அவனை)முற்றவும் நோக்கிய இராமபிரானும், (தன்மனைவியாகிய) சானகிப்பிராட்டியார் இலங்கையிற் கொடியசிறையினின்று மீண்டுவந்துசேர்ந்தன ளென்னுமாறு துன்பம்நீங்கி மகிழ்வுற்றான்; (எ-று.)—இது, இராமபிரான் தன்னைச்சேர்ந்தோரிடத்துப் பேரன்புகொள்பவனென்பதைப் புலப்படுத்தும். அன்றியும், "குரங்கையான் பிணித்தகைப்பிணி,...சிலையினாற் கோடிவீடெனில், சீதையும் பெயர்ந்தனள் சிறை" என்று கும்பகர்ணன் கூறியதனாலும் இவ்வாறு இராமபிரான் கருத இடனுண்டு. பி-ம்:—1காந்திய. (௧௫௧௧)

௨௬௪.—கும்பகர்ணனுடைமூக்குச்செவிகளைச் சுக்கிரீவன்
கவர்ந்து சென்றதைப்பற்றிய கவிகூற்று.

மத்தகம் பிளந்து¹மா டுருவ வார்சிலை
வித்தகன் ²சரந்தொட மெலிவு ³தோன்றிய
சித்திரம் பெறுதலிற் செவியு மூக்குங்கொண்டு
⁴அத்திசை ⁵போயின ⁶னல்ல தொண்ணுமோ.

(இ - ள்.) நெற்றியைப்பிளந்து பக்கத்தில் உருவிச்செல்லுமாறு நீண்ட வில்லில் இராமபிரான் அம்புகளைத் தொடுத்துவிட்டதனால், (கும்பகர்ணன்) மெலிவையடைந்த அந்தத்தக்கசமயத்தைப்பெற்றதனால், (அவனுடைய)செவியையும் மூக்கையுங்கொண்டு (தமரிருந்த) அந்த இடத்தைப்போய்ச் சேர்ந்தான் (சுக்கிரீவன்: இவ்வாறு) தக்கசமயம் வாய்க்காவிட்டால் (சுக்கிரீவனால்) அந்தக்கும்பகர்ணனது செவிநாசிகளைப்பறித்துச் செல்வதென்பது) முடியுமோ? (எ-று.)—பி-ம்:—1பாயுதிரம்வாழ்ந்தெழ, வாயுதிரம்வாரவே. 2சிரந்தெற. 3தோன்றியச். 4அத்தலை, இத்திசை. 5பெயர்ந்தனன் 6அலாததேயுமோ. (௧௫௧௨)

உகூரு.—மூர்ச்சைதெளிந்த கும்பகர்ணன், தன்மூக்குச்செவிகளைக் கவியரசன்கொண்டு சென்றுவிட்டமையை யுணர்தல்.

*அக்கணத் தறிவுவந் தணுக வங்கைநின் று*
*உக்கனன் கவியர சென்னு முண்மையும்*
*மிக்குயர் [1]நாசியுஞ் செவியும் வேறிடம்*
*[2]புக்கது முணர்ந்தன னுதிரப் போர்வையான்.*

(இ-ள்.)அப்போது உதிரத்தாற்போர்க்கப்பட்டவனுன கும்பகர்ணன்,—அறிவுவந்து தோன்ற, கவிகட்குஅரசனுன சுக்கிரீவன் (தன்) அகங்கையினின்று அப்பாற்சென்றனனென்ற உண்மையையும், மிக்குஉயர்ந்த (தன்னுடைய) நாசியும் செவியும் வேறிடம் புக்கதையும் அறிந்தான்; (எ-று.)—பி-ம்:—[1]மூக்கொடு. [2]புக்கவும். (கருகூ)

உகூசு.—உதிரம்ஒழுகப்பெற்ற கும்பகர்ணனது வருணனை.

*[1]தாதுரா கத்தடங் [2]குன்றந் தாரைசால்*
*கூதிர்[3]கா னெடுமழை சொரியக் [4]கோத்திழி*
*ஊதையோ டருவிக ளுமிழ்வ [5]தொத்தனன்*
*மீதுறு குருதியா றொழுகு [6]மேனியான்.*

(இ - ள்.) மேலேபொருந்திய ஆறுபோன்ற குருதி ஒழுகப்பெற்ற உடம்பையுடையவனுன கும்பகர்ணன்,—காவிக்கற்களின் செந்நிறத்தைக்கொண்டபெரியமலையானது, தாரையாகமிக்க குளிர்ச்சியைவெளிப்படுத்துகின்ற பெருமழைபொழிய வெள்ளம்பொருந்தி இழிகின்ற அருவிகளை ஊதையோடும் உமிழ்வதை யொத்தனன்; (எ - று.)

பெருமூச்சுவெளிப்பட இரத்தம்பெருகப்பெற்ற கும்பகர்ணனுக்கு, ஊதையோடு அருவியிழியப்பெற்ற தாதுராகத் தடங்குன்றம் உவமையாம். தாது-இங்கே, காவிக்கல்: வடசொல். ராகம்-செந்நிறம். பி-ம்:—[1]சாதுராகத். [2]குன்றத். [3]வானெடு. [4]கோத்துழி. [5]ஒத்தன. [6]மேனியே. (கருகச)

உகூஎ.—கும்பகர்ணன் சினங்கொள்ளுதல்.

*எண்ணுடைத் [1]தன்மைய னினைய வெண்ணிலாப்*
*பெண்ணுடைத் தன்மைய தாய பீடையாற்*
*புண்ணுடைச் [2]செவியொடு மூக்கும் [3]பொன்றலாற்*
*கண்ணுடைச் [4]சுழிகளுங் குருதி [5]கால்வன.*

(இ-ள்.) ஆராய்தலைக்கொண்ட தன்மையுடையனுன கும்பகர்ணன், இவ்வாறுன நிலையினைஎண்ணுதலில்லாமல் (இராவணன்) பெண்ணைக்கவர்ந்துகொண்ட தன்மையதாகிய தவற்றினைச்செய்தமையால் (நேர்ந்தபோரிலே தனது) புண்ணையுடையசெவியுடனே மூக்கும் அழிதலால், (அக்கும்பகர்ணனுடைய) கண்ணுடை வட்டங்களும் குருதியைக் கால்வனவாயின; (எ-று.)

இராவணன் ஆராய்ச்சியின்றி ஒருபெண்ணைக் கவர்ந்ததனுற் போர்நிகழ, அப்போரில் கும்பகர்ணனுக்குச் செவியொடுநாசியும்இழக்கநேர்ந்தது; அதனை

கினையவே, இப்போது கும்பகர்ணனதுகண்களில் ரோஷத்தினற் குருதி வெளிப்படுவதாயிற்றென்பதாம். பி-ம்:—1தன்னிலையினைய, தன்மையவாய, தன்மையதாய. 2செவிநெடு. 3போனவாய்ப், போனவன். 4குழிகளும், துளை நெடுங். 5கான்றவே. (கடுகடு)

உகூஅ.—கும்பகர்ணன் அப்போது அடைந்தநிலை.

ஏசியுற் றெழும்விசும் பினவைப் பார்க்குந்தன்
நாசியைப் பார்க்குமுன் னடந்த 1நாளுடை
வாசியைப் பார்க்கு2மிம் மண்ணைப் பார்க்குமாற்
சீசி3யுற் றதுவெனத் தீயு 4நெஞ்சினன்.

(இ-ள்.) (தனக்கு) நேர்ந்ததைக்குறித்து சீசீ என்றுசொல்லித் தீகின்ற நெஞ்சையுடையவனை கும்பகர்ணன்,—ஏசிக்கொண்டுஎழுகின்ற வானவரைப் பார்ப்பான்; தன்நாசியைப் பார்ப்பான்; கீழ்நடந்தநாளின்வாசியைப் பார்ப்பான்; இந்தப்பூமியைப்பார்ப்பான்; (எ-று.)—பூமியைப்பார்த்தல், நாணக்குறி. பி-ம்:—1நாளுடை. 2பின். 3உற்றுளதெனத். 4சிந்தையான். (கடுகசு)

உகூகூ.—போருமாறு கும்பகர்ணன் கேடகமும் வாளுங் கொள்ளுதல்.

என்முகங் காண்பதன் முன்ன 1மியானவன்
தன்முகங் 2காண்பது சரதந் 3தானெனப்
பொன்முகங் காண்பதோர் தோலும் போரிடை
வன்முகங் காண்பதோர் வாளும் வாங்கினன்.

(இ-ள்.) என்னுடையமுகத்தை (இராமன்) காண்பதற்குமுன்பே யான் அந்தஇராமனதுமுகத்தை (இவ்வாறுக) [நாசியுஞ்செவியும்அற்றதாகக்] காண்பது நலமென்று கருதி, பொன்மயமானமுகத்தைக்கொண்டதொரு கேடகத்தையும், போரில்வலியமுகத்தைக்கொண்டு பொருவதான ஒருவாளையும் எடுத்துக்கொண்டான்; (எ - று.)—வாங்கினன்என்பதற்கு - பேய்கள்சுமந்து கொண்டுவர அவைகளிடத்தினின்று வாங்கிக்கொண்டான் என்று பொருள் கூறுவதுமுண்டு. சரதம் = வரலம்: இதுவும் அடுத்தபாடலும் பலபிரதிகளில் இல்லை. பி-ம்:—1யானிவன். 2காண்பதே. 3நன்றெனப். (கடுகஎ)

௩௦௦.—இனி, கும்பகர்ணன்செய்யும் ஆர்ப்பாட்டங்கள் ஏழுகவிகளிற் கூறப்படுகின்றன.

வீசினன் கேடகம் விசும்பின் மீனெலாம்
கூசின வமரரும் குடர்கு ழம்பினர்
காய்சின வரக்கனுங் 1கனன்ற போதவன்
நாசியுஞ் செவியும்வெங் குருதி நான்றவே.

(இ - ள்.) கேடகத்தை(க் கும்பகர்ணன்) தூக்கியெறிந்தான்; வானத்திலுள்ள நட்சத்திரங்களெல்லாம் (அதன்ஒளியைக்கண்டு) கூச்சமடைந்தன; தேவர்களும் குடற்குழப்பங் கொண்டார்கள்; கோபிக்குஞ்சினத்தை இயற்கையாகவேகொண்ட கும்பகர்ணன் கோபத்தைமிகுதியாகக்கொண்டபோது அந்

தக்கும்பகர்ணனுடைய மூக்குஞ்செவியும் இரத்தத்தைவெளிக்கக்கின;(எ-று.) —கோபித்ததனல் இரத்தம்பொங்கி அறுபட்ட நாசிசெவித்தொளைகள்வழியாக வழிந்தனவென்க. பி-ம்:—[1]கன்னற். (கருகஅ)

ரு0க. ஆயிரம் பேய்சுமந் தளித்த தாங்கொரு
மாயிருங் கேடக [1]மிடத்து வாங்கினன்
பேயிரண் டாயிரஞ் சுமந்து பேர்வதோர்
[2]காயொளி வயிரவாட் பிடித்த கையினன்.

(இ - ள்.) இரண்டாயிரம்பேய்கள் சுமந்துசெல்வதாகிய எரிக்கும்ஒளியையுடைய வயிரவாளைப்பிடித்த கையையுடையவனாகிய கும்பகர்ணன்,—ஆயிரம்பேய்சுமந்து ஆங்குவந்துகொடுத்ததாகிய ஒருமிகப்பெரிய கேடகத்தை இடப்புறத்தால் வாங்கினன்; (எ-று.)—பி-ம்: —[1]எடுத்து. [2]காயெரி. (கருகக)

ரு0உ. விதிர்த்தனன் வீசினன் விசும்பின் மீனெலாம்
உதிர்த்தன னுலகினை யனந்த னுச்சியோடு
அதிர்த்தன னார்த்தன னாயி ரம்பெருங்
கதிர்த்தலஞ் சூழ்வட வரையின் காட்சியான்.

(இ - ள்.) ஆயிரமென்கிற மிக்ககிரணங்களைக்கொண்ட சூரியமண்டலம் சுற்றிவருகின்ற மேருமலையென்னத்தக்க தோற்றத்தையுடையவனான கும்பகர்ணன்,—(கேடகத்தை)அசைத்து(மேல்)வீசி வானத்திலுள்ள மீன்களையெல்லாம் உதிர்த்தான்; (அன்றியும்), ஆதிசேஷனுடையஉச்சியுடனே இவ்வுலகினை அதிரச்செய்தான்; ஆரவாரஞ் செய்தான்; (எ - று.) (கருஉ0)

ரு0ங. [1]வீசின கேடக முகத்து வீங்குகால்
கூசின குரக்குவெங் குழுவைக் கொண்டெழுந்து
ஆசைக டோறும்விட் டெறிய [2]வார்த்தெழும்
ஓசை[3]யொண் கடலையுந் திடர்செய் தோடுமால்.

(இ - ள்.) வீசியெறிந்த கேடகத்தின்முகத்திலிருந்து மிக்குத்தோன்றிய காற்றானது, அச்சங்கொண்டகுரங்குகளின் கொடியகூட்டத்தைக் கொண்டு சென்று திக்குகள்தோறும்விட்டுஎறிய, (அவைகள்), ஆர்த்தெழுகின்ற ஓசையைக் கொண்ட ஒள்ளியகடலையும் திட்டாகச்செய்தவண்ணம்ஓடுவனவாயின.

கேடகத்தினின்று தோன்றியகாற்று வானரக்குழுக்களைத் தூக்கிக்கொண்டு கடலிடையே யோடச்செய்ய, அவ்வானரக்குழுக்களால் கடல் திட்டாயிற் றென்க. பி-ம்:—[1]வீசினன், வீசிய. [2]ஆர்த்தெழுந்து. [3]வெங். (கருஉக)

ரு0ச. போயின கேடகம் போக நோக்கினன்
ஆயிரம் பெயரவ னறியு முன்பவன்
பேயிரண் டாயிரம் பேணுங் கேடகம்
ஏயெனு மளவினி லெய்தச் சென்றதால்.

(இ - ள்.) ஆயிரந்திருநாமங்களையுடையவனான அந்தஸ்ரீராமன், (பிறர்) அறிவதற்குமுன்பு,(வானத்திற்)சென்ற கேடகத்தை(த் தன்விற்றொழிலால்)

போகச்செய்தான்: இரண்டாயிரம்பேய்கள் பேணிக்கொணர்ந்த (மற்றொரு) கேடகமானது எயென்னுமாத்திரத்திற்குள் (அவ்வரக்கனை) அணுகவந்தது; (எ - று.)—இச்செய்யுள் பலபிரதிகளி லில்லை. (கருஉஉ)

௯௦௩. தோலிடைத் தூரக்கவுந் [1]துகைக்க வுஞ்சுடர்
வேலுடைக் கூற்றினுற் [2]றுணிய வீசவுங்
[3]காலுடைக் கடலெனச் சிந்திக் [4]கைகெட
வாலுடை நெடும்படை யிரிந்து மாய்ந்ததால்.

(இ - ள்.) கேடகத்தை இடையே செலுத்தலாலும், (தன்காலினால்) துகைத்தலினாலும், சுடரையுடையவேலின்வடிவத்தைக்கொண்ட யமனால் துண்டுபடவீசுவதனாலும், சண்டமாருதத்தினால் உடைதலைக்கொண்ட கடலைப்போல, வாலையுடைய மிக்ககுரங்குச்சேனை, சிதறி(த் தம்)செயலற நிலைகெட்டு ஒழிந்தது; (எ - று.) —ஆல் - அசை. பி-ம்:—[1]துதைந்தவெஞ். [2]வீச வீசவும். [3]காலிடைக். [4]கைக்கெடா. (கருஉ௩)

௯௦௪. ஏறுபட் டது[1]மிடை யெதிர்ந் துளாரெலாங்
கூறுபட் டதுங்கொழுங் குருதி [2]கோத்திழிந்
தாறுபட் டதுநில மனந்த [3]னுச்சியுஞ்
சேறுபட் டதுமொரு கணத்திற் [4]றீர்ந்தவால்.

(இ-ள்.) (ஆயுதம்)வீசப்படுதலைப்பொருந்தியதும், (அதனால்)போர்க்களத்திலெதிர்ந்துள்ளவரெல்லாம் துண்டந்துண்டமாகியதும், மிக்கஇரத்தம்(வெள்ளமாகக்)கோத்துக்கொண்டு பெருகி ஆறுதோன்றியதும் நிலத்துடனுள்ள அனந்தனுச்சி சேறுபட்டதும் ஒருகணப்போதில் முடிந்தன; (எ - று.)—உச்சியும், உம்மை - உயர்வுசிறப்பு. பட்டதும், உம்மை - எண்ணுப்பொருளன. ஏறுதல் - வடுப்படுதல்: அதற்குக் கருவி யாதலால், படைக்கலம் 'ஏறு' எனப் பட்டதுஎன்றலுமாம். பி-ம்:—[1]மிடைந்து. [2]கோத்தெழுந்து. [3]உச்சியில். [4]தீர்ந்ததால். (கருஉ௪)

௯௦௫.—அப்போது சாம்பவான் இராமபிரானிடம் கும்பகர்ணனை உபேட்சிக்கலாகாதெனல்.

[1]இடுக்கிலை [2]யெதிரினி யிவனை யிவ்வழித்
தடுக்கிலை யாமெனிற் குரங்கின் றானையை
யொடுக்கினை [3]யரக்கனை யுயர்த்தி னாயென
முடுக்கின னிராமனைச் சாம்பன் [4]முன்பினான்.

(இ - ள்.) 'இனி (இதற்குச்) சமானமான இக்கட்டானசமயம்,(உண்டாகப்போவது) இல்லை; இப்போது இவனைத் தடுக்காமற்போவாயானால், குரங்கின்சேனையை ஒடுக்கினவனாய்,அரக்கனை வலிகொள்ளும்படிசெய்தவனாவாய்' என்றுசொல்லி, இராமபிரானை வலிமையுள்ளவனாகிய சாம்பன் (போரத்) தூண்டினான்; (எ-று.)--பி-ம்:---[1]இடுக்கினி. [2]எதிரிலை, எதிரினீ. [3]அரக்கரை. [4]முன்னியே. (கருஉ௫)

௩0அ.—இராமபிரான் கும்பகர்ணனுக்ஙாவிடத்தை யணுகநடத்தல்.

அண்ண லுந் தானையி னழிவு மாங்கவன்
திண்ணெடுங் கொற்றமும் வலியுஞ் சிந்தியா
நண்ணின னடந்தெதிர் நமனை யின்றிவன்
[1]கண்ணிடை நிறுத்துவ னென்னுங் [2]கற்பினன்.

(இ-ள்.) பெருமையிற்சிறந்தவனாகிய இராமபிரானும்,-(வானரச்)சேனையினழிவையும், அப்போது அந்தக்கும்பகர்ணனுக்குஉண்டான உறுதியான மிக்ககொற்றத்தையும் வலிமையையும் சிந்தித்து, '(இதுவரையில் அச்சத்தினால் மறைந்துநின்ற)யமனை இன்றைக்கு இவனுடையகண்ணுக்கு எதிரேநிறுத்துவேன்' என்ற கருத்தைக் கொண்டவனாய்,(அந்தக்கும்பகர்ணனுக்கு) எதிராக நடந்து கிட்டினான்; (எ - று.)—இது "ஆறினோடு" என்ற அடுத்தபாடலுக்குப் பின் சிலபிரதிகளி லுள்ளது. பி-ம்:—[1]கண்ணெதிர். [2]கற்பினால், காட்சியால்.

௩0௯.—இனி, ஐந்துகவிகள் இராமகும்பகர்ணர்களின் போரைத் தெரிவிக்கும்.

ஆறினோ [1]டேழுகோ லசனி யேறென
ஈறிலா விசையன விராம னெய்தனன்
பாறுகு சிறையென விசும்பிற் பாறிட
நூறினன் வாளினா லுணங்கு [2]கல்வியான்.

(இ - ள்.) பதின்மூன்றுபாணங்கள் பேரிடிபோலஎல்லையில்லாத வேகமுடையவற்றை இராமன் எய்தான்;நுட்பமான(போர்க்)கல்வியை யுணர்ந்தவனான கும்பகர்ணன், பருந்துஉகுக்கின்ற இறகுசட்டைபோல ஆகாயத்திற் சிதறிடும்படி (அவற்றைத் தன்) வாளினாற் பொடியாக்கினான்; (எ - று.)—[1]ஆறு. [2]கேள்வியான். (கருஉஎ)

௩௧0.ஆடவர்க் கரசனுந் [1]தொடர வவ்வழிக்
கோடையிற் கதிரெனக் கொடிய கூர்ங்கணை
[2]ஈடுறத் துரந்தன னவையு மிற்றுகக்
கேடகப் புறத்தினாற் கிழியச் [3]சிந்தினான்.

(இ-ள்.) புருஷோத்தமனாகிய ஸ்ரீராமனும், தொடர்ச்சியாக அப்போது கோடைக்காலத்துச்சூரியன்போற் கொடிய கூரியகணைகளை வலிமைபொருந்தச் செலுத்தினான்; அவைகளும் முறிபட்டுவிழவும் கிழியவும் கேடகத்தின் பின்புறத்தினால் (கும்பகர்ணன்), சிந்தச்செய்தான்; (எ - று.)—[1]சிந்தினான் = சிந்துவித்தான். பி-ம்:—[1]அணுகி. [2]ஊடுற. [3]வீசினான். (கருஉஅ)

௩௧௧.சிறுத்ததோர் முறுவலுந் தெரியச் செங்கணான்
[1]மறித்தொரு வடிக்கணை [2]தொடுக்க [3]மற்றவன்
ஒறுத்தொளிர் வாளொடு முரவு நாகத்தை
[4]அறுத்தது கலுழனி னமரா [5]ரார்க்கவே.

(இ - ள்.) சிறியதாகிய ஒப்பற்ற சிரிப்புந்தோன்ற, செந்தாமரைக் கண்ணனாகிய இராமன், மீண்டு ஒருகூரியகணையைப் பிரயோகிக்க, (அது) அந்

தக்கும்பகர்ணனுடைய வெட்டி விளங்குகின்ற வாளென்கிற வலியநாகத்தை அமரர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரஞ்செய்யக் கருடனைப்போல் அறுத்து வீழ்த்தியது; (எ - று.)—மற்று-அசை. சிறுத்ததுஎன்று அடைமொழிவந்ததனால்,முறுவல்சிரிப்பையே காட்டிற்று. முறுவலும்என்றஉம்மை சினமேயன்றி என்றபொருளைக் காட்டும். பி-ம்:—1மறுத்து. 2தொடுத்து. 3மற்றதவ். 4அறுத்ததக். 5ஆர்த்தெழ. பார்க்கவே. (௯௫௨௯)

௩௧௨. அற்றது தடக்கைவா ளற்ற தில்லென
மற்றொரு வயிர1வாள் கடிதின் வாங்கினான்
முற்றினன் முற்றின 2னென்று முன்புவந்து
உற்றன னூழித்தீ யவிய வூதுவான்.

(இ-ள்.) ஊழித்தீயவியும்படி பெருமூச்சுவிடுபவனாகிய அந்தக் கும்பகர்ணன்,--பெரியகையிற்பிடித்த வாள் அறுப்புண்டதானது அற்றதில்லையென்று (கண்டவர்) கருதும்படி மற்றொருவயிரவாளைக் கடிதாகக்கையிற்கொண்டு, (யாவரையும்) முடித்துவிட்டேன்முடித்துவிட்டேனென்று சொல்லியவண்ணம் முன்னேவந்துநின்றான்; (எ - று.)--பி-ம்:---1வாட். 2என்ன. (௯௫௩௦)

௩௧௩. 1அந்நெடு வாளையுந் துணித்த வாண்டகை
பொன்னெடுங் கேடகம் புரட்டிப் போர்த்ததோர்
நன்னெடுங் கவசத்து நாம வெங்கணை
2மின்னொடு நிகர்ப்பன பலவும் வீசினான்.

(இ - ள்.) அந்தப்பெரியவாளையும் (தன்னம்புகளால்) துண்டித்த ஆண்மைக்குணமுள்ளவனாகிய ஸ்ரீராமன்,—(அவனுடைய) பொன்னெடுங்கேடகத்தையும் வீழ்த்தி,(அவனுடலைப்)போர்த்துக்கொண்டிருந்ததொரு நல்ல நெடிய கவசத்திலே அச்சத்தைவிளைக்கவல்லனவும் மின்னலையொப்பனவும் [மிகவிளங்குவனவும்] ஆன கொடியஅம்புகள் பலவற்றையும் சிந்தினான்; (எ-று.)— பி-ம்:—1 அன்னெடு. 2மின்னெனமிளிர்வன. (௯௫௩௧)

௩௧௪.—அப்போது இராவணன் அனுப்பிய சேனை வந்துசேர்தல்.

அந்தர மன்னது நிகழு 1மவ்வழி
இந்திரன் றமரொடு மிரிய 2வெய்திடச்
3சிந்துவுந் தன்னிலை 4குலையச் சேணுற
வந்தது தசமுகன் விடுத்த மாப்படை.

(இ - ள்.) அப்படிப்பட்டகேடு நிகழ்கின்ற அச்சமயத்தில், தேவேந்திரனும் தம்மவரொடு நிலைகெட்டோடவும், கடலும் தன்னிலைகுலைந்துபோகவும் தசமுகன் அனுப்பிய பெருஞ்சேனை வெகுதூரத்தினின்று (நெருங்க)வந்தது.

சேணுற-வானத்திலுற என்பாருமுளர். பி-ம்:—1அவ்வயின், வேலையில். 2போயிட. 3சிந்துரம். 4நாணச்சேணுற, நாணச்சீறியே. (௯௫௩௨)

௩௧௫.--சமயத்துச்சேனைவந்ததன் வருணனை.

1வில்வினை யொருவனு மிவனை 2வீட்டுதற்கு
ஒல்வினை யிதுவெனக் கருதி யூன்றினான்

[3]வல்வினை [4]தீயென [5]வந்த போதொரு
நல்வினை யொத்தது நடந்த தானையே.

(இ-ள்.) விற்றொழிலில் ஒப்பற்றவனான இராமபிரானும்,—இந்தக்கும்ப கர்ணனைக் கொல்லுதற்கு ஏற்றதொழில்செய்தற்குத் தக்ககாலம் இதுஎன்று மனத்திலாழ்ந்து கருதினான்;(அப்போது)நடந்துசேர்ந்ததானையானது,—வலிய தீவினை தீப்போல (ஒழிக்க)வந்தபோது (அதனைத் தடுக்கத்தக்க தீரென்று சொல்லுதற்குஏற்ப வந்த) நல்வினையையொத்தது; (எ - று.)—பி-ம்:—[1]வில் வினை. [2]வீடுதற்கு. [3]பல்வினை. [4]தீயன. [5]பரந்த. (கருஙுங)

ருகசு.—வந்தசேனை கும்பகர்ணனைத் திரண்டுநோக்க, இராமபிரான் அவற்றைப் போர்க்குக் கடிதுவருகவெனல்.

கோத்தது புடைதொறுங் குதிரை தேரொடாள்
[1]பூத்திழி மதமலை மிடைந்த போர்ப்படை
காத்தது [2]கருணனைக் [3]கண்டு மாயமாக்
[4]கூத்தனும் வருகெனக் கடிது [5]கூவினான்.

(இ - ள்.) குதிரையும், தேரும், ஆளும், தோன்றிப்பெருகுகின்ற மதநீரைக்கொண்ட மலைபோன்றயானையும் ஆகிய நெருங்கிய போர்செய்யவல்ல (சதுரங்க)சேனையும்,பக்கங்களிலெல்லாம் திரண்டதாகிக் கும்பகர்ணனைக் காக்கத்தொடங்கிற்று;(அது)கண்டு மாயக்கூத்தனான திருமாலின் அவதாரமானஸ்ரீ ராமனும் கடிதுவருகஎன்று(அப்படையை) அழைத்தான்; (எ-று.)—மதமலை- அடையடுத்தஉவமவாகுபெயர். பி-ம்:—[1]போர்த்தொழில். [2]கன்னனை, கண்ணனை. [3]கண்ட. [4]கூற்றினும். [5]கூடினான், கூறினான். (கருஙுச)

ருகஎ.—வந்தசேனையை இராமபிரான் எதிர்த்துநிற்றல்.

சூழிவெங் கடகரி புரவி தூண்டு [1]மால்
[2]ஆழியந் தேரொடு மிடைந்த வார்கலி
ஏழிரு கோடிவந் தெய்திற் றென்பரால்
ஊழியி னொருவனு மெதிர்சென் றூன்றினான்.

(இ - ள்.) முகபடாத்தையணிந்த விரும்பத்தக்க மதநீரொழுகப்பெற்ற யானையும் குதிரையும் தூண்டப்படுகின்ற பெரிய சக்கரத்தைக்கொண்ட அழகியதேருடனே நெருங்கிய பதினான்குகோடிசமுத்திரஞ் சேனை வந்துசேர்ந்தது; ஊழிக்காலத்திலும் அழியாதுநிற்பவனாகிய திருமாலினமிசமான ஸ்ரீராமனும்,எதிரேபோய் எதிர்த்துநின்றான்;(எ-று)—ஆர்கலி-சமுத்திரமென்பதன் பரியாயம்.சமுத்திரம்-பேரெண். இனி, சமுத்திரம்போன்ற பதினான்குகோடி சேனையுமாம். கோடிஎய்திற்று - ஒருமைப்பன்மைமயக்கம். பி-ம்:—[1]தேர். [2]ஆழியபெரும்படை, ஆழிவெம்பெரும்படை. (கருஙுரு)

ருகஅ.—கும்பகர்ணன் சூலப்படைகொண்டு போரவருதல்.

காலமுங் காலனுங் கணக்கி றீமையும்
[1]மூலமுன் றிலையென வகுத்து முற்றிய
ஞாலமு [2]நாகமும் விசும்பு நக்குறுஞ்
சூலமொன் றரக்கனும் [3]வாங்கித் தோன்றினான்.

(இ-ள்.) (ஆயுட்)காலவெல்லையும் யமனும் கணக்கில்லாததீமையும் என்ற இந்தமூலகாரணம் மூன்று இலையாகஅமைக்கப்பெற்று(ப் படையுருவம்)முற்றியுள்ளதும், மண்ணுலகம் பாதாளம் விசும்புஎன்ற மூன்றையும்அழிக்கவல்லதுமான சூலமொன்றை அரக்கனும் கையிற்கொண்டு தோன்றினன்; (எ - று.)

எதிர்ப்பவர்களைச்சித்திரவதைசெய்து அவர்களின் ஆயுட்காலத்தை யமனுதவியாற்போக்குவது சூலமென்பது,முன்னிரண்டடிகளாற்கூறிய விசேஷணத்தின் கருத்து. சூலத்திற்குள்ளமூவிலைகள் காலம்முதலியனபோலுமெனவருணித்தார்: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]மூலமுமிணை, மூலமுமிலை. [2]நாகரும். [3]ஏந்தி. (௩௫௩௬)

வேறு.

௩.௧௬.-இராமபிரானுடைய அம்புகளினல் சேனைகள்மாண்டொழிந்தமை ஆறு கவிகளாற் கூறப்படுகின்றது.

[1]அரங்கி டந்தன வறுகுறை நடிப்பன வல்லவென் றிமையோரும்
மரங்கி டந்தன மலைக்குவை [2]கிடந்தன வாமென மாறுடிக்
[3]கரங்கி டந்தன காத்திரங் கிடந்தன கறைபடும் படிகவ்விச்
சிரங்கி டந்தன கண்டனர் கண்டில [4]ருயிர்கொடு திரிவாரை.

(இ - ள்) இமையவரும்,—போர்க்களத்திலே '(இராமபாணத்தால்)அறுத்துவீழ்த்தப்பட்டனவான (தலை)யற்றஉடற்குறைகள் நடிப்பனவல்ல' என்றும் 'மரத்துண்டங்கள் கிடந்தன: (அன்றி) மலைக்குவியல்கள் கிடந்தனவாம்' என்றும் மாறுடிக்(கூறுமாறு)கரங்களோடுகூடியனவான (வீரரின்) உடல்கள் கிடந்தனவற்றையும், (இரத்தக்)கறைபடும்படி (மண்ணைக்) கவ்விக்கொண்டு (அவர்களின்) சிரங்கள் கிடந்தவற்றையும் காணலாயினர்: உயிர்கொடுதிரிபவரைக் காணமாட்டாதவராயினர்; (எ - று.)

இராமசரத்தால் எதிர்ந்தார் தலையறுப்புண்ண,நடிப்பனவான அவ்வுடல்கள் 'அறுபட்ட அடிமரமோ? அல்லது மலைக்குவியலோ?' என்று தேவர்களும் மருளும்படி ஒருபுறம்இருக்க,அவர்களுடையசிரங்களும் மண்ணைக்கவ்விக்கொண்டு உதிரக்கறையுடன்இருந்தனவென்றவாறு. கரங்கிடந்தனஎன்றஇடத்திலுள்ள கிடந்தனஎன்பது காத்திரத்திற்கு அடைமொழி.இனி,கரங் கிடந்தன-கரங்கிடந்தவற்றையும்என உரைப்பாருமுளர்.அரங்கு-போர்க்களம்.இடத்தல்-அறுத்துவீழ்த்தப்படுதல். பி - ம்:—[1]அரங்கிடஞ்செகம், அரங்கிடஞ்செய. [2]கிடந்தென். [3]கரந்திடந்தன. [4]உயிரொடுங். (௩௫௩௭)

௩.௨௦. இற்ற வல்லவு மீர்ப்புண்ட வல்லவு [1]மிடையிடை முறிந்தெங்குந், துற்ற வல்லவுந் [2]துணிபட்ட வல்லவுஞ் சுடுபொறித் தொகை தூவி, வெற்ற வெம்பொடி யாயின வல்லவும் வேறொன்று நூறுகி, [3]அற்ற வல்லவுங் கண்டிலர் படைக்கல மடுகளந் திட[4]ராக.

(இ-ள்.) கொல்லுகின்ற போர்க்களம் மேடாகுமாறு, முறிந்துபோயின வல்லாதனவும், (இரத்தப்பெருக்கால்) இழுத்துக்கொண்டுபோகப்பட்டன வல்லாதனவும், இடையிடையே முறிந்து எல்லாவிடங்களையும் தூர்த்தன வல்லாதனவும், துண்டுபட்டனவல்லாதனவும், சுடுகின்றதீப்பொறித்திரளைச் சிந்தியவண்ணம் வெறுமையாகவெவ்வியபொடியாகிப் போயினவல்லாதன

வும், வெவ்வேருன நூறுதுண்டுகளாகி அற்றுப்போயினவல்லாதனவுமான படைக்கலங்களை, (எவரும்), காணமாட்டாதவராயினர்; (எ - று.)

இறுதல்முதலியனஅடைந்த அரக்கர்படைக்கலங்களால் அந்த அமர்க்களம் பெருமேடாயிற் றென்றவாறு. அரக்கவீரர்களின்படைக்கலங்கள் இறுதல்முதலியவற்றுள் ஏதேனும்ஒருநிலையையடையாது செவ்வனேயிருப்பது எதுவும்காணப்படவில்லை யென்க. பி - ம்:—1இடைமுறிந்தெங்கெங்கும். 2துணிபடவல்லவும். 3இற்ற. 4ஆகி. (கரு௩அ)

௩உக. படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன பகழிகள் 1பாகரைப் பறிந்தோடிக், குடைந்து வையகம் புக்குறத் 2தேக்கிய 3குருதியாற் குடர்சோரத், 4தொடர்ந்து நோயொடுந் துணை5மருப் பிழந்துதங் காத்திரந் துணியாகிக், கிடந்த 6வல்லது 7நடந்தன கண்டிலர் கிளர் 8மதக் கரியெங்கும்.

(இ - ள்.) பரவிய (தமது) கும்பத்தலத்திலே பாய்ந்தனவான (இராம) பாணங்கள் குடைதலினாலே, பாகரைக் கைகடந்துஓடி, பூமியிலேமிகுதியாகப்புகுந்து தேங்குமாறுபெருகிய இரத்தத்தினுற் குடல்சோர மரணநோயோடும் தொடரப்பெற்று, இரட்டைத்தந்தங்களையும்இழந்து, தமதுஉடலும் துண்டுபட்டுக்கிடந்தனவேயல்லாமல்(உயிருடன் இனிது) நடந்தனவான மிக்க மதநீரொழுகப்பெற்ற மலைபோன்ற யானைகளை எங்குங் கண்டிலர்; (எ - று.)

இதனால், யானைகள் பட்டமையைக் கூறினர். கும்பம் - யானையின்தலைமீது இரண்டுபானைபோன்றிருக்கும் உறுப்பு. பி-ம்:—1பரந்தது, அபரத்தைப், பாதத்தைப், பாகத்தைப், பானத்தைப். 2தாக்கிய. 3குருதிய, குருதிகள். 4தொடர்ந்தகையொடும். 5மருப்பினொடும். 6அல்லவும். 7நடந்தது. 8மதகரியெங்கும், மதக்கிரியெல்லாம், மதகிரியெல்லாம். (கரு௩௯)

௩உஉ. வீழ்ந்த 1வாயின 2விளிவுற்ற பதாகைய வெயிலுமிழ் மூயிலம்பு, போழ்ந்த 3பன்னெடும் 4புரவிய முறைமுறை யச்சொடும் 5பொறியற்றுத், தாழ்ந்த வெண்ணிணந் தயங்கு6வெங் குழம்பிடைத் 7தலைத்தலை மாருடி, 8ஆழ்ந்த வல்லது 9பெயர்ந்தன கண்டில 10ரதிர்குரன் மணித்தேர்கள்.

(இ - ள்.) அதிர்கின்றஓசையையுடைய மணித்தேர்கள்,—வீழ்ந்தவாய்ப்புறத்தையுடையனவும், அழிவுற்ற பெருங்கொடிகளையுடையனவும், ஒளியை வெளியிடுகின்ற கூரிய அம்புகளாற் பிளக்கப்பட்ட பலநீண்ட குதிரைகளையுடையனவுமாய், முறைமுறையே அச்சுடனே இயந்திரமும்அற்று, இழிவான வெண்ணிணத்துடனேவிளங்குகின்றவெவ்விய(இரத்தக்)குழம்பினிடையிலே ஆங்காங்கு மாருடி ஆழ்ந்தனவல்லது (நல்லநிலைமையுடனே) பெயர்ந்தனவற்றைக் கண்டிலர்; (எ-று.)—தேர்களழிந்தமை கூறப்பட்டது. பி-ம்:—1வானின, வாளன, வாழிய, வாலன. 2விரைவுற்றபதாகைய, விளிவுறப்பாகரை, விரைவுற்றபாகரை, விரைவுறப்பாகரை, விரைவுறப்பாகர்மேல். 3புல்லிடும், புண்ணெடும். 4புரவியை, புரவியும். 5பொறியாகத். 6செங். 7தலைதடுமாருடி. 8ஆழ்ந்தது. 9பேர்ந்தன, பேர்ந்தது. 10அணிநெடுந்தேரெல்லாம். (கரு௪௦)

கூ௨௩. ஆட [1]றிர்ந்தன வளைகழுத் தற்றன வதிர்பெருங் [2]குர
னீத்த, தாடுணிந்தன தறுகண்வெங் கரிநிரை தாங்கிய பிணத்தோங்
கற், கோட மைந்தவெங் குருதி[3]நீ ராறுகள் சுழிதொறுங் [4]கொணர்
ந்துந்தி, யோட லன்றிநின் றுகள்வன கண்டில [5]ருருகெழு பரியெல்
லாம்.

(இ - ள்.) அழகுவிளங்குகின்ற குதிரைகளெல்லாம்,—வலிமைதீர்ந்தன
வும், வளைந்தகழுத்துஅற்றனவும், அதிர்கின்றபெருங்குரலைவிட்டனவும்,
தாள்துணியப்பெற்றனவுமாகி, அஞ்சாமையையுடைய கொடிய யானைத்திர
ளால்தோன்றிய பிணமலையின்உச்சியினின்றுபெருகிய உஷ்ணமானகுருதிநீ
ராறுகளாற்சுழிகள்தோறும்கொண்டுதள்ளப்பெற்றுஓடுவனவன்றி(உயிரோடு)
நின்றுதிரிவனவற்றைக் கண்டிலர்; (எ-று.)—ஆடல்-அடல்என்பதன்நீட்டல்;
இனி; ஆடல் - கூத்தாடுதலுமாம். ஓங்கற் கோடு - மலையுச்சி. குதிரைகளழிந்
தமையைக் கூறியவாறு. பி-ம்:—[1]அற்றன. [2]குரநீத்த. [3]நீராற்றகன், நீரா
ர்த்தன. [4]குரைத்துந்தி. [5]உயர்கெழு, ஒலிகிளர். (கருசக)

கூ௨௪. வேத நாயகன் வெங்கணை [1]வழக்கத்தின் மிகுதியை [2]வெ
வ்வேறிட்டு, ஓது கின்றதெ னும்பரு மரக்கர்வெங் களத்துவர் துற்று
ரைக், காதல் விண்ணி டைக் [3]கண்டன ரல்லது [4]கணவர்த முடல்நாடும்,
மாதர் வெள்ளமே [5]கண்டனர் கண்டிலர் [6]மலையினும் பெரியாரை.

(இ - ள்.) வேதங்களாற்பிரதிபாதிக்கப்பட்ட தலைவனாகிய ஸ்ரீராமபிரான்
கொடியஅம்புகளைப்பிரயோகித்ததன் மிகுதியை வெவ்வேறாகவகுத்துச்சொல்
லவேண்டியது எதற்கு?(சுருக்கமாகச்சொல்லுமிடத்து),தேவர்களும், கொடிய
போர்க்களத்திற் (பொருமாறுவந்து)பொருந்தியவரான அரக்கரை அன்போடு
வானுலகத்திற் கண்டனரே யல்லாமல் மலையினும்பெரியதோற்றமுடைய
அவ்வரக்கரை (உயிரோடுபோர்க்களத்துக்) காணமாட்டாதவராகினர்: கணவ
ருடைய உடலைத்தேடிப்பார்க்கின்ற மாதர்வெள்ளத்தையே (போர்க்களத்திற்)
கண்டனர்; (எ - று.)—பதாதிப்படையொழிந்தமை கூறியவாறு. வந்த அரக்கர்
யாவரும் மடிந்தன ரென்பது, கருத்து. பி-ம்:—[1]வேகத்தின். [2]யாம். [3]கண்ட
வர். [4]கண்டகருடனும். [5]கண்டது. [6]மலையெனும். (கருசஉ)

கூ௨௫.—சேனைகள்யாவும் ஒழிந்து கும்பகர்ணன் தனிப்பட்டவனாக,

இராமபிரான் அவனைநோக்கி ஒன்று கூறத்தொடங்குதல்.

பனிப்பட் டா[1]லெனக் [2]கதிர்வரப் படுவது பட்டதப் படைபற்
றார், துனிப்பட் டாரெனத் [3]துலங்கின ரிமையவ ரியாவர்க்குந் தோ
லாதான், இனிப்பட் டானென வீங்கின [4]வரக்கரு மேங்கின ரிவனந்
தோ, தனிப்பட் டானென வவன்முக நோக்கியொன் றுரைத்தனன்
றனிநாதன்.

(இ - ள்.) சூரியன்வருகையில் (வானத்தினின்று) வீழ்வதாகிய பனி
ஒழிந்தாற்போல(அந்தஅரக்கச்)சேனை யொழிந்தது; பகைவர் (தோல்வியால்)
வெறுப்படைந்தாரென்ற காரணத்தினால், தேவர்கள் விளக்கமுறலானார்கள்;
யாவர்க்கும் தோலாதவனான கும்பகர்ணன் இனிஇறந்திடுவானென்று கருதி

யதனால், இதுவரையில் மகிழ்ச்சியிக்கிருந்த அரக்கரும், எக்கமுற்றார்: அய்யோ! இந்தக்கும்பகர்ணன் தனிப்பட்டானென்று அவனுடையமுகத்தைப்பார்த்து ஒப்பற்றதலைவனை ஸ்ரீராமன், ஒன்றுகூறலானான்; (எ-று.)—இராமபிரான் கூறுவதை மேலிரண்டுகவிகளிற்காண்க. கதிர்-கதிரவனுக்கு, ஆகுபெயர். படுவது-ஒழிவதுமாம். பி-ம்:—[1]அது. [2]கதிரின்வாய்ப். [3]துளங்கினர். [4]வானரம் வேறினியிலன், வானரம்வேறினியிவன், அரக்கருமேங்கினிரினி. (கஙசங)

கூஉகூ.—இதுவும் அடுத்தகவியும்-குளகம்: இராமபிரான் கும்பகர்ணனை வினவியதைத் தெரிவிக்கும்.

[1]ஏதி யோடெதிர் [2]பெருந்துணை யிழந்தனை யெதிரொரு தனிநின்றாய், நீதி யோனுடன் பிறந்தனை யாதலி னின்னுயிர் நினக்கீவன், போதி யோ[3]பின்னை வருதியோ வன்றெனிற் போர்[4]புரிந் திப்போதே, சாதி யோவுனக் குறுவது சொல்லுதி [5]தெரிவுறச் சமைந்தம்மா.

(இ - ள்.) (யான்சொல்வதைக்) கேள்: ஆயுதத்துடனே எதிர்க்கவல்ல பெருந்துணையான சேனையையும் இழந்தாய்: என்னெதிரே தன்னந்தனியனாய் நின்றாய்; நீதிமுறைதவறாத விபீஷணனுடன் பிறந்தவனாதலால், உன்னுயிரை உனக்குத் தருவேன்; (இப்போது நகர்க்குட்)போகின்றாயா?(போய்ப்) பின்பு (மீண்டு)வருகின்றாயா? இல்லையென்றால் இப்போதேபோர்புரிந்துசாகின்றாயா? உனக்குப்பொருந்தியதை ஆராய்ந்து தெளிவாகச் சொல்வாய்; (எ-று.)—கேட்டலென்றபொருளைக் குறிப்பிக்கும் அம்ம என்பது நீண்டுவந்தது. பி-ம்:- [1]ஏதியோடுடன். [2]பொருந். [3]நாளை. [4]பொருதிப்போதே, புரிந்திப்போழ்து. [5]சமைவுறத்தெரிந்தம்மா. (கஙசச)

கூஉஎ. இழைத்த தீவினை யிற்றில நாகலி னியானுனை யிளையோனால், அழைத்த போதினும் வந்திலை யந்தக னாணையின் வழிநின்றாய், பிழைத்த தானுனக் கருந்திரு நாளொடு பெருநதுயி னெடுங்காலம், உழைத்துவீடுவ தாயினை யென்னுனக்[1]குறுவது தான்றுரையென்றான்.

(இ - ள்.) (நீ முன்பு)செய்துள்ள தீவினை நீங்கவில்லையாதலால், யான் உன்னை (உன்) தம்பியைக்கொண்டு அழைத்தபோதிலும் வந்திடாமல் யமனுணைக்கு உட்பட்டுநின்றாய்[இறக்கப்போகின்றவனாயுள்ளாய்]: வாழ்நாளுடனே அருமையான செல்வமும் உனக்குத் தவறிவிட்டது; பெருந்துயிலைநெடுங்காலஞ்செய்து இறப்பதற்குச் சமைந்துநின்றாய்: உன்மனத்திலுள்ளதொன்றுளதுவோ அதனைச் சொல்வாயென்றான்;(எ-று.)—பி-ம்:--[1]உற்றனவுரை.(கஙசரு)

கூஉஅ.இதுமுதல் நான்கு கவிகள்-ஒருதொடர்: கும்பகர்ணன் கூறியவிடை.

மற்றெ லாநிற்க வாசியு மானமு மறத்துறை வழுவாத
கொற்ற நீதியுங் குலமுதற் றருமமு மென்றிவை குடியாகப்
பெற்ற [1]றுங்களா லெங்களைப் பிரிந்துதன் பெருஞ்செவி மூக்கோடும்
அற்ற வெங்கைபோ லென்முகங் [2]காட்டிநின் றாற்றல [3]னுயிரம்மா.

(இ-ள்.)கேள்:(நீ சொன்ன) மற்றவைகளெல்லாம் இருக்கட்டும்: (யாவரினும்) மிக்குத்தோன்றுகின்றசிறப்பும் மானமும் வீரத்துறையினின்றும்

தவறாத வெற்றியோடுகூடிய நீதியும் (க்ஷத்திரிய)குலத்திற்கு முதன்மையான (மற்றுமுள்ள) தருமங்களும் என்றஇவை குடியிருக்குமிடமாகப்பெற்ற உங்களாலே, எங்களைப்பிரிந்துபோய்த் தன்னுடைய பெரியசெவிகள் மூக்கோடும் அறுபட்ட எமது தங்கையைப்போல என்முகத்தைக்காட்டிக்கொண்டுநின்று உயிரோடிருக்கப்போறேன்; (எ - று.)—என் தங்கைபோல, உங்களால்அறுபட்ட மூக்குச்செவிகளுடனே புவியில் மானமற்றுவாழ்ந்திருக்கப்பொறேனென்கிறான், கும்பகர்ணன். பி - ம்:—[1]நுங்கள்பால், உங்களால். [2]ஆர்க்கினிக்காட்டுவது, காட்டிநின்றுற்றுவன். [3]உரையம்மா, உரையையா. (கருசகூ)

ஙஉகூ. நோக்கி ழந்தனர் வானவ ரெங்களா [1]லவ்வகை நிலைநோக்கித், தாக்க ணங்[2]கனை யவள்[3]பிறர் [4]மனையெனத் தடுத்தனன் [5]றக்கோர்முன், வாக்கி ழந்ததென் றயர்வுறு வேன்[6]செவி தன்னொடு மாற்றாரால், மூக்கி ழந்தபின் [6]மீளலென் றாலது முடியுமோ [7]முடியாதாய்.

(இ - ள்.) அழிவில்லாதவனே! எங்களால் வானவர்கள் ஒளியிழந்தார்கள்; அவ்வகைநிலைமையினைப் பார்த்துவிட்டு, (என் தமையனார் சீதையைக் கவர்ந்துவந்தபோது'மனத்தைத்)தாக்கிவருத்துந்தன்மையுள்ள தெய்வப்பெண்போன்றவளான சீதை பிறர்மனைவி:(ஆதலால், இவளைக் கைப்பற்றலாகாது)' எனத் தடுத்தேன்: (அவன் என்பேச்சையங்கீகரியாமையால்), தக்கவர்க்கு முன்னே பேசுதற்குஉரிய வாக்குப்போய்விட்டது [பேசுவதற்குமுடியாதே!] என்றுவருந்துகின்ற யான், மாற்றவரால் செவியோடு மூக்கையிழந்தபின், (நகர்க்கு) மீள்வதென்றால் அது (எனக்கு) முடியுமோ? (எ - று.)

நியாயவாதிகள்முன்னே அநியாயஞ்செய்துவிட்டவர் பேசுதற்குமுடியாதென்றகருத்தால், 'தக்கோர்முன்வாக்கிழந்ததென் றயர்வுறுவேன்' என்கின்றான். அயர்வுறுவேன், நோக்கி, மூக்கிழந்தபின் மீளலென்றால் முடியுமோ என இயையும். முன்னேவாக்குப்போக இப்போது மூக்குச்செவிகள்போயினவெனக்காண்க. பி-ம்:—[1]உவகையினோக்கேயால், அதுபகைநோக்கேயாய்த். [2]அனையாள். [3]பிறன். [4]மனைவியைத்தடுத்தனன். [5]எனத்தக்கோர், எனத்தக்கோன், எனத்தக்கோய். [6]மற்றுமமரிடை, மறச்செருவிடை. [7]மீள்வன். [8]முடியாதால். (கருசஎ)

ஙஙO. உங்க டோடலை வாள்கொடு துணித்துயிர் குடித்தெம்முனுவந்தெய்த, நங்கை நன்னலங் கொடுக்கிய வந்தநான் வானவர் நகைசெய்யச், செங்கை தாங்கிய [1]சிரத்தொடுங் கண்ணினீர் குருதியி னொடுதேக்கி, எங்கை போலெடுத் தழைத்துநான் வீழ்வனோ விராவணனெதிரம்மா.

(இ - ள்.) உங்களுடையதோளையும் தலையையும் வாளைக்கொண்டு துணித்து உயிரைக்குடித்து, என்தமையன்மகிழ்ந்து அடையுமாறு சீதையின் அழகியநலத்தை (அவனுக்குக்) கொடுக்கும்படி (பொருதற்குப் போர்க்களத்து) வந்த யான்,—வானவர் (பரிகசித்துச்) சிரிக்கும்படி செவ்விய கையைத் தாங்கிய சிரத்துடனும் [தலையிற்கைவைத்தவண்ணம்] கண்ணீரை இரத்தத்துடனே தேங்கச்செய்து எனதுதங்கைபோல எடுத்தகுரலுடன்கூவிக்கொ

ண்டு இராவணனெதிர்வீழ்தற்குஉரியனே? (எ - று.)—அம்மா-தனக்குநேர்ந்த நிலைமையைக்கருதிவியந்தவாறு.தலையிற்கையைவைத்துக்கொள்ளுதல்,துயர்க் குறி. பி - ம்:—1 சிரத்தினன். (கருசஅ)

ருருக. [1]ஒருத்த னீ[2]தனி யுலகொரு மூன்றிற்கு மாயினும் பழி யோருங், கருத்தி னல்வருஞ் [3]சேவக னல்லையோ சேவகர் கட[4]னேரா ராய், [5]செருத்திண் வாளினற் றிறத்திற னுங்களை [6]யமர்த்துறைச் சிரங் கொய்து, பொருத்தி னலது பொருந்துமோ தக்கது புகன்றிலை போ லென்றான்.

(இ - ள்.) நீ ஒருமூவுலகிற்கும் தனிப்பட்ட ஒப்பற்றமுதல்வனாயினும், பழியை யாராய்ந்துஅறியும் மனத்தோடுவருகின்ற வீரனல்லையோ? சேவகர் கடமையைஅறியாதவன்போற் பேசுகிறாயே: போரில் வலிய வாளினால் துண்டந்துண்டமாக உங்களைப்போர்க்களத்தில் தலையையறுத்துவிட்டுப்பொருந்தச் செய்தால் அது மீண்டும்பொருந்துமோ! தகுதியானதைச்சொல்லவில்லையென்றான், (கும்பகர்ணன்); (எ - று.)

போல்-அசை.நீ வீரனாயிருந்து மூக்கறுபட்டபின்,'ஊர்க்குப்போய்வருகிறாயா?', என்றுகேட்பது தகுதியன்றென்றவாறு. கொய்தசிரத்தைப் பொருத்தினாற் பொருந்தமாட்டாததுபோல, யான்இழந்தவீரத்தை இனிப் பெறலாகாதென்கின்றான். பி-ம்:—1ஒருத்தனே. 2அவனுலகொரு, உலகொருங்கொரு. 3சேவகரல்லரோ, சேவகனல்லநீ. 4நேர்வார், ஓர்வார். 5செருக்கின். 6மறத்துறச், அறுத்துறச். (கருசகூ)

ருருஉ.—கும்பகர்ணன் தன்றென்றையெடுத்துஇராமபிரான்மேலெறிதல்.

என்று [1]தன்னெடுஞ் சூலத்தை யிடக்கையின் [2]மாற்றினன் வலக்கையாற், குன்று நின்றது [3]பேர்த்தெடுத் திரு[4]நிலக் குடர்கவர்ந் தெனக்கொண்டான், சென்று [5]விண்ணொடும் [6]பொறியொடுந் தீச்செல்லச் சேவகன் [7]சென்னிநேரே, [8]வென்றி [9]தீர்கென விட்டன [10]னதுவந்து பட்டது மேலென்ன.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) என்றுசொல்லித் தனது (வலக்கையிலேயிருந்த) நெடியசூலத்தை இடக்கையிலேமாற்றிக்கொண்டு, (தன்) வலக்கையினாற் பெரியநிலத்தின் குடலைக் கவர்ந்தாற்போல நின்றதொருகுன்றத்தைப் பேர்த்தெடுத்துக் (கையிற்) கொண்டவனாய், வானத்திற்சென்று தீப்பொறியோடு தீயும் வெளிப்பட மகாவீரனான இராமபிரானுடைய தலைக்குநேராக 'வெற்றிகொண்டுமுற்றுக' என்றுசொல்லிவிட்டனன்: அது வந்து (இராமபிரானது)மேலேபட்டது என்னுமாறுநெருங்க,—(எ-று.)—'என்ன' என்பது அடுத்தசெய்யுளில்'நூறிய புரவலன்...சிந்தினன்' என முடியும். பி-ம்:—1நன்னெடும். 2மாற்றித்தன். 3கோத்தெடுத்து. 4நிலங். 5விண்ணெடும். 6திசையொடும். 7மேற்சென்றே. 8வென்றி. 9தீர்க்கென. 10பட்டது, பட்டது. (கருருO)

### ௩௩௩.—இராமபிரான் கும்பகர்ணனெறிந்த மலையை நீறாக்கி அவன்கைச்சூலத்தையுந் துண்டித்தல்.

அனைய குன்றென்னு மசனியை [1]யாவர்க்கு [2]மறிவருந் தனிமேனி,
புனையு நன்னெடு நீறெனத் தூறிய புரவலன் [3]போர்வென்று, நினையு
[4]மாத்திரத் தொருகைநின் றொருகை [5]யி னிமிர்கின்ற நெடுவேலைத்,
தினையின் [6]மாத்திரைத் துணிபட [7]வரன்முறை சிந்தினன் சரஞ்சிந்தி.

(இ - ள்.) அந்தக்குன்றென்றுபேர்கொண்ட இடியை எவர்க்கும்அறிவரிதாகிய ஒப்பற்ற (தன்) திருமேனியை அலங்கரிக்கும்படி (அங்குஎழுந்த) நல்ல சிறந்ததூளியென்னும்படி பொடிபடுத்திய ஸ்ரீராமன், போரில்வெற்றியுற்று நினையும்மாத்திரத்தில் ஒருகையினின்று மற்றொருகையில் நிமிர்ந்துதோன்றுகின்ற நெடியசூலப்படையைத் தினைப்பொழுதில் துணிபடுமாறு (யுத்தவீரர்) பொரவேண்டியமுறைப்படி சரங்களை மிகப்பொழிந்தான்; (எ - று.)

அறிவருந்தனிமேனி-சிவபெருமான்திருமேனியெனினுமாம்.மறி வரும் எனவும்பிரிக்கலாம். [2]அறிவருமரன்மேனி புனையுநன்னெடுநீறெனை என்றபாடத்துக்கு-அறிவதற்குஅரியசிவபிரானது திருமேனியைப் புனைவதற்கு(அங்கு) எழுகின்றசிறந்தபெருமை(பெற்ற விபூதிபோல,மலைதுகளாகித்தோன்ற என்க. பி-ம்:—[1]அவ்வழி. [3]பொரவேறு, பொரவென்று. [4]மாத்திரை. [5]கையால். [6]மாத்திரத்திற்றுக, மாத்திரை துணிபட, மாத்திரந்துணிபட. [7]முறைமுறை. (கருநிக)

### ௩௩௪.—இராமபிரானெய்த அம்புகள் கும்பகர்ணன் கவசத்தைப் பிளக்கமாட்டாமை.

அண்ணல் விற்கொடுங் கால்விசைத் [1]துதைந்தன வலைகடல் [2]வறளாக, உண்ண கிற்பன வுருமையுஞ் சுடுவன மேருவை யுருவிப்போய்,
[3]விண்ண கத்தையுங் கடப்பன [4]பிழைப்பிலா [5]மெய்யன மேற்சேர்ந்த,
கண்ணு தற்பெருங் கடவுடன் கவசத்தைக் கடந்தில கதிர்வாளி.

(இ-ள்.) பெருமையிற்சிறந்தஇராமபிரான் வில்லின்வளைந்தகாலினின்று விசையுடன்செல்லுமாறு விடுத்தனவும்,அலைகடல் வறண்டதாகும்படி (அதன் நீரைப்)பருகும்வல்லமைபெற்றனவும், இடியையும் சுடவல்லனவும், மேருவையும் ஊடுருவிச்சென்று வானத்திடத்தையுங் கடப்பனவும், தவறுதலில்லாமல் நிச்சயமாகப் பயனைவிளைப்பனவும் (கும்பகர்ணனுடைய)மீது சேர்ந்தனவுமான ஒளியுள்ளஅம்புகள், சிவபிரானீந்த (அந்தக்கும்பகர்ணன்பூண்ட) கவசத்தைத் துளைக்கமாட்டாவாயின; (எ - று.)—பி-ம்:-[1]உதைத்தனன், உதைத்தன. [2]வளாகத்தை, அளறுக. [3]விண்ணளைத்தையும். [4]பிழைப்பில. [5]வெய்யவன்மேற்சென்று, மெய்யன்றன்மேற்சேர்ந்த. (சுருஉ)

### ௩௩௫.—இராமன் சங்கரன்கணையால் அறுத்துத்தள்ளக் கும்பகர்ணனது கவசம் அறுந்துவிழுதல்.

[1]தாக்கு கின்றன நுழைகில [2]தலையது தாமரைத் தடங்கண்ணன்
நோக்கி யிங்கிது சங்கரன் கவசமென் றுணர்வுற நுனித்துன்னி

ஆக்கி [3]யங்கவ னடுபடை தொடுத்துவிட் டறுத்தன னதுசிந்தி
வீக்கி ழந்தது [4]வீழ்ந்தது வரைசுழல் விரிசுடர் வீழ்ந்தென்ன.

(இ-ள்.) (தான் எய்த அம்புகள் கவசத்தை) மோதுகின்றனவாய்நுழைய மாட்டாவாயின: தாமரைத்தடங்கண்ணனாகிய ஸ்ரீராமன், தலைமை [மேன்மை] பெற்றதான அதனைப்பார்த்து இங்கேஇது சங்கரபகவானளித்தகவசம்' என்றுஉணர்விற்பட நுணுகியறிந்து, அந்தச்சங்கரபகவானது கொல்லுந்தன்மையுள்ள அஸ்திரத்தைஅபிமந்திரித்து(அம்பை)வில்லிற்பூட்டிப்பிரயோகித்து (அந்தக்கும்பகர்ணன் கவசத்தை) அறுத்திட்டான்: அது கட்டுக்குலைந்ததாகி (உடனிலின்று)வெளிப்பட்டு மேருமலையை வலம்வருகின்ற சூரியன்(பூமியில்) வீழ்ந்தாற்போலப் பேரொளியுடனே (மண்ணில்) வீழ்ந்திட்டது; (எ - று.)— அங்கு - அசை. விரிசுடர்-அன்மொழித்தொகை. வீக்கு-கட்டு. பி-ம்:-[1]தாக்குகின்றில நுழைகில, தாக்குகின்றன னுழைகிலது. [2]அனையது. [3]ஆங்கவன், அன்னவன். [4]வடநெடுவரைதொடர்சுடரிடை. (கருஙரு)

ருஙகூ.—கவசமற்ற கும்பகர்ணன் பெருஞ்சீற்றத்துடனே தண்டாயுதங்கொண்டு வானரப்படையை யரைத்தல்.

காந்து வெஞ்சுடர்க் கவசமற் றுகுதலுங் கண்டொறுங் கனல்[1]சிந்தி, ஏந்து வன்னெடுந் தோள்புடைத் தார்த்தங்கொ [2]ரெழுமுனை வயிரப்[3]போர், வாய்ந்த வன்னெடுந் தண்டுகைப் பற்றினன் வானரப் படைமுற்றுஞ், சாந்து [4]செய்குவ னாமென [5]முறைமுறை யரைத்தனன் றரையோடும்.

(இ - ள்.) ஒளிவீசுகின்ற உஷ்ணகிரணனை சூரியன்போன்ற (தன்) கவசம் அறுபட்டுச் சிந்தியவளவில், இருகண்களினாலும் கனலைச்சிந்தி, ஓங்கிய வலியநெடிய தோளைத் தட்டி ஆரவாரித்து, அப்போது இருப்புமுனையையுடையதும் உறுதியானதும் போர்க்குவாய்ப்பானதுமான வலியநெடிய தண்டாயுதத்தைக் கையிற்கொண்டவனாய், வானரப்படைமுழுவதையும் சாந்துபோல ஆக்கிவிடுவேனென்றுசொல்லி முறைமுறையே தரையோடும் அரைக்கலானான்; (எ - று.)---பி-ம்:---[1]சிந்த. [2]எழுமுனை. [3]போர்ப்பாந்தள். [4]செய்தனன். [5]அரைத்தனன்முறைமுறை. (கருஙச)

ருஙஎ.---இராமபிரான் சரமழையைப்பொழிகையிலும் கும்பகர்ணன் இலட்சியஞ்செய்யாது தண்டுகொண்டு சாரிதிரிதல்.

பறப்ப வாயிரம் படுவன வாயிரம் பகட்டெழி [1]லகன் மார்பந்
திறப்ப வாயிரந் [2]திரிவன வாயிரஞ் சென்று[3]புக் குருவாது
மறைப்ப வாயிரம் வருவன வாயிரம் வடிக்கணை யென்றாலும் [சாரி.
[4]பிறப்ப [5]வாயிடைத் [6]தெழித்துறத் திரிந்தனன் கறங்கெனப் பெருஞ்

(இ - ள்.) (வானத்திற்) பறப்பவைஆயிரமும், (பகைவன்மேற்) படுவன ஆயிரமும் (அவனது) பெருமைபெற்றுஎழுந்து தோன்றுதலையுடைய பரந்த மார்பைப் பிளப்பவைகள்ஆயிரமும், (எாற்புறமும்) திரிவன ஆயிரமும், பேரய்உட்புகுந்து தொளைத்திடாமல் (மேலே) மறைப்பவை யாயிரமும்,(வில்

வினின்றுவெளிப்பட்டு) வருபவைஆயிரமும் (என இவ்வாறுஇராமபிரானது) கூரியஅம்புகள் (உள்ளன) என்றாலும்,— (ஒலி) பிறக்க அங்கேஅதட்டிக் கொண்டு காற்றடிபோலப்பெருஞ்சாரி மிகத்திரிந்தனன், (அந்தக்கும்பகர்ணன்); (எ - று.)—பி -ம்:—1வரைமார்பைத், அவன்மார்பைத். 2நீர்வள. 3புக்குருவெல்லாம். 4சிறப்ப.5ஆயிரம். 6தெழித்திடை, தெளித்துரை. (கஙகூகூ)

கூகூஅ.—தண்டாயுதத்தைத்துணித்துவிட, கும்பகர்ணன் வாளையும் கேடகத்தையும் எடுத்துக்கொள்ளுதல்.

தண்டு கைத்தலத் துளதெனி னுாதன்று தானை1யென் றது2சாயக், கொண்ட லொத்தவன் 3கொடுங்கணை பத்தொரு தொடையினிற் 4றொடுத்தெய்தான், கண்ட 5முற்றது 6மற்றது 7கருங்கழ லரக்கனுங் கனன்றாங்கோர், மண்ட லச்சுட 8ராமெனக் கேடகம் வாங்கினன் வாளோடும்.

(இ - ள்.) தண்டாயுதமானது(இவனுடைய)கையிலுளதானால்,(வானரச்) சேனை உயிருடனிருப்பதாகாதென்றுகருதி, அது அழியும்படி, காளமேகத்தையொத்தவனான ஸ்ரீராமன்,—கொடியஅம்புகள்பத்தை ஒருதொடுப்பில் தொடுத்துவிட்டான்: (அதனால்), அந்தத்தண்டாயுதம் கண்டமாகிவிட்டது: கரிய கழலையுடையஅரக்கனும்,—கோபித்து அப்போது வாளுடனே பூமியில்விளங்குகின்ற ஓர்சூரியனென்னுமாறு கேடகத்தையும் கையிற்கொண்டிட்டான்; (எ-று )—மற்று-அசை. பி-ம்:—1என்றவர். 2சாற்றக். 3கொலைக். 4கோத்து. 5உற்றன. 6கண்டது, தண்டது. 7கனை. 8ஆடகக். (கஙகூசு)

கூகூகூ.—கும்பகர்ணன் வாட்படையெடுத்தலும் வானரர்அஞ்சிக் குலைய, இராமன் வாட்படையெடுத்த கையைத் துண்டித்தல்.

வாளெ டுத்தலும் வானர வீரர்கண் 1மறுகினர் வழிதோறுந், தாளெ டுத்தனர் 2கழிந்தனர் வானவர் தலையெடுத் திலர்தாழ்ந்தார், கோளெ டுத்தது மீளவென் றுரைத்தலுங் கொற்றவன் குன்றொத்த, தோளெ டுத்தது துணித்தியென் றொருசரந் துரந்தனன் சுரர் வாழ்த்த.

(இ - ள்.) (கும்பகர்ணன்) வாட்படையையெடுத்தவுடனே, வானரவீரர்கள் மனங்கலங்கி, வழிதோறும் கால்விசைகொண்டவராய் ஓடியப்பாற் சென்றனர்; வானவர் தலையைநிமிர்க்காமல் தொங்கப்போட்டனர்; மீளஉயிர்க்கொள்ளை ஆரம்பித்திட்டதென்று (துணைவர்) கூறியவளவில்,—வெற்றிபொருந்தியஇராமபிரான்,—(கும்பகர்ணனுடைய) குன்றொத்ததோள் எடுத்த வாளைத் துணிப்பாயென்று ஒருசரத்தை அமரர்வாழ்த்தச் செலுத்தினன்; (எ - று.)—பி-ம்:—1மயங்கினர். 2சமழ்த்தனா. (கஙகூஎ)

கூசo.—அதுகண்ட அரக்கரின்கலக்கம்.

அலக்க ணுற்றது தீவினை நல்வினை யார்த்தெழுந் ததுவோர்த்துக், கலக்க முற்றன ரிராக்கதர் காலவெங் கருங்கடற் றிரைபோலும், வலக்கை யற்றது வாளொடுங் 1கோளுடை 2வானமா மதிபோலும், இலக்கை3 யுற்றதவ் விலங்கைக்கு ஸ்ரீராவணன் 4றனக்குமென் றெழுந்5தோடி.

(இ - ள்.) (தனக்குஆதாரமாகவுள்ள கும்பகர்ணன்கை யறுப்பட்டதனால்), தீவினையானது, துன்பமடைந்தது: புண்ணியமானது, (மகிழ்ச்சியினால்) ஆரவாரித்தெழுந்தது; இராக்கதர் (யாவரும், ஒரேவகையாக) 'யுகாந்தகாலத்துப்பொங்கியெழுகின்ற கொடிய கருங்கடலின் அலையைப்போலும் வலக்கையானது, இராகுவினாற்பற்றப்(பட்டுக் குறை)படுதலையுடைய வானத்துவிளங்குகின்ற சந்திரனையொத்த வாட்படையோடும் அற்றது: (அதனால்) அந்தஇலங்கைக்கும் இராவணனுக்கும்(இனிப்)பாதுகாவல் ஒழிந்தது' என்று சொல்லியவண்ணம் எழுந்தோடி(உடல்)வேர்த்துக் கலக்கமடைந்தனர்;(எ-று.)

தீவினை, நல்வினை - அதததற்குஉரியகடவுளைக் காட்டும். இலக்கை = ரக்ஷாஎன்றவடசொற்றிரிபு. பி-ம்:—1கோளொடும், தோளொடும். 2வானவிர்மதி, வானவர்பதி. 3உற்றவவ், உற்றதவ். 4தலைக்குமென்றெழுந்து, தலைக்குமேலெழுந்து. 5ஓட. (கருருஅ)

ந.சக.—கும்பகர்ணன் அற்ற கையை இடக்கையாலெடுத்து மோத, வானரர்மடிதல்.

மற்றும் வீரர்க ளுளரெனற் கெளிதரோ மறத்தொழி [1]லிவன்
மாடு, பெற்று [2]நீங்கின ராமெனி னல்லது பேரெழிற் றோளோடும்,
அற்று [3]வீழ்ந்தகை யறுதவெங் கையினா லெடுத்தவ னோத்தோடி,எற்
ற வீழ்ந்தன [4]வெயிறிளித் [5]தோடின வானரக் [6]குலமெல்லாம்.

(இ - ள்.) மிக்குஎழுந்துவளர்தலையுடைய தோளுடனே அறுபட்டுவீழ்ந்த தன்னுடையகையை அந்தக்கும்பகர்ணன் அறுபடாதகொடியகையினாலெடுத்து ஆரவாரஞ்செய்துகொண்டு ஓடிமோதவே,(இவனைக் கண்டதனாற்)பல்லையிளித்துக்கொண்டு ஓடின வானரக்கூட்டங்களெல்லாம்,(உயிரொழிந்து)வீழ்ந்தன;(இவ்வாறு இக்கும்பகர்ணன் வீரங்காட்டியதனால்) இவனிடத்து(இரந்து வீரத்தொழிலை)அடைந்து நீங்கினோர்(வீரராகஇருந்தால் இருக்கல்)ஆமேயன்றி, வேறும் (இவனைக்காட்டிலும்) வீரர் உள்ளாரென்று சொல்லுதல் எளிமையானதோ? (எ - று.)

'எனற்கு' என்றஇடத்து நான்காம்வேற்றுமை கருத்தாப்பொருளில் வந்தது. முன்னிரண்டடிகட்கு-மறத்தொழிலையுடைய இந்தக்கும்பகர்ணனிடத்து உயிரைப்பிச்சைவாங்கிக்கொண்டு இருந்த வீரர்இருந்தால் இருக்கலாமேயன்றி எதிர்த்துநின்றவீரர் உளரெனல் முடியாது என்று கருத்துக்கூறினுமாம். எளிதுஎன்றதன்பின், 'அர்' - சாரியை: ஓகாரம்-வினா. பி-ம்:— 1அவன். 2நீங்கினது. 3வீப்ந்தன. 4எயிறிரித்து, எயிறிரிந்து. 5ஓடினார். 6குழு.

ந.சஉ.—கும்பகர்ணனது வீரங்கண்ட உலகோரின்அச்சம்.

வள்ளல் காத்துட னிற்கவும் வானரத் தானையை மறக்கூற்றங்,
கொள்ளை கொண்டிடப் [1]பண்டையின் மும்மடி குமைக்கின்ற [2]படி
நோக்கி, வெள்ள மின்றொடும் [3]வீய்ந்துறு மெனபதோர் விம்மலுற்
றுயிர்வெம்ப, உள்ள கையினு மற்றவெங் [4]கரத்தையே யஞ்சின வுலகெல்லாம்.

(இ - ள்.) 'உதாரகுணமுடையவனான ஸ்ரீராமன் வானரசேனையைக் காத்தவண்ணம் கூடஇருக்கவும்,கொடுமையையுடைய யமன் கொள்ளைகொள் ளும்படி முன்பு குமைத்ததைவிட மூன்றுமடங்கு அதிகமாக(க் கும்பகர்ணன்) குமைக்கின்ற தன்மையை நோக்கி, உலகோரெல்லாம்,—(வானர) வெள்ளமா னது இன்றொருநாளில் அழிந்துபோம்' என்று கருதுவதனாலான துன்பத் தைக்கொண்டு உயிர் துடிக்க,அற்றுப்போகாமலிருக்கின்ற கையைக்காட்டிலும் (அந்தக்கும்பகர்ணனது) அறுபட்ட கொடியகையையே மிகவும் அஞ்சினர்.

அற்ற வலக்கையை இடக்கையிலே கொண்டு மோதியடிக்கும்போது இறக்கும்படி செய்வது அற்ற கையே யாதலால், அறுதகையைவிட அற்றகை யையே உலகோர்அஞ்சினரென்க. பி-ம்:—1தண்டினின். 2குறி. 3வீந்தனும், வீந்தன. 4கையையே. (கஙசுo)

ஙசங.—கும்பகர்ணனுடைய வீரம்.

மாறு வானரப் 1பெருங்கட லோடத்தன் றோணின்று 2வார் சோரி, 3யாறு 4விண்டொடும் 5பிணஞ்சுமந் தோடமே லமரரு மிரிந் தோடக், 6கூறு கூறுபட் டிலங்கையும் விலங்கலும் 7பறவையுங் குலை ந்தோட, ஏறு சேவகன் மேலெழுந் தோடினன் மழைக்குல மிரிந் தோட.

(இ - ள்.) பகையாயுள்ள வானரப்பெருஞ்சேனைக்கடல் நிலைகெட்டோ டவும், தன்தோளினின்று வடிகின்ற இரத்தநதி வானத்தைமுட்டுகின்ற [முட் டுமாறு] பிணத்தைச் சுமந்துகொண்டு ஓடவும்,வானத்திலுள்ள அமரரும் நிலை கெட்டோடவும், இலங்கையிலுள்ள வீரரும் மிருகங்களும் பட்சிகளும் (அவ் விரத்தநதியைக்கண்டு) பலபலவகையாகப்பிரிந்து நிலைகுலைந்தோடவும், (கும் பகர்ணன்), மழைக்குலம் நிலைகெட்டோட, [வானவழியாக] மிகுகின்ற வீரத் தனமுள்ள ஸ்ரீராமன்மீது எழுந்தோடினன்; (எ - று.)

மேலெழுந்துஎன்றெடுத்து-பிணக்குவியலின்மீது எழுந்துஎன்று உரைப் பினுமாம்.இலங்கையும் விலங்கலும்-இலங்காநகரமும்,அந்நகரிலிருக்கின்ற திரி கூடமலையும் எனினுமாம். பி-ம்:—1பெரும்படை.2வரு,வளர்.3யாறும்,4ஆனை யின். 5பிணக்குவைகொண்டு. 6கூறுபட்டனவிலங்கலுமிலங்கையும்: 7பரவை யுங், யாவையுங். (கஙசுக)

ஙசச.—ஸ்ரீராமன் தேவர்களின்வேண்டுகோளாற் கும்பகர்ணனது மற்றைக்கையை யறுத்துவீழ்த்துதல்.

1ஏற்றுக் கையையு 2மிக்கணத் 3தரிதியென் றிமையவர் தொழு தேத்தத், தோற்றுக் 4கையகன் றொழிந்தவ னுளவை 5தொலையவுந் தோன்றாத, கூற்றுக் கையமு மச்சமுங் கெடநெடுங் 6கொற்றவன் கொ லையம்பால், வேற்றுக் கையையும் வேலையி விட்டனன் வேறுமோ ரணை7யாக.

(இ - ள்.) 'மற்றொருகையையும் இக்கணத்திலரிந்திடுவாய்' என்று(இரந் தவண்ணம்)இமையவர் கைதொழுது துதிக்க,(இராமபிரானுக்கு முன்னே வலி

மை) தோற்று (வலக்)கைநீங்கி யொழியப்பெற்றவனான அந்தக்கும்பகர்ணனுடைய வாழ்நாட்கள் தொலையுமாறும், (இதுவரையில் அரக்கர்)கண்ணுக்குப் புலனாகாதிருந்த யமனுக்குச் சந்தேகமும் அச்சமுங்கெடவும், மிக்கவெற்றி பெற்ற இராமபிரான்,—கொல்லுந்தன்மையுள்ள (தன்) அம்புகளினால் மற்றொருகையையும் (அறுத்து) வேறொருஅணையென்று தோன்றுமாறு கடலில் வீழ்த்தினான்; (எ - று.)

ஐயம் - 'இவ்வரக்கர்கண்ணுக்குப் புலப்பட்டால் நம்மை என்செய்வார்களோ?' என்ற சங்கை: சங்கையினால் அச்சமுண்டாகுமென்க. பி-ம்:—[1]ஏற்றுக். [2]கணத்தினில். [3]அரியும். [4]கையதன்றழிந்தவனுடையநாள், கையொழிந்தொழித்தவனாளவை. [5]தொலைவுணித்தோன்றாத. [6]கொலைபயிலயில். [7]மான, ஆன.

௩௪௫.—கடலில்வீழ்ந்த கும்பகர்ணனதுதோளின் வருணனை.

சந்திரப்பெருந் தூணொடுஞ் [1]சார்த்திய ததிலொன்றுந் [2]தவறாது, அந்தரத்தவரலைகட லமுதெழக் கடைவுறு மந்நாளிற், சுந்தரத்தடந் தோள்வளை மாசுணஞ் சுற்றிய தொழில்காட்ட, மந்தரத்தையுங் [3]கடுத்தது மற்றவன் மணியணி வயிரத்தோள்.

(இ - ள்.) அழகிய பெரியதோளிலணிந்தவளையானது பாம்புசூழ்ந்ததன்மையைத் தோற்றுவிக்க, அந்தக்கும்பகர்ணனுடைய இரத்தினாபரணத்தையணிந்த வயிரத்தோள்கள்,—சந்திரனாகிய பெருந்தூணொடுசார்த்தியதாய்(க்கடைகின்ற) அந்த மத்தின்தன்மையினின்று சிறிதுங்குறைவுபடாது வானிலுள்ள தேவர்கள் அலையுந்தன்மையுள்ள பாற்கடலினின்று அமிழ்து தோன்றுமாறு கடைகின்ற அந்நாளில் மந்தரமலையையும் ஒத்தது; (எ-று.)

கடலினிடையேவீழ்ந்ததோள் வளைபூண்ட கும்பகர்ணன்கை, பாற்கடலிடையே நடப்பட்டு வாசுகியென்றபாம்பாகிய கடைகயிறுசுற்றிய மந்தரமலைபோன்ற தென்க. பி-ம்:—[1]சாத்தியததில், சாத்தியேயதில், சாத்தியதிலதென. [2]தவிராமல், தவிராதால். [3]ஒத்தது. (௧௫௬௩)

௩௪௬.—இதுவும்அது.

சிவண வண்ண[1]வான் கருங்கடற் [2]கொண்டுய்த்த செயலினுஞ் செறி[3]கற்றைச், சுவண வண்ணவெஞ் [4]சிறையுடைக் கடுவிசை [5]முடுகிய தொழிலாலும், [6]அவண வண்ணல தேவலி னியற்றிய [7]வமைவினு மயில்வாளி, உவண வண்ணலை [8]யொத்தது மந்தர மொத்ததவ் வுயர்பொற்றோள்.

(இ - ள்.) (தன்னைத்தானே) ஒத்திருக்க அழகியமிகப்பெரியகடலிலே கொண்டுசேர்த்தசெயலினாலும், நெருங்கியதொகுதியையும் பொன்னிறத்தையுங்கொண்ட விரும்பத்தக்க சிறகுகொண்ட கடுவிசையால் விரைந்துசென்ற செயலினாலும், அவ்விடத்துஅந்த ஸ்ரீராமபிரானதுகியமனப்படி ஏவியதொழிலைச்செய்த தன்மையினாலும் (இராமபிரானுடைய)கூரியஅம்புகள்,—கருடபக

வாளையொத்தது; உயர்ந்த பொன்னணியணிந்த அந்த(க் கும்பகர்ணனது) தோள்கள், (கருடபகவான்கொண்டுவந்திட்ட)மந்தரத்தை யொத்தது;(எ-று.)

இந்தச்செய்யுளைக்காணுமிடத்து, கருடபகவான் திருமாலின்கட்டளையால் அமிருதமதனத்தின்பொருட்டு மந்தரமலையைப் பாற்கடலிலிட்டானென்று ஒருசரிதமிருப்பதாகத்தோன்றுகின்றது. திருமாலின்கட்டளையால் அநந்தனென்னும்நாகராசன் மந்தரமலையைப்பெயர்த்தெடுத்துத்தர அம்மலையோடு தேவர்கள் பாற்கடலையடைந்தனரென்று மஹாபாரதத்திற்கூறப்பட்டுள்ளது.
பி-ம்:—1வன். 2கொடுவந்த. 3தாரைச். 4சிறையிடைக். 5முடுக்கிய. 6அவண வண்ணனன்று. 7அளவினும். 8ஒத்தன, நிகர்த்தன. (கருகூச)

ந௪எ.—இருகையுமற்ற கும்பகர்ணன் வானரக்கடலைக் கலக்குதல்.

பழக்க நாள்வரு மேருவை யுள்ளுறத் தொளைத்தொரு [1]பணையா
க்கி, வழக்கி னாலுல களந்தவ னமைத்ததோர் [2]வான்குணில் வலத்
தேந்தி, முழக்கி னா[3]லெனா முழங்குபே ரார்ப்பினான் வானர முந்நீரை,
உழக்கி னான்றசை [4]தோலெலும் பெனுமிவை குருதியோ டொன்றாக.

(இ - ள்.) பழக்கமாகச் சூரியன் (வலமாக)வருகின்ற மேருவை உள்ளே பொருந்தத்துளைத்து ஒருபறையாகச்செய்து, முறைமையினால் உலகையளந்தவனான திரிவிக்கிரமக்கடவுள் (அக்காலத்து அந்தமேருமலையாகியபறைக்குஉற்ப)அமைத்ததாகிய பெரியகுணிலொன்றை வலத்தேயேந்திமுழக்கினாற்போல முழங்குகின்றபேராரவாரத்தையுடையவனான கும்பகர்ணன்,—தசை தோல் எலும்புஎன்கின்றஇவைகுருதியோடும்சேர்ந்துஒன்றுபடும்படி வானரப் படையாகிய சமுத்திரத்தைக் கலக்கினான்; (எ - று.)

முதல்மூன்றடிகளில் பெருந்தோற்றமுடைய கும்பகர்ணனதுபோரார்ப்பிற்கு, மேருமலையைப்பறையாகக்கொண்டு முழக்குவதை யுவமைகூறினார். இல்பொருளுவமை: தற்குறிப்பேற்றவணியெனவும்படும். பி-ம்:—1பறை. 2வன். 3என்ன. 4தோன்மயிரென்பொடு. (கருகூரு)

ந௪அ.—இராமன் கும்பகர்ணனுடைய வலக்காலை அம்புகளாலறுத்தல்.

நிலத்த கால்கனல் புனல்[1]விசும் பிவைமுற் று நிருதனா துரு[2]வாகிக்,
கொலத்[3]த காததோர் வடிவு[4]கொண் டாலெனா [5]வுயிர்களைக் குடிப்
பானைச், சலத்த [6]காலனைத் தறுகணார்க் கரசனைத் தருக்கினிற் பெரி
யானை, வலத்த காலையும் வடித்தவெங் கணையினாற் றடிந்தனன் றனுவல்
லான்.

(இ - ள்.) நிலத்தோடுகூடிய காற்று நெருப்பு நீர் விசும்பு என்கின்ற இவையெல்லாம் நிருதனதுஉருவையடைந்து கொல்லமுடியாததொரு வடிவைக்கொண்டாற்போல (த் தோன்றி) உயிர்களையழிப்பவனும், கோபத்தைக் கொண்ட யமன்போன்றவனும், அஞ்சாமையையுடையோரில் தலைவனும், செருக்கினால் மிக்கவனுமாகிய கும்பகர்ணனுடைய வலக்காலையும் கூரியகொடியஅம்பினால் வில்லாளியான இராமபிரான் அறுத்துத்தள்ளினான்; (எ - று.)

இவ்வுலகத்துப்பிராணிகளின்உடல்கள் - நிலம்முதலிய பஞ்சபூதங்களினாலியன்றவையென்பது, நூற்கொள்கை. கும்பகர்ணனுடையஉடல், இந்தப்

பிரபஞ்சத்திலடங்கியுள்ள பஞ்சபூதங்கள்எவ்வளவுஉண்டு அவ்வளவெல்லாஞ் சேர்ந்துஇயன்றாற்போன்றுள்ளதென முதலடியாற்கூறியவாறு: இது-தற்குறிப் பேற்றவணி. இதனால், அந்தக்கும்பகர்ணனுடையபெருந்தோற்றமும் பேராற் றலும் பெறப்படும். பி-ம்:—[1]எனவிவை, எனுமிவை. [2]ஆக்கி. [3]தகாதன. [4]கொண்டானென, கொண்டனவென. [5]உயிரினை. [6]காலனோர். (கருசுசு)

கூசு௭.—கும்பகர்ணன் ஒற்றைக்காலால்நொண்டியபடி போர்வருதல்.

பந்தி [1]பந்தியின் பற்குல [2]மீன்குலம் [3]பாகுபா டுறப்[4]பாகத்து,இந்து
[5]வெள்ளெயி றிமைத்திடக் குருதி[6]யா றொழுக்கல்கொண் டெழுசெக்க
ர்,அந்தி வந்தென வகனெடு வாய்விரித் தடி[7]யொன்று [8]கடிதோட்டிக்,
குந்தி வந்தன னெடுநிலங் குழிபடக் குரைகடல் [9]கோத்தேற.

(இ - ள்.) வரிசைவரிசையாகவுள்ள பற்களின்குலம் நட்சத்திரக்கூட்டம் போலப் பாகுபாட்டை [தனியே மிகவும்விளங்கித்தோன்றுதலை] அடையவும், பிறைச்சந்திரன்போன்று வெள்ளியகோரப்பல் விளங்கவும், குருதியாற்றினொ ழுக்கினாலே எழுகின்ற செவ்வானத்தையுடைய அந்திப்போதுவந்தாற்போல அகன்றநெடுவாயைவிரித்து, நெடியநிலம்குழிபடவும் ஒலிக்கின்றகடல் (பூமிய மிழ்வதனால்) வெள்ளப்பெருக்குக்கொண்டு நிலத்தின்மீதுபரவவும் ஒற்றை யடியைவிரைவாகச்செலுத்தி நொண்டிக்கொண்டுவந்தான்; (எ-று.)—பி-ம்:— [1]பந்தியிற். [2]மீன்குலப். [3]பாடுபாடுறப், பாடுபாடுறு. [4]பாகத்தின், பாதத்து. [5]எள்ளிநின்று. [6]ஆமெக்கர். [7]ஒன்றில். [8]கடிதோடிக். [9]கொதித்தேற. (கருசு௭)

கூரு௦.—கும்பகர்ணனது மற்றொரு காலையும் இராமபிரானறுத்தல்.

மாறு காலின்றி வானுற [1]நிமிர்ந்துமா [2]டுளவெலாங் [3]கடித்தேந்திச்
சூறை மாருத மாமெனச் [4]சுழித்துமேற் றொடர்கின்ற தொழிலானை
ஏறு சேவக னெரிமுகப் [5]பகழியா [6]லிருநிலம் பொறைநீங்க
வேறு [7]காலையுந் [8]துணித்தன [9]னறத்தொடு வேதங்கள் கூத்தாட.

(இ-ள்.) மற்றொருகாலில்லாமல் வானத்தையளாவஓங்கிப் பக்கத்துள்ள வைகளையெல்லாம்கடித்து ஏந்தியவண்ணம் கடுங்காற்றுப்போலவட்டமிட்டு மேலேதொடர்கொன்றதொழிலையுடையவனை கும்பகர்ணனை, ஸ்ரீராமன்,— நெருப்பைவாயிற்கொண்ட அம்பினாலே பெரியபூமியின்பாரம்நீங்கும்படியும் அறத்தோடு வேதங்கள் கூத்தாடவும், மற்றொருகாலையும் துணித்தனன்; (எ - று.)—ஏறுசேவகன்-ஸ்ரீராமன். பி-ம்:—[1]பாய்ந்து. [2]உளது. [3]பறித்து, வளைத்து. [4]சுழியின்மேற்றாக்கின்ற. [5]பகழிகள். [6]இறைநிலம். [7]தானுள. [8]கா லையும், துமித்தனன். [9]துணித்தனன். (கருசுஅ)

கூருக.—கும்பகர்ணனுக்குச் சீற்றம் விஞ்சுதல்.

கையி ரண்டொடு கால்களுந் துணிந்தன [1]கருவரை பொருவுந்தன்
மெய்யி ரண்டுநா றாயிரம் பகழியால் வெரிநுறத் தொளைபோன
செய்ய கண்பொழி தீச்சிகை யிருமடி [2]சிறந்தது தெழிப்போடும் [றம்.
[3]பெய்யும் [4]வானிடை யிடியினும் [5]பெருத்தது வளர்ந்தது பெருஞ்சீற்

(இ-ள்.) கையிரண்டுடனே காலிரண்டும் துணிந்தன; பெரியமலையையொத்த தன்னுடல் (இராமனுடைய) இருநூறாயிரம்அம்புகளால் முதுகுவழியே வெளிப்படத் துளையாகியது; செந்நிறக்கண்களினின்று வெளிப்படுகின்ற அக்கினிச்சுவாலை இருமடங்கு மிக்கது; பெருங்கோபமானது, ஆரவாரத்துடனே பெய்கின்றவானத்திற்றோன்றுகின்ற இடியைக்காட்டிலும் மிக்குவளர்ந்தது; (எ-று.)—பி-ம்:—1கனவரை. 2சிறந்தன, சிந்தின. 3வையம். 4வானிடிமழையினும், வானிடைமழையினும். 5பெருத்தன. (கடுசுக)

௩௫௨.—கும்பகர்ணன் வாயால் ஒருமலையை யொடித்தெறிதல்.

பாதங் கைகளோ டிழந்தனன் [1]படியிடை யிருந்து[2]தன் பகுவாயாற்
காத நீளிய மலைகளைக் கடித்திறுத் தெடுத்துவெங் கனல்[3]பொங்கி
[4]மீது மீதுதன் னகத்தெழு காற்றினால் விசைகொடு திசைசெல்ல
ஊத வூதப்பட் [5]டுலந்தன வானர [6]முருமின்வீ ழுயிரென்ன.

(இ-ள்.) கைகளையும் பாதங்களையும் இழந்தவனாகிய கும்பகர்ணன்,—பூமியிலிருந்து தன்னுடைய பிளவுபட்ட [பெரிய] வாயினாலே காததூரம்நீண்டிருந்தமலைகளைக் கடித்துஒடித்துஎடுத்துக் கொடிய(சிற்றக்)கனல்மிக்கு மேன்மேலும் தன்னுள்ளிருந்துவெளிக்கிளம்புகின்றகாற்றினால்விரைவுகொண்டு திக்குக்களிற்செல்லுமாறு ஊதுந்தோறும், (அம்மலைகளினால்) வானரப்படை உருமினால் உயிரொழியும் பிராணிகள்போல உயிரொழிந்தழிந்தன; (எ-று.)—பி-ம்:—1பதியிடை. 2வான், வன். 3பொங்க. 4மீதுதன்னகத்தெழுங்கடு. 5உலர்ந்தன, அலந்தன, உருண்டன. 6உருமு. (கடுஎ0)

௩௫௩.—கும்பகர்ணனதுசெயல்கண்டு இராமன் கைவிதிர்ப்புறல்.

தீயி னாற்செய்த கண்ணுடை யானெழுஞ் சிகையினாற் றிசைதீய,
வேயி னாற்[1]றிணி வெற்பொன்று நாவினால் விசும்புற வளைத்தேந்திப்,
பேயி னார்ப்புடைப் [2]பெருங்கள [3]மெரிந்தெழப் பிலந்திறந் ததுபோ
லும், வாயி னாற்செல [4]வீசினன் வள்ளலு மலர்க்கரம் விதிர்ப்புற்றான்.

(இ-ள்.) தீயினாற்செய்யப்பட்டாற்போன்ற கண்களையுடையவனான கும்பகர்ணன்,—(தன்னிடத்தினின்று)எழுகின்றஅக்கினிச்சுவாலையினால்நாற்றிசையும் தீய, மூங்கிலினால்நெருங்கியமலையொன்றை நாவினால் வானத்தைப்பொருந்தவளைத்தேந்தி, பேய்களின்ஆரவாரத்தைக்கொண்ட பெரியபோர்க்களம் எரிந்துபோகக் குகைதிறந்தாற்போன்றுள்ளவாயின்வலிமையினால் வெகுதூரஞ்செல்ல வீசியெறிந்தான்: (அதுகண்ட) இராமபிரானும், (தன்)தாமரைமலர்போன்றகை நடுங்கப்பெற்றான்; (எ-று.)—கைவிதிர்ப்புற்றது, அச்சத்தினாலென்க: கைவிதிர்த்தான்-கையையசைத்துவாளிதொடுத்தானென்பாருமுளர். பி-ம்:—1தெரி. 2பொரு. 3இரிந்து. 4ஊதினான். (கடுஎக)

௩௫௪.—அப்போது கும்பகர்ணன் தன்மனத்தினுள் உணர்வுதோன்றத் துயருறுதல்.

ஐயன் விற்றொழிற் காயிர மிராவண [1]ரமைவில ரந்தோயான், கையுங் கால்களு மிழந்தனன் வேறினி [2]யுதவலாந் துணைகாணேன், மைய

[3]நோய்கொடு [4]முடித்தவா தானென்றும் வரம்பின்றி [5]வாழ்வானு க்கு, உய்யு மாறரி தென்றுத னுள்ளத்தி னுணர்ந்தொரு துயருற்றான்.

(இ - ள்.) பெரியோனாகிய இராமபிரானுடையவிற்றொழிற்கோ, ஆயிரம்இராவணர் இருந்தாலும் (எதிர்த்தற்குஏற்றவலிமை) அமையாதவராவர்; ஐயோ! யான் கையுங் கால்களும் இழந்துள்ளேன்; இப்போது வேறே உதவக் கூடியவகையையும் காண்கிலேன்; (இப்படிப்பட்ட யான் என்செய்வேன்)! ஆசையாகிய நோயானது (இராவணனைக்)கொண்டு முடித்தவிதம் என்னேதான்!!என்றும்வரம்பின்றிவாழவேண்டியவனான இராவணனுக்கு (இனி)உய்யும் வகைஇல்லை என்று தன்மனத்தினுள்ளேயறிந்து ஒப்பற்ற துயரை யடைந்தான்;(எ-று.)—பி-ம்:--[1]அமைகிலர். [2]உதவலன். [3]நோயொடு. [4]முடிந்தவனென்று, முடிந்தவென்முன்னவன், முடிந்தவாறென்று. [5]வாழ்ந்தானுக்கு. ()

வேறு.

ருடு.—கும்பகர்ணன் இராமபிரானிடத்துச் சிலகூறத்தொடங்குதல்.

சிந்துரச்செம் பசுங்குருதி திசைகடொறுந் [1]திரையாற
வந்திரத்தேர் கரிபரியா ளீர்த்தோடப் பார்த்திருந்த
கந்தரப்பொற் [2]றனியாண்மைக் [3]களிற்றனையான் கண்ணின்ற
சுந்தரப்பொற் றோளானை முகநோக்கி யிவைசொன்னான்.

(இ-ள்.)சிந்துரப்பொடிபோற்செந்நிறமுள்ள புதியஇரத்தம் திசைகடோறும் திரைபொருந்திய ஆறாகி எந்திரமமைந்த தேர் கரி பரி ஆள்என்ற சதுரங்கசேனைகளை யிழுத்துக்கொண்டு ஓடப் பார்த்திருந்தவனும், குகையைக்கொண்டபொற்கிரியையும் வீரமமைந்தகளிற்றையும்ஒத்தவனுமான கும்பகர்ணன், (தன்) கண்ணெதிரேநின்ற அழகியபொன்னாபரணம்பூண்ட தோள்களையுடையவனான ஸ்ரீராமபிரானை முகம்நோக்கி இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ று.)—அவற்றை மேல் ஐந்துகவிகளிற் காண்க. மூன்றாமடியில், 'கந்தரப் பொற்கிரியானைக் காகுத்தன்தனையுயர்ந்த'என்று ஒருபிரதியிலுள்ளது. பி-ம்:- [1]சிறையாற, சிறையாறாய். [2]பொற்களியாடல். [3]கிரியனையான். (கடுஎஉ)

ருடுசு.—நான்குகவிகள் - கும்பகர்ணன் யாதொருதீங்கும் நேராதபடி விபீஷணனைப் பாதுகாக்க இராமபிரானைவேண்டுதலைத்தெரிவிக்கும்.

புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
[1]மைக்கடங்கார் [2]மதயானை வாள்வேந்தன் வழிவந்தீர்
[3]இக்கடன்க ளுடையீர்நீ ரெம்வினைதீர்த் தும்முடைய
[4]கைக்கடைந்தா னுயிர்காக்கக் கடவீ[5]ரென் கடைக்கூட்டால்.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (தன்னைச்) சரணமாகஅடைந்த ஒருபுறாவின்பொருட்டினால் தராசுத்தட்டிலேறினவனும் கறுத்தமதநீரை மேகம்போற்பொழிகின்ற மதயானையையும் வாட்படையையுமுடையவனுமான சிபிசக்கரவர்த்தியினதுவமிசத்திற்பிறந்தவரே!இந்த(ச்சிபிசக்கரவர்த்திபோல) அன்பின்செயல்களையுடையவரான நீங்கள்,என்னுடையபிரார்த்தனையினால்,எங்களுடையஉறவினாலான

தீவினையையொழித்து உமதுபக்கத்தைச்சேர்ந்தவனாகிய விபீஷணனுடைய உயிரையும்பாதுகாக்கக்கடவீர்;(எ-று.)—பி-ம்:—1மைக்கடங்கா. 2மதவானை. 3இக்கடங்கள். 4கைக்கடந்தான், கைக்கடன்றான். 5எங்களைக்கட்டால்.(கருஎச)

௫௫௭. நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லாற்
சாதியால் வந்தசிறு நெறியறியா னெந்தம்பி
1ஆதியா யுனையடைந்தா னரசருருக் கொண்டமைந்த
வேதியா வின்னமுனக் 2கடைக்கலமியான் வேண்டினேன்.

(இ - ள்.) முதற்கடவுளே! க்ஷத்திரியவடிவைக்கொண்டு (உலகத்துத்) தோன்றிய வேதத்தினாற்பிரதிபாதிக்கப்படுகின்ற கடவுளே! முறைப்படியே யமைந்ததான ஒப்பற்ற சிறந்த தருமசாஸ்திரவழியினாலல்லாமல் (இராட்சச) சாதிப்பிறப்பாலுண்டான அதருமநெறியை யறியாதவனாகிய என்தம்பிவிபீஷணன்,உன்னை(அடைக்கலமாக) அடைந்துள்ளான்; மீண்டும்(அவனை)அடைக்கலப்பொருளாகக்காத்தலை யான் வேண்டினேன்; (எ - று.)—பி-ம்:—1ஆதியானுனை. 2அடைக்கலந்தான். (கருஎரு)

௫௫௮. வெல்லுமா நினைக்கின்ற வேலரக்கன் வேரோடுங்
கல்லுமா முயல்கின்றா னிவ1னென்னுங் கறுவுடையான்
ஒல்லுமா றியலுமே லுடன்பிறப்பின் பயனோரான்
கொல்லுமா லவனிவனைக் 2குறிக்கோடி 3கோடாதாய்.

(இ - ள்.) (நீதிநெறியிற்) கோணாதுநடப்பவனே! வெல்லுமாறுநினைக்கின்ற வேற்படையையுடையனாகிய இராவணன் 'இவ்விபீஷணன். (தன்னை) வேரோடும் கல்லும்படி முயல்கின்றானென்று (இவனிடம்) கறுக்கொண்டுள்ளான்; உடன்பிறப்பின்பயனை உணராதவனான அவ்விராவணன், கூடுமாறு நேருமானால் இவனைக் கொல்லுவான்; (ஆகையால், இவனை) ஜாக்கிரதையாகப்பார்த்துக்கொள்; (எ - று.)—பி - ம்:—1எனலும். 2குறிக்கொணீ. 3கோவிந்தா. (கருஎசு)

௫௫௯. தம்பியென நினைந்1திரங்கித் 2தவிரானத் தகவில்லான்
நம்பி3யிவன் றனைக்காணிற் கொல்லுமிறை நல்கானால்
உம்பியைத்தா னுன்னைத்தா னனுமனைத்தா னொருபொழுதும்
எம்பி4பிரி யானாக 5வருளுதியா னேண்டினேன்.

(இ - ள்.) அந்தநற்குணமில்லாதவனான இராவணன்,—தம்பியாயிற்றே என்றுகருதிஇரக்கங்கொண்டு விட்டிடான்; நற்குணம்நிறைந்தவனே! இவனைக் கண்டாற்கொல்வான்; சிறிதும் அருள்செய்யான்; உன்தம்பியையும் உன்னையும் அனுமானையும் தான் ஒருபொழுதும் என்தம்பிவிபீஷணன் பிரியாதிருக்குமாறு திருவருள்புரிவாய்;யான் வேண்டிக்கொள்கிறேன்; (எ-று.)— நம்பி-அண்மைவிளி: நம்பியாகியஇவன்எனினுமாம். பி-ம்:—1இரங்கல். 2தவிராதான். 3நயனில். 4பிரியலனாக. 5அருளுதியால்யான்வேண்ட. (கருஎஎ)

௫௬௦.—கும்பகர்ணன் தன்சிரத்தையறுத்துக்கடலிலிட வேண்டுதல்.

மூக்கிலா 1முகமென்று முனிவர்களு மமரர்களும்
2நோக்குவார் நோக்காமை நுன்கணையா லென்கழுத்தை

நீக்குவாய் நீக்கியபின் னெடுந்தலையைக் கருங்கடலுட்
போக்குவா [3]யிதுநின்னை வேண்டுகின்ற பொருளென்றான்.

(இ - ள்.) முனிவர்களும் அமரர்களுமாகிய காட்சிகாண்பவர் மூக்கில்லாதமுகமென்றுசொல்லிக்கொண்டு காணாதபடி உன் அம்பினால்என்கழுத்தை (யறுத்து) நீக்குவாய்: அவ்வாறுநீக்கியபின் (என்) நெடியதலையைக் கரியகடலுக்குள்ளே போக்குவாய்: இதுவே, (யான்) உன்னை வேண்டிக்கொள்ளுகின்றவரம் என்றுசொல்லி முடித்தான்; (எ - று.)—பி-ம்:—[1]முகம்வந்து. [2]நோக்குவார் நோக்காமுன்னொரு, நோக்கலாளேக்காமேநோன். [3]இதுவெனக்கு. (௧௫௭௮)

௩௬௧.—இராமன் கும்பகர்ணன்தலையையறுத்துக் கடலிலிடுதல்.

வரங்கொண்டா [1]னினிமறுத்தல் வழக்கன்றென் றொருவாளி
யுரங்கொண்ட [2]தடஞ்சிலையி னுயர்நெடு[3]நா ணுட்கொளுவாச்
சிரங்கொண்டான் கொண்டதனைத் திண்காற்றின் கடும்படையால்
அரங்கொண்ட [4]கருங்கடலு ளழுவத்து ளழுத்தினான்.

(இ - ள்.) (அதுகேட்ட ஸ்ரீராமன், 'இந்தக்கும்பகர்ணன்) வரங்கேட்டுக்கொண்டானாதலால் இனி மறுத்தல் முறைமையன்று' என்றுசொல்லி, வலிமைகொண்ட பெரியவில்லிலே சிறந்தநெடியநாணைப் பூட்டி ஒருஅம்பைக்கொண்டு (கும்பகர்ணனது) சிரசைக் கொய்தான்; கொய்ததனை வலியகடியவாயவ்யாஸ்திரத்தினால் பாதலம்வரையிலாழ்ந்துள்ள கரியகடலின்நடுவில் அழுந்தி வீழச்செய்தான்; (எ-று.)—அரம்-பாதாளம். பி-ம்:—[1]இது. [2]நெடுஞ்சிலையினூற, நெடுஞ்சிலையினுயிர். [3]நாணுடன்கொண்டான், ஞாணுடன்கொண்டான். [4]நெடுங். (௧௫௭௯)

௩௬௨.—கடலினுள் கும்பகர்ணன் முகம்மூழ்குதல்.

மாக்கூடு படர்வேலை மறிமகரத் திரைவாங்கி
மேக்கூடு கிழக்கூடு மிக்கிரண்டு திக்கூடு
போக்கூடு [1]தவிர்த்திருகண் [2]புகையோடு புகை[3]யுயிர்க்க
மூக்கூடு புகப்புக்கு [4]மூழ்கியதம் முகக்குன்றம்.

(இ- ள்.) பலமிருகங்கள்கூடியுள்ள பரவியமகரவேலையின் மடங்குகின்ற திரையை(அப்பால்)தள்ளி மேற்கிலும் கிழக்கிலும் மிக்குள்ளஇரண்டுதிக்கிலும் இடையே போதல்தவிர்த்து இருகண்களின்புகையுடன் அஸ்திரப்புகையும் வெளிப்பட, அந்தமுகக்குன்றம் (அறுந்த) மூக்குவழியாக(நீர்)உட்புகப் புக்கு மூழ்கியது; (எ - று.)—மலைபோன்றமுகம்விழவே, சஞ்சாரமறும்படி கடலினீர்நான்குதிசையிலும் முதலில் விலக, அம்முகம் அறுந்தமூக்கின்வழியே நீர் புகப்பெற்றுப் பிறகு கடலிலமிழ்ந்துவிட்டதென்பதாம். பி - ம்:—[1]கவித்து. [2]செவியூடும். [3]உயிர்க்கும். [4]மூழ்கியது, மூழ்கியதால். (௧௫௮௦)

௩௬௩.—தேவர்கள்முதலியோர்மகிழ, அரக்கர்படைத்தலைவர் அச்செய்தியை இராவணனுக்கு உணர்த்தச்செல்லுதல்.

ஆடினார் வானவர்க [1]ளரமகளி ரமுதவிசை
பாடினார் [2]மாதவரும் வேதியரும் பயந்தீர்ந்தார்
கூடினார் [3]படைத்தலைவர் கொற்றவனைக் குடர்[4]கலங்கி
ஓடினா ரடலரக்க ரிராவணனுக் [5]குணர்த்துவான்.

(இ - ள்.) வானவர்கள் ஆடினார்; அமரமகளிர் அமுதம்போன்ற இசைப்பாடலைப் பாடினார்; மாதவரும் வேதியரும் அச்சம்ஒழிந்தார்: படைத்தலைவராகிய வானரர் வெற்றிபெற்றஇராமபிரானைக் கூடினார்: வலிமைபொருந்திய அரக்கர்,-குடர்கலங்கி,(கும்பகர்ணன் இறந்தசெய்தியை) இராவணனுக்குஉணர்த்தும்பொருட்டு ஓடினார்; (எ-று.)—பி-ம்:—[1]மகளிர்களும், அரம்பையர்கள். [2]வேதியரும் மாதவரும். [3]எனைத்தலைவர். [4]கலங்க. [5]உணர்த்துவார். (௧௫௮௧)

ஸ்ரீவான்மீகிமுனிவர் இந்தச்சந்தர்ப்பத்தைக் கூறியுள்ளதுவருமாறு:-- தோல்வியுற்ற மனவருத்தத்தோடு போர்க்களத்தினின்றுமீண்ட இராவணன் சிங்காசனத்திலுட்கார்ந்து வந்த அரக்கரைப்பார்த்து, தான் ஒருமனிதனால் தோல்வியடைந்ததற்கு மிகவருந்தியும் தனக்குமுன்புநேர்ந்துள்ளசாபங்களை நினைந்துவருந்தியுங் கூறி, இலங்கையை வானரர்கள் புகாதவாறு காக்கும்படி சொல்லிக் கும்பகர்ணனை எழுப்புமாறு கட்டளையிட்டான்.

'அகாலத்தில் எழுப்பவேணுமே' என்ற சிந்தையுடனே அந்தஅரக்கர்கள் சென்று கும்பகர்ணனுடையஅரண்மனையையடைந்து அவனுடையமூச்சுக்காற்றினால்தடுக்கப்பட்டு, அரிதில்நுழைந்தனர். மாமிசம் இரத்தம் கள்முதலிய உணவுப்பொருள்களைக் கும்பகர்ணன் எழுந்ததும்உண்ணவுதவுமாறு நிரப்பிவைத்து, அவ்வரக்கர்கள் பலவகைப்பறைகளையடிப்பதும் பலவகைவாச்சியங்களைவாசிப்பதும், உலக்கை இருப்புத்தடி முதலியவற்றைக்கொண்டு அவன்மீது தாக்குவதும், குதிரை ஒட்டகம் முதலியவற்றைஅவன்மீது நடத்துவதும், அவனைப் புரட்டிப்புரட்டிப்பார்ப்பதும், தலைமயிரைப்பிடித்து இழுப்பதும், ஜலத்தைக்காதிற்கொட்டுவதும்முதலியனவாகப் பலவகைஉபாயங்களைச்செய்துபார்த்தும் அந்தக் கும்பகர்ணன் கண்விழித்திலன். பெருஞ்சினத்துடன் அவ்வரக்கர்கள் இறுதியாக ஆயிரம்யானைகளை அந்தக்கும்பகர்ணன்மீது ஓட்டிமிதிப்பித்தனர். சிறிதுதுயிலுணர்ந்து அகாலத்திலெழுப்புவதனால் அச்சங்கொண்டு சோம்பல்முறித்து, கும்பகர்ணன், அருகேயிருந்தவர் மதுமாமிசாதிகளைமிகுதியாகத்தர அவற்றையுண்டு பின்பு தன்னையெழுப்பிய காரணத்தை வினவினான். யூபாக்ஷனென்பவன் செய்திதெரிவிக்க, இப்பொழுதேபகைவெல்வேனென்றுஅந்தக்கும்பகர்ணன்செல்லத்தொடங்க, மகோதரன் 'ராக்ஷஸராசனிடத்துச்சென்று அவன்சொல்வதைக்கேட்டுப்பிறகுசெல்லலாம்' என்றனன்.

கும்பகர்ணனும் உடன்பட்டு ஸ்நானஞ்செய்து அலங்கரித்துக்கொண்டு இரண்டாயிரங்கட்குடங்களைப்பருகிவிட்டு அண்ணனிடத்துக்குப் பயணமாயினன். ராஜமார்க்கத்திற்செல்லும் அவனைக் கண்டு வானரர்கள் அஞ்சிக்கலங்கி ஆங்காங்குஓடலாயினர். ஸ்ரீராமன் பெருந்தோற்றமுடைய அந்தக்கும்பகர்ணனைக்கண்டு, விபீஷணனை வினவி அவனுடையசெய்தியையெல்லாமுணர்ந்தனன். பின்பு ஸ்ரீராமன் சேனாபதியான நீலனை நோக்கி, போருக்குப் பலவகை ஆயுதங்களையும் மலை மரம் முதலியவற்றையும் நிரப்பிவைத்துக்கொண்டு சேனைகளை அணிவகுத்து ஜாக்கிரதையாக இருக்கும்படியேவினன். இது நிற்க:

கும்பகர்ணன் இராவணனையடைந்துவணங்கிப் பீடத்திலமர்ந்து 'தூங்கும் என்னை எழுப்பக் காரணம்என்?' என்று வினவினான். இராவணன் இராம

பிரானால் நேரிட்ட துயரத்தையெடுத்து விரிவாகச்சொல்லி 'இத்துயரம் உன்னால்தான் ஒழியவேண்டும்' என்றனன். அதுகேட்ட கும்பகர்ணன் முன்னமே சீதையைவிட்டிடவேணுமென்று சொன்னதைக் கேளாமைபற்றியும் துர்மந்திரிகளின்பேச்சைக்கேட்டு அரசநீதிநூலுக்கு மாறாகநடந்ததுகுறித்தும் வெறுத்துக்கூற, இராவணன் கும்பகர்ணன்மீதுசினந்து நிஷ்டூரமாகக்கூறினான். கும்பகர்ணன்வார்த்தையைக் கேட்ட மகோதரன், நீதிநூல்கட்டுக்கு அடங்காது, அந்தக்கும்பகர்ணன்கூறியவற்றைக் கண்டித்து, 'மாயையால் இராமனை நாங்கள்கொன்றோமென்பித்துச் சீதையை வசப்படுத்துவதே இப்போது செய்யவேண்டிய செயல்' என்றனன்.

கும்பகர்ணன் அம்மகோதரன்கூறியதைக் கண்டித்துத் தான் ஒருவனே பகைவெல்வதாகஉறுதிகூறித் தனியே செல்லத்தொடங்க, இராவணன் சேனைகளுடன்செல்லுமாறு படைகளை யனுப்பினன். கும்பகர்ணன் போர்க்களங்குறுகிப் போர்செய்தலும் வானரர்கள் அஞ்சியோடத்தொடங்க, அங்கதன் பலபடியாகக்கூறி அவ்வானரர்களைப் போகவொட்டாமல் நிறுத்தினான். வானரர்கள் வெகுமும்முரமாகப்பொரலாயினர்: கும்பகர்ணன் தன் தண்டாயுதத்தால் தாக்கிக்கொல்லுவதும் சிலவானரர்களைக் கையினாற்பற்றிப் பட்சிப்பதுமாகக் கடும்போர் புரிந்தான். அப்போது அநுமான் பர்வதங்களைக்கொண்டு போர்புரிந்து, கும்பகர்ணன் தன்சூலத்தால் மார்பிற்பிளக்க உயிரொடுங்கிநின்றான். வானரர்கள்அஞ்சியோடுகையில், நீலன், சேனைகளைநிலைநிறுத்திப் பொரலாயினன். இவனோடு ருஷபன் சரபன் கவாட்சன் கந்தமாதனன் என்பவர்களும், மலைகளையும் மரங்களையுங் கொண்டு எதிர்த்துத் தோற்றனர். பின்னும் வானரமுக்யர்கள் விடாது அவன்மேல்ஏறி அவனைப்பல்லாற் கடிப்பதும் நகங்களாற்பீறுவதும் முட்டியாற்குத்துவதுமாக இம்சித்தனர். கும்பகர்ணன் அவர்களைப்பிடித்து வாயிற்கொள்ள, அவ்வானரர்கள் காதின்வழியாய் வெளிப்படலாயினர். அதுநோக்கிய அரக்கன் வானரர்களை முறித்து உண்ண, வானரர் வெருவி நிலைகெட்டோடி ஸ்ரீராமனைச் சரணமடைந்தனர். அப்பால் அங்கதன் கும்பகர்ணனை வலிகுலையச்செய்து இறுதியில் அக்கும்பகர்ணனால் தாக்கப்பெற்று மூர்ச்சையடைந்தான். பிறகு கும்பகர்ணன் சூலத்தைக் கையிற்கொண்டு சுக்கிரீவன்மேற் சென்றனன். இருவர்க்கும் நெருக்கமாகப் போர் நிகழ்கையில், சூலத்தைச் சுக்கிரீவன்மேலெறிய, ஆயிரம்பாரம்நிறையுள்ள அந்தச்சூலாயுதத்தை அருகேயிருந்த அநுமான் சுக்கிரீவன்மேல்தாக்காமற் பற்றி முறித்துப் போகட்டனன். சூலம் முறிந்திடவே, கும்பகர்ணன் மலையைப் பறித்துச் சுக்ரீவன்மேலெறிய, தாக்குண்ட சுக்கிரீவன் மூர்ச்சையடைந்தனன். அப்போது அந்தக்கும்பகர்ணன் சுக்கிரீவனையெடுத்துக்கொண்டுபோகலாயினன். அதுகண்ட அநுமான், 'சுக்கிரீவனை மீட்பதா?' என்று ஆலோசித்து, தான் விடுவிப்பது தலைவனுடைய மேன்மைக்கு இழுக்காமென்றும் சுக்கிரீவனே தன்னை விடுவித்துக்கொள்ள வல்லவனென்றும் நிச்சயித்து, வானரர்களைத் தேற்றிக்கொண்டிருந்தான்.

ராஜமார்க்கத்திற் கும்பகர்ணனுக்குநிகழ்ந்த சைத்யோபசாரங்களினால் மூர்ச்சைதெளிந்து சுக்கிரீவன் ஆலோசித்து அவ்வரக்கனுடையகாதுகளைப் பீறியும் மூக்கைக்கடித்துக்கொய்தும் தோள் வயிறு கபோலம்என்றஇவற்றின் பக்கங்களைப் பிளந்தும்நின்றான். அதுகண்டுசினந்து அரக்கன் சுக்கிரீவனைத் தரையிலிட்டுத் துவைத்தான். சுக்கிரீவன் அதனைப் பொருட்படுத்தாமல் வானத்திற் கிளம்பி ஸ்ரீராமனைச் சேர்ந்திட்டான்.

கும்பகர்ணன் மீண்டு இரணகளத்திற்புகுந்து வெறிகொண்டு வானரரைப் பட்சித்தவண்ணம் தொடர்ந்தோட, இலட்சுமணன் அம்பெய்தனன். அதனைப்பொருட்படுத்தாமல் அவ்வரக்கன் இராமனைக் கிட்டுமாறு ஓட, ஸ்ரீராமன் ரௌத்ராஸ்திரத்தை விடுத்தனன். அதனால்அவ்வரக்கன் மெய்ம்மறந்துபரவசனானான். பின்னர்த்தேறி அரக்கன் வானரர்முதலியோரைப் பட்சிக்கத்தொடங்க, 'வானரர்முதலியோர் இவனைக்குறுக்கிட்டு இவன்மீது எதிக்கொள்ளின் அப்பாரத்தைப் பொறுக்கமுடியாமல் கீழ்விழுந்திடுவான்' என்று இலட்சுமணன் ஆலோசனைகூற, அங்ஙனமே வானரர்முதலியோர் எதிக்கொள்ள யாவரையும் அரக்கன் உதறித்தள்ளிவிட்டு வானரர்களைப்பட்சித்தவண்ணம் ஸ்ரீராமனைக் கிட்டலாயினன். ஸ்ரீராமன் கடும்போர்புரிந்து அஸ்திரங்களினால் அவ்வரக்கனது கால்களையும் கைகளையும் ஒவ்வொன்றாக அறுத்துவீழ்த்து, இறுதியாக வானவரெல்லாம் மகிழ்ந்து வாழ்த்த அவ்வரக்கனது சிரத்தையும் கொய்துவீழ்த்தினன். கும்பகர்ணன் இறந்தொழிந்ததைக்கேட்டறிந்த இராவணன் பலபடியாகப் புலம்பி வருத்தந்தாங்கமாட்டாது மூர்ச்சித்தனன்.

கும்பகர்ணன்வதைப்படலம் முற்றிற்று.

---

## ௧௬-ஆவது மாயாசனகப்படலம்.

(இராவணன் சீதையை இணக்குவிக்கக்கருதித் தாராலோசனைசெய்தபின் தன்வேண்டுகோளின்படி மகோதரன்) மாயையினாலுண்டாக்கிய சனகனைச் சீதைக்குக்காட்டியதைத் தெரிவிக்கும் படலமென்க.

கும்பகர்ணன் இராமனாதியரோடு போர்விளைக்கையில், நகரத்திலிருந்த இராவணன் சீதையைப்பெறும்வண்ணம் உபாயங்கூறுமாறு மகோதரனைக்கேட்க, மகோதரன் ஆலோசனைகூற, அம்மகோதரனுடைய மந்திராலோசனையின்படி செய்யச்சொல்லித் தான் சீதையிருக்குமிடஞ்சென்று தன்குறைகூறியிரக்க, சீதை அவ்விராவணனைத் துரும்பாகக் கருதி யிகழ, அதற்கு இராவணன் 'கடலைக்கடந்து இராமன் குரங்குச்சேனையுடன் இலங்கை வந்திட்டானென்று செருக்குக்கொள்ளாதே; அயோத்திவீரரையெல்லாம் கொன்றுவரும்படி வீரரை யேவியுள்ளேன். சனகனாகிய உன்தந்தைமீதும் வீரரையனுப்பியுள்ளேன்' என்று அச்சமுறுத்த, அப்போது மகோதரன் மாயாசனகனைப் பற்றிக்கொணர, அவனைக் கண்டு சீதை பிரலாபிக்க, இராவணன் 'இனியேனும் என்கருத்துக்கு இணங்குவாயாயின் எனது அரசச்செல்வத்தையெல்

லாம் இந்தச்சனகனுக்கு அளிப்பேன்' என்றுகூறிவேண்ட, அதுகேட்டசீதை இராவணனைக் கடிந்துகூற, இராவணன் சினங்கொண்டு சீதைமீதுசெல்ல, மகோதரன் விலக்கி 'தந்தைகூறினால் இவள் இசைவாள்' என்ன, பின்பு அவ்விராவணன் மாயாசனகனைக்கொண்டு சீதைக்குச் சிலவார்த்தைகூறுவித்தான். அதுகேட்டசீதை அந்தச்சனகனை ஐயுற்றுச் சினங்கொண்டு வெறுத்துக்கூற, இராவணன், 'இவன் சனகனல்லவா? இருக்கட்டும்' என்று அந்தச் சனகனைக் கொல்லச்செல்ல, மகோதரன் விலக்கினனாக, அச்சமயத்தில் இராமன் கும்பகர்ணனைக்கொன்றதனால் மகிழ்ந்து வானவர்களும்வானரர்களுஞ்செய்த பேரொலி ஆண்டுச்செவிபிறப்பட, அதுகேட்டு இராவணன் கலங்கியிருக்கையில் தூதர்வந்து கும்பகர்ணனது மரணத்தைத் தெரிவித்தனர். அதுகேட்ட இராவணன் பிரலாபித்துச் சினத்துடனே அப்பாற்செல்ல, மகோதரனும் சனகனை வேறோர்சிறையில்வையுங்களென்றுசொல்லி வேறோர் திசையாகச் செல்ல, அப்பால் சீதைக்கு மாயாசனகன்வரலாற்றைக் கூறித் திரிசடை தெளிவிக்க, சீதை துயர்நீங்கி மகிழ்ந்திருந்தமை இப்படலத்திற் கூறப்படுகின்றது.

வேறு.

க.—கவிக்கூற்று: கீழ்க்கூறியதனையும் இனிச்சொல்லப்போவதையும் இன்னவெனத் தெரிவித்தல்.

அவ்வழிக் கருணன் செய்த [1]பேரெழி லாண்மை யெல்லாஞ்
செவ்வழி [2]யுணர்வு தோன்றச் செப்பினஞ் சிறுமை தீரா
வெவ்வழி [3]மாயை யொன்று வேறிருந் தெண்ணி வேட்கை
இவ்வழி யிலங்கை வேந்த னியற்றிய தியம்ப [4]லுற்றும்.

(இ - ள்.) அந்தயுத்தகளத்தில்நேர்மையானவழியிலே[தருமமார்க்கமாக] கும்பகர்ணன்செய்த மிகவும்அழகிய பராக்கிரமங்களையெல்லாம் உணர்விலே விளங்குமாறு (கீழ்ப்படலத்திற்) கூறினோம்; இவ்விடத்தில் [அசோகவனிகையில்] இலங்கைவேந்தனான இராவணன்,—(பிராட்டியினிடமுள்ள) காதலினாலே கொடுமையான [அதருமமான] வழியாகிய சிறுமையினின்றுநீங்காத ஒப்பற்றமாயையை வேறாகத் தனியேயிருந்து ஆலோசித்து இயற்றியதை (இப்படலத்திற்) கூறத்தொடங்கினோம்; (எ - று.)

இராவணன் மாயையினால் வஞ்சிக்கமுயல்வதை இனிக் கூறப்போவதால், கும்பகர்ணனது போர்த்தொழில் அப்படிப்பட்டதன்று என்பார் 'செவ்வழிப்பேரெழிலாண்மை' எனப்பட்டது. கருணன் = கும்பகருணன்: ''நாமைகதேசேநாமக்ரஹணம். செவ்வழி - நன்றாகவுமாம். மேற்பாடலில் ''சிறுமையிற்றீருஞ் செய்கை யாதெனவுணர்த்தி'' என்கின்றாதலின், அதற்கு ஏற்பக் கவி, இந்தமாயையால் சிறுமைதீராது என்ற குறிப்புத்தோன்ற, 'சிறுமைதீரா மாயை' என்றாரென்னலாம். பி-ம்:—[1]போர். [2]உணர்ந்து. [3]மாயையாலே. [4]உற்றான்.
(கருஅஉ)

௨.—ஆலோசனைமண்டபத்துக்குவந்த மகோதரனை நோக்கி இராவணன் 'சீதையை அடையும் உபாயங் கூறுக' எனல்.

மாதிரங் கடந்த தோளான் மந்திர விருக்கை [1]வந்த
மோதரா னென்னு நாமத் தொருவனை முறையி னோக்கிச்
சீதையை யெய்தி [2]யுள்ளந் [3]சிறுமையிற் றீருஞ் [4]செய்கை
[5]யாதெனக் [6]குணர்த்தி யின்றென் னின்னுயி ரீதி யென்றான்.

(இ - ள்.) திக்குக்களையெல்லாம் வென்ற தோள்வலியையுடையவனான இராவணன்,--ஆலோசனைமண்டபத்துக்கு வந்துசேர்ந்த மகோதரனென்னும் பேரையுடையவனான ஒப்பற்றவனை முறையின் நோக்கி, '(யான்),சீதையைப் பெற்று, (என்) மனத்துன்பத்தினின்று தீரும்உபாயம் எதுவோ (அதை எனக்குத்) தெரிவித்து இன்று எனது இனியஉயிரைத் தருவாய்' என்று வேண்டினான்; (எ - று.)—மோதரான் = மஹோதரன்.

மகோதரனால் தன்னுயிர்பெறவேண்டுமெனக் கருதுகின்றானாதலால், இராவணன் தன்னைத் தாழ்த்தி,இழிந்தோன்கூறவேண்டியசொல்லால் 'ஈதி' என்கின்றானென நயங் காண்க:"ஈயென்கிளவி யிழிந்தோன்கூற்றே"என்றார், தொல்காப்பியனார். துன்பத்தினால் மனம் குன்றுமாதலின், அதனை 'சிறுமை' என்றார்: காரணத்தைக் காரியத்தினாற் கூறிய உபசாரவழக்கு.பி-ம்:—[1]வந்து, புக்கு. [2]உள்ளச், உள்ள.[3]சிறுமையை.[4]வண்ணம்.[5]நீதியை.[6]உரைத்துநீயேகின்.

௩.—மகோதரன் சீதை உன்னை மணக்குமாறு ஒருமாயச்செயல் புரிவேனெனல்.

உணர்த்துவ [1]னின்றே நன்றோ ருபாயத்தி னுறுதி மாயை
புணர்த்துவன் சீதை தானே புணர்வதோர் வினயம் [2]போற்றிக்
கணத்து[3]வன் சனகன் றன்னைக் கட்டினன் கொணர்ந்து [4]காட்ட
மணத்தொழில் [5]புரியு மன்றே மருத்தனை யுருவ மாற்றி.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) (அந்தமகோதரன்,—இராவணனைநோக்கி), 'இன்றே நல்லதாகிய ஒப்பற்ற உபாயத்தினாலே (உனக்கு) உறுதியாவதொருபொருளைச் சொல்லுவேன்; சீதை தானே (உன்னைச்) சேர்வதாகிய மாயையை,(யுக்தியாற்)செய்வேன்: ஒப்பற்றவஞ்சனையை யாதரித்து, மருத்தனென்பவனை ஒருநொடிப்போதில் (அரக்கவுருவம்நீங்கிச்) சனகனுருவமாக மாறச்செய்து (அந்த) மாயாசனகனைக் கட்டிக்கொணர்ந்து சீதைக்குங் காட்ட, (அவனை அந்தக்கட்டினின்றுவிடுவிக்குமாறு சீதையானவள் உன்னைக்) கலியாணம்புரியுஞ்செயலை விரும்புவாளன்றோ? (எ - று.)

மருத்தனென்பவனைச் சனகராசனுருவங்கொள்ளும்படிசெய்து அவனைக் கட்டிச் சீதைக்குமுன் கொண்டுவருவேன்: அங்ஙனம் கட்டுப்பட்ட தன்தந்தையின் உருவத்தைச் சீதை காண்பாளாயின் 'நமதுதந்தை கட்டுப்பட்டுவிட்டானே! இவன் உயிர்க்கும் தீங்குநேருமோ?' என்று அஞ்சி இவனை எவ்வகையாலாவது விடுவிக்கவேணுமென்ற நினைப்பினால் உன்னைத் தானே மணப்பள்'

என, மகோதரன் தான் செய்யக்கருதிய உபாயத்தை இராவணனிடம் விரித்துக் கூறுகின்றானென்க. பி-ம்:—1இன்று, அன்றே. 2போக்கி. 3உயிர். 4காட்டின். 5முடியும். (கடுஅச)

ச.—மகோதரனைப்பாராட்டிப் பின் ராவணன் சீதையிருக்குமிடம் போதல்.

எனவவ 1னுரைத்த லோடு மெழுந்துமார் 2பிறுகப் புல்லி
அனையவன் றன்னைக் கொண்டாங் கணுகுதி யன்ப 3வென்னாப்
புனைமலர்ச் 4சரளச் சோலை நோக்கின னெழுந்து போனான்
5வினைகளைக் கற்பின் வென்ற விளக்கினை வெருவல் காண்பான்.

(இ - ள்.) என்று அந்தமகோதரன் சொன்னவளவில்,—(இராவணன்), (அந்தமகோதரனிடத்துப் பேருவப்புக்கொண்டு தனது இருப்பிடத்தினின்று) எழுந்து (அம்மகோதரனை)மார்பினால் இறுகத்தழுவி, (அவனைநோக்கி), 'அன்ப! அந்தமருத்தனை (மாயாசனகவேஷத்துடனே) அந்தஅசோகவனிகையினிடம்(கட்டிக்) கொண்டுவந்துநெருங்குவாய்' என்றுசொல்லிவிட்டு,—(எதிராளிகளின்) தீயசெயல்களை(த் தனது)கற்பினால் பொருட்படுத்தாது இருந்த குலவிளக்காகிய சீதாபிராட்டியை அச்சுறுத்தும்பொருட்டு, அலங்கரிக்கின்ற மலர்களைக்கொண்ட இனிய அசோகவனிகையென்னுஞ் சோலையை (அடையக்)கருதியவனாய், (அந்தமந்திராலோசனைச்சபையினின்று)எழுந்துபோனான்.

தன்கருத்தை முற்றுவிக்குமாறு உபாயங் கூறியமாத்திரத்தி லுண்டான மனமகிழ்ச்சியினால், இராவணன் இருக்கைவிட்டெழுந்து மகோதரனை மார்பிறுகப்புல்லினன். சீதாபிராட்டி பெருங்கற்பினளாயிருத்தலினால்தான், அவட்கு இராவணாதியரால் யாதொருதீங்குஞ் செய்யஇயலவில்லையென்பது, 'வினைகளைக் கற்பின்வென்ற விளக்கு' என்பதன்பொருள். ஸரலம் - வடசொல். பி - ம்:—1இசைத்தலோடும். 2அழுந்தப். 3என்று, என்றான். 4கனகச், அசோகச், தாளச், கானச். 5வினையினை. (கடுஅடு)

ரு.—இரண்டுகவிகள் - இராவணன் அசோகவனிகையைநோக்கிச் சென்றதன் வருணனை.

மின்னொளிர் மகுட கோடி 1யிளவெயில் 2விரித்து வீசத்
துன்னிருள் 3ளிரிந்து தோற்பச் சுடர்மணித் தோளிற் றோன்றும்
பொன்னரி மாலை நீல 4வரையின்வீ ழருவி 5பொற்ப
நன்னெடுங் களிற6மா லியானை 7நாணுற நடந்து 8வந்தான்.

(இ - ள்.) (இராவணன்), ஒளிவிளங்குகின்ற கிரீடங்களின் வரிசை இளவெயில்போன்றவொளியைப் பரப்பி (எங்கும்) வீசுதலினால், நெருங்கியஇருளானது தோற்று நிலைகெட்டோடவும், ஒளியையுடைய இரத்தினாபரணங்களையணிந்த தோளின்மீது தோன்றும் பொன்னரிமாலை நீலமலையினின்று வீழ்கின்ற நீரருவியைப்போல் இனிதுவிளங்கவும், அழகிய உயர்ந்த மதமயக்கமுள்ள யானை நாணமடையும்படி நடந்துவந்தான்; (எ - று.)

சீதையுள்ள அசோகவனிகையைநோக்கி இராவணன் மதயானைபோல வெகுகம்பீரமான தோற்றமுண்டாகும்படி நடந்துவந்தானென்க. அங்ஙனம் நடந்து வரும்போது அவ்விராவணனது பத்துக்கிரீடங்களின்ஒளியால் இருள் பரந்தோட, பொன்னரிமாலை அவ்விராவணனது தோளிலே நீலமணிக்குன்றில் நீரருவிபோல விளங்கித்தோன்றிற்றென்றார். சுடர்மணி - தோளிலணியும் அணிக்கு, வினைத்தொகையன்மொழி. பொன்னரிமாலை - பூமாலையைப் போலப்பொன்னாற்செய்த ஆபரணவிசேடமென்பர். இரிந்துதோற்ப-தோற்றுஇரிய: விகுதிபிரித்துக்கூட்டல். பி - ம்:—[1]வெயிலொளி, நெடுவெயில். [2]எரித்து, விரிந்து. [3]துரந்ததெய்வச், துரந்துதேயச், இரிந்துபாறச். [4]மலையின். [5]போர்ப்ப. [6]நல். [7]நாணுவ. [8]சென்றான். (கருஅகூ)

ளா. விளக்கொரு [1]விளக்கந் தாங்கி [2]மின்னணி யரவிற் சுற்றி
இளைப்புறா [3]மருங்கு நோவ முலைசுமந் தியங்கு [4]மென்ன
முளைப்பிறை நெற்றி வான மடந்தையர் முன்னும் பின்னும்
வளைத்தனர் [5]வந்து சூழ வந்திகர் வாழ்த்த வந்தான்.

(இ - ள்.) 'விளக்கு ஒருவிளக்கைத் தாங்கிக்கொண்டு மின்னல்போன்ற அணியை [மேகலையை] அரவிலேசுற்றி, இளைப்புப்பொருந்திய இடை நோகும்படி முலையைச்சுமந்துகொண்டு சஞ்சரிக்கும்' என்று வருணித்துக்கூறுமாறும் முளைக்கின்றபிறைச்சந்திரனையொத்த நெற்றியையுடைய தேவமாதர் (தன்) முன்புறத்தும் பின்புறத்தும்வந்து வளைத்துக்கொண்டுசூழவும் வந்திகள்வாழ்த்தவும் (அவ்விராவணன்) வந்தான்; (எ - று.)

வானமங்கையர் விளக்கையேந்தி இராவணனை முன்புறத்தும் பின்புறத்துஞ் சூழ்ந்துநின்றாரென்க. இடைக்கு அரவை உவமைகூறுவது தமிழ்க்கவிகளின்மரபுஆதலால், இடையைத் தாத்ரூப்யரூபகமாக'அரவு'என்றேகூறினார். பூண்ட அணிகலங்கள் விளக்குப்போலு மென்பதுபற்றி, விளக்குந்தாங்கி என்றாரென்றலுமுண்டு. பி-ம்:—[1]விளக்கை. [2]மின்னணிந்தரவுசுற்ற, மின்னணிகலாபஞ்சுற்றி. [3]மருங்குநோவ. [4]ஆபோல். [5]பரந்து. (கருஅஎ)

எ.—சீதையை இராவணன் காணுதல்.

பண்களாற் கிளவி செய்து பவளத்தா [1]லதர மாக்கிப்
பெண்க[2]ளா ளார்க்கு ணல்ல வுறுப்பெலாம் [3]பெருக்கி யீட்டி
எண்களா [4]லளவா மானக் குணங்தொகுத் தியற்றி னாளைக்
கண்களா [5]லரக்கன் கண்டா னவளையோர் கலக்கங் காண்பான்.

(இ - ள்.) (வாயிலிருந்துவரும்) பேச்சுக்களை இராகத்தாற்செய்தும், உதடுகளைப் பவழத்தாற்செய்தும், பெண்ணாய்ப்பிறந்தவர்களுள் (அமைந்த) அழகியஉறுப்புக்களையெல்லாம் மிகுதியாகச்சம்பாதித்து உண்டாக்கியும், இலக்கத்தைச்சொல்லி எண்ணமுடியாத பேரளவுள்ள குணங்களை ஒன்றுகூடச்செய்தும் இயற்றப்பெற்றவளான சீதையை, இராவணன், (தனது கொடுங்) கண்களினாற்கண்டான்; (எதற்காகஎனில்), அந்தச்சீதையை ஒருபெருங்கலக்கத்தைக் காணச்செய்வதற்காக; (எ - று.)

இராவணன் இப்போது சீதையைக் காண்பது, அந்தச்சீதையை மனங் கலங்கச்செய்வதற்காகவேயென்பதாம். பெருந்துஷ்டனான இராவணனுடைய இருபதுகண்கள் பலும்போது அந்தக் கண்ணூற்றினாற் சீதைக்குக் கலக்கம் விளைவது முறைமையே யென்க. 'கண்களால்' என்றார், கொடுங்கண் என்பதைக் குறிப்பித்தற்காக. கண்டான்...காண்பான் - தொடைமுரண். சிலபிரதிகளில் இச்செய்யுள் "எனவவன்"(௬)என்பதன்பின் உள்ளது. பி - ம்:—1 தாமமாக்கி. 2ஆனர்க்கு. 3பெருகவீட்டி, பிறக்கியீட்டி, பெருக்கியீட்டி. 4அளவில். 5 ஆரக்.

அ.—இராவணன் சீதைக்குமுன் பீடத்திருந்து கூறத்தொடங்குதல்.

இட்டதொ [1]ரிரண பீடத் [2]தமரரை யிருக்கை நின்றுங்
கட்டதோட் கானஞ் சுற்றக் கழ[3]லொன்று [4]கவானிற் றேன்ற
வட்ட[5]வெண் கவிகை [6]யோங்கச் சாமரை மருங்கு வீசத்
[7]தொட்டதோர் [8]சுரிகை யாள [9]னிருந்தன னினைய [10]சொன்[ன்].

(இ-ள்.) போடப்பட்டிருந்த ஓர்பொன்மயமான பீடத்திலே தேவர்களை இருப்பிடத்தினின்று அப்பாற்படுத்திய தோள்களின்தொகுதி சூழ்ந்திருக்கவும், ஒருபாதம் துடையிலே காணப்படவும்,—வட்டமாயுள்ள வெண்ணிறக்குடை தலைமீது பிடிக்கப்படவும்,—சாமரைகள்(இரு) புறத்திலும் வீசப்படவும்,—(இடையிற்) கட்டியதாகிய ஒருகத்தியையுடையவனாய், (இராவணன்), இருந்து இவ்வார்த்தைகளைக் கூறுபவனானான்; (எ-று.)—இராவணன் கூறுவனவற்றை மேலிற்கவிகளிற் காண்க.

இரணபீடத்து இருந்தனன் சொன்னான் என இயையும். இராவணன் சாமரை இருமருங்குவீசக் காலின்மீது காலை யிட்டவண்ணம், சீதைக்குமுன் னேயிட்ட பொன்மயமானதொருபீடத்திலேயிருந்து சொல்லலானா னென்க. இரணம்-ஹிரணமென்ற வடசொல்லின்விகாரம். கானம் - தொகுதியென்ற பொருளில்வந்தது: "தாமரைக்காடு" என்றதுபோல. பி-ம்:—1 அரிண, இரத்தின. 2அமரர்தமிருக்கைவென்று. 3ஒன்றேர். 4காலிற்காண. 5ஒண். 6ஏந்தச். 7தொட்டவன். 8சுரிகைவாளன், சுரிகைவாளி. 9இருந்தவன். 10சொல்வான்.

கூ.—எட்டுக்கவிகள்-இராவணன் சீதையினிடம் கூறியதைத் தெரிவிக்கும்.

என்றுதா னடிய னேனுக் கிரங்குவ திந்து வென்பான்
என்றுதா னிரவி யோடும் வேற்றுமை [1]தெரிவ தென்பால்
என்றுதா [2]னனங்க வாளிக் கிலக்கிலா திருத்த லாவது
என்றுதா [3]னுற்ற தெல்லா மியம்புவா [4]னெடுத்துக் கொண்டா[ன்].

(இ - ள்.) 'அடியவனான என்நிமித்தம் (நீர் மனத்தில்) இரக்கங்கொள்வது என்றுதான்? என்னிடத்துச் சூரியனுடனே சந்திரன் வேறுபாடுஅறியப்படுவது என்றுதான்? (நான்), மன்மதனுடைய அம்புகட்கு இலக்குஆகாமல் இருக்கமுடிவது என்றுதான்?' என்று தான் அடைந்துள்ளவருத்தங்களையெல்லாம்சொல்லும்படி, (இராவணன்), எடுத்துக்கொண்டான்; (எ-று.)—இராவணன் தன்வருத்தங்களைச் சொல்வதை, மேல் ஆறுகவிகளிற் காண்க.

காமோத்தீபகப்பொருள்களுள்ஒன்றுஆதலால்,பிராட்டியினிடம் மோகங் கொண்ட இராவணனுக்கு இந்துவென்பான் தழற்கொழுந்துபோன்று சுடுவதுபற்றி, நீ இரங்கினுயானுல் சந்திரன் அப்போதுதான் குளிர்ந்து சூரியனை விடச் சந்திரன் வேறு என்று உணரலாயிருக்கு மென்பான் 'நீஎன்றுதான் அடியனேனுக்குஇரங்குவது - இந்துவென்பான் என்றுதான் இரவியோடும் வேற்றுமைதெரிவதுஎன்பால்?' என்கின்றான். உருவிலியான மன்மதன் கண்ணுக்குத்தெரியாமலேநின்று தாமரைமுதலிய மலரம்புகளைத்தொடுத்து ஆடவர்க்கும் மகளிர்க்கும் ஆசைநோய்விளைப்பனென்று கூறுதல், மரபு. 'தான்' நான்கனுள்முதல்மூன்றடிகளில்வருபவை-அசை: நான்காமடியில்வருவது-படர்க்கை யொருமைப்பெயர். பி-ம்:---1தெரிப்பது. 2அநங்கன். 3பட்டது. 4எழுந்து. ()

க0. வஞ்சனே னெனக்கு நானே மாதரார் 1வடிவு கொண்ட-
நஞ்சுதோ யமுத முண்பா னச்சினே னுளுந் 2தேய்ந்த
3நெஞ்சு4நே ரான தும்மை நினைப்புவிட் டாவி நீக்க
அஞ்சினே 5னடிய னேனு மடைக்கல மமுதின் வந்தீர்.

இதுமுதல் எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வஞ்சனாகிய யான் சுயமாகவே பெண்வடிவங்கொண்ட விஷம் படிந்த அமிருதத்தை யுண்பதற்கு விரும்பினேன்: நாள்தோறும் இளைத்து வருகின்ற (என்) மனமும் (இப்போதுசெருக்கிநீங்கி) நேர்மையையடைந்து விட்டது; உம்மை நினைப்பதைவிட்டிட்டு உயிர்நீக்குவதற்கு அஞ்சினேன்; அமுதின்வந்தீர்! அடியவனை நான் உமது அடைக்கலப்பொருளாவேன்.

மாதரைவிரும்புவது தவறு என்று உணர்ந்தும் அத்தீமையைச் செய்ய விரும்புவதனுல், 'வஞ்சனேன் எனக்கு நானே மாதரார்வடிவுகொண்ட நஞ்சுதோயமுதமுண்பானச்சினேன்' என்கின்றான். பிரிந்தநிலையில் பெருவருத்தத்தை விளைத்துச் சேர்ந்தநிலையில் பெருஞ்சுகத்தை விளைக்கு மென்ற கருத்தால், மாதராரை 'நஞ்சுதோயமுதம்' என்றும், மிக்க வருத்தத்திற்கு உள்ளாகாதபடி உம்மை மனத்தினுலும் எண்ணுதுவிட்டிடுவோமென்றால் அப்போது என்னுயிரே போகுமென்பான் 'உம்மை நினைப்புவிட்டுஆவிநீக்கஅஞ்சினேன்' என்றும் கூறுகின்றான். சீதை இலக்குமியினமிசமானவளென்பதை நம்பாதவனு யிருந்தும், 'அமுதின்வந்தீர்' என்றுவிளிப்பது,இலக்குமிபோன்ற பேரழகுடையவள் சீதையென்பதைக் காட்டும். நெஞ்சுநேரானதும்மைஎன்ற இடத்து, நேரானதான நெஞ்சையுடைய உம்மைஎன்று பொருளுரைப்பினுமாம். பி-ம்:—1வடிவம். 2தேய்ந்து, நாளும். 3நெஞ்சில். 4நேரானதும்மை, நேரானவும்மை, நேர்ந்தும்மைநாயேன், ஓர்ந்தும்மைநாயேன், நேர்ந்துண்மையாக. 5அஞ்சினேன். (கடுகக)

கக. தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர் தென்றல் 1தூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத் தோளை மெலிவித்தீர் வேனில் வேளை
ஆர்ப்பித்தீ ரென்னை யின்ன லறிவித்தீ ரமர ரச்சந்
தீர்ப்பித்தீ 2ரின்ன மென்னென் செய்வித்துத் 3தீர்தி ரம்மா.

(இ - ள்.) (எவர்க்குந்தோலாத என்னை நுமக்குத்) தோற்கும்படிசெய்தீர்; சந்திரனால் (என்)உடம்பைச் சுடுமாறுசெய்திட்டீர்; தென்றற்காற்றானது நீர்த்திவலையோடுவீச (அதனால் வெம்மையாகியஉடம்பை) வேர்க்குமாறுசெய்தீர்; வயிரம்போலுறுதியான (என்) தோள்களை மெலியச்செய்தீர்; வேனிலைத் துணைவனாகக்கொண்ட மன்மதனை, ஆர்ப்பாடஞ்செய்யுமாறு செய்திட்டீர்; (இதுவரையில் துன்பமென்பது இன்னதுஎன்று அறியாதிருந்த) என்னை, துன்பம் இன்னபடியிருக்குமென்று உணருமாறுசெய்திட்டீர்; தேவர்களை அச்சம் நீக்குவித்தீர்; இன்னம் என்னஎன்ன செய்வித்துத் தீர்வீரோ?(எ-று.) —அம்மா - வியப்பிடைச்சொல்: ஒருமகாவீரனைத் தனிமையுடனுள்ள ஒரு பெண் படுத்துவிக்கும் பாட்டைக் குறித்து வியந்தவாறு.

தன்னை 'நான் உன்னடைக்கலம்' என்று சொல்லுமாறு செய்வித்ததனால் 'தோற்பித்தீர்' என்றும், சந்திரன் காமோத்தீபகனாகஇருந்து வெதுப்புவதனால் 'மதிக்குமேனிசுடுவித்தீர்' என்றும், குளிர்தென்றலும் சந்திரன்போலவே வெம்மையுடையதாய் வீசுதலின் 'தென்றல்தூற்ற வேர்ப்பித்தீர்' என்றும், குன்றுபோல் ஓங்கியிருந்த தன்தோள்கள் மெலியப்பெறுவதால் 'வயிரத் தோளை மெலிவித்தீர்' என்றும், மன்மதன் உற்சாகங்கொண்டு தன்னம்புகளை யெய்யுமாறு ஆர்ப்பாடஞ்செய்வதால் 'வேனில்வேளை யார்ப்பித்தீர்' என்றும் இராவணன் கூறுகின்றான். 'செய்வித்துத்தீர்திர்' என்றஇடத்து, 'தீர்' என்றது - துணைவினையாகவந்தது: இனி, தனிச்சொல்லாகவேகொண்டு, என்னென் செய்வித்துத்தீர்திர் - என்னஎன்ன துன்பங்களை எனக்குவிளைவித்து (உமதுமனவைரம்)தீர்வீரோ?என்று உரைப்பினுமாம். பி-ம்:—[1]தூர்த்த.[2]இன்னுமென்ன. [3]தீர்த்திர். (கருகூஉ)

கஉ. பெண்ணெலா நீரே யாக்கிப் பேரெலா முமதே யாக்கிக்
கண்ணெலா நுங்க ளாக்கிக் காமவே ளென்னு நாமத்து
அண்ண[1]லெய் வானு மாக்கி [2]யைங்கணை யரியத் தக்க
புண்ணெலா [3]மெனக்கே யாக்கி விபரிதம் [4]புணர்த்தி விட்டீர்.

(இ - ள்.) (யான்விரும்பும்) பெண்களெல்லாம் நீரொருவரேயாகச்செய்தும், (யான்விரும்பிக் கூப்பிடுகிற) பெயர்களெல்லாம் உம்முடைய பெயரேயாகுமாறுசெய்தும், (என்னுடைய) இருபதுகண்களும் உம்மிடத்திலேயேயிருக்குமாறுசெய்தும், காமவேளென்று பேரைக்கொண்ட பெருமையிற்சிறந்தவனை(என்மீது மலரம்புகளைத்)தொடுப்பவனாகச் செய்தும், (அந்தமன்மதனது) பஞ்சபாணங்களால் (உடம்பை) அரிந்து உண்டாக்கக்கூடிய புண்களெல்லாம் எனக்கேயுண்டாகுமாறுசெய்தும் மாறுபாடானநிலையை (எனக்கு) உண்டாக்கிவிட்டீர்; (எ - று.)

உம்மிடத்துவிருப்பத்தினால் இவ்வாறு நான் வருந்தும்போது நீர் உபேட்சிக்கலாமோ? என்பது,குறிப்பு. உம்மொருவரிடத்து எனக்குவிருப்புள்ளதே தவிர வேறு எந்தமகளிரிடத்தும் எனக்கு விருப்பில்லையென்பது 'பெண்ணெலாம் நீரேயாக்கி' என்பதன் கருத்து. இராவணன் யாரைக்கூப்பிடவேணுமென்று நினைத்தாலும் இடைவிடாது சீதையைநினைத்துக்கொண்டிருத்தலால்

அவள் பேரே தன்வாயில் வருகின்றதென்பது,'பேரெலாமுமதேயாக்கி'என்பதன்பொருள். 'இப்போது மன்மதன் வேறொருவரிடத்துஞ்செல்லாது என்னொருவனையே யிலக்காகக்கொண்டு எய்கின்றானோ?' எனக் கருதுமாறுஉள்ளதுஎன்பது 'ஐங்கணையரியத்தக்க புண்ணெலா மெனக்கேயாக்கி' என்பதன் கருத்து. மகாவீரனான தன்னுடம்பெல்லாம் மன்மதன்கணையாற் புண்ணாக்கிவிட்டது மாறுபாடானசெய லாதலால் 'விபரீதம்புணர்த்துவிட்டீர்' என்றும், மகாவீரனானஎன்னையும் புண்படுத்தின அவனதுபெருமையே பெருமையென்றவியப்புத்தோன்ற, அவனை 'காமவேளென்னும் நாமத்தண்ணல்' என்றும் கூறுகிறான். ஐங்கணைகள்-தாமரைமலர் அசோகமலர் மாமலர் முல்லைமலர் குவளைமலர்என்பன. பி-ம்:—[1]எய்பவனும். [2]ஐங்கணைக்கு. [3]எமக்கே, எனதே. [4]புணர்த்து. (௧௫௯௩)

௯௩. ஈசனே [1]முதலா மற்றை மானிட ரிறுதி [2]யாருங்
கூசமூன் றுலகுங் [3]காக்குங் [4]கொற்றத்தேன் வீரக் கோட்டி
பேசுவா [5]ரொருவற் காவி தோற்றிலன் பெண்பால் வைத்த
ஆசைநோய் [6]கொன்ற [7]தென்னா வாண்மை[8]மா சுணா தன்றே.

(இ - ள்.) சிவபிரான்முதலாக மநுஷ்யர்வரையிலுமுள்ள யாவரும் அஞ்சும்படி, மூன்றுலகத்தையும் காக்கவல்ல வெற்றியையுடைய யான், வீரருடைய வரிசையில் பேசப்படுபவர் எவர்க்கும் உயிர்தோற்றேனில்லை;[வீரர் யாவரையும் எதிர்த்துவென்றேன் என்றபடி]:(அப்படிப்பட்ட என்னை), ஒரு பெண்ணிடத்திலேவைத்த ஆசையாகியபிணி கொன்றுவிட்டதென்றால்,(என்னுடைய) வீரத்தன்மையானது குற்றப்படாதல்லவா? (எ - று.)

பிறிதுறிப்புவகையால், 'ஆண்மை மாசுணாதன்றே' என்ற தொடர் - ஆண்மை மாசுண்ணவேயுண்ணும் என்றபொருளைத் தந்தது. ஆசைநோய் கொல்லுதல்-ஆசைநோய்வருத்துதல். "ஒண்ணுதற்கோஒ உடைந்ததேஞாட்பினுள், நண்ணாரு முட்குமென் பீடு" என்ற குறள், இங்குக் கருதத்தக்கது. பி - ம்:—[1]முதலினோர்கள். [2]ஆகக். [3]காத்த, கொண்ட. [4]தோற்றத்தென், கொற்றத்தோள். [5]ஒருவர்க்காக்கி, ஒருவராகத். [6]கொண்டேன். [7]என்றால் [8]மாசுண்ணுதோதான். (௧௫௯௪)

௯௪. [1]நோயினை நுகர [2]வேயு [3]நுணங்கிநின் றுணங்கு மாவி
நாயுயி ராகு மன்றே நாள்பல [4]கழிந்த காலைப்
பாயிர [5]முணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்த பத்தி
ஆயிர [6]மல்ல போன வையிரண் டென்பர் [7]பொய்யே.

(இ - ள்.) குறைந்துநின்று வாடுகின்ற (என்) உயிரானது காமநோயை அநுபவித்துக்கொண்டிருக்கையிலும், (இவ்வாறே) பலநாள் கழிந்தகாலத்தில் [பலநாள் கழியுமாயின்] நாயுயிரென்று (பலராலும்) இழித்துக்கூறப்படுமல்லவா? வரலாற்றுமுறையால் ஆராய்ந்தறிந்த நூலையுடையவர், காமத்திலே ஏற்படுத்திய (அவத்தையின்) வரிசை, பொய்யாகப் பத்து என்று கூறுவார்கள்; ஆயிரமுள்ளன என்று சொல்லவும்முடியாமல் அவற்றையும் அவை கடந்துள்ளன; (எ - று.)

நூலோர் மன்மதாவஸ்தை பத்து என்று கூறினரேயாயினும், நான் படுகின்றஅவஸ்தையை யுற்றுநோக்குமிடத்து அந்த மன்மதாவஸ்தை ஆயிரத்துக்குமேலும்உள்ளனபோல் தோன்றுகின்றன. இவ்வவஸ்தையுடனேபலநாள் உயிரோடிருத்தல்முடியாது என, தன்னிடத்துஇரங்கவேணுமென்றகுறிப்பிறல் தனக்குள்ளநிலையை இராவணன் கூறுகின்றானென்க. மரணத்தைக் குறிப்பிக்குமாறு பேசியிருத்தலால், சாக்காடுஎன்னும் அவத்தையைக் கூறியது, இச்செய்யுளென்னலாம். பாயிரம்-நூலின்வரலாறு.

ஆணே பெண்ணே ஒருத்தரை யொருத்தர் நேசிக்கும் நிலையில் தோன்றும் மன்மதாவத்தைகள் பத்தாகுமென்க: அவை "காட்சி வேட்கை யுள்ளுதல் மெலிதல், ஆக்கஞ்செப்பல் நாணுவரையிறத்தல், நோக்குவவெல்லாமவையேபோறல், மறத்தல் மயக்கம் சாக்காடென்ற, ஐயிரண்டவத்தையும்" என்று இலக்கணவிளக்கத்திலும், "காட்சி முதலாச் சாக்காடீறாக், காட்டிய பத்தும்" என்று அகப்பொருள்விளக்கச் சூத்திரத்திலும், "ஒத்தகிழவனுங் கிழத்தியுங் காண்ப," "வேட்கை யொருதலையுள்ளுதல் மெலிதல், ஆக்கஞ்செப்பல் நாணுவரையிறத்தல், நோக்குவவெல்லாமவையேபோறல், மறத்தல் மயக்கஞ்சாக்காடு" என்று தொல்காப்பியத்திலும் கூறப்பட்டிருத்தல் காண்க. இவற்றுள்-காட்சியாவது-ஆடவரும் மகளிரும் ஒருவரையொருவர் காணுதல்: வேட்கையாவது—கண்டபொருளைப் பெறவேண்டுமென்னும் உள்ள நிகழ்ச்சி: உள்ளுதலாவது-விரும்பியபொருளை இடைவிடாது நினைத்தல்: மெலிதலாவது-அங்ஙனம் நினைத்தலால் உடம்பு இளைத்தல்: ஆக்கஞ்செப்பலாவது-தன்னெஞ்சின்கண் வருத்தம்மிகுகின்றபடியைப் பிறர்க்குரைத்தலென்றுஒருசாராரும்; யாதாயினும் ஓரிடையூறுகேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக்கூறுதலென்று மற்றொருசாராரும் கூறுவர்: (வடமொழியிற்கூறியுள்ள மன்மதாவஸ்தைபத்தனோடு ஒப்பிட்டு ஊன்றிப்பார்க்குமிடத்து, வேட்கைசெலுத்திய பொருளின் குணத்தைப்பற்றி வாய்பிதற்றுதல் என்று இத்தொடர்க்குப் பொருள் கொள்ளலாமென்று தோன்றுகின்றது.) நாணுவரையிறத்தலாவது-நாணத்தினெல்லையைக்கடத்தல்: நோக்குவவெல்லாம் அவையேபோறலாவது-காணுமவையெல்லாம் விருப்பத்திற்குஇடனானபொருளின் உருப்பேபோலுதலென்று ஒருசாராரும், பிறர் தம்மைநோக்கிய நோக்கமெல்லாம் தம்மனத்து மறைந்துள்ள காமவொழுக்கத்தையறிந்து நோக்குகின்றாரெனத் திரியக்கோடலென்று மற்றொருசாராரும் கூறுவர்: மறத்தலாவது-தனக்கு உரியவிளையாட்டு முதலியசெயலை மறத்தல்: மயக்கமாவது-செய்திறனறியாது கையறுகை: சாக்காடாவது-மரணம்: மரணத்திற்கு முயலுதலென்றும், மரணத்திற்கு ஒத்த செயலைச்செய்தலென்றும் இதன்பொருளை விரிப்பர். வடமொழியில், சக்ஷுப்ரீதி மநஸ்ஸங்கம் ஸங்கல்பம் ஜாகரம் க்ருஶதை அரதிஹ்ரீத்யாகம் உந்மாதம் மூர்ச்சை மரணம் எனப் பத்து மன்மதாவஸ்தைகூறியுள்ளன இங்குக்கூறியவற்றில் அடங்குவதை யூன்றி யுணர்க: பிற்காலத்து அலங்காரநூலார் மன்மதாவஸ்தைபன்னிரண்டென்று கூறியுள்ளனர். பத்தி-வடசொல்.

பி-ம்:—1நோயிடை. 2நச்சி, நாளும். 3நுணாங்கும். 4கழித்த. 5உணர்ந்து, முதல, முதலா. 6அல்லவோதான். 7பொன்னே. (கருகரு)

கரு. அறந்தருஞ் செல்வ மன்னீ ரமுதினு மினியீ ரென்னைப்
பிறந்திலை னாக்க வந்தீர் பே1ரெழின் மானங் கொல்ல
2மறந்தன 3பெரிய போன 4வரமெனு மருந்து தன்னால்
இறந்திறந் 5துய்கின் றேன்யான் யாரிது தெரியு மீட்டார்.

(இ - ள்.) தருமத்தினாற்கொடுக்கப்பட்ட செல்வத்தையொத்தவரே! அமிருதத்தைக்காட்டிலும் இனிமைவாய்ந்தவரே! என்னைப்பிறவாதவன்போலச் செய்யவந்தவரே! (உம்முடைய) பேரழகானது (என்னுடைய) மானத்தைக் கெடுக்க, (யான்செய்த) பெருஞ்செயல்கள் மறந்துவிட்டன: யான், (உம்மிடத்திலுள்ள பெருவிருப்பத்தினால்) செத்தவன்போலப் பலமுறையாகியும், (நீர் அருள்புரிதலென்கிற) வரமாகிய மருந்தினாற் பிழைத்திருப்பவனாகின்றேன்; யார் இத்தன்மையை யறிதற்குஏற்ற தன்மையையுடையவர்? (எ-று.)

உம்மிடத்துவைத்துள்ள காதலால் இறக்கின்ற எனக்கு, நீர் தரும் வரமே உயிர்பிழைக்க ஏதுவாகும்: ஆகையால், என்னிடத்து நீர் மனமிரங்கியருள வேண்டு மென்று சொல்லி, இராவணன் தன்பேச்சை முடிக்கின்றானென்க. அவ்வாறு வரம் தரவேணுமென்பதற்காகவே, பிராட்டியைக் கொண்டாடுகின்றான். தனக்கு நேர்ந்துள்ள நிலைமையைக்கருதி, 'மானங்கொல்லப் பெரியமறந்தன போன' என்றது. அறந்தருஞ்செல்வம், அழியாதுநின்று இன்பமளித்தலில் உவமையாகும். தான் பிறந்ததற்குப் பயன் சீதையையணைதலே யென நினைக்கின்றானாதலால், அணையாதநிலையில் 'பிறந்திலனாக்கவந்தீர்' என்று பேசுகின்றான். பெரிய - குறிப்புவினையாலணையும்பெயர். போன-முற்று. 'உய்கின்றேன்'— இயல்பினால்வந்த காலவழுவமைதி. பி-ம்:-1எழிற்காமம், எழிற்காமன். 2மறந்தனன். 3என்னைத்தானே, உணர்வுநும்மை, பெரியோர்வந்து, பெரியோர்சொன்ன, போயபோன, பெரியபொன்னே. 4வருமெனும். 5உய்கின்றேனோ, உய்கின்றேனால். (கருகசு)

கசு. அந்தா 1முனிவரின் மேனா ளகலிகை யென்பாள் காதல்
இந்திர 2னுரத்தைப் 3புல்கி யெய்தின ளிழுக்குற் றாளோ
மந்திர மில்லை வேறோர் மருந்தில்லை மைய னோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வா யமுதலா லமுதச் சொல்லீர்.

(இ - ள்.) அமுதம்போன்ற சொல்லையுடையவரே! நடுவுநிலைமையோடு ஆராய்ந்துபார்த்தால், முற்காலத்தில் அகலிகையென்பவள் அன்போடு தேவேந்திரனது மார்பைப் புல்லி (இன்பத்தை) அடைந்தவள் தாழ்மையை யடைந்தாளோ? (என்னுடைய காம)மயக்கத்தாலாகிய (இந்த)நோயைப்போக்குதற்கு அழகிய குமுதமலர்போன்ற (நுமது) வாயமுதமல்லாமல் வேறோர்மருந்தில்லை; மந்திரமில்லை; (எ - று.)

முன்னிரண்டடிகள்-பரபுருஷனைக்கூடுவதனால் இழுக்குண்டாகாதென்பதை உதாரணமுகத்தால் விளக்கும். பின்னிரண்டடிகள், நீ எனக்கு இன்பந்

தந்தால் எனதுமையல்நோய் நீங்குமேயன்றி வேறுவழியால் நீங்காதென்பதைத் தெரிவிக்கும். பி-ம்:—[1]உணரான், உணரீர். [2]உணர்த்தப். [3]நல்கி. (கடுகஎ)

கஎ.—இராவணன் சீதையை நிலத்தில்வீழ்ந்து வணங்குதல்.

என் றுரைத் தெழுந்து [1]சென்றங் கிருபதென் [2]றுரைக்கு நீலக்
குன் றுரைத் தாலு நேராக் [3]குவவுத்தோ ணிலத்தைக் [4]கூட
மின்றிரைத் தருக்கன் றன்னை விரித்து[5]மீன் [6]றொக்க தொன்று
நின்[7]றிமைக் கின்ற தன்ன முடிபடி நெடிதின் வைத்தான்.

(இ-ள்.) என்று(இவ்வாறெல்லாஞ்)சொல்லி, (இராவணன்), அங்கு[சீதையினருகில்]எழுந்துபோய், இருபதென்றுசொல்லுகின்ற நீலநிறமுள்ளமலையை உவமையாகச்சொன்னாலும் (தமக்கு)ஒவ்வாதனவான திரண்ட தோள்கள் பூமியிற் சேர, மின்னலைச்சுருட்டி (அதன்மீது) சூரியன்தன்னை ஒளிபரப்புமாறு வைத்து நட்சத்திரங்களின் ஒருதிரள் நிலைத்துநின்று ஒளிவிடுகின்றதுபோன்ற கிரீடத்தைப் பூமியின்மீது வெகுகாலம் வைத்தான்; (எ - று.)

'வரமருளவேணும்' என்று வேண்டிய இராவணன் பிராட்டியைத் திருவுளமிரங்குமாறு பூமியில்விழுந்து வணங்கினனென்க. ஸாஷ்டாங்கமாகத் தரையில்வீழ்ந்து வணங்கும்போது கையும் கிரீடமும் பூமியிற்படுதலை 'குவவுத்தோணிலத்தைக்கூட,' 'முடிபடிநெடிதின்வைத்தான்' என்றார். 'முடிபடி நெடிதின்வைத்தான்' என்றமையால்-நீ இரங்குவேனென்றுவரமருளினால்தான் எழுந்திடுவேனென்று கருதுமாறு வெகுநேரம் வணங்கினபடியே கிடந்தான் இராவணனென்பது, பெறப்படும்: இவ்வாறுகிடத்தல் 'ப்ரணிபாதம்' எனப்படும். கிரீடம் தலைக்குச் சேரவளைந்திருத்தலால் 'மின்திரைத்து' என்றும், அக்கிரீடத்தினின்றுவெளிவரும் ஒளி சூரியனது வெயில்போன்றுவீசுதலால், 'அருக்கன்தன்னைவிரித்து' என்றும், கிரீடங்களிற்பதித்துள்ள இரத்தினங்களைக்காணுமிடத்து நட்சத்திரங்கள்போன்று சொலிப்பது தெரிதலால், 'மீன்றொக்கதொன்று நின்றிமைக்கின்றதன்ன' என்றும் கூறினர். தொக்கது-தொகுதி. பி-ம்:—[1]சென்றவ். [2]இசைத்த, இசைக்கும். [3]தோளெலாநிலத்துக். [4]கூட்டி. [5]பின், முன். [6]உகுத்தபோலும், தொகுத்துத்தோன்றி, தொகுத்தபோலும். [7]இமைக்கின்றவன்ன, இமைகின்றதென்ன, இமைக்கின்றதன்பொன், இமைக்கின்றதன்மை. (கடுகஅ)

கஅ.—சீதை கூறத்தொடங்குதல்.

வல்லிய மருங்கு கண்ட மானென மறுக்க [1]முற்று
மெல்லிய லாக்கை முற்று நடுங்கினள் விம்மு கின்றாள்
கொல்லிய வரினு [2]முள்ளங் கூறுவன் றெரிய வென்னாப்
[3]புல்லிய கிடந்த தொன்றை நோக்கினள் [4]புகல்வ தானாள்.

(இ - ள்.) மென்மைத்தன்மையையுடைய சீதை,— (இராவணனைத் தன்னருகே கண்டதனால்), புலியைத் (தன்) பக்கத்திற் பார்த்தமான்போலக் கலங்குதலையடைந்து உடல்முழுதும் நடுங்கப்பெற்றுப் புலம்புபவளாய்,— (பிறகு சிறிதுதேறி)—'(என்னைக்) கொல்லும்படிவந்தாலும், (என்) மனக்

கருத்தை நன்குஅறியும்படி சொல்வேன்' என்று (தனக்குள் உறுதிகொண்டு), தரையிலே கிடந்ததாகிய அற்பமானதொரு துரும்பைப் பார்த்த வண்ணம் சொல்லத்தொடங்கினாள்; (எ - று.)—சீதை கூறுவதை மேல் ஆறு கவிகளிற் காண்க.

புருஷனுடன் நேரே பேசுவது தகுதியன்றென்று கீழேகிடந்ததொரு துரும்பைப் பார்த்தவண்ணம் இராவணனுக்கு மறுமொழி கூறலாயினள் சீதை யென்பதாம். புல்லைப்பார்த்துக் கூறியதில் நீ ஒருசிறு துரும்புக்குச் சமான மென்ற கருத்துந் தோன்றும். மெல்லியல் - அன்மொழித்தொகை.
பி-ம்:—1 உற்ற. 2உள்ள. 3புல்லியல். 4புகலலுற்றாள். (கடுகூகூ)

கக.—இதுமுதல் ஆறுகவிகள்-சீதை கூறுவன.

பழியிது பாவ மென்று பார்க்கிலை பகரத் தக்க
மொழியிவை [1]யல்ல வென்ப துணர்கிலை முறைமை நோக்காய்
கிழிகிலை நெஞ்சம் வஞ்சக் கிளையொடு மின்று [2]காறும்
[3]அழிகிலை யென்ற [4]போதென் கற்பென்னு மறந்தா னென்னாம்.

எழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) '(நீ விரும்பிய) இச்செயல், (இம்மையில்யாவராலும்) பழிக்கப்பட்டதாகும்: (மறுமையில் நரகம்விளையும்படி) பாவத்தையுண்டாக்குவதாம்' என்று பார்க்கின்றாயில்லை; (நீ பேசிய) இப்பேச்சுக்கள், சொல்லத்தக்க பேச்சுக்களல்ல' என்பதனையும் அறிகின்றாயில்லை; நீதியையும் பார்க்கின்றாயில்லை; (இவ்வாறு தகாத செயலைச்செய்தும் தகாதபேச்சுக்களைச சொல்லியும், நீ) நெஞ்சம்பிளவுபட்டாயில்லை; (உன்) வஞ்சனைக்கு அநுகூலமாகஇருக்கிற (உன்)சுற்றத்தாரோடும்இன்றைவரையிலும் அழிகின்றாயில்லை' என்றால், என்கற்பிருந்து என்னபயன்? தருமந்தானிருந்து என்ன பயன்? (எ - று.)

பழிபாவத்தைச் சிறிதும் நினையாது முறைகேடாகத் தகாதவார்த்தைகளைச் சொல்லுகிறாயே: இவ்வாறான உன்னுடையநெஞ்சு கிழிபட நீ வமிசநாசமாகப்போனாலல்லவோ, என்கற்பு பயன்பெற்றதாகவும் தருமம் உலகத்தில்மேம்பட்டதாகவும் ஆகு மென்று சீதை கூறின ளென்க. நீ நெஞ்சம் கிழிகிலை - சினைவினை முதல்வினையோடும் முடிந்தது. பி-ம்:—1 அல்லது. 2நாளை. 3கழிகிலை. 4போதுகற்பெனும். (கசுoo)

உo. [1]வானுள [2]மறத்திற் [3]றோன்றுஞ் [4]சொல்வழி [5]வாழு [6]மண்ணின்
ஊனுள [7]வுடம்புக் கெல்லா முயிருள [8]வுணர்வு [9]முண்டால்
தானுள பத்துப் பேழ்வாய் தகாதன வுரைக்கத் [10]தக்க
யானுள கேட்க வென்றோ லென்சொல்லா [11]யாது செய்யாய்.

(இ - ள்.) ஆகாயத்தையெட்டியுள்ள கொடுமையோடு தோன்றுகின்ற (உனது)சொல்லின்படியே வாழுமாறு (இந்த)நிலவுலகத்திலுள்ள மாமிசமயமான உடல்படைத்த பிராணிகட்கெல்லாம் உயிருள்ளன: உணர்வும் உண்டு; (ஆயினும் அவ்வுயிர்கள் இவ்வாறானசொல்லைச் சொல்வதில்லை); தகுதியில்லாத சொற்களைச்சொல்லுதற்குஎற்பப் பிளவுபட்ட பத்துவாய்கள் (உனக்கு)

உள்ளன; (நீ சொல்வதைக்) கேட்பதற்கு(க் கதியற்ற) யான் இருக்கின்றே னென்றால், (நீ) எதைத்தான் சொல்லமாட்டாய்? எதைத்தான் செய்யமாட்டாய்? (எ - று.)—தான்-அசை.

கொடிய உன் கீழ்ப்பட்டுவாழ்வனவாயிருந்தாலும், மண்ணுலகத்திலுள்ள பிராணிகள் தாம் உயிருள்ளனவாயிருப்பதற்குஏற்ப நல்லுணர்வுபெற்றிருக்கின்றன; நீயோ நல்லுணர்வென்பது சிறிதுமில்லாமல் ஒன்றுக்குப்பத்தாகவுள்ள வாய்களால் வாய்க்குவந்தபடியெல்லாம் உளறுகிறாய்; அவற்றைக்கேட்கும்படி யான் ஏற்பட்டேனென்றால், நீ எதைத்தான் சொல்லமாட்டாய்? என்று அவ்விராவணன் தகாதசொற்களைக் கூறினமையைத் தான் மனத்தினுற் பொறுக்காமைதோன்றக் கூறுகின்றாள் சீதை யென்க. 'வான்உள' என்ற தொடரையும் உடம்புக்கெல்லாம் என்பதனோடு இயைத்து-வானுள உடம்புக்கெல்லாம் மண்ணிலுள்ள உடம்புக்கெல்லாம் உயிருள உணர்வுமுண்டால் என்று கூட்டியுரைப்பாருமுளர். உடம்பு - உடம்புள்ளபிராணிக்கு ஆகுபெயர். பி-ம்:—1வானுற. 2வரத்தில், அறத்தில். 3தேறுன், தோற்றும், தோற்றுன். 4சொல்லுள. 5வாழ்வு, வழுவா, வாழ. 6மன்னும். 7உடம்பிற்கொல்லா. 8உணவும். 9உண்டே. 10இங்கே, தக்காய். 11ஏது. (ககூ0௪)

உக. வாசவன் மலரின் மேலான் மழுவலான் மைந்தன் மற்றைக்
கேசவன் 1சிவனென் றிந்தத் 2தன்மையோர் 3தன்மை கேளாய்
பூசலி 4னெதிர்ந்தே னென்றாய் போர்க்களம் புக்க போதென்
ஆசையின் கனியைக் கண்ணிற் கண்டிலை போலு மஞ்சி.

(இ - ள்.) இந்திரனும் தாமரைமலரின்மேல்வீற்றிருப்பவனாகிய பிரமதேவனும் மழுப்படையையுடையவனான சிவபிரானது புதல்வனான குமாரக்கடவுளும் பின்னும் திருமாலும் சிவனும்என்ற இப்படிப்பட்ட பெருமைபெற்றவர்களின்நிலைமையைக் கேட்டிடாமல் [இலட்சியஞ்செய்யாமல்] பெரும் போரில் எதிர்த்துவென்றேனென்று பெருமைபாராட்டுகின்றாய்; (இப்படிப் பெருமைபாராட்டுகின்ற நீ), என்னுடையஆசைபழுத்த பழம்போன்ற கணவனைப் போர்க்களத்திற் புகுந்திருக்கிற (இவ்) வேளையில் அஞ்சிக் கண்ணாற் காணவில்லைபோலும்; (எ - று.)

நீ இந்திரன்முதலியவர்களையெல்லாம் வென்றதாகப் பெருமைபாராட்டுகின்றாய்; அப்படிப்பட்ட நீ எனது ஆசைக்கனியான இராமனைப் போர்க்களத்தில்வந்துநிற்கிற இப்போது கண்ணாற்காணுதற்கும்அஞ்சி இங்கேவந்துள்ளாய்போல்தோன்றுகின்றது: உன்வீரம் மிகநன்று என்று ஏசினளென்க. ஆசையின்கனி - என்விருப்பத்தின்பயனானவன். கண்ணிற்கண்டிலையென்றது - கண்களாற்கண்டிருந்தால் திகைப்புற்றுஅங்கேயே கிடந்திருப்பா யென்ற கருத்தோடு, நீ நற்புத்தியையாவது பெற்றிருப்பாய் அல்லது அவனதுசரத்திற்கு இலக்காகி மாண்டாவதுஇருப்பா யென்ற கருத்தைக் காட்டும். பி - ம்:— 1என்னநின்ற, சிறுவனென்றித், சிறுவனென்றீது. 2அமைதியோ. 3தம்மைக்கேளாய், கிட்டிக்கண்டாய். 4எதிர்ந்தனென்றாய், எதிர்ந்துநின்றாய். (ககூ0௫)

௨௨. ஊணிலா யாக்கை பேணி [1]யுயர்புகழ் சூடா துன்முன்
நாணிலா திருந்தே னல்லே னவையறு குணங்க ளென்னும்
பூணெலாம் [2]பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலா [3]மின்னு மென்னுங் காதலா லிருந்தேன் கண்டாய்.

(இ - ள்.) உணவின்றிக்கிடக்கிற இவ்வுடம்பைஆதரித்து உயர்ந்த புகழைப்பெருமலும் உன்முன்னிலையில் வெட்கமில்லாமலும் இருந்தவளல்லேன்; (பின்னை எதனுல் எனில்);—குற்றமற்ற குணங்களென்கிற அணிகலன்களையெல்லாந் தாங்கிய திருமேனியையுடைய புண்ணியமூர்த்தியாகிய அந்த இராமபிரானை இன்னும் தரிசித்தல் கூடு மென்னுங் * காதலால் உயிர்வைத்துக் கொண்டிருந்தேன்; (எ - று.)—கண்டாய்-தேற்றப்பொருளைக் குறிப்பிக்கும்.

'இராமபிரானைப்பிரிந்ததனுல் உடனே சீதை மாண்டாளென்று புகழ்ச் சொல்லைப்பெறுமாறு உயிரை விட்டேனுனல், அப்போது இராமபிரானைக் காணமுடியாதே!' என்ற இக்காரணத்தினுல்தான்,நான் இத்தனைநாள்வருந்தியும் உயிரைவைத்துக்கொண்டிருப்பது: என்னுயிரில்விருப்பினுலன்று என்கிருள் சீதையென்க. இதனுல், சீதை தன்னிலும் இராமபிரானிடத்துக்கொண்டுள்ள விருப்பம் விளங்கும். 'சோற்றுலெடுத்தசுவர்' என்பவாதலால், ஊண்நிலாயாக்கைஎனஎடுத்து - ஊணினுல் நிலாவுகின்ற யாக்கை யெனினுமாம். பி-ம்:—[1]உயிர்செகாதுளதேயுன்முன்,உயர்புகழ்கெடவேயுன்முன், உயிர்செகாதுளனுகின்றேன், உயர்புகழ்சுடாதுன்முன்னே. [2]பொறுக்கும். [3]என்னுமந்தக்.

௨௩. சென்று[1]சென் றழியு மாவி [2]திரிக்குமாற் செருவிற் [3]செம்பொன்
[4]குன்றுநின் றனைய தம்பி [5]புறக்கொடை காத்து நிற்பக்
கொன்றுநின் றலைகள் சிந்தி யரக்கர்தங் குலத்தை முற்றும்
வென்று[6]நின் றருளுங்[7] கோலங் காணிய [8]கிடந்த வேட்கை.

(இ - ள்.) போர்க்களத்திற் செம்பொன்மயமானமேருமலை நின்றாற் போன்ற தம்பியான இலக்குமணன் (நீ) புறங்கொடுத்தோடுவதைத் தடுத்து நிற்க, (உன்னைக்) கொன்று, உன்தலையைப் பூமியிலேவீழ்த்தி அரக்கருடைய கூட்டத்தை முழுதும்வென்று நிற்கப்போகின்ற (ஸ்ரீராமனது) திருமேனியினழகைக் காணவேணுமென்றுள்ள ஆசையானது, (துயரமிகுதியால்உடலை) விட்டுநீங்கி அழிவதாகின்ற (என்) உயிரைத் திரும்பிவிடச்செய்யும்; (எ-று.)

கீழ்க்கூறியதனையே, சீதை இங்கு வேறுவகையாகக் கூறுகின்ருள். நீ இராமபிரானுல் அழிவது திண்ண மென்பதை,மூன்றடிகளால் கூறுகின்ருள். இச்செய்யுள்-பூட்டுவிற்பொருள்கோளாம். திரிக்கும் - திரியுமென்பதன் பிறவினை. பி-ம்:—[1]நின்றழியும். [2]திரியும், தரிக்கும், தெரிக்கும். [3]சேமக். [4]கன்று. [5]புறக்கடை,பிறர்குடை, தனிக்குடை. [6]நின்றனைய. [7]காலங் [8]கிடக்க. (கசுOச)

---

* ''ஆமாதந்துஃ குஸுமஸத்ருஶம் ப்ராயஶோஹ்யங்கநாநாம்-ஸத்யஃ பாதி ப்ரணயிஹ்ருதயம் விப்ரயோகே ருணத்தி'' என்ற காளிதாசன்வாக்கு நினைப்பிற்கு வருகின்றது.

உச. எனக்குயிர் [1]பிறிது மொன் றுண் டென்றிரே [2]லிரக்க மல்லால்
தனக்குயிர் வேறின் றாகித் தாமரைக் கண்ண தாக்கி
கனக்கரு மேக மொன் று கார்முகந் தாங்கி யார்க்கும்
[3]மனக்கினி தாகி நிற்கு மஃதன்றி வரம்பி லாதாய்.

(இ - ள்.) நீதிமுறைமைக்குக் கட்டுப்படாதவனே! கருணையென்பதல்லாமல் தனக்கு உயிரென்பது வேறொன்றில்லாமலும் தாமரைபோன்ற கண்களையுடையதாகியும்மின்று நெருங்கிய கருநிறமுள்ள மேகமொன்று வில்லைத் தாங்கி,யாவருடைய மனத்துக்கும் இனிமையைப் பயப்பதாய்நிற்கின்ற அந்த [இராமனென்னப்படுகிற]பொருளையல்லாமல்,எனக்கு வேறும்உயிரொன்று உளதென்று எண்ணியிராதே; (எ - று.)

சீதாபிராட்டி எனக்குஉயிர் இராமபிரானே யென்கிறாளென்க. இதனால், இராமபிரான்இருக்குமளவும் சீதை தானும் இருப்பவ ளென்பதும் பெறப்படும். இரக்கத்தை யுயிராகப்பெற்றும், தாமரைக்கண்களைப்பெற்றுமுள்ள நீர்கொண்ட காளமேகமொன்று வில்லைத்தாங்கி நிற்குமாயின் அதுவே இராமபிரானுக்கு ஒப்பாகுமென்பது, இந்தச்செய்யுளிற் கூறிய உருவகத்தாற் பெறப்படும். பி-ம்:—[1]பிறிதுமுண்டோவென்றிரேல், பிறிதொன்றுண்டென்றெண்ணலே, பிறிதுமொன்று... இரேன். [2]எனக்கும். [3]மனத்துளதாகி. (கசுOஙு)

உரு.—அதுகேட்ட இராவணன் சினங்கொண்டு
சீதையின் கொள்கையைப் பரிகசித்தல்.

என்றன ளென்ற லோடு மெரி[1]யுறு கண்ணன் றன்னைக்
கொன்றன மானந் [2]தோன்றக் [3]கூற்றெனச் சீற்றங் கொண்டான்
வென்றெனை யிராம னுன்னை மீட்டபி னவனோ டாவி
ஒன்றென [4]வாழ்தி போலென் [5]றிடியுரு [6]மொக்க நக்கான்.

(இ - ள்.) என்று கூறிமுடித்தாள் (சீதை): என்றுசொன்னவளவில்,—(இராவணன்);நெருப்பைச்சிந்துகிறகண்களையுடையவனும்,தன்னைக்கொல்ல முயன்றாற்போல ரோஷமானது உண்டாக யமன்போலக் கோபங்கொண்டவனுமாகி,—(சீதையைநோக்கி),—'என்னைச் செயித்து இராமன் உன்னை மீட்டபின்பு அந்தஇராமபிரானோடு (இருவருக்கும்)உயிரொன்றே யென்று தோன்றுமாறு(ஒருமித்து)வாழ்வாய்போலும்' என்று பேரிடிபோல(ப் பேரொலியுண்டாகுமாறுபரிகாசமாகச்) சிரித்தான்; (எ - று.)

'அசம்பாவிதமான செயலைத் திண்ணமாக நிகழுமென்று கருதுகின்றாயே; உன்னைப்போற் பேதைமையுடையவர்களும் உண்டோ?' என்று பரிகசித்துக் கூறினன் இராவண னென்க. போல் - ஒப்பில்போலி. இடியுருமு - ஒருபொருட்பன்மொழி. பி - ம்:—[1]உகு. [2]தோன்றிக். [3]கூற்றன. [4]வாழ்தியே. [5]உருமிடி. [6]உக்க, உட்க, மிடிக்க. (கசுOச)

உசு.—இதுவும் அடுத்தகவியும் - இராவணன்
நான் இராமனை வெல்வது திண்ணமெனல்.

[1]இனத்துளா ருலகத் துள்ளா ரிமையவர் முதலி னோரென்
சினத்துளா [2]ரியாவர் தீர்ந்தார் தயரதன் [3]சிறுவன் றன்னைப்
புனத்துழாய் மாலை யானென் றுவக்கின்ற ஒருவன் புக்குன்
மனத்துளா னெனினுங் கொல்வன் வாழுதி [4]பின்னை மன்னோ.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) பெருந்திரளாகவுள்ள இவ்வுலகத்தில்வசிப்பவரான மனிதரும் தேவர்களும் முதலியவரான என்கோபத்திற்கு இலக்கானவர்களில், யாவர் உயிர்தப்பிப்பிழைத்தார்கள்? (நீ)கொல்லையில்தோன்றுகின்ற துழாய்மாலையை யணிந்தவனாகிய திருமாலேயென்றுசொல்லி (மனம்) மகிழ்வதற்குக் காரண மான ஒருத்தன் புகுந்துகொண்டு உன்மனத்திலேயிருக்கின்றானென்றாலும், அந்தத்தசரதகுமாரனை இராமனை (யான்) கொன்றேதீருவேன்: பின்னை வாழ்ச்சிபெறுவாய்; (எ - று.)

நீ இராமனுடன் சேர்ந்துவாழ்வேனென்றல்லவா நினைக்கின்றாய்; அந்த ராமன்உன்மனத்திற்குட்புகுந்துகொண்டானென்றாலும்,அப்போதும்அவனை யான் கொல்வது திண்ணம்: ஆகவே, நீ அவனுடன் வாழவேனென்று கருது வது பேதைமையே யென்றவாறு. தான் அலட்சியமாகக் கருதுகின்றமை தோன்ற 'தயரதன் சிறுவன்' என்கிறான். தயரதன்=தசரதன்: பத்துத் திசைகளிலுஞ் செல்லுந் தேரையுடையவனென்பது, பொருள். துழாய்-துல ஸீயென்பதன் சிதைவு. பி-ம்:—1எனைத்து. 2ஆரே. 3சிறுவனீயிப், சிறு வனீயப். 4பின்னுமன்னோ. (கசுoஎ)

உஎ. [1]வளைத்தன மதிலை வேலை [2]வகுத்தன வரம்பு வாயால்
உளைத்தன குரங்கு பல்கா [3]லென்றக முவந்த [4]துண்டேல்
இளைத்தநுண் [5]மருங்குல் [6]நங்கா யென்னெதி ரெய்திற் றெல்லாம்
விளக்கெதிர் [7]வந்த விட்டிற் [8]பான்மையே வியக்க [9]வேண்டா.

(இ - ள்.) சிறுத்து நுண்ணிய இடையையுடைய பெண்ணே! '(இராம சேனையாகிய) குரங்குகள், கடலை யணைகட்டின; (பின்பு இலங்கையை யடைந்து)மதிலை வளைத்தன: வாயாற் பன்முறைப் பேரொலிசெய்தன' என்று மன முவந்தது(உனக்கு)உள்ளதாகுமாயின், (கடலில் அணைகட்டுதல் முதலிய நிகழ்ந்த செயல்களைக் குறித்து) வியப்புக்கொள்ளவேண்டா; என்னெதிர்ப்பட்ட அந்தக் குரங்குகளெல்லாம்,விளக்குக்கு முன்னே(திரண்டு)வந்த விட்டிற்பூச்சி யின் தன்மையையே (யுடையனவாம்); (எ - று.)

கடலை யணைகட்டிக் கடந்து இலங்கையைச்சேர்ந்து இலங்காநகரத்தின் மதிளை முற்றுகைசெய்து ஆரவாரிப்பதனாலேயே குரங்குகள் வெற்றியடைந் தனவாகா: அவை விளக்கைக்கண்ட விட்டிற்பூச்சிகள்போல,என்னைக் கண்ட மாத்திரத்தில் தாமே அழிந்துவிடு மென்கின்றான், இராவணன்: இராமன் வெல்வானென்று கருதுவது பேதைமையேயென்று சீதையை மருட்டியவாறு. பி-ம்:—1வளைத்தனர். 2வகுத்தனர். 3என்றுகொண்டு. 4உண்டால். 5மருங்கு 6மெங்காய். 7வீழ்ந்த. 8பான்மைய. 9வேண்டாம். (கசுoஅ)

உஅ.—இராவணன் தான் அயோத்தியிலும் மிதிலையிலும் வீரரைப் போக்கியுள்ளதாகச் சீதையை மருட்டுதல்.

*கொற்றவா ளரக்கர் தம்மை யயோத்தியர் குலத்தை முற்றும்*
*[1]பற்றிநீர் [2]தருதி [3]ரன்றேற் பசுந்தலை [4]கொணர்திர் [5]பாரித்து*
*[6]உற்றதொன் [7]றியற்று மீரென் றுந்தினே னுந்தை மேலும்*
*வெற்றியர் தம்மைச் [8]செல்லச் சொல்லினன் விரைவி னென்றான்.*

(இ - ள்.) 'அயோத்திக்குஅரசரின்குலத்தை முழுவதும் பிடித்து நீர் கொண்டுவாருங்கள்: அன்றேல், (வெட்டிக்கொன்றஅவ்வயோத்தியரின்)புதிய தலைகளை (இங்குக்) கொண்டுவாருங்கள்: முயற்சிகொண்டு(இவ்விரண்டனுள்) ஏற்றதொரு செயலைச் செய்யுங்கள்' எனக்கட்டளையிட்டு, வெற்றிபொருந்திய வாட்படையையுடைய அரக்கர்களை (அயோத்தியிற்) செலுத்தியுள்ளேன்; உனது தந்தைமேலும், வெற்றிபொருந்திய வீரரை விரைந்துபோகுமாறு சொல்லினேன் என்று கூறினான், (இராவணன்); (எ - று.)

கீழ் மாயஞ்செய்து சீதையை யிணக்கவேண்டு மென்று துராலோசனை செய்தமைக்கு ஏற்பவே, இராவணன், அயோத்தியிலுள்ள இராமனைச்சேர்ந்த பரதன்முதலியோரை உயிருடன்பற்றியோ அல்லது சிரங்களைவெட்டியோ கொணருமாறும், சனகனைப் பற்றிக்கொணருமாறும் வீரர்களை அயோத்திக்கும் மிதிலைக்கும் விரைவிலனுப்பியுள்ளே னென்று கற்பித்துக்கூறுகின்றானென்க. 'அயோத்தியர்' என்றது-இராமனுடைய குலத்தைச்சேர்ந்த பரதன் முதலியோரைக் காட்டிற்று. உந்தினேன் நுந்தை என்றும்பிரிக்கலாம். பி-ம்:—[1]பற்றினீர். [2]கொணர்திர். [3]அன்றே. [4]கொணர்ந்து. [5]பாரில். [6]உற்ற. [7]இயற்றுவீரே மிதிலையன். [8]சாரச். (கசுoக)

உகூ.—இராவணனது சொல்லைக் கேட்ட சீதையின் வருந்தம்.

*என்றவ [1]னுரைத்த காலை யென்னை [2]யிம் மாயஞ் [3]செய்தாற்கு*
*ஒன்று[4]மிங் கரிய தில்லை யென்பதோர் துணுக்க முந்தத்*
*நின்றுநின் றுயிர்த்து நெஞ்சம் [5]வெதும்பினு ணெருப்பை மீள*
*[6]தின்றுதின் றுமிழ்கின் றாரிற் றுயருக்கே சேக்கை யானாள்.*

(இ - ள்.) என்று அவ்விராவணன் சொன்னபோது, 'என்னை இப்படி வஞ்சனைசெய்து சிறைப்படுத்தியவனுக்கு [இராவணனுக்கு], இப்போது(செய்வதற்குக்கூடாத) அருமையான செயல், ஒன்றும் இல்லை'என்றுகருதுவதனால் ஓரச்சம் தூண்டவே, திகைத்துநின்றவண்ணம் மனம்கொதித்தவளாய், நெருப்பை அடிக்கடி தின்றுதின்று வெளிப்படுத்துபவர்போல (வெப்புமாக)ப் பெருமூச்சுவிட்டுத் துன்பத்திற்கே இருப்பிடமாயினாள்; (எ - று.)

'என்னை வஞ்சனையாகக் கவர்ந்துவந்ததுபோலவே, இன்னும் என்னவஞ்சனைசெய்ய நினைத்திருக்கின்றானோ இந்தப்பாவி?' என்று ஒருபால்திகைப்பும் ஒருபால் மனவெதுப்புங்கொண்டு சீதை பெருவருத்த முற்றன ளென்க. துணுக்கம் முந்த என்றும் பிரிக்கலாம். பி-ம்:—[1]இசைத்த. [2]அம். [3]செய்தால். [4]அங்கு. [5]விம்மினாள். [6]தின்றுமிழ்கின்றதென்னத். (கசுகo)

௩௰.—சீதை பின்னும் வருந்திக்கூறுதல்.

இத்தலை [1]யின்ன செய்த விதியினு [2]ரென்னை யின்னும்
அத்தலை யன்ன செய்யச் சிறியரோ [3]வலிய ரம்மா
பொய்த்தலை யுடைய தெல்லாந் தருமமே போலு மென்னுக்
கைத்தன ளுள்ளம் வெள்ளக் கண்ணினீர் [4]கரையி லாதாள்.

(இ - ள்.) கண்ணினின்று பெருகுகின்றநீர்க்கு அளவைப்பெறாதவளான சீதை,—'என்னை இவ்விடத்து இப்படிப்பட்டசெயலை [இராமனைப்பிரிந்து எதிராளியின் சிறையிலகப்பட்டுவருந்துமாறு] செய்த விதியினார் இன்னும் (அயோத்திமிதிலைஎன்ற) அவ்விடங்களில் (இராவணன்சொன்ன) அச்செயலைச்செய்ய அற்பமானவரோ? வலியர்: [ஊழ்வினை என்னை இப்பாடுபடுத்தியைத்ததுபோலவே அயோத்திமுதலிய இடங்களிலிருப்பவர்க்கும் தீங்குபுரியும்வல்லமையுடையதே யென்றபடி]; (இப்போது கெழுந்தன்மையைப்பார்த்தால் நன்மையைவிளைக்காது) பொய்க்குந்தன்மையைக் கொண்டிருப்பதெல்லாம் தருமமொன்றுமே போலத் தோன்றுகின்றது' என்று எண்ணி மனத்துக்குள்ளே வெறுத்துக்கொண்டாள்; (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல். விதியின் கொடுந்தன்மையைநினைந்து வியந்தவாறு.

தருமத்திலேயே நாட்டமாயிருப்பவர்க்கு வருத்தம் நிகழ்வதை நினைக்கவே, 'பொய்த்தலையுடைய தெல்லாந் தருமமேபோலும்' என்று வெறுத்துக் கூறுகின்றாள். உடையதெல்லாம்-ஒருமைப்பன்மைமயக்கம். வாயினால் விவரமாகச் சொல்லக்கூசி, 'அன்ன' என்கிறாள்: 'அன்ன' என்றது, உஅ-ஆஞ்செய்யுளிற்கூறியதைக் காட்டும். விதியினார்சிறியரோ அரியர் - இழிப்பினால்வந்த வழுவமைதி. பி - ம்:—1இன்னல். 2இன்னமென்னை. 3அளியர், அளியன். கலுழ்வதானாள். (௧௬௧௧)

௩௧.—மகோதரன் அப்போது மருத்தனைச் சனகனுருவ மெடுக்கச்செய்து மாயாசனகனைச் சீதைமுன்கொணர, இராவணன் காணுதல்.

[1]ஆயதோர் காலத் [2]தாங்கண் [3]மருத்தனைச் சனக னாக்கி
வாய்[4]திறந் தாற்றப் பற்றி மகோதரன் கடிதின் [5]வந்து
காயெரி யனையான் முன்னர்க் காட்டினன் [6]வணங்கக் கண்டாள்
தாயெரி வீழக் கண்ட பார்ப்பெனத் [7]தரிக்கி லாதாள்.

(இ - ள்.) அக்காலத்தில் அங்கே [இலங்கையில்] மருத்தனைச் சனகனாக்கி, (சனகன்வடிவுகொண்ட அவ்வரக்கன்) வாயைத்திறந்தவண்ணம் கதறிக்கொண்டிருக்க (அவனைச் சிறை)பிடித்துக்கொண்டு, மகோதரனென்றஅரக்கன்,—விரைவிலேவந்து சுவலிக்கின்றநெருப்பையொத்தவனான இராவணனெதிரேகாட்டினன்; (அங்ஙனம் காட்டுகையில் அந்தமாயாசனகன், அவ்விராவணனைப்) பணிந்துஎழக்கண்ட சீதை தன்தாய்ப்பறவை நெருப்பில்வீழ்வதனைக்கண்ட பறவைக்குஞ்சுபோல மனந்தாங்காதவளாயினாள்; (எ - று.)

சனகன் = ஜநகன்: மிதிலைக்கு அதிபதி: சீதையை வளர்த்த தந்தை. காட்டினன்-'இதோ சனகனைமிதிலையினின்று சிறையாகப்பற்றிக்கொணர்ந்து

விட்டேன்: பார்ப்பாயாக' எனக் காட்டினு னென்க. பார்ப்பு - பறவையி னிளமைப்பெயர். பி-ம்:—1ஆயது, ஆயின. 2ஆங்கே, ஆங்கோர். 3அரக்கனே. 4திறந்திரங்க, இழிந்திரங்க, அழிந்திரங்க. 5வந்தான். 6வணங்கிக், வணக்கங். 7தரிப்பிலாதாள். (கசுகஉ)

ரு௨.—அதுகண்ட சீதையின் வருந்தநிலை.

கைகளை நெரித்தாள் 1கண்ணின் மோதினுள் கமலக் கால்கள்
நெய்யெரி மிதித்தா லென்ன நிலத்திடைப் பதைத்தா ணெஞ்சம்
மெய்யென 2வெரிந்தா ளேங்கி 3விம்மினு ணடுங்கி வீழ்ந்தாள்
பொய்யென வுணரா ளன்பாற் 4புரண்டனள் பூச லிட்டாள்.

(இ - ள்.) (சனகன் மகோதரனுற் பற்றப்பட்டு வந்தது) பொய்யென் பதை யறியாதவளான சீதை,—அன்பாற் கைகளைநெரித்தாள்; (அத்துன்ப நிலையைக் காணுமாறு கண்களுக்குநேர்ந்ததுபற்றிக்) கண்களிலே மோதிக் கொண்டாள்; (தனது) தாமரைமலர்போன்ற பாதங்கள் நெய்வார்க்கப்பட்டு எரிகின்றஅக்கினியை மிதித்தாற்போலப் பூமியின்மீது துள்ளிக்குதித்தாள்; மனம் (தன்) உடல்போல வேவப்பெற்றுள்; ஏக்கங்கொண்டு புலம்பினுள்; (தரையிலே) நடுங்கிவிழுந்தாள்; புரண்டனள்; பேரொலிபடக் கதறினுள்.

கைகளைநெரித்தல் முதலியன, துன்பத்தினுல் நிகழ்ந்த செயல்கள். பொய்யென்று உணரின் அன்புபற்றியெழுந்த துயரம் உண்டாகாதென்பார் 'பொய்யெனவுணரா ளன்பாற் புரண்டனள்' என்றுர். இச்செய்யுளில் அவலச்சுவை விளங்குதல்காண்க. பி-ம்:—1கண்ணை. 2இருந்தாள். 3வீங்கினு ளோங்கி. 4புரண்டரும். (கசுகரு)

ருரு.—இதுமுதல் மூன்றுகவிகள்-சீதைவாய்விட்டரற்றியதைத் தெரிவிக்கும்.

1தெய்வமே யென்னு மெய்ம்மை சிதைந்ததோ வென்னுந் தீய
2வைவனே வுலகை யென்னும் வஞ்சமோ 3வலிய தென்னும்
4உய்வலோ வின்ன மென்னு மொன்றல துயா முற்றுள்
5தையலோ தரும மேயோ 6வாரவ டன்மை தேர்வார்.

(இ - ள்.) (அந்தச் சீதையானவள்),—தெய்வமேயென்பாள்; 'சத்தியம் அழிந்ததோ!' என்பாள்: 'உலகைத்தீய்ந்துபோம்படி சபித்துவிடட்டுமோ?'என் பாள்; மாயசெய்கையா (வெல்லுமாறு) வலிமை பெற்றது?' என்பாள்; 'இன் னமும் பிழைத்திருக்கக்கடவனே?' என்பாள்; (அப்போது அவள்) ஒருபடியாக வல்ல [பலபடியாகத்] துன்பப்பட்டாள்; (அவ்வாறு துன்பமுற்றது), ஒரு பெண்ணே? (அல்லது, சாட்சாத்தான) தருமந்தானே? அந்தச்சீதையின் தன் மையை ஆராய்ந்தறிபவர் யாவர்? (எ - று.)

ஈற்றடி - கவிக்கூற்று: இது - சீதையென்பவள் சாதாரணமான ஒரு பெண்பிள்ளையல்லள்: தருமத்தின் வடிவமானவளென்ற கருத்தைக்காட்டும். 'தருமச்சொரூபியானவட்கும் இவ்வாறு துன்பம்நேர்ந்ததே! என்று கவி

இரங்கியமையும் இதிற் பெறப்படும். பி-ம்:--1தெய்வமோ. 2வைவலோ. 3வலி தே. 4உய்வனே. 5ஐயவோ துன்பமேயோ, ஐயவோ துயரமேயோ. 6ஆரதன் றன்மையோர்வார். (கசுகச)

நடஈ. எந்தையே யெந்தை 1யேயென் பொருட்டினு னுனக்கு மிக்கோள், வந்ததே யென்னைப் பெற்று வாழ்ந்தவா றிதுவோ மண் ணோர், தந்தையே 2தாயே செய்த தருமமே 3தவமே யென்னும், வெந்துயர் 4வீங்கித் 5தீவீழ் விறகென வெந்து 6வீழ்வாள்.

(இ - ள்.) (பின்னுஞ்சீதை), 'என் தந்தையே! என்தந்தையே! என் பொருட்டாக (த்தருமாநுஷ்டானத்திலேயே கண்ணாய்நிற்கின்ற துறவி போன்ற) உனக்கும் (பகைவர்கையிலே) சிக்குண்டுநிற்பதாகிய இத்தன்மை நிகழ்ந்ததே!! என்னை (ப் பெண்ணாக) அடைந்து, (நீ) வாழ்ந்த ஆறுஇது வோ? மண்ணுலகத்தார்க்கெல்லாம் தந்தைபோல நன்மையைநாடுபவனே! (அன்பினால்) தாயையொத்திருப்பவனே! (முற்பிறவியிற்) செய்த தருமம் போல் மறுமையையும்விளைப்பவனே! (நற்பயனைவிளைப்பதில்) தவம்போன் றவனே!' என்பாள்; கொடியதுயரம்மிகுந்து தீயினால் (விழுங்கப்பட்டு) விழு கின்ற விறகுபோல, (துயரத்தினால்) மனம்வெதும்பிக் கீழேவிழுவாள்.

சோகாக்கினியினால் எரிக்கப்பட்டுக் கீழ்விழுந்த சீதைக்கு, உலகத்தில் நெருப்பினால் எரிக்கப்பட்டுவீழும் விறகை யுவமைகூறினார். பெற்றமக்களால் இன்பத்தை யடையவேண்டியதாயிருக்கத் துன்பம்நேர்ந்ததுபற்றி, 'என்னைப் பெற்றுவாழ்ந்தவாறிதுவோ?' எனவும், நற்குணமுடையோர்க்குப் பிறர்கை யிற் சிறைப்பட்டுவருந்துவது தகுதியன் றென்பதுபற்றி, 'உனக்கும் இக் கோள்வந்ததே!' எனவும் கூறுகிறாள். ஏகாரம்-இரக்கம். உனக்கும், உம்மை- உயர்வுசிறப்பு: ஜநகன் நற்சீலமுடையவனென்பது, பிரசித்தம். பி-ம்:--1இன் றென்பொருட்டு. 2தயாவேயென்னும். 3தகவே. 4என்னுந், நீங்கித், ஏங்கித். 5தீயில். 6வீழ்ந்தாள். (கசுகரு)

நடரு. இட்டுண்டா யறங்கள் செய்தா 1யெதிர்ந்துளோ ரிருக்கை யெல்லாஞ், 2சுட்டுண்டா யுயர்ந்த வேள்வித் துறையெலாங் 3கரையுங் கண்டாய், மட்டுண்டார் மனிதர்த் 4தின்ற வஞ்சரால் வயிரத் 5திண் டோள், கட்டுண்டா 6யென்னே யானுங் காண்கின்றேன் 7போலுங் கண்ணால்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (விருந்தினர்க்கு முதலில் உணவு) அளித்துப் (பிறகு நீயும்) உண்டாய் (பலவகைத்) தருமகாரியங்களைச் செய்தாய்; (உன்னை) எதிர்த்த பகைவர்களின் ஊர்களையெல்லாம் எரித்துவிட்டாய்; சிறந்த யாகத்துறை களெல்லாவற்றிலும் முடிவுகண்டாய்: [எல்லாயாகங்களையும் செய்திட்டா யென்றபடி]; (அப்படிப்பட்ட சிறப்புப்பெற்ற நீ), கட்குடியராகி மனிதரைத் தின்பவரான வஞ்சகக்குணமுள்ள அரக்கரால் வயிரம்போன்ற உறுதியான தோள்கள் கட்டப்பட்டுள்ளாய்;(உனக்குநேர்ந்த இந்தநிலை) என்னேயோ!(உன்

னுடையபுத்திரியெனப்பெயர்கொண்டுள்ள) நானும் (உன்னுடைய பெருமையைக்கண்டு களிக்கவேண்டிய) கண்களால் (உனக்குநேர்ந்துள்ள இந்தத்தீய நிலைமையைக்) காண்கின்றேன்போலும்; (எ - று.)

இவ்வாறான நிலை அறத்தினாலும் வீரத்தினாலும் மேம்பட்ட உனக்குநேர, யான் என்கண்களாற் காண்பது தகுதியன்று என்றபடி. என்னே-இரக்கக் குறிப்பு. பகைவரிருக்கையை யெரித்தல், புறத்திணையில் 'மழபுலவஞ்சி' எனப்படும். சுட்டுண்டாய், உண் - துணைவினை. சுட்டுண்டாய், உண்-செயப்பாட்டு வினைப்பொருளது. பி-ம்:—1எதிருளோர். 2சுட்டுண்டாட்டயர்ந்தாய், சுட்டுண்டாய் மறையோர்.3தொலைவு.4தின்றார். 5தோள்கள். 6போலும், நீயும், நீயே, என்னே. 7கொடிய. (கசுகசு)

நகசு.—சீதை மீண்டும் அரற்றத்தொடங்குதல்.

[1]என்றின பலவும் பன்னி யெழுந்துவீழ்ந் [2]திடரிற் [3]றேய்ந்தாள், பொன்றினள் [4]போலு மென்னப் [5]பொறையுயிர்ந் [6]துயிர்ப்புப்
போவாள், மின்[7]றனி நிலத்து வீழ்ந்து புரள்கின்ற தனைய[8]மெய்யாள்,
அன்றிலம் [9]பேடை போல வாய்திறந் தரற்ற லுற்றாள்.

(இ - ள்.) என்று இப்படிப்பட்டனவான பலவார்த்தைகளையும் விவரித்துச்சொல்லி, எழுந்து (துயரத்தைத் தாங்கமாட்டாமையினால் மீண்டும் பூமியில்) விழுந்து துன்பத்துள் அமிழ்ந்து,—'(இவள்) உயிர்நீங்கினாள்போலும்' என்று (கண்டோர்) கருதும்படி (துன்பத்தைத்) தாங்குந்தன்மைகெட்டுப் பெருமூச்சுவிடுபவளாய்,(சீதை),—மின்னலானது நிலத்து ஒன்றியாகவீழ்ந்து புரள்வதையொத்த உடம்பையுடையவளாய், அழகிய அன்றிற்பறவைபோல வாய்விட்டுக்கதறத்தொடங்கினாள்;(எ-று.)-அதனை மேலிற் கவிகளிற் காண்க.

உயிர்ப்புப்போவாள் என்பதற்கு - மூச்சு அற்றவளாய் என்றுகூறி, மூர்ச்சையடைந்தா ளென்றலும் ஒன்று. வான்மீகிமுனிவரும் அழுகின்ற சீதைக்குப் பெண்கிரௌஞ்சத்தைப் பலவிடங்களில் உவமை கூறுவர். பி-ம்:- 1என்றனள். 2இடருற்று. 3ஓய்ந்தாள், ஓய்ந்து. 4ஆகும். 5பொறி. 6உயிர்ப்பும். 7திணி. 8நீரான். 9பேடையேபோல். (கசுகள)

நகள.—இதுமுதற்பதினேருகவிகள் - சனகராசனைக்குறித்துச் சீதை அரற்றுதலைக் கூறும்.

பிறையுடை நுதலார்க் கேற்ற பிறந்த[1]விற் கடன்கள் [2]செய்ய
இறையுடை யிருக்கை மூதூ ரென்றும்வந் [3]திறுக்க லாதீர்
சிறையிடைக் காண நீருஞ் [4]சிறையொடுஞ் சேர்ந்த வாறோ
[5]மறையுடை வரம்பு நீங்கா வழிவந்த [6]மன்னர் நீரே.

பன்னிரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) வேதத்திற்கூறியுள்ள முறைமையினின்றுதவறாத சந்ததியிலே தோன்றிய அரசராகியநீர், பிறைச்சந்திரன்போன்ற நெற்றியையுடையமகளிர்க்குஏற்ற பிறந்தவீட்டவர் செய்யுங்கடமைகளைச் செய்வதற்காகவும் (எமது) தலைவருடைய [ஸ்ரீராமனுடைய] இருப்பிடமாகிய பழமையான ஊருக்குவந்து, என்றைக்கும் தங்காதிருப்பவரானீர்; (அப்படிப்பட்ட

நீரும் சிறையிலே (என்னைக்) காண்பதற்காகச் சிறையுடனே வந்தவகையோ தான் (இது)? (எ - று.)

சனகராசன் அக்கினியைஅவியாமல்வைத்துக்கொண்டு நித்தியாக்கினி ஹோத்திரஞ்செய்கின்ற ஆஹிதாக்கினியாதலால், பிறந்தகத்தார் பெண்ணுக்குச்செய்யவேண்டிய கடமைகளைச் செய்தற்காகவும் ஊரைவிட்டு வந்தவனல்லன்: அப்படிப்பட்டவனை இப்போது சிறைப்பட்டுக்கிடக்கக் காணுதலால், 'நான் சிறைப்பட்டிருப்பதைக் காண நீரும் உமதுகருமாநுஷ்டாநங்களைத் தவிர்த்துச் சிறைப்பட்டுவந்தீரோ?'என்று சீதை புலம்புகின்றன ளென்க. இல்-பிறந்தவீட்டாரென்ற பொருளைக் காட்டிற்று; ஆகுபெயர். 'மூதூர் என்றும்வந்து இறுக்கலாதீர்' என்றதற்குக் காரணங் கூறுவாள் 'மறையுடைவரம்பு நீங்காவழி வந்த மன்னர்நீரே' என்கின்றாள். பி-ம்:—1இக், அக். 2பெற்ற. 3இறுத்திலாதீர், இறுத்தலாகீர், இருந்தாலாதீர். 4சேர்ந்ததெவ்வாறுவேறோர், சேர்ந்ததெவ்வாறு செப்பும், சிறையிடைச்சேர்ந்தவாறோ. 5மறையிடை. 6மன்னநீரே, மன்னனீரே. (ககசுகஅ)

கஅ. வன்சிறைப் பறவை [1]யூரும் வானவன் வரம்பின் மாயப் [றோர்
புன்சிறைப் [2]பொறையைத் [3]தீர்ப்பா [4]னுளனெனப் புலவர் நின்
என்சிறை [5]தீர்க்கு வாரைக் காண்கிலே னென்னில் வந்த
உன்சிறை [6]விடுக்க வல்லா ரியாருள ருலகத் துள்ளார்.

(இ - ள்.) 'வலியசிறகையுடைய கருடப்பறவையை யேறிச்செலுத்துகின்ற கடவுளாகிய திருமாலோ,—அளவிடமுடியாத மாயையின்காரியமான இழிவுபட்ட சிறையென்னும் (சமுசாரபந்தமாகிய) பாரத்தைத் தீர்க்கும் பொருட்டு இருக்கின்றான்' என்று சொல்லியவண்ணம் நல்லறிவுவாய்ந்த பெரியோர் நிச்சயித்துள்ளார்: (அவ்வளவே தவிர), என்னுடைய காவலில் வாழும் வாழ்க்கையைப் போக்கவல்லவரைக் காணப்பெற்றிலேன்; என்காரணத்தினால் நேரிட்டுள்ள உம்முடையசிறையை விடுக்கத்தக்கவல்லமையுடையவர், இவ்வுலகத்திலுள்ளவரில் யார் உளர்? (எ - று.)

திருமால் மாயத்தினால்விளையும் சமுசாரபந்தத்தை யொழிக்கின்றவ ரென்றுபிரசித்தமாகப் பெரியோர் கூறியுள்ளார்; விடுவித்தற்குஅரிய அந்தப் பந்தத்தைப்போக்கவல்ல திருமாலின்அமிசமாகிய இராமனுக்கு, எனக்கு நேர்ந்துள்ள இச்சிறையைப் போக்குதல் பெருந்தொழிலன்றாயினும், வலியஇச்சிறையை விடுவிக்குமாறு அவன் வரக் காண்கிலேன்; என்சிறையையே போக்குவாரில்லையாயின், என்நிமித்தமாகவந்த உமதுசிறையைப் போக்கவல்லவர் யாவர்? எவருமில்லையே! என்று சீதை வருந்துகின்றன ளென்க. பி - ம்:—1ஊரும்மாயவன்வரம்பின், ஊர்திமழுவலான்மலரோன். 2பிறவி, சிறையைத். 3தீரார். 4உளர்பிறர், உளரெனப். 5நீக்குவாரை. 6விடுக்கற்பாவார், தீர்க்கவல்லார், நீக்கற்பாலார். (ககசுகக)

கக. [1]பண்பற்றா ரோடு [2]கூடாப் பகைபெற்றாய் பகழி பாய
விண்பெற்றா யெனினு நன்றால் வேந்தரா [3]யுயர்ந்த மேலோர்
எண்[4]பெற்றாய் பழியும் பெற்றா யிதுநின்னாற் பெற்ற [5]தன்றாற்
பெண்பெற்றா யதனாற் பெற்றா [6]யாவர்நின் பேறு பெற்றார்.

(இ - ள்.) நற்குணமிராதவரோடுசேராமலிருத்தலால் தோன்றிய பகைவனை அடைந்தீர்; (நீர் இப்படிப் பகைவன்கையிலகப்பட்டுச் சிறையுண்டு கிடப்பதைக்காட்டிலும், பகைவனுடைய) அம்பு (உம்மீது) பாய்வதனால் (இறந்து) வீரசுவர்க்கத்தையடைந்தீ ரென்றாலும் நல்லதாகும்; (நீர்) வேந்தராகி மேம்பாட்டையடைந்த பெரியோரில் எண்ணிக்கையையும் அடைந்தீர்; (இப்போது பகைவர்கையில் அகப்பட்டதனாற்) பழியையும்அடைந்தீர்: (பழிக்குக்காரணமாகநேர்ந்த) இந்த உமதுநிலை,நீரே தேடிக்கொண்டதன்று;(பின்னை எதனால் வந்ததெனின்), பெண்ணாக (என்னைப்) பெற்றீராதலால் அவ்வழியாகப்பெற்றீர்; உம்மைப்போல் (இவ்வாறான) பேற்றை [பகைவர்கையிற் சிக்குண்டு பழிக்குப்பாத்திரமாவதை] அடைந்தவர் யாவர்? (எ - று.)

உமக்கு இராவணன் பகையானது - பண்பு அற்றவரோடு சேர்வதில்லையென்று நீர் உறுதிகொண்டிருப்பதனா லாகும்; அங்ஙனம் உறுதியுள்ள நீர் பகைவர்கையி லகப்பட்டுப் புகழையிழப்பதைக் காட்டிலும் போரில் உயிரொழிந்துவிட்டீரென்றாலும் நலமே; அப்போது பழிப்புக்கு இடனில்லையன்றோ? உயர்ந்த வேந்தரோடு சேர்த்துஎண்ணப்படும் பெருமைவாய்ந்தநீர், பகைவர்கையிற் சிக்குண்டதனாற் பழியடைந்துவிட்டீரே; இந்தப்பழி நீர் தேடிக்கொண்டதன்று: சீதையாகியஎன்னைப் பெற்றதனால் தோன்றியதாகுமென்று, சீதை வருந்திக்கூறுகின்றனளென்க. 'யாவர்நின்பேறுபெற்றார்' என்ற வாக்கியம் - உம்மைப்போல் துர்ப்பாக்கியமுள்ளவர் எவருமில ரென்ற எதிர்மறைப் பொருளைக் காட்டும். பண்பற்றாரோடு கூடாப்பகை என்றஇடத்து, கூடா என்னும் பெயரெச்சம்-காரணப்பொருளதாய்க் காரியப்பெயரைக்கொண்டது. 1பண்பெற்றாரோடுகூடாப்பகை என்ற பாடத்துக்கு - நற்குணவான்கள் கூட்டத்திற்சேராத பகையென்று, பகையினதுதன்மையைக் கூறியதாகக் கருத்துக் காண்க. இறந்துவிடுவதில், பகைவர்கையிற் சிறைப்பட்டானென்ற ஈனச்சொல்லில்லாமல் வீரசுவர்க்கம் புகலாமாதலால், 'விண்பெற்றாயெனினும் நன்றால்' என்றது. பி-ம்.—2கூடப்பகைபெற்று. 3வந்தோர். 4பற்றுப், பெற்றார். 5என்றால். 6யாரின்ன, யாரிந்தப். (௧௬௨0)

௬0. 1சுற்றுண்ட பாச 2நாஞ்சிற் சுமையொடுஞ் சூடுண் 3டாற்ற
எற்றுண்டு 4மளற்று நீங்கா 5விழுசிறு ருண்டை யென்னப்
பற்றுண்ட நாளே மாளாப் 6பாவியே னும்மை யெல்லாம்
விற்றுண்டே னெனக்கு மீளும் விதி7யுண்டோ நரகில் 8வீழ்ந்தால்.

(இ - ள்.) கயிற்றினாற் கட்டப்பட்டுள்ள கலப்பையிலே (நுகத்தடிச்) சுமையுடனே சூடுண்டும், மிகவும் அடியுண்டும், சேறுயுள்ள கழனியை விட்டுநீங்காமல் (அச்சேற்றிலேயே உழுதவண்ணம்) விழுந்தன்மையுள்ள சிறியஎருதுபோல,—(பகைவனாற்) பிடியுண்ட காலத்திலேயே உயிரைநீக்க மாட்டாமற்போன தீவினையையுடையேனான நான்,உங்களையெல்லாம் விலைப்படுத்திவிட்டேன்; (நான் தீவினைப்பயனையனுபவிக்கும்படி நேர்ந்து) நரகத்தினிடைப்பட்டால், (அந்நரகத்தினின்று) மீளும்வகை எனக்கு உள்ளதோ?

இருப்புச்சலாகையாற்குடுண்டு எரிற்பூட்டிக் கோலால்அடிக்கவும்பட்டுச் சேற்றிலேயேஉழுமாறு செலுத்தப்பெறுவதனுற் செல்லமாட்டாது அந்தக் கழனிச்சேற்றில்தானே விழுந் தன்மையைக் கொண்ட எருதுபோலப் பெரும் பாவியேன் யான் என்று, இராமனைப்பிரிந்து இராவணன்கையிற் சிக்குண்டு பலவகைத் தீச்சொல்லாற்பொத்தப்பட்டுச் சிறைப்பட்டு உயிருடனேயுள்ள தன்னை, சீதை வெறுத்துக் கூறுகின்ருள். சனகன் இப்போதுபற்றப்பட்டு இங்குவந்தது தன்னுலேயே யென்று கருதுபவளாதலால், 'உம்மையெல்லாம் விற்றுண்டேன்' என்கிருள். உம்மையென்றது-இவ்வரக்கர்கையிற் சிக்குண் டாரோஎன்று ஐயுறுகின்ற அயோத்தியரையும் மிதிலையாரையும் உளப்படுத்து மென்னலாம். பற்றப்பட்டபோதே உயிரை நீத்திருந்தால் நான் சிறைத்துன் பத்தினின்று மீள்வதல்லாமல், உம்மையும் இவ்வாருனநிலைக்கு உள்ளாக்காம லிருக்கலாமே: அப்படிச்செய்யாமல் என்னைப்போலவே உங்களையுஞ் சிறைப் படுத்தியதனுல் எனக்கு நேரும் பாதகம் மிகப்பெரிது என்பாள் 'எனக்குமீளும் விதியுண்டோ நரகின் வீழ்ந்தால்' என்கிருள். சூடுதல் - அடித்தலும், எற்று தல்-தாற்றுக்கோலாற் குத்துதலுமாம். பாசஞ்சுற்றுண்ட நாஞ்சில் என்க. பி-ம்:—1சுற்றுண்டாய். 2நான்ற. 3ஆற்ருது. 4மலறுநீங்கா, என்றுநீங்கா, என்று நீங்கா, அளற்றினீங்காது. 5உழு. 6பாவியான். 7உண்டே. 8வீழ்ந்தார். (கரு௨க)

சஅ. 1இருந்துநான் 2பகையை யெல்லா 3மீறுகண் டளவி லின்பம்
பொருந்தினே னல்லே னெங்கோன் றிருவடி புனைந்தே னல்லேன்
வருந்தினே னெடுநா ளும்மை 4வழியொடு முடித்தேன் வாயால்
அருந்தினே னயோத்தி வந்த வரசர்தம் புகழை 5யம்மா.

(இ - ள்.) நான், (இலங்கையிற் சிறையிலே) தங்கிப் பகைவர்திரளை யெல்லாரும் நாசமடையுமாறுசெய்து அளவில்லாத இன்பத்தை யடைந்தே னல்லேன்; எமதுதலைவனுகிய இராமபிரானது திருவடிகளைச் சூடினவ ளல்லேன்; வெகுகாலமாக[பத்துமாசகாலமாக]ச் சிறைப்பட்டு வருத்தமடைந் தேன்;உம்மை வமிசத்தோடும் அழியச்செய்தேன்; அயோத்தியிலேதோன்றிய வரான அரசர்களுடைய கீர்த்தியையெல்லாம்(என்)வாயினுல் உண்டிட்டேன்; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்.

நான் சிறையிருந்துவருந்தியதனுல் பகைவரையெல்லாம் அழியச்செய்து இராமபிரான் திருவடியைப்புனையுமாறு நேர்பட்டிருப்பின்,அப்போது இந்தச் சிறைவாசமும் மேன்மைபெற்றதாகும்: என்சிறைப்பாடு அவ்வாறு நல்லபய னைத்தராது உம்மை வமிசத்தோடுமுடிக்கவும் அயோத்தியர்புகழையெல்லாம் மிச்சமில்லாமல்ஒழிக்கவும் நேர்ந்ததே! என்று வருந்துகின்ருள் சீதை யென்க. அழித்திட்டபொருளை 'வாயிற்போகட்டுக்கொண்டான்'என்ற வழக்குப்பற்றி, 'புகழை வாயாலருந்தினேன்' என்கிருள்: உலகவழக்குநவிற்சியணி. இனி, 'மானைப்பற்றித்தா' என்றது முதலிய தன்வாய்ச்சொற்களே கேட்டிற்குக்கா ரண மென்பதுபற்றி இவ்வாறு கூறினுளுமாம்.பி-ம்:—1இருந்துதான்,இருந் தயான். 2பதைத்தது. 3இறுதி. 4பழியொடும். 5அந்தோ, ஐயா. (கரு௨௨)

சஉ. கொல்லெனக் கணவற் [1]காங்கோர் [2]கொடும்பகை கொடு த்தே னெந்தை, கல்லெனத் [3]திரண்ட தோளைப் பாசத்தாற் கட்டக் கண்டேன், இல்லெனச் சிறந்து நின்ற விரண்டுக்கு [4]மின்னல் சூழ்ந் தேன், அல்லனோ [5]வெளிய ளோயா [6]னளியத்தே [7]னிறக்க லாதேன்.

(இ - ள்.) (என்னுடைய) கணவனுர்க்கு,கொல்வாயென்று சொல்லி அங்கே [பஞ்சவடியில்] ஒரு கொடிய பகையை (உண்டாக்கி)த் தந்தேன்;(இப் போது இங்கு) எனதுதந்தையாகிய உமது மலைபோலத்திரண்ட தோள்க ளைக் கயிற்றினுற் கட்டியிருக்க(வும், அதனை விடுவித்தற்குரிய உபாயத்தைத் தேடாமற்) பார்த்துக்கொண்டேயிருந்தேன்:இருகமென்றுசொல்வதற்குச்சிறப் புவாய்ந்த (பிறந்தகம் புக்ககம் என்ற) இரண்டுக்கும் துன்பம்விளையுமாறு ஆலோசித்தவளாகேனோ? நான் சாமானியமானவளோ? (இந்நிலையிலும்) உயிரைப்போக்காது வைத்துக்கொண்டுள்ளயான் இரங்கத்தக்கவள்; (எ-று.)

'மாயமானைப் பிடித்துத்தா'என்று ஸ்ரீராமபிரானைக்கேட்டதே அவ்விரா மன் என்னைப்பிரிந்து பெருந்துன்பத்திற்கு உள்ளாகக் காரண மானதனுல், அச்சொல்லையே'கொல்லெனக்கணவற்குஆங்கோர்கொடும்பகைகொடுத்தேன்' என்று சீதை கூறுகின்றுள். கணவன் தந்தை ஆகிய இருவர்க்கும் தீமை விளையத் தான் காரணமானதுபற்றி, 'இல்லெனச்சிறந்து நின்ற இரண் டுக்கும் இன்னல் சூழ்ந்தேன்' என்றது. 'அளியத்தேன்' என்று, தன்னிடத் துப் பழிப்பினுற் கூறுகின்றுள்: இது, அளிசெய்யத்தக்கவளல்லனென்றகருத் தைப் புலப்படுத்தும்.'ஒல்லையிற் சடாயுவேந்தனுயிரினைக் குறைத்தேன்றாய' என்றுஒருபிரதியில் இரண்டாமடி காண்கிறது.பி-ம்:—[1]எங்கு,இங்கு.[2]நெடும். [3]தடந்தோளீர்த்துப்,சிறந்ததிண்டோள்.[4]இறுதி.[5]எளியளோ. [6]அளியற்றேன். [7]இருக்கலாமோ, அயர்க்கலாமோ, நிற்கலாமோ. (கககஉ௩)

ச௩. இணையறு வேள்வி மேனு ளியற்றியின் றெடுத்த வெந்தை
[1]புணையுறு [2]திரடோள் [3]யாத்துப் பூழியிற் [4]புரளக் கண்டேன்
மணவினை முடித்தென் கையை மந்திர [5]மரபிற் றொட்ட
கணவனை [6]யிணைய கண்டா லல்லது [7]கழிகின் றேனே.

(இ-ள்.)முற்காலத்தில்,ஒப்பற்றயாகத்தைச்செய்து(என்னைப்)பெற்றுவள ர்த்த என்தந்தையாகிய சனகராசனது தெப்பம்போலப் பொருந்திய[அடைந் தோர்க்கு ஆதரவாகிய]திரண்ட தோளை(ப் பகைவர்)கட்டியதனுல்மண்ணிலே புரளக்கண்ட யான்,—கலியாணச்சடங்கை(ச் செய்து) முடித்து என்கையை வேதமந்திரத்திற்கூறிய முறைப்படி பிடித்த(என்)கணவனையும், இவ்வாறுன செயலை[புழுதியிற் புரளுதலை]க் கண்டாலல்லாமல்உயிர்நீங்குவேனோ?(எ-று.)

பகைவர் என்தந்தையாரின் தோளைப் பிணித்துப் பூமியிற் புரட்டக்கண்ட யான் என்கணவனுரையும் பகைவர் இங்ஙனஞ்செய்யக் காணும்படி நேரும் போலிருக்கிறதே! அதற்குள் என்பிராணன் போகக்கூடாதா?என்று இரங்கிக் கூறினள் சீதை யென்க. யாகத்தைச்செய்ய உழுதபோது உழுபடைச்சாலிற் கிடைத்தவ ளாதலால், அத்தன்மை தொனிக்க, 'இணையறுவேள்விமேனு ளியற்றி யின்றெடுத்த எந்தை'என்கிறுள். புணையுறுதோள்-தன்னையடைந்தா

ரைத் தாங்கவல்ல வலிமையுடைய தோள் என்றவாறு. இனைய = இனையது. பி-ம்:—1புணையறு. 2தடந்தோள். 3யார்த்து,ஆரப்.4புரட்டக்.5விதியால்.6இன்னல்கண்டாலல்லது, வினையேன்காண்டலின்றியே,இனையேன்காண்டலின்றியே. 7கழிக்கின்றேனே. (கசுஉ௪)

சுரு. 1அன்னைமீ 2ரையன் மீரோ யாருயிர்த் தங்கை மீரே
என்னையீன் றெடுத்த வெந்தைக் 3கெய்திய தியாது மொன்று
4முன்னநீ ருணர்ந்தி லீரோ வுமக்கும்வே றுற்ற துண்டோ
துன்னரு நெறியின் வந்து தொடர்ந்திலீர் துஞ்சி னீரோ.

(இ - ள்.) தாய்மார்களே! பெரியோர்களே! (என்னுடைய) அரிய உயிர் போன்ற தங்கைமார்களே! என்னைப்பெற்றெடுத்த என்தந்தைக்கு நிகழ்ந்துள்ள நிலையை யாதொன்றும்[சிறிதும்]நீர் மனத்தினால்(நினைந்து)அறிந்தீரில்லையோ? (அன்றி),உங்கட்கும்,(இந்த என்தந்தைக்கு நேர்ந்ததுபோலவே) வேறு நிகழ்ந்த ஆபத்து (ஏதேனும்) உண்டோ? (நீங்கள்), கிட்டி நெருங்குவதற்கு அரிய வழியிலே வந்து தொடர்ந்தீரில்லை; (ஒருகால் நீங்களெல்லோரும்) இறந்துவிட்டீர்களோ? (எ - று.)

அன்னைமீர் என்றது-சனகனது மனைவிமுதலியோரையெனவும், ஐயன்மீர் என்றது-ஜநகனது தம்பியாகிய குசத்துவசன் புரோகிதராகிய சதாநந்தன் முதலியோரையெனவும் கொள்ளலாம். 'ஆருயிர்த்தங்கைமீர்' என்றது - பரதன்முதலியோரது மனைவியரான மாண்டவி முதலியோரை. உடன்வந்திடாமையால், தந்தைக்குநேர்ந்ததை யறியாமலாவது இருக்கவேணும்: அன்றி, தந்தையைப்போலவே பிடியுண்டு கட்டுப்பட்டாவது இருக்கவேணும்: அல்லாக்கால், இறந்தாவது இருக்கவேண்டுமென்கிறாள். துஞ்சுதல்-மங்கலவழக்கு. முன்னம்-மனம். பி-ம்:—1அன்னையே. 2ஐயன்மீரென். 3எய்தியதுயரமேதும். 4முன்னிநீர். உன்னலீர். (கசுஉ௫)

சுரு. 1மேருவிற் குப்பர்ச் சேர்ந்து விண்ணினை நீக்கொண் டாலும்
நீருடைக் காவன் மூதூர் 2ரெய்தலா 3நெறியிற் றன்றாற்
போரிடைக் 4கொண்டா ரேனும் வஞ்சனை புணர்த்தா ரேனும்
ஆருமக் 5குரையற் பாலா ரனுமனு முளரோ 6நும்பால்.

(இ - ள்.) மேருவின் மேலிடத்திற்போய் விண்ணுலகத்தைக் கைக்கொண்டாலும், நீருற்சூழப்பட்ட அரணைக்கொண்ட பழமையான இந்த இலங்காபுரமானது (பிறரால்) அடைதற்கு உரிய வழியையுடையதன்று; (நம்முடைய பகைவர், உம்மைச்சேர்ந்தோரின்உயிரைப்) போரிலே கொண்டாராலும் மாயச்செயலைச் செய்தாராலும், உமக்கு (நிகழ்ந்ததைச்) சொல்லக்கூடியவர், யாவருளர்? உம்மிடத்து அநுமானும் இருக்கின்றானோ? (எ - று.)

'உம்மைச்சேர்ந்தோர்க்கு இங்குளந்தநிலைநேர்ந்தாலும் கடல்கடந்துஇங்கு வந்து செய்தியறிந்து மீண்டு நமக்கு அறிவிப்பாரில்லையே!'என்று சீதை வருந்தியவாறு. அநுமான் உம்மிடம் இருப்பானாயின், அவன் கடல்கடந்து இந்த ஊரையடைந்து இங்கு நிகழுஞ்செய்தியையறிந்து மீண்டு சொல்லவல்லவனென்பாள் 'நும்பாலனுமனும் உளனோ?' என்கிறாள். முன்பு அநுமான் தன்னிட

த்து இருந்ததனால், ஸ்ரீராமன் அவனை விடுத்து இங்கு இருந்த என்னிலையைய றிந்தான்: அதனால், ஸ்ரீராமன் இப்போது வந்துள்ளான்: அப்படிச் சனகனுக்கு நேரிட்டுள்ள விபத்தைய றிவித்தற்கு அநுமானைப்போன்ற ஒருத்தர் இல்லாமை யால்தான் நீங்கள் செய்தியையே யறியமுடியாது வாராமலிருக்கின்றீரோ? எனக் கருத்துவிவரித்துக் காண்க.: பி-ம்:—[1]மேருவினும்பர்ச். [2]எய்துவர். [3]நெறி யிற்றன்றே. [4]கண்டாரேனும். [5]உரைக்கற்பாலார், அறியற்பாலார். [6]உம்பால்.

௬௬. சரதமற் றிவனைத் தந்தார் தவம்புரி [1]யாற்றல் [2]தாழ்ந்த
பரதனைக் கொணர்தற் கேது மையுற வில்லைப் பன்னாள்
வரதனும் வாழ்ந்தா னல்லன் றம்பியு [3]மனையன் வாழான்
விரதமுற் றறத்தி னின்றாக் கிவைகொலாம் விளைவ மென்மேல்.

(இ - ள்.) இந்தச்சனகராசனை(ப் பற்றிப் பிடித்துக்கட்டிக்)கொணர்ந்த பகைவர், தவம்புரிந்து உடல்வலிமைகுறைந்த பரதனைப் பற்றிக்கொண்டுவரு தற்கு எதுவும் [சிறிதும்] சந்தேகம் இல்லை; நிச்சயம்: (பரதன் பகைவர்கைப் பட்டபின்பு, வேண்டுவார்) வேண்டியதையெல்லாம் கொடுக்கவல்லனான ஸ்ரீ ராமனும்,—(பலகாலம் உயிருடன்) வாழ்பவனாக இராமன்; (அவனுடைய) தம்பி யும் [இலட்சுமணனும்], (அவ்விராமனையே) போன்றவனாய் உயிர்வாழமாட் டான்; விரதத்தைமேற்கொண்டு தருமவழியிலே யூன்றியிருப்பார்க்கு, மேல் மேல் விளையத்தக்கவை இவையோதாம்? (எ - று.)

சனகனைப் பற்றிக்கொணர்ந்த பகைவர்க்குப் பரதனை இவ்வாறு பற்றிக் கொணர்தல் முதலியனசெய்தலும் எளியதே; பரதனுக்கு ஆபத்துநேர்வதை யுணரின், இராமனும் மற்றைத்தம்பிமாரும் உயிர்வாழாரென்பது, திண்ணம்: நன்னெறி மேற்கொண்டார் இவ்வாறு தீமையுறுதல் தக்கதோ? என்று புலம் பிக்கூறுகின்றனள் சீதை யென்க. தம்பியென்றது-சத்துருக்கனனையும் உண ர்த்தும். விரதம்முற்று அறம்என்று பிரித்து-விரதமிருந்து முடிக்கப்படுகின்ற அறம் எனினுமாம். வாழ்ந்தான்-இயல்பினால்வந்த காலவழுவமைதி. பி-ம்:— [1]புரிந்தாற்றல். [2]சான்ற. [3]அனையவாழ்வான், அனையன்வாழா. (௧௬௨௭)

௬௭. அடைத்தது கடலை மேல்வந் [1]தடைந்தது [2]மதிலை யாவி
துடைக்கது பகையைச் சேனை யெனச்சிலர் சொல்லச் சொல்லப்
படைத்ததோ ருவகை தன்னை வேறொரு வினயம் பண்ணி
யுடைத்தது விதியே யென்றென் [3]றனைந்தன [4]ளுணர்வு [5]சோர்வ [ள்.

(இ-ள்.) '(வானர)சேனையானது, சமுத்திரத்தை யணைகட்டித்தடுத்தது (இலங்காபுரத்தின்) மதிலை எதிர்த்துவந்து சேர்ந்தது; பகைவரை உயிரைப் போக்கிற்று' என்று சிலர் சொல்லுந்தோறும், (கேட்டு, யான்) அடைந்த தாகிய ஒப்பற்றமகிழ்ச்சியை, (என்) ஊழ்வினையே வேறொரு வஞ்சகத்தொழி லைசெய்து போக்கிற்றென்று பன்முறை கூறி வருந்தினவளாய், (சீதை) அறிவுஒழியவளானாள் [மூர்ச்சித்தாள்]; (எ - று.)—பி - ம்:—[1]அடர்த்தது. [2]பதியை. [3]உரைத்தனள், உயிர்த்தனள், உளைத்தனள். [4]உரையுங். [5]தீர்ந்தாள்.

௪௮.—'இப்போது வேண்டிக்கொண்டால், சீதை வசமாவாள்' எனக் கருதி இராவணன் கூறத்தொடங்குதல்.

ஏங்குவா ளினைய [1]பன்ன விமையவ [2]ரேற்ற மெல்லாம்
வாங்குவா ளரக்க [2]னுற்ற மனமகிழ்ந் தினிதி னோக்கித்
தாங்குவா ளல்ல டுன்ப [3]மிவனையுந் தாங்கித் தானும்
[4]ஓங்குவா ளென்ன வுன்னி யினையன [5]வுரைக்க லுற்றான்.

(இ - ள்.) (துன்பத்தினால்)இரங்குபவளாய்(ச் சீதை) இவ்வாறான வார்த்தைகளைக் கூற,தேவர்களுடைய மேன்மையையெல்லாம் வாங்கிய வாட்படையையுடைய இராவணன்,—மிகவும் மனமகிழ்ந்து, இனிமையாக[காதலோடு] பார்த்து, '(இந்தச்சீதை), துன்பம் தாங்குவாள் அல்லள்; (ஆகையால், இப்போது நாம் இவள் மனமுவக்கும்படி பேசினால்), இந்தச்சனகனையும் பாதுகாத்துத் தானும் (துன்பம்நீங்கி) மேம்பட்டிருப்பாள்[எனக்குஇணங்குவாள்]' என்று நினைத்து, இவ்வாறான வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அவற்றை மேல்ஆறுகவிகளிற் காண்க.

வாள் - இராவணன் கைலாயமலையின்கீழ் அகப்பட்டு நசுக்குண்டு சாமகானத்தினாற் சிவபிரானைத் தோத்தரித்தபோது மனமுவந்த அப்பிரானது அருளினாற் பெற்றது: சந்திரஹாஸ மெனப்படும். பி-ம்:—[1]பன்னி. [2]மற்ற. [3]என்னையும், இவளையும். [4]ஓங்குவான். [5]உணர்த்தல். (௧௬௨௧)

௪௯.—இதுமுதல் ஆறுகவிகள்-ஒருதொடர்: இராவணன் மீண்டும் சீதையை இணங்குமாறுவேண்டுதலைத் தெரிவிக்கும்.

காரிகை நின்னை யெய்துங் காதலாற் கருத [1]லாகாப்
பேரிட ரியற்ற லுற்றேன் பிழை[2]யிது பொறுத்தி [3]யின்னும்
வேரற மிதிலை யோரை விளிகிலேன் விளிந்த போதும்
ஆருயி ரிவனை யுண்ணே னஞ்சலை யன்ன மன்னாய்.

(இ - ள்.) அழகிய பெண்ணே! (நடையால்) அன்னப்பறவை போன்றவளே! உன்னைப் பெறவேணுமென்ற விருப்பினால் நினைத்தற்குங் கூடாத [மிகக்கொடிய] பெரியதுன்பத்தைச் செய்யத்தொடங்கினேன்;இந்த(எனது) குற்றத்தைப் பொறுத்தருள்வாய்; பின்னும் மிதிலையிலிருப்பவரை வேரோடு அழிந்திடும்படி கொல்வதில்லை; (நான்) சாவதாயிருந்தாலும் இந்தச்சனகனுடைய அருமையான உயிரைக் கொல்வதில்லை;அஞ்சாதே; (எ - று.)

காதலென்பது அறிவைக்கெடுப்பதாதலால்,'இன்னது செய்யத்தக்கது, இன்னது செய்யத்தகாதது'என்ற விவேகமில்லாமல் உன்தந்தையைக் கட்டிக்கொணர ஏற்பாடுசெய்திட்டேன்:உன்மனம் நோவுமாறு இத்தொழில்புரிந்தது தவறென்று இப்போது ஏற்படுகின்றது: ஆதலால், இப்பிழையைப்பொறுப்பாய்: மிதிலையில் எவர்க்கும் ஒருதுன்பத்தையும் புரியேன்: என்னுயிர்போவதானாலும் இவனைக் கொல்லேன்; நீ அஞ்சாதே' என்று சீதை மனமுவக்க வேணு மென்ற கருத்தினால் இராவணன் கூறுகின்றன னென்க. இந்தச்சனகனை உயிர்கொள்ளாவிடின் என்னுயிர்போவது நிச்சய மென்று ஏற்பட்டாலும் அப்போதும் நான் இவனுயிரைக் கொல்லே னென்பது, 'விளிந்தபோ

தும் ஆருயி ரிவளை யுண்ணேன்' என்றதன் கருத்து. விளிகிலேன்=விளிக்கிலேன்: தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது. உயிருண்ணேன் -"உண்டற்குரிய வல்லாப்பொருளை,யுண்டதுபோலக் கூறலும் மரபே" என்றதனால் அமைந்தது. பி-ம்:—1ஆகப். 2அது. 3பின்னை. (கசுருo)

௫o. இமையவ ருலக [1]மேதா னிவ்வுல கேழு [1]மேதான்
அமைவரும் புவன [2]மூன்றி லென்னுடை யாட்சி [1]யேதான்
சமைவுறத் தருவன் [3]மற்றித் தாரணி [4]மன்னற் கின்னற் [ன்.
சுமையுடைக் காம வெந்நோய் துடைத்தியேற் றொழுது வாழ்வே

(இ - ள்.) துன்பத்தைவிளைக்கின்றதும் சுமையாகத் தோன்றுகின்றதுமான(என்)காமமாகிய கொடியநோயைப் போக்குவாயானால்,—(அப்போது), இந்தப் பூமிக்குஅரசனாகிய சனகனுக்கு,—தேவருலகம் வேண்டுமானாலுஞ்சரி, ஏழுதீவாகவுள்ள இந்தப்பூலோகம்முழுதும் வேண்டுமானாலுஞ்சரி,பொருந்திய மூன்றுஉலகத்திலுமுள்ள என்னுடைய அரசாட்சிச்செல்வம் வேண்டுமானாலுஞ்சரி, சுவாதீனமாகும்படி கொடுப்பேன்: (அன்றியும், உன்னைக் கடவுள் போலத்) தொழுது வாழ்ச்சியுற்றிருப்பேன்; (எ - று.)

நீ மாத்திரம் எனது காமநோயைப் போக்குவா யானால்,நான் எதுவேணுமென்றாலும் உனதுதந்தையான இந்தச்சனகராசனுக்குத் தருவேன்: அன்றியும், உன்னையும்தொழுதவண்ணம் வாழ்ச்சியுற்றிருப்பே னென்றனனென்க. தொழுது என்பதற்கு-இந்தச்சனகனைத்தொழுது எனினுமாம். தாரணி-தாரணீயென்ற வடசொல்லின்விகாரம்:பூமியென்பதுபொருள்: இனி, தார்அணி-மாலையையணிந்த என்றுமாம். மற்று-வினைமாற்று. பி - ம்:—1ஓ. 2மூன்றும். 3பற்றித். 4மன்னற்கோான். (கசுருக)

௫க. இலங்கையூ ரிவனுக் [1]கீந்து வேறிடத் [2]திருந்து வாழ்வேன்
நலங்கிளர் [3]நிதி யிரண்டு நல்குவ னமைத் தெய்வப் [ள்
பொலங்கிளர் [4]மானந் தானே [5]பொதுவறக் [6]கொடுப்பன் புத்தே
வலங்கிளர் வாளும் வேண்டில் [7]வழங்குவ [8]னியாது மாற்றேன்.

(இ - ள்.) (நீ) வேண்டுவாயாயின், இலங்கையாகிய நகரை இந்தச்சனகனுக்குக் கொடுத்து, (நான் இந்நகரத்தைவிட்டு) வேறோரூரிலிருந்து உயிர் வாழ்வேன்; நன்மைமிகுந்த (சங்கநிதி பதுமநிதிஎன்ற)இருநிதிகளையும் (இவனுக்குக்)கொடுப்பேன்; பிரசித்திபெற்றதெய்வத்தன்மையுள்ள அழகுவிளங்குகின்ற புஷ்பகவிமானத்தையும் பொதுமைநீங்க [இவனுக்கே உரியதாக]க் கொடுப்பேன்;வெற்றியோடு விளங்குகின்ற தெய்வவாளையும், கொடுப்பேன்; (கேட்பது)எதனையும்,(கொடுக்கமுடியாதென்று)மறுத்துச்சொல்லமாட்டேன்.

மானம் - விமானம்: முதற்குறை. புத்தேள்வாள் - சிவபிரான்தந்த வாள். பி-ம்:—1ஈந்தேன். 2இருந்தியானும், இருப்பனீதில். 3நிதியமூன்றும். 4விமானந். 5பொதுவுறக். 6கொடுத்துப். 7நல்குவன். 8யாவுமற்றேன். (கசுருஉ)

௫உ. இந்திரன் [1]கவித்த மௌலி யிமையவ ரிறைஞ்சி யேத்த
மந்திர மரபிற் சூட்டி வானவர் மகளி ரியாரும்

பந்தரி னுரிமை செய்ய யா[2]னிவன் பணியி னிற்பன்
சுந்தரப் பவள [3]வாயா [4]லொருமொழி சிறிது [5]சொல்லின்.

(இ - ள்.) (சீதையே!) அழகிய பவழம்போன்ற (உனது) வாயினால், ஒருபேச்சைச் சிறிதே சொல்வாயானால், (பிறகு), யான்,—தேவேந்திரன் (தலையின்மீது) சூடியுள்ள கிரீடத்தைத் தேவர்கள் வந்துவணங்கித் துதிக்கும்படி வேதமந்திரத்தோடு (முன்னோரணிந்த) முறைப்படியே (இந்தச்சனகனுக்கு) அணிவித்து, தேவமகளிரெல்லாம் பந்தல்போல(க் கவிந்துகொண்டு) உரிய பணிகளைச் செய்துநிற்க, இவன்கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நிற்பேன்; (எ-று.)

தேவேந்திரப்பட்டத்தையே இவனுக்குக்கட்டவேண்டுமென்றாலும் அவ்வாறேசெய்வேனென்கின்றான், இராவண னென்க. நீ பூர்ணசம்மதமுங்காட்டவேண்டுவ தில்லை யென்பான் 'ஒருமொழி சிறிது சொல்லின்' என்கிறான். பி-ம்:—[1]கவிக்க. [2]அவன். [3]வாயாய், வாயீர், வாயோர். [4]அருள். [5]சொல்லீர்.

ருரு. எந்தைதன் றந்தை தாதை யிவ்வுல [1]கின்ற முன்னோன்
[2]வந்திவன் றனே [3]வேட்ட வரமெலாம் [4]வழங்கும் [5]மற்றை
[6]அந்தக னடியார் செய்கை யாற்றுமா லமிழ்தின் வந்த
செந்திரு நீ[7]ரல் லீரே லவளும்வந் தேவல் செய்யும்.

(இ - ள்.) (நீர் என்வேண்டுகோட்கு இணங்குவீரானால் பின்பு),— எனது தந்தையான விச்சிரவமுனிவனது தந்தையாகிய புலஸ்தியமகரிஷியின் தகப்பனும் இவ்வுலகங்களையெல்லாம் படைத்த பழமையானவனுமான அந்தப் பிரமன் தானே வந்து இந்தச்சனகன் வேண்டியவரங்களெல்லாவற்றையும் கொடுப்பான்; மற்றும் (கொல்லுங்கடவுளாகிய) யமன் அடிமைப்பட்டவர்செய்யுங் குற்றேவல்களைச் செய்வான்; (பாற்கடல் கடைந்தகாலத்தில்) அமிருதத்தோடுதோன்றிய அழகியதிருமகளாக நீர் இராமற்போனால், அந்தத் திருமகளும், (உம்மருகே) வந்து (உமக்குக்) குற்றேவல்புரிவாள்; (எ - று.)

தன்விருப்பிற்குச் சீதை யிணங்கினால் பின்னும்பெறக்கூடியவை இவையெனப் பேசுகின்றான், இராவணன். இலக்குமியே சீதையாய்வந்திருக்கின்றாளென்று சொல்லக்கேட்டிருத்தலாலும் அந்தப்பேச்சில் பூர்ணநம்பிக்கை இல்லாமையாலும், 'அமிழ்தின்வந்த செந்திருநீரல்லீரேல்' என்றது. பி-ம்:—[1]ஈன்றானென்முன். [2]வந்திவண். [3]கேட்ட, விட்ட. [4]வழங்கி. [5]ஆற்றால். [6]அந்தமில்... ஆற்றுவேன். [7]இலீர். (ககாடு)

ருசு. தேவரே [1]முதலா மற்றைத் [2]திண்டிற னுகர் மண்ணோர்
[3]யாவரும் வந்து [4]நுந்தை யடிதொழு தேவல் [5]செய்வார்
பாவைநீ [6]யிவனின் வந்த பயன்[7]பழு தாவ தன்றால்
மூவுல காளுஞ் செல்வங் [8]கொடுத்தது முடித்தி யென்றான்.

(இ - ள்.) தேவர்கள்முதலாக மற்றுமுள்ள மிக்கவலிமைபெற்ற பாதாளலோகவாசிகளும் மண்ணுலகத்தவரும் எல்லோரும் வந்து உன்தந்தையாகிய சனகனது பாதங்களை வணங்கி ஏவியதொழிலைச் செய்வார்கள்; சித்திரப்பதுமைபோன்றவளே! நீ இந்தச் சனகராசனிடத்தினின்று பிறந்ததனால் பெறலாகும் நன்மை பழுதுபடாது; மூவுலகத்தையும் ஆளுகின்றசெல்வத்தை (இந்தச்

சனகனுக்குக்) கொடுத்து (நீ இவனுக்கு மகளாகத்தோன்றிய) அந்தப்பயனை முடிப்பாய் என்று கூறி முடித்தான், (இராவணன்); (எ - று.)

'தன்னைப்பெற்றதனால்தான் சனகராசனுக்குப் பகைவர்கையில் பிணிப்புண்ணுதல் நேர்ந்தது' என்று சீதை கருதியுள்ளாளாதலால், 'நீ இவனின் வந்த பயன் பழுதுஆவதன்று' என்கிறான். 'அது' என்பது - எனது அந்த வேண்டுகோளை யென்று உரைப்பாருமுளர். பி-ம்:-[1]முதலினோர்கள். [2]சிறிய நாளிறுதியானோர், செறுநரிற்சிறுகியானோர், சிறுநரிறுதியானோர், அறிஞருஞ் சீரியோர்கள். [3]எவரும். [4]உன்றந்தை. [5]செய்யப். [6]இதனில். [7]பழுதாகாவண்ணம். [8]கொடுத்தனன், கொடுத்திது. (கசுரு)

௫௫.—இதுமுதல் ஐந்துகவிகள்-அதுகேட்ட சீதை சினத்தோடு கூறுவனவற்றைத் தெரிவிக்கும்.

இத்திருப் பெறுகி[...]ந் [2]இனியணிலங்கை நுங்கள்
பொய்த்திருப் [1]பெறுகிமாய் சுமிதவீடணன் புலவர் கோமான்
கைத்திருச் சரங்க ளென்[...]வ னுடலை[...]டைக் கலக்கற் பால
மைத்திரு நிறத்தான் ற[...] நீயெடு[...]சை வைக்கற் பால.

(இ - ள்.) இந்த(த் திரிலோகத்திலே! (மகாவனுயிருக்கையென்ற) செல்வத்தைப்பெறப் போகிறவனும், இ[...]ாயவன்; இலங்கையோடுகூடிய பொய்ம்மையைக்கொண்டுள்ள உங்கள்[...]வத்தை அடையப்போகுபவனும், விபீஷணனேயாவன்; தேவர்கட்கு[...] தலைவனாகிய திருமாலின் அமிசமான ஸ்ரீராமனுடைய கையி[...]ய அம்புகள் உன்னுடைய மார்பிலே சேர்தற்குஉரியன; அஞ்ச[...]ற அழகிய நிறத்தையுடையவனை அந்த ஸ்ரீராமபிரானது திரு[...]ன்சிரசின்மீது வைத்தற்கு உரியவை; (எ - று.)

'தன்வசப்படுத்துதற்காகவே இராவணன்மாயையால் இவ்வாறு புரிவித்திருக்கவேண்டும்' என்று கருத்துத்தோன்றப்பெற்று, சீதை, மனத்தில் தயிரியங்கொண்டு கூறலாயின ளென்க. புலவர்கோமான்என்பதை விபீஷணனுக்குஏற்றி,'மைத்திருநிறத்தான் கை' 'மைத்திருநிறத்தான்தாள்'என 'மைத்திருநிறத்தான்'என்பதை மத்திமதீபமாக்கி உரைத்தல் ஏற்கும்: "முழுதுணர்புலவனே" என்று இலங்கைக்கேள்விப்படலத்து விபீஷணனைக்கூறியது, இங்குக் காணத்தக்கது. பி-ம்:—[1]புணர்கிற்பானும். [2]மார்பினில்,மார்பொடுங். (கசுஙுசு)

௫௬. உகுவன நின்னோடு [1]டைய ணயக ாம வாளி
புகுவன [2]போழ்ந்துன் மார்பிற் றிறந்தன புண்க ளெல்லாந்
[3]தகுவன வினிய சொல்லத் தக்கன சாப ணாணின்
உகுவன மலைக [4]ளஞ்சப் [5]பிறப்பன [6]வொலிக ளம்மா.

(இ - ள்,) (பகைவர்க்கு) அச்சம்விளைக்கத்தக்கனவான (எனது) தலைவனுடைய சிறந்த அம்புகள், உன்னோடுசிரிப்பனவாய்ப் பிளந்துகொண்டு உன்னுடையமார்பிலேபுகுந்து புண்களையெல்லாம் வெளிப்பட்டுத்தோன்றுமாறு உண்டாக்கித் தகுதியையுடையனவான நன்மைதரக்கூடியவற்றைச் சொல்லுதற்குத் தகுவனவாகும்;(கீழே)விழுவனவான மலைகளும் பின்வாங்கும்படி (அப்

பெருமானுடைய) வில்நாணியிலிருந்து ஒலிகள் பிறக்கப்போகின்றனவாகும்; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்; அம்புகளையும் நாணொலியையும் பற்றி வியந்து கூறியவாறு.

என் தலைவனாகிய இராமபிரானுடைய அம்புகள் உன்மார்பைத் துளைத்துப் புண்ணாக்கும்போதுதான் 'நாம் செய்தது தவறானசெயல்' என்ற நற்புத்தி உனக்குத் தோன்றுமேயன்றி, அதற்குமுன் உனக்கு நல்லறிவுதோன்றாதென்பது, முதல் மூன்றடிகளின்கருத்து. வில்நாணியைத் தெறிக்கும்போது மலை வீழ்ந்தாற்போன்ற பேரொலிதோன்றுமென்பது, ஈற்றடியிற் கூறிய பொருள். நாமவாளி - தன்பெயர் [ராமனென்றபெயர்] பொறித்துள்ள அம்பு எனினுமாம். இனிய-பயனால் இனியன. பி-ம்:—1ஜயநாயகன். 2போழ்ந்தபோதுன் மார்பினிற்றீர்ந்தபுண்கள், போழ்ந்துன் … புண்களெல்லாம். 3தருவனவினைய. 4என்ன. 5பிளப்பன. 6ஒளிகள். வாயீர்,

(கசுாஉஎ)

ருஎ. சொல்லுவ மதுர மாற்ற … வில்வுல …ந்தா 1லுண்டுன் கண்ணைக்
கல்லுவ காகம் வந்து கு… வரமெல …லக் கண்ணன்
வில்லுமிழ் 2பகழி 3பின் … யாற்று …ங்கெழி லலங்கன் மார்பம்
புல்லுவ களிப்புக் 5கூர் …ளும் வந் …தா றலகை 6யெல்லாம்.

(இ-ள்.) காகங்கள்,—இனிய …பேச்சுகளைச் சொல்லுவனவாய் மூக்கினாற் (கொத்தி உன் தசையைப்) புசித்து உன்னுடையகண்களைத் தோண்டப்போகின்றன; புண்டாக்கவல்லன ஸ்ரீராமனுடைய வில்லினின்று வெளிப்பட்ட பாணங்கள்,—(உன்னுடைய) எழில்விளங்குகின்ற மாலையைத்தரித்த மார்பிலேவந்து கூடப்போகின்றன; (பிறகு) புலால்நாற்றம்வீசுகின்ற பேய்கள் யாவும் மகிழ்ச்சிமிகுந்து தழுவப்போகின்றன; (எ - று.)

நீ செய்த தீச்செயலின்பயனாகக் காக்கையும் பேயும் உன்னைக்கிட்டிப் பிடுங்கித்தின்னுமென்றவாறு. பிணத்தைப் பிடுங்கித்தின்பன வாதலால், அலகை புலவுநாறுவனவாயின. காகம் கர்ணகடூரமாகக் கத்துவனவற்றைப் பிறகுறிப்புவகையால் 'சொல்லுவ மதுரமாற்றம்' என்கிறான். விலங்குதல்-விளங்குதல்; இனி, குறுக்காகப் பரந்திருத்தலையுடைய, மார்புஎனினுமாம். துண்டம் - வடசொல். புல்லப்போகின்ற அலகையின்கருத்தால் 'விலங்கெழில் மார்பம்' என்றது. 'புல்லுவ' என்பது, அலகையெல்லாம்என்பதற்கும் பயனிலையாய்கின்றது. பி-ம்:—1கொத்திக், உண்டே, உண்டு, உன்றன், 2தளைகள். 3வந்துன், உன்றன். 4விலங்கலின். 5கூர்வ, கூரப், சாலப், கூர்ந்த. 6போலாம்.

(கசுாஉஅ)

ருஅ. 1விரும்பி நான் கேட்ப துண்டா 2னின்னுழை 3வார்த்தை வீரன்
4இரும்பியல் வயிர வாளி யிடறிட வெயிற்றுப் பேழ்வாய்ப்
5பெரும்பியல் தலைகள் 6சிந்திப் 7பிழைப்பிலை முடிந்தா யென்ன
அரும்பியல் 8துளவப் பைந்தா ரனுமன்வந் 9தழைத்த வந்நாள்.

(இ-ள்.) 'ஸ்ரீராமனுடைய இரும்பின்தன்மையைக்கொண்ட உறுதியான அம்புகள் தள்ளுவதனால், கோரப்பற்களைக்கொண்ட பிளந்தவாயோடுகூடிய பெருத்தகழுத்திலேயொட்டிக்கொண்டிருக்கின்ற தலைகள் வெட்டி வீழ்த்தப்

பட்டு 'பிழைத்தலென்பது இல்லாதவாறு உயிர்நீங்கியே விட்டாய்' என்று (நீ இறந்தசெய்தியைச்சொல்வித் தனது) அருமையான கழுத்திலேயணிந்த பசிய துளவமாலையை யுடையஅநுமான் (வந்து இராமபிரானிடத்து) அழைத்துச் செல்லப்போகின்ற அந்தநாளிலே உன்னைப்பற்றிய அவ்வார்த்தையை யான் விரும்பிக் கேட்கப்போவது உண்டு; (எ - று.)—ஆல்-தேற்றம்: அசையுமாம்.

நீ இப்போது கூறும்வார்த்தை யான்விரும்பிக்கேட்டற்கு உரியதன்றென்பது,குறிப்பு. தலைவர்க்குஉரிய மாலையை அடியவர்சூடுதல்மரபுஆதலால், 'அரும்பியல்துளவப்பைந்தார்அநுமன்' என்றாள். அரும்புஇயல்எனப்பிரித்து-அரும்புந்தன்மையுள்ள எனினுமாம். பி-ம்:—1விரும்பிய. 2உன்னுடை. 3விரும்பி. 4இரும்பயில், இரும்பிகல். 5பெரும்பெயர்த், பெரும்புயத். 6சிந்த. 7பிழைப்பில. 8தாளப், ஆரப், சாளப். 9அளித்த, அளிக்கும். (கசுடு௯)

ருசு. புன்1மக கேட்டி கேட்டற் 2கினியன புகுந்த போரின்
உன்மக னுயிரை 3யெம்மோய் சுமித்திரை 4யுய்ய வீன்ற
நன்மகன் வாளி நக்க 5நாயவ னுடலை 6நக்க
என்மக னிறந்தா 7னென்ன நீயெடுத் தரற்ற லென்றாள்.

(இ - ள்.) அற்பனான சிறியோனே! (யான்சொல்வதைக்) கேட்பாய்; (யான்) கேட்பதற்கு இனிமையாயிருப்பவை (எவையெனில்),—(இப்போது) நேர்பட்டுள்ள யுத்தத்திலே உனதுபுத்திரனுடைய பிராணனை எமதுதாயான சுமித்திராதேவி(உலகோர்)நல்வாழ்வையடையும்படிபெற்ற நற்குணமுள்ளமகனை இலக்குமணனுடையஅம்புகள் தீண்டியொழித்தலினால் அவனுடலைநாய் நக்குகையில்,'என்புத்திரன்[இந்திரசித்து]இறந்துபட்டானே!என்றுசொல்லிக் குரலெடுத்து நீ புலம்புதலேயாம்'என்று கூறிமுடித்தாள், (அந்தச்சீதை).

மகாபதிவிரதையாகிய சீதை பதியினிடத்துப்பக்தியோடும் மனத்தைரியத்தோடும் இங்குக் கூறியவை, மிகவும் பாராட்டற்பாலன. கேட்டற்குஇனியன, நீ யரற்றல் என முடியும். பி - ம்:—1மகன். 2உரியது, உரியன. 3எம்மை. 4என்ன. 5நரியவனுடலம், நாய்களவ்வுடலை. 6உண்ண. 7என்னை தெடுத்தெடுத்தரற்றல், என்னநீயெடுத்தழைப்பது. (கசுசுo)

சுo.—இராவணன் சினந்து சீதையினிடம் விரைந்துசெல்ல, மகோதரன் தடுத்தல்.

வெய்யவ 1னனைய கேளா வெயிலுக விழித்து வீரக்
கைபல பிசைந்து பேழ்வா 2யெயிறுபுக் கழுந்தக் கவ்வித்
தையலைமே லோட லோடு மகோதரன் 3றடுத்தா னின்ற
மொய்கழற் றாதை வேண்ட விசையுநீ முனிய லென்றான்.

(இ - ள்.) கொடியவனாகிய இராவணன் அவ்வாறான வார்த்தைகளைக் கேட்டு வெம்மையானநெருப்புப்பொறி வெளிப்பட(க்கண்ணை)மலரத்திறந்து பார்த்து, வீரத்தையுடைய (தனது) இருபதுகைகளையும் பிசைந்துகொண்டும் பிளவுபட்ட வாயிலேயுள்ள பற்கள்போய் நன்குஅழுந்தும்படி (உதட்டைக்) கடித்துக்கொண்டும், சீதையின்மீதுவிரைந்து சென்றவளவில்,—மகோதரன்

(இராவணன் செல்வதைத்) தடுத்து, - நெருங்கிய வீரக்கழலை யணிந்த (கட்டுண்ட)'ஈன்றவனை இந்தச்சனகன்வேண்டிக்கொண்டானானல்(பிறகு இவள் உனது வேண்டுகோட்கு) இணங்குவாள்;(ஆகையால்), நீ (இவள்மீது)கோபிக்க வேண்டா' என்று கூறினன்; (எ - று.)

சீதை கூறியசொற்கள் சினத்தை மிகவும் மூள்வித்தலால், இராவணன் இவளைக்கொன்றுவிடுவோமாஎன்ற கருத்தோடு சீதையின்மேற் செல்லலானு னென்னலாம். வாய்எயிறுவுக்கழுந்தக்கவ்வுதல்-சீற்றத்தின்செயல். பி-ம்:— 1இனைய. 2எயிறுற. 3தடுத்துத்தான்றன், தடுத்தானின்ற. (௧௬௬௪)

சூக.—இராவணன் தன்னுசனத்திருக்க, மாயாசனகன் சீதையைநோக்கிக் கூறத்தொடங்குதல்.

1என்றவன் 2விலக்க 3மீண்டா னாசனத் திருக்க வாவி
பொன்றின னுகுமென்னத் 4தரையிடைக்கிடந்த பொய்யோன்
இன்றிது 5நேரா யென்னி னென்னை 6யென் குலத்தி னோடுங்
கொன்றனை யாதி யென்னு வினையன கூற லுற்றான்.

(இ - ள்.) என்றுசொல்லி அந்தமகோதரன் தடுக்க,மீண்டவனை இராவணன்(தன்னுடைய) ஆசனத்திலே தங்கியிருக்க,'(இவன்)உயிர்இறந்துவிட்டான்போலும்?' என்றுகருதுமாறு தரையிலே (கட்டுண்டுவீழ்ந்து) கிடந்த மாயாசனகன், 'இப்போது இந்த(இராவணனுடைய)வேண்டுகோட்கு இசையாமற் போவாயானல் என் குலத்தோடும் (நீ) என்னைக் கொன்றாயாவாய்' என்று சொல்லி இவ்வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, மேலிரண்டுகவிகளிற் காண்க.

நீ இவன் வேண்டுகோட்கு இசைந்தாயானல் என்னையும் மிதிலையாரையும் விட்டிடுவதாகவும் இல்லாவிடின் யாவரையும் கொல்வதாகவும் இவ்விராவணன் உறுதிகொண்டுள்ளானதலால், உன்இசைவின்மையே நாங்கள் அழிதற்குக் காரணமென்கின்றான், மாயாசனகனென்க. பி - ம்:—1அன்றவன். 2தகைப்ப. 3மீண்டாண்டு. 4தரைமிசைக். 5நீராய். 6உன். (௧௬௬௫)

சூ௨.—இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்: இராவணன் கோரிக்கைக்கு இணங்குமாறு மாயாசனகன் சீதையினிடம் கூறுதலைத் தெரிவிக்கும்.

பூவின்மே லிருந்த தெய்வத் தையலும் 1பொதுமை யுற்றாள்
பாவியான் பயந்த நங்கை நின்பொருட் டாகப் பட்டேன்
ஆவிபோ 2யழித 3னன்றே யமரர்க்கு 4மரச னுவான்
தேவியா 5யிருத்த 6றீதே சிறையிடைத் 7தேம்பு கின்றாய்.

(இ-ள்.) மலர்மேல்வசிப்பவளான தெய்வத்தன்மையுள்ள பெண்ணாகிய இலட்சுமியும் (பலர்க்கும்) பொதுவாதலைப் பொருந்தியுள்ளாள்; பாவி! யான் பெற்றபெண்ணே! உனக்காகவே இறந்தேன்; சிறையிலேயகப்பட்டு வருந்துபவளே! (நான்) உயிர்போய் அழிந்துவிடுதல் நல்லதோ?(நீ இச்சிறையினின்று நீங்கித்)தேவர்கட்குந்தலைவனாக இருக்கின்ற இராவணனுக்கு மனைவியாயிருத்தல் தீதாகுமோ? (எ - று.)

'நீ இணங்குவதில் இரண்டு நன்மையுள்ளன: என்னுயிர்தப்புத லென்பது ஒன்று: உன் சிறைத்துன்பம்நீங்கித் தேவர்க்கரசனது தேவியாகை என்பது மற்றொன்று: இவ்வாறு பெற்றதந்தையும் நீயும் துயர்நீங்கி இனிதுஇருக்கலாயிருக்க, இருவரும் துன்பத்திற்கு உள்ளாகுமாறு பிடிவாதம் கொள்கின்றாயே; இது என்னபேதைமை!! இப்பேதைமையை விட்டிடு' என்றுகூறியவாறு. 'ஒருவர்க்கு உரியமனைவி மற்றொருவனைச் சேர்தல் கூடுமோ?' என்ற ஐயத்தைப் போக்குவதற்காக, 'பூவின்மேலிருந்ததெய்வத்தையலும் பொதுமையுற்றாள்' என்கிறான். ஆவிபோயழிதல்நன்றே என்பதற்கு - நீ ஆவி போயழிவது நல்லதோ? என்றலுமொன்று. பட்டேன் - காலவழுவமைதி. பி-ம்:—1புதுமை. 2அழிகை, அழிய. 3நன்றோ. 4அரசனுனன், அரசாவான்றன். 5இருக்கை. 6தீதோ. 7தேம்புகின்றீர். (கசுசங)

சுரு. என்னை 1யென் குலத்தி னோடு மின்னுயிர் தாங்கி 2யீண்டு
நன்னெடுஞ் செல்வந் 3துய்ப்பே 4னாக்கினை 5நல்கி நாளும்
உன்னைவெஞ் சிறையி னீக்கி 6யின்பத்து ளுய்ப்பா யென்னாப்
பொன்னடி 7மருங்கு வீழ்ந்தா 8னுயிருகப் பொருமு கின்றான்.

(இ - ள்.) உயிர்போய்விடுமோ என்னுமாறு புலம்புகின்றவனான அந்த மாயாசனகன்,—'கருணைபுரிந்து, என்னை என்குலத்தினோடும் இனிய உயிரைத்தாங்கி இவ்வுலகத்தில் நெடுநாள்நிற்கக்கூடிய சிறந்த செல்வத்தை யனுபவிப்பவனாகச்செய்து, உன்னையும் (நீ இப்போது அனுபவிக்கிற) கொடிய சிறையினின்றும் நீங்கச்செய்து, எப்போதும் மகிழ்ச்சியிலேஉய்ப்பாய்'என்று கூறியவண்ணம்(சீதையின்) அழகிய பாதங்களினிடத்தில் வீழ்ந்துவேண்டினான்.

எனக்கும் உனக்கும் நன்மையுண்டாகுமாறு இராவணன் கருத்துக்கு இசைவா யென்று சீதையின்பாதங்களில் மாயாசனகன் வீழ்ந்து வேண்டுகின்றனனென்க. உயிர்உக - பெருமூச்சுவெளிப்பட என்பாருமுளர். இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை. 8உருமுகப்பொருமுகின்றான் என்ற பாடம், பிராசமென்னுஞ்சொல்லணிக்கு ஏற்கும். பி-ம்:—1உன், உம். 2யாண்டும். 3துய்ப்பான். 4ஆக்கியே, ஒக்கினை. 5நல்கில். 6ஓகைதந்தளிப்பாய், இன்பத்தோடளிப்பாய். 7அருகு. 8உயிருக்கே. (கசுசச)

சுஎ.—சீதை மாயமென்றுஉகருதிச் சினந்து மீண்டும் கூறத்தொடங்குதல்.

அவ்வுரை கேட்ட நங்கை செவிகளை யமையப் 1பொத்தி
வெவ்வுயிர்த் தாவி 2தள்ளி வீங்கினள் வெகுளி 3பொங்கி
இவ்வுரை யெந்தை கூறா னின்னுயிர் வாழ்க்கை பேணிச்
செவ்வுரை யன்றி தென்னாச் 4சீறினை ளுலையச் செப்பும்.

(இ - ள்.) அந்தப்பேச்சைக்கேட்ட பெண்ணாகிய சீதை,—(தன்) காதுகளை அழுந்த (த் தன்கைகளால்) மூடிக்கொண்டு வெம்மையாகப் பெருமூச்சுவிட்டு(ப் பெருவருத்தத்தினால்)உயிர்நீங்கி[மூர்ச்சித்து],(பிறகுதெளிந்து)கோபம் மிகக்கிளர்ந்து மேலெழப்பெற்று, 'என்தந்தையானவன்,(தன்)இனிய உயிருடன்வாழ்தலையே முக்கியமாகக்கொண்டு இவ்வாறானவார்த்தையைச் சொல்

லான்;இது நேர்மையானவார்த்தையன்று:[மாயத்தினால் சனகனுருக்கொண்டு வந்தானுடைய பேச்சாக இருக்கவேண்டும்]' என்றுகருதி, சீற்றத்தை வெளிக் காட்டுபவளாய்(ச் சனகனுருக்கொண்டுவந்தவன் மனம்)வருந்தும்படி கூறு பவளானாள்; (எ - று.)—சீதைகூறுவதனை மேல் ஐந்துகவிகளிற் காண்க.

கேட்கப்பிடியாதவார்த்தையைக் கூறியதனால், சீதை, தன் செவிகளைப் பொத்திக்கொண்டாள். உளையஎன்பதற்கு-இராவணன் மனம்வருந்தஎனினு மாம். பி-ம்:—1போற்றி. 2துள்ள, தள்ள. 3பொங்க. 4சீறியகிளியிற்கூறும்.

சுரு.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: சீதை மாயாசனகனைப் பற்றித் தான் சந்தேகிக்கின்றமைதோன்றக் கண்டித்துக் கூறுவன.

அறங்கெட வழக்கு நீங்க வரசர்த [1]மரபிற் [2]கான்ற
மறங்கெட [3]மெய்ம்மை தேய வசை[4]வர மறைக ளோதுந்
திறங்கெட வொழுக்கங் குன்றத் தேவரும் பேணத் தக்க
நிறங்கெட வினைய சொன்னாய் [5]சனகன்கொ னினையி னையா.

(இ - ள்.) தருமம் ஒழியவும், (தொன்றுதொட்டுநடந்துவந்த) முறைமை கெடவும், அரசர்களுடைய வமிசத்துக்குச் சிறந்த வீரத்தன்மை கெடவும், சத்தியமென்பது ஒழியவும், பழிப்புப் பொருந்தவும், வேதங்கள்கூறுகின்ற நிலையும் கெடவும், நல்லொழுக்கம் ஒழியவும், தேவர்களும் விரும்பத்தக்க சிறப்பு ஒழியவும் இவ்வாறான [இழிவான]வார்த்தைகளைச் சொன்னாய்;ஆராயு மிடத்து, ஐயனே! (நீ) சனகனோ? (எ - று.)

கொல் - ஐயப்பொருளது. சனகனாயிருப்பின், அறக்கேடுமுதலியன தோன்றுஞ் சொற்களைக் கூறா தாதலால், 'சனகன்கொல்'என்றா ளென்க. பி-ம்:—1மரபுக்கு, அமைவுக்கு. 2ஆன. 3வன்மை,மென்மை. 4உற. 5சனகன் கொனீயுமையா, நீகொலாஞ்சனகனென்பான். (கசுசுசு)

சுஎ. வழிகெட வரினுந் [1]தத்தம் வாழ்க்கை[2]தேய்ந் திறினு [3]மார்பங்
கிழிபட வயில்வேல் வந்து [4]கிழிப்பினுஞ் [5]சான்றோர் கேட்கும்
மொழி[6]கொடு வாழ்வ தல்லான் முறைகெடப் [7]புறநின் றார்க்கும்
பழிபட [8]வாழ்கிற் பாரும் பார்த்திப ருளரோ பாவம்.

(இ - ள்.) (தம்முடைய)சந்ததியேஅழியும்படி நேர்ந்தாலும், தங்கள் தங்க ளுடைய உயிர்வாழ்க்கை கழிந்துபோவதானாலும்,மார்பு கிழிந்திடும்படி கூரிய வேற்படைவந்து தாக்கினாலும்,பெரியோர் (காதுகொடுத்துக்) கேட்பதற்கு ஏற்ற புகழ்மொழியைப் பெற்று வாழ்வதல்லாமல், நியாயமுறைநீங்க மறைவி லிருந்து (பலரும்) ஆரவாரித்துத்தூற்றக்கூடிய பழியுண்டாக வாழ்பவரான அரசரும் (உன்னையன்றி வேறொருத்தரும்) உள்ளார்களோ? பாவம்! (எ-று.)

எப்படிப்பட்டஆபத்து நேர்ந்தாலும் புகழ்பெற வாழாது பழிபடவாழ விரும்புகின்ற அரசர் இல்லை:உனக்குமாத்திரம் இவ்வாறான தீயபுத்தி தோன் றிற்றே! பாவம்!! என்கிறாள் சீதை. பாவமென்பது-இரக்கப்பொருளைக்குறித் தது. பி - ம்:—1தந்தம். 2தேய்ந்திடினும். 3மார்பும். 4கிடைப்பினும், கிடைக் கினும். 5ஆன்றோர்கூறும். 6பட. 7புரை. 8வாழுகின்றார்,வாழுகின்ற, வாழ்தல் செய்யும். (கசுசுஎ)

சுஎ. நீயுநின் கிளையு [1]மற்றிந் நெடுநில [2]வரைப்பு நேரே
மாயினு முறைமை குன்ற [3]வாழ்வனோ வயிரத் திண்டோள்
ஆயிர நாமத் தாழி [4]யரியினுக் கடிமை [5]செய்வேன்
நாயினை [6]நோக்கு வேனோ நாண்டுறந் [7]தாவி நச்சி.

(இ - ள்.) நீயும் உன் சுற்றத்தார்களும் பின்னும் இந்த நீண்ட பூமிப்பரப்பும் (என்) கண்ணெதிரில்தானே மாய்ந்தாலும், நீதிமுறை தவறும்படி வாழ விரும்புவேனோ? வயிரம்போலுறுதியான வலியதோளையுடைய ஆயிரந்திருநாமங்களைக்கொண்ட சக்கராயுதத்தையேந்திய திருமாலின் அமிசமான ஸ்ரீ ராமபிரானுக்கு அடிமைசெய்பவளாகிய யான், நாண் துறந்து உயிரோடுவாழ்வதை விரும்பி நாய்போன்ற இராவணனை யெதிர்பார்த்து நிற்பேனோ?

என்றைக்குஇருந்தாலும் ஒருநாள்போகவேண்டிய உயிருக்காக அழியாப்பூணான நாணைத் துறத்தல் மடவார்க்கு அழகன்று என்பது, 'நோக்குவேனோ நாண்துறந்தாவிநச்சி'என்றதன் கருத்து. புருஷோத்தமனான ஸ்ரீராமனோடு நோக்குமிடத்து நாய்போற் கடைப்பட்டவனே இவ்விராவண னென்கிறாள். நாயினை நோக்குவேனோ' என்றதனால், சீதை அந்தஇராவணனை எவ்வளவு இழிவாக நினைத்திருக்கிறா ளென்பது, விளங்கும். சீதையின்கற்பு இங்கு வெளியாதல் காண்க. சீதை ஆதியிருந்தே தன்கற்பை வெளியிடுதலால் இவளதுகற்பு 'அறக்கற்பு' எனப்படும். பி-ம்:—[1]மற்ற. [2]வரைப்பின். [3]வாழ்வனே. [4]ஐயனுக்கு. [5]செய்தேன். [6]தீண்டுவேனோ, நச்சுவேனோ. [7]உயிரை. (கசுசஅ)

சுஅ. வரிசிலை யொருவ னல்லான் மைந்தரென் மருங்கு [1]வந்தார்
எரியிடை வீழ்ந்த விட்டி [2]லல்லரோ வரசுக் கேற்ற
அரியொடும் [3]வாழ்ந்த பேடை யங்கணத் தழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வ துண்டோ நாயினுங் கடைப்பட் டோனே.

(இ - ள்.) நாயைக்காட்டிலும் தாழ்மைப்பட்டவனே! கட்டமைந்தவில்லையுடைய வீரனான இராமனேயல்லாமல் என்னருகேவந்த (வேறு)மைந்தர்கள், தீபச்சுவாலையில் வீழ்ந்திட்ட விட்டிற்பறவைபோல் உயிரொழிவாரன்றோ? (மிருகங்கட்கெல்லாம்) அரசுஆகுந்தன்மைக்குஏற்ற ஆண்சிங்கத்துடனே வாழ்ந்திருந்த பெண்சிங்கமானது, சாக்கடையிற்கிடக்கும் அழுக்குப்பொருளைத் தின்னக்கூடிய நரியுடனே வாழ்வதென்பது எங்கேனும் நடக்குமோ?

முன்னிரண்டடியிற் பொதுப்படக்கூறியபொருள், தன்மருங்கு சார்ந்த இராவணன் தீபச்சுவாலையையடைந்த விட்டிற்போலச்சாவானென்ற சிறப்புப் பொருளைக் காட்டிற்று. பின்னடியிற்கூறிய உபமானம்-ஸ்ரீராமனோடுவாழ்ந்த யான் இராவணனுடன் வாழ்ந்திருக்க உடன்படல் தகாது என்ற உபமேயப் பொருளைத் தெரிவிக்கும்; பிறிதுமொழிதலணி. "என்னெதிரெய்திற்றெல்லாம் விளக்கெதிர்வந்த விட்டிற்பான்மையே" என்று இராவணன் சொல்லக் கேட்டாளாதலால், சீதை, அதனைமாற்றி'என்மருங்குவந்தாரெரியிடைவீழ்ந்த விட்டிலல்லரோ' என்று தன்கற்பின்நிலைதோன்றக்கூறுகின்றாளென்க. இராவணனது விருப்பிற்கு இணங்குமாறு கூறியதனால், மாயாசனகனை 'நாயினுங்

கடைப்பட்டோனே' என்று இழித்துக் கூறுகின்றாள். சிங்கத்தைக் குறிக்கும் போதும் அரி என்பது ஹரியென்ற வடசொல்லின் திரிபேயாகும். பி-ம்:— 1வந்தால். 2அல்லவோ. 3வாழும்பேடு. (௧௬௪௯)

௬௯. 1அல்லையே யெந்தை யாகு 2யாகத்தா னலங்கல் வீரன்
வில்லையே 3வாழ்த்தி மீட்கின் 4மீளுதி மீட்சி யென்பது
இல்லையே லிறந்து 5தீர்தி யிதுவலா 6வியம்ப லாகாச்[சொன்னாள்.
சொல்லையே யுரைத்தா 7யென்றும் பழிகொண்டா யென்னச்

(இ - ள்.) (நீ)என்தந்தையாகுபவனுக்குத் தோன்றவில்லை;(நீ என்)தந்தையாக ஆனால் அப்போது, வெற்றிமாலையையணிந்த வீரனாகிய ஸ்ரீராமனது தனுசையே வாழ்த்துக்கூறி (அவன்) மீட்டால் (பகைவர்கையிற் கட்டுண்பதினின்று) மீளுவாய்; (அவன் உன்னை) மீட்பதென்பது நிகழாதாயின், இறந்தொழிவாய்; இதுவேயல்லாமல், (வேறொன்று செய்யத்தக்கதன்று); சொல்லுதற்குத்தகாத சொல்லையே சொன்னாய்; (அதனால்) எப்போதும் (நீங்காத) பழியையே பெற்றாய் என்று கூறினாள், (சீதை); (எ - று.)—தான்-அசை.

இராமன்மூலமாக இந்த உன்னுடைய சிறைப்பிணிப்புத் தீர்ந்தால் தீரவேண்டுமேதவிர வேறுவகையாகத் தீர்வதனினும் உன்னுயிர்மாளுதலே மேலென்றனள் சீதை யென்க. பி-ம்: -1அல்லையேல். 2ஆகத்தால், ஆகதான், அரக்கனான். 3தொழுதுவாழ்த்தி,வாழ்த்திமீளின். 4மீள்வது, மீளுவதும். 5தீர்தும். 6இயம்பலாத, தீயசொல்லை. 7என்னும். (௧௬௫௦)

௭௦.—அதுகேட்ட இராவணன் சீதையை யச்சுறுத்தக்கருதி அந்த மாயாசனகனை வெட்டுமாறு வாளுருவுதல்.

வன்திற லரக்க னன்ன வாசக மனத்துக் 1கொள்ளா
நின்றது நிற்க 2மேன்மே னிகழ்ந்தவா நிகழ்க 3நின்முன்
4இன்றிவ னல்லன் போலாஞ் 5சனகனிக் கணத்தின் 6கண்ணே
கொன்றுயிர் குடிப்ப னென்னாச் 7சுரிகைவா 8ளுருவிக் கொண்டான்.

(இ - ள்.) கொடுமையான வலிமையையுடைய இராவணன், (சீதை சொன்ன) அந்தக்கடுமையான வார்த்தையை(த் தன்) மனத்திலே கொண்டு '(நின் மனத்திலே) கொண்டது கொள்க; மேன்மேலும் நடந்தவாறு நடக்கட்டும்; உன்கண்ணெதிரில், இப்போது (இங்குள்ள) இவன் (நமது தந்தை) அல்லன் போலுமென்கின்ற (இந்தச்) சனகனை இந்தக்கணத்தில்தானே வெட்டிக்கொன்று உயிரைப்பருகுவேன்' என்றுசொல்லிச் சுரிகையென்ற வாளையுருவியெடுத்துக் (கையிற்) கொண்டான்; (எ - று.)

நின்றதுநிற்க மென்மேல் நிகழ்ந்தவாநிகழ்கஎன்றது - யான் எதையும் இலட்சியஞ்செய்யே னென்றபடி. இவன் சனகன் அல்லன்போலாம் என்று மாற்றித் தனியே ஒருமுடிபு ஆக்குவாருமுளர். சுரிகைவாள்-இருபெயரொட்டு. நிகழ்ந்தவா-காலவழுவமைதி. பி-ம்:—1கொள்ளான். 2மண்மேல். 3நின்முன். 4நின்றவன். 5என்றனை. 6இன்னே, நின்முன், முன்னே. 7தடக்கை. 8உரீஇக் கொண்டானால். (௧௬௫௧)

எக.—சீதை சிறிதும் அஞ்சாது 'உன்னாலொன்றும் ஆகாது: முடிவில் இராமனம்பால் இறப்பாய்' எனல்.

*என்னையுங் கொல்லா [1]யின்னே யிவனையுங் கொல்லா யின்னும்*
*[2]உன்னையுங் [3]கொல்லாய் [4]மற்றிவ் வுலகையுங் கொல்லா யானே*
*[5]இன்னலு நீங்கி யென்றுங் கெடாப்புக [6]ழெய்து கின்றேன்*
*பின்னையு மெங்கோ [7]னம்பிற் கிளையொடும் பிழையா யென்றாள்.*

(இ - ள்.) '(நீ) என்னையுங் கொல்லவல்லமையுடையாயல்லை; (அவ்வண்ணமே) இப்போது இவனையுங் கொல்லமாட்டாய்; பின்னும் (என்மீது பெருங் காதல்வைத்துள்ளதனால்) உன்னையும் கொன்றுகொள்ளமாட்டாய்; அன்றியும், இவ்வுலகத்தையும் கொல்லமாட்டாய்: பின்னும், எமது தலைவனாகிய இராமனுடைய அம்பினால் சுற்றத்தாருடனே பிழைத்திராமல் உயிர்நீங்குவாய்: யானோ (அப்போது என்) துன்பமும் நீங்கி என்றும் அழியாததான புகழை அடைவேன்' என்றுகூறினாள், (சீதை); (எ - று.)

அற்பசக்தியையுடைய உன்னால் என்னைக்கொல்லுதல்முதலியன முடியாதென்றபடி. எய்துகின்றேன் - காலவழுவமைதி. பி-ம்:—[1]இன்னம். [2]உன்னையே. [3]கொல்ல, கொல்வாய். [4]முற்றிவ். [5]இன்னுயிர். [6]ஏந்திநின்றேன். [7]அம்பால். (கசுருஉ)

எஉ.—சனகனை இராவணன் கொல்லப்போனதை மகோதரன்விலக்கல்.

*இரந்தனன் வேண்டிற் றல்லா லிவன்பிழை [1]யிழைத்த துண்டோ*
*புரந்தரன் செல்வத் தைய [2]கொல்கையோர் பொருளிற் றேதான்*
*பரந்தவெம் பகையை வென்றா [3]லின்வழிப் படரு நங்கை*
*அரந்தைய ளாகு மன்றே [4]தந்தையை [5]நினைவ தானால்.*

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) இந்திரசெல்வத்தையுடைய தலைவனே! இந்தச்சனகன் (தன் மகளிடத்து) இரந்து (உன்கருத்துக்கு இசையுமாறு) வேண்டிக்கொண்டதல்லாமல் (உனக்குச்) செய்த குற்றம் (ஏதேனும்) உளதோ? (இவனைக்) கொல்வது ஒருபெருங்காரியமாகுமோ? பரவியுள்ள (உன்னுடைய) கொடியபகைவனை [இராமனை] (நீ) வென்றால் உன்னதீனத்தில் வருபவளான (இந்தச்சீதையாகிய) பெண், (அப்போது) தந்தையைப்பற்றி நினைப்பதுஉண்டாகுமாயின், துன்பமுடையவளாவ ளன்றோ? (எ - று.)

இந்தச்சனகன் உனக்குமாறாக எதுவும் செய்யவில்லை; அன்றியும், நீ பகைவென்றபோது உனக்குச் சுவாதீனையாகப்போகின்ற இவள் அப்போது தன்தந்தையையிழந்த துன்பத்தை யடைந்திடுவாள்: ஆகையால், இவனைக் கொல்லவேண்டாஎன்றுசொல்லித் தடுத்தனன் மகோதர னென்க. பி-ம்:— [1]இயற்றிற்று, இயம்பிற்று. [2]கொல்கையோபொருந்திற்றேதான். [3]இவன், அவன். [4]தாதையை. [5]நலிவது, நினைப்பது. (கசுருங)

எ௩.—அப்போது தேவர்களின் ஆரவாரமும் வானரர்களின்ஆர்ப்பும் இராவணன் காதில் விழுதல்.

[1]என்றவன் விலக்க [2]மீண்டாண் டிருந்ததோ ரிறுதி யின்கட்
குன்றெனா [3]நீண்ட கும்ப கருணனை யிராமன் கொல்ல
வன்றிறற் குரங்கின் [4]றானை வானுற [5]வார்த்த வோதை
[6]சென்றன செவியி னூடு [7]தேவர்க ளார்ப்புஞ் [8]செல்ல.

(இ-ள்.) என்றுசொல்லி அந்தமகோதரன் (மாயாசனகனை இராவணன் வாள்கொண்டுவெட்டமுயன்றதைத்)தடுக்க,(இராவணன் அச்செயலைச் செய்யாது)திரும்பிஅங்கு இருந்த ஒருசமயத்தில்,--மலைபோல ஓங்கியுள்ள கும்பகருணனை இராமன்கொன்றதனால் மிக்கவலிமையுள்ள குரக்குச்சேனையானது வானத்தையளாவும்படி ஆரவாரித்த பேரொலியோடு தேவர்கள்செய்த பேரொலியும், (எங்கும்) பரவியதனால் (அவ்விராவணனுடைய) செவியில்விழுந்தன.

இறுதியின்கண் சென்றன என இயையும். மகாகவியாகிய கம்பர் சீதையைப்பெறவேணுமென்று மகோதரனதுமாயையி னுதவியால் இராவணன் முயல்கையில் அவனுடையஉற்சாகத்தைக் கெடுக்குமாறுபெருஞ்சோகம் நிகழ்ந்ததை யுணர்ந்ததாகக் கதையைப்புணர்த்துள்ளநயம் பாராட்டத்தக்கது: நாடகத்திற்போல ஒருசுவையை மற்றோர்சுவை மறைக்குமாறு கதைநிகழ்ச்சி கூறுவதனாலேயே இது கம்பநாடகமென்று கூறப்படுகின்றது. பி - ம்:---1என்றவண். 2மீட்டு. 3நின்ற. 4சேனை.5வாரா. 6சென்றது.7தேவர்தம்.8சேர. (௧௬௫௪)

எ௪.—'இந்தத் தேவவானரர்களின் ஆரவாரம் - தன்சேனைபழியக் கும்பகர்ணன் தனிப்பட்டதனாலாகியது' என்று கருதி இராவணன் வருந்துதல்.

உருந்திற லமரர் நாடும் [1]வானர யூகத் தோரு
[2]மிருந்திறம் [3]வேறொன் றில்லா விருவர்நா ணொலியும் [4]விஞ்சத்
தருந்திற [5]னினைந்தே [6]னெம்பிக் கமரிடைத் தனிமைப் [7]பாடு
புருந்துள [8]தூண்டென் றுள்ளம் பொருமல்வந் துற்ற போழ்தின்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) ஒலிசெய்வதில் மேம்படுதன்மை வேறொன்றற்கில்லாத [எல்லாப் பொருளினும் மேம்பட்ட ஒலியுள்ள] (இராமலட்சுமணர் என்ற) இருவருடைய வில் நாணியின் ஒலியையும், (எனக்குமுன்னே) வலிமையழிந்த தேவருலகமும் (போர்செய்யவந்த) அணியணியாகவுள்ள வானரரும் இப்போது விஞ்சுவதற்குத் தக்க காரணத்தை நினைத்துப்பார்த்தேன்: எனது தம்பியாகிய கும்பகர்ணனுக்குப் போர்க்களத்தில் (சேனையெல்லாம் இறந்திட்டதனால்) தனிமைப்பட்டிருப்பதென்பது நேர்ந்துள்ளதுபோலும்' என்று (இராவணன்)மனத்தில் துன்பம்வந்து நேர்ந்தசமயத்தில்,—(எ-று)—''தூதர் என்றார்'' என அடுத்த கவியோடு முடியும்.

இராமலக்ஷ்மணர் வில்நாணியொலியையும் விஞ்சத்தேவரும் வானரரும் ஆரவாரஞ்செய்யக் காரணம், கும்பகர்ணன் தன் சேனையொழியத் தனிமைப்பட்டா னென்றது கருதிய மகிழ்ச்சியினாலாகிய தேயாகும் என்று

துணிந்து, இராவணன் அவன்தனிமைக்கு யாதுசெய்வது என்பது குறித்துத் தன்மனத்திற் சிந்தையடைந்தா னென்றவாறு. கும்பகர்ணனை இராமலட்சுமணராற் கொல்லமுடியாது என்று திடமாகநம்பியிருக்கின்றானாதலால், இராவணன், இவ்வாறுநினைந்தான். பி-ம்:—[1]வானரயோகத்தாரும் வானரவோதத்தோரும், வானரரோகைக்காரும். [2]நகுந்திறல். [3]தம்பினில்லா. [4]மாயத், வீய்ந்த. [5]கினைத்தேன். [6]எம்பியமரிடை, எம்பிதமரிடை. [7]பாடும். [8]என்றநெஞ்சம். (கசுருரு)

எரு.—இராமபிரானாற் கும்பகர்ணன் இறந்தமையைத்
தூதுவர் இராவணனிடங் கூறுதல்.

புறந்தரு சேனை [1]முந்நீ [2]ரிருஞ்[3]சிறை போக்கிப் [4]போதப்
[5]பறந்தன ரனைய தூதர் செவிமருங் கெய்திப் பையத்
திறந்திற [6]மாக நின்ற கவிப்பெருங் [7]கடலைச் [8]சிந்தி
இறந்தன னுப்பி யம்பிற் கொன்றன னிராம [9]னென்றார்.

(இ - ள்.) காக்கின்ற சேனாசமுத்திரத்தை(த் தமது) பெரியசிறகினாலே அரிதிற்கடந்து மிகவும்பறந்துவந்தவராகிய அந்தத் தூதர்கள்,—கிட்டி மெல்ல (இராவணனுடைய)காதினிடத்திலே 'கூட்டம்கூட்டமாக இருந்த வானரசேனையாகிய சமுத்திரத்தை அழித்து உமது தம்பியாகிய கும்பகர்ணன் இறந்திட்டான்: இராமன் தன்னம்பினாற் கொன்றான்' என்று (கும்பகர்ணன் இறந்த செய்தியைத்) தெரிவித்தார்கள்; (எ - று.)

தூதுவர் பறவையுருக்கொண்டு சேனையைக் கடந்து வந்தமையை முதலடி தெரிவிக்கும். பி-ம்:-[1]முன்னீர். [2]அருஞ். [3]சிறைப். [4]பேரப். [5]பறந்தனன னையதூதன், பறந்தனவனையதூதன். [6]ஆகி. [7]சேனை. [8]சீந்தி. [9]என்றான். (கசுருசு)

எசு.—கும்பகர்ணன் இறந்ததுகேட்டு இராவணன்பெருந்துயரத்தாற்
பூமியில் விழுந்திடுதல்.

ஊரொடும் பொருந்தித் தோன்று மொளியவ னென்ன வொண்பொன், தாரொடு [1]புனைந்த மௌலி தரையொடும் பொருந்தத் [2]தள்ளிப், பாரொடும் பொருந்தி நின்ற மராமரம் [3]பணைக ளோடும், வேரொடும் பறிந்து மண்மேல் [4]வீழ்வதே போல வீழ்ந்தான்.

(இ - ள்.) ஊர்கோளுடனேபொருந்திக் காணப்படுகின்ற சூரியன்போல அழகியபொன்மாலையினால் அலங்கரிக்கப்பெற்ற (தன்) கிரீடமானது பூமியிலேபொருந்தும்படி (துயரத்தினால்)தள்ளப்பட்டு, பூமியிலே பொருந்தியுள்ள மராமரமானது வேரோடும்பறியுண்டு கிளைகளோடும் மண்ணின்மீது வீழ்வதையொப்ப (இராவணன்) விழுந்திட்டான்; (எ - று.)

பொற்றாரோடுகூடியமோலிக்கு-ஊர்கோளுடன்கூடிய சூரியன் உவமை. இராவணன் இருபதுகைகளுடன் வீழ்ந்தது, மராமரம் பணைகளோடும் வீழ்வதுபோலு மென்றார்: உவமையணி. மராமரம்வீழ்தற்குக் காரணம், வேர் பறியுண்ணுதல். ஒளியவன்-ஆயிரங்கிரணங்களைப்பெற்றிருத்தலாற் பேரொளியுள்ளவன்: சூரியன். பி-ம்:—[1]பொலிந்த. [2]தள்ளப், தாழப். [3]பணையினோடும். [4]வீழ்ந்ததே. (கசுருஎ)

எஎ.—இராவணன் அரற்றத்தொடங்குதல்.

பிறிவெனும் [1]பீழை தாங்கள் [2]பிறந்தநாட் டொடங்கி யென்றும்
உறுவதொன் [3]றின்றி யாவி யொன்றெனு [4]நினைந்து நின்றான்
[5]எறிவரு [6]மமரிற் றம்பி தன்பொருட் டிறந்தா னென்ன
அறிவழிந் தவச னாகி யரற்றின னண்ட முற்ற.

(இ-ள்.) தாங்கள் பிறந்தநாள்தொடங்கிப் பிரிவு எனப்படுகின்ற துன்ப தருஞ்செயல் ஒன்று எப்போதும் நேர்வதில்லாமல் [நேராமையால்] (இருவர்க் கும்) ஆவியொன்றேஎன்று நினைந்திருந்தவனான இராவணன்,—'(படைக் கலங்களை) வீசியெறிகிற போரிலே (தன்)தம்பியாகிய கும்பகருணன் தன் பொருட்டாகஇறந்தான்' என்று (தூதர்) சொல்ல(க் கேட்டு) அறிவுகெட்டு(த் துக்க) பரவசனாகி(த் தன்குரல்) அண்டத்தின் மேல்முகட்டளவும்பொருந்த வாய்விட்டுக்கதறலானான்; (எ-று.)—இராவணன் அரற்றுதலை மேல் ஒன்பது கவிகளிற் காண்க.

'பிரி' என்பதுபோலவே, 'பிறி'என்னும்வினைப்பகுதியும் வழங்குகின் றது. இராவணனுக்கும் கும்பகர்ணனுக்கும்பிரிவு இதுவரையிலும் நேராமை யால், இருவர்க்கும் ஆவியொன்றே என்று கருதும்படியாயிருந்த தென்க. பி-ம்:—[1]பீழைதங்கள்,பொருளதொன்றும். [2]பிழையா. [3]இன்மை, அறியான். [4]உரைத்து, நினைத்து. [5]எறிபெருஞ். [6]சமரில். (ககூ௩அ)

வேறு.

எஅ.—ஒன்பதுகவிகள் ஒருதொடர்: இராவணன் அரற்றுதலைத் தெரிவிக்கும்.

தம்பியோ வானவராந் தாமரையின் [1]காடுழக்குந்
தும்பியோ நான்முகத்தோன் [2]சேய்மதலை தோன்றலோ
நம்பியோ [3]இந்திரனை நாமப் பொறிதுடைத்த
எம்பியோ யானுன்னை யிவ்வுரையுங் [4]கேட்டேனோ,

(இ - ள்.) தம்பியே! தேவர்களாகிய தாமரைக்காட்டைக் கலக்கவல்ல மத்யானைபோல்பவனே! நான்குமுகங்களையுடைய பிரமனுடையபுத்திரன் புத்திரனுக்குப் புதல்வனாகத் தோன்றியவனே! ஆடவரிற்சிறந்தோனே!இந்திர னது பெயர்பொறிக்கப்பட்டிருந்ததை(த் தெரியவொட்டாமல்)மறையவடித்த என் தம்பியே! யான் உன்னைப்பற்றி இவ்வாறானவார்த்தையையும் [நீ இறந் தாயென்பதையும்] கேட்கும்படியானேனோ!! (எ - று.)

தம்பியோமுதலியவை - புலம்பல்விளியாதலால், ஓகாரம்பெற்றுவந்தன. 'இந்திரனை நாமப்பொறிதுடைத்தஎம்பி' என்றது - இந்திரனதுபெயர் எங் கும் பொறிக்கப்படாதவாறு அவன்மேன்மையைக் கெடுத்த தம்பி யென்றபடி. பொறித்தல் - செதுக்குதல். யான் உன்னை இவ்வுரையுங்கேட்டேனோஎன் றது - இந்திரன்முதலியோரைவென்ற மகாபராக்கிரமசாலி யென்று பிர சித்திபெற்ற நீ ஒருமனிதனாற் கொல்லப்பட்டாயென்ற இந்தத் தீமொழியை யும் கேட்கும்படியானேனே என்று இரங்கியவாறு;ஓகாரம்-இரக்கம். பி-ம்:—[1]கான். [2]தொன்மரபில். [3]வானவரை. [4]கேட்டேனே. (ககூ௩க)

௭௯. மின்னிலைய வேலோனே யானுன் விழிகாணேன்
[1]நின்னிலை யாதென்னே னுயிர்பேணி நிற்கின்றேன்
உன்னிலைமை [2]யீதாயி னோடைக் களிறுந்திப்
பொன்னுலக [3]மீளப் புகாரோ புரந்தரனார்.

(இ - ள்.) ஒளியைக்கொண்ட இலைத்தொழிலையுடைய வேற்படையை யுடையோனே! யான், (நீ இறக்குந்தருணத்தில்) உன்கண்ணுக்குப் புலனாகா தவனாகவும் 'உன்நிலைமை எவ்வாறுஉள்ளது?' என்று வினவாதவனாகவு மிருந்து என்னுயிரைப்பாதுகாத்து நிற்கின்றேன்;(மகாபராக்கிரமசாலியாகிய) உன்னுடையநிலை இவ்வாறு ஆகுமானால் [நீ இறந்துவிட்டாயென்றால்], நெற் றிப்பட்டமணிந்த(ஐராவதமென்னும் தன்)மதயானையைச்செலுத்திக்கொண்டு, இந்திரன் சுவர்க்கலோகத்தில் மீண்டும் புகமாட்டானோ? (எ - று.)

உனக்கு ஆபத்துநேர்வதான காலத்தில் உன்னைக்கிட்டியிருந்து உனக்கு வேண்டியதுணையை விரைவிச் செய்யவேண்டியது என்கடமையாயிருக்கவும் யான் செய்யாதுவிட்டு என்னுயிரைப் பாதுகாத்துக்கொண்டிருக்கின்றேனே! இது எனக்குத் தகுமோ? நீயே காலதருமத்துக்கு உள்ளானாயானால், இனி,இந் திரன் அச்சமற்றுத் தன்சுவர்க்கலோகத்தையாளச் செல்வானே!!என்று வருந் தியவாறு. புரந்தரனார்-இழிப்பினால்வந்த பால்வழுவமைதி. இச்செய்யுள் சில பிரதியில் "வன்னெஞ்சின்" என்ற அடுத்தசெய்யுளின்பின் உள்ளது. பி-ம்:— [1]என்னிலையொன்றேனுமுயிர்பேணிநிற்கிலேன், நின்னிலையூழென்றேவுயிர் பேணி நிற்கின்றேன், நின்னிலையாதென்றேனுயிர்பேணிநிற்கின்றேன், நின் னிலெனவின்றென்னுயிர்பேணிநிற்கிலேன், என்னிலைமையின்றென்னுயிர் பேணிநிற்கிலேன், என்னிலைமையின்றே நிலைபேணிநிற்கிலேன். [2]ஈதேற்ற. [3]ஆளப், துற்ற. (௧௬௬௦)

௮௰. [1]வன்னெஞ்சி னென்னைநீ நீத்துப்போய் வான[2]டைந்தால்
இன்னஞ் சிலரோ டொருவயிற்றி னியார்பிறப்பார்
மின்னஞ்சு வேலோய் விழி[3]யஞ்சி வாழ்கின்றார்
[4]தந்நெஞ்சந் தாமே தடவாரோ தானவர்கள்.

(இ - ள்.) மின்னலும்அஞ்சுகின்ற[மின்னலைக்காட்டிலும் ஒளிவீசுகின்ற] வேற்படையையுடையவனே! கொடிய எண்ணத்தையுடைய என்னை நீயே விட்டுச்சென்று வீரசுவர்க்கஞ் சேர்ந்தால், இன்னம் சிலருடனே ஒருவயிற் றில் யார் பிறக்க விரும்புவார்?(நம்)கண்ணெதிரேவருதற்கும் அச்சங்கொண்டு (மறைந்து) வாழ்கின்றவர்களான தனுவின்சந்ததியாரான அசுரர்கள், (நீ இறந் ததை அறிந்தபின்பு),தமதுமார்பைத்தாமே தடவி(த் தாம் வீரரென்று கர்ச்சித் து)க் கொண்டு வரமாட்டாரோ? (எ - று.)

நீயே உடன்பிறந்தவனிருக்க இறந்தாயானால், மற்றையோரைப்பற்றிக் கேட்பானேன்? இவ்வாறான உடன்பிறப்பினால் யாதுபயன்? மூத்தவனான உடன்பிறந்தவனிருக்க இளையசகோதரன் இறப்பது என்பது ஏற்பட்டால், சகோதரன்வேண்டுமென்ற எண்ணமே உலகத்திற்போய்விடாதோ? என்பது முன்னிரண்டடியிற் கூறிய பொருள். 'நீ'என்ற சொல்-அண்ணனைவிட்டு ஒரு

போதும்பிரியாதவ னென்ற கருத்தைத் தரும். 'வன்னெஞ்சின்' என்பதை 'நீத்துப்போய்' என்பதனோடு சேர்த்துப் பொருள்கூறினுமாம். கீழே இந்திரன் தலையெடுத்துவிடுவானேயென்று வருந்திக்கூறினான்: இங்குப் பின்னிரண்டடிகளால், தானவர்கள் தலையெடுத்து விடுவாரே என்று வருந்துகின்றானென்க. தாமேஎன்றது - முன்புநமக்குத் தோற்றுப் பதுங்கியிருந்தவரேயென்ற குறிப்பு. பி - ம்:—1வன்னெஞ்சாய்நீ, வன்னெஞ்சநீ, வன்னெஞ்சன். 2அடைந்த. 3அஞ்ச. 4தன்னெஞ்சுதன்னைத், தன்னெஞ்சுதானே. (கசுசுக)

அக. கல்லன்றோ நீராடுங் 1காலத்துன் 2காறேய்க்கும்
மல்லொன்று தோளாய் வடமேரு 3மானுடவன்
வில்4லொன்று நின்னை விளிவித் 5துளதென்னுஞ்
சொல்லன்றோ வென்னைச் 6சுடுகின் றது7 தோன்றால்.

(இ - ள்.) பலம்பொருந்திய தோள்களையுடையவனே! வடக்கேயுள்ள மேருஎன்றமலையானது (நீ) ஸ்நாநஞ்செய்கின்றகாலத்திலே உனது குதிகாலை (அழுக்குப்போகத்) தேய்ப்பதற்கு உதவுகின்ற கல்லல்லவோ? ஆண்களிற் சிறந்தவனே! '(ஒரு)மனிதன்(தனது)வில்லொன்றில்தொடுத்த பாணம் உன்னை இறக்கும்படிசெய்தது' என்கின்ற சொல்லல்லவா என்னை (மிகவும்) வருத்துகின்றது! (எ - று)

மேருவானது நீ ஸ்நாநஞ்செய்கின்றகாலத்து உன்குதிகாலைத்தேய்க்கின்ற கல்லாக உதவுவதாகும். அப்படிப்பட்டபெருமைபெற்ற நீ இறந்தாயே: நீ இறந்தாலும் இறக்கிறாய்; ஒருமானுடன் வில்லிலிருந்துஎய்த அம்பினால் உனக்கு இறப்பு நேர்ந்தது என்பதைக் கருதும்போது உன்சாவு மிக்கவருத்தத்தைத்தருகின்றதென்று ஆற்றுகின்றான், இராவணனென்க. பி - ம்:—1காலத்துட், காலத்துக். 2காறேய்க்க. 3மானிடன்கை. 4ஒன்றாலுன்னை, ஒன்றினின்னை. 5உளன். 6சுடுவித்தது. 7தோன்றலே. (கசுசுஉ)

அஉ. 1மாண்டனவாஞ் சூலமுஞ் சக்கரமும் 2வச்சிரமுந்
3தீண்டினவா வொன்றுஞ் 4செயலற்ற வாந்தெறித்து
5மீண்டனவா 6மானிடவன் மெல்லம்பு மெய்யுருவ
நீண்டனவாந் தாமின்ன 7நின்றாரந் தோளோக்கி.

(இ - ள்.) (சிவனுக்குஉரிய) சூலப்படையும் (திருமாலுக்குஉரிய) சக்கரப்படையும், (இந்திரனுக்குஉரிய) வச்சிரப்படையும் என்ற இவைகள் (முற்காலத்தில்உன்மீது ஏவப்பட்டு உன்னைத்) தீண்டினவாற்றால் ஒன்றுஞ்செய்யமாட்டாதனவாகி மழுங்கியனவாய், தெறித்து அப்பாற்போய்விட்டனவாம்; (அப்படியிருக்கையில்), மனிதனொருவனுடையமென்மையான அம்புகள்(உன்) உடம்பைத்துளைத்துச்செல்லும்படி நீண்டு வந்தனவாம்;(அப்படியிருக்க); இராவணேசுவரனார் இன்னும்(தமது)தோளைப் பார்த்துக்கொண்டு இருந்தாராம்; (இது மிகவும்நன்று!!) (எ - று.)

சிவபெருமானுடைய சூலம்முதலியன உன்னைத் தீண்டிமழுங்கி ஒன்றுஞ் செய்யமாட்டாதனவாகி மீண்டுபோக, ஒருமனிதனுடைய அற்பமான அம்புகள் உன்னுயிரைவாங்கிவிட்டனவே! இது என்ன விபரீதம்!! இவ்வாறான

செயல் நிகழ்ந்தபின்பு இவ்வாறுசெய்த மானுடனைத் தொலைக்கவோ அல்லது என்னுயிரை யிழக்கவோ இரண்டிலொன்று உடனே செய்யவேண்டியதா யிருக்க, 'எனக்குத் தோள்வலி மிகுதியாகவுள்ளது' என்று தோள்வலியைப் பாராட்டியவண்ணம் இரண்டுக்கு இருபதாகவுள்ள தோள்களை யான் பார்த்துக்கொண்டிருத்தலால் யாதுபயன்? என்று வருந்திக்கூறுகின்றான் இராவணனென்க. அம்பின் இழிவுதோன்ற 'மெல்லம்பு' என்கின்றான். முதல்மூன்றடிகளிலுள்ள 'ஆம்' என்பன-ஐதிகியப்பொருளையும், நான்காமடியிலுள்ள 'ஆம்' என்பன - தகுதியின்மைப்பொருளையுங் காட்டின. இராவணனார் - தன்னைப் படர்க்கையாகக் கூறியது: பன்மை இழிப்பினால்வந்தது. மாளுதல் - மழுங்குதல். பி-ம்:—[1]மாண்டனவோ. [2]வண்மழுவும். [3]தீண்டினவோவொன்றுஞ், தீண்டினவேயல்லால், தீண்டினபோழ்தெல்லாஞ். [4]செயலிற்றதோ, செயலாற்றுவாழ், செயலாற்றுநார். [5]மீண்டனவோ, மீண்டனவால். [6]மானிடவர். [7]என்கின்றாரந்தோகின். (கசுசுங)

அங. நோக்கறவு [1]மெம்பியர்கண் [2]மாளவு நொய்திலங்கை
போக்கறவு மாதுலனார் [3]பொன்றவுமென் பின்பிறந்தாள்
மூக்கறவும் வாழ்ந்தே னொருத்தி முலைக்கிடந்த
ஏக்கறவா லின்ன மிரேனோ வுனை[4]யிழந்தும்.

(இ - ள்.) எனது தம்பிமார் பார்ப்பதற்குமில்லாமற்போகும்படி இறந்துவிடவும், இலங்கை இலேசாக (எதிரிகள்கைப்)பட்டுவிடவும், என்மாமனாகிய மாரீசன் இறந்துபோகவும், என்பின்பிறந்தவளான சூர்ப்பணகை மூக்குஅறுபடவும், ஒருபெண்ணினுடைய முலையினிடத்துக்கிடந்த ஆசையினால் உயிருடனிருந்தேன்: உன்னையிழந்தும் இன்னும்இரேனோ? (எ - று.)

எம்பிமார் என்றது-கரன்முதலியோரை. ஒருபெண்ணிடத்துக்கொண்ட பித்து என்னைச்சேர்ந்தவர்கள் என்னவாறுஆயினாரென்பதையும் கருதாது என்னை என்னபாடு படுத்துகின்றது! என இரங்கியவாறு. பி - ம்:—[1]எம்பியர்தாம், எம்பிமார். [2]மாளவுமே, மாளவுமிர், மாளவும்போய். [3]பொன்றவும், பொன்றிடவும். [4]இழந்து. (கசுசுச)

அசு. தன்னைத்தான் றம்பியைத்தான் றானைத் [1]தலைவனைத்தான்
மன்னைத்தான் மைந்தனைத்தான் மாருதத்தின் காதலைத்தான்
பின்னைக் கரடிக் கிறையைத்தான் பேர்[2]மாய்த்தாய்
என்னத்தான் [3]கேட்டிலே னென்னானை வா[4]றிதுவே.

(இ - ள்.) இராமனையாவது, (அவனது) தம்பியான இலட்சுமணனையாவது, சேனாபதியான நீலனையாவது, (வானரர்கட்கெல்லாந்) தலைவனானசுக்கிரீவனையாவது, (வாலியின்) புதல்வனான அங்கதனையாவது, வாயுபுத்திரனான அனுமானையாவது, அன்றிக் கரடிகட்கு அரசனான சாம்பவானையாவது, புகழழியச்செய்து(நீ)கொன்றாயென்று சொல்லவும் கேட்கப்பெற்றிலேன்: (அப்படியிருக்கையில், உனக்குத்தோன்றிய) இம்மரணம், எவ்வாறாகத்தோன்றியதிலை!! (எ - று.)

எதிரிகளிற் பெருமையுடையவராகக் கருதப்படுகின்ற இராமன்முதலிய எவரையேனும் நீ உயிரொழிக்க,பிறகுஅதனால் உனக்கு மரணம் நேரின்,அது ஒருபடியாக மனத்துக்குச் சமாதானமாக இருக்கும்: அங்ஙனம் ஒன்றும்நிகழா திருக்கையில்தானே உனக்குமாத்திரம் மரணம் நேர்ந்ததெனின், இதனைப் பற்றி நாம் என்னென்றுசொல்லுவது!!என இராவணன் இரங்கியவாறு.காதல்-காதலனுக்கு, ஆகுபெயர். பி-ம்:—[1]தலைவரை.[2]தொலைத்தான். [3]பெற்றிலனே. [4]இதுதான், இதுவோ. (கசுகூரு)

அரு. ஏழை மகளி ரடிவருட வீர்ந்தென்றல்
வாழு மணியரங்கிற் பூம்பள்ளி வைகுவாய்
சூழு [1]மலகை துணங்கைப் பறை[2]துவைப்பப்
பூழி யணைமேற் [3]றுயின்றனையோ போர்க்களத்தே.

(இ - ள்.) அறியாமைக் குணத்தையுடைய மகளிர் காலைப் பிடிக்கவும், குளிர்ந்த தென்றற்காற்று வாழ்ச்சிபெறவீசுகிற அழகிய நர்த்தனசாலையில் மலரணையிலே தங்கியிருப்பவனே! போர்க்களத்திற்சூழ்ந்துள்ளபேய்கள் துணங்கைக்கூத்திலே பறையடிப்பதுபோன்ற ஒலியைச்செய்ய,புழுதிப்படுக்கையில் நித்திரைபுரிகின்றனையே? (எ - று.)

ஓகாரம் - இரக்கம். மலரணையில் வைகியவனுக்குப் புழுதியணையிற் பள்ளிகொள்ளுமாறு நேர்ந்ததே என இரங்கியவாறு. இச்செய்யுளில், ஒருவனுக்கு நிலைமாறிய தன்மையைக் கூறியது - முறைபிறழ்படர்ச்சியணியாம்: இதனை,வடநூலார் பர்யாயாலங்காரமென்பர்.இது,சிலபிரதியில்"செந்தேன்" என்ற அடுத்தபாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]அலகைத். [2]துளங்க, துவைக்கப், துவைப்பத். [3]கிடந்தனையோ. (கசுகூசு)

அசு. செந்தேன் பருகித் [1]திசைதிசையு நீவாழ
[2]உய்ந்தே [3]னினியின்று நானு முனக்காவி
[4]தந்தேன் [5]பிரியேன் றனிபோகத் [6]தாழ்க்கிலேன்
[7]வந்தேன் றொடர மதக்களிறே வந்தேனால்.

(இ - ள்.) செந்நிறமுள்ளமதுவைக் குடித்து, (வெற்றியுடனே)பலதிசைகளிலும் (சென்று) நீ வாழ்ச்சி பெற்றிருக்க, (நான் சுகமாக) உயிர்வாழ்ந்திருந்தேன்; (நீ உயிரொழிந்த)இனிமேல் இப்போது நானும்(பிழைத்திராமல்)உனக்கு உயிரைத்தந்தவனாகி, (நீ) தனியேசெல்லத் தாமதிக்காதவனாய், பிரியாது (உன்னைத்)தொடரவந்திட்டேன்; மதயானைபோன்றவனே! வந்துவிட்டேன்.

ஆல்-தேற்றம். ஆவிதந்தேன், வந்தேன் என்பன-விரைவினால், எதிர்காலம் இறந்தகாலமாகக்கூறப்பட்ட காலவழுவமைதிகள்.நானும்என்றஉம்மை-நீ எனக்கு வாழ்க்கைதந்ததுபோலவே என்ற பொருளைத் தழுவுவதனால்,இறந்தது தழுவியஎச்சம். இன்று என்பதைக் கீழோடேகூட்டி, இன்று-இதுவரையும்,நீவாழ உய்ந்தேனெனினுமாம்.பி-ம்:—[1]திசைகடொறுந்நீவாழ்வு,திசைகடொறுந்நீவாழ,திசையுந்தித்நீவாழ்வு, திசையுந்தித்நீவாழ. [2]நந்தேன். [3]நனியென்றும். [4]நொந்தேன். [5]பிழையேன். [6]தாழ்கிலேன். [7]வந்தேனே. (கசுகூஎ)

௮௭.—இராவணன் இவ்வாறு கதற, சீதை மகிழ்ச்சியடைதல்.

அண்டத் தளவு மினைய பகர்ந்[1]தழைத்துப்
பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் [2]பாரித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்[3]கண்ணா ளுள்ளே கிளுகிளுத்தாள்.

(இ-ள்.) (இராவணன்),—இவ்வாறானசொற்களைச் சொல்லி வானமுகடு வரையிலும் (குரலொலி எட்டும்படி)கூவி, பழமையான தனது பெயரின்காரணத்தைப் பலருமறியச்செய்தான்; கெண்டைமீன்போன்ற வடிவத்தைக்கொண்ட பெரிய கண்களையுடையவளான சீதை,—கொவ்வைக்கனிபோன்ற வாய் துடிக்கவும் மயிர்க்கூச்செறியவும் மனத்துக்குள்ளேதானே குதூகலிப்புக்கொண்டாள்; (எ - று.)

இராவணனென்றபெயர்-கதறியவனென்று பொருள்படுமாதலால், இப்போது வான்முகட்டளவும் தன்குரலொலியெட்டும்படி கதறித் தனது இராவணனென்றபேரின் பொருளைப் பலருமறியச் செய்தானென்றார்: கைலாயத்தின் கீழ் அகப்பட்டபோது எவ்வளவு கதறினனோ, அவ்வளவுபேரொலிபட இப்போதும் கதறினனென்க. வாய்துடித்தல், மயிர்பொடித்தல் - மகிழ்ச்சிக் குறிகள். பி-ம்:—[1]அழைப்ப. [2]பாலித்தான். பாவித்தான். [3]கண்ணி. (௧௬௬௮)

௮௮.—சீதையின் மகிழ்ச்சி.

வீங்கினாள் கொங்கை மெலிந்த மெலிவகல
ஓங்கினா ளுள்ள முவந்தா ளுயிர்[1]புகுந்தாள்
[2]தீங்கிலாக் கற்பிற் றிருமடந்தை [3]சேடியாம்
பாங்கினா ளுற்றதனை யாரே பகர்கிற்பார்.

(இ-ள்.) (சீதையானவள்),—(மகிழ்ச்சியினால்) தனம்பூரித்தாள்; (உடல்) இளைத்துப்போன இளைப்பெல்லாம் நீங்கப் பருத்தாள்; மனம்குளிர்ந்தாள்: (போனநிலையிலிருந்த) உயிர் மீண்டுவரப் பெற்றாள்; குற்றமற்ற பதிவிரதா தருமத்தோடுகூடிய இலக்குமி வேலைக்காரியாக இருத்தற்குஉரிய அழகையுடையவளான அச்சீதை அடைந்தநிலையை அறிந்து சொல்லவல்லவர் யாவர் தாம்? (எ - று.)

மாயையாற் சனகனுருவமாக்கிக் கொணர்ந்துகாட்டக் கண்டதும் இராவணன்கூறிய செவிபொறுக்காதசொற்களைக் கேட்டதும் என்ற இவைமுதலியவற்றால் மிகமெலிந்து பெருந்துயரத்திலாழ்ந்திருந்த சீதைக்கு, கீழ்நிகழ்ந்தனவெல்லாம் மாயச்செயலேயென்றும் இராமபிரானே வெற்றிபெற்று வருகின்றானென்றும் திண்ணமாகஅறிந்த இந்நிலையில் தோன்றிய மகிழ்ச்சியை அளவிட்டுச்சொல்ல எவர்க்கும் ஆகா தென்பதாம். தீங்கிலாக்கற்பிற்றிருமடந்தை சேடியாம்பாங்கினாள் என்றதனால்-இந்தச் சீதையினது பேரழகும் பெருங்கற்பும் பெறப்படும். சேடி-சேடீ: வடசொல். பி-ம்:—[1]உயிர்த்தாள். [2]இல்லாக். [3]செங்கமலை, செங்கமலப். (௧௬௬௯)

௮௯.—இதுவும் அது.

[1]கண்டாள் கருணைத்தன் கண்கடந்த தோளானைக்
கொண்டா ளொருதுணுக்க [2]மன்னவனைக் கொற்றவனை

தண்டாத வாளி தடிந்த [3]தனிவார்த்தை
யுண்டாளு டறடித்தாள் வேறொருத்தி யொக்கின்றாள்.

(இ - ள்.) தன் கண்ணுக்கு அடங்காத (பேரழகுபடைத்த) தோளையுடையவனை இராமனையும் கும்பகருணனையும் (முன்னே) கண்டு, ஒப்பற்ற அச்சங்கொண்டவளான சீதை,—அந்தக்கும்பகர்ணனை வெற்றிபெற்றஇராமபிரானுடைய தவறுமலழிக்கவல்ல அம்பு வெட்டிவீழ்த்திய ஒப்பற்றவார்த்தையைக் (காதின்மூலமாகக்) கேட்டு உடம்பு பூரித்தவளாய், வேறொருத்திபோலானாள்; (எ - று.)

இராமபிரானுக்குமுன்னே பெருவடிவுபடைத்த கும்பகர்ணன் நிற்பதாகப் பாவித்து முதலிற்பெருந்துணுக்கங்கொண்டு, பிறகு அவனை இராமபிரான் வென்றமையைக்கருதிப் பெருமகிழ்ச்சியடைந்தாள் சீதையென்க. சிறைப்பட்டுள்ள சீதை கீழ் இராவணன்செய்த மாயச்செய்கையால் மனங்குன்றி அலமந்து மாழ்கித் தவிக்கின்றநிலையிலே, கும்பகர்ணன் இறந்தசெய்திதெரிந்து தன் முன்னேதானே இராவணன் சோகித்துவருந்தித் தவித்துத் திகைத்துக் கதறுவது கண்டு அவள்மனத்திற்பொங்கிய பெருமகிழ்ச்சியை யளவிட்டுச் சொல்லமுடியாதென்று கருதிய ஆசிரியர், தாம், அதனைக் கற்போர்க்கு ஒருவாறு உணர்த்தவேண்டுமென்று இதனால், உணர்த்துகின்றாரென்க. இங்கு, அவலச்சுவையினின்று உவகைச்சுவை மாறியதில்லை கற்போராற் பாராட்டற்கு உரியது. கண்கடந்ததோளானை என்பதற்கு-கண்ணுக்குஅடங்காதபடி பேரளவுபடைத்த தோளையுடையவனை என்றுபொருள்கூறி,கருணனைக் கண்டாள் என்று இயைத்துஉரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]கண்டாளக்கண்ணனைத்தன் கண், கண்டாள் கருணனைக்கண். [2]அன்றவனைக்,அவன்றனைக்.[3]தனிப்புழுதி.

கூ௦.—இராவணன் சீறுதல்.

தாவரிய பேருலகத் [1]தின்றென் சாங்கோலி
யாவரையுங் கொன்[2]றடக்கி யென்றும் [3]மிறவாத
மூவரையு மேலைநாண் மூவா மருந்துண்ட
தேவரையும் வைப்பேன் சிறையென்னச் சீறினான்.

(இ - ள்.) கடத்தற்குஅரிய[மிகப்பரந்த] பெரியஇவ்வுலகத்திலே இன்று என்னம்பைச்செலுத்தி எல்லாரையும்கொன்று அடங்கச்செய்து என்றைக்கும் அழியாத (பிரமன் விஷ்ணு சிவன்என்ற) மும்மூர்த்திகளையும், முற்காலத்தில் [பாற்கடலைக்கடைந்து அமிருதத்தை யெடுத்தகாலத்தில்] சாவாமருந்தாகிய அமிருதத்தையுட்கொண்ட தேவர்களையும் சிறையில்வைத்திடுவேன்' என்று சீறினான் (இராவணன்); (எ - று.)

திறனற்றவர்க்குச் சீற்றந்தோன்றுதல் இயல்பேயாதலால்,இராமபிரான் மீது எதிர்த்துப் பொரமுடியாத இராவணனுக்கு மண்ணுலகத்தார் முதலியோரிடத்துச் சீற்றமுளதாயிற்று: இது, துயரத்தால் தோன்றிய சீற்றம். மண்ணுலகத்தார் கொல்லக்கூடியவராதலின் அவர்களைப்பற்றி 'பேருலகத்து யாவரையுங் கொன்றடக்கி' என்றும், திரிமூர்த்திகளும் அழியாதவராதலாலும் தேவர்களும் அமிருதமுண்டதனாற் சாவாமைபடைத்தவராதலாலும் அவர்

களை 'சிறைவைப்பேன்' என்றுஞ் சொல்லிச் சீறினன். தா அரிய - அழிதலில்லாத என்றுமாம். பி-ம்:—[1]எம்பிசவத்தோடும். [2]அடுக்கி. [3]பிறவாத. (கசுஎக)

கூக.—மந்திரியர் தேற்றத் தேறி, இராவணன் சினத்தோடு அங்கு நின்று செல்லுதல்.

அக்கணத்து [1]மந்திரிய ராற்றச் சிறிதாறி
இக்கணத்து [2]மானிடவ ரீரக் [3]குருதியால்
முக்கைப் புனலுகுப்ப [4]னெம்பிக் கெனமுனியாத்
திக்கனைத்தும் போர்கடந்தான் போயினான் றீ[5]விழியான்.

(இ - ள்.) எல்லாத்திக்கிலும் (சென்று) போரில் வெற்றிபெற்றவனாகிய இராவணன்,—அந்தக்கணத்தில் மந்திரிமார் சமாதானப்படுத்தச் சிறிது தணிந்து, மானுடரான இராமலட்சுமணருடைய ஈரம்நீங்காத [அப்போது தான் உடம்பிலிருந்து வெளிப்பட்ட]இரத்தத்தைக்கொண்டு'இ கணத்தில் என்தம்பிக்கு மூன்றுமுறை கையால் நீரிறைப்பதாகிய தர்ப்பணத்தைச் செய்வேன்' என்று சொல்லிச் சினந்து, தீப்புறப்படவிழிக்குங் கண்ணையுடையவனாய், (சீதையிருந்த இடத்தைவிட்டு அப்பாற்) சென்றான்; (எ - று.)

இறந்தோர்பொருட்டுத் தர்ப்பணஞ்செய்கையில் மூன்றுமுறை நீர்விடுதல் நூன்முறை. 'மந்திரியர்' என்றது-மகோதரனைக் காட்டுமென்னலாம்: அவனே உடனுள்ளவனாதலால்: இழிப்பினால் 'மந்திரியர்'எனப் பன்மையாற் கூறியதென்க. முனியா - இறந்தகாலவினையெச்சம். பி-ம்:—[1]மந்திரிமார். [2]மானிடர்கள். [3]குருதியினால். [4]என்னமுனிந்தெழா. [5]விழியா,விழிப்பான். ()

கூஉ.—மகோதரன் போதல்.

[1]கூறாறு [2]மினிநா மக்[3]கும்ப கருணனார்
பாறுடு வெங்[4]களத்துப் பட்டா ரெனப் [5]பதையா
வேறோர் சிறையிவளை வைம்மின் [6]விரைந்தென்ன
மாறோர் திசைநோக்கிப் போனார் மகோதரனார்.

(இ - ள்.) 'இவ்வேளை நாம் (வேறொன்றுஞ்)சொல்லோம்: (ஏனெனில்), அந்தக்கும்பகர்ணனென்பவன் பருந்துகள் வட்டமிட்டு உலாவுகின்ற கொடிய போர்க்களத்திலே இறந்திட்டான்' என்று சொல்லி வருந்தி, (அருகிலிருந்த பணியாளரைநோக்கி),'இந்தச்சனகனை வேறொருசிறையிலே விரைவாக வையுங்கள்' என்றுகட்டளையிட்டு,—மகோதரன், (இராவணன்சென்றதிக்கிலும்) வேறான திசையைநோக்கிப் போய்விட்டான்; (எ - று.)

'இப்போது கும்பகர்ணன் இறந்திட்ட செய்தி வந்திட்டதனால், இந்தச்சனகனை என்னசெய்வதென்று ஆலோசிப்பதற்கு வழியில்லாமற்போயிற்று: ஆகையால், சீதையைச் சிறையில்வைத்திருப்பதுபோலவே, இந்தச்சனகனையும் வேறுஒருசிறையில் வைத்திடுங்கள்'என்று சொல்லித் தான்வேறொருவழியாகப் போயினன் மகோதரனென்க. அவமானமடைந்துசெல்பவர் யாவரும் ஒருவழியாகச்செல்லாது மூலைக்குஒருத்தராகவெளிச்செல்லுதல்,இயற்கையே. மகோதரனார்என்ற பன்மையும்-இழிப்புப்பற்றியது. பி-ம்:—[1]கூறோ. [2]இனி

நமக்கே,இனிநமக்கு,இனிநமக்கோர், இனிநமக்காய்க், நமக்கினியார். 3கும்பஞ் செய்கன்னனுர். 4களத்தே. 5பதைத்தான், பதைந்தார், பதைப்பார். 6எனவிளம்பா, எனவிளம்பி. (௧௬௭௩)

வேறு.

௬௩.—அப்போது திரிசடை வந்து சீதையைத் தேற்றத் தொடங்குதல்.

1வரிசடை நறுமலர் வண்டு 2பாடிலாத்
துரிசடை புரிகுழற் சும்மை சுற்றிய
ஒருசடை யுடையவட் குடைய 3வன்பினுள்
திரிசடை தெருட்டுவா ளினைய 4செப்புவாள்.

(இ - ள்.) இரேகையமைந்த சிறகுகளையுடைய நறுமணங்கொண்டமலரில் மொய்க்குந்தன்மையுள்ள வண்டுகள் தங்குதலில்லாத அழுக்குஅடைந்த முறுக்குள்ள கூந்தலின்தொகுதியை ஒருசடையாகச்சுற்றிவைத்துள்ள அந்தச் சீதையினிடத்தில் அன்புடையவளான திரிசடையென்பவள் தேற்றுபவளாய் இவ்வாறுனவார்த்தைகளைச்சொல்லினுள்; (எ - று.)

கணவனைப்பிரிந்தமகளிர் தலைவாருதல்முதலிய சம்ஸ்காரமின்றி யிருக்க வேண்டுமென்ற முறைமைப்படியே ஒருசடையாகக் கூந்தற்றெருகுதியைச் சீதை சுற்றிவைத்துள்ளாளாதலால், அவளை 'குழற்சும்மைசுற்றிய ஒருசடையுடையவள்' என்றூர்.விபீஷணனது திருமகளான திரிசடை தந்தையைப்போல நற்குண நற்செய்கைகளையுடையவளாய்ச் சீதை வருந்தும்போதெல்லாம் அப்பிராட்டியைத் தேற்றுபவ ளாதலால்,இப்போதும் தேற்றலானுளென்க. இச்செய்யுளில் முதலெழுத்து வேறுபட்டிருக்க இரண்டுமுதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபட்டது - திரிபுஎன்னுஞ் சொல்லணியாம். சடை-சிறமெனக்கொண்டு, வரி-அழகையும்,சடை-சிறத்தையும், நறு-நறுமணத்தையுங்கொண்ட,மலர் எனினுமாம். பி-ம்:—1பரிசடை. 2மாடிலாத். 3அன்பினல். 4செப்பினுள். (௧௬௭௪)

௬௪.—திரிசடை சீதையைத் தேற்றும்மொழி.

உந்தையென் 1றுனக்கெதி ருருவ 2மாற்றியே
3வந்தவன் மருத்தனென் றுளனோர் மாயையான்
அந்தமில் கொடுந்தொழி லரக்க னுமெனுச்
சிந்தையி னுணர்த்தின ளமுதின் 4செய்கையாள்.

(இ-ள்.)'உன்தந்தையென்றுசொல்லிக்கொண்டு உன்னெதிரிலே(தனது இயற்கையான)உருவத்தை மாற்றிக்கொண்டுவந்தவன், மருத்தனென்றுபெயருள்ள ஒப்பற்றமாயக்காரனுகி எல்லையில்லாத கொடுந்தொழிலையுடைய அரக்கனுவன்' என்று அமிருதத்தின் செயலையுடையவளான திரிசடை, (அந்தச்சீதையின்) மனத்திற்படும்படி தெரிவித்தாள்; (எ - று.)

உயிர்போகுந்தருணத்தில் உண்மையையுணர்த்திச் சீதையின் உயிரைப் போகாதவாறு பாதுகாப்பவ ளாதலின்,திரிசடையை, 'அமுதின்செய்கையாள்' என்கிறூர். பி-ம்:—1உன். 2மாற்றினுன். 3வந்தனன். 4செம்மையாள். (௧௬௭௫)

கூடு.—கவிக்கூற்று: சீதை துயர் நீவிர்ந்தாளாக, இராவணன் செய்ததை இனிச்சொல்வோமெனல்.

நங்கையு மவளுரை நாளுந் தேறுவாள்
சங்கையு மின்னலுந் துயருந் தள்ளினாள்
இங்குநின் [1]றேகிய விலங்கை காவலன்
அங்குநின் றியற்றிய தறைகு வாமரோ.

(இ - ள்.) அந்தத்திரிசடையின்பேச்சை எப்போதும் நம்புபவளான சீதாபிராட்டியும், (தன் மனத்துக்கொண்டிருந்த) ஐயத்தையும் துன்பத்தையும்(உடலில்தோன்றும்) துயரக்குறிகளையும் போக்கினாள்; (சீதையிருந்த)இவ்விடத்திணின்று சென்ற இலங்கைக்கரசனாகிய இராவணன்,அங்கிருந்து செய்ததை இனிச்சொல்லுவோம்; (எ - று.)

அந்தத்திரிசடை கூறுவதெல்லாம் வாய்மையேயாயிருக்கப் பலமுறை கண்கூடாகக் கண்டுள்ளா ளாதலால், இப்போதும் இவள்சொல்வது மெய்யேயென்று துணிந்து சீதை துயர்நீங்கின ளென்க. இன்னல் துன்பம் என்று பரியாயச்சொல் இரண்டு வந்ததனால்,ஒன்று-மனத்துயரத்தையும்,மற்றொன்று - அத்துயரத்தினால் உடலில்தோன்றும் மெய்ப்பாடுஆன கண்ணீர் வார்தல் முதலிய செயலையும் காட்டும். 'இலங்கைகாவல னங்கு நின்றியற்றிய தறைகுவாம்' என மேற்படலத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறு. சங்கை-ஸங்கா: வடசொல். பி-ம்:—[1]எய்திய து. (கசுஎசு)

மாயாசனகப்படலம் முற்றிற்று.

---

## கஎ-ஆவது அதிகாயன்வதைப்படலம்.

அதிகாயனது வதையைக் கூறும் படலமென்று விரியும்.அதிகாயனென்பவன் இராவணனுக்குத் தாந்யமாலினீயென்றமனைவியினிடம் பிறந்தவன்.அதிகாயன் என்றசொல்-பெருந்தோற்றமுள்ள உடல்படைத்தவனென்று பொருள்படும். சிலபிரதியில் முதலாறுபாடல்களும் மாயாசனகப்படலத்தோடு சேர்ந்தனவாக,"நதிகாய்" (எ)என்றபாடல்முதலே இப்படலம் தொடங்குகின்றது.

கும்பகர்ணனிறந்ததற்காகப்புலம்பிச்சென்ற இராவணன், கோபாக்கினியுடனே தன்னிருபுறத்தும அருகேநிற்கிற அரக்கரைப் பார்த்துக் கடிந்து,'என் தம்பியைப் பாதுகாவாமல்விட்டிட்டு உம்முயிரையே பெரிதாகக்கொண்டுவந்தும்,நீர் வீரர்களென்று முழங்குவது எவ்வாறு?உங்களால் ஆகாதென்றுற்சொல்லிவிடுக:யான் என்வேலைக்கொண்டு மானிடரைவெல்வேன்: அமரில்வெல்லுவோமென்று தைரியமிருந்தாற் செல்லுக: இல்லாவிடின், மீள்க: நும்கருத்தைச்சொல்லுக'என்ன,அதிகாயன் மானமுஞ் சீற்றமும்பொங்க எழுந்து,'எல்லாரையும் சாமானியமாகச்சொல்லலாகாது: நான் மானிடரையும் வானரரையும் வென்று வருகிறேன்:நீர் இங்குத்தானே இனிதிரும் உமக்கு இராமன்உண்டாக்கிய துன்பத்தை நான் இலட்சுமணனைக்கொன்று இராமனுக்குஉண்டாக்

காவிடின்,உம்முடைய புத்திரனல்லேன்' என்றுகூற,இராவணன்,'நன்றுகூறினாய்:நீ இலட்சுமணனைக் கொன்றுவிடு: பிறகு நான் இராமனைக்கொல்வேன்' என்று விடைகொடுத்து மிகப்பலசேனைகளையும்பல அரக்கவீரரையும்ஏவினான். விடைபெற்ற அதிகாயன்ஆயிரம்பரிபூண்டதேரேறிப் போர்க்களஞ்சென்றான். கும்பனும் நிகும்பனும் அகம்பனும் தேரேறி அயல்செல்லப் பல்லாயிரஞ்சேமத்தேர்கள்உடன்போக, அதிகாயன், வெவ்வேறு வகைப் படைக்கலங்களுடன் போர்க்களஞ்சென்று,அங்கு முண்டமாய் வீழ்ந்திருக்குங் கும்பகர்ணனுடலைப் பார்த்து வருந்திச்சினந்து, 'இங்ஙனம்புரிந்தவனுடையதம்பியை இவ்வாறு போர்க்களத்தில்விழுமாறுபுரிந்து அண்ணனைத்துன்புறச்செய்துஎன்னிடராறுவேன்' என்று கொண்டு, மயிடனென்பவனைத் தூதுவிடுத்தான். அத்தூதின் கருத்தையுணர்ந்த ஸ்ரீராமன்இலட்சுமணனுக்குப் பொருதற்குச்செல்லவிடைகொடுக்க,விபீஷணன் தனியே இலட்சுமணனைச்செல்லவிடவேண்டா என்று அவ்வதிகாயனுடைய வலிமையையும் மதுகைடபரில் மதுவென்பவனே கும்பகர்ணனாகவும் கயிடபனேஅதிகாயனாகவும் பிறந்துள்ளவரலாற்றையுங்கூற, ஸ்ரீராமன் இலட்சுமணனுடைய பராக்கிரமத்தைக்கூறி முடிவில் உடன்செல்லுமாறு விபீஷணனுக்குவிடைதர ஸ்ரீராமனநுமதியின்படி அவ்விலட்சுமணனுடன் விபீஷணன் சென்றான். பின்னர் அரக்கர் வானரர்என்ற இருதிறத்தார்க்கும் நிகழ்ந்தபோரில் வானரசேனை பின்வாங்குவதுகண்டு,ஆங்குச்சென்று சேர்ந்த இலட்சுமணன் தன்திறமையால் சதுரங்கசேனைகளையுந்தொமிசஞ்செய்ய, தாருகனென்பவன் வந்து பொருது தலையறுப்புண்டுஇறக்க,அப்பாற் பொங்கிச்சினந்து பெரும்போர்புரிந்த காலன் குலிசன் காலசங்கன் மாலி மருத்தன் என்ற ஐவரையும் இலட்சுமணன் கொன்று வீழ்த்தினான். அதுகண்ட அதிகாயனுடைய சேனாவீரர் பெருங்கணக்கினவான யானைப்படையோடு வந்துஎதிர்க்க, அப்படைகளையெல்லாம் இலட்சுமணன் பொருதழிக்கையில் அநுமானும் உடன்உதவினான். அதுகண்ட தேவாந்தகன் அநுமானோடு எதிர்த்துத் தேரையும் பாகனையும்இழந்து தானும் மாண்டனன்.பின்பு அதிகாயன் அநுமானை வீரவாதம்பேசி யழைகூவ, அநுமான் திரிசிரனுடனேகூடி என்னுடன் பொரலாமென்றான். அதுகேட்ட திரிசிரன் பொங்கிவர அநுமான் அவனுயிரைப்போக்கி, மேலைவாசலிற் போர்நிகழ்வதுகேட்டு அங்குச், சென்றனன்.பிறகு அதிகாயன் பிரமித்து அநுமான்திறமையை வியந்து,வந்தகாரியத்தைப் பார்க்கவேண்டுமென்று இலட்சுமணனோடு பொரலானான்.இளையபெருமாள் அங்கதன்மேலேறிக்கொண்டு தேரோடுவந்துநின்ற அதிகாயனோடு பொரலாயினன். இருவரும் பலவகையஸ்திரங்களைக்கொண்டு கடும்போர்புரிகையில், வாயுபகவான் பிரமாஸ்திரத்தாலன்றி இவ்வதிகாயன்தொலையானென்று இலட்சுமணனுக்குக் கூற, இளையபெருமாள் பிரமாஸ்திரத்தால் அதிகாயனை உயிரொழித்தனர். அப்பால் அங்கதனோடு நராந்தகனும்,நீலனோடு மத்தனும், இடபனோடு வயமத்தனும், சுக்கிரீவனோடு கும்பனும்,அநுமானோடு நிகும்பனும் பொருதுமடிந்தனர். அக்கால்,மற்றையரக்கர் பொரமாட்டாது சிதறுண்டோடினர். அதிகாயன் முதலியோரின் வதத்தைத் தூதுவர் இராவணனுக்கு

அறிவிக்க, இராவணன் வருத்தமும் சினமும் பொங்கக் கிலேசித்தனன். தன் மகனது மரணத்தைக்கேட்ட தானியமாலினி புலம்ப, இலங்கையெல்லாம் வருந்திற்று என்ற இச்செய்தி இப்படலத்துக் கூறப்படுகின்றது.

க.—அமைச்சரைநோக்கிச் சினத்துடன் இராவணன் கூறத்தொடங்குதல்.

> கொழுந்துவிட் டழன்றெரி மடங்கல் கூட்டற
> எழுந்தெரி வெகுளியா னிருமருங்கினுந்
> தொழுந்தகை யமைச்சரைச் [1]சுளித்து நோக்குறு
> மொழிந்தன னிடியொடு [2]முகிலுஞ் சிந்தவே.

(இ-ள்.) உக்கிரங்கொண்டு கொழுந்துவிட்டெரிகின்ற ஊழித்தீயும் ஒப்பறும்படி எழுந்தெரிகின்ற சினத்தையுடையவனான இராவணன்,—இருபுறத்திலும் (தன்னைத்) தொழுந்தன்மையுள்ள அமைச்சரைச் சினந்துபார்த்து, இடியொடுமுகிலுஞ்சிந்த மொழியலானான்; (எ - று.)—இராவணன் மொழிவதை மேல் ஐந்துகவிகளிற் காண்க.

'இடியொடுமுகிலுஞ்சிந்தமொழிந்தனன்' என்றதனால், மொழியும்போது பெருங்குரல்படக் கடுஞ்சீற்றத்தோடு பேசலானானென்பது பெறப்படும். மடங்கலெரி-ஊழித்தீ. கூட்டு-ஒப்பு. அமைச்சரைக்கூறியது, மற்றும்அந்தரங்கராரானர்க்கு உபலட்சணம்: அதிகாயன்முதலியோரை அமைச்சரெனக்கொள்வாருமுளர். இச்செய்யுள் சிலபிரதியி லில்லை. பி-ம்:—[1]சுளிந்து. [2]முகிலுமஞ்சவே.

உ.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: இராவணன் அமைச்சரைக்கடிந்து கூறுதலைத் தெரிவிக்கும்.

> ஏகுதி [1]ரெம்முகத் தெவரு [2]மென்னுடை
> [3]யோகவெஞ் சேனையு [4]முடற்று மும்முடைச்
> சாகரத் தானையுந் தழுவச் சார்ந்தவர்
> வேகவெஞ் [5]சிலைத்தொழில் [6]விலக்கி [7]மீள்கிலீர்.

(இ-ள்.) என்னுடைய உபாயம்வல்ல வெவ்விய சேனையும், உம்முடைய பகையழிக்கவல்ல கடல்போற்பரந்தசேனையுந் தழுவச்சார்ந்து, அந்தப்பகைவரின் வேகத்தோடுகூடிய வெவ்விய சிலையின் தொழிலை விலக்கி மீளமாட்டாதவராயினீர்; (அதனால்) என்னெதிரினின்று எல்லீரும்(அப்பாற்) செல்லுங்கள்; (எ - று.)—யோகம்-உபாயம். பி-ம்:—[1]எங்ஙனம். [2]உம்முடை, எம்முடை, எண்ணுடை. [3]மோக, ஓகை. [4]முதலவெம்முடைச், முதலவும்முடைச், முதலவும்படைச், உதவவும்முடைச். [5]செருத்தொழில். [6]விலக்க. [7]வீட்டிரால், மீட்டிரால். (கசுஎஅ)

> ௩. எடுத்தவ [1]ரிருந்துழி யெய்தி யாரையும்
> [2]படுத்திவண் மீடுமென் றுரைத்த பண்பினீர்
> [3]தடுத்திலீ ரெம்பியைத் [4]தாங்க கிற்றிலீர்
> [5]கொடுத்திலீ [6]ருரும்முயிர் வீரக் கோட்டியீர்.

(இ-ள்.) '(சேனைகொண்டு)போருக்குவந்தவரான இராமலட்சுமணர்முதலியோர் இருந்தஇடத்திற் போய், யாவரையும் கொன்று இங்கேமீளுவோம்'

என்றுபுனைத்த வீரப்பண்புடையோரே! எம்முடையதம்பியைப் போர்க்குத் தனியே செல்லவொட்டாது) தடுக்காமற்போனீர்; (உடனுதவியாயிருந்து அவனுயிர்க்குத் தீங்குநேராமல்) தாங்கும்வல்லமையற்றவரானீர்; (அவனிறந்ததற்காக) உம்முயிரையாவது கொடுத்திருக்கலாமே, அதுவுஞ் செய்யாமற் போனீர்: (இப்படியிருந்தும் நீங்கள்)வீரர்கோஷ்டியிற் சேர்ந்துள்ளீர்; (எ-று.) —பி-ம்:—1இரிந்துழி. 2படுத்தவன், படுத்தன. 3தடுக்கிலீர். 4தாங்குகிற்றிலீர். 5கொடுக்கிலீர். 6நும்முயிர். (௧௬எ௯)

ச. 1உம்மையி னின்றுநா னுலக மூன்றுமென்
வெம்மையி னுண்டது நீரென் வென்றியால்
2இம்மையி னெடுந்திரு வெய்தி னீரினிச்
செம்மையி 3னின்றுயிர் 4தீர்ந்து 5தீர்திரால்.

(இ - ள்.) முன்னர்த்தொடங்கி நான் உலகம்மூன்றையும் ஆண்டது, எனது கொடியபராக்கிரமத்தினாலாகும்; நீங்கள் என்னுடைய வெற்றியால் இம்மையில் மிக்கசெல்வத்தையடைந்தீர்;இப்போதாவது நீங்கள் நேர்மையான வீரகுணத்தைக் கைக்கொண்டிருந்து உயிரைக்கொடுத்தாவது (உமதுகடமையைச்) செய்து தீர்ந்தவராமின்; (எ - று.)—உம்மை-முன்னுள். பி-ம்:—1உம்வயினன்று, உம்மையுமன்று, உம்மையினன்றி. 2இன்மையின். 3இன்னுயிர். 4துறந்து. 5தீர்கிலீர். (௧௬அ௦)

ரு. ஆற்றல மென்றிரே 1லென்மின் யானவர்
தோற் 2றலம் வந்துகத் 3தூர்ந்து தொன்னெடுங்
4கூற்றல துயிரது 5குடிக்குங் 6கூர்த்தவென்
7வேற்றலை மானுடர் வெரிநிற் காண்பனால்.

(இ - ள்.) (அவர் முன்னேநின்றுபொர) வல்லமையுடையோ மல்லோமென்பீராயின், என்றுசொல்லுங்கள்:யான் அவர்தோற்றுத் துன்பமடைந்து வலிகெட, பழையநெடிய யமனேயன்றி உயிரைக்குடிக்கவல்ல கூர்மையையுடைய என்வேலின்நுனியை விரைவாகச்செலுத்தி, மானுடரை முதுகுகாணச் செய்வேன்;(எ-று.)—அலம்வந்துஉக-துன்பமடைந்துவலிசிந்தவென்க.பி-ம்:—1எனினும். 2அலமந்துற, அலமந்துக, அலக்கண்ணுற. 3தூரந்த. 4கூற்றலமாவுயிர், கூற்றலமெனவுயிர், கூற்றிலமெனவுயிர். 5குடித்துக். 6கூற்றென. 7வேற்றலம். (௧௬அ௧)

சு. அல்லது பூண்டுமக் குரைப்ப தாரமர்
1வெல்லுது மென்றிரேன் மேற்செல் வீரினி
2வல்லது 3மடி தலே யென்னின் 4மா றுதிர்
சொல்லுநுங் கருத்தென முனிந்து 5சொல்லினான்.

(இ - ள்.) 'அல்லாமலும் உமக்குச் சொல்லவேண்டுவது உண்டு; அரிய அமரில் வெல்வோ மென்பீராயின்,(போர்)மேற்செல்வீர்:இனி,(உமக்கு)ஆகக்கூடியது(போரில்)மடிதலேயென்றால்,(போர்க்குச்செல்வதினின்று)மீளுமின்; (இவ்விரண்டில்) நுமதுகருத்து யாது? சொல்லும்'என்று முனிவுடன் கூறினான், (இராவணன்);—(எ - று.) பி-ம்:—1வெல்லினும். 2அல்லது. 3மடிதிரேலெனினும், மதிதிரேலெனினும். 4மாறுவீர், துணிந்து. 5சொல்லென்றான்.()

வேறு.

எ.—அதிகாயன் கூறத்தொடங்குதல்.

நதிகாய்நெடு மானமு [1]நாணுமுறு
மதிகாய்குடை மன்னனை வைதுரையா
விதிகாயினும் வீரம் வெலற்கரியான்
அதிகாய னெனும்பெய ரானறைவான்.

(இ - ள்.) பிரமன்கோபித்தாலும் வெல்லமுடியாத வீரத்தையுடையவனான அதிகாயனென்னும் பெயரையுடையவன்,— நதிநீருஞ் சுடும்படியான மிக்ககோபமும் நாணமு மடைந்து, பூர்ணசந்திரனைவெல்லும்(வெண்கொற்றக்) குடையையுடைய இராவணனைப் பழித்துரைத்து(ப் பின்வருமாறு) கூறுபவனானான்; (எ - று.)—அதிகாயன்கூறுவதை மேல் ஆறுகவிகளிற்காண்க. விதி-விதிக்குங்கடவுள்: பிரமதேவன். இந்தப்பாடல்களை வஞ்சிவிருத்தமாக அலகிடாமல், நதிகாய் நெடுமா னமுநா ணுமுறு என்று அளவடிநான்குகொண்ட கலிவிருத்தமாக அலகிடினுமாம். பி-ம்:—[1]நாணமுறு. (கஎஅ௩)

அ.—மூன்றுகவிகள்-அதிகாயன் தன்வீரம்பாராட்டுதலைத் தெரிவிக்கும்.

வானஞ் சுக வையக மஞ்சுக[1]மா
லானஞ்சு முகத்தவ னஞ்சுகமேல்
[2]நானஞ்சின னென்றுனை நாணுகபோ
ரியானஞ்சின னென்று [3]மியம்புவதோ.

இதுமுதல் எட்டுக்கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) வானத்திலுள்ளார் அஞ்சட்டும்; வையகத்திலுள்ளார் அஞ்சட்டும்; திருமாலானவனும் ஐம்முகத்தவனான சிவபிரானும் அஞ்சட்டும்; பின்னும் நான் போருக்கு அஞ்சினேனென்று உன்னைப்பற்றி (நீயே) நாணங்கொள்க; (என்னைக்குறித்து)யான் அஞ்சினேனென்று இயம்புவதும் தகுதியுடையதுஆகுமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)—எவரஞ்சினும் நான் போருக்கு அஞ்சிலேனென்றபடி. இராவணன் நிஷ்டூரமாகக் கூறியதனால், அதிகாயன் இவ்வாறு கூறினன். விஷ்ணுவென்றபொருளைக்காட்டும் மால்என்பது, 'ஆன்' விகுதி பெற்று 'மாலான்'என வந்தது. பி-ம்:—[1]மால் தானஞ்சுகசங்கரனஞ்சுகபோர். [2]நானஞ்சினனேலுனை நாணுகபோர், நானஞ்சினனென்றுரை நாணுகநாள், நானஞ்சுகவென்றுனை நாணுகபோர், நானஞ்சினனன்றுனை நாணுகதான், நானஞ்சினனென்றுரைமேலுகநாள். [3]இயம்புமதோ. (கஎஅ௪)

௯. வெம்மைப்பொரு தானவர் [1]மேல்வலியோ
ரும்மைத்தலை யிற்கொடு தந்திலனோ
[2]உம்மைக்குலை யப்பொரு மும்பரையுங்
கொம்மைக் குய[3]வட்டனை கொண்டிலனோ.

(இ - ள்.) கொடுமையாகப்பொருகின்ற தானவரில் மேலானவலிமைபெற்றவரைத் தலையிட்டுக்கொண்டுவந்து (உம்மிடத்துக்) கொடுத்திலேனோ? உம்மையும் நடுங்குமாறுபோர்செய்த தேவர்களையும் திரண்ட குயவனுடைய சக்கரத்தைப்போலச் சுழலவடித்திலேனோ? (எ - று.)—ஈற்றடிக்கு—கொம்

மை-பருத்த, குயம்-அவர்கள்மார்பில், வட்டணை கொண்டிலரோ-தாளம்போட்டிலேனோ? என்று உரைப்பாருமுளர். பி-ம்:—[1]மெய். [2]மும்மை. [3]வட்டணை.

க௦.காய்ப்புண்ட நெடும்படை கை[1]யுளதாத்
தேய்ப்புண்ட வனுஞ்சில சில்[2]கணையால்
ஆய்ப்புண்டவ னும்மவர் சொல்வலதால்
ஏய்ப்புண்டவ னும்மென [3]வெண்ணினையோ.

(இ - ள்.) காய்ச்சியடித்துக்கூராக்கப்பட்ட நெடியபடை (தன்) கையிடத்திலேதானே யிருக்கத் (தரையில்) தேய்க்கப்பட்டவனான அட்சகுமாரனும், சிலவாகிய அற்பக்கணைகளால் உயிரொடுங்கிப்போனவனான கும்பகர்ணனும், அவ்விராமலட்சுமணரின் புகழின்வல்லமையால் ஏய்க்கப்பட்டவனான விபீஷணனுமென்று(என்னை)எண்ணினையோ? (எ-று.)—நான் அட்சன்முதலியவர்களைப்போலவல்லேன், எதிரிகளைவென்றேதீர்வே னென்றவாறு. ஆய்தல் - வலியோய்தல். பி - ம்:—[1]கையுளதாய், கையுளதால். [2]கணைமால். [3]எண்ணுதியோ, எண்ணினையே. (கசுஅசு)

கக.—அதிகாயன் செய்யுஞ் சபதம்.

உம்பிக்குயி ரீறுசெய் தானொருவன்
றம்பிக்குயி ரீறு சமைத்தவனைக்
[1]கம்பிப்பதொர் வன்றுயர் [2]கண்டிலனேல்
நம்பிக்கொரு நன்மக னோவினிநான்.

(இ - ள்.) உன்தம்பியின் உயிர்க்கு இறுதிசெய்தவனான ஒருவனுடைய [இராமனுடைய] தம்பிக்கு [இலட்சுமணனுக்கு] பிராணநாசஞ்செய்வித்து, அவ்விராமனை நடுங்கச்செய்யவல்ல ஒப்பற்றகொடுந்துயரை உண்டாக்காமற் போவேனாயின், இனி, நான் உனக்கு ஒப்பற்ற சிறந்தமகனாவேனோ? (எ - று.) —நான் உன்மகனாயிருந்தால் இலட்சுமணனுக்கு மரணத்தையுண்டாக்கி,இராமனால் உனக்குஎவ்வாறான துன்பம்நேர்ந்ததோ அவ்வாறானதுயரத்தை அவ்விராமனுக்குஉண்டாக்குவே னென்றவாறு. நம்பிக்கு-முன்னிலையிற் படர்க்கைவந்த வழுவமைதி. பி-ம்:—[1]கம்பித்ததொர். [2]கண்டிலனேல். (கசுஅஎ)

கஉ.—அதிகாயன் தான் செய்யப்போவதாகக்கருதியதைக்கூறுதல்.

கிட்டிப்பொரு தக்கிளர் சேனையெலாம்
மட்டித்துயர் [1]வானரர் வன்றலையை
வெட்டித்தரை யிட்[2]டிரு வில்லினரைக்
கட்டித்தரு வன்னிது காணுதியால்.

(இ - ள்.) நெருங்கிப்போர்செய்து அந்தக்கிளர்ச்சிகொண்டுள்ள(வானர) சேனையையெல்லாம் பிசைந்திட்டுச் சிறந்த வானரர்களின் கொடியதலையை வெட்டித் தரையிற்போகட்டு, வில்லாளிகளான இராமலட்சுமண ரிருவரையும் கட்டிக்கொணர்வேன்; இந்த (என்)வலிமையைக் காண்பாயாக; (எ - று.) —பி - ம்:—[1]வானர. [2]இகல். (கசுஅஅ)

கங.—அதிகாயன் விடைவேண்டுதல்.

சேனைக்கட லோடிடை செல்கெனினும்
யானிப்பொழு தே[1]தனி யேகெனினுந்

தா[2]ளுத்தது சொல்லுதி தாவிடை[3]யென்
ருனித்திற முன்னி யரக்கர்பிரான்.

(இ - ள்.) 'சேனைக்கடலுடனே போர்க்களத்திற்குச் செல்க'என்று கட்டளையிட்டாலும், (அன்றி), 'தனியே [சேனையுடனல்லாமல்] செல்க' என்று கட்டளையிட்டாலும், யான் இப்பொழுதே (அவ்வாறே செய்வேன்); (இவ்விரண்டனுள் உனக்குச்) சம்மதமானதைச் சொல்லுவாய்: (எனக்குப் போர்க்குச்செல்ல) விடைதருவாய் என்றுகூறிமுடித்தான் (அதிகாயன்); இவ்வாறு (தன்மகன்)கூறியதனைநினைந்து,அரக்கர்தலைவனான இராவணன்,—(எ-று.)—இச்செய்யுளிலுள்ள 'அரக்கர்பிரான்' என்ற எழுவாய், மேல் கரு-ஆங் கவியிலுள்ள 'ஏவினனல்' என்பதனோடு முடியும். தான்-அசை. பி-ம்:—[1]இடையேயிடினும், கடிதேகெனினும். [2]ஒத்தன. [3]என்றுனைத்திறம், என்றுனைத்திறம்.

கச.—இதுமுதல் ஐந்துகவிகள் - அதிகாயன்போர்க்குச்செல்லச் சித்தனாக இருப்பதுகண்டு இராவணன் உவந்து கூறுவனவற்றைத் தெரிவிக்கும்.

சொன்னயிது நன்று [1]துணிந்தனைநீ
அன்னனுயிர் தந்தனை யாமெனின்யான்
பின்னாள் விராம னெனும்பெயரான்
றன்னருயிர் [2]கொண்டு [3]சமைக்குவனால்.

(இ - ள்.) (நீ) செவ்வனே தீர்மானித்து இவ்வார்த்தையைக் கூறினாய்: நீ அந்தஇலட்சுமணனுடைய உயிரைத் தந்தாயென்றால்,யான்,(அதன்)மற்றைநாள் அந்த இராமனென்ற பெயரையுடையவனது அருமையான உயிரைக் கொண்டு முடிப்பேன்; (எ - று.)—பின் னாள் அ இராமன் என்று பிரிக்க. பி-ம்:—[1]துணித்தனைநீ. [2]உண்டு, கொன்று. [3]செமிக்குவனால். (கககo)

கரு. போவா யிதுபோது பொலங்[1]கழலோய்
மூவாயிர [2]கோடிய ரோடுமுரட்
காவார்கரி தேர்பரி [3]காவலினென்று
ஏவாதன யாவையு மேவினனால்.

(இ-ள்.) 'பொன்னாலியன்ற வீரக்கழலையணிந்தவனே! மூவாயிரங்கோடி பதாதியரோடு மாறுபடுந்தன்மையைக் காத்தல்பொருந்திய யானையும் தேரும் குதிரையும் என்றஇவற்றின்காவலிலே (போர்க்குச்) செல்வாய்'என்று (இதுவரையில்)ஏவாத [மிகப்பல] சேனைகளை (அந்தஅதிகாயனுடன்செல்லுமாறு) ஏவினன்; (எ-று.)—[3]காவலினின்று என்றபாடத்திற்கு--காவலில்நின்றுஎன்று பிரிப்பதல்லாமல், காவலின் இன்று எனப் பிரிப்பினுமாம். கா-முதனிலைத் தொழிற்பெயர். பி-ம்:—[1]கழலோர். [2]கோடிமுரட்படையார். [3]காவலனின். ()

கசு. கும்பக்கொடி யோனு நிகும்பனும்வேறு
அம்பொற்கழல் [1]வீர னகம்பனுமுன்
செம்பொற்பொலி தேரயல் [2]செல்குவரால்
உம்பர்க்கும் [3]வெலற்கரி யாருரவோர்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (பின்னும் இராவணன்கூறுவான்):—தேவர்கட்கும்வெல்லமுடியாதவரும் வலிமையையுடையவருமான கும்பனென்றகொடியவனும் நிகும்பனும் வேறாகவுள்ள அழகியபொற்கழலையணிந்த வீரனாகிய அகம்பனும் உன்னுடைய செம்பொன்மயமாகவிளங்குகின்ற தேரின் அயலிற் (பாதுகாவலாகச்) செல்வார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]வீரனகம்பனெனும், வீரகம்பனெனும். [2]செல்லுதியால், செய்குவரால். [3]இலக்கரியாருரவோர், வெலற்கரிதாமுரவோய்.

௧எ. ஓரேறு சிவற்குள தொப்புளவாம்
வாரேறு வயப்பரி யாயிரம்வன்
போர்[1]ரேறிட வேறுவ பூணுறுதிண்
தேரேறுதி தந்தனன் வெந்திறலோய்.

(இ-ள்.) கொடியதிறலையுடையவனே! வலியபோர் நடக்கையில்(போர்க்களத்தில்) மேன்மேற்செல்வனவும் சிவபிரானுக்குஉளதாகியஒருஇடபத்தை ஒப்பாகக்கொண்டனவுமான வார்பூண்ட வலியகுதிரைகள் ஆயிரம் பூட்டப்பெற்ற திண்ணியதேரில் ஏறுவாய்;(எ-று.)—'பிரமதேவன்தந்ததோராதலால், திண் டேர்' என்றனனென்னலாம். இச்செய்யுள் சிலபிரதியில் "ஆமத்தனை" என்றஅடுத்தபாடலின்பின் காணப்படுகின்றது. பி-ம்:—[1]ஏறிடின், ஏறிடி. ()

௧அ. ஆமத்தனை [1]மாவுடை யத்தனைதேர்
சேமத்தன [2]பின்புடை செல்ல[3]வடுங்
கோமத்த [4]நெடுங்கரி கோடியொடும்
[5]போமத்தனை வெம்புர விக்[6]கடலே.

(இ - ள்.) பொருந்திய அவ்வளவு [ஆயிரம்] குதிரையையுடையஅத்தனை சேமத்தேர் பின்புடைசெல்லவும், கொல்லவல்ல சிறந்த மதம்பிடித்த நெடிய கரிகள் கோடியுடனே அத்தனைவெவ்விய புரவித்தொகுதியும் உடன்வரும்; (எ - று.)—அத்தனையென்றது - கீழ்ச்செய்யுளிற் கூறிய ஆயிரமென்றதைக் காட்டிற்று. இனி, இச்செய்யுளில் மூன்றுமடியில் 'வருகிற கோடி' என்பதைக் காட்டு மெனினுமாம். பி - ம்:—[1]தேருடையத்தனையோ, தேருடையத்தனைமா. [2]பின்பிடை. [3]நெடுங். [4]மதக்கரி. [5]போர்மத்தனெனும்புடைசெல், போமத்தனெனும்புடைசெல், போமத்தபொலம்புரவி, போமத்தநெடும்புரவி. [6]கடலீர், கடவே. (௧௫-௧௮)

௧௯.—இராவணன் விடைகொடுக்க, அதிகாயன் போர்க்குச் சித்தனாதல்.

என்றேவிடை நல்க விறைஞ்சியெழா
வன்றாள்வயி ரச்சிலை கைக்கொடு[1]வாள்
பொன்றாழ்கவ சம்புகு தாமுகிலின்
நின்றானிமை யோர்க [2]ணெளிந்தனரால்.

(இ-ள்.) என்றுசொல்லி விடைகொடுக்க,—(அதிகாயன் அவ்விராவணனை)வணங்கியெழுந்து வலியமுனையையுடைய உறுதியானசிலையைக் கைக்கொண்டு ஒளிபொருந்திய பொன்னாற்செய்யப்பட்ட கவசத்தினுட்புக்கு, முகில்போலநின்றான்; (அதுகண்டு)இமையோர்களும் அஞ்சினர்; (எ - று.)

கருநிறத்தோடு வில்லைக்கைக்கொண்டிருத்தலால், அதிகாயனுக்குக் கார்முகில் உவமையாயிற்று. இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. பி - ம்:—[1]வான். [2]நெளித்தனரால். (கசுகரு)

உ0.—அதிகாயன் போர்க்களம்நோக்கிச் செல்லுதல்.

பல்வேறு படைக்கலம் வெம்பகலோன்
எல்வேறு [1]தெரிப்பகொ டேகினனால்
சொல்வேறு தெழிக்குநர் [2]சுற்றுறமா
வில்வேறு [3]தெரிப்புறு [4]மேனியினான்.

(இ - ள்.) யானையைக்காட்டிலும் வேறாகத்தோன்றுகின்ற மேனியையுடையவனான அதிகாயன்,—(தமது) பேச்சால் வேறாக [மிகக்கொடுமையாக] அதட்டுகின்ற வீரர் (தன்னைச்)சுற்றி வர, பல்வகையான வெவ்வேறுபடைக்கலங்கள் கொடியசூரியனைக்காட்டிலும் வேறாக ஒளிவீசுபவற்றைக் கைக்கொண்டு சென்றான்; (எ - று.)—இவ்வாறு வீரரில் எவருங் கர்ச்சித்ததில்லையென்பது, 'சொல்வேறுதெழிக்குநர்'என்றதன் கருத்து.மாவில் வேறு தெரிப்புறு-யானையினும் வேறாகத்தோன்றுகின்ற. பி - ம்:—[1]தெரிப்பதொடு. [2]சுற்றினரால், சுற்றமுமா, சுற்றுறவும், சுற்றுநரால். [3]தெரிக்கரு. [4]மேகமனான், மேகமனார், மேனியினார். (கசுகசு)

உக.—களிறுமுதலியவற்றின் ஒலி.

இழையஞ்சன மால்[1]களி றெண்ணிலரி
முழையஞ்ச முழங்கின மும்முறை[2]நீர்க்
[3]குழையஞ்ச முழங்கின [4]நாணொலி[5]கோள்
மழையஞ்ச முழங்கின மாமுரசே.

(இ - ள்.) ஆபரணம்பூண்ட மைபோன்ற மதமயக்கங்கொண்ட ஆண் யானைகள், குகையிலெண்ணில்லாத சிங்கங்கள் அஞ்சிநிற்க முழங்கின; (வில்லின்) நாணியைத் தெறிக்குமொலி, கடலும் குழைந்துஅஞ்சும்படி முழங்கின; பெரியமுரசுகள்(நீரைக்)கொள்ளுதலையுடைய மேகமும்அஞ்சும்படி முழங்கின.

கடலுக்கு ஆக்கல் அளித்தல் அழித்தல்என்ற மூன்றுதன்மையுள்ளனவாதல்குறித்து முந்நீரென்று பெயரிருத்தற்கேற்ப,இங்குக் கடலை 'மும்முறைநீர்' என்றார். அஞ்சுதல்-கீழ்ப்பட்டுப்போதல். பி-ம்:—[1]களிறெண்ணரிவாழ், களிசேணரிவாழ். [2]நீர். [3]உழை.[4]ஞாணொலி. [5]கொள்ளனவும்படிக்கலாம். ()

உஉ.—இதுமுதல்நான்குகவிகள் - சேன்றசேனைகளின் வருணனை.

ஆர்த்தார் [1]நெடு[2]வான நடுங்கவடிப்
போர்த்தார்நில மாமகள் [3]பேர்வளனத்
தூர்த்தார்[4]நெடு வேலைக ளேளியினால்
வேர்த்தாரது கண்டு விசும்புறைவோர்.

(இ - ள்.) (உடன்சென்ற வீரர்கள்), நெடியவானம் நடுங்க ஆரவாரித் தார்; பூமிதேவியும் இடம்விட்டுப்பேர்வளென்னுமாறு (காலை) மாறிமாறிவைத்

தனர்; நெடிய கடல்களைத் தூளியினால் தூர்த்தார்; அதுகண்டு விசும்பிலுறைப வரான தேவர்கள் (உடல்)வேர்த்தனர்; (எ - று.)

வேர்த்தல்-அச்சத்தின்செயல். பி-ம்:—1நடு, அகல். 2வானகமஞ்ச, வானடு ங்க. 3பேர்வதெனத், போவகந். 4திரைவேலைகள், அலைவேலைகள். (கசுகஅ)

உகு. அடியோடு மதக்களி யானைகளின்
பிடியோடு நிகர்த்தன 1பின்புறமுன்
தடியோடு 2துடக்கிய தாரையவெண்
கொடியோடு துடக்கிய கொண்முவெலாம்.

(இ - ள்.) (தம்மிடத்து) மின்னலோடுபொருந்திய ஒழுங்கையுடையன வும் (யானைகளின்மீதுபிடிக்கப்படும்)வெண்ணிறக்கொடியோடு துடக்குண்டு செல்வனவுமான மேகங்களெல்லாம்—, முன்னே (தம்) கால்விசையாலோடு கின்றமதக்களிப்புக்கொண்ட யானைகளின் பின்புறத்துச்செல்லும் பெண்யா னைகளோடு ஒத்தன; (எ - று.)

யானைகளின்மீது பிடிக்கப்படும் வெண்கொடியோடு துவக்குண்டு அவ்யா னைகளின்பின்னேசெல்லும், மேகங்கள் மதயானையின்பின்னேசெல்லும் பெ ண்யானைகளைப் போன்றனவென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. தடி = தடித்: வடசொல்: மின்னல். பி-ம்:—1பின்பிர. 2தொடங்கிய, நிகர்த்தன. (கசுகக)

உச. தாருடின மால்கரி யின்1புடைதாழ்
மாருடின 2மாமத மண்டுதலால்
ஆருடின பாய்பரி 3யானைகளுஞ்
சேருடின 4சேனைறி சென்றவெலாம்.

(இ - ள்.) அங்குசத்தாற்குத்துண்ட மதமயக்கமுள்ள யானைகளது (கன் னங்களின் இரு)புறங்களிலும் மாருடினவாய்த்தாழ்கின்ற [பெருகுகின்ற] மிக் கமதநீர்நெருங்குதலால் (தோன்றிய) ஆற்றிலே பாயுந்தன்மையுள்ள குதிரை களும் யானைகளும் மூழ்கின;(அதனால்,சேனைகள்)சென்ற மிக்கதூரமெல்லாம் சேருய்விட்டன; (எ - று.)—மாருடினமதம் - ஒன்ருேடொன்று மாறுபட்டுப் பெருகுகின்ற மதநீரென்றவாறு. பி - ம்:—1புடைதான். 2வார்மதம். 3ஆள்களு டன், யானைகளின், யாழிகளும். 4சென்றன. (கஎ00)

உரு. தேர்சென்றன செங்கதி ரோனொடு1சேர்
ஊர்சென்றன போ2லொளி யோடைகளின்
கார்சென்றன கார்கிரை சென்றனபோற்
பார்3சென்றில சென்றன பாய்பரியே.

(இ - ள்.) செந்நிறக்கிரணத்தையுடையசூரியனோடு சேர்ந்து ஊர்கோள் சென்றனபோல, (அந்தஅதிகாயன் இரதத்தையொட்டிப் பல) தேர்கள் சென் றன; (மின்னலோடு) மேகக்கூட்டங்கள் சென்றனபோல, ஒளிபொருந்திய நெற்றிப்பட்டத்தோடுகூடிய யானைகள் சென்றன; (சேனைகளிற்) சென்றன வான பாயுந்தன்மையுள்ள பரிகளோ பாரிற்சென்றில; (எ - று.)

பாயுங்குதிரைகள் சேனையுடன்சென்றனவாயினும் பாரிற்சென்றிலஎன் ருர்; பெருவிசையோடு குதிரைகள் பாய்ந்துசெல்லும்போது அவற்றின்

கால்கள் பூமியிற்படுவது புலனுகாமையால் இவ்வாறு கூறியது.பி-ம்:—1தேர். 2ஒளிர். 3சென்றனசென்றில, சென்றனசென்றன. (கஎ0க)

உசு.—அதிகாயன் போர்க்களத்திடைப் புகுதல்.

1மேருத்தனை வெற்பின 2மொய்த்துநெடும்
பாரிற்செலு மாறுப டப்படருந்
தேர்சுற்றிட வேகொடு சென்றுமுரட்
போர்முற்று களத்திடை 3புக்கனனால்.

(இ - ள்.) மேருவளவுள்ள மலைகளின்கூட்டம் நெருங்கிப்பெரியபூமியிற் செல்லுந்தன்மையொப்பச் செல்லுகின்ற தேர்கள் சுற்றிநிற்க, (முயற்சி)கொண்டு மாறுபடும் போர் முதிர்கின்ற போர்க்களத்திலே,(அதிகாயன்),போய்ச்சேர்ந்தான்; (எ-று.)—இச்செய்யுள் ஒருபிரதியில் இல்லை. பி-ம்:—1மேரத்தனை, மேருத்தனி. 2ஒத்து. 3புக்கனரால். (கஎ0உ)

உஎ.—போர்க்களத்தைக்கண்டு அதிகாயன் மனம்புழுங்கி வருந்துதல்.

கண்டான விராம னெனுங்களிமா
உண்டாடிய 1வெங்கள னூடுருவப்
புண்டானுறு நெஞ்சு புழுக்கமுறத்
திண்டாடினன் வந்த சினத்திறலோன்.

(இ - ள்.) அந்தஇராமனென்கிற மதயானை (இராட்சசசேனைகளையெல்லாம்) கபளீகரித்துவிளையாடிய கொடியபோர்க்களத்தைமுற்றவும் கண்டு, புண்பட்ட[மிகுவருத்தமடைந்த](தன்)மனம் புழுங்கப்பொங்கியெழுந்த கோபத்தையுடைய வலியவனான அந்தஅதிகாயன் வருந்தினான்; (எ-று.)—போரில் இராமபிரானால் உயிரொழிந்த அரக்கரின் அலங்கோலக்காட்சியைக் காணவே, அதிகாயனுக்கு மனம்புண்பட்டுப் பெருவருத்தம் தோன்றிற்றென்க. பி-ம்:-1செங்களம். (கஎ0௩)

உஅ.—தன்தாதையான கும்பகர்ணனது தலையைக் காணாமையால் அதிகாயன் வருந்துதல்.

1மலைகண்டன 2போல்வரு 3தோளொடு 4தாள்
கலைகண்ட கருங்கடல் 5கண்டுழல்வான்
நிலைகண்டன கண்டொரு தாதைநெடுந்
தலைகண்டில 6னென்று சலித்தனனால்.

(இ - ள்.) மலையைக்கண்டாற்போன்று(காட்சி) வருகின்ற தோளுடனே தாளும் கலைதல்பொருந்திய [ஒழியப்பெற்ற] கரியகடலை [கும்பகர்ணனை] க் கண்டு வருந்துபவனான அதிகாயன்,—(அந்தக்கும்பகர்ணனுக்கு)நேர்ந்தனவான நிலைமைகளை (மனத்தினால்) எண்ணி, ஒப்பற்றஅந்தத்தாதையினது நெடியதலையைக் கண்டிலேனென்று வருந்தினான்; (எ - று.)—1அலை. 2போல்வன. 3வாளொடு. 4தோள். 5கண்டுளவாம், கண்டடலின். 6நின்று. (கஎ0௪)

உகூ.—கும்பகர்ணனதுஉடல்கண்டு அதிகாயன்வருந்துதல்.

மிடலொன்று சரத்தொடு மீதுயர்வான்
திடலன்று திசைக்களி றன்றொருதிண்

கடலன்[1]றிதெ னெந்தை கடக்கரியான்
உடலென் [2]றுயிரோடு முருத்தனனால்.

(இ - ள்.) 'இது, வலிமைபொருந்திய அம்புடனே மேடாகஉயர்ந்திருக்கின்ற பெரிய திட்டு அன்று: திசைக்களிற்றினுடலும் அன்று; ஒருதிண்ணிய கடலன்று; எனது தந்தையாகிய மதமொழுகப்பெற்ற யானைபோன்றவனான கும்பகர்ணனது உடலாகும்' என்றுசொல்லிப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு கோபித்தான்; (எ - று.)—கடக்கரியான்என்பதற்கு - யானைச்சேனையையுடையவ னெனினுமாம். 'வான்திடலன்று, திசைக்களிறன்று' முதலியனவாக மறுத்ததனால், கும்பகர்ணன்உடல் திடல்முதலியவற்றைப்போலு மென்க. பி-ம்:—[1]இதுவெந்தை. [2]உயிரோடுமுகுத்தனனால், உயிராலவுயிர்த்தனனால்.

௩0.—வருந்திய அதிகாயன் மானிடரைக்கொல்லாவிடின் இடர்தீராதெனல்.

எல்லே யிவைகாணிய [1]வெய்தினனோ
வல்லே [2]யுள ராயின மானிடரைக்
[3]கொல்லேனொரு நானுயிர் [4]கோனெறியிற்
செல்லேனெனி னிவ்விடர் தீர்குவனோ.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ-ள்.) ஐயோ!இவ்வாறானநிலைகளைக் காண்பதற்கோ(இங்கு)வந்தேன்!! விரைவாக,நான் ஒருத்தன், (இன்னும்)உயிருடனிருப்பவராகிய மானுடரைக் கொல்லாதவனும் என்னுயிரைப்பாதுகாத்துக்கொள்ளும் நெறியிற் செல்லாதவனுமாக இருப்பேனானால் இவ்விடர் நீங்கப்பெறுவேனோ? (எ - று.)

நான் இம்மானுடரைக்கொன்று என்னுயிரையும் பாதுகாத்துக்கொண்டு மீண்டுசென்றால்தான் முண்டமான என்தந்தையை இப்போது காண்பதனால் எனக்குத்தோன்றுந் துயர் நீங்கு மென்பதாம். எல்லே-இரக்கக்குறிப்பிடைச்சொல். பி - ம்:—[1]எய்தினன்யான், எய்தினயான். [2]உளராகிய, உளதாகிய. [3]கொல்லேனுயிர்நானொரு, தொல்லேனெனினானுயிர், கொல்லேனெனினின்னுயிர். [4]கொனெறியில். (௧௭0௬)

௩௧.—இலட்சுமணனைக் கொல்வேனென்று நிச்சயித்து அதிகாயன் தூதுவனைநோக்கிக் கூறத்தொடங்குதல்.

என்னா முனியாவி திழைத்துளவன்
பின்னானையு [1]மிப்படி செய்துபெயர்ந்து
அன்னானிடர் [2]கண்டிட னாறுவனென்று
உன்னா வொருவற்கி துணர்த்தினனால்.

(இ - ள்.) என்றுகூறிச் சினந்து, '(என்தந்தை தலைநீங்க உடல்மாத்திரம் இருக்கும்) இந்நிலையைச் செய்தவனான இராமனுடைய பின்பிறந்தவனான இலட்சுமணனையும் இவ்வாறாகும்படிசெய்து போய், அந்தஇராமனுடைய இடரைக்கண்டு (என்மனத்) துயரம் ஆறுவேன்' என்று (மனத்திலெண்ணிக்) கருதி

ஒருதூதுவனைநோக்கி இதனை உணர்த்தலானான்; (எ-று.)—ஈற்றடியில்'இது' என்பதனாற் சுட்டியதை மேல் கங-கவியிற் காண்க.

இப்படிசெய்தல்-கைவேறு கால்வேறு தலைவேறு என இவ்வாறாகவெட்டிக் கொல்லுதல். ஒருவனென்றது மயிடனைக்குறிக்குமென்பது மேலைக்கவியால் விளங்கும். பி-ம்:—1அப்படி. 2ஆற்றுவனென்றயல்வேறு,கண்டிடராற்றுவனென்று. (கஎ0எ)

௩௨.—அதிகாயன் இலக்குமணற்கு மயிடனைத் தூதுஅனுப்பிச் சொல்லுமாறு கூறியவற்றை, இதுமுதல் நான்குகவிகள் தெரிவிக்கும்.

1வாநீ2மயி டன்னொரு வல்விசையிற்
3போநீய விலக்குவ னிற்4புகல்வாய்
நானீது துணிந்தன 5னண்ணினனால்
6மேனீயி துணர்ந்து விளம்பிடுவாய்.

பதின்மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) மயிடனே! நீ வா; ஒப்பற்ற மிக்கவிசையோடு புறப்பட்டுப்போ; (போய்), நீ அந்தஇலக்குமணனிடத்திலே புகல்வாய்; நான்(இவ்வாறு இலட்சுமணனை முண்டமாகச் செய்துவிடுவதாகிய) இச்செயலைஆராய்ந்து துணிந்துள்ளேன்: சிறந்த இதனை நீ யுணர்ந்து சொல்வாய்; (எ - று.)

'அவ்விலக்குவனிற்புகல்வாய்'என்று கூறியிருக்கவும், தான் செய்யக்கருதியதனை மூன்றாமடியிற்கூறி, அதனைக்கூறவேணுமென்பதனை வற்புறுத்த 'மேனீயிதுணர்ந்து விளம்பிடுவாய்' என்று பின்னுங் கூறுகின்றான். நண்ணுதல்-ஆராய்தல். பி-ம்:—1வானீள். 2மயிடாசெடு. 3போய். 4புகலாய், புகுவாய். 5நண்ணினனேல். 6மேனீதியையுன்னி. (கஎ0அ)

௩௩. அந்தாரிள வற்கயர் வெய்தியழுந்
தந்தாதை 1மனத்திடர் தள்ளிடுவான்
2உந்தார் துயரோடு முருத்தெரிவான்
வந்தானென 3முன்சொல் வழங்குதியால்.

(இ-ள்.)'தள்ளுகின்ற மிக்க துயரோடும் கோபித்துஎரிபவனான அதிகாயனென்பவன்,—அழகிய மாலையையணிந்த(தன்)தம்பிபொருட்டு [தம்பியிறந்த தன்பொருட்டு]மனவருத்தமடைந்து அழுகின்ற தம்தாதையின் மனத்துஇடரைப் போக்குவதற்காக வந்துள்ளான்' என்று முதற்சொல் சொல்லுவாய்; (எ - று.)—மூன்றாம்அடியில், உந்து ஆர் துயர்-தள்ளுகின்ற மிக்கதுயரமென்க. பி-ம்:—1 மனத்துயர். 2உந்தாரியரோடுமுருத்தெதிர்வான், உந்தாதுயிரோடுமுருத்தெரிவான். 3முற்சொல். (கஎ0௯)

௩௪. கோ1ளுற்றவ னெஞ்சு சுடக்குழைவான்
2நாளுற்ற 3விருக்கையில் நாமொருவன்
4தாளற்றுரு ளக்கணை 5தள்ளிடுவான்
சூளுற்றது முண்6டது சொல்லுதியால்.

(இ - ள்.) (துயரத்தினால்) கொள்ளுதலைப்பொருந்தியவனாய் மனங் கொதிக்கவருந்துகின்றவனான இராவணனுடைய நாளோலக்கத்தில், யான்

[அதிகாயன்], ஒப்பற்றஇலக்குவன் தாளற்றுருளுமாறு அம்பைச்செலுத்தும் படி சபதஞ்செய்ததுமுண்டு: அதனையுஞ் சொல்லுவாய்; (எ - று.)—பி-ம்:— 1உற்றவ. 2தாளுற்ற.3இருக்கையினன்கொருதன், இருக்கையினங்கொருதன், இருக்கையில்யாளொருதன், இருக்கையிலாவொருவன், இருக்கையிலாவொரு தன். 4தாளிற்று, தாளுற்று. 5தந்துசெய்வான். 6இது. (கஎசO)

கூரு. 1தீதென்றது சிந்தனை செய்திலனால்
2ஈதென்றிற மன்னெறி 3யாமெனநீ
தூதென்4றிக ழா5துன சொல்வலியாற்
போதென்றுட னேகொடு போதுதியால்.

(இ - ள்.) (நான் செய்யக்கருதிய) அது தீமையானது என்பதைச் சிந்தைசெய்யேன்: இது என்தன்மையாம்: (இது) க்ஷத்திரியதருமமுமாம் என்று சொல்லிப் (பின்னும் அவ்வதிகாயன்) உன்னுடையசொல்வலியால் 'நீ (நாம் சொல்லப்போவது)தூதுமொழிதானே' என்று இகழாமல்'போதுவாய்'என்று (இலட்சுமணனிடம்) சொல்லி (அவனை) உன்னுடன்அழைத்துக்கொண்டு வருவாய்; (எ - று.)—பி-ம்:—1தீதென்றிவை, தீதொன்றது. 2ஈதென்றறம், ஈதொன்றறம், ஈதன்றறம். 3யானெனநீ, யானெதிர்நீ, யானெனநீள். 4இகழாய். 5உளசொல்வதலால், நினசொல்வலியால், முறைசொல்வதலால். ()

கூசு.—இராமலட்சுமணரைக்கிட்டிப் போர்க்குவருவோரெல்லாம் வாட்டுமென்று கூறச்சொல்லுதல்.

செருவாசையி னார்1புகழ் தேடுறுவார்
2இருவோரையு நீவலி யுற்றெதிரே
பொருவோர்நம னார்3பதி புக்குறைவோர்
வருவோரை யெலாம்4வரு கென்னுதியால்.

(இ-ள்.) போரில்ஆசையுள்ளவரும் புகழைத்தேடுபவருமான(இராமலட்சுமணர்)இருவோரையும் நீ விரைவிற்கிட்டி'எதிரேவந்துபொருபவர் யமனூர்பதியிலேபுக்கு உறையப்போகின்றவராவர்: (இவ்வாறிருப்பதையுணர்ந்து) போர்க்குவருவோரெல்லாம் வருக' என்றுசொல்லுவாய்; (எ-று.)—இது "சிந்தாகுலம்" என்ற அடுத்தபாடலின்பின் சிலபிரதிகளி லுள்ளது. வருவோரை, ஐ - அசை. பி-ம்:—1புகழ்தேடுவரால். 2ஒருவோரையுநீயலது, ஒருவாரையுநீயுற, இருவோரையுநீவலி. 3சிறைபுக்குறைவான். 4வரவெண்ணுதியால். (கஎசஉ)

கூஎ.—இலட்சுமணனையழைத்துவருவாயெனின் பலவகைப் பரிசளிப்பேனென்றுஅதிகாயன்கூறியதை ஏழ கவிகள் கூறும்.

சிந்தாகுல மெந்தை 1திரித்திடுவான்
2வந்தானென வென்னெதி ரேமதியோய்
தந்தா3யெனின் யானல தியார்தருவார்
4உந்தாரிய வுள்ள 5வுயர்ந்த வெலாம்.

(இ-ள்.) அறிஞனே!என்தந்தையின்மனத்துயரத்தை(யான்)போக்கும்பொருட்டு,(இலட்சுமணன்)வந்தானென்று என்னெதிரிலே அழைத்துவருவாயா

னால், நீக்குதற்கு அரியனவாகவுள்ள உயர்ந்த பொருளையெல்லாம் (உனக்கு) என்னையன்றி வேறு யார் தருவார்? (எ-று.)—4உந் தாரியவல்ல என்றபாடத்திற்கு-உம்மால் தாங்குதற்கும்முடியாத [மிருதியான] என்று உரைப்பினுமாம். முன்னையபொருளில், உந்த அரியஎன்பன - உந்தாரியஎன்று விகாரம் பெற்றுவந்தன. பி-ம்:—1 திருத்திடுவான், திருந்திடுவான், திரிந்திடுவான். 2வந்தானலனென், வந்தானெனனின். 3எனில்யானலதார். 4உந்தாரியல்பல்ல, உந்தார்திருவல்ல. 5உவந்த. (கஎகரு)

௩அ. வேறேய விலக்குவ னென்னவிளம்பு
ஏறேவரு மேலிமை யோரெதிரே
கூறேபட 1செய்துயிர் கொண்டுனையும்
2மாறேயொரு மன்னென வைக்குவனால்.

(இ - ள்.) இலக்குவனென்று வேறாகவிளம்பப்படுகின்ற [சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற] ஆண்சிங்கம் (போர்க்கு உன்னால்அழைக்கப்பட்டு இங்கு) வருமாயின், தேவர்களெதிரே பலதுண்டமாகச்செய்து (அவனது) உயிரையுங் கொண்டு, (நீ செய்தஉபகாரத்திற்குப்) பிரதியுபகாரமாக உன்னையும் ஒரு அரசனாகச் செய்துவைப்பேன்; (எ - று.)—பி-ம்:—1செய்துகொடுத்து. 2மாறேயுமொர். (கஎகச)

௩௯. விண்ணாடியர் விஞ்சைய 1ரஞ்சொலினார்
2பெண்ணா ரமுதன்னவர் 3பெய்தெவரும்
உண்ணாதன கூர்நற வுண்டசுப்பு
எண்ணாயிர 4மாயினு மீகுவனால்.

(இ - ள்.) (இலட்சுமணனையழைத்துவந்த உனக்கு, பின்னும்), வானுலகத்தவரும் வித்தியாதரருமாகிய அழகியசொல்லினையுடைய பெண்டிருள் அரிய அமுதம்போன்றவரான மகளிர்எவரும், வார்த்துஉண்ணாதனவான (சிறப்பு)மிகுந்த கறவைக்கொண்ட குடம் எண்ணாயிரம்வேண்டுமானாலும் தருவேன்; (எ-று.)—பி-ம்:—1இன்மென். 2உண்ணார். 3பெய்தவரும். 4எண்ணன.

௪௦. உறைதந்தன செங்கதி ரோனுருவிற்
பொறைதந்தன 1காசொளிர் பூணிமையோர்
திறைதந்தன தெய்வ நிதிக்கிழவன்
முறைதந்தன தந்து முடிக்குவனால்.

(இ - ள்.) செந்நிறமுள்ள (ஆயிரங்)கிரணங்களைக்கொண்ட சூரியனுருவைப்போலப் பொருந்தியனவும், பாரமுள்ளனவும், இமையோர்திறைப்பொருளாகத்தந்தனவும், தெய்வத்தன்மையுள்ள (நவ) நிதிகட்குத்தலைவனாகிய குபேரன் முறைமைபற்றித்தந்தனவுமாகிய இரத்தினம்விளங்குகின்ற ஆபரணங்களைத் தருவேன்; (எ - று.)—தந்துமுடிக்குவன், முடி-துணைவினை. செங்கதிரோனுருவின்உறைதந்தன என்க. உறைதந்தன என்பதில், தா-துணைவினை. இனி, பூண்தந்து, முடிக்குவன்-முடியையுஞ்சூட்டுவேன் என்றலுமொன்று. முறை-உடன்பிறந்தமுறைமையெனக்கொள்ளலாம். பி-ம்:—1காசொளி, சேரணி.

௪௧. மாறுமத வாரிய வண்டினொடும்
பாறுடு 1முகத்தன பல்பகலும்

தேருதன [2]செங்களி வெங்கதமா
நாறுயிர மாயினு நந்துவனால்.

(இ - ள்.) மாறுத மதப்பெருக்கையுடையனவும், வண்டினுடனே பருந்துகள் பறக்கின்ற முன்புறத்தையுடையனவும், பலநாளும் தேருதனவும் [மதவெறிகொண்டிருப்பனவும்], மிக்க மதக்களிப்புடனே கொடியகோபத்தையுடையனவுமானவிலங்காகியயானை நூறாயிரம்வேண்டுமானாலும் தருவேன்.

மதமணத்தினால் வண்டுகள்பறந்துவருதல், இயல்பு. மதயானை எதிர்ப்பட்ட பிராணிகளைக் கொல்லு மாதலால், தசையிலுள்ளஈசையால் பருந்துகள் மதயானைசெல்லுகையில் அவற்றின்முன்னே பறந்துசெல்லுமென்க. பல்பகலுந்தேருதன என்பதை, 'களிவெங்கதமா' என்றதொடர் சமர்த்தித்துநின்றது; தொடர்நிலைச்செய்யுட்குறியணி. பி - ம்:—[1]முகத்தின. [2]செங்கணவெங்களிமா, வெங்களிசெங்கதமா. (கஎகஎ)

சுஉ. செம்பொன்னி னமைந்து [1]சமைந்தனதேர்
உம்பர்நெடு வானினு [2]மொப்புறமாப்
பம்பும்[3]மணி தாரணி பாய்பரிமா
இம்பர் நடவாதன வீகுவனால்.

(இ - ள்.) (அன்றியும்), செம்பொன்னினாலியன்று உறுதிபொருந்தியனவான தேர்களும், மேலேயுள்ளநெடியவானுலகத்திலும் ஒத்தபொருளைப் பெறாமல், நெருங்கியஇரத்தினங்கள்பதித்தகிங்கிணிமாலையைப்பூண்டு, இவ்வுலகத்தேநடவாதன [தாவிச்செல்வதனால் வானத்தில்தானே யிருப்பதுபோலத்தோன்றுவன] வாகிப் பாயுந்தன்மையுள்ள குதிரைகளும் தருவேன்; (எ-று.)—'இம்பர்நடவாதன' என்றவிடத்து அமங்கலப்பொருள் காணத்தக்கது. பி-ம்:—[1]சமைந்துள. [2]ஒப்பிலவால், ஒப்புறமாப். [3]மணியாரணி. (கஎகஅ)

சுங. நிதியின்[1]னிரை குப்பை [2]நிறைந்தனவும்
பொதியின்மிளிர் காசு பொறுத்தனவும்
மதியின்னொளிர் தூசு வகுத்தனவும்
[3]அதிகஞ்சக டாயிர மீகுவனால்.

(இ-ள்.) நிதிகளின்தொகுதி குப்பைபோல்நிறைந்தனவும், மூட்டையாக விளங்குகின்ற இரத்தினங்களைத் தாங்கியனவும், சந்திரன்போல்விளங்குகின்ற வெண்பட்டினாலியன்றஆடை பலவகையைக்கொண்டனவுமான ஆயிரக்கணக்காகவுள்ளசகடத்தைமிகவும் தருவேன்; (எ - று.)—சகடம் - வண்டி. பி-ம்:—[1]நிறைகுப்பை, நெறிதெங்கு. [2]நிறைத்தனவும், நிரைத்தனவும். [3]அதிகஞ்சகமாயிரம். (கஎகக)

சுச.—அதிகாயன் விடைகொடுத்தனுப்ப மயிட னேகுதல்.

மற்றும்[1]மொரு தீதின் [2]மணிப்பணிதந்து
[3]உற்றன் னினை வியாவையு முந்துவனாற்
பொற்றிண்கழ லாய்நனி [4]போவெனவோடு
எற்றுந்திர டோளவ னேகினனால்.

(இ - ள்.) பின்னும், ஒருகுற்றமற்ற மணியினாலியன்ற அணிகலனைத் தந்து, பொருந்திய நீ வேண்டின எல்லாவற்றையும் தருவேன்; பொன்னாலியன்ற திண்ணிய வீரக்கழலையணிந்தவனே! சிறக்கப்போவாய் என்று கட்டளையிட்டவுடனே, (பகைவரை) மோதவல்ல திரண்டதோளையுடையவனாகிய அம்மயிடன் செல்லலானான்; (எ - று.)—பி-ம்:—1பொதி. 2மணிக்கணிதந்து, மணித்திரடந்து, மணிக்கணிதம். 3உற்றுன்னுழையாவையும், உற்றிந்தினையாதன, உற்றுந்துணையாவையும், உற்றந்துணையாவையும், உற்றின்னனையாவையும். 4போகெனலும். (களஉ0)

சுடு.—மயிடனென்றதூதுவன் ஸ்ரீராமனை யடைய, வானரவீரர் விரைந்து அவனைப் பற்றுதல்.

ஏகித்தனி சென்றெதி 1ரெய்தலுறாங்
காகுத்தனை யெய்திய 2காலையின்வாய்
வேகத்தொடு வீரர் 3விடைத்தெழலும்
ஓகைப்பொரு ளுண்டென வோதினனால்.

(இ-ள்.) (மயிடன் அங்குநின்று) புறப்பட்டுத் தனியேபோய் எதிரேவருகின்றஇராமபிரானைச் சேர்ந்தவளவில், வேகத்துடனே (வானர) வீரர்கள் சினங்கொண்டு (வந்த அத்தூதுவனைப்பற்றுதற்கு) எழுதலும், உவகையை (உமக்குத்) தரக்கூடிய பொருளொன்று (இப்போதுசொல்லவேண்டுவது) உள்ளதுஎன்று சொல்லி (இராமபிரான், பின்னுங்) கூறலானான்; (எ - று.)—அதனை, மேலைக்கவியிற் காண்க.

இந்தத்தூதுவன் வந்தது ஒருபெருவீரன் போர்க்கு வரப்போகின்றானென்பதைக் குறிப்பிக்குமெனக் கருதி 'ஓகைப்பொருளுண்டு' என்று இராமபிரான் ஓதினன். பி-ம்:—1எய்துதலும். 2காலையினால். 3விசைத்தெழலும். ()

சுசு.—இராமபிரான் தூதுவனைவிட்டிடுங்களென்றுகூறி, வானரர்களை விலக்குதல்.

போதம்முதல் வாய்மொழி 1யேபுகல்வோன்
2ஏதும்மறி யான்வறி தேகினனால்
3தூதன்னிவ னைச்சுளி யன்மினெனா
வேதம்முத னாதன் விலக்கினனால்.

(இ - ள்.) உணர்வுக்கு முதலாயிருப்பவனாகி வேதத்திற்கு முக்கியப்பொருளாய்த் தலைவனாகின்ற இராமபிரான்,—(விரைந்துபற்றிய வானரவீரர்களைநோக்கி, 'இவன் தன்தலைவன்கூறிய) வாய்வார்த்தையையேபுகல்பவன்; (அதற்குமேல்) எதையும்அறியாதவன்; படைக்கலமின்றி வந்துள்ளான்: தூதனாவன்: இவனைச் சினவாதீர்கள்' என்றுகூறி, (வானரவீரர்களையெல்லாம்) விலக்கினான்; (எ-று.)—"தண்டாமரையாள் கேள்வ, னொருவனையே நோக்குமுணர்வு" என்றபடி உணர்வுஎன்பது திருமகள்கேள்வனையே நோக்குமாதலால், திருமாலினவதாரமான ஸ்ரீராமனை 'போதம்முதல்' என்றார். பி-ம்:-1பொய்புகலான், பொய்புகல்வான். 2ஏதும்மதியான், ஏதம்மதியான். 3தூதன்னவனை. ()

சஎ.—'நீ வந்ததுயாதுகருதி?' என்றுஇராமன்வினவ, மயிடன் இலட்சுமணனிடமே சொல்லவேண்டுமெனல்.

என்வந்த குறிப்ப தியம்பெனலும்
மின்வந்த வெயிற்றவன் [1]வில்வல[2]வுன்
பின்வந்தவ னே[3]யறி பெற்றியதான்
மன்வந்த கருத்தென மன்னர்பிரான்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) (அவ்வாறுவிலக்கிய இராமபிரான், 'நீ) வந்த கருத்து யாது பற்றியது? அதுசொல்வாய்'என்னலும்,—ஒளிபொருந்திய எயிறுகளையுடைய அந்தமயிடன், (இராமபிரானைநோக்கி), 'வில்வல்லோனே! மன்னர்பிரானே! எம்மரசனுக்குப்போந்துள்ள கருத்துஉன்பின்னேதோன்றிய இலட்சுமணனே அறியவேண்டுவது' என்ன, (அதுகேட்டு),—(எ-று.)—'வினவ...நிகழ்த்தினன்' என அடுத்த கவியில் தொடர்ந்துமுடியும். மன்னர்பிரான்-அண்மைவிளி. பி-ம்:—[1]வில்வலி. [2]நின். [3]எறிபெற்றியெனு. (களஉ௩)

சஅ.—இலட்சுமணன்வினவ, தூதன் தான்வந்தசெயலுரைத்தல்.

சொல்லாயது சொல்லிடு சொல்லிடென
வில்லாள [1]னிளங்கிளை யோன்வினவப்
பல்லாயிர கோடி [2]படைக்கடன்முன்
[3]நில்லாயென நின்று நிகழ்த்தினனால்.

(இ-ள்.) வில்லாளியான இராமபிரானது தம்பியாகிய இலட்சுமணன் 'சொல்வாய்:(நீ வந்த)அந்தக்கருத்தைச் சொல்லிடு, சொல்லிடு'என்று வினவ,—பல்லாயிரகோடிக்கணக்கான (அதிகாயனுடைய) சேனைசமுத்திரத்துக்குமுன்னர்(போர்புரியுமாறு)நிற்பாயென்றுசொல்லிநின்று,(பின்னும்)கூறலானான்; (எ-று.)—தூதுவன் பின்னும்கூறியவற்றை மேல் மூன்றுகவிகளிற் காண்க. பல்லாயிரகோடிபடைக்கடலுடனேவந்துஅதிகாயன்முன்நில்லாய்என்றுமாம். பி-ம்:—[1]விளங்கிளையோன், இலங்கிளையோன். [2]படைக்கலம், படைத்தலை. [3]நில்லாதவனின்று. (களஉ௪)

சகூ.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: தூதுவன் பின்னும் கூறுவனவற்றைத் தெரிவிக்கும்.

உன்மே லதிகாய [1]னுருத்துளனாய்
நன்மேருவி னின்றன னுடியவன்
[2]றன்மே லெதிருப்வலி [3]தக்குளையேற்
பொன்மேனிய [4]வென்னொடு போதுதியால்.

(இ-ள்.) உன்மீது அதிகாயன் கோபித்தவனாகிச் சிறந்தமேருமலைபோல (உன்னை)நாடி நிற்பவனானான்; அவன்மீது எதிர்ப்பதற்குஉரிய வலிமை பெற்றுள்ளாயானால், பொன்போன்றமேனியனே!என்னோடும்(அவ்வதிகாயனுள்ள இடம்நோக்கி) வருவாய்; (எ-று.)—பி-ம்:—[1]உருத்தெதிர்வான். [2]தன்னேர், தன்னோடு. [3]தாகுதியேல், தக்குதியேல், தாக்குளையேல் [4]எண்ணொடு.()

ருo. மையப்படி வத்தொரு தந்தையைமுன்
[1]மெய்யெப்படி செய்தன னுன்முன் விரைந்து
[2]ஐயப்பட லப்படி யிப்படியிற்
[3]செய்யப் படுகிற்றி [4]தெரித்தனனால்.

(இ - ள்.) மலைபோன்ற வடிவத்தையுடைய ஒப்பற்றதந்தையின் [கும்ப கர்ணனின்] உடம்பை உனது தமயன் முன்பு எப்படிச்செய்தனனோ, அப்படி இப்பூமியில் விரைந்து(நீ) செய்யப்படுவாய்:(இதிற்) சந்தேகப்படாதே; (இவ்வி ஷயத்தை உனக்கு நான்) தெரிவித்துவிட்டேன்; (எ - று.)—பி-ம்:—[1]மெய் யை. [2]எய்யப். [3]செய்யப்படுகிற்றி, செய்யப்படுகைக்கு. [4]தெரிந்தனனால், தெரி ந்தனமால். (கஎஉசு)

ருக. கொன்றுனொழி யக்கொலை [1]கோளறியா
நின்றுனொடு [2]நின்றதெ னேடியெனிற்
றன்றாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்றானை [3]யியற்றும் [4]வேட்கையினால்.

(இ - ள்.) (கும்பகர்ணனைக்) கொன்றவன் நீங்க, கொலைச்செயலைச்செய் யாதவனாய் நின்றவனோடு [இலட்சுமணனோடு] (அந்த அதிகாயன்) (பொருமா று) தேடிநிற்பது எதனாலெனில்?—தன் தந்தை இராவணன் படுகின்ற துயர த்தை(த் தன்சிறிய) தந்தையை [கும்பகர்ணனை]முன்பு(கொன்று)வென்றவனை அநுபவிக்கச்செய்யவேண்டுமென்கின்ற விருப்பத்தினாலே(என்று கூறிமுடித் தான், தூதுவன்); (எ-று.)

இதனால்,இலட்சுமணனோடு போர்புரிய அதிகாயன் தேடிவரக் காரணங் காட்டியவாறு. கொலைகோள்-கொலையைக்கொள்ளுதல்: கொலைத்தொழிலைச் செய்தல். பி-ம்:—[1]கோளறியான். [2]நின்றதெனோநெடியோன். [3]இயற்றும. [4]வேட்கையினன், வேட்கையென. (கஎஉஎ)

ருஉ.—இராமன் தன்னுடன்பாட்டைத் தெரிவித்தல்.

[1]வானோர்களு மண்ணினு ளோர்களுமற்று
ஏனோர்களு மிவ்வுரை கேண்மி[2]னிவன்
தானேபொரு வா[3]னய லேதமர்வந்து
[4]ஆனோரு முடன்பொரு வானமைவான்.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) வானிலுள்ளவர்களும் மண்ணிலுள்ளவர்களும் மற்றுமுள்ளவர் களும் இவ்வுரை கேண்மின்: இவ்விலக்குமணன் தானே (அதிகாயனுடன் எதிர்நின்று) பொரப்போகின்றான்: (அவனுக்குப்பக்கபலமாக அவனைச்) சேர்ந்துவந்தவராயுள்ளவர்களுடனும்பொருதற்குச் சம்மதிப்பான்; (எ-று.)-- என்று ஸ்ரீராமன் இலட்சுமணன் தனியேஅதிகாயனுடன்பொருதற்குச் செல் லுமாறு உடன்பட்டதைச் சாட்சியத்துடன் கூறுகின்றானென்க. அடுத்தபாட லைச் செருகுகவியெனக்கொள்பவர் இச்செய்யுள் அதிகாயனுடையஙிபந்தனைக் குச்சாட்சிவைத்தவாறாக உரைகொள்ளுவர். பி-ம்:—[1]வானிலுளோர். [2]அவன். [3]அலனே. [4]ஆனாலுமுடன், தானேவுடனே. (கஎஉஅ)

ருங.—இராமன்சொல்லியபின் தூதுவன்பிதற்றுதல்.

என்றேயுல கேழினொ டேழினையுந்
தன்றாமரை போலிரு தாளளவா
நின்றானுரை செய்ப நிசாசரனும்
பின்றாவுரை யொன்று பிதற்றினனால்.

(இ - ள்.) என்று பதினான்குலோகங்களையும் தனது தாமரைமலர்போன்ற இருதாள்களினால் அளந்துநின்றவனான ஸ்ரீராமன் சொல்ல, தூதுவனான நிசாசரனும் பின்றாதபேச்சொன்றைப் பிதற்றினான்; (எ - று)—அதுமேற்கவியிற்காண்க. இச்செய்யுள்பலபிரதிகளி லில்லை: இடைச்செருகலான்பாடலிற் சேர்ந்ததாகவே இருக்கலாம். (கஎஉக)

ருச.—தூதுவன் சொல்லியது கேட்டு, இலட்சுமணனைப் போர்க்குச்செல்லுமாறு இராமபிரான் விடைகொடுத்துஅனுப்புதல்.

எழுவாயினி யென்னுட [1]னென்றெரியும்
மழு[2]வாய்நிகர் வெஞ்சொல் வழங்குதலுந்
தழுவாவுட னேகுதி [3]தாழலெனத்
தொழுவார்தொழு தாளரி சொல்லுதலும்.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) 'இப்போது என்னுடனே எழுவாய் [பின்வாங்கிநிற்கவேண்டா]' என்று எரிகின்ற மழுவின்வாயையொத்த வெம்மையைக் கொண்ட சொல்லை(த் தூதுவன்) சொன்னவுடனே, --தொழுவார் தொழத்தக்க தாள்களையுடைய ஸ்ரீராமன், (அந்தஇலட்சுமணனைத்) தழுவிக்கொண்டு 'உடனே செல்வாய்: தாமதிக்காதே' என்று சொன்னவுடனே,—(எ - று.)---"எனுவீடணன் சொல்லாடினன்" என அடுத்த கவியில் முடியும். பி-ம்:—[1]என்றிடலும். [2]வாணிகர். [3]தானெனவே, தாழ்கலெனா. (கஎஙO)

ருரு.—கவிக்கூற்று: விபீஷணன் அப்போதுகூறியதை இனிக்கூறுவோமெனல்.

[1]எல்லாமுட னெய்திய பின்[2]னிவனே
வில்லாளொடு போர்செய வேண்டுமெனு
[3]நல்லாறுடை வீடண னாரணன்முன்
[4]சொல்லாடின னன்னவை சொல்லுதுமால்.

(இ - ள்.) நல்வழியிற்செல்லுதலையுடைய விபீஷணன், (நாம்)எல்லாம் உடன்போனபின்னரே, இவன் வில்லாளியான அதிகாயனோடு போர்புரிய வேண்டுமென்று நாராயணனது அவதாரமாகிய ஸ்ரீராமபிரானிடம் (அந்த அதிகாயனைப்பற்றிய) விஷயங்களைப் பேசினான்; அவற்றைச் சொல்லுவோம்.

'இலட்சுமணன் அதிகாயனுடன் போர்புரியட்டும்: ஆனால், நாமெல்லோரும் தூரஇருத்தலாகாது: சமயத்தில்உதவுமாறு உடன்செல்லவேண்டும்' என்றுசொல்லிக் காரணத்தை விபீஷணன் மேலேகூறுகின்றான். பி - ம்:---[1]எல்லோம், எல்லேம். [2]அவனே. [3]நல்லோனெடு. [4]சொல்லோதினனன்னது. ()

ருசு.—இனி, இருபத்தேரநகவிகள்-அதிகாயன் திறலையும் செய்தியையும் விபீஷணன் கூறுவனவற்றைத் தெரிவிக்கும்.

வாரேறு கழற்சின வாளரியெம்
போரேறொடு போர்புரி வானமையாத்
தேரேறு சினக்கடு வெந்தறுகட்
காரேறென வந்த கதத்தொழிலோன்.

இருபத்திரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (இவ்வதிகாயன்),—கச்சினாற் கட்டிய வீரக்கழலையணிந்த சினங்கொண்ட கொடிய சிங்கம்போன்றவனான போரில்வல்ல எமதுலட்சுமணனோடு போர்புரியுமாறு உடன்பட்டு, சினத்தையும் மிகக்கொடியஅஞ்சாமைக் குணத்தையுமுடைய பெரிய மேகமென்று தேரேறிவந்துள்ள கோபத் தொழிலையுடையவன்; (எ - று.)—இச்செய்யுள் அனேகபிரதிகளிலில்லை. ()

ருஎ. ஓவாநெடு மாதவ மொன்றுடையான்
தேவாசுர ராதியர் செய்செருவிற்
சாவானிறை யுஞ்சலி யாவலியான்
மூவாமுத ஞன்முக ஞர்மொழியால்.

(இ - ள்.) (இவன்),—ஒழியாத பெருந்தவமொன்றையுடையவன்: அழியாதமுதல்மூர்த்தியான பிரமனதுவரத்தினாலே தேவாசுரர் முதலியோர்செய்த போரிற் சாவாமற் சிறிதுஞ்சலியாத வலிமையுடையனாயு மிருந்தான்; (எ-று.)

ருஅ. [1]கடமேய் கயிலைக்கிரி கண்ணுதலோடு
இடமேற [2]வெடுத்தவ னேயிவனைத்
[3]திடமேயுல கிற்பல தேவரொடும்
வடமேரு வெடுக்க வளர்த்தனனால்.

(இ - ள்.) காடுகளைக்கொண்ட கயிலைக்கிரியைச் சிவபிரானுடனே (நின்ற) இடத்தினின்று அடியோடுபேர்த்துஎடுத்தவனான இராவணனே, உலகிற் பலதேவர்களுடனே வடமேருவைப் பேர்த்தெடுக்கவேண்டுமென்று கருதி அதற்குஏற்பத் திடமாக இவனைவளர்த்தான்; (எ - று.)

ஒருதேவனைக்கொண்ட கயிலையை யெடுத்த இராவணன் பல தேவர்களைக்கொண்ட வடமேருவைப் பேர்த்தெடுக்கவேணுமென்ற கருத்தோடு இவ்வதிகாயனை வளர்த்தா னென்று அதிகாயனுடைய பேராற்றலை விளக்கியபடி.பி-ம்:—1கடமே. 2எடுத்தனமின்று, எடுத்தனனென்று. 3திடமேல். ()

ருசு. [1]மாலாரொடு மந்தர மாசுணமும்
[2]மேலாகிய தேவரும் வேண்டு[3]மெனு
ஆலாலமு மாரமிழ் தும்மமையக்
காலானெடு வேலை [4]கலக்கிடுமால்.

(இ-ள்.) (இவன்),—திருமாலும் மந்தரமலையும் வாசுகியென்னும் பெரும்பாம்பும் மேலாகிய தேவரும் (கடைவதற்குத்துணையாகஉதவ) வேண்டுமென்னமல், ஆலாலமும் அரியஅமுதமும்தோன்ற(த் தன்) காலினாலேயே பெரிய பாற்கடலைக் கலக்கவல்லான்; (எ - று.)—பி - ம்:—1மாலார்நெடு. 2மேலாயின. 3எனு, என. 4கலக்கினனால். (கஎ௩௫)

௯௦. ஊழிக்கு [1]முயர்ந்தொரு [2]நாளொருவாப்
பாழித்திசை [3]நின்று சுமந்தபணைச்
சூழிக்[4]கரி தள்ளுத றோள்வலியோ
ஆழிக்கிரி தள்ளுமொ ரங்கையினான்.

(இ - ள்.) பிரளயகாலத்திலும்(அழியாமல்)மேம்பட்டிருந்து ஒருநாளும் நீங்காமல் வலியதிசைகளிலேநின்று சுமந்தனவும் பருத்தனவும் முகபடாத்தை யணிந்தனவுமான யானையை,சக்கரவாளமலையைத்தள்ளவல்ல அழகியஒப்பற்றகையினால்(வென்று)தள்ளுதல்தோள்வலியாகுமோ?(எ-று.)--இவ்வதிகாயன் சக்கரவாளமலையைத் தன்னுடைய தோள்வலியாற் பேர்த்துத்தள்ளிவிட்டானாதலால்,இவனுடைய தோள்வலிக்குமுன்னே திக்கஜங்களை அவைகள்உள்ள விடத்தினின்று தள்ளிய இராவணனது தோள்வலி பாராட்டற்குரியதோ? என்றவாறு: இராவணனைக்காட்டிலும் வலிமைமிஞ்சியவனென்றபடி.பி-ம்:— [1]உயர்ந்துள. [2]நாளொடும்வாழ், நாளொருவன். [3]நின்ற. [4]கிரி. (௧௭௬௬)

௯௧. காலங்கள் கணக்கில கண்ணிமையா
ஆலங்கொண் [1]மிடற்றவ னாரழல்வாய்
வேலங்[2]கெறி யக்கொடு விட்டது[3]நீ
[4]சூலங்கொ லெனப்பகர் சொல்லுடையான்.

(இ - ள்.) கணக்கில்லாதகாலம் (சென்றாலும்) கண்ணிமைத்தலில்லாத விஷகண்டனான சிவபிரான் நிரம்பியஅழல்வாய்ந்த சூலத்தை(ப்போர்நேர்ந்து) அப்போது(இவன்மீது) எறிய, (அதுதன்னைக் கையிற்) பற்றிக்கொண்டு (அப்பரமனெதிரேபோய்) நீ விட்டது (இச்) சூலமேயோ? என்று பகர்கின்ற சொல்லையுடையவன், (இவ்வதிகாயன்); (எ - று.)—பி - ம்:—[1]மிடற்றவர், மிடற்றிவன். [2]ஒழிய, இரிய. [3]நீள். [4]சூலங்கொள், சூலங்கள். (௧௭௬௭)

௯௨. பகையாடிய வானவர் பல்[1]வகையூர்
புகையாடிய நாள்புனை [2]வாகையினான்
மிகையாருயி ருண்ணென வீசியவெந்
தகையாழி [3]நகைந்த தனுத்தொழிலான்.

(இ - ள்.) (அன்றியும் இவன், தன்னோடு) பகைமைபாராட்டிய வானவரின் பலபகுப்புக்களையுடைய ஊரைச் சுட்டெரிக்கத்தொடங்கியகாலத்தில், (இவனைவெல்லக்கருதி, வெற்றிக்குஅறிகுறியாக) வாகைமாலைபுனைந்த திருமால் '(இவனது) குற்றமுள்ள நிறைந்த இனியஉயிரை உண்பாய்' என்று சொல்லியெறிந்த கொடுந்தன்மையுள்ள சக்கரத்தைத் தடுத்த விற்றொழிலையுடையவன்; (எ - று.)—பி-ம்:—[1]பகை. [2]மாலையினான். [3]தகைந்த. (௧௭௬௮)

௯௩. உயிரொப்புறு பல்படை [1]யுள்ளவெலாஞ்
செயி[2]ரொப்புறு மித்திரர் சிந்தியநாள்
அயிரொப்பன நுண்டுகள் செய்தவர்தம்
வயிரப்படை [3]தள்ளிய வாளியினான்

(இ - ள்.) உயிர்பொருந்துதலுள்ள பல்வகைப்பட்ட படையாகவுள்ளன வெல்லாவற்றையும் சினம்பொருந்துதலையுடைய தேவர்கள் (தன்மீது) சிந்த

காலத்தில்,(அவற்றை,இவன்),--மணலுக்குஒப்பான நுண்ணியபொடிகளாக்கி அத்தேவர்களின் உறுதியானஆயுதங்களையும் பயனிலவாகப்போக்கிய அம்புகளையுடையவன்; (எ-று.)—உயிரொப்புறுபடையெனவே,தம்முடையதொழிலாகிய பகையழித்தலைத் தவறாது செய்யவல்லபடை யென்பது,பெறப்படும். இனி, ஒப்புறுஎன்பதனை ஒப்புறுஎன்பதன் விகாரமெனக்கொண்டு, உயிர் ஒப்புறு-பகைவருயிரை யொழிக்கவல்ல எனினுமாம். இந்திரர் தேவராதலை "இந்திரர்தொழுமடி" இந்திரரமிழ்தம் முதலியவற்றாலறிக. பி-ம்:—[1]உள்ளது. [2]ஒப்புற. [3]சிந்திய. (கஎ௩கூ)

கூ௪. கற்றான்மறை நூலொடு கண்ணுதல்[1]பான்
முற்றாதன தேவர் முரட்படை[2]தாம்
மற்றாரும் வழங்க [3]வலா [4]ரிலவும்
பெற்றானெடி தாண்மை பிறந்துடையான்.

(இ - ள்.) (மற்றும் இவன்),---(தநுர்வேத) ரகசியத்தை (அதற்குஉரிய) சாஸ்திரங்களுடனே சிவபெருமானிடத்திற் கற்றான்; (அங்ஙனம் கற்கும் போது) தேவர்கள் பழகாதனவும் பிரயோகிக்கத்தெரிந்தவர் மற்றுளவரும் இல்லாதனவுமான வலிமையுடையபடைகளைப் பெற்றான்: (அதனாலும்), மிக்கஆண்மை தோன்றப் பெற்றுள்ளான்; (எ - று.)—தாம் - அசை. பி-ம்:—[1]மால். [2]தான். [3]வல்லார். [4]இயல்பும். (கஎ௪0)

கூ௫. அறனல்லது [1]வல்லது [2]மாறறியான்
மறனல்லது [3]பல்பணி [4]மற்றணியான்
திறனல்லதொ ராருயி ருஞ்சிதையான்
[5]உறனல்லது பேரிசை [6]யென் [7]றுணர்வான்.

(இ - ள்.) (இவன்,)—அறனல்லாததுஅன்றி வேறொன்று அறியான்; வீரமல்லது மாறான பலதொழிலையும் மேற்கொள்ளான்: வலிமையற்றதாகிய பொருந்தியபிராணியொன்றையும் அழிக்கமாட்டான்; பெரும்புகழைப்பெறுதலையே நல்லதென்று உணர்வான்; (எ - று.)—இரண்டாமடி, வீரத்தையே ஆபரணமாகப் பூண்டவன் அதிகாயன் என்ற பொருளைத்தரும். பேரிசை உறல் நல்லது என்று மாறுக. பி-ம்:—[1]நல்லது. [2]மற்று. [3]பல்லணி. [4]மற்றறியான், மாறறியான், மாற்றறியான், மாறணியான். [5]உறநல்லன, உறநல்லது. [6]ஒன்று. [7]உடையான், உணரான். (கஎ௪க)

கூ௬. காயத்துயி ரேவிடு காலையினும்
மாயத்தவர் கூடி [1]மலைந்திடினுந்
[2]தேயத்தவர் செய்குதல் செய்திடினும்
[3]மாயத்தொழில் செய்ய [4]மதித்திலனால்.

(இ-ள்.) (இவ்வதிகாயன்),—(போரில்) உடலிலுள்ள உயிரைவிடவேண்டியகாலம் வந்தாலும் [சங்கடமான நிலை நேர்ந்தாலும்], வஞ்சனையுள்ளவர் கூடி (த் தன்னோடு) பொருதாலும், தேயத்திலுள்ளவர்களெல்லாம் கிரித்திரிமச்செயலை(த் தன் திறத்து) ச்செய்தாலும், மாயத்தொழிலைச் செய்யக் கருத

மாட்டான்; (எ - று.)—இவ்வதிகாயனை மாயமுணர்ந்தவனென்று முதனூல் கூறும். இதுவரையில் அதிகாயனுடைய திறமையைக்கூறிய விபீஷணன் மேல்பத்துச்செய்யுள்களால் அவனுடையபூர்வசரிதத்தைக் கூறுவன். பி-ம்: —[1]மலைத்திடினும். [2]சேயத்தவர் செய்குதல், தேயத்தவர் செய்தது, தேயத்தவர்செய்யல, தேயத்தரசெய்துதல். [3]மாயத்திறல். [4]மதிக்கிலனுல். (௧௭௪௨)

௬௭. [1]மதுகைடவ ரென்பவர் வானவர்தம்
பதிகைகொடு [2]கட்டவர் பண்டொருநாள்
[3]அதிகைதவ ராழி யனந்தனையும்
[4]விதிகைம்மிக முட்டிய [5]வெம்மையினர்.

(இ-ள்.) பெருங் கபடமுடையவரான மது கைடபன் என்ற (இரு)தானவர்கள்,—வானவருடைய ஊரைக் கைப்பற்றிக்கொண்டு (அவர்களைக்) களைந்தெறிந்தவராய், முன்னொருகாலத்தில் விதியானது தூண்ட, பாற்கடலிலுள்ள அழிவற்றகடவுளாகிய திருமாலையும் எதிர்த்த கொடுமையையுடையவராயினர்; (எ-று.)—அதிகைதவர்-மிக்ககபடமுள்ளவர்: வடசொல். பி-ம்:— [1]மதுகையிடவரென, மதுகையிடரென்றுளர். [2]தொட்டவர். [3]அது கைதவர். [4]விதிகைமுக. [5]வேட்கையினர், வெம்மையினன். (௧௭௪௩)

௬௮. நீராழி யிழிந்து நெடுந்தகையைத்
தாராயம ரென்றனர் [1]தாமொருநாள்
ஆராழிய வண்ணலு மஃ[2]திசையா
[3]வாராவமர் செய்கென [4]வந்தனனால்.

(இ - ள்.) அவர்கள், பாற்கடலிலே யிறங்கி ஒருநாள் பெருங்குணமுள்ள திருமாலைநோக்கி, 'அமர் தருவாய்' என்று கூறினர்: அரிய சக்கரப்படையையுடைய பெருமையிற்சிறந்த திருமாலும், அதற்கு உடன்பட்டு (இதுவரையில்) நிகழ்ந்திராத அமரைச் செய்க' என்று சொல்லிக்கொண்டு வந்தான்; (எ - று.) பி - ம்:—[1]தான். [2]இசைய. [3]வாராயமர். [4]வந்தனரால். (௧௭௪௪)

௬௯. [1]வல்லாருரு வாயிர மாய்வரினும்
[2]நல்லார்முறை [3]வீசி நகுந்[4]திறலார்
மல்லா விளகாது [5]மலைந்தனன்மால்
அல்லாயிர மாயிர [6]மஃகினவால்.

(இ-ள்.) வல்லமையுடையவர் ஆயிரம்உருக்கொண்டு வந்தாலும்(அவரை) நன்மைமிகுந்த போர்முறையால் வீசிச் சிரிக்குந்திறமையுள்ளவரான அந்த மதுகைடபருடனே, திருமால், பின்வாங்காது மல்லயுத்தத்தாற் போற்புரிந்தான்;(அங்ஙனம் போர் புரிகையில்)பல்லாயிரக்கணக்கான நாட்கள் கழிந்தன; (எ-று.)—பி - ம்:—[1]வல்லார்கரமாயிரமாய், எல்லார் படையாயிரமே, எல்லார் கரமாயிரமே. [2]நல்லான். [3]வீச. [4]தொழிலார். [5]மலைந்தனன்மாறு, மலைந்தனர் மற்று, மலைந்தனராண்டு. [6]ஆகினவால், அஃகினனுல். அஃகினரால். (௧௭௪௫)

௭௦. [1]தன்போல்பவ [2]ராரு மிலாததனிப்
பொன்போலொளிர் மேனியனைப் [3]புகழோய்

[4]என்போல்பவர் சொல்லுவ [5]தெண்ணுடையார்
[6]உன்போல்பவ ரியாருள ரென்றுரையா.

(இ - ள்.) தன்னைப்போல்பவர் யாவரையும் பெற்றிராத தனிப்பட்ட பொன்போல் அருமையாகியொளிர்கின்ற திருமேனியையுடைய அந்தத்திரு மாலைப்பார்த்து, (மதுகைடபர்கள், தனித்தனியே) 'புகழோய்! என்போல்பவர் சொல்லுதற்குஉரியது (யாதெனில்?—)மதித்தற்குஉரியவலிமையையுடைய வரில் உன்போல்பவர் யாவருளர்?' என்றுகூறி,—(எ - று.)—இச்செய்யுளி லுள்ள'உரையா'என்றசொல்,மேல் எஉ-ஆங்கவியிலுள்ள 'சொல்லுதலும்'என் றதனோடு இயையும். பி-ம்:—[1]தம். [2]தானலதாருமிலார், தானுமிலாததனிப், தாமுமிலாததனிப். [3]புகழா. [4]என்போல்பலபோலுவ, என்போர்பலசொல் லுவ. [5]என். [6]உன்போலியாரார். (களசகு)

எக. ஒருவோ ருலகேழையு முண்[1]டுமிழ்வோம்
இருவோமொடு நீதனி யித்தனைநாட்
[2]பொருவோமொடு நேர்பொரு தாய்புகழோய்
தருவோநின் [3]மனத்தது [4]தந்தனமால்.

(இ - ள்.) (நாங்கள்) ஒருத்தராகவே ஏழுலகங்களையும் உண்டுஉமிழத் தக்கவல்லமையுடையோம்:(அப்படித்தனித்தனித் திறமைவாய்ந்த)போர்செய் கின்றவரான எங்கள் இருவரோடும் நீ தனியாக இத்தனைநாள் நேரேநின்று (பின்வாங்காமற்)போர்புரிந்தாய்;புகழோய்! நின்மனத்திலுள்வேண்டுவதாகிய வரத்தைத் தருவோம்: தந்தேவிட்டோம்; (எ-று.)—'தருவோம்' என்றபின்பு 'தந்தனம்' என்றுகூறியது-தாம் விரைவில் தவறாதுகொடுப்போமென்றுவற் புறுத்துதற்கு:காலவழுவமைதி. பி-ம்:—[1]உமிழ்வோய். [2]பொருவோமெனவே, பொருவேமொடுநீ. [3]மனத்தன. [4]தானெனலும். (களசஎ)

எஉ. ஒல்லும்படி [1]நல்ல துனக்குதவச்
சொல்லும்படி யென்றவர் [2]சொல்லுதலும்
வெல்லும்படி நும்மை [3]விளம்புகெனக்
[4]கொல்லும்படி யாலரி கூறுதலும்.

(இ - ள்.) (நீ வரமாக எங்களிடத்துச்) சொல்லும்விதம், உனக்கு நல் லது நேரும்படி (நாங்கள்) உதவும்பொருட்டே [நீ உனக்கு நன்மைநேருமாறு வரங்கேட்டாற்கொடுப்போம் என்றபடி] என்று அவர் சொல்லுதலும்,—உங் களைவெல்லும்படி(நீங்கள்)சொல்லுக [வரந்தருக]' என்று(அவர்களைக்)கொல் லும்படியாகத் திருமால் சொன்னவுடனே,—(எ-று.)—'நல்குதலும்' எனஅடு த்தகவியோடு தொடரும். பி-ம்:—[1]நல்ல. [2]சோறலுமே. [3]விளம்புமென. [4]கொல் லும்படியும். (களசஅ)

எ௩. இடையிற்படு கிற்கிலம் யாமொருநின்
றுடையிற்படு கிற்று மெனத்துணியா
[1]அடையச்செய கிற்றிய தாணையெனு
[2]நடையிற்படு நீதியர் [3]நல்குதலும்.

(இ - ள்.) 'நாங்கள் ஒப்பற்ற உனது தொடையிலே இறக்கவல்லோம்: வேறிடத்திற்சாகமாட்டோம்' என்றுசொல்லித்(தம்முயிரைவிடத்) துணிந்து, '(உன்றுடைக்குள்ளே எங்களை) அடையும்படி செய்யவல்லவனாவாய்: அதுவே (நீ செய்யவேண்டிய எங்களுடைய) கட்டளை' என்று ஒழுக்கந்தவறாமல் நடக்கின்ற முறைமையினையுடையரான அம்மதுகைடபர்கள் கூறுதலும்,-(எ-று.) —'இடத்தொடையை விட்டான்' என அடுத்த கவியில் முடியும். பி-ம்:— 1அடையிற்படகிற்றி, அடையப்படுகிற்றி, அடையப்படர்கிற்றி. 2நடையிற்பொலி, நடையற்பொலம், நடையிற்பட. 3நல்கினரால். (கஎசக)

ஏச. விட்டா[1]னுலகி யாவையு மேலொடுகீழ்
எட்டா வொருவன்ற னிடத்[2]துடையை
ஒட்டா தவ [3]ரொன்றின [4]சூழ்வலியாற்
பட்டாரிது பட்டது பண்டொருநாள்.

(இ-ள்.) (மனோவாக்காயங்கட்கு) எட்டாதஒப்பற்ற அத்திருமால், மேலோடுகீழுள்ள எல்லாவுலகங்களையும்(பொருந்த நெடுகச்செல்லுமாறு) தனது இடத்தொடையை விட்டான்;பகைவராகிய மதுகைடபர்கள் சூழின்வலியால் ஒருப்பட்டவராய் (அத்தொடையில்)அகப்பட்டுக்கொண்டார்:இதுமுன்னொரு காலத்தில் நிகழ்ந்தது; (எ - று.)—பி-ம்:—1உலகேழையும். 2தொடையில், தொடையால். 3ஏறினர். 4சூழ்வினையில். (கஎரு௦)

ஏரு. தனிநாயகன் வன்கதை தன்கைகொளா
நனிசாட விழுந்தனர் நாளுலவாப்
[1]பனியாமது [2]மேதை படப்படர்மே
தினியானது பூவுல கெங்கணுமே.

(இ - ள்.) ஒப்பற்றதலைவனாகிய திருமால்,வலிய கதாயுதத்தைத் தன்கையிற்கொண்டு நன்குமோத,(அந்தமதுகைடபர்கள்), (தமது)வாழ்நாளற்றுஇறந்தொழிந்தனர்;இந்தப் பரவிய பூமிமுழுதும்,அஞ்சுதலென்பதுசிறிதும்இல்லாத அந்தமது வென்பவனுடைய மேதசானது பட்டதனால், மேதினியென்றபேருடையதாயிற்று; (எ - று.)

இந்த மதுவினது மேதசானது உலகு எங்கும் பட்டதனால் தான், இந்தப்பூமிக்கு மேதினீ என்று பெயராயிற் றென்றவாறு. இச்செய்யுள் சில பிரதியிலில்லை. பனியா-ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். பி-ம்:—1பனியாயது. 2மேதையினிற்பட. (கஎருக)

ஏசா. [1]விதியாலி வுகந்தனின் மெய்[2]வலியான்
மதுவானவ னெம்முன் மடிந்தனனாற்
[3]கதிர்தானிகர் கைடவ னிக்கதிர்வேல்
அதிகாய [4]னிதாக வறைந்தனனால்.

(இ - ள்.) இந்தஉலகத்தில் மெய்யாகிய வலிமை படைத்துள்ள மது என்பவனான எமது தமையன் [கும்பகர்ணன்] விதியால் மாண்டான்: சூரியனையே நிகர்த்த கைடபனென்பவனோ, இந்த ஒளியுள்ள வேற்படை

(தூங்கிய அதிகாயனுவன்; இவ்வுண்மையை மனத்திற்படமொறு கூறினேன்; எ - று.) பி - ப்:—[1]விதியாவுலகந்தனில், விதியானிவுகந்தனின். [2]வலிசால். [3]கதமேகிகர், கதிகாணிவர், கதிகாணிமிர். [4]அதாக வலிந்தனனுல், இதாக வறிந்தனனுல், எனுமுனறைந்தனனுல். (கஎ௬௨)

எஎ.—இவ்வாறு விபீஷணன் சொல்ல, ஸ்ரீராமன் கூறத்தொடங்குதல்.

என்றான விராவண னுக்கிளையான்
[1]நன்றாருக வென்றொரு நாயகனு
மின்றா[2]னுமிழ் வெண்ணகை வேறுசெயா
நின்றானிது [3]கூற நிகழ்த்தினனால்.

(இ-ள்.) அந்த இராவணனுக்குத் தம்பியாகிய விபீஷணன் என்று கூறினன்; நன்றாருக என்று சொல்லி ஒப்பற்ற தலைவனுன இராமபிரானும், மின்னல்போலும் நிறத்தை வெளிப்படுத்துகின்ற வெண்ணிறமான சிரிப்பை வேருகச்செய்துநின்று இதனைக் கூறத்தொடங்கினன்: (எ-று.)—இராமன் கூறுவதை மேல் ஒன்பது கவிகளிற் காண்க.

இது என்றது - இலக்குமணனது பராக்கிரமத்தை. நன்றாருக என்றது; சொல்லியதையெல்லாம் நன்குணர்ந்தே னென்று அங்கீகரித்த படியாம். இராமபிரான் வெண்ணகை புரிந்தது-இலட்சுமணனதுஆற்றலுக்கு முன்னே அதிகாயனது திறமை செல்லாது என்று தான் துணிந்துள்ளமையைக் குறிப்பிக்கும். பி-ம்:—[1]நன்றுகவிதென்றொரு. [2]கிமிர். [3]கூறி. (கஎ௬௩)

எஅ.—நான்கு கவிகள் - இலக்குமணனுடைய பராக்கிரமத்தை ஸ்ரீராமன் கூறுவதைத் தெரிவிக்கும்.

எண்ணாயிர கோடி யிராவணரும்
விண்ணுடரும் வேறு[1]ல கத்தவரும்
நண்ணுவொரு மூவரு நண்ணிடினுங்
கண்ணு[2]லிவன் விற்றொழில் காணுதியால்.

ஒன்பது கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) எண்ணாயிரங் கோடியிராவணர்களும், விண்ணுட்டவரும், வேறுலகத்திலுள்ளவரும், கிட்டுதற்கு அரிய மும்மூர்த்திகளும் பொருந்தினுலும் [எதிர்த்து நின்றாலும்], (அவர்களையெல்லாம் எதிர்க்கின்ற) இந்த இலட்சுமணனது விற்றொழிலைக் கண்ணாற் காண்பாய்; (எ - று.)—பி-ப்:— [1]உலகத்தவரும். [2]அவன். (கஎ௬௪)

எகூ. வானென்பதென் வையக மென்பதென்மால்
தானென்பதென் வேறு தனிச்[1]சிலையோர்
யானென்பதெ னீசனென் [2]வானவர்தங்
கோனென்பதெ னெம்பி [3]கொதித்திடுமேல்.

(இ - ள்) என்தம்பி கோபிப்பானுனல்,—(அப்போது), வானத்தவர் என்று சொல்வதுதான் என்? வையகத்தவரென்பதுஎன்ன? திருமால் என்பதுதான்என்ன? வேறான தனிப்பட்ட வில்லாளிகள் (என்பதென்ன?)

யான் என்பது தான் என்ன? சிவபெருமானென்பது என்ன? இமையோர் தலைவனான இந்திரனென்பது என்ன? (எ - று.)

இந்த இலக்குமணனுடைய கோபத்திற்குமுன் ஒருவரையும் எடுத்துச் சொல்லவேண்டுவதில்லை; இவன் சினந்திருக்கும்போது எவராலும் இவன் முன்னே நிற்கமுடியாது என்றவாறு. சினந்தால் என்னிலும் விஞ்சியவ னென்பான் 'யானென்பதென்' என்றான். பி-ம்:—1சிலையோன். 2இன் றிமை யோர். 3கொதித்திடிலே, கொதித்திடுமால். (கஎருரு)

அ௦. தெய்வப்படை யுஞ்[1]சின முந்திறனும்
[2]மையற்றொழி மாதவ மற்றுமெலாம்
எய்தற்குள வோவிவ னிச்சிலையிற்
கைவைப்பள வே[3]யிறல் காணுதியால்.

(இ-ள்.) தெய்வத்தன்மையுள்ள படைக்கலங்களும் கோபமும் வல்லமையும் குற்றம்அற்றொழிந்த பெருந்தவமும் மற்றுமுள்ளனவெல்லாமும் (இவன் முன்னே) வந்து சேர்தற்கு உரியனவோ? இவ்விலக்குமணன் இச்சிலையிலே கைவைக்கும் அளவில்(அவை)முறிந்தொழிதலைக் காண்பாய்; (எ-று.)—பி-ம்:—1திறலுஞ் சினமும். 2மையுற்றெழுமாயமும், மையற்றொழில்மாதவம். 3இறு. இப்பாடலின்பின்''நீரைக்கொடு'' (அங) என்றபாடல் சில பிரதியில் உள்ளது. (கஎருசு)

அக. என்றேவியை வஞ்சனை செய்தெழுவான்
அன்றேமுடி வானிவ னன்னவள்சொற்
குன்றேனென [1]வேகிய கொள்கையினால்
நின்றானுள [2]னாகி நெடுந்தகைபாய்.

(இ - ள்.) மிக்க பெருமைக்குணமுள்ள விபீஷணா! என் தேவியை வஞ்சனைசெய்து எடுத்துச்சென்றவனாகிய இராவணன் அன்றைக்கே முடிந்திருப்பான்; இவ்விலட்சுமணன் 'அவளுடைய[சீதையின்]சொல்லை மீறேன்' என்று(தான் பாதுகாத்திருந்த இடத்தை விட்டிட்டு நான் உள்ள இடத்துக்கு) வந்தசெயலால்(அவ்விராவணன் இது வரையில்) உயிருள்ளவனாய் நின்றான்; (எ - று.)—பி - ம்:—1எய்திய. 2ஆய நெடுந்தகையான். (கஎருஎ)

அஉ.—இது முதல் ஐந்துகவிகள் - நீயும் உடன் சென்று இலட்சுமணன் அதிகாயன் சிரத்தைக் கொய்து தள்ளுவதனைக்காணென்று சொல்லி விபீஷணனுக்கு விடைகொடுத்தனுப்பியதைத் தெரிவிக்கும்.

அஉ. ஏகாயுட னீயு [1]மெதிர்ந்துளனா
[2]மாகாய னெடுந்தலை வாளியொடும்
ஆகாய மளந்து விழுந்ததனைக்
[3]காகாதிக [4]ணுங்குதல் காணுதியால்.

(இ - ள்.) நீயும் இவனுடனே செல்வாய்: (இவனுடனே) எதிர்ந்துள்ளவனாகிய அதிகாயனுடைய பெரியதலை (எய்யப்பட்ட) அம்புடனே வானத்தை யளந்து(பூமியில்)விழுவதனைக் காகம் முதலிய பறவைகள் குத்தியுண்பதனைக் காண்பாய்; (எ - று.)

விழுதல் நுங்குவதற்கு முன்னிகழ்வதாதலால், 'விழுந்ததனை' என இறந்த காலத்தாற் கூறியது. இச்செய்யுள் சிலபிரதியில் "ஒன்றுயிரவெள்ளம்" (அடு) என்ற பாடலுக்குப்பின் உள்ளது. அதிகாயனே, 'மாகாயன்' என்றார். பி-ம்:— [1]எதிர்ந்துளவன். [2]மாகாயநெடுச். [3]தாகாதிய. [4]நுங்குவ. (கஎடுஅ)

அங. நீரைக்கொடு நீரெதிர் [1]நிற்கொணுமே
[2]தீரக்கொடி யாரொடு தேவர்[3]பொருளும்
போரைக்கொடு வந்து புகுந்தது[4]நாம்
ஆரைக்கொடு [5]வந்த [6]தறிந்திலேயோ.

(இ-ள்.) நீரைத்துணையாகக்கொண்டு நீருக்கு எதிராக நிற்கமுடியுமோ? மிக்ககொடியரான அரக்கருடன் தேவர்பொருட்டுப் பெரும்போரை மேற்கொண்டுவந்து நாம் புகுந்தது ஆரைத்துணையாகக்கொண்டுவந்து? அதனை (நீ) யறிந்ததில்லையோ? (எ - று.)

நீரையெதிர்க்கவேணுமானால் அதனைவற்றவடிப்பதற்குஉரிய உபாயத்தையல்லவா கைப்பற்றவேண்டும்; அதைவிட்டு அந்நீரோடு வேறொருநீர்ப்பகுதியை முட்டவிட்டால் முடியுமோ? அதுபோலவே, இந்தஅரக்கரை வற்றச்செய்வதற்கு இலட்சுமணனாகிய என்தம்பிபோன்றவராலன்றி, மற்றைச்சாமானியமானவரால் முடியுமோ? முடியாதென்றபடி. இவ்விஷயத்தைநீயறியவில்லைபோற் காண்கின்றதென்றான் இராமனென்க. இனி, இச்செய்யுட்கு ஒருநீருடன்மற்றொருநீர் எதிர்த்துக் கூடாமல் நிற்குமோ? அதுபோலத்தருமத்துடன் தருமம்சேரும். இந்தப்பெருந்துஷ்டருடன் நாம் தேவர்கட்காகப் போர்புரிய வந்தது அந்தத்தருமத்தைத் துணைபற்றியேயல்லாமல் வேறோருதவியினாலன்று என்று கருத்து விரித்தாருமுளர். பி-ம்:-[1]நிற்கினுமே, நிற்கொணுமேற். [2]வீரைக். [3]வெருஉம். [4]நான். [5]நீயது, நீயும். [6]அயர்த்தனையோ. (கஎடுக)

அச. சிவனல்லனெனிற்றிரு வின்பெருமான்
அவனல்லனெனிற்புவி தந்தருளுந்
தவனல்லனெனிற்றனி யேவலியோன்
இவனல்லனெனிற்பிற ரி[1]யாருளரோ.

(இ - ள்.) (அவ்வதிகாயனைவெல்வதற்கு உரியவன்), சிவன்: அவனல்லாவிட்டால், திருவுக்குத்தலைவனாகிய திருமால்; அவனல்லாவிட்டால், பூமியைப் படைத்தவனான தவமுடையபிரமதேவன்: அவனல்லாவிட்டால் தனியே வலியுள்ளவனான இந்தஇலட்சுமணன்: (இவனும்) அல்லாவிட்டால் பிறர் எவர் தாம் உளர்? (எ-று.)—பி-ம்:—[1]யாருளரே. (கஎசூ0)

அடு. ஒன்றுயிர வெள்ள மொருங்[1]குளவாம்
[2]வன்றுணையர் வந்து [3]வளைந்தவெலாங்
கொன்றுனிவ னல்லது [4]கொண்டுடனே
நின்றார்பிற [5]ரின்மை நினைந்திலையோ.

(இ - ள்.) ஓராயிரவெள்ளமாக ஒருங்கேயுள்ளவாகிய வலியசேனைவீரர்களாய்(கும்பகர்ணனுடனே)வந்து வளைந்த எல்லாரையும் கொன்றவன் இவனேயல்லாமல்(எதிர்த்து)இவனுக்குத் துணையாக நின்றவர் பிறரில்லாமையை

நினைத்தில்லாய் போலும்; (எ - று.)—பி - ம்:—1உளதாம். 2வன்றானையின், வன்றானைகள். 3மலைந்த. 4கொன்றுடனே. 5உண்மைநினைந்தனையோ. (கஎசுக)

அசு. கொல்வானு மிவன்1கொடி யோரையெலாம்
வெல்வானு மிவன்2னடல் விண்டுவென
ஒல்வானு மிவன்றுட னேயொருநீ
செல்வாயென வேவுதல் செய்தனனால்.

(இ - ள்.) கொடியாரையெல்லாம் கொல்லப்போகின்றவனும் இவனே; (அங்ஙனம் கொன்று)வெற்றியையடையப்போகின்றவனும் இவனே;வலிமை பொருந்திய விட்டுணுபோல எதிர்த்துப்பொருபவனும் இவனே; (ஆகையால்), ஒப்பற்றநீ விரைவாகச் செல்வாய் என்று (அந்தவிபீஷணனை ஸ்ரீராமன்) ஏவினன்; (எ - று.)—பி-ம்:—1கொடியோனை. 2முதல். (கஎசுஉ)

அஎ.—இராமபிரானை வணங்கிவிட்டு இலட்சுமணன் போர்புரியச் செல்லுதல்.

அக்காலையி லக்குவ னரியனை
முக்காலும் வலங்கொடு மூதுணர்வின்
1மிக்கானடல் வீடணன் மெய்தொடரப்
புக்கானவன் வந்து புகுந்தகளம்.

(இ - ள்.) அப்போது இலட்சுமணன் ஸ்ரீராமபிரானை மும்முறையாக வலம்வந்து பேருணர்வுமிக்கவனும் வலிமைபொருந்திய விபீஷணன் தன்னுடன்தொடர, அவ்வதிகாயன் புக்ககளத்திலே போய்ப் புகுந்தான்; (எ - று.) பெருமாளுக்குத் தாம் சேஷமாயிருப்பதையும்,பெருமாள்சியமனமே தமக்கு உத்தாரகமென்பதனையும், தம்முடையபாரதந்திரியசொரூபத்தையும் பிரகாசப்படுத்தப் பெரியபெருமாளாகிய தமதுஆசாரியரை வாசிககாயிக மாநஸிகமாகிய மூன்றுபிரகாரத்தாலும் தண்டஞ்சமர்ப்பித்தார் இளையபெருமாளென்று முன்னிரண்டடிகட்குக் கருத்து விரித்துரைப்பர். பி - ம்:—1மிக்கான்மதி, மிக்கானெடு. (கஎசுஙு)

அஅ.—இருசேனையும் கைகலத்தல்.

சேனைக்கடல் சென்றது 1தென்கடல்மேல்
ஏனைக்கடல் வந்த 2தெழுந்ததென
ஆனைக்கடல் தேர்ப்பரி யாள்மிடையுந்
தானைக்கட லோடு தலைப்படலும்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) தென்கடலின்மீது ஏனைக்கடல் வந்து பொங்கியெழுந்ததென்னும்படி, (இலட்சுமணனுடன்) சென்றதாகிய (வானர)சேனைக்கடல்,ஆனைத்தொகுதியும் தேர் பரி ஆட்கள்இவை நிறைந்த (இராக்கத) சேனைக்கடலோடு (போர்க்கு) யத்தனித்தலும்;—(எ - று.)—'விரிந்ததூளி விசும்பையுங்கடந்தது' என அடுத்த கவியோடு முடியும். பி-ம்:—1திண். 2எழுந்த. (கஎசுச)

வேறு.

அகூ.—அப்போது விசும்பில் தூளிபரத்தல்.

பசும்படு குருதியிற் பண்டு சேறுபட்டு
[1]அசும்புற வுருகிய வுலக [2]மார்த்தெழக்
குசும்பையி [3]னறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையுங் [4]கடந்தது விரிந்த தூளியே.

(இ - ள்.) பச்சையிரத்தத்தினால் நீர்க்கசிவுபொருந்தியதனால் முன்பு சேறுபட்டுக்குழைந்த இரணகளத்தில் (இப்போதுசேனைகள்) ஆரவாரித்துக் கொண்டு எழுதலால் விரிந்ததூளி,—குசும்பையென்றநறுமலரின் சுண்ணத் தொகுதிபோலவானத்தையுங் கடந்தது; (எ - று.)—உலகம் - இங்கு ரணக ளம். பி - ம்:—1 அசும்பற. 2ஆர்ப்பெழக். 3 நறு. 4கடந்தன. (கஎசுரு)

கூ௦.—பலவகையோசை.

தாமிடித் தெழும்பணை முழக்குஞ் சங்கினம்
ஆமிடிக் குமுறலு மார்ப்பி னோதையும்
ஏமுடைக் கொடுஞ்சிலை [1]யிடிப்பு மஞ்சித்தம்
வாய்[2]மடித் தொடுங்கின மகரவேலையே.

(இ-ள்.) தாம் அடிக்கப்பட்டு (எங்கும்)பரவுகின்ற பறைகளினொலியும், சங்கினத்தினின்று தோன்றுகின்ற இடிக் குமுறலும், (வீரர்கள்) ஆரவாரித் தலாலானஓசையும்,ஏமமாக [பாதுகாவலாக]க் கொள்கின்றகொடிய வில்லின் (நாணியைத் தெறித்தலாற் றோன்றுகின்ற) இடிப்பும் (ஆகியஇவற்றிற்கு) அஞ்சி, மகரங்களைக்கொண்ட கடல்,தம்வாயைமடித்துக்கொண்டு ஒடுங்கின; (எ - று.)—அப்போர்க்களத்தில்தோன்றிய ஓசைகள் கடலினொலியினு மிக் கிருந்தனஎன்க: தொடர்புயர்வுநவிற்சியணி. பி - ம்:—1 இடியுமஞ்சித்தம், இடிக்குமெஞ்சித்தன், எதியுமஞ்சித்தன். 2மடுத்து. (கஎசுசு)

கூக.—இனி அரக்கவானரர்கட்குக் கைகலந்துநடந்தபோர் பத்துக்கவிகளிற் கூறப்படும்.

உலைதொறுங் குருதிநீ ரருவி [1]யொத்துக
இலைதுறு மரமெனக் கொடிக [2]ளிற்றுக
மலைதொறும் [3]பாய்ந்தென [4]மான யானையின்
தலைதொறும் [5]பாய்ந்தன குரங்கு தாவியே.

(இ - ள்.) (அப்போது அரக்கர்கள்) அழியும்போதெல்லாம் (அவர்க ளுடலினின்று) இரத்தநீர் அருவிநீரையொத்து வெளிப்படுகையில், இலை நெருங்கிய மரம்போலத் (தோன்றுதற்குக்காரணமான துவசங்கள் (தண்டத் தினின்று) அற்றுவிழுந்துகொண்டிருக்க, குரங்குகள் மலைதொறும் பாய்ந்தாற் போலச் சினங்கொண்ட யானைகளின்தலைமீது தாவிப்பாய்ந்தன; (எ - று.)

இங்கு அரக்கரென்றது-அதிகாயனுடைய யானைச்சேனையிற் பாகரா யிருந்தவர்களைக் காட்டும். காட்டவே, யானைமீதிருந்த பாகர் அழியுந்தோறும் இரத்தத்தைக் கக்கியது - யானைமீதிருந்துபெருகுவது மலையிலிருந்துசெந்நிற

வருவிநீர்பெருகுவதுபோலவும்,யானைகளின்மீது பிடிக்கப்பட்டிருந்த கொடிச்சீலைகள் தண்டத்தினின்று இற்றுவீழ்ந்தது-மலைமீதுள்ளமரத்திலிருந்து இலை உதிர்வதுபோலவுந்தோன்ற, யானைகள்மீது வானரம்பாய்ந்தது - மலைமீது பாய்ந்ததை யொத்திருந்ததென்றார்: தற்குறிப்பேற்றவுவமையணி. பி-ம்:— 1ஓடுவ.2இற்றன.3படர்ந்தன,பரந்தன,பாய்ந்தன.4மானை.5பரந்தன. (கஎகூஎ)

கூ உ. கிட்டின 1கிளைநெடுங் 2கோட்ட 3கிழுகு
மட்டின 4வருவியின் 5மதத்த வானரம்
விட்டன நெடுவரை 6வேழம் வேழத்தை
முட்டின 7வொத்தன முகத்தின் வீழ்வன.

(இ-ள்.) பொருந்திய கிளைகளினாலே நீண்ட தந்தங்களைப்பெற்றனவும், கிழேசிந்துகின்ற தேன்கூட்டங்களாகிய அருவியினால் மதத்தைப்பெற்றனவுமாகி, வானரங்கள் (அரக்கரின் யானைப்படைமீது) எறிந்தனவான பெரிய மலைகள்,—வேழம் வேழத்தை முட்டினவொத்தனவாய்(ப் போர்)முகத்தில் வீழ்வனவாயின; (எ-று.)—உருவகத்தை யங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி: மலைக்குக் கோடும் மதமும் கூறியவாறு காண்க. மட்டுஇனம் - தேன்கூட்டம். பி-ம்:—1கிளர். 2கோட்டம், கோடு. 3கிழுக. 4அரும்பின. 5மத்த. 6வெம்மை. 7போன்றன. (கஎகூஅ)

கூ௩. இடித்தன வுறுக்கின விறுக்கி 1யேய்ந்தன
தடித்தன வெயிற்றினாற் றலைகள் சந்துறக்
கடித்தன கவிக்குலங் கால்கண் மேற்படத்
துடித்தன குருதியிற் றுரக ராசியே.

(இ-ள்.) கவிக்குலம்,—(அரக்கரின்குதிரைகளைக் கைகளால்)இடித்தன; (சிலவற்றைக்) கோபித்தன; (சிலவற்றைக்) கெட்டியாகப்பிடித்தன; (சிலவற்றை) வெட்டின; (சிலவற்றைப்) பற்களினால் தலைகளின்சந்திகள் அறும்படி கடித்தன; (இவ்வாறு செய்ததனால்) குதிரைக்கூட்டங்கள்,— கால்கள் மேற்புறமாகத்தூக்கியவண்ணம் இரத்தவெள்ளத்தில் துடிப்பனவாயின; (எ-று.)— பி - ம்:—1எற்றின, ஏந்தின. (கஎகூகூ)

கூ௪. அடைந்தன கவிக்குல மெற்ற வற்றன
1குடைந்தெறி கால்பொரப் 2பூட்கைக் 3குப்பைகள்
4இடைந்தன 5முகிற்குல மிரிந்து 6சாய்ந்தென
உடைந்தன 7குலமருப் புகுத்த முத்தமே.

(இ-ள்.) அடைந்தனவான வானரக்கூட்டம் மோதுவதனால் (வலிமை) யற்றனவான யானைத்திரள்கள், குடைந்துகொண்டு வீசுகின்ற பெருங்காற்று மோதுவதனால் முகிற்குலம் இடைந்து நிலைகெட்டுச் சாய்ந்தாற்போல் அழிந்தன; (அவற்றின்) சிறந்த தந்தங்கள் முத்துக்களைச் சிந்தின; (எ - று.)— பி - ம்:—1குடைந்தன. 2பூபக், பூளைக், பூழைக். 3குப்பையின். 4இடைந்தென, மிடைந்தென. 5சூற்குலம், சூல்குலம். 6சாய்ந்தன. 7கரி, கரம், நகு.

கூ௫. 1தோல்படத் துதைந்தெழு வயிரத் 2தூணிகர்
கால்படக் கைபடக் கால பாசம்போல்

வால்படப் புரண்டனர் நிருதர் மற்றவர்
வேல்படப் புரண்டனர் கவியின் வீரரே.

(இ - ள்.) யானைகளும் இறக்கும்படி விரைந்தெழுகின்ற வயிரத்தூணை யொத்த (வானரர்களின்)கால்கள் படுவதாலும் கைகள்படுவதாலும் கால பாசம்போன்ற வால் படுவதாலும், நிருதர் புரண்டார்கள்; அந்நிருதரின் வேல் படுவதனால் கவியின்வீரர் புரண்டார்கள்; (எ - று.)—தோல் - யானை. மற்று- அசை. பி-ம்:—1தோலடைத்துறைந்தெழு, தோல்படப்புனைந்தெழு, தோல் படப்புனைந்தன, தோல்படத்துகைத்தெழு. 2தூணணி. (கஎஎக)

கூசா. [1]மரவமுஞ் [2]சிலையொடு மலையும் வாளெயிற்று
அரவமுங் கரிகளும் பரியு மல்லவும்
விரவின கவிக்குலம் வீச விம்மலால்
உரவருங் கானெனப் பொலிந்த தும்பரே.

(இ - ள்.) தொகுதியாய்க்கூடிய கவிக்குலம் (அரக்கரின்மீது), மரவம் கற்களோடுகூடிய மலை வாள்போற் கூரிய பற்களையுடைய பாம்புகள் யானை கள் குதிரைகள் என்றஇவற்றையும் இவைகளல்லாதனவற்றையும் வீசி யெறிய, (இவைகள்) மிக்கதனால்,—மேலிடமானது,வலிமைபொருந்திய காடு போலவிளங்கிற்று; (எ - று.)—பி-ம்:—1மரனொடுஞ். 2சிலைகளும். (கஎஎஉ)

கூஎ. தடவரை [1]கவிக்குலத் தலைவர் தாங்கின
அடல்வலி நிருதர்தம் மணிகராசிமேல்
விடவிட விசும்பிடை மிடைந்து [2]வீழ்வன
[3]படர்கட லினமழை படிவ [4]போன்றவே.

(இ - ள்.) கவிக்குலத்தலைவர் (தாம்) தாங்கினவான பெரிய மலைகளை மிக்கவலிமையையுடைய அரக்கரின் சேனைத்தொகுதியின்மீது விடுந்தோறும், (அவைகள்)---ஆகாயத்தில் நெருங்கி(க் கடலில்)வீழ்வானவாகி, பரவிய கட லில் தொகுதியான மேகக்கூட்டங்கள் படிவனவற்றை யொத்தன;(எ-று.)— தற்குறிப்பேற்றவணி. அடல்வலி - ஒரு பொருட்பன்மொழி. பி-ம்:—1கவிக் குலத்தரசர். 2வீழ்ந்தன. 3படர்கலின் மழையென. 4போன்றதே. (கஎஎங)

கூஅ. இழுக்கின [1]ரடிகளி னிங்கு [2]மங்குமா
மழுக்களு மயில்களும் [3]வாளுந் தோள்களும்
முழுக்கின [4]ருழுககினர் யூரி [5]யாக்கையை
[6]ஒழுக்கினர் [7]நிருதரை யுதிர வாற்றினே.

(இ - ள்.) இங்குமங்குமாக (ஓடி) கால்கள் வழுக்கிவிழுந்தவரான நிரு தரை, (வானரர்கள், அவர்களின்) மழுக்களும் அயில்களும் வாளும்(இவற்றை த்தாங்கிய)தோள்களும் என்றவற்றை முழுகச்செய்து,(அவர்களின்)வலியயாக் கையைக் கலக்கி, உதிரவாற்றிலே செலுத்தினர்; (எ - று.)—இழுக்கினரான நிருதரை ஒழுக்கினரென்க. பி - ம்:—1அடிகணின்று. 2அங்குமாய். 3வாழுந். 4முழுக்கினர். 5யானையை, 6ஒழுக்கின. 7நிருதர்தம். (கஎஎச)

கூகூ. மிடலுடைக் [1]கவிக்குலங் குருதி வெள்ளநீர்
இடையிடை நீக்கின [2]விளையந்த யானையின்

திடரிடைச் சென்றவை [3]யொழுக்கச் சேர்ந்தன
கடலிடைப் புக்கன கரையுங் காண்கில.

(இ - ள்.) வலிமையுள்ள வானரக்கூட்டம்,---இரத்தநீர்வெள்ளத்தில் இடையிடையிலே நீந்தினவாய், (அங்கு விழுந்து) கிடக்கின்ற யானையாகிய திடரிற் சென்றவை, வெள்ளத்தாலிழுக்கப்பட்டுச்செல்லச் சேர்ந்தனவாகிக் கடலிடையேபுக்குக் கரைகாணமாட்டாதனவாயின; (எ - று.)—பி - ம்:— [1]கவிக்குலக். [2]எய்த, எய்த்த. [3]ஒழுக்கி, ஒழுகி. (கஎஎ௫)

கூ00. கால்பிடித் தீர்த்திழி குருதிக் [1]கண்ணகட்
சேல்பிடித் தெழுதிரை யாற்றிற் றிண்ணெடுங்
கோல்[2]பிடித் தொழுகுறு குருடர் கூட்டம்போல்
வால்பிடித் தொழுகின [3]கவியின் மாலையே.

(இ - ள்.) வானரத் தொகுதிகள்,—காலைப்பிடித்து இழுத்துக்கொண்டு பெருகுகின்ற இரத்தவெள்ளத்தினிடத்தனவாகி, கண்ணையொக்கின்ற சேல் மீனைக்கொண்டெழுகின்ற அலைகளையுடைய யாற்றில் வலிய நீண்ட கோலைப் பிடித்துக்கொண்டு செல்லுகின்ற குருடர்கூட்டம்போல, (யானைகளின்) வாலைப்பிடித்துக்கொண்டு சென்றன; (எ - று.)—இச்செய்யுள், சிலபிரதியில் இல்லை. வால் பிடித்து - ஒருவர்வாலைஒருவர்பிடித்துஎன்பாரு முளர். கட்சேல் - உவமத்தொகை. பி-ம்:—[1]கண்ணகன். [2]பிடித்தொழுகிய, பிடித்தெழுகுறு. [3]குரங்கின். (கஎஎசு)

கூ0க.—கவிக்குலம் வலிதோற்று ஓடுதல்.

பாய்ந்தது நிருதர்தம் பரவை பன்முறை
காய்ந்தது கடும்படை [1]கலக்கிக் கைதொறுந்
தேய்ந்தது சிதைந்தது சிந்திச் சேணுறச்
சாய்ந்தது [2]தகைப்பெருங் கவியின் றானையே.

(இ - ள்.) அரக்கவீரர்களின் கடல், பன்முறைபாய்ந்து கொடிய (வானரப்) படையைக் கலக்கிக் கோபித்தது; (அப்போது) தகுதியுள்ள பெரிய வானரப்படை,---அணிதோறும்(வலிமை)தேயப்பெற்றதாய்ச்சிதறிச்சிதைந்ததாகி வெகுதூரத்திற்பொருந்தக் கெட்டோடிற்று; (எ-று.)

கடும்படை கலக்கி - (அரக்கர் தாம் கொண்ட) கொடிய படைக்கலங்களாற் கலங்கச் செய்து என்றும், சேணுறச்சாய்ந்தது - வானத்தையடையுமாறு மடிந்தது என்றுமாம். பி - ம்:—[1]விலக்கி. [2]தகைப்பரும். (கஎஎஎ)

கூ0உ.---ஓடும் வானரப்படையை 'அஞ்சவேண்டா' என்று சொல்லி
இலக்குமணன் வில்லின்நாணியை ஒலிப்பித்தல்.

அத்துணை யிலக்குவ னஞ்ச லஞ்சலென் று
எத்துணை மொழிகளு மியம்பி [1]யேற்றினன்
கைத்துணை வில்லினைக் [2]காலன் வாழ்வினை
[3]மொய்த்துணை [4]நாணினை முழங்கத் தாக்கினன்.

(இ - ள்.) அவ்வேளையில், இலட்சுமணன்,---'அஞ்சற்க, அஞ்சற்க' என்று எத்துணையோ (தேறுதலுண்டாகுஞ்) சொற்களைச் சொல்லி (வானரசேனை

கட்கு) ஊக்கமுண்டாக்கி, யமன் வாழ்ச்சி பெறுதற்கு நெருங்கிய துணையாய்(த் தன்) கைக்குத் துணையாயுள்ள [கையைவிட்டுநீங்காத] வில்லினை, நாணியை முழங்குமாறு தெறித்தான்; (எ - று.)

அஞ்சல்-வியங்கோள். உயிர்களைக்கொன்று தள்ளுதலால், இலக்குமணன் வில் காலன்வாழ்விற்குக் காரணமாம். இனி, வில்லினை, ஏற்றினன்-நாணேற்றினவனாய், காலன்வாழ்வினுக்கு மொய்த்துணையாக நாணினைத் தாக்கினானென்றுமாம். பி-ம்:—1ஏற்றதன், ஏற்றனன், ஏற்றத்தன். 2காலவாழ்வினை. 3மொய்த்துணர், மொய்த்தெழு. 4நாணொலி, ஞாணினை. (கஎஎஅ)

கஐகூ.—நாணொலியின் வருணனை.

நான்மறைந் தொளிப்பினு நுவன்ற பூதங்கள்
மேன்மறைந் தொளிப்பினும் விரிஞ்சன் 1வீயினுங்
கான்மறைந் 2தொளிப்பிலாக் கடையிற் 3கண்ணகல்
4நான்மறை யார்ப்பென நடந்த தவ்வொலி.

(இ - ள்.) சாஸ்திரங்களெல்லாம் மறைந்துபோய்ஒளித்துக்கொண்டாலும், சொல்லப்படுகின்ற ஐம்பெரும்பூதங்களும் (தமது)காரணமாகிய மூலப்பிரகிருதியில் லயிக்க(அதுவும்) புலனாகாதிருப்பினும், (படைத்தற்கடவுளாகிய) பிரமதேவனும் அழிந்திட்டாலும், யுகாந்தகாலத்தில் மறைந்தொளித்தலில்லாத இடமகன்ற நான்மறையின் ஆரவாரம்போல அவ்வொலி தோன்றி நடந்தது; (எ - று.)

யுகாந்தகாலத்தில் எல்லாப்பூதங்களும் அழிந்து பிரகிருதியில் இலயிக்க, அந்தப்பிரகிருதி பரம்பொருளுக்குத் திருமேனியாயமைய, அந்நிலையில் நித்தியங்களான வேதங்கள் அப்பரம்பொருளைப் பேரொலிபடத் துதித்துநிற்கு மென்க. இலட்சுமணன் வில்லையெடுத்து நாணொலியை யெழுப்பியவுடனே அரக்கரதுவீரம் இருந்த இடம் தெரியாமல் மறைந்திட, இலக்குமணனது நாணொலியே யெங்குஞ்சென்றதென உவமப்பொருத்தங் காண்க. தற்குறிப்பேற்றவுவமையணி. கான்மறைந்து, கால்-தமிழுபசருக்கம். பி - ம்:—1வீசினும். 2ஒளிப்பினும், ஒளிக்கிலாக். 3கண்ணுதல். 4தானடைந்தார்த்தென. (கஎஎகூ)

கஐச.—இதுமுதல் மூன்றுகவிகள் - இலக்குமணனப்புகள் செய்யுஞ் செயல்களைக் கூறும்.

1துரந்தன சுடுசரந் 2துரந்த தோன்றல
3கரந்தன நிருதர்தங் 4கரையில் 5யாக்கையின்
6நிரந்தர நெடும்பிணம் விசும்பி னெஞ்சுறப்
பரந்தன 7குருதியப் பள்ள 8வெள்ளத்தின்.

(இ - ள்.) (இலட்சுமணனாற்)சுடுசரங்கள் செலுத்தப்பட்டன;(அவ்வாறு) துரக்கப்பட்டவை (கண்ணுக்குத்) தெரியாமல் அரக்கருடைய அளவற்ற யாக்கையிலே மறைந்தன: (அப்போது) மிக்க (அரக்கப்) பிணங்கள் இடைவெளியில்லாமல் வானத்தின்நடுவிடத்திற் பொருந்த (அவ்வுடலினின்று வெளிப்

பட்ட) இரத்தங்கள் அந்தப்பள்ளமாகிய கடலிலே பரந்தன; (எ - று.)—
பி - ம்:—1துரந்தனன். 2துரந்தவொன்றல, துரந்ததொன்றல. 3கரந்தனன். 4கடையில். 5ஆக்கைகள். 6சிறந்தன. 7குருதியிற், குருதியம். 8வெள்ளத்தே.()

கoரு. யானையின் கரந்1துரந் திரத வீரர்தம்
வானுயர் முடித்தலை தடிந்து வாசியின்
கானிரை யறுத்துவெங் 2கறைக்கண் மொய்ம்பரை
ஊனுடை யுடல்பிளந் தோடு மம்புகள்.

(இ - ள்.) (இலட்சுமணன் விடுத்த அந்த) அம்புகள்,---யானையின் துதிக்கைகளை அப்பாற்படுத்தியும், இரதவீரரின் மிகவுயர்ந்த கிரீடமணிந்த தலைகளை வெட்டியும், குதிரைகளின் கால்தொகுதிகளை அறுத்தும், கொடிய இரத்தக்கண்ணுள்ள வீரர்களின் தசையைக் கொண்ட உடலைப் பிளந்தும் ஓடுவனவாயின: (எ - று.)---கறைக்கண் = குருதிக்கண். பி - ம்:—1துணிந்தெதிர்ந்த, துமித்தார்த்த, துமிந்தார்த்த. 2சனற்கண்முன்பரை, கறைக்கண்முன்பரை, கறைக்கணும்பலை, கரைக்கண்மொய்ம்பரை. (கஎஅக)

கoசு. வில்லிடை யறுத்துவே 1றுணித்து வீரர்தம்
எல்விடு கவசமு 2மார்பு 3மீர்த்தெறி
கல்லிடை 4யறுத்துமாக் கடிந்து 5தேரழீஇக்
6கொல்லிய வியானையைக் கொல்லுங் 7கூற்றினே.

(இ - ள்.) (பின்னும் அந்த அம்புகள்,—எதிரிகளான) வீரர்களின் விற்களை இடையிலே யறுத்தும், வேற்படைகளைத் துணித்தும், ஒளிவிடுகின்ற கவசமும் (அவற்றைப்பூண்ட)மார்பும் என்ற இவற்றை அறுத்தும், எறியப்படுகின்ற மலைகளை இடையிலே யறுத்தும், குதிரைகளைக் கடிந்தும், தேரையழித்தும், கொல்லுந்தன்மையுள்ள யானைகளை யமன்போலக்கொல்லுவனவாயின; (எ - று.)

சதுரங்கசேனைகளையும் இலட்சுமணன் விடுத்த அம்புகள் அழித்தமை இரண்டொட்டுக்களாற் கூறப்பட்டனவென்க. பி-ம்:—1துணித்த. 2ஆர்ப்பும். 3ஈர்ந்தெறி. 4நுறுக்கியாடடிந்து, நுறுக்கிமாத்தடிந்து. 5தேர்கழீஇக். 6கொல்லிய. 7கோல்களே, கூற்றென. (கஎஅஉ)

கoஎ.---இனி நான்குகவிகள் போரிற்பட்டவற்றின் வருணனையைத் தெரிவிக்கும்.

வெற்றிவெங் கரிகளின் 1வளைந்த வெண்மருப்பு
2அற்றெழு விசைகளி னும்ப 3ரண்மின
4முற்றுரு முப்பகற் றிங்கள் வெண்முளை
உற்றன விசும்பிடை பலவு 5மொத்தன.

(இ - ள்.) வெற்றிபொருந்திய கொடியயானைகளின் வளைந்த வெள்ளிய தந்தங்கள்,—அற்றெழுகின்ற விசைகளினால் வானத்தைச் சேர்ந்தனவாய், பூர்ணமாதலில்லாத இருதினையில் தோன்றும் வெள்ளிய பிறைச்சந்திரன் பலவும் வானத்தில்தோன்றியன ஒத்தன; (எ - று.)

வெண்மருப்பு - சுக்கிலபட்சத்துத் திருதியையில் தோன்றும் சந்திரனை யொக்கும் உவமையணி. 4முற்றரு முற்பகல் என்ற பாடத்துக்கு - ஸ்ருஷ்டித்தல் நிறைவேறாத ஆதிகாலத்திலென்க. இதுமுதல் ஐந்துகவிகள் ஒரு பிரதியில் இல்லை. பி-ம்:—1வளைந்த, 2அற்றது. 3அண்ணின, வானமீன். 4முற்றிருமுப்பதிற். 5ஒத்ததே. (கஎஅரு)

க௦அ. கண்டகர் நெடுந்தலை கனலுங் 1கண்ணன
துண்டவெண் 2பிறைத்துணை கவ்வித் தூக்கிய
குண்டலம் மீன்குலந் 3தழுவிக் கோண்மதி
மண்டலம் 4விழுந்தன போன்ற 5மண்ணினே.

(இ - ள்.) கனல்கின்ற [சீற்றந்தோன்றுகின்ற] கண்களையுடையனவான கொடியஅரக்கரின் நெடிய தலைகள்,—கண்டமாயுள்ள இரண்டு வெண்பிறைச் சந்திரனைக் கவ்விக்கொண்டு(காதில்)அணிந்துள்ள குண்டலங்களாகிய நட்சத்திரக்குழாங்களை உடன்சேர்த்துக்கொண்டு, கிரகங்களைக் கொண்ட மதிக்கத்தக்க (வான) மண்டலம் பூமியில் விழுந்தன போன்றன; (எ - று.)

இலட்சுமணனால் துணிக்கப்பட்டுப் பூமியிலே விழுந்த அரக்கரின் சிரங்கள் குண்டலங்கள் காதிற்றோன்றச் சினக்குறியாக உதட்டை எயிறுகளாற் கவ்வியவண்ணம் இருத்தலால், வானமண்டலமே பூமியில் விழுந்திட்டது போலு மெனக் குறித்தார்: தற்குறிப்பேற்றவணி. கனலுங் கண் செவ்வானம் போலு மென்னலாம். கோள்மதி மண்டலம் என்பதற்கு - ஒளியையுடைய சந்திரனைக் கொண்டதான மண்டல மென்றுகொண்டு, வானமண்டலத்தைக் காட்டு மெனினுமாம். தலைகள்பலஆதலால், வானமண்டலத்தைப் பன்மையாக 'விழுந்தன' என்றார். பி-ம்:—1கன்ணினை, கண்ணகன். 2பிறைத்துணி. 3தழுவக். 4வீழ்வன, விழுவன. 5மண்ணின்மேல், மண்ணின. (கஎஅச)

க௦கூ. கூர்மருப் பிணையன குறைந்த கையன
கார்மதக் 1கனவரை கவிழ்ந்து வீழ்வன
2போர்முகக் குருதியின் புணரி புக்கன
3பாரெடுக் குறுநெடும் பன்றி போன்றன.

(இ - ள்.) கூரிய இணைமருப்புக்களையுடையனவும் குறைந்தகையையுடையனவுமான மதங்கொண்ட கரியபெரியமலைபோன்றயானைகள் கவிழ்ந்து வீழ்பவை,—முனைமுகத்து இரத்தக்கடலிற் புக்கனவாய், (பிரளயக்கடலில் முழுகிய) பூமியையெடுக்கும் மஹாவராஹ மூர்த்தியையொத்தன; (எ - று)

கையற்றமை, நெடும்பன்றியை வடிவினலொத்தற்குக் காரணமாம். தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1கனக்கிரி, கனகரி. 2போர்முதற். 3பார்மிசையெடுக்குறும், பார்மிசையெடுப்புறும். (கஎஅரு)

கக௦. புண்ணுற வுயிருகும் புரவி பூட்டறக்
கண்ணகன் றேர்க்குல மறிந்த காட்சிய
1எண்ணுறு பெரும்பதம் வினையி னெஞ்சிட
மண்ணுற விண்ணின்வீழ் 2மானம் 3போன்றன.

(இ - ள்.) (அம்புதொளைத்த) புண்ணுற்றதனால் உயிரொழிந்த குதிரைகள் பூட்டியநிலையினின்று நீங்க, இடமகன்ற தேர்க்கூட்டங்கள்,---தலைகவிழ்ந்து வீழ்ந்தகாட்சியையுடையனவாய், மதிக்கத்தக்க பெரியபதவி [சுவர்க்காநுபவம்] நீங்க வினைப்பயனால் விண்ணினின்று மண்ணிற்பொருந்தவீழும் விமானங்களை யொத்தன; (எ - று.)

வினையினெஞ்சிட-புண்ணியங்குறைய எனினுமாம். நல்வினைப்பயனால் துறக்கத்தையடைந்து அங்குவிமானத்திற்சஞ்சரிப்பவர் அப்புண்ணியம்நீங்குகையில் விமானத்துடன் தறைப்பட, அந்தத்தறைப்பட்ட விமானத்தைப் போலும், அரக்கராற் போரிற்செலுத்தப்பட்டு இப்போதுமறிந்துகிடக்குந் தேர்த்தொகுதிக ளென்க;தற்குறிப்பேற்றவணி. உபரிசரவசுவென்பவன் நல்வினைநீங்க விமானத்தோடுபுவியில்வீழ்ந்திட்டசரிதை, இங்குக்கருதத்தக்கது. பி-ம்:---1விண்ணுறு. 2விமானம். 3போன்றதே. (கஎஅகூ)

கககூ.—இதுவும், அடுத்த கவியும் - கவந்தமாடுதலைப்பற்றிக் கூறும்.

1அடக்கருங் கவந்தநின் றாடு கின்றன
2விடற்கரும் வினையறச் சிந்தி 3மெய்யுயிர்
கடக்கருந் துறக்கமே கலந்த 4வாமெனா
உடற்பொறை யுவகையிற் 5குனிப்ப வொத்தன.

(இ - ள்.) (இலட்சுமணன்விடுத்த அம்புகள்) அட்டதனாற் கருகிறமுள்ள உடற்குறைகள் நின்றாடுபவை,—விடுதற்குமுடியாத இருவினைகள் அறும்படி (அவற்றை)யொழித்து(த் தம்)உடலிலிருந்த ஆன்மாக்கள் செல்லுதற்குஅரிய துறக்கத்தைச்சேர்ந்துவிட்டனவாமென்று கருதி உவகையினால் அவ்வுடற்பொறைகள் கூத்தாடுவதை யொத்தன; (எ - று.)

பலவாயிரவர்மடிந்தால், கவந்தம்தோன்றியாடுமென்பது, நூற்கொள்கை: "பேரொத்தவாயிரம்பேர்மடிந்தாற் பிறக்குங்கவந்தம், நேரொத்தவாடும்" என்றார்,பிள்ளைப்பெருமாளையங்காரும். இலட்சுமணன்புரிந்த போரில் அங்ஙனம் உடல் ஆடியதற்கு—தம்முயிர்கள் வினையில்நீங்கித் துறக்கம்புக்கன என்ற மகிழ்ச்சியினா லாடுவதாமென ஒருகாரணங் கற்பித்துக் கூறினர்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. உயிர்நீங்கின உடல் சுமையாக இருக்கு மாதலால், 'உடற்பொறை' என்றது. பி-ம்:---1அடற். 2இடர்ப்படர். 3எம்முயிர், வெவ்வுயிர். 4ஆறெனா. 5குளிப்பவொத்தன, குளித்ததொத்ததே, குனிப்பவொத்தவே. ()

ககஉ. 1ஆடுவ கவந்த2மொன் றொறெண் ணாயிரம்
வீடிய 3பொழுதெனும் பனுவன் 4மெய்யதேற்
கோடியின் 5மேலுள 6குனித்த 7கொற்றவன்
8பாடினி யொருவராற் 9பகரற் பாலதோ.

(இ-ள்.)பதினாலாயிரம்பேர் மடிந்தபோது ஒருகவந்தம்ஆடுவதாகுமென்ற நூற்கொள்கை மெய்யாயிருக்குமானால், (அப்போரில்) ஆடிய கவந்தங்கள், கோடியினும்மேலுள்ளன; இனி, வெற்றிபொருந்திய இலட்சுமணனுடைய பெருமை ஒருவரால் சொல்லத்தக்கதோ? (எ - று.)---பி-ம்:---1ஆடின. 2ஓரா

றெண்ணாயிரம், எண்ணறெண்ணாயிரர், எண்ணறெண்ணாயிரம். [3]பொழுதினும் [4]மெய்யதே, மெய்யதோ. [5]மேலுளர். [6]பொருத. [7]கொற்றவர். [8]பாடியல்வு, பாடியல். [9]பகரப். (கஎஅஅ)

ககரு.—உதிரப்பெருக்கத்தின் வருணனை.

ஆனையின் குருதியு மரக்கர் [1]சோரியும்
ஏனைவெம் புரவியி [2]னுதிரத் திட்டமுங்
கானினு [3]மலையினும் [4]பரந்த [5]காற்புனல்
[6]வானயா றெனக் கடன்[7]மடுத்தவே.

(இ - ள்.) யானைகளின் இரத்தமும், அரக்கரின் இரத்தமும், மற்றுமுள்ள விரைவுள்ள குதிரைகளின் இரத்தப்பெருக்கமும், காட்டிலும் மலையிலும் பரந்த மழைக்கால்பொழிந்தநீரினால் தோன்றிய பெருமைபொருந்திய நதிபோலக் கடலிற் புகுந்தன; (எ - று.)

பொருட்பின்வருநிலையணி காண்க. பி-ம்:—[1]சேனையும். [2]உதிரவீட்டமும், இரத்தத்தீட்டமும். [3]வரையினும். [4]பொழிந்த. [5]கார்மழை, கார்புனல். [6]மானயாறு, வானையாறு. [7]மடுத்ததே. (கஎஅகூ)

ககசு.—மூன்றுசுவிகட்-படுகளச்சிறப்பு.

தாக்கிய சரங்களிற் றலைக ணீங்கிய
[1]ஆக்கைய புரசையோ [2]டணைந்த [3]தாளன
மேக்குய ரங்குசக் [4]கைய வெங்கரி
நூக்குவ கணிப்பில வரக்கர் நோன்பிணம்.

(இ-ள்.) தாக்கின அம்புகளால் தலைகள்நீங்கிய உடலையுடைய அரக்கரின் வலிய பிணம், யானைக்கழுத்திடுகயிற்றோடு சேர்ந்த கால்களையுடையனவும், மேலேதூக்கிய அங்குசத்தைக்கொண்ட கையையுடையனவுமாகிக் கொடிய யானைகளைச் செலுத்துவ எண்ணில்லாதன; (எ - று.)

பாகர்களுக்குத் தலையற்றபின்பும் யானைசெலுத்துந்தொழில் முன்தொடர்ச்சிபற்றி நிகழ்ந்த தென்க. பி-ம்:—[1]ஆக்கிய. [2]அளைந்த. [3]தாளின. [4]கையர்.

ககஎ. கோளுடைக் கணைபடப் [1]புரவிக் கூத்தன
தோளுடை நெடுந்தலை [2]துமிந்துந் [3]தீர்கில
ஆளுடைக் குறைத்தலை யதிர வாடுவ
வாளுடைத் தடக்கைய வாசி [4]மேலன.

(இ - ள்.) கொல்லுந்தன்மையுள்ள (இலட்சுமணனது) பாணம் பட்டதனால் தோளையுடைய [தோட்புறத்துக்குமேலுள்ள] நெடியதலைகள் வெட்டுண்டும், வாளையேந்தியபெரியகையையுடையனவும் குதிரையின்மேலுள்ளனவுமான வீரரின் தலையற்றவுடற்குறை குதிரைகளின் கூத்தைக்கொண்டனவாய் நீங்காது அதிர்ச்சியுண்டாக ஆடுவன; (எ - று.)

கூத்தாடுங்குதிரைகளின்மேலுள்ள தலையற்ற குதிரைவீரரினுடல்கள் அக்குதிரைக்கூத்திற்கு ஏற்ப ஆடுவனவாயின வென்றவாறு. வாசிமேலன ஆளுடைக்குறைத்தலை, புரவிக்கூத்தனவாய், தீர்கில அதிர வாடுவ என்க. குறைத்தலை-

குறைதலையடைந்ததலையையுடையது: கவந்தமெனப்படும். இச்செய்யுள் சில பிரதியில்"வைவன" (௧௧௬) என்றஅடுத்தசெய்யுளின்பின் காணப்படுகின்றது. பி-ம்:—1புரவிகூத்தன, பருவக்கூற்றனர், புரவிக்கூத்தயர். 2துமிந்து, துணிந்து. 3தீர்ந்தில. 4மேலென. (௧௭௧௧)

௧௧௬. வைவன முனிவர்சொல் லனைய வாளிகள்
கொய்வன 1தலைகொளக் குறைத்த லைக்குழாங்
கைவளை வரி2சிலைக் கடுப்பிற் 3கைவிடா
எய்வன 4வெனைப்பல 5விரத வீரரே.

(இ - ள்.) சபிக்கின்ற முனிவரின் [சாபச]சொற்களையொத்த [தவறுமற் பயனைவிளைப்பனவான] அறுக்குந்தன்மையுள்ள (இலட்சுமணனுடைய)அம்புகள் தலைகளைக்கொள்ள, (பின்பும்) இரதவீரரின் உடற்குறைகளின்தொகுதி [கவந்தங்களின்கூட்டம்] கையினால்வளைக்கப்படுகின்ற கட்டமைந்தசிலையினின்றும் (முன்கொண்ட) வேகத்தைக் கைவிடாமல் (அம்பை) எய்பவை மிகப்பல; (எ - று.)—பி - ம்:—1தலைகளைக், தலைகடோள். 2சிலைகடுப்பிற், சிலைபிடித்த. 3கைவிடாது. 4எனப்பல. 5இரதமேலன, நிருதரீட்டமே. (௧௭௧௨)

௧௧௭.—அரக்கர் மாண்டமை.

தாதையைத் தம்முனைத் தம்பி யைத்தனிக்
1காதலைப் 2பேரனை மருக னைக்களத்து
ஊதையி னொருகணை யுருவ மாண்டனர்
சீதையென் 3றொருகொடுங் 4கூற்றந் 5தேடினார்.

(இ - ள்.) சீதையென்றுபேர்கொண்ட ஒருகொடியயமனைத் தேடிக்கொண்டவரான அரக்கர்கள்,—தமப்பனையும் தமையனையும் தம்பியையும் ஒப்பற்ற அன்பிற்குஇடனாகியபுதல்வனையும் பேரனையும் மருகனையும் போர்க்களத்திலே சண்டமாருதம்போன்ற(இலக்குமணனது)ஒருகணை யூடுருவிச்செல்ல,(தாமும்) மாண்டனர்; (எ-று.)—ஊதையினொருகணை-வாயவ்யாஸ்திரமென்பாருமுளர். பி-ம்:—1காதலன். 2பெயரனை. 3ஒருபெருங். 4கூற்றைத். 5தேடியே. (௧௭௧௩)

௧௧௮.—கழுதுகள் பரவியதன் வருணனை.

தூண்டருங் கணைபடத் 1துமிந்து துள்ளிய
தீண்டரு நெடுந்தலை தழுவிச் சேர்ந்தன
2பூண்டெழு கரதலம் பொறுக்க லாதன
ஆண்டலை நிகர்த்தன வெருவை யாடுவ.

(இ - ள்.) தூண்டுதல்வேண்டாத [இயற்கையாகவேமேன்மேற் பாயுந் தன்மையுள்ள] கணை படுதலால் துணிப்புண்டு துள்ளின தீண்டுதற்குஅரிய நெடியதலையைத் தழுவிச் சேர்ந்தனவாகிய கழுதுகள், (தாம்)கொண்டுஎழுந் தன்மையுள்ள கரதலத்தைப்பெறாதனவான ஆண்டலையென்னும் பறவையையொத்து (எங்கும்) சஞ்சரிக்கலாயின; (எ - று.)—நுந்துறிப்பேற்றவணி. எருவை-தலைவெளுத்து உடல்சிவந்துள்ள பருந்துவகையென்பாருமுளர். இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை. பி-ம்:—1துணிந்து. 2பூண்டன. (௧௭௧௪)

ககசு.—அரக்கர்பெருந்திரளாக இலட்சுமணனம்புகளாலிறத்தல்.

[1]ஆயிர வாயிர கோடி யாய்வருந்
தீயுமிழ் [2]நெடுங்கணை மனத்திற் செல்வன
பாய்வன [3]புகுவன நிருதர் பல்லுயிர்
[4]ஓய்வன நமன்றமர் கால்க [5]ளோயவே.

(இ - ள்.) பலஆயிரகோடிக்கணக்காய் (வில்லினின்று) வெளிவருவன வான தீயைக்கக்குகின்ற நெடியகணைகள் மனம்போலவிரைந்துசென்று பாய்வனவாய்(உடலிற்)புக,(அதனால்) அரக்கர்பலரின்உயிர்களும் நமன்தமர்களின் கால்களோயுமாறு ஒழிவனவாயின; (எ - று.)

இறந்தஉயிர்களை யெடுத்துக்கொண்டுசெல்லவேண்டியிருத்தலின்,நமன் றமர்கால்களும் ஓய்ச்சலையடைந்தனவென்றார். நமன்தமர்-யமபடர். விரைந்து செல்வதில், இலட்சுமணன் அம்புகட்கு மனம்உவமை. பி-ம்:—[1]ஆயிரமாயிர, ஆயிரமாயிரங். [2]கொடுங். [3]படுவன. [4]ஓய்வில. [5]ஓடியே, ஓய்வன. (கஎகூ)

க௨௦.—அரக்கரின்பிணங்கண்டு அமரர் தலைதுலுக்கலும்
பூமி முதுகுநெளிதலும்.

விளக்குவான் கணைகளால் விளிந்து மேருவைத்
துளக்குவா ருடற்பொறை துணிந்து [1]துள்ளுவார்
[2]இளக்குவா ரமரர்தஞ் [3]சிரத்தை யெண்முதுகு
உளுக்குவா ணிலமகள் பிணத்தி னோங்கலால்.

(இ - ள்.) மேருவையும் அசைக்கவல்ல [போராற்றல்படைத்த]வரான அரக்கர்கள் ஜ்வலிக்கின்ற சிறந்த (இலட்சுமணனுடைய)அம்புகளால் இறந்து உடலாகிய சுமை துணிக்கப்பட்டுத் துடிப்பவராயினர்; (அதுகண்டு) அமரர் தமது சிரத்தை யசைப்பாராயினர்; பிணமலையால் பூமிதேவி மதிக்கத்தக்க முதுகு நெளிவாளாயினள்; (எ - று.)

எவ்வளவுபாரத்தையுந்தாங்கவல்ல முதுகு நெளிபவளாயினள் பூமிதேவி யென்பார் 'எண்முதுகுளுக்குவாள் நிலமகள்' என்றார். இளக்குதல் அசைத்த லாதலை "வெளிவிளக்குங் களிறுபோல" என்ற இடத்துங்காண்க. பி-ம்:— [1]துன்னுவார், துன்னலால். [2]இளக்குவான். [3]சிரத்தையேன். (கஎகசு)

க௨க.—அப்போது தாருகனென்பவன் வந்து இலட்சுமணனுடன்
எதிர்த்தல்.

[1]தாருக னென்றுள னொருவன் [2]ஏறுநெடு
மேருவின் பெருமையா [3]னெரியின [4]வெம்மையான்
[5]போருவந் துழக்குவான் புகுந்து [6]தாங்கினான்
தேரினன் சிலையின னுமிழுந் தீயினன்.

(இ - ள்.) தான் நெடிய மேருமலைபோன்ற பெருந்தோற்ற முடைய வனும் தீப்போன்ற வெம்மையையுடையவனுமாகிய தாருகனென்று உள்ள வனான ஒருவன், போரை யுவந்து செய்யப் புகுந்து,—தேரின்மீதேறி வில் லைக் கையிலேந்தி, (கண்ணினின்று) நெருப்புப்பொறியைக் கக்குகின்றவனாய்

(அவ்விலக்குமணனுடன்)எதிர்ந்துநின்முன்;(எ - று.)—பி - ம்:—1தாருதன். 2தன்னெடு. 3எரியும். 4வெய்யவன், வெண்மையான். 5போருவந்தழல்கு வான், போரில் வந்தொழுகுவான். 6தாக்கினன். (களகஎ)

கஉஉ.—இலட்சுமணனுக்கும் தாருகனுக்குய் நடந்த போர்.

[1]துரந்தன [2]னெடுஞ்சர நெருப்பின் றோற்றத்த
பரந்தன [3]விசும்பிடை யொடுங்கப் பண்டுடை
வரந்தனின் வளர்வன வவற்றை [4]வள்ளலும்
கரந்தனன் கணைகளான் முனிவு காந்துவான்.

(இ - ள்.) முன்னே (தான்)படைத்துள்ள வரத்தினாலே மிகுவனவும் நெருப்பின் தோற்றத்தையுடையனவுமான நெடிய சரங்களை (அந்தத்தாரு கன்)விடுத்தான்;(அவை),விசும்பினிடமும் குறைந்திடும்படி(எங்கும்)பரந்தன; அவற்றை, இலட்சுமணனும், சினத்தினாற் கொதித்தவனாய்(த் தன்) கணை களால் ஒளிக்குமாறுசெய்தான்; (எ - று.)—பி-ம்:—1 துரந்தன. 2சுடு. 3விசும் பெலாம். 4வானவன். (களகஅ)

கஉங.—தாருகன் இலட்சுமணன்கணையால் இறத்தல்.

அண்ணறன் வடிக்கணை துணிப்ப [1]வற்றவன்
கண்ணக னெடுந்தலை விசையிற் காரென
விண்ணிடை [2]யார்த்தது விரைவின் [3]மெய்யுயிர்
உண்ணிய வந்தவெங் கூற்று முட்கவே.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனான இலட்சுமணனது கூரியகணைகள் விசையாகத் துண்டிக்க, அந்தத்தாருகனுடைய இடமகன்ற நெடியதலை,— அறுபட்டு விரைவாக அவ்வுடலிலுள்ள உயிரை யுண்ணுதற்குவந்த கொடிய யமனும் அஞ்சும்படி மேகம்போல வானத்தில்ஆரவாரித்தது; (எ - று.)— பி-ம்:—1அற்றன. 2ஆர்த்தன. 3வெவ்வுயிர். (களகக)

கஉச.—பின்பு காலன் முதலிய ஐவர் போரவருதல்.

[1]காலனுங் குலிசனுங் [2]காலசங்கனும்
மாலியு மருத்தனு [3]மருவு மைவருஞ்
[4]சூலமுங் கணிச்சியுங் கடிது [5]சுற்றினர்
[6]பாலமும் பாசமு மயிலும் [7]பற்றுவார்.

(இ - ள்.) (பின்பு), காலன் குலிசன் காலசங்கன் மாலி மருத்தன் (என்று) பெயர் பொருந்திய ஐவரும், சூலப்படையையும் மழுப்படையும் விரைந்து சுற்றுபவரும், பிண்டிபாலம் பாசாயுதம் அயில் என்னும் படைக் கலங்களைப் பற்றுபவரு மானார்கள்; (எ - று.)

ஐவரும் முறையே சூலம் முதலியவற்றைக் கைக்கொண்டா ரென்றே னும், ஒவ்வொருத்தரும் ஐம்படைகளைக் கைக்கொண்டாரென்றேனும் கொ ள்க. பி-ம்:—1காலனை. 2காலசங்கனும். 3மருவுவார்கடாஞ். 4பாலமும். 5பற்றி னர். 6சூலமும் பாசமும், சூலமுமாலமும். 7துவுவார், துவுவான், பற்றினர்.

கஉரு.—இலட்சுமணன் அவர்களைத் தலைதுணித்துச் சேனையைச் சிதறவடித்தல்.

அன்னவ ரெய்தன வெறிந்த வாயிரந்
துன்னரும் படைக்கலந் [1]துணித்துத் [2]தூவினன்
நன்னெடுந் [3]தலைகளைத் துணித்து நால்வகைப்
பன்னெடுந் தானையைப் பாற நூறினான்.

(இ - ள்.) அவர் எய்தனவும் வீசியனவுமான ஆயிரக்கணக்கான நெருங்குதற்குரிய படைக்கலங்களை (இலட்சுமணன் அம்புகளைத்) தூவினவனாய்த் துணித்து, நல்ல[வலிய]நெடிய (அவர்கள்) சிரங்களைத் துணித்து, நால்வகைப் பட்ட பலவான பெருஞ்சேனையைச் சிதறடித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]துணியத். [2]தூவின, தூவினர். [3]தலைகளுந் தடிந்து. (கஅ0௪)

கஉசு.—அப்போது அதிகாயன் சேனையோர் இலட்சுமணனை வளைந்துகொண்டு படைக்கலம் விடுதல்.

ஆண்டதி காயன்றன் சேனை [1]யாடவர்
[2]ஈண்டின மதகரி யேழெண் ணாயிரந்
தூண்டினர் மருங்குறச் சுற்றி னார்[3]தொகை
வேண்டிய படைக்கல [4]முறையின் [5]வீசுவார்.

(இ - ள்.) அப்போது அதிகாயனுடைய சேனைவீரர், நெருங்கின மதயானை எழுபத்தீராயிரத்தைத் தூண்டிப் பக்கத்திற்பொருந்த வளைந்து கொண்டவராய், தொகுதியாகிய(தாம்)வேண்டிய படைக்கலங்களை முறையே வீசுபவராயினர்; (எ - று.)—பி - ம்:—[1]ஆண்டவர், ஆண்டவை. [2]ஈண்டினர். [3]தொக. [4]மலையின், மழையின். [5]வீசினார். (கஅ0உ)

கஉஎ.—வளைந்தவர் வானரசேனையை யழித்தல்.

போக்கிலா [1]வகைப்புறம் வளைத்துப் பொங்கினார்
தாக்கினார் திசைதொறுந் தடக்கை மால்வரை
[2]நூக்கினார் [3]படைகளா னுறக்கி னார்குழம்பு
ஆக்கினார் கவிகடங் குழுவை [4]யார்ப்பினார்.

(இ - ள்.) வானரர்கள் தப்பிப்போகமுடியாதவகையிற் பக்கமெல்லாம் வளைத்துச்சீறினவராய்,(அதிகாயன் சேனையோர்),தாக்கித் திக்குக்கள்தோறும் பெரியகைகளையுடைய பெருமலைபோன்ற யானைகளைச் செலுத்தினார்கள்: (அன்றியும்), படைக்கலங்களால் நுறுக்கிக் குரங்குகளின் கூட்டத்தைக் குழம்பாக்கி ஆரவாரஞ்செய்பவரானார்கள்; (எ று.)—பி-ம்:—[1]வகையுற. [2]தூக்கினார். [3]படைகளை, படைக்கலம். [4]ஆர்ப்பினால். (கஅ0௩)

கஉஅ.—வானரர்க்கும் அதிகாயன்சேனைவீரர்க்கும் நிகழ்ந்த போர்.

[1]எறிந்தன வெய்தன வெய்தி யொன்றொடொன்று
அறைந்தன வசனியின் [2]கிசையி னோசைகள்

நிறைந்தன மழையென நெருக்கி நிற்றலான்
மறைந்தன வுலகொடு திசையும் வானமும்.

(இ - ள்.) (வானரர்கள்) வீசியன வானமலைகளும் (அரக்கர்கள்) எய்தவையான அம்புகளும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டனவாய், இடிபோன்ற விசையினோடு திக்குக்களில் நிறைந்தனவாகி மேகக்குழாம்போல நெருக்கி நிற்றலால், உலகங்களுடனே திசையும் வானமும் மறைந்திட்டன; (எ - று.)— கீழ் 'மால்வரை தூக்கினர் படைகளால் நூறுக்கினர்' என்றபாட்டிற்கு ஏற்ப, 'எதிர்ந்தன எய்தன' என்றதென்பர், ஒருசாரார். 'விசையினசைகள் நிறைந்தன' என்பதை மழைக்கு அடைமொழியாகக்கொள்ளினுமாம். பி-ம்: —[1]வெதிர்ந்தன. [2]விசையவாரியின், விசைய வாசைகள். (கஅ0சு)

கூஉகூ. அப்படை யனைத்தையு மறுத்து வீழ்த்தவர்
துப்புடைத் [1]தடக்கைக டுணித்துச் சுற்றிய
முப்புடை மதமலைக் குலத்தை முட்டினான்
[2]எப்புடை மருங்கினு மெரியும் [3]வாளியான்.

(இ - ள்.) எரிகின்ற அம்புகளையுடையவனான இலட்சுமணன், —(எதிரிகள் வீசிய) அந்தப்படைக்கலங்களையெல்லாம் அறுத்துத்தள்ளி, அவருடைய வலிமையுடைய பெரியகைகளை யறுத்து, (தன்னை) வளைந்த மும்மதங்கொண்ட யானைக்கூட்டங்களை எல்லாப்பக்கவிடங்களிலும் தாக்கினான்: (எ - று.)—'எப்புடை மருங்கினும்' என்னும் அடைமொழியை 'எரியும்' என்பதனோடு இயைத்தலுமொன்று. மலை-ஆகுபெயர். பி-ம்:—[1]கைகடாள். [2]எப்படை. [3]வாளியால்.

வேறு.

கரு0.—இதுமுதல் எட்டுக்கவிகள்-இனி இலட்சுமணன் யானைப்படைகளை வென்றமை கூறும்.

[1]குன்றன மதகரி கொம்பொடு கரமற
வன்றலை துமிதர மஞ்சென மறிவன
[2]ஒன்றல வொருபது மொன்பது மொருகணை
[3]சென்றரி தரமழை [4]சிந்துவ மதமலை.

(இ-ள்.) (இலட்சுமணனுடைய) ஒருகணை சென்று கொய்வதனால், —குன்றையொத்த மதயானைகள் கொம்புகளுடனே கரங்களற வலியதலை துண்டித்துவிழ மேகம்போல் வீழ்ந்து கிடப்பவை, —ஒன்றல்லாதனவாய் ஒருபதும் ஒன்பதுமாகும்: மலைபோன்ற அவ்யானைகள் மதமழை சிந்துவன; (எ - று.)— மலை-உவமவாகுபெயராய், யானையைக்காட்டிற்று. முதலில் 'மதகரி' என வந்ததனால், யானையைக் காட்டும் மலை என்ற இச்சொல்-சுட்டுமாத்திரமாய் நின்றது. இக்குவருஞ்செய்யுட்களில் குற்றெழுத்துப்பயின்றிருத்தலால், இவை-குறுஞ்சீர்வண்ணம். பி-ம்:—[1]குன்றெனும். [2]ஒன்றின பஃதுமோரொருபதும், ஒன்றல வொருபதுமிருபதும், ஒன்றென வொருபது மொன்பதும். [3]சென்றெரிதர, சென்றனசரம், சென்றெதிர்தா. [4]சிந்தின. (கஅ0சு)

௧௬௧. ஒருதொடை [1]விடுவன வுருமுறழ் கணைபட
இருதுடை புரசையொ [2]டிறுபவ ரெறிபடை
விருதுடை நிருதர்கண் மலையென விழுவர்கள்
[3]பொருதுடை வன[4]மத மழையன புகர்மலை.

(இ - ள்.) ஒரு தொடுப்பினில் விடப்படுவனவான இடியையொத்த கணைகள் படுவதனால், எறிகின்ற படைக்கலங்களையும் விருதுகளையுமுடைய அரக்கர்கள்,—(தமது) இருதுடைகளும் யானைக்கழுத்திடுகயிற்றோடு துண்டிக் கப்பட்டவராய், மலைபோல விழுபவராயினர்; மதம் மழையையொத்திருக்கப் பெற்ற விளங்குகின்ற மலைபோன்ற (அவரேறிய) யானைகள்,—பொருது (தாமும்)உயிர்குலைவனவாயின; (எ - று.)—பி-ம்:—[1]வருவன. [2]அறுபவர். [3]பொருதுடைசின. [4]மதமலையன, மதமழையென. (௧௮௦௭)

௧௬௨. பருமமு [1]முதுகிடு [2]படிலகையும் வலிபடர்
மருமமு [3]மழிபட நுழைவன வடிகணை
[4]உருமினும் வலியன [5]வுருள்வன திசைதிசை
கருமலை நிகர்வன [6]கதமலை கனல்வன.

(இ-ள்.) சீறுவனவாகிய சினங்கொண்ட யானைகள்,—(தமது) கல்லணையும் முதுகிலிடப்பட்டஅம்பாரியும் வலிமைபொருந்திய மருமத்தானமும் அழிபடும்படி இடியைக்காட்டிலும் வலியனவான கூரியகணைகள் நுழையப்பெற்றனவாகித், திக்குக்கள்தோறும்உருண்டு, கருநிறமுள்ளமலையை நிகர்த்தன.

கதமலையென்பது-அடையடுத்த உவமவாகுபெயராய், யானையையுணர்த்திற்று. வலிபடர்படிகையும்என எடுத்து-(தவிசை) வலிமையுடன் கட்டிய படிந்த இறுக்குவாரும் என உரைப்பர் ஒருசாரார். பி-ம்:—[1]முதுகிடை. [2]படிவை. [3]வழிபட. [4]உருமெனும், உருமென. [5]உருவின. [6]களிமலைகனல்வன, களியுடை மதமழை, தனிமலைகனல்வன. (௧௮௦௮)

௧௬௩. இறுவன [1]கொடியவை [2]யெரிவன விடையிடை
துறுவன சுடுகணை துணிவன மதகரி
அறுவன வவையவை கடவினர் [3]தடிதலை
வெறுமைகள் கெடுவன விழிகுழி கழுதுகள்.

(இ - ள்.) எரியுந்தன்மையுள்ளனவும் அவ்வவ்விடங்களிலே (இலக்கு எங்கேகிடைக்குமென்றுதேடி) நெருங்குகின்றனவுமான சுடுந்தன்மையுள்ள (இலக்குமணனெய்த) அம்புகளால் (தம்மீதுநாட்டிய) கொடிகள் இறுவனவாக,மதயானைகள், துணடுபட்டன; (அன்றியும்), அவ்வவ்யானைகளைத் தூண்டிச்செலுத்தினபாகரின் தடித்த தலைகளும் அறுபட்டன; (அதனால்) விழிகுழிந்தபேய்கள், (தாம் உணவின்றி) வெறுமையாயிருந்தநிலை கெடுவனவாயின; (எ-று.)—பி-ம்:—[1]கொடியன. [2]எறிவன. [3]அவரொடு, மதமலை, அமைதலை, அடிதலை, கடிதலை. (௧௮௦௯)

௧௬௪. மிடலொடு விடுகணை மழையினு [1]மிகையுள
படலொடு [2]முருமெறி பருவரை [3]நிலையன

உடலொடு [4]முருள்கரி யுதிரம தருகெழு
கடலொடு பொருதது கரியொடு கரியென.

(இ - ள்) வலிமையுடனே விடப்பட்ட கணைகள் மழையைவிட மிகுதியாகவுள்ளவை படுதலோடும் இடிவிழப்பெற்ற பருத்த மலையின் நிலையையடைந்தனவாய் உடலோடும் கீழுருண்டுவிழுந்த யானைகளின் உதிரமானது,- யானையோடு யானை பொருவதுபோல அச்சம்விளங்குகின்ற கடலொடு பொருதது; (எ - று.)

கடலுக்கு முன்னே ஒருகடல்போல யானைகளிடத்தினின்று பெருகிய இரத்தம் தோன்றலாயிற் றென்றபடி; தற்குறிப்பேற்றவணி. (பி-ம்:—[1]மிசையன, மிகுவன. [2]உருமுறழ். [3]நிரையன, நிலயென, நிரையென. [4]உருள்திரி யுரமதுவுருகெழு. (கஅகo)

கஅரு. மேலவர் [1]படுதலின் விடுமுறை யிலமிடல்
ஆலமு மசனியு [2]மனையன [3]வடுகிரி
மாலுறு [4]களியன மறுகின மதமழை
போல்வன [5]தமதம வெதிரெதிர் [6]பொருவன.

(இ - ள்.) மேலிருக்கும்பாகர் இறந்தகனால் முறைமையாகச்செலுத்தப்படுதல் இல்லாதனவும் [தம்முடைய விருப்பின்படி செல்வனவும்] வலிமை பொருந்திய ஆலகாலவிஷமும் இடியும் போன்றனவுமான [உக்கிரத்தையும் ஆரவாரத்தையும் கொண்டனவுமான]கொல்லுந்தன்மையுள்ளயானைகள்,மயக்கம் மிகுகின்ற மதக்களிப்பையுடையனவாகிக் கலங்கியனவாய், (தம்) மதம் மழைபோல்வனவாக(ஒன்றோடொன்று) தம்தமது எதிர்க்கெதிரே போர்செய்வனவாயின; (எ - று.)

பாகரற்றமையால் இன்னாரோடு பொருவதென்பதை யறியாமல் மதமிகுதியால் யானைகள் தம்மினத்து யானைகளுடனே பொருதன என்க.கிரி-ஆகுபெயர். பி-ம்:—[1]மடிதலின். [2]அனையவன். [3]விடுகரி. [4]கிரியினின், கரியினின். [5]தமதமது, மதகரி, தமதமர். [6]பொருதன. (கஅகக)

கஅசு. கால்சில துணிவன கரமறு வனகதழ்
வால்சில துணிவன வயிறுகள் வெளிபட
[1]நால்வன கு[2]டரன நகழ்வன [3]சிலவுரு
தோல்சில கணைபல சொரிவன [4]மழையென.

(இ - ள்.) மழையெனப் பலகணை(தம்மீது)சொரியப்பெற்றனவான சில யானைகள், கால துணிவன; கரம் அறுவன; சில, விரைவுள்ள வால் துணிவன; (சில) வயிறுகள் வெளிப்பட வெளித்தொங்குகின்றனவான குடலையுடையன; சில வளருந்தன்மையுள்ளதோல் வழுக்குண்டுபோவன; (எ-று.)— மழையெனக் கணைபல சொரிவன என்ற தொடரை 'சில' என்பவற்றோடெல்லாம் இயைக்க.சொரிவன-சொரியப்பட்டன:செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. [4]மழையன என்ற பாடத்திற்கு - சில யானைகள் வீரிடுதலால் மழையை யொத்தனவென்று பொருளுரைப்பர். (பி - ம்:—[1]நால்சில [2]குடர்சில, குடரின. [3]சிலசில, சில பொரு. [4]மழையின. (கஅகஉ)

கருஎ. முட்டின [1]முட்டற முரணுறு திசைநிலை
[2]எட்டினு மெட்டரு [3]நிலையன [4]வெவையவன்
விட்டன விட்டன விடுகணை படுதொறும்
பட்டன பட்டன [5]படர்மத கரிபல.

(இ - ள்.) (தாம்) மாறுபடுதலைப் பொருந்திய திசைநிலை யெட்டினும் (சென்று)முட்டியனவான(இலட்சுமணனுடைய அம்புகளால்) தாக்குதலின்றி எட்டுதற்குஅருமையான நிலையை யடைந்த யானைகள்எவை?[எவையும்இல்லை: யாவையும் இலட்சுமணனம்பால் மோதப்படுதலையடையவேயடைந்தன]; அவ்விலக்குமணன் பலமுறைவிட்டனவான எய்யப்படும் அம்புகள் படுந் தோறும் (எதிர்ந்து)வருகின்ற பலமதயானைகள் மிகவும் இறந்தன; (எ-று.)— [5]படர்பணைகுவிவன என்றபாடத்திற்கு, பணை-தந்தமென்க: பறையென்பாரு முளர். பி-ம்:—[1]முட்டின. [2]எட்டினவெட்டின,எட்டினுமெட்டற. [3]நிலையென, நிலையின. [4]எவையவர், எவையெவை, அவரவை, அவையவர், அவையவை. [5]படமதகரிபல, படுமதகரிபல, படர்பணைகுவையன. (கஅகரு)

கருஅ.—இதுமுதல் ஒன்பதுகவிகள்-மீண்டும் பகைவர் மதயானைப் படைகொண்டு எதிர்க்க, இலட்சுமணன் வென்றமையைக் கூறும்.

கருஅ. [1]அறுபதின் முதலிடை நாலொழி யாயிரம்
[2]இறுதிய மதகரி யிறுதலு மெரியுமிழ்
[3]தறுகணர் [4]தகையற [5]நிலையினர் சலமுறு
கறுவின [6]ரவனெதிர் கடவினர் கடலென.

(இ - ள்.) ஐம்பத்தாறாயிரம் என்ற கணக்குள்ள மதயானை இற்றிடலும், எரியைக்கக்குகின்ற அஞ்சாமையுள்ளவரும் நற்குணமற்றநிலைமையையுடைய வரும்கோபம்பொருந்திய கறுவைக்கொண்டவருமான அரக்கர்,அந்த இலக்கு மணனெதிரே கடலைப்போல(ச் சேனையை)ச் செலுத்தினார்கள்; (எ - று.)

அறுபதின்முதல் - அறுபது என்பதில், இடை - பின்வாங்கிய, நால் - நான்கு என்ற எண்ணை, ஒழி - ஒழித்த, ஆயிரம் - ஆயிரமென்ற எண்ணை, இறுதிய—இறுதியாகவுடைய,கரி: எனவே, ஐம்பத்தாறாயிரம்யானையாயிற்று. அறுபதின் முதலிடை - அறுபது என்ற முதல் தொகையில் எனினுமாம். பி - ம்:—[1]அறுபது முதலிடைநூறமை, அறுபதுமுதலிடைநூறவை. [2]இறுவிய. [3]தறுகணை. [4]தகைவரு. [5]நிலையன, நிலையென. [6]வரையெதிர், எதிரெதிர்.

கருகூ. எல்லையின் மதகரி [1]யிரவின தினநிகர்
செல்வன [2]முடிவில தெறுதொழின் [3]மறவனை
வில்லியை [4]யினிதுற [5]விடுகணை மழையினர்
கொல்லுதி யெனவெதிர் கடவினர் கொடியவர்.

(இ - ள்.) கொடியவரான இராக்கதர்கள்,—இனிதாக [எளிதாக]க் கணை களை மழையென்னுமாறு ஏவுபவராய், முடிவில்லாமல் அழிக்குந் தொழிலை மேற்கொண்ட வீரனும் வில்லாளியுமான இலட்சுமணனை நோக்கி, 'கொல்லு வாய், (பார்ப்போம்)' என்று சொல்லியவண்ணம் இரவின்கூட்டத்தை யொத்

துச்செல்வனவான எல்லையில்லாத மதயானைகளை எதிராகச்செலுத்தினர்; (எ - று.)—கொடியவர்.—இனிதுற விடுகணைமழையினராய், முடிவில தெறு தொழில்மறவனை வில்லியை'கொல்லுதி' என, இரவினதுஇனம்நிகர்செல்வன எல்லையில் மதகரியை எதிர்கடவினரென்க. பி-ம்:—[1]இமகிரிநிகர்வன, விரவினவினனிகர், எறுழ்வலிவிரைவொடு.[2]முடிவிலே.[3]மறவினை,மறமுறழ்.[4]இனியிது, இனிவிடு.[5]கணைமழையெனவெமைக், கணமழையெனவிமைக், விடுகணை மழையன, விடுகணைமழையெனர். (கஅகஙி)

கசுo. வந்தன மதகரி வளைதலின் மழைபொதி
செந்தனி யொருசுட ரென[1]மறை திறலவன்
இந்திர தனுவென வெழுசிலை [2]குனிவுழி
தந்தியி னெடுமழை சிதறின [3]தரையினில்.

(இ - ள்.) வந்தனவான மதயானைகள் வளைதலினால், மேகத்தால் மூடப்பெற்றுச் செந்நிறமுள்ள மிகவும்ஒப்பற்ற சூரியன்போன்று மறைக்கப்பெற்ற வல்லமையையுடையவனை இலட்சுமணன் இந்திரதனுசைப்போல (அம்பு) எழுகின்ற சிலையை வளைத்தபோதே, தரையினிடத்துப்போல அம்பின் நெடு மழைகள் யானையில் சிதறுவனவாயின; (எ - று.)—[3]சிந்தினஎன்றபாடங் கொண்டு - மழைத்துளிகள் சிந்துவதுபோலத் தரையில் யானைகள் சிந்தின என்றுஉரைப்பாருமுளர். தந்தியின் நெடுமழை சிதறின-யானைகளாகிய நெடிய மேகங்கள் சிதறினஎன்றலு முண்டு. பி-ம்:—[1]மலை. [2]குனிவழி, குனிதலும். [3]தரையின. [4]தரையன. (கஅகசு)

வேறு.

கசுக.[1]மையற்றழை செவி[2]முற்பொழி மழைபெற்றன மலையின்
மெய்பெற்றன [3]கடலொப்பன வெயிலுக்கன விழியின்
மொய்[4]பெற்றுயர் முதுகிற்றன முக[5]முக்கன [6]முரண்வெங்
கை[7]யற்றன மதமுற்றின [8]களியற்றில [9]கதமா.

(இ-ள்.) மதமயக்கத்தைக்கொண்டு தழைத்த (தஞ்) செவிமூலமாக (மத நீர்) மழைபொழியப்பெற்றனவும், மலைபோன்ற உடலைப்பெற்றனவும், கடல் போன்றனவும் [கறுத்த நிறத்தையுடையனவும்], கண்மூலமாக வெம்மையை வெளிப்படுத்துவனவுமான சீற்றங்கொண்ட யானைகள்,—வலிமைபெற்றுயர்ந்தமுதுகு இற்றனவும் முகம்சிந்தினவும் மாறுபடுகின்றகொடியகையற்றனவுமாயின: மதத்தினால்மிக்க களிப்புமாத்திரம் அறாதனவாயின; (எ - று.)

கதமா - கறவுள்ளமிருகம்: யானை: கறு வைத்திருத்தல், யானையின்தன்மையில் ஒன்று. 8கணிதத்தியல்என்றபாடத்துக்கு-கணத்துக்குக் கணம் மாறு மியல்புள்ள என்று பொருளுரைப்பர். பி - ம்:—[1]மையற்றன. [2]முப்பொழி. [3]கடலொப்பென. [4]பெற்றன. [5]அற்றன. [6]முரணும். [7]உக்கன. [8]கதமற்றில. களியற்றன, களியுற்றில. [9]களிமா. (கஅகஎ)

கசுஉ.உண்ணின்றலை [1]கடனீருக விறுதிக்கடை யுறுகால்
எண்ணின்றலை நிமிர்கின்றன விகல்வெங்கணை யிரணப்

பண்ணின்படர் 2தலையிற்பட 3மடிகின்றன 4பலவாம்
மண்ணின்றலை 5புருள்கின்றன 6மழையொத்துயர் மதமா.

(இ - ள்.) தன்னெல்லைக்குள்நின்று அலைவீசுகிற கடலின் நீர் (எல்லையினின்றுவெளிப்பட்டுப்) பெருகுமாறு யுகாந்தகாலத்தில் பெருங்காற்று (அளவுபட்ட எல்லையினின்று நிமிர்வதை) ஒப்ப அளவுபட்டஎல்லையினின்று கடந்துவருகின்றனவான (இலக்குமணனுடைய) வலிய வெவ்விய அம்புகள் பொன்னொலியன்ற அலங்காரத்தையுடைய பரவிய தலைகளிற் படுவதனால், மேகங்களை யொத்து ஓங்கிய மதயானைகள் பூமியிலுருள்கின்றனவாகி மடிகின்றவை பலவாம்; (எ - று.)

இல்பொருளுவமை. எண் என்பது-இலக்கணையால், அளவுஎன்றபொருளைக் காட்டிற்று. இரணம் - பொன். இரணப்பண்-போர்க்கு உரிய அலங்காரமுமாம்: இப்பொருளில் இரணம் - ரணமென்றவடசொல் இகரம் முன்வரப்பெற்றது. 6மழையொத்தன என்ற பாடத்துக்கு—மழையைப்போன்று கருநிறத்தோடு மதமழை பொழிந்தவண்ணம், மண்ணிற் புரண்டன என்பர். பி - ம்:—1அலைநீருக. 2தலையிற்படர். 3மடிகின்றனர். 4பலவாய். 5உருகின்றன, புகுகின்றன. (கஅகஅ)

கசுரு.பிறைபற்றிய வெனுநெற்றிய பிழையற்றன 1பிறழப்
பறையற்றமில் 2விசைபெற்றன 3பரியக்கிரி யமரர்க்கு
இறை4யற்றைய முனி5விற்படை யெறியப்6புடை யெழுபொற்
சிறையற்றன வென7விற்றன 8சினமுற்றிய 9மதமா.

(இ-ள்.) பறவைபோல்[பறந்து செல்கின்றனஎன்று சொல்லுமாறு]குற்றமில்லாத விரைவைப்பொருந்தியனவான சினமுற்றிய மதயானைகள்,--தவறுதலில்லாதனவான (இலட்சுமணனது) அர்த்தசந்திரபாணங்கள் விளங்குவதனாற் பிறைச்சந்திரன்கள் பற்றியுள்ளனவென்னுமாறு தோன்றுகின்ற நெற்றியையுடையனவாகி, தேவர்கட்குத்தலைவனான இந்திரன் அப்போதுகொண்ட சினத்துடனே (தன்) வச்சிராயுதத்தை வீசக் கிரிகள் (தம்) இருபக்கத்திலும் பொருந்திய அழகிய சிறையற்றுவீழ்ந்தாற்போல இரங்குமாறு உயிரொழிந்துகிடந்தன; (எ-று.)--பிழையற்றன-தவறுதலில்லாத அர்த்தசந்திர பாணங்கள். பறை-பறவை. அற்றம்-குற்றம். பரிய-இரக்கமுண்டாகுமாறு, இற்றனஎன்க. பி-ம்:—1பிறழாப் பறை, பிறழ்வன்றறை, பிறழாவறை. 2வசையற்றன. 3அரியக். 4பற்றிய. 5நற்படை. 6படை. 7அற்றன. 8எனமுற்றின, எனவற்றன, சிலமுற்றிய. 9சிலமா. (கஅகக)

கசுசு.கதிரொப்பன கணை1பட்டுள 2கதமற்றில 3கதழ்கார்
அதிரத்தனி 4யதிர்கைக்5கரி யளவற்றன 6வுளவா
7எதிர்பட்டனல் பொழியக்கிரி 8யிடறித்திசை யெழுகார்
உதிரத்தொடு 9மொழுகிக்கட னடுவுற்றவு முளவால்.

(இ - ள்.) யானைகள் சூரியனுக்குஒப்பான (இலட்சுமணனது) அம்புகள்பட்டுள்ளவை,--சினம்நீங்காதா, விரைகின்ற மேகம் இடிக்க [மேகம் இடிப்பது

போல]ஒப்பற்றுப் பேரொலிசெய்தலுடன் அளவற்றவை உள்ளனவாயிருக்க, எதிர்ப்பட்டு அனல்வெளிப்பட மலைகளில் இடறிவிழுந்து திக்குக்களிலெழுகின்ற மிக்கஇரத்த (வெள்ள)த்தோடும்போய்க் கடலினிடையிற்புகும் யானைகளும் உள்ளன; (எ - று.)

அளவற்ற யானைகள் கணைகள் தீண்டப்பெற்றும் சினம் பொங்க வீரிட்ட வண்ணம் இருக்க, சில யானைகள் கணைக்கு எதிர்ப்பட்டதனால் அக்கணையால் தாக்குண்டு அனல்பொழியத் தாங்கமாட்டாது மலையில்இடறிப்போய்க் கடலினிடைப்புக்கனவென்க. காருதிரம்-மிக்கஇரத்தம்: கருநிறத்தையடைந்த உதிரமுமாம்.பி-ம்:--1பட்டில,பட்டுடல்.2தரமற்றில.3கதழ்காய்.4திரள்கைக்,திரளக். 5கிரி.6அளவா,அளவாது, உளவால்.7எதிர்ப்பட்டன வொழியக், எதிர்பட்டன மொழியக், எதிர்பட்டன வொழியக். 8இவரித்திரை, இவறித்திரை. 9முழுகி.

கசரு.கண்ணின்றலை யயில்வெங்கணை [1]பட[2]நின்றன காணு
எண்ணின்றலை நிமிர்வெங்கத முதிர்கின்றன [3]வினமா
மண்ணின்றலை நெரியும்படி திரிகின்றன மலைபோல்
உண்ணின்றலை நிருதக்கட [4]லுலறிட்டன வுளவால்.

(இ - ள்.) கண்ணினிடத்துக் கூரியகொடிய அம்புகள் படநின்றன வாய்க் காணமுடியாதவாறு அளவுக்கடங்காது நிமிர்கின்ற கொடுங்கோபம் முதிரப் பெற்றுள்ளனவான இனமாகிய யானைகள்,—பூமியினிடம் நெரியும்படி திரிகின்றனவாய் (த்தம்முடைய)இடத்திலேயே மலைபோலநின்று[மாற்றுருள்ளவிடத்துக்குச் செல்லாமல்]நிருதராகிய அலைகொண்ட கடலையே வற்றச் செய்தனவு முள்ளன; (எ - று.)

வருத்தமும் கோபமும்மிக்கதனால் தமக்குஅகப்பட்ட நிருதக்கடலையே சிலமதயானைகள் உலறச்செய்தனவென்க. பி-ம்:—1படை. 2நின்றவை.3இகன்மா, இதண்மா. 4உழக்கிட்டவும், உழறிட்டன, உலறிட்டவும். (கஅஉக)

கசசு.ஓராயிர மயில்வெங்கணை யொருகால்விடு தொடையிற்
காராயிரம் விடுதாரையி னிமிர்கின்றன [1]கதுவுற்று
ஈராயிர மத[2]மால்கரி விழுகின்றன வினிமேல்
ஆராய்வதெ னவன்விற்றொழி லமரேசரு மறியார்.

(இ-ள்.) ஒருமுறைதொடுத்துவிடுகின்ற தொடுப்பினில் ஓராயிரங்கூரிய கொடியஅம்புகள் கருமேகங்கள் ஆயிரக்கணக்கான தாரைகள்பொழிகின்றனபோல் நிமிர்கின்றனவாய்க் கவ்வுவதனால், மதமயக்கங்கொண்ட ஈராயிரம்யானைகள் விழுகின்றன; அவ்விலக்குமணனது விற்றொழிலைத் தலைமைத்தேவர்களும் அறியமாட்டார்கள்; இனி, மேலேஆராய்ச்சிசெய்யவேண்டுவது என்(உள்ளது)? (எ-று.)---மால்-மயக்கம். பி-ம்:—1கதழ்வுற்று. 2மாகரி. (கஅஉஉ)

கசஎ.—அழிந்தயானையின் இரத்தப்பெருக்கு.

தேருந்தெறு கரியும்பொரு சின[1]மள்ளரும் வயவெம்
போரின்றலை யுகள்கின்றன புரவிக்குல மெவையும்
[2]பேருந்திசை [3]பெறுகின்றில [4]பணையின்பிணை மதவெங்
காரின்றரு குருதிப்பொரு [5]கடலின்றன் கடலா.

(இ - ள்.) தந்தங்களோடு மதம்பொருந்திய கொடிய கார்போன்ற யானைகளிருந்து பெருகுகின்ற குருதியினாலியன்றகடல் நின்றனவற்றைக் கடக்கமுடியாதனவாய்,(மற்றுமுள்ள)தேர்களும் அழிக்கவல்லயானைகளும் பொருகின்றசினம்மூண்ட வீரரும் குதிரைக்கூட்டம்எல்லாமும், வலியகொடியபோரினிடத்துப்புரள்வனவாய், பேர்ந்துசெல்லுந்திசையைப் பெறாவாயின; (எ-று.)---பணையின் மதம் பிணை காரென்க.பி-ம்:---[1]மன்னரும். [2]தேரும். [3]பெருகுந்திறல், பிறையின்றலே. [4]பிணையின்பணை. [5]கடலின்கரை. (கஅஉரு)

கசஅ.---இராவணன் மீண்டும் யானைச்சேனையை வாவிடுதல்.

நூறாயிர மதவெங்கரி யொருநாழிகை [1]நுவலக்
கூறாயின பயமுற்றொரு [2]குலைவாயின வுலகந்
தேறாதன [3]மலைநின்றன [4]தெரியாதன [5]சினமா
[6]வேறாயின வவையாவையு முடனேவர விட்டான்.

(இ-ள்.)வெவ்வியநூறாயிரம்மதயானைகள், ஒருநாழிகை(சென்றதென்று)சொல்லுமளவில் துண்டுதுண்டாகிப்பட்டன: உலகத்துயிர்கள், அச்சங்கொண்டு ஒப்பற்றநடுக்கமடைந்தன; (பின்னர் அதனையொற்றராலறிந்த இராவணன்),தேறாதனவும்[மதமயக்கங்கொண்டனவும்]மலைபோல்நின்றனவும்(பிறரொருவரும்) கண்டறியாதனவுமான சினம்பூண்ட யானைகள் வேறாயிருந்த அவையெல்லாவற்றையும் உடனேவருமாறு அனுப்பினான்; (எ - று.)---அதிகாயன் மற்றும்யானைகளை இலக்குமணன்பொருமிடத்துக்குச்செலவிட்டானென்பாருமுளர். பி-ம்:---[1]நுணுகிக். [2]கொலையாயின, குறைவாயின. [3]மலையென்றன, மலைகின்றன. [4]தெரியாவர. [5]சிலமா. [6]வேறாயுள. (கஅஉசு)

கசகூ.—யானைகளை இளையபெருமாளுக்கெதிரே வீரர்செலுத்துதல்.

ஒருகோடிய மதமால்கரி யுளவந்தன வுடன்முன்
பொருகோடியி லுயி[1]ருக்கன [2]வொழியப்பொழி மதயாறு
அருகோடுவ வரவுந்தின ரசனிப்[3]படி கணைகால்
இருகோடுடை [4]மதவெஞ்சிலை [5]யிளவாளரி யெதிரே.

(இ - ள்.) முன்பொருத போர்முனையில் உயிருக்கவையொழிய, உயிருள்ளனவாய்ஒருசேரவந்தனவான பொழிகின்ற மதயாறுகள் அருகேஓடப்பெற்ற பெரிய ஒருகோடிமதயானைகளை,இடிபோல அம்புகளைக் கக்குகின்ற இருமுனையையுடையவலிய கொடுஞ்சிலையைக்கொண்ட இளையபெருமாளுக்கு எதிரே வருமாறுதூண்டிச்செலுத்தினார்கள்;(எ - று.)--யானைவீரரென்றாற்போல எழுவாய்வருவிக்க. "மதவலியாகும்" என்பது தொல்காப்பியம். பி - ம்:---[1]உக்கின. [2]பொழியப். [3]படுகணையால். [4]மழை. [5]வய. (கஅஉஎ)

கருo.---இதுமுதல் ஆறுகவிகள்-இலக்குமணன் மீண்டும் யானைச்சேனையை யொழித்தமையைக் கூறும்.

உலகத்துள மலையெத்தனை யவையத்தனை யுடனே
[1]கொலநிற்பன பொருகிற்பன புடைசுற்றின குழுவாய்
அலகற்றன சினமுற்றிய வனலொப்பன வவையுந்
தலையற்றன சர[2]மற்றன தனி[3]விற்றொழி லதனால்.

(இ - ள்.) (அனுப்பியயானைகள்) உலகத்திலேயுள்ளனவான மலையெத்தனையோ, அவையத்தனையும் உடனே அழிக்குமாறு நிற்பவற்றை ஒப்பனவாகிக் கூட்டமாக (இலட்சுமணனது) பக்கத்திலே சுற்றின; கணக்கிறந்தனவும் சினம் முதிரப்பெற்றனவும் அனல்போன்றனவுமான அவ்யானைகள்யாவும், ஒப்பற்ற (அவ்விலக்குமணனது) விற்றொழிலால் தலையற்றனவும் கையற்றனவுமாயின; (எ - று.)---பொருதல்-ஒத்தல். பி-ம்:---1கொலை. 2இற்றின. 3விற்றொழிலவனால். (கஅஉகூ)

கருக. [1]நாலாயிர நவயோசனை நனிவன்றிசை யெவையும்
மாலாயின மதவெங்கரி திரிகின்றன வரலுந்
[2]தோலாயின வுலகெங்கணு மென[3]வஞ்சினர் துகளே
போலாயின வய[4]வானமு மாறுனது புவியே.

(இ - ள்.) முப்பத்தாறாயிர யோசனைதூரம் வலிய திசையெல்லாம் மதமயக்கங்கொண்ட வெவ்விய மதயானைகள் திரிகின்றவை மிகவும் வரலும், உலகமுழுதும் யானைகளேயாய்விட்டனவென்று (யாவரும்) அஞ்சினர்; வலிய வானமெல்லாம், துகள்போலாயின: பூமியோ, துகளற்றதாயிற்று; (எ-று.)

வானகம் மண்ணின்துகளாக, பூமி தூளியில்லாதவெறும்வெளி யாயிற்று என்ற இதில், மாற்றலணிகாண்க. நனி - மிகவும். பி-ம்:---1நாலாயிரமவை, நாலாயினநவ, நாலாயினவவை. 2தோலாயினது. 3அஞ்சின. 4வானரமின்றுயது, வானரமன்றுயது, வானகமாறுனது, வானமுமளறுனது. (கஅஉஎ)

கருஉ. கடை[1]கண்டில தலைகண்டில [2]கழுதின்திரள் [3]பிணமா
இடை[4]கண்டன மலை[5]கொண்டென வெழுகின்றன [6]திரையாற்
புடைகொண்டெறி குருதிக்கடல் புணர்கின்றன [7]பொறிவெம்
படைகொண்டிடை படர்கின்றன [8]மதயாறுகள் பலவால்.

(இ - ள்.) பேய்களின்கூட்டம், முடிவைக்காணுமலும் தொடங்குமிடத்தைக்காணுமலும் பிணமாய்விட்டயானைகளை இடையிற் கண்டு, மலைகளைத்தூக்கிக்கொண்டுசெல்வனபோல (அவ்யானைப்பிணங்களைத்) தூக்கிக்கொண்டுசெல்வனவாயின: (அன்றியும்), அலைகளினுற் பருத்தநிலையையடைந்து கொந்தளிக்கின்ற இரத்தக்கடலினிடையே தீப்பொறிபறக்கின்ற கொடியபடைகளையடித்துக்கொண்டு பரவுகின்ற மதயாறுகள்பல சேர்வனவாயின; (எ - று.)

இன்ன இடத்தில் ஆரம்பித்து இங்கு முடிவுபெறுகின்றதென்பதில்லாமல், யானையின் பிணத்திரள் எங்கும் நெருங்கிக்கிடந்ததென்பது 'கடைகண்டில தலைகண்டில' என்றதன் கருத்து. இனி, கடைகண்டிலதலைகண்டில என்பதற்கு - 'வாற்பக்கம் இது, தலைப்பக்கம் இது' என்று காணுதனவாய் என்று உரைப்பாருமுளர். பிணம்மா-பிணமாய்விட்ட மிருகம்: இங்கு, யானை. பி-ம்:---1கண்டன. 2கழுகின். 3பிணமாம், பிணமார். 4கொண்டன. 5கொண்டன, கண்டென. 6துறையால், துரையால். 7பொறிவெய். 8கறையாறுகள். (கஅஉஅ)

கருங. ஒற்றைச்சர மதனேடொரு கரிபட்டுக [1]வொளிர்வாய்
வெற்றிக்கணை யுருமொய்ப்பன வெயிலொப்பன வயில்போல்

வற்றக்கடல் சுடுகிற்பன மழையொப்பன பொழியுங்
கொற்றக்கரி பதினாயிர மொருபத்தியிற் கொல்வான்.

(இ - இ.) ஒற்றைச்சரத்திற்கு ஒருயானைவீதம் இறந்துவிழ, இடியை யொத்துஉக்கிரமாயிருப்பனவும் வெயிலொத்துவிளங்குவனவும் வேற்படை போல வற்றும்படி கடலைச் சுடவல்லனவுமான ஒளிர்கின்ற வாயையுடைய வெற்றிபொருந்திய அம்புகளால், மழையையொத்தனவாய் (மதம்) பொழியும் வெற்றிபொருந்திய யானைகள் பதினாயிரங்களை ஒருபத்தியாகக் கொல்பவனானான், (இலட்சுமணன்); (எ - று.)---பி - ம்:---[1]ஒளி.

அயிலாற்கடல்வற்றிய வரலாறு வருமாறு:---பாண்டியநாட்டில் உக்கிரபாண்டியன் முறைதவறாது செங்கோல் நிகழ்த்திப் பல அசுவமேதயாகங்களைப் புரிந்துவந்தானாக, அதுகண்டு பொறாமைகொண்ட இந்திரன் அப்பாண்டியனது வளஞ்சிறந்த நாட்டையழிக்குமாறு வருணனையேவ, அத்தேவன்தன்வாழிடமான கடலின்நீரைப் பொங்கியெழச்செய்து நாட்டைஅழிக்கத்தொடங்குகையில், சிவபெருமான் அந்தப்பாண்டியராசனது கனவிற் சித்தராய்த்தோன்றிச் செய்தியறிவித்து வேலைக்கொண்டு கடல்மீதுஎவி வருணனையடக்குமாறுபணிக்க, அரசன்விழித்தெழுந்து கடவுளருளைவியந்து துதித்து அக்கட்டளைப்படியே புரிந்து கடலை யடக்கினனென்பதாம். (௧௮௨௯)

௧௫௬. மலையஞ்சின மழையஞ்சின வனமஞ்சின [1]பிறவும்
நிலையஞ்சின திசைவெங்கரி நிமிர்கின்றன கடலின்
[2]அலையஞ்சின பிறிதென்[3]சில [4]தனியைங்கர கரியுங்
கொலை[5]யஞ்சுதல் [6]புரிகின்றது கரியின்படி கொளலால்.

(இ-ள்.) (இளையபெருமாள் யானைகளைத் தேடிக்கொல்வதுகண்டு, யானைபோல் வடிவுள்ள) மலைகள் அஞ்சின; (அவ்யானைபோலப் பெருந்தோற்றத்துடனே கருநிறமுமுள்ள)மேகங்களும் அஞ்சின:(அவ்வாறே கறுத்துள்ளமையால்) வனங்களும் அஞ்சின;(கீழ்ச்சொன்னவற்றின்)வேறான கொடியதிசைக்கரிகளும் (தம்) நிலையிலிருப்பதற்கு அஞ்சின; ஓங்குகின்றனவானகடலின் அலைகளும் (தாம் மதயானைபோன்ற தோற்றமுள்ளமையால்) அஞ்சின; சிலவற்றைப்பற்றி வேறாகக்கூறுவதென்?(கூறவேண்டுவதில்லை; எனெனில்),— ஒப்பற்ற ஐங்கரத்தைக்கொண்ட வேழமும் [விநாயகக்கடவுளும்] (தான்) யானையின் வடிவத்தைக்கொண்டிருத்தலால் கொலைக்காக [இலட்சுமணன் தான் யானை முகத்தையுடைமைபற்றி எங்குக்கொல்வானோ? என்று] அச்சத்தையடைகின்றது: (எ - று.)

தொடர்புயர்வுநவிற்சியணி. பிறவும்நிலையஞ்சின-பிற [யானைபோன்ற பெருந்தோற்றமுள்ள] பொருள்களும் நிலையினின்றும் அஞ்சின: திசைவெங்கரி, (தம்மிடத்தைவிட்டுச்) செல்வனவாயின என்று கூறுவாருமுளர்.பி-ம்:— [1]மறவோர். [2]தலையஞ்சின. [3]சிலை. [4]தனிவெங்கரிதிரியும், தனியைங்கரகிரியும். [5]அஞ்சலி. [6]புரிகின்றனன், புரிகின்றன. (௧௮௩௦)

௧௫௭. காலேறின [1]சிலைநாணொலி [2]கடவேறுகள் படவான்
[3]மேலேறின [4]மிசையாளர்கள் தலைமெய்தொறு முருவக்

கோலேறின வுருமேறுகள் குடியேறின 5வெனலாய்
மா6லேறிய களியானைகண் மழையேறென மறிய.

(இ - ள்.) குதைகளிலேறியுள்ள வில்நாணியின் ஒலிகள், வனத்தில் வாழும் ஆண்சிங்கங்கள் இறந்தொழியும்படி வானத்தின்மேலாகவும் தோன்றின: (பின்பு) பேரிடிகள் குடியேறினஎன்னும்படி, அம்புகள்,—மதமயக்கம் மிக்ககளிப்புக்கொண்ட யானைகள் பெருமழைபோல மடங்கிவிழவும், (அவ்யானைகளின்) மிசையிருப்பவரின் தலைகளிலும் உடம்பிலும் ஊடுருவவும், பாய்ந்தன: (எ-று.)---கோல்-அம்புகள். ஏறுதல்-பாய்ந்துநிற்றல். வில், இலட்சுமணனுடையது. கடவேறு-கடத்திலுள்ள ஆண்சிங்கம்: கடம்-காடு. கோல்,---உருவ மறிய, ஏறினவென்க. பி-ம்:—1சில. 2கடலேறுகள். 3மேலேறினர். 4மிகையாளர்கள். 5எனலால். 6ஏறின. (கஅ௬க)

கருசு.—இதுமுதல்ஒன்பது கவிகள்-அநுமான் யானைப்படையைப் பொருதழித்தலைக் கூறும்.

1இவ்வேலையி 2னனுமான்முத லெழுவேலையு 3மனையார்
வெவ்வேலவர் 4செலவேவிய கொலையானையின் 5மிகையைச்
6செவ்வேயுற நினையாவொரு செயல்செய்குவ 7னென்பான்
8தவ்வேலென வந்தா9னவன் தனி10வேலெனத் தகையான்.

(இ - ள்.) இந்தவேளையில், முதன்மைபெற்றஏழுசமுத்திரங்களையொத்தவரானகொடியவேற்படையைக்கொண்டஅரக்கர் செல்லுமாறுஏவிய கொலையானைகளின்மிகுதியை, அனுமான்,--செவ்வனே பொருந்த நினைந்துபார்த்து, 'ஒரு(வீரச்)செயலைச் செய்வேன்' என்று (தனக்குள்ளே)கருதியவனாகி, அவ்விலக்குமணனுடைய ஒப்பற்ற வேலென்றுசொல்லுந்தன்மையை மேற்கொள்பவனாய்த் திடீரென்று (அங்கு) வந்தான்; (எ - று.)

தவ்வேலென-திடீரென்று. 3அனையான் என்ற பாடத்தைக்கொண்டு, எழுவேலையையொத்தவனை அநுமான் என்றும், வெவ்வியவேலையுடைய இராக்கதர்செலஏவிய யானையின்மிகுதியைக் கண்டு நினைந்து 'ஒப்பற்றவீரச்செயலைச்செய்யப்போகின்றேன் என்பவனாய்(ப் பின்னும்), தவ்வேல் - தாவிக்குதியாதேயுங்கள் என்றவண்ணம் என்றும்உரைப்பர்.வேலெனத்தகையானாய் வந்தானென்க. பி-ம்:—1அவ்வேலையின்.2அநுமானுமொரா. 4மிசையேவிய, செலமேவிய, சிலவேவிய. 5மிசையே. 6செவ்வேசெல. 7என்றுத். 8தவ்வேனென, தவ்வேளென. 9அவர், இவன், ஒரு. 10வேலன. (கஅ௬உ)

கருஎ.ஆர்த்தங்கனல் விழியா 1முதிர் மதயானையை யனையான்
தீர்த்தன்கழல் பரவாமுத லரிபோல்வரு திறலான்
வார்த்தங்கிய கழலானொரு மரனின்றது நமனூர்
போர்த்தண்டினும் 2வலிதாயது கொண்டான்புகழ் கொண்டான்.

(இ - ள்.) முதிர்ந்தமதத்தைக்கொண்ட யானையையொத்தவனும் முதன்மைப்பொருளான நரசிங்கமூர்த்தியையொத்த திறலையுடையவனும் வாராற்கட்டியவீரக்கழலைத்தாங்கியவனும் புகழ்கொண்டவனுமான அனுமான்,---அப்

போது பரிசுத்தமூர்த்தியாகிய ஸ்ரீராமபிரானது திருவடிகளைத் துதித்து ஆரவாரித்து அனல்புறப்படவிழித்து, (அயலில்) நின்றதும் யமனுடைய போர்த் தண்டினும்வலியதுமாகிய ஒருமரத்தைப்(ப் பொருமாறு) கைக்கொண்டான்; (எ - று.)---பி - ம்:—[1]முழுமத. [2]வலியாயது. (௧அ௩௨)

௧௩௫அ. கருங்[1]கார்புரை நெடுங்கையன களி[2]யானைக ளவைசென்று
[3]ஒருங்காயின வுயிர்மாய்ந்தன பிறிதென்பல [4]வுரையால்
வருங்[5]காலனும் பெரும்பூதமு மழைமேகமு [6]முடனுப்
பொருங்காலையின் மலைமேல்விழு [7]முருமேறெனப் புடைத்தான்.

(இ - ள்.) (அனுமான் கைக்கொண்ட அம்மரத்தினால்), (அழிக்குந் தொழில்) கைவந்த யமனும் பெரும்பூதமும் மழைமேகமும் ஒன்றாகி(உலகை)ப் பொருது அழிக்கும்போது மலைமேல்விழுகின்ற உருமேறுபோலத்தோன்றும்படி புடைத்தான்: (அதனால்), கரியமேகத்தையொத்து நெடியகையையுடையனவான மதயானைகள்,(அவ்வநுமானை திரே திரள்திரளாகச்)சென்று உயிர்மாய்ந்தன: வேறாகப்பலஉரைத்து என்னபயன்? (எ - று)---பி - ம்:—[1]காரன. [2]யானைகளொடு. [3]ஒருங்காய்ந்தன. [4]உரையா. [5]காலமும்,காலமைம். [6]உடனுய்ப். [7]இடியேறெனப். (௧அ௩௪)

௧௩௯. மிதியாற்பல விசையாற்பல மிடலாற்பல [1]விடறுங்
கதியாற்பல [2]காலாற்பல [3]வாலாற்பல வாலின்
நுதியாற்பல நுதலாற்பல நொடியாற்பல [4]பயிலுங்
குதியாற்பல குமையாற்பல [5]கொன்றானற நின்றான்.

(இ-ள்.) தருமத்தில்நிலைநின்றவனான அநுமான்,--(யானைகளில்)மிதித்த மிதியாற் பலவற்றையும், விசையாற் பலவற்றையும், வலிமையாற் பலவற்றையும், இடறும்நடையினாற் பலவற்றையும், காலினாற் பலவற்றையும், வாலாற் பலவற்றையும், வாலின்நுனியாற் பலவற்றையும், நுதலாற் பலவற்றையும், நொடியாற் பலவற்றையும், பழகிய குதிப்பினாற் பலவற்றையும், குமைத்தலினாற் பலவற்றையும் கொன்றான்; (எ-று.)---நொடி-கை விரலால் நொடித்தல்: பேச்சு என்றாரு முளர்.பி-ம்:—[1]விறல்வெம்,விடவெங்.[2]தெழியாற்பல.[3]காலாற்பலவாலின், காலாற்பலகாலின், [4]நுவலுங். [5]கொன்றான்றனிநின்றான். ()

௧௩௦. பறித்தான்சில பகிர்ந்தான்சில வகிர்ந்தான்சில [1]பணைபோன்று
இறுத்தான்சில விடந்தான்சில பிளந்தான்சில வெயிற்றாற்
கறித்தான்சில கவர்ந்தான்சில [2]கரத்தாற்சில பிடித்தான்
முறித்தான்சில [3]திறத்தானையி னெடுங்[4]கோடுகண் முனிந்தான்.

(இ-ள்.) சினங்கொண்டவனான அநுமான்,--சிலயானைகளைப் பிடித்திழுத்தும், சிலவற்றை (இருகூறாகப்) பகிர்ந்தும், சிலவற்றை (நகங்களாற்) கீறியும், சிலவற்றை மூங்கில்போல முறித்தும், சிலவற்றைத் தோலுரித்தும், சிலவற்றை பலதுண்டமாம்படிப் (பிளந்தும்,சிலவற்றைப் பற்களாற் கடித்தும், சிலவற்றைக்கவர்ந்தும், சிலவற்றைக் கையாற்பிடித்தும், சிலகூட்டமானயானைகளின் நெடியகோடுகளை முறித்தும் நின்றான்;(எ-று.)--பி-ம்:—[1]பணைபோல், பணையொன்று.[2]கடித்தான்சில.[3]திறந்தானையின்,திறத்தானையன்.[4]கோளை.()

கஙுக.வாரிக்குரை கடலிற்புக [1]வெறியுங்நெடு மரத்தாற்
[2]சாரித்தலைத் துருட்டுங்[3]நெடுந் தலத்திற்படுத் தரைக்கும்
பாரிற்[4]பிடித் தடிக்குங்குடர் பறிக்கும்[5]படர் விசும்பின்
ஊரிற்செல [6]வெறியும்மிதித் துழக்கும்[7]முகத் துதைக்கும்.

(இ - ள்.) (அவ்வநுமான்,--யானைகளை)நீர்நிறைந்த ஒலிக்குங்கடலிற்புகுமாறு எறிவான்:நெடியமரத்தைக்கொண்டு சாரிதிரிந்து அலைத்துஉருட்டுவான்; நெடியபூமியில் தள்ளி அரைப்பான்; பிடித்துப் பூமியிலேஅடிப்பான்: குடலைப் பறித்துவிடுவான்;(பறித்தகுடரைப்)பரவியவானத்தின்(மூலமாக)ஊரிற்செல்லும்படி வீசியெறிவான்: மிதித்துக் கலக்குவான்: முகத்தில்உதைப்பான்; (எ - று.)—விசும்பினூரில்-வானுலகத்துஊரிலே யென்றலுமொன்று.பி-ம்:—[1]விலகும், வழங்கும், விலக்கும். [2]சாரித்தலத்துருட்டுங், சாரித்தலையுருட்டும். [3]நெடுநிலத்திற். [4]பிடித்தெற்றும். [5]நெடு. [6]வீசும். [7]மிதித்து. (கஅஙஎ)

கஙுஉ.வாலால்வர வளைக்குங்நெடு மலைப்பாம்பென வளையா
மேலாளொடு [1]மிடையும்[2]மழு [3]மலைமேற்செல [4]விலக்கும்
ஆலாலமுண் டவனேயென வகல்வாயினிட் டதுக்குங்
தோலாயிர [5]மிமைப்போதினி னரியேறெனத் [6]தொலைக்கும்.

(இ - ள்.) (பின்னும் அனுமான்,---தன்) வாலினால் வெகுதூரமடங்க நெடிய மலைப்பாம்புபோல வளைப்பான்: வளைத்து, (அவ்யானைகளின்) மீதுள்ள பாகனுடனே (அவ்யானைகளை) நெருங்கியபெரியமலைமீதுசெல்லும்படி (மோதி உயிர்) விலகச்செய்வான்; (மற்றும் சில யானைகளை), ஹாலாஹலவிஷத்தையுண்டவனான சிவனே யென்னும்படி அகன்றவாயிலேயிட்டு நெருக்குவான்; ஆண் சிங்கம்போல, ஆயிரம் யானைகளை இமைப்பொழுதிற்குள்ளே உயிரொழிப்பான்; (எ - று.)

அநுமான் சிவபெருமானது அமிசமாதலால், அதனை மெய்ப்பிக்குமாறு மேல்வந்த யானைகளை யொழித்தான்; சிவபெருமான் தன்மேற் சீறிவந்த யானையின் தோலை யுரித்துப் போர்த்தவனாதல் காண்க. பி-ம்:—[1]மிசையும். [2]மழு.[3]மலையிற். [4]வீசும். [5]இறைப். [6]துகைத்தான்; தொலைப்பான். (கஅஙஅ)

கஙுங.சையத்தினு முயர்வுற்றன தறுகட்களி மதமா
நொய்திற்[1]கடி தெதிருற்றன நூறாயிர மாறு
மையற்[2]கரி [3]யுயிரிற்றன [4]விண்புக்கன [5]மறையத்
தொய்யற்பட [6]ரழுவக்கொழுஞ் [7]சேறுயுகத் [8]துகைத்தான்.

(இ - ள்.) மாறாத மதமயக்கத்தைக்கொண்ட யானைகள் (சில) உயிரிற்று வானுலகமடைந்தனவாய்மறைய,(மற்றும் அநுமான்),---மலையைக் காட்டிலும் ஓங்கியிருப்பனவான அஞ்சாமையுள்ள களிப்புடைய மதயானைகள் நூறாயிரம் மிகவிரைவாக எதிருற்றவை குழம்பாய்ப் படர்ந்த நீர்நிலத்திலே கொழுவிய சேறாய்ச்சிந்தத் துகைப்பவனானான்; (எ - று.)—பி - ம்:---[1]கடித்திறத்தானவன். [2]கிரி. [3]உயிரிற்சில, உருவிற்சில, உகிரிற்சில. [4]விண்புக்குயிர், குழைபுக்குரு, சிலவற்றன. [5]மதியத்,மழையத். [6]அழுவத்தொடு.[7]சேறுயெழத். [8]துகைப்பான். (கஅஙக)

கசுச.வேறுயின மதவெங்கரி யொருகோடியின் விறலோன்
நூறுயிரம் [1]படுத்தானிது நுவல்காலையி னிளையோன்
கூறுயின [2]வெனவன்னவை கொலைவாளியிற் [3]கொன்றுன்
[4]ஏறுநெடும் பயத்தா[5]னெடுந் திசைக்காவல ரிரிந்தார்.

(இ - ள்.) வலிமையுள்ளவனுகிய அநுமான், (பின்னும்) வேறுன மதமுள்ள கொடிய ஒருகோடியானைகளில் நூறுயிரம்யானைகளை யொழித்தான்; இதுநிகழும்போது, இளையபெருமாள் (தமது) பாகமாக நிற்கின்றனஎன்று (அநுமான் கொல்லாதுவிட்ட)அந்தக்கரிகளைக் கொலைத்தொழிலைக்கொண்ட அம்புகளாற் கொன்றுன்:(அப்போது)பெருமைபெற்றதிக்பாலகர் மிக்கஅச்சம் ஏறப்பெற்று நிலைகெட்டுஓடினுர்கள்; (எ-று.) [5]நெடுநிசி காவலர் என்றபாடத்திற்கு - இரவில்வலிமைகொண்டுசஞ்சரிப்பவரான நெடியஅரசர்: எனவே, அரக்கரைக் காட்டுமென்க. இனி 'ஏறு'-போர்க்களத்திலேறுமல், இரிந்தாரென்றலுமொன்று. பி-ம்:—[1]படுத்தாடினன். [2]பெற. [3]அறுத்தான், குறைத்தான். [4]தேறுதரோர், ஈறுய் நெடும், தேறுநெடும். [5]பெருந்திசை. (கஅசுo)

கசுரு.—அரக்கர் நிலைகெட்டு ஓட, தேவாந்தகனென்பான் சினந்து திரிதல்.

இரிந்தார்திசை திசையெங்கணு மியானைப்பிண மெற்ற
நெரிந்தார்களு நெரியாதுயிர் நிலைத்தார்களு நெருக்கால்
[1]எரிந்தார்நெடுந் தடக்[2]தேரிழிந் தெல்லாருமுன் செல்லத்
திரிந்தா[3]னொரு தனியேநெடுந் தேவாந்தகன் [4]சினத்தான்.

(இ - ள்.) எல்லாத்திசைகளிலும் யானைப்பிணங்கள் மோதுதலினுல் நெரிந்தவர்களும், நிலைகெட்டோடினுர்: நெரிந்திடாமலே உயிர்நிலைத்தவர்களும் நெருக்கினுல் எரிந்திட்டனர்:(மற்றையோர்) எல்லாரும் நெடியபெரிய தேரிலிருந்து இழிந்து முன்னே ஓட, நெடிய தேவாந்தகன்,—சினத்தோடு தன்னந்தனியே திரிபவனுனுன்;(எ-று.)—யானைப்பிணமெற்றுவதனுல் தேருடன் ஓடமுடியாமல் பாதசாரிகளாய் அரக்கர் ஓடலானுர்.பி-ம்:—[1]தெரிந்தார். [2]தேரிழந்து, தேரொடும். [3]நெடுந்தனியேயொரு. [4]சினத்தால், செறுத்தான்.

கசுசு.—அநுமானேடு தேவாந்தகன் பொருது மாண்டமையை, இதுமுதல் ஆறுகவிகள் தெரிவிக்கும்.

உதிரக்கடல் பிணமால்வரை யொன்றல்லன பலவாய்
எதிரக்[1]கடு நெடும்போர்க்களத் தொருதான்புகுந் தேற்றுன்
கதிரொப்பன சிலவெங்கணை யனுமானுடற் றைந்தான்
அதிரக்[2]கட னெடுந்தேரினன் [3]மழையேறென வார்த்தான்.

(இ-ள்.) உதிரக்கடலும் பெரியபிணமலைகளும் ஒன்றேயல்லாமல் பலவாகத் தோன்றியிருக்கையிலும், கொடிய நெடிய போர்க்களத்திலே, பெரிய தேரையுடையனுன தேவாந்தகன், தான் ஒருத்தனுய்ப் புகுந்து,—எதிர்த்தவனுய், சூரியனை ஒப்பனவான சிலகொடிய கணைகளை அநுமானுடலினுட்செலுத்தி, கடலும் அதிரும்படி மழையிடிபோல ஆரவாரித்தான்; (எ - று.) —பி-ம்:—[1]கரு. [2]தடநெடுந்தேரினன். [3]மழையாமென. (கஅசுஉ)

௧௬௭. அப்போதினி னனுமானுமொர் மர[1]மோச்சிநின் றார்த்தான்
இப்போதிவ னுயிர்போமென வுருமேறென வெறிந்தான்
வெப்போவென வெயில்[2]கால்வன வயில்வெங்கணை விசையால்
துப்போவெனத் [3]துணியாம்வகை தேவாந்தகன் [4]றுரந்தான்.

(இ-ள்.) அப்போது அநுமானும்,-ஒருமரத்தைஉயரவெடுத்து நின்று ஆரவாரித்தவனாய், 'இப்போது இவனுயிர் போய்விடும்'என்று சொல்லி, பேரிடிபோல எறிந்தான்: அக்கினியின் வடிவுதானோ என்று நினைக்குமாறு வெம்மையை வெளிப்படுத்துவனவான கூரிய வெவ்வியகணையின் விசையினால் (அம்மரத்தை 'இது ஒரு) வலியுடையபொருளோ' என்று [இலேசாகத்] துண்டுபடும்படி தேவாந்தகன் செலுத்தினான்; (எ - று.)—பி-ம்:— [1]ஏந்தி. [2]காய்வன. [3]துணியா நெடுந். [4]அறுத்தான். (௧௮௬௩)

௧௬௮. மாறாங்கொரு மலைவாங்கினன் வயவானரக் [1]குலத்தோர்க்கு
ஏறாங்[2]கது வெறியாதமுன் முறியாயுக வெய்தான்
கோறாங்கிய சிலையானுட னெடுமாருதி கோதித்தான்
[3]பாறாங்கெனப் புகப்பாய்ந்தவ னெடுவில்லினைப் பறித்தான்,

(இ - ள்.) வெற்றிபொருந்திய வானரக்குலத்தார்க்குத் தலைவனான அனுமான் அப்போது மாறாக ஒருமலையை வாங்கினான்; அந்தமலையை அவ்விடத்து எறிவதற்கு முன்னமே முறிந்ததாய்ச் சிந்தும்படி (தேவாந்தகன்) அம்பெய்தான்: அம்பைத்தாங்கியவில்லைக்கொண்ட அந்தத்தேவாந்தகனோடு பெருமைபொருந்தியமாருதி, சினந்து, அங்குப் பருந்துபுகுந்தாற்போலப்பாய்ந்து அந்தத்தேவாந்தகனுடைய நெடியவில்லைப் பறித்திட்டான்; (எ - று.) —பி - ம்:—[1]குலத்தோர். [2]அதும். [3]பாறாமெனப். (௧௮௬௪)

௧௬௯. பறித்தானெடும் [1]படைவானவர் [2]பலரார்த்திடப் பலவா
முறித்தா[3]னவன் வலிகண்டுயர் தேவாந்தகன் முனிந்தான்
மறித்தாங்கொரு சுடர்த்தோமரம் வாங்கா[4]மிசை யோங்காச் [ர்.
செறித்தா[3]னவ னிடத்தோண்மிசை யிமையோர்களுந் திகைத்தா

(இ - ள்.) (தேவாந்தகனது)நெடியவில்லைப் பறித்த அநுமான்,வானவர் பலர் (மகிழ்ச்சியினால்) ஆரவாரிக்கப் பலவாக முறித்தான்; அவ்வநுமானது வலிமையைக்கண்டு (வீரத்தினாற்)சிறந்த தேவாந்தகன் சினந்தவனாய்,--மீண்டும் அப்போது ஒரு ஒளிபொருந்திய தோமரமென்னும் படையை யெடுத்து மேலேயோங்கி அவ்வநுமானுடைய இடத்தோளின்மீது நெருக்குமாறு எறிந்தான்; (அதுகண்ட) தேவர்களும் திகைத்தார்கள்;(எ-று.)—பி - ம்:—[1]பகையானவர், பகைவானரப், [2]பகைதிக்கிட, படையார்த்திட. [3]இவன். [4]மிக. ()

௧௭௦. சுடர்த்தோமர [1]மெறிந்தார்த்தலுங் கனலாமெனச் [2]சுளித்தான்
[3]அடற்றோமரம் பறித்தான்[4]றிரித் துருமேறென [5]வார்த்தான்
புடைத்தானவன் றடந்தேரொடு நெடுஞ்சாரதி [6]புரண்டான்
[7]மடத்தோகையர் வலிவென்றவன் வானோர்முக மலர்ந்தார்.

(இ - ள்.) ஒளிபொருந்திய தோமரத்தை(த் தேவாந்தகன் எறிந்து ஆரவாரித்தலும், மடமைக்குணமுள்ள மகளிரின் வலிமையை வென்றவனாகிய

அனுமான்,—அக்கினிபோலக் கோபித்தவனாய், வலிமைபொருந்திய அத்தோமரத்தைப்பறித்துத்திரிந்துஇடியேறுஎன்னும்படிஆரவாரித்துப்புடைத்தான்; (அதனால்), அத்தேவாந்தகன் நெடுஞ்சாரதி பெருந்தேருடனே புரண்டான்; (அதுகண்டு) வானவர்முகம் மலரப்பெற்றார்; (எ - று.)---பி-ம்:—1 எடுத்து, செறித்து. 2சுளிந்தான். 3அடர்தோமரம், அடத்தோமரம். 4திரித்து,நிறத்து. 5அடித்தான். 6புரள. 7மடற்றேறகையர். (கஅசசு)

இங்கே ஒரு பிரதியிற் காணப்படுவதொரு செய்யுள் வருமாறு:---

* துள்ளிக்களி யயவானர ரார்த்தாரவை தோன்றக்
கள்ளக்கடு நிருதக்குலங் கண்டப்படக் கண்டே
உள்ளக்கடு வேகத்தொடு தேவாந்தக னாத்தே [ன்.
கொள்ளப்படை யனையஃதொரு கொடுஞ்சூலங் கைக்கொண்டா

கஎ௧. சூலப்படை தொடுவான்றனை யிமையாதமுன் 1றொடர்ந்தான்
ஆலத்தினும் 2வலியானும்வந் தெதிரேபுகுந் 3தடர்த்தான்
4காலற்கிரு கண்ணான்5றன கையாலவன் கதுப்பின்
மூலத்திடைப் புடைத்தா6னுயிர் முடித்தான்சிர மடித்தான்.

(இ - ள்.) சூலப்படையைக் கைக்கொண்ட தேவாந்தகனைக் கண்ணிமைப்பதற்கு முன்னே (அநுமான்) தொடர்ந்து பொரலானான்: விஷத்தைக்காட்டிலும் கொடுவலியையுடைய தேவாந்தகனும் வந்து எதிரேபுகுந்து பொருதான்; யமனுடைய இருகண்கட்குஒப்பான மாருதி தன்கையினால் அவனுடைய கதுப்பின் மூலபாகத்திலே புடைத்துச் சிரத்தை மடித்து உயிரை முடித்தான்; (எ - று.)---பி-ம்:—1 தூரந்தான். 2கடியானும். 3அடர்ந்தான், ஆர்த்தான். 4காலத்திரு, காலற்செறி. 5தனிக். 6உயிர்முடிந்தான்சிரமிடிந்தான், சிரமிடந்தானுயிர்முடிந்தான், உயிர்முடித்தான் சினமுடித்தான். ()

கஎ௨.---அதுகண்டு அதிகாயன் சினந்து அநுமானோடு போரவருதல்.

கண்டானெதி ரதிகாயனுங் கனலாமெனக் கனன்றான்
புண்டானெனப் புனலோடிழி யுதிரம்விழி பொழிவான்
உண்டேனிவ னுயிரிப்பொழு தொழியேனென வுரையாத்
திண்டேரினைக் 1கடிதேவெனச் சென்றா2னவ னின்றான்.

(இ - ள்.) அதிகாயனும், (தேவாந்தகன் இறந்ததைப்) பிரதியட்சமாகக் கண்டு கனல்போலக் கொதித்துப் புண்ணென்றுதோன்றுமாறு திரவரூபமாயிழிகின்ற இரத்தத்தைக் கண்ணாற் கக்குபவனாய், 'இவனுயிரை இப்போதே

* (இ-ள்.) களிப்பும் வெற்றியும்பொருந்திய வானரர்(அதுகண்டு)துள்ளியாரவாரித்தனர்: அத்தன்மைகள் தோன்றவும், கள்ளத்தனமுள்ள கடியநிருதக்குலம் சின்னபின்னமாக,அதுகண்டு மனத்திற் கொடுங்கோபத்தோடு தேவாந்தகன் வலிமையால் (உயிரைக்) கொள்ளைகொள்ளும் (யமனது) படைக்கலம் போன்றதாகிய கொடுஞ் சூலப்படையைக் கைக்கொண்டான்;(எ-று,)-இச்செய்யுள்பல பிரதிகளிலில்லை. சந்தர்ப்பத்திற்கு ஏற்றதாக இருக்கின்றது.ஆயினும் இன்னும் சிற்சில இடத்திற் பாடம் வேறுவகையிருப்பின் சிறக்கும்.

உண்டேன்: விடமாட்டேன்' என்றுசொல்லி, 'வலியதேரினை விரைவாகஏவு' என்று(சாரதிக்குச்)சொல்லி(அநுமானுள்ள இடத்துச்)சென்றான்: அவ்வநுமானும் (எதிராக)நின்றான்; (எ - று.)---பி-ம்:---[1]கடிதோட்டினன். [2]இவன்.

கஎகூ.---அதிகாயன் வருவது கண்டு சின்னபின்னப்பட்ட அரக்கச்சேனையிலுள்ளாரும் நெருங்குதல்.

அன்னான்வரு மளவின்றலை நிலைநின்றன வனிகம்
பின்னானது [1]முன்னானது பிறிந்தார்களுஞ் செறிந்தார்
பொன்னாலுயர் [2]நெடுமால்வரை போல்வானெதிர் புக்கான்
சொன்னானிவை யதிகாய[3]னும் வடமேருவைத் துணிப்பான்.

(இ - ள்.) அவ்வதிகாயன் வருமளவில், சேனைகள் நிலைத்துநின்றன; பின்னிட்டதும் முன்னிட்டதாயிற்று; பிரிந்துசென்ற வீரர்களும் (வந்து) நெருங்கினர்: வடமேருவையும் துணிக்கவல்ல அதிகாயனும்,---பொன்னாலியன்றமிகவுயர்ந்த பெருமலையான மேருவைப்போல்பவனான அனுமானெதிரே புகுந்தவனாய், இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)---அதிகாயன் சொன்னவற்றை மேலிரண்டுகவிகளிற் காண்க. பி-ம்:---[1]முன்னானதும். [2]வடமால்வரை. [3]அச்சுடர் மாருதிமுன்னர். (கஅ௪கூ)

கஎச.---இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்: அதிகாயனுடைய வீரவாதம்.

தேய்த்தாயொரு தனியெம்பியைத் தலத்தோடொரு திறத்தாற்
போய்த்[1]தாவினை நெடு[2]மாகடல் [3]பிழைத்தாய்கடல் புகுந்தாய்
வாய்த்தாரையு மடித்தாயது கண்டேனெதிர் [4]வந்தேன்
ஆய்த்தாயது [5]முடிவின்றனக் கணித்தாக[6]வந் தடுத்தாய்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (முன்பு) ஒப்பற்ற தனித்த என்தம்பியை [அட்சகுமாரனை] நிலத்தோடுதேய்த்து ஒப்பற்ற வலிமையால் மிகப்பெரியகடலைத் தாவிப்போய் உயிர் பிழைத்தாய்; (இப்போது ராட்சசசேனை) சமுத்திரத்திற் புகுந்து வலிமைவாய்த்தவருகிய தேவாந்தகனையும் மடித்தாய்; அதுகண்டு உன்னெதிரே வந்துள்ளேன்; இன்று உனக்கு முடிவு நெருங்கிவிட்டது: (இதனால் என்) சமீபமாக வந்துள்ளாய்; (எ - று.)---ஆய்த்து ஆயது ஒருபொருட்பன்மொழி: சிறிதே வேறுபட்டிருப்பதுபற்றி, அடுக்குத்தொடரென்னவுமாம்: கிட்டிவிட்டது என்றபடி. பி - ம்:---[1]தாயினை. [2]மால். [3]பிழைத்தாயெதிர், பிழைத்தாயனல், பிழைத்தாயிடை. [4]வந்தோன். [5]முடிவுன்றனக்கு. [6]வந்தணைந்தாய், வந்தடைந்தாய். (கஅ௫௦)

கஎரு. இன்றல்லது நெடுநாளுனை யொருநாளினு [1]மெதிரேன்
ஒன்றல்லது [2]செய்தாய்பல வினையோனையு [3]முனையும்
வென்றல்லது மீளாதவென் [4]மிடல்வெங்கணை மழையாற்
கொன்றல்லது [5]செல்லேனிது கொள்ளென்றனன் கொடியோன்.

(இ - ள்.) இன்றைக்கு(க் கொன்றால்) அல்லது உன்னை (இனிவரும்) நெடுநாளில் ஒருநாளிலும் எதிர்க்கமாட்டேன்; (நீ) ஒருதீங்குஅல்லாமல் பல தீங்குகளைச் செய்துள்ளாய்: (ஆகையால்,) வென்றல்லது மீளுதலில்லாத என்

னுடைய வலியகொடிய கணைமழையால், (இராமனுக்கு) இளையவனாகிய இலட்சுமணனையும் உன்னையும் கொன்றல்லது மீளேன்: இதனை மனத்திலுறுதியாகக்கொள் என்றனன், கொடியவனாகிய அதிகாயன்; (எ-று.)—பி-ம்:—1எதிரே. 2செய்தாயெமை. 3முன்னை. 4விறல். 5கொல்லேனிது கொள்கென்றனன், கொல்லேனிதுகொல்லென்றனன். (கஅ௫௧)

கஎசு.—அதுகேட்டு அநுமான் திரிசிரனையும் யான் சொல்லும்படி அழைத்துக்கொள்ளெனல்.

பிழையாதிது பிழையாதெனப் பெருங்கைத்தலம் 1பிசையா
மழையாமெனச் சிரித்தான்வட மலையாமெனு நிலையான்
முழைமுழ2யாளரி 3யனையாயினு மெனைநீமிக முனிவாய்
அழையாய்திரி சிரந்தோனையு 4நிலத்தோடு5மிட் டுரைப்பான்.

(இ - ள்.) வடக்கேயுள்ளமேருமலையென்னும்படி சலியாதநிலைமையையுடைய அநுமான்,—(அதுகேட்டு),'குகையில்வாழ்கின்ற கொடியசிங்கம்போன்றவனே! இன்னும் மிகுதியாக என்மீதுகோபிப்பாயாக; (நான் இலட்சியஞ்செய்யேன்; யான்)நிலத்தோடும் இட்டுஅரைப்பதற்குத் திரிசிரனையும் அழைப்பாய்: (நான் சொல்லுகின்ற) இவ்வார்த்தை தவறாது, தவறாது' எனச்சொல்லி(த் தன்)பெரிய கைத்தலத்தைப் பிசைந்து மேகம்போல (ப் பேரொலிபடச்)சிரித்தான்; (எ-று.)—பி-ம்:—1பிணையா. 2வாழரி. 3அனையானையுமெனையும்மிக, அனையாளினுமெனைநீமிக. 4தலத்தோடும். 5இட்டரைப்பான், இட்டரைக்க, இட்டிரைப்ப. (கஅ௫௨)

கஎஎ.—அதுகேட்ட திரிசிரசு தானே பொருமாறு வந்துசேர, இருவரும் பொருதல்.

ஆமாமெனத் தலைமூன்றுடை யவனார்த்தவந் 1தடர்த்தான்
கோமான்றனிப் பெருந்தூதனு மெதிரேசெருக் 2கொடுத்தான்
காமாண்டவர் 3கல்லாதவர் வல்லீரெனக் கழறா
நா4மாண்டற தானின்றவர் நடுவேபுக நடந்தான்.

(இ - ள்.) (அநுமான்கூறியதுகேட்டு), ஆம், ஆம் எனச்சொல்லி,மூன்று தலையையுடையவனான திரிசிரசு,ஆரவாரஞ்செய்துகொண்டு வந்து தாக்கஆரம்பித்தான்: இராமபிரானது ஒப்பற்றபெருந்தூதனாகிய அநுமானும்,—எதிராகப்போர்கொடுத்தவனாய், 'காமத்தினால் மிக்கவரும் கல்லாதவருமான நீங்கள் (காமமற்றும் கற்றுமுள்ள என்னோடுபொர)வல்லவராவீர்' என்று இகழ்ச்சியாகச்சொல்லி,அருகாக நின்றவர் நாக்குவற்றியொழிய நடுவேபுகுந்து நடந்தான்.

காமம்மாண்டவரென்பது - காமாண்டவரென விகாரப்பட்டுவந்தது. ஜிதேந்த்ரியனும் கலைகளிலெல்லாம்வல்லவனுமான என்முன்னே அங்ஙனிராதஉம்மால்வெல்லமுடியுமோ? முடியாதென்பது,மூன்றாமடியின்கருத்து. வல்லீர்-இகழ்ச்சிக்குறிப்பு. இனி, வல்லீரென்பதற்கு-வல்லமையுடையவரல்லீரென்று உரைத்தற்குமிடமுண்டு: இப்பொருளில் "வல்லாராயினும்வல்லுநராயினும்" என்றவிடத்து வல்லாரென்பது-படர்க்கையில் எதிர்மறைமுற்றாய்

நின்றதுபோல, வல்லீரென்பது-முன்னிலைப்பன்மையில் எதிர்மறைமுற்றாக வந்ததென்க. இவ்வாறன்றி, உங்களைக்காத்துக்கொள்ளும் வல்லமையைப்பெற் றிராத நீங்கள் பெருவீரரேயென்பது 'காமாண்டவர் கல்லாதவர்வல்லீர்' என்ற தன்கருத்து என்பாருமுளர். இப்பொருளில், கா-காத்தல். ஈரம்வறளல் அச்சத் தினாலாகும். பி-ம்:—[1]அடர்ந்தான், அடைந்தான். [2]குறித்தான். [3]அல்லாதவர். [4]மாண்டவரயனின்றவர், மாண்டனரயனின்றற. (கஅ௩௩)

களஅ.—திரிசிரசை நிலத்திலிட்டரைத்திட்டு அநுமான் மேற்றிசைவாயிலுக்குச் செல்லுதல்.

தேர்மேற்செலக் குதித்தான்றிரி சிரத்தானையொர் திறத்தாற்
[1]கார்மேற்றுயின் மலைபோலியைக் கரத்தாற்பிடித் தெடுத்தான்
பார்மேற்படுத் தரைத்தா[2]னவன் பழிமேற்படப் படுத்தான்
போர்மேற்றிசை நெடுவாயிலி னுளதாமெனப் போனான்.

(இ-ள்.) (அந்தத்திரிசிரசினுடைய) தேர்மேற் சேருமாறு குதித்து, மேகம் (தன்)மீதுபடியப்பெற்ற மலைபோல்பவனை திரிசிரசை ஒப்பற்ற வல்லமை யாற் கையாற்பிடித்துஎடுத்துப் பூமியின்மீது தள்ளி அரைத்து அவ்வரக்கனுக் குப்பழிப்புமிகும்படி கொன்றான்; (பின்பு), போர் மேற்றிசைநெடுவாயிலே உள்ளதென்று (அங்குப்)போனான்; (எ - று.)—மேற்றிசைக்கு அநுமான்செ ன்றனனென வந்ததனால், இந்தப்போர் இலட்சுமணனிருந்த வடதிசைவாயி லில்நிகழ்ந்ததென்க. 'கார்மேற்றுயில்' என்பது, மலைக்கு இயற்கையாய்வந்த அடைமொழி. பி-ம்:—[1]கார்போற். [2]அவர். (கஅ௩௪)

வேறு.

களசு.—அதுகண்ட அதிகாயன் அநுமானுடையதிறத்தை மனத்தினுள் வியத்தல்.

இமையிடை யாகச் சென்றா னிகலதி காய னின்றான்
[1]அமைவதொன் றுற்ற தேற்றா னருவியோ டழல் [2]கால் கண்ணான்
உமையொரு [3]பாக னேயு மிவன்முனிந் துருத்த [4]போது
[5]கமையில னற்ற [6]லென்னாக் [7]கதத்தொடுங் குலுக்குங் கையான்.

(இ-ள்.) கண்ணிமைப்பொழுதிற்குள்ளாக (மேற்குத்திசைவாயிற்கு அநு மான்) சென்றிட்டான்; வலிமைபொருந்திய அதிகாயன் தக்கதொருசெயலைச் செய்தற்குஅறியாமல் நீரருவியோடு நெருப்பையும் கக்குகின்ற கண்களுடைய னாகி(த்திகைத்து)நின்றவனாய், 'உமாதேவியை ஒருபாகத்திலேயுடைய சிவபெ ருமானானாலும் இவ்வநுமான் முனிவுகொண்டு சீற்றத்தைவெளிக்காட்டும் போது (அதனைப்)பொறுத்தற்கு வல்லமையுடையனல்லன்' என்று சொல்லிக் கோபத்தோடும் நடுங்குகின்றகையையுடையனானான்; (எ - று.)

கமை-பொறுத்தற்கு, ஆற்றலிலன் என்க. பி-ம்:—[1]அமைவதென்று... தேற்றான், அமைவிதொன்றுற்றதேற்றான். [2]காய். [3]பாகனேனும். [4]காலைக், போழ்து. [5]கமையுறற்பாலன், கமைவிலனாற்றல். [6]என்னாஞ். [7]சிரத்தொடுங் கரத்தொடுங். (கஅ௩௫)

௧௮௦.—இனித் தாமதிக்கலாகாதென்று போருமாறு இலட்சுமணன்மேல் அதிகாயன் செல்லுதல்.

பூணிப்பொன் றுடையனாகிப் [1]புகுந்தநான் புறத்து நின்று
பாணித்தல் வீர மன்றாற் பருவலி படைத்தோர்க் கெல்லாம்
ஆணிப்பொன் [2]ஆனான் றன்னைப் பின்னுங்கண் டறிவ னென்னாத்
தூணிப்பொற் [3]புறத்தான் றிண்டே ரிளவன்மேற் றூண்டச் சொன்னான்.

(இ - ள்.) (தான் அப்போது செய்யவேண்டுவதைப்பற்றி ஒருதீர்மானம் கொண்டவனாய், '(ஒருகாரியத்திற்காக முனைமுகத்திற்) புகுந்தநான் வேறொருகாரியத்திலேநின்று தாமதித்தல் வீரமன்றாகும்:பருத்தவலிமைபடைத்தோர்க்கெல்லாம் ஆணிப்பொன்போற் சிறந்தவனான இலட்சுமணனைப் பின்னுங்கண்டு (அவன்திறத்தை) அறியப்போகின்றேன் [பொருவேன்]' என்றுசொல்லி, தூணீரத்தைப் பொன்போன்ற புறத்திற்கட்டியவனான அதிகாயன்,இளையபெருமாள்மீதுவலிய(தன்)தேரைத் தூண்டுமாறுசொல்லினான்.

பருவலி...ஆணிப்பொன்னானான் தன்னைப்பின்னும் கண்டறிவன் என்பதற்கு- நான்இப்போது எடுத்துக்கொண்டகாரியம் முற்றியபின்பு, அநுமானை மீண்டும் கண்டு அவன்திறத்தையறிவேன் எனக்கூறுதலும், 'தூணிப்பொற் புறத்தான்' என்பதை இளவலுக்கு அடைமொழியாக்கி யுரைத்தலும்பொருந்தும் இச்செய்யுளையடுத்து "முழங்கின்" (௧௮௬) என்று தொடங்கும் பாடல் சிலபிரதியி லுள்ளது. பி-ம்:—[1]புகுந்தனான்,புகுந்துதான்,புகுந்துநான். [2]அனையான், அன்னான். [3]புயத்தான். (௧௮௫௬)

௧௮௧.—அதிகாயன் சேனையுடன் சென்றுசேர, இலட்சுமணனும் எதிரேநிற்றல்.

தேரொலி கடலைச் சீறச் சிலையொலி மழையைச் சீறப்
[1]போரொலி முரசி னோதை [2]திசைகளிற் புறத்துப் போகத்
தாரொலி கழற்கான் மைந்தன் றானையுந் தானுஞ் சென்றான்
வீரனு மெதிரே நின்றான் விண்ணவர் விசையம் [3]வேண்ட.

(இ-ள்.) தேரொலியானது கடலைச் சீறவும், வில்லினொலி மழையைச் சீறவும், போரில் ஒலித்தலையுடைய முரசினோசையானது திக்குக்களின் வெளியிற் செல்லவும், போர்மாலை தழைத்த கழலையணிந்த காலையுடைய மைந்தனான அதிகாயன் சேனையுந் தானுமாகச் சென்றான்:தேவர்கள்,'(வெல்க, வெல்க' என்று) விசயத்தைவேண்ட, (இளைய)வீரனாகிய இலட்சுமணனும் அவனெதிரே நின்றான்;(எ-று.)---பி-ம்:—[1]பேரொலி. [2]திசைகளின்புறத்துஞ் செல்ல. [3]சொல்ல. ((௧௮௫௭)

௧௮௨.—அங்கதன்வந்து இலட்சுமணனைத் தன்தோளின்மீது ஏறிக்கொள்ளுமாறு வேண்டுதல்.

வல்லையி னணுக வந்து [1]வணங்கினன் வாலி மைந்தன்
கில்லியந் தேரின் மேலா [2]னவனமர் செவ்வி தன்றால்
வில்லியர் [3]திலத மன்ன நின்றிரு மேனி தாங்கப்
[4]புல்லிய வெனினு மென்றோ ளேறுதி புனித வென்றான்.

(இ - ள்.) விரைவாகக் கிட்டிவந்து வணங்கியவனாகி, வாலிகுமாரனான அங்கதன், —'அந்தஅதிகாயன் சக்கரத்தைக்கொண்ட அழகிய தேரின்மேலுள்ளான்: (அவனுடன் தரையிலிருந்தபடியே) பொருவது செம்மையுடையதாகாது: வில்லாளிகளுக்குத் திலகம்போன்ற உனது திருமேனியைத் தாங்குதற்கு இழிந்தனவேயானாலும்,புனிதனே! என் தோளின்மேல் எழுந்தருள்வாய்' என்று வேண்டிக்கொண்டான்; (எ-று.)—பி-ம்:—1வணங்கிய. 2இவன். 3திலகமன்னாய். 4புல்லியன். (கஅருஅ)

கஅரு.—அங்கதன் தோளின்மீது இலட்சுமணன் ஏறுதல்.

1ஆமென வமலன் றம்பி யங்கத னலங்கற் றோண்மேல்
தாமரைச் சரணம் வைத்தான் கலுழனிற் றாங்கி நின்ற
கோமக னாற்ற னோக்கிக் குளிர்கின்ற மனத்த ராகிப்
பூமழை பொழிந்து 2வாழ்த்திப் புகழ்ந்தனர் புலவ ரெல்லாம்.

(இ - ள்.) ஆம் என்று அங்கீகரித்து, ஸ்ரீராமனது திருத்தம்பியாகிய இலட்சுமணன், அங்கதனுடைய பூமாலையையணிந்த தோளின்மீது தாமரைமலர்போன்ற(தன்)கால்களைவைத்து ஏறியிருந்தான்;கருடபகவான் (விஷ்ணுபகவானைத் தாங்குவது)போன்று (இலக்குவனைத்)தாங்கிநின்ற அரசகுமாரனை அங்கதனது வல்லமையைநோக்கித் தேவர்களெல்லாம் குளிர்ச்சியடைந்தமனத்தையுடையவராய், பூமழை பொழிந்து, (வாழ்கவென்று) வாழ்த்திப் புகழ்ந்தார்கள்; (எ - று.)—பி-ம்:—1ஆமென்றுமன்னன், ஆமென்னுமண்ணல். 2வானோர்போயதெம் பொருமலென்றார், வாழ்த்துப்புகன்றனர் புலவரெல்லாம். (கஅருக)

கஅசு.—அங்கதன் திறமை.

ஆயிரம் புரவி பூண்ட வதிர்குர லசனித் திண்டேர்
போயின 1திசைக ளெங்கும் கறங்கெனச் சாரி 2போமால்
மீயெழி 3னுயருந் 4தாழிற் றாழும் விண் செல்விற் செலலுந்
தீயெழ வுவரி நீரைக் கலக்கினான் சிறுவ னம்மா

(இ - ள்.) பாற்கடல்நீரைத் தீயெழக் கலக்கினவனான வாலியின்சிறுவனாகிய அங்கதன், ஆயிரம்குதிரைகள் கட்டியதும் அதிர்கின்ற குரலினால் இடியையொத்ததுமான வலிய (அதிகாயனுடைய)தேரானது சென்ற திசைகளிலெல்லாம் (தானும்) காற்றாடிபோலச் சாரிபோவான்; மேலே (தேர்) எழுந்ததென்றால் (தானும்) உயர்வான்: தாழ்ந்தால் (தானும்) தாழ்வான்: வானத்திற் சென்றால் (தானும் உடன்) செல்வானானான்; (எ - று.)—வாலி கடலைக் கலக்கியது அமுது பிறத்தற்காக. உவரிநீர்-பாற்கடல்: 'உப்புச்சாறு கொள்வது எப்போதோ?' என்று வருதலுங் காண்க. பி-ம்:—1திசைகடோறும். 2போவான். 3மேலாம். 4மேவின்மேவும். (கஅசுo)

கஅரு.—வானரர் அங்கதன் திறமையைக் கண்டு ஆரவாரித்தனராக, இலக்குமணன் சரமாரி பொழிதல்.

அத்தொழி னோக்கி 1யாங்கு வானரத் தலைவ ரார்த்தார்
இத்தொழில் கலுழற் கேயு மரிதென விமையோ ரெல்லாம்

கைத்தலங் குலைத்தா 2ராகக் களிற்றினும் 3புரவி மேலுங்
கைத்தன விளைய வீரன் சரமெனுந் தாரை மாரி.

(இ - ள்.) (அங்கதனது) அத்தொழிலைப்பார்த்து அப்போது வானரத் தலைவர், ஆரவாரித்தனர்; 'இந்தத்தொழிற்றிறமை கருடனுக்கும் அரியது' என்று இமையவரெல்லாம் கைத்தலம் விதிர்விதிர்த்தனராக, யானைகளின் மீதும் குதிரைமீதும் இளையவீரனுடைய சரமென்கிற தாரையாகப் பொழிகின்ற மாரிகளை வதைத்தன; (எ - று.)---சரமெனுந்தாரைமாரி-கைதவாபநுதி. பி - ம்:—1ஆங்கவன், ஓங்கும். 2பின்னர்க், பின்றை, பின்றார், அந்தக். 3தேரின் மேலும். (கஅகக)

கஅகஉ.---பலவகைமுழக்கம்.

முழங்கின 1முரசம் வேழ முழங்கின 2மாரித் திண்டேர்
முழங்கின 3முகரப் பாய்மா முழங்கின முழுவெண் சங்கம்
முழங்கின தனுவி னோதை முழங்கின கழலுந் தாரும்
முழங்கின தெழிப்பு மார்ப்பு முழங்கின முகிலின் மும்மை.

(இ - ள்.) முரசம் முழங்கின; வேழம் முழங்கின;மிகவலிய தேர் முழங்கின; கனைக்குந்தன்மையுள்ள குதிரை முழங்கின; முழுமையான வெள்ளிய சங்கம் முழங்கின; வில்லினோசை முழங்கின; வீரக்கழலும் கிண்கிணியும் முழங்கின; (வீரர்கள்) அதட்டும் ஒலிப்பும், ஆரவாரஞ்செய்தலும் முகிலினும் மும்மடங்குமிக்கு முழங்கின; (எ - று.)—பாய்மா-பாயும்விலங்கு: குதிரை. பி-ம்:—1புரசை. 2முரணத். 3மாரிப், முரணப். (கஅகஉ)

கஅகஙு.---இலக்குமணனெய்த அம்புமழையாற் சேனை மாய்தல்.

கரிபடக் காலாள் வெள்ளங் 1களம்படக் 2கலினக் கால்போற்
பரிபடக் கண்ட 3கூற்றும் 4பயம்படப் பைம்பொற் றிண்டேர்
எரிபடப் பொருத பூமி யிடம்பட 5வெதிர்ந்த வெல்லாம்
முரிபடப் பட்ட வீரன் முரட்கணை மாரி மாரி.

(இ - ள்.) போர்க்களத்தில் யானைகள் இறக்கவும், காலாள்களின் கூட்டம் இறக்கவும், கல்லணைபொருந்திய காற்றுப்போற் செல்லுந்தன்மையுள்ள குதிரை இறக்கவும், (அந்தப் போரின்மும்முரத்தைக்) கண்ட யமனும் அச்சம்பொருந்தவும், பசும்பொன்னாலியன்ற வலியதேர் எரிந்திடவும், பொருத யுத்தகளம் (சேனைகளற்றமையால்) விசாலமாய்த் தோன்றவும், எதிர்ந்தசேனைகளெல்லாம் முறிந்திடவும் வீரனுடைய வலிய அம்புகளாகிய பெருமழை மிகுதியாக வுண்டாயின; (எ - று.) உருவகமும் சொற்பின்வருநிலையும் சேர்ந்து வந்தன. பி-ம்:—1களப்படக். 2காலின் கால்போல், கலினக்காலப். 3கூற்றம். 4பயப்படப். 5வீதியெல்லாம், எய்திற்றெல்லாம், எயிற்றெல்லாம். (கஅகங)

கஅகச.---அதிகாயனை இலட்சுமணன் வினவுதல்.

மன்னவன் றம்பி 1மற்றவ் வீரவனைன் மகனை நோக்கி, என்னுனக் 2கிசைச நின்ற 3வெறிபடைச் சேனை யெல்லாந், சின்னபின்னங்கள் பட்டாற் பொருகிலையோ திரித்து 4நீயே, நன்னெடுஞ் 5செருச் செய் வாயோ சொல்லுதி 6நயந்த தென்றான்.

(இ - ள்.) இராமபிரானது திருத்தம்பியாகிய இலட்சுமணன், பின்பு அந்த இராவணன்மகனான அதிகாயனைப்பார்த்து, உன்விருப்பம் யாது? எதிர்தற்குஉரிய படைக்கலங்களைக்கொண்ட நிற்கின்ற சேனையெல்லாம் சின்ன பின்னங்களாகிவிட்டாற்(பிறகே)போர்செய்வாயோ? (இப்போதே முனைமுகத்தில்)திரிந்து நீயே நல்ல நெடிய போரைச் செய்வாயோ? (இவ்விரண்டில் நீ) விரும்பியதைச் சொல்வாயென்றான்;(எ-று.)—பி-ம்:—1மற்றை. 2இங்கு. 3எதிகடற்றானையெல்லாம், பொருதியோசேனையோடும், எரிபடைச்சேனையோடும். 4நீநின். 5ஏகர்செல்வாயோ. 6நயந்த. (கஅசுச)

கஅசூ.---இதுவும், அடுத்தகவியும் - அதிகாயன் கூறும் மறுமொழியைத் தெரிவிக்கும்.

யாவரும் 1பொருவ ரல்ல 2ரெதிர்ந்துள 3யானு நீயுந்
தேவரும் பிறருங் காணச் 4செருவது செய்வ வெல்லாங்
காவல்வந் துன்னைக் காப்பார் 5காக்கவு மமையும் வேறே
6கூவிய ததனுக்கன்றோ வென்றனன் கூற்றின் 7வெய்யோன்.

(இ-ள்.) யமனைக் காட்டிலும் வெவ்வியவனாகிய அதிகாயன்,—யாவரும் பொருபவரல்லர்; செய்யப்போவதெல்லாம், எதிர்ப்பட்டுள்ள யானும் நீயுமே தேவர்களும் மற்றுமுள்ளாருங் காணப் போரென்பதாகும்; காவலாக வந்து உன்னைக்காப்பவர் காப்பினும் பொருந்தும் [உன்னைக்காத்தற்பொருட்டு எத்தனைபேர் உனக்குப்பலமாக ஏற்பட்டாலும் எனக்குச் சம்மதமே யென்றபடி]: வேறே (உன்னைஆள்விடுத்து) அழைத்தது (உன்னுடன் பொருதுவெல்ல வேண்டுமென்ற) அதற்காகவேயல்லவோ? என்று கூறினான்; (எ - று.)

செருவது, அது - பகுதிப்பொருள்விகுதி. எப்படிப்பட்டவராலும் என்னிடத்தினின்று உன்னைக் காத்தல் முடியாதென்பது, மூன்றாம் அடியின் கருத்து. பி-ம்:---1பொருவதில்லை. 2எதிர்ந்துளன். 3நீயுநானும். 4செருப்பல செய்வதல்லாற், செருப்பலசெய்வோமென்றான், செய்வது செய்வதெல்லாம். 5காப்பவும். 6கூவியந்தகனுக்கிவன். 7மிக்கான். (கஅசுரு)

கசுo. உமையனே காக்க 1மற்றங் குமையொரு 2கூறன் காக்க
இமையவ ரெல்லாங் காக்க வுலகமோ ரேழுங்காக்க
சமையுமுன் வாழ்க்கை 3யின்றோ டென்றுதன் சங்க மூதி
4அமையுருக் 5கொண்ட கூற்றை நாணெறிந் துருமி னார்த்தான்.

(இ - ள்.) உம்தமையனே காக்கட்டும்; அன்றி, உமையை ஒருபாகத்திற் கொண்டவனான சிவனே காக்கட்டும்; இமையவரெல்லாம் சேர்ந்து காக்கட்டும்; உலகம் ஒரேழுங் காக்கட்டும்; இன்றோடு உன் வாழ்வு அடங்கிவிடும் என்றுசொல்லித் தன் சங்கத்தை யெடுத்தூதி, மூங்கிலுருக்கொண்டயமனை [தன்வில்லை] நாணியைத் தெறித்து இடிபோல ஆரவாரித்தான்; (எ-று.)— அங்கு-அசை. அமை-மூங்கில். பி-ம்:—1மற்றை. 2பாகன். 3இன்றே. 4நமனுரு. 5கொண்ட வில்லை, கொண்ட கூற்றும், கொண்டாலன்ன. (கஅசுசு)

கசுக.---இலட்சுமணன் அதிகாயனுக்குப் பதிலுரைத்துப் பொருதல்.

அன்னது கேட்ட மைந்த 1னரும்பியன் முறுவ லோன்றச்
2சொன்னவர் வாரார் யானே தோற்கினுந் தோற்கத் தக்கேன்

[3]என்னைநீ பொருது வெல்லி னவரையும் [4]வென்றி யென்று
மின்னினு மிளிர்வ தாங்கோர் வெஞ்சரம் [5]கோத்து விட்டான்.

(இ - ள்.) அச்சொல்லைக்கேட்ட இளையபெருமாள்,—'அரும்பின் தன்மையைக்கொண்ட புன்சிரிப்புத் தோன்ற, '(நீ)சொன்ன எமையன்முதலோர் வரமாட்டார்கள்; (ஒருகால்) நானே தோற்றாலும் தோற்கத்தக்கவனே; பொருது நீ என்னை வெல்வாயானால் அவரையெல்லாம் வென்றவனேயாவாய்' என்று சொல்லி, மின்னலைக்காட்டிலும் விளங்குவதாகிய ஒரு கொடிய சரத்தை அப்போது கோத்துவிட்டான்; (எ - று.)—மைந்தன் விட்டான் என்க. முறுவல்-அறியாமையை எள்ளல்பற்றிவந்தது. அவரென்றது-கீழ்ச்செய்யுளில் அதிகாயன் கூறிய உமையன்முதலானவரைச் சுட்டும். பி - ம்:—[1]அரும்பிய. [2]சொன்னவாவாராய். [3]என்னையும். [4]வென்ற தென்றான். [5]தொடுத்து. (கஅசுஎ)

கசுஉ.---இதுமுதற் பதின்மூன்று கவிகள் - அதிகாயனுக்கும் இலட்சுமணனுக்கும் நிகழ்ந்த போரைத் தெரிவிக்கும்.

விட்டவெம் பகழி தன்னை [1]வெற்பினை வெதுப்புந் தோளான்
சுட்டதோர் [2]பகழி தன்னால் விசும்பிடைத் துணித்து [3]நீக்கி
எட்டினே டெட்டுவாளி யிலக்குவ விலக்கா யென்னாத்
[4]திட்டியின் [5]விடத்து நாக [6]மனையன [7]சிந்தி யார்த்தான்.

(இ-ள்.) மலையையும் வாட்டவல்ல தோளையுடையவனான அதிகாயன்,- (இலட்சுமணன்) விட்ட கொடிய அம்பைச் சுடுந்தன்மையதான ஒப்பற்ற கணையினாலே ஆகாயத்தினிடத்தே துணித்துப்போக்கி, (இலக்குமணனைப் பார்த்து,)'இலக்குவனே!(இவ்வம்புகளை)விலக்குவாய்'என்று சொல்லி,திட்டிவிடமென்ற நாகம்போல்வனவான பதினாறுஅம்புகளைச் சிந்தி ஆரவாரித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]வெற்பினும்வீங்கு, வெற்பெனவீங்குந். [2]கணையினாலே. [3]வீக்கி. [4]திட்டியும். [5]விடத்தினனும். [6]இனையன. [7]சிதறி. (கஅசுஅ)

கசுங.ஆர்த்தவ னெய்த வாளி யனைத்தையு [1]மறுத்து மாற்றி
வேர்த்[2]தொளி வயிர வெங்கோன் மேருவைப் [3]பிளக்கற்பால
தூர்த்தன னிராமன் றம்பி யவையெலாந் [4]துணித்துச் சிந்திக்
கூர்த்தன பகழி கோத்தான் குபேரனை யாடல் கொண்டான்.

(இ - ள்.) இளையபெருமாள்,---ஆரவாரித்து அந்தஅதிகாயன் எய்த அம்புகளனைத்தையும் அறுத்துப்போக்கி, கோபித்து, மேருவையும்பிளக்கும் வல்லமைபெற்றனவான ஒலிக்கும்உறுதியான கொடியஅம்புகளை நிரப்பினான்; குபேரனை வெற்றிகொண்டவனான அதிகாயன்,---அவையெல்லாவற்றையும் வெட்டித்தள்ளி, கூர்மைபெற்றனவான பகழிகளைத் தொடுத்துவிடுத்தான்; (எ - று.)—பி - ம்:—[1]அம்பினாலே. [2]ஒளிர். [3]வீட்டற்பால, விசும்பை முட்டத். [4]துணியத்தூவிக். (கஅசுகூ)

கசுச.எய்தன வெய்த வெல்லா மெரிமுகப் பகழி யாலே
[1]கொய்தன [2]னகற்றி யார்க்கு மாக்கணைக் குரிசில் கோபஞ்

செய்தனன் றுரந்தான் [3]றெய்வச் செயலன்ன கணையை வெங்
[4]நொய்தவன் கவசங் கீறி நுழைவன பிழைப்பி லாத. [கோல்

(இ-ள்.) ஆண்களிற் சிறந்தவனுன இலட்சுமணன்,—எய்த எல்லாவற்றையும் நெருப்பைமுகத்திற்கொண்ட அம்பாலே அறுத்துப் போக்கி ஆரவாரிக்கின்ற அரக்கனுன அதிகாயனைச் சினந்தனனுகி, தெய்வச்செயலையொத்த கணைகளைத் துரந்தான்: கொடிய(அந்த)அம்புகளெல்லாம் தவறாதனவாய், இலேசாக அவ்வதிகாயனது கவசத்தைக் கீறி நுழைவனவாயின; (எ - று.)

'வெங்கோல்' என்பதைக் கவசத்துக்கு அடைமொழியாக்கி-விரும்பத்தக்க கோற்றொழிலமைந்த கவசம் என்றுகொண்டு, கவசத்தைக்கீறி நுழைவனவாய்ப் பிழைப்பில்லாத தெய்வச்செயலன்ன கணையைத் துரந்தான் என்று அந்வயித்துரைப்பாருமுளர். தவறாது பயன் விளைத்தலில் தெய்வச்செயல் கணைக்கு உவமையாம். பி-ம்:—[1]செய்தவை. [2]தீக்கி மற்றக்குமாரனைக். தீக்கியாற்ற வாக்கனை, தீக்கியார்க்குமரக்கனை. [3]தேவர்செயலெனக்கணையை, தெய்வச் சிலையினிற்செங்கண், தெய்வச்செயலினசெங்கண், தெய்வச்செல்லெனக் கணையை. [4]நொய்தன. (கஅஎ0)

ககூரு. நூறுகோல் கவசங் கீறி நுழைதலுங் குழைவு தோன்றத்
தேறலாத் துணையுந் தெய்வச் [1]சிலைநெடுந் தேரி னூன்றி
[2]ஆறினை னது[3]கா லத்தங் கவனுடை யநீக மெல்லாங்
கூறுகூ றுக்கியம்பாற் கோடியின் மேலுங் கொன்றுன்.

(இ - ள்.) நூறுபாணங்கள் (அதிகாயனுடைய)கவசத்தைப் பிளந்துகொண்டு உட்புகவும், வருத்தந்தோன்ற, (அவன் தான்) தேறுமளவும் (தன்) தெய்வச்சிலையைப் பெரியதேரிலூன்றிக்கொண்டு இளைப்பாறியிருந்தான்; அக்காலத்தில்அங்கு அவ்வதிகாயனுடைய சேனையெல்லாவற்றையும்(இலட்சுமணன்) அம்பினுலே சின்னபின்னஞ்செய்து கோடிக்கும்மேலாக உயிரொழியச்செய்தான்: (எ - று.)—பி-ம்:—[1]சிலையொடும். [2]ஆறினை. [3]காலத் தங்கவன்படை, காலத்தினங்கவன், காலத்தங்கன்னவன். (கஅஎக)

ககூகூ. புடைநின்றுர் புரண்ட வாறும் போகின்ற புங்க வாளி
கடை[1]நின்று கணிக்க வாங்கோர் [2]கணக்கிலா வாறுங் கண்டான்
இடை[3]நின்ற மயக்கந் தீர்ந்தா னேந்திய சிலையன் காந்தித்
தொடைநின்ற பகழி மாரி மாரியின் மும்மை தூர்த்தான்.

(இ - ள்.) (அதிகாயன்)---நடுவேநேர்ந்த (தன்) மயக்கந்தீர்ந்து, பக்கத்தினின்றவர் புரண்டுபோனவகையையும் செல்கின்ற கூரிய (இலட்சுமணனுடைய)அம்புகள் முழுதும்நின்று கணக்கிடுமாறு ஒருகணக்குஇல்லாதவகையையும் கண்டவனுகி, ஏந்தியவில்லையுடையனவாய்க் கொதித்துத் தொடுக்கப்பெறுகின்ற அம்புமழையை மாரியினும் மும்மடங்குமிகுதியாக நிரப்பினுன்; (எ-று.)—பி-ம்:—[1]நின்றுகளித்த, நின்றுகணக்கில், சென்றுகழிந்தது. [2]கணப்பிலா. [3]நின்று. (கஅஎஉ)

ககூஎ. வானெலாம் பகழி [1]வானின் வரம்பெலாம் பகழி [2]மண்ணுந்
தானெலாம் பகழி குன்றின் றலையெலாம் பகழி [3]சார்ந்தோர்

ஊனெலாம் பகழி 4யேன்றோ 5ருயிரெலாம் பகழி வேலை
மீனெலாம் பகழியாக 6வித்தினன் வெருளிமிக்கோன்.

(இ - ள்.) ஆகாயமெல்லாம் பகழி, வானின்வரம்பு எல்லாம் பகழி, நிலவுலகில் எல்லாம் தானே பகழி, மலையின்சிகரங்களிலெல்லாம் பகழி, சேர்ந்திருப்பவருடைய உடம்பிலெல்லாம் பகழி, எதிர்ந்தோரின்உயிரிலெல்லாம்பகழி, கடலின்மீன்களிடத்திலெல்லாம் பகழி, இவ்வாறாக வெருளிமிக்கவனாய் (அதிகாயன்அம்புகளை எங்கும்) விதைத்திட்டான்; (எ - று.)—பகழி-அம்பு. பி-ம்:—1திக்கின். 2மண்ணே. 3சாய்ந்தோர். 4நின்றோர்.5உடலெலாம்.6வித்தனன், விதைத்தனன். (கஅஎ௩)

கஅஎச. மறைந்தன திசைக ளெல்லாம் வானவர் மனமே போலக், குறைந்தன சுடரின் மும்மைக் 1கொழுங்கதிர் குவிந்தொன் றொன்றை, அறைந்தன பகழி வைய 2மதிர்ந்தது விண்ணு மஃதே, நிறைந்தன பொறியின் குப்பை 3நிமிர்ந்தது நெருப்பின் கற்றை.

(இ - ள்.) (அதிகாயன்வித்திய பகழிகளால்) திசைகளெல்லாம் மறைந்திட்டன;வானவரின்மனம்போல முச்சுடர்களின் கொழுவியகதிர்,(ஒளி)குன்றின;பகழிகள்குவிந்து ஒன்றை மற்றொன்றாக மோதலாயின;பூமி அதிர்ந்தது; வானமும் அவ்வாறே(அதிர்ந்தது); அனற்பொறித்தொகுதிகள் நிறைந்தன; நெருப்பின்கற்றை மிக்குததோன்றிற்று; (எ - று.)—பி-ம்:—1கொழுங்கவிக். 2அதிர்ந்தன, மாதிரம். 3நிமிர்ந்தன. (கஅஎச)

கஅஎரு. முற்றிய தின்றே யன்றோ 1வானர முழங்கு தானை
மற்2றிவன் றன்னை வெல்ல வல்லனோ வள்ள றம்பி
கற்றது 3கால னோடோ கொலையிவ னொருவன் கற்ற
விற்றொழி 4லென்னே யென்னாத் தேவரும் வெருவ லுற்றார்.

(இ - ள்.) 'முழங்குகின்ற வானரசேனை, இன்றைக்கே முடிந்துவிடுமல்லவோ? இராமனது தம்பி, இவனை வெல்லவல்லனோ? இவ்வதிகாயன் கொலையைக் கற்றது யமனுடனேதானோ? ஒப்பற்ற இவன் கற்றுள்ளவில்வித்தை (இருந்தபடி) என்னே!' என்று கூறி, தேவர்களும் அஞ்சத்தொடங்கினார்; (எ - று.)—மற்று-அசை: வினைமாற்று. பி-ம்:—1வானரர்.2அவன்.3காலனோடே. 4என்னுமெனக். (கஅஎரு)

உ00. அங்கதன் னெற்றி மேலுந் தோளினு மாகத் துன்றும்
1புங்கமே 2தோன்ற வண்ணம் பொருஅம் பலவும் போக்கி
வெங்கணை யிரண்டு மொன்று மிளவல்மேல் 3ஏவிச்
சங்கமு மூதி விண்ணோர் தலைபொதி ரெறிய வார்த்தான்.

(இ - ள்.) (அப்போது அதிகாயன்), அங்கதனுடைய நெற்றிமேலும் தோளின்மீதும் மார்பிலும் அம்பின்நுனியும் தோன்றுதபடி(அழுந்தப்)பொருகின்ற அம்புகள்பலவற்றைச் செலுத்தி,கொடிய அம்புகள் மூன்றை இலட்சுமணன்மீது எவி, மேகம்போல்முழங்குகின்ற சங்கத்தை யூதி,விண்ணவரின்சிரம் நடுக்கமடைய ஆரவாரித்தான்; (எ - று.)—பி-ம்:—1புங்கமும். 2தோன்றும். 3மிக்க, வேகச். (கஅஎசு)

உ0௬. வாலிசேய் மேனி மேலு மழைபொரு [1]குருதி வாரி
காலுயர் வரையிற் [2]செங்கே ழருவிபோ லொழுகக் கண்டான்
[3]கோலொரு பத்து [4]நூற்றுற் குதிரையின் [5]றலைகள் கொய்து
மேலவன் [6]சிரத்தைச் சிந்தி வில்லையுந் [7]துணித்தான் வீரன்.

(இ-ள்.) (சற்று) ஓங்கியதாழ்வரையிலே செந்நிறமாகவிளங்குகின்ற அருவிபோல் வாலிகுமாரனை அங்கதன் உடன்மேலும் மழைபோன்றகுருதிநீர் ஒழுகுவதைக்கண்டவனாய், வீரனான இலட்சுமணன்,—ஓராயிரம்அம்புகளால் (தேர்க்)குதிரைகளின் தலைகளை கொய்து தேர்மேலேயுள்ளவனான பாகனுடைய சிரத்தையும் போக்கி, (அதிகாயனுடைய)வில்லையும் துணித்திட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]குருதிமாரி. [2]கீழ்வீழருவி. [3]கோலொன்று. [4]நூறுற். [5]தலையைக். [6]தேரைச். [7]அறுத்தான். (கஅஎஎ)

உ0௨. மாற்றொரு தடந்தே ரேறி [1]மாறொரு சிலையும் வாங்கி
[2]ஏற்றவல் லரக்கன் றன்மே [3]லெரிமுதற் கடவு ளென்பான்
ஆற்றல்சால் படையை விட்டா னரிய னரக்க னம்மா
வேற்றுள [4]தாங்க வென்று வெய்யவன் படையை விட்டான்.

(இ - ள்.) மற்றுஒருதடந்தேரின்மீதுஏறி வேறுஒருசிலையையும் எடுத்துக்கொண்டு எதிர்த்த வலிய அரக்கன்மீது,இலட்சுமணன்,--அக்கினிபகவானது வலிமைபொருந்திய படைக்கலத்தை [ஆக்நேயாஸ்திரத்தை]ப் பிரயோகித்தான்;அரக்கனும்'தாங்குக'என்றுசொல்லி,வேறாகஉள்ளதொருஆக்கினேயாஸ்திரத்தை விடுத்தான்; (எ - று.)

அம்மா-வியப்பிடைச்சொல்;சலிக்காது அதிகாயன் வேறொரு வெய்யவன் படையை விடுத்ததுகுறித்து வியந்தவாறு. தாங்க - அகரவீற்றுவியங்கோள். வெய்யவன்படை - சூரியாஸ்திரமென்பாருமுளர். பி-ம்:—[1]மற்றொரு. மாற்றொரு. [2]பேற்றயலரக்கன், ஏற்றவாளரக்கன், [3]எரிமுகக். [4]தாங்காய்.(கஅஎஅ)

உ0௩. பொருபடை யிரண்டுந் தம்மிற் [1]பொருதன பொருதலோடும், எரிகணை யுருமின் வெய்ய விலக்குவன் றுரந்த மார்பை, உருவின வுலப்பி லாத [2]வூலாகில னுற்ற லோயான், சொரிகணை மழையின் மும்மை [3]சொரிந்தனன் றெழிக்குஞ் சொல்லான்.

(இ-ள்.) பொருகின்ற அந்த அஸ்திரங்களிரண்டும் தம்மிற் பொருதன; பொருகையில், (பின்னும்) இலக்குமணன்எய்த உருமினும் வெம்மையயுடைய எரிகணைகள், அழிவில்லாதனவாய் (அதிகாயனுடைய)மார்பை ஊடுருவின; வருந்தாதவனும்வலிமைகுறையப்பெறாதனவுமாகி அதட்டுகின்றசொல்லையுடையவனான அதிகாயன்,இலக்குமணன் சொரிந்தகணைமழையினும் மூன்றுமடங்கு கணைகளை மிகுதியாகச்சொரிந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]பொருந்தின. [2]உலைகிலன். [3]தூர்ந்தனன். (கஅஎக)

உ0௪. பின்னின்றார் முன்னின் றாரைக் காணலாம் பெற்றித் தாக
[1]மின்னின்ற வயிரவாளி [2]திறந்தன மேனி முற்றும்
[3]அந்நின்ற [4]நிலையி னாற்றல் [5]குறைந்திலனாவி நீங்கான் [ன்.
பொன்னின்ற வடிம்பின் வாளி [6]மழையெனப் பொழியும் [7]வில்லா

(இ - ள்.) (பின்னும் இலக்குமணன்பிரயோகித்த) ஒளிபொருந்திய உறுதியான பாணங்கள், பின்னேநிற்பவர்கள் முன்னேயிருப்பவரைக் காணலாம்படி (அவ்வதிகாயனுடைய) மேனிமுற்றும் தொளையாக்கிவிட்டன; அவ்வாறு நின்றநிலைமையிலும், (அதிகாயன்),—வல்லமைகுறையப்பெறுதவனும் ஆவி நீங்கப்பெறுதனவுமாகி, பொன்போல்நின்ற கூர்மையைக்கொண்ட அம்பை மழைபோலப்பொழிகின்ற வில்லையுடையவனுனன்; (எ-று.)—1முன்னின்ற. 2துரந்தனன். 3அன்னின்ற. 4நிலையவாற்றல். 5துறந்திலன். 6உருமெனப். 7கையான், வில்லி. (௧அ௮௦)

உ0ரு.—வாயுதேவன்தோன்றிப் பிரமாஸ்திரத்தைவிடுமாறு இலக்குமணனுக்கு உரைத்தல்.

கோன்முகந் 1தள்ளி யள்ளிக் கொடுஞ்சிலை நாணிற் கோத்துக்
கான்முகம் குழைய வாங்கிச் 2சொரிகின்ற காளை வீரன்
பான்முகந் 3தோன்ற நின்று காற்றினுக் கரசன் பண்டை
நான்முகன் 4படையா லன்றிச் சாகில னம்ப வென்றான்.

(இ - ள்.) அம்புகளை முகந்து அள்ளியள்ளிக் கொடியசிலையின் நாணியிலே கோத்து, விற்கால்முகங்குழையும்படி வளைத்துச் சொரிபவனுன காளைபோன்ற இளையவீரனிடத்து,வாயுதேவன்,(தன்) முகந்தோன்ற(ப் பிரதியட்சமாய்வந்து)நின்று, 'நம்பனே!பழமையான பிரமனைத்தேவதையாகக்கொண்ட அஸ்திரத்தினாலல்லாமல் (இவன்)சாதலிலன்' என்று கூறினன்; (எ - று.)—வீரன்பால், பால்-ஏழனுருபு. பி - ம்:—1அள்ளியள்ளுங், அள்ளியுள்ளுங். 2பொழிகின்ற. 3தோன்றி. 4படையின். (௧அ௮௧)

உ0சு.—அதிகாயன்சிரத்தை இலக்குமணன் பிரமாத்திரத்தா லறுத்தல்.

நன்றென 1வுவந்து வீர னான்முகன் படையை வாங்கி
மின்றனி 2திரண்ட 3தென்னச் சரத்தொடுங் கூட்டி விட்டான்
குன்றினு முயர்ந்த 4தோளான் 5றலையினைக் 6கொண்டவ் வாளி
சென்றது விசும்பி னூடு தேவருந் தெரியக் கண்டார்.

(இ - ள்.) வீரனான இலக்குமணன்,—நல்லதென்றுசொல்லி மகிழ்ந்து பிரமாஸ்திரத்தையெடுத்து, மின்னல் தனியே திரண்டதென்னுமாறு அம்புடனே சேர்த்துவிட்டான் [பிரமாஸ்திரத்தை யபிமந்திரித்து அம்புதொடுத்து விட்டான் என்றபடி]; அந்தஅம்பானது, மலையினும்உயர்ந்துள்ள தோள்களையுடையவனான அவ்வதிகாயனது தலையைக்கொண்டு ஆகாயத்தினிடமாகச்சென்றது; தேவரும், (தங்)கண்ணுக்குப்புலனாக (அதனைக்)கண்டார்கள்; (எ - று.) —பி-ம்:—1உணர்ந்து. 2திரண்ட. 3அன்ன. 4தீயோன். 5தலையினிக். 6கொண்ட.

உ0எ.—வானவர்முதலியோர் மகிழ்ச்சிமுதலியனவற்றை அடைய, இலக்குமணன் அங்கதன்தோளினின்று இறங்குதல்.

பூமழை பொழிந்து 1வானோர் போயதெம் பொருமை லென்றார்
தாமழைத் தலறி 2யெங்கு மிரிந்தன ரரக்கர் தள்ளித்
தீமையுந் 3தகைப்பு நீங்கித் 4திகைத்தனர் குரக்குச் 5சேனை
கோமகன் றோளி னின்றுங் குதித்தனன் கொற்ற 6வில்லான்.

(இ - ள்.) வானவர் மலர்மழைசிந்தி 'எம்முடையவருத்தம்நீங்கிற்று' என்றனர்; அரக்கர் தாங்கள் கதறிக் கூவியவண்ணம் (ஒருவரையொருவர்) தள்ளிக்கொண்டு எங்கும் நிலைகெட்டு ஓடினர்; வானரசேனையார் துன்பமும் வலிதடுக்கப்படுதலும் நீங்கித் திகைப்புற்றனர்; வெற்றிபொருந்திய வில்லாளியான இலக்குமணன், அங்கதன் தோளினின்று குதித்திறங்கினான்; (எ - று.)—பெருமகிழ்ச்சியையுண்டாக்குஞ்செயல் நிகழின் திகைப்புத்தோன்றுதல், இயல்பு. கோமகன்-அரசகுமாரன்: இங்கே, அங்கதன். பி-ம்:—[1]விண்ணோர். [2]எங்கிச்சரிந்தனர். [3]களிப்பும், தனிமை, தன்மை. [4]திகைத்தனர், தெளிந்தது. [5]சேனைக். [6]வில்லி. (கஅஅரு)

உ௦அ.—இலக்குமணன் வென்றதுகண்ட வீடணன், இந்திரசித்தும் இறப்பானென்று நிச்சயித்தல்.

[1]வெந்திறற் சித்தி கண்ட வீடணன் வியந்த நெஞ்சன்
அந்தரச் சித்த [2]ரார்க்கு மமலையுங் கேட்டா னையன்
மந்திர சித்தி [3]யன்ன சிலைத்தொழில் [4]வலியி தாயின்
[5]இந்திர சித்தி னார்க்கு மிறுதி[6]யே யியைவ தென்றான்.

(இ-ள்.) (இலக்குமணனது) கொடியவலிமை பயன்விளைத்ததைக்கண்ட விபீஷணன்,—வியப்புக்கொண்ட நெஞ்சமுடையவனாய், வானத்திற் சஞ்சரிக்கின்ற சித்தரின் ஆரவாரிக்கின்ற ஆரவாரத்தையும் கேட்டான்; (பின்பு) ஐயனுடைய [இலக்குமணனுடைய] மந்திரசித்தியையொத்த வில்தொழிலின் வலி இவ்வாறுள்ளதாயின், இந்திரசித்துக்கும் மரணமே பொருந்துவது என்று கூறினான்; (எ - று.)—பி-ம்:—[1]வெந்திறச். [2]ஆர்ப்பும். [3]அன்னான். [4]வலியதாயின், வலியிதானால். [5]இந்திரசித்தனுற்கும். [6]ஏயியல்வது, இங்கிவனால்.

உ௦௯.—இதுவும் அடுத்தகவியும்-நராந்தகன் வருதலைக் கூறும்.

எந்தெழி லாகத் தெம்மு னிறந்தன [1]னென்று நீநின்
சாந்[2]தகன் மார்பு திண்டோ [3]ணோக்கிநின் றனுவை [4]நோக்கிப்
போந்தகைக் [5]குரியை யன்றாற் போகலை போக லென்னா
[6]நாந்தக மின்னத் [7]தேரை நராந்தக [8]னடத்தி வந்தான்.

(இ - ள்.) 'மிக்க அழகையுடைய ஆகத்தைக்கொண்ட எமது அண்ணன் இறந்திட்டானென்று நீ உன்னுடைய சந்தனமணிந்த பரந்த மார்பையும் வலியதோளையும் பார்த்துக்கொண்டும், உன்னுடைய வில்லைப்பார்த்துக்கொண்டும் போகின்றதகுதிக்கு உரியவனல்லை; போகாதே, போகாதே' என்று சொல்லிக்கொண்டு, கத்தி (பளபளவென்று) ஒளிவிட, நராந்தகனென்பவன் தேரைச் செலுத்திவந்தான்; (எ - று.)—மார்புமுதலியன நோக்குதல், நாம் வென்றிட்டோமென்ற செருக்கைக் காட்டுதற்கு. பி-ம்:—[1]என்றே. [2]அகன் மார்பிற், அகலாததிண்டோள். [3]நோக்கினன். [4]தாங்கிப். [5]உரியது. [6]நாந்தகப்பரிசை, நாந்தக மின்னும், நாந்தகமின்னு. [7]வீசி, வீச, [8]நடந்து. (கஅஅடு)

உ௧௦. தேரிடை நின்று கண்க டீயுகச் சீற்றம் [1]பொங்கப்
[2]பாரிடைக் கிழியப் பாய்ந்து பகலிடைப் பரிதி யென்பான்

ஊரிடை [3]நின்று னென்னக் கேடக மொருகை தோன்ற
[4]நீருடை முகிலின் மின்போல் [5]வாளொடு நிமிர வந்தான்.

(இ-ள்.) (அந்த நராந்தகன்),—கண்களினின்று நெருப்புப்பொறி சிந்தவும் சீற்றம் கிளர்ந்துதோன்றவும் தேரினின்று பூமியினிடங்கிழிய இறங்கி,பகலிற் சூரியன் ஊர்கோளினிடையே நின்றானென்னும்படி கேடகம் ஒருகையில் தோன்ற,நீர்பொருந்தியமுகிலில் மின்னுப்போல் (மற்றொருகையில்) வாளுடனே நிமிர்ந்துவந்தான்; (எ - று.)—பி-ம்—1செல்லப். 2பாரிடை. 3நின்றால ன்ன, நின்றானன்ன. 4நீரிடை. 5வாளிடை, வானிடை. (கஅஅசு)

உகக.—அங்கதன் நராந்தகன் வருவதைக் காணுதல்.

வீசின மரமுங் கல்லும் [1]விலங்கலும் வீற்று வீற்றாய்
ஆசைக டோறும் [2]சிந்த வாளினா லறுத்து மாற்றித்
தூசியு மிரண்டு கையும் நெற்றியுஞ் சுருண்டு [3]நீர்மேற்
பாசியி னொதுங்க [4]வந்தா னங்கத னதனைப் பார்த்தான்.

(இ - ள்.) (அதுகண்டு வானரவீரர்கள்) வீசிய மரமும் கல்லும் மலைகளும் தனித்தனியே திக்குக்கள்தோறுஞ் சிதறும்படி வாளினாலறுத்து (அவற்றை)ப்போக்கி, (வானரப்படையில்) முன்னணிப்படையும் இருபக்கத்துச் சேனையும் நெற்றிச்சேனையும் சுருண்டுபோய் நீர்மேற்பாசி (யொதுங்குவது) போல ஒதுங்கிவழிவிட்டிட (அந்தநராந்தகன்)வந்தான்; அங்கதன்(அவன்)வருவதைப்பார்த்தான்; (எ-று.)—பி-ம்:—1வீற்றுவீற்றாகவீழ. 2வீசி, வீச. 3மென் மேற். 4சென்றான். (கஅஅஎ)

உகஉ.—நராந்தகனுடன் அங்கதன் பொருது அவனைக் கொன்றமையை மூன்று கவிகள் கூறும்.

மரமொன்று [1]விரைவின் வாங்கி வாய்மடித் [2]துருத்து வள்ளல்
சர[3]மொன்றிற் கடிது சென்று தாக்கினான் றாக்கி னான்றன்
கரமொன்றிற் றிரிவ தாருங் [4]காண்கிலா ததனைத் தன்கை
அரமொன்று வயிர வாளா லாயிரங் கண்டங் கண்டான்.

(இ - ள்.) ஒருமரத்தை விரைவிலே வாங்கி வாயைமடித்துக்கொண்டு கோபித்து, இராமபிரானுடைய ஒப்பற்ற சரம்போல விரைவுடனேபோய், (அங்கதன் நராந்தகனைத்) தாக்கினான்; தாக்கின அங்கதனுடைய கரமொன்றிலே (மரமொன்று) சுழல்வதை யாரும் காணாதவண்ணம் [மிகவிரைவிலே] அம்மரத்தை (நராந்தகன்) தன்கையிலுள்ள அரத்தினாலராவிச்செய்த உறுதியான வாட்படையால் ஆயிரந்துண்டாக்கினான்: (எ - று.)—பி - ம்:—1விசையின்.2உறுக்கி.3ஒன்றுகடிதிற். 4காண்கிலாதானை, காண்கிலாததனை. (கஅஅஅ)

உகங. அவ்விடை வெறுங்கை நின்ற வங்கத னாண்மை யன்றால்
இவ்விடை [1]பெயர்த லென்னா விமையிடை [2]யொதுங்கா முன்னர்
[3]வெவ்விட மென்னப் பொங்கி யவனிடை [4]யெறிந்த வீச்சுத்
[5]தவ்விட [6]வுருமிற் புக்கு வாளொடு தழுவிக் கொண்டான்.

(இ - ள்.) அவ்விடத்து வெறுங்கையுடனே நின்ற அங்கதன் 'இப்போது பெயர்ந்துபோதல் ஆண்தன்மையன்று' என்று கருதி,இமைப்பொழுது கழிதற்குள்ளே கொடிய விஷம்போலச் சீறி அந்தநராந்தகனிடத்திலே எறி

கின்ற வாள்வீச்சு ஒழியுமாறு இடிபோற்புகுந்து வாளுடனே (அவனைத்)தழு விக்கொண்டான்; (எ - று.)—பி - ம்:—1பெயர்வது, போர்வது. 2ஒருங்கா, அடங்கா. 3வெவ்விடை. 4எழுந்துவீசித், எரிந்துவீழுந், எதிர்ந்துவீசுந், அதிர்ந்து வீசுந், இரிந்துவீசுந். 5தவ்விடை, தவ்வுடை. 6உருவிற். (கஅஅக)

உகச. அத்தொழில் கண்ட வானோ ராவலங் கொட்டி யார்த்தார்
இத்தொழி [1]லிவனுக் கல்லா [2]லீசற்கு மியலா தென்பார் [டான்
குத்தொழித் தவன்கை [3]வாடன் கூருகிர்த் தடக்கை கொண்
ஒத்திரு கூறாய்[4]வீழ வீசிவா னுலைய வார்த்தான்.

(இ-ள்.) (அங்கதனுடைய) அச்செயலைக் கண்ட வானவர், செருக்குத் தோன்றக் கைகொட்டி யாரவாரித்து,'இச்செயல் இவனுக்கு(ச்செய்ய)இயன்ற தேயல்லாமல் உருத்திரமூர்த்திக்குஞ் செய்யவியலாது என்பவரானார்; குத்து தல் தொழிலைச் செய்யாதுவிட்டு அவன்கைவாளை(ப் பிடுங்கித் தனது) கூரிய உகிரையுடைய பெரியகையிற் கொண்டவனாய், (அந்த நராந்தகன்) ஒத்த இரு பகுதியாகி (உயிரொழிந்து) விழும்படி அந்தவாளைவீசி, வானவரும் அஞ்சும் படி (மகிழ்ச்சியினால்) ஆரவாரஞ்செய்தான்; (எ - று.)—பி-ம்:—1அவனுக்கு. 2யாவர்க்கும். 3வாட்டன். 4வீசிவிண்ணவர், வீழ வீசினான். (கஅக௦)

உகரு.—போர்மத்தன் நீலனுடன் பொருது ஒழிந்தமையைப்
பதின்மூன்று செய்யுள்கள் கூறும்.

கூர்மத்தின் [1]வெரிநின் வைத்து வானவ ரமுதங் கொண்ட
நீர்மத்தி னிமிர்ந்த தோளா னிறைமத்த மதுவைத் தேக்கி
[2]ஊர்மத்த [3]முண்டா லன்ன மயக்கத்தா [4]னுருமைத் தின்பான்
போர்மத்த னென்பான் வந்தான் புகர்மத்தப் பூட்கை மேலான்.

(இ-ள்.) யாமையின் முதுகிலேவைத்து வானவர் அமுதத்தைப்பெறக் காரணமான கடலைக்கடைந்த மத்தான (மந்தர) கிரிபோல நிமிர்ந்த தோளை யுடையவனும், இடியையும் உட்கொள்ளவல்ல (கொடுமைவாய்ந்த)வனுமான போரில்வல்ல மத்தனென்பவன்,—நிறைந்தமதத்தையுண்டாக்கவல்ல மது வைத் தெவிட்டக் குடித்து, ஊமத்தங்காயை யுண்டாலொத்தமயக்கமுடைய வனாய்,முகப்புள்ளியையும் மதத்தையுமுடைய யானைமீதேறியவனாகி வந்தான்.

யுத்தோந்மத்தனென்பது மகோதரனுக்குப் பெயரென்று வால்மீகத்தால் விளங்கும்: அப்பெயரேபோர்மத்தனென்று வழங்கப்பட்டதாகத்தோன்றுகின் றது. உந்மத்தனென்றுவழங்குவதும் உண்டு: உஉஅ-ஆஞ் செய்யுளைக்காண்க. மத்தனென்றபெயர் 'போர்' என்று அடைபெற்றுவந்ததென்பர், ஒருசாரார். மகோதர மகாபாரிசுவர் இராவணனுக்குத் தம்பிமுறையாகுபவர். மகோதரனு டைய யானை சுதரிசன மெனப்படும். நீர்-கடலுக்கு, இலக்கணை. மத்த மது- வடசொற்றொடர். ஊர்மத்தம்-ஊமத்தமென்பதன் விரித்தல். பி - ம்:—1முது கின், முதுகு. 2ஊர்மத்தை. 3உண்டாலென்ன. 4உருமுத். (கஅகக)

உகசு. காற்[1]றன்றேற் கடுமை யென்னுங் [2]கடலன்றேன் முழக்க மென்னுங், கூற்றன்றேற் கொலைமற் றென்னா முருமன்றேற் கொடு

மை யென்றுஞ், சீற்றந்தா னன்றேற் சீற்றம் வேறொன் று தெரிப்ப
தெங்கே, மாற்றன்றே மலைமற் [3]றென்னே மத்தன்றன் மத்த யானை.

(இ-ள்.) போர்மத்தனென்பவனுடைய மதம்பிடித்த யானை,—காற்றன்று
யின்,விரைவு எப்படி வந்ததாகும்? கடலன்றாயின்,முழக்கம் எப்படிவந்ததாகும்?
யமனன்றாயின், கொலைத்தொழில் எப்படிவந்ததாகும்? இடியன்றாயின்,
கொடுமை எப்படி வந்ததாகும்? சீற்றமே ஒருவடிவு படைத்துவந்ததன்றாயின்,
வேறொரு சீற்றத்தைத் தெரிவிப்பது எவ்வாறு? மலையோ இதற்கு ஒப்பான
தன் று; பின்னர்(இதை)என்ன என்று(நாம் வருணித்துச்)சொல்வது?(எ-று.)
—இதுவும், அடுத்த கவியும் போர்மத்தனதுயானையின் தன்மையைக் கூறும்.

போர்மத்தனதுயானை காற்றுமுதலியவற்றைப்போற் கடுமை முதலியவை
பொருந்தியிருந்த தென்க.மத்தனென்பது,போர்மத்தனென்பதன் ஏகதேசம்
போலும். ஸ்ரீவான்மீகிமுனிவர், மகாபாரிசுவனை, மத்தனென்றும் மத்தாநீக
னென்றுங்கூறுவர். பி - ம்:—[1]அன்றே, அன்றோ. [2]கனல். [3]யாதோ, ஏதோ,
எங்கே. (க௮கூ௨)

உகஎ.[1]வேகமாக் கவிகள் வீசும் வெற்பினம் விழுவ மேன்மேற்
பாகர்காற் சிலையிற் றூண்டு முண்டையா மெனவும் [2]பற்றா
மாகமா மரங்க ளெல்லாங் [3]கடாத்திடை வண்டு [4]சோப்பி
ஆகினு [5]மாம தன்றேற் [6]கரும்பென்றே யறைய லாமால்.

(இ-ள்.) வானரங்கள் வேகமாக வீசுகின்ற வெற்பினம் மேன்மேல்விழு
பவை, பாகர்காலிலே,சிலையினின்று தூண்டுகின்ற உண்டையாகு மென்பதற்
குந் தக்கனவல்ல;(அவைகள் வீசுகின்ற)வானுற வோங்கியபெரியமரங்களெல்
லாம், கன்னத்திலே வண்டையோட்டுவதாகினும் ஆம்: அதுஉவமையாகா
தென்றால், கரும்பு என்றே சொல்லலாம்; (எ - று.)—ஆல் - தேற்றம்.

மரங்கள் கரும்புபோல் எளிதில் முறிந்தன என்றவாறு. 'வேகமாக்
கவிகள்வீசும்'என்ற தொடரை மரங்களோடும் ஒட்டுக. ஈச்சோப்பிபோல்,
'வண்டுசோப்பி' என்றார். பாகர் காற்சிலையிற்றூண்டும் உண்டையாமெனவும்
பற்றா-பாகர்கள் இருமுனைகொண்ட சிலையிலேவைத்துத் தூண்டுகின்ற உண்
டையாகுமென்பதற்கும் பற்றாது என்பாரு முளர்.பி-ம்:--[1]வேகமாய்...வீழ்வ.
[2]பற்ற. [3]கடத்திடை. [4]சேர்வது. [5]ஆகுமன்றேல், ஆகவன்றேல்.[6]கரும்பென.

உகஅ.காலிடைப் பட்டும் மானக் கையிடைப் பட்டுங் கால
வாலிடைப் பட்டும் [1]வெய்ய மருப்பிடைப் பட்டு மாண்டு
நாலிடைப் பட்ட சேனை [2]நாயகன் றம்பி யெய்த
கோலிடைப் [3]பட்ட தெல்லாம் [4]பட்டது குரங்குச் சேனை.

(இ - ள்.) குரங்குச் சேனை,—அப்போது, (அந்தயானையினது) காலின்
கீழகப்பட்டும், பெருமைபொருந்திய துதிக்கையிலே யகப்பட்டும், காலனை
யொத்த வாலினிடத்திலே யகப்பட்டும், கொடிய தந்தங்களிலே அகப்பட்டும்
உயிரொழிந்து, இளையபெருமாளெய்த அம்பினிடத்தே யகப்பட்ட நாலாகப்
பொருந்திய ராட்சசசேனை பட்டபாட்டையெல்லாம் அடைந்தது; (எ-று.)—
பி - ம்:—[1]மாண்ட. [2]நம்பிதன். [3]பட்ட. [4]பட்டன, பட்டதக். (க௮கூ௩)

௨௧௯. தன்படை [1]பட்ட தன்மை நோக்கினுன் றரிக்கி லாமை
அன்படை யுள்ளத் தண்ண [2]லனலின்றன் புதல்வ ஞழி
வன்படை யனைய தாங்கோர் மராமரஞ் சுழற்றி வந்தான்
பின்படை [3]செல்ல [4]நள்ளார் பெரும்படை யிரிந்து [5]பேர.

(இ - ள்.) தன்சேனை யடைந்ததன்மையை நோக்கினவனும் அன்பைப் பெற்ற மனத்தைக்கொண்ட பெருமையிற் சிறந்தவனும் அக்கினிகுமாரனுமான நீலன்,—மனந்தரியாமல், ஆங்கு ஒருமராமரத்தை யெடுத்து, (தன்) சேனை பின்னே தொடர்ந்துவரவும் பகைவரின் பெருஞ்சேனை நிலைகெட்டு ஓடவும், வலியஆழிப்படை போல்வதாகச் சுழற்றிக்கொண்டு வந்தான்; (எ-று.) —பி-ம்:—[1]உற்ற. [2]அனலன்றன், அங்கிதன், அங்கியின். [3]பட்டு. [4]நண்ணர், நன்னீர்ப். [5]போக. (கஅகரு)

௨௨௦. சேறலுங் களிற்றின் மேலான் றிண்டிற லரக்கன் செவ்வே
ஆறிரண் [1]டம்பி ஞலந்நெடுமர மறுத்து [2]வீழ்த்தான்
வேறொரு குன்ற நீலன் வீசின னதனை [3]விண்ணின்
நூறுவெம் [4]பகழி தன்ஞ னூறக்கினன் [5]களிறு நூக்கி.

(இ - ள்.) (அவ்வாறு நீலன் தன்மீது) வரவும், களிற்றின்மேலேயுள்ளவனுகிய மிகவலிமையுள்ள அரக்கன்,—நேரே பன்னிரண்டம்பினுல் அந்த நெடியமரத்தைத் துண்டித்து வீழ்த்தினன்; நீலன் வேறொருமலையைவீசினன்; அதனை யானையை முன்செலுத்தியவண்ணம் நூறு கொடிய அம்புகளினுல் வானத்திலேயே பொடியாக்கிவிட்டான்; (எ-று.)—ஊறு வெம்பகழிதன்னுல் என்று பிரித்தாரு முளர். பி-ம்:—[1]அம்பினுலேயம். [2]விட்டான். [3]வென்றி. [4]பகழியாலே. [5]கரியை. (கஅகசு)

௨௨௧. [1]பின்னெடுங் குன்றந் தேடிப் பெயர்குவான் பெயரா வண்ணம்
பொன்னெடுங் குன்றஞ் சூழ்ந்த பொறிவரி யரவம் போல
[2]அந்நெடுங் கோப யானை யமரரும் [3]வெயர்ப்ப வங்கி
தன்னெடு மகனைப் [4]பற்றிப் பிடித்தது தடக்கை [5]நீட்டி.

(இ-ள்.) பின்பு பெரிய மலையைத் தேடிக்கொண்டு செல்பவனுன நீலன், செல்லமுடியாதபடி, மந்தரமலையைச்சுற்றிய படப்புள்ளிகளையும் உடற்கோடுகளையுமுடைய (வாசுகியென்னும்) நாகம்போல, அந்த நெடிய சினமுள்ள யானை,—தேவர்களும்(அஞ்சி)உடல் வெயர்க்குமாறு,சிறந்தஅக்கினிகுமாரனை அந்த நீலனைப் பெரியகையைநீட்டிப் பற்றிப் பிடித்தது; (எ-று.)—பி-ம்:—[1]பின்னரும். [2]அன்னெடுங். [3]எஞ்ச, வியப்ப. [4]சுற்றி. [5]தாக்கி, தாங்கி. (கஅகஎ)

௨௨௨. ஒடுங்கின னுரமு மாற்ற லூற்றமு முயிரு மென்னக்
கொடும்படை வயிரக் கோட்டாற் குத்துவான் [1]குறிக்குங் காலை
நெடுங்கையுந் தலையும் [2]பிய்யா நொய்தினி னிமிர்ந்து போனுன்
நடுங்கின ரரக்கர் விண்ணோர் நன்றுநன் றென்ன நக்கார்.

(இ - ள்.) (அப்போது நீலன்),—வலிமையும் வல்லமையாலாகியஊக்கமும் உயிரும் ஒடுங்கினுனென்று (கண்டோர்) கருதும்படி, வளைந்த அரிவாள் போன்ற[கூரிய]வயிரப்பூண்கட்டியதந்தத்தினுற் குத்துமாறு(அவ்வரக்கனுடையயானை)எண்ணுமளவில்,—(அதனது)நீண்டகையையும் தலையையும் பிய்த்து

க்கொண்டு விரைவில் மேலோங்கிச் சென்றான்; அரக்கர்நடுங்கினார்; விண்ணவர் 'நன்று, நன்று' என்றுசொல்லிச் சிரித்தனர்; (எ-று.)—பி-ம்:—[1]குறுகுங்காலை, குறுகும்வேலை. [2]பாற, பிய்ய, வீய. (கஅகூஅ)

உஉங.[1]தறைத்தலை யுற்றா னீல னென்பதோர் காலந் தன்னில்
[2]நிறைத்தலை வழங்குஞ் சோரி [3]நீத்தத்து நெடுங்குன் றென்னக்
[4]குறைத்தலை வேழம் வீழ [5]விசும்பின்மேற் கொண்டு நின்றான்
[6]பிறைத்தலை வயிரவாளி மழையெனப் [7]பெய்யுங் [8]கையான்.

(இ - ள்.) நீலன் பூமியிற் பொருந்தினானென்னுமளவுக்குள், நிறையத் தலையைக்கொண்டு ஓடுகின்ற குருதிவெள்ளத்திலே பெருமலையென்னுமாறு குறைதலையடைந்த தலையைக்கொண்ட[தலையற்ற](அவ்)வேழம் விழ,(அதன் மேலேயிருந்த போர்மத்தன்),—விசும்பின்மேலேநின்றவனாய், அர்த்தசந்திர பாணங்களை மழைபோலப்பொழிகின்ற கையையுடையவனானான்; (எ-று.)—பி-ம்:—[1]தறையினினுற்றானுற்றான், தறைத்தலையுற்றானுற்றான். [2]நிறத்தலை. [3]நீர்த்தது.[4]குறத்தலை.[5]விசும்பை.[6]பிறத்தலை.[7]பொழியும்.[8]வில்லான்.(கஅகூகூ)

உஉச.வாங்கிய சிரத்தின் மற்றை [1]வயிரவான் [2]கோட்டை [3]வவ்வி
வீங்கிய [4]விசையி னீல னரக்கன்மேற் செல்ல விட்டான்
ஆங்கவ [5]னவற்றை [6]யாண்டோ ரம்பினா லறுத்தோ ரம்பால் [ன்.
[7]ஓங்கல்போற் புயத்தி னான்ற [8]னுரத்திடை [9]யொளிக்க வெய்தா

(இ-ள்.) நீலனானவன், வாங்கியசிரத்திலுள்ள அந்தவயிரம்போன்ற உறுதியுள்ள பெரியதந்தங்களைப் பறித்து மிக்கவிசையுடனே அரக்கன்மேற்செல்லுமாறு விட்டான்; அந்தஅரக்கன் அப்போது அத்தந்தங்களை ஓரம்பினாலறுத்திட்டு,ஓரம்பினால் மலைபோன்றபுயத்தையுடையவனான நீலனுடையமார்பிலே ஒளிக்குமாறுஎய்தான்; (எ-று.)—பி-ம்:—[1]வயிரவாட்.[2]கோடு.[3]வாங்கி.[4]விசையால். [5]அத்தை. [6]ஆங்கோர். [7]ஓங்கலம். [8]உரத்தின்மேற். [9]குளிப்ப, ஒளிப்ப.

உஉரு.எய்தது கால மாக [1]விளிந்தில தியானை யென்னக்
கையுடை மலையொன் [2]றேறிக் காற்றெனக் கடாவி வந்தான்
வெய்யவ [3]னவனைத் தானு மேற்கொளா வில்வி னோடு
மொய்பெருங் [4]களிற்றி னிட்டான் [5]மும்மதக் களிற்றின் முன்னர்.

(இ - ள்.) எய்த அக்காலத்திலே (கண்டோர்) யானை இறந்திடவில்லையென்றுகருதுமாறு (அரக்கன்),வேறொருயானைமீதேறிக் காற்றுப்போல்விசையாகத்தூண்டிக்கொண்டு வந்தான்; கொடியவீரமுள்ளவனான நீலன், வலிய பெரியயானையைப்(பிய்த்துமேலேதூக்கியது)போன்று அவ்வரக்கனையும் வில்லுடனே மேலேதூக்கிக்கொண்டு மும்மதங்கொண்ட அவன்யானையின் முன்புறத்திலிட்டான்; (எ-று.)—அவனைத்தானும், உம்மை-இறந்ததுதழுவியது. பி-ம்:—[1]விழுந்தில தியானை, விழுந்திலயானை. [2]ஏந்தி. [3]அதனைத், தன்னைக். [4]களத்தின். [5]மொய்தரு. (கஅ௦க)

உஉசு.[1]இட்டவ னவனி நின்று மெழுவதன் முன்ன மியானை
கட்டமை வயிரக் கோட்டாற் களப்பட [2]வீழ்த்திக் காலால்
[3]எட்டிவன் றடக்கை தன்னா [4]லெடுத்தெங்கும் விரைவின் வீசப்
பட்டிலன் றானே [5]தன்போர்க் [6]கரியினைப் படுத்து வீழ்த்தான்.

(இ-ள்.) இடப்பட்ட அந்தப்போர்மத்தனென்பவன் பூமியினின்றுஎழுவ தற்குமுன்னம்.(மதவெறியால் அவனைத் தன்தலைவனென்றுஉணராமையால்) யானையானது பூண்கட்டுப்பொருந்திய கிம்புரிக்கோட்டாற் களத்தில் விழும் படி தள்ளிக் காலினால்எட்டி [மிதித்து] (பலமுறை)வலிய பெரியகையினால் எடுத்துப் பலவிடத்திலும்விரைவாகவீசவும் இறவாதவனைத் தானே தன்போர்யானையைக்கொன்று வீழ்த்தினான்; (எ-று.)—தன்யானையே தன்னைச்செய்த இமிசையைப் பொறுக்கமாட்டாமற் போர்மத்தன் அவ்வுபத்திரவம்நீங்கத் தன் யானையைத் தானே கொன்றானென்க. பி - ம்:—1இட்டனன். 2வீழ்த்துக். 3வெட்டி. 4எடுத்தெடுத்தெங்கும், எடுத்தங்குமிங்கும். 5தன்கைக், தன்பொற். 6களிற்றினைப். (௧௧௦௨)

௨௨௭. தன்கரி தானே கொன்று தடக்கையாற் 1படுத்து 2வீழ்த்தும்
மின்கரி தென்ன 3மின்னு மெயிற்றினான் வெகுளி நோக்கிப்
பொன்கரி தென்னுங் கண்கள் 4பொறியுக நீலன் புக்கான்
வன்கர முறுக்கி மார்பிற் குத்தினன் மத்தன் மாண்டான்.

(இ - ள்.) பெரியகையினால் தன்யானையைத் தானேகொன்று வீழ்த்தி மின்னலுங் கரியதென்னும்படி மின்னுகின்ற எயிற்றையுடையவனான போர் மத்தனது வெகுளியைப் பார்த்து,நீலன்,பொன்னுங் கரியதென்னுமாறு(தன்) கண்களினின்று தீப்பொறி வெளிச்சிந்தப்புகுந்து,வலியகரத்தைமுறுக்கி(அவனது)மார்பிலே குத்தினன்;(அதனால்),போர்மத்தன் மாண்டான்; (எ - று.)— பி-ம்:—1தடிந்து, தடித்து. 2வீழ்த்த. 3சின்ற. 4புகை. (௧௧௦௩)

௨௨அ.—இனி, இடபவயமத்தர்கள் போர்புரிகையில், வயமத்தன் இறந்தானென்றவிஷயம் ஒன்பதுகவிகளிற் கூறப்படும்.

உன்மத்தன் வயிர மார்பி னுருமொத்த கரஞ்சென் 1றுற்ற
வன்மத்தைக் கண்டு மாண்ட மதமத்த மலையைப் 2பார்த்துஞ்
சன்மத்தின் றன்மை யானுந் தருமத்தைத் தள்ளி வாழ்ந்த
கன்மத்தின் 3கடைக்கூட் டானும் வயமத்தன் 4கடிதின் வந்தான்.

(இ-ள்.)உன்மத்தனுடையவயிரம்போலுறுதியான மார்பிலேஉருமையொத்த கைசென்றுபொருந்திய வலிமையைக்கண்டதனாலும், மாண்ட மதங்கொண்ட மத்தமலையை[யானையை]ப் பார்த்தும்,பிறவியின்தன்மையாலும்[உடன்பிறப்பாலும்],தருமத்தைநீக்கி வாழ்ந்துவந்த தீவினையினால்நேர்ந்துள்ள முடிவு காலத்தாலும் [சாகுங்காலம் தனக்குக்குறுகியதாலும்], வயமத்தனென்பவன் விரைவில் போர்க்குவந்தான்; (எ - று.)—உன்மத்தன் = யுத்தோன்மத்தன்: இதனைப் பெயராக்கொள்ளாமல்,போர்ப்பித்துக்கொண்ட அரக்கனென்பாருமுளர். மகோதரனை யுத்தோன்மத்தனென்றுகூறியதுபோல, மகாபாரிசுவனை மத்தனென்றும், மத்தாநீகனென்றும் முதனூல்கூறும்:அவனையே கம்பர் வயமத்தனென்றுகுறித்துள்ளாரென்று தோன்றுகின்றது.பி-ம்:—1ஊன்ற.2பார்த்துச்,கண்டும்.3கடைக்கூட்டானமலை,கடைக்கூட்டாலுமலை.4கடிது,கனன்று.

௨௨௯. பொய்யினும் பெரிய மெய்யான் பொருப்பினைப் பழித்த தோளான்,வெய்யனென் றுரைக்கச் சாலத் 1திண்ணியான் வில்லின் செல்வன், பெய்கழ 2லரக்கன் சேனை யார்த்தெழப் பிறங்கு பல்பேய், ஐயிரு நூறு பூண்ட வாழியந் தேரின் மேலான்,

(இ - ள்.) (அந்தவயமத்தன்),—பொய்யைக்காட்டிலும் பெரிய உடல் படைத்தவன்: மலையைப்பழித்த தோளையுடையவன்: வெய்யவனென்று உரைப்பதற்கு (முடியாதபடி) மிகவுந் திண்மையையுடையான்; வில்வித்தை யைச்செல்வமாகக்கொண்டவன்:(அவன்),--பூண்டவீரக்கழலையுடைய இராவ ணன்சேனை (மகிழ்ச்சியினால்)ஆரவாரித்தெழ விளங்குகின்றபல்லைக்கொண்ட பேய் ஆயிரம்பூண்ட சக்கரத்தைக்கொண்ட அழகியதேரின்மீது ஏறியவன்; (எ - று.)—பி-ம்:—1 தண்ணியான். 2அரக்கர்தானை. (ககூ0௫)

உகூ0. ஆர்க்கின்றா னுலகை யெல்லா மதிர்க்கின்றா [1]னுருமு மஞ்சப்
பார்க்கின்றான் பொன்றி னாரைப் பழிக்கின்றான் பகழி மாரி
தூர்க்கின்றான் குரக்குச் சேனை துரக்கின்றான் றுணிவை நோக்கி
ஏற்கின்றா ரில்லை யென்னா [2]விடபன்வந் தவனோ டேற்றான்.

(இ-ள்.) ஆரவாரஞ்செய்பவனும்,(அதனால்)உலகத்தையெல்லாம்அதிரச் செய்பவனும்,இடியும்அஞ்சும்படி(கொடுமையாகப்) பார்க்கின்றவனும், இறந்த வரையெல்லாம் பழிக்கின்றவனும், அம்புமாரியை (ப் போர்க்களம்) தூருமாறு பொழிகின்றவனும், குரங்குச்சேனையை யோட்டுகின்றவனுமான அந்தவயமத் தனது துணிவினைப் பார்த்து (இவனை) எதிர்ப்பவரில்லையென்று இடப னென்றவானரவீரன்வந்து அவனோடு எதிர்த்தான்; (எ - று.)—பி-ம்:—1அச னியென்னப். 2இடவன். (ககூ0௬)

உகூக. சென்றவன் றன்னை நோக்கிச் சிரித்துநீ சிறியை யுன்னை,
வென்றவ [1]மும்மை யெல்லாம் விளிப்பனோ விரிஞ்சன் [2]றானே, என்
றவ னெதிர்ந்த போது மிராவணன் மகனை யின்று, கொன்றவன் றன்
னைக் [3]கொன்றே குரங்கின்மேற் [4]கொதிப்ப னென்றான்.

(இ - ள்.) சென்றுசேர்ந்தவனான இடபனைப்பார்த்து(அந்தவயமத்தன், பரிகாசமாகச்)சிரித்து, 'நீ சிறியவன்: உன்னைவென்று (பயனில்லை:) வீணே யாம்: உம்மையெல்லாம் (போர்க்கு) அழைப்பேனோ? விரிஞ்சன் [பிரமதே வன்] தானே என்றுசொல்லுமாறுள்ள அநுமன் எதிர்த்தபோதும் இராவண குமாரனை அதிகாயனை இன்று கொன்றவனான இலட்சுமணனைக் கொன்ற பின்பே அக்குரங்கின்மீது கோபங்கொள்வேன்' என்று கூறினான்; (எ - று.) —'வென்று' என்ற வினையெச்சம் 'அவம்' என்பதன்பின் வருவிக்கப்பட்ட 'ஆம்' என்பதனோடு முடியும். அநுமான் பிரமபட்டத்தைப்பெறப்போகின்றவ னாதலால், அவனை, 'விரிஞ்சன்றானேயென்றவன்' என்றான். பி-ம்:—1என்று போரின்விளிகிலன், என்றுநின்மேல் விளிகிலன்,உம்மை...விளிவனே. 2என் பான். [3]கொன்று. [4]கொதிப்பது. (ககூ0எ)

உகூஉ. வாய்[1]கொண்டு [2]சொற்றற் கேற்ற வலி[1]கொண்டு பலியுண் வாழ்க்கைப், பேய்[1]கொண்டு வெல்லவந்த பித்தனே மிடுக்கைப் [3]பே ணி, நோய்[4]கொண்டு மருந்தைச் செய்யா [5]வொருவநின் னேன்மை [6]யெல்லாம், ஓய்கின்றாய் காண்டி யென்னா வுரைத்தன னிடப னுல் கான்.

(இ-ள்.) 'வாய்கொண்டு சொல்லுதற்குஏற்ற வலிமையைக்கொண்டு[உண்மையானவலிமையின்றி வாயாடித்தனமாகப் பாராட்டிச்சொல்லுதற்குஉரிய வலிமையேபெற்று]ம் பலியையுண்ணும்வாழ்க்கையையுடைய பேயைக்கொண்டும்வெல்லவந்துள்ள பித்தனே! வலிமையைப் பாராட்டியவண்ணம் நோயைக் கொண்டிருந்தே மருந்துசெய்யமாட்டாத ஒருவனே! உன்வலிமையெல்லாம் ஓயப்போகின்றாய்: (அதனைக்)காண்பாய்'என்று பின்வாங்காதவனாய் இடபனென்றவீரன் கூறினான்; (எ - று.)

வாயாடித்தனத்தாலும் பேய்ப்பரிவாரங்களைக்கொண்டும் வெல்லலாமென்று கருதுகின்றது பைத்தியக்காரத்தனமென்பான் 'பித்தனே' என்றான். 'நோய்கொண்டுமருந்துசெய்யாவொருவ' என்றது-உன்னைவெல்லவேநாங்கள் சித்தமாகஇருந்தும் எங்களைவெல்லும்வழியை நாடாதுஇருப்பவனென்றபடி: இனி, சீதையைவிட்டிடுதலே இப்போரை யொழிக்க வழி யென்று அறியாதவனே!எனினுமாம். பி-ம்:—[1]கொண்டும். [2]சொற்றற்கொத்த, சொற்றகொற்ற. [3]பேணின். [4]கண்டு. [5]ஒருவனின், ஒருவநீ. [6]நோனாய். (கக௦அ)

உகக. [1]ஓடுதி யென்ன [2]வோடா துரைத்தியே லுன்னோ [3]டின்னே
[4]ஆடுவன் விளையாட் டென்னா வயிலெயிற் றரக்க னம்பொற்
கோடுறு வயிரப் போர்விற் காலொடு புருவங் [5]கோட்டி
ஈடுற விடபன் மார்பத் தீரைந்து பகழி யெய்தான்.

(இ-ள்.) '(நீ) ஓடிவிடுவாயென்று (நான்) நினைக்கையில், ஓடாமல் மாறு சொல்லுகின்றாயானால்,உன்னோடு இன்றைக்கு விளையாட்டுப்புரிவேன்' என்று சொல்லிக் கூரிய பற்களையுடைய வயமத்தனென்பவன், அழகிய பொன்மலையான மேருவுக்குச்சமமான உறுதியுள்ள போர்வில்லின் முனைகளோடு (தன்) புருவத்தையும் வளைத்து இடபனுடையமார்பிலே பதியுமாறு பத்துஅம்புகளை விடுத்தான்; (எ - று.)

விற்காலொடு புருவங்கோட்டி என்றது-உடனவிற்சியணி: இங்கு விற்காலுக்கும் புருவத்துக்கும் கோடுதல் கூறியது, படிப்போரின் உள்ளத்து மகிழ்ச்சி விளைத்தல் காண்க.நான் என்முழுவலிமையோடு உன்னிடம் போர்புரிய வேண்டியதில்லை யென்ற கருத்தினால்,இடபனிடத்து 'விளையாட்டாடுவன்' என்கிறான். கோடு - உச்சி: மலைக்கு, ஆகுபெயர். அம்பொற்கோடு - மேரு: உறு - உவமவுருபு. இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. பி-ம்:—[1]ஓடுவாய். [2]ஓடாவுரைத்தியே. [3]என்னே. [4]ஆடுவான். [5]காட்டி. (கக௦க)

உகஉ. அசும்புடைக் குருதி பாயு மாகத்தான் [1]வேகத் தாலத்,
[2]தசும்புடைக் [3]கொடுந்தேர் தன்னைத் தடக்கையா லெடுத்து வீசப்,
பசுங்கழற் [5]கண்ண பேயும் பறந்தன பரவை [6]நோக்கி, விசும்பிடைச்
[7]செல்லுங் காரின் றாரைபோ லான்ற மெய்யான்.

(இ-ள்.) வெள்ளமாகவுள்ள இரத்தம் பாய்கின்ற உடம்பையுடையவனாய், (இடபன்),வேகத்தோடு கலசத்தைக்கொண்ட அந்தக்கொடியதேரைப் பெரிய கையாலெடுத்துஎறிய, (அத்தேருடனே) பசியகழற்சிக்காய்போன்றகண்ணை

யுடைய பேயும் கடலைநோக்கிப் பறந்தன;(அப்போது அத்தேரிலிருந்த வயமத்தன்), ஆகாயத்திற் செல்லுகின்ற மேகத்தினொழுங்குபோல் தொங்குகின்ற உடம்பையுடையவனுமான்; (எ - று.)—பி-ம்:—1வேகத்தாய. 2தசும்பிடைக். 3தடந். 4கனற். 5கண்ணின். 6பாய, பாய்ந்து, போக்கி. 7சேரும். (ககூகo)

உகடு.தேரொடுங் கடலின் வீழ்ந்து சிலையுந்தன் றலையு 1மெல்லாம்
நீரிடை யழுந்திப் பின்னு 2நெருப்பொடு 3நிமிர வந்தான்
பாரிடைக் குதியா முன்ன மிடபனும் பதக நீபோய்
ஆரிடைப் புகுதி யென்ற வந்தரத் தார்த்து 4வந்தான்.

(இ - ள்.) தேருடனே கடலிலேவிழுந்து வில்லும் தன்தலையும் எல்லாம் நீரிலேயழுந்திப் பின்னும் கோபத்தோடும் (கடலின்நீரினின்று) மேலெழுந்து வந்தவனான வயமத்தன் பூமியிலே குதிப்பதற்குமுன்னம்,இடபனும்'பாதகா! நீபோய் எங்கேபுகுந்துகொள்ளப்போகிறாய்?' என்று போர்க்களத்திலே ஆரவாரஞ் செய்துகொண்டுவந்தான்; (எ - று.)—அந்தரம் = இடம்: இங்கே,போர்க்களம்: ஆகாயமுமாம். பி - ம்:—1சோரி.2நின்றவன்,நின்றவா, நெருப்பினும். 3நிமிர்ந்துநீண்டான். 4சென்றான். (ககூகக)

உகசு.அல்லினைத் தழுவி நின்ற பகலென வரக்கன் றன்னைக்
கல்லினும் வலிய தோளாற் கட்டியிட் டிறுக்குங் காலைப்
1பல்லுடைப் பில2வா யூடும் பசும்பெருங் குருதி பாய
3வில்லுடை மேக மென்ன விழுந்தன னுயிர்விண் செல்ல.

(இ - ள்.) இரவினைத் தழுவிநின்ற பகலைப்போல (இடபன்)அரக்கனைக் கல்லைக்காட்டிலும் வலியதோளினாற் கட்டியிட்டு நெருக்குகிறவளவில், (அந்த வயமத்தன்),—பல்லைக்கொண்ட பிலம்போன்ற வாயின் வழியாகப் பச்சையிரத்தம் மிகுதியாகப் பாய, (தன்)உயிர் விண்ணிற்செல்ல, வில்லைப்பூண்ட மேகம்போல(ப் பாரில்) விழுந்தான்; (எ - று.)—பி - ம்:—1பல்லிடைப். 2வாயோடு, வாயோடும். 3வில்லிடை. (ககூகஉ)

உகஎ.—இதுமுதற்பத்துக்கவிகள்-சுக்கிரீவனும் கும்பனும் பொருதலைக் கூறும்.

1குரங்கினுக் கரசும் வென்றிக் கும்பனுங் குறித்த வெம்போர்
அரங்கினுக் கழகு 2செய்ய வாயிரஞ் சாரி 3போந்தார்
மரங்4கொண்டுந் தண்டு கொண்டு மலையென மலையா நின்றார்
5சிரங்களுங் கரமு மெல்லாங் 6குலைந்தனர் கண்ட தேவர்.

(இ-ள்.)குரங்குகட்குத்தலைவனான சுக்கிரீவனும் வெற்றிபொருந்தியகும்பனென்பவனும்(அப்போது) செய்தகொடியபோரைக்கொண்டகளத்திற்கு அழகுதோன்றஆயிரம்முறை வலசாரிஇடசாரியாகச் சுற்றிச்சுற்றிவருபவராகி,மரத்தைக்கொண்டும் தண்டாயுதத்தைக்கொண்டும் மலைபோல(ப்பெருந்தோற்றத்துடன்) பொருதனர்: (அதனைக்) கண்ட தேவர்கள், சிரமும்கரமும் எல்லாம் நடுக்கங்கொண்டனர்; (எ - று.)—பி-ம்:—1குரங்கினக்கிறையும், குரங்கினுக்கிறையும்.2செய்யும்.3போர்த்தார்.4கொடுங்.5கரங்களுந்தலையும்.6குலைத்தனர். ( )

வேறு.

௨௩௮. கிடைத்தா ருடலிற் [1]கிழிசோரியை வாரித்
துடைத்தார் விழியிற் [2]றழன்மாரி சொரிந்தார்
உடைத்தாரொடு பைங்கழ லார்ப்ப வுலாவிப்
புடைத்தார் பொருகின்றனர் கோளரி போல்வார்.

(இ - ள்.) போர்புரிகின்றவராகிய வலியசிங்கத்தையொத்த சுக்கிரீவ கும்பர்என்னும் இருவரும்,—(ஒருவரையொருவர்) கிட்டியவராய், உடலிற் கிருந்துபெருகுகின்ற இரத்தத்தை வாரித்துடைத்தார்: கண்களினின்று நெருப்புமழையைப் பொழிந்தார்கள்; (தாம்) பூண்டுள்ள பொன்னரிமாலே யுடனே பசும்பொன்னாற்செய்த வீரக்கழல் ஆரவாரிக்க, உலாவி (ஒருவரை யொருவர்) புடைத்தார்கள்; (எ - று.)—இச்செய்யுள் சிலபிரதியில் "தண்டங் கையின்" என்ற அடுத்த பாடலுக்குப்பின் உள்ளது. பி - ம்:—[1]செழு. [2]கனல்.

௨௩௯. தண்டங் கையின்[1]வீசிய தக்க வரக்கன்
அண்டங்கள் [2]வெடிப்பன வென்ன வடித்தான்
கண்டங்கது மாமர மேகொடு காத்தான்
விண்டங்கது தீர்ந்தது மன்னன் வெகுண்டான்.

(இ - ள்.) தண்டத்தைக் கையிலெடுத்துச்சுற்றிய (போர்த்) தகுதியுள்ள கும்பன் அண்டங்கள் வெடிப்பன என்னுமாறு பேரொலியுண்டாக அடித்தான்; அப்போது அதுகண்டு பெரியமரத்தைக்கொண்டு (சுக்கிரீவன் தண்டத்தின் வீச்சு தன்மீதுபடாதபடி) தடுப்பவனானான்; அப்போது அதுவும் முறிந்தொழிந்திட்டது; (அதனால்அந்தச்) சுக்கிரீவமன்னன் கோபங்கொண்டான்; (எ-று.)—பி-ம்:—[1]வீசியதாக. [2]வெடித்தன. (கககரு)

௨௪௦. பொன்றப் பொரு வேனினி யென்று பொருதான்
ஒன்றப் புகுகின்றதொர் கால முணர்ந்தான்
நின்றப் பெரியோ னினையாதமு னீலன்
குன்றொப்பதொர் தண்டு கொணர்ந்து கொடுத்தான்.

(இ - ள்.) '(நீ)இறக்குமாறு இனிப்பொருவேன்' என்றுகூறி மனம்பொருதவனான சுக்கிரீவன் மூண்டுபொரப்போகின்றதொரு காலத்தை யுணர்ந்தவனாய்நின்று, அந்தப்பெருமையுள்ள சுக்கிரீவன் நினையாததற்குமுன்னம் நீலனென்பவன் மலையையொப்பதாகிய ஒருதண்டாயுதத்தை(அந்தச்சுக்கிரீவனுக்குக்)கொணர்ந்து கொடுத்தான்; (எ-று.)—அரக்கனைக்கொல்லநினைந்து கையிற்படையில்லாமையாற் சுக்கிரீவன் சிந்திக்கையில், நீலன் தண்டுகொண்டு கொடுத்தானென்க. (ககககூ)

௨௪௧. அத்தண்டு கொடுத்தது கைக்கொ டடைந்தான்
ஒத்தண்டமு மண்ணு நடுங்க வுருத்தான்
[1]பித்தன்றட மார்பொடு தோள்கள் பிளந்தான்
சித்தங்க ணடுங்கி யரக்கர் திகைத்தார்.

(இ - ள்.) (நீலன்)கொடுத்ததாகிய அந்தத்தண்டாயுதத்தைக் கைக்கொண்டு (பொருதற்குப்) பொருந்தியவனான சுக்கிரீவன்,—மண்ணும் விண்ணும்

ஒத்தூடுங்கக் கோபித்து, போர்ப்பித்துக்கொண்டவனை கும்பனுடைய பரந் தமார்புடனே தோள்களைப் பிளந்திட்டான்; அரக்கர்கள் மனம்நடுங்கித் திகைத்தனர்; (எ - று.)— பி-ம்:—1பித்தன்றன. (கககள)

உசஉ. அடியுண்ட வாக்க னருங்[1]கனன் [2]மின்ன
இடியுண்டதொர் மால்வரை யென்ன [3]விழுந்தான்
முடியும்மிவ னென்பதொர் [4]முன்னம் [5]வெகுண்டான்
ஒடியும்முன தோளென மோதி [6]யுடன்றான்.

(இ-ள்.) அடிபட்ட அரக்கன் பெருங்கனல் மின்னும்படி இடியுண்டதான ஒருபெருமலையென்னுமாறு விழுந்து, இவன்முடிவானென்று கருதுவதற்குச் சிறிது முன்னமே, வெகுண்டவனாய், உன்தோள்ஒடியுமென்று (சுக்கிரீவனை நோக்கிச்) சொல்லி மோதி(ப் பின்னுஞ்)சினங் காட்டினான்; (எ - று.)— பி - ம்:—1கலன். 2வீழ, மின்ன. 3இருந்தான். 4முன்னின். 5முனிந்தான். 6உயர்ந்தான், உணர்ந்தான். (கககஅ)

உசங. தோளிற் [1]புடையுண்டயர் சூரியன் மைந்தன்
தாளிற் றடுமாற றவிர்ந்து [2]தகைந்தான்
[3]வாளிக் கடு[4]வல்விசை யா[5]லெதிர் மண்டி
ஆளித் [6]தொழிலன்னவன் மார்பி னறைந்தான்.

(இ - ள்.) தோளிலே யடியுண்டு வருந்துகின்ற சூரியகுமாரனான சுக்கிரீவன்,(தன்)போர்முயற்சியில் தடுமாறுதலொழிந்து, அம்புபோன்ற மிகஅதிகமான வேகத்தோடு(அரக்கனுடைய)எதிரே நெருங்கி,தகைந்து சிங்கம்போன்ற வீரச்செயலையுடைய அவ்வரக்கனுடைய மார்பிலே மோதினான்; (எ - று.)— பி - ம்:—1புடைகொண்டு, படையுண்டு. 2தகைத்தான். 3வாளிப்படு. 4வால். 5அவன். 6திறலன்னவன், தொழிலேனவன். (கககக)

உசச. அடியாயிர கோடியின் மேலு மடித்தார்
[1]முடிவானவ ரியாரென வானவர் மொய்த்தார்
இடியோ[2]டிடி கிட்டிய தென்ன விரண்டும்
பொடியாயின தண்டு பொருந்தினர் புக்கார்.

(இ - ள்.) ஆயிரகோடிக்குமேலும் (அதிகமாக) அடிகளை(த் தண்டாயுதத்தால்) அடித்துக்கொண்டார்; (அப்போது 'வெற்றியைமுடிவாகப்பெறுபவர் யார்?' என்று அறிய வானவர் நெருங்கினார்கள்; இடியோடு இடிகிட்டியதென்னுமாறு இரண்டு தண்டாயுதமும்(ஒன்றோடொன்று தாக்கிப்) பொடியாயின; (அவ்விருவரும்)பொருந்தி(மல்லயுத்தம்பொரத்) தொடங்கினர்; (எ - று.)— பி - ம்:—1முடிவாரவர், முடிவானவன், முடிவாரினி, முடியாரினி. 2இடியே றெனவின்ன. (ககஉ0)

உசரு. மத்தச்சின [1]மால்களி றென்ன மலைந்தார்
பத்துத் திசை யுஞ்செவி டெய்தின பல்கால்
தத்தித் தழு வித்திர டோள்கொடு தள்ளிக்
[2]குத்தித்தனி குத்தென மார்பு [3]கொடுத்தார்.

(இ - ள்.) (சுக்கிரீவன் கும்பன்என்ற இருவரும்) மதம்பிடித்த சினமும் மதமயக்கமுமுள்ள ஆண்யானைபோலப் பொரத்தொடங்கினர்: பத்துத்திக்குகளும் செவிடாயின: பலமுறை பாய்ந்து தழுவியும் திரண்டதோளைக்கொண்டு (ஒருவரையொருவர்) தள்ளியும் (ஒருத்தர் தாம்) குத்தி தனிக் குத்துக் குத்துவாய் என்று மார்புகொடுத்தும் (மல்லயுத்தம்)புரிந்தனர்; (எ - று.)— பி - ம்:—[1]மா. [2]குத்தத். [3]கொடுத்தான். (௧௧௨௧)

உ௪௬. நிலையிற்சுட ரோன்மகன் [1]வன்கை நெருங்கக்
[2]கலையிற்படு கம்மியர் கூட மலைப்ப
[3]உலையிற்ப [4]டிரும்பென [5]வன்மை [6]யொடுங்க
மலையிற்பிள [7]வுற்றது தீயவன் மார்பம்.

(இ - ள்.) (பொருகின்ற) நிலையிலே சூரியகுமாரனான சுக்கிரீவனுடைய வலிய கை(முஷ்டியாக) நெருங்கியதனால்,தொழிலிற்பயின்ற கம்மியரின் சம்மட்டிமோதுவதனால் உலைக்களத்திற்பொருந்திய இரும்புபோல வலிமையொடுங்க, தீயவனான அந்தக்கும்பனதுமலைபோன்றமார்பு பிளவுபட்டது; (எ-று.)—பி - ம்:—[1]அங்கை. [2]வலையிற். [3]உலையிட்ட. [4]இரும்பன. [5]வண்மை. [6]ஒடுங்கி. [7]உற்றன. (௧௧௨௨)

உ௪௭.—சுக்கிரீவனாற் கும்பன் மாளுதல்.

செய்வா யிகலென்[1]றவ னின்று சிரித்தான்
ஐவா யரவம் முழைபுக்கென வையன்
கைவாய்வழி சென்றவ னாருயிர் கக்கப்
பைவாய்நெடு நாவை முனிந்து பறித்தான்.

(இ - ள்.) (அப்போதும்) அவ்வரக்கன் இகல்செய்வாயென்று சிரித்து நின்றான்; (அவ்வேளையில்) ஐவாய்ப்பாம்பு குகையிற்புகுந்தாற்போல சுக்கிரீவன் தன்கையை (அரக்கன்)வாயினுள்ளேசெலுத்தி அவன்ஆருயிரைக் கக்குமாறு பைபோன்ற (அவனது) நெடுநாவை முனிந்துபறித்திட்டான்; (எ-று.) —சென்று-செலுத்தி: பிறவினைப்பொருளில்வந்த தன்வினை: அந்தர்ப்பாவிதணிச் என்பர். பி-ம்:—[1]இவனென்று. (௧௧௨௩)

உ௪௮.—இதுவும் அடுத்த கவியும் - அங்கதன் நிகும்பனுடனே பொருதலைக் கூறும்.

அக்காலை நிகும்ப[1]னனற்சொரி கண்ணன்
புக்கானினி யெங்கட [2]போகுவ தென்றா
மிக்கானெதி ரங்கத னுற்று வெகுண்டான்
எக்காலமு மில்லதோர் பூசல் [3]விளைத்தார்.

(இ - ள்.) அப்போது நிகும்பனென்பவன் நெருப்பைக்கக்குகின்ற கண்களையுடையவனாய்ப் புகுந்து 'இனி எங்கடாபோகுவது?' என்றுசொல்லிக்கொண்டு செருக்கிநின்றான்: அவனெதிரே அங்கதன்போய்ச் சினந்தான்:(இருவரும்)எக்காலமும் நிகழாதபோரை நிகழ்த்தினர்கள்; (எ - று.)—பி - ம்:— [1]அனற்றெறு. [2]போகுதியென்ன. [3]இழைத்தான். (௧௧௨௪)

உசகூ. சூலப்[1]படை யானிடை வந்து தொடர்ந்தான்
ஆலத்தினும் வெய்யவ னங்கத னங்கோர்
[2]தாலப்படை [3]கைக்கொடு சென்று [4]தடுத்தான்
நீலக்கிரி [5]மேனிமிர் பொற்கிரி நேர்வான்.

(இ - ள்.) சூலப்படையையுடையவனான நிகும்பனிடத்தே, நஞ்சினும் கொடுமைமிக்கவனான அங்கதன், வந்து தொடர்ந்து, அங்கே ஒருபனைமரமாகிறபடையைக்கையிற்கொண்டு சென்று தடுத்தவனாய், நீலக்கிரிமேல் நிமிர்ந்து செல்கிற பொற்கிரிபோல்பவனானான்; (எ - று.)—பி-ம்:—[1]படைமின்னிட, படையின்னிடை. [2]கோலப்பனை, சாலப்பனை, தாலப்பனை. [3]கையொடு. [4]குதித்தான். [5]மேலிகல், மேனிகர், போனிகர். (கசுஉரு)

உரு௦.—இதுவும் அடுத்த கவியும் - நிகும்பன் சூலப்படையைவிடத் தொடங்குகையில் அநுமான்வந்துதடுத்து, அவனை அறைந்து கொன்றுபோடுதலைத் தெரிவிக்கும்.

[1]எறிவானுயர் சூல மெடுத்தலு மின்னே
முறிவா[2]னிக லங்கத னென்பதன் [3]முன்னே
அறிவானடன் மாருதி யற்றமு ணர்ந்தான்
பொறி[4]வானுகு தீயென வந்து புகுந்தான்.

(இ - ள்.) எறியும்பொருட்டு சிறந்த சூலப்படையை (நிகும்பன்) எடுத்தலும்,—வலிமைபொருந்திய அங்கதன் இன்றே முறிந்திடுவானென்பதற்கு முன்னே வலிமைபொருந்திய அநுமான்(அதனை) அறிபவனாய்ச் சமயமறிந்து பொறியை மிகுதியாகச்சிந்துகின்ற தீப்போல வந்து புகுந்தான்; (எ - று.)— அங்கதன் இகல் முறிவானென்று இயைப்பினுமாம். பி-ம்:—[1]எறிவானிகல், எறிவானிவர், எறிபாலுயர். [2]இவன். [3]முன்னர், முன்னம். [4]வானுறு. ()

உருக. தடையேதுமில் சூல [1]முனிந்து சலத்தால்
விடையேநிக ரங்கதன் மேல்விடு வானை
இடையேதடை கொண்டுத னேடவி [2]ழுங்கைப்
புடையேகொடு [3]கொன்றடன் மாருதிபோனான்.

(இ - ள்.) விடையையொத்த அங்கதன்மீது தடையேதுமில்லாத சூலப்படையைச் சினந்து கொடுமையோடு விடுவதற்குமுயல்பவனான நிகும்பனை, நடுவே(சென்று) தடுத்துத் தன்னுடைய இதழ்அவிழப்பெற்றாற்போல் தோன்றும் அழகியகையினாற் புடைத்தலைச்செய்து கொன்று, வலிமைபொருந்திய மாருதி, சென்றிட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]முனிந்த. [2]செங்கைப். [3]கொன்றனன். (ககஉஎ)

உருஉ.—அரக்கர் பின்னிட, வானரர் மரங்களைச் சுழற்றிவீசி அரக்கர்சேனையைக் குறைத்தல்.

நின்றார்கள் [1]தடுப்பவ ரின்மை [2]தெளிந்தார்
பின்றாதவர் பின்றி யிரிந்து [3]பிரிந்தார்
வன்றாண்மரம் வீசிய வானர வீரர்
கொன்றார்[4]மிகு தானை யரக்கர் [5]குறைந்தார்.

(இ - ள்.) நின்றஅரக்கர்கள் (வானரசேனையைத்) தடுப்பவரில்லாமையால் தத்தளித்தார்கள்; பின்னிடாத வீரரும் பின்னிட்டு நிலைகெட்டுப்போயினார்; வலியதாளைக்கொண்டமரத்தை வீசி, அந்தவானரவீரர்கொன்றார்: மிக்க சேனையையுடைய அரக்கர் (உயிர்)குறையப்பெற்றனர்; (எ - று.)—வீசியஎன எடுப்பினுமாம்.குறைந்தார்-பலரும்மாண்டதனால்தொகையிற்குறைந்தாரெனினுமாம். பி-ம்:—[1]எதிர்ப்பவர்.[2]நிணைந்தார்.[3]பெயர்ந்தார். [4]நிமிர்.[5]குலைந்தார். ()

உ௲௩.—இதுமுதல் எட்டுக்கவிகள் - அரக்கரின்நிலைமையைத் தெரிவிக்கும்.

ஓடிப்புகு வாயி [1]னெருக்கி னுலந்தார்
கோடிக்[2]கதி கத்தினு மேலுளர் [3]குத்தாற்
பீடிப்புறு புண்ணுட லோடு பெயர்ந்தார்
பாடித்தலை யுற்றவ ரெண்ணிலர் பட்டார்.

(இ - ள்.) ஓடிப்புகுகின்ற (நகரின்)வாயிலிலே நெருக்கத்தினால் அழிந்தவர் கோடிக்கும் மேலாகவுள்ளார்; குத்தாற்பீடிக்கப்படுகிற புண்ணுடலுடனே அப்பாற்போய்ப் படைவீட்டிலேயுற்றவராய் இறந்தவர் எண்ணில்லாதவராவர்; (எ-று.)—பி-ம்:—[1]நெருக்கியுலைந்தார். [2]கணிதத்தினும்.[3]குத்திற். ()

உ௲௪. தண்ணீர் [1]தரு கென்றனர் [2]தாவுற வோடி
உண்ணீரற வாவி [3]யுலர்ந்தன ருக்கார்
கண்ணீரொடு மாவி [4]கலுழ்ந்தனர் [5]காலால்
மண்ணீர முறக்[6]கடி தூர்புக வந்தார்.

(இ - ள்.) 'தண்ணீர் தருக' என்று வேண்டியவர் தாவுதலுற்றுஓடி வாயினுள்ளும் நீர்வற்ற வரண்டு உயிர்ஒழிந்தார்; கண்ணீர்ப்பெருக்குடனே உயிருக்குவருந்தியவராய்,(சிலர்சென்று)காலின்வழியாகப்பெருகுகின்ற (அக்கண்ணீரின்)ஈரம் மண்ணிற்பொருந்த விரைவாக ஊர்புகவந்தனர்; (எ - று.)— உள் நீர் அறஎன்றுபிரிக்க. பி - ம்:—[1]தருகென்றன. [2]தாவற. [3]உலந்தனர். [4]இழந்தனர். [5]காலின். [6]தமதூர். (௧௧௲௦)

உ௲௫. விண்மேனெடி தோடின ராருயிர் விட்டார்
மண்மேனெடு மால்வரை யென்ன [1]மறிந்தார்
எண்மேலு [2]நிமிர்ந்துள ரீரு டயங்கப்
புண்மேலுடை மேனியி னார்திசை போனார்.

(இ - ள்.) விண்ணின்மீது நெடுந்தூரம்ஓடி அரியஉயிரை விட்டனராய்ப் பூமியின்மீது நெடியபெரிய மலை(கிடக்கின்றன) என்னும்படி மடங்கிக்கிடந்தவரும், ஈரல் வெளித்தெரியப் புண்மிக்குடைய மேனியினராகித் திசையிலோடிச்சென்றாரும் எண்ணுக்கு அடங்காமல் மிக்குள்ளார்; (எ - று.)

'எண்மேலுநிமிர்ந்துளர்' என்றதொடர்'மறிந்தார்' 'போனார்'என்றஇரண்டோடும் இயையும்: மத்திமதீபம். ஈருள்-ஈரல். பி-ம்:—[1]மடிந்தார். [2]நிமிர்ந்தனர்ஈரறயங்கும், நிமிர்ந்ததமீரறயங்கி, நிமிர்ந்தனசீருடனெங்கும். (௧௧௲௧)

உ௲௬. அறியும்மவர் தங்களை [1]யையவி வம்பைப்
பறியும்மென வந்து பறித்தலு மாவி

பிறியும்மவ ரெண்ணிலர் [2]தம்மனை பெற்றார்
குறியும்[3]மறி கின்றிலர் சிந்தை குறைந்தார்.

(இ - ள்.) (தமக்கு) அறிமுகமாயிருப்பவரைநோக்கி, 'ஐய! இந்த அம்பைப் பறித்திடும்' என்றுசொல்ல, (அவர்) வந்து பறித்தவுடனே (தம்) ஆவிநீங்கியவர், எண்ணில்லாதவராவர்; தம்மனையை யடைந்தவர், (வீட்டாரால்) அடையாளமும் அறியப்பெறாதவராய் மனம்ஒடுங்கினோரும், (எண்ணிலர்); (எ-று.)—எண்ணிலர்-பந்திமதீபம். பி-ம்: -[1]ஏயவர். [2]தம்முனை. [3]பறிகின்றிலர், அறிகின்றில.

உ௱ஙஎ. பரி[1]பட்டு [2]விழச்சிலர் நின்று பதைத்தார்
கரிபட் டுருளச்சிலர் [3]கால்கொடு சென்றார்
நெரிபட்[4]டழி தேரிடை யே[5]சிலர் நின்றார்
எரிபட்ட [6]மலைக்க ணிருந்தவ [7]ரென்ன.

(இ - ள்.) குதிரை இறந்துவீழ, சிலர் (ஒன்றுந்தோன்றாது) நின்று பதைத்தார்கள்; (தம்முடைய) யானை அடிபட்டு உருண்டுவிட, சிலர் காலினாற் சென்றார்கள்; எரிபட்டுப்போன மலையிலேயிருந்தவ ரென்னும்படி நெரிபட்டு அழிந்த தேரினிடத்தில்தானே சிலர்நின்றார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]விட்டு. [2]விழ. [3]காலொடு. [4]இழிதேருடையார். [5]பலர். [6]மனைக்கண், மனைக்குள். [7]ஏய்த்தார், ஒத்தார். (ககஙங)

உ௱ஙஅ. [1]மண்ணின்றலை வானர [2]மேனியர் வந்தார்
புண்ணின்ற வுடற்பொறை யோர்[3]சிலர் புக்கார்
கண்ணின்ற குரங்கு கலந்தன வென்று
உண்ணின்ற வரக்கர் மலைக்க [4]வுலந்தார்.

(இ - ள்.) புண்பட்ட உடற்சுமையையுடையோரான சிலஅரக்கர்,—பூமியிலே வானரமேனியராய்வந்து புகுந்தாராக, 'குரங்குகள் கண்ணெதிரே நின்றனவாய் (நம்மிடத்திற்) சேர்ந்தனவே' என்று உள்ளேயிருந்த அரக்கர் பொர, உயிரொழிந்தார்; (எ - று.)

தம்மை வானரர் மாய்க்காதிருக்கவேணுமென்ற கருத்தினால் அரக்கர் வானரவுருவைக் கொண்டனராக, அன்னார் வானரமென்றே கருதப்பட்டு அரக்கராலேயே யுயிர்மாய்ந்தன ரென்க. உயிர்மாய்க்கப்பெறாதிருக்க வானரவுருக்கொண்டும் அக்காரணத்தாலே மாய்வு நிகழ்ந்ததாகக்கூறியது-தந்நீயின்மையணி. பி-ம்:—[1]மண்ணின்றனை. [2]மேனியின். [3]உறை. [4]உலைந்தார். (ககஙச)

வேறு.

உ௱ஙகூ. இருகணுந் திறந்து நோக்கி [1]யயலிருந் திரங்கு கின்ற
உருகுதங் காத லோரை யுண்ணுநீ ருதவு மென்றார்
வருவதன் முன்ன மாண்டார் [2]சிலர்சிலர் வந்த [3]தண்ணீர்
[4]பருகுவா ரிடையே பட்டார் [2]சிலர்சிலர் பருகிப் பட்டார்.

(இ - ள்.) (தமது) இருகண்ணையுந் திறந்துபார்த்து, அயலிலிருந்து (தம் நிலைக்கு) இரங்குகின்றவரும் மனமுருகுந்தன்மையருமான (தம்) காதற்குஇடமானவரை 'உண்ணும் நீர் தாருங்கள்' என்று வேண்டினவராய், (அவர்கள்

உண்ணுநீரைக்கொண்டு) வருவதன்முன்னே சிற்சிலர் மாண்டார்; வந்த தண்ணீரைப் பருகத்தொடங்கியவராய் நடுவே யிறந்திட்டார் சிலர்; சிலர் பருகி மாய்ந்தார்;(எ - று.)---காதலர் - மக்களென்னலாம். பி-ம்:—1இல். 2சிலசிலர். 3நன்னீர், தெண்ணீர். 4பருகுவான், பருகுவ. (ககூருரு)

உகூ0.மக்களைச் சுமந்து செல்லுந் 1தாதையர் வழியி னாவி
உக்கன ரென்ன வீசித் தம்மைக்கொண் டோடிப் போனார்
2கக்கினர் குருதி 3வாயாற் கண்மணி 4சிதறக் காலால்
திக்கொடு நெறியுங் காணார் திரிந்து5சென் றுயிருந் 6தீர்ந்தார்.

(இ-ள்.) (போரிற் புண்பட்ட தம்) மக்களைச் சுமந்துசெல்கின்ற தாதையர், வழியிலே(அம்மக்கள்)ஆவியொழிந்தவராக, (அவ்வுடலை)எறிந்திட்டுத் தம்மைக்கொண்டு ஓடிப்போய், (துயர்மிகுதியால்) குருதியை வாயாற்கக்கிக் கண்மணி தெறித்துவீழ்தலால் திக்கும்வழியும் தெரியாதவராய், காலினால் (தடவியவண்ணம்)வழிமாறிப்போய்த் தம்முயிரும் தீர்ந்தார்கள்;(எ-று)—பி-ம்:—1தாயரும். 2கக்கின. 3வாயார். 4சிதறி. 5வந்து. 6தீர்வார். (ககூருசு)

உகூக.—அரக்கர்தோற்ற செய்தி தெரிவிக்கத்தூதர்இராவணனையடைதல்.

இன்னதோர் தன்மை யெய்தி யிராக்கத ரிரிந்து சிந்திப்
பொன்னகர் புக்கா ரிப்பாற் பூசல்கண் டோடிப் 1போன
துன்னருந் தூதர் சென்றார் தொடுகழ லரக்கர்க் கெல்லாம்
மன்னவ னடியில் வீழ்ந்தார் மழைபினீர் வழங்கு கண்ணார்.

(இ - ள்.) இப்படிப்பட்டதொருநிலைமையையடைந்து, இராக்கதர்,---நிலைகெட்டுச்சிதறிப்போய், அழகிய இலங்காநகரத்திற் புக்கார்; இவ்விடத்திற் போரைக்கண்டுவிட்டு(அப்பூசலின்செய்தியைக் கூறும்பொருட்டு)ஓடிப்போன நெருங்குதற்குஅரிய தூதுவர்,சென்று,மழையைப்போல நீரை வெளிவிடுகின்ற கண்களையுடையவராய், தொடுத்த வீரக்கழலைக்கொண்ட அரக்கர்தலைவனை இராவணனது பாதங்களில் விழுந்தனர்; (எ-று.)—பி-ம்:—1போனார்,போய.

உகூஉ.—அதிகாயன்முதலியோர் இறந்தமையைத் தூதுவர் தெரிவித்தல்.

நோக்கிய விலங்கை 1வேந்த னுற்றது நுவன்மி னென்றான்
போக்கிய சேனை 2தன்னிற் 3புகுந்துள 4விறையும் போதா
ஆக்கிய 5போரி னைய வதிகாயன் 6முதல்வ ராய
கோக்குலக் 7குமர ரெல்லாங் கொடுத்தன ராவி யென்றார்.

(இ-ள்.) (தூதுவர் காலின்கீழ்விழுந்ததைக்) கண்ட இலங்கைக்குத்தலைவனை இராவணன்,—'நிகழ்ந்துள்ளதைக் கூறுங்கள்' என்று வினவினான்; '(நீ) அனுப்பிய சேனைகளில் மீண்டுவந்துள்ளவை சிறிதுஎன்று சொல்வதற்கும் போதா: [மிகச்சொற்பசேனையே மீண்டுவந்த தென்றபடி]: நடந்தபோரிலே ஐயனே! அதிகாயனைமுதலாகவுடைய அரசகுலத்துக் குமாரரெல்லாம் உயிர் நீங்கினார்'என்று(அத்தூதுவர்)கூறினார்கள்;(எ-று.)—பி-ம்:--1வேந்துமுற்றது நுவறிரென்றான், வேந்தனுற்றது நுவலுமின்னே,வேந்தன்...என்ன.2தம்மிற். 3புகுந்துளது.4 தறையும்.5செருவின்.6முதலாயுள்ள.7மைந்தர். (ககூருஅ)

உசுங.—அதிகாயன்முதலியோர் இறந்ததுகேட்ட இராவணன் தன்மை.

*ஏங்கிய விம்மன் மான மிரங்கிய விரக்கம் வீரம்*
*ஓங்கிய வெகுளி துன்ப மென்றிவை [1]யொன்றிற் கொன்று.*
*தாங்கிய தரங்க மாகக் [2]கரையினைத் தள்ளித் தள்ளி*
*வாங்கிய [3]கடல்போ னின்று னருவிநீர் வழங்கு கண்ணான்.*

(இ - ள்.) (அரக்கர்குலக்குமாரர்இறந்ததைக் கேள்வியுற்றதனால்) நீரருவியைவெளிவிடுகின்ற கண்களையுடையவனான இராவணன்,—ஏக்கங்கொள்ளுதற்குக்காரணமான அழுகை மானம் இரங்குகின்றஇரக்கம் வீரம் மிகுகின்ற வெகுளி துன்பம் என்ற இவை ஒன்றற்கொன்று (மேன்மேல்) தள்ளப்பட்டு வருகின்ற அலை போன்றிருக்க, (அலைகள்) கரைவரையில் தள்ளித்தள்ளிமீளுகின்றகடல்போல்நின்றான்; (எ - று.)

குமரர் இறந்ததை நினைத்தலினால் விம்மலும் துன்பமும், பலரும்மடிந்ததைக் கேள்வியுற்றதனால் அவர்களைச்சேர்ந்தவர்க்கு வருத்தம் நிகழுமேஎன்பதை நினைக்க இரக்கமும், தாம்தோற்க எதிரிகள்வென்றமையால் மானமும், அதுபற்றி அவர்மீதுவெகுளியும், எதிரிகளைவென்றே தீரவேணுமென்று வீரமும் ஒன்றற்குஒன்று மேம்பட்டு இராவணனுக்குத் தோன்றுவனவாயின. தாங்குதல் - தள்ளப்பட்டுவருதல். பி-ம்:—[1]ஒன்றுக்கொன்று. [2]தரையினைத், திரையினைத். [3]கடலேபோல்வானெருப்பு, கடல்போல்வந்தானருவி. (ககங௧)

உசுச.—இதுவும் அடுத்த கவியும்-வருத்தம்முதலியவற்றால் இராவணன் செய்த செயல்களைக் கூறும்.

*[1]திசையினை [2]நோக்கு நின்ற தேவரை நோக்கும் [3]வந்த*
*[4]வசையினை நோக்கும் கொற்ற வாளினை நோக்கும் [5]பற்றிப்*
*பிசையுறுங் [6]கையை மீசை சுறுக்கொள [7]வுயிர்க்கும் [8]பேதை*
*நசையிடைக் [9]கண்டா னென்ன நகுமழு முனியு நாணும்.*

(இ - ள்.) (பின்பு இராவணன்),—திக்குக்களையெல்லாம் நோக்குவான்; நின்ற தேவர்களை நோக்குவான்; (தனக்கு)நிகழ்ந்த பழிப்பினை நோக்குவான்; வெற்றிபொருந்திய வாளினை நோக்குவான்; கையைப்பற்றிக்கொண்டு பிசைவான்; மீசை தீந்துபோகுமாறு பெருமூச்செறிவான்;நசையினாற் பேதைமைக்குணத்தையடைந்தான்போல நகுவான், அழுவான்,முனிவான், நாணங்கொள்வான்; (எ - று.)

அவலச்சிரிப்பினை, 'பேதை நசையிடைக்கண்டானென்ன நகும்' என்றார்.தேவர்களையும் நோக்கித் திக்கினைநோக்கியது—தேவரும் திசையிலுள்ளாரும் காண வசை நேரிட்டதே என்ற கருத்தினால். அதற்குப் பரிகாரஞ்செய்யலாமாஎன்று வாளினை நோக்கும். ஒன்றுஞ்செய்யமாட்டாதநிலையிற் கையைப் பிசைதல், இயல்பு. பி-ம்:—[1]திசைகளை. [2]நோக்குகின்ற. [3]செய்த, தீரா.[4]வசைகளை. [5]வாரிப். [6]கைகள். [7]உறுக்கும், முறுக்கும். [8]பேச.[9]கண்டாலென்ன. ()

உசடு. மண்ணினை யெடுக்க வெண்ணும் [1]வானினை யிடிக்க வெண்ணும், எண்ணிய வுயிர்க [2]ளெல்லா மொருகணத் தெற்ற வெண்

ணும், பெண்ணெனும் ³பெயரா வெல்லாம் பிளப்பனென் றெண்ணு ⁴மெண்ணிப், புண்ணிடை யெரிபுக் கென்ன மானத்தாற் ⁵புழுங்கி னை யும்.

(இ-ள்.) (பின்னும் இராவணன்),—மண்ணினையெடுக்க எண்ணுவான்; வானத்தை யிடிக்க வெண்ணுவான்;("ஊர்வபதினெண்ரும்" என்று)எண்ணப் பட்டுள்ள உயிர்களையெல்லாம் ஒருகணத்தில் எற்றக் கருதுவான்;பெண்ணெ ன்கிற பெயரைக்கொண்ட பொருள்களையெல்லாம் பிளப்பேனென்று எண் ணுவான்; (அவ்வாறு)எண்ணிப் புண்ணிலே நெருப்புப்புகுந்தாற்போல மான த்தினுற் புழுங்கிவருந்துவான்; (எ - று.)

சீதையின்மூலமாகவே இத்துணைத்துன்பம்நேர்ந்ததுபற்றிப் பெண்பா விடத்திலேயே முதலிற்சினங்கொண்டு பெண்ணெனும் பெயரவெல்லாம் பிள ப்பனென்று கருதினுயினும், சீதையைப்பிளத்தலைக் கருதும்போது அவ ளைப்பெறுமையென்ற துன்பத்தோடு இத்துன்பமும் சேர்ந்து இராவணனுக் குப்புண்ணிடையெரிபுக்காற்போலாயின வென்க. பி-ம்:—1வானிடைமடிக்க. 2யாவும். 3பெயரை, பெயர்கள். 4பேராப், எண்ணில். 5புழுங்குகின்றான். ()

உகூகூ.—இதுமுதல் எட்டுக்கவிகள்-தன்மகனிறந்ததை யறிந்த தானியமா லினி புலம்பிக்கொண்டு அரக்கன்தாளில் வீழ்ந்தழுதமையிடுதலைக் கூறும்.

ஒருவரு முரையார் வாயி னுயிர்த்தில ருள்ள ¹மோய்வார்
வெருவருந் ²தகைய ராகி விம்மின ரிருந்த வேலைத்
தரு³வன மணைய தோளான் றன்னெதிர் ⁴தானி மாலி
இரிய⁵விட் டலறி யோயாப் பூசலிட் டேங்கி வந்தாள்.

(இ-ள்.) (அங்கிருந்தவர்களில்) ஒருவரும் வாயினுல் (ஒன்றும்) உரையா தவர்களும் மூச்சுவிடாதவருமாகி மனமோய்ந்து அஞ்சியதன்மை யுடையவ ராய் அழுதுகொண்டிருந்தபோது, தருக்களடர்ந்த வனம்போன்ற தோளையு டையவனை இராவணனுக்கெதிரில் தானியமாலினி(யென்ற அவ்விராவண ன்மனைவி)நிலைகெட்டு அலறி ஓயாதபேராரவாரஞ்செய்து அழுதுகொண்டுவந் தாள்; (எ-று.)—தானிமாலி-தாந்யமாலிநீ யென்பதன்சிதைவு. பி-ம்:—1ஓர் வார்.2தகைய. 3அமைர்தனைய. 4தானமாலி, தானமாலை, தானுயாலி.5உற்று.()

உகூஎ.மலைக்குவட் டிடிவீழ்ந் தென்ன ¹வளைகளோ டார ²மேங்க
முலைக்குவட் டெற்றுங் கையாண் முழை³திறந் தன்ன வாயாள்
தலைக்குவட் டணைந்த செக்கர் சரிந்தன ⁴குழல்க டத்தி
உலைக்குவட் டுருகு செம்பொத் ⁵துதிரநீர் ⁶வழங்குங கண்ணாள்.

(இ - ள்.) (அங்ஙனம்வந்த தானியமாலினி),—மலையுச்சியிலே இடிவிழுந் தாற்போல(க்கை)வளைகளுடனே (கழுத்திலணிந்த)ஆரமும் ஒலிக்க முலைமுகத் திலே மோதிக்கொள்ளுங் கையையுடையவளும், முழைதிறந்தாற்போன்ற வாயையுடையவளும், மேற்சிகரத்திலேபொருந்திய செவ்வானம் சரிந்தாற் போன்ற (செம்பட்டமயிர்க்) குழல்கள் அவிழ்ந்துஎங்கும்பரவ உலைக்களத்தி லே வைட்டுஉருகின செம்மையொத்து இரத்தநீர்வழங்குகின்ற கண்களையுடை

யவளு மானாள்;(எ-று.)—மூலைமுகட்டிலே கையாலெற்றுதல்,மலைக்குவட்டில் இடிவீழ்ந்ததுபோலுமென்க. குழல்கள் தத்திஎனப்பிரியும். தத்தி=தத்த. உலைக்கு-உருபுமயக்கம். வட்டு-திரண்டவடிவுள்ளது. பி - ம்:—[1]மணிகளோடு. [2]வாங்க, ஓங்கு. [3]திறந்தனைய. [4]குழல்கடாங்கி, குழலாடத்தி, குழலாள்கத்தி. [5]அருவி. [6]உமிழும்ஒழுகும். (க௯௪௩)

உ௬அ. வீழ்ந்தன ளரக்கன் றாண்மேன் மென்மைத்தோ [1]ணிலத்
தை [2]மேவப், [3]போழ்ந்தனள் பெரும்பாம் பென்னப் புரண்டனள்
[4]பொருமிப் பொங்கிச், சூழ்ந்தனை [5]கொடியா யென்னாத் துடித்தருந்
துயர வெள்ளத், தாழ்ந்தனள் புலம்ப லுற்றா ளழக்கண்டு மறிந்தி
லாதாள்.

(இ-ள்.) (இதுவரையில்) பிறர்அழுவதைப்பார்த்தும் அறிந்திராதவளான தானியமாலினி,—மென்மையையுடையதோள் நிலத்தைப்பொருந்த இராவணன் தாளின்மீது வீழ்ந்து(வாயைப்) பிளந்துகொண்டுதுக்கம்பொங்கியழுது, பெரும்பாம்புபோலப் புரண்டு, 'கொடியவனே! (எனக்குக் கேடு) சூழ்ந்தாய்' என்று சொல்லித் துடித்து (க் கடத்தற்கு) அரிய துயரவெள்ளத்திலே யாழ்ந்து புலம்பத் தொடங்கினாள்; (எ - று.)---தானியமாலினி புலம்புவதை மேல் ஐந்துகவிகளிற் காண்க. இலங்கையில் அழவேண்டிய அவசியமில்லாமையால், அழுவதைக்கண்டுமறியாதவளென்றார். பி-ம்:---[1]நிலத்துத். [2]தோயப். [3]போழ்ந்தன. [4]நோக்கித்துன்பம். [5]கொடுமை. (க௯௪௪)

வேறு.

உ௬௯. மாட்டாயோ விக்காலம் [1]வல்லோர் வலிதீர்க்க
மீட்டாயோ வீர மெலிந்தாயோ தோளாற்றல்
கேட்டா [2]யுணர்ந்திலையோ [3]வென்னுரையுங் கேளாயோ
காட்டாயோ வென்னுடைய கண்மணியைக் காட்டாயோ.

ஆறுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) இப்போது வலியோரின்வலிமையைத் தீர்க்கமாட்டாயோ? வீரம் மீளப்பெற்றாயோ? தோள்வலிமை மெலியப்பெற்றாயோ? (நான்சொல்வதைக்) கேட்டு உணர்ந்திலையோ? (அன்றி), என்னுரையையே செவிகொடுத்துக் கேளாயோ? என்னுடையகண்மணியை [புதல்வனான அதிகாயனை]க் காட்டமாட்டாயோ, காட்டமாட்டாயோ? (எ-று.)—பி-ம்:—[1]வல்லாரை. [2]அறிந்திலையோ. [3]என்னுயிரும். (க௯௪௫)

உ௭௦. இந்திரற்குந் [1]தோலாத நன்மகனை யீன்றாளென்று
[2]அந்தரத்து வாழ்வாரு மேத்து மளியத்தேன்
மந்தரத்தோ ளென்மகனை மாட்டா மனிதன்றன்
உந்து சிலைப்பகழிக் குண்ணக் [3]கொடுத்தேனே.

(இ - ள்.) இந்திரனுக்குந்தோற்காத நல்ல[வலிமையுள்ள] புத்திரனைப் பெற்றாளென்று வானத்தில்வாழுந் தேவர்களும் கொண்டாடுகின்ற கொண்டாட்டத்திற்குப் பாத்திரமான நான், மந்தரம்போன்ற தோளைக்கொண்ட என்

மகனை,(இயற்கையில்)வலிமையற்ற மானுடவர்க்கத்திற்சேர்ந்தவனான ஒருத்தனுடைய செலுத்தும் வில்லினம்புக்கு உண்ணுமாறு பலிகொடுத்தேனே! (எ - று.)—ஏகாரம்-இரக்கம். பி - ம்:—[1]தோலா. [2]அந்தரத்தின்வானவரும், [3]கொடுத்தாயே. (௧௧௬௬)

௨௭௧. அக்க னுலந்தா னதிகாயன் [1]முன்பட்டான்
மிக்கதிறத் [2]துள்ளார்க ளெல்லாரும் வீடினார்
மக்களினி [3]னின்றுளான் [4]மண்டோ தரிமகனே
திக்கு விசய மினியொருகாற் [5]செய்யாயோ.

(இ - ள்) அட்சகுமாரன் (முன்னமே)அழிந்துவிட்டான்; அதிகாயனும் இறந்திட்டான்;மிக்கதிறமையுடனுள்ளார்கள்எல்லாம் அழிந்தார்கள்:(அரக்கனுடைய)மக்கட்குள் உயிருடனிருப்பவன் மண்டோதரிமகனேயாவன்: இனி,ஒருமுறை திக்குவிசயஞ்செய்யமாட்டாயோ? (எ - று.)

முன்பு அக்கன்முதலிய மக்கள் துணையாயிருந்தமையால் திக்குவிசயஞ் செய்தாய்: இனி, அங்ஙனுள்ளவரில் இந்திரசித்துத்தவிர மற்றையோரெல்லாம் இறந்திட்டமையால், திக்குவிசயஞ்செய்வது இயலாதென்றவாறு. மூன்றாமடி மண்டோதரிமகனைநோக்கிய விளியெனக் கொண்டு,'நீயாவது திக்குவிசயஞ்செய்து வரமாட்டாயோ?' என்று தன்மகனைக்கொன்றவரைப் பழிக்குப் பழிவாங்கத் தானியமாலினி கூறுகின்றாளெனக் கொள்ளலும் ஒன்று. பி-ம்:—[1]தானுலந்தான், நாளுலந்தான். [2]உள்ளார். [3]யாருள்ளார், நின்றுளார், [4]வண்டோதரி. [5]செல்லாயோ, செய்வாயோ. (௧௧௬௭)

௨௭௨. ஏதையா சிந்தித் [1]திருக்கின்றா யெண்ணிறந்த
கோதையார் [2]வேலரக்கர் பட்டாரைக் கூவாயோ
[3]பேதையாய்க் காமம் [4]பிடிப்பாய் பிழைப்பாயோ
சீதையா லின்னம் வருவ சிலவேயோ.

(இ-ள்.) ஐய!ஏது சிந்தித்திருக்கின்றாய்?(வெற்றி)மாலைசூடியவேற்படையைக்கொண்ட எண்ணிறந்த அரக்கர் இறந்தவரை(த் திரும்பிவருமாறு) கூப்பிடமாட்டாயோ?அறிவற்றுக் காமத்தைப்பற்றிய நீ பிழைப்பாயோ?சீதையால் வரவேண்டியவை இன்னும் சிலஉள்ளனவோ? (எ - று.)—கோதையார்வேலரக்கரென்பது-மகளிர்க்குக்கணவராகிய வேற்படையையுடைய அரக்கரெனினுமாம். பி - ம்:—[1]இருக்கின்றது. [2]வில், வல். [3]பேதையாய். [4]பிடித்தார் பிழைப்பாரோ. (௧௧௬௮)

௨௭௩. உம்பி யுணர்வுடையான் சொன்ன வுரை[1]கேளாய்
நம்பி குலக்கிழவன் கூறு நலமோராய்
கும்ப கருணனையுங் கொல்வித்தென் கோமகனை
அம்புக் கிரையாக்கி யாண்டா யரசையே.

(இ-ள்.) உணர்வுடையவனான உன்தம்பி[கும்பகர்ணன்]சொன்ன உரையைக் கேளாதவனாய்;குலத்திற்குரியவிபீஷணநம்பி கூறிய நல்வழியைச்சிந்தியாதவனாய்;கும்பகர்ணனையுங்கொல்வித்து என்சிறந்தகுமாரனையும் அம்பு

க்குஇரையாக்கி, ஐயனே! (நன்கு) அரசு புரிந்தாய்; (எ - று.)—பி-ம்:—[1]கொள்ளாய், உள்ளாய். (கசுஉசு)

உஎச.—முறையிடுந் தானியமாலினியை உருப்பசியும் மேனகையும் அரண்மனைக்கு இட்டுக்கொண்டுபோதல்.

என்று பலபலவும் பன்னி யெடுத்தழைத்துக்
கன்று பட[1]பிழைத்த தாய்போற் [2]கவல்வாளை
நின்ற வுருப்பசியு மேனகையு நேர்ந்தெடுத்துக்
குன்று புரையு [3]நெடுங்கோயில் கொண்டணைந்தார்.

(இ-ள்.) என்று பலபலவும் கூறிக் குரலெடுத்துக் கதறி, கன்றுஇறக்கப் பிழைத்திருக்கிற தாய்ப்பசுப்போலக் கவல்கின்றவளான தானியமாலினியை (அருகே)நின்ற உருப்பசியும் மேனகையும் அணுகிவந்து எடுத்து மலையையொத்தபெரிய அரண்மனைக்குள்ளே கொண்டு சேர்ந்தார்: (எ-று.)—பி-ம்:- [1]கதறும், பதைத்த. [2]கனல்வாளை. [3]மணிக்கோயில், நெடுங்கோவில். (கசுஉ௦)

உஎரு.—யாவரும் வருந்துதல்.

[1]தான நகரத் தரக்கர் தலைமயங்கிப்
போன மகவுடையார் [2]போலப் புலம்பினார்
ஏனை மகளிர் நிலையென்னாம் [3]போயிரங்கி
வான [4]மகளிருந்தம் வாய்திறந்து மாழ்கினார்.

(இ-ள்.) (முதன்மைத்)தானத்தைப்பெற்ற இலங்காநகரத்திலே அரக்கர் ஒருவரோடொருவர்சேர்ந்து (தம்)மகவுபோகப்பெற்றவர்போலப் புலம்பினார்கள்; (அப்புலம்பலைக்கேட்டு)வானவமகளிரும் மிகவும் இரக்கங்கொண்டு வாய்திறந்து [கதறி] வருந்தினார்கள்; அங்ஙனமாயின், மற்றமகளிரின்நிலை என்னாம்?

இலங்கையிலுள்ளவரின் சோகத்தைக் கண்டு வானவமகளிரே வருந்தினாரென்றால், மற்றையோரின்வருத்தத்தை அளவிட்டுக் கூறமுடியாதென்றவாறு. பி - ம்:—[1]தானைநகரந்தளரத். [2]எல்லாம். [3]எண்ணிறந்த. [4]மகளிர்களும். ()

உஎசு.—இலங்கையின்வருத்தத்தின் வருணனை.

தாரகலத் தண்ண றனிக்[1]கோயி ருசாதி
போ வுலகுற்ற துற்றதாற் பேரிலங்கை
ஊரகல மெல்லா மார்ந்தை யுவாவுற்ற
[2]ஆர்கலியே யொத்த தழுத குரலோசை.

(இ - ள்.) பெரியஇலங்கையானது, மாலையையணிந்த மார்பையுடைய தசரதசக்கரவர்த்தியின் ஒப்பற்ற கோயிலிலிருந்து தாசரதி (வனத்திற்குப்) பேர்ந்துசெல்ல, உலகு அடைந்த வருத்தத்தை யடைந்தது; ஊர்ப்பரப்பு முழுவதும் உண்டான பெருந்துன்பத்தால் தோன்றிய அழுதகுரலோசையானது, பூர்ணசந்திரனைக்கண்ட கடலினோசையே யொத்தது; (எ - று.)—அண்ணல்- இராமனுமாம். பி-ம்:—[1]கோயிருள்சாத்தி. [2]ஆர்கலியேயொத்த, ஆர்கலியோடொத்த. (கசுஉஉ)

இந்தச்சந்தர்ப்பத்துச்சரிதையை ஸ்ரீவான்மீகிகூறியவிதம் வருமாறு:--
இராவணன்கும்பகர்ணனிறந்ததற்காகப்புலம்புகையில், அவனதுபுதல்வனான திரிசிரனென்பவன் தேற்றி, தான் போர்வென்றுவருவதாகக்கூற, இராவணன் தேறினான். பின்பு, தேவாந்தகன் நராந்தகன் அதிகாயன் என்ற ராவணபுத்திரர்களும் தாம் தாம் போர்க்குச் செல்ல ஊக்கங்கொண்டனர். இராவணன் அப்புதல்வர்களை வாழ்த்திப் போர்க்குச்செல்ல விடையளித்து, அவர்களின்பாதுகாப்பின்பொருட்டுத் தன்தம்பிமாரான யுத்தோந்மத்தன் மத்தன்என்னப்படுகின்ற மஹோதரமஹாபார்சுவர்களை விடுத்தனன். அவ்வரக்கர்யாவரும் பெருஞ்சேனைசூழப் புறப்பட்டுப் போர்க்களங் குறுகி, வானரசேனையைக் கண்டனர். இருதிறத்தார்க்குங் கைகலந்த போர் நடந்தது. அப்போரில் அரக்கச்சேனைகள் வானரசேனைகளாற் பின்வாங்குவது கண்டு, நராந்தகனென்பவன், கடுவிசையுள்ளகுதிரைமீதேறி வானரரைத்தலையெடுக்கவொட்டாது மிகவும்உக்கிரமாகப்பொர, அதுகண்ட சுக்கிரீவன் அவனோடு பொருமாறு அங்கதனையேவ, இருவருக்கும் நிகழ்ந்தபோரில் அங்கதன் முஷ்டியால்மோதி நராந்தகனைக் கொன்றனன். அதுகண்டு மகோதரன் திரிசிரஸ் தேவாந்தகன்என்ற மூவரும் அங்கதனைத் தாக்கலாயினர்: அங்கதனும் மூவருடனும் பொர, ஹநுமானும் நீலனும் துணையாய்வந்து பொரலாயினர். அப்போரில் தேவாந்தகனை அனுமான் முஷ்டியால் தலையில் மோதிக்கொன்றான்: நீலன் பெருமலையால் மகோதரனையும் அவனேறிவந்த களிற்றையும் மாய்த்தனன். அநுமான் திரிசிரனுடன்பொருது, இறுதியில் அவன்கையிற்கொண்டிருந்த கத்தியைப் பறித்து, அதனால் அவ்வரக்கனுடைய சிரசைக் கொய்தனன். பின்னர் மகாபார்சுவன் பெருஞ்சீற்றத்துடன் தண்டாயுதத்தை யேந்திக்கொண்டு வானரர்களின்மீது பாய, இடபனென்பவன் எதிர்த்துப்பெரும்போர் நிகழ்த்தி, முடிவில் அவ்வரக்கன்கொண்டிருந்த கதாயுதத்தைப்பறித்து அதனாலேயே அவனையடித்துஉயிரொழித்தனன். அதுகண்டு, கரையைக்கடந்த கடல்போல் அரக்கசேனை பறந்தோடிற்று.

பின்பு அதிகாயன், தன்னுடன்பிறந்தோர்களும் சிற்றப்பன்மாரும் இறந்ததையும் தன்சேனை கலங்கிவருத்தமுற்றிருப்பதையுங் கண்டு பெருஞ்சினங்கொண்டு நாணொலியையெழுப்பியும் சிங்கம்போற்கர்ச்சித்துக்கொண்டும் புகுந்தான். வானரர்கள் அவ்வொலிகளைக் கேட்டும் அவனதுபேருருவத்தைக்கண்டும் நடுநடுங்கி இராமபிரானைச் சரணமடைந்தனர். ஸ்ரீராமன் அதிகாயனைப்பற்றி விபீஷணனை வினவ, விபீஷணன், 'இவன் இராவணனுக்குத் தானியமாலினியிடம் பிறந்தவன்: பிரமனைநோக்கித் தவம்புரிந்து தேவாசுரர்களாற் சாவில்லாமையையும் இந்ததிவ்யகவசத்தையும் இரதத்தையும் பெற்றான்: பலமுறை தேவதானவயட்சர்களை வென்றுள்ளான்' என்று இவைமுதலாக அவனுடைய வல்லமையையும் தன்மையையும் எடுத்துக்கூறி, 'இவனை விரைவில் வெல்ல முயல்க' என்றனன். அப்போது அதிகாயன் வானரசேனையிற் புக, குமுதன் மைந்தன் துவிவிதன் நீலன் சரபன் முதலியோர் அவனை யெதிர்த்தனர். அரக்கன் வானரர்களைமுறியடித்துக் கலங்கச்செய்து, ஸ்ரீராமனைக்கிட்டி 'நான் வில்லுடன் நிற்கின்றேன்: அற்பருடன் பொர

விரும்புகின்றிலேன்: வலிமையுள்ளவர் போர்க்கு வரட்டும்'என்று கூவினன். அதுகேட்டு இளையபெருமாள் வெகுண்டு பொருதற்குவர,அரக்கன்'நீ பாலன்: என்னுடன் பொரவல்லமை யுடையையல்லை' என்றுஎற்போன்று இலட்சுமணனைக் குறைத்தும் தன்னைப்புகழ்ந்தும் பேச, இலட்சுமணன் 'வெற்றுப் பேச்சினுற் பயனில்லை: தொழிலினுல் திறமையைக் காட்டவேண்டும்' என்று சொல்லிப் பொரலாயினன். இலட்சுமணன்விடுத்த அம்புகளைக் கண்டு அவனதுதிறமையை அதிகாயன் மெச்சிப் பெரும்போர்செய்தான்: அவ்விருவர்க்கும்நிகழ்ந்த போரில் பலஅம்புகளும் அஸ்திரங்களும் இருவீரர்களாலும் விடப்பட்டன. இறுதியாக வாயுபகவானுடைய பேச்சினுல் இலட்சுமணன் பிரமாஸ்திரத்தைத்தொடுத்து அதிகாயன்தலையைக் கொய்து அவனுயிரைப் போக்கினுன். அரக்கச்சேனை நிலைகலங்கியோடிற்று. தூதுவரால் அதிகாயன்முதலியோர் இறந்ததுகேள்வியுற்று, இராவணன், பெருந்துயரமடைந்து புலம்பி, ஸ்ரீராமாதிகளின் பராக்கிரமத்தில் திகைப்புக்கொண்டு, இலங்கையைச் செவ்வனே பாதுகாக்குமாறு ஏவி, பெருந்துயருடன் அரண்மனையில் செட்டுயிர்ப்பு எறிந்தவண்ணம் இருந்தனனென்பது.

அதிகாயன்வதைப்படலம் முற்றிற்று.

---

## க௯-ஆவது நாகபாசப்படலம்.

நாகபாசத்தைப்பற்றிக்கூறும் படலமென விரியும்.நாகபாசம்என்ற வடசொல்தொடர் - நாகாஸ்திரமாகிய பாசமென இருபெயரொட்டுப் பண்புத்தொகை; கயிற்றைப்போலக் கட்டுப்படுத்தலின், நாகாஸ்திரம், பாச மெனப்பட்டது. இந்தப்படலத்துக்கு இந்திரசித்துநாகபாசப்படலம் என்று ஒரு பிரதியிற் பெயர் காணப்படுகின்றது.

ராக்ஷஸஸ்திரீகள் அலங்கோலநிலையுடன் மார்பிலடித்துக்கொண்டு அழுவதுகண்டு, இந்திரசித்து 'இவ்வாறுணநிலை நேரக் காரணம் யாதோ?'என்று பெருங்கலக்கத்துடனேசென்று, அதிகாயன் முதலிய வீரர்கள் இறந்தபின்பு புத்திரசோகத்தாலும் இராக்கதவீரர்பலரும் போரில்மாண்டதனுலும் மிக்க துயரமுற்ற இராவணனை யடைந்து செய்திதெரிந்து போர்க்குச்செல்ல அவனிடம் விடைபெற்று, தன்தம்பியான அதிகாயனைக்கொன்ற இலக்குமணனைத் தான் தவறுமற் கொல்வதாகச் சபதஞ்செய்து யுத்தசந்நத்தனுய் இராக்கதசேனையோடு புறப்பட்டுப் போர்க்களங்குறுக, அதுகண்ட இளையபெருமாள் விபீஷணனுல் அவனதுவல்லமையையுணர்ந்து இந்திரசித்தோடு பொரத் துணையுடன்செல்லவேண்டுமென்ற விபீஷணன்கூற்றை நன்றெனலும், லட்சுமணனைநோக்கி இந்திரசித்து வருவதையுணர்ந்து அநுமன் தன்வாயிலேவிட்டு அவ்விடத்திற்கு நணுகினுன்: அங்கதன்முதலியோரும், பெருஞ்சேனையுடன் சுக்கிரீவனும் முன்பேசென்றிருந்தனர். இருதிறத்துச்சேனைக்கும் பெரும்போர் நிகழ்கையில், அரக்கர்சேனை குரக்குச்சேனையால் தளர்தல்கண்டு இந்

திரசித்துத்தனியேநின்று பகைவென்றுநிற்க, சுக்கிரீவன் அநுமான் நீலன் அங்கதன்முதலியோர்பொருதும் குரக்குச்சேனை பலபடியழிந்ததுகண்ட இலக்குமணன்,தானே சென்று பகைவெல்லாது மூர்துறக்குரங்குச்சேனையைப் பொரவிட்டதுகுறித்து நொந்துகூறினன். இவ்வேளையில் ஒற்றரால் இலட்சுமணனை இந்திரசித்து வினவியறிய, பலஇராக்கதர் திரண்டு இலக்குமணனையெதிர்த்துதோற்றனர்: பின்னர் இலட்சுமணனை இந்திரசித்து நெருங்க,அப்போது அநுமான் அங்குவந்து தன்தோளின்மீதுஏறிக்கொண்டுபொருமாறுவேண்ட,இலட்சுமணன் அவ்வண்ணமே அநுமனதுதோளிலேறிக்கொண்டுபொரலாயினன்: இருவர்க்குங் கைகலந்தபோர் நிகழ்கையில், இலட்சுமணன்திறலைக் கண்டு இந்திரசித்து வியந்தனன். இருதிறத்தார்க்கும் மும்முரமானபோர் நேர்ந்தபோது,இலட்சுமணன் இந்திரசித்தின்கவசத்தைப் பிளந்தானாக, உடற்காப்புவேறின்மையால்,அவ்விந்திரசித்து அம்புபட்டு மூர்ச்சித்தனன்.அக்காலையில்,தூமிராக்ஷனும் மகாபார்சுவனும்இலட்சுமணனுடன்பொருதுதோற்றனர். அப்போது சூரியாத்தமனமாக, விபீஷணன்வார்த்தையால் இலட்சுமணன் இந்திரசித்தைக் கொல்லமுயன்று அவனதுதேரை யழிக்க, இந்திரசித்து தன்மாயையினால் ஆகாயத்தில்மறைந்து நாகாஸ்திரத்தினால் லக்ஷ்மணனையும் வாநரவீரர்களையுங் கட்டிவீழ்த்துச் சென்று தன்தந்தையினிடம் நிகழ்த்திய செய்தியுரைத்து அரண்மனைசேர்ந்தனன். இலட்சுமணன் நாகாஸ்திரத்தாற் கட்டப்பட்டு மூர்ச்சித்ததுகண்டு விபீஷணன் எண்ணாதனஎண்ணிவருந்திப் பிரலாபிக்க, அனலன் அவ்விபீஷணனைத்தேற்றி, இராமபிரானிடம்வந்து இலட்சுமணனுக்கு நேர்ந்த நிலையைக்கூற, ஸ்ரீராமன் அப்பேரிருளில் ஆக்கினேயாஸ்திரத்தாற் பேரொளியுண்டாக்கி இலட்சுமணனைத் தேடிக் கண்டு மனந்தியங்கிவருந்த, விபீஷணன் தேற்றினன். ஸ்ரீராமபிரான் நாகாஸ்திரத்தின் வரலாறுமுதலியவற்றைக் கேட்க, விபீஷணன்அவற்றையெல்லாம்தெரியச்சொல்ல, ஸ்ரீராமன் பகைவர்மீதுசினமும் இலட்சுமணனுக்குநேர்ந்த நிலையைக்குறித்து வருத்தமும் தோன்றப் பலபடிகூறி வருந்தாநின்றனன். அப்போது கருடபகவான் வந்து ஸ்ரீராமபிரானைத்துதித்து அந்நாகபாசத்தை நீக்கினனாக, அந்தக்கருடபகவானுக்கு ஸ்ரீராமபிரான் முகமன்கூறி அவனை வினவ, அன்னவன் தான் கருடனென்பதையும் பழைய நண்பனென்பதையும் உணர்த்தி விடைபெற்றுச்சென்றான். அப்பால் அநுமன்ஆலோசனையால் வானரர்கள் பேராரவாரஞ்செய்தனர். அதுகேட்டு இராவணன் இந்திரசித்து பகைவென்றேனென்றது பொய்போலுமென்றுஎள்ளி அவனதுஅரண்மனையையடைய, வந்த காரணத்தை இந்திரசித்து வினவ, இராவணன் ‘இலக்குமணன்வில்நாணியொலியும் வானரரார்ப்பும் கேட்டிலையோ?’ என்ன, இவ்வேளையில் தூதர் நிகழ்ந்தனகூற,இராவணன் கருடனையிகழ்ந்து இந்திரசித்தை நோக்கி ‘நீயே சென்றுபகைவெல்வாய்’ என்ன,மறுத்தும் பகைவெல்ல இந்திரசித்து உடன்பட்டான் என்றசெய்தி இப்படலத்துக் கூறப்படும்.

க.—அரக்கியரழவநுகண்டு இந்திரசித்து சங்கித்துப் புறப்படுதல்.

குழுமிக் கொலைவாட்க ணரக்கியர் கூந்த ருழுத்
[1]தழுவித் தலைப்பெய்துதங் கைகொடு மார்பி [2]னெற்றி
அழுமித் தொழிலியாதுகொ லென்றொ [3]ரயிர்ப்பு முற்றான்
[4]எழிலித் தனியே றெனவிந் திரசித் தெழுந்தான்.

(இ - ள்.) இந்திரசித்தானவன்,—(அரக்கியரழுதல்கண்டு),—'கொல்லு தற்றொழிலுள்ள வாள்போன்ற கண்களையுடைய இராக்கதமாதர்கள் (தம் மில்) ஒன்றுகூடித் திரண்டு தலைவிரிகோலமாய் (ஒருவரையொருவர்) கட்டிக் கொண்டும், தங்கள்கைகளால் மார்பிலடித்துக்கொண்டும் அழுகிற இச்செய் கை என்னகாரணத்தினு லாகியதோ?' என்று ஒரு சந்தேகத்தையும் அடைந் தவனாய்,—மேகத்தில்தோன்றும் ஒப்பற்ற [மிகப்பெரிய] இடிபோலப் புறப் படுதலுஞ் செய்தான்; (எ - று)

அயிர்ப்பும், உம்மை-'எழுந்தான்' என்பதை நோக்கி எதிரதுதழுவியஎச் சம்; இசைநிறையுமாம். எழிலி-வானத்தில்எழுதலையுடையதெனப் பொருள் படுங் காரணக்குறி. ஏறுஎன்பது-இடியாதலை-"ஏறிடிமுதலனாகு மிடபமோ டெருது மப்பேர்" என்ற சூடாமணிநிகண்டினுலும் அறிக. குழுமி-திரண்டு.

இந்தரஜித் என்ற வடமொழிப்பெயர் - இந்திரனைச்சயித்தவனென்று பொருள்படும். இராவணனுக்கு மந்தோதரியினிடம் பிறந்த புதல்வனான மேகநாதனுக்கு, இப்பெயர், இந்திரனைச்சிறைமீட்கவந்த பிரமன் அளித்தது. இராவணன் திக்குவிசயஞ் செய்கையிற் சுவர்க்கலோகத்தையடைந்து இந் திரனையெதிர்த்துப் போர்செய்தபொழுது, இராவணனால் இந்திரனைச்சயிக்க முடியாத சமயத்தில்,அவன்மகனானமேகநாதன் மாயையால்மறைந்துபொருது இந்திரனைக் கலங்கச்செய்து அவனை மாயைப்பாசத்தாற் கட்டிக்கொண்டுபோய் இலங்கையிற் சிறைவைத்திட, அதனையுணர்ந்த பிரமதேவன் தேவர்கள்சூழ அங்குவந்து இராவணனைக் கண்டு 'இந்திரனைச்சயித்ததனால், உன்மகனுக்கு, இனி 'இந்த்ரஜித்' என்று பெயர் வழங்குக' என்று உபசாரவார்த்தைகூறி அம்மகனுக்கு வரமும் அளித்து இந்திரனைச் சிறைமீட்டுச்சென்றன னென் பது வரலாறு. பி-ம்:—[1]தழுமித். [2]எற்ற. [3]அயிர்ப்பம். [4]எழுமித். (ககஙிரு)

உ.—இந்திரசித்துகொண்ட சங்கையின் விவரம்.

எட்டாகிய திக்கையும் வென்றவ னின்று மீடு
பட்டான்கொ லதன்றெனிற் பட்[1]டழிந் தான்கொல் [2]பண்டு
சுட்டா[3]னி வகன்பதி யைத்தொடு வேலை யோடுங்
கட்டான்கொ லிதற்கொரு காரண மென்கொ லென்றான்.

(இ - ள்.) 'எட்டுத்திக்குக்களிலுமுள்ளார்யாவரையும் சயித்தவனான இராவணன், (முதல்நாட்போரிற்போலவே) இன்றைக்கும் (போரிற் பகை வனுக்குத் தோற்றுப்) பெருமை யொழியப்பெற்றானோ? அவ்வாறன்றாயின், (போர்க்களத்தில்) இறந்தொழிந்தானோ? (அல்லாவிடின்), முன்பு (இவ் விலங்காபுரியை) எரியூட்டியவனான அநுமான், (சகரபுத்திரர்களால்) தோண்

டப்பட்ட(தும் இவ்வூர்க்கு அரணாக அமைந்துள்ளது மான) கடலோடும் இடமகன்ற இவ்விலங்கைத்தீவை (இப்பொழுது) பேர்த்துவிட்டானோ? இவ்வாறு (அரக்கியர்) புலம்புதற்கு உரியதொருகாரணம் யாதாயிருக்குமோ?" என்று (பலவாறு) சந்தேகிப்பவனானான்; (எ - று.)

அப்பொழுது அங்குஇருந்த நிலைமை—இலங்கைக்கேயோ, அன்றி அதன் அரசனான இராவணனுக்கேயோ,பெருந்தீங்கு விளைந்துள்ளதென்றுகலங்கும்படி இருந்ததென்க. இச்செய்யுளுக்கும், கீழ்க்கவியிலுள்ள 'இந்திரசித்து' என்பதே எழுவாய். இவகன்பதியை என்பதை மத்திமதீபமாக, 'கட்டான்' என்பதோடுங் கூட்டுக. (கீழ்கடலில் வடக்குப்பகுதி சகரபுத்திரரால் தோண்டப்பட்டமாத்திரத்தைக்கொண்டு, கடலுக்கு 'தொடு' என்ற அடைமொழி கொடுத்தலும், கடலைச் சாகரமென வழங்குதலும், கவிமரபு.)

விலங்கினத்தைச் சார்ந்த வாநரமாகிய அநுமானை 'சுட்டான்'( என உயர்திணையாக்கூறுதல் இலக்கணத்துக்கு ஒக்குமோவெனின்,—உயர்திணை அஃறிணை என்ற பகுப்பிற்குக் காரணம் முறையே அறிவின்நிறைவும் குறைவு மாதலால், அவ்வறிவிற் குறைவின்றி ஐம்பொறியறிவோடு பகுத்தறிவையுங் கொண்டு மனிதர்போலவே தொழில்திறமமைந்த தெய்வக்குரங்கை உயர்திணையின்பாற்படுத்துதல் ஒக்குமென்க; இத்தன்மை, மற்றைவாநரர்களுக்கும் கரடியாகிய ஜாம்பவானுக்கும் கழுகுகளாகிய ஜடாயு ஸம்பாதி என்பவர்க்கும் பொருந்தும்: தொல்காப்பியத்து மரபியலில் உரைகாரர் "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்ற சூத்திரத்தின்கீழ்க் குரங்கை விலங்கினமென்று பொதுவகையாற் கூறினவர்தாமே "மக்கள்தாமே ஆறறிவுயிரே" என்ற அடுத்தசூத்திரத்தின்கீழ் 'குரங்குமுதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும்' என்றமை காண்க. 'ஒரோவழி அஃறிணைப் பொருள்கள் மொழியாற்பேசுவன உளவாயின் அது தெய்வத்தன்மை முதலிய விசேடத்தானன்றிப் பொருட்டன்மையா னன்மையின்,அமைத்துக்கொள்வது' என்ற இலக்கணவிளக்கச்சூறாவளியும் இங்குக் காணத்தக்கது. அன்றியும், இவர்கள் வடிவில் மனிதரிற் சிறிதுவேறுபாட்டையே யுடையராயிருந்தன ரென்பதும் அறிக. பி-ம்:—[1]ஒழிந்தான், அழிந்தது. [2]பண்டோர். [3]கொலிவன். (கககூச)

க.—இந்திரசித்து சென்று இராவணனைக் காணுதல்.

கேட்டா னிடை[1]யுற்றதெ னென்று [2]கிளத்தலி யாரும்
மாட்டாது நடுங்கினர் மாற்ற மறந்து நின்றார்
[3]ஓட்டா நெடுந்தேர் [4]கடிதோட்டி யிமைப்பி னுற்றான்
காட்டாதன காட்டிய தாதையைச் [5]சென்று கண்டான்.

(இ - ள்.) (இந்திரசித்து), 'இவ்விடத்தில் [இலங்கையில்] (இவ்வளவு துயரத்துக்குக் காரணமாக) நிகழ்ந்த செய்தி யாதோ?' என்று (எதிர்ப்பட்டவர்யாவரையும்) வினவினான்; (அதற்கு) அவர்கள்யாவரும் (துயரமிகுதியால் நாக்குளற) வாய்விட்டுச்சொல்லமுடியாமல் (உள்ளமும் உடலும்) நடுங்கிச் சொற்சோர்வுபட்டு நின்றார்கள்; (அப்பொழுது அவ்விந்திரசித்து அழுகைக்

காரணத்தை இன்னதென்று அறியக் கவலைமிக்கவனாய்), தூண்டிச் செலுத்த வேண்டியஅவசியமில்லாத [இயல்பிலேயே மிகவிரைந்துசெல்லுந் தன்மையுள்ள] (தனது) பெரியதேரை வேகமாகச்செலுத்தி (இராவணனுள்ளவிடத்திற்) கணப்பொழுதிற் போய்ச்சேர்ந்து, (பிறராற்செய்து) காட்டமுடியாத செயல்களைச் செய்துகாட்டிய(தனது)தந்தையான இராவணனைக் கண்டான்.

பேசாவெழாது சொற்சோர்வுபட்டுத் திகைத்து நடுங்கினது, அவலத்தின் மெய்ப்பாடு. இடையுற்றது = இடையூறு எனினுமாம்; (காரியசித்திக்குத் தடையாக) நடுவில் நேர்ந்தது. தேரிற்கட்டிய சிங்கத்தின் தொழிலைத் தேரின் மேலேற்றி 'ஓட்டா நெடுந்தேர்' என்று கூறிய இது, உபசாரவழக்கு. மிக விரைந்துசெல்லுந் தேரைப்பின்னும்வேகமாகச் செலுத்தினது, துயர்க்காரணத்தை விரைந்து அறியவேண்டுமென்னும் பரபரப்புப்பற்றி. இனி, 'ஓட்டா நெடுந்தேர்கடிதோட்டி' என்பதற்கு - ஓட்டுதற்குஅரிய பெரியதேரை விரைவாகச் செலுத்தி எனினுமாம். ஓட்டாநெடுந்தேர்கடிதோட்டி, காட்டாதன காட்டிய - தொடைமுரண். இந்திரசித்தின் தகப்பனான இராவணன், தன் தலையைத் தானேகொய்து ஓமஞ்செய்தல் கைலாசமெடுத்தல் முதலாகப் பிறர்க்குச் செய்யமுடியாத அரும்பெருஞ்செயல்கள் பலவற்றைச் செய்துள்ளமைபற்றி, 'காட்டாதனகாட்டிய தாதை'எனப்பட்டான். காட்டாதனஎன்பது - எதிர்மறைப்பொருளையுணர்த்தாது அருமையையுணர்த்திநின்றது: "காட்டாதனவெல்லாங் காட்டி" என்றவிடத்திற்போல. இனி, காட்டாதன காட்டிய என்பதற்கு - இதுவரையில் ஒருநாளுங் காட்டாத சோகக்குறிகளை (இப்பொழுது)காட்டிய என்று பொருள்கொள்ளுதலும் பொருந்தும். பி-ம்:—
[1]உற்றதென்னென்று. [2]கிளத்த. [3]ஓட்டாய். [4]கடிதென்றோர். [5]கண்ணிற். ()

ச.—இந்திரசித்து கலக்கத்தின் காரணத்தை வினவ, இராவணன் மறுமொழிகூறுதல்.

கண்டா [1]னிறையாறிய நெஞ்சினன் கைகள் [2]கூப்பி
உண்டாயதெ [3]னிவ்வழி யென்றலு மும்பி மாரைக்
கொண்டா னுயிர்காலனுங் [4]கும்ப நிகும்ப ரோடும்
விண்டா னடைந்தா னதிகாயனும் வீர வென்றான்.

(இ - ள்.) (இந்திரசித்து இராவணனைப்) பார்த்து, சிறிது துயரந்தணிந்த மனமுடையவனாய், (அவனைநோக்கி), கைகளைக் குவித்து(த் தொழுது), 'இப்பொழுது [இவ்விடத்து] நேர்ந்த துயர்க்காரணம் யாது?' என்று வினவியவுடனே,-- இராவணன்,-இந்திரசித்தை நோக்கி),வீரனே! யமனும் உன் தம்பியரை உயிர்வாங்கினான்[கொன்றான்]:கும்பன் நிகும்பன் என்ற இருவருடனே அதிகாயனும்(இறந்து)மேலுலகஞ் சென்றான்' என்றான்;(எ-று.)-தான்-அசை.

அரக்கியரின் அழுகுரலைக்கேட்டதும்'இராவணனே பட்டொழிந்தானோ' என்றுஞ் சங்கைகொண்ட இந்திரசித்து, அவனை உயிருடனிருக்கக் கண்டதனால் சிறிது ஆறியநெஞ்சினனாயினனென்க. 'உம்பிமார்'என்றது, தேவாந்தகன் நராந்தகன் திரிசிரஸ் என்பவர்களை. வலிமையில்மிக்கோனாதலால், அதி

காயனைத் தனியேயெடுத்துக்கூறினன். பொருது இறந்தவர்களாதலால் வீர சுவர்க்கஞ் செல்லவேண்டியவர்களாயினும், உடலினின்று உயிர்பிரித்தல் யம னதுதொழி லாதலால்,'கொண்டானுயிர் காலன்'என்றார். காலனும்,உம்மை- நம்மிடத்துத்தோற்று இதுவரையும்அஞ்சியிருந்த யமனும் என இழிவுசிறப்பு ப்பொருளது. பி-ம்:—[1]இடர். [2]கூப்பா. [3]இவ்வழி. [4]கும்பனிகும்பனேடும்.()

ரு.—கேட்டு இர்திரசித்து கோபித்தலும் வருந்துதலும்.

சொல்லாத முன்னஞ் சுடரைச் சுடர்தூண்டு கண்ணன்
பல்லா லதரத்தை யதுக்கிவிண் மீது பார்த்தான்
எல்லாரு மிறந்தன ரோவென வேங்கி [1]நைந்தான்
வில்லாளரை யெண்ணில் [2]விரற்குமுன் னிற்கும் வீரன்.

(இ - ள்.) வில்வீரர்களை எண்ணத்தொடங்கினல் (ஐந்து)விரல்களுள் முதல்விரலில் நிற்கும்படியான வீரனாகிய இந்திரசித்து,—(தனது தம்பி யர்களின் மரணத்தைஇராவணன்) சொல்லுதற்குமுன்னே கோபாக்கினியா னது தீப்பொறிகளைக் கக்கிவிடுகின்ற கண்களையுடையவனாய்,பற்களால் உதட் டைக்கடித்து(அண்ணாந்து)ஆகாயத்தைநோக்கி, 'யாவரும் இறந்தொழிந்தனர் அந்தோ!' என்று ஏக்கமுற்று வருந்தினன்; (எ - று.)

சுடரைச் சுடர்தூண்டு கண்ணன் - அக்கினியையும் எரிக்கும்படியான [கோபாக்கினிச்சுவாலையை மிகுதியாகவுடைய]கண்களை யுடையவனாய் என்று மாம். செய்வது இன்னதென்றுஅறியாது திகைத்து நிற்கும்பொழுது ஆகா யத்தைநோக்குதல், இயல்பு. சிறந்த வில்வீரர்களை அவரவர்களின் தகுதிக்கு ஏற்ப முறைப்படுத்தி எண்ணத்தொடங்கினல் இந்திரசித்து எல்லாரினும் மிக்கவீரனாக முதலில்வைத்து எண்ணப்படுந் தகுதியுடையவன் என்பது, ஈற்றடியின்கருத்து.விரற்கு-வேற்றுமைமயக்கம். பி-ம்:—[1]நின்றான். [2]வீரர்க்கு.

சு.—அதிகாயன் முதலியோரைக்கொன்றவர் இன்னரென்று இராவணன் இர்திரசித்துக்குக் கூறுதல்.

ஆர்[1]கொன் றவ[2]ரென் றலும் பேரதி காய னென்னும்
பேர்[3]கொன் றவன்வென் றியிலக்குவன் [4]பின்பு நின்றார்
ஊர்கொன் றவனுற்பிற ரா[5]லென வுற்ற வெல்லாந்
தார்கொன் றையினன் கிரிசாய்த்தவன் றானு ரைத்தான்.

(இ-ள்.) (இவ்வாறு ஏங்கி வருந்திய இந்திரசித்து இராவணனைநோக்கி), '(அதிகாயன்முதலிய வீரர்களைக்) கொன்றவர் யாவர்?' என்று வினவஉட னே,—கொன்றைமாலையைத்தரித்த சிவபிரானது(கைலாச)மலையைப்பெயர்த் துச் சாய்த்தவனான இராவணன்,—'பெருமையுள்ள அதிகாயனென்னும்பெய ருடையவனைக் கொன்றவன், வெற்றியையுடைய இலக்குமணன்; அதிகாய னெழிந்த மற்றையோர் [தேவாந்தகன் நராந்தகன் திரிசிரஸ் கும்பன் நிகும் பன் என்பவர்] இவ்விலங்காபட்டணத்தை எரித்தழித்தவனான அநுமானா லும் பிறராலும் [சுக்கிரீவன் அங்கதன் என்பவராலும்] (கொல்லப்பட்டனர்)' என்று நடந்தவை முழுதையும் உரைத்தான்; (எ - று.)—தான்-அசை.

இலக்குவன்-லக்ஷ்மணன் என்ற வடமொழிப்பெயரின் சிதைவு: இப்பெயர்-உத்தமபுருஷலக்ஷணங்கள்பலவற்றையு முடையவனென்றும், (பகவத்கைங்கரிய) லக்ஷ்மியோடு கூடியவ னென்றும் காரணப்பொருள்படும். 'கொல்லப்பட்டனர்' என ஒருசொல் வருவிக்கப்பட்டது. அநுமான், தனது வாலின் நெருப்பினால் இலங்கையை எரித்து அழித்தவ னாதலால், 'ஊர்கொன்றவன்' எனப்பட்டான். பி - ம்:—1கொன்றனர். 2என்றலுமே. 3கொன்றனன். 4பின்னைநின்றது. 5பிறர்க்குற்றது. (ககருஅ)

எ.—இதுவும் அடுத்த கவியும்-இந்திரசித்து இராவணனை நோக்கி நிஷ்டுரவார்த்தை கூறுதலைத் தெரிவிக்கும்.

கொன்றா ரவரோ கொலைசூழ்கென நீகொ டுத்தாய்
வன்றானையர் மானிடர் [1]வன்மை [2]யறிந்து மன்னா
[3]என்றாறு [4]மெனைச்செல வேவலை யிற்ற தென்னா
நின்றா னெடிதுன்னி முனிந்து நெருப்பு யிர்ப்பான்.

(இ - ள்.) (இந்திரசித்து இராவணனை நோக்கி) அரசனே! வலியசேனையையுடையவர்களாகிய மனிதர்களது [ராமலக்ஷ்மணரது] வல்லமையை அறிந்திருந்தும், (அவர்களோடு போர்செய்ய அதிகாயன் முதலிய சிறுவர்களை அனுப்பியபடியால் அவர்கள் இறந்தார்கள் ஆதலால், அவர்களைக்)கொன்றவர் அப்பகைவர்களோ? [அவரல்லர்;](பகைவர்களை நோக்கி)'(நீங்கள்)கொலைசெய்யுங்கள்' என்று நீயே (அவர்களைக்) காட்டிக்கொடுத்தாய்; (மகாவீரனான) என்னை(ப் போர்க்குச்)செல்லும்படி சிறிதும் ஏவினாயில்லை;(அதனால் நம்பக்கத்து வலிமை) அழிந்துபட்டது' என்றுகூறி, வெகுவாகச்சிந்தித்துக் கோபங்கொண்டு, நெருப்புப்போல [வெம்மையாக]ப் பெருமூச்சுவிடுபவனாய் நின்றான்.

நீ இராமலக்ஷ்மணர் முதலிய பகைவரது வல்லமையைப் பலபடி கண்டிருந்தும் அவர்களை வலியடக்கிவெல்லுந்திறமுள்ள என்னை அவர்களோடுபோர்செய்ய ஏவாது, அதிகாயன் முதலிய இளைஞர்களை ஏவினது, ஏவின உனது பிழையேயாகு.மாதலால்,போர்செய்யச் சிறுவரை ஏவிவிட்டுப் பின்பு அவர் இறந்ததற்காக நீ வருந்துதல் பேதைமையேயாமென இராவணனைநோக்கி இந்திரசித்து கூறினனென்க. அவரோ, ஓகாரம்-ஒழியிசை. பி-ம்:—1வண்மை. 2உணர்ந்தும்.3ஒன்றானும்,என்றாலும்.4எனை...யுற்றவென்னா,எனை...எண்ணா, இனிச்செலவுற்றதுன்வாழ்க்கையென்னா. (கஅருகூ)

அ. அக்கப் பெயரோனை நிலத்தொ டரைத்து ளானை
[1]விக்கற்கொரு [2]வெவ்வுரைத் தூதுவ னென்று விட்டாய்
புக்கத் தலைப்பெய்த னினைந்திலை புந்தி யில்லாய்
மக்கட் டுணையற்றனை யிற்றதுன் வாழ்க்கை மன்னோ.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அக்ஷகுமாரனைத் தரையோடுதேய்த்தழித்தவனான அநுமானை (நான் பிரமாஸ்திரத்தினாற் கட்டிக்கொணர்ந்தபோது)கொல்லுதற்கு(மாறாக) (எதிரியின்)விருப்பமானபேச்சைச் சொல்லுதலையுடையஒருதூதனென்று(பரிவுகாட்டி)விட்டிட்டாய்;(அவனைக் கொல்லாதுவிட்டதனால் இவ்விடத்திலுள்ள

செய்திகள்யாவும்)எதிர்ப்பக்கத்திற்சென்றுசேர்தலினைத்தாயில்லை;(பின்விளைவதை ஆலோசியாது அப்போது)அறிவுகெட்டாய்;(அக்குற்றத்தினால் இப்பொழுது),(மற்றைப்)பிள்ளைகளின்உதவியையும்இழந்தாய்:(அதனால்),உனதுவாழ்வும் குலைந்தது; (எ - று.)—மன் ஓ- ஈற்றசைகள்; இரக்கப்பொருளனவுமாம்.

அநுமான் முன்பு கடல்கடந்து இலங்கைபுக்குச் சீதையைக் கண்டுபேசிய பின் தன்வருகையை உனக்கு அறிவிக்கும்படி அசோகவனத்தை யழிக்க,அதனைக் கேள்வியுற்றுக் கோபங்கொண்ட நீ ஏவியனுப்பிய பலஇராக்கதவீரரையும் அவ்வநுமான் கொன்று கடைசியில் உனதுமகனான அக்ஷகுமாரனையும் தரையில் தேய்த்துக்கொல்ல, பின்பு நான் அவ்வநுமானைப் பிரமாஸ்திரத்தினாற் கட்டிக்கொணர்ந்தேனே; அப்பொழுதே அவனைக் கொன்றிருந்தால், அவன் மறுபடி கடல்கடந்துசென்று இராமனுக்குச் சீதையின்செய்திமுதலியவற்றைச் சொல்லியிருப்பனோ? அவ்விராமன்முதலியோர் பெரும்படையைக் கொண்டு போர்க்குத்தான் வந்திருப்பார்களோ? அப்பொழுது நமது உட்பகைவனான விபீஷணனது வார்த்தையைக் கேட்டுத் தூதனைக்கொல்லலாகாதென்று 'பரிவுகொண்டு,மகனையும்உளப்படக்கொன்றதனால் உபேக்ஷிக்கத்தகாத அவ்வநுமனை உயிருடன்விட்டதனாலன்றோ இவ்வளவு ஆபத்துநேர்ந்தது; பின்விளைவதைப்பற்றி அப்பொழுதேஆலோசியாததுஉனது அறிவீனமேயன்றோ? என்று இந்திரசித்து சோகத்தினால் இராவணனைப் பழித்துக்கூறினனென்க.

நிலத்தொடு அரைத்து-வேற்றுமைமயக்கம்.[1]விக்கற்பொரு என்றபாடம், தூதனுடைய எளிமையை விளக்கும். 'புந்தியில்லாய்'-விளியுமாம். தானொருவனிருக்கவும், பிள்ளைகளிற் பலரும் இறந்ததுபற்றி, 'மக்கள்துணையற்றனை' என்றான். இற்றது உன் வாழ்க்கை-காலவழுவமைதி;வெறுப்பினாற் கூறியது. விக்கல்=வீக்கல்-அழித்தல்; வீ என்பதன்பிறவினையான வீக்கு-பகுதி: இனி அவிக்கல் என்பதன் விகாரமுமாம். பி-ம்:—[1]மிக்கற்பொரு, விக்கைக்கொரு. [2]வேவுரைத் தூதுவனென்று, தூதுவனென்றுவிளம்பி. (௧௯௬௦)

௬.—இதுமுதல் ஐந்து கவிகள்-இலக்குமணனைக் கொல்வேனென்று இந்திரசித்து சபதஞ்செய்தலைக் கூறும்.

என்னின்று [1]நினைந்து மியம்பியு மெண்ணியுந்தான்
கொன்னின்ற படைக்கலத் தெம்பியைக் கொன்றுளானை
[2]யந்நின்ற நிலத்தவ னாக்கையை [3]நீக்கி யல்லால்
மன்னின்ற நகர்க்கினி [4]வாரலன் வாழ்வும் வேண்டேன்.

(இ - ள்.) இப்பொழுது (கடந்துபோனவற்றைப்பற்றிச்) சிந்தித்தும் (உன்மீது குறை)கூறியும் (இனி நடக்கவேண்டியதைப்பற்றி) ஆலோசித்தும் யாதுபயன்? கொலைத்தொழில்பொருந்திய ஆயுதங்களையுடைய எனது தம்பியான அதிகாயனைக் கொன்றவனான அவ்விலக்குமணனது உடம்பை, அவன் நின்ற அப்போர்க்களத்திலேயே உயிர்பிரித்தல்லாமல், பெருமைபொருந்திய இவ்விலங்காநகரத்துக்கு (இனி மீண்டு) வரமாட்டேன்[கொன்றேவருவேன் என்றபடி]; (நான்சொன்னபடிசெய்யத்தவறினேனானால் எனது) உயிர்வாழ்க்கையும் விரும்பேன் [இறந்துபடுவேன்]; (எ - று.)—தான்-அசை.

இனி வீண்காலங்கழியாது பகைவனைக்கொல்வே னென்று இந்திரசித்துச் சபதஞ்செய்தன னென்க. என் நின்று என்றும் பிரித்து உரைக்கலாம். பி-ம்:—[1]நினைத்தும். [2]அன்னின்ற. [3]வீட்டியல்லால். [4]வார்கிலென். (கககூக)

௧0. மாற்றருவுயி ரெம்பியை மாற்றிய மானு டன்றன்
ஊற்றுார் குருதிப்புனல் பார்மக ளுண்டி லாளேல்
[1]ஏற்று னிகலிந்திர னிரிரு காலெ னக்கே
தோற்றான் [2]றனக்கென் னெடுஞ்சேவகந் [3]தோற்க வென்றான்.

(இ - ள்.) '(பிறரால்) நீக்கமுடியாத உயிரையுடைய என்தம்பியை உயிர்நீக்கிய [கொன்ற] மனிதனாகிய இலக்குமணனது சுரக்குந்தன்மையுள்ள இரத்தப்பெருக்கைப் பூமிதேவி குடியாவிட்டால்[அவனைக்கொன்று அவனிரத்தம் பூமியிற்பெருகி வெள்ளமாம்படி நான் செய்யாமற்போவேனானால்],—போரில் எதிர்த்து எனக்கே (ஒருமுறை) தோற்றவனான இந்திரனுக்கு எனது பெரியபராக்கிரமம் நான்குதரம் தோற்றதுபோ லாகக்கடவது' என்று சபதங் கூறினான்; (எ - று.)

இலக்குமணனைப் பெயர்கூறாது 'மானுடன்' என்று கூறினது, அவனிடத்து இந்திரசித்துக்கொண்டுள்ள வெறுப்பையும் அலட்சியத்தையும் விளக்கும். இச்செய்யுள் "வெங்கண" என்ற அடுத்த பாடலுக்குப்பின் சில பிரதியிலுள்ளது. பி-ம்:-[1]ஏற்று. [2]தனக்கேநெடுவெஞ்சமர். [3]தோற்கவேயான். (கககூ௨)

௧௧. வெங்கண் ணெடுவானரத் தானையை வீற்று வீற்றுப்
பங்கம் [1]முறநூறி யிலக்குவ னைப்ப டேனேல்
அங்கந் [2]தரவஞ்சியென் னாணை கடக்க லாத
செங்கண் ணெடுமான் முதற்றேவர் [3]சிரிக்க வென்னை.

இதுமுதல் மூன்று கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) கொடுந்தன்மையையுடைய பெரிய குரங்குச்சேனையை தனித்தனி துண்டுபட்டுமுறியும்படி அழித்து இலக்குமணனையும் கொல்லாது விடுவேனானால்,—உடம்பைக்கொண்டு (என்னெதிரில்) வருவதற்கும் பயந்து எனது கட்டளையை மீறமாட்டாத சிவந்தகண்களையுடைய பெரிய திருமால் முதலிய தேவர்கள், என்னைச் சிரிக்கட்டும்; (எ-று.)

என்னிடத்து அஞ்சி நடுங்குபவர்களும் என்னைப் பரிகசித்துச் சிரிப்பார்களாக வெனச் சபதம் கூறியவாறு. பங்கம்முற -தோல்வியடைய என்றும், நிணச்சேறுபட என்றும் பொருள்கொள்ளலாம். அங்கம் தர-போரிற் புறங்கொடாதுமார்புகாட்டி முன்னிற்க. பி-ம்:—[1]பட, இற. [2]தரமஞ்சி. [3]சிரிப்ப.

௧௨. பாம்பிற் றருவெம்படை பாசு பதத்தி னோடுந்
[1]தேம்பற் பிறைசென்னி வைத்தான்றரு தெய்வ வேதி
ஓம்பித் [2]திரிந்தேற் கினியின் றுதவா து போமேற்
சோம்பித் [3]துறப்பன் [4]னுயிர் சோறு [5]முவந்து வாழேன்.

(இ - ள்.) நாகத்தின்வடிவமாய்ப் பொருந்திய கொடிய அஸ்திரத்தையும் [நாகாஸ்திரத்தையும்] பாசுபதமென்னும் அஸ்திரத்தையும் குறைதலையுடைய

பிறைச்சந்திரனை முடியில்தரித்த சிவபிரான்தந்த தெய்வத்தன்மையுள்ள வாளாயுதத்தையும் பாதுகாத்துக்கொண்டு காலங்கழித்துவந்தஎனக்கு, இனிமேல், இன்றைதினத்திற் செய்யும்போரில், (அவைகள்) பயன்படாது வீணாகுமானால், சோம்பலடைந்து [எல்லாமுயற்சியையும் விட்டு] என்உயிரை விட்டிடுவேன்; சோற்றையும் விரும்பியுண்டு வாழேன்; (எ - று.)

பாசுபதம் - பசுபதிசம்பந்தமானது; தத்திதாந்தநாமம்: பசுபதி-சிவன். தனதுவீரம் தட்டுத்தடையின்றி எங்குஞ்செல்வதனால் ஒருவரிடத்தும் அச்சமின்றிப் பேருற்சாகங்கொண்டு தன்னுடன் போருக்குவருபவர் யாரேனும் உண்டோ என்று தேடிச்செல்பவன் தான் என்பான், 'திரிந்தேற்கு' என்றான். 'இனி' என்பதை, 'சோம்பித் துறப்பன்' என்பதனோடு கூட்டியும் உரைக்கலாம். சோறு-மற்றை உண்ணப்படும்பொருள்கட்கும் உபலக்ஷணம். பி-ம்:—1தேம்பொற். 2திரிந்தேனெனக்கு. 3திரிவேன். 4இனிச். 5உகந்து. (கஉகூசு)

கரு. மருந்தே நிகரெம்பிதன் னாருயிர் வவ்வி னானை
விருந்தே யெனவந்தகற் கீகிலன் வில்லு மேந்திப்
1பொருந்தேவர் குழாநகை செய்திடப் போந்து பாரின்
இருந்தே னெனின் 2னானவ் விராவணி 3யல்ல னென்றான்.

(இ - ள்.) தேவாமிருதத்தையேயொத்த எனதுதம்பியான அதிகாயனது அருமையான உயிரைக் கவர்ந்தவனான இலக்குமணனை யமனுக்கு விருந்தாகக் கொடாமல், (என்னோடு) போர்செய்யுந்தன்மையுள்ள [எனக்குப் பழம்பகைவர்களான] தேவர்களின் கூட்டம் (பரிகாசத்தினால்) சிரிக்கும்படி வில்லையும் (வீணே) சுமந்து பூமியிற் (பாரமாகப்) பொருந்தியிருந்தேனானால், நான் அந்தஇராவணனதுமகனல்லேன் என்றும் (இந்திரசித்து சபதஞ்) கூறினான்; (எ-று.)

ராவணி - ராவணன்மகன்: தத்திதாந்தநாமம். நான் மகாவீரனையுள்ள இராவணனுக்குப் பிறந்த புதல்வனாக இருப்பின், அவனது வீரத்தன்மைக்கு ஏற்ப, என்தம்பியைக் கொன்றவனை இலக்குமணனைக் கொல்லாதுவிடேனென்று இந்திரசித்து சபதஞ்செய்தனனென்க. பி-ம்:—1பெருந்...போர்ந்து. 2யானும். 3அல்ல. (கஉகூரு)

கச.—இராவணன் இந்திரசித்தைப் போர்க்குச் செல்லவிடுதல்.

1ஏகா யிதுசெய் தெனதின்னலை 2நீக்கி டெந்தைக்கு
ஆகாதன வும்3முள வோ 4வெனக் காற்ற லார்மேல்
மாகால் வரிவெஞ்5சிலை யோடும் 6வளைத்த போது
சேகாகு மென்றெண்ணி7யிவ் வின்னலிற் சிந்தை 8செய்தேன்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ-ள்.)(இராவணன் இந்திரசித்தைநோக்கிக்கூறுவான்:—'யுத்தகளத்திற்குச்)சென்று,(நீ கூறியபடியே இலக்குமணனைக்கொல்வதாகிய)இத்தொழிலைச் செய்துஎன்னுடைய மனத்துன்பத்தை நீக்குவாயாக:உனக்கு,செய்யமுடியாதகாரியங்களும் இருக்கின்றனவோ?[இல்லை:எப்படிப்பட்டதொழிலும் எளிதிற்செய்யமுடியும் என்றபடி]; (பொறுக்கமுடியாத) புத்திரசோகம் நேரிட்ட

இக்காலத்தில்,—எனக்குப் பகைவர்கள்மீது, (நீ சென்று), பெரிய கழுந்தையுடைய கட்டமைந்த கொடிய (உனது) வில்லையும் (பகைவர்களையும்) வளைத்தகாலத்தில் [வளைத்தால்], (எனக்கு) உறுதியுண்டாகுமென்று எண்ணி (உன்னை)நினைத்தேன்': (எ-று.)—'என்றானை' என அடுத்த கவியோடு தொடரும்.

'நான் புத்திரசோகத்தால் மனமழுங்குகிறஇச்சமயத்தில் நீ சென்று பகைதீர்த்து என்மனத்துயரத்தைநீக்கி எனக்குத் தேறுதலையுண்டாக்குதல் தகுதியே'என்றுசொல்லி இராவணன் மகனுக்கு விடைகொடுத்தனனென்க. சேகுமரவைரம்: இங்கு, உறுதியென்னும்பொருளது. பி-ம்:—1 ஏகாய். 2நீக்க. 3உளதோ. 4அவர்க்காற்றலரமோ. 5சிலையோயை, சிலையோரை. 6மதித்தபோதே. 7உவப்பினிற். 8செய்தார். (கஉகசு)

கரு.—இந்திரசித்து தந்தையின் அநுமதிப்படி போர்க்குச் சித்தனாதல்.

என்றானை வணங்கி 1யிலங்கயில் 2வாளாரு மார்த்திட்டு
ஒன்றா னுமறா வுருவா வுடற்காவ லோடும்
3பொன்றாழ் கணையின்னெடும் புட்டில் புறத்து வீக்கி
வன்றாள் வயிரச்சிலை வாங்கினன் வானை வென்றான்.

(இ - ள்.) என்றுகூறிய இராவணனை, வானுலகத்தவரைச் சயித்தவனான இந்திரசித்து, நமஸ்கரித்து,—(ஆயுதம்) ஒன்றினாலும் அறுக்கமுடியாததும் (அம்புகளால்) ஊடுருவிச்செல்லமாட்டாததுமான கவசத்துடனே விளங்குகின்ற கூரிய உடைவாளையும் அணிந்துகொண்டும்,—பொன்மயமானவையும் உள்ளாழ்ந்தவையுமான பெரிய அம்பறாத்தூணிகளை(த் தோள்களின்) பின்புறத்திற் கட்டிக்கொண்டும்,—வலியகுதையையுடைய உறுதியான வில்லை எடுத்துக்கொண்டான்; (எ - று.)—உடற்காவல்-கவசம். கணைப்புட்டில்-அம்பறாத்தூணி. பி-ம்:—1இலங்கிலை. 2யாதும். 3பின்றாழ், பின்றா. (கஉகசுஎ)

கசு.—இந்திரசித்து எடுத்துக்கொண்ட வில்லின் வரலாறு.

வயிரங்கெடு மால்வரை கொண்டு மலர்க்கண் வந்தான்
செயிரொன்று முறாவகை யிந்திரற் கென்று செய்த
உயர்வெஞ்சிலை யச்சிலை பண்டவன் றன்னை யோட்டித்
துயரின் றலை1வைத் திவன்கொண்டது தோற்ற மீதால்.

(இ - று.) (இந்திரசித்து கையிற்பிடித்த) அவ்வில்லானது,—(திருமாலின் நாபீ) கமலத்தில் தோன்றியவனான பிரமன், (பகைவர்களால்) துன்பம் சிறிதும் உண்டாகாதபடி, இந்திரனுக்காக, உயர்ந்தபெரிய வச்சிரமலையைக்கொண்டுசெய்தசிறந்த கொடிய வில்லாகும்; முற்காலத்தில், அவ்விந்திரனைத் தோற்கச்செய்து (அவனைத்) துன்பத்துக்கு உள்ளாக்கி இவ்விராவண குமாரன் (வலியக்) கவர்ந்துகொண்டது; (அவ்வில்லின்) வரலாறு இதுவாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இந்திரசித்து, போர்க்களங்குறுகி, அங்கு அக்கினியில் ஓமஞ்செய்து அந்தஅக்கினியினின்று பிரமாஸ்திரம்முதலியவற்றைப் பெற்றனனென முதனூல் கூறுகின்றது. இந்திரற்கென்று, என்று-அசை; நான்காம்வேற்றுமைச்

சொல்லுருபு எனினுமாம்; 'ஆக' என்பதுபோல. துயரின்தலைவைத்து - சிறைவைத்து என்றபடி. பி-ம்:— 1வைத்தவற், வைத்தவர்க். (சகூகூஅ)

கஎ.—இந்திரசித்தின் அம்பறத்தூணிகள்.

தோளிற் கணைப்புட்டிலு மிந்திரன் றோற்ற 1நாளே
ஆளித் திறலன்னவன் 2கொண்டன வாழி யேழும்
மாளப் புனல்வற்றினும் வாளி யறாத 3வன்கட்
4கூளிக் கொடுங்கூற்றினுக் காவதொர் 5கூடு போல்வ.

(இ - ள்.) தோள்களிற் கட்டப்பட்ட அம்பறாத்தூணிகளும்,—இந்திரன் தோற்றுச்சிறையில்அகப்பட்ட அந்நாளிலேயே யாளிபோன்ற வலிமையையுடையஅவ்விந்திரசித்து(அவனிடமிருந்து)கவர்ந்துகொண்டனவாம்; (அவை), ஏழுகடல்களும் இல்லையாம்படி [முழுவதும்] நீர்வற்றினாலும் பாணங்கள் ஒழியப்பெறாதன; (அன்றியும்), தாட்சிணியமில்லாத கொல்லுதற்றொழிலுடையனை கொடிய யமன் தங்குவதற்குஉரிய ஒருகூண்டை ஒத்துள்ளன;(எ-று.)

உயிர்களைக் கொல்லுங் கணைகளிருக்குந் தூணியைக் கூற்றினுக்குஉரிய கூடாக உத்பிரேக்ஷித்தார்; தற்குறிப்பேற்றவணி. எழுகடல்களும் வறண்டாலும் அம்புகள் எடுக்கஎடுக்க வறளா என்று தூணியின்சிறப்புக் கூறியவாறு; அக்ஷயதூணீர மென்க. ஆளி-சிங்கம் போன்றதும் துதிக்கையுடையதுமாகிய மிருகவிசேடம்; சிங்கமுமாம். ஆழி யேழு-உவர்நீர், கருப்பஞ்சாறு, கள்,நெய், தயிர்,பால், நன்னீர் இவற்றின் மயமானவை. 'புனல்' என்றது-உவர்நீர் முதலியவற்றை யுணர்த்திநின்றது: இலக்சணை. கூளி-கொலைத்தொழிலையுடையவன்; "கூளியர் நண்பர் பூதகணவீரர் கோலைத்திறத்தோர்" என்பது, சூடாமணி. 4கூளிக் கடுங்கூற்றி னுணுத்ததொர்கூடு என்றபாடத்திற்கு-கூளிகளும் கொடியயமனும் ஆகியவற்றின் உணவுகளமைந்ததொரு கூடு என்று உரைப்பாருமுளர்;கூளிகளின் இரையாகியபிணங்களையும் கூற்றினுணவாகிய உயிர்களையும் தனித்தனி தொகுக்கின்ற அம்புகள், ஒற்றுமைநயத்தால் அவ்வுணவெனப்பட்டன வென்க. பி-ம்:—1ஞான்றே. 2கொண்டனன்,கொண்டனல். 3வன்கைக். 4கூளிக்...ஊணுயதோர். 5கூடம். (சகூசக)

கஅ.—இந்திரசித்து மற்றும் ஆயுதங்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுதல்.

பல்லாயிர கோடி படைக்கலம் பண்டு தேவர்
எல்லாரு 1முனைத்தலை யாவரு மீந்த மேரு
2வில்லாளன் கொடுத்த விரிஞ்ச னளித்த 3மெய்ம்மை
அல்லாற் புரியாதன யாவையு மாய்ந்து கொண்டான்.

(இ - ள்.) முற்காலத்தில், எல்லாத்தேவர்களும் எதிர்த்துச்சண்டைசெய்த போர்க்களத்தில் (இவனிடத்துத் தோற்றவர்களாக அத்தேவர்கள்) எல்லாரும் கொடுத்தவையும், மகாமேருவை வில்லாகக்கொண்டவனான சிவபிரான் கொடுத்தவையும், பிரமன் கொடுத்தருளியவையும்,(தங்கள்) இயற்கைத்தொழிலான கொலையையல்லாமல் (கொல்லாதுபழுதுபடுதலை இதுவரையிற்) செய்யாதவையுமான மிகப்பலவான ஆயுதங்களெல்லாவற்றையும் தேர்ந்தெடுத்துக்கொண்டான், (இந்திரசித்து); (எ - று.)

இந்திரசித்து தவஞ்செய்து சிவபெருமானிடத்தும் பிரமதேவனிடத்தும் பலஆயுதங்களைப் பெற்றனனென்றும், இந்திரன்முதலிய தேவர்களைத் தோற் கடித்து அவர்களிடத்தினின்று பலஆயுதங்களை வலியக் கவர்ந்து கொண்டன னென்றும் அறிக. படைக்கலத்திற்கு மெய்ம்மையாவது - பழுதுபடுதலின்றி இலக்கைத் தவறாதுஅழித்தல். பி-ம்:—1முனித்தலை. 2வில்லாளர். 3வெம்மை, மேன்மை. (கக௭௦)

கக௯.—இதுமுதல் நான்குக்விகள் - ஒருதொடர்:
இந்திரசித்தின் தேர்ச்சிறப்பைக் கூறும்.

நூறுயிரம் [1]யாளியி னுண்மை தெரிந்த சீயத்து
வேறுமவை யன்னவை யாயிரம் பூண்ட [2]தென்ப
[3]மாறுமொ ரிலங்கை நிகர்ப்பது வானு ளோருந்
தேறுதது மற்[4]றவ னேறிய தெய்வ மாத்தேர்.

(இ-ள்.) அவ்விந்திரசித்து ஏறின தெய்வத்தன்மையுள்ள பெரியதோ னது,—லக்ஷம்யாளிகளின் வலிமையை(த் தனித்தனி)கொண்ட அப்படிப்பட்ட ஆயிரம் ஆண்சிங்கங்கள் பூட்டப்பெற்றது; வேறாகவொரு இலங்காபட்டணத்தை யொத்துள்ளது; தேவர்களாலும் (இத்தன்மையது என)அறியப்படாதது; (எ - று.)—என்ப, மற்று - அசைகள். இந்திரசித்தின்தேர் கோவேறுகழுதை பூண்டது என முதனூல் கூறும். தெரிதல் - இங்கே, பெற்றிருத்தலென்ற பொருளது: இலக்கணை. பி-ம்:—1ஆளரி, யாளியும். 2என்ன. 3மாறு. 4இவன்.

௨௦. பொன்சென் றறியா வுவணத்தனிப் புள்ளி னுக்கும்
மின்சென் றறியா மழுவாளன் விடைக்கு மேனாட்
பின்சென்ற [1]தல்லாற் பெருகுஞ்சிறப் புற்ற [2]போதும்
முன்சென் றறியாதது [3]மூன்றுல கத்தி னுள்ளும்.

(இ-ள்.) (அத்தேர்,—சிறத்தினால்) பொன்னும்உவமையாகச்செல்லுதலை அறியப்பெறாத [ஒப்பாகமாட்டாத] (திருமாலின் வாகனமான) கருடனென் கிற ஒப்பற்ற பறவைக்கும், மின்னலும் ஒப்பாகமாட்டாத மழு வென்னும் ஆயு தத்தை யேந்திய சிவபிரானது (வாகனமாகிய) ரிஷபத்துக்கும், முற்காலத் தில், (எப்பொழுதும் தான் வெற்றிபெறுதலால் அவைகள் முன்நிற்கமாட் டாது புறங்கொடுத்துப்போக அவற்றைத் துரத்திக்கொண்டு தான் அவற்றின்) பின்னே சென்றதே யல்லாமல்,(அவை ஒப்பற்ற துணிவலி முதலிய) மிகுஞ் சிறப்பைப் பெற்றகாலத்திலும்,(சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்ற) திரிலோ கத்தினுள்ளும்(தான் தோல்வியடைதலால் அவைகள் பின்னே துரத்திவர அவைகளின்) முன்னே சென்றறியாதது; (எ - று.)

இந்திரசித்தின்ஊர்தியான இத்தேர், திருமாலின்ஊர்தியான கருடனுக் கும் சிவபிரானதுஊர்தியான விருஷபத்துக்கும் வலிமை முதலிய எவ்வாற் றாலும் எப்பொழுதும் எவ்விடத்திலும் கீழ்ப்படாது மேற்பட்டேயுள்ளதென் பது கருத்து. இந்திரசித்து தெய்வத்தன்மையுள்ள இத்தேரின் மேலேறிப் போர் செய்வதனால் தான் ஒருபோதும் தோல்வியடையாது வெல்லவல்லனாகின்

றன னென்க.தேவேந்திரனுக்குத் தம்பியாகி அவனைக் குறைவில்லாது காக்க உடன்வசிக்கும் விஷ்ணுவின் அம்சமான உபேந்திரன் தேவர்கட்கெல்லாந் தலைவனாகிய இந்திரனுடன் திக்குவிஜயஞ்செய்யப்புறப்பட்ட அவ்விராவணன் போர்செய்யவந்த காலத்துஅவ்விந்திரனைக் காவாதுவிட்டதனாலும்,அஷ்டதிக்பாலகர்களிலொருவனான ஈசானனும் முப்பத்துமுக்கோடிதேவர்களில் ஏகாதசருத்திரரு மாகிய சிவபிரானதுமூர்த்திகள் மேற்குறித்தபோரில் இந்திரனுக்குப் பக்கபலமாய்நின்று வெற்றிபெறுமற்போனதனாலும், அவ்விந்திரனை வென்ற இந்திரசித்தினால் தோற்கடிக்கப்பட்டன ரென்னலாம். இனி, இச்செய்யுளுக்கு-இத்தேர் விரைவு வலிமை முதலியவற்றால்,திருமாலின் வாகனமான கருடனும் சிவபிரானது வாகனமான விருஷபமும் ஆகிய இவ்விரண்டற்கும் பிற்படுமேயன்றி, மூன்று உலகத்திலும் [மற்றுளவையும்] எவ்வளவு சிறப்புற்றகாலத்தும் தனக்கு முற்படப் பெறாதது என்னுங் கருத்து அமைய உரைத்தலுமாம்.

உவணன்-ஸுபர்ணன் என்ற வடசொல்லின் சிதைவு: அழகிய இறகுகளையுடையவனென்று பொருள்படும். இவன், காசியபமுனிவரது மனைவியருள் விநதையென்பவளது மகன்; சூரியன் சாரதியான அருணனது தம்பி; விஷ்ணுவுக்கு எப்பொழுதும் வாகனமாயிருப்பவன்; இதுபற்றி, இவனுக்கு வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'பெரியதிருவடி' என்று பெயர். பி-ம்:—[1]அல்லாததொர்பெருஞ், அல்லாதவோர்பெருஞ்,அல்லதொருமாண், அல்லாவொர்பெருஞ். [2]போரின். [3]மூவுலகத்தின். (கஉஎஉ)

உக.ஏயாத் தனிப்போர் வலிகாட்டிய விந்தி ரன்றன்
சாயாப் பெருஞ்சாய் கெடத் [1]தாம்புக ளாற்ற டந்தோள்
போயார்த்தவன் வந்தனன் வந்தன னென்று பூசற்
பேயார்த் [2]தெழுந்தாடு[3] நெடுங்கொடி [4]பெற்ற தம்மா.

(இ-ள்.) (அத்தேர்),—'ஒப்பில்லாத சிறந்த போர்த்திறமையைக் காட்டி யுத்தஞ்செய்த இந்திரனுடைய (யார்க்கும்) அழியாத மிக்க வலிமை அழியும்படி (எதிர்த்துச்)சென்று கயிறுகளால் (அவனுடைய)பெரிய தோள்களைக் கட்டிய மகாவீரன் வந்தான் வந்தான்' என்று பேராரவாரத்தையுடைய பேய் இரைத்து எழுந்து கூத்தாடப்பெற்ற பெரியதுவசத்தைப்பெற்றது; (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல்; பேயின்பேராரவாரமே எதிரிகளைக் கலங்கச்செய்கின்றதுஎன அத்தேரின்கொடுமையை வியந்தவாறு. இதனால், இந்திரசித்தின்தேர் பேய்க்கொடியுடைய தென்பது பெறப்படும்.சாய்-சாயா: வடசொல்; ஒளி: இங்கே, வலிமையையுணர்த்திநின்றது; புகழுமாம். தாம்பு-இங்கே,மாயைப்பாசம். இச்செய்யுள் சிலபிரதியில்"செதுகை'என்ற அடுத்தபாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]பாம்புகளாற்.[2]எழுந்தாட, எழுந்தாடுவ.[3]பொற்கொடி. [4]பெய்ததம்மா, பெற்றியம்மா. (கஉஎ௩)

உஉ. செதுகைப் பெருந்[1]தானவ ரூனெடுந் தேய்த்த நேமி
யதுகைத் திசையானையை யோட்டிய தென்ன லாமே

மதுகைத் தடந்தோள்வலி காட்டிய வான வேந்தன்
முதுகைத் தழும்பாக்கிய [2]மொய்யொளி [3]மொட்ட தம்மா.

(இ - ள்.) (பின்னும் அத்தேர்),பொருதலையுடைய பெரிய அசுரர்களை(க் கீழே தள்ளிஅவர்களுடைய) உடம்புகளைத் தேய்த்தழித்த சக்கரங்களை யுடையது; வெற்றியுற்ற (தனது) பெரும்புஜபலத்தைக் காட்டிய சுவர்க்கத்துக்குத் தலைவனான இந்திரனது முதுகை ஊறுபடுத்திய நிறைந்த ஒளியையுடைய மொட்டு என்ற உறுப்பையுடையது; (இவ்வாறு சிறப்புப்பெற்றிருக்க), துதிக் கையையுடைய திக்கஜங்களை வென்று துரத்தியது என்று சொல்லுதல் (அத் தேர்க்கு ஒரு) சிறப்பாமோ? [சிறப்பாகாது என்றபடி]; (எ - று.)

இத்தேரின் உறுப்புக்களுள்ஒன்றான சக்கரம் அசுரர்களையும்,மற்றோருறுப் பானமொட்டுதேவர்தலைவனான இந்திரனையும் ஊறுபடுத்தி வென்றிருக்க,இத் தேர் திக்கஜங்களைவென்று துரத்தியதுஎன்று கூறுதலிற் சிறப்பில்லையென்ற வாறு. செதுகை-வைரமுமாம். மொட்டு-தாமரைமலரின் வடிவமாகச் செய்து தேரின் முன்னிடத்து வைக்கப்படுவதோர் உறுப்பு: இதனைக் கொடிஞ்சி யென்று கூறுதலும் உண்டு. இராவணனும் அஞ்சி ஒன்றுஞ்செய்யமாட்டாது திகைக்கும்படி இந்திரன் போர்செய்தனனாதலால், ‘மதுகைத்தடந்தோள் வலிகாட்டிய வானவேந்தன்’ என்றார். இந்திரசித்து இந்திரனைவென்று சிறை பிடித்துக்கொண்டுபோனபோது தேரின்மொட்டிற் சேர்த்து அவனைக்கட்டின மையால், அவன்முதுகு தழும்புபட்டதென்க. மதுகை-வெற்றி. பி-ம்:—[1]தா னவர்தன்னொடுந்தேய்த்த, தானவன்றன்னொடுஞ்செய்த, தானவரோடுந் தேய்த்த. [2]மெய்யொளி. [3]மொட்டிது. (௧௯௭௬)

௨௬.—இந்திரசித்து தேர்மீதேறிப் போர்க்குப் புறப்படுதல்.

அத்தேரினை யேறிய தொப்பன வாயி ரந்தேர்
[1]ஒத்தேய்வன [2]சேமம தாய்வர வுள்ளம் வெம்போர்ப்
பித்தேறின னென்ன [3]நடந்தனன் பின்ப லான்மற்று
எத்தே வரையும் முகங்கண் [4]டறியாத வீட்டான்.

(இ - ள்.) எல்லாத்தேவர்களையும் (தோற்றோடச்செய்து) பின்புறத் தை(க் கண்டதே) யல்லாமல் (அவர்கள் தனக்கெதிராய்நின்று) முகத்தை[முக ங்கொடுத்துப் போர்செய்ய]ப் பார்த்திராத வலிமையுடையவனான இந்திரசித் து,—அந்தத்தேரின்மேலேறிக்கொண்டு,அத்தேரை ஒத்துள்ளவையான ஆயிர ந்தேர்(தம்மில்) நெருங்கியுள்ளவையாய்ப் பாதுகாவலாய் உடன்வர, மனத்திற் கொடிய போர்வெறி கொண்டவனென்று(கண்டோர்)சொல்லும்படி(போர்க் களத்துக்குச்) சென்றான்; (எ- று.)—மற்று - அசை; வினைமாற்றுமாம்.

போரிற்கொண்டுள்ள மிக்கஊக்கம் தோன்றும்படி தேரை விரைவாகச் செலுத்தி உக்கிரந்தோன்றச்சென்றனனென்பார், ‘வெம்போர்ப் பித்தே றினனென்ன நடந்தனன்’ என்றார். ‘பின்பலால் மற்றெத்தேவரையும் முகங்கண்டறியாத ஈட்டான்’என்றதனால், எல்லாத்தேவர்களையும் எதிர்நிற்க வொட்டாதுமுதுகுகாட்டியோடச்செய்யும் இந்திரசித்தின்வீரச்சிறப்பு வெளி யாம். சேமம் - க்ஷேமம். இதனால், சேமத்தேரெனப்படுகிற உதவித்தேர் பல

வற்றின்உடன்வரவு கூறப்பட்டது. ஏறி அதுஎன்றுபிரியும். பி-ம்:—[1]ஒத்தேறினை. [2]சேமம்வரத்தன துள்ளம், செம்மைவைத்தான்றனதுள்ளம். [3]நடந்தன பின்பிலான்மற்று, நடந்தனன்பின்பலாமற்று. [4]அறியாதுவிட்டான். (௧௬௭௫)

உச.—இந்திரசித்தினது சேனையின் மிகுதி.

அன்னானொடு [1]போயின தானை [2]யறிந்து கூற
என்னாலரி [3]தேனு மியம்பு[4]வான் மீக னென்னும்
நன்னான் மறையானது நாற்பது வெள்ள மென்னச்
[5]சொன்னான் பிறரி[6]யாரஃ துணர்ந்து தொகுக்க வல்லார்.

(இ - ள்.) (பக்கபலமாக) அவ்விந்திரசித்தினுடனே சென்ற சேனையினளவை (இவ்வளவென்று) தெரிந்து சொல்ல (எளியனாகிய) என்னால் முடியாதாயினும்,—(மகிமையால் யாவராலும்) சிறப்பித்துச்சொல்லப்படுகிற வான்மீகியென்னப்படுகின்றசிறந்த நான்குவேதங்களையும்அறிந்த முனிவன், 'அச்சேனை, நாற்பது வெள்ளம்' என்று கூறினான்; (ஆகையால், யானும் அவ்வாறேகூறுவேன்): வேறுயாவர்தாம், அஃது(இவ்வளவென்று)அறிந்து கணக்கிட்டுக் கூற வல்லமையுடையவர்? (எ-று.)

இயம்பு-பிரமதேவனது அநுக்கிரகத்தாலும் நாரதமுனிவனதுஉபதேசத்தாலும் முதனூலைக் கூறிய எனினுமாம். வான்மீகன் = வால்மீகி; வடமொழித் தத்திதாந்தநாமம். இப்பெயர்-புற்றினின்றுபிறந்தவ னென்று பொருள்படும்; வல்மீகம்-புற்று. இவன் முதலில் பிருகுவமிசத்தவரான ருக்ஷருக்குப் புத்திரனாய்த்தோன்றித் தக்கபருவம்வந்தபின்புஒருகுறப்பெண்ணைக் காமுற்று அவளைக்கூடி மக்களைப்பெற்றுமகிழ்ந்து அக்குடும்பசம்ரக்ஷணத்தின்பொருட்டு வழிபறித்து ஜீவநஞ்செய்துவருகையில், அவ்வழியேசென்ற ஸப்தரிஷிகளின் பொருள்களையும் அடித்துக் கவர்ந்து ஓரிடத்தில்வைக்க, அவர்கள் 'இப்பொருள்களை இங்கேயேவைத்துப் போய் உன்பெண்டுபிள்ளைகளைக் கண்டு 'நான் உங்களைப் பாதுகாத்தற்காகச் செய்யும் பாவத்திற் பங்கு உங்களுக்குஉண்டா?' என்று கேட்டுவா: பின்பு இப்பொருள்களை எடுத்துக்கொண்டுபோகலாம்' என்று சொல்ல, இவனும் போய் அங்ஙனமே கேட்க, அவர்கள் 'ஓகோ! இது என்ன பைத்தியம்! பாவத்திலும் பங்குக்கு வருவார்உண்டோ?'என்ன, அது கேட்ட இவன் திடுக்கிட்டுச் சென்று அவ்விருடியரைச் சரணம்புகவே, அவர்கள் கருணைகூர்ந்து தமது திவ்வியஞானத்தினால் இவனதுஜந்மகர்மங்களையுணர்ந்து ராமமந்திரத்தைத் தலைகீழாக 'மரா' என்று இவனுக்கு உபதேசித்துச் செல்ல, இவனும் வெகுகாலம் சலியாமல் தூண்போலநின்று தவஞ்செய்ய, இவன்மேற் புற்று மூடிக்கொண்டது;அது ஒருகாலத்தில்மழைபெய்துகரைய, அதனினின்று இவன் வெளிப்பட்டமைபற்றி,வால்மீகி யெனப் பெயர்பெற்றனன். இவனை வருணகுமார னென்பதும் இதுபற்றியே. வான்மீகி நாற்பது வெள்ள மென்று சொன்ன இடம் விசாரிக்கத்தக்கது. பி - ம்:—[1]போகிய. [2]அளந்து. [3]என்னும். [4]வன்மீகனென்பானன்னாளறைவானது. [5]சொன்னார். [6]யாவர். (௧௬௭௬)

உரு.—இதுவும் அடுத்தகவியும்-குளகம்: இந்திரசித்து சேனையோடு போர்க்களஞ் சேர்தலைத் தெரிவிக்கும்.

தூமக்க ணரக்கனுந் தொல்[1]லமர் யார்க்குந் [2]தோலா
மாபக்கனு மங்நெடுந் தேர்மணி யாழி [3]காக்கத்
தாமக் குடைமீ தியாப்பெருஞ் சங்கம் விம்ம
[4]நாமக் கடற்பல்லிய நாற்கடன் [5]மேலு மார்ப்ப.

(இ - ள்.) புகைநிறமான கண்களையுடைய இராக்கதனும் [தூமிராக்ஷனும்] பழைய [முன்நடந்த] போர்களில் எவர்க்கும் தோல்வியடைந்திராத மகாபார்சுவனென்பவனும் அந்த [தான் ஏறிய] பெரிய தேரினது அழகிய சக்கரங்களைப் பாதுகாக்கவும்,-ஒளியையுடைய(வெண்கொற்றக்)குடை மேலே பொருந்திவிளங்கவும், பெரிய சங்கவாத்தியங்கள் முழங்கவும் (தமதுபேரொலியாற் பகைவர்க்கு) அச்சத்தைத் தருகின்ற பலவகைவாத்தியங்களின் கூட்டங்கள் நான்குகடல்களினும் அதிகமாகப் பேரொலிசெய்யவும்,—(எ - று.)— 'சென்றனன்' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

இராவணன்முதலில் தோற்பதற்கு முன்னமே தூமிராட்சன் அநுமானாற் கொல்லப்பட்டா னென்றும், பின்னையவன் அதிகாயனுடன் துணையாக அனுப்பப்பட்டு ருஷபனென்னும் வாநரனாற் கொல்லப்பட்டா னென்றும் முதனூல்கூறும்; தூமிராக்ஷனும் மகாபார்சுவனும் முறையே இராவணனுக்கு மாமன்முறையிலும், உடன்பிறந்தவன்முறையிலும் நிற்பவர்: இவர் வேறு எனக் கொள்ளுமொன்று. யுத்தத்தில் பல்லியம் முழக்குதல், போர்வீரர்க்கு மனக்கிளர்ச்சியை வளர்த்தற்காக. பல்லியம் - கொட்டுவனவும் ஊதுவனவு மாகிய தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரப்புக்கருவி எனப்படும் பலவகைவாத்தியங்கள். ஆர்ப்ப - பொதுவினை. 'நாற்கடல்மேலுமார்ப்ப' - உயர்வுநவிற்சியணி. பி - ம்:—[1]அமரர்க்கும். [2]தோலான். [3]காப்ப. [4]நாமப் பெரும், நாமக்கடும். [5]போலும்.　　　(கசுஎஎ)

உசு. தோராயிர மாயிர கோடிதன் மாடு செல்லப்
போரானை புறத்தி னவற்றி னிரட்டி [1]போதத்
தாரார் புரவிக்கடல் [2]பின்செலத் தானை [3]வீரப்
பேராழி முகஞ்செலச் சென்றனன் பேர்ச்சி யில்லான்.

(இ - ள்.) ஆயிரத்தாற்பெருக்கிய ஆயிரகோடியென்னுந் தொகையளவான தேர்கள் தனது அருகில் [உள்ளணியாகச் சூழ்ந்து] வரவும், அத்தேர்த் தொகையினும் இருமடங்கான [இரண்டாயிரம் ஆயிரகோடி] போர்க்குச் சிறந்த யானைகள் (அவ்வுள்ளணியின்) புறத்திலே [புறவணியாகச்சூழ்ந்து] வரவும், அணிவகுப்புப் பொருந்திய குதிரைக்கூட்டங்கள் பின்னே [பின்னணியாக] வரவும், பதாதிவீரரது சேனையாகிய பெருந்திரள் முன்னே [முன்னணியாகச்] செல்லவும்,—நிலைகலங்குதலில்லாதவனான இந்திரசித்து (போர்க்களத்துக்குச்) சென்றான்; (எ - று.)

கடல்-கூட்டமென்ற பொருளில்வந்தது; "இவுளிக் கடல்" என்ற சிந்தாமணியிற்போல. கடல், பேராழி என்பவற்றைப் பெருந்தொகைகுறிக்கும்

பெயர்களென்னினுமாம்; படைத்தொகைவகைகளில் 'சமுத்திரம், வெள்ளம்' என்பனபோல. பி-ம்:—1போகத். 2முன். 3வீரர். (௧௬௭௮)

வேறு.

௨௭.—இலக்குமணன்போர்க்களத்தைநோக்கிவருபவனை 'இராவணனோ, இந்திரசித்தோ?' என்று ஐயுறுதல்.

நின்றன னிலக்குவன் களத்தை நீங்கலன்
பொன்றின னிராவணன் புதல்வன் போர்க்கினி
அன்றவ னல்லனே லமரர் வேந்தனை
வென்றவன் வருமென விரும்புஞ் சிந்தையான்.

(இ - ள்.) லக்ஷ்மணன்,—(போர்க்களத்தைநோக்கிவருகிற இந்திரசித்தை இன்னானென்று அறியாமல்), இராவணனது மகனான அதிகாயனென்பவன் இறந்தொழிந்தான்; (ஆதலால்), (என்னுடன்) போர்செய்வதற்கு இப்பொழுது அவ்விராவணனே (வருகின்றான்போலும்); (வருபவன் அவ்விராவணன்)அல்லாவிட்டால் முற்காலத்தில் தேவர்தலைவனான இந்திரனை வென்றவனாகிய இந்திரசித்தே வருகின்றவனாகும்' என்று (வருகின்றவனைப் பற்றிச்) சந்தேகங்கொண்டு (போர்செய்தலில்) ஆசைகொண்டுள்ள மனமுடையவனாய்ப் போர்க்களத்தைவிட்டு நீங்காது (அங்கேயே) நின்றான்; (எ - று.)

இனி, 'இராவணபுத்திரனான அதிகாயன் இறந்தான்:இனிமேல், வைரங்கொண்ட அவ்விராவணன் அல்லது இந்திரசித்து போர்க்கு வருவான்'என்று கருதி (அவர்கள்வரவை) ஆசையோடு எதிர்நோக்கிய மனமுடையவனாய்,இலக்குமணன்,போர்க்களத்தை விட்டுநீங்காது அங்கேயேநின்றனனென்று உரைகூறினுமாம். இப்பொருளில், 'அன்றவன்' என்பது-வினைத்தொகை: அன்றுதல்-கோபித்தல். இச்செய்யுளினால், இலக்குமணனுக்குயுத்தஞ்செய்தலிலுள்ள உற்சாகம் நன்குவிளங்கும். இனி, 'அன்று' - அசையுமாம். நீங்கலன், சிந்தையான் - முற்றெச்சங்கள். (௧௬௭௯)

௨௮.—'வருபவன் யார்?'என்று இலக்குமணன் விபீஷணனைக் கேட்க, அவன் 'இந்திரசித்து' என்று தெரிவித்தல்.

[1]யாரிவன் [2]வருபவ னியம்பு வாயென
வீரவெந் [3]தொழிலினான் [4]வினவ வீடணன்
ஆரிய [5]விவனிக லமரர் வேந்தனைப்
போர்கடந் தவ[6]னின்று [7]வலிதுபோ ரென்றான்.

(இ - ள்.) (பகைவர்க்குக்) கொடிய வீரச்செயலை யுடையவனான இலக்குமணன், (விபீஷணனை நோக்கி), 'இதோவருகிறவன் யார்? சொல்வாய்' என்றுவினவ,—விபீஷணன், (இலக்குமணனைநோக்கி), சிறந்தவனே! இவன் போர்வலிமையுள்ள தேவேந்திரனைப் போரிற் சயித்தவனான இந்திரசித்து (இவன் போர்க்கு வருவதனால்), இன்றைக்கு நடக்கும் போர் மிகவலிமையுள்ளதாகும்' என்று மறுமொழி கூறினான்; (எ - று.)

போர்க்குவருபவன் இராவணன் இந்திரசித்து என்னும்இருவரில் ஒருவனென்று தெரிந்தும் சிறிதும் பின்னிடையாது பேருக்கங்கொண்டு போர்

களத்தில் எதிர்பார்த்துநின்ற இலக்குமணனது வீரத்திறலை வியந்து, அவனை 'வீரவெந்தொழிலினன்' என்றார். பி-ம்:—[1]ஆரிவன், யாரிவன். [2]வருமவன். [3]திறலினன். [4]விளம்ப. [5]இவன்கொலாமமர. [6]இவன். [7]புரிந்துயர்ந்தவன். (௧௯௮௦)

௨௯.—இதுமுதல் நான்கு கவிகள் - 'துணைவலிகொண்டே இந்திரசித்துடன் போர்செய்யவேண்டும்' என்று விபீஷணன் இலக்குமணனுக்கு இந்திரசித்தின் ஆற்றலைத் தெரிவித்தலைக் கூறும்.

[1]எண்ணின துணர்த்துவ துளதெந் தெம்பிரான்
கண்ணகன் பெரும்படைத் துணைவர் [2]காத்திட
[3]நண்ணின [4]துணையொடு [5]பொருத [6]னன்றிது
[7]திண்ணிதி னுணர்தியாற் [8]றெளியுஞ் சிந்தையால்.

ஐந்து கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (விபீஷணன் லக்ஷ்மணனை நோக்கிச் சொல்வான்:—) எமது தலைவனே! (நான்) எண்ணினது ஒன்று (உன்பக்கல்) தெரிவிக்கவேண்டியது உண்டு: (அதுயாதெனில்,—) இடமகன்ற பெரியசேனையின் தலைவர்களாகிய போர்த்துணைவர்கள் (சோர்வுபடாது) காவல்செய்ய, பொருந்திய அத்துணை வலிமையுடன் (கூடிநின்றே), (இவ்விந்திரசித்தோடு) போர்செய்தல், நல்லது; இச்செய்தியை ஆராய்ந்து நிச்சயிக்கவல்ல மனத்தினால் உறுதியாக ஆலோசிப்பாய் [தீர்க்காலோசனைசெய்வாயாக என்றபடி]; (எ - று.)—ஆல் - அசை.

[3]'நண்ணினன் துணையொடு' என்று பாடங்கொண்டு—பெரும்படைத் துணைவர்காத்திட நண்ணினனென்று உரைப்பினுமாம். பி-ம்:—[1]எண்ணினன். [2]காத்துடன். [3]நண்ணினன். [4]நந்துணை, துணையொடும். [5]பொருகை. [6]நன்றென. [7]திண்ணிய துணர்த்தினன், திண்ணனவுணர்தியால். [8]தெரியுஞ்சிந்தையான். (௧௯௮௧)

௩௦. மாருதி சாம்பவன் வான ரேந்திரன்
தாரைசேய் நீலனென் றினைய [1]தன்மையார்
வீரர்வந் துடனுற விமல நீநெடும்
போர்செயத் தகுதியாற் புகழின் பூணினாய்.

(இ - ள்.) குற்றமற்றவனே! புகழை அழகிய ஆபரணமாகக்கொண்டவனே! அநுமானும் ஜாம்பவானும் குரங்கரசனான சுக்கிரீவனும் தாரையின்மகனான அங்கதனும் நீலனும் என்ற இவர்கள்போன்ற தன்மையையுடையவரான வீரர்கள் வந்து உன்னுடன் (துணையாகப்பொருந்த) நீ பெரிய போரைச்செய்தல்தகுதி; (எ - று.)

மாருதி - வாயுவின் குமாரன்; வடமொழித்தத்திதாந்தநாமம்; மாருதன் - வாயு. கேசரியென்ற வாநரவீரனது மனைவியாகிய அஞ்சனாதேவியினிடத்தில் வாயுதேவனுக்கு இவ்வநுமான் தோன்றினனென உணர்க; இவன், வாயுவின் அம்சத்தோடு ருத்திராம்சமுமுடையான். சாம்பவன் - ஜாம்பவான்; ஒருகால் பிரமன் வாய்திறந்து கொட்டாவிவிட்டபொழுது அதனினின்று அப்பிரமதேவனது அம்சமாய்த் தோன்றினன்; கரடிகளுக்கு அரசன். வாநரேந்திரன் - சுக்கிரீவன்; சாபத்தாற் பெண்வடிவமான ருக்ஷரஜஸ்என்ற

வானரராசனது கழுத்தினழகைக் கண்டு காமுற்ற சூரியனுக்கு அப்பெண் குரங்கினிடந் தோன்றியவன்; வாலியின்தம்பி. தாரை - வாலியின்மனைவி; தாரா என்பது, ஆவீறு ஐயாயிற்று. பி-ம்:—1தன்மையாம். (கசுஅஉ)

ரு௩. பல்பதி னாயிரந் தேவர் [1]பக்கமா
எல்லையில் [2]சேனைகொண் டெதிர்ந்த விந்திரன்
ஒல்லையி னுடைந்தன னுயிர்கொண் [3]டுய்ந்துளான்
[4]மல்லலந் தோளினா [5]யமுதின் வன்மையால்.

(இ - ள்.) பெருமைபொருந்திய அழகிய தோள்களையுடையவனே! பல் பதினாயிரக்கணக்கான தேவர்கள் (தனக்குப்) பக்கபலமாயிருக்க, அளவற்ற [மிகஅதிகமான] சேனையை உடன்கொண்டு, (இவ்விந்திரசித்தோடு) எதிர்த்துப்போர்செய்த இந்திரன் (இவன்முன்) விரைவில் தோற்றவனாகி, (தான் முன்பு பானம்பண்ணின) அமிருதத்தின் பலத்தினாலேயே உயிருடன் தப்பிப் பிழைத்தான் [இந்திரன் அமிருதமுண்ணாம லிருந்தால் அப்பொழுதே இவ்விந்திரசித்தால் இறந்திருப்பன் என்றபடி]; (எ - று.)

'துணையொடு பொருதல் நன்று' என்று கீழ்க்கூறியதற்கு ஏற்ப அவன் வலிமையுடையவனென்பதை விளக்கவேண்டிய இந்தச்சந்தர்ப்பத்தில் அவ் வலிமையின்காரிய மாகிய இந்திரசயத்தைக் கூறினதனால், இது, காரியப்புனைவிலி புகழ்ச்சியணி; இவ்வணி, பிறிதுமொழித லென்ற பெயராலும் வழங்கும்: வடநூலார் அப்ரஸ்துதப்ரசம்ஸை யென்பர். இது, மேல்வருவதற்கும் ஒக்கும். இந்திரசித்தின் வீரச்செயலை இவ்வாறு விபீஷணன் கூறுவது, இவனோடு துணைவலியின்றிப் போர்செய்பலாகா தென்று வற்புறுத்துதற்கு. பி-ம்:—1பக்கமார். 2தானை. 3உய்ந்தனன். 4மல்லெனும். 5வரத்தின்வண்மையால்.

ரு௪. [1]இனியவை மறையுமோ விந்தி ரன்புயப்
பணி[2]வரை யுளநெடும் [3]பாசப் பஃறழும்பு
அனுமனைப் பிணித்துள னை போதவன்
தனு[4]மறை வித்தகஞ் [5]சாற்றற் பாலதோ.

(இ - ள்.) இந்திரனுடைய தோள்களாகிய இமயமலையிற் பொருந்திய (இவன்கட்டிய)நீண்ட(மாயைக்)கயிற்றினாலாகிய அந்தப்பலதழும்புகள், இனி மறையுமோ? (அன்றியும், இவன்), அநுமானையும (பிரமாஸ்திரத்தினாற்) கட்டினவனாயிருக்கையில் [கட்டினதனால் என்றபடி], அவ்விந்திரசித்தினது தநுர்வேதப்பயிற்சியிலுள்ள திறமை சொல்லப்படுந் தன்மையுடையதோ?

விபீஷணன், இவனது திறமையை விளக்குதற்பொருட்டு, விண்ணுலகத்தில் இந்திரனை வென்றதையும், மண்ணுலகத்தில் அநுமானை வென்றதையும் உதாரணமாகக் கூறினனென்க. இனி அவை... தழும்பு. மறையுமோ - இந்திரனைத்தழும்புபடுத்திய இவனது அவ்வீரச்செயல்கள் உலகமுள்ள வளவும் அழியாது நிலைநிற்கு மென்றபடி. அனுமன் = ஹநுமாந்: இவன், பிறந்தவுடனே இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்றுகருதிப் பிடிக்கப்பாய்ந்தபொழுது, அதனையறிந்து கோபங்கொண்ட இந்திரனது வச்சிராயுதத்தினால் அடிக்கப்பட்டுச் சிதைந்த கன்னமுடையவனானதனால், இவனுக்கு இப்பெயர் வந்தது. இப்

பெயர் - கன்னத்தில் விசேஷமுடையவ னென்று பொருள் படும். இவனுக்கு இப்பெயர், இந்திரனால் இடப்பட்டது. பல்+தழும்பு=பஃறழும்பு. தநு மறை - தநுர்வேதம்: அதாவது - வில் முதலிய ஆயுதங்களிற் பயிலும் வகைகளையும், பகைவெல்லுதற்குஉரிய மந்திரம் முதலிய பிரயோகங்களையும் அறிவிக்கிற ஆயுதசாஸ்திரம். உபவேதம்நான்கனுள் ஒன்றாதலால் 'தனுமறை' எனப்பட்டது;மற்றவை-ஆயுர்வேதம், காந்தர்வவேதம்,தந்த்ரவேதம் என்பன. பி-ம்:—1இனியது. 2வரையின்னெடும்,வரைவன்னெடும், வரையன்னெடும். 3பாசத்தாலுறை, பாசத்தாலுற,பாசத்தார்த்தடல். 4முறை. 5தடுக்கற்பாலதோ.

கஉ.—இதுவும் அடுத்தகவியும் - அநுமான் அங்குவருதலைத் தெரிவிக்கும்.

என்றவ 1னிறைஞ்சலு மிளைய வள்ளலும்
2நன்றெனு மொழிதலு நணுகி னனரோ
வன்றிறன் மாருதி யிலங்கைக் 3கோமகன்
சென்றன னிளவன்மே லென்னுஞ் சிந்தையான்.

(இ - ள்.) என்றுகூறி, அவ்விபீஷணன் (இலக்குமணனை) வணங்கினவுடனே, இளையபெருமாளும் 'நல்லது' என்று சொல்லி உடன்பட்ட வளவிலே,—கொடிய வலிமையையுடைய வாயுகுமாரனான அநுமான்,—'இளைய பெருமாள்மீது இலங்கையரசனாகியஇராவணனது மகனான இந்திரசித்து (போர்செய்யச்) சென்றான்' என்னுங் கவலையுடையவனாய் (அவ்விடத்தில்) வந்துகிட்டினான்; (எ-று.)

இராமலட்சுமணர்க்கு யாதொருதீங்கும் நேரிடாதபடி குறிக்கொண்டு பாதுகாக்கும் இயல்புடைய இவ்வநுமான், இந்திரசித்தின் பலபராக்கிரமங்களை யநுபவித்தறிந்தவ னாதலால், அவன்வருகையை யறிந்தவளவிலே இலக்குமணனுக்கு உதவியாக அங்கு வந்து சேர்ந்தன னென்க. பி - ம்:—1இயம்பலும், இறைஞ்சினன். 2நன்றன. 3கோன். (சகூஅ)

கஎ. கூற்றமுங் கட்புலம் புதைப்பக் கோத்தெழு
1தோற்றமு மிராவணி துணிபு நோக்குறா
மேற்றிசை 2வாயிலை விட்டு வெங்கடுங்
காற்றெனு 3வணுகினன் 4கடிதின் வந்தரோ.

(இ - ள்.) யமனும் (அஞ்சிக்) கண்மூடிக்கொள்ளும்படி திரண்டெழுகின்ற (இராக்கதசேனையின்) தோற்றத்தையும் இராவணகுமாரனான இந்திரசித்தின் துணிச்சலையும் பார்த்து, (அநுமான்,—இலங்கையின் தான் இருந்த) மேற்குத்திக்கின் வாயிலினின்று, கொடிய பெருங்காற்றுப்போல விரைவாக வந்து (இலக்குமணனைச்) சேர்ந்தான்; (எ-று)

கீழ்க்கவியிற் கூறிய அநுமான்வந்தானென்ற செய்தியையே இக்கவியில் வேறுவகையாக விவரித்துக் கூறியதனால், கூறியதுகூறலென்னுங் குற்றத்துக்கு இடமின்மை யுணர்க. கண்புதைத்தல் - அச்சக்குறி. கட்புலம்-கண்ணாகியபுலமெனு இருபெயரொட்டு. புலமென்றது, இங்குப் பொறி யென்னும் பொருளில் வந்தது: ஒருவகை இலக்கணவழக்கு. இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. பி-ம்:—1தேற்றமும். 2கீட்டிசை. 3அணுகினர். 4கடிதிற்காக்கவே. ()

௯௫.—சுக்கிரீவன் முதலியோர் இலக்குமணனுக்குத் துணையாதல்.

அங்கதன் [1]முன்னரே யாண்டை யானயல்
துங்க[2]வன் றோளின ரெவருஞ் சுற்றினர்
செங்கதி ரோன்மகன் முன்பு சென்றனன்
சங்கநீர்க் கடலெனத் தழீஇய [3]தானையான்.

(இ-ள்.) அங்கதன் முன்னமே அவ்விடத்திலேயே[இலக்குமணனருகில் தானே] வந்துசேர்ந்திருந்தான்; உயர்ந்தவலிய தோள்களையுடைய (மற்றை) வானரவீரர்களெல்லாரும், (இலக்குமணனது) பக்கத்தில் வந்து (அவனுக்குத் துணையாகச்) சூழ்ந்துகொண்டார்கள்; சிவந்தகிரணங்களையுடையவனான சூரியனது மகனாகிய சுக்கிரீவன், சங்குகளையுடைய நீர்நிறைந்த கடல்போல(த் தன்னை)ச் சூழ்ந்துபரந்துள்ள சேனையையுடையவனாய், (இலக்குமணனுக்கு) முன்னே சென்றான்; (எ - று.)

இராமலட்சுமணர்க்கு அருகிலே சேனாமுகத்தில் நிற்றல், முன்பு சுக்கிரீவனுக்கு நியமிக்கப்பட்டிருத்தலை யுணர்க. பி - ம்:—[1]முன்னதாயாண்ட சேனையிற். [2]வெந்தொழிலினர். [3]தானையே. (௪௯௮௭)

௯௬.—இருதிறத்துச் சேனைகளின் தோற்றம்.

இருதிரைப் பெருங்கட லிரண்டு [1]திக்கினும்
பொருதொழில் [2]வேட்டுவந் தார்த்துப் [3]பொங்கின
வருவன [4]போன்றன மனத்தி னாற்சினந்
திருகின வெதிரெதிர் செல்லுஞ் சேனையே.

(இ-ள்.) கோபாவேசத்தினால் மனம் மாறுபட்டனவாய் எதிர்க்குஎதிராகச் செல்லுகின்ற (இராக்கதசேனை வானரசேனை என்ற இருதிறத்துச்) சேனைகளும்,—அலைகளையுடைய பெரிய இரண்டுகடல்கள் போர்செய்யுந்தொழிலை விரும்பி உற்சாகங்கொண்டு, இரண்டுதிக்கிலிருந்தும் ஆரவாரித்துப் பொங்கி வருவனவற்றைப் போன்றன; (எ - று.)

இல்பொருளுவமையணி; மனம் சினத்தினால் திருகின என உருபுபிரித்துக்கூட்டப்பட்டது; அன்றி, மனத்திற் கோபத்தால் மாறுபாடுகொண்டன வென்றுங் கொள்ளலாம்; இவ்வுரைக்கு, 'மனத்தினால்' என்பது-உருபுமயக்கம். பி-ம்:—[1]திக்கெனப். [2]வேட்டெழுந்து. [3]பொங்கியே. [4]போல்வன. ()

௯௭.—தேவர்கள் போர்காணுதற்கு வானத்தில்வந்து திரளுதல்.

கண்ணினான் மனத்தினாற் கருத்தி னாற்றெரிந்து
எண்ணினாற் [1]பெறுபய னெய்து மின்றென
நண்ணினா ரிமையவர் நங்கை மாரொடும்
விண்ணினா டுறைவிடம் வெறுமை கூரவே.

(இ ள்.) தேவர்கள்,—'கவனத்துடன் ஆலோசித்து அறியுமிடத்து, கண்களினாலும் மனத்தினாலும் பெறுவதற்கு உரிய பிரயோசனம் இன்றைக்குக் கைகூடும்' என்று எண்ணிக்கொண்டும் சொல்லிக்கொண்டும்,—சுவர்க்கலோகமாகிய (தங்கள்)வாழுமிடம் வெறுமை மேவிடும்படி(அதனை அனைவரும்

விட்டிட்டுத்) (தங்கள் தங்கள்) மனைவியர்களுடனே (யுத்தகளத்திற்கு நேரே ஆகாயத்தில்) வந்து நெருங்கினார்கள்; (எ - று.)

அளவிறந்தபெருஞ்சேனைத்திரள் பொருவதைக் காணுதலால் கண்கட்கும், வாயினால் இவ்வளவென்று கணக்கிட்டுச்சொல்லுதற்குஅரிய பெருந்தொகையை நினைத்தலால் மனத்துக்கும் மகிழ்ச்சி யுண்டாகு மென்க. மனம் ஓரிடத்தும் கண் ஓரிடத்துஞ் செல்லாது இரண்டும் ஒருசேர ஓரிடத்திலேயே செல்லவேண்டு மென்பார், 'கருத்தினாற் றெரிந்தெண்ணினால் கண்ணினால் மனத்தினால் பெறுபய னெய்தும்' என்றாரெனினுமாம். தெரிந்து எண்ணினால் - விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது. இனி, கண்ணினால் கருத்தினால் தெரிந்து - கண்களால்கருத்துடன் உற்றுப்பார்த்து, மனத்தினால் எண்ணினால் என்று நிரனிறைப்பொருள்கோளமையப் பொருள்கூறலுமாம். 'மனத்தினாற் கருத்தினால்...எண்ணினால்' என மேல்நோக்கில் ஒரேபொருளையுடைய சொற்கள் வந்தது போலத்தோன்றி ஆழ்ந்துநோக்கப் பொருள்வேறுபட்டிருப்பது, கூறியதுகூறல்விளைந்தழிவு என்னுஞ் சொல்லணியாம். வடநூலார் புநருக்தவதாபாஸாலங்கார மென்பர். நிலவுலகத்தில் விசேஷமானபோர் நடக்கும்போது தேவர்கள் அதனை மேலிருந்து கண்டு மகிழ்ந்து கொண்டாடுதல், இயல்பு. எல்லாத்தேவர்களும் தம்முலகத்தைவிட்டுப் போர்காண ஆகாயத்தில் வந்ததனால், தேவலோகம்முழுதும் வெற்றிடமாயிற் றென்க பி-ம்.— [1]பெறும். (கசுஅகூ)

கூஅ.—இதுவும் அடுத்த கவியும் - அச்சேனைகளின் ஆரவாரத்தைத் தெரிவிக்கும்.

ஒத்திரு தானையு மூடற்ற வுற்றுழி
அத்தனை வீரரு மார்த்த [1]வார்கலி
நத்தொலி முரசொலி நடுக்க லாற்[2]றலை
பொத்தினர் [3]செவிகளைப் [4]புரந்த ராதியர்.

(இ - ள்.) இருதிறத்துச் சேனைகளும் (தம்மில்) நெருங்கிப் போர்செய்யப் பொருந்தியபோது,—(அவ்விருசேனைகளிலுமுள்ள) எல்லாவீரர்களும் கர்ச்சித்தலினா லுண்டான பேராரவாரமும், சங்குகளின் ஓசையும், முரசவாத்தியங்களினோசையும் நடுங்கச் செய்தலினால் [செவிடுபடச்செய்வதனால்],—(ஆகாயத்திற் போர்காணவந்த) இந்திரன்முதலான தேவர்கள், (தங்கள்) காதுகளை(க்கைகளினால்) மூடிக்கொண்டார்கள்; (எ-று.)

தலைபொத்தினர், தலை - தமிழுபசர்க்கம். புரந்தராதியர் - தீர்க்கசந்தி பெற்ற வடமொழித்தொடர். புரந்தரன் - (பகைவர்களது) பட்டணங்களைப் பிளப்பவனென்று காரணப்பொருள்படும். நத்தொலி - மென்றொடர் வன்றொடராயிற்று. பி-ம்:—[1]அவ்வொலி. [2]செவி. [3]இமையவர், செவித்துளை. [4]புரந்தராதியர். (கசுகூ0)

கூகூ. எற்றுமின் பற்றுமி னெறிமி னெய்ம்மி னென்று
[1]உற்றன வுற்றன வுரைக்கு மோதையும்

முற்றுறு கடையுகத் திடியின் மும்மடி
பெற்றன பிறந்தன சிலையின் பேரொலி.

(இ - ள்.) 'அடியுங்கள், பிடியுங்கள், (ஆயுதங்களை) எறியுங்கள், (அம்புகளை) எய்யுங்கள்' என்று அவ்வச்சமயங்களுக்கு ஏற்றனவாக, (இருதிறத்து வீரர்களும்) சொல்லுதலினாற் பிறந்த ஓசைகளும், வில்லினின்று உண்டானவையான [வில்நாணியின்] மிக்க ஒலிகளும்,—(யாவும்) அழியுங் கல்பாந்த [பிரளய] காலத்தி லுண்டாகும் இடியோசையினும் மூன்று மடங்கு அதிகமாக எழுந்தன; (எ-று.)—யுகம் - வடசொல்; இங்கே, ஊழிக்காலத்தின் மேலது. பி-ம்:---1உற்றனருற்றனர். (௧௯௯௧)

௪௦. இனி ஒன்பதுகவிகள் இருசேனையுங்கலந்து பொருவதைத் தெரிக்கும்.

கற்[1]பட மரம்படக் கால வேல்பட
விற்படு கணைபட வீழும் வீரர்தம்
எற்[2]படு முடல்பட விரண்டு [3]சேனையும்
பிற்பட [4]நெடுநிலம் பிளந்து பேருமால்.

(இ - ள்.) இருதிறத்துச்சேனைகளும் பின்னிடும்படி (ஒருவர்மேல் ஒருவர் எறிகிற) கற்கள் படுதலினாலும், மரங்கள் தாக்குதலினாலும், யமன்போன்ற வேலாயுதங்கள் ஊடுருவிச்செல்லுதலினாலும், வில்லினின்று பிரயோகிக்கப்பட்ட அம்புகள் தைத்தலினாலும் இறந்துவிழுகிற (இருதிறத்திலுமுள்ள) வீரர்களுடைய ஒளி பொருந்திய உடம்புகள் (தன்மேற்) பொருந்துவதனால், பெரிய பூமியானது, (அச்சுமையையும் அதிர்ச்சியையுந் தாங்கமாட்டாது) தளர்ந்து நிலைகுலையும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

உயர்வு நவிற்சியணி. எல்படும் உடல் என்பதற்கு - இரட்டுறமொழிதலால், (கருநிறத்தால்) இரவையொத்த (இராக்கதவீரரது) உடம்பும், (மேனியின் விளக்கத்தாற்) பகலையொத்த (வானரவீரரது) உடம்பும் என்றும் பொருள் கூறலாம்; எல் - இரவு பகல் என்னும் இரண்டுக்கும் பொதுப்பெயர். கல்லும் மரமும், வானரருடையவை: வேலும் கணையும், இராக்கதருடையவை. பி-ம்:—1படை. 2படர். 3தானையும். 4இரு. (௧௯௯௨)

௪௧. எழுத்தொடர் மரங்களா லெற்ற முற்றிய
விழுத்தலை முழுவதுஞ் சிதறி வீழ்ந்தன
[1]அழுத்திய பெருஞ்சினத் தரக்க ராக்கைகள்
கழுத்துள தலையில களத்தி னாடுவ.

(இ - ள்.) வளைதடிகளாலும் இருப்புச்சங்கிலிகளாலும் மரங்களாலும் (வானரவீரர்கள்) தாக்கியதனால் உயிரொழிந்தனவும், சிறந்ததலைகளெல்லாம் அடியோடுஅற்று விழுந்தனவுமான (தம்மை) மேலிட்ட மிக்கசோபத்தையுடைய இராக்கதவீரரது உடல்கள், கழுத்துக்களுடன்கூடித் தலையில்லாதனவாய்[கபந்தங்களாய்]ப் போர்க்களத்திற் கூத்தாடுவன; (எ - று.)

இதனால், அரக்கரழிந்தமை கூறினார். எழு தொடர் மரங்களால் - இரும்புத்தூண்போன்ற [வலிய பெரிய] மரங்களினால் என்றலுமாம்: தொடர் -

உவமவுருபு. முற்றுதல்-முடிதல், உயிரொழிதல், கழுத்துள தலையில-தொடை முரண். பி-ம்:—[1]அழுத்தினர். (௧௬௬௫)

௫௨. வெட்டிய [1]தலையன நரம்பு வீசமேல்
முட்டிய [2]குருதிய குரங்கின் மொய்[3]யுடல்
சுட்டுயர் நெடுவனந் [4]தொலைந்த பின்னெடுங்
கட்டைக ளெரிவன போன்று காட்டுவ.

(இ - ள்.) (அரக்கர்களால்) வெட்டப்பட்ட தலைகளையுடையவையும் (அறுபட்ட) நரம்புகள் வீசுவதனால் மேல்நோக்கிப் பாய்கிற இரத்தத்தை யுடையவையுமான குரங்குகளின் வலியஉடம்புகள்,—ஓங்கிவளர்ந்த பெரிய காடு (நெருப்பினாற்) சுடப்பட்டு வெந்தொழிந்தபின்பு பெரிய (அடிக்) கட்டைகள் எரிவனவற்றைப் போன்று தோன்றுவன; (எ - று.)

இதனால், வானரங்களழிந்தமை கூறினர். குரங்குகள் தலையறுபட்ட பிறகு கழுத்துநரம்புகள் செந்நிறமான இரத்தத்தை வெளிப்படுத்திக்கொண்டு நின்ற தோற்றம், காட்டின் மேற்புறம்முழுதும் எரிந்தபிறகு அடிக்கட்டைகள்நின்று எரிந்துகொண்டிருப்பதை யொக்குமெனக் குறித்தார்; தன்மைநவிற்சிப்பேற்றவணி. சுட்டு - சுடப்பட்டு; செயப்பாட்டுவினைப்பொருளில்வந்த செய்வினை. பி-ம்:—[1]தலைகளினரம்பு, தலையினரம்பு. [2]குருதிகள். [3]உடற். [4]தொலைத்த. (௧௬௬௬)

௫௩. பிடித்தன நிருதரைப் பெரிய [1]தோள்பெயர்த்து
ஒடித்தன கால்விசைத் [2]துதைத்து வுந்தின
கடித்தன கழுத்தறக் கைக ளாலெடுத்து
அடித்தன வரைத்தன வார்த்த வானரம்.

(இ-ள்.) குரங்குகள்,—இராக்கதர்களை(க் கைகளால் இறுக)ப்பிடித்தும், (அவர்களது) பெரியதோள்களைப்பேர்த்து ஒடித்தும், கால்களினால் விசைகொண்டு உதைத்துத் தள்ளியும், கழுத்துஅறும்படி (பற்களாற்) கடித்தும், கைகளால்தூக்கியெடுத்து(நிலத்திலே)மோதியும்,(கீழே)தேய்த்தும் ஆரவாரஞ் செய்தன; (எ-று.)—இதனால், மீண்டும்,அரக்கரழிந்தமை கூறினர். இச்செய்யுளில்,'பிடித்தன'முதலியவை-முற்றெச்சம். பி-ம்:—[1]தோள்களைப். [2]உதைத்த.

௫௪. வாள்களிற் கவிக்குல வீரர் [1]வார்கழல்
தாள்களைத் துணித்தனர் தலையைத் தள்ளினர்
தோள்களைப் [2]பிரித்தன ருடலைத் [3]துண்டவன்
[4]போழ்களிற் புரட்டினர் [5]நிருதர் [6]பொங்கினர்.

(இ - ள்.) அரக்கர்கள்,—வாள்களால் வானரசாதிவீரர்களின் நீண்ட வீரக்கழலையணிந்த கால்களை வெட்டியும், தலையை (யறுத்து)த்தள்ளியும், தோள்களை (வெட்டி)வேறுக்கியும், உடம்புகளைத் துண்டுபட்ட வலியபிளவுகளாகப் புரட்டித்தள்ளியும் மகிழ்ச்சிபாராட்டினார்கள்; (எ - று.)

இதனால், மீண்டும், வானரங்களழிந்தமை கூறினர். உடலைத்துண்டவன் போழ்களிற் புரட்டினர்-வானரர்களின் உடம்பைத் துண்டுதுண்டாம்படி பிள

ந்துதள்ளின ரென்றபடி. போழ் - பிளக்கப்பட்டது. பி - ம்:—[1]வன்கழற், வால்களிற். [2]துணித்தனர், குறைத்தனர். [3]துண்டமிட்டு. [4]ஆழ்கடற். [5]அரக்கர். [6]ஆர்த்தனர். (கககூசு)

சுரு. [1]மரங்களி லரக்கரை மலைகள் போன்றுயர்
சிரங்களைச் [2]சிதறின வுயிரைச் சிந்தின
கரங்களைக் [3]கழல்களை [4]யொடியக் காதின
குரங்கெனப் பெயர்கொடு திரியுங் கூற்றமே.

(இ - ள்.) குரங்கென்றுபெயரிட்டுக்கொண்டு திரிகின்ற யமன்கள்,— மரங்களினால் இராக்கதவீரர்களது மலைகள்போலுயர்ந்த தலைகளைச் சிதறடித்தும், (அவர்களது) உயிரைப்போக்கியும், கைகளையும் கால்களையும் ஒடியும்படி மோதியடித்தும் பொருதன; (எ - று.)

இதனால், வாநரங்கள் அரக்கரையழித்தல்,மீண்டுங் கூறப்பட்டது. கழல்- ஆகுபெயரால், கால்களைக் குறிக்கும். ஈற்றடி-வஞ்சகவேழிப்பணி: இங்கு, கொல்லுதல்தொழிலில் யமனுக்கும் குரங்குக்கும் ஒப்புமைவெளியாம். பி-ம்:- [1]மரங்களால். [2]சிதறினருடலைச்சிந்தினர். [3]முறித்தன, முறித்தனர், குறைத்தனர். [4]கண்ணைச்சூன்றன, கண்ணைச்சூழ்ந்தனர், கண்ணைச்சூழ்ந்தன. (கககூஎ)

சுசு. சுடர்த்தலை நெடும்[1]பொறி சொரியுங் [2]கண்ணன
[3]அடர்த்தலை நெடுமர மற்ற கையன
[4]உடர்த்தலை வைவேவே [5]லுருவ [6]வுற்றவர்
மிடற்றினைக் [7]கடித்துடன் [8]விளிந்து போயின.

(இ - ள்.) ஒளியைத் தன்னிடத்தேகொண்ட பெரிய நெருப்புப்பொறிகளைக்(கோபத்தாற்)கக்குகின்ற கண்களை யுடையனவான சிலவாநரங்கள்,— (எதிரிகளை) நெருக்கிவருத்துகிற (தமதுகையிற்கொண்ட) பெரியமரங்களுடனே அறுபட்ட கைகளையுடையனவாய்,(தமது) உடம்பில் (எதிரிகள் பிரயோகித்த) உறுதியான வேலாயுதம் ஊடுருவிச்சென்றுகொண்டிருக்கவும், (தம்மேல் அவ்வேற்படையை) எறிந்தவர்களது கழுத்தைக் கடித்துவிட்டு அவருடன் (தாமும்) இறந்துபடுவனவாயின; (எ - று.)

அரக்கரும் வாநரங்களும் ஒருங்குஅழிந்தமை, இதிற் கூறப்பட்டது. சில குரங்குகள், கைகள்அறுபட்டு உடம்பில் வேல்தைத்துக்கொண்டிருக்கவும் சிறிதும் சலியாது தம்பகைவரைக் கடித்துக்கொன்றே தாமும் இறந்தொழிந்தன வென அவற்றின்வீரச்சிறப்புக் கூறியவாறு. உடர் = உடல்: போலி; குடர்என்பதுபோல. உற்றவர்-(எறிதல்தொழிலைப்)பொருந்தியவர். பி-ம்:— [1]கனல். [2]கண்ணின. [3]அடற்றல, அடற்றலை. [4]உடற்றலை. [5]உருவி. [6]அற்றவர். [7]தடிந்துடன். [8]விரிந்துபோயின,விளிந்தவானரம், விளிந்துபோவன. (கககூஅ)

சுஎ. அடர்ந்தன [1]கிரிகளை யசனி [2]யேறெனத்
[3]தொடர்ந்தன [4]மழைபொழி தும்பிக் [5]கும்பங்கள்
இடந்தன மூளைக ளினிதி னுண்டன
கடந்தன [6]பசிதழல் கராடி [7]காறுவ.

(இ - ள்.) போர்செய்வனவான கரடிகள்,—மலைகளைச்சார்ந்து அழிக்கின்றனவான பேரிடிகள்போலத் தொடர்ந்துசென்று(மத)மழையைச்சொரிகின்ற யானைகளின் மஸ்தகங்களைக் கீண்டனவாய் (அவற்றின்) மூளைகளை இனிமையாகத்தின்று பசியாகிய அக்கினியை ஒழிந்தன [பசியாறின]; (எ - று.)

ஜாம்பவானைச்சேர்ந்தவையான கரடிகள்பொருதல், இதிற் கூறப்பட்டது. இடிகளினால் மலைகள் அழிதல்போல, கரடிகளினால் அரக்கரின்பக்கத்து யானைகள் அழிந்தனவென்க; உவமையணி. 'தொடர்ந்தன' என்பதைத் தும்பிக்கு அடைமொழியாக்கினுமாம். தொடர்ந்தன மழை பொழி - தொடர்ச்சியாக [இடைவிடாது] மதநீர்ப்பெருக்கைச் சொரிகிற எனினுமாம். வயிற்றிற் காந்துதலையுண்டாக்குதலாலும், இடப்பட்டஉணவுகளைப் பஸ்மமாக்குதலாலும், பசி, தழலாக உருவகப்படுத்தப்பட்டது; அன்றியும், வயிற்றிலுள்ள ஜாடரமென்னும் அக்கினியே பசிக்குக் காரணமாதலையும் உணர்க. காதுவ - பெயர். பி-ம்:---[1]கரிகளை. [2]எறனற். [3]தொடர்ந்தது. [4]மழையெனத், மழைமதத். [5]கொம்புகள். [6]பசிகளைக், பரிகளைக், [7]காந்துவ, காதியே. (கககக)

சஎ. கொலை[1]மத கரியன குதிரை [2]மேலன
[3]வலமணித் [4]தேரன வாளின் மேலன
[5]சிலைகளின் குடுமிய [6]சிரத்தின் மேலன
மலைகளிற் பெரியன குரங்கு தாவுவ.

(இ - ள்.) (வடிவிலும் வலியிலும்) மலைகளினும் பெரியவையான வானரங்கள்,—தாவுவனவாய்,—கொல்லுதல்தொழிலுள்ள மதம்பிடித்த (அரக்கர்களுடைய) யானைகளின்மேற் பாய்பவையும், குதிரைகளின்மேற் பாய்பவையும், உறுதிபொருந்திய மணிகள்கட்டிய தேர்களின்மேற் பாய்பவையும், வாளாயுதங்களின்மேற் பாய்பவையும், விற்களின் நுனியின்மேற் பாய்பவையும், (அவர்களது) தலைகளின்மேற் பாய்பவையும்ஆயின; (எ - று)

ப்லவங்கமென்ற தம் பெயர் உண்மையாம்படி தாவிப்பாய்ந்துசெல்லும் இயல்பினவான வானரங்கள் அரக்கர்களுடைய யானைமுதலியவற்றின்மேல் ஒன்றிலிருந்துஒன்றாக விரைவிற்பாய்ந்து அவற்றையெல்லாம் அழிக்குந்தன்மையை இதிற் கூறினார்; தன்மைநவிற்சியணி. பி-ம்:—[1]மதக். [2]மேலென. [3]அலர்மணித், அலைமணித். [4]தோளனவாளி. [5]சிலைகளிற். [6]சித்திரத்தின்மேல்.

வேறு.

சஅ.—இரத்தவெள்ளம்.

தண்டுகொண் டரக்கர் தாக்கச் [1]சாய்ந்துகு நிலைய சந்தின்
துண்டங்க ளாக [2]வாளிற் [3]றுணிந்தபே [4]ருடலைத் தாவிக்
கொண்டெழு மலைக ளோடுங் குரக்கினப் பிணத்தின் குப்பை
மண்டுவெங் குருதி [5]யாறாய் மறிகடன் மடுத்த மாதோ.

(இ - ள்.) குரங்குக்கூட்டங்களின்பிணக்குவியல்களினின்று நெருங்கிப் பெருகுகின்ற வெவ்விய இரத்தங்கள்,-ஆறாகி,—இராக்கதர்கள் கதாயுதங்களைக் கொண்டு மோதியதனாற் சாய்ந்துவிழுந்தன்மையையுடையனவும் (அவர்க

ளது)வாளாயுதங்களினால் தறிபட்டவையுமாகிய பெரிய உடம்புகளைச் சந்தன மரத்தின் துண்டுகளாகச் சிந்திக்கொண்டு, கிளர்ந்தெழுகின்ற அலைகளோடும். (அலைகள்)மடங்கப்பெற்ற கடலையும் நிறைத்துவிட்டன; (எ - று.)

மலையிலிருந்து பெருகும் யாற்றின்வெள்ளம் (காட்டின்வழியாக வருத லால் அங்குள்ள) சந்தனமரங்கள் முறிந்து துண்டுகளாக அவற்றை வீசிக் கொண்டு பெரியஅலைகளை யுடையனவாய்ச்சென்று கடைசியிற் கடலிற்சேர் தல்போல, யுத்தத்தில் வீரர்களுடைய மலைபோன்ற உடம்புகளிலிருந்து பெருகுகிற இரத்தவெள்ளங்கள், துணிபட்ட உடல்துண்டங்களை வீசிக் கொண்டு அலைகளையுடையனவாய்க் கடலிற்சேர்ந்தன வென்று இரத்தவெள் ளத்தை வருணித்தவாறு; உருவகவணி. அரக்கர்சேனை உருத்தெரியாதபடி மிகவும் சின்னபின்னப்பட்டுக் குலைந்துபோனதனால், வானரங்களின் பிணங்க ளையும் உடல்துண்டுகளையுமே கூறினார். சந்தின்துண்டு - சந்தனமரத்தின் துண்டு. மாது ஓ-ஈற்றசை. பி-ம்:—[1]தகர்ந்துடற்றலைகடள்ளித். தகர்ந்துகு... டள்ளி, தகர்ந்துடைதலையொடள்ளித். [2]வாளாற். [3]துணித்த.[4]உடல்கடுங்கக். [5]ஆறம். (௨௦௦௯)

௫௦.—அநுமான் பகைவர்சேனையைக் கலக்குதல்.

பணிவென்ற பதாகை யென்றும் பல்லுளைப் பரிமா வென்றுந்
தனுவென்றும் வாளி யென்றுந் தண்டென்றுந் [1]தனிவே லென்றுஞ்
சினவென்றி மதமா வென்றுந் தேரென்றுந் தெரிந்த தில்லை
[2]அனுமன்கை வயிரக் [3]குன்று [4]லரைப்புண்ட வரக்கர் தானை.

(இ - ள்.) அநுமானுடைய கைகளாகிய உறுதியான மலைகளினால் (தரை யில்) தேய்க்கப்பட்ட இராக்கதசேனையில்,—அஞ்சுதலை வென்றுள்ள [பகை வர்களிடத்தில் அஞ்சாது வெற்றிபெற்றமையைத் தெரிவிக்கிற] கொடிக ளென்றும், பலவாகிய பிடரிமயிர்களையுடைய குதிரைகளென்றும், விற்க ளென்றும், அம்புகளென்றும், கதாயுதங்க ளென்றும், ஒப்பற்ற வேலாயுதங்க ளென்றும், கோபத்தையும் வெற்றியையுமுடைய மதம்பிடித்த யானைக ளென்றும், தேர்களென்றும் தெரியவில்லை; (எ - று.)

அநுமான் கையில் அகப்பட்டவற்றையெல்லாம் அழித்ததனால், அவை கள் ஒருசேர நொறுங்கி உருத்தெரியாது அழிந்தனவென்க. மிகவிரைவில் அழித்தலால், இப்பொழுது இதனையழிக்கின்றா னென்று தெரிந்துகொள்ள வும் முடியாதாயிற்று என்றுங் கொள்ளலாம். பதாகை-பெருங்கொடி. அநுமன் கைவயிரக்குன்றாலரைப்புண்ட-திரிபணி. வயிரக் குன்று-உறுதியான குழவி என்றவாறுமாம். இனி, அனுமன்கைவயிரக்குன்றால் என்பதற்கு - அனுமான் கையிற்கொண்டுள்ள வலியமலையினால் என்று உரைப்பினும் பொருந்தும். பணி வென்ற-(வெண்ணிறத்தாற்) பனியையொத்த என்றுமாம். சிலபிரதியில் இதுவும் அடுத்தசெய்யுளும் "எடுத்தது"(௫௩)என்ற பாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]விட்டேறென்றும். [2]அநுமன்றன். [3]தண்டால். [4]அரைப்புண்டது. (

௫௧.—அங்கதன் அரக்கர்சேனையைச் சிதைத்தமை.

பொங்குதேர் புரவி [1]யானை பொருகழ னிருத [2]ரென்னுஞ்
சங்கையு [3]மில்லா வண்ணந் [4]தன்னுளே தழுவிக் கூற்றம்
எங்குள வுயிரென் றெண்ணி [5]யிணைக்கையாற் கிளைத்த தென்ப
அங்கதன் மரங்கொண் டெற்ற [6]வளறுபட் [7]டழிந்த தானை.

(இ-ள்.) அங்கதனென்பவன் மரத்தினால் தாக்கச் சேறுகி அழிந்தனவான மிக்க தேர்களும் குதிரைகளும் யானைகளும் போர்செய்யும் வீரக்கழலையணிந்த இராக்கதர்களும் என்று சொல்லப்படுகிற [சதுரங்கத்தையுடைய] சேனைகளில்,—கூற்றம்,—தன்மனத்திற் சிறிதும் அச்சமில்லாமற் பொருந்தி, (தனக்குஇரையான) உயிர்கள் எங்கேனும் (தப்பி)உள்ளனவோ என்று நினைத்து(த் தனது) இரண்டுகைகளாலும் கிளறிப்பார்த்தது; (எ - று.)—என்ப - அசை.

சங்கையுமில்லாவண்ணம்-யமன் இதுவரையில் அரக்கரிடத்துக்கொண்டுள்ள அச்சத்தை இப்பொழுது சிறிதுங் கொள்ளாமல், உயிர் எங்கு உள என்று எண்ணி - உயிர்கள் எங்கு உள்ளன என்று நாடி யென்தலும் ஒன்று. பி-ம்:—[1]யானைப் பொருதொழில். [2]என்னச்,என்றுஞ். [3]இலாத. தன்னுள்ளே, [4]தன்னுள்ளந். [5]இணைக்கையாற்கிளைப்பதென்ன, இணைக்கையாற்றிளைத்ததென்ப,இணைக்கைகடிளைத்ததென்ப,இணைத்துடனெழுந்ததென்ன. [6]அழிவு, அழிந்து. [7]ஒழிந்த. (௨௦௦௫)

௫௨.—தேவருஷிகள் போர்த்திறத்தை வியத்தல்.

தாக்கிய திசைக டோறுந் தலைத்தலை மயங்கித் [1]தம்மில்
நூக்கிய களிறுந் தேரும் [2]புரவியு நூழில் செய்ய
ஆக்கிய செருவை நோக்கி யமரரோ டசுரர் போரைத்
[3]தூக்கினர் முனிவ [4]ரென்னை யிதற்கது [5]தோற்கு மென்றார்.

(இ-ள்.) எதிர்த்துப்போர்செய்கின்ற(எல்லாத்)திக்குக்களிலும் தமக்குள்ளே அவ்வவ்விடங்களிற் கலந்து எதிர்த்த யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் (வாநரங்கள்) அழித்துக் குவிக்க, (இவ்வாறு) செய்த (இந்த)யுத்தத்தைப் பார்த்து,—தேவர்களோடு அசுரர்கள் செய்த யுத்தத்தை(இதனோடு) ஒப்பிட்டுப்பார்த்த தேவவிருடிகள், 'இந்தயுத்தத்தின் முன்னே அந்தத்தேவாசுரயுத்தம் எவ்வளவு? (அது, இப்போர்க்கு ஈடாகாது) தோற்றுவிடும்' என்று சொன்னார்கள்; (எ - று.)

இந்தயுத்தத்துக்குத் தேவாசுரயுத்தம் சிறிதும் ஈடாகாதெனத் தேவருஷிகள் வியந்தன ரென்க. போர்நிகழ்கையில், தேவர்களோடு தேவருஷிகளும் ஆகாயத்தில் நின்று காணுதல், இயல்பு. பி - ம்:- - [1]பின்னும். [2]பரிகளும். [3]தூக்கிய. [4]என்னே. [5]தோற்றம். (௨௦௦௬)

௫௩.—அரக்கர்சேனையால் நிலைகலங்கிய வாநரசேனையை வாநரவீரர் காத்தல்.

எடுத்தது நிருதர் தானை யிரிந்தது குரங்கி னீட்டந்
தடுத்தனர் [1]முகங்க டாங்கித் தனித்தனித் தலைவர் தள்ளிப்

படுத்தன ரரக்கர் வேலை 2பட்டதும் படவும் 3பாரார்
கடுத்தனர் 4கடுத்த பின்னுங் 5காத்தனர் கவியின் வீரர்.

(இ - ள்.) இராக்கதசேனை,(முதலில்)தலையெடுத்தது:(அதனால்);குரங்குகளின் கூட்டம்,(முன்நிற்கமாட்டாமற்)புறங்கொடுத்தோடிற்று;(அப்பொழுது) (வாநரசேனைத்)தலைவர்கள், (அரக்கருக்குப் புறங்கொடாமல் அவர்க்கு) முன் நின்று [எதிர்க்கும் முகங்களையுடையவர்களாய்], ஒவ்வொருவரும்(ஓடிப்போக வொட்டாது வாநரங்களைத்) தடுத்து(அரக்கர்களை)எதிர்த்தார்கள்; இராக்கதர்கள்,கடல்போலப்பரந்த (வாநர)சேனையை(மீண்டும்) வீழ்த்திக்கொன்றார்கள்; (அவ்வாறு பல வாநரர்கள்) அழிந்தவுடனே, (எஞ்சிநின்ற வாநரர்கள்) ஓட்டமெடுத்தார்கள்; வாநரசேனைத்தலைவர்கள், (தம்பக்கத்துச்சேனைகள்) அழிந்திறக்கவும் (அதனைச்)சிறிதும் பொருள் செய்யாதவராய்,ஓடின வாநரங்களைப் பின்னும் தடுத்துநிறுத்தினார்கள்; (எ - று.)

தள்ளிப்படுத்தல் - வீழ்த்திக்கொல்லுதல்.(வேலை)பட்டதும் கடுத்தனர்; கவியின்வீரர் படவும் பாரார் கடுத்த(வற்றைப்) பின்னும் காத்தனரென்க. இனி, தலைவர் தடுத்தனராய்(ப் பகைவர்களை)ப் படுத்தனர்; அரக்கர்,வேலை - (தமது) சேனாசமுத்திரம், பட்டதும்-இறந்ததையும், படவும்-இறந்துகொண்டிருப்பதையும், பாரார்-லக்ஷ்யம்பண்ணாதவர்களாய், கடுத்தனர்-(வாநரசேனைகளின்மீது)கோபித்தார்கள்:கடுத்த பின்னும்-கோபித்தபின்பும்,(சிறிதும் அஞ்சாது), கவியின்வீரர் காத்தனர் என்றலும் ஒன்று. பி-ம்:—1முகங்கடோறும். 2பட்டது. 3பாராக். 4அரக்கர். 5காய்ந்தனர், கரந்தனர். (௨௦௫)

ருச.—நீலனென்னும் வாநரனது போர்த்திறம்.

சூலமும் மழுவுந் தாங்கித் தோளிரு நான்குந் தோன்ற
மூலம்வந் தலைமை யுண்ணு 1முருத்திர மூர்த்தி 2யென்ன
நீலனின் றுழியே நின்று 3னிரந்தரங் கணங்க ளோடுங்
காலனென் றொருவ னியாண்டும் பிரிந்திலன் பாசக் கையான்.

(இ - ள்.) சூலாயுதத்தையும் மழுவையும் (கைகளில்)ஏந்திக்கொண்டு எட்டுத்தோள்களும் விளங்க முதற்கடவுளரான திரிமூர்த்திகளில் (ஒருவனாகப்) பொருந்தி உலகத்துயிர்களை யழித்தொழிக்கிற பயங்கரசொரூபமுள்ள (அழித்தற்கடவுளான) சிவபிரான்போல, நீலன் (தான்போர்செய்து அழித்து) நின்றவிடத்திலேயே யமனென்றுசொல்லப்படுகிற ஒருதேவன் (தனது) பரிவாரங்களுடனே பாசமென்னும் ஆயுதத்தைக் கைக்கொண்டவனாய் எவ்விடத்துக்கும் பிரிந்து செல்ல இயலாதவனாய் எப்பொழுதும் நின்றான்; (எ - று.)

சர்வசங்காரகாலத்தில் சிவபிரான் எண்டோளுடையனாய் உலகங்களையெல்லாம் அழிப்பனென்பது, நூல்துணிபு. மிக்கசினங்கொண்டு பலவுயிர்களை ஒருசேரக்கொல்லுதலால், நீலனுக்கு உருத்திரமூர்த்தியை உவமைகூறினார். உயிர்கொள்ளுங் கடவுளான யமன் நீலன்நின்றவிடத்திலேயே நின்றானென்றதனால், அவ்வீரன் அளவின்றிப் பகைவரை அழித்தமை விளங்கும். பி-ம்:—1ருத்திரர். 2என்பான், என்னும். 3நிரந்தரக், நிரந்தரங். (௨௦௬)

௫௫.—குமுதனது போர்த்திறம்.

காற்[1]றல்லன் [2]புனலோ [1]வல்லன் கனலல்ல னிரண்டு கையால்
ஆற்றல னாற்று கின்ற [3]வருஞ்சம மிதுவே யாகில்
ஏற்றமென் பலவுஞ் சொல்லி யென்பத [4]மிழந்தே னென்னக்
கூற்றமுங் [5]குலுங்கியஞ்ச [6]வெங்கதக் குமுதன் [7]கொன்றான்.

(இ - ள்.) (கொலைத்தொழிலுக்கென்றே ஏற்பட்ட) யமனும், 'எனது அதிகாரத்தொழிலை யிழந்தேன்' என்றுசொல்லி (உடல்) நடுங்கிப் பயப்படும்படி, கடுங்கோபத்தையுடைய குமுதனென்னும்வாநரவீரன்,—(பகைவர்சேனையைத் தானே ஒருசேர) அழித்திட்டான்; (அவ்வீரன்),—(வீசியடித்து ஒருசேரஅழிக்குந் தன்மையுடைமையாற் காற்றாயிருக்கலாமோவெனின் அக்) காற்றல்லன்; (வீழ்த்திக்கொல்லுந் திறமுடைமையால் நீராயிருக்கலாமோவெனின் அந்) நீருமல்லன்; (மிக்கஉக்கிரங்கொண்டு எதிர்த்தழித்தலால் அக்கினியாயிருக்கலாமோவெனின் அந்த) அக்கினியு மல்லன்; மனம்பொருந்தவனாய் (ஆயுதமுமின்றித் தனது) இரண்டுகைகளாலேயே செய்கின்ற (பிறர்க்குச் செய்தற்கு) அரிய போர் இத்தன்மைத்தே: என்றால், (அவ்வீரனது போர்த்திறமையைப்பற்றி மற்றும்) பலவாறுசொல்லுதலாற் சிறப்பு யாது?

மகாவீரனாகியகுமுதனதுபோர்த்திறம் எவ்வகையிலும் சொல்லிமுடியாதென்பது கருத்து. தனதுகொலைத்தொழிலை இக்குமுதன் மேற்கொள்ளுதலால், தனதுஅதிகாரம் ஒருவேளை போய்விடுமோ என யமன் அஞ்சிநடுங்குவானாயின னென்க. 'காற்றல்லன்' முதலிய மூன்றும், மெய்தெரிபொருளின்மேல் அன்மையைவைத்துக்கூறித் திணைவழுவாமற் காத்தனவாம். காற்றல்லன் புனலோவல்லன் கனலல்லன் - விலக்கணி; குமுதன்போர்செய்து அழிக்குந்திறம் காற்றுமுதலியவற்றின்செய்கையை ஒத்துள்ளது என்க.

பி-ம்:—[1]அலன். [2]புனலும். [3]வஞ்சகம். [4]இழப்பனென்று. [5]வெருவியஞ்சக். [6]வெஞ்சினக். [7]சொன்னான். (௨௦௦௭)

௫௬.—இடபனது வீரத்தொழில்.

மறிகடல் புடைசூழ் வைப்பின் மானவன் வாளி போன
செறிபணை மரமே நின்ற மரங்களிற் றெரியச் செப்புங்
குறியுடை மலைக ளும்பிற் குலவரைக் குலமே [1]கொள்ளா
எறிதலோ டுறைதல் [2]வேட்ட [3]விடவனன் றெடுத்தி லாத.

(இ - ள்.) (கையிற்) கொண்டு வீசியெறிதலையும் மோதுதலையும் விரும்பிய ருஷபனென்னும் வாநரவீரன் அன்று (வேரோடுபிடுங்கி) எடாமல் விட்டவை,—(அலை)மடங்குகிற கடலாற் பக்கங்களிற் சூழப்பட்ட நிலவுலகத்தில் உள்ளனவான மரங்களுக்குள்ளே இராமபிரானது அம்பு ஊடுருவிச்சென்று துளைக்கப்பெற்றவையும் நெருங்கினகிளைகளையுடையவையுமான (ஏழு) மராமரங்களே; (பலரும்) அறியும்படி சிறப்பித்துச்சொல்லப்படுகிற பெயர்களையுடைய மலைகட்குள்ளே குலபருவதங்களின் வருக்கமே; (எ - று.)

ருஷபனென்னும் வானரவீரன் ஏழுமராமரங்களன்றி மற்றெல்லாமரங்களையும், குலபர்வதங்களன்றி மற்றெல்லாமலைகளையும் பிடுங்கிவீசியெறிந்து

அடித்துப் போர்செய்தன னென்றவாறு; தொடர்புயர்வுநவிழ்ச்சியணி. வைப்பு - பூமிக்குத்தொழிலாகுபெயர். மாநவன் - மநுகுலத்திற் பிறந்தவன்; வடமொழித் தத்திதாந்தநாமம். விவஸ்வானென்னும் ஒருபெயருள்ள சூரிய னதுகுமாரனாகிய மநுவென்பவன், அக்காரணத்தால், வைவஸ்வதமநுவென்று கூறப்படுவன்; இவன்தான் இராமபிரானதுவமிசத்துக்கு ஆதிபுருஷன்; தங்கள்தலைவனான இராமபிரானது ஆற்றலுக்கு அறிகுறியாதலால் ஏழுமரா மரங்களையும், தங்கட்கு வாஸஸ்தாநமான பூமிக்கு ஆதாரமாதலாற் குலபரு வதங்களையும் குமுதன் களைந்திடாது விட்டனன்போலும். பி-ம்:-[1]கொள்க, கொள்ள. [2]வேண்டி. [3]இடபனேனெடுத்திலாத, இடவவன்றெடுத்திலாத, இடவவன்றெடுத்திலாதான். (௨௦௦அ)

ருஎ.—ஜாம்பவானது வீரம்.

வாம்பரி மதமா மான்றேர் வாளெயிற் றரக்கர் [1]மானப்
பாம்பினும் வெய்யோர் சாலப் [2]படுகுவர் [3]பயமின் [4]றின்றே
[5]தூம்புறழ் குருதி மண்டத் [6]தொடர்நெடு மரங்கள் சுற்றிச்
சாம்பவன் கொல்லச் சாம்பு [7]மென்றுரை யமரர் தந்தார்.

(இ - ள்.) 'தாவிச்செல்கின்ற குதிரைகளையும் மதம்பிடித்த யானைகளை யும் குதிரைபூட்டிய தேர்களையுமுடையவர்களும், சினமுள்ள பாம்பைக்காட் டிலும் கொடியவர்களும் மாயச்செய்கையுள்ளவர்களுமான வாள்போன்ற பற் களையுடைய இராக்கதர்கள், மிகுதியாக இறந்தொழிவார்கள்; (இனி நமக்கு அரக்கரால் உண்டாகும்) பயம் இல்லையாம்; மதகுகளினின்று வெளிவருவது போன்ற[மிகஅதிகமான] இரத்தம் மிகும்படி(கிளைகள்)நெருங்கியுள்ள பெரிய மரங்களைச் சுழற்றி ஜாம்பவானென்னும்வீரன் கொல்வதனால் இன்றை யொருநாளிலேயே (அரக்கர்கூட்டம் யாவும்) இறந்தொழியும்' என்று (ஆகா யத்திற் போர்காணுந்) தேவர்கள், சொன்னார்கள்; (எ - று.)

தேவர்கள், முதலில் ராக்ஷசநாசத்தால் தமக்குநேரும் இலாபத்தைக் கூறி, பின்னர் அவ்வரக்கர்கள்அழிதலின் காரணத்தை 'சாம்பவன்கொல்லச் சாம்பும்'என்றதனால் தெரிவித்தார்.பி-ம்:—[1]மாளப்,மாயப்.[2]பல்குதல்.[3]பயன். [4]எய்த்த, எய்த, என்னத். [5]தூம்புள.[6]சுடர்.[7]என்றுகொண்டமரரார்த்தார்,என் றனரமரர்சாய்ந்தார். (௨௦௦௯)

ருஅ.—பனசனது போர்த்திறம்.

பொருங்குலப் புரவி [1]யான திரைகளும் [2]கலம்பொற் றேரும்
இருங்[3]களி யானை யான [4]மகரமு மிரியல் போக
நெருங்கிய படைக ளான மீன்குல [5]மிரிந்து சிந்தக்
கருங்கடல் கலக்கு மத்திற் பனசனுங் கலக்கிப் புக்கான்.

(இ - ள்.) மோதுகின்ற குதிரைகளின்கூட்டமாகிய அலைகளும் அழகிய தேர்களாகிய மரக்கலங்களும் பெரிய மதக்களிப்பையுடைய யானைகளாகிய சுறுமீன்களும் (கலக்கத்தாற்) பின்னிடவும், கூட்டமான (பலவகை) ஆயு தங்களாகிய (பலவகை) மீன்களின் கூட்டங்கள் கலங்கிச் சிதறவும், பெரிய

(திருப்பாற்) கடலைக்கலக்கின (மந்தரமென்னும்) மத்துப்போல, பனசனென்னும்வாநரவீரனும்,(அரக்கரது சேனைக்கடலைக்)கலக்கிக்கொண்டே புகுந்தான்.

ஈற்றடி - உவமையணியும், மற்றைமூன்றடிகளும்-உருவகவணியுமாம். இங்கு உவமையணி உருவகவணியை அங்கமாகக்கொண்டு வந்ததனால், கலவையணி. கருங்கடல் என்பதற்கு - தன்னிடத்திற் பள்ளிகொண்டுள்ள திருமாலின் திருமேனியின் நிழலீட்டினாற் கருநிறமாய்த்தோன்றுகிற பாற்கடலெனினுமாம்;"நீலக்கடல்கடைந்தாய்" என்ற பெரியாரருளிச்செயல் இங்குக் காணத்தக்கது. இனி, இராக்கதசேனை கருநிறமானதோற்றமுடையதாதல் பற்றி, இல்பொருளுவமையாக 'கருங்கடல்கலக்கும் மத்து'என்றுராகவுமாம். மகரம்-முதலையுமாம். பி-ம்:—1பொற்றூர்த்திரள்களும். 2பொலம்.3கலயானை. 4மலைகளும். 5நெரிந்து. (உ௦௪௦)

௫௯.—மயிந்தன்முதலியோரது வீரச்செயல்.

மயிந்தனு [1]மிளவ றுனு மழைக்குலங் [2]கிழித்து வானத்து
உயர்ந்தெழு மெருவை வேந்த ருடன்பிறந் தவரை யொத்தார்
கயங்குடைந் தாடும் வீரக் களிறொத்தான் கவயன் காலிற்
பெயர்ந்தில னுற்ற தல்லாற் கேசரி [3]பெரும்போர் பெற்றான்.

(இ - ள்.) மயிந்தனென்னும் வாநரனும் (அவனது)தம்பியான த்விவிதனென்பவனும்,—மேகங்களின்கூட்டங்களைக் கிழித்துக்கொண்டு மேலுலகத்தைநோக்கி உயரமாகப் பறந்துசென்ற சகோதரராகிய (சம்பாதி சடாயு என்னும்)கழுகரசர்களை யொத்தார்; கவயனென்னும்வாநரன், நீர்நிலையில்மூழ்இக்கலக்கிவிளையாடுகிற வீரத்தன்மையுள்ள ஆண்யானையையொத்தான்;கேசரியென்னும் வாநரன், நிலத்திருத்த லன்றி அடியெடுத்துவைத்து அப்பாற் செல்லாமல்[ஓரிடத்திலேயே உறுதியாய்நின்று] பெரியபோரைச் செய்தான்.

வானத்தில் எழுந்து போர்செய்தலால் மைந்தத்விவிதர்க்கு வானத்திற் பறந்துசென்ற சம்பாதிசடாயுக்களையும், அரக்கர்கூட்டத்தினிடையே புக்கு மிக்கவீரத்துடன் அவர்களைக் கலக்கி யழித்தலால் கவயனுக்குக் கயங்குடைந்தாடுங் களிற்றையும் உவமைகூறினர். முன் ஒருகாலத்தில் அருணனது புத்திரராய் ரம்பையென்னுந் தேவமாதினிடந் தோன்றியவரான சம்பாதி சடாயு என்னும் கழுகரசரிருவரும் தேவலோகத்தைக்காணுங்கருத்துக்கொண்டு மேல்நோக்கிப் பறந்துசென்றன ரென்பது,வரலாறு.கேசரி-சூரியன்கொடுத்தவரத்தினால் சுவர்ணரூபமான சுமேருவென்று பிரசித்திபெற்ற ஒருபர்வதத்தில் அரசாண்டுகொண்டிருந்த வாநரவீரன்; அநுமானின்தாயான அஞ்சநாதேவியின் கணவன். பி-ம்:—1 துமிந்தன்றானும். 2கிழிய. 3பெரும்பொற்றோளான்.

௬௰.—அரக்கர்சேனை தூக்குச்சேனையால் தளர்தல்கண்டு இந்திரசித்து தான் தனியேநின்று பொருதல்.

பெருப்படைத் தலைவ ரியாரும்பெயர்ந்திலர் பிணத்தின் குப்பை
வரம்பில [1]பரம்பி யார்த்து மலைகின்ற பொழுதின் வந்துற்று
இரிந்தன கவியுங் [2]கூடி யெடுத்தன வெடுத்த லோடுஞ்
[3]சரிந்தது நிருதர் தானை [4]தாக்கின னரக்கன் றானே.

(இ - ள்.) பெரிய(வாநர)சேனுதிபதிக ளெல்லாரும் சலியாதவர்களாய் (அரக்கரது) பிணக்குவியல்கள் எல்லையில்லாதனவாய் மிகும்படி ஆரவாரித்துப் போர்செய்கின்ற சமயத்தில்,—(முன்பு) தோற்றேடின வாநரங்களும், மீண்டுவந்து உடன்சேர்ந்து போர்செய்யத்தொடங்கின; (அவைகள் அவ்வாறு) போர்தொடங்கினவுடனே, அரக்கர்சேனை நிலைதளர்ந்தது; (அப்பொழுது), இராக்கதவீரனான இந்திரசித்து, (தான்) தனியாகவே (நின்று) போர்புரிபவனானன்; (எ - று.)—இச்செய்யுள் ஒருபிரதியி லில்லை. பி-ம்:—[1]பரப்பி. [2]ஈண்டி. [3]சரிந்தன. [4]தாங்கினன், தாக்கினன். (உ0சஉ)

வேறு.

சாக.—எட்டுக்கவிகள் இந்திரசித்தின் யுத்தங் கூறும்.

பூணெ றிந்தகுவ டனைய தோள்களிரு புடை[1]ப ரந்துயர [2]வடல் வலித்,தூணெ றிந்தனைய விரல்கள் கோதையொடு [3]சுவடெ றிந்ததொரு தொழில்படச், சேணெ றிந்துநிமிர் திசைக ளோடுமலை செவிடெ றிந்துடைய [4]மிடல்வலோன், நாணெ றிந்துமுறை முறைதொ டர்ந்து கட லுலகை யியாவையு நடுக்கினன்.

(இ - ள்.) வலிமைமிக்கவனான இந்திரசித்து,—ஆபரணங்கள் ஒளிவீசப்பெற்ற மலைச்சிகரங்களை யொத்த (தனது) தோள்கள் (கோபாவேசத்தாற் பூரித்துப் பருத்து) இருபக்கத்திலும் பரவி யுயரவும்,—மிக்கவலிமையுடைய தூண்கள் பொருந்தினாற்போன்ற கைவிரல்கள் வரிசையாகத் தழும்புபடுதலாகிய ஒருதொழிலைப் பொருந்தவும்,—நெடுந்தூரம் வியாபித்துப் பரந்த திக்குக்களும் மலைகளும் செவிடுபட்டு அழியவும்,வரிசையாகத் தொடரும்படி வில்நாணியை(க் கைவிரலால்) தெறித்து (ஒலிசெய்து), கடல்சூழ்ந்த உலகம் முழுவதையும் (அப்பேரொலியால்) நடுங்கச்செய்தான்; (எ - று.)

பூணெறிந்த குவடனைய தோள்கள்-இல்பொருளுவமை. போரென்றால் தோள்கள் பூரித்தல், வீரர்களின் இயற்கை. 'கோதையொடு சுவடெறிந்த தொரு தொழில் பட' என்பதற்கு-விரற்சட்டையால் தழும்பைநீக்குதலாகிய ஒருதொழிலைப் பொருந்தவும் என்றும் பொருள்கொள்ளலாம்;இப்பொருளில் கோதை-கோதா என்னும் வடசொல்லின்திரிபு: (கோதா-உடும்பு; அதன்தோலினலாகிய விரற்சட்டைக்கு, ஆகுபெயர்.) முன்னையபொருளில், கோதை - வரிசை. முறைமுறை தொடர்ந்து - தானொருவனே எல்லா வாநர வீரர்களையும் ஒருவரொருவராகப் போர்தொடர்ந்து என்றலும் ஒன்று. இவ்விருத்தம் முடியுமளவும் பெரும்பாலும் ஒவ்வொருபாடலிலும் பிராசம் என்னுஞ் சொல்லணி யிருத்தல் காண்க. பி-ம்:—[1]பெயர்ந்துயர. [2]மிடைவலத் ,மிடல்வலித். [3]சுவடெறிந்தது, சிலையெறிந்தது, செவிடெறிந்தது, தொடர்வதிந்தது. [4]விறல்வலோன், விறல்விலோன். (உ0சங)

சாஉ. சிங்க வேறுகடல் போன்[1]மு ழங்கிநிமிர் தேர்க டாய்நெடிது செல்கெனு, [2]அங்க தாதிய ரனுங்க வானவர்க ளஞ்ச வெஞ்[3]சினமனந்தமாச், சங்க பாலகுளி காதி [4]யாலெயிறு தந்த [5]தீவிட முமிழ்ந்து[6]சார், [7]வெங்க ணாகமென வேக மா[8]யுருமு வெள்க வெங்கணைகள் சிந்தினன்.

(இ - ள்.) ஆண்சிங்கம்போன்றவனான இந்திரசித்து,—கடல்போலப் பேராரவாரஞ்செய்து, 'உயர்ந்ததேரைச் செலுத்திக்கொண்டு(பகைவர்சேனையின்நடுவே) நெடுந்தூரம் விரைந்து செல்வாயாக' என்று (தனதுசாரதியை நோக்கிக்)கட்டளையிட்டு,—அங்கதன்முதலியவாநரர் மனமழுங்கவும், தேவர்கள் அச்சமடையவும், இடியும்(இவ்வம்புகளின் கொடுமைக்குத் தான் ஈடாக மாட்டாமல்) வெட்கமடையவும்,வெள்ளிய பற்களினின்று வெளிப்படுகிற கொடியவிஷத்தைக் கக்கிக்கொண்டுவருகின்ற சங்கபாலன் குளிகன் முதலிய கொடுந்தன்மையுடைய நாகங்களென்று சொல்லும்படியாகவும், கொடிய அம்புகளை உக்கிரமான கோபத்துடனே, மிகப்பலவாக, விரைவாகப்பொழிந்தான்.

'இந்திரசித்து' என்று தோன்றாஎழுவாய் வருவித்துக்கொண்டு,ஆண்சிங்கமும் கடலும் போலச் சிங்கநாதஞ்செய்து[கர்ச்சித்து]எனினுமாம். இந்திரசித்தின்கொடுமையை நோக்கி, இவனால் இராமபிரான்பக்கத்தில் என்ன தீங்கு விளையுமோ என்று தேவர்கள் அஞ்சுபவராயினரென்க. அஷ்டமகாநாகங்கள்-வாசுகி, அநந்தன், தக்ஷகன்,சங்கபாலன்,குளிகன், பதுமன்,மகாபதுமன், கார்க்கோடகன்என்பன. பி-ம்:—[1]முழக்கி. [2]அங்கதாதிபன். [3]சினவனந்தன்மாச். [4]வாளெயிறுகைத்து, வாளெயிறதுக்கி. [5]வெவ்விடம். [6]சால், சேர். [7]செங். [8]உருமுசிந்து, உருமுமஞ்ச. (உ௦கச)

௬௩. சுற்றும் வந்துகவி வீரர் வீசிய சுடர்த்[1]த டங்கல்வரை [2]தோய் மரம், இற்[3]றெ ரிந்துபொடி யா[4]யு திர்ந்தன [5]வெழுந்து சேணிடை யிழிந்த[6]போல், வெற்றி வெங்கணை படப்ப டத்தலைகள் விண்ணினூடுதிசை மீதுபோய், அற்றெ ழுந்தன விழுந்து மண்ணிடை யழுந்து கின்றன வனந்தமால்.

(இ - ள்.) (இந்திரசித்தினது) வெற்றிபொருந்திய கொடிய அம்புகள் மிகுதியாக மேன்மேற்படுதலினால்,—வாநரவீரர்கள் (இந்திரசித்தை) நான்கு பக்கங்களிலுஞ்சூழ்ந்துகொண்டு (அவன்மேல்) எறிந்த காந்தியையுடைய பெரிய கல்மயமான மலைகளும் (வானத்தை)அளாவிய மரங்களும், முறிந்துபோய் எரிபட்டுப் பொடியாகிச் சிதறிவிழுந்தன; அறுபட்டுஎழுந்தனவான (வாநரவீரர்களது) மிகப்பலதலைகள், (பறவைகள்) ஆகாயத்திற்கிளம்பிக் கீழிறங்குவனபோல ஆகாயத்திற் பலதிக்குக்களிலுஞ்சென்று (பூமியில்) விழுந்து [விழுகிறவிசையினால்] மண்ணில்அழுந்துகின்றனவாயின; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

இந்திரசித்தின் கைப்பழக்கத்தினால் படுவதுந்தெரியாமல் தலைகளை அம்புகள்அறுத்துத்தள்ளுவன வென்பார், 'சேணிடையெழுந்து இழிந்தபோல்' என்றார். பறவைகள் இயல்பாக வானத்திலெழுந்து நெடுந்தூரஞ்சென்று மீண்டும்இழிதல், உவமை. பி-ம்:—[1]தடங்கண். [2]மாமரம், தோமரம், தொன்மரம். [3]ஒடிந்து.[4]ஒடிந்தன, உடைந்தன. [5]எரிந்துமண்ணிடை. [6]போய்,போர். (உ௦கரு)

௬௪. சிலைத்த டம்பொழி வயக்க டும்[1]பகழி செல்ல வொல்கினர் சினத்தினால், உலைத்தெ றிந்திட வெடுத்த [2]குன்றுதொ றுடற்ப ரங்கள்கொ டோதுங்கினார், [3]நிலைத்து [4]நின்றுசின முந்து செல்லவெதிர்

சென்று [5]சென்றுற [6]நெருக்கலான், மலைத்[7]தலங்களொ டுரத்தலங்
[8]கழல வூடு [9]சென்றபல வாளியே.

(இ - ள்.) (சில வாநரவீரர்கள்),—(இந்திரசித்தின்) வில்லிடத்தினின்று மிகுதியாகவெளிப்படுகிற வலிமையையும் வேகத்தையுமுடைய அம்புகள் (தம்உடம்பின்மேற்)பாய்தலால் தளர்ந்தவர்களாய் (இந்திரசித்தின்மீதுஉண்டான) கோபத்தினுற் பீடிக்கப்பட்டு (அவன்மேல்) எறிதற்காக(த் தாம்) கையிற் கொண்டுள்ள மலைகள்தோறும் பெரிய (தங்கள்) உடம்பை (ச் சுருக்கி)க்கொண்டு பதுங்கிமறைந்து (தளர்ச்சியொழிந்து) நிலைபெற்றுநின்று (அவன்மீது தாம்கொண்டுள்ள) கோபம் (தம்மை யிழுத்துக்கொண்டு) முன்னே செல்ல (மீண்டும் மேன்மேல் அவனது)எதிரிற் போய்ப்போய், (அவனை) மிகவும் சமீபிக்கவே, (மீண்டும் அவனது வில்லினின்று புறப்பட்ட வேறு) பல அம்புகள்,—(அவர்கள் கையிலேந்தியுள்ள) மலைகளும் (அவற்றில்மறைந்துநிற்கிற அவர்களுடைய) மார்புகளும் முழுதும்துளைபடும்படி (அவற்றில்) ஊடுருவிச்சென்றன; (எ - று.)

இந்திரசித்தின்வில்லினின்று மிகுதியாகப்புறப்பட்ட அம்புகள் தடையின்றித் தம்முடம்பில் மேன்மேற்படுதலால் அவனெதிரில் நிற்கவும் அவனையெதிர்த்து முன்செல்லவும் மாட்டாது தளர்ந்துபோன வாநரவீரர்கள் தாம் கோபத்தோடு அவன்மேல்எறிதற்பொருட்டுக் கையிலேந்தியுள்ள மலைகளைக் கேடகம்போலஉபயோகித்துத் தம்பேருடலைச் சுருக்கிக்கொண்டு அவற்றின் மறைவிலே பதுங்கிநின்று தந்திரமாகத் தப்பி, மீண்டுங் கோபந்தூண்ட அங்ஙனம்பதுங்கினவண்ணமாகவே அவனெதிரில் மேன்மேற்சென்று அவனைச் சமீபித்து நெருக்கியவளவிலே, மீண்டும் அவன் எய்த கூரியஅம்புகள் அம்மலைகளைத்துளைத்து அவற்றின்மறைவிலிருந்த அவர்களுடம்பையுந் துளைத்து அப்பாற்சென்றன என்பதாம். போரிற் பகைவனுக்கு முன்நிற்கமாட்டாத வாநரர்கள் உயிர்நீங்காது உடம்போடிருத்தலை ஒருபாரமாகக்கருதினரென்பதும், அவர்கட்கு அப்பொழுதுஉடம்பும் ஒருபாரமாம்படி சோர்வுஉளதாயிற்று என்பதும்தோன்ற, 'உடற்பரங்கள்கொடு' என்றாரென்னலாம். பி-ம்:—1கணைகள். 2குன்றுகொடுடற்பரங்கள்கொடொடுங்கினர். 3நினைத்து. 4நின்ற. 5சென்றிடை. 6நெருக்கினன். 7கரங்களொடு. 8கிழிய. 9போனபலவாளியால். (உ0கசு)

கூரு. முழுத்த மொன்றிலொரு வெள்ள வானர [1]முடிந்து மாள்வ
ன [2]தடிந்துபோய்க்,கழுத்த கையநிமிர் கால வாலபல கண்ட மானபடி
கண்டுநேர், எழுத்[3]தொ டர்ந்தபடர் [4]தோள்க ளாலெறிய வெற்ற
[5]வுற்றன [6]வெழுந்துமேல், விழுத்த பைந்தலைய வேணு மால்[7]வரை
கள் வீசி வீசி[8]யுடன் [9]வீழுமால்.

(இ-ள்.) ஒருமுகூர்த்தகாலத்திலே ஒருவெள்ளமென்னும் பெருந்தொகையுள்ள வாநரங்கள் (ஆயுள்)முடிந்து(இந்திரசித்தின் அம்புகளினால்) துணிக்கப்பட்டுப்போய் ஒழிவனவான கழுத்தையுடையனவும் கைகளையுடையனவும் நீண்டகால்களையுடையனவும் வாலையுடையனவுமாகிப் பலதுண்டங்களான விகக்தை பிரதியக்ஷமாகப்பார்த்து, இருப்புத்தூண்போன்ற பெரிய

(தங்கள்) கைகளினால் (அவன்மேல் மலைகளை) எறிதற்கும் (அவனை) மோது தற்கும்(அவனுக்குநேரேவானத்திற்) பாய்ந்தெழுந்து சென்றவையான(வேறு சில)வாநரங்கள்,—(அந்நிலையில் அவனம்புகளினால் தாம் துணிபட்டு),அவன் மேல்தள்ளின பசுமையான தலைகளையுடையனவாய் (த் தாம் கையிலேந்தி யுள்ள) மூங்கிற்காட்டையுடைய பெரியமலைகளையும் (அவ்விந்திரசித்தின் மேற்) போகட்டுப் போகட்டு (அத்தலைகளோடும் மலைகளோடும்) தாமுமொரு சேர (அவன்மேல்) விழும்; (எ - று.)

இந்திரசித்து இடைவிடாது மேன்மேலெய்துவருகிற அம்புகளினாற் கழுத்தற்றவையும் கையற்றவையும் காலற்றவையும் வாலற்றவையுமாய்ப் பற் பலவாறுசின்னபின்னப்பட்டு ஒருமுகூர்த்தகாலத்தில் ஒருவெள்ளம்வாநரங்க ளழிந்ததைக் கண்கூடாகக்கண்டு கோபங்கொண்ட வேறுசில வாநரங்கள், தாம் கைக்கொண்டுள்ள மலைகளைஅவன்மேலெறியவும் அவனைத் தமதுநீண்ட பெரியவலிய கைகளால் அடிக்கவுங் கருதிப் பாய்ந்துகிளம்பி அவனுக்குநேரே மேலே வானத்திற்சென்று பாய்ந்தன; அங்ஙனம் பாய்ந்தவை, அந்நிலையில் அவனம்புகளால் தாம் துணிபட்டு, அங்குநின்று விழுமளவில், முந்தினமுயற் சியின்தொடர்ச்சியால், தம்தலையை அவன்மேல்தள்ளித் தம்கையிலுள்ள மலை யையும் அவன்மேல்வீசியெறிந்து அவற்றோடு தம்உடம்பினாலும் அவன்மேல் விழுந்து இவ்வாறு தாம் இறந்துபோம்போதும் இயன்றவளவு அவனுக்குஊறு செய்தனவென்பதாம். இதில், அவ்வாநரங்களுடைய ஊக்கமும் போர்முயற்சி த்திறமும் நன்குவிளங்கும். "அடுசிலை பகழிதொடுத்து விடப்புகுமளவினி லயமெதிர் விட்டவர் வெட்டினர்,உடல்சில விருதுணிபட்டன பட்டபினொரு துணி கருதுமிலக்கையழிக்குமே" என்றது முதலியன காண்க. 'வரைகள் வீசி வீசி யுடன் வீழும்' என்ற சொற்போக்கினால், வாநரங்கள் மலை கள்போன்ற பேருடம்புடையன வென்பது தொனிக்கும். ஈற்றடி - உட னிகழ்ச்சியணி. முழுத்தம்-முஹூர்த்தமென்ற வடசொல்லின் சிதைவு:அது, இரண்டுநாழிகைகொண்ட காலம். மாளுதல் - ஒழிதல். மேல்விழுத்ததலைய - தலையை மேல்விழுத்தியன. பி-ம்:—[1]முடிந்ததுள்ளன. [2]கடிந்து. [3]தொடர்ந்த வடர், தொடர்ந்தபல, தொடர்ந்தசிமிர். [4]தோளர்போநெறிய. [5]அற்றன. [6]விழுந்து. [7]தலைகள்வீசவீச, [8]உடல். [9]வீயுமால், மீளுமால்.	(உ0கஎ)

கஈ. அற்ற பைந்தலை யரிந்து [1]சென்றன வயிற்க டுங்கணை [2]வெ யிற்கள்போற், புற்[3]ற டைந்தகொடு வெவ்[4]வ ராவினெடு நாக லோக மது [5]புக்கவால், வெற்ற வெள்ளிடை [6]விரிந்து போவதொரு மேடு பள்ளம்வெளி யின்மையால், உற்ற [7]செங்குருதி வெள்ள [8]முள்ளதிரை யோத [9]வேலையொடு மொத்ததால்.

(இ - ள்.) (தம்மால்)அறுபட்ட (வாநரங்களின்)பசியதலைகளை (ஊடுரு விச்சென்று முழுவதும்) அரிந்துகொண்டு, (அப்பாற்) சென்றனவாகிய கூர் நுனியையும் வேகத்தையுமுடைய (இந்திரசித்தின்) அம்புகள்,—(சிறுதுவா ரங்களினுள்ளும் தரைவெடிப்புக்களினுள்ளும் நுழைந்து கீழ்ச்சென்றுவிளங் கும்) வெயில்கள்போலவும், புற்றில்நுழைந்த மிகக்கொடிய பாம்புகள்போல

வும், தூரத்திலுள்ள பாதாளலோகத்தைச் சேர்ந்தன; மேடும் பள்ளமும் இவ்விரண்டு மில்லாத சமபூமியும் என்ற வேறுபாடு சிறிதும் இல்லாதபடி (செய்துகொண்டு, அவ்)வெட்டவெளியிற் பரந்துசெல்வதாகிய (செயற்கையாய்ப்) பொருந்திய சிவந்த இரத்தப்பெருக்கானது (இயற்கையாய்) உள்ள அலைகளையும் பொங்குதலையுமுடைய கடலோடும் ஒத்தது; (எ - று.)

தொடர்புயர்வுநவிற்சியணியை யங்கமாகக்கொண்டுவந்த உவமையணி. வாநரங்களின் தலைகளை யறுத்து ஊடுருவிக் கழுத்து முழுவதையும் அரிந்து கீழ்விழுந்தபின்பும் வேகத்தோடு தரையில் தொளைசெய்துகொண்டு கீழுலகமளவும் நெடுந்தூரம் நுழைந்துசென்ற அம்புகட்கு,அங்ஙனம் சிறுபூழைகளின் வழியாகக் கீழ்நோக்கி நெடுந்தூரஞ்சென்று விளங்குஞ் சூரியகிரணங்களும்,புற்றில்நுழைந்து தமதுஉலகத்துக்குச்செல்லும் பாம்புகளும் உவமையாம்.நாகங்கள் புற்றுவழியாகத் தமது உலகம் புகுதல், இயல்பு. சிறுவெள்ளத்துக்குஅன்றிப் பெருவெள்ளம் பாய்ந்துபரவுதற்கு மேடு பள்ளம் வெளி[சமநிலம்] என்ற வேறுபாடு இல்லாமையால், 'ஒருமேடுபள்ளம்வெளியின்மையால் வெற்றவெள்ளிடைவிரிந்துபோவது'எனப்பட்டது. பி - ம்:—[1]சிந்தின. [2]வெயிற்கொள்பொற். [3]அடர்ந்ததொரு. [4]அராவினொடு. [5]புக்கதால். [6]இரிந்து. [7]பைங். [8]அள்ளுதிரை. [9]வேலையினை. (உ௦கஅ)

கூ௦. விழிக்கு மேல்[1]விழிய நிற்கின் [2]மார்பிடைய [3]மீளுமேன் [4]முதுக மேனிய,[5]கழிக்கு மேலுயர வோடு மேனெடிய [6]கால வீசினிமிர் கையவாய்த்,தெழிக்கு மேலகவு நாவ சிந்தை[7]யின வுன்னு மேற்சிகா மியாவையும், பழிக்கு மேனிய [8]குரக்கின் மேலவன் விடுங்[9]கொடும்பகழி [10]பாயவே.

(இ - ள்.) மலைகளையெல்லாம் (தமக்கு ஒப்பாகாவென்று) பழிக்கும்படியான [மலைகளினும் மிகப்பெரிய வலிய] உடம்பையுடையனவான குரங்குகளின்மேல், அவ்விந்திரசித்து பிரயோகித்த கொடிய அம்புகளானவை,— (தாம்) பாயும்போது, (அவ்வாநரங்கள் கண்களை) விழித்துப்பார்த்தால் அவ்விழிகளின்மேல் விழுகின்றனவும்,(எதிர்த்து)நின்றால் மார்புகளின்மேற்பாய்கின்றனவும், (எதிர்த்துப் போர்செய்யமுடியாது) புறங்காட்டி யோடுமானால் முதுகுகளின்மேல் தாக்குகின்றனவும்,(அப்பாணங்களைத் தம் உடம்பிற்படாதபடி) விலகித் தப்பமுயற்சிசெய்யுமாயின் அவ்வுடம்பிலெங்கும் (தவறாது) பொத்துகின்றனவும், உயரப்பாய்ந்துஓடுமானால் நீண்டகால்களின்மேற் பற்றுகின்றனவும், (கைகளை) வீசுமாயின் உயர்ந்த கைகளில் தைக்கின்றனவுமாகி, (வாயினால்) அதட்டுமாயின் அசைகின்ற நாக்குக்களிற் பொத்துகின்றனவும், (மனத்தினால்) நினைக்குமாயின் அம்மனத்தின்மேலுஞ் செல்லுகின்றனவு மாயின; (எ - று.)

இந்திரசித்தினால் அளவின்றி மேன்மேற்சொரியப்படுகிற பாணங்கள், வாநரங்களின் உடலுறுப்புக்கள்தோறும் தவறாது பாய்தலின் இயற்கையைச் சமத்காரமுண்டாகக் கூறினது, தன்மைநவிற்சியணி. எய்யப்படுதற்கு உரியதல்லாத மனத்தையும் எய்ததாகக் கூறியது, அம்புகளின் எய்தற்றொழிற்

சிறப்பை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணியாம். சிந்தை-இதயத்தான முமாம். பி-ம்:—[1]விழியினிற்கும். [2]மார்பிடையின், மார்பிடையும். [3]வீழு மேன். [4]முதுகைமேனியைக். [5]கிழிக்குமேலுயிரிலோடும், கிழிக்குமேலுயிரை வெராப். [6]கால்கள்வீசில், காலபாச, கால்கள்வீசி.. காலைவீசி. [7]எனவுண்ணு மேற். [8]குரங்கு, குரங்கின். [9]கடும். [10]பாயுமே. (உ௦கக)

கூஅ. மொய்யெடுத்தகணை மாரி யாலிடை முடிந்த தொன்று [1]முறை கண்டிலார், [2]எய்யி டத்தெறியு நாணி னோசையல தியாது [3]மொன்றுசெவி யுற்றிலார், மெய்யெ டுத்தகவி வெள்ள மியாவையும் [4]விழுந்து போனவெனும் விம்மலாற், கை[5]யெ டுத்தன குரங்கி னோடு முறை [6]கண்டு தேவர்கள் கலங்கினார்.

(இ-ள்.) (ஆகாயத்திற் போர்கண்டு நின்ற) தேவர்கள்,—(இந்திரசித்தாகிய காளமேகம்சொரிந்த) வலிமைமிக்க அம்புமழையினால், நடுவில் நிகழ்ந்த செயல்களுள் ஒன்றையேனும் முறையேகண்டாரில்லை; (இந்திரசித்து) அம்பு எய்யும்பொழுது (கைவிரலினால்) தெறிக்கின்ற வில்நாணியினின்று உண்டாகிறவோசையையே யல்லாமல் வேறுஎந்தவோசையையும் கேட்டுணர்ந்தாரில்லை; 'உடம்பெடுத்துள்ள வாநரக்கூட்டங்களெல்லாம் இறந்தொழிந்தன' என்ற விசனத்தினால் கைகளைமேலெடுத்தனவான (எஞ்சிநின்ற சில) வாநரங்களின் ஓடுந்தன்மையையே கண்டு கலங்கினார்; (எ - று.)

தேவர்கள், கண்டிலார்; செவியுற்றிலார்; ஓடுமுறைகண்டு கலங்கினார் என்க. இடைமுடிந்தது என்பதற்கு-அவ்விடத்தில்நிகழ்ந்தது என்று பொருள் கொண்டு, எல்லாப்பக்கத்திலும் பரவிமறைத்ததனால் அவ்விடத்துநிகழுஞ் செயல்கள் தேவர்களாலும் கண்டறியமுடியாவாயின வென்றலும் ஒன்று. வாநரசாதியாயுள்ளவையனைத்து மென்ற பொருளில், 'மெய்யெடுத்த கவி வெள்ளம் யாவையும்' எனப்பட்டது. இறந்தொழிதலென்றபொருளில் 'விழுந்துபோதல்' என்னுஞ் சொல்வழக்கை உலகவழக்கத்திலுங் காண்க. பி-ம்:—[1]இடை. [2]எய்யும்விற்கையெறி, எய்விடத்தினெறி. [3]ஒன்றுமிடை. [4]விளிந்துபோன. [5]அடித்தன. [6]கண்ட. (உ௦உ௦)

கூகூ.—இதுவும், அடுத்தகவியும்-குளகம்: இந்திரசித்து பகைவென்று நின்றமைகண்ட சுக்கிரீவன் பெருமரங்கொண்டு பொருதலைக்கூறும்.

கண்ட வானர மகந்த கோடி முறை கண்ட மானபடி கண்டவக், [1]கண்டன் மா[2]ெருருவ ரின்மை கண்டுகணை மாறி னான்[3]விடுத லின்மையாய்க், கண்ட காலையில் விலங்கி னானிரவி [4]காதல் காதுவதொர் காதலாற், கண்ட கார்சிதைய மீ[5]து யர்ந்தொளிர் மராம ரஞ்சுலவு கையினான்.

(இ - ள்.) (தன்)கண்ணுக்குஎதிர்ப்பட்ட அளவிறந்த கோடிக்கணக்கான வாநரங்கள் முறையே துண்டங்களானதைப் பார்த்த கொடியவனான அந்தஇந்திரசித்து (தன்னோடு)எதிர்ப்பவர் ஒருவரும் இல்லாமையைப்பார்த்துப் பிரயோகித்தலில்லாமல்அம்புகளைமாற்றி[போர்நிறுத்தி]நின்றான்; (அப்பொழுது), தூரத்தில்நின்றவனான சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன்,—(அதனைப்) பார்த்த

மாத்திரத்தில் (அவனையெதிர்த்துத்) தாக்கவேண்டுமென்ற ஒருவிருப்பத்தால், காணப்படுகிற மேகங்கள் சின்னபின்னமாம்படி மேலோங்கிவிளங்குகின்ற ஒருமராமரத்தை (ப் பிடுங்கிக்கொண்டு) சுழற்றுகின்ற கையையுடையவனாய், (எ - று.)—'எய்தி' என அடுத்த கவியோடு தொடரும்.

கண்டன்-கண்டகன்: முள்போற்கொடியவன். கார்சிதையச் சுலவுஎன இயையும்; சுக்கிரீவன் கையிற்கொண்டு மராமரத்தைச் சுற்றும் விசையினால் வானத்துமேகங்கள் சிதறுமென்க. மராமரம் - ஸாலவிருக்ஷம்: (ஒருவகை) ஆச்சாமரம். பி - ம்:—1சண்ட. 2ஒருவன். 3விடுதலன்னதாற், விடுதல்கண்ணினாற். 4காதலன்சமர்செய். 5உயர்ந்ததொர். (௨௦௨௧)

௭௦. உடைந்து தன்படை யுலைந்து [1]சிந்தியுயி ரொல்க வெல்செரு வுடற்றலாற், [2]கடைந்து தெள்ளமுது கொள்ளும் [3]வள்ளலென மேனி மிர்ந்ததொர் [4]கறுப்பினான், [5]இடைந்து சென்றவனை யெய்தி யெய்தரிய காவல் [6]பெற்றிக லியற்றுவான், மிடைந்து நின்றபடை வேலை காறளர வீசி னானிருதர் கூசினார்.

(இ-ள்.) தனது(வாநர)சேனை வலிகெட்டுவருந்திச் சிதறி உயிரொழியும்படி (இந்திரசித்து) வெல்கின்ற போரை முயன்றுசெய்ததனால்,—(பாற்கடலைக்) கடைந்து தெளிவானதேவாமிருதத்தைப்பெற்ற உதாரகுணமுடையவனை வாலிபோல மேன்மேற் பொங்குகிற கோபத்தையுடையவனாய்,—(போரைநிறுத்தி) விலகிப்போகின்றவனை அவ்விந்திரசித்தைக் கிட்டி,—(பிறர்) கிட்டுதற்குமுடியாத காவலைப்பெற்றுப் போர்செய்தற்கு நெருங்கி, நிலைகின்ற (அரக்கரது) சேனாசமுத்திரம் நிலைகுலையும்படி (அம்மராமரத்தைச் சுழற்றி) வீசிப் போர்செய்தான்; (அதனால்), அரக்கர்கள் கூசசங்கொண்டார்கள்; (எ-று.)—பி-ம்:—1சிந்த. 2கடைந்த. 3வண்ணமென. 4கடுப்பினான். 5அடைந்து. 6மேலிகலியற்றுவான், பெற்றுகலியற்றுவான். (௨௦௨௨)

௭௧.—சுக்கிரீவனேறிந்த மராமரத்தை இந்திரசித்து துணித்தல்.

[1]சுற்று நின்றபடை சிந்தி யோடவொரு மராம ரங்கொடு [2]துகைத்துளான், வெற்றி கண்டுவலி நன்று நன்றென வியந்து வெங்கணை [3]தெரிந்தவன், நெற்றி யின்றலை யிரண்டு மார்பிடை யொரைஞ்சு நஞ்செசன [4]நிறுத்தவன், பற்றி வந்தமரம் வேறு [5]வேறுற நொறுக்கி நுண்பொடி [6]பரப்பினான்.

(இ - ள்.) (இந்திரசித்து),—(தன்னைச்) சூழ்ந்துநின்றசேனைகள் சிதறியோடும்படி ஒருமராமரத்தைக்கொண்டு தாக்கிவருத்தினவனான சுக்கிரீவனது வெற்றியைப்பார்த்து, '(இவனது) பலம் மிகவும் நன்றாயிருக்கின்றது' என்று(அவனைக்) கொண்டாடி,(பின்பு),விஷத்தைப்போலக் கொடியபாணங்களை (ச் சிறந்தனவாக)த் தேர்ந்தெடுத்து,—அவனது நெற்றியினிடத்தில் இரண்டுபாணங்களையும் மார்பினிடத்தில் ஐந்துபாணங்களையும் அழுந்தும்படி பிரயோகித்து, அச்சுக்கிரீவன் கையிற்கொண்டுவந்த மராமரத்தைத் துண்டுதுண்டாம்படிநொறுக்கிச்சிறியபொடிகளாய்ப்பரவச்செய்தான்; (எ-று.)

'துளைத்துளான் வெற்றிகண்டு வலி நன்றுநன்றென வியந்து' என்றத னால், வலியபகைவனும் வியந்துகொண்டாடும்படி சுக்கிரீவனது வீரச்செயல் மிகச்சிறப்புற்றிருந்த தென்பது விளங்கும். பி-ம்:—[1]சுற்றி. [2]தொலைத்துளான். [3]விரைந்தவன். [4]கிறுத்தினன், கிறுத்தபின். [5]கூறற. [6]படுத்தினன். (௨௦௨௫)

எ௨.—அநுமான் இந்திரசித்தின்மேல் ஒருமலையையெறிய, அதனை அவன் தூளாக்குதல்.

அக்க ணத்தனும ஞல காலமென லாய தோர்வெகுளி [1]யாயி னன், புக்க லைத்துலக முங்கு லுங்க[2]கிமிர் தோள்பு டைத்துருமு போலுரு, [3]இக்க ணத்தவ [4]னிறக்கு மென்பதொரு குன்றெ டுத்து மிசை யேவினன், உக்க தக்கிரி சொரிந்த வாளிகளி னூழி லாதசிறு பூழியாய்.

(இ - ள்.) அப்பொழுது, அநுமானனவன், ஆலாகலவிஷமென்றுசொல் லும்படியுண்டானதொரு[மிகக்கொடிய]கோபத்தைக் கொண்டவனாய், (அங்கு) வந்து, எல்லாவுலகமும் அஞ்சிநடுங்கும்படி (தனது) உயர்ந்த தோள்களைத் தட்டி, இடிபோலப்பொருந்தி [பெருமுழக்கமுண்டாம்படி கர்ச்சித்துக்கொ ண்டு], 'இப்பொழுதே அவ்விந்திரசித்து (இதனால்) இறந்தொழிவான்' என்று (கண்டோர்யாவருஞ்) சொல்லும்படி (மிகப்)பெரியதொருமலையை யெடு த்து (அவ்விந்திரசித்தின்)மேல் எறிந்தான்; (அப்பொழுது, அவ்வரக்கன்) பொழிந்த பாணங்களினால், அம்மலை,முறைமையில்லாத[மிகநுண்ணிய]சிறிய துகளாகிச் சிதறிவிட்டது; (எ - று.)—பி-ம்:—[1]ஆயவண், அண்மினற், அண் ணினன். [2]உயர். [3]இக்கணத்தினில். [4]இறக்கும். (௨௦௨௬)

எ௩.—இதுமுதல் ஐந்துகவிகள் - இந்திரசித்துக்கும் அநுமானுக்கும் நடந்த வாக்குவாதம்.

[1]நில்ல டாசிறிது [1]நில்ல டாவுனை நினைந்து வந்தனன் முனைக்கு நான், வில்லெ டாமையினை தாண்மை பேசியுயி ரோடு நின்றுவிளை யா டினய், [2]கல்ல டாரொடு [3]மரங்க ளோவரு கருத்தி னேன்வலி [4]கடப் பவோ, [5]சொல்ல டாவென வியம்பி னனிக லரக்க னைய[6]னிவை சொ ல்லினன்.

(இ - ள்.) (அநுமனெறிந்த பெரியமலை இங்ஙனம் பொடிப்பொடியான அப்பொழுது), போர்வலிமையையும் பகைமையையுமுடைய அரக்கனாகிய இந்திரசித்து,—(அநுமானை நோக்கி), 'நில் அடா:சற்றே நில்அடா: நான்(இந் தப்)போர்க்களத்துக்கு உன்னை [உன்னோடு போர்செய்வதை] உத்தேசித்து வந்தேன்: (நீ), வில்லெடுத்துப் போர்செய்யாமலே,உனது பராக்கிரமத்தைப் புகழ்ந்துசொல்லிக்கொண்டு உயிருடன் இருந்து விளையாடுகிறாய்; (உன்னு டன் போர்புரிய)வரும் எண்ணமுடையவனாகிய எனது வலிமையை அடக்க வல்லவைகள், கல்லும் பெரியமரங்களுந் தாமோ? அடா; அடா!(நீ)சொல்வா யாக' என்று (இகழ்ச்சிதோன்றக்) கூறினன்;(அதற்கு), பெரியோனாகிய அநு மான், இவ்வார்த்தைகளைக் கூறுபவனானான்; (எ-று.)—அவற்றை, மேல் இர ண்டு கவிகளிற் காண்க.

அடா - ஆண்பால்விளிப்பொருளில்வரும் இகழ்ச்சிக்குறிப்பிடைச் சொல். தனது தம்பியாகிய அக்ஷகுமாரனை முன்பு கொன்றமைபற்றி அநுமானிடத்தும் இந்திரசித்து மிக்க கறுக்கொண்டுள்ளானாதலால், 'உனைநினைந்து வந்தனன் முனைக்கு நான்' என்றான். 'வில்வீரனாகிய என்னோடு வில்லெடுத்துப் போர்செய்தலே தகுதி; கல்லையும் மரங்களையுங்கொண்டுபொருதல் தகுதியன்று' என இந்திரசித்துக் கூறினனென்க. ஓகாரம் - வினாவகையால், எதிர்மறைப்பொருளோடு இகழ்ச்சியையும் குறித்தது. பி-ம்:—[1]வில்லெடா. [2]கல்லெடா. [3]மரங்களோடிருகரத்தினேன், மரங்களோவிருகரத்தினேன். [4]கடக்குமோ, கடக்கவோ. [5]சொல்லெடா. [6]இது. (௨௦௨௫)

௭௪. வில்[1]லெ டுக்க[2]வுரி யார்கள் வெய்யசில வீர ரிங்குமுளர் [3]மெல்லியோய், கல்லெ டுக்க[4]வுரி யானு நின்றன னதின்று நாளையிடை [5]காணலாம், எல்லெ டுத்த[6]படை யிந்தி ராதிய ருனக்[7]கி டைந்துயிர் கொ[8]டேகுவார், புல்லெ டுத்தவர்க ளல்லம் [9]வேறுசில போ[10]ரெ டுத்தெதிர் புகுந்துளோம்.

இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) 'அற்பனே! எமதுபக்கத்திலும் வில்லெடுத்துப்போர்செய்யத் தக்கவர்களான கொடிய சிலவீரர் இருக்கின்றனர்; கல்லெடுத்துப்போர்செய்ய வல்ல நானும் நிற்கின்றேன்; (நீ மெச்சிப்பேசும் உனது) அந்த வில்வீரத்தை இரண்டொருநாளிலேயே காணலாம்; ஒளியையுடைய ஆயுதங்களையேந்திய இந்திரன்முதலியதேவர்கள், உனக்குத்தோற்று உயிர்கொண்டு செல்வார்கள்: (நாங்களோ அவ்விந்திராதியர்போலப்) புல்லை வாயினாற்கௌவினவர்களல்லோம்: வேறு சிலபோர்வகைகளைத் தொடங்கி உன்னெதிரில் வந்துள்ளோம்.

'சிலவீரர்' என்றது, இராமலக்ஷ்மணர்களை. 'சில' என்றது, இரண்டின் மேல்நிற்கும். இந்திரசித்து அநுமானை இகழ்ந்துகூறியதற்கேற்ப, 'மெல்லியோய்' என இகழ்கின்றான். 'சிலவில்வீரருளர்' என்றும், 'அது இன்றுநாளையிடை காணலாம்' என்றும் அநுமான் உத்தரங் கூறினனென்க: உனக்கு வில்வீரம் சிறிதும்இல்லாமை விரைவிலே வெளியாமென்பது, இதன்கருத்து. இங்கே வில்வீரர்இல்லையென்று அவமதிக்கவேண்டா; உன்வலியையும்அடக்கவல்ல வில்வீரர்இங்கேயிருக்கின்றார்கள் என்று இந்திரசித்தை அநுமான் வெருட்டுபவனாய் 'வில்லெடுக்கவுரியார்கள் வெய்யசிலவீர ரிங்குமுளர் மெல்லியோய்' என்றான். போரில்தோற்றவர் வாயினாற் புல்லைக்கௌவுதல், மரபு. உனக்கு இடைந்து உயிர்கொடுஏகுவாராய்ப் புல்லெடுத்தவர்களான இந்திராதியரல்லம் யாம் என்க. இந்திராதியர்க்கு 'எல்லெடுத்தபடை' என்ற அடைமொழிகொடுத்து 'அவர்களல்லம்யாம்' என்ற இதில், உனக்குத்தோற்றுப் புற்கவ்வி அரிதில்தப்பிப்பிழைத்த இந்திராதியர் ஏந்திய வச்சிரம்முதலிய ஆயுதங்கள்போல அலங்காரார்த்தமாகஇராமல் நாங்கள் கைக்கொள்ளுங் கற்கள்முதலியன மேம்பட்டுப் போரில் எங்களுக்கு வெற்றியைத்தருமென்னுங் கருத்து விளங்கும். பி-ம்:—[1]எடுக்கவும். [2]உரித்தெமையர்சிலர், உரித்தெமையசில,

உரியார்களெம்மையர், உரியார்களையசில. 3மெல்லியோம்: 4உரியோமுன்ன் நனம். 5காண்கலாம். 6பதி. 7உடைந்து.8ஏகினர்,எகுநாட்.9வென்றுசில.10எடுத்திடை. (உ0உசு).

எரு. என்னொ டேபொருதி யோவ துன்றெனி னிலக்கு வப்[1]பெயரி னெம்பிரான், றன்னொ டேபொருதி யோ[2]வு னுந்தைதலை தள்ள நின்றதனி வள்ளலாம், மன்னொ டேபொருதி யோவு ரைத்தது மறுக்கிலேமென வழங்கினான், பொன்னொ டே[3]பொருவி னல்ல தொன்றொடு பொதுப்ப டாவுயர் புயத்தினான்.

(இ - ள்.) (நீ) என்னுடனே போர்செய்வாயோ? அப்படியல்லாவிட்டால், இலக்குமணனென்னும் பெயரையுடைய எமதுதலைவனுடனே போர்செய்வாயோ? (அது அன்றெனின்), உனது தந்தையின் [இராவணனுடைய] தலைகளை(த் துணித்துத்)தள்ளுவதற்காக வந்துள்ள ஒப்பற்ற வரையாதருளுந் தன்மையனான இராமபிரானுடனே போர்செய்வாயோ? (நீ) எதைச்சொன்னாலும் அதை மறுக்கமாட்டோம் (யாம்) என்று கூறினான்: (யாவனெனில்),—பொன்மலையான மகாமேருகிரியுடனே ஒத்தாலல்லாமல், வேறொருபொருளோடு பொதுத்தன்மை பொருந்தமாட்டாத [ஒப்புமையற்ற] உயர்ந்த தோள்களையுடையவனாகிய அநுமான்; (எ - று.)

'த்வந்த்வயுத்தமாக நீ யாரோடு போர்செய்ய விரும்புகிறாய்? சொல்' என் இந்திரசித்தை அநுமான் வினவினன். அநுமான் தத்துவஞானமுடையவனாதலால், இராவணசங்காரத்திற்காகவே திருமால் இராமபிரானாகத் திருவவதரித்துள்ளமையை யுணர்ந்து, அதனை 'உனுந்தைதலை தள்ளநின்ற தனிவள்ளல்' என்றதனால் வெளியிட்டன னென்க. வேண்டுவார் வேண்டியபடி வழங்கும் வண்மையுடையார் வினவுமாறுபோலவினவி'உரைத்தது மறுக்கிலேம்' என்றன னென்பார்,'வழங்கினான்' என்றார். பின்னர் இராமனுக்கு 'உனுந்தை தலைதள்ளநின்ற' என அடைமொழிகொடுத்ததனால், இலக்குவன் இந்திரசித்தின் தலையைத் துணிக்கவந்தவன் என்று தொனிக்குமாறு அறிக. பி-ம்:—1பெயரென். 2சொல். 3பொருவதன்றிவேறொருபொருப்படா, பொருவிலன்றி வேறொருபொருப்படா. (உ0உஎ)

எசு. எங்கு நின்றன னிலக்கு வப்[1]பெயரவ் வேழை யெம்பியதிகாயனைச்,சிங்கம் [2]வந்தவனை வென்று தன்னுயி ரெனக்கு வைத்தமொதார் சிறப்பினான், அங்க வன்றனை மலைந்து கொன்றுமுனி வாற வந்தனன்[3] தன்றியும், உங்க டன்மையி னடங்கு மோவுல கொடுக்கும் வெங்கணை [4]தொடுப்பினே.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (இந்திரசித்து அநுமானைநோக்கிக்கூறுவான்):—எனது நம்பியாகிய அதிகாயனென்னும் (போர்செய்ய)வந்த சிங்கம்போன்றவனைச் சயித்துத் தனது உயிரை நான்கொல்லுதற்கென்று வைத்துள்ளதொரு சிறப்பையுடையவனாகிய இலக்குமணனென்னும் பெயரையுடைய அந்த அறிவுகேடன் எங்கே நிற்கிறானோ, அவ்விடத்திலேயே அவனைப் பொருதுகொன்று கோபந்தணிவ

தற்காகவே (நான்) வந்துள்ளேன்; அதுவல்லாமலும், உலகங்களையெல்லாம் ஒடுங்கச்செய்யவல்ல கொடிய அம்புகளை(நான்)பிரயோகித்தால்,உங்கள்(வீரத்) தன்மையினால் (அவை)அடங்குமோ? [அடங்கமாட்டாவன்றோ?] (எ - று.)

'அதிகாயனைக்கொன்று அதனால் தன்னுயிர்க்குத் தீங்கைத் தானேதேடிக் கொண்ட அறிவீனன் இலக்குமணன்' என்பான், அவனை இந்திரசித்து, 'ஏழை'என்றான்:செருக்குமொழி. பகைவனாற்கொல்லப்பட்டவிடத்தும் அதிகாயனை 'சிங்கம்'என்றது, இந்திரசித்துக்கு அவனிடமுள்ள பேரபிமானத்தை விளக்கும். சிறப்பினான்-பிறகுறிப்புவகையால், சிறப்பிலானென்றவாறு. மகாவீரனைக் கொன்றமைபற்றித் தன்னைச் சிறப்புடையானாகக் கருதியிருப்பானெனினுமாம். தன்உயிர் எனக்கு வைத்ததொர்சிறப்பினான்-தனது உயிரை எனக்கு வரிசைப்பொருளாக வைத்துள்ளவனெனினுமாம்.அதிகாயனைக் கொன்ற இலக்குமணனை உயிர்நீக்கிப் பழிக்குப்பழிவாங்குவேனென்று இந்திரசித்து உறுதிகொண்டிருந்தமை, இங்குப் புலனாம். உங்கள் தன்மையினடங்குமோ - நீங்கள்மூவரும் ஒருங்குசேர்ந்துவந்தாலும் உங்கள்வீரம் என்னொருவனது வில்வீரத்துக்குச் சிறிதும் ஈடாகாது என்றபடி: யான் வெங்கணைதொடுத்தால் அது உங்களைக்கொன்றவளவிலடங்குமோ? உலகனைத்தையும் ஒடுக்குமே என்றுங் கொள்க;இவை இந்திரசித்தின் வீரவாதம்.பி-ம்:— [1]பெயரன். [2]வந்ததனை. [3]அன்றியே. [4]தொடுக்கினே, தொடுக்கிலே. (௨௦௨௮)

௭௭. [1]ஆரு மென்[2]படைஞ ரெய்த [3]வின்றியய லேக யானு[4]மிகல்
வில்லுமோர், தேரி னின்றுமை யடங்க லுந்திரள் சிரந்து ணிப்ப[5]னிது
திண்ணமால், வாரு[6]முங்களுடன் வானு ளோர்களையு மண்ணு ளோ
ரையும் வரச்சொலும்,போரு மின்றொரு பகற்[7]க ணேபொருது வெல்
வன் வென்றலது போகிலேன்.

(இ - ள்.) எனதுசேனைவீரர் ஒருவரும் (எனக்குத் துணையாக) வருதலில்லாமல்(விலகி)அப்புறஞ் சென்றுவிட, (தனியனான) நானும் (எனது)வலிமையுள்ளவில்லும் (இந்த) ஒரேதேரில் (உறுதியாக)நின்று உங்களெல்லோரையும் கூட்டமாகத் தலைதுணித்துவிடுவேன்; இது நிச்சயம்; (நீங்கள்யாவரும் போர்செய்ய)வாருங்கள்;உங்களோடு[உங்களுக்கு உபபலமாக] தேவலோகத்திலுள்ளவர்களையும் பூமியிலுள்ளவர்களையும் (போர்புரிய)வரும்படி சொல்லுங்கள்;இன்றைஒருபகற்பொழுதினுள்ளேயே(யாவரோடும்)போர்செய்து யுத்தத்தில் வெற்றியையும்அடைவேன்; (நான் யாவரையும்)சயித்தன்றி (இவ்விடம் விட்டுப்)பெயரேன் [எல்லாரையும் வென்றபின்பே மீண்டுசெல்வேன் என்றபடி]; (எ - று.)—ஆல்-அசை.

விண்ணுலகத்தாரும் மற்றும் மண்ணுலகத்தாரனைவரும் உங்கட்குப் பக்கபலமாய்நிற்க நீங்கள் எல்லீரும் போர்புரிந்தாலும் ஓர் துணையுமின்றி உங்களனைவரையும் வெல்லும் அசகாயசூரன் யானென இந்திரசித்து விடையிறுத்தவாறு. யானும் வில்லும் நின்று துணிப்பேன் - சிறப்பினால்வந்த பால்வழுவமைதி. பி-ம்:— [1]யாரும். [2]படைஞர். [3]அன்றி. [4]ஒரு. [5]இவை. [6]உங்களொடு. [7]கணை.

௭௮.—இந்திரசித்து அநுமான்மேல் அம்பெய்ய, அநுமான் மலையை யேர்த்தெடுக்கொண்டு அவனெதிரில் ஒன்றுகூறத் தொடங்கல்.

என்று வெம்பகழி யேழு நூறு[1]மிரு நூறும் வெஞ்[2]சிலைகொ டேவினன், குன்று நின்றனைய வீர மாருதிதன் மேனி மேலவை குழுக்களாய்ச், சென்று சென்றுருவ லோடும் வாளெயிறு தின்று [3]சீறியொரு சேமவன், குன்று நின்றது [4]பறித்தெடுத்தவனை யெய்தி [5]நொய்தினிது கூறினன்.

(இ - ள்.) என்றுசொல்லி, (இந்திரசித்து, - (தனது) கொடியவில்லைக் கொண்டு, கொடிய தொள்ளாயிரம் அம்புகளை(அநுமான்மீது)செலுத்தினன்; அப்பாணங்களானவை தனதுஉடம்பின்மேல் பெருந்தொகுதிகளாக மேன் மேற்சென்று தைத்தவளவில்,—(பெரியதொரு) மலைநின்றாற்போன்ற வீரத் தன்மையையுடைய அநுமான்,(தனது)ஒளியுள்ள பற்களைக்கடித்துக்கோபித்து, (அங்கே) நின்றதாகிய (தனக்கு) உறுதிதருமென்றுநினைத்தற்கு இடமான வலிய (ஒரு) மலையைப் பேர்த்தெடுத்துக்கொண்டு அவ்விந்திரசித்தின்முன் நின்று அலட்சியமாக இவ்வார்த்தையைக் கூறுபவனானான்; (எ-று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

சேமக்குன்று-தக்கசமயத்தில் உதவவேண்டுமென்பதை நோக்கிப் பாது காவலாகப் பத்திரமாய்வைக்கப்பட்டிருந்த மலை; சேமவில்,சேமத்தேர், சேமப் பொருள் என்றாற்போலக்கொள்க. பி-ம்:—[1]எழு, [2]சிலையினேயினன். [3]நின் றதொருசேவகன். [4]பிடித்தெடுத்து. [5]ஐயனிவை, நொய்தினிவை. (௨௦௬௦)

௭௯.—அநுமான்கூறிய வீரவாதம்.

தும்பி யென்றுலகி னுள்ள யாவை[1]யவை யேவையுந் [2]தொகுபு துள்ளுதாள், [3]வெம்பு வெஞ்சின மடங்க [4]லொன்றின்வலி தன்னை நின்றெளிதின் [5]வெல்லுமோ, நம்பி தம்பி[6]யென தெம்பி ரான்வரு துணைத்[7]தரிக்கிலை [8]நலித்தியேல், அம்பின் முந்தியுன தாவி [9]யுண்ணுமிது [10]காவ லாகிலைவ லாண்மையால்.

(இ - ள்.) உலகத்தில் யானையென்று சொல்லப்பட்டுள்ளவை எத்தனை உள்ளனவோ அவையாவும் (ஒருங்கே) திரண்டாலும், குதித்துப்பாயுந்தன் மையுள்ள கால்களையும் கொதிக்கின்ற கொடியகோபத்தையுமுடைய ஒருசிங் கத்தின்பலத்தை (அதன்முன்) நின்று எளிமையாய் வெல்லமாட்டுமோ? [வெல்லமாட்டாவன்றே!] ஸ்ரீராமபிரானது திருத்தம்பியும் எங்கள்தலைவனு மாகிய எனது இலக்குமணப்பெருமாள்வருமளவும் (தாமசித்திருக்கப்) பொறு மல் (என்னை)வருத்துவாயானல்[என்னுடன்போர்செய்வாயானல்],(உனது) அம்பு(நான்போகடும் இம்மலையை அழிக்க)வருவதற்குமுன்னமே இம்மலை உன் பிராணனை ஒழித்துவிடும்;வில்வித்தையிற்பயின்று வல்லமைபெற்றுள்ள(உன து) பௌருஷத்தினல்,அடா! (இம்மலை உனதுஉயிரை அழிக்கவொட்டாது) பாதுகாத்துக்கொள்வாயாக(என்று அநுமான் ஒருமலையையெறிந்தான்.

இராக்கதர்களாகிய நீங்களெல்லோரும் ஒருசேரத்திரண்டுபொருதாலும் என்னொருவனதுவலிமையை உங்களால்வெல்லமுடியாது என்றஉபமேயத்தை

உபமானமுகத்தாற் பெறவைத்ததனால்,முன்னிரண்டடிகள் - பிறிதுமொழிதலென்னும் அணியாம்.'நீ இலக்குமணனுடன்போர்புரியவிரும்பினதனால்,யான் வெறுமனேயிருந்தேனேயன்றி உன்னுடன்பொரத் திறமையற்றவனுயன்று; இப்பொழுது நீ அவ்விலக்குமணன்வருமளவுந் தாழ்த்திருக்கப்பொறுமல் என் மீதுபாணங்களைத் தொடுத்தமையால், உனதுஉயிரையொழிக்குமாறு யான் இம்மலையை உன்மீது எறிகின்றேன்; உனக்கு வில்லாண்மையிருப்பின் இது உனதுஉயிரைஉண்ணுதவாறு இதனைக் கணைகொண்டு தடு; பார்ப்போம்' என அநுமான் கோபமூண்டு வீரவாதங்கூறிமலையையெறிந்தனனென்க. மடங்கல்-(பிடரிமயிர்)மடங்குதலுடையது என ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி. இம் மலை ஆவியுண்ணு ம்-உண்ணுததது உண்பதுபோலவும் உண்ணப்படாதது உண்ணப்படுவதுபோலவுங் கூறிய மரபுவழுவமைதி. பி - ம்:—[1]எவையாவையுந், அவையாயிரத். [2]தொகுதியாயினும், தொகுதியுள்ளதான்,தொகுதியுள்ளதார். [3]வெம்பியஞ்சின. [4]ஒன்றை, வெகுநாய்கள்மற்றதனை, ஒன்றைவலியுடனுயு மற்றவைகள். [5]வெல்லுமேல். [6]எனதம்பிரான். [7]தருக்கிலே. [8]நடத்தியேல், சலித்தியேல். [9]உண்பதிது. [10]காவெடா. (உ௦௬௪)

அ௦.—அநுமானெறிந்தமலை இந்திரசித்தின்மார்பிற்பட்டுப் பொடியாதல்.

செருப்ப யிற்றிய தடக்கை யாளிசெல விட்ட குன்றுதிசை யானையின்,[1]மருப்பை யுற்றதிர டோளி ராவணன் மகன்றன் [2]மார்பினுயர் வச்சிரப், பொருப்பை யுற்றதொர் பொருப்பெ னச்சடி. தொடிந்திடிந்துதிசை போயதால், நெருப்பை யுற்றதொ ரிரும்பு [3]கூடமுற நீறுபட்டது [4]நிகர்த்ததால்.

(இ - ள்.) போரிற்பழக்கப்படுத்தியுள்ள பெரிய கையையுடைய யாளி போன்றவனான அநுமான் (இங்ஙனம் வீரவாதஞ்செய்து இந்திரசித்தின்மீது) செல்லும்படிவிட்ட மலையானது,—திக்கஜங்களின் தந்தங்களைப் பொருந்தியுள்ள திரண்டதோள்களையுடைய இராவணனதுமகனான இந்திரசித்தின் மார்பிலே உயர்ந்த வஜ்ரமயமானதொருமலைமீது பட்டதொரு மலைபோல, விரைவிலேபிளந்து இடிபட்டு(த் தூளாய்)த் திக்குக்களிற் (சிதறிப்)போயிற்று; (அன்றியும்), நெருப்பிற் பழுக்கக்காய்ந்ததோர் இரும்பானது சம்மட்டியினால் அடிபட்டமாத்திரத்திற் பொடியாய்ச் சிதறினதையும் ஒத்தது; (எ - று.)

தடக்கையாளி என்பதற்கு-பெரியகைகளை யாள்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். இராவணன் திக்விஜயஞ்செய்தபொழுது திக்கஜங்களோடு பொருகையில் அவனதுமார்பு தோள்முதலிய இடங்களில் அவ்யானைகளின் தந்தங்கள்பொத்திஒடிந்துவிட்டன என்ற வரலாறுபற்றி, 'திசையானையின் மருப்பையுற்ற திரடோளிராவணன்'என்றார். தான் பிறிதொன்றினுற் பேதிக்கப்படாமலே பிறவற்றையெல்லாம் தான்பேதிக்கவல்லதாதல், வச்சிரத்தின் இயல்பு. வச்சிரப்பொருப்பையுற்றதொர் பொருப்பென-இல்பொருளுவமை. சம்மட்டி-இந்திரசித்தின்மார்புக்கும், பழுக்கக்காய்ச்சின இரும்பு-அநுமானெறிந்த மலைக்கும் உவமை. பி-ம்:—[1]மருப்புகுத்த. [2]மார்பினெடு, மார்பினிடை. [3]கூடமென. [4]நிகர்த்தவால். (உ௦௬௫)

அக.—இந்திரசித்து அநுமான்மேல் மற்றும் பல அம்பு தொடுத்தல்.

விலங்கன் மேல்வா [1]விலங்க வீசிய [2]விலங்க னீறுபடு [3]வேலையிற், [4]சலங்கை மேனிமிர வெஞ்சி னந்திருகி வஞ்சன் [5]மேனிமிர் தருக்கினன், வலங்கொள் பே[6]ருலக மேரு வோடென மதிக்கு மாருதிதன் [7]வாசநா று, அலங்கன் [8]மார்பினொடு [9]தோளி னூடுருவ வாயி ரஞ்சர மழுத்தினன்.

(இ - ள்.) (தனது) மலைபோன்றமார்பின்மேல் தாக்கும்படி தூர(நின்று அநுமான்) எறிந்த மலை பொடிபட்டபொழுதில்,—வஞ்சனைக்குணமுள்ளவனை இந்திரசித்து,—கறுவு(தன்னிடத்தில்) மேன்மேல்அதிகப்படக்கொடிய கோபத்தினால் மாறுபட்டு மிகவிஞ்சிய செருக்குக்கொண்டவனாய்,—உறுதிகொண்ட பெரிய உலகத்தையும் மேருமலையையும் பேர்த்தெடுக்கவல்ல அநுமானது மணம்வீசுகின்ற மாலையையணிந்த மார்பிலும் தோள்களிலும் ஊடுருவிச்செல்லும்படி ஆயிரக்கணக்கான அம்புகளைப் பிரயோகித்தான்; (எ - று.)

இந்திரன் அநுமானுக்கு வரமளித்தபோது கொடுத்த ஒருபொற்றாமரை மாலையை அவ்வநுமான் தரித்துள்ளதனால், 'வாசநாறலங்கன் மார்பினொடு தோளின்'எனப்பட்டது; அலங்கல்-போர்க்கு அறிகுறியாகஅணிந்த தும்பைப் பூமாலையுமாம். மேருவோடென, என-எண்ணுப்பொருளது. பி-ம்:—[1]விலங்கல்வீசிய, விலங்கிமற்றது. [2]விலங்கினின்றுபடும்,விலங்கனின்றுபடும்.[3]எல்லையிற். [4]கலங்க. [5]மேனிகர்தருக்கினால். [6]உலகமேருவோவெனமதிக்கும், உலகைமேருவோடென்மதிக்கும். [7]வாசமெல். [8]மார்புமுயர்.[9]தோளுமூடுருவ,தோளினேடுருவ. (உ0௩௩)

அஉ.—அநுமானுக்குத் துணையாக நீலனென்னும் வானரன் வருதல்.

ஒன்று போல்வனவொ ராயி ரம்பகழி யூடு போயுருவ [1]வாட்டகக், குன்று [2]கால்குடைய மேலு யர்ந்திடை [3]குலுங்கு கின்றனைய கொள்கையான், மன்ற னாறுதட மேனி மேலுதிர வாரி சோர[4]வரு மாருதி, நின்று தேறுமள வின்கண் வெங்கண்[5]விழி நீலன் வந்திடை நெருக்கினன்.

(இ - ள்.) (இந்திரசித்தினுடைய) ஒன்றையொன்றுஒத்தனவான [ஒரே தன்மையனவான] ஆயிரம்பாணங்கள் (தனதுஉடம்பில்)ஊடுருவிச்செல்ல,—பொன்மயமான மேருமலை(பெருங்)காற்றுத் தாக்கிக் குடைந்துவருத்த வெளித்தோற்றத்துக்குமாத்திரம் உயர்ந்து(காணப்பட்டு) உள்ளிடம் கலகலத்தது போன்றதன்மையையுடையவனாகி (அணிந்துள்ள மாலையினால்) வாசனை வீசப்பெற்ற பெரியஉடம்பின்மேல் ரக்தவெள்ளம் பெருகப்பெற்ற அநுமான், (ஒன்றும்செய்யமாட்டாது) நின்று (என்செய்யலாமென்று) ஆலோசிப்பதற்குள்ளாக கொடுமையானகண்களையுடைய நீலனென்னும் வானரன் அவ்விடத்தில்வந்து (இந்திரசித்தை) வருத்தத்தொடங்கினான்; (எ - று.)

யாதாயினும்ஒன்றினால் ஊறுபட்டவளவிலே உடல்நிமிர்ந்து இடைகுலுங்குதல் பெருவிலங்கின்இயல்புஆதலால், அதனை மலைமேலேற்றி, 'மேலுயர்ந்திடைகுலுங்குகின்றனைய கொள்கையான்' என்றார். குலுங்குகின்ற

என்ற பெயரெச்சத்தின் அகரவீறு - தொகுத்தல். பி - ம்:—[1]வாட்டடக், [2]காலெறியமேலிழிந்திடை, கால்குலையமேலுலைந்திடை. [3]குலுங்கநின்றனைய. [4]வய. [5]அடல். (உ0௬௪)

அ௫.—நீலன் ஒருமலையை இந்திரசித்தின்மேலெறிய, அதனைத் தனதுபாணங்களால் அவன் அழித்தல்.

நீல னின்றதொரு நீல மால்வரை நெடுந்த டக்கையி [1]னிடந்து நேர், மேலெ ழுந்[2]தெரி விசும்பு செல்வதொரு வெம்மை யோடு[3]வர வீசலுஞ், சூல மந்தக [4]னெறிந்த தன்னது துணிந்து சிந்தவிடை [5]சொல்லுறுங், கால மொன்றுமறி யாம லம்புகொடு கல்வி ளு[6]னெடிய வில்லினன்.

(இ - ள்.) நீலன்பக்கத்திலிருந்ததாகிய நீலநிறமுள்ள பெரிய ஒருமலையை நீண்டபெரிய (தனது) கைகளினாற் பேர்த்தெடுத்து, அக்கினியானது மேலேகிளம்பி ஆகாயத்திற்செல்வதுபோன்ற ஒப்பற்றகொடுமையோடு போம்படி (இந்திரசித்தின்மேல்) நேராக வீசியெறிந்தவுடனே,—பெரியவில்லையேந்திய இந்திரசித்து,—யமனால் எறியப்பட்டதாகிய சூலாயுதம்போன்ற அம்மலை துண்டுபட்டுச் சிதறிப்போம்படி நடுவிற் (கணக்கிட்டுச்) சொல்லக்கூடிய காலம் சிறிதும் தெரியாதபடி [மலையையெறிந்த அந்தக்ஷணத்திலேயே மிக விரைவில் என்றபடி] (தனது) அம்புகளினால்அழித்திட்டான்; (எ - று.)

நீலன் மலையையெறிந்ததற்கும் இந்திரசித்து அதனைவீழ்த்த அம்புஎய்ததற்கும் இடையிற் சிறிதுபொழுதும் இல்லையாம்படி என்பது, 'இடைசொல்லுறுங் காலமொன்று மறியாமல்' என்பதன் கருத்து. பி-ம்:—[1]இடைந்து. [2]அரி. [3]செல. [4]எறிந்தனன்னது. [5]சொல்லினுங்,செல்லுறுங். [6]வலிய. (உ0௬௫)

அ௬.—நீலன் இந்திரசித்தின்பாணங்களினால் நடுக்கமடைதல்.

ஊக மெங்கு[1]முயி ரோடு நின்றனவு மோட வானவர்க ளுள்ளமும்,[2]மோக மெங்குமுள வாக மேருவினு மும்ம டங்கு[3]வலி [4]திண்மைசால், ஆக மெங்கும்வெளி யாக வெங்குருதி யாறு பாயவன லஞ்சுவாய், நாக [5]வெங்கணகு வாளி பாய்தொறு நடுங்கி னான்மலை பிடுங்கினான்.

(இ - ள்.) (இறந்தவையொழிய) உயிரோடிருப்பனவான மற்றைவாநரங்களனைத்தும் எல்லாப்பக்கங்களிலுஞ் சிதறியோடும்படியும், தேவர்களுடைய மனத்திலும் மற்றையோர்மனத்திலும் திகைப்புஉண்டாகும்படியும், மகாமேருகிரியைக்காட்டிலும் மூன்றுமடங்கு அதிகமான மிக்கஉறுதிபொருந்திய (நீலனுடைய) உடம்புமுழுதும் (மிகத்துளைபட்டுச் சல்லடைக்கண்போல) வெட்டவெளியாகவும், கொடிய இரத்தவெள்ளம் பெருகவும், கூர்நுனியையுடையனவும் பாம்பின்கொடுமைவிளங்குகின்றனவுமான அக்கினியும் அஞ்சும்படியுள்ள (இந்திரசித்தின்) அம்புகள் விரைந்துவருந்தோறும், மலையைப் பெயர்த்து (இந்திரசித்தின்மீது) எறிந்தவனான (அந்த) நீலன், நடுங்கினான்.

'நடுங்கினான் மலைபிடுங்கினான்'—மலையையும் அலட்சியமாகப் பேர்த்தெடுக்கவல்ல மகாவீரனான நீலனும் அஞ்சிப்பின்னிட்டுநடுநடுங்கும்படியாயிற்

றுஎன இந்திரசித்தின்விற்போர்த்திறமையை வியந்தவாறு. வெங்கண்நகுதல்-கொடுமைவிளங்குதல். பி-ம்:—1உயிரோட. 2மோகவெங்கடலின்வீழ்க. 3முதிர், நிமிர். 4தன்மையான், திண்மையான். 5வெங்கணைகள்மாரி. (௨0௩௬)

அரு.—அங்கதன் மலைகளையெறிய, இந்திரசித்து அவைகளை அம்புகளாற் பொடியாக்குதல்.

மேரு மேருவென வல்ல வல்லவென வேரி ளோடுநெடு [1]வெற்பெலாம், [2]மார்பின் மேலுமுயர் தோளின் மேலும்[3]வர வாலி காதலன் வழங்கினான், சேரு மேயவை தனுக்கை நிற்கவெதிர் செல்லு மேகடிது செல்லினும், பேரு மே[4]கொடிய வாளி யான்முறி [5]பெறுக்க லா[6]வகை நுறுக்கினான்.

(இ - ள்.) (இது) மேருமலையே மேருமலையே என்று (சிலர்) சொல்லும்படியும் (ஆராய்ந்துபார்த்த வேறுசிலர்) மேருவன்று மேருவன்று [வேறு மலை]என்று சொல்லும்படியும் அடியோடு பெரியமலைகளையெல்லாம்(பெயர்த்தெடுத்து), (இந்திரசித்தின்) மார்பின்மேலும் உயர்ந்ததோள்களின்மேலும் தாக்கும்படி வாலியின் அன்பிற்கிடமுள்ள மகனான அங்கதன் மிகுதியாக வீசியெறிந்தான்; (இந்திரசித்தின்) கையில் வில் இருக்கையிலே, அம்மலைகள் (அவனிடத்தில்) நெருங்கிச்சேருமோ? (அவனுடைய) எதிரில்தான் செல்லமாட்டுமோ? (ஒருகால்) விரைவாக (அவனெதிரிற்) சென்றாலும், (அவனது அம்புக்கு இலக்காகாமல்) தவறுமோ? (அவ்விந்திரசித்து, தனது) கொடியஅம்புகளினால், துண்டு என்ற தன்மையையும் அடையாதபடி[பொடிப்பொடியாம்படி] (அம்மலைகளை) நொறுங்கச்செய்துவிட்டான்; (எ - று.)

அங்கதன் இந்திரசித்தின்மீது வீசியெறிந்த மலைகள் மிகப்பெரியதோற்றமுடையனவாயிருந்ததனால், கண்டவர் மேருவோ அல்லவோ என்று சந்தேகிக்கும்படியாயிற்று என்பது, முதலடியின் கருத்து. 'சேருமே யவை தனுக்கைநிற்க வெதிர்செல்லுமே கடிதுசெல்லினும் பேருமே' என்றதொடர்-கவிக்கூற்று. பி-ம்:—1வெற்பெண. 2மாரின். 3உற. 4கடிய. 5பெறுக்கொணு. 6அவை.

அகூ.—இந்திரசித்தின் அம்புகளினால் அங்கதன் சோர்ந்துவிழுதல்.

நெற்றி மேலுமுயர் தோளின் மேலுநெடு மார்பின் மேலுநிமிர் தாளினும், புற்றி னூடுநுழை நாக மன்னபுகை வேக வாளிகள் புகப்புகத், தெற்றி வாளெயிறு தின்று கைத்துணை பிசைந்து கண்களொரி தீயுக, [1]வற்றி யோடுதிர வாரி சோர்வுற மயங்கி னா[2]னில முயங்கினான்.

(இ - ள்.) (அங்கதனது) நெற்றியிலும் உயர்ந்ததோள்களிலும்பரந்த மார்பிலும் நீண்ட கால்களிலும், புற்றிலேநுழைகின்ற பாம்புகள் போன்றவையாய்ப், புகைகின்ற[உக்கிரமான]வேகத்தையுடைய (இந்திரசித்தின்) பாணங்கள், பலபடியாகப் பாய,—(அங்கதன்),—தடுமாறி, ஒளியுள்ள பற்களைக் கடித்து, (இன்னதுசெய்வதென்று அறியாததிகைத்துத் தனது) இரண்டு கைகளையும் பிசைந்து, கண்களினின்று எரிகின்ற தீப்பொறி சிந்த வாடி, (தனது உடம்பினின்றுவெளியே)விரைந்துவருகின்ற இரத்தவெள்ளம் பெரு

கியபடியேயிருக்க, மயக்கமடைந்து தரையிற்சோர்ந்துவிழுந்தான்; (எ-று.)—
பி-ம்:—[1]வற்றிேனுடு, வற்றியூடு, உற்றிலாது. [2]சிலை. (௨௦௩௮)

அஎ.—தன்பக்கத்துச்சேனை பலபடியாக அழிந்தமைகண்ட இலக்குமணன் விபீஷணனை நோக்கி ஒன்றுகூறத் தொடங்குதல்.

[1]மற்றை வீரர்கடம் மார்பின் மேலுமுயர் தோளின் மேலுமழை மாரிபோற், கொற்ற [2]வெங்கணை [3]யுலக்க வெய்தவை குளிப்ப நின்று டல் குலுங்கினர், இற்[4]ற விந்தன பெரும்ப தாதியுயி [5]ருள்ள வெங் கணு [6]மிரிந்தவப், பெற்றி கண்டிளைய வள்ள [7]லொள்ளெரி பிறந்த கண்ணனிவை [8]பேசினன்.

(இ - ள்.) (அநுமான் நீலன் அங்கதன் தவிர) மற்றைவாநரவீரர்களும், தமதுமார்பின்மேலும் உயர்ந்ததோள்களின்மேலும் மழைத்தாரைகள்போல (எதிரிகள்) அழியும்படி (இந்திரசித்தினால்) எய்யப்பட்டனவாகிய வெற்றி பெற்ற கொடியஅம்புகள் உட்புகுந்துவருத்த, நின்றநிலையிலே (திகைத்து) உடல்நடுங்கினார்கள்; பெரியகாலாட்சேனையான வாநரசேனைகள், இறந்தொழிந்தன; (அரிதில்தப்பி)உயிர்பிழைத்தவைகளோ, எல்லாப்பக்கங்களிலும் சிதறியோடின; அத்தன்மையைகண்டு,(இராமனுக்கு) இளையவனான உதாரகுணமுள்ள இலக்குமணன், ஒள்ளியதீப்பொறி பறக்குங் கண்களையுடையவனாய் (ப் பெருங்கோபங்கொண்டு), இவற்றைக் கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை,அடுத்த கவியிற் காண்க.

பதாதி-(வாகனமில்லாமற்)கால்களினால் நடந்துசெல்லும் காலாட்படை.
பி-ம்:—[1]மற்று, மற்ற. [2]வன்கணை. [3]உலக்கவெய்தன, இலக்கமெய்தவை. [4]அவிந்தது. [5]உள்ளது. [6]இரிந்ததப், உயர்ந்தவப். [7]ஒள்ளரி. [8]பேசுவான். (௨௦௩௧)

வேறு.

அஅ.—விபீஷணனைநோக்கி இலக்குமணன் கூறியவார்த்தை.

பிழைத்தது கொள்கை [1]போரப் பெரும்படைத் தலைவர் யாரும்
[2]உழைத்தனர் குருதி வெள்ளத் [3]துலந்தது முலப்பிற் றன்றே
அழைத்திவன் றன்னை யானே யாருயிர் [4]கொளப்படாதே
இழைத்தது பழுதே [5]யன்றோ [6]வீடண வென்னச் சொன்னான்.

(இ - ள்.) (இலக்குமணன் விபீஷணனைநோக்கி), 'விபீஷணனே! (நாம் கொண்ட) கொள்கை மிகவும்தவறிவிட்டது; (எங்ஙனமெனின்,—) (நமது) பெரியசேனைத்தலைவர்களெல்லாரும், இரத்தப்பெருக்கில் அழுந்தி வருந்தினார்கள்; இறந்த (நமது) சேனையும் குறைவுடையதன்று [மிக்கபெருந்தொகையுடையதே];இவ்விந்திரசித்தை (ப் போருக்கு) அழைத்து நானே (இவனது) அரிய உயிரை வாங்கியிருக்கக்கூடாதா? (அவ்வாறு செய்யாமல் இவ்வாறு) செய்தது [நமது சேனைத் தலைவர்களையும் சேனையையும் இவனோடு போர் செய்யவிட்டது], வீணேயன்றோ!' என்று கூறினான்; (எ - று.)

கொள்கை - இந்திரசித்தினுடன் இலக்குமணன்தானே போர்செய்யாமல்வாநரவீரர்களை உடன்கொண்டு போர்செய்யவேண்டுமென்று கொண்ட

எண்ணம். உலந்ததும் உலப்பிற்றன்றே என்பதற்கு - (அழிந்ததுபோக) மிச்ச மாய்கின்றதும் வலியழிவுள்ளதாயிற்றன்றோ வென்று உரைத்தலுமாம். போத-மிகவும். கொளப்படாதே, ஏ-வினா. பி-ம்:—1போகப், போயப். 2உழைத்ததுங். 3உலந்ததும்.4கோட்படாதே.5என்னே, என்றோ.6வீடணா. (உ0௬0)

அகூ.—விபீஷணன் இலக்குமணனது வார்த்தையை அங்கீகரித்தல்.

ஐய[1]வீ தன்ன தேயா [2]லாயிர கோடி தேவர்
எய்தின [3]ரெய்தி னூரே யிடுபட் [4]டிரிந்த தல்லாற்
செய்தில ரிவனை [5]யொன்று நீயிது தீர்ப்பி னல்லால்
உய்[6]திற னுண்டோ [7]வேறிவ் வுலகினுக் [8]குயிரோ டென்றான்.

(இ - ள்.) 'தலைவனே! (நீ கூறிய)இது உண்மையே;(முன்னொருகாலத்தில்), (இவ்விந்திரசித்தின்முன் போர்புரிதற்கு) மேன்மேல் வந்தவர்களாகிய மிகப்பலதேவர்கள் (தங்கள்) வலிமையொழிந்து சிதறிப்புறங்கொடுத்து ஓடியதல்லாமல், (தாங்கள் மிகப்பலராயிருந்தும்) இவனொருவனை யாதொன்றும் செய்யமாட்டாதவராயினர்; (இவனால் நேர்ந்த) இத்துன்பத்தை நீ நீக்கினாலல்லாமல் [நீ இவனைக்கொன்றா லன்றி] இவ்வுலகத்துப்பிராணிகட்கு உயிரோடுபிழைக்கும் வழி வேறேஉள்ளதோ? [ஒருவழியுமில்லை யன்றோ]' என்று (இலக்குமணனைநோக்கி விபீஷணன்) கூறினன்; (எ-று.)

மிகப்பல தேவர்களே ஒருங்குதிரண்டுவந்தும் இவன்முன் நிற்கமாட்டாது சிதறியோடின ரென்றால் இவ்வானரர்கள் இவனுக்கு எம்மாத்திரம் என்பது, இரண்டாவதுவாக்கியத்தின் கருத்து. பதினான்குவருஷம் நித்திரையின்றியிருந்த ஒருவனாலன்றி மற்றுஎவராலும் கொல்லமுடியாதபடி வரம்பெற்றிருந்த இந்திரசித்தை, அங்ஙனமே வனத்தில் இராமபிரானுக்குப் பாதுகாவலாகும்பொருட்டுத் துயிலின்றியிருந்த இலக்குமணனே கொல்லவல்லவனென்பான், 'நீஇது தீர்ப்பினல்லால் உய்திறனுண்டோ வேறுஇவ்வுலகினுக்கு உயிரொடு'என்றான். பி-ம்:—1கேள்.2ஆயிரங்.3எய்தினார்களீடு,எய்தினூரெய்தி. 4இருந்தது. 5இன்று. 6திறம், திறல். 7மற்றிவ். 8உயிர்கொடு, உயிர்கொண்டு.

கூ0.—இந்திரசித்து ஒற்றனைவினவி இலக்குமணனை யறிதல்.

என்பது சொல்லக் கேட்ட விந்திர வில்லி னோடும்
[1]பொன்பொரு மேக மொன்று வருவது போல்கின் றானை
[2]முன்பனை முன்பு நோக்கி யிவன்கொலாம் பரதன் முன்னோன்
றன்பெருந் தம்பி யென்றா னாமெனச் சாரன் சொன்னான்.

(இ - ள்.) என்று (விபீஷணன்) சொன்னவார்த்தையைக் கேட்டவனாகிய பொன்னையொத்த [பொன்னிறமுடைய] ஒருமேகம் இந்திரதநுசோடு வருவதை யொப்பவனும் வலிமையுடையவனுமான இலக்குமணனை (இந்திரசித்து தனது) எதிரிலேபார்த்து, (ஒற்றனைநோக்கி), 'பரதனது தமையனான இராமனது பெரியதம்பியாகிய இலக்குமணன் இவன்தானோ?' என்று வினவினன்; (அதற்குவிடையாக), ஒற்றன் 'ஆம்' என்று சொன்னான்; (எ - று.)

சிலசமயங்களிலே காலை மாலைகளிற் சூரியனுக்கு எதிராகவானத்து மேகத்தினிடத்தில் விற்போல்வளைந்து பலநிறத்துடன் காணப்படும் வடி

வத்தை 'இந்திரவில்' என்றல், மரபு: மேகத்திற்கு அதிபதி இந்திரனாதலால், அதிற் காணப்படுகிற இவ்வில்லுருவத்தை 'இந்திரதநுசு' எனக்கூறுகின்றனர் போலும். பரதனென்னும்பெயர்-(இராமன் வனவாசஞ் செல்லுங்காலத்தில் இராச்சியபாரத்தைப்) பரிக்கும்வல்லமையுடையானென்று,முன்னமே ஞான திருஷ்டியினாலுணர்ந்த வசிஷ்டரால் தசரதனது இரண்டாவதுபுத்திரனுக்கு இடப்பட்டது. 'பெருந்தம்பி' என இலக்குமணனைக் கூறினது, இவனுக்குப் பின்பிறந்தவனாகிய சத்துருக்கினனை விலக்கும்பொருட்டு; தமையனாரைவிட் டுப்பிரியாது உடன்வந்த பெருமையுடைய தம்பியுமாம். பி-ம்:—1பொன் புரை, பொன்புணர். 2முன்பனும். (உ0சுஉ)

கூக.—பலஇராக்கதசேனைத்தலைவர்கள் ஒருங்குதிரண்டு இலக்குமணன்மேற் செல்லுதல்.

தீயவ னிளவ 1றன்மேற் 2செல்வதன் முன்னஞ் செல்கென்று
ஏயின ரொருவ ரின்றி யிராக்கதத் தலைவ ரெங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய் 3நண்ணினை நாங்கள் காணப்
போயினி யுய்வ தெங்கே யென்றெரி விழித்துப் புக்கார்.

(இ - ள்.) கொடியவனான இந்திரசித்து இளையபெருமாள்மீது செல் வதற்குமுன்பே,—('நீங்கள் இலக்குமணனோடு போர்செய்யச்)செல்லுங்கள்' என்றுசொல்லித் தங்களைஏவினவர் ஒருவருமில்லாமலே படைத்தலைவராகிய இராக்கதர்கள், (இலக்குமணனைநோக்கி), 'எங்கள்தலைவனான இராவணனது மகனை [அதிகாயனை] க் கொன்றவனே! நாங்கள் காண [எங்கள்கண்ணெதி ரில்] வந்து அகப்பட்டுக்கொண்டாய்: இனிமேல் (நீ எங்களினின்று தப்பிப்) பிழைத்துப்போவது எவ்வாறோ?' என்று நெருப்புப்போல(உக்கிரமாக)விழித் துப்பார்த்து(ப் போர்செய்ய) நெருங்கினார்கள்; (எ - று.)

இலக்குமணனுக்கு உபபலமாகவந்த வாநரர் பலஅரக்கருடன்வரும் இந் திரசித்தோடு தாம் முந்திப்பொருதமைபோல, இந்திரசித்துக்கு உபபலமாக வந்தஅரக்கர் முந்தி இலக்குமணனுடன் பொரத்தொடங்கினரென்க.பி-ம்:— 1தன்னை. 2சேர்வதன். 3நண்ணின. (உ0சுங)

கூஉ.—இலக்குமணனது வெற்றி.

கோடிநூ 1றமைந்த கூட்டத் திராக்கதர் 2கொடித்திண் டேரும்
ஆடன்மாக் களிறு மாவும் 3கடாவின ரார்த்து மண்டி
மூடினார் மூடி னாரை முறைமுறை நூ4றுத்து வாகை
சூடினா னிராமன் பாதஞ் சூடிய தோன்ற றம்பி.

(இ-ள்.) நூறுகோடிக்கணக்காகத் திரண்ட பெருங்கூட்டமான இராக்க தர்கள்,—துவசங்கள்கட்டிய வலியதேர்களையும் பலம்பொருந்திய பெரிய யானைகளையும், குதிரைகளையும் (இலக்குமணன்மீது) செலுத்தினவர்களாய் ஆரவாரஞ்செய்து நெருங்கி (அவனை இடைவிடாது) வளைந்துகவிந்துசூழ் தார்கள்; (அவ்வாறு தன்னை) வளைந்துகொண்ட அரக்கர்களை இராமபிரானது திருவடிநிலைகளை (த் தனதுமுடிமேற்) சூடியவனான பரதனது தம்பியாகிய

இலக்குமணன் முறைப்படியாகத் துணித்துக்கொன்று வெற்றிமாலையைச் சூடினான்; (எ - று.)

வாகை-போரிற் பகைவென்றோர் அணிதற்கு உரியது. பரதன் காட்டிலிருந்து இராமனைமீட்டுவருதற்காகச் சித்திரகூடஞ்சென்று அங்குஎழுந்தருளியிருந்த ஸ்ரீராமனை அயோத்திக்குத் திரும்பிவரும்படி வணங்கிவேண்ட, அப்பெருமான் அதற்கு இசையாமல் பதினான்குவருடங்கழிந்ததும் வருவேனென்றுஉறுதிகூறித் தனக்குப் பிரதிநிதியாகத் தன்மரவடிகளை அப்பரதனுக்குக் கொடுத்தருள, அவன் அவற்றைத் தலையால் தாங்கிச்சென்று, அவற்றிற்கு இராச்சியபட்டாபிஷேகமுஞ் செய்தனனென்பது வரலாறு. பி-ம்:—1இயைந்த.2கோடித்திண்டேர்.3அடங்கலும்,மடங்கலூர்ந்து.4முனிந்து. (உ0சச)

கூரு.—அப்பொழுது உலகத்திலுண்டான குழப்பம்.

அதிர்ந்தன வுலக [1]மேழு மனற்பொறி யசனி யென்னப்
பிதிர்ந்தன [2]மலையும் பாரும் பிளந்தன பிணத்தின் [3]மேன்மேல்
உதிர்ந்தன தலைகண் மண்டி யோடின வுதிர நீத்தம்
விதிர்ந்தன வமரர் கைகள் [4]விளைந்தது [5]கொடிய வெம்போர்.

(இ - ள்.) (இலக்குமணனெய்த அம்புகளின் உக்கிரத்தன்மையால்), எழுலோகங்களும் அதிர்ச்சிபெற்றன; தீப்பொறிகளையுடைய இடி(விழுந்தாற்)போல, மலைகளும் தூளாகிச் சிதறின; பூமியினிடங்களும் பிளவுபட்டன; (போர்க்களத்தில்இறந்துவிழுந்துகிடந்த)பிணங்களின்மீது,(அம்புகளால்துணிபட்டுத்)தலைகள்மேன்மேல்விழுந்தன;ரத்தவெள்ளம் மிக்குப்பெருகின;(இவற்றைக்கண்ட) தேவர்களுடைய கைகளும் நடுநடுங்கின; (இவ்வாறாக இலக்குமணனது) மிகக்கொடிய யுத்தம் மூண்டது; (எ - று.)—இச்செய்யுள்-போரின் மிக்ககொடுமையை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. பி-ம்:—1எங்கும். 2மழையும். 3குன்றத்து, குன்றம். 4விளைந்தன. 5கோடி. (உ0சரு)

கூச.—இலக்குமணனது அம்புகளின் சிறப்பு.

[1]விட்டனன் [2]விசிகம் வேகம் [3]விடாதன [4]வீரன் மார்பிற்
பட்டன வுலக மெங்கும் [5]பரந்தன பதாகைக் காட்டைச்
சுட்டன துரக ராசி துணித்தன [6]பனைக்கை [7]மாவை
அட்டன கூற்ற மென்ன [8]வடர்ந்தன வனந்த மம்மா.

(இ - ள்.) மகாவீரனான இலக்குமணன் (எப்பொழுதும்) வேகத்தை நீங்காதனவான எல்லையில்லாதனவான அம்புகளைப் பிரயோகித்தான்; (அவ்வம்புகள், இராக்கதர்களுடைய) மார்பில் தைத்தன; உலகமுழுவதும் பரவின; (அவர்களுடைய) கொடிகளின்தொகுதியை யெரித்தன; குதிரைக்கூட்டத்தைத் துண்டித்தன; பனைமரம்போன்ற துதிக்கையையுடைய யானைகளைக் கொன்றன; யமன்போல (க் கொலைத்தொழிலைச் செய்துகொண்டு போர்க்களம்முழுதும்) நெருங்கின; (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல்; இலக்குமணனது அம்புகளின் செயலை வியந்தவாறு.

மேல் சOO-ஆம் செய்யுள்முதல்தான் இந்திரசித்துக்கும் இலக்குமணனுக்கும் போர் கூறுகின்றார்; ஆதலால், இது, அவனுக்குமுன் எதிர்த்துவந்து

இராக்கதசேனைத்தலைவர்களோடு இலக்குமணன்செய்த போரைக்கூறியதாம். காடு - இங்கு, தொகுதியென்னும் பொருளது. 'அனந்தம்' என்பது, விசிகம் என்பதனோடு இயையும். பி - ம்:—1விட்டன. 2விசிகை. 3வீழ்ந்தன. 4வீரர். 5படர்ந்தன. 6பணைக்கை. 7வேழம். 8பட்டன. (உ௦சகூ)

கூ௩.—மிகப்பலஅரக்கரழிவும், இலக்குமணனது பாணவர்ஷத்தின் சிறப்பும்.

1உலக்குந ருலக்கின் றுரை யெண்ணுவா னுற்ற 2விண்ணோர்
கலக்குறு கண்ண 3ராகிக் கடையுறக் 4காண லாற்றார்
விலக்கரும் பகழி மாரி 5விளைக்கின்ற விளைவை 6யுன்னி [றார்.
இலக்குவன் 7சிலைகொ டேகொ 8லெழுமழை 9பயின்ற 10தென்

(இ - ள்.) (இலக்குமணனுடைய அம்புகளால்) மிகுதியாக இறக்கும் அரக்கர்களைக் கணக்கிடத்தொடங்கின தேவர்கள்,—(அளவிறந்த திரளைப் பார்க்கமுடியாது) கலக்கம்மிக்க கண்பார்வையுடையவர்களாய் முடிவுவரையிற் காணமாட்டாதவ ரானார்கள்; (மற்றும்), (ஒருவராலும்) விலக்கமுடியாத அம்புமழையை(இலக்குமணன்)உண்டாக்குகின்ற செய்தியை உள்ளத்திற்கொண்டு,—'ஏழுமேகங்களும் (இடைவிடாது பொழியுந்தன்மையைப்)பழகியது, இலக்குமணனதுவில்லினிடத்தில்தானோ!' என்றுவியந்துகூறினார்கள்; (எ-று.)

இலக்குமணனது ஒற்றைவில்லினின்று பல்லாயிரம்பாணங்கள் இடைவிடாது வெளிப்பட்டு மிக்கபகைவர்களை வெகுவிரைவில் அழித்தன வென்றவாறு. முன்னிரண்டடி-தன்மைநவிற்சியணியும், பின்னிரண்டடி - தற்குறிப்பேற்றவணியுமாம். ஏழுமேகம்-ஸம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. பி-ம்:—1உலக்கின்றார். 2வானோர். 3 நோக்கிக். 4காணலானா . 5வீழ்கின்ற. 6நோக்கி. 7சிலைகொண்டேயே, சிலையொடேசொல். 8எழிலியும். 9ஈன்றது. 10என்பார். (உ௦சஎ)

கூ௫.—இதுமுதல் மூன்றுகவிகள்-படுகளச்சிறப்பு.

1ஒளியொண் 2கணைக டோறு முந்திய வேழ மொற்றை
வாளியின் 3றலைய பாரின் 4மறிவன மலையிற் சூழ்ந்த
5ஆளியின் றப்பின் வீரர் 6பொருகளத் தார்த்த வாழித்
தூளியின் 7றொகைய வள்ளல் 8சுடுகணைத் தொகையு 9மம்மா.

(இ - ள்.) (இலக்குமணன் பிரயோகித்த) வரிசையான ஒள்ளிய அம்புகளொவ்வொன்றினாலும் தாக்கிவீழ்த்தப்பட்ட யானைகள்,—(ஒவ்வொன்றும்) ஒவ்வோர் அம்பின்முனையையுடையனவாய்,பூமியில் இறந்துவிழுந்து மலைகள் போல(ப் போர்க்களமெங்கும் இராசியாகக்)குவிந்துகிடந்தன; சிங்கம்போன்ற வலிமையையுடைய வீரர்கள் போர்செய்கின்ற (அந்த)யுத்தகளத்திலே இலக்குமணனது கொல்லுந்தன்மையனவான அம்புகளின் எண்ணிக்கையும் ஆரவாரஞ்செய்கின்ற கடலினுள்ள மணல்களின் தொகையையுடையன; (எ-று.) —அம்மா-வியப்பிடைச்சொல்.

இலக்குமணன் ஒவ்வொருயானைக்கு ஒவ்வோரம்புவீதமாக அளவிறந்த அம்புகளையெய்து பல்லாயிரம்யானைகளைக் கொன்று மலைமலையாகக் குவித்

தன னென்றவாறு. ஒளி-வரிசை. பி-ம்:—1மீளி. 2கணைகளோடும். 3தலைகள். 4மறிந்தவன்மலையிற்,மறிந்தினமலையிற், மறிவனமழையிற். 5ஆளியின்றுழனி, ஆளியிற்றுளக்கி,பூளையிற்றுளக்கி. 6அமர்க்.7தொகையும். 8சொரி. 9அலைதே. ()

கூஎ. பிறவியிற் பெரிய 1நோக்கிற் பிசிதமுண் டுழலும் 2பெற்றிச்
3சிறையன வென்ன நோக்கித் தேவருந் 4திகைக்கத் 5தேற்றித்
துறைதொறுந் தொடர்ந்து வானம் வெளியறத் துவன்றி வீழும்
பறவையிற் பெரிது 6பட்டார் பிணத்தின்மேற் 7படிவ மாதோ.

(இ - ள்.) '(இவை),—பிறப்பிலேயே[இயற்கையிலேயே]பெரிய தோற்றத்தையும் மாமிசத்தையேயுண்டுதிரியுந்தன்மையையும் இறகுகளையுமுடையனவான பறவைகளேயாம்' என்று தேவரும் பார்த்துத் திகைப்படைய, '(பறவைகளல்ல, பாணங்களே' என்று அவர்களைத்) தெளியவிளக்கி,—(இலக்குமணனெய்த பாணங்கள்,—போர்க்களத்திற்) பலவிடங்களிலும் நிறைந்து, ஆகாயத்தில் இடைவெளியில்லாமல் நெருங்கி(த் தரையிற்கிடக்கிற பிணங்களின் மாமிசத்தைத் தின்னும்படி அவற்றின்மேல்)விழுகிற பறவைகளைப்பார்க்கிலும் பெரியனவாக இறந்தவர்களுடைய பிணங்களின்மேற் பொத்துண்டு கிடப்பனவாயின; (எ - று.)

இறகுகளோடுகூடிப் பிணங்களைக்கவ்விக்கொண்டு பெருந்தோற்றத்தோடிருந்த அம்புகளுக்கு, இறகுகளோடுகூடிப் பிணங்களை அலகினாற் குத்திக்கொண்டு பேருருவமுடையனவாயுள்ள பறவைகள் உவமைபாம்; ஐயவணி. அம்புகள் விரைந்துசெல்லும்பொருட்டு அவற்றிற்கு இருமருங்கிலும் இறகுகள்கட்டுதல், மரபு: இதுபற்றி, வடமொழியில் அம்புகளுக்கு 'பத்ரீ'என ஒரு பெயர். பிசிதம்-வடசொல்.இனி, இச்செய்யுளுக்கு-தோற்றத்திற்பருத்தவடிவத்தையும் ஊனைத்தின்று திரியுந் தன்மையையும் இறகுகளையுமுடையன வென்று (தம்மை)நோக்கித் தேவர்களும் மிகவியக்கும்படி தம்மைக் காட்டிக்கொண்டு, (இலக்குமணனம்புகள்), போர்க்களத்திலெங்குஞ் சென்று வானத்தில் இடைவெளியில்லாதபடி (மறைத்துக்கொண்டு நிறைந்து)நெருங்கிக் கீழிறங்கும் (கழுகுமுதலிய) பறவைகள்போல மிகுதியாக இறந்துவிழுந்த அரக்கர்களுடைய உயிர்நீத்த உடலிற் பற்றிப் பதிந்துகிடப்பனவாயின வென்றும் உரைகொள்ளலாம். பி-ம்:—1நோய்க்குத். 2தோற்றம்.3சிறையென, சிறியவே, சிறையவே. 4திகைத்துத், திகைப்பத். 5தெற்றித், தோற்றித். 6பட்ட. 7படியுமம்மா, பகழிமாதோ. (உ0சக)

கூஅ. திறந்தரு கவியின் சேனை செறிகழ 1னிருதன் சீற
2இறந்தன கிடந்த வெள்ள மெழுபதிற் 3பாதி மேலும்
பறந்தலை முழுதும் பட்ட வஞ்சகர் படிவ 4மூடி
5மறைந்தது 6குருதி யோடி மறிகடன் 7மடுத்தி லாத.

(இ - ள்.) கட்டிய வீரக்கழலையுடைய இராக்கதனாகிய இந்திரசித்து கோபித்துப் போர்செய்ததனால், வலிமை மிக்க வாநரசேனைகள் முப்பத்தைந்துவெள்ளத்திற்குமேல் இறந்து கீழ்விழுந் துகிடந்தன;போர்க்களம்முழுவதும் இறந்த அரக்கர்களின் உடம்புமூடுதலால்,மறைந்தது;(அங்குப்பெருகிய) ரத்த

வெள்ளங்கள் பாய்ந்தோடிச்சென்று அலைமடங்குகின்ற சமுத்திரத்தில் அடங்காவாயின; (எ - று.)

வெள்ளம் எழுபதிற் பாதிமேலும்-நாற்பதுவெள்ளம்போலும்; "ஐய அமர்த்தலை, நீயு நாற்பதுவெள்ள நெடும்படை, மாய வெங்கணை மாரி வழங்கினை" என மேல்வருவது காண்க. கடலினும்மிக்கது இரத்தப்பெருக்கு என்பது, ஈற்றடியின் கருத்து. பி-ம்:—[1]நிருதர், அரக்கர். [2]இறந்தது. [3]பாகமென்னப், பரக்குமென்னப். [4]மூட. [5]மறைந்தன. [6]குருதியோடு. [7]மடுத்தமாதோ.()

கூகூ.—அரக்கர்களின் அபஜயம்.

கையற்றார் கால்க ளற்றார் கழுத்தற்றார் கவச மற்றார்
மெய்யற்றார் குடர்கள் [1]சோர விசையற்றார் [2]விளிவு மற்றார்
[3]மையற்றார்க் கரியுந் தேரும் வாசியு மற்று மற்றார்
உய்யச்[4]சாய்ந் தோடிச் சென்றா ருயிருள்ளா ராகி யுள்ளார்.

(இ - ள்.) (அரக்கர்களிற்பலர்), கைகள் அறுபட்டார்கள்; கால்கள் அறுபட்டார்கள்;கழுத்து அறுபட்டார்கள்; கவசம் அறுபட்டார்கள்; உடம்பு[மார்பு] அறுபட்டார்கள்; குடல்கள் அறுபட வேகம்ஒழிந்தார்கள்; (ஒருவரையொருவர்) கூப்பிடுகிற சக்தியும் ஒழிந்தார்கள்; மதமயக்கத்தையும் கிண்கிணிமாலையையுமுடைய யானைகளும் தேர்களும் குதிரைகளும் மற்றுமுள்ள ஆயுதம் முதலியவைகளும் ஒழியப்பெற்றார்கள்;(இவர்கள் இவ்வாறாக), உயிருடனிருப்பவர்களாகிய அரக்கர்கள், (தாம்)உயிர்தப்பும்படி, நிலைகெட்டு முதுகுகாட்டி ஓடிப்போனார்கள்; (எ - று.)—கவசம்-இரும்பு முதலியவற்றாலாகிய உடம்பின்மேற்சட்டை; வடசொல். சொற்பின்வருநிலை பணி. பி - ம்:—[1]அற்றார். [2]விழியும். [3]மையற்றார்கரியும். [4]சார்ந்தோடியுற்றார். (உ௦௬௪)

௪௦௦.—இலக்குமணனை இந்திரசித்து நெருங்க அநுமான் அங்கு வருதல்.

வற்றிய கடலு ணின்ற மலையென மருங்கின் யாருஞ்
சுற்றின ரின்றித் தோன்றுந் தசமுகன் [1]றோன்ற றன்னித்
[2]தெற்றின புருவத் தோன்றன் மனமெனச் செல்லுந் [3]தேரான்
உற்றன [4]னிளைய கோவை யனுமனு முடன்வந் துற்றான்.

(இ - ள்.) நீர்வற்றியகடலுள் (தனியே) நின்ற மலைபோல, (தனது) பக்கங்களிற் சூழ்ந்துநின்றவ ரொருவரு மில்லாமல் [தன்னந்தனியனாய்க்] காணப்படுகிற பத்துமுகங்களையுடையவனான இராவணனதுமகனாகிய இந்திரசித்து,—(தன்பக்கத்தில் யாவரும் இறந்ததனால் வருந்தித்)துடித்து,(கோபத்தினால்) நெறித்த புருவத்தையுடையவனாகி, தனது மனம்போல (மிகவிரைந்து)செல்லுகின்ற தேரின்மேலுள்ளவனாய், இளையபெருமாளை நெருங்கினான்; (அவ்வளவில்), உடனே அநுமானும், (அங்கு) வந்துசேர்ந்தான்; (எ - று.)—இவன்பக்கத்துவீரரெல்லாருமொழியத் தன்னந்தனியனாய்ப் போர்க்களத்தில் நின்றஇந்திரசித்துக்கு,நீரெல்லாம்வற்றிய கடலின்நடுவில்நின்றமலை உவமை. பி-ம்:—[1]தனையனுள்ளம். [2]தெற்றியபுருவத்தோளான், தெற்றியபுருவக்கோளான். [3]தேர்மேல். [4]இளவறன்னை. (உ௦௬௫)

௧௦௧.—அநுமான்மீது ஏறிய இலக்குமணனும் இந்திரசித்தும் ஒருவர்மீதொருவர் அம்புசோரிதல்.

தோளின்மே லாதி யைய வென்றடி தொழுது நின்றான்
ஆளி[1] போன் மொய்ம்பி னானு மேறின னமர ரார்த்தார்
[2]காளியே யனைய காலன் கொலையன கனலின் வெய்ய
வாளிமேல் வாளி தூர்த்தார் மழையின்மேன் மழை[3]வந் தன்னார்.

(இ - ள்.) (அநுமான் அங்குவந்தவுடனே இலக்குமணனை நோக்கி), 'தலைவனே! (எனது) தோளின்மேல் ஏறியருள்வாய்' என்றுகூறி (அவனது) பாதங்களில் வணங்கிநின்றான்; சிங்கம்போன்ற வலிமையுடைய அவ்விலக்குமணனும் (அவன்வேண்டுகோளுக்கிணங்கி அவ்வநுமான்தோளில்) ஏறினான்; (அதுகண்டு களித்து), தேவர்கள் ஆரவாரஞ்செய்தார்கள்; (உடனே), ஒரு மேகத்தின்மீது மற்றொருமேகம் (போர்செய்ய) வந்தாற்போன்ற தன்மையுடையரான (இலக்குமணன் இந்திரசித்துஎன்ற) அவ்விருவரும்,—காளியையொத்துப் பகைவெல்லுந்தன்மையனவும் யமன் (போலக்) கொல்லுந்தன்மையுடையனவும் நெருப்பைக்காட்டிலுங் கொடுமையுடையனவுமான பாணங்களின்மீது பாணங்களாக (ஒருவர்மீதுஒருவர் மேன்மேல்) தூர்த்தார்; (எ-று.)

அம்புமழையை இடைவிடாதுசொரிகிற இவ்விரண்டுவீரர் எதிர்த்துநின்றதற்கு, நீர்சொரிகிற இரண்டுமேகங்கள் எதிர்த்துநிற்றலை இல்பொருளுவமையாகக் கூறினார். தேரிலேறியஇந்திரசித்து, அநுமான்மீதுஏறிய இலக்குமணன்என்றஇவ்விருவர்க்குந் தனித்தனி மேகத்தின்மீதுவரும்மேகம்உவமையெனவுங் கொள்ளலாம்; ஊர்திகளுக்கு மேகம் விரைவில் உவமைகூறப்படும். காளி-மகிஷாசுரமர்த்தனஞ்செய்வதற்காகப் பார்வதிகொண்டதோர் அவதாரவிசேஷம்; இவள், பாலைநிலக்கடவுள்: இப்பெயர், கருநிறமுடையவளென்றுபொருள்படும்; காளி - விஷமும், பாம்பின் நச்சுப்பல்லில் ஒன்றுமாம். பி-ம்:-
[1]ஏய். [2]கூளியே, காளியை. [3]வீழ்ந்தென்ன. (௨௦௫௩)

௧௦௨.—இதுமுதல் இருபத்துநான்குகவிகள் - இந்திரசித்து இலக்குமணன் என்ற அவ்விருவர்க்கும் நேர்ந்த போரைத் தெரிவிக்கும்.

இடித்தன சிலையி னாண்க [1]ளிரிந்தன திசைக [2]ளிற்று
வெடித்தன [3]மலைகள் விண்டு பிளந்தன [4]விசும்பு மேன்மேல்
பொடித்த[5]விவ் வுலக மெங்கும் [6]பொழிந்தன பொறிகள் பொங்கிக்
கடித்தன [7]கணைக ளோடு கணைகடம் மயில்வாய் கவ்வி.

(இ - ள்.) (அவ்விருவரது) வில்லின்நாணிகள் இடியிடித்தாற்போலப் பேரொலிசெய்தன; (அவ்வொலியின்மிகுதியால்), திக்குக்கள் இற்று நிலைகெட்டன; மலைகள் விண்டு வெடிபட்டன; மேலுலகங்கள் பிளவுபட்டன; (அந்நாணொலியினால்) இவ்வுலகமுழுதும் தோன்றியவையான தீப்பொறிகள் மிக அதிகமாக நிறைந்தன; (ஒருவர்எய்த) அம்புகளை (மற்றொருவர் எய்த) அம்புகள் (தங்கள்)கூரியவாயினாற் கவ்விச் சிறிக்கடித்தன; (எ - று.)

முதல்மூன்றடிகள் - உயர்வுநவிற்சியணி: இது, நாணொலியின் கடுமையைவிளக்கும். ஈற்றடியில், அம்புகள் ஒன்றின்மேலொன்றுபாய்தலை அயில்வாய்கவ்விப்பொங்கிக் கடிப்பனவாகக்குறித்தார். வாய்-இங்கு, நுனி. 'பொடித்த' என்பதற்கு - (அந்நாணொலியினுலாகிய அதிர்ச்சியினுல்) மயிர்ச்சிலிர்ப்படைந்த என்றுவது, (அதனுற்) பொடியாகப்பட்ட என்றுவது பொருள்கொண்டு, இவ்வுலகம்என்பதற்கு அடைமொழியாக்கினுமாம். முன்னேயவுரையில், இவ்வுலகமெங்கும்பொடித்த பொறிகள் மேன்மேற் பொழிந்தன என்க. பி-ம்:—[1]எரிந்தன, எறிந்தன. [2]அற்று. [3]அண்டம். [4]விசும்புமென்னப். [5]பொடித்தன. [6]பொரிந்தன. [7]கணேகளோடும். (உOருச)

க0ரு. அம்பினே டம்பொன் றென்றை [1]யறுக்கமற் றறுக்கி லாத
[2]வெம்பொறி கதுவ விண்ணில் வெந்தன கரிந்து [3]வீழ்ந்த
உம்பரு [4]முணர்வு சிந்தி யொடுங்கின ருலக மியாவும்
[5]கம்பமுற் [6]றுலேந்த வேலைக் [7]கலமெனக் கலங்கிற் [8]றண்டம்.

(இ-ள்.) அம்புகளோடு எதிரம்புகள் (தாக்கும்போது) ஒன்றையொன்று அறுக்க, அங்ஙனம் (ஒன்றையொன்று) அறுக்கமாட்டாதனவான (வேறுசில) அம்புகள், கொடிய தீப்பொறிகள்பற்ற ஆகாயமார்க்கத்திலே வெந்துகருகிக் கீழ்விழுந்தன; (அக்கொடுமையைப்பார்த்துப் பொறுக்காத) தேவர்களும் அறிவுகலங்கி யொடுங்கினுர்கள்; உலகங்களெல்லாம் நடுக்கங்கொண்டு வருந்தின; உலகவுருண்டை கடலிற்செல்லுங் கப்பல்போல அசைந்துநடுங்கிற்று.

ஒன்றேடொன்றுதாக்கும்போது சிற்சிலபொருள்களில் தீப்பொறியுண்டாதல், இயற்கை. மற்று - வினைமாற்று. பி - ம்:—[1]அறுத்தனவறுத்திலாத, அறுத்தவற்றறற்றிலாத, அறுத்தற்றவற்றிலாத. [2]வெம்புவெஞ்சரங்கடம்மில், வம்புவெம்பொறிகடுள்ளி, வெம்புவபொறிகடுன்னி. [3]வீய்ந்த. [4]பிறருநீக்கியோங்கின,உணர்வுநீங்கியொடுங்கினர். [5]தம்பமிற்று.[6]எழுந்தவேலைக், உலேந்துகாலிற், உலேந்தவேலை. [7]கடல்களும், கடலெனக். [8]அன்றே. (உOருரு)

க0ச. அரியினம் பூண்ட தேரு மனுமனு [1]மனைந்த சாரி
[2]புரிதலி னிலங்கை யூருந் [3]திரிந்தது புலவ ரேயும்
எரிகணேப் படல [4]மூட [5]விலருள ரென்னுந் தன்மை
தெரிகிலர் செவிடு செல்லக் [6]கிழிந்தன திசைக ளெல்லாம்.

(இ - ள்.) சிங்கக்கூட்டங்கள் கட்டப்பட்டுள்ள (இந்திரசித்தின்)தேரும் (இலக்குமணனுக்கு வாகனமாய்நின்ற) அநுமானும், (போருக்கு ஏற்ப) அளவிறந்த பலவகையாகச் சுழன்றுவருதலினுல் (தோன்றிய) அதிர்ச்சியினுல், இலங்காபுரியும் சுழலலுற்றது; (இருவரும் எய்த)எரியுந்தன்மையுள்ள அம்புகளின்கூட்டம் (எங்கும்) மூடிக்கொண்டதனுல், (இலக்குமணன் இந்திரசித்து என்றஅவ்விருவரும்) இலரோ உளரோ என்ற தன்மையை, (இமையாக்கண்களேயும் விசேஷபுத்தியையுமுடைய) தேவர்களும் அறியமாட்டிற்றிலர்; எல்லாத்திக்குக்களும், (அப்போரிலுண்டாகிய பேரொலியால் ஆங்காங்கு உள்ள பிராணிகள்) செவிடுபடத் தாம் பிளவுபட்டன; (எ - று.)

சாரி-வலசாரி, இடசாரி, மண்டலம், பவுரி முதலியன. புலவர்-விபுதர் என்ற வடசொல்லின் பொருள்கொண்ட பெயர்; புலம், அல்லது புலமை-அறிவு: அதனையுடையவர். பி-ம்:—[1]அனந்தஞ். [2]புரிதலும். [3]புரிந்தது. [4]மூடி. [5]இவருளர், யாரிவர். [6]கிழிந்தது. (உ0௫௬)

க0௫. நாண்பொரு வரிவிற் செங்கை நாடநா னவின்ற கல்வி
மாண்பொரு வகையிற் றன்று [1]வலிக்கில்லை யவதி [2]வானஞ்
[3]சேண்பெரி தென்று சென்ற தேவரு மிருவர் செய்கை
[4]காண்பரி தென்று [5]காட்சிக் கையுற வெய்திற் [6]றன்றே.

(இ-ள்.) 'நாணிபூட்டப்பட்ட கட்டமைந்த வில்லினது புகழ்பெற்ற நூலை [வில்வித்தையை]த் (தமது) சிவந்தகைகளால் (இவ்விருவரும்)பயின்றுபழகிய கல்வியின்பெருமை ஒருவகைப்பட்டதன்று [பலவகைப்பட்டதாம்]; (இவர்களது தேக) பலத்துக்கும் எல்லையில்லை: (இவர்களது வலிமை), வானத்தினும் மிகப்பெரியது; (ஆகையால் இவர்களுடைய போரைக் காணவேண்டுவது அவசியம்)' என்றுநினைத்து (வானத்துப் போர்காண) வந்த தேவரும், 'இவ்விருவரது போர்செயல் வகை காண்பதற்கு முடியாதது' என்றுசொல்லி விட்டதனால், காட்சிப்பிரமாணத்துக்கும் சந்தேகம் உண்டாய்விட்டது; (எ - று.)—அன்றே-வியப்பிடைச்சொல்.

அதிபிரசித்தமான இவ்விருவருடைய வில்வல்லமையையும், தேக பலத்தையும் பிரதியட்சமாகக் காணவேண்டுமென்று அவாக்கொண்டு வந்த தேவர்கள், இவர்களது செய்தொழில்விரைவினால் அவற்றைச் சிறிதும் காணமாட்டாராயின ரென்பது, கருத்து. காட்சி, அநுமாநம், ஆகமம் முதலாகப் பிரமாணங்கள் பலவகையாம்; அவற்றுள், காட்சி என்பது-பிரதியட்சமாகக் கண்டறிதல்: இப்பிரமாணமே, சந்தேகத்திற்குஇடமற்றிருப்பதால், மற்றையபிரமாணங்களெல்லாவற்றினுஞ் சிறந்தது:அவ்வாறுயுள்ள காட்சிப்பிரமாணத்திலும் ஐயமுண்டாம்படி இமையாக்கண்ணரான தேவர்களும் அவ்விருவர்செய்கையை நன்குகாணமாட்டாதவராயின ரெனக் கவி வியந்துகூறியவாறு. பி-ம்:—[1]வலிக்கில்லை. [2]வானச். [3]சேண்பரிதென்றுசென்ற, சேண்பொருளென்றுநின்ற. [4]காண்பொருளன்றென். [5]காட்சிகையறவு. [6]அன்றே, அம்மா. (உ0௫௭)

க0௬. என்செய்தா ரென்செய் தாரென் [1]றியம்பு வா[2]ரினைய தன்மை
முன்செய்தா ரியாவ ரென்பார் முன்னேது பின்னே தென்பார்
கொன்[3]செய்தார் வீர ரின்ன திசையினு ரென்றுங் கொள்ளார்
பொன்செய்தார் மவுலி விண்ணோ ருணர்ந்திலர் [4]புகுந்த தொன்றும்.

(இ - ள்.) பொன்மயமான (கற்பகமலர்)மாலையை முடியிலணிந்த தேவர்கள்,—(அங்கு) நிகழ்ந்ததொன்றையும் (நன்கு) அறியமாட்டாதவர்களாய்,—'(இவ்விருவீரரும்) யாதுசெய்தார்கள்! யாதுசெய்தார்கள்!' என்று(பொதுப்பட வியந்து)கூறுவார்கள்; 'இதுபோன்ற வீரச்செயலை,(இதற்கு)முன்பு யாவர்தாம் செய்திருக்கின்றார்?' என்று சொல்வார்கள்; '(இத்தன்மையகடும்போர்)முன்னுமில்லை, பின்னுமில்லை' என்றுசொல்வார்கள்;(தமது போர்த்தொழிலால்) அச்

சத்தையுண்டாக்குபவரான (அவ்விரு) வீரரை இன்னதிசையிலுள்ளார்களெ ன்று அறியவும்மாட்டாதவ ராஞர்கள்; (எ - று.)

'என்செய்தார் என்செய்தார்,' என்ற அடுக்கு, வியப்புப்பற்றியது. முன் எது பின்எது-இத்தன்மைய போரை முன்னே செய்தவர்களு மில்லை, இனிச் செய்யப்போகின்றவர்களு மில்லை யென்றபடி. கொன் - அச்சமுணர்த்தும் இடைச்சொல். பொன்னுலகமான தேவருலகத்திலுள்ளவை யாவும் பொன் மயமென்பது நூற்கொள்கையாதலால், 'பொன்செய் தார்' என்றார்; பொன் செய்து ஆர் மவுலி என்று பிரித்து, பொன்னிஞற் செய்யப்பட்டு அமைந்த கிரீடம் எனினுமாம். பி-ம்:—[1]இயம்பிஞர். [2]இன்ன. [3]செய்வேல். [4]புரிந்தது.

கOஎ. ஆயிர கோடி பல்ல மயிலெயிற் றரக்க னெய்தான்
ஆயிர கோடி பல்லத் தலை [1]துணித் தறுத்தா னையன்
ஆயிர கோடி நாகக் கணைதொடுத் தரக்க னெய்தான்
ஆயிர கோடி நாகக் [2]கணைகளா லறுத்தா [3]னண்ணல்.

(இ - ள்.) கூரிய பற்களையுடைய இராக்கதனுகிய இந்திரசித்து, ஆயிரக் கோடிக்கணக்கான பல்லங்களை பிரயோகித்தான்: இளையபெருமாள், ஆயிர கோடிபல்லங்களிஞல் அவற்றைத் துணித்து ஒழித்தான்; இந்திரசித்து ஆயிர கோடிநாகக்கணைகளை (வில்லில்) தொடுத்துப் பிரயோகித்தான்: பெருமைபெ ற்றவஞன இலக்குமணன், ஆயிரகோடி நாகக்கணைகளிஞல் (அவற்றை) அறுத்தொழித்தான்; (எ - று)

பல்லம்-அம்புவிசேடம்: வடசொல். நாகக்கணை என்பது, நாகம்போலும் வடிவமுள்ள அம்புவிசேடம். பி-ம்:—[1]தொடுத்து. [2]கணைதொடுத்து, கணையை யும். [3]ஐயன். (உOகூ)

கOஅ. [1]கோட்டியின் றலைய கோடி கோடியம் பரக்கன் [2]கோத்தான்
[1]கோட்டியின் றலைய கோடி கோடியாற் குறைத்தான் கொண்டல்
மீட் [3]டொரு கோடி கோடி வெஞ்சினத் தரக்கன் விட்டான்
[4]மீட்டொரு கோடி கோடி கொண்டலை தடுத்தான் வீரன்.

(இ - ள்.) இந்திரசித்து, துன்பமூட்டுபவையான பலகோடி அம்புக ளைத் தொடுத்துவிட்டான்: மேகத்தையொத்தவஞன இலக்குமணன், கோட் டியின் தலைய கோடி கோடியால் (அவ்விந்திரசித்து எய்தபாணங்களைத்) துணித்தான்; கடுங்கோபத்தையுடைய இந்திரசித்து, மீண்டும் ஒருகோடிகோடி பாணங்களை யெய்தான்: இலக்குமணன், மீண்டும் ஒருகோடி கோடிபாணங் களிஞல் அவ்வம்புகளைத் தடுத்தான்; (எ - று.)

கொண்டல்-நீர்கொண்டமேகம்: உவமையாகுபெயராய், இலக்குமணனைக் குறித்தது: இடைவிடாது பாணவர்ஷம் பொழிதலில் உவமை. கோடி கோடி- எண்ணலளவாகுபெயர்:கோடியிஞற்பெருக்கியகோடி;மிகப்பலவென்க. கோடி- அம்புவிசேடமுமாம். பி-ம்:—[1]கோட்டியதலைய. [2]எய்தான். [3]இருகோடி. [4]மீட்டலை. (உOகூO)

க0௬௬. கங்கபத் திரமோர் கோடி கைவிசைத் தரக்க னெய்தான்
கங்கபத் திரமோர்கோடி [1]கணைதொடுத் திளவல் காத்தான்
திங்களிற் பாதி கோடி யிலக்குவன் றெரிந்து விட்டான்
திங்களிற் பாதி கோடி [2]தொடுத்தவை யரக்கன் றீர்த்தான்.

(இ - ள்.) இந்திரசித்து, ஒருகோடிக்கணக்கான கங்கபத்திரமென்னும் பாணவிசேடங்களைக் கைவேகங்கொண்டு எய்தான்: இளையவீரன் [இலக்குமணன்], ஒருகோடிக் கங்கபத்திரபாணங்களைத் தொடுத்து (அவற்றைத் தன்மீது படவொட்டாமல்) தடுத்து (அழித்துத் தன்னைக்) காத்துக்கொண்டான்; இலக்குவன், கோடி அர்த்தசந்திரபாணங்களைச் சிறந்தனவாகத் தேர்ந்தெடுத்துவிட்டான்: இந்திரசித்து, அப்பாணங்களைக்கோடி அர்த்தசந்திரபாணங்களைத்தொடுத்து நீக்கினான்; (எ - று.)

கங்கபத்ரம்-வடசொல்; கழுகின்சிறகுகளையுடையது எனப் பொருள்படும்: கங்கம்-கழுகு, பத்ரம் - சிறகு. திங்களிற் பாதி - அர்த்தசந்திரபாணம். பி-ம்:—[1]கணைகளால், கைவிசைத்து. [2]தெரிந்தவை, தெறித்தவை. (உ0௬௬)

க௩0 கோரையின் றலைய கோடி கொடுங்கணை யரக்கன் கோத்தான்
கோரையின் றலைய கோடி தொடுத்தவை யிளவல் [1]கொய்தான்
பாரையின் றலைய கோடி பரப்பினு [2]னிளவல் [3]பல்காற்
பாரையின் றலைய கோடி யரக்கனும் [4]பறைக்க வெய்தான்.

(இ-ள்.) இந்திரசித்து, கோரைபோன்ற நுனியையுடையனவான கோடி கொடிய அம்புகளைப் பிரயோகித்தான்: இளையபெருமாள், கோடிக்கோரைத்தலையம்புகளைத் தொடுத்து அவ்விந்திரசித்தின் அம்புகளை யறுத்தான்; இளையபெருமாள், பாரைபோன்ற தலையையுடையனவான கோடிப் பாணங்களைப் பலதரம் தூவினான்: இந்திரசித்தும், கோடிப் பாரைத்தலையம்புகளை, விரைவாக (அவற்றிற்கு எதிரே) பிரயோகித்தான்; (எ - று.)—கோரை-ஒருவகைப்புல். பாரை-ஒருவகைமீன்; குழிகல்லும் கருவியுமாம். பி-ம்:-[1]கொன்றான். [2]பாயப். [3]பார்மேற், பால்வாய். [4]பரக்க, பாய, பதைப்ப. (உ0௬உ)

௩௩௩. தாமரைத் தலையவாளி தாமரைக் [1]கணக்கிற் [2]சார்ந்த
[3]தாம்வரத் தூரந்து முந்தித் தசமுகன் றனைய னார்த்தான்
தாமரைத் தலைய வாளி தாமரைக் [1]கணக்கிற் [4]சார்ந்த
[5]தாம்வரத் தடுத்து வீழ்த்தான் றாமரைக் கண்ணன் றம்பி.

(இ - ள்.) இராவணனது புதல்வனான இந்திரசித்து, தாமரையரும்புபோன்ற முனையையுடைய அம்புகள் பத்மமென்ற பேரெண்பொருந்தியவையாய்த் தாம் (தன்வில்லினின்று) வெளிக்கிளம்ப முதலிற்பிரயோகித்து ஆரவாரித்தான்: தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையவனான இராமபிரானது தம்பியாகிய இலக்குமணன், தாமரையரும்புபோன்ற முனையையுடைய அம்புகள் தாம் பத்மமென்னும் பேரெண்ணையுடையவையாய்த் (தன்வில்லினின்று) வெளிவர (அவற்றால் அவ்விந்திரசித்தின் பாணங்களைத்) தடுத்து, (பயனிலவாய்) விழச் செய்தான்; (எ - று.)

தாமரைத்தலைய வாளி-வடமொழியில் 'நாளீகாஸ்த்ரம்' எனவும், தமிழில் 'மொட்டம்பு' எனவும்படும். தாமரைக்கணக்கு - வடமொழியில் 'பத்மம்' எனப்படும்: அதாவது கோடியினுற் பெருக்கிய கோடி: கோடாகோடி. ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், நூறாயிரம் [லக்ஷம்], பத்துலக்ஷம், நூறுலக்ஷம் [கோடி], பத்துக்கோடி, நூறுகோடி, ஆயிரங்கோடி, பதினாயிரங்கோடி, லக்ஷங்கோடி, பத்துலக்ஷங்கோடி, நூறுலக்ஷங்கோடி என முறையே எண்வகுப்புக் காண்க. இங்ஙனம் ஒன்றுமுதற் பதினைந்தாவது தானமான நூறுலக்ஷங்கோடியே-பதுமம், தாமரை, கோடாகோடி என வழங்கும்: (100000000000000.)
பி - ம்:—1கணத்தில். 2சாரத். 3தாமரைக்கணத்திற்சிந்தி, தாமரைக்கணத்தினுந்தி, தாமரைத்தூரந்துமுந்தி. 4சார்ந்து, சாரத். 5தாமரைத்தடுத்து, தாமரைக்கணத்து, தாம்வரத்தடிந்து. (௨௦௯௫)

௧௧௨. வச்சிரப் பகழி கோடி 1வளையெயிற் றரக்க னெய்தான்
வச்சிரப் பகழி கோடி தூரந்தவை 2யனகன் மாய்த்தான்
முச்சிரப் பகழி கோடி யிலக்குவன் 3முடுக்க விட்டான்
முச்சிரப் பகழி 4கோடி தொடுத்தவை 5தடுத்தான் மொய்ம்பன்.

(இ - ள்.) வளைந்த (கோரப்) பற்களையுடைய இந்திரசித்து, கோடிக்கணக்கான வச்சிரமென்ற பாணங்களை எய்தான்: குற்றமற்றவனான இலக்குமணன், கோடிக்கணக்கான வச்சிரமென்னும்பாணங்களைப் பிரயோகித்து அவ்விந்திரசித்தின் அம்புகளை அழித்தான்; இலக்குவன், கோடிக்கணக்கான 'த்ரிசிரஸ்' என்னும் பாணங்களை வேகமாய்ச்செல்ல விட்டான்: வலியவனான இந்திரசித்து முச்சிரப்பகழிகோடியைத் தொடுத்து அவ்விலக்குமணனெய்த அம்புகளைத் தடுத்தான்; (எ - று.)

வச்சிரப்பகழி - பலதலைகளையுடைய வச்சிரத்தின்வடிவமானதொரு பாணம். முச்சிரப்பகழி - மூன்றுமுனையையுடையதொரு பாணம். பி-ம்:—1வாளெயிற்று. 2இளவல். 3முடுக்கி, முடுகி. 4கோடியாற்கண்டன். 5முறையிற்கொய்தான், தடுத்தான்மொய்ம்பன். (௨௦௯௬)

௧௧௩. அஞ்சலி யஞ்சு கோடி தொடுத்திக லரக்க 1னெய்தான்
அஞ்சலி யஞ்சு 2கோடி தொடுத்தவை 3யறுத்தா னையன்
குஞ்சரக் 4கன்னங் கோடி யிலக்குவன் சிலையிற் கோத்தான்
குஞ்சரக் 4கன்னங் கோடி தொடுத்தவை யரக்கன் 5காத்தான்.

(இ - ள்.) வலிமையையுடையவனாகிய இந்திரசித்து, ஐந்துகோடியென்னும்அளவினவான அஞ்சலியென்னும்பாணங்களைத் தொடுத்து எய்தான்: இலக்குமணன், அவ்விந்திரசித்துஎய்த பாணங்களை அஞ்சலிஅஞ்சுகோடி தொடுத்து அறுத்தான்; இலக்குவன், கோடியென்னும்அளவான குஞ்சரக்கன்னம்என்னும்பாணங்களை(த் தனது) வில்லில் தொடுத்துஎய்தான்: அரக்கன், அவைகளைக் கோடிக்குஞ்சரக்கன்னம் தொடுத்துத் தடுத்தான்; (எ - று.)

அஞ்ஜலி - கூப்பியகைபோன்றிருப்பதொரு பாணம்; வடசொல்; இது, அஞ்ஜலிகமெனவும் வழங்கும். குஞ்சரக்கன்னம் - குஞ்ஜரகர்ணம்: வடசொல்;

கஜகர்ணமெனவும் வழங்கும்: யானையின்காதுபோன்ற தோற்றமுடைய தோர் அம்பு; (குஞ்சரம் - புதரில்மகிழ்வது என யானைக்குக் காரணக்குறி). பி-ம்:—[1]ஆர்த்தான். [2]கோடியாற்றடுத்து, கோடிதொடுத்திவை. [3]தடுத்தான். [4]கன்னகோடி. [5]கொய்தான். (உ0சுரு)

கதச. எய்யவு மெய்த வாளி விலக்கவு முலக [1]மெல்லாம்
மொய்கணைக் கான [2]மாகி முடிந்தது முழங்கு வேலை
பெய்கணைப் [3]பொதிக ளாலே [4]வளர்ந்தது பிறந்த கோபங்
கைம்மிகக் கனன்ற தல்லாற் றளர்ந்திலர் காளை வீரர்.

(இ - ள்.) (இப்படி இளையபெருமாளும் இந்திரசித்தும் ஒருவர்மேல் ஒருவர், அம்புகளைப்) பிரயோகித்தலினாலும் பிரயோகித்த அம்புகளை(த் தம் மேற்படவொட்டாது அம்பெய்து) தடுத்தலினாலும், உலகம்முழுவதும் நெருங்கிய அம்புக்கூட்டத்தை யுடையதாயிற்று; ஒலிக்கின்றகடல் பொழிகின்ற,அம்புகளின்தொகுதிகளால் வளர்ச்சியுற்றது; (அங்ஙனமாகவும்), இளவெருது போன்ற அவ்விருவீரர்களோ, (மனத்தில்) உண்டான கோபம் மேன்மேல் அதிகமாக மூளப்பெறுதலன்றி, (சிறிதும்) தணியப்பெற்றாரில்லை; (எ-று.)

பிறந்தகோபம் கைம்மிகக் கனன்றதல்லால்என்பதற்கு - கோபமானது கைத்தொழில் மிகுந்தோறும் மூண்டதேயல்லாமல்என்றும் பொருள்கூறலாம். காளைவீரர் கோபம் தளர்ந்திலர் - அஃறிணைப்பண்புப்பெயர் உயர்திணைஎழுவாயைத்தொடர்ந்துஅம்முடிபு ஏற்றது. பி-ம்:—[1]எங்கும். [2]ஆக.[3]பொறிகளாலே. [4]பறந்தது, பெயர்ந்தது, வறண்டது. (உ0சுசு)

கதரு. வீழியின் கனிபோல் மேனி கிழிபட வனுமன் [1]வீரச்
சூழிரும் பனைய தோண்மே லாயிரம் பகழி தூவி
ஊழியி [2]னிமிர்ந்த செந்தீ யுருமினை யுமிழ்வ தென்ன
ஏழிரு நூறு வாளி யிலக்குவன் கவசத் தெய்தான்.

(இ - ள்.) (இந்திரசித்தானவன்),—வீழிப்பழம்போல அநுமானதுஉடம்பு கிழிபடும்படியாக, (அவனது) வீரத்தையுடைய திரண்ட இரும்புத்தூண் போன்ற தோள்களின்மேல் ஆயிரம்அம்புகளைச் சொரிந்து,—பிரளயகாலத்தில் உயரவெழுந்தமேகங்கள் சிவந்த நெருப்புமயமான இடியை வெளிப்படுத்துவதுபோல, ஆயிரத்துநானூறுபாணங்களை இலக்குமணனுடைய கவசத்திலே எய்தான்; (எ - று.)

வீழியின்கனி - இரத்தங்குழம்பிய அநுமான்மேனிக்குச் செந்நிறத்தில் உவமம்.வீழி-ஓர்செடி;அதன்பழம் செந்நிறமுடையது.நிமிர்ந்த-பெயர்.பி-ம்:—[1]வீரஞ் [2]எழுந்த. (உ0சுஎ)

கதசு. முற்கொண்டா னரக்க னென்று முளரிவாண் [1]முகங்க
டேவர், பிற்கொண்டா ரிளைய கோவைப் [2]பியற்கொண்டான் பெருந்
[3]தோ ணின்றுங், கற்கொண்டார் [4]கிரியின் நாலு மருவிபோற் குருதி
கண்டார், விற்[5]கொண்டா ரிவனே யென்று வெறுக்கொண்டார் [6]முனி
வர் மேலோர்.

(இ - ள்.) மேலிடத்து உள்ளவராகிய தேவர்களும், தேவரிஷிகளும்,— இளையபெருமாளை(த் தனது) பிடரியின்மேல் ஏறவைத்துக்கொண்டுள்ளவனை அநுமானுடைய பெரியதோள்களினின்று (பெருகுகின்றதாகிக்) கற்களினால் நிறைந்துள்ள மலையிலிருந்துபெருகுகின்ற அருவிபோன்ற இரத்தத்தைப் பார்த்தவராகி, 'ராக்ஷசனாகிய இந்திரசித்து, (போர்த்தொழிலில்) கைவிஞ்சினான்' என்றுஎண்ணி, தாமரைமலர்போன்ற ஒளியுள்ள (தமது)முகங்களைத் திருப்பிக்கொண்டார்கள்: 'வில்வீரர்களிற்(சிறந்தவன்) இவ்வரக்கனே' என்று கூறி,('தமது பக்கத்துக்குக் குறைவுநேருமோ?'என்று)அச்சங்கொண்டார்கள்.

மிக்ககொடிய அவ்வரக்கனது திறத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமையாலும்,நாணத்தினாலும்,தேவர்களும் தேவரிஷிகளும் தமதுமுகத்தைத் திருப்பிக்கொண்டன ரென்க. இளையகோவைப் பியல்கொண்டான் - இலக்குமணனுக்குவாகனமாய் அமைந்துநின்றவன். விற்கு ஒள் தார் இவனே என்று எடுத்து - அழகிய மாலையையணிந்த இவனே வில்தொழிலில்வல்லவன் எனக் கூறினும் பொருந்தும். பி-ம்:—1முகங்கொள். 2பெயர்கொண்டான், பெயற்கொண்டான், பெயர்கொண்டார். 3தோள்நின்றும். 4கிரியின்மேல்வார். 5கொண்டால், கொண்டான். 6விண்ணோரெல்லாம். (௨௦௬௮)

௧௧௭. [1]சீறுநூ றறிந்த சிந்தை யிலக்குவன் சிலைக்கைவாளி
நூறுநூ [2]றேவி [3]நொய்தி னுடங்குளை [4]படங்கண் மாவும்
வேறு[5]கூ றியற்றி வீரக் கொடியையு மறுத்து வீழ்த்தி
ஆறுநூ றம்பு செம்பொற் கவசம்புக் கழுந்த வெய்தான்.

(இ - ள்.) கோபித்துச்செய்யும் போர்த்தொழிலைப்பற்றிய சாஸ்திரத்தை [வில்வித்தைமுதலியவற்றை] யுணர்ந்த மனத்தையுடைய இலக்குமணன், (தனது) கையிலுள்ள வில்லினின்று பலநூற்றுக்கணக்கான அம்புகளைப் பிரயோகித்து, விரைவில் மடங்கியுள்ள பிடரிமயிரையுடைய(அவ்விந்திரசித்தின் தேரிற் கட்டிய) சிங்கங்களையும் வெவ்வேறு துண்டாகச்செய்து வீரத்துக்கு அறிகுறியான துவசத்தையும் அறுத்துத்தள்ளி, (அவனணிந்துள்ள) செம்பொன்மயமான கவசத்திற் புகுந்து (உடம்பில்) தைக்கும்படி அறுநூறுஅம்புகளையும் எய்தான்; (எ - று.)

நூலையறிந்து போர்செய்பவருடைய கோபத்தை நூலின்மே லேற்றி, 'சீறும்நூல்' என்றார்; உபசாரவழக்கு. பி - ம்:—1சீறி. 2எவ. 3வெய்தின். 4அடங்கன்மாவும். 5வேறியற்றி, நூறியற்றி. (௨௦௬௯)

௧௧௮. காளமே கத்தைச் சார்ந்த கதிரவ னென்னக் காந்தித்
தோளின்மேன் மார்பின் மேலுஞ் சுடர்விடு [1]கவசஞ் சூழ
[2]நீளநீள் பவள வல்லி [3]நிரையொளி [4]நிமிர்வ வென்ன
வாளிவாய் தோறும் வந்து [5]பொடித்தன [6]குருதிவாரி.

(இ - ள்.) காளமேகத்தைச் சார்ந்த சூரியன்போலப் பிரகாசித்து, (இந்திரசித்தின்) தோள்களின்மேலும் மார்பின்மேலும் (பொருந்தி) ஒளிவிடுகிற கவசத்தைச் சுற்றிலும் நீளமாக நீண்டுள்ள [மிகநீண்ட] பவழக்கொடிகளின்

வரிசைகள் ஒளியோடு வெளித்தோன்றுவனபோல, இரத்தப்பெருக்குகள் (இலக்குமண னெய்த)அம்புகள் தைத்தஇடந்தோறும்,வந்து வெளிப்பட்டன.

இந்திரசித்தின் கரிய உடலின்மேற் பொருந்திய பொன்மயமான கவசத்திற்குக் காளமேகத்தைச்சார்ந்த கதிரவன் உவமை. இலக்குமணனது அம்புகள் தைத்த இடந்தோறும் வெளிவருகிற செந்நீர்ப்பெருக்கை, பவழக்கொடி தனதுஒளியை வெளிவிட்டுக்கொண்டு தோன்றுவதுபோலு மென்றார்; செந்நிறம் பற்றிய உவமை. காளமேகத்தைச் சார்ந்த கதிரவனையும் இந்திரசித்தினுடம்பி லெங்கும் வெளிசசொரிகிற செந்நீர்ப்பெருக்குக்கு உவமையாக் கொள்ளலாம். பி-ம்:—[1]கவசத்தூடு, கவசச்சூழல். [2]நீளுநீர், நீளணி. [3]நிரைத்தன, நிரைத்தென. [4]வீழ்ப்ப, வீழ்ப, வீழ்ப்பன். [5]பொடித்தது. [6]உதிரவாரி.(உ0௭0)

கூகூகூ.பொன்னுறு தடந்தேர் பூண்ட மடங்கன்மாப் புரண்ட போதும்
மின்னுறு பதாகையோடு சாரதி [1]வீழ்ந்த போதும்
[2]தன்னிறத் துருவ வாளி தடுப்பில சார்ந்த போதும்
இன்னதென் றறியா னன்னு னினையதோர் மாற்றஞ் சொன்னான்.

(இ - ள்.) (இலக்குமணனது அம்புகளால்),—பொன்மயமான பெரிய (தனது) தேரிற் பூட்டப்பட்டுள்ள சிங்கங்கள் கீழ்விழுந்து புரண்டு இறந்தகாலத்திலும், ஒளிபொருந்திய கொடியுடனே தேர்ப்பாகன் இறந்து கீழ்விழுந்த காலத்திலும், தனது மார்பில் ஊடுருவும்படி பாணங்கள் தடுக்கமுடியாதனவாய் நெருங்கினகாலத்திலும்,—அவ்விந்திரசித்து, இன்னதென்று (ஒன்றும்) உணராதவனாய், இத்தன்மையதான ஒருவார்த்தையைச் சொல்பவனானான்; (எ-று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

பகைவனைக்குறித்துப் புகழ்தலால், இந்திரசித்து தன்னைத் தான் மறந்து கூறலானா னென்றார். பி - ம்:—[1]வீய்ந்த. [2]தன்னிறந்துருவி. (உ0௭க)

கஉ0.[1]அந்நர னல்ல னாகி னாரண னனைய [2]னன்றேற்
[3]பின்னரன் பிரம [4]னென்பார்ப் பேசுக பிறந்து வாழும்
மன்னர்[5]நம் [6]பதியின் வந்து வரிசிலை [7]பிடித்த கல்வி
[8]இந்நரன் றன்னொ டொப்பா ரியாருள [9]ரொருவ ரென்றான்.

(இ - ள்.) '(இவ்விலக்குமணன்),—அந்த நரனேயாவன்: அவன்அல்லாவிட்டால் நாராயணனை ஒப்பன்; அவனுமன்றாயின், பின்பு சிவன் பிரமன் என்ற தேவர்களை (உவமையாகச்)சொல்க; நமதுஊரில்வந்து கட்டமைந்த வில்லை(ப் போர்செய்யும்படி) கையிற்கொண்ட வில்வித்தையில் தேர்ச்சிபெற்ற இம்மனிதனோடு ஒப்பவர், (பூமியிற்) பிறந்துவாழ்கிற அரசர்களுள் எவர் ஒருவர் இருக்கின்றனர்?' என்று (இந்திரசித்து இலக்குமணனது வீரத்தைப்) புகழ்ந்துகூறினான்; (எ - று.)

இவ்விலக்குமணனுக்குத் திரிமூர்த்திகள் ஒப்பாவரேயன்றி, அரசராய்ப் பெருமைபெற்றுவாழ்கிற மனிதரெவரும் ஒப்பாகாரென்பது கருத்து. முன்னொருகாலத்தில் குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் விளக்கும் பொருட்டுத் திருமால் தானே நரனென்னுஞ் சிஷ்யனும் நாராயணனென்னுங் குருவுமாகப் பதரிகாச்சிரமத்தில்தோன்றிச் சிஷ்யனுக்குக் குரு தத்து

வப்பொருளை உபதேசிப்பதாக வீற்றிருந்தமை யுணர்க. என்பார்ப் பேசுக - "இயல்பின் விகாரம்". 'நரன்' என்றசொல் இரண்டனுள், முன்னது - திருமாலின் அவதாரவிசேஷமாகிய ஓர்இருடியையும், பின்னது - மனிதனையும் உணர்த்தும். பகைவனுங்கொண்டாடத்தக்க வலிமையையுடையான் இலக்குமணனென்பது, இங்கு வெளியாம். "நெடும்புனலுள் வெல்லு முதலையடும் புனலின், னீங்கி னதனைப்பிற" என்றபடி எல்லாரும் தம்நிலத்தில் வலியரென்பதற்கு மாறாக, சாதாரணமனிதனான இவ்விலக்குமணன் தன்னிடத்தை விட்டு மிகக்கொடியரும் மகாசூரரும் அரக்கருமாயுள்ள மாற்றாராகிய நமது ஊரில்வந்து சலியாதுஎதிர்நின்று பொருதுவெல்லுவதே! இவனது வில்வீரம் இருந்தபடியென்!!' என இலக்குமணனைப் பாராட்டிக்கூறுவான், 'நம் பதியின்வந்து வரிசிலைபிடித்த கல்வி யிந்நரன்' என்றான். பி-ம்:---1அன்னரன். 2அல்லாற். 3பின்னரப். 4என்பார்பேசுக. 5தம். 6விதியால். 7வடித்த, விளைத்த. 8இன்னரன். 9இனையர். (உ0எஉ)

கஉக வாயிடை நெருப்புக் கால 1வுடனெடுங் குருதி 2வாரத்
தீயிடை நெய்வார்த் தன்ன வெகுளியா னுயிர்தீர்ந் தாலும்
ஓய்விட மில்லான் வல்லை 3யோரிமை யொடுங்கா முன்னம்
ஆயிரம் புரவி பூண்ட வாழியந் 4தேரினானான்.

(இ-ள்.) (தனது) உயிர்போவதாயிருந்தாலும்(போர்த்தொழிலை)ஒழியாதவனாகிய இந்திரசித்து,—வாயில் நெருப்புவெளிப்படவும், உடம்பில் மிக்க இரத்தம்வழியவும், நெருப்பில் நெய்யைவார்த்தாற்போன்ற [மிகப்பொங்குகின்ற] கோபத்தையுடையவனாய், விரைவாக ஒருதரம்இமைமூடுவதற்குமுன்னே [ஒருநிமிஷத்திற்குள்] ஆயிரங்குதிரைகள் பூண்டதும் (வலிய) சக்கரங்களையுடையதுமான அழகியவேறொருதேரின்மேல்ஏறிக்கொண்டான்;(எ-று.)

இலக்குமணனது அம்புகளால் தன்தேரிற்கட்டிய சிங்கம்கொடிமுதலியன அழியவே, ஆயிரங்குதிரைபூண்ட வேறொருதேரின்மீது இந்திரசித்து ஏறினனென்க. இயற்கையாயுள்ள இந்திரசித்தின் கோபத்தை மிகுவிக்கின்ற இலக்குமணனதுஅம்புகளுக்கு, தீயிடைவார்க்கும்நெய்யை உவமை கூறினார். 'உயிர்தீர்ந்தாலும் ஓய்விடமில்லான்' என்றதில், இந்திரசித்தினது சுத்தவீரத்தன்மை விளங்கும். பி-ம்:—1உடலெழுங். 2மண்ட. 3ஒரிமம். 4தேரான். (உ0எங)

வேறு.

கூஉஉ. ஆசை யெங்கணு மம்புக வெம்புபோர்
ஓசை விம்ம 1வுருத்திர னும்முடல்
கூச வாயிர கோடி கொலைக்கணை
வீசி விண்ணை வெளியில தாக்கினான்.

(இ - ள்.) (இந்திரசித்து),—உக்கிரமானபோரினது ஆரவாரம் மிகவும், (அழித்தற்றொழிற்கடவுளான) சிவபிரானும் (அப்போரின்கொடுமையைப் பொறாமல்) உடம்புநடுங்கவும், எல்லாத்திக்குக்களிலும் அம்புகள்சிந்தும்படி

யும் பலகோடிக்கணக்கான கொல்லுதற்றொழிலையுடைய பாணங்களைப் பிர யோகித்து ஆகாயத்தை வெற்றிடமில்லையாம்படி செய்தான்; (எ - று.)

அம்புகவெம்புபோர் - பிராசமென்னுஞ்சொல்லணி. கொடுமையை யுடைய கடவுளென்பார், 'உருத்திரன்' என்றார்; இது, ஸாபிப்பிராயவிசே ஷ்யம்: கருத்துடையடைகொளியணி. பி-ம்:—[1]உருத்திரரும். (உ0எச)

கஉரு.[1]அத்தி றத்தி [2]லனக னு மாயிரம்
பததிப் பத்தியி [3]னெய்துவ பல்கணை
சித்தி ரத்தினிற் சிந்தி யிராவணன்
புத்தி ரற்குமொ ராயிரம் போக்கினான்.

(இ-ள்.) குற்றமற்றவனாகிய இலக்குமணனும், அப்பொழுது வரிசைவரி சையாகப்பிரயோகிப்பனவாகிய பலஆயிரம் அம்புகளை(க் கண்டோர்) ஆச்சரிய மடையும்படி செலுத்தி, (இந்திரசித்தின் அம்புகளைத் துண்டித்து), இராவணன் மகனான இந்திரசித்தின்மேலும் ஆயிரம் பாணங்களைச் செலுத்தினான்; (எ-று.) —பத்திபத்தி - அடுக்கு, பன்மைகுறித்தது. சித்திரம்-ஆச்சரியம். பி-ம்:— [1]அத்திறத்தினன், அத்திறத்தினில். [2]ஐயனும். [3]எய்துவ, எய்துறும். (உ0எரு)

கஉசு.ஆயி ரங்கணை [1]பாய்ந்தன வாற்றருங்
கா[2]வெ ரித்தலை நெய்யெனக் [3]காந்துறாத்
[4]தூய வன்சுடர் சூழொளி நெற்றியில்
தீய வெங்கணை நூறு செலுத்தினான்.

(இ - ள்.) (இலக்குமணனது) ஆயிரம்அம்புகளும் (இந்திரசித்தின்மேற்) பாய்ந்தன; (அதனால் இந்திரசித்து), பொறுக்கமுடியாத சுடுகின்றநெருப்பில் நெய்யை(ச் சொரிந்தால் அந்நெருப்பு மூண்டெரியுமாறு)போல (மனங்)கொதி த்துப் பரிசுத்தமூர்த்தியான இலக்குமணனது மிக்கஒளிநிறைந்த நெற்றியின் மேல் மிகக்கொடிய நூறுபாணங்களை எய்தான்; (எ - று.)

தமையனான இராமபிரானுக்கு அடிமைத்தொழிலை எப்பொழுதும் தனக் குரியபணியாகக்கொண்டுசெய்யும் நிர்த்தோஷனாதலால், இலக்குமணனை, கீழ்க் கவியில் 'அநகன்' என்றும், இக்கவியில் 'தூயவன்' என்றுங் கூறினார். ஆயிரங் கணை என்றவிடத்து, முற்றும்மை விகாரத்தால் தொக்கது. சுடரொளிசூழ்நெற் றியில் என்க. பி-ம்:—[1]பாய்தலும். [2]எரிப்படு. [3]காந்தினான். [4]தீயவன்பெருஞ் சேவகன்சென்னிமேல் - தூயவெங்கணைநூறுடன்றூவினான், தீயவன்...... நூறுடன்றூண்டினான். (உ0எசு)

கஉஎ. நெற்றி [1]மேலொரு நூறு நெடுங்கணை
உற்ற போதினு மியாதுமொன் றுற்றிலன்
[2]மற்ற வன்றொழி லோன்மணி மார்பிடை
முற்ற வெங்கணை நூறு முடுக்கினான்.

(இ - ள்.) (தனது) நெற்றியின்மேல் (இந்திரசித்தினது) நூறுபெரிய அம்புகள் தைத்தபொழுதிலும், (இலக்குமணன்), சிறிதும் வருந்தாதவனாய், கொடுந்தொழிலையுடையவனான அந்த இந்திரசித்தினது அழகியமார்பினிடம் முழுவதிலும் (ஊடுருவிச்செல்லும்படி) கொடிய நூறுஅம்புகளை விரைவிற்செலு

த்தினன்; (எ - று.)—மற்று - வினைமாற்று; பின்புஎனினுமாம். அவன்தொழிலோன்-தொகுத்தல். பி-ம்:—1மேலுமொர். 2மற்றவ்வெங். (உ0எஎ)

கஉசு.—இந்திரசித்து சோர்ந்து போர்செய்யாது
வில்லையூன்றிக்கொண்டிருத்தல்.

நூறு வெங்கணை மார்பி [1]னுழைதலின்
ஊறு சோரியொ டுள்ளமுஞ் சோர்தரத்
தேற லாந்துணை யுஞ்சிலை யூன்றியே
ஆறி நின்றன னாற்றலிற் றோற்றிலான்.

(இ - ள்.) வல்லமையில் (இதுவரை ஒருபொழுதும்) பின்வாங்காதவனான இந்திரசித்து,—(இலக்குமணனது)கொடியநூறுஅம்புகள் (தனது)மார்பில்தைத்ததனால்,(மேன்மேற்)சுரக்கின்ற இரத்தம்பெருகுதலுடனே மனமும் சோர்வடைய, (இளைப்புநீங்கித்) தேறுதலுண்டாகுமட்டும் (தனது) வில்லை (ஊன்றுகோல்போலக் கொண்டு) ஊன்றிநின்று (யாதொருதொழிலுஞ் செய்யாது) தணிந்திருந்தான்; (எ - று.)

ஊறுசோரியொடு உள்ளமுஞ்சோர்தர - சிலேடைமூலமாகவந்த உடனவிற்சியணி; பெருகுதல் தளர்தல்என்று தனித்தனிபொருள்படும் 'சோர்தர' என்பதை, அபேதாத்யவஸாயத்தால் [பேதமிருக்கவும்ஒற்றுமைப்படுத்தி]ஒருசேரச் சோரி என்பதிலும் உள்ளம்என்பதிலும் சென்றுஇயையும்படி வைத்திருத்தல் காண்க. சிலையூன்றிஆறிநின்றனன்-இந்திரசித்து, நாணேற்றி அம்பெய்தற்குரிய வில்லையே அதுசெய்யாமற் களைப்பின்மிகுதியால் ஊன்றுகோலாகக்கொண்டுநின்றன னென்றபடி. இச்செய்யுள் சிலபிரதியி வில்லை. பி-ம்:—1நுழைதலும். (உ0எஅ)

கஉஎ.—இலக்குமணனதுவாகனமாகிய அநுமான்
இந்திரசித்தின் தேர்க்குதிரையைக்கொன்று தேரையுருட்டியமை.

புதைபு நன்[1]மணி பொன்னுரு ளச்சொடும்
சிதைய வாயிரம் பாய்பரி சிந்திட
வதையின் மற்றொரு கூற்றென மாருதி
உதையி னவ்வன் றேரை யுருட்டினான்.

(இ - ள்.) கொலைத்தொழிலில் வேறொருயமனையொத்த அநுமான்,—(பூமியில்) அழுந்துந்தன்மையுள்ள சிறந்த இரத்தினங்கள்பதித்துச்செய்த பொன்மயமான சக்கரங்கள் அச்சுக்களுடனே சிதைபடவும், தாவிச்செல்வனவான ஆயிரங்குதிரைகளும் வீழ்ந்திறக்கவும், (ஒரு) உதையினாலே அவ்விந்திரசித்துஏறியதேரை உருட்டித்தள்ளினான்; (எ - று.)

இலக்குமணனது வாகனமான அநுமான் இந்திரசித்தினது தேரினுடையஅச்சையும் சக்கரங்களையும் முறித்துக் குதிரைகளைக்கொன்று வீழ்த்தி அத்தேரையும்உதைத்து உருட்டித்தள்ளின னென்றவாறு. யமன்போலக் கொலைத்தொழில்செய்யும் அநுமானை வேறொரு யமனாகக் குறித்தார், இதில், பிரசித்தனான யமன் அநுமானுக்கு ஈடாகா னென்பதும் தோன்றும். பி-ம்:—1மணிப். (உ0எகூ)

### கஉஅ.—வேறெருதேரேறி இந்திரசித்து இலக்குமணன்மீது அம்புபொழிதல்.

பேயொ ராயிரம் பூண்டது பெய்ம்மணி
ஏய [1]தேரிமைப் பின்னிடை யேறினன்
தூய வன்[2]சுடர்த் [3]தோளிணை [4]மேற்சுடர்
தீய வெங்கணை யைம்பது சிந்தினன்.

(இ - ள்.) (இந்திரசித்து),—ஓர்ஆயிரம்பேய்கள்கட்டியதும் நெருக்கமாய்வைத்துப்பதித்த இரத்தினங்கள் பொருந்தியதுமான (வேறோர்) இரதத்தின்மீது ஒருநிமிஷகாலத்தில் ஏறினவனாய்,—பரிசுத்தனாகிய இலக்குமணனது ஒளியையுடைய இரண்டுதோள்களின்மேலும் விளங்குகின்ற மிகக்கொடிய ஐம்பதுபாணங்களைப் பொழிந்தான்; (எ - று)—பி-ம்:—[1]தேரினிமைப்பிடை, தேரொரிமைப்பிடை. [2]துணைத். [3]தோளினை. [4]மேற்செலத், மேற்சுடத். (உ௨அ0)

### கஉகூ.—இந்திரசித்து தேரேறிவருந்தோறும் இலக்குமணன் அத்தேர்களை யழித்தமை.

ஏறி யேறி [1]யிழிந்ததல் லாலிகல்
வேறு செய்திலன் [2]வெய்யவன் வீரனும்
ஆறு கோடி பகழியி [3]னையிரு
நூறு [4]தேரொரு நாழிகை நூறினன்.

(இ - ள்.) கொடியவனாகிய இந்திரசித்து,—(தானேறுந்தேர்களையெல்லாம் இலக்குமணன் அம்புகொண்டு அழிப்பதனால் பலதேர்களில்) ஏறியேறி இழிந்துகொண்டிருந்தானேயல்லாமல் வேறே யுத்தஞ் செய்யவில்லை; (இங்ஙனமாகும்படி), இலக்குமணனும், ஆறுகோடி அம்புகளினால் (அவ்விந்திரசித்தின்) ஆயிரந்தேர்களை ஒருநாழிகைப்பொழுதினுள் அழித்தான்; (எ-று.)

இந்திரசித்து தேரேறுகிறதும் உடனே இளையபெருமாள் அதனைச் சிதைக்கிறதும் என இவ்வாறே இருவர்க்கும்போர் நடந்ததென்பதாம். நாழிகை-விநாடிஅறுபதுகொண்டது. பி-ம்:—[1]இழிவது, இழிதல்,இழந்தது. [2]வெய்யவவீரனும். [3]ஐயரு. [4]தேரரை. (உ0அக)

### கங0.—தேவர்களின் மகிழ்ச்சி.

ஆசி கூறின ரார்த்தன ராய்மலர்
வீசி வீசி வணங்கினர் விண்ணவர்
ஊச னீங்கின ருத்தரி கத்தொடு
[1]தூசு வீசினர் நன்னெறி துன்னினர்.

(இ-ள்.) (இந்திரசித்து ஏறுந் தேர்களையெல்லாம் இலக்குமணன்சிதைப்பதுகண்ட) நன்னடக்கையில் நிற்பவராகிய விண்ணவர்,—(அவ்விலக்குமணனுக்கு) ஆசீர்வாதஞ்சொன்னார்கள்: ஆரவாரஞ்செய்தார்கள்: ஆராய்ந்தெடுத்த பூக்களை (இலக்குமணன்மேல்) மிகுதியாகத்தூவி (அவனை) த் தொழுதார்கள்; மனத்தடுமாற்றம் நீங்கப்பெற்றனர்; மேலாடையுடன் இடையாடையையும் (உயர) வீசினார்கள்; (எ - று.)

தேவர்கள் ஆசிகூறியது, இலக்குமணனிடத்துள்ள பேரன்பினால். பூக்களைத் தூவி வணங்கியது, தமதுபக்கத்துக்குவெற்றியைக் கண்டமையாலுண்டான மகிழ்ச்சியினால்; அன்றியும், அத்தேவர்கள் தமது மெய்யுணர்வினால், ஆதிசேஷனே திருமாலாகிய இராமபிரானுக்குப் பலவகைப் பணிவிடைகளையும்புரிய இலக்குமணனாய்த்தோன்றியுள்ளானென்பதை யறிந்திருத்தல்பற்றியுமாகலாம். ஊசல் - மனத்தடுமாற்றத்திற்கு, உவமையாகுபெயர். ஆரவாரஞ்செய்தலும், உத்தரீயத்தையும் அரையாடையையும் விசிறுதலும், வெற்றியாலாகிய களிப்புப்பற்றி. உத்தரிகம் = உத்தரீயம்; வடசொல்; மேலாடையென்பது, பொருள். தூசு - வஸ்த்ரம்: இங்கு அரையாடை; அது-அந்தரீயம் எனப்படும். ஆகாயத்திற்கு, 'ஸத்பதம்' என ஒருபெய ரிருத்தலால், நன்னெறி - ஆகாயத்தில், துன்னினார் - (போர்காண) நெருங்கிநிற்பவராகிய, விண்ணவர் எனப் பொருள்கூறினுமாம். பி-ம்:—1தூது. (உOஅஉ)

கஙக.—இந்திரசித்தின் பக்கத்தார் இலக்குமணனை யெதிர்த்தல்.

[1]அக்க ணத்தி னொராயிர மாயிரம்
மிக்க வெங்க [2]ணரக்கரவ் வீரனோடு
ஒக்க [3]வின்ப மொருவழி யூணினார்
[4]புக்கு முந்தினர் போரிடைப் [5]பொன்றுவார்.

(இ - ள்.) அப்பொழுதில்,—அவ்விந்திரசித்தோடு சமமாக ஒருதன்மையானசௌக்கியத்தையும் உணவையுமுடையவராகிய மிக்க கொடுமையையுடைய பத்துலக்ஷம் இராக்கதர்கள்,—அழிபவர்களாய், யுத்தகளத்திற்புகுந்து முன்வந்து (இலக்குமணனை) எதிர்த்தார்கள்; (எ - று.)

ஒருவழிமுந்தினர் என இயைத்து, ஒருசேர எதிர்த்தார்கள் எனினுமாம், இலக்குமணனை யெதிர்க்கவந்த ராக்ஷசர்கள் எல்லாவகையிலும் இந்திரசித்தை யொத்தவர்கள் என்பது, மூன்றாமடியின் கருத்து. இப்பொழுது இலக்குமணனை யெதிர்க்கவந்த அரக்கர்கள் இந்திரசித்துக்குஉபபலமாகச் செல்லும்படி இராவணனாற் கட்டளையிடப்பட்டவரென்க. இன்பம் ஊணினார்- இன்பம் நுகர்தலையுடையவ ரெனினுமாம். போர் - போர்க்களத்துக்கு, இலக்கணை. பி-ம்:—1அக்கணத்தினில். 2அரக்கர்தம். 3வந்துற்றொருவழிநண்ணினார். 4புக்கிழிந்தனர், புக்கமுந்தினர். 5பொன்றுவான், ஆற்றுவார். (உOஅங)

கஙஉ.—எதிர்ந்த அரக்கரின்தன்மை.

தேரர் [1]தேரி னிவுளியர் [2]செம்முகக்
காரர் காரி [3]னிடிப்பினர் கண்டையின்
தாரர் தாரணி யும்விசும் புந்தவழ்
பேரர் பேரி முழக்கன்ன பேச்சினர்.

(இ - ள்.) ஆலோசிக்குமிடத்து,—தேர்வீரர்களும் குதிரைவீரர்களும் செம்புள்ளிகளுள்ளமுகத்தையுடைய மேகம்போன்ற [கருநிறத்தையுடைய] யானைவீரர்களுமான அவ்வரக்கர்கள்,—மேகம்போலக் கர்ச்சிப்பவர்களும்கிண்கிணிமாலையையுடையவர்களும் (மிக்கவளர்ச்சியாற்) பூமியிலும் வானத்திலும் படர்ந்த உடம்பையுடையவர்களும் பேரிகைவாச்சியங்களின் ஒலியை

யொத்த பேச்சையுடையவர்களுமாக இருந்தார்கள்; (எ-று.)—கண்டைத்தார்-வீரர்கள் தம்வீரத்திற்கு அறிகுறியாகக்கழுத்தில் அணிந்துகொள்வதோர் ஆபரணவிசேடமென்ப. இச்செய்யுளின் நான்கடிகளிலும் முதலில் மடக்கணி. காண்க. பேரம்-உடல்: அதனையுடையவர் - பேரர். பி-ம்:—1பாயும். 2செந்நிறக். 3இடியினர் கண்டையின், இடிப்பினர் கண்டையர், இடிப்பனகண்டையர், இடிப்பனகாட்சியர். (உ0அச)

கஉரு.—இரண்டுகவிக-ள் - பலவகையோசைகளைக்கூறும்.

பார்த்த பார்த்த திசைதொறும் பன்மழை
போர்த்த [1]வான மெனவிடி போர்த்தெழ
ஆர்த்த [2]வோசையு மம்பொடு வெம்படை
தூர்த்த [2]வோசையும் விண்ணினைத் [3]தூர்த்தவால்.

(இ-ள்.) கண்டகண்டதிக்குக்களிலெல்லாம் பலமேகங்கள் சூழ்ந்துகொள்ளப்பெற்ற ஆகாயம்போலக் கர்ச்சனை பரந்துஉண்டாகும்படி (வீரர்கள்) ஆரவாரஞ்செய்தலினால் தோன்றிய ஓசையும், அம்புகளையும் கொடிய (மற்றை) ஆயுதங்களையும் மிகுதியாகப்பிரயோகித்தலாலுண்டாகிய ஓசையும்,—வானத்தைநிறைத்தன [ஆகாயமெங்கும்பரவின]; (எ - று.)—பி-ம்:—1வானத்திடியெனப்போர்த்தனர். 2ஓதையும். 3தூர்த்ததால். (உ0அரு)

கஉசு.ஆளி யார்த்தன வாளரி யார்த்தன
கூளி யார்த்தன [1]குஞ்சர மார்த்தன
வாளி யார்த்தன [2]தேரிவர் [3]மண்டிலந்
தூளி [4]யார்த்தில தூற்பிணந் [5]துன்னலால்.

(இ - ள்.) (அவ்வரக்கர்சேனையில்),—யாளிகள் சத்தித்தன; ஆண்சிங்கங்கள் கர்ச்சித்தன; பேய்கள் பேராரவாரஞ்செய்தன; யானைகள் வீரிட்டன; (எய்த)அம்புகள் (செல்லும்விசையால்) ஒலிசெய்தன; தேர்கள் ஊர்ந்துசெல்லப்பெற்ற யுத்தகளமானது பிணங்கள் நெருங்கியிருப்பதனால் தூளிகள் மேலெழுந்து நிறையப்பெறவில்லை; (எ - று.)

தேரிவர்மண்டிலமென்றது-தூளிகளெழுந்து வானத்தில்நிறையவேண்டுமென்ற கருத்தைவிளக்கும் சாபிப்பிராயவிசேஷண மாதலால், கருத்துடையடைமொழியணி. யாளிகளும் சிங்கங்களும் பேய்களும் அவர்கள்தேரிற்பூட்டியவை, பேய்கள் பிணந்தின்னவந்தவையுமாம். கூளி-கழுகுமாம். இனி,யாளிகள்கட்டியவையும் சிங்கவேறுகள்கட்டியவையும் பேய்கள்கட்டியவையும்யானைகள்கட்டியவையும் மண்டலகதியாகச்செல்லுங்குதிரைகள் கட்டியவையுமான தேர்கள் நெருங்கிச்செல்லப்பெற்ற யுத்தகளம் பிணந்துன்னலால் தூளியெழப்பெற்றிலது என்று உரைப்பினுமாம். ஆர்த்திலது-ஆர்ந்திலது என்பதன் வலித்தல். ஒருபொருளுள்ள ஆர்த்தன என்றசொல் பலமுறைவந்தது-சொற்பொருட்பின்வருநிலையணி. பி-ம்:—1குதிரைகள்,குதிரையும். 2வானவர்,தேவர்தம். 3மண்டலம். 4ஆர்த்தில. 5துன்னவே, துன்றலால். (உ0அசு)

கஙரு.—இதுமுதல் ஐந்துகவிகள்-இந்திரசித்தும் அவன்பக்கத்தாரும் எதிர்த்துப்பொருகையில் இலக்குமணன் தன்திறனைக் காட்டியதைத் தெரிவிக்கும்.

வந்[1]த ணைந்ததொர் வாளரி வாவுதேர்
இந்தி ரன்றனை வென்றவ னேறினன்
[2]சிந்தி னன்சர மாரி திசைதிசை
அந்தி [3]வண்ணனொ ரம்பி னகற்றினன்.

(இ-ள்.) இந்திரசித்து (தம்மவராற்கொணரப்பட்டு அங்கு) வந்துசேர்ந்ததாகிய கொடியசிங்கங்கள் (பூட்டப்பட்டு அவை) தாவிச்செல்லப்பெற்றதொரு தேரின்மேல்ஏறிப் பாணவருஷங்களைத் திக்குக்களிலெல்லாம் பொழிந்தான்; சந்தியாகாலத்தின் [செவ்வானத்தின்] நிறம்போன்ற நிறமுடையவனான இலக்குமணன் (தனது) அம்பு ஒன்றினாலேயே (அவற்றையெல்லாம்) நீக்கிவிட்டான்; (எ - று.)—சரமாரி பொழிந்தனன்-உருவகம். இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை. பி-ம்:—[1]அணைந்தன. [2]சிந்தினன்சரம்மாருதிமேற்செல, சிந்தின... வரும். [3]வண்ணனும். (உ௦அஎ)

கஙகா.சுற்றும் வந்து [1]பரந்து தொடர்ந்தவர்
எற்று கின்றன [2]வெய்த வெறிந்தன
அற்று திர்ந்தன வாயிரம் வன்றலை
ஒற்றை வெங்கணை யோடு [3]முருண்டவால்.

(இ-ள்.) (இலக்குமணனைச்) சுற்றிநின்று பரவித்தொடர்ந்துள்ள இராக்கதர்கள் மோதுகின்றவையும் பிரயோகித்தவையும் மேல்வீசியவையுமான எல்லாஆயுதங்களும், (இலக்குமணனுடைய அம்புகளால்) அறுபட்டுப் பொடியாய்ச் சிதறின; ஆயிரம் (அரக்கர்களின்) வலியதலைகள் (இலக்குமணனெய்த) ஒரே கொடிய பாணத்தோடும் கீழுருண்டுவிழுந்தன; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

எற்றுகின்றன-தண்டாயுதம்போன்றவை. எய்த - பிறைக்கணைபோன்றவை. எறிந்தன-வேல்போன்றவை. இலக்குமணன் தனது அம்புகளால் எதிரிகளது ஆயுதங்களையெல்லாம் நீறாக்கி ஒரேஅம்புகொண்டு ஆயிரவர்முடிகளையறுத்துத்தள்ளினனென்பதாம். ஈற்றடி-உடனவிற்சியணி. பரந்து-பரபரப்புக்கொண்டு எனினுமாம். பி-ம்:—[1]படர்ந்து.[2]எய்து.[3]உருட்டினான். (உ௦அஅ)

கஙஎ.குடர்[1]கி டந்தன பாம்பெனக் கோண [2]மதித்
திடர்கி டந்தன சிந்தின தேர்த்[3]திரள்
படர்[4]கி டந்தனர் பல்படைக் [5]கையினர்
கடர்கி டந்தன [6]போன்ற களத்திலே.

(இ-ள்.) சமுத்திரம்கிடந்தாற்போன்ற[மிகப்பரந்த]போர்க்களத்திலே,--குடல்கள், பாம்புபோன்றவடிவத்துடன் விழுந்துகிடந்தன; வலிமையையுடைய மதயானைகள்,குன்றுகள்போலவிழுந்துகிடந்தன; தேர்களின்கூட்டங்கள்,பொடியாய்ச்சிதறின; பல ஆயுதபாணிகளாகிய வீரர்கள் (தங்கள்தேகம் இலக்குமணனுடைய பாணங்களாற் புண்பட்டுத்) துன்பத்தில் ஆழ்ந்தார்கள்; (எ - று.)

சொற்பொருட்பின்வருநிலையணியும் உவமையணியுஞ் சேர்ந்துவந்த சேர்வையணி. மதித்திடர் - இகரவீறு சிறுபான்மை எழுவாய்த்தொடரில்

மிக்கது. மதத்தையுடையது மதி என யானைக்கு வடமொழிக் காரணக்குறி அது, தமிழில் ஈயீறு இகரமாயிற்று. மூன்றாமடிக்கு—பல் படைக்கையினர்-பலவகை ஆயுதங்களையேந்திய கைகளையுடையவர்களான, படர்-போர்வீரர்கள், கிடந்தனர்-(இறந்துவிழுந்து)கிடந்தார்கள் என்றும் உரைக்கலாம்; படர்-வட சொல். திடர் கிடந்தன-உவமைத்தொகை. கடர் = கடல்;போலி.பி-ம்:—1கிடந்தது. 2மதத். 3திரட். 4கிடந்தன. 5கையன. 6போன்று. (உ௦அக)

கஅஅ.குண்ட லங்களு மாரமுங் கோவையும்
1கண்ட நாணுங் கழலுங் கவசமுஞ்
சண்ட மாருதம் வீசத் தலத்துகும்
2விண்ட லத்தினின் மீனென வீழ்ந்தவால்.

(இ-ள்.) (அரக்கர்களுடைய) குண்டலங்களும் முத்துமாலைகளும் அணிவடங்களும் கண்டசரங்களும் வீரக்கழல்களும் கவசமும் ஆகியஎல்லாம்,—(சங்காரகாலத்துக்) கொடும்பெருங்காற்று வீசுதலால் ஆகாயத்திலிருந்து பூமியில் விழுகின்ற நட்சத்திரங்கள்போல (லக்ஷ்மணனுடைய பாணங்களால் அற்றுக்) கீழ்விழுந்தன; (எ-று.)—ஆல்-ஈற்றசை. பி-ம்:—1கண்டை. 2விண்டலஞ்செறி மீனின்விளங்குமால், விண்டலத்துள மீனின்விழுந்தவால், விண்டலத்துளமீனும்விழுந்தவால். (உ௦கூ௦)

கஅகூ.அரக்கன் 1மைந்தனை 2யரிய 3னம்பினாற்
கரக்க நூறி யெதிர்பொரு கண்டகர்
சிரக்கொ டுங்4குவைக் குன்று 5திரட்டினான்
இரக்க 6மெய்தி யெவங் காலனு 7மெஞ்சவே.

(இ - ள்.) இலக்குமணன், (தனது) பாணங்களினால்,—இராவணன்மகனை இந்திரசித்தை,(உருவம்)மறையும்படி எய்து,—கொடியயமனும் மனமிரங்கிப் பின்னிடையும்படி, எதிர்த்துப்போர்செய்கிற துஷ்டர்களான அரக்கர்களுடைய கொடியதலைகளின் குவியல்களை மலைபோலக் குவித்தான்; (எ-று.) —பி-ம்:—1மைந்தன். 2அடுங்கணை, அடுகணை, அடுசிலை. 3யாவையும். 4குலக். 5திரட்டினர். 6எய்த. 7ஏகவே, ஏங்கவே, ஓங்கவே. (உ௦கக)

கஅ௦.—நான்கு கவிகள் - இலட்சுமணன்வாகனமாகிய அநுமான்செய்த போரைத் தெரிவிக்கும்.

1சுற்றி வால்கொடு தூவுந் துவைக்கும்விட்டு
எற்றும் வானி னெடுத்தெறி யும்மெதிர்
உற்று மோது 2முதைக்கு 3முறுக்குமாற்
கொற்ற வில்லி4யன் றேறிய கூற்றமே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வில்வீரனான இலக்குமணன் அப்பொழுது ஏறியிருக்கப்பெற்ற யமன்போன்ற அநுமான்,—(அரக்கர்களைத் தனது)வாலினாற் சுற்றி(க்கட்டி வாரித்)தூவுவான்;(கால்களால்)மிதிப்பான்; வெட்டித்தள்ளிவிடுவான்; ஆகாயத்தில் தூக்கியெறிவான்; எதிர்சென்று அறைவான்; உதைப்பான்; வெருட்டுவான்; (எ - று.)

சொல்லுத்தற்றொழிலொப்புமையால், அநுமானைக் கூற்றமாக உருவகஞ் செய்தார்; அடுத்த மூன்று கவிகளிலும், யானையாகவும் சிங்கமாகவும் குதிரை யாகவும் உருவகப்படுத்திக் கூறுதல் காண்க. அநுமான்செய்த வீரச்செயலைக் கற்றோருள்ளம் மகிழும்படி கூறியுள்ளது, தன்மைநவிற்சியணி. இச்செய்யு ளில் உருவகமும் தன்மைநவிற்சியும் திலதண்டுலநியாயத்தாற் சேர்ந்துவந் தது, சேர்வையணியாம். பி-ம்:—[1]சுற்றும். [2]உருட்டும். [3]உழக்குமால், உதை க்குமால். [4]இன்று. (உ0கூஉ)

கசசக. பார்க்கு மஞ்ச வுறுக்கும் [1]பகட்டினால்
தூர்க்கும் வேலையைத் தோள்[2]புடை கொட்டிநின்று
ஆர்க்கு மாயிரந் தேர்பிடித் தங்கையால்
ஈர்க்கு மையனன் றேறிய யானையே.

(இ-ள்.) இலக்குமணன் அப்பொழுது ஏறியிருந்த யானைபோன்ற அநு மான்,—(எதிரிகள்) அஞ்சும்படி விழித்துப்பார்ப்பான்; அதட்டுவான்; யானை களை வீசியெறிந்து அவற்றாற் கடலைத்தூர்ப்பான்;தோள்களினிடங்களைத்தட்டி ஆரவாரஞ்செய்துநிற்பான்;(தனது)அழகியகைகளால் ஆயிரந்தேர்களைப்பிடித் திழுப்பான்; (எ - று.)—இதுவும் - உருவகமும் தன்மைநவிற்சியுஞ் சேர்ந்து வந்த சேர்வையணியே.வாகனமாய்நிற்றலும்,வலிமையும்,பெருந்தோற்றமும் பற்றி, அநுமானை யானையாக உருவகஞ்செய்தார். பி - ம்:—[1]பகட்டுமால். [2]புடைத்தொட்டி. (உ0கூ௩)

கசசஉ. மாவு [1]மியானையும் வாளுடைத் தானையும்
பூவு நீரும் புனைதளி ரும்மெனத்
தூவு [2]மள்ளிப் பிசையுந் துகைக்குமாற்
சேவ கன்றெரிந் தேறிய சீயமே.

(இ-ள்.) வீரனான இலக்குமணன் ஆராய்ந்துஏறியிருந்த சிங்கம்போன்ற அநுமான்,—குதிரைகளையும், யானைகளையும், வாளாயுதத்தையுடைய காலாட் சேனைகளையும், பூக்களும் சலமும் அழகியதளிர்களும்போல (மிகஇலேசாக எடுத்து)த்தூவுவான்; வாரிப் பிசைவான்; துகைப்பான்; (எ - று.)

மா-குதிரையையுணர்த்திற்று. குதிரைகளைப் பூப்போலக் கொண்டு தூவு வான்; யானைகளை நீர்போலக்கொண்டு அள்ளிப்பிசைவான்; காலாட்சேனைக ளைத் தளிர்போலக் கொண்டு துகைப்பான் என இயைத்து, முறைநிரனிறைப் பொருள்கோ ளென்னலுமாம். தெரிதல் - எதிரியான இந்திரசித்து தேரேறி நிற்க,தான் காலாளாயிருந்து போர்புரிதல் கூடாதென்று செய்த ஆலோசனை. பலபராக்கிரமங்களால் மிகஎளிதிற் பெரும்பகை யழித்தல்பற்றி, அநுமானைச் சிங்கமாக உருவகஞ்செய்தார். பி-ம்:—[1]ஆனையும். [2]அள்ளும். (உ0கூச)

கசசங. உரகம் பூண்ட வுருவோ பொருந்தின
இரத மாயிர [1]மேயெனு மாத்திரை
சரத மாகத் தரைப்படச் சாடுமால்
வரத னன்றுவந் தேறிய வாசியே.

(இ - ள்.) இலக்குமணன் அப்பொழுது மனமகிழ்ந்து ஏறியுள்ள குதிரை போன்ற அநுமான்,—பாம்புகள் பூட்டப்பட்டவையும்(வலிய) சக்கரங்கள்பொருந்தியவையுமான ஆயிரந்தேர்களை, மிக்கவிரைவில் நிச்சயமாகத் [தவறாமல்] தரையில் வீழ்ந்துஅழியும்படி மோதுவான்; (எ - று.)

தேர்களிற் கயிறுகட்டவேண்டிய இடங்களிலும், அத்தேர்க்குதிரைகட்கு வார்முதலியன வேண்டுமிடங்களிலும் பாம்புகள் உபயோகிக்கப்பட்டிருந்தன வென்க. ஏயெனல்-விரைவுக்குறிப்பு. வரதன்-வேண்டுவோர்க்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பவன். விரைந்துசெல்லும் வாகனமாயினமைபற்றி, அநுமானைக் குதிரையாக உருவகஞ்செய்தார். சரதம்-விளையாட்டுமொம். இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை. பி-ம்:—1எய்யெனும். (உ௦கரு)

கசச.—இர்திரசித்தின் அம்பினால்மூர்ச்சித்த வானரர்
மூர்ச்சைதெளிந்தெழுதல்.

அவ்வி டத்தினி லாய்மருந் தா[1]லழல்
வெவ்வி டத்தினை யுண்டவர் மீண்டென
எவ்வி டத்தினும் [2]வீழ்ந்த வினத்தலைத்
தெவ்வ டக்கும் வலியவர் தேறினார்.

(இ-ள்.) அப்பொழுது,—வெப்பங்கொண்ட கொடியவிஷத்தை உண்டு மயங்கினவர் சிறந்தமருந்தினாற் பிழைத்துஎழுந்தாற்போல,(போர்க்களத்திற்) பலவிடங்களிலும் (இந்திரசித்தின் பாணங்களினால் மூர்ச்சித்து) விழுந்துகிடந்தவர்களாகிய (அவ்வநுமானுடைய) இனத்தில் [வாநரக்கூட்டத்தில்] உள்ளவர்களான பகையடக்கும்வல்லமையுடைய வீரர்கள், (சிறிதுநேரங்கழிந்ததும் தாமாகவே) மூர்ச்சைதெளிந்து எழுந்தார்கள்; (எ - று.)

கொடுவிஷத்தினால் மூர்ச்சையடைந்தவர் நல்லமருந்தினால் அம்மூர்ச்சை தெளியப்பெற்று எழுந்திருத்தல்போல, இந்திரசித்தின் கொடிய அம்புகளால் மூர்ச்சித்தவாநரவீரர்கள் அம்மூர்ச்சைதெளியப்பெற்று எழுந்தனர்: உவமையணி. அழல் விடம் - வினைத்தொகை: உவமைத்தொகையாகவும் விரிக்கலாம். 'வலியவர்' என்றது, இலக்குமணன் இந்திரசித்துடன் போர்புரியுமுன் அவ்விந்திரசித்துக்குத் தோற்றுவிழுந்த வாநரர்களை. பி-ம்:—1உழல். 2வீழ்ந்தவினைத்தலை, வீழ்ந்தவரெண்ணிலர், வீழ்ந்தவரெண்ணிலாத். (உ௦கசு)

கசரு.—மூர்ச்சைதெளிந்த வானரரின்போர்.

தேறி னார்க ணெருப்புகச் சீறினார்
ஊறி னார்வந் திளவலை யொன்றினார்
[1]மாறு மாறு மலையு மரங்களும்
நூறு மாயிர முங்கொடு [2]நூறினார்.

(இ - ள்.) தெளிந்து எழுந்த அவ்வாநரவீரர்கள்,—நெருப்புப்பொறிபறக்கும்படி கோபித்து, மேன்மேல்நெருங்கிவந்து இளையபெருமாளையடுத்து, எதிரியானஇந்திரசித்துக்கு மாறாக(எதிர்நின்று) மலைகளையும் மரங்களையும் நூற்றுக்கணக்காகவும்ஆயிரக்கணக்காகவும் (கைகளில்ஏந்திக்)கொண்டு (எதிரிகளை)அழித்தார்கள்; (எ - று.)

ஊறினர் - ஊற்றில் நீர்சுரப்பதுபோல (வாநரவீரர்கள்) மேன்மேல் இலக்குமணனைச் சேர்ந்தனரென்க; இனி, வலிமையுடையவர்களாய் என்றும், (பகைவர்க்கு) ஊறுசெய்பவர்களாய் என்றும் உரைக்கலாம்: ஊறு - இடையூறு, தழும்பு, தீங்கு, கொலை. மாறு-மாற்றான்: பகைவன். இனி, மாறுமாறு - மாற்றிமாற்றி என்றுங் கொள்ளலாம். தேறினர் கண் நெருப்பு உக சீறினர் என்று பிரித்தும் உரைக்கலாம். பி-ம்:—[1] மாறிமாறி, மாறுமற்றை. [2] நூறினன். (உ௦௬௭)

௬௪௬.—வானரர் வீசிய மரங்களினாலும் குன்றுகளினாலுஞ் சிதைந்த இரதங்களின் வருணனை.

விகட [1]முற்ற [2]மரனொடு வெற்பினம்
[3]புகட [4]வுற்ற பொறுத்தன போவன
துகட வத்தொழில் [5]செய்துறைக் கம்மியர்
சகட மொத்தன [6]தாரணி தேரெலாம்.

(இ - ள்.) வேறுபாடுபொருந்திய [பலவேறுவகைப்பட்ட] மரங்களையும் மலைகளின்கூட்டத்தையும் (வாநரவீரர்) வீசிமேலெறிய (அவைபடுதலால் தமக்கு)நேர்ந்தஊறுபாடுகளைக் கொண்டவையாய் அழிந்தொழிவனவான இங் கிணிகள்கட்டப்பட்டுள்ள தேர்களெல்லாம்,—கம்மாளரின் குற்றமில்லாமல் வேலைசெய்கிற இடங்களிலுள்ள [வேலைமுற்றுப்பெறாத] தேர்களையொத்தன.

வாநரவீரர்கள் மரங்களையும் மலைகளையும்எறிதலால் உறுப்புக்கள் சிதைந்துபோன அரக்கரது தேர்கள், சிற்பிகளால் அரைகுறையாக வேலைசெய்யப்பட்டுத் தொழில்முற்றுப்பெறாமல் அவர்கள் கைத்தொழிற்சாலைகளிலுள்ள தேர்களைப் போலு மெனக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. விகடம் - கரடுமுரடுமாம். புகட-புகவிட என்பதன் மரூஉ; இது, போகட எனவும் மருவிவரும். துகள் தவ எனப்பிரியும்: தவ = தப: நீங்க. கர்மம் - தொழில்: அதுசெய்பவன், கர்மீ; வடசொல்: அது, கம்மியென விகாரப்பட்டது: அதன் பன்மை - கம்மியர். கம்மியர்-இங்கு, மரத்தச்சர். பி-ம்:—[1] அற்ற. [2] மராமரம். [3] பொகட. [4] உற்றுப். [5] செய்துறைகம்மியர். [6] தாரணித்தேரரோ. (உ௦௬௮)

௬௪௭.—மூன்றுகவிகள்-அங்கதன்இந்திரசித்தைவென்றதைத் தெரிவிக்கும்.

வாலி மைந்தனெர் [1]மாமரம் வாங்கினன்
[2]காலின் [3]வந்த வரக்கனைக் காவிது
போலு முன்னுயி ருண்பது புக்கென
[4]மேனி மிர்ந்து நெருப்புக வீசினன்.

(இ-ள்.) வாலியின்புதல்வனான அங்கதன் ஒருபெரியமரத்தைப் பெயர்த்துக்(கையிற்) கொண்டு, தேரில்வந்த இந்திரசித்தை(நோக்கி), 'இம்மரம்வந்து உனதுஉயிரைஅழிக்கும்: (இதனை அங்ஙனஞ் செய்யவொட்டாது) பாதுகாத்துக்கொள்வாயாக' என்றுசொல்லி, உயரஎழுந்து (மிக்கவேகத்தால்) நெருப்புப்பொறி பறக்க வீசினன்; (எ - று.)

கால்-தேர்ச்சக்கரம்; இங்குச் சினையாகுபெயராய்த் தேரைக் குறித்தது. போலும் - ஒப்பில்போலி. இனி, 'காலின்வந்த' என்பதற்கு - காற்றுப்போல்

(வேகமாய்த் தேரில்) வந்தனன்றுமாம். பி-ம்:—1மால்வரை, மாமலை. 2காலன். 3வந்தவ். 4மேலிவர்ந்து, மேனிரந்து. (உ௦கக)

கசஅ. ஏர ழித்தது செய்தவ னீண்டெழிற்
சீ1ர ழித்தவ னாமெனத் 2தேவர்கள்
ஊர ழித்த 3வுயர்வரைத் தோளவன்
தே4ர ழித்த திமைப்பினிற் சென்றதால்.

(இ - ள்.) '(இவ்வங்கதன்), அழகுகெட்டதை [தீத்தொழிலைச்] செய்தவனாகிய இராவணனுடைய நெருங்கிய வலிமையின்சிறப்பை அழித்தவனாவான்' என்று (கண்டோர்) சொல்லும்படி,—(அங்கதன் எறிந்த அம்மரம்), தேவர்களின்இருப்பிடமான சுவர்க்கலோகத்தை யழித்தவனும் உயர்ந்தமலை போன்ற தோள்களையுடையவனுமான இந்திரசித்தின்தேரை ஒருநொடிப்பொழுதில்அழித்துச்சென்றது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

தேவர்கள்முதலியோரைவருத்துதல், பிறர்மனைநயத்தல்முதலிய சிறப்பற்றஇழிதொழில்களைச் செய்தனனாதலால்,இராவணனை 'ஏரழித்ததுசெய்தவன்' என்றார். ஏரழித்தது - சாதியொருமை. அங்கதன் மிக்கஉக்கிரங்கொண்டு மரத்தையெடுத்து எறிந்தபோது, அம்மரத்தின்விசை,'இராவணன் பக்கத்துக்கு இதனால் தோல்வி விளைவது நிச்சயம்' எனக் கண்டோர்சொல்லும்படியிருந்த தென்க. இனி, செய் தவன் எழில் சீர் அழித்தவன்என - செய்ததவமுடையோனான [அல்லது படைத்தற்கடவுளான] பிரமனது அழகின்சிறப்பை (அவனது ஐந்துமுகங்களில் ஒன்றைக்கொய்ததனால்) அழித்தவனான உருத்திரமூர்த்திபோல, ஏர்அழித்தது -அழகையழித்து, தேர்அழித்தது எனக்கூறலு மொன்று. பி-ம்:—1அழித்தவர்தாமெனத். 2தேவர்தம். 3உயர் வலித். 4அழித்தொரிமைப்பிடைச். (உகOO)

கசகூ. அந்த வேலையி னார்த்தெழுந் தாடினார்
சிந்தை 1சீரி னுயர்ந்தனர் தேவர்கள்
தந்தை 2தந்தைபண் 3டுற்ற 4சழக்கெலாம்
எந்தை தீர்த்தன னென்பதோ 5ரேம்பலால்.

(இ - ள்.) அப்பொழுது தேவர்கள்,—மனத்தில் மிக்கபெருமையாராட்டியவர்களாய்,'முன்னே பாட்டனாகியஇந்திரன் (இவ்விந்திரசித்தினால்)அடைந்த அவமானத்தையெல்லாம் எமதுஐயனாகியஇவ்வங்கதன் தீர்த்தனன்' என்று கருதுதலினாலாகிய ஒப்பற்ற சந்தோஷத்தினால் ஆரவாரித்துஎழுந்து கூத்தாடினார்கள்; (எ - று.)

இந்திரன் இந்திரசித்தினிடத்துத் தோற்றதனாலாகிய அவமானத்தை இந்திரன்பேரனாகிய அங்கதன் அவ்விந்திரசித்தை வென்றதனால் தீர்ப்பவனானான். தந்தைதந்தை - தந்தைக்குத் தந்தை; பாட்டன்: பிதாமஹன். அங்கதன் தந்தையாகிய வாலிக்கு,இந்திரன் தந்தையாதலறிக. பி-ம்:—1சாலவுவந்தனர். 2தாதையன்று. 3உள்ள. 4சமழ்ப்பெலாம். 5ஏமலால். (உகOக)

கரு௰.—வென்றஅங்கதனை 'அப்பாற்செல்லாதே' என்று இந்திரசித்து நெருங்குதல்.

அழிந்த தேரினின் றந்தரத் தக்கணத்து
எழுந்து மற்றொ ரிரதமுற் றேறினன்
கழிந்து போகலை நில்லெனக் [1]கைக்கணை
பொழிந்து சென்றனன் றீயெனப் [2]பொங்கினான்.

(இ - ள்.) (தன்தேர்அழிந்த)அச்சமயத்தில்(இந்திரசித்து).அழிந்த(அந்த) இரதத்திலிருந்து ஆகாயத்திற்கிளம்பி வேறோர்இரதத்தைச்சார்ந்து ஏறி அக்கினிபோற்கொதித்து, (அங்கதனைநோக்கி), 'அப்பால் (உயிர்தப்பிச்)செல் லாதே:நில்' என்றுகூறி, கையினால் (வில்லினின்று)அம்புகளைச் சிந்தி நெருங் கினான்; (எ - று.)—கழிந்துபோகலை - உயிர்தந்துபோ என்றபடி. பி-ம்:— [1]கார்க்கணை. [2]பொங்குவான். (உகoஉ)

கருக.—இதுவும் அடுத்தகவியும் - இந்திரசித்தைவளைந்துகொண்டு பலவானரங்கள் பொருதமையைக்கூறும்.

இந்தி ரன்மகன் மைந்தனை யின்னுயிர்
தந்து போகெனச் [1]சாரலுற் றான்றனை
வந்து மற்றைய வானர வீரரும்
முந்து போர்க்கு முறைமுறை [2]முற்றினார்.

(இ - ள்.) இந்திரன்புதல்வனை வாலியினுடைய பிள்ளையாகிய அங்க தனை (நோக்கி), '(உனது) இனிய உயிரை (எனது அம்புகளுக்கு இலக்காக) க் கொடுத்துச்செல்வாய்' என்றுகூறி (அவ்வங்கதனை)க் கிட்டினவனாகிய இந் திரசித்தை, மற்றுமுள்ள வானரவீரர்களெல்லாம், போர்செய்யும்பொருட்டு அடைந்து விரைவாக வரிசைவரிசையாய் சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று)

'இளவரசனாகிய அங்கதனுக்கு இந்திரசித்தினால் என்னதீங்குநேருமோ!' என அஞ்சி,அவனுக்குத் துணையாகப்போர்புரியுமாறு மற்றைவானரவீரர்கள் இந்திரசித்தைச் சூழ்ந்தன ரென்க. இந்திரசித்து அங்கதனை 'உயிர்தா' என் றான், தன்னோடொத்தவீரனாகக்கருதினானதலால். முந்துபோர் - சிறப்பாகச் செயயும் போர் எனினுமாம். பி-ம்:—[1]சாற்றல். [2]முன்னினார். (உகoங)

கரு௨.மரமுங் குன்று மடிந்த வரக்கர்தஞ்
சிரமுந் தேரும் புரவியுந் திண்[1]கரிக்
கரமு [2]மாளியும் வாரிக் கடியவன்
சரமுந் தாழ்சர வீசினர் [3]தாங்கினார்.

(இ-ள்.) (இந்திரசித்தைச்சூழ்ந்துகொண்ட வானரவீரர்கள்),—மரங்களை யும் மலைகளையும் இறந்துபோன ராக்ஷசர்களின்தலைகளையும் தேர்களையும் குதி ரைகளையும் வலிமையுள்ளயானைகளின் துதிக்கைகளையும் சிங்கங்களையும்(கைக ளால்)வாரியெடுத்து,கொடியவனாகிய இந்திரசித்து(எய்கிற)அம்புகளின் வேக மும் (இவைகளின்வேகத்திற்கு மிகவும்) பின்னிடும்படி வீசினர்; (எ - று.)

இந்திரசித்தின் அம்புகளைக்காட்டிலும் மிக்கவிசையுடையனவாயிருந் தன, வானரவீரரெறிந்த மரங்கள்முதலியன என்றவாறும். கரி-கரத்தையுடை

யது என யானைக்குக் காரணக்குறி. கடியவன்சரமுந்தாழ்தர என்பதற்கு-இந்திரசித்தின் பாணங்களும் தம்மால் வலியற என்று கூறினுமாம். வீசினர்தாங்கினர் - வீசிஎதிர்த்தார்கள் எனினுமாம். வாரித் தாங்கினர் வீசினர் என்க. பி-ம்:—1கிரிக். 2வாரிக்கடிந்தவனேவிய, வாளியும்வாரிக்கடியவன். 3தாங்கினன்.

கருரு.—இலட்சுமணன் லக்ஷத்கணக்கான அரக்கர்களின் உயிரைப்போக்குதல்.

அனைய காலையி லாயிர மாயிரம்
வினைய வெங்க ணரக்கரை விண்ணவர்
நினையு மாத்திரத் [1]தாருயிர் நீக்கினன்
[2]மனையும் வாழ்வு முறக்கமு மாற்றினன்.

(இ - ள்.) அச்சமயத்தில், மாளிகையையும் அரசவாழ்க்கையையும் தூக்கத்தையும் நீக்கியுள்ளவனாகிய இலக்குமணன்,—போர்த்தொழிலையும் கொடுமையையுமுடைய பத்துலக்ஷக்கணக்கான ராக்ஷசர்களை, தேவர்கள் நினைக்கும் பொழுதிற்குள்ளே[தேவர்களும்மனத்தினால் எண்ணமுடியாதபடி மிக்கவிரைவாக], அருமையான உயிரைப்போக்கினன் [கொன்றான்]; (எ - று.)

மனையும் வாழ்வும் உறக்கமும் மாற்றினன் - சர்வேசுவரனாயும் தனது தமையனாயுமுள்ள ஸ்ரீராமபிரானுக்கு, ஸர்வதேஸ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அடிமைத்தொழில் செய்வதற்காக நாடுதுறந்து அப்பிரானுடனே காடுபுகுந்து நாட்டின்பங்களையெல்லாங் கைவிட்டு ஜாகரூகனாய் எல்லாக்காலத்திலும் சகலவிதகைங்கரியமுஞ் செய்யும் இளையபெருமாளென்க. ஈற்றடியில் உடனிகழ்ச்சியணி காண்க. பி-ம்:—1ஆக்கையை. 2மனையின்வாழ்வும். (உகoரு)

கருசு.—தோல்வியுற்ற இந்திரசித்து சீறுதல்.

ஆனை யுந்[1]தடந் தேருந்தன் னாருயிர்த்
தானை யும் பரியும் [2]பட்ட தன்மையை
மான வெங்க ணரக்கன் [3]மனக்கொளாப்
போன வென்றியன் றீயெனப் பொங்கினன்.

(இ-ள்.) அகங்காரத்தையும் கொடுந்தன்மையையுமுடைய இந்திரசித்து,—யானைகளும் பெரியதேர்களும் தனது அரியஉயிர்போன்ற காலாட்சேனைகளும் குதிரைகளும் அழிந்த விதத்தை மனத்தில் எண்ணி(க் கவலைகொண்டு), நீங்கியவெற்றியுடையவனாய் [அபஜயமடைந்து] நெருப்புப்போலச் சீறினன்.

'ஆருயிர்த்தானை' என்ற இதனால், இந்திரசித்து சேனையின்மேல் வைத்திருந்த பேரபிமானமும், சேனையின் இன்றியமையாமையும் விளங்கும். 'போன வென்றியன்' வடமொழிநடை. பி-ம்:—1அடர். 2படுந். 3மகன். (உகoசு)

கருஎ.—தேர்ச்சக்கரக் காவலாளரான தூமிராட்சமகாபாரிசுவரை இந்திரசித்து காணுதல்.

[1]சேர்த்த டம்பெருஞ் சில்லியந் [2]தேரினர்
காத்து நின்ற விருவரைக் கண்டனன்
[3]ஆர்த்த தம்பெருஞ் சேனைகொண் [4]டண்டமேல்
ஈர்த்த சோரிப் பரவை[5]நின் றீர்த்தலால்.

(இ - ள்.) ஆரவாரஞ்செய்த தம்பக்கத்து [இராக்கதராது] (இறந்த) பெரியசேனைகளை வாரிக்கொண்டு அண்டமுகட்டில்முட்டிய இரத்தக்கடல் (பரவி)நின்று (இந்திரசித்தின்தேரையும்) இழுத்தலால், (அங்ஙனம் இழுக்க வொட்டாதபடி) பாதுகாத்துக்கொண்டிருந்த சிறந்த மிகப்பெரிய அழகிய (தனது) தேர்ச்சக்கரத்தை யடுத்துள்ளவர்களான (தூம்ராக்ஷன் மகாபார்சுவன் என்ற) இருவரையும், (இந்திரசித்து), கண்டான்; (எ - று.)

சில்லியந்தேரினர் - அந்தேரின்சில்லியர்என விகுதிபிரித்துக் கூட்டல். இனி, இச்செய்யுளுக்கு-இரத்தவெள்ளம் பரவிநின்று (தம்மையும்) இழுத்த லால் (அங்ஙனந் தம்மைஇழுக்கவொட்டாதபடி இந்திரசித்தின்) மிகப்பெரிய தேரைப் பற்றுக்கோடாகப் பற்றிக்கொண்டவர்களாய்(த்தம்மைப்)பாதுகாத்து நின்ற (அத்தேர்க்காவலாளரான) இரண்டு அரக்கர்களையும் (இந்திரசித்து) கண்டான் எனவும் உரைகூறுவாருமுளர். பி-ம்:—1தேர்த்தடம். 2தேரினைக். 3ஆர்த்ததப், ஆர்த்தவப், ஆர்த்துநும். 4அண்மினீர். 5நின்றேற்றலான், நின் றேறிரால். (உகoஎ)

கருகூ.—தேர்செல்லமாட்டாமையால் அவ்விரண்டரக்கரும் ஓரிடத்திலேதானே இருத்தல்.

நேர்செ லாதிடை 1நின்றனர் நீணெடுங்
கார்செ லாவிருள் 2கீறிய கண்ணகன்
தேர்செ லாது 3விசும்பிடைச் செல்வதோர்
பேர்செ லாது பிணத்தின் 4பிறக்கமே.

(இ - ள்.) (அப்போர்க்களத்தில்), பிணங்கள் மலைபோலக் குவிந்திருத்த லால்,—(அதற்குநேராக மேலே) மிகப்பெரியமேகங்களும் செல்லமாட்டா; இருளையழிக்கின்ற (சூரியனுடைய) இடமகன்ற தேரும் செல்லமாட்டாது; ஆகாயத்திற்செல்லுந்தன்மையுள்ள (ஜந்துக்களில்) ஒருஜந்துவும் செல்லாது; (இவ்வாறு பிணங்கள் நெருங்கியிருத்தலால் அவ்விரண்டு வீரர்களும்), நேரா கப்பெயர்ந்து செல்லமாட்டாமல் (நின்ற) இடத்திலேயே நின்றார்கள்; (எ-று.)

ஓர்பேர்-ஒருஜந்து. பிறக்கம்-(உயர்ச்சியால் நெடுந்தூரத்திலும்) பிறங்கு வது [விளங்குவது] என மலைக்குக் காரணப்பெயர். பிணத்தின் பிறக்கம்-பிண மலை. பிணங்கள் மலைபோலக் குவிந்து தன்மீது ஒன்றையுஞ்செல்லவொட்டாது தடுக்குமெனக் கூறி அதன் மிகுதியை விளக்கினர்: தொடர்புயர்வுநவிற்சி யணி. பி-ம்:—1நின்றன. 2கீறிய. 3விசும்பினில், 4பிறங்கலால், பிறங்கலே. (உகoஅ)

கருஎ.—இந்திரசித்து தூம்ராக்ஷமகாபார்சுவர்களிடத்து இலக்குமணன்திறலை வியந்துகூறுதல்.

அன்று தன்னய னின்ற வரக்கரை
1ஒன்று வாண்முக நோக்கி யொருவிலான்
நன்று நம்படை நாற்பது வெள்ளமுங்
கொன்று நின்ற படியெனக் கூறினன்.

(இ - ள்.) அப்பொழுது, (இந்திரசித்து),—தனதுபக்கத்தில்நின்ற(அவ் விரண்டு)அரக்கர்களது ஒளிபொருந்திய முகத்தைப் பார்த்து, 'வில்லையேந்திய

ஒருவனுன லக்ஷ்மணன் நமது சேனைநாற்பதுவெள்ளத்தையும் அழித்துநின்ற விதம் வியக்கத்தக்கது!' என்று சொன்னான்; (எ - று.)

இந்திரசித்து, இலக்குமணனது அஸஹாயசூரத்தன்மையை அவ்வரக்கர்களிடத்து வியந்துகூறினனென்க. பி-ம்:—[1]ஒன்றநோக்கியொருவில்லி னுற்றலான். (உசுகூ)

கூஅ.—அவ்வரக்கர் உம்மிருவர் திறலும் ஒருதிறத்தனவெனல்.

ஆய வீரரு மைய வமர்த்தலை
நீயு நாற்பது வெள்ள நெடும்படை
மாய வெங்கணை மாரி வழங்கினை
[1]ஓய்வில் வெஞ்செரு வொக்குமென் றோதினர்.

(இ-ள்.) (அதுகேட்ட) அவ்விருவீரரும்,—(இந்திரசித்தை நோக்கி),—'சிறந்தவனே! போர்க்களத்தில் நீயும் (எதிரிகளுடைய) நாற்பதுவெள்ளக் கணக்கான பெரிய (வாநர) சேனை அழியும்படி, கொடிய அம்புகளை மழை போலச் சொரிந்தாய்: (ஆகையால்), இடைவிடாதுசெய்த (உனது) கொடிய போர் (அவ்விலக்குமணன்போரோடு) ஒத்ததேயாம்' என்றார்கள்; (எ - று.)

'இலக்குமணனும் நமது நாற்பதுவெள்ளஞ்சேனையைக் கொன்றான்; நீயும் எதிரிகளுடையசேனையில் நாற்பதுவெள்ளங் கொன்றாய்; ஆதலின், இருவருடையபோரும் ஒத்திருத்தலால், நம்பக்கத்துக்குத் தோல்விநேரிட்டதெனக் கவலைப்படக் காரணமில்லை' என இந்திரசித்துக்கு அவ்விருவரும் தேறுதல் கூறியவாறு. பி-ம்:—[1]ஓயும். (உஎ0)

கூகூ.—இந்திரசித்தும் இலக்குமணனும் மீண்டும் பொருதல்.

வந்து [1]நேர்ந்தனர் மாருதி மேல்வரும்
அந்தி வண்ணனு மாயிர மாயிரஞ்
சிந்தி னான் [2]கணை தேவரை வென்றவன்
[3]நுந்த நுந்த முறைமுறை நூறினான்.

(இ - ள்.) (இலக்குமணன் இந்திரசித்துஎன்ற இருவரும்,—போர்புரிய மறுபடி)வந்துகூடினார்கள்; (அவர்களில்), அநுமான்மீது ஏறிவந்த செவ்வானம் போன்றநிறமுடையவனான இலக்குமணனும், ஆயிரக்கணக்கான அம்புகளைப் பொழிந்தான்; தேவர்களைச்சயித்தவனாகிய இந்திரசித்து,—(இலக்குமணன்) எய்யுந்தோறும் (அவ்வம்புகளைத் தான்எய்கிற அம்புகளால்) முறையே நீறாக்கினான்; (எ - று.)

நுந்தநுந்த, அடுக்கு - தொறுப்பொருளது. முறைமுறை-அடுக்கு,இடைவிடாமை விளக்கும். இது "ஆறுமேழும்" என்ற அடுத்தசெய்யுளின்பின் சிலபிரதியிலுள்ளது. பி-ம்:—[1]நேர்ந்தனன். [2]சரம். [3]முந்துபோர்க்கு முறைமுறைமுந்தினான், நுந்த...நோக்கினான். (உஎக)

க௱0.—இந்திரசித்து வானரர்களை யழித்தல்.

ஆறு மேழு மறுபது [1]மைம்பதும்
நூறு மாயிர மூங்கணை நூக்கிவந்து

ஊறி ஞரை யுணர்வு தொலைத்துயிர்
தேறி ஞரை [2]நெடுநிலஞ் சேர்த்தினான்.

(இ - ள்.) (இந்திரசித்து), ஆறும் ஏழும் அறுபதும் ஐம்பதும் நூறும் ஆயிரமும் (இவ்வாறாகப்) பாணங்களைச் செலுத்தி, (முதலில்) மூர்ச்சையடைந்து (பின்பு) தேறியவர்களாய்வந்து மேன்மேல் நெருங்கியவர்களான வாநர வீரர்களை யழித்துப் பெரியநிலத்திலே விழச்செய்தான்; (எ - று.)

'ஊறிஞரையுணர்வுதொலைத் துயிர்தேறிஞரை' என்றது, ௧௬௫-ஆங் கவியின் முன்னிரண்டடியின் அநுவாதம். பி-ம்:—[1]எண்பதும். [2]நெடுஞ்சரஞ். ()

௧௬௯.—இதுவும் அடுத்த கவியும் - இந்திரசித்தும் அவனதுசேனையும் வலிதோற்க, இலட்சுமணன் அம்புமழைபொழிந்தமை தெரிவிக்கும்.

கதிரின் [1]மைந்தன் முதலினோர் [2]காவலார்
உதிர வெள்ளத்தி னொல்கி யொதுங்கலும்
எதிரி னின்ற விராவணி [3]யீடுற
வெதிரின் காட்டெரி போற்சரம் [4]வித்தினான்.

(இ - ள்.) சூரியன்மகனான சுக்கிரீவன்முதலியோரான (வாநரப்படைக்) காவல்வீரர்கள் சோர்ந்து இரத்தப்பெருக்கில் ஒதுங்கினவுடனே,—(இலக்குமணன்),—தன்னெதிரில்நின்ற இந்திரசித்து தளர்ச்சியடையுமாறு மூங்கிற் காட்டிற் பற்றியநெருப்புப்போலப் பாணங்களைச் சொரிந்தான்; (எ - று.)

மூங்கிற்காட்டில் நெருப்புப்பிடித்தால் அக்காட்டை யெரிப்பதுபோல, இலக்குமணனது அம்புகள் பகையழிக்குந்தன்மையன வென்க. காவலர் - (பக்கபலமாக இலக்குமணனுக்குப்) பாதுகாவலாய் நின்றவருமாம். 'வித்தினான்' என்றதனால், இலக்குமணபாணங்கள் மேன்மேல் விளையுந்தன்மையன வென்பதுபோதரும். பி-ம்:—[1]மைந்தர். [2]காந்தினர், காதினார். [3]எடுற. [4]வீசினான்.

௧௭௦. உளைவு [1]தோன்ற விராவணி யொல்கினான்
கிளையி னின்ற விருவர் [2]கிளைத்தலும்
அளவில் சேனை யவிதர வாரியற்கு
இளைய வீரன் சுடுசர மேவினான்.

(இ - ள்.) (அப்பொழுது), இந்திரசித்து வருந்தமுண்டாகத் தளர்ச்சியடைந்தான்; (பின்பு, மரத்தைக்) கிளைபோல (இந்திரசித்தை யடுத்து) நின்ற (தூம்ராக்ஷன மகாபார்சுவன் என்னும்) இரண்டு அரக்கரும் உற்சாகங்கொண்டு எதிர்த்துப்போர்தொடங்கியவளவிலே, (இராமபிரானுக்குத்) தம்பியாகிய இலக்குமணன், அளவில்லாத [மிகஅதிகமான] (ராக்ஷச) சேனை அழியும்படி கொல்லுந்தன்மையுள்ள அம்புகளைப் பிரயோகித்தான்; (எ - று.)—ஒருபிரதியில் ஈற்றடிமுதலடியாகத்தொடங்கி, மூன்றாவது இரண்டாவதாகவும், இரண்டாவது மூன்றாவதாகவும், முதலது நான்காவதாகவும் மாறிக்கிடக்கின்றன. பி-ம்:—[1]தோன்றி. [2]கிளைத்தரும், கிளக்கரும். கிளத்தரும், கிளத்தலும். (௨௧௧௪)

வேறு.

கஙஈ.—இது முதல் ஏழுகவிகள் - இலக்குமணனம்புகளால் ஊறுபட்ட அரக்கர்களின் நிலைமையைத் தெரிவிக்கும்.

தெரிகணை மாரி [1]பெய்யத் தேர்களுஞ் [2]சினைக்கை மாவும்
பரிகளுந் [3]தாமு மன்று [4]பட்டவர் கிடக்கக் [5]கண்டார்
இருவரு நின்றார் [6]மற்றங் கிராக்கத ரென்னும் [7]பேரார்
ஒருவரு நின்று நில்லை யுள்ளவ ரோடிப் போனார்..

(இ - ள்.) (இலக்குமணன்) ஆராய்ந்தெடுத்த அம்புகளை மழைபோலச் சொரிய, (அதனால், அரக்கருடையனவான) தேர்களும் துதிக்கையாகிய உறுப்பையுடைய விலங்குகளும் [யானைகளும்] குதிரைகளும் அப்பொழுது இறந்துவிழுந்துகிடப்பதை அந்தஇரண்டுஅரக்கர்களும் கண்டார்கள்; அந்த இரண்டுஅரக்கர்கள்மாத்திரமே(போர்க்களத்தில்) நின்றார்கள்: அவ்விடத்தில், (அவ்விருவரன்றி) இராக்கதரென்னும் பேருடையார் வேறொருவரும் (உயிருடன்) நிற்கவேயில்லை; (இறந்தபலரொழிய) உயிருள்ளவரான சில அரக்கர்களோ, (அவ்விடத்தைவிட்டு) ஓடிப்போனார்கள்; (எ - று.)—அன்றுபட்டுக் கிடக்க அவர்தாமும் கண்டனரென்க. மற்று - வினைமாற்று. பி-ம்:—[1]பாய. [2]சினக், சிலைக். [3]அரக்கர்தாமும். [4]பட்டன. [5]கண்டாங்கு. [6]மற்றை, மற்ற. [7]பேர்கள். (உ௬௯௫)

கஙச. [1]ஓடின ரரக்கர் தண்ணீ ருண்ணவசை [2]புலர்ந்த நாவர்
தேடின [3]ரெதிர்ந்து கையான் [4]முகிலினை முகந்து தேக்கிப்
பாடுறு [5]புண்க டோறும் பசும்புனல் பாயப் பாய
வீடினார் சிலவர் [6]சில்லோர் பெற்றிலர் விளிந்து [7]வீழ்ந்தார்.

(இ-ள்.) (அங்ஙனம்)ஓடினவர்களாகிய ராக்ஷசர்களில் சிலவர், தண்ணீர் பருகவேண்டுமென்றவிருப்பினால் நாக்குவறண்டவர்களாய், (தண்ணீரைத்) தேடி மேகங்களை நெருங்கி(த் தமது) கைகளால் (அம்மேகங்களிலுள்ள தண்ணீரை) வாரிக்குடித்து, (அம்புதைத்தலாலுண்டான) துன்பம்பொருந்திய புண்களில் தண்ணீர்மிகுதியாக ஊறுவதனால், இறந்தார்கள்; சில்லோர், (நீர்) கிடைக்கப்பெறாதவர்களாய்(த் தாகத்தால்) இறந்துவிழுந்தார்கள்; (எ - று.)

தண்ணீர்பருகியும் பருகாதும் இருவகையாலும் மாண்டனரென்க. தேக்குதல் - நிறைய உட்கொள்ளுதல். தாகத்தையுடையவர்கள் தண்ணீர் குடித்தும் இறந்தது, விரணசன்னிபாதத்தினா லென்க. புண்கள்தோறும் புனல்பாய வீடினார் - குடித்தநீர் உடம்பிலுள்ள நரம்புகளின் வழியாக அம்புகளாலுண்டான புண்கள்தோறும்ஊறி விரணவலியெடுத்து இறந்தார்கள். பி-ம்:—[1]ஓடிய. [2]உற்றநாவர், உலர்ந்தவாயர். [3]தெரிந்து, திரிந்து. [4]முடின. [5]புண்களெல்லாமப், புண்களோடும்பசும். [6]சிலபேர். [7]போனார். (உ௬௯௬)

கஙரு. வெங்கணை திறந்த மெய்யர் விளிந்திலர் விரைந்து சென்றார்
செங்குழற் கற்றை சோரத் தெரிவைய [1]ராற்றத் தெய்வப
பொங்[2]கிரும் பள்ளி [3]புக்கா ரவருடல் பொருந்தப் புல்லி
அங்கவ ராவி யோடுந் தம்முயிர் போக்கி யற்றார்.

(இ-ள்.) கொடிய அம்புகளினாற் பிளக்கப்பட்ட உடம்பையுடையவரான சில அரக்கர்கள்,—இறவாது விரைந்துசென்று (தமது) மனைவியரான ராக்ஷசிகள்(தங்கள்)செம்பட்டமயிர்த்தொகுதி அவிழ (ஓடிவந்து)உபசரிக்க, அம்மனைவியரது உடம்பை அழுந்தத்தழுவினபடியே அவ்விடத்தில் அம்மனைவியரது உயிருடன் தம்முயிரையும் ஒழித்துஇறந்தவர்களாய், (வீரசுவர்க்கத்தில்) தெய்வத்தன்மையுள்ள அழகிய பெரியபடுக்கையைச் சேர்ந்தார்கள்; (எ - று.)

சில அரக்கர், உடம்புமுழுதும் அம்புகளாற் சல்லடைக்கண்களாய்த்தொளைபட்டு, அப்போர்க்களத்திலேயே இறவாமல், தம்மனைவியரிடத்துள்ள மிக்கஅன்பினால் அவர்களிடத்தை நோக்கிச்செல்ல, அவர்களும் தம்கணவர் ஊறுபட்டுவருவதையறிந்து வருத்தத்தோடு தம் செம்பட்டமயிர்க்கூந்தல் அவிழ்ந்துபுரள ஓடி எதிர்கொண்டு அக்கணவர்க்குப் பலவகையுபசாரங்களைச் செய்து தேற்ற, சிறிதுதேறுதலடைந்த அவ்வரக்கர்கள் தமது மனைவியரைத் தழுவிக்கொண்டு அங்ஙனமேஇறக்க,அம்மகளிரும் தம்கணவரிறந்த துக்கத்தினால் உடன்உயிர்துறக்கவே, அவ்விருபாலாரும் ஒருங்கு வீரசுவர்க்கத்தையடைந்து இன்பமநுபவித்தன ரென்றவாறு. கணவனுடனே இறக்கும் மகளிர் கணவனடைகிற உலகத்தைச் சேர்ந்துஅவனோடு இன்புறுவர் என்பது நூற்கொள்கை. தெய்வப்பொங்கிரும் பள்ளி - வீரசுவர்க்கத்திற் கற்பகமலர்களாலாகிய படுக்கை. பி-ம்:—[1]எதிர்ப்பத், அரற்றத்.[2]பூம்.[3]புக்கங்கு.(உககஎ)

கசசு. பொறிக்[1]கொடும் பகழி [2]மார்பர் போயின ரிடங்கள் புக்கார்
மறிக்கொளுஞ் சிறுவர் தம்மை [3]மற்றுள சுற்றந் தம்மைக்
[4]குறிக்கொளு [5]மென்று கூறி யவர்முகங் குழைய நோக்கி
நெறிக்கொளுங் கூற்றை நோக்கி யாருயி [6]ரொறுத்து நீத்தார்.

(இ - ள்.) தீப்பொறியுமிழ்கின்ற கொடியஅம்பு தைத்த மார்பையுடையரான சில அரக்கர்,—(யுத்தகளத்தைவிட்டுப்)போய்(த் தம்தம்)இருப்பிடத்திற் புகுந்து,பின்பு(தமக்கு)உள்ள சுற்றத்தார்களை நோக்கி,'(காலைக்கட்டி)மடக்குகிற (இந்த எனது) மக்களை (நீங்கள்) கருத்துடன் பார்த்துக்கொள்ளுங்கள்'என்று சொல்லி, அந்த(த் தமது) மக்களின் முகத்தைக் கனிவாய்ப்பார்த்து,(தங்களுயிரைத் தன்)வசப்படுத்திக்கொண்டுபோகவந்த யமனைக் கோபித்துப்பார்த்து அருமையான தம்முயிரைத் துறந்தார்கள்; (எ - று.)

குழையநோக்குதல் - 'இவர்களைவிட்டு இறக்கின்றோமே, இனி இவர்கள்கதி என்னாகுமோ?' என்ற இரக்கத்துடனே பார்த்தல். கூற்றைஒறுத்து நோக்கிஎன்க.இறக்குந் தருணத்திலும் யமனைக்கோபிக்கின்றனர் என்றதனால், அவர்களுடைய அஞ்சாநெஞ்சுறுதி பெறப்படும். ஒறுத்து - வெறுத்துஎனினுமாம். பி-ம்:—[1]கொளும் [2]பாயப். [3]மற்றுள்ள சுற்றத்தானை. [4]தறிக்கொளும். [5]என்னக். [6]நெடிதின், நெடிது. (உககஅ)

கசஎ. தாமரைக் கண்ணன் றம்பி தன்மையி தாயின் [1]மெய்ம்மை
வேமரைக் கணத்தி னிவ்வூ ரிராவணி விளிதன் முன்னம்
மாமரக் கானிற் குன்றின் [2]மன்றைந்திரு [3]மறைய [4]வல்லை
போமெனத் தமரைச் சொல்லிச் [5]சிலருட னிறந்து போனார்.

(இ-ள்.) சில அரக்கர்கள்,—'செந்தாமரைமலர்போன்றகண்களையுடையனுன இராமனது தம்பியாகிய இலக்குமணனுடைய வீரத்தன்மை இவ்வாறே கொடியதாயிருக்குமாயின்[கொடியதாயிருத்தலினால்],இந்த லங்காபுரியானது நிச்சயமாய் அரைநொடிப்பொழுதில் அழிந்துவிடும்;(ஆகையால்), இந்திரசித்து இறப்பதற்கு முன்னமே, பெரிய மரங்களையுடைய காடுகளிலும் மலைகளிலும் (நீங்கள் உயிருய்ய இலக்குமணன்கைக்கு அகப்படாமல்) மறைந்திருங்கள்: (அவ்வாறு)மறைந்துவசிப்பதற்கு, விரைவில் ஓடிச்செல்லுங்கள்' என்று தமது உறவினரைநோக்கி இதனைச்சொல்லி, உடம்புநீங்கிச் (சுவர்க்கஞ்)சேர்ந்தார்கள்.

இந்திரசித்து இறந்தானாயின் பிறகு இலக்குமணன் தடையின்றி உங்களையே இலக்காகக் குறித்துவருவானாதலால், அங்ஙனம் வருதற்குமுன்னமே விரைவில் நீங்கள் மறைந்து தப்பிப் பிழையுங்களென்று, இறக்கும் அரக்கர்கள் உற்றஉறவினர்க்கு உறுதிமொழிகூறினரென்க. போமறைக்கணத்தெம் முள்ளீரெனச் சொல்லியாவிபோனார். என்று சிலப்பிரதியில்நான்காமடி. பி-ம்:—1மெய்யே.2மறைந்திடும்,மறைந்துநீர்.3உறைய. 4வல்லே. 5தமதுடல், தம்முடல். (உகககூ)

கூகூஅ.வரையுண்ட மதுகை மேனி மருமத்து 1வள்ளல் வாளி
இரையுண்டு துயிலச் சென்றார் 2வாங்கிடி 3னிறப்ப மென்பார்
பிரையுண்ட பாலி னுள்ளம் பிறிதுறப் பிறர்முன் சொல்லா[னார்.
உரையுண்ட 4நல்லோ ரென்ன வுயிர்த்5துயிர்த் 6துழைப்ப தா

(இ-ள்.) (தங்களது)மலைபோன்ற வலிமையுடைய உடம்பின் மருமத்தானத்திலே இலக்குமணனது அம்புகள்(தைத்து)ஆகாரத்தையுண்டுகிடக்க(அம்புகள்தைத்தபடியே)சென்ற சில அரக்கர்,—'(இந்த அம்புகளைப்) பிடுங்கினால் இறந்துவிடுவோம்' என்று எண்ணி, பிரைகுத்தினபால்போல(த் தமது)மனம் வேறுபட[மயங்க], பிறரிடத்துச்சொல்லாத சொற்களைக்கொண்ட [மௌனவிரதம்பூண்ட] பெரியோர்போல [ஒன்றும் வாய்விட்டுப்பேசமாட்டாதவர்களாகி]ப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு வருந்துபவரானார்கள்; (எ - று.)

வரையுண்ட,உண்ட-உவமவுருபு. அம்புகள் மருமத்தில்தைத்து மாமிசத்தைக் கவ்விக்கொண்டு தங்கியிருத்தலை இரையுண்டுதுயின்றதாகக் கூறினது, ஒருவகைக் கவிசமத்காரம்; செய்யாததைச் செய்ததுபோலக்கூறிய மரபுவழுவமைதி. மருமம்-உயிர்நிலை: மார்பு. பிரை - பாலின் தன்மையை மாற்றுதற்கு உரிய பொருள். பிறர்முன்சொல்லாஉரையுண்ட நல்லோர் என்னஎன்பதற்கு-(அருகரல்லாத) பிறர்க்கு உபதேசிக்கத்தகாத சிறந்த திருமந்திரத்தை மனத்திற்கொண்டுள்ள பெரியோர்போல (மௌனமாய்) என்று பொருள்கூறுவாருமுளர். பி-ம்:—1வாளியாய. 2இகல்கிட்டி. 3நிறபவென்பார்,இறப்பனென்றார், இறப்பமென்றார். 4பெரியோர். 5உயிர்ப்பு. 6உழைப்பது. (உகஉ0)

கூகூகூ.தேரிடைச் செல்லார் மானப் புரவியிற் செல்லார் செங்கட்
காரிடைச் செல்லார் காலிற் காலெனச் செல்லார் காவல்
ஊரிடைச் செல்லார் நாணு 1யுயிரின்மே லுடைய வன்பாற்
போரிடைத் 2திரியா நின்று நடுங்கினர் புறத்தும் போகார்.

(இ - ள்.) (மற்றும்அரக்கர்), தேரின்மேலேறிச்செல்லாமலும், ரோஷமுள்ள குதிரையின்மே லேறிச்செல்லாமலும், சிவந்தகண்களையுடைய மேகம் போன்றயானையின்மீ தேறிச்செல்லாமலும்,காற்றுப்போல[வேகமாகக்] காலினால் நடந்துசெல்லாமலும், வெட்கத்தினாலே காவலையுடைய இலங்காபட்டணத்திற் செல்லாமலும்,யுத்தகளத்தின்வெளியே ஓடிப்போகாமலும், (தங்கள்) உயிரின்மேலுள்ள விருப்பத்தினாலே போர்க்களத்திற் சஞ்சரியாமல் (ஒருசார் பதுங்கி)நின்று நடுங்கினார்கள்; (எ - று.)

'தேர்முதலியவாகனங்களிலேறியாயினும் கால்களினால் நடந்தாயினும் இலக்குமணனெதிரிற்சென்றால் இலக்குமணன் என்னதீங்குசெய்வானோ?' என்னும் அச்சத்தால் அவ்வாக்கர்கள் அவ்வாறுசெய்யாமலும், இலங்கையினுட்சென்றால் தோற்று அஞ்சி ஓடிவந்ததற்காக ஊரிலுள்ளார் இகழ்வரே என்ற நாணத்தால் அங்குஞ்செல்லாமலும், அந்நாணத்தினாலேயே புறத்திலுஞ்செல்லாமலும்,உயிரின்மேல் அன்புமிகுதியாயிருத்தல்பற்றி'எங்குமரணம் நேருமோ?' என்று சங்கைகொண்டு போரில் வெளிப்படாமலும், அப்போர்க்களத்திலேயேஒருசார் பதுங்கியிருந்துகொண்டு நடுநடுங்கினரென்பது, கருத்து. 'செங்கட்கார்'எனவே, யானையாயிற்று.'நாணால்' என்பதை'புறத்தும்போகார்'என்பதனோடுங்கூட்டுக. பி-ம்:—1உயிரிடை. 2செல்லார்,போகார். (உகஉக)

கஎ௦.—இலக்குமணன் இந்திரசித்தின் கவசத்தைப் பிளத்தல்.

நொய்தினிற் சென்று கூடி [1]யிராவணி யுளவை நோக்கி
வெய்தினிற் [2]கொன்று வீழ்ப்ப லென்பதோர் வெகுளி [3]வீங்கிப்
பெய்துழிப் பெய்யு மாரி [4]யனையவன் [5]பிணங்கு கூற்றின்
கையினிற் [6]பெரிய வம்பாற் கவசத்தைக் [7]கழித்து வீழ்த்தான்.

(இ - ள்.) பெய்தவிடத்திலேயேபெய்யும் மேகத்தை யொத்தவனான இலக்குமணன்,—விரைவாகச் சென்று நெருங்கி, இந்திரசித்தின் மருமங்களைக் கண்டறிந்து '(இவனை) விரைவிற் கொன்றுதள்ளுவேன்' என்று ஒரு கோபம்மிக்கு, மாறுபாடுகொள்ளும்யமன்போன்ற (தன்)கையிலுள்ள பெரிய அம்புகளால் (அவ்விந்திரசித்தின்) கவசத்தை வெட்டித்தள்ளினான்; (எ - று.)

இராவணியுளவு நோக்குதல் - இந்திரசித்தைக்கொல்லும் உபாயத்தை ஆலோசித்து அறிதல். [1]இராவணியுளைவைநோக்கி என்ற பாடம்-இந்திரசித்து தளர்ச்சியடைந்தமையைப்பார்த்து என்று பொருள்படும்; கீழ் கசுஉ - ஆஞ் செய்யுளில் "உளைவுதோன்றவிராவணி யொல்கினான்" என்றது காண்க. இந்திரசித்தொருவன்மீது பலமுறைஅம்புகளைப்பொழிதலால்,இலக்குமணனைப் 'பெய்துழிப்பெய்யுமாரி யனையவன்' என்றார். பி-ம்:—[2]துணித்து. [3]வீங்கப். [4]அனையன. [5]பிறங்கு. [6]கடிய. [7]கிழித்து. (உகஉஉ)

கஎக.—இதுவும்அடுத்தகவியும் - தூமிராக்ஷனும் மகாபார்சுவனும் இலக்குமணனை எதிர்த்துப் போருதலைத்தெரிவித்தும்.

கவசத்தைக் [1]கழித்து வீழ்ப்பக் காப்புறு [2]கடனின் றாகி
அவசத்தை யடைந்த [3]வீர னறிவுவந் தடையு முன்னங்

துவசத்தின் புரவித் திண்டேர் ⁴கடிதுறத் தூண்டி யாமித்
திவசத்தின் முடித்தும் வெம்போ ரெனச்சினந் திருகிச் சென்றார்.

(இ - ள்.) (இலக்குமணன் இந்திரசித்தின்) கவசத்தைவெட்டித்தள்ள, (அம்புபடாது) காக்கும்படியான இன்றியமையாப்பொருள் வேறொன்றுமில்லாமையால், தன்வசந்தப்பின [மூர்ச்சையடைந்த] இந்திரசித்து, உணர்வு தெளிந்து எழுவதற்கு முன்னே, (தூமிராக்ஷன் மகாபார்சுவன் என்ற இருவரும்), துவசத்தையுடையதும் குதிரைகள் பூட்டப்பெற்றதுமான வலியதேரை விரைவாகச்செலுத்தி 'நாங்கள் இந்தத்தினத்திற் (பொருதுவென்று) கொடியபோரை முடித்திடுவோம்' என்றுகூறிக்கோபத்தினால் மாறுபட்டு (இலக்குமணனெதிரிற்) சென்றார்கள்; (எ - று.)

காப்புஆகடன் இன்று ஆகி - தன்னைத்தான்பாதுகாத்துக்கொள்ளும் முறையில்லாமல் எனினுமாம். இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை. பி-ம்:— 1கிழித்து. 2கடையினின்றார். 3வீரனறிவுறுந்துணையின்வீரத், அண்ணலறிவுறுந்துணையும்வீரத். 4கடிதினில். (உகஉ௩.)

கஎ௨. மாருதி மேலு மையன் மார்பினுந் தோளின் மேலுந்
¹தேரின ரிருவர் சென்றார் ²செந்தழற் பகழி தூவி
ஆரியன் ³வாகை வில்லு மச்சுடைத் தேரு மத்தேர்
⁴ஊர்குவா ருயிருங் ⁵கொண்டான் புரவியி னுயிரு ⁶முண்டான்.

(இ - ள்.) தேர்வீரரான அவ்விரண்டு அரக்கர்களும்,—அநுமான்மீதும் இலக்குமணனதுமார்பின்மீதும்தோள்களின்மீதும்செந்நிறமுள்ள அக்கினி மயமான அம்புகளைத் தூவியவண்ணம் (எதிர்த்துப்) போனார்கள்; இலக்குமணன், வெற்றியைத்தரவல்ல (அவர்களது) வில்லையும், அச்சையுடைய தேரையும், அந்தத் தேரைச்செலுத்தும் பாகரது உயிரையும் கவர்ந்துகொண்டான்; அந்தத்தேர்க்குதிரைகளின் உயிரையும் வாங்கினான்; (எ - று.)

வாகைவில்-முன்புவெற்றியையுடையதாயிருந்த வில். பி-ம்:—1தேரினினிருவர், தேரினின்றிருவர். 2சிந்தினபகழிசிந்தி. 3அவர்கள். 4ஊர்குவான், ஊருவான். 5பூட்டும், உண்டான். 6கொண்டான். (உகஉ௪)

கஎ௩.—அந்தஇரண்டுஅரக்கரும் அநுமனுடன்போரத்தொடங்கி
உயிர்தப்பியோடுதலை இரண்டுகவிகள் தெரிவிக்கும்.

இருவரு மிழந்த வில்ல ரெழு¹முளை வயிரத் ²தண்டர்
உருமெனக் கடிதி னோடி யனுமனை யிமைப்பி னுற்றார்
பொருகனற் பொறிகள் சிந்தப் புடைத்தனர் புடைத்த லோடும்
பருவலிக் கரத்தி னாற்றண் டிரண்டையும் பறித்துக் கொண்டான்.

(இ - ள்.) விற்களையிழந்தவர்களான அவ்வரக்கரிருவரும், எஃகினாற் செய்தபூண்களையுடைய மூங்கிலினாலாகிய உறுதியான கதாயுதத்தையேந்தியவர்களாய் இடிபோல [மிக்ககொடுமையுடன்] விரைவாகச்சென்று, அநுமானை ஒருகணப்பொழுதிலேநெருங்கி, நெருங்கிய தீப்பொறிகள்சிந்தும்படி புடைத்தார்கள்; (அங்ஙனம்) அடித்தவளவிலே, (அவ்வநுமான்), பருத்த வலிமை

யுடைய (தனது) கைகளினால் அந்த இரண்டு கதாயுதங்களையும் பிடுங்கிக் கொண்டான்; (எ - று.)

முளை - மூங்கில். எழு - எஃகினாலாகிய பூணுக்கு ஆகுபெயர். எழுமுளை-வளர்ந்த மூங்கில் எனினுமாம். பி-ம்:—1முனை. 2தண்டால். (௨௧௨௫)

௧௨௬. தண்டவன் கைய தாய 1தன்மையைத் 2தறுக ணாளர்
3கண்டனர் 4கண்டு செய்வ 5தாவதொன் றுணருங் காணார் [டார்
6கொண்டன னெறிந்து நம்மைக் கொல்லுமென் றச்சங் கொண்
உண்டசெஞ் 7சோறு நோக்கா ருயிருக்கே யுதவி செய்தார்.

(இ - ள்.) அஞ்சாமையையுடைய அவ்வரக்கரிருவரும், (தாம் கைக்கொண்டிருந்த) தண்டாயுதம் அவ்வநுமான்கையி லகப்பட்ட தன்மையைக் கண்டார்கள்; கண்டு (தம்மால் அச்சமயத்தில் அவனுக்கு மாறாகச்)செய்யக் கூடியதொழில் ஒன்றையேனும் அறியாதவர்களாய், '(நமது தண்டைப்) பறித்துக்கொண்ட இவ்வநுமான் வீசி (அவ்வாயுதத்தினாலேயே) நம்மைக்கொல்வான்' என்று பயங்கொண்டவர்களாய், (தாம் இதுவரையிற்) புசித்த செவ்வியசோற்றைப்பற்றியாயினும் ஆலோசியாதவர்களாய், தங்களுயிரைக்காப்பதற்கே துணைபுரிபவரானார்கள் [உயிர்தப்புமாறு ஓடினார்கள் என்றபடி];(எ-று.)

"தஞ்சமென வொருவர்சோறுண்ட தாளாண்மை, வெஞ்சமரி லன்றி விளிவரோ" என்றபடி ஒருவனதுசோற்றையுண்டவர்கள் நன்றிமறவாமையினால் தமது உயிரினாலும் அவனுக்கு உதவிபுரிவது கடமையாயிருக்க இவ்வரக்கர்கள் அவ்வாறுசெய்யாது ஓடிப்போயின ரென்பது, ஈற்றடியின்கருத்து. சோற்றுக்குச் செம்மையாவது-அன்போடு அளிக்கப்படுதல். தண்டு கையது - சாதியொருமை; தண்டுஇரண்டும் தனித்தனி அவன்கையிலிருப்ப தென்பது தேர்ந்தபொருள். பி-ம்:—1தகைமையை. 2தறுகண்ணாளர். 3கண்டவர். 4ஆண்டு. 5ஆவதோவொன்றும். 6கொண்டிவன். 7சோற்றை. (௨௧௨௬)

௧௨௭.—மூன்றுகவிகள் - மூர்ச்சித்த வானரவீரர்கள் தெளிந்தெழுந்துபோர்செய்தலைத் தெரிவிக்கும்.

காற்றுவந் 1தசைத்த லாலுங் கால2மல் லாமை யாலுங்
3கூற்றுவந் 4தாவி கொள்ளுங் 5குறியின்மை 6குறித்த லாலும்
தேற்றம்வந் தெய்தி நின்ற மயக்கமு நோவுந் தீர்ந்தார
வேற்றமும் வலியும் பெற்று ரெழுந்தனர் வீர ரெல்லாம்.

(இ - ள்.) (இந்திரசித்தினால் மூர்ச்சையடைந்திருந்த வானர) வீரரெல்லாரும்,—(இனிதாக அச்சமயத்தில்) குளிர்ந்தகாற்று வந்து வீசியதனாலும், (அது தாங்கள் இறப்பதற்கு உரிய) கால மல்லாததனாலும் [ஆயுள்முடியாமையாலும்], யமன்வந்து (தமது) உயிரைக் கொள்ளுதற்குஉரிய அடையாளமொன்றும் இல்லாமை தெரிதலாலும் [மரணவேதனை சிறிதும் இல்லாமையாலும்], தெளியுந்தன்மை வந்து பொருந்தி, (முன்பு) இருந்த மயக்கமும் வருத்தமும் நீங்கினவர்களாய், மிக்கஊக்கத்தையும் வலிமையையும் அடைந்தவர்களாகி(ப் போர்க்கு) எழுந்தார்கள்; (எ - று.)

ஏதுவணி; இதன்இலக்கணம் - காரணத்தையும் காரியத்தையும் அழகுபடச் சேர்த்துச்சொல்லுதல். இரண்டாமடிக்கு - யமன் இவர்களுயிரைக் கொள்ளவேண்டுமென்றுவந்து அதற்குத்தக்கநிமித்தமில்லாமையைத் தெரிந்துகொள்வதனாலும் என்றும் பொருள்கூறலாம். பி-ம்:—[1]இசைத்தலாலும். [2]அன்றுதலாலும். [3]கூற்றம். [4]உயிரைக். [5]கோளின்மை.[6]கொடுத்தலானும். ()

கஎகூ.அங்கதன் குமுதன் னீலன் சாம்பவ னருக்கன் மைந்தன்
பங்கமின் மயிந்தன் றம்பி சதவலி பனசன் [1]முன்னாச்
சிங்கவே றனைய வீரர் யாவருஞ் [2]சிகரி யேந்தி
மங்கலம் வானோர் [3]சொல்ல மழையென வார்த்து வந்தார்.

(இ-ள்.) அங்கதன் குமுதன் நீலன் ஜாம்பவான் சூரியகுமாரனாகிய சுக்கிரீவன் குற்றமற்ற மயிந்தன் அவன்தம்பியாகிய த்விவிதன் சதவலி பனசன் (ஆகிய இவர்கள்) முதலாக ஆண்சிங்கத்தையொத்த வாநரவீரர்களெல்லாரும், தேவர்கள் மங்கலவாழ்த்துக் கூற மலைகளை யெடுத்துக்கொண்டு மேகம்போலக் கர்ச்சித்துக்கொண்டு வந்தார்கள்; (எ - று.)—பங்கம் - தோல்வியுமாம். சிகரம்-கொடுமுடி; அதனையுடையது - சிகரி.பி-ம்:—[1]முன்னோர், முன்னான். [2]சிகரம். [3]கூற. (உகஉஅ)

கஎஎ.[1]அத்தனை யோருங் குன்ற [2]மளப்பில [3]வசனி யேற்றோடு
ஒத்தன நெருப்பு வீசு முருமென வொருங்க வுய்த்தார்
இத்தனை போலுஞ் செய்பு மிகலெனா முறுவ [4]லெய்திச்
சித்திர [5]வில்வ லோனுஞ் சின்னபின் னங்கள் செய்தான்.

(இ - ள்.) அத்தனைவாநரவீரர்களும், பேரிடிபோன்றவையாகிய மலைகளை நெருப்பைக்கக்கும் இடிபோல [இடி நெருப்பைச் சொரிவதுபோல] அளவில்லாமல் ஒருசேர எதிர்த்தார்கள்; (மூர்ச்சைதெளிந்துஎழுந்திருந்த) அழகிய வில்லின்திறமுடையவனாகிய இந்திரசித்தும், '(இவர்கள்)செய்யும் போர் இவ்வளவேபோலும்' என்று புன்சிரிப்புக்கொண்டு, (அவர்களெறிந்த மலைகளை) அறுத்தும் பிளந்தும் பொடியாக்கினான்; (எ - று.)—அலட்சியம் பற்றி,'இத்தனைபோலு மிகல்' என்றான். இங்கு, முறுவல் - நால்வகை நகைகளுள் எள்ளல்பற்றியது. பி-ம்:—[1]அத்தனைவோரும். [2]அளப்பில, அளவில. [3]ஆனியேறோடு. [4]செய்த. [5]வில்லினானும். (உகஉகூ)

கஎஅ.—சூரியாஸ்தமன வருணனை.

மரங்களு மலையுங் [1]கல்லு மழையென வழங்கி வந்து
நெருங்கினர் [2]நெருங்கக் கண்டு மொருதனி நெஞ்சும் வில்லுஞ்
சரங்களுந் துணையாய் நின்ற நிசாசரன் றனிமை நோக்கி
இரங்கினா னென்ன மேல்பாற் குன்றுபுக் [3]கருக்க [4]னின்றான்.

(இ - ள்) (வாநரவீரர்கள் மீண்டும்) மரங்களையும் மலைகளையும் கற்களையும் மழைபோல மிகுதியாகச் சொரிந்துகொண்டு, (இந்திரசித்தினருகில்) வந்து நெருங்கினார்; (அவர்கள் அவ்வாறு) நெருங்குவதைப் பார்த்தும், (வேறொருவரும்துணையில்லாமல்) தனது தன்னந்தனியான மனமும் வில்லும் பாணங்களுமே(தனக்குத்)துணையாய்(ப்பொருந்தப் பின்வாங்காமல்)நிற்கின்ற

அரக்கனாகிய இந்திரசித்தினுடைய தனிமையைப் பார்த்து,மனத்தில் இரக்கங் கொண்டவன்போலச்சூரியன்மேற்கிலுள்ளஅஸ்தமனகிரியைச்சார்ந்தான்.

இயற்கையாகச் சூரியன் மறையலுற்றதை, பலவானரவீரர்கள் ஒருங்கு திரண்டு மரங்கள்முதலியவற்றையெறிந்து போர்செய்ய, இந்திரசித்து, தனியனாய் அகப்பட்டுக்கொண்டு நின்றதற்கு மனமிரங்கி அதனைக் காணப்பொறாது மறையத்தொடங்கியதாகக் காரணங்கற்பித்துக் கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். மலையும் கல்லும் என்பதற்கு - மலைகின்ற [போர் செய்தற்குஉரிய] கற்களையும் என்று உரைப்பாருமுளர். பி - ம்:---[1]ஏந்தி, அம்பும். [2]நெருங்குமாகண்டு. [3]இரவி. [4]சென்றான். (௨௧௩௦)

௧௭௯.—இருள் பரவுதல்.

வாழிய வேத நான்கு [1]மனுமுதல் வந்த நூலும்
[2]வேள்வியு மெய்யுந் தெய்வ வேதியர் [3]விழைவு [4]மஃதே
[4]ஆழியங் கமலக் கையா னாகிய பரம னென்னா
ஏழைய ருள்ள [5]மென்ன விருண்டன திசைக ளெல்லாம்.

(இ - ள்.) 'நான்குவேதங்களும் மநுஸ்மிருதிமுதலாகப் பொருந்திய தருமசாஸ்திரங்களும் யாகங்களும் சத்தியமும் தெய்வத்தன்மையுடைய அந்தணர்கள் விரும்பும் அந்தப்பேறும் (ஆகிய இவையெல்லாம்) சக்கராயுதமேந்திய அழகிய தாமரைமலர்போன்ற கையையுடைய பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணனது சொரூபமே'என்று உணராத அறிவீனரது மனம் (அஜ்ஞானத்தால் இருளடைதல்)போல,எல்லாத்திக்குக்களும் இருளடையலாயின;(எ-று.)

மனுமுதல் வந்த நூல் - மநுவினிடத்தினின்று தோன்றிய சாஸ்திரமெனினுமாம். திருமால் கையிற்கொண்டுள்ள சக்கரம், சுதர்சநமெனப்படும். விழைவுஅஃதுஉம்என மாற்றுக. உவமையணி. பி-ம்:—[1]மனுமுறை, மறைமுறை. [2]வேள்வியுமேய,வேள்வியுமஃதே,வேள்வியும்மாரும். [3]வினையும், விளையும். [4]ஆழியங்கமலக்கண்ணனாதியம்,ஆழியங்கமலக்கையனாதியம். [5]போல. ()

௧௮௦.—இதுவும் அடுத்த கவியும் - விபீஷணன்வார்த்தையால் இலக்குமணன் இந்திரசித்தைக் கொல்ல முயலுதலைந் தெரிவிக்கும்.

நாகமே யனைய [1]நம்ப நாழிகை [2]யொன்று நான்கு
பாகமே கால மாகப் படுத்தியேற் பட்டா னன்றேல்
வேக[3]வா ளரக்கர் காலம் விளைந்தது விசும்பின் [4]மீதா
ஏகுமேல் [5]வெல்வ னென்ப திராவணற் கிளவல் சொன்னான்.

(இ - ள்.) '(பகைவர்மேற்)பாம்புபோற் சிறந்தன்மையுள்ள சிறந்தவனே! ஒருநாழிகையின்நான்கிலொருபாகமே காலமாக [கால்நாழிகைப்பொழுதிலே] கொன்றால்தான் (இவ்விந்திரசித்து) இறப்பான்;அங்ஙனமன்றாயின் [அதற்குட் கொல்லாவிட்டால்], விரைந்துதொழில்செய்யவல்ல கொடிய அரக்கர்கள் (தமது மாயையைச் செய்தற்குஉரிய) இராக்காலம் வந்திடும்: (அக்காலம் வந்திட்டால், இவன்), (மாயையைச் செய்யும்பொருட்டு) ஆகாயத்தின்மேற் செல்வான்: அங்ஙனஞ்சென்றால்,வெற்றிபெறுவான்'என்ற இவ்வார்த்தையை இராவணனதுதம்பியான விபீஷணன் (இலக்குமணனைநோக்கிச்) கூறினான்.

லக்ஷ்மணன், ஆதிசேஷனது அமிசமாதலால், 'நாகமேயனைய நம்ப' என விளித்தற்குஉரியன். இனி, நாகம்-யானையும், மலையுமாம். விளைந்தது-விரைவு பற்றிய காலவழுவமைதி. அரக்கர்காலம் - இராத்திரி; அதுவே அவர்கள் வலிமையோடுசஞ்சரிக்கும் காலம். பி-ம்:—[1]நம்பி. [2]ஒன்றின். [3]வேல். [4]வஞ்சன், மீதில். [5]வெல்லுமென்னா. (உகஙஉ)

கஅக. அத்தனை வீரர் மேலு மாண்டகை யனுமன் மேலும்
எத்தனை கோடி வாளி மழையென வெய்யா நின்ற
வித்தக வில்லி னானைக் கொல்வது [1]விரும்பி வீரன்
சித்திரத் தேரைத் தெய்வப் பகழியாற் சிதைத்து வீழ்த்தான்.

(இ - ள்.) (தன்னைநெருங்கிய)அத்தனைவாநரவீரர்களின்மேலும் ஆண்மைக்குணமுடைய அநுமான்மேலும் எத்தனையோகோடிக்கணக்கான [மிகப் பலவான] அம்புகளை மழைபோலச்சொரிகிற வியக்கத்தக்க வில்திறமுடைய வனாகிய இந்திரசித்தைக் கொல்லுதலை விரும்பி, இலக்குமணன் (அவ்வரக்கனது) அழகியதேரை (த் தனது) தெய்வத்தன்மையுள்ள அம்பினால்அழித்துத்தள்ளினான்;(எ-று.)—பகழிக்குத் தெய்வத்தன்மை-பழுதுபடாமல் இலக்கை யழித்தல்.பி - ம்:—[1]கருதி. (உகஙங)

கஅஉ.—இந்திரசித்து நாகாஸ்திரத்தாற்கட்டஎண்ணி ஆகாயத்துச் செல்லுதல்.

அழித்ததே [1]ரழுந்தா முன்ன மம்பொடு கிடந்து [2]வெம்பி
உழைத்துயிர் விடுவ தல்லா [3]லுறுசெரு வென்றோ மென்று
பிழைத்திவர் [4]போவ ரல்லர் பாசத்தாற் [5]பிணிப்பி னென்னா
விழித்திமை யாத முன்னம் வில்லொடும் விசும்பிற் சென்றான்.

(இ-ள்.) (இந்திரசித்து),—(இலக்குமணனால்) அழிக்கப்பட்ட (தனது) தேர் கீழ்விழுதற்கு முன்னே,—'நாகபாசத்தால் (நான் இவர்களைக்) கட்டிவிட்டால், (இலக்குமணன் முதலிய)இவர் அம்பினாற்கட்டப்பட்டுக் கீழ்விழுந்து தவித்து வருந்தி உயிரையிழக்கவேண்டுமேயன்றிப் பெரும்போரில்வெற்றி கொண்டோமென்றுசெருக்கி உயிர்தப்பிச் செல்லமாட்டார்'என்றுஆலோசித்து,கண்மூடித்திறப்பதற்குள் [வெகுவிரைவில்] (தனது)வில்லுடனே(நாகாஸ்திரத்தைப் பிரயோகிப்பதற்காக) ஆகாயத்திற் சென்றான்; (எ - று.)

நான் இப்போது சும்மாஇருந்தால் எதிரிகள் தாம் உயிர்தப்பினதற்கு மகிழாமல் யுத்தத்தில்வென்றோமென்று செருக்குக்கொள்வார்க ளாதலால் இவர்களை நாகபாசத்தாற்கட்டி வலியடக்கவேண்டுமென்று கருதி அதற்காக வானத்திற்சென்றனன் இந்திரசித்து என்பது கருத்து. இனி, 'நான் இங்கே சும்மா இருந்தால் இலக்குமணனம்பினால் வருந்தி உயிர்விடவேண்டுமே; அல்லாமலும், இவர்கள் சயித்தோமென்று கர்விப்பார்களே; ஆகையால், அவ்வாறு இவர்கள்செருக்கி உயிர்தப்பிச்செல்லாதபடி நாகபாசத்தாற் கட்டவேண்டும் எனக்கருதி இந்திரசித்து சென்றனனென்னுங் கருத்துப்பட உரைத்தலுமொன்று.அழுந்தாமுன்னம் சென்றான் என்று இயையும். விழித்துஇமையாத முன்னம் = இமைத்துவிழியாத முன்னம். பி-ம்:—[1]அழி

யா.2மண்டி.3இனிச்செயலொன்றோவென்னுப்,உறுபகைவென்றுமென்று,உறு பகைவேண்டோமென்று.4போகாவண்ணம்,போகாமுன்னம்.5பிணிப்பன். ()

கஅரு.—இந்திரசித்து வானத்துமறைந்ததுகண்டு தேவர்கள் அஞ்சிச் சிதறியோடுதல்.

பொன்குலா மேனி மைந்தன் றன்னொடும் புகழ்தற்[1]கொத்தான்
வன்[2]கலா [3]மியற்றி நின்றான் மற்றொரு மனத்தனாகி
மின்குலாங் கழற்கால் வீரன் விண்ணிடை [4]விரைந்த தன்மை
என்கொலா மென்ன வஞ்சி [5]வானவ ரிரியல் போனார்.

(இ - ள்.) 'பொன்போலவிளங்குகின்ற திருமேனியையுடைய இலக்கு மணனுடன் வலியபோரைச் செய்து நின்றவனும், (வில்வன்மையில் யாவரா லும்) புகழ்தற்குத் தக்கவனும், ஒளிவிளங்குகின்ற வீரக்கழலை யணிந்த பாதங் களையுடைய வீரனுமான இந்திரசித்து, மனம் மாறுபட்டு, ஆகாயத்தில் வேக மாகச்சென்ற தன்மை யாதாய் முடியுமோ! 'என்று அஞ்சித் தேவர்கள் சிதறி யோடினார்கள்; (எ - று.)

இதுவரையில் இலக்குமணனுடன் போர்செய்திருந்த இந்திரசித்து திடீரென்று ஆகாயத்திற் சென்றதனால் என்ன தீங்குவிளையுமோவென்று தேவர்கள் அஞ்சிக் கலங்கின ரென்க. கலாம் - கலஹம்: வடசொல். தேவர் தலைவனான இந்திரனையுமுளப்பட வென்றவனாதலால், இந்திரசித்தை 'புகழ் தற்கொத்தான்' என்றார். என்கொல்ஆம், கொல் - இரக்கம்: ஆம்-அசை. என் ஆம்கொல்என்றுமாற்றினுமாம். பி-ம்:—[1]ஒத்த. [2]கொலாம்.[3]இயற்றாநின்றான், இயற்றுகின்றான், எயிற்றாநின்றான். [4]மறைந்த. [5]விண்ணவர், இமையவர். ()

கஅச.—இந்திரசித்து நாகபாசம்விடுக்க ஆகாயத்துச் செல்லுதல்.

தாங்குவிற் கரத்தன் றாணி தழுவிய புறத்தன் [1]றன்னின்
ஓங்கியுற் றெரியா நின்ற [2]வெகுளிய [3]னுயிர்ப்பன் றீயன்
தீங்[4]கிழைப் பவர்கட் கெல்லாஞ் சீரியன் மாயச் செல்வன்
வீங்கிருட் பிழம்பி னும்பர் [5]மேகத்தின் மீதி னானான்.

(இ - ள்.) வில்லைத்தாங்கிய கையையுடையவனும் அம்பறாத்தூணியைக் கட்டிய முதுகையுடையவனும் இயல்பாகவே மிகப்பொங்கியெரிகிற கோபாக் கினியையுடையவனும் பெருமூச்சையுடையவனும் கொடியவனும் பொல் லாங்குசெய்பவர் யாவரினுஞ் சிறந்தவனும் மாயத்தையே செல்வமாகவுடை யவனுமான இந்திரசித்து,—மிகுதியான இருளின் திரட்சியிலே மேகத்தின் மேற் செல்பவனானான்; (எ - று.)

இக்கவி - அநுவாதம். புறம்-முதுகு. உலகத்தவர் செல்வத்தை விரும்பி யீட்டிப் பாதுகாத்தல்போல, இந்திரசித்து மாயங்களை விரும்பிப் பயின்று பாதுகாத்தன னென்க. பி-ம்:—[1]தன்னுள். [2]வெகுளியின். [3]உயிர்ப்புத்தீயன், உயிர்ப்பிற்றீயன். [4]இழைப்பவரையெண்ணில், இழைப்பவருக்கெல்லாம். [5]வேகத்தின். (உகுகூ)

கஅரு.—இந்திரசித்து நுண்ணியவடிவினனாதல்.

தணிவறப் பண்டு செய்த தவத்தினாற் றருமத் தானும்
பிணி[1]யறாப் பவரிற் பெற்ற வரத்தினும் பிறப்பி னானும்

மணிநிறத் தரக்கன் 2செய்த மாயமந் திரத்தி னானும்
அணுவெனச் சிறிய தாங்கோ ராக்கையு முடைய னானன்,

(இ - ள்.) நீலமணிபோன்ற நிறமுடைய இந்திரசித்து,---அப்பொழுது, முன்பு குறைவில்லாமற்செய்துள்ள தவத்தினாலும் (முற்பிறப்பிற்செய்துள்ள) தருமங்களினாலும், அஞ்ஞானப்பிணிப்பை யொழிப்பவர்களான பிரமன்முதலி யோரிடத்திற் பெற்றுள்ள வரங்களினாலும் (தனது) இராக்கதசாதியின்உரி மையினாலும் செய்கிற மாயத்திற்குஉரிய மந்திரபலத்தினாலும்,அணுப்போலச் சிறியதான ஒருசரீரத்தையு முடையவனானான்; (எ - று.)

அணு-மிகச்சிறுபொருள். 'ஆக்கையுமுடையனானான்' என்ற உம்மை - கீழ்ஆகாயத்திலானதன்றி என்று பொருள்படுதலால், இறந்ததுதழுவிய எச் சம். பி-ம்:--1அறுப்பவனில். 2கற்ற. (உகூஎ)

கஅகூ.---இந்திரசித்து அஸ்திரத்தையபிமந்திரித்து எடுத்தல்.

வாங்கினான் மலரின் 1மேலே 2வானவன் வானக் கங்கை
தாங்கினா.னுலகந் 3தாங்குஞ் சக்கரத் தவனென் றாலும்
வீங்குவான் 4றோளை வீக்கி 5வீழ்த்தலன் 6மீள்கி லாத
ஓங்குவா ளரவி னாமத் தொருதனிப் படையை 7யுன்னி.

(இ - ள்.) (அவ்விந்திரசித்து), (திருமாலின் நாபித்)தாமரைமலரின்மே லுள்ள பிரமதேவனும் ஆகாசகங்கையைத்(தனதுசடைமுடியில்)தரித்தவனான சிவபிரானும் (துஷ்டநிக்கிரகஞ்செய்து) சிஷ்டர்களைக்காக்கிற சக்கராயுதத் தையுடையவனான திருமாலும் ஆயினும், (அவர்களையும்), பருத்த பெரிய தோள்களை யிறுக்கிக்கட்டித் தள்ளியல்லாமல் திரும்பாததான [கட்டிவீழ்த்தி யே மீள்வதான] சிறந்தகொடிய நாகத்தின் பெயரைக்கொண்ட ஒப்பற்ற தோர் அஸ்திரத்தை [நாகபாசத்தை]ச் சிந்தித்து [அபிமந்திரித்து]எடுத்தான்.

'உலகந்தாங்குஞ்சக்கரத்தவன்'என்பதற்கு-ஆதிகூர்மரூபியாய்க்கீழிருந்து உலகங்களைத் தாங்குகிற திருமாலென்றுமாம்; மூவுலகத்தையும் பாதுகாக் கின்ற ஆஜ்ஞாசக்கரத்தையுடையவனான இந்திரனென்றும் பொருள் கூற லாம். முதல்மூன்றடிகள் - அஸ்திரத்தின் சிறப்பை விளக்கக்கூறியன. இச் செய்யுளில் 'உன்னி வாங்கினான்' என ஈற்றுமொழி முதல்மொழியோடு இயைந்துமுடிந்தது,பூட்டுவிற்பொருள்கோள்; இச்செய்யுள் "அதுகணத்து" (கஅஅ)என்றதன்பின் சிலபிரதியிலுள்ளது. பி - ம்:—1மேலான். 2வான கமணிநீர்க்கங்கை. 3தாவும். 4தோளின்வீக்கின், தோளினூக்கின். 5வீழ்த் தன்றி. 6வீழ்க்கலாத. 7உன்னு. (உகூஅ)

கஅஎ.—இந்திரசித்து தோற்றோடிவிட்டதாக வானரரும் இலக்குமணனும் மகிழ்ந்திருத்தல்.

ஆயின காலத் தார்த்தா ரமர்த்1தொழி லஞ்சி யப்பால்
போயின னென்ப துன்னி 2வானர வீரர்போல்வார்
நாயகற் கிளைய கோவு மன்னதே 3நினைந்து 4நக்கான்
மாயையைத் தெரிய வுன்னார்5போர்த்தொழின் மாற்றி நின்றார்.

(இ-ள்.) அப்பொழுது, வாநரவீரர்கள்,—(இந்திரசித்தின்) மாயச்செய்கையை நினைத்தறியாதவர்களாய்,—(இந்திரசித்து),'போர்செய்தற்குப்பயந்து அப்பால் ஓடிப்போயினன்' என்று நினைத்து, (மகிழ்ச்சியினால்) பேராரவாரஞ் செய்து, போர்செய்தலை நீங்கிநின்றார்கள்; இராமபிரானது திருத்தம்பியாகிய இலக்குமணனும், அவ்வாநரவீரர்கொண்டஎண்ணத்தையே தானும்கொண்டு சிரித்தான்; (எ - று.)

வானரவீரர் போல்வார்-ஒப்பில்போலி: "நெய் போல்வதூஉம்" என்னும் நாலடியாரிற் போல; வாக்கியாலங்காரம்: வாநரவீரர்முதலியோ ரென்ற கருத்துங் கொள்ளலாம். பி-ம்:—1தொழிற்கு. 2வானரப்பெரியோர்தாமும். 3நயந்தான், நயந்து. 4தீய. 5அமர்த்தொழின்மாறி. (உகூகூ)

கஅஅ.—இலட்சுமணன் போரொழிந்து இளைப்பாறுதல்.

அதுகணத் தனுமன் றோளின் றையனு மிழிந்து வெய்ய
1கதுவலிச் சிலையை வென்றி யங்கதன் கைய தாக்கி
முதுகுறச் சென்று நின்ற கணையெலா முறையின் வாங்கி
2விதுவிதுப் 3பாற்ற லுற்றான் விளைகின்ற 4துணர்ந்தி லாதான்.

(இ - ள்.) அச்சமயத்தில் இலக்குமணனும் (அப்பொழுது) நடப்பதைச் (சிறிதும்) உணராதவனாய்,—அநுமானுடைய தோளிலிருந்துகீழிறங்கி, கொடியவலிமைபொருந்திய (தனது) வில்லை வெற்றியையுடைய அங்கதன்கையிலுள்ளதாகச்செய்து (தனது மார்பின்வழியாக)முதுகில் நன்றாகப்பாய்ந்திருந்த (பகைவரது) அம்புகளையெல்லாம் முறைமையாகப் பறித்தெறிந்து இளைப்பாறத் தொடங்கினான்; (எ-று.)

கதுவு வலி=கதுவலி; தொகுத்தல்: கதுவுதல்-நீங்காதுபற்றுதல். விதுவிதுப்பு-இரட்டைக்கிளவி; போர்செய்ததனால்நேர்ந்த இளைப்பு. பி-ம்:—1கதிவலி, கதிர்வலி. 2விதிர்விதிர்ப்பு.3ஆற்றி.4உணர்விலாதான், உணர்கிலாதான்.

கஅகூ.—இந்திரசித்து நாகபாசத்தைவிடுக்க, அது இலக்குமணன் தோளைச்சுற்றிக்கொள்ளுதலைந் தெரிவிக்கும்.

விட்டன னரக்கன் வெய்ய படையினை 1விடுத்த லோடும்
2எட்டினோ டிரண்டு திக்கு மிருந்3டிரிந் திரிய வோடிக்
கட்டின தென்ப மன்னோ காகுத்தற் கிளைய காளை
வட்ட4வான் வயிரத் திண்டோண் 5மலைகளை யுளைய வாங்கி.

(இ-ள்.) இந்திரசித்து, கொடிய அந்நாகாஸ்திரத்தைப் பிரயோகித்தான்; (அவ்வாறு) விட்டவுடனே, (அப்படை), பத்துத்திக்குக்களிலும் இருள் ஓடிச்செல்லும்படி (மிக்க ஒளியுடனே) விரைந்துசென்று, இராமபிரானது தம்பியாகிய இலக்குமணனுடைய திரண்ட பெரிய உறுதியான வலிமையுள்ள மலைகள்போன்ற தோள்களை வருந்தும்படி வளைந்து சுற்றிக்கொண்டது.

பத்துத்திக்குகள் - நான்குபெருந்திசைகளும், நான்குமூலைத்திசைகளும், மேல் கீழ் என்னும் இரண்டுமாம். காகுஸ்த்தன் என்ற வடசொல்-ககுத்ஸ்தனென்னும் அரசனது மரபிற் பிறந்தவனென்று காரணப்பொருள்படும்;

தத்திதாந்தநாமம். சூரியகுலத்துப் புரஞ்சயனென்ற அரசன் தன்விருப்பத்தின்படி தனக்குவாகனமாகி எருதுவடிவங்கொண்ட இந்திரனது ககுத்எனப்படுகிற முசுப்பின்மேல் ஏறி வீற்றிருந்து பகைவரைப் பொருதுஅழித்ததனால் ககுத்ஸ்தன் என்று பெயர்பெற்றான். பி-ம்:—[1]விடுதலோடும். [2]எட்டுமோர். [3]இரிந்திரிய, எழுந்திரிய. [4]ஆண். [5]மலையினையுலைய. (௨௪௬௪)

கக௬௦.—இதுமுதல் ஆறுகவிகள்-நாகபாசத்தாற் கட்டப்பட்டவர்களது நிலைமையைத் தெரிவிக்கும்.

[1] இறுகுறப் பிணித்த லோடு மியாவையு மெதிர்ந்த போதும்
[2]மறுகுறக் கடவா னல்லன் மாய[3]மென் [4]றுணர்வா னல்லன்
[5]உறுகுறைத் துன்ப மில்லா னொடுங்கினன் செய்வ தோரான்
[6]அறுகுறைக் களத்தை [7]நோக்கி யந்தர மதனை நோக்கும்.

(இ - ள்.) எல்லாப்பிராணிகளும் (திரண்டு ஒருசேர) எதிர்த்தகாலத்திலும் மனங்கலங்கத் தக்கவனல்லாதவனும் (மனத்திற்) பொருந்திய குறையாகிய துன்பமில்லாதவனும் [திருப்தியான மனமுடையவனும்] ஆன இலக்குமணன், (அந்நாகாஸ்திரம் தன்னை) இறுகக்கட்டினவளவில், '(இது இந்திரசித்தின்) மாயச்செய்கை' என்று அறியாமல் இன்னதுசெய்வதென்று உணராமல் வலிமைகுன்றினவனாய், உடற்குறைகளையுடைய போர்க்களத்தைப் பார்த்து ஆகாயத்தையும் பார்ப்பான்; (எ - று.)

'யாவையு மெதிர்ந்தபோதும் மறுகுறக்கடவானல்லன் - இலக்குமணன் எல்லாவுலகங்களையும் ஒருசேர வெல்லவல்ல திறமையுடையவ னென்றபடி. இந்திரசித்து மாயையால் ஆகாயத்தில் மறைந்து நாகாஸ்திரந்தொடுத்ததை யறியாமல் இலக்குமணன் திடீரென்று தன்தோள்கட்டப்பட்டதைக்கண்டு 'போர்க்களத்துவந்து யாரேனும் அம்பு தொடுத்தனரோ?' என்று முதலிற் களத்தைப்பார்த்து அங்கு ஒருவரையுங்காணாமையால் ஒருவேளை 'வானத்திலிருந்து போர்செய்யக்கூடும்' என்று ஆகாயத்தைப்பார்த்தனனென்க. அறுகுறை - அறுபட்ட உடல்துண்டு. பி-ம்:—[1]இறுக்குற. [2]மறுக்குற. [3]ஒன்று. [4]உணரானல்லன், உணரவல்லான். [5]உறுக்குற. [6]அறுக்குறை. [7]நோக்கும்.

கக௬க. காலுடைச் சிறுவன் மாயக் கள்வனைக் கணத்தின் காலை
மேல்விசைத் [1]தெழுந்து நாடிப் பிடிப்பனென் றுறுக்கும் வேலை
[2]ஏல்புடைப் பாச மேனு ளிராவணன் புயத்தை வாலி
வால்[3]பிணித் தென்னச் [4]சுற்றிப் பிணித்தது வயிரத் தோளை.

(இ - ள்.) வாயுவின் புதல்வனான அநுமான்,—'(இவ்வாறு) மாயையைச் செய்கின்ற கள்ளத்தன்மையுடையவனைக் கணப்பொழுதினுள் ஆகாயத்தில் வேகமாகக்கிளம்பியெழுந்து தேடிப் பிடிப்பேன்' என்று உக்கிரங்கொண்டு தொடங்குஞ்சமயத்தில்,—தாக்கிவருத்துதலையுடைய அந்நாகபாசமானது,—முற்காலத்தில் இராவணனது தோள்களை வாலியினதுவால் கட்டினதுபோல (அநுமானது) உறுதியான தோள்களைச் சூழ்ந்து கட்டியது; (எ - று.)

காலுடை, கால்-காற்று; உடை - உடையஎன்னும்ஆறனுருபின்தொகுதல். இன்னதென்றுஅறியமுடியாதபடி மறைந்துநின்று வருத்துதலால்

'மாயக்கள்வன்' என்றார். இச்செய்யுள் "மற்றையோர்" என்ற அடுத்தபாடலின்பின் சிலபிரதியி லுள்ளது.

வாலி இராவணன்தோளைப் பிணித்த கதை:—திக்விசயஞ்செய்யப் புறப்பட்டுப் பலரையும்வென்ற இராவணன், ஒருகாலத்தில், கிஷ்கிந்தாநகரத்தையாண்ட வாநரராசனை வாலியோடு போர்செய்யும்பொருட்டுக் கிஷ்கிந்தையைச்சேர்ந்து, அப்பொழுது அவன் அங்கு இல்லையென்றும் வழக்கப்படி நாற்கடலிலும் நீராடி நித்தியகருமம்முடிக்கச் சென்றுள்ளா னென்றும் அறிந்து, தென்கடற்கரைக்குச் சென்று, அங்கு மந்திரஜபஞ்செய்துகொண்டிருக்கிற வாலியைப் பார்த்து, அவனைத் தந்திரமாக எளிதிற்பிடித்துக்கொள்ளும்பொருட்டு அடி ஓசைப்படாமல் மெதுவாய்நடந்து அவன்பின்னே சேர, அதனைக் கீழ்கண்ணாற்கண்ட வாலி, முன்ஜாக்கிரதைப்பட்டு, கிட்டவந்து தன்னைக்கட்டத்தொடங்கியவுடனே இராவணனைக் கக்கத்தில்இடுக்கி வாலினாற்சுற்றிக்கொண்டபடியே ஆகாயமார்க்கமாய்ச்சென்று மற்றைக்கடல்களிலுஞ்சேர்ந்து நியமங்களை நிறைவேற்றிக்கொண்டு தனதுநகரமடைந்து இராவணனைக் கீழேயுதற, அவன் தன்வரலாறுகூறித் தன்குற்றம்பொறுக்கவும் தன்னைநட்பாகக்கொள்ளவும் வேண்டி அவனதுநட்பைப் பெற்றனனென்பதாம். பி-ம்:—[1]எழுந்த. [2]ஏலவப், ஏலுடைப், ஏல்வுடைப். [3]பிடித்தென்ன, புடைத்தென்ன. [4]பற்றிப். (உ௧௬௩)

௧௬௨. மற்றையோர் [1]தமையு மெல்லாம் வாளெயிற் றரவம் வந்து
சுற்றின வயிரத் தூணின் [2]மலையினிற் பெரிய தோள்கள்
இற்றன விற்ற வென்ன விறுக்கின விமைகா வுள்ளத்
தெற்றென வுடைய வீர [3]ரிருந்தனர் செய்வ தோரார்.

(இ-ள்.) (அந்நாகாஸ்திரத்தாலுண்டான) வாள்போன்றபற்களையுடைய பாம்புகள், மற்றைவாநரவீரர்களெல்லாரையும் வந்துசூழ்ந்துகொண்டு வச்சிரஸ்தம்பங்கள்போலவும் மலைகள்போலவும் பெரியனவான (அவ்வாநரவீரர்களின்) தோள்களை 'முறிந்துபோயின முறிந்துபோயின' என்று (அவர்கள்) முறையிடும்படி அழுத்திப்பிணித்தன; (அப்போது), (இயல்பிலே) சலியாத [தைரியமான]மனத்தைத் தெளிவாகவுடைய அவ்வீரரெல்லாரும், செய்வது இன்னதென்றுஅறியாது திகைத்திருந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]தம்மை. [2]மலையெனப், மலைகளிற். [3]இரிந்தனர். (உ௧௬௪)

௧௬௩. மலையென [1]வெழுவர் வீழ்வர் மண்ணிடைப் புரள்வர் வானில்
தலைகளை யெடுத்து நோக்கித் தழலெழ விழிப்பர் தாவி
அலைகிளர் வாலாற் பாரி னடிப்பர்வாய் மடிப்ப ராண்மைச்
சிலையவற் கிளைய கோவை நோக்குவ ருள்ளந் [2]தீவர்.

(இ-ள்.) (நாகாஸ்திரத்தாற் கட்டுப்பட்ட வாநரவீரர்கள்), மலைகள் (மேலெழுந்தாற்) போலக் கிளம்புவார்கள்; கீழேவிழுவார்கள்; தரையிற் புரள்வார்கள்; தலைகளைத் தூக்கி ஆகாயத்தைப்பார்த்து நெருப்புப்பொறிபறக்கக் கண்களை விழிப்பார்கள்; பாய்ந்து அலைகின்ற வளர்ந்த (தங்கள்) வால்களினாற் பூமியில் அடிப்பார்கள்; உதடுகளைக் கடிப்பார்கள்; ஆண்தன்மையையுடைய

வில்லையேந்திய இராமபிரானது தம்பியான இலக்குமணனைப்பார்த்து (இவ் வீரனுக்கும் இப்படிநேர்ந்ததே யென்று) மனங்கொதிப்பார்கள்; (எ - று.)

எழுதலும் வீழ்தலும் புரளுதலும் - இந்திரசித்துஎவிய நாகங்கள் இறுக்குதலால்தோன்றிய வருத்தம் பொறாமையாலும், தழுவெழுவிழித்தலும் வாலலடித்தலும் வாய்மடித்தலும்-வெகுளியினாலும், உள்ளந்தீதல்-சோகத்தினாலும் நிகழ்ந்தன வென்க. பி-ம்:—[1]வீழ்வார்வீழ்வர், வீழ்வர்வீழா. [2]தீய்வார், தீர்வர். (உகசு௫)

கககூச.வீடணன் முகத்தைத நோக்கி வினை[1]யுண்டே யிதனுக் கென்பர்
மூடின கங்குல் மாலை யிருளினை முனிவர் [2]மொய்ம்பில்
ஈடுறத் தக்க போலா நம்மெதி [3]ரென்னு வேந்தல்
ஆடகத் தோளை நோக்கி [4]நகைசெய்வர் விழுவ ரஞ்சார்.

(இ - ள்.) (பின்னும் அவ்வாநரவீரர்கள்),—விபீஷணனதுமுகத்தைப் பார்த்து, 'இதற்கு (எதாவது பரிகாரச்) செயல் உளதோ?"என்று வினவுவார்கள்; இரவிலே கம்மிக்கொண்ட திரட்சியானஇருளைக் கோபிப்பார்கள்; 'நமது கண்ணெதிரிலே (இவை) வலிமையிற் குறையத்தக்கனவோ!' என்று இரங்கிக்கூறி, இலக்குமணனது பொன்போன்ற தோள்களைப் பார்த்துச் சிரிப்பார்கள்: விழுவர்: (அந்நிலையிலும் இயற்கைவீரத்தால்) அஞ்சாதிருப்பர் [தைரியங்கொண்டிருப்பார்கள்]; (எ - று.)

அம்புஎய்தவனைக் கண்டுபிடிக்கவொட்டாது தடைசெய்தலால் இருளை முனிவாராயினர்: தாம் யாதோருதவியுஞ்செய்யமுடியாது இலக்குமணனது வருத்தத்தைக் காணும்படிநேர்ந்த விதியைப் பற்றி வாநரவீரர் இகழ்ந்து நகைத்தன ரென்க. இங்கு நகைப்பு, தம்மையிகழ்தல் பற்றியது. மாலை-திரட்சி. ஏந்தல்-பெருமையிற்சிறந்தவன்: ஆண்பாற்சிறப்புப்பெயர். பி-ம்:—[1]உண்டோ. [2]மொய்ம்பன். [3]என்று, என்றே, என்னப். [4]நொந்துநொந்துருகினைவார், நொந்துநொந்தழுங்கினைவார். (உகசகூ)

ககூ௫.ஆரிது [1]தீர்க்க வல்லா ரஞ்சனை பயந்த வள்ளல்
மாருதி பிழைத்தான் கொல்லோ வென்றனர் மறுகி நோக்கி
வீரனைக் கண்டு [2]பட்ட திது[3]கொலா மென்று விம்மி
வார்கழற் றம்பி தன்மை காணுமோ வள்ள [4]லென்பார்.

(இ - ள்.) (மற்றும் வாநரவீரர்கள்),—'இப்பொழுதுநேர்ந்துள்ளவருத்தத்தை நீக்கவல்லவர் யாவர்? அஞ்சனாதேவி பெற்ற உபகாரியான அநுமான் (இதற்குத்தப்பிப்) பிழைத்துள்ளானோ?" என்று கூறினவர்களாய், மனங்கலங்கிப்பார்த்து,—(நாகபாசத்தாற்கட்டுண்ட) இலக்குமணனைப் பார்த்து 'நேர்ந்த நிலைமை இதுவோ!' என்றுகூறிப் புலம்பி,—'இராமபிரான் நீண்டவீரக்கழலையணிந்த(தனது)தம்பியான இலக்குமணனுக்குநேர்ந்த (இந்)நிலைமையைக் கண்டு பொறுப்பனோ?" என்றுங் கூறுபவரானார்கள்; (எ - று.)

அநுமான்தவிர மற்றெவராலும் இதற்குப் பரிகாரஞ் செய்யமுடியாதென்று கருதினராதலின், 'அவன் பிழைத்துள்ளானோ?" என்றும், இப்போதுள்ள இலக்குமணனது நிலைமையைக் கண்டால் அவனிடத்து மிக்கஅன்

புள்ள இராமபிரான் என்னிலைமையடைவானே?" என்ற அச்சத்தால் "தம்பி தன்மைகாணுமோ" என்றும் கூறலானார்கள். பி-ம்:—1தீர. 2பட்டவிது. 3கொலோ. 4என்றார். (உகசஎ)

கககூ.—நாகாஸ்திரம் வானரர்மீதுபாய்ந்ததைப்பற்றிய கவிக்கூற்று.

என்1சென்ற தன்ன 2சொல்லி னெறும்வலி யரக்க னெய்தான்
மின்3சென்ற தன்ன வானத் தாருமினம் 4வீழ்வ வென்னப்
பொன்சென்ற 5வடிம்பின் வாளி புகையொடு பொறியுஞ் 6சிந்தி
முன்சென்ற 7முதுகிற் பாயப் பின்சென்ற 8மார்ப முற்ற.

(இ - ள்.) (அச்சமயத்தில்) நிகழ்ந்தனவான அந்தக்கலக்கங்களை (விரித்து)ச்சொல்லின் யாதுபயன்? மிக்கவலிமையையுடைய அரக்கனாகிய இந்திரசித்து,ஆகாயத்திலே(நின்று)மின்னல்அமைந்ததுபோன்றனவான (பல)அம்புகளைப் பிரயோகித்தான்; பொன்னினாலமைந்த நுனியையுடைய அந்தஅம்புகள்இடியின்கூட்டம்வீழ்வனபோலப் புகையையும் தீப்பொறிகளையுஞ்சிந்திக்கொண்டு(அக்களத்தில் வீரர்யாவரும் கவிழ்ந்து வீழ்ந்திருப்பதனால்) முதுகிற் பாயும்படி முன்னேசென்றவைகளாய், பின்புறமாயுள்ள மார்பில் ஊடுருவிச் சென்று பொருந்தின; (எ - று.)

முதலடியில், சென்றது அன்ன - ஒருமைப்பன்மைமயக்கம். வானரவீரர்களிற் சிலர் நிமிர்ந்தும் சிலர் கவிழ்ந்தும் விழுந்துகிடந்தன ரென்றுகொண்டு, இந்திரசித்தினம்புகளில் மார்பில்தைத்தவை ஊடுருவிமுதுகிலேபாய முதுகில்தைத்தவை ஊடுருவி மார்பிலேபாய்ந்தன வென்று ஈற்றடிக்குப் பொருள் கொள்ளுதல் அமையும். பொன்சென்றவடிம்பின் வாளி யாதலால், 'மின் சென்றதன்ன'எனப்பட்டன. பி - ம்:—1செய்ததன்மை, சென்றதன்மை, சென்றதென்ன. 2சொல்லி, சொல்வது, உன்னி. 3சென்றதென்ன. 4வீழ்ப. 5வடிவின். 6சிந்த. 7பின்புசெல்லமுதுகுற, முதுகிற்செல்லப்பின்சென்ற. 8மார்பை. (உகசஅ)

ககஎ.—அந்தநாகாஸ்திரத்தால் வானரர்பட்ட துன்பம்.

1மலைத்தலைக் கால மாரி மறித்தெறி வாடை மோதத்
தலைத்தலை மயங்கி 2வீழுந் தன்மையிற் 3றலைகள் சிந்துங்
கொலைத்தலை வாளி 4பாயுங் 5குன்றனை குவவுத் தோளார்
6நிலைத்தில ருலைந்து சாய்ந்தார் நிமிர்ந்தது குருதி நீத்தம்.

(இ - ள்.) மலைகளினிடத்தில்தங்கியுள்ள கறுத்த நீர்கொண்டமேகங்கள், மடக்கியடிக்கின்ற கடுங்காற்று வீசுதலினால், அவ்வவ்விடங்களிற் சிதறி விழுந் தன்மைபோல,—தலைகளைத் துணித்துத்தள்ளவல்ல கொல்லுதற்றொழிலைத் தம்மிடத்துக்கொண்ட (இந்திரசித்தின்) பாணங்கள் ஊடுருவிச்செல்லப்பெற்ற மலைபோன்ற திரண்டதோள்களையுடையவர்களான வானரவீரர்கள், (ஓரிடத்தில்) நிலைத்திருக்கமாட்டாதவர்களாய் வருந்திப்புரண்டார்கள்; (அவர்களுடைய) இரத்தவெள்ளம் மிக்குப்பெருகிற்று; (எ - று.)

கடுங்காற்றினால் மேகங்கள் சிதறிவிடுவதுபோல, இந்திரசித்தின் அம்புகளினால் வானரவீரர்கள் ஓரிடத்தில்நிலையாதுபுரண்டு சிதறினா ரென்க; உவ

மையணி. காலம்-கறுப்பென்னும்பொருள் படுவதொரு வடசொல். காலமாரி-கார்காலத்து மேகமுமாம். பி-ம்:—1மலைத்தலைதாவு. 2வீழ்ந்த. 3தழல்கள். 4பாயக். 5குன்றென, குன்றெனும். 6நிலைத்தலைகுலந்து, நிலைத்திலருலந்து. ()

க௬அ.—அநுமானுடைய தன்மை.

ஆயிர கோடி மேலு மம்பு 1தன் னுகத் தூடு
போயின போது மொன் றுந் துடித்திலன் 2பொடித்து 3மானத்
தீயெரி 4சிதறுஞ் செங்க ணஞ்சனை 5சிங்க மேனி
நாயகன் றம்பிக் குற்ற துயர்சுட நடுங்கு கின்றான்.

(இ - ள்.) ரோஷத்தினால் எரிகிறநெருப்புத்தோன்றிப் பொறிபொறியாச்சிந்துகின்ற சிவந்தகண்களையுடையவனாகிய அஞ்சனாதேவிபெற்ற சிங்கம்போன்ற அநுமான்,—ஆயிரகோடிக்கும் அதிகமாக அம்புகள் தனதுமார்பில் தைத்துச்சென்ற பொழுதிலும், சிறிதும் வருந்தினானில்லை; இராமபிரானது தம்பியான இலக்குமணனுக்கு நேர்ந்த துன்பம் (தன்னை)வருத்தியதனால்,உடம்பு நடுங்குபவனானான்; (எ-று.)

சிங்கம் - உவமையாகுபெயர். மேனி நடுங்குகின்றான் என இயையும். அநுமான் தனதுவருத்தத்தைச் சிறிதும் மேற்கொள்ளாது பிறர்வருத்தத்துக்கு மிகமனங்குழையும் பெருந்தன்மையுடையானென்பது இங்குப் பெறப்படும். அஞ்சனைசிங்கம் மேனி நடுங்குகின்றானென்க. பி - ம்:—1தன்னுகத்தோடு. 2பொடித்த, பொடித்திண். 3மானந். 4சிந்தும். 5சிங்கந்தெய்வ. (௨௯0)

க௬௯.—மற்றை வானரவீரர் அங்கதன் இவர்களின் நிலைமை.

வேறுள வீர ரெல்லாம் வீழ்ந்தன ருருமின் வெய்ய
நூறுமா யிரமும் வாளி யுடலிடை 1நுழையச் சோரி
ஆறுபோ லொழுக 2வண்ண லங்கத 3னனந்த வாளி
ஏறின மெய்ய னேனு மிருந்தன னிடைந்தி லாதான்.

(இ-ள்.) மற்றுமுள்ள வானரவீரர் யாவரும், இடியைக்காட்டிலுங் கொடியனவான அம்புகள் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் (தங்கள்) உடம்புகளில் நுழைவதனால், (தம்தம் உடம்பினின்று) இரத்தம் ஆறுபோலப் பெருக(த் தம்வசந்தப்பி)க் கீழ்விழுந்துகிடந்தார்கள்;பெருமையிற்சிறந்தவனாகிய அங்கதன், அளவில்லாத அம்புகள் தைத்த உடம்பையுடையவனாயிருந்தும், சோர்வடையாமலிருந்தான்; (எ-று.)

'சோரி ஆறுபோலொழுக' என்பதைப் பிந்தின வாக்கியத்துக்குங் கூட்டலாம். பி - ம்:—1நுழைப்ப. 2ஐயன், 3அனந்தம். (௨௯௯).

௨00.—வானரராசனான சுக்கிரீவன் நிலை.

கதிர்வன் காதன் மைந்தன் கழலிளம் பசுங்1கா யன்ன
எதிரெதிர் பகழி தைத்த யாக்கைய னெரியுங் கண்ணன்
வெதிர் நெடுங் கான மென்ன வேகின்ற மனத்தன் 2மெய்யன்
உதிர 3வெங்கடலுட் டாதை 4யுதிக்கின்றான் றனையு மொத்தான்.

(இ - ள்.) சூரியனது அன்பிற்கு உரியமகனான சுக்கிரீவன்,—அம்புகள் நேர்நேராகத்தைத்ததும்(அதனால்)இளமையான பசிய கழற்காயை யொத்தது

மான உடம்பையுடையவனும், தீப்பொறிபறக்கின்ற கண்களையுடையவனும், பெரியமூங்கிற்காடு (எரிந்தாற்)போலப் பற்றியெரிகின்ற மனத்தையும் உடம்பையுமுடையவனுமாய்,கொடிய இரத்தக்கடலி லுதயமாகின்ற (தனது) தந்தையாகிய சூரியனையும் போன்றான்; (எ - று.)

'தந்தையே மகனாய்ப்பிறக்கின்றான்' என்னும் நூல்வழக்குப்பற்றி, சுக்கிரீவனுக்கு அவன் தந்தையான சூரியனை உவமைகூறுதல் ஏற்கும். உதிரக்கடலுள் உதிக்கின்ற சூரியனென்றது, இல்பொருளுவமை; சுக்கிரீவன் இரத்த வெள்ளத்தினிடையே கிடந்து விளங்கின னென்க. மேலே முட்கள்நிரம்பப் பெற்ற கழற்காய், மேலே அம்புகள் நிறையப்பெற்ற உடலுக்கு உவமை. பசுங்காயன்னயாக்கையென்க. பி-ம்:—1காயென்ன. 2வெய்ய. 3ஒண்கடலில். 4உதிக்கின்றதன்மை, உதிக்கின்றான்றன்னை. (உகடுஉ)

உ0க.—இதுவும் அடுத்தகவியும்-நாகபாசத்தாற் கட்டுண்ட இலட்சுமணன் வருணனை.

வெப்பாரும் பாசம் [1]வீக்கி வெங்கணை [2]வளைக்கு மெய்யன்
ஒப்பாரு மில்லான் றம்பி யுணர்ந்திருந் தின்ன லுய்ப்பான்
இப்பாச [3]மாய்க்கு மாய மியான்வல்ல னென்ப தோர்ந்தும்
[4]அப்பாசம் [5]வீச வாற்றா தழிந்த [6]நல் லறிவு போன்றான்.

(இ - ள்.) (தனக்கு) உவமையாக ஒருவரையும்பெறாதவனாகிய இராமபிரானது தம்பியான இலக்குமணன்,—கொடுமைநிறைந்த நாகபாசத்தாற் கட்டுண்டு கொடியஅம்புகள் சூழ்ந்துள்ள உடம்பையுடையவனாய், (தனக்கு அதனையொழிக்கும் வல்லமையிருப்பதை) அறிந்திருந்தும் துன்பத்தையனுபவிப்பவனாய்,—'இந்தச்சம்சாரபந்தத்தை நீக்கவல்ல திறமையுடையேன்யான்' என்பதை உணரலாயிருந்தும், அந்தப்பாசங்களை நீக்க முடியாது (உணர்வு) கெட்ட சிறந்த ஆன்மாவை ஒத்திருந்தான்; (எ - று.)

ஒருவன் சம்சாரபந்தத்தினின்று நீங்கி நன்னெறிபெறும் ஆற்றலையுடைந்திருந்தும் விதிவசத்தால் அவ்வாறுசெய்யாது அந்தச்சம்சாரத்திலேயே உழைத்து வருந்துதல் போல, சர்வசக்தனான லக்ஷ்மணன் தான் அந்நாகபாசத்தை எளிதில் ஒழிக்கும் வல்லமையுடையனாயிருப்பதை யுணர்ந்திருந்தும் மநுஷ்ய பாவனையால் அவ்வாறுசெய்யாது அந்நாகபாசத்தாற் கட்டுண்டு வருந்துபவனானான். ஆதிசேஷனது அமிசமான இலக்குமணன் தான் கொண்டுள்ள மாநுடத்தன்மைக்கு ஏற்ப இவ்வாறு நாகபாசத்தால் வருந்தினனென்க. உபநிஷத்துக்களில் ஆன்மாவை 'ஞானம்' என்று கூறியிருத்தலும், வியாசமுனிவர் உத்தரமீமாஞ்சையில் "தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேச:" [=ஞானகுணத்தையேமுக்கியமாகக்கொண்டிருத்தலால் ஆன்மாவை ஞானமென்கிறது]என்றுகூறியிருத்தலும்பற்றி, ஆன்மாவை 'அறிவு' என்றார்; "ஒண்டாமரையாள் கேள்வ, னொருவனையே நோக்கும் உணர்வு" என்றார் பெரியாரும்: சித்,சேதநம்என்ற அதன்பரியாயப்பெயர்களையுங் காண்க.ஒப்பு ஆருமில்லான் எனவே, தன்னினும் மிக்காரொருவருமில்லாதவ னென்பது தானே பெறப்படும். பாசம் - கயிறு; பரமாத்மவிஷயத்திற் புத்தியைச்செல்லவொட்டாது தடுத்து

மனத்தைப்பிணித்தல்பற்றி, சம்சாரம், பாசமெனப்படும்; உவமவாகுபெயர். மாயம்-உபாயம். பி-ம்:-1வீக்க. 2துளைக்கும், துளங்கும். 3மாய்க்குந்தன்மை... தேர்ந்தும், மாய்க்கும்...வல்லேனென்னத்தேர்ந்தும், மயக்குமாயமெய்திய வின்னல்தேரான். 4பொய்ப்பாசம். 5வீசல். 6நல்லறிவும். (௨௧௫௫)

௨0௨. அம்பெலாங் கதிர்க ளாக 1வழிந்தழிந் திழியு மாகச்
செம்புனல் வெயிலிற் றோன்றத் திசையிரு ளிரியச் 2சீறிப்
பம்பு3பே ரொளிய நாகம் பற்றிய படிவத் தோடும்
உம்பர்நா 4டிறந்து வீழ்ந்த வொளியவ னேயு மொத்தான்.

(இ - ள்.) (அவ்விலக்குமணன், தன்னுடம்பில் தைத்துள்ள) அம்புக ளெல்லாம் கிரணங்களாகவும், உடம்புதைய தையப் பெருகுகிற இரத்தம் வெயில்போலத்தோன்றவும், எல்லாப்பக்கத்திலும் நிறைந்த இருட்டை நிலை கெட்டோடும்படிகோபித்து [ஓட்டி] நிறைகிற பெரிய ஒளியையுடையதும் பாம்பினாற் பிடிக்கப்பட்டதுமான உருவத்துடனே தேவலோகத்தினின்று தவறிக்கீழ்விழுந்த சூரியனையும் ஒத்தான்; (எ - று.)

பலஅம்புகள்தைக்க இரத்தம்வழிய நாகாஸ்திரத்தாற் கட்டுப்பட்டுக் கீழ் விழுந்துகிடந்த இலக்குமணனுக்கு, ஆயிரங்கிரணங்களோடுகூடி வெயில் வீசப் பாம்பினாற்பிடிக்கப்பட்டு வானத்திலிருந்து தவறிக் கீழ்விழுந்த சூரி யனை உவமைகூறினார். உருவகத்தை அங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப் பேற்றவணி. ஒளியபடிவம், பற்றியபடிவம் என இயையும. சூரியனதுபெயர் களுள் 'பாஸ்வாந்' என்ற வடமொழிப்பெயரின் பொருளமைய, 'ஒளியவன்' என்றார்; ஒளியுடையவனென்க. 'நாகம்பற்றிய படிவத்தோடும்' என்பதைச் சூரியனுக்கும் இயைக்க;பூமியின் சாயை சந்திரனைமறைத்தலாலும் சந்திரனது சாயை சூரியனைமறைத்தலாலும் நேர்கிற கிரகணங்களை, ராகுவென்னுங் கரும்பாம்பும் கேதுவென்னுஞ் செம்பாம்பும் சந்திரசூரியரைப்பற்றுதலா லாவனவாகக் கூறுதல், மரபு. பி-ம்:---1அலைந்தலைந்ததிருமாழிச், அழிந்தழிந் தலைக்குமாழிச், அழிந்தழிகதிர்க்குமாழிச். 2சீய்க்கும். 3பேரொளிகொள். 4இழிந்து. (௨௧௫௬)

௨0௩.—இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்: இந்திரசித்து இராவணனரண்மனையைச் சேர்தலைத் தெரிவிக்கும்.

மயங்கினன் வள்ள றம்பி மற்றையோர் முற்று மண்ணை
முயங்கினர் மேனி யெல்லா மூடினு னரக்கன் 1மூரித்
தயங்கு2பே ராற்ற லானுந் தன்3னுட றைத்த வாளிக்கு
உயங்கின னுளைந்தா மன் வாயா லுதிரநீ 4ருமிழா நின்றான்.

(இ - ள்.) இராமபிரானது தம்பியாகிய இலக்குமணன் மயங்கிக்கிடந் தான்: மற்றையெல்லாவீரரும் (விழுந்து) தரையைத் தழுவிக்கிடந்தார்கள்; (அவர்களுடைய) உடம்புகளையெல்லாம் (அம்புகளால்) மறைத்தவனும் வலி மையினால்விளங்குகின்ற மிக்கதிறமையையுடையவனுமாகிய இந்திரசித்தும் தனது உடம்பில் (முன்னமே) தைத்துள்ள (இலக்குமணனது) அம்புகளுக்கு மனந்தளர்ந்து வருந்தி,வாயினால்இரத்தத்தைக் கக்கிக்கொண்டு,—(எ - று.)—

'என்றெண்ணினான்' என அடுத்த கவியில் முடியும். ஆற்றலான் அரக்கனும் என உம்மை, பிரித்துக்கூட்டப்பட்டது. அந்த உம்மை, இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. பி-ம்:—[1]மூரி, மைந்தன். [2]போராற்றலானும், பேரம்பாற்றானும், போரம்பாற்றானும். [3]உடற்றைத்த. [4]உமிழ்வதானான். (உகருரு)

உ0ச. சொற்றது முடித்தே னென்னா [1]யென்னுடற் சோர்வை நீக்கி
மற்றது முடிப்ப [2]னென்று வெண்ணினன் [3]மனிதன் வாழ்க்கை
இற்றது குரங்கின் றானை [4]யிறந்ததென் றிரண்டு பாலுங்
கொற்ற[5]மங் கலங்க ளார்ப்ப விராவணன் கோயில் புக்கான்.

(இ - ள்.) 'சொன்னதை நிறைவேற்றினேன்: எனதுஉடம்பின்தளர்ச்சியைப் போக்கிக்கொண்டு நாளைக்கு மற்றதையும் நிறைவேற்றுவேன்' என்று நினைத்து, 'மனிதனது வாழ்வு (இன்றோடே) அழிந்தது: குரங்கின்சேனை ஒழிந்தது' என்று (தனது) இரண்டு பக்கங்களிலும் வெற்றிக்குஅறிகுறியாக மங்கல வாத்தியங்கள்முழங்க இராவணனது அரண்மனையிற் போய்ச்சேர்ந்தான்.

சொற்றது - "வெங்கண்ணெடுவானரத்தானையை வீற்றுவீற்றாய்ப் பங்கம்பிறநூறி யிலக்குவனைப்படு" த்தல். மற்றது - எஞ்சிநின்ற இராமன்முதலியோரையழித்தல். இலக்குமணன்முதலியோர் தன்நாகபாசத்தால் இறந்தனரென்று கருதினனாதலால், 'சொற்றதுமுடித்தேன்' என்றான். மநுஜன் என்பது மனிசன்எனத்திரிந்துநின்றது. மனிசன்வாழ்க்கை இற்றது-இராமனதுவலத்தோளன்னதக்க லக்ஷ்மணன்ஒழிந்தா னென்றபடி. பி - ம்:—[1]என்னுடைச்சோர்வு. [2]என்னும். [3]மனிதர். [4]இழிந்தது. [5]மங்கலநின்று. (உகருசு)

உ0ரு.—இதுவும் அடுத்தகவியும் - இந்திரசித்துசென்றவகையைத் தெரிவிக்கும்.

[1]ஈர்க்கடை பகழி மாரி யிலக்குவ னென்ன நின்ற
[2]நீர்க்கடை மேகந் தன்னை [3]நீக்கியுஞ் செருவி னீங்கான்
வார்க்கடை மதுகைக் கொங்கை மணிக்குறு முறுவன் மாதர்[ன்.
[4]போர்க்கடைக் கருங்கண் வாளி [5]புயந்தொறும் பொழியப் புக்கா

(இ - ள்.) ஈர்க்குப்போல்அடர்ந்த அம்புமழையைக்கொண்ட இலட்சுமணனென்று சொல்லப்பட்டுநின்ற நற்குணத்தைக் கொண்ட மேகத்தையொழித்தும், (இந்திரசித்து), போரினின்றுநீங்காதவனாய், கச்சைக்கடத்தலையுடைய வலிமையைக்கொண்டதனங்களையும் அழகியபுன்சிரிப்பையுமுடைய மகளிரின்போர்செய்தலையுடைய கருநிறமுள்ள கடைக்கண்வாளி புயந்தொறும் பொழிந்துகொண்டிருக்கப் புக்கான்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் இராவணன்கோயில்புக்கானென்றகவி, இச்செய்யுளில், அங்ஙனம் அவ்விந்திரசித்துச்செல்லும்போது மகளிர் புன்முறுவல்செய்து கடைக்கண்பார்வையைச் செலுத்தித் தமதுகாமக்குறிப்பைத் தெரிவிக்கச் சென்றானென்றார். வீரப்போர்க்குஉள்ளானவன் இப்போது காமப்போர்க்கு உள்ளானானென்று கூறியவாறு. ஈர்க்கு=ஈரை: உருபுமயக்கம்: நீர்-நற்குணம். மூன்றாமடியில், கடை - கடத்தல்: தொழிற்பெயர். எதுகைநோக்கி 'வார்க்கடை'எனக் ககரவொற்று இரட்டித்துவந்தது. இச்செய்யுளில், திரிபுஎன்

னுஞ் சொல்லணிகாண்க. இரண்டாமடியில், நீர்க்கடைமேகம்-நீரையுடைய யுகாந்தகாலத்துமேகம்என்று உரைப்பாருமுளர். பி-ம்:—[1]ஈர்க்கடைப், ஈர்கிடைப்.[2]நீர்கிடை.[3]நீங்கியுஞ்செருவை.[4]போர்கடைக். [5]புய்த்தொடும். (௨௯௫௭)

௨௦௬. ஐயிரு கோடி செம்பொன் மணிவிளக் கங்கை யேந்தி
மையறு வான நாட்டு மாதரு மற்றை நாட்டுப்
பையர வல்கு லாரும் பலாண்டிசை பரவத் தங்கள்
[1]தையல ரறுகு தூவி வாழ்த்தினர் தழுவச் சார்ந்தான்.

(இ - ள்.) (அப்போதுஇந்திரசித்து),—செம்பொன்னினிடையே இரத்தினங்கள்பதித்துச்செய்த விளக்குக்களை அழகியகையிலேந்திக்கொண்டு குற்றமற்ற சுவர்க்கலோகத்துமாதர்களும் மற்றையுலகத்து அரவின்பையையொத்த அல்குலையுடையரானமாதர்களும் பத்துக்கோடித்தொகையினர் இசையுடனே பல்லாண்டுபாட,அரக்கமகளிர் அறுகைத்தூவிவாழ்த்தினவராய் உடன்வர இராவணனரண்மனையைச்சேர்ந்தான்;(எ-று.)—பி-ம்:—[1]தையலாராறு.

௨௦௭.—இராவணனுக்குச் செய்திதெரிவித்து,இந்திரசித்து தன்னிருப்பிடஞ்சேர்தல்.

தந்தையை யெய்தி [1]யன்றுங் குற்றுள தன்மை [2]யெல்லாஞ்
சிந்தையி [3]னுணரக் கூறித் [4]தீருதி யிடர்நீ யெந்தாய்
[5]நொந்தன னியாக்கை நொய்தி [6]னுறிமே னுவல்வ னென்னாப்
புந்தியி லனுக்கந் [7]தீர்ப்பான் றன்னுடைக் கோயில் புக்கான்.

(இ - ள்.) (இந்திரசித்து),—தகப்பனான இராவணனைச்சேர்ந்து அன்றைத்தினத்திலே அப்போர்க்களத்தில் நடந்துள்ள செய்திகளையெல்லாம் (அவன்) மனத்திலறியும்படி [தெளிவாகச்] சொல்லி,—'எனது தந்தையே! நீ துன்பம் நீங்குவாயாக: (யான்) உடல்வருந்தினேன்: விரைவில் இளைப்பாறி மேல் (நடக்கவேண்டியதைப்பற்றிப் பிறகு) சொல்வேன்' என்று கூறி (அவனைத்தேற்றி), (தன்) மனத்திலுண்டாயிருந்த அயர்ச்சியைத் தீர்த்துக்கொள்ளும்பொருட்டுத் தனது இருப்பிடத்திற் போய்ச்சேர்ந்தான்; (எ-று.)—பி-ம்:—[1]ஒன்றார்க்கு. [2]சாரச். [3]உணர்த்திமற்றுந். [4]தீயிடர்தீர்த்துநீக்கி, தீயிடர்தீரநோக்கி. [5]நொந்தனனுக்கை. [6]ஆற்றி. [7]தீர்வான். (௨௯௫௯)

௨௦௮.—இலக்குமணனுக்கு நேர்ந்த ஆபத்தைநினைத்து விபீஷணன் சோர்ந்து விழுதல்.

இத்தலை யின்ன லுற்ற வீடண [1]னிழைப்ப [2]தோரான்
மத்துறு [3]தயிரி னுள்ள மறுகினன் மயங்கு கின்றான்
அத்தலைக் கொடிய னென்னை யட்டில னளியத் தேனான்
செத்திலன் வலிய [4]னின்றே னென்றுபோய் வையஞ் சேர்ந்தான்.

(இ - ள்.) இந்தப்பக்கத்தில் (இலக்குமணனுக்கு நேர்ந்ததைப்பற்றி) வருத்தமடைந்த விபீஷணன்,—செய்வது(இன்னதென்று) அறியாது மத்தினாற்கடையப்பட்ட தயிர்போல மனங்கலங்கினவனாய்த் தெளிவுகுலைகின்றவனாகி,—'எதிர்ப்பக்கத்திலுள்ள கொடியவனாகிய இந்திரசித்து என்னைக் கொன்றானில்லை: இரங்கத்தக்க எளிமையடைந்தவனான நான்(சுயமாக)இறந்தேனு

மில்லை: உறுதியுள்ளவனாய் நின்றுள்ளேன்' என்றுசொல்லிக்கொண்டேபோய் (மிக்கதுயரத்தால்) தரையில் விழுந்திட்டான்; (எ - று.)

கொடியன் என்னை அட்டிலன் - இவர்களைக்கொன்றதுபோல என்னையுங்கொன்றிருந்தால் யான் இத்துயரங்களையெல்லாங்கண்டுவருந்தாதிருத்தல் கூடுமன்றோ? என்றபடி. பி-ம்:—[1]இசைப்ப. [2]தேரான். [3]தயிர்போல். [4]இன்றே யென்று, என்றென்றழன்று. (உகசுo)

உoகூ.—இலட்சுமணனும் வானரரும் நாகபாசத்தாற்கட்டுண்டதற்காக விபீஷணன் கதறத்தொடங்குதல்.

பாசத்தா[1]லனகன் றம்பி [2]பிணிப்புண்ட [3]படியைக் கண்டு
நேசத்தா ரெல்லாம் வீழ்ந்தா ரியானொரு தமிய னின்றேன்
தேசத்தா ரென்னை [4]யென்னே சிந்திப்பா ரென்று [5]நையும்
வாசத்தார் மாலை மார்பன் வாய்திறந் தரற்ற லுற்றான்.

(இ - ள்.) 'இராமனது தம்பியாகிய இளையபெருமாள் நாகபாசத்தாற் கட்டுண்டவகையைக் கண்டு (அவனிடத்தில்) அன்புகொண்டவர்களான வானரவீரர்களெல்லாரும், (பிணிப்புண்டு) கீழ்விழுந்தார்கள்: நான்மாத்திரம் தனியனாய் இறவாதுநிற்கின்றேன்: உலகத்தவர் என்னைப்பற்றி என்ன நினைப்பார்களோ!' என்று (துயரத்தினால்) வாடுகின்றவனான வாசனையால் நிறைந்தபூமாலையை யணிந்த மார்பையுடைய விபீஷணன் வாய்விட்டுக் கதறுபவனானான்; (எ-று.)—அவன்கதறுவதை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க. பி-ம்:—[1]ஐயன். [2]பிணிப்புற்ற. [3]படியேபட்ட. [4]என்னென், என்னை. [5]நீயும். (உகசுக)

உகo.—மூன்றுகவிகள்-விபீஷணன் புலம்புநிலைத் தெரிவிக்கும்.

கொல்வித்தா னுடனே [1]நின்றங் கென்பரோ கொண்டு போனான்
வெல்வித்தான் மகனை யென்று பகர்வரோ விளைவிற் கெல்லாம்
நல்வித்தாய் நடந்தான் முன்னே யென்பரோ நயந்தோர் தத்தம்
[2]கல்வித்தாம் வார்த்தை [3]யென்று கரைவித்தா [4]னுயிரைக் [5]கண்போல்.

(இ - ள்.) (என்னைக்குறித்து, 'வஞ்சனையால் நல்லவன்போலத் தன்னைக்காட்டிக்கொண்டு) கூடவேயிருந்து (லக்ஷ்மணனை இந்திரசித்தைக்கொண்டு) அப்போர்க்களத்திற் கொல்லும்படி செய்தான்' என்பார்களோ? '(இந்திரசித்தினிடத்தில்) அழைத்துச்சென்று தனக்கு(மகன்)முறையான அவ்விந்திரசித்தை வெற்றிபெறும்படிசெய்தான்' என்பார்களோ? 'நேர்ந்ததீமைகட்கெல்லாம் (தான்)முக்கியமாம்பொருட்டு முன்பு பணிவாய்நடந்துகொண்டான்' என்பார்களோ? (இராமன்பக்கல்) அன்புடையரான உலகத்தவர் (ஆராய்ந்து) கூறும் மொழியும் அவரவரின் கல்வியளவினதாய்(ப் பலவகைப்பட்டு) நிற்கும்' என்றுகூறி, (தனது) கண்களைப்போலவே உயிரையும் கரைந்துருகும்படிசெய்தான், (விபீஷணன்); (எ-று.)

இராமன்பக்கல் அன்பினால் உலகத்தார்யாவரும் தன்னைத் தோன்றியவாறெல்லாம் பலபடியாகப் பழிப்பார்களே யென்று விபீஷணன் கண்ணீர் விட்டுக் கதறி வருந்தினான். வித்து - (மரமுண்டாதற்குக்காரணமாகிய)விதை; இலக்கணையால், இங்கு, காரணமென்றபொருளில் வந்தது. 2கல்வித்தாய்வார்

த்தையென்ற பாடத்திற்கு - 'புத்திமான்கள் தங்கள் தங்கள் கல்வியினளவே தாங்கள் ஆய்ந்துகூறும் வார்த்தையும்' என்ற உலகச்சொல்லுக்குத் தக்கபடியே தன்னுடைய கற்பனசக்தியினளவாக இவ்வாறு புலம்பிக் கரைவித்தானென்று பொருளுரைப்பர். விளைவிற்கெல்லாம் நல்வித்தாய் நடந்தான் முன்னே-இங்ஙனம்நேர்ந்தகாரியங்கட்கெல்லாம் நல்லகாரணமாய் முதலிலே இலங்கையினின்று இங்குவந்துசேர்ந்தான் எனினுமாம். பி-ம்:—[1]நின்றான். [2]கல்விக்காம். [3]என்னக். [4]உடலைக். [5]கண்ணால். (உகஙஉ)

உகஙங. போரவன் புரிந்த போதே பொருவரு வயிரத் தண்டால்,
தேரொடும் புரண்டு [1]வீழச் [2]சிந்தியென் சிந்தை [3]செப்பும், [4]வீரமுன்
றெரித்தே னல்லேன் விளிந்திலேன் [5]மெலிந்தே னிஞ்ஞான்று, ஆருற
வாகத் தக்கே [6]னளியத்தே னழுந்து கின்றேன்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அவ்விந்திரசித்து போர்செய்த அப்பொழுதே, (எனது) ஒப்பில்லாத உறுதியையுடைய(இந்தத்)தண்டாயுதத்தால்(அவனைத்)தேருடனே புரண்டு விழும்படி சிதறடித்து, (இப்போது) எனது மனம் தெரிவிக்கின்ற [என்மனத்தில்தோன்றுகின்ற] வீரச்செயலை முன்னமே செய்துகாட்டினேனில்லை; (அவ்விந்திரசித்தினால்) மடிந்தேனு மில்லை; இப்பொழுது தளர்ந்து போனேன்; இரங்கத்தக்க எளிமையடைந்தவனாகிய யான் (துயரவெள்ளத்தில்) முழுகுகின்றேன்! யார்க்குத்தான் (யான்)உறவாகத்தக்கவன்? (எ - று.)

ஆருறவாகத்தக்கேன் - இராவணனுடன் பகைத்து அவனைத்துறந்து இங்குப்போந்ததனால் அத்தலைக்கும் வேண்டாதவனாயினேன்: இங்கும் இலக்குமணனுக்குத் தீமையுண்டாம்படி உபேக்ஷித்து இந்திரசித்து வெல்லும்படி விட்டதனால் இத்தலைக்கும் வேண்டாதவனாயினேன்; இவ்வாறு இருதிறத்தாரிடத்தும் மாறாக நடந்ததனால் யான் யார்க்குத்தான் வேண்டியவன்? ஒருவருடனும் உறவுபாராட்டாத மிக்க கொடியேனாயினேன் யான் என்றபடி. 'சிந்தைசெப்பும் வீரம்' என்பதற்கு - மனத்திற்கொண்டுள்ள இராமன்பக்கலுறுதியான விசுவாசமெனினுமாம். பி-ம்:—[1]சாயச். [2]சீறி. [3]செப்ப, செய்ய. [4]வீரமுன்தெரிந்தேன், வீரமூந்தரித்தேன். [5]மெலிவுமில்லேன், மெலிந்தேனல்லேன், மெலிந்தேனிங்ஙன். [6]அளியென்றேன். (உகஙங)

உகஙச. ஒத்[1]தலைத் தொக்க [2]வீடி யுய்விலை [3]முய்வித் துள்ளங்
கைத்தலை நெல்லி [4]போலக் காட்டிலேன் [5]கழிந்து மில்லேன்
அத்தலைக் கல்லேன் யானீண் டபயமென் றடைந்து நின்ற
இத்தலைக் கல்லே னல்லே னிருதலைக் [6]கொள்ளி யொப்பேன்.

(இ - ள்.) (வானரவீரர்களோடு உடனிருந்து) சமமாக அலைச்சற்பட்டு (இறக்கும்படி நேரிட்டால் இவர்களோடு) ஒக்க (நானும்) இறந்து, பிழைப்பதாயினும் (இவரையெல்லாம்) பிழைப்பித்து (நானும்பிழைத்து, எனது) மனக்கருத்தைக் கையிலுள்ள நெல்லிக்கனியைப்போல[நன்குவிளங்க]க் காட்டினேனில்லை; (இவர்கட்குநேர்ந்த ஆபத்தைக்கண்டு நான்) இறந்துபோகவு

மில்லை; யான் எதிர்ப்பக்கத்துக்கும் ஆகாதவனாயினேன்: இங்குவந்துசரண மென்றுசேர்ந்த இந்தப்பக்கத்துக்கும் ஆகாதவனாயினேன்: நல்லவன்(யான்); (இருதிறத்தார்க்கும் வேண்டாதவனாய்விட்டபடியால்) இரண்டுபக்கத்திலும் நெருப்பையுடைய கொள்ளிக்கட்டைபோல்வேன் (யான் என்று விபீஷணன் புலம்பினான்); (எ - று.)

மேல்தோற்றத்தினாலே உள்விதையின் வரைகளைத் தெரிவிக்கின்ற கையி லுள்ள நெல்லிக்கனி - உள்ளும்புறமும் ஒத்திருத்தற்கு உவமை. கைத்தலை நெல்லி - கரதலாமலகம். இருதலைக்கொள்ளி-இரண்டுபக்கத்தார்க்கும் வேண் டாதவனாயிருத்தற்கு உவமை. பி-ம்:—[1]அலைத்து. [2]ஓடியுய்யினும். [3]உய்ந்தே, உய்ந்தென். [4]என்னக், தன்னிற். [5]கழிந்துமேலேன். [6]சூலம்போல்வேன். ()

உ௯௩.—அனலன் விபீஷணனைத் தேற்றுதல்.

[1]அனையன பலவும் பன்னி யாகுலித் தரற்று வானை
[2]வினையுள பலவுஞ் [3]செய்யத் தக்கன வீர நீயும்
நினைவிலார் போல [4]நெஞ்ச நெகிழ்தியோ [5]நீத்தி யென்று
இனையன சொல்லித் தேற்றி யனலன்மற் [6]றினைய [7]செய்தான்.

(இ - ள்.) அவைபோன்ற பலவார்த்தைகளையுஞ் சொல்லி வியாகுல மடைந்து வருந்திக்கதறுகின்றவனான விபீஷணனைநோக்கி, (விபீஷணனது மந்திரியான) அனலனென்னும் அரக்கன், 'வீரனே! (இப்பொழுது பரிகார மாகச்)செய்யத்தக்கவையானதொழில்கள் பலவும் உள்ளன; (அவற்றைச் செய்யமுயலாமல், பேரறிவுடையவனாகிய) நீயும், அறிவில்லாதவர்போல மனந் தளரக்கடவையோ? (அங்ஙனம்மனம்வருந்துதலை) விட்டிடுவாய்'என்று இவைபோன்ற வார்த்தைகளைக்கூறித் தேறுதல்செய்து பின்பு,இதனைச்செய் தான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

அனலன் - இராமனைச்சரணமடைதற்கு விபீஷணன் வந்தபொழுது அவனுடன்வந்த அவன்மந்திரியர்நால்வரில் ஒருவன். நீயும், உம்மை - உயர்வு சிறப்பு. பி-ம்:—[1]அனையவன். [2]வினையனை. [3]சொல்லத்தக்கனை. [4]நின்று நினைத்தியோ, நின்று நெகிழ்த்தியோ. [5]மன்னவென்று, ஐயவென்று, உள்ள மென்ன, நீயுமென்று. [6]இதுவும். [7]சொன்னான். (உ௯௩)

உ௯௪.—இரண்டுகவிகள் - இலக்குமணனுக்குநேர்ந்த ஆபத்தை அனலனறிந்த இராமனது தன்மையைக் கூறும்.

நீ[1]யினி திருத்தி யான்போய் நெடியவற் குரைப்ப னென்னாப்
போயின னனலன் [2]போயப் புண்ணியன் பொலன்கொள் பாதம்
மேயினன் வணங்கி யுற்ற வினை[3]யெலா [4]மியம்பி [5]நின்றான்
ஆயிரம் [6]பெயரி னானு மருந்துயர்க் கடலு ளாழ்ந்தான்.

(இ-ள்.)'நீ(இங்கேயே வருந்தாது)இனிதாக இருப்பாயாக;நான் சென்று தலைவனான இராமபிரானுக்கு (இச்செய்தியை)ச் சொல்லிவருவேன்' என்று சொல்லி, அனலன்,—(இராமனிருக்குமிடத்தைநோக்கிச்) சென்றான்: போய், புண்ணியமேவடிவெடுத்தாற்போன்ற [தர்மஸ்வரூபியான] அந்த இராமபிரா

னது அழகுகொண்ட திருவடிகளைச் சேர்ந்து நமஸ்கரித்து(ப் போர்க்களத்து) நடந்த தொழில்களையெல்லாங் கூறிநின்றான்; (அதுகேட்டு),ஆயிரந்திருப்பெயர்களையுடையனை [திருமாலின் திருவவதாரமூர்த்தியாகிய]இராமபிரானும், (கடத்தற்கு)அரிய துன்பக்கடலில் முழுகினான்; (எ - று.)

தலைவனிடம் அடியார்பேசும்போது முதலில்வணங்கிப் பின்னர்ப்பேசுதல் முறைமையாதலால், 'வணங்கி யுற்றவினையெலா மியம்பிநின்றான்' என்றது.ஆயிரம்பெயர்-ஸஹஸ்ரநாமம்.திருமாலின் அவதாரமூர்த்தியாகிய இராமபிரான் தான் கொண்டுள்ள மநுஷ்யபாவனைக்குத் தக இங்ஙனம் வருந்தினானென்பது,ஈற்றடியில் தொனிக்கும். பி-ம்:—[1]இவண். [2]யாணர்ப், சென்றப். [3]எல்லாம். [4]விளங்கச், விதியிற்.[5]சொன்னான்.[6]நாமத்தானும், நாமத்தண்ணல்.

உகடு.உரைத்திலெ னொன்றுந் தன்னை யுணர்ந்திலெ [1]னுயிரு மோடக்
கரைத்திலன் [2]கண்ணி னீரைக் கண்டில னியாதுங் கண்ணால்
அரைத்திலெ [3]னுலகை மெல்லா மங்கையாற் பொங்கிப் பொங்கி
இரைத்திலெ னுளனென் [4]றெண்ணி யிருந்தனன் விம்மி யேங்கி.

(இ - ள்.) (இராமபிரான்),—புலம்பி வருந்தி (உணர்வுடனே)உயிரும் ஒழிய [மூர்ச்சித்ததனால்], தன்னையும்அறியாமலும் ஒன்றையும்(வாய்திறந்து) சொல்லாமலும்,கண்களினின்று நீரைச் சொரியாமலும்,ஒன்றையும் கண்ணால் திறந்துபாராமலும் கோபம்மிகுந்து(தனது) அழகிய கைகளால் உலகங்களையெல்லாம் அழித்திடாமலும், வாய்விட்டுக் கதறாமலும் நின்று, (மூர்ச்சை சிறிதுதெளிந்தவளவில், இலக்குமணன்) இருக்கின்றானென்றே எண்ணியிருந்தான்; (எ - று.)

இராமபிரான் சோகமிகுதியால் திகைத்து உணர்வொழிந்து 'எனது தம்பிக்கும் இவ்வாறு நேர்ந்திருக்குமோ?நேர்ந்திராது' என்ற ஒரெண்ணத்தையும் ஒருசார்கொண்டனனென்றவாறு.மிக்கதுயரச்செய்தியைக்கேட்டபோது முதலில் இன்னதென்றுணராது திகைத்துத் துன்பத்திற்குக்காரணமாய்நிகழ்ந்ததை நிகழாததாகச் சிறிதுபொழுதுஎண்ணுதல் உலகவியல்பாதலை யுணர்க. கண்ணீர்விடுதல்முதலிய அவலத்தின் மெய்ப்பாடுகள், எல்லைகடந்ததுக்கச் செய்தியைக் கேட்டபொழுது முதலில்தோன்றாவென்க. தனதுகையால் உலகங்களையெல்லாம் பொடியாக்கவல்ல இராமபிரானும் ஒன்றுஞ்செய்யமாட்டாது இவ்வாறுதுயருற்றனனென்றால், சோகம் எவர்க்கும்கடத்தற்கு அரியது என்பது பெறப்படும். இவ்வாறு மிகவருந்துவதனால், இராமபிரான் தன் தம்பியினிடத்துக் கொண்டுள்ள பேரன்பு இனிதுவிளங்கும். பி-ம்:—[1]ஒன்றும். [2]விம்மிவிம்மிக், கண்ணினீரிற். [3]உலகை. [4]எண்ண. (உகசுஎ)

உகசு.—ஸ்ரீராமன் எழுந்து போர்க்களத்தினிடத்துச் சேர்தல்.

விம்மினன் வெதும்பி வெய்துற் றேங்கினி னிருந்த [1]வீரன்
இம்முறை யிருந்து [2]செய்வ தியாவது மில்லென் [3]றெண்ணிப்
[4]பொம்மென வெழுந்து நொய்திற் பொருக்கென [5]விசையிற் போனான்
[6]தெம்முறை துறந்து வென்ற [7]செங்கள மருங்கிற் [8]சேர்ந்தான்.

(இ-ள்.) புலம்பிக் கன்றி மனந்தவித்து எக்கமுற்றிருந்த இராமபிரான், 'இவ்வகையில் [இவ்வாறுபுலம்பிக்கொண்டு] (இங்கு)இருந்து செய்யத்தகுவது ஒன்றுமில்லை' என்று நினைத்து, விரைவாகத் திடீரென்றுகிளம்பி மிக்கவிரைவாகப் போய்ப் பகைவன் முறைதவறிச் சயித்த(இரத்தத்தாற்)சிவந்த போர்க்களத்தினிடத்திற் சேர்ந்தான்; (எ - று.)

இலக்குமணன் போரொழிந்து நிராயுதபாணியாயிருக்கும்போது இரவில் வானத்தில்மறைந்து இந்திரசித்து அவனையும் மற்றெல்லாரையும் எதிர்பாராதிருக்கையில் நாகபாசத்தாற் கட்டிவிழுத்தி வென்றது முறைமையன்றாதலால், 'தெம் முறைதுறந்துவென்ற' என்றார். பொம்மென, பொருக்கென - விரைவுக்குறிப்பு. தெவ்+முறை=தெம்முறை. பி-ம்:—1வேந்தன். 2செய்யலாவதொன்றிலனென்று, செய்யல்...இலமென்று. 3என்னா. 4பொம்மலினெழுந்து, பொம்மலோடெழுந்து, பொம்மெனவிம்மலோடும். 5எழுந்து. 6முனை. 7செங்களமதனிற். 8சென்றான். (உகசுஅ)

உகஎ.—இருள்நெருங்கியிருந்ததன் வருணனை.

இழிந்தெழுங் காள மேக மெறிகட 1லனைய மற்றும்
ஒழிந்தன நீல வண்ண முள்ளன வெல்லா 2மொக்கப்
3பிழிந்தது 4கால மாகக் 5காளிமைப் பிழம்பு போதப்
பொழிந்தது 6போன்ற தன்றே பொங்கிருட் கங்குற் போர்வை.

(இ - ள்.) மிக்கஇருட்டாகிய இரவின்போர்வையானது,—(கடலில்) இறங்கி(நீர்குடித்து)மேலெழுகிற கருமேகங்களையும் (அலை)வீசுகின்ற கடலையும் மற்றும் (சொல்லாது)ஒழிந்துள்ளனவான அத்தன்மைய நீலநிறமுடைய எல்லாப்பொருள்களையும் ஒருசேரப்பிழிந்து, அவ்விரவையே (பொழிதற்கு உரிய) காலமாகக்கருதி (அவற்றிலிருந்துவந்த)கருமையின்தொகுதியை மிகுதியாகச் சொரிந்ததைப்போன்றது; (எ-று.)—அன்றே-அசை; தேற்றமுமாம்.

தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இரவில் இருள் மிகவும்அதிகமாயிருத்தலை இங்ஙனங் குறித்தார். காளமேகம், காளிமா-வடசொற்கள். இரவில் இருட்டு எங்கும்மூடியிருத்தல்பற்றி, அதனைப் போர்வையாக உருவகப்படுத்தினார். அனையநீலவண்ணமுள்ளன-மைம்முதலியன. பி-ம்:—1அளைய. 2ஒக்கும். 3கழிந்தது, பிழிந்தன. 4காலமாண்ட. 5காளிமப், காளியம், போரொழிற். 6போன்றவந்தப், போன்றதன்ன, போன்றதென்ன. (உகசுகூ)

உகஅ.—ஸ்ரீராமன் ஆக்நேயாஸ்திரத்தால் இருளையோட்டுதல்.

ஆரிரு 1ளன்ன தாக வாயிர நாமத் தண்ணல்
சீரிய 2வனலித் தெய்வப் படைக்கலந் 3தெரிந்து வாங்கிப்
4பாரிய விடுத்த லோடும் பகையிரு ளிரிந்து பாறச்
சூரிய னுச்சி யுற்றா 5லொத்ததவ் வுலகின் சூழல்.

(இ - ள்.) நிறைந்தஇருள் அவ்வாறாயிருக்க (அதனைநீக்கும்பொருட்டு), ஆயிரந் திருநாமங்களையுடைய மிகச்சிறந்தவனான அவ்விராமபிரான்,—சிறந்த தெய்வத்தன்மையுள்ள ஆக்நேயாஸ்திரத்தைத் தேர்ந்துஎடுத்து(எல்லாவற்றை

யுங்) காணும்படியாகப் பிரயோகித்த வளவில்,—(பார்ப்பதற்குப்) பகையாயி ருந்த இருள் அழிந்தொழிய, அப்போர்க்களத்தின் சுற்றிடம்முழுதும் சூரியன் உச்சிவானத்தையடைந்தாற் போன்றது [மிக்கவெளிச்சமடைந்ததுஎன்றபடி].

'அங்கியினெடும்படை வாங்கி யங்கது, செங்கையிற் கரியவன் திரிக்கு மெல்லையிற், பொங்கிரு ளப்புறத்துலகம் புக்கது, கங்குலும் பகலெனப் பொலிந்துகாட்டிற்றே" என்ற ஆரணியகாண்டச்செய்யுளோடு இதனை ஒப் பிடுக. போர்க்களத்தைச்சேர்ந்த இராமபிரான் அங்கு ஒன்றையுங் காண வொண்ணாது பகையாயிருந்து தடுத்த அவ்விருள் நீங்கி வெளிச்சமுண்டாகு மாறு ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகித்தன னென்க. உச்சிக்காலத்தில் வெயில்மிகுதியால் ஒளிமிக்கிருத்தல், அநுபவசித்தம். பாரிய-'பார்'என்ற முத னிலையடியாகப்பிறந்த செய்யியவென்னும் வாய்பாட்டுவினையெச்சம். 'அவ் வுலகு' என்றது, போர்க்களத்தை; "மறையொன்றுரைப்பன" என்ற சிந்தா மணிச்செய்யுளில் 'உலகாளும்' என்றவிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'உலகு'என்னுஞ்சொல், மண்ணுலகுமுழுதுமேயன்றித் தன்கட் கூறுபட்ட நிலங்களையும் உணர்த்துமென்பது "மாயோன்மேய காடுறையுலகமும்" என் னுஞ் சூத்திரத்தான் உணர்க' என்று உரைத்தமை இங்கு அறியத்தக்கது. சூழல் - தொழிலாகுபெயர். பி-ம்:—1அனையது. 2அனலின். 3சிலையிற்சேர்த் திப். 4பாரியவெடுத்தலோடும்,பாரின்மேலெடுத்தலோடும், பாரின்மேல்விடுத்த லோடும். 5ஒத்ததால், ஒத்தன. (உகஎ0)

உகஅ.—ஸ்ரீராமன் போர்க்களத்தைக் காணுதல்.

படையுறு பிணத்தின் 1பம்மற் 2பருப்பதந் துவன்றிப் பல்வேறு
இடையுறு குருதி வெள்ளத் தெறி3கட லெழுநீர்த் தும்பி
4உடையுறு தலைக்கை யண்ண லுயிரெலா 5மொருங்கி யுண்ணுங்
கடையுறு காலத் தாழி யுலகன்ன களத்தைக் கண்டான்.

(இ - ள்.) ஆயுதங்கள்தைத்த பிணங்களின் திரளினாலாகிய மலைகள் நிறைந்து, பலவேறுவிதமாக இடையிடையே பொருந்திய இரத்தவெள்ளமா கிய (அலை)வீசுகின்ற கடலின் பொங்குகின்றதன்மையினால், யானைத்தோலா கிய ஆடைபொருந்தியவனும் (பிரமனது)தலையோட்டைக் கையிலேந்தியவ னுமான சிவபெருமான் எல்லாவுயிர்களையும் ஒன்றுசேர்த்து அழிக்கின்ற சர்வசங்காரகாலத்திலே(பிரளயப்பெருங்)கடலினாற் கைக்கொள்ளப்பட்ட உல கத்தைப்போன்றுள்ள (அந்தப்)போர்க்களத்தை, (ஸ்ரீராமன்), கண்டான்.

இராமன் ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகித்து இருளையோட்டி ஒளியையுண்டாக்கிப் போர்க்களத்தைக்கண்டன னென்க. பிணங்கள் நெரு ங்கிக் குருதிநீர்பரந்த போர்க்களத்துக்கு, பிராணிகளெல்லாம் அழிந்து பிர ளயக்கடல் கைக்கொண்ட உலகை உவமைகூறினார். இவ்வுவமையால், போர்க்களத்திற் பிராணிகள் அளவில்லாதிறந்தன வென்பதும் அக்களம் காண்பதற்குஅச்சந்தருந் தோற்றமுடையதாயிற் றென்பதும் பெறப்படும். ஒருங்கி = ஒருக்கி. பிரளயகாலத்திற் சிவபிரான் அனைத்துயிரையும் அழிப்ப

னென்பது, நூற்கொள்கை. பி-ம்:—1பம்பற். 2பருவத்தும். 3கடலெழுநீர் பொங்கி, கடலதனிற்றும்பி. 4உடைபுலித்தடக்கை. 5ஒருங்க, ஒடுங்க.(உகஎக)

உஉ௦.—ஸ்ரீராமன்போர்க்களத்திற்சென்று இலக்குமணனைக்காணுதல்.

பிணப்பெருங் குன்றி னூடுங் குருதி[1]நீர் பெயரப் பேரும்
நிணப்பெருஞ் சேற்றி னூடும் படைக்கல நெருக்கி னூடும்
மணப்[2]பெருங் களத்தின் மோடி மங்கல வாழ்க்கை [3]வைப்பிற்
கணத்தினும் பாதிப் போதிற் றம்பியைச் சென்று கண்டான்.

(இ-ள்.) துர்க்கையினது மங்கலவாழ்க்கைக்கு உரிய இடமாகிய(புலால்) நாற்றத்தையுடைய பெரியபோர்க்களத்திலே பிணங்களாலாகிய பெரிய மலைகளின்நடுவிலும் இரத்தவெள்ளம்பெருகுதலால் இடம்விட்டுப்பெயர்கின்ற நிணங்களினுலாகிய மிக்கசேற்றின்நடுவிலும் (கீழ்விழுந்துள்ள) ஆயுதக்கூட்டங்களின் நடுவிலும், அரைக்ஷணத்திற் போய், (இராமபிரான்), தம்பியாகிய இலக்குமணனைக் கண்டான்; (எ - று.)

மோடி - துர்க்கை: பார்வதியின் அம்சமானவள்; இவள் போர்க்களத்துக்கு அதிதேவதை யாதலால், போர்க்களத்தை 'மோடி மங்கலவாழ்க்கை வைப்பு' என்றார். நிணம் - கொழுப்பு. போர்க்களத்திற்செல்வது அரிதாயிருந்தும் தம்பியைக்காணவேண்டுமென்னும் பேரவாவினுல் இராமபிரான் விரைந்துசென்றன னென்க. பி-ம்:—1நீர்ப்பெருக்கினூடும். 2பெருங்காக மோடிமங்கலப்பளாகை. 3வைப்பைக். (உகஎஉ)

உஉக.—ஐந்துகவிகள்-ஸ்ரீராமனுடைய சோகநிகழ்ச்சிகளைத் தெரிவிக்கும்.

[1]அய்யவ னுக்கை தன்மேல் விழுந்துமார் பழுந்தப் புல்லி
[2]உய்யல னென்ன [3]வாவி யுயிர்த்துயிர்த் [4]துருகு கின்றான்
பெய்யிரு தாரைக் [5]கண்ணன் பெருந்துளி பிறங்க வானின்
வெய்யவன் றன்னைச் சேர்ந்த [6]நீனிற மேக மொத்தான்.

(இ - ள்) (இராமபிரான்), இலக்குமணனது உடம்பின்மேல்விழுந்து (தனது) மார்புஅழுந்தும்படி (அவனைத்) தழுவி, '(இனி இவன்) பிழையான்' என்று (தன்னைக் கண்டவர்)சொல்லும்படி பெருமூச்சை மிகவிட்டு உருகி நீர்சொரிகிற இரண்டுகண்களையு முடையவனாய், பெரிய மழைத்துளிகள் வெளிப்பட்டுக்கொண்டிருக்க ஆகாயத்தில் விளங்குகிற)சூரியனைச்சேர்ந்த நீலநிறமுள்ள மேகத்தைப் போன்றான்; (எ - று.)

அய்யன்என்பது விரித்தல்விகாரம்பெற்று 'அய்யவன்' என நின்றது; காதம்-காவதம்என்றாற்போல. இனி, ஐ அவன் என்பது சந்தியும் போலியும் பெற்று அய்யவன் என நின்றதாகக்கொண்டு, அழகிய அவ்விலக்குமணனது என்றும் பொருள்கூறலாம். ஐ - திருமாலின்அவதாரமான ஸ்ரீராமன் எனினுமாம். உய்யலன் என்ன-(இவ்விலக்குமணன்) பிழைக்கமாட்டான்என்றெண்ணி எனக் கொள்ளலும் ஒன்று. பிறங்கச் சேர்ந்த மேகம் என இயையும். நீல்-நீலமென்பதன் கடைக்குறை. பி-ம்:—1ஐயன்றனவன்மேல்வீழ்ந்தானமுழ்ந்துறமார்பிற், ஐயன்றனவன்றன்மேல்வீழ்ந்தழுந்துயிரழுந்தப். 2உய்யலேன், உய்யிலேன். 3வாடி. 4உயங்குகின்றான். 5கண்ணீர்ப். 6நீணிற. (உகஎங)

உஉஉ. உழைக்கும்வெய் துயிர்க்கு மாவி யுருகும்[1]போ யுணர்வு சோரும்
இழைக்குவ [2]தறித றேற்ரு னிலக்குவா விலக்கு வாவென்று
உழைக்குந்தன் கையை [3]வாயின் மூக்கின்[4]வைத் தயர்க்கு மைய்யா
பிழைத்தியோ [5]வென்னு மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்.

(இ - ள்.) உண்மையாகப் பிறந்திருந்தும் (எப்பொழுதும்) பிறப்பில்லாத கடவுளாகிய இராமபிரான்,—வருந்துவான்; வெம்மையாகப் பெருமூச்சு விடுவான்; உயிர் கரைவான்; அறிவுநீங்கித் தளர்வான்; செய்குவதை இன்னதென்றுஅறியாதவனுய், 'லக்ஷ்மணு!' என்று பலமுறை கூப்பிடுவான்; தனது கையை (இலக்குமணனது) வாயிலும் மூக்கிலும் வைத்து (மூச்சுக்காற்று உளதா? என்றுபார்த்து) வருந்துவான்; 'ஐயனே! பிழைப்பாயோ!' என்று கூறுவான்; (எ - று.)

இங்குக்கூறுவனயாவும், அவலத்தின்மெய்ப்பாடுகள். கருமத்தினலன்றி இச்சையினற்பிறப்பவனென்பார், 'மெய்யேபிறந்தேயும் பிறந்திலாதான்' என்ருர். ஜீவாத்மாக்கள் தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவர ரூபங்களாய்ப் பிறப்பது கர்மவசத்தினு லென்றும், திருமால் இராமகிருஷ்ணுதி அவதாரங்கள் செய்வது அவ்வாறன்றித் தன்இச்சையினு லென்றும் அறிக. பிறந்தேயும் - (இராமகிருஷ்ணுதியராகப்) பிறந்திருந்தும், பிறந்திலாதான் - கர்மவசத்தினுற் பிறவாதவன் என்றவாறு. இது, "அஜாயமாநோ பஹுதா விஜாயதே [=(கர்மத்தினுற்) பிறவாதவனுயிருந்தும் (தனது இச்சையினுற்) பலபடியாகப் பிறக்கின்ருன்]" என்ற உபநிஷத்தின் கருத்துக்கொண்டது. திருமால் கருமத்தினலன்றித் தன்விருப்பத்தினுல் திருவவதரிக்கின்ருனென்ற இவ்வுண்மையை யுணர்தல், 'அவதாரரஹஸ்யஜ்ஞாநம்' எனப்படும். பி-ம்:-[1]பேருணர்வு. [2]அரிதிற்றேரு, அரிதிற்றேற்ரு. [3]மூக்கின்வாயில். [4]வைத்தறியும், வைத்தணைக்கும். [5]இன்னுமென்னும், என்னுமாவி, என்னுமென்னும். (உகஎச)

உஉ௩. தாமரைக் [1]கையாற் ருளைத் தைவருங் குறங்கைத் தட்டுந்
[2]தூமலர்க் கண்ணை நோக்கு மார்பிடைத் துடிப்புண் [3]டென்னு
ஏமுறும் விசும்பை நோக்கு [4]மெடுக்குந்தன் மார்பி னேற்றும்
பூமியில் வளர்த்துங் கள்வன் போயகன் ருனே வென்னும்.

(இ - ள்.) (பின்னும் இராமபிரான்),—(தனது) தாமரைமலர்போன்ற கைகளினுல் (இலக்குமணனது) கால்களைத் தடவுவான்; (இலக்குமணனது) துடையைத்தட்டுவான்; பரிசுத்தமான தாமரைமலர்போன்ற (இலக்குமணனது) கண்களைப் பிரித்துப்பார்ப்பான்; (இவனது) மார்பில் துடித்தல் [படபடவென்று அடித்துக்கொள்வது] உள்ளது என்று மனமகிழ்வான்; ஆகாயத்தைப்பார்ப்பான்; (அவ்விலக்குமணனைத்) தூக்கியெடுத்துத் தனதுமார்பிற் சார்த்திக்கொள்வான்; தரையிற்படுக்கவிடுவான்; 'மாயச்செய்கையையுடையவனை இந்திரசித்து போய்விட்டானே' என்பான்; (எ - று.)

தாளைத்தடவுதல்முதலியன - அன்பினுலும், உயிருண்டோ இல்லையோ வென்று ஆராய்தற்பொருட்டுஞ் செய்த தொழில்கள். விசும்பைநோக்கினது,

இந்திரசித்து இன்னும்மறைந்துள்ளானோ வென்ற ஐயம்பற்றி. 'கள்வன்போயகன்றானோ' என்றது, அவனுக்கு எதிர்செய்யக்கருதியவாறும். தன்மைநவிற்சியணி. ஏமமுறும் என்பது ஏமுறும் எனத் தொக்கது. தைவரும், தைவா-பகுதி.
பி-ம்:—[1]தாளைக்கையாற்றைவரும். [2]தூய்மலர். [3]என்னும். [4]எடுக்குந்தன் கையாலேந்தும், எடுத்தெடுத்திறுகப்புல்லும். (௨௧௭௫)

௨௨௪. வில்லினை நோக்கும் பாச [1]விசிப்பினை நோக்கும் வீயா
அல்லினை நோக்கும் வானத் தமரரை நோக்கும் பாரைக்
கல்லுவன் வேரோ டென்னும் பவளவாய் [2]கறிக்குங் கற்றோர்
சொல்லினை நோக்குந் [3]தன்போற் [4]புகழினை நோக்குந் தோளான்.

(இ - ள்.) தன்னைத்தானே ஒத்தவனான புகழையேவிரும்புகின்ற தோள்களையுடையவனாகிய இராமபிரான்,—(தான் கையிற்கொண்டுள்ள) வில்லைப் பார்ப்பான்; நாகபாசத்தினது கட்டுக்களைப் பார்ப்பான்; விடியாதஇரவைப் பார்ப்பான்; ஆகாயத்திலுள்ளதேவர்களைப் பார்ப்பான்; 'பூமியை அடியோடு பெயர்த்துவிடுவேன்' என்பான்; பவழம்போன்ற(தனது)வாயுதடுகளைக் கடிப்பான்; கற்றறிந்தபெரியோர்கூறியுள்ளசொற்களை ஆலோசித்துப்பார்ப்பான்.

'கைக்குச்சுமைமாத்திரமாய்க்கிடந்த இவ்வில்லினால் யாதுபயன்? இவனுக்கு இப்பேரிடர் நேர்ந்ததே!' என்ற கருத்தினால், இராமபிரான் தன்கை வில்லையும், தம்பி நாகாஸ்திரத்தாற் கட்டுண்டிருப்பதையும் பார்ப்பவனாயினான். அல்லைநோக்கியது, பகைவனுக்கு வலியுண்டாக்கி மறைந்துமாயஞ் செய்யத் துணையாய்நின்றகாரணம்பற்றி அதன்மேற்கொண்ட சினத்தினாலென்க. தேவர்களை நோக்கினதற்குக் காரணம்-இந்திரசித்துக்குப் பலவகை வரங்களையுங்கொடுத்துத் தங்கட்கும் தனதுதம்பிக்கும் தீமையையுண்டாக்கியதோடு அவன்வருத்திய காலத்திலும் அதற்குப் பரிகாரஞ்செய்ய முயலாது வானத்தில்நின்று வேடிக்கைபார்த்துக்கொண்டிருந்தமையாம். மூன்றாமடியிற்கூறியவை, துயரத்தினால்தோன்றிய சினத்தின் செயல்கள். கற்றோர் சொல் - "அறம்வெல்லும் பாவந்தோற்கும்" என்றது. அதனைநோக்கினது, பெரியோரது அச்சொல்லும் பழுதுபட்டதே யென்னும் எக்கத்தினால். இனி, 'கற்றோர்சொல்லினை நோக்கும்' என்பதைத் தோளானுக்கு அடைமொழியாக்கி, முனிவர்சொல்லுந் துதிமொழிகளையேற்றுக்கொள்ளும் இராமபிரான் எனக் கூறலுமொன்று. தன்போற்புகழினை நோக்குந் தோளான் என்பதற்கு-தன்னைப்போலவே [தனதுஉயிரைப்போலவே] தனதுபுகழையும் (இன்றியமையாததெனக்) கருதிப் பாதுகாக்கின்ற தோள்வலிமையுடையானென்று பொருள்கொள்ளினும் அமையும். [3]தன்பொற்புகழினைஎன்றும் படிக்கலாம்.
பி - ம்:—[1]வீக்கினை. [2]அதுக்கிக், கடிக்கும். [3]தன்கைப். [4]பகழியை. (௨௧௭௬)

௨௨௫. வீரரை யெல்லாம் [1]பார்க்கும் விதியினைப் [1]பார்க்கும் வீரப்
பாரவெஞ் சிலையைப் [1]பார்க்கும் பகழியைப் [1]பார்க்கும் [2]பாரில்
யாரிது பட்டா [3]ரென்போ லெளிவந்த வண்ண மென்னும்
நேரிது [4]பெரிதென் றேழு மலையுயி [5]ரியிர நின்றான்.

(இ - ள்.) பிரமாணங்களைக்கடந்துநின்றவனாகிய இராமபிரான்,—(கீழ் வீழ்ந்துகிடந்த வாநர)வீரர்களையெல்லாம் பார்ப்பான்; (மனைவியைப்பிரிந்த தன்றித் தம்பியையும் துணைவர்களையும் இழக்கநேர்ந்த) விதியைப்பற்றி ஆலோசிப்பான்; வீரத்துக்குஉரிய பெரிய கொடிய (தனது) வில்லை(ச் சமயத் திற்பயன்படவில்லையே யென்று) பார்ப்பான்; (இனி இவைகளால் யாது பயன்? என்று தனதுஅம்பறாத்தூணியில் நிறைந்துள்ள)அம்புகளைப் பார்ப் பான்;'(இப்)பூமியில் என்னைப்போல இவ்வாறு எளிமைத்தன்மையை[பெருந் துன்பங்களை] வேறுயாவர் அடைந்தார்?' என்பான்; '(எனக்கு நேர்ந்துள்ள) இத்துன்பம் மிகவும்நேராயுள்ளது!' என்றுகூறுவான்; (எ - று.)

"தனக்குந் தன்றன்மை யறிவரியான்" என்றபடி ஸர்வஜ்ஞனான தன் னாலும் அறியவொண்ணாதவனான திருமால் எத்துணை ஞானமுடையார்க்கும் ஒருவகையாலும் அறியமுடியாதவனாயிருத்தலால், 'அளவையி னிமிரநின் றான்' என்றார். அளவை-பொறிகளாற்காணுதலாகிய காட்சியும், குறிகளால் உய்த்துணர்தலாகிய அநுமானமும், செய்யாமொழியாகிய ஆகமமும் முதலி யன.நேரிதுஎன்று ஒருசொல்லாகவும் கொள்ளலாம்;இது பெரிதுநேர்-இகழ்ச் சிக்குறிப்பு; நேரியதன் றென்றபடி. இனி, ஈற்றடிக்கு, நேராக இது பெரிது என்று சொல்லப்படுகிற [மிகப்பெரிய] அளவைக்காட்டிலுங் கடந்துநின்ற வன் என உரைப்பாருமுளர். பி-ம்:—[1]நோக்கும். [2]பாரின். [3]யானேயெளி வந்த, என்போலழிவந்த, என்போலிளிவந்த. [4]பரிது. [5]நிமிர்ந்து. (உகஎஎ)

உஉகூ.—இராமன் விபீஷணனைநோக்கி நிஷ்டூரமாகக்கூறுதல்.

எடுத்தபோ ரிலங்கை வேந்தன் மைந்தனோ டிளைய [1]கோவுக்கு
[2]அடுத்த[3]தென் றென்னை வல்லை யழைத்திலை [4]யமரர் பாசந்
தொடுத்தகை[5]தலையினோடுந் துணித்துயிர்[6]துடைக்க வென்னைக்
கெடுத்தனை வீடணாநீ யென்றனன் [7]கேடி லாதான்.

(இ - ள்.) 'இலங்கையினரசனாகிய இராவணனது மகனான இந்திரசித் துக்கும் இலக்குமணனுக்கும் பெரும்போர் நேரிட்டது' என்றுசொல்லி, 'தேவ ர்களாற்கொடுக்கப்பட்ட நாகபாசத்தைப் பிரயோகித்த (இந்திரசித்தினது) கைகளை (அவனது) தலையுடனே அறுத்துத்தள்ளி (அவனது) உயிரையும் போக்கும்படி என்னை விரைவில் அழையாமற்போனாய்; (ஆதலால்), விபீ ஷணனே! நீ என்னைக் கெடுத்துவிட்டாய்' என்று (நிஷ்டூரமாகக்) கூறினான்; (யாவனெனில்,—என்றைக்கும்) அழிவில்லாதவனாகிய திருமாலின் அவ தாரமான இராமபிரான்; (எ - று.)—பி-ம்:—[1]கோவுற்று, கோவுங். [2]அடுத்த, தடுத்தது. [3]போழ்தென்னையிங்கே. [4]அரவின். [5]சரத்தினோடும், சிரத்தினோ டும், சரத்தினூடும். [6]குடிப்பன், குடிக்க, குடிப்ப. [7]கேதமுய்ப்பான். (உகஎஅ)

உஉஎ.—அறுசுவிக்ள்-ஒருதொடர்: விபீஷணன் நிகழ்ந்தவரலாற்றை இராமபிரானிடங்கூறுதலைத் தெரிவிக்கும்.

அவ்வுரை யருளக் [1]கேட்டா னழிகின்ற வரக்கன் றம்பி
இவ்வழி [2]யவன்வந் தேற்ப[3]தறிந்தில மெதிர்ந்த போதும்

வெவ்வழி யவனே தோற்கு [4]மென்பது விரும்பி நின்றேன்
தெய்வ[5]வன் பாசஞ் செய்த செயலிந்த [6]மாயச் செய்கை.

(இ-ள்.) அவ்வார்த்தையை(இராமபிரான்)கூறக்கேட்டவனும் மனந்தளர்கின்ற இராவணனது தம்பியானவிபீஷணன், (பின்வருமாறு கூறுபவனானான்:—'இப்போர்க்களத்தில் அவ்விந்திரசித்துவந்து எதிர்த்துப்போர்புரிவானென்பதை(நாங்கள்முன்னம்) அறிந்திலோம்; (இலக்குமணனுடன் அவன்) எதிர்த்துப்போர்செய்கிறபொழுதும் [போர்செய்வதை நான் உணர்ந்தபிறகும்] துர்மார்க்கனாகிய அவ்விந்திரசித்தே தோற்பானென்பதையே விரும்பி எதிர்நோக்கியிருந்தேன்: (அதனால்தான் இப்போர்ச்செயலைத் தேவரீருக்குத் தெரிவித்திலேன்); இந்த வஞ்சனைச்செய்கை, தெய்வத்தன்மையுள்ள வலிய நாகபாசத்தால் விளைந்தவிளைவாம்; (எ - று.)

இச்செய்யுளில் 'அரக்கன்தம்பி' என்ற எழுவாய், மேல் உங உ-ஆம் கவியில் 'கலுழிக்கண்ணான் என்னச்சொல்லி வணங்கினான்' என்று முடியும்; ஆகவே, இதுமுதல் அதுவரையிலும் ஆறுசெய்யுள்கள் ஒருதொடரென்று உணர்க. 'என்னை யழையாது கெடுத்தாய்'என்ற இராமனதுமொழிக்கு விபீஷணன் இச்செய்யுளினால் ஏற்ற சமாதானங்கூறி,அடுத்தகவிமுதல் நிகழ்ந்தவரலாறுகளை விவரித்துக் கூறுகின்றான். முன்னமே இலக்குமணனுக்கு நேர்ந்த தீங்கைப்பற்றி வருந்தியிருந்த விபீஷணன் இராமபிரானது நிஷ்டூரவார்த்தையைக் கேட்டுப் புண்ணிற்புளிப்பெய்தாற்போல முன்னினும் அதிகமாக வருந்தினனென்க. 'அறிந்திலம்' என்றது-போர்க்களத்திலுள்ள தம்பக்கத்தார்யாவரையும் உளப்படுத்திய தன்மைப்பன்மை. இனவெதுகை. பி-ம்:—[1]கேட்டங்கழுகின்ற. [2]இவன். [3]அறிந்திலேன். [4]என்பதை. [5]வான். [6]மாயை.

உஉஅ. அற்றதி காய னாக்கை தலையில தாக்கி [1]யாண்ட
வெற்றிய [2]னாய வீரன் மீண்டில னிலங்கை மேனாட்
பெற்றவ னெய்து [3]மென்னும் பெற்றியை யுன்னிப் பிற்போது
உற்றனன் மைந்தன் றானை நாற்பது வெள்ளத் தோடும்.

(இ-ள்.) அதிகாயனது உடம்பு அறுபட்டுத் தலையில்லாததாம்படிசெய்து பெற்ற சயத்தை யுடையவனாகிய இலக்குமணன்,—முற்காலத்தில் இலங்கையை(க் குபேரனிடத்தினின்று) பெற்றவனான இராவணன் (போர்க்கு) வருவான் என்னுந் தன்மையைநினைத்து,(இப்போர்க்களத்தைவிட்டு)நீங்காது(இங்கேயே) நின்றான்; பின்பு, (இராவணனது) புதல்வனாகிய இந்திரசித்து, நாற்பதுவெள்ளஞ்சேனையுடனே (போர்புரியுமாறு) வந்துசேர்ந்தான்; (எ - று.)

கீழ் உஎ-ஆஞ் செய்யுளில் "போர்க்கினி, யன்றவனல்லனே லமரர்வேந்தனை, வென்றவன் வரு மென விரும்புஞ்சிந்தையான்" என்று கூறியிருக்க, இங்கு 'மேனாளிலங்கைபெற்றவன்எய்தும்' என்றுகூறியது குன்றக்கூறலாகாதோவெனின், பகைவரவைஎதிர்நோக்கியிருந்தானென்று கூறவேண்டுவதே விபீஷணனது நோக்கமென்க. அவ்விருபத்தேழாஞ்செய்யுளில்'வருகின்றவன் யாரோ?' என்று சந்தேகங்கொண்டதாகப் பொருள்கூறியஉரைக்கு ஏற்ப, இச்செய்யுளில்'எய்தும்' என்பதற்கு-வருகின்றானெனப்பொருள்கூறலுமாம்.

**இராவணன் இலங்கைபெற்ற விவரம்:**—விஷ்ணுவினால் துரத்தப்பட்டுப் பாதாளத்திற் பதுங்கியிருந்த இராவணனது மாதாமகனான சுமாலியானவன் தன் தௌகித்திரர் வரம்பெற்று மேம்பட்டிருப்பதை யறிந்து களிப்போடு மந்திரிமாரையுங்கூட்டிக்கொண்டு இராவணனைக்கிட்டி 'நீ நல்வரத்தைப் பெற்றிருக்கின்றா யாதலால், ஆதியில் நமதாயிருந்தஇலங்காபட்டணத்தைக் குபேரனிடத்தினின்று கைப்பற்றவேண்டும்' என்றுசொல்லவும், இராவணன் தடுத்துச்சொல்லவே, அந்தச்சுமாலி ஒன்றும்பேசாதேசெல்ல, அவன்மைந்தனாகியபிரகத்தன் வந்து'குபேரனிடத்தில் தமையன்முறை பாராட்டுதல் தக்கதன்று; முன் பிறந்தவர்களான அசுரர்களைத் தேவர்கள் விஷ்ணுவைக்கொண்டு வென்று மூவுலகத்தாட்சியையும் பெறவில்லையோ?' என்று கூற, அது மனத்திற்பதிந்த இராவணன் அவனையே தூதனாகஅனுப்பி இலங்கையைக் குபேரனிடத்தினின்று கவர்ந்துகொண்டனனென்பதாம். பி-ம்:—1ஆண்டவ். 2ஆக்கி, ஆகி, ஆக. 3எய்தும். (உகஅ௦)

உஉகூ. ஈண்டுநஞ் சேனை வெள்ள 1மிருபதிற் றிரட்டி மாளத்
தூண்டினன் பகழி மாரி 2தலைவர்கள் தொலைந்து சோர
மூண்டெழு போரிற் பாரின் 3முறைமுறை 4முடித்தான் பின்னர்
ஆண்டகை யோடு 5மேற்றா னாயிர மடங்கற் றேரான்.

(இ - ள்.) ஆயிரஞ்சிங்கங்கள்பூட்டிய தேரையுடையனாய்வந்த இந்திரசித்து, உக்கிரமாய்ச்செய்கின்ற யுத்தத்தில் நெருங்கிய நமதுசேனைகளில் நாற்பது வெள்ளம் உயிரழியவும், (வாநரசேனைத்)தலைவர்கள் தரையில் வருந்திச்சோர்ந்துவிழவும், அம்புமழை சொரிந்து கிரமக்கிரமமாக அழித்திட்டான்; பின்பு, ஆண்மைக்குணமுடையனான இலக்குமணனுடனும் எதிர்த்துப்போர்செய்தான்: (எ - று.)—பி-ம்:—1எழுபதிலிரட்டி, எழுபதிற்பாகம். 2தலைவரைத்தொலைத்துச். 3மும்முறை. 4முடிந்தான். 5உற்றான். (உகஅக)

உ௩௦. அனுமன்மே னின்ற 1வைய னாயிரந் தேரு 2மாயத்
தனு3வலங் காட்டிப் 4பின்னை நாற்பது வெள்ளத் 5தானை [டான்
6பனியெனப் படுவித் தன்னான் 7பலத்தையுந் தொலைத்துப் பட்
8இனியென வயிரவாளி 9யெண்ணில 10நிறத்தி னெய்தான்.

(இ - ள்.) (இரதாதிபதியோடு பதாதியாய்நின்று போர்செய்யலாகாதென்று) அநுமான்மீதுஎதிர்நின்ற இலக்குமணன், (இந்திரசித்தின்) ஆயிரந்தேர்களும்(அவ்வப்பொழுதே)அழியும்படி, (தனது)வில்திறமையைக்காட்டி மற்றும் (அவனது)நாற்பதுவெள்ளம் சேனையையும் (சூரியன்முன்)பனிபோல அழியச்செய்து அவனதுபலத்தையுங் குலைத்து, 'இப்பொழுதே(இந்திரசித்து) இறந்திட்டான்' என்று(கண்டவர்)சொல்லும்படி கணக்கில்லாத உறுதியான அம்புகளை (அவனது)மார்பிற் பிரயோகித்தான்; (எ - று.)

தானைக்குப் பனியை உவமைகூறினதற்கு ஏற்ப, இலக்குமணனுக்குச் சூரியனை உவமையாகக்கொண்டாம். பட்டான்—தெளிவுபற்றிய காலவழுவமைதி. அன்னான்பலத்தையுந்தொலைத்து என்பதற்கு - அவனுக்குப்பக்கபலமாய்வந்த மகாபார்சுவனையுந் தூமிராக்ஷனையும் வலியழித்துத் துரத்தியென்று

உரைத்தலுமாம். பி-ம்:—1வள்ளல். 2மாய்த்துத், மாளத். 3வலி. 4பின்னர். 5தானைப். 6பனியினைப். 7வலத்தையும்,பிலத்தையும். 8இனையன. 9எண்ணிலா. 10திறத்தின். (உகஅஉ)

உ௩க. 1ஏவுண்ட பகு2வா யோடுங் குருதிநீ 3ரிழிய நின்றான்
தூவுண்ட தானை முற்றும் படவொரு தமியன் 4சோர்வான்
போவுண்ட தென்னி னைய 5புணர்க்குமா மாய 6மென்று
பாவுண்ட கீர்த்தி யானுக் 7குணர்த்தினன் பரிதி பட்டான்.

(இ-ள்.) அம்புகள்தைத்த பிளந்தஇடங்களிலெல்லாம் இரத்தநீர்பெருகும்படி நின்றவனாகிய இந்திரசித்து,(அம்புகளாற்)பொழியப்பட்டஎல்லாச்சேனைகளும் அழிய, தன்னந்தனியனாய்நின்று வருந்துபவனானான்;'ஐயனே! (இவன்) தப்பிப்போவது நேர்ந்தால், மிக்கமாயங்களைச் செய்வான்' என்று பரவுதல் பொருந்திய கீர்த்தியையுடையவனான இலக்குமணனுக்குத் தெரிவித்தேன்; (அவ்வளவில்), சூரியன் அஸ்தமித்துவிட்டான்; (எ - று.)—பரிதிபட்டான் - இராப்போதுவந்திட்டதென்றபடி. பகுவாயோடும்-உருபுமயக்கம்; வாய்தோறுமென்க. பாவுதல் - பரவுதல். பி-ம்:—1ஏவுண்டு. 2வாயூடு. 3எய்த. 4சோர்வாற். 5புணர்க்குவன். 6என்னப். 7உணர்த்தினேன். (உகஅ௩)

உ௩உ. மாயத்தா லிருண்ட தாழி யுலகெலாம் வஞ்சன் வானிற்
போயத்தா னுடைய வஞ்ச வரத்தினு லொளித்துப் 1போயிவ்
2வாயத்தார்ப் பாசம் 3வீசி யயர்வித்தா 4னம்பின் 5வெம்புண் [ன்.
6காயத்தா னென்னச் சொல்லி வணங்கினன் 7கலுழிக் கண்ணு

(இ - ள்.) 'கடல்சூழ்ந்த நிலவுலகம்முழுதும் மாயைசெய்தற்கு அநுகூலமாக இருண்டுபோயிற்று; (அப்பொழுது, இலக்குமணனது) அம்புகளினால் தவிப்படைந்த சரீரமுடையவனாகிய மாயம்வல்லவனான இந்திரசித்து, ஆகாயத்திற் சென்று தான்பெற்றுள்ள அந்த வஞ்சனைசெய்தற்குஅநுகூலமான வரபலத்தால் மறைந்துநின்று இவ்வானரக்கூட்டத்தாரை நாகபாசத்தை வீசித் தளரும்படிசெய்தான்' என்று (நடந்தவரலாறுகளையெல்லாம் விவரமாக இராமபிரானுக்குக்)கூறி,நீர்பெருகுகின்றகண்களையுடையவனாய், (இராமபிரானை) வணங்கிநின்றான்; (எ - று.)

கலுழி - கலுஷமென்னும் வடசொல்லின் சிதைவு; கலங்கினநீர் என்று பொருள். பி-ம்:—1பொய்யின். 2ஆயத்தாற். 3மேவி. 4நம்ப. 5வெமபக். 6காய்வித்தான். 7கலுழும். (உகஅ௪)

உ௩௩.—எவரும் உயிர்துறக்கவில்லை யாதலால் பாசம்நீங்கினால் யாவரும் உயிர்பெற்றெழுவரென்று விபீஷணன் ஸ்ரீராமனைத்தேற்றுதல்.

1பின்னையு மெழுந்து போர்த்தும் 2வணங்கியெம் பெரும யாரும்
இன்னுயிர் 3துறந்தா ரில்லை யிறுக்கிய பாச மிற்றாற்
புன்னுனைப் 4பகழிக் கோயுந் தரத்தரோ புலம்பி 5யென்னை
இன்னலுற் றயரல் 6வெல்லா வறத்தினைப் பாவ மென்றான்.

(இ - ள்.) (விபீஷணன்),—மீண்டும் எழுந்துநின்று மறுபடியும் (இராமபிரானை)நமஸ்கரித்து, 'எமது தலைவனே! (இவர்களில்)எவரும் இனிய உயிர் நீங்கினவர்களல்லர்; (இவர்களைக்)கட்டியுள்ள நாகபாசம் ஒழிந்தால், (யாவரும் வலிவுடனெழுவார்கள்):புல்லிய நுனியையுடைய அம்புகளுக்கு வலியழியுந் தன்மை யுடையரோ (இவர்கள்)? அழுது என்னபயன்? துன்பப்பட்டுவருந் தாதே; பாவச்செயல்கள் தருமத்தை வெல்லமாட்டா' என்றான்; (எ - று.)

இனி, இறுக்கியபாசம் இற்று என்று எடுத்து, கட்டியபாசம் இத்தன்மை யது என்றும் பொருள்கூறலாம்: ஆல் - ஈற்றசை. அயரல்-எதிர்மறை வியங்கோள்; "மகனெனல்" என்பது போல. 'அறத்தினைப் பாவம் வெல்லா' என்றதனால், தருமத்தில்நடக்கிற நமக்குப் பாவிகளான அரக்கரால் தோல்வி நேராது: விரைவிலேயே யாவரும் பாசமொழிந்து பிழைத்துஎழுவரென்றவாறும்; இது - தேற்றுமொழி. இறுக்கியபாசமிற்றால் இன்னுயிர் துறந்தாரல்லரென்று கூட்டியுரைப்பினுமாம். இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை. பி-ம்:- 1பின்னரும் வணங்கியேதும். 2பிழைத்திலன், பிழைத்திலம். 3இறந்தாரில்லை. 4பகழிகொல்லுந்தாரத்ததோ, பகழிகொய்யுந்தரத்தரோ. 5உள்ளம். 6வெல்லா தருமத்தைப். (உகஅடு)

உருசு.—நாகபாசத்தைப்பற்றிய விவரத்தை ஸ்ரீராமன் வினவ, விபீஷணன் கூறத்தொடங்குதல்.

யாரிது கொடுத்த 1தேவ 2னென்னையீ திதனைத் 3தீருங்
காரண மியாது நின்று லுணர்ந்தது கழறிக் காணென்று
ஆரியன் 4வினவ வண்ணல் 5வீடண னமல சாலச்
சீரிதென் றதனை யுள்ள 6பரிசெலாந் 7தெரியச் சொன்னான்.

(இ-ள்.) 'இந்தப்பாசத்தை (இவ்விந்திரசித்துக்குக்)கொடுத்த தேவன் யாவன்? இதன் தன்மை என்ன? இதிலிருந்து தப்பிப்பிழைக்கும் உபாயம் என்? (இவற்றைப்பற்றி) நீ அறிந்துள்ளதைச் சொல்வாயாக' என்று இராமபிரான் (விபீஷணனைக்) கேட்க,—பெருமைபொருந்திய விபீஷணனானவன்,—(இராமபிரானைநோக்கி),—'குற்றமற்றவனே! மிகவும்நல்லது' என்று அந்நாகபாசத்தைப்பற்றி(த் தான்)அறிந்துள்ள எல்லாவிவரங்களையும் தெரியும்படி சொல்லலானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

கழறிக்காண் - ஒருசொல்தன்மைப்பட்டது. 'சாலச்சீரிது' என்றது, அங்கீகாரவார்த்தை. பி-ம்:—1தேவர். 2என்னையது, என்னையீங்கு. 3தீர்க்குங். 4அருள. 5அடிமலர்வணங்கியண்மிச், மலரடி சரணஞ்சார்ந்து. 6ஆறு. 7செப்பலுற்றான். (உகஅசு)

உருடு.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: நாகபாசத்தைப்பற்றிய விவரத்தை விபீஷணன் இராமபிரானிடம்கூறுதலைத் தெரிவிக்கும்.

ஆழியஞ் செல்வ 1பண்டிவ் வகலிட மளித்த 2வண்ணல்
வேள்வியிற் 3படைத்த நீசன் வேண்டினன் பெற்று வெற்றி
4தாழ்வறு 5சிங்தை யோற்குத் தவத்தினு லளித்த நாணை
ஊழியி 6னிமிர்ந்த காலத் துருமின துற்ற மீதால்.

(இ - ள்.) சக்கராயுதத்தையுடைய அழகிய செல்வனே! முற்காலத்தில், இந்த உலகத்தைப் படைத்த பிரமன், (தான்செய்த ஒரு) யாகத்திற் பெற்றது; சிவபெருமான் (அப்பிரமனிடத்தினின்று) வேண்டிவாங்கி வெற்றிபெற்று(ப் பிறகு) தாழ்தலில்லாத மனத்தையுடையவனான இந்திரசித்துக்கு (அவன் செய்த) தவத்தின் பயனாகக் கொடுத்தது: (இதன்வரலாறு இது; இது) உண்மை: கல்பாந்தகாலத்திலுண்டாகிற இடிபோன்ற தன்மையுடையது; (இதன்) வலிமை, இப்படிப்பட்டது; (எ - று.)

அகலிடம் - பூமி: வினைத்தொகையன்மொழி. இனவெதுகை. பி-ம்:— [1]பண்டிங்கு. [2]செல்வன். [3]படைத்த. [4]தாழ்வுறு. [5]சிந்தையோனுக்களித்தனன் றவத்தினை, சிந்தையோற்கு... அளித்தானைய. [6]உயர்ந்த. (உகஅஎ)

உகூரு. [1]அன்னதா [2]றாற்ற லன்றே யாயிரங் கண்ணி னானைப் [ண்ணி
பின்னுற வயிரத் திண்டோள் பிணித்தது பெயர்த்தொன் [3]றெ
என்னினி யனுமன் றோளை யிறுக்கிய திதனா [4]லாண்டும்
பொன்னுல காளுஞ் செல்வந் [5]துறந்தது புலவ ரெல்லாம்.

(இ-ள்.) ஆயிரங்கண்களையுடையவனான இந்திரனது மிக்கவலிமையமைந்த தோள்களைப் பின்னே பொருந்தும்படி கட்டினது, அந்தநாகபாசத்தினது வலிமையன்றோ? அப்பொழுதும் [அநுமான் இலங்கையிற் சீதையைத்தேடச் சென்றபொழுதும்] அநுமானது தோள்களை (இவ்விந்திரசித்து) இறுக்கிக் கட்டியதும் இந்தநாகபாசத்தாலேயே; தேவர்கள்யாவரும் சுவர்க்கலோகத்தை யாள்கின்றசிறப்பை இழந்ததும், இதன் வலிமையினாலேயே (நேர்ந்தது); (ஆதலால்), இனி (இதன்வலிமையைப்பற்றி) மற்றும் வேறே எண்ணியாது பயன்? (எ - று.)—'இதனால்' என்பதை இறுதிவாக்கியத்தோடுங்கூட்டுக. பி-ம்:—[1]அன்னதின். [2]ஆற்றறன்றால். [3]எண்ணல். [4]யாண்டும். [5]தந்தது. ()

உகூஎ. தான்விடில் [1]விடுமி தொன்றே சதுமுகன் முதல்வ [2]ராய
வான்விடில் விடாது மற்றிம் [3]மண்ணினை யெண்ணி யென்னே
[4]ஊன்விட வுயிர் [5]போய் [6]நீங்க நீங்கும்வே றாய்தி யில்லைத்
தேன்விடு துளவத் தாரா யிதுவிதன் செய்கை [7]யென்றான்.

(இ - ள்.) தேன்சொரிகின்ற திருத்துழாய்மாலையை யுடையவனே! ஒப்பற்ற இந்நாகபாசமானது, தானே விட்டால்தான் விடும்; பிரமனைமுதலாக வுடையரான வானுலகத்தவர் விடுவித்தாலும் விட்டுநீங்காது; இந்தமண்ணுலகத்தவரைப்பற்றி (இவர் விடுவிப்பாரோ என்று) எண்ணித்தான் என்ன பயன்? (இது தான்பற்றியவர்களது) தேகம்ஒழியவும் உயிர்போகவுந்தான் நீங்கும்; (இதிலிருந்து) வேறுபிழைக்கும்வழி இல்லை; இந்நாகபாசத்தினது செயல் இதுவாகும் என்று கூறினான், (விபீஷணன்); (எ - று.)

வான், மண் என்பன - அவ்வவ்வுலகத்தார்க்கு இடவாகுபெயர்கள். 'சதுமுகன் முதல்வராய வான் விடில் விடாது மற்றிம்மண்ணினையெண்ணி யென்னே' என்றது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. சதுமுகன் - சதுர்முகன்; நான்குமுகங்களை யுடையவன். மற்று - வினைமாற்று. ஊன்விட உயிர்போய்நீங்க நீங்கும்-உடம்பைவிட்டு உயிர்நீங்கினால்தான் நீங்கும் என்ற

ப்டி. பி-ம்:—1விடுவதல்லாற், விடுத்தலல்லாற், விடுதலன்றிச். 2ஆய்ந்த. 3மன்னனீ. 4ஊனிடை. 5போல். 6நீங்குமுள்ளம் வேறுவதில்லை, நீங்கநீங்கும் வேறுய்வதில்லை. 7ஆன. (உ௯அ௩)

உ௯அ.—மூன்றுகவிகள்-தான் செய்யத்தக்கதைப்பற்றிப் பலவகையான எண்ணத்தை ஸ்ரீராமன் விபீஷணனிடம் கூறுதலைத் தெரிவிக்கும்.

ஈந்துள தேவர் மேலே யெழுகெனோ வுலகமி யாவுந்
தீந்துக ளாறி 1யானுந் 2தீர்கெனோ விலங்கை சிந்தப்
பாய்ந்தவர் 3சுற்ற 4முற்றம் படுப்பனோ 5வியன்ற பண்போடு
ஏய்ந்தது பகர்தி யென்றா னிமையவ ரிடுக்கண் டீர்ப்பான்.

(இ - ள்.) தேவர்களின் துன்பங்களைத் தீர்ப்பதற்காகத் திருவவதரித்தவனாகிய இராமபிரான், (விபீஷணனைநோக்கி, 'இந்நாகபாசத்தை இந்திரசித்துக்குக்) கொடுத்துள்ள தேவர்களின்மீது கிளம்பிப் போர்செய்வேனோ? எல்லாவுலகங்களும் சாம்பராய்ப்போம்படி அழித்து நானும் அழிவேனோ? இலங்காபட்டணம் அழியும்படி (அதன்மீது) பாய்ந்து (அதிலுள்ள அரக்கர்களை) அவர்கள் சுற்றத்தாருடனே ஒருசேரக் கொல்வேனோ? (இவற்றில் இச்சமயத்துக்கு) ஏற்ற தகுதியோடுபொருந்தியதைச் சொல்வாய் என்று சொன்னான்.

இராவணன்முதலிய இராக்கதர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் தேவர்கள் பாற்கடலிற் பாம்பணையிற் பள்ளிக்கொண்டருளிய பரமனைச் சரணமடைந்து பிரார்த்திக்க, அப்பெருமான் தசரதன்மகனாய்த் தோன்றித் துயர்தீர்ப்பதாக அருளிச்செய்து, அங்ஙனமே திருவவதரித்தனனாதலால், இராமபிரானை 'இமையவரிடுக்கண் தீர்ப்பான்' என்றார். இடுக்கண் = இடுங்குகண்: துன்பமுண்டாங்காலத்திற் கண் இடுங்குதல்பற்றி வந்த பெயர்; காரியத்தைக் காரணமாக்கூறிய உபசாரவழக்கின்பாற் படும். ஓகாரங்கள் - விகற்பப்பொருளன. எழுகென் - தன்மையொருமைமுற்று; க் - எதிர்காலவிடைநிலை. பி-ம்:—1வானுந். 2தீக்கெனோ. 3சுற்றும். 4முற்றப்படுக்கெனோ. 5இயல்வுபண்டே, இயற்றும்பண்போடு. (உ௯௦)

உ௯௧. வரங்கொடுத் தினைய பாசம் 1வழங்கினோன் தானே நேர்வந்து
இரங்கிடத் தக்க துண்டேல் 2விகழ்கில னில்லை யென்னின்
உரங்கெடுத் துலக மூன்று மொருவனோ ரம்பிற் சுட்ட [தின்.
புரங்களிற் 3றீய்த்துக் காண்பன் பொடியொரு கடிகைப் போழ்

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (இந்திரசித்துக்கு) வரத்தைக்கொடுத்து இத்தன்மையான நாகபாசத்தையும் அளித்தவன் தானாகவே (எனது) எதிரில்வந்து மனமிரங்கி அருள்செய்வதுஉண்டானால் (நான்) உபேக்ஷிப்பதில்லை [விரும்பிஏற்றுக்கொள்வேன்]; (அங்ஙனஞ்) செய்யாமற்போனால், மூன்றுஉலகங்களையும், வலியழித்து, ஒப்பற்றசிவபெருமான் ஒரே அம்பினாற் சுட்டழித்த திரிபுரங்களைப்போலக் கொளுத்தி, ஒருநாழிகைப்பொழுதினுள் நீறாக்குவேன்; (எ - று.)

திருமாலாகிய அம்பைக்கொண்டு திரிபுரம் அழிக்கப்பட்டதனால், 'ஓரம்பிற் சுட்ட புரங்கள்' என்றான். பி-ம்:—1வழங்கினார்தாமே நேர்வந்து, வழங்

கின்றார்தாமேவர் தூற்று. [2]இகழிலனில்லையென்னில், இகழ்கின்றேனில்லையென்னில். [3]தீரக். (௨௧௯௧)

௨௪௦. எம்பியே யிறக்கு [1]மென்னி லெனக்கினி யிலங்கை வேந் தன், றம்பியே புகழ்தா [2]னென்னை பழி[2]யென்னை யறந்தா [2]னென்னை, [3]நம்பியே யென்னைச் சேர்ந்த [4]நண்பரி [5]னல்ல வாமே, [6]உம்பரு முல கத் துள்ள [7]வுயிர்களு [8]முதவி பார்த்தால்.

(இ-ள்.) லங்காராஜனான இராவணனது தம்பியாகிய விபீஷணனே! எனது தம்பியாகிய இலக்குமணனே இறப்பானானால், எனக்கு இனி (நான் செய்யுந் தொழில்) புகழுடையதாவென்று ஆலோசிக்கவேண்டுவதுதான் என்ன? பழி யுடையதென்று கவலைப்படவேண்டுவதுதான் என்ன? தருமமுடையதா வென்றுதான் ஏன் பார்க்கவேண்டும்? (மற்றும்,—இவர்கள் கைம்மாறுகரு தாது எனக்குச்செய்துள்ள) உதவியை ஆலோசித்துப்பார்த்தால், மேலுலகத் திலுள்ள உயிர்களும் இவ்வுலகத்திலுள்ள உயிர்களும் நம்பிக்கைகொண்டு என்னையடைந்த இந்த நண்பராகிய வாநரவீரர்களினும் நல்லனவாகுமோ?

எனதுதம்பியும் நண்பரும் இறந்தபடியால், யான் பழிபாவங்கட்கு அஞ்சாமலும் அறத்தையும்நோக்காமலும் எல்லாவுலகத்துஉயிர்களையும் ஒரு சேர அழித்திடுவே னென்பது கருத்து. பி-ம்:—[1]ஆகிலினியெனக்கு, ஆகு மென்னிலிவ், ஆயினென்னிலிவ். [2]என்ன. [3]நம்பியர். [4]நம்பரின், நண்பரும். [5]நல்லவாமேல், அல்லவாமேல். [6]உம்பர்க்கும். [7]உயிர்கட்கும். [8]உதவியென்னை, உதவிப்பார்க்க, உதவிபார்க்கில். (௨௧௯௨)

௨௪௧.—இராமபிரான் தம்பிக்காக உலகையழித்தல் முறையன்றென்று கருதுதல்.

என்றுகொண் டியம்பி யீண்டிங் [1]கொருவ[2]னிங் கிடுக்கண் செய்ய
வென்[3]றரு முலகை [4]மாய்த்தல் விதியன்று லென்று [5]விம்மி
நின்றுநின் றுன்னி [6]யுன்னி நெடிதுயிர்த் தலக்க ணுற்றான்
றன்றுணைத் [7]தம்பிதன்மேற் றுணைவர்மேற் றாழ்ந்த [8]வன்பான்.

(இ - ள்.) தனக்குத்துணையானதம்பியாகிய இலக்குமணன்மீதும் நண் பர்களான வாநரர்களின்மீதும் மிக்க அன்பையுடையவனான இராமபிரான்,— என்றுசொல்லி, 'இப்பொழுது இவ்விடத்து ஒருவன் இவ்வாறு துன்பத்தை யுண்டாக்க(அதற்காக), அருமையானஉலகத்தைவென்று அழித்தல் முறைமை யன்று' என்று ஏங்கி நின்றுநின்று நினைத்துநினைத்துப் பெருமூச்சுவிட்டு வருத்தம் அடைந்தான்; (எ - று.)

'ஒருவன்' என்றது, இந்திரசித்தை. "ஏக:பாபாநி குருதே பலம் புங்க்தே மஹாஜந: [=ஒருவன் பாவஞ்செய்யப் பலர் அதன்பயனை அனுபவிக்கின்ற னர்]" என்றபடி ஒருவன் தீங்குசெய்ய உலகத்தோரையெல்லாம் அழிப்பது அறமன்று என்றுகருதி விம்மிவருந்தின னென்க. கொண்டு, ஆல் - அசை கள். 'இங்கு' என்பதையும் அசையென்னலாம். [7]தம்பிமேலும் துணைவர்மேல் தாழ்ந்த அன்பான் என்றபாடத்திற்கு - தம்பியினிடத்திற்காட்டிலும் நண்பர்

களிடத்து மிக்க அன்பையுடையவன் என்று உரைக்க. பி-ம்:—1ஒருவர். 2ஓர். 3இவண், அவன், அவம். 4மாய்த்தால். 5விம்மும். 6மீண்டும். 8அன்பால். ()

உசஉ.—நாகபாசத்தால் தம்பியிறப்பின் ஸ்ரீராமன் தானும் இறப்பதாகத்துணிதல்.

மீட்டும்வந் திளைய வீரன் வெற்பன்ன 1விசயத் தோளைப்
2பூட்டுறு பாசந் தன்னைப் பன்முறை புரிந்து நோக்கி
வீட்டிய தென்னிற் 3பின்னை வீவனென் றெண்ணும் 4வேதத்
5தோட்டியின் றொடக்கினிற்குந் 6துணைக்கைமால் யானை யன்னான்.

(இ-ள்.) வேதமாகிய அங்குசத்தின் கட்டுக்கு அடங்கிநிற்கின்ற இரண்டு துதிக்கைகளையுடையதொரு பெரியயானையையொத்தவனான இராமபிரான்;—மறுபடியும் வந்து, இளையபெருமாளுடைய மலைபோன்ற வெற்றியையுடைய தோள்களைக் கட்டியுள்ள நாகபாசத்தைப் பலமுறை உற்றுப்பார்த்து, "(இது இலக்குமணனைக்) கொன்றதானால் உடனே (யானும்) இறப்பேன்" என்று எண்ணுவானானான்; (எ - று.)

வேதத்தோட்டியின் தொடக்கினிற்கும் துணைக்கைம் மால் யானை யன்னான் - யானை அங்குசத்துக்கு வசப்பட்டிருத்தல்போல வேதங்கட்குவசப்பட்டு நிற்பவன்; வேதமந்திரங்களால் வசீகரிக்கத்தக்கவன்: வேதங்களால் அறியத்தக்கவ னென்றபடியுமாம். 'துணைக்கைம்மால்யானை' என்றது, இல் பொருளுவமை; "இருகைவேழத் திராகவன்" என்றார்கடவுள் வாழ்த்திலும். உபமானமாகிய யானைக்கு 'துணைக்கை' என்ற அடைமொழி கொடுத்தது, உபமேயமாகிய ஸ்ரீராமபிரானது இரண்டுபுயங்களும் துதிக்கைபோலு மென்றற்கு. இராமபிரான் தம்பியிறந்தால் தானும் இறப்பதாகக் கூறினது, இலக்குமணனிடத்து அவனுக்குஉள்ள பேரன்பைக் காட்டும். அஸஹாய சூரனான இலக்குமணனுக்கும் ஊறுசெய்ததுபற்றி, இராமபிரான் நாகபாசத்தைப் பன்முறைநோக்கின னென்க. பி-ம்:—1வைரத். 2பூட்டிய. 3பின்னர் வீப்பன். 4பாகன். 5தோட்டியிற்றுவக்கி, தோட்டியிற்றுடக்க. 6துளைக். (உசகூச)

வேறு.

உசங.—இதுமுதல் ஏழுகவிகளா-கருடனது வருகையைக்கூறும்.

இத்தன்மை யெய்து மளவின்க 1ணின்ற விமையோர்க ளஞ்சி யிதுபோய், எத்தன்மை யெய்தி முடியுங்கொ லென்று குலைகின்ற 2வெல்லை யதன்வாய், அத்தன்மை கண்டு புடைநின்ற வண்ணல் கலுழன்ற னன்பின் 3பிசையாற், சித்தந் 4நடுங்கி யிது5தீர மெள்ள விருளோடு வந்து தெரிவான்.

எட்டுக்கவிகள் - குளகம்.

(இ-ள்.) (இராமபிரான்) இந்நிலைமையை யடையுஞ்சமயத்தில்,—(வானத்து வந்து போர்கண்டு)நிற்கிற தேவர்கள் பயந்து "(இராமனது) இந்நிலைமை முதிர்ந்து எவ்வகையாய்ச்சென்று முடியுமோ?" என்று எண்ணி நடுங்குகின்ற சமயத்தில்,—(இராமபிரானது) அந்நிலைமையைப்பார்த்து (அவ்விராமனது)

பக்கத்திலே (உருவம்மறைந்து) நிற்கின்ற பெருமையிற்சிறந்தவனான கருடபகவான்,—(இராமபிரான்மீது)தான்கொண்டுள்ள மிக்கஅன்பினால் மனம் நடுங்கி, (அப்பெருமானது) இத்துயரம் நீங்கும்படி மெல்ல இருட்டில் வந்து தோன்றி விளங்குபவனும்,—(எ - று.)—(ஆய்), "பணிவான் [பணிந்து"] (௨௬௧) "இன்னபன்னி மொழிவான்" (௨-௫௦) எனத்தொடர்ந்துமுடியும். இங்ஙனமே அடுத்தசெய்யுள்களையும் முடித்துக்கொள்க.

இதுபோய் எத்தன்மையெய்திமுடியுங்கொல் - இராமனே முடிவனோ, உலகமே அழியுமோ,எது எவ்வாறாய்முடியுமோ?என்க.திருமால்திருவவதாரங் கொள்ளும்போது இலக்குமி பஞ்சாயுதங்கள் திருவநந்தாழ்வான் கருடன் முதலியோர் வேற்றுருவத்துடனாவது மறைந்தாவது உடனிருப்ப ரென்பது நூல்துணிபாதலால், 'புடைநின்ற கலுழன்' என்றார். இனி, புடைநின்றஎன்பதற்கு - தேவர்களின்பக்கத்தில்நின்ற என்றுபொருள்கூறினுமாம். கலுழன்-கருடன். அன்பு-இங்கே, பக்தி. கருடபகவானது வருகையால் நாகபாசம் நீங்குதலின்,'இதுதீரத் தெரிவான்' என்றார். அண்ணல், கருடன்-ஒருபொருளின்மேல்வந்த பலபெயர். பி-ம்:—[1]வந்த. [2]எல்லையிதன்வாய். [3]விசையால், [4]கலங்கி, கலங்கும். [5]தீர்ப்பனென்ன, தீர்வனென்ன. (௨௬௫)

௨௬௬. அசையாத சிந்தை [1]யரவா லனுங்க வழியாத வுள்ள மழிவான், [2]இசையா விலங்கை யரசோடு மண்ண லருளின்மை கண்டு [3]நயவான், விசையா லனுங்க வடமேரு வைய மொளியால் விளங்க விமையாத், திசையானை கண்கண் முகிழா வொடுங்க நிறைகால் வழங்கு சிறையான்.

(இ - ள்.) (எதற்குங்)கலங்காத (இராமனது) மனம் (தம்பிமுதலியோரைக் கட்டிவருத்துகிற) நாகபாசத்தாற் கலங்கினதனால் [கலங்கினதைக் கண்டு] (ஒருபொழுதும்) வருத்தமடையாத (தனது) மனம் வருந்துபவனும்,—(நல்வழிக்கு) உடன்படாத லங்காராசனான இராவணனோடு மற்றெல்லோரிடத்திலும் இராமபிரானது திருவருளில்லாமையைக் கண்டு விரும்பாதவனும்,—(தனது) வேகத்தினால் வடக்கிலுள்ளமகாமேருவும் நிலைகுலையவும் (தன் மேனியின்) காந்தியினால் நிலவுலகம் விளங்கவும் (ஒருகாலத்துங்) கண்ணிமைத்தலில்லாத திக்கஜங்களும் கண்களைமூடிக்கொண்டு ஒடுங்கும்படியும் மிக்ககாற்றைவீசுகின்ற சிறகுகளையுடையவனும்,—(எ - று.)

தலைவனான இராமபிரானது கலங்காத திருவுள்ளங் கலங்கினதனால், அடியவனான கருடன் தானும் மனங்கலங்குவானாயினன்.'அரசோடும்' என்ற உம்மையால், 'மற்றெல்லாரிடத்திலும்' என்று வருவித்து உரைக்கப்பட்டது. இராவணன்முதலிய ராக்ஷசரிடத்தில்மாத்திரமே யன்றி "உலகமூன்றும்... தீய்த்துக்காண்பன் பொடியெருகடிகைப்போழ்தின்" என நிரபராதிகளான மற்றையோர்விஷயத்திலும் இராமபிரானுக்குக் கோபம் மூண்டதனால், அதனைக் கருடன் விரும்பாதவனாயினான். விபீஷணன்முதலியோர் பலவகையாக நல்லறிவுகூறியும், அநுமானும் அங்கதனும் இராமதூதர்களாய்ச்சென்று பேசியும் இராவணன் சீதையைக் கொடுக்க உடன்படாதிருந்ததுபற்றி, அவனை 'இசை

யாவிலங்கையரசு' என்றார். திக்கஜங்கள் தெய்வத்தன்மையுள்ளனவாதலால், அவைகளும்தேவர்கள்போலவே கண்ணிமைக்குமியல்புடையனவல்லவென்க. பின்னிரண்டடி - தொடர்புயர்வுநவிற்சியணி. பி-ம்:—[1]அயர்வால். [2]அசை யா. [3]பெயர்வான். (௨௧௬௬)

௨௬௫. காதங்கள் கோடி கடைசென்று காணு நயனங்கள் வாரி கலுழக், கேதங்கள் கூர வயர்கின்ற வள்ளல் திருமேனி கண்டு கிளர் வான், சீதங்கொள் வேலை [1]யலைசிந்த [2]ஞால மிருள்சிந்த [3]வந்த [4]சிறை யான், வேதங்கள் பாட வுலகங்கள் யாவும் வினைசிந்த நாக மெலிய.

(இ - ள்.) கோடிக்காததூரமளவும் (பார்வை)சென்று (அங்கங்குள்ளவற் றையெல்லாங்) காணவல்ல (தனது) கண்களில் நீர்வழியத் துன்பங்கள் அதி கப்படச் சோர்கின்ற இராமபிரானது திருமேனியைப் பார்த்து (நாகாஸ்திரத் தையொழித்தலில்)ஊக்கம்மிகுபவனும்,—குளிர்ச்சிகொண்டகடல் அலைகளைச் சிதறவும் உலகங்கள் இருளைஒழியவும் [உலகத்தைமூடியஇருள் சிதறி வில கிப்போகவும்](அடித்துக்கொண்டு)வந்த இறகுகளினால் வேதங்களின் ஸ்வரத் தோடுகூடிய ஒலியுண்டாகவும், எல்லாவுலகங்களும் பாவங்களை நீங்கவும், (இந்திரசித்தினாற் பிரயோகிக்கப்பட்ட)நாகங்கள் தளர்ச்சியடையவும்,—

வெகுதூரத்திலுள்ளவற்றையும் பார்த்தறிகிற வல்லமை பறவைகட்கு உண்டென்பது பிரசித்தம். இராமபிரானது வருத்தத்தைக் காணுதலாற் கருடபகவான் கண்ணீர் பெருக்கினான். இனி,கண்ணீர்-ஆநந்தபாஷ்பமுமாம். கருடன் வேதஸ்வரூபியாதலால், அவன் இறகடிக்கும்போதுஎழும்ஒலியை வேதவொலியாகவே கூறினார். சிறகுகளினின்றுஉண்டாகுங் காற்றின் விசை யாற் கடலலைகளும், பொன்மயமான அச்சிறகுகளின் ஒளியால் உலகத்துப் பரவிய இருளும் சிதறுவனவாயின; வேதமயமான கருடபகவான் பறந்து வரும்போது அவனதுஇறகுகளினின்று வெளிவீசுங்காற்றுப் பரிசுத்திகர மானதனால், அக்காற்றுப்பட உலகம் வினைசிந்துவதாயிற்றென்க. 'பாம்பிற் குப்பகை கருடன்' ஆதலால், கருடன்வரும்போது அந்நாகங்கள் மெலிவன வாம். பி-ம்:—[1]திசை. [2]ஞாலவிருள். [3]வந்து. [4]சிறையால், (௨௧௬௭)

௨௬௬. அல்லைச் சுருட்டி வெயிலைப் பரப்பி யகலாசை யெங்கு மழியா, வில்லைச் செலுத்தி நிலவைத் திரட்டி விரிகின்ற சோதி மிளிர, எல்லைக் குயிற்றி யெரிகின்ற மோலி யிடைநின்ற மேரு வெனுமத், தொல்லைப் பொருப்பின் [1]மிசையே விளங்கு [2]சுடரோனின் மும்மைச் சுடர.

(இ - ள்.) அகன்றுள்ள திக்குக்களிலெல்லாம் இடையறாத சோதியைப் பரவச்செய்தலின்மூலமாக இருளைநீக்கி(அவ்விருளிருந்தவிடத்துச்)சூரியனது ஒளியைப்பரப்பியும் சந்திரகாந்திபோன்றஒளியைக் கூட்டமாகஉண்டாக்கியும் (இவ்வாறு இருவகையாகப்) பரவுகிறஒளி (தன்மேனியினின்று) விளங்க வும்,—(தன்னொளியாற்) பகற்பொழுதையுண்டாக்கி விளங்குகின்ற கிரீடம் (ஜம்பூத்வீபத்தின்)நடுவிலுள்ள மேருஎன்றபெயரையுடைய அந்தப் பழமை

யான மலையின்மேலே விளங்குகின்ற சூரியனைக்காட்டிலும் மும்மடங்கு மிகுதியாகப் பிரகாசிக்கவும்,—(எ - று.)

கருடபகவானது பொன்னிறமுள்ள மேனியினின்று ஒளி உண்டாய்ப் பரவுவதை 'அல்லைச்சுருட்டி வெயிலைப்பரப்பி யகலாசையெங்குமழியாவில்லைச்செலுத்தி' என்றும், வெண்ணிறமுள்ள கழுத்தினின்று ஒளி தோன்றிப் பரவுவதை 'நிலவைத் திரட்டி' என்றுங் கூறினர். மேருமலை - கருடபகவானது உடம்புக்கும், அம்மலையினுச்சியில் தோன்றும் சூரியன் - அப்பகவான் திருமுடியிலணிந்துள்ள கிரீடத்துக்கும் உவமையென்க. சோதி=ஜ்யோதிஸ். மேருமலை பூமிக்கு இடையிலுள்ளது என்பது நூற்கொள்கையாதலால், 'இடைநின்ற மேரு' என்றார். குயிற்றல் - செய்தல். பி-ம்:—[1]மிசையே. [2]சுடரோரின். (உககஅ)

உசஎ. நன்பால் விளங்கு மணிகோடி யோடு [1]நளிர்போது செம்
பொன் [2]முதலாத், தன்பா லியைந்த நிழல்கொண் டமைந்த [3]தழுவாது
வந்து தழுவ, மின்பா [4]லியன்ற தொருகுன்றம் வானின் [5]மிளிர்கின்ற
தென்ன வெயிலோன், தென்பா லெழுந்து வடபா னிமிர்ந்து வரு
கின்ற செய்கை தெரிய.

(இ - ள்.) அழகிய (கழுத்தின்) இடத்தில் விளங்குகின்ற கோடிக்கணக்கான ரத்நஹாரங்களோடு குளிர்ந்தபூமாலைகளும் சிவந்த பொன்னரிமாலைகளும் முதலியனவாகத் தன்னிடத்திற்பொருந்திய காந்தியோடு கூடிய ஆபரணங்களெல்லாம் (தான் [கருடன்] சிறகடித்துக்கொண்டு மிக்கவிரைவுடன் வருதலால் தனதுமார்பிற்) படாதனவும் படுவனவுமாய்ப் பொருந்தவும்,—மின்னலினாலே உண்டானதாகிய ஒருமலை ஆகாயத்தில்தோன்றி விளங்குகிறதுபோலவும்,—சூரியன் தெற்கேஉதித்து வடக்கேஉயர்ந்துவருகின்ற தன்மை விளங்கவும்,—(எ - று.)

திர்யக்ஜாதியாகிய கருடன் குறுக்காகவரும் விசையால், அவன் கழுத்திலணிந்துள்ள ஆபரணங்கள் அவன்மார்பிற் பெரும்பாலும் படாதனவும் சிறுபான்மைபடுவனவு மாயின வென்க. எப்பொழுதும் பெருமாளுக்கு அபிமுகமாக எதிரிற் பணிவொடுநிற்றல், கருடனியல்பு; அங்ஙனமே இலங்கைநோக்கித் தெற்குமுகமாய்நின்ற இராமபிரானது எதிரிலே மறைந்துநின்றுள்ள கருடன் அங்கிருந்து வெளிப்பட்டு வடக்குமுகமாய் அருகில்வந்தனனென்று உணர்க. பின்னிரண்டடி - இல்பொருளுவமையணி. பால் - பால்போன்ற வெள்ளொளியையுடைய கழுத்துக்கு உவமையாகுபெயரெனினுமாம். மணி, போது, பொன் என்பவை - அவ்வவற்றாலாகிய ஆரத்துக்குக் கருவியாகுபெயர். அமைந்த - பெயர். பி-ம்:—[1]நளி. [2]நனிசால். [3]தகையாவும்வந்துதவழ. [4]அமைந்த, அமைந்தது. [5]விழுகின்ற. (உககக)

உசஅ. பன்னாகர் சென்னி மணி[1]கோடி கோடி பலகொண்டு செ
ய்த வகையான், மின்னா [2]லியன்ற தெனலாய் விளங்கு மிளிர்பூண் [3]வய
ங்கும் வெயில்கால், பொன்னா [4]லியன்ற நகையோடை பொங்க வன

மாலை மார்பு புரளத், தொன்னாள் பிரிந்த துயர்தீர வண்ண திருமேனி கண்டு தொழுவான்.

(இ - ள்.) சர்ப்பங்களின் தலைகளினுள்ள மிகப்பலகோடிக்கணக்கான மாணிக்கங்களைக்கொண்டு செய்துள்ளபடியால் மின்னலினாற்செய்யப்பட்டுள்ளதென்று சொல்லும்படி மிகவிளங்குகின்ற ஆபரணங்களும் விளங்குகிற சூரியகாந்தி போன்றதொளியை வெளிவீசுகின்ற பொன்னினாலாகிய பொலிவையுடைய நெற்றிப்பட்டமும் மிகுதியாகப்பிரகாசிக்கவும்,—துளசிமாலையானது மார்பிற்புரளவும் (வந்து),—நெடுநாளாகப்பிரிந்ததனாலுண்டான துயரம்நீங்க இராமபிரானது திருமேனியைக்கண்டு (சேய்மையிலிருந்தே) கை குவிப்பவனும்,—(எ - று.)

பன்னாகர்என்பது, பன்னகரென்பதன் நீட்டல். இனி, பல்நாகர் - பல நாகர் என்றும், பற்களையுடைய நாகர் என்றும் உரைக்கலாம். பூண் - சாதியொருமை. தொன்னாள் - சௌசலையின்கர்ப்பத்தில்வந்துபொருந்திய நாள் முதலாக என்றபடி.

பாட, சிந்த, மெலிய (உசஎ), மிளிர, சுடர (உசகூ), தழுவ, என்ன, தெரிய (உசஎ), பொங்க, புரள, (வந்து), துயர்தீரக் கண்டு தொழுவான் (உசஅ) என்க. பி-ம்:—[1]கோடியோடுபணி. [2]இயன்ற. [3]வயங்க. [4]இயைந்த.

உசகூ. முடிமே [1]னிமிர்ந்த முகிழ்ந்தேறு கையன் முகின்மே னிமிர்ந்த வொளியான், அடிமேல் விழுந்து பணியாம னின்ற நிலையுன்னி யுன்னி யழிவான், [2]கொடிமே [3]லிருந்தி வுலகேழொ டேழு தொழநின்ற கோளு மிலனாய்ப், படிமே லெழுந்து வருவான் விரைந்து பலகா னினைந்து பணிவான்.

(இ - ள்.) தலையின்மேல்உயர்ந்து பொருந்திய குவிதலைக்கொண்ட [கூப்பிய] கைகளையுடையவனும்,—காளமேகத்தைக்காட்டிலும் மிக்க நீலவொளியுடையவனாகிய அத்திருமாலின் திருவடிகளில்(வெகுநாளாக)விழுந்துவணங்காமல் நின்ற (தனது) நிலைமையை நினைத்துநினைத்து வருந்துபவனும்,—(அப்பெருமானது) துவசத்தின்மேலிருந்து இந்தப்பதினான்குஉலகத்தாரும் (தன்னை)வணங்கும்படி நின்ற பெருமையும் இல்லாமல் எழுந்து வேகமாய்த் தரைமீது வருகின்றவனுமாய்,—பலமுறை மனப்பூர்வமாகவணங்கி,--(எ-று.) —'இன்னபன்னி மொழிவான்' என அடுத்த கவியோடுமுடியும்.

முகின்மேல்நிமிர்ந்த ஒளியான் அடிமேல் விழுந்து பணியாமல் நின்ற நிலை உன்னிஉன்னி அழிவான்—"பழுதே பலபகலும் போயினவென் றஞ்சி, யழுதேன்" என்றார் பெரியாரும். எல்லாவுலகத்தாரும் வணங்கும்படி திருமாலின் திருமுன்னர்த் துவசத்தின்மேலிருப்பவன் இப்பொழுது அத்திருமாலுடனின்றித் தனியேவருபவனாயினனென்க. கருடபகவான் திருமாலுக்கு வாகனமும் கொடியுமாதலை யுணர்க. பி-ம்:—[1]நிமிர்ந்து. [2]தொடி. [3]இருந்த. (உஉ0௭)

௨௫௦.—கருடபகவான் ஸ்ரீராமனைத் தேற்றித் துதிக்கத் தொடங்குதல்.

[1]வந்தான் மறைந்து பிரிவால் [2]வருந்து மலர்மே லயன்றன் முத லோர்,தந்தாதை [3]தாதை யிறைவா [4]மறைந்து [5]விளையாடு கின்ற தனி யோய், சிந்தா குலங்கள் களைவாய் தளர்ந்து துயர்கூர லென்ன செய லோ, எந்தாய் வருந்த லுடையாய் வருந்த லெனவின்ன பன்னி [6]மொழிவான்.

(இ - ள்.) '(திருமால் இராமனுனதற்கு ஏற்ப ஆதிசேஷனுயிருத்தலை விட்டுத் தம்பியான லக்ஷ்மணனுகித் தான் வந்து இயற்கைவடிவத்தை) மறை ந்து அவதரித்தவனது பிரிவைப்பற்றி (மனம்)வருந்துகின்றவனும் தாமரை மலரில்வாழ்கிற பிரமன் முதலியோர்க்குங் காரணனுமான தலைவனே! (சொரூபத்தை)மறைத்துக்கொண்டு (மனிதவுருவத்துக்கு ஏற்ப) நடிக்கின்ற ஒப்பற்றவனே! (சரணமடைந்தவர்களின்) மனோவியாகுலங்களை நீக்குபவனே! (இத்தன்மையனுன நீயும்)மனந்தளர்ந்து துன்பமிகுதல் என்னசெய்கையோ? எனதுதலைவனே! வருந்தாதே; ஸர்வஸ்வாமியே! வருந்தாதே' என்று சொல்லி இத்தன்மையனவான பலவார்த்தைகளைக் கூறுபவனுனன்; (எ - று.)—அவ ற்றை மேல்பதினெருகவிகளிற்காண்க.

கருடபகவான் உண்மையைத் தெரிவித்து இராமனைப் பலவாறுதேற்று பவனுனன். பிரிவால் வருந்தும் - (இந்திரசித்தின் நாகபாசத்தாற் கட்டுண்டு இலக்குமணன்) உயிர்நீங்கினனே யென்று வருந்துகிற என்றபடி. தாதை தாதை - பிதாமஹன். அயன்தன்முதலோர்தம் தாதைதாதை - படைத்தற் கடவுளான பிதாமகனென்னும் பெயருடைய பிரமன் முதலியோர்க்கும் பிதா மகனுய் [படைத்தற்கடவுளாய்] நிற்பவ னென்றபடி. இங்கு 'தாதை தாதை' என்றது, லக்ஷிதலக்ஷணை. தேவர்களால் அழிக்கமுடியாதபடி வரம்பெற்றுள்ள இராவணன்முதலிய ராக்ஷசர்களைச் சங்கரிக்கும்பொருட்டு அத்தேவர்களின் வேண்டுகோளினுல் திருமாலும் அப்பெருமானதுசயனமாகிய ஆதிசேஷனும் பிராதாக்களாகப் பிறந்து தாம்கொண்டுள்ள மனிதவுருவத்துக்கு ஏற்ப ஒரு வரைவிட்டு ஒருவர் பிரிந்ததற்குவருந்துதல் முதலியன எம்பெருமானது இச் சையினுலேயே யாதலால்,'மறைந்து விளையாடுகின்ற'என்றுர். சரணமடைந்த வர்களின் மனத்துன்பங்களையெல்லாம் ஒரு சிறிதுமின்றி யொழிக்கும் இயல் பினனுகிய நீயே இங்ஙனம்வருந்துவது உனது பெருமாயமேயென்பது,மூன் ருமடியின் தாற்பரியம். பி-ம்:—[1]வந்தாய். [2]வருந்தியயர்வாய். [3]எந்தை. [4]பிற ந்து, மறந்து. [5]விளையாடுகின்றறவிராய்,விளையாடுகின்றவிறைவா. [6]அழிவான்.

௨௫௧.—இதுமுதற் பதினொருகவிகள் - கருடாழ்வான் இராமபிரானைத் துதித்தலைந்தெரிவிக்கும்.

தேவாதி தேவர் பலாரு [1]முந்து திருநாம மோது [2]செயலோய்
[3]மூவாத நாளு முலகேழொ டேழு மரசாளு [4]மேன்மை [5]முதல்வா
மேவாத வின்ப மவை[6]மேவி மேவ நெடுவீடு [7]காட்ட முடியாய்
[8]ஆவாய் வருந்தி யழிவாய்கொ லாரிவ் வதிரேக மாயை யறிவார்.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.)தேவ அதிதேவர் பலராலும் மூந்து திருநாமம் ஓதுசெயலோய்-தேவர்களும் (பிரமருத்திரேந்திராதியரான) தலைமைத்தேவர்களும்ஆகிய பலராலும் சிறந்த திருநாமங்களைச்சொல்லித் துதிக்கும்படியாகவுள்ள செய்கையையுடையவனே! அ நாளும் மூவாதுஉலகுஏழொடுஏழும் அரசுஆளும் மேன்மை முதல்வா - பிரளயகாலத்திலும் அழியாதபடி பதினான்குஉலகங்களையும் திருவயிற்றிலடக்கிப் பாதுகாக்கின்ற மேன்மையையுடைய தலைவனே! மேவாத இன்பம்அவை மேவி - (உனக்குஅடிமைப்பட்டஉயிர்கள் பிறரால்) அடையமுடியாத [பெறுதற்குஅரிய] இன்பங்களை யடைந்து (பின்பு), மேவ-(பரமபதத்தில் உன்னை) அடையும்படி, நெடு வீடு காட்ட - பெரியமுத்தியுலகத்தை (அவர்கட்கு)க் கொடுத்தற்கு, முடி ஆய் ஆவாய்-முதற்றலைவனாயிருப்பவனே! (அத்தன்மையையுடைய நீ), வருந்தி அழிவாய்கொல்-(மனம்)வருந்தித் தளரக்கடவையோ! இஃதிரேகம் மாயை அறிவார்ஆர் - (உனது) இந்த மிக்கமாயையை அறியவல்லவர் யாவர்? (எ - று.)

தேவாதிதேவர் - தேவர்களினும் மேம்பட்டவராய்ப் பரமபதத்தில்வாழ்கிற நித்தியசூரிகளுமாம். எல்லாம்அழியும் பிரளயகாலத்தில் திருமால் தானொருவன்மாத்திரம்நின்று எல்லாவுலகங்களையும் அவற்றிலுள்ள உயிர்களுடனே தன்திருவயிற்றில் அடக்கிவைத்துக்கொண்டு அவற்றிற்கு யாதோரூறுமின்றிப் பாதுகாக்கின்றன னென்பது, பிரசித்தம். எல்லாவுயிர்கட்குந் தலைமைபூண்டுள்ள நீ இங்ஙனம் வருந்துவதுபோலநடிப்பது என்னபெருமாயமோ? எனக் கருடன் இராமபிரானது முன்னிலையில் அவனதுஉண்மைநிலையையுரைத்தவாறு. இச்செய்யுளினால், நலமந்தமில்லதோர்நாட்டில் நித்யமுக்தர்க்குப் போக்யனாய்க்கொண்டு வீற்றிருந்து ஏழுலகும்தனிக்கோல்செலுத்தும் பரத்வத்தின் நிலைமை கூறப்பட்டதென்னலாம். 'அநாள்'-தொகுத்தல். அதிரேகம் - மிகுதி: வடசொல். இச்செய்யுள் "தானந்தமில்லை" (உருச) என்ற செய்யுளின்பின் சிலபிரதியிலுள்ளது. பி-ம்:—[1]ஆதி. [2]செயலால், [3]மூவாத வாயு, மூவாதெநாளும். [4]எம்மை. [5]முதலாய். [6]மேவிமேவி. [7]கண்டுமுடியா, கண்டுமுடியார். [8]ஆவா. (உஉ0௬)

உருஉ. எழுவா யெவர்க்கு முதலாகி யீறொ டிடையாகி யெங்கு முளையாய், [1]வழுவாத வர்க்கும் வரமீயவல்லை யவரால் வரங்கள் பெறுவாய், தொழுவா யுணர்ச்சி தொடராத தன்மை [2]யுருவாய் மறைந்து துயரால், அழுவா யொருத்த [3]னுளைபோலு மாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) எவர்க்கும்-எல்லாவுயிர்கட்கும், முதல் ஆகி-படைக்குங்காரணனாகியும், ஈறொடு - அழிக்குங்காரண னாகியும், இடை ஆகி - காக்குங்காரணனாகியும், எழுவாய் - (ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாய்த் திருப்பாற்கடலில்) தோன்றுவாய்; எங்கும் உளை ஆய் - எல்லாவிடத்திலும் வியாபித்துநின்று, வழுவாது-தவறாமல், அவர்க்கும் - உபாசகர்கட்கெல்லாம், வரம் ஈயவல்லை-(வேண்டிய)வரங்களைக் கொடுக்கும் வல்லமை யுடையாய்; (இங்ஙனம்

வல்லமைபெற்றிருந்தும்),உணர்ச்சி தொடாத தன்மை உரு ஆய் மறைந்து - முற்றுணர்வுஉண்டாகப்பெறாத தன்மையையுடைய மனிதவடிவைக்கொண்டு (உனதுசொரூபத்தை)மறைத்துநின்று,தொழுவாய் - (உன்னினுங்கீழ்ப்பட்ட தேவர்களை) வணங்கி, அவரால் வரங்கள் பெறுவாய் - அத்தேவர்களால்(உனக்குவேண்டும்) வரங்களைப் பெறுவாய்; துயரால் அழுவாய் - துன்பத்தினால் வருந்துவாய்; ஒருத்தன் உளை போலும் - (இவ்வாறு ஆச்சரியசக்தியை யுடையனாய் நீ) ஒருத்தன் இருக்கின்றாய்போலும்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்—? (எ - று.)

திருமாலினது வியூகமூர்த்திகளில் ஸங்கர்ஷணரென்பவர் ஆமோதமென்னும் இடத்தில் ஜ்ஞானம் பலம் என்ற இரண்டுகுணங்களை முக்கியமாகத் தம்மிடத்திற்கொண்டு அழித்தற்றொழிலையும், ப்ரத்யும்நரென்பவர் ப்ரமோதமென்னும்இடத்தில் ஐசுவரியம் வீரியம்என்ற இரண்டுகுணங்களை முக்கியமாகத் தம்மிடத்திற்கொண்டு படைத்தற்றொழிலையும், அநிருத்தரென்பவர் ஸம்மோதமென்னும்இடத்தில் சக்தி தேஜஸ்என்ற இரண்டுகுணங்களை முக்கியமாகத் தம்மிடத்திற்கொண்டு காத்தற்றொழிலையும் மோக்ஷமளித்தலையும் செய்கின்றனரெனவும், இம்மூன்றுவியூகமூர்த்திகளும் உபாஸகர்களுக்கு வேண்டும்வரங்களை அளிக்கின்றனரெனவும், பிரமவிஷ்ணுருத்திரரென்னுந் திரிமூர்த்திகட்கு இம்மூவரும் அதிஷ்டாநதேவரெனவும் நூல்கள் கூறும். நித்தியமானஆத்மாவைப் படைத்தல் அழித்தல்என்பன-பிரகிருதியின்விகாரமானசரீரத்துடன் சேர்க்கையும் அதனினின்று பிரிக்கையுமாம்

திருமால் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையுஞ் செய்யுமாறு ஸங்கர்ஷணப்ரத்யும்ந அநிருத்தஸ்வரூபியாகிப் பயன்கருதி வழிபடும்உபாஸகர்க்குத் தக்கவாறு அநுக்கிரகஞ்செய்துநிற்கும் வியூகநிலையை 'எழுவாயெவர்க்குமுதலாகியீறொடிடையாகி வழுவாதவர்க்கும்வரமீயவல்லை' என்றதனாலும், "கரந்தசிலிடந்தொறு மிடந்திகழ்பொருடொறுங், கரந்தெங்கும் பரந்துளன்" என்றபடி எல்லாப்பொருள்களும் நிலைபெறுமாறு எள்ளினுள் எண்ணெய்போல அவற்றினுள் மறைந்து பரந்துநிற்கும் அந்தர்யாமிநிலையை 'எங்குமுளையாய்' என்றதனாலும், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநஞ்செய்து தருமத்தைநிலைநிறுத்துந் தன்மையதான விபவாவதாரநிலையை 'அவரால் வரங்கள்பெறுவாய்.........அழுவாய்' என்றதனாலுங் குறித்தனரென்னலாம். அவரால் வரங்கள்பெறுதலை, வருணனைவழிவேண்டுதல் முதலிய இடங்களிற் காண்க. உணர்ச்சிதொடாத தன்மையுருவாய் மறைந்து-தான் முற்றுமுணர்ந்தவனாயிருந்தும் கர்மவசத்தினால் உண்மையறிவுகுலையநிற்கும் மனிதர்களோடொக்க ஒன்றும்அறியாதவன்போல்நின்று என்றபடி. படைத்தல் காத்தல் அழித்தல் என முறைபடக்கூறும் முத்தொழிலில் காத்தல் நடுவணதாதலால், அதனை, 'இடை' என்றார். போலும் - உரையசைப்பொருளது. 'உளை' என்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது - வினையாலணையும் பெயர்; பின்னது - குறிப்புமுற்று. அவர்க்கு, அவரால்என்ற சுட்டுக்கள்-தகுதிபற்றி அவ்வப் பொருளின்மேல் நின்றன.

இனி, முன்னிரண்டடிக்குப் பிறவாறும் உரை கூறப்படும்; அது வருமாறு:—பிரமருத்திரேந்திராதிய ரெல்லார்க்கும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாகி எங்கும்வியாபித்தவனாய் எழுவாய்; அவர்கட்குத்தவறாது வரங்களை யருளவும் வல்லை; அங்ஙனமிருந்தும் விபவாவதாரத்தில் அவர்களைத் தொழுது அவர்கள்பக்கல் வரம்வேண்டிப்பெறுகின்றாய் என்பதாம். பி-ம்:— [1]வழுவாதெவர்க்கும். [2]உறுவாய். [3]எனலாகும். (௨௨௦௪)

௨௫௫. உன்னொக்க வைத்த விருவர்க்கு மொத்தி யொருவர்க்கு முண்மை யுரையாய், முன்னொக்க நிற்றி யுலகொக்க [1]வொத்தி [2]முடிவொக்கி [3]னொன்று [4]முடியாய், என்னொக்கு மின்ன செயலோ வி[5]தென்னி விருளொக்கு மென்று [6]விடியாய், [7]அந்நொப்ப மேகொல் பிறிதேகொ லாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) உன் ஒக்க வைத்த இருவர்க்கும் ஒத்தி - (காத்தற்றொழிலைக் கைக்கொண்ட)உன்னோடு சமானமாக (ஆக்கல் அழித்தல் தொழில்களுக்கென்று) நீ அமைத்துவைத்த (பிரமருத்திராகிய) இருமூர்த்திகளுடனும் (சேர்த்து அயன் அரி அரன் என்று எண்ணும்படி நீ) பொருந்தியிருக்கின்றாய்; ஒருவர்க்கும் உண்மை உரையாய் - (அங்ஙனமிருந்தும் அவ்விருமூர்த்திகளில்) ஒருவர்க்காயினும் (உனது) உண்மைநிலையைத் தெரிவிக்கின்றாயில்லை; முன் ஒக்க நிற்றி - (மும்மூர்த்திகளுள்ளும் நீயே) முதல்மூர்த்தியாக நிற்கின்றாய்; உலகு ஒக்க ஒத்தி-உலகத்துப்பொருள்களுடன் அந்தர்யாமியாய்க் கலந்துநிற்கின்றாய்; முடிவு ஒக்கின் ஒன்றும் - (இப்பிரபஞ்சங்களை) அழிக்கவேணுமென்று (நீ) திருவுள்ளங்கொண்டால் (நினைத்தபொழுதே அவற்றிற்கு அவ்வழிவு) பொருந்தும்; முடியாய் - (நீயோ ஒரு பொழுதும்) அழிதலின்றியிருப்பாய்; இன்ன செயல் இது என் ஒக்குமோ என்னில் - (உன்னுடைய) இத்தன்மையான இச்செய்கை எத்தன்மைத்தோ என்று(ஒருவர்)ஆராயப்புகுந்தால், இருள் ஒக்கும் என்று விடியாய் - (அவர்களுடையமனம்)இருள் மண்டியுள்ளதென்று சொல்லும்படி விளக்கந்தராது நிற்பாய்; (இங்ஙனம் உனது செய்கை அறியப்படாமலிருத்தற்குக் காரணம்),அ நொப்பமே கொல்-(ஆராய்கின்ற) அப்புத்தியின் சிறுமையோ? பிறிதே கொல் - வேறு யாதாயினுமுளதோ? இ அதிரேகம் மாயை ஆர் அறிவார்—? (எ - று.)

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையும் திருமால் வ்யூகமூர்த்திகளாய்நின்று செய்கின்றாரெனக் கீழ்க்கவியிற்கூறி, இங்குப் பிரமருத்திரர் படைத்தலழித்தல்களைச் செய்கின்றாரெனல் மாறுகொளக்கூறலாகாதோ வெனின்,—ஆகாது: ப்ரத்யும்நனாயிருந்து பிரமனைக்கொண்டு ஸ்ருஷ்டியையும், ஸங்கர்ஷணனாயிருந்து ருத்திரனைக்கொண்டு ஸம்ஹாரத்தையும் நடத்துகின்றனரென்பது கருத்தாதலால். உன்னொக்கவைத்த இருவர்க்குமொத்தி யொருவர்க்கு முண்மை யுரையாய்—"ஒத்தவிடையனும் நான்முகனு முன்னையறியாப் பெருமையோனே" என்றார் பெரியாரும். முன்னொக்கநிற்றி-"முதலாவார்மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்","முதலாந்திருவுருவ மூன்றென்பர் ஒன்றே, முதலாகும் மூன்று

க்கு மென்பர்" என்பன காண்க. முடிவொக்கினென்று முடியாய்—"காற்றை முன்னுடைப் பூதங்களவை சென்று கடைக்கால், வீற்றுவீற்றுற்றுவீவுறும் நீயென்றும் வீயாய்" என்பர் மேல். உனது செய்கை எத்தன்மையோர்க்கும் உணரலரிது என்பது, மூன்றாமடியின் கருத்து. நொப்பம்=நொய்ப்பம்: நொய்ம்மை.பி - ம்:—[1]நிற்றி. [2]முடிவத்தில். [3]என்றும். [4]முடிவாய். [5]என்ன. [6]விடியா. [7]அன்னுப்பம். (உஉ௦ரு)

உருச. வாழு ளளித்தி முடியாம [1]னீதி வருநாளு நிற்றி மறை
யோய், [2]பேணு யுனக்கொர் பொருள்வேண்டு மென்று பெறுவா னரு
த்தி [3]பிழையாய், ஊணு யுயிர்க்கு முயி[4]ராகி நிற்றி யுணர்[4]வாய பெண்
ணி னுருவாய், ஆ[4]ணுகி [5]மற்று மலி[4]யாகி யாரிவ் வதிரேக மாயை
யறிவார்.

(இ - ள்.) மறையோய் - வேதங்களால் துதிக்கப்படுபவனே! வாழ் நாள் அளித்தி - (பிரபஞ்சத்திலுள்ள ஜீவராசிகளுக்கெல்லாம் அவ்வவற்றின் வினைக்குத்தக்கபடி)வாழ்நாளைக் கொடுக்கின்றாய்; முடியாமல் நீதி வரு நாளும் நிற்றி - அழிவடையாமல் இயல்பாகவே எதிர்காலத்திலும் நிற்கின்றாய்; உனக்கு ஓர் பொருள் வேண்டும் என்று பேணாய்-(நீ எல்லாவற்றாலுங் குறைவின்றியிருப்பதனால்) உனக்கு (ஏதேனும்) ஒருபொருள் வேண்டுமென்று விரும்புகின்றாயில்லை; பெறுவான் அருத்தி பிழையாய் - (உன் அடியவர்கள்) பெறுதற்கு ஆசைப்படும்பொருளைத் தவறாதுஅளிப்பாய்: ஊண் ஆய் - நுகர்தற்குஉரிய பொருளாகியும், உயிர்க்கும் உயிர் ஆகி - அந்தராத்மாவாகியும், உணர்வு ஆய - காட்சியறிவுக்கு இலக்காகிற, பெண்ணின் உரு ஆய் - பெண் வடிவ மாகியும், ஆண் ஆகி - ஆண்வடிவமாகியும், மற்றும் - அன்றியும், அலி ஆகி - அலிவடிவமாகியும், நிற்றி - நிற்கின்றாய்; இ அதிரேகம் மாயை ஆர் அறிவார்—? (எ-று.)

வினைக்குத்தக்க பய னளித்தலும், அழிவின்மையும், மறைகளாலுணர்த்தப்படுந்தன்மையும், எல்லாப்பொருளுமுடைமையும், அடியார்கள்வேண்டுவன அளித்தலும், "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங் கண்ணன்" என்றபடி நுகரப்படுமியல்பும், அந்தராத்மத்வமும், ஸர்வ வஸ்துஸ்வரூபத்வமு மாகிய எம்பெருமானது பண்புகள் இச்செய்யுளிற்குறிக்கப்பட்டன. 'ஊணாய்' என்பதற்கு - அந்நமயமாகிய உடம்பாகி யென்று உரைப்பாரு முளர். பி - ம்:—[1]நீதிவழுவாமனிற்றி, நிற்றிவருநாளிறத்தி. [2]பேணு. [3]பிடியாய். [4]ஆதி. [5]மற்றை. (உஉ௦சு)

உருரு. தானந்த மில்லை பலவென்னு மொன்று தனியென்னு மொ
ன்று தவிரா, ஞானந் தொடர்ந்த சுடரென்னு மொன்று நயனந்
[1]தொடர்ந்த வொளியால், வானந் [2]தொடர்ந்த பதமென்னு [3]முன்னை
[4]மறைநாலின் வந்த முறையால், ஆனந்த மென்னு [5]மயலென்னு
மாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) உன்னை - உனதுசொரூபத்தைப்பற்றி,—மறை நாலின் - நான்குவேதங்களிலும், ஒன்று - ஒருசுருதி, தான் - (திருமாலின்சொரூபம்)

தான், அந்தம் இல்லை பல என்னும் - எல்லையில்லாது பலபடிப்படஇருக்கு மென்று சொல்லும்; ஒன்று - மற்றொருசுருதி, தனி என்னும் - ஏகமூர்த்தி யென்று சொல்லும்; ஒன்று - வேறொருசுருதி, தவிரா ஞானம் தொடர்ந்த சுடர் என்னும் - நீங்காத ஞானம்பொருந்திய ஒளிமயமானது என்று சொல்லும்; (ஒன்று)-பின்னுமொருசுருதி, நயனம் தொடர்ந்த ஒளியால் வானம் தொடர்ந்த பதம் என்னும்-கண்ணுக்குப்புலனாகிற ஒளிவடிவத்துடன் [சூரியஸ்வரூபியாய்] ஆகாயத்தைப் பொருந்திய இடமாகக்கொண்டுள்ளது என்று சொல்லும்; (ஒன்று)—,வந்த முறையால் ஆனந்தம் என்னும் - வந்த முறைப்படியே ஆனந்தமய மென்று சொல்லும்; (மற்றொன்று), அயல் என்னும் - (வாக்குக்கும் மனத்துக்கும்) எட்டாதது என்று சொல்லும்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்—? (எ - று.)

வேதங்களை உனது சொரூபத்தை இத்தன்மையதுதா னென்று சுட்டி யுணர்த்தாது பலபடியாகக் கூறுமாயின், வேறுயாவர்தாம் உன்மாயையை அறியவல்லவர்? என்பது, கருத்து. தைத்திரீயத்தில், பரப்பிரஹ்மஸ்வரூபத்தை ஆராயப்புக்கு, முதலில் 'அந்நம்' எனவும்,பின்பு 'ப்ராணன்' எனவும், பின்பு 'மநஸ்' எனவும், அதன்பின்னர் 'விஜ்ஞாநம்' எனவுங் கூறிக் கடைசியில் 'ஆநந்தம்' என்று கூறினமையால்,'வந்தமுறையால் ஆனந்த மென்னும்' என்றான். இச்செய்யுளிற் குறித்த மறைபொருளாகிய சுருதிவாக்கியங்களையும், அவற்றின் ஆழ்பொருளையும் வல்லார்வாய்க் கேட்டுணர்க. பி-ம்:— 1கடந்த வொளியாய். 2துறந்த. 3ஒன்று. 4மறைநாலுமந்தமறியாது. 5அறிவென்னும். (உஉ0எ)

உ௫௲. மீளாத வேத முடிவின்க 1ணின்னை மெய்யாக மெய்யி னினையுங், 2கேளாத வென்று பிற3வென்று சொன்ன கெடுவார்கள் சொன்ன 4கட்வான், மாளாத நீதி 5யிகழாமை நின்க ணபிமான 6மில்லை வறியோர், ஆளாயும் 7வாழ்தி யாசாள்தி யாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ-ள்.) மீளாத-மீளுதலில்லாத [பொய்படாத], வேதம்-வேதங்கள்,— முடிவின்கண் - (தமது) முடிவில் [உபநிஷத்துக்களில்], நின்னை - உன்னை, மெய் ஆக-உண்மைப்பொருளாக[உண்டென்று], மெய்யின் நினையும்-(தமது) உண்மையுணர்வினால் ஆராய்ந்துகூறும்; (அங்ஙனமிருக்கவும்), கேளாத என்று-(கடவுள்முதலியன 'யான் கண்ணுற் கண்டுள்ளேன் எனப் பார்த்தவரொருவர் சொல்லக்) கேட்டிராதவை' என்றும், பிற என்று-(இவை) வேறு காரணம்பற்றியவை என்றும் [தெய்வம் முதலியன உண்மையில் இல்லை: உலகம் இனிதுநடத்தற்பொருட்டுத் தந்திரசாலிகளான பண்டிதர்கள் செய்த கட்டுப்பாடேயாகும் அவை என்றாற்போன்று], சொன்ன—,வறியோர் - அறிவில்லாதவர்களான நாஸ்திகர்கள், சொன்ன கடவால் - (தாம்)கூறிய சொற்களுக்குத் தகுதியாக, மாளாத நீதி இகழாமை நின் கண் அபிமானம் இல்லை கெடுவார்கள் - (ஒருபோதும்) பழுதுபடாத (சாஸ்திரங்களிற் கூறிய) முறைமை பிறழாதபடி உன்னுடைய திருவருட்பார்வைநோக்கத்தை (ஒருபொழு

தும்) பெருமல் நரகத்தில்வீழ்ந்துஅழுந்திவருந்துவார்கள்; (உண்மைப் பொருளாகிய நீயோ), ஆள் ஆயும் வாழ்தி - (பக்தியுள்ள அடியார்கட்கு) ஏவலாள்போன்று எளியவனுயும் வாழ்கிறாய்; அரசு ஆள்தி - (அனைவரையும்)அரசாளுதலுஞ் செய்கிறாய்: இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்—? (எ - று.)

முதல்மூன்றடிகளில், 'வேதவிரோதிகளாய்க் கடவுளும் மறுபிறப்பும் இருவினைப்பயனும் முதலியன இல்லை'என்று சொல்லும் நாஸ்திகர்களை நிரவித்து, நான்காமடியால் எம்பெருமானுடைய சௌலப்பியத்தையும் பரத்வத்தையும் வெளியிட்டார். ஆளாயும்வாழ்தி அரசாள்தி—"பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக் கரிய, வித்தகன்" என்றார் பெரியாரும். "அறிவிலா ரென்னுடைய ரேனு மிலர்" ஆதலால், அறிவில்லாதாரை 'வறியோர்' என்றார். அபிமாநம் - வடசொல்; இங்கு, அருணுக்கம் என்றபொருளைத் தந்தது. ஆள் - ஆளப்படுபவன்; அடியவன். 'ஆள்தி'-உகரச சாரியை தொகுத்தல். நின்கண் அபிமானம் - நினதுகண்ணேட்டமுமாம். பி-ம்:—1நின்றவ் வரமெய்யின் மெய்யின்வினையின். 2கேளாகிநிற்றி, கேளாகநிற்றி. 3வேறு பேசும். 4கடவாய். 5இகழாமல். 6உள்ளவறிவோர்க்கு. 7ஆதி. (உஉ0அ)

உருஎ. சொல் 1லொன் றுரைத்தி பொருளாதி தூய மறையுந் 2துறந்து திரிவாய், வில்லொன் றெடுத்தி சரமொன் றெடுத்தி மிளிர் 3சங்க மங்கை யுடையாய், கொல்லென் றுரைத்தி கொலையுண்டு நிற்றி கொடியாயுன் 4மாயை 5யறியேன், அல்லென்று நிற்றி பகலாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) ஒன்று சொல் உரைத்தி - ஒப்பற்றதான சப்தஸ்வரூபியாகச் சொல்லப்படுகின்றாய்: பொருள் ஆதி-(அச்சொற்களின்) பொருளுமாகிறாய்; தூய மறையும் துறந்து திரிவாய் - பரிசுத்தமான [ஸ்வயம்பிரமாணமாகிற] வேதங்களுக்கும் அப்பாற்பட்டுநிற்பாய்; (பகையழித்தற்காக), வில் ஒன்று எடுத்தி சரம் ஒன்று எடுத்தி - ஒப்பற்றவில்லைக் கையிலேந்தி (அதில்தொடுத்தற்கு) ஒப்பற்றஅம்பையும் எடுக்கின்றாய்: மிளிர் சங்கம் அம் கை உடையாய்- (தனது முழக்கத்தினலேயே பகையழிக்கவல்ல) பிரகாசிக்கிற சங்கத்தை அழகியகையிலுடையாய்; கொல் என்று உரைத்தி-(அரக்கர்க்குப் பகைவனாய் நின்று) 'கொல்' என்று சொல்லுகின்றாய்: கொலையுண்டு நிற்றி - (அரக்கராய் நின்று)கொல்லப்பட்டுங் கிடக்கிறாய்;கொடியாய்-(இங்ஙனம்)மாறுபாடுடையவனே! உன் மாயை அறியேன் - (எவ்வாற்றாலும்) உனதுமாயையை அறிகின்றேனில்லை; அல் என்று நிற்றி - இரவாகவும் நிற்கின்றாய்: பகல் ஆதி - பகலுமாகின்றாய்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்—? (எ - று.)

எல்லாம் கடவுளின்சொரூபமே யாதலால், சொல்லாகவும் பொருளாகவும், கொலைசெய்கிறவனாகவும் கொலையுண்பவனாகவும், இரவாகவும் பகலாகவும் நிற்கின்றாய் என்றார்: இது, முரண்விளைந்தழிவணியின்பாற்படும்; வடநூலார் விரோதாபாஸாலங்காரமென்பர்: சொல்லும் பொருளும் நீயே என மேல்நோக்கில் மாறுபடுகின்றமையும், பகவான் ஸர்வஸ்வரூபி யென்ற

உட்கருத்தை நோக்க மாறுபாடில்லாமையுங் காண்க. 'கொல்' எனல்-வீரவாதம். பி-ம்:—[1]என்று நிற்றி. [2]அறிந்துதொடரா.[3]சங்கை.[4]மாயம்.[5]அறியார்.

உருஅ. மறந்தாயு மொத்தி மறவாயு மொத்தி [1]மயலாரும் யானு மறியேம், துறந்தாயு மொத்தி துறவாயு மொத்தி யொருதன்மை [2]சொல்ல வரியாய், பிறந்தாயு மொத்தி பிறவாயு மொத்தி பிறவாம னல்கு பெரியோய், அறந்தா னிறுத்த [3]லரிதாக வாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) பிறவாமல் நல்கு பெரியோய் - (அடியவர்கள்மீளப்) பிறவாதபடி (அவர்கட்கு முத்தியை) அளிக்கின்ற பெருமைக்குணமுடையோனே! (நீ), மறந்தாயும் ஒத்தி - (இப்பொழுது பலவாறுகக்கவலைப்படுவதனால் உனது ஸ்வரூபத்தை) மறந்தவன்போன்று மிருக்கின்றாய்: மறவாயும் ஒத்தி - (அவதாரத்தின்பயனாகத் துஷ்டர்களையழிக்க உத்தேசித்தலினால் உனது ஸ்வரூபத்தை) மறவாதவன்போன்று மிருக்கின்றாய்; மயல் - (உனது) மாயையை, ஆரும் - (உலகத்தவர்) யாவரும், யானும் - நானும், அறியேம் - அறியும் வல்லமையுடையோ மல்லோம்; துறந்தாயும்ஒத்தி - (இயல்பிலே பற்றற்றிருத்தலால்) துறந்தவன்போன்றுமிருக்கின்றாய்: துறவாயும்ஒத்தி-(நாகபாசத்தினாற் கட்டுண்டவரைநோக்கி மிக இரங்குதலால்) துறவாதவன்போன்று மிருக்கின்றாய்; ஒரு தன்மை சொல்ல அரியாய் - (மறத்தல் மறவாமை துறத்தல் துறவாமைஎன இவ்வாறு மாறான தன்மைகளை ஒருங்கேகொண்டுள்ளதனால்) ஒரு தன்மையில் அடக்கிச்சொல்ல அரியவனாயிருக்கின்றாய்; அறம் தான் நிறுத்தல் அரிது ஆக-தருமத்தைத் தானானதன்மையில் (இருந்துகொண்டே) நிலைநிறுத்தல் முடியாமையினால், (அதனை நிலைநிறுத்தும்பொருட்டு அவதாரஞ்செய்து), பிறந்தாயும்ஒத்தி-(உலகத்திற்)பிறந்தவன்போன்று மிருக்கின்றாய்: பிறவாயும் ஒத்தி - (உலகத்தார்போலக் கருமவசத்தாற் பிறவாமையால்) பிறவாதவன் போன்றுமிருக்கின்றாய்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்—? (எ - று.)

முரண்விளைந்தழிவணி. உலகத்தில் அதருமம் மேலிட்டுத் தருமம் நிலைகுலையும்போதெல்லாம் திருமால் திருவவதரித்துத் துஷ்டர்களையழித்துத் தருமத்தைச் சீர்பெறச்செய்தலினால் 'அறந்தானிறுத்தலரிதாகப் பிறந்தாயு மொத்தி' என்றும், எம்பெருமானது திருவவதாரம் அவனதுஸங்கல்பத்தினால்நிகழவதேயன்றி உலகத்தவர்பிறப்புப்போலக் கருமத்தினால் நிகழாமையால் 'பிறவாயு மொத்தி' என்றுங் கூறினன்: "மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்" என்றார் கீழும். 'அறந்தானிறுத்த லரிதாக' என்பதை, முன்னிரண்டடிகளோடுங் கூட்டலாம். பி-ம்:—[1]மயலாகிமற்றெவ்வினையும். [2]சொல்லலரிதால். [3]அரிதாகும், அரிதாகி. (உஉசஂ)

உருகூ. வினைவர்க்க முற்று முடனே படைத்தி யவை[1]யெய்தி [2]யென்றும் [3]வினையா, நினைவர்க்கு நெஞ்சி னுறுகாம முற்றி [4]யறியாமை நிற்றி [5]மனமா,முனைவர்க்கு [6]முத்தி யமரர்க்கு [6]மற்றிம் முழுமூட [7]ரென்னு முதலோர், அனைவர்க்கு மொத்தி [8]யறியாமை யாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ-ள்.) வினைவர்க்கம் முற்றும் - (ஒவ்வோருயிர்களின் புண்ணியபாவ ரூபங்களான இரு) வினைகளின் தொகுதிகட்கெல்லாம் (ஏற்ப), உடனே-ஒருசேர, படைத்தி - (அவ்வுயிர்களை) உடலெடுக்கச் செய்கிறாய்: அவை எய்தி என்றும் விளையா - அவ்விருவினைகள் (தம்மைக்) கிட்டி எப்போதும் [ஒருபோதும்] பயனைவிளைக்காதபடி, நினைவர்க்கு - (உன்னைத்)தியானிப்பவர்கட்கு, நெஞ்சின் உறு காமம்உம் - (அவர்களின்) மனத்தினுள்ளேயிருக்கிற (எவ்வகை) விருப்பத்தையும், முற்றி-நிறைவேற்றி, அறியாமை - (நீயே விருப்பத்தை நிறைவேற்றுவிப்பவனென்பது வெளிக்குப்) புலனாகாதவாறு, மனம் ஆ நிற்றி - (அவரது)மனமாகவும் (மறைந்து) நிற்கின்றாய்: முனைவர்க்கும் - முனிவர்கட்கும், முத்தி அமரர்க்குஉம்-மோட்சலோகத்துள்ள நித்திய சூரிகட்கும், மற்று - அன்றியும், முதலோர்-முதல் மூர்த்தியரான பிரமருத்திரர்கட்கும், முழுமூடர் - முழுமூடர்க்கும், என்னும்-என்கின்ற, இ அனைவர்க்கும்-இந்த எல்லார்க்கும், அறியாமை-அறியமுடியாமலிருத்தலாகிய தன்மையில்,ஒத்தி:—இ அதிரேகம்மாயை அறிவார் யார்—? (எ - று.)

முதலடியின் முற்பகுதி - ஆன்மாக்கள் உரைமெழுக்கிற்பொன்போலப் பிரகிருதியிலே இலயித்துக்கிடக்கும்போது ஸர்வேசுவரன் 'இவைகள் இறகொடிந்த பட்சிபோல இங்ஙனம் கிடக்கவொண்ணாது: கரசரணாதி அவயவங்களைப்பெற்று நம்மைப்பற்றி ஈடேறவேண்டும்'என்று தோன்றிய சங்கற்பத்தினால் ஸமஷ்டிஸ்ருஷ்டிசெய்தமையைத் தெரிவிக்கும். படைத்த உயிர்களில் இருவினைப்பயனை நுகர்ந்து அலேச்சற்படுவதினின்று நீங்கி ஈடேறவேணுமென்று எவரேனும் நினைப்பின் அவர்களை யங்ஙனமே கடாட்சித்து இருவினைகளைத்தொலைத்து அவர்களின் மனோபீஷ்டத்தைப் பூர்த்திசெய்துமுத்தியையளிக்கின்றாய்:இவ்வாறு செய்யினும், நீ செய்வது வெளிக்குப் புலனாவதில்லை: இவ்வாறு அவர் கருதுவதற்குக் கருவியான மனமும் நீயே:உன்நிலை யறியமுடியாமைநிற்பதில் ருஷிகளோடு பிரமருத்திராதியரோடு முழுமூடரோடு வாசியில்லையென்பதாம்.பகவான் இந்திரியங்களில் தான் மனமாக-நிற்பனென்பதை "இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி"என்று ஸ்ரீகீதையில் அருளிச்செய்திருத்தலுங் காண்க. விளையா = விளையாமல்:நினைவர்க்கும் என்றவிடத்து உம்மைபிரித்துக் காமம்என்பதனோடு கூட்டப்பட்டது. பி-ம்:—[1]செய்தி. [2]ஒன்றும். [3]விழையாய், பிழையாய். [4]அறியாமனிற்றி, அறிவாகிநிற்றி, அறிவாக நிற்றி. [5]நெறியார். [6]ஒத்தி. [7]என்றிம். [8]அறியாமல். (உ௨கக)

உகூ௦. எறிந்தாரு மேறு படுவாரு மின்ன பொருள்கண் டிரங்குபவருஞ், [1]செறிந்தாரி னுண்மை யெனலாய தன்மை தெரிகின்ற தூன்னதிடையே, பிறிந்தார் பிறிந்த [2]பொருளோடு போதி பிறியாது நிற்றி பெரியோய், அறிந்தா ரறிந்த பொருளாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) பெரியோய் - பெரியவனே! எறிந்தாரும் - (ஆயுதங்களை) எறிந்தவர்களும், ஏறு படுவாரும்-(அவ்வாயுதங்களால்) ஊறுபடுபவர்களும், இன்ன பொருள் கண்டு இரங்குபவரும்-இத்தன்மையைப்பார்த்து மன

மிரங்குபவர்களும், (ஆகிய), செறிந்தாரின் - (இங்கு) நெருங்கியிருக்கின்றவர்களுள், உண்மை எனல் ஆய தன்மை-(நீ) கலந்திருக்கின்றாயென்ற விஷயம், உன்னது இடையே-உன்னிடத்திலே, தெரிகின்றது-(அறிஞர்க்கு) விளங்குகின்றது; பிறிந்தார் பிறிந்தபொருளோடு போதி-அறிவீனர் நீங்கியுள்ள ஞானமாகிய பொருளோடு (நீயும் அவர்களைவிட்டுப்) பிரிந்திடுகின்றாய்; பிறியாது நிற்றி-அங்ஙனமே பிரிந்திருந்தாலும் அவர்களிடத்தும் அந்தர்யாமியாய்க்கொண்டு) பிரியாமல் நிற்கின்றாய்; அறிந்தார் அறிந்த பொருள் ஆதி - தத்துவஞானமுடையார் தமது உண்மையுணர்வினால் ஆராய்ந்தறிந்த மெய்ப்பொருளுமாகின்றாய்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்—? (எ-று.)

எறிந்தார் - அரக்கர்கள்; எறுபடுவார் - இலக்குமணன் முதலியோர்; இன்னபொருள் கண்டிரங்குபவர் - தேவர்கள் முதலியோர்: இவர்களிடத்தெல்லாம் சிறிதும் வேறுபாடின்றி ஒருதன்மையாகக் கலந்திருக்கின்றாயென்பது, முன்னிரண்டடிகளின் கருத்து. பிறிந்தார் பிறிந்தபொருளோடு போதி-உண்மையறிவினர்க்கே புலப்படுந்தன்மையனான நீ அஜ்ஞர்களுக்கு அறிவின்மையால் விளங்கமாட்டாய் என்றபடி. பரமாத்மாவை யுணராதவரிடத்தும் அப்பரமாத்மாவின் அந்தர்யாமித்வம் ஒழிகின்றில தென்ற உண்மை, மூன்றாமடியில் விளக்கப்பட்டது. 'பிறிந்தார் பிறிந்தபொருளோடு போதி' என்பதற்கு - மாறுபட்டவர்களான பகைவர்களிடத்து மாறுபாட்டுடனே எதிர்த்துச்செல்கின்றாயென்று உரைப்பாருமுளர்; பிறிந்தபொருள் - பிறிதற்குக் காரணமான பொருள்: எனவே, மாறுபாடாம். எறு-ஆயுதங்கள் எறுவதனால் உண்டாவது என ஊறுபாட்டுக்குக் காரணக்குறி: இச்சொல் இப்பொருளில் வருதலை "வாளேறு" முதலிய இடங்களிலுங் காண்க. இச்செய்யுள் ஒருபிரதியிலில்லை. பி-ம்:—1செறிந்தாய. 2பொருளேயளித்தி. (உஉகஉ)

உகூக. பேராயி ரங்க ளுடையாய் பிறந்த பொருடோறு நிற்றி [1]பிரியாய், தீராய் [2]பிரிந்து திரிவாய் [3]திறந்தொ றவைதேறு [4]மென்று [5]தெளியாய், கூராழி யங்கை யுடையாய் திரண்டோ [6]ருருவாதி கோட லுரிபோல், ஆராயி னேது மிலையாதி யாரிவ் வதிரேக மாயை யறிவார்.

(இ - ள்.) பேர் ஆயிரங்கள் உடையாய்-ஆயிரந்திருநாமங்களையுடையவனே! பிறந்த பொருள்தோறும்-தோன்றிய பொருள்களெல்லாவற்றினிடத்தும், பிரியாய் நிற்றி - நீங்காமற் கலந்துநிற்கின்றாய்: தீராய்-அழிவில்லாய்: பிரிந்து திரிவாய்-(பலவகை அவதாரங்கள்கொண்டு உனது நிஜரூபத்தினின்று) பிரிந்துவந்து திரிகின்றாய்: திறந்தொறு அவை தேறும் என்று தெளியாய்-அவ்வவதாரவகைகளிலெல்லாம் அவ்வவ்வினங்கள் (உனது நிலைமையை) அறியுமென்று தெளியப்படாதவனாயுள்ளாய்; கூர் ஆழி அம் கை உடையாய் - கூரிய சக்கராயுதத்தை யேந்தும் அழகிய திருக்கையையுடையவனே! திரண்டு ஓர் உரு ஆதி - விராட்ஸ்வரூபமாய்த்திரண்டு ஓர்உருவமாகிறாய்; ஆராயின் கோடல் உரி போல் எதும் இலை ஆதி - (உனதுதன்மையை) ஆராயுமிடத்து வெண்

காந்தட்கிழங்கையுரித்தால் உள்ளே ஒன்று மில்லாதவாறுபோல ஒன்றும் விளங்காதவனுகிருய்; இ அதிரேகம் மாயைஅறிவார் ஆர்—? (எ - று.)

திருமால் மீனம்முதலிய திருவவதாரங் கொள்ளும்போது அவ்வவ்வடிவத்துக்குத்தக்கவாறு குணங்தொழில்களை மேற்கொண்டு நடப்பதனால் இவ்வுலகத்துப்பொருள்கள் அவனதுநிலையைத் தேருதுநிற்கு மென்பது, 'திறந்தொறவைதேறுமென்று தெளியாய்' என்பதன் கருத்து. 'கோடலுரிபோலாராயி னேதுமிலை' என்றவிடத்து, ''உரிக்கின்ற கோடலி னுந்து கந்தமென வொன்று மின்றி, விரிக்குந்தொறும் வெறும் பாழாய்விடும்'' என்றது அறியத்தக்கது. இதுவரை பதினெருசெய்யுள்கள் - 'ஆரிவ்வதிரேகமாயையறிவார்'என்பதைமகுடமாக்கொண்டு வந்தன.பி-ம்:—1பெரியோய்.2பிறிந்து, பிறந்து. 3பிறந்தவவைதேயும். 4ஒன்று. 5சிதையாய். 6உருவாகிச். (உஉகங)

உகூஉ.—கருடன் இராமனை நெருங்குதல்.

என்றின்ன பன்னி யழிவா [1]னெறிந்த வெறிசோதி [2]கீற விருள்போய்ப், பொன்றுன்னி யன்ன வெயில்வீசு கின்ற பொருள்கண்டு நின்ற புகழோன், நின்றுன்னி யுன்னி யிவன்யாவ னென்று [3]நிமிர்கின்ற வெல்லை நிமிரச்,சென்[4]றுன்னு முன்ன ருடனாயி னானிவ் வுலகேழுமூடு சிறையான்.

(இ-ள்.) என்று இத்தன்மையனவான துதிச்சொற்களைக் கூறி(நெஞ்சு) உருகுபவனான கருடன் (தான் விரைந்துவரும்போது) வீசிய விளங்குகிற (அவனது தேக)காந்தி கிழித்தழித்தலால் இருட்டிநீங்கிப், பொன்னினெளி பொருந்தினற்போன்ற சிவந்தஒளி பரவுகிற தன்மையை, நிலைபெற்ற கீர்த்தியை யுடையவனான ஸ்ரீராமன் பார்த்துநின்று, '(இங்ஙனம் ஒளிவீசிவருகிற) இவன்யார்?' என்று எண்ணிஎண்ணித் தலை நிமிர்ந்துநிற்கிற சமயத்தில்,இந்த ஏழுலகங்களையும் மறைக்கத்தக்க [மிகப்பரந்த] சிறகுகளையுடையவனான அக்கருடன், நேராகப்பாய்ந்துசென்று நினைக்குங்காலத்திற்குள் (அவ்விராமபிரானிடம்) சேர்ந்தான்; (எ - று.)

'உலகேழுமூடு சிறையான்' என்றது - சிறகின்பரப்பை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. கருடனதுஉடம்பு பொன்மயமானதனால், 'பொன்றுன்னியன்ன வெயில் வீசுகின்ற' என்றார். வெயில் - சூரியகாந்தி; அதுபோலவிளங்குகிற சிவந்தஒளிக்கு இங்குஇலக்கணை. உடனுதல் - கூடுதல். பி-ம்:—1நிறத்தவெரி. 2சிதறியிருளைப்.3நினைகின்ற.4உன்னிமுன்னம்.(உஉகச)

உகூங.—கருடன் சமீபித்ததனால் நாகபாசம் நீங்குதல்.

வாசங் கலந்த மரைநாள நூலின் வகையென்ப தென்னை மழையென்று, ஆசங்கை கொண்ட கொடைமீளி யண்ணல் [1]சரராமன் [2]வெண்ணெ யனுகுந்,தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ லறிவாள ரென்றிம் முதலோர், பாசங் கலந்த பசிபோ லகன்ற பதகன் றுரந்த வுரகம்.

(இ - ள்.) பாவியான இந்திரசித்து பிரயோகித்த(அஸ்திரத்தினலாகிய) நாகங்களானவை,—மேகமென்றுசந்தேகங்கொள்ளுதற்கிடமான ஈகையை

யுடைய வலிமைகொண்ட பெருமையிற்சிறந்த சராமமுதலியாரது வெண்ணெயென்னும்பெயர் முன்னேபொருந்தப்பெற்ற ஊர்க்கு [திருவெண்ணெய் நல்லூர்க்கு] வந்து சேர்ந்த வேதம்வல்ல அந்தணர்களும் செவ்வியசொற்களாலமைந்த நூல்களில் தேர்ந்த அறிவுடையவர்களான புலவர்களும் என்னும் இவர்முதலாயினோரது சுற்றத்தார்கள் அடைந்துள்ள பசி (அவ்வள்ளல் வரையாது கொடுத்தலினால் நீங்குதல்)போல (இருந்தஇடந்தெரியாதபடி) ஒழிந்துவிட்டன; (அங்ஙனந் துணிபட்ட நாகங்களோ), வாசனைபொருந்திய தாமரையினது தண்டினுள்ளே உள்ள (மெல்லிய) நூலின் தன்மையையடைந்தன என்று சொல்வது என்ன சிறப்பு? (எ - று.)

அந்நாகபாசம் இருந்தஇடமுந் தெரியாது முழுதும் அழிந்தமையால், அதற்குத் தாமரைத்தண்டின் நூலும் உவமை கூறத்தகாததாயிற்றென்க. கைம்மாறுகருதாது கொடுக்குங் கொடைமிகுதியை யுடைமையால், சராமனுக்கு 'மழையென்று ஆசங்கைகொண்ட' என அடைமொழி கொடுத்தார். 'சராமன்'—திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப முதலியாரது தம்பி: கண்ணப்பமுதலியார்க்குப் பின்பிறந்தவரென்பர்.

இதிகாசமாயும் பகவானுடையசரித்திரமாயு முள்ள இவ்விராமாயணத்தில் நரஸ்துதிசெய்யலாமோ எனின், கம்பர் இளம்பிராயம்முதல் நெடுநாளாகத் தமக்கு அந்நவஸ்திராதிகள்கொடுத்து இவ்விராமாயணத்தைத் தம்மைப் பாடுமாறுசெய்த மகாபுருஷர்களைக் கூறுவது உபகாரஸ்மிருதிக்கு அறிகுறி யாதலாற் குற்றமாகா தென்க. அன்றி, ப்ரஸ்துதமாகிய உபமேயமுகத்தால் அவ்வள்ளல்களைக் கூறாது அப்ரஸ்துதமாகிய உபமானமுகத்தாற் கூறினதும் ஒருபரிகாரமாம். இவரதுதமையனான சடையப்பமுதலியார் இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்து கூறப்பட்டுள்ளார். இவ்வாறே புகழேந்திப்புலவர் தமதுநளவெண்பாவில் முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கியையும், வில்லிபுத்தூரார் தமதுபாரதத்தில் வரபதியாட்கொண்டானையும் ஆங்காங்குச் சிறப்பித்துக்கூறுவதையும் அறிக: வடமொழியிலும் இவ்வழக்கமிருத்தலை 'ராகவபாண்டவீயம்'முதலிய நூல்களிற் காணலாம். "வண்டார்வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான், தண்டார்புனை சந்திரன்சுவர்க்கி-கொண்டாடும், பாவலன்பா னின்றபசிபோல நீங்கிற்றே, காவலன்பானின்றகலி" என்ற நளவெண்பாவோடு இச்செய்யுளை ஒப்பிடுக.

மரை - முதற்குறைவிகாரம். 'செஞ்சொல்' என்றது - நூலுக்கு, அடையடுத்த ஆகுபெயர். 'மறைவாணர்' என்றது - வடமொழிப்புலவர்களையும், 'செஞ்சொல் அறிவாளர்' என்றது-செந்தமிழ்ப்புலவர்களையுங் குறிக்குமென்னலாம். முதலோர்என்றது - கூத்தர், பாணர் முதலியோரை. பாசம் - கயிற்றின்பெயர் அதுபோலப் பிணிப்பையுண்டாக்கும் அன்புக்கு ஆய், அது அவ்வன்பிற்கு இடமான சுற்றத்தாரைக் குறித்தலால்,இருமடியாகுபெயராம். மறைவாணர்முதலியோரது சுற்றத்தாரின் பசி நீங்குதல் கூறவே, அம்மறைவாணர் முதலியோரதுபசி நீங்குதல் அருத்தாபத்தியாற் பெறப்படும்:

"அழுக்கறுப்பான்சுற்றம்...கெடும்" என்னுமிடத்திற்போல. அகன்ற—முற்று. பதகன்=பாதகன். பி - ம்:—1 சடையன்றன். 2வெண்ணே. (உஉகரு)

உ௲சு.—இதுவும் அது.

பல்லாயி ரத்தின் முடியாத பக்க மவைவீச வந்து படர்கால்
செல்லா நிலத்தி [1]னிருளாதல் செல்ல வுடனின்ற வாளி [2]சிதறுற்று
எல்லா விதத்து முணர்வோடு [3]நண்ணி யிவனே பிழைக்கு மெனவோர்
வல்லா னொருத்த னிடையே படுத்த வடுவான மேனி வடுவும்.

(இ - ள்.) பல ஆயிரக்கணக்கிலும் அடங்காத [மிகப்பலவான] இறகுச் சட்டைகளையுடைய (அந்தக்கருடபகவானது இரண்டு) சிறகுகளும் (அடித்துக்கொள்ளுதலால்) வந்துபரவுகின்ற காற்றானது (வீழ்ந்தோரின்உடற்குவியலாற்)செல்லமுடியாததான பூமியிற் பொருந்திய இருட்டு நீங்கும்படி வீசுதலினால்,(இலக்குமணன்முதலியோருடைய)உடம்புகளில் தைத்திருந்த அம்புகள் சின்னபின்னமாய்ப்போய், (அவர்களுடைய)உடல்களில்(நாகபாசத்தால் உண்டான) தழும்புகளும்,—எவ்வகையிலும் அறிவோடுபொருந்திய 'இவனும் (நன்னெறியினின்று)தவறுவனோ?' என்று(யாவருஞ்)சொல்லும்படி தெளிந்த வல்லமையுடையனான ஒரு ஞானியினிடத்து (முக்குணவசத்தால்) நடுவில் நேர்ந்த பாவத்தை யொத்துநீங்கின; (எ - று.)

ஞானநுஷ்டானமுடையாரிடத்து நிகழும் பாவம் கடவுளருளால் நீங்குவதுபோல,இவ்வீரர்களுக்கு நாகபாசத்தோடு அப்பாசத்தாலுண்டான தழும்புகளும் கருடபகவானது சிறகுகளின்காற்றினால் முற்றும் நீங்கின என்க. தத்துவஞானமுடையனாய்க் கடவுளையே ரக்ஷகனாக நம்பி நன்னெறியிலேயே நடக்கும் ஒருவனிடத்து அபுத்திபூர்வகமாக ஏதேனும் பாவம் நேர்ந்தால் அதனைக் கடவுள் பொறுத்தருளுகின்றானென்பது நூற்றுணிபு. ஆன-முற்று; உவமவுருபு. வடு - குற்றமும், தழும்பும். பெரியதிருவடியினது இருபக்கத்துச்சிறகுகளும் அநேக இறகுச்சட்டைகள் நிறைந்தனவாயிருத்தலை, உயர்வுநவிற்சியணிவகையால் 'பல்லாயிரத்தின்முடியாத பக்கம்' என்றார். பக்கம்=பக்ஷம்; வடசொல். இருளாதல், ஆதல் - முதல்வேற்றுமைச்சொல்லுருபின்தன்மையது. ஓர் வல்லான்-வினைத்தொகை; ஓர்தல்-ஆராய்ந்துதெளிதல்.

இச்செய்யுளுக்கு விநோதரசமஞ்சரியிற் காணப்படுகின்ற பாடமும் பொருளும் வருமாறு:—

"பல்லாயிரத்தின்முடியாத பக்கமவை வீச வந்த படர்கால்
செல்லாநிலத்தி னருளோடுசெல்ல வுடனின்ற வாளி சிதறற்
றெல்லாமவித்து முணர்வோடு மெண்ணி யறனேவிளைக்குமுரவோன்
வல்லானொருத்தனிடையே படுத்த வடுவான மேனிவடுவும்.

இதன்பொருள்:—பன்னகவைரியென்றுசொல்லப்பட்ட கருடனாகிய ஆபத்சகாயன் திருப்பாற்கடலிலிருந்து கிருபையுடனே அநேகமாயிரங்காலங் கழிந்தாலும் ஓரிறகேனுமுதிராது அழியாதிருக்கின்ற தனதுநெடியசிறகைத் திசைத மட்டும்விரித்து அசைத்துக்கொண்டு அதிவேகமாய்ப்பறந்துவர,அந்தச் சிறகடிக்காற்றானது யுத்தபூமியிற் பிரவேசிக்க,அதனால்,அங்குள்ளவர்களுடைய

சரீரத்தை யிறுக்கி ஒடுக்கி நிலைபெயரவொட்டாமற் கட்டியிருந்த நாகபாசங்கள் பட்டுப்பட்டென்று அற்றுப்போயின; அற்றவுடனே, சகலஇந்திரியங்களையும் அடக்கி மூவாசைகளையும் பற்றறவிட்டு ஆத்மஉஜ்ஜீவநம் இதுவே யென்று விவேகத்தோடு நிச்சயித்து யதிஆச்சிரம தர்மத்தையே மேன்மேலும் வளர்க்கின்ற திடசித்தமுடைய ஒரு தத்துவஞானிவிஷயத்தில் மூடாத்மாக்கள் அகங்காரத்தால் விளைக்கும் பழிபாவங்கள் அவனை யணுகாது மாயுந் தன்மை போல, அந்நாகபாசத்தாற் கட்டுப்பட்ட இளையபெருமாள் முதலானவர்களுடைய திருமேனிவடுக்களும் தோன்றாமல் மாறிப்போயின" என்பதாம்.

கம்பர் தமதுஇராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றச்சென்றபோது, அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் 'தில்லைமூவாயிரவரது அங்கீகாரத்தோடு வந்தால் அரங்கேற்றலாம்' என்று சொல்லியனுப்பிவிட, அதற்காகக் கம்பர் சிதம்பரதலத்திற்போய்ச் சிலதினங்கள் வசித்து முயன்றும் அத்தில்லை மூவாயிரவர்களெல்லாரும் ஒருங்குகூடாததைக் குறித்து வருந்தியிருக்கையில், ஒருநாள் அத்தீக்ஷிதர்களிலொருவரது மகன் பாம்புகடித்து இறக்க, அவ்வுடலைச் சம்ஸ்காரஞ்செய்தற்கு அவர்களனைவரும் ஒருங்கே கூடியிருக்குஞ் சமயம்பார்த்துக் கம்பர் இராமாயணத்துடன் அங்குச்சென்று தாம் வந்த காரணத்தைத் தெரிவித்து, இந்திரசித்து இலக்குமணன்முதலானவர்கள்மீது பிரயோகித்த நாகபாசம் துணிபட்டசெய்தியைக்கூறும் இச்சந்தர்ப்பத்திற் சில செய்யுள்களை யெடுத்துச்சொல்லி வேறுமூன்று வெண்பாக்களையும் பாடின மாத்திரத்தில், கடித்தபாம்பு அங்குத்தோன்றி விஷத்தைமீட்டுக்கொண்டு செல்ல, அப்பிள்ளை உயிர்பெற்றெழுந்தது என்று கூறும் ஐதிகியம் இங்கு அறியத்தக்கது. பி-ம்:—[1]அருளாளர், இருளோடு. [2]சிதைவுற்று. [3]எண்ணியறனையிழைக்குமரவோன். (உஉகசு)

உகூரு.—வாநரங்களெல்லாம் பிழைத்தெழ, அரக்கர் பிழைத்திடாமை.

தருமத்தி னொன்று மொழுகாத செய்கை தழுவிப் புணர்ந்த
[1]தகையால், உருமொத்த வெங்கண் [2]வினைதீய வஞ்ச ருடல்[3]உய்ந்த
தில்லை யுலகின்,கருமத்தி னின்ற கவிசேனை வெள்ள மலர்[4]மேலவ் வள்
ளல் கடைநாள், [5]நிருமித்த வென்ன வுயிரோ டெழுந்து நிலைநின்ற
தெய்வ நெறியால்.

(இ - ள்.) தருமமார்க்கத்திற் சிறிதும் நடவாத செய்கையைப்பொருந்தியுள்ளதன்மையினால்,இடிபோன்றகொடுங்கண்ணையுடைய தீவினைகளையுடைய அரக்கர்களின் (உயிர்நீத்த) உடம்புகள் உயிர்பெற்றெழுந்தனவில்லை; தாமரைமலரில்வாழ்கிற அந்தப்பிரமதேவன் பிரளயமுடிவான பிற்காலத்தில் [ஸ்ருஷ்டிகாலத்தில்](மீளவும்)படைத்த பிராணிகள்போல லோக(ஸம்ரக்ஷண)காரியத்திலே முயன்றுநின்ற வாநரசேனைவெள்ளங்கள் தெய்வசங்கற்பத்தால் உயிர்பெற்றெழுந்து ஊக்கங்கொண்டு நின்றன; (எ - று.)

அரக்கர்கள் எப்பொழுதும் அதருமத்தையே மேற்கொண்டு ஒழுகுபவராதலால், அவர்களிலிறந்தவர் பிழைத்தற்கு யாதொருவகையும் நேர்ந்திடவில்லை; இராமனதுபக்கத்தாரோ அறநெறிதவறாதுநிற்றலால் அதன்பயனு

கத் தெய்விகமாய்க் கருடபகவான் வந்துசேரப் பிழைத்தெழுவாராயினரென்பது, கருத்து. தாம் கூறுங் கதைமுகத்தால் நீதிகளைத் தெரிவிப்பதே காப்பியங்களின்நோக்க மாதலின், அதற்குஏற்ப, இங்குப் பாவபுண்ணியங்களின் விளைவை வெளியிட்டார். இறந்த வாநரவீரர்கள் பிழைத்தெழுந்ததற்கு, பிரளயத்திலழிந்த உயிர்கள் மீண்டும்பிரமனாற் படைக்கப்படுதலை உவமைகூறினர்.
பி-ம்:—1வகையால். 2அரவஞ்ச. 3உய்த்தது. 4மேலே. 5திருமித்தது. (உ௨௬௭)

உகூகூ.—இராமனது மகிழ்ச்சி.

இளையா னெழுந்து தொழுவானை [1]யன்பி னிணையார மார்பி னணையா, விளையாத துன்பம் விளைவித்த தெய்வம் வெளிவந்த தென்ன வியவாக், [2]கிளையாரி னின்ன துணையோரை யாவி[3]கெழுவா வெழுந்து தழுவா, [4]முளையாத திங்க [5]ளுநகிரான் முன்வந்து முறைநின்ற வீரன் மொழிவான்.

(இ - ள்.) நீதிவழியில்நிற்கின்ற வீரனாகிய இராமபிரான்,—(உணர்வு பெற்று)எழுந்து(தன்னை)வணங்குபவனான இலக்குமணனை அன்பினால் ஹாரங்கள்பொருந்தப்பெறுகிற (தனது) மார்பில் இறுகத்தழுவி,—நேரிடத்தகாத [மிகக்கொடிய] துன்பத்தை யுண்டாக்கின தெய்வந்தானே (அதனைநீக்கக் கருடவடிவத்தைக் கொண்டு)பிரதியட்சமாக வந்தது என்று கொண்டாடி,—சுற்றத்தவர்போன்ற [அன்பிற்சிறந்த] இந்த (வானரவீரர்களாகிய) சிநேகிதர்களை உயிரைத்தழுவுதல்போன்று எழுந்துதழுவி,—உதயமாகுந்தன்மையில்லாத [எப்பொழுதும் ஒரேதன்மைகொண்டுவிளங்குகின்ற] சந்திரனைப்போன்றநகங்களையுடையவனாகிய கருடபகவானது எதிரில்வந்து(பின்வருமாறு) கூறுபவனாயினன்; (எ - று.)—அதனை அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

துணையோரைத் தழுவா என இயையும். இணையாரமார்பு - தனக்கு ஏற்ற ஆரத்தைத் தரித்த மார்புமாம். கருடபகவான் பிரதியட்சமாக வந்து நாகபாசத்தாலுயிர்ப்பின்றியிருந்த யாவரையும் பிழைப்பித்துத் தனதுமனத்துயரைநீக்கியதனால், அவனை இராமபிரான் 'விளையாததுன்பம்விளைவித்த தெய்வம் வெளிவந்தது' என வியப்பானாயினன். துன்பத்திலும்விட்டுப்பிரியாது உடனிருந்து தாமும் அதனை அனுபவிக்கின்ற உற்றஉறவினரை, தன் திறத்தில் உயிரைத்துறந்தும் உதவிபுரியும் பிராணசிநேகிதரான வாநரர்கட்கு உவமைகூறினர். எழுந்துதொழுவான் இளையானைஎன உருபுபிரித்துக் கூட்டுக. முளையாததிங்கள்-இல்பொருளுவமை. பிறைச்சந்திரன்-நகத்திற்கு, நிறமும் வடிவும் பற்றிய உவமை. பி-ம்:—1அன்பொடு.2கிளையார்களன்ன.3கெழுவத்தொடர்ந்து. 4முளையான. 5எயிறன். (உ௨௬௮)

வேறு.

உகூஎ.—மூன்றுகவிகள் - ஸ்ரீராமன் கருடபகவானுக்கு முகமன்கூறுதலைத் தெரிவிக்கும்.

ஐயநீ [1]யாரை யெங்க ளருந்தவப் [2]பயத்தி னன்வந்து
எய்தினை யுயிரும் வாழ்வு மீந்தனை யெம்ம னோராற்
கையுறை கோடற் கொத்த காட்சியை யல்லை மீட்சி
செய்திற [3]மிலையா லென்றான் றேவர்க்குந் [4]தெரிக்கி லாதான்.

(இ - ள்.) தேவர்கட்கும் (தனது உண்மைநிலையை) அறிவியாதவனான இராமபிரான், (கருடபகவானைநோக்கி), 'ஐயனே! நீ யார்? எங்களது அருமையான தவத்தின் பயனால் (இங்கு) வந்துசேர்ந்தாய்;(நாகபாசத்தாலழிந்தவர் யாவர்க்கும் அத்துன்பத்தைநீக்கி) உயிரையும் வாழ்க்கையையுங் கொடுத்தாய்; எம்போலியரிடத்திற் காணிக்கைப்பொருளைப் பெற்றுக்கொள்ளுதற்குத் தக்க தோற்றமுடையவனல்லாதவனாயிருக்கின்றாய் [மிக்கபெருந்தன்மையுடையனாயிருக்கின்றாய் என்றபடி];(நீ செய்த இப்பேருபகாரத்திற்கு ஈடாகப்)பிரதியுபகாரஞ் செய்யும்வகை(எங்கட்கு)இல்லை' என்றான்; (எ - று.)

உயிர்கொடுத்ததோடு நில்லாமல்அவரவர்களதுஉடம்பிலுண்டான வடுக்களையுந் தீர்த்து அவர்களெல்லாரும் அக்கணத்திலேயே மீண்டும் உற்சாகங் கொண்டு போர்தொடங்குமாறு புரிந்தமையால், 'உயிரும்வாழ்வு மீந்தனை' என்றனனென்க. கையுறை-கையில் உறுவது[பொருந்தியுள்ளது] சிறியார் பெரியாரைக் காணும்போது கையிற்கொண்டு செல்லும்பொருள். மீட்சிசெய்திறமிலை-நீ செய்தது, நாங்கள் முன் உனக்கு ஓர்உதவியுஞ்செய்யாதிருக்கத் தக்ககாலத்திற் பயன் தூக்காது புரிந்த பேருதவி யாதலால் அதற்குஏற்ற கைம்மாறு எங்களாற்செய்யமுடியாது என்றபடி. பி-ம்:—[1]யாரே. [2]பயத்தின்வந்திங்கு. [3]இல்லை. [4]தெரிக்கொணுதான். (உ௨கக)

உ௬அ. [1]பொருளினி யுணர வேறு [2]புறத்துமொன் றுண்டோ புந்தித்
தெருளினை [3]யுடைய ராயிற் செயலருங் கருணைச் செல்வம்
[4]மருளினை [5]யிரவின் வந்த வாழ்க்கையீ தாகின் வாயால்
அருளினை யென்னி னெய்த வரியன வுளவோ வைய.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) (பின்னும் அக்கருடபகவானை நோக்கி இராமபிரான்கூறுவான்:--), தலைவனே!மயக்கத்தோடு வருந்துதற்கிடமான இவ்விரவிலே(பிறர்க்குச்)செய்யமுடியாத சிறந்த அருளுடனே (நீ)வந்ததனாலுண்டான (எங்களுடைய)வாழ்க்கையானது இதுவாயிருக்கவும்,வாயினாலும் (எங்களைப்பற்றி)உபசாரமொழி கூறுகின்றாயென்றால்,அறிவின்தெளிவையுடையவராயிருந்து(ஒருவர்)ஆலோசிக்குமிடத்து, இப்பொழுது (உனக்கு உபமானமாகிய) பொருள் (இவ்வுலகத்திலல்லாமல்) வேறுஉலகத்திலும் அறிந்துசொல்வதற்கு ஒன்று உளதாகுமோ? (இவ்வாறு சிறந்தஉனக்குக்) கிடைத்தற்கு அரியனவான (எங்களாற்கொடுக்கத்தக்க) பொருள்களும் இருக்கின்றனவோ? [இல்லை: ஆதலால் எங்களாற் கைம்மாறுசெய்யஇயலாது என்றபடி]; (எ-று.)

மயங்கிவருந்துதற்கிடமான இவ்விரவில் வந்து எங்களை உயிர்பிழைப்பித்ததே பேரருளின் செயலாயிருக்கவும் அதனோடுநில்லாது உபசாரமொழியுங்கூறுகின்றாய்:எவ்வுலகத்தும் ஒப்பில்லாதஉனக்கு எங்களாற் செய்யத்தக்க கைம்மாறு யாது உளது? என்றவாறு. இனி, 'பொருளினியுணரவேறுபுறத்துமொன்றுண்டோ' என்பதற்கு நீசெய்த இப்பேருதவிக்கு உரிய கைம்மாறாகக்கொடுக்கத்தக்க பொருள் எவ்வுலகத்திலுமில்லை யென்றும், வாயால் அருளினையென்னின் எய்த அரியனஉளவோ என்பதற்கு-(நீ இன்னானென்

பதை உனது) வாயினால் (எங்கட்கு) அருளிச்செய்தனையானால் எங்கட்குப் பெறுதற்கும் அரியனவும் உள்ளனவோ என்றும் பொருள்கூறலாம். இதற்கு மாறாக ஒருவர்கருதுவராயின் அது அவருடைய பேதைமையேயாமென்பார், 'புந்தித்தெருளினையுடையராகின்' என்றார். 'செயலருங்கருணைச் செல்வ' என்றுஎடுத்து, கருடபகவானைக்குறித்த விளி யெனலுமாம். "அருட்செல் வஞ் செல்வத்துட்செல்வம் பொருட்செல்வம், பூரியார்கண் ணுமுள" என்ற திருக்குறளிற் பரிமேலழகர் 'அருளான்வருஞ் செல்வமாவது - உயிர்களை யோம்பி அவ்வறத்தான் மேம்படுதல்' என்றது இங்கு உணரத்தக்கது. மருளின் னை இரவின்னனப்பிரிக்க. பி - ம்:—1பொருளினை. 2புறத்திறன். 3உடையையாகிச், உடையராகிற்.4மருளினில். 5வரவில், வரவே. (உஉ௨௦)

உசுகூ. 1கண்டிலை முன்பு சொல்லக் 2கேட்டிலை கடமின்றன் 3றெம்பாற்
4கொண்டிலை கொடுப்ப தல்லாற் குறையிலை யிதுவின் கொள்கை
யுண்டிலை யென்ன நின்ற வுயிர்தந்த வுதவியோனே
பண்டிலை நண்பு நாங்கள் செய்வதென் பகர்தி 5யென்றான்.

(இ - ள்.) உண்டோ இல்லையோ என்றுசந்தேகிக்கும்படி நின்ற (இலக்குமணன்முதலியோரது) உயிர்களைக் கொடுத்த மகோபகாரியே!' (உனக்கும் எங்கட்கும்) பழமையான சினேகமில்லை; (இதுவரையில் எங்களை நீ) பார்த்ததுமில்லை; முன்பு(எங்களைப்பற்றிப் பிறர்)சொல்லக் கேட்டிருக்க மாட்டாய்; (நீ எங்கட்குக்) கொடுப்பதேயல்லாமல் எம்மிடத்தில் கடனாகவும் யாதொன்றையும் பெற்றுக்கொண்டாயில்லை; (நீ) ஒருகுறையையுமுடையா யில்லை: உனது தன்மையோ இவ்வாறிருக்கின்றது; நாங்கள் (உன்திறத்துச்) செய்தற்குரிய கைம்மாறு யாது? சொல்வாயாக என்றுகூறினான்; (எ - று.)

உலகத்தில் நண்பர்கள் ஒருவர்க்கொருவர் உதவுவது இயற்கையே: அவ்வாறு நண்பில்லாவிடினும், பரிசயமுடையோர் பரஸ்பரம் உபகாரஞ் செய்துகொள்வதுமுண்டு; அஃதின்றியிருப்பினும், கேள்விமூலமாக அறிந் தவர் உதவுவதும் ஒருபரியாயமாம்; எங்கட்கும் உனக்கும் இவ்வாறு ஒரு வகைத் தொடர்பும் இல்லையாகவும், எங்களால் ஆகவேண்டுவதொரு குறை பாடும் உனக்கு இல்லாமலிருக்கவும், இதற்குமேம்பட்ட உதவியில்லையென்று சொல்லத்தக்க உயிரளித்தலாகிய பேருதவியை நீ புரிந்தாயென்றால், உன் திறத்து யாங்கள் செய்வது யாதோ? என இராமபிரான் கருடனுக்கு முகமன் கூறினனென்க. 'கடமின்றெம்பாற்கொண்டிலை' என்பதைப் பின்வரும் 'குறையிலை' என்பது சாதித்தலால், நோடர்நிலைச்செய்யுட்குறியணியாம்; 'பாடத்தின் முறைமையினும் பொருண்முறைமை வலியுடைத்து' என்ற நியாயம்பற்றி, 'பண்டுநண்பிலை' என்றதுமுன்னர்க்கூட்டியுரைக்கப்பட்டது; பிறவிடங்கட்கும் இஃதுஒக்கும். கொடுப்பதல்லாற் குறையிலை யென்றுஇயை த்து உரைப்பினுமாம். பி-ம்:—1கண்டிலம். 2கேட்டிலம். 3உம்மாற். 4கொண் டிலம். 5என்றார். (உஉஉக)

உ௰.—கருடன் இராமனிடம் விடைபெற்றுச் செல்லுதல்.

பறவையின் குலங்கள் காக்கும் 1பாவகன் பழைய நின்னோடு
உறவுள தன்மை யெல்லா முணர்த்துவ 2னரக்க னோடம்

மறவினை முடித்த பின்னர் வருவ[3]னின் னுழையன் [4]மாயப்
பிறவியின் பகைஞ நல்கு விடையெனப் பெயர்ந்து போனான்.

(இ - ள்.) பறவைக்கூட்டங்களைப் பாதுகாக்கின்ற [பக்ஷிராஜனாகிய] பரிசுத்தமாக்குந் தன்மையுடைய கருடபகவான், (இராமபிரானைநோக்கி), 'மாயத்தையுடைய பிறப்புக்குப் பகைவனே! இராக்கதனாகிய இராவணனோடு (நேர்ந்துள்ள) அந்தப்போர்த்தொழிலை (நீ) முடித்தபின்பு [ராவணவதஞ்செய்த பின்பு], (நான்) உன்னிடத்துவந்து உன்னோடு (எனக்கு) உள்ள பழமையான உறவின் தன்மைமுழுதையும் விளங்கச்சொல்வேன்; (எனக்கு இப்பொழுது) விடைகொடுப்பாயாக' என்றுசொல்லி (விடைபெற்றுக்கொண்டு அவ்விடம்) விட்டுநீங்கிச் சென்றான்; (எ - று.)

இராமபிரானிடத்துக் கருடனுக்கு உள்ள பழையஉறவு - தானனதன்மையில் வாகனமாகவும் கொடியாகவும்இருத்தல். பிறவிக்கு மாயமாவது - தன்னிடத்துச் சிறிதும் ஸாரமில்லாதிருக்கவும் ஸாரமுள்ளதுபோலத் தோன்றி மருட்டுந்தன்மை. மாயப்பிறவி - மாயையினாலாகிய பிறப்புமாம். தன்னைச்சரணமடைந்தவர்க்கு அப்பிறவியைநீக்கி முத்தியளிக்கும் முதற்கடவுளே யென்பான், 'பிறவியின்பகைஞ' என்று விளித்தான். பாவகன் - வடசொல். பி-ம்:—[1]பாரகன். [2]அரக்கரோட்டை, அரக்கனோடிம். [3]என்றுரைத்து, என்றுணர்த்தி, என்னுழையின். [4]மாயாப். (உ௨௨௨)

இங்கே ஒருபிரதியில் செய்யுளொன்று காணப்படுவது வருமாறு:—
பறவைநா யகன்று னேகப் படருறு துயரம் நீங்கிக்
கறவையுங் கன்றும் போலக் களிக்கின்ற மனத்த ராகி
இறைவனு மிளைய கோவும் யாவரு மெழுந்து நின்றார்
மறையொரு நான்கும் மண்ணும் வானமு மகிழ்ந்த மாதோ.

உ௨௩.—இராமபிரான் கருடாழ்வானைச் சிலாகித்தல்.

ஆரிய னவனை நோக்கி யாருயி ருதவி யாதுங்
காரிய மில்லான் போனான் கருணையோர் [1]கடன்மை யீதாற்
பேரிய ளாளர் செய்கை யூதியம் [2]பிடித்து மென்னார்
மாரியை நோக்கிக் கைம்மா றியற்றுமோ வைய மென்றான்.

(இ - ள்.) சிறந்தவனாகிய இராமபிரான் (விடைபெற்றுச்சென்ற) அக்கருடபகவானைப்பற்றி,—'(போர்க்களத்தில் நாகபாசத்தால் விழுந்துகிடந்த வீரர்யாவர்க்கும்) அருமையான உயிரை அளித்து (நம்மிடத்திற்பெறும்) காரியம் எதுவும் இல்லாதவனாய்ப்போனான்; பேரருளுடையோரது தன்மை இவ்வாறேயிருக்குமன்றோ? பெருந்தன்மையையுடைய நன்மக்கள் (தாம்) செய்த உபகாரத்திற்குப் பிரதிபலனைப் பெறுவோமென்று கருதார்; இவ்வுலகத்துஉயிர்கள் (தங்கட்கு மழைபெய்து உதவுகின்ற) மேகங்களைக் குறித்துப் பிரதியுபகாரஞ்செய்யுமோ?' என்றான்; (எ - று.)

கருடபகவான் நாகபாசத்தால் மூர்ச்சித்துவிழுந்துகிடந்த யாவரையும் உயிர்பிழைப்பித்துப் பிரதிபலனொன்றும்விரும்பாது சென்றான் னென்னுஞ் சிறப்புப்பொருளை, 'கருணையோர் கடன்மை ஈது' என்ற பொதுப்பொருள்

கொண்டு சாதித்ததனால், முன்னிரண்டடி - வேற்றுப்பொருள்வைப்பணி யின்பாற்படும். 'கருணையோர்கடன்மையீது' என்றதை மூன்றாமடியால் விவரித்தார். உலகத்துஉயிர்கள் யாதொருகைம்மாறுஞ் செய்யாவாகவும் அவற்றிற்குஉபயோகமாக மேகம் மழைபெய்துஉதவுதல் போல, பெரியோர்களும் கைம்மாறுநோக்காது உதவுவரென்பது, பின்னிரண்டடியின் கருத்து. ''கைம்மாறுவேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங்கொல்லோவுலகு'' என்ற திருக்குறளின் பொருள்முழுதும் இங்கு அமைந்துள்ளது. கைம்மாறு - தாம் ஒருவர்க்குச் செய்த உபகாரம் அவர்கையினின்று மீண்டும் தம் கைக்கு மாறுவது என்பதுபற்றி வந்த பெயர். பி-ம்:—[1]கருமம், கடமை. [2]பிடித்துமென்றான், பிடிப்பரன்றால். (உஉஉ௩)

உஎஉ.—இதுவும், அடுத்தகவியும் - அநுமானது விருப்பத்தின்படி அனைவரும் ஆரவாரஞ்செய்தலைத் தெரிவிக்கும்.

இறந்தன னிளவ [1]லென்று விறைவியு மிடுக்க ணெய்தும்
மறந்தன ருறங்கு கின்ற [2]வஞ்சரு மறுகி மீளப்
பிறந்தன ரென்று [3]கொண்டோர் பெரும்பயம் பிடிப்ப ரன்றே
யறந்தரு சிந்தை [4]யன்ப வார்த்துமென் றனுமன் சொன்னான்.

(இ - ள்.) அநுமன்,—(இராமபிரானைநோக்கி,) 'தருமம்பொருந்திய மனத்தில் அன்புடையவனே! (நாம்இப்பொழுதுமகிழ்ச்சிக்குஉரிய செய்கையொன்றுஞ்செய்யாதுவாளாவிருந்தால்), இலக்குமணன் இறந்தானென்று எண்ணித் தலைவியாகிய சீதையும் துன்பமடைவள்; (நாம் வாளாவிராமற் பேராரவாரஞ்செய்தாலோ, கவலையின்றி) மெய்ம்மறந்துதூங்குகின்ற வஞ்சனைக்குணமுள்ள அரக்கர்களும் '(போர்க்களத்துஇறந்த வானரர்யாவரும்) மீளவும் உயிர்பெற்றெழுந்தார்கள்' என்றுநினைத்து மனங்கலங்கிப் பெரியதோர்அச்சங்கொள்வார்களன்றோ; (ஆதலின், நாம்) பேராரவாரஞ்செய்வோம்' என்று சொன்னான்; (எ - று.)

அரக்கர்கள் போர்க்களத்தில் அவ்வப்பொழுதுநிகழும் தங்கள்வெற்றிகளைச் சீதையினிடந் தெரிவிப்பார்களாதலால் அவர்கள்மூலமாக இலக்குமணனதுஆபத்தையறிந்து சீதை மனங்கலங்குவளாதலின் அவளது அக்கலக்கத்தையொழித்தற்பொருட்டும், வானரவீரர்களுடன் இலக்குமணனும் இறந்தானென்றுகவலையற்று உறங்குகிற அரக்கர்கட்குப் பேரச்சமுண்டாக்குதற்பொருட்டும், நம்பக்கத்துவீரர்கள் இறவாது உயிருடனிருக்கின்றார்களென்பதை யறிவிக்குமாறு யாவரும் பேராரவாரஞ் செய்யவேண்டும் என அநுமன் இராமபிரானிடத்து விண்ணப்பித்தனனென்க. இறைமை-தலைமை: அதனையுடையவள், இறைவி. 'இறந்தவர் மீண்டும் உயிர்பெற்று எழுகிற மகிமை இவர்களிடத்து உள்ளதனால், இனி நாம் என்செய்தாலும் இவர்கள் நாசமுறாது மீளவுங்கிளர்ந்தெழுவரே: நாம் இதற்கு என்செய்வது!' என்று அரக்கர்கள் முன்னினும்மிகுதியாக அச்சங்கொள்வ ரென்பான், 'ஓர் பெரும்பயம் பிடிப்பர்' என்றான். பி-ம்:—[1]என்றால். [2]வஞ்சகர். [3]சாலப், கொண்டே. [4]ஐய.

உஎ௩. அழுகிதென் றண்ணல் கூற வார்த்தனர் கடல்க ளஞ்சிக்
[1]குழைவுற வனந்த னுச்சிக் [2]குன்றநின் றண்ட கோளம்

[3]ஏழுமிசை யுலக மேன்மே லேங்கிட விரிந்து [4]சிந்தி
மழைவிழ மலைகள் கீற மாதிரம் [5]பிளக்க மாதோ.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனாகிய இராமபிரான்('நீ சொல்வது) தகுதியே' என்று (உடன்பட்டுக்)கூற, (உடனே, வானரவீரர்கள்),-(ஏழு)கடல்களும் அஞ்சிக் கலங்கவும், (கீழிருந்து பூமியைத்)தாங்கிநின்ற ஆதிசேஷனது தலைகள் வலியழிந்தொடுங்கவும், உலகவுருண்டை வெடித்து மேலெழவும், உலகத்தார்யாவரும் மிகஅதிகமாக ஏக்கங்கொள்ளவும், மேகங்கள் நிலைகுலைந்து [கரு வழிந்து]சிதறிவிழவும், மலைகள் பிளவுபடவும், பெரியதிக்குக்கள் பிளவுபடவும், பேராரவாரஞ்செய்தார்கள்; (எ - று.)

'அழகிது' - அங்கீகாரவார்த்தை. இச்செய்யுள், ஆரவாரத்தின் மிகுதியை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. இந்தப்பாடல்முதற்கொண்டே சில பிரதிகளில் படைத்தலைவர்வதைப்படலம் என்று காண்கிறது. ஒருபிரதியில் இந்தச்செய்யுளில் நாகபாசப்படலம் முடிய, அடுத்த செய்யுளில் மேற்படலம் தொடங்குகின்றது. பி-ம்:—[1]குழையுற. [2]குன்றினின்று. [3]எழுவிழ, எழினிரை. [4]சிந்த. [5]பிளப்ப. (உஉஉரு)

உஎச.—அப்பேரொலியை இராவணன் கேட்டல்.

பழிப்பருஞ் [1]சிந்தை யாள்பாற் சிந்தனை படரக் கண்கள்
[2]விழிப்பிலன் மேனி சால வெதும்பினன் [3]ஈசன் வேலுங்
குழிப்பரி தாய [4]மார்பை மன்மதன் கொற்ற வாளி
[5]கிழிப்புற வுயிர்ப்பு [6]நீங்கிக் கிடந்தவா ளரக்கன் கேட்டான்.

(இ-ள்.) பழிப்பில்லாத மனத்தையுடையளான சீதையினிடத்தில் (தனது)மனஞ் சென்றதனால், (ஒருபொருளையும்) கண்கள்கொண்டு திறந்து பார்த்தலுஞ்செய்யானாய், உடம்பு மிகத்தாபமடையப்பெற்று, சிவபிரானது சூலாயுதமும்துளைத்தற்கு அரியதான [மிகவலிய] (தனது) மார்பை மன்மதனது வெற்றியையுடைய மலரம்புகள் ஊடுருவிச்செல்லச் சுவாசமின்றிக்கிடந்த வாளாயுதமேந்திய அரக்கனாகிய இராவணன், (வானரவீரர்கள் செய்த அப்பேராரவாரத்தைக்) கேட்டான்; (எ - று.)

இராவணன் தன்னைச் சிறைப்படுத்திப் பலவகையாக வேண்டியும் அச்சமுறுத்தியும் வசமாக்கிக்கொள்ள முயலவும், சீதை மனஞ் சிறிதுஞ் சலியாது, தனக்கு அரக்கரூரில் நேர்ந்த மிக்கதுன்பநிலையிலும் தனதுகணவனையே நினைத்திருந்த உத்தமியாதலால், அவளை 'பழிப்பருஞ்சிந்தையாள்' என்றார். 'பழிப்பருஞ்சிந்தையாள்பாற் சிந்தனைபடர' என்றதனால், சீதை தன்னை த்ருணப்ராயனாகஎண்ணிக் கண்ணெடுத்துப்பார்த்தலுஞ் செய்யாதிருக்கையிலும் இராவணன் இடைவிடாது அவளிடத்துக் காதல்கொண்டிருந்தனனென்பது எடுத்துக்காட்டப்பட்டது; இந்த ஒருதலைக்காமத்தை ரஸாபாஸமென்பர், அலங்காரநூலுடையார். மன்மதாவஸ்தை பலவற்றுள் 'சிந்தனை படர' என்றதனால் காதலித்தபொருளினிடத்தே மனம்பதிதலும், 'கண்கள் விழிப்பிலன்' என்றதனால் பிறபொருள்களிடத்துவெறுப்பும், 'மேனிசாலவெதும்பினன்' என்றதனால் தாபமும், 'உயிர்ப்புநீங்கிக்கிடந்த' என்றதனால்

மூர்ச்சையும் கூறப்பட்டன. இவை, மரணமொழிந்த மற்றை யவஸ்தைகட்கும் உபலக்ஷணம். 'ஈசன்வேலும் குழிப்புஅரிதாய மார்பு' என இராவணனதுமார்பின் வலியைச் சிறப்பித்துக்கூறியவாறு. "ஒண்ணுதற்கோஒ வுடைந்ததே ஞாட்பினுள், நண்ணாரு முட்குமென் பீடு" என்ற திருக்குறள், இச்செய்யுளின் பின்னிரண்டடிகளுக்கு மேற்கோளாகத்தக்கது. மன்மதனது பாணங்கள் - தாமரைமலர் மாமலர் அசோகமலர் முல்லைமலர் நீலோற்பலமலர் என்பன. இவை, மலருருவமாய் மிகமெல்லியனவா யிருந்தும், மூவுலகையும் வென்ற மகாவீரனாகிய இராவணனையுங் கலங்கச்செய்ததனால், 'கொற்ற வாளி' எனப்பட்டன. 'விழிப்பதுமுகிழ்ப்பதாகிவெதுப்பினமேனிமேலும்' என்று ஒருபிரதியில் இரண்டாமடி காண்கிறது. பி-ம்:—1மேனியாள்பாற். 2விழிப்பவன். 3ஈசனாலும். 4மார்பு, மார்பின். 5கிழித்திட, கிழித்துற. 6வீங்கிக்.

௨௭௫.—இலங்கையில் இராவணனும் சீதையுமே அவ்விரவில் துயிலின்றியிருத்தல்.

தாதைசொற் றலைமேற் கொண்ட தாபதன் றரும மூர்த்தி
1ஈதைக ளர்க்கு நாமத் திராமனை யெண்ணி யேங்குஞ்
சீதையு மவளை யுன்னிச் 2சிந்தனை 3தீர்ந்துந் தீராப்
பேதையு மன்றி யவ்வூ 4ரியாருளர் துயில்பெ றாதார்.

(இ-ள்.) (தனது) தந்தையின் கட்டளையை மேன்மையாக அங்கீகரித்த தவவடிவத்தையுடையவனும் தருமத்தைநிலைநிறுத்தத் திருவவதரித்தவனும் (சொன்னமாத்திரத்தில் அச்சொன்னவர்களுடைய) துன்பங்களையெல்லாம் நீக்கவல்ல திருப்பெயரையுடையவனுமான இராமனை (எப்பொழுதும்) தியானித்து வருந்துகிறசீதையும், அசசீதையையே நினைத்து மனமழிந்தும் (அவளிடத்துள்ள மோகத்தினாலும் விதிவலிமையினாலும்) உயிர்நீங்காத மூடனான இராவணனுமன்றி அவ்விலங்கையில் தூங்காதவர் எவர்உளர்?

தலைமேற்கொள்ளல்-சிரஸாவகித்தல். தருமமூர்த்திஎன்றதற்கு-தருமமே ஒருருவெடுத்தாற்போன்றவன் எனினுமாம். ஈதை=ஈதிஎன்னும் வடசொல் திரிபு. ஈதைகள் தீர்க்கும்நாமம்—"தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சென்மமு மரணமுமின்றித் தீருமே, இம்மையே யிராமவென் றிரண்டெழுத்தினால்" என்றது காண்க. சிந்தனைதீர்ந்துந் தீராப்பேதை என்பதற்கு - சீதை நமக்குக் கிட்டமாட்டா ளென்று மனத்தில் ஆசையொழிதற்குக் காரணம் உறுதியாக உண்டாயிருந்தும் அவளிடத்து ஆசைநீங்காது அவள்நிமித்தமாகத் தனக்குத்தானே கேடுவிளைத்துக்கொள்ளும் அறிவிலி என்று கருத்துப்படப் பொருளுரைப்பினுமாம். 'கீழ்வாளரக்கன் கேட்டான்' என்றுகூறியதற்கு ஏற்ப, இச்செய்யுளினால், அதற்குக்காரணமாக அவன் விழித்திருத்தல் ஏதுவுடன் உரைக்கப்பட்டது. இராவணன் தன்மை கூறுவார், வேறொன்றையும் மனத்தில்நினையாது தன் கணவனாகிய இராமனையே இடைவிடாது நினைத்திருக்கும் மகாபதிவிரதையாகிய சீதையின் செய்தியையும் உடன்கூறினார். பி-ம்:— 1ஈதிகள், ஈதகள், ஏதமே. 2சிந்தையுள். 3துயரம், திரிந்து. 4ஆருளர். (௨௨௨௭)

உஎசு.—இந்திரசித்து பகைவென்றே னென்றதைக் குறித்து இராவணன் பரிகசித்தல்.

சிங்கவே [1]றசனி யேறு கேட்டலுஞ் [2]சீற்றச் சேனை
பொங்கிய தென்ன மன்னன் பொருக்கென வெழுந்து போரில்
மங்கினர் பகைஞ ரென்ற [3]வார்த்தையே வலிய தென்னு
அங்கையோ டங்கை [4]கொட்டி யலங்கறோள் [5]குலுங்க நக்கான்.

(இ - ள்.) அரசனாகிய ஆண்சிங்கம்போன்ற இராவணன்,—பேரிடிபோன்றஅவ்வாரவாரத்தைக் கேட்டவுடனே,—'கோபத்தையுடைய(வானர)சேனை (போர்க்குச்) கிளர்ந்தெழுந்தது'என்று (உட்கொண்டு) விரைவாக(ப் படுத்தலை விட்டு)எழுந்து, 'பகைவர்கள் போரில் இறந்தனர்'என்று(இந்திரசித்து)கூறிய வார்த்தையோ மிக்கவலிமையுடையது!' என்று இகழ்ந்து, உள்ளங்கையோடு உள்ளங்கை (சேரத்)தட்டி, (வெற்றி) மாலையையணிந்த (தனது) தோள்கள் குலுங்கும்படி சிரித்தான்; (எ - று.)

தன்மகனான இந்திரசித்தின்சொல்லைநம்பிப்பகைவர்களிறந்தார்களென்று கவலையற்றிருந்த இராவணன் எதிர்பாராது வானரர்கள் மகிழ்ச்சியோடுசெய்யும் பேராரவாரத்தைக் கேட்டவுடனே திடுக்கிட்டெழுபவனாயினனென்க. முதலடியில் ஆண்சிங்கம் பேரிடியைக்கேட்டாற்போல இராவணன் அப்பேராரவாரத்தைக் கேட்டன னென்ற கருத்து அமையும். மன்னன்சிங்கவேறு எனக் கூட்டுக. சிங்கவேறு என்பது - பொருளால் உயர்திணையாதலின், 'நக்கான்' என்னும் உயர்திணைமுடிபு கொண்டது. சிங்கவேறாகிய மன்னன் என்று கூட்டியுரைப்பினுமாம். வார்த்தையே,ஏ-இகழ்ச்சி. வலியது-பிறகுறிப்புவகையால், சிறிதும் வலியிலது என்ற இகழ்ச்சிப்பொருளை . வற்புறுத்தும்: எதிர்மறையிலக்கணை. கைகொட்டிச்சிரித்தது-தன்மகனது வார்த்தை பொய்யாயிற்றே என்பதுபற்றிய பரிகாசத்தினால்: இங்கு நகை, எள்ளல்பற்றி வந்ததாம்.பெருநகைசெய்யும்போது தோள்குலுங்குதல்,இயல்பு. பி-ம்:— [1]இடித்த தென்ன. [2]சீற்றத்தெய்வம். [3]வார்த்தையை. [4]தாக்கி. [5]துலங்க. (உஉஉஅ)

உஎஎ.—இதுவும், அடுத்த கவியும் - இராவணன் தன்னில் தானே சொல்லுதலைத் தெரிவிக்கும்.

[1]இடிக்கின்ற தசனி யென்ன [2]விரைக்கின்ற திராமன் போர்வில்
வெடிக்கின்ற தண்ட மென்னப் படுவது தம்பி வின்னாண்
அடிக்கின்ற [3]தென்ன வந்து செவிதொறு மனுமனார்ப்புப்
பிடிக்கின்ற துலக மெங்கும் பரிதிசே யார்ப்பின் பெற்றி.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) இராமனது போர்செய்தற்குஉரிய வில்லானது, இடி இடியின் றதுபோலப் பேரொலிசெய்கின்றது; (அவனது)தம்பியாகிய இலக்குமணனுடைய வில்லினது நாணியோ, இவ்வண்டகோளம் வெடிக்கின்றதோ என்று சந்தேகிக்கும்படி ஒலிக்கின்றது; அநுமானுடைய ஆரவாரமோ, அறைந்தாற்

போல(என்னுடைய)காதுகளிலெல்லாம் வந்து தாக்குகின்றது; சூரியகுமாரனை சுக்கிரீவனது ஆரவாரத்தின் தன்மை உலகம்முழுதும் பரவுகின்றது.

வில்லினது ஓசை, டங்காரம் எனப்படும்; அது, வில்லின் நாணியைக் கைவிரலால்தெறித்தலாற் பிறக்கும். முதன்மூன்றடிகளில் உவமையணியிருத்தல் காண்க. இராவணன் அநுமானது வீரச்செயலை முன்னமே நன்கு கண்டிருத்தல்பற்றி அவனிடத்து மிக்க அச்சங்கொண்டுள்ளானாதலால், அவனது ஆர்ப்பை 'அடிக்கின்றதென்ன வந்து செவிதொறும்பிடிக்கின்றது' எனக் கூறுவானாயினன். இராவணனுக்குச் செவிகள் இருபதாதலால், 'செவிதொறும்' எனப்பட்டது. 'பிடிக்கின்றது'என்பது முன்னுள்ள 'அநுமனார்ப்பு' என்பதனோடும், பின்னுள்ள'பரிதிசேயார்ப்பின்பெற்றி'என்பதனோடுஞ் சென்றியைவது, இடைநிலைவிளக்காம்: இதனை வடநூலார் மத்யமதீபம் என்பர். பி-ம்:—1இடிக்கின்ற.2இசைக்கின்ற(ர)விசைக்கின்ற.3என்னைவந்து. (உஉஉக)

உஎஅ அங்கத 1னவனோ வார்த்தா 2னரந்தர மார்க்கின் றானும்
வெங்கத நீலன் 3மற்றை வீரரும் வேறு வேறு
பொங்கின ரார்த்த வோசை 4யண்டத்தும் புறத்தும் போன
சங்கை5யொன் றின்றித் தீர்ந்தார் 6பாசத்தைத் தரும 7நல்க.

(இ - ள்.) அவ்வங்கதனும் ஆரவாரிக்கின்றான்; கடுங்கோபத்தையுடைய நீலனும் ஆகாயத்தில்ஒலியெழுமாறு கர்ச்சிக்கின்றான்; (இவர்களன்றி)மற்றை வாநரவீரர்யாவரும், தனித்தனியே (மனத்தில்)உற்சாகங்கொண்டு ஆரவாரித்ததனாலுண்டான ஒலிகளானவை, இவ்வண்டகோளத்திலும் வெளியிலுஞ் சென்றுபரவின; (ஆதலால்),—தருமதேவதை அருளுகின்றதனால், சிறிதுஞ் சந்தேகம்இல்லாமல் (எதிரிகளெல்லாம்) நாகபாசத்தினின்று தப்பிப்பிழைத்தார்; (எ - று.)

ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களுடைய வின்னாணொலியையும் வாநரவீரர்களுடைய ஆரவாரத்தையுங் கேட்டு, இராவணன் 'நாகபாசத்தால் உயிரிழந்தவர்யாவரும் அறக்கடவுளின் உதவியால் நிச்சயமாகப்பிழைத்திருக்கவேண்டும்' என ஊகித்தறிந்தனனென்க. இராமனது பக்கத்தார் பகைவரும் மதிக்கும்படி பேரறத்தினையுடையாரென்பது, 'தருமநல்க' என்ற இராவணனது வார்த்தையினால் விளங்கும். 'வேறுவேறு பொங்கினரார்த்த ஓசை' என்றதனால், ஒவ்வொருவருடைய ஆரவாரமும் தனித்தனிதெரியும்படி தெளிவாகவுள்ளது என்றபடி. பாசத்தை=பாசத்தினின்று என வேற்றுமைமயக்கம். அவனோ, ஓகாரம் - சிறப்பு. பி-ம்:-1அவனும். 2அனந்தரம். 3மற்ற. 4அண்டத்தின். 5ஒன்றில்லை. 6பாவத்தை. 7மாய்க்க. (உஉஙo)

உஎகூ.—இராவணன் இந்திரசித்தின்மாளிகைக்குச் செல்லுதல்.

என்பது சொல்லிப் 1பள்ளிச் 2சேக்கையின் 3றிழிந்து வேந்தன்
ஒன்பது கோடி வாட்கை 4யரக்கர்வந் 5துழையர் 6சுற்றப்
பொன்7பொதி விளக்கங் 8கோடிப் பூங்குழை மகளி ரேந்தத்
தன்பெருங் கோயி லின்று மகன்றனிக் கோயில் சார்ந்தான்.

(இ-ள்.) என்று (தன்னிலே தான்) சொல்லிக்கொண்டு,—(ராக்ஷஸ)ராஜனாகிய இராவணன்,—(இனிச்செய்யவேண்டுவதைப்பற்றிஆலோசித்துப்) படுக்கையினின்றுஇறங்கி,வாளைக்கையிலேந்தியவர்களான ஒன்பதுகோடி ராக்ஷஸர்கள்(தன்)பக்கத்தவர்களாய்ச் சூழ்ந்துவரவும், அழகிய காதணியையுடைய கோடிக்கணக்கான மாதர்கள் பொன்னாற்செய்யப்பட்ட விளக்குக்களை யேந்திவரவும்,தனது பெரியஅரண்மனையிலிருந்து(புறப்பட்டுத்தனது) மகனான இந்திரசித்தினது ஒப்பற்றமாளிகைக்குப் போய்ச்சேரலானான்; (எ - று.)

மகளிர் விளக்கையேந்தி உடன்வருதலும், மெய்க்காவலரான வீரர்கள் ஆயுதபாணிகளாய் உடன்செல்லுதலும்,அரசர்கட்குஉரிய உபசாரமாம். வந்து சுற்ற=சுற்றிவர. பி-ம்:—[1]பன்னி. [2]சேக்கையின். [3]எழுந்து. [4]அரக்கரோடு. [5]உழையிற். [6]சுற்றிப். [7]பொலி, பதி. [8]கோடிப்பூங்குழன். (உஉகூக)

உஅ௦.—நான்குகவிகள் - இராவணன்சென்றபோது மகளிர்உடன்சென்றதைக் கூறும்.

தாங்கிய துகிலார் [1]மெள்ளச் சரிந்துவீழ் [2]குழலார் [3]தாங்கி
வீங்கிய வுயிர்ப்பார் விண்ணை விழுங்கிய முலையார் [4]மெல்லத்
தூங்கிய விழியார் தள்ளித் துளங்கிய நடையார் [5]வல்லி
வாங்கிய மருங்குன் மாத [6]ரனந்தரான் மயங்கி வந்தார்.

(இ - ள்.) கொடியும்(ஒப்பாகாது) பின்வாங்கிய இடையையுடையரான மகளிர்,—(அவிழ்ந்திருத்தலால் கையினால்)தாங்கிய அரையாடையையுடையவரும், மெல்லச்சோர்ந்து தொங்குகின்ற கூந்தலையுடையவரும், தடைப்பட்டு(ப் பின்) மிகுதியாகவெளிப்படுகின்ற பெருமூச்சையுடையவரும், வானத்தை இடைவெளியில்லாமற்செய்கின்ற தனங்களையுடையவரும், மெதுவாகத்தூங்கிய கண்விழியையுடையவரும், தட்டுத்தடுமாறிய நடையையுடையவருமாகித் தூக்கமயக்கத்துடன்(இராவணனுடைய அருகில்)வந்தார்கள்.

இச்செய்யுளில் தூக்கமயக்கத்தோடு மகளிர்சென்றமையை அழகுபடக் கூறியிருத்தலால், தன்மைநவிற்சியணியாம். பி-ம்:—[1]மெல்லச். [2]குழலைத். [3]தாக்கி. [4]ஆடித், விம்மித். [5]வள்ளி. [6]அனந்தராய், அனந்தலாய். (உஉகூஉ)

உஅக.பானமுந் துயிலுங் கண்ட கனவும்பண் [1]கனிந்த பண்ணைக்
கானமுந் [2]தள்ளத் தள்ளிக் களியொடுங் [3]கள்ளங் கற்ற
மீனினும் பெரிய வாட்கண் விழிப்பது முகிழ்ப்ப தாக
வானவர் மகளிர் போனார் மழலையஞ் சதங்கை [4]மாழ்க.

(இ - ள்.) தேவமாதர்கள்,—மதுபானமும் தூக்கமும் (தாங்கள் அப்பொழுது) கண்டகனவுக்களும் மகளிர்கூட்டத்தின் இசையினியபாட்டுக்களும் (தம்மைச்சுழற்றித்) தள்ளவும், மதக்களிப்புடன் (பொருந்தி), வஞ்சனையைப் பழகி மீனினுஞ்சிறந்து வாள்போன்ற (தமது) கண்கள்திறப்பதும் மூடுவதுமாகவும்,—(தமதுகாலிலணிந்த) ஙிரம்பாவொலியையுடைய அழகியசதங்கைகள் சிறிதேஒலிக்கவும், தடுமாறி (இராவணனுடன்) சென்றார்கள்; (எ - று.)

இங்கு 'வானவர்மகளிர்' என்றது - வானுலகத்தை வென்றபொழுது இராவணனால் அங்குநின்று கவரப்பட்டு அவன்குறிப்பின்படி யொழுகுகிற தெய்வமகளிரை. கள்ளிருட்பொழுதிற் செல்லுகையில் குடிமயக்கமும் குறைத்தூக்கமும் கண்டகனவின் தொடர்ச்சியும் மிகஇனியபாடலின் ஓசையும் தம்மைச் சுழற்றித்தள்ள, தூக்கம்நன்குதெளியாததனால் கண்கள் முகிழ்ப்பதும்விழிப்பதுமாக்கிடக்க, மெல்ல இராவணனுடன் வானவர்மகளிர் தள்ளாடிச்சென்றனரென, அம்மாதர்சென்றமையை வருணித்தார்; தன்மை நவிற்சியணி. தள்ளுதற்கேதுவாக எழிலில் ஒவ்வொன்றுமே போதுமானகாரணமாயுள்ள பானம்முதலியவற்றை ஒருங்கேகூறினது, கூட்டவணி. அரக்கரது சேர்க்கையால், அவர்க்குஏவல்பூண்ட வானவமகளிரும் மதுபானஞ் செய்வாராயின ரென்க. வானவமகளிர் கனாக்கண்டுகொண்டிருக்கையிலும் இராவணனிடத்து அச்சத்தால் எழுந்துசென்றனராயினும், கனா முற்றாமையால் தள்ளாடுவாராயினர். இராவணன் செல்லும்போது, இன்னிசை வல்லமாதர்கள் மங்கலவாழ்த்துப்பாடல்பாடிக்கொண்டு உடன்சென்றனரென்க. மிக இனிய சங்கீதத்தைக் கேட்கையில் மெய்ம்மறந்து சோர்தல், இயல்பு.

வானவர்மகளிர், தள்ள, ஆக, மாழ்க, தள்ளி,போனார் என இயையும். கண்கட்குக் களிப்பு - காதற்குறிப்பு. "யானோக்குங்காலை நிலனோக்கும் நோக்காக்கால், தானோக்கி மெல்லநகும்" என்றபடி மகளிர் தாம் காதலை யுடையராயிருந்தும் ஆடவர்நோக்கும்பொழுது தமதுஉள்ளக்குறிப்பைப் புலப்படுத்தாது வேற்றிடத்துத் தமதுபார்வையைச் செலுத்தியும், அங்ஙனம்நோக்கின ஆடவர் தமதுபார்வையை வாங்கினபொழுது தாம் அவரைநோக்கி மகிழ்ந்தும் நிற்ப ராதலால்,அவரது கண் 'கள்ளங்கற்ற கண்' எனப்பட்டது. இனி 'ஆடவர்மனத்தைக் கொள்ளைகொள்ளவல்ல கண்' எனினுமாம். மழலை - நிரம்பாமென்சொல்; அது-இங்கு, இலக்கணையால், அதுபோன்ற ஒலியை யுணர்த்திற்று. பானம்முதலியவற்றால் தள்ளாடிக்கொண்டு செல்கின்றமைபற்றி, அம்மகளிரணிந்துள்ள சதங்கையினின்று உண்டாகும் ஒலியும் தளர்ச்சிப்பட்டுத்தோன்று மென்பார், 'சதங்கை மாழ்க' என்றார்.

'அநிமிஷர் இமையோர்முதலிய பெயர்களை இமையாநாட்டமுடைமையாற் பெற்றுள்ள வானவரதுமகளிர் கண் விழிப்பதும் முகிழ்ப்பது மாகப் போயினார்' எனக் கூறியது என்னையோ? எனின்,—இங்கு, 'விழிப்பதுமுகிழ்ப்பதாகப்போனார்' என்றது, எல்லாம்உறங்கும் நள்ளிருட்பொழுதாகையினால் வானவர்மகளிரும் தூக்கக்குறி தமதுகண்களிற்பொருந்தப்போயினா ரென்ற மாத்திரைப்பொருளையே குறிக்கு மென்பது; மண்ணுலகத்தில் அரக்கர்களுடன் நெடுநாட்பழகியதனால், வானவமகளிர் தமது தெய்வத்தன்மையழிந்து இங்ஙனமாயின ரென்றலும் ஒன்று; அன்றியும், "நிரங்குசா: கவய: [கவிஞர் தட்டுத்தடையில்லார்]" என்ற நியாயம்பற்றி,தேவமாதர் கண்கட்கு முகிழ்ப்பதும் விழிப்பதும் கூறினார் எனினுமாம். பி-ம்:—[1]களிந்தபாடற், களித்தவாயும். [2]தள்ளத்தள்ளக், [3]கழறக்கற்ற. [4]கொஞ்ச. (௨௩௩)

உஅஉ. மழை[1]யினை நீல மூட்டி வாசமும் புகையு [2]மாட்டி [றுப்
உழையுழை [3]சுருட்டி மென்பூத் [4]தொடுத்திடைக் கிடையூ றென்
[5]பிழையுடை [6]விதியார் செய்த பெருங்[7]குழல் கருங்கட் செவ்வாய்
இழை[8]யணி மகளிர் [9]சூழ்ந்தா ரனந்தரா விடங்க டோறும்.

(இ - ள்.) மேகத்திற்கு நீலநிறத்தையேற்றி, வாசனையையும் அகிற்புகையையும் ஊட்டிச் சுருட்டி இடையிடையே மெல்லிய மலர்களைச் செருகி '(நுண்ணிய) இடைக்கு(ப் பாரமிகுதியால்) நாசம் (உண்டாகுமே)' என்றுகருதாத பிழையையுடைய பிரமனுர் படைத்த பெரியகூந்தலையும் கறுத்தகண்களையும் சிவந்தவாயையுமுடைய ஆபரணமணிந்த மாதர்கள், தூக்கத்தோடு (இராவணனது) பக்கங்களிலெல்லாம் நெருங்கினர்கள்; (எ - று.)

மேகத்தினும் குழல் வேறுபட்டிருக்கவும் அதனை 'மழையினை........ விதியார்செய்த பெருங்குழல்' என மேகத்தினுலியன்றதாகக் கூறியது, பிறிநிலையுயர்வுநவிற்சியணி; வடமொழியில் 'பேதகாதிசயோக்தி' எனப்படும். மேகத்திற்கு இயற்கையாயுள்ள நிறத்தினும்மிக்கநீலநிறமும் இயற்கைநறுமணமும் அகிற்புகைமுதலியவற்ருலாகிய செயற்கைமணமும் சுருட்டிமுடித்தலும் இடையிடையே பூவைச்செருகுதலும் கூந்தற்கு உள்ளதனுல், உவமைப்பொருளாகியமேகத்திற்கு அவற்றையெல்லாம் கூட்டிச்சொல்லவேண்டிற் றென்க. முடி, குழல், தொங்கல், பனிச்சை, சுருள் என்ற கூந்தலின் வகைஐந்தனுள், சுருட்டிப் பின்னேசெருகுதலாகிய சுருளுக்குஏற்ப, 'சுருட்டி' எனப்பட்டது. இல்லையுண்டென்று ஐயுறுமாறு மிகநுண்ணிய இடை இத்துணைப்பெரும்பாரமேற்றினுல் முறிந்துபடுமே யென்ற ஆலோசனை சிறிதுமின்றிப் பிரமன் கூந்தற்பாரத்தைப் படைத்தனனென, இடையினது மிக்கநுண்மையையும், கூந்தலின் பெருந்தொகுதியையும் விளக்கியவாறு. படைத்தற்கடவுளெனப் பெரும்பெயரிட்டுக்கொண்டு இங்ஙனஞ்செய்த பேதைமையைப்பற்றி, 'விதியார்'என இகழ்ச்சிதோன்றக் கூறினர். கருங்கட் செவ்வாய்-தொடைமுரண். பி-ம்:—[1]விழை. [2]ஊட்டி. [3]சூட்டி, சுட்டி. [4]குவித்து. [5]பிழையுணர். [6]நுதலார். [7]கயல். [8]இழை. [9]தாழ்ந்தார். (உஉஙச)

உஅங. [1]தேனிடைக் கரும்பிற் பாலி லமுதினிற் கிளவி தேடி
[2]மானிடைக் கயலில் வாளில் [3]மலரிடை நயனம் வாங்கி
மேனடை யனைய மற்றும் நல்[4]வழி நல்க வேண்டி
[5]வானுடை யண்ணல் செய்த மங்கையர் [6]மருங்கு [7]சென்றார்.

(இ - ள்.) சத்தியலோகத்துக்குத் தலைவனுன பிரமதேவன், (இயற்கையானபடைப்பினுஞ்) சிறந்தவகையாற் படைக்கவிரும்பி,—தேனினிடத்தும் கரும்பின்சாற்றினிடத்தும் பாலினிடத்தும் தேவாமிருதத்தினிடத்துமுள்ள (இனிமைக்கூறுகளைப்) பேச்சுக்களாகத் தேடியமைத்தும்,—மானினிடத்தும் கயல்மீனினிடத்தும்வாளாயுதத்தினிடத்தும் தாமரைமலரினிடத்தும் (உள்ள சிறந்தகூறுகளைக்) கண்களாக நாடியமைத்தும், மற்றும் அத்தன்மையனவா

இய மேன்மையான நல்வகைகளைக்கொண்டும், படைத்த இளமகளிர்,—(இராவணனது) பக்கங்களிற் சென்றார்கள்; (எ - று.)

மிக்கஇனிமைதருதலில் மகளிரதுபேச்சுக்குத் தேன்முதலியவற்றை உவமையாகக் கூறுதல், கவிமரபு. 'மேனடையனையமற்றும் (கொண்டும்)' என்றதனால், அம்மகளிரது மற்றையவுறுப்புக்களும் சாயல்முதலியனவும் அவ்வவற்றிற்குஉரிய உபமானப்பொருள்களின் ஸாரங்கொண்டு அமைக்கப்பட்டனபோலு மென்பது பெறப்படும். இம்மகளிரதுபேச்சுக்கள்முதலியன மிக்க சிறப்புடையன வென்பதைக் குறித்தற்கு, இங்ஙனம் கூறினர். கரும்பு - அதன்சாற்றுக்கும், மான்-அதன் நோக்கத்திற்கும் முதலாகுபெயர்கள். வான்-சத்தியலோகம். பி-ம்:—[1]தேனினில். [2]மானினில். [3]மலரினில் [4]விழி. [5]வானிடை. [6]மருங்கிற். [7]வந்தார். (உஉ௩௫)

உஅ௪.—இராவணனுடன்சென்றவர் பேரோசைகேட்டு ஒடுங்கியமை.

தொடங்கிய வார்ப்பி னோசை செவிப்புலந் தொடர்த லோடும்
இடங்கரின் வயப்போத் தன்ன வெறுழ்வலி யரக்க ரியாரும்
மடங்கலின் முழக்கங் கேட்ட [1]வான்கரி யொத்தார் மாதர்
அடங்கலு மசனி கேட்ட வளையுறை யரவ மொத்தார்.

(இ - ள்.) (வானரவீரர்கள்) தொடங்கிச்செய்த பேராரவாரம் காதுகளில் நுழைந்தமாத்திரத்தில்,—இடங்கரின் வலிமையையுடைய ஆண் போன்ற மிக்க வலிமையையுடைய இராக்கதரெல்லாரும், சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்ட பெரிய யானைகளைப் போன்றார்கள்; இராக்கதஸ்திரீகளெல்லாரும், இடிமுழக்கத்தைக்கேட்ட புற்றில்வசிக்கும்பாம்புகளைப் போன்றார்கள்.

இடங்கர் - நீர்வாழ்பிராணிகளுள் முதலைபோன்ற ஒரு ஜந்து; இடங்கரின்ஆண் 'போத்து' எனப்படும். இடியோசையைக் கேட்டமாத்திரத்தில் பாம்புகள் அஞ்சிநடுங்கி யொடுங்கு மென்பது, நூல்துணிபு. மனையகத்து வாழுமியல்பினரான கொடிய இராக்கதமாதர்க்கு, வளையுறைபாம்பை உவமைகூறினது ஏற்கும். பி-ம்:—[1]வனகரி. (உஉ௩௬)

உஅ௫.—இராவணன் இந்திரசித்தைப் பார்த்தல்.

அரக்கனு மைந்தன் வைகு மாடகத் தமைந்த மாடம்
பொருக்கெனச் சென்று புக்கான் [1]புண்ணினீர்க் குமிழி பொங்கத்
[2]தரிக்கிலன் மடங்க லேற்றுப் [3]பொருலைப்புண்டு [4]சாய்ந்து போன
கருக்கிளர் மேக [5]மன்ன களிறனை யானைக் கண்டான்.

(இ - ள்.) இராவணனும்,—(தனது)மகனான இந்திரசித்து வசிக்கின்ற பொன்னினாலாகிய மாளிகையில் விரைவாகச்சென்றுசேர்ந்து,—(இலக்குமணனது அம்புகளினால் துளைக்கப்பட்ட தன்உடம்பின்) புண்களினின்று (இரத்தம்)நீர்க்குமிழிபோல வெளிப்பட, (வேதனையைப்) பொறுக்கமாட்டாதவனாகி, நீர்கொண்டமேகம்போன்ற (உருவத்தோற்றத்தையுடைய)னாய், ஆண்

சிங்கத்தினால் வலியழிக்கப்பட்டுச் செயலற்று ஒடுங்கினதாகிய ஆண்யானை யைப்போன்றவனுமுள்ள இந்திரசித்தைக் கண்டான்; (எ - று.)

இலக்குமணனால் வலியொடுங்கி விழுந்துகிடக்கிற இந்திரசித்துக்கு, சிங் கத்தினால் வலியழிந்து விழுந்துகிடக்கிற யானை உவமம். இந்திரசித்தினாற்கட் டுண்டுவலியொடுங்கிய இலக்குமணனுக்குச் சிங்கத்தைஉவமைகூறியது - இந் திரசித்து இயற்கைவலிமையினாலன்றி மாயையினால் இலக்குமணனைக்கட்டி வென்றமை நிலையின்றியழிந்ததனாலும், இலக்குமணனம்பினால் இந்திரசித்து புண்பட்டு வருந்தி விழுந்துகிடத்தல் நிலைநிற்றலினாலும்பொருந்தும். "அடுக் கியதோற்றம்விடுத்தல்பண்பே" என்பவாதலால், காரைக் களிறனையானுக்கு உவமையாக்குக. கரு-உள்ளிருக்கும்பொருள்; இங்கே, நீர். பி-ம்:---1புண்ணி னிற். 2தருக்கிலன். 3அலைப்புண்டு, தொலைவுண்டு. 4சோர்ந்து. 5என்னைக். ()

உஅகூ.—இராவணன் இந்திரசித்தைநோக்கி விழுந்துகிடப்பதன் காரணத்தை வினவல்.

எழுந்தடி வணங்க [1]லாற்று னிருகையு மரிதி னேற்றித்
தொழுந்தொழி லானை நோக்கித் [2]துணுக்குற்ற [3]மனத்தன் றோன்றல்
[4]அழுங்கினை வந்த தென்னை [5]யடுத்ததென் றடுத்து[6]ச் சொன்னான்
புழுங்கிய [7]புண்ணி னானு மினையன [8]புகல லுற்றான்.

(இ - ள்.) எழுந்து (தன் தந்தையின்) பாதங்களை வணங்குதற்கும் மாட் டாதவனாய், (கிடந்தபடியே தனது) இரண்டுகைகளையும் மிக்கவருத்தத்துட னே தலைமேற்கொண்டு வணங்குந் தொழிலுடையவனை இந்திரசித்தைப் பார்த்து, (இராவணன்),—திடுக்கிட்ட மன முடையவனாய், 'மகனே! (நீ)மிக வருந்தினாய்; (உனக்குச்) சமீபித்ததாய் என்னதீங்கு வந்தது?' என்று பல முறை வினவினான்; தவிப்படைதற்குக்காரணமான புண்களை யுடையனாகிய இந்திரசித்தும், இவ்வார்த்தைகளைக் கூறத்தொடங்கினான்; (எ - று.)—அவற் றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

கைகளைத் தலைமேற்கொண்டு குவித்து வணங்குதலும் இந்திரசித்துக்கு அப்பொழுது எளிதிற்கூடாததாயிருந்த தென, அவனது உடற்புண்களினால் நேர்ந்த வருத்தமிகுதியைக் கூறியவாறு. வாநரர்முதலியோரான பகைவர் செய்த ஆரவாரத்தைச் செவியுற்றதனால் மனமழுங்கின இராவணன், இந்திர சித்தை யுசாவிப் பகைவெல்ல உபாயஞ்செய்யவேண்டுமென்றுவந்த விடத்து, எதிர்பாராது அவன் விழுந்துகிடப்பதைக் கண்டதனால், 'இவனுக்கு இப் பொழுது பகைவர்களால் யாதேனும் தீங்கு நேர்ந்ததோ?' என்றுதிடுக்கிட்டு 'என்னை அடுத்தது வந்தது?' என வினவுபவனாயின னென்க. தான் வின வியதற்கு இந்திரசித்து வருத்தமிகுதியால் மறுமொழிகொடாது கிடந்தது பற்றி, இராவணன் அதன்காரணத்தையறியவேண்டுமென்னும் அவாவினால், அடுத்தடுத்து வினவவேண்டுவ தாயிற்று. தோன்றல் - அண்மைவிளியாத

லின் இயல்பு. பி-ம்:---1உற்றான். 2 துளக்குற்ற, துயருற்ற. 3மனத்தனுகி. 4அழுந்தினே. 5அடுத்துச்சென்றெடுத்து, அடுத்ததென்றெடுத்து, அடுத்தவனெடுத்து. 6கேட்டான். 7உள்ளத்தானும். 8புகறலுற்றான், புகல்வதானான்.

உஅஎ.—நான்குகவிகள் இந்திரசித்தின் விடை.

உருவின 1வுரத்தை முற்று முலப்பில வுதிரம் வற்றப்
பருகின வளப்பி லாத பகழிகள் கவசம் 2பற்றற்று
3அருகின பின்னைச் சால 4வலசினே னைய கண்கள்
செருகின 5வன்றே யானு மாயையிற் 6றீர்ந்தி லேனேல்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) ஐயனே! (இலக்குமணனது) அளவில்லாத [மிகப்பல] அம்புகள், (எனது) மார்பை முழுதும் ஊடுருவிச்சென்று துளைத்தன; அழிவில்லாத (எனதுஉடம்பின்) இரத்தத்தை வற்றிப்போம்படி குடித்துவிட்டன; (எனது உடம்பின்மேலணிந்த) கவசங்கள், (அந்தஅம்புகளினால்) பற்றுவிட்டு அழிந்தன; பிறகு, மிகவும் தளர்ந்தேன்: (எனது) கண்கள் சொருகிவிட்டன. மாயையினால் தம்பி மறைந்திலேனாயின், யானும் அப்போழுதுதானே (இறந்திருப்பேன்); (எ - று.)

'இறந்திருப்பேன்' என ஒருசொல் வருவித்துஉரைக்கப்பட்டது; இது, அவாய்நிலே. இலக்குமணனம்புக்கு உயிர்தப்பிப்பிழைத்தது, நான் கற்றிருந்த மாயையின் வலிமையினு லென்றவாறும். 'இறந்திருப்பேன்' எனத் தன்மரணத்தை வாயினாற்சொல்லுதற்குக் கூசி அம்மொழியை இந்திரசித்து கூறுதுவிடுத்தனன்போலும். பகழிகள் உதிரம்வற்றப் பருகின - செய்யாதன செய்தனபோலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. இச்செய்யுள் சிலபிரதிகளிவில்லை. பி-ம்:—1உதிரம். 2பற்றுது, பற்றத். 3தருகின. 4அலசினகணேகளேய. 5அன்றே, அன்றவ். 6தீர்ந்திலேனல், தீர்ந்திலேனே. (உஉருகூ)

உஅஅ.இந்திரன் விடையின் பாக னெறுழ்வலிக் 1கலுழ 2னேறுஞ்
சுந்தர னருக்க னென்றித் தொடக்கத்தார் தொடர்ந்த 3போரில்
நொந்தில 4னினைய தொன்று நுவன்றிலன் மனித னுண்மை
மந்தர மனைய தோளாய் வரம்புடைத் தன்று 5மன்னே.

(இ-ள்.) மந்தரபருவதத்தையொத்த தோள்களை யுடையவனே! தேவேந்திரனும் இடபத்தை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துஞ் சிவபிரானும் மிக்க வலிமையையுடைய கருடன்மீது ஏறிச்செல்லும் அழகியவனான திருமாலும் சூரியனுமென்ற இவர் முதலியோர் (என்னுடன்) தொடர்ந்துசெய்த போரில் (நான் சிறிதும்) வருந்தினேனில்லை; இப்பொழுது (நான்) சொல்வதுபோன்ற எளிமையான வார்த்தையொன்றையும் சொன்னதுமில்லை; (ஒன்றுக்குந்தளராத என்னையும் இவ்வாறு வருந்திக்கூறும்படி செய்துவிட்டதனால்), மனிதனது [இலக்குமணனது] வலிமை ஓர்எல்லையுடையதன்று; (எ - று.)—மன், ஓ - ஈற்றசைகள்; வியப்பைவிளக்குவனவுமாம்.

இந்திரன்முதலிய பல தேவர்கள் திரண்டு பொருகையிலும் பின்வாங்காத நான், இம்மனிதனொருவன் தனித்துச்செய்த போரில் இங்ஙனம் தளர்ந்துவருந்துமாறாயிற்றே என, இந்திரசித்து தன்எளிமையை நொந்து கூறியவாறு. மந்தரம் - அஷ்ட குலபர்வதங்களில்ஒன்று. இச்செய்யுள் "இளையவன்" என்ற அடுத்தபாடலின்பின் சிலபிரதியிலுள்ளது. பி-ம்:—1கருடன். 2எறிச். 3போது. 4ஐய, அனைய. 5மன்ற. (உஉ௯௦)

உஅகூ. இளையவன் றன்மை யீதா லிராமன தாற்ற லெண்ணில்
தலையவி ழலங்கன் மார்ப நம்வயிற் 1றங்கிற் றன்றால்
விளைவுகண் 2டுணர்த லல்லால் 3வென்றிமேல் விளையு மென்ன
4உளையதன் றென்னச் சொன்னா 5னுற்றுள துணர்ந்தி லாதான்.

(இ - ள்.) முறுக்குஅவிழ்ந்த மலர்களாலாகிய மாலையையணிந்த மார்பையுடையவனே! தம்பியானஇலக்குமணனது வல்லமையே இத்தன்மைத்து; (அவனது தமையனான) இராமனது வல்லமையைப்பற்றி நினைத்தால் (அவ்வெண்ணுதல்தானும்) நம்மிடத்திற் பொருந்தியதாகாது [நம்மால் எண்ணவும் முடியாது என்றபடி]; மேல் எங்ஙனம்முடியுமோ அதனைப் பார்த்துத் தெரிந்துகொள்ளவேண்டுமே யன்றி, வெற்றியே இனி (நமக்கு) உண்டாகுமென (நீ) நினைத்திருக்கிறாயே அங்ஙனம் எண்ணுவது தகாதுஎன்றுகூறினான்: (யாவனெனில்),—(அப்பொழுது) நேர்ந்துள்ளதை [இலக்குமணன் முதலியோர் பாசம்நீங்கியெழுந்ததை] அறியாதவனான இந்திரசித்து; (எ - று.)

இலக்குமணனோடு பொருது வென்ற இவ்வளவைக்கொண்டே நமக்கு மேன்மேல் வெற்றியுண்டாகு மென்று நீ துணிந்திருக்கவேண்டா; இராமனோ நம்மால் நினைக்கவும்முடியாத அத்துணைப் போராற்றலுடையவன்; ஆதலால், அவனுடனும் பொருதபின்னர் நமதுவெற்றிதோல்விகளை முடிவுகொண்டே அறியவேண்டு மென்பதாம். நம்வயின் தங்கிற்று அன்று - (அத்துணையாற்றல்) நம்மிடத்து உள்ளதன்று எனினுமாம். 'உற்றுளதுணர்ந்திலாதான்' என்பது-நேர்ந்ததையுணர்ந்திருப்பின் இந்திரசித்து இலக்குமணன் முதலியோரைத் தான் வென்றமைதோன்றஇங்ஙனங்கூறானென்றகருத்தைப் புலப்படுத்தலால், கருத்துடையடைகொளியணி.பி-ம்:-1தக்கதன்றால். 2உணர்வது. 3வென்றிமேல்விளையுமென்பது, வென்றியும் விளையுமன்றோ, வென்றியேவிளைவதென்றல். 4உளவது, உளைவது.5உற்றனவுணர்கிலாதான். (உஉ௯க)

உகூ௦. வென்றது பாசத் தாலு மாயையின் 1விளைவி னாலுங்
2கொன்றது குரங்கு வீரர் 3தம்மொடக் 4கொற்றத் தோனை
நின்றன னிராம 5னின்னு நிகழ்ந்தவா 6நிகழ 7மேன்மேல்
என்றன 8னென்னக் கேட்ட விராவண 9னிதனைச் சொன்னான்.

(இ - ள்.) வானரவீரர்களுடனே வெற்றியையுடைய அவ்விலக்குமணனை (நான்) கொன்றதும் வெற்றிபெற்றதும் நாகபாசத்தினாலும் (எனது) மாயையின் நிகழ்ச்சியினாலுமே யாம்; இன்னும் இராமனொருவன் எஞ்சிநிற்கிறான்;

மேன்மேல் நடக்கிறபடி நடக்கட்டும் என்று (இந்திரசித்து) கூறினான்; என்று கூறக்கேட்ட இராவணன், இதனைச் சொன்னான்; (எ - று.) —இராவணன் சொன்னதனை, அடுத்தகவியிற் காண்க. பி - ம்:—1வினையினாலும். 2கொன்றதக். 3தம்முடைக், தம்மொடுங். 4கொற்றத்தாரை. 5இப்பால். 6நிகழும். 7மேலால். 8அதனைக். 9இனைய. (௨௨௬௨)

௨௯௧.—இந்திரசித்தின்மொழிகேட்ட இராவணன் 'பகைவர்செய்த பேரொலியைக்கேட்டிலைபோலும்' என்றல்.

1வார்கழற் கால மற்றவ் விலக்குவன் வயிர 2வில்லின்
பேரொலி யரவம் 3விண்ணைப் பிளந்திடக் கூங்கு 4போந்த
5காரொலி 6மடங்க வல்லை 7கம்பிக்கக் களத்தி னார்த்த
8பேரொலி யொன்று மைய வறிந்திலை போலு மென்றான்.

(இ - ள்.) நீண்ட வீரக்கழலையணிந்த காலையுடைய இந்திரசித்தே! ஐயனே! அந்தஇலக்குமணனது உறுதியான வில்லினுடைய மிகப்பெரிய ஆரவாரம் மேலுலகைப்பிளக்க, வாநரங்கள் (ஆகாயத்திலே) எழுந்த மேகங்களின் இடியோசையும் கீழ்ப்படும்படியும் (கேட்ட பிராணிகளெல்லாம்) உடனே அஞ்சிநடுங்கும்படியும் போர்க்களத்தில் ஆரவாரித்த போர்க்குஅறிகுறியான ஓசையை (நீ) சிறிதும்உணர்ந்தாயில்லைபோலும் என்றுகூறினான், (இராவணன்); (எ - று.)—மற்று-அசை. பி - ம்:—1வார்கலிக்கழற்கால்வீர, வாரொலிகழற்கால்மற்றை. 2வில்லிற், வல்லிற். 3விண்ணும். 4போர்ந்து, போர்ந்தது. 5ஆர்கலி. 6அடங்கவேலை. 7கம்பித்த. 8ஆர்கலியையவொன்றும். (௨௨௬௩)

௨௯௨.—இராவணனதுபேச்சில் இந்திரசித்து ஐயமுற்றுக் கூறுதல்.

1ஐயவெம் பாசந் தன்னா லார்ப்புண்டா ரசனி யென்னப்
பெய்யும்வெஞ் சரத்தான் மேனி பிளப்புண்டா ருணர்வு பேர்ந்தார்
2உய்யுந ரென்று ரைத்த துண்மையோ 3வொழிக்க வொன்றோ
4செய்யுமென் 5றெண்ணத்6தெய்வஞ் சிறிதன்றோ தெரியி 7னென்றான்.

(இ - ள்.) தந்தையே! (இலக்குமணன்முதலிய பகைவர்கள்), கொடிய நாகபாசத்தினாற் கட்டுப்பட்டார்கள்; (அன்றியும்), இடிபோலச்சொரிந்த (எனது) கொடிய அம்புகளால் உடல்பிளக்கப்பட்டார்கள்; உணர்வுஒழிந்தார்கள்; (அவ்வாறு அழிந்த அவர்களைப்) பிழைத்துள்ளார்களென்று (நீ) கூறியது உண்மையாமோ? (அவர்களைக் கட்டியிருந்த நாகபாசமானது) ஒழிப்பதற்கு (உரிய) ஒருபொருளாகுமோ? [யாவராலும் அழிக்கமுடியாததொன் றல்லவோ?] ஆலோசித்துப்பார்க்குமிடத்து, (பிறிதொன்று இப்பாசத்தைப் பழுதுபடச்) செய்யும் என்று நினைத்தால் (இப்பாசத்தை எனக்குஅளித்த) தெய்வம் சிறுமைப்பட்டுவிடுமன்றோ? என்று (இந்திரசித்து மறுமொழி) கூறினான்.

தன் தந்தையின்வார்த்தையையும் நம்பாமல் இங்ஙனங் கூறினதனால், நாகபாசம் ஒருவராலும் அழிக்கவொண்ணாததென்றும் அதனாலிறந்தவர்கள் ஒரு

வாற்றாலும் பிழைக்கமாட்டார்க ளென்றும் எண்ணி இந்திரசித்து தனதுவெற்றியில் மிக்கநம்பிக்கைகொண்டிருந்தன னென்பது வெளியாம். தெய்வம் சிறிதன்றோ என்றதற்கு - இதனையளித்த தெய்வம் மிகப்பெரியதாதலின் ஒருபொழுதும் நாகபாசத்தைப்பற்றி இவ்வாறுநினைக்கக் காரணமில்லையென்பது கருத்து. பி-ம்:—1ஐயகேள். 2உய்யுமாறுணர்ந்துபோந்தது,உய்யுமென்றுரைத்தபோதது,உய்யுமென்றுரைத்தபோது. 3 ஒழிக,ஒழிகில். 4செய்யுநம்,செய்வமென்று. 5எண்ணில். 6தெய்வஞ் சிறியதோ,தெய்வச்செயலொன்றாந். 7அம்மா.

உகூரு.—மூன்றுகவிகள்-தூதர்கள் இலக்குமணன் முதலியோரது வாலாற்றைக் கூறியதைத் தெரிவிக்கும்.

ஈதுரை நிகழும் வேலை 1யெய்திய தறியப் போன
தூதுவர் விரைவின் 2வந்தார் புகுந்தடி தொழுத லோடும்
யா3தவ ணிகழ்ந்த தென்ன விராவண னியம்ப 4வீறின்று
5ஓதிய கல்வி யாளர் புகுந்துள துரைக்க லுற்றார்.

(இ-ள்.) இவ்வாறு (இராவணனுக்கும் இந்திரசித்துக்கும்) சம்பாஷணை நடந்துகொண்டிருக்குஞ் சமயத்தில்,—(போர்க்களத்தில்) நேர்வதை அறியும்படி (இராவணனாலேவப்பட்டுச்) சென்றிருந்த தூதர்கள், விரைவாகவந்து சேர்ந்து(அவனுடைய)பாதங்களை வணங்கினவளவில்,இராவணன்,(அவர்களை நோக்கி), 'அவ்விடத்தில் [போர்க்களத்தில்] நடந்த வரலாறு யாது?' என்று வினவ, (உடனே) எல்லையில்லாதுபடித்துத்தேர்ந்த கல்வியுடையவர்களாகிய அத்தூதர்கள்,நேர்ந்துள்ளதைச் சொல்லத்தொடங்கினார்கள்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

ஈறு இன்றுஓதியகல்வியாளர் - தூதுதொழிற்குவேண்டிய கல்வியறிவிற் சிறிதுங்குறைபாடின்றித் தேர்ச்சியுடையவர். பி-ம்:—1எய்துவதறியப்போய, எய்தியதெதிரேகின்ற. 2வந்து. 3இவண். 4ஈறில், வீறி. 5ஆதிய. (உஉசு)

உகூசு. பாசத்தாற் பிணிப்புண் டாரைப் பகழியாற் 1களப்பட் டாரைத்
தேசத்தா 2ரரசன் மைந்த 3னிடையிருள் சேர்ந்து 4நின்றே
5ஏசத்தா னிரங்கி 6யேங்கி யுலகெலா 7மெரிப்ப னென்றான்
வாசத்தார் மாலை மார்ப வானுறை கலுழன் வந்தான்.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வாசனையினால்நிறைந்த மலர்மாலையையணிந்த மார்பையுடையவனே! கோசலநாட்டிலுள்ளார்க்குத்தலைவனாகிய தசரதனது புத்திரனான இராமன்,—நாகபாசத்தாற் கட்டுண்டவர்களாய் அம்புதைத்தலாற்போர்க்களத்தில் ஊறுபட்டவர்களை நடுராத்திரியில் சேர்ந்துநின்று(கண்டவர்)பரிகசிக்கும்படி (இறந்தோர்பொருட்டுத்) தான்பரிதவித்து (முதலில்)அழுது, (பின்பு), 'எல்லாவுலகங்களையும் எரித்தழித்துவிடுவேன்'என்றுகூறி மிகச்சினந்தான்; (அச்சமயத்து), மேலுலகத்தில் வசிக்கின்ற கருடன் (அங்கு) வந்துதோன்றினான்; (எ - று.)—இருள் - அதனையுடைய இரவிற்கு ஆகுபெயர். பி-ம்:—

1அறுப்புண்டாரை. 2ஈசன், நேசன். 3வந்திடைசினத்து. 4நோக்கி, கண்டே. 5ஏசற்றான். 6பின்னை. 7அவிப்பன், வீப்பன். (உஉசுகூ)

உகூரு. அன்னவன் வரவு காணா வயிலெயிற் றரவ மெல்லாஞ்
சின்னபின் னங்க ளான [1]புண்ணொடு [2]மயர்வு தீர்ந்தார்
முன்னையின் வலிய ராகி [3]மொய்க்கள [4]நெருங்கி மொய்த்தார்
இன்னது நிகழ்ந்த தென்று [5]ரரக்கனீ தெடுத்துச் சொன்னான்.

(இ - ள்.) அந்தக்கருடனது வருகையைக் கண்டு, (அவர்களைக்கட்டியிருந்த) கூரிய பற்களையுடைய நாகங்கள்யாவும் துண்டுதுண்டுகளாய் அழிந்துநீங்கின; (அதனால் அவர்கள்யாவரும்) புண்களும் தளர்ச்சியும் நீங்கப் பெற்றவர்களாகி, (பாசத்தாற்கட்டுப்படுதற்கு) முன்புஇருந்ததனினும்மிக்க வலிமையுடையவர்களாய், போர்க்களத்தில் திரண்டுநெருங்கினார்கள்: நடந்த வரலாறு இது என்று(ஒற்றர்கள்)கூறினார்கள்:(அப்பால்),இராவணன் இதனையெடுத்துக்கூறலானான்; (எ-று.)—அதனை, அடுத்த நான்கு கவிகளிற் காண்க.

பி-ம்:—1பின்னொடு. 2மோகந், மயக்கந். 3மொய்கொள, முனைக்களம். 4நெருங்க. 5இராவணனினைய. (உஉசுஎ)

உகூசு.—மூன்றுகவிகள்-அதுகேட்ட இராவணன் கருடனைப்பற்றிக்கூறும் பரிகாசவார்த்தையைத் தெரிவிக்கும்.

[1]ஏத்தருந் தடந்தோ [2]ளாற்ற லென்மக னெய்த பாசங்
[3]காற்றிடைக் [4]கழித்துத் தீர்த்தான் கலுழனுங் காண்மின் [5]காண்மின்
வார்த்தையீ தாயி [6]னன்று விராவணன் வாழ்ந்த வாழ்க்கை
மூத்தது [7]கொள்கை போலா [8]மென்னுடை முயற்சி யெல்லாம்.

நான்கு கவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) (ஒருவராலும்)புகழ்தற்கு முடியாத பெரிய புயங்களின் வலிமையையுடைய எனதுகுமாரனாகிய இந்திரசித்து, (பகைவர்கள்மேற்) பிரயோகித்த நாகபாசத்தைக் கலுழன்(தனது இறகுகளினின்றுதோன்றிய)காற்றினால் அழித்துநீக்கிவிட்டானும்!(இப்புதுமையைப்)பாருங்கள்!பாருங்கள்!!இச்செய்தி இவ்வாறாகுமானால்,இராவணனாகிய நான் வாழ்ந்தவாழ்வு மிகநன்றாயிருந்தது! (பகைவெல்லச் செய்துள்ள) எனது பிரயத்தனமுழுதும் வலிமைமுடிந்துவிட்டதுபோலும்; (எ - று.)—ஆல் - அசை.

இச்செய்யுளில் வந்த 'ஆம்' என்பன - வியப்புப்பொருளோடு அலட்சியத்தையும் குறிக்கும்; 'காண்மின் காண்மின்' என்ற அடுக்கும், இகழ்ச்சியை வற்புறுத்தும். காற்றிடை - வேற்றுமைமயக்கம். நன்றுஎன்றது - பிறகுறிப்பு வகையால், நன்றன்று என்பதனை விளக்கின்றது; எதிர்மறையிலக்கணை. இராவணன் தன்னைப் பிறன்போலப் படர்க்கையாக் கூறினது, அவன் தன்னைப்பற்றித் தான் கொண்டிருந்த பெருமிதத்தைப் புலப்படுத்தும்; இடவழுவமைதி. ஏ தரும் எனஎடுத்து. உயர்வுபெற்ற எனினுமாம்; ஏ - உயர்வுணர்த்துவதோர் உரிச்சொல். இனடவெதுகை. பி-ம்:—1ஏற்றரும். 2அண்ணல். 3காத்திடைச். 4கழற்றித்தீர்த்தான். 5சால. 6நன்றும். 7கொள்க. 8என்னினி.

உகூஎ. உண்டுல கேழு மேழு முமிழ்ந்தவ னென்னு மூற்றங் [ன்
கொண்டவ னென்னோ டேற்ற செருவினின் மறுக்கங் கொண்டா
மண்டலந் திரிந்த போது மறிகடன் [1]மறிந்த போதுங்
கண்டிலன் போலுஞ் சொற்ற கலுழனன் றென்னைக் கண்ணால்.

(இ - ள்.) பதினான்குஉலகங்களையும் (பிரளயகாலத்தில்) உட்கொண்டு (மீண்டும் சிருஷ்டிகாலம்வந்தவாறே) வெளிப்படுத்தினவனென்ற நிலையான புகழைப் பெற்றுள்ளவனான விஷ்ணு,— அந்நாளில் [பூர்வத்தில்] என்னுடன் எதிர்த்துச்செய்த போரிற் கலக்கங்கொண்டவனாய்(ப் புறங்கொடுத்தோடி) உலகமெங்குஞ் சுற்றித்திரிந்தபொழுதும் (அலை) மடங்குகிற கடலில் ஒளித்த பொழுதும் (இவர்கள் எடுத்துக்) கூறிய கருடன் என்னைக்கண்களாற் பார்த்திலன்போலும்! (எ - று.)

அப்பொழுதெல்லாம் எனது ஆற்றலை நேரிற்கண்டும் ஒன்றுஞ்செய்ய மாட்டாதுநின்ற அக்கருடன் இப்பொழுது எனக்குஎதிராகத் தனதுதலைவனுக்கு எங்ஙனம் உதவவந்தனனென்றனனென்க. திருமால் பிரளயகாலத்தில் எல்லாவுலகங்களையும் அவற்றிலுள்ள ஜீவராசிகளுடனே யாதொருதீங்கும்நேரிடாதபடி உட்கொண்டு தன்வயிற்றில்வைத்துப் பாதுகாத்துப் பிரளயப்பெருங்கடல்நீரில் ஆதிசேஷாம்சமான ஓர்ஆலிலையின்மீது குழந்தையினுருக்கொண்டு யோகநித்திரைசெய்து, பிரளயம்நீங்கினவுடனே அவ்வுலகங்களையெல்லாம் பழையபடியே உமிழ்வ னென்பது, நூல்துணிபு. ஊற்றம் - ஊன்றி [நிலைபெற்று] நிற்பதான புகழ். பி-ம்:—[1]மறந்த, மடுத்த, கடந்த. ()

உகூஅ. காங்களி னேமி சங்கந் தாங்கிய கரியோன் காக்கும்
புரங்களு [1]மழியப் போன [2]பொழுதிலென் சிலையிற் [3]பொங்கி
உரங்களின் [4]முதுகிற் றோளி [5]னுறைபுறு [6]சிறையி னுற்ற
சரங்களு நிற்க வேகொல் [7]வந்ததவ் வருணன் றம்பி.

(இ - ள்.) கைகளிலே சக்கரத்தையும் சங்கத்தையும் ஏந்தியுள்ள கரிய நிறமுடையனான விஷ்ணு காக்கின்ற பட்டணங்களும் அழிந்துபோம்படி (நான் போர்க்குச்) சென்ற அப்பொழுது,—எனது வில்லினின்று மிக்குக் கிளம்பி(த் தனது)மார்புகளிலும் முதுகிலும் தோள்களிலும்(தன்பக்கங்களிற்) பொருந்திய சிறகுகளிலும் சென்றுபாய்ந்த அம்புகள் நிலைத்திருக்கவும் அருணனது தம்பியான அக்கருடன்வந்து (என்மாற்றார்க்கு)உதவிசெய்ததோ? (எ-று.)

கரியோன்காக்கும் புரங்கள் என்றது - விஷ்ணு இந்திரனுக்குத் தம்பியாய் உபேந்திராவதாரங்கொண்டு அவனுக்குத்துணையாகநின்று பாதுகாக்கின்ற தேவலோகத்திலுள்ள அமராவதிமுதலிய பட்டணங்களை. விஷ்ணுவுக்குரிய பஞ்சாயுதங்களுள் இரண்டைக்கூறினது - மற்றையவற்றிற்கும் உபலக்ஷணம். சங்கம் திருமாலுக்கு ஆயுதமாவது, பகைவரைத் தனதுமுழக்கத்தால் அஞ்சுவித்து அழித்தல்பற்றியென்க. திருமால் வலக்கையிற் சக்கரமும்,

இடக்கையிற் சங்கமுந் தாங்குவன். பொங்கிஉற்றனன இயையும். 'சரங்கள்நிற்க வேயும் வந்ததுகொல்' என்றது - 'எனதுஅம்புகளினால் சேர்ந்த வருத்தந்தீரா திருக்கையிலும் கருடன் போரிற்பகைவர்க்கு உதவவந்தானோ? முன்பட்ட பாடு அவனுக்கு ஞாபகமில்லைபோலும்!' என அக்கருடனை யிகழ்ந்தபடியாம். அருணன்-காசியபமுனிவர்க்கு விநதையினிடம் பிறந்தவன்; இடைக்குக் கீழ்ப் பட்ட அவயவங்க ளில்லாதவன்; சூரியன்சாரதி. இங்குக் கருடனை 'அருணன் தம்பி' எனக்கூறினது, இராவணன் அவனிடத்துக் கொண்டுள்ள இகழ்ச்சி யைத் தொனிப்பிக்கும்.

கரியோன் - விஷ்ணு. காக்கும் புரங்களும் அழிய - தான்காக்கின்ற நக ரங்களும் (என்னால்) அழிய (விட்டு), போனபோழ்தில்-(என்முன்போர்க்கு நிற்கமாட்டாது) ஓடிப்போனபொழுதில் என்றும் பொருள்கொள்ளலாம். 'முதுகினுற்றசரங்கள்' என்றது, அவன்புறங்கொடுத்தோடின னென்பதைக் காட்டுதற்கு; முன்பு மந்திராலோசனைச்சமயத்தில் நல்லறிவுணர்த்திய விபீ ஷணனுக்குமாறாக இராவணன் செருக்கிப்பேசியபோது "பித்தனுகியவீசனு மாலு மென்பெயர்கேட், டெய்த்தசிந்தைய ரேகுழி யேகுழியெல்லாங், கைத் ததுவேற்றினுங் கடாவிய புள்ளினுமுதுகிற், றைத்தவாளிக ணின்றுள குன் றின்வீழ்தடித்தின்" என்றதுங் காண்க. பி-ம்:—[1]இழிய. [2]போழ்தினன். [3]போன, சோதி. [4]மார்பிற். [5]உறைவண. [6]சிறகின். [7]வந்தனன். (உஉ௬0)

உ௬௬.—இராவணன் இந்திரசித்தை மீண்டும்போர்செய்யச்செல்லத் தூண்டுதல்.

[1]ஈண்டது கிடக்க மேண்மே லிசைந்தவா [2]றிசைக வெஞ்சி
மீண்டவர் தம்மைக் கொல்லும் [3]வேட்கையை வேட்கு [4]மன்றே
ஆண்டகை நீயே [5]யின்று [6]மாற்றுதி யருமைப் போர்கள்
[7]காண்டலு [8]நாணு மென்றான் மைந்தனுங் கருத்தைச்சொன்னான்.

(இ - ள்.) இப்பொழுது அது கிடக்கட்டும்; இனி, முடிந்தபடியேமுடி யட்டும்; (இறவாது) உயிர்தப்பிப்பிழைத்தவர்களை (மீண்டும்பிழைத்திடாதபடி) கொல்லவேண்டுமென்கின்ற விருப்பத்தைக்கொள்ளக்கடவோமன்றோ?; ஆண் மைக்குணமுடைய இந்திரசித்தே! நீயே (அதற்காகச்சென்று) இன்னமும் அருமையானபோரைச்செய்யக்கடவாய்; (ஒருகால்இறந்தவர்களைப்பிழைப்பித் தவனான அக்கருடன், நீஅவனைம்அழிக்கக்) கண்டவுடனே வெட்கப்படு வான் என்றுகூறினான், (இராவணன்); (அப்பொழுது), (அவனது) மகனான இந்திரசித்தும், (தன்) கருத்தை வெளியிட்டுச் சொல்லலானான்; (எ-று.)— அதனை, அடுத்த கவியிற் காண்க. அன்றே - தேற்றம். ஈண்டதுகிடக்க-நடந்த செய்தியைப் பாராட்டவேண்டாஎன்றபடி. பி-ம்:-[1]ஈண்டிது. [2]இயைக, இசைய. [3]வேட்கையேவேண்டும், வேட்கையேவேட்டும். [4]அன்றோன். [5]இன்னும், பின் னும். [6]ஆற்றுவதருமைப்போர்கள். [7]காண்டிடும், காண்டது. [8]யானும், நாணம், யானே. (உஉ௬௧)

௩௦௦.—இந்திரசித்து 'உன்விருப்பின்படி நாளைப்போர்புரிவேன்' என்ன, இராவணன் தன்மாளிகை சேர்தல்.

இன்றொரு பொழுது [1]தாழ்த்தெ னிகற்பெருஞ் சிரம [2]நீங்கிச்
சென்றொரு கணத்தி னானே நான்முகன் [3]படைத்த தெய்வ
வென்றிவெம் படையி னாலுன் மனத்துயர் வீட்ப னென்றான்
நன்றென [4]வரக்கன் போய்த்த [5]னளிமலர்க் [6]கோயில் புக்கான்.

(இ - ள்.) (இந்திரசித்து இராவணனை நோக்கி), 'இன்றையொருநாள் மாத்திரம்தாமதித்துப் போரிலுண்டானஎனதுபெருவருத்தம் நீங்கப்பெற்று, நாளைக்கு(ப் போர்க்களத்திற்)போய்,ஒருகணப்பொழுதிலே பிரமனாற் படைக்கப்பட்ட தெய்வத்தன்மையுள்ள வெற்றிபெற்ற கொடிய அஸ்திரத்தினால் [பிரமாஸ்திரத்தினால்] உனது மனத்துன்பத்தை யொழிப்பேன் [பகைவர்களைக்கொல்வேன்]' என்றுகூறினான்; (அதுகேட்டவளவில்), இராவணன் அவ்வாறேசெய் யென்று உடன்பட்டுக்கூறிப்போய் மலர்மாலைகளால் அலங்கரிக்கப்பெற்ற தனது பெரிய மாளிகையிற் சேர்ந்தான்;(எ-று.)—ஒருபிரதியில் இந்தப்பாடல்முடிந்ததும் பாசப்படலம்முற்றிற்றுஎன்று எழுதியுள்ளது. பி-ம்:—[1]தாழ்த்தே. [2]நீக்கிச். [3]அளித்த. [4]அவனும். [5]நளிர்மணிக், நளிர்மதிக். நகரினிற். [6]சென்று. (௨௨௫௨)

நாகபாசப்படலவரலாறு முதனூலிற் கூறிய விதம்:—"இராமபிரான் வாநரசேனையுடனே இலங்கையை முற்றுகைசெய்தபொழுது வாநரர்க்கும் அரக்கர்க்கும் தொந்தயுத்தம் நிகழ்கையில், சூரியன் அஸ்தமிக்க, அப்பொழுது அவ்விருதிறத்தார்க்கும் மிகக்கொடிய இராப்போர் நேர்ந்தது. அதில் இந்திரசித்து அங்கதனால் தனதுதேர்முதலியவற்றை யிழந்து தோற்று மாயையினால் ஆகாயத்தேமறைந்துநின்று இராமலக்ஷ்மணர்மீது நாகாஸ்திரங்களைப் பிரயோகிக்க, அவர்கள் உடனே மூர்ச்சித்துக் கீழ்வீழ்ந்தார்கள். அதுகண்டு சுக்கிரீவன் விபீஷணன் முதலியோர் மிகவும் சோகித்துநிற்கையில், இந்திரசித்து இராமலக்ஷ்மணரைக் கட்டி வென்றே னென்னும் பெருமிதத்தோடு வாநர வீரர்களை யெல்லாம் அம்புகளால் வருத்திச் சென்றனன். அத்தருணத்தில் அந்நிலையிலிருந்த இராமலக்ஷ்மணரை நோக்கிக் கலங்கிய சுக்கிரீவனை அவரது முகத்தெளிவு முதலிய நற்குறிகளைச் சுட்டிக்காட்டி விபீஷணன் தேற்றி, சிதறியோடிய வாநரர்களையும் நிலைநிறுத்தினான். இங்குஇவ்வாறுநிகழ்கையில், இந்திரசித்து தனதுதந்தையினிடஞ்சென்று இராமலக்ஷ்மணர்களைத் தான் நாகபாசத்தாற் கட்டிவந்த செய்தியைக் கூற, உடனே இராவணனிட்ட கட்டளையினால் அரக்கியர் சீதையைப் புஷ்பகத்தின்மீதுஏற்றிப் போர்க்களங் குறுகி இராமலக்ஷ்மணரது நிலைமையை அவட்குக்காட்ட, அதுகண்ட அவள் பலவாறுபுலம்புமளவில், விபீஷணன்மகளான திரிசடை இராமன் பிழைத்தற்கு உரிய நற்குறிகளை அச்சீதைக்கு எடுத்துக்காட்டித் தேற்ற, பிராட்டி ஒருவாறு தேறி, மீண்டும் அரக்கியரால் அசோகவனத்திற் சென்றுசேர்ந்து துயருற்றிருந்தனள். பின்பு கட்டுப்பட்டிருப்பினும் இராமன் மிக்கதைரியமும் தேகபலமுமுடையனாதலின் கண்விழித்தவனாய்ப் பக்கத்தில் வீழ்ந்

துள்ள இலக்குமணனது நிலைமையைக் கண்டு பலபடிசோகித்தான். அப்பொழுது அங்குவந்து அவ்விராமலக்ஷ்மணரை நோக்கிக் கலங்கின விபீஷணனைச் சுக்கிரீவன் தேற்றித் தன்மாமனாகிய சுஷேணனை நோக்கி 'நீ வாநர வீரர்களுடன் இராமலக்ஷ்மணரைக் கிஷ்கிந்தைக்கு அழைத்துக்கொண்டு சென்றால், நானொருவனே இவ்விராவணனை வம்சநாசமாக்கிச் சீதையை மீட்டுவருவேன்' என்றுகூற, அதற்குச் சுஷேணன் 'முன்னே தேவாசுரயுத்தத்தில் இறந்த தேவர்களைப் பிருகஸ்பதியானவர் பிழைப்பித்த சஞ்சீவகரணி முதலியமூலிகைகள் தேவர்களாற் பாற்கடலிடையேயுள்ள சந்திரம்துரோணம் என்னும் பருவதங்களில் வைக்கப்பட்டுள்ளனவாதலின், இப்பொழுது அவற்றைக் கொணர அநுமான் செல்க' என்று கூறினான். அச்சமயத்திற் கருடபகவான் அங்குத்தோன்றவே, இராமலக்ஷ்மணர்களை அம்புவடிவமாய்க்கட்டியிருந்த நாகங்கள் சின்னபின்னப்பட்டொழிந்தன. அப்பால் அந்தக் கருடன் இராமலக்ஷ்மணர்களைக் கண்டு மகிழ்ந்து தனது கைகளினால் அவர்களைத்தழுவினமாத்திரத்தில், அவர்கட்கு அம்புகளாலுண்டான விரணங்களெல்லாம்நீங்கி, தேககாந்தி பலம்முதலியவை முன்னையினும் இருமடங்காயின. அப்பொழுது இராமபிரான் அக்கருடனிடத்து அன்புபாராட்டி அவனை நோக்கி அவனதுவரலாற்றை வினவ, அதற்குஅவன் 'நான் உனது உயிர் நண்பனாகிய கருடன்; நீங்கள் நாகாஸ்திரங்களாற் கட்டுப்பட்டதைக்கேள்வியுற்று அவற்றை விடுவிக்க வந்தேன்; அந்த அஸ்திரங்களை, தேவர் முதலிய எவராலும் விடுவிக்கமுடியாதன; இப்பொழுது நான் வந்தகாரியம் முடிந்தது; அரக்கர்கள் மாயமறிந்தவ ராதலின், அவர்களுடன் ஜாக்கிரதையாகப்போர் புரிக; நான் போய்வருகிறேன்; எனக்கு விடைகொடுக்கவேண்டும்; யான் உனக்கு எவ்வாறு நண்பினனென்பதைப்பற்றி இப்பொழுது ஆராயவேண்டா; நீ இராவணசங்காரஞ்செய்தபின்பு உனக்கே தெளிவாம்' என்று கூறி விடைபெற்றுச் சென்றனன். பின்பு, இராமலக்ஷ்மணர் யாதொருதீங்குமின்றி உயிர்த்தெழுந்ததைக் கண்டு வாநரர்கள் பெருமகிழ்ச்சிகொண்டு சிங்கநாதஞ்செய்தார்கள். நள்ளிரவில் அப்போராரவாரத்தைக்கேட்டு இராவணன் துணுக்குற்றுத் தூதர்களால் இராமன்செய்தியை யறிந்து தூம்ராக்ஷனை அவர்களுடன் போர்புரியுமாறு ஏவினன்" என்பதாம்.

கும்பகர்ணன் அதிகாயன் என்பவர்களின் வதத்திற்கு முன்னரே இவ்வரலாறு நிகழ்ந்ததென்றும், அதிகாயன்வதத்தின்பின்னர் இராவணனது சோகத்தைக்கண்ட இந்திரசித்து பிரதிஜ்ஞைசெய்துசென்று இராமலக்ஷ்மணாதியரைப் பிரமாஸ்திரத்தாற் கட்டிச்செல்ல, பின்பு ஜாம்பவான் சொல்லியபடி அநுமான் இமயமலையருகிலுள்ள மருத்துமலையைக் கொணர, அதிலுள்ள மூலிகைகளின் காற்றுப் பட்ட மாத்திரத்தில், இறந்தவர்போன்று கிடந்த யாவரும் யாதோருரூபாடுமின்றித் துயிலுணர்ந்தவர்போ லெழுந்தனரெனவும் முதனூலால் அறியப்படும்.

நாகபாசப்படலம் முற்றிற்று.

## யுத்தகாண்டத்துமுதற்பகுதியின் செய்யுண்முதற்குறிப்பகராதி.

64/2